# முருகவேள் பன்னிரு திருமுறை

தொகுதி 2

அருணகிரிநாதர் அருளிய

## திருப்புகழ்:

(பாடல்கள் 451 முதல் 995. முடிய)

உரையாசிரியர்

டாக்டர் வசு. செங்கல்வராயன். எம்.ஏ., டிலிட்.

திருநெல்வேலி தென்னிந்திய

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.

154, டி.டி.கே.சாலை, ஆழ்வார்பேட்டை,

சென்னை - 600 018.

வடக்குப்பட்டு சுப்பிரமணிய பிள்ளை செங்கல்வராயன் (1883)



THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING, SOCIETY, TINNEVELLY, LTD.

கழகவெளியீடு: 1925

பதி-1 1951
பதி-2 1965
பதி-3 1992

Q26:417x

N92.2

# MURUGAVEL PANNIRU THIRUMURAI

## Part - II. Vol.III & IV

### Tiruppugazh:

APPAR ACHAKAM, MADRAS - 600 108.

# பதிப்புரை

சிவபெருமானுக்குப் பண்டு பன்னிரு திருமுறைகள் வகுக்கப்பட்டுப் பன்னூறு ஆண்டுகளாகச் செந்நெறிச் செல்வர்களால் ஓதி வழிபடப்பட்டு வருதல் போலத் திருமுருகப் பெருமானுக்கும் பன்னிரு திருமுறைகள் வகுத்தல் வேண்டும் என உளங் கொண்ட டாக்டர் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை, எம். ஏ., அவர்கள் 'முருகவேள் பன்னிரு திருமுறை' என்னும் இத்தொகுப்பினைத் தக்க ஆராய்ச்சி உரையுடன் தொகுக்க முன் வந்து அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்ப் பாடல்களை ஏழு திருமுறைகளாக வகுத்து உரையெழுதி ஐந்து தொகுதிகளாக அமைத்து அச்சிட்டு வெளியிட்டனர்.

அடுத்து அருணகிரிநாதர் அருளிய கந்தரலங்காரம் கந்தரந்தாதி ஆகிய இருநூல்களையும் எட்டாந் திருமுறையாகவும், திருவகுப்பை ஒன்பதாந் திருமுறையாகவும், கந்தரனுபூதியைப் பத்தாந் திருமுறையாகவும் திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, மற்றும் முருகனைப் பற்றிய பாடல்களைப் பதினொன்றாந் திருமுறையாகவும், தேனூர் வரகவி சொக்கலிங்கம் பிள்ளை அவர்கள் பாடிய சேய்த்தொண்டர் புராணம்' பன்னிரண்டாம் திருமுறையாகவும் தொகுக்க 'முருகவேள் பன்னிரு திருமுறை' உருப்பெறலாயிற்று.

இப் பன்னிரு திருமுறைகளின் மறு பதிப்புகளைக் கழகவழி வெளியிடக் கருதி ஏற்று, *1965* ஆம் ஆண்ம.ல் சில தொகுதிகளை வெளியிட்டோம். முதன் முறையாக முன்பு வெளியான ஆறு தொகுதிகளையும் ஒரு சேர வெளியிட வேண்டுமென்ற ஆவல் நிறைவேறும் வகையில் ஈண்டு நான்கு பாகங்களில் வெளியிட்டுள்ளோம். திருமுருக அன்பர்கள் இதனை ஏற்றுப் போற்றி முருகன் அருள் பெறுவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# முன்னுரை

திருத்தணிகேசர் திருவருள் துணை கொண்டு எங்கள் பாட்டனார் உயர்திரு வ.த. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் பல இடங்களினின்றும் சேகரித்த ஓலைச் சுவடிகளிலிருந்து திருப்புகழ்ப் பாக்களை யாவரும் பாடி வணங்குவதற்கு முதன் முதலாக நூல் வடிவில் மூன்று பாகங்களாக அச்சேற்றிச் திருமுருகனுக்குத் தொண்டாற்றினார். வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ என்ற வள்ளற் பெருமானின் வாக்கிற்கொப்ப எங்கள் தந்தையார் தணிகைமணி டாக்டர் வ.சு.செ. அவர்கள் அருணகிரிநாதர் அருளிச் செய்த திருப்புகழ்ப் பாக்களிலும் பிறவற்றிலும் திளைத்து, பக்தியில் ஆழ்ந்து இன்புற்று, பல வகையான ஆராய்ச்சிகளைச் செய்து தணிகை எம்பெருமானை வணங்கினார்கள். சைவத் திருமுறைகள் பன்னிரண்டு உள்ளவற்றைப் போல முருகப் பெருமானுக்கும் திருப்புகழ் முதலாய நூல்களை முருகவேள் பன்னிரு திருமுறை என வகுத்து ஆராய்ச்சி உரையுடன் தொகுத்து வெளியிட்டு மகிழ்ந்தனர் இவற்றின் முதல் பதிப்பு திருநிறை மீனாட்சி கல்யாணசுந்தரம் அவர்களால் 1952 - 1957 ஆம் ஆண்டுகளில் வெளியிடப்பட்டது. சில தொகுதிகளின் இரண்டாம் பதிப்பு சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தாரால் 1965-ல் வெளியிடப்பட்டது. பின்னர் முருக பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கிப் பல்லாண்டுகளாகக் கிடைக்காதிருந்த இத்தொகுதிகளை மீண்டும் பதிப்பிக்கத் திட்டமிட்டோம்.

முருகவேள் பன்னிரு திருமுறை எனச் சுமார் 4,900 பக்கங்களில் ஆறுதொகுதிகளாக இதுவரை இருந்தவற்றை இம்மூன்றாம் பதிப்பில், முதல் இரு தொகுதிகளை ஒன்றாகச் சேர்த்து முருகவேள் பன்னிரு திருமுறை பாகம் ஒன்று என்றும்; மூன்று, நான்கு தொகுதிகளை ஒன்று சேர்த்துப் பாகம் இரண்டு என்றும்; ஐந்தாம் தொகுதியைப் பாகம்

மூன்று என்றும்; ஆறாம் தொகுதியைப் பாகம் நான்கு என்றும் வகைப்படுத்தி ஒளியச்சு முறையில் அச்சுக்கோத்து நல்ல தாளில் தெளிவான எழுத்துகளில் பெரிய அளவில் நான்கு பாகங்களாக வெளியிடும் பேற்றினைப் பெற்றமைக்குப் பெரிதும் உவக்கின்றோம்.

இவ்வரிய பணி விரைவாகவும் செம்மையாகவும் நிறைவேறத் தூண்டுகோலாய் இருந்து உதவிய டாக்டர் யு. மத்வநாத் அவர்கட்கும், அரிய தமிழ்த் தொண்டாற்றி வரும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்க்கும் எங்கள் உளங் கனிந்த நன்றி என்றென்றும் உரித்தாகுக. பக்தர்களும், ஆராய்ச்சியாளர்களும் இதனைப் பெற்றுப் பயனடையும் பேற்றினைத் திருத்தணிகேசன் அருள்வாராக.

சிவாலயா
10, வேங்கடராமன் தெரு,
இராசா அண்ணாமலைபுரம்,
சென்னை - 600 028.

வ. செ. தணிகை நாயகன்
ஞானபூரணி மத்வநாத்
வ.செ. சசிவல்லி
Sep. 1992.

# உள்ளுறை

# முருகவேள் பன்னிரு திருமுறை

திருத்தணிகையெம் பெருமான் திருப்புகழ்ச் செல்வத்தை எங்கள் குடும்பத்துக்குத் தந்து அச் செல்வத்தைப் பெருக்கும் வாய்ப்பு ஒன்றையும் இப்போது தந்தனர்.திருப்புகழே அன்றி முருகன் பெரும்புகழ்ப் பெருநூல்கள் அனைத்தையும் பன்னிரு திருமுறைகளாக வகுக்கலாம் என ஓர் எண்ணத்தை உதவினர். சிவபிராற்கு உரிய பன்னிரு திருமுறைகளுக்கு ஒப்பனவாக, முருகவேளுக்கும் உரிய பன்னிரு திருமுறைகளாவன:-

**1 முதல் 7 திருமுறைகள்**

முதல் ஏழு திருமுறைகளாம் 'தேவாரம்' போல திருப்புகழும் முதல் ஏழு திருமுறைகளாம்.(ஆறு படை வீட்டுத் திருப்புகழ்ப் பாக்கள் ஆறு திருமுறைகள்: பிற திருப்பதிகளின் திருப்புகழும் பொதுத் திருப்புகழும் ஏழாந் திருமுறை)

**8ஆந் திருமுறை**

'திருவாசகம்' 'திருக்கோவையார்' எட்டாந் திருமுறை யாமாறு, திருவாசகத்துக்கு இணையாம் கந்தரலங்காரமும் அகப் பொருள் கொண்ட திருக்கோவையாருக்கு ஒப்ப அகப் பொருள் அமைந்த கந்தரந்தாதியும் எட்டாந் திருமுறையாம்.

**9 ஆந் திருமுறை**

ஒன்பதாம் திருமுறையாகுந் 'திருவிசைப்பா'வுக்கு ஒப்ப, இசைப் பாடலாம் திருவகுப்பு ஒன்பதாந் திருமுறையாம்.

**10 ஆந் திருமுறை**

மந்திர நூலாய்ப் பத்தாந் திருமுறையாகும் 'திருமந்திரத்' துக்கு இணையாக, மந்திர நூலாம் கந்தரநுபூதி பத்தாந் திருமுறையாகும்.

**11 ஆந் திருமுறை**

அடியார் பலரின் பாடல் தொகுதியாம் பதினோராந் திருமுறைக்கு ஒப்ப, முருகவேளுக்குரிய பழைய அடியார்கள் பலர் பாடியவற்றுள், திரட்டப்பட்ட பகுதிகள் முருகப் பெருமானது பதினோராந் திருமுறையாகும்.

**12 ஆந் திருமுறை**

திருத்தொண்டர் புராணமாம் பெரிய புராணத்துக்கு ஒப்ப, முருகவேள் தொண்டர்களின் புராணம் சேய்த்தொண்டர் புராணம்' என்றும் அருமைப் பெயருடன் ஒன்று. அது பன்னிரண்டாந் திருமுறையாம்.

## 451. அர்ச்சித்துப் பாடி முத்திபெற

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

அதி *மதங் கக்கப் †பக்கமு கக்குஞ்
சரிதனந் தைக்கச் சிக்கென நெக்கங்
கணைதருஞ் செச்சைப் பொற்புய னத்தன் குறவாணர்-

அடவியந் தத்தைக் கெய்த்துரு கிச்சென்
றடிபணிந் திட்டப் பட்டும யற்கொண்
டயர்பவன் சத்திக் கைத்தல னித்தன் குமரேசன்;

துதிசெயும் சுத்தப் பத்தியர் துக்கங்
களைபவன் பச்சைப் பக்ஷிந டத்துந்
‡துணைவனென் றர்ச்சித் திச்சைத ணித்துன் புகழ்பாடிச்

சுருதியின் கொத்துப் பத்தியு முற்றுந்
துரியமுந் தப்பித் தத்வ மனைத்துந்
தொலையுமந் தத்துக் கப்புற நிற்கும் படிபாராய்;

கதிபொருந் தக்கற் பித்துந டத்துங்
கனல்தலம் புக்குச் சக்ரமெ டுக்குங்
கடவுளும் X பத்மத் தச்சனு முட்கும் படிமோதிக்-

○கதிரவன் பற்குற் றிக்குயி லைத்தின்
சிறகரிந் தெட்டுத் திக்கர்வ குக்குங்
கடகமுந் தட்டுப் பட்டொழி யக்கொன் றபிராமி;

---

* மதம் - மகிழ்ச்சி. † பக்கம்-அன்பு.

‡ "துணைவன் - தோழாபோற்றி, துணைவா போற்றி"
-திருவாசகம், போற்றி.

X பத்மத் தச்சன் - பிரமன்.

○ 'கோகனகத் தச்சற் கினியெனைப் பண்ணக் கொடான்
இது சத்தியமே" - போரூர்ச் சந்நிதிமுறை - அலங்-26.
தக்கன் யாகத்தில் தண்டனை அடைந்தோர் - பாடல் 390
கீழ்க்குறிப்பைப் பார்க்க

# 451.

நிரம்ப மகிழ்ச்சியை வெளிவிடும் (தரும்) பக்கம் (அன்பும்), விரும்பிக் களிகூரும் தேவசேனையின் கொங்கையும் சிக்கெனத் தைக்க (அழுத்தமாக மனதிற் பதிய, இறுகப் பிணிக்க), (உள்ளம்) நெகிழ்ந்து, உடனே அணைந்த, வெட்சி மாலை அணிந்த அழகிய திருப்புயங்களை உடையவன், பெரியோன், குறவர் (வாழும்)

காட்டில் (இருந்த) அழகிய கிளிபோன்ற வள்ளிக்கு (வள்ளியை நினைத்து) இளைத்து, உருகிச் சென்று, அவளுடைய அடியிற் பணிந்து, இஷ்டப்பட்டு (ஆசை பூண்டு), மயல்கொண்டு (மோகம் கொண்டு) தளர்பவன், சத்திவேலைத் திருக்கரத்திற் கொண்டவன், நித்தன் (என்றும் உள்ளவன்), குமரேசன்,

துதிசெய்கின்ற பரிசுத்தமான பத்திபூண்ட அன்பர்களுடைய துக்கத்தை நீக்குபவன், பச்சைப்பக்ஷியாம் (மயிலை) நடத்தும் உதவியாளன் - என்றெல்லாம் கூறி அருச்சித்து, என் ஆசையை நிறைவேற்றி, உன் புகழைப் பாடி,

வேதங்களின் கூட்ட வரிசையையும், (பிற) எல்லா வற்றையும், துரிய நிலையையும் (தன் மயமாய் நிற்கும் சுத்த உயர் நிலையையும்) கடந்து, தத்துவங்கள் யாவும் (மூலப் பொருள்கள் யாவும்) அழிந்துபோகும் முடிவுநிலைக்கு அப்புறத்தே நிற்கும்படி கண்பார்த்தருளுக.

(வேள்வி இயற்ற வேண்டிய) வழி பொருந்தும்படி ஏற்பாடு செய்து (தக்கன்) வேள்வி நடத்திய (கனல்தலம்) அக்கினி குண்டங்கள் இருந்த யாகசாலையுள் நுழைந்து, சக்கரம் ஏந்தும் கடவுள் (திருமாலும்,) தாமரையில் வீற்றிருக்கும் படைத்தல் தொழில் புரி தச்சன் (பிரமனும்) அச்சம் உறும்படித் தாக்கியும்

(ஒரு) சூரியனுடைய பற்களைக் குத்தியும், ஒரு (இந்திரனாம்) குயிலின் திண்ணிய சிறகை அரிந்தும், எட்டுத்திக்கர் (அஷ்டதிக்குப்பாலகர்களாம் - (ஒரு) இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்போர்) அணிவகுத்த கடகமும் (சேனைகளும்) நிலை குலைந்து அழிந்து போம்படிக் கொன்றும், அபிராமி.

பதிவ்ரதம் பற்றப் பெற்ற*ம கப்பெண்
பரிவொழிந் தக்கிக் குட்படு தக்கன்
பரிபவம் பட்டுக் கெட்டொழி யத்தன் செவிபோயப்-

† பனவிபங் கப்பட் டப்படி வெட்கும்
படிமுனிந் தற்றைக் கொற்றம்வி ளைக்கும்
பரமர்வந் திக்கக் **கச்சி**யில் நிற்கும் பெருமாளே (1)

## 452. உலகோரைப் புகழ்தல் ஒழிய

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

கனகதம் பத்தைச் செச்சையை மெச்சுங்
கடகசங் கத்துப் பொற்புய வெற்பன்
கடுமுள்வலஞ் சித்துப் புக்கதொர் கொக்கும் பொடியாகக்-

கறுவுசெலுஞ் சத்திப் பத்மக ரத்தன்
குமரனென் றர்ச்சித் தப்படி செப்புங்
கவிமொழிந் தத்தைக் கற்றற வுற்றும் புவியோர்போய்

குனகியுங் கைக்குக் கற்பக மொப்பென்
றனகனென் றிச்சைப் பட்டத ளிக்குங்
‡ குமணனென் றொப்பிட் டித்தனை பட்டிங் கிரவான-

---

*பதிவ் [illegible] † பனவி - பார்ப்பனி - பனவனுக்குப் (பெண்பால் பனவன் பார்ப்பான்)

‡ குமணன் சிறந்த கொடை வள்ளல்; தன் தம்பி தனது நாட்டினைக் கொள்ளத், தான் காட்டகத்தே இருந்தபொழுது பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் இரப்ப, அவன் தனது தலையை வெட்டிக்கொண்டு போய்த் தம்பியிடம் கொடுத்துப் பரிசு பெறும்படி தனது வாளைப் புலவர்க்குக் கொடுத்தான்.

*நாடிழந் ததனினு நனியின் னாதென*
*வாள்தந் தனனே தலையெனக் கீய-புறநானூறு 165.*

பதிவிரதத் தன்மையைக் கைப்பிடிக்கப்பெற்ற மகப் பெண் (இன்பப்பெண்) உமையம்மையின் பரிவு ஒழிந்து (தன்னையும் தன் கணவன் சிவனையும் தக்கன் புறக்கணித்தான் என்னும் வருத்தம் தீரவும், அக்கிக்கு உட்படு (அங்கிக்கு உட்படு) நெருப்பில் விழப்பெற்ற தக்கன் பரிபவம்பட்டு (அவமானப் பட்டு) கெட்டு ஒழியவும், தனது செவி (செவ்வி - அழகு) போய் அந்த

பனவி (பார்ப்பனி)-கலைமகள் - பங்கப்பட்டு-பங்கம் அடைந்து (மூக்கு போய்) அவ்வண்ணம் வெட்கம் படும்படி கோபித்தும், அற்றை (அன்றைய தினத்தில்) கொற்றம் விளைக்கும் (வெற்றி பெற்ற) பரமர் (சிவபெருமான்) வணங்கக் கச்சியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(உன்புகழ்பாடி அந்தத்துக் கப்புறம் நிற்கும்படி பாராய்)

## 452

பொன்னாலாய (தம்பம்) தூண் போன்றதும், வெட்சி மாலை அணிந்ததும் மெச்சும்படியான வீரவளைக் கூட்டங்களை அணிந்ததுமான அழகிய புய மலைபோலன், கடலிலே வஞ்சனை எண்ணத்துடன் புகுந்து நின்ற ஒப்பற்ற மாமரம் (சூரன்)பொடியாக (அழிய)

கோபித்த சிவந்த சத்திவேலை ஏந்திய தாமரையன்ன திருக்கரத்தன், குமரன், என்று சொல்லி அருச்சித்து அத்தகைய தோத்திரங்களைச் சொல்லும் பாடலை மொழிந்து (பாடி)அத்தை (அதை) கற்று (படித்து) அற-நன்றாக, மற்றும் - அப்பாடலில் (ஈடுபட்டு) இருந்தும், உலகோர் (அறியாமை யாற்போய் (செல்வரிடம் போய்)-

குனகியும் (கொஞ்சிப் பேசியும்), கைக்கு (உங்கள் கைக்கு) கற்பகம் ஒப்பென்று (கொடைத்திறத்தில் கற்பக விருக்ஷம் தான் நிகராகும் என்றும், (நீங்கள்) அனகர் - யாதொரு பாவமு மில்லாதவர் என்றும் (மகா புனிதர் என்றும்), யாசகர்கள் எதை இச்சைப்பட்டு வேண்டு- கின்றார்களோ அதை அளிக்கும் (கொடுக்கும்) குமணவள்ளலே நீங்கள் என்றும், ஒப்பிட்டு (உவமைகள்) கூறி, இப்படி எல்லாம் வேதனைப்பட்டு இங்கு இரவு (யாசித்தல்) என்கின்ற

குருடுகொண் டத்தச் சத்தம னைத்துந்
*திருடியுஞ் சொற்குத் தக்கதொ டுத்துங்
குலவியுங் கத்தப் பட்டக லக்கந் **தெளியாதோ;**

† சனகனன் புற்றுப் பெற்றம டப்பெண்
தனிபெருங் கற்புச் சக்ரந டத்துந்
தகையிலங் கைச்சுற் றத்தைமு ழுத்துஞ் சுடவேவெஞ்-

சமரசண் டக்கொற் றத்தவ ரக்கன்
கதிர்விடும் பத்துக் கொத்துமு டிக்குந்
தனி‡ யொரம் பைத்தொட் டுச்சுரர் விக்னங்
களைவோனும்;

தினகரன் சொர்க்கத் துக்கிறை சுக்ரன்
Xசசிதரன் திக்குக் கத்தர கத்யன்
திசைமுகன் செப்பப் பட்டவ சிட்டன் திரள்வேதஞ்-

செகதலஞ் சுத்தப் பத்தியர் சித்தம்
செயலொழிந் தற்றுப் பெற்றவர் மற்றும்
சிவனும்வந் திக்கக் **கச்சியில்** நிற்கும் பெருமாளே. (2)

## 453. சமயச் சிலுக்கு அற

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

செடியுடம் பத்தித் தெற்றியி ரத்தஞ்
செறிநரம் பிட்டுக் கட்டிய சட்டஞ்
சிறைதிரண் டொக்கத் தொக்கவி னைப்பந் தவிகாரம்

---

* இங்கு கூறிய கருத்தைத்-

"திருடி நெருடிக் கவிபாடித் திரியு மருள்விட்டு"
என்ற இடத்தும் காண்க. (பாடல் 290)

† சனகன்-சீதையின் பிதாவாகிய மிதிலை அரசன்; சனகர் யாகஞ் செய்ய உழுத கலப்பையின் அடிமுனையில் பெட்டி தோன்ற அதில் குழந்தை இருக்கக் கண்டு அதைச் சனகர் வளர்த்தார். இக்குழந்தை தான் சீதை.

‡ ஸ்ரீராமர் "ஒகமாட, ஒகபாணமு, ஒகபத்னி வரதுடே" என்பர் தியாகராஜசுவாமிகள்.

X சசிதரன்-ஈசானியன்.

குருட்டுத்தன்மையைக் கொண்டு, பொருளும் ஒலியும் பிற எல்லாமும் (பழைய நூல்களினின்றும்) திருடியும், சொல்லுக்குத் தக்கவாறு (பாடல்களை) அமைத்தும் மகிழ்ந்து குலவியும் கத்துகின்ற கூச்சலிடுகின்ற கலக்க அறிவு தெளிவு அடையாதோ!

சனக மகாராஜன் அன்புடன் பெற்ற மடப்பெண் (சீதையின்) ஒப்பற்ற பெரிய கற்பு என்னும் ஆஞ்ஞா சக்ரம் நடைபெற்ற பெருமை வாய்ந்த இலங்கையில் இருந்த (அரக்கர் குலச்) சுற்றத்தார் யாவரும் சுடுபட்டழியும்படி, கொடிய,

போர்வல்ல வலிய வீரம் வாய்ந்த அரக்கன் (ராவணனுடைய) ஒளி வீசும் பத்துக் கொத்தான முடிகளுக்கும் ஒப்பற்ற ஒரு அம்பைச் செலுத்தி (வீழ்த்தி) தேவர்களின் இடர்களை நீக்கின திருமாலும்-

சூரியனும், சொர்க்கத்துக்கு இறைவனாம் இந்திரனும், சுக்கிரனும், (பிறை சூடிய) ஈசானனும், திக்குக் கர்த்தர்கள் (அஷ்டதிக்குப் பாலகர்களும்), அகத்திய முநிவரும், பிரமனும், பேர்போன (புகழ்பெற்ற) வசிட்டரும், கூட்டமான வேதங்களும்

பூலோகத்தினரும், அகத்தூய்மை புறத்தூய்மை கொண்ட பக்தர்களும், (சித்தம், செயல், ஒழிந்தற்றுப் பெற்றவர்) மனமும் செயலும் ஒடுங்கி ஒழியப் பெற்ற ஞானிகளும், பின்னும், சிவனும். வணங்கி நிற்கக் **கச்சியில்** நிற்கும் பெருமாளே!

(கலக்கம் தெளியாதோ)

# 453.

பாவத்துக்கு இடமான உடம்பு, அத்தி (எலும்பு), தெற்றி (மாடம் - அத்தித் தெற்றி (எலும்பாலாய வீடு), ரத்தம், நெருங்கிய நரம்புகள் (இவைகள்) இட்டு (சேர்த்து) கட்டிய சட்டம் - கட்டப்பட்ட ஒரு கட்டடம், சிறையிட்டது போலச் சூழ்ந்து திரண்டு ஒன்று கூடிச் சேர்ந்த வினை என்னும் பாசக் கலக்கம்.

திமிரதுங் கத்தத் துத்திரை யெற்றுஞ்
சென்னபங் கத்துத் துக்கக டற்கண்
திருகுரும் பைப்பட் டுச்சுழல் தெப்பங் கரணாதி;

குடிபுகும் பொக்கப் புக்கிலி றப்பின்
குடிலம்வெந் தொக்குக் கொட்டில்ம லத்தின்
குகைசுமந் தெட்டுத் திக்கிலு முற்றுந் தடுமாறுங்-

குவலயங் கற்றுக் கத்தியி ளைக்குஞ்
சமயசங் கத்தைத் தப்பிமி ருக்குங்
குணமடைந் துட்பட் டொக்கனா ருக்கும் படிபாராய்;

படிதருங் கற்புக் கற்பக முக்கண்
கொடிபசுஞ் சித்ரக் குத்தர முத்தம்
*பணிநிதம் பத்துச் சத்தி யுகக்குங் குமரேசா-

† பரவசங் கெட்‡ டெட் டக்கர நித்தம்
பரவுமன் பர்க்குச் சித்தி யளிக்கும்
பரமர்வந் திக்கத் தக்க பதத்தன் குருநாதா;

---

*பணி நிதம்பம்-பணி-நாகம் 'கோணாகப் பேரல்குல் மாதராள்" சம்பந்தர்-2-44-4

† பரவசம் கெட்டு-ஆத்மஞானம் அடைந்து-எனலுமாம்.

‡ எட்டு அக்கரம்-ஓம் நமோநாராயணாய என்னும் விஷ்ணு மந்திரம் எனக் கொண்டால் - சித்தி அளிக்கும் பரமர் - திருமால் "அவன் பெயர் எட்டெழுத்தும் ஓதுவார்கள் வல்லர் வானம் ஆளவே" - திருமழிசை-சந்த விருத்தம் 77; திருமால் வந்திக்கத் தக்க பதத்தன்-எனப் பொருள்படும்.

எட்டு அக்கரம்-"ஓம் ஆம் ஔம் சிவாயநம" -"எட்டாம் எழுத்தேழை யேற்குப் பகர்ந்த முத்தா" - திருப்புகழ் 737.

இனி எட்டெழுத்து என்பதற்கு எட்டு என்னும் எண்ணின் தமிழ் வடிவம் கொண்ட எழுத்து "அ" - எனக் கொண்டால் "அ" என்பது சிவத்தைக் குறிக்கும். 'ஆரும் அறியார் அகாரம் அவனென்று "இணையார் திருவடி எட்டெழுத்தாகும்" திருமந்திரம் - 1751. 898. சிவனடியை நித்தம் பரவும் அன்பர் - எனப் பொருள் இயையும் பரமர்-சிவன்.

இருண்டதும், உயர்ந்தெழுந்துள்ளதும், ததும்பி எழும் அலைகள் மோதும் பிறப்பென்னும் பங்கத்து - துக்க - கடற்கண் (பிறப்பு எனப்படும் குற்றம் வாய்ந்த) துக்ககரமான கடலிடத்தே), திரு குரும்பை பட்டு (திருகு - குரும்பை பட்டு-பறிபட்டு விழுந்த தென்னங் குரும்பை போல அலைச்சலுற்றுச் சுழன்று, (அந்தப்பிறவிக் கடலில் மிதக்கும்) தெப்பம்போன்ற கரணங்கள் (மனம், புத்தி, அகங்காரம், சித்தம்) முதலியன

குடி புகுந்துள்ள பொய்யான இருப்பிடம், இறந்து போனால் இந்த வஞ்சகக் குடிசை வெந்து போகும் கொட்டகை மும்மலங்களின் இருப்பிடம் - (ஆகிய இந்த உடலைச்) சுமந்து, எட்டுத் திசைகளிலும் எல்லா இடங்களிலும் தடுமாறுகின்ற.

இவ்வுலக நூல்களைக் கற்றும், கத்தி, இளைத்துப் போகும் சமய சார்பான சங்கங்களை விட்டு விலகி இருக்கும் (உத்தம) குணத்தை அடைந்து, (அத்தகைய சாந்த) குணத்திலேயே உட்பட்டு எப்போதும் (நான்) இருக்கும்படி கண் பார்த்தருளுக.

தகுதியுற்ற - முறைமையான - கற்பு வாய்ந்த கற்பகம் அனையாள், முக்கண் கொண்ட கொடிபோல்வாள், அழகும் சித்ரக்கு - சித்திரத்துக்கு (அலங்காரத்துக்குத்), தாரம் (தகுதியான), (முத்தம் பணி) முத்தாபரணம் தாழும் அல்குலையும் கொண்ட சத்தி (தேவி) (அல்லது, முத்தமாலை கொண்ட, பணி (பாம்பு போன்ற) நிதம்பம் கொண்ட சத்தி (தேவி)-மகிழ்கின்ற குமரேசனே!

பரவசம் கெட்டு (பராக்கை ஒழித்து - மனத்தை நிலை நிறுத்தி) எட்டு அக்கரம் (எட்டெழுத்தை - "ஓம் ஆம் ஔம் சிவாய நம" என்னும் எட்டெழுத்தை) தினந்தோறும் போற்றிச் செபிக்கும் அன்பர்களுக்குச் சித்தி (மோக்ஷ இன்பத்தைத்) தரும் பரமேசர் வணங்கத் தக்க திருவடிகளை உடைய குருநாதனே!

தொடியிடும் பத்மக் கைக்கு மிடைக்குஞ்
சுருள்படும் பத்திப் பட்ட குழற்குந்
துகிர்கடைந் தொப்பித் திட்ட இதழ்க்குங் குறமானின்-

சுடர்படுங் கச்சுக் கட்டு முலைக்குந்
துவளுநெஞ் சத்தச் *சுத்த இருக்கும்
சுரரும்வந் திக்கக் **கச்சி**யில் நிற்கும் பெருமாளே (3)

## 454. முருகனைப் புகழும் செயல்களையே கூற

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

கனக்ரவுஞ் சத்திற் சத்தியை விட்டன்
றசுரர்தண் டத்தைச் செற்ற விதழ்ப்பங்
கயனைமுன் குட்டிக் கைத்தளை யிட்டும் பரையாளுங்-

கடவுளன் புற்றுக் கற்றவர் சுற்றும்
பெரியதும் பிக்கைக் †கற்பக முற்றங்
‡கரதலம் பற்றப் பெற்ற வொருத்தன் ஜகதாதை;

புனவிளந் தத்தைக் கிச்சை யுரைக்கும்
புரவலன் பத்தர்க் குத்துணை நிற்கும்
Xபுதியவன் செச்சைப் புட்ப மணக்கும் பலபாரப்-

---

* சுத்த இருக்கும் -சுத்தமாகிய இருக்கு வேதமும்

† கற்பகம் - கணபதி பெருவரத்தினராதலால் 'கற்பகம் என்பது அவருக்கு ஒரு சிறப்புப் பெயர்.' 'கற்பகம் என வினைகடி தேகும்' (விநா திருப்புகழ் 1)

‡ கரதலம் பற்றப் பெற்ற - என்பதற்குக் குழந்தை முருகனைக் கணபதி கையில் அணைத்தெடுத்து ஏந்தி உலவினர் எனவும் பொருள் காணலாம்.

X புதியவன் - 'முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே'- திருவாசகம் -திருவெம்பாவை.

தொடி (கைவளை, தோள்வளை) அணிந்துள்ள தாமரை யன்ன கைக்கும், இடைக்கும், சுருள் கொண்ட வரிசை யமைந்த கூந்தலுக்கும், பவளத்தைக் கடைந்தெடுத்து அலங்கரித்து வைத்த (வாய்) இதழுக்கும்-குறமான் (வள்ளியின்)

ஒளிவீசும் ரவிக்கை கட்டிய கொங்கைக்கும் - நெகிழ்கின்ற நெஞ்சத்தை உடையவனே, சுத்தமான இருக்கு வேதமும், தேவர்களும் வணங்கக் **கச்சியில்** நிற்கும் பெருமாளே!

*(சமய சங்கத்தைத் தப்பி குணமடைந்து இருக்கும்படி பாராய்)*

# 454.

பருத்த கிரவுஞ்ச மலைமீது வேலாயுதத்தை விட்டு அன்று அசுரர் தண்டத்தைப் (படையை) அழித்தும், அந்த இதழ்களை உடைய தாமரைஆதனத்தனாம் பிரமனை முன்பு குட்டிப் (பின்) கை விலங்கு இட்டு உம்பரைத் (தேவர்களை) காத்தளித்தாண்ட-

கடவுள், அன்புகொண்டு கற்றுவல்ல பெரியோர்கள் வலம்வரும் பெரிய தும்பிக்கையைக் கொண்ட கற்பகம் (கணபதி) முன்தம்-முன்பு தனது கையைப் பிடிக்கப் பெற்ற ஒருவன் (கணபதி தன் கையாற்பற்றி அழைத்துச் செல்ல நடை கற்ற 'இளையதளர் நடை பழகின' ஒருவன் (ஒரு குழந்தை), உலகுக்கு ஒரு தந்தை -

தினைப்புனத்திருந்த இளமைப் பருவத்துத் தத்தைக்கு (கிளிக்கு) வள்ளிக்கு இச்சை (காதல் மொழிகளை) உரைக்கும் (சொன்ன) அரசன், பக்தர்களுக்குத் துணையாக நின்றருளும் புதியோன், வெட்சிப் புட்பம் மணம் வீசும் பல கனத்த-

புயனெனுஞ் சொற்கற் றுப்பிற கற்கும்
பசையொழிந் *தத்தத் திக்கென நிற்கும்
† பொருடொறும் பொத்தப் பட்டதொ ரத்தம் பெறுவேனோ,

‡ அனல்விடுஞ் செக்கட் டிக்கய மெட்டும்
பொரவரிந் திட்டெட் டிற்பகு திக்கொம்
பணிதருஞ் சித்ரத் தொற்றை யுரத்தன் திடமாக-
அடியொடும் பற்றிப் X பொற்கயி லைக்குன்
றதுபிடுங் கப்புக் கப்பொழு தக்குன்
றணிபுயம் பத்துப் பத்துநெ ரிப்புண் டவனீடுந்;

தனதொ Oரங் குட்டத் தெட்பல டுக்குஞ்
சரியலன் கொற்றத் துக்ரவ ரக்கன்
தசமுகன் கைக்குக் கட்க மளிக்கும் பெரியோனுந்-
தலைவியும் பக்கத் தொக்க விருக்குஞ்
சயிலமுந் தெற்குச் சற்குரு வெற்புந்
தணியலும் பெற்றுச் கச்சியில் நிற்கும் பெருமாளே (4)

---

* அத்தத்து இக்கு எனநிற்கும்-அர்த்தத்திலே கரும்புபோல் இனித்து நிற்கும்.

† பொருள் தொறும் பொத்தப் பட்டது ஓர் அத்தம்-குணம் அமையச் செய்யுள்தோறும் பொதியப்படுவதாகிய ஒரு செல்வத்தை.

‡ ராவணன் மார்பிற்பட்டு பொரவந்த திசையானையின் கொம்பு முறிந்தது. "திசை யானையின் மருப்புலக்க வழங்கிய மார்பினான்"

"திசையானைப் பணையிறுத்த பணைத்த மார்பால்"
-கம்ப ராமாயணம் -ராவணன் வதை-*189-226.*

X பொற்கயிலை - 'நின்னுடைய பொன்மலையை வேரொடும் பிழ்ந்தேந்தலுற்ற- இராவணன்' சம்பந்தர்- I-50.8

'உயர்பொன் நொடித்தான் மலை -சுந்தரர் 100-10
"இராவணன் பொன்மலையைக் கையால்
ஊக்கஞ்செய் தெடுத்தலுமே -அப்பர் VI-82-10
கயிலையை எடுத்த வரலாறு - பாட்டு *188* பக்கம் *440* கீழ்க்குறிப்பு.
Oஅங்குட்டத்து எட்பல் அடுக்கு -
"திருவடிப் பெருவிரற் றலையினால் நெறுக்கென
அழுத்திட" கம்ப - ராமா- உத்தர- வரையெடுத்த *71.*
" நெருக்கினார் விரல் ஒன்றினால்" -சம்பந்தர் I-135-8

புயங்களை உடையோன் - என்னும் வகையில் சொற்களைக் கற்று, பிற சம்பந்தமான சொற்களைக் கற்கவேண்டும் என்கின்ற பற்று ஒழிந்து, அர்த்தத்திலே கரும்பு போல இனித்து நிற்கும் குணம் அமையச் செய்யுள்தோறும் பொதியப்படுவதாகிய ஒரு செல்வத்தை (அல்லது, அர்த்தத்திலே கரும்புபோல நிற்கும்படியாக ஒவ்வொரு பொருள் தோறும் ஒவ்வொரு சொற்பொருள்தோறும் (இனிமை) புகுத்தப்பட்ட ஒரு செல்வ வாக்கைப் பெறுவேனோ!

நெருப்பை வீசும் சிவந்த கண்களை உடைய திக் கஜங்கள் எட்டும் தன்னோடு சண்டை செய்ய (தன் மார்பிற்பட்டு) அரிபட்ட (ஒடிந்துபோன) எட்டுக் கொம்புகளின் துண்டு களாம் கொம்புகளை அணிந்து-கொண்ட அழகிய ஒப்பற்ற மார்பினன் - பலத்துடனே

அடியோடு பற்றிப் பொன்மலை (கயிலைமலையைப்) பிடுங்கப் புகுந்தபொழுது அந்த மலை போன்ற புயங்கள் பத்துப்பத்தும் (இருபதும்) நெரிப்பு உண்டவனும், மேம்பட்ட அல்லது நிலைத்துள்ள.

தனது (சிவனது) ஒப்பற்ற (அல்லது ஒரு) அங்குஷ்ட விரலின் (பெருவிரலின்) எள்ளின் பல் அத்தனை வரிசைக்கும் (எள் நுனி அளவுக்கும்) ஈடாகாதவனும், வீர உக்ரம் கொண்ட அரக்கனும், பத்து முகத்தினனும், ஆகிய ராவணனுடைய கைக்குக் *கட்கம் (வாள் ஒன்றை அளித்த பெரியராம் சிவனும் (அவரது)

தலைவி (மனைவி-பார்வதியும்) (அவரது) பக்கத்தில் ஒன்றுபட்டு (சேர்ந்து) இருக்கும் - மலை (அர்த்தநாரீசுரர் விளங்கும் மலை) யாகிய திருச்செங்கோடும், தெற்கே உள்ள உத்தம தலமாம் குருமலை (சுவாமிமலை)யும், திருத்தணிகையும்-(தாம் வீற்றிருக்கும் தலங்களாகப்) பெற்றுக் கச்சியில் நிற்கின்ற பெருமாளே!

(இக்கெனநிற்கும் பொருள் பொத்தப்பட்ட தொரத்தும் பெறுவேனோ)

---

*சிவபிரான் ராவணனுக்குக் கட்கம் (வாள்) தந்தது

"எவ்வகைப் படையும் வெல்லும் சந்திரவாளும் ஈந்தான்"

கம்ப ராமா. வரையெடுத்த 75.

† சயிலம்-திருச்செங்கோடு.

## 455. பற்றற

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

தெரியலஞ் செச்சைக் கொத்து முடிக்கும்
பரி *திகந் தத்தைச் சுற்ற நடத்துஞ்
சிறைவிடுஞ் சொர்க்கத் துச்சுர ரைக்கங் கையில்வாழுஞ்-
† சிறுவனென் றிச்சைப் பட்டு பஜிக்கும்
படிபெரும் பத்திச் சித்ர கவித்வஞ்
சிறிதுமின் றிச்சித் தப்பரி சுத்தம் பிறவாதே
பரிகரஞ் சுத்தத் தக்கப்ர புத்வம்
பதறியங் ‡ கட்டப் பட்டனர் தத்வம்
பலவையுங் கற்றுத் தர்க்க Xமதத்வம் பழியாதே-
பரபதம் பற்றப் பெற்ற எவர்க்கும்
பரவசம் பற்றிப் பற்றற நிற்கும்
பரவ்ரதம் பற்றப் பெற்றிலன் மற்றென் துயர்போமோ;
சரியுடன் துத்திப் பத்திமு டிச்செம்
O பணதரங் கைக்குக் கட்டிய நெட்டன்
தனிசிவன் பக்கத் தற்புதை பற்பந் திரிசூலந்
தரிகரும் பொக்கத் தக்கமொ ழிச்சுந்
தரியரும் பிக்††கப் பித்தத னத்தந்
தரி‡‡ சுரும் பிக்குப் பத்ரையெ வர்க்குந் தெரியாத-

---

* திக்-அந்தத்தைச் சுற்ற பரி நடத்தும் - சிறுவன் - என இயைக்க;

† முடிக்கும் நடத்தும், சிறைவிடும், வாழும் - சிறுவன் எனக் கூட்டி முடிக்க.

‡ அட்டம்-பக்கம்-குறுக்கு;அட்டம் ஆளித் திரள் வந்தணையும் அண்ணாமலை-சம்பந்தர் I-69-10

Xமதத்து வம்பு அழியாதே எனப்பிரிக்க

Oசிவபிரான் கையிற் பாம்பு கட்டியிருத்தல்-"கடுத்தாடுங் கரதலத்-தில்-கரிய பாம்பும் " -சுந்தரர் VII-90-1. "பையணி அரவு. கையணிபவன்" -சம்பந்தர்-I-III-4 . **பற்பம் பஸ்மம் திருநீறு †† கப்பித்த-கிளைத்த

‡‡ சுரும்பு -வண்டு, மலை இக்கு பத்ரை-தேவி கையில் கரும்பு "கரும்பும் அங்கை சேர்த்தாளை முக்கண்ணியை'

-அபிராமி அந்*101.*

## 455.

மாலையாக அழகிய வெட்சிப் பூங்கொத்துக்களைச் சூடிக் கொள்பவனும், குதிரையாம் மயிலை திக்குகளின் அந்தம் (கோடி வரையில் சுற்றும்படி நடத்துபவனும், சிறைவிடும் சொர்க்கத்துச் சுரரை)-சொர்க்கத்துச் சுரரைச் சிறைவிடும்-விண்ணுலகத்துத் தேவர்களைச் சிறையினின்று மீட்டவனும், கங்கையில் வாழ்ந்தவனும்-(ஆன)-

சிறுவன் (குழந்தை) என்று இச்சைப்பட்டு - ஆசை நிரம்பிப் பஜிக்கும்படி பாடிப் போற்றும்படியான பெரிய பக்தியும், அழகிய கவிபாடும் திறமும் சிறிதேனும் இல்லாது, சித்தத்தில் (மனதில்) பரிசுத்த நிலை தோன்றாமல் -

பரிகரம் (பரிவாரங்கள்) தம்மைச் சூழ்ந்திருக்கும் படியான பிரபுத்வம் (பெரிய பிரபு நிலையை) அடைந்து (செல்வ அதிகார நிலையைக் கூடி), பதறிப் (பரபரப்புடன்) அவ்விடத்தில் (அட்டப்பட்டனர்) பக்கத்தில் சூழ்பவர்களின் உண்மை நீதிகள் பலவற்றையும் கற்றுத் தர்க்கம்பேசி மதங் களின் வம்புப் பேச்சுக்களில் அழியாமல் -

மேலான (வீட்டின்ப) நிலையை அடையப் பெற்ற எவரும் மிக்க மகிழ்ச்சியைக் கொள்ள பற்று அற்று நிற்கும் மேலான தவநிலையை அடையப் பெற்றிலேனே! அங்ஙனம் இருக்கின்ற எனது துயர் போமோ (போவதற்கு வழியுண்டோ)?

ஒழுங்காகப் படப்பொறி வரிசையைத் தலையிற் கொண் டதும், செவ்விய படத்தைக் கொண்டதுமான பாம்பைக் கையிற் கட்டியுள்ள பெருமையோன், ஒப்பற்ற சிவன் - ஆகிய பெருமானது பக்கத்தில் உள்ள அற்புதத் தலைவி, திருநீறு, முத்தலைச் சூலம் - (இவைகளைத்)

தரித்துள்ளவள், கரும்புக்கு ஒப்பு என்று சொல்லத்தக்க சொற்களை உடைய சுந்தரி, தோன்றிக் கிளைத்த (பரவியுள்ள) கொங்கைகளை உடைய அந்தரி, சுரும்பு - இக்கு வண்டுகள் மொய்க்கும் தேன் அனையாள் (அல்லது - மலையில் தோன்றிய கரும்பு) அல்லது வண்டுகள் மொய்க்கும் கரும்பு) ஏந்திய (பத்ரை) பத்ரை (காளி) யாரும் அறிய ஒண்ணாத

பெரிய *பண் டத்தைச் சத்திய பித்தன்
பிரிதியுண் கற்புப் பச்சையெ றிக்கும்
ப்ரபையள் † தண்டிற்கைப் ‡ பத்ம மடப்பெண் கொடிவாழ்வே

பிரமரண் டத்தைத் தொட்டதொர் வெற்பும்
பிளவிடுஞ் சத்திக் கைத்தல நித்தம்
பெருமிதம் பெற்றுக் கச்சியில் நிற்கும் பெருமாளே. (5)

## 456 சத்தியப் பொருளை உணர

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

புனமடந் தைக்குத் தக்க புயத்தன்
குமரனென் Xறெத்திப் பத்தர் துதிக்கும்
பொருளைநெஞ் சத்துக் கற்பனை முற்றும் பிறிந்ததும்

புகலு Oமெண் பத்தெட் டெட்டியல் தத்வம்
சகலமும் பற்றிப் பற்றற நிற்கும்
பொதுவை **யென் றொக்கத் தக்கதொ ரத்தந் தனைநாளும்;

சினமுடன் தர்க்கித் துச்சிலு கிக்கொண்
†† டறுவருங் கைக்குத் திட்டொரு வர்க்குத்
தெரிவரும் சத்யத் தைத்தெரி சித்துன் செயல்பாடித்

---

*பண்டத்தை- பண் தத்தை.
† தண்டு-வீணை

"சரிகம பதநிப் பாடல் தண்டு தைவரு செங்கையோன்"
(வில்லி பாரதம் -இந்திர-42)

தேவி கையில் வீணை -

"பண் களிக்கும் குரல் வீணையும் கையும் -
அபிராமி அந்தாதி 70.

‡ பார்வதி தாமரையில் வீற்றிருப்பது - பாட்டு31 பக்கம் 91
X எத்தி-ஏத்தி O எண்பத்தெட்டு எட்டு- 96.,**என்று -சூரியன்.
†† அறுவரும் அறுவகைச் சமயத்தாரும் -பாட்டு 156 362 பார்க்க).

பெருமை சிறந்த பண் போன்ற மொழியை உடைய கிளி சத்தியத்தில் (உண்மையில்) பித்தன் (மிக்க ஈடுபாடு உடையவன் - மெய்யனாகிய பித்தன் (சிவனுடைய) ப்ரீதியை (அன்பை) உண் (உட்கொண்ட) கற்பு வாய்ந்த பச்சை ஒளி வீசும் பேரொளியாள், வீணை ஏந்திய கையினள், தாமரையில் வீற்றிருக்கும் மடமங்கை, கொடிபோல்வாளாகிய பார்வதி தேவியின் குழந்தையே!

பிரமர் உலகத்தைத் தொடும்படி வளர்ந்திருந்த ஒரு மலையை ( கிரவுஞ்சத்தைப் ) பிளந்தெறிந்த வேலாயுதத்தைக் கொண்ட திருக்கரத்தனே! நாளும் சிறப்புடனே (மேம்பாட்டுடனே) கச்சியில் நின்றருளும் பெருமாளே!

(என் துயர் போமோ)

## 456

தினைப்புனத்து மடந்தை (வள்ளிக்கு)த் தக்கதான புயங்களை உடையவன் , குமரன், என்று ஏத்தி (போற்றிப்) பக்தர்கள் துதிக்கின்ற பொருளை, மனத்திற் கொண்ட கற்பனைகள் முழுமையும் பிறவான பலவற்றையும்

சொல்லுகின்ற தொண்ணூற்றாறு எனப்பட்ட தத்வங்களும் (உண்மைகளும்) ஆக எல்லாவற்றையும் பற்றியும் பற்றற்றும் நிற்கின்ற பொதுப் பொருளை, சூரியனுக்கு ஒப்பாகத் தக்க பேரொளியைக் கொண்ட அத்தம்தனை (பொருளை, செல்வத்தை) நாள்தோறும்

கோபத்துடனே தர்க்கம் பேசிச் சிலுகிக்கொண்டு (சண்டையிட்டு), அறுவகைச் சமயத்தாரும் கைக்குத்துடன் இட்டு (வாதித்து)ம் ஒருவருக்கும் தெரிதற்கு அரிதான சத்யப் பொருளைத் தெரிசனம் செய்து உன் திருவிளையாடல்களைப் பாடி

*திசைதொறுங் கற்பிக் கைக்கினி யற்பந்*
*திருவுளம் பற்றிச் செச்சை மணக்குஞ்*
*சிறுசதங் கைப்பொற்* **பத்ம மெனக்கென் றருள்வாயே;**
*கனபெருந் தொப்பைக் கெட்பொரி யப்பம்*
*கனிகிழங் கிக்குச் சர்க்கரை *முக்கண்*
*கடலைகண் டப்பிப் பிட்டொடு † மொக்குந் திருவாயன்-*
*கவளதுங் கக்கைக் கற்பக முக்கண்*
*திகழுநங் கொற்றத் தொற்றை மருப்பன்*
*கரிமுகன் சித்ரப் பொற்புகர் வெற்பன் றனையீனும்;*
*பனவி ‡ யொன் றெட்டுச் சக்ரத லப்பெண்*
*கவுரிசெம் பொற் Xபட் டுத்தரி யப்பெண்*
*பழய Oஅண் டத்தைப் பெற்ற மடப்பெண் பணிவாரைப்-*
*பவதரங் கத்தைத் தப்ப நிறுத்தும்*
*பவதி **கம் பர்க்குப் புக்கவள் பக்கம்*
*பயில் †† வரம் பெற்றுக்* **கச்சி***யில் நிற்கும் பெருமாளே* (6)

---

*முக்கண்-தேங்காய் † முக்கும் - என்றும் பாடம் முக்கும்-மொக்கும்.
‡ 'ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதுமேவி உறைபவளே'
-அபிராமி அந்தாதி-19
'வீற்றிருப்பாள் நவ கோணத்திலே' (வராகிமலை - 31)
X பட்டு உத்தரியப்பெண்

"உடையாளை ஒல்கு செம்பட் டுடையாளை" அபிராமி அந்தாதி-84
"தாளணி நூபுரம் செம்பட்டுத் தாளுடை" திருமந்திரம் 1049.
O "அண்டமெல்லாம் பூத்தாளை " அபிராமி அந்தாதி 101

**கம்பர்க்குப் புக்கவள் பக்கம் நிற்கும் பெருமாள் என்றதனால் காமா[illegible]ம்மை கோயிலின் பக்கத்திலுள்ள குமர கோட்டத்து முருகவேள[illegible]புகழ்ப் பாடலாகும் இப்பாடல்.

[illegible]ும் பெருமாள்

வி[illegible] ல்லி அனுப்பியும் பிரமனைச் சிறையினின்றும் சி[illegible] வர் நேரில் வந்து சொல்லியபின் பிரமனைச் [illegible]ஷம் நீங்க முருகவேள் குமர கோட்டத்தில் தவக்- [illegible] புள்ளிமான் தோல் ஆடை, மௌஞ்சி [illegible] அரைஞாண், திருக்கரங்களில் ருத்ராக்ஷம் [illegible]டு தேவசேனாபதீச லிங்கப் பிரதிஷ்டை செய்து [illegible]ங்கி வரம் பெற்றனர். -(காஞ்சிப் புராணம்)

திசைகள் தோறும் (திசைகளில் உள்ளார் யாவர்க்கும்) கற்பிக்கைக்கு (எடுத்து உபதேசிக்க) * இனி (நீ) சற்று திருவுளம் வைத்துத் (தயை கூர்ந்து) உனது வெட்சிமாலை மணம் வீசுவதும் சிறிய சதங்கை அணிந்துள்ளதுமான அழகிய (திருவடித்) தாமரையை எனக்கு என்று அருள் புரிவாய்!

கனத்த பெரிய தொப்பைக்கு, எள், பொரி, அப்பம், பழம், கிழங்கு, கரும்பு, சர்க்கரை, தேங்காய், கடலை, கற்கண்டு இவைகளை வாரியுண்டு பிட்டுடன் விழுங்கும் திருவாயை உடையவர்-

சோற்றுத்திரளை உட்கொள்ளும் உயர்ந்த துதிக்கையை உடைய கற்பக விநாயகர், முக்கண்ணர் , விளங்கும் நமது வீரம் வாய்ந்த ஒற்றைக்கொம்பர் யானை முகத்தினர், அழகிய பொலிவுள்ள (மத்தகத்துப்) புள்ளிகளை உடைய மலையன் னவராம் கணபதியைப் பெற்ற-

அந்தணி (பார்ப்பனி) (1+8) நவசக்ரபீடத்துப்பெண், கவுரி, செவ்விய அழகிய பட்டாலாய மேலாடை அணிந்துள்ள பெண், பழையவளும் அண்டங்களைப் பெற்றவளுமாய மடப்பெண், தன்னைப் பணிவாருடைய

பிறப்பு என்னும் அலைகடலை விலக்கி நிறுத்தும் தேவி, ஏகாம்பரநாதரை அடைந்தவள் (மணந்தவளாம்) பார்வதி (காமாக்ஷி) தேவிக்கு அருகே அமைந்து வரம் பெற்று) (அல்லது அமைந்து தவப்பயனாய் இறைவரிடம் வரம் பெற்று) கச்சியில் நின்றருளும் பெருமாளே!

(சதங்கைப் பத்ம மெனக்கென் றருள்வாயே)

---

*தாம் பெற விரும்பிய உபதேசப் பொருளை உலகினர் யாவரும் அறியவேண்டும் என அருணகிரியார்க்கு உள்ள இந்த எண்ணம் அவருடைய கருணையைக் காட்டுகின்றது. "கருணைக்கு அருணகிரி" என்பதற்கு இது ஒரு சான்று.

## 457. பக்தனாக

தனதனந் தத்தத் தத்தன தத்தம
தனதனந் தத்தத் தத்தன தத்தம
தனதனந் தத்தத் தத்தன தத்தம தனதான

கறையிலங் குக்ரச் சத்தி தரிக்குஞ்
சரவணன் *சித்தத் துக்கு ளொளிக்குங்
கரவடன் கொற்றக் குக்குட வத்தன் தனிவீரக்-

கழலிடும் பத்மக் கட்செவி வெற்பன்
பழநிமன் **கச்சிக்** கொற்றவன் மற்றுங்
கடகவஞ் சிக்குக் கர்த்த னெனச்செந் தமிழ்பாடிக்;

குறையிலன் புற்றுக் குற்ற மறுக்கும்
†பொறைகள்நந் தற்பப் புத்தியை விட்டெடன்
குணமடங் கக்கெட்டுக் ‡குண மற்றொன் றிலதான-

குணமடைந் தெப்பற் றுக்களு மற்றுங்
Xகுறியொடுஞ் சுத்தப் பத்த ரிருக்குங்
குருபதஞ் சித்திக் கைக்கருள் **சற்றுங் கிடையாதோ;**

பிறைகரந் தைக்கொத் துப்பணி மத்தந்
தலையெலும் பப்புக் கொக்கிற கக்கம்
பிரமனன் றெட்டற் கற்ற திருக்கொன் றையும்வேணிப்-

---

* சித்தத்துள் ஒளிக்கும் கரவடன்

"உள்ளமெல்லாம் உள்கி நின்று ஆங்கே
உடனாடும் கள்ளம் வல்லான்" -சம்பந்தர் I-103 6.

† பொறைகள் நந்த அற்ப புத்தியை விட்டு எனப்பிரிக்க - நந்த விர்த்தியாக 'பொறைகள் நந்த' - பொறையின் பெருமையைப், "பொறைவாசி வசி வசம் கர மான் பட்டவா ஒளி சேர்ந்த பின்னே", என்னும் கந்தரந்தாதியிற் (84) காண்க.

‡ 'குணம் மற்றொன்றிலதான குணமடைந்து இந்நிலை பற்றி "குணமில் குணமே" என்பர் கடவுளை-சம்பந்தர் II-10-4

X குறி - இலக்கு, நோக்கம் - கடவுளே துணை என்னும் நோக்கம் "குணம் பொல்லேன் குறியும் பொல்லேன்' அப்பர் 6-95-9. "குறிக் கொண்டிருந்து இண்டை புனைகின்ற மாலை' - அப்பர் 4-99-4 'குறி கலந்த இசைபாடல்'- சம்பந்தர் I-2-1.

# 457.

ரத்தக்கறை விளங்கும் உக்ரம் பொருந்திய வேற்படையை ஏந்தும் சரவண மூர்த்தி, மனத்தில் ஒளிந்து கொண்டிருக்கும் திருடன், வீரம்வாய்ந்த கோழிக்கொடி ஏந்திய கையன், ஒப்பற்ற வீரக்

கழலை அணிந்துள்ள தாமரையன்ன திருவடியை உடையவன், பாம்பு மலையான் (திருச்செங்கோட்டு மலை யான்), பழநி அரசு, கச்சிவீரன், பின்னும் கங்கணம் (கைவளை) அணிந்த வஞ்சிக்கு (வஞ்சிக்கொடி போன்ற வள்ளிக்குத்) தலைவன் என்றெல்லாம் செந்தமிழ்ப்பாக்களைப் பாடி.

குறைவு பாடாத அன்பு பூண்டு குற்றங்களை விலக்க வல்ல பொறுமைக் குணம் சிறந்து மேம்பட அற்பமான புத்தியை ஒழித்து எனக்கு (இப்போது)உள்ள (தீய) குணங்கள் எல்லாம் கெட்டு , குணம் வேறு ஒன்று இல்லாததான

குணத்தை-(ஒரே நிலையான வேறு குணங்கள் கலக்காத சாத்விக குணம் ஒன்றையே, அடைந்து, எவ்விதமான பற்றுக்களையும் ஒழித்தும், கடவுட்குறி ஒன்றையே கருதும் பரிசுத்தமான பக்தர்கள் இருக்கும் பெருமை பொருந்தும் ஞானசாரிய நிலை (பதவி) எனக்குக் கை கூடுவதற்கு உனது திருவருள் சற்றேனும் கிடைக்காதோ!

நிலவு, கரந்தை (திருநீற்றுப்பச்சைக் கொத்துகள்), பாம்பு, ஊமத்தம், கபால எலும்பு, அப்பு (கங்கை நீர்), கொக்கின் இறகு ருத்ராக்ஷ மாலை, பிரமன் அன்று எட்டுதற்கு அரிதாக இருந்த அழகிய கொன்றை இவையெலாம் அணிந்த சடை.

*பிறவுநின் றொக்கத் தொக்கு மணக்குஞ்
சரணியம் பத்மக் கைக்கொடி †முக்கண்
பெறுகரும் ‡பத்தக் கத்தருள் நற்பங் கயவாவி

திறைகொளுஞ் சித்ரக் குத்து முலைக்கொம்
பறியுமந் Xதத்தைக் கைக்கக மொய்க்குந்
த்ரிபுரை Oசெம் பட்டுக் கட்டு நுசுப்பின்
திருவான-

தெரிவையந் துர்க்கிச் சத்தி யெவர்க்குந்
தெரிவருஞ் சுத்தப் பச்சை நிறப்பெண்
சிறுவதொண் டர்க்குச் சித்தி யளிக்கும்
பெருமாளே (7)

---

* பிறை முதலிய - மணக்கும் சரணி - சிவபிரான் தேவி திருவடியிற் பணிதலும், அவருடைய சடையிலிருந்த பிறை, நதி இவைகளின் மணம் நாறும் சீறடியாள் தேவி என்பதும்-

(1) 'கடிக்கொன்றைத் தேன்மணக்கும் பிறைநாறும் சீறடியைப் பாடுவனே" -மீனாட்சி குறம் 45

(2) "வெண்டிங்கள் செக்கர் மதியா** கங்கை வாணி நதியாச் சிவபிரான் மகுடகோடீரத் தடிச்சுவடழுத்தியிடு மரகதக் கொம்பு" மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் வருகை 5.

(3) மழுக்கொண்டு தற்கொண்ட தன் மகிணனோடுடி முடி மேல் மதியும் விண்ணதியும் ஓர் பருதியும் குருதியும் மானக் குழைந்த பஞ்சிச் சீறடித் தளிர்" "துணைமாலையம்மை பிள்ளைத் தமிழ்-54

"திங்கட் பகவின் மணநாறுஞ் சீறடி", அபிராமி அந்தாதி 35
† முக்கண்ணியைத் தொழுவார்க் கொரு தீங்கில்லையே"
அபிராமி அந்தாதி-101

‡ அத் (தக்கத்து) தக்கது அருள்(தேவி); தக்கது - சந்த நோக்கி 'தக்கத்து' என நிற்கின்றது 'தக்கது அருளுவாள் தேவி' என்பதை "ஆம் ஆங்கு தாய் மாண்பினள்" (அடியார்க்கு நல்லது எது ஆம் ஆகும் என்பதை அறிந்து உதவும் தாய்) -என வரும் வேல்வாங்கு வகுப்பிற் காண்க.

X தத்தை கைக்ககம் மொய்க்கும் - தேவி கையிற் கிளி உண்டு-

'பொருவரு பைங்கிளி தங்கிய செங்கைப் பொற்புயிர் ஓவியமே" திருவெண்ணிற்றுமை பிள்ளைத்தமிழ் - (தாலப்பருவம்-6)

O செம்பட்டுக் கட்டு - 456 - கீழ்க்குறிப்பைப் பார்க்க.

வேறும் சிரத்தில் இருந்தன - இவை விளங்கி ஒன்று சேர்ந்து கூடி மணம் வீசும் திருவடியை உடையாள், (சிவபிரான் தனது பாதத்தில் வீழ்ந்து வணங்குவதால் அவர் சிரசில் இருந்த எல்லாப் பொருள்களின் மணமும் தனது திருவடியிற் பொருந்தி வீசப் பெற்றவள், அழகிய தாமரைபோன்ற திருக்கரத்தை உடைய கொடிபோல்வாள், மூன்று கண்கள் கொண்ட கரும்பு போன்றவள், (அ தக்கது அருள்) அந்த தக்கதான பொருளை அருளும் (தனது அடியானுக்கு எது தக்கதோ அதை அறிந்து அருளுகின்ற) பெண், நற் பங்கயவாவி (நல்வாவிப் பங்கயம் - நல்ல திருக்குளத்துத் தாமரையையும்-

திறைகொளும் - கப்பங் கட்டச் செய்யும் - வென்று அடக்கும், அழகிய, குத்து (திரண்டு குவிந்த) கொங்கையைக் கொண்ட கொம்பு (போல்பவள், அறியும் (ஞானமுள்ள) அம் (அழகிய) தத்தை - கிளி, கைக்கு அகம் கையினிடத்தே மொய்க்கும் பயின்று இருக்கும், திரிபுரை *(சந்திரகண்டம், சூரியகண்டம், அக்கினி கண்டம் என்னும் முப்பிரிவையுடைய சக்கரத்துக்குத் தலைவி), செம்பட்டு ஆடை கட்டியிருக்கும் இடையை உடைய லக்ஷ்மீகரம் பொருந்திய

நங்கை, அழகிய துர்க்காதேவி, சத்தி, எவர்க்கும் தெரிதற்கு அரிதான சுத்தமான பச்சை நிறங்கொண்ட பெண் - ஆகிய பார்வதி தேவியின் பிள்ளையே! தொண்டர்களுக்குச் சித்தி (வீடுபேற்றை) அளிக்கும் பெருமாளே!

*(பத்தரிருக்கும் குருபதம் சித்திக்கைக்கு அருள் சற்றும்கிடையாதோ!)*

---

* அபிராமி அந்தாதி - (உரை) பக்கம் 5.

## 458. பரம்பொருளை அடைய

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

*செறிதரும் †செப்பத் துற்பல வெற்பும்
பிறிதுமங் கத்தைக் குற்ற விருப்புஞ்
சிகரிதுண் டிக்கக் கற்ற தனிச்செஞ் சுடர்வேலும்-

திரள்புயங் கொத்துப் பட்ட வனைத்துந்
தெளியநெஞ் சத்துப் புற்று மயக்கம்
திகழ்ப்ரபஞ் சத்தைப் புற்புத மொக்கும் படிநாடும்;

அறிவறிந் தத்தற் கற்றது செப்புங்
‡கடவுளன் பத்தர்க் கச்சம றுத்தன்
பருள்பவன் பொற்புக் **கச்சி**யுள் நிற்கும் பெருமானென்-

றவிழுமுன் புற்றுக் கற்றும னத்தின்
செயலொழிந் தெட்டப் பட்டத னைச்சென்
றடைதரும் **பக்வத் தைத்தமி** யெற்கென் **றருள்வாயே;**

Xகுறியவன் செப்பப் பட்ட எவர்க்கும்
பெரியவன் கற்பிக் கப்படு Oசுக்ரன்
குலைகுலைந் துட்கச் சத்ய **மிழற்றுஞ் சிறுபாலன்.

---

* இந்தத் திருப்புகழ் "கச்சி மேற்றளி" த் தலத்துத் திருப்புகழ்.

† செப்பத்து உற்பல வெற்பு - செங்கழுநீர்மலை - திருத்தணிகை.

‡ கடவுளன் - கடவுள்: குரு - குருவன் என்றது போல - 'வானோர் குருவனே போற்றி' - திருவாசகம் 5-68.

X குறியவன் - வாமநர் - திருமாலின் ஐந்தாவது அவதாரம் - இவர் மாவலியின் செருக்கை அடக்க அவனிடம் குறுகிய உருவுடன் சென்று மூவடி மண் வேண்டினர். அசுரகுரு சுக்கிரன் தடை செய்தும் கேளாது மாவலி மூவடி மண்ணைத் தானஞ்செய்து தாரை வார்க்கும்போது' சுக்கிரன் குண்டிகையினின்றும் நீர்விழாதவகை சிறுரூபியாய்க் குண்டிகையிலிருந்து தடைசெய்ய வாமநர் தர்ப்பையால் நீர்த்தாரை வரும்வழியைக் குத்தச் சுக்கிரன் ஒரு கண் பொட்டையாயினன். பின்பு, வாமநர் நீண்ட உரு (திருவிக்ரம ரூபம் கொண்டு மூவுலகை ஈரடியால் அளந்து, ஓர் அடியை மாவலி சிரத்தின்மேல் வைத்து அவனைப் பாதாளத்தில் அழுத்தி அங்குச் அங்குச் சகல போகங்களையும் அனுபவிக்கச் செய்தனர்.

Oபிரகலாதனுக்குப் பாடம் கற்பிக்கப் புகுந்த சுக்கிரன் இவ்வரலாற்றைப் பாடல் 327-1 (பக்கம் 317 -கீழ்க்குறிப்பிற் பார்க்க)

** மிழற்றல் - மேன்மையாகச் சொல்லல்.

**458**

நிறைந்து நெருங்கி மலரும் செம்மை வாய்ந்த செங்கழு நீர்மலை திருத்தணிகையும், பிறிதும் அங்கு அத்தைக்கு (அதற்கு) உற்ற - பின்னும் அங்கு அதனுக்கு (அதற்கு) உற்ற - (போன்ற) - (பின்னும் திருத்தணிகை போன்ற) பிற இருப்பும் (பிற ஸ்தலங்களும்), மலை (கிரிவுஞ்சகிரி) துண்டுபடச் செய்யவல்லதான ஒப்பற்ற செவ்விய ஒளி வேலும்-

திரண்ட புயங்கள் கொத்தாக உள்ளன யாவும் (பன்னிரண்டும்) தெளிதர நெஞ்சத்தில் துப்பு உற்று (அறிவு அடைந்து), மயக்கமே விளங்குகின்ற இவ்வுலகு நீர்க்குமிழியின் நிலையை ஒத்தது என்னும் தன்மையை ஆய்ந்து உணரும்-

அறிவை அறிந்து (அடைந்து), அத்தற்கு (தந்தையாம் சிவபிராற்கு) அற்றது - (ஒரு பற்றும் அற்றுத் தத்துவங் கடந்துநிற்கும் பொருளை)ச் செப்பும் (உபதேசித்த) கடவுளன் (இறைவன்) என்றும், பத்தர்களுடைய அச்சத்தை (பயத்தை) நீக்கி அன்பை அருளுபவன் என்றும், அழகிய கச்சியில் (காஞ்சியில்) நின்றருளும் பெருமான் என்றும், (கூறி)

நெகிழ்ந்துருகும் அன்பு பூண்டு, (திருவருளையே) கற்று, மனத்தின் தொழில் ஒழிந்து (மன ஒடுக்கம் உற்று-மனோலயம் பெற்று) அந்த நிலையில் எட்டப்படுவதான கிடைப்பதான) பொருளைப்போய் அடையும் பக்குவத்தை (ஆன்ம பரிபாகத்தை ) அடியேனுக்கு எப்போது அருளுவாய்.

குறளுருவம் எடுத்தவன் (வாமனாவதாரம் கொண்டவன்), சொல்லப்படும் எவரினும் பெரியவன், கல்வி கற்றுக் கொடுக்கவந்த சுக்ராசாரி உள்ளம் நடுநடுங்கி அஞ்ச உண்மையைச் சாதித்து மேலாகச் சொன்ன சிறு குழந்தை (பிரகலாதனுடைய)-

குதலையின் சொற்குத் தர்க்க முரைக்குங்
கனகனங் கத்திற் குத்தி நிணச்செங்
குடர்பிடுங் கத்திக் குற்ற முகச்சிங் கமுராரி;

பொறிவிடுந் துத்திக் கட்செவி யிற்கண்
துயில்கொளுஞ் சக்ரக் கைக் *கிரி சுத்தம்
புயலெனும் பொற்புப் பெற்ற நிறத்தன் ஜகதாதை

† புனிதசங் கத்துக் கைத்தல ‡ நிர்த்தன்
Xபழையசந் தத்தைப் பெற்ற மடப்பெண்
புகலு O கொண்டற்குச் சித்தி யளிக்கும்
பெருமாளே (8)

---

*கிரி என்றார் திருமாலை" பச்சைமா மலைபோல் மேனி"
-தொண்டரடிப்பொடியாழ்வார்.

† புனித சங்கம் - பாஞ்ச சன்னியம் - "இப்பி ஆயிரம் சூழ்ந்த திடம்புரி; இடம்புரி ஆயிரஞ் சூழ்ந்தது வலம்புரி; வலம்புரி ஆயிரம் சூழ்ந்தது சலஞ்சலம்; சலஞ்சலம் ஆயிரஞ்சூழ்ந்தது பாஞ்ச சன்னியம்' பிங்கலம்.

‡ நிர்த்தன் -காளிங்கன் என்னும் பாம்பின் மீது நிர்த்தனம் செய்த பிரான்- (பாட்டு 245-2-பக்கம் 114 கீழ்க்குறிப்பு)

X " பழைய சந்தத்தைப் பெற்ற மடப் பெண்" என்றது அரனுடைய சத்தியே அரி ஆதலால் அந்தப் பூர்வ நிலைமையைக் குறித்தது. இதை "அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே" "காவியங் கண்ண ளாகிக் கடல்வண்ண னாகி நின்ற தேவியைப் பாகம் வைத்தார் திருப்பயற் றூரனாரே" என்னும் தேவாரத்தானும் உணர்க. சத்தியின் ஒரம்சம் ரக்ஷ கிருத்தியத்தி னிமித்தம் தனது மாயாவல்லபத்தாற் புருஷரூபங் கொண்டுற்றதே மாயன் என்னும் விஷ்ணுவாம்.

"அக்கினியோடு உஷ்ணம் போலச் சிவத்தோடு அபின்னை யாய்ச் சகல கரும வாக்ஷிணியாயிருக்கும் சிவசத்தி - அபரை, பாரபரை பரை என முத்திறப்படும்/ அபரை - பிராமி, வைஷ்ணவி ரௌத்திரி என மூன்று விதப்படும். பிராமி ** சிருட்டித்தல்காரணமாகஇருப்பள்;வைஷ்ணவி** ரக்ஷித்தல் காரணமாக இருப்பள்; ரௌத்திரி - சங்கரித்தல் காரணமாக இருப்பள்."

-சைவ சமயநெறி (74)

(தொடர்ச்சி பக்கம் 27 பார்க்க)

மழலைச் சொல்லுக்கு (எதிர்த்துத்) தருக்கம் பேசின இரணியனுடைய உடலைக் குத்தி மாமிசம் நிறைந்த செவ்விய குடலைப்பிடுங்கித் (திக்குற்ற) திசைகளை எட்டின - மிகப்பரந்த முகத்தைக் கொண்ட சிங்க (நரசிங்க) முராரி (திருமால்)-

ஒளி வீசும் படப்பொறிகளை உடைய பாம்பு (ஆதிசேடன் மேல்) துயில் கொள்ளும் (தூங்கும்), (கிரி - மலை போன்றவன்), சக்கரத்தை ஏந்திய கையை உடைய மலை போன்றவன், பரிசுத்தமான மேகம் எனத்தக்க அழகு வாய்ந்த நிறத்த்வன், ஜகத்துக்கு (உலகுக்குத்) தந்தை

பரிசுத்தமான (சங்கம்) பாஞ்ச சன்னியம் என்னும் சங்கைத் திருக்கையிற்கொண்ட கூத்தன், பழைய சந்தத்தை (வடிவை)க் கொண்ட மடப்பெண், புகழப்படும் கொண்டல் ஆகிய (மேகநிறத் திருமா லுக்கு) வீடு பேறளித்த பெருமாளே!

*(பக்வத்தைத் தமியெற் கென்றருள்வாயே)*

---

*(26 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத்தொடர்ச்சி)*

O" கொண்டற்குச் சித்தியளிக்கும் பெருமாள்' என்றது, ஷண்முகக் கடவுள் திருஞானசம்பந்தராகத் திரு அவதாரஞ் செய்துற்ற காலத்திற் சிவ சாரூபம் வேண்டிக் கச்சியில் திருமேற்றளியில் தவஞ் செய்துகொண்டிருந்த விஷ்ணுமூர்த்திக்குச் (சம்பந்தர்) சிவ சாரூபம் அளித்த வரலாற்றைக் குறிக்கின்றது. "முத்தமிழ் விரகர் பாட்டலங்கலாற் பரஞ்சுடர் திருவுருப் பெற்றான்"- "முருகப்புத்தேள் அருள்விழிப் பாவை தன்னால் மேற்றளியில் முகுந்தனோர் இலிங்கமானான்"- காஞ்சிப் புராணம் - திருமேற்றளிப் படலம் (II) அந்தருவேதிப்படலம் (35).

-திருப்புகழ் 999- ஆம் பாடலையும் பார்க்க.

## 459. தொண்டு செய

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

அரியயன் *புட்பிக் கக்குழ மிக்கொண்
டமரர்வந் திக்கத் தட்டுரு வச்சென்
றவுணரங் கத்தைக் குத்திமு றித்தங் கொருகோடி-

அலகைநின் றொத்தித் † தித்தி யறுத்தும்
பலவியங் கொட்டச் ‡ சக்கடி கற்றந்
தரியுடன் பற்றிக் X குச்சரி மெச்சும் படிபாடிப்;

பரிமுகங் கக்கச் செக்கண் விழித்தும்
பவுரிகொண் டெட்டுத் திக்கை யுடைத்தும்
படுகளம் புக்குத் தொக்கு நடிக்கும் படிமோதிப்-

படைபொருஞ் சத்திப் பத்ம நினைத்துஞ்
சரவணன் கச்சிப் பொற்ப னெனப்பின்
பரவியுஞ் சித்தத் துக்கு வரத்தொண் டடைவேனோ;

O பெரியதண் **செச்சைக் கச்சணி வெற்பும்
சிறியவஞ் சிக்கொத் தெய்த்த நுசுப்பும்
ப்ரிதியொழிந் தொக்கக் †† கைக்கிளை
துத்தங்குரலாதி-

---

*புட்பிக்க - வாய்மலர்ந்து குறைகூற. † தித்தி யறுத்தல் - தாளச்சதி யறுத்தல். ‡ சக்கடி - நிந்தை, பரிகாசம்.

X - குச்சரி- ஒரு பண் - போர்க்களத்தில் பேய்கள் ஆடுவதும், பாடுவதும், வாத்தியங்கள் முழக்குவதும் - திருவகுப்பில் "பொருகளத் தலகை வகுப்பிற்" காணலாகும்.

O காஞ்சிநகர் - காமாட்சி தேவியின் தலமாதலின் தேவியின் வர்ணனை இத்தலத்துப் பல திருப்புகழிலும் காணலாம்.

** செச்சை - குங்குமக் குழம்பு

†† ஏழிசைகள்-குரல், துத்தம், கைக்கிளை, உழை; இளி விளரி, தாரம். குரல் ஏழிசையுள் முதலாவது; துத்தம்-சமனிசை, கைக்கிளை - காந்தார சுரம்; உழை - மத்திம சுரம்; இளி - பஞ்சம சுரம்: விளரி - நெய்தற்குரிய இரங்கற் பண்; தாரம் - நிஷாத சுரம்.

திருமாலும் பிரமனும் வாய் திறந்து தமது குறைகளை எடுத்துக்கூறவேண்டி ஒன்றுகூட, தேவர்கள் வணங்கி நிற்க, ஊடுருவிச் சென்று அசுரர்களுடைய உடலைக் குத்தியும் முறித்தும், அப்போது அவ்விடத்தில் ஒருகோடி

பேய்கள் நின்று, தாளம் போட்டும், தாளச்சதி அறுத்தும், பல வாத்தியங்களை முழக்கியும், பரிகாசப் பேச்சுக்களைப் பேசியும், துர்க்கையுடன் சேர்ந்து குச்சரி என்னும் ராகத்தை மெச்சி வியக்கும்படிப் பாடியும்

வடவா முகாக்கினி போலத் தீயை வெளிப்படுத்தும் சிவந்த கண்ணை விழித்தும், பவுரி (மண்டலமா யாடும் கூத்து வகையை) ஆடி, எட்டுத் திசைகளையும் அதிர்ச்சியுறச்செய்தும், (பிணங்கள் விழும்) போர்க்களத்தில் நுழைந்து, ஒன்று சேர்ந்து, நடனஞ் செய்யவும், (பகையாம் அசுரர்களைத்) தாக்கி-

எவ்விதமான படைகளையும் பொருது வெற்றி பெறவல்ல சத்திவேலை ஏந்தும் (பத்மம்) தாமரையன்ன திருக்கரங்களைத் தியானித்தும், சரவணன் என்றும், காஞ்சிமாநகர் அழகன் என்றும், பின்பு பலவாறு போற்றியும் இவ்வாறு பரவுதல் என் சித்தத்தில் உதிக்கும்படித் தொண்டுசெய்யும் பேற்றை அடைவேனோ!

பெரிய, குளிர்ந்த, குங்குமக்குழம்பு கொண்ட, ரவிக்கையணிந்த மலைபோன்ற கொங்கையும், நுண்ணிய வஞ்சிக் கொடி போல இளைத்த இடையும், ப்ரிதி ஒழிந்து ஒக்க (ப்ரிதி ஒக்க ஒழிந்து)-விருப்பம் முழுதும் ஒழிந்து ஓர் இசையில் தான் அதிக விருப்பம் என்னாமல் - எல்லா இசை வகைகளையும் ஒன்று போலப் பாவித்துக் - கைக்கிளை, துத்தம், குரல் முதலான-

பிரிவில்கண் டிக்கப் பட்ட வுருட்டும்
கமுகமுஞ் சிற்பச் சித்ர முருக்கும்
பிரதி *யண் டத்தைப் பெற்றருள் சிற்றுந்
தியும்நீலக்;

கரியகொண் டற்கொப் பித்த கதுப்புந்
திலகமுஞ் செப்பொற் பட்டமு † முத்தின்
கனவடங் கட்டப் பட்ட கழுத்துந் திருவான-

கருணையுஞ் சுத்தப் ‡ பச்சை வனப்புங்
கருதுமன் பர்க்குச் X சித்தி யளிக்குங்
கவுரியம் பைக்குப் புத்ர எவர்க்கும் பெருமாளே (9)

## 460. முருகன் கருணையை வியத்தல்

தனதனத் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

கனிதருங் O கொக்குக் **கட்செவி வெற்பும்
பழநியுந் தெற்குச் சற்குரு வெற்புங்
கதிரையுஞ் சொற்குட் பட்ட திருச்செந் திலும்வேலும்-

கனவிலுஞ் செப்பத் தப்பு மெனைச்சங்
கடவுடம் புக்குத் தக்கவ னைத்துங்
களவுகொண் டிட்டுக் கற்பனை யிற்கண்
சுழல்வேனைப்,

---

*தேவி அண்டங்களைப் பெற்றவள் - 'பெற்றாள் சக தண்டங் களனைத்தும் அவை பெற்றும் முற்றா முகிழ் முலையாள்" -வில்லிபாரதம் - தீர்த்த யாத்திரை 15. "உலகேழும் பெற்ற சீரபிராமி"- அபிராமி அந்தாதி - காப்பு

† முத்தின் கனவடம் - 'மெய்க்கே அணிவது வெண்முத்து மாலை' -அபிராமி அந்தாதி 37.

‡ பச்சை வனப்பு - " மண்களிக்கும் பச்சை வண்ணமுமாகி" அபிராமி அந்தாதி - 70.) X சித்திஅளிக்கும் கவுரி - 'பெறுவார் அழியா முத்தி வீடுமன்றோ" - அபிராமி அந்தாதி 15.

O கொக்கு - மாமரம். ** கட்செவி வெற்பு - நாக கிரி. பாடல் 367-ன் தலக்குறிப்பையும், 380-ன் கீழ்க்குறிப்பையும் பார்க்க.

பிரிவுகள் கொண்ட பகிர்தல் செய்யப்பட்ட உருட்டும் (புரளும் குரலிசையும்), (அல்லது - இசை நரம்புகளை வருடுதலும்), கமுகமும் (கமகமும்) ஸ்வரபேதமும், சிற்பத்தின் (சிற்ப நூலிற் சொல்லப்பட்ட) சித்திரம் (அழகையும்) உருக்கும் மெலியச் செய்ய வல்ல (அழகும்), பிரதி அண்டத்தை (ஒவ்வொரு அண்டத்தையும்) பெற்றருளியதுமான சிறு வயிறும், இருண்ட

கறுத்த மேகத்துக்கு நிகரான கூந்தலும், நெற்றிப் பொட்டும், செம்பொன் பட்டமும், முத்தின் சிறந்த மாலை கட்டப்பட்ட கழுத்தும், தெய்வத்தன்மை வாய்ந்த

கருணையும், சுத்தமான பச்சைநிற அழகும், தியானிக்கும் அன்பர்க்கு வீடுபேறு அளிக்கும் தன்மையும் கொண்ட கவுரி தேவிக்குப் புத்திரனே, எல்லார்க்கும் பெருமாளே!

(தொண்டடைவேனோ)

## 460.

பழத்தைத் தருகின்ற மாமரங்கள் நிறைந்த பாம்புமலை (சர்ப்பகிரியாம்) திருச்செங்கோட்டையும், பழநியையும், தெற்கில் உள்ள சற்குருமலையாம் சுவாமிமலையும், கதிர்காமத் தையும், புகழுக்கு இருப்பிடமான திருச்செந்தூரையும், வேலாயுதத்தையும்

கனவிலும் சொல்லி அறியாத என்னைச், சங்கடம் தரும் (இந்த) உடம்புக்கு (உடம்பின் சுகத்துக்கு) வேண்டிய சகல பொருள்களையும் கவர்ந்து - (திருட்டு) வழியிலாவது அடைந்து) கற்பனையிலே (கபட யோசனைகளிலேயே கருத்துக்களிலேயே) நோக்கம் கொண்டு சுழலும் என்னை-

புனிதனம் பைக்குக் *கைத்தல ரத்நம்
†பழையகங் கைக்குற் றப்புது முத்தம்
புவியிலன் றைக்கற்‡றெய்ப்பவர் வைப்பென் றுருகாஎப்-

பொழுதும் வந்திக்கைக் கற்ற எனைப்பின்
Xபிழையுடன் பட்டுப் பத்தருள் வைக்கும்
**பொறையையென் செப்பிச் செப்புவ தொப்பொன்
றுளதோதான்;**

O**அனனியம் பெற்றற் றற்றொரு பற்றுந்
தெளிதருஞ் சித்தர்க் குத்தெளி சிற்கொந்
தமலைதென் **கச்சிப்** பிச்சி மலர்க்கொந் தளபாரை-

அறவிநுண் பச்சைப் பொற்கொடி கற்கண்
டமுதினுந் தித்திக் கப்படு சொற்கொம்
பகிலஅண் டத்துற் பத்திசெய் முத்தின் பொலமேருத்;

---

* "கையால் எடுத்தணைத்துக் கந்தனெனப் பேர் புனைந்து" என்பது கந்தர் கலிவெண்பா; எனவே, தேவியின் "கைத்தல ரத்னம்" ஆயினன் முருகவேள்.

† முதலில் கங்கையில் வளர்ந்து விளையாடின பின்னரே பார்ப்பதி தேவி வந்தெடுத்தாராதலின் 'பழைய கங்கை' ஆயினள். பார்ப்பதி பின்னர் எடுத்தனள் குழந்தைகளை பார்ப்பதிக்குப் புதிதாகக் கிடைத்த காரணத்தால் 'புது முத்தம் ' ஆயினர்'.

‡ 'எய்ப்பவர் வைப்பு' -இளைத்தவர்க்கு உள்ள காப்பு நிதி "என்றன் வாழ்முதலே எனக்கு எய்ப்பில் வைப்பே" - திருவாசகம் (நீத்தல் 39).

X பிழையுடன் பட்டு - 'யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகி' -சுந்தரர் VII-51-10.

O பத்தருள் வைக்கும் பொறை-பத்தர் குழாத்தில் தன்னையுங் கூட்டி வைத்தாரே முருகவேள் என்று அருணகிரியார் மகிழ்வர்- "இடுதலைச் சற்றுங் கருதேனைப் போதமிலேனை யன்பாற் கெடுதலிலாத் தொண்டரிற் கூட்டியவா-வேலோன்", (கந்தரலங்காரம் 100)

பிழையுடன்பட்டுப் பத்தருள் வைக்கும் பொறை-இது அருணகிரியார் வரலாற்றைக் குறிக்கும் பகுதி.

** அனனியம் பெற்று -"ஒருத்தனாம் வகை"- என்ற கருத்து (பாடல் 173-பக்கம் 398)

புனித மூர்த்தி; தேவி பார்ப்பதியின் கையில் விளங்கும் ரத்நம், பழைய கங்காதேவிக்குக் கிடைத்த புது முத்தம், பூமியில் அன்றைக்கு அற்று (அல்லது, அன்று) எய்ப்பவர், (அன்றன்றைக் கென்று ஒன்றும் சேமித்து வைக்காது, இறைவன் திருவுளச்சம்மதம் என்று யாவற்றையும் விட்டு) இளைத்த பெரியோர்க்குச்- சேமப் பொருளாய் (காப்புநிதியாக) விளங்குபவன் என்றெல்லாம் கூறி உருகி, எல்லாப்-

பொழுதினிலும் (எப்போதும்), வணங்குதலே இல்லாத என்னை, (என்னிடம் உள்ள இக்குறைகள் எல்லாவற்றையும் நீ உணர்ந்த) பின்னும் என்னுடைய குற்றங்களைப் பொருட் படுத்தாது பொறுத்துச் சம்மதித்து என்னையும் உனது பக்தர் கூட்டத்துள் ஒருவனாக வைத்துள்ள உனது பொறுமையைக் (கருணையை) நான் என்ன சொல்லிப் புகழ்வது, (அந்த உனது கருணைக்கு) நிகர் (ஒப்பு) ஒன்று உள்ளதோதான் - (நிகரே - ஒப்பே) இல்லை என்றபடி.

அனனியம் பெற்று (அன்னியமின்மை-அத்துவைத நிலையைப்) பெற்று நீ நான் என்னும் இரண்டற்ற நிலையைப் பெற்று) அற்று அற்று ஒரு பற்றும் ( எவ்வித பற்றும் நன்றாக அற்றுப்போய்) தெளிவு அடைந்த சித்தத்தவர்கள் தெளிந்து உணர்ந்த அறிவுருவான அமலை- பூங்கொத்துக்கள் அணிந்த அமலை (மலமற்றவள், நிர்மலி)- அழகிய **கச்சிப்** பதியில் பிச்சிமலரை அணிந்துள்ள கொந்தளம் (கூந்தலை உடைய) பாரை (பரை-பராசக்தி)-

அறவி (அறச்செல்வி-புண்ணியவதி), நுண்ணிய பச்சை நிறமுள்ள அழகிய கொடிபோல்வாள் கற்கண்டு, அமுது இவையிரண்டினும் அதிகமாகத் தித்திக்கின்ற சொற்களை உடைய கொம்பனையாள் எல்லா அண்டங்களையும் தோற்று விக்கும் முத்து மேருமலை, பொன் மேருமலை (என்னத் தக்கவள்)

தனிவடம் பொற்புப் பெற்றமு லைக்குன்
றிணைசுமந் தெய்க்கப் பட்ட நுசுப்பின்
தருணிசங் குற்றுத் தத்துதி ரைக்*கம் பையினூடே

தவமுயன் றப்† பொற் றப் ‡ படி கைக்கொண்
டறXமிரண் டெட்டெட் டெட்டும் வளர்க்கும்
தலைவிபங் கர்க்குச் செத்ய முரைக்கும் பெருமாளே (10)

## 461. பிறப்பு போதும் போதும்

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

தசைதுறுந் தொக்குக் கட்டளை சட்டஞ்
சரிய*ʼ வெண் கொக்குக் கொக்க நரைத்தந்
தலையுடம் பெய்த்தெற் புத்தளை நெக்கிந் த்ரியமாறித்-

---

* கம்பையினூடே தவ முயன்றது:- 'உமை நங்கை வழிபடச் சென்று நின்றவா கண்டு வெள்ளங்காட்டி வெருட்டிட வஞ்சி வெருவியோடித் தழுவ வெளிப்பட்ட கள்ளக்கம்பனை" சுந்தரர் VII-61-10. "அரிய தவமுற்றுக் கச்சியினில் உறமேவும் புகழ் வனிதை" -திருப்புகழ் 899.

† பொற்ற - சிறந்த, நல்ல; "பொற்ற சுண்ணமெனப் புகழ்ந்தார்"; - சிந்தாமணி-885.

‡ படி-இருநாழி நெல். படி கைக்கொண்டதைக் காஞ்சிப் புராணம்- தழுவக்குழைந்த படலத்திற் காண்க. படி கைக்கொண்டு 32 அறம் வளர்த்தது;- "இச்சைப்படி தன்பேரறம் எண்ணான்கும் வளர்க்கும் பச்சைக் கொடி" வில்லிபாரதம் அருச்சுனன் தீர்த்தயாத்திரை-13. "இருநாழி நெலாலறம் எப்போதும் பகிர்வாள்'- திருப்புகழ் 812. "ஐயன் அளந்த படியிரு நாழிகொண் டண்ட மெல்லாம் உய்ய அறஞ் செயும் உன்னை' அபிராமி அந்தாதி 57.

X இரண்டெட்டு + எட்டு + எட்டு 32. 'எண்ணான் கறத்தினைப் போற்றி யாதி பீடத்தில் வீற்றிருக்கும் உமையமர் காமக் கோட்டி" கந்த புராணம் திருநகரம் 78 புண்ணியத் திருக்காமகோட்டத்துப் பொலிய முப்பதோ டிரண்டறம் புரக்கும்" பெரியபுராணம்- திருக்குறிப்புத் தொண்டர்-71. 32 அறங்களாவன -1. ஆதுலர்க்குச் சாலை, 2 ஓதுவார்க்கு உணவு 3 அறுசமயத்தார்க்கு உண்டி, 4 பசுவுக்கு வாயுறை, 5 சிறைச் சோறு, 6 ஐயம், 7 தின்பண்டம் நல்கல், 8 அறவைச் சோறு, (அநாதர்க்கு அளிக்கும்

ஒப்பற்ற மணிவடத்தின் அழகு பெற்ற கொங்கை மலையைச் சுமந்த அதனால் இளைத்து நிற்கும் இடையை உடைய இளமைப் பருவத்தினள்; சங்குகள் பொருந்தித் ததும்பிப் பரவிச் செல்லும் அலைகளை உடைய கம்பை ஆற்றுக்கு அருகே-

தவம் செய்து அந்த சிறப்புள்ள படியை கையிற் கொண்டு அறம் இரண்டு எட்டு *(16)*, எட்டு *(8)*, எட்டும் *(8)* - முப்பத்திரண்டையும் வளர்த்த தலைவி -(காமாட்சி தேவி)யின் பங்காளராம் சிவபிரானுக்கு O மெய்ப்பொருளை உபதேசித்த பெருமாளே.

*(உன் - பொறையை என் செப்பிச் செப்புவது)*

# 461.

மாமிசமும் நெருங்கிய தோலும் அளந்து வைக்கப்பட்ட கட்டடம் (கூடு) தளர்ந்துபோக, (மயிர்) ** வெண்ணிறமுடைய கொக்கு போல நரைத்து, அழகிய தலை, உடம்பு (எல்லாம்) இளைத்துப் போய், எலும்புக் கட்டுகள் நெகிழ்ச்சியுற்று, இந்திரியம் (ஐம்பொறிகளும் - மெய், வாய், கண், மூக்கு, செவி) இவைகளின் தொழில்கள் மாற்றம் அடைந்து,

---

உணவு), 9. மகப்பெறுவித்தல், 10 மகவு வளர்த்தல், 11. மகப் பால் வார்த்தல் 12. அறவைப் பிணஞ் சுடுதல், 13. அறவைத் தூரியம் (அநாதர்க்கு அளிக்கும் உடை தூரியம் - நல்லாடை) 14. சுண்ணம், 15. நோய்க்கு மருந்து, 16. வண்ணார், 17. நாவிதர், 18. கண்ணாடி, 19. காதோலை, 20. கண் மருந்து, 21. தலைக் கெண்ணெய், 22. பெண் போகம், 23. பிறர் துயர் காத்தல், 24. தண்ணீர்ப் பந்தல், 25. மடம், 26. தடம், 27. சோலை, 28. ஆவுரிஞ்சுதறி, 29. விலங்கிற்கு உணவு, 30. ஏறு விடுத்தல், 31. விலைகொடுத்து உயிர்காத்தல், 32. கன்னிகாதானம்.

O சத்தியம் - மெய்ப்பொருள் - " யான்தான் எனுஞ்சொல் இரண்டுங் கெட்டாலன்றி யாவருக்கும் தோன்றாது சத்தியம்"

- கந்தர் அலங்-95

** " தலைமயிர் கொக்குக் கொக்க நரைத்து" -திருப்புகழ் 447.

தடிகொடுந் திக்குத் தப்ப நடக்கும்
தளர்வுறுஞ் சுத்தப் பித்த விருத்தன்
தகைபெறும் பற்கொத் துக்க ளனைத்துங் கழலாநின்;

றசலருஞ் செச்செச் செச்செ யெனச்சந்
ததிகளும் சிச்சிச் சிச்சி யெனத்தங்
கரிவையும் துத்துத் துத்து வெனக்கண் டுமியாமற்-

றவருநிந் திக்கத் தக்க பிறப்பிங்
*கலமலஞ் செச்சைச் சித்ர மணித்தண்
டையரவிந் தத்திற் புக்கடை தற்கென் றருள்வாயே;

குசைமுடிந் தொக்கப் †பக்கரை யிட்டெண்
டிசையினுந் தத்தப் ‡புத்தியை நத்துங்
குரகதங் கட்டிக்கிட்டி நடத்துங் Xகதிர்நேமிக்-

குலரதம் புக்O கொற் றைக்கணை யிட்டெண்
டிரிபுரஞ் சுட்டுக் கொட்டை பரப்புங்
குரிசில்வந் திக்கக் **கச்சி**யில் நிற்குங் கதிர்வேலா;

திசைமுகன் தட்டுப் பட்டெழ **வற்குஞ்
சிகரியுங் குத்துப் பட்டு விழத்தெண்
டிரை ††யலங் கத்துப் புக்குல விச்சென் றெதிரேறிச்-

சிரமதுங் கப்பொற் கட்டிகை யிட்டன்
றவுணர்நெஞ் சிற்குத் திக்கறை கட்கஞ்
சிதறிநின் றெட்டிப் பொட்டெழ வெட்டும்
பெருமாளே.(11)

---

* அலம் அலம் - போதும் போதும்
† பக்கரை - அங்கவடி.
‡ புத்தியை நத்துங் குரகதம் - வேதப் பரி.
X கதிர்நேமி - சூரியசந்திரர்களாகிய சக்கரம்.
O ஒற்றைக்கணை - "ஓரம்பே முப்புரம் உந்தீபற" திருவாசகம்
** வற்கும் - வலிமைகொள்ளும்.
†† அலங்கம் - கொத்தளம்.

தடி கொண்டு திசைதடுமாறி நடக்கும்படியாக தளர்ச்சியை அடையும் சுத்தப் பித்தம் கொண்ட கிழவனாய், அழகு பெற்றிருந்த பல் வரிசைகள் முழுமையும் கழன்று போய்,

அயலாரும் சே சே சே என்று (இகழ)ப், பிள்ளைகளும் சீ சீ சீ என்று (பரிகசிக்க), உடன் தங்கும் (இருக்கும்) பெண்களும் தூ தூ தூஎன்று (அவமதிக்க)ப், பார்த்தவுடன் (அவமதித்து) உமிழ்ந்து (துப்பிப்) பிறர்

யாவரும் நிந்திக்கத் தக்கதான (இந்த) பிறப்பு இங்கு போதும் போதும்; வெட்சி மலர் அணிந்த ரத்னத்தாலாய தண்டை அணிந்த தாமரைத் திருவடியைப் பற்றிச் சேர்வதற்கு என்றைய தினம் அருளுவாய்.

குசை (கடிவாளம்) இட்டு, நன்றாக அங்கவடி சேர்த்து, எட்டுத் திக்கிலும் தாவிச்செல்லும் அந்தப் புத்தியை (ஞானத்தை) விரும்பும் குதிரையைப் பூட்டி, (வேதங்களாகிய குதிரைகளைப் பூட்டி), நெருங்கி நடத்தும் (சுதிர்) சூரிய சந்திரர்களாகிய சக்கரம் கொண்ட

சிறந்த தேரில் ஏறி, அமர்ந்து, ஒரே அம்பை எய்து, மதிக்கத்தக்க திரிபுரங்களை எரித்து அடியோடும் அழித்துத் தமது வெற்றியைப் பரப்பிய தலைவர் வணங்கக் கச்சியில் நிற்கும் கதிர்வேலா!

பிரமனும் தடைபட்டு நிற்கும்படி - வலிமை வாய்ந்திருந்த மலை (கிரௌஞ்சம்) (வேலாற்) குத்துப்பட்டு விழுந்து அழிய, தெள்ளிய திரைகள் வீசும் கடலையும், கொத்தளத்தையும் (மதிலுறுப்புக்களையும்) தாண்டி உலவிச் சென்று, (பகைவர்களை) எதிர்த்து வென்று

சிரம் (அசுரர்களுடைய) தலைகள், அதுங்க - அமுங்கி (நாசமடைய), பொலிவுள்ள கண்கள் - (திசையிட்டு) (திசையில்) பிரமிப்பு அடைய, அன்று அசுரர்களின் நெஞ்சிற் குத்தி, அவர்கள் கையிலிருந்த ரத்தக்கறை கொண்ட வாளாயுதங்கள் சிதறிப் போய்த் தூரத்திற் பொடிபட்டு விழும்படி அவர்களை வெட்டிய பெருமாளே!

(தண்டை அரவிந்தத்திற் புக்கடைதற்கென் றருள்வாயே)

## 462. நினைக்க

தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம்
தனதனந் தத்தத் தத்தன தத்தம் தனதான

புரைபடுஞ் செற்றக் குற்ற மனத்தன்
தவமிலன் சுத்தச் சத்ய அசத்யன்
புகலிலன் சுற்றச் செத்தையுள் நிற்குந் *துரிசாளன்-

பொறையிலன் கொத்துத் தத்வ விகற்பஞ்
சகலமும் பற்றிப் பற்றற நிற்கும்
பொருளுடன் பற்றுச் சற்றுமில் வெற்றன் கொடியேனின்;

கரையறுஞ் சித்ரச் சொற்புகழ் கற்குங்
கலையிலன் கட்டைப் புத்தியன் மட்டன்
கதியிலன் செச்சைப் பொற்புய வெற்புங் கதிர்வேலுங்-

கதிரையுஞ் †சக்ரப் பொற்றையு மற்றும்
பதிகளும் பொற்புக் கச்சியு முற்றுங்
கனவிலுஞ் சித்தத் திற்கரு திக்கொண் டடைவேனோ;

---

* துரிசு - துக்கம் (பிங்கலம்)

† சக்ரப் பொற்றை - சக்கரவாளகிரி; சக்கரம் - பூமி (பிங்கலம்), பொற்றை - மலை; பூமியிலுள்ள மலைகள்; சக்கரம் பாம்பின் படம் என்னும் - பொருளில் சக்ரப் பொற்றை-திருச்செங்கோடு (சர்ப்பகிரி)

# 462.

குற்றத்துக்கு இடமான தணியாக் கோபம் முதலான பல குற்றங்களைக் கொண்ட மனத்தை உடையவன், தவம் என்பதே இல்லாதவன், கலப்பிலாத உண்மை நிறைந்த அசத்யன் (பொய்யன்), கதியற்றவன் (திக்கற்றவன்), சுழற்சியுறும் குப்பை போல நிற்கின்ற துக்கம் கொண்டவன்

பொறுமையில்லாதவன், பலதிறப்பட்ட உண்மைகளின் வேறுபாடுகளான எல்லாவற்றையும் பற்றி நின்றும், பற்று இன்றி நிற்கின்ற பொருளான மெய்ப் பொருள்மேல் பற்று கொஞ்சமேனும் இல்லாத பயனலி, பொல்லாதவன்-உனது

கரையற்ற (எல்லையில்லாத) அழகிய சொற்புகழாகிய (சொற்களால் அமைந்த புகழ் நூலாகிய) தேவாரத்தை (அல்லது - அழகிய, சொல்லத்தக்க புகழைக்) கற்கும் கலை ஞானம் இல்லாதவன், கட்டைப் புத்தி உடையவன் (மழுங்கின அறிவு உடையவன்), மட்டன் (மூடன்), நற்கதி அடையும் பேறு இல்லாதவன் - இத்தகைய நான் உனது - வெட்சிமாலை அணிந்த அழகிய புயமலைகளையும், ஒளி வீசும் வேலாயுதத்தையும்-

கதிர்காமத் தலத்தையும், சக்கரம் (பூமியில் உள்ள), பொற்றையும் (மலைகளையும்)- அல்லது சக்ரவாளகிரி யையும்) மற்றுமுள்ள தலங்களையும், அழகு வாய்ந்த **கச்சிப்பதியையும்**, ஆகிய உனது இருப்பிடங்கள் எல்லா வற்றையும், கனவிலும் மறவாது எனது சித்தத்தில் தியானித்துக் கொண்டு உன்னை அடைய மாட்டேனோ!

குரைதருஞ் சுற்றுச் *சத்தச முத்ரங்
கதறிவெந் துட்கக் †கட்புர துட்டன்
குலமடங் கக்கெட் டொட்டொழி யச்சென் றொரு‡நேமிக்-

குவடொதுங் கச்சொர்க் கத்த ரிடுக்கங்
கெடநடுங் கத்திக் கிற்கிரி வர்க்கங்
குலிசதுங் கக்கைக் Xகொற்றவ னத்தங் குடியேறத்;

தரைவிசும் பைச்சிட் டித்த இருக்கன்
சதுர்முகன் சிட்சைப் பட்டொழி யச்○சந்
ததமும்வந் திக்கப் பெற்றவர் தத்தம் பகையோடத்-

தகையதண் டைப்பொற் சித்ர விசித்ரந்
தருசதங் கைக்கொத் தொத்து முழக்குஞ்
சரணகஞ் சத்திற் பொற்**கழல் கட்டும் பெருமாளே. (12)

## 463. கழல் அன்பொடு பகர

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தனதான

சலமலம் விட்டத் தடம்பெ ருங்குடில்
சகல வினைக்கொத் திருந்தி டும்படி
சதிர வுறுப்புச் ††சமைந்து வந்தொரு தந்தைதாயும்-

---

*சத்த சமுத்திரம் - "அம்பு ஏழும் சூரும் போய் மங்கப் பொரு கோபா" திருப்புகழ்-43. " வளைகடல் கதற மலையொடு பொருத மழுச் சேவகனே'- சேவகன் வகுப்பு † கட்புரம்... கண் புரம்-கண்-பெருமை (திவாகரம்) 'கண்ணார் கழுக்குன்றம்' சம்பந்தர் - 2-39-2. புரம்-ராசதானி கண்புரம்... பெருமை தங்கிய வீரமகேந்திரம் (சூரன் ஊர்), கள்புரம் கள். களவு, புரம்- உடல் வஞ்சக உடல். ‡ நேமிக்குவடு... சக்ரவாளகிரி-சக்ரகிரியுங் குலைய விக்ரம நடம் புரியும் மயில்' - திருப்புகழ் 354 , X கொற்றவன் நத்தும் எனப்பிரிக்க. ○சந்ததமும் வந்திக்கப் பெற்றவர்... தேவர்கள். வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் மனம் நின்பால் தாழ்த்துவதும் தாமுயர்ந்து தம்மையெல்லாம் தொழவேண்டி திருவாசகம்சதகம்-16.

**முருகன் பூஙகழல் கட்ட... கடல் உட்கிற்று, துட்டன் குலமடங்க ஒழிந்தான். நேமிக்குவடு ஒதுங்கிற்று, சொர்க்கத்தர் துன்பு ஒழிந்தனர், திக்கிலுள்ள மலைகள் நடுங்கின, இந்திரன் குடி ஏறினன், பிரமன்

(1) ஒலிக்கின்றதும், சுற்றியுள்ளதுமான ஏழு கடலும் கதறி, வெந்து, அஞ்ச (2) பெருமை தங்கிய வீர மகேந்திர புரத்திலிருந்த துஷ்டன், (அல்லது - கள்ளத்தனம் கொண்ட உடலமைந்த துஷ்டன்) - சூரன் தனது குலம் முழுமையும் கெட்டு (ஓட்ட)-அடியோடு ஒழிய (3) போய் ஒரு சக்ர

வாளகிரியும் ஒதுங்கி நிற்க, (4) சொர்க்க தலத்தில் (விண்ணுலகில்) இருந்தவருடைய துன்பம் தொலைய (5) நடுங்கத் திக்கிற் கிரி வர்க்கம் - திக்கில் உள்ள மலைக் கூட்டங்களெல்லாம் நடுக்கம் அடைய - (6) குலிசாயுதத்தை ஏந்திய கையை உடைய கொற்றவன் (அரசனாம் இந்திரன்) நத்தம்-தனது ஊரில் குடிபுக.

(7) மண்ணுலகையும் விண்ணுலகையும் படைத்த இருக்கு ஆதிய வேதம் வல்ல நான்முகன் தண்டனை அடைந்து விலக, (8) எப்போதும் வணங்கப்படுபவர்களாம் தேவர்களுடைய பகைவர்கள் ஓட்டம் பிடிக்க,

(9) அழகிய தண்டையும், பொன்னாலாய அழகிய விசித்திரமான சதங்கையும் (கிண்கிணித்) திரளும் தாள ஒற்றுமையுடன் ஒலி செய்யத், திருவடித் தாமரையில் பொலிவுள்ள வீரக் கழலைக் கட்டின பெருமாளே!

*(கச்சியும்... சித்தத்திற் கருதிக்கொண் டடைவேனோ)*

## 463.

ஜலம், மலம் இவைதமை விடுகின்ற மிகப் பெரிய குடிசையில், எல்லா வினைகளும் ஒன்று சேர்ந்து அமையும்படி வலிமைபெறப் பொருத்தப்பட்ட உறுப்புக்கள் (அவயவங்கள்) கூடிட மனக்களிப்புடன் ஒப்பற்ற தந்தையும் தாயும்-

---

தண்டனை உற்றான், தேவர்களின் பகைவர்கள் ஓடினர். தண்டையும் சதங்கையும் கழல் ஒலிக்கு ஒத்து ஒலித்தன. பூங்கழல் கட்ட என்றது முருகவேள் செயல் செயத்தொடங்க- எனப் பொருள்படும். " தேங்கிய அண்டத் திமையோர் சிறைவிடச் சிற்றடிக்கே பூங்கழல் கட்டும் பெருமாள்'- (கந்தர் அலங்-83)

†† சமைந்து உவந்து எனப் பிரிக்க.

(1) - (9) அஞ்ச, ஒழிய, நிற்க, தொலைய நடுக்கம் அடைய, குடிபுக, விலக, ஓட்டம் பிடிக்க, ஒலி செய்ய - கழல் கட்டும் எனமுடித்துப் பொருள் காண்க.

தரவரு பொய்க்குட் கிடந்த *கந்தலி
லுறையு முயிர்ப்பைச் சமன்து ரந்தொரு
† தனியி லிழுக்கப் படுந் ‡த ரங்கமும்வந்திடாமுன்;
பல X வுரு வத்தைப் பொருந்தி யன்றுயர்
படியு நெளிக்கப் படர்ந்த O வன்கண
படமயில் புக்குத் துரந்து கொண்டிகல் வென்றிவேலா-
பரிமள மிக்கச் சிவந்த நின்கழல்
பழுதற நற்சொற் றெரிந்து அன்பொடு
பகர்வதி னிச்சற் றுகந்து தந்திட வந்திடாயோ;
**சிலையு மெனப்பொற் சிலம்பை முன்கொடு
சிவமய மற்றுத் திடங்கு லைந்தவர்
திரிபுர மத்தைச் சுடுந்தி னந்தரி ††திண்கையாளி-

---

*கந்தல் - 'மாலினா லெடுத்த கந்தல்' திருப்புகழ் 786.

†தனியில் இழுக்கப்படும் தரங்கம் - என்பது உயிர்போமத் தனிவழிக்கே' என்ற கந்தர் அலங்காரத்தை (59) நினைவூட்டும்

‡ தரங்கம் மனக்கலக்கம். 'தரங்கம் எய்திச் சனங்களெல்லாம் இரிஇ'- கந்த புராணம் - 3-15-78

" உரங்கிளர் சூரனென் றொருபேர் பெற்ற நீ
தரங்கம தடைவதுந் தலைமைக் கேற்பதோ".
இரங்கலை இரங்கலை" -கந்தபுராணம் - 3-20-16.

X உருவம் - வர்ணம்; மயில் தோகை பல வர்ணங்களைக் கொண்டது 'பலநிறம் மிடைந்த விழுசிறை யலர்ந்த பருமயில்" - திருப்புகழ் 164. இங்கு 'மயில்' என்றது மயிலான இந்திரனைக் குறிக்கின்றது. இந்த மயிலில் ஏறித்தான் சூரனுடன் முருகவேள் பொருதது.

"இந்திரன் .. சுந்தர நெடுங்கட் பீலித் தோகைமா மயிலாய்த்
தோன்றி, வந்தனன் குமரற் போற்றி மரகத மலைபோல் நின்றான்"
"படர்சிறை மயூர மாகி முன்னுறு மகவான் தன்மேல்
மொய்ம்புடன் புக்கு வைகி... ஊர்தலுற்றான்"

- கந்தபுராணம்

4-13-378- 382; திருப்புகழ்ப் பாடல் 447-பக்கம் 624 பார்க்க.

O வன்கணபடமயில் - அச்சந்தரும் படம் (பாம்பை)க் கொண்ட மயில் எனலுமாம்

(தொடர்ச்சி 43-ஆம் பக்கம் பார்க்க.)

சேர்ந்து அளிக்க (உண்டாகின்ற) பொய்யிலேயே கிடந்த கந்தலில் (கந்தையில் - கிழிபட்ட துண்டில் அழிந்து போகும் உடலில்) இருக்கும் மூச்சை - (சுவாசத்தை) யமன் ஓட்டிச் செலுத்த ஒரு தனியான வகையில் (ஒரு கோரமான வகையில்) இழுக்கும் (அல்லது - பிராணவாயுவை ஒரு தனி வழியில் இழுத்துக்கொண்டு போகும்போது உண்டாகும் தரங்கம் (மனக்கலக்கம்) வந்து கூடாமுன்-

பலவித நிறங்களைப் பொருந்தியதும், அன்று போர்களத்திற் சிறந்த பூமியும் நெளியச் சென்றதுமான, வலிமை வாய்ந்த பீலிக் கண்களை உடைய படம் (தோகையாம்) போர்வையை உடைய மயிலில் ஏறிச் செலுத்திச் சென்று போரினை வென்ற வேலனே!

நறுமணம் மிகுந்து பெருகும் சிவந்த உனது திருவடியை எவ்வகைக் குற்றமுமில்லாத நல்ல சொற்கள் கொண்டு அறிந்து அன்புடனே, சொல்லும்படியான பாக்கியத்தை இனிச் சற்று (நீ) மகிழ்ந்து உதவ வரமாட்டாயா!

சிலையும் என (வில் என்று) பொற்சிலம்பை (பொன் மலையாம் மேருவை, முன் கையிற்கொண்டு, சிவ வழிபாட்டைக் கைவிட்டுத் தமது சக்தி குலைந்த அசுரர்களைத், திரிபுரத்தை எரித்த அந்த தினத்தில் தரித்த (வில்லாக மலையைத் தரித்த) திண்ணிய (வலிய) திருக்கரத்தைக் கொண்டவள்-

---

*(42 - ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

**திரிபுரம் எரித்த வரலாறு பாடல் 285 பக்கம் 206 கீழ்க்குறிப்பு

†† சிலைபிடித்த கை தேவியின் கை ஆதலின், திண்கையாளி என்பது தேவியை . குவடு குனித்துப் புரஞ்சுடுஞ்சினவஞ்சி நீலி'..... திருப்புகழ் 464. 'குலவரை தனுவென புரம் நொடியினில் எரி செய்த அபிராமி'- திருப்புகழ் 304 'திரிபுரம் மாண்டு நீறெழ மலைசிலை ஒரு கையில் வாங்கு நாரணி- திருப்புகழ்-507.

திருமகள் கச்சுப் பொருந்தி டுந்தன
தெரிவை யிரக்கத் துடன்பி றந்தவள்
திசைகளி லொக்கப் படர்ந்தி டம்பொரு கின்றஞானக்;

கலைகள ணைக்கொத் தடர்ந்து வம்பலர்
*நதிகொள கத்திற் பயந்து கம்பர்மெய்
கருக † இடத்திற் கலந்தி ருந்தவள் கஞ்சபாதங்

கருணை மிகுத்துக் கசிந்து ளங்கொடு
கருது மவர்க்குப் பதங்கள் தந்தருள்
‡ கவுரி திருக்கொட் டமர்ந்த இந்திரர் தம்பிரானே. (13)

## 464. அறிவைப் பெற

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தனதான

Xதலைவலை யத்துத் தரம்பெ றும்பல
புலவர் மதிக்கச் சிகண்டி குன்றெறி
தருமயில் செச்சைப் புயங்க யங்குற வஞ்சியோடு.

---

*கம்பை நதிக்கரையில் தேவி மணலால் இலிங்கம் தாபித்துப் பூசிக்கும்போது, தேவியின் பூசையில் மகிழ்ந்து சிவபிரான் தேவியின் அன்பைச் சோதிக்க வேண்டிக், கம்பை நதியில் வெள்ளம் பெருகச் செய்தனர். லிங்கத்துக்கு ஊறு வருமென அஞ்சித் தேவி லிங்கத்தை இறுகத் தழுவ அவள் தவத்துக்குக் குழைந்து இரங்கி வெள்ளத்தை இறைவன் தடுத்தனர். அங்ஙனம் தழுவினதால் லிங்கத்தில் தேவியின் வளைத் தழும்பும் கொங்கைத் தழும்பும் பதிந்தன. பின்னர் தேவி வேண்டின வண்ணம் தேவியை இறைவன் மணம் செய்து கொண்டனர் இது 'கவுரி கல்யாணம்' என வழங்கும். இதன் விரிவைக் காஞ்சிப் புராணம் தழுவக் குழைந்த படலத்திலும் பெரிய புராணம் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணத்திலும் காணலாகும். *460 ஆம் பாடல்* உரைக் குறிப்பையும் பார்க்க.

† தேவி இடப்பாகம் பெற்றது - பாடல் *301*-பக்கம் *246* கீழ்க் குறிப்பு.

‡ கவுரி திருக் கொட்டு என்றதனால் இந்தத் திருப்புகழும் அடுத்த பாடலும் காஞ்சி காமாக்ஷி அம்மை திருக்கோயிலில் உள்ள முருகவேளுக்கு உரியனவாம் என்க. கொட்டு கோட்டம் ; அம் ஈறு கெட்டு முதல் குறுகிற்று கோட்டம் கோயில் 'கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும் " *-சிலப்பதி14-10* உமையமர் காமக்கோட்டி' -கந்த புராணம் -திருநகரம் *78.*

Xதலைவலையம்-முதல்எல்லை-முதல்வகுப்பு

அழகிய தேவி, ரவிக்கை பொருந்திய கொங்கைகளைக் கொண்ட மாது, கருணையுடனே தோன்றியவள். திசைகள் எல்லாவற்றினும் வியாபித்து இடங்கொண்ட ஞானக்

கலைகள் (நூல்கள்) அணைந்த கொத்து (திரள்) திரண்ட கலை நூல்களனைத்தையும் , அடர்ந்து (நிரம்பப் பழகி) வம்பு அலர் (புது மலர்களை) நதிகொள் அகத்தில் (கொள் நதி அகத்தில்) கொண்ட கம்பை நதிக் கரையகத்தே, பயந்து (அந்தக் கம்பை நதியின் வெள்ளத்தைக் கண்டு பயந்து) கம்பர் (ஏகாம்பரநாதரது சிவந்த) மெய் (உடல்), கருக (தனது) கருநிறத்தை ஏற்றுக் கொள்ளும்படி இடத்திற் கலந்திருந்தவள் (இடது பாகத்திற் கலந்திருந்த தேவி), தனது தாமரைத் திருவடியை-

அம்பு மேலிட்டுக் கசிந்த உள்ளத்தோடு தியானிக்கும் அவர்க்கு (அடியார்களுக்கு) பதங்கள்-மேலான பதவிகளைத் தந்தருளுகின்ற **கவுரியம்மை** ஆகிய தேவியின் (திருக்- கொட்டு) - **திருக்கோயிலில்** வீற்றிருக்கின்ற பெருமாளே! தேவேந்திரர் தம் பெருமாளே!

(நின்கழல் பகர்வது.....தந்திட வந்திடாயோ)

## 464.

முதல் எல்லையில் (வகுப்பில்) வைக்கத் தக்க தகுதி (மேன்மை) பெற்றுள்ள புலவர்கள் போற்றித் துதிக்க, உனது மயிலையும், (கிரௌஞ்ச) மலையைப் பிளந்து (எறிதரும்) எறிந்த அயில் (வேலையும்), வெட்சிமாலை அணிந்த புயங்களையும் கயவஞ்சி (யானை வளர்த்த தேவசேனை -யையும்), குறவஞ்சி (குறவர் வளர்த்த) வள்ளியையும்-

தமனிய முத்துச் சதங்கை கிண்கிணி
தழுவிய செக்கச் சிவந்த பங்கய
சரணமும் வைத்துப் பெரும்ப்ர பந்தம்வி ளம்பு *காளப்;
புலவ னெனத்தத் துவந்த ரந்தெரி
தலைவ னெனத்தக் கறஞ்செ யுங்குண
புருஷ னெனப்பொற் பதந்த ருஞ்சன னம்பெறாதோ-
பொறைய னெனப்பொய்ப் ப்ரபஞ்ச மஞ்சிய
துறவ னெனத்திக் கியம்பு கின்றது
புதுமை யலச்சிற் பரம்பொ ருந்துகை தந்திடாதோ;
குலசயி லத்துப் பிறந்த பெண்கொடி
யுலகடை யம்பெற் றவுந்தி † யந்தணி
குறைவற முப்பத் திரண்ட றம்புரி கின்றபேதை-
குணதரி ‡ சக்ரப் ப்ரசண்ட் சங்கரி
கணபண ரத்நப் Xபுயங்க கங்கணி
குவடு குனித்துப் புரஞ்சு டுஞ்சின வஞ்சிநீலி;
Oகலப விசித்ரச் சிகண்டி சுந்தரி
கடிய விடத்தைப் பொதிந்த கந்தரி
கருணை விழிக்கற் பகந்தி கம்பரி யெங்களாயி-

---

*காளப் புலவன் -(காளம் மேகம் போல) பெருமழைபோலக் கவிகளைச் சொரியவல்ல புலவன்; காளமேகப் புலவர் அருணகிரியார் காலத்திலோ அதற்குச் சில ஆண்டுகள் முன்னரோ இருந்தமையால் காளமேகத்தின் ஆசு கவித்திறம் அருணகிரியார்க்கு நன்கு தெரிந்திருக்கும்; ஆதலின் காளப்புலவன் என்ற போது காளமேகருடைய ஞாபகமும் அருணகிரியார்க்கு இருந்திருக்கும்).

† அந்தணி -அந்தணன் என்பதின் பெண்பால் - அபய வரம் புரி உபய கரம் திகழ் அந்தணி' வேல்வாங்கு வகுப்பு.,

‡ சக்ரப் ப்ரசண்ட சங்கரி - "சக்ர தலத்தி த்ரியக்ஷி" பூதவேதாள வகுப்பு. 'முக்கோணத் தானத்தாள் திருப்புகழ் 1126; திருப்புகழ் 456. பக்கம்-18-கீழ்க்குறிப்பைப் பார்க்க.

X புயங்க கங்கணி:- 'அழல்வாய் கான்றிடு நாகாங்கதை" வேல்வாங்கு வகுப்பு; நாக அங்கதை-பாம்பை அங்கதமாகப்புனைந்தவள். அங்கதம்-வாகுவலயம்; புயவளை; தோளணி.

O தேவியை மயில் என்றது. - 'இமய மயில்' சீர்பாத வகுப்பு; "இரண கிரண மடமயில்" - தேவேந்திர வகுப்பு. மேலும் மயிலாப்பூரிலும் மயிலாடுதுறை என்கின்ற மாயூரத்திலும் தேவி (பார்வதி) மயில் ரூபங்கொண்டு சிவபிரானைப் பூசித்தாள்.

பொன்னாலாய முத்துச் சதங்கை (கிண்கிணி) இவைகளைத் தழுவி மிகச் சிவந்த தாமரை மலர் போன்ற திருவடியையும் வைத்துப் பெரிய பாமாலைகளைப் பாட வல்ல காளமேகம் (கருமேகம்) போன்ற.

புலவன் இவன் என்று சொல்லும்படியும், உண்மை ஞானம் பெற்ற தலைவன் இவன் என்று கூறும்படியும், தக்க (சரியான) தருமங்களைச் செய்யும் குணத்தை உடைய (சற்) புருஷன் இவனென்று (உலகோர்) கூறும்படியும் மேலான பதத்தை (பதவியை-நிலையை)த் தருகின்றதான சனனம் (பிறப்பை) (இந்த ஆன்மா) பெறாதோ (நான் பெறேனோ!)

பொறுமை உடையவன் இவன் என்றும், பொய் உலகத்தைக் கண்டு பயந்த துறவி இவன் என்றும் திக்குகளில் உள்ளோர் (உலகோர்) சொல்வது ஓர் அதிசயம் அன்று; அறிவுக்கு மேம்பட்ட பெருநிலையைச் சேர்ந்து பொருந்தும் பேற்றை (நினது திருவருள்) தந்து அருளாதோ!

சிறந்த மலையாம் (இமயத்தில்) பிறந்த பெண்கொடி, உலகு எல்லாவற்றையும் ஈன்ற திருவயிற்றை உடைய அழகிய தட்பம் உடையாள் குளிர்ந்தகுணம் உடையாள்), குறைவு இல்லாத வகையில் முப்பத்திரண்டு அறங்களைச் செய்து வந்த தேவி-

நற்குணம் உடையாள், சக்ரம் (மந்திர யந்திரத்தில்) வீரத்துடன் விளங்கும் சங்கரி, கூட்டமான படங்களை உடையதும், ரத்ன (மணி) கொண்டதுமான பாம்பைக் கங்கணமாக (கைவளையாக) அணிந்தவள், மேரு மலையை வளைத்துத் திரிபுரத்தை எரித்த கோபங்கொண்ட வஞ்சி (வஞ்சிக்கொடி போன்ற தேவி), நீல நிறமுடையவள்,

கலப விசித்ரச் சிகண்டி (விசித்ரக் கலபச் சிகண்டி, விசித்திரமான தோகையைக் கொண்ட மயில் அனையாள்) (அல்லது மயில்ரூபம் கொண்டவள்), சுந்தரி, பொல்லாத விஷத்தை அடக்கி வைத்துள்ள கழுத்தை உடையவள், கருணை நிறைந்த கண்ணினள், கற்பகம் (போன்று வேண்டுவார்க்கு வேண்டுவதை அளிப்பவள்), திக்கே (அம்பரமாக) ஆடையாக உடையவள் (நிர்வாணி), எங்கள் ஆயி (தாய்)

கருதிய பத்தர்க் கிரங்கு மம்பிகை
சுருதி துதிக்கப் படுந்த்ரி யம்பகி
கவுரி திருக்கொட் டமர்ந்த இந்திரர்
தம்பிரானே. (13)

## 465. திருவடியைப் போற்ற

தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத்
தனத்தத்தத் தனத்தத்தத் தனதான

இதத்துப்பற் றிதழ்த்துப்பற் றிருட்பொக்கக் கருத்திட்டத்
தியக்கத்திற் றியக்குற்றுச் சுழலாதே-

எலுப்புச்சுக் கிலக்கத்தத் தடித்தொக்குக் கடத்தைப்பெற்
றெடுத்துப்பற் றடுத்தற்பத் துழலாதே;

*சுதத்தத்தச் சதத்தத்தப் பதத்தர்க்குற் றவற்றைச்சொற்
றுவக்கிற்பட் டவத்தைப்பட் டயராதே-

துணைச்செப்பத் தலர்க்கொத்துற்
பலச்செச்சைத் தொடைப்பத்திக்
கடப்பப்பொற் கழற்செப்பித் தொழுவேனோ;

---

*சுத தத் தத் சதத் அத்த பதத்தர் - அந்தந்த சத்தத்துக்கும் சுத்தமாகிய அர்த்தம் விசாரிக்கும் இலக்கணிகள்.

தன்னைத் தியானிக்கின்ற பக்தர்களிடத்தே இரக்கம் கொண்டுள்ள அம்பிகை, வேதம் துதிக்கும் முக்கண்ணி, கவுரியின் திருக்கோயிலில் (காமாட்சியம்மை கோயிலில்) வீற்றிருக்கும் தம்பிரானே! தேவேந்திரர்களின் தம்பிரானே!

(சிற்பரம் பொருந்துகை தந்திடாதோ)

## 465.

இதத்துடன் (இன்பத்துடன்) பற்று - பற்றுகின்ற இதழ் - வாயிதழின், துப்பு - நுகர்ச்சி (வாயூறலை அனுபவித்தலை), அற்று-நீங்கி, இருள் -இருண்ட, ( துன்பம் தரும்) பொக்கக் கருத்து - பொய்யான (வஞ்சகமான) எண்ணங்களில் , இட்டத் தியக்கத்தில் (இஷ்டம் வைத்ததனால்) வரும் சஞ்சலங்களால் (மயக்க அறிவால்) , தியக்கு உற்று (சஞ்சலம் அடைந்து. மயக்கம் அடைந்து) நான் சுழற்சி உறாமல்-

எலும்பு, சுக்கிலம் (இந்திரியம்) , கத்தம் (மலச்சேறு) , தடி (தசை - மாமிசம்) - தொக்கு - தோல் - (இவைகூடிய), கடத்தை உடம்பைப் பெற்றெடுத்து - அடைந்துகொண்டு, பற்று அடுத்த-பற்று (பாசம்) சேர்ந்துள்ள - தற்பத்து - பாவநிலையில் - பாவத்தில் - உழலாதே - அலைச்சல் உறாமல் - (அல்லது - பற்று அடுத்து அற்பத்து உழலாதே - பாசத்தைக்கொண்டு அற்பமான செயல்களில் அலைச்சல் உறாமல்)-

சுத-சுத்த சுத்தமான (தத் தச் சதத்து) தத்தத் சத்தத்து - அந்த அந்த சத்தத்துக்கும், அத்தம் - அர்த்தத்தை (விசாரிக்கும்) பதத்தர்க்கு - பத ஆராய்ச்சி செய்வோர்க்கு, உற்றவற்றை - உள்ளதை, சொல் - எடுத்துச் சொல்லும், துவக்கில்பட்டு -கட்டிலே (தொடர்- பிலே) சிக்குண்டு, அதனால் அவஸ்தைப்பட்டு (வேதனைப் - பட்டு) சோர்வு அடையாமல்-(சொல் ஆராய்ச்சியாற் சோர்வுறாமல்) -

துணைச் செப்பத்து - செப்பத்து துணை (செப்பம்) செவ்வையான தன்மை (துணை) கூடிய-அலர்க் கொத்து - பூங்கொத்துக்களும் உற்பலம் (நீலோற்பல மலர்) செச்சை (வெட்சிப்பூ) இவை தம்மால் ஆய தொடைப் பத்தி (மாலை வரிசைகளும்), கடப்பம், (கடம்பும்) கொண்ட, பொற்கழல்- அழகிய உனது திருவடிகளைச் செப்பி (புகழ்ந்து கூறித்) தொழ மாட்டேனோ!

கொதித்துக்குத் திரக்கொக்கைச் சதித்துப்பற்
றிகைக்குட்பொரு
குலத்தைக்குத் திரத்தைக்குத் தியவேலா-

குறத்தத்தைக் கறத்தத்திக் கு*முத்தத்தத் தமொக்†
கிக்குக்
குலத்துக்குக் குடக்கொற்றக் கொடியோனே;

கதச்சுத்தச் சுதைச்சித்ரக் களிற்றுக்கொற் றவற்குக்கற்
பகச்சொர்க்கப் புரப்பொற்பைப் புரிவோனே-

கடுக்கைக்கட் செவிக்கற்றைச் ‡சடைப்பக்கக்
கொடிக்கற்புக்
Xகடற்கச்சிப் பதிச்சொக்கப் பொருமளே (15)

## 466. திருவடியைச் செப்ப

தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத்
தனத்தத்தத் தனத்தத்தத் தனதான

எனக்குச்சற் றுனக்குச்சற் றெனக்கத்○தத் தவர்க்கிச்சைப்
பொருட்பொற்றட் டிடிக்கைக்**குக் குடில்மாயம்-

---

*முத்த அத்தத்து அம் ஒக்கு -முத்தாபரண மணிந்த தோள்களின் அழகுக்கு ஒப்பாகும்.

† இக்குக் குலத்து - கரும்புக்கும் ஒத்த குலமாகிய மூங்கிற் காம்பையுடைய

‡ சடை-ஆகுபெயராய்ச் சடையை உடைய சிவனைக் குறிக்கும்.

X கடல் கச்சி -காஞ்சியம்பதியின் பெரும் பரப்பையும் பெருமையையும் கூட்டத்தின் பேராலியையும் கருதி கடற் கச்சி என்றார்.

"மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்
ஒலியும் பெருமையும் ஒக்கும்-மலிதேரான்
கச்சி படுவ கடல் படா கச்சி
கடல்படுவ எல்லாம் படும்" - என்னும் பாடலையும் காண்க

○அத்தவர் - பொருட்பெண்டிர், விலைமாதர்.

**கு-சிறுமை.

கோபங்கொண்டு வஞ்சகமுள்ள கொக்கை (மாமரத்தை-மாமரமாய் நின்ற சூரனை) சதித்து (அழித்து,) பற்றி கைக்குள்-கைக்குள் பற்றி-தன்வசப்படுத்தி (மயிலை- வாகனமாகவும், சேவலைக் கொடியாகவும் தன் வசம் கொண்டு), பொற்குலத்தை (பொன்மயமாம்) - குலம்-மலை (கிரவுஞ்ச கிரியையும்), (அதன்) குத்திரத்தை (அதன் வஞ்சக நிலையையும்) குத்திய - குத்தி அழித்த-வேலனே!

குறத் தத்தைக்கு (குறவர்குலத்துக் கிளியாம்) வள்ளியினுடையவும் அறத்து அத்திக்கு (கற்பியல் அற நெறியில் நின்ற யானை) தேவ சேனையினுடையவும் - முத்தாபரணம் அணிந்த தோள்களின் அழகுக்கு ஒப்பாகும் கரும்புக்கு ஒத்த குலமாகிய மூங்கிற் காம்பையுடைய கோழியின் வீரக் கொடியை உடையவனே!

கதம் (கோபத்தையும்) சுத்த-சுத்தமான சுதை (வெண்மை நிறத்தையும்) சித்ரம் -அழகையும் கொண்ட களிறு -ஐராவதம் என்னும் யானைக்கு அரசனாம் தேவேந்திரனுக்குக் கற்பக விருக்ஷங்கள் உள்ள சொர்க்கலோக அழகைக் தந்து உதவி புரிந்தவனே!

(கடுக்கை) கொன்றையும், கட்செவி (பாம்பும்) உள்ள (கற்றைச்சடை) திரண்ட சடையை உடைய சிவனது, பக்கக் கொடி-பாகத்து அமர்ந்த கொடியனைய தேவியின்-கற்பு (தவத்தொடு கூடிய அறம் வளர்த்த) கடல்-கடல் ஒலிபோல் ஒலிகொண்ட கச்சிப்பதி-காஞ்சியந் திருநகரில் அழகிய பெருமாளே!

(கடப்பப் பொற்கழற் செப்பித் தொழுவேனோ)

## 466.

எனக்கும் கொஞ்சம், உனக்கும் கொஞ்சம் என்று கத்து (கூச்சலிடுகின்ற), அத்தவர்க்கு (பொருட் பெண்டிருக்கு - விலைமாதருக்கு இச்சை - விருப்பமுள்ள பொருள்- பொருளையும் பொன்தட்டு-பொன்தட்டு (முதலானவைகளையும்) இடு - தருகின்ற இக்கை-ஆபத்தைக் கொண்ட இந்த குக்குடில்-சிறுமை வாய்ந்த தேகமானது, மாயம்-மாயமாய் மறைந்தது.

எனக்கட்டைக் கிடைப்பட்டிடு டனற்சுட்டிட் டடக்கைக்குப்
பிறக்கைக்குத் தலத்திற்புக் கிடியாமுன்;

திணைக்குட்சித் திரக்கொச்சைக் குறத்தத்தைத் தனத்தைப்பொற்
பெறச்செச்சைப் புயத்தொப்பித் தணிவோனே-

செருக்கிச்சற் றுறுக்கிச்சொற் பிரட்டத்துட் டரைத்தப்பித்
திரட்டப்பிக் கழற்செப்பத் திறல்தாராய்;

*பணைக்கைக்கொக் கணைத்தட்டுப் படக்குத்திப் படச்சற்பப்
பணத் †துட்கக் கடற்றுட்கப் பொரும்வேலா-

பரப்பற்றுச் சுருக்கற்றுப் பதைப்பற்றுத் திகைப்பற்றுப்
பலிப்பப்பத் தருக்கொப்பித் தருள்வாழ்வே;

---

*பணைக்கைக் கொக்கன்-தாருகாசுரன் யானையின் துதிக்கையைப் 'பணைக்கை' என்பர்; 'பணைக்கை மும்மத வேழம்'
- அப்பர் 5-2-1

† துட்க-அஞ்சு

(என்று) விறகுக்கட்டைகளின் (இடைப்பட்டிட்டு) இடையே (மத்தியிலே) கிடத்தப்பட்டு, அனல் (நெருப்பால்) சுட்டிட்டு (சுடப்பட்டு) அடக்கைக்கு (அடங்குவதற்கு) இறந்து மறைந்து போவதற்கும், பிறப்பதற்கும், தலத்தில் (இந்தப் பூமியில்) புக்கு - தோன்றி, இடியாமுன்-மடிந்து (அழிந்து) போவதன் முன்னரே.

தினைப்புனத்தில், அழகிய குழந்தைபோலத் திருந்தாப் பேச்சுக்களைப் பேசும் குறக்குலத்து கிளியாம் வள்ளியின் கொங்கையை அழகுபெற வெட்சிமாலை அணிந்த திருப்புயத்தில் ஏற்று அணிபவனே!

அகந்தை கொண்டும், சிறிது கோபித்தும், (சொல்) பேசுகின்ற துஷ்டரை, பிரட்டத்துட்டரை-நன்னெறியில் நின்றும் வழுவின துஷ்டர்களினின்றும் -தப்பி-விலகி,திரள் தப்பி அவர்கள் கூட்டத்தினின்றும் விலகி, (உனது) கழல் செப்ப திருவடியைப் புகழத் திறல் தாராய்-சாமர்த்தியத்தை (ஒழுக்கத்தை) தந்து அருளுக.

பணைக்கை (பனைமரம் போல நீண்ட கை-துதிக்கையைக் கொண்டிருந்த கொக்கனை *கொக்கின் குணங்கொண்டவனாம் தாரகனை (அல்லது -பணைக்கை(யன்) கொக்கன் - எனக் கொண்டு பணைக்கையன் (தாரகனையும்) கொக்கன்-மாமரமாய் நின்ற சூரனையும், தட்டுப்பட தடைபடும்படிக் குத்தி, அவன் (அவர்) அழிவுற சற்பப் பணம் (ஆதிசேடனுடைய படங்கள் அஞ்சவும், கடல் அஞ்சவும் - பொருத வேலனே!

பரப்பு (பேராசை) ஒழிய, சுருக்கு (உலோபகுணம்) ஒழிய, பதைப்பு (நடுக்கம் - அல்லது ஆத்திரப்படுதல்) ஒழிய, திகைப்பு (மயக்கம்) ஒழிய பலிப்ப இத்தகைய நற்குணங்கள் உண்டாக, பத்தர்க்கு-அடியார்களுக்கு ஒப்பித்துச் - சேர்ப்பித்து (அடையும்படித் தந்து உதவி) அருள்புரியும் செல்வமே!

---

*கொக்கன் - ஓர் இழிவுச் சொல்லாக உபயோகப்பட்டுள்ளது. கொக்கின் குணம்-சமயம் பார்த்துச் செயலாற்றல் - மடைத் தலையில் ஓடுமீன் ஓட உறுமீன் வருமளம் வாடியிருக்குமாம் கொக்கு' - மூதுரை.

*கனிக்குத்திக் கனைத்துச்சுற் றிடப்பச்சைத் கனப்பகூஷிக்
கிடைப்புக்குக் களிப்புக்குத் திரிவோனே.

கலிக்கொப்பிற் சலிப்பற்றுக் கதிக்கொத்திட் டெழிற்சத்திக்
கடற்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே (16)

## 467. புகழை ஓத

தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத்
தனத்தத்தத் தனத்தத்தத் தனதான

இறைச்சிப்பற் றிரத்தத்திட் டிசைக்கொக்கப் பரப்பப்பட்
டெலுப்புக்கட் டளைச்சுற்றிச் சுவர்கோலி.

எடுத்துச்செப் பெனக்கட்டிப் புதுக்குப்புத் தகத்திற்புக்
கெனக்குச்சற் றுனக்குச் சற் றெனுமாசைச்;

சிறைக்கொத்திப் பிறப்பிற்பட் டுறக்கச் சொப் பனத்துற்றுத்

திகைக்கப்பட் டவத்தைப்பட் டுழலாதுன்.

திருப்பத்மத் திறத்தைப்பற் றுகைக்குச்சித்
திரத்தைச்சொற்

† றிதக்கொற்றப் புகழ்ச்செப்பித் திரிவேனோ;

*கனிபெறும் பொருட்டுச் சுற்றினது - பாடல் 184 பக்கம் 430 பார்க்க

† திதம் - நிலைமை

கனிக்கு (மாம்பழம் - அல்லது மாதுளம்பழம்) பெறவேண்டி திக்கு அனைத்தும் (திக்குகள் முழுமையும்) - உலகெலாம்) சுற்றிட - வலம்வர, பச்சை-பச்சை நிறமுள்ள கனப்பக்ஷிக்கு (பெருமை வாய்ந்த மயிலின்), இடைப்புக்கு - மேல் ஏறி அமர்ந்து களிப்புக்கு-மகிழ்ச்சியுடன் திரிவோனே!

கலி (கலியுகத்திலும்) ஒப்பு இல் - நிகரிலாத, சலிப்பு அற்று (சலித்தல் இல்லாமல் - மன உவப்புடன்), கதிக்கு-கதியைத்தர (வீட்டின்பத்தைத் தருதற்கு, ஒத்திட்ட (ஒத்திட்டுள்ள) உட்பட்டுள்ள - இசைந்தெழுந்தருளியுள்ள, எழிற் பெருமாளே - அழகிய பெருமாளே! சத்திப் பெருமாளே-சத்திவேல் ஏந்திய பெருமாளே - (அல்லது அழகிய சத்தி-சத்தியாம் காமாட்சி தேவிவாழும்) கடற் கச்சிப் பதிச் சொக்கப் பெருமாளே - கடல் போலும் ஒலி பெருகும் **கச்சிமாநகரில்** அழகிய பெருமாளே!

(கழற் செப்பத் திறல் தாராய்)

## 467.

மாமிசத்துடன் அதைப்பற்றியுள்ள ரத்தத்தை இட்டு -சேர்த்து இசைக்கு ஒக்க- அந்த ரத்தம் பொருந்துதற்குத் தக்கவாறு உடலிலே பரப்பவைத்து, எலும்புச் சட்டத்தைச் சுற்றிலும், சுவரை வகுத்து-

எடுத்துச், செப்பு என - ஒரு (ஒரு பாத்திரமாக)-கட்டி உரு ஏற்படுத்தி புதுக்கு அலங்கரித்த -புத்தகத்தில் -புதிய அகத்தில் (வீட்டில்)புக்கு-புகுந்து, (ஓர் உடலெடுத்துப் பிறந்து) எனக்குக் கொஞ்சம் வேண்டும் - உனக்குக் கொஞ்சம் வேண்டும் என்கின்ற ஆசை எனப்படும்.

சிறைச்சாலையில் (இருக்க) ஒத்து-சம்மதங்கொண்டு இந்தப் பிறப்புக்களிலே பட்டு-பிறப்புக்களை அடைந்து, (உறக்கம் சொப்பனத்து உற்ற) தூக்கம் கனவு இவைகளை அடைந்து மயக்கம் கொண்டும், வேதனை அடைந்தும் திரியாமல் உனது-

அழகிய தாமரையாம் திருவடிகளின் திறம் (சார்பைப்) பற்றுகைக்கு - பற்றி உய்வதற்கு-உய்யும் பொருட்டு. அழகை வெளிப்படுத்தும் சொற்களால், உனது நிலைத்த வீரப் புகழைச் சொல்லிச் சொல்லித் திரிய மாட்டேனோ!

பிறைச்செக்கர்ப் புரைக்கொத்துச்
சடைப் பச்சைக் கொடிக்கிச்சைப்
பிறக்குற்றத் திருப்பக்கச் சிவநாதர்-

*பெருக்கப்புத்† தடக்கைக்‡ கற் பத்த்தொப்பைக்
கணத்துக்குப்
பிரச்சித்தக் கொடிக்குக்டக் கொடியோனே;
பறைக்கொட்டிக் களைச்சுற்றக் X குறட்செக்கட்
கணத்திற்குப்
பலிக்குப்பச் சுடற்குத்திப் பகிர்வேலா-

---

*சிவபிரான்போல விநாயகருக்கும் சிரசிற் கங்கை உண்டு: சிவபிரானுக்கு உரிய சடை, கங்கை, திங்கள், கொன்றை, பாம்பு, முக்கண் இவை ஆறும் விநாயக மூர்த்திக்கும் உண்டு.

'கங்கையும், பனிவெண் திங்களும், விரைத்த கடுக்கையந் தொங்கலும், அரவும், தங்குபொற் சடையும், முக்கணும் தாதை - தாணு என்றுணர்த்த, மென்மலர்க்கை அங்குச பாசம் அணிந்து வெற்புயிர்த்த ஆரணங்கு அன்னை என்றுணர்த்தி, வெங்கலி முழுதும் துமித்தருள் பட்டி விநாயகன் சேவடி பணிவாம்"... என்னும் பேரூர்ப் புராணமும்,

கங்கையார் ஆம்பலை... மனக்கூடம் சேர்ப்பாம்" என்னும் திருக்குற்றாலப் புராணமும் ஈண்டு உணர்தற்பாலன. (ஆம்பல்-யானை)

† தடக்கை - விநாயகருக்குத் தடக்கை-

"தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீண்முடி கடக்களிற்றைக்
கருத்துளிருத்துவாம்" - பெரிய புராணம்.

‡ கற்பக தொப்பை கணம் - விநாயகருடைய வயிறுபோலப் பருத்த வயிற்றையுடைய பூதகணம். முருகவேள் சூரனுடன் போருக்குச் சென்றபொழுது அவருடன் இரண்டாயிர வெள்ளம் பூதகணங்கள் சேனையாகப் போந்தன.

"அண்டவாபரணம்.. முதலாங் கணப்பெருந் தலைவரை நோக்கி ஆயிர இரட்டி பூத வெள்ளத்தோ டறுமுகன் சேனையாய்ச் சென்மின் நீயிரென்றருளி அவர்தமைக் குகற்கு நெடும் படைத் தலைவரா அளித்தான்" - கந்த புராணம் I-18-40

X குறள்... கணம் - " குண்டைக் குறட்பூதம் - சம்பந்தர் I-*46-1*. பூத கணங்கள் - போர்க்களத்தில் - பச்சை உடலை - உண்ணுதல் - "அரக்கர் தம்மை... ... வாளெயிற்றினிற் சவட்டியே" தக்கயாகப் பரணி - *379*. 'நிணமலை நெடிய குறளிகள் பகூஷித்து நிர்த்தமிட' திருப்புகழ்.*921*.

பிறைச் செக்கர்ப் புரைக்கு ஒத்து - செக்கர்ப் பிறைப்புரைக்கு ஒத்து - சிவந்த பிறைக்குத் தந்த உயர்வுக்குத் ஒத்து (அல்லது புரை செக்கர் பிறைக்கு ஒத்து - பெருமையும் செந்நிறமும் கொண்ட பிறைக்குத் தலையிடம் தந்தது போலப்- பின்னிய கூந்தலைக்கொண்ட பச்சைநிறக் கொடியாம் பார்வதிக்கு இச்சை ஆசை, பிறக்குற்ற பிறந்துள்ள (பிறப்பதற்குத் தக்க) அல்லது பிறங்குதல் உள்ள - விளக்கம் உற்ற திருப்பக்கம் (அழகிய இடது) பாகத்தைத் தந்துள்ள சிவபிரானுடைய-

பெருகு அப்பு-பெருகு நீராம் (கங்கையையும்), தடக்கை- பெருமைவாய்ந்த துதிக்கையையும் கொண்ட அல்லது, பெருத்த * கப்புதலை - (வாரி உண்ணுதலைச் செய்யும், தடக்கையையும் கற்பகம் (விநாயகரது தொப்பை போலப் பருத்த) தொப்பை (வயிற்றை) உடைய கணத்துக்கு (பூத கணங்களுக்குப்) பிரசித்த நன்கு தெரிந்தவனே! கொடி (ஒழுங்கு அல்லது நீளமுள்ள) கோழிக் கொடியனே! (அல்லது-கொடியாகக் - கோழிக்- கொடியை உடையவனே!)

பறை வாத்தியங்களை முழக்கிக் (களைச்சு உற்ற) களைப்பு அடைந்துள்ள, குறள் செக்கட் கணத்திற்கு - செக்கண் குறள் கணத்துக்கு - சிவந்த கண்களை உடைய குறட் பூதக் கூட்டங்களுக்கு, பலிக்கு - உணவுக்கு வேண்டி, பச்சுடல் (அசுரர்களின்) பசிய உடல்களைக் குத்திப் பகிர்ந்தளித்த வேலனே!

---

* அவல் பொரி 'கப்பிய கரிமுகன்' - விநாயகர் திருப்புகழ் 1

பணப்பத்திக் கணத்துத்திப் படுக்கைக்*கச்
சபத்திச்சைப்
படுக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே (17)

## 468 கழலைத் தமிழிற் பாட

தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத்
தனத்தத்தத் தனத்தத்தத் தனதான

கடத்தைப்பற் றெனப்பற்றிக் கருத்துற்றுக் களித்திட்டுக்
கயற்கட்பொற் பிணைச்சித்ரத் தனமாதர்-

கலைக்குட்பட் டறக்கத்திச்
சலித்துக்† கட் டளைச்சொற்பொய்த்
திரைக்குட்பட் டறச்செத்திட் டுயிர்போனால்;

எடுத்துக்கொட் டிடக்கட்டைப் படத்தெட்டத் தணற்றட்டக்
கொளுத்திச்சுற் றவர்ப்பற்றற் றவர்போமுன்-

இணக்கிப்பத் திமைச்செச்சைப்
பதத்தைப்பற் றுகைக்குச்சொற்
றமிழ்க்கொற்றப் புகழ்ச்செப்பித் திரிவேனோ;

---

*இந்தத் திருப்புகழ் காஞ்சியில் கச்சபேசர் கோயிலில் உள்ள முருகவேளுக்கு உரியது.

கச்சபம்; திருப்பாற்கடல் கடைபட்ட பொழுது அழுந்தின மத்தாகிய மந்தர மலையைத் திருமால்; (கச்சபம்) ஆமையாக முதுகு கொடுத்துத் தாங்கிப் பின்னர் இறுமாப்படைந்து கடலைக் கலக்கினர் அந்த ஆமையை விநாயகர் அடக்கி மடிவித்து அதன் ஓட்டைச் சிவபிரான் அணியத் தந்தனர். விநாயகர் துதி - பாடல் 5 பக்கம்-14 கீழ்க்குறிப்பு) - பின்னர், திருமால் தனது குற்றம் தீர்ந்து ஈடேறவேண்டிக் காஞ்சியில் சோதிலிங்கத்தைப் பூசித்து - இந்த லிங்கம் "கச்சபேசர்" என்னும் திரு நாமத்துடன் விளங்க வேண்டும் என்ற வரத்தைப் பெற்றனர். அந்த லிங்கம் உள்ள ஆலயமே காஞ்சியில் கச்சபேசர் கோயில் என விளங்குகின்றது.

† கட்டளை-கற்பனை.

படங்களின் வரிசையையும் கூட்டமான புள்ளிகளையும் கொண்ட ஆதிசேடனைப்; படுக்கை-படுக்கையாகக் கொண்ட கச்சபத்து ஆமை உரு எடுத்த திருமால் ஆசைப்பட்டுள்ள (திருமாலின் ஆசைக்கு இடமான) கச்சி நகரில் அழகிய பெருமாளே!

(புகழ்ச் செப்பித் திரிவேனோ!)

# 468.

குடத்தைப் பற்றுவது போலப் பற்றி , (குடம் போன்ற அக்கொங்கையின்) மீதே எண்ணத்தை வைத்து உள்ளம் மகிழ்ச்சியுற்று, மீன்போலும் கண்ணின் அழகையும், இணையாயுள்ள அழகிய கொங்கைகளையும் உடைய மாதர்களின்-

மதன கலைக்குள் ஆசைப்பட்டு, (அந்த சாஸ்திரங்களை நன்றாகக் கூவி ஓதி, பின்னர் சலித்துப்போய்க், கற்பனைப் பேச்சுக்கும் - பொய் என்னும் மறைப்புத் திரைக்கும் உட்பட்டவனாகி (கற்பனைப் பேச்சும், பொய்யும் பேசி), (அல்லது பொய்க்கடலில் அழுந்தி, அழிந்து இறந்து உயிர் போனால் (உடலை)

எடுத்துச், (சுடுகாட்டிற்) போடவேண்டி, விறகுக் கட்டைகளிடையே படும்படி வைத்துத் தெட்ட (முற்றின)- தணல்-நெருப்பு-தட்ட கொளுத்தி - கிட்டும்படிக் கொளுத்திச் சுற்றத்தார்கள் - பற்று அற்றவர்களாய் (சுடுகாட்டினின்றும்) போவதற்குமுன்-

இணக்கி (இணங்கி - மனம் பொருந்தி), பத்திமை (பத்தியுடன்), செச்சைப் பதத்தை (வெட்சி மலர்கொண்ட உன் (திருவடியைப்) பற்றுகைக்கு (பற்றி உய்வதற்கு), சொற்றமிழ்க் கொற்றப்புகழ் (தமிழ்ச்சொற் கொற்றப்புகழ்) தமிழ்மொழி (கொண்டு உனது) வீரப்புகழைச் செப்பித் திரிவேனோ - செப்பித் திரிவேனோ (சொல்லித் திரியும் பாக்கியம் அமையுமோ)!

அடைத்திட்டுப் புடைத்துப்பொற்
பதச்சொர்க்கத் தனைச்சுற்றிட்
டலைப்புப்பற்றெனச்சொற்றிட் டறுசூரை-

அடித்துச்செற்றிடித்துப்பொட்
டெழப்*பொர்ப்புப் படக்குத்திட்
டலைத்துச்சுற் றலைத்தெற்றுக் கடல்மாயப்;

புடைத்திட்டுப் படிக்குட்செற் றடப்புக்குக் கதத்துக்கக்
† கயிற்கொக்கைப் படக்குத்திப் பொருவோனே-

புனத்திற்பொற் குறத்திக்குப் புணர்க்கொத்தப்
பசப்பெத்திப்
புணர்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே(18)

## 469. பற்றற

தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத்
தனத்தத்தத் தனத்தத்தத் தனதான

கருப்பற்றிப் பருத்தொக்கத் தரைக்குற்றிட் டுருப்பெற்றுக்
கருத்திற்கட் பொருட்பட்டுப் பயில்காலங்-

கணக்கிட்டுப் பிணக்கிட்டுக் கதித்திட்டுக்
கொதித்திட்டுக்
கயிற்றிட்டுப் பிடித்திட்டுச் சமனாவி;

பெருக்கப்புத் தியிற்பட்டுப் புடைத்துக்கக்
கிளைப்பிற்பொய்ப்
பிணத்தைச்சுட் டகத்திற்புக் கனைவோரும்-

* பொர்ப்பு - பொருப்பு, † கயில் -பிடர்-கழுத்தின் பின்புறம்-
'கயில் கலந்திருண்டு தாழ்ந்த கருங்குழல்'- சூளாமணி சுயம்-112.
'மயிர்ப் புறஞ் சுற்றிய கயில் - மணிமேகலை -3-135.

(தேவர்களைச் சிறையில்) அடைத்தும், (அவர்களைப்) புடைத்தும் (அடித்தும்) (அவர்களுடைய) அழகிய இருப்பிடமாகிய சொர்க்க பூமியை வளைந்துகொண்டு (அங்குள்ளார்) அலைச்சல் கொள்ளுங்கள் எனக்கூறி அவர்களை (அலைத்து) நீங்கின (சென்ற) சூரனை)-

அடித்தும், கோபித்து இடித்தும், பொடிபட அவனுக்குத் துணையாயிருந்த) எழுகிரியும் அழிவுற (வேலால்) குத்தியும், (அவனை) அலைத்து, வளைந்துள்ள திரைகள் (தெற்று) நெருங்கியுள்ள - கடலும் கலக்கமுற்று (ஒடுங்க)-

அலைத்துப் பூமியிலே செற்று அட புக்கு-பூமியிலே கோபத்துடன் அழிக்கப் புறப்பட்டு, கோபமும் வருத்தமும் கயில் (பிடரில் - கழுத்தில் - நெஞ்சில்) கொண்ட, அல்லது, கயில் - பூட்டப்பட்டுள்ள (கலந்துள்ள) கொக்கை (மாமரமாம்) சூரனை) பட - அழிவுபடக் குத்திச் சண்டை செய்தவனே!

தினைப்புனத்தில் அழகிய குறத்தி வள்ளியை (அவள்) சேர்தற்கு வேண்டிய பசப்பு மொழிகளால் (தந்திர மொழிகளால்) ஏத்தி (துதித்து) (அல்லது எத்தி வஞ்சித்து) அவளைப் புணர்ந்த (சேர்ந்த) கச்சிப்பதியில் அழகிய பெருமாளே!

(கொற்றப் புகழ்ச் செப்பித் திரிவேனோ)

## 469.

(ஒரு தாயின்) கருவாகச் சேர்ந்து, உருவம் பருத்தலை (முதிர் தலை) அடைந்து, (பத்து மாதம் என்னும் கணக்கு) ஒன்று கூட, (வெளிபட்டுப்) பூமியில் வந்த சேர்ந்து, பால பருவம் முதலிய உருவங்களை முறையே அடைந்து, எண்ணத்திலே பொருள் சேர்வதே குறிப்பாக வாழ்நாளைச்) செலுத்துங் காலத்திலே-

(ஆயுளின்) கணக்கைப் பார்த்து (முடிவு காலம் வருவதை அறிந்து) மாறுபாடு கொண்டு (விரோதம் கொண்டு), விரைந்து வந்து மிக்க கோபத்தைக் காட்டிப், பாசக்கயிற்றை வீசிப் பிடித்து எமன் என்னுடைய ஆவியை (உயிரை)

பெருக்க (பிரித்து எடுத்துக் கொண்டுபோக), புத்தியிற்பட்டு (உயிர்போய் விட்டது என்று (புத்தியில்) தெரிந்துகொண்ட புடை (பக்கத்திலிருந்த), துக்கக் கிளை (துக்கங்கொள்ளும் சுற்றத்தினர் பின் (பின்னர்) பொய் - போய் - (அல்லது நிலையாது ஒழிந்த, பிணத்தைச் சுட்டெரித்துவிட்டு வீட்டுக்கு வந்து எல்லாரும்-

*பிறத்தற்சுற் றமுற்றுற்றிட் டழைத்துத்தொக் கறக்கத்துப்
பிறப்புப்பற் றறச்செச்சைக் கழல்தாராய்;*

*பொருப்புக்கர்ப் புரக்கச்சுத் தனப்பொற்புத் திணைப்பச்சைப்
புனக்கொச்சைக் குறத்தத்தைக் கினியோனே-*

*புரத்தைச்சுட் டெரித்துப்*பற் றலர்க்குப்பொற் பதத்துய்ப்பைப்
புணர்த்தப் †பித் தனைக்கற்பித் தருள்வோனே;*

*செருக்கக்‡குக் கரைக்குத்திச் செருப்புக்குப் பிடித்தெற்றிச்
சினத்திட்டுச் சிதைத்திட்டுப் பொரும்வீரா-*

*திருத்தத்திற் புகற்சுத்தத் தமிழ்ச்செப்புத் த்ரயச்சித்ரத்
திருக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே.* (19)

---

*பற்றலர்க்குப் பொற்பதத் துய்ப்பைப் புணர்த்தியது-

திரிபுரம் எரித்த வரலாற்றைப் பாடல் 285-பக்கம் 206- பார்க்க; திரிபுரம் எரிபட்ட பொழுது சிவ வழிபாட்டால் மாளாது பிழைத்த மூவரில் - இருவர் சிவபிரானது திருக்கோயில் காவலாளரானார்கள். பின் ஒருவன் சிவபிரானது நடனத்தின்போது முழவு வாத்தியம் முழக்கும் பேற்றினை அடைந்தான்.

"மூ எயில் செற்ற ஞான்று உய்ந்த மூவரில் இருவர் நின் திருக்
கோயிலின் வாய்தல் காவலாளரென் றேவிய பின்னை
ஒருவநீ கரிகா டரங்காக, மானை நோக்கியோர் மாநடம் மகிழ
மணிமுழா முழக்க அருள் செய்த. தேவதேவநின் திருவடி
யடைந்தேன் செழும் பொழில் திருப்புன் கூருளானே"

-சுந்தரர் - 7-55-8

† பித்தன் - சிவபிரான் - "பித்தா பிறைசூடி"

-சம்பந்தர் - 1-89-3 சுந்தரர் -1-1-1

‡ குக்கர் - (நாய்போல) மிக இழிந்தோர் - (குக்கன்-நாய்)
(குக்கல்-நாய்) " குடிமையில் கடமைபட்ட குக்கரில் பிறப்பர்"

-தொண்டரடிப்பொடியாழ்வார் - திருமாலை -39.

(அந்தப்) பிறப்பிற் சுற்றத்தாராய் உள்ளார் யாவரையும் வரும்படி அழைத்துந் (தொக்கு அற) - (பரிச உணர்ச்சியறியும் இந்திரியம் சோர்வடைந்து ஓயும்படிக் கூச்சலிடும் (அழுது கத்துகின்ற (இந்தப்) பிறப்பிலே உள்ள ஆசை நீங்கும்படி உனது வெட்சிமலர் சூழ்ந்த திருவடியைத் தந்தருளுக.

மலைபோன்றதும் பச்சைக் கர்ப்பூரம், ரவிக்கை (இவை அணிந்ததுமான கொங்கை அழகைக் கொண்ட, தினை வளரும் பசுமை கொண்ட புனத்திலிருந்த - திருந்தாப் பேச்சைப் பேசும் அல்லது தாழ்ந்த குலமாம்) குறக்குலத்துக் கிளியாம் - வள்ளிக்கு இனியவனே..!

திரிபுரத்தைச் சுட்டெரித்து, பகைவராயிருந்த திரிபுராதிகள் மூவர்க்குப், பதத் துய்ப்பை (மேலான பதவி நுகர்ச்சியைப்) புணர்த்து (கூட்டி வைத்த) (அப் பித்தனை) - அந்தப் பித்தனாம் சிவனுக்குக் (கற்பித்து) குருமூர்த்தியாய் நின்று (பிரணவப் பொருளை ஓதுவித்து அருளியவனே!

செருக்கு (அகந்தை கொண்ட (அ குக்கரை)- அந்த (நாய்போல) இழிந்தோர்களாம் அசுரர்களை-குத்தி-(வேலாற்) குத்தியும், செருப்புக்குப் பிடித்து எற்றி - போரிற் புகுந்து பிடித்து மோதியும். கோபித்துச் சிதைத்தும் (அழிவு செய்தும்) சண்டை செய்த வீரனே!

திருத்தமாக (பிழையிலாத வகையில்) சொல்லப்படும் சுத்தமான தமிழ் - (செப்புத் த்ரய) - த்ரய செப்பு இயல்-இசை நாடகம் என்னும் மூவகையாலும் செப்பு-ஓதப்படும் [அல்லது சுத்தத் தமிழ் மூவகைத் தமிழும் - இயல் - இசை நாடகம் என்னும் மூவகைத் தமிழும் (விளங்கும்)] சிறப்புவாய்ந்த லக்ஷ்மீகரம் பொருந்திய கச்சிப்பதியில் அழகிய பெருமாளே!

(பற்றறச் செச்சைக் கழல் தாராய்)

## 470. திருவடியைப் பெற

தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத் தனத்தத்தத்
தனத்தத்தத் தனத்தத்தத் தனதான

கறுக்கப்பற் *றுவர்ப்பிட்டுச் சிரித்துச்சற் றுறுக்கிக்கட்
பிறக்கிட்டுப் படக்கற்பித் திளைஞோர்தங்-

கழுத்தைச்சிக் கெனக்கட்டித் தனச்செப்புப் படக்குத்திட்
டுருக்கிக்கற் பழிக்கப்பொற் பெழுகாதல்;

புறப்பட்டுக் களிக்கக்கற் புரத்தைப்பிட் டரக்கிப்பொற்
பணிக்கட்டிற் புறத்துற்றுப் புணர்மாதர்-

பொருத்தத்தைத் தவிர்த்துச்சற் றிரக்ஷித்துப் புரப்பப்பொற்
**பதத்தைப்பெற் றிருக்கைக்குப்** பெறுவேனோ;

திதற்கொக்கைப் படக்குத்திச் செருக்கிக்கொக் கரித்துச்சக்
கரிக்குப்புத் திரற்குற்றுத் தளைபூணச்

சினத்துப்பொற் பொருப்பைப் பொட்
டெழுத்தித்† திக் கரித்துப்புத்
திரித்தத்திற் சிரித்துற்றுப் பலபேய்கள்;

பறிக்கப்பச் சிறைச்சிக்கட் கறிக்குப்பைச் சிரச்சிக்குப்
பரப்பொய்க்கட் டறப்புக்குப் பொருதோனே-

பணிச்செச்சைத் தொடைச்சித்ரப் புயத்துக்ரப்
படைச்சத்திப்
படைக்கச்சிப் பதிச்சொக்கப் பெருமாளே (20)

---

* துவர்த்தல் - சிவத்தல் " தூநகைத் துவர்த்த செவ்வாய்... நல்லார்"- கம்ப ராமா-நீர்விளை 13.

துவர் - பாக்கு - "வாசமணத் துவர்வாய்க் கொள்வோர்" பரிபாடல் 12-22

† திக்கரித்து - நிந்தித்து.

## 470.

பல் கறுக்கத் துவர்ப்பிட்டு - பற்களிற் கறை ஏற்படும்படி (பாக்கு வெற்றிலையின்) சிவப்பு நிறம் ஏறச் செய்தும். சிரித்தும், கொஞ்சம் அதட்டியும், கண்கள் பின் சுழலுவது போல விழித்தும், இவ்வாறு (சில) பாவனைகள் செய்து இளைஞர்களுடைய-

கழுத்தை அழுந்தக் கட்டி, (செப்புத் தனம்படக் குத்திட்டு) சிமிழை ஒத்த கொங்கை படும்படி இறுக அணைத்து, (அதனால்) மனம் உருகும்படி ஆக்கிக், கற்பு மனோதிடம் அழிபட மிகுதியாக எழுகின்ற காம ஆசை-

தோன்றி இன்பத்தைத் தர, பச்சைக் கற்பூரத்தைப் பொடிசெய்து தேய்த்து அழகுடன் அலங்கரித்த கட்டிலின் மேற் சேர்ந்து புணர்கின்ற பொது மாதர்களின்-

சேர்க்கையை (இணக்கத்தை) நீக்கிச் சிறிது (அடியேனை) ரக்ஷித்துக் காக்க (உனது) அழகிய திருவடியைப் பெற்றிருக்கும் பாக்கியத்தை) பெறுவேனோ!

வலிமை வாய்ந்த மாமரத்தை அழிபடும்படிக் குத்தியும், பெருமிதத்துடன் கர்ச்சித்து *சக்கரிக்கு (திருமாலின்) புத்திரற்கு (பிரமனுக்கு)ப் பொருந்த விலங்கை மாட்டும்படிக்

கோபித்தும், பொன்மலையைக் (கிரவுஞ்சத்தை)த் தூள் எழும்படிப் பொடியாக்கியும். (அதை) நிந்தித்தும், புதிய ரத்தத்தில் சிரிப்புடன் அளைந்த (துழாவின) பல பேய்கள்)

பறிக்கப் பச்சிறைச்சிக்கண் கறிக் குப்பை - பச்சை மாமிசங்களில் கடித்துத் தின்னுதற்குரிய குவியல்களைப் பறித்து, உண்ணக் (கிடைக்குமோ) என்றிருந்த (சிரச் சிக்குப் பரப்பு)- மிகுந்த சந்தேகமும் ஆத்திரமும் (அப் பேய்களுக்கு) (ஒய்க் கட்டற) வேகத்தில் அடியோடு நீங்க (அல்லது - போய்க்கட்டற - போய் அடியோடு நீங்க)ப்புக்கு - யுத்தகளத்திற் புகுந்து சண்டை செய்தவனே!

ஆபரணமாக வெட்சிமாலையை (அணிந்த) அழகிய புயங்களில் உக்ரமான ஆயுதமான சத்திவேற் படையைக் கொண்ட பெருமாளே! கச்சி நகரில் அழகிய பெருமாளே! (பொற்பதத்தைப் பெற்றிருக்கைக்குப் பெறுவேனோ)

---

*சக்கரி-சக்கிரி - சக்கரத்தை உடையவன். சங்கரி - சக்கரி... எனத் திரிந்தது; சங்கரி - சங்கு அரி - சங்கேந்திய திருமால்.

## 471. ஆசை அற

தத்தத் தனதான

அற்றைக் கிரைதேடி- அத்தத் திலுமாசை;
பற்றித் தவியாத பற்றைப் பெறுவேனோ;
வெற்றிக் கதிர்வேலா- வெற்பைத் தொளைசீலா;
கற்றுற் றுணர்போதா- கச்சிப் பெருமாளே. (21)

## 472. ஆண்டருள

தத்தத் தத்தத் தனதான

முட்டுப் பட்டுக் *கதிதோறும்-
முற்றச் சுற்றிப் பலநாளும்;
தட்டுப் பட்டுச் சுழல்வேனைச்-
சற்றுப் பற்றக் கருதாதோ;
†வட்டப் புட்பத் தலமீதே-
வைக்கத் தக்கத் திருபாதா;
‡கட்டத் தற்றத் தருள்வோனே-
கச்சிச் சொக்கப் பெருமாளே.(22)

*கதிதோறும் - தேவ மனித நரக விலங்கு என்னும் நாற்கதிகளிலும்.
† வட்டப் புட்பத் தலம் - வட்டமாகிய இருதய கமல பீடம்.
‡ கட்டத்து அற்றத்து - துன்பப் படுஞ் சமயத்தில்.

# 471.

அன்றன்று வேண்டிய உணவைத் தேடி-பொருளிலும் ஆசை

கொண்டு தவியாத பற்றை (பற்றுக்கோடு ஒன்றை)ப் பெறுவேனோ!

வெற்றியே விளங்கும் ஜோதி வேலனே! (கிரவுஞ்ச மலையைத் தொலைத்த பரிசுத்தனே!

கற்றுத் தியானித்து உணரப்படும் ஞான சொரூபனே- கச்சி (காஞ்சி)யிற் பெருமாளே!

(ஆசை பற்றித் தவியாத பற்றைப் பெறுவேனோ)

# 472.

சங்கடப்பட்டு - (தேவ, மனித, நரக, விலங்கு என்னும்) நாற்கதிகளிலும் (கதி ஒவ்வொன்றிலும்)

முழுமையும் அலைந்து பல நாளும்,

(தடைபட்டு) தடுமாறுதல் அடைந்து சுழல்கின்ற என்னைக்,

கொஞ்சம் (கவனித்து) ஏன்று (ஆண்டு) கொள்ள நினைத்தலாகாதோ (நினைத்தருளுக-என்றபடி)

வட்டமாகிய இருதய கமல பீடத்தின் மேலே

வைத்துப் பூசிக்கத் தக்க அழகிய திருவடிகளை உடையவனே!

துன்பப்படும் (அற்றம்) சமயத்தில் அருள்புரிபவனே!

கச்சியில் (வீற்றிருக்கும்) அழகிய பெருமாளே!

(சற்றுப் பற்றக் கருதாதோ)

## 473 . திருவடியைப் பெற

*தத்தத் தத்தத் தத்தத் தத்தத்*
*தத்தத் தத்தத் தனதான*

*அற்றைக் கற்றைக் கொப்பித் தொப்பித்*
*தத்தத் தத்தத் தருவோர் தாள்-*
*அர்ச்சித் திச்சித் தக்கத் தக்கத்*
*தொக்குத் திக்குக் குடில்பேணிச்*
*செற்றைப் புற்சொற் கற்றுக் கற்றுச்*
*செத்துச் செத்துப் பிறவாதே;*
*செப்பச் செப்பப் பச்சைப் பச்சைச்*
*செச்சைச் செச்சைக் கழல்தாராய்;*
*துற்றுப் பிற்புக் குற்றக் கொக்கைத்*
**துட்கத் † திட்கப் பொரும்வேலா;*
*சுத்தப் பத்திச் சித்ரச் ‡ சொர்க்கச்*
*சொர்க்கத் தத்தைக் கினியோனே;*
*Xகற்றைப் பொற்றைப் பற்றக் குத்திக்*
*கத்தக் கத்தக் களைவோனே-*
*Oகற்புச் சத்திப் பொற்புச் சத்திக்*
*கச்சிச் சொக்கப் பெருமாளே (23)*

---

* துட்க - வெருவ: பயப்பட

† திட்க - திடுக்கிட,

‡ சொர்க்கம் - கொங்கை "குறவர் பாவை சொர்க்கத்தின் மோகர்" - செந் தூர் பிள்ளைத் தமிழ்-10

Xகிரவுஞ்சன் என்னும் அரக்கனே அகத்தியர் இட்ட சாபத்தால் கிரவுஞ்சமலையாயினன். "அன்றிலம்பேர் பெற்றுள்ள அவுணன்" 'வெய்யோய்... நின்தொன்மை நீங்கி நீண்மலையாகி ஈண்டே நின்று... தீத்தொழில் இழைத்தி" "செவ்வேள் வேற்படை தன்னிற் பின்னாள் விளிகுதி விரைவின் என்றான்" -கந்த புராணம் 2-24-1, 11,12.

O கற்புச் சத்தி பொற்புச் சத்தி-சத்தி (பார்வதி) கற்பினொடு கொடுத்த சத்தி (வேல்) "உமைக்கணின்று தற்பெயர் புணர்த்திக் கற்பினொடு கொடுத்த... நெடுவேலோய்" கல்லாடம் - "பார்வதி சத்தியென்று தன் திருநாமஞ் சாத்தி - சூரனை வெல்லென்று கற்பித்தலுடனே கொடுப்ப... விடுத்த... வேல்" (கல்லாட உரை). திருப்புகழ் -66 பக்கம் 158 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

# 473.

அன்றைக்கு அன்றைக்கு (நாள்தோறும்) அலங்கரித்து அலங்கரித்து அத்தத்து (தாம்பெற்ற பொருளுக்குத்தக்க) அத்தம் (பிரதி பலனைத்) தருபவராம் (அல்லது கை தருபவராம், வழிகாட்டுபவராம்) பொதுமகளிரின் பாதங்களைப்-

போற்றியும் விரும்பியும் (அக்கத்து அக்கம்) கண்ணுக்குக் கண்ணாய்த் - (திக்கு தொக்கு) - திக்குகள் தோறும் (எவ்விடத்திலும்) தொக்கு- கூடி (இந்த) உடலைப் போற்றி வளர்த்து

செற்றை (கூட்டமான - நிரம்ப) (புன்சொல்) இழிவான சொற்களை மேலும் மேலும் கற்று, இறந்துபட்டு, இறந்து பட்டுப் பிறவிகளை அடையாத வண்ணம்-

மேலும் மேலும் சொல்லித் துதிக்க உனது மிகக் குளிர்ச்சி பொருந்திய சிவந்த வெட்சி மலரணிந்த திருவடியைத் தந்தருளுக.

நெருங்கிப் பின் தொடர்ந்து (கடலில்) இருந்த மாமரமாம் (சூரன்) பயப்பட்டுத் திடுக்கிடும்படிச் சண்டை செய்த வேலனே!

பரிசுத்தத்தையும், பேரன்பையும், அழகிய கொங்-கையையும் கொண்ட - விண்ணுலகத்துக் கிளியாம் தேவசேனைக்கு இனிமை யானவனே!

திரண்ட மலையாம் கிரவுஞ்சத்தைத் தாக்கிக் குத்தி அம்மலையரக்கன் கிரவுஞ்சன் பெருங் கூச்சலிட்டு அழும்படி அதை (கிரவுஞ்சத்தை) அழித்துத் தொலைத்தவனே!

(கற்புச் சத்திப் பொற்புச் சத்தி) கற்புக் கணிகலமாம் தேவி (அளித்த) அழகிய வேலை (அல்லது சத்தி (தேவி) கற்பினுடன் (கொடுத்த) வேலை- (ஏந்தும்) பெருமாளே! கச்சியிற் சொக்கப் பெருமாளே!

(செச்சைக் கழல் தாராய்)

## 474. மாதர்மீதுள்ள மயக்கு அற

தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
தத்தத் தத்தத் தனதான

சுத்தச் சித்தத் தொற்பத் தர்க்குச்
சுத்தப் பட்டிட் டமுறாதே-

தொக்கப் பொக்கச் சிற்கட் சிக்குட்
சொற்குற் றத்துத் துறைநாடி;

பித்தத் தைப்பற் றித்*தைத் தற்றுற்
றொத்துக் †கித்திப் பிணிமாதர்-

‡பெட்டிற் கட்டுத் தட்டுப் பட்டுப்
பிற்பட் டிட்டுத் தளர்வேனோ;

Xஅத்தத் தத்திக் கத்தற் கெய்த்தத்
Oதத்திக் கத்துப் பலமீவாய்-

---

* தை-ஒரு தாளக் குறிப்பு-

† கித்தி - 'கித்தி நின்றாடும் அரிவையர்' - திருவிசைப்பா - 10 11

‡ பெட்டு - மயக்கு வார்த்தை - 'கயவர் சொல்லும் பெட்டைக் கெடுக்கும் பிரானல்லனே'! - இராமாநுச நூற்றந்தாதி -93

பெட்டு - பொய் - 'வட்டனை பேசுவர்... பெட்டினை உரைப்போர்' - நக்கீரர் - கோபப் ப்ரசாதம்.

X அத்த - தத்திக்கு - அத்தன்: அத்த - தத்திக் - கத்தன் எனப் பிரித்து, அத்த தத்தி என்பன அந்த - தந்தி என்பனவற்றின் மரூஉ எனக்கொண்டு, அந்த தந்திக்கு (ஐராவதத்துக்குத் தலைவன் எனவும் பொருள் காணலாம். இந்திரனுக்கு முருகவேள் அஞ்சல் (அபயம்) அளித்துத் திடம் தந்தது.

'வெள்ளைக் கயேந்திரனுக்கு அஞ்சல் அளித்து"
-கந்தர் கலிவெண்பா-95

"சதுமகத்தனை அந்நிலை நோக்கியே அன்பிற் கூறுவான்
"சூரர்குலம் முடிய வானுளோர் மீண்டிட இருஞ்சிறை;
விண்பதத்தைநீ ஆண்டிட நல்குதும் ஐயுறேல் என்றார்"
கந்த புராணம் -2-43-139, 140.

(தொடர்ச்சி 71-ஆம் பக்கம் பார்க்க)

## 474.

பரிசுத்தமான உள்ளத்தை உடைய (தொல்) பழைய அடியார்களிடம் சுத்த மனத்துடன் இஷ்டம் (நண்பு) வைக்காமல்-

நெருங்கிய பொய்யோடு கலந்த சில கட்சிகளைச் (சேர்ந்து) சொற் குற்றங்களுக்கு இடம் தருகின்ற வழிகளை நாடியும்-

மயக்கம் பூண்டு "தை" என்ற தாளத்துக்குக் - (தற்று உற்று ஒத்து) கட்டமைந்ததாய் ஒத்ததான (கித்தி)- நடனத்தால் வசப்படுத்துகின்ற (பொது) மாதர்களுடைய-

மயக்கு வார்த்தையில் - (பொய்யில்) - கட்டுண்டு தடுமாற்றம் அடைந்தும், முன்னேற்றம் இல்லாமல் கீழ் நிலையை அடைந்து தளர்ச்சி உறுவேனோ!

அத்தத் தத்திக் கத்தற்கு (அ - தத்து - அத்திக்கு - அத்தற்கு, அல்லது அத்தி - கத்தற்கு)- அந்த மனக் கவலை கொண்டிருந்த - அல்லது ஆபத்திலிருந்த - (ஆனை)-ஐராவதத் தலைவனாம் இந்திரனுக்கும் - எய்த்த தவஞ்செய்து இளைத்துப் போயிருந்த - (அந்த அத்திக்கு) அந்த யானைக்கும் - (அத்து) சாரும்படி - கூடும்படி - பலம் (உறுதி, தைரியம்). பயன் அளித்தவனே!

---

எய்த்தத் தத்திக் கத்துப் பலமீவாய் - என்பதை 'எய்த்த - அத்த அத்திக்கு - அத்து' எனப் பிரித்து 'எய்த்த அத்த' என்பன 'எய்த்தத்த' என மருவி, 'எய்த்தத்த அத்திக்கு' என்பன எய்த்தத் தத்திக்கு' என மருவினதாகக் கொள்ளவேண்டும் எய்த்த அத்த - என்பதில் அத்த - அந்த என்பதன் மரூஉ; எனவே- 'எய்த்த - அந்த - அத்திக்கு' எனக் கொண்டு பொருள் காணவேண்டும் இனி-

எய்த்த - தத்து - இக்கத்து - எனப் பிரித்தால் - 'இக்கத்து' என்பது 'இக்கட்டு என்பதன் மரூஉ எனக்கொண்டு- (அத்தன்) இந்திரன் இளைத்திருந்த - தத்து - ஆபத்தான இக்கட்டில் - கஷ்ட திசையில் பலம் ஈந்தவனே - எனப் பொருள் காண வேண்டி வரும்.

O அத்திக்குப் பலம் தந்தது

திருமால் முருகவேளை யானையாகத் தாங்க நினைத்து "மாவிரபுரம்" என்னும் தலத்தில் அருந் தவம் புரிந்தார். அவருடைய

(தொடர்ச்சி 72-ஆம் பக்கம் பார்க்க)

அர்ச்சித் துப்பொற் செக்கொச் சைத்தத்
தைக்குச் செச்சைத் தொடைசூழ்வாய்;
கத்தத் தித்தத் தத்திற் கொக்கைக்
கைத்தச் சத்திப் படையேவுங்-
கற்புச் சத்திப் பொற்புச் சத்திக்
கச்சிச் சொக்கப் பெருமாளே (24)

## 475. தமிழ் பாட

தத்தத் தத்தத் தனனத் தத்தத் தத்தத் தனனத்
தத்தத் தத்தத் தனனத் தனதான

கொக்குக் கொக்கத் தலையிற் பற்றுச் சிக்கத்
தளகக்
கொத்துற் றுக்குப் பிணியுற் றவனாகிக்-
குக்கிக் கக்கிக் கடையிற் பற்றத் துற்றுக் கழலக்
கொத்தைச் சொற்கற் றுலகிற் பலபாஷை;

---

(71 - ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

தவத்துக்கு இரங்கி முருகவேள் எதிர்தோன்றத் திருமால் "எனக்கு முன் அவமானம் புரிந்த தாரகன் சாத்தனாருக்கு யானை வாகனமாக விளங்குகின்றான். அவன் அஞ்சும்படி என்னை நீ யானை வாகனமாக்கி ஊருதல் வேண்டும்' என வேண்டினர்: அங்ஙனமே அவரை யானையாக்கி முருகவேள் ஊர்ந்தனர். இதனால் முருகவேள் " கயாரூட மூர்த்தி" ஆனார்.

" மதவெங் களிற் றூர்திப் பெருமான்" தணிகைப் புராணம் (அகத்தியர் 68)

"ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" - திருமுருகாற்றுப்படை

(பிணிமுகம் - யானை)

'சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தம ருழக்கி' - பரிபாடல் (5) சுப்ரமணிய பராக்ரமம் - பக்கம் -119

** இளைத்த அத்தி - பானுகோபனுடன் செய்த போரில் இளைத்த அத்தி ஐராவதம் எனவும் கொள்ளலாம். இது தணிகையில் முருகவேளைப் பூசித்த இந்திரனால் அவருக்குச் சீதனமாகக் கொடுக்கப்பட்டது. தணிகைக் கோயிலில் இந்திர திசை (கிழக்கு) நோக்கி இது நிற்கின்றது.

" பெண்கரி யுடன்நிலை பெறுகென் றிந்திரன்
வெண்கரி தன்னையும் விசாகற் கீந்து" - தணிகாசல புராணம் 342.

(தொடர்ச்சி 73-ஆம் பக்கம் பார்க்க)

*அருச்சித்து (பூசித்து) அழகிய செம்மை வாய்ந்த கொச்சைச் சொல் பேசும் - திருந்தாப் பேச்சினைப் பேசும் கிளிபோன்ற வள்ளிக்கு வெட்சி மாலையைச் சூட்டினவனே!

கத்து அத்தி (ஒலிக்கின்ற கடலில்) - தத்து அத்தில் (தத்து அதில்) - ஆபத்தான நிலையில் (இருந்த) (கொக்கை) மாமரமாம் சூரன்மீது, கைத்த (கையகத்ததான - கையில் இருந்த - சத்திப் படையை ஏவும் (செலுத்தின பெருமாளே) !

கற்புக்கு (அணிகலமாம்) சத்தி (பார்வதி) அளித்த அழகிய சத்தி வேல் ஏந்தும் பெருமாளே ! கச்சியிற் சொக்கப் பெருமாளே!

(பிற்பட்டிட்டுத் தளர்வேனோ)

## 475.

கொக்கின் நிறம்போலத் தலையிற் பற்றியுள்ள சிக்கத்து (குடுமியின்) அளகக் கொத்து - மயிர்த் தொகுதி உற்று - (வெண்மை நிறத்தை) அடைந்து (நான்) உக்கு - மக்கி மெலிந்து, நோய்க்கு ஆளாகி (நோயுற்றவனாய்)

குக்கி (குக்கல் உற்று) இருமி, (கக்கி) (வாந்தி செய்து,) (கடையில்) வாழ்நாளின் இறுதியில், பற்றத்து உற்று (பல் தத்து உற்று) பற்களெல்லாம் ஆபத்தை அடைந்து, கழல - விழுந்து ஒழிய, (கொத்தை) ஈனமான (அஞ்ஞானமான) சொற்களைக் கற்று உலகில் உள்ள பல பாஷைகளைத்-

---

இனி, தவத்தால் இளைத்த அத்தி - தேவசேனை எனக்கொண்டு தேவசேனையை மணந்து பலன்அளித்தார் - எனலுமாம்.

*இங்ஙனம் வள்ளியை அர்ச்சித்ததும் மாலை சூட்டினதும் முருகவேளுக்கு வள்ளியிடமிருந்த பெருங்காதலை விளக்குகின்றது.

"நின்றனைப் பாவிய னீங்கியே படர வல்லனோ'
"உய்திறம் வேறெனக் குள கொள் ஈண்டுநின்
கைதனில் இவ்வுயிர் காத்துக் கோடியால்"
நின்னிரு பூங்கழல் அல்லது புகலொன் றில்லையால்
நீங்கலன் நீங்கலன் நின்னை என்றுமே"

- என முருகவேள் வள்ளியை நோக்கிக் கூறினராமே!
(கந்த புராணம் - வள்ளி திருமணம் - 84-86)

திக்கித் திக்கிக் குளறிச் செப்பித் தப்பிக் கெடுபொய்ச்
செற்றைச் சட்டைக் குடிலைச் சுமைபேணும்-

சிக்கற் றூட்குக் கருணைச் சுத்தச் சித்தித் தமிழைத்
திட்டத் துக்குப் புகலப் பெறுவேனோ;

அக்கிட் டிக்கிட் டமருக் கொட்டிக் கிட்டிட் டெதிரிட்
டத்ரத் தெற்றிக் கடுகப் பொருசூரன்

அச்சுக் கெட்டுப் படைவிட் டச்சப் பட்டுக் கடலுட்
புக்குப் பட்டுத் *துருமத் தடைவாகத்;

தக்குத் திக்குத் தறுகட் டொக்குத் தொக்குற் றதுகட்
கைக்கொட் டிட்டிட் டுடல்சிற் கணமாடிச்-

சத்திக் குத்தித் துடியிற் சத்திக் கக்கைக் சமர்செய்ச்
† சத்திக் கச்சிக் குமரப் பெருமாளே (25)

## 476. அகப்பொருள்

தத்தத் தத்தத் தத்தத் தத்தத்
தத்தத் தனனத் தனதான

தத்தித் தத்திச் சட்டப் பட்டுச்
சத்தப் படுமைக் கடலாலே-

சர்ப்பத் தத்திற் பட்டுக் கெட்டுத்
தட்டுப் படுமப் பிறையாலே;

---

* துருமம்-மரம்

† "சர்ப்பப் பொற்றைக் குமரப் பெருமாளே," என்றும் பாடம்; 'சர்ப்பப் பொற்றை' என்பது திருச்செங்கோடு.

தடைப்பட்டுத் தடைப்பட்டு குழறிப் பேசித் தவறு தலான வழியிற் சென்று கெட்டுப் போகின்ற பொய்க்-கூட்டமாம் (நிறைந்த) சட்டையாகிய (இந்த) (குடில்-ஐ-சுமை) குடிசையாம் வியப்புத் தரும் சுமையை விரும்புகின்ற-

சிக்கு (தடை) நீங்கப்பெற்று, உட்கு (உள்-கு உள்ளத்திலே கருணை எண்ணம் வாய்க்கப்பெற்றுப், பரிசுத்த மானதும், சித்தியை (நற்கதியை, மோட்சத்தைத் தர வல்லதுமான தமிழை (தமிழ்ப் பாக்களை)த் திட்டத்துக்கு பூரணமாக, லக்ஷணமாக, செவ்வையாக சொல்லும் (பாடும்) பாக்கியத்தைப் பெறுவேனோ!

அங்கிட்டு இங்கிட்டு (அங்கும் இங்கும்-பல இடங்களிலும்) (அமருக்கு ஒட்டி) போர் செய்ய (ச் சபதத்துடன்) துணிந்து (கிட்டியிட்டு) சமீபத்தில் நெருங்கி எதிர்த்து அஸ்திரங்களைப் (படைகளை-ஆயுதங்களை)எற்றி (செலுத்தி) விரைவிற் சண்டை செய்த சூரன்-

உடம்பு கெட்டு போய், ஆயுதங்களைக் கைவிட்டு (இல்லாதொழிந்து) அல்லது, தனது சேனைகளை விட்டுத் தன்னந் தனியனாய், பயம் அடைந்து, கடலுள்ளே புகுந்து வேதனைப்பட்டு, (மா) மர உருவத்தை அடைந்து நிற்க-

(தக்குத் திக்குத் தறுகண்)- தறுகண் - அஞ்சாமையுட-னிருந்த வீரம் எல்லாம் தக்குத் திக்கெனத் தடுமாற. தொக்குத் தொக்குற்றது கண் (தொக்கு - பரிச உணர்ச்சி அறியும் இந்திரியம்) (முதலிய) துவையலாகி (அழிந்துபட) அந்த இடத்தும் (அந்த நிலையிலும்), கைக்கொட்டு இட்டு இட்டு-கையை மிகவும் கொட்டிக்கொண்டு (ஆர்ப்பரித்து)-உடலுடன் சிலபொழுது (நேரம்) ஆடி (போர் செய்து)-

சத்தி (வேற்படை) குத்தினதால், (துடியில் சத்திக்க) துடித்துக் கதறி ஒலி செய்ய (அல்லது துடி-உடுக்கைப் பறையின் முழக்கம்போலக் கூவிக்கதற) கைச்சமர் செய் - ஒழுங்கான போரைச் செய்த பெருமாளே! சத்திப் பெருமாளே - வேற் பெருமாளே ! கச்சிக் குமரப் பெருமாளே

(தமிழைப் புகலப் பெறுவேனோ)

## 476.

அலைகள் தாவிச்சென்று தாவிச்சென்று ஓர் ஒழுங்கு முறையிலே தொழிற்பட்டு ஒலி செய்கின்ற கருங் கடலாலும்-

(சர்ப்பத்தின் தத்தில்பட்டு) கிரகணத்தின்போது) ராகுகேது எனப்படும்)-பாம்பாற் பிடிபடுதல் என்னும் ஆபத்திற்பட்டு, கெடுதல் உற்று, தடைபடுகின்ற சந்திரனாலும்-

சித்தத் துக்குப் பித்துற் றுச்சச்
சித்ரக் கொடியுற் றழியாதே-

செப்பக் கொற்றச் சிற்பப் பத்திச்
செச்சைத் **தொடையைத்** **தரவேணும்**

கொத்துத் திக்குப் பத்துட் புக்குக்
குத்திக் கிரியைப் பொரும்வேலா-

கொச்சைப் பொச்சைப் பொற்பிற் பச்சைக்
கொச்சைக் குறவிக் கினியோனே;

சுத்தப் பத்தத் தர்க்குச் சித்தத்
துக்கத் தையொழித் திடும்வீரா-

சொர்க்கத் துக்கொப் புற்றக் **கச்சிச்**
சொக்கப் பதியிற் பெருமானே (26)

---

குறிப்பு:- இப்பாடலின் ஒவ்வோரடியிலும் இறுதியிலுள்ள பாகத்தை எடுத்தமைக்கப் பின்வருமாறு பிறிதொரு பாடலாமாறு காண்க:-

---

சத்தப் படுமைக் கடலாலே;
தட்டுப் படுமப் பிறையாலே;
சித்ரக் கொடியுற் றழியாதே
செச்சைத் தொடையைத் தரவேணும்;
குத்திக் கிரியைப் பொரும்வேலா-
கொச்சைக் குறவிக் கினியோனே;
துக்கத் தையொழித் திடும்வீரா-
சொக்கப் பதியிற் பெருமானே.

சித்தத்துக்கு (மனதிலே) பித்து உற்று (காம வெறி கொண்டு) (உச்சம்) அதன் அதிகமான நிலையை இந்த அழகிய கொடிபோன்ற பெண் அடைந்து அழிவுபடாமல்

உனது (செப்பமானதும்) செவ்வையானதும் (கொற்றம்) வீரத்துக்கு அறிகுறியானதும், (சிற்பம்) தொழில் திறம் காட்டுவதும். (பத்தி) வரிசையாய் அமைந்ததுமான வெட்சிமாலையைத் தந்தருள வேண்டும்

நிறைந்துள்ள (திக்குப்பத்துள்) வடக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு - வடகிழக்கு, தென் கிழக்கு, வடமேற்கு, தென்மேற்கு - மேல். கீழ் எனப்படும்) பத்துத் திக்குகளிலும் வேலால் குத்திக் கிரௌஞ்சகிரியுடன் (அல்லது) ஏழுகிரியுடன் சண்டைசெய்த வேலனே!

திருந்தாப் பேச்சு பேசுபவளும், (பொச்சை) காடு மலைகளில் இருப்பவளும் அழகிலே பச்சைநிறங் கொண்டவளும், இழிகுலமாம் குறக்குலத்தவளுமான வள்ளிக்கு இனியவனே!

பரிசுத்தமான (பத்தத்தர்) பக்த அத்தர்-பத்தியில் உயர்ந்தோர்களுடைய மனத்தில் உள்ள துக்கங்களை ஒழித்திடுகின்ற வீரனே!

*சொர்க்கத்துக்கு (தேவருலகுக்கு) ஒப்பான கச்சி எனப்படும் அழகிய திருப்பதியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(செச்சைத் தொடையைத் தரவேணும்)

**உள்ளுறை பாட்டின் உரை**

ஒலி செய்கின்ற கரிய கடலாலும்,
எதிர்ப்படும் சந்திரனாலும்,
அழகிய கொடிபோன்ற இப்பெண் அழிவுறாமல்,
(உனது) வெட்சிமாலையைத் தரவேணும்;
குத்தி மலையைப் பொருத வேலனே;
இழிகுலக் குறத்திக்கு இனியவனே!
துக்கத்தை ஒழிக்கும் வீரா!
சுவர்க்கப்பதியில் (அமராவதியிற்) பெருமாளே.

* சொர்க்கம் - சுவர்க்கப்பதி-அமராவதி.

## 477. அடிமையாய் அர்ச்சிக்க

தத்தத்தத் தத்தத் தத்தத்தத் தத்தத்
தத்தத்தத் தத்தத் தனதான

பொக்குப்பைக் *கத்தத் தொக்குப்பைக் குத்துப்
பொய்த்தெத்துத் † தத்துக் குடில்பேணிப்

பொச்சைப்பிச் சற்பக் கொச்சைச்சொற் கற்றுப்
பொற்சித்ரக் கச்சுக் கிரியார்தோய்;

துக்கத்துக் கத்திற் சிக்குப்பட் டிட்டுத்
துக்கித்துக் கெய்த்துச் சுழலாதே-

சுத்தச்சித் தத்துப் ‡ பத்திப்பத் தர்க்கொத்
துச்சற்றர்ச் சிக்கப் பெறுவேனோ;

திக்குத்திக் கற்றுப் X பைத்தத்தத் திக்குச்
செற் O பத்ரக் கொக்கைப் பொரும்வேலா-

செப்பச்சொர்க் கத்துச் செப்பொற்றத் தைக்குச்
செச்சைக்கொத் தொப்பித் தணிவோனே;

---

*கத்தம் -மலம்

† தத்து-ஆபத்து

‡ 'தொண்ட ருடனதாகி விளையும் அன்பின் அடிமையாகு முறைமை யொன்றை அருள்வாயே' - என்றார் பிறிதோரிடத்தும் திருப்புகழ் 227

X பை தத்து அத்தி - பசிய அலைமோதுகின்ற கடல்

Oபத்திரம்-இலை.

# 477.

பொக்குப் பை-குற்றம் நிறைந்த பை, (சுத்தும்) மலம் (தொக்கு-தொகு கூடின பை, குத்து பொய்த்து எத்து-சுடு சொல் பொய்யொடு கலந்து வஞ்சகம், ஆபத்து - இவையெல்லாம் கூடிய குடிசை உடலை விரும்பி

(பொச்சை) குற்றமானதும், (பிச்சு) பைத்தியம் கொண்டதும், அற்பமானதும் (கொச்சை) இழிவானதுமான சொற்களைக் கற்று அழகிய விசித்திரமான ரவிக்கை பூண்ட மலைபோன்ற கொங்கைகளை உடைய மாதர்களைச் சேருதலால் (வரும்)-

(துக்கத் துக்கத்தில்) பெருந்துக்கத்தில் (அல்லது துன்பநோயில்) சிக்குப்பட்டிட்டு-மாட்டிக் கொண்டு, வேதனையுற்று, இளைத்துச் சுழற்சியுறாமல் சஞ்சலப்படாமல்-

பரிசுத்தமான நெஞ்சத்துடன் பத்திபூண்ட பத்தர்களுக்கு (ஒத்து) இணையாக, (நான் ஒழுகி), சற்று அர்ச்சிக்க சிறிதளவேனும் (உன்னைப்) பூசிக்கும் பாக்கியத்தைப் பெறுவேனோ!

திக்குத் திக்கு அற்று-எந்தத் திக்கிலும் திக்கு (உதவி) இல்லாதுபோய்-தனிப்பட்டு-பை தத்து அத்தி - பசிய அலைமோதுகின்ற கடலுள் செல்-போய்ச் சேர்ந்த இலையொடு கூடிய மாமரமாம் சூரனொடு போர்புரிந்த வேலனே!

(செப்பச் சொர்க்கத்து) செவ்விய விண்ணுலகில் (அல்லது....செப்பு அ சொர்க்கத்தில் ... விசேடமாகச் சொல்லப்படும் அந்த விண்ணுலகில் உள்ள), செப் பொன்-செம்பொன் போன்ற தத்தைக்கு... கிளியனைய தேவசேனையை, செச்சைக் கொத்து (வெட்சி மலர்க் கொத்தால்) ஒப்பித்து -அலங்கரித்து, அணிவோனே-மாலை சூட்டுபவனே!

*கக்கக்கைத் தக்கக் கக்கட்கக் கக்கிக்
கட்கத்தத் தர்க்குப் பெரியோனே-
† கற்றைப்பொற் றெத்தப் பெற்றப்பொற் ‡ சிறப்பக்
கச்சிக்குட் சொக்கப் பெருமாளே.(27)

## 478. மாதர்மீதுள்ள மயக்கு அற

தனனத்தத் தனனத்தத் தனனத்தத் தனனத்தத்
தனனத்தத் தனனத்தத் தனதான

அயிலப்புக் கயலப்புத் தலைமெச்சுற் பலநச்சுக்
Xகனுரத்தைக் கனவெற்புத் தனமேகம்-
அளகக்கொத் தெனவொப்பிப் புளுகிச்சொற் பலகற்பித்
திளகிக்கற் புளநெக்குத் தடுமாறித்;
துயில்விட்டுச் செயல்விட்டுத் துயர்வுற்றுக் கயர்வுற்றுத்
தொடியர்க்கிப் படியெய்த்துச் சுழலாதே-
O சுருதிப்பொற் பொருள் **செக்கர்க் குரவிட்டுத்
†† தமர்பற்றித்
தொழு ‡‡ செச்சைக் கழல்பற்றிப் பணிவேனோ;

---

*கக்கு அக்கை தக்க அங்க (ங் கட்கு ஆக்கு அங்கி கண் சுத்த அத்தர் - பிரமன் முதலியோர் சரீரத்தினின்றுங் கழன்ற எலும்பைத் தகுந்த தமது அங்கங்களுக்கு ஆபரணமாக்கிய அக்கினிக் கண்ணையுடைய கர்த்தராகிய பிதா.

† துதிப் பாடல் நிரம்பப் பெற்றது கச்சி - என்பது - நால்வர் பாடலும் பெற்ற பெருமையாலும், ஐயடிகள் காடவர் கோன் நாயனார், பரணதேவர், பட்டினத்தார் முதலிய பெரியோர்களாற் போற்றப்பெற்ற பெருமையாலும் உணரலாகும்.

‡ சிற்பக் கச்சி - சிற்ப வேலை அழகுக்குக் கச்சிக் கைலாசநாதர் கோயில் பேர் போனது

X உரத்தைக் கனவெற்பு - உரத்த ஐ கன வெற்பு.

O"நெறிபல கொண்ட வேதநன் முடியினு மருவிய குருநாதா' திருப்புகழ் 289.

**செக்கர் ஆகுபெயராய் முருகவேளின் சிவந்த திருவடியைக் குறிக்கின்றது.

†† தமர் - முருகவேளின் அடியார்கள்.

‡‡ செச்சைக் கழல் - 'வெட்சிமலர் சூழ்ந்த நின்னிரு கழற்கால் " - கல்லாடம்-முருகர் துதி.

*(பிரமன் முதலியோர் சரீரத்தினின்றும்) (கக்கு) - கழன்ற, அக்கை - எலும்பை, தக்க - தகுந்த (அக்கக்கட்கு - அங்கங்கட்கு, (தமது) அங்கங்களுக்கு, (அக்கு) - (ஆபரணமாக) ஆக்கிய, (அக்கி) அக்கினிக் (கண் கத்த அத்தர்) - கண்ணையுடைய கர்த்தராகிய பிதா - சிவனுக்குக் - குருநாதனாம் பெரியோனே!*

திரளான (நிரம்பப்) போற்று - துதிப் பாடல்களால் ஏத்தப் பெற்ற (கச்சிக்குள்) - அழகிய சிற்ப வேலைகள் காணக்கூடிய **கச்சிக்**குள் - அழகிய பெருமாளே!

# 478.

(அயில்) வேல், (அப்பு) அம்பு, (கயல்) மீன், (அப்புத் தலை) நீர்க்கிடமான கடல், மெச்சு-வியக்கத்தக்க உற்பலம் (நீலோற்பமலர்), நச்சு - விஷம் தான் - கண்; உரத்த - மார்பில் உள்ள (ஐ) - அழகிய (கனவெற்பு) பருத்த மலைதான் - கொங்கை; மேகம் (தான்)

(அளகக் கொத்து) கூந்தல் தொகுதி - என்று இவ்வாறு உவமை கூறிப் பொய் பேசிச் சொல்பல கற்பனையாக அமைத்து, உருகி, (கற்பு(ள்)ளம்) மனோதிடம் உள்ள நெஞ்சம் நெகிழ்ந்து தடுமாற்றம் அடைந்து-

தூக்கம் ஒழிந்தும், செய்யவேண்டிய செயல்கள் ஒழிந்தும், துக்கம் கொண்டு, உக்கு - மெலிந்து, தளர்ச்சி (சோர்வு) உற்று, (தொடி) கைவளை பூண்ட மாதர்களுக்கு இவ்வாறு இளைத்துப் போய் அலையாமல்-

வேதத்தின் அழகிய பொருள்களைக்கூறி *(செக்கர்க்கு) சிவந்த உன் கழலிணைக்கு (குரவு) குராமலரை இட்டுப்-பூசித்து, (தமர்) உனது அன்பின் கூட்டத்தார் (அடியார் கூட்டம்), பற்றி - அன்பு வைத்துத் தொழுகின்ற செச்சைக் கழல் வெட்சி மலர் சூழ்ந்த திருவடியைச் சிக்கெனப் பற்றிப் பணியமாட்டேனோ!

---

** "கழலோ முழுதும் செய்யோய்"

-கந்தர நுபூதி - 25.

*புயலத்தைக் குயி†தத்தைக் கிளைபுக்குத் தொளைபச்சைப்
புனமுத்தைப் புணர்சித்ரப் புயவீரா-

† புரவிக்கொட் பிரதற்றத் திருள்திக்கிப் படிமட்கப்
புகல்பொற்குக் குடவெற்றிக் கொடியோனே;

‡ கயிலச்சுத் தரதத்துச் சயிலத்X துத் தர நிற்கக்
Oகரணிச்சித் தருள்கச்சிப் பதியோனே.

---

*புயல் அத்தை - அத்தை - தலைவி (பிங்கலம்) - புயலை வாகனமாகக் கொண்ட தலைவி மேகம் இந்திரனுக்கு வாகனமாதலால் தேவசேனைக்கும் வாகனமாம். "தெய்வ மின் ஊர் செல் (தெய்வயானை ஏறி வருகின்ற மேகவாகனம்" கந்தரந்தாதி உரை - 100.

† "புறத்திருளை அகற்றுதற்குப் புணரியெழுஞ் சூரியனைப் புலரிக் காலைச் சிறக்குமிரு சிறகடித்துத் தினத்தினமும் அழைத்துலவுஞ் சேவலே!" -சேவல்பத்து

‡ கயில் விமானத்தின் கொடுங்கை மேற்பாகம். 'கயில் - பூண்கடைப் புணர்வு - மாட்டும் கொக்கி அச்சு - அச்சாணி, ஆதாரம்; தரம் - வலிமை; தத்து - ஆபத்து. தகுதி X உத்தரம் நிற்க அகத்தியர் உதவிய வரலாறு;-

பார்வதி திருமணத்தின்போது இமயமலையிற் கூடிய தேவர் முநிவர் ஆகியோரின் பெருங்கூட்டத்தால் பூமியின் வடதிசை (இமயம்) தாழ்ந்தது; தென்திசை உயர்ந்தது அங்குக் குழுமி இருந்தோர் அஞ்சினர்: சிவபிரான் அகத்தியரை நோக்கி 'நீ உடனே தென் திசைக்கு ஏகுக நீ தென்திசையிற் பொதியமலையைச் சேரின் நிலைகுலைந்து நிற்கும் இப் பூமி சமன்நிலை பெறும்' எனக்கூற அங்ஙனமே அகத்தியர் தென்திசை நோக்கிச் சென்று பொதிய மலையை அடைய வடதிசைக்கு உற்ற ஆபத்து நீங்கி வடதிசையும் தென் திசையும் சமமான நிலைகளை அடைந்தன-

'தென்னாடு நண்ணி... பொதியமலை மேவுதி வையமெல்லாம்
மேனா ளெனவே நிகராகி விளங்கும் என்றான்"
" பொதியம தென்னும் வெற்பிற் புனிதமா முநிவன் வைகத்
துதியுறு வடபால் தென்பால் புவனியோர் துலைபோல் ஒப்ப"
-கந்த புராணம் I--10 - 53 - 64.

O கரணி - சிற்ப சேலை செய்யும் தபதி. கரணி - தொழில் செய்பவர். கரணம் - தொழில் - "சித்திரக் கரணம் "- சிலப் -3-54

சித்தர் - உள் - கச்சி - அகத்தியர் எனும் பெரியார் (உள்) தியானித்து வணங்கின - காஞ்சி.

புயல் (மேகத்தை வாகனமாகக்கொண்ட அத்தை - தலைவி (தேவசேனை)யையும், குயில்; (பேச்சின் இனிமையில்) குயில் போன்றவளும், தத்தை - நிறத்தாலும், அழகாலும் *(தத்தை) கிளி போன்றவளும், (கிளை (கிள்ளை) கிளிகள், புக்கு (புகுந்து), தொளை-மூக்கால் தொளைத்து உண்கின்ற பச்சைத் தினை விளை புனத்தில் (காவலிருந்த) (முத்து) முத்துப் போன்ற அருமை வாய்ந்த வள்ளியையும் சேர்கின்ற அழகிய புயவீரனே!

(புரவி) குதிரைகள் (கொட்பு) சுழன்று வரும் (இரத) (சூரியனுடைய) தேர் - (வரும்) (அற்றத்து) சமயத்தில், இருளானது (திக்கி) தடுமாறிப், (படி) உலகு - உலகினின்றும் (மட்க) வலி குன்றிப்போக (இருள் ஒழிய) புகல் - கூவுகின்ற அழகிய கோழியின் ஜயக்கொடியை உடையவனே!

† (கயில்) (பூமியை ஒரு நிலையில் வைத்துள்ள) கொக்கி- பூட்டு (தளர்ந்து) (அச்சு) அச்சத்தை (பயத்தை) தர. (தத்து) ஆபத்தான நிலையிலிருந்த (சயிலத்து) இமயமலையில் (உத்தரம்) வடதிசை - வடக்குத் திசை தாழாது (சமமான நிலையில்) நிற்க, (கரணி) செய்தவரான (அல்லது மருந்தாய் - சமய சஞ்சீவியாய் உதவி புரிந்தவரான, சித்தர் - சித்த புருஷராம் ‡ அகத்திய முநிவர் - உள் தியானித்து வணங்கிய கச்சிப் பதியோனே!

---

*தத்தைக்கிளை - கிளியின் கூட்டம் எனலமாம்.

† கயில் அச்சு தரம்தத்து - உலகம் நேர்படநிற்க ஏற்பட்டுள்ள ஆதாரத்தின் வலிமையானது ஆபத்து நிலை அடைய எனவும் பொருள் காணலாம் கரணி - சிற்பி அச்சாணியைச் செப்பனிட்டது போலப் பூமியை நிலை நிறுத்தின சிற்பி போன்ற சித்தர் - (அகத்தியர்) எனலுமாம். இந்த அடிக்கு பிரமஸ்ரீ ஜகந்நாதையர் பின்வருமாறு உரை காண்பர்-

‡ "கயில் அசுத்த ரதத்து சயிலத்து தரம் நிற்க கரணி சித்து அருள் கச்சிப் பதியோனே"- பூட்டு வாயை உடைய அழகிய தூய இரதத்தைப் போலவும் (தாம் இருக்கும்) மலையைப் போலவும் அதன் தகுதி நிற்கும்படியாக, எல்லாக் கரணங்களையும் அதிதேவதையாக உடைய பராசத்தி தன் சித்தினை அருளி வைத்த காஞ்சீபுரத்தை உடையவனே! ஸ்ரீ சக்கரத்தை ரதமெனவும் மேருவெனவும் சொல்வது ஒரு முறை. அதற்குச் சமமானது காஞ்சி."

(தொடர்ச்சி பக்கம் 88 பார்க்க)

கடலிற்கொக் கடல்கெட்டுக் கரமுட்கத் தரமுட்கப்
பொருசத்திக் கரசொக்கப் பெருமாளே (28)

## 479. அகப் பொருள் (மாலையை வேண்டுவது)

*தத்தத் தனதன தத்தத் தனதன*
*தத்தத் தனதன தனதான*

*கச்சிட் டணிமுலை தைச்சிட் டுருவிய*
*மச்சக் கொடிமதன் மலராலுங்-*

*கச்சைக் கலைமதி நச்சுக் கடலிடை*
*அச்சப் படவெழு மதனாலும்;*

*பிச்சுற் றிவளுள மெய்ச்சுத் தளர்வது*
*சொச்சத் தரமல இனிதான-*

*பிச்சிப் புதுமலர் வைச்சுச் சொருகிய*
*செச்சைத்* **தொடையது** **தரவேணும்;**

*பச்சைத் திருவுமை யிச்சித் *தருளிய*
**கச்சிப்** *பதிதனி லுறைவோனே-*

*பற்றிப் பணிபவர் குற்றப் பகைகெட*
*உற்றுப் பொரவல கதிர்வேலா;*

*இச்சித் தழகிய கொச்சைக் குறமகள்*
*மெச்சித் தழுவிய திருமார்பா-*

*எட்டுக் குலகிரி முட்டப் பொடிபட*
*வெட்டித் துணிசெய்த பெருமாளே.* (29)

---

*அருளிய - அன்புடன் (பூஜை) செய்த - வேடன் அருளிய பூஜை" பாட்டு 433 பக்கம்-589 கீழ்க்குறிப்பு; அன்புடன் அறம் வளர்த்த-எனலுமாம் "இச்சைப்படி தன் பேரறம் எண்ணான்கும் வளர்க்கும் பச்சைக்கொடி உறை கச்சிப்பதி " - வில்லிபாரதம் - அருச்சுனன் தீர்த்த -13.

கடலில் இருந்த மாமரம் வலியிழந்து தன்னுடைய தீமை போய் (அல்லது பிரதாபம் செயல் அழிந்து) அஞ்சுதல் உண்டாக, மேன்மை போய் அஞ்சுதல் உண்டாகச் சண்டை செய்த சத்திவேலை ஏந்திய திருக்கரத்தனே! அழகிய பெருமாளே!

*(செச்சைக் கழல் பற்றிப் பணிவேனோ)*

## 479.

ரவிக்கையிட்ட அழகிய கொங்கையில் தைத்து ஊடுருவிச் சென்ற மீன்கொடியைக் கொண்ட மன்மதனது மலர்ப் பாணங்களாலும்-

(தக்கனிட்ட சாபத்தால் தேய்ந்து போதல் என்னும்) வடு அல்லது தழும்பினைக்கொண்ட கலைகளை உடைய சந்திரனானவன், ஆலகால விஷம் பிறந்த கடலினிடையே நான் அஞ்சும்படி (எழும் அதனாலும்) எழுந்துள்ள அந்தச் செய்கையாலும்

பைத்தியநிலை கொண்டு இவள் (தலைவி) (உள்ளம்) மனம் (எய்த்துத் தளர்வது) இளைத்துத் தளர்ச்சி அடைவது கொஞ்சமான அளவினதன்று (சிறிதளவன்று) (ஆதலால் இறைவா! நீ) இனிமைதரும்

பிச்சியின் புது மலர்கள் (இடையிடையே) வைத்துச் சொருகப்பட்டுள்ள வெட்சி மாலையை (எனக்கு) அளித்தருள வேண்டும்;

பச்சை நிறத்து அழகிய உமை இச்சை வைத்து (பூஜை செய்த- அல்லது 32 அறங்களை) அருளிய (கச்சி) கச்சிப்பதியில் உறைபவனே!

அன்பு வைத்துப் பணிகின்றவர்களுக்கு உள்ள குற்றங்களும் பகைகளும் (அல்லது பணிபவர்களுக்குக் குற்றம் செய்யக் கருதிய பகைவர்கள் ) அழிந்து நீங்க, உதவ வந்து, போர் புரிய வல்ல ஒளிவேலனே!

உன்மீது காதல் வைத்த அழகிய திருந்தாப்பேச்சை உடைய (அல்லது இழிகுலத்துக்) குறமகள் (வள்ளி) உன்னை மெச்சித் தழுவின அழகிய மார்பனே!

எட்டு குல மலைகளும் அடியோடு பொடிபடும்படி (அவைகளுள் வாசம் செய்திருந்த) அசுரர்களை வெட்டித் துணித்த பெருமாளே!

*(செச்சைத் தொடையது தரவேணும்)*

## 480. முத்திபெற

தனதன தானாந்தன தனதன தானாந்தன
தனதன தானாந்தன தனதான

*கமலரு சோகாம்பர முடிநடு வேய்பூங்கணை
கலகமர் வாய்தோய்ந்தம ளியின்மீதே-
களையற மீதூர்ந்†தெழ மதனவி டாய்போம்படி
கனவிய வாரேந்தின இளநீர்தோய்ந்
‡தெம்துயிர் நீலாஞ்சன மதர்விழி யால்வாங்கிய
Xஇவளுடன் மால்கூர்ந்திடு மநுபோகம்-
இனிவிட வேதாந்தப ரமசுக வீடாம்பொருள்
இதவிய பாதாம்புய மருள்வாயே;
அமகர O ஆசாம்பர அதுகர **ஏகாம்பர
††அது ‡‡லண நீலாம்பர மறியாத-
XX அநகOOர நாளாங்கிதர் தமையுமை யாள்சேர்ந்தருள்
***அறமுறு சீகாஞ்சியி லுறைவோனே;

---

*கமலம் - முதற் கணை; அரு அசோகு - நடுக் கணை; பரம் ஆம் முடி - கனமான நீலோற்பலக் கடைக் கணை; நடு ஏய் பூங் கணை - இவற்றிற்கு இடையிடையாகும் மா, முல்லை என்னும் இருகணைகள் ஆகிய பஞ்சபாணங்களின். 'கமலம் - அரு அசோகு + ஆம்பரம் - முடி + நடு + ஏய் கணை, எனப்பிரித்தும் பொருள் கொள்ளலாம் பாடல் 19-பக்கம் 60 பார்க்க.

† எழுமதன - எழு அ மதன.

‡ எமது -எனது ஒருமையிற்பன்மை (எதுகை நோக்கி)

Xஇவள்-தான் மோகங்கொண்ட பெண்-பன்மைஒருமையில்வந்ததாகக் கொண்டு - இப் பொதுமாதர்களுடன் - எனவும் கொள்ளலாம் Oஆசாம்பர - திகம்பர. ** ஏகாம்பரம் - ஆம்பிரம், ஆமிரம் - மாமரம்- மாமரத்தின் நிழலில் வீற்றிருக்கும் ஏகன் (ஒருவன்)

†† அ துல - ஒப்பில்லாத

‡‡ அனம் நீல அம்பரம் அறியாத - அன்னரூபங் கொண்ட பிரமன் நீலநிறமுற்ற ஆகாயத்தில் முடிதேடி யறியாத; அன்னமும் நீலக்கடல் போன்ற விஷ்ணுவும் அறியாத - என்றும் பொருள் கொள்ளலாம். XX அநகர் - பாப ரகிதர் OO அம் நாள அங்கிதர் - அழகிய முலைக்காம்பின் தழும் புடையவர். பாட்டு 463, பக்கம் - 44 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

*** அறம் உறு காஞ்சி - பாட்டு 278, 460- பக்கம் 192, 34.

(மன்மதனது ஐந்து மலர்ப் பாணங்களில்) முதற்கணையாகிய தாமரை மலர், அருமையான அசோக மலர், (அம்பரம்) மாம்பூ, ஈற்றிலும் இடையிலும் உள்ள நீலோற்பலமலர், முல்லைமலர் ஆகிய புஷ்ப பாணங்களின் தொழிலாற்றலால் - (கலக அமர் வாய் தோய்ந்து - சச்சரவு பொருந்தி (அல்லது - கலகப்போரில்) ஈடுபட்டுப், படுக்கையின்மேல்-

அயர்வு (சோர்வு) நீங்க, என்மீது தாக்கி எழுகின்ற காமதாகம் நீங்கும்படிக் கனத்ததும், ரவிக்கை தாங்கியதுமான இளநீர்போன்ற கொங்கைகளை அணைந்து -

என்னுடைய உயிரை கரிய மை பூசிய செழிப்புள்ள கண்கொண்டு கவர்ந்த இந்தப் பெண்மீது மோகம் மிக்கு எழுகின்ற அநுபோகத்தை (இன்ப நுகர்ச்சியை)-

இனி விட்டொழிப்பதற்கு, வேத முடிவான, பரமசுகம் தருவதான, முத்திப் பொருளாகிய, இதம் (இன்பம்) தருவதான (உனது) பாத தாமரையைத் தந்தருளுவாயாக.

அ, ம, கர- அ(உ) ம - ஓம் என்னும் பிரணவாகாரமான வரும், திகம்பரரும், அது என்று அஃறிணை நிலையிலும் போற்றப்படக் கூடியவரும், ஏகனாய் (ஒருவனாய்) மாமரத்தின் கீழ் வீற்றிருப்பவரும், ஒப்பிலாத தன்மை உடையவரும், (அன்னம்) அன்னரூபங் கொண்ட பிரமன் நீல நிறமுள்ள ஆகாயத்தில் (முடி தேடி) அறியாத-

(பாபத்தை ஒழிப்பவரும்) பாப ரகிதரும், (தேவியின்) அழகிய முலைக்காம்பின் தழும்பை உடையவரும் ஆகிய சிவனை உமாதேவி (தவஞ்செய்து) சேரப் பெற்றதும், தேவி அருளிய (வளர்த்த) (முப்பத்திரண்டு) அறங்களும் நிகழப் பெற்றதுமான (தலமாம்) ஸ்ரீ காஞ்சியில் வீற்றிருப்பவனே!

விமல்*கி ராதாங்கனை தனகிரி தோய்காங்கெய
†வெடிபடு தேவேந்திர னகர்வாழ
விரிகடல் தீமூண்டிட நிசிசரர் வேர்மாண்டிட
வினையற வேல்வாங்கிய பெருமாளே (30)

## 481. உபதேசம் பெற

தனன தானன தத்தன தனதன
தானா தத்தத் தனதான

கரும மானபி றப்பற வொருகதி
காணா தெய்த்துத் தடுமாறுங்-
கலக காரண துற்குண சமயிகள்
நானா வர்க்கக் கலைநூலின்;
வரும நேகவி கற்பவி பரிதம
னோபா வத்துக் கரிதாய-
Xமவுன பூரித சத்திய வடிவினை
மாயா மற்குப் புகல்வாயே;
தரும வீம அருச்சுன நகுலச
காதே வர்க்குப் புகலாகிச்
சமர பூமியில் விக்ரம வளைகொடு
நாளோர் பத்தெட் டினிலாளுங்;

(83 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

‡ அகத்தியர் காஞ்சியைத் தரிசித்து வணங்கியது:-

மேரு மலையுடன் பகைத்த விந்தமலை நீள வளர்ந்து சந்திர சூரியர்கள் செல்லும் வழியைத் தடை செய்தது அந்த மலையின் அகங்காரத்தைப் பிரமதேவர் வேண்டிய வண்ணமே அகத்தியர் அடக்கித் தென்திசை நோக்கி வரும் வழியில் காஞ்சியைத் தரிசித்து ஏகாம்பரநாதரைப் போற்றினர்.

"தாப வேந்து காஞ்சி வளநகர் தன்னை முன் கண்டான்"

"சூதத் தெய்வத்தருநிழல் மேய கருணைப் பிழம்பை விழியெதிரே கண்டுகொண்டன். "இணங்கு முறைமையின் அங்கம் எட்டினும் ஐந்தினும் சால வணங்கி மகிழ்ந்து திளைத்து வார்புனல் கண்கள் சொரியக் குணங்குறி யின்றி எழுந்த கோலத் திருவுருப் போற்றி அணங்கரு மெய்யருள் பெற்று மீண்டனன் ஆர்கலி யுண்டான்' -காஞ்சி புராணம், தழுவக் 226, 229, 230.

*கிராத அங்கனை-வேடப் பெண் † வெடி - நறுமணம்.

அழுக்கற்றவனே (பரிசுத்தமானவனே)! வேடப்பெண் (வள்ளியின்) கொங்கை மலையில் தோய்கின்ற காங்கேயனே! (கங்கா புத்திரனே)! நறுமணம் கமழ்கின்ற தேவேந்திரநகர் பொன்னுலகு வாழும் பொருட்டு-

பரந்த கடல் தீப்பற்றி எரியவும் ,அசுரர்கள் வேரோடு மாளவும், தீவினை எல்லாம் ஒழியவும் *வேலாயுதத்தைப் பிரயோகித்த பெருமாளே!

(இதவிய பாதாம்புயம் அருள்வாயே)

# 481.

வினைக்கு ஈடான பிறவி தொலைவதற்கு ஒரு வழியும் தெரியாமல் இளைத்துத் தடுமாறுபவரும்

கலக்கம் தரும் கூச்சலுக்கே இடம் தருகின்ற பொல்லாத குணத்தை உடையவருமான † சமயவாதிகளின் பலவிதமான சாஸ்திர நூல்களிற்

சொல்லப்பட்ட அநேக மாறுபாடுகள் கொண்டதும் பொருந்தாததுமான மனோபாவனைக்கு (மன உணர்ச்சிக்கு) (அரிதாய) எட்டாததான-

மவுனநிலை நிறைவு கொண்டதான உண்மை ஒளியை நான் (மாயாமலுக்கு)-இறப்பின்றி விளங்க - உபதேசித்-தருளுவாயாக.

தருமன்- வீமன்-அருச்சுனன்-நகுலன்-சகாதேவன் (ஆகிய ஐவர்க்கும்) சரண் அளிப்பவனாகி-(காப்பு அளிப்பவனாகி)

போர்க்களத்தில் பராக்கிரமம் வாய்ந்த சங்கு கொண்டு நாள் ஒரு பதினெட்டில் (போர்) நிகழும்-

---

*'வேல் வாங்குதல் -வேலைப் பிரயோகித்தல்"- 'வேல்வாங்கு வகுப்பைப்' பார்க்க.

† சமய தர்க்க விரோத வாதிகள் தவிர ஏற்றுவ... அநுபூதி மீமிசை திகழும் அற்புத மவுன நிர்க்குண சிவமயத் திருஞான வேழமே "(திருஞான வேழவகுப்பு).

குரும கீதலமுட்பட வுளமது
கோடா மற்க்ஷத் ரியர்மாளக்

குலவு தேர்கட வச்சுதன் மருககு
மாரா கச்சிப் பெருமாளே.(31)

## 482. பொது மாதர் உறவு அற

தனதன தத்தத் தாந்த தானன
தனதன தத்தத் தாந்த தானன
தனதன தத்தத் தாந்த தானன தனதான

கலகலெ னப்பொற் சேந்த நூபுர
பரிபுர மொத்தித் தாந்த னாமென
கரமல ரச்சிற் றாந்தொ மாடிய பொறியார்பைங்-

கடிதட முற்றுக் *காந்த ளாமென
† இடைபிடி பட்டுச் சேர்ந்த ‡ ஆலிலை
கனதன பொற்பிட் டோங்கு மார்பொடு வடமாடச்;

சலசல சச்சச் சேங்கை பூண்வளை
பரிமள பச்சைச் சேர்ந்த லாவிய
சலசமு கத்துச் சார்ந்த வாள்விழி சுழலாடத்-

தரளந கைப்பித் தாம்ப லாரிதழ்
குலமுகி லொத்திட் டாய்ந்த வோதியர்
சரசமு ரைத்திச் சேர்ந்த தூவைய ருறவாமோ;

---

*காந்தள் பாம்புக்கு உவமை யாதலின் அல்குலுக்கும் உவமை யாயிற்று

"பாம்பு பை யவிந்தது போல்.... ஒண் செங்காந்தள்" -குறுந்தொகை-185

'பைசேர் அரவார் அல்குலார் -சம்பந்தர் I-65-5.

'பை யரவம் விரி காந்தள் - சம்பந்தர் -3-104-11.

குருக்ஷேத்திரம் ((முள்) களரிபடவும் (பாழ்நிலமாகவும்), அல்லது- குருமகீதலம் உட்பட -இடம் குருக்ஷேத்திரமாக தமது திருவுள்ளம் (கோணாது) நெறிமுறையில் நிற்கவும், அரசர்கள் யாவரும் இறந்துபடவும்

(அருச்சுனனுடைய) விளக்கமுற்ற தேரைச் செலுத்தின திருமாலுக்கு மருகனே! கச்சிப் பெருமாளே!

(சத்திய வடிவினை மாயாமறக்குப் புகல்வாயே)

# 482.

கல கல என்று அழகிய சிவந்த பாத கிண்கிணியும், சிலம்பும் தாள ஒத்துப்போல் "தாந்தனா" என்று ஒலிக்கத் தாமரை போன்ற கைகள் அதற்குச் சரி ஒப்பாக அமையத் "தாந்தோம்" என ஆடல் பயில்கின்ற தந்திரத்தினர்-பசுமை (செழிப்பு) வாய்ந்த

அல்குல் விரிந்து காந்தளை நிகர்ப்ப ஒரு பிடி அளவே உள்ள இடையிற் பட்டாடை பொருந்திய (அல்லது) காந்தள் போன்ற கையால் இடை பிடி படும்படியும்) ஆலிலை போன்ற வயிற்றுடனும் கனத்த கொங்கைகள் அழகு தந்து விளங்கும் மார்புடனும் (முத்து) மாலை அசைய,

சலசல சஜ்ஜ என்று ஒலிக்கும் சிவந்த கையில் அணிந்துள்ள வளையல்களையும் நறுமணம் வீசும் பச்சைப் *(பொட்டு) பொருந்தி விளங்கும் தாமரையன்ன முகத்தில் உள்ள வாள் போன்ற கண்கள் சுழன்று அசைய

முத்துப்போன்ற பற்கள் ஒளி வீசச் செவ்வாம்பல் போன்ற வாயிதழ்களைக் கொண்டவர்கள், சிறந்த மேகம் போன்ற திருந்திய கூந்தலைக் (கொண்டவர்கள்) சரசம் (காமலீலைப் பேச்சுகளைப்) பேசிச் சேர்கின்ற மாமிசம் உண்போர்-ஆகிய இத்தன்மைய பொது மாதர்களுடைய சம்பந்தம் நன்றா! நன்றன்று என்றபடி

திலத முகப்பொற் காந்தி மாதுமை
*யெனையருள் வைத்திட் டாண்ட நாயகி
சிவனுரு வத்திற் சேர்ந்த பார்வதி சிவகாமி

திரிபுவ னத்தைக் காண்ட நாடகி
குமரி சுகத்தைப் பூண்ட காரணி
சிவைசுடர் சத்திச் சாம்பவீ அமை யருள்பாலா;

அலகையி ரத்தத் தோங்கி மூழ்கிட
நரிகழு குப்பிச் சீர்ந்து வாயிட
அசுரர் குலத்தைக் காய்ந்த வேல்கர முடையோனே;

அமரர் மகட்குப் போந்த மால்கொளும்
விபுத குறத்திக் காண்ட வாதின
மழகு சிறக்கக் காஞ்சி மேவிய
பெருமாளே (32)

## 483. பிறவி அற

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தத்தத் தனதான

† கொத்தார் பற்கா லற்றே கப்பாழ்
‡ குப்பா யத்திற் செயல்மாறிக்-
கொக்கா கிக்கூ னிக்கோல் தொட்டே
கொட்டா விக்குப் புறவாசித்;
தித்தா நிற்றார் செத்தார் கெட்டேன்
X அஆ உஉ எனவேகேள்-

*இது அருணகிரியாரைத் தேவி ஆண்டதைக் குறிக்கும்.

† "பற் கொத்துக்கள் அனைத்தும் கழலாநின்று"- திருப்புகழ் 416
'பல் தத்துற்றுக் கழல'- திருப்புகழ் 475

‡ குப்பாயம் -சட்டை -சரீரம்

X "அ ஆ உ உ" இங்கு அ உ என்னுங் குற்றெழுத்துக்கள் விட்டிசைக்கின்றன; ஆதலால் அந்த எழுத்துக்கள் வல்லெழுத்துக்களின் வலிமை பெற்றுத் 'தத்தா தத்தத்' என்னும் சந்த ஓசையை நிரப்புகின்றன. சிதம்பரச் செய்யுட் கோவை 61- ஆம்பாடலில் 'மைக் கடல் ' என்பதற்கு எதுகையான 'நொஎன' வருகின்றதும் காண்க, அது "விட்டிசை வல்லொற்றெதுகை" யாம்.

பொட்டணிந்த முகத்தின் அழகிய ஒளி வீசும் மாது உமாதேவி, என்மீது திருவருள் வைத்து என்னை ஆண்டருளின நாயகி, சிவபிரானது திருவுருவத்தில் (இடது - பாதியிற்) சேர்ந்துள்ள பார்வதி, சிவகாமி

மூன்று புவனங்களையும் படைத்த நாடகத்தினள், குமரி சுகத்தையே அணிந்துள்ள காரணசக்தி, சிவன், தேவி ஜோதி, பராசத்தி, சாம்பவி, அ(ம்)மை (பிராட்டி) பெற்ற குழந்தையே!

பேய்கள் ரத்தத்தில் நன்றாய் முழுகவும் ,நரியும், கழுகும், (உண்டதால் உடல்) உப்பி - உப்ப பெருக்கச் சமயம் வாய்ந்த-தென்று வாயை வைத்து (உண்ண)வும், அசுரர்களுடைய குலத்தைச் சுட்டு அழித்த வேலாயுதத்தைத் திருக்கரத்தில் உடையவனே!

தேவர் மகளாம் தேவசேனை மீது சென்ற ஆசை கொண்ட தேவனே! குறத்தி (வள்ளியை) ஆண்டவனே! நாள்தோறும் அழகு விளங்கி மேம்படக் காஞ்சியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(தூவையர் உறவாமோ)

## 483.

வரிசை நிறைந்திருந்த பல் வேர் (அடி) அற்று விழுந்து போகப் பாழ்படும் சட்டையான (இந்த உடலின்) செயல்கள் தடுமாறி,

(மயிரெலாம்) கொக்கின் நிறமாய் வெளுத்து ,(உடல்) கூன் அடைந்து, (கையில்) ஊன்றுகோல் பிடித்துக் கொட்டாவி (விட்டத்), தலை குனிதலை அடைந்து (இங்ஙனம்) வாசி-நிலை வேறுபாடுகளை-

அனுபவித்து நின்றார், (பின்னர்) இறந்தார், (ஐயோ) கெட்டேன் எனக் கூறிக் கதறி " அ ஆ உ உ" என்னும் ஒலியுடன் உறவினர் அழ-

*செற்றே சுட்டே விட்டே றிப்போ
மப்பே துத்துக் கமறாதோ;

நித்தா வித்தா ரத்தோ கைக்கே
நிற்பாய் கச்சிக் குமரேசா-

நிட்டூ ரச்சூர் கெட்டோ டப்போர்
நெட்டோ தத்திற் பொருதோனே;

முத்தா ரத்தோ ளிற்† கோ டற்பூ
முட்டா திட்டத் தணிவோனே-

முற்றா நித்தா அத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே. (33)

## 484. பாட

தானத் தத்தத் தத்தன தத்தத் தனதான

‡ கோவைச் சுத்தத் துப்பத ரத்துக் கொடியார் தங்

கோலச் கச்சுக் கட்டிய முத்தத் தனமேவிப்;

பாவத் துக்குத் தக்கவை பற்றித் திரியாதே

பாடப் பத்திச் சித்த மெனக்குத் தரவேணும்;

மாவைக் குத்திக் கைத்தற எற்றிப் பொரும்வேலா.

---

* செற்று-சென்று

† கோடற் பூ - வெண்காந்தள் மலர்

கோடற் செச்சைய மார்பா' என்றார் பிறிதோரிடத்து (திருப்புகழ் 1123) கோடல்-செங்காந்தள் மலரையுங் குறிக்கும் (குறிஞ்சிப் பாட்டு 61-2 உரை) முருகன் -"சுடர்ப்பூங் காந்தட் பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்" திருமுருகாற்றுப்படை 43.44

‡ கோவை வாயித முக்கும் " -திருப்புகழ் 914

(சுடுகாட்டுக்குச்) சென்று அங்கே (பிணத்தைச்) சுட்டு-விட்டுச் சுடலையினின்றும் வெளியேறி வருகின்ற அந்தப் பேதைமை வாய்ந்த துக்கம் நீங்காதோ!

நித்தனே (என்றும் உள்ளவனே)! விசித்திரம் நிறைந்த மயில்மீது (விளங்கி )நிற்பவனே! (அல்லது-விசித்திரம் வாய்ந்த மயில் போன்ற வள்ளியைப் பெறும் பொருட்டு அவளருகே நிற்பவனே)! **கச்சிக் குமரேசனே!**

கொடுமை வாய்ந்த சூரன் கேடு அடைந்து (கடலிடையே) ஓடப் போரினைப் பெரிய கடலிற் செய்தவனே!

முத்து ஹாரம் (மாலை) அணிந்த தோளில் வெண் காந்தள் மலரைத் தவறாது இஷ்டத்துடனே அணிபவனே!

முற்றாத நித்தனே (முதுமை வராத நித்தனே)! என்றும் இளையோனாய் என்றும் இருப்பவனே! அத்தனே! பரிசுத்தனே! முத்தனே! வீடுபேறுள்ளவனே! முத்தியைத் (தரும்) பெருமாளே!

(துக்கம் அறாதோ)

## 484.

கொவ்வைப் பழம் போலவும் சுத்தமான பவளம் போலவும் சிவந்த வாயிதழ்களை (உதட்டினை) உடைய (கொடி போன்ற) மாதர்களுடைய-

அழகிய ரவிக்கை அணிந்துள்ளதும், முத்து மாலை அணிந்ததுமான கொங்கையை விரும்பி (அணைந்து)

பாப காரியங்களுக்குத் தக்கவையான செயல்களைச் செய்து திரியாமல் -(உன்னைப்)

பாடிக் புகழப், பத்தி நிறைந்த உள்ளத்தை எனக்குத் தந்தருள வேண்டும்.

(சூரன் என்கின்ற) மாமரத்தைக் குத்தி வெறுத்து அடியோடு கொன்று போர் செய்த வேல் ஏந்தியவனே!

மாணிக் கச்சொர்க் கத்தொரு தத்தைக் கினியோனே;
*சேவற் பொற்கைக் கொற்றவ கச்சிப் பதியோனே-
தேவச் சொர்க்கச் சக்கிர வர்த்திப்
பெருமானே (34)

## 485. திருவடியைப் பற்ற

தான தத்தனத் தான தானனத்
தான தத்தனத் தான தானனத்
தான தத்தனத் தான தானனத் தனதான

சீசி †முப்புரக் காடு நீறெழச்
சாடி நித்திரைக் ‡கோசம் வேரறச்
சீவன் முத்தியிற் கூட வேகளித் தநுபூதி

சேர Xஅற்புதக் கோல மாமெனச்
சூரி யப்புவிக் கேறி யாடுகச்
சீலம் வைத்தருட் டேறி யேயிருக் கறியாமற்;

* கோழிக்கொடி - முருகவேளின் வலது திருக்கரத்தில் உள்ளது

"வீறு கேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம் மாறிலாத வேல் அபயமே வலம்; இடம் வரதம்; ஏறுபங்கயம் மணி, மழுத் தண்டுவில் இசைந்த ஆறிரண்டு கை அறுமுகம் கொண்டு வேல் அடைந்தான். (கந்தபுராணம் 3-10-4)

† "சுட்டு வெம்புரம் நீறாக-திரிபுரமாகிய மும்மலங்களும் வெந்து நீறாகும்படிச் சுட்டு'. எனவரும் 612 ஆம் பாடலின் உரையைக் காண்க.

‡ கோசம் - பஞ்சகோசம் அவைதாம்-1 அன்னமயகோசம் அன்னம் (உணவு) அதனால் ஆய உடல் 2 பிராணமய கோசம கன்மேந்திரியமும் பிராணனும் கூடியது; 3 மனோமய கோசம் மனம் 4 விஞ்ஞானமய கோசம்-ஞானேந்திரியமும் புத்தியும் ,(ஞானந்திரியம் உணர்தற்குரிய மெய் வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள்) 5 ஆனந்தமயகோசம் ஆன்மாவுக்குள்ளே உள்ள உறை. இந்த ஐந்து கோசங்களும் ஆன்மாவை மூடிக்கொண்டிருக்கின்றன.

(X-பக்கம் 97 பார்க்க)

மாணிக்கம் (ஆதிய நவரத்னங்கள்) நிறைந்த விண்ணுலகத்தில் இருந்த ஒப்பற்றகிளியாம் தேவசேனைக்கு (அல்லது மாணிக்கம் ஆதிய நவரத்னங்களை அணிந்த .. தத்தை தேவசேனைக்கு) இனியவனே-

சேவற்கொடியை அழகிய கையிற் கொண்ட வீரனே! கச்சிப் பதியில் இருப்பவனே!

தேவர்கள் வாழும் விண்ணுலகத்துக்குச் சக்கர-வர்த்தியாம் பெருமாளே!

(பாடப் பத்திச் சித்தம் எனக்குத் தரவேணும்)

## 485.

சீசி என இகழ்ந்து ஒதுக்க வேண்டிய (முப்புரம்போல (ஊறு செய்யும்) மும்மலங்கள் என்கின்ற காடு (வெந்து) சாம்பலாகும் படி, அந்தக் காட்டைத் துகைத்து ஒழித் தெரிந்து, உறக்கம் கோசங்கள் - ஆன்மாவை மூடிக்கொண்டிருக்கிற (உறைகள்- முடிகள்), இவை அடியோடு ஒழிய சீவன் முத்தி நிலையை (ஆன்மா இம்மையிலேயே முத்தியடையும் நிலையை) நான் கூடுதற்கு மகிழ்ச்சியுற்று அனுபவ ஞான நிலையைச்

சேர்தற்கு X அற்புதத் தோற்றம் இது என்றும் கூறும்படி சூரியமண்டலம் (போன்ற) - பெருஞ் சோதியைக் கண்டு களிப்பதற்குரிய ஒழுக்க நிலையை அடைந்து (உனது) திருவருளை உணர்ந்திருக்க அறியாமல்-

---

(96 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

X அற்புதக் கோல... சூரிய புவி:-

இடைகலை பிங்கலை எனப்படும் இரண்டு வழியினையும் மாற்றி, மூலமாம் ஒரு வழியைத் திறந்தால், அங்கே பொருந்திய கோடி சூரியர்களைப் போன்ற பெருஞ்சோதியைத் தரிசிக்கலாம்

'இருவழி யடைத்து மூலத் தொருவழி திறந்து ஆங்கு எய்தும்
பருதியோர் கோடி ஒத்த சோதியும் பார்த்து, நாதம்
ஒருபதும் கேட்டு மும்மைக் குணம்புலத் துடனடக்கிப்
புருவமேல் நாட்டம் ஓட்டி ஆனந்தப் புணரி புக்கான்"

-திருக்கழுக்குன்றப் புராணம் நந்திதனம்-24

பாசம் விட்டுவிட் டோடி போனதுப்
போது மிப்படிக் காகி லேனினிப்
பாழ்வ ழிக்கடைக் காம லேபிடித் தடியேனைப்
பார டைக்கலக் கோல மாமெனத்
தாப ரித்து *நித் தார மீதெனப்
பாத பத்மநற் போதை யேதரித் தருள்வாயே;
தேசில் துட்டநிட் டூர கோதுடைச்
சூரை வெட்டியெட் டாசை யேழ்புவித்
தேவர் முத்தர்கட் கேத மேதவிர்த் தருள்வோனே-
† சீர்ப டைத்தழற் சூல மான்மழுப்
பாணி ‡ வித்துருப் பாத னோர்புறச்
சீர்தி கழ்ப்புகழ்ப் பாவை யீனபொற் குருநாதா;
காசி X முத்தமிழ்க் கூடலேழ்மலைக்
**கோவ †† லத்தியிற் கான ‡‡ நான்மறைக்
காடு XXபொற்கிரிக் காழி யாருர்பொற் புலிவேளூர்-
காள அத்தியப் பால்சி ராமலைத்
தேச முற்றுமுப் பூசை மேவிநற்
OOகாம கச்சியிற் சால மேவுபொற் பெருமாளே (35)

---

*நித்தாரம் - நித்தியமாகிய ஆரம் † தீ மான் . மழு முதலிய சிவபிரானது திருக்கரத்தில் வந்த காரணம் - பாட்டு 286 பக்கம் 210- பார்க்க ‡ சிவன் - பவள நிறத்தினர் - 'பவள மேனியர் சம்பந்தர் -3-112-3 X முத்தமிழ்க் கூடல் - மதுரை தமிழ்ச் சங்கம் இருந்த தல மாதலின் மதுரையை முத்தமிழ்க் கூடல் என்றார் மதுரைக்கு அருகிலுள்ள வைகையாற்றைத் 'தமிழ் வையை' என்றும் கூடலைப் " பாடல் சான்று பல் புகழ் முற்றிய கூடல்" என்றும் பரிபாடல் கூறும். 6-60 17-22 'தமிழ் நிலைபெற்ற மதுரை' என்பது சிறுபாணாற் றுப்படை 66-7

ஏழ்மலை திருவேங்கடம்.**கோவல் -திருக்கோவலூர் †† அத்தியின் கானம் திரு ஆனைக்கா ஆனை சிவனை வழிபட்ட தலமாதலால் 'ஆனைக்கா'-"விறல்மிக்க கரிக்கருள் செய்தவனே" சம்பந்தர் 2-23-4 ‡‡ நான்மறைக் காடு -வேதாரணியம் மறை வேதம் பூசித்த தலம் = "பல காலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்றி மலரால் வழிபாடுசெய் மாமறைக் காடா" -சம்பந்தர் 2-37-6 XX பொற்கிரி கனககிரி- திருப்புகழ் பாடல் 400 பார்க்க; மேரு, கயிலை எனலுமாம்-திருப்புகழ் பக்கம் - 446 கீழ்க்குறிப்புப் பார்க்க OO ' காம கச்சிகுற் றால மேவு பொற் பெருமாளே' என்றும் பாடம் "காம கச்சிகச் சாலை மேவு' எனவும் இருந்திருக்கலாம்.

பாசங்கள் (ஒரு வழியாய் அடியோடு ஒழியாமல்) விட்டு விட்டு (இடையீடுடன்) விட்டு ஓடிப்போனது போதும்; இவ்வாறு இடையிடையே பாசம் விலகும் நிலைவேண்டாம்; இனிப் பாழ்படும் நெறியில் (என்னை) புகுத்து அடைக்காமல் (என்னைப்) பிடித்து -அடியேன்

இப்பூமியில் (உனக்கு) அடைக்கலமாக வைக்கப்பட்ட ஓர் உருவமாம் எனக்கொண்டு, என்னைத் (தாபரித்து) ஆதரித்து நித்தியமாகிய ஆரம் (ஓர் ஆபரணம்) ஆம் இது என்று என்னைப் பாத தாமரையாம் நல்ல மலரில் என்று அருளுவாயாக;

ஞானம் இலாத துஷ்டனும், கொடுமை வாய்ந்தவனும்; குற்றம் உள்ளவனுமான சூரனை வெட்டி, எட்டு திசைகளிலும், ஏழ் உலகங்களிலும் உள்ள தேவர்களுக்கும் முத்திநிலை கண்ட பெரியோர்களுக்கும் இருந்த துன்பத்தை ஒழித்தருளி- யவனே!

சிறப்பு பொருந்திய நெருப்பு, சூலம், மான், மழு இவைகளைப் (பாணி) திருக்கரத்திற் கொண்ட (வித்துரு பவள (நிறத்) திருவடியுடையவனாம் (சிவனுக்கு) ஒரு பாகத்தில் உள்ள சீர் விளங்கும் புகழ் நிறைந்த பாவை (தேவி பார்வதி) பெற்றருளிய அழகிய குருநாதனே!

காசி, முத்தமிழ் விளங்கின மதுரை, திருவேங்கடம், திருக்கோவலூர் திருஆனைக்கா வேதாரணியம் கனககிரி (அல்லது கயிலை, அல்லது மேரு), சீகாழி திருவாரூர் அழகிய புலியூர் (சிதம்பரம்) வேளூர் (புள்ளிருக்கு வேளூர் - வைத்தீசுரன் கோயில்)-

சீகாளத்தி அதன் பின் திரிசிராமலை ஆக நாடு முழுமையும் மூன்று காலங்களிலும் பூஜை நடத்தப்பெற்று, அழகிய விரும்பத்தக்க கச்சியில் மிகவும் வீற்றிருக்கும் (அதிக காதலுடன் மேவும்)அழகிய பெருமாளே!

(பாத பத்ம நற்போதையே தரித் தருள்வாயே)

## 486. அகப் பொருள் (அஞ்சல் என்று கூற)

தத்ததன தந்த தத்ததன தந்த
தத்ததன தந்த தனதான

*நச்சரவ மென்று நச்சரவ மென்று
நச்சுமிழ் களங்க மதியாலும்

நத்தொடு முழங்க னத்தொடு முழங்கு
† நத்திரை வழங்கு கடலாலும்;

இச்சையுணர் வின்றி யிச்சையென வந்த
இச்சிறுமி நொந்து மெலியாதே;

எத்தனையி நெஞ்சில் எத்தன முயங்கி
இத்தனையி லஞ்ச லெனவேணும்

பச்சைமயில் கொண்டு பச்சைமற மங்கை
பச்சைமலை யெங்கு முறைவோனே-

பத்தியுட னின்று பத்திசெயு மன்பர்
பத்திரம ணிந்த கழலோனே;

‡ கச்சிவர் குரும்பை X கச்சவர் விரும்பு
கச்சியில மர்ந்த கதிர்வேலா-

கற்பக வனங்கொள் கற்பக விசும்பர்
கைத்தளை களைந்த பெருமாளே (36)

---

*இந்த 486 ஆம் பாடலில் அடிதோறும் விளங்கும் வழி எதுகை கவனிக்கற்பாலது;

சந்திரனும் கடலொலியும் விரகவேதனை தருவன -பாடல் 218 பக்கம் 53 பார்க்க.

† நத் திரை-விசேஷ திரை.

‡ "அரவகல் அல்குலார் பால் ஆசைநீத் தவர்க்கே வீடு தருவம் என் றளவில் வேதம் சாற்றிய தலைவன்"

(திருவிளையாடல்-சுந்தரர் துதி)

Xகச்சவர்-வெறுத்தவர்.

# 486.

நச்சு (விரும்பிப் பிடிக்க வந்த) - கேது என்னும் பாம்பு தன்னை மென்று ( வெளிவிட்ட காரணத்தால் தானும் ஒரு விஷப் பாம்பு என்றே சொல்லும்படி, நச்சு விஷத்தை (உமிழ்) (என்மீது) கக்குகின்ற (களங்கத்தை) கறையைக் கொண்ட நிலவாலும்-

(நத்தொடு) சங்கினுடன் (முழங்கு)பேரொலி செய்கின்ற கடலாலும்), (கனத்தொடு) மேகத்துடன் முழங்குகின்ற (கடலாலும்), (அல்லது சங்கின் ஒலியுடன் மேகத்தின் (இடியின்) ஒலியும் கலந்ததுபோலப் பேரொலி எழுப்பி முழங்கும் )விசேஷ அலைகளை வீசும் கடலாலும்-

பத்தித் தொண்டு, தெளிவு இரண்டும் இல்லாமல் ஆசைப்படுகின்றேன் எனக்கூறிவந்த இந்தச் சிறுபெண் நொந்து மெலியாமல்-

எவ்வளவோ நெஞ்சிலே (எத்தனங்களை) முயற்சிகளை (முயங்கி) மேற்கொண்டு செய்பவளாகிய (இவளை) இந்த அளவிலே (இப்பொழுதே) அஞ்சல் என்று கூறி அருள் செய்ய வேண்டுகின்றேன்.

பச்சை மயிலை (வாகனமாகக் கொண்டு) பச்சை நிறங்கொண்ட வேடப் பெண் (வள்ளி) வாழ்ந்த பசுமை வாய்ந்த மலை (வள்ளிமலையின்) எவ்விடத்தும் உறைபவனே! (அல்லது) மறமங்கையுடன் பசுமை வாய்ந்த மலையிடங்களில் எல்லாம் (எங்கும் உள்ள மலைகளிலும்) உறைபவனே!

பத்தியுடனே (நிலைத்து) நின்று (அல்லது முறைமை ஒழுங்கு தவறாமல் நின்று) பக்தி செய்கின்ற அன்பர் பூசிக்கும் பத்திரங்களை (இலைகளை, பூ இதழ்களை) அணிந்து கொள்கின்ற திருவடியை உடையவனே!

ரவிக்கை (இவர்) ஏறி உள்ள (அணிந்துள்ள) தென்னங் குரும்பை போன்ற கொங்கைகளைக் (கைத்தவர்) வெறுத்தவர் களாகிய பெரியோர்கள் விரும்பும் கச்சியில் வீற்றிருக்கும் ஒளிவேலனே!

கற்பகக் காட்டைக்கொண்ட, (கற்பு) நீதி நெறியில் நிற்கும் (அகம்) உள்ளத்தைக் கொண்ட விண்ணுலகத்தவராம் தேவர்களின் கை விலங்குகளை அவிழ்த்தெறிந்த பெருமாளே! (அஞ்சலென வேணும்).

குறிப்பு:- இப்பாடலில் ஒவ்வோரடியிலும் ஈற்றிலுள்ள பாகங்கள்,

*நச்சுமிழ் களங்க மதியாலும் - நத்திரை வழங்கு கடலாலும்; இச்சிறுமி நொந்து மெலியாதே - இத்தனையி லஞ்ச லெனவேணும்; பச்சைமலை யெங்கு முறைவோனே - பத்திர மணிந்த கழலோனே; கச்சியிலமர்ந்த கதிர்வேலா - கைத்தளை களைந்த பெருமாளே".

எனப் பிறிதொரு பாடலாமாறு காண்க.

## 487. வினையற

தனன தத்தன தனன தத்தன
தனன தத்தன தனதான

படிறொ ழுக்கமு மடம னத்துள
படிப ரித்துட னொடிபேசும்-
பகடி கட்குள மகிழ மெய்ப்பொருள்
பலகொ டுத்தற உயிர்வாடா;
† மிடியெ னப்பெரு வடவை சுட்டிட
விதன முற்றிட மிகவாழும்-
விரகு கெட்டரு நரகு விட்‡ டிரு
**வினைய றப்பத மருள்வாயே;**
கொடியி டைக்குற வடிவி யைப்புணர்
குமர **கச்சியி** லமர்வோனே-
குரவு செச்சைவெண் முளரி புத்தலர்
குவளை முற்றணி திருமார்பா;

---

* சூரனுக்கு அஞ்சி சசியைப் பிரிந்திருந்த இந்திரன் சசியின் நினைவு வர, காமவேதனைப்படுகின்றபோது சந்திரனை நோக்கி-

"எஞ்சலில் அமுதினை யார்க்கும் நல்குநீ
நஞ்சினை உகுத்தி, இவனுயிர் ஒழிப்பன் யானெனா
வஞ்சினம் பிடித்தியோ மதியமே' என்கின்றான்
(கந்த புரா- I-24-39)

† 'முழுதுங் கெடுக்கும் மிடியால் விதனப்படார் -(கந்தர் அலங் 33).
'வறுமையாகிய தீயின்மேற் கிடந்து நெளியும்
நீள்புழு ஆயினேற்கு' - திருப்புகழ் 753.
"மிடி என்றொரு பாவி" - கந்தர் அநுபூதி - 19.

‡ 'இருவினை' - பெரிய வினை எனலுமாம்.

**கரந்துறை பாடலில் உரை**

விஷத்தைக் கக்கும் களங்கம் உள்ள நிலவாலும் விசேஷ திரைகளை வீசும் கடலாலும்,

இந்தச் சிறுபெண் வேதனையடைந்து மெலியாமல் இப்பொழுதே அஞ்சல் என்று கூறியருள வேண்டுகின்றேன்;

பசுமை கொண்ட மலை எங்கும் உறைபவனே! (வில்வம் ஆதிய) பத்திரங்களை அணிந்த திருவடிகளை உடையவனே!

கச்சியில் வீற்றிருக்கும் ஒளிவேலனே! (தேவர்களின்) கை விலங்கை ஒழித்த பெருமாளே.

# 487.

வஞ்சனை கூடிய நடவடிக்கையை அறியாமை கொண்ட மனத்தில் உள்ளபடியே மேற்கொண்டு அப்போதைக்கப்போது (நொடி - தந்திரச்) சொற்களை விடுகதை போன்ற சொற்களைப் பேசுகின்ற-

(பகடிகட்கு) வெளி வேஷக்காரருக்கு (பொதுமகளிர்க்கு) (அவர்கள்) உள்ளம் மகிழ்ச்சி கொள்ளும்படி உடலையும் பொருளையும் பல முறையும் தத்தம் செய்து (கொடுத்து) (அல்லது அவர்தம் உடல் இன்பம் பெறவேண்டிப் பொருள் பல கொடுத்து - அல்லது - அவர்கள் பொய்ப் பேச்சுக்கு ஈடாக மெய்யாகவே பொருளைத் தந்து), (பின்னர்) மிகவும் உயிர்வாட-

வறுமை (தரித்திரம் என்கின்ற பெரிய வடவைக்கனல் வடவாமுகாக்கினி (ஒத்த நெருப்பு) என்னைச் சுடுவதால் துன்பம் அதிகரிக்க (அல்லது துன்பம் விளைய) மிகவும் அத்துன்பத்துடன் வாழும்

விரகு - அழிவுநிலை அழிந்து, அரு நரகில் விழுவது விலகி, நல்வினை-தீவினை என்னும் இருவினைகளும் ஒழிய, (உனது) திருவடியைத் தந்தருளுக.

கொடிபோலும் இடையை உடைய குறக்குலத்து அழகியை (வள்ளியைக்) கலந்த குமரனே! கச்சியில் வீற்றிருப்பவனே!

குரா, வெட்சி, வெண்டாமரை, புதிதாக மலர்ந்த குவளைப்பூ இவை எல்லாம் நிரம்ப அணிந்து கொள்ளும் அழகிய மார்பனே!

பொடிப டப்பட நெடிய விற்கொடு
புரமெ ரித்தவர் குருநாதா-
பொருதி ரைக்கடல் நிருத ரைப்படை
பொருது ழக்கிய பெருமாளே.(37)

## 488. பொதுமகளிர் உறவு அற

தனனத்தத் தானத் தானன
தனனத்தத் தானத் தானன
தனனத்தத் தானத் தானன தந்ததான

மகுடக்கொப் பாடக் காதினில்
நுதலிற்பொட் டூரக் கோதிய
மயிரிற்சுற் *றோலைப் பூவொடு வண்டுபாட-

வகைமுத்துச் சோரச் சேர்நகை
யிதழிற்சொற் சாதிப் பாரியல்
மதனச்சொற் பாடுக் கோகில † ரம்பைமாதர்;

பகடிச்சொற் கூறிப் போர்மயல்
முகவிச்சைப் பேசிச் சீரிடை
பவளப்பட் டாடைத் தோளிரு கொங்கைமேலாப்-

பணமெத்தப் பேசித் தூதிடு
மிதயச்சுத் தீனச் சோலிகள்
பலரெச்சிற் காசைக் காரிகள் சந்தமாமோ;

தகுடத்தத் தானத் தானன
திகுடத்தித் தீதித் தோதிமி
தடுடுட்டுட் டாடப் பேரிகை சங்குவீணை-

---

*ஓலைப் பூ - தாழம் பூ.
† ரம்பை - தேவலோகத்து நாடக மகளிரில் ஒருத்தி.

பொடியாகும்படி பெரிய (மேரு மலையாம்) வில்லை ஏந்தித் திரிபுரத்தை எரித்த சிவபிராற்குக் குருநாதனே!

மாறுபட்டெழும் அலைகொண்ட கடலிலிருந்த அசுரரை (அல்லது - கடல்போலப் பெருகிப் பரந்த அசுரரை, அல்லது கடலையும் அசுரரையும்), (வேற்) படை கொண்டு சண்டையிட்டுக் கலக்கி அழித்த (அல்லது கடலையும், அசுரப் படையையும் (சேனையையும்) சண்டையிட்டுக் கலக்கின பெருமாளே!

(இருவினையறப் பதம் அருள்வாயே)

## 488.

மகுடம் (சல்லடைக் கொப்பு எனப்படும் காதணியும்), (கொப்பு) கொப்பு எனப்படும் காதணியும் - (ஆடக் காதினில்) காதில் ஆட, நெற்றியில் பொட்டு பரவி விளங்க, சிக்கெடுக்கப்பட்டு சீவி விடப்பட்ட மயிரிற் சுற்றி வைத்துள்ள தாழம்பூவில் வண்டுபாட-

நல்ல தரமான முத்தும் இழிவுபடும்படி விளங்கும் பற்களைக் காட்டி வாயிதழ்களால் (வாயால்) தாங்கள் பேசும் சொற்களையே சாதிப்பவர்கள், பொருந்திய (மதனச் சொல்) (மன்மதனது சொல்லை) காமலீலைப் பாடல்களைப் பாடுகின்ற குயில் போன்ற மாதர்கள், ரம்பையை நிகர்க்கும் மாதர்கள்

(பகடிச் சொல்) பரிகாசப் பேச்சுக்களைப் பேசி, (போர் மயல்) மயல்போர் - காம இச்சைப் போர் நெஞ்சிற் கிளம்பும் படி முகத்திலே விருப்பத்தைக் காட்டிப் பேசி, அழகிய இடையிலே பவளநிறப்பட்டாடை - செந்நிறப் பட்டாடையைத் தோள்மீதும் இரு கொங்கைகள் மீதும் பொருந்த அணிந்து-

பணம் நிரம்பத் தரும்படி பேசி, (அதன் பொருட்டுத் தூது அனுப்புகின்ற உள்ளத்தை உடைய (சுத்த ஈன) மிக்க இழிவான (சோலிகள்) தொழிலைப் பூண்டவர்கள், பல பேருடைய எச்சிலுக்கும் ஆசைப்படுபவர்கள் - ஆகிய பொது மாதர்களின்) சந்தம் சுகம் (அல்லது பழக்கம்) ஆமோ - நல்லதாகுமோ (ஆகாது என்றபடி)

தகுடத்தத் தானத் தானன ... தடுடுட்டுட்.. என்னும் ஒலியெழப் பேரிகை (முரசு), சங்கு, வீணை (இவைகள்)

*தடமிட்டுப் பாவக் கார்கிரி
பொடிபட்டுப் போகச் சூரர்கள்
தலையிற்றிட் டாடப் போர்புரி கின்றவேலா;
திகிரிப்பொற் பாணிப் பாலனை
மறைகற்புத் தேளப் பூமனை
சினமுற்றுச் †சேடிற் சாடிய கந்தவேளே-
தினையுற்றுக் காவற் காரியை
மணமுற்றுச் ‡தேவப் பூவொடு
திகழ்கச்சித் தேவக் கோன்மகிழ்
தம்பிரானே (38)

## 489. பேரின்பப் பொருள் பெற

தத்தத்தத் தானன தானன
தத்தத்தத் தானன தானன
தத்தத்தத் தானன தானன தனதான

X மக்கட்குக் கூறரி தானது
கற்றெட்டத் தான்முடி யாதது
மற்றொப்புக் கியாதுமொ வாதது மனதாலே-
மட்டிட்டுத் தேடவொ ணாதது
தத்வத்திற் கோவைப டாதது
O மத்தப்பொற் போதுப கீரதி மதிசூடும்;

---

* தடமிட்டுப் பாவக்கார் கிரி - தன்னகத்தே வழிகாட்டி உள்ளே வந்தவர்களை மாயையால் மடக்கி மாய்வித்த கிரௌஞ்சன் என்னும் அசுரன் இந்த அசுரன் அகத்திய முநிவர் வருவதைக் கண்டு வழியில் மலையுருவில் நின்று அம்மலையிடையே ஒருவழியைக் காட்ட அவர் உள்ளே வந்ததும் வழி தடுமாறச் செய்ய அவர் இது அசுரனது மாயம் எனத் தெரிந்து தனது கைத் தண்டினால் அடித்து - கொடியோய்! நீ உன் சொந்த உருவை இழந்து இந்த மலையாகவே இருக்கக் கடவாய்" பின்னர், எம்பிரான் முருகன் கைவேலால் இறக்கக் கடவாய்" எனச் சாபமிட்டு அவன் மாயையில் நின்றும் விலகி வெளி வந்தனர். "நின் தொன்மை நீங்கி நீண்மலையாகி ஈண்டே நின்று தீத்தொழில் இழைத்தி" "செவ்வேள் வேற்படை தன்னிற் பின்னாள் விளிகுதி" என்றான் - கந்த புராணம் *2-24-11.12.* † சேடில் சாடிய - திரட்சியான தலையிற் குட்டிய ‡ வள்ளியை - 'வள்ளிப்பூ என்றார் பரிபாடலில் - 'வள்ளிப்பூ நயந்தோயே' பரிபாடல் *14-22.* X இந்தப் பாடலின் கருத்தும் போக்கும் திருப்புகழ் *343*-ஆம் பாடலின் கருத்தும் போக்கும்போல்வன-பாடல்கள் *741,980,1052.* இவ்வகையன. O மத்தப் பொற் போது - 'பொன் பொதி மத்த மாலை' - சம்பந்தர் - II-85-2.

(துடமிட்டு) தன்னிடத்தே வெளியிடம் அல்லது வழியைக் காட்டிப் பாவகாரியாம் (பாவஞ் செய்தவனாம்) கிரி (கிரௌஞ்சன் என்னும் அசுரனாம்) மலைபொடிபட்டுப் போகச் சூரர்களின் (தலை இற்று இட்டு ஆட) தலை அறுந்து வீழ்ந்து ஆட (கவந்தங்கள்-தலையற்ற உடல்கள்) ஆடப் போர் செய்த வேலனே!

சக்கரம் ஏந்திய அழகிய திருக்கரத்தை உடைய திருமாலின் பிள்ளையும், (மறைகல் புத்தேள் அப் பூம(ன்)னை)- வேதங்களைக் கற்ற தேவனும் அந்தத் தாரையில் வீற்றிருப்ப - வனுமான பிரமன் மீது கோபங்கொண்டு அவனது திரட்சியான தலையிற் குட்டிய கந்தவேளே!

தினைப்புனத்திலிருந்து காவல் பூண்ட வள்ளியைத் திருமணம் செய்துகொண்டு, தேவருலகில் வாழ்ந்த (பூ அனைய) தேவசேனையுடன் விளங்கும் கச்சிப்பதியில் தேவர் தலைவனாம் இந்திரன் மகிழும் தம்பிரானே!

(ஆசைக்காரிகள் சந்தம் ஆமோ)

## 489.

மக்களுக்கு (அது இத்தன்மையது என்று எடுத்துக்) கூறுதற்கு அரிதானது; கற்று (கல்வியின் மூலமாக எட்டிப் பிடிக்கலாம் என்றால் அங்ஙனம், எட்டுதற்கும் முடியாதது; பின்னர். அதற்கு (ஒன்றை) (ஒப்பிடலாம் என்றால்) ஒப்பிடுவதற்கு எப்பொருளுமே ஒப்பிட ஒண்ணாதது; மனது கொண்டு-

அளவிட்டுத் தேடுதற்கு முடியாதது; (எத்தகைய) அறிவு ஆராய்ச்சிக்கும் ஒரு வழியான (வகையில்) வரிசையில் அமையாதது; ஊமத்தை மலரையும், பொன்னிறப் பூவாம் கொன்றையையும் (அல்லது - ஊமத்த மலரின் பொன் (தாது) மகரந்தப்பொடி கொண்ட மலரையும்), கங்கையையும் நிலவையும் அணிகின்ற-

முக்கட்பொற் பாளரு சாவிய
*அர்த்தக்குப் போதக மானது
முத்திக்குக் காரண மானது பெறலாகா-

முட்டர்க்கெட் டாதது நான்மறை
யெட்டிற்றெட் டாதென வேவரு
முற்பட்டப் பாலையி லாவது புரிவாயே;

செக்கட்சக் ராயுத மாதுலன்,
மெச்சப்புற் போதுப டாவிய
திக்குப்பொற் பூதர மேமுதல் வெகுரூபம்

சிட்டித்துப் பூதப சாசுகள்
கைக்கொட்டிட் டாடம கோததி
செற்றுக்ரச் சூரனை மார்பக முதுசோரி,

கக்கக்கைத் தாமரை வேல்விடு
செச்சைக்கர்ப் பூரபு யாசல
கச்சுற்றப் பாரப யோதர முலையாள்முன்-

கற்புத்தப் பா†துல கேழையு
மொக்கப்பெற் றாள்விளை யாடிய
‡கச்சிக்கச் சாலையில் மேவிய
பெருமாளே (39)

---

*அர்த்தக்கு-அர்த்தத்துக்கு.

† உலகேழையும் பெற்றது: பாடல் 456 கீழ்க் குறிப்பைப் பார்க்க.

‡கச்சிக் கச்சாலை என்பது காஞ்சியில் கச்சபேசர் திருக்கோயில் இது பெரிய காஞ்சீபுரத்தில் உள்ளது. திருப்பாற்கடலைக் கடைந்த பொழுது மத்தாகிய மந்த்ரமலை அழுந்த அதைத் திருமால் ஆமை உருவெடுத்து முதுகில் தாங்கினார்; பின்னர் அவர் இறுமாப்படைந்து கடலைக் கலக்க, சிவபிரானது ஏவலால் விநாயகர் அந்த ஆமையைக் கொன்று அதன் ஓட்டைச் சிவபிரான் அணியத் தந்தனர். அதன் பின் திருமால் தமது குற்றம் தீரப் பூசித்த சோதி லிங்கமே கச்சபேசர்.

-திருப்புகழ்-விநா பாடல்-5 பக்கம் 14 கீழ்க்குறிப்புப் பார்க்க.

முக்கண் கொண்ட அழகர் சொல்லுக எனக்கேட்ட பொருளுக்கு உபதேச வித்தாக இருப்பது, மோக்ஷத்துக்குக் காரணமாக விளங்குவது, பெறுதற்கு முடியாததாய்

மூடர்களுக்கு எட்டாததாய் இருப்பது, நான்கு *வேதங்களுக்கும் எட்ட முடியவில்லை என்று விளக்கம், உறாத வழியில் முற்பட்டும், முற்பட்ட நிலைக்கு அப்பாலான நிலையில் உள்ளது எதுவோ அந்தப் பொருளை (அடியேனுக்கு) உபதேசித்தருளுக.

சிவந்த கண் மலரையும் சக்ராயுதத்தையும் கொண்ட மாமன் மெச்சிப் புகழ, புல்லும் மலரும் (படர)-உள்ள -வியம் (பெரிய) திக்குகளில் உள்ள (பொன்பூதரம்) மேரு முதலான பலப்பல உருவ பேதங்களைப்

படைத்துப், பூதங்களும் பேய்களும் கை கொட்டிட்டு (ஆர்ப்பரித்து) ஆட, பெரிய கடலைச் (செற்றும்) அடக்கியும், கொடுமையுடன் எழுந்த சூரனது மார்பிடம் முற்றின ரத்தத்தைச்-

சொரியவும் செய்த திருக்கரத் தாமரையினின்றும் வேலாயுதத்தைச் செலுத்தின-சந்தனக் குழம்பு-பச்சைக் கற்பூரம் இவைதமைப் பூசியுள்ள- திருப்புயங்களை உடையவனே! ரவிக்கை பொருந்தியதும், கனமானதும், பால் கொண்டது-மான கொங்கையைக் கொண்டவளும் முன்பு ஒருநாள்-

கற்பு நிலை தவறாமல் உலகு ஏழையும் ஒருங்கே ஈன்ற வளுமான (காமாக்ஷிதேவி) தவஞ்செய்து மகிழ்ந்த கச்சிப் பதியில் **கச்சாலை** (கச்சபாலயம்) என்ற திருக்கோயிலில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அப்பாலை யிலாவது புரிவாயே)

---

*வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே'

-திருவாசகம்-சிவபுராணம்.

'பெருமறை தேடிய அரும்பொருள்'- திருவாசகம்-அற்புத 3.

'மறையி லீறுமுன் தொடரொணாத நீ'- திருவாசகம்-சதகம்-95

## 490. மாதர்மீதுள்ள மயக்கு அற

தனதான தந்த தனதான தந்த
தனதான தந்த தனதான

மயலோது மந்த நிலையாலும் வஞ்ச
வசை பேசுகின்ற மொழியாலும்-

மறிபோலு கின்ற விழிசேரு மந்தி
மதி நேரு கின்ற நுதலாலும்;

அயிலே நிகர்ந்த விழியாலும் அஞ்ச
நடையாலும் அங்கை வளையாலும்

அறிவே யழிந்து அயர்வாகி நைந்து
அடியேன் மயங்கி விடலாமோ;

*மயிலேறி யன்று நொடிபோதி லண்டம்
வலமாக வந்த குமரேசா-

†மறிதாவு செங்கை அரனா ரிடங்கொள்
மலைமாது தந்த முருகேசா;

நயவா னுயர்ந்த மணிமாட மும்பர்
நடுவே நிறைந்த மதிசூழ

நறைவீசு கும்ப குடமேவு ‡கம்பை
நகர்மீத மர்ந்த பெருமாளே (40)

---

* உலகை வலம் வந்தது - பாட்டு 184, பக்கம் 430 பார்க்க.

† மான் ஏந்தியது - பாட்டு 286, பக்கம் 210 கீழ்க்குறிப்பைப் பார்க்க

‡ கம்பை - கம்பையாறு : " கம்பை சூழ்தரு காஞ்சியந் திருநகர்"
கந்த புராணம் I-23-9.

## 490.

காம ஆசையை அறிவிக்கின்ற அந்த நிலையாலும் (தோற்றத்தாலும்) வஞ்சகம் கூடிய பழிப்புச் சொல் சொல்கின்ற பேச்சுக்களாலும்

மான் பார்வை கொண்ட கண்களுக்கு அடுத்துள்ள மாலைப் பிறையை நிகர்க்கின்ற நெற்றியாலும்-

வேலை நிகர்க்கும் கண்களாலும், (அஞ்சம்) அன்னத்தின் நடைபோன்ற ந்டையாலும், அழகிய கையில் உள்ள வளையாலும்,

(என்) அறிவு அழிபட்டு, சோர்வு அடைந்து ஒடுங்கி அடியேன் மயக்கம் கொள்ளல் நன்றா? (நல்லதன்று என்றபடி)

மயில் மீதேறி முன்பு ஒருகால் ஒரு நொடிப்போதில் உலகை வலமாக வந்த குமரேசனே!

மானைத் தாவி நிற்கும் நிலையில் ஏந்தி உள்ள திருக்கரத்தை உடைய சிவபிரானது இடது பாகத்தில் இடங்கொண்டுள்ள மலைமகள் (பார்வதி) தந்த முருகேசனே!

மேம்பாட்டுடன் வான் அளவும் உயர்ந்த அழகிய மாடங்களின் மேலும் நடுவிலும் நிறைந்த ஒளி வீசும் நிலவு சூழ்ந்து விளங்க-

(வேள்வியின் பொருட்டு) நறுமணம் கமழும் கும்பகலசங்களும் குடங்களும் பொருந்தியுள்ள கம்பை யாற்றங்கரை நகராகிய கச்சிநகர் மீது விருப்பம் வைத்து வீற்றிருக்கும் பெருமாளே!

(அடியேன் மயங்கி விடலாமோ)

## 491. விலைமாதர் சேர்க்கை யற

தத்த தத்த தாத்த தத்த தத்த தாத்த
தத்த தத்த தாத்த தனதான

முத்து ரத்ந சூத்ர மொத்த சித்ர மார்க்கர்
முற்*செ மத்து மூர்க்கர் வெகுபாவர்
முத்து திர்த்த வார்த்தை யொத்த பத்ர வாட்கண்
†முச்சர் மெத்த சூட்சர் நகையாலே;
எத்தர் குத்தி ரார்த்தர் துட்ட முட்ட ‡காக்கர்
இட்ட முற்ற கூட்டர் **விலைமாதர்**
Xஎக்கர் துக்கர் வாழ்க்கை யுற்ற சித்த நோய்ப்புண்
இப்ப டிக்கு **மார்க்கம்** **உழல்வேனோ**;
தித்தி மித்தி மீத்த னத்தனத்த மூட்டு
சிற்று டுக்கை சேட்டை தவில்பேரி-
திக்கு மக்க ளாக்கை துக்க வெற்பு மீக்கொள்
செக்க டற்கு ளாழ்த்து விடும்வேலா;
Oகற்பு ரத்தை வீட்டி நட்ட மிட்ட நீற்றர்
கத்தர் பித்தர் கூத்தர் குருநாதா-

---

*செமத்து - சென்மத்து; 'செமித்தெத்தனை" -திருப்புகழ் 266. 'சமம்' 'செமம்' என வந்ததென்றால், சமம் - போர், சண்டை செய்வதில் முற்படுகின்ற மூர்க்கர்.

† முச்சர் - முஞ்சர் 'முஞ்சர் மனைவாசல்' திருப்புகழ் 41.

‡ காக்கர் - 'காக்கன் போக்கன்' - என்னும் உலக வழக்கிற்போல.

Xஎக்கர் -'எக்கராம் அமண்கையர்' - சம்பந்தர் - III-39-11.

O திரிபுரத்தை அழித்தபோது இறைவர் நடனம் செய்தார். இந்த ஆடல்கள் கொடுகொட்டி, பாண்டரங்கம் எனப்படும்.

சிட்டமார்ந்த மும்மதிலும்... சுட்டு மாட்டி - நட்டமாடு நம்பெருமான்I-49-8 (சம்பந்தர்).

'திரிபுரம் எரியத் தேவர் கொண்ட... ஆடிய கொடுகொட்டி ஆடலும்"
'தேர்முன் நின்ற திசைமுகன் காண, ஆடிய வியன் பாண்டரங்கமும்"
-சிலப்பதிகாரம் 6,(40-45).

"நீறணிந்து பாண்டரங்கம் ஆடுங்கால்" - (கலித்தொகை கடவுள் வாழ்த்து) 'இறைவன் வெண்ணீற்றை அணிந்தாடிய பாண்டரங்கக் கூத்து"-(சிலப்பதி உரை - 6.45) என வருவனவற்றுக்கு ஏற்ப " நட்டமிட்ட நீற்றர்'- என்றார்.

# 491.

முத்து, ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட (ஒரு) யந்திரத்தை ஒத்த விசித்திரமான வழியைப் பற்றினவர்கள், முன் சென்மத்திலேயே மூர்க்கராயிருந்தவர்கள், (அல்லது போர்க்கு முன் நிற்கும் மூர்க்கர்), மிக்க பாவஞ் செய்தவர்கள்-

முத்து உதிர்த்ததுபோலப் பேசுபவர்கள், (ஒத்த பத்ர வாட்கண்) பத்திரம் ஒத்த வாட்கண் - (பத்ரம்) வாள் போன்ற (வாள்) ஒளி விசும் கண்களை (அல்லது - பத்திரம் - அம்பு போன்றதும், வாள் போன்றதுமான கண்களை) உடைய முச்சர்-முஞ்சர். அழிந்து போவோர்கள்-மிக்க சூட்சுமம் - சூழ்ச்சியை தந்திரங்களை உடையவர்கள் சிரிப்பினாலேயே-

ஏமாற்றுபவர்கள், (குத்திர அர்த்தர்) - வஞ்சனைப் பொருளுடன் பேசுபவர்கள் (துட்ட) துஷ்டத்தனம் (முட்ட) முற்றின - முழுமையுமான (காக்கர்) துன்மார்க்கர்கள், தங்களுக்கு இஷ்டம் உள்ள கூட்டத்திற் சேர்பவர்கள்- விலைமாதர்கள்-

(எக்கர்) இறுமாப்புடையவர்கள், துக்கத்தைத் தருபவர்கள் - (ஆன அம்மாதர்களின் வாழ்க்கையில் ஆசை-வைத்த மனநோய் ஆகிய புண்கொண்டு இப்படிப்பட்ட வழியில் அலைதல் உறுவேனோ!

தித்தி மித்தி மீத் தனத்த னத்தம் என்னும் ஒலியை (மூட்டு அல்லது ஊட்டு) எழுப்புகின்ற சின்ன உடுக்கை சேட்டை (இயக்கம்) - இயக்கப்படும்-அடிக்கப்படும் தவில்(மேள-வகை), பேரி (முரசு) இவைகளைக் கேட்டு - அசுரர்கள் இங்ஙனம் ஆர்ப்பாட்டம் செய்வதைக்கண்டு.

திசைகளிலிருந்த மக்களின் ஆக்கையில் (உடலில்) துக்கம் மலைபோல் மீக்கொள்வதை மேலிடுவதைக் கண்டு-அந்தத் துக்கத்துக்குக் காரணமாயிருந்த (சூரனை)ச் செக்கடற்குள் - சிவந்த ரத்தக் கடற்குள் ஆழ்த்திவிட்ட வேலாயுதனே!

கல் (மலைபோன்ற) திரிபுரங்களை அழித்து நடனம் செய்த திருநீற்றர் (திருநீறணிந்த பெருமான்), கத்தர்(கர்த்தா-கடவுள்), பித்தர், கூத்தர்-ஆம் சிவனுடைய குருநாதனே!

கற்கு றிச்சி வாழ்ப்பெ *ணொக்க வெற்றி
வேற்கொள்
†கச்சி நத்தி நாட்கொள் பெருமாளே.(41)

## 492. அடியாரொடு சேர

தந்த தாத்தன தன்ன தனந்தன
தத்தத் தத்தத் தனதானா

வம்ப றாச்சில கன்ன மிடுஞ்‡சம
யத்துக் கத்துத் திரையாளர்-
வன்க லாத்திரள் தன்னை யகன்றும
னத்திற் பற்றற் றருளாலே;
Xதம்ப ராக்கற நின்னை யுணர்ந்துரு
கிப்பொற் பத்மக் கழல்சேர்வார்-
Oதங்கு ழாத்தினி லென்னையு மன்பொடு
வைக்கச் சற்றுக் கருதாதோ;
வெம்ப ராக்ரம மின்னயில் கொண்டொரு
வெற்புப் **பொட்டுப் படமாசூர்-
வென்ற பார்த்திப பன்னிரு திண்புய
வெட்சித் சித்ரத் திருமார்பா;

---

*ஒக்க ஒருசேர ; உடன் ; † "கைச்சி னத்தி னாட்கொள்" எனவும் இருந்திருக்கலாம். கைச்சினம்-சோழநாட்டில் தேவாரம் பெற்றதொரு ஸ்தலம் ‡சமயத்துக் கத்து-சமயவாதிகளின் கூச்சல் - அருணகிரியார்க்குச் சமயவாதி-களின் கூச்சலே ஆகாது திருப்புகழ் *156, 174, 945, 960* - பார்க்க. அவர்கள் கடல்போலக் கூச்சலிடுவர் -என்பதைச் -'சாகரம் என முழங்கு வாதிகள் சமய பஞ்ச பாதகர்' என்றார்

-(திருப்புகழ் *674*)

X பராக்கற உணர்தல் -"பிறிது பராக்கற ... குமார முருக.... என்று பாடி" என்றார் பிறிதோரிடத்து-திருப்புகழ்-*990*

தம் பராக்கு அற்ற அடியார்- தம்மை விடுத் தாயும் பழைய அடியாருடன் கூட்டி "- கந்தர் கலிவெண்பா.

தம்மை விடுத்து-பசுபோதம் நீங்கப்பெற்று-"தானென்றவர் முன் ஒளித் தோடித் தன்னை யிழந்தவர் முன், யானென்று சென்றிடுங் காசிப் பிரான்", காசிக்கலம்பகம்-*84*.

O அடியார் குழாத்தில் என்னையும் சேர்த்தருளுக ' என வேண்டிய இவ்வேண்டுகோளை அருணகிரியார்க்குமுருகவேள் நிறைவேற்றிக்கொடுத்தனர் என்பது 'போதமிலேனை அன்பாற் கெடுதலிலாத் தொண்டரிற் கூட்டியவா ...

மலை நில ஊர் (வள்ளிமலையில்) - வாழ்ந்த பெண் ஒக்க வாழ்ந்தபெண் வள்ளியுடனே, வெற்றி வேலை ஏந்தி, கச்சித்தலத்தை (நத்தி-நத்தினவனே) விரும்பினவனே! நாள் (இளமை) கொண்ட பெருமாளே (என்றும் இளைய பெருமாளே)! (அல்லது) கச்சியை விரும்பி நாள்தோறும் பொலியும் (பொலிந்து வீற்றிருக்கும்) பெருமாளே!

(விலைமாதர்... மார்க்கம்-உழல்வேனோ)

# 492.

தீம்பு வார்த்தைகள் சில நீங்காததும் கொள்ளை கொள்வது போன்றதுமான (சமயத்து) சமயவாதக் (கத்து கூச்சற் கட லொலியை எழுப்புவோருடைய

வலிய கலைக் கூட்டத்தில் நின்றும் நீங்கி, மனத்தில் (யாதொரு) ஆசையும் இல்லாமல், (உனது) திருவருளாலே-

(தம்மைப் பற்றிய) 'யாம்' என்னும் நோக்கம் அற, (உன்னை) உணர்ந்து, உருகி, (உனது) அழகிய தாமரை போன்ற திருவடியைச் (சேர்வார்தம்) சிந்திப்பவர்களுடைய

குழாத்தினில் (கூட்டத்தினில்) என்னையும் அன்புடன் கூட்டிவைக்கச் சிறிதளவு (முருகா! உனது திருவுள்ளம்) நினைத்தலாகாதா!

மிகப் பராக்ரமம் (வீரமும்), ஒளியும் கொண்ட வேல்கொண்டு ஒப்பற்ற கிரவுஞ்சமலை** பொடிபட, மாமரமாய் நின்ற சூரனை-

வென்ற அரசே! பன்னிரண்டு திண்ணிய புயங்களை உடையவனே! வெட்சிமாலை அணிந்த அழகிய லக்ஷ்மீகரம் பொருந்திய மார்பனே!

---

வேலோன்", எனவரும் கந்தரலங்காரப் பாடலால் (100) அறிகின்றோம் அடியார் சிறப்பை-பாடல் 324 (பக்கம் 304 305 கீழ்க்குறிப்பைப் பார்க்க)

** பொட்டாக வெற்பைப் பொருத கந்தா " - கந்தர் அலங்.34.

*கம்ப ராய்ப்பணி மன்னு புயம்பெறு
கைக்குக் கற்புத் தவறாதே
†கம்பை யாற்றினி லன்னை தவம்புரி
கச்சிச் சொக்கப் பெருமாளே (42)

## 493. உபதேசம் மறவாமை

தாந்தத்தன தானன தானன
தாந்தத்தன தானன தானன
தாந்தத்தன தானன தானன தனதானா

வாய்ந்தப்பிடை நீடு குலாவிய
நீந்திப்‡பது மாதியை மீதினி
லூர்ந்துற்பல வோடையில் நீடிய உகள்சேலை-
வார்ந்துப்பக ழீயதி ராகிமை
கூர்ந்துப்பரி யாவரி சேரவை
சேர்ந்துக்குழை யோடுச லாடிய விழியாலே;
சாய்ந்துப்X பனை யூணவ ரானபொ
Oலாய்ந்துப் **பாணி னாரிரு தாளினில்
வீழ்ந்திப்படி மீதினி லேசிறி தறிவாலே-

*கம்பராய் வெளிப்பட்டு -ஏகாம்பரராய் வெளிப்பட்டுத் தோன்றி-தேவியின் தவத்துக்கு இரங்கி மாமரத்தடியில் இறைவர் தோன்றினார்" அம்மை....

"அருந்தவம் புரிய .... அவள் தனிப் பெருங் கணவர்
மாவின் மூலத்தில் வந்து தோன்றினார் மலைமகள் காண"

அல்லது, இறைவன் (கம்பராய்) ஏகாம்பரராய்-பணி (பூஜை செய்யும்) தனது புயத்தைப் பெறவேண்டி (தன்னை மணக்க) அன்னை தவம் புரிந்தாள்-

" தம் மணவாள நற் கோலம் மாது வாழவே காட்டி"

- பெரிய புராணம்-திருக்குறிப்பு-57, 67

ஏகாம்பரர்-என்பதன் பொருள் (ஆமிரம்)-மாரத்தின் கீழ் தோன்றிய ஏகர் என்பது

† கம்பையாற்றங்கரையிற் பூசித்தது-பாட்டு 463 பக்கம் 44 பார்க்க

‡ பதும ஆதியை-தாமரையாகிய முதன்மையான மலரை, Xபனை ஊனவர் ஆனபோல பனங்கள்ளை உண்டவர் லாகிரி கொண்டது போல

Oஆய்ந்து-மயங்கிச் சிறிது ஆராய்ந்து

**பாணினார்-இசைபாடும் பொதுமகளிர்

ஏகாம்பரர் என்னும் பெயரினராய் (விளங்குபவரது) பாம்புகள் நிலைத்திருக்கின்ற (அல்லது ஏகாம்பரர் ஆய்ப்பணி - ஆய்ந்து அணிந்துள்ள பாம்புகள் பொருந்தி- யிருக்கின்ற) புயத்தைப் பெறும் பொருட்டு (அல்லது-இறைவன் (கம்பராய்) ஏகாம்பரராய், வெளிப்பட்டுத் தோன்றி (பணிமன்னு புயம்) - தொண்டு (நிலைத்திருக்கும் புயத்தை - அவர்க்குப் பூசை செய்யும் தனது புயத்தை - அவர்க்குப் பெறுவதற்குகாக - இறைவன் தனது புயத்தைப்பெற-இறைவன் தன்னை மணக்க-கற்புநிலை தவறாமல்-

கம்பை யாற்றங்கரையில்-(அன்னை) தாய் (பார்வதி) தவஞ் செய்திருந்த **கச்சியில்** அழகிய பெருமாளே!

*(கழல்சேர்வார் குழாத்தினில் வைக்கச் சற்றுக் கருதாதோ)*

## 493.

அப்பிடை வாய்ந்து நீடு குலாவிய பதுமாதியை-நீரினில் பொருந்தி நெடுநேரம் விளங்கின தாமரையாகிய முதன்மையான மலரை-நீந்தி (தனது அழகால்) கடந்து மேம்பட்டு, உற்பல ஓடையில் மீதினில் ஊர்ந்து (நீலோற்பல ஓடையில் மேலே பரந்து விளங்கி - ஓடையில் உள்ள நீலோற்பலம் போல வெளித்தோன்றி விளங்கி - நெடுந்தூரம் பாயவல்ல சேல்மீனை-

நேரொத்து (சேல்மீன்போல நீண்டு), அம்புக்குப் போட்டியாகி எதிர்த்து, மை (அஞ்சனம்) மிகப் பூசப்பட்டு அதைத் தாங்குவதாகி, ரேகைகள் பொருந்த, வை (கூர்மை) கொண்டு, (காதில் உள்ள) குழையோடு ஊசலாடிய கண்களாலே-

(என் ஒழுக்கம்) சாய்ந்து-தளர்ந்து, பனங்கள்ளை உண்டவர் லாகிரி கொண்டதுபோல, மயங்கிச் சிறிது ஆராய்ந்து, (பாணினார்) இசைபாடும் பொதுமகளிருடைய இரண்டு பாதங்களிலும் வீழந்து, (இப்படி) இந்தப் பூமியின் மீது அற்ப அறிவு காரணமாக-

*சாந்தப்பிய மாமலை நேர்முலை*
*சேர்ந்துப்*படி வீணினி லேயுயிர்*
*மாய்ந்திப்படி போகினு* **மோர்மொழி** **மறவேனே;**
*† சார்ந்தப்பெரு நீர்வெள மாகவே*
*பாய்ந்தப்பொழு தாருமி லாமலெ*
*காந்தப்பெரு நாதனு மாகிய ‡மதராலே*
*தாந்தக்கிட தாகிட தாகிட*
*தோந்திக்கிட தோதிமி தோதிமி*
*சேஞ்செக்கண சேகெண சேகெண வெனதாளம்;*
*காந்தப்பத மாறியு லாவுய*
*Xராந்தற்குரு நாதனு மாகியே*
*போந்தப்பெரு மானமுரு காவொரு பெரியோனே-*
*Oகாந்தக் கலு மூசியு மேயென*
*ஆய்ந்துத்தமி ழோதிய சீர்பெறு*
**காஞ்சிப்பதி** *மாநகர் மேவிய பெருமாளே.* (43)

---

*படி-படித்து †சர்வ சங்கார பிரளய காலத்தில்-இறைவன் நடனஞ்செய்தல்; ஊழிக்காலத்தில ஒருயிரும் இராது என்பது; ஒருவரிவ் வுலகில் வாழ்கிலா வண்ணம் ஒலிபுனல் வெள்ள முன் பரப்ப", சம்பந்தர்- III-118-9.

அழித்தழித்தோர் மத்தப் பெரும் பித்தன் முன்னின்று தொந்தமிடவும் -மீனாட்சி பிள்ளைத்தமிழ் *16.*

‡ மதர்-களிப்பு.

X அந்தன்-சர்வசங்காரன்.

Oகாஞ்சி -குமரகோட்டத்து அருச்சச்சர் கச்சியப்பசிவாசாரியர் தாம் பாடிய கந்தப் புராணப் பகுதியைத் தினம் தினம் அர்த்த ஜாமம் ஆன பின் முருகன் திருவடிக்கீழ் வைக்க, மறுநாள் காலையில் அதில் திருத்தங்கள் காணப்படுமாம் ஆதலால்- " காந்தக் கல்லும் ஊசியுமே என ஆய்ந்து தமிழ் ஓதிய சீர்பெறு காஞ்சிப்பதி' என்பது கந்தபுராணத்தை அதன் ஆசிரியரது அன்புக்கு ஈடுபட்டு முருகவேள் அப்போதைக்கப்போது பார்த்துத் திருத்திக் கொடுத்த அன்பின் சக்தியைக் குறிக்கும் போலும் அங்ஙன- மாயின் அருணகிரியாரின் காலம் கச்சியப்ப சிவாசாரியாரின் காலத்துக்குப் பிற்பட்டதாகும் சைவசித்தாந்த மகா சமாஜத் திருப்புகழ்ப் பதிப்பிலே இரண்டு பாக்களில் -(525)- 'குதலை மொழியினார்: (793) 'தித்தித்த மொழிச்சிகள்) கச்சியப்ப சிவாசாரியரைப் பற்றி வருகின்றன.

(i) 5 5, மருவு புலவனார் கவிக்குளே சிறு வழுவ தறைமகா சபைக்குள் ஏகியெவகையபெயரதா இலக்கணாவிதிமொழிவோனே

சாந்து பூசப்பட்டுள்ள பெரியமலைக்கு நிகராம் கொங்கையைச் சேர்ந்து படிந்து, வீணாகக் காலத்தைக் கழித்து) உயிர் அழிந்து - இவ்வாறு கெட்டுப் போனாலும் நீ சொன்ன ஒப்பற்ற உபதேச மொழியை நான் மறக்க மாட்டேன்.

சேர்தலுற்ற பெரிய நீர் பிரளய நீர் - வெள்ளமாகவே பாய்ந்து பரக்கும் அந்த வேளையில் (ஊழிப் பிரளய காலத்தில்), ஓர் உயிரும் இல்லாமல், தாம் ஒருவரே காந்தம் (ஒளிவீசும்), பெருநாதனும் ஆகிய - பெரிய பிரளய கால மூர்த்தியாகிய களிப்பினாலே -

தாந்தக்கிட தாகிட தாகிடXX சேகெண சேகெண என்று தாளம் ஒலிக்க-

(காந்தப்பதம்)-அழகிய திருவடியை மாற்றி மாற்றி (நடன) உலாவை மிகச் செய்யும் ஆந்தன் (அந்தன்)- (முடிவானவனான) சர்வ சங்கார மூர்த்திக்குக் குருநாதனாய் வந்துள்ள பெருமானாம் முருகவேளே! ஒப்பற்ற பெரியோனே!

காந்தக் கல்லும் ஊசியுமே என (காந்தமும் (இரும்பு) ஊசியும் ஒன்றோடொன்று இழுபட்டுச் சேர்வதுபோல, ஆய்ந்து - ஆசிரியரும் மாணவனும் ஒருவரோ டொருவர் மனம் ஒருமித்து நூல்களை ஆய்ந்து, தமிழை ஓதுகின்ற மேன்மை பொருந்திய காஞ்சிப்பதி எனப்படும் மஹாநகரில் வீற்றிருக்கும் பெருமாளே

(ஓர் மொழி மறவேனே)

---

(ii) 793 'முற்பட்ட இலக்கண நூலிடை தப்புற்ற கவிக்கெனவே அவை முற்பட்டு புதுத்துறை மாறிய புலவோனே'

-அருணகிரிநாதர் நூலாராய்ச்சி - பக்கம் -*114* பார்க்க.

இனி, இங்ஙனம் கொள்ளாது பொதுவாக, ஆசிரியர் - மாணவர் எனக் கூடிப் பலரும் தமிழ் ஓதிய இடம் காஞ்சி - எனவும் கொள்ளலம்.

'வளரிலைத் தருப்பை நுனியெனக் கூர்த்த மதியினர்
தொன்று தொட் டுடைய
பளகறு கேள்விப் பயிற்சியர் மேற்கோள்
முதற்பகர் மூன்றினுந் தெருட்டி
இளையருக் குணர்த்தும் இலக்கண நெறியோர்
ஈரிரு புலமையர் தம்முட்
களவிக லிகந்து குழாங் குழாமாகிக் கலைதெரி கழகமும்
பலவால்"- காஞ்சிப் புரணம் - நகரப் = *108.*

## 494. மோக்ஷம் பெற

தனதனாத் தத்த தந்த தனதனாத் தத்த தந்த
தனதனாத் தத்த தந்த தனதான

அறிவிலாப் பித்த ருன்ற னடிதொழாக் கெட்ட வஞ்சர்
அசடர்பேய்க் கத்தர் நன்றி யறியாத-
அவலர்மேற் சொற்கள் கொண்டு கவிகளாக் கிப்புகழ்ந்து
அவரைவாழ்த் தித்தி ரிந்து பொருள்தேடிச்;
சிறிதுகூட் டிக்கொ ணர்ந்து தெருவுலாத் தித்தி ரிந்து
தெரிவைமார்க் குச்சொ ரிந்து அவமேயான்
திரியுமார்க் கத்து நிந்தை யதனைமாற் றிப்ப ரிந்து
தெளியமோ க்ஷத்தை யென்று அருள்வாயே;
*இறைவர்மாற் றற்ற செம்பொன் வடிவம்வேற் றுப்பி ரிந்து
இடபமேற் கச்சி வந்த உமையாள்தன்-
இருளைநீக் கத்†த வஞ்செய் தருளநோக் கிக்கு ழைந்த
இறைவர்கேட் கத்த குஞ்சொ லுடையோனே;
குறவர்கூட் டத்தில் வந்து கிழவனாய்ப் புக்கு நின்று
குருவியோட் டித்தி ரிந்த தவமானைக்-
‡குணமதாக் கிச்சி றந்த வடிவுகாட் டிப்பு ணர்ந்த
குமரகோட் டத்த மர்ந்த பெருமாளே (44)

---

*மாற்றற்ற செம்பொன்" - 'மாற்றறியாத செழும் பசும் பொன்னே" -அருட்பா.

† "தவஞ் செய்தருள நோக்கிக் குழைந்து "-அம்மை அருந்தவம் புரியத் தரிப்பரே அவள் தனிப் பெருங் கணவர்'- 'எம்பிராட்டிக்கு மெல்லியரானார் என்றும் ஏகம்பர்'- 'மா துமெய்ப் பயன்கொடுப்பவே கொண்டு வளைத்தழும்புடன் முலைச்சுவடணிந்தார்' -பெரிய புராணம் - திருக்குறிப்பு-57, 65, 66.

‡ 'குணமதாக்கி.... வடிவு காட்டினது'
"முகமா றுடைய பிரான் - கன்னிதனையோர் கடிகாவினிற் கலந்து
துன்னு கருணை செய்து தொல்லுருவங் காட்டினனே"
-கந்த புராணம் 6-24-115.

குணமதாக்கி - தெய்வக் கோலத்தை வள்ளிக்கு அருளியது:- "அறுமுகம் உடைய வள்ளல்... நங்கைதனை யருளோடு நோக்க... குறவர் மாதர் குயிற்றிய கோலம் நீங்கி, முன்னுறு தெய்வக் கோல முழுதொருங் குற்றதன்றே"- கந்த புரா.6-24-197.

# 494.

அறிவு இல்லாத பித்தர், உனது திருவடியைத் தொழாத கெட்ட வஞ்சகர்கள், மூடர்கள், பேயின் தன்மைகொண்ட செய்கையாளர், நன்றி அறிதல் இல்லாத-

பயனிலிகள் - ஆகிய இத்தகையோர் மீது சொற்கள் கொண்டு பாடல்கள் அமைத்து அவர்களைப் புகழ்ந்தும் அவரை வாழ்த்தியும் (அதன் பொருட்டுத்) திரிந்து பொருள்தேடி-

சிறிதளவு சேகரித்துக் கொண்டுவந்து (பொதுமகளிர் வாழும்) தெருக்களில் உலவித் திரிந்து (அப்) பெண்களுக்கு அப்பொருளை நிரம்பக்கொடுத்து, (இங்ஙனம்) வீண் காலங் கழித்து நான்-

திரிகின்ற போக்கால் எனக்கு வருகின்ற நிந்தை மொழி ஒழியும்படி அருளி, என்மீது அன்புகூர்ந்து, நான் தெளிவு பெற மோக்ஷ இன்பத்தை என்று எனக்கு அருள்புரிவாய்!

இறைவரது மாற்றறியாத செம்பொன் வடிவம் வேறாகும்படி அவரிடமதிருந்து பிரிந்து, இடப வாகனத்தின் மீது காஞ்சிக்கு வந்த உமையவள் தனது-

இருள் (அஞ்ஞானம்) நீங்கத் தவஞ்செய்து விளங்க, அந்த (அம்மையின்) தவத்தைப் பார்த்து மனம் குழைந்த (உருகின) இறைவர் கேட்டு மகிழத்தக்கதான (உபதேசச்) சொல்லை உடையவனே!

குறவர்களின் கூட்டத்தில் வந்து, கிழவனாக ஒருவேடம் காட்டிப் புகுந்து நின்று, (தினைப்புனத்தில்) குருவிகளை(க் கவண் கற்களால்) ஓட்டி (அங்குமிங்கும்) திரிந்த தவம் நிறைந்த மானாம் வள்ளியைத்-

தன் வசப்படுத்திச், சிறந்த தனது தெய்வ வடிவத்தைக் காட்டி அவளோடு சேர்ந்த பெருமாளே! குமரகோட்டம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருக்கும் பெருமாளே!

(தெளிய மோக்ஷத்தை என்று அருள்வாயே)

## 2. திருவானைக்கா.

(இது பஞ்சபூத ஸ்தலங்களில் 'அப்பு' ஸ்தலம். மூவர் தேவாரமும் பெற்றது. திரிசிராப்பள்ளிக்கு வடக்கு $2^1/_2$ மைல் வெள்ளையானை வழிபட்ட ஸ்தலமாதலால் "ஆனைக்கா" என்றும், ஜம்பு நாவல் (வெள்ளை நாவல்) மரத்தடியிற் சிவபிரான் எழுந்தருளியிருப்பதால்" "ஜம்புகேச்வரம்". என்றும் பெயர் வந்தன. கச்சியப்ப முநிவர் பாடிய ஸ்தல புராணம் ஒன்றுள்ளது)

### 495. வேசையர் மயக்கறப் பாதசேவை

தந்தன தானன தத்த தத்தன
தந்தன தானன தத்த தத்தன
தந்தன தானன தத்த தத்தன தனதான

அஞ்சன வேல்விழி யிட்டழைக்கவு
மிங்கித மாகந கைத்துருக்கவு
மம்புயல் நேர்குழ லைக்குலைக்கவும் நகரேகை-
அங்கையின் மூலம்வெ ளிப்படுத்தவு
மந்தர மாமுலை சற்றசைக்கவு
மம்பரம் வீணில விழ்த்துடுக்கவு மிளைஞோர்கள்;
நெஞ்சினி லாசைநெ ருப்பெழுப்பவும்
வம்புரை கூறிவ ளைத்திணக்கவு
மன்றிடை யாடிய ருட்கொடுக்கவு மெவரேனும்-
நிந்தைசெ யாதுபொ ருட்பறிக்கவு
மிங்குவ லார்கள்கை யிற்பிணிப்பற
நின்பத சேவைய நுக்ரகிப்பது மொருநாளே;
*குஞ்சர மாமுக விக்கிநப்ரபு
†அங்குச பாசக ரப்ரசித்தனொர்
கொம்பன்ம கோதரன் முக்கண் விக்ரம கணராஜன்-

---

*விநாயகப் பெருமானுக்கு உரிய அருமையான தோத்திரம் இது.

† விநாயகர் திருக்கரத்தில் அங்குசம், பாசம் இரண்டும் உண்டு; (அடியார்களின்) ஆணவம் என்னும் யானையைப் பிணிக்க (கட்ட)ப் பாசம் ஒரு திருக்கரத்திலும், அதை அடக்க அங்குசம் ஒரு திருக்கரத்திலும் கொண்டுள்ளார்.

(தொடர்ச்சி - பக்கம் 123-பார்க்க)

## 495.

மைபூசியுள்ள வேல்போன்ற கண் கொண்டு அழைக்கவும், இன்பகரமாகச் சிரித்து மனத்தை உருக்குதல் செய்யவும். அழகிய மேகம்போன்ற கூந்தலைக் கலைக்கவும் நகக்குறி (யிட்டு)

அழகிய (கைம் மூலத்தை) அக்குளை (கமுக்கட்டை)த் தெரியும்படிக் காட்டவும், மந்தர மலை போன்ற கொங்கையைச் சிறிது அசைக்கவும், புடைவையை அனாவசியமாக அவிழ்த்து உடுக்கவும், இளைஞர்களுடைய-

நெஞ்சிலே ஆசைத் தீயை எழுப்பவும், வீண் வார்த்தைகளைப் பேசி, அவர்கள் மனதைக் கவர்ந்து வசப்படுத்தவும், அரங்கில் (சபையில்) நடனம் செய்து மருட்சி (காமமயக்கைக்) கொடுக்கவும், யாராயிருந்த போதிலும்-

நிந்தை செய்யாமல் (இகழ்ச்சி செய்யாமல்) (இவர் இழிந்தவர் என ஒதுக்காது பொருள் பறிப்பதே தமது குறியாக வைத்துக்கொண்டு பொருளைப் பறிக்கவும், இங்கு வல்லவர்களாயுள்ள (பொதுமகளிரின்) கையில் அகப்பட்டுக் கொண்ட கட்டு நீங்க, உனது பாதசேவையை நீ தந்து அநுக்கிரகம் செய்யும் ஒரு நாளும் உண்டோ! (அநுக்கிரகம் செய்யும் ஒரு நாள் எனக்குக் கிடைக்குமா!)

யானையின் அழகிய முகத்தைக்கொண்ட விக்ன விநாயகன் என்னும் பிரபு (பெரியோன்), அங்குசம், பாசம் இரண்டும் கையிற்கொண்ட பிரசித்திபெற்றவன், ஒற்றைக் கொம்பன், பெருவயிறன், முக்கண்ணன், பராக்ரமம் நிறைந்த கணபதி (கணங்களுக்கு அரசன்)-

---

**" ஆணவவெங் கரிபிணித் தடக்கிக் கரிசினேற்கு
இரு கையும் ஆக்கும் அண்ணலை" -தணிகைப் புராணம்.

"மும்மை நாட்டம் நால்வாய்ப்
பாசம் அங்குசம் தேசுறும் எயிறு" -சங்கற்ப நிராகரணம் (1)

"கங்கையும் பனிவெண் திங்களும் விரைத்த கடுக்கையந் தொங்கலும் அரவும், தங்குபொற் சடையும் முக்கணுந் தாதை தாணு என்றுணர்த்த, மென்மலர்க் கை, அங்குச பாசம் அணிந்து வெற்புயிர்த்த
ஆரணங்கு அன்னை யென் றுணர்த்தி, வெங்கலி
முழுதும் துமித்தருள் பட்டிவி நாயகன் சேவடி பணிவாம்"
-பேரூர்ப் புராணம்.

கும்பிடு வார்வினை பற்றறுப்பவன்
எங்கள் விநாயக னக்கர்பெற்றருள்
குன்றைய ரூபக கற்பகப்பிளை யிளையோனே;
துஞ்சலி லாதச டக்ஷரப்*பிர
பந்த சடானன துஷ்டநிக்ரக
† தும்பிகள் சூழவை யிற்றமிழ்த்ரய பரிபாலா-
துங்க ‡ **கஜாரணி** யத்திலுத்தம
Xசம்பு தாடகம டுத்ததக்ஷிண
Oசுந்தர மாறன்ம திட்புறத்துறை பெருமாளே. (1)

## 496. பூஜை செய்ய

தந்தன தானத் தானன, தந்தன தானத் தானன
தந்தன தானத் தானன தனதான

அம்புலி நீரைச் சூடிய செஞ்சடை மீதிற் றாவிய
ஐந்தலை நாகப் பூஷண ரருள்பாலா-
அன்புட னாவிற் பாவது சந்தத மோதிப் பாதமு
மங்கையி னானிற் **பூசையு** **மணியாமல்;**

---

* பிரபந்தம் - பந்திக்கப்படும் ஷட்கோண யந்திரம்.

† "தும்பிகள் சூழவை' என்பது மதுரையிற் சொக்கநாதர் ஆலயத்தில் அஷ்ட கஜங்கள் தாங்கும் விமானத்து அருகிலுள்ள சங்க மண்டபம்-
'கரியெட்டும்... தாங்க..மயன் நிருமித்துதவிய.. விமானம்'
(திருவிளை - இந்திரன் 83)
'தேவர்கோன் இழிச்சிய மதமலை யிருநான்கு பிடர்
சுமந்தோங்கி... குயிற்றிய சிகரக் கோயில்" -கல்லாடம் 28.
இங்கே உக்கிர பாண்டியனாய் முருகவேள் தமிழைப் பரிபாலித்தார்.

‡ கஜாரணியம் - திரு ஆனைக்கா. நாற்கோட்டு யானை பூசித்த தலம், "நாற்கோட்கு நாகம். பணிந்ததுவும்"- பெரிய புராணம் - ஞான சம்பந்தர் 345. இந்த யானை வெள்ளை யானை. "வித்தகத்தால் வெள்ளானை விள்ளா அன்பு விரவியவா கண்டதற்கு வீடு காட்டி".
-அப்பர் VI-83-6.

-வரலாற்று விரிவு-பாடல் 500-கீழ்க்குறிப்பைப் பார்க்க

Xசம்பு தாடகம் - சம்பு - தீர்த்தம் - திருவானைக்காவிலுள்ள ஒன்பது தீர்த்தங்களுள் ஒன்று. (தொடர்ச்சி பக்கம் 125-பார்க்க)

கும்பிடுபவர்களுடைய வினையையும் பற்று (ஆசையையும்) அறுப்பவன், (அல்லது வினை பற்றுதலை அறுப்பவன்), எங்கள் விநாயகமூர்த்தி, நக்கர் (நக்கர் - திகம்பரர் - சிவன்), பெற்றருளிய குன்று அன்ன (மலை போன்ற) உருவத்தை உடையவன் - (ஆகிய) கற்பகவிநாயக- பிள்ளைக்கு இளையவனே!

அழிவு இல்லாத ஆறெழுத்தின் (பெருமைகூறும்) பாமாலை நூல்களுக்கு உரியவனே! அல்லது, ஆறெழுத்து அடக்கப்படும் அறுகோண யந்திரத்தின் மூலப்பொருளே) ஆறுதிருமுகத்தனே! துஷ்டர்களை நிக்ரஹம் செய்பவனே (அழிப்பவனே)! யானைகள் சூழ்ந்துள்ள சபாமண்டபத்தில் முத்தமிழைப் பரிபாலித்தவனே!

உயர்ச்சி பெற்ற **திருவானைக்கா**வில் (வீற்றிருக்கும்) உத்தமனே! **சம்பு தீர்த்தத்துக்கு அடுத்துத் தெற்கே உள்ள ○**சுந்தரபாண்டியன்** மதிலின் வெளிப்புறத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

*(நின் பதசேவை அநுக்கிரகிப்பதும் ஒரு நாளே!)*

## 496.

நிலவையும், கங்கையையும் சூடியுள்ள செஞ்சடைமேல் தாவி நிற்கும் ஐந்துதலை நாகத்தை ஆபரணமாக அணிந்துள்ள சிவபிரான் அருளிய குழந்தையே!

அன்புடனே நாக்கொண்டு பாடல்களால் எப்போதும் (உனது) பாதத்தை ஓதி, அங்கை கொண்டு உன்னைப் பூசிக்கும் ஒழுக்கத்தை மேற் கொள்ளாமல்

---

**"சம்புமுனி என்றொருவன்.. சந்நிதிக்குப் பாவகன் மாதிரத்து பூ அலர்ந்த ஒரு தீர்த்தம் புகுந்தாடி" 'எமதியற்கையினைத் தலைப்பட்டான், ஆதலினால் அங்கதற்குப் பெயர் 'சம்பு தீர்த்தம்' என்றாயது மாதே"- திரு ஆனைக்காப் புராணம் தீர்த்த விசேடம்-42, 43.

○ திருவானைக்கா கோயில் பஞ்சப் பிராகாரங்கள் என்னும் ஐந்து சுற்று வீதிகளை உடையது மதில்களுள் நான்காவது மதில் மிகப் பெரியது. அது திருநீறிட்டான் மதில். **சுந்தரமாறன்** மதில் அதற்கு உள்ளே இருக்கும் ஒரு மதில் போலும்; சுந்தரமாறன்-மதுரைச் சுந்தரபாண்டிய தேவன் சம்பந்தப்பட்ட கல்வெட்டு சிதம்பரம் கிழக்குக் கோபுரத்தில் உள்ளது. இவன் காலம் 1250 கி.பி. தென் ஆற்காடு கெஜட்டீர் திருவானைக்காவில் மதில் கட்டினவன் இவனாய் இருக்கலாம்..

வம்பணி பாரப் பூண்முலை வஞ்சியர் மாயச் சாயலில்
வண்டுழ லோதித் தாழலி லிருகாதில்-
மண்டிய நீலப் பார்வையில் வெண்டுகி லாடைச் சேர்வையில்
மங்கியெ யேழைப் பாவியே னழிவேனோ;
கொம்பனை நீலக் கோமளை அம்புய மாலைப் பூஷணி
குண்டலி யாலப் போசனி யபிராமி-
கொஞ்சிய வானச் சானவி சங்கரி வேதப் பார்வதி
குன்றது வார்பொற் காரிகை யருள்பாலா;
செம்பவ ளாயக் கூரிதழ் மின்குற மானைப் பூண்முலை
திண்புய மாரப் பூரண மருள்வோனே-
*செந்தமிழ் பாணப் பாவலர் சங்கித யாழைப் பாடிய
தென்திரு **வானைக் காவுறை** பெருமாளே (2)

## 497. சிவயோகி ஆக

தனத்த தான தானான, தனத்த தான தானான
தனத்த தான தானான தனதான

அனித்த மான வூனாளு மிருப்ப தாக வே† நாசி
யடைத்து வாயு வோடாத வகைசாதித்-
தவத்தி லேகு வால்மூலி புசித்து வாடு மாயாச
அசட்டு யோகி யாகாமல் மலமாயை;

---

*'செந்தமிழ் பாணப் பாவலர்-திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் - 'செந்தமிழ்ப் பாணனார்'. 'சந்த இசைப்பாணர்' 'அருட்பெரும்பாணார்; 'நல்ல இசை யாழ்ப்பெரும்பாணர்' - என இவரைப் பெரிய புராணம்கூறும் இவர் சம்பந்தப் பெருமான் அருளும் பாடல்களை யாழிலிட்டு வாசிப்பார். அங்ஙனம் சம்பந்தருடன் திரு ஆனைக்காவுக்கு வந்து அங்கு சம்பந்தர் பாடிய பாடலுக்கு இசைய சங்கீத யாழைப் பாடினர் என்பது தெரிகின்றது.

'பிள்ளையார்... சொற்றமிழ் மாலையின் இசைகள் சுருதியாழ் முறை தொடுத்தே... அகலா நண்புடன் அமர்ந்தார்"

-பெரிய பிராணம் திருஞான-*141.*

† நாசி அடைத்து வாடும் அசட்டு யோகி.

'விழிநாசி வைத்து, மூட்டிக் கபால மூலாதார நேரண்ட மூச்சையுள்ளே ஓட்டிப் பிடித்தெங்கும் ஓடாமற் சாதிக்கும் யோகிகளே"-

துருத்தி யெனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி உடம்பை ஒறுக்கில் என்னாம்"- என்றார் கந்தர் அலங்காரத்தில்-*85.71*

ரவிக்கை அணிந்த பாரமுள்ள நகையணிந்த கொங்கைகளை உடைய வஞ்சிக் கொடிபோல்பவராம் மாதர்களின் மாயச் சாயலிலும், வண்டுகள் திரியும் கூந்தற் சரிவிலும், இரு காதிலும்,

நெருங்கிய கரிய கண்களின் பார்வையிலும், வெண்மை நிறத்து ஆடையின் சேர்க்கையிலும், அறிவு மங்கிப்போய் (குறைந்து) ஏழைப் பாவியேனாகிய நான் அழிந்து போவேனோ!

கொம்பு அனைய (மெல்லிய) நீலநிற அழகி, தாமரை மாலையை அணியாக அணிந்தவள். (குண்டலி) சுத்த மாயையாம் சத்தி, விஷத்தை உண்டவள், அழகி,

குலவி மகிழும் வான்கங்கை (அல்லது வான்கங்கை போலத் தூயவள்) சங்கரி, வேதம் போற்றும் பார்வதி, மலை (இமயத்தின்) நெடிய தவத்தில் வந்த அழகிய மாது அருளிய பாலனே!

சிவந்த பவளாய (பவளம் - ஆய) பவள நிறமான மெல்லிய வாய் இதழ்களை உடைய ஒளி பொருந்திய குறமான் வள்ளியை அவளது பூண் அணிந்த (ஆபரணம் அணிந்த) முலை (உனது) திண்ணிய புயங்களில் நன்கு அழுந்தப் பூரணம் (நிறைந்த திருவருளை) அவளுக்குப் பாலித்தருளியவனே!

செந்தமிழ் ஞானம் உள்ள பாணப் பாவலர்(பாண்சாதிப் பாவலராம் திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார்) இசை ததும்பும் யாழை, (சம்பந்தர் பாடலுக்கு ஏற்ப), வாசித்த அழகிய **திருவானைக்கா**வில் வீற்றிருக்கும் பெருமாளே

(பூசையும் அணியாமல் பாவியேன் அழிவேனோ)

# 497.

நித்யமில்லாத (அழியக்கூடிய) இந்த ஊன் (இந்த உடல்) நாளும் (என்றும்) நிலைத்து இருக்கவேண்டி மூக்கை அடைத்து மூச்சு ஓடாதவகையை அப்யசித்து (நிறைவேற்றி)

(அவத்திலே) பயனிலாத வழியிலே நின்று, (குவால்) நிரம்ப, (மூலி) மூலிகைகளை (மருந்தாக உபயோகப்படும் செடி கொடி கிழங்கு ஆதிகளை) உண்டு, வாடுகின்ற அலுப்பும் (களைப்பும்), (அசட்டுத்தனம்), மூடத்தனமும் உள்ள யோகியாக ஆகாமல், மலம், மாயை

செனித்த காரி யோபாதி யொழித்து ஞான ஆசார
சிரத்தை யாகி யான்வேறெ னுடல்வேறு;
செகத்தி யாவும் வேறாக நிகழ்ச்சி யாம நோதீத
*சிவச்சொ ரூபமாயோகி யென ஆள்வாய்;
தொனித்த நாத வேயூது †சகஸ்ர நாம கோபால
சுதற்கு நேச மாறாத மருகோனே-
‡சுவர்க்க லோக மீகாம சமஸ்த லோக பூபால
தொடுத்த நீப வேல்வீர வயலூரா;
மனித்த ராதி சோணாடு தழைக்க மேவு காவேரி
மகப்ர வாக பாணீய மலைமோதும்;
மணத்த சோலை சூழ்×காவை அனைத்து லோக மாள்வாரு
மதித்த சாமி யேதேவர் பெருமாளே (3)

## 498. காலன் வரும் போது கழலைப் புகழ

தானதன தானத் தானதன தானத்
தானதன தானத் தனதான

ஆரமணி வாரைப் பீறியற மேலிட்
டாடவர்கள் வாடத் ○துறவோரை-
ஆசைமட லூர்வித் தாளுமதி பாரப்
பாளித படீரத் தனமானார்;

---

*சிவயோகி ஆகவேண்டும்:-

"சிவயோகம் என்னும் கருத்தையறிந்து முகமாறுடைக் குருநாதன் சொன்ன கருத்தை மனத்தில் இருந்துங் கண்டீர் முத்தி கைகண்டதே " -(கந்தர்-அலங்காரம் 71).

இங்குள்ள கருத்துடன் - "அனாசார கருமயோகி ஆகாமல்:- உடலம் வேறு யான் வேறு கரணம் வேறு வேறாக உதறி... ஆசார பரமயோகி யாமாறு... அருள்வாயே-திருப்புகழ் 1047 எனவருவதை ஒப்பிட்டு அறியவும் திருப்புகழ் 212-ம் இங்கு உணரற்பாலது.

† சகஸ்ரநாம கோபாலசுதன் 'பேராயிரமுடைய பேராளன் பேராளன் என்கின்றாளால்'. பெரிய திருமொழி 8-1-6

‡சுவர்க்கலோக மீகாமன், "சுரலோக துரந்தரனே" "நாகபுரந்தரனே". கந்தர் அனுபூதி 16,20.

X காவை என்பது திருவானைக் கா

O துறவோரை மடல் ஊர்வித்தல் - பாடல் 235 (பக்கம் 87) பாடல் 158 பக்கம் 368

இவைகளால் தோன்றுகின்ற காரியங்களையும், (உபாதி) வேதனைகளையும் ஒழித்து, ஞானமும், ஆசாரமும், சிரத்தை (முயற்சி) இவைகளைக் கொண்டவனாய் யான் வேறு, என்னுடைய உடல்வேறு

பிரபஞ்சத்திலே யாவும் வேறு என (வேற்றுமை காட்டும் வேறு வேறாக) எண்ணும்படி நிகழ்ச்சிகளைக் காட்டும் இந்த மனதுக்கு (அல்லது யான்வேறு, என் உடல் வேறு, உலகில் உள்ள யாவும் வேறு என உதறின பற்றற்ற நிலையினால் அடையக்கூடியதும்), மனதுக்கு எட்டாததாய் விளங்கும் "சிவ சொரூப மஹாயோகி" என நான் ஆகும்படி என்னை ஆண்டருளுக.

ஒலி தரும் இசையுடன் கூடிய புல்லாங்குழலை ஊதுபவரும், ஆயிரம் திருநாமம் கொண்டவருமான கோபாலப் பிள்ளைக்கு அல்லது நந்தகோபாலருடைய பிள்ளைக்கு (திருமாலுக்கு) அன்பு மாறுபடாத மருமகனே!

விண்ணுலகம் (என்னும் கப்பலைக் காப்பாற்றிய) மாலுமியே! சகல லோகங்களையும் புரக்கும் அரசே! (மாலையாகக்) கட்டப்பட்ட கடப்ப மாலையனே! வேல்வீரனே! வயலூரானே!

மனிதன் ஆதிய ஜீவ வர்க்கங்கள் உள்ள சோழநாடு தழைக்க வரும் காவேரியாற்றின் மகா வெள்ளநீரின் அலைகள் மோதுகின்றதும்

நறுமணம் கமழ்கின்ற சோலைகள் சூழ்ந்துள்ளதுமான திரு ஆனைக்காப் பெருமாளே! சகல லோகங்களை ஆள்பவரும் மதித்து வணங்கும் தெய்வமே - தேவர் பெருமாளே!

(சிவச்சொரூப மாயோகி என ஆள்வாய்)

## 498.

ஹாரம் (மணிவடம்) அணிந்துள்ள (வார்) ரவிக்கை- யையும் (பீறி) கிழித்துக்கொண்டு, (அற) மிகவும் (மேலிட்டு) வெளித்தோன்றி, ஆண்களை வாட்டியும், துறவிகளைக்

காமத்தில் ஆழ்த்தி, மடல் ஏறும்படிச் செய்வித்தும் ஆளவல்லதாய், அதிக பாரங்கொண்டதாய், பச்சைக் கற்பூரம், சந்தனம் இவைகளை அணிந்ததான கொங்கையை உடைய மாதர்களின்.

காரளக நீழற் காதளவு மோடிக்
காதுமபி ராமக் *கயல்போலக்-

காலனுடல் போடத் தேடிவரு நாளிற்
காலைமற வாமற் புகல்வேனோ

பாரடைய வாழ்வித் †தாரபதி பாசச்
சாமளக லாபப் பரியேறிப்-

‡பாய்மதக போலத் தானொடிக லாமுற்
Xபாடிவரு மேழைச் சிறியோனே;

சூரர்புர சூறைக் காரசுரர் காவற்
காரஇள வேனற் புனமேவுந்-

O தோகைதிரு வேளைக் கார **தமிழ் வேதச்
சோதிவளர் காவைப் பெருமாளே (4)

---

*கண்ணுக்கு காலனை உவமை கூறுதல் வழக்கம் :- "காலன் வேல்கணை... நேர்கண்" - திருப்புகழ் 924 -- இங்கு அதற்குமாறாகக் காலனுக்குக் கண்ணை உவமை கூறுகின்றார். இங்ஙனம் பிரசித்தமான உபமானத்தை உபமேயமாகவும் உபமேயத்தை உபமானமாகவும் மாற்றிக்கூறியதால் இது எதிர் நிலையணி - வடநூலார் இதைப் 'பிர தீபாலங்காரம்' என்பர் - உதாரணம் மேரு போலும் தோள் என்னாது தோள்போலும் மேரு என்பது. 'தோளொடு புரையுஞ் செம்பொன் மேரு" (வில்லிபாரதம்) 13 ஆம் நாள் போர் - 106

† ஆரபதி - அரபதி - சர்ப்பராஜன் .

ஆதிசேடனும் மயிலும்;

"நீளக் காள புயங்க கால... கலாபத்தோ்' - திருப்புகழ் 68.

"நாகபந்த மயூரா" - திருப்புகழ் 100.

"கலபி ஆலித்து அனந்தன் பணாமுடி தாக்க" -கந்தர் அலங்காரம் 97.

"சேடன்முடி திண்டாட... நடிக்கு மயில்" - மயில் விருத்தம் 2.

ஆதிசேடன் - உலகைத் தாங்குவது - "ஆதார கமடமும் கணபண வியாளமும் " வேல் விருத்தம் 3.

‡ விநாயகரோடு போட்டியிட்டது - திருப்புகழ் 184-பக்கம் 430 கீழ்க்குறிப்பு.

X பாடிவரல் - வளைந்தோடி வருதல்; பாடியோட்டம்- ஒரு விளையாட்டு.

(O - ** பக்கம் 131 பார்க்க)

மேகம் போன்ற கரிய கூந்தலின் நீழலிலே காதுவரைக்கும் ஓடி, கொல்லும் தொழிலை மேற்கொண்ட அழகிய கயல் மீன்போல (கண்கள் போல) - (ஆடவரையும் துறவிகளையும் காமப் பித்தேற்றிக் கொல்லும் கண்போலக் கொலைத் தொழிலைக்கொண்ட)

காலன் - என்னுடைய உடலைவிட்டு என் உயிரைப் பிரிக்கத் தேடிவருகின்ற அந்தத் தினத்தில் (உனது) காலை (திருவடியை) மறவாமல் (புகல்வேனோ)- சொல்லும் பாக்கியத்தைப் பெறுவேனோ!

உலக முழுமையும் (தாங்கி) வாழ்விக்கும் சர்ப்ப ராஜனான ஆதிசேடனைத் தனது காலிற் கட்டவல்ல பசுந்தோகை வாகனமாம் மயிலில் ஏறி

பாய்கின்ற மதம் கொண்ட மத்தகத்தை உடைய விநாயகரொடு மாறுபட்டு, முன்பொருகாலத்தில், (உலகை) வளைந்தோடி வந்த ஏழைக் குழந்தையே!

சூரர்களுடைய ஊர்களைச் சூறையாடி அழித்தவனே! தேவர்களுக்குக் காவற்காரனாய் விளங்குபவனே! பச்சைத் தினைப்புனத்தில் இருந்த

மயில் போன்ற (வள்ளியுடன்) நன்றாகப் பொழுது போக்கிக் காவலிருப்பவனே! (தமிழ் வேதச்சோதி) தமிழ் மறை (தேவாரத்தை) அருளிய சோதி மூர்த்தியே! (மங்கலம்) வளரும் **திருவானைக்காவிற்** பெருமாளே! (அல்லது - தமிழ்ப்ரியனாம் வேதச் சோதியாகிய சிவபிரான்) (அல்லது - தமிழ்மறை - தமிழ் வேதமாம் தேவாரப்பாக்களைப் பெற்ற சோதியாம் சிவபிரான் வீற்றிருந்தருளும் **திருவானைக்காவிற்** பெருமாளே!

(காலை மறவாமற் பணிவேனோ)

---

O **வள்ளிவேளைக்காரன்**:- வள்ளியோடு பொழுது போக்குபவன் எனப் பொருள்படும். "குருவி.... ஒச்சிய...திருமானை... தொழுது என்றும் பொழுது போக்கிய பெருமாளே" திருப்புகழ் 1181 திருவேளைக்காரன் வகுப்பு :- (அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும் - பக்கம் 185 - பார்க்க).

*** தமிழ் வேதம் சம்பந்தர் அருளியது-" காழி நற்றமிழ் ஞான சம்பந்தன் மறைவளரும் தமிழ்மாலை " II-67-11.

## 499. அருள்பெற

தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன
தான தத்தன தத்தன தத்தன தனதான

ஆலம் வைத்தவி ழிச்சிகள் சித்தச
னாக மக்கலை கற்றச மர்த்திக
ளார்ம னத்தையு மெத்திவ ளைப்பவர் தெருவூடே
ஆர வட்டமு லைக்குவி லைப்பண
மாயி ரக்கல மொட்டிய ளப்பினு
மாசை யப்பொரு ளொக்கந டிப்பவ ருடன்மாலாய்;
மேலி ளைப்புமு சிப்பும வத்தையு
மாயெ டுத்தகு லைப்பொடு பித்தமு
மேல்கொ ளத்தலை யிட்டவி திப்படி யதனாலே
மேதி னிக்குள பத்தனெ னப்பல
பாடு பட்டுபு ழுக்கொள்ம லக்குகை
வீடு கட்டியி ருக்குமெ னக்குநி னருள்தாராய்;
*பீலி மிக்கம யிற்றுர கத்தினி
லேறி முட்டவ ளைத்துவ குத்துடல்
பீற லுற்றவு யுத்தக ளத்திடை மடியாத
பேர ரக்கரெ திர்த்தவ ரத்தனை
பேரை யுக்ரக ளப்பலி யிட்டுயர்
பேய்கை கொட்டிந டிப்ப†ம ணிக்கழுகுடனாட;
ஏலம் வைத்தபு யத்தி லணைத்தருள்
‡வேலெ டுத்தச மர்த்தையு ரைப்பவர்
ஏவ ருக்கும னத்தில்நி னைப்பவை யருள்வோனே:-

---

*பீலிமிக்க மயில் - மயிலாக முருகவேளைத் தாங்கிய இந்திரன் பாடல் 447 - பக்கம் 624-கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† மணி-கருமை- 'மணிசூழ்மாலை நட்டம் நவில் நம்பன்' சம்பந்தர்- 2-62-6

‡ வேலெடுத்த..... அருள்வோனே"- மனப்பாடம் செய்ய வேண்டிய அழகான அடிகள் இவை

"ஏவருக்கு மனத்தில் நினைப்பவை அருள்வோனே" முருகவேள். "நினைத்தவை முடித்தருள் க்ருபைக்கடல்"- திருக்கையில் வழக்க வகுப்பு; "முருகொத்தீயே முன்னியது முடித்தலின்".

- புறநானூறு -56

## 499.

விஷத்தைக் கொண்ட கண்ணினர், சித்தசன் (மன்மதனுடைய) ஆகமக் கலை (சாஸ்திர நூல்களைப்) படித்துள்ள சாமர்த்திய சாலிகள், எப்படிப் பட்டவருடைய மனத்தையும் வஞ்சனை வழியால் (வஞ்சனை செய்து) தம் வசம் இழுப்பவர்கள், தெருவில் நின்று-

முத்துமாலை அணிந்த வட்ட வடிவுள்ள கொங்கைக்கு விலையாகப் பணம் ஆயிரக்கலங் கணக்காகத் துணிந்து அளந்து கொடுத்தாலும், தங்களுடைய ஆசையைக், கொடுத்த அந்த பொருளுக்குத் தக்கவாறே (அந்தப் பொருளின் அளவே), நடித்து ஒழுகுவோருடன் நான் ஆசை பூண்டவனாய்-

(அதன்) பின்னர் இளைப்பும் (வாட்டமும்), முசிப்பும் (மெலிவும்), அவத்தையும் (வேதனையும்) அடைந்து உண்டான குலைப்போடு (நடுக்க வாதத்துடன்) பித்தமும் அதிகப்பட தலையில் எழுதியுள்ள விதிப்பிரகாரம்- அவ்விதி காரணமாக-

பூமியில் அபத்தன் என (பொய்யன் என்று பேர் பெற்று) பல கஷ்டங்கள் பட்டு, புழுசேர்ந்த மலக்குகையாம் வீட்டைக்கட்டி, (புழுவும் மலமும் கொண்ட இந்த உடலைப்-பிறவியை எடுத்து) இருக்கின்ற எனக்கு உனது திருவருளைத் தந்தருளுக.

தோகை நிரம்ப உள்ள மயிலாம் குதிரையில் ஏறி(அசுரர்கள் யாவரையும்) ஒருசேர வளைத்து, அவர்களைக் கூறுபடுத்தி, அவர்கள் உடல்கள் கிழிவுபட்ட போர்க்களத்தில் இறவாது எஞ்சி நின்ற

பெரிய அரக்கர்கள் எதிர்த்து வந்தவர் அத்தனை பேரையும் கடுமையான போரில் (களப்பலி) கொடுத்துப் போரில் மடிவித்துக் (கொன்று) பெரிய பேய்கள் கைகொட்டி நடிக்கவும், கரிய கழுகுகள் உடன் ஆடவும்-

ஏலம் (வாசனைப்பண்டம்) மணக்கும் தோளில் அணைத்துவைத்துள வேலாயுதத்தை (எடுத்துச் செலுத்திய) சாமர்த்தியத்தை (திறமையை)ப் புகழ்வோர் யாவருக்கும் அவரவர் மனத்தில் நினைக்கும் இச்சைகளைப் பூர்த்திசெய்து அருள்பவனே!

---

*களப்பலி - யுத்தகளத்தில் கொற்றவைக்குக் கொடுக்கும் பலி

*ஏழி சைத்தமி ழிற்பய னுற்ற †வெ
ணாவ லுற்றடி யிற்பயி லுத்தம
ஈசன் முக்கணி ருத்தன ளித்தருள்
பெருமாளே (5)

## 500. நரஸ்துதியை விட்டொழிக்க

தனத்தா தனத்தா தனத்தா தனத்தா
தனத்தா தனத்தான தந்ததான

‡உரைக்கா ரிகைப்பா லெனக்கே முதற்பே
ருனக்கோ மடற்கோவை யொன்றுபாட
உழப்பா திபக்கோ டெழுத்தா ணியைத்தே
டுனைப்பாரி லொப்பார்கள் கண்டிலேன்யான்;
குரைக்கான வித்யா கவிப்பூ பருக்கே
குடிக்காண் முடிப்போடு கொண்டுவாபொன்;
குலப்பூ ணிரத்நா திபொற்றூ செடுப்பா
யெனக்கூ றிடர்ப்பாடின் மங்குவேனோ;

---

வெண்ணாவலடியில் உள்ள ஈசன் மூவர் தமிழையும் ஏழிசையையும் கேட்டுவந்தவர். " வெண் நாவலின் மேவிய எம் அழகா" என்று சம்பந்தரும் , 2-23-1. " தீவினை சேராதே இருளறுத்துநின் றீசனென் பார்க்கெலாம் அருள் கொடுத்திடும் ஆனைக்கா அண்ணலே"- என்று அப்பரும் 5-31-8, "ஆனைக்காவுடை ஆதியை நாளும் இறைவனென் றடிசேர்வார் எம்மையும் ஆளுடையாரே"- என்று சுந்தரரும்-7-75-1, இசைத் தமிழாற் பாடிய பாடல்களைப் பெற்ற வள்ளலார் ஆனைக்காவிலுறையும் அண்ணலார். சம்பந்தர் தாம் அருளிய தமிழ் மாலையை" ஏழின்னிசை மாலை" என்கிறார்-2-37-11.

† வெண்ணாவல்- திரு ஆனைக்காவிற் கோவிலிலுள்ள விருக்ஷம்
"ஆனைக்காவில் வெண்ணாவல் மேவிய மெய்ப் பொருளை"
பெரிய புராணம் ஞானசம் 345

‡ காரிகை-11ஆம் நூற்றாண்டில் அமிர்தசாகரர் இயற்றிய ஒரு யாப்பிலக்கண நூல் ஆதலால் இது அருணகிரியார் காலத்துக்கு முற்பட்ட நூல்

(தொடர்ச்சி பக்கம் 135- பார்க்க).

ஏழிசைத் தமிழிற் பயன் உற்ற (ஏழிசைத் தமிழாம்-தேவாரப் பாக்களின் பயனைக்கொண்ட) வெண்ணாவல் மரத்தின் கீழ் விளங்குகின்ற உத்தமனாம் சிவன்-முக்கண் கொண்ட நிருத்தன் (கூத்தன்-நடனன்) பெற்றருளிய பெருமாளே!

(எனக்கு நின் அருள் தாராய்)

## 500.

சொல்லப்படுகின்ற "காரிகை" என்னும் யாப்பிலக்கண நூலின் எனக்கே முதற்பேர் (நிபுணர் என்னும் முதற் பேர் எனக்கே); உனக்கோ (உன் பேரில்) * மடல் கோவை என்னும் பிரபந்தவகை ஒன்று பாடுவதற்கு-

(உழப்பாது) (காலம் கடத்தாது-தாமதிக்காது-உடனே) யானையின் தந்தப்பிடி அமைந்த எழுத்தாணியைத் தேடி எடு; உனக்கு இப் பூமியில் ஒப்பானவர்களை கண்டதில்லை (நான்);

(குரைக்கு ஆன) - பெருமைக்கு உரிய - வித்தைவல்ல கவியரசர்களுக்கே (குடிக்காண்) நீ ஒரு புகலிடமாக விளங்குகின்றாய்; (பண) முடிச்சோடு கொண்டுவா பொற்காசுகளை;

சிறந்த ஆபரணங்களையும், ரத்னம் முதலியவற்றையும், உயர்ந்த அழகிய ஆடைகளையும் எடுத்துக் கொண்டுவா; என்றெல்லாம் சொல்லிப் புகழும் இடர்ப்பாட்டில் (துன்பங்களில்) வாட்டம் உறுவேனோ!

---

*மடல்-தான் கனவிற் கண்ட ஒரு மாதை அடைவேன், அடையத் தவறின் மடலேறுவேன் என ஒருவன் கூறும் வகையில் கலிவெண் பாவிற் பாடப்படும் பிரபந்த வகை-உதாரணம் -'வருண குலாதித்தன் மடல்'.

கோவை-அகப் பொருள் நூல்வகை வழிபாடு தெய்வத்தையேனும், ஆதரித்தவர்களையேனும் பாட்டுடைத் தலைவர்களாக அமைத்துப் பாடப் பெறுவது உதாரணம் - திருச்சிற்றம்பலக் கோவையார், தஞ்சைவாணன் கோவை. 500ஆம் பாடலின் முதல் இரண்டு அடிகளால் காரிகை என்னும் யாப்பிலக்கண நூல் அருணகிரியார் காலத்தில் நன்கு பயிலப்பட்டது என்பதும், எழுத்தாணிக்குத் தந்தப் பிடி போட்டிருந்தார்கள் என்பதும் தெரிகின்றன.

*அரைக்காடை சுற்றார் † தமிழ்க்கூட லிற்போய்
‡அனற்கே புனற்கேவ ரைந்தஏடிட்
டறத்தா யெனப்பேர் படைத்தாய் புனற்சே
லறப்பாய் வயற்கீழ மர்ந்தவேளே;
திரைக்கா விரிக்கே கரைக்கா னகத்தே
சிவத்யான முற்றோர் Xசி லந்திநூல்செய்-

---

*அரைக்கு ஆடை சுற்றாதவர்கள்- அமணர் (சமணர்) அரையில் ஆடையின்மையால் அ(ம்)மணம்; உடை இலார்"-"ஆடை ஒழித்தங் கமணே திரிந்துண்பர்"- சம்பந்தர்-2-40- 10; 2-72-10.

† தமிழ்க்கூடல்-485-ஆம் பாடல் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

‡ அனலில் புனலில் ஏடு இட்டது - பாடல் 181, பக்கம் - 420- குறிப்பைப் பார்க்க.

Xசிலந்தி நூல்செய் திருக் காவணம் திரு ஆனைக்கா - புட்பவந்தன் மாலியவான் என்னும் கணநாதர்கள் சிவபக்தியிற் பொறாமை காரணமாகச் சினங்கொண்டு தம்மைத்தாமே சபித்துச் சிலந்தியும் ஆனையும் ஆயினர். புட்பவந்தன் வெள்ளானை ஆயினன், மாலியவான் சிலந்தியானான். வெள்ளை யானை வெண்ணாவலின் கீழ் இறைவனைக் கண்டு மகிழ்ந்து பூஜை செய்து வந்தது. சிலந்தி அந்த இறைவனைக் கண்டு மகிழ்ந்து தன் வாய் நூலால் கோயில் மண்டபம், கோபுரம் எல்லாம் இறைவனுக்கு அமைத்து வணங்கிற்று. சிலந்தி நூலைக் கண்ட யானை இஃதென்ன அநுசிதம் என நினைத்து சிலந்தி கட்டின கோயிலைச் சிதைத்து அழித்துச் சுத்திசெய்து பூசைசெய்து போயிற்று. கோயில் சிதைத்து போனதைக் கண்ட சிலந்தி வருந்திக் கோபித்து யானை மறுமுறை வந்து பூசித்த போது அதன் துதிக்கையுட் புகுந்து குடைந்தது. நோய் தாங்க முடியாது யானை மாண்டது வெளியில் வர முடியாமல் சிலந்தியும் மாண்டது இறந்த யானை சிவகணநாதன் ஆயிற்று. இறந்த சிலந்தி சோழர் குலத்தில் பிறந்து கோச் செங்கட்சோழன் என்னும் பெயர் பெற்றது உரிய காலத்துக்குப் பின்னே பிறந்த காரணத்தால் "செங்கண்" பெற்று கோச் செங்கணான்" ஆயிற்று - இந்த கோச் செங்கட் சோழன் அறுபத்து மூன்று நாயன்மார்களின் ஒருவர் ஆயினர். இவர் இறைவனுக்கு-பழைய வாசனை காரணத்தால்-யானை புகாதவண்ணம் "மாடக்கோயில்" பல அமைத்தார்.

(தொடர்ச்சி பக்கம்-137 பார்க்க)

அரையில் (இடுப்பில்) ஆடை கட்டாதவர்கள் (சமணர்கள்) மிக்கிருந்த தமிழ் வளர்ந்த மதுரைத் தலத்துக்குப்-போய் அங்கே நெருப்பிலும், நீரிலும் பாடல் எழுதப்பட்ட ஏட்டினை யிட்டு

அறச் செல்வன் என்னும் புகழைக் கொண்டாய்! நீரில் சேல்மீன்கள் நிரம்பப் பாய்கின்ற வயற்கீழ் (வயல்களின் கீழ்புறத்தில்-அல்லது வயலூரில் வீற்றிருக்கும் (செவ்)வேளே!

திரைகள் வீசும் காவிரியின் கரையில் இருந்த காட்டினுள்ளே சிவத்யானம் நிறைந்திருந்த சிலந்திப் பூச்சியின் நூலால் அமைக்கப்பெற்ற

---

*(136 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

'எண்டோள் ஈசற்கு எழில்மாடம் எழுபது செய்து
உலகம் ஆண்ட' திருக்குலத்து வளச் சோழன்.

- பெரிய திருமொழி -6-6-8.

"புத்தியினாற் சிலந்தியுந்தன் வாயின் நூலால் பொதுப்
பந்தர் அது இழைத்துச் சருகால் மேய்ந்த சித்தியினால்
அரசாண்டு சிறப்புச் செய்யச் சிவகணத்துப் புகப் பெய்தார்;
திறலால் மிக்க வித்தகத்தால் வெள்ளானை விள்ளா அன்பு,
விரவியாகண்டதற்கு வீடு காட்டிப் பத்தர்களுக் கின்னமுதாம்
பாசூர் மேய , பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்த வாறே"-

- அப்பர் 6-83-6

"சிலந்தியும் ஆனைக்காவிற் திருநிழற் பந்தர் செய்து
உலந்தவண் இறந்த போதே கோச்செங்க ணானு மாகக்
கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர் தங்கள்
குலந்தனிற் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்ட னாரே

- அப்பர்-4-49--4.

யானை பூசித்து அருள் பெற்ற காரணத்தால் "ஆனைக்கா" என ஆயிற்று. " செறிகவுட் கடாத்த ஆனைக்கு ஆரருள் புரிதலின்
ஆனைக்கா ஆயிற்று", திரு ஆனைக்காப் புராணம்.

மேற்சொன்ன வரலாற்றின் விரிவைத் திருவானைக்காப் புராணம் திரு ஆனைக்கா உலா, பெரியபுராணம் என்னும் நூல்களிற் காண்க.

திருக்கா வணத்தே யிருப்பா ரருட்கூர்
*திருச்சால கச்சோதி தம்பிரானே (6)

## 501. இந்திரிய தாப சபலமற

தான தனன தனதந்த தந்தன
தான தனன தனதந்த தந்தன
தான தனன தனதந்த தந்தன தனதான

† (ஓலமறைக ளறைகின்ற வொன்றது
‡மேலை வெளியி லொளிரும் பரஞ்சுடர்
Xஓது சரியை க்ரியையும் புணர்ந்தவ ரெவராலும்.
ஓத வரிய துரியங் கடந்தது
போத அருவ சுருபம் ப்ரபஞ்சமும்
ஊனு முயிரு முழுதுங் கலந்தது சிவஞானம்)
சால வுடைய தவர்கண்டு கொண்டது
மூல Oநிறைவு குறைவின்றி நின்றது
சாதி குலமு மிலதன்றி யன்பர்சொ னவியோமஞ்-
சாரு மநுப வரமைந்த மைந்தமெய்
வீடு பரம சுகசிந்து இந்த்ரிய
தாப சபல மறவந்து நின்கழல் பெறுவேனோ;

---

*சாலகம் - சிலந்திவலை, பலகணி; திருச்சாலகச்சோதி-"அந்தண் மடவார் அனவரதம் சிந்தித்துச் சேவிக்கும் எல்லைத் திருச்சாலக நலமும்". "பரமன் சிறக்கும் திருச்சா லகத்தொளிர் தேவேசன் கறைக்கண்டன் என்னானைக் கன்று", திருவானைக்கா உலா 57-75 (திருச்சாலக நலம்; -சந்நிதிக்குமுன்னே தரிசனத்துக்காக அமைக்கப் பெற்றுள்ள ஒன்பது துவாரங் கொண்ட பலகணி - இதன் வழியாக இறைவனைத் தரிசித்தோர் நவதீர்த்தங்களிலும் மூழ்கிய பலனைப் பெறுவரென்பது ஐதிகம் - திரு ஆனைக்கா உலா பக்கம்-16 குறிப்புரை.

† "வேதங்கள் ஐயா என வோங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே"
- திருவாசகம்-சிவபுராணம்-34

'மறை யீறறியா மறையோனே' கூஷ திருச்சதகம் 85.

'மறைவளரும் பொருளாயினானை'- சம்பந்தர்-3-105-6

‡ 'வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி' திருவாசகம் போற்றி அகவல்.141.

X சரியை-கிரியை பாடல்-331-பக்கம் 330 பார்க்க O 'மூலமாய முதலவன்', 'மூலமதாகி நின்றான்'- சம்பந்தர் -3-5-2 3-61-9 குறைவிலா நிறைவே'- சம்பந்தர் -2-10-4 திருவாசகம்-2-5 சுந்தரர் 7-70-6.

அழகிய பந்தலின்கீழ் இருந்தவரும் அருள்மிக்க-அழகிய-(சாலகத்தே) சிலந்திவலைக்கீழ் விளங்குபவருமான சோதியாம் சிவ பிரானுடைய (பிரானே) தலைவனே! (அல்லது) பந்தலின்கீழ் இருப்பவருடைய திருவருட் பாக்கியமாய் விளங்கும் தம்பிரானே! அழகிய பலகணி வழியாய்ச் சோதி வடிவாய்த் (தரிசனம்) தருகின்ற தம்பிரானே!

(இடர்ப் பாடின் மங்குவேனோ)

# 501.

(மறைகள் ஓலம் அறைகின்ற ஒன்று அது)' - வேதங்கள் (எங்குற்றாய் என்று தேடும் அபயக் குறிப்பொலியை எழுப்புகின்ற ஒப்பற்ற ஒரு (பொருள்; பரவெளியில் - பராகாசத்தில் - ஞானாகாசத்தில் - விளங்கும் பரஞ்சோதி; சொல்லப்படும் சரியை, கிரியை என்னும் மார்க்கத்தைக் கைப்பற்றினவர்கள் எவராலும்-

ஓதுதற்கரிதாய் துரியநிலையை (யோகியர் தம் மயமாய் நிற்கும் உயர் நிலையை)க் கடந்து நிற்பது; அறிவு, வடிவமின்மை, வடிவம் உண்மை உலகு, உடல், உயிர் இவை எல்லாவற்றிலும் கலந்து நிற்பது; சிவஞானம்

நிரம்ப உடைய தவத்தினர் கண்டு கொண்டது: மூலப்பொருளாய் நிறைந்துள்ளதாய்க் குறைவே இல்லாது நிற்பது; சாதி, குலம் இவை இல்லாதது மேலும், அன்புள்ள அடியார்கள் சொன்ன வியோமத்தை (ஞானாகாசத்தைச்)

சார்ந்துள்ள அநுபவர் (அனுபவங் கொண்டுள்ள பெரியோர்கள்) அமைந்து அமைந்த (மனம் ஒடுங்கிப் பொருந்தியுள்ள உண்மையான மோக்ஷ வீடாம் பரமசுகக் கடல்போன்றது - இத்துணைப் பெருமைவாய்ந்தது நின்கழல், (இந்திரிய தாப சபலம் அற) - இந்திரியங்களால் ஐம்புலன்களால்) உண்டாகின்ற தாப சபலம் (தாக ஆசைகள், மெலிவுகள்) ஒழிய வந்த அந்த (நின்கழலை)ப் பெறுவேனோ;

வால குமர குக கந்த குன்றெறி
வேல மயில எனவந்து கும்பிடு
வான விபுதர் பதியிந்த்ரன் வெந்துயர் களைவோனே-
வாச களப வரதுங்க மங்கல
வீர கடக புயசிங்க சுந்தர
வாகை புனையும் ரணரங்க புங்கவ வயலூரா;
ஞால முதல்வி யிமயம் பயந்தமின்
நீலி கவுரி பரைமங்கை குண்டலி
நாளு மினிய *கனியெங்க ளம்பிகை த்ரிபுராயி-
† நாத வடிவி ‡யகிலம் பரந்தவ
ளாலி னுதர முளைபைங் கரும்புXவெ
ணாவ லரசு மனைவஞ்சி தந்தருள்
பெருமாளே (7)

## 502. அருள் பெற

தனதனதன தானத் தானன
தனதனதன தானத் தானன
தனதனதன தானத் தானன தனதான

கருமுகில்திர ளாகக் கூடிய
இருளெனமரு ளேறித் தேறிய
கடிகமழள காயக் காரிகள் புவிமீதே-

---

*கனி - பழம் - "கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை" திருவிசைப்பா. கனி - க(ன்) னி "இமயககன்னி பூசனை செய்த கேதாரம்"- கந்தபுராணம் I-23-3.

† "நாத முடிவிலே நல்லாள் இருப்பது' -திருமந்திரம் 609.

‡ அகிலம் பரந்தவள் - அகிலாண்ட நாயகி. திரு ஆனைக்கா தேவி பெயர்.

Xவெண்ணாவல்அரசு- திரு ஆனைக்கா அரன்.

நாவல் மரம் நிறைந்த வனத்திற் சம்பு முநிவர் தவம் செய்து கொண்டிருந்தார். அவர் எதிரில் "வெண்ணாவற் பழம்" ஒன்று வீழ்ந்தது. அந்தப் பழத்தின் அருமையைக் கண்டு அதைக் கயிலையில் அரனுக்கு அவர் நிவேதித்தார். இறைவன் உண்டு உமிழ்ந்த விதையை அம் முனிவர் எடுத்து விழுங்கினர். அது அவர் வயிற்றில் முளைத்து வாய்வழியாகத் தழைத்து மரமாக ஓங்கி வளர்ந்தது; இறைவன் ஆணைப்படி அவர் அந்த வெண்ணாவற் பழம் விழுந்த தலத்திடை வந்து தவநிலையாய் இருந்தார். அம் முநிவர் வேண்டிய

இளங்குமரனே! குகனே! கந்தனே! கிரெளஞ்ச மலையை அழித்த வேலாயுதனே! மயிலனே! எனத் துதித்துவந்து கும்பிட்ட வானுலகத் தேவர்களின் தலைவனான இந்திரனுடைய கொடிய துயரை நீக்கினவனே!

நறுமணம் வீசும் கலவைச் சாந்தம் அணிந்தவனே! சிரேஷ்டமானதும், பரிசுத்தமானதும், மங்களகரமானதுமான வீர கடகத்தை (கங்கணத்தை) அணிந்த திருப்புயத்தை உடைய சிங்கமே! அழகனே! வெற்றிகொண்ட போர்க்களத்திற் சிறந்தவனே! வயலூரனே!

உலகுக்கு முதல்வி, இமயமலை ஈன்ற மின்போன்ற தேவி, நீலி, கவுரி பரை, (பராசக்தி), மங்கை, குண்டலி (வல்லபசக்தி), நாளுக்குநாள் இனிமை பயக்கும் பழம் (அல்லது - இனிமைதரும் க(ன்)னி, எங்கள் அம்பிகை, திரிபுரத்தை எரித்த தாய் (அல்லது -திரிபுரை - ஆயி),

நாத வடிவினள், அகிலாண்டநாயகி, ஆலிலைபோன்ற உதரம் (வயிறு) உள்ள பசிய கரும்பு அனையவள், **வெள்ளை நாவற் கீழ் வீற்றிருக்கும் அரசின்** (ஜம்புநாதரின்) மனைவி, வஞ்சிக்கொடி போல்வாள் பெற்றருளிய பெருமாளே!

*(தாப சபலம் அற நின்கழல் பெறுவேனோ)*

## 502.

கரிய மேகங்கள் கூட்டமாகக் கூடின இருள் என்று சொல்லும்படியான மருட்சி - வியப்பு - நிறைந்து விளக்க முற்றதும், நறுமணம் வீசுவதுமான - (அளக - ஆயக்காரிகள்) கூந்தலை உடையவர்கள், தோழியர்களை உடையவர்கள், இந்தப் பூமியில் -

---

வண்ணமே அந்த வெண்ணாவல் மரத்து அடியில் இறைவன் வீற்றிருக்கின்றார்; அதனால் இறைவனுக்கு 'ஜம்புநாதர்' 'வெண்ணாவலரசு' எனப் பெயர் போந்தது; தலம் 'ஜம்புகேசுரம்' ஆயிற்று (திரு ஆனைக்காப் புராணம்)

"ஞான பூமிக்கண் ஒளிர இருப்பாய் உன் நீழலிலே
யாம் உறைவோம் என்ன ' - திரு ஆனைக்கா உலா,-17.

வெண்ணாவல் விரும்பு மயேந்திரரும், அண்ணல் ஆரூர் ஆதி ஆனைக்காவே" -சம்பந்தர் - 3-109-7.

கனவியவிலை யோலைக் காதிகள்
முழுமதிவத னேரப் பாவைகள்
களவியமுழு மோசக் காரிகள் மயலாலே;

பரநெறியுண ராவக் காமுகர்
உயிர்பலிகொளு மோகக் காரிகள்
பகழியைவிழி யாகத் தேடிகள் முகமாயப்-

பகடிகள்பொரு ளாசைப் பாடிக
ளுருவியதன பாரக் கோடுகள்
படவுளமழி வேனுக் கோரருள் **புரிவாயே;**

மரகதவித நேர்முத் தார்நகை
குறமகளதி பாரப் பூண்முலை
மருவியமண வாளக் கோலமு முடையோனே-

வளை தருபெரு ஞாலத் தாழ்கடல்
முறையிடநடு வாகப் போயிரு
வரைதொளைபட வேல்விட் டேவிய அதிதீரா;

அரவணைதனி லேறிச் சீருடன்
விழிதுயில்திரு மால்சக் ராயுதன்
அடியிணைமுடி தேடிக் காணவும் அரிதாய-

அலைபுனல்சடை யார்மெச் சாண்மையும்
உடையதொர்மயில் வாசிச் சேவக
அழகிய திரு **வாணைக் காவுறை**
பெருமாளே (8)

மிகுத்த விலைகொண்ட ஓலை (காதணியை) அணிந்துள்ள காதை உடையவர்கள், பூரண சந்திரன் (வதனம் நேர் அப் பாவைகள்) நேர்வதன. அப் பாவைகள் - போன்ற முகத்தை உடைய அந்த (பதுமை அனையார்) மாதர்கள், கள்ளத்தனத்துடன் கூடிய முழுமோசக்காரிகள் - ஆசையாலே-

மேலான மார்க்கத்தை அறியாத அந்தக் காமிகள், உயிரையே பலிகொள்கின்ற ஆசைக்காரிகள், அம்பையே கண்ணாகத் தேடிவைத்துள்ளவர்கள். முகம் கொண்டு பாசாங்கு செய்கின்ற

வெளிவேஷக்காரிகள், பொருள்மேலேயே ஆசை-கொண்டுள்ளவர்கள் - ஆகிய பொதுமாதர்களின் (உருவிய)- வடிவழகு கொண்டுள்ள கொங்கை பாரங்கள் என்னும் மலைகள் (நெஞ்சில்), தைக்க உள்ளம் அழிகின்ற எனக்கு ஓர் அருளைப் புரிந்திடுக.

மரகத விதம் (பச்சை நிறம்) கொண்டவளும், முத்துக்கள் போன்ற பற்களை உடையவளுமான குறமகளின் (வள்ளியின்) அதிக பாரமுள்ள, ஆபரணம் அணிந்த கொங்கை பொருந்திய மணவாள கோலம் உடையவனே!

வளைதரு பெருஞாலத்து ஆழ்கடல் - பெருஞாலத்து வளைதரு ஆழ்கடல் பெரியபூமியை வளைந்துள்ள ஆழமான கடல் முறையிட, நடுவாகப் பாய்ந்து, பெரிய மலை - கிரௌஞ்சத்தைத் - தொளை செய்யும்படி வேலைச் செலுத்தி அனுப்பின மகாதீரனே!

பாம்பணையின்மேல் ஏறிச் சீராகக் கண்துயிலும் திருமால், சக்ராயுதத்தை ஏந்தியவன், திருவடியிணையின் முடிவைத் தேடிக் காணுதற்கும் அருமையான (கிடையாதிருந்த)-

அலைநீர்க் கங்கையைக் கொண்ட சடையினர், மெச்சுகின்ற ஆண்மையை உடைய ஒப்பற்ற மயில் என்னும் குதிரையைக் கொண்ட (அல்லது மயிலை இருப்பிடமாகக் கொண்ட) பாரக்ரம சாலியே அழகிய திருவானைக்காவில் வீற்றிருக்கும் பெருமாளே!

(உளம் அழிவேனுக் கோரருள் புரிவாயே)

## 503. ஆண்டருள

தானத் தான தான தனதன
தானத் தான தான தனதன
தானத் தான தான தனதன தனதான

*காவிப் பூவை யேவை யிகல்வன
நீலத் தால கால நிகர்வன
காதிப் போக மோக மருள்வன இருதோடார்-

காதிற் காதி மோதி யுழல்கண
மாயத் தார்கள் தேக பரிசன
காமக் ரோத லோப மத மிவை சிதையாத;

பாவிக் காயு வாயு வலம்வர
†லாலிப் பார்கள் போத கருமவு
பாயத் தான ஞான நெறிதனை யினிமேலன்-

பா‡லெக் காக யோக ஜெபதப
×நேசித் தார வார பரிபுர
பாதத் தாளு மாறு திருவுள நினையாதோ;

०கூவிக் கோழி வாழி யெனமயி
லாலித் தால கால மெனவுயர்
கூளிச் சேனை வான மிசைதனில் விளையாடக்-

---

*காவி-கண்ணுக்கு உவமை "காவி மலர் புரையுங் கண்ணார்"-
சம்பந்தர் 2-70-12; ஏ-கண்ணுக்கு உவமை - "ஏவிணை நேர்வழி"
-திருப்புகழ்-56

† லாலித்தல் - அன்பு வைத்தல்.

‡ லெக்காக - லக்கு ஆக்க, X நேசித்து-நேசிப்பித்து,

० கோழி-கூவி-வாழி என-சூரனுடன் முருகவேள் போர் புரிந்த காலத்தில் அக்கினி கோழிக் கொடியாகி அவருடைய தேர்மீது இருந்து ஆரவாரித்தது,

'எரிதழற் பண்ணவன் வாவு குக்குட மாண்கொடி யாகியே
தேவ தேவன் திருநெடுந் தேர்மிசை மேவி ஆர்த்தனன்
அண்டம் வெடிபட"

-கந்த புராணம் -4-13-206,

# 503.

(காவிப்பூவை) கருங்குவளை மலருடனும், ஏவை (அம்புடனும்) மாறுபடுவன, கரிய ஆலகால விஷத்தை ஒப்பன, கொல்லுந் தகைமையதாய் போகத்தையும் இன்பத்தையும்), மோகத்தையும் (காமமயக்கத்தையும்) (அருள்வன) கொடுப்பன - இரண்டு தோடுகளை அணிந்துள்ள

காதுகளை வெட்டுவனபோலப் போய் மோதித்திரியும் (க(ண்)ண) கண்களைக்கொண்டு மாயம் செய்பவர்கள் ஆகிய பொதுமாதர்களின் தேகத்தைத் தொடுதற்குள்ள ஆசை, (குரோதம்) கோபம், (லோபம்) ஈயாமை, (மதம்) செருக்கு இவை அழிவுபடாத-

பாவிக்கு (பாவியாகிய எனக்கு) - (ஆயு வாயு வலம்வர லாலிப்பார்) - ஆயுளும் பிராணவாயுவும் வலிமை வரும்படி அன்பு வைத்து போஷிப்பவர்களுடைய அறிவொடு கூடிய தொழில்களின் உபாயத்தைக் காட்டும் ஞானவழியை இனிமேல் (என்மீது) அன்பு

கூர்ந்து அந்த வழியே குறியாக வைத்துக்கொண்டு, யோகம், ஜெபம், தவம் இவைகளில் அன்பு வரும்படிச் செய்து, பேரொலிசெய்யும் சிலம்பணிந்த (உனது) திருவடியில் (என்னை) ஆண்டுகொண்டு ஆளுமாறு (உனது) திருவுள்ளம் நினைந்தருளாதோ!

(கூவிக் கோழி வாழி என) கோழியானது கூவி 'வாழி' என்று வாழ்த்தி, மயில் (ஆலித்து) ஆரவாரம் செய்து ஆலகால விஷம் போல உயர்ந்து விளங்க, சிவகணங்களாகிய பூதகணச் சேனைகள் வானில் (மகிழ்ச்சியுடன்) விளையாடக்-

கோரத் தீர சூர னுடைவினை
பாறச் சீற *லேன பதிதனை
கோலக் கால மாக அமர்செய்த வடிவேலா;
† ஆவிச் சேல்கள் பூக மடலிள
பாளைத் தாறுகூறு படவுய
ராலைச் சோலை மேலை வயலியி லுறைவோனே
ஆசைத் தோகை மார்க ளிசையுட
னாடிப் பாடி நாடி வருதிரு
ஆனைக் காவில் மேவி யருளிய
பெருமாளே (9)

## 504. வீடு பெற

தனதன தானந்த தான தந்தன
தனதன தானந்த தான தந்தன
தனதன தானந்த தான தந்தன தனதான

‡குருதிபு லாலென்பு தோன ரம்புகள்
கிருமிகள் Xமாலம்பி சீதமண்டிய
குடர்நிணம் ரோமங்கள் மூளை யென்பன
பொதிகாயக்

---

*ஏனபதி - ஆதிவராகம். இரணியாக்கன் என்பான் பூமியைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு போனான். பூமிதேவி முறையிடத் திருமால் வராகரூபம் எடுத்துச் சென்று இரணியாக்கனைக் கொன்று பூமியைத் தன் கொம்பின் நுனியில் தாங்கி எழுந்து பூமியை முன் போல நிறுத்தினார். இரணியாக்கனது ரத்தத்தைக் குடித்த வெறியினால் வராகம் மதங்கொண்டு பூமியை அலைக்க ஆரம்பித்தது. சிவபிரான் அவ்வராகத்தை அடக்க முருகவேளை அனுப்பினார். அவர் சென்று வராகத்தை எடுத்துச் சுழற்றி அடக்கி அதன் கொம்பைப் பிடுங்கிச் சிவனிடம் சேர்ப்பித்தார். சிவபிரான் அந்தக் கொம்பை அணிந்தருளினார் - (பாடல் 229 பக்கம் 72)

'அங்கண்மா ஞாலம் தன்னை மேலினி அகழு மோட்டுச்
செங்கண்மால் ஏன யாக்கை எயிற்றையோர் சிறுகை பற்றி
மங்குல்வான் உலகிற் சுற்றி மருப் பொன்று வழுத்த வாங்கித்
தங்கணா யகற்குச் சாத்தச் சண்முகன் அளிக்கும் என்பர்"
-கந்த புராணம் - 4-7-26.

'உயற்படு கற்பமங் கொன்றில் ஏனத்தின்
எயிற்றினைப் பறித்திடுங் குமரன் என்னவே" -கந்தபுரா 4-5-63

(†, ‡, X பக்கம் 147 பார்க்க).

கோர (அச்சந் தருபவனும்) தீரனுமான சூரனுடைய வினை சிந்தி ஒழியவும், (சீறல்) சீறிப் பெருங்கோபத்துடன் வந்த ஆதிவராகம் (கோலாகலமாக)க் கூக்குரலிட்டு அடங்கவும் போர் புரிந்த கூரிய வேலனே!

† ஆவி (குளத்தில் உள்ள) சேல்மீன்கள் கமுக மரத்தின் மடல்) ஏடுகளாகிய இளம்பாளைகளின் குலைகள் பிளவு-படும்படி (உயர்) உயர்ந்து பாயும் (ஆலை) கரும்புகள் நிறைந்த (அல்லது - கள் நிறைந்த) சோலையைக் கொண்ட மேலைவயலூர் (என்னும் தலத்தில்) வீற்றிருப்பவனே!

ஆசை நிரம்பிய (தோகைமார்கள்) பெண்கள் இசை பாடிக்கொண்டு ஆடியும் பாடியும் (நாடியும்) விரும்பியும் வந்து (வணங்குகின்ற) திரு ஆனைக்கா என்னும் தலத்தில் விருப்புடன் வீற்றிருந்தருளும் பெருமாளே!

*(பாதத் தாளுமாறு திருவுளம் நினையாதோ)*

## 504.

‡ ரத்தம், ஊன், எலும்பு, தோல், நரம்புகள், புழுக்கள், X(மால்) காற்று, (அம்) நீர், (பிசிதம்) இறைச்சி, இவைகள் நிரம்பிய குடல், கொழுப்பு, மயிர், மூளை என்னப்பட்ட இவை நிறைந்த உடல் என்னும்

---

† ஆவி - வாவி - குளம்

‡ "குடருங் கொழுவும் குருதியும் என்பும் தொடரு நரம்பொடு தோலும் - இடையிடையே வைத்த தடியும் வழும்புமாம்" நாலடியார்.

X மலம் -' மாலம்' என நீண்டது எனவும் கொள்ளலாம்.

குடிலிடை *யோரைந்து வேட ரைம்புல
அடவியி லோடுந்து ராசை வஞ்சகர்
கொடியவர் மாபஞ்ச பாத கஞ்செய அதனாலே;

சுருதிபு ராணங்க ளாக மம்பகர்
†சரியைக்ரி யாவண்டர் பூசை வந்தனை
துதியொடு நாடுந்தி யான மொன்றையு முயலாதே-
‡சுமடம தாய்வம்பு Xமால்கொ ளுந்திய
திமிரரொ டேபந்த மாய் வருந்திய
துரிசற ஆநந்த வீடு கண்டிட அருள்வாயே;

ஒருதனி வேல்கொண்டு நீள்க்ர வுஞ்சமும்
நிருதரு மாவுங்க லோல சிந்துவும்
உடைபட மோதுங்கு மார பங்கய கரவீரா-
உயர்தவர் மாவும்ப ரான அண்டர்கள்
அடிதொழு தேமன்ப ராவு தொண்டர்கள்
உளமதில் நாளுங்கு லாவி யின்புற
வுறைவோனே;

○கருதிய ஆறங்க வேள்வி யந்தணர்
அரிகரி கோவிந்த கேச வென்றிரு
கழல்தொழு சீரங்க ராச னன்புறு மருகோனே-

---

*ஐம்புல வேடரின் அயர்ந்தனை' - சிவஞானபோதம் (8); ஐம்புல வேடரின் சேட்டைகளை ஐம்பெருமா பூதங்காள்' முதலிய பாடல்கள் வரும் திருவாரூர்த் திருத்தாண்டகத்தில் (6-27-3, 4) காணலாம். 'ஓர ஒட்டார் ஒன்றை உன்ன ஒட்டார் மலரிட்டுனதாள் சேர ஒட்டார் ஐவர்' - கந்தர் அலங்-4

† சரியை கிரியை - பாடல் 331-பக்கம் 330 பார்க்க

‡ சுமடம் - அறிவின்மை.

மால்கொளுந்திய மால் கொள்ளும் தீய.

○இந்த அடியால் - ஆறங்கம் வல்லவர்களாய் வேள்வி நடத்தின அந்தணர்கள் சீரங்கத்திற் பள்ளி கொண்டிருக்கும் ஸ்ரீ ரங்கநாதப் பெருமாளை ஹரி ஹரி கோவிந்த கேசவா என்று பூஜித்து வணங்கின ரென்பதும், அருணகிரியார் காலத்தில் ஸ்ரீரங்கம் கோயிலில் வழிபாடு சிறப்புற்றிருந்தது. என்பதும் தெரிகின்றன. ஆறங்கம் - மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் (சந்தோபிசிதம்-வேதத்தின் சந்தங்களை உணர்த்தும் நூல்)

குடிசையுள் நிகரற்ற ஐந்து வேடர்கள் (ஐம்பொறிகள் மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன), ஐம்புலம் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்) என்னும் காட்டிடையே ஓடுகின்ற கெட்ட ஆசைகொண்ட வஞ்சகர்கள், பொல்லாதவர்கள், கொடிய பஞ்ச பாதகங்களை (கொலை, பொய், களவு, கள்ளுண், குருநிந்தை எனப்படும்) கொடிய பாவச் செயல்களைச் செய்ய, அதன் விளைவாக-

வேதம், புராணங்கள், ஆகமங்கள் - சொல்லப்படுகின்ற சரியை, கிரியை, தேவர்பூஜை, வழிபாடு, தோத்திரம், இவை கொண்டுநாடிச் செய்யும் தியானம் - இசை ஒன்றையேனும் முயற்சி எடுத்துக்கொண்டு அநுட்டிக்காமல்-

அறிவிலியாய், பயனிலாததும் ஆசைகளை எழுப்புவதும் ஆய கொடிய ஆணவ இருள் கொண்டவர்களுடன் - மந்தர்களுடன் கூட்டுறவாய் வருத்தம் அடைந்த குற்றம் தொலைய - (ஆனந்த) பேரின்ப வீட்டை யான் காணும்படியாக அருள்புரிவாயாக.

ஒப்பற்ற ஒரு வேலாயுதத்தால் பெரிய கிரவுஞ்ச மலையும், அசுரர்களும், (சூரனாம்) மாமரமும் அலைவீசும் கடலும், உடைபட்டு அழிய மோதின குமரனே! தாமரையன்ன திருக்கரங்களை உடைய வீரனே!

உயர்ந்த தவசிகள், சிறந்த மேலுலகத்துள்ள தேவர்கள் - (உனது) திருவடியைத் தொழுதே (மன்) நன்றாகப் போற்றிசெய்யும் அடியார்கள்- ஆகியோர்தம் உள்ளத்தில நாள் தோறும் விளையாடி மகிழ்ச்சியுடன் வீற்றிருப்பவனே!

ஆய்ந்து அறிந்த ஆறு அங்கங்கள், யாகங்கள் இவைகளில் வல்ல அந்தணர்கள், "ஹரி ஹரி கோவிந்தா! கேசவா" எனக் கூறித் தனது இரண்டு திருவடிகளிலும் தொழுகின்ற சீரங்கராஜனாம் திருமால் அன்பு கொள்ளும் மருமகனே!

*கமலனு மாகண்ட லாதி யண்டரு
மெமது பிரானென்று தாள்வ ணங்கிய
† கரிவனம் வாழ்சம்பு நாதர் தந்தருள்
பெருமாளே (10)

## 505. ஞானம் பெற

தானத் தானத் தனதான

நாடித் தேடித் தொழுவார்பால்-
‡நானத் தாகத் திரிவேனோ;
Xமாடக் கூடற் பதிஞான-
வாழ்வைச் சேரத் தருவாயே;
Oபாடற் காதற் புரிவோனே-
பாலைத் தேனொத் தருள்வோனே;
**ஆடற் றோகைக் கினியோனே-
ஆனைக் காவிற் பெருமாளே (11)

---

*(கமலன் - பிரமன் திரு ஆனைக்காவில் ஈசனைப் பூசித்தது: "சம்புதலத் தோன்பால் தடங்கண்டு சங்கர என்(று) அம்புயன் மாதவஞ்செய்-தர்ச்சிக்க " இந்திரன் பூசித்தது - "வானவர்கோன் - ஏங்கித்தன் நாமத் தடங்கண்டு நாளுந் தொழ"-

திரு ஆனைக்கா உலா 7, 31, 32.

† கரிவனம்-திருஆனைக்கா.

‡ நான் நத்து ஆக-நான் நத்துதலாக 'நா னெத்தாக' எனவும் பாடம்.

Xகூடற்பதி-மதுரை"சிவராசதானியாய்ச் சீவன் முத்தித் தலமுமாய்த் துவாத சாந்தத் தலமுமானது இத்தலம்" - மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் அம்புலி-6

துவாத சாந்தம் - உச்சிக்குமேல் பன்னிரண்டு அங்குலத்தில் உள்ளதாகக் கருதப்படும் யோகஸ்தானம்

துவாத சாந்தத் தலம் - கூடற்பதி - மதுரை விராட்புருஷனது துவாதசாந்த நிலையாகக் கருதப்படும் மதுரை.

(தொடர்ச்சி X, O, ** - பக்கம் - 151 பார்க்க)

பிரமனும், இந்திரனாதிய தேவர்களும், எமது தலைவன் என்று திருவடியில் வணங்கப்பெற்ற - திரு ஆனைக்காவில் வாழ்கின்ற ஜம்பு நாதர் ஈன்றருளிய பெருமாளே!

(ஆனந்த வீடு கண்டிட அருள்வாயே)

## 505.

விரும்பித் தேடித் தொழுகின்ற (அடியாரிடத்தே)

நான் (நத்து ஆக) விருப்பம் உள்ளவனாகத் திரிய மாட்டேனோ!

மாட கூடங்கள் உள்ள (கூடற்பதி மதுரைத் தலத்தைக் குறிப்பதான) துவாதசாந்த நிலையிற் கூடும் ஞான

வாழ்வினை அடையும்படி அருள் புரிக;

O பாடலில் ஆசை கொண்டுள்ளவனே!

பால் போன்றதும் தேன் போன்றதுமான இனிமை கொண்ட அருளைப் பாலிப்பவனே! (அல்லது - பால் போலவும் தேன்போலவும் இன்பம் பூண்டு அருள்வோனே!)

"நடனம் ஆடும் மயிலுக்கு இன்பம் பயப்பவனே! (மயிலுக்கு இன்பம் தருபவனே)- அல்லது - ஆடுமயிலை ஒத்த வள்ளிக்கு இனியவனே!

ஆனைக்காவிற் பெருமாளே!

(ஞான வாழ்வைச் சேரத் தருவாயே)

---

"துவாதசாந்தப் பெருவெளியில் துரியங்கடந்த பரநாத மூலத் தலம்"

மீனாட்சிபிள்ளை - முத்தம் - 1

துவாதசாந்த நிலை: 'பரநாத வெளியில் துவாத சாந்த வீடு'

மீனாட்சிபிள்ளை - சப்பாணி - 4

'துவாத சாந்தத் தொரு பெரு வெளிக்கே விழித்துறங்கும் தொண்டர்'

மீனாட்சிபிள்ளை - அம்மானை - 3

O முருகனுக்குத் (தமிழ்ப்) பாடலிற் காதல்: 'தமிழிற் பாடல் கேட்டருள் பெருமாளே"

- திருப்புகழ் 782.

** ஆடும் தோகைக்கு நிகர் வள்ளி - 'ஆடிய மயிலினை ஒப்புற்று விளையாடும் வேடுவர் சிறுமி'

-திருப்புகழ் 1199.

## 506. மனோலயம் பெற

தனந்த தத்தன தானான தானன
தனந்த தத்தன தானான தானன
தனந்த தத்தன தானான தானன தந்ததான

நிறைந்த துப்பிதழ் தேனூறல் நேரென
மறந்த ரித்தக ணாலால நேரென
நெடுஞ்சு ருட்குழல்* ஜீமூத நேரென
† நெஞ்சின்மேலே
நெருங்கு பொற்றன மாமேரு நேரென
மருங்கு நிட்கள ஆகாச நேரென
நிதம்ப முக்கணர் பூணார நேரென நைந்துசீவன்;
குறைந்தி தப்பட வாய்பாடி யாதர
வழிந்த ழைத்தணை மேல்வீழு மாலொடு
‡குமண்டை யிட்டிடை சோராவி டாயில
மைந்துநாபி-
குடைந்தி ளைப்புறு மாமாய வாழ்வருள்
மடந்தை யர்க்கொரு கோமாள மாகிய
குரங்கை யொத்துழல் வேனோம னோலய
மென்றுசேர்வேன்;
xமறந்த சுக்ரிப மாநீசன் வாசலி
லிருந்து லுத்தநி யோராத தேதுசொல்
மனங்க ளித்திட லாமோது ரோகித முன்புவாலி-

---

*ஜீமூதம்.. நீருண்ட மேகம்

† நெஞ்சு -மார்பு " தலையினும் மிடற்றிலும் நெஞ்சினும் நிலை-இ (தொல் -எழுத்..83)

‡ குமண்டையிடுதல் மகிழ்ச்சியாற் குதித்தல்... "கூடுமுயிருங் குமண்டையிடக் குனித்து" - திருவாசகம் -குலாப் பத்து-1

Xகார்காலம் ஆவணி -புரட்டாசி) கழித்ததும் சேனையுடன் வந்து உதவுகின்றேன் என்று சுக்ரீவன் ஸ்ரீ ராமருக்கு வாக்குதத்தம் செய்திருந்தான். தான் சொன்ன பேச்சை மறந்து கள்ளுண்டு.... சுக்கிரீவன் காலங் கழித்தான். ஸ்ரீ ராமர் கோபங்கொண்டு இலக்குமணரை நோக்கி சுக்கிரீவன் சொன்ன எல்லையைக் கடந்து தூங்குகின்றான். இன்னும் அவன் வரக்காணோம் தரும நெறியை மறந்து விட்டான்; வாழ்வில் மயங்குகின்றான் நீ அவனிடம் போய் அவன் உள்ளத்தை அறிந்து வா! தருமத்தை நிலை நிறுத்த நான் எடுத்துள்ள வில்லுண்டு. அம்பு உண்டு, காலனும் உண்டு

# 506.

நிறைந்த பவளம் போன்ற வாயிதழ் ஊறல் (இதழில் ஊறும் நீர்) தேன் நேரெனத்) தேனை ஒக்கும் (என்று கூறியும்) வீரம். (அல்லது கொலைத் தொழில்) கொண்ட கண் ஆலகால விஷத்தை ஒக்கும் (என்று கூறியும்) நீண்டதும் சுருள் கொண்டதுமான கூந்தல் மேகத்தை நிகர்க்கும் (என்று கூறியும்), (நெஞ்சின்மேலே)-மார்பின்மேலே

நெருங்கியுள்ள அழகிய கொங்கைகள் பெரிய மேருமலைக்கு ஒப்பென்று கூறியும், இடையானது உருவம் இலாத வெளிக்கு ஒப்பென்று கூறியும், அல்குற் பிரதேசம் சிவபிரான் அணியும் மாலையாம் பாம்பை நிகர்க்கும் எனக் கூறியும், (உள்ளம்) நைந்து (சோர்வடைந்து) ஜீவன்-

மங்கலுற்று (இதம்பட) இன்பம் அழிய-வாயால் பாடி, அன்பு இல்லாமலே அழைத்துப் படுக்கையின் மேல் விழும் ஆசையுடன் களித்துக் குதித்து ஆடை நெகிழவும் (காம விடாயில்)-தாகத்தில் (அமைந்து) பொருந்தி-அம்மாதர்களின் (நாபி) கொப்பூழில் (தொப்புளில்)-

மூழ்கித் திளைத்து அனுபவித்து, களைப்பைத் தருகின்ற பெரிய மாய வாழ்க்கையைத் தருகின்ற மாதர்கள் பால் ஒப்பற்ற மகிழ்ச்சியைக் கொள்கின்ற குரங்கைப்போன்று திரிவேனோ! மனஒடுக்கம் என்று அடைவேன்!

(தான் சொன்ன சொல்லை) மறந்துபோன சுக்ரீவன் என்னும் மகா நீசன் (இழிந்தோனுடைய) (இருப்பிடத்தின்) வாயிலில் நின்று "ஏ! லுத்தனே-லோபியே-பேராசை யுள்ளவனே)! நீ தெளிவு அடையாததற்கு-உணர்ச்சி பெற-திருப்பதற்கு) (ஏது)காரணம் என்ன சொல், (கள்ளுண்டு) மனம் களிப்புறுதல் நியாயமா! உன் செய்கை (துரோகிதம்) பாதகம் ஆகும்; முன்பு வாலியை-

---

என்று சொல்; வானரப் பேரே மாண்டுபோம் என்று சொல்" எனக் கூறி அனுப்பினார். பின்னர் அநுமாரும் தாரையும் இடை நின்று இலக்குணமருக்குச் சமாதனம் கூறிச் சுக்கிரீவனை பெருஞ் சேனையுடன் இராமரிடம் வந்து கூடி மன்னிப்புக் கேட்கும்படி

(தொடர்ச்சி 154 பக்கம் பார்க்க)

வதஞ்செய் விக்ரம சீராம னானில
மறிந்த திச்சர மோகோ கெடாதினி
வரும்ப டிக்குரை யாய்பார் பலாகவ மென்றுபேசி;
*அறந்த ழைத்தநு மானோடு மாகடல்
வரம்ப டைத்ததின் மேலேறி ராவண
னரண்கு லைத்தெதிர் போராடு நாரணன்
மைந்தனான-
அநங்கன் மைத்துன வேளே கலாபியின்
விளங்கு செய்ப்பதி வேலா யுதாவிய
னலங் †க யப்பதி வாழ்வான தேவர்கள்
தம்பிரானே (12)

## 507. ஆண்டருள

தனதன தனதன தாந்த தானன
தனதன தனதன தாந்த தானன
தனதன தனதன தாந்த தானன தனதான

பரிமள மிகவுள சாந்து ‡மாமத
முருகவிழ் வகைமலர் சேர்ந்து கூடிய
பலவரி யளிதுயில் கூர்ந்து வானுறு முகில்போல-
பரவிய இருள்செறி கூந்தல் மாதர்கள்
பரிபுர மலரடி வேண்டி யேவிய
பணிவிடை களிலிறு மாந்த கூள ×நெறிபேணா;

---

செய்து அவர்தம் நட்பை நிலை நிறுத்தினர். பின்வரும் கம்பராமாயண அடிகள் இந்தத் திருப்புகழ்க் கருத்தை நன்கு காட்டுவனவாம்.

' அன்ன காலம் அகலும் அளவினில்
முன்னவீரன் இளவலை மொய்ம்பினோய்
சொன்ன எல்லையி னூங்குமத் தூங்கிய
மன்னன் வந்திலன் என்செய்த வாறரோ;
" அறம் மறந்தனன் அன்பு கிடைக்கநம்
மறனறிந்திலன் வாழ்வின் மயங்கினான்.
"இம்பர் நல்லறஞ் செய்ய எடுத்த விற்
கொம்பும் உண்டு அம்பும் உண்டோன்று
சொல்லுநம் ஆணையே' கம்பராமா-கிட்கிந்தைப் படலம்1-4

---

*அறம் தழைத்த அநுமான் "தன்னுருக் கொண்டு நின்றான் தருமத்தின் தனிமை தீர்ப்பான்-கம்பராமா மராமர-34

† கயப் பதி திருவானைக்கா

‡ மான்மத ' என்றும் பாடம். × 'அதிமோக' -என்றும் பாடம்.

வதம்செய் (அழித்த) பராக்ரம ஸ்ரீராமன் நான்! (நிலம்) உலகெலாம் அறியும் (இந்த என்னுடைய) அம்பை! ஓகோ- கெட்டுப்போக வேண்டாம் - இனியேனும் தாமதிக்காது வரும்படிப் போய்ச்சொல் பார்ப்பாயாக பல போர்களின் விளைவை" என்றெல்லாம் இலக்குமணர் மூலமாகச் சுக்ரீவனுக்குச் சொல்லி (அனுப்பிப்) பேசி-

தருமநெறி விளங்கும் அநுமாரோடு சென்று பெரிய கடலை அணையிட்டு அடைத்து, அந்த அணைமீது போய் ராவணனுடைய கோட்டைகளை அழித்து எதிர்த்துப் போர் செய்த நாராயண மூர்த்தியின் குமாரனான-

மன்மதனுக்கு மைத்துனனாம் வேளே! மயில் மீது விளங்கும் வயலூர் வேலாயுதப் பெருமானே! சிறப்பும் நலமும் கொண்ட ஆனைக்கா என்னும் பதியில் வாழ்வு கொண்ட தம்பிரானே! தேவர்கள் தம்பிரானே!

(மனோலயம் என்று சேர்வேன்)

# 507.

நறுமணம் மிகக் கொண்ட சாந்து, மாமதம் (மான்மதம்) கஸ்தூரி, வாசனை வீசும் நல்ல மலர்கள் இவைகளிற் பொருந்திக்கூடின பல ரேகைகள் கொண்ட வண்டுகளின் துயில் கொண்டதும், ஆகாயத்தில் உள்ள மேகம் போன்றதும்,

பரவின இருள் நிறைந்ததுமான (மிகக் கருநிறங்- கொண்டதுமான) கூந்தலை உடைய மாதர்களின் சிலம்- பணிந்த மலர் போன்ற அடிகளை விரும்பி, அவர்கள் இட்ட வேலைகளைப் பணியாளாகச் செய்வதில் ஒரு பெருமை பாராட்டும் (கூளனை) வீணனை (பயனற்றவனை) -ஒழுக்க முறையை விரும்பி அனுட்டிக்காத-

விரகனை யசடனை வீம்பு பேசிய
விழலனை யுறுகலை யாய்ந்தி டாமுழு
வெகுளியை யறிவது போங்க பாடனை மலமாறா-
வினையனை யுரைமொழி சோர்ந்த பாவியை
விளிவுறு நரகிடை வீழ்ந்த மோடனை
வினவிமு னருள்செய்து பாங்கி னாள்வது
மொருநாளே;
கருதலர் திரிபுர மாண்டு நீறெழ
மலைசிலை யொருகையில் *வாங்கு நாரணி
† கழலணி மலைமகள் ‡ காஞ்சி மாநக ருறைபேதை
xகளிமயில் சிவனுடன் வாழ்ந்த மோகினி
Oகடலுடை யுலகினை யீன்ற தாயுமை
கரிவன முறை**யகி லாண்ட நாயகி
யருள்பாலா;
முரணிய சமரினில் மூண்ட ராவண
னிடியென அலறிமு னேங்கி வாய்விட
முடிபல திருகிய †† நீண்ட மாயவன் மருகோனே-
முதலொரு குறமகள் ‡‡ நேர்ந்த நூலிடை
யிருதன கிரிமிசை தோய்ந்த காமுக
XX முதுபழ மறைமொழி யாய்ந்த தேவர்கள்
பெருமாளே (13)

---

*வாங்குதல் வளைத்தல்" வாங்கியன பூங்கமலக் கையாலும் ஒரு சாபம் காலாலும் ஒரு சாபம்" வில்லி பாரதம் 12-போர் (க) "பிறை மதியன்ன கொடுமரம் வாங்கி" கல்லாடம்-4. (கொடுமரம்-வில்) ..

தேவி திரிபுரத்தைச் சுட்டது - பாட்டு 304,464 பார்க்க

† கழல் -சிலம்பு 'கமலினி மலைமகள்' என்றும் பாடம்

‡ காஞ்சிமா நகர் உறை பேதை 'ஏலவார் குழலி'-காமாக்ஷி

xகளி மயில் - தூய மதி காட்டும் மட மயிலை வணங்கி வாழ்வாம் - கருவூர்ப்புராணம்; "இமயகிரி மயில்" திருப்புகழ்-304, 64.

O"பாய்திரை யுடுத்த ஞாலம்" - கல்லாடம்-முருகர் துதி **அகிலாண்ட நாயகி-திரு ஆனைக்கா தேவியின் திருநாமம் "அரனார் அங்கம் பிரியா அகிலாண்ட நாயகியே" திரு ஆனைக்கா உலா-23.

†† வாமனாவதாரத்தில் நீண்ட உருவம் எடுத்தவர்
பாட்டு 458-பக்கம் 24

‡‡ 'குறமகள் ஏந்து நூலிடை' -என்றும் பாடம்.

XX முதுகிளர் - என்றும் பாடம்.

தந்திரசாலியை, மூடனை, வீண் புகழ்ச்சி -கர்வப் பேச்சு-பேசும் (உதவாக்கரையை) உபயோகம் அற்றவனை, உள்ள கலை நூல்களை ஆய்ந்தறியாத முழு வெறுப்புக் கொண்டவனை (பொறுமை யற்றவனை) அறிவு போன (கபடனை) வஞ்சகனை - அல்லது அறிவு ஓடிப்போம்படி தப்பவிட்ட காவலாளனை, குற்றங்கள் நீங்காத

வினை நிரம்பியவனை, சொல்லும் சொல் சோர்வு பட்டபாவியை (சொல்லும் பேச்சு தவறிய) பாவியை, இறந்து சேரும் நரகத்திடை விழுந்துள்ள மூடனை எங்குளான் இப்படிப்- பட்டவன் என ஆய்ந்து கவனித்து, முன்னதாக உனது திருவருளையும் பாலித்து (என்னை) நன்கு ஆண்டருளும் காலமும் ஒன்று உண்டா?

பகைவர்களுடைய திரிபுரங்கள் அழிந்து தூளாக (மேரு) மலையை ஒரு கையில் வில்லாக வளைத்த நாரணி, (கழல் சிலம்பணிந்த மலைமகள், காஞ்சிமாநகரில் விளங்கும் தேவி (காமாக்ஷி)

இன்பம் நிறைந்த மயில் போல்வாள், சிவபிரானுடன் வாழும் அழகி, கடலை உடையாக (ஆடையாகக்) கொண்ட உலகை யீன்ற தாய் உமாதேவி, **திரு ஆனைக்காவில்** வீற்றிருக்கும் **அகிலாண்ட நாயகி** அருளிய குழந்தையே!

மாறுபட்ட போரில் முற்பட்டெழுந்த ராவணன்-இடி ஒலியுடன் அலறியும் - அதன்முன்பு - கவலைப்பட்டும் - வாய்விட்டு அழ (உரக்க அழ) (அவனுடைய) பல முடிகளையும் (தலைகளையும்) அரிந்து தள்ளிய (திருமாலின்)-விஸ்வரூபம் எடுத்த திருமாலின்-மருகனே.

முன்பு ஒப்பற்ற குறமகள் (வள்ளியின்) நுண்ணிய நூல் போன்ற இடை மீதும் இரண்டு கொங்கையாம் மலை மீதும் தோய்ந்த ஆசையாளனே! மிகப் பழையதான வேத மொழியை ஆய்ந்துள்ள தேவர்களின் பெருமாளே!

(ஆள்வதும் ஒரு நாளே)

## 508. மாதர் மயக்கற

தானத் தானன தத்தன தத்தன
தானத் தானன தத்தன தத்தன
தானத் தானன தத்தன தத்தன தனதான

வேலைப் போல்விழி யிட்டும ருட்டிகள்
காமக் ரோதம்வி ளைத்திடு துட்டிகள்
வீதிக் கேதிரி பப்பர மட்டைகள் முலையானை-
மேலிட் டேபொர விட்டபொ றிச்சிகள்
மார்பைத் தோளைய சைத்துந டப்பிகள்
வேளுக் காண்மைசெ லுத்துச மர்த்திகள்
களிகூருஞ்
சோலைக் கோகில மொத்தமொ ழிச்சிகள்
காசற் றாரையி தத்திலொ ழிச்சிகள்
தோலைப் பூசிமி னுக்கியு ருக்கிகள் எவரேனும்-
தோயப் பாயல ழைக்கும வத்திகள்
மோகப் போகமு யக்கிம யக்கிகள்
சூறைக் காரிகள் துக்கவ லைப்பட
லொழிவேனோ;
காலைக் கேழுமு கிக்குண திக்கினில்
ஆதித் யாயள னப்பகர் தர்ப்பண
*காயத் ரீசெப மர்ச்சனை யைச்செயு
முநிவோர்கள்-
கானத் தாசிர மத்தினி லுத்தம
† வேள்விச் சாலைய ளித்தல்பொ ருட்டெதிர்
காதத் தாடகை யைக்கொல்க்ரு பைக்கடல்
மருகோனே;

---

*காயத்ரீ ஜெபம்-அந்தணர்கள் நாள்தோறும் ஓதும் ஒரு வேதமந்திரம் ஆராய்ந்து காயத்ரியது செபிப்பார் வைதிகநன் மார்க்கமே பிழையாதிருக்கு மறையோர்'.... அறப்பளீசுர சதகம் 81

† வேள்விச் சாலையை ஸ்ரீ ராமர் அளித்தது; தாடகையைக் கொன்று வேள்வியைக் காத்தது- பாட்டு 431-பக்கம் 582... கீழ்க்குறிப்பு.

தாடகை -சுந்தன் தேவி. அகத்தியர் ஆச்சிரமத்திலிருந்த மரங்களைச் சுந்தன் அழித்ததால் அவர் கோபத்தீயால் அவன் சாம்பர் ஆனான். தன் கணவன் இறந்ததைக் கண்டு தாடகை அகத்தியருக்குத் தீமை செய்யத் தொடங்கினாள். முநிவர் இவளையும் இவள் குமாரர் மாரீசன்,

# 508.

வேல் பாய்வது போலக் கண் கொண்டு மயக்குபவர், காமம், குரோதம் (கோபம்) இவைதமை உண்டுபண்ணும் துஷ்டர்கள் வீதியிலேயே திரிகின்ற கூத்தாடிகளாம் பயனிலிகள்-கொங்கையாம் யானையை

மேலே எதிர்த்துப் போர்செய விடுகின்ற தந்த்ரவாதிகள் மார்பையும் தோளையும் அசைத்து நடப்பவர்கள், மன்மதனுக்கு வீரத்தைத் தருகின்ற சாமர்த்திய சாலிகள்-மகிழ்ச்சி பொங்கும்

சோலைக் குயில்கள் போன்ற பேச்சினை உடையவர்கள் காசு இல்லாதவர்களை நல்லபடியே பக்குவமாக நீக்குபவர்கள், (உடலின்) தோலைப் பூசி மினுக்கிக் (கண்டோர்) மனத்தை உருக்குபவர்கள், யாராயிருந்தாலும்

சேர்தற்கு (உடன்பட்டு) படுக்கைக்கு அழைக்கும் பயனிலிகள், ஆசைப் போகங்கள் எழுப்பி மயக்குபவர்கள், கொள்ளைக்காரிகள் - இத்தகைய வேசையர்களின் துக்கந்-தருவதான வலையில் மாட்டிக் கொள்ளுதலினின்றும் நீங்கேனோ!

காலையில் முழுகிக் கிழக்குத் திசையை நோக்கி "ஆதித்யாய" என்று (சூரியபகவான்மீது துதிமொழிகளைச்) சொல்லித் தர்ப்பணம், காயத்திரி ஜெபம், அருச்சனை (முதலிய) செய்யும் முனிவர்கள்-

(வாழ்ந்திருந்த) காட்டில் ஆஸ்ரமத்தில் (நடந்த) மேன்மை வாய்ந்த வேள்விச் சாலையை (யாக சாலையை (இடையூறின்றி)க் காப்பாற்றும் பொருட்டு, எதிர்த்து வந்த (*காதத் தாடகை) கொடியவளாம் தாடகை என்னும் அரக்கியைக் கொன்ற ஸ்ரீராமருக்கு மருமகனே!

---

சுபாகுவையும் அரக்கராகச் சபித்தனர் தாடகை அரக்கியாய் முனிவர்களின் வேள்விக்குத் தீமை செய்தனள். விசுவாமித்திரர் ஏவலால் இராமமூர்த்தி இவளைக் கொன்றார் (அபிதான சிந்தாமணி).

*கரதம்-காதகம்.

ஆலைச் சாறுகொ தித்துவ யற்றலை
பாயச் சாலித ழைத்திர தித்தமு
தாகத் தேவர்கள் மெச்சிய செய்ப்பதி யுறைவேலா-
ஆழித் தேர்மறு கிற்பயில் மெய்த்*திரு
நீறிட் டான்மதிள் சுற்றிய பொற்றிரு
**ஆனைக்** **காவினி** லப்பர்ப்ரி யப்படு
பெருமாளே (14)

## 3. திருவருணை.

(திருவருணை என்பது திருவண்ணாமலை. ரெயில்வே ஸ்டெஷன் பஞ்சபூதஸ்தலங்களில் **தேயு** ஸ்தலம் நினைக்க முத்தியளிக்கும் நிர்மல க்ஷேத்திரம் விஷ்ணுவும் பிரமனும் அடி முடி தேடிக் காணாத சோதிகிரி இதற்குச் சோணகிரி சோணாசலம் அருணாசலம் என்னும் பெயர்களுமுண்டு. இந்த ஐதிஹ்யத்தைக் கொண்டு இத்தலத்திற் கார்த்திகைக் கிர்த்திகைத் தீபதரிசனம் மிகவும் விசேஷம். இத்தலம் இந்நூலாசிரியராகிய ஸ்ரீ அருண கிரிநாத ஸ்வாமிகளுடைய ஜனனபூமி; இங்கே இவர் முருக பிரானால் தடுத்தாட்-கொள்ளப்பட்டு மௌனோபதேசம் பெற்றார்; கோயிலில் மேலைப் பிராகாரத்தில் இவர் அடக்கமான இடத்தில் இவருடைய உருவம் ஒன்று சிறிதாகச் செய்து வைக்கப்பட்டிருக்கின்றது. இவருக்கு அநுக்கிரகஞ் செய்த முருகக் கடவுளி னுருவம் கோயிலுக்குக் கிழக்கே ஒரு ஸ்தம்பத்தி லிருக்கின்றது அவருக்குக் "கம்பத் திளையனார்" என்று பெயர். இதற்கு மேற்கே உள்ள கோபுர வாயிலுக்கு வடக்கில் "கோபுரத்திளையனார்" என்னும் முருகபிரானுடைய சந்நிதியும் அருணகிரிநாத ஸ்வாமிகளுடைய சிலையுருவமும் இருக்கின்றன மலைப் பிரதக்ஷிணம் 8-மைல் தூரம்; ஸ்தல புராணமுண்டு.)

## 509. திருவடி மறவாமை

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

குமர குருபர குணதர நிசிசர
திமிர தினகர சரவண பவகிரி
குமரி சுதபகி ரதிசுத சுரபதி குலமானுங்-

---

*திரு நீறிட்டான் மதில் -திரு ஆனைக்காவில் நான்காவது மதில் மிகப் பெரியது. இது திரு நீற்றுமதில் திரு நீறிட்டான் மதில் என வழங்கும்.

கரும்பாலைகளின் சாறு கொதித்து வயலிடத்தே பாய்வதால் நெற்பயிர் தழைத்து சுவை தருவதான அமுதம் ஆகத் தேவர்கள் மெச்சின வயலூரில் வீற்றிருக்கின்ற வேலனே!

சக்கரங்கள் கொண்ட தேர் வீதியில் பயிலும் (வரும்) ஆனைக்காவில், உண்மை விளங்கும் திரு நீறிட்டான் மதில் சுற்றிலும் உள்ள அழகிய திரு **ஆனைக்காவில்** (அப்பர்) சிவபிரான் பிரியப்படுகின்ற பெருமாளே!

(துக்க வலைப்படல் ஒழிவேனோ)

## திருவருணை.

## 509.

குமரனே! குருபரனே! (நற்) குணச் செல்வனே! அசுரர்கள் என்னும் இருளை (விலக்கும்) சூரியனே! சரவணபவனே! (இமய) மலையின் புத்திரிக்குப் புத்திரனே! (பகீரதி) கங்கைக்குப் பிள்ளையே! தேவர் தலைவனாம் இந்திரனுடைய சிறந்த (மானன்ன) மகள் (தேவசேனையும்)-

---

இம் மதில் கட்டப்பட்ட பொழுது சிவபெருமான் ஒரு சித்தராக எழுந்தருளி வேலைக்காரருக்குத் திரு நீற்றையே கூலியாகக் கொடுக்க, அது அந்த அந்த வேலைக்காரர் உண்மையாகப் பாடுபட்ட அளவுக்கு ஏற்பப் பொற்காசு ஆயிற்று. திருநீற்றையே கூலியாகக் கொடுத்த காரணத்தால் அங்ஙனம் கட்டப்பட்ட மதில் திரு நீறிட்டான் மதில் ஆயிற்று. "அகில காரணர் வினைஞர்பால் பூதியை அளித்து முகில் சுலாவ நன்கிழைத்த மாமதில்" இம் மதிலை வலம் வருவோர் சகல வரங்களையும் பெறுவர். "வரங்களை வேட்டோரெல்லாம் மெத்திய அன்பால் இந்த வியன்மதில் சூழ்க"....திரு ஆனைக்காப் புராணம் -ஆரஞ்சாத்து படலம் 49; திரு நீற்றுத் திருமதிற் படலம் - 18.

குறவர் சிறுமியு மருவிய திரள்புய
முருக சரணென வுருகுதல் சிறிதுமில்
கொடி(ய) வினையனை யவலனை யசடனை யதிமோகக்;
கமரில் விழவிடு மழகுடை யரிவையர்
களவி னொடு *பொரு ளளவள வருளிய
கலவி யளறிடை துவளுறும் வெளிறனை யினிதாளக்-
† கருணை யடியரொ டருணையி லொருவிசை
சுருதி புடைதர வருமிரு பரிபுர
கமல மலரடி கனவிலு நனவிலு மறவேனே;
‡ தமர மிகுதிரை யெறிவளை கடல் குடல்
மறுகி யலைபட விடநதி யுமிழ்வன
சமுக முககண பணபணி பதிநெடு வடமாகச்-
சகல வுலகமு நிலைபெற நிறுவிய
கனக கிரிதிரி தர Xவெகு கரமலர்
தளர வினியதொ ரமுதினை யொருதனி கடையாநின்;
றமரர் பசிகெட வுதவிய க்ருபைமுகில்
Oஅகில புவனமு மளவிடு குறியவன்
அளவு நெடியவ னளவிட அரியவன் மருகோனே-

---

* பொருள் அளவே இன்பம் தருவர் வேசையர் என்பது;
"அணைமிசை கைக்காசுக் களவு அருள்பவர்."
"காசள உறவாடி", "பொருளொக்க நடிப்பவர்" - திருப்புகழ் 156, 329, 499.

† இந்த அடி அருணகிரியார் வரலாற்றைக் குறிக்கும். திருவண்ணாமலையில் முருகவேள் இவருக்குத் தரிசனம் தந்த வரலாறு இது.

‡ கடல் கடைந்த வரலாறு:

தேவர்களும் அசுரர்களும் மரணத்திற்குப் பயந்து திருமாலைப் பணிந்து பிரார்த்திக்க அவர் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுக்கலாம்; அமுதம் அருந்தினால் மரணம் அணுகாது என்று கூறினர். உடனே மந்தர மலையை மத்தாக நாட்டி வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகப் பூட்டி இருதிறத்தாரும் கடைய முயல, மத்து அசையவில்லை. பின்னர் வாலி என்னும் வானரத் தலைவனுடைய உதவியால் பாற்கடல் கடையப்பட, வாசுகி வாடி வருந்தி விஷத்தைக் கக்கிற்று அவ் விஷத்துக்கு யாவரும் பயந்து ஓடிச் சிவபிரானைச் சரண் அடைய அவர் அந்த விஷத்தை அடக்கி உண்டனர். பின்னர் சிவபிரானது திருவருளைப் பெற்று மீண்டும் பாற்கடலைக் கடைந்தார்கள். அமுதம் பிறந்தது. திருமால் அதை எடுத்துத் தேவர்களுக்குப் பங்கிட்டு அளித்தனர்.

(X, O - தொடர்ச்சி - பக்கம் 163 பார்க்க.)

குறவர் மகள் (வள்ளியும்) பொருந்தும் திரண்ட புயங்களை உடையவனே! முருகனே! சரணம் - என்று (கூறி) உருகுதல் சற்றும் இல்லாத கொடிய வினைக்கு ஈடானவனை, வீணனை, மூடனை, அதி ஆசை என்னும் (காமம் என்னும்)

நிலப் பிளப்பில் விழும்படித் தள்ளுகின்ற அழகுவாய்ந்த மாதர்கள் வஞ்சக எண்ணத்துடன் தங்களுக்குப் பொருள் (எவ்வளவு கிடைத்ததோ அந்த) அளவுக்கு அளவுக்குத் தகுந்தபடி கொடுக்கின்ற சேர்க்கை - இன்பம் என்கின்ற சேற்றினிடையில் துவட்சியுறும் (சோர்வு அடையும்) அறிவிலியாகிய என்னை இன்புடன் ஆண்டருள - (உனது)

கருணைக்குப் பாத்திரர்களான அடியார் கூட்டத்துடன் (வந்து) திருவண்ணாமலையில் ஒருமுறை - வேத ஒலி பக்கங்களில் முழங்க வந்த இரண்டு சிலம்பணிந்த தாமரை மலர்போன்ற திருவடிகளைக் கனவிலும் மறவேன் நனவிலும் (விழித்திருக்கும் போதும்) மறவேன்;

ஒலி மிகுந்த அலைகளை வீசும் வளைந்த கடலின் உட்பாகங்கள் கலங்கி அலைச்சல் உறவும், விஷத்தை ஆறுபோலக் கக்கி உமிழும் (சமுக முக) விளக்கமுற்ற தோற்றத்தைக்கொண்ட - கூட்டமான படங்களைக்கொண்ட (பணிபதி) சர்ப்பராஜனாம் வாசுகி நெடிய கயிறாகவும்

எல்லா உலகங்களும் நிலை பெறும்படி நிறுத்தி வைக்கும் பொன்மலையாம் மேரு (மத்தாகச்) சுழலவும், பல திருக்கர மலர்களும் தளர்ச்சியுறவும் (அல்லது கர மலர் மிகத்தளர) இனியதான ஒரு அமுதத்தை ஒப்பற்ற தனி முதல்வனாய் நின்று கடைந்து (கடைவித்து)

தேவர்களுடைய பசி நீங்க உதவின கிருபை வாய்ந்த மேகவண்ணன், எல்லா உலகங்களையும் அளக்கவல்ல வாமனன் (குட்டை - குறிய வடிவினன்) (உலகை) அளந்தபோது நெட்டை (நீண்ட) ரூபத்தினன், (அளவிட) மதித்து எண்ணுதற்கு அரியவன் - அத்தகைய திருமாலுக்கு மருமகனே!

---

X திருமால் "வெகு கரமலர் தளரக்" கடைந்தது - "வனிதை மேவு தோளாயிரமு நோவக் கடையும் ஆதி கோபாலன்" - திருப்புகழ் 1047.

O திருமால் குறியவன் - நெடியவன்

திருமால் மாவலியிடம் குறியவராய்ச் சென்று நெடியவராய் உலகளந்தார்.

- திருப்புகழ் 268, பக்கம் - 166கீழ்க்குறிப்பு.

*அரவு புனைதரு புநிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர வொளிதிகழ்
† அறிவை யறிவது பொருளென அருளிய
பெருமாளே (1)

**510. சரணமும் மவுனமும் பெற**

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

அருவ மிடையென வருபவர் துவரிதழ்
அமுது பருகியு முருகியு ம்ருகமத
அளக மலையவு மணிதுகி லகலவு மதிபார-
அசல முலைபுள கிதமெழ ‡அமளியில்
அமளி படஅந வரதமு மவசமொ
டணையு மழகிய கலவியு X மலமல முலகோரைத்;

---

* முருகவேள் சிவனுக்கு உபதேசித்தது.
-திருப்புகழ் 193, பக்கம் 450 கீழ்க்குறிப்பு.

† "அறிவை அறிவது பொருள் என அருளிய பெருமாளே" இந்த உபதேசத்தின் பெருமையைத் தாயுமானவர் பின் வருமாறு பாராட்டுகின்றனர்:-

"அறிவை அறிவதுவே யாகும் பொருளென
றுறுதி சொன்ன உண்மையினை ஒருநாள் எந்நாளோ!"
(எந்நாட்கண்ணி - அறிஞருரை 14.)

அறிவே இறைவன், அறிவே இறைவன் திருமேனி:- "திருவான்மியூருறையும் அறிவே உன்னை யல்லால் அடையாதென தாதரவே" சம்பந்தர் 3-55-9; அறிவே நின்னை யல்லால் இனியாரை நினைக்கேனே" - சுந்தரர் 24-9.

"அகலிய புராணமும் ப்ரபஞ்ச சகலகலை நூல்களும் பரந்த
அருமறை யநேகமும் குவிந்தும் அறியாத
அறிவும் அறியாமையுங் கடந்த
அறிவு திருமேனி யென்றுணர்ந்துன்
அருண சரணார விந்தம் என்று அடைவேனோ!"
- திருப்புகழ் 1019.

"அறிவு வடிவென் றறியாத என்னை
அறிவு வடிவென் றருள் செய்தான் நந்தி"

(தொடர்ச்சி ‡, X - பக்கம் 165 - பார்க்க)

பாம்பை ஆபரணமாகக்கொண்ட பரிசுத்த மூர்த்தியாம் சிவனை வழிபட்டு (வணங்க) உனது குதலைச் சொல்லால் அவர் தெளிவு பெற, (நன்கு உணர) ஒளிமயமாம் அறிவை அறிவதுதான் பொருள் என்பது என்று அவருக்கு உணர்த்தி அருளிய பெருமாளே!

(மலரடி கனவிலும் நனவிலும் மறவேனே)

## 510.

உருவமே இல்லாதது (கண்ணுக்குத் தெரியாதது) - அவ்வளவு சிறியது) இடை என்று கூறும்படி வந்துள்ளவர்கள், பவளம் போன்ற வாயிதழின் (ஊறலாம்) அமுதை உண்டும் உருகியும், கஸ்தூரியின் வாசனைகொண்ட கூந்தல் அலையவும் ஆடை விலகவும், அதிக பாரமான-

மலைபோன்ற முலை புளகிதம்கொள்ள, படுக்கை கோலாகலமாக எப்போதும் (காம மயக்கத்தோடு) தன் வசம் இழந்து சேர்கின்ற அழகிய புணர்ச்சி (யின்பமும்) போதும் போதும், உலகில் உள்ளவர்களைக்-

---

அறிவு வடிவென் றருளால் அறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே"
அறிவுக் கழிவில்லை யாக்கமும் இல்லை
அறிவுக் கறிவல்ல தாதாரம் இல்லை
அறிவே அறிவை அறிகின்ற தென்றிட்
டறைகின் றனமறை யீறுகள் தாமே

திருமந்திரம் 2357, 2358

"அறிவை அறிவா லறிந்தே அறியும் அறிவதனில்
பிறிவுபட நில்லாமல் பிடிப்பதினி யெக்காலம்!" (184)
"அற்பசுக மறந்தே அறிவை அறிவால் அறிந்து
கெற்பத்தில் வீழ்ந்து கொண்ட கேடறுப்ப தெக்காலம்" - (25)
-எக்காலக் கண்ணி, (பத்திரகிரியார்)

‡ அமளியில் அமளிபட - 'அமளிமிசை அமளிபட' - திருப்புகழ் 1099.
X அலம் அலம் - போதும் போதும்.

தருவை நிகரிடு புலமையு மலமல
முருவு மிளமையு மலமலம் விபரித
சமய கலைகளு மலமல மலமரும் வினைவாழ்வுஞ்-
*சலில லிபியன சனனமு மலமல
மினியு னடியரொ டொருவழி படஇரு
தமர பரிபுர சரணமு மவுனமு மருள்வாயே;
† உருவு கரியதொர் கணைகொடு பணிபதி
யிருகு தையுமுடி தமனிய தநுவுட
னுருளை யிருசுடர் வலவனு மயனென மறைபூணும்-
உறுதி படுசுர ரதமிசை யடியிட
நெறுநெ றெனமுறி தலுநிலை பெறுதவம்
உடைய ‡ வொருவரு மிருவரு மருள்பெற
வொருகோடி;
தெருவு நகரியு நிசிசரர் முடியொடு
சடச டெனவெடி படுவன புகைவன
திகுதி கெனஎரி வன அனல் நகைகொடு
முனிவார் தஞ்-
சிறுவ வனசரர் சிறுமியொ டுருகிய
பெருமஅருணையி லெழுநிலை திகழ்வன
சிகரி மிசையொரு கலபியி லுலவிய
பெருமாளே(2)

---

* சலில லிபி யன - நீர்மே லெழுத்துக்கு நேரான.

† உருவு கரிய தொர் கணை - கரியவன் - விஷ்ணு

திரிபுரம் எரித்த வரலாறு - திருப்புகழ் 285-பக்கம் - 206; பாடல் 390-பக்கம் 484; பாடல் 469 பக்கம் 62-பார்க்க.

"கல்லானிழற் கீழாய் யிடர் காவாய் என வானோர்
எல்லாமொரு தேராய் அயன்மறை பூட்டிநின் றுய்ப்ப
வல்வாயெரி காற்றீர்க்கரி கோல் வாசுகி நாண்கல்
வில்லாலெயில் எய்தானிடம் வீழிம் மிழலையே"

என்னும் சம்பந்தர் தேவாரமும் (1-11-6) "தச்சுவிடுத்தலும் தாமடி யிட்டலும் அச்சுமுறிந்ததென் றுந்தீபற" - என வரும் திருவாசகமும் நினைத்தற்குரியன.

‡ "ஒருவரும இருவரும் அருள்பெற" எனப் பிரித்துக் கூறியது - ஒருவர் முழுவு வாசிப்பதையும், இருவர் வாயில் காவலாளர்களானதையும் குறிக்க- (பாடல் 469 பக்கம் 62 - பார்க்க.)

(கற்பக) விருக்ஷத்தை நீங்கள் ஒப்பீர்கள் எனப்பாடும் கவித்திறமும் போதும் போதும்; நல்ல உருவமும் இளமையும் போதும் போதும்; ஒன்றுக்கொன்று மாறுபடுகின்ற சமய சாஸ்திரங்களும் போதும் போதும்; வேதனைப்படுத்தும் அஞ்சுதல் உறுத்தும் வினைக்கு ஈடான வாழ்வும்-

நீர்மேல் எழுத்துக்கு நேரான பிறப்பும் போதும் போதும்; இனி(யேனும்), உன் அடியாரோடு நானும் ஒரு வழிப்பட்டு ஈடேற உனது இரண்டு (ஒலிசெயும் சிலம்-பணிந்த) திருவடிகளையும் மௌனோபதேசத்தையும் தந்தருளுவாயாக.

உருவம் கறுப்பான ஒப்பற்ற அம்பு கரிய திருமால் அம்பாக) சர்ப்பராஜனாம் வாசுகி வில்லின் முனைகளில் முடியப்படும் (கயிறாக), பொன்னுருவ (மேருமலை வில்லாக, சக்கரங்கள் (சூரியன் - சந்திரன் எனப்படும்) சுடர்களாகத், தேர்ப்பாகன் பிரமன் ஆக, வேதக் (குதிரைகள்) பூட்டப்பட்டுள்ள-

திண்ணிய தேவர்களே ரதமாக ஆன (தேர்மேல்) (சிவபிரான்) அடிவைத்தவுடனே நெறு நெறு என்று (அத்தேர்) முறிபடவும், நிலைத்த (அசைவு உறாத) தவ நிலையைக் கொண்டிருந்த (ஒருவரும் இருவரும்) திரிபுராதிகள் மூவரும் (தீயில்மாளாது) (உய்ந்து) அருள் பெறவும், ஒரு கோடிக்கணக்கான-

தெருக்களும் (திரிபுரத்திலிருந்த வீடுகளும்), ஊர்களும், அசுரர்களின் தலையுடனே சட சட என்று வெடிபட்டும், புகைவிட்டும், திகுதிகென எரிவனவாய், ஆம்படி தீ எழுப்பிய சிரிப்பைக்கொண்டு கோபித்த சிவபிரானது-

குழந்தையே! வேடர் மகளைக்கண்டு உருக்கம்கொண்ட பெருமை வாய்ந்தவனே! திரு அண்ணாமலையில் ஏழுநிலை விளங்குவதான கோபுரவாயிலில் (அல்லது உயர்ந்த நிலை விளங்கும் மலை உச்சியில்) மயில்மேல் உலவி விளக்கம் தரும் பெருமாளே:

(சரணமும் மவுனமும் அருள்வாயே)

## 511. பேரின்பப் பொருளைப் பெற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

*கருணை சிறிதுமில் †பறிதலை ‡நிசிசரர்
பிசித அசனம றவரிவர் முதலிய
கலக விபரித வெகுபர சமயிகள் பலர்கூடிக்-

கலக லெனநெறி கெடமுறை முறைமுறை
கதறி வதறிய குதறிய கலைகொடு
கருத அரியதை விழிபுனல் வரமொழி
குழறாவன்;

புருகி யுன தருள் பரவுவகை வரில்விர
கொழியி லுலகியல் பிணைவிடி லுரைசெய
லுணர்வு கெடிலுயிர் புணரிரு வினையள றதுபோக-

உதறி லெனதெனு மலமறி லறிவினி
லெளிது பெறலென மறைபறை யறைவதொ
ருதய மரணமில் பொருளினை யருளுவ
தொருநாளே;

தருண சததள பரிமள பரிபுர
சரணி தமனிய தநுதரி திரிபுர
தகனி கவுரிப வதிபக வதிபயி ரவிசூலி-

சடில தரியநு பவையுமை திரிபுரை
சகல புவனமு முதவிய பதிவ்ருதை
சமய முதல்வித னயபகி ரதிசுத சதகோடி;

---

*அருமையான பாடல் இது; மனப்பாடம் செய்தற்கு உரியது.

† பறி தலையர் - சமணர் - திருப்புகழ் 172 பக்கம் 398 கீழ்க்குறிப்பு

‡ நிசிசரர் பிசித அசன மறவர் - ராக்ஷதரையும் புலாலுண்ணும் மறவரையும் ஒத்த சமணர்.

# 511.

கருணை என்பதே சிறிதும் இல்லாத தலைமயிர் பறிப்பவரும், அரக்கர்களுக்கு ஒப்பானவரும், புலால் உண்ணும் மறவரை (வேடரை) ஒத்தவரும் ஆன சமணர் முதலிய, (கலகங்கள் செய்தும், விபரீத உணர்ச்சியால் மாறுபட்டு ஆரவாரம் செய்யும்) பல திறத்த பர சமய வாதிகள் பலரும் கூடி

கலகலென (ஆரவாரம் செய்து) நீதி முறைதவறி, அவரவர் முறை வரும்போதெல்லாம் பெருங் கூச்சலிட்டுக் கதறி, (வதறிய - குதறிய) வாயாடித்திட்டி - நெறிதவறிப் பேசும் கலை நூல்களால் எண்ணுதற்கும் அரியதான பொருளை, கண்களில் நீர்வர, மொழியானது குழறி அன்புகொண்டு-

உருகி, உனது திருவருளைப் போற்றும் மனநிலை வந்தால், (விரகு) தந்திரபுத்தி ஒழிந்தால், உலக சம்பந்தமான கட்டுகள் விட்டால், வாக்கு, செய்கை, மன உணர்ச்சி - (மனம் - வாக்கு, காயம்) இம் மூன்றின் தொழிலும் அழிந்தால், உயிரைச் சார்கின்ற நல்வினை - தீவினை என்னும் இரண்டு வினைகளாம் சேறு போம்படி-

உதறி விலக்கினால், எனது எனது என்னும் ஆசையாம் குற்றம் அற்றுப்போனால் - அறிவில் எளிதாகப் பெறுதல் முடியும் என்று வேதங்கள் பறையறைந்து சொல்லுவதான ஒப்பற்ற - தோற்றம் முடிவு இல்லாத (அந்தப் பேரின்பப்) பொருளை (அடியேனுக்கு நீ) அருள்செயும் பாக்கியநாள் ஒன்று (எனக்குக்) கிட்டுமா!

என்றும் இளமையொடு கூடியதாய், தாமரை போல்வதாய், நறுமணம் வீசுவதாய்ச் சிலம்பணிந்ததாயுள்ள திருவடிகளை உடையவள், பொன் (மலை) - மேருவை வில்லாக ஏந்தினவள், திரிபுரங்களை எரித்தவள், கவுரி, பகவதி, (தேவி), பகவதி, பயிரவி, சூலம் ஏந்தியவள் -

சடை தரித்தவள், அநுபவை (போகங்களை நுகர்விப்பவள்) உமை, திரிபுரை, எல்லா உலகங்களையும் ஈன்றருளிய பதிவிரதை, எல்லாச் சமயங்களுக்கும் முதல்வி, - (ஆகிய பார்வதியின்) பிள்ளையே! கங்கையின் மகனே! நூறுகோடி

அருண ரவியினு மழகிய ப்ரபைவிடு
கருணை வருணித தனுபர குருபர
அருணை நகருறை சரவண குரவணி புயவேளே-
அடவி சரர்குல மரகத வனிதையு
மமரர் குமரியு மனவர தமுமரு
*கழகு பெறநிலை பெறவர மருளிய பெருமாளே. (3)

## 512. சிவசுகம் உற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

துகிலு ம்ருகமத பரிமள அளகமு
நெகிழ இருதன கிரியசை தரஇடை
துவள †மனிதரு மமரரு முநிவரு முடனோடித்-
தொடர வனமணி மகரமி லகுகுழை
யடரு வனவிட மிளிர்வன ரதிபதி
சுருதி மொழிவன கயல்விழி புரள்தர நடுவாக;
வகிரு மதிபுரை தநுநுதல் பனிவர
வனச பதயுக பரிபுர மொலிபட
மறுகு தொறுமுல வியினிய கலவியை விலைகூறும்-
வரைவி லரிவையர் தருசுக சலதியி
லலையு மெனதுயி ரநுதின நெறிதரு
‡மவுன சிவசுக சலதியில் முழுகுவ
தொருநாளே;
முகிலு மதியமும் ரவியெழு புரவியு
நெடிய குலைமிட றிடறமு துககன
முகடு கிழிபட வளர்வன கமுகின மிசைவாளை-

---

* வள்ளி - தேவசேனை முருகவேளின் அருகுநிலை பெறவரம் அருளிய வரலாறு: - திருப்புகழ் 382, 435 (பக்கம் 464, 590 - கீழ்க் குறிப்புகளைப் பார்க்க)

† மாதர் மயக்கின் வன்மையைக் கூறும் இது: "நடந்தாள் ஒரு கன்னி மாராச கேசரி நாட்டிற் கொங்கைக், குடந்தான் அசைய ஒயிலாய், அது கண்டு கொற்றவர் பின், தொடர்ந்தார், சந்யாசியர் யோகம் விட்டார், சுத்த சைவரெல்லாம் மடம்தான் அடைத்துச் சிவபூஜையுங் கட்டிவைத்தனரே" என்னும் தனிப்பாடலையும் பார்க்க.

‡ மவுன சிவசுகத்தின் பெருமையைத் திருஞானவேழ வகுப்பிற் காண்க. அந்த வகுப்பில் இதைச் செய லொழித் தநுபூதி மீமிசை திகழும் அற்புத மவுன நிர்க்குண சிவமயத் திருஞான வேழம்" என்கின்றார் அருணகிரியார்.

சிவந்த சூரியர்களைவிட அழகான ஒளிவீசும் கருணையே அலங்கார உருவதான தேகத்தை உடையவனே! குருபரனே! திருவண்ணாமலை நகரில் வீற்றிருக்கும் சரவணனே! குராமலை அணிந்த புயங்களை உடைய வேளே!

(காட்டிற் சஞ்சரிக்கும்) வேடர் குலத்துப் பச்சைநிற மங்கை (வள்ளியும்) தேவர் குமாரி (தேவசேனையும்) எப்போதும் பக்கத்தில் அழகு விளங்க நிலைபெற்றிருக்க அவர்களுக்கு வரம் தந்தருளிய பெருமாளே!

(பொருளினை அருளுவ தொருநாளே)

## 512.

ஆடையும், கஸ்தூரி ஆதிய நறுமணம் கமழும் கூந்தலும் நெகிழ்ந்து குலைய, இரண்டு கொங்கை மலைகள் அசைய, இடை துவண்டுநிற்க, மனிதரும், தேவர்களும், முநிவர்களும் கூடவே ஓடிவந்து-

தொடர, (வனம்) அழகு மணியாலாய மகரமீன்போல விளங்கும் குழைகளைத் தாக்குவனவாய், விஷம் பொலி-வனவாய், ரதியின் கண வன் காமனுடைய சாஸ்திரத்தை எடுத்துக் கூறுவனவாய் விளங்குகின்ற கயல்மீன் போன்ற கண்கள் புரள - மத்தியிலே-

கீறுபட்ட நிலவை ஒத்த வில்லைப்போன்ற (வளைவுள்ள) நெற்றி (வியர்வுத்) துளிகளைத் துளிக்க, தாமரைபோன்ற அடிகள் இரண்டிலும் சிலம்பு ஒலிசெய, தெருக்கள் தோறும் உலாவி, இனிய புணர்ச்சி யின்பத்தை விலை கூறுகின்ற-

(வரைவு இல் அரிவையர்) - பொதுமகளிர் தருகின்ற சுகக் கடலிலே அலைகின்ற என்னுடைய உயிரானது நாள்தோறும் நன்னெறியிற் செலுத்தும் மௌன சிவ சுகக் கடலில் திளைத்து முழுகும்படியான (பாக்கியங்கொண்ட) நாள் ஒன்று வருமா!

மேகமும் நிலவும் (ரவி) சூரியனுடைய ஏழு குதிரைகளும் தமது நீண்ட குலைகளின் கழுத்துப் பாகத்தில் இடறுண்ணவும் (தடைபடவும்), பழையதாயுள்ள ஆகாய - உச்சி கிழிபடவும் (அவ்வளவு உயரமாய்) வளர்ந்துள்ள கமுக மரங்களின் கூட்டத்தின்மேல் (பாயும்) வாளை மீன்களும்-

முடுகு கயலுகள் வயல்களு முருகவிழ்
தடமு முளரிய அகழியு மதில்களு
முழுது முடையதொ ரருணையி லுறைதரு
மிளையோனே;

அகிலு மருதமு முகுளித வகுளமு
மமுத கதலியும் அருணமும் வருடையு
மபரி மிதமத கரிகளு மரிகளு முடனேகொண்-

டருவி யிழிதரு மருவரை தனிலொரு
சவர வனிதையை முநிதரு புனிதையை
அவச முடன்மல ரடிதொழு துருகிய பெருமாளே. (4)

## 513. நன்றி மறவாமை

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

மகர மெறிகடல் விழியினு மொழியினு
மதுப முரல் *குழல் வகையினு நகையினும்
வளமை யினுமுக நிலவினு மிலவினு நிறமுசும்-

மதுர இதழினு மிடையினு நடையினு
மகளிர் முகுளித முலையினு நிலையினும்
வனச பரிபுர மலரினு †முலரினு மவர் நாமம்;

பகரு கினுமவர் பணிவிடை திரிகினு
முருகி நெறிமுறை தவறினு மவரொடு
பகடி யிடுகினு மமளியி லவர்தரு மநுராகப்-

---

* குழல்வகை - 5; முடி, குழல், தொங்கல், பனிச்சை சுருள்:
மயிரை உச்சியில் முடித்தல் - முடி முடி சுருட்டி முடித்தல் - குழல்; மயிரை முடிந்து விடுதல் தொங்கல் மயிரைப் பின்னி விடுதல் - பனிச்சை. மயிரைப் பின்னே செருகல் - சுருள்.

† உலர்தல் - வாடுதல் "உலர்ந்து போனேன் உடையானே" திருவாசகம் - 32-1.

அவைகளால் வெருட்டப்படும் கயல்மீன்களும் ஓடித்திரியும் வயல்களும், நறுமணம் வீசும் தடாகங்களும், தாமரை மலர்கள் விளங்கும் அகழிகளும், மதில்களும் - இவையெலாம் உடைய ஒப்பற்ற **திருவண்ணாமலையில்** வீற்றிருக்கும் இளையோனே!

அகில், மருதம், மலர்விடும் மகிழமரம், அமுதம்போல இனிக்கும் வாழை, (அருணம்) செம்மறியாடும் - (அல்லது மானும்) (வருடையும்) மலையாடும், கணக்கற்ற மதங்கொண்ட யானைகளும், சிங்கங்களும் (அல்லது குரங்குகளும்) உடனே இழுபட்டுவரப் பாயும்

அருவிகள் இழிந்துவரும் அருமையான (வள்ளி) மலையில் ஒரு வேடப் பெண்ணை, சிவ முநிவர் தவத்தே வந்த பரிசுத்த நங்கையைக் காம மயக்குடன் (வசம் அழிந்து) அவளது மலரடியைத் தொழுது உருகிய பெருமாளே!

(சிவசுக சலதியில் முழுகுவ தொருநாளே)

# 513.

மகர மீன்களை வீசி எறியும் கடல்போன்ற கண்ணிலும், பேச்சிலும், வண்டுகள் ஒலிசெயும் கூந்தல் வகைகளிலும், சிரிப்பிலும், வளப்பத்திலும், நிலவு போன்ற முகத்திலும், இலவமலரைக் காட்டிலும் அதிக செந்நிற ஒளி விளங்கும்-

இனிமைதரும் வாயிதழினும், இடையினும், நடையினும், மாதர்களின் அரும்பிய கொங்கையிலும், (அவர்கள்) நிற்கும் நிலையிலும், தாமரை போன்றதும் சிலம்பணிந்ததுமான மலர்போன்ற அடிகளிலும் (நான்) வாடினாலும், அந்த மாதர்களுடைய பேர்களைச்

சொல்லிச் செபித்தாலும், அவர் இட்ட பணிவிடை-களைச் செய்வதிலேயே ஈடுபட்டுத் திரிந்தாலும், அவர் பொருட்டு மனம் உருகி நீதிமுறை தவறி நடந்தாலும், அவருடன் விகடமொழிகள் (பரிகாசப் பேச்சுகள்) பேசிக்கொண்டி-ருந்தாலும், படுக்கையில் அவர் தரும் காமப்பற்றாகின்ற-

பரவை படியினும் வசமழி யினுமுத
*லருணை நகர்மிசை கருணையொ டருளிய
பரம வொருவச னமுமிரு சரணமு மறவேனே;

கககன சுரபதி வழிபட † எழுகிரி
கடக கிரியொடு மிதிபட வடகுல
கனக கனகுவ டடியொடு முறிபட முதுசூதங்-

கதறு சுழிகட லிடைகிழி படமிகு
கலக நிசிசரர் பொடிபட நடவிய
கலப மரகத துரகத ந்ருபகிரி மயில்வாழ்வே;

தகன கரதல சிவசுத கணபதி
சகச சரவண பரிமள சததள
சயன வனசரர் கதிபெற முனிபெறு புனமானின்-

தரள முகபட நெறிபட நிமிர்வன
தருண புளகித ம்ருகமத தனகிரி
தழுவ மயல்கொடு தனி ‡ மட லெழுதிய
பெருமாளே.(5)

## 514. மயிலேறும் பவனியை நினைக்க

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

முகிலை யிகல்பொரு முழுவிருள் குழலென
X முதிய மதியது முகமென O நுதலிணை
முரணர் வரிசிலை முடுகிடு கணைவிழி
யெனமூவா-

* இது அருணகிரியாரின் வரலாற்றைக் குறிக்கும் பகுதி.

† எழுகிரி - திருப்புகழ் 43-பக்கம் 117-கீழ்க் குறிப்பைப் பார்க்க.

‡ மடல் எழுதிய பெருமாளே - திருப்புகழ் 289 - பக்கம் 220

X "முதிய மதிதனை முகமென வரிசிலை
முரணு நுதலென முடுகிய கணைவிழி" என்றும் பாடம்.

O நுதல் - புருவம்.

கடலில் முழுகினும், என்வசம் அழிந்தாலும், முதல் நாள் திருவண்ணாமலைப் பதியில் கருணையுடன் (நீ) அளித்தருளிய மேலான ஒப்பற்ற உபதேச மொழியையும், (உனது) இரண்டு திருவடிகளையும் மறவேன்;

விண்ணுலகத்துத் தேவர் தலைவன் (இந்திரன் வழிபட, எழுகிரியானது, வட்டமான சக்ரவாளகிரியுடன் மிதிபட, வடக்கே உள்ள சிரேஷ்டமான பொன்மயமான பருத்த மேருமலை அடியோடு பொடிபட பழையதான (சூரனாம்) மாமரம்-

ஒலித்து சுழி யெறியும் கடலிடத்தே கிழிபட்டு அறுபடவும் மிக்க கலகத்தைச் செய்துவந்த அசுரர்கள் பொடிபடவும், நடத்தின தோகை நிரம்பிய பச்சைக் குதிரையாம் மயிலேறும் அரசே! (இமய) மலை மயிலாம் பார்வதியின் செல்வக் குமரனே!

நெருப்பை ஏந்திய திருக் கரத்தனாம் சிவனுடைய பிள்ளையே! கணபதிக்குச் சகோதரனே! சரவணனே! நறுமணம் வீசும் நூற்றிதழ்த் தாமரையிற் பள்ளி கொண்டவனே! (காட்டிற் சஞ்சரிப்பவர்களாம்) வேடர்கள் நல்ல கதிபெற (சிவ) முநிவர்பெற்ற (திணைப்) புன மானாம் வள்ளியின்

முத்தாலாய மேலணிந்துள்ள ஆடை வளைவுபட நிமிர்ந்து எழுவனவும், இளமை வாய்ந்தனவும், புளகிதம் கொண்டனவும், கஸ்தூரி அணிந்துள்ளனவுமான கொங்கை-களாம் மலையைத் தழுவ மோகங்கொண்டு ஒப்பற்ற மடல் எழுதின பெருமாளே!

(ஒரு வசனமும் இரு சரணமும் மறவேனே)

## 514.

மேகமும், வலிமை பொருந்தும் முற்றின இருளுமே கூந்தல் என்றும், பூரண சந்திரனே முகம் என்றும், புருவம் இரண்டும் பகைவர்தம் கட்டப்பட்ட வில் என்றும், விரைந்து பாயும் அம்பு கண் என்றும் - மூப்பிலாத (கேடுறாத)

முளரி தனின்முகு ளிதமலர் முலையென
*முறுவல் தனையிரு குழைதனை மொழிதனை
மொழிய வரியதொர் தெரிவையர் வினையென
மொழிகூறிப்;

பகலு மிரவினு மிகமன மருள்கொடு
† பதியி லவர்வடி வுளதழ கெனவொரு
பழுது மறஅவர் பரிவுற இதமது பகராதே-

பகைகொ டெதிர்பொரு மசுரர்கள் துகைபட
‡விகட முடனடை பயில்மயில் மிசைவரு
பவனி தனையநு தினநினை யென அருள்
பகர்வாயே;

புகல வரியது பொருளிது எனவொரு
புதுமை யிடஅரி யதுமுத லெனுமொரு
பொதுவை யிதுவென தவமுடை முநிவர்கள்
புடைசூழப்-

புரமு மெரியெழ நகையது புரிபவர்
புனலும் வளர்மதி புனைசடை யினரவர்
புடவி வழிபட புதை பொருள் விரகொடு
புகல்வோனே;

அகில கலைகளு மறநெறி முறைமையு
மகில மொழிதரு புலவரு முலகினி
லறிஞர் தவமுயல் பவர்களு மியலிசை யதனாலே-

Xஅறுவர் முலையுணு மறுமுக னிவனென
அரிய நடமிடு மடியவ ரடிதொழ
அருணை நகர்தனி லழகுடன் மருவிய
பெருமாளே. (6)

---

* "அமுது பொதிதரு கனிதனை யிதழென
முலையை நகையென வளையிரு குழையென - என்பதும் பாடம்
((முலை - முல்லை; வளை - வள்ளைக்கொடி - குழை - காது

† படியி லரிவையர் வடிவதில் ஒரு குறை (பாட பேதம்)

‡ "விகட முடனடமிடு மயில்" - (பாட பேதம்)

Xஅறுவர் முலை நுகரும் அறுமுக குமர சரணமென அருள்பாடியாடி"
- சீர்பாத வகுப்பு.

தாமரையின் அரும்புநிலை மலர் கொங்கை எனவும், பற்களையும் இரு குழைகளையும், மொழியையும், (உவமை) சொல்லுதற்கு அரிதானதாமொரு மாதர்களின் செயலாற்றுங் கருவிகளெனவும் கூறிப்

பகலும் இரவும் மிக்க மன மருட்சியுடன் (பதியிலர்) பொது மகளிரின் வடிவில் அழகு இருப்பிடங் கொண்டிருக்கின்றதெனச், சற்றும் குறைவிலா வகையில் அவர்கள் அன்பு கொள்ளுமாறு இதமொழிகளை (இன்ப வார்த்தைகளை) அவர்களிடம் சொல்லித் திரியாதே-

பகைமை பூண்டு, எதிர்த்துச் சண்டைசெய்த அசுரர்களைத் தூளாமாறு, அழகுடன் (நடை) கூத்து - நடனம் செய்கின்ற மயில்மேல் வரும் திரு ஓலக்க தரிசனத்தை (உலாவரும் காட்சியை) தினந்தோறும் நினைப்பாயாக என்று வரம் அருளுக (திருவருள் மொழியைக் கூறுவாயாக.)

எடுத்துச் சொல்லுதற்கு அரியதான பொருள் இதுதான் என்றும், ஒரு புதிதாம் தன்மையில் கற்பனை செய்ய அரியதான முதன்மையது, ஒப்பற்ற பொதுவாம் தன்மை கொண்டது இது என்றும், தவநிலையில் உள்ள முநிவர்கள் பக்கத்திற் சூழ்ந்து நிற்க-

திரிபுரம் எரியுண்ண நகை புரிந்தவர், கங்கையையும், வளரும் பிறையையும் அணிந்துள்ள சடையினர் - ஆகிய சிவன் பூமியில் (சுவாமிமலையில் - (அல்லது) திருத்தணிகையில்) உன்னை வழிபட்டு நிற்க (அவருக்கு நீ! ரகசியப் பொருளை சாமர்த்தியத்துடன் உபதேசித்தவனே)

சகல கலைகளும், தரும நெறியைக்கூறும் ஒழுக்க (நூல்களும்) எல்லாவற்றையும் மொழியவல்ல புலவர்களும், உலகில் உள்ள அறிஞர் யாவரும், தவ நிலையைச் சார்ந்து முயல்பவர்களும், இயற்றமிழாலும் இசைத் தமிழாலும்-

(கார்த்திகை மாதர்) அறுவர்களின் முலைப்பால் உண்ணும் அறுமுக (சுவாமி) இவன் என்று தியானித்துக் கூறி அருமையான நடனம் இடும் அடியவராய் (உனது) திருவடியைத் தொழுதுநிற்கத், திருவண்ணாமலைத் தலத்தில் அழகுடன் வீற்றிருக்கும் பெருமாளே!

(அநுதினம் நினையென அருள்புகர்வாயே)

## 515. திருவடி மறவாமை

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

முருகு செறிகுழல் சொருகிய விரகிகள்
முலைக ளளவிடு முகபட பகடிகள்
முதலு முயிர்களு மளவிடு களவியர் முழுநீல-

முழுகு புழுககில் குழைவடி வழகியர்
முதிர வளர்கனி யது *கவ ரிதழியர்
முனைகொ ளயிலென விழியெறி † கடைசிய
ரநுராகம்;

மருவி யமளியி னலமிடு கலவியர்
மனது திரவிய ‡ மளவள வளவியர்
வசன மொருநொடி நிலைமையில் கபடியர்
வழியேநான்

மருளு மறிவின னடிமுடி யறிகிலன்
Xஅருணை நகர்மிசை கருணையொ டருளிய
மவுன வசனமு மிருபெரு சரணமு மறவேனே;

கருதி யிருபது கரமுடி யொருபது
கனக மவுலிகொள் புரிசைசெய் பழையது
கடிய வியனகர் Oபுகவரு கனபதி கனல்மூழ்கக்-

---

* கவிர் இதழ் - என்பது பாடமாயின் முருக்கு இதழ் எனப் பொருள்படும்.

† கடைசியர் - மருத நிலப் பெண்கள் - இங்குப் பொதுவாக மாதர்கள் என்றாவது - கடைப்பட்டோர் (இழிந்தோர்) என்றாவது கொள்ளலாம் 'நெடியகட் கடைசி மங்கையர்'-சிந்தாமணி *1249*. வளைவய லிடையிடைக் களைகளை கடைசியர். பெருங்கதை I-48-162.

‡ அளவளவு அருளுதல் - *509* ஆம் பாடலின் கீழ்க்குறிப்பைப் பார்க்க.

X இது அருணகிரியாரின் வரலாற்றைக் குறிக்கும். *513*-ஆம் பாடலும் இதுவும் அருணையில் அவர் ஆட்கொளப் பெற்றதை விளக்குவன.

O புகவரு - புகுவதற்கு அரிதாகிய.

# 515.

நறுமணம் நிறைந்த கூந்தலைச் சொருகி முடித்துள்ள தந்திரசாலிகள், கொங்கைகளை அளவிட்டுக் காட்டும் மேலாடை அணிந்துள்ள வெளி வேஷக்காரிகள், (அவரவர்க்-குள்ள) மூலதனத்தையும், அந்த அந்த உயிர்களையும் (தம்மிடம் வரும் பேர்வழிகளின் சுபாவத்தையும்) அளந்திடவல்ல திருடிகள்- முழுமையும் நீலநிறம் நிரம்பக்கொண்ட -

புழுகு (புனுகு சட்டம்), அகில் இவையிரண்டும் குழையப்பட்ட மணங்கொண்ட உருவ அழகியர், நன்கு பழுத்த (கொவ்வைக்) கனியின் தன்மையைக் கவர்ந்துள்ள (வாய்) இதழினர், கூர்மைகொண்ட வேல்போன்ற கண் பார்வையை வீசிடும் மாதர்கள் (அல்லது - கடைப்பட்டோர் - இழிந்தோர்)- (அல்லது) அயிலெனக் கடைவிழியை (கடைக்கண்ணை வீசுபவர்)காமப்பற்று -

பொருந்த, படுக்கையில் (தேக) நலத்தைத்தரும் புணர்ச்சியாளர், தங்கள் மனதைத் (தயவைத்) தாம் பெற்ற பொருளின் அளவளவே அளந்து தருபவர், பேசும் பேச்சில் ஒரு நொடி நேரத்தில் வஞ்சனை புகுத்துபவர் - ஆகிய பொதுமகளிரின் வழியில் நான்

மருள்கின்ற அறிவைக் கொண்டவன், (அடிமுடி - முடிஅடி) தலைகால் தெரியாதவன், (அத்தகைய எனக்குத்) திரு அண்ணாமலையில் கருணையுடன் நீ அருளின மௌனோ-பதேசத்தையும் இரண்டு பெருமைவாய்ந்த திருவடிகளையும் நான் மறவேன் -

ஆய்ந்து இருபது கரங்களும் தலை ஒரு பத்தும் பொன்னாலாய கிரீடங்களணிந்த தலையினன் (ராவணன்) ஆண்ட மதில்கள் கொண்டதும், பழமையானதும், காவல் கொண்டதுமான அற்புத நகரம், அயலார் புகுதற்கு அரிதான பெருமைவாய்ந்த நகரம், ஆன - இலங்கை எரியில் முழுக -

*கவச அநுமனொ டெழுபது கவிவிழ
அணையி லலையெறி யெதிரமர் பொருதிடு
களரி தனி †லொரு கணைவிடு மடலரி
மருகோனே;

சருவு மவுணர்கள் தளமொடு பெருவலி
யகல நிலைபெறு சயிலமு மிடிசெய்து
‡தரும னவர்பதி குடிவிடு பதனிசை மயில்வீரா-
Xதருண மணியவை பலபல செருகிய
தலையள் துகிலிடை யழகிய குறமகள்
தனது தனமது பரிவொடு தழுவிய
பெருமாளே (7)

## 516. உண்மை உணர்வு கூட

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

○விடமு மமுதமு மிளிர்வன இணைவிழி
வனச மலதழல் முழுகிய சரமென
விரைசெய் ம்ருகமத அளகமு முகிலல
வொருஞான-
விழியின் வழிகெட இருள்வதொ ரிருளென
மொழியு மமுதல வுயிர்கவர் வலையென
விழையு மிளநகை தளவல களவென
வியனாபித்;

---

* ராவணனோடு போர் நடந்தபோது அநுமார் ராம லக்ஷ்மணருக்குக் கவசம்போல உதவினராதலின் அவரைக் 'கவச அநுமன்' என்றார். 'அநுமனொ டெழுபது கவி' என்றது அநுமனொ டெழுபது வெள்ளங் கவிகளை 'அநுமானோ டேயெழுபது வெளங் கவி சேனாசேவித நிருபன்' - திருப்புகழ் - 880.

'ஏற்ற வெள்ளம் எழுபதி னிற்றவென்
றாற்ற லாளர்' - கம்ப ராமா - நாடவிட்ட -2.

† ஒரு கணைவிடும் அடலரி - 452-ஆம் பாடலின் கீழ்க்குறிப்பைப் பார்க்க - (பக்கம் -6)

‡ 'இமையவர் நாட்டினில் நிறைகுடி யேற்றிய...
தம்பிரானே' - என்றார் பிறிதோரிடத்து (திருப்புகழ் -990).

அவுணர்களின் வலி யகல சயிலத்தை இடி செய்து, அந்த அவுணர்களை (தருமன் அவர்பதி) யம லோகத்தில் - குடியேறவிட்ட - எனவும் பொருள் காண அமைந்துளது. தருமன் அவன் - தருமன் அவர்.

(தொடர்ச்சி பக்கம் 181-பார்க்க.)

ரகைஷ போன்ற அநுமானோடு எழுபது (வெள்ளம்) குரங்குகள் (மலைகளைப்) போட்ட அணையிற் (கடலை) அடக்கிக் கடந்து எதிர்த்துப் போர்செய்த போர்க்களத்தில் ஒரு அம்பை விட்ட பராக்ரமனாம் திருமாலின் மருகனே!

போராடின அசுரர்கள் தங்கள் படையுடன் தமது மிக்க வலி எல்லாம் தொலைந்தழிய, நிலைபெற்றிருந்த கிரவுஞ்சத்தை இடித்துத் (தரு மன் அவர்) கற்பக விருக்ஷத்தின் நீழலில் அமர்ந்துள்ள அந்தத் தேவர்களைத் (தங்கள்) ஊரில் - பொன்னுலகில் (குடியேறவிட்ட) குடியேறும்படி உதவின (பதன் - பதம்) அழகு பொருந்திய மயில் வீரனே!

Xபுதிய மணிகள் பல பல செருகியுள்ள தலையினை உடையவள், ஆடை இடையில் அழகோடு அமைந்த குறமகள் (வள்ளியின்) கொங்கையை அன்புடன் தழுவின பெருமாளே!

(மவுன வசனமும் இருபெரு சரணமும் மறவேனே!)

## 516.

oவிஷமும் அமுதமும் இரண்டும் கொண்டு விளங்குகின்ற இரு விழிகளும் (குளிர்ந்த) தாமரையல்ல, நெருப்பில் தோய்ந்த அம்புகளாம் என்றும்; நறுமணம் கமழும் கஸ்தூரி வாசனைகொண்ட கூந்தலும் மேகம் அன்று, ஒப்பற்ற ஞான

விழி நாடும் வழியை மறைக்கும் இருளைத்தரும் தனி இருளாம் என்றும்; பேச்சும் அமுதம் அன்று, உயிரையே கவரும் வலையாம் என்றும்; விரும்பும் காமத்தை ஊட்டும் பற்கள் (தளவன்று களவாம் என்றும்) முல்லையரும்பு அன்று, திருட்டுத்தனத்தைத் தம்மாட்டு ஒளித்து வைத்துள்ளவைகளாம் என்றும்; வியப்பைத் தரும் தொப்புள் (கொப்பூழ்) என்னும்

---

என்றது - ஒருமை பன்மை மயக்கம் துன்புற் றவுணர்கள் நமனுல குறவிடு மயில் வேலா"- என்றார் 210- ஆம் திருப்புகழில்.

X 'தருணமணி - துகிலிடை'-

"தூசா மணியும் துகிலும் புனைவாள்" - கந்தர் அநுபூதி.

O இந்த அருமைத் திருப்புகழில் முதல் நான்கு அடிகள் விலக்கணியின் பாற்படும்.

"கடுவும் அமிர்தமும் விரவிய விழியினர்" - என்றார் திருப்புகழ் 60-ல்

தடமு மடுவல படுகுழி யெனஇடை
துடியு மல*மத னுருவென வனமுலை
சயில மலகொலை யமனென முலைமிசை
புரள்கோவை

தரள மணியல யம்ன்விடு கயிறென
மகளிர் மகளிரு மலபல வினைகொடு
சமையு முருவென †வுணர்வொடு புணர்வது
மொருநாளே;

அடவி வனிதையர் தனதிரு பரிபுர
சரண மலரடி மலர்கொடு வழிபட
அசல மிசைவிளை புனமதி லினிதுறை
‡ தனிமானும்

அமர ரரிவையு மிருபுடை யினும்வர
முகர முகபட கவள Xதவளகர
அசல மிசைவரு மபிநவ கலவியும்
விளையாடுங்;

---

*மன்மதனது உருவம் எவ்வாறு கண்ணுக்குத் தோன்றாதோ அவ்வாறு இடை அதன் நுண்மையாலும் மென்மையாலும் கண்ணுக்குத் தெரியாது என்கின்றார்.

"மதன தனுநிகர் இடைக்கே" - வேதா வானோன் எழுதினான் இலையோ' - என்றார் பிற இடங்களிலும் - திருப்புகழ் -1184, 150

† உணர்வொடு புணர்வது:-

"நின்னிடைப் புகுந்தனன்... என்னிடை "ஞானவல்லியை நன்மணம் புணர்த்தி" - சிதம்பர மும்மணிக்கோவை -29

‡ "வானக மங்கையும் தேன்வரை வள்ளியும் இருபுறம் தழைத்த"

"குஞ்சரக் கோதையும் குறமகட் பேதையும்
இருந்தன இருபுறத் தெந்தையென் னமுதம்" - கல்லாடம் 56; 73.

X தவளகர அசலம் - இது முருகவேளுக்கு உரிய பிணிமுகம் என்னும் யானை. இதன் வரலாற்றை திருப்புகழ் 474 பக்கம் -71 கீழ்க்குறிப்பிற் காண்க.

(தொடர்ச்சி பக்கம் 183 பார்க்க)

இடமும் மடு (ஆற்றிடைப்பள்ளம்) அன்று, படுகுழியாம் (யானைகளைப் பிடிக்க அமைத்த) பெருங்குழியாம் என்றும்; இடையானது துடி (உடுக்கை) அன்று, மன்மதனது உருவமாம் என்றும்; (அதாவது - அருவமாம் (உருவம் இல்லாதது) என்றும்; அழகிய கொங்கை மலையன்று, கொலைசெய்யும் யமனே என்றும்; கொங்கையின் மேல் புரளுகின்ற கோத்த வடம் (மாலை)-

முத்துமாலை - ரத்னமாலை அன்று, யமன்விட்ட பாசக்கயிறே ஆம் என்றும்; மாதர்கள் மாதர்கள் அல்ல, பல வினைகள் சேர்ந்து அமைந்த உருவமே என்றும்; காணவல்ல ஞான உணர்ச்சியுடன் கூடும் ஒரு நாள் எனக்குக் கிடைக்குமா!

வன தேவதைகள் தன்னுடைய இரண்டு, சிலம்பணிந்த, அடைக்கலம் புகத் தக்க, மலரடிகளை மலர்கொண்டு வழிபட, மலைமேல் விளைந்துள்ள (தினைப்) புனத்தில் இனிது அமர்ந்திருந்த ஒப்பற்ற மான்போன்ற வள்ளியும் -

தேவர் வளர்த்த மகளாம் தேவசேனையும் இரண்டு பக்கத்திலும் வர, (முகரம்) ஒலி செய்வதும், (முகபடம்) முகத்தில் தொங்கும் அலங்காரத் துணிகொண்டதும், உணவு கொள்வதும், வெண்ணிறம் கொண்டதும், துதிக்கை உடையதுமான மலையன்ன பிணிமுகம் என்னும் யானையின்மீது எழுந்தருளும் புதுமை வாய்ந்தவனே! சேர்க்கையின்பத்தில் விளையாடுகின்ற

---

*(182-ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

அருள் செய்வதற்கும் போர் புரிவதற்கும் எழுந்தருளும்போது முருகவேள் 'பிணிமுகம்' என்னும் யானைமேற் செல்வார்.

"வேழம் மேல்கொண்டு"

"அங்குசம் கடாவ ஒரு கை"

"ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி"

- திருமுருகாற்றுப் படையும். அதன் உரையும்

"சேயுயர் பிணிமுகம் ஊர்ந்தமர் உழக்கி" - *பரிபாடல் 5-2*

"கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு" - *பதிற்றுப்பத்து -11.*

"மாறாவென்றிப் பிணிமுக ஊர்தி ஒண்செய்யோனும்"

- *புறநானூறு 56.*

கடக புளகித புயகிரி சமுக *வி
கடக கசரத துரகத நிசிசரர்
கடக † பயிரவ ‡ கயிரவ மலர்களும் எரிதீயுங்-
கருக வொளிவிடு தனுபர Xகவுதம
புநித முநிதொழ அருணையி லறம்வளர்
கருணை யுமைதரு சரவண சுரபதி
பெருமாளே (8)

## 517. கலி நீங்க

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன தனதான

Oகமரி மலர்குழல் சரிய புளகித
கனக தனகிரி யசைய பொருவிழி
கணைக ளெனநுதல் புரள துகிலதை
நெகிழ்மாதர்-
கரிய மணிபுர ளரிய கதிரொளி
பரவ இணைகுழை யசைய நகைகதிர்
கனக வளைகல நடைகள் பழகிகள்
மயில்போலத்;
திமிரு மதபுழு கொழுக தெருவினி
லலைய விலைமுலை தெரிய மயல்கொடு
திலத மணிமுக அழகு சுழலிக ளிதமூறல்-

---

* விகட அக. † பயிரவன் - பயங்கரத்தைச் செய்வோன் -

‡ கயிரவம் - செவ்வல்லி.

முருகவேள் செந்நிறத்தவர்.

"பவழத் தன்ன மேனி" - குறுந்தொகை - கடவுள் வாழ்த்து.

"செய்யன் சிவந்த ஆடையன்" - திருமுருகாற்றுப்படை.

"உருவும் உருவத் தீ யொத்தி" - பரிபாடல் 19.

X அருணையில் கவுதம முநிவர் தொழுதது;

இறைவனது இடப் பாகத்தை பெற விரும்பின பார்வதி தேவி இறைவன் ஆணைப்படி திருவண்ணாமலைக்குத் தவஞ் செய்ய வந்தபோது அங்குக் கௌதம முநிவர் ஆஸ்ரமத்தில் தான் வந்து தங்கினதாக அருணாசல புராணம் கூறும்.

'கோதமனார் ஆசிரமந் தன்னிற் குறுகினாள்" 'கோதமாச் சிரமந்தன்னிற் கோல்வளை தீதிலாத் தவஞ்செய்தது செப்பினேன்" அருணாசல புராணம் - திருக்கண் புதைத்த சருக்கம் 56, 78.

O கமரி - கம அரி; கமம் - நிறைவு; அரி - வண்டு.

(கடகம்) கங்கணம் அணிந்தனவும், புளகம் கொண்டுள்ளனவுமான புயமலைக் கூட்டத்தை உடைய (விகட அக) அழகு வாய்ந்த உள்ளத்தவனே! கசரத துரக நிசிசரர் கடக பயிரவ (நிசிசரர் - கசரத துரக கடக பயிரவ) அசுரர்களுடைய யானை, தேர், குதிரை, சேனை (இவைகளுக்குப்) பயங்கரத்தை ஊட்டுபவனே! கயிரவ மலர்களும் - செவ்வாம்பல் மலர்களும், எரிகின்ற தீயும்

கருகும்படி அவ்வளவு சிவந்த ஒளியை வீசும் தேகத்தை உடைய கடவுளே! கவுதமர் என்னும் பரிசுத்தமான முநிவர்தொழுது பூசிக்கத் திரு **அண்ணாமலையில்** அறநெறியை வளர்த்த கருணை வடிவினளாம் உமையவள் ஈன்ற சரவணனே! தேவர் தலைவனாம் இந்திரனுக்குப் பெருமாளே!

(உணர்வொடு புணர்வதும் ஒரு நாளே)

## 517.

நிறைந்த வண்டுகள் கூந்தலிற் சரிய, புளகிதம் கொண்ட பொன்மயமான கொங்கை மலை அசைய, போரிடுவது போன்ற கண்கள் அம்புகளென (விளங்க), நெற்றி புரள, ஆடையானது நெகிழ்கின்ற மாதர்களின் -

(கழுத்திற்) கரிய மணி (மாலை) புரள்வதால் அருமையான சோதிஒளி பரவ, இரண்டு குழைகளும் அசைய, ஒளி விளக்கமுள்ள பொன்வளைகள் கல என ஒலிக்க, நடை பயிற்றுபவர் மயில்போல - (மயில்போல நடை பயிற்றுபவர்)-

பூசியுள்ள சாரமான புனுகுசட்டம் ஒழுகத் தெருவில் அலைய, விலைக்கு விற்கப்படும் கொங்கை வெளித்தோன்ற, காமப்பற்றுடன் நெற்றிப்பொட்டு அணிந்துள்ள முக அழகுடன் (அங்குமிங்கும் சுழலுபவர்) திரிபவர்களாம் பொதுமகளிரின்) வாயிதழ் ஊறலைத் -

திரையி லமுதென கழைகள் பலசுளை
யெனவு மவர்மயல் தழுவு மசடனை
திருகு புலைகொலை கலிகள் சிதறிட
அருள்தாராய்;

குமர குருபர குமர குருபர
குமர குருபர குமர குருபர
குமர குருபர குமர குருபர *எனதாளங்-

குரைசெய் முரசமொ டரிய விருதொலி
டமட டமடம டமட டமவென
குமுற திமிலைச லரிகி னரிமுத லிவைபாட;

அமரர் முநிவரு மயனு மனைவரு
மதுகை மலர்கொடு தொழுது பதமுற
அசுரர் பரிகரி யிரத முடைபட விடும்வேலா-

அகில புவனமொ டடைய வொளிபெற
அழகு சரண்மயில் புறம தருளியொ
ரருண கிரிகுற மகளை மருவிய
பெருமாளே (9)

## 518. யமன் வரும்போது காத்தருள்

தனதனத் தானனத் தனதனத் தானனத்
தனதனத் தானனத் தனதான

†கயல்விழித் தேனெனைச் செயலழித் தாயெனக்
கணவகெட் டேனெனப் பெறுமாது-

கருதுபுத் ராளனப் புதல்வரப் பாளனக்
கதறிடப் பாடையிற் றலைமீதே;

---

* தாள ஒலியிலும் முருகவேளின் திருநாம ஒலியைக் கேட்கின்றார் அருணகிரியார்.

† 'கயல்விழித் தேன்' - கயல் மீன் போலும் கண்ணை உடைய தேன்மொழி - மனைவி' என்றும் பொருள் காணலாம்.

கடலில் எடுத்த அமுதே இது என்றும், கரும்பு இது என்றும், (கள்) தேன் இது என்றும், பலாப்பழத்தின் சுளை இது என்றும், அந்த மாதர்களின் மோகத்தில் தழுவுகின்ற முட்டாளின் (திருகு) குற்றங்கள், (புலை) இழிவான தன்மை, (கலிகள்) துன்பம் - தரித்திரம் முதலிய தீமைகள் சிதறி விலக அருள்புரிவாயாக.

குமர குருபர, குமர குருபர, குமர குருபர, குமர குருபர, குமர குருபர, குமர குருபர - என்னும் ஒலியுடன் தாளங்கள் -

ஒலி செய்கின்ற முரசத்துடன் (போர்ப் பறையுடன்), அருமையான வெற்றி ஒலிகள் டமட டமடம டமட டம என்று அதிரொலி செய்ய, திமிலை (பறைவகை), சல்லரி (பறைவகை), கின்னரி (யாழ்வகை) முதலானவை பாடத் -

தேவரும், முநிவரும், பிரமனும், யாவரும் மதுகை மலர்கொடு தொழுது (கை மது மலர்கொடு தொழுது) கரத்திலேந்திய) தேன்நிறைந்த பூக்களைக்கொண்டு தொழுது, (இழந்து நின்ற) தத்தம் பதங்களை - பதவியைப் பெறவும், அசுரர்களின் குதிரை, யானை, தேர் இவை உடைபட்டழியவும் செலுத்தின வேலாயுதனே!

எல்லா உலகங்களும் எங்கும் ஒளி பெறவும், அழகிய பாதங்களை மயிலின்மேல் இருத்தி ஒப்பற்ற திரு **அண்ணா மலையில்** மருவிய (வீற்றிருக்கும்) பெருமாளே! குறமகள் வள்ளியைச் சேர்ந்த பெருமாளே!

(திருகு புலைகொலை கலிகள் சிதறிட அருள்தாராய்)

## 518.

(கயல்) கண்விழித்தேன் - (உங்களுக்குப் பணிவிடைகள்) எத்தனை நாள் கண்விழித்துச் செய்தேன், என்னைச் செயலற்றுப் போம்படிச்செய்து விட்டீர்களே! என்றும், கணவ! இனி நான் அழிந்துபோனேன் என்றும் கூறி மனைவி அழப், பெற்ற தாய் -

என் எண்ணத்திலேயே உள்ள மகனே என்று புலம்ப, பிள்ளைகள், 'அப்பா' என்று கதறப், பாடையில் தலைமாட்டுப் பக்கத்தே நின்று -

பயில்குலத் தாரழப் பழையநட் பாரழப்
பறைகள்கொட் டாவரச் சமனாரும்;

பரியகைப் பாசம்விட் டெறியுமப் போதெனைப்
பரிகரித் தாவியைத் தரவேணும்;

*அயிலறச் சேவல்கைக் கினிதரத் தோகையுற்
† றருணையிற் கோபுரத் துறைவோனே

அமரரத் தா ‡ சிறுக் குமரிமுத் தாசிவத்
தரியசொற் பாவலர்க் கெளியோனே;

புயலிளைப் பாறுபொற் சயிலமொய்ச் சாரலிற்
புனமறப் பாவையைப் புணர்வோனே

பெரடிபடப் பூதரத் தொடுXகடற் சூரனைப்
பொருமுழுச் சேவகப் பெருமாளே (10)

## 519. திருவடியைத் தொழ

தனதனத் தானனத் தனதனத் தானனத்
தனதனத் தானனத் தனதான

கறுவுமிக் காவியைக் Oகலகுமக் காலனொத்
திலகுகட் சேல்களிப் புடனாடக்

கருதிமுற் பாடு **கட் டளையுடற் பேசியுட்
களவினிற் காசினுக் குறவாலுற்;

---

* இந்த அடியில் வேல், சேவல், மயில் மூன்றும் ஓதப்பட்டன.

† திரு அண்ணாமலைக் 'கோபுரத் திளையனார்' என்னும் முருக வேளைக் குறிப்பன திருப்புகழ்ப் பாடல்கள் 518 முதல் 523-முடிய.

‡ சிறுக் குமரி - குறச் சிறுமியைத் தான் குறிக்கும்.

X கடற் சூரனைப் பொரு - கடலிலே நின்ற சூரனோடு (மாவுடன்) பொருத -

'ஆழிச்சூர் செற்றாய்" (ஆழி - கடல்)- திருப்புகழ் (292).

O கலகும் - கலக்கும்.

** கட்டளை உடல் - அளவான பொருள்.

நெருங்கின குலத்தினர் - உறவினர் அழ, பழைய நட்பினர்கள் அழ, பறைகள் கொட்டிவர, யமனும்

பருத்த - கையிலுள்ள - பாசக்கயிற்றை என்மீது விட்டு எறியும் அந்தத் தருணத்தில் என்னை (யமனிடத் திருந்தும் நீக்கிக்) காப்பாற்றி என் உயிரைத் தந்தருளுக.

வேல், தரும நிலைக்கோழி, இவை இரண்டும் திருக்கரத்தில் இனிது விளங்க மயில்மீது விளங்கித் திரு **அண்ணாமலையில் கோபுரத்து** (வாயிற் பக்கத்தில்) வீற்றிருப்பவனே!

தேவர்களுக்குத் தலைவனே! சிறிய குமரி வள்ளிக்கு (அல்லது - அத்தேவர்கள் இடையே வளர்ந்த இளமை வாய்ந்த தேவசேனைக்கு) (முத்தம் இட்டுப்) பிரியம் தருபவனே! சிவபிரானை அருமையான சொற்களால் பாடும் பாவலர்க்கு (சிவனைப்பாடும் புலவர்க்கு) எளியவனே!

மேகங்கள் இளைப்பாறுகின்ற (தங்கிப் படிகின்ற) அழகிய மலை (வள்ளிமலையின்) நெருங்கிய சாரலிலே (மலைப்பக்கத்தே)- தினைப்புனங் காத்திருந்த வேடப் பெண்ணைக் கூடினவனே!

பொடிபடப் பூதரத்தொடு (சூரனைக் காத்திருந்த ஏழு மலைகள்) பொடிபடக், கடலிலே மாமரமாய்க் கிடந்த சூரனைப் பொருது அடக்கிய பரிபூரண பராக்கிரமப் பெருமாளே!

(ஆவியைத் தரவேணும்)

# 519.

கறுவு (சினம் - கோபம்) மிகுந்து ஆவியைக் கலக்கும் அந்த காலனைப்போல விளங்கும் கண் என்கின்ற மீன் மகிழ்ச்சியுடன் நாட (விரும்பிப் பார்க்க)-

யோசனை செய்து முன்னதாகவே அளவான பொருள் இவ்வளவு என்று பேசி, உள்ளத்தே வைத்த கள்ளத் தனத்தால், பெற்ற அளவுக்கே உறவு பூண்டு -

றுறுமலர்ப் பாயலிற் றுயர்விளைத் தூடலுற்
றுயர் பொருட் கோதியுட் படுமாதர்-

ஒறுவினைக் கேயுளத் தறிவுகெட் டேனுயிர்ப்
புணையிணைத் தாள்தனைத் தொழுவேனோ;

மறையெடுத் *தோதிவச் சிரமெடுத் தானுமைச்
செறிதிருக் கோலமுற் றணைவானும்-

†மறைகள் புக் காரெனக் குவடுநெட் டாழிவற்
றிட அடற் சூரனைப் பொரும்வேலா;

அறிவுடைத் தாருமற் றுடனுனைப் பாடலுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே-

அடவியிற் றோகைபொற் றடமுலைக் காசையுற்
றயருமச் சேவகப் பெருமாளே. (11)

## 520. ஓத

தனதனத் தானனத் தனதனத் தானனத்
தனதனத் தானனத் தனதான

பரியகைப் பாசம்விட் டெறியுமக் காலனுட்
பயனுயிர்ப் போயகப் படமோகப் -

படியிலுற் றாரெனப் பலர்கள்பற் றாவடற்
படரெரிக் கூடுவிட் ‡டலைநீரிற்;

---

* ஓதி - ஓதுபவன்

† மறைகள் புக்கார் என - அடைக்கலம் புகுந்தா ரென.

‡ அலைநீரிற் பிரியும் - "நீரிற் படிந்து விடு பாசத் தகன்று"
- பாட்டு 162- பக்கம் -376 -கீழ்க்குறிப்பைப் பார்க்க.

பொருந்திய மலர்ப் படுக்கையில் வருத்தத்தை உண்டு பண்ணியும் (புலவி) பிணக்கு உற்றும், அதிகப் பொருள் தரவேண்டும் என்று கூறி அத்தகைய பெரிய தொகைக்கே உட்படுகின்ற மாதர்கள் -

கடிந்து கூறும் (துன்பப்படுத்தும்) செயலுக்கே (செயல்களால்) (என்) உள்ளத்து அறிவு கெட்டேன்; என் உயிர்க்குப் பிறவிக்கடலைக் கடக்கத் தெப்பம்போல உதவும் உனது இருதாள்களைத் தொழ மாட்டேனோ!

வேதங்களை எடுத்து ஓதும் பிரமனும், வஜ்ராயுதத்தை (குலிசத்தை) ஏந்தும் இந்திரனும், மை (மேகம்) போலக் கருமை நிறம் நிறைந்த அழகிய கோலத்தைக் கொண்டு சேரும் திருமாலும் -

(சூரனுக்குப் பயந்து) மறைவிடம் தேடித் (தன்னிடம்) அடைக்கலம் புகுந்துள்ளார்கள் என்ற) காரணத்தால் - (குவடு) மலைகளைக்கொண்ட (நெட்டாழி) நெடிய கடல் வற்றிப்போக, வலிமைவாய்ந்த சூரனொடு பொருதவேலனே!

அறிவு வாய்ந்த பெரியோர்களும் (என்னுடன் இருந்து) *யான் பாடும் சந்தப்பாக்களை என்னுடன் கூடி உன்னைப்பாட **அண்ணாமலையில் கோபுரத்தில் வீற்றிருப்பவனே.**

(வள்ளிமலைக்) காட்டில் மயிலன்ன வள்ளியின் அழகிய பெரிய கொங்கைமீது ஆசைகொண்டு அயர்ச்சிகொண்ட (சோர்வு கொண்ட) அந்த பராக்ரமம் நிறைந்த பெருமாளே!

(உயிர்ப்புணையிணைத் தாள்தனைத் தொழுவேனோ!)

## 520.

பருத்ததான கைக் கயிற்றைப் (பாசக்கயிற்றை) விட்டு வீசும் அந்தக் (காலனுள்) காலனிடத்தே - பயன்தரும் இந்த உயிர் - போய் - அகப்பட்டுக்கொள்ள - மோகம் (ஆசைவைத்து) இந்தப்

படியில் (பூமியில்) உற்றார் எனச் (சுற்றத்தார் எனப்படும்) - பலரும் பற்றா - என் உடலைப்பற்றி - அடல் (பலமாகப்) படர்ந்து - எரியும் எரியில் இந்தக் கூடு (உடலை)- விட்டு (போட்டு), தாங்கள் அலைவீசும் நீரில் - குளித்துப்)

---

* அருணகிரிநாதர் வரலாறு - பக்கம் 17 பார்க்க.

பிரியுமிப் பாதகப் பிறவியுற் றேமிகப்
பிணிகளுக் கேயிளைத் துழல்நாயேன்-

பிழைபொறுத் தாயெனப் பழுதறுத் தாளெனப்
பிரியமுற் றோதிடப் பெறுவேனோ;

*கரியமெய்க் கோலமுற் றரியினற் றாமரைக்
கமைவபற் றாசையக் கழலோர்முன் -

கலைவகுத் தோதிவெற் பதுதொளைத் தோனியற்
கடவுள்செச் சேவல்கைக் கொடியோனென்

றரியநற் பாடலைத் தெரியுமுற் றோர்† கிளைக்
கருணையிற் கோபுரத் துறைவோனே -

அடவியிற் றோகைபொற் றடமுலைக் காசையுற்
றயருமச் சேவகப் பெருமாளே (12)

## 521. மயில்மீது வர

தனதனன தான தத்த, தனதனன தான தத்த
தனதனன தான தத்த தனதான

தருணமணி வானி லத்தி லருணமணி யால விட்ட
தழலமளி மீதெ றிக்கு நிலவாலே-

தலைமைதவி ராம ணத்தி னிலைமையறி யாதெ
திர்த்த
தறுகண்மத வேள்தொ டுத்த கணையாலே;

---

* இது திருமால் கண்மலரிட்டுச் சிவபிரானைப் பூசித்த வரலாற்றைக் குறிக்கும் -

பாடல் -80 353, பக்கம் - 188-388 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† கிளைக்கு -'கு' 'பொருட்டு' என்னும் பொருளில் வந்துளது. பாடல் 278 பக்கம் 190. கீழ்க்குறிப்பு. கிளை -கூட்டம் என்னாது கிள்ளை - கிளி எனக் கொண்டால் அரிய நல்ல திருப்புகழ்ப் பாடல்களைத் தெரிந்துசொன்ன ஒப்பற்ற கிளியாம் அருணகிரியார்க்கு * (அருள்செய்து) திரு அண்ணாமலையிற் கோபுரத்தில் வீற்றிருப்பவனே! - எனப் பொருள்படும் இந்தப் பொருளில் இந்தப் பாடல் பிற்காலத்து ஆன்றோர் பாடலோ என்னும் ஐயம் ஏற்படும்.

பிரிந்து போகின்ற - பாபத்துக்கு இடந்தருகின்ற பிறவியை அடைந்தே மிக்க நோய்களால் இளைத்துத் திரிகின்ற அடியேனுடைய

பிழை பொறுத்தவனே என்றும், என் குற்றங்களைக் களைந்து ஆண்டருள் என்றும், அன்புகொண்டு நான் உன்னை ஓதிப் புகழும் பாக்கியத்தைப் பெறுவேனோ!

(கரிய மெய்க்கோலம் உற்ற அரியின்) கரிய உடல் நிறம்கொண்ட திருமாலின், (நல் தாமரைக்கு அமைவ) நல்ல தாமரைக்கு ஒப்பான கண்ணையே, (பற்று ஆசை) மலராகக் கொள்வதற்கு ஆசைகொண்ட அந்தத் திருவடியை உடையோராம் சிவபிரான்முன் (சிவபிரானது சந்நிதானத்தில்)

கலைநூற் கருத்தை எடுத்து ஓதினவன் (தேவாரப் பாக்களாக ஓதினவன்) (அல்லது கலைகளின் சாரமாம் மூலப்பொருளை உபதேசித்தவன்), கிரவுஞ்ச மலையைத் தொளை செய்தவன், தகுதிவாய்ந்த கடவுள், சிவந்த சேவற் கொடியைக் கையிற் கொண்டவன் என்று.

அருமையான நல்ல பாடல்களைத் தெரிந்துகூறி அடைவோர் கூட்டத்துக்கு (அருள்பாலிக்க) **அண்ணாமலையில்** கோபுரத்தில் வீற்றிருப்பவனே!

காட்டில் (வாசம்செய்த) தோகை - மயிலன்ன வள்ளியின் அழகிய பெரிய கொங்கைமீது ஆசைகொண்டு தளர்ச்சி பூண்ட அந்த பராக்ரமப் பெருமாளே!

(பிரியமுற்று ஓதிடப் பெறுவேனோ)

## 521.

(தருணம்) சமயம் பார்த்து, (மணி) ஒளிகொண்ட (வான் நிலத்தில்) ஆகாயத்தில் நின்று (அருணமணி) செம்மணி - மாணிக்கம்போலச் செந்நிறத்ததாய் - ஒலித்து அசைந்துவரும் நெருப்பைப் படுக்கையின்மேல் வீசுகின்ற நிலவாலும் -

தலைவனிடத்தினின்றும் நீங்காத என் மனத்தின் நிலைமையை அறியாது (என்னை) எதிர்த்த கொடியவனான செருக்குள்ளவனான மன்மதன் செலுத்தின பாணங்களாலும் -

வருணமட மாதர் கற்ற வசையின் மிகை பேச முற்று
மருவுமென தாவி சற்று மழியாதே-
*மகுடமணி வாரி சைக்கும் விகடமது லாவு சித்ர
மயிலின் மிசை யேறி நித்தம் வரவேணும்;

கருணையக லாவி ழிச்சி களபமழி யாமு லைச்சி
கலவிதொலை யாம றத்தி மணவாளா-
கடுவுடைய ரா நி ரைத்த †சடிலமுடி மீது வைத்த
கடியமல ராத ரித்த கழல்வீ ரா;
அருணமணி யால மைத்த கிரணமணி சூழும் வெற்றி
அருணை நகர் கோபு ரத்தி லுறைவோனே-
அசுரர்குலம் வேர றுத்து ‡வடவனலை மீதெ ழுப்பி
அமரர்சிறை மீள விட்ட பெருமாளே (13)

---

* மகுடம் அணிவார் - தேவர்கள். "முடியுடை அமரர் (சம்பந்தர் -I-41-9; I-79-6) "உயரமரர் மணிமுடி" சீர்பாத வகுப்பு.

தேவர்கள் போற்றும் இந்திரனாகிய மயில்.

மகுடமணி வார் இசைக்கும் மயில் - என்பதற்குத் தனது மகுடத்தில் மணி (ரத்னத்தை) வைத்துள்ள வார் -கயிறுபோன்ற பாம்பு (வாசுகி - அல்லது ஆதிசேடனை)த் (தனது காலிற்) கட்டி அடக்கி உள்ள மயில் - எனப் பொருள் காணலாம் என்பர் அருட்கவி சேதுராமனார். (பாற்கடல் கடைந்தபோது வாசுகி - ஆதிசேஷன் கடையும் கயிறானதும் குறிக்கற்பாலது) "பூட்டு பணிப்பத மாமயிலா." "நாகபந்த மயூரா" - "நீளக்காள புயங்க கால கலாபத்தேர்" 'பணமணி பட்சத் துரங்கமும்', 'திருப்புகழ் 789, 100, 68, 1016! "வாசுகி எடுத்துதறும் வாசி" - வேளைக்காரன் வகுப்பு; கலபி "அனந்தன் பணாமுடிதாக்கக் காலிற் கிடப்பன மாணிக்க ராசி" கந்தர் அலங்காரம் 97. "பாரப் பணாமுடி அநந்தன் முதலரவெலாம் பதைபதைத்தே நடுங்க" (மயில் விருத்தம்)

மகுடமணிவார் - கந்தருவர் எனக்கொண்டு அவர்களும் புகழும் விகடம் (கூத்து வகைகளைக்) கொண்ட மயில் - எனப் பொருள் காண்பர் வித்வான் பிரம ஸ்ரீ ஜகந்நாதையரவர்கள்.

† சடிலமுடிமீது வைத்த கடிய மலர்;

"கொன்றை யணிந்த சிரம் சரண் அங்கீகாரா " -திருப்புகழ் 1148

‡ 'வட அனலை மீதெ ழுப்பி'-

"சங்கரித்து அம்மலை முற்றும்

சிரித்தெரி கொளுத்தும் - 'கதிர்வேலா' - திருப்புகழ் 263 பக்கம் 155-ன் கீழ்க்குறிப்பில் - 'பன்னிரு விழிகளும் பிறங்கு வெஞ்சுடர் வடவைபோ லாக்கி அக்கணத்தில் உற்று நோக்கினன் எரிந்தன 'களேவரத் தொங்கல்'- என வருவதைக் காண்க.

பல ஜாதிகளைச் சார்ந்த அறியாமை கொண்ட பெண்கள் தெரிந்துபேசும் வசைப் பேச்சுக்களே மிகுதியாகப் பேசுவதாலும் - முழுமையும் ஈடுபட்டழுந்தியுள்ள என்னுடைய ஆவி சிறிதேனும் அழியாமல் -

மகுடம் (உச்சிக்கொண்டையும்), *(மணி) அழகிய வாரும் (கடிவாளவாரும்), (இசைக்கும்) கட்டியுள்ள (மயிற் பரிமீது,) (அல்லது - மகுடமணிவார் - தேவர்கள் இசைக்கும் - போற்றும் -மயில்மீது), (விகடம்) அழகுடன் உலவும் அலங்கார மயில்மீது ஏறி நாள்தோறும் வரவேணும்.

கருணை நீங்காத கண்ணினள்; சந்தனக் கலவை அழியாத (எப்போதும் விளங்கும்) கொங்கையள்; (உன்னோடு) சேர்க்கை நீங்காத பராக்ரமம் வாய்ந்தவள் (அல்லது சேர்க்கை நீங்காத வேட்டுவச்சி) ஆகிய குறத்தியின் மணவாளனே!

விஷம் உடைய பாம்புகளின் வரிசைகொண்ட (சிவபிரானது) சடாமகுடத்தின் மேல்வைத்த (கழல்வீரா) திருப்பாதங்களை உடைய வீரனே! நறுமலர்களை விரும்புகிற திருப்பாதங்களை உடைய வீரனே! (அல்லது - (சிவபிரான் தன்னை வணங்கினதால்) அவரது சடைமுடியில் வைத்திருந்த வாசனை மலர்களை ஏற்றுக்கொண்ட கழலினை உடைய வீரனே!)

சிவந்த ரத்னங்களில் அமைந்துள்ள (ஒளிபோன்ற) ஒளி பொருந்திய (மணி) சூரியன் வலம்வரும் வெற்றி விளங்குவதான **அருணைநகர்** கோபுரத்தில் உறைபவனே!

அசுரர்களுடைய குலத்தை வேருடன் அறுத்து வடவாக்கினி போன்ற தீயை அவர்கள்மீது செலுத்தித், தேவர்களைச் சிறையினின்றும் மீள்வித்த (மீட்டுக் காப்பாற்றிய) பெருமாளே!

(மயிலின் மிசை ஏறி நித்தம் வரவேணும்)

---

*மயிலுக்குச் சேணம், கடிவாளம், அங்கவடி - (விநா - துதி - 3, கந்தர் அலங் - 11)

## 522. மயில்மீது வர

தனதனன தான தத்த, தனதனன தான தத்த
தனதனன தான தத்த தனதான

முழுகிவட வாமு கத்தி னெழுகனலி லேபி றக்கு
முழுமதிநி லாவி னுக்கும் வசையாலும்-
மொழியுமட மாத ருக்கு மினியதனி வேயி சைக்கு
முதியமத ராஜ னுக்கு மழியாதே;

புழுகுதிகழ் நீப மத்தி லழகியகு ராநி ரைத்த
புதுமையினி லாறி ரட்டி புயமீதே-
புணரும்வகை தானி னைத்த துணரும்வகை நீல சித்ர
பொருமயிலி **லேறி நித்தம் வரவேணும்;**

எழுமகர வாவி சுற்று *பொழி**லருணை** மாந கர்க்கு
ளெழுதரிய **கோபு ரத்தி** லுறைவோனே-
இடைதுவள வேடு வச்சி படமசைய வேக னத்த
இளமுலைவி டாத சித்ர மணிமார்பா;

செழுமகுட நாக மொய்த்த ஒழுகுபுனல் வேணி வைத்த
சிவனைமுத லோது வித்த குருநாதா-
†திசைமுகன்‡மு ராரி மற்று மரியபல தேவ ருற்ற
சிறையடைய மீள விட்ட பெருமாளே (14)

---

* 'சோலை சூழ்ந்த உயர்பொழில் அண்ணா'- அப்பர். 6-16-5.

† திசைமுகன் - நான்முகன் பிரமன் - தான் படைத்த திலோத்தமையைக் கண்டு பிரமன் காதல்கொண்டு அவளை நோக்கத் திலோத்தமை வேறொருதிசைக்குச் செல்ல, அவளைப்பார்க்க வேண்டி அந்தத் திசைப் பக்கம் தனக்கு ஒரு முகத்தைப் படைத்துக் கொண்டான் பிரமன். இவ்வாறு அவள் நாலு திசைகளிலும்செல்ல, அவளைப் பார்க்கப் பிரமனும் நாலு திசைப் பக்கங்களுக்கும் முகங்களைப் படைத்துக்கொண்டான் அதனால் திசைமுகன் ஆயினன்.

‡ முராரி - முரன் என்றும் அசுரனுக்குப் பகையாய் நின்று அவனை அழித்த திருமால். முரன் நரகாசுரனுடைய சேநாபதியும் மந்திரியும். இவன் கோட்டையைக் காத்துக் கொண்டிருந்தபோது கண்ணனாற் கொல்லப்பட்டான்.

# 522.

முழுகி வடவா முகத்தின் (வடவா முகாக்கினியில் மூழ்கி) அங்கு பெற்ற சூட்டுடனே தோன்றும் பூரண சந்திரனுடைய ஒளிக் கிரணங்களுக்கும், நிந்தனை பேச்சுப்

பேசும் மடமையுடைய மாதர்களுக்கும், இனிமை வாய்ந்த தனி - ஒப்பற்ற புல்லாங்குழலின் இசையொலிக்கும், பழையவனாம் மன்மத ராஜனுடைய (சேஷ்டைகளுக்கும்) நான் (உட்பட்டு) அழிந்துபோகாமல் -.

புனுகு சட்டத்திலும் (மணம்) விளங்கும் (நீபமதில்) கடம்பிலும், அழகிய குராமலரிலும் வரிசையாக அமைந்த (மாலைகளின்) புதுமைத் தோற்றம்கொண்ட பன்னிரு புயங்களின் மீதே -

அணைந்து சேரும் வழியையே (நான்) நினைத்துள்ள (உண்மையை உலகோர்) தெரியும்படி (நீ) நீலநிறங்கொண்ட அழகிய சண்டைசெய்ய வல்ல மயிலில் ஏறி நித்தமும் வரவேணும்;

எழு மகர வாவி (மகரம் எழுவாவி)- மகரமீன்கள் உள்ள தடாகங்கள் சுற்றிலும் உள்ள சோலைசூழ்ந்த **அருணை** (திரு அண்ணாமலை) நகர்க்குள் எழுதுதற்கு அரிய **கோபுரத்தில் உறைபவனே!**

இடைதுவள வேடுவச்சி (வேடுவச்சியின் இடை நெகிழவும்), படம் (சீலை - ஆடை) அசையவும், பருத்த இளமை வாய்ந்த (அவளது) கொங்கையை விடாத அழகிய மணிமார்பனே!

செழுமை கொண்ட மணிமுடி நாகம் நெருங்கும், ஒழுகி விழும் கங்கை நீரைச் சடையில்வைத்த சிவபிரானை முதல் நாளில் ஓதுவித்த (சிவபிரானுக்கு உபதேசம் சொன்ன) குருநாதனே!

பிரமன், திருமால், பின்னும் அருமைவாய்ந்த பல தேவர்கள் இருந்த சிறையினின்றும் எல்லாரையும் மீளும்படி வெளியேற்றிய பெருமாளே!

(மயிலில் ஏறி நித்தம் வரவேணும்)

## 523. மயில்மீது வர

தனதனன தான தத்த தனதனன தான தத்த
தனதனன தான தத்த தனதான

*வடவையன லூடு புக்கு முழுகியெழு மாம திக்கு
மதுரமொழி யாழி சைக்கு மிருநாலு-
வரைதிசைவி டாது சுற்றி யலறுதிரை வாரி திக்கு
மடியருவ வேள்க ணைக்கு மறவாடி;
நெடுகனக மேரு வொத்த புளகமுலை †மாத ருக்கு
நிறையுமிகு காத லுற்ற மயல்தீர-
நினைவினொடு பீலி வெற்றி மரகதக லாப சித்ர
நிலவுமயி லேறி யுற்று வரவேணும்;
மடலவிழு மாலை சுற்று புயமிருப தோடு பத்து
மவுலியற வாளி தொட்ட அரிராமன்-
மருகபல வான வர்க்கு மரியசிவ னார்ப டிக்க
‡ மவுனமறை யோது வித்த குருநாதா;
Xஇடையரியு லாவு முக்ர அருணகிரி மாநகர்க்கு
ளினியகுண கோபுரத்தி லுறைவோனே-
எழுபுவிய ளாவு வெற்பு முடலிநெடு நாக மெட்டு
மிடையுருவ வேலை விட்ட பெருமாளே (15)

---

* நிலவொளி, யாழிசை, கடலொலி, வேள்கணை, மாதர் வசை மொழி இவை காமமிக்கார்க்கு வேதனை தருவன;
(பாடல் 218-பக்கம் 53- பாடல் 284 (பக்கம் 204)- பார்க்க)

† மாதருக்கு - மாது அருக்கு; அருக்கு - அருமை.

‡ "மவுன வசனம்" - திருப்புகழ் 515.

X அரி - (பாம்பு) "அரிகுலம் மலிந்த அண்ணாமலை"
- அப்பர் 4-63-6.

'அரவுமிழ் மணிகொள் சோதி அண்ணாமலை' 4-63-7
'அல்லாடரவம் இயங்குஞ்சாரல் அண்ணாமலை'- சம்பந்தர் 1-69-11
'மாசுணங்கள் தண் மணிப் பைகள் அவிழ்த்திடும் சோணசைலனே"
சோணசைலமாலை - 40; அரி - பன்றி எனவும் கொள்ளலாம்.
"ஏனத் திரளோ டினமான்கரடி யழியும் அண்ணாமலை"
சம்பந்தர் 1-69-3

(தொடர்ச்சி பக்கம் 199- பார்க்க.)

# 523.

வடவா முகாக்கினியின் உள்ளே நுழைந்து முழுகி எழுகின்ற சிறந்த நிலவுக்கும், இனிய மொழிபோலச் சுவைக்கும் யாழின் இசை யொலிக்கும், எட்டு

மலை, (எட்டு) திசை இவை முழுதும் விடாமல் சுற்றி - வளைந்து பேரொலி செய்யும் அலைகொண்ட கடலுக்கும், இறந்துபோய் உருவமிழந்து அருவமாயுள்ள மன்மதனது பாணங்களுக்கும் மிகவும் வாடி -

பெரிய பொன்மயமான மேருவைப் போன்ற புளகம் கொண்ட கொங்கையை உடைய (இந்த) மாது - அருமையாக - நிறைந்துள்ள மிக்க ஆசைகொண்ட மயக்கம் தீர -

(இவள்மீது) நினைவுவைத்து பீலிக் கண்கள்கொண்ட வெற்றி வாய்ந்த பச்சைத் தோகைகளின் அழகு பொலியும் மயிலில் ஏறி அமர்ந்து வரவேணும்;

இதழ்கள் விரியும் மாலைகள் சுற்றி அணிந்துள்ள புயங்கள் இருபதும், பத்து முடிகளும் அற்றுவிழ பாணப் ப்ரயோகம் செய்த ஹரிராமரின்

மருமகனே! பல தேவர்களுக்கும் அரியவனாய் நிற்கும் சிவபிரான் உணர மௌன ரகசியத்தை உபதேசித்த குருநாதனே!

வழியிலே அரி (பாம்புகள்) (அல்லது குரங்குகள்) உலவும் பயங்கரமான **அண்ணாமலை** மகா நகரத்தில் இனிமை தரும் **கிழக்குக் கோபுரத்தில்** உறைபவனே!

ஏழு உலகளவும் அளாவி நிற்கும் மலையுடன் (மேருவுடன்) மாறுபட்டுப் பொருது- பெரிய மலைகள் எட்டையும் (அஷ்டகிரிகளையும்) ஊடுருவும்படியாக வேலாயுதத்தைச் செலுத்தின பெருமாளே!

(மயிலேறி யுற்று வரவேணும்)

---

*(198-ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

"சாரலின் ஏனம் மருப்புமும் சோண சைலனே"-சோணசைலமாலை-14

"கட்செவியும் ஒண் கேழலின் மருப்பும் சார்தரும் உலக விளக்கெனும் சோணசைலனே" -ஷெ 24.

## 524 ஆண்டருள

தானதன தானத் தானதன தானத்
தானதன தானத் தனதான

ஆலவிழி நீலத் தாலதர பானத்
தாலளக பாரக் கொண்டலாலே-
ஆர நகை யால்விற் போர்நுதலி னால்வித்
தார நடை யால்நற் கொங்கையாலே;
சாலமய லாகிக் காலதிரி சூலத்
தாலிறுகு பாசத் துன்பமுழ்கித்-
தாழ்விலுயிர் வீழ்பட் டூழ்வினைவி டாமற்
சாவதன்மு **னேவற் கொண்டிடாயோ;**
சோலைதரு கானிற் கோலமற மானைத்
*தோளிலுற வாகக் கொண்டவாழ்வே -
சோதிமுரு காநித் தாபழய †ஞானச்
‡ **சோணகிரி வீதிக் கந்தவேளே;**
பாலகக லாபக் கோமளம யூரப்
பாகவுமை பாகத் தன்குமாரா-
பாதமலர் மீதிற் Xபோதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் தம்பிரானே(16)

---

* வள்ளியைத் தோளிற் கொண்டது: -

'மாதாம் ஓர்மினை எடுத்தே தான்வர' - திருப்புகழ் 714

"உரத்தோளிடத்திற் குறத்தேனை வைத்திட் டொளித் தோடும் வெற்றிக் குமரேசா"- திருப்புகழ் 534

† 'அன்பர்க்கு மெய்ஞ்ஞானச் சோதி விளைக்குமலை - துஞ்ஞானச் சந்தமலை' - அண்ணாமலை வெண்பா - 22.

‡ திருப்புகழ் 524, 525 அருணை வீதியில் இருக்கும் வேலவற் குரியன.

X போதமலர் - ஞானபூஜைமலர்; 'ஞானவாசம் வீசிப் ப்ரகாசியா நிற்ப. புட்பமாலை அணிவேனோ' - திருப்புகழ் 1211

ஞானபூஜை செய்வார்க்குக் கொல்லாமை, ஐம்பொறி அடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்பன அட்ட புட்பமாம் (எண்மலர்).

"ஞானநெறி நிற்றல் அர்ச்சனை ஓவற வுட்பூசனை செய்யில் உத்தமம்"- திருமந்திரம் 1849.

## 524.

நஞ்சு போன்ற கண்களாம் நீலோற்பல மலராலும், வாயிதழ் ஊறல் பருகுவதாலும், கூந்தற் பாரமாம் மேகத்தாலும்-

முத்துப்போன்ற பற்களாலும், வில்லைப்போன்ற போருக்கு உற்ற நெற்றியினாலும், (புருவத்தினாலும்), விரிவான (பலவித) நடையினாலும், நல்ல கொங்கையாலும் -

மிகவும் மோகம் கொண்டவனாய்க், காலனுடைய முத்தலைச் சூலத்தைக் (கண்டு), அவன் கட்டும் பாசக் கயிற்றினால் துன்பத்தில் ஆழ்ந்து -

அந்தத் துக்கத்தில் (தாழ்வில் - மனச்சோர்வில்) உயிர் வீழுதல் உற்று (உயிர் அழுங்கி), ஊழ்வினை விடாது தொடர்ந்து சாவதற்கு முன்பு (அடியேனை) ஆட்கொள்ள மாட்டாயோ!

சோலைகளைக் கொண்ட காட்டகத்தே அழகிய வேடர் குலத்து மான் போன்ற வள்ளியைத் தோளில் உறவுபூண்டு அணைந்து கொண்ட செல்வமே!

சோதி முருகனே! நித்தனே (என்றும் அழியாதவனே)! பழமையானதும், ஞானபூமியுமான திரு அண்ணாமலை வீதியில் வீற்றிருக்கும் கந்தவேளே!

குழந்தையே! தோகை நிறைந்த அழகிய மயிலை நடத்துபவனே! உமைபங்கனாம் சிவகுமரனே!

பாத தாமரையில் ஞானமலரை யிட்டு (அல்லது பாதமலர்மீது படும்படி பூவையிட்டுப்) பாடித் தொழுபவர்களுடைய தோழத் தம்பிரானே!

(ஏவற் கொண்டிடாயோ)

## 525. பிறப்பு இறப்பு அற

தானதன தானத் தானதன தானத்
தானதன தானத் தனதான

பேதகவி ரோதத் தோதகவி நோதப்
பேதையர்கு லாவைக் கண்டுமாலின்-

பேதைமையு றாமற் றேதமக லாமற்
பேதவுடல் பேணித் தென்படாதே;

*சாதகவி காரச் சாதலவை போகத்
தாழ்விலுயி ராகச் சிந்தையாலுன்-

தாரைவடி †வேலைச் சேவல்தனை யேனற்
சாரல்மற மானைச் சிந்தியேனோ;

‡போதகம யூரப் போதகக டாமற்
போதருணை வீதிக் கந்தவேளே-

Xபோதகக லாபக் கோதைமுது வானிற்
போனசிறை மீளச் சென்றவேலா;

பாதகப தாதிச் சூரன்முதல் வீழப்
பாருலகு வாழக் கண்டகோவே-

பாதமலர் மீதிற் போதமலர் தூவிப்
பாடுமவர் தோழத் தம்பிரானே (17)

---

* சாதக விகாரச் சாதல் - துன்பமான பிறப்பு இறப்பு.

† வேல், சேவல், வள்ளியம்மை - இவைதமைத் தியானிக்க வேண்டும் என்பது;

‡ போதக மயூர போது அக அகடு ஆ மன் போது - யானை, மயில் இவைகளின் மேல் மல ராசனமிட்ட மத்திய ஸ்தானத்திலெழுந்தருளி வருகின்ற; யானைவாகனம் - திருப்புகழ் 516 பார்க்க.

X போதக கலாப கோதை முது வான் - தெய்வயானையம்மை அவதரித்த முதிய விண்ணுலகம்.

## 525.

மனம் வேறுபாடு, பகைமை, வஞ்சகம் இவைதமைக் கொண்ட விசித்திரமான பேதையராம் மங்கையர்கள் மகிழ்ச்சியுடன் உறவாடுதலைக் கண்டு மோகத்தால் -

அறியாமை (மடமை) (உறா) உற்று - பூண்டு, மற்று ஏதம் அகலாமல் - அதனால் குற்றங்குறைகள் எனைவிட்டு நீங்காது, பேதம் (வேறுபாட்டினை - மாறுதலை அடையும்) இந்த உடலை விரும்பிப் பாதுகாத்து வெளியே உலவாமல் -

(சாதகம்) பிறப்பும், விகாரம் (பாலன், குமரன், கிழவன் என்னும்) வேறுபாடும், (சாதல்) இறப்பும் - ஆகிய இவை தொலைய, குறைவு இலாத உயிராக (என் உயிர்) விளங்க, மனத்தால் உனது -

(தாரை) கூர்மைகொண்ட, வடிவை உடைய (அல்லது மிகக் கூர்மையான வேலையும், கோழியையும், தினைப்புன மலைச்சாரலிலிருந்த வேடர் மான் வள்ளியையும் தியானிக்க மாட்டேனோ!

(போதகம்) யானை, மயில் இவைகளின்மேல் மலராசனம் இட்ட மத்தியஸ்தானத்தில் எழுந்தருளி வருகின்ற - **அண்ணாமலை வீதியில்** உள்ள கந்தவேளே!

(போதகம்) யானை ஐராவதம் வளர்த்த (கலாபக் கோதை) மயில்போன்ற தேவசேனை வாழ்ந்த பழைய விண்ணுலகத்தார்கள் சென்றிருந்த சிறையினின்றும் அவர்கள் மீளவேண்டிப் போருக்கு எழுந்த வேலனே!

பெரும் பாபச்செயல்களையே செய்த காலாட் படைகளை உடைய சூரன் முதலானோர் வீழ்ந்து மடியவும், மண்ணுலகும் விண்ணுலகும் வாழுமாறும் கருணைபுரிந்த தலைவனே!

(உனது) திருவடி மலரை நினைந்து ஞான பூசனை செய்து (உன் திருப்புகழைப்) பாடும் தொண்டர்களுடைய தோழத் தம்பிரானே!

(வேலை, சேவல் தனை, மறமானைச் சிந்தியேனோ)

## 526. வேசையர் மாயையிற் படாவகை

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தனதான

*அமுத முறுசொ லாகிய தோகையர்
பொருளு ளாரையெ னாணையு னாணையெ
னருகு வீடிது தானதில் †வாருமெ னுரைகூறும்-

அசடு மாதர் ‡கு வாதுசொல் கேடிகள்
தெருவின் மீதுXகு லாவியு லாவிகள்
அவர்கள் மாயை படாமல் கெடாமல்நி
னருள்தாராய்;

குமரி காளிவ ராகிம கேசுரி
கவுரி மோடிசு ராரிநி ராபரி
கொடிய சூலிசு டாரணி யாமளி மகமாயி-

குறளு ரூபமு ராரி சகோதரி
யுலக தாரி உதாரி பராபரி
குருப ராரிவி காரி நமோகரி அபிராமி;

சமர நீலிபு ராரித னாயகி
மலைகு மாரிக பாலிந னாரணி
சலில மாரிசி வாயம னோகரி பரையோகி-

---

*தேவி துதி நிறைந்த பாடல் இது.
† வாரும் என உரை கூறும்

‡ குவாது - குதர்க்கம்.

X குலாவி யுலாவி - படாமல் கெடாமல் - எனவரும் வழி எதுகை கண்டு களிக்கத்தக்கது.

## 526.

அமுதமே ஊறிவருவதுபோல இனிக்கும் சொற்களைக் கொண்ட மயிலனைய மாதர்கள், பொருள் உள்ள செல்வர்களை 'என்மேல் ஆணை' 'உம்மேல் ஆணை', (நீர் என்னை விட்டுப்போகக் கூடாது) (என் வீடு அருகு இதுதான்) என்வீடு சமீபத்தில் உள்ளதே இதுதான்; அங்கே வாரும் - என்று (உரைகூறும்) பேசுகின்ற

அசட்டு (மூடப்பெண்கள்}, குதர்க்கம் பேசும் கேடுறு-வோர், தெருவில் குலவி உலவுபவர்கள், அத்தகையோரது மாயை என்மீது தாக்காமலும், நான் கெடாமலும் இருக்க உனது திருவருளைத் தந்தருளுக.

குமரி, காளி, வராகி, மகேசுரி, கௌரி, மோடி, சுராரி நிராபரி - (சுரர்களுக்குத் - தேவர்களுக்குப் பகைவர்களான) அசுரர்களை முதன்மை இழக்கச் செய்பவள் - கீழ்ப்படுத்தினவள் - அல்லது - (சுராரி) தேவர்களுக்குக் கண் போன்றவள் (அல்லது தேவர்களின் பலமாய் நிற்பவள்), (நிராபரி) - பொய்யிலி - உக்ரமான சூலத்தை ஏந்தியவள், (சுடாரணி) ஒளிமயத்தவள், (யாமளி) சியாமள நிறம் (அல்லது) ஒருவகைப் பச்சை நிறத்தை உடையவள் - மகமாயி -

குறள்ரூபம் (வாமன ரூபம் - குட்டை உருவம்) கொண்ட (முராரி) திருமாலின் சகோதரி, உலகத்தைத் தரித்துப் புரப்பவள், உதார குணம் (தயாளகுணம்) உடையவள் (கொடையாளி), முதன்மை பூண்டவள், குருபரனாம் சிவனுக்குக் கண் போன்றவள், வேறுபாடுகளைப் பூணவல்லவள், வணங்கப்படுபவள், அழகுள்ளவள்} -

போர்வல்ல துர்க்கை, திரிபுரத்தை எரித்தவருடைய பத்தினி (தலைவி), (மலை) இமயமலையின் புதல்வி, கபாலம் ஏந்தினவள், நல்ல நாரணி, நீர்பொழியும் மழைபோன்றவள், சிவ சம்பந்தப்பட்டு விரும்பத்தக்கவள், பராசக்தி, யோகி -

சவுரி வீரிமு நீர்விட போஜனி
*திகிரி மேவுலக யாளி†செ யாளொரு
‡சகல வேதமு மாயின தாயுமை யருள்பாலா;
திமித மாடுசு ராரிநி சாசரர்
முடிகடோறுXக டாவியி டேயொரு
Oசிலப ஞ்சுகு ணாலிநி ணாமுண விடும்வேலா-
திருவு லாவுசொ ணேசர ணாமலை
முகிலு லாவுவி மானந வோநிலை
சிகர மீதுகு லாவியு லாவிய பெருமாளே (18)

## 527. கழல் பெற

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தனதான

உருகு மாமெழு காகவு மேமயல்
பெருகு மாசையு ளாகிய பேர்வரி
லுரிய மேடையில் வார்குழல் நீவிய வொளிமானார்-
உடைகொள் **மேகலை யால்முலை மூடியும்
நெகிழ நாடிய தோதக மாடியு
முவமை மாமயில் போல்நிற மேனிய ருரையாடுங்;
கரவ தாமன மாதர்கள் நீள்வலை
கலக வாரியில் வீழடி யேநெறி
கருதொ ணாவதி பாதக னேசம தறியாத-

---

* திகிரிமேவு கையாள் - திருமால் அம்சம் - கையிற் சக்கரம்
"தயங்கு கவுத்துவமோ பூண் தனிச்சோதிச் சக்கரமே
- தக்கயாகப்பரணி 116, 165.
"வெங்கட் பணியணைமேல் துயில்கூரும் விழுப்பொருளே
- அபிராமி அந்தாதி - 35
† "பிங்கலை நீலி செய்யாள் வெளியாள் பசும் பெண் கொடியே'
- அபிராமி அந்தாதி 21.
‡ "எழுதா மறையின் ஒன்றும் அரும்பொருளே" - ஷை -10
"மறையாய் மறைப் பொருளாய்.... இடம் பிரியா எம்பிராட்டி"
-திருவிளையாடல் - தடாதகை - 42
X கடாவி யிடேய் - கடாவி யிட்டு ஏய்.
O குணாலி நிணாம் உண - குணலையிட்டு நிணம் உண்ண
** மேகலை- ஆடை.

சௌரியம் (பராக்ரமம்) உள்ளவள், வீரம் உள்ளவள், கடல் விஷத்தை உண்டவள், சக்கரம் ஏந்திய திருக்கரத்தை உடையவள், இலக்குமி, ஒப்பற்ற எல்லா வேதமுமாய் நிறைந்த தாய், உமை, ( ஆகிய பார்வதி) அருளிய குழந்தையே!

பேரொலி செய்து போராடின தேவர்களின் பகைவர்-களாம் அரக்கர்களுடைய முடிகள்தோறும் (ஆயுதங்கள்) படும்படிச் செலுத்திவைத்து - அங்குக்கூடிப் பொருந்திய ஒரு சில பசாசுகள் குணலையிட்டு (ஆரவாரத்துடன் கூத்தாடி) மாமிசங்களை உண்ணும்படி விட்ட வேலனே!

லக்ஷ்மீகரம் விளங்கும் சோணேசரது **அண்ணா-மலையில்** மேகம் உலவும் (விமானம்) கோயிலில் (அல்லது) (கோபுரத்தில்) ஒன்பது நிலைகளைக் கோபுரத்தின் உச்சியில் விளக்கமுற்று உலாவின பெருமாளே.

*(மாயை படாமல் நின் அருள் தாராய்)*

## 527.

உருகி ஒழுகும் நல்ல மெழுகுபோல மோகம் விருத்தியாகும் காமத்தில் உட்பட்ட பேர்வழிகள் வந்தால் - நல்ல மெத்தை மேடையில் (தளத்தில்) இருந்து (தமது) நீண்ட கூந்தலை வாரிக்கொள்ளும் அழகிய மாதர்கள் -

உடையாகக் கொண்டுள்ள மேல் ஆடையால் கொங்கைகளை மூடியும், (அந்த) ஆடை நெகிழ்வதற்கு வேண்டிய ஜாலவித்தைகள் ஆடியும், உவமை கூறப்படும் சிறந்த மயில்போன்ற ஒளி கொண்ட மேனியர், பேசுவதிலேயே

ஒளிப்பு (மறைவு) அமைந்த மனமுடைய மாதர்கள், (ஆகிய பொதுமகளிரின்) பெரிய வலையாகிய கலக (சச்சரவுக்) கடலில் வீழ்கின்ற அடியேன், நன்னெறியைக் கருதமாட்டாத அதிபாதகன், நேசம் (அன்பென்பதையே) அறியாத

கசட மூடனை யாளவு மேயருள்
கருணை வாரிதி யேயிரு நாயகி
கணவ னேயுன தாளிணை மாமலர் தருவாயே;

சுருதி மாமொழி வேதியன் வானவர்
பரவு கேசனை யாயுத பாணிநல்
துளப மாலையை மார்பணி மாயவன் மருகோனே;

தொலைவி லாவசு ரேசர்க ளானவர்
துகள தாகவு மேயெதி ராடிடு
சுடரின் வேலவ னேயுல கேழ்வலம் வருவோனே;

*அருணர் கோடியி னாரொளி வீசிய
தருண வாண்முக மேனிய னேயர
னனையு நாயகி பாலக னேநிறை கலையோனே-

அணிபொன் மேருயர் கோபுர மாமதி
லதிரு மாரண வாரண வீதியு
ளருணை மாநகர் மேவியு லாவிய
பெருமாளே (19)

## 528. மகளிர் மயக்கு அற

தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன தந்ததான

கரியுரி அரவ மணிந்த மேனியர்
கலைமதி சலமு நிறைந்த வேணியர்
கனல்மழு வுழையு மமர்ந்த பாணியர் கஞ்சமாதின்-

கனமுலை பருகி வளர்ந்த காமனை
முனிபவர் கயிலை யமர்ந்த காரணர்
கதிர்விரி மணிபொ னிறைந்த தோளினர்
கண்டகாள;

* "சதகோடி சூரியர்கள் உதயமென"......சீர்பாத வகுப்பு.

குற்றமுள்ள மூடனை ஆட்கொள்ள அருளிய (ஆண்டருளிய) கருணைக் கடலே! (வள்ளி - தேவசேனை என்னும்) இரு நாயகிமார்களின் கணவனே! உன்னுடைய தாளிணைகளாம் சிறந்த மலர்களைத் தந்தருளுக.

வேதங்களின் சிறந்த மொழிகளை ஓதும் அந்தணனாம் பிரமனும், தேவர்களும் போற்றுகின்ற கேசன் (கேசவன்)- ஐ ஆயுதபாணி (சங்கம், சக்கரம், கதை, (வில்) சார்ங்கம், வாள் (கட்கம்) என்ற ஐவகை - ஆயுதங்களைத் திருக்கரத்திற் கொண்டவன், நல்ல துளவமாலையை மார்பில் அணிந்துள்ள மாயவன் - ஆகிய திருமாலின் மருமகனே!

அழிவிலாத அசுரர் தலைவர்களான (தாரகன் - சிங்கமுகன் - சூரன்) பொடியாம்படி எதிர்த்துப் போர் புரிந்த ஒளிவீசும் வேலாயுதனே! உலகு ஏழையும் வலம் வந்தவனே!

சூரியர்கள் கோடிக் கணக்கானவர்களின் சுடர்வீசும் இளமை ஒளி விளங்கும் முகங்கொண்ட மேனியனே! சிவபிரான் அணையும் தேவி (பார்வதியின்) குழந்தையே! நிறைந்த கலைப் புலவனே!

அழகிய பொன்மலை மேருபோல் உயர்ந்த கோபுரம், பெரியமதில், ஒலிபெருகும் வேதவீதி - வேதஒலி முழக்கும் வீதி), யானைகள் செல்லும்வீதி இவைகள் உள்ள **அண்ணாமலை** மாநகரில் விரும்பி உலவும் பெருமாளே!

*(தாளிணை மாமலர் தருவாயே)*

## 528.

யானையின் உரித்த தோலையும் பாம்பையும் அணிந்த மேனியர், கலைகள்கொண்ட (ஒளிகொண்ட) திங்களும் கங்கையும் நிறைந்த சடையினர், நெருப்பையும், மழு ஆயுதத்தையும் (பரசையும்), மானையும் ஏந்திய கையினர் - தாமரையில் வாசம் செய்யும் மாது - இலக்குமியின் -

பருத்த கொங்கையின் பாலை உண்டு வளர்ந்த மன்மதனைக் காய்ந்தழித்தவர் (கோபித்தழித்தவர்), கயிலாயத்தில் அமர்ந்துள்ள மூலப்பொருளானவர், ஒளி பரப்பும் ரத்னமும் பொன்னும் நிறைந்த தோளை உடையவர் ஆகிய சிவனது கழுத்தில் (உள்ள) விஷத்தின்-

வரிவென *வுனது ளுகந்த வேலென
மிகவிரு குழையு மடர்ந்து வேளினை
யனையவ ருயிரை விழுங்கி மேலும்வெ குண்டுநாடும்-

வினைவிழி மகளிர் தனங்கள் மார்புற
விதமிகு கலவி பொருந்தி மேனியு
மெழில்கெட நினைவு மழிந்து மாய்வதொ
ழிந்திடாதோ;

எரிசொரி விழியு மிரண்டு வாளெயி
றிருபிறை சயில மிரண்டு தோள்முகி
லெனவரு மசுரர் சிரங்கள் மேருவி டிந்துவீழ்வ-

தெனவிழ முதுகு பிளந்து காளிக
ளிடுபலி யெனவு நடந்து தாள்தொழ
எதிர்பொரு துதிர முகந்த வேகமு கைந்தவேலா;

அரிகரி யுழுவை யடர்ந்த வாண்மலை
அருணையி லறவு முயர்ந்த கோபுர
மதினுறை குமர அநந்த வேதமொ ழிந்துவாழும்-

அறுமுக வடிவை யொழிந்து வேடர்கள்
அடவியி லரிவை குயங்கள் தோய்புய
அரியர பிரம புரந்த ராதியர் தம்பிரானே. (20)

## 529. பெண்கள் மீதுள்ள மயக்கு அற

தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன தந்ததான

† கனைகடல் வயிறுகு ழம்பி வாய்விட
வடதம னியகிரி கம்ப மாய்நட
கணபண விபரித கந்த காளபு யங்கராஜன்-

---

* உனது உள் உகந்த வேல் முருகர் வேலாயுதப் ப்ரியர்; "வேலை மறவாத கரதலா".....திருப்புகழ் 1050.

† கடல் கடைந்தது -பாட்டு 509 - பார்க்க.

விரிவோ இது என்னும்படியும், உனது உள்ளத்துக்கு உகந்த வேலாயுதமோ இது என்னும்படியும், மிகவும் இரண்டு காதணி குழைகளையும் நெருங்கி, மன்மதனொத்த அழகுள்ள புருடர்களின் உயிரையே விழுங்கியும், பின்னும் கோபித்தும், நாடுகின்ற

செயலினை உடைய கண்களை உடைய மாதர்களின் கொங்கைகள் மார்பிற் பொருந்த, விதமிகு (பலவிதமான) காமலீலைகளிற் பொருந்தி, மேனியும் அழகை இழக்கவும், நினைவு அழிந்தும் இறந்துபோகும் (விதி) தொலையாதோ!

நெருப்பினை வீசும் கண்கள் இரண்டுடனும், (இருபிறை வாளெயிறு) இரண்டு பிறைபோன்ற ஒளிவீசும் பற்களுடனும், மலை யிரண்டு போன்ற தோள்களுடனும் (கரிய) மேகம் வருவதுபோல வரும் அசுரர்களின் தலைகள் மேருமலை இடிந்து வீழ்வது

போல விழ, முதுகு பிளவுபட, (ரணகளத்துக்) காளிகள் தமக்கு இட்ட பலி உணவு என்று நடந்து உனது பாதங்களைத் தொழ, எதிர்த்துப் போர்புரிந்து (அசுரர்களின்) ரத்தத்தை விரும்பின வேகத்துடன் சென்ற வேலாயுதனே!

சிங்கம் (அல்லது பாம்பு, பன்றி, குரங்கு), யானை, புலி இவைகள் நெருங்கியுள்ள ஒளிவீசும் மலையாம் திருவண்ணா-மலையில் மிகவும் உயர்ந்த கோபுரத்தில் வீற்றிருக்கும் குமரனே! அளவிலாத வேதங்கள் போற்ற வாழும்

ஆறுமுக வடிவை விட்டு விட்டு, வேடர்களின் காட்டில் (இருந்த) பெண் (வள்ளியின்) கொங்கைகளைச் சேரும் புயங்களை உடையவனே! திருமால், சிவன், பிரமன்! இந்திரன் முதலானோர் (ஆகிய இவர்தம்) தம்பிரானே

(கலவி பொருந்தி... மாய்வ தொழிந்திடாதோ)

## 529.

ஒலிக்கின்ற கடலின் உட்புறம் எல்லாம் குழப்பங் கொண்டு (வாய்விட) கலங்கி வெளிப்பட, வடக்கில் உள்ள பொன்மலை (மேரு) அமையும்படி (மத்தாக) நட்டுக், கூட்டமான படங்களை உடைய விபரீதமான (அதிசயிக்கத் தக்க) நாற்றமுள்ள விஷத்தைக் கொண்ட நாகராஜன் (ஆதிசேடன்)-

கயிறென அமரர நந்த கோடியு
முறைமுறை யழுதுக டைந்த நாளொரு
கதியற வுலகைவி ழுங்கு மேகவொ ழுங்குபோல;

வினைமத கரிகளு மெண்டி சாமுக
கிரிகளு முறுகிட அண்ட கோளகை
வெடிபட எவரையும் விஞ்சி வேலிடு நஞ்சுபோல-

விடுகுழை யளவும ளந்து காமுக
ருயிர்பலி கவர்வுறு பஞ்ச பாதக
விழிவலை மகளிரொ டன்பு கூர்வதொ
ழிந்திடாதோ;

முனைபெற வளையஅ ணைந்த *மோகர
நிசிசரர் கடகமு றிந்து தூளெழ
முகிலென வுருவமி ருண்ட தாருக னஞ்சமீன-

முழுகிய திமிரத ரங்க சாகர
முறையிட இமையவர் தங்க ளூர்புக
முதுகிரி யுருவமு னிந்த சேவக
செம்பொன்மேரு;

அனையன கனவித சண்ட கோபுர
அருணையி லுறையும ருந்து ணாமுலை
அபிநவ வனிதைத ருங்கு மாரநெ
ருங்குமால்கொண்-

டடவியில் வடிவுக ரந்து போயொரு
குறமகள் பிறகுதி ரிந்த காமுக
அரியர பிரமபு ரந்த ராதியர் தம்பிரானே (21)

* மோகரம் - பேராரவாரம். 'மோகர துந்துமி ஆர்ப்ப' -திருப்புகழ் 364

(கடையுங்) கயிறாக, தேவர்கள் பலகோடியும் (கூடி) முறை முறையாக (வரிசை வரிசையாக) அமுதம் கடைந்த அந்த நாளில் (பிழைக்கும்வழி ஒன்றும் இல்லாத வகையில் உலகையே விழுங்க வந்த கரிய மேகத்தின் வரிசைபோலச் (எழுந்து)-

செயலாற்றும் மதயானைகளும் (அஷ்ட கஜங்களும்), எட்டுத் திசைகளிலும் உள்ள மலைகளும், சூடேறி காந்திப் போய்க் கரிநிறங்கொள்ள, அண்ட உருண்டை வெடிபட, யாரையும் மேலிட்டு அடக்கி, வேல் போலப் பரந்துவரும் விஷம்போலத் -

தொங்கும் குழை வரையிலும் நீண்டு, காமங் கொண்டவர்களுடைய உயிரை உண்ணக் கவர்வதும், பஞ்ச பாதகங்களுக்கும் இடந் தருவதுமான கண் என்னும் வலையைக்கொண்ட மாதர்கள்மீது காதல் மிகுவது - (மிகும் குணம்) என்னைவிட்டு விலகாதா!

போர்க்களத்தே இடம் பெற்று வளைவாக அணைந்த பேராரவாரம் செயும் (அல்லது உக்ரம் கொண்ட) அசுரர்களின் சேனை முறிபட்டுப் பொடியாகவும், மேகம்போல உருவம் (கறுத்த) தாரகாசுரன் அஞ்சும்படி, மீன்கள் -

உள்ளதும், இருண்டதும், அலைவீசுவதுமான கடல் கலங்கி முறையிட, தேவர்கள் தங்கள் ஊர் போய்ச்சேரப், பழைய (கிரவுஞ்ச) கிரியில் (வேல்) ஊடுருவிச் செல்லக் கோபித்த பராக்கிரமசாலியே! செம்பொன் மேருமலைக்கு

ஒப்பான பருமைகொண்ட வலிய கோபுரங்களை உடைய திருவண்ணாமலையில் வீற்றிருக்கும் (அருந்து - உண்ணாத) பிடித்துப் பருகுதல் இல்லாததான கொங்கையை உடைய என்றும் புதியவளாம் மாது (பார்வதி) ஈன்ற குமரனே! அடர்ந்து பொருந்திய ஆசை கொண்டு -

காட்டில் தனது உண்மை உருவை மறைத்துச் சென்று ஒரு குறப்பெண் (வள்ளியின்) பின்பே திரிந்த காமுகனே (காமப் பித்தனே)! திருமால், பிரமன், இந்திரனாதிய தேவர்களுக்குத் தம்பிரானே!

(மகளிரொ டன்பு கூர்வ தொழிந்திடாதோ)

## 530. கழலைக் கருத

தனதன தனனம் தனதன தனனம்
தனதன தனனம் தனதான

இரவியு மதியுந் தெரிவுற எழுமம்
புவிதனி லினமொன் றிடுமாதும்-
எழில்புதல் வருநின் றழுதுள முருகும்
மிடர்கொடு *நடலம் பலகூறக்;

கருகிய வுருவங் கொடுகனல் விழிகொண்
டுயிரினை நமனுங் கருதாமுன்
கலைகொடு பலதுன் பமுமக லிடநின்
**கழலிணை கருதும் படிபாராய்;**

திருமரு வியதிண் புயனயன் விரியெண்
டிசைகிடு கிடவந் திடுசூரன்-
திணிபுய மதுசிந் திடஅலை கடலஞ்
சிடவலி யொடுகன் றிடும்வேலா;

அருமறை யவரந் தரமுறை பவரன்
புடையவ ருயஅன் றறமேவும்-
அரிவையு மொருபங் கிடமுடை யவர்தங்
**கருணை**யி லுறையும் பெருமாளே (22)

## 531. கழல் தொழ

தனதன தனனம் தனதன தனனம்
தனதன தனனம் தனதான

விரகொடு வளைசங் கடமது தருவெம்
† பிணிகொடு விழிவெங் கனல்போல-
வெறிகொடு சமனின் றுயிர்கொளு நெறியின்
றெனவிதி வழிவந் திடுபோதிற்;

கரவட மதுபொங் கிடுமன மொடுமங்
கையருற வினர்கண் புனல்பாயுங்

---

*நடலம் - துன்பமொழி.
† பிணி - பாசக்கயிறு.

## 530.

சூரியனும் சந்திரனும் தெரியும்படி தோன்றிவரும் (இப்) பூமியில் சுற்றமாகப் பொருந்திவரும் (மாதும்) மனைவியும் -

அழகிய மக்களும் நின்று அழுது உள்ளம் உருகும் படியான வருத்தத்துடன் துன்பமொழிகள் பல சொல்ல -

கறுத்த உருவத்துடனும் நெருப்பு வீசும் கண்ணுடனும் (என்) உயிரைக் காலனும் பிடிக்கக் கருதி வருவதற்கு முன்பாக -

படித்த நூற்படிப்புடன் பல துன்பங்களும் நீங்க உனது திருவடியிணைகளை (நான்) தியானிக்கும்படி கண்பார்த்தருளுக.

லக்ஷ்மி பொருந்திய திண்ணிய (வலிய) புயத்தவனாம் (திருமால்), பிரமன், பரந்த எண் திசையிலுள்ளோர் (யாவரும்) (கிடுகிட) நடுநடுங்க வந்த சூரனுடைய

வலிமை வாய்ந்த புயங்கள் அறுபட்டு விழ, அலைவீசும் கடல் அஞ்ச (பயப்பட), வலிமையுடன் கோபித்த வேலனே!

(அருமறையவர்) அரிய வேதங்கள் வல்லவர்களும், (அந்தரம் உறைபவர்) வானில் உறையும் தேவர்களும் அன்புடைய அடியார்களும், (உய) பிழைக்கும் வண்ணம் அன்று (முப்பத்திரண்டு) அறங்களை விரும்பிச் செய்த

(தேவி) பார்வதியை, ஒரு பாகத்தில், இடப்பக்கத்தில்-கொண்டவரான சிவபிரான் (தங்கு) வீற்றிருக்கும் திரு **வண்ணாமலையில் வீற்றிருக்கும் பெருமாளே!**

(நின் கழலிணை கருதும் படிபாராய்)

## 531.

சாமர்த்தியத்துடனே சூழ்ந்து துன்பத்தைத் தரக்கூடிய கொடிய பாசக்கயிற்றைக் கொண்டு, கண்கள் தீய நெருப்புப் போல

(வெறி கொடு) கோபத்துடனே யமன் ஆய்ந்து உயிரைக் கொள்ளவேண்டிய முறைநாள் இன்று எனத் தேர்ந்து, விதியின் ஏற்பாட்டின்படி வந்திடும் அந்த சமயத்தில் -

களவு - வஞ்சகம் மிகுந்த மனத்துடனே மாதர்கள், சுற்றத்தார்கள் கண்களில் நீர் பாய்கின்ற -

மறமக ளமுத புளகித களப
வளரிள முலையைம ணந்தமார்பா;
அடலணி விகட மரகத மயிலி
லழகுட னருணையி னின்றகோவே-
அருமறை விததி முறைமுறை பகரு
மரியர பிரமர்கள் தம்பிரானே (24)

## 533. கழல் நிழலுற

தனதன தனனா தனதன தனனா
தனதன தனனா தனதான

கெஜநடை மடவார் வசமதி லுருகா
கிலெசம துறுபாழ் வினையாலே-
கெதிபெற நினையா துதிதனை யறியா
கெடுசுக மதிலாழ் மதியாலே;
தசையது மருவி வசையுட லுடனே
தரணியில் மிகவே யுலைவேனோ-
சததள மலர்வார் புணைநின கழலார்
தருநிழல் புகவே தருவாயே;
திசைமுக வனைநீள் சிறையுற விடுவாய்
திருநெடு கருமால் மருகோனே-
திரிபுர தகனா ரிடமதில் மகிழ்வார்
திரிபுரை யருள்சீர் முருகோனே;
நிசிசர ருறைமா கிரியிரு பிளவா
நிறையயில் முடுகா விடுவோனே
நிலமிசை புகழார் தலமெனு *மருணா
நெடுமதில் வடசார் பெருமாளே (25)

---

*திருவண்ணாமலையில் வடக்குவீதி ஒன்றில் 'ஆறுமுகசுவாமி கோயில்' ஒன்று உளது. இப்பாடல் அந்த முருகவேளுக்கு உரியது போலும். 'அருணாபுரிசேர் நெடிதாமதில் சூழ் அணிபால் வடசார் பெருமாளே' என இவ்வாண்டில் (1953) அருட்கவி சேதுராமனார் இந்தப் பிரானைப் பாடியுள்ளார்.

வேடர்மகளின் அமுதமும் புளகிதமும் கொண்ட, சந்தனக்கலவை பூசப்பட்ட, வளர்ந்துள்ள, இளமை வாய்ந்த, கொங்கையை அணைந்த மார்பனே!

வலிமையும், அலங்காரமும், அழகும், பச்சைநிறமும் கொண்ட மயிலில் அழகுடன் திரு **அண்ணாமலையில்** வீற்றிருக்கும் தலைவனே!

அரிய வேதங்களின் தொகுதி (கூட்டம்) முறை முறையாக ஓதுகின்ற திருமால், அரன், பிரமன் ஆதிய இம் மூவர்க்கும் தம்பிரானே!

*(தனிமலர் அணையில் நலங்கலாமோ)*

# 533.

(பெண்) யானையின் நடையைக் கொண்ட மாதர்களுக்கு வசப்பட்டு உருகி, வருத்தம் தருகின்ற பாழான வினைப்பயனால்-

(நற்) கதியைப் பெறுதற்கு நினையாமலும், (உன்னைத்) துதிப்பதை அறியாமலும், அழிவைத்தரும் சுகத்தில் (சிற்றின்பத்தில்) ஆழ்ந்துபோகின்ற அறிவாம்-

சதைகொண்டதும், பழிப்பான பேச்சு இடமானதுமான உடலுடன் (அல்லது - சதைகூடியதான, (அழிந்து போவதான), வசை பழிக்கத்தக்கதான உடலுடன்)- இப்பூமியில் மிகவும் அலைவேனோ (அல்லது அழிவேனோ)

நூற்றிதழ்த் தாமரை யன்னதும், பிறவிக்கடலைத் தாண்டப் பெரிய தெப்பம் போன்றதுமான உன்னுடைய திருவடி நிரம்பத் தருகின்ற நிழலிற் சேர (அல்லது உன்னுடைய) திருவடியாம் மர நிழலிற் சேர) அருள் தருவாயே!

பிரமனைப் பெரிய சிறையிற் புக வைத்தவனே! அழகிய பெரிய கரிய திருமாலுக்கு மருகனே!

திரிபுரத்தை எரித்தவருடைய இடது பாகத்தில் மகிழ்ந்திருக்கும் பார்வதி அருளிய சிறப்புற்ற குழந்தையே!

அசுரர்கள் இருந்த பெரிய கிரவுஞ்சமலை இரண்டு பிளவு ஆகும்படி (நிறை) மாட்சிமை அல்லது நீதிவாய்ந்த வேலாயுதத்தை வேகத்துடன் செலுத்தினவனே!

பூமியில் புகழ் நிறைந்த தலம் எனப் பேர்பெற்ற **அருணாசலத்தில்** (திருவண்ணாமலையில்) பெரிய மதிலின் வட புறத்தே (வீற்றிருக்கும்) பெருமாளே!

*(தரணியில் மிகவே உலைவேனோ)*

## 534. கலை ஞானம் பெற

தனத்தா தனத்தத் தனத்தா தனத்தத்
தனத்தா தனத்தத் தனதான

அருக்கார் நலத்தைத் திரிப்பார் மனத்துக்
கடுத்தாசை பற்றித் தளராதே-
அடற்கா லனுக்குக் *கடைக்கால் மிதித்திட்
டறப்பே தகப்பட் டழியாதே;

† கருக்காரர் நட்பைப் பெருக்கா சரித்துக்
கலிச்சா கரத்திற் பிறவாதே-
கருத்தா லெனக்குத் திருத்தா ளளித்துக்
**கலைப்போ தகத்தைப் புகல்வாயே;**

ஒருக்கால் நினைத்திட் ‡ டிருக்கால் மிகுத்திட்
டுரைப்பார்கள் சித்தத் துறைவோனே-
Xஉரத்தோ ளிடத்திற் குறத்தேனை வைத்திட்
டொளித்தோடும் வெற்றிக் குமரேசா;

செருக்கா தருக்கிச் Oசுரச்சூர் நெருக்கச்
செருச்சூர் மரிக்கப் பொரும்வேலா-
திறப்பூ தலத்திற் றிரட் **சோண வெற்பிற்
றிருக்கோ புரத்திற் பெருமாளே (26)

---

*கடைக்கால் மிதித்திட்டு - அடிப்படை கோலி

† கருக்காரர் பிறவிக்கேதுவாகும் செய்கையோர்.

‡ இருக் கால் - இரண்டு திருவடிகளையும்; "நெஞ்சில் ஒரு கால் நினைக்கில் இருகாலும் தோன்றும் முருகாஎன் றோதுவார் முன்" -முருகாற்றுப்படை...தனி வெண்பா. இனி, இருக்கு மந்திரங் களால் ஓதுதல் எனலுமாம். சம்பந்தப் பெருமான் திருவாக்காகிய தேவாரத்தைத் "தென்னூல் சிவபத்தி ருக்கு ஐயம் போக உரைத்தோன்" என்றார்; அவர் அருளிய தேவாரம் "இருக்கு வேதம்" ஆதலால் அவரை "இருக்குமொழிப் பிள்ளையார்" -என்றார் சேக்கிழார் பெரியபுரா....ஞானசம் - 80.

X திருப்புகழ் - 524 714 - பார்க்க.

O சுரச் சூர் நெருக்கு....சுரர்களாகிய தெய்வத்தன்மையோரை ஒடுக்கிய.

** சோண வெற்பு என்பது திருவண்ணாமலை

# 534.

(அருக்கு) அருமை வாய்ந்த (உடல்) நலத்தைக் கெடுப்பவர்களாம் (பொதுமகளிருடைய) மனத்துக்கு ஒத்த (இயைந்த) (மனதுக்கு இன்பந் தருதற்கு வேண்டிய) ஆசைகொண்டு தளர்ச்சி யடையாமலும்-

வலிமை வாய்ந்த காலனுக்கு (காலன் என் உயிரைக் கொள்வதற்கு வேண்டிய) அடிப்படையைக் கோலி - அதனால் - மிகவும் மனம் வேறுபாடு அடைந்து அழியாமலும்-

பிறவிக்கு ஏதுவாகும் செய்கையோரது நட்பை மிகவும் (கொண்டாடிக்) கைக்கொண்டு, கலிபுருஷனுக்கு இடமாம் (பிறவிக்) கடலிற் பிறவாமலும்-

நீ என்மீது மனம் வைத்து (எனக்கு உனது) திருத்தாளைத்தந்து கலைஞானத்தையும் உபதேசிப்பாயாக.

ஒருமுறை உன்னைத் தியானித்து உனது இரண்டு திருவடிகளையும் நிரம்ப உரைப்பவர்களுடைய (அல்லது இருக்கால் - வேதமந்திரங்களால் - நிரம்ப ஓதுபவர்களுடைய) உள்ளத்தில் உறைபவனே!

வலிமை பொருந்திய தோளிலே குறத்தேனை (வள்ளியை) எடுத்துக்கொண்டு மறைந்து ஓடின வெற்றி பொருந்திய குமரேசனே!

ஆணவங்கொண்டு கர்வங்கொண்டு; (சுரச்சூர்) சுரர்களாகிய தெய்வத்தன்மையோரை, (நெருக்கு) ஒடுக்கிய - அந்த போருக்குவந்த - சூரன் இறக்கப் போர் செய்த வேலனே!

நிலைபெற்ற இப் பூமியில் (தீ யுருவாகத்) திரண்ட திரு **அண்ணாமலையில்** திருக்கோபுரத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(கலைப் போதகத்தைப் புகல்வாயே)

## 535. நரகிற் புகுதாதபடி

தனனா தனனத் தனனா தனனத்
தனனா தனனத் தனதான

அருமா மதனைப் பிரியா தசரக்
கயலார் நயனக் கொடியார்தம்-
அழகார் புளகப் புழுகார் சயிலத்
தணையா வலிகெட் டுடல்தாழ;
இருமா நடைபுக் குரைபோ யுணர்வற்
றிளையா வுளமுக் குயிர்சோர-
*எரிவாய் நரகிற் புகுதா தபடிக்
கிருபா தமெனக் கருள்வாயே;
ஒருமால் வரையைச் சிறுதூள் படவிட்
டுரமோ டெறிபொற் கதிர்வேலா-
உறைமா னடவிக் குறமா மகளுக்
குருகா திருபொற் புயவீரா;
†திருமால் கமலப் பிரமா விழியிற்
றெரியா வரனுக் கரியோனே-
செழுநீர் வயல்சுற் றருணா புரியிற்
றிருவீ தியினிற் பெருமாளே (27)

## 536. பிறவியற

தனதனா தானனத் தனதனா தானனத்
தனதனா தானனத் தனதான

‡ அழுதுமா வாவெனத் தொழுதுமூ டூடுநெக்
கவசமா யாதரக் கடலூடுற்-

---

* எரிவாய் நரகம் - 'கும்பி பாகம்' எனப்படும்: இது ஏழு நரகங்களுள் ஒன்று; ஏழு நரகங்கள்:- கூடசாலம். கும்பிபாகம், அள்ளல், அதோகதி, ஆர்வம், பூதி, செந்து (பிங்கலம்) பாவஞ் செய்தவரைக் குயச் சூளையிற் சுடுவதுபோல் வாட்டும் நரகம் - கும்பி பாகம்.

†திருமால், பிரமா இருவர்க்கும் அண்ண முடியாமையால் அம்மலை "அண்ணா" - மலை எனப் பெயர் பெற்றது. இறைவனது சோதி உருவமே திருவண்ணாமலை - பாடம் 319-பக்கம் 292-பார்க்க.

(தொடர்ச்சி பக்கம் 223 - பார்க்க)

## 535.

அரிய அழகிய மன்மதனைப் பிரியாத (சரம்) பாணங்கள் போலவும், கயல்மீன் போலவும் உள்ள கண்களை உடைய (கொடியிடைப்) பெண்களின் (அல்லது பொல்லாதவர்களாம் பொதுமகளிரின்)

அழகிய புளகாங்கிதம் கொண்ட புனுகுசட்ட வாசனை பூண்ட மலையன்ன கொங்கைகளை அணைந்து, என்து வலிமை அழிந்து, உடல் நலிய,

இருமலிற்படும் (நடை) தன்மை (நிலை) வந்துசேரப், பேச்சு அற்று, உணர்வும் போய், இளைத்து, உள்ளம் (உக்கு) மெலிந்து, உயிர் சோர்வுற்று,

எரிகொளும் நரகத்தில் புகாதவண்ணம் (உனது) இருதாளை எனக்கு அருள் தந்து உதவுக.

ஒப்பற்ற பெரிய (அல்லது மாயைகள் செய்த) கிரவுஞ்சகிரியை சிறு தூளாகும்படிச் செய்து, பலத்துடன் செலுத்தின அழகிய ஒளிவாய்ந்த வேலனே!

உறை மான் அடவி (மான் உறை அடவி) - மான்கள் இருந்த காட்டில் குறமகள் வள்ளிக்கு உருகின பன்னிரு புயவீரனே!

திருமால் தாமரையில் வீற்றிருக்கும் பிரமன் இவர்கள் இருவர் கண்களும் காணப்பெறாத சிவனுக்கும் அருமை வாய்ந்தவனே!

செழுமை வாய்ந்த நீர் வயல்கள் சூழ்ந்துள்ள திரு **அண்ணாமலை ஊரில்** அழகிய **வீதியில்** வீற்றிருக்கும் பெருமாளே!

## 536.

அழுதும், ஆவா என இரங்கித் தொழுதும் அப்போதைக்கப்போது (பத்தியால்) நெகிழ்ந்து, தன் வசமற்று, (ஆதரம்) அன்பு என்னும் கடலில் திளைத்து-

---

"என்னிகர் எவரும் இல்லென் றிருவரும் இகலும் எல்லை
அன்னவர் நடுவு தோன்றி அடிமுடி தெரியா தாகி
உன்னினர் தங்கட் கெல்லாம் ஒல்லையின் முத்தி நல்கித்
தன்னிக ரின்றி நின்ற தழற்பொருஞ் சயிலம் கண்டான்"

*(கந்தபுராணம் 1-23-11)*

‡ இப் பாடல் (536) - மனப்பாடத்துக்கு தக்க பாடல்.

(தொடர்ச்சி பக்கம் 224 - பார்க்க)

றமைவில்கோ லாகலச் சமயமா பாதகர்க்
கறியொணா மோனமுத் திரைநாடிப்;
பிழைபடா ஞான மெய்ப் பொருள்பெறா தேவினைப்
பெரியஆ தேசபுற் புதமாய-
**பிறவிவா** ராகரச் **சுழியிலே** போய்விழப்
**பெறுவதோ** நானினிப் புகல்வாயே;
பழைய பா கீரதிப் படுகை மேல் வாழ்வெனப்
படியு *மா றாயினத் †தனசாரம்-
பருகுமா றானனச் சிறுவ **சோ** **ணாசலப்**
பரமமா யூரவித் தகவேளே;
‡பொழுதுசூழ் போதுவெற் பிடிபடா பார்முதற்
பொடிபடா வோடமுத் தெறிமீனப்-
புணரிகோ கோவெனச் சுருதிகோ கோவெனப்
பொருதவே லாயுதப் பெருமாளே (28)

## 537. கழல் பெற

தானதனத் தானதனத் தானதனத் தானதனத்
தானதனத் தானதனத் தனதானா

ஆனைவரிக் கோடிளநிர்ப் பாரமுலைச் சாரசைபட்
டாடைமறைத் தாடுமலர்க் குழலார்கள்-

---

அழுது - தொழுது - நெக்கு - அவசமாதல் - முதிர்ந்த பத்திக்கு அறிகுறி. "நெக்கு நெக்குள் உருகி உருகி அழுதும் தொழுதும் வாழ்த்தி"- திருவாசகம் - புணர்ச்சி - 8.

---

* ஆறு ஆய் - (கார்த்திகை மாதர்களாகிய) ஆறு தாய்மார்.

† தன சாரம் - முலைப் பால்
தாய்மார் அறுவர் முலைப்பால் உண்டது:-
அறுமீன் முலையுண் டழுது விளையாடி" - கந்தர்கலி வெண்பா.
"கிர்த்திகையர் அறுவரும் எடுக்க அவ ரொருவ ரொரு
வர்க்கவனொ ரோர்புத்ர னானவனும்" - வேடிச்சி காவலன் வகுப்பு
அறுமுக ஒருவன் வேறாய் அறுசிறார் உருவங் கொண்டான்"
-கந்தபுரா - திருஅவதார - 116.

‡ கிரவுஞ்சம் மாலைவேளையில் பொடிபட் டழிந்தது. வேலின் வெம்மையால் கடல் கலங்கி வற்றியது. பார் பொடிபட்டது; "கிரவுஞ்சத்திற் சேர்ந்துபட் டுருவிச் சென்று...மீண்டது" "கலக்கம் எய்தி....அஞ்சி ஓடினன் இரவி என்போன்" "கூர்வேல் வெற்பினை அட்டகாலை.... வற்றிய கடல்கள்" "இரவியில் இரவி செல்ல" (தொடர்ச்சி பக்கம் 225 - பார்க்க)

ஆறுதல் (சாந்தம்) இல்லாத ஆடம்பரமயமான சமயவாதப் பாதகர்களுக்கு அறிதற்கு முடியாத மௌனக் குறியைத்தேடி-

தவறுதலிலாத ஞான மெய்ப் பொருளை (நான்) அடையாமலே, வினைக்கு ஈடான பெரிய திரிபு (வேறுபாடு) அடையும் நீர்க் குமிழிபோல நிலையிலாத மாயமான-

பிறவி என்கின்ற (வாராகரம்) - கடலின்நீர்ச் சுழியிலே போய் விழக் கடவேனோ நான் இனி - சொல்லியருளுக.

பழைய கங்கை யென்னும் நீர்நிலைப் படுக்கையின்மேல் செல்வக் குமரர்களாய்த் தோன்றிக் கார்த்திகை மாதர்களாகிய ஆறு தாய்மார்களின் (தனசாரம்) முலைப்பாலை-

உண்ட ஆறு திருமுகங்கள் கொண்ட குழந்தையே! திரு **அண்ணாமலைப்** பரமனே! மயில்வாகனனே! ஞான மூர்த்தியாம் வேளே!

பொழுது போம் சமயத்தே (அந்த வேளையில்) கிரவுஞ்சம் பொடிபட, பூமி முதலியவை பொடிபட்டோடத் (தூளெழுந்தோட), முத்துக்களை வீசுவதும் மீன்களைக் கொண்டதுவுமான

கடல் கோ கோ என முறையிட, வேதங்கள் கோ கோ என்று முறையிடச் சண்டை செய்த வேலாயுதப் பெருமாளே!

(பிறவிச் சுழியிலே விழப் பெறுவதோ நான்)

## 537.

ஆனையின் கோடுகள் உள்ள தந்தத்தையும், இளநீரையும் நிகர்த்து, பாரமுள்ளதான கொங்கையைச் சார்ந்து அசைகின்ற பட்டாடையால் மறைத்துஆடும் மலரணிந்த கூந்தலுடையவர்கள் -

---

"செங்கதிர் மறைந்து போனான்" - கந்தபுரா I-20-185, 189, 192, 21-2, 3.
"கீழுறு பிலமும் பாரும் பிளந்தன வரைகள் யாவும் பிதிர்ந்தன"
"செற்றிய பூழியீட்டம்" கந்தபுரா I-20-190, 192.

ஆரவடத் தோடலையப் பேசி நகைத் தாசைபொருட்
டாரையுமெத் தாகமயக் கிடுமோகர்;
சோனை *மழைப் பாரவிழித் தோகைமயிற் சாதியர்கைத்
தூதுவிடுத் தேபொருளைப் பறிமாதர்-

தோதகமுற் †றேழ்நரகிற் சேருமழற் காயனையுட்
சோதியொளிப் பாதமளித் தருள்வாயே;
தான தனத் தீதிமிலைப் பேரிகைகொட் டா‡சமலைச்
சாயகடற் சூரைவதைத் திடுவோனே-

தாளவியற் சோதிநிறக் காலினெழக் கோலியெடுத்
தாபரம்வைத் தாடுபவர்க் கொருசேயே;
தேனிரசக் கோவையிதழ்ப் பூவைகுறப் பாவைதனத்
தேயுருகிச் சேருமணிக் கதிர்வேலா-
சீரருணைக் கோபுரமுற் றானபுனத் தோகையுமெய்த்
தேவமகட் கோர்கருணைப் பெருமாளே (29)

---

* மழை - கூந்தலுக்கு உவமை - "மழை யொக்கும் வடித்த கூந்தல்" - கம்ப - ராமா - மாரீசன் 70.

† ஏழ் நரகு - 535-கீழ்க்குறிப்பைப் பார்க்க.

‡ சம் - நன்றாக; சமலை - அழுக்கு - எனப் பொருள் கொண்டால் (உலக) அழுக்குகள் ஒழிய எனப் பொருள்படும்.

முத்துமாலையும் தோடும் மிக அசைய (அல்லது முத்துமாலையொடு மிக அசையப்) பேசியும், நகைத்தும், (ஆசை) பொன், பொருட்டு - வேண்டி, யாரையும் வஞ்சனையுடன் மயக்குவிக்கும் காமிகள்-

(சோனைமழை) விடாமழைபோல் அடர்ந்த கூந்தற் பாரமும் கண்பார்வையும் கொண்டு கலாப மயில்போன்ற ஜாதியர். (கை) தம் இடத்தே உள்ள தூதாள்களை அனுப்பிப் பொருளைப் பறிக்கின்ற மாதர்கள் ஆகிய பொதுமகளிரின்

வஞ்சகத்திற் பட்டு, ஏழ்நரகிற் சேருதற்கு உற்ற (என்னை), (அழற்காயனை) தீக்கு இரையாகும் உடலெடுத்த என்னை, (உட்சோதி ஒளி) - சோதி உள் ஒளி - ஜோதியுட் சோதியாய் விளங்கும் உனது திருவடியைத் தந்து அருள்புரிக.

தானதனத்தீ என முழங்கும் (திமிலை) - பறைவகை, (பேரிகை) முரசு, இவை ஒலிசெய்ய, (சம் மலை சாய) - நன்றாகக் கிரவுஞ்சமலை (அல்லது எழுகிரி) அழியக் கடலில் நின்ற சூரனை வதைத்தவனே!

தாளத்தின் இலக்கண விளக்கமானது ஒளிபொருந்திய தனது திருவடியின் மூலம் உண்டாகும்படி (ஒரு) திருவடியைக் (கோலி) வளைத்து எடுத்தும், (ஒரு திருவடியைத்) (தாபரம்) பூமியில் வைத்தும் ஆடுகின்ற நடராஜப் பெருமானுக்கு ஒப்பற்ற பிள்ளையே!

தேனின் ரசம்போல இனிக்கும், கொவ்வைப்பழம் போலச் சிவந்த வாயிதழைக்கொண்ட நாகணவாய்ப்புள் போன்ற குறப்பாவை (வள்ளியின்) கொங்கைக்கே மனம் உருகி அவளிடம் சேர்ந்த அழகிய ஒளி வேலனே!

அழகிய அண்ணாமலைக் கோபுரத்தில் வீற்றிருந்து, உன் மனதுக்கு உகந்த தினைப்புன மயிலாம் (வள்ளிக்கும்), மெய்யன்பு கொண்டிருந்த தேவமகள் (தேவசேனைக்கும்) ஒப்பற்ற கருணையைக் காட்டிய பெருமாளே!

(பாதமளித் தருள்வாயே)

## 538. அகப் பொருள்

தனனத் தனதானன தனனத் தனதானன
தனனத் தனதானன தனதான

இடருக் கிடராகிய கொடுமைக் கணைமேல்வரு
மிறுதிச் சிறுகால்வரு மதனாலே-
இயலைத் தருகானக *முயலைத் தருமேனியி
லெரியைத் தருமாமதி நிலவாலே;

தொடரக் கொடுவாதையி லடையக் கரைமேலலை
தொலையத் தனிவீசிய கடலாலே
துணையற் றணிபூமல ரணையிற் றனியேனுயிர்
துவளத் தகுமோ **துயர்** **தொலையாதோ;**

வடபொற் குலமேருவின் முடுகிப் பொருசூரனை
மடியச் சுடஏவிய வடிவேலா-
மறவக் குலமாமொரு குறமெய்த் திருமாமகள்
மகிழப் புனமேவிய மயில்வீரா;

அடரப் படர்கேதகை மடலிற் றழைசேர்வய
**லருணைத்** **திருவீதியி** லுறைவோனே-
† அவனித் திருமா தொடு சிவனுக் கிமையாவிழி
அமரர்க் கரசாகிய பெருமாளே (30)

---

* முயலைத் தரு மேனி - முயற்களங்கத்தைக் காட்டும் வடிவம்.

† அவனித்திரு - 'மண்ணுலகோருக்குத் திருவே!' எனலுமாம். "திருவே என் செல்வமே" - அப்பர் தேவாரம். *(6-47-1).* திருமாது - பார்வதி. 'திருமாது வெகு ரூபி...சிவை' திருப்புகழ் *644;* 'திருமாதோடுறை கோயில் திருமாதைப் பாகம் வைத்து சம்பந்தர் I-3-3; 2-50-4;

இமையாவிழி அமரர் - "இமையாது விழித்த அமரர்" சிதம்பர மும்மணிக்கோவை - *20.* திருமாதொடு சிவனுக்கு இமையா விழியே எனக் கொண்டு பார்வதியும் சிவனும் பார்த்த கண் பார்த்தபடியே (கண் இமைக்காமல்) பார்க்கின்ற பொருளே - எனவும் பொருள் தொனிக்கும். சிவபிரானை 'இமையா முக்கண்...செல்வன்' எனத் திருமுருகாற்றுப்படை கூறும்.

# 538.

துன்பத்தின்மேல் துன்பம் தருவதான கொடிய (மன்மத) பாணங்களின்மேலே வந்து முடிவைத் (அழிதலைத்) தருவதான தென்றல்காற்று வீசிவருகின்ற அந்தக் காரணத்தாலும்-

தகுதியைக் கொண்டதும் காட்டகத்து முயல்போலுங் களங்கத்தினைக் கொண்டதுமான வடிவத்தில் நின்றும் நெருப்பினைவீசும் அழகிய சந்திரனுடைய ஒளியாலும்-

தொடர்ந்து - மேல் மேல்வந்து - கொடிய வேதனையை (நான்) அடையும்படி, கரையின்மேலே அலைகள் பட்டழிய அவைகளை ஒப்பற்ற விதத்தில் வீசுகின்ற கடலாலும்-

துணை எவருமின்றி, அலங்கரித்த அழகிய மலர்ப்படுக்கையில், தனியனாகிய எனது உயிர் வாடுதல் தகுமோ! என் துக்கம் ஒழியாதோ!

வடக்கே உள்ள பொன் செறிவுகொண்ட மேருமலை போல் விரைந்துசென்று சண்டை செய்த சூரன் இறந்துபோம் வகையிற் சுடும்படி அவன்மீது செலுத்தின கூரிய வேலனே!

வேடர் குலத்தவளாம் ஒப்பற்ற குறக்குலத்து, மெய்ம்மை திகழும் இலக்குமியின் சிறந்தமகள் (வள்ளி) மகிழும்படி அவளிருந்த தினைப்புனத்துக்கு விரும்பிச் சென்ற மயில் வீரனே!

நெருக்கமாய் வளர்ந்துள்ள தாழை மடலின் தழைகள் சேர்ந்துள்ள வயல்களை உடைய திரு **அண்ணாமலைத் திருவீதியில்** வீற்றிருப்பவனே!

அவனிக்கு - திருமாதுக்கு - சிவனுக்கு - இமையாவிழி அமரர்க்கு - அரசாகிய பெருமாளே! மண்ணுலகத்தார்க்கும் திருமாது - உமைக்கும், சிவனுக்கும் இமையாத விழிகளை உடைய விண்ணுலகத்தார்க்கும் - அரசனாகிய பெருமாளே!

(துயர் தொலையாதோ)

## 539. அகப் பொருள்

தனனாதன தானன தத்தம் தனதான

*இமராஜனி லாவதெ றிக்குங் கனலாலே-
இளவாடையு மூருமொ றுக்கும் படியாலே;
சமராகிய மாரனெ டுக்குங் கணையாலே-
† தனிமானுயிர் சோருமு தற்கொன் றருள்வாயே;
குமராமுரு கா ‡ சடி லத்தன் குருநாதா-
குறமாமக ளாசைத ணிக்குந் திருமார்பா;
X அமராவதி வாழ்வம ரர்க்கன் றருள்வோனே-
அருணாபுரி வீதியி னிற்கும் பெருமாளே (31)

## 540. விலைமாதரை விட்டொழிய

தனன தனதனன தனதான தத்த தனனா தனந்த
தனன தனதனன தனதான தத்த தனனா தனந்த
தனன தனதனன தனதான தத்த தனனா தனந்த
தனதனத் தனதான

O இரத சுரதமுலை களுமார்பு குத்த நுதல்வேர் வரும்ப
அமுத நிலையில்விர லுகிரேகை தைக்க மணிபோல் விளங்க
இசலி யிசலி ** யுப ரிதலீலை யுற்று இடைநூல் நுடங்க வுளமகிழ்ச் சியினோடே-
இருவ ருடலுமொரு வுருவாய் நயக்க முகமே லழுந்த
அளக மவிழவளை களுமேக லிக்க நயனார விந்த
லகரி பெருக அதரமுமே யருத்தி முறையே யருந்த உரையெழப் பரிவாலே

---

* இமகிரணன் என்பது சந்திரனுக்கு ஒரு பெயர். இமம் - பனி.

† காமங் கொண்டாரை வருத்துவன - பாடல் 218 பக்கம் 53பார்க்க.

‡ சடிலத்தன் - சடிலம் - சடை; சடையான்; சடில அத்தன் எனவும் பிரிக்கலாம். X அமராவதி - இந்திரன் ஊர்; பொன்னகர்.

O முதல் நான்கடி - புணர்ச்சி விவரிக்கும்.

'புல்லுதல் சுவைத்திடல் புணர் நகக்குறி, பல்லுறல் மத்தளம் பயிலுந் தாடனம், ஒல்லொலி கரணமோ டுவகை ஆகிய, எல்லையில் புணர்நிலைக் கியைந்த என்பவே' - கந்தபுராணம் 5-5-38.

* * "ஈரைம் பகுதியாற் பிறவாற் சேர்தல் உரைதரு புணர்ச்சியாகும் உபரியும் அனைய தொன்றே" - 5-5-39.

## 539.

இமராஜன் - பனிக்கு அரசனாகிய - நிலா - சந்திரன் வீசுகின்ற நெருப்பாலும்-

இளவாடை (மெல்லிய தென்றற்காற்றும்), ஊராரும் வருத்துகின்ற தன்மையாலும்

போர்க்கென எழுந்த மன்மதன் தொடுக்கும் (மலர்ப்) பாணங்களாலும்

தனித்துக் கிடக்கும் மானன்ன இப்பெண்ணின் உயிர் சோர்கின்றதே, அதற்கு ஒரு வழிகூறி அருளுவாயாக;

குமரனே! முருகனே! சடைமுடிப் பெருமானுக்குக் குருநாதனே!

குறவர்பெருமகள் வள்ளியின் ஆசையை நிறைவேற்றின அழகிய மார்பனே!

பொன்னுலக வாழ்வைத் தேவர்களுக்கு அன்று அருளியவனே!

**திருவண்ணாமலை வீதியில்** வீற்றிருக்கும் பெருமாளே.

(அருள்வாயே).

## 540.

சுவை கொண்டதும், புணர்ச்சியின்பம் தருவதுமான கொங்கைகள் மார்பில் அழுந்த, நெற்றியில் வேர்வை துளிர்க்க (தோன்ற), காமம் பெருகும் இடங்கண்டு அங்கு விரல் நகக்குறி தைக்க, ரத்னம்போல ஒளிபெருக, (இன்ப ஒளிமயமாய்), இசலி இசலி (மாறுபட்டு மாறுபட்டு அடிக்கடி பிணக்கு - ஊடல்கொண்டு, ஊடல்கொண்டு) உபரித லீலை - உபரி சுரதம் (மேல்விழும் புணர்ச்சி லீலைகளை விளையாடி, நூல்போலும் இடை துவள, உள்ளத்தில் களிப்புடனே-

இருவர் உடலும் ஒன்றுபட்டு ஓருருவாகி இன்பந்தர, முகம்மேலே அழுந்த, கூந்தல் அவிழ்ந்துவிழ, வளைகள் ஒலிக்க, கண் என்னும் (அரவிந்தம்) தாமரையில் (லகரி பெருக) - மயக்கம் பெருக - அதரபானம் (வாயிதழ் ஊறலை) ஆசைக்குத் தக்கபடி உண்ணவேண்டிய முறையில், உண்ண, பரிவால் உரையெழ - அன்பு காரணத்தால் (சில) சொற்கள் பேச,

புருவ நிமிரஇரு *கணவாள் † நிமைக்க வுபசார
மிஞ்ச
அவச கவசமள வியலே தரிக்க அதிலே யநந்த
புதுமை விளையஅது பரமா பரிக்க இணைதோளு
மொன்றி அதிசுகக் கலையாலே-
புளக முதிரவித கமென்வாரி தத்த வரைநாண் மழுங்க
மனமு மனமுமுரு கியெயா தரிக்க வுயிர்போ லுகந்து
பொருள தளவுமரு வுறுமாய வித்தை விலைமாதர்
கிங்சி; விடஅருட் புரிவாயே;
பரவு மகரமுக ரமுமேவ லுற்ற ‡சகரால் விளைந்த
தமர திமிரபிர பலமோக ரத்ந சலராசி கொண்ட
Xபடியை முழுதுமொரு நொடியே மதித்து வலமாக
வந்து சிவனிடத் தமர்சேயே-
பழநி மிசையிலிசை யிசையே ரகத்தில் திருவா வினன்கு
டியினில் பிரமபுர மதில்வாழ் திருத்த ணிகையுடு
Oமண்டர்
பதிய முதியகதி யதுநா யெனுக்கு முறவாகி
நின்று கவிதையைப் புனைவோனே;

---

* கண்வாள் என்பது கணவாள் என்றாயிற்று.

† நிமைக்க - இமைக்க.

‡ சகர் - சகரர் - சகரனுக்கு இரண்டாவது மனைவி சுமதியிடம் பிறந்த புத்திரர்கள்; இவர்கள் அறுபதினாயிரவர். சகரன் அசுவமேத யாகம் செய்து விடுத்த குதிரையை இந்திரன் பாதாளத்தில் தவஞ்செய்து கொண்டிருந்த கபிலருக்குப் பின்புறங் கட்டி மறைத்தான். குதிரையைத் தேடிவந்த சகரர் குதிரையைத் தடுத்தவர் கபிலர் என எண்ணி அவரை வருத்த, அவரது கோபத்தீயால் மாண்டனர். பின்னர் பகீரதனால் நற்கதி அடைந்தனர். சகரர் தோண்டினதால் உண்டானது சாகரம் (கடல்; "சகரர் தொட்டலாற் சாகரம் எனப் பெயர் தழைப்ப" (கம்ப ராமா - அகலிகை -43)

X உலகை வலம் வந்தது - திருப்புகழ் பாடல் 184- பக்கம் 430.

O அண்டர்பதி - அமராவதி அண்டர்பதிய - பழநி, ஏரகம், திரு ஆவினன்குடி, பிரமபுரம், திருத்தணிகை, அமராவதி என்னும் (பதிய!) தலங்களை உடையவனே! - எனப் பொருள் காணலாம் பழநி முதலிய தலங்களில் அண்டர்கள் தரிசனம் செய்யத்தங்குவது.

(1) பரவி இமையோர்சூழ நாடொறுமிசைந்து பழநிமலை மீதோர் பராபரன் இறைஞ்சு பெருமாளே - பாடல் *146.* (2) சுராதிபதி மால் அயனும் மாலொடு சலாமிடு சுவாமிமலை வாழும் பெருமாளே - பாடல் *207.* (3) இமையவர் பணி திருத்தணி பொற்பதி - பாடல் *303* (4) அண்டர்கள் தாமெச்சிய நீள் தணியம்பதி - பாடல் *311.*

புருவம் மேலெழ இருகண்களும் ஒளிவீசி இமைக்க, உபசார வார்த்தைகள் அதிகரிக்க, ஒருவித மயக்கம் தன்வசம் அழிதல் - கவசம்போல (மேற்போர்வை போன்ற அளவான தன்மையில் - உண்டாக - அப்போது கணக்கிடுதற்கரிய புதிய உணர்ச்சிகள் தோன்ற - அவ்வுணர்ச்சியை நன்றாக அனுபவிக்க இரு தோள்களும் ஒன்றிக் கலந்து அதிகமான சுகமாகிய அம்சத்தால் (பகுதியால்)-

புளகாங்கிதம் நிறையக், காமம் என்கின்ற (வாரி) கடல் ததும்பிப் பரவ, அரையில் (இடுப்பிற்) கட்டியுள்ள கயிறும் அரைநாணும் (அரை மணியும்) (மழுங்க) ஒளிகுறைந்து விலக, மனத்தோடு மனம் உருகி அன்பு மீக்கொள்ள உயிர்போல மகிழ்ந்து பாவித்துப், பொருள் கிட்டும் வரையில் கலந்து களிக்கும் மாயவித்தை வல்ல பொது மகளிரின் (சிங்கி) விஷச்சூழலை விட்டொழிக்க அருள் புரிவாயாக;

போற்றப்படுவதாய், மகரமீனும், (முகரமும்) சங்கும் கொண்டுள்ளதாய், சகரரால் உண்டானதாய், (தமரம்) பேரொலி உடையதாய், இருள் நிறத்ததாய், (பிரபல) பேர் போனதாய், வசீகரம் உள்ளதாய், (ரத்னம்) மணிகள் கொண்டதாய் உள்ள கடல் சூழ்ந்ததான பூமி முழுதும் ஒரு நொடிப்போதில் அளவிட்டு வலம்வந்து சிவபிரானிடத்தில் அமர்ந்த குழந்தையே!

பழநிமலை மீதும், சொல்லப்புகின் (இசை இசை) புகழொடு கூடிய ஏரகம் (சுவாமிமலையிலும்), திரு ஆவினன் குடியிலும், சீகாழியிலும், (என்றும் மங்கலமாய் நீ) வாழ்கின்ற திருத்தணிகையிலும், அண்டர்பதிய - (தேவர்களின்) அமராவதியிலும், உறைவிடம் கொண்டவனே! (அல்லது) அண்டர் - (தேவர்கள்) பதிய (உன்னைத் தரிசிக்கவந்து) அத்தலங்களில் தங்குதலைக் கொண்டவனே! முதிய கதியது - முதிய கதியானது - பழம் பொருளாம் வீட்டின்பமானது, நாயேனுக்கும் -அடிமைக்கும், உறவாகி நின்று கிட்டும்படியாக நின்று, (அடியேனுடைய பாமாலையை அணிந்து கொள்பவனே!

---

*(5) சேணாடு பரவி நாளும் ஈடேறு புகலி - பாடல் 769.*

*(6) இமையோர் புகுந்தீண்டி கந்தமாலை கொடுசேர் காழி -சம்பந்தர் 1-24-2.*

அரியு மயனுமம ரருமாய சிட்ட பரிபால னன்ப
ரடையு மிடரைமுடு கியெநூறதுட்ட கொலைகார
ரென்ற
அசுரர் படையையடை யவும்வே ரறுத்த அபிராம
செந்தி லுரகவெற் புடையோனே-
அருண கிரணகரு ணையபூர ணச்ச ரணமே லெழுந்த
இரண கரணமுர ணுறுசூர னுட்க மயிலேறு கந்த
*அருணை யிறையவர்பெ ரியகோபுரத்தில்
வடபாலமர்ந்த அறுமுகப் பெருமாளே. (32)

## 541. அருள் பெற

தனதனனத் தனதான

இரவு பகற் பலகாலும் - இயலிசைமுத் தமிழ்கூறித்;
திரமதனைத் தெளிவாகத் - **திருவருளைத்** **தருவாயே;**
பரகருணைப் பெருவாழ்வே - பரசிவதத் துவஞானா;
அரனருள்சற் புதல்வோனே - **அருணகிரிப்** பெருமாளே (33)

## 542. கிருபை பெற

தனன தனனா தனன தனனா
தனன தனனா தனதான

† இருவர் மயலோ அமளி விதமோ
எனென செயலோ அணுகாத-
‡ இருடி அயன்மா லமர ரடியா
ரிசையு மொலிதா னிவைகேளா;

---

*அருணை பெரிய கோபுரத்து வடபால் அமர்ந்த பெருமாள்- (கோபுரத்திளையனார்) - இவரே அருணகிரியாரை ஆட்கொண்ட மூர்த்தி - 'அடலருணைத் திருக் கோபுரத்தே யந்த வாயிலுக்கு வட அருகிற்....கண்டு கொண்டேன்' -கந்தரலங்காரம் (காப்பு); இங்கு அருணை அடல் திருக் கோபுரம் - (அடல் - வலிய) - பெரிய கோபுரம்" எனப் பொருள் காணவேண்டும்.

† 'உனை நங்களப்பா சரணம் என்று கூறல் உன் செவிக் கேறலை கொல் பெண்கள் மேற் பார்வையை கொல்' (திருப்புகழ் 613)..என்பதும் இக்கருத்ததே.

‡ 'பாம்பணைத் துயின்றோன் அயன் முதல்தேவர் பன்னெடுங் காலம் நிற் காண்பான் ஏம்பலித்திருக்க'..... திருவிசைப்பா (பூவணம்).

திருமாலும், பிரமனும், தேவர்களும் ஆன சிட்டர்களை (மேலோர்களைக்) காத்தளிப்பவனாய், அன்பர்களுக்கு வரும் வருத்தங்களை ஓட்டித் தூளாக்க, துஷ்டர்களான - கொலைகாரர்கள் எனப்படும் அசுரர்களுடைய சேனை முழுமையும் வேரறுத்த அழகனே! திருச்செந்தூர், (நாகமலை என்கின்ற) திருச்செங்கோடு - எனுந் (தலங்களை உடையவனே) தலங்களில் வீற்றிருப்பவனே!

செவ்விய ஒளிவீசுவதும், கருணை பூரணமாக நிறைந்ததுமான உனது திருவடியைப் பகைத்து மேலெதிர்த்து வந்த போர்மனம் கொண்டவனாய் மாறுபட்டெழுந்த சூரன் அஞ்சும்படி மயில்மீது ஏறிவந்த கந்தனே! திரு **அண்ணாமலையில்** சிவபிரானது (திருக்கோயிலின்) பெரிய கோபுரத்தில் வடக்குப் பக்கத்தே அமர்ந்துள்ள ஆறுமுகப் பெருமாளே!

(விலைமாதர் சிங்கிவிட அருட்புரிவாயே)

## 541.

இரவும் பகலும் பலமுறையும் - இயல், இசை, (நாடகம்) ஆகிய முத்தமிழாலும் (உன்னை) புகழ்ந்து பாடி -

நிலைத்தது எதுவோ அது எனக்குத் தெளிவுடன் விளங்க - உனது திருவருளைத் தருவாயே.

மேலான கருணையுடன் விளங்கும் பெருவாழ்வே! மேலான சிவமயமான உண்மையான (ஞானனே) ஞானப் பொருளே!

சிவபிரான் அருளிய நல்ல பிள்ளையே! திரு **அண்ணாமலைப்** பெருமாளே!

(திரு அருளைத் தருவாயே)

## 542.

இருவர் (தேவசேனை - வள்ளியம்மை) மீது கொண்ட ஆசையோ! வேறு உனது திருக்கோயிலில் நடக்கும் ஆரவாரங்களோ (அல்லது உனது பூம்படுக்கையில் நடக்கும் விசேடங்களோ) வேறு என்ன என்ன நிகழ்ச்சிகளோ - என்ன காரணமோ - அடியேனுக்குத் தெரியாது - உன்னை அணுக முடியாத-

முநிவர்கள், பிரமன், மால், தேவர்கள், அடியார்கள் - இவ்வளவு பேரும் முறையிட்டலறும் ஒலிகள் எனது செவியில் விழவில்லை; (அங்ஙனம் இருக்க)

தொருவ னடியே னலறு மொழிதா
னொருவர் பரிவாய் மொழிவாரோ
*உனது பததூள் புவன கிரிதா
னுனது கிருபா கரமேதோ;
பரம குருவா யணுவி லசைவாய்
† பவன முதலா கியபூதப்-
படையு முடையாய் ‡ சகல வடிவாய்
பழைய வடிவா கியவேலா;
Xஅரியு மயனோ டபய மெனவே
அயிலை யிருள்மேல் விடுவோனே-
Oஅடிமை கொடுநோய் பொடிகள் படவே
அருணை கிரிவாழ் பெருமாளே (34)

## 543. காட்சி அளிக்க.

தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தனதான

இருவினை யஞ்ச மலவகை மங்க
இருள்பிணி மங்க மயிலேறி-

---

* முருகவேளின் விசுவ ரூபத்தில் அவரது உள்ளடி (அடியின் உட்புறம்) தான் மலைகள் எல்லாம், "உள்ளடி வரைகள் யாவும்"-(கந்த புராணம் 4-13-423)

† "அஞ்சு பூதமு மார்த்த துடையதே" சம்பந்தர் 3-114-5.

‡ "சகல வடிவாய்ப் பழைய வடிவு".

"அழிவிலாத நம் பெரு வடிவம் கொள்வம் நன்கு கண்டிடுதி என்றான்" "கடல் உலகம் திக்கு,

மாறிலாப் புவனம் அண்டம் வானவர் உயிர்கள் யாவும்
ஆறுமாமுகத்து வள்ளல் மேனியில் அமைந்ததன்றி
வேறிலை என்ன ஆங்கோர் வியன்பெரு வடிவம் கொண்டான்"
"மாறிலா திருக்குந் தொல்லை ஒருதன துருவங் காட்டி
நிற்றலும் உம்பர் கண்டார்"

"யார்க்கும் மூலகாரணமாய் நின்ற மூர்த்தி இம் மூர்த்தி அன்றோ" - கந்த புராணம் - 4-13-421, 422, 427, 433.

X அரி அயன் அபயம் என வேலை இருள் மேல்விட்டது:

தேவர்களைத் தின்று உயிர் குடிப்பேன் என்று சூரன்கூறிப், பெரிய இருள் உருவம் கொண்டு வானிடைப் பாய்ந்தான். தேவர்கள் அஞ்சிப் 'பன்னிரு புயத்தாய் ஓலம், மூவருமாகி நின்ற

நான் - ஒருவன் அடியேன் (தன்னந்தனியனாய்) - இங்கு முறையிட்டலறும் மொழிகள் யாரேனும் ஒருவர் அன்புடன் (உன்னிடம்) வந்து தெரிவிப்பார்களோ (அறியேன் நான்)

(உனது விசுவரூபத்தில்) உனது திருவடித் தூசானது பூமியில் உள்ள மலைகள் ஆகும்; அத்தகைய பெரியோனே! உனது கிருபாகரம் (திருவருட்டன்மை) எத்தகையதோ - அறியேன்)

மேலான குருமூர்த்தியாய், அணுவிலும், அசைவு காட்டுபவனாய், (பவனம்) வாயு முதலான ஐம்பூதங்களாம்-

படையையும் (சேனைகளையும் - அல்லது ஆயுதங்களையும்) உடையவனே! சகல உருவாயும். பழைமையாக உள்ள உருவாயும், (பழமை முதல் புதுமைவரை உள்ள சகல வடிவமும்) ஆய் அமைந்த வேலனே!

திருமாலும், பிரமனும் அபயம் என்று உன்னிடம் ஓலமிட வேலாயுதத்தை இருள் வடிவம் எடுத்த அசுரன் சூரன்மீது செலுத்தியவனே!

(அடிமை) அடியேன்பட்ட பொல்லாநோய் தூளாமாறு (அருளி)த் திரு **வண்ணாமலையில்** வாழ்கின்ற பெருமாளே.

*(உனது கிருபாகரம் ஏதோ)*

## 543.

பெரிய வினைகள் (அல்லது நல்வினை - தீவினை இரண்டும்) அஞ்சி ஒழிய மலக்கூட்டங்கள் மங்கி அழிய, அஞ்ஞானமும், பிணிகளும் ஒடுங்க (நீ) மயிலேறி-

---

மூர்த்தியே ஓலம் ஓலம்' என முறையிட்டனர். இறைவன் உடனே வேலை அந்த இருள்மேல் ஏவ, இருள் உருவம் மாய்ந்து உடனே அழிந்தது.

"ஞாலமும் ககன முற்றும் மாயிருள் உருவங் கொண்டு மறைந்துநின் றார்க்க லுற்றான்."

"வானோர்...தலைத்தலை சிதறி, நில்லாத தோடினார்" "ஐய அங்கவன் உயிரை உண்டெம் மாவியை யருளுகென்றார்"

"வேலை சூரன் மேற் செல்லத் தொட்டான்"

"அவுணன் கொண்ட மாயிருள் உருவமுற்றும் வல்விரைந் தகன்ற தன்றே" (கந்தபுராணம் *4-13-456, 459, 462, 464, 465*)

○ இது அருணகிரியார் வரலாற்றைக் குறிக்கும்.

இனவரு ளன்பு மொழிய கடம்பு
வினதக முங்கொ டளிபாடக்;

கரிமுக னெம்பி முருகனெ னண்டர்
களிமலர் சிந்த அடியேன்முன்-

கருணை பொழிந்து முகமு மலர்ந்து
கடுகி நடங்கொ டருள்வாயே;

*திரிபுர மங்க மதனுடல் மங்க
திகழ்நகை கொண்ட விடையேறிச்-

† சிவம்வெளி யங்க ணருள் குடிகொண்டு
திகழ நடஞ்செய் தெமையீண'

அரசி யிடங்கொள் மழுவுடை யெந்தை
அமலன் மகிழ்ந்த குருநாதா;

அருணை விலங்கல் மகிழ்‡ குற மங்கை
அமளி நலங்கொள் பெருமாளே (35)

## 544. திருவடியை அடைய

தனதன தாந்த தந்த தனதன தாந்த தந்த
தனதன தாந்த தந்த தனதான

இருவினை யூண்ப சும்பை கருவிளைXகூன்கு டம்பை
யிடரடை பாழ்ம்பொ தும்ப கிதவாரி-

இடைதிரி சோங்கு கந்த மதுவது தேங்கு கும்ப
மிரவிடை தூங்கு கின்ற பிணநோவுக்;

---

*திரிபுரம் மதனுடல் இருவரும் அழியச் சிரித்தது. திரிபுரம் எரியச் சிரித்தது பாட்டு 285 - பக்கம் 206; மதன் எரியச் சிரித்தது - பாட்டு 288. பக்கம் 216.

† வெளியில் நடம், 'உருவிலாத பாழில் வெட்ட வெளியிலாடு நாத நிர்த்த' பாட்டு 442 - பக்கம் 610.

‡ "இரு மங்கை அமளி நலங்கொள்வதை....பாடல் 885 காண்க"

X கூன்.....பாத்திரம்...."குருதி சாறெனப் பாய்வது குரைகடற் கூனில்"....கம்பரா.....கிங்கர. 40

அருள் சம்பந்தமான அன்பு சம்பந்தமான மொழிகளைக் கூற, கடம்புவின் அதகமும் கொ(ண்)டு அளிபாட - உனது கடப்பமலராம் (அதகம் - உயிர்தரு மருந்தைக்) கொண்டு வண்டுகள் பாட-

யானைமுகப் பெருமான் என் தம்பியே, முருக என (அன்புடன் அழைக்க)த் தேவர்கள் மகிழ்ச்சியுடன் மலர் பொழிய, அடியேன் எதிரே

கருணை மிக மிக்கு, முகம் மலர்ந்து, வேகமாக நடனத்துடன் வந்து அருள்புரிவாயாக;

திரிபுரம் அழிய, மன்மதனது உடல் அழிய, விளங்கும் சிரிப்பைக்கொண்ட (சிரித்த) (விடை ஏறியாம்) இடபவாகனராம்

சிவபிரான், ப்ராகாசமான வெட்டவெளியிலே திருவருளுடன் வீற்றிருந்து, எங்கும் விளக்கம் உற நடனம் செய்து. என்னை (ஈன்ற) பெற்ற

தேவி (பார்வதி)யை இடது பாகத்தில் ஏற்றுக் கொண்ட மழு (பரசு) ஆயுதத்தை ஏந்திய எந்தை, மாசற்றவன், மகிழ்ந்த குருநாதனே!

திரு **அண்ணாமலை** மலையில் மகிழும் குறமங்கை (வள்ளி)யின் படுக்கை இன்பத்தை அனுபவிக்கும் பெருமாளே!

(நடங்கொ டருள்வாயே)

## 544.

இரு வினைகளுக்கும் உணவிடமான பச்சைப் பை - புதிய பை; கரு வளருவதற்கு இடமான கூன் (பாத்திரம்), குடம்பை (கூடு) (அல்லது கூன் - வளைவு உள்ள கூடு); துன்பங்களையே அடைத்து வைத்துள்ளதும் பாழடையப் போவதுமான (பொதும்பு) - குழி அல்லது குகை; அகித வாரி இதம் இன்மை (இனிமை, நன்மை - இல்லாமை) துன்பமும் தீமையும் கொண்ட கடலின்-

நடுவே திரிகின்ற (சோங்கு) மரக்கலம்; கந்தம் (இந்திரியங்களில்) மது (ருசி) தேங்கு (நிறைந்துள்ள) கும்பம் - குடம் (அல்லது, கந்தம் - கந்தம் - மலச்சேறும், மது - நீரும் நிரம்பிய இடம்); இரவிலே தூங்குகின்ற பிணம் போன்ற நோயினுக்கு

குருவியல் பாண்ட மஞ்சு மருவிய கூண்டு *நெஞ்சொ
டுயிர்குடி போங்கு ரம்பை யழியாதென்-

றுலகுட னேன்று கொண்ட கருமபி ராந்தொழிந்து
னுபயம் தாம்பு யங்க ளடைவேனோ;

அருணையி லோங்கு துங்க சிகர† க ராம்பு யங்க
ளமரர் குழாங்கு விந்து தொழவாழும்-

அடியவர் பாங்க பண்டு புக‡ லகி லாண்ட முண்ட
அபிநவ சார்ங்க கண்டன் மருகோனே;

கருணைXம்ரு கேந்த்ர அன்ப ருடனுர கேந்த்ரர் கண்ட
கடவுள்ந டேந்த்ரர் மைந்த வரைசாடுங்-

கலபக கேந்த்ர தந்த்ர அரசநி சேந்த்ர கந்த
கரகுலி சேந்த்ரர் தங்கள் பெருமாளே (36)

## 545. திருவடியை மறவேன்

தனதனன தனதனன தான தத்த தந்த
தனதனன தனதனன தான தத்த தந்த
தனதனன தனதனன தான தத்த தந்த தனதான

இருளளக மவிழமதி போத முத்த ரும்ப
இலகுகயல் புரளஇரு பார பொற்ற னங்கள்
இளகஇடை துவளவளை பூச லிட்டி ரங்க
எவராலும்-

* நெஞ்சு குடி போவது....மனம்.எண்ணங்கள் குடிபோவது அழிவது;

† கராம்புயங்கள் குவிதல் - கை கூப்பித் தொழுதல்-
'கரங் குவிவார் உண்மகிழும் கோன் கழல்கள் வெல்க'
-திருவாசகம் - சிவபுராணம்

‡ அண்டம் உண்டது - பாட்டு 267-பக்கம் - 164 பார்க்க.

X தில்லை நடராஜப் பெருமானது ஆடல் வியாக்ரபாதர் - பதஞ்சலி - என்ற இருவர் காணும் பொருட்டே ஆடப்பட்டது.

"பதஞ்சலி புலிக்காலண்ணல் இருவரும் உணர்வாற் காண எல்லையில் அருளால் ஈசன் திருநட இயற்கைகாட்டும் தில்லை மூதூர்" - கந்த புராணம் - I-23-14.

உருவாய் அமைந்த பாத்திரம்; அஞ்சு (ஐம்பூதங்களும் அல்லது ஐம்பொறிகளும் பொருந்தி உள்ள கூடு; மனத்துடனே உயிரும் (உடலைவிட்டு) வெளியேறும் (குரம்பை) சிறுகுடில், அழியாமல் நிலைத்து நிற்குமென்று-

உலகத்தாருடன் நான் கொண்டுள்ள வினைப்பயனால் வரும் மயக்கம் (ஒழிந்து) நீங்கப்பெற்று உனது இரண்டு பாத தாமரைகளை அடையும் பாக்கியத்தைப் பெறுவேனோ!

திரு **அண்ணாமலையில்** உயர்ந்து ஓங்கின பரிசுத்த-மான, (சிகரம்) கோபுர (வாயிலில்) வீற்றிருப்பவனே! கராம்புயங்கள் அமரர் குழாம் குவிந்து (அமரர் குழாம் கராம் புயங்கள் குவிந்து) - தேவர்களின் கூட்டங்கள் தமது தாமரையன்ன கரங்களை (கைகளை)க் கூப்பித் தொழ வாழ்கின்ற-

அடியவர் தோழனே! முன்பு ஒரு காலத்தில் சொல்லப் படுகின்ற அகில அண்டங்களையும் உண்ட புதுமை வாய்ந்த சாரங்கம் என்னும் வில்லை ஏந்திய (கண்டன்) வீரனாம் திருமாலின் மருமகனே!

கருணை நிறைந்த மிருகசிரேஷ்டரான அன்பர் - புலிக்கால்கொண்ட **வியாக்ரபாதருடன்,** உரகேந்த்ரர் - சர்ப்ப சிரேஷ்டராம் **பதஞ்சலி** தரிசித்த கடவுளாம் நடராஜப் பெருமானுடைய குமாரனே! மலைகளைத் தூளாக்கும்-

தோகை உடைய பக்ஷி சிரேஷ்டனாம் மயில் வாகனனே! நூல்கள் வல்லவனே! அரசே! உண்மையிற் சிறந்தவனே (சத்திய சிரேஷ்டனே)! கந்தனே! குலிச கர இந்திரர் - குலிசாயுதத்தை (வஜ்ராயுதத்தைக்) கையிற் கொண்ட தேவேந்திரர்களுக்குப் பெருமாளே!

(உன் உபய பதாம்புயங்கள் அடைவேனோ)

# 545.

இருண்ட கரிய கூந்தல் அவிழ, சந்திரன் போன்ற முகத்தில் உண்டான முத்துப்போன்ற வேர்வை வெளித் தோன்ற, விளங்கும் கயல்மீன் போன்ற கண்கள் புரள, இரண்டு பாரமான கொங்கைகள் நெகிழ்ச்சியுற, இடை துவட்சியுற, (கை) வளையல்கள் ஒன்றோடொன்று மோதி ஒலிக்க, யாராலும்

எழுதரிய கலைநெகிழ ஆசை மெத்த வுந்தி
யினியசுழி மடுவினிடை மூழ்கி நட்பொ டந்த
இதழமுது பருகியுயிர் தேக மொத்தி ருந்து
முனிவாறி;

முருகுகமழ் மலரமளி மீதி னிற்பு குந்து
முகவனச மலர்குவிய மோக முற்ற ழிந்து
மொழிபதற வசமழிய ஆசை யிற்க விழ்ந்து
விடுபோதும்-

முழுதுணர வுடையமுது மாத வத்து யர்ந்த
பழுதில்மறை பயிலுவள னாத ரித்து நின்று
முநிவர்சுரர் தொழுதுருகு **பாத பத்ம மென்று**
**மறவேனே;**

*ஒருசிறுவன் மணமதுசெய் போதி லெய்த்து வந்து
கிழவடிவு கொடுமுடுகி வாச லிற்பு குந்து
உலகறிய இவனடிமை யாமெ னக்கொ ணர்ந்து
சபையூடே-

ஒருபழைய சருகுமடி ஆவ ணத்தை யன்று
உரமொடவ னதுவலிய வேகி ழிக்க நின்று
உதறிமுறை யிடுபழைய வேத வித்தர் தந்த
சிறியோனே;

---

* சிறுவன் - சுந்தரமூர்த்தி சுவாமிகள்,இவருடைய திருமண வாசலிற் சிவபிரான் ஒரு கிழ வேதியரின் வடிவுகொண்டுவந்து - "சுந்தரா! நீ என் அடிமை! என் உத்தரவு இல்லாமல் எப்படி மணஞ்செய இருந்தாய்! இதோபார் உனது பாட்டனார் எழுதித்தந்த அடிமைச் சீட்டு" எனக் கூறித் திருமணத்தைத் தடைசெய்யச் சுந்தரர் கோபித்து எழுந்து ஏ! பித்தா! ஒரு அந்தணன் மற்றொரு அந்தணனுக்கு அடிமை ஆவதுண்டா' எனக் கூறி அந்த ஓலைச் சீட்டைப் பற்றிக் கிழித்தெறிந்தனர். கிழவர் - ஹா ஹா என்று கூவிச் சுந்தரரைத் திருவெண்ணெய் நல்லூரிலுள்ள நியாயவாதிகளிடம் கொண்டுபோய் நிறுத்திக், கிழிபட்டது நகல் ஓலை, மூல ஓலை இதோ பாருங்கள் எனக்கூற, அவ் வந்தணர்கள் கையெழுத்தைப் பரிசோதித்து ஒற்றுமை கண்டு. சுந்தரா! இந்த ஓலையில் உள்ள எழுத்து உன் பாட்டனாருடையதே! நீ அடிமை புரிய வேண்டியதே- எனத் தீர்ப்பளித்தார்கள். பின்பு கிழவேதியரை இந்த ஊரில் உங்கள் வீடு, மனை, மக்கள் எங்கே என வினவ, வேதியர் 'காட்டுகின்றேன் வாருங்கள்' என முன் செல்லச் சுந்தரர் முதலானோர் பின் சென்றனர். வேதியர் திருக்கோயிலுள் நுழைந்ததும் மறைந்தனர். சுந்தரருக்கு ஞானம் பிறந்து என் அப்பனே! நீயே இவ் வேடத்துடன் வந்து அடிமையைத் தடுத்தாட் கொண்டாய் எனக் கூறி விம்மி விம்மி அழ, இறைவன் அவருக்குக் காட்சிதந்து என்னைப் 'பித்தா'

எழுதுதற்கு முடியாததான (ஆடை) தளர்ச்சியுற, ஆசை அதிகரிக்கக், கொப்பூழாகிய இனிமைதரும் சுழிபோன்ற மடுவில் (நீர் நிலையிலே)முழுகி, நட்பு பூண்டு, அந்த வாயிதழ்களின் அமுதத்தை உண்டு, உயிரும் தேகமும் ஒன்றுபோல ஒத்திருந்து, கோபம் வெறுப்பு எல்லாம் தணிந்து-

நறுமணம் வீசும் மலர்ப் படுக்கையின் மீது படுத்து, முகமெனும் தாமரைமலர் சுருங்க, காம ஆசைகொண்டு, அதில் அழிந்து, சொற்கள் பதற (தடுமாற), தன் வசம் கெட்டழிய, அந்த ஆசையிலேயே கவிழ்ந்து முழுகிவிட்ட சமயத்திலும் கூட-

எல்லாம் உணரும்படியாக அடைந்துள்ள முற்றின மகா தவநிலையிலும்; உயர்ந்ததும் குற்றமிலாததுமான வேதத்திலும் நெருங்கி விளங்குவன என்று விரும்பிப் போற்றிசெய்து நின்று முநிவர்களும் தேவர்களும் வணங்கி உருகும் (உனது) பாத தாமரைகளை (நான்) என்றும் மறக்க மாட்டேன்.

ஒப்பற்ற சிறுவனுடைய (நம்பியாரூரன் என்கிற சுந்தரனுடைய) மணச்சடங்கு நடக்கும்போது, இளைப்புடன் வந்து (அல்லது நடக்கிறதென்று அறிந்துவந்து), கிழ உருவம் கொண்டு வேகமாக முன்வந்து, (மண) வாசலிற் புகுந்து, உலகோர் யாவரும் அறிய - இந்தச் சிறுவன் (எனக்கு) அடிமையாம் என ஒரு சீட்டை எடுத்துவந்து சபையோர்களின் மத்தியிலே-

ஒரு பழைய, ஓலையில் எழுதப்பட்டு மடித்து - (சுருட்டி)-வைத்திருந்த பத்திரம் ஒன்றை, வலிவுடன் அந்தச் சிறுவன் வேணுமென்றே பற்றிக் கிழித்தெறிய, அப்போது கைகால்களை உதறிக்கொண்டு இது முறையோ என்று கூச்சலிட்ட பழையவரும், வேதத்தை நன்கறிந்த முதல்வருமான சிவபிரான் தந்த குழந்தையே!

---

என்றாய்; எனக்கு உகந்தது பாமாலை; நீ 'பித்தா' எனத் தொடங்கிப் பதிகம் பாடுவாயாக' எனக் கூறி மறைந்தனர்; பின்பு சுந்தரரும் அந்த ஆணையைத் தலைமேற்கொண்டு பித்தா பிறை சூடி பெருமானே அருளாளா!....அத்தா உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனலாமே' - எனப் பாடிக் கசிந்து உருகினர்; பின்பு தலந்தோறும் சென்று பதிகம் பாடி ஈற்றிற் கயிலையை அடைந்தனர். இங்ஙனம் சுந்தரரை இறைவன் தடுத்தாட்கொண்ட வரலாற்றை அருணகிரியார் இங்கு அருமையாகக் குறித்துள்ளார்.

அரியவுடு பதிகடவி யாட கச்சி லம்பொ
டழகுவட மணிமுடிவி யாள மிட்ட முந்த
அமரரொடு பலர்முடுகி ஆழி யைக்கடைந்து அமுதாக-
அருளுமரி திருமருக *வார ணத்தை யன்று
அறிவினுட னொருகொடியி லேத ரித்து கந்த
**அருணகிரி** நகரிலெழு கோபு ரத்த மர்ந்த
பெருமாளே. (37)

## 546. அகப்பொருள்

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனதான

இறுகு மணிமுலை மருவு தரளமு
மெரியு முமிழ்மதி நிலவாலே-
† இரவி யெனதுயிர் கவர வருகுழ
லிசையி லுறுகட லலையாலே;
தறுகண் ரதிபதி மதனன் விடுகொடு
சரமி லெளியெனு ‡ மழியாதே
தருண மணிபொழி **லருணை** நகருறை
சயில மிசையினில் **வரவேணும்;**
முறுகு திரிபுர மறுகு கனலெழ
முறுவ லுடையவர் குருநாதா-
முடிய கொடுமுடி யசுரர் பொடிபட
முடுகு மரகத மயில்வீரா;

---

*வாரணம் - கோழி.

சூரனுடைய உடல் வேலாற் பிளவுபட, ஒரு கூறு மயிலாகவும் ஒரு கூறு சேவலாகவும் முருகவேளை எதிர்த்துவர, அவர் அருட்கண்ணால்

"குக்குட உருவை நோக்கிக் கடிதில்நீ கொடியே ஆகி
மிக்குயர் நமது தேரின் மேவினை ஆர்த்தி" என்றார்.

அங்ஙனமே அது சேவற்கொடி ஆயிற்று. முருகவேள்

"சூர்திகழ் மஞ்ஞை ஏறிச் சுமக்குதி எம்மை என்னாப்
பார்திசை வான முற்றும் பரியென நடாத்த லுற்றா(ர்)

-இங்ஙனம் மயில் வாகனமாயிற்று. -கந்தபுராணம் 4-13-497. 499.

† இரவி - இராவி; வருத்தி,

‡ நிலவு, குழலோசை, கடலொலி, காமன்பாணம் இவை விரக நோயை வளர்ப்பன.

அருமையான உடுபதி (சந்திரனை)த் (தூணாக) இருக்கும்படிச் செலுத்திவைத்துப், பொன்மலையாம் மேரு அல்லது மந்தரம் (என்னும் மத்துடன்) கயிறாக ரத்ன முடிகளை உடைய (வியாளம்) பாம்பாகிய ஆதிசேடனைப் பூட்டி அழுத்தமாக தேவரோடு பலரும் விரைவுடன் *கடலைக் கடைந்து அமுது வரச்செய்து (அதைத்)

(தேவர்களுக்குப்) பகிர்ந்தளித்த திருமாலின் அழகிய மருமகனே! சேவலை அன்று நல்ல யோசனையுடன் ஒரு கொடியில் நிறுத்தி ஏந்தி மகிழ்ந்த பெருமாளே! **திருவண்ணாமலை** நகரில் (உள்ள) (அல்லது ஏழுநிலைக்) கோபுரத்தில் (கோபுரவாயிலில்) எழுந்தருளியுள்ள பெருமாளே!

*(பாத பத்மம் என்றும் மறவேனே)*

# 546.

நெருங்கி அழுத்தமாயுள்ள அழகிய கொங்கையின் மீதுள்ள முத்துமாலையும் தீ உமிழும்படிக் காய்கின்ற சந்திரனுடைய நிலா ஒளியாலும் -

வருத்தி என்னுடைய உயிரை அபகரிக்க எழுகின்ற புல்லாங்குழலின் இசையாலும், பொருந்திய கடலின்- அலையாலும் -

கொடுமை வாய்ந்த ரதிகாந்தனாகிய மன்மதன் செலுத்தும் கொடிய பாணத்தாலும் எளியேன் அழிவுபடாமல் -

தக்க தருணத்தில் (சமயத்தில்) அழகிய சோலைகள் (அல்லது அழகிய இளஞ்சோலைகள்) சூழ்ந்த **திரு அண்ணாமலைப்** பதியில் உள்ள மலைமேல் வந்தருள வேண்டும்;

கடுமை வாய்ந்த திரிபுரங்களின் வீதிகளில் நெருப்பு எழும்படிப் புன்சிரிப்புச் சிரித்த சிவபிராற்குக் குருநாதனே!

எல்லா மலையுச்சிகளிலும் வாசஞ் செய்திருந்த அசுரர்கள் பொடிபட் டழியச் செலுத்தின பச்சை மயில் வீரனே!

---

*கடல் கடைந்து அமுதம் பகிர்ந்தது - பாடல் 509 பக்கம் -162.

குறவர் மடமக ளமுத கனதன
குவடு படுமொரு திருமார்பா-
கொடிய சுடரிலை தனையு மெழுகடல்
குறுக விடவல பெருமாளே (38)

## 547. திருவடியை நினைக்க

தனதனன தத்த தனதனன தத்த
தனதனன தத்த தனதான

உலையிலன லொத்த வுடலினனல் பற்றி
*யுடுபதியை முட்டி யமுதூற-
லுருகிவர விட்ட பரமசுக முற்று
வுன தடியை நத்தி நினையாமற்;
சிலைநுதலி லிட்ட திலதமவிர் பொட்டு
திகழ்முகவர் முத்து நகையாலே-
சிலுகுவலை யிட்ட மயல்கவலை பட்டுத்
திருடனென **வெட்கி** **யலைவேனோ;**
கலைகனக வட்ட திமிலைபறை கொட்ட
கனகமயில் விட்ட கதிர்வேலா-
கருதலரின் முட்டிக் கருகிவரு துட்ட
கதவமண ருற்ற குலகாலா;
† அலைகடலு டுத்த தலமதனில் வெற்றி
**அருணை**வளர் ‡ வெற்பி லுறைவோனே-
அசுரர்களை வெட்டி யமரர்சிறை விட்டு
அரசுநிலை யிட்ட பெருமாளே (39)

---

* உடுபதியை முட்டி அமுதூறல் உருகிவர விட்ட பரமசுகம்:-

"இந்து கதிர்ச் சேரருணைப் பந்திநடுத் தூணொளிபட் டின்பரசப் பாலமுதச் சுவை" - திருப்புகழ் 867 "வானின்கண் நாமமதி மீதி லூறுங் கலா இன்ப அமுதூறல்" - திருப்புகழ் 93-ம் அதன் உரையும் (பக்கம் 219) பார்க்க.

† தலம் - பூமி என்னாது க்ஷேத்திரம் எனக் கொண்டு அலைகடல் உடுத்த தலம் - என்பதற்குத் திருச்செந்தூர் எனவும் பொருள் கொள்ளலாம். திருச்செந்தூரிலும், அருணை மலையிலும் உறைவோனே - எனப் பொருள்படும்.

‡ 'வெற்பில் உறைவோனே' என இந்தப் பாடலிலும், 'சயிலமிசையினில் வரவேணும் என 546-ஆம் பாடலிலும் வருவதால் 546-547 பாடல்கள் திருவண்ணாமலையில் மலைமீது வீற்றிருக்கும் முருகவேளைக் குறிக்கின்றன போலும்.

குறவர் மடமகள் (வள்ளியின்) அமுதம் பொதிந்த கனத்த கொங்கை மலைகள் தாக்கும் ஒரு அழகிய மார்பனே! உக்கிரமான ஒளி இலைவேலை எழுகடலும் (வற்றிச்) சுருங்கும்படிச் செலுத்த வல்ல பெருமாளே!

(அருணை சயில மிசையினில் வரவேணும்)

## 547.

(கொல்லனது) உலைக்களத்தில் உள்ள நெருப்புப் போல உடலில் சிவாக்கினி பற்றி மேல் எழுந்து சந்திர மண்டலத்தை முட்டி அங்கு அமுத ஊறல்

ஊறி உருகி வர விடுகின்ற பரம சுகத்தை அடைந்து, உன்னுடைய திருவடியை (அல்லது பரமசுகம் முற்றி நிலைத்துள்ள உனது திருவடியை) விரும்பி நினையாமல்

வில்லைப்போல வளைந்த நெற்றியிலிட்ட திலதம் எனத் திகழும் பொட்டு (அல்லது சிறந்து திகழும் பொட்டு) விளங்கும் முகத்தை உடையவர்களின் முத்துப் போன்ற பல்லழகாலே -

துன்ப வலையிற் சேர்ப்பித்த காமப்பித்தாற் கவலை அடைந்து திருடன் என வெட்கப்பட்டு அலைவேனோ!

சாஸ்திர முறைப்படி வாசிக்கப்படுவதும், பொன் போல விளங்குவதும், வட்டவடிவு உடையதுமான திமிலைப் (ஒருவகைத் தோற்கருவி) பறைபோலச் சப்திக்கப் பொன்மயிலைச் செலுத்தின ஒளி வேலனே!

பகைவர்கள் போல எதிர்த்துத் தாக்கி, நிறங்கறுத்து வந்த துஷ்டரும் (கதம்) கோபம் கொண்டவருமான (அமணர்) சமணருடைய குலத்தைக் (காலன்போல) அழித்தவரே!

அலைவீசும் கடலை (ஆடையாக) உடுத்துள்ள (தலமதனில்) பூமியில், வெற்றித்தலமாம் (சிவபிரான் அரி - அயன் இருவருக்கும் அரியவராய் நின்று வெற்றிகண்ட தலமாம்) திரு **அண்ணாமலை**யில் விளங்கும் மலையில் வீற்றிருப்பவனே!

அசுரர்களை வெட்டித் தேவர்களைச் சிறையினின்றும் விடுவித்துப் (பொன்னுலக) ராஜ்ய பாரத்தை ஒரு நிலையில் வைத்த) பெருமாளே.

(வெட்கி அலைவேனோ)

## 548. அகப்பொருள்

தனதனன தனந்த தானன தந்ததான

கடல்பரவு தரங்க மீதெழு திங்களாலே-
கருதிமிக மடந்தை மார்சொல்வ தந்தியாலே;
வடவனலை முனிந்து வீசிய *தென்றலாலே-
வயலருணையில் வஞ்சி போதந லங்கலாமோ;
† இடமுமையை மணந்த நாதரி றைஞ்சும்வீரா-
‡ எழுகிரிகள் பிளந்து வீழஎ றிந்தவேலா;
அடலசுரர் கலங்கி யோடமு னிந்தகோவே-
அரிபிரம புரந்த ராதியர் தம்பிரானே. (40)

## 549. விலைமாதர் மயக்கு அற

தனதனனத் தனதனனத் தனதனனத் தனதனனத்
தனதனனத் தனதனனத் தனதான

கமலமுகப் பிறைநுதல்பொற் சிலையெனவச் சிரகணைநற்
கயலெனபொற் சுழலும்விழிக் குழல்கார்போல்
கதிர்தரளொப் பியதசனக் கமுகுகளப் புயகழைபொற்
கரகமலத் துகிர்விரலிற் கிளிசேருங்;

---

* திங்கள், மகளிர்பேச்சு, தென்றல் - இவை காமத்தை வளர்ப்பன - பாடல் 218 பக்கம் 53)

† தேவி இடப்பாகம் பெற்றது - பாட்டு 301 பக்கம் 246 பார்க்க.

அருணையில் உமைதவஞ்செய்து சிவபிரானது இடதுபாகத்தைப் பெற்றதாக அருணாசல புராணம் கூறும்:

'அங்கம் யாவுநம் பொருட்டுவிட் டிமயவெற் படைந்தாய்
இங்கு நாமுனக் கொருபுறம் அளிப்பதே இயற்கை
மங்கை யேநம திடப்புறத் துறையென மகிழ்வுற்
றங்கை யாலணைத் தருளினன் உருகியொன் றானார்.
அடுத்த செஞ்சடை ஒருபுறம்; ஒருபுறம் அளகம்;
தொடுத்த கொன்றையோர் புறம்; ஒருபுறம் நறுந் தொடையல்;
வடித்த சூலமோர் புறம்; ஒரு புறம் மலர்க்குவளை;
திடத்தி லார்கழல் ஒருபுறம்; ஒருபுறம் சிலம்பு;
பச்சை வண்ணமற் றொருபுறம்; ஒருபுறம் பவளம்;
கச்சு லாமுலை ஒருபுறம், ஒருபுறம் கவின்மார்;

(தொடர்ச்சி பக்கம் 549- பார்க்க)

## 548.

கடலிற் பரந்துவரும் அலைகளின்மீதே தோன்றி எழும் நிலவாலும் -

நினைத்து நினைத்து (மிக நினைத்து)ப் பெண்கள் தமக்குள் பேசிக் கொள்ளும் (வதந்தி) ஊர்ப்பேச்சாலும்;

வடவாக்கினியைக் கோபித்து வீசுகின்ற தென்றற் காற்றாலும்.

வயல்சூழ்ந்த திரு **அண்ணாமலையில்** (இந்தப்) பெண்ணினுடைய அறிவு கலங்கலாமா (வருந்தலாமா)

இடதுபாகத்தில் உமையைச் சேர்த்துக்கொண்ட சிவபெருமான் வணங்குகின்ற வீரனே!

எழுமலைகளும் பிளந்து வீழும்படி எறிந்த வேலாயுதனே!

வலிமை வாய்ந்த அசுரர்களைக் கலங்கி ஓடக் கோபித்த தலைவனே!

திருமால், பிரமா, தேவேந்திரனாதியர் - இவர்தம் தம்பிரானே!

(போதும் நலங்கலாமோ)

## 549.

தாமரை முகம்; பிறையும் அழகிய வில்லும் (நுதல்) நெற்றியும் புருவமும்; மிகவும் உறுதியான அம்பும் நல்ல மீனும் போல்வன அழகாய்ச் சுழலும் கண்கள்; கூந்தல் மேகத்தை ஒக்கும்;

ஒளி பொருந்திய முத்தை ஒக்கும் (தசனம்) பல்; கமுகை (ஒக்கும்) கழுத்து; புயம் மூங்கிலை (ஒக்கும்); (கமலப் பொற்கரத்துத்) தாமரையை (நிகர்க்கும்) அழகிய கையின் விரலின் நகம் கிளியின் (மூக்கை) ஒக்கும்,

---

அச்ச நீக்கிய வரதமொன் றபயமொன் றங்கை;
இச்சை யாமிவர் உறுதல்கண் டிறைஞ்சினார் இமையோர்'

(அருணாசல புராணம் இடப்பாகம்பொற்ற சருக்கம்).

‡ எழுகிரிகளைப் பிளந்தது - பாட்டு 43- பக்கம் 17; 1 பாட்டு 257 பக்கம் 140- பார்க்க.

குமரி தனத் திதலைமலைக் கிசலியிணைக் கலசமெனக்
குவிமுலைசற் றசையமணிக் கலனாடக்-

கொடியிடைபட் டுடைநடைபொற் சரணமயிற்
கெமனமெனக்
குனகிபொருட் பறிபவருக் குறவாமோ;

திமிலையுடுக் குடன்முரசுப் பறைதிமிதித் திமிதிமெனட்
டிமிடிமிடிட் டிகுர்திமிதித் தொலிதாளம்

செககணசெக் கணகதறத் திடுதிடெனக் கொடுமுடியெட்
டிகைசிலைபட் டுவரிபடச் சிலை*கோடித்;

துமிலவுடற் றசுரர்முடிப் பொடிபடரத் தமுள்பெருகத்
தொகுதசைதொட் டலகையுணத் தொடும்வேலா -

துவனிதினைப் புனமருவிக் குறமகளைக் களவுமயற்
சுகமொடணைத் தருணகிரிப் பெருமாளே (41)

## 550. பொது மகளிர் உறவு அற

தனன தத்தத் தத்த தத்தத் தனதன
தனன தத்தத் தத்த தத்தத் தனதன
தனன தத்தத் தத்த தத்தத் தனதன தனதான

† கமல மொட்டைக் கட்ட ழித்துக் குமிழியை
நிலைகு லைத்துப் பொற்கு டத்தைத் தமனிய
கலச வர்க்கத் தைத்த கர்த்துக் குலையற இளநீரைக்

*கோடி - கோட்டி; வளைத்து.

† இந்தப் பாடல் 'ஸ்தன வர்ணனைப் பாடல் - (882- ஆம் பாடலைப் போல); இவ் வகையது கண் வர்ணனைப் பாடல் - 126.

கமலமொட்டு, நீர்க்குமிழி, பொன் குடம், பொன் கலசம், இளநீர், வட்டு (சூதாடு கருவி), செப்பு, கரியின் மருப்பு (யானைத் தந்தம், மன்மதன் கிரீடம், சக்ரவாகப்புள், தாளம், மலை இவைகளை எவ்வாறு கொங்கைகள் வெல்கின்றன என்பதை முதல் நான்கடிகள் விளக்குகின்றன.

(குமரி) பருவப் பெண்ணின் (திதலைதனம்)- தேமல் பரந்த கொங்கையானது மலைக்கு (மலையுடன்) இசலி (மாறுபட்டு - போட்டிப்போட்டு) இரண்டு குடங்கள் போல விளங்கக், குவிந்துள்ள அக் கொங்கைகள் சற்று அசைய, ரத்ன ஆபரணங்கள் அசைந்தாட -

கொடிபோன்ற இடையில் பட்டாடை, (பொற் சரண நடை) அழகிய பாதங்களின் நடைமயில் செல்வதுபோல விளங்கக், கொஞ்சிப்பேசிப் பொருள் பறிக்கும் (பொது மகளிரின்) கூட்டுறவு ஆமோ (ஆகாது என்றபடி) -

திமிலை (ஒருவகைப் பறை), உடுக்கு (உடுக்கை) - இடை சுருங்குபறை, முரசுப்பறை (போர்ப்பறை); திமிதித் திமிதிம் எனவும், டிமி டிமிடிட் டிகுந்திமிதித் எனவும் ஒலிக்கத் தாளம் -

செககண செக கண என ஒலி எழுப்பத், திடு திடு என்று சிகரங்களை உடைய எண் திசையிலுள்ள மலைகள், (அஷ்ட கிரிகள்)அழிபடவும், (உவர்) கடல் கலங்கவும் வில்லை வளைத்து

(துமிலம்) பேராரவாரத்துடன், (உடற்று) போர்புரிந்த அசுரர்களின் முடிகள் பொடிபட, ரத்தம் உள்ள இடம் எல்லாம் பெருக, விழுந்து கூடியுள்ள மாமிசங்களைத் தொட்டுப் பேய்கள் உண்ணும்படிச் செலுத்தின வேலாயுதனே!

துவனி - (பக்ஷிஜாதிகளின்) ஒலி நிறைந்த தினைப்புனத்துக்குச் சென்று குறமகள் (வள்ளியை) களவுவழியில் மோக இன்பத்துடன் அணைத்த **திருவண்ணா மலைப்** பெருமாளே!

(பொருட் பறிப்பவருக் குறவாமோ)

# 550.

தாமரையின் மொட்டைக் கட்டு அவிழ்த்து அழகை இழக்கச் செய்தும், நீர்க்குமிழியை நிலைகுலைந்து உருவு இழக்கச்செய்தும், தங்கக் குடத்தையும், பொன்னாலாய கலச வர்க்கங்களை (கூட்டங்களை)யும் நொறுங்கச் செய்தும், குலை குலையாயிருக்கும் அழகு ஒழியும்படி இளநீரைக் -

கறுவி வட்டைப் பிற்று ரத்திப் பொருதப
சயம்வி ளைத்துச் செப்ப டித்துக் குலவிய
*கரிம ருப்பைப் புக்கொ டித்துத் திறல்மத
† னபிஷேகம்;

அமலர் நெற்றிக் கட்ட ழற்குட் பொடிசெய்து
அதிக சக்ரப் புட்ப றக்கக் கொடுமையி
னடல்ப டைத்தச் சப்படுத்திச் ‡ சபதமொ
டிருதாளம்-

அறைதல் கற்பித் துப் ×பொ ருப்பைப் பரவிய
சிறக றுப்பித் துக்க திர்த்துப் புடைபடு
மபிந வச்சித் ரத்த னத்துத் திருடிக ளுறவாமோ;

தமர மிக்குத் திக்க திர்க்கப் பலபறை
தொகுதொ குக்குத் தொத்தொ குக்குத்
தொகுதொகு
தரிகி டத்தத் தத்த ரிக்கத் தரிகிட
எனவோதிச்-

oசவடு றப்பக் கப்ப ழொத்திப் புகையெழ
விழிக ளுட்செக் கச்சி வத்துக் குறளிகள்
தசைகள் பட்சித் துக்**க ளித்துக் ††கழுதொடு
கழுகாட;

‡‡அமலை யுற்றுக் கொக்க ரித்துப் படுகள
அசுர ரத்தத் திற்கு ளித்துத் திமியென
அடிந டித்திட் டிட்டி டித்துப் பொருதிடு
மயிலோனே -

---

*யானையின் மருப்பைக் கண்ணபிரான் ஒடித்தனர் - பாடல் 120 பக்கம் 286.

† அபிஷேகம் - கிரீடம் சபதம் - சப்தம்.

X மலையின் சிறகுகளை ‡ இந்திரன் அறுத்தது - பாடல் 216-பக்கம் 50 பார்க்க.

O சவடு உற பக்க பழு ஒத்தி - பக்கத்துப் பழுவெலும்புகள் நெரிய முடக்கிய கைகளை ஒத்தித் துணங்கைக்கூத்தாடி.

"முடக்கிய இருகை பழுப்புடை யொற்றித்
தொடக்கிய நடையது துணங்கை யாகும்" (பிங்கலம்)

** களித்து - களிக்க.

†† "கழு கொடு கழுதாட" - திருப்புகழ் 1.

‡‡ "மமதை யொத்துக் கொக்க ரித்துப் படுகள

கோபித்தும், சொக்கட்டான் காய்களை (சூதாடு கருவிகளை)ப் பின்னாலே துரத்தி - (ஆட்டத்தில் காய்களைத் துரத்தி)ச் சண்டைசெய்து தோல்வி வரும்படிச் செய்தும், செப்பு (சிமிழை) வேலைப் பாடு செய்பவர்கள் அடித்து உருவாக்கியும், விளங்கிய யானையின் தந்தத்தை போய் ஒடித்தும் - சக்திவாய்ந்த மன்மதனுடைய கிரீடத்தைச்

சிவபிரானது நெற்றிக்கண்ணின் நெருப்பில் பொடி படுத்தியும், (அச்சப்பட்டு) அதிக தூரத்தில் சக்ரவாகப் புள் பறந்து போம்படிக் கடுமையான வலிமை கொண்டு அதைப் பயப்படும்படிச் செய்தும், சப்தத்துடனே இரண்டு தாளங்களும்

(ஒன்றோடொன்று) அறைந்து மோதிக் கொள்ளும்படிச் செய்தும், அல்லது சப்தம்செய்து இருதாளங்களும் ஒன்றோடொன்று மோதுவதுபோல அறையும்படிச் செய்தும், மலைகளின் பரந்த இறகுகளை அறுபடும்படிச் செய்தும், வளர்ச்சியுற்றுப் பக்கத்து இடமெலாம் பரவிப் புதுமையும், அழகும் கொண்ட கொங்கைகளை உடைய திருடிகளாம் பொது மாதர்களின் உறவு நல்லதா - (உறவு கூடாது என்க);

ஒலி மிகுந்து திசைகள் அதிர்ச்சியுற பலவகையான பறைகள் தொகு தொகுக்கு தொத் தொகுக்கு.... தரிகிட என ஒலிசெய -

சவடு (நெரிவு - நசுக்குகை) அழுத்தம் உண்டாகும்படி பக்கத்துப் பழு எலும்புகளை (விலா எலும்புகளை) ஒத்தி - தாக்கித் (துணங்கை) என்னும் கூத்தை ஆடி), புகை எழ, கண்கள் உள்ளே மிகச் சிவந்து, (குறளிகள்) மாயவித்தை செய்யும் பேய் வகைகள் மாமிசங்களை உண்டுக் களிப்படையவும், பேய் வகைகளுடன் கழுகுகள் ஆட,

ஆரவாரம் மிகுந்து, கொக்கரித்தும், பலர் இறந்துபோன போர்க்களத்தில் அசுரர்களின் ரத்தங்களில் குளித்துத், திமி (திமி) என்னும் ஒலியுடன் பாதங்களை வைத்து, நடித் திட்டு (இட்டு) மிக நடித்திட்டு.(இடித்து) மேற்சென்று சண்டைசெய்த மயில்வாகனனே!

---

அசுர ரத்தத் திற்கு ளித்துச் சசிபதி
மகள் கரத்தைப் பற்று கொற்றக் கொடைமுரு க!விராலி
மலையி னுச்சிப் பச்சை ரத்னக் கலவியி
அலவு மெய்பரத் யக்ஷ ரக்ஷக் குருபர
வயிலற் சித்தித் தெனக்குத் தெளிவருள்
பெருமாளே" - என்றும் பாடம்.

அழகு மிக்கச் சித்ர பச்சைப் புரவியி
னுலவு மெய்ப்ரத் யக்ஷ நற்சற் குருபர
*அருணை யிற்சித் தித்தெ னக்குத்† தெளிவருள்
பெருமாளே. (42)

## 551. துதி

தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதான

கரிமுகக் கடகளிற் றதிககற் பகமதக்
‡கஜமுகத் தவுணனைக் கடியானை-

கடலையெட் பயறுநற் கதலியிற் கனிபலக்
கனிவயிற் றினிலடக் கியவேழம்;

xஅரிமுகத் தினனெதிர்த் திடுகளத் தினின்மிகுத்
தமர்புரிக் கணபதிக் கிளையோனே-

அயிலெடுத் தசுரர்வெற் பலைவுறப் பொருதுவெற்
றியைமிகுத் தறுமுகக் குமரேசா;

---

* இது 'அருணகிரியாரின்' வரலாற்றுக் குறிப்பாகும்.

† தெளிவு - ஞானம் - 'வலிதாயம் தேனியன்ற நறுமா மலர் கொண்டு நின் றேத்தத் தெளிவாமே - சம்பந்தர் 1-3-6.

‡ கஜமுகத் தவுணனைக் கடியானை;-

கஜமுகாசுரன் என்பவன் தேவர்களை வருத்திவந்தான். இந்திரன் ஆதியோர் விநாயகரை வணங்கி எங்கள் துயர் தீர்த்திடுக என வேண்டினர். அவர் தம் வேண்டுகோளுக்கு இணங்கிக் கணபதி போருக்கு எழுந்து சென்று அந்த அவுணனொடு பொருது, தமது தந்தம் ஒன்றை முரித்து அவன்மேல் விடுக்க, அது அவன் மார்பைக் கீண்டது. அவனும் மாண்டவன் போலாகித் தனது உடம்பை விட்டு ஒரு ஆகு (பெருச்சாளியாகிக்) கணபதியைத்

(தொடர்ச்சி பக்கம் 255 -பார்க்க.)

அழகு மிகுந்த, அலங்காரமான, பச்சைக் குதிரையாம் மயில் மீதேறி உலவுகின்ற சத்தியம் (ப்ரத்யக்ஷமாக) வெளிப்படையாக வந்த நல்ல சற்குருபரனே! திரு அண்ணாமலையில் நான் நற்கதிகூடி அநுகூலம் அடையும்படி எனக்குத் தெளிவு (ஞானத்தை) அருளிய பெருமாளே!

(திருடிகள் உறவாமோ)

# 551.

யானை முகத்தையும் மதத்தையும் கொண்ட களிறு, சிறந்த கற்பக (விநாயகர்), மதங்கொண்ட யானைமுகத்து அசுரனை (கஜமுகாசுரனை) அடக்கிய யானை -

கடலை, எள், பயறு, நல்ல வாழையின் பழம், பலாப்பழம் (இவைகளை) வயிற்றினில் அடக்கின யானை

X அழகிய முகங்கொண்டவர், (அல்லது, தெருச் சந்திகளில் வீற்றிருப்பவர்), எதிர்த்துப் போர்புரியும் போர்க்களத்தில் பெரிய போரைச் செய்யும் கணபதி - (இத்தகையோர்க்குத்) தம்பியே!

வேலைச் செலுத்தி அசுரரின் மலையன்ன கூட்டம் அலைச்சல் உறும்படிச் சண்டை செய்து ஜயம் மிகக்கொண்ட ஆறுமுகத்துக் குமரேசனே!

---

(254- ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)

தாக்க வந்தான் கணபதி அதன் முதுகில் தாவி ஏறி வீற்றிருந்து என்னைச் சுமக்குதி என்றனர்.

"நீ நமைச் சுமத்தி; என்று மேக்குயர் பிடரில்
தாவி வீற்றிருந் தூர்தல் உற்றான்" - கந்தபுராணம் 6-14-252.

X அரி - அழகு - தெருச்சந்தி. முகம் - இடம்

*நரிமிகுக் கிளைகளைப் பரியெனக் †கடிவளக்
கையில்பிடித் தெதிர் நடத் திடுமீசன்-

நடனமிப் படியிடத் தினுமிசைத் தரையினிற்
கரியுரித் தணிபவற் கொருசேயே;

‡ துரிபெறச் சரிபொழிற் கனவயற் கழகுளத்
×துரியமெய்த் தரளமொய்த் திடவீறிச்-

சுரர்துதித் திடமிகுத் தியல் தழைத் தருணையிற்
சுடரயிற் சரவணப் பெருமாளே (43)

## 552. பொதுமகளிர் மீது மயக்கு அற

தனன தந்தனம் தனதன தனதன
தனன தந்தனம் தனதன தனதன
தனன தந்தனம் தனதன தனதன தனதான

கருநி றஞ்சிறந் Oதகல்வன புகல்வன
மதன தந்திரங் கடியன கொடியன
கனக குண்டலம் பொருவன வருவன **பரிதாவும்-

கடலு டன்படர்ந் தடர்வன தொடர்வன
விளையு நஞ்சளைந் தொளிர்வன ††பிளிர்வன
கணையை நின்றுநின் றெதிர்வன முதிர்வன
இளையோர்முன்;

---

* நரி பரியாக்கியது. பாடல் 439- பக்கம் 601- கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† கடிவளம் - கடிவாளம். ‡ துரி - (காய்கனிகள் ஆகிய) சுமை.

× துரிய மெய்த் தரளம் - தூய்மையான முத்துக்கள்.

O 'அகல்வன புகல்வன'- 'கடியன கொடியன'- முதலிய வழி எதுகைகள் கண்டு இன்புறற்பாலன. முதல் நாலடிகள் 'கண் வர்ணனை' கூறுவன.

** பரி - வடவா முகாக்கினி.

†† பிளிர்வன - கொப்புளிப்பன.

நரியின் பெரிய கூட்டங்களைக் குதிரையென ஆக்கிக் கடிவாளத்தைக் கையில் பிடித்துப் (பாண்டியன்) எதிரே நடத்தின ஈசன் (சொக்கேசர்)- தமது

திருவிளையாடலை இந்தப் பூமியில், (இவ்வாறு நடத்தினவர் பின்னும்) சொல்லப்படும் இப் பூமியில் யானையை உரித்து அணிந்தவர் - அவருக்கு ஒப்பற்ற பிள்ளையே! (கடிவளக் கையில் பிடித்து பாண்டியன் எதிரே நடனம் இப்படி யிடத்தினும் நடத்திடும் ஈசன், இசை தரையின் மிசை கரியுரித்தணிந்தவன் - சேயே)

(காய்கனிகளின்) சுமை பெறுவதாற் சரியும் பொழிலிலும் (அல்லது காய்கனிகளின்) சுமையைப்பெற்ற அந்தச் சரியில் (மலைச்சாரலில்) உள்ள (பொழிலிலும்), பெருமைவாய்ந்த வயலிலும் அழகு உள்ளனவும் தூய உருவைக் கொண்டுள்ளனவுமான முத்துக்கள் நெருங்கிக் கிடக்க, மிக்கெழுந்து

தேவர்கள் துதிசெய்ய மிகப் பிரபலமாய், உனது (கருணைக்) குணம் விளக்கமாய் விளங்கும் திரு **அண்ணாமலையில்** ஒளிவீசும் வேலேந்திய சரவணப் பெருமாளே!

## 552.

கரிய நிறத்தைக் கொண்டனவாய், அகன்று உள்ளனவாய், பேசுவது போலப் பொலிவு உள்ளனவாய், காம சாஸ்திரத்திற் கூறப்பட்ட கடுமை, கொடுமை வாய்ந்தனவாய், (காதில் உள்ள) பொன் குண்டலத்தோடு போரிட வருவதுபோலக் காதளவும் நீண்டனவாய், வடவா முகாக்கினி படர்ந்துள்ள -

கடல்போலப் பரந்து அடர்ந்து தொடர்வனவாய், (அக் கடலில் தோன்றி எழுந்த விஷம்போலத்) தோன்றும் விஷம் கலந்து பிரகாசித்துக் கொப்புளிப்பனவாய், பாணத்தையும் (அம்பையும்) நின்று நின்று எதிர்ப்பனவாய், முற்றின தொழிலை உடையனவாய் (தொழிலில் மிகப் பயின்றனவாய்), இளைஞர்கள் முன்னிலையில் -

*செருவை முண்டகஞ் சிறுவன வுறுவன
களவு வஞ்சகஞ் சுழல்வன வுழல்வன
தெனன தெந்தனந் தெனதென தெனதென
எனநாதம்-

தெரிசு ரும்பைவென் றிடுவன அடுவன
மருள்செய் கண்கள்கொண் டணைவர்த முயிரது
திருகு கின்றமங் கையர்வச மழிதலை
யொழிவேனோ;

மருவு தண்டைகிண் கிணிபரி புரமிவை
கலக லன்கலின் கலினென இருசரண்
மலர்கள் நொந்துநொந் தடியிட வடிவமு
மிகவேறாய்-

வலிய சிங்கமுங் கரடியு முழுவையு
முறைசெ ழும்புனந் தினைவிளை யிதண்மிசை
மறவர் தங்கள்பெண் கொடிதனை யொருதிரு வுளநாடி;

அருகு சென்றடைந் தவள்சிறு பதயுக
சதத ளம்பணிந் ததிவித கலவியு
ளறம ருண்டுநெஞ் சவளுடன் மகிழ்வுட னணைவோனே

அமரர் சங்கமுங் குடிபுக நொடியினில்
நிருதர் சங்கமும் பொடிபட அமர்செய்து
அருணை வந்து †தென் திசைதனி லுறைதரு
பெருமாளே (44)

## 553. அகப் பொருள்

தானான தான தானான தான
தானான தானன தந்ததான

காணாத தூர நீணாத வாரி
காதார வாரம தன்பினாலே-

---

* செருவை மூண்டு அகம் சிறுவன - போர் முயன்று அகங்கொண்டு சீறுவன.

† திருவண்ணாமலையில் தெற்கு வீதியில் உள்ள 'குமரன் கோயில்' என வழங்கும் ஆலயத்து முருகவேளுக்கு உரியது இப் பாடல்.

'அருணை தென்நல் வீதி அழகுக்' குமரன் கோயிற் 'பெருமாளே'

"அருணாபுரித் தென்நல் வீதியிற் குமரேசனற்குடி கோயிலிற் பெருமாளே"

"அனற்சிலைத் தளி தெற்குக் கோயிலிற் பெருமாளே"

"அருணைநற்றளி பழைய தட்சிண அணி குடிக்குயர் பெருமாளே"

- என்றெல்லாம் பாடியுள்ளார் அருட்கவி சேதுராமனார்.

போரை முயன்று (அந்தப் போரிடும் எண்ணத்தை) அகத்தில் (தனக்குள்ளே) கொண்டு சீறுவனவாய், (கோபிப்பனவாய்), கோபித்துத் தங்குவனவாய்க், களவு எண்ணம், வஞ்சக எண்ணம் கொண்டு சுழன்று திரிவனவாய், தென்ன தெந்தனம் தெனதென தெனதென என்ற ஒலியை

எழுப்பும் வண்டை வென்றிடுவனவாய் (வெல்வனவாய்), அதையும் தன் உரு ஒளியால் அடக்குவனவாய், (காம) மயக்கத்தை ஊட்டு வனவாயுள்ள கண்கள் கொண்டு தம்மை அணைகின்ற பேர்வழிகளின் உயிரையும் திருகிப் பறிக்கின்ற (பொது) மகளிரின் வசத்தே பட்டு அழிதலை ஒழிக்க மாட்டேனோ!

பொருந்திய தண்டையும் கிண்கிணியும் சிலம்பும் இவை மூன்றும் கல கலன் கலின் கலினென ஒலிக்கும்படி இரண்டு திருவடி மலர்களும் நொந்து நொந்து அடியிட, உருவமும் மிக மாறி -

வலிமை பொருந்திய சிங்கம், கரடி, புலி இவை உறைகின்ற (வசிக்கின்ற) செழுவிய தினை விளை புனத்தில் பரண்மேல் இருந்த வேடர் தம் பெண் கொடிதனை (வள்ளியை) உனது ஒப்பற்ற திருவுளத்தில் விரும்பி

(அவள்) அருகில் (சமீபத்திற்) சென்று சேர்ந்து அவளுடைய சிறிய இரு பாத தாமரையிற் பணிந்து பலவிதமான ஆடல்களில் மிகவும் நெஞ்சு (மனம்) மருட்சி பூண்டு அவளை மகிழ்ச்சியுடன் அணைந்தவனே!

தேவர் கூட்டங்கள் (விண்ணுலகிற்) குடியேற, நொடிப்போதில் அசுரர் கூட்டங்கள் பொடிபட்டழியும்படிப் போர்செய்து **அண்ணாமலையில்** வந்து தெற்குத் திசையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(மங்கையர் வசம் அழிதலை ஒழிவேனோ)

## 553.

கண்ணுக்கு எட்டாத தூரம் (பரந்ததாய்), (நீள்நாதம்) பெரிய ஒலிகொண்டதாய் உள்ள கடலின் கொல்வது போலச் செயப்படும் ஆடம்பரமும், அதன் பின்பாக -

காலாளும் வேளும் ஆலால நாதர்
*காலால் நிலாவு † மு னிந்து‡பூமேல்;

நாணான தோகை நூலாடை சோர
நாடோர்க ளேசXஅ ழிந்துதானே-

நானாப வாத மேலாக ○ஆக
நாடோறும் வாடிம யங்கலாமோ;

சோணாச லேச பூணார நீடு
தோளாறு மாறும்வி ளங்குநாதா-

தோலாத வீர வேலால டாத
சூராளன் மாளவெ குண்டகோவே;

சேணாடர் லோகம் வாழ்மாதி யானை
தீராத காதல்சி றந்தமார்பா-

தேவாதி கூடு மூவாதி மூவர்
தேவாதி தேவர்கள் தம்பிரானே (45)

---

*தக்கன் யாகத்தில் நிலவு (சந்திரன்) வீரபத்திரருடைய காலால் தேய்க்கப்பட்டான். "சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன் தன் வேள்வியினில்"- திருவாசகம் - அம்மானை.

"மதியினை வீரன் காணுறாத், தன்னொரு பதங்கொடே
தள்ளி மெல்லெனச், சின்னம துறவுடல் தேய்த்திட் டானரோ"
- கந்தபுரா 6-20-24.

† முனிந்து - முனிய.

‡ பூ - பூமி

X கடல்ஒலி, மன்மதன், சந்திரன், ஊர்ப்பேச்சு - காமிகளுக்கு வருத்தம் தருவன - பாட்டு 218 பக்கம் - 53.

O ஆகம்.

கால் (தென்றல்காற்றை) ஆளும் (தேராகக்கொண்ட) மன்மதனும், ஆலாலம் (கடலிற் பிறந்த விஷத்தை) உண்ட நாதர் சிவபிரானுடைய காலால் தேய்க்கப்பட்ட நிலாவும் முனிய (கோபிக்க)- இந்தப் பூமியின்மேல் -

நாணம் கொண்ட மயிலன்ன இப் பெண், தனது நூற்புடைவை நெகிழ, நாட்டில் உள்ளோர் பழித்துரைக்க, (உள்ளம்) அழிந்து, அதனால் -

பலவித அபவாதம் (அபகீர்த்தி - அவதூறு) மேலெழுந்து வெளிப்பட, உடல் நாள்தோறும் வாடி மயக்கம் உறலாமோ;

சோணாசலம் (என்கின்ற) **திருவண்ணாமலை** ஈசனே! (பூண் - ஆரம்) அணிந்துள்ள முத்துமாலை (அல்லது கடப்பமாலை) பெரிய தோள்கள் பன்னிரண்டிலும் விளங்குகின்ற நாதனே!

தோல்வி யிலாத வீரனே! வேல்கொண்டு, அடுதல் இலாத (அழிதல் இலாத) (அல்லது, தகாத செய்கைகளைச் செய்த) சூரன் என்னும் ஆண்மையாளன் இறந்து போம்படி கோபித்த தலைவனே!

விண்ணுலகத்தினருடைய உலகில் வாழ்ந்திருந்த மாது தேவசேனையின் நீங்காத அன்பு - முடிவிலாத அன்பு - விளங்கும் மார்பை உடையவனே!

தேவர்கள் ஆதியோர், மூன்றெனக்கூடிய ஆதிமூர்த்தி- களாம் மூவர் - (பிரமா, விஷ்ணு, ருத்திரன்), தேவர்கள் ஆதியோர்க்குத் தேவர்களாயிருக்கின்ற தேவேந்திரர்கள் - இவர்கள் யாவர்க்கும் பிரானே (தம்பிரானே)!

(நாடோறும் வாடி மயங்கலாமோ)

## 554. யாக்கையை வெறுத்தல்

*தானா தத்தன தானா தத்தன*
*தந்தன தந்தன தான தந்தன*
*... .... .... .... தந்ததான*

காரா டக்குழ லாலர் லக்கணை
கண்கள் சுழன்றிட வேமு கங்களி
னாலா பச்சிலை யாலே *மெற்புசி
மஞ்சள் கலந்தணி †வாளி கொந்தள
காதர் டக்கலன் மேலா டக்குடி
யின்ப ரசங்குட மார்ப ளிங்கொளி கொங்கைமாதர்-
காசா சைச்செய லாலே சொக்கிடு
விஞ்சையர் கொஞ்சிடு வாரி ளங்குயில்
போலே நற்றெரு வூடா டித் ‡துயல்
தொங்கல் நெகிழ்ந்திடை யேது வண்டிட
கால்தா விச்சதி யோடே சித்திர
மென்ப நடம்புரி வாரு டன்செயல் மிஞ்சலாகிச்
சீரா டிச்சில நாள்போய் மெய்த்திரை
வந்து கலந்துயி ரோட வங்கமொ
டூடா டிப்பல நோயோ டுத் தடி
கொண்டு குரங்கென வேந டந்துசொல்
சீயோ டிக்கிடை பாயோ டுக்கிய
டங்கி யழிந்துயி ரோடு ளைஞ்சொளி
யுங்கண்மாறிச்-
சேரா மற்○ பொறி கேளா மற்செவி
துன்பமொ டின்பமு மேம றந்துபின்
ஊரார் சுற்றமு மாதோர் மக்களு
மண்டியு மண்டையு டேகு விந்திது
சீசீ சிச்சிசி போகா நற்சனி
யன்கட வென்றிட வேகி டந்துடல் **மங்குவேனோ;**

---

*மெற் புசி -மேல் பூசி. † வாளி - ஒருவகைக் காதணி - மேற்காதில் உள்ள ஓரணி - 'கொண்டையும் முச்சி உச்சியும் வாளி முத்தும்' முத்துக்குமார - பிள்ளைத்தமிழ் - செங்கீரை - 1.‡ துயல் அசைகின்ற. "தடியுமாகிய... மந்தியெனும்படி குந்தி நடந்து" - பட்டினத்தார் உடற்கூற்று
○ பொறி - அறிவு.

## 554.

மேகம்போல விளங்க அந்தக் கூந்தல், (ஆல் ஆலக்கணை) பெரு விஷம் தோய்ந்த அம்புபோன்ற கண்கள் சுழல - முகங்களில் நாலாவிதமான பச்சிலைகளை மேலே பூசி மஞ்சளையும் கலந்து அணிந்துள்ள வாளி காதணி) யானது (கொந்தளம்) கூந்தலுக்கு அருகில் உள்ள காதில் ஆட, ஆபரணங்கள் மேலே ஆட, (இன்பரசம் குடி குடமார்) இன்பரசம் குடிகொண்டிருக்கின்ற குடங்கள் போன்று பளிங்கின் ஒளிகொண்ட கொங்கைகளை உடைய மாதர்கள் -

காசின் மேற்கொண்ட ஆசைச் செயல்களால் மயக்கப் பொடி போடுகின்ற மாயவித்தை வல்லவர், கொஞ்சிப் பேசுபவர், இளங்குயில் போலே நல்ல தெருக்களில் ஊடாடி (அங்குமிங்கும் செல்பவராய்) அசைகின்ற மேலாடை நெகிழவும், இடை துவளவும், கால்கள் தாவ, தாள ஒத்துடனே சித்திரப்பதுமை என்னும்படி நடனம் புரிபவர் - இத்தகைய (பொதுமாதர்களுடன்) இணக்கச் செயல் அதிகமாகி -

சீராகக் காலங்கழித்துச், சில நாள் சென்றபின் உடலில் திரைகள் (தோல் சுருக்கங்கள்) வந்துஏற்பட, உயிர் போகும்படி (இந்த) (அங்கமோடு) உடலோடு (ஊடாடி) வேதனைப்பட்டு பல நோய்களுடன், தடியைப் பிடித்துக் கொண்டு குரங்குபோல நடந்து, சொல்கின்ற "சீ" என்னும்சொல் (ஓடி) எங்கும்பரவக் கிடக்கை படுக்கையாகி, (உக்கி - அடங்கி - அழிந்து) - மெலிவுற்று, ஒடுங்கி, அழிதலுற்று, உயிருடனே (உளைஞ்சு) வேதனை உற்று ஒளியும் கண்ணினின்றும் விலகி (குருடாய்)-

(பொறி சேராமல்) அறிவு ஒருவழிப்படாமல் அழிந்து (செவி கேளாமல்) காதுங் கேளாமல், துன்பம் - இன்பம் இரண்டையும் மறந்து - பிரக்ஞை யற்றுப்போய், ஊராரும், சுற்றத்தாரும், பெண்டிரும், மற்று மக்களும் நெருங்கியும் பக்கத்திற் கும்பு கூடியும் 'இது சீசி சிச்சி சி (இப்போது) போகாது, நல்ல சனியன், கடக்கட்டும் அப்படியே கழிந்து போகட்டும் என்று கூறிச் செல்ல, அங்ஙனமே கிடந்து உடல் அழிவேனோ!

மாரோன் முப்புர நீறா யுற்றிட
அங்கி யுமிழ்ந்திடு வோரி பம்புலி
தோல்*சீ யத்தொடெ †யேகா சர்ச்சடை
கங்கை யிளம்பிறை யார ணிந்தவர்
மாடே றிக்கட லாலா லத்தையு
முண்டவ ரெந்தை‡சிவாநு பங்குறை
யென்றன்மாதா-
மாலோ னுக்கிளை யாள்மா பத்தினி
யம்பிகை சங்கரி மோக சுந்தரி
Xவேதா மக்கலை ரூபாள் முக்கணி
ரம்பிய கொங்கையி னாள்ப யந்தருள்
மாஞா னக்கும ராதோ கைப்பரி
யின்பத வண்குரு வேOயெ னஞ்சுரர்
தொண்டுபாடச்;
சூரார் மக்கிட மாமே ருக்கிட
அங்கட **லெண்கிரி யோடி பங்கொடு
†† தீபே ழற்றிட பாதா ளத்துறை
நஞ்சர வின்பண மாயி ரங்கெட
சூழ்வா ளக்கிரி தூளா கிப்பொடி
விண்கணி றைந்திட வே‡‡ந டம்புரி கின்றவேலா-

---

* சிவபெருமான் சிங்கத்தின் தோலையும், தலையையும் அணிந்தவர் என்பதற்குத் "தரியாவுள மால்கொடு தன்னிகழு, மரியோடு கைம் மாவை யடற்புலியை, யுரியாமிசை போர்வை யுடுக்கையெனப். பரியாவர னுற்றது பார்த்திலையோ" என்னுங் கந்த புராணம் - காமதகனப்படலம் 32-ஆம் பாடலையும். "புலிபுலி யதளுடுக்கும்" என்னும் ஸ்ரீகாளத்திப் புராணம் - தென்கைலாயச் சருக்கம் 68-ஆம் பாடலில் "வெந்திறற் சீயஞ் சீயத் தலை புனை தருந்தென் வெள்ளிச் சயிலத்தி னிறக்கின் மன்னோ" என்பதையும், 'ஏனையோர்க் கிறைமை யின்மை காட்டி, முடங்குளை மடங்கன் முகனடுஉக் கோத்த, வெண்டலை மாலை கண்டவர் வெருவத், தண்டாது கிடைக்குந் திண்டோட் பொருப்பன்" என்னும் இஷ்டலிங்க அகவலையும் நோக்குக. "சிங்கத்துரி மூடுதிர்" "தங்கிய மாதவத்தின் தழல் வேள்வியினின் றெழுந்த சிங்கமும் நீள்புலியும் செழுமால்கரி யோடலறப் பொங்கிய போர்புரிந்து பிளந்தீருரி போர்த்ததென்னே!" - சுந்தரர் 2.7; 99-6.

† ஏகாசம் - போர்வை. ஏகாசர் - போர்வையை யுடையவர். ‡ சிவ அநுபங்கு உறை - சிவபெருமானோடு கூட (அவர் திருமேனியிற்) பாதியாக உறையும். (X,O,**, † † தொடர்ச்சி - 265- ஆம் பக்கம் பார்க்க.)

மன்மதனும், மூன்று புரங்களும், சாம்பலாகும்படி நெருப்பினை வெளிச் செலுத்தினவர்; யானை, புலி இவைகளின் தோலையும், சிங்கத்தின் தோலையும் மேற் போர்வையாகக் கொண்டவர்; சடையில் கங்கை, இளம்பிறை, (ஆர்) ஆத்திமாலை சூடியுள்ளவர், ரிஷபவாகனங்கொண்டவர், கடலில் எழுந்த மகா விஷத்தையும் உண்டவர், எந்தை, சிவபெருமானொடு கூட அவர் திருமேனியிற் பாதியாக உறையும் எனது தாய் -

திருமாலுக்குத் தங்கை, மஹாபத்தினி, அம்பிகை, சங்கரி, ஆசை (அன்புக்கு) உரிய சுந்தரி, வேதாகம நூல்களின் உருவம் வாய்ந்தவள், மூன்று கண்ணை உடையவள், பருத்த கொங்கையள் - அத்தகைய பார்வதி பெற்றருளிய மஹா ஞானக் குமரனே! கலாபப் பரியாம் மயில்மேல் திருவடியை வைத்துள்ளவனே! வளமை வாய்ந்த குருமூர்த்தியே! - என்று தேவர்கள் அடிமை பூண்டு பாட -

சூராதிகள் அழிந்துபோக, மஹா மேருமலையும் மெலிவு அடைய, அழகிய கடலும், அஷ்ட கிரிகளும், (அஷ்ட) கஜங்களோடு, ஏழுதீவுகளும் குலையப், பாதாளத்தில் உள்ள விஷப்பாம்பாகிய ஆதிசேஷனுடைய படங்கள் ஆயிரமும் கேடு உறச், சூழ்ந்துள்ள சக்ரவாளகிரி தூள் பட்டுப் பொடிகள் விண்ணிடம் எல்லாம் நிறையும் வண்ணமே நடனம் செய்த வேலனே!

---

X வேதாம - வேதாகம. "அருமறைக்கு முன்னாய் நடு எங்குமாய் முடிவாய முதல்வி" - அபிராமி அந்தாதி 55.

O எனஞ்சுரர் - என அம் சுரர். **எண்கிரி - இமயம், மந்தரம், கைலாசம், விந்தியம், நிடதம், ஏமகூடம், நீலம், கந்தமாதனம்.

**எண்திசை யானைகள்:** - ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் (பிங்கலம்)

†† தீபு ஏழ் - ஏழு தீவுகள்: - நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம் புட்கரம், தெங்கு, கமுகு. இவ் வெழுவகைப் பொருளும் அவ்வத் தீவின் மிக்கன ஆகையால் அவற்றால் அத் தீவுகள் பெயர் பெற்றன.

‡‡ இந்த அடி முருகவேளின் 'துடிக்கூத்து' 'குடைக்கூத்து' இவைகளின் திறத்தை விளக்குகின்றது.

*சோர்வே தத்தலை மேலா டிச்சுக
பங்கய செங்கர மோட கம்பெற
வாகா னக்குற மாதோ டற்புத
† மங்குல ணங்குட னேம கிழ்ந்துநல்
‡ தூணோ டிச்சுட ராகா சத்தைய
ணைந்துவி ளங்கரு ணாச லந்திகழ்
தம்பிரானே. (46)

## 555. அகப்பொருள் (கடப்பமலர் பெற)

தானதன தந்ததன தானதன தந்ததன
தானதன தந்ததன தந்த தனதான்

காருமரு வும்பெருகு சோலைமரு வுங்கொடிய
×காகளம டங்கவுமு ழங்கு மதனாலே-
காலடர வம்பமளி மேலடர வந்துபொரு
காமன்விடு விஞ்சுகணை அஞ்சு மலராலே-
ஊருமல கும்பழைய பேருகம்வி ளைந்ததென
ஓரிரவு வந்தெனது சிந்தை யழியாதே-
ஊடியிரு கொங்கைமிசை கூடிவரி வண்டினமு
லாவிக டம்பமலர் தந்தருளுவாயே;
ஆருமர வும்பிறையு நீருமணி யுஞ்சடைய
ராதிபர வும்படிநி னைந்த குருநாதா-
ஆறுமுக முங்குரவு மேறுமயி லுங்குறவி
யாளுமுர முந்திருவும் அன்பு முடையோனே;

---

* 'நெறிபல கொண்ட வேதநன் முடியினு மருவிய குருநாதா' திருப்புகழ் 289.

† மங்குல் அணங்கு - விண்ணுலகப் பெண் - தெய்வயானை.

‡ தூண் - சிவமாகிய அக்கினி ஸ்தம்பம். "சிவபிரான் ஜோதித் தூணாய் இருவர்க்கும் அரியராய் நின்றது - பாடல் 319- பக்கம் 292, பாடல் 535. பக்கம் 222 பார்க்க; "நூறு நூறாயிரக் காதம் நோக்கினும். ஈறிலா திருந்ததவ் வெரியின் தூணமே" - அருணாசல புராணம் திருமலை - 50

× காகளம் - (குயிலாகிய) எக்காளம். மன்மதனுக்கு வில் - கரும்பு; பாணம் - மலர்: நாண் - வண்டு: குதிரை - கிளி; தேர் - தென்றல்; முரசம் - கடல்; யானை - கங்குல் (இரவு) எக்காளம் (ஊதுகொம்பு)- குயில்; கொடி - மீன்; குடை - திங்கள். "ஆலைக் கரும்பு சிலை; ஐங்கணைபூ; நாண் சுரும்பு;
மாலைக் கிளிபுரவி; மாருதந்தேர்; - வேலை
கடிமுரசங், கங்குல் களிறு, குயில் காளம்
கொடிமகரம் திங்கள் குடை" - (இரத்தினச் சுருக்கம்)

(நெறி பலகொண்டு சோர்வு உறும் (தளரும்) வேதத்தின் உச்சியின்மேல் விளங்குபவனே! சுகத்துடன் உனது தாமரையன்ன செம்மைக்கரத்துடன் உனது (அகம்) உள்ளத்-தையும் பெற்ற அந்த அழகிய (குறமாதோடு) வள்ளியுடனும், அற்புதமான விண்ணுலகப் பெண் தேவசேனையுடனும் மகிழ்ச்சியுற்று, நல்ல அக்கினி ஸ்தம்பமாம் சிவசுடர் உயர்ந்தோடி ஆகாசத்தை அளாவி விளங்கும் அருணாசலத்தில் (திருவண்ணாமலையில்) விளங்குகின்ற தம்பிரானே!

(உடல் மங்குவேனோ)

# 555.

மேகமும் வாசனையும் பெருகி எழும் சோலையில் உள்ள பொல்லாததான (குயிலாகிய) எக்காளம் எல்லாம் ஒருசேர ஒலிக்கின்ற அந்தக் காரணத்தாலும் -

(கால்) தென்றற்காற்று நெருங்கி, வாசனை ஏற்றியுள்ள படுக்கையின்மேற் செறிந்து வரப், போருக்கு எழுந்த மன்மதன் செலுத்த மேலே வந்த பாணங்களாம் ஐந்து மலர்களாலும்,

ஊராரும் உலகத்தாரும் பழைய பெரிய உகாந்த காலம் வந்ததுபோல ஆரவாரம் செய்வதாலும் - (நீ என்மீது மனம் இரங்கி) ஒரு இராப்பொழுதேனும் வந்து என் மனம் நைந்து அழியாதபடிப் -

பிணங்கியும், எனது இரண்டு கொங்கைகளின் மீது கூடி இணங்கியும், (வரி) இசைப்பாட்டுகளைப் பாடும் வண்டின் கூட்டங்கள் உலவுகின்ற கடப்ப மலர் மாலையைத் தந்தருளுவாயாக.

ஆத்தி மலரையும், பாம்பையும், பிறையையும், கங்கையையும் அணிந்துள்ள சடையராம் ஆதி மூர்த்தி (சிவன்) பரவநினைத்த (தியானித்த) குருநாதனே!

ஆறுமுகங்களும், குராமலரும், வாகனமாம் மயிலும், குறத்தி வள்ளி அணைந்து ஆட்சிகொள்ளும் திருமார்பும், செல்வமும், அன்பும் உடையவனே!

மேருமலை யும்பெரிய சூருமலை யுங்கரிய
வேலையலை யும்பகையும் அஞ்ச விடும்வேலா-
மேதினியி றைஞ்சுமரு ணாபுரிவி ளங்குதிரு
வீதியிலெ ழுந்தருளி நின்ற பெருமாளே (47)

## 556 மாதர்மீதுள்ள மயக்கு அற

தான தனான தத்த தனதான

கீத விநோத மெச்சு குரலாலே-
கீறு மையார் முடித்த குழலாலே;
நீதி யிலாத ழித்து முழலாதே-
நீமயி லேறி யுற்று வரவேணும்;
சூதமர் சூர ருட்கப் பொருசூரா-
சோண கிரியி லுற்ற குமரேசா;
ஆதியர் காதொ ருச்சொ லருள்வோனே-
ஆனைமுகார் கனிட்ட பெருமாளே (48)

## 557. கண்பார்த் தருளுக

தனதனன தனதனன தானத் தாத்தன
தனதனன தனதனன தானத் தாத்தன
தனதனன தனதனன தானத் தாத்தன தனதான

குரவநறு மளகுழல் கோதிக் காட்டியெ
குலவுமிரு கயல்கள்விழி மோதித் தாக்கியெ
குமுதமல ரொளிபவள வாயைக் காட்டியெ
குழையாத-

மேருமலையும் (கிரௌஞ்சமும்), பெரிய சூரனும், ஏழுகிரியும், கருநிறத்து அலைவேலையும் (அலைகடலும்), பகைவர்களும் அஞ்சும்படி செலுத்தின வேலனே!

உலகம் வணங்கும் திரு **அண்ணாமலையில்** விளங்குகின்ற திருவீதியில் எழுந்தருளியுள்ள பெருமாளே.

(கடம்பமலர் தந்தருளுவாயே)

## 556.

ராக விநோதங்கள் அமைந்துள்ளமை பற்றி மெச்சக் கூடிய குரலின் இனிமை கண்டும்,

வகிர்ந்து வாரப்பட்டதும், கருநிறம் நிறைந்ததும், முடிபோடப் பட்டதுமான கூந்தலைக் கண்டும் - (மயங்கி)

நீதி என்பதே இல்லாத வகையில் அழிதகவான செயல்களைச் செய்து நான் திரியாதிருக்க

நீ மயில்மீதேறி (மனம்) பொருந்தி வர வேண்டுகின்றேன்!

* சூதான எண்ணங்கள் கொண்ட சூரர்கள் அஞ்சும்படிப் போர்செய்த சூரனே!

**சோணகிரி** (திரு **அண்ணாமலையில்**) வீற்றிருக்கும் குமரேசனே!

ஆதியர் (சிவபெருமானது) காதில் ஒப்பற்ற சொல் (பிரணவத்தை) உபதேசித்தவனே!

ஆனைமுகத்தவராம் கணபதிக்கு கனிஷ்ட (தம்பியாகும்) பெருமாளே!

(நீ மயிலேறியுற்று வரவேணும்)

## 557.

குராமலரின் நறுமணம் பொருந்திய (அளகம்) மயிர்க் குழற்சி கொண்ட கூந்தலை (அல்லது அளகம் எனப்பேர் பெற்ற கூந்தலைக்) (கோதி) சிக்கெடுத்துக் காட்டியும், விளங்குகின்ற இரண்டு கயல்மீன்கள் போன்ற கண்கள் கொண்டு மோதித் தாக்கியும், குமுதமலர் போன்றதும், ஒளி பொருந்திய பவளம் போன்றதுமான வாயைக் காட்டியும், இளகாத

* (சூதம் அமர் சூரர் எனக்கொண்டு மாமரமாய் நின்ற சூரபதுமர் எனலுமாம்)

குணமுறுக இனிதுபயில் கூறிக் காட்டியெ
குலையஇரு கலைநெகிழ வீசிக் காட்டியெ
*குடவியிடு மரிவையர்க ளாசைப் பாட்டிலெ
கொடியேன்யான்;

பொருளிளமை கலைமனமு மேகப் போக்கிய
புலையனிவ னெனவுலக மேசப் போக்கென
பொறிவழியி லறிவழிய பூதச்சேட்டைகள் பெருகாதே-
புதுமலர்கள் மருவுமிரு பாதத் தாற்றியெ
பொதுவகையி லருணைநிலை நீள்கர்த் தாவெனப்
புகழடிமை தனையுனது பார்வைக் காத்திட
நினையாதோ;

அரவமுட னறுகுமதி யார் †மத் தாக்கமு
மணியுமொரு சடைமவுலி நாதர்க் கேற்கவெ
அறிவரிய வொருபொருளை போதத் தேற்றிய
அறிவோனே-
அழகுசெறி குழலியர்கள் ‡வானத் தாட்டியர்
தருமமுது சரவணையில் வாவித் தேக்கியெ
Xஅறுசிறுவ ரொருவுடல மாகித் தோற்றிய
இளையோனே;

---

*குடவியிடும் - வளைக்கும் † மத்த அக்கமும் - ஊமத்தையும் உருத்திராக்ஷமும். ‡ வானத்தாட்டியர் - கார்த்திகை மாதர்கள்.

Xகார்த்திகை மாதர்கள் அறுவரையும் மகிழ்விக்க ஆறு குழந்தைகளானார் முருகவேள்; பின்னர், தேவி அறுவரையும் ஒன்று சேர்த்து அணைக்க ஒரு உடலம் கொண்டார்.

"உவகையொடு கிர்த்திகையர் அறுவரும் எடுக்க அவர் ஒருவ ரொருவர்க்கவணொ ரோர்புத்ர னானவனும்" - வேடிச்சி காவலன் வகுப்பு

"மறுவறு மார லாகு மாதர்மூ விருவர் தாமும்
நிறைதரு சரவ ணத்தின் நிமலனை அடைந்து போற்ற
உறுநர்கள் தமக்கு வேண்டிற் றுதவுவோ னாதலாலே
அறுமுக ஒருவன் வேறாய் அறுசிறார் உருவங்
கொண்டான்"- கந்தபுரா - திரு அவதாரம் 116

"எடுத்தனள் புல்லித் திருமுகங்களோ ரா றுபன் னிருபுயஞ் சேர்ந்த உருவம் ஒன்றெனச் செய்தனள் உலகமீன் றுடையாள்"- கந்தபுரா-சரவண -20

"அன்னவள்கண் டவ்வுருவம் ஆறினையும் தன்னிரண்டு கையாலெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து மெய்யாறும் ஒன்றாக மேவுவித்து"- கந்தர் கலிவெண்பா.

குணம் (காம) முதிர்ச்சியை உறும்படி இனிமையான வகையில் நெருங்கிய பழமையை (உறவைக்) காட்டும் பேச்சுகளைப் பேசிக் காட்டியும், இரு கலை குலைய நெகிழ - பெரிய புடவையும் குலைவுற்று (நெகிழ) அவிழ்ந்து தளரும்படி (முன் தானையைப்) பக்கம் வீசிக் காட்டியும், (ஆடவர்களை) வளைத்திழுக்கும் மாதர்களுடைய காம லீலைகளிலே கொடியவனாகிய நான் -

(என்) பொருள் - (என்) இளமை, (என்) படிப்பு (என்) மனம் - இவை யாவும் போகும்படித் தொலைத்த கீழ் மகன் இவன் என்று உலகோர் (ஏச) இகழ்ந்துரைக்கப்போனதே போக்காக ஐம்பொறிகளின் வழியிலே சென்று, என் அறிவு அழிய, ஐம்பூதங்களின் (அல்லது ஐம்பூதங்களால் ஆய உடம்பின்) குறும்புச் செயல்கள் என்னிடம் வளராதவாறு -

புதுமலர்கள் பொருந்தியுள்ள உனது இரண்டு திருவடிகளாற் சாந்திபெற்று, *யாவர்க்கும் ஒப்ப முடிந்த வகையில் **அருணையில்** நிலைத்துள்ள பெரிய கர்த்தனே (தலைவனே) என்று உன்னைப் புகழ்கின்ற இந்த அடிமையாகிய என்னை உனது திருக்கண் பார்வை காத்தளிக்க நினைக்காதா!

பாம்பும், அறுகும், சந்திரனும், (ஆர்) ஆத்தியும், மத்தம் (ஊமத்தையும்), (அக்கமும்) ருத்ராக்ஷ மாலையும் அணிந்துள்ள ஒப்பற்ற சடாமகுடம் உடைய சிவபிரான் உவந்து ஏற்றுக்கொள்ளும் வண்ணம் அறிதற்கு அரிதான ஒப்பற்ற (பிரணவப்) பொருளை அவருக்கு உபதேசித்து ஊட்டிய அறிஞனே!

அழகு நிறைந்த கூந்தலை உடையவர்களாய் வானிடத்தே உள்ள கார்த்திகை மாதர்கள் தந்த பாலமுதைச் சரவணமடுவில் நிரம்ப உண்டு ஆறு சிறுவர்களா யிருந்தவர்கள் ஒரு உடலினராகி விளங்கித் தோன்றிய இளைஞனே!

---

*பொதுவகையில் - பொதுவகையில் கர்த்தா, தலைவா, முதல்வா என இறைவனைப் புகழ்தல்.

சுரருலவ அசுரர்கள் மாளத் தூட்பட
துயவுமுட லயிலைவிடு மாவுக் ராக்ரம
சுவறியெழு கடலுமுறை யாகக் கூப்பிட முனிவோனே-
துடிமுழவு மறவரிட *சேவற் காட்டினில்
துணைமலரி னணுகிதினை காவற் † காத்தனை
சுரியகுழல் குறமகளை ‡ வேளைக் காத்தனை
பெருமாளே. (49)

## 558. முத்தி பெற

தனதன தானான தானன தனதன தானான தானன
தனதன தானான தானன தனதான

குழவியு மாய்மோக மோகித குமரனு மாய்வீடு காதலி
Xகுலவனு மாய்நாடு காடொடு *தடுமாறி-
குனிகொடு கூனீடு மாகிடு கிழவனு மாயாவி போய்விட
விறகுட னேதூளி யாவது Oமறியாதாய்ப்
பழயச டாதார மேனி** கழ் கழியுடல் காணா
††நிராதர
பரிவிலி வா‡‡னாலை நாடொறு
மடைமாறிப்
பலபல வாம்யோக சாதக வுடல்கொடு மாயாத போதக
பதியழி யாவீடு போயினி யடைவேனோ;

---

*சேவல் - காவல். 'இறடியஞ் சேவற்கு எறிகவண் கூட்டியும்' கல்லாடம் 85 -9 (இறடி - தினை), 'உயிர்ச் சேவலுக்கே' - கந்தரந்தாதி - 15.

† காத்தனை - காத்த அன்னை.

‡ வேளைக்காத்த - பாடல் 166- பக்கம் 387 கீழ்க்குறிப்பு

X குலவன் - குலவுபவன் அல்லது குலத்தவன் - 'பனிக்கதிர்க் குலவன்' கல்லாடம் 10. 'குலமிலாதானைக் குலவனே என்று' -சுந்தரர் 7-34-6.

O அறியா தாய் - அறிந்து தாவி ** 'கழியுடல் காணா'- தன் உடலை மறந்த நிலை.

'நின்னையுணர்ந் துணர்ந் தெல்லாம் ஒருங்கிய நிர்க்குணம் பூண்
டென்னை மறந்திருந்தேன் இறந்தேவிட்ட திவ்வுடம்பே"
- கந்தர் அலங் - 19

'உடம்பொடு செத்திட் டிருப்பார் சிவயோகியார்களே"
- திருமந்திரம் - 121

‡ நிராதர பரிவு இலி வான் - நிராதார மாகிய துன்பமில்லாத ஆகாயத்தில். ‡ ‡ நாலை மடை மாறி - கழிந்துபோகும் நாலங்குலப் பிரமாண வாயுவைக் கழியாது திருப்பி, 'நாலினை மறித்து' - திருப்புகழ் 647.

தேவர்கள் (மகிழ்வுற்று) உலவவும், அசுரர்கள் இறந்து பொடியாகவும், துயவும் - அறிவு கலங்கும்படி, உடல் - கோபித்த - வேலாயுதத்தைச் செலுத்தின மகா உக்ர (மூர்த்தியே)! (க்ரம) நீதிமானே! வற்றிப்போய் ஏழுகடலும் முறைசெய்து ஒலி எழுப்பக் கோபித்தவனே!

துடி (உடுக்கை), முழவு (முரசு) இவைகளை உடைய வேடர்களின் (சேவல்) காவல்கொண்ட காட்டில் (துணை மலரின்) இரண்டு (திருவடி) மலர்களால் நடந்து நெருங்கி தினைப்புனங் காவல்காத்த (அன்னை) தாய் (வள்ளி), சுருண்ட கூந்தலைக்கொண்ட குறமகள் வள்ளி - என்னும் தேவியின் (வேளைகாத்து) - தக்க சமயத்துக்காகக் - காத்திருந்து (அந்த அம்மைமய) அணைந்த பெருமாளே!

(அடிமைதனை உனது பார்வைக் காத்திட நினையாதோ)

# 558.

குழந்தையாய் இருந்து, பின்பு, மாயை, காம மயக்கம் இவை பூண்ட குமரப் பருவத்தனாய், வீடு, மனைவி இவர்களொடு கூடிய நற்குலத்தவனாய், நாட்டிலும் காட்டிலும் உழன்று தடுமாறுபவனாய் - பின்னர் -

உடல் வளைந்து கூன் பெரிதாய் ஆன கிழவனுமாய், உயிர் (உடலைவிட்டு) நீங்க, (உடல்) விறகுடன் சாம்பற் பொடி ஆவதையும் அறிந்து தாவி -

பழமையாயுள்ள ஆறு ஆதாரங்களின் மேல் நிலையில் (நிகழ்) காணக்கூடிய (அடையக்கூடிய) (கழியுடல்)- உடம்பு கழிபட்ட (நீங்கின) நிலையை அடைந்து, நிராதர (சார்பு வேண்டாததும்) பரிவிலி - துன்பமில்லாததுமான ஆகாயத்தில் - நாலை நாடோறும் மடைமாறி - நாள்தோறும் (நாலை மடைமாறி) - (கழிந்து போகும்) நாலங்குலப் பிரமாண வாயுவைக் கழியாது திருப்பிப் -

பல பல விதமான யோக சாதகங்கள் (யோகப் பயிற்சிகள்) செய்த உடலை வளர்த்து, அழிவில்லாததும், அறிவு மயமானதுமான இறைவனுடைய அழியாத முத்திவீட்டை நாடிச்சென்று இனியேனும் சேருவனோ!

எழுகடல் தீமுள மேருவு மிடிபட வேதாவும் வேதமு
மிரவியும் *வாய்பாறி யோடிட முதுசேடன்-

இருளறு பாதாள லோகமு மிமையமு நீறாக வாள்கிரி
யிருபிள வாய்வீழ மாதிர மலைசாய;

அழகிய மாபாக சாதன னமரரு மூர்பூத மாறுசெய்
அவுணர்த மாசேனை தூளெழ விளையாடி-

†அமரினை மேவாத சூரரை அமர்செயும் வேலாயு
தாவுயர்
**அருணை**யில் வாழ்வாக மேவிய பெருமாளே (50)

## 559. வீடு பெற

தானதன தானதத்த தானதன தானதத்த
தானதன தானதத்த தனதான

‡ கேதகைய பூமுடித்த மாதர்தம யாலிலுற்று
கேவலம தான அற்ப நினைவாலே-

கேள்வியதி லாதிருக்கு மூழ்வினையி னால்மிகுத்த
கேடுறுக வேநினைக்கும் வினையாலே-

வேதனையி லேமிகுத்த பாதகனு மாயவத்தில்
மேதினியெ லாமுழற்று மடியேனை-

**வீடுதவி யாள**வெற்றி வேல்கரம தேயெடுத்து
வீறுமயில் மீதிலுற்று வருவாயே;

நீதிநெறி யேயழித்த தாருகனை வேரறுத்து
நீடுபுகழ் தேவரிற்கள் குடியேற-

*வாய் பாறி - இடம்விட்டுப் பெயர்ந்து.
† அமரினை மேவாத - அமைதியைப் பொருந்தாத.
‡ கேதகைய பூ - தாழையின் பூ.

எழுகடலும் தீ மூண்டு எரியவும், மேருமலையும் பொடிபடவும், பிரமனும், வேதங்களும், சூரியனும் இடம் விட்டுப் பெயர்ந்து ஓடவும், ப ழைய ஆதிசேஷன் (உள்ள)

இருள் இலாத பாதாள லோகமும், இமையமலையும் பொடியாகவும், சக்ரவாளகிரி இரண்டு பிளவுபட்டு வீழவும் திக்குகளில் உள்ள அஷ்ட பர்வதங்கள் சாய்ந்து விழவும்,

அழகுள்ள சிறப்புவாய்ந்த இந்திரனும் தேவர்களும் அவர்களுடைய ஊரில் (பொன்னுலகில்) பூத (புகுத) குடியேறவும், (மா றுசெய்) பகைமைத் தொழில்பூண்ட அசுரர்களுடைய பெரிய சேனை தூள்படவும் விளையாடி -

அமைதியைப் பொருந்தாத சூரர்களோடு போர்புரிந்த வேலாயுதனே! சிறப்புவாய்ந்த **அண்ணாமலையில்** வாழ்வாக வீற்றிருக்கும் பெருமாளே!

*(அழியா வீடு போயினி அடைவேனோ)*

## 559.

தாழையின் பூவை முடித்துள்ள பெண்களுடைய மயலில் (மோகத்தில்) உற்றுத் தாழ்நிலையதான அற்பமான நினைவுகளாலும்,

ஆராய்ச்சிக்கு இடந்தரா திருக்கும் (அகப்படாதிருக்கும்) ஊழ்வினையாலும், மிக்க அழிவு வருதற்கே நினைக்கின்ற செயல்களாலும்,

வேதனையிற்பட்டு மிக்க பாதகத்துக்கு இடந் தருபவனாய், வீணாக உலக முழுமையும் சுழற்சி (அலைச்சல்) உறும் அடியேனுக்கு -

மோக்ஷ வீட்டைத் தந்தருளி ஆட்கொள்ளும் பொருட்டு வெற்றிவேலைத் திருக்கரத்தே எடுத்து விளங்குகின்ற மயில்மீதிலே அமர்ந்து வந்தருளுக;

நீதிநெறியை அழித்த தாருகாசுரனை வேரோடே அறுத்து பெரிய புகழ்கொண்ட தேவர்கள் (தத்தம்) இற்கள் (இல்லங்களில்) குடியேற-

நீடருளி னால்விடுத்த பாலகும ராசெழித்த
நீலநிற மால்தனக்கு மருகோனே;

சோதியன லாவுதித்த *சோணகிரி மாமலைக்குள்
† சோபைவட கோபுரத்தி லுறைவோனே-

சோனைமழை போலெதிர்த்த தானவர்கள் மாளவெற்றி
தோளின்மிசை ‡வாளெடுத்த பெருமாளே (51)

## 560. திருவடியைப் பெற

தானான தனதான தனதான

கோடான மடவார்கள் முலைமீதே-

கூர்வேலை யிணையான விழியூடே;

ஊடாடி யவரோடு முழலாதே-

ஊராகத் திகழ்பாத மருள்வாயே;

நீடாழி சுழல்தேசம் வலமாக-

நீடோடி மயில்மீது வருவோனே;

Xசூடான தொருசோதி மலை மேவு-

Oசோணாடு புகழ்தேவர் பெருமாளே. (52)

---

*சோணகிரி - சோணம் - சிவப்பு - சிவப்புமலை - அருணகிரி (அருணம் - சிவப்பு).

† சோபை - அழகு - ஒளி.

‡ "மகபதி தன்பதி பகைகிழியும்படி யன்றடல் வாள் ஓங்கிய வேல் வாங்கவே - (வேல்வாங்கு வகுப்பு)

" வாளாலே வேலாலே சேதித்திடும் வீரா - திருப்புகழ் 1045.

X சூடானசோதிமலை - அனல்மலை - அண்ணாமலை.

O சோணாட்டின் மீது அருணகிரியார்க்கு மதிப்பு மிக உண்டு. ஆதலால் தான். 'ஈதலும்பல கோலால பூஜையும் ஓதலும் குண ஆசார நீதியும் ஈரமுங் குரு சீர்பாத சேவையும் மறவாத ஏழ்தலம்புகழ் காவேரியால்விளை சோழமண்டலம்' என்றார் -திருப்புகழ் 100.

பெருங்கருணையால் உதவின இளங்குமரனே! செழிப்புள்ள நீலநிறம் உள்ள திருமாலுக்கு மருகோனே!

ஜோதி நெருப்பாகத் தோன்றின (சோணகிரி) அருணகிரி என்கின்ற சிறந்த மலைக்குள் அழகுள்ள வடக்குக் கோபுரத்தில் வீற்றிருப்பவனே!

விடாது பெய்யும் பெருமழைபோல எதிர்த்து வந்த அசுரர்கள் இறந்துபோம்படி ஜயம் பொருந்திய தோள்மீது (கையில்) வாளாயுதத்தை எடுத்த பெருமாளே!

(வீறுமயில் மீதிலுற்று வருவாயே)

## 560.

மடவார்களின் (பெண்களின்) கோடான (மலைபோன்ற) கொங்கையிலும் -

கூரிய வேலுக்குச் சமானமான கண்களிலும் -

ஊடாடினவனாய் - (கலந்து பழகினவனாய்) அவர்களோடு திரியாமல்-

(எனது சொந்த ஊர்போல) (நிலைத்த) இருப்பிடமாக விளங்குகின்ற (உனது) திருவடிகளை அருள்வாயே -

விரிந்த கடல் சூழ்ந்த உலகை வலமாக

முழுதும் ஓடி மயில்மேல் வந்தவனே!

நெருப்பான ஒரு ஜோதிமலையில் (அண்ணாமலையில்) வீற்றிருக்கும் (பெருமாளே!)

சோழநாட்டார் புகழும் (பெருமாளே!) தேவர் பெருமாளே!

(பாதம் அருள்வாயே)

## 561.

*தானதன தத்த தத்த தானதன தத்த தத்த*
*தானதன தத்த தத்த தனதான*

*கோடுசெறி மத்த கத்தை வீசுபலை தத்த வொத்தி*
*கூறுசெய்த ழித்து ரித்து நடைமாணார்-*
*கோளுலவு முப்பு ரத்தை வாளெரிகொ ளுத்தி விட்ட*
**கோபநுத லத்த ரத்தர் குருநாதா;*

*† நீடுகன கத்த லத்தை யூடுருவி மற்ற வெற்பு*
*நீறெழமி தித்த நித்த மனதாலே-*
*‡நீபமலர் பத்தி மெத்த வோதுமவர் சித்த மெத்த*
*நீடுமயில் தத்த விட்டு வரவேணும்;*

*ஆடலணி பொற்சி லைக்கை வேடுவர்பு னக்கு றத்தி*
*ஆரமது மெத்து சித்ர முலைமீதே-*
*ஆதரவு பற்றி மெத்த மாமணிநி றைத்த வெற்றி*
*ஆறிருதி ருப்பு யத்தில் அணைவீரா;*

---

* கோப நுதல் - கோபங் குறித்த நுதல் (ஆகுபெயராய்) நெற்றிக்கண். நுதலத்தர் - நுதலினர் - நெற்றிக்கண்ணினர் எனலுமாம்.

† கனகத் தலத்தை ஊடுருவினது முதலியன முருகவேளின் திருவிளையாடல்கள்-

"எண்டிசை புரந்த தேவர் இருந்த தொல் பதங்க ளெல்லாம்
பண்டுள திறத்தின் நீங்கப் பறித்தனன் பிறழ வைக்கும்"
"விரிகடல் உலகின் வானின் மேவுதொன் னிலைமை யாவும்
திரிபுற எவரோ செய்தார் தெரிந்திலம் அவரை"
- கந்த புராணம் - திருவிளை -27,37-

‡ நீப மலர் பத்தி - நீப மலர் சூடிய புய பந்திகளின் சிறப்பை

# 561.

தந்தங்கள் பொருந்திய (யானையின்) மத்தகத்தில் வெளித்தோன்றும் (பல்லை) பற்களை வெளியில் விழும்படித் தாக்கிக் கிழித்துக் கூறிட்டு அழித்துத் (தோலை) உரித்தும் (கஜசம்ஹார மூர்த்தியாய் விளங்கியும்), நன்னெறியைப் போற்றாதுவிட்ட (திரிபுரத்து) அசுரர்களுடைய)-

(கோள்) மேகமண்டலத்தின் மீது பறந்து செல்லும் (அல்லது) தீமை நிறைந்த - முப்புரங்களை ஒளிவீசும் நெருப்பாற் கொளுத்திவிட்ட கோபங் குறித்த - (கோபத்தைக் காட்டின)- (அத் தரத்தர்)அந்த மேன்மையை (வலிமையைக்) கொண்டிருந்த சிவபிரானுக்கு (அல்லது, கோபங்கொண்ட நெற்றிக் கண்ணினர், அத்தர் - ஆகிய சிவபிரானுக்குக்) குருநாதனே!

பெரிய (கனகத் தலத்தை) பொன்னுலகை - வானை உட்புறங்களை அலைத்துப் பின்னும் மலைகளைத் தூளாமாறு மிதித்து விளையாடின நித்தனே! மனதோடு

கடப்பமலரைச் சூடிய உனது புயவரிசையின் சிறப்பை நிரம்ப ஓதுகின்ற அடியார்களின் சித்தத்தில் உறைபவனே! நிரம்பவும் நீலமயிலைத் தாவிவரச் செலுத்தி வந்தருள வேண்டுகின்றேன்;

ஆடல் (போரை)- அணி - மேற்கொள்ளும் அழகிய வில்லை ஏந்தின கையினராம் வேடர்களின் தினைப்புனத்தில் இருந்த குறத்தியின் முத்துமாலை நிரம்பிய அழகிய கொங்கைமேல் -

விருப்பம் வைத்து நிரம்ப சிறந்த மணிகள் நிறைந்துள்ளனவும், வெற்றி பெற்றனவுமான பன்னிரு திருப்புயங்களிலும் (அக் குறத்தியை) அணைந்த வீரனே!

தேடிமையொர் புத்தி மெத்தி நீடுறநி னைத்த பத்தி
சீருறவு ளத்தெ ரித்த சிவவேளே-

தேறருணை யிற்ற ரித்த சேண்முகடி டத்த டர்த்த
தேவர்சிறை வெட்டி விட்ட பெருமாளே. (53)

## 562. திருவடியை மறவாமை

தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன
தனதன தத்தத் தனந்த தந்தன தனதான

சிலைநுதல் வைத்துச் சிறந்த குங்கும
திலதமு மிட்டுக் குளிர்ந்த பங்கய
திருமுக வட்டத் தமர்ந்த மென்குமிழ்
தனிலேறிச்-

செழுமணி ரத்நத் திலங்கு பைங்குழை
தனைமுனி வுற்றுச் சிவந்து நஞ்சணி
செயலினை யொத்துத் தயங்கு வஞ்சக
விழிசீறிப்;

புலவிமி குத்திட் டிருந்த வஞ்சியர்
பதமல ருக்குட் பணிந்த ணிந்தணி
புரிவளை கைக்குட் கலின்க லென்றிட
அநுராகம்-

புகழ்நல மெத்தப் புரிந்து கொங்கையி
லுருகிய ணைத்துப் பெரும்ப்ரி யங்கொடு
புணரினும் நிற்பொற் பதங்கள் நெஞ்சினுள்
மறவேனே;

கலைமதி வைத்துப் புனைந்து செஞ்சடை
மலைமகள் பக்கத் தமர்ந்தி ருந்திட
கணகண கட்கட் கணின்க ணென்றிட
நடமாடுங்-

தேடிவந்த (இமையோர்) தேவர்கள் புத்தி நிரம்பி நீண்டகாலம் வாழ வேண்டுமென்று (திருவுளத்தில்) நினைத்த சிவவேளே! அவர்களுடைய புத்தி சிறப்பான வழியிற் செப்பமுற வேண்டுமென்று திருவுள்ளத்தில் தெரிந்து வைத்த சிவவேளே! (அல்லது) தேடிவந்த தேவர்கள் புத்தி நிரம்பி நீண்டகாலம் நிலைத்திருக்க வேண்டி, அதற்காக அவர்கள் நினைத்து மேற்கொண்டுள்ள பத்தி சீராக அமையத் திருவுளம் கொண்ட சிவவேளே!

செழிப்புள்ள அருணையில் உள்ள (மலையின் உச்சியிடத்தில்) அடைந்து கூடின தேவர்களின் சிறையை வெட்டிவிட்ட பெருமாளே! (அல்லது - அயனரி - இவருடைய மயக்கம் தெளிந்த அருணையில்) தரித்த (வீற்றிருந்த பெருமாளே! சேண்முகடிடம் - விண்ணுலகில் நிறைந்துள்ள தேவர்களின் சிறையை வெட்டிவிட்ட பெருமாளே!)

(நீலமயில் தத்தவிட்டு வரவேணும்)

## 562.

வில்லைப் போன்ற நெற்றியில் நல்ல குங்குமப் பொட்டையிட்டு, குளிர்ந்த தாமரை போன்ற அழகிய முகவட்டத்தில் உள்ள மெல்லிய குமிழம் பூப்போன்ற மூக்கின் மேற் சார்ந்து -

செழுமையுள்ள ரத்னமணி விளங்கும் அழகிய குழைகள் உள்ள காதைக் கோபித்துச் சிவந்து, விஷமுண்ட தன் செயலுக்கு ஒப்ப, வஞ்சகங் கொண்டு விளங்கும் கண்கள்கொண்டு சீறிக் கோபித்து -

ஊடல் குணம் அதிகப்பட்டு இருந்த மாதர்களின் பாதமலரில் வணங்கி, அவர்கள் அணிந்துள்ள ஆபரணமாய் விளங்கும் வளையல் கையிற் கலின்கலென்று ஒலிக்கக், காமப்பற்றான-

புகழ் நலச் செயல்களை அதிகமாகச் செய்து அவர்களுடைய கொங்கையில் உருகி, அணைத்து, மிக்க ஆசையுடன் கலவி செய்தாலும், உனது அழகிய பதங்களை நெஞ்சினில் மறவேன்!

கலைகொண்ட பிறையை வைத்து அலங்கரித்த செந்நிறச் சடையுடன், மலைமகள் (பார்வதி) (இடது) பாகத்தில் அமர்ந்து விளங்க, கணகண கட்கட் கணின்கண் என்று ஒலிசெய நடனம் ஆடுகின்ற.

கருணைய னுற்றத் த்ரியம்ப கன்தரு
முருகபு னத்திற் றிரிந்த மென்கொடி
கனதன வெற்பிற் கலந்த ணைந்தருள் புயவீரா;
அலைகடல் புக்குப் பொரும்பெ ரும்படை
யவுணரை வெட்டிக் களைந்து வென்றுயர்
அமரர்தொ ழப்பொற் சதங்கை கொஞ்சிட வருவோனே-
அடியவ ரச்சத் தழுங்கி டுந்துயர்
தனையொழி வித்துப் ப்ரியங்கள் தந்திடும்
அருணகி ரிக்குட் சிறந்த மர்ந்தருள்
பெருமாளே.(54)

## 563. வேல் மயில் பெற

தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா தனதான

*சிவமா துடனே அநுபோ கமதாய்
† சிவஞா னமுதே பசியாறித்-
திகழ்வோ ‡ டிருவோ ரொருரு பமதாய்
திசைலோ கமெலா மநுபோகி;
இவனே யெனமா லயனோ டமரோ
ரிளையோ னெனவே மறையோத-
இறையோ னிடமாய் விளையா டுகவே
யியல் Xவே லுடன்மா அருள்வாயே;
○தவலோ கமெலா முறையோ வெனவே
தழல்வேல் கொடுபோ யசுராரைத்-
தலைதூள் படஏழ் கடல்தூள் படமா
தவம்வாழ் வுறவே விடுவோனே;

---

* சிவமாதை மணந்து அநுபவித்தல்:
"சிவசுடரதனைப் பாவை மணமென மருவி"-திருப்புகழ் 238. "சிவஞான புண்டரிக மலர் மாதுடன் கலவி சிவபோக மன் பருக"-திருப்புகழ் 1240 என வருவன காண்க.

† சிவஞான அமுதுண்டு பசியாறுதல்.
குகனெ குருபர னேயென நெஞ்சிற்
புகழ அருள்கொடு நாவினில் இன்பக்
குமளி சிவஅமு தூறக வுந்திப பசியாறி - திருப்புகழ் 593.

‡ இருவோர் ஒரு ரூபமதாய் ** அமரோர் இளையோன் எனல்
"இருவரும் உருகிக் காய நிலையென மருவித் தேவர்
இளையவன் என வித்தாரம் அருள்வாயே" - திருப்புகழ் 238.
X மா - மயிலாகிய குதிரை. ○ தவ - மிகவும்.

கருணைப்பிரான், பொருந்திய முக்கண்ணன் பெற்ற முருகனே! (தினைப்) புனத்தில் திரிந்துலவின மெல்லிய கொடிபோன்ற வள்ளியின் பருத்த கொங்கை மலைகளிற் சேர்ந்து அணைந்தருளின புயங்கள்கொண்ட வீரனே!

அலைகொண்ட கடலிற் புகுந்து சண்டைசெய்த பெரிய சேனையைக் கொண்ட அசுரர்களை வெட்டித் தொலைத்து ஜெயித்து, உயர்ந்த தேவர்கள் தொழ, அழகிய சதங்கை (கிங்கிணி) ஒலிசெய வருபவனே!

அடியார்கள் பயத்தால் துன்புற்று ஒடுங்கும் வருத்தத்தை நீக்கி, அன்புதரும் (பெருமாளே)! **அண்ணாமலையில்** சிறந்து வீற்றிருந் தருளும் பெருமாளே!

(நிற்பொற் பதங்கள் நெஞ்சினுள் மறவேனே)

## 563.

சிவம் என்கின்ற தலைவியுடன் இன்ப நுகர்ச்சி கொண்டவனாய், 'சிவஞானம்' என்கின்ற அமுதத்தை உண்டு அதனால் பசி நீங்கி-

விளக்கத்துடன் (நானும் தலைவியும்) இருவோரும் ஒரு ரூபமாய் (எட்டுத்) திசையிலுள்ளோரும் உலகினர் யாவரும் - - சுகானுபவம் உடையவன்

இவன் ஒருவனே என்று வியக்கும்படித், திருமால், பிரமன், தேவர் (யாவரும்) இவன் 'இளையோன்' - ("என்றும் இளையோன்" "முருகன்") என்று வியந்து கூற, மறை (வேதமும்) (அங்ஙனமே) எடுத்துக் கூற-

இறையோன் இடமாய் (சிவபிரானிடத்தில்) நான் (உனைப்போல) விளையாட (எனக்கு நீ) அழகிய *வேலையும் மயிலையும் தந்தருளுவாயாக.

மிகவும் லோகங்கள் எல்லாம் முறையோ என்று ஓலமிட, நெருப்பை வீசும் வேலுடன் சென்று அசுரர்களின்

தலைகள் தூள்பட, ஏழு கடல்களும் தூள்பட, சிறந்த தவத்தினர் வாழ்வுறுமாறு (அந்த வேலைச்) செலுத்தினவனே!

* வேல்மயில் பெறுதல் - திருப்புகழ் 413 பார்க்க

*கவர்பூ வடிவாள் குறமா துடன்மால்
கடனா மெனவே அணைமார்பா-
† கடையேன் மிடிதூள் படநோய் விடவே
‡ கனல்மால் வரைசேர். பெருமாளே. (55)

## 564. அன்பு பெற

தனதனன தனதனன தந்தனந் தந்தனம்
தனதனன தனதனன தந்தனந் தந்தனம்
தனதனன தனதனன தந்தனந் தந்தனம் தந்ததான

சின Xமுடுவல் நரிகழுகு டன்பருந் தின்கணங்
கொடிகெருடன் அலகைபுழு வுண்டுகண் டின்புறுஞ்
செடமளறு மலசலமொ டென்புதுன் றுங்கலந்
துன்பமேவு-
செனனவலை மரணவலை ரண்டுமுன் பின்தொடர்ந்
தணுகுமுட லநெகவடி விங்கடைந் தம்பரஞ்
சிறுமணலை யளவிடினு மங்குயர்ந் திங்குலந்
தொன்று நாயேன்;

---

* "தன்கடன் அடியேனையுந் தாங்குதல் - என் கடன் பணி செய்து கிடப்பதே" என்னும் அப்பர் பெருமான் திருவாக்குக்கு ஏற்ப - மனமொழி மெய்களால் தன்னையே நினைந்து தவப்பணி பூண்டிருந்த வள்ளியைப் புரத்தல் தணிகை நாயகருக்குக் கடமையாம் செயலதாக நிகழ்ந்தது; ஆதலினால் வள்ளி யிருந்த குறிச்சியிற் சென்று (தாமே) கலியாணம் முயன்றனர் என்க. (கந்தர் அலங்-24)

இங்ஙனம் வள்ளியை ஆட்கொண்ட பெருமையினால் முருகன் புகழ் உயிர்ப்புப் பெற்று இன்றும் ஓங்குகின்றது இதனை மெய்ப் பொருட்டிருப்புகழ்க் குயிர்ப்பளித்து எழிற் றினைக்கிரிப்புறத்து உறைவேலா" - என அருணகிரியார் விளக்கியுள்ளார். (திருப்புகழ் 253)

அங்ஙனம் வள்ளியை ஆண்டது முருகவேளுக்கு ஒரு கடமை யாயிற்று என்பதைக் 'குறவிக்குக் கடவோனே' என்னும் திருப்புகழிலும் (1303 குறித்துள்ளார். திருப்புகழ் 199-பக்கம் 13-கீழ்க்குறிப்பு. பாடல் 253-பக்கம் 133-கீழ்க்குறிப்புப் பார்க்க.

பூவடிவாள் - பொலிவுள்ள அழகினாள் -எனலுமாம்

† மிடி தூள்பட, நோய்விட - ஆண்டது - 'அருணகிரியாரின் வரலாற்றுக் குறிப்பாகும்' (தொடர்ச்சி பக்கம் 285-பார்க்க.)

கவர் பூ வாழைப்பூவின் அல்லது - வசீகரிக்கும்பூவின்) நிறத்தினளாம் குறமாது வள்ளியின் - மீது மால் (ஆசை கொள்வது) கடனாகும் என்றே - நமக்குக் கடமையாகும் என்றே அவளை அணைந்த மார்பனே!

கடைப்பட்டவனாகிய என்னுடைய மிடி (வறுமை) தூள்பட்டு ஒழியவும், நோய் தொலையவும் (அருள் கூர்ந்து) அக்கினிப் பெருமலையாம் **அண்ணாமலையிற்** பொருந்தி வீற்றிருக்கும் பெருமாளே!

(வேலுடன் மா அருள்வாயே)

# 564.

கோபங்கொள்ளும் நாய், நரி, கழுகு, இவைகளுடன் பருந்தின் கூட்டம், காக்கை, கருடன், பேய், புழு - இவை யாவும் உண்டும் கண்டும் மகிழ்ச்சி யுறுகின்ற உடல் சேறு போன்ற மலம், ஜலம் எலும்பும் கூடியுள்ள (கலம்) பாத்திரம் துன்பத்துடன் கூடிய

பிறப்புவலை, இறப்புவலை - இந்த இரண்டும் முன் பின்னாகத் தொடர்ந்து நெருங்கிவரும் உடல், அனேக விதமான வடிவங்களை இவ்வுலகில் அடைந்து கடலின் சிறுமணலை அளவிடினும் அங்கு அந்த அளவின் அதிகமாக மேற்பட்டு. இங்கு அழிபடுதலைப் பொருந்தும்; அத்தகைய அழிதலை உடைய (நாயேன்) அடியேன்-

---

*(284 - ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

மிடி - வறுமை; அருணகிரியார் வறுமையிற் பட்டது. நோயிற் பட்டது.

"வறுமையாகிய தீயின்மேற் கிடந்து நெளியுநீள் புழுவாயினேற் கிரங்கி அருள்வாயே" - திருப்புகழ் *753.*

"மிடியால் மயக்கம் உறுவேனோ" - திருப்புகழ் *214.*

"மகாபிணி மேலிட முடக்கி வெட்கு மதாமத வீணனை"

-திருப்புகழ் *850.*

"பிணி அடுத்து.....உடல் மங்குவேனை" - திருப்புகழ் *413.*

‡ *கனல் மால்வரை - திருவண்ணாமலை.* X முடுவல் - நாய்.

கனகபுவி நிழல்மருவி யன்புறுந் தொண்டர்பங்
குறுகஇனி யருள்கிருபை வந்து *தந் தென்றுமுன்
கடனெனது உடலுயிரு முன்பரந் தொண்டுகொண்
டன்பரோடே-

கலவிநல மருவிவடி வஞ்சிறந் துன்பதம்
புணர்கரண மயில்புறமொ டின்புகொண் டண்டருங்
கனகமலர் பொழியஉன தன்புகந் தின்றுமுன்
சிந்தியாதோ;

தனனதன தனனதன தந்தனந் தந்தனந்
தகுகுகுகு குகுகுகுகு டங்குடங் குந்தடந்
தவில்முரசு பறைதிமிலை டிங்குடிங் குந்தடர்ந்
தண்டர்பேரி-

தடுடுடுடு டுடுடுடுடு டுண்டுடுண் டுண்டுடுண்
டிமிடிமிட டகுர்திகுகு சங்குவெண் கொம்புதிண்
கடையுகமொ டொலியகட லஞ்சவஞ் சன்குலஞ்
சிந்திமாளச்;

சினமுடுகி †அயிலருளி யும்பரந் தம்பரந்
திசையுரகர் புவியுளது மந்தரம் பங்கயன்
செகமுழுது மகிழ அரி அம்புயன் தொண்டுகொண்
டஞ்சல்பாடத்-

திருமுறுவ லருளியென தெந்தையின் பங்குறுங்
கவுரிமன முருகவொரு கங்கைகண் டன்புறுந்
திருவருண கிரிமருவு சங்கரன் கும்பிடுந்
தம்பிரானே.(56)

---

* தந்து - தர.

† "அயில் அருளி - உம்பர் - அந்த அம்பரம்' என்றாவது அயில் அருளியும் பரந்த அம்பரம் - என்றாவது பிரித்தும் பொருள் காணலாம்.

இந்தப் பாடல் 18-ஆம் திருப்புகழ் போலச் சந்தமும் முடிவும் கொண்டது.

பொன்னுலகின் நீழலில் இருந்து (உன்பால்) அன்பு பூண்டுள்ள தொண்டர் பக்கத்திற் சேர்ந்து பொருந்த இனி உனது அருட்கிருபையை வந்து தர, என்றும் உனது கடமையாகும்; என்னுடைய உடலும் உயிரும் உன் பாரமாகும் (உன் ஆட்சிக்கு உட்பட்டதாகும்); அடியேனுடைய தொண்டை ஏன்றுகொண்டு அன்பர்களுடனே-

சேர்க்கை இன்பம் பொருந்தி, என் அழகு சிறப்புற்று, உனது திருவடியில் புணர் கரணம் (கரணம் புணர) - என் மனம் பொருந்த, மயிலின் புறத்தே மகிழ்ச்சிபூண்டு, தேவர்களும் பொன் மலர்களைப் பொழிய, உன்னுடைய அன்பானது மகிழ்ச்சிகூடி இன்றே என்னை முன்னதாகக் கருதாதோ! (முதலில் நினைக்காதோ)!

தனனதன தனனதன....டங்குடங் குந் என (தடம்) ஒலிக்கும் வளைவுள்ள (தவில்) மேளம், முரசு, பறை, திமிலை (ஒருவகைப் பறை) இவையெலாம் டிங் டிங்குந் தென்று ஒருங்குகூடி பேரொலி எழுப்பத், தேவர்களின் பேரி வாத்தியம்-

தடு டுடுடு டுடுடுடு....டிமிடிமிட டகுர்திகுகு என ஒலிக்க, சங்கும், (வெண் கொம்பும்) வெண்ணிறமுடைய ஊதுகொம்பும், வலிய (கடையுகம்) யுகக்கடை - யுகாந்தம் - யுகமுடிவு போல ஒலிசெய்ய, கடல் அஞ்ச, வஞ்சனாகிய சூரனது குலம் சிதறுண்டு அழிய,

கோபம் மிக உண்டாக, வேலாயுதத்தைச் செலுத்தித் தேவர்கள், அந்த (அம்பரம்) கடல், திசைகள், (இவைகளில் உள்ளோர்), (உரகர்) நாகர், பூமியில் உள்ள (மந்தரம்) மந்தரமாகிய மலைகளில் உள்ளோர். பிரமன் உலகங்கள் முழுதும் - (இங்ஙனம் யாவும்) மகிழ்ச்சிகொள்ள, திருமாலும் பிரமனும் அடிமைபூண்டு அபயந் தா என்று ஒலிடும் பாடல்களைப் பாட

அழகிய புன்னகையைப் பூத்தருளி, எனது தந்தை சிவபிரானது பக்கத்தில் உள்ள கவுரி (உமையவள்) மனம் குழைய, ஒப்பற்ற கங்கை (உன் ஆடலைப் பார்த்து) அன்பு கொள்ளும் - தம்பிரானே! திரு அண்ணாமலையில் வீற்றிருக்கும் தம்பிரானே! சங்கரன் கும்பிடும் தம்பிரானே!

(அன்புகந்து இன்று முன் சிந்தியாதோ)

## 565. பிறப்பு அற

தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன தந்ததான

*சுக்கி லச்சுரொணி தத்தி லூற்றநளி
னத்தி லப்புவென ரத்த முற்றிசுக
சுக்கி லக்குளிகை யொத்து கெர்ப்பகுகை
வந்துகோலத்-

தொப்பை யிட்டவயி றிற்பெ ருத்துமிக
வட்ட மிட்டுடல வெப்ப முற்றுமதி
சொற்ற பத்தின்†மறி யக்ஷ ரத்தினுடை
விஞ்சையாலே;

கக்க நற்புவியி லூற்ற ரற்றிமுலை
யைக்கொ டுக்கவமுர் தைப்பு சித்து‡வளர்
கைக்க சத்தியொடு ழைத்து தத்துநடை அந்தமேவிக்-

கற்று வெற்றறிவு பெற்று Xதொக்கைமயி
லொத்த மக்கள்மய லிற்கு ளித்துநெறி
கட்டி யிப்படிபி றப்பி லூற்றுடல மங்குவேனோ;

தெற்க ரக்கர்பவி ஷைக்கு லைத்து Oவிட
ணற்கு நத்தரச ளித்து முத்திகொடு
சித்தி ரத்திருவு ரத்த சக்கிரிதன் மருகோனே-

---

* "ஒழுகிய விந்து வூறு சுரோணித மீது கலந்து
பனியி லொர்பாதி சிறுதுளி மாது
பண்டியில் வந்து புகுந்து திரண்டு
உருவமு மாகி உயிர்வளர் மாதம்
ஒன்பது மொன்று நிறைந்து மடந்தை
உதர மகன்று புவியில் விழுந்து" - பட்டினத்தார் உடற்கூற்று.

†மறி அக்ஷரத்தினுடை விஞ்சை: பிரமலிபியின் சத்தி-பிரமன் எழுதியுள்ள தலை எழுத்து-'என் தலைமேல் அயன் கையெழுத்தே" கந்தர் அலங்-40 'ஏட்டின் விதிப்படியே கொடுமாபுர வீட்டி லடைத்து" - திருப்புகழ் 789

‡ வளர்கைக்கு அசத்தியொடு எனப்பிரிக்க

X தொக்கை - தோகை O விடணற்கு விபீஷணற்கு

விபீஷணற்கு முடி சூட்டியது - திருப்புகழ் 141-பார்க்க.

'ஆதிநாயக னாக்கிய நூன்முறை நீதியானை நெடுமுடி சூட்டுவாய்' என இராமர் இலக்குமணற்கு ஓத, அவரும் அங்ஙனமே விபீஷணருக்கு முடி சூட்டினார்.

"ஐயன் ஆணையினால் இளங்கோளரி
கையினால் மகுடங் கவித்தானரோ" - கம்ப ராம-மீட்சி. 2, 6.

# 565.

(சுக்கிலம்) இந்திரியமும், சுரோணிதம் (சுக்கிலத்தோடு கலந்து சிசு உற்பத்திக்குக் காரணமாகும்) மகளிர் இரத்தமும் ஒன் று பட்டுத், தாமரையிலையில் நீர்போல, ரத்தம் நிறைந்து, சுகந்தரும் சுக்கிலத்தாலாய ஒரு (குளிகை) மந்திர சக்தியுள்ள ஒரு மாத்திரை அளவைப் பூண்டு கெர்ப்பப் பையில் தோன்றிப் (பின்னர்) அழகிய

தொப்பையிடுகின்ற (தாயின்) வயிற்றிலே பெருத்து (வளர்ந்து), மிகவும் அந்த வயிற்றிற் சுழலுதல் உற்று, உடலில் சூடுவரப் பெற்று, மாதம் சொல்லப்பட்ட பத்தாவதில் - (பத்தாம் மாதத்தில்)-மறி) கீழ்மேலாக விழச் செய்யவல்ல எழுத்துக்களின் மந்திர சக்தியாலே-

வெளியில் தள்ளிவிட, நல்ல இப் பூமியிற் சேர்ந்து, (சேர்ந்ததும்) அழுது, (தாயார்) முலையை (முலைப்பாலை)த் தர, அந்த முலைப்பாலமுதை உண்டு, வளர்வதற்கு வலியின்மையால் பிரயாசைப்பட்டு, தத்தித் தத்தி நடக்கும் நடை அழகைப் பெற்று-

நூல்களைப் படித்து, பயனிலா அறிவை அடைந்து, தோகைமயில் போன்ற (பெண்) மக்களின் மோகத்தில் மூழ்கி, விதியினாற் கட்டுண்டு, இவ்வண்ணம் பிறவியை அடைந்து உடலம் (ஈற்றில்) அழிபட இறந்து படுவேனோ!

தெற்கிலிருந்த அரக்கர்களின் செருக்கை அழித்து, விபீஷணற்கு விரும்பத்தக்க அரசாட்சியைத் தந்து முத்தியைக் கொடுத்தவரும், அழகிய லக்ஷுமியை மார்பில் தரித்தவரும், சக்கரத்தை ஏந்தியவரும் ஆன திருமாலின் மருகனே!

செக்க ரத்தின்மலை *முப்பு ரத்திலெரி
யிட்ட சத்திசிவ னுற்று நத்தமிகு
† சித்த னைத்தையும்வி ழித்த சத்தியுமை தந்தபாலா;
தர்க்க மிட்டசுர ரைக்கெ லித்துமலை
யுக்கெ ழுக்கடல்கொ ளுத்தி அட்டதிசை
தட்ட முட்டையடை யக்கொ டிப்புகையின் மண்டும்வேலா-
தத்தை வித்ருமநி றத்தி முத்தணிகு
றத்தி கற்பகவ னத்தி சித்தமவை
தக்கு நத்தஅரு ணைக்கி ரிக்குள்மகிழ்
தம்பிரானே (57)

## 566. திருவடி சேர

தந்தத் தந்தத் தனதன தானன
தந்தத் தந்தத் தனதன தானன
தந்தத் தந்தத் தனதன தானன தனதான

செஞ்சொற் பண்பெற் றிடுகுட மாமுலை
கும்பத் தந்திக் குவடென வாலிய
தெந்தப் பந்தித் தரளம தாமென விடராவி-
சிந்திக் கந்தித் திடுகளை யாமுன
தங்கத் தம்பொற் பெதுவென வோதுவ
‡ திண்டுப் புந்தித் திடுகனி தானுமு
னிதழாமோ;

---

* முப்புரத்தில் எரியிட்ட சத்தி:- சத்தி - வன்மை; தேவி எனலுமாம்.

திரிபுரத்தை எரித்தது தேவி:-

திரிபுர நீறதாக அனல்மோதுஞ் சிலை" - திருப்புகழ் 1276

'புரஞ் சுடுஞ் சினவஞ்சி நீலி' - திருப்புகழ் 464. 'புரம் நொடியினில் எரிசெய்த அபிராமி' - திருப்புகழ் 304

† சித்து அனைத்தையும் விழித்த சத்தி: சகல சித்திகளுக்கும் தேவியின் அருளே காரணமாகும்;

சித்திகள் எட்டன்றிச் சேரெட்டி யோகத்தாற்
புத்திக ளானவை எல்லாம் புலப்படும்.
சித்திகள் எண் சித்தி தானாந் திரிபுரை
சத்தி அருள்தரத் தானுள வாகுமே" - திருமந்திரம் 670.

‡ திண்டுப்புந் தித்திடு கனிதானும் - திண் துப்பும் தித்தித்திடு கனிதானும்; துப்பு - பவளம்.

செம்மையான திருக்கரத்தில் (மேரு) மலையாம் (வில்லை எந்தி)த் திரிபுரங்களில் நெருப்பு பற்றும்படிச் செய்த) சத்தி (தேவி), சிவன் உடனிருந்து விரும்ப, (அல்லது முப்புரத்தில் எரியிட்ட வன்மைவாய்ந்த சிவன் உடனிருந்து விரும்ப), மிகுந்த சித்துக்கள் யாவற்றையும்*அட்ட சித்திகள் முதலான சித்துக்களை யெல்லாம் கண்ட சத்தி (சித்துக்களுக்குப் பிறப்பிடமான சத்தி) - (உமை) பார்வதி பெற்ற குழந்தையே!

வாதிட்டு வந்த அசுரர்களைச் செயித்து, மலைகள் பொடியாக, ஏழு கடல்களையும் எரியிட்டு, எட்டுத் திசைகளும் (தட்ட) நுறுங்க, (முட்டை அடைய) தவிடுபட, (கொடிப்புகை) நெருப்பின் புகைக் கொடியுடன் விரைந்து உக்ரத்துடன் நெருங்கும் வேலாயுதனே!

கிளி போன்றவள், பவளநிற முடையவள், முத்துமாலை அணிந்த குறப்பெண் (வள்ளி), கற்பக வனத்தி (கற்பக மரக்காடு உள்ள பொன்னுலகத்தவள் (தேவசேனை) - ஆகிய இருவர்களின் மனங்கள் பொருந்தி விரும்பத் திரு **அண்ணாமலைக்குள்** மகிழும் தம்பிரானே)

(பிறப்பிலுற் றுடலம் மங்குவேனோ)

## 566.

செம்மையான சொற்களின் தகுதியைப் பெற்றுள்ள (செஞ்சொற்களாற் புகழத்தக்க) குடம்போன்ற பருத்த கொங்கையானது கும்பகலசம், யானை, மலை என விளங்கியும், வெண்மை நிறங்கொண்ட பற்களின் வரிசை முத்துப்போல விளங்கியும் - துன்பத்தில் என் ஆவியைத்-

தள்ளி மணம் வீசவல்ல அழகு வாய்ந்தனவாம்; (ஆதலால்) உனது அங்கங்களின் அழகிய பொலிவுக்கு எதை யான் உவமையாகக் கூறுவது; (திண்) வலிமையுள்ள பவளமும் தித்திப்பு உள்ள பழமும் உன் வாயிதழுக்கு நிறத்திலும் சுவையிலும் நிகராகுமோ!

---

* அட்டசித்தி - திருப்புகழ் 296 - பக்கம் 236.

மஞ்சொக் குங்கொத் தளகமெ னாமிடை
கஞ்சத் தின்புற் றிடுதிரு வேயிள
வஞ்சிக் கொம்பொப் பெனுமயி லேயென முறையேய-
வந்தித் திந்தப் படிமட வாரொடு
கொஞ்சிக் கெஞ்சித் தினமவர் தாடொழு
மந்தப் புந்திக் *கசடனெ நாளுன தடிசேர்வேன்;
நஞ்சைக் கண்டத் திடுபவ †ராரொடு
திங்கட் பிஞ்சக் கரவணி வேணியர்
நம்பர்ச் செம்பொற் பெயரசு ரேசனை யுகிராலே-
நந்தக் கொந்திச் சொரிகுடல் சோர்வர
‡ நந்திக் கம்பத் தெழுநர கேசரி
X நஞ்சக் Oகுண்டைக் கொருவழி யேதென மிகநாடி;
** வெஞ்சச் ††சிம்புட் சொருபம தானவர்
பங்கிற் பெண்கற் புடையபெ ணாயகி
விந்தைச் செங்கைப் பொலிசுத வேடுவர் புனமீதே-

---

*கசடனெநாள் - கசடன் எந் நாள். † ஆர் - ஆத்தி.

நந்தி - தோன்றி

X நஞ்ச - நைந்துபோக

Oகுண்டை-குறுமை 'குண்டைக் கோட்ட குறுமுள்கள்ளி' அகநானூறு 184-நஞ்சக்குண்டைக்கு - நைந்து குறுக.

**வெஞ்சு - வெச்சு சந்தம் நோக்கி; வெச்செனல் - கடுமையாகும் குறிப்பு.

'தமதீஞ்சொல் வெச்சென்றிடச் சொல்லி' - (சிந்தாமணி 2015)

†† இரணியனைவதைத்த நரசிங்கம் (திருமால்) திருப்புகழ் 327-1 பக்கம் 317) - இரணியனது ரத்தம் ஒரு துளிகூடச் சிந்தாமல் அதை உறிஞ்சி உண்டனர்; அதனால் வெறி ஏறி உக்கிரம்கொண்டு உலகங்களை வருத்தத் தொடங்கினர். இதைக் கண்ட தேவர்கள் அஞ்சிச் சிவபெருமானை வேண்ட, அவர் வீரபத்திரரை ஏவ, வீரபத்திரர் சரபப்பக்ஷியின் உருவம் எடுத்து அந்த நரசிங்கத்தை அடக்கிக் கொத்திக் கீறி, அதன் தோலையும், முகத்தையும் சிவபிரானுக்கு முன்பு வைத்தனர்: சிங்கத்தோலை உடையாக அணிந்தார். அதனாற் சிவபிரானுக்குச் 'சிங்க உரி'யும் "நாரசிங் காம்பரன்" எனப் பெயரும் கிடைத்தன. சிங்கமுகத்தைப் பிரமனது வெண்டலைமேல் அணிந்து கொண்டனர்.

"வீர! * நர சிங்கத்தையே வதைத்துப் பிறங்கும் ஆனனத்தையும் ** சருமந் தனையும் நல்குதி ** என்றுரைத்தான்"

"சரப உருக் கொணர்ந்தே.. ஆர்ப்பரித்து....வள்ளுகிரால் நரமடங்கல்"

(தொடர்ச்சி பக்கம் 293 பார்க்க)

மேகத்தை நிகர்க்கும் திரண்டு நிறைந்துள்ள கூந்தல் என்றெல்லாம் கூறி (மிடை) நெருங்கிய தாமரையில் மகிழ்ந்து வீற்றிருக்கும் லக்ஷ்மியே, இளமைவாய்ந்த வஞ்சிக் கொடிக்கும் கொம்புக்கும் ஒப்பான மயில்போன்றவளே, என்றெல்லாம் முறை பொருந்த - ஒழுங்காக-

வந்தனைப் பேச்சுக்கள் பேசி, இவ்வண்ணம் மாதர்களுடன் கொஞ்சிப் பேசியும், கெஞ்சிப் பேசியும், நாள்தோறும் அவர்களுடைய பாதங்களைத் தொழுகின்ற மழுங்கின அறிவுடைய குற்றமுடையவனாகிய நான் எந்த நாளில் உனது திருவடியைச் சேர்வேன்!

விஷத்தைக் கழுத்தில் தரிப்பவர், ஆத்திமாலையோடு இளம்பிறையையும், (அக்கு) எலும்பையும் (அல்லது ருத்திராக்ஷத்தையும், பாம்பையும் பூண்டுள்ள சடையினர், நம்பர் (சிவன்) (செம்பொன் பெயர் அசுரேசனை) இரணியன் என்னும் பெயருள்ள அசுரனை - நகத்தாலே-

அழிந்துபோம்படிக் குத்திக் கிழித்து, சொரிந்துவிழும் குடல் தளர்ச்சியுற, (கம்பத்து நந்தி எழு) தூணிலே தோன்றி வெளிவந்த நரசிங்கமூர்த்தி, (நஞ்சக் குண்டைக்கு) (அகங்காரம்) நைந்து அடங்கிக் குறுகுவதற்கு வழி யாதென்று மிக யோசித்து-

கடுமை கொண்டவராய்ச் சரபப்பக்ஷியின் சொரூபம் கொண்டவருடைய பாகத்தில் இடங்கொண்ட பெண், கற்பு நிறைந்த பெண்கள் நாயகமாம் பார்வதியின் அழகிய செங்கையில் விளங்கும் குழந்தையே! வேடர்களின் தினைப்புனத்திலே-

---

வடிவனைத்தும் உரித்த சுற்றதளும் திருமுகமும் முற்றுமெடுத்
தமலன் துலங்கவைமுன் சயவீரன் இலங்கிட வைத்தனனே.
வீரன் முன்பாய் வைத்த திறை.
...பராபரன்...விரித்துடுத்து...
நாரசிங்காம்பரன் என்றே பெயர்தரித்து முகத்தை
நளின அயன் வெண்டலைமேல் நாயகமாய்த் தரித்தான்"
- ஞானவரோதயர் உபதேச காண்டம் - *1830, 1839, 1842, 1843.*

வீரபத்திரர் எனக் கூறாது சிவனே சரபமானார் எனக் காஞ்சிப் புராணம் கூறும்.

'அஞ்சலீரென் றளித்தனன் சிம்புளாய்
வஞ்ச மானிட வாளரி யாயுளைத்
துஞ்சு வித்துரி கொண்டொளி தோற்றினான்
தஞ்ச முண்டவர் தஞ்சர ணாயினான்.'

-காஞ்சிப் புராணம் - நாரசிங்கீச - *12.*

வெண்டித் தங்கித் திரிகிழ வாவதி
துங்கத் துங்கக் கிரியரு ணாபுரி
வெங்கட் சிங்கத் தடிமயி லேறிய பெருமாளே (58)

## 566 - I சிவ அமுது உண்ண

தனதன தனனாத் தனதன தனனத்
தனதன தனனாத் தனதன தனனத்
தனதன தனனாத் தனதன தனனத் தனதான

*செய செய **அருணாத் திரி**சிவ யநமச்
செயசெய அருணாத் திரிமசி வயநச்
செயசெய அருணாத் திரிநம சிவயத் திருமூலா-
செயசெய அருணாத் திரியந மசிவச்
செயசெய அருணாத் திரிவய நமசிச்
செயசெய அருணாத் திரிசிவ யநமஸ்த் தெனமாறி;
செய செய அருணாத் திரிதனின் விழிவைத்
தரகர சரணாத் திரியென உருகிச்
செய செய குருபாக் கியமென மருவிச் சுடர்தாளைச்-
சிவசிவ சரணாத் திரிசெய செயெனச்
சரண்மிசை தொழுதேத் தியசுவை பெருகத்
திருவடி **சிவவாக் கியகட லமுதைக் குடியேனோ;**

---

*இந்த அருமைப் பதிகம் பாராயணத்துக்கு மிகப் பொருத்தமாம். ஏனெனில் பஞ்சாக்ஷரமும் நினைத்தால் முத்தி அளிக்கும் 'அருணாத்திரி' என்னும் திருநாமமும் பல முறை வருவதால்: 'உன்னினர் தங்கட்கெல்லாம் ஒல்லையின் முத்தி நல்கும்" மலை அண்ணாமலை;

'சிவயநம' என்னும் பஞ்சாக்ஷர மாறுதல்களும் கவனிக்கற்பாலன. இங்ஙனம் மாறி உரைப்பதன் பலனை

'நகார மகார சிகார நடுவாய்
வகாரம் இரண்டும் வளியுடன் கூடி
ஒகார முதற்கொண் டொருக்கால் உரைக்க
மகார முதல்வன் மனத்தகத் தானே' -
சிகார வகார யகார முடனே
நகார மகார நடுவுற நாடி
ஒகார முடனே ஒருகா லுரைக்க
மகார முதல்வன் மதித்துநின் றானே

- என வரும் திருமந்திரப் பாக்களிற் (976, 982) காணலாம்.

(தொடர்ச்சி பக்கம் 295-பார்க்க.)

(வெண்டி) களைப்பு உற்றுத் தங்கித் திரிந்த உரிமையாளனே (அல்லது கிழவடிவு கொண்டவனே! மிக உயர்ந்ததும் பரிசுத்தமானதுமான மலையுள்ள திரு **அண்ணாமலை** ஊரில் விரும்பத்தக்க கண்ணை உடைய சிங்கபீடம்போல (சிங்காசனம் போல) மயில்மேல் ஏறிய பெருமாளே!

(எந்நாள் உனது அடி சேர்வேன்)

## 566 - I

ஜெய ஜெய அருணாசலா "சிவய நம", ஜெய ஜெய அருணாசலா 'மசிவயந', ஜெய ஜெய அருணாசலா "நமசிவய" - அழகிய மூலப்பொருளே!

ஜெய ஜெய அருணாசலா "யநமசிவ' ஜெய ஜெய அருணாசலா "வயநமசி" ஜெயஜெய அருணாசலா சிவய நமஸ்த்து" என மாறி மாறிச் செபித்து

ஜெய ஜெய என்று கூறி அருணாசலத்தில் (மனக்) கண்ணை வைத்து 'ஹர ஹர திருவடி மலையே, (சிவமலையே) எனத்தியானித்து) உள்ளம் உருகி, ஜெய ஜெய (இந்த மந்திரம்) (எங்கள்) குருதந்த பாக்கியம் என உள்ளம் பொருந்தி, (ஆண்டவனது) ஒளிவீசும் திருவடியை

'சிவ சிவ' திருவடி மலையே (சிவமலையே) ஜெய ஜெய எனப் புகழ்ந்து திருவடியின் மீது (வீழ்ந்து) தொழுது போற்றிய இன்பம் பெருக அந்தத் திருவடியின் (ஆண்டவனது) *சிவமந்திரத்தாற் பெறுகின்ற கடலமுதம் போன்ற இனிய அமுதைப் பருகேனோ, பருகி மகிழேனோ!

---

'வளி - சீவனாகிய "ய", மகார முதல்வன் - நாதத்துக்குத் தலைவனான சிவன், நகாரத்தை முதலாக வைத்துக் கூறுவது வேதமுறை, சிகாரத்தை முதலாக வைத்துக் கூறுவது ஆகம முறை'. (பஞ்சாக்ஷர விளக்கம் - பக்கம் 73, 74)

'சி' கரம் முதலாகிக் கடைசிவரையில் மாறும் முறையை இங்குக் கூறியவாறே திருமூலரும் திருமந்திரத்திற் பின்வருமாறு குறிக்கின்றார்;

ஆயுஞ் சிவாய நமசி வாயந
வாயு நமசிவா யயநம சிவாயந
வாயுமே வாய நமசியெனு மந்திர
மாயுஞ் சிகாரம் தொட்டந்தத் தடைவிலே (923)

- பஞ்சாக்ஷர விளக்கத்தைத் திருப்புகழ்ப் பாடல் 207 - பக்கம் 28, பாடல் 262 - பக்கம் 152 - கீழ்க்குறிப்பிற் காண்க.

* பசுபதி சிவாக்கியம் (திருப்புகழ் 191).

செயசெய *சரணாத் திரியென முநிவர்க்
கணமிது வினைகாத் திடுமென மருவச்
செடமுடி மலைபோற்†றவுணர்க ளவியச் சுடும்வேலா-
திருமுடி யடிபார்த் திடுமென இருவர்க்
கடிதலை தெரியாப் படி‡ நிண அருணச்
சிவசுடர் Xசிகிநாட் டவனிரு செவியிற்
புகல்வோனே;

செயசெய சரணாத் திரியெனு மொடியெற்
கிருவினை பொடியாக் கியசுடர் வெளியிற்
**றிருநட மிதுபார்த் திடுமென மகிழ்பொற்
குருநாதா-
திகழ்கிளி மொழிபாற் சுவையித ழமுதக்
குறமகள் முலைமேற் புதுமண மருவிச்
சிவகிரி அருணாத் ††திரிதல மகிழ்பொற்
பெருமாளே (58-I)

---

* சரணாத்திரி என வரும் இடங்களில் சரண - அத்திரி திருவடிமலை எனப்பொருள்படும். 'திருவடி சிவவாக்கிய கடலமுதை' என்ற இடத்தும் - சரணாத்திரி எனவரும் இடங்களிலும் - "திருவடி" என்னும் சொற்றொடர் சிவனையே குறிக்கும்; 'செங்காட்டங்குடி மேய திருவடி தன் திருவருளே பெறலாமோ திறத்தவர்க்கே"-எனச் சம்பந்தர் கூறிய இடத்தில் (III 63-7) திருவடி என்னும் சொல் சிவபெருமானையே குறிக்கின்றது கவனிக்கற்பாலது. பின்னும்-

"திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகஞ்சிந் திக்கில்
திருவடி யெசெல் கதியது செப்பில்
திருவடியே தஞ்சம் உள்தெளி வார்க்கே" -என்னும்

திருமந்திரச் செய்யுளும் *(138)* உணரற்பாலது; திருவடியைச் 'சுத்த ஞானம் என்னும் தண்டையம் புண்டரிகம்' என்றார் கந்தரலங்காரத்தில் - *(92)*. எனவே 'சரணாத்திரி' என்பது 'திருவடி மலை' 'சிவமலை' எனப்பொருள்படும். 'அருணாசலம் அண்ண முடியாதவராய்ச் 'சிவம்' நின்ற இடம் ஆதலால் அது 'அண்ணாமலை' 'சிவமலை'யாம்.

சரணம் - அடைக்கல ஸ்தானம், புகலிடம் எனப் பொருள் கொண்டு - சரணாத்திரி என்பதற்கு யாவர்க்கும் புகலிடமாம் மலை எனலுமாம்.

† எழுகிரி, கிரவுஞ்சம் இவைகளில் வாசஞ் செய்திருந்த அசுரர்கள், இம் மலைகளின் பாதுகாப்பிலிருந்த அவுணர்கள். ‡ நிண - நின்ற.

X சிகி - அக்கினி நாட்டவன் - கண்ணை உடையவன் (சிவன்)

(தொடர்ச்சி பக்கம் -297 பார்க்க.)

"ஜெய ஜெய திருவடி மலையே (சிவமலையே)" என்று கூறும் இது (வினை காத்திடும் என முநிவர் கணம் மருவ) வினைகளைப் போக்கிடும் வினையினின்றும் காத்திடும் நம்மை என்று முநிவர் கூட்டங்கள் கூடிப் பொருந்தத், தங்களுடைய உடலையும் முடியையும் கிரௌஞ்சம், எழுகிரி என்னும் மலைகள் காப்பாற்ற நின்ற அசுரர்கள் மடிந்து விழச் சுட்டெரித்த வேலாயுதனே!

திருமுடியையும், திருவடியையும் கண்டுபிடியுங்கள் எனக்கூறித், திருமால், பிரமா என்னும் இருவர்க்கும் அடியும் முடியும் தெரியாத வண்ணம் நின்ற செந்நிறச் சிவசுடராம் - அக்கினிக் கண்ணனாம் சிவனுடைய இரண்டு செவிகளும் (குளிர) உபதேசம் செய்தவனே!

ஜெய ஜெய திருவடி மலையே (சிவமலையே) எனத் துதிக்கின்ற அடியேனுக்கு "(உனது) இருவினைகளையும் பொடியாக்கிய ஒளி வெளியில் (யாம் செய்யும்) திருநடம் இதோ! பார்ப்பாயாக' எனக்கூறி மகிழும் அழகிய குருநாதனே!

விளங்கும் (மொழி) கிளி மொழி போலவும், பாலின் சுவை போலவும் அமைந்து, வாயிதழ் (ஊறல்) அமுதம் போல அடைந்துள்ள குறமகள் (வள்ளியின்) கொங்கையின் மீது உள்ள புது மணத்தை அனுபவித்துச் சிவமலையாம் **அருணாசல** தலத்தில் மகிழ்கின்ற அழகிய பெருமாளே!

*(சிவவாக்கிய கடலமுதைக் குடியேனோ)*

---

*(296-ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)*

O அடியேனுக்கு.

** சுவாமிகள் நடன தரிசனம் பெற்றதைக் குறிக்கும்.

†† அருணாத்ரி - அருணாசலம்; அத்திரி - மலை; இப் பாடலை அருணகிரிநாதர் வரலாறு என்னும் எனது நூலிற் (பக்கம் 249) பார்க்க.

## 567. காலன் வருநாளில் தரிசனம் பெற

தனன தனந்தனந் தான தத்த தந்த
தனன தனந்தனந் தான தத்த தந்த
தனன தனந்தனந் தான தத்த தந்த
தனதனத் தனதான

தமர குரங்களுங் காரி ருட்பி ழம்பு
மெழுகிய அங்கமும் பார்வை யிற்கொ ளுந்து
தழலுமிழ் கண்களுங் காள மொத்த கொம்பு
முளகதக் *கடமாமேல்-

தனிவரு மந்தகன் பாசம் விட்டெ றிந்து
அடவரு மென்றுசிந் தாகு லத்தி ருந்து
தமரழ மைந்தருஞ் சோக முற்றி ரங்க
மரணபக் குவமாநாள்;

கமல முகங்களுங் கோம ளத்தி லங்கு
நகையு நெடுங்கணுங் காதி னிற்று லங்கு
கனக குதம்பையுந் தோடும் வஜ்ர அங்க
தமுமடற் சுடர் வேலுங்-

கடிதுல கெங்கணுந் †தாடி யிட்டு வந்த
மயிலுமி லங்கலங் கார பொற்ச தங்கை
கழலொலி தண்டையங் காலு மொக்க வந்து
வரமெனக் கருள்கூர்வாய்;

இமகிரி வந்தபொன் பாவை பச்சை வஞ்சி
அகில தலம்பெறும் பூவை சத்தி யம்பை
யிளமுலை யின்செழும் பால்கு டித்தி லங்கு
மியல்நிமிர்த் திடுவோனே-

---

*கடமா - மதயானை - 'கடமா முகத்தினாற்குத் தாதை காண்
அப்பர் - VI - 65-9.

† தாடி - தாவடி; பிரயாணம்;

## 567.

(தமரம்) ஒலி செய்கின்ற (குரங்களும்) (கால்) குளம்புகளும், (கார்) கரிய நிறமுடைய - (இருட்பிழம்பு) - இருளின் திரட்சி பூசினது போன்ற உடலும், பார்க்கும் பார்வையில் எரிகின்ற நெருப்பைக் கக்குகின்ற கண்களும், (காளம்) ஊதுகொம்பு போன்ற நீண்ட கொம்புகளும் உள்ள (எருமைமேல்), (கதம்) கோபம் நிறைந்த (கடமா) மதயானை போன்ற எருமைமேல்-

ஒப்பற்ற நிலையில் வருகின்ற யமன் பாசக்கயிற்றை வீசி எறிந்து கொல்ல வருவான் என்கின்ற மனக்கவலையில் இருந்து, சுற்றத்தார் அழ, மக்களும் துக்கமுற்று வருந்த - மரணம் குறுகிக்கூடும் நாளில்- (நீ)

தாமரையன்ன திருமுகங்களும், அழகுடன் விளங்கும் நகையும், நீண்ட கண்களும், காதில் விளங்கும் பொன்னாலாய (குதம்பை) காதணியும், தோடு (தோடு என்கிற காதணியும், வஜ்ரம் (வைர ரத்னத்தால்) ஆகிய (அங்கதம்) தோளில் அணியும் வாகுவலயம் என்கிற ஆபரணமும், வெற்றி பொருந்திய ஒளிவீசும் வேலாயுதமும்

வேகத்தில் உலக முழுமையும் பயணம் போய்வந்த மயிலும், விளங்குவதும் அலங்காரமா யுள்ளதுமான அழகிய சதங்கை, வீரக்கழல், ஒலிசெயும் தண்டை - இவை யணிந்துள்ள திருவடியும் - இவை யாவும் ஒன்றுபடக் (கூடிட) வந்த வரத்தை எனக்கு அருள் புரிவாயாக.

இமயமலையில் தோன்றிய பொன்னனையாள், பாவை (பதுமை போல்வாள்), பச்சை நிறத்து வஞ்சிக்கொடி போல்வாள், அண்டங்களை எல்லாம் பெற்ற பூவை (நாகண வாய்ப்புள் போல்வாள்), சத்தி, அம்பை, ஆகிய பார்வதி தேவியின் இளங் கொங்கையின் செழுமையான பாலைக் குடித்து, விளங்கிநின்ற (பாண்டியனுக்கு இயற்கையாயிருந்த) (கூனை) நிமிர்த்தருளியவனே! (அல்லது) விளங்கும் இயற்றமிழ் ஆதிய தமிழை வளர்த்தவனே! (அல்லது - விளங்கும் உலக ஒழுக்கங்களைச் சீர்ப்படுத்தினவனே!)

இறைவ ரிறைஞ்சநின் றாக மப்ர சங்க
முரைசெய் திடும்ப்ரசண் டாவி சித்து நின்ற
ரணமுக துங்கவெஞ் சூரு டற்பி ளந்த
அயிலுடைக் கதிர்வேலா;

அமண ரடங்கலுங் கூட லிற்றி ரண்டு
கழுவி லுதைந்துதைந் தேற விட்டு நின்ற
அபிநவ துங்ககங் காந திக்கு மைந்த அடியவர்க்
கெளியோனே-

அமரர் வணங்குகந் தாகு றத்தி கொங்கை
தனில்முழு குங்கடம் பாமி குத்த செஞ்*சொ
லருணை நெடுந்தடங் கோபு ரத்த மர்ந்த
அறுமுகப் பெருமாளே. (59)

## 568. மறவேன்.

தனனாதன தனனாதன தாந்தன தாந்தனதந்
தனனாதன தனனாதன தாந்தன தாந்தனதந்
தனனாதன தனனாதன தாந்தன தாந்தனதந் தனதான

† தமிழோதிய குயிலோமயி லாண்டலை யாம்புறவங்
கிளிகாடையி‡னணிலேரளி யாங்குரல் வாய்ந்ததிசெந்
தகுமா Xமிட றொலியாரித ழாஞ்சுளை
தேன்கனியின் சுவைசேருந்-

தனபாரமு மலையாமென வோங்கிட மாம்Oபொறிசிந்
திடவேல்விழி நுதலோசிலை வான்பிறை மாந்துளிரின்
சரிரார்குழ லிருளாநகை யோங்கிய வான்கதிரின்
சுடர்பாயக்;

**குமிழ்நாசியின் முகமோமதி யாங்குளிர் சேங்கமலஞ்
சரிதோடிணை செவியாடுச லாங்கள பூங்கமுகங்
கொடிநூலிடை யுடையாரன மாம்ப்ரியர் மாண்புரிமின்
கொடிமாதர்-

---

* சொல் - புகழ் - 'தன் சொலால் தான் கண்டனைத்திவ் வுலகு' திருக்குறள் 387. † தமிழ் - இனிமை ‡ அணில் - அன்றில் X மிடற்றொலி - புட்குரல் - இங்கு அன்னத்துக்குப் பதிலாகக் கிளி கூறப்பட்டுள்ளது - பாட்டு 197, 323, 337 (பக்கம் 6, 300, 344) பார்க்க. O பொறி சிந்திட - தேமல் சிதறிட, ** குமிழ் - குமிழ்-என்னும் பூ. மூக்குக்கு உவமிக்கப்படும் ஒரு மலர். "மூக்கரிந்து மண்ணில் எங்கணும் தூக்கி வைத்தெனக் குமிழ் மலரும்" - காஞ்சிப்புராணம் - நாட்டு - 59. "மலர்க் குமிழ் ஒத்துள துண்டம்" - திருப்புகழ் 198.

சிவபிரான் வணங்கிக்கேட்க, அவர்முன் நின்று ஆகம ஞானப் பிரசங்கம் செய்த சக்திமானே (வீரனே)! (போர்க்கென்று) போரணிகளை இறுகக்கட்டி நின்று போர்முனைக்கு எழுந்த, உயர்ச்சி பெற்ற, கொடிய, சூரனுடைய உடலைப் பிளந்த கூர்மைகொண்ட ஒளிவேலனே!

சமணர் அனைவரும் மதுரையில் கூட்டமாகக் கழுமுனையிற் காலூன்றிக் கால் ஊன்றி ஏறும்படி விட்டு நின்ற புதுமைப் பிரானே! பரிசுத்தமான கங்காநதியின் மைந்தனே! அடியவர்க்கு எளியவனே!

தேவர்கள் வணங்கும் கந்தபிரானே! குறத்தி (வள்ளியின்) கொங்கையில் அழுந்தும் கடம்பனே! மிகுந்த வல்ல புகழ் விளங்கும் அருணையில் நீண்ட பெரிய கோபுரத்தில் வீற்றிருக்கும் ஆறுமுகப் பெருமாளே!

(வரமெனக் கருள் கூர்வாய்)

## 568.

தமிழின் இனிமைக் குரலைக் காட்டும் குயிலோ, மயிலோ, கோழிதானோ, புறாவோ, கிளியோ, காடையோ (குறும்பூழோ) அன்றிலோ, வண்டோ, என்னும்படிப் (புட்) குரல் வாய்ந்து மிக்க, செம்மையான, தக்கதான, சிறந்த கண்டத்து ஒலி (புட்குரல்) உடைய மாதர்களின் வாயிதழாம் (பலாச்)சுளை, தேன், பழம் இவையிற்றின் சுவை சேர்ந்ததாம்-

கொங்கைப்பாரம் மலை என்னும்படிப் பருத்து ஓங்க, (மா - பொறி) அழகிய தேமல் அங்கும் இங்கும் சிதறிட, வேலோவிழி, வில்லோ சிறந்த பிறையோ நெற்றி அல்லது புருவம், மாந்தளிரோ சரீரம், இருளோ கூந்தல், (நகை) பற்கள் விளங்கும் சிறந்த சூரியனது பாயும் ஒளியோ

குமிழம்பூவோ மூக்கு, இனிய முகம் திங்களோ, குளிர்ந்த செந்தாமரையோ, பொருத்தமாயுள்ள தோடு இரண்டும் விளங்கும் காதுகள், ஊசலோ (ஊஞ்சலோ) கழுத்து அழகிய கமுகோ - கொடியோ, நூலோ இடையானது - எனக் கொண்டுள்ளவர், அன்னம் போல்பவர், பிரியம் காட்டுபவர், பெருமைவாய்ந்த (சிறந்த) மின்னல் கொடி போன்றவர் ஆகிய (பொது) மாதர்களின்-

குணமோடம ளியினாடினு மோங்கிய பூங்கமலஞ்
சரணூபுர குரலோசையு மேந்திடு மாண்டலையின்
கொடியோடெழு தரி தாம்வடி வோங்கிய
பாங்கையுமன் தகையேனே;

திமிதோதிமி திமிதோதிமி தாங்கண தீங்கணதொந்
தகுதோதகு தகுதோதகு டாங்குட தீங்கடதொந்
திகுடோடிமி டிமிடோடிமி டாங்குட டீந்தகமென்
றியல்பேரி-

திசைமுடுக கடலேழ்பொடி யாம்படி யோங்கியவெங்
கரிதேர்பரி யசுரார்கள மாண்டிட நீண்டரவின்
சிரமீள்படக் குவடோதுகள் வான்பெற வாங்கியவண்
கதிர்வேலா;

*கமழ்மா †விதழ் சடையாரடி யேன்துயர் தீர்ந்திடவெண்
தழல் ‡மாபொடி யருள்வோரடல் மான்துடி தாங்கியவண்
கரர்மாடரு ளுமையாளெமை யீன்றவ ளீன்றருள்மென்
குரவோனே-

Xகடையேனிரு வினைநோய்மல மாண்டிட தீண்டியவொண்
சுகமோகினி வளிநாயகி பாங்கனெ னாம்பகர்மின்
கலைநூலுடை முருகா Oவழலோங்கிய
வோங்கலின்வண் பெருமாளே. (60)

---

* அருணகிரியார்க்கு அருணாசலேசுரர் திருநீறு அளித்த வரலாறு இது.

† இதழ் - இதழி; கொன்றை. ‡ மா பொடி - திரு நீறு.

X அருணகிரியார்க்கு வள்ளியம்மை ஸ்பரிசதீக்ஷை செய்த வரலாறு இது - (அருணகிரிநாதர் வரலாறு - பக்கம் 11, 12).

O அழ லோங்கிய ஓங்கல் - திருவண்ணாமலை.

குணத்திலும் ஈடுபட்டுப் படுக்கையில் அவர்களுடன் கலவி புரிந்தாலும் (விளையாடினும்) - விளங்குகின்ற அழகிய தாமரையன்ன (உனது) திருவடியில் உள்ள (நூபுரத்தின்) சிலம்பின் ஒலி ஓசையும், (நீ) கையில் ஏந்தியுள்ள கோழிக் கொடியையும், எழுதுதற்கு அரிதான ஒளி சிறந்த அழகும், மிகுந்த அளவுக்கு என் நினைவில் வருவதைத் (நான்) தடை செய்யேன் (அதாவது - சிறிதேனும் மறப்பதில்லை; நன்கு நினைப்பேன்-

திமிதோதிமி திமிதோதிமி....டாங்குட டீந்தகம் என்று ஒலிக்கின்ற பேரி (முரசு)-

திசைகள் எல்லாம் மூடும்படியும், கடல் ஏழும் பொடியாகும்படியும் பேரொலியுடன் வந்த, கொடிய யானைகளும், தேர்களும், குதிரைகளும், அசுரர்களும் போர்க்களத்தில் இறந்துபட, (அதனால்) பெரிய ஆதிசேடனது தலை (பூபாரத்தினின்றும்) மீட்சிபெற, மலைகளின் பொடி ஆகாயத்தை அளாவிச் செலுத்தின வளமும் ஒளியும் வாய்ந்த வேலாயுதனே!

மணம் வீசும் அழகிய கொன்றையைச் சூடிய சடையார், அடியேனுடைய துயர்தீர (வெண்ணிறத்ததாய் நெருப்பால் தோன்றிய பெருமைவாய்ந்த பொடியாம்) திருநீற்றை அருளி உதவினவர், வலிமை பொருந்திய மான், துடி இவைகளைத் தாங்கிய வண்மை (ஈகை, வளப்பம்) வாய்ந்த திருக்கரத்தவர் - பக்கத்தில் இருந்தருளும் உமையாள், எம்மைப் பெற்றவள், பெற்றருளிய அமைதி வாய்ந்த குருவே!

கடையவனாகிய (கீழோனாகிய) என்னுடைய இரு வினைகளும், நோயும், மும்மலங்களும் அழிந்துபோம்படி ஸ்பரிசதீக்ஷை செய்த ஒள்ளிய சுகமோகினி வள்ளிநாயகிக்குக் கணவனாகச் சொல்லப்படுகின்ற விளங்கும் கலை நூல்கள் வல்ல (சகல கலா வல்லவனாம்) முருகா! நெருப்புருவாய் ஓங்கிநின்ற மலையாம் **அண்ணாமலையில்** வளப்பம் பொருந்திய பெருமாளே!

(வடிவோங்கிய பாங்கையும் தகையேன்)

## 569. கவலை ஒழிய

தனன தனத்தத் தனந்த தனன தனத்தத் தனந்த
தனன தனத்தத் தனந்த தனதான

தலையை மழித்துச் சிவந்த துணியை யரைக்குப் புனைந்து
சடையை வளர்த்துப் புரிந்து புலியாடை-
சதிரொடு வப்பப் புனைந்து விரகொடு கற்கப் புகுந்து
தவமொரு சத்தத் தறிந்து திருநீறு;
*கலையை மிகுத்திட் டணிந்து†கரண வலைக்குட் புகுந்து
கதறு நிலைக்கைக் கமர்ந்த எழிலோடே-
கனக மியற்றித் திரிந்து துவளு மெனைச்சற் றறிந்து
**கவலை யொழித்தற்** கிரங்கி யருள்வாயே;
அலைகட லிற்கொக் கரிந்து மருவரை யைப்பொட்
டெறிந்து
மமருல கத்திற் புகுந்து முயரானை-
அருளொடு கைப்பற்றி வந்து **மருண கிரிப்புக்** கிருந்து
மறிவுள பத்தர்க் கிரங்கு மிளையோனே;
மலையை வளைத்துப் பறந்து மருவு புரத்தைச் சிவந்து
வறிது நகைத்திட் டிருந்த சிவனார்தம்-
மதலை புனத்திற் புகுந்து நரவடி வுற்றுத் திரிந்து
மறமயி லைச்சுற் றிவந்த பெருமாளே. (61)

## 570. பொதுமகளிர் மீது மயக்கு அற

தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன
தனத்த தானன தத்தன தத்தன தனதான

திருட்டு வாணிப விக்ரம துட்டிகள்
மதத்த ரூபிகள் துர்ச்சன ‡பொட்டிகள்
செகத்து Xநீலிகள் கெட்டப ரத்தைகள்
மிகநாணார்-

---

* கலை - சரீரம்.

† 'இந்திரிய வய மயங்கி' - திருவாசகம் - கண்ட பத்து. - I

‡ பொட்டிகள் - திருப்புகழ் - 28 பார்க்க.

X நீலிகள் - திருப்புகழ் 27, 88 (பக்கம் 77-87 கீழ்க்குறிப்பு).

# 569.

தலையை மொட்டையடித்தும், சிவப்புத் துணியை (காவித்துணியை) இடுப்பில் அணிந்தும், சடையை வளர்த்துக்கொண்டும், விரும்பிய புலித்தோல் ஆடையை-

பெருமையாக மகிழ்ந்து அணிந்தும், சாமர்த்தியமாகக் கற்க ஆரம்பித்தும், 'தவம்' என்பதை அந்தச் சொல்லின் சப்தத்தளவே அறிந்தும், (சற்றேனும் தவநிலையில்லாது), திருநீற்றை (விபூதியை)

உடலில் நிரம்ப அணிந்தும், இந்திரிய வலைக்குள் அகப்பட்டும், கதறி வேதனைப்படும் நிலைக்கு உண்டான அழகுடனே - (பொன் வேண்டி)-

(ரசவாதத்தால்) பொன்னை ஆக்கித் திரிந்து சோர்வு அடையும் என்னைக் கொஞ்சம் கவனித்து என்னுடைய கவலையை ஒழிக்கவேண்டி (என்மீது) இரக்கங்கொண்டு அருள்புரிவாயாக.

அலைவீசும் கடலில் மாமரத்தை (சூரனை) அரிந்தும், அரிய கிரவுஞ்சகிரியைத் தூளாக்கியும், தேவலோகத்திற் புகுந்து பெருமை வாய்ந்த யானை (தேவசேனைக்கு)

அருள்பாலித்து அவளைக் கைப்பற்றியும் வந்து திரு **அண்ணாமலையிற்** புகுந்து வீற்றிருந்து அறிவு உள்ள பக்தர்களுக்கு இரங்குகின்ற இளையோனே-

(மேரு) மலையை (வில்லாக) வளைத்துப், பறக்கின்ற சக்திவாய்ந்த திரிபுரங்களின் மீது கோபித்துச் சற்றே சிரித்திருந்த சிவ பெருமானுடைய-

(மதலை) குழந்தையே! (தினை)ப் புனத்திலே புகுந்து, (அங்கே) மனித உருக்கொண்டு திரிந்து, வேடர் (வளர்த்த) மயில்போன்ற (வள்ளியை) வளைத்துக் கவர்ந்து (அபகரித்து) வந்த பெருமாளே!

(கவலை ஒழித்தற் கிரங்கி அருள்வாயே)

# 570.

திருட்டு வியாபாரம் செய்வதில் சாமர்த்தியம் கொண்ட துஷ்டர்கள், ஆணவ சொரூபம் உடையவர்கள், தீய தன்மை கொண்ட வேசிகள், இவ்வுலகில் உள்ள தந்த்ரவாதிகள், கெட்டுப்போன பரத்தைமார்கள்- மிகவும் நாணம் இல்லாதவர்கள்-

சிலைக்கு நேர்புரு வப்பெரு நெற்றிக
ளொடுப்பு மார்பிக ளெச்சிலு தட்டிகள்
சிரித்து மாநுடர் சித்தமு ருக்கிகள் விழியாலே;

வெருட்டி மேல்விழு *பப்பர மட்டைகள்
மிகுத்த பாவிகள் வட்டமு கத்தினை
† மினுக்கி யோலைகள் பித்தளை யிற்பணி மிகநீறால்-

விளக்கி யேகுழை யிட்டபு ரட்டிகள்
தமக்கு மால்கொடு நிற்கும ருட்டனை
விடுத்து நாளொரு மித்திரு பொற்கழல்
பணிவேனோ;

தரித்த தோகண தக்கண செக்கண
குகுக்கு கூகுகு குக்குகு குக்குகு
தகுத்த தீதிகு தக்குகு திக்குகு எனதாளந்-
தடக்கை தாளமு மிட்டியல் மத்தள
மிடக்கை தாளமு மொக்கந டித்தொளி
தரித்த கூளிகள் தத்திமி தித்தென
‡ கணபூதம்;

அருக்க னாரொளி யிற்ப்ரபை யுற்றிடு
மிரத்ந மாமுடி யைக்கொடு கக்கழ
லடக்கை யாடிநி ணத்தையெ டுத்துண அறவேதான்-
அரக்கர் சேனைகள் பட்டுவி ழச்செறி
திருக்கை வேல்தனை விட்டரு ளிப்பொருப்
அருட்கு காவரு ணைப்பதி யுற்றருள்
பெருமாளே. (62)

---

* பப்பர மட்டைகள் - திருப்புகழ் 508, 1228 பார்க்க.

† "முகமினுக்கி மெட்டிட்டுப் பொட்டிட்டுப் பித்தளை யோலை விளக்கி யிட்டு" - திரு ஏகம்பமாலை 29.

‡ பூதங்கள் போரிற் கிடக்கும் ரத்ன முடிகளைக் கழற்சிக் காய்களைக் கொண்டு விளையாடுவதுபோல விளையாடினவாம்:-

பூதங்கள் ரத்ன முடிகளின் ரத்னங்களைக் கொண்டு ஒற்றையா இரட்டையா என்னும் விளையாட்டைப் பந்தயம் போட்டுக்கொண்டு விளையாடின என்று 'பூதவேதாள வகுப்பு' கூறுவது இங்கு உணர்தற்பாலது-

"யுத்த களத்தினில் ரத்ன மணிக்குவை
ஒட்டமொ டொற்றை யிரட்டை பிடிப்பன' - (பூதவேதாள வகுப்பு)

வில்லைப் போன்ற புருவத்தையும் சிறந்த நெற்றியையும் உடையவர்கள், முன்னுக்கு விளங்கும் மார்பினை உடையவர்கள், எச்சில் நிறைந்த உதட்டை உடையவர்கள், சிரிப்பினாலேயே ஆண்மக்களுடைய உள்ளத்தை உருக்குபவர்கள், கண்களாலே-

வெருட்டி மேலே விழுகின்ற கூத்தாடும் பயினிலிகள், மிக்க பாபம் செய்தவர்கள், வட்டமான முகத்தை மினுக்கிக் காதோலைகளாயுள்ள பித்தளையில் ஆன ஆபரணங்களை அதிகச் சாம்பலிட்டு

விளக்கம்பெறச் செய்து குழையணிந்த, மாறுபட்ட பேச்சுடையோர்கள் - இத்தகையோர்கள் மீது காதல் கொண்டு நிற்கும் மயக்கத்தை விட்டு நான் மனம் ஒருமைப்பட்டு - (ஒருவழியில் நின்று) (உனது) இரண்டு அழகிய திருவடிகளைப் பணிவேனோ - (பணியும் பாக்கியத்தை அடைவேனோ!)

தரித்த தோகண.......தக்குகு திக்குகு என்று இசைத்தாள அறுதிகளைப்-

பெரிய கைகளால் தாளமிட்டும், பொருந்திய மத்தளம், இடக்கை (இடது கையாற் கொட்டும் ஒரு தோற்கருவி), தாளம் இவையெலாம் ஒருங்கே ஒலிக்க - அதற்குத் தக நடனஞ் செய்து, ஒளி கொண்ட பேய்கள் தத்திம் தித்தெனக், கூட்டமான பூதங்கள்

சூரியனுடைய ஒளி போல ஒளி வீசும் ரத்னங்களால் ஆன சிறந்த கிரீடங்களைக் கொடுக (கொண்டு உக) கொண்டு, அவை சிந்தும்படியாகக், கழல் (கழற்சிக்காய்கள்) கெச்சைக் காய்களைக்கொண்டு விளையாடுதல் போல (அடக் கையாடி) ஜெயம் பெறக் கையில் (வைத்து) விளையாடி மாமிசங்களை எடுத்து உண்ணும்படி, அடியோடு அற்றுப்போய்-

அசுரருடைய சேனைகள் அழிந்துவிழச் (செறி திருக்கை) திருக்கையிற் செறி - திருக்கையிற் கொண்டுள்ள வேலாயுதத்தைச் செலுத்தியருளிப் போர்செய்த கருணைக் குகனே! திரு **அண்ணாமலை** நகருள் வீற்றிருக்கும் பெருமாளே!

(நான் ஒருமித்து இருபொற்கழல் பணிவேனோ)

## 571. அகப்பொருள்

தானன தான தத்த தானன தான தத்த
தானன தான தத்த தனதான

*தேதென வாச முற்ற கீதவி நோத மெச்சு
தேனளி சூழ மொய்த்த மலராலே-
சீறும ராவெ யிற்றி லூறிய காளம் விட்ட
சீத நிலாவெ றிக்கு மனலாலே;

போதனை † நீதி யற்ற வேதனை வாளி தொட்ட
போர்மத ராஜ னுக்கு மழியாதே-
போக மெலாநி றைத்து மோக விடாய்மி குத்த
பூவையை நீயணைக்க வரவேணும்;

மாதினை வேணி வைத்த நாதனு மோது பச்சை
மாயனு மாதரிக்கு மயில்வீரா-
வானவர் சேனை முற்றும் வாழம ராப திக்குள்
வாரண மான தத்தை மணவாளா;

மேதினி யோர்த ழைக்க வேயரு ணாச லத்து
வீதியின் மேவி நிற்கு முருகோனே.

---

*தேது - ஒளி, "தேதெரி அங்கையில் ஏந்தி ஆடும்" - சம்பந்தர் 3-101-4.

† 'நீதியற்ற வேதன்மீது வாளி தொட்டது' - தான் படைத்த திலோத்தமை மீது காதல் கொண்டதனால் பிரமன் நீதியற்றவன். (பாட்டு 522-பக்கம் 196)

இனி 'நீதியற்ற வேதன்' என்பதற்கு வேறு காரணம்-

முருகவேள் - சூரனைச் சங்கரித்துத் தேவர்களைக் காத்துத் தேவசேனையை மணந்த பின்னர் - "நமக்கு எல்லாந் தந்தது இவ்வேல்" என்றார். அப்போது அருகிருந்த பிரமன் 'இவ் வேலிற்கு இந் நிலை என்னால் வந்ததன்றோ' என நீதியற்ற உரையைக் கூறினான். இதைக் கேட்ட முருகவேள் நங் கையில் வேலுக்கு நீ கொடுப்பதொரு சத்தி யுண்டோ" எனக் கூறிக் கோபித்து 'இங்ஙனம் கூறிய நீ மண்ணிடைச் செல்வாய்' - எனச் சபித்தனர்

(திருமுருகாற்றுப்படை 163-165 - நச்சினார்க்கினியர் உரை.)

போதனை நீதி யற்ற வேதன் - என்பதற்கு போதனையும் (ஞானமும்) நீதியும் அற்ற பிரமன் எனவும் பொருள் காணலாம்.

# 571.

(தேது என) (தேசு என) ஒளி உடையதாய் (அல்லது அழகு உடையதாய்), (வாசம் உற்ற) - நறுமணம் கொண்டதாய், (இசை விநோதம்) - விநோதமான இசைகளை விரும்பித் தேனுண்ணும் வண்டுகள் சூழ்ந்து மொய்ப்பதான மலர்களாலும்-

கோபித்து எழும் பாம்பின் பற்களில் ஊறிய (விஷம் போன்ற) விஷத்தைக் கக்குகின்றதான குளிர்நிலா வீசுகின்ற நெருப்பினாலும்-

*போதனை (போதில் - பூவில் வீற்றிருப்பவனும்) நீதியில்லாதவனுமான வேதனை (பிரமன் மேலே) (வாளிதொட்ட) (தனது) (மலர்) அம்புகளை ஏவின போரில் வல்ல மன்மதராஜனாலும் - நான் அழிவுறாமல்-

பலவித இன்பங்களையும் நிறையத் தந்து, (உன்மீது) மோக தாகம் (காம ஆசை) மிக்குள்ள (இந்த)ப் பெண்ணை நீ அணைக்க வரவேணும்.

கங்கை என்னும் பெண்ணைச் சடையில் வைத்துள்ள தலைவனாம் சிவபிரானும், போற்றப்படுகின்ற பச்சை நிறத் திருமாலும் விரும்புகின்ற மயில் வீரனே!

தேவர்களின் சேனை எல்லாம் வாழ்கின்ற அமராபதியில் (இந்திரன்நகரில்) இருந்த யானையால் (ஐராவதத்தால்) வளர்க்கப்பட்ட கிளிபோன்ற தேவசேனைக்கு மணவாளனே (கணவனே)!

உலகோர் செழிப்புறவே திரு **அண்ணாமலையின் வீதியில்** வீற்றிருக்கும் முருகனே!

---

* 'சகோதர முறையுள்ள பிரமன் மீதிலேயே பாணம் எய்த மன்மதனுக்கு நான் எந்த மூலை' - என்னும் பொருள் இந்த அடியில் தொனிக்கின்றது.

*மேருவை நீறெ ழுப்பி † நான்முக னார்ப தத்தில்
வேலடை யாள மிட்ட பெருமாளே. (63)

## 572. பாட

தான தத்த தந்த தான தத்த தந்த
தான தத்த தந்த தனதான

தோத கப்பெ ரும்ப யோத ரத்தி யங்கு
தோகை யர்க்கு நெஞ்ச மழியாதே-
சூலை வெப்ப டர்ந்த வாத பித்த மென்று
சூழ்பி ணிக்க ணங்க ளணுகாதே;
பாத கச்ச மன்தன் மேதி யிற்பு குந்து
பாசம் விட்டெ றிந்து பிடியாதே-
‡பாவ லற்கி ரங்கி நாவ லர்க்கி சைந்த
பாடல் மிக்க செஞ்சொல் தரவேணும்;
வேத மிக்க Xவிந்து நாத மெய்க்க டம்ப
வீர பத்ர கந்த முருகோனே-
மேரு வைப்பி ளந்து சூர னைக்க டிந்து
வேலை யிற்றொ ளைந்த கதிர்வேலா;
கோதை பொற்கு றிஞ்சி மாது கச்ச ணிந்த
கோம ளக்கு ரும்பை புணர்வோனே-
Oகோல முற்றி லங்கு சோண வெற்பு யர்ந்த
கோபு ரத்த மர்ந்த பெருமாளே. (64)

---

* மேரு - வேலால் - தூளானது- 'வேலுக் கணிகலம் வேலையும் சூரனும் மேருவுமே' - கந்தர் அலங்-62.

'நேமிச் சூரொடு மேருத் தூளெழ' - திருப்புகழ் 68.

† "நான்முகன் மார்பகத்தில்" என்றும் பாடம். நான்முகன் காலில் விலங்கிட்டது வேலே -

"விடவசனஞ் சிலபறையும் விரிஞ்சன் விலங்கது கால் பூண்டு தன்மேல் தீர்ந்தனன்....வேல் வாங்கவே" - வேல்வாங்கு வகுப்பு.

'தேர்ப்பாகன் மைந்தன் மறையோடு தெருமர....வாங்கு வேற்கார" - திருப்புகழ் 757.

"தலர் ராசி தந்தானைச் சிறையிட்டவேல்" - கந்தரந்தாதி - 14.

'ஓம்' என்பதற்குப் பொருள் தெரியாது விழித்தமையால் பிரமன் முருகவேளாற் சிறையிடப் பட்டான். பாட்டு 95-பக்கம் 224; பாட்டு 212-பக்கம் 42;

(தொடர்ச்சி பக்கம் - 311 பார்க்க.)

மேருமலையைப் பொடியாக்கிப் பிரமனது காலில் வேல் கொண்டு அடையாளமாக (விலங்கிட்ட) பெருமாளே!

(பூவையை நீ அணைக்க வரவேணும்)

## 572.

மன நோயைத் தரும் பெரிய கொங்கைகளைக் கொண்டு நடக்கும் மாதர்கள் பொருட்டு (என்) நெஞ்சு அழிவுறாமல்)-

சூலைநோய், வெப்பு (சுரம்), மிக்க வாதநோய், பித்தநோய் என்னும் பேர்களுடன் சூழ்கின்ற நோய்க் கூட்டங்கள் (என்னை) அணுகாமல்

பாவி எமன் தனது எருமை வாகனத்தில் ஏறி வந்து பாசக்கயிற்றை என்மீது விட்டெறிந்து என்னைப் பிடியாமல்-

பாவலனாகிய நக்கீர தேவர்க்கு இரக்கம் காட்டிய தேவனே! புலவர்கள் ஒப்பத்தக்க பாடலையும், நன்கு அமைந்த செவ்விய சொற்களையும் எனக்குத் தந்தருள வேண்டும்.

வேதங்களிற் பாராட்டப்பட்ட விந்து (பீடம்) நாதம் (லிங்கம்) எனப்படும் மூலப்பொருளே! மெய்யிற் கடப்பமாலை அணிந்தவனே! வீரபத்ரருக்கு (உகந்த) கந்தனே! அல்லது - வீரனே! பத்ர - அழகனே, கந்தனே அல்லது, (வீரபத்ர - வீரவாள் கொண்ட கந்தனே), முருகோனே!

மேருமலையை (கிரவுஞ்சத்தைப்) பிளந்து, சூரனை அழித்துக் கடலிற் குளித்தெழுந்த ஒளிவேலனே!

(கோதை) பெண்ணின், அழகிய குறிஞ்சிநிலப் பெண்ணின், ரவிக்கை அணிந்த அழகிய இளநீர் அனைய கொங்கையை அணைந்தவனே!

அழகு நிறைந்து விளங்கும் சோணகிரியில் (அண்ணாமலையில்) உயர்ந்த கோபுரத்தின் கண் வீற்றிருக்கும் பெருமாளே!

(பாடல் மிக்க செஞ்சொல் தரவேணும்)

---

‡ 'பாவினுக் கிணங்க' - என்றும் பாடம். பாவலன் - நக்கீர தேவர்; நக்கீரருக்கு இரக்கங் காட்டின சரிதம் பாடல் *91* - பக்கம் *212-214* காண்க.

X விந்து - நாதம் - பாடல் *100*-பக்கம் *235* - கீழ்க்குறிப்பு.

O "கோலமுற்று யர்ந்த சோலை வெற்பி லங்கு" என்றும் பாடம்.

## 573. அகப்பொருள்

தான தனதன தத்தம் தனதான

பாண மலரது தைக்கும் படியாலே-
பாவி யிளமதி கக்குங் கனலாலே;
நாண மழிய வுரைக்குங் குயிலாலே-
நானு மயலி லிளைக்குந் தரமோதான்;
சேணி லரிவை யணைக்குந் திருமார்பா-
*தேவர் மகுட மணக்குங் கழல்வீரா;
† காண அருணையில் நிற்குங் கதிர்வேலா-
‡ காலன் முதுகை விரிக்கும் பெருமாளே.(65)

## 574. நோயற

தானா தானா தானா தானா
தானா தானத் தனதான

பாலாய் X நூலாய் தேனாய் ○நீளாய்
பாகாய் வாய்சொற் கொடியார்தாம்-
**பாடா வாடா வேடா வாலே
பாடா யீடற் றிடைபீறுந்;

---

* தேவர்கள் முருகன் கழலில் வணங்குவதால் அவர்கள் மகுடங்களில் உள்ள மலர்கள் அவர் கழலில் விழுந்து கழல் மணக்கின்றது. "இமையவர் முடித்தொகையும். மணக்கும் இரு பாதச் சரோருகனும்" - (வேடிச்சி காவலன் வகுப்பு). "சுரர்மாமுடி கமழுங் கழலே' - கந்தரநுபூதி 44.

† 'காண அரிவைமுன் நிற்கும் கதிர்வேலா' - என்றும் பாடம். இந்தப் பாடத்தில் அரிவை என்பது முருகம்மையாரைக் குறிக்கும்; முருகம்மையாரும் அருணகிரியாரின் காலத்துக்கு முற்பட்டவராவர்.

முருக நாமத்தையே ஓர் அம்மை ஓதிக்கொண்டிருக்க அவள் கணவன் 'ஓத வேண்டாம் அடுத்த வீட்டுக்காரன் பேர் முருகன் என்று கூறித் தடுத்தும் கேளாது 'முருக முருக' என்று ஓதினதால் கணவன் வெகுண்டு அவள் கரத்தை வெட்டினான். அப்போதும் அவள் முருகனையே தியானித்து நிற்க முருகவேள் இரங்கி அவள் முன் தோன்றி அவள் கரத்தையும் முன்போலத் தந்தனர்.

"ஒருமுருகா என்றென்னுள்ளங் குளிர உவந்துடனே
வருமுருகா என்று வாய்வெருவா நிற்பக் கையிங்ஙனே
தருமுருகா என்று தான் புலம்பா நிற்பத் தையல்முன்னே
திருமுருகாற்றுப் படையுட னேவருஞ் சேவகனே

(தொடர்ச்சி பக்கம் 313-பார்க்க.)

## 573.

மன்மதனது மலர்ப்பாணங்கள் தைக்கும் காரணத்தாலும்

பாவி இளம்பிறை வெளிவீசுவிடுகின்ற நெருப்பாலும்

(என்) மானத்தைக் கெடுக்கும் வகையிற் கூவுகின்ற குயிலாலும்

நானும் காம மயக்கத்தால் இளைத்துப்போதல் (தகுதியோ) நியாயமோதான்

விண்ணுலகத்தில் இருந்த பெண்ணைத் (தேவசேனையை) அணைக்கும் திருமார்பனே!

தேவர்களுடைய மகுடங்கள் நறுமணம் வீசும் திருக்கழலை உடைய வீரனே!

யாவரும் கண்டுதொழ **அருணாசலத்தில்** விளங்கும் ஒளிவேலனே!

(அடியார் பொருட்டு) யமனை அவன் முதுகுவிரிய அடித்து வெருட்டி விலக்கும் பெருமாளே!

(நானும் மயலில் இளைக்கும் தரமோதான்)

## 574.

பால் போன்றும், (இனியதமிழ்) நூல்போன்றும், தேன்போன்றும் நீண்டு வருகின்ற ஆய்ந்த பாகு (காய்ச்சின) வெல்லமாய் இனிக்கும் வாய்ச்சொல்லை உடைய கொடிபோன்ற மாதர்கள் தாம்-

பாடி ஆடி வேட்கின்ற வலிமையினாலே (விருப்பம் ஊட்டுகின்ற சக்தியால்) பாடாய் - வேதனையுற்றவனாய் - (ஈடு அற்று) (என்) வலிமை (என் தகுதி) தொலைந்துபோய், மத்தியிலே - ஒரு வேளையிலே - கிழிபட்டுப் போகும்-

---

"அரிவைமுரு காஎன் றழைக்குமுன் னேவந்து
கரமுதவி நின்ற கருணைப் பெருந்தேவா"

- (போரூர்ச் சந்நிதி முறை)

‡ 'கான மயிலை நடத்தும் பெருமாளே' - என்றும் பாடம்.

X நூல் - சாஸ்திரம் ஆகமம் எனவும் பொருள்படும்.

O நீள் ஆய் பாகாய் - நீண்டு வருகின்ற ஆய்ந்த பாகாய்.

** பாடா ஆடா வேள் தாவாலே - பாடி ஆடி வேட்கின்ற வலிமையினாலே.

தோலா லேகா லாலே யூனா
லேசூழ் பாசக் குடில்மாசு-

தோயா மாயா வோயா நோயால்
சோர்வாய் மாளக் கடவேனோ;

*ஞாலா மேலா வேதா போதா
நாதா † சோதிக் கிரியோனே-

ஞானா சாரா வானாள் கோனே
நானா வேதப் பொருளோனே;

வேலா பாலா ‡ சீலா காரா
வேளே Xவேடக் கொடிகோவே-

வீரா தாரா Oஆறா தாரா
வீரா வீரப் பெருமாளே (64)

## 575. இடர் தீர

தனதன தனந்த தான தனதன தனந்த தான
தனதன தனந்த தான தனதான

புணர்முலை மடந்தை மாதர் வலையினி லுழன்ற நேக
பொறியுட லிறந்து போன தளவேதுன்-

புகழ்மறை யறிந்து கூறு மினியென தகம்பொ னாவி
பொருளென நினைந்து நாயெ னிடர்தீர;

---

* ஞாலம் - உயர்ந்தோர் - "இம் மூவர் ஞாலம் எனப் படுவார்"-திரிகடுகம். "உலகம் என்பது யர்ந்தோர் மாட்டே' என்பது இலக்கணம்.

† 'சேரிக் கிரி" என்றும் பாடம்; சேரிக்கிரி
-தென்சேரி கிரி (பாடல் 396)

‡ சீல ஆகாரா - பரிசுத்த வடிவனே.

X 'கோழிக் கொடியோனே' என்றும் பாடம்.

O ஆறு ஆதாரம் - பாடல் 220 (பக்கம் 56-58)

தோலாலும், காற்றினாலும், மாமிசத்தாலும், சூழப்பட்டுள்ளதும், பற்றுக்களுக்கு இடமானதுமான குடில் - குடிசை, குற்றங்கள்

தோய்ந்தும், ஒளிமழுங்கியும், ஓய்விலாத (எப்போதும் உள்ள) நோயினால் தளர்ச்சி உற்றும் இறந்துபடக் கடவேனோ!

பூமியில் மேம்பட்டு நிற்பவனே! (அல்லது *உயர்ந்தோர்க் குயர்ந்தோனே) பிரமனுக்கும் (உண்மை) போதித்தவனே! நாதனே! சோதிமலையாம் **அருணகிரிப்** பிரானே!

ஞான ஆசார முதல்வனே! வானுலகை ஆள்கின்ற தலைவனே! பலவகைய வேதங்களுக்கும் உட்பொருளானவனே!

வேலனே! குழந்தையே! பரிசுத்த வடிவனே! (செவ்) வேளே! வேடப்பெண் (வள்ளியின்) நாயகனே!

வீரத்துக்கு ஆதாரம் ஆனவனே! (மூலாதாரம் ஆதிய) ஆறு ஆதாரங்களுக்கும் உரியவனே! வீரனே! வீரமுள்ள பெருமாளே!

(நோயால் மாளக் கடவேனோ)

## 575.

நெருங்கிச் சேர்தலுற்ற கொங்கைகளை உடைய மாதர்களின் வலையில் அலைபட்டு, அனேக விதிவசப்பட்ட (அல்லது - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளைக் கொண்ட) உடல்கள் மாய்ந்து போனவைகளுக்கு (அளவு ஏது) கணக்கு உண்டோ! (கணக்கில்லை என்றபடி); உனது

புகழைச் சொல்லும் வேதாகம நூல்களைக் கற்றறிந்து சொல்லும் இனிமேல் எனது உள்ளம்; பொன் உயிர் பொருள் - என இம் மூன்றையும் நினைந்து (இம் மூன்றின் மேல் ஆசைகொண்டு - (திரியும்) அடியேனுடைய வருத்தங்கள் ஒழிய

* 'பெரியார்கட் கெல்லாம் பெரியாய் நீயே' - அப்பர் VI-38-5.

மணமுணர் மடந்தை மாரொ டொளிர்திரு
முகங்க ளாறு
மணி *கிரி யிடங்கொள் பாநு வெயிலாசை-

வரிபர வநந்த கோடி முநிவர்கள் புகழ்ந்து போத
மயில் மிசை மகிழ்ந்து நாடி **வரவேணும்;**

பணமுலை யரம்பை மார்கள் குயில்கிளி யினங்கள் போல
பரிவுகொ டுகந்து வேத மதுகூறப்-

பறைமுர சநந்த பேரி முறை முறை ததும்ப நீசர்
படைகட லிறந்து போக விடும்வேலா;

அணி †சுக நரம்பு வீணை குயில்புற வினங்கள்
போல
அமளியில் களங்க ளோசை வளர்மாது-

அரிமகள் மணங்கொ டேகி யெனதிட ரெரிந்து போக
அருணையின் விலங்கல் மேவு பெருமாளே (67)

## 576. நினைக்க

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

புலைய னான மாவீனன் வினையி லேகு மாபாதன்
பொறையி லாக கோபீகன் முழுமூடன்-

புகழி லாத தாமீகன் அறிவி லாத காபோதி
பொறிக ளோடி போய்வீழு மதிசூதன்;

நிலையி லாத கோமாளி கொடையி லாத ஊதாரி
நெறியி லாத வேமாளி குலபாதன்-

* கிரியிடம் - கிரீடம். † புட்குரல் - கிளி கூறப்பட்டது பாடல் 568 பார்க்க.

(மனம் உணர்) உன்னைக் கூடுதலையே தமது உணர்ச்சியாகக்கொண்ட (மடந்தைமாரொடு) தேவசேனை - வள்ளியுடன், விளங்குகின்ற திருமுகங்கள் ஆறு, மணிக்-கிரீடங்கள் இவை தம்முட்கொண்ட சூரிய ஒளி திக்குகளிலெல்லாம்-

வரி (ரேகைகளைப்) பரவ - பரப்பி வீச, கணக்கிலாத கோடி முநிவர்கள் புகழ்ந்து வர, மயில்மேல் மகிழ்ந்து (என்னை) விரும்பி (நீ) வரவேணும்;

பருத்த கொங்கைகளைக் கொண்ட தேவ மாதர்கள் குயில், கிளி இவைகளின் கூட்டங்கள்போல (நின்று) அன்புடனே மகிழ்ந்து வேதங்களைக் கூறவும்,

பறையும், முரசும் கணக்கிலாதபேரி (பறை வகைகளும்) முறைப்படி முறைப்படி பேரொலி எழுப்பவும், இழிந்தோராம் அசுரர்களுடைய சேனைக் கடல் மடிந்து போம்படிச் செலுத்தின வேலாயுதனே!

அழகிய கிளி, நரம்புள்ள வீணை, குயில், புறாக் கூட்டங்கள் போலப் படுக்கையில் கண்டத்து ஓசையை (புட்குரலோசையை) எழுப்பும் மாது-

திருமாலின் மகளை (வள்ளியை)த் திருமணஞ் செய்து சென்று, அடியேனுடைய துன்பங்கள் எரிந்து அழியத், திரு **அருணை நகரில்** மலையில் வீற்றிருக்கும் பெருமாளே!

(இடர்தீர......வரவேணும்)

## 576.

கீழ்மகனாய் மிக இழிந்தவன், தீவினைச் செயல்களி-லேயே செல்லும் மகா பாதகன், பொறுமை என்பதே இல்லாத கோப குணத்தினன், முழு முட்டாள்-

புகழ் என்பதே இல்லாத தாம்பிகன் (டம்பன்), அறிவு என்பதே இல்லாத (காபோதி) கண்ணிலான், ஐம்பொறிகள் இழுக்கும் வழியிலேயே போய் விழுகின்ற பெரிய சூதுடையோன் (தந்திரக்காரன்)-

ஒரு நிலையில் நிற்காத கோணங்கி, ஈகை என்பதே இல்லாத டம்பச் செலவு - வீண் செலவுக்காரன் - நன்னெறி என்பதே இல்லாத (ஏமாளி) பேதை - குல பாதகன் (தான் பிறந்த குலத்தைப் பாவத்துக்கு ஆளாக்குபவன்) - இத்தகைய நான்-

நினது தாளை நாடோறு மனதி லாசை வீடாமல்
நினையு மாறு நீமேவி யருள்வாயே;
சிலையில் வாளி தானேவி யெதிரி ராவ ணார்தோள்கள்
சிதையு மாறு போராடி யொருசீதை-
சிறையி லாம லேகூடி புவனி மீதி லேவீறு
திறமி யான மாமாயன் மருகோனே;
அலைய மேரு மாசூரர் பொடிய தாக வேலேவி
அமர தாடி யேதோகை மயிலேறி-
அதிக தேவ ரேசூழ உலக நீதி லேகூறும்
அருணை மீதி லேமேவு பெருமாளே (68)

## 577. மாதர்மீது மயக்கு அற

தானனத் தத்ததனத் தானனத் தத்ததனத்
தானனத் தத்ததனத் தத்த தனதான

*போககற் பக்கடவுட் பூருகத் தைப்புயலைப்
† பாரியைப் பொற்குவையுச் சிப்பொ ழுதிலீயும்-
போதுடைப் ‡ புத்திரரைப் போலவொப் பிட்டுலகத்
தோரைமெச் சிப்பிரியப் பட்டு மிடிபோகத்;
த்யாகமெத் தத்தருதற் காசுநற் சித்திரவித்
தாரமுட் பட்ட Xதிருட் டுக்க விகள்பாடித்-

*போக கற்ப கடவுட் பூருகம் - இஷ்டபோகத்தை யளிக்கும் கற்பமாகிய தெய்வவிருக்ஷம். பூருகம் - விருக்ஷம் † பாரி - பாடல் 236. ‡ புத்திரர் - இவ்வள்ளல்கள் இன்னாரென விளங்க இல்லை. 'புத்திரனை' என்றும் ஒரு பாடம் உண்டு. அது சரியாயின் 'புத்திரன்' என்றது 'முடிய ஒரு பொருள் உதவிய புதல்வன்' என 304-ஆம் பாடலிற் கூறப்பட்ட வள்ளலைக் குறிக்கலாம். இனி, பிரமஸ்ரீ கி-வா ஜகந்நாதையர் அவர்கள் இது 'கர்ணனைக் குறிக்கும் என்றும், கர்ணன் உச்சிப்போது மட்டுமே ஈவதை விரதமாகக் கொண்டிருந்தான் என்றும் அக் காரணத்தால் 'கர்ணன் அரைத் தாதா' என்று தனிப் பாடல் ஒன்று கூறுவதாகவும் பின் வரும் வில்லி பாரதச் செய்யுள்கள் சான்றாம் என்றும் பேரன்புடன் தெரிவித்தார். 'அடுத்த தானமும் பாரிசிலும் இரவலர்க் கருளுடன் முற்பகலளவும், கொடுத்து நாயகன் புகுந்தனன்' - 'அன்ன வேதியன் தளர்ந்த என் நடையினாலானதே பிற்பகல் என்று, சொன்ன வேலையில் நகைத்துனக் களிப்பன் நீ சொன்னவை யாவையும் என்றான்' வில்லிபாரதம் - கிருஷ்ணன் தூது 239, 240. "பின் போதில் வண்மை ஒழிவானை ஓடி அழை என்று பேச" - வில்லி பாரதம் - 9-ஆம் போர்-2 X 'திருடி நெருடிக் கவிபாடி' என்றார் பிறிதோரிடத்து. - (திருப்புகழ் 290).

உனது திருவடியைத் தினந்தோறும் மனதில் ஆசை அழியாமல் (பூரண ஆசையுடன்) நினைக்கும் வண்ணம் *நீ என் உள்ளத்திலிருந்து அருள் புரிவாயாக.

வில்லினின்றும் அம்பைச் செலுத்தி எதிரி (பகைவனாம்) ராவணனுடைய தோள்கள் அறுபடும்படிப் போர் செய்து ஒப்பற்ற சீதையைச்

சிறையில் இல்லாதவாறு செய்து (சிறையினின்று மீட்டு) இவ்வுலகில் மேம்பட்டு விளங்கின சாமர்த்தியசாலி யாகிய மஹா மாயனாம் திருமாலின் மருகனே!

அலைய மேரு. (மேரு அலைச்சலுற) மாசூரர் பொடியதாக (மகா சூரர் பொடிபடும்படி) வேலாயுதத்தைச் செலுத்திப் போர் புரிந்து கலாப மயில் மேல் ஏறி-

நிரம்பத் தேவர்கள் சூழ உலகத்திற் புகழ்ந் தோதப்படும் திரு **அருணையில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(நினையுமாறு நீமேவி அருள்வாயே)

# 577.

இஷ்ட போகத்தை அளிக்கும் கற்பகமாகிய தெய்வ விருக்ஷத்தையும், மேகத்தையும், பாரியையும், பொன் (குவியலை) உச்சி வேளையிற் கொடுத்து வந்த

(போது) (தெய்வ) மலரை வைத்திருந்த புத்திரர்களை - நிகர்ப்பாய் நீ என்றும் உவமை கூறி ஒப்பிட்டு, உலக மக்களை மெச்சி, அவர்கள்மீது பிரியத்தைக் காட்டி - (என்) தரித்திரம் ஒழியும்பொருட்டு,

கொடை பெரிதாக (அவர்கள் தருவதற்கு - நான் பெருவதற்கு) ஆசுகவிகள், நல்ல சித்தரக் கவிகள் வித்தார கவிகள் ஆதிய திருட்டுக் கவிகளை (அவர்கள்மீது) பாடி-

---

* "மறவாதே நினைக்கின்றேன் மனத்து உன்னை வைத்தாய்"
-சுந்தரர் தேவாரம் - 7-1-1.

தேடியிட் டப்படுபொற் பாவையர்க் கிட்டவர்கட்
சேல்வலைப் பட்டடிமைப் பட்டுவிடலாமோ;
ஆகமப் பத்தருமற் றாரணச் சுத்தருமுற்
றாதரிக் கைக்கருணைத் துப்பு மதில்சூழும்-
ஆடகச் சித்ரமணிக் கோபுரத் துத்தரதிக்
காகவெற் றிக்கலபக் கற்கி யமர்வோனே;
தோகையைப் பெற்ற இடப் பாக *ரொற்றைப் பகழித்
† தூணிமுட் டச்சுவறத் திக்கிலெழுபாரச்-
சோதிவெற் பெட்டுமுதிர்த் தூளிதப் பட்டமிழச்
சூரனைப் பட்டுருவத் தொட்ட பெருமாளே (69)

## 578. முக்குணம் அற

தான தனத்தத் தனத்த தத்தன
தான தனத்தத் தனத்த தத்தன
தான தனத்தத் தனத்த தத்தன தனதான

மானை விடத்தைத் தடத்தி னிற்கயல்
மீனை நிரப்பிக் ‡குனித்து விட்டணை
வாளி யைவட்டச் சமுத்தி ரத்தினை வடிவேலை-
வாளை Xவனத் துற் பலத்தி னைச் Oசெல
மீனை விழிக்கொப் பெனப்பி டித்தவர்
மாய வலைப்பட்டிலைத் **துடக் ††குழல் மணநாறும்;
ஊன விடத்தைச் சடக்கெ னக்கொழு
வூறு முபத்தக் கருத்த டத்தினை
யூது பிணத்தைக் குணத்ர யத்தொடு தடுமாறும்-

---

* ஒற்றைப் பகழி - திரிபுர சம்மாரத்தில் அம்பாக உற்ற விஷ்ணு;

† தூணி - (அம்பறாத்தூணி) அந்த அம்பு தங்குங் கூடாகிய கடல்.

திரிபுரம் எரித்தபொழுது சிவபிரான் திருக்கரத்தில் இருந்தது ஒரே ஒரு அம்பு (திருமால்); 'ஈரம்பு கண்டிலம்; ஏகம்பர் தம், கையில் ஓரம்பே முப்புரம் உந்தீ பற' - திருவாசகம்.

‡ 'குறித்து விட்டணை - என்றும் பாடம். X வனம் - ஜலம்.

O செலமீன் - சேல் அம் மீன். **துடக்கு - மகளிர் சூதகம்

†† உழல் - ஊழல்; ஊழல் மணம் - துர்நாற்றம்.

(அவ்வண்ணம் பொருள்) தேடி (அப் பொருளை நான்) காதல் வைத்த அழகிய பெண்களுக்குத் தந்து அவர்தம் (கட்சேல்வலை - சேல் கண்வலை) மீன்போன்ற கண் வலையிற்பட்டு (அவர்களுக்கு) அடிமைப் பட்டுவிடல் நல்லதா? (நல்லதன்று என்றபடி);

ஆகமங்களைக் கற்று வல்ல பக்தர்களும் வேதங்களைப் பயின்ற பரிசுத்தர்களும் ஒருங்குகூடி விரும்பிப் பணி செய்ய திரு அண்ணாமலையில் - பொலிவுள்ள மதில் சூழும்-

பொன் மயமான விசித்திரமான அழகிய கோபுரத்தின் வடக்குப் பக்கத்தில் ஜெயம் விளங்கும் (தோகைக் குதிரை) மயில்மீது அமர்ந்துள்ளவனே!

மயிலன்ன பார்வதியை இடப் பாகத்தில் பெற்றவருக்குத் (திரிபுர சம்ஹார காலத்தில்) ஒரு அம்பாயிருந்த (திருமாலின்) உறைவிடமாம் கடல் அடியோடு வற்றும்படியும், திசைகளில் எழுந்துள்ள பாரமான

ஒளி வீசும் மலைகள் எட்டும் (அஷ்ட கிரிகளும்) உதிர்ந்து (தூளிதப் பட்டு) தூளாகி அமிழும்படியும் சூரன்மீது பட்டு உருவும்படி வேலைச் செலுத்தின பெருமாளே!

(பாவையர்க்கு.....அடிமைப்பட்டு விடலாமோ)

## 578.

மானையும், விஷத்தையும், (குளத்தினில் கயல் மீன்களை நிரப்பியும்) குளத்தினில் நிரப்பப்பட்ட கயல்மீன்களையும், (வில்லை) (குனித்து) வளைத்துச் செலுத்தி அணையும்படிச் செய்கின்ற அம்பையும், வட்டமாக வளைந்துள்ள கடலையும், கூரிய வேலையும்,

வாளையும், ஜலத்தில் மலர்கின்ற செங்கழு நீரையும், சேலாகிய மீனையும் - கண்ணுக்கு ஒப்பாகும் என்று உவமை கூறிப் படித்து (அவர்) அப் பொதுமகளிருடைய மாய வலையிற் சிக்கி, (இலை) அரசிலை போன்றதும், மகளிரின் சூதகமாம் துர்நாற்றம் நாறும்-

ஊனமான (ஈனமான) இடத்தைச், (சடக்கென) வேகமாகக் (கொழு) கொழுப்பு ஊறுகின்ற (உபத்தம்) ஜன்மேந்திரியமான பெண்குறியாம் கரு உண்டாகும் இடத்தை, வீங்கிப் பிணமாவதை, முக்குணத்தோடும் தடுமாறுகின்ற

ஊசலை நித்தத் த்வமற்ற செத்தையு
பாதியை யொப்பித் துனிப்ப வத்தற
வோசை செலுத்திப் ப்ரமிக்கு மிப்ரமை
தெளியாதோ;

சானகி கற்புத் தனைச்சு டத்தன
சோக வனத்திற் சிறைப்ப டுத்திய
தானை யரக்கற் குலத்த ரத்தனை வருமாளச்-
சாலை மரத்துப் புறத் *தொ ளித்தடல்
வாலி யுரத்திற் சரத்தை விட்டொரு
† தாரை தனைச்சுக் ரிவற்க ளித்தவன்
மருகோனே;

சோனை மிகுத்துத் திரட்பு னத்தினி
லானை மதத்துக் கிடக்கு மற்புத
சோண கிரிச்சுத் தர்பெற்ற கொற்றவ மணிநீபத்-
தோள்கொடு சக்ரப் பொருப்பி னைப்பொடி
யாகநெ ருக்கிச் செருக்க ளத்தெதிர்
சூரனை வெட்டித் துணித்த டக்கிய
பெருமாளே (70)

## 579. திருவடியைப் பெற

தனத்த தத்தன தானா தனதன
தனத்த தத்தன தானா தனதன
தனத்த தத்தன தானா தனதன தந்ததான

முகத்து லக்கிக ‡ளாசா ரவினிகள்
விலைச்சி றுக்கிகள் நேரா வசடிகள்
முழுச்ச மர்த்திகள் காமா விரகிகள் முந்துசூது-

*ஒளித்திருந்து வாலிமேல் அம்பெய்தது:- 'ஒளித்து நின்று வரிசிலை குழைய வாங்கி வாயம்பு மருமத் தெய்தல் தருமமோ' - கம்ப ராமயணம் - வாலிவதை 83.

† "தாரை - வாலியின் தேவி - அங்கதன் தாய் - இவளைச் சுக்ரீவன் வாலிக்குப் பிறகு தேவியாகக் கொண்டனன் (அபிதான சிந்தாமணி - பக்கம் 80 - (வால்மீகி ராமாயணம்).

"தாரைமான் ஒரு சுக்கிரிபன் பெற" - திருப்புகழ் 886.

‡ ஆசார ஈனிகள்.

(ஊசலை) பதனழியும் - அழுகிப்போகும் பொருளை, (நித்தத்வம்) நிலைபேறு இல்லாத செத்தை போன்ற வேதனையை, ஒப்பித்து (அலங்கரித்தும்) உ(ன்)னி - (எப்போதும்) நினைத்தும் (பவத்து) பிறப்பிலே (அல்லது - வேதனையை ஒப்பி துனி பவத்து வேதனையை மனமொப்பி ஏற்றுக்கொண்டு (துனி) வெறுக்கத் தக்க பிறப்பிலே) (அற) மிகவும் (ஓசை) மகிழ்ச்சியை (செலுத்தி)க் காட்டிப் (பிரமிக்கும் இப் பிரமை) மயங்குகின்ற இம் மயக்கம் தெளியாதோ!

ஜானகி (சீதையின்) கற்பு தன்னைச் சுடத் தனது அசோக வனத்தில் சிறையில் வைத்த சேனைகள்கொண்ட அரக்கன் (ராவணனுடைய) குலத்தைச் சேர்ந்தவர்கள் அத்தனை பேரும் இறந்தொழிய

சாலையில் இருந்த மரங்களின் புறத்தே ஒளித்திருந்து வன்மை வாய்ந்த வாலியின் மார்பில் அம்பைச் செலுத்தி ஒப்பற்ற தாரையைச் சுக்ரீவனுக்கு அளித்த ஸ்ரீராமரின் (திருமாலின்) மருகனே!

விடாமழை அதிகமாய்ப் பொழியச் செழித்த தினைப்புனத்தில் ஆனை மதங்கொண்டு (அல்லது மயங்கிக்) கிடக்கும் அற்புத மலையான சோணகிரி (திருவண்ணா மலையில் வீற்றிருக்கும்) பரிசுத்தமூர்த்தி (அருணாசலேசுரர்) பெற்ற வீரனே! அழகிய கடப்பமாலை (அணிந்த)

தோள் கொண்டு சக்ரவாளகிரியும் பொடியாக நெருங்கிப், போர்க் களத்திலே எதிர்த்து வந்த சூரனை வெட்டித் துண்டாக்கி அடக்கின பெருமாளே!

(பிரமிக்கும் இப் பிரமை தெளியாதோ)

## 579.

முகத்தை மினுக்குபவர், (பளபளப்பாக்குபவர்), ஆசாரத்தில் இழிவு - குற்றமுள்ளவர்கள் (உடல் நலத்தை) விலைக்கும் விற்கும் சிறுக்கிகள், (அன்பு), பொருந்துதல் இல்லாத மூடர்கள் முழு சாமர்த்தியம் வாய்ந்தவர்கள், காமலீலைத் தந்திரசாலிகள் சூதான எண்ணம் முற்பட்டு நிற்கும்-

மொழிப்ப ரத்தைகள் காசா சையில்முலை
பலர்க்கும் விற்பவர் நானா வநுபவ
முயற்று பொட்டிகள் மோகா வலமுறு
கின்றமுடுர்;

செகத்தி லெத்திகள் சார்வாய் *மயகிகள்
திருட்டு மட்டைகள் மாயா சொருபிகள்
சிரித்து ருக்கிகள் ஆகா வெனநகை
சிந்தைமாயத்-

திரட் †பொ றிச்சிகள் மாபா விகளப
கடத்த சட்டைகள் மூதே விகளொடு
திளைத்த லற்றிரு சீர்பா தமுமினி
யென்றுசேர்வேன்,

தொகுத்தொ குத்தொகு தோதோ தொகுதொகு
செகுச்செ குச்செகு சேசே செககண
தொகுத்தொ குத்தொகு தோதோ தொகுதொகு
தொந்ததீதோ

துடுட்டு டுட்டுடு டூடூ டுடுடுடு
திகுத்தி குத்திகு தீதோ எனவொரு
துவக்க நிர்த்தன மாடா வுறைபவர்
தொண்டர்பேணும்,

‡அகத்தி யப்பனு மால்வே தனும்அறம்
வளர்த்த கற்பக மாஞா லியுமகி
ழவுற்ற நித்தபி ரானே அருணையில் நின்றகோவே-

அமர்க்க ளத்தொரு சூரே சனைவிழ
முறித்து ழக்கிXயவானோர் குடிபுக
அமர்த்தி விட்டசு வாமீ அடியவர்
தம்பிரானே(71)

---

* மயகிகள் - மயக்கிகள்

† பொறி - தந்திரம் 'பொறியிற் பல மாயம் தரும் பொறிகள் அறிந்து' கம்ப ராமாயணம் - சூர்ப்ப - 139.

‡ அகத்தியப்பன் - அகத்தியராற் பூசிக்கப்பட்டவன்.

X அவ் வானோர்.

சொற்களை உடைய பொதுமகளிர், காசின்மேல் உள்ள ஆசையினாலே கொங்கையைப் பலருக்கும் விற்பவர்கள், பலவிதமான அனுபோக நுகர்ச்சிகளில் ஊக்கம் கொண்டுள்ள வேசிகள், மோகத்தினால் (காம மயக்கத்தால் துன்பம் அடைகின்ற மூடர்கள்-

உலகில் வஞ்சிப்பவர்கள், சார்வாய், (நம் பக்கம் சார்ந்த நட்பினர் போலிருந்து) மயக்குபவர்கள், திருடிகள், பயனிலிகள், மாயையே ஒருரு எடுத்து வந்ததுபோல் இருப்பவர்கள், தங்கள் சிரிப்பினாலேயே மனத்தை உருக்குபவர்கள், ஹாஹா என்று நகைத்துத் (தங்களிடம் வந்தவர்களின்) உள்ளத்தை மாய்க்கும்

முற்றின தந்திரசாலிகள், மகாபாவிகள், (அபகடத்து அசட்டைகள்) வஞ்சகம் கொண்டு புறக்கணிப்போர், மூதேவிகள் - இத்தகைய பொதுமகளிரொடு நெருங்கிக் கலத்தல் ஒழிந்து உனது இரண்டு சீர்பாதங்களை இனி என்று நான் அடைவேன்;

தொகுத்தொ குத்தொகு....... தோதோ தொகுதொகு தொந்ததீதோ-

துடுட்டு டுட்டுடு.... திகுத்தி குத்திகு தீதோ என ஒப்பற்றதாய்த் தொடங்கும் ஒரு ஆடலை ஆடி வீற்றிருப்பவர், அடியார்கள் விரும்பும்

அகத்தீசுரனும் (சிவபிரானும்), திருமாலும், பிரமனும் (காஞ்சியில்) அறம் வளர்த்தவளும், கற்பக விருக்ஷம் போன்றவளும், சிறந்த ஞாலத்தவளும் (பூமியிற் பூசிக்கப்படுபவளும்) ஆன பார்வதியும் மகிழும்படி இருக்கும் அழிவிலாதவனாகிய பெருமாளே! அண்ணாமலையில் எழுந்தருளும் தலைவனே!

போர்க்களத்தில் ஒப்பற்ற சூரர் தலைவனான சூரபத்மன் விழும்படி முறித்துக் கொன்று, அந்த தேவர்கள் (பொன்னு-லகிற்) குடியேறும்படி வாழவிட்ட சுவாமியே! அடியவர் தம்பிரானே!

(சீர்பாதமும் இனி என்று சேர்வேன்)

## 580. மாதர்மீது மயக்கு அற

தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன தனதான

மேக மொத்தகுழ லார்சி லைப்புருவ
வாளி யொத்தவிழி யார்மு கக்கமல
மீது பொட்டிடழ கார்க ளத்திலணி வடமாட-
மேரு வொத்தமுலை யார்ப ளப்பளென
மார்பு துத்திபுய வார்வ ளைக்கடகம்
வீறி டத்துவளு நூலொ டொத்தஇடை யுடைமாதர்;
தோகை பக்ஷிநடை யார்ப தத்திலிடு
நூபு ரக் *குரல்கள் பாட கத்துகில்கள்
சோர நற்றெருவு டேந டித்துமுலை விலைகூறிச்-
சூத கச்சரச மோடெ யெத்திவரு
வோரை நத்திவிழி யால்ம ருட்டிமயல்
தூள்†ம ருத்திடுயி ரேப றிப்பவர்க ளுறவாமோ;
சேக ணச்செகண தோதி மித்திகுட
டாடு டுட்டமட டீகு தத்தொகுர்தி
தீத கத்திமித தோவு டுக்கைமணி முரசோதை-
தேச முட்கவர ஆயி ரச்சிரமு
மூளி பட்டுமக மேரு வுக்கவுணர்
தீவு கெட்டுமுறை யோவெ னக்கதற விடும்வேலா;
ஆக மத்திபல கார ணத்தியெனை
யீண சத்தி ‡அரி ஆச னத்திசிவ
னாக முற்றசிவ காமி பத்தினியின் முருகோனே-
Xஆர ணற்குமறை தேடி யிட்டதிரு
மாலம கட்சி றுமி மோக சித்ரவளி
ஆசை பற்றிஅரு ணாச லத்தின்மகிழ்
பெருமாளே (72)

---

* குரல்கள் பாட ஆகத் துகில்கள் சோர எனப்பிரிக்க; ஆகத் துகில் - மார்பு வஸ்திரம்.

† மருத்திடு - மருந்திட்டு. வேசையல் மருந்திடுதல் பாட்டு 230 பக்கம் 74 பார்க்க.

‡ 'அரி தோலாசனத்தி' - திருப்புகழ் 646.

X பிரமனுக்கு வேதத்தைத் தேடிவந்து திருமால் கொடுத்த வரலாறு - மச்சாவதாரம்.

- திருப்புகழ் 245-பக்கம் 108 - கீழ்க்குறிப்பு.

# 580.

மேகம் போன்ற கூந்தலை உடையவர்கள் வில்லைப் போன்ற புருவத்தினர், அம்பு போன்ற கண்ணினர் முகக்கமல (கமலமுக) தாமரை போன்ற முகத்தின்மீது பொட்டு இடும் அழகினர், கழுத்தில் அணிகின்ற மணிமாலை அசைந்தாட-

மேருமலை போன்ற கொங்கையர், பளபள என்று ஒளிதரும் மார்பில் தேமலும், கையில் வரிசையாயுள்ள வளையல்களும் (கடகமும்) கங்கணமும் மேம்பட்டு விளங்க, துவள்கின்ற நூல் போன்ற இடையை உடைய மாதர்கள்-

கலாபப் பக்ஷியாம் மயில்போன்ற நடையினர், காலில் அணிந்துள்ள சிலம்புகளின் ஓசைகள் ஒலிக்க, உடல் மீதுள்ள ஆடைகள் நெகிழ, நல்ல தெருக்களின் வழியே நடித்து, கொங்கையை விலைக்கு விற்று

சூதகச் சரசமோடே (அகச் சூது சரசமோடே) உள்ளத்தில் சூதொடு - வஞ்சகத்தொடு - (சரசம்) - காம சேக்ஷ்டைகளைக் காட்டி, மோசம் செய்து, (அயலில்) வருவோரை விரும்பி, அவர்களைக் கண்ணால் மயக்கி, மயக்கம் தரும் தூள் மருந்தை இட்டு (உண்ணச்செய்து) உயிரையே பறிப்பவர்களாம் (வேசையர்கள்) சம்பந்தம் ஆமோ (உறவு கூடாது என்றபடி).

சேகணச் செகண....தீதகத் திமித தோ என்று உடுக்கை, மணி, முரசு இவைகளின் ஆரவார ஒலியால்,

நாடெலாம் அஞ்ச, (அர) ஆதிசேடனுடைய ஆயிரஞ் சிரங்களும் மூளிபட்டு. மகாமேருமலை சிதறுண்டு, அசுரர்கள் வாசஞ்செய்த நிலங்கள் அழிவுற்று (யாவரும்) முறையோ என்று கதறச் செலுத்தின வேலனே!

ஆகமங்களுக்கு உரியவள், பல காரணங்களுக்கு மூலப் பொருளானவள், அடியேனை (ஈண - ஈன்ற) பெற்றெடுத்த சத்தி, சிம்மாசனம் கொண்டவள், சிவபிரானது ஆகத்தில் இடங்கொண்டுள்ள சிவகாமி என்னும் பத்தினியின் இளங்குழந்தையே!

பிரமனுக்கு வேதத்தைத் தேடித்தந்த திருமாலின் மகளாம் சிறுமி: (உன்மீது) ஆசை கொண்ட விசித்ர வள்ளி மீது ஆசைபூண்டு அருணாசலத்தில் மகிழும் பெருமாளே!

(உயிரே பறிப்பவர்கள் உறவாமோ)

## 581. அகப்பொருள் - முத்திபெற

தனதன தந்த தத்த தனதன தந்த தத்த
தனதன தந்த தத்த தனதான

மொழியநி றங்கறுத்து மகரவி னங்கலக்கி
முடியவ ளைந்தரற்று கடலாலும்-
முதிரவி டம்பரப்பி வடவைமு கந்தழற்குள்
முழுகியெ ழுந்திருக்கு நிலவாலும்;
*மழையள கந்தரித்த கொடியிடை வஞ்சியுற்ற
மயல்தணி யும்படிக்கு நினைவாயே-
மரகத துங்க வெற்றி விகட நடங்கொள் சித்ர
மயிலினில் வந்து முத்தி தரவேணும்;
அழகிய மென்குறத்தி புளகித சந்தனத்தி
னமுத தனம்படைத்த திருமார்பா-
அமரர் புரந்தனக்கு மழகிய செந்திலுக்கு
மருணை வளம்பதிக்கு மிறையோனே;
† எழுபுவ னம்பிழைக்க அசுரர் சிரந்தெறிக்க
‡ எழுசயி லந்தொளைத்த சுடர்வேலா-
இரவிக ளந்தரத்தர் அரியர பங்கயத்த
ரிவர்கள் பயந்தவிர்த்த பெருமாளே(73)

## 582. சிவஞான சித்திபெற

தனதான தத்ததன தனதான தத்ததன
தனதான தத்ததன தனதான

Xவலிவாத பித்தமொடு களமாலை விப்புருதி
வறள்சூலை குட்டமொடு குளிர்தாகம்-

---

* 'மழையொக்கும் வடித்த கூந்தல்' - கம்ப. ராமா - மாரீசன் வதை - 70- 'மழை தவழ் வளைகுழல்' - திருப்புகழ் 650.

† ஏழு லோகம் - பாடல் 46 - பக்கம் 123.

‡ ஏழுகிரி - பாடல் 43 - பக்கம் 117.

X வலி - அமரகண்டம், குமரகண்டம், பிரமகண்டம், காக்கைவலி, முயல்வலி என்று ஐவகைப்பட்ட வலிகள்.

வாதம் - உடலில் வாயு மிகுதலாகிய பிணிக் கூறு.

வறள் - வறள் வலிப்பு - வயிற்று வலி வகை.

## 581.

யாவரும் சொல்லும்படியாக நிறம் கறுமைகொண்டு, மகர மீன்களின் கூட்டம் கலக்கி முழு இடத்தும் வளைந்து ஒலிசெய்யும் கடலாலும்-

(கலைகள்) வளர, இடம் அகன்று (பூரணமாய் - பூரண சந்திரனாய்), வடவா முகாக்கினியை மொண்டு கொண்டும், நெருப்பில் முழுகியும், எழுந்துவரும் நிலவாலும்-

மழைபோல் நீண்ட கூந்தலைக்கொண்ட வஞ்சிக்கொடி போன்ற இடையை உடைய (இப் பெண்) அடைந்துள்ள காம மயக்கம் தணியும்படிக்கு (நீ) நினைவு பூண்டு-

பச்சை நிறம், பரிசுத்தம், வெற்றி இவைகளைக் கொண்டதாயும், அழகுள்ள நடனம் கொண்டதாயும் உள்ள அலங்கார மயில்மீது வந்து முத்தி தரவேணும்.

அழகிய மென்மை வாய்ந்த குறத்தி (வள்ளியின்), புளகம் கொண்டதும், சந்தனமும் அமுதமும் பொதிந்த கொங்கையைக் (கொண்ட)- அணைந்துள்ள அழகிய மார்பனே!

தேவர்களின் ஊர் (அமராவதியிலும்), அழகிய திருச்செந்தூரிலும், அருணை என்னும் வளப்பம் பொருந்திய ஊரிலும் தங்கும் தலைவனே!

ஏழுலகங்களும் பிழைக்க அசுரர்களின் தலை தெறிக்க ஏழு கிரிகளைத் தொளைத்த ஒளிவேலனே!

ஆதித்தர்கள், விண்ணுலகோர், அரி (திருமால்), அரன் (ருத்திரன்) பங்கயத்தன் (பிரமா) இவர் தம் பயத்தை ஒழித்த பெருமாளே!

(மயிலினில் வந்து முத்தி தரவேணும்)

## 582.

வலி (இழுப்பு நோய்), வாதம் - பித்தநோய் - பின்னும் கண்டமாலை நோய், (விப்புருதி) - சிலந்தி அல்லது கிரந்திப்புண் என்னும் நோய் - (வறள்) - உடம்பு மெலிதல். சூலை (வயிற்றுளைவு நோய்), குட்டநோய், குளிர், தாகம்.

மலிநீ ரிழிச்சல்பெரு வயிறீளை கக்குகளை
வருநீ ரடைப்பினுடன் வெகுகோடி;
சிலைநோ யடைத்தவுடல் புவிமீ தெடுத்துழல்கை
தெளியா வெனக்குமினி முடியாதே-
சிவமார் திருப்புகழை எனுநா வினிற்புகழ
சிவஞான சித்தி தனை யருள்வாயே;
தொலையாத பத்தியுள * திருமால் களிக்கவொரு
சுடர்வீசு சக்ரமதை யருள்ஞான-
†துவர்வேணி யப்பன்மிகு சிவகாமி கர்த்தன்மிகு
சுகவாரி ‡ சித்தனருள் முருகோனே;
அலைசூரன் வெற்புமரி முகனானை வத்திரனொ
டசுரா ரிறக்கவிடு மழல்வேலா-
Xஅமுதா சனத்திகுற மடவாள் Oகரிப்பெணொடும்
அருணா சலத்திலுறை பெருமாளே (74)

## 583. ஆண்டருள

தனதன தானாதன தனதன தானாதன
தனதன தானாதன தனதான

விடுமத வேள்வாளியின் விசைபெறு **மாலாகல
விழிகொடு வாபோவென வுரையாடும்
விரகுட ††னூறாயிர மனமுடை மாபாவிகள்
ம்ருகமத கோலாகல முலைதோய;
அடையவு மாசாபர வசமுறு கோமாளியை
அவனியு மாகாசமும் வசைபேசும்-

* திருமாலுக்குச் சிவபிரான் சக்கரம் தந்தது:- பாட்டு 80-பக்கம் 188 - கீழ்க்குறிப்பு.

† துவர் வேணி - (துவர் - பவளம்)- 'பவளச்சடை' - சம்பந்தர் I-18-1;

‡ சித்தன் - சிவபிரான் மதுரையில் 'எல்லாம் வல்ல சித்தராய்' விளையாடினார் - திருப்புகழ் 355 - பார்க்க. பக்கம் 398.

X அமுத அசனத்தி எனலுமாம்:- அமுதம்போல இனிய தேன், தினைமாவை உண்பவள்; அசனம் - உணவு.

O கரிப்பெண் - தெய்வயானையம்மை ** ஆலகால - ஆலகால்.

†† 'முப்பதுகோடி மனத்தியர்' - திருப்புகழ் 1190.

"பெண்ணெனப் படுவ கேண்மோ...ஓராயிரம் மனத்த வாகும்". சிந்தாமணி 1597. 'வஞ்சமே கோடி கோடிகள் நெஞ்சமே சேர மேவிய வன்கணார்' - திருப்புகழ் 237.

மிக்க நீரிழிவு, பெருவயிறு (மகோதரம்), ஈளை (கோழை),கக்கு (வாந்தி செய்தல்), களை (அயர்வு) - (சோர்வு) வருகின்ற மூத்திரத் தடை நோய் - இவைகளுடன் வெகு கோடிக் கணக்கான-

கோபித்து எழும் நோய்களை அடைத்துள்ள (இந்த) உடலைப் பூமியின்மிசை எடுத்துத் திரிதல் - தெளிந்த அறிவு இல்லாத எனக்கும் இனி முடியாது;

மங்கலம் நிறைந்த (உனது) திருப்புகழை என்னுடைய நாவாற் புகழச் சிவஞான சித்தியைத் தந்தருளுக;

நீங்காத பத்தியைக் கொண்ட திருமால் மகிழ ஒப்பற்றதான ஒளியை வீசும் சக்கரத்தை அவருக்கு அருளின ஞானமயமான-

பவளநிறச் சடையப்பன், (புகழ்) பெருகிய சிவகாமியின் தலைவன், மிக்க சுகக் கடல்போன்ற சித்த மூர்த்தி அருளிய முருகனே!

கடல், சூரன், கிரௌஞ்சமாலை, (அரிமுகன்) சிங்காமுகாசுரன், (ஆனை வத்திரன் - யானைமுகன்) தாரகன் - மற்றும் அசுரர்கள் (யாவரும்) இறக்கும்படிச் செலுத்தின நெருப்பு வேலனே!

அமுத (மய) பீடத்தினள், குறமடவாள் - ஆகிய (வள்ளியுடனும்) யானை வளர்த்த பெண் - தேவசேனையுடனும் அருணாசலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(சிவஞான சித்திதனை அருள்வாயே)

## 583.

விடுமதவேள் வாளியின் (மதவேள் விடுவாளியின்) - வலிமை அல்லது செருக்கு உள்ள மன்மதன் செலுத்துகின்ற அம்புபோல வேகம் பெற்றுள்ள ஆலகால விஷத்தை ஒக்கும் கண்கள் கொண்டு 'வா' என்றும் 'போ' என்றும் பேசுகின்ற-

சாமர்த்தியத்துடன் நூறாயிரக் கணக்கான (ஒரு நிலையில்லாத) மனத்தைக் கொண்ட மகா பாவிகளின் கஸ்தூரி அணிந்துள்ள ஆடம்பரமான கொங்கைகளில் அணைந்து-

சேர, ஆசைப் பிரமை பூண்ட கோணங்கியை, மண்ணு-ளோரும் விண்ணுளோரும் பழிப்புரை பேசும்

அசடஅ நாசாரனை அவலனை ஆபாசனை
அடியவ ரோடாள்வது மொருநாளே;
வடகுல கோபாலர்த மொருபதி னாறாயிரம்
வனிதையர் தோள்தோய்தரு மபிராம-
மரகத நாராயணன் மருமக சோணாசல
மகிப*ச தாகாலமு மிளையோனே;
† உடுபதி சாயாபதி சுரபதி மாயாதுற
உலகுய வாரார்கலி வறிதாக-
உயரிய மா ‡நாகமு நிருதரு நீறாய்விழ
ஒருதனி வேலேவிய பெருமாளே.(75)

## 584. நினைக்க

தனன தானன தனன தானனா
தனன தானனம் தனதான

விதிய தாகவெ பருவ மாதரார்
விரகி லேமனந் தடுமாறி-
விவர மானதொ ரறிவு மாறியே
வினையி லேஅலைந் திடுமூடன்;
முதிய மாதமி ழிசைய தாகவே
மொழிசெய் தேநினைந் திடுமாறு-
முறைமை யாகநி னடிகள் மேவவே
முனிவு திரவந் தருள்வாயே;
சதிய தாகிய அசுரர் மாமுடீ
தரணி மீதுகுஞ் சமராடிச்-
Xசகல லோகமும் வலம தாகியே
தழைய வேவருங் குமரேசா;

---

* 'என்றும் இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே" -திருமுருகாற்றுப்படை - தனிப் பாடல்

'என்றும் இளையோய்நம குமாரநம என்று தொழுதார்' -கந்தபுராணம் - 1-14-82.

† உடு - நக்ஷத்திரம்; உடுபதி - சந்திரன். சாயாதேவி - சூரியன் மனைவியருள் ஒருத்தி.

‡ நாகம் - மலை - உயரிய மாநாகம் - மேரு, கிரவுஞ்சம்.

X "செவ்வேள்..மயிலிடை வைகி ஊர்ந்தான் மாமுகந் திசைகள் முற்றும்" - கந்தபுராணம் - 4-13-503.

முட்டாளான துராசாரனை, வேதனைப் படுபவனை, அசுத்தனை, (உனது) அடியார்களோடு ஆண்டருளும் பாக்கியம் கிடைக்கும் ஒரு நாள் கிடைக்குமா!

வடக்கே கோபாலர் குலத்தவரான (இடையர் குலத்தவரான) ஒரு பதினாயிரம் மாதர்களது தோள்களை அணைந்த அழகிய

பச்சைநிற நாராயணனுக்கு மருமகனே! சோணாசல (அண்ணாமலையனே)! அரசே! சதாகாலமும் - என்றும் இளையோனே!

(உடுபதி) - நக்ஷத்திரங்களுக்குத் தலைவனான சந்திரனும், சாயாபதி - சாயாதேவிக்குக் கணவனாகிய சூரியனும், (சுரபதி) தேவர் தலைவனாம் இந்திரனும், இறந்துபடாது வாழ, உலகம் பிழைக்க, நீண்ட (ஆர்கலி) கடல் வற்றிப்போக-

சிறந்த மகா (நாகமும்) கிரவுஞ்சகிரியும், அசுரர்களும் தூள் பட்டுவிழ ஒப்பற்ற வேலைச் செலுத்தின பெருமாளே!

(அடியரொ டாள்வதும் ஒரு நாளே)

## 584.

விதி கூட்டுவிப்பதால் யௌவனம் (இளமை) வாய்ந்த பெண்களின் தந்திரச் செயல்களிலே மனம் தடுமாறுதல் அடைந்து-

தெளிவுள்ளதான ஒரு அறிவும் கெட்டுப்போய் வினை வசப்பட்டு அலைந்திடுகின்ற மூடனாகிய (நான்)

பழைய, சிறந்த தமிழ்ப்பாக்களை, இசையுடனே உரைத்து (பாடி) உன்னை நினைந்திடும்படியும்-

கிரமப்படி (முறைப்படி) உனது திருவடிகளை அடையுமாறும், என்மீதுள்ள கோபம் தீர்ந்து வந்து அருள்புரிவாயாக.

வஞ்சனை கூடின அசுரர்களுடைய பெரிய முடிகள் பூமியின்மீது உகும் (உகும்படி - சிந்தும்படி) போர்செய்து-

எல்லா உலகங்களையும் (மயில்மீது) வலமாக (அவ்வுலகங்கள்) குளிரும்படி - நலமுறும்படி - வந்த குமரேசனே!

அதிக வானவர் கவரி வீசவே
அரிய கோபுரந் தனில்மேவி-
அருணை மீதிலெ மயிலி லேறிய
அழக தாய்வரும் பெருமாளே (76)

## 585. யாக்கையை வெறுத்தல்

தந்தத் தனதன தந்தத் தனதன
தந்தத் தனதன தந்தத் தனதன
தனத்த தனதன தனத்த தனதன
தனத்த தனதன தனத்த தனதன
.. .. .. .. தனதான

*விந்துப் புளகித இன்புற் றுருகிட
சிந்திக் கருவினி லுண்பச் சிறுதுளி
விரித்த † கமலமெல் தரித்து ளொருசுழி
யிரத்த குளிகையொ டுதித்து வளர்மதி

விண்டுற் றருள்பதி கண்டுற் றருள்கொடு
‡ மிண்டிச் செயலினி ரம்பித் துருவொடு
மெழுக்கி லுருவென வலித்து எழுமதி
கழித்து Xவயிர்குட முகுப்ப வொருபதில்

விஞ்சைச் செயல்கொடு கஞ்சச் சலவழி
வந்துப் புவிமிசை பண்டைச் செயல்கொடு
விழுப்பொ டுடல்தலை அழுக்கு மலமொடு
கவிழ்த்து விழுதழு துகுப்ப அனைவரு மருள்கூர-

---

* 'கரு உண்டாவதும், பருவம் முதிர்ந்து குழந்தையாகிப் பூமியிற் சேர்வதும் இங்குக் கூறப்படுகின்றது. பாடல் 444 பக்கம் 615. பாடல் 565 - பக்கம் 288 - கீழ்க் குறிப்புக்களைப் பார்க்கவும்.

† கமல மெல் - கமல மேல்.

‡ மிண்டி - வலிகொண்டு.

X வயிறு என்பது சந்தநோக்கி வயிர் என்றாயிற்று.

நிரம்பத் தேவர்கள் கவரிவீச அருமை வாய்ந்த கோபுரத்தில் வீற்றிருந்து-

அண்ணாமலையிலே மயில்மீது ஏறி அழகுடன் வரும் பெருமாளே.

(முனிவு தீரவந் தருள்வாயே)

# 585.

விந்துவானது (சுக்கிலம்)- புளகாங்கிதத்தால் - இன்பநிலை அடைந்து - வெளிவந்து ஒழுகச்சிந்தி - (ஒருமாதின்) கருவிலே உட்கொள்ளப்பட்டதான (அதன்) சிறிய துளியானது விரிந்துள்ள -தாமரை போன்ற கருப்பையில் தங்கி அங்கு உள்ளே ஒரு சுழற்சியில் ரத்தத்தின் (குளிகை - மாத்திரை) அளவொடு (சுரோணிதத்தோடு) கலத்தலால் (கரு) உதித்து (தோன்றி) - (மதிவளர விண்டுற்று) மாதம் ஏற ஏற (வயிறு பெருத்து) வெளிக்காட்ட. ஈன்ற தந்தை (பிதா) இதை அறிந்து அன்புபூண, வலிகொண்டு, (சக்தி அடைந்து), ஆட்டம் அசைவு நிரம்ப ஏற்பட்டு, (துரு) - குற்றங்களுக்கு ஆளாகி, மெழுக்கில் வளர்த்த உருவம்போல உருவம் நன்கு பொருந்தி, ஏழுமாதம் முற்றினபின், வயிறானது குடம்போல (உகுப்ப) வெளிக்காட்ட, ஒரு பத்தாவது மாதத்தில், மாயவித்தை அல்லது மந்திரச்செயலால் - தாமரை உருவமுள்ள ஜலத்துவார வழியே (குழந்தையாய்) வெளிவந்து பூமியின்மேல், பழைய வினைச் செயல்கள் உடன் தொடருதலோடும், (விழுப்பொடு) அசுத்த நிலையோடும், உடலும் தலையும் அழுக்கும் மலமும் மூடக் கவிழ்ந்து, விழுந்து (வெளியே) தள்ளப்பட, (அதுகண்டு) எல்லோரும் (அக் குழந்தைமேல்) ஆசை மீக்கொள்ள-

மென்*பற் றுருகி† மு கந்திட் டனைமுலை
யுண்டித் தரகொடு ‡வுண்கிச் Xசொலிவளர்
வளத்தொ டளைமல சலத்தொ Oடுழைகிடை
துடித்து தவழ்நடை வளர்த்தி யெனதகு
வெண்டைப் பரிபுர தண்டைச் சரவட
முங்கட் டியல்முடி பண்பித் தியல்கொடு
விதித்த முறைபடி படித்து மயல்கொள
தெருக்க ளினில்வரு வியப்ப இளமுலை
விந்தைக் கயல்விழி கொண்டற் குழல்மதி
**துண்டக் கரவளை கொஞ்சக் குயில்மொழி
விடுப்ப துதைகலை நெகிழ்த்தி மயிலென
நடித்த வர்கள்மயல் ††பிடித்திடவர்வரு வழியேபோய்ச்;
சந்தித் துறவொடு பஞ்சிட் டணைமிசை
கொஞ்சிப் பலபல விஞ்சைச் சரசமொ
டணைத்து மலரிதழ் கடித்து இருகர
மடர்த்த குவிமுலை யழுத்தி யுர ‡‡மிடர்
சங்குத் தொனியொடு பொங்கக் குழல்மலர்
சிந்தக் கொடியிடை தங்கிச் சுழலிட
சரத்தொ டிகள்வெயி லெறிப்ப மதிநுதல்
வியர்ப்ப பரிபுர மொலிப்ப எழுமத
சம்பத் திதுசெய லின்பத் திருள்கொடு
வம்பிற் பொருள்கள்வ ழங்கிற் றிதுபினை
சலித்து வெகுதுய ரிளைப்பொ டுடல்பிணி
XX பிடித்தி டனைவரும் நகைப்ப கருமயிர்
நரைமேவித்-

---

* பற்றுருகி - பாசத்தினா லுருகி.

† முகத்தல் - தாங்கி எடுத்தல் - "முந்தி வந்திறைஞ்சினானை முகந்து யிர் மூழ்கப் புல்லி" - கம்பராமா - கும்பகர்ணன் - 129.

‡ உண்கி - உண்டு - X சொலி - சொலித்து.

O உழைகிடை - உழைத்துக்கிடந்து.

** துண்டம் - முகம் (பிங்கலம்.)

†† பிடித்திட அவர் வரு எனப்பிரிக்க.

‡‡ மிடறு என்பது சந்தநோக்கி மிடர் என்றாயிற்று; மிடறு- கழுத்து.

XX பிடித்திட அனைவரும் எனப்பிரிக்க.

மெதுவாகப் பாசத்தினால் உள்ளம் உருகி, (முகந்திட்டு) தாங்கி எடுத்து, (அனை) அன்னை - தாய் - முலை உண்டித்தரகொடு - முலைப்பால் தரக்கொண்டு, உண்டு, ஜொலிப்புடன் வளர்ந்து, வளப்பத்தோடு, துழாவுகின்ற மலஜலத்திலே உழைத்துக்கிடந்து துடித்தும், தவழ்கின்ற நடையுடன் (வளர்த்தி எனதகு) - தக்கபடி வளர்கின்ற தெனச் சொல்லும்படி - (வெண்டை) வெண்டையம் என்னும் காலணியும், (பரிபுரம்) - சிலம்பும், தண்டையும், மணிவடமாகிய கழுத்தணியும் அணிவித்துத், தக்கபடி உச்சி வரையும் சீர்திருத்தி, ஒழுக்கத்துடன், விதித்துள்ள முறைப்படி நூல்களைப் படித்து, (வயதேறுவதால்) காம மயக்கம் உண்டாக, தெருவிலே வருகின்ற வியக்கத்தக்க இளமுலை, விசித்திரமான மீன்போன்ற விழி, மேகம்போன்ற கூந்தல், (திங்கள் போன்ற முகம் அல்லது) (பிறைத்துண்டம் போன்ற) கைவளை ஒலிக்க, குயில்போன்ற சொற்கள் வெளிவர, நெருங்கிய ஆடையை நெகிழ்த்தி (தளர்த்தி) மயில்போல நடித்தவர்களின் மேல் (பொது மகளிர் மேல்) காமமயக்கம் கொள்ள, அம் மகளிர் வரும் வழியிற்போய்-

அவர்களைச் சந்தித்துப் பஞ்சிட்ட படுக்கையின்மேல் (அம் மகளிரொடு) கொஞ்சிப் பலவகைப்பட்ட விசித்ரமான காமலீலைகளுடன அவர்களை அணைத்து, அவருடைய (குமுத) மலர்போன்ற வாயிதழ்களைக் கடித்து, இரண்டு கைகளாலும் நெருங்கியுள்ள அவர்தம் குவிந்த கொங்கைகளை (உரம் அழுத்தி) மார்போடழுத்தி, கண்டத்தினின்றும் சங்குத் தொனிபோலப் புட்குரல்கள் எழும்பக், கூந்தலில் உள்ள மலர்கள் சிந்த, (வஞ்சிக்) கொடிபோன்ற இடையில் தங்கிச் சுழற்சியுற (சரத் தொடிகள் சரம் - மணிவடமும், (தொடி) தோள்வளையும் ஒளிவீச, பிறைபோன்ற நெற்றி வியர்வுதர, காற்சிலம்பு ஒலிசெய, உண்டாகும் காம மயக்கு என்கின்ற (சம்பத்து) செல்வத்தின் இந்தச் செயலால் சிற்றின்பமாகிய இருள் கொண்டு வீணாகப் பொருள்களைச் செலவிட்டும், இங்ஙனம் செலவழித்த பின்னர் (சலித்துப்போய்) வெறுப்பு உற்று மிக்க துயரமும் சோர்வும் கொண்டு, உடலை நோய்கள் பிடிக்க, எல்லோரும் பரிகசித்துச் சிரிக்கக், கரிய மயிரும் நரைகொண்டு (வெளுத்து)-

*தன்கைத் தடிகொடு குந்திக் †கவியென
உந்திக் கசனம றந்திட் டுளமிக
சலித்து வுடல்சல மிகுத்து மதிசெவி
‡விழிப்பு மறைபட கிடத்தி மனையவள்
சம்பத் துறைமுறை யண்டைக் கொளுகையில்
சண்டக் கருநம னண்டிக் கொளுகயி
றெடுத்து விசைகொடு பிடித்து வுயிர்தனை
பதைப்ப Xதனிவழி யடித்து கொடுசெல
சந்தித் தவரவர் பங்குக் கழுதுஇ
ரங்கப் பிணமெடு மென்றிட் டறைபறை
தடிப்ப சுடலையி லிறக்கி விறகொடு
கொளுத்தி Oயொருபிடி **பொடிக்கு மிலையெனு**
முடலாமோ;

திந்தித் திமிதிமி திந்தித் திமிதிமி
திந்தித் திமிதிமி திந்தித் திமிதிமி
திமித்தி திமிதிமி திமித்தி திமிதிமி
திமித்தி திமிதிமி திமித்தி திமிதிமி
என்பத் துடிகள்த வுண்டைக் கிடுபிடி
பம்பைச் **சலிகைகள் சங்கப் பறைவளை
திகுர்த்த திகுதிகு டுடுட்டு டுடுடுடு
டிடிக்கு நிகரென வுடுக்கை முரசொடு
செம்பொற் குடமுழ வுந்தப் புடன்மணி
பொங்கச் சுரர்மலர் சிந்தப் பதமிசை
செழித்த மறைசிலர் துதிப்ப முநிவர்கள்
களித்து வகை††மனி முழக்க அசுரர்கள் களமீதே-

---

* பாடல் 554 பக்கம் 262 கீழ்க்குறிப்புப் X பார்க்க.

† கவி - குரங்கு.

‡ "வன்பல் விழுந்து இரு கண்களிருண்டு" - பட்டினத்தார் உடற்கூற்று.

X 'உயிர்போம் அத்தனி வழிக்கே' - கந்தர் அலங். 59.

'கூற்றுவனூர்க்குச் செல்லும் வழியும் துயரும் பகரீர் - கந்தர் அலங்.56.

O 'காயம் ஒருபிடி சாம்பலாகி விடலாமோ' - திருப்புகழ் 778.

** சலிகை - சல்லிகை 'சல் என்ற ஓசை கொண்டதால்' சல்லிகை, "மத்தளம், தண்ணுமை, யிடக்கை, சல்லிகையென, வைத்த நான்கும் உத்தமக் கருவி" -சிலப்பதிகாரம் (ஊர்காண்) -151 - உரை. ††மனி-மன்னி; பொருந்தி.

தனது கைத் தடியோடு (குந்திக் கவியென) (கவியெனக் குந்தி) குரங்குபோலக் குந்தி நடந்து, (உந்திக்கு) வயிற்றுக்கு (அசனம்) 'உண வையும் மறந்து போய், உள்ளம் மிகவும் அலுத்துத் தேகத்தில் நீர் அதிகமாகச் சேர்ந்து, அறிவும், காதும் கண்ணும் மறைவு அடைந்து (தத்தம் தொழில் குறைபட்டுப்), (படுக்கையிற்) படுக்கையாய், மனையாளும், செல்வத்திலுள்ள (உறைமுறை) உறன்முறையார் உறவினரும் (சுற்றத்தாரும்) பக்கத்தில் வந்து சேரும்பொழுது கோபங்கொண்ட கரிய யமன் அணுகித் (தான்) கொண்டுவந்த பாசக்கயிற்றை எடுத்து வேகத்துடன் பிடித்து உயிரை அது பதைக்கும்படித் தனி வழியில் அடித்துக்கொண்டு செல்ல, (வந்து) (பிணத்தைப் பார்க்கத் - துக்கம் விசாரிக்கச்) சந்திப்பவர்கள் அவரவர் பங்குக்கு அழுதும் இரக்கம் காட்டியும் நிற்கப், பிணத்தை எடுங்கள் என்று கூறி ஒலிக்கின்ற பறைகள் மிக்கெழ, சுடுகாட்டிற் கொண்டு போய்ப் பிணத்தை இறக்கி, விறகு இட்டுக் கொளுத்தி, ஒருபிடி சாம்பற் பொடிகூட இல்லை எனும்படிச் சொல்லத்தக்க (இந்த) உடல் ஆமோ! (ஆகாது) உடல் எடுக்கக் கூடாது (பிறவி வேண்டாம் என்றபடி)

திந்தித் திமிதிமி திந்தித் திமிதிமி.....திமித்தி திமிதிமி திமித்தி திமிதிமி என்று (துடிகள்) உடுக்கைகள், (தவுண்டை) பேருடுக்கை, (கிடுபிடி) வட்ட வடிவான ஒருவகை வாத்தியம். (பம்பை) - பறைப்பொது (முல்லை நெய்தல் நிலங்கட்கு உரியது), (சலிகைகள்) சல்லிகை என்னும் உத்தமத் தோற்கருவிகள், கூட்டமான பறை, சங்கு, திகுர்த்த திகுதிகு டுடுட்டு டுடுடுடு என்று இடிக்கு நிகராக (இடி இடிப்பதுபோல) உடுக்கை, முரசு, சிவந்த அழகிய குடமுழா, (தப்பு) - ஒருவகைப் பறை, அதனோடு, மணி இவையுடன் பேரொலி எழுப்பத், தேவர்கள் மலர் (பதமிசை சிந்த) திருவடி மீது சொரிய, செழிப்புள்ள மறைமொழிகளைச் சிலர் சொல்லித்தோத்திரம் செய்ய, முநிவர்கள் மகிழ்ந்து முறையுடன் பொருந்தி அம் மறைகளை முழங்க, அசுரர்கள் போர்க்களத்திலே-

சிந்திக் குருதிக ளண்டச் சுவரகம்
*ரம்பக் கிரியொடு பொங்கிப் பெருகியெ
சிவப்ப அதில்கரி மதர்த்த புரவிகள்
சிரத்தொ டிரதமு மிதப்ப நிணமொடு

செம்புட் கழுகுக ளுண்பத் தலைகள்த
தும்பக் கருடன டங்† கொட் டிடகொடி
மறைப்ப நரிகண மிகுப்ப குறளிகள்
நடிக்க இருள்மலை கொளுத்தி யலைகடல்

செம்பொற் பவளமு டங்கிக் கமர்விட
வெந்திட் ‡ டிகமலை விண்டுத் துகள்பட
Xசிமக்கு முரகனு முழக்கி விடபட
மடைத்த சதமுடி நடுக்கி யலைபட விடும்வேலா

தொந்தத் தொகுகுட என்பக் கழலொலி
பொங்கப் பரிபுர செம்பொற் பதமணி
சுழற்றி நடமிடு நிருத்த ரயன்முடி
கரத்த Oரரிகரி யுரித்த கடவுள்மெய்

தொண்டர்க் கருள்பவர் வெந்தத் துகளணி
கங்கைப் பணிமதி கொன்றைச் சடையினர்
தொடுத்த மதனுரு பொடித்த விழியினர்
மிகுத்த புரமதை (யரித்த நகையினர்

தும்பைத் தொடையினர் கண்டக் கறையினர்
தொந்திக் கடவுளை தந்திட் டவரிட
சுகத்தி **மழுவுழை கரத்தி மரகத
நிறத்தி †† முயலக பதத்தி அருளிய முருகோனே

---

* ரம்ப - நிரம்ப - முதற்குறை

† கொட்டிட - கோட்டிட - வளைக்க; வட்டமிட

‡ இக மலை - இங்குள்ள மலைகள். X சிமக்கும் - சுமக்கும்.

O அரி உரித்தது - பாடல் - 566 - பக்கம் 292; கரி உரித்தது - பாடல் 286, பக்கம் 210.

**, †† மழு, மான், முயலகன் - வரலாறு பாட்டு 286 பக்கம் - 210.

சிதறி விழுந்து, அவர்களுடைய ரத்தம் அண்டச் சுவரளவும் நிரம்ப, மலைபோலப் பொங்கி எழுந்து பெருகிச் சிவப்ப, அந்த ரத்த (வெள்ளத்தில்) யானைகளும், கொழுப்புள்ள குதிரைகளும், அறுபட்ட சிரங்களும், (இரதங்கள்) தேர்களும் இவையெலாம் மிதக்க, மாமிசத்தைச் சிவந்த பறவைக் கூட்டமாம் கழுகுகள் உண்ண, (உண்ட மகிழ்ச்சியால்) அவைகளின் தலைகள் (திருப்தியுடன்) அசையக் கருடன் நடத்துடன் வட்டமிட, காக்கைகள் மறைவுசெய்ய, நரிக்கூட்டங்கள் மிகச் சேர, (குறளிகள்) மாயவித்தை செய்யும் பேய்வகைகள் கூத்தாட, இருண்ட கிரௌஞ்சகிரியைக் கொளுத்தி, அலைவீசும் கடல் தன்னகத்துள்ள செம்பொற் பவளங்கள் சுருங்கிப் பிளவுபட, வெந்துபோய், இங்குள்ள மலைகள் (யாவும்) தூளாகப், (பூபாரத்தைச்) சுமக்கின்ற (பாம்பு) ஆதிசேடனும் கூச்சலிட்டு விஷமுள்ள படங்களைக்கொண்டுள்ள நூற்றுக்கணக்கான தனது முடிகள் நடுக்கமுற்று அலைபடும்படிச் செலுத்தின வேலாயுதனே.!

தொந்தத் தொகுகுட என்னும் கழலின் ஒலி மிக்கெழ, (பரிபுரம்) சிலம்பணிந்துள்ள செவ்விய அழகிய பாதத்தை அழகாகச் சுழற்றி (அல்லது பாதங்களில் அணிந்துள்ள மணிகளுடன் - சுற்றி) நடனஞ் செய்கின்ற நிருத்த மூர்த்தி, பிரமனது முடியைக் கையிற் கொண்டவர். சிங்கத்தையும், யானையையும் உரித்த கடவுள், உண்மை அடியார்களுக்கு அருள் செய்பவர், வெந்த நீறு அணிபவர், கங்கை, பாம்பு, திங்கள், கொன்றை இவைதமைக் கொண்ட சடையர், (தன்மீது அம்பைச்) செலுத்தின மன்மதனுடைய உருவைப் பொடிசெய்த கண்ணினர், (ஆணவம்) மிக்கிருந்த திரிபுரங்களை எரித்த புன்னகையை உடையவர், தும்பை மலர்மாலையை அணிந்தவர், கழுத்தில் கரிய அடையாளத்தினை உடையவர், தொந்திக்கடவுள் (கணபதியை)ப் பெற்றவர் - அத்தகைய சிவபிரானது இடது பாகத்தில் உள்ள சுகத்தி, மழு மான் ஏந்தின கரத்தினை உடையவள், மரகதம் போன்ற பச்சை நிறத்தினள், முயலகனை மிதித்த திருவடியினள் அருளிய முருகனே!

துண்டச் சசிநுதல் *சம்பைக் கொடியிடை
ரம்பைக் கரசியெ † னும்பற் றருமகள்
சுகிப்ப மணவறை களிக்க அணையறு
முகத்தொ டுறமயல் செழித்த திருபுய

செம்பொற் கரகம லம்பத் திருதல
மம்பொற் ‡ சசியெழ Xசந்தப் பலபடை
செறித்த கதிர்முடி கடப்ப மலர்தொடை
சிறப்பொ டொரு † குடில் மருத்து வனமகள்

தொந்தப் புணர்செயல் கண்டுற் றடியெOனி
Oடைஞ்சற் பொடிபட முன்புற் றரு **ளயில்
தொடுத்து மிளநகை பரப்பி மயில்மிசை
நடித்து ††அழல்கிரி பதிக்குள் மருவிய
பெருமாளே (77)

---

* சம்பைக் கொடி இடை - திருப்புகழ் 210 பார்க்க.

† உம்பல் தரு மகள் - தெய்வயானையம்மை "னும்பொற் குறமகள்" என்றும் பாடம். இந்தப் பாடத்திற் பின்வரும் "குடில் மருத்துவன மகள்' என்பதற்கு விண்ணுலகத்து இந்திரன் மகள் - தேவசேனை - எனப் பொருள் காண்க. குடில் - விண் மருத்துவன் -இந்திரன்.

‡ சசி யெழ - சந்திரனைப்போல் ஒளியெழ

X பலபடை பதினோர் உருத்திரரும் முருகவேளுக்குப் படையாம். "உருத்திரர் தமை.....இவன் கையிற் படையாய் இருத்திரென் றவரைப் பல படை யாக்கி ஈந்தனன் எம்பிரான் கரத்தில்"

'உருத்திர கணத்தோர் நவிலருந் தோமரம், கொடி, வாள்.
வன்திறற் குலிசம் பகழி, அங்குசமும், மணி.
மலர்ப்பங்கயம், தண்டம், வென்றிவில், மழுவும் ஆகி
வீற்றிருந்தார் விறல்மிகும் அறுமுகன் கரத்தில்"
"ஆயதற் பின்னர். ** எப்படைக்கும் நாயக மாவதொரு
தனிச் சுடர்வேல் நல்கியே மதலைகைக் கொடுத்தான்'

-கந்தபுரா - I-18-36, 37, 38.

O இடைஞ்சல் பொடிபட அயில் தொடுத்து. இளநகை பரப்பினது இது அருணகிரியாரின் வரலாற்றைக் குறிக்கும்.

இளநகை பரப்பினது:- "வருமுக நகையொளி தழைந்த நயனமும் இருமலர் சரணமும் மறவேனே" - திருப்புகழ் 113.

(அருணகிரிநாதர் வரலாறு - பக்கம் 8 பார்க்க.)
(தொடர்ச்சி பக்கம் - 343 பார்க்க.)

துண்டச் சசி (சசி துண்டம்) பிறைத்துண்டம் போன்ற நெற்றியையும் (அல்லது புருவத்தையும்), சம்பைக் கொடியிடை) மின்னற் கொடிபோன்ற இடையையும் (உடையவள்), அரம்பையருள் அழகில் மேம்பட்ட ரம்பைக்கும் அரசி - என்னும்படியான உம்பல் தருமகள் - (ஐராவத) யானை வளர்த்த மகள் - தெய்வயானை சுகம்பெற அவளது மண அறை இன்ப மயமாக அவளை அணைந்த ஆறுமுகங்களோடு சேர்ந்து காம இச்சை மிகக்கொண்ட அழகிய புயங்களை உடையவனே! (செம்பொற் கமலகர பத்திரு தலம்) செவ்விய அழகிய திருக்கரத்தலங்களாம் தாமரை (பத்திரு) பன்னிரண்டும் அழகிய ஒளி சந்திரனைப் போல ஒளியைவீச, அழகிய பல படைகள் (ஆயுதங்கள்), (கதிர் செறித்த முடி) ஒளி (மணிகள்) பதிக்கப்பட்ட கிரீடம், கடப்ப மலர்மாலை இவைகளின் சிறப்புடனே, ஒப்பற்ற குடிசையிலிருந்த (மருத்து - மருந்து) அமுதம்போன்ற (வனமகள்) காட்டுவாசி - காட்டில் வசிப்பவளாம் மகள் வள்ளியுடன் சம்பந்தப்பட்டு, சேர்ந்த செயலைப் புரிந்து (செய்து), அடியேனுடைய (இடைஞ்சல்கள்) தடைகளாம் கஷ்டங்கள் பொடிபட்டு ஒழிய, அடியேன் முன்பு தோன்றி (காட்சிதந்து), கருணைமயமாம் வேலைச் செலுத்தியும், புன்னகை நிரம்பப் புரிந்தும், மயில்மீது நடனம் செய்து நெருப்பு மலையாம் **அண்ணாமலை** ஊருக்குள் வீற்றிருக்கும் பெருமாளே!

(ஒருபிடி பிடிக்கும் இலை எனும் உடலாமோ)

---

*(342 - ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)*

** அயிலேவி அருணகிரியாரின் வினையைப் பொடியாக்கியது:-
'அடியேன் இருவினை தூள்படவே அயிலேவிய பெருமாளே
-திருப்புகழ் 725.

அயில்தொடுத்து என்பதற்கு வேல்கொண்டு அருணகிரியாரின் நாவில் எழுதினார் என்றும் பொருள் கொள்ளலாம்.

"பூதலமும் எங்கிளையும் ஈடேற நாவிற் பொறித்து"
"நேயனுள் நாக்கில் தீட்டும் வடிவேலுடனே"
-திருவிரிஞ்சை பிள்ளைத்தமிழ்.

தமது ஆறெழுத்தைப் பொறித்தனர் என்பது-
"அருணகிரி பைந்தமிழின் மாரிபெய்ய
நாவில் திருப்பெயரை நட்டோனை" - இலஞ்சி முருகன் உலா.

†† அழல்கிரி பதி - திருவண்ணாமலை.

## 586. சிவபதம் பெற

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தனதான

வீறுபுழு கானபனி நீர்கள்மல தோயல்விடு
மேருகிரி யானகொடு தனபார-

மீதுபுர ளாபரண சோதிவித மானநகை
மேகமனு காடுகட லிருள்மேவி;

நாறுமலர் வாசமயிர் நூலிடைய தேதுவள
நாணமழி வார்களுட னுறவாடி-

நாடியது வேகதியெ னாசுழலு மோடனைநின்
ஞானசிவ மானபத மருள்வாயே;

கூறுமடி யார்கள்வினை நீறுபட வேஅரிய
கோல *மயி லானபத மருள்வோனே-

கூட அர னோடுநட மாடரிய காளியருள்
கூருசிவ காமியுமை யருள்பாலா;

ஆறுமுக மானநதி பாலகுற மாதுதன
மாரவிளை யாடிமண மருள்வோனே-

ஆதிரகு ராமஜய மாலின்மரு காபெரிய
† ஆதியரு ணாபுரியில் பெருமாளே (78)

---

* மயிலானபதம் - சூரனுக்குக் கிடைத்த மயில்வாகனப் பதவி.

† 'ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமாளே' என்பதும் காண்க.

# 586.

மேம்பட்டு (மணம்வீசும்) புனுகுசட்டம், பனி நீர்கள் ஆகிய இவைகளை (மல தோயால்) மலம் தோய்ந்துள்ள இந்த உடலின் மீது, (விடு) விட்டு (பூசி), மேருமலை போன்ற- தீமைக்கு இடமான - கொங்கைப் பாரங்களின்

மேலே புரள்கின்ற ஆபரணங்களின் ஒளியும், (பல) விதமான சிரிப்பும், மேகம், (அனு) பின்னும், காடு, கடல் இவைகளின் இருள் (கறுப்பு நிறத்தைக்) கொண்டு

மணம் வீசும் மலர்களின் வாசனையைக் கொண்ட (மயிர்) கூந்தலும், நூல்போன்ற (நுண்ணிய) இடை துவள்வதும் (நெகிழ்வதும்) கொண்டு, வெட்கம் என்பதே இல்லாது அழியும் வேசையர்களுடன் உறவு ஆடி (நட்பு பூண்டு)

விரும்பி, அவர்களுடன் ஆடுவதே கதியாகிச் சுழல்கின்ற மூடனாகிய எனக்கு உனது ஞானமயமான சிவமயமான திருவடியைத் தந்தருளுவாயாக.

(உன்னைப்) போற்றும் அடியார்களின் வினை தூளாக அவர்களுக்கு அருமையான அழகிய மயிலான பதவியை அருள்பவனே!

கூட அரனோடு நடமாடு (அரனோடு கூட நடமாடு) சிவபிரானுடன் நடமாடின அரிய காளி, அருள் மிக்க சிவகாமி, உமை, அருளிய குழந்தையே!

ஆறுமுகம் கொண்ட குழந்தையே! (கங்கா) நதியின் குழந்தையே! குறமாது (வள்ளியின்) கொங்கை குளிர விளையாடி மணம்செய்து கொண்டவனே!

ஆதி ரகுராமராம் ஜயமாலுடைய மருகனே! பெரிய, ஆதித்தலமான அருணாபுரியில் பெருமாளே!

(ஞானசிவ மானபதம் அருள்வாயே)

## 4. திருக்காளத்தி:

(ரெயில்வே ஸ்டேஷன். இது ஆந்திர மாகாணம் சித்தூர் ஜில்லா ரேணுகுண்டா ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 15-மைல். பஞ்சபூத ஸ்தலங்களில் வாயு ஸ்தலம். கோயில் சுவர்ணமுகி (பொன்முகரி) நதியின் கீழ்க்கரையில் மலையடிவாரத்தில் இருக்கின்றது. (சீ) சிலந்தி, (காளம்) பாம்பு, (அத்தி) யானை யாகிய இம் மூன்றும் பூசித்த ஸ்தலம். கண்ணப்ப நாயனார் முத்தியடைந்த முது நகர். இது தக்ஷிண கைலாசம் எனவும் பெயர் பெறும். (பாடல் 331 பக்கம் 332 பார்க்க). மூவர் தேவாரமும் பெற்ற தலம். இதற்குத் திருகாளத்திப் புராணம் ஸ்ரீ காளத்திப் புராணம் என இரண்டு ஸ்தல புராணங்கள் உள்ளன.)

## 587. சிவஞானம் பெற

தனத்தா தத்தத் தனனா தந்தத்
தனத்தா தத்தத் தனனா தந்தத்
தனத்தா தத்தத் தனனா தந்தத் தனதான

*சரக்கே றித்தப் பதிவாழ் தொந்தப்
பரிக்கா யத்திற் பரிவோ †டைந்துச்
சதிக்கா ரர்ப்புக் குலைமே விந்தச் செயல்மேவிச்
சலித்தே மெத்தச் சமுசா ரம்பொற்
சுகித்தே சுற்றத் தவரோ டின்பத்
தழைத்தே மெச்சத் தயவோ டிந்தக் குடிபேணிக்;
‡குரக்கோ ணத்திற் கழுநா யுண்பக்
குழிக்கே வைத்துச் சவமாய் நந்திக்
குடிற்கே நத்திப் பழுதாய் மங்கப் படுவேனைக்-
குறித்தே முத்திக் குXமறா வின்பத்
தடத்தே பற்றிச் சகமா யம்பொய்க்
குலக்கால் வற்றச் ○**சிவஞானம்பொற் கழல்தாராய்;**
புரக்கா டற்றுப் பொடியாய் மங்கக்
கழைச்சா பத் **தைச் சடலா னுங்கப்
புகைத்††தீ பற்றப் புகலோ ரன்புற் றருள்வோனே

---

*சரக்கு ஏறு இந்த பதி - பொருள்கள் மிகுந்த இப் புவியிடம்.

† "மூள்வாய தொழிற்பஞ் சேந்திரிய வஞ்ச முகரிகாள்" - அப்பர் 6-27-9.

(தொடர்ச்சி பக்கம் 347 பார்க்க.)

## திருக்காளத்தி.

## 587.

பொருள் மிகுந்த இந்தப் புவியிடத்தே வாழ்கின்ற சம்பந்தத்தை வகிக்கின்ற இவ் வுடலிலுள்ளே அன்பு பூண்டவர் போல உள்ள ஐந்து மோசக்காரர்கள் புகுந்து (உலைமேவு) உலைதல்கொண்ட (அழிதலுக்குக் காரணமான) இத்தகைய தொழில்களை விரும்பி மேற்கொண்டு

சஞ்சலப்பட்டு மிகவும் சமுசாரம், செல்வம் இவைகளைச் சுகத்துடன் அனுபவித்துச் சுற்றத்தாருடன், மகிழ்ச்சி மிக்குப் புகழும்படி, அன்புடனே இந்த வாழ்விடத்தை விரும்பிக்

குளம்புத் தன்மையுள்ள மூக்கை உடைய கழுகும் நாயும் உண்ணக் குழியில் வைத்துப் பிணமாய் நந்து (கெடுகின்ற) இந்த குடிற்கே (குடிலையே- வீட்டையே) - உடலையே விரும்பிப் - பயனற்றுப் பதனழிந்து, அழிதல் உறுகின்ற என்னை - (நீ)

குறிக்கொண்டு முத்திக்கு மாறுதலில்லாத இன்ப வழியைக் கைப்பற்றி, உலக மாயை, பொய், (அல்லது பொய்யான உலகமாயை), குலம் குடி என்கின்ற பற்றுக்கோடு இவையெலாம் வற்றிப்போகச் சிவஞானமாகிய உனது அழகிய திருவடியைத் தந்தருளுக.

திரிபுரம் என்னும் காடு அழிந்து பொடியாய் மறையவும், கரும்பு வில்லை ஏந்திய அழகிய தேகத்தையுடைய மன்மதன் அழியவும், புகைகொண்ட தீ பற்றச் செய்த (அப் புகலோர்) அந்த வெற்றியாளரால் (சிவபிரானால்) அன்புகொண்டு அருளப்பட்டவனே! (உலகுக்குத் தரப்பட்டவனே!) (அல்லது) சிவனுடைய அன்பைப் பெற்று அடியவர்க்கு அருள்பவனே!

---

*(346 - ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

‡ குரக் கோணத்திற் கழு - குளம்புத் தன்மையுள்ள மூக்கையுடைய கழு. கோணம் - மூக்கு.

X மறா - மாறா.

O "சிவஞானம் பொற்கழல்" - "சுத்த ஞானமெனும் தண்டையம் புண்டரிகம்" - கந்தர் அலங் - 92. 'ஞான பாத பத்மம்' -திருப்புகழ் 442.

** ஐ சடலான் - அழகிய தேகத்தையுடைய மன்மதன்.

†† தீ பற்று அ புகலோர் - அக்கினி பற்றச் செய்த அந்த வெற்றியாளர். புகல் - வெற்றி.

புடைத்தே யெட்டுத் திசையோ ரஞ்சத்
தனிக்கோ லத்துப் புகுசூர் மங்கப்
புகழ்ப்போர் சத்திக் கிரையா நந்தத் தருள்வோனே;

திருக்கா னத்திற் பரிவோ டந்தக்
குறக்கோ லத்துச் செயலா ளஞ்சத்
திகழ்ச்*சீ ரத்திக் †கழல்வா வென்பப் புணர்வோனே-

சிவப்பே றுக்குக் கடையேன் வந்துட்
புகச்சீர் வைத்துக் கொளுஞா னம்பொற்
றிருக்கா ளத்திப் பதிவாழ் கந்தப்
பெருமாளே (1)

## 588. ஆண்டருள

தனத்தா தத்தத் தனதான

‡சிரத்தா னத்திற் பணியாதே-
செகத்தோர் பற்றைக் குறியாதே;
வருத்தா மற்றொப் பிலதான-
மலர்த்தாள் வைத்தெத் தனையாள்வாய்;
நிருத்தா கர்த்தத் துவநேசா-

---

* தன்முன் கிழவராய் வந்தவர் - முருகவேள் என்று உணராது வள்ளி அக் கிழவரை மணக்கமாட்டேன் என்றுஓட, விநாயகர் யானையாக வந்து வழிமறிக்க வள்ளி அஞ்சித் திரும்பிக் கிழவரிடம் அடைக்கலம்புகுந்தபோது - வள்ளிக்குக் கிழவர் 'அஞ்சற்க' எனக் கூறின வரலாறு இது. 'இவ்வேழங் காத்தருள்க எந்தைநீர் சொற்றபடி செய்வேன் என ஒருபால் சேர்ந்து தழீ இக் கொண்டனளே" - கந்தபுராணம் - 6-24-112.

† அழல் வா என்ப - அழாதே, வா என்ன

‡ 'உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின் செல்லேன்'
"ஒருத்தரை மதிப்பதிலை உன்றனருளாலே"
"திருவு மெய்ப்பொருளும் செல்வமும் எனக்குன் சீருடைக் கழல்கள் என்றெண்ணி ஒருவரை மதியாது" - என்னும் பாடல்களின் கருத்து.

(சிரத்தானத்திற் பணியாதே) தலைகொண்டு உன்னைப் பணியாமல் செகத்தோர் பற்றைக் குறிகொண்டிருக்கின்றேன். அங்ஙனம் உலகப் பற்றை நான் குறியாதவாறு நீ என்னை வருத்தி -அழைத்து ஆள்வாய் - எனவும் பொருள் காணலாம்.

அடித்து எட்டுத் திசைகளில் உள்ளோர்களும் பயப்படும்படி ஒப்பற்ற (தனிப்பட்ட) - பயங்கரமான உருவத்துடன் புகுந்த சூரன் அழிந்துபோம்படி அவனை (புகழ்ப்போர் சத்திக்கு) போரிற் புகழ்கொண்ட சத்தி வேலாயுதத்துக்கு இரையாக (உணவாக) (ஆனந்தத்து) - மகிழ்ச்சியுடன் அருளியவனே!

அழகிய (வள்ளிமலைக்) காட்டில் அன்பு பூண்டு அந்தக் (குறக் கோலத்துச் செயலாள்) குறக்கோலம் பூண்டிருந்த செய்கையளாம் வள்ளி பயப்பட்டபொழுது - "விளங்கும் சீர்பெற்ற (இந்த) யானைக்குப் (பயந்து) நீ, ஆழாதே, வா" என்று சொல்லி அவளை அணைத்தவனே!

சிவகதி அடையும் பேற்றுக்குக் கடையவனாகிய நான் வந்து உட்சேருதற்கு வேண்டிய சிறப்பினை எனக்குத் தந்து கொ(ள்)ளு என்னை ஏற்றுக் கொள்வாயாக! ஞானமும் பொலிவும் அழகும் நிறைந்த ஸ்தலமாகிய காளத்தி ஊரில் வாழ்கின்ற கந்தப் பெருமாளே! (அல்லது சீர்வைத்து என்னை (க் கொளு) - என்னை (ஆட்) கொண்ட - கந்தப் பெருமாளே!

(சிவஞானம் பொற்கழல் தாராய்)

## 588.

சிரத்தானத்தில் (சிரஸ்தானத்தில்) தலைகொண்டு (உன்னை ஒழிய ஒருவரையும்) பணியாமலும்-

உலகோர்தம் பாசங்களில் நோக்கம் செலுத்தாமலும் (உலக ஆசைகளில்) அகப்படாமலும் - (நான் உய்யுமாறு நீ என்னை)

(வருத்தா) வருத்தி - வரவழைத்து (ஏன்று கொண்டு) மற்று நிகரில்லாத

மலர்போன்ற (உனது) திருவடிகளிற் சேர்த்து எத்தனை (வஞ்சகனாகிய) என்னை ஆண்டருளுவாயாக.

(நிருத்தா) கூத்தாட வல்லவனே! தலைமைத்தானம் கடவுள் தானம் வகிக்கும் நேசனே!

*நினைத்தார் சித்தத் துறைவோனே;
திருத்தாள்† முத்தர்க் கருள்வோனே-
திருக்கா ளத்திப் பெருமாளே. (2)

## 589. கலங்கா மதி பெற

தந்தன தானத் தனந்த தானன
தந்தன தானத் தனந்த தானன
தந்தன தானத் தனந்த தானன தனதான

பங்கய னார்பெற் றிடுஞ்ச ராசர
அண்டம தாயுற் றிருந்த பார்மிசை
‡ பஞ்சவர் கூடித் திரண்ட தோர்நர உருவாயே
பந்தம தாகப் பிணிந்த ஆசையில்
இங்கித மாகத் திரிந்து மாதர்கள்
பண்பொழி சூதைக் கடந்தி டாதுழல் படிறாயே;
சங்கட னாகித் தளர்ந்து நோய்வினை
வந்துடல் மூடக் கலங்கி டாமதி
தந்தடி யேனைப் புரந்தி டாயுன தருளாலே-
சங்கரர் வாமத் திருந்த நூபுர
சுந்தரி யாதித் தருஞ்சு தாபத
தண்டைய னேகுக் குடம்ப தாகையின் முருகோனே;

திங்களு லாவப் Xபணிந்த வேணியர்
பொங்கர வாடப் புனைந்த மார்பினர்
திண்சிலை சூலத் தழுந்து பாணியர் நெடிதாழ்வார்

---

* "நினைப்பவர் மனத்துளான்" - சம்பந்தர் -I-76-7.

† முத்தர் - பிரம வித்துக்கள், பிரம வரர், பிரம வரியர், பிரம வரிஷ்டர் என நால் வகையினராய் இம்மையிலேயே முத்த ராயினார் - ஜீவன் முத்தர்கள்.

(1) பிரம வித்துக்கள்: பிரமஞானம் அடைந்தும் லோகோபகாரமாகத் தமக்கு முன் விதிக்கப்பட்ட விதிகளின்படி ஒழுகும் ஞானிகள். (2) பிரமவரர் - சமாதியில் நின்றும் தாமே உணர்பவராகிய ஞானிகள். (3) பிரம வரியர்: சமாதியினின்றும் பிறர்கலைக்க எழுகின்ற ஞானிகள். (4) பிரம வரிஷ்டர்: தாமேயாகவும், பிறர் கலைத்தாலும் சமாதியினின்றும் எழாத ஞானிகள்.

(தொடர்ச்சி பக்கம் 351 பக்கம்.)

நினைப்பவர்களுடைய சித்தத்தில் வீற்றிருப்பவனே!

திருத்தாளை முத்தர்க்கு - முற்றத் துறந்தார்க்கு (ஜீவன் முத்தர்களுக்கு) அருள்பவனே!

திருக்காளத்தியில் (வீற்றிருக்கும்) பெருமாளே!

(எத்தனை ஆள்வாய்)

## 589.

பிரமதேவன் படைத்துள்ள சரம் - அசரம் (அசைவன, அசையாதனவாயுள்ள) அண்டமாகிப் பொருந்தி இருக்கும் இந்தப் பூமிமேல், ஐம்பூதங்களும் கூடி ஒன்றாகி ஒரு மனுஷ உருவு அமைந்து

பாசத்தாற் கட்டுண்ட ஆசையில் இன்பமுற்றுத் திரிந்து மாதர்களின் நற்குணம் இல்லாத வஞ்சகச் சூழலைக் கடந்திடாமல் திரிகின்ற, பொய் கலந்தவனாய்,

வேதனைப் படுபவனாய்ச் சோர்வடைந்து நோயும் வினையும் வந்து உடலை மூட, அதனால், கலக்கமடையாத அறிவைத் தந்து அடியேனைக் காப்பாற்றுவாயாக உன் திருவருளைப் பாலித்து:

சிவபிரானுடைய இடது பாகத்திலிருந்த சிலம்பணிந்த அழகி, ஆதி பெற்ற குழந்தையே! திருவடியில் தண்டையை அணிந்தவனே! கோழிக் கொடிகொண்ட முருகனே!

நிலவு (சடையிலே) உலவும்படிப் (பணித்த) அருளிய சடையர், மேலெழுந்த பாம்பு ஆடும்படி அணிந்துள்ள மார்பை உடையவர், வலிமைவாய்ந்த (பினாகம் என்னும்) வில்லும் சூலாயுதமும் பொருந்தியுள்ள திருக் கையினர், நிரம்ப ஆழ்ந்தும் நீண்டும் உள்ள,

---

(பக்கம் - 350 கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

‡ "ஐம்பூதத்தான் ஆகியதோர் ஆக்கை"

- வேற்பத்து - தணிகைச் சந்நிதி முறை.

x பணித்த - பணிந்த என ஆயிற்று - சந்தம் நோக்கி - இதன் வரலாறு - பாடல் 415 பக்கம் 548) உலாவ அப்பு அணிந்த எனவும் பிரிக்கலாம். அப்பு - கங்கை.

சிந்துவி லேயுற் றெழுந்த காளவி
டங்கள மீதிற் சிறந்த சோதியர்
திண்புய மீதிற் றவழ்ந்து வீறிய குருநாதா;
*சிங்கம தாகத் திரிந்த மால்கெரு
வம்பொடி யாகப் பறந்து சீறிய
சிம்புள தாகச் சிறந்த காவென வருகோமுன்-
† செங்கதி ரோனைக் கடிந்த தீவினை
துஞ்சிட வேநற் றவஞ்செய் தேறிய
தென்கயி லாயத் தமர்ந்து வாழ்வருள்
பெருமாளே. (3)

உ

## 5. சிதம்பரம்.

(ரெயில்வே ஸ்டேஷன். பஞ்சபூத ஸ்தலங்களில் **ஆகாய** ஸ்தலம். தரிசிக்க முத்தியளிக்குந் தலம். மூவர் தேவாரமும் திருவாசகமுந் திருக்கோவையாரும் பெற்ற முதுநகர். இது **தில்லை, பெரும் பற்றப்புலியூர், புலியூர், புலிசை, புலீச்சுரம், மன்று, திருச்சிற்றம்பலம்** எனவும் பெயர் பெறும். பஞ்ச சபைகளில் இது **கநகசபை.** இங்குத் தாண்டவ தரிசன ப்ரபாவத்தையுந் தில்லை மூவாயிரர் பெருமையையும் அருண-கிரிநாதர் மிகச் சிறப்பித்துப் பாடியுள்ளார். ஸ்தலபுராணங்-களுண்டு.)

## 590. துதி

தனதனன தான தனதனன தான
தனதனன தானத் தனதானா

கனகசபை மேவு மெனதுகுரு நாத
கருணைமுரு கேசப் பெருமாள்காண்-
கனகநிற வேத னபயமிட மோது
கரகமல சோதிப் பெருமாள்காண்;

*நரசிங்கத்தை வீரபத்திரர் சரபப்பக்ஷியாய் அடக்கின வரலாற்றைப் பாடல் 566-பக்கம் -292 பார்க்கவும்.

† தக்ஷயாகத்தில் ஒரு சூரியனுடைய கண்ணைப் பறித்தும், ஒரு சூரியனுடைய பற்களைத் - தகர்த்தும் வீரபத்திரர் தண்டனைபுரிந்தார்.

(தொடர்ச்சி பக்கம் 353-பார்க்க.)

கடலிலே இருந்து சூழ்ந்த கரிய விஷத்தைத் (தனது) கண்டத்திலே விளங்கும்படி வைத்த பேரொளியினர், அத்தகைய பெருமானது வலிய புயங்களின்மீது தவழ்ந்து பொலிந்த குருநாதனே!

நரசிங்கமாகத் திரிந்த திருமாலின் அகந்தை பொடிபட்டழியப் பறந்து கோபித்த சரபப் பக்ஷியாய் (உரு எடுத்து) விளங்கி (அகா) ஹஹா என்று சப்தித்து வந்த (கோ) பெருமானாகிய * வீரபத்திரர் - முன்பு.... (தக்ஷயாகத்தில்)

(செங்கதிரோனை) சூரியனைத் தண்டித்த (தீவினை) தோஷம் நீங்க நல்ல தவஞ்செய்து சிறப்படைந்த "தக்ஷிண கயிலாயமாம்" (காளத்தியில்) வீற்றிருந்து (அடியார்களுக்கு) வாழ்வு அருளும் பெருமாளே!

(அடியேனைப் புரந்திடாய் உனதருளாலே)

## சிதம்பரம்.

## 590.

கனகசபையில் நடனம் செய்யும் எனது குருநாதராகிய கருணை நிறைந்த முருகேசப் பெருமாள் நீதான்.

பொன்னிறம் வாய்ந்த பிரமன் - கிருபைதா என்று ஓலமிட (அவன் தலையிற்) குட்டிய கரமாகிய தாமரையை (தாமரை யன்ன கையைக்) கொண்ட ஜோதிப் பெருமான் நீதான்;

---

(பக்கம் - 352 கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)

"சூரியனார் தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரித்தவா றுந்தீபற"
"உண்ணப் புகுந்த பகனொளித் தோடாமே
கண்ணைப் பறித்தவா றுந்தீபற" - திருவாசகம்.
"பகன் தாமரைக் கண்கெடக் கடந்தோன்"
திருக்கோவையார் - 124; பகன் என்பவன் ஒரு சூரியன்.

* வீரபத்திரர் சூரியரைக் கடிந்த தீவினை தீரத் தவஞ் செய்தது; இறைவன் ஆணைப்படி வீரபத்திரர் சூரியர்களுக்குத் தண்டனை புரிந்தது தோஷம் ஆமோ எனின் - ஆம் போலும்; ஏனெனில் அருக்கன் (சூரியன்) அரன் உருவத்தவன்.

"அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில்
அருக்கன் ஆவான் அரனுரு வல்லனோ - அப்பர் 5-100-8.

வினவுமடி யாரை மருவிவிளை யாடு
*விரகுரச மோகப் பெருமாள்காண்

விதிமுநிவர் தேவ †ரருணகிரி நாதர்
விமல‡ சர சோதிப் பெருமாள்காண்-

சனகிமண வாளன் மருகனென Xவேத
சதமகிழ்கு மாரப் பெருமாள்காண்-

சரண Oசிவகாமி **யிரணகுல காரி
தருமுருக நாமப் பெருமாள்காண்-

இனிதுவன மேவு ††மமிர்தகுற மாதொ
டியல்பரவு காதற் பெருமாள்காண்-

இணையி‡‡லிப தோகை XXமதியின்மக ளோடு
மியல் OOபுலியுர் வாழ் பொற்
பெருமாளே. (1)

---

*விரகு - உற்சாகம். 'வணிகன்... ஒருநாள்... வனஞ் சென்று விரகிற் புக்கான்" - மேருமந்தர புராணம் -342.

† அருணாசலேசுரரை முருகவேள் என்கின்றார். சிவன் வேறு முருகன் வேறு அன்று ஆதலின்:

"செம்மைய ஞானசத்தித் திருவுருக்கொண்ட செம்மல்
எம்மின் வேறல்லன் யாமும் அவனின் வேறல்லேம் கண்டீர்"
- தணிகைப் புராணம்.

‡ சரசோதி - சரம் - சுவாசம். இறைவனே நம்முள் உயிர்ப்பாய் (மூச்சாய்) நிற்கின்றான் -

'என்னுளே உயிர்ப்பாய்ப் புறம் போந்து புக்
கென்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே" அப்பர் -5-21-1.

X வேத சதம் - வேதமெல்லாம்.

O சிவகாமி... சிவகாமசுந்தரி - சிதம்பரத்தில் தேவி பார்ப்பதியின் பெயர். 'சென்று தொழ அருள் சுரக்கும் சிவகாமசுந்தரி தன் நின்ற திருநிலை போற்றி' -கோயிற் புராணம்.

** இரண குல ஹரி - போர் செய்யும் அவுணர் குலத்தை ஹரித்தவள்.

†† அமிர்தகுறமாது - அமுதாசனத்தி குறமடவாள்'-திருப்புகழ்-582.

(தொடர்ச்சி பக்கம் 355 பார்க்க)

உன்னை ஆய்ந்து ஓதும் அடியார்களிடம் பொருந்தி அவர்களிடம் விளையாடுகின்ற உற்சாகமும், இன்பமும், ஆசையும் உடைய பெருமாள் நீதான்;

பிரமன், முநிவர்கள், தேவர்கள், அருணாசலேசுரர், பரிசுத்தமாய் (எனது) மூச்சுள் (உயிர்ப்புள்) விளங்கும் ஜோதிப் பெருமாள் - (எல்லாம்) நீதான் -

(ஜானகி) சீதையின் கணவன் (ஸ்ரீ ராமருடைய) மருமகன் என்று வேதசதம் (நூற்றுக் கணக்கான வேதங்களும் - சகல வேதங்களும் ) கூறி மகிழ்கின்ற குமாரப் பெருமாள் நீதான் -

அடைக்கலம் பாலிக்கும் சிவகாமி, போர் செய்யும் (அவுணர்) குலத்தை (ஹரித்தவள்) - அழித்தவள் ஈன்றருளிய முருகன் என்னும் திருநாமத்தை உடைய, பெருமாள் நீதான் -

சுகமான (வள்ளிமலைக் காட்டில் தினைப்புனத்தில் இருந்த இனிய குறமாது (வள்ளியுடன்) உழுவலன்பு விரிந்த காதல்பூண்ட பெருமாள் நீதான் -

ஒப்பற்ற யானை (வளர்த்த) மயில்போன்ற தேவசேனையாம் அறிவு நிறைந்த நங்கையுடன் (அல்லது தேவசேனையுடனும் வள்ளியுடனும்) தகுதி கொண்ட புலியூரில் வாழ்கின்ற அழகிய பெருமாளே!

---

*(354- ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

‡‡ இப தோகை - தேவயானையம்மை.

XX மதியின் மகள் - மதி என்பதற்கு யானை என்றும் பொருள் உளது. 'கோண்மதித் திடர் கிடந்தன' - கம்ப ராமா - நாக பாசம் -136

இபதோகை, யானை மகள் இரண்டும் - ஒரே பொருளின.

இனி, 'வள்ளி' என்னும் சொல்லுக்கு (மதி) சந்திரன் என்னும் பொருள் உண்டு. 'வள்ளி - தண்கதிர் மண்டிலம்' - தொல்கா. பொருள் 88 உரை - எனவே மதியின் மகள் என்பது வள்ளியைக் குறிக்கும்.

OO புலிக்கால் முநிவர் - வியாக்ரபாதர் - தொழுது நின்ற தலமாதலின் சிதம்பரம் புலியூர் எனப்படும்.

## 591. துதி

தத்ததன தான தத்ததன தான
தத்ததன தான தனதான

கைத்தருண சோதி யத்திமுக வேத
*கற்பக†ச கோத்ரப் பெருமாள்காண்-

கற்புசிவ காமி நித்யகலி யாணி
கத்தர்குரு நாதப் பெருமாள்காண்;

‡வித்துருப ராம ருக்குமரு கான
வெற்றி யயில் பாணிப் பெருமாள்காண்-

வெற்புளக டாக முட்குதிர Xவீசு
வெற்றிமயில் வாகப் பெருமாள்காண்;

சித்ரமுக மாறு முத்து மணி மார்பு
திக்கினினி லாதப் பெருமாள்காண்-

தித்திமிதி தீதெ னொத்திவிளை யாடு
சித்திரகு மாரப் பெருமாள்காண்;

சுத்த Oவிர சூரர் பட்டுவிழ வேலை
தொட்டகவி ராஜப் பெருமாள்காண்-

துப்பு **வளி யோடு மப்புலியுர் மேவு
சுத்தசிவ ஞானப் பெருமாளே (2)

---

* சிதம்பரத்தில் மேலைக் கோபுர வாயிலில் வீற்றிருக்கும் கணபதி - கற்பக விநாயகர்; "புலியூர் புகழ்சொற்பதப் பொருளாகுவ அணிகோபுரக் கற்பகத் தனியானை கழல்களே" - கோயிற்புராணம்.

† சகோத்ரம் - ஒரே கோத்திரம் - எனலுமாம்; "சதாசிவ கோத்திரன்" - என்றார் பிறிதோரிடத்தும் - திருப்புகழ் 330.

‡ வித்துருபம் - விந்துருபம்; மழைத்துளி பெய்யும் மேகவண்ணம்.

X "வாசி விசைகொண்ட வாகனப் பீலியின் கொத்தசைபடு கால்பட் டசைந்தது மேரு" (கால்-காற்று) - கந்தர் அலங் 11.

O வீர ** வள்ளியோடும்.

# 591.

துதிக்கையை உடையவரும், இளமை வாய்ந்தவரும், ஜோதிசொரூபம் உடையவரும், யானை முகத்தைக் கொண்டவரும், வேதப்பொருளும், கற்பக விநாயகர் என்னும் திருநாமங் கொண்டவருமான கணபதியின் சகோதரப் பெருமாள் நீதான் -

கற்பு நிறைந்த சிவகாமசுந்தரியும், நித்திய கலியாணியு மான பார்வதியின் (கத்தர்) தலைவராம் சிவபிரானுடைய குருநாதப் பெருமாள் நீதான் -

விந்து ரூபம் - மழைத்துளி பெய்யும் மேகவண்ணம் கொண்ட ஸ்ரீராமருக்கு மருகனான - ஜெய வேற்கைப் பெருமாள் நீதான் -

மலைகள் உள்ள அண்ட கோளகைகள் அஞ்சுகின்ற வலிமையுடன் (கலாபத்தை) வீசும் வெற்றி மயிலை வாகனமாகக் கொண்ட பெருமாள் நீதான்

அழகிய முகங்கள் ஆறும், முத்துமணி (மாலைகள் கொண்ட) திருமார்பும் (திக்கினின்) எத்திக்கிலும் இல்லாத (அழகையும் ஒளியையும் கொண்டுள்ள) பெருமாள் நீதான் -

தித்திமிதி தீதென்று தாளமிட்டு விளையாடும் அழகிய குமாரப் பெருமாள் நீதான் -

சுத்த வீரனே! சூரர்கள் அழிந்து விழும்படி வேலாயுதத்தைச் செலுத்தின பெருமாள் நீதான்! கவிராஜப் பெருமாள் நீதான் -

(துப்பு) தூய்மை கொண்ட வள்ளி நாயகியோடும் அந்தப் புலியூர் என்னுந் தலத்தில் மேவும் பெருமாளே! சுத்த சிவஞானப் பெருமாளே!

## 592. தரிசனை பெற

தனதனன தனன தந்தத் தனதானா

இருவினையின் மதிம யங்கித் திரியாதே-
*எழுநரகி லுழலு நெஞ்சுற் றலையாதே;
† பரமகுரு அருள்நி னைந்திட் டுணர்வாலே-
பரவுதரி சனையை யென்றெற் கருள்வாயே;
தெரி‡ தமிழை யுதவு சங்கப் புலவோனே-
சிவனருளு முருக செம்பொற் கழலோனே;
கருணைநெறி புரியு மன்பர்க் கெளியோனே-
Xகனகசபை மருவு கந்தப் பெருமாளே. (3)

## 593. கழல் பெற

தனன தனதன தானன தந்தத்
தனன தனதன தானன தந்தத்
தனன தனதன தானன தந்தத் தனதான

குகனெ குருபர னேயென நெஞ்சிற்
புகழ அருள்கொடு நாவினி லின்பக்
குமுளி Oசிவவமு தூறுக வுந்திப் பசியாறிக்-
கொடிய இருவினை மூலமும் **வஞ்சக்
கலிகள் பிணியிவை வேரொடு சிந்திக்
குலைய †† நமசிவ யோமென கொஞ்சிக்
களிகூரப்;

---

* எழுநரகு - பாடல் 535-பக்கம் 222- கீழ்க்குறிப்பு.

† அருணகிரியாரின் வரலாறு சம்பந்தப்பட்ட வரையில் 'பரமகுரு' என்பதற்கு பரமேசுரனாகிய குரு என்றே பொருள் காணலாம். ஏனெனில் அருணாசலேசுரரே இவருக்குக் குருவாக அருள் புரிந்துள்ளார். இது அமுத மொழிகொடு தவநிலை அருளிய பெரிய குணதரர் உரைசெய்த மொழி", எனவரும் திருப்புகழால் (1006) ஒருவாறு உணரக்கிடக்கின்றது - "அருணகிரிநாதர் வரலாறு" பக்கம் 4, 5, (கீழ்க்குறிப்பு 3).

‡ உக்கிரபாண்டியராக முருகவேள் மதுரையில் அரசுபுரிந்து சங்கப் புலவர்களுடன் தமிழ் ஆய்ந்தார்.

"குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர் கொண்டதும்
தண்டமிழ் மதுரங் கூட்டுண எழுந்த வேட்கையால்"

- மதுரைக் கலம்பகம் - 93.

திருவள்ளுவமாலையில் உக்கிரப் பெருவழுதியாரின் பாடல் ஒன்று உளது. (தொடர்ச்சி பக்கம் 359 பார்க்க)

## 592.

இருவினையினால் (என்னுடைய) அறிவு மயக்கம் அடைந்து (நான்) திரியாமல்

ஏழு நரகங்களிலும் கலக்க முறுதற்கு உரிய நெஞ்சத்தைப் படைத்து (நான்) அலையாமல்

சிறந்த குருமூர்த்தியின் திருவருளை நினைவில் வைத்து ஞானத் தெளிவால்

போற்றுதற்குரிய (உனது) தரிசனக் காட்சியை என்றைக்கு எனக்கு அருள்புரிவாய்,

(யாவரும்) தெரிந்து (மகிழத்தக்க) தமிழை ஆய்ந்து உதவின சங்கப் புலவனாய் விளங்கினவனே!

சிவபெருமான் பெற்றருளிய முருகனே! செவ்விய பொன்னாலாய கழலை அணிந்தவனே!

அருள் நெறியை அநுஷ்டிக்கும் அன்பர்களுக்கு எளியவனே!

கனகசபையில் வீற்றிருக்கும் கந்தப் பெருமாளே!

(தரிசனையை என்று எற்கு அருள்வாய்)

## 593.

குகனே! குருபரனே என்று மனம்கொண்டு நான் புகழவும், (உனது) அருளின் துணைகொண்டு (எனது) உள் நாவில் இன்பரசத்தின் குமிழி பொங்கச் சிவ அமுது ஊறுவதால் வயிற்றுப் பசியாறி -

பொல்லாத இருவினைகளின் மூலப்பகுதி, (வஞ்சகக்) கொடிய கேடுகள், நோய்கள் இவையெல்லாம் வேரோடு தொலைந்து அழிவுறவும், "நமசிவய ஓம்" என (மந்திரத்தை) அன்புடன் ஓதி மகிழ்ச்சி நிரம்பவும்,

---

(358 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

X கனகசபை - பொன்னம்பலம். இது பஞ்ச சபைகளுள் ஒன்று. ரத்னசபை - திருவாலங்காடு; ரஜதசபை (வெள்ளியம்பலம்)- மதுரை; தாம்பிரசபை - திருநெல்வேலி; சித்திரசபை - திருக்குற்றாலம்.

O "சிவஞானமுதே பசியாறி" - எனவரும் பாடல் 563- பக்கம் 282 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

** வஞ்சம் - கொடுமை - "வஞ்சக் கருங்கடல்நஞ் சுண்டார் போலும்"- அப்பர் - 6-21-4.

†† 'நமசிவய' - இது ஸ்தூல பஞ்சாக்ஷரம் - பாடல் 262-பக்கம் 152 கீழ்க்குறிப்பு.

*பகலு மிரவுமி லாவெளி யின்புக்
குறுகி யிணையிலி நாடக செம்பொற்
பரம கதியிது வாமென சிந்தித் தழகாகப்-
† பவள மனதிரு மேனியு டன்பொற்
சரண ‡ அடியவ ரார்மன வம்பொற்
றருண சரண்மயி லேறியு னம்பொற்
கழல்தாராய்;

தகுட தகுதகு தாதக தந்தத்
திகுட திகுதிகு தீதக தொந்தத்
தடுடு டுடுடுடு டாடக டிங்குட் டியல்தாளம்-
Xதபலை திமிலைகள் பூரிகை பம்பைக்
Oகரடி தமருகம் வீணைகள் பொங்கத்
தடி**ய ழனவுக மாருத சண்டச் சமரேறிக்;

ககன மறைபட ஆடிய செம்புட்
பசிகள் தணிவுற சூரர்கள் மங்கக்
கடல்க ளெறிபட நாகமு மஞ்சத் தொடும்வேலா-
கயிலை மலைதனி லாடிய தந்தைக்
குருக மனமுன நாடியெ கொஞ்சிக்
**கனக** சபைதனில் மேவிய கந்தப்
பெருமாளே (4)

---

* "பகலும் இரவும் இலாவெளி" - பாடல் 303 பக்கம் 250 - கீழ்க்குறிப்பு.

† முருகன் பவள மேனியன்-
'தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவழத் தன்னமேனி சேவலங் கொடியோன்'
- குறுந்தொகை - கடவுள் வாழ்த்து.

‡ அடியவரார் - 'ஆர்' விகுதி உயர்வைக் குறிக்க எழுந்தது. அடியவர் (ஆர்) மன்ன - அடியார்கள் நிறைந்து பொருந்தி வர எனலுமாம்.

அடியவர்தம் மனமாகிய... மயிலில் ஏறி! (ஏறுபவனே) எனவும் பொருள் காணலாம்.

X தபலை - பதலை; ஒருவிதவாத்தியம்.

O கரடி - கரடிகை; ஒரு பறை.

** அழன், அழனம் - பிணம்.

பகலும் இரவும் இல்லாத வெளியில் இன்பத்தை அணுகி அடைந்து, ஒப்பிலாத (இறைவனுடைய) திருவிளையாடலும், செவ்விய அழகிய பரமகதியும் இதுவே ஆகும் என்று உணர்ந்து நான் அழகிய நிலையைப் பெறவும் -

பவளம் (அன்ன) போன்ற திருவுருவத்துடன் - நீ உன் அழகிய திருவடியை (அடைந்த) (அடியவரார்) அடியார்கள் (மன) மன்ன - பொருந்தி உடன்வர அழகிய, பொலிவுள்ள, இளமை வாய்ந்த - அடைக்கலம் தர வல்ல (அல்லது பாதங்களை உடைய) மயில்மீது ஏறி உனது அழகிய பொன் அனைய திருவடியைத் தந்தருளுக:

தகுட தகுதகு.... டாடக டிங்குட் என்று ஒலிக்கும் தாளமும்,

(தபலை)- (தபளா) மத்தளவகை, (திமிலைகள்) பறைவகை, (பூரிகை) ஊதுகுழல், (பம்பை) (பறைவகை), (கரடி) கரடி கத்துவதுபோல ஒலி செய்யும் பறைவகை, (தமருகம்) உடுக்கை, வீணைகள் இவையெலாம் பேரொலி எழுப்பத், (தடி) தடியப்பட்ட - கொல்லப்பட்ட (அழனம்) பிணங்கள், (உக) சிதறிவிழ, வாயு வேகத்துடன் கொடிய போர் செய்யப் புகுந்து -

ஆகாயம் மறைவுபட (வந்து பந்தரிட்டது போலக் - களிப்புடன்) கூத்தாடும் செவ்விய (கருடன் முதலான) பறவைகளின் பசிகள் அடங்கவும், சூரர்கள் அழிவுறவும், கடல்கள் அலையுண்ணவும், ஆதிசேடனும் (அல்லது அஷ்ட நாகங்களும்) அஞ்சவும் செலுத்தின வேலாயுதனே!

கயிலாய மலையில் திருவிளையாடல் செய்யும் தந்தைக்கு- சிவபிரானுக்கு - (உருக மனம்) மனம் உருக, முன்பு, விருப்பத்துடன் அவருடன் கொஞ்சி விளையாடிக் கனகசபையில் வீற்றிருக்கும் கந்தப் பெருமாளே!

(பொற்கழல் தாராய்)

## 594. கழலைப்பற்றிக் கரையேற

தந்தனத் தத்தன தந்தனத் தத்தன
தந்தனத் தத்தன தந்தனத் தத்தன
தந்தனத் தத்தன தந்தனத் தத்தன தந்ததான

வண்டையொத் துக்கயல் கண்சுழற் றுப்புரு
வஞ்சிலைக் குத்தொடு அம்பை யொத் துத்தொடை
வண்டுசுற் றுக்குழல் கொண்டலொத் துக்கமு
கென்பக்ரீவம்

மந்தரத் தைக் *கட பொங்கிபத் துப்பணை
கொம்பையொத் துத்தன முந்து †குப்பத்தெரு
வந்துளத் திப்பொரு மங்கையர்க் கைப்பொரு
ளன்பினாலே;

கொண்டலைத் துத்தழு வுங்கைதட் டிற்பொருள்
கொண்டுதெட் டிச்சர சம்புகழ்க் குக்குன
குங்‡குழற் கிப்படி நொந்துகெட் டுக்குடில்
மங்குறாமல்-

கொண்டுசத் திக் Xகட லுண்டுகுப் பத்துனி
னன்பருக் குச்செயல் தொண்டுபட் டுக்கமழ்
குங்குமத் திற்சர ணம்பிடித் துக்கரை
யென் றுசேர்வேன்;

அண்டமிட் டிக்குட டிண்டிமிட் டிக்குகு
டந்தகொட் டத்தகு டிங்குதொக் கத்தம
டஞ்சகட் டைக்குண கொம்புடக் கைக்கிட
லென்பதாளம்.

---

* கடம் பொங்கு - என்பது கட பொங்கு என்றாயிற்று; கடம் -மதம்.

† குப்ப - கூப்ப - குவிய.

‡ குழற்கு - குழலையுடையார்க்கு.

X கடல் உண்டு உகுப்ப துன் நின் அன்பர் - அகஸ்தியர்.

## 594.

வண்டு போன்ற கயல்மீன் அனைய கண் தன் சுழற்சியால் புருவமாகிய வில்லில் தொடுக்கப்பட்ட அம்பை நிகர்க்கவும், (அணிந்துள்ள) மாலையில் வண்டானது சுற்றுகின்ற கூந்தலானது மேகத்தை நிகர்க்கவும், (கமுகென்ப க்ரீவம்) க்ரீவம் - கழுத்து கமுகு போலுளது என்று சொல்லும்படியும் -

மந்தரமலையை, மதம் பொங்குகின்ற யானையின் பருத்த தந்தங்களை - நிகர்த்து கொங்கைகள் முன்னிட்டுக் குவியத், தெருவிலே வந்து, வஞ்சித்துச் சண்டைசெயும் (அல்லது) மாறுபடும் மகளிர் தமது கையிற் கிடைத்த பொருளின் பொருட்டுக் காட்டும் அன்பினாலே -

(தமது வீட்டுக்குள் அழைத்துக் கொண்டுபோய்த் தழுவுங் கைகளால், தட்டிலே பொருளைப் பெற்றவுடன், வஞ்சனை எண்ணத்துடன் (சரசம்) காமலீலைகளைச் செய்தும், புகழ்ந்தும், கொஞ்சிப் பேசுகின்ற (குழலையுடையார்)- ஆகிய பொது மாதர்கள் பொருட்டு இவ் வண்ணம் நான் மனம் நொந்து நைந்து உடம்பு வாட்டம் அடையாமல் -

(கொண்டு சத்தி) சக்திகொண்டு - தனது ஆற்றல் கொண்டு, கடலை உண்டு உமிழ்ந்து உனை அடுத்த உனது அன்பராம் அகத்தியருக்குப் பணிசெய்து தொண்டு பட்டு, நறுமணம் வீசும் செஞ்சாந்துள்ள திருவடிகளைப் பற்றி (முத்திக்) கரையை என்று அடைவேன்!

அண்டம் (அண்டங்களில்) (மிட்டி) (மிண்டி) - நெருங்கி, (குட) வளைய (சூழ) டிண்டிமிட்டி என்று (குடந்த கொட்ட) குடந்தம் - குடம் (குடமுழ அல்லது கடவாத்தியம்) கொட்ட - முழக்கச்செய்து (அவ் வொலிக்குத்) தகு-தகுந்த "டிங்கு" என்னும் ஒலி (தொக்க) ஒன்றுகூடத், (தமடம்) தம் பட்டம் - (பறைவகை), (சகட்டை) சகண்டை - துந்துபி என்னும் முரசு, சிறந்த (கொம்பு) ஊதுகொம்பு (டக்கை) - (இடக்கை) இடக்கையாற் கொட்டும் தோற்கருவி இவை தமக்கு (இடல்) உதவியாய் ஒலிக்கும் தாளம்-

அண்டமெட் டுத்திசை யும்பல்சர்ப் பத்திரள
கொண்டல்பட் டுக்கிரி யும்பொடித் துப்புல
னஞ்சவித் துத்திர ளண்டமுட் டத்துகள் வந்தசூரர்;

கண்டமற் றுக்குட லென்புநெக் குத்தச
னங்கடித் துக்குடி லஞ்சிவப் பச் *செநிர்
கண்தெறிக் கத்தலை பந்தடித் துக்கையி
லங்குவேலால்-

கண்களிக் கக்கக னந்துளுக் கப்புக
ழிந்திரற் குப்பதம் வந்தளித் துக்கண
கம்பலத் திற்குற மங்கைபக் கத்துறை
தம்பிரானே.(5)

## 595. விலைமாதர்மீதுள்ள மயக்கு அற

தந்த தந்தனத் தான தந்தன
தந்த தந்தனத் தான தந்தன
தந்த தந்தனத் தான தந்தன தந்ததான

கங்கு லின்குழற் கார்மு கஞ்சசி
மஞ்ச ளின்புயத் தார்ச ரம்பெறு
கண்கள் கொந்தளக் காது கொஞ்சுக
செம்பொனாரம்-

கந்த ரந்தரித் தாடு கொங்கைக
ளும்ப லின்குவட் டாமெ னுங்கிரி
கந்த முஞ்சிறுத் தேம லும்பட
சம்பைபோல;

அங்க மைந்திடைப் பாளி தங்கொடு
† குந்தி யின்குறைக் கால்ம றைந்திட
அஞ்சி லம்பொலிப் பாட கஞ்சரி
கொஞ்சமேவும்-

* செநிர் - செந்நீர்: இரத்தம்.

† குந்தியின் குறைக்கால் - குதிக்கால்.

அண்டங்களும், எட்டுத் திசைகளும், (உம்பல்) அஷ்ட கஜங்களும், பாம்பின் கூட்டங்களும், (அஷ்டநாகங்களும்) மேகமும் குலைபட்டு, மலைகளும் பொடியாய், பொறிகள் ஐந்தையும் (அவித்து) கெடுத்து திரண்ட அண்டங்களில் முழுமையும் தூசி உண்டாக (எதிர்த்து) வந்த சூரர்கள் -

(கண்டம்) கழுத்து அறுபட்டுப்போய், குடலும், எலும்பும், நெகிழ்ந்து (தளர்ச்சியுற்று) (தசனம்) பற்களைக் கடித்துக் (குடிலம்) - சடை (தலைமயிர்) சிவப்ப, ரத்தம் கண்களினின்றும் வெளிபட்டுச் சிதற, (அந்த சூரர்களின்) தலையைப் பந்து அடிப்பது போல் அடித்துத் தள்ளி யெறிந்து, கையில் (இலங்கு) விளங்கும் வேலாயுதத்தால்-

கண் குளிர்ச்சி அடைந்து மகிழ, விண்ணுலகம் (இழந்த பொலிவு மீண்டும்) வரப்பெற்றுச் செழிப்புறத் தன்னைப் புகழ்ந்த இந்திரனுக்கு அவனுடைய இந்திர பதவியை (அளித்து) அநுக்ரகஞ் செய்து கொடுத்து (கனகம்பலத்தில்) பொன்னம்பலத்திற் (குறமகள்) வள்ளியம்மையின் பக்கத்தில் வீற்றிருக்கும் தம்பிரானே!

(சரணம் பிடித்துக் கரை என்று சேர்வேன்)

## 595.

இருள் போன்ற கூந்தலாகிய கார் (மேகத்தைக் கொண்டவர்கள்,) முகம் சந்திரனை ஒத்தவர்கள், மஞ்சள் விளங்கும் கையினர்கள், அம்பு போன்ற கண்களை உடையவர்கள், (கொந்தளம்) தலைமயிர்ச் சுருள் காதைக் கொஞ்சும்படிக் கொண்டவர்கள், செம்பொன் மாலை

கழுத்தில் அணிந்து, அசைகின்ற கொங்கைகள் (உம்பல்) யானைபோலும், (குவடு) திரட்சி கொண்டதான மலையாய், அதில் நறுமணமும் சிறிதளவு தேமலும் தோன்ற, மின்னல்போல

(அங்கு அமைந்து இடை) இடையானது அங்கு அமையப்பெற்று, பட்டு ஆடைகொண்டு குதிக்கால் மறையும்படி உடுத்து, அண் (அடுத்துள்ள) சிலம்பும், ஒலிக்கின்ற பாடகம் என்கின்ற காலணியும், (சரி) கைவளையுடன், (ஒத்து) ஒலிக்க உள்ளவர்களாய் -

அஞ்சு கங்குயிற் பூவை யின்குரல்
அங்கை பொன்பறிக் கார பெண்களொ
டண்டி *மண்டையர்க் கூழி யஞ்செய்வ
தென் றுபோமோ
சங்கு பொன்தவிற் காள முந்† துரி
யங்கள் துந்துமிக் காட திர்ந்திட
சந்த செந்தமிழ்ப் பாணர் கொஞ்சிட அண்டகோசம்-
சந்தி ரன்பதத் தோர்வ ணங்கிட
இந்தி ரன்குலத் தார் ‡பொ ழிந்திட
X தந்தி ரம்புயத் தார்பு கழ்ந்திட வந்தசூரைச்;
செங்கை யுஞ்சிரத் தோடு பங்கெழ
அந்த கன்புரத் தேற வஞ்சகர்
செஞ்ச ரந்தொடுத் தே Oநடம்புரி கந்தவேளே-
திங்க ளொண்முகக் காமர் **கொண்டவன்
கொங்கை மென்குறப் பாவை யுங்கொடு
செம்பொ னம்பலத் தேசி றந்தருள்
தம்பிரானே (6)

## 596. யாக்கையை வெறுத்தல்

தந்த தந்தன தந்த தந்தன
தந்த தந்தன தந்த தந்தன
தந்த தந்தன தந்த தந்தன தனதான

கொந்த ளம்†† புழு கெந்த வண்பனி
‡‡ரம்ப சம்ப்ரம ணிந்த மந்தர
கொங்கை வெண்கரி கொம்பி ணங்கிய மடமாதர்

---

*மண்டையர் - வேசையர் திருப்புகழ் 88.

†துரியம் - தூரியம். முரசப்பறை

‡ பொழிந்திட - புஷ்ப மாரி சொரிய.

Xதந்திரம் - யாழ் நரம்பு-ஆகுபெயராய் - யாழ்.

Oசூரனை வென்ற உடன் முருகவேள் ஆடிய கூத்து துடிக்கூத்து. அசுரர் படைகளை எல்லாம் வென்றபின் முருகவேள் குடையைத் தாழ்த்து ஆடின கூத்து குடைக் கூத்து.

"சூர்த்திறங் கடந்தோன் ஆடிய துடியும்"
படைவீழ்த் தவுணர் பையுள் எய்தக்
குடைவீழ்த் தவர்முன் ஆடிய குடையும்' - சிலப்.கடலாடு-51.

அழகிய கிளி, குயில், நாகணவாய்ப்புள் இவைகளின் குரல் கொண்டவர்களாய், அழகிய கையில் பொன்னைப் பறிக்கின்ற (கொள்ளைக்காரர் போன்ற) விலைமாதர்களை (நான்) நெருங்கி, அந்த (மண்டையர்க்கு) வேசையர்க்குச் சேவக வேலை செய்வது என்று தொலையுமோ!

சங்கு அழகிய தவில் (மேளவகை), (காளம்) ஊது கொம்பு, அவையுடன், (தூரியங்கள்) முரசப்பறைகள், (துந்துமி) பேரிகை - ஆகிய வாத்தியக் (காடு) கூட்டம், மிகுதி- அதிர்ச்சி செய்து ஒலிக்க, அழகிய செந்தமிழ்ப் பாடல்கள் பாடவல்ல பாணர்சாதியர் அருமையாக அன்புடன்பாட, (அண்டகோசம்) அண்ட கடாகம் (அண்ட உருண்டையின் மேல் ஓடு) வரையில் உள்ளோரும்-

சந்திர மண்டலத்தில் உள்ளோரும் வணங்கவும், (இந்திரன் குலத்தார்) தேவர்கள் பூமாரி சொரியவும், (தந்திரம் புயத்தார்)- (யாழ் ஏந்தும் கையினர்) - கந்தருவர் புகழ்ந்திடவும், எதிர்த்து வந்த சூரனுடைய

செவ்விய கைகளும், சிரத்துடன் பாகப்படும்படி (துண்டாக அற்றுப்போகவும்), யமனுடைய ஊரில் ஏற வஞ்சகர் (வஞ்சகராம் அரக்கர்கள்) போய் சேரவும், சிறந்த அம்புகளைச் செலுத்தி நடனம் புரிந்த கந்தவேளே!

திங்களின் (பூரண மதி) போன்ற, குளிர்ந்த ஒளியை உடைய முக அழகு கொண்டவளும், வலிய கொங்கைகளைக் கொண்ட மென்மை வாய்ந்தவளுமான (குறப்பாவை) வள்ளியுடனே செம்பொன்னாலாய அம்பலத்தில் - **கனக சபையில்** - மேம்பட்டு விளங்கு அருளும் தம்பிரானே!

(பெண்களொடண்டிஊழியஞ் செய்வதென்று போமா)

## 596.

(கொந்தளம்) தலைமயிரில் புனுகுசட்டமும் வாசனையுள்ள நல்ல பன்னீரும் நிரம்பச் சிறப்பாக அணிந்துள்ள மந்தர மலைபோற் பருத்த கொங்கைகள் என்னும் வெண்ணிறமுள்ள யானைத் தந்தங்கள் பொருந்தியுள்ள (மடமாதர்) அழகிய மாதர்கள்-

---

**"கொண்டவ" அல்லது "கொண்டவள்" என்பது பாடமாயின் சந்தம் தெளிவு பெறும் 'வன்கொங்கை' "சிந்துரம் பணைக்கோடு கொங்கை குறமங்கை" ஆதலின்-திருப்புகழ்-598.

†† புழு கெந்த-புழுகு கந்த.

‡‡ ரம்ப-நிரம்ப - திருப்புகழ் 606-பார்க்க.

கொந்த ளங்குழ லின்ப மஞ்சள
ணிந்து சண்பக வஞ்சி ளங்கொடி
கொஞ்சு பைங்கிளி யனபெ ணுங்குயில்
மயில்போலே;

வந்து *பஞ்சணை யின்ப முங்கொடு
கொங்கை யும்புய முந்த மும்புற
மஞ்சு வொண்கலை யுங்கு லைந்தவ
மயல்மேலாய்-

வஞ்சி னங்கள்தி ரண்டு கண் செவி
யுஞ்சு கங்கள்தி ரும்பி முன்செய்த
வஞ்சி னங்களு டன்கி டந்துட லழிவேனோ;

தந்த னந்தன தந்த னந்தன
திந்தி மிந்திமி திந்தி மிந்திமி
சங்கு வெண்கல கெ(ா)ம்பு துந்துமி பலபேரி-
சஞ்ச லஞ்சல கொஞ்சு கிண்கிணி
† தங்கு டுண்டுடு டுண்டு டன்பல
சந்தி ரம்பறை பொங்கு வஞ்சகர் களமீதே;

சிந்த வெண்கழு ‡ கொங்கு பொங்கெழு
செம்பு ளங்கரு டன்ப ருந்துகள்
செங்க ளந்திகை யெங்கு மண்டிட விடும்வேலா-

X திங்க ளிந்திர னும்ப ரந்தர
ரும்பு கழ்ந்துரு கும்ப ரன்சபை
செம்பொ னம்பல மங்கொ ளன்பர்கள்
பெருமாளே. (7)

---

* பஞ்சணை - பஞ்ச சயனம் எனக் கொண்டால் அன்னத்தூவி, இலவம் பஞ்சு, செம்பஞ்சு, மயில்தூவி, மெத்தை வெண்பஞ்சு - இவை ஐந்தால் ஆய மெத்தை.

† "தங்கு டுண்டுடு டுண்டு டுண்டுடு.
சந்ததம் பறை பொங்க" - என்றும் பாடம்.

‡ ஒங்கு - ஓங்கு - "ஓங்கு மாகடல் ஓதம் வந்துலவும் ஒற்றியூர்' சுந்தரர் - 7-54-3.

X 'திங்கள் இந்திரன் உம்பர் சுந்தரர்
சென்றிறைஞ்சிடு மம்பரன் சபை
செம்பொ னம்பல மெங்கு மன்பர்கள் பெருமாளே' - என்றும் பாடம்.

பூங்கொத்துக்கள் (அண் அம் குழல்) சேர்ந்துள்ள அழகிய கூந்தலை உடையவராய், சுகந்தரக்கூடிய மஞ்சளைப் பூசிக்கொண்டு, சண்பக மலர்சூடி, வஞ்சியின் இளமை வாய்ந்த கொடிபோல விளங்கிக், கொஞ்சுகின்ற பச்சைக்கிளி போலவும், அன்பு வாய்ந்த குயில்போலவும் மயில்போலவும்-

வந்து, பஞ்சு மெத்தையில் இன்பத்தையும் கொடுக்கும் கொங்கைகளும், புயங்களும் வடுப்பட, அழகிய நல்ல ஆடையும் கலைந்து, (அவம்) கேடும், காம இச்சையும் மேற்படுவதாய்

சபதமொழிகளை நிரம்பச்சொல்லி, கண்கள், காதுகள் இவைகள் கொடுத்திருந்த சுகங்கள் மாறுபட்டு (குருடாய், செவிடாய்) முன்பு செய்திருந்த சூள்களுடன் (சபத மொழிகள் நிறைவேறாமல்) (பாயிற்) படுக்கையாய்க் கிடந்து உடலம் அழிவேனோ! (இறந்து படுவேனோ)!

தந்த னந்தன தந்த னந்தன....திந்தி மிந்திமி என்று சங்கும், வெண்கல (ஊது) கொம்பும், (துந்துமி) பேரிகை முதலான பல முரசவாத்தியங்கள்,

சஞ்சலஞ் சல என்று கொஞ்சும் கிண்கிணியுடன் பொருந்தும் டுண்டுடு டுண்டு என்னும் ஒலியுடன் பல (சந்திர அம்பறை) (சந்திரன் போல) வட்ட வடிவுள்ள அழகிய பறைகளின் (ஒலி) (பொங்கு) பொங்க - மிக்கு - எழ (வஞ்சகர்) அசுரர்கள் போர்க்களத்திலே-

மடிய வெண்ணிறக் கழுகுகளும் ஓங்கி உயர்ந்து எழுகின்ற செம்மைநிறப் பக்ஷியாகிய கருடனும் பருந்துகளும் (ரத்தத்தால்) செந்நிறம் கொண்ட போர்க்களத்தில் பக்கங்கள் எங்கிலும் நெருங்கி அடையச் செலுத்தின வேலனே!

சந்திரனும் இந்திரனும் (உம்பர்) தேவர்களும் (அந்தரர்) மற்றும் விண்ணில் உறைவோர்களும் புகழ்ந்து உருகும் இறைவனது சபையாகிய செவ்விய **பொன்னம்பலத்தை** அழகாகக் கொண்ட பெருமாளே! அன்பர்கள் பெருமாளே!

(உடல் அழிவேனோ)

## 597. பதம் பெற

தந்தன தந்தன தான தந்தன
தான தனந்தன தான தந்தன
.... ... ... ... தந்ததான

மந்தர மென்குவ டார்த னங்களி
லாரம ழுந்திட வேம ணம்பெறு
சந்தன குங்கும சேறு டன்பனி
நீர்கள் கலந்திடு வார்மு கஞ்சசி
மஞ்சுறை யுங்குழ லார்ச ரங்கயல்
வாள்விழி செங்கழு நீர்த தும்பிய
கொந்தளோலை-

வண்சுழ லுஞ்செவி யார்து டங்கிடை
வாடந டம்புரி வார் *மருந்திடு
விஞ்சையர் கொஞ்சிடு வாரி ளங்குயில்
மோகன வஞ்சியர் போல கம்பெற
வந்தவ †ரெந்தவுர் நீர றிந்தவர்
போல இருந்ததெ னாம யங்கிட
இன்சொல்கூறிச்;

சுந்தர ‡வங்கண மாய்நெ ருங்கிநிர்
வாருமெ னும்படி யால கங்கொடு
பண்சர சங்கொள வேணு மென்றவர்
சேம வளந்துறு தேன ருந்திட
துன்றுபொ னங்கையின் மீது கண்டவ
ரோடு விழைந்துமெ கூடி யின்புறு
மங்கையோரால்-

---

* மருந்திடுதல் - பாடல் 230 பக்கம் 74-பார்க்க.

† எந்த வுர் - எந்த ஊர்.

‡ வங்கணமாய் - உற்ற நேசமாய்.

# 597.

மந்தரம் என்று சொல்லப்பட்ட மலைபோன்ற கொங்கைகளில் (கழுத்தில் அணிந்துள்ள) பொன்மாலை அழுந்திக் கிடக்க, நறுமணங் கொண்ட சந்தனம், செஞ்சாந்து இவை தம் கலவைச் சேற்றுடன் பனிநீர்களைக் கலந்து பூசிவைப்பவர், (முகம் சசி) சந்திரன் போன்ற முகத்தையும், மேகம் போன்றதான கூந்தலையும் உடையவர், அம்பு கயல்மீன், வாள் - இவை போன்ற கண்ணினர், செங்கழுநீர்ப்பூ நிரம்பவைத்துள்ள கூந்தலானது (ஓலை) காதணி (ஓலைச்சுருளில்)

நன்றாகச் சுருண்டுள்ள காதினை உடையவர்கள், துவள்கின்ற இடையானது. வாட நடனம் செய்பவர், (தம்மாட்டு வருபவர்களுக்கு) மருந்திடும் மாயவித்தைக்காரர், கொஞ்சுபவர், இளங்குயில் போல்பவர், காம மயக்கம் தரவல்லவர், வஞ்சிக்கொடி போல்பவர், தமது வீட்டை அடைந்து வந்தவர்களை (எந்த ஊர் நீர்) - நீர் எந்த ஊர்? முன்பே பழக்கம் உள்ளவர் போல இருக்கிறதே என்றெல்லாம் பேசிக் காமமயக்கம் வரும்படி இனிய சொற்களைப் பேசி-

அழகு உற்ற நேசத்துடனே கிட்ட நெருங்கி 'நீர் வாரும்' என்னும் தன்மையைக் குறிப்பித்து வீட்டுக்கு உள்ளே அழைத்துக் கொண்டுபோய், (தமது) (பண்ணால்) இசைப்பட்டால் (சரசம்) காமசேஷ்டை உண்டாக வேணும் என்ற எண்ணத்துடன் வந்தவருடைய செல்வம் என்கின்ற வளம் செறிந்த தேனை உண்ண (பொருள்களைக் கவர) முயற்சித்த தாற் கிட்டிய பொன்னை அங்கைமேல் கண்டவுடனே (பொன் கிடைத்த உடனே) வந்தவரோடு விருப்பம் காட்டிச் சேர்ந்து இன்பம் அடைகின்றவர் ஆகிய மாதர்களால்

துன்பமு டங்கழி நோய்சி ரங்கொடு
சீபுழு வுஞ்சல மோ*டி றங்கிய
புண் †குட வன்கடி யோடி ளஞ் ‡சனி
சூலைமி குந்திட வேப றந்துடல்
துஞ்சிய மன்பதி யே புகுந்துய
ராழி விடும்படி சீர்ப தம்பெறு விஞ்சைதாராய்;
அந்தர துந்துமி யோடு டன்கண
நாதர் புகழ்ந்திட வேத விஞ்சைய
ரிந்திர சந்திரர் சூரியன்கவி
Xவாணர்த வம்புலி யோர்ப தஞ்சலி
அம்புய னந்திரு மாலொ டிந்திரை
வாணிய ணங்கவ ளோட ருந்தவர் தங்கள்மாதர்-
அம்பர ரம்பைய ரோடு டன்திகழ்
மாவுர கன்புவி யோர்கள் மங்கையர்
அம்புவி மங்கைய ரோடு ருந்ததி
மாதர் புகழ்ந்திட வேந டம்புரி
அம்புய செம்Oபதர் **மாடகஞ்சிவ
காம சவுந்தரி யாள்ப யந்தருள் கந்தவேளே-
திந்திமி திந்திமி தோதி மிந்திமி
தீததி திந்தித தீதி திந்திமி
தந்தன தந்தன னாத னந்தன
தானத னந்தன னாவெ னும்பறை
செந்தவில் சங்குட னேமு ழங்கசு
ரார்கள் சிரம்பொடி யாய்வி டுஞ்செயல்
கண்டவேலா-

---

* இறங்கிய - இறங்க.

† குடவன் - குடவுண்ணி - ஒரு ஜெந்து.

"சிலவிட மேய்ந்த சிறுபுண் குரம்பையில்

மசகமும், உலங்கும், வாய்ப்படைக் குடவனும்"

குடவுண்ணி - இது கடித்து ரத்தத்தை உண்ணும்; ஆதலால் 'வாய்ப் படைக் குடவன்' - என்றார் - (காசிக் கலம்பகம் 58-உரை)

‡ சனி - சன்னி.

X "வாணர்தவம் பெரியோர் பதஞ்சலி யம்புலி யுந்திரு" என்றும் பாடம்.

O பதர் - பதத்தர் நடம்புரி பாதத்தர்.

(தொடர்ச்சி பக்கம் 373-பார்க்க.)

துன்பமும் முடக்குவாதம் முதலிய (உடலை) அழிக்கும் நோய்களும் சிரங்குடனே, சீயும், புழுவும், ஜலமும் ஒழுகும் புண்கள், (குடவன்) குடவுண்ணியால் ஏற்பட்ட (கடி) விஷக்கடியுடன் (இளமைவயதில் வந்த) ஜன்னிநோய், சூலைநோய், இவையெலாம் பெருகவே, (பறந்து) உயிர் பறந்துபோய் உடல் அழிவுற்று, யமனுடைய ஊரிலே புகும் துன்பக்கடலை நான் கடக்கும்படி (விடும்படி) உன்னுடைய சீரான திருவடியைப் பெறவல்ல வித்தையை - மந்திரத்தைத் தந்தருளுக;

ஆகாயத்தில் ஒலிக்கும் துந்துமி (பேரிகை) வாத்தியத்துடன் கணநாதர்கள் புகழ வேத மந்திரம் வல்லவர்கள், இந்திரர், சந்திரர், சூரியன், கவிவாணர்கள், தவசிகள், வியாக்ரபாதர், பதஞ்சலி, (அல்லது தவஞ்சிறந்த வியாக்ரபாதர், ஒப்பற்ற பதஞ்சலி) பிரமன், அழகிய திருமால், அவருடன் இலக்குமி, சரஸ்வதிதேவி, அவளுடன் அரிய தவமுநிவர்களின் பத்தினிமார்கள்-

விண்ணில் உள்ள ரம்பையாதி தேவமாதர்களுடன் விளங்கும் சிறப்புடைய நாகலோக மாதர்களும் அழகிய மண்ணுலக மாதர்களும், இவர்களுடன் அருந்ததி ஆதிய மாதர்களும் புகழ, நடனம் புரிந்த தாமரை யொத்த செவ்விய திருவடிகளை உடையவருடைய **பக்கத்திலும் உள்ளத்திலும் உள்ள சிவகாம சவுந்தரியாம் பார்வதிதேவி பெற்றருளிய கந்தவேளே!

திந்திமி திந்திமி தோதி மிந்திமி....தானத னந்தனனா என்று ஒலிக்கும் பறைகளும், செவ்விய தவிலும் (மேளவகையும்), சங்குடனே முழங்க, அசுரர்களின் தலைகள் பொடியாகப்போகும் செயலைச் செய்த வேலாயுதனே!

---

*(372-ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

** "மாடு (பக்கத்தில்) சிவகாம சவுந்தரி" என்பது 'அயலே புரிவோடுமைபாட - ஆடும்" *(சம்பந்தர் 3-101-2)* என்னும் கருத்தது. "செம்பதத்தர் - அகம் சிவகாமி" - என்றது. 'உடையாள் உன்றன் நடு இருக்கும்" *(திருவாசகம் - கோயில் மூத்த-1)* என்னும் கருத்தது.

செந்திணை யின்புன மேர்கு றிஞ்சியில்
வாழுமி ளங்கொடி யாள்ப தங்களில்
வந்துவ ணங்கி* நி ணே† மு கம்பெறு
‡ தாளழ கங்கையின் வேலு டன்புவி
செம்பொனி ணம்பல மேல கம்பிர
காரச மந்திர மீத மர்ந்தருள் தம்பிரானே. (8)

## 598. தரிசனம் பெற - அருள் பெற

தந்த தந்தனத் தான தந்ததன
தந்த தந்தனத் தான தந்ததன
தந்த தந்தனத் தான தந்ததன தந்ததான

X வந்து வந்துவித் தூறி யென்றனுடல்
வெந்து வெந்துவிட் டோட நொந்துயிரும்
வஞ்சி னங்களிற் காடு கொண்டவடி வங்களாலே-
மங்கி மங்கிவிட் டேனை யுன்றனது
சிந்தை சந்தொஷித் Oதாளு கொண்டருள
வந்து சிந்துரத் தேறி யண்டரொடு
தொண்டர்சூழ;
எந்தன் **வஞ்சனைக் காடு சிந்திவிழ
†† சந்த ரண்டிசைத் தேவ ரம்பையர்க
ளிந்து பந்தடித் தாடல் கொண்டுவர
‡‡மந்திமேவும்-

---

* நிணே - நின்றே. † 'முகம் பெறுதல் 'தோன்று நிலைமையைப் பெறுதல்' "சுடர் முகம் பெற்றே போதே பாிவுறு நலத்தவன்றே பங்கயம்"
- சிந்தாமணி - 1404.

‡ தாளமுக அங்கையின் எனப் பிரிக்க.

X 'விந்ததின் ஊறி வந்தது காயம் வெந்தது கோடி' - திருப்புகழ் -98.

O "ஆளு கொண்டருள வந்து சிந்துரத்து ஏறி"....அடியார்களை ஆளும் பொருட்டு முருகன் வரும்போது 'பிணிமுகம்' என்னும் தனது யானை வாகனத்தின்மீது எழுந்தருளுவான் - பாடல் -207. பக்கம் 29-கீழ்க்குறிப்பு.

** வஞ்சனை - மாயை. "வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கி" கம்ப ராமா - உருக்காட் - 17.

†† சந்து - இசை 'சந்துலாந் தமிழ்' - சம்பந்தர் 2-109-11.

‡‡ மந்தி....வண்டு.

செந்தினைப் புனமிருந்த அழகிய மலைநில ஊராம் வள்ளிமலையில் வாழ்ந்த இளங்கொடி போன்ற வள்ளி நாயகியின் பாதங்களில் வந்து வணங்கி நின்று அவளது திருமுக தரிசனத்தைப் பெற்ற தாள் அழகனே (அல்லது - அவள் எதிரில் தோன்றின) திருவடி அழகனே! அங்கையில் வேலாயுதத்துடன் பூமியில் (தில்லையில்) செம்பொன் அம்பலத்தில் உள்ளே பிராகாரங்களோடு (ச) கூடிய (மந்திரமீது) (அல்லது, மேல் பிராகாரத்தில் உள்ள) திருக்கோயிலிலே அமர்ந்தருளும் தம்பிரானே!

(சீர்பதம்பெறு விஞ்சைதாராய்)

## 598.

(உலகிலே) தோன்றித் தோன்றி, (வித்து) விந்துவில் (சுக்கிலத்தில்) ஊறி ஊறி (கருவில் தோன்றித் தோன்றி - பிறந்து பிறந்து) என்னுடைய உடலானது வெந்துபோய், வெந்துபோய், இங்ஙனம் ஓடுவதால் வாடி, உயிரும் (பலபிறப்பு எடுப்பேன் என்று) சபதம் செய்து கொண்டது போல (அல்லது வஞ்சினங்களில் - கோபத்தின் காரணத்தால்) காடு கொண்ட (மிகவும் கணக்கிலாதனவான) உருவங்களை எடுத்து-

அழிந்து அழிந்துபோன என்னை உனது திருவுள்ளம் மகிழ்ச்சியுடனே (ஏன்று) ஆட்கொண்டருளுமாறு நீ எழுந்தருளி (உனது) 'பிணிமுகம்' என்னும் யானைமீது ஏறி, அண்டர்களும் (தேவர்களும்) அடியார்களும் சூழ்ந்து வர-

என்னுடைய மாயையிற்பட்ட (பிறவிக்காடு) ஒழிந்து தொலைந்துபோக, (சந்தர்) இசையைப் பாடினவராய் - (அண்டு) நெருங்கிவந்த (இசைத் தேவரம்பையர்) இசைகள் வல்ல அல்லது புகழ்கொண்ட தேவ ரம்பையர் (தேவமகளிர்) உள்ளம் (பக்தியால்) கனிவுற்றுப், பந்தடித்து நடனத்துடன் கூடிவர, வண்டுகள் விரும்பி மொய்க்கும்.

என்க டம்பணித் தோளு மம்பொன்முடி
சுந்த ரந் *திருப் பாத பங்கயமும்
என்றன் முந்துறத் †தோணி ‡யுன்றனது
சிந்தைதாராய்;

அந்த ரந்திகைத் தோட விஞ்சையர்கள்
சிந்தை Xமந்திரத் தோட கெந்தருவ
ரம்பு யன்சலித் தோட எண்டிசையை யுண்டமாயோன்-
அஞ்சி யுன்பதச் சேவை தந்திடென
வந்த வெஞ்சினர்க் காடெ ரிந்துவிழ
Oஅங்கி யின்குணக் கோலை யுந்திவிடு
செங்கைவேலா;

**சிந்து ரம்பணைக் கோடு கொங்கைகுற
மங்கை யின்புறத் தோள ணைந்துருக
சிந்து ரந்தனைச் சீர்ம ணம்புணர்நல் கந்தவேளே-
சிந்தி முன்புரக் காடு மங்கநகை
கொண்ட ††செந்தழற் கோல ரண்டர்புகழ்
செம்பொ னம்பலத் தாடு மம்பலவர்
தம்பிரானே. (9)

## 599. மாதர்மீது இச்சையற

தனத்தத்தம் தனத்தத்தத்
தனத்தத்தம் தனத்தத்தத்
தனத்தத்தம் தனத்தத்தத் தனதான

கதித்துப் ‡‡பொங் கலுக்கொத்துப்
பணைத்துக் XXகொம் பெனத்தெற்றிக்
OOகவித்துச்செம் பொனைத்துற்றுக் குழலார்பின்-

---

* திரு - 'கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்'....திருக்கோவையார் - 1- உரை. †தோணி - தோன்றி.

‡ 'சிந்தனை நின் தனக் காக்கி" - திருவாசகம் - சதகம் - 26.

'நினைக்கின்றேன் மனத்துன்னை வைத்தாய் - சுந்தரர் - 7-1-1.

X மந்திரம் - விசாரம். O முருகன் அம்புகள் "வெங்கனல் விடுத்திடும் ....சரம்" - கந்த புராணம் - 4-13-182. ** 'மதவெங்கரிக்கிரண்டு வலுகொம்பெனத் திரண்டு வளருந் தனம்' - (திருப்புகழ் 607) என்றதுபோல †† 'செந்தழற்கோலர்"....'செவ்வழல் என நனி பெருகிய உருவினர்" - சம்பந்தர் 3-85-4. ‡‡ பொங்கு அல்லுக்கு ஒத்து - மிகுந்த இருளுக்குச் சமானமாகி. XX கொம்பு என தெற்றி - கொம்பு போலச் சடைபின்னி.

OO கவித்து செம்பொனை - ஜடைபில்லை கவித்து.

மதிக்கத்தக்க கடப்பமாலை அணிந்த தோள்களும் அழகிய பொன்முடியும், அழகிய - கண்டாரால் விரும்பப்படும் - திருவடித் தாமரையும் என்றன் முன்பு முற்பட, (நீ) தோன்றி உன்னுடைய திருவுள்ளத்தைத் தந்தருளுக (என்னைக் கண்பார்த்தருளுக) (அல்லது) உன்னை நினைக்கும்படியான சிந்தையை - உள்ளத்தைத் தந்தருளுக.

விண்ணிலுள்ளோர் பிரமித்து ஓட, (விஞ்சையர்கள்) வித்யாதரர்கள் மனக்கவலையுடன் ஓட, கந்தருவரும், பிரமனும் மனம் சோர்வடைந்து ஓட, எட்டுத் திசையிலும் பரந்த பூமியை உண்ட திருமால்-

அச்சமுற்று உனது திருவடிச் சேவையைத் தந்து (காத்தருளுக) என்று கூற, (எதிர்த்து) வந்த கொடிய கோபத்தினராகிய அசுரர்களின் காடுபோன்ற பெருங் கூட்டம் எரிபட்டுவிழ நெருப்பின் தன்மையைக் கொண்ட அம்பினைச் செலுத்திவிட்ட செங்கை வேலனே!

யானையின் பருத்த கொம்புபோன்ற கொங்கைகளை உடைய குறமங்கை (வள்ளி) (இன்புற) மகிழும்படி அவளது தோள்களை அணைந்து (உருக) நின்று - உருகி, (சிந்துரம் தனை) யானை (வளர்த்த) மகளாம் தேவசேனையைச் சிறப்புடன் திருமணம் செய்து கொண்ட நல்ல கந்தவேளே.

(சிந்திமுன் புரக்காடு மங்க) முன் புரக்காடு சிந்திமங்க - முன்பு திரிபுரங்கள் என்னும் காடு சிதறுண்டு அழிய சிரிப்பிற் கொண்ட பெரு நெருப்பை ஏவின அழகர், (அல்லது சிரித்த செவ்விய நெருப்பு உருவத்தினர்), தேவர்கள் புகழும் (அம்பலவர்), செம்பொன் அம்பலத்திலே திருநடனம் புரியும் அம்பலவர் ஆகிய சிவபிரானுக்குத் தம்பிரானே!

(உன் தனது சிந்தை தாராய்)

## 599.

நிறைந்து தோன்றி, மிகுந்த இருளுக்குச் சமானமாகி, செழிப்புற்று, கொம்புபோல ஜடையாகப் பின்னப்பட்டு, (கவித்து செம்பொனை) செம்பொன்னாலாய ஜடை பில்லையைக் கவித்து, நெருக்கம் கொண்ட கூந்தலை உடைய மாதர்களின் பின்சென்று (அல்லது அவர்தம் பின்புறத்தே)

கழுத்தைப்பண் புறக்கட்டிச்
சிரித்துத் *தொங் கலைப்பற்றிக்
கலைத்துச்செங் குணத்திற்பித் திடுமாதர்;

பதித்துத்தந் தனத்தொக்கப்
பிணித்துப்பண் புறக்கட்டிப்
பசப்பிப்பொன் தரப்பற்றிப் பொருள்மாளப்-

பறித்துப்பின் துரத்துச்சொற்
கபட்டுப்பெண் களுக்கிச்சைப்
பலித்துப்பின் † கசுத்திப்பட் டுழல்வேனோ;

கதித்துக்கொண் டெதிர்த்துப்பிற்
கொதித்துச்சங் கரித்துப்பற்
கடித்துச்சென் றுழக்கித்துக் கசுரோரைக்-

கழித்துப்பண் ‡ டமர்க்குச்செப்
பதத்தைத்தந் தளித்துக் Xகைக்
கணிக்Oகுச்சந் தரத்தைச்சுத் தொளிர்வேலா-

**சிதைத்திட்டம் புரத்தைச்சொற்
கயத்தைச்சென் றுரித்துத்தற்
சினத்தக்கன் சிரத்தைத்†† தட் சிவனார்தஞ்-

செவிக்குச்செம் பொருட்கற்கப்
புகட்டிச்செம் பரத்திற்செய்த்
திருச்சிற்றம் பலச்சொக்கப் பெருமாளே. (10)

---

* தொங்கலை - தொங்கும்படி தரித்த வஸ்திரத்தை. † கசுத்தி-கஸ்தி; வருத்தம் ‡ அமர்க்குச் செப்பதத்தை - அமரர்க்குச் செம்பதத்தை.

X கைக்கு அணி - கையினிடத்து அணிந்த Oகுச்ச தரத்து ஐ சுத்த ஒளிர் வேலா ....குஞ்சங் கட்டிய அச்சத்தைத் தரும் அழகிய பரிசுத்தமான பிரகாசிக்கின்ற வேலையுடையவரே.

** புரத்தை எரித்தது - பாட்டு 285-பக்கம் 206 பார்க்க.
யானைத்தோலை உரித்தது - பாட்டு 286-பக்கம் 210 பார்க்க.
தக்கன் தலையைச் சிதைத்தது - பாட்டு 390 -பக்கம் 484.

†† தள் சிவனார்.

கழுத்தை நன்றாகக் கட்டியும், சிரித்தும், தொங்கும் ஆடையை (முந்தானையை) - முன்றானையைப் பிடித்துக் கலைத்தும், நல்ல குணத்தைப் பித்து பிறக்கும்படிச் செய்கின்ற மாதர்களின்மீது

(மனத்தைப்) பதித்து (அழுந்த வைக்கத்) தாம்பெற்ற (தனத்து ஒக்க) பொருளுக்குத் தக்கபடி வசப்படுத்தி நன்றாகக் கட்டியும், பசப்பியும் (இன்முகம் காட்டி ஏய்த்தும்), பொன் தரப்பெற்று அடைந்து, (வந்தவனுடைய) பொருள் வற்றிப்போம் அளவும்-

(அவனிடம்) பறித்துப் பின்னர் அவனை வெருட்டித் துரத்தும் சொற்களை உடைய வஞ்சகப் பெண்கள் மீது ஆசை உண்டாகிப் பின்னர் வருத்தத்தை அடைந்து நான் அலைச்சல் உறுவேனோ!

விரைந்தெழுந்து எதிர்த்தும், பின்னர் கொதிப்புற்றுச் சங்காரம் செய்து, பற்களைக் கடித்துக் (கோபித்துப்) போய், கலக்கித் துக்கப்படும் அசுரர்களை

ஒழித்து முன்பு (அமர்க்கு) அமரர்களுக்குத் தேவர்களுக்குச் செவ்விய நிலையைத் தந்தருளி (பொன்னுலகிற் குடியேற்றிக்) கையில் அணிந்துள்ள குஞ்சம் கட்டிய, அச்சத்தைத் தரும் அழகிய பரிசுத்தமான பிரகாசிக்கின்ற வேலை உடையவரே!

சிதைத்திட்டு அம்புரத்தை (அந்தத் திரிபுரங்களை அல்லது அழகிய திரிபுரங்களை) அழிவுசெய்து, சொல்லப்பட்ட அல்லது புகழ் பெற (கயாசுரனாய் வந்த) யானையிடம் சென்று அதை உரித்து, (தன்) தான் என்னும் அகங்காரத்தாற் கோபம்கொண்ட தக்கனுடைய தலையை (அறுத்துத்) தள்ளின சிவனாருடைய-

செவிக்குள் செம்மைப் பொருளாம் (பிரணவப் பொருளை) (அவர்) கற்கும்படிச் செலுத்திச் செவ்விய மேலான வகையில் அமையப்பெற்ற **திருச்சிற்றம்பலத்தில்** எழுந்தருளியுள்ள அழகிய பெருமாளே!

(அசுத்திப்பட்டு உழல்வேனோ)

## 600. மாதர்களின் உறவு அற

தனத்தத் தந்தன தானன தானன
தனத்தத் தந்தன தானன தானன
தனத்தத் தந்தன தானன தானன தனதான-

சிரித்துச் சங்கொளி யாமின லாமென
வுருக்கிக் கொங்கையி னாலுற மேல்விழு
செணத்திற் சம்பள மேபறி காரிகள் சிலபேரைச்-

சிமிட்டிக் கண்களி னாலுற வேமயல்
புகட்டிச் செந்துகி லால்வெளி யாயிடை
திருத்திப் பண்குழ லேய்*முகி லோவிய
மயில்போலே;

அருக்கிப் பண்புற வேகலை யால்முலை
மறைத்துச் செந்துவர் வாயமு தூறல்க
ளளித்துப் பொன்குயி லாமென வேகுரல் மிடறோதை-

அசைத்துக் கொந்தள வோலைக ளார்பணி
மினுக்கிச் சந்தன வாசனை சேறுட
னமைத்துப் பஞ்சணை மீதணை மாதர்க ளுறவாமோ;

இரைத்துப் பண்டம ராவதி வானவ
ரொளித்துக் கந்தசு வாமிப ரா† பர
மெனப்பட் டெண்கிரி ஏழ்கடல் தூள்பட அசுரார்கள்

இறக்கச் ‡ சிங்கம தேர்பரி யானையொ
டுறுப்பிற் செங்கழு கோரிகள் கூளியொ
டிரத்தச் சங்கம தாடிட வேல்விடு மயில்வீரா;

---

* 'மேகத்தைக் கண்டு சிறகை விரித்து நடிக்கும் மயிலே"
- தணிகைச் சந்நிதி முறை - மயில்பத்து - 9.

'கார் பெற்ற தோகையோ' - நளவெண்பா - கலிநீங்கு - 92.

† பரம் என - காப்பது உன் பாரம் என.

‡ சிங்கமும் தேரும் . 'சிங்கமும் பல இரதமொடு"
- திருப்புகழ் 603.

# 600.

சிரித்துப் (பற்களின் ஒளியைச்) சங்கின் ஒளி எனவும் மின்னலின் ஒளி எனவும் சொல்லும்படி வெளிக்காட்டி, (அதனால் காண்போரது மனத்தை) உருக்கி, கொங்கை கொண்டு மேலே பொருந்த விழுகின்ற அந்த செணத்தில் (அந்த க்ஷணத்திலே - பொழுதிலே), (விலைக்) காசு பறிக்கின்றவர்கள், சில பேர்வழிகளைச்

(சிமிட்டிக் கண்களினால்) கண்ணைச் சிமிட்டி (உறவே மயல் புகட்டி) அழுத்தமாகக் காமத்தை உட்புகுத்தி (ஊட்டி), செவ்விய (தமது) ஆடையால் வெளித்தோன்றவே (பகிரங்கமாகவே) இடையைச் சீர்ப்படுத்திப், (பண்) இசைப்பாட்டுக்கள் குழல்போல இனிமை பொருந்த, (முகில்) மேகத்தை (க் கண்ட) சித்திர மயில் போல (அல்லது, மேகத்தை நீங்கின மயில்போல)

(தமது) அருமையைக் காட்டி, ஒழுங்காக, ஆடையாற் கொங்கையை மறைத்து, செவ்விய பவளம்போன்ற வாயிதழின் அமுதன்ன ஊறல்களைக் குடிக்கத் தந்து, அழகிய குயில் என்னும்படி குரல் எழக் கண்டத்தில் ஓசையை

அசையச் செய்து, கூந்தலையும் காதோலைகளையும், நிறைந்த அணிகலன்களையும் செப்பம் செய்து ஒளிபெறச் செய்து, சந்தனத்தின் நறுமணக் கலவையுடன் அலங்கரித்துப், பஞ்சு மெத்தையின்மீது சேர்கின்ற மாதர்களின் உறவு கூடலாமோ (கூடலாகாது என்றபடி)

ஒலிடும் ஒலியுடன் முன்பு அமராவதியில் இருந்த தேவர்கள் (மேருமலையில்) ஒளித்துக் கொண்டிருந்து "கந்த சுவாமியே! மேலாம் பொருளே! (எங்களைக் காப்பது) உன் பாரம்" என்று முறையிட, (பட்டு எண்கிரி) அஷ்டபர்-வதங்களும் (பட்டு) - பொடிபட்டு ஏழுகடல்களில் தூள்பட, அசுரர்கள்

இறந்துபட, சிங்கங்கள் பூட்டப்பட்ட தேர்கள், குதிரைகள், யானைகள், மிகுதியாய் நெருக்கமாய் வந்த செந்நிறத்த கழுகுகள், (ஓரிகள்) நரிகள், (கூளியோடு) பேய்களோடு ரத்த வெள்ளத்தில் விளையாட வேலாயுதத்தைச் செலுத்தின மயில்வீரனே!

*சிரித்திட் டம்புர மேமத னாருட
லெரித்துக் கண்ட †க பாலியர் பாலுறை
திகழ்ப்பொற் ‡சுந்தரி யாள்சிவ காமிநல் கியசேயே-
திருச்சித் தந்தனி லேகுற மானதை
யிருத்திக் கண்களி கூர்திக ழாடக
திருச்சிற் றம்பல மேவியு லாவிய
பெருமாளே. (11)

## 601. பதவி பெற

தத்தனந் தத்தனந் தானனத் தந்ததன
தத்தனந் தத்தனந் தானனத் தந்ததன
தத்தனந் தத்தனந் தானனத் தந்ததன தந்ததான

தத்தையென் றொப்பிடுந் தோகைநட் டங்கொளுவர்
X பத்திரங் கட் Oகயங் காரியொப் புங்குழல்கள்
**சச்சையங் கெச்சையுந் தாளவொத் தும்பதுமை
யென்பநீலச்-
சக்கரம் பொற்குடம் பாலிருக் குந்தனமொ
டொற்றிநன் சித்திரம் போலஎத் தும்பறியர்
††சக்களஞ் சக்கடஞ் சாதிதுக் கங்கொலையர்
‡‡சங்கமாதர்;

---

* சிரித்து....மதனை எரித்தது - திருப்புகழ் 288-பக்கம் 216
-கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† பிரம கபாலத்தைக் கையிலேந்தியவர் சிவபிரான்
- கபாலம் ஏந்துங் கையர்' - சம்பந்தர் I-71-1.

‡ சிவகாம சுந்தரியாள் - என மாற்றுக. சிவகாம சுந்தரி - சிதம்பரத்திற் பெருமானது நடனத்தைக் கண்டு களிக்கும் பார்வதி தேவியின் பெயர்.

"மணி மன்றுள் நவிற்று நடங்காண்டல் பூண்ட
சிவகாம சுந்தரி தாள் பரவி வாழ்வாம்"
- வாளொளி புற்றூர்ப் புராணம்.

X பத்திரம் - அம்பு. O கயம் காரி = நீருண்ட கார்மேகம். **சச்சை அம் கெச்சை - சத்திக்குங் காற் சதங்கை. ††சகள்ளம் சக்கடம் சாதி - முழுப் பொய்யைப் பரிகாசத்தினாற் சாதிக்கின்ற.

‡‡ சங்கம் - சேர்க்கை, கூட்டம், அழகு.

சிரித்து அழகிய திரிபுரத்தையும் மன்மதனுடைய உடலையும் எரிசெய்த (கபாலியர்) சிவபிரானுடைய பக்கத்தில் இருக்கின்ற விளக்கமுள்ள பொலிவு நிறைந்த (சுந்தரியாள் சிவகாமி) சிவகாமி சுந்தரியாள் பெற்ற குழந்தையே!

உனது அழகிய உள்ளத்திலே (குறமாது) வள்ளியை இருத்திக் கண்ணால் மகிழ்ச்சி மிக்கடைந்து பொன் வேய்ந்த திருச்சிற்றம்பலத்தே (பொன்னம்பலத்தே) விரும்பி உலவும் பெருமாளே!

(பொது - மாதர்கள் உறவாமோ)

## 601.

கிளி என்று ஒப்புமை கூறத்தக்கவராய் மயில் போன்றவராய் உள்ளவர்கள், நடனம் செய்பவர்கள், வாள் (அல்லது அம்பு போன்ற) கண்ணும், நீருண்ட மேகம் போன்ற கூந்தலும் கொண்டு சத்திக்கும் காற் சதங்கை தாள ஒத்துப்போல ஒலிசெயும் பாவை (விக்கிரகம்) எனக் கூறத்தக்கவர், நீலநிறமுள்ள

சக்கரவாகப்புள், பொன்குடம், போன்று பால்கொண்ட தாயுள்ள கொங்கை கொண்டு அணைத்து, நல்ல பதுமை போலிருந்து வஞ்சித்துப் (பொருள்) பறிப்பவர்கள், முழுப் பொய்யைப் பரிகாசத்தினாற் சாதிக்கின்ற துக்கந்தரும் கொலைத் தொழிலையும் செய்பவர்கள், (விலைக்குச்) சேர்க்கை கொள்ளும் மாதர்கள் (விலைமாதர்கள்) - அல்லது மாதர் கூட்டம் - (அல்லது அழகிய மாதர்கள்)-

*சுத்திடும் பித்திடும் சூதுகற் குஞ்சதியர்
முற்பணங் †கைக்கொடுந் தாருமிட் டங்கொளுவர்
‡சொக்கிடும் புக்கடன் சேருமட் டுந்தனகும்
விஞ்சையோர்பால்-

தொக்கிடுங் கக்கலுஞ் சூலைபக் கம்பிளவை
விக்கலுந் துக்கமுஞ் சீதபித் தங்கள்கொடு
துப்படங் கிப்படுஞ் சோரனுக் கும்பதவி
யெந்தநாளோ;

சூத்திரங் கற்றசண் டாளர் Xசத் தங்குவடு
பொட்டெழுந் திட்டுநின் றாட Oஎட் டந்திகையர்
கொற்றமுங் கட்டியம் பாடநிர்த் தம்பவுரி
கொண்டவேலா-

கொற்றர்பங் குற்ற **சிந் தாமணிச் செங்குமரி
பத்தரன் புற்றஎந் தாயெழிற் கொஞ்சுகிளி
கொட்புரந் தொக்கவெந் தாடவிட் டங்கிவிழி
மங்கைபாலா;

---

* சுத்திடும் பித்து இடும் - தங்கள் வசத்திற் சுழலும்படியான பித் தேற்றுகின்ற; சுத்து - இது சுற்று என்பதன் மரூஉ.

† கை கொடு உந்து ஆரும் - கையிற் கொண்டு செலுத்தும் யாரையும்.

‡ சொக்கு இடும்பு கடன் சேரு மட்டும் தனகும் - சொக்கும் படியான இடும்பு வார்த்தைகளைச் சொல்லிப் பொருள் பற்றிக் கொள்ளும் வரையில் லீலாவிநோதம் பாராட்டும்.

X சத்த அம் குவடு - ஏழு மலைகள்.

O எட்டு அம் திகையர் - அஷ்டதிக்குப் பாலகர்; கிழக்கில் இந்திரன்; தென் கிழக்கில் - அக்கினி; தெற்கில் - யமன்; தென் மேற்கில் நிருதி; மேற்கே - வருணன்; வடமேற்கில் - வாயு; வடக்கில் குபேரன்; வடகிழக்கே - ஈசானன்.

** சிந்தாமணி - இது விரும்பிய அனைத்தையும் கொடுக்க வல்ல தெய்வமணி - திருப்பாற்கடல் கடைந்தபோது தோன்றிய மணி; இந்திரனிடம் இருப்பது; (திருப்புகழ் விநா-2, பக்கம்-10 கீழ்க் குறிப்பு). "சிந்தாமணி தெண்கடலமிர்தம் தில்லையானருளால் வந்தால் இகழப்படுமே' - திருக்கோவையார் 12.

தங்கள் வசத்திற் சுழலும்படியான பித்தேற்றுகின்ற சூதினைக் கற்றுள்ள வஞ்சகர், முன்னதாகப் பணம் கையிற் கொண்டு செலுத்தும் யார்மீதும் தமது இஷ்டத்தைச் செலுத்துபவர், சொக்கும்படியான (மயங்கும்படியான) இடும்பு வார்த்தைகளை (அகந்தைச் சொற்களை - அல்லது கொடிய துன்பச் சொற்களைச்) சொல்லிப் பொருள் சேரும் வரையில் நண்பு காட்டும் (லீலாவிநோதம் பாராட்டும்) மாயவித்தைக் காரரிடத்தே (ஆடும் ஆட்டங்களால்)-

நெருங்கிக்கூடி வருகின்ற (கக்கலும்) வாந்தியும், சூலை நோயும் (வயிற்றுளைவு நோயும்), (பக்கப்பிளவை) விலாப் பக்கத்தில் உண்டாகும் ராஜகட்டியும் - புண்கட்டியும், விக்கலும், துக்கமும், சீதம் (குளிர் அல்லது சீதமலம்) பித்தம் ஆகிய நோய்களைக் கொள்வதால் - (துப்பு) அடங்கி) - வலிமை குறைந்து அழிந்து போகும் (இந்த) கள்வனுக்கும் (பதவி) சிவபதவி (சாலோக சாமீப - சாரூப - சாயுஜ்ய எனப்படும் இன்பநிலை) கிடைப்பது எந்தநாளோ - எப்போதோ - (அறிகிலேன் - என்றபடி).

வஞ்சகம் கற்ற சண்டாளர், ஏழுமலைகளும் பொடிபட்டு நின்று குலைய, அஷ்டதிக்குப் பாலகர்களும், (உனது) வீரத்தைக் (கட்டியம் பாட) புகழ்மாலையாகப் பாட, நடனமாகிய கூத்துக்களைக் கொண்ட வேலனே!

வென்றியாளராம் சிவபிரானது (இடது) பாகத்தில் உள்ள சிந்தாமணி அனையாள், செவ்வியகுமரி, பக்தர்கள் அன்பு கொண்ட எனது தாய், அழகிய கொஞ்சும் கிளி, (கொட்) கொட்கு - சுழன்று திரியும் (புரம்) திரிபுரங்கள் எல்லாம் (மூன்றும்) வெந்து குலையவைத்த நெருப்புக் கண்களைக் கொண்ட மங்கை (பார்வதி தேவியின்) குழந்தையே!

சித்திரம் பொற்குறம் பாவைபக் கம்புணர
செட்டியென் றெத்திவந் தாடிநிர்த் தங்கள்*புரி
† சிற்சிதம் பொற்புயஞ் சேரமுற் றும்புணரு
மெங்கள்கோவே-
சிற்பரன் தற்பரன் சீர்திகழ்த் தென்புலியூர்
ருத்திரன் ‡ பத்திரஞ் சூலகர்த் தன்சபையில்
தித்தியென் றொத்திநின் றாடுசிற் றம்பலவர்
தம்பிரானே. (12)

## 602. மாதர்மீது மயக்கு அற

தனத்தத்தந் தனத்தத்தந்
தனத்தத்தந் தனத்தத்தந்
தனத்தத்தந் தனத்தத்தந்
• • • • தனதான

தனத்திற்குங் குமத்தைச்சந்
தனத்தைக்கொண் டணைத்துச்சங்
கிலிக்கொத்தும் பிலுக்குப்பொன்
தனிற்கொத்துந் தரித்துச்சுந்
தரத்திற்பண் பழித்துக்கண்
சுழற்றிச்சண் பகப்புட்பங் குழல்மேவித்-
தரத்தைக்கொண் டசைத்துப்பொன்
தகைப்பட்டுந் தரித்துப்பின்
சிரித்துக்கொண் டழைத்துக்கொந்
தளத்தைத் Xதண் குலுக்கிச்Oசங்
கலப்புத்தன் கரத்துக்கொண்
டணைத்துச்சம் ப்ரமித்துக்கொண் டுறவாடிப்;

*புரி - புரிந்து.

†சிற்சிதம் - சில் சிதம் (அல்லது சித்து சிதம்) சில் - நுண்ணிய (திருக்கோவை 196 உரை) சிதம் - ஞானம் - "சிதம்பட நின்ற நீர்கள்'- அப்பர்-4-59-7; சித்து - அறிவு.

‡ பத்திர அம் சூலம் - இலைகளையுடைய அழகிய சூலாயுதம்.

X தண் - அன்பு - "தண் கலந்த சிந்தையோடு சூத னன்று சாற்றுவான்" - சேது புராணம் - சீதை குண்ட_(ரு)

O சங்கு அலம்பு - வளையல்கள் சப்திக்கும்;

விசித்ரமான அழகிய குறப்பாவை (வள்ளி)பாற் சென்று சேர, செட்டி வடிவு எடுத்து வஞ்சித்து வந்து விளையாடல் செய்து கூத்துக்கள் புரிந்து, நுண்ணி ஞானத்தவளாம் அந்த வள்ளி உனது அழகிய புயங்களிற கூட அவளை முழுதும் கலந்து சேர்ந்த எங்கள் தலைவரே!

ஞானபரன், பரம்பொருள், சீர் விளங்கும் அழகிய புலியூரில் (சிதம்பரத்தில்) இருக்கும் ருத்ர மூர்த்தி, இலைகளையுடைய அழகிய சூலாயுதத்தைக் கொண்ட தலைவன், பொன்னம்பலத்தில் "தித்தி" என்னும் தாளத்துக்குத் தக்கபடி நடிக்கும் (சிற்றம்பலவர்) நடராஜப் பெருமானது தம்பிரானே!

(சோரனுக்கும் பதவி எந்த நாளோ)

# 602.

கொங்கையிற் செஞ்சாந்தையும் சந்தனத்தையும் (கொண்டு சேர்த்து) - அப்பி, சங்கிலிக் கொத்துக்களும், மினுக்கும் பொன்னாலாய கூட்டமான அணிகலன்களும் அணிந்து, (தமது) அழகில் (ஈடுபட்டவரை) அவர்தம் (நல்ல பண்புகளை அழித்து) நற்குணங்களை அழித்துக் கண்களைச் சுழற்றியும், சண்பகப்பூவைக் கூந்தலில் வைத்தும் (அலங்கரித்தும்)

(தரம்) தங்களது மேன்மை விளங்க (உடலை) அசைத்தும், பொன் தகை - பொற்சரிகை பொருந்திய பட்டாடையைத் தரித்தும், பின்பு சிரித்தும், கொண்டுவந்து அழைத்துச்சென்று, கூந்தலை அன்புடனே அசைத்தும், வளையல்கள் சப்திக்கும் தமது கைகளாற் கொண்டுபோய் அணைத்துப் பெருங்களிப்புடன் உறவு பூண்டு-

புனித்தப் *பஞ் சணைக்கட்டின்
படுத்துச்சந் தனப்பொட்டுங்
குலைத்துப்பின் புயத்தைக்கொண்
டணைத்துப்பின் சுகித்திட்டின்
புகட்டிப்பொன் சரக்கொத்துஞ்
சிதைப்பப்பொன் தரப்பற்றும் பொதுமாதர்-
புணர்ப்பித்தும் பிடித்துப்பொன்
கொடுத்துப்பின் † பிதிர்ச்சித்தன்
திணிக்கட்டுஞ் சிதைத்துக்கண்
சிறுப்பப்புண் பிடித்தப்புண்
புடைத்துக்கண் பழுத்துக்கண்
டவர்க்குக்கண் புதைப்பச்சென் றுழல்வேனோ;
சினத்துக்கண் சிவப்பச்சங்
கொலிப்பத்தின் கவட்டுச்செங்
குவட்டைச்சென் றிடித்துச் ‡ சென்
டரைத்துக்கம் பிடிக்கப்பண்
சிரத்தைப்பந் தடித்துக்கொண்
டிறைத்துத்தெண் கடற்Xறிட்டுங் கொளைபோகச்-
செழித்துப்பொன் சுரர்ச்சுற்றங்
களித்துக்கொண் டளிப்Oபுட்பஞ்
சிறக்கப்பண் சிரத்திற்கொண்
டிறைத்துச்செம் பதத்திற்கண்
திளைப்பத்தந் தலைத் **தழ்த்தம்
புகழ்ச்செப்புஞ் சயத்துத்தின் புயவேளே;

---

* பஞ்சணைக் கண் திண்படுத்து எனப்பிரிக்க

† பிதிர்தல் - கலங்குதல் "பிதிரும் மன மிலேன்" - திவ் - இயற்பா நான்முகன் - 84.

‡ சேண் தரை துக்கம் பிடிக்கப் பண் - விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையுந் துக்கம் பிடிக்கப் பண்ணிய.

X அத் தூளின் வாரிதிடர் பட்டதே' - கந்தர்-அலங்காரம் -11. என்புழிப்போல. திட்டு - திடர் - மேடு.

O இறைவனைப் பூசிக்கப் பூப்பறித்துப் பூக் கூடை சுமத்தல் வேண்டும்;-

'புக்கணைந்து புரிந்தல ரிட்டிலர்
நக்கணைந்து நறுமலர் கொய்திலர்
பூப்பெய் கூடை புனைந்து சுமந்திலர்' - அப்பர் - 5-95-1, 3.

** தழ்த்தம் புகழ்செப்பும் - தாழ்த்து அம் புகழ் செப்பும்; தாழ்த்து - தாழ்த்தி

உயர்ந்த சுத்தமான பஞ்சணை மெத்தையிலே நன்றாகப் படுத்து வந்தவனுடைய சந்தனப் பொட்டைக் கலைத்துப் பின்பு தனது கைகளால் அணைத்துப் பின்பு (சுகத்திட்டு இன்பு) இன்பச் சுகத்தை அனுபவித்து (கட்டிப் பொன்) பொன் கட்டிகளால் ஆன மணிவடத்திரளும் (சிதைப்ப) செலவழிந்து தொலையும்படி, பொன்னைத் தரும்படி, பற்றுகின்ற பொதுமகளிரைப்

(புணரும்) (சேரும்) (பித்தும்) பைத்தியமும் பிடித்து (அவர்களுக்குப்) பொன்னைக் கொடுத்துப் பின்பு (பிதிர்) கலங்கும் மனமுடையவனாகிய நான், (என்னுடைய) வலிமை பொருந்திய (உடல்) கட்டும் சிதைவுண்டு தளர்ந்து, கண்ணும் சிறுத்துப்போய், புண் பிடித்து, அந்தப் புண் வீங்கிப் பருத்து, கண் பழுத்து - புண்ணின் இடமெல்லாம் பழுத்து (அழுகி) அதைப் பார்த்தவர்களெல்லாம் கண்ணை மூடிச் செல்லும்படியாக நான் திரிவேனோ!

கோபித்து, (அதனால்) கண்கள் சிவக்கவும், சங்குகள் ஒலிக்கவும், வலிய கிளைகளை உடைய செவ்விய மலை - கிரவுஞ்சத்தைப் பொடிபடுத்தி விண்ணுலகத்தாரையும், மண்ணுலகத்தாரையும் துக்கம் பிடிக்கப் பண்ணின (அசுரர்களின்) சிரங்களைப் பந்தடிப்பதுபோல அடித்து அவைதமை (போர்க்களம்) எங்கும் சிதற வைத்துத் தெளிய கடல் (திட்டு) மேடாம் தன்மையைக் (கொளை) கொள்ளுதலை அடைந்து நிற்க,

செழிப்புற்றுப் பொன்னுலகத்துத் தேவர்களும் அவர்களின் சுற்றத்தார்களும் மகிழ்ச்சி பூண்டு, அம் மகிழ்ச்சியுடன் வண்டுகள் மொய்க்கும் மலர்களை (மலர்க்கூடைகளை) விளக்கமுறத்தக்கபடி - அல்லது அலங்கார- மாக - தலையிற் - சுமந்து சென்று இட்டுப் பூசித்து உனது செவ்விய திருவடிகளில், தமது கண்கள் மகிழத் தமது தலைகளைத் தாழ்த்தி அழகிய உனது திருப்புகழைச் சொல்லும் ஜயம் விளங்கும் வலிய திருப்புயத்தை உடைய வேளே!

*பனித்துட்கங் கசற்குக்கண்
பரப்பித்தன் சினத்திற்றிண்
புரத்தைக்கண் டெரித்துப்பண்
கயத்தைப்பண் டுரித்துப்பன்
பகைத்தக்கன் தவத்தைச்சென்
றழித்துக்கொண் † டடற்பித்தன் தருவாழ்வே-
‡ படைத்துப்பொன் றுடைத்திட்பன்
X தனைக்குட்டும் படுத்திப்பண்
கடிப்புட்பங் கலைச்சுற்றும்
பதத்தப்பண் புறச்சிற்றம்
பலத்திற்கண் களித்தப்பைம்
புனத்திற்செங் குறத்திப்பெண் பெருமாளே. (13)

## 603. பொதுமாதர் உறவு அற

தனதன தனத்தத் தந்த தந்தன
தனதன தனத்தத் தந்த தந்தன
தனதன தனத்தத் தந்த தந்தன தனதான

திருடிக ளிணக்கிச் சம்ப ளம்பறி
O நடுவிகள் மயக்கிச் **சங்க முண்கிகள்
†† சிதடிகள் முலைக்கச் சும்பல் கண்டிகள் சதிகாரர்-
செவிடிகள் மதப்பட் டுங்கு ‡‡குண்டிகள்
அசடிகள் XXபிணக்கிட் டும்பு றம்பிகள்
செழுமிக ளழைத்OOதிச் சங்கொ ளுஞ்செயர்
வெகுமோகக்;

*பனித்து உட்க - நடுங்கி உதிர.

† மன்மதனை எரித்தது. திரிபுரத்தை அழித்தது. யானையை உரித்தது. தக்கன் வேள்வியை அழித்தது - இவ் வரலாறுகளை பாடல் 399 பக்கம் 510; பாடல் 285 பக்கம் 206; பாடல் 286 பக்கம் 210; பாடல் 390, பக்கம் 484, பார்க்கவும்.

‡ படை துப்பு ஒன்றுடை திட்பன் - படைக்கும் வல்லமையுடைய வலியோனாகிய பிரமன்.

X பிரமனைக் குட்டியது - பாடல் 212, பக்கம் 42 கீழ்க்குறிப்பு.

O நடுவி - நடுவன் என்பதற்குப் பெண்பாலாகக் கொண்டு யமன் போல்பவர் எனலுமாம். **சங்கம் - சையோகம்.

†† சிதடிகள் - அறிவிலிகள். ‡‡ குண்டிகள் - குண்டர்கள் என்பதன் பெண்பால். XX பிணக்கிட்டும் - பிணக்கிடும்.

OO இச்சம் - இச்சை 'ஒள்ளிழை மாதரைப் புணர்த்திய இச்சத்துப் பெருக்கத்தில்" - பரிபாடல் 7-36.

நடுங்கி அச்சங்கொள்ள (அங்கசற்கு) மன்மதன்மேல் நெற்றிவிழி (நெருப்பைச்) செலுத்தித் தான்கொண்ட கோபத்தால் (திண்ணிய) வலிய திரிபுரங்களை விழித்து எரித்து, (கோப) அலங்காரமாய் வந்த யானையை முன்பொருகால் (உரி) உரித்த (துப்பன்) வலிமை கொண்டவன், பகைமை பூண்டிருந்த தக்கனுடைய (தவத்தை) யாகத்தை போய் அழித்து அவனையும் கொன்ற வலிமை வாய்ந்த பித்தன் பெற்ற செல்வமே!

படைக்கின்ற (துப்பு) ஆற்றல் ஒன்றை உடைய (திட்பன்தனை) திறமை கொண்டவனான பிரமனை, (குட்டும் படுத்தி) குட்டிப் (பண்) தகுதியான, நறுமணமுள்ள (புட்பம் பதத்த) - மலர்களைக்கொண்ட திருவடிகளை உடையவனே! (கலைச் சுற்றும் பதத்த) பரதகலை - பரத சாஸ்திர முறைப்படி சுழன்று நடிக்கும் திருவடிகளை உடையவனே! அலங்காரத்துடன் (தில்லைத்) திருச்சிற்றம்பலத்தில் கண் குளிர்ச்சியுற மகிழ்ச்சி கொண்ட (பெருமாளே!) பசிய தினைபுனத்திலிருந்த செவ்விய குறத்திப் பெண் (வள்ளிக்குப்) பெருமாளே!

(உழல்வேனோ)

## 603.

திருடிகள், (வந்தவர்களைத் தம் இஷ்டப்படி) இணங்க வைத்துப் பொருள் பறிக்கின்ற (நடுவு) நீதி பூண்டவர்கள், மயங்க வைத்துச் சையோகம் - சேர்க்கை காண்பவர்கள் (புணர்வோர்), அறிவிலிகள் (முலைக் கச்சும்பல்) கச்சு முலை உம்பல் - ரவிக்கை அணிந்த கொங்கை யானையைக் கொண்ட, (கண்டிகள்) கடிந்து கூறும் பேச்சு உடையவர்கள் வஞ்சனை உள்ளத்தினர்,

(காரியவாதிகளாய்ச்) செவிடுபோலக் (காது கேளாதவர் போல) இருப்பவர்கள், அகங்காரம் கொண்டு (உங்கு) (உங்கார ஒலியை எழுப்பும்) - அதட்டும் - (குண்டிகள்) இழிவுடையோர், முட்டாள்கள், பிணக்கம் (ஊடல்) கொள்ளும் - புறம்பிகள் - குல ஒழுக்கத்துக்கு வெளிப்புற மானவர்கள் (வேசையர்) செழிப்பு (அழகு) கொண்டவர்கள், வருபவர்களை அழைத்து (இச்சம் கொளும் செயர்) தமது இச்சையை நிறைவேற்றிக்கொள்ளும் செயல் திறத்தைக் கொண்டவர்கள், மிக்க ஆசை பூண்ட-

குருடிகள் நகைத்திட் டம்*பு லம்பு †க
ளுதடிகள் கணக்கிட் டும்பி ணங்கிகள்
‡குசலிகள் Xமருந்திட் டுங்கொ டுங்குணர் விழியாலே-
கொளுவிகள் மினுக்குச் Oசங் **கி ரங்கிகள்
நடனமு நடித்திட் ††டொங்கு சண்டிகள்
குணமதில் முழுச்சுத் ‡‡தசங்க்ய சங்கிக ளுறவாமோ;
இருடிய ரினத்துற் றும்ப தங்கொளு
மறையவ னிலத்தொக் குஞ்சு கம்பெறு
மிமையவ ரினக் XXகட் டுங்கு லைந்திட வருசூரர்-
இபமொடு OOவெதித்தச் சிங்க மும்பல
இரதமொ ***டெதத்திக் கும்பி ளந்திட
இவுளியி ரதத்துற் றங்க மங்கிட விடும்வேலா;
†††அரிகரி யுரித்திட் டங்க சன ‡‡‡ புர
மெரிதர நகைத்துப் XXXபங்க யன்சிர
மளவொடு மறுத்துப் பண்OOOட ணிந்தவ ரருள்கோனே-

---

*புலம்புதல் - (உரத்த குரலில்) அடிக்கடி சொல்லுதல் - 'வீரட்டம் புலம்பேனாகில் என் கண் துயில் கொள்ளுமே' - அப்பர் 5-53-12.

† வேசைகள் கள் உண்டனர் என்பது - திருப்புகழ் 60, 88, 362, 877 பார்க்க ‡ குசலிகள் - தந்திரவாதிகள்.

X மருத்திட்டும் - மருத்திடும் - மருந்திடும். வேசையர் மருந்திடுதல் - திருப்புகழ் 230 பக்கம் 74 பார்க்க.

O சங்கு - வளையல். ** இரங்கல் - ஒலித்தல். †† ஓங்கு - ஓங்கு.

‡‡ அசங்க்யம் - அவலக்ஷணம், கணக்கின்மை, எண்ணிறந்தது.

அசங்க்ய சங்கிகள் - கூடா நட்பினர் - எனலுமாம். அகத்தாற் கூடாதே புறத்தே நண்பு காட்டுவர்.

XX கட்டு - மிகுதி - "கட்டணிவார்சடை" - திருக்கோவையார்-303 உரை.

OO வெதித்த-வேதித்த: பேதித்த *** ஏதத் திக்கும் - எந்தத் திக்கும்.

††† அரி - நரமடங்கல். (சிங்க உரி - பாடல் 566, பக்கம் 292).

‡‡‡ புரம் - உடல் - 'மதனனை விடுத்தனம் தெளிவில்லேம்; அவன் புரம் பொடித்தனை' - கந்த புராணம் - I-5-11.

'கடமையாதி விலங்கு தத்தம்...கண்டுயம்....போவது கருதி அன்னான் புரத்திடை உரைத்துப் போமால்" - கந்த புரா 2-5-4.

XXXபிரமன் சிரம் அறுத்தது - பாட்டு 286, பக்கம் - 209.

OOOஅயன் சிரம் பண்டு அணிந்தது-

"பிரமனும்...இறக்கும் - இறந்தான் களேபரமும்....
கொண்டு கங்காளராய்" - அப்பர் - 4-112-7.

குருடிகள் சிரித்துக்கொண்டே தமது இஷ்டத்தைப் (புலம்பு) வெளியிடுகின்ற (அடிக்கடி முறையிடுகின்ற) (கள் உதடிகள்) கள்ளுண்ட உதட்டினர், (பெற்ற பொருளைக்) கணக்குப் பார்த்துப் பார்த்துப் பிணக்கம் கொள்பவர்கள், தந்திரவாதிகள், மருந்து வைத்து மயக்கும் கொடிய குணத்தினர், கண்களைக் கொண்டே (கண்பார்வையைக் கொண்டே)-

(தம்மாட்டு) இழுத்துக்கொள்ளும் சக்தி வாய்ந்தவர்கள், மினுக்கப்பட்ட - துலக்கப்பட்ட வளையல்களின் ஒலித்தலைக் கொண்டவர்கள், நடனமும் நடித்து விளங்கி ஓங்கும் (சண்டிகள்) பிடிவாத குணத்தினர், குணமோ முழுமையும் சுத்த (அசங்க்ய) அசிங்கமான - அவலக்ஷணமான - (அல்லது *கணக்கிலாத) சம்பந்தம் உடையவர்கள் அத்தகைய பொதுமாதர்களின் உறவாமோ! சம்பந்தம் ஆமோ! கூடாது என்றபடி.

ரிக்ஷிகள் இனத்தோர் (நெருக்கமும்) கூட்டமும், பதவியிலிருக்கும் பிரமன் (படைத்த) மண்ணுளோர் கூட்டமும். சுகம் பெற்றிருந்த தேவர்களின் கூட்ட மிகுதியும் - (எல்லாம்) நிலைகுலைய வந்த சூரர்கள்-

யானைக் கூட்டங்களுடன் பேதம் கொள்ளும் (பகை கொள்ளும்) சிங்கங்களும் (அவை பூட்டப்பட்ட தேர்களும் எந்தத் திக்கிலும் பிளவு உண்டு அழிய, குதிரைகள் தேரில் பூட்டப்பட்டன உடல் நாசம் அடைந்து அழியச் செலுத்தின வேலாயுதனே!

(நர) சிங்கத்தையும் யானையையும் (தோல்) உரித்து மன்மதனும் திரிபுரமும் எரிபட்டு அழியச் சிரித்து (அல்லது - மன்மதனுடைய - (புரம்) உடல் எரிபட்டு அழியச் சிரித்து), பிரமனுடைய தலையை ஒரு கணக்காக அறுத்தும், முன்பு பிரமகபாலத்தை அணிந்தவருமான சிவபிரான் தந்தருளிய தலைவனே!

---

* "எத்தனைபேர் நட்டகுழி எத்தனைபேர் தொட்டமுலை
எத்தனைபேர் பற்றி இழுத்த இதழ்" - பட்டினத்தார்- வெண்பா.

அமரர்த மகட்கிட் டம்பு ரிந்துநல்
குறவர்த மகட்பக் கஞ்சி றந்துற
அழகிய திருச்சிற் றம்ப லம்புகு பெருமாளே.(14)

## 604. மாதர்மீது மயக்கு அற

தந்த தந்தன தந்த தந்தன
தந்த தந்தன தந்த தந்தன
தந்த தந்தன தந்த தந்தன தந்ததான

கொந்த ரங்குழ லிந்து வண்புரு
வங்கள் கண்கய லுஞ்ச ரங் *கணை
கொண்ட ரம்பைய ரந்த முஞ்சசி † துண்டமாதர்-

கொந்த ளங் ‡ கதி ரின்கு லங்களி
னுஞ்சு ழன்றிர சம்ப லங் Xகனி
கொண்ட நண்பித ழின்சு கங்குயி
லின்சொல்மேவு ந;

தந்த வந்தர ளஞ்சி றந்தெழு
கந்த ரங்கமு கென்ப பைங்கழை
தண்பு யந்தளி ரின்கு டங்கைய ரம்பொனாரந்-
தந்தி யின்குவ டின்த னங்களி
ரண்டை யுங்குலை கொண்டு விண்டவர்
தங் Oக டம்படி யுங்**க வண்டிய
சிந்தையாமோ;

மந்த ரங்கட லுஞ்சு ழன்றமிர்
தங்க டைந்தவ னஞ்சு ††மங்குலி
மந்தி ரஞ்செல்வ முஞ்சு கம்பெற எந்தவாழ்வும்-

---

*கணை - (அம்பின்) அலகு - சிந்தாமணி -90 உரை.

† துண்டம் - முகம்.

‡ கதிர் - ஒளி, குலம், அழகு.

X கனி - இனிமை, சாரம்.

O கடம் - உடம்பு.

**கவண் - தீய - சிந்தை, தீய - திய எனக் குறுகிற்று. - 'மால் கொளுந்திய' - (பாடல் -504) என்புழிப் போல.

†† மங்குலி - இந்திரன்.

தேவர் மகளாம் தேவசேனையிடம் இஷ்டத்தைக் காட்டி, நல்ல குறவர்தம் மகள் வள்ளி (உனது) வலப்பக்கத்திற் சிறப்புற்று வீற்றிருக்க (அல்லது வள்ளியிடத்தே சிறப்பாக நீ பொருந்த), அழகிய (தில்லைத்) திருச்சிற்றம்பலத்தே புக்கு விளங்கும் பெருமாளே!

(அசங்க்ய சங்கிகள் உறவாமோ)

## 604.

(கொந்தரங் குழல்) குழல் அம் கொந்தர் - கூந்தலிலே அழகிய பூங்கொத்துகளை உடையவர், பிறைச் சந்திரன் போன்ற வளப்பமுள்ள புருவங்களையும் (கண் கயலும் சரம் கணைகொண்ட) கயலும் சரமும் கணையும் கண் கொண்ட - கயல்மீன் போலவும், அம்புபோலவும், அம்பின் அலகு போலவும் உள்ள கண்களையும் கொண்ட (அரம்பையர் அந்தமும்) தெய்வமகளிர் போன்ற அழகையும், (சசி) சந்திரன் போன்ற (துண்டம்) முகத்தினையும் உடையவராகிய மாதர்கள்.

கூந்தலின் ஒளி அழகுகளில் ஈடுபட்டுத் திரிந்து சுவையுள்ள பழத்தின் சாரத்தைக் கொண்டு உகந்ததாயிருந்த வாயூறலின் இன்பம், கிளி, குயில் இவைகளின் மொழிபோன்ற இனிய சொல், விரும்பும்படியான,

தந்த அம் தரளம் (அம் தரள தந்தம்) அழகிய முத்துக்கள் போன்ற பற்கள், நல்ல எழுச்சியுள்ள (கமுகென்ப கந்தரம்) கமுகு போன்ற கழுத்து, பசிய மூங்கில் (அல்லது கரும்பு) போன்ற குளிர்ந்த புயங்கள் தளிர்போல மென்மைகொண்ட உள்ளங்கை - இவைதமை உடையவர்கள், அழகிய பொன்மாலையை அணிந்துள்ள

யானைபோலவும் மலைபோலவும் உள்ள (தமது) கொங்கைகள் இரண்டும் நிலைகெட்டு வெளிவந்தவர்கள் - இத்தகைய - (பொது மகளிருடைய (கடம்) உடலிலே தோய்கின்ற (கவண்திய) கவண்கல் போலக் கொடிதாய் வேகமாய்ப் பாய்கின்ற - தீய - கெட்ட சிந்தை யாமோ (தீய மனம் ஆமோ) - ஆகாது என்றபடி,

மந்தரமலையைக் கடலிற் சுழலவைத்து அமுதம் கடைந்தெடுத்தவன், அஞ்சும் (அச்சங்கொண்ட) இந்திரன் இருப்பிடம், செல்வம், சுகம் முதலிய சகல வாழ்வையும் பெற-

*வந்த ரம்பையெ னும்ப கிர்ந்துந
டங்கொ ளுந்திரு மங்கை பங்கினன்
† வண்டர் லங்கையு ளன்சி ரம்பொடி
கண்டமாயோன்;

‡ உந்தி யின்புவ னங்க ளெங்கும
டங்க வுண்டகு டங்கை யன்புக
ழொண்பு ரம்பொடி கண்ட எந்தையர் பங்கின்மேவும்-
Xஉம்ப லின்கலை மங்கை சங்கரி
மைந்த னென்றய னும்பு கழ்ந்திட
வொண்ப ரந்திரு வம்ப லந்திகழ்
தம்பிரானே. (15)

## 605. குறை தீர

தனந்தந்தம் தனந்தந்தம்
தனந்தந்தம் தனந்தந்தம்
தனந்தந்தம் தனந்தந்தம் தனதான

தியங்குஞ்சஞ் சலந்துன்பங்
கடந்தொந்தஞ்செறிந்தைந்திந்
த்ரியம்பந்தந் தருந்துன்பம் படுமேழை-
Oதிதம்பண்பொன் றிலன்பண்டன்
**தலன்குண்டன் சலன்கண்டன்
தெளிந்துன்றன் பழந்தொண்டென் றுயர்வாகப்

---

* கடல் கடைந்த வரலாறு:- பாடல் 509, பக்கம் 162 பார்க்க.

கடல் கடைந்ததில் தன்வந்திரி, அமுதம், அமுதத்துடன் அறுபது-கோடி அரம்பையர், இவர்களுக்குத் தோழியர், உச்சைச் சிரவம் என்னும் குதிரை, கௌத்துவமணி, பஞ்ச தருக்கள், காமதேனு, சிந்தாமணி, சந்திரன், ஐராவதம், மூதேவி, திருமகள், வாருணி - பிறந்தன. திருமகள், கௌத்துவமணி இவைதமைத் திருமால் ஏற்றுக்கொண்டனர். அரம்பையர், உச்சைச் சிரவம், ஐராவதம், சிந்தாமணி , பஞ்ச தருக்கள் ஆகிய செல்வங்கள் இந்திரனுக்குக் கிடைத்தன- (அபிதான சிந்தாமணி)

† வண்டர் - அரசனுக்கு நாழிகை அறிவிக்கும் கடிகையார், மங்கல பாடகர். ‡ திருமால் புவனம் உண்டது - பாடல் 267, பக்கம் 164 பார்க்க.

X உம்பலின் கலைமங்கை சங்கரி என்றார் - கலைமகளே அம்பிகையின் ஒரு கூறு ஆதலின் "புண்டரிக வீட்டிற் பொலிந்து மதுரச் சொற்பொலி பழம்பாடல் சொல்லுகின்றவளும் நின்சொருபம்" - மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - பொன்னூசல்-2.

தேவியைச் 'சகலகலா வியாபிநீம்' - என அதர்வணவேதம் கூறும்.

O திதம் - நிலைமையான. ** தலன் - கீழானவன்.

(அந்தக் கடலில் தோன்றிய) அரம்பையாதிய நடன மாதர்களையும் (சிந்தாமணி, காமதேனு, உச்சைச் சிரவம் என்னும் குதிரை முதலிய பல பொருள்களையும்) பங்கிட்டு அளித்து நடனம்கொண்ட லக்ஷ்மிகாந்தன், (வண்டர்) மங்கல பாடகர் பாடிநின்ற இலங்கை வேந்தன் ராவணனுடைய தலைகள் பொடியாம்படி வென்ற மாயவன்-

தனது வயிற்றில் அண்டங்கள் முழுமையும் அடங்க உண்ட உள்ளங்கையன் - ஆகிய திருமால் புகழ, விளங்கின திரிபுரங்களைப் பொடிசெய்த எந்தை சிவபெருமானுடைய பாகத்தில் இருக்கும்

எழுச்சிகொண்ட (சகல) கலைகளுக்கும் தலைவியாகிய மங்கை வாகீசுவரியாம் சங்கரி மைந்தனே என்று பிரமனும் புகழ, ஒள்ளிய மேலான, (தில்லைத்) திரு அம்பலத்தில் விளங்கும் தம்பிரானே!

*(தீய சிந்தையாமோ)*

## 605.

அறிவைக் கலக்கும் மனக்கவலை, துன்பம் (கொண்ட) (கடம் தொந்தம் செறிந்து) இவ் வுடலிற் சம்பந்தப்பட்டு நெருங்கியுள்ள, (ஐந்து இந்த்ரியம் பந்தம்) (மெய், வாய், கண், மூக்கு, செவி) என்னும் ஐம் பொறிகளால் உண்டாகும் துன்பத்தில் வேதனைப் படுகின்ற ஏழை-

நிலைமையான (நற்) குணம் ஒன்றும் இல்லாதவன், (பண்டன்) ஆண்மையில்லாதவன், (தலன்) கீழானவன், (குண்டன்) இழிந்தோன், (சலன்கண்டன்) கோபவீரன் இத்தகைய நான் (அறிவு) தெளிந்து உனது பழைய அடியான் என்னும் உயர்நிலையை அடையும்படி (நீ)

புயங்கந்திங் களின் துண்டங்
குருந்தின்கொந் தயன்றன்கம்
பொருந்துங்கங் கலந்தஞ்செஞ் சடைசூடி-

புகழ்ந்துங்கண் டுகந்துங்கும்
பிடுஞ்செம்பொன் சிலம்பென்றும்
புலம்பும்பங் கயந்தந்தென் குறைதீராய்;

இயம்புஞ்சம் புகந்துன்றுஞ்
சுணங்கன்செம் பருந்தங்கங்
கிணங்குஞ் *செந் தடங்கண்டுங் களிகூர-

இடும்பைங்கண் சிரங்கண்டம்
பதந்தந்தங் கரஞ்சந்தொன்
றெலும்புஞ்சிந் திடும்பங்கஞ் செயும்வேலா

தயங்கும்பைஞ் சுரும்பெங்குந்
தனந்தந்தந் தனந்தந்தந்
தடந்தண்பங் கயங்கொஞ்சுஞ் † சிறுகூரா-

தவங்கொண்டுஞ் செபங்கொண்டுஞ்
சிவங்கொண்டும் ப்ரியங்கொண்டுந்
தலந்துன்றும் பலந்தங்கும் பெருமாளே.(16)

## 606. பொதுமகளிர்மீது மயக்கு அற

தனனந் தனத்த தந்த தனனந் தனத்த தந்த
தனனந் தனத்த தந்த தனதான

பருவம் பணைத்தி ரண்டு கரிகொம் பெனத்தி ரண்டு
பவளம் பதித்த செம்பொ னிறமார்பிற்-

படருங் கனத்த கொங்கை மினல்கொந் தளித்து சிந்த
பலவிஞ் சையைப் புலம்பி யழகான;

* செந்துடம் - ரணகளம்.

† சிறுகூர் - இந்தத் தலம் இன்னதென்று தெரியவில்லை. சிற்றூர் (சித்தூர்) எனக் கொள்ளலாம்.

பாம்பு, (திங்களின் துண்டம்) பிறைச் சந்திரன், குருந்த மலரின் கொத்து, அயன் தன் கம் - பிரமனுடைய (தலை) கபாலம், பொருந்திய (கம்)- கங்கை நீர் - இவை (கலந்த) சேர்ந்த அழகிய செஞ்சடையராம் சிவபிரான்-

புகழ்ந்தும், பார்த்து மகிழ்ந்தும், கும்பிடுகின்ற (உனது) செம்பொற் சிலம்பு எப்போதும் ஒலிக்கின்ற தாமரையன்ன திருவடியை எனக்குத் தந்து என்னுடைய குறைகளைத் தீர்த்தருளுக.

சொல்லப்படுகின்ற (சம்புகம்) நரிகள், நெருங்கும் நாய்கள், செம் பருந்துகள் (அங்கு அங்கு) அங்கங்கே கூடி நிற்கும் ரணகளத்தைப் பார்த்து மகிழ்ச்சி மிகும்படி-

(இடும்பை) துன்பம் உண்டாக, கண், தலை, கழுத்து, கால், அவரவரது, கை (உடற்) பொருத்தங்கள் ஒன்றுபட்ட எலும்புகள் இவையெலாம் அழிவுபடும்படி துண்டு செய்த வேலனே!

ஒளிகொண்ட (அல்லது) திகைப்பு உள்ள பசிய வண்டுகள் எல்லா இடத்தும் தனந்தந்தம் தனந்தந்தம் என்னும் ஒலியுடன் குளங்களில் உள்ள குளிர்ந்த தாமரை மலர்களிற் கொஞ்சுகின்ற **சிறுகூர்** என்னும் தலத்தில் வீற்றிருப்பவனே!

தவம் கொண்டவரும் (தவத்தினரும்) ஜெபத்தினரும், சிவனடியார்களும் பிரியத்துடன் நாடி அடைகின்ற தலமாகிய சிதம்பரத்தில் (பொன்) **அம்பலத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(என்குறை தீராய்)

## 606.

(பருவம்) தக்க காலத்தில் (அல்லது இளமையில்) பருத்து இரண்டு (யானைத்) தந்தங்கள் என்று சொல்லும்படி, திரட்சியுற்றுப் பவளம் பதித்ததுபோன்ற செவ்விய பொன்னிறமுடைய மார்பிலே,

பரந்துள்ள, கனம்கொண்ட, கொங்கைகள், மின்னல் மின்னி எழுந்ததுபோல (ஒளி) வீச, பலவிதமான மாய வித்தைப் பேச்சுக்களைப் பலமாகப் பேசித் (தமது) அழகான-

புருவஞ் சுழற்றி யிந்த்ர தநுவந் துதித்த தென்று
புளகஞ் செலுத்தி ரண்டு கயல்மேவும்-

பொறிகள் சுழற்றி *ரம்ப பரிசம் பயிற்றி மந்த்ர
பொடிகொண் டழிக்கும் வஞ்ச குறவாமோ;

உருவந் தரித்து கந்து கரமும் பிடித்துவந்து
உறவும் பிடித்†த ணங்கை வனமீதே-

ஒளிர்கொம் பிணைச்ச வுந்த ரிய‡வும்
பலைக்கொ ணர்ந்து
ஒளிர்வஞ் சியைப் புணர்ந்த மணிமார்பா;

செருவெங் களத்தில் வந்த அவுணன் தெறித்து மங்க
Xசிவமஞ் செழுத்தை முந்த விடுவோனே-

தினமுங் களித்து செம்பொ னுலகந் துதித்தி றைஞ்சி
திருவம் பலத்த மர்ந்த பெருமாளே. (17)

---

* ரம்ப - நிரம்ப.

† அணங்குஐ வன மீதே - தெய்வத் தன்மை பொருந்திய அழகிய கற்பக வனத்திலே.

‡ தம்மை மணக்கமாட்டேன் என்று வள்ளி மறுத்தபொழுது முருகவேள் கணபதியை யானையாக வரவழைத்து வள்ளியை அச்சுறுத்தி மணந்தனர்.

'இபமாகி அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே" விநா-துதி-1 பார்க்க.

X பஞ்சாக்ஷரமும் வேலும் பலவிதத்திலும் ஒப்புள்ளன; இரண்டும்

அடியார்களுக்கு நன்மையைத் தருவன; தீமையை ஒழிப்பன. பஞ்சாக்ஷரம் - 'கூற்று அஞ்ச உதைத்தன' - சம்பந்தர் 3-22-1; வேல் "தருக்கி நமன் முருக்கவரின் ..... இறைகழற்கு நிகராகும் - வேல் வகுப்பு; பஞ்சாக்ஷரம் 'ஏத்துவார்க்கு இடரான கெடுப்பன வினைப்பகைக்கு அத்திரமாவன' - சம்பந்தர் 3-22-3, 10. "உறும் இடுக்கண் வினைசாடும்" - வேல்; வேல் வகுப்பு.

(புருவஞ் சுழற்றியிந்த்ர தனுவந் துதித்ததென் று) இந்திரவில் (வானவில்) வந்து தோன்றின துபோல உள்ள தமது புருவங்களைச் சுழற்றிப், புளகம் தருகின்ற இரண்டு கயல்மீன்போல உள்ள-

உறுப்பாகிய கண்களைச் சுழற்றி, நிரம்பவும் தொட்டுப் பயின் று, (மந்த்ர பொடிகொண்டு) சொக்குப் பொடிகொண்டு, அழிக்கின்ற வஞ்சகர்களாம் (பொது மகளிருடைய) சம்பந்தம் ஆமோ! கூடாது என்றபடி;

வேற்று உருவம் பூண்டு மன மகிழ்ச்சியுடன் (வளைவிற்கும் செட்டியாய் வள்ளியின்) கரத்தையும் பிடித்து மகிழ்ந்து, அணங்கை உறவும் பிடித்து - தெய்வமகள் போன்ற அந்த வள்ளியை நட்புப்பூண்டு (வள்ளிமலைக்) காட்டிலே (அல்லது - தெய்வத்தன்மை பொருந்திய அழகிய (வள்ளிமலைக்காட்டிலே) (அல்லது, சேனாபதியாயிருந்த தமது போர் வீர உருவத்தை - (கோலத்தை) நீக்கிக் *கலியாண) (கோலத்தைப் பூண்டு மகிழ்ந்து (தேவசேனையின்) கரத்தைப் பிடித்து மகிழ்ந்து (தேவர்கோன் - இந்திரனுக்கு மருமகன் என்னும்) சம்பந்தத்தையும் கொண்டு, (அணங்கு ஜவன மீதே)- தெய்வத்தன்மை பொருந்திய அழகிய கற்பக வனத்திலே)

விளங்குகின்ற கொம்புகளைக்கொண்ட அழகிய (கணபதியாம்) யானையை வரவழைத்து, விளங்கும் அந்த வஞ்சிக்கொடி போன்ற வள்ளியைக் கலந்த அழகிய மார்பனே! (அல்லது - விளங்கின (கொம்பினை) பூங்கொம்பு அன்ன தேவசேனையையும், அழகிய (கணபதியாம்) யானையை வரவழைத்து விளங்கும் வஞ்சிக்கொடி போன்ற வள்ளியையும் கலந்த அழகிய மார்பனே!)

போர்நடந்த கொடிய (போர்க்) களத்திலே வந்த அவுணன் சூரன் பிளவுபட்டு அழிய (சிவம் அஞ்செழுத்தை) பஞ்சாக்ஷரத்தின் ஆற்றலைக்கொண்ட வேலாயுதத்தை முற்படச் செலுத்தினவனே!

நாள்தோறும் மகிழ்ச்சியுடனே (செம்பொன் உலகம்) செவ்விய பொன்னுலகத்தினராம் - தேவர்கள் துதித்து வணங்கும் (தில்லைத்) திரு அம்பலத்திலே வீற்றிருக்கும் பெருமாளே!

(வஞ்சர் உறவாமோ)

---

(* கீழ்க்குறிப்பு பக்கம் 402-பார்க்க.)

## 607. திருவடியைப் பெற

*தனனந் தனத்த தந்த தனனந் தனத்த தந்த*
*தனனந் தனத்த தந்த தனதான*

*மதவெங் கரிக்கி ரண்டு வலுகொம் பெனத்தி ரண்டு*
*வளருந் தனத்த ணிந்த மணியாரம்-*
*வளைசெங் கையிற்சி றந்த வொளிகண் டு* நித்தி லங்கு*
*வரருந் திகைத்தி ரங்க வருமானார்;*
*விதவிங் கிதப்ரி யங்கள் நகைகொஞ் சுதற்கு ணங்கள்*
*மிகைகண் டுறக்க லங்கி மருளாதே-*
*† விடுசெங் கையற்று ணர்ந்து வலம்வந் துனைப்பு கழ்ந்து*
*‡ மிகவிஞ்சு பொற்ப தங்கள் தருவாயே;*
*நதியுந் திருக்க ரந்தை மதியுஞ் சடைக்க ணிந்த*
*நடநம் பருற்றி ருந்த கயிலாய-*
*X நகமங் கையிற்பி டுங்கு மசுரன் சிரத்தொ டங்கம்*
*நவதுங்க ரத்ந முந்து திரடோளுஞ்;*
*சிதையும் படிக்Oகொ ரம்பு தனைமுன் தொடுத்த கொண்டல்*
*திறல்செங்க ணச்சு தன்றன் மருகோனே;*
*தினமுங் கருத்து ணர்ந்து சுரர்வந் துறப்ப ணிந்த*
*திருவம்பலத்த மர்ந்த பெருமானே.* (18)

---

*(401 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)*

*சேனாபதித்திருவுருவம்;- அபயம், வாள், சூலம், வேல், அங்குசம், வரதம், குலிசம், வில், தண்டம் முதலியகொண்ட திருக்கோலம்.

தேவசேனை நாயகர் கலியாணத் திரு உருவம்;- ஒரு கை தமது வலதுதொடையில் அமர்த்தியுள்ள தேவசேனையைத் தழுவுவது போல அவளது கொங்கைகள்பாற் பொருந்த, ஒரு கை அபயம் காட்ட, ஏனைய திருக்கரங்கள் கேடகம், வாள், சூலம், குலிசம், வேல், வில், கதை, சேவல், தாமரை, அம்பு இவைகளுடன் விளங்க ஆறுதிருமுகங்களுடன் விளங்கும் உருவம் (தணிகைப்புராணம் அகத்திய -66-74)

---

*நித்து - நீத்து; துறந்து துறவிகளும் திகைப்பது- பாடல் 158, பக்கம் 368 கீழ்க்குறிப்பைப் பார்க்க.† விடு - விட்டு. ‡ மிக -மேன்மையடைய.

X நகம் அங்கையிற் பிடுங்கும் அசுரன் - இது கையில் உள்ள நகத்தை எளிதில் எடுப்பதுபோல (கயிலைமலையை எடுப்பது) எளியதொரு வேலை என நினைத்த மூடன் என்பதைக் குறிக்கும். O ஸ்ரீ ராமர் ஓரம்பு தொடுத்து - பாடல் 452 பக்கம் 6 - கீழ்க்குறிப்பு.

# 607.

மதங்கொண்ட கொடிய யானையின் இரண்டு வலிமை பொருந்திய கொம்புகள் - தந்தங்கள் என்று சொல்லும்படித் திரட்சியுற்று வளர்கின்ற கொங்கைகள் மீது அணிந்துள்ள ரத்னமாலை-

(வளை செங்கையில்) செங்கையில் வளையல் - இவைகளின் ஒளியைக் கண்டு (நீத்து இலங்குவரரும்) துறவியாய்ச் சிறந்து விளங்கும் சிரேஷ்டர்களும் திகைப்புற்று மனம் நெகிழ்வுற வருகின்ற (மான் அனைய) மாதர்களின்-

விதம் விதமான இன்பம் தரும் பிரியங்களையும் சிரிப்புடன் கொஞ்சிப்பேசும் குணங்களின் மேம்பாட்டையும் கண்டு, அவை மனத்தில் அழுந்த மனங்கலங்கி, மோக மயக்கம் கொள்ளாமல்-

விட்டொழிந்து, சிறிதேனும் சந்தேகம் கொள்ளாமல், உன்னை உணர்ந்து, வலம் வந்து, உன்னைப் புகழ்ந்து, (நான்) மிக மேம் பாட்டை - மேன்மையை அடைய - உனது (விஞ்சு பொற்பதங்கள்) மேலான அழகிய திருவடிகளைத் தந்தருளுக-

கங்கை நதியையும் அழகிய கரந்தை மலரையும் (அல்லது திருநீற்றுப் பச்சையையும்) திங்களையும் சடையில் அணிந்தவரும் நடனம் செய்கின்ற நம்பருமாகிய (நடராஜப் பெருமான்) பொருந்தி வீற்றிருக்கும் கயிலாய-

(நகம்) மலையைத் தனது அங்கையாற் பிடுங்க முயன்ற அசுரன் இராவணனுடைய தலையும் உடலும் உயர்ந்த நவரத்ன (மாலை) விளங்கும் திரண்ட தோள்களும்-

சிதைந்து போம்படி ஒரு அம்பை முன்பு செலுத்தின மேகமனையவரும், பராக்ரமம் விளங்கும் செவ்விய கண்களை உடையவருமான (அச்சுதன்) திருமாலின் மருமகனே!

நாள்தோறும் (தொழவேண்டியதின்) கருத்தை - தொழுவதால் வரும் பயனை - அறிந்து தேவர்கள் வந்து தாழப் பணிந்த (தில்லைத்) திரு அம்பலத்தே அமர்ந்த பெருமாளே!

(பொற்பதங்கள் தருவாயே)

## 608. தரிசனம் பெற

தனதந்தன தனதந்தன தனதந்தன தான
தனதந்தன தனதந்தன தனதந்தன தான
தனதந்தன தனதந்தன தனதந்தன தானத் தனதான

முக சந்திர புருவஞ்சிலை விழியுங்கயல் நீல
முகிலங்குழ லொளிர்தொங்கலொ டிசைவண்டுகள் பாட
மொழியுங்கிளி *யிதழ்பங்கய நகைசங்கொளி காதிற்
குழையாட-

† முழவங்கர சமுகம்பரி மளகுங்கும வாச
முலையின்புர சகுடங்குவ டிணைகொண்டுநல் மார்பில்
முரணுஞ்சிறு பவளந்தர ளவடந்தொடை யாடக்
கொடிபோலத்;

துகிரின்கொடி யொடியும்படி நடனந்தொடை வாழை
மறையும்படி ‡ துயல்சுந்தர சுகமங்கைய ரோடு
துதை பஞ்சணை மிசையங்கசன் ரதியின்பம தாகச்
செயல்மேவித்-

தொடைசிந்திட மொழிகொஞ்சிட அளகஞ்சுழ லாட
விழிதுஞ்சிட இடைXதொய்ஞ்சிட மயல்கொண்
Oடணைகீனும்

சுகசந்திர முகமும் **பத அழகுத்தமி யேனுக்
கருள்வாயே;

---

*வாய் இதழுக்குச் செந்தாமரையிதழ் ஒப்பு - 'செங்கமலம் ஒப்புக் கண்டு மொழிந்தார் ஈரிதழ்க்கும்' (உசித சூடாமணி நிகண்டு.)

† முழவ- ஒலிக்க - 'வரைசேரும் முகில் முழவ' - சம்பந்தர் I-132-4.

‡ துயல் - அசைந்தாடுகின்ற.

X தொய்ஞ்சிட - தளர.

O அணைகீனும் - அணைகினும்.

** பதம் - பதவி, சொல், திருவடி, பதம் - மந்திரச்சொல் - "அந்தியும் நண்பகலும் அஞ்சு பதஞ்சொல்லி" - சுந்தரர் - VII-83-1.

# 608.

முகம் - திங்கள், புருவம் - வில், கண் - கயல்மீன், கரிய மேகம் - அழகிய கூந்தல், அந்தக் கூந்தலில் உள்ள ஒளி வீசும் மாலையில் இருந்து இசைகளை வண்டுகள் பாட, மொழி - கிளிமொழி, வாயிதழ் - தாமரையிதழ், பல் - சங்கின் ஒளி கொண்டன, காதில் குழைகள் அசைவன,

முழுவங்கர சமுகம் (அங்கர சமுகம் முழுவ) - அழகிய கையிணைகள் (வளையணிந்தமையால்) ஒலி செய்ய, வாசனை உள்ள செஞ் சாந்தின் நறுமணம் கொண்ட கொங்கைகள் என்னும் இன்பமான சாறு பொதிந்த குடத்துக்கும் மலைக்கும் நிகராகி விளங்கும் இரண்டையும் கொண்டுள்ள மார்பிடத்தில் - (நிறத்தில்) மாறுபடும் சிறிய் பவள (வடமும்) மாலையும் முத்து (வடமும்) மாலையும் ஆடி அசைய, கொடிபோல-

(கொடி அசைவதுபோல அசைந்தாட) பவளக்கொடி ஓடிவதுபோல நடனம் (செய்து) வாழை போன்ற தொடை மறையும்படி (ஆடை) அசைந்து ஆடுகின்ற அழகிய சுகம் தருகின்ற பெண்களோடு நெருங்கிய பஞ்சு மெத்தையில் (அங்கசன்) மன்மதனும் ரதியும் போல இன்பந்தரும் லீலைகளைச் செய்து-

மாலை சிதறவும், மொழி கொஞ்சவும், கூந்தல் சுழன்று அசையவும், கண்கள் சோர்வு அடையவும், இடை தளரவும் காம மயக்கம் கொண்டு அணைந்தபோதிலும், அழகிய உனது திங்கள் போன்ற குளிர் முக தரிசனத்தையும், கந்தலோகத்தில் வசிக்கும் பதவி அழகையும் (அல்லது) உனது திருவாயால் (உபதேசத்தையும்) அல்லது உனது திருவடியால் (திருவடி தீக்ஷையையும்) அடியேனுக்கு அருள்வாயே!

*அகரந்திரு †உயிர்பண்புற ‡அரியென்பது மாகி
உறையுஞ்சுட ரொளி Xயென்கணில் வளருஞ்சிவ காமி
அமுதம்பொழி பரையந்தரி உமைபங்கர னாருக்
கொருசேயே-

அசுரன்சிர மிரதம்பரி சிலையுங்கெட கோடு
சரமும்பல படையும் Oபொடி கடலுங்கிரி சாய
அமர்கொண்டயில் விடுசெங்கர வொளிசெங்கதிர்
போலத் திகழ்வோனே;

**மகரங்கொடி நிலவின்குடை மதனன்திரு தாதை
மருகென்றணி விருதும்பல முரசங்கலை யோத
††மறையன்றலை யுடையும்படி நடனங்கொளு
மாழைக் கதிர்வேலா

வடிவிந்திரன் மகள்சுந்தர மணமுங்கொடு மோக
சரசங்குற மகள்பங்கொடு வளர்தென்புலி யூரில்
மகிழும்புகழ் திருவம்பல மருவுங்கும ரேசப்
பெருமாளே. (19)

---

* அகர அம் திரு - எல்லா உயிர்களோடும் மெய்களோடுங் கலந்தும் வேறாகத் தனித்தும் நிற்கும் அகர எழுத்துப்போலச் சித்தும் அசித்தும் ஆகிய பிரபஞ்சமுற்றுந் தோய்ந்தும் வேறாகத் தனித்தும் நிற்கின்ற செல்வி.

† உயிர் பண்பு உற - ஆத்மகோடிகள் ரக்ஷணையைப் பொருந்த.

‡ தேவியே அரி - என்பது - பாடல் 37, பக்கம் 105 கீழ்க்குறிப்பு.

X இறை ஒளி கண்ணில் விளங்கும் என்பது-

'என் கணிலாடு தழல்வேணி எந்தையர்' - திருப்புகழ் - 98 பக்கம் 230 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

'காளத்தியான் அவன் என் கண்ணுளானே' - அப்பர் - VI - 8.

O பொடி - பொடிந்து தூளாகி.

** மன்மதனுடைய கொடி, குடை முதலியன - பாடல்-555, பக்கம் 266 கீழ்க்குறிப்பு.

†† பிரமனைக் குட்டினது - திருப்புகழ் - 212, பக்கம் - 42 கீழ்க்குறிப்பு. பிரணவத்தின் பொருள் தெரியாது பிரமன் விழித்த பொழுது முருகவேள் அவனைக் குட்டிச் சிறையில் இட்டார். "இதன் பொருள் கருதாய், சிட்டி செய்வதித் தன்மையதோ எனாச் செவ்வேள், குட்டினான் அயன் நான்கு மா முடிகளுங் குலுங்க' கந்த புராணம் I-16-14-

(எல்லா உயிர்களோடும்) மெய்களோடும் கலந்தும் வேறாகத் தனித்தும் நிற்கும்) அகர எழுத்துப்போலச் (சித்தும் அசித்தும் ஆகிய பிரபஞ்ச முற்றும் தோய்ந்தும் வேறாகத் தனித்தும் நிற்கின்ற) திரு....செல்வி, (உயிர் பண்புற) ஆத்ம கோடிகள் ரக்ஷணையைப் பொருந்த (அரி) திருமால் (என்னும் காக்கும் கடவுள்) ஆகி, விளங்கி நிற்கும் (சுடரொளி) பேரொளி, என் கண்ணில் விளங்கி மகிழும் சிவகாமி, அமுத இன்பத்தைப் பொழிகின்ற பராசக்தி, (அந்தரி) பராகாச வடிவினள் (அல்லது சிதா காசத்தில் உறைபவள்) அத்தகைய உமாதேவியின் பாகத்தில் உள்ள அரனாருக்கு (சிவபெருமானுடைய) ஒப்பற்ற குழந்தையே!

(அசுரன்) சூரனுடைய தலை, தேர், குதிரை, வில் இவையெலாம் கெட, (அவனுக்குக் காவலாயிருந்த (கோடு)) எழுகிரி, அம்பு முதலிய பல படைகள்....இவை யாவும் பொடிந்து தூளாகக், கடலும் கிரௌஞ்சமலையும் சாய்ந்து அடங்கப், போரை மேற்கொண்டு அம்பைச் செலுத்தின செவ்விய கரத்தினனே! ஒளி வீசும் செஞ்சுடர்ச் சூரியன் போல விளங்குபவனே!

மகர மீனைக் கொடியாகவும், நிலாவைக் குடையாகவும் கொண்ட மன்மதனது அழகிய தந்தையாம் திருமாலின் மருமகன் என்று அழகிய விருதும் (வெற்றிச் சின்னமும்) பல முரசம் என்னும் பறைகளும், சாத்திர நூல்களும் புகழ்ந்து நிற்கப், பிரமனது தலை உடைந்து போம்படி அவனைக் குட்டித் திருநடனம் (திருவிளையாடல்) கொண்ட வேலனே! (மாழை) பொன்னின் (கதிர்) ஒளி கொண்ட வேலனே!

அழகு நிறைந்த இந்திரனது மகள் தேவசேனையொடு அழகிய திருமணத்தைச் செய்துகொண்டு, (பின்பு மோக சரசம்) காமலீலைகளைக் (குறமகள்) வள்ளியொடு பங்கு கொண்டு விளையாடித் திருவளரும் அழகிய புலியூரில் (சிதம்பரத்தில்) (யாவரும்) கண்டு களிக்கும் திரு அம்பலத்திலே விளங்கும் குமரேசப் பெருமாளே!

(பத அழகும் தமியேனுக்கருள்வாயே)

## 609. மறவேன் என்பது

தந்தன தானன தான தந்தன
தந்தன தானன தான தந்தன
தந்தன தானன தான தந்தன தந்ததான-

*சந்திர வோலைகு லாவ கொங்கைகள்
†மந்தர மால‡ந னீர்த தும்பநல்
சண்பக மாலைகு லாவி ளங்குழல் மஞ்சுபோலத்-
தண்கயல் வாளிக ணாரி ளம்பிறை
விண்புரு வாரிதழ கோவை யின்கனி
தன்செய லார்நகை சோதி யின்கதிர் சங்குமேவுங்-
கந்தரர் Xதேமலு மார்ப ரம்பநல்
சந்தன சேறுட னார்க வின்பெறு
கஞ்சுக மாமிட றோதை கொஞ்சிய ரம்பையாரைக்-
கண்களி கூரOவெ காசை கொண்டவர்
**பஞ்சணை மீதுகு லாவி னுந்திரு
கண்களி ராறுமீ ராறு திண்புய மூங்கொள்வேனே;
இந்திர லோகமு ளாரி தம்பெற
சந்திர சூரியர் தேர்ந டந்திட
எண்கிரி சூரர்கு ழாமி றந்திட கண்டவேலா-
†† இந்திரை கேள்வர்பி தாம கன்கதி
ரிந்துச டாதரன் வாச வன்தொழு
தின்புற வேமனு நூல்வி ளம்பிய கந்தவேளே;

---

* சந்திரவோலை - சந்திரனைப்போற் சீதள காந்தியைத் தரும் காதோலை. † மந்தரம் ஆல - மந்தரகிரிபோல் அசைய. ‡ நல் நீர் ததும்ப - நல்ல நீர்மை பெருக.

X தேமலும் மார் பரம்ப எனப் பிரிக்க; பரம்ப - பரவ.

O வெகு ஆசை. ** "கண்டுண்ட சொல்லியர்" - என்னும் கந்தரலங்காரச் செய்யுள் 37ன் கருத்து.

†† (1) சிவன் உபதேசம் பெற்றது - தணிகைப் புராணம் வீராட்டகாசப் படலத்திற் காண்க.

(2) திருமால் (ராமர்) - சிவஞானம் பெற்றது - தணிகைப் புராணம் இராமனருள்பெறு படலம் பார்க்க.

(3) பிரமன் உபதேசம் பெற்றது - பிரமன் சுவாமிமலையில் பிரணவத்தின் உண்மையை உபதேசிக்கப் பெற்றனன் - திரு ஏரக மான்மியம் - பிரம தீர்த்த வரலாற்றுச் சருக்கம்.

(4) இந்திரன் - தணிகையிலும் சுவாமிமலையிலும் பூசித்துப் பேறு பெற்றான்.

# 609.

சந்திரனைப்போற் சீதள காந்தியைத் தரும் காதோலை விளங்க, கொங்கைகள் மந்தரகிரிபோல அசைய, நல்ல நீர்மை பெருக, அழகிய சண்பகமாலை விளங்கும் மெல்லிய கூந்தல் மேகம்போல விளங்க-

குளிர்ந்த மீன் போன்றதும், அம்பு போன்றதுமான கண்களை உடையவர்கள் - இளம்பிறை விண் (விண்ணில் விளங்கும்) இளம்பிறை போன்ற புருவத்தினர், (இதழ் கோவையின் கனி) கொவ்வைக்கனி போன்ற வாயிதழ்களை உடையவர், (பொது மகளிருக்கு உரிய) (சொந்தமான) ஸாஹஸச் செயலை நிறையச்செய்யும் நகை (சிரிப்பு) பல் ஒளி கதிரொளி (சூரியன் ஒளி) போன்று உடையவர் சங்கு போன்ற-

கழுத்தினை உடையவர், (தேமலும் மார் பரம்ப) தேமல் மார்பில் பரவ, நல்ல சந்தனக் கலவையின் நிறைந்த அழகைப் பெற்ற, சட்டை அணிந்த அழகிய கழுத்தின் (தொண்டையினின்றும்) உண்டான ஒலி கொஞ்சுகின்ற ரம்பைபோன்ற மாதர்கள் மீது-

கண் மகிழ மிக்க ஆசை பூண்டு, அவர்களுடன் பஞ்சு மெத்தைமீது குலவி விளையாடினும், அழகிய உனது கண்கள் பன்னிரண்டும், பன்னிரண்டு வலிய திருப்புயங்களும் (என்) மனத்திற் கொள்வேன் (தியானிப்பேன்);

இந்திரலோகத்தில் உள்ள தேவர்கள் இன்பம்பெறவும், சந்திர சூரியருடைய தேர்கள் உலாவி வரவும், அஷ்டகிரிகளில் இருந்த சூரர் கூட்டங்கள் இறந்தொழியவும் கண்ட வேலனே!

இலக்குமி தேவியின் கணவராம் திருமாலும், பிரமனும் ஒளிவீசும் சந்திரனைச் சடையில் தரித்த சிவமூர்த்தியும், இந்திரனும் தொழுது இன்பம் பெறவே தரும சாஸ்திரத்தை எடுத்து ஓதிய கந்தவேளே!

*சிந்துர மால்குவ டார்த னஞ்சிறு
பெண்கள்சி காமணி மோக வஞ்சியர்
செந்தினை வாழ்வளி நாய கொண்குக
அன்பரோது-

†செந்தமிழ் ஞானத டாக மென்சிவ
கங்கைய ளாவும கா சிதம்பர
திண்சபை மேவு ‡ம னாச வுந்தர
தம்பிரானே. (20)

## 610. முத்தி பெற

தான தான தான தானன தான தந்த
தத்த தந்த தத்த தந்த தந்ததான

காய மாய வீடு மீறிய கூடு நந்து
புற்பு தந்த னிற்கு ரம்பை கொண்டுநாளுங்-
காசி லாசை தேடி வாழ்வினை நாடி யிந்த்ரி
யப்ர மந்த டித்த லைந்து சிந்தைவேறாய்;
வேயி லாய தோள மாமட வார்கள் பங்க
யத்து கொங்கை யுற்றி ணங்கி நொந்திடாதே-

---

* சிந்துரம் - செங் குங்குமம்.

† சிதம்பரத்துத் திருக்கோயிலினுள் உள்ள சிவகங்கைத் தீர்த்தத்தை அருணகிரியார் "செந்தமிழ் ஞான தடாகம்" என அருமையாகச் சிறப்பித்துள்ளார். இந்தத் தீர்த்தத்தில் நீராடினால் செந்தமிழ் ஞானம் சித்திக்கும்போலும். சிவகங்கைத் தீர்த்தத்தின் பெருமையைப் பின்வருமாறு நூல்கள் சிறப்பிக்கின்றன:-

(1) "சித்தமால் தீர ஈசன் சிவகங்கை வடிவாய் நின்றான்'
- "ஈரேழுலகத்தில் எத் தீர்த்தத்தும் உத்தம தீர்த்தம் ஈது
சத்திய உரையாம்"

"மன்றம் தேச உத்தரத்துள்ளது; என்றும் உயர்ந்த
தீர்த்தத் துயர்ந்தது; எத்திசையோரும் போற்றும்
எழிற் சிவகங்கை; யார்க்கும் முத்தியை நல்கு தீர்த்தம்
முதலருட் டீர்த்தமாகும்" - (சிதம்பர புராணம்) - தீர்த்த

(2) "திருந்தும் ஈசான திக்கில் சிவகங்கை யென்னும் தீர்த்தம்
இருந்திடும்; மூழ்குவார்க்கஃ தீந்திடுஞ் சித்த சுத்தி"
-(சிதம்பர சபாநாத புராணம்) தீர்த்த-

(தொடர்ச்சி பக்கம் - 411 பார்க்க.)

செங் குங்குமம் அணிந்து பெரிய மலை போன்ற கொங்கைகளைக் கொண்ட சிறு பெண்களுக்கு எல்லாம் சிகாமணியாய், உன் ஆசைக்கு உகந்த வஞ்சிக்கொடி அனையவளாய்ச் செவ்விய தினைப்புனத்தில் வாழ்ந்த வள்ளிக்கு நாயகனே! விளங்கும் குகனே! அன்பர்கள் பாடிப் புகழும்-

செந்தமிழ் ஞான தீர்த்தமாகிய சிவகங்கை என்னும் தீர்த்தம் விளங்கும் மஹா சிதம்பர க்ஷேத்திரத்தில் திண்ணிய (கனக) சபையில் விளங்கி நிற்கும் அரசே! அழகிய தம்பிரானே!

*(கண்கள் இராறு மிராறு திண்புயமுங் கொள்வேனே)*

## 610.

உடல் என்கின்றது ஒரு மாய வீடு; (அது) மிக்கெழுந்ததொரு கூடு (போன்றது); அழிந்து மறையும் மொக்குள் - நீர்க்குமிழி போன்ற இத்தகைய (குரம்பை) சிறுகுடிலைக் கொண்டு நாள்தோறும்-

காசில் ஆசைகொண்டு (அதற்காகப் பல இடத்தும்) தேடிச் (சுக) வாழ்க்கையை விரும்பி, ஐம்பொறிகளாலாய மோக மயக்கம் வலுவடைந்து அதனால் அலைச்சல் உற்று மனம் வேறுபட்டுக் கலங்கி,

மூங்கில் போன்ற தோள்களை உடைய அழகிய பெண்களின் தாமரை மொட்டினை ஒத்த கொங்கைகளை விரும்பி அடைந்து அவை வசப்பட்டு மனம் நோவுறாமல்-

---

*(410- ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)*

(3) *"தீர்த்தம் என்பது சிவகங்கையே*
*ஏத்தருந் தலம் எழிற் புலியூரே*
*மூர்த்தி அம்பலக் கூத்தன துருவே"*

*- (சிதம்பரச் செய்யுட் கோவை)*

(4) *மார்கழித் திருவாதிரையில் இந்தத் தீர்த்தத்தில் படிதல் விசேடம்.*
*"மார்கழி யாதிரை - சீர்மலி கமல வாசம் திகழ்*
*சிவகங்கையாடி " - கோயிற் புராணம் (இரணிய 76.)*
‡ மனா - மன்னா.

வேத கீத போத மோன மெய் *ஞான நந்த
முற்றி டின்ப முத்தி யொன்று தந்திடாயோ;

†மாய வீர தீர சூரர்கள் பாற நின்ற
விக்ர மங்கொள் வெற்பி டந்த செங்கைவேலா-

வாகை வேடர் பேதை காதல வேழ மங்கை
யைப்பு ணர்ந்த வெற்ப கந்த செந்தில்வேளே;

ஆயும் வேத கீத மேழிசை பாட ‡வஞ்செ
ழுத்த ழங்க முட்ட நின்று துன்றுசோதீ-

ஆதி நாத ராடு நாடக சாலை யம்ப
லச்சி தம்ப ரத்த மர்ந்த தம்பிரானே.(21)

## 611. ஆண்டருள

தனத்ன தனதன தானான தானன
தனதன தனதன தானான தானன
தனதன தனதன தானான தானன தந்ததான

அவகுண விரகனை வேதாள ரூபனை
அசடனை மசடனை ஆசார ஈனனை
அகதியை மறவனை Xஆதாளி வாயனை
அஞ்சுபூதம்-

Oஅடைசிய **சவடனை மோடாதி மோடனை
அழிகரு வழிவரு வீணாதி வீணனை
அழுகலை யவிசலை ††ஆறான வூணனை
அன்பிலாத;

---

* 'ஞான ஆனந்தம் உற்றிடு இன்பமுத்தி' என்று பிரித்தும் பொருள் காணலாம்.

† 'மாயச் சூரன்றறுத்த மைந்தன்' - சம்பந்தர் - 2-62-1.

‡ அஞ்செழுத்து தழங்க என்பது அஞ்செழுத் தழங்க என வந்தது: தழங்க - முழங்க.

X ஆதாளி - வாயன் - வீம்பு பேசுவோன்.

O அடைசிய - ஒதுக்கிய.

** சவடு - வண்டல்.

†† ஆறான ஊண் - அறுசுவை உண்டி - அறுசுவை:- கைப்பு, இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு.

வேதம், கீதம், (போதம்) அறிவு, (மோனம்) மௌனம், மெய்ஞ்ஞானம் (நந்த) தழைத்து வளர்ச்சி யுறவும், (முற்றிடு) பெருகிப் பூரணமான 'இன்ப முத்தி' என்னும் ஒப்பற்ற ஒன்றைத் தந்தருள மாட்டாயோ!

மாயத்தில் வல்ல வீர, தீர சூரர்களான (சூரன், சிங்கமுகன், தாரகன்) என்போர் சிதறி அழிய (வெற்றிகொண்டு), (நின்ற) செங்கை வேலனே! நிலைத்த (மாயை) பராக்ரமம் கொண்ட கிரௌஞ்ச மலையைப் பிளவு செய்த செங்கை வேலனே!

வெற்றியாளராம் வேடர் மகள் (வள்ளியின்) காதலனே! யானை (ஐராவதம்) வளர்த்த மங்கை தேவசேனையைக் கலந்த மலை கிழவனே! கந்தனே! திருச்செந்தூரில் வாழும் வேளே!

ஆய்ந்து வேத கீதங்களையும் ஏழிசைகளையும் பாட, அஞ்செழுத்தை ஓதி முழங்க - அவ்வொலி முழுமையும் நின்று நெருங்கி விளங்கும் ஜோதியே!

ஆதிநாதராகிய சிவபிரான் ஆடுகின்ற நாடக சாலையாகிய பொன்னம்பலத்தைக் கொண்ட சிதம்பரத்தில் அமர்ந்து விளங்கும் தம்பிரானே!

(முத்தி யொன்று தந்திடாயோ)

## 611.

துர்க்குணம் கொண்ட தந்திரசாலியை (அல்லது காம தாபம் கொண்டவனை), வேதாளமே உருவமெடுத்தது போன்றவனை, முட்டாளை, குணம் கெட்டவனை, ஆசாரம் குறைவு பட்டவனை, கதியற்றவனை, மலைவேடன் போன்றவனை, வீம்பு பேசும் வாயனை - (மண், நீர், தீ, காற்று, ஆகாயம்) என்னும் ஐந்து பூதங்களாற் -

சேரப்பட்டதான பயனற்றவனை, மூடருள் மூடனை, அழிந்துபோகும் கருவின் வழியே வந்த வீணருள் வீணனை, அழுகிப்போன பண்டம் போல்பவனை, அவிந்து போன பதனழிந்த பண்டம் போன்றவனை, விதம்விதமான உண்டியை உண்பவனை, (அறுசுவை உண்டியை விரும்புபவனை) அன்பு இல்லாத-

கவடனை விகடனை நானா விகாரனை
வெகுளியை வெகுவித மூதேவி மூடிய
கலியனை அலியனை *ஆதேச வாழ்வனை
வெம்பிவீ ழுங்-

களியனை யறிவுரை பேணாத மாநுட
†கசனியை யசனியை மாபாத னாகிய
கதியிலி தனையடி நாயேனை யாளுவ
தெந்தநாளோ;

மவுலியி லழகிய பாதாள லோகனு
மரகத முழுகிய ‡காகோத ராஜனு
Xமநுநெறி யுடன்வளர் சோணாடர் கோனுட
னும்பர்சேரும்

மகபதி புகழ் Oபுலி யூர்வாழு நாயகர்
மடமயில் மகிழ்வுற வானாடர் கோவென
மலைமக ளுமைதரு வாழ்வே மனோகர
மன்றுளாடும்;

---

* ஆதேசம் - திரிபு

† கசனி - அசனி - என்பதற்கு யானை போன்றவன், ஆடு போன்றவன் எனப் பொருள் காண்பர் ஆசிரியர் - மு. திருவிளங்கனார் அவர்கள். ‡ காகோத ராஜன் - சர்ப்பராஜனாகிய பதஞ்சலி.

X சோணாடு - சோழநாடு. சோழன் - இவை இரண்டின்மீதும் அருணகிரியார்க்கு விருப்பமும் மதிப்பும் உண்டு - பாட்டு 560, பக்கம் 276 பார்க்க.

O சிதம்பரத்தில் பூசித்துப் பேறு பெற்றவர்கள்.

(1) வியாக்ரபாதர் - மத்தியந்தின முநிவர் என்பவரின் புதல்வர். இவர் வண்டுணாத பூக்களை இரவில் எடுக்கவும், மரம் ஏறி நல்ல மலர்களைப் பறிக்கவும் வேண்டித் தவஞ்செய்து - "காலும் கரமும் புலியின் மலிய, கண் அங்கு அவை தங்க" சிவபிரானிடம் வரம் பெற்றனர் அதனால் 'வியாக்ரபாதர்' 'புலிக்கால் முநிவர்' எனப் பெயர் பெற்றார். அவர் பூசித்ததால் தில்லை 'புலியூர்' ஆயிற்று.

(2) பதஞ்சலி:- அனசூயை 'அஞ்சலி' செய்த கரத்தில் ஐந்து தலை பொருந்திய ஒரு சிறு பாம்பாக ஆதிசேஷன் தோன்ற அந்த அம்மையார் அச்சத்தினாற் கைவிட - 'பதஞ்சலி' ஆனான்.

வியாக்ரபாதருக்கும் பதஞ்சலிக்கும் சிவபெருமான் சிதம்பரத்தில் தமது திருக்கூத்தைத் தரிசிப்பித்தார்.

(3) இரணியவர்மன்:- வடக்கே கௌட தேசத்தே அரசு புரிந்த மநு என்பவனுடைய மூத்த குமாரன். இவன் உடல் சிங்க நிறம் உடையதாயிருந்ததால் தலயாத்திரை செய்து தெற்கே தில்லைக்கு வந்தபோது - வியாக்ரபாதர் உதவியால் சிவகங்கையிற் படிந்து பொன்னிற மேனியைப் பெற்று, இரணியவர்மன் எனப் பேர் பெற்றனன். இவன் வியாக்ரபாத

வஞ்சனை எண்ணம் கொண்டவனை, (விகடனை) உன்மத்தம் கொண்டவனை, பலவிதமான விகார நடவடிக்-கைகள் பூண்டவனை, கோபியை, நிறைந்த மூதேவித்தனம் மூடியுள்ள சனீஸ்வரனை (கலி புருஷனை), ஆண்மையில்லா-தவனை, நிலைமாறுபட்ட வாழ்வை உடையவனை, வாடி விழுகின்ற

குடியனை, நல்ல அறிவு மொழிகளை விரும்பாத மாறுபடப்பதரை (கசக்கித் தள்ளப்பட்டவனை), இடிபோன்ற பேச்சுக்களை உடையவனை, மகா பாதகனாய்க் கதி கெட்டவனை - (இத்தகைய கோலத்தவனை) கீழுக்கும் கீழான அடியேனை ஆண்டருளுவது எந்த நாளோ - (ஆண்டருளும் நாள் ஒன்று உண்டோ?)

மணிமுடிகள் அழகாக உடைய (ஆயிரம் பாரமுடிகளை உடைய) பாதாள லோகனாகிய (ஆதிசேடனும்), பச்சைநிறம் உடல் முழுமையும் உள்ள சர்ப்பராஜனாகிய பதஞ்சலியும் மநுநெறி வழாது ஆட்சி செய்யும் சோழநாட்டாருக்குத் தலைவனான *சோழராஜனும், தேவர்களோடு சேர்ந்து வரும்-

(மகபதி) இந்திரனும் புகழ்கின்ற **சிதம்பரத்தில்** வாழ்கின்ற (சபா) நாயகரும், (அவர் அருகில் நிற்கும்)- மடமயில் போன்ற சிவகாம சுந்தரியும் மகிழ்ச்சிகொள்ள வானில் உள்ள தேவர்களுக்கெல்லாம் தலைவனாக விளங்கும் மலைமகள் உமைபெற்ற செல்வமே! மனதுக்கு விருப்பம் தருபவனே! அம்பலத்தில் ஆடும்-

---

முநிவரின் சொற்படி அந்தர் வேதியிலிருந்து மூவாயிரம் முநிவர்களை நடராஜப் பெருமானது பூஜைக்காகத் தில்லைக்கு அழைத்து வந்தான். தில்லை சேர்ந்து எண்ணிப் பார்க்கையில் ஒரு முநிவரைக் காணாது திகைத்தான். அப்போது அசரீரி அவர்கள் எம்மை ஒப்பவர்கள் யாம் அவர்க்கு ஒப்பு; நாம் அவர்களில் ஒருவன்; எனக் கூறக் கேட்டு யாவரும் மகிழ்ந்து பணிந்தனர். தேவர்கள் பூமாரி பெய்தனர். (அந்தர் வேதி கங்கைக்கும் யமுனைக்கும் நடுவேயுள்ள தேசம். அந்தர் - நடு; வேதி - சமபூமி) கோயிற் புராணம் பார்க்க.

* மநுநீதி கண்ட சோழன், அபயன், அநபாயன் - இவர் தம்முள் எவரையேனும் இது குறிக்கலாம்.

சிவசிவ ஹரஹர தேவா நமோநம
தெரிசன பரகதி யானாய் நமோநம
திசையினு *மிசையினும் வாழ்வே நமோநம
†செஞ்சொல்சேருந்-

திருதரு கலவி மணாளா நமோநம
‡திரிபுர மெரிசெய்த கோவே நமோநம
ஜெயஜெய ஹரஹர தேவா சுராதிபர்
தம்பிரானே. (22)

## 612. புகழ்ந்து போற்ற

தத்த தந்ததன தான தந்ததன
தத்த தந்ததன தான தந்ததன
தத்த தந்ததன தான தந்ததன தனதான

கட்டி முண்டகர பாலி யங்கிதனை
முட்டி யண்டமொடு தாவி விந்துவொலி
கத்த மந்திரவ தான வெண்புரவி மிசையேறிக்-

கற்ப கந்தெருவில் வீதி கொண்டுசுடர்
பட்டி மண்டபமு டாடி யிந்துவொடு
கட்டி விந்துபிச காமல் வெண்பொடிகொ
டசையாமற்;

---

* மிசையினும் - எனப்பிரித்து - 'மேலிடத்திலும்' 'விண்ணிலும்' எனவும் பொருள் காண்பர்.

† 'செஞ்சொல் சேரும் திரு' -வள்ளிநாயகி - ஏனெனில் வள்ளியின் மொழியையே "பண்கள் தங்கு அடர்ந்த இன்சொல்" - (திருப்புகழ் - 96). 'ரஞ்சிதாம்ருத வசனம்' - (திருப்புகழ் - 79) "இந்தளாம்ருத வசனம்" திருப்புகழ் 289). 'கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லி' - (கந்தரலங்காரம் 10) - என்றாராதலின்;

"திருதரு கலவி" - இலக்குமி ஈன்ற மயிலனைய வள்ளி கலவி கலவத்தையுடையது - மயில், கலவம் - மயில்தோகை - இங்ஙனமும் பொருள் காணலாம்.

‡ நடராஜப்பெருமான் வேறு - முருகன் வேறு என்னும் வேற்றுமை காட்டாது "உமைதரு வாழ்வே' என்றும் - திரிபுரம் எரிசெய்த கோவே' என்றும் பாடியுள்ளார் அருணகிரியார்.

சிவசிவ ஹரஹர தேவா! உன்னை வணங்குகின்றேன் வணங்குகின்றேன்; கண்டு களிக்கவேண்டிய மேலான கதிப் பொருளானவனே! உன்னை வணங்குகின்றேன் - வணங்குகின்றேன்; எத்திசையிலும், எவ்வகைப் புகழிலும் (அல்லது) எந்த இசை ஞானத்திலும், வாழ்பவனே உன்னை வணங்குகின்றேன் - வணங்குகின்றேன்; செஞ்சொல் (இனிய சொற்களைப்) பேசுகின்ற-

(திரு) வள்ளி நாயகியின் கலவி யின்பத்தைப் பெறுகின்ற மணவாளனே! உன்னை வணங்குகின்றேன் - வணங்குகின்றேன்; திரிபுரங்களை எரித்த தலைவனே! உன்னை வணங்குகின்றேன் வணங்குகின்றேன்; ஜெய ஜெய, ஹரஹர தேவா! தேவர் தலைவர்களுக்குத் தம்பிரானே!

(நாயேனை ஆளுவ தெந்த நாளோ!)

## 612.

கட்டி - பிராண வாசியைப் பாழில் ஓடவொட்டாமல் அதன் ஸ்தானத்திற் பிடித்துக்கட்டி, - முண்டக அரபாலி அங்கிதனை - மூலாதார கமலத்துள்ள அருள்பாலிக்குஞ் சிவாக்கினியை, - மூட்டி - மூண்டு எழச்செய்து, - அண்ட மொடு தாவி - அண்டமாகிய கபாலபரியந்தம் தாவச் செய்து, விந்து ஒலி கத்த - விந்து நாதம் தோன்றி முழங்க, - மந்திர அவதான வெண்புரவி மிசை ஏறி - கட்டப்பட்ட கூடத்திற் சாவதானமாக நிற்கும் அச் சுவேதப் புரவியின் மேல் ஆரோகணித்து-

கற்பக அம் தெருவில் - கற்பகம்போல் விரும்பிய-வெல்லாம் அளிக்கத்தக்க அழகிய மேலைச் சிவவீதியில் - வீதிகொண்டு - நேராக ஓடச்செலுத்தி, - சுடர் பட்டி மண்டபம் - எல்லாத் தத்துவங்களும் ஒன்றுபடும் ஸ்தானமாகிய பிரகாசிக்கின்ற லலாட ஸ்தானமண்டபத்தில் - ஊடாடி - பிரத்தியாகார தாரணை தியானாதிகளைப் பழகி, - இந்துவொடு விந்து பிசகாமல் கட்டி - சந்திரகலை சலியாமலும், விந்து கழலாமலும் உறுதி பெறக்கட்டி வெண்பொடிகொடு - அந்த வெண்ணீற்றை அணிந்து கொண்டு அசையாமல் - ஸ்தாபரமாக நின்று-

சுட்டு வெம்புரநி றாக விஞ்சைகொடு
தத்து வங்கள்விழ சாடி யெண் குணவர்
சொர்க்கம் வந்துகையு ளாக எந்தைபத முறமேவித்-
துக்கம் வெந்துவிழ ஞான முண்டுகுடில்
வச்சி ரங்களென மேனி தங்கமுற
சுத்த கம்புகுத வேத விந்தையொடு புகழ்வேனோ;

*எட்டி ரண்டுமறி யாத என்செவியி
லெட்டி ரண்டுமிது வா†மி லிங்கமென
எட்டி ரண்டும்வெளி யாமொ ழிந்தகுரு முருகோனே-

* இது அருணகிரியார் உபதேசம் பெற்ற வரலாற்றைக் குறிக்கும். எட்டு இரண்டு - அகார உகாரங்கள்; அவற்றின் பிரபாவம் குருமுகமாக உணரற்பாலது 'பட்டி மண்டப மேற்றினை யேற்றினை எட்டி னோடிரண் டும்மறி யேனையே' என்பது திருவாசகம். இங்கு 'எட்டினோ டிரண்டும் அறியேனையே' எனவரும் அடிக்குப் பண்டிதமணி திரு கதிரேசம் செட்டியார் எழுதிய உரை பின் வருமாறு:- "உலகியலில் அறிவு இல்லாதவன் ஒருவனைக் குறித்து "எட்டும் இரண்டும் எவ்வளவு" என்று கேட்டால் சொல்ல அறியாதவன் என்று இழித்து உரைத்தலை கேட்கின்றோம்; அதனையே அடிகள் தம்பால் ஏறிட்டு 'எட்டினோ டிரண்டும் அறியேனை' என்று கூறினர். இனி, எட்டினோடு என்பதற்கு அகரத்தோடு எனவும், இரண்டும் என்பதற்கு உகர மகரங்கள் எனவும் பொருள் கொண்டு, அகர உரக மகரங்களின் இயைபு ஆகிய பிரணவ மந்திரம் எனக் கோடலும் ஒன்று தமிழில் உள்ள எண்ணைக் குறிக்கும் வடிவங்களில் எட்டு அகர வடிவாகவும், இரண்டு உகர வடிவாகவும், "இரண்டும்" என்புழி, இறுதி மகர ஒற்றாகவும் இருத்தல் அறிக. பிரணவத்தின் இயல்பறியாதவன் என்பதற்குச் சிவமந்திரமாகிய திரு ஐந்தெழுத்தின் இயல்பு அறியாதவன் என்பது பொருள் ஆகும் என்க. இவ்வுண்மையை 'எட்டும் இரண்டும், இனிது அறிகின்றிலர் எட்டும் இரண்டும் அறியாத ஏழையர் எட்டும் இரண்டும் இரு மூன்று நான்கு எனப்பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே' - என்று விளக்கிக் கூறுவர் திருமூலர். ஈண்டு எட்டும் இரண்டும் பிரணவம் என்று அறியாத ஏழையர் இருமூன்று நான்கு என்பர் என இழித்துக் கூறியதும் அறிக" - மேல் எழுதிய திருவாசக உரை திருப்புகழ் அடியின் கருத்தை நன்கு விளக்குகின்றது அகர உகர மகரங்கள் - ஓம் என்னும் பிரணவமாம் - திருப்புகழ் - *327*, பக்கம் *314, 315* கீழ்க்குறிப்பைப் பார்க்க எட்டும் இரண்டும் அறியாத என் செவியில் - மொழிந்த குருநாதனே! என்பதற்கு எட்டும் இரண்டும் பத்து என்று எண்ணிக்கை கூட அறியாத முட்டாளாகிய எனக்கும் உபதேசம் செய்து கரை ஏற்றினையே என்பது ஒரு பொருள் எட்டும்.

சுட்டு வெம் புரம் நீறு ஆக - திரிபுரமாகிய மும் மலங்களும் வெந்து நீறாகும்படிச் சுட்டு, - விஞ்சை கொடு - சித்து வித்தைகளெல்லாம் கைவரப் பெற்று, - தத்துவங்கள் விழ சாடி - தத்துவ சேஷ்டைகளெல்லாம் வேரற்று விழும்படிச் சாடி, - எண் குணவர் சொர்க்கம் - எண்குணவராகிய சிவபதவி, - வந்து கையுள் ஆக - கை கூடி வந்து சித்திக்க,- எந்தை பதம் உற மேவி - அச்சிவபதவியில் உற்றுப்பொருந்தி,

துக்கம் வெந்து விழ - பிறவித் துன்பமென்பது பஸ்மீகரமாய்ப்போக - ஞானம் உண்டு - ஞானாமிர்த பானம் பண்ணி, - குடில் வச்சிரங்கள் என - தேகம் வச்சிர காயமாக,- மேனி தங்கம் உற - நிறம் தங்கவர்ணமாக, - சுத்த அகம் புகுத - விசித்திரத்துடனே, - புகழ்வேனோ - உனது திருப்புகழை யெடுத்துப் பாடுவேனோ?

எட்டும் இரண்டும் இன்னது என்று (பத்து என்று) அறியாத என்னுடைய செவியில் எட்டும் இரண்டும் (அ + உ + ம்) இவையே சிவக்குறியாம் என்று, அந்த எட்டு இரண்டையும் - அந்த அகார உகார மகார இலக்கணங்களைத் (தெளிவாக) வெளிப்படையாக உபதேசித்த குருமூர்த்தியாம் முருகோனே!

---

இரண்டும் அறியாத - அடியார்களுக்கு உரிய பத்து இலக்கணங்களுள் ஒன்றேனும் இல்லாத எனக்கும் உபதேசம் செய்த குருவே! என்பதும் பொருளாம் - அடியார்களுக்கு உரிய பத்து இலக்கணங்களாவன:- (1) கண்டமிசை தழுதழுத்தல் (2) நா அசைத்தல் (3) இதழ் துடித்தல் (4) கம்பமாதல், (5) விண்டு மயிர் பொடித்தல் (6) அங்கம் வெதும்பியே விதிர் விதிர்த்து வெயர்த்தல் (7) நில்லா (து), எண்டிசைகள் தள்ளாடிவிழல் (8) கண்ணீர் பிலிற்றல் (9) கலுழ்ந்திரங்கல், (10) ஆர்வம்கொண்டு பரவசப்படுதல் இவைபத்தும் அடியார்க்குக்குறிகள் அம்மா!" "ஞானவரோ - உபதேச காண்டம் - 921)

'பத்துக்கொலாம் அடியார் செய்கைதானே' - அப்பர் 4-18-10,

'பத்துடையீர் ஈசன்பழ அடியீர் - திருவாசகம் திருவெம்பாவை.

'பத்துடை அடியவர்க் கெளியவர் - திருவாய்மொழி - 1-3-1,

'பத்தாம் அடியார்க்கோர் பாங்கனுமாம் - அப்பர் - 6-15-2.

இனி எட்டும் இரண்டும் - பத்து - அது தமிழ் எண்ணில் "ய"- "ய" - பஞ்சாக்ஷரத்தில் ஆன்மாவைக் குறிக்கும் ஆதலால் எட்டும் இரண்டும் அறியாத என்பதற்கு ஆன்ம இலக்கணம் அறியாதிருந்த எனக்கு - எனவும் பொருள் காணலாம்.

† இலிங்கம் - சிவக்குறி.

*எட்டி ரண்டுதிசை யோட செங்குருதி
†யெட்டி ரண்டுமுரு வாகி வஞ்சகர்மெ
லெட்டி ரண்டுதிசை யோர்கள் பொன்றஅயில்
விடுவோனே;

செட்டி யென்று ‡சிவ காமி தன்பதியில்
கட்டு செங்கைவளை கூறு மெந்தையிட
சித்த முங்Xகுளிர நாதி வண்பொருளை
நவில்வோனே-

---

*எட்டு இரண்டு திசை - அஷ்ட திக்குக்களும் கீழும்மேலும்.

† (i) எட்டும் இரண்டும் உருவாகி - பத்து - எனக்கொண்டு உருவத் திருமேனியுடன் பத்துநாளிற் சூரசம்மாரத்தை முடித்தனர் எனப் பொருள் கொள்ளலாம்.

"ஐந்திருவைகலின் அவுணர்தந் தொகையும்
அல்லல் ஆற்றிய சூரனும் முடிந்திட அடுதும் -
ஈரிரண்டிருமூன்றாகும் இரும்பகலிடையே எங்கோன்
ஆரிருஞ்சமர மூட்டி அவுணர்தம் அனிகந் தன்னைச்
சூரொடு முடித்து.... சிறப்பு நல்கும்" - கந்தபுராணம் 3 10-11; 11-32.

(ii) இனி 'எட்டிரண்டும் உருவாகி' என்பதற்குப் பதினாறு திரு உருவங்களை உடையராகி - எனவும் பொருள் காண்பர்; முருகவேளுக்குப் பதினாறு திருவுருவங்கள் ~~தணி~~ என்று தணிகைப் புராணம் கூறும்; அவைதாம்:-

(1) ஞானசத்திதரனது உருவம், (2) கந்தன் உருவம், (3) தேவசேனாபதி உருவம், (4) சுப்பிரமணிய அண்ணல் உருவம், (5) களிற்றூர்திப் பெருமான் உருவம், (6) சரவணபவன் உருவம், (7) கார்த்திகேயன் உருவம், (8) குமரன் உருவம், (9) ஆறுமுகன் உருவம், (10) தாரகாந்தகன் உருவம், (11) சேனாபதி உருவம், (12) பிரமசாத்தன் உருவம், (13) வள்ளி கல்யாண கடவுள் உருவம், (14) பாலசுப்பிரமணிய பகவன் உருவம், (15) கிரௌஞ்ச சம்மார தேவன் உருவம், (16) மயில்வாகனப் பெருமாள் உருவம்.

"ஈண்டு விளக்க எடுத்துரைத்த ஈரெண்ணுருவம்"
- தணிகைப்புராணம் - அகத்தியனருள்பெறு படலம் - 64-79.

(iii) இனி, எட்டிரண்டும் உருவாகி செங்குருதி ஓட - என மாற்றி, எள் - திரண்டும் - உருவாகி - செங்குருதி ஓட - எனக்கொண்டு அசுரர்களின் எள்ளத்தக்க - இழிவுபடுத்தத்தக்க இகழ்ச்சியே திரண்டு ஓர் உருவம் எடுத்தது போல அவர்தம் ரத்த வெள்ளம் ஓட - எனவும் கொள்ளலாம்.

(தொடர்ச்சி பக்கம் - 421 பார்க்க)

**(பத்துத் திக்குகளி**லும் ஓடும்படி *சிவந்த ரத்தத்தை)* **சிவந்த ரத்தம் பத்துத்** திசைகளிலும் **ஓடும்படி** - (எட்டு **இரண்டும் உருவாகி)** பத்து நாள்கள் **உருவத்திருமேனி** - போர்க்கோலத் திருமேனி விளங்கப் போரின் பொருட்டுப் பாசறையில் **இருந்து**, வஞ்சகராம் சூரர்களும், **பின்னும் பத்துத்** திசை அண்டங்களில் இருந்த அசுரர்களும் **அழியும்படி** - வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

செட்டி வடிவெடுத்துத் தேவி (சிவகாமி - தடாதகைப் பிராட்டி (அங்கயற் கண்ணி) அரசாட்சி புரிந்த பதியாகிய மதுரையில், (கட்டு செங்கைவளை) செங்கை வளைக்கட்டை - செவ்விய கையில் வளையல் கட்டுகளைக், (கூறும்) (விலை கூறின) விற்ற, எந்தை - சிவபிரானுடைய, உள்ளம் குளிரும்படி அநாதி வண் பொருளை - தனித்த மூலப் பொருளை உபதேசித்தவனே!

---

(பக்கம் 420 கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

‡ சிவகாமி தன் பதியில் - தேவிக்கு ஆதிக்கஸ்தானமாகிய மதுரையில்: சிவபிரான் வளையல் விற்ற திருவிளையாடல்:-

தாரு (கா) வனத்திலிருந்த இருடிகளுடைய பத்தினிகளின் கற்பை அளந்து காட்டச் சிவபெருமான் பிக்ஷாடன உருவம் உடையவராகி அவர்கள் எதிரில் தோன்ற அவர்கள் காமாந்தகராய் வளையல் சோர நின்றார்கள். இருடிகள் இக்கோலத்தைக் கண்டு தமது பன்னியர்களை நீங்கள் கற்பு நிலை வழுவி விட்டீர்கள். மதுரையில் வைசியப் பெண்களாக பிறக்கக் கடவீர்கள் சிவபெருமான் உங்களைக் கைதீண்டும்போது இந்தச் சாபம் நீங்கும்" என்றார்கள்; இருடி பத்னிகள் அவ்வாறு மதுரையிற் பிறந்திருந்தபோது சிவபெருமான் வளையல் செட்டியாய் அந்தப் பெண்களுக்கு வளையல் இட்டு மறைந்தருளினார். மறைந்த பெருமான் யாவரும் காண விண்ணிலே காட்சி அருளினர். செட்டிப் பெண்கள் கருவுற்று வீரமும் புகழும் கொண்ட புதல்வர்களை ஈன்றனர்"

X குளிர அநாதி என்று பிரிக்க.

*செட்டி யென்றுவன மேவி † யின்பரச
சத்தி யின்செயலி னாளை யன்புருக
‡ தெட்டி வந்துபுலி யூரின் மன்றுள்வளர்
பெருமாளே x(23)

## 613. தரிசனம் பெற

தந்தனத் தானதன தந்தனத் தானதன
தந்தனத் தானதன தந்ததான

நஞ்சினைப் போலுமன வஞ்சகக் கோளர்களை
நம்புதற் றீதெனநி னைந்துநாயேன்-
நண் Oபுகப் பாதமதி லன்புறத் தேடியுனை
நங்களப் பாசரண மென்றுகூறல்;
உன்செவிக் கேறலைகொல்**பெண்கள் †† மெற்
பார்வையைகொல்
உன் சொலைத் தாழ்வுசெய்து மிஞ்சுவாரார்.
## உன்றனக் கேXXபரமும் என்றனக் கார்துணைவர்
உம்பருக் OOகாவதினின் வந்து*** தோணாய்;
††† கஞ்சனைத் தாவிமுடி முன்பு ‡‡‡குட் டேயமிகு
கண்களிப் பாகவிடு செங்கையோனே-
கண்கயற் பாவைகுற மங்கைபொற் றோடழுவு
XXXகஞ்சுகப் பான்மைபுனை
பொன்செய்தோளாய்;

---

* முருகவேள் (வளையல் விற்கும்) செட்டி வேடம்பூண்டு வள்ளியிடம் சென்ற லீலை கந்தபுராணத்திற் கூறப்பட இல்லை. ஆனால் தணிகை உலாவிற் கூறப்பட்டுளது. (திருப்புகழ் - பாடல் 215, பக்கம் -48, பாடல் 601, பக்கம் 386 பார்க்க.)

† இன்ப ரச சத்தியின் செயலினாளை - இச்சா சத்தி மயமான வள்ளிநாயகியை ‡ தெட்டி - எத்தி.

X இந்தப் பாடலின் முதல் - நான்கடிகளுக்கும், பாடல் 439, 647 முதல் நான்கடிகளுக்கும், பாடல் 318-ற்கும் உள்ள உரை எங்கள் பழைய பதிப்பில் உள்ளவை. பழைய பதிப்பில் முதற் பக்கத்திற் கூறப்பட்ட வித்துவான்களால் எழுதப்பட்டவை. Oஉக - பெருக்க. **பெண்கள் - தெய்வயானையம்மை, வள்ளியம்மை.

††மெல்-மேல்.

## "காக்கக் கடவிய நீ காவா திருந்தக்கால் ஆர்க்குப் பரமாம் அறுமுகவா" - திருமுருகாற்றுப்படை தனிப்பாடலின் கருத்தது.

XX பரம் - பாரம்.

(தொடர்ச்சி பக்கம் 423 பார்க்க)

(வளையல்) செட்டியின் வேடத்துடன் (தினை) வனத்துக்குச் சென்று அங்கே இச்சா சத்தி மயமான வள்ளி நாயகியை அன்புகனிந்து (தெட்டி) வஞ்சித்துக் கவர்ந்து வந்து புலியூரில் (பொன்) அம்பலத்தில் விளங்கி நிற்கும் பெருமாளே!

(வேத விந்தையொடு புகழ்வேனோ)

## 613.

விஷம்போல மனத்தில் வஞ்சகம் கொண்டுள்ளவர்களை நம்புதல் கெடுதலாகும் என்று நினைத்து அடியேன் -

(உன்மீது) நண்பு பெருக, (உனது) திருவடிகளில் அன்பு பொருந்த (உன்னைத்) தேடி உன்னை "எங்கள் அப்பா சரணம்" என்று ஓலிடுகின்றேனே அந்தக் கூச்சல்

உன் காதில் ஏறவில்லையா! (பெண்கள்) தேவசேனை - வள்ளி என்னும் நாச்சியார்களின் மேல் உன் கண்பார்வை உள்ளதால் கேட்க இலையோ)! உனது (உபதேச) மொழிகளைத் தாழ்வு படுத்தி மேற் செல்வார் ஆர்? வரம்பு மீள்வார் ஆர் (ஒருவரும் இலர் என்றபடி).

உனக்கே (எனைப் புரத்தல்) பாரமாகும்; (உன்னை விட்டால் எனக்கு வேறு யார் துணைவர் உளர் (ஒருவரும் இல்லையே); தேவர்களுக்கு நீ உற்ற துணையாய் ஆனது போல என் முன்னும் வந்து தோன்றி அருளுக;

பிரமனை எட்டி அவனது முடியில் முன்பு குட்டுப் பொருந்தும்படி மிக்க கண் களிப்புடன் செலுத்தின செவ்விய கையை உடையவனே!

கண் கயல்மீன்போல உள்ள பாவை அனைய குற மங்கை (வள்ளியின்) அழகிய தோளைத் (உடலோடுடலாய்த்) தழுவும் சட்டையை அணிந்த தன்மையை ஒக்கத் தழுவி அணையும் அழகிய தோளனே! உடலிற் சட்டையணிவது போல வள்ளியைத் தழுவி அணைந்த தோளனே!

---

OO ஆவதினின் - ஆவதுபோல். *** தோணாய் - தோற்றாய்

††† பிரமனைக் குட்டியது. பாடல் - 608, பக்கம் 406 பார்க்க.

### குட்டு ஏய.

XXX சட்டை உடலைத் தழுவுவதுபோல வள்ளியின் உடலை முருகன் தழுவினன்.

அஞ்சவெற் பேழுகடல் மங்கநிட் டூரர்குலம்
அந்தரத் தேறவிடு கந்தவேளே-
*அண்டமுற் பார்புகழு மெந்தைபொற் பூர்புலிசை
அம்பலத் தாடுமவர் தம்பிரானே. (24)

## 614. அருள் புரிய

தந்ததன தனதான

செங்கலச முலையார்பால் - சிந்தைபல தடுமாறி;
அங்கமிக மெலியாதே - அன்புருக அருள்வாயே;
செங்கைபிடி கொடியோனே - செஞ்சொல்தெரி புலவோனே;
மங்கையுமை தருசேயே - மன்றுள்வளர்பெருமாளே (25)

## 615. அன்பு பெற

தனன தான தனந்தன தானன
தனன தான தனந்தன தானன
தனன தான தனந்தன தானன தந்ததான

கரிய மேக மெனுங்குழ லார்பிறை
சிலைகொள் வாகு வெனும்புரு வார்விழி
கயல்கள் வாளி யெனுஞ்செய லார்மதி
†துண்ட‡மாதர்-

கமுக க்ரீவர் புயங்கழை யார்தன
மலைக ளாஇணை யுங்குவ டார்கர
கமல வாழை மனுந்தொடை யார்சர சுங்கமாடை;

---

*அண்ட முதலான.

† துண்டம் - (முகம்) பிங்கலம்; பாடல் 604 பார்க்க.

‡ மாதர் - அழகு, 'மாதர் கொள் மாத ரெல்லாம் மார்கழித் திங்கள் தன்னில் புனற்றடம் ஆடல் செய்வார்"- திருவாதவூரர் புராணம் 384. மாதர் "மடப்பிடியும் " - சம்பந்தர் -1-136-1.

அஞ்ச வெற்பு (கிரௌஞ்சம் நடுங்க), ஏழு கடலும் ஒடுங்க, (அல்லது வெற்பு ஏழு - ஏழு கிரிகள் அஞ்ச, கடல் மங்கிக் குலைய) கொடிய அசுரர்களின் கூட்டம் (விண்ணில் ஏற) இறந்துபோம்படி செய்த கந்தவேளே!

அண்டம் முதலான உலகங்கள் புகழும் எந்தையே! (அல்லது எந்தை சிவபிரானுடைய) அழகிய ஊராம் புலியூரில் (சிதம்பரத்தில்) (பொன்) அம்பலத்தே ஆடுகின்ற நடராஜப் பெருமானுக்குத் தம்பிரானே!

(உம்பருக் காவதினின் வந்துதோணாய்)

## 614.

செவ்விய (கலசம்) குடம் போன்ற கொங்கைகளை உடைய மாதர் மீது - சிந்தை பலவாறாகத் தடுமாறி,

அங்கம் மிகவும் மெலிவு உறாமல் - அன்பால் (என் உள்ளம்) உருகும்படி நீ அருள்புரிக;

செங்கையிற் பிடித்துள்ள (சேவற்) கொடியோனே, செஞ்சொற்கள் தெரிந்த - தெரிவிக்கும் புலவனே!

மங்கை பார்வதி பெற்ற குழந்தையே! (பொன்) அம்பலத்தில் விளங்கும் பெருமாளே!

(அன்புருக அருள்வாயே)

## 615.

கரிய மேகம் போன்ற கூந்தலை உடையவர், பிறை போலவும், வில் போலவும், விளங்கி அழகு கொண்ட புருவங்களை உடையவர், கண்கள் கயல்மீன் போலவும், அம்பு போலவும் செயலை ஆற்றும் தொழிலினர், சந்திரன் போன்ற முகத்தை உடையவர், (மாதர்) அழகுள்ள -

கமுகுபோன்ற கழுத்தினர், புயம் மூங்கில் (அல்லது கரும்பு) போன்றவர், கொங்கைகள் மலைக்கு இணையான (குவடார்) திரட்சி உடையவர், கரம் தாமரை போன்றவர், வாழை போன்ற தொடைகளை உடையவர், (சர சுங்க மாடை) சுங்க சர மாடை - கள்ளத்தனமான நடையாற் கைக்கொண்ட பொன் (கொண்டு வாங்கப்பட்ட)

வரிய பாளித முந்துடை யாரிடை
துடிகள் நூலிய லுங்கவி னாரல்குல்
மணமு லாவிய ரம்பையி னார்பொருள்
சங்கமாதர்-

மயில்கள் போல நடம்புரி வாரியல்
குணமி லாத வியன்செய லார்வலை
மசகி நாயெ னழிந்திட வோவுன தன்புதாராய்;

சரியி லாத சயம்பவி யார்முகி
லளக பார பொனின் *சடை யாள்சிவை
சருவ லோக சவுந்தரி யாளருள் கந்தவேளே-

சத† ப ணாம குடம்பொடி யாய்விட
அவுணர் சேனை மடிந்திட வேயொரு
தழல்கொள் வேலை யெறிந்திடு சேவக
செம்பொன்வாகா;

அரிய மேனி யிலங்கை யிராவணன்
முடிகள் வீழ சரந்தொடு மாயவன்
‡ அகில மீரெழு முண்டவன் மாமரு
கண்டரோதும்-

x அழகு சோபித அங்கொளு மானன
விபுதை மோகி குறிஞ்சியின் வாழ்வளி
அருள்கொ டாடி சிதம்பர மேவிய
தம்பிரானே (26)

---

* தேவி சடையாள் என்பது - 'பேழைவார் சடைப் பெருந் திருமகள்' - சம்பந்தர் - II - 107 - 6. சடை பொன்னிறத்தது - 'பொன் போற் சடை'- சம்பந்தர் II-36-3.

† பணம் - பருமை "உரககண பணமவுலி... அலையவே' வேல் விருத்தம் - 1.

‡ திருமால் உலகுண்டது - பாடல் 267, பக்கம் - 164 கீழ்க்குறிப்பு.

x அழகு சோபிதம், அம் - ஒரு பொருள் குறிக்கும் மூன்று சொற்கள் ஓரிடத்தில் வந்துள்ளன.

கோடுகள் கொண்ட (பாளிதம்) பட்டுப் புடவைகளால் (உந்து உடையார்) முன்னிட்டு விளங்கும் உடைகளைத் தரித்தவர், இடையானது துடிபோலவும், நூல்போலவும் உள்ள அழகு கொண்டவர் (அல்லது இடையானது துடிகளையும் நூலையும் ஒக்கும், அழகு நிறைந்த அல்குல் நறுமணம் வீசுகின்ற ரம்பை போன்றவர், பொருளுக்காகக் கூடுதலை உடைய (பொது) மாதர்,

மயில்கள் போல நடம்புரிபவர், நல்ல தன்மைக் குணத்தின்பாற் படாத வியப்பான செயல்களைக் கொண்டவர், - (இப்படிப்பட்ட பொது மாதர்களின் வலையில் மனம் கலக்குண்டு அடியேன் அழிவுறலாமோ? உன்னுடைய அன்பைத் தந்தருளுக.

தனக்கு ஒப்பில்லாத சுயம்புவான தேவதை, மேகம் போன்ற கூந்தற் பாரத்தைக் கொண்டவள், பொன் நிறமான சடையை உடையவள், சிவை, எல்லா உலகங்களுள்ளும் (மேம்பட்ட) அழகி (பார்வதி) பெற்ற கந்தவேளே!

நூற்றுக் கணக்கான பருத்த மணிமுடிகள் பொடியாக அல்லது (ஆதிசேடனுடைய) நூற்றுக் கணக்கான பணா மகுடம் (படந்தாங்கும் மணிமுடிகள் பொடியாய்விட (குலைய) வும், அசுர சேனைகள் இறந்துபோம்படி ஒப்பற்றதும் நெருப்பைக் கொண்டதுமான வேலாயுதத்தை செலுத்தின பராக்ரமசாலியே! செம்பொன்னிற அழகனே!

அருமையான மேனியைக்கொண்ட இலங்கை (அரசன்) இராவணனுடைய முடிகள் (தலைகள்) அற்று விழும்படி அம்பைச் செலுத்தின மாயவனும், பதினான்கு உலகங்கள் முழுமையும் உண்டவனுமான திருமாலின் சிறந்த மருகனே! தேவர்கள் ஓதிப் புகழும்

அழகு வாய்ந்த ஒளியை உடையவனே! அழகுகொண்ட திருமுகங்களை உடையவனே! அல்லது அழகு வாய்ந்த முகத்தைக் கொண்ட தேவதை (தேவசேனை), உன் ஆசைக்கு உகந்தவளாம் மலைநில ஊர் (வள்ளிமலையில்) வாழும் வள்ளி நாயகி ஆகிய இருவர்மீதும் அருள்கொண்டு அவர்களுடன் லீலை செய்து (அல்லது அழகுள்ள முகத்தைக்கொண்ட தேவி, அழகி, குறிஞ்சியில் வாழ்பவளாகிய வள்ளிநாயகி மீது அருள்பாலித்து அவளுடன் லீலை செய்து) சிதம்பரத்தில் வீற்றிருக்கும் தம்பிரானே!

(உனது அன்பு தாராய்)

## 616. மாதர் இணக்கம் அற

தாந்த தானன தந்த தனந்தன
தாந்த தானன தந்த தனந்தன
தாந்த தானன தந்த தனந்தன தந்ததான

கூந்த லாழவி ரிந்து சரிந்திட
காந்து மாலைகு லைந்து பளிங்கிட
கூர்ந்த வாள்விழி கெண்டை கலங்கிட
கொங்கைதானுங்-
*கூண்க ளாமென பொங்கந லம்பெறு
காந்தள் மேனிம ருங்குது வண்டிட
கூர்ந்த ஆடைகு லைந்துபு ரண்டிர
சங்கள்பாயச்;

சாந்து வேர்வின ழிந்து மணந்தப
வோங்க வாவில்க லந்து முகங்கொடு
தான்ப லாசுளை யின்சுவை கண்டித
ழுண்டுமோகந்-
தாம் †பு றாமயி லின்குரல் கொஞ்சிட
வாஞ்சை மாதரு டன்புள கங்கொடு
சார்ந்து நாயென ழிந்துவி ழுந்துடல்
மங்குவேனோ;

தீந்த தோதக தந்தன திந்திமி
ஆண்ட பேரிகை துந்துமி சங்கொடு
சேர்ந்த பூரிகை பம்பை தவண்டைகள்
பொங்குசூரைச்-
சேண்சு லாமகு டம்பொடி தம்பட
வோங்க வேழ்கட லுஞ்சுவ றங்கையில்
சேந்த வேலது கொண்டு நடம்பயில்
கந்தவேளே;

மாந்த ணாருவ ணங்குயில் கொஞ்சிட
தேங்கு வாழைக ரும்புகள் விஞ்சிடு
வான்கு லாவுசி தம்பரம் வந்தமர் செங்கைவேலா-

---

* கூண்கள் - குண்கள் - குன்றுகள்; குன்று என்பது குண் என மருவி முதல் நீண்டது.

† புறா மயிலின் குரல் - புட்குரல் - பாடல் 197, பக்கம் - 6.

## 616.

கூந்தலானது தாழ விரிவுற்றுச் சரிந்துவிழ, பிரகாசிக்கின்ற மாலை குலைவுற்றுப் பளிங்குபோல விளங்க, கூரிய ஒளி பொருந்திய கண் கெண்டை மீன்போலக் கலக்கம் கொள்ள, கொங்கைகளும்

குன்றுபோல எழுச்சி கொள்ள, செழிப்புள்ள காந்தள் பூ அனைய உடலில் இடை துவட்சிகொள்ள, சுற்றி வளைத்துள்ள ஆடை குலைவு உற்றுப் புரண்டு இன்ப ஊறல்கள் பாய்ந்து பெருக,

(நெற்றியில் உள்ள) சாந்து வேர்வையினால் அழிந்து வாசனை கெட, மிக்கு எழும் காதலுடன் சேர்ந்து, (முகம் கொடுத்து) முகத்தொடு முகம் வைத்து, பலாச்சுளையின் சுவை கண்டதுபோல வாயிதழை உண்டு காம ஆசையினால் -

புறா, மயில் (ஆதிய புட்குரலுடன்) கொஞ்ச, ஆசை வைத்த மாதர்களுடன், புளகாங்கிதத்துடன் இணங்கி அடியேன் (அல்லது நாய்போல) அழிந்து விழுந்து உடல் வாட்டமடைவேனோ!

தீந்த தோதக தந்தன திந்திமி என்ற ஓசையை எழுப்புகின்ற பேரிகை, துந்துமி, சங்கு இவைகளுடன் பூரிகை (ஊதுகுழல்), பம்பை (ஒருவிதபறை), தவண்டைகள் (பேருடுக்கைகள்) இவைதம் ஒலிமிக்கு எழ வந்த சூரனுடைய -

உயர்ந்து விளங்கும் மணிமுடி பொடிதான்பட, விளங்கும் அந்த ஏழு கடல்களும் வற்றிப்போக, அழகிய கையில் சிவந்த வேலாயுதத்தை ஏந்தி நடனம் பயின்ற (துடிக்கூத்து ஆடின) கந்தவேளே!

மாந்தணாருவனம் (தண் ஆரும் மாவனம்) குளிர்ச்சி நிறைந்த மாமரச் சோலையிலே குயில் கொஞ்ச, தேங்கு (நிறைந்த வாழைகளும் (அல்லது தெங்கும் (தென்னையும்) வாழையும்) கரும்புகளும் மேலிட்டெழுந்து ஆகாயத்தை அளாவும் சிதம்பரம் என்னும் தலத்தில் வந்து வீற்றிருக்கும் செங்கை வேலனே!

மாண்புர காசத னங்கிரி சுந்தர
மேய்ந்த நாயகி சம்பைம ருங்குபொன்
வார்ந்த ரூபிகு றம்பெண் வணங்கிய
தம்பிரானே.(27)

## 617. நைதல் ஒழிய

தத்த தன்ன தய்ய தத்த தன்ன தய்ய
தத்த தனன தய்ய தனதான

அத்த னன்னை யில்லம் வைத்த சொன்னம் வெள்ளி
அத்தை நண்ணு செல்வ ருடனாகி-

*அத்து பண்ணு கல்வி சுற்ற மென்னு மல்ல
லற்று நின்னை † வல்ல படிபாடி;

முத்த னென்ன ‡ வல்லை யத்த னென்ன வள்ளி
முத்த னென்ன வுள்ள முணராதே-

முட்ட வெண்மை யுள்ள பட்ட னென்மை கொள்ளு
முட்ட னிங்ங னைவ தொழியாதோ;

தித்தி மன்னு தில்லை நிர்த்தர் கண்ணி னுள்ளு
தித்து மன்னு பிள்ளை முருகோனே-

சித்தி மன்னு செய்ய சத்தி துன்னு கைய
x சித்ர வண்ண வல்லி யலர்சூடும்;

---

* அத்து பண்ணு கல்வி - ஓரளவு படித்த கல்வி எனலுமாம்.

† வல்லபடி - (வல்லபடிபாடி - புறநானூறு - 47 உரை)

‡ வல்லை அத்தன் - வலிமை வாய்ந்த பெருமான் எனலுமாம். வல்லை - வலிமை வல்லை - திருவல்லம், வல்லக்கோட்டை - பாடல் 316, பக்கம் - 284, 285 பார்க்க.

x வல்லி - வள்ளி வெல்லலர் வினை துறவறத்தின் மேவினும் வல்லிதன் கேள்வனை மனத்துன்னார்களே' தணிகைப்புரா . இராம 1.

'சித்ரவண்ண வல்லி அலர்சூடும் பத்தர்' - எனக் கொண்டு அழகிய நிறமுடைய (வல்லி அலர்) கொடிப் பூக்களை (அல்லது, அல்லி அலர் - தாமரைப் பூக்களை இட்டு சூட்டி பணியும் பத்தர் - எனவும் பொருள் காணலாம். (வல்லி - கொடி.)

பெருமையும் ஒளியும் கொண்ட கொங்கை மலைகளை உடைய அழகு வாய்ந்த நாயகி (தேவசேனையும்), (சம்பை) மின்னல் போன்ற இடையையும் பொன் உருக்கி வார்த்தது போலுள்ள உருவத்தையும் கொண்ட குறப்பெண் (வள்ளி)யும் வணங்கின தம்பிரானே! (அல்லது.... சுந்தரம் வாய்ந்த நாயகியான குறப்பெண் *வள்ளி வணங்கின தம்பிரானே!)....... அல்லது குறப்பெண்ணை வள்ளியை வணங்கின தம்பிரானே!)

(நாயெனழிந்து விழுந்துடல் மங்குவேனோ)

## 617.

தந்தை, தாய், வீடு, வைத்துள்ள பொன், வெள்ளி, (அத்தை) தந்தையுடன் பிறந்தவள், பொருந்தியுள்ள (செல்வர்) பிள்ளைகள் - இவர்களுடன் கூடினவனாய் -

கூடும்படி (வரும்படி) கற்கப்பட்ட கல்வி, உறவினர் என்றெல்லாம் உள்ள துன்பங்கள் நீங்கி உன்னைக் கூடிய வகையில் இயன்ற வகையிற்பாடி -

முத்தன் (முத்தி முதல்வன்) நீ எனவும், திருவலம் என்னும் தலத்தில் உள்ள அத்தன் (பெருமான்) நீ எனவும், வள்ளியை முத்தமிட்டவன் (வள்ளி காதலன்) நீ எனவும், என்னுடைய உள்ளத்தில் நான் உணர்ந்து மகிழாமல் -

முழுமையான (வெண்மை) அறியாமை நிறைந்த (பட்டன்) புலவனும், (எண்மை) எளிமை... பரிதாப நிலை கொண்ட மூடனும் ஆகிய நான் இங்ஙனம் (நைவது) வருந்தி இரங்கும் நிலை (ஒழியாதோ) நீங்காதோ!

'தித்தி - என்னும் தாளச்சதி நிலைபெற்று விளங்கும் தில்லை நடராஜர் (கூத்தன்) நெற்றிக் கண்ணினின்றும் (உதித்து) தோன்றி நிலைபெற்றுள்ள பிள்ளை முருகனே!

(சகல சித்திகளுக்கும் இடமாய் விளங்கும் செம்மை வாய்ந்த (அல்லது சிவந்த) வேலாயுதம் பொருந்திய கையனே! (சித்ரவண்ணவல்லி) அழகிய திருவுருவம் வாய்ந்த (வல்லி) வள்ளி பூ இட்டுப் பணியும் - (செம்மலே)!

---

* வள்ளி வணங்கிய - வள்ளியை வணங்கின - என இருவகையும் பொருள்படும். 'வள்ளிபதம் பணியும்... தயாபரனே' என்புழிப் போல - கந்தர நுபூதி - 6.

பத்த ருண்மை சொல்லு ளூற்ற செம்மல் *வெள்ளி
பத்தர் கன்னி புல்லு மணிமார்பா-

பச்சை வன்னி யல்லி செச்சை சென்னி யுள்ள
பச்சை மஞ்ஞை வல்ல பெருமாளே. (28)

## 618. வினையற.

தனதாத்த தய்ய தனதாத்த தய்ய
தனதாத்த தய்ய தனதான

† இருள்காட்டு செவ்வி ததிகாட்டி வில்லி
னுதல்காட்டி வெல்லு மிருபாண-

இயல்காட்டு ‡ கொல்கு வளைகாட்டி முல்லை
நகைகாட்டு வல்லி யிடைமாதர்;

மருள்காட்டி நல்கு ரவுகாட்டு மில்ல
இடுகாட்டி னெல்லை நடவாத-

வழிகாட்டி நல்ல றிவுகாட்டி மெல்ல
Xவினை வாட்டி யல்லல் செயலாமோ-

தெருள்காட்டு தொல்லை மறைகாட்டு மல்லல்
மொழிகாட்டு தில்லை யிளையோனே-

தினைகாட்டு கொல்லை வழிகாட்ட வல்ல
குறவாட்டி புல்லு மணிமார்பா;

---

*வெள் இபத்தர் - வெள்ளை யானையையுடைய தேவேந்திரன்.

† 'இருள் விரி குழலை' - என்றார் பிறிதோர் இடத்து - பாடல் 53, பக்கம் - 136.

‡ 'முழுநீலம் கொல்லும் மதன் அம்பின் குணம்' - பாடல் 19. பக்கம் 60 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

Xவினை வாட்டி அல்லல் செயல் ஆமோ - வினையை வாட்டிய பின்னரும் அது துன்பஞ் செய்யலாகுமா?

பக்தர்களுடைய மெய் பொருந்திய திருவாக்கில் விளங்கும் (செம்மலே!) பெரியோய்! (வெள் இபத்தர்) வெள்ளை யானையை உடைய தேவேந்திரனது மகள் (தேவசேனை) அணையும் அழகிய மார்பனே! (அல்லது அலர்சூடும் பத்தருண்மை சொல்லுள் உற்ற செம்மல் (செம்மலே)! சித்ரவண்ணவல்லி - வெள்ளிபத்தர் கன்னி - ஆக இருவரும் புல்லுமணி மார்பா - எனலுமாம்)

பச்சை வன்னி இலையையும், அல்லிப் பூ, வெட்சிப் பூ இவை தலைச் சிரசிற்கொண்ட பெருமாளே! பச்சை மயிலை ஏறி நடத்த வல்ல பெருமாளே!

(இங்ஙன் நைவது ஒழியாதோ)

## 618.

இருளைக் காட்டுகின்ற (இருள்போன்ற) (செவ்விததிகாட்டி) செழிப்புள்ள, நெருங்கிக் கூட்டமான (கூந்தலைக் காட்டி, வில்லைப்போன்ற நெற்றியை (அல்லதுபுருவத்தைக் காட்டி, (எவற்றையும்) வெல்லக்கூடிய இரண்டு அம்புகளின் -

(இயல்காட்டு கொல்குவளை) கொல் இயல்காட்டு குவளை - கொல்லுந் தன்மையைக் காட்டும் (மன்மதனின்) குவளை மலர்போன்ற கண்களைக் காட்டி - முல்லை மலர்போன்ற பற்களைக் காட்டும், கொடிபோன்ற இடையை உடைய மாதர்களின்மீது

காம மயக்கம் காட்டுவதால் வருகின்ற (நல் குரவு) வறுமை காட்டுகின்ற இல்லம் - சமுசார வாழ்க்கை என்னும் (உள்ளம் வேகின்ற) சுடுகாட்டுப் பிரதேசத்தில் மாட்டிக்கொள்ளாத

நல்வழியைக் காட்டியும் நல்லறிவைக் காட்டியும், மெதுவாக (எனக்குள்ள) வினையை (நீ) வாட்டிய பின்னரும் அவ்வினை (என்னைத்) துன்பஞ் செய்யலாகுமா?

* ஞானவழியைக் காட்டுகின்ற பழைய (மறைமொழிகள்) வேத மொழிகள் காட்டும் வளப்பம் பொருந்திய (செம்பொருள் நிரம்பிய) (உபதேச) மொழியை (அடியேனுக்கு) (காட்டு) உபதேசித்த இளையோனே! சிதம்பரத்தில் வீற்றிருக்கும் இளையோனே!

தினை விளையும் புனத்திற்கு வழியைக் காட்டவல்ல குறத்தி வள்ளி அணையும் அழகிய மார்பனே!

---

* இது அருணகிரியார் வரலாற்றைக் காட்டும்.

அருள்காட்டு கல்வி நெறிகாட்டு செல்வ
அடல்காட்டு வல்ல சுரர்கோபா-

அடிபோற்றி *யல்லி முடிசூட்ட வல்ல
†அடியார்க்கு நல்ல பெருமாளே. (29)

## 619. மாதர்மீது மயலற

தய்யதன தானனத் தானனந் தானதன
தய்யதன தானனத் தானனந் தானதன
தய்யதன தானனத் தானனந் தானதன தனதான

முல்லைமலர் போலுமுத் தாயுதிர்ந் தானநகை
வள்ளைகொடி போலுநற் காதிலங் காடுகுழை
முல்லைமலர் மாலைசுற் றாடுகொந்தாருகுழ
லலைபோதம்-

மொள்குசிலை வாணுதற் பார்வையம் பானகயல்
கிள்ளைகுர லாரிதழ்ப் பூவெனும் போதுமுக
முன்னல்கமு கார்களத் தோய்சுணங் காயமுலை
மலையானை;

வல்லகுவ டாலிலைப் போலுசந் தானவயி
றுள்ளதுகில் நூலிடைக் காமபண் டார அல்குல்
‡வழ்ழைதொடை யார்மலர்க் காலணிந் தாடுபரி
புரவோசை-

---

* அல்லி - தாமரை, பாடல் 313, பக்கம் 276 கீழ்க்குறிப்பு.

† (1) 'வெற்றிவேற் பெருமாள் அடியார்க்கு நல்ல பெருமாள்'-

(கந்தர் அலங்காரம் 33) (2) கருவூருள் ஆநிலை அண்ணலார் அடியார்க்கு நல்லரே'- சம்பந்தர் 2-28-3. (3) "வெள்காது அடியார் எண்ணமே முடிப்பது விரதமாக் கொண்ட அடிகள்" - காஞ்சிப் புராணம் - வாணீச 99.

‡ வழ்ழை - வாழை.

அருள் வழியைக் காட்டுகின்ற கலைச் செல்வ வழியைக் காட்டும் செல்வனே! வன்மையையுங் கொடூரத்தையும் காட்டும் வலிய அசுரர்களைக் கோபித்து அழித்தவனே!

உனது திருவடியைப் போற்றித் தாமரை மலராற் கட்டப்பட்ட இண்டைமாலையை (உனது) முடியில் சூட்ட வல்ல அடியார்களுக்கு நல்ல பெருமாளே!

(அல்லல் செயலாமோ?)

## 619.

முல்லை மலர்போலவும் முத்துக்கள் உதிர்ந்தன வைகளால் வரிசை அமைந்தன போலவும் உள்ள பற்களையும், வள்ளைக்கொடி போல உள்ள நல்ல காதில் விளங்கி அசைகின்ற குழைகளையும், முல்லைமலர் மாலை சுற்றி உள்ளதும் அசைகின்ற பூங்கொத்துக்கள் நிறைந்துள்ளதும் (குழல் அலைபோது)- (அலைபோது அ குழல்) அலை வீசுவதுபோலப் புரளும் அந்தக் கூந்தலையும், அழகாய்

எடுக்கப்பட்ட வில்லைப்போன்ற ஒளி பொருந்திய நெற்றியையும், பார்வை அம்பான கயல் (அம்பான கயல் பார்வை) அம்பு போன்றதும் கயல்மீன் போன்றதுமான கண்ணையும், கிளியின் குரல் போன்ற குரலையும் உடையவர்கள்; இதழ்களை உடைய தாமரைப்பூ என்னும்படியான மலர் முகத்தையும், முன்னல், கமுகார், களம், (கமுகார் முன்னல் களம்) கமுகு போன்றதும் (முன்னல்) நினைத்தற்கு இடமானதுமான நெஞ்சையும், தோய் சுணங்கு (சுணங்கு நோய்) தேமல் பரந்துள்ளதான கொங்கையாகிய (மலை யானை) எதிர்த்துவரும் யானை போன்றதும்

வன்மை வாய்ந்ததுமான குன்றையும், ஆலிலை போன்றதும் பிள்ளைப் பேற்றுக்கு இடம் தருவதுமான வயிற்றையும், அவ் வயிற்றின் மேலுள்ள ஆடை அமைந்துள்ள நூல்போல் நுண்ணிய இடையையும், காமத்திற்கு நிதி இடம் போன்ற அல்குலையும், வாழை போன்ற தொடையையும் உடையவர்கள்; மலர் அன்ன (பூப் போன்ற) காலில் அணியப்பட்டு அசைகின்ற சிலம்பின் ஒலியானது -

மல்லிசலி யாடபட் டாடைகொண் டாடமயல்
தள்ளுநடை யோடுசற் றேமொழிந் தாசைகொடு
வல்லவர்கள் போலபொற் சூறைகொண் டார்கள்மய
லுறவாமோ;

அல்லல்வினை போகசத் தாதிவின் டோடநய
வுள்ளமுற வாகவைத் தாளுமெந் தாதைமகி
*ழுள்ளமைய ஞானவித் தோதுகந் தாகுமர
முருகோனே-

அன்னநடை யாள்குறப் பாவை †பந் தாடுவிரல்
என்னுடைய தாய்வெண்முத் தார்கடம் பாடுகுழல்
அன்னைவலி சேர்தனக் கோடிரண் டானவளி
மணவாளா;

‡செல்லுமுக ஏழ்கடற் பாழிவின் டோடதிர
வல்லசுரர் சேனைபட் டேமடிந் தேகுருதி
செல்லதிசை யோடுவிட் டாடுசிங் காரமுக
வடிவேலா-

தெள்ளுதமிழ் பாடியிட் டாசைகொண் டாடXசசி
வல்லியொடு கூடிதிக் கோர்கள்கொண் டாடஇயல்
தில்லைநகர் கோபுரத் தேமகிழ்ந் தேகுலவு
பெருமாளே. (30)

---

* அள் - செவி.

† பந்தாடு விரல் - 'பந்தமரும் விரல் மங்கை' - சம்பந்தர் 3-12-6.

‡ செல் - மேகம்.

X சசிவல்லி - இந்திராணியின்மகளாகிய தெய்வயானை.

மல்லிட்டு வாதாடுவதுபோல மாறுபட்டு ஒலிக்கவும், பட்டாடையானது தன்மேல் படும்போது எல்லாம் அசைந்து ஒலிக்கவும், காம மயக்கத்தால் தள்ளுகின்ற நடையோடு கூடி (சற்றே மொழிந்து) சிற்சில வார்த்தைகளைப் பேசி ஆசை பூண்டு சாமர்த்தியம் உள்ளவர் போல பொற்காசுகளைத் (தம்மிடம் வருபவரிடம்) கொள்ளை கொண்டவர்கள் - ஆகிய அத்தகைய மாதர்களின் மீது காமமயக்கம் கொள்ளலாமோ?

துன்பத்தைத் தரும் வினை தொலையவும், அசத்தான குற்றங்கள் நீங்கித் தொலையவும், இன்பமான உள்ளம் பொருந்தி அமையவும் அருள்வைத்து ஆளுகின்ற என்னுடைய தந்தையாம் சிவபெருமான் மகிழ்ச்சி உற (அவரது) (அள்) -காதில் (அமைய) குளிர்ந்து பொருந்த (ஞானவித்து) ஞானத்திற்கு விதை போன்ற மூலப்பொருளை உபதேசித்த கந்தனே! குமரனே! முருகோனே!!!

அன்னம்போன்ற நடையினளாம் குறப்பாவை - குறவர் தம் பாவை, பந்தாடுகின்ற விரல்கள் உடைய என்னுடைய தாய், வெள்ளை முத்துக்கள் போன்ற கடப்பமலர் விளங்கும் கூந்தலை உடைய அம்மை, வன்மைவாய்ந்த கொங்கை மலைகள் இரண்டினைக் கொண்டவள் - ஆகிய வள்ளி நாயகியின் மணவாளனே!

(செல்லு) மேகங்கள் படிவதற்கு இடமான ஏழு கடற் பரப்புக்களும் பிளவுண்டு சிதறி ஒலிசெய, வலிய அசுரர் சேனை அழிவுபட்டு இறந்து, ரத்தம் பரவித் திசைகளில் ஓடும்படி செய்து விளங்கும் அழகிய திருமுகத்தைக்கொண்ட சுடர் வேலனே!

தெளிவான தமிழ்ப்பாடலைப் பாடி ஆசையால் (உன்னை) அடியார் புகழ்ந்து கொண்டாடவும், (சசி வல்லியோடு)- இந்திராணியின் மகள் தேவசேனையோடு கூடி அமர்ந்து, (பல) திக்கில் உள்ளோர்களும் புகழ்ந்து கொண்டாடவும் தகுதி மிக்க (தில்லை நகர் கோபுரத்தே) சிதம்பரத்துத் திருக்கோயிற் கோபுரத்திடத்தே மகிழ்ந்து விளங்கி நிற்கும் பெருமாளே!

(மயல் உறவாமோ)

## 620. சிவஞானம் பெற

தனத்தத் தந்தனத்தத் தானன தானன
தனத்தத் தந்தனத்தத் தானன தானன
தனத்தத் தந்தனத்தத் தானன தானன தனதான

அடப்பக் கம்பிடித்துத் தோளொடு தோள்பொர
வளைத்துச் செங்கரத்திற் சீரொடு பாவொடு
அணுக்கிச் *செந்துணுக்கிற் † கோவிதழூறல்க
ளதுகோதி;
அணிப்பொற் பங்கயத்துப் பூண்முலை மேகலை
நெகிழ்த்துப் ‡ பஞ்சரித்துத் தாபண மேயென
Xஅருட்டிக் கண்சிமிட்டிப் பேசிய மாதர்க
ளுறவோடே;
படிச்சித் தங்களித்துத் தான்மிக மாயைகள்
படித்துப் பண்பயிற்றிக் காதல்கள் மேல்கொள
பசப்பிப் பின்பிணக்கைக் கூறிய வீணிக
ளவமாயப்-
Oபரத்தைக் **குண்டுணர்த்துத் தோதக பேதைகள்
பழிக்குட் சஞ்சரித்துப் போடிடு மூடனை
பரத்துற் றண் †† பதத்துப் போதக மீதென
அருள்தாராய்;
தடக்கைத் ‡‡ தண்டெடுத்துச் சூரரை வீரரை
நொறுக்கிப் பொன்றவிட்டுத் தூளெழ நீறெழ
தகர்த்துப் பந்தடித்துச் சூடிய தோரண கலைவீரா-

---

* செந்துணிக்கில் - சிவந்த பவளத்துண்டை யொத்த.
† கோவிதழ் - கோப இதழ் - இந்திரகோபத்தை யொத்தஇதழ்
‡ பஞ்சரித்து - குதலைமொழி பேசி.
X அருட்டி - சாக்கிரதை பண்ணி.
O பரத்தை - பரத்தைகள்.
** குண்டு உணர்த்து - தாழ்வான செய்கையை யுணர்த்தும்.
†† பதத்துப் போதகம் - திருவடி ஞானம் - சிவஞானம்.
'திருவடியே சிவமாவது' - திருமந்திரம் 138.
‡‡ தண்டு - முருகவேளின் ஆயுதங்களில் தண்டும் ஒன்று.
- பாடல் 585 பக்கம் 342 கீழ்க்குறிப்பு.

## 620.

(அட) தமது காரியத்தில் வெற்றி பெறவேண்டி, வந்தவரின் சார்பை நன்றாகப் பிடித்து, அவருடைய தோளொடு தங்களுடைய தோள் இணைந்து பொருந்த, அவரை (வளைத்துச் செங்கரத்தில்) செங்கரத்தில் வளைத்து - தங்களுடைய செவ்விய கரங்களால் அணைத்து இழுத்துச் சீராட்டியும், பாடல் பாடியும் சமீபத்தில் அணைவித்துச் சிவந்த பவளத்துண்டை ஒத்ததும் இந்திர கோபத்தை ஒத்ததுமான (வாய்) இதழ் ஊறல்களைத் தொகுத்து அனுபவிக்கத் தந்து -

அழகிய பொலிவுள்ள தாமரை மொட்டு போன்றதும் ஆபரணம் அணிந்துமான கொங்கையை (கொங்கையின் மேலுள்ள கச்சை - ரவிக்கையையும்), இடையில் அணிந்துள்ள மேகலையையும் (இடையணியையும்) தளர்த்திக் குதலை மொழிபேசி, கொடு பணத்தையே என்று ஜாக்கிரதை பண்ணிக், கண்ணைச்சிமிட்டிப் பேசுகின்ற (பொது) மகளிர் தங்களொடு சம்பந்தப் பட்டவர்கள் மேல் -

படிகின்ற (துங்கள் உள்ளங் களித்தே பலவிதமான மாயா லீலைகளைக் காட்டி, இசைப் பாட்டுக்களை நிரம்பப்பாடிக், (காம) ஆசைகள் மேல் கொள்ளும்படியாகப் பாசாங்குகள் செய்து, பின்னர், ஊடித் தங்களுடைய பிணக்கத்தை - மாறுபாட்டை எடுத்துப்பேசும் (வீணிகள்) வீண் ஆனவர்கள், கேடுதரும் வஞ்சகங்கொண்ட

பரத்தைகள், தாழ்வான செய்கையைக் காட்டுகின்ற வஞ்சகப் பேதைமார்கள் (ஆகிய விலைமாதர்களின்) பழிக்கிடமான செயல்களிலே சுழன்று திரிவதற்கே விதிக்கப்பட்டவனான மூடனாகிய எனக்கு மேலான பொருளாய்ப் பொருந்தி அணுகியுள்ள (உனது) திருவடி ஞானம் இதுதான் என்று காட்டும் திருவருளைத் தந்தருளுக.

பெரிய திருக்கரத்தில் தண்டாயுதத்தை எடுத்து சூரர்கள் ஆன வீரர்களை எல்லாம் பொடிபடுத்தி அழிவித்துப் புழுதி எழவும், பொடி எழவும் படியாகச் சின்னா பின்னமாய் உடைத்துப் பந்தடிப்பதுபோல அடித்து, (சூடிய தோரண) தோரணம் சூடிய அலங்காரமாலை சூடிய வீரனே! போர்க்கலையாதிய சகல கலைகளிலும் வல்ல வீரனே!

தகட்டுப் பொன்சுவட்டுப் பூவணை மேடையில்
சமைப்பித் தங்கொருத்திக் கோதில மாமயில்
தனிப்பொற் பைம்புனத்திற் கோகில மாவளி
மணவாளா;

திடத்திற் றிண்பொருப்பைத் தோள்கொடு சாடிய
அரக்கத் திண்குலத்தைச் சூறைகொள் வீரிய
திருப்பொற் பங்கயத்துக் கேசவர் மாயவர்
அறியாமல்-

திமித்தத் திந்திமித்தத் தோவென ஆடிய
சமர்த்தர்ப் *பொன்புவிக்குட் டேவர்க ணாயக
திருச்சிற்றம்பலத்துட் கோபுர மேவிய
பெருமாளே. (31)

## 621. முத்தி பெற

தத்தத் தானன தானன தானன
தத்தத் தானன தானன தானன
தத்தத் தானன தானன தானன தனதான

† அக்குப் பீளைமு ளாவிளை மூளையொ
டுப்புக் ‡ காய்பனி நீர்மயிர் தோல்Xகுடி
லப்புச் சீபுழு வோடடை யார்தசை யுறமேவி-

O அத்திப் பால்பல நாடிகு ழா**யள்வ
ழுப்புச் சார்வல மேவிளை யூளைகொ
ளச்சுத் தோல்குடி லாமதி லேபொறி விரகாளர்;

---

* புவி - இடம். பொன்புவி - பொன்னம்பலம்: பொன்புவி பொன்னுலகு எனலுமாம்.

† அக்குப் பீளை - கண்பீளை.

‡ காய் - புரைகுழல்.

X குடிலப் பூச்சி - வளைவான நாகப்பூச்சி.

O அத்தி - எலும்பு.

** அள் வழுப்பு - காது குறும்பி.

பூவின் புற இதழ்களால் பொன்னடையாளடம் விளங்குவது போன்ற - பூ இதழ்களால் பொன்மயமாய் அமைக்கப்பட்ட (அல்லது, நெருக்கமாய் பொன்மயமாய் அமைக்கப்பட்ட) மலர் அணை மேடையின்மேல் அலங்காரமாய் அமைந்த அந்த ஒப்பற்றவள், குற்றமே இல்லாத சிறந்த மயில் போன்றவள், தனிமையாய் அழகிய, பசுமை வாய்ந்த (தினைப்) புனத்தில் இருந்த குயில் போன்றவள் ஆகிய பெருமை வாய்ந்த வள்ளி நாயகியின் மணவாளனே!

பலத்துடன் திண்ணிய மலைகளை கைகள் கொண்டு வீசி எறிந்த அரக்கர்களின் பலத்த கூட்டத்தைச் (சூறை கொண்ட) சுழற்காற்று வீசுவதுபோல் வீசி அழித்த வீரம் வாய்ந்த (திருப்பொற் பங்கயத்துக் கேசவர்) பொற் பங்கயத்துத் திருக்கேசவர் - அழகிய தாமரை மலரில் வீற்றிருக்கும் லக்ஷ்மிகாந்தர் ஆன (லக்ஷ்மிநாயகர் ஆன) கேசவர், மாயவர் ஆகிய திருமால் உணர்ந்து அறிய மாட்டாத வகையில்.

திமித்தத் தித்திமித்தத் தோ என்று நடனம் செய்த சமர்த்தராகிய கூத்தப் பெருமானுடைய பொன்னம்பலத்தில் தேவர்கள் நாயகனாய் விளங்குபவனே! அல்லது - நடனம் செய்த கர்த்தராகிய நடராஜருக்கும் பொன்னுலகத்துத் தேவர்களுக்கும் நாயகனாய் விளங்குபவனே! திருச்சிற்றம்பலத்துள் கோபுரத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(போதகம் ஈதென அருள்தாராய்)

## 621.

கண்ணிற் பீளை (மூளா) மூளா - மேலெழுதல், (இளை) கோழை, மூளையில் தோன்றி வீங்குகின்ற புரைகுழல், அச்சம் தருகின்ற நீர் (துர்நீர்கள்), மயிர், தோல், வளைவான நாகப்பூச்சி (நாக்குப் பூச்சி), புழு இவையெலாம் அடைந்து நிறைந்த புலால் (ஊன்) இவை பொருந்தப் பெற்று -

எலும்பின் பக்கங்களில் பல நாடிகள், குழாய்கள் காது குறும்பி இவை சேர்ந்து, பலமாக விளைகின்ற ஊத்தைகளை கசுமாலங்களைக் கொண்ட அடையாளங்கள் வாய்ந்த தோலொடு அமைந்த குடிசையாகிய (இவ்வுடலிலே) ஐம்புலன்கள் என்னும் தந்திரக்காரர்கள் -

*சுக்கத் தாழ்கட லேசுக மாமென
புக்கிட் †டாசைபெ ணாசைம ணாசைகள்
தொக்குத் தீவினை யூழ்வினை காலமொ டதனாலே-
துக்கத் தேபர வாமல் சதாசிவ
முத்திக் கேசுக மாக பராபர
சொர்க்கப் பூமியி லேறிட வே‡பத
மருள்வாயே;

தக்கத் தோகிட தாகிட தீகிட
செக்கச் சேகண தாகண தோகண
தத்தத் தானன டீகுட டாடுடு வெனதாளந்-
தத்திச் சூரர்கு ழாமொடு தேர்பரி
கெட்டுக் கேவல மாய்கடல் மூழ்கிட
சத்திக் கேயிரை யாமென வேவிடு கதிர்வேலா;

திக்கத் தோகண தாவென வேXபொரு
Oசொச்சத் தாதையர் தாமென வேதிரு
செக்கர்ப் பாதம தேபதி யாசுதி யவைபாடச்-
செப்பொற் பீலியு லாமயில் மாமிசை
பக்கத் தேகுற மாதொடு சீர்பெறு
தெற்குக் கோபுர வாசலில் மேவிய
பெருமாளே.(32)

## 622. பொதுமாதர் உறவு வரா வகை

தானத் தானன தானன தானன
தானத் தானன தானன தானன
தானத் தானன தானன தானன தனதான

ஆரத் தோடணி மார்பிணை யானைகள்
போருக் காமென மாமுலை யேகொடு
ஆயத் தூசினை மேவிய நூலிடை மடமாதர்-

* சுக்கம் - களவு, ஒதுக்கு.

† ஆசை - பொன்; "பெண் ஆசை மண் ஆசை மூன்றும் நீத்து" -ஆப்பனூர்ப் புராணம் - கடவுள் வாழ்த்து.

‡ பதம் - உபதேசச் சொல்லை அருள்வாயே - எனலுமாம். பதம் - சொல் (பாட்டு 608 பக்கம் 404 பார்க்க)

X பொரு - நடம்பொரு; நடனஞ் செய்கின்ற.

O சொச்சம் - நிர்மலம்.

களவுடன் ஒதுங்கியுள்ளதும் ஆழ்ந்த கடல் போன்றது மான (சமுசார) வாழ்க்கையே சுகமென நினைத்து, அதில் ஈடுபட்டு, ஆசையுடன் (பெண், ஆசை, மண்)- பெண் - (ஆசை - பொன்)- மண் என்னும் மூவாசைகளும் ஒன்று சேர்ந்து, தீவினை ஊழ்வினை இவைகளின் காலக்கொடுமை காரணமாக-

துக்கம் பெருகி வேதனைப்படாமல், எப்பொழுதும் மங்களகரமாயுள்ள முத்தி நிலையிலே சுகமாக எவற்றினும் மேம்பட்டதான சொர்க்கநாட்டில் நான் கரை ஏறும்படி உனது திருவடியைத் தந்தருளுக - (அல்லது - உபதேசம் செய்தருளுக)

தக்கத் தோகிட தாகிட தீகிட... டீகுட டாடுடு என்னும் ஓசை எழுத் தாளங்களின் -

ஒலியைப் பரப்பிச் சூரர்களின் கூட்டத்துடன் (அவர்களுடைய) தேர்களும், குதிரைகளும் அழிபட்டுக் கீழ்நிலையடைந்து கடலில் முழுகும்படி - சத்திவேலுக்கே யாவும் உணவாயின என்று சொல்லும்படியே - செலுத்தின ஒளிவேலனே!

திக்கத் தோகணதா என்று நடனஞ் செய்கின்ற நிர்மல மூர்த்தியாம் உனது தந்தையார் நடராஜப் பெருமானே நீ என்று சொல்லும்படி அழகிய சிவந்த (வலது) திருவடியை (பூமியிற்) பதித்து இசை ஒலிகள் பாட -

செம்பொன் நிறத்தோகை விளங்கும் மயில்மீது பக்கத்திற் (சிவகாமியம்மை போலக்) குறமாது - வள்ளியம்மையுடன் (நடித்துச்) சிறப்புற்றுத் (தில்லையில்) தெற்குக் கோபுர வாசலில் வீற்றிருக்கும் பெருமாளே!

(சதாசிவ முத்திக்கே - பதம் அருள்வாயே)

## 622.

முத்து மாலையோடு ஆபரணங்களைக் கொண்ட மார்பில் இணையாகவுள்ள (இரண்டு) யானைகள் போருக்கெழுந்ததுபோல எழுந்துள்ள பெரிய கொங்கைகளைக் கொண்டவர்களாய், ஆய்ந்து எடுத்த ஆடையை அணிந்துள்ள நூல்போல நுண்ணிய இடையை உடைய அழகிய மாதர்கள் -

ஆலைக் கோதினி லீர மிலாமன
நேசத் தோடுற வானவர் போலுவர்
*ஆருக் கேபொரு ளாமென வேநினை வதனாலே;
காருக் கேநிக ராகிய வோதிய
மாழைத் தோடணி காதொடு மோதிய
காலத் தூதர்கை வேலெனு நீள்விழி வலையாலே-
காதற் சாகர மூழ்கிய காமுகர்
மேலிட் டேயெறி †கீலிகள் ‡நீலிகள்
காமத் தோடுற வாகையி லாவருள் புரிவாயே;
சூரர்க் கேயொரு கோளரி யாமென
நீலத் தோகைம யூரம தேறிய
தூளிக் கேகடல் தூர நிசாசரர் களமீதே-
சோரிக் கேவெகு ரூபம தாவடு
தானத் தானன தானன தானன
சூழிட் டேபல Xசோகுக ளாடவெ பொரும்வேலா;
வீரத் தால்வல ராவண னார்முடி
போகத் தா Oனொரு வாளியை யேவிய
மேகத் தேநிக ராகிய மேனியன் மருகோனே-
**வேதத் தோன்முத லாகிய தேவர்கள்
பூசித் தேதொழ வாழ்புலி யூரினில்
மேலைக் கோபுர வாசலில் மேவிய பெருமாளே. (33)

---

* ஆருக்கே - யாராலே. † கீலிகள் - கீலகிகள்; தந்திரவாதிகள்.

‡ நீலிகள் - நீலிப்பேய் - பாடல் 27- பக்கம் 77 கீழ்க்குறிப்பைப் பார்க்க. Xசோகுகள் - பேய்கள் O ஒருவாளி - ஸ்ரீராமர் ஒரே அம்பு விடுவது - (பாடல் 452 பக்கம் 6 கீழ்க்குறிப்பு) ** பிரமன் முதலான தேவர்கள் பூசித்தது:-

பிரம தேவர் கங்கைக் கரையில் ஒருயாகம் செய்யக் கருதித் தில்லைவாழ் அந்தணர்களையும் தேவர்களையும் அழைத்துவரச் சொல்லி நாரத முனிவரைத் தில்லைக்கு அனுப்பினார் இங்கே பெருமானது ஆனந்த நிருத்தத்தைத் தரிசித்திருக்கும் நாங்கள் இந்த அமுதத்தை விட்டு அங்கே வருவதற்கில்லை எனத் தில்லைவாழ் அந்தணராதியோர் கூற நாரதர் இதைப் பிரமதேவருக்குச் சொல்ல, பிரமதேவர் தாமும் தில்லைக்கு, வந்து திரு நடனத்தைத் தேவர்களுடன் தரிசித்தனர் என்பது தலவரலாறு -

(தொடர்ச்சி 445 ஆம் பக்கம் பார்க்க)

கரும்பாலையிற் (சாறுபோக) கோதாக நிற்கும் சக்கைபோலச் சற்றேனும் ஈரம் (கருணை) யில்லாத மன அன்புடனே உறவு கொண்டவர் போல்பவர், யாரைப் பிடித்தால் (யாரொடு உறவு பூண்டால்) காசு கிடைக்கும் என்ற ஒரு எண்ணத்தையே நினைவாகக் கொண்ட காரணத்தால் -

மேகத்துக்கு ஒப்பான கூந்தலை யுடையவர், பொன்னாலானதோடு என்கின்ற ஆபரணத்தை அணிந்த காதை வந்து மோதுகின்ற காலதூதர்களுடைய கைவேல் போலுள்ள நீண்ட விழிகள் என்கின்ற வலையைக் -

காமக் கடலில் முழுகிய காமிகள் மீதிற்பட்டு அவர்கள் அதிற்சிக்கும்படி எறிகின்ற தந்திரவாதிகள், நீலி என்னும் பேய்போல நடிக்க வல்லவர்கள் - அத்தகைய பொது மாதர்களின் மீது காமங்கொண்டு (உறவாகை) ஆசைப்படுதல் இல்லாத வழியை அருள்புரிவாயாக;

சூரர்களை அழிப்பதற்கே எனத் தோன்றிய ஒரு சிங்கம்போல, நீலக் கலாபம் கொண்ட மயில்மேல் ஏறி, புழுதியால் கடல் நிரம்பி தூர்ந்துபோக - மறைய, அசுரர்களின் போர்க்களத்தே -

ரத்தமே ஒரே ரூபமாய் - ரத்தமயமே விளங்க (அடு) போர் புரிந்து, தானத் தானன தானன தானன என்று (பாடி)ச் சூழ்ந்துகொண்டு பல பேய்க் கூட்டங்கள் ஆடிக் கூத்தாடச் சண்டை செய்த வேலனே!

வீரத்தில் வல்லவனான ராவணனுடைய தலை அற்றுவிழ ஒரு அம்பைச் செலுத்தின, மேகமொத்த உருவத்தனான திருமேனியை உடைய திருமாலின் மருகனே!

பிரமன் முதலான தேவர்கள் பூசைசெய்து தொழுது வாழும் புலியூரில் (சிதம்பரத்தில்) மேலைக் கோபுர வாசலில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அருள் புரிவாயே)

---

*(444 - ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

*"..... மலரவனும் ஆர் அழலாடு*
*நிலையம் வணங்கா நிழல்சிவ கங்கா தர நீறார்*
*தலைவ புயங்கா பரண இரங்காய் தக என்றான்"*

*- (கோயிற் புராணம் - நடராசச் சருக்கம் 62)*

## 623. காம நோயிற் படாவகை

தானத் தான தத்த தானத் தான தத்த
தானத் தான தத்த தனதான

காதைக் காதி மெத்த மோதிக் கேள்வி யற்ற
காமப் பூச லிட்டு மதியாதே-
காரொத் தேய்நி றத்த வோதிக் காவ னத்தி
னீழற் கேத ருக்கி விளையாடிச்;
சேதித் தேக ருத்தை நேருற் றேபெ ருத்த
சேலொத் தேவ ருத்தும் விழிமானார்-
தேமற் பார வெற்பில் மூழ்கித் தாப மிக்க
தீமைக் காவி தப்ப நெறிதாராய்;
மாதைக் காத லித்து வேடக் கான கத்து
வாசத் தாள் சிவப்ப வருவோனே-
வாரிக் கேயொ ளித்த மாயச் சூரை வெட்டி
மாளப் போர்தொ லைத்த வடிவேலா;
வீதித் தேர்ந டத்து தூளத் தால ருக்கன்
வீரத் தேர்ம றைத்த புலியூர்வாழ்-
மேலைக் கோபு ரத்து மேவிக் கேள்வி மிக்க
வேதத் தோர்து தித்த பெருமாளே. (34)

## 624. ஞானம் பெற

தய்ய தானத் தானன தானன
தய்ய தானத் தானன தானன
தய்ய தானத் தானன தானன தனதான

கொள்ளை யாசைக் காரிகள் பாதக
வல்ல மாயக் காரிகள் சூறைகள்
கொள்ளும் ஆயக் காரிகள் வீணிகள் விழியாலே-

## 623.

காதை வெட்டுவதுபோல அதிகமாக (அந்தக் காதின்மேல்) மோதி, (கேள்வியில் இல்லாத) கேட்டறியாத காமப்போரை விளைத்து - யாரையும் மதியாமல் -

மேகத்தை ஒத்து நிகர்க்கும் நிறத்தை உடைய கூந்தலென்னும் சோலைக் காட்டின் நிழலிலே களிப்புற்று விளையாடி

(தன்னைக் கண்டவர்களுடைய) கருத்தைச் (சேதித்து)- அழித்து, ஒழுங்குடனே பெரிதாக விளங்கிச், சேல்மீன் போன்று (ஆடவர்களை) வருத்துகின்ற கண்ணை உடைய பெண்களின்

தேமல் பரந்துள்ள கனத்த மலைபோன்ற (கொங்கையில்) முழுகிக், காம ஆசை மிக்க கொடுமையினின்றும் (என்னுடைய) ஆவி பிழைக்கும்படியான வழியைத் தந்தருளுக.

(வள்ளிப்) பெண்மீது ஆசைவைத்து வேடர்கள் வாழும் காட்டகத்தில் நறுமணம் வீசும் (உனது) திருவடி சிவப்பச் சென்றவனே! (அல்லது, காட்டகத்தில் வாசம் செய்தவளாகிய (அவள்) உனது காமப்பேச்சுக்களைக் கேட்டுக் கோபிக்க வந்தவனே!)

கடலில் ஒளித்த மாயத்தில் வல்ல சூரனை (மாமரத்தை) வெட்டி அவன் மாளும்படி போர்செய்து முடித்த கூர்வேலனே!

வீதியில் தேர் செல்லுவதால் எழும் தூசியால் சூரியனுடைய வீரத்தேர் மறைபடுகின்ற **புலியூரில்** (சிதம்பரத்தில்) விளங்கும்

**மேலைக் கோபுரத்தில்** வீற்றிருந்து, கேள்வி ஞானம் மிக்க வேதம் வல்லவர்கள் துதிக்கின்ற பெருமாளே!

(தீமைக் காவி தப்ப நெறி தாராய்)

## 624.

பேராசை கொண்டவர்கள், பாபச் செயல்கள் செய்யவல்ல மாயக்காரிகள், சூறைக் காற்றப்போல கொள்ளையடிக்கும் (ஆயக்காரிகள்) தோழியர் கூட்டத்தினர் அல்லது ரகசியத் (தொழிலினர்), பயனற்றவர்கள் (தமது) கண்களாற்

கொல்லும் லீலைக் காரிகள் யாரையும்
வெல்லு மோகக் காரிகள் சூதுசொல்
கொவ்வை வாய்நிட் டூரிகள் மேல்விழு
மவர்போலே;

உள்ள *நோவைத் தேயுற வாடியர்
† அல்லை நேர்ஓப் பாமன தோஷிகள்
உள்வி ரோதக் காரிகள் மாயையி லுழல்நாயேன்

உய்ய வேபொற் றோள்களும் ஆறிரு
கையு நீபத் தார்முக மாறுமுன்
உள்ள ஞானப் போதமு நீதர வருவாயே;

‡ கள்ள மாயத் தாருகன் மாமுடி
துள்ள நீலத் தோகையின் மீதொரு
கையின் வேல்தொட் டேவிய சேவக முருகோனே-

Xகல்லி லேபொற் றாள்பட வேயது
நல்ல ரூபத் தேவர கானிடை
கௌவை தீரப் போகுமி ராகவன் மருகோனே;

---

* நோவைத்து - நோவ வைத்து.

† 'உள்ளம் புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள் இதயமே போன்ற திரா' - நளவெண்பா - சுயம்வர 113.

‡ கள்ள மாயப்போர் செய்வதில் வல்லவன் தாரகன் - என்பது அவன் வீரவாகுவுடனும் முருகவேளுடனும் செய்த போர்த்திறத்திற் காணலாம். கந்தபுராணம் - தாரகன்வதை 80, 81, பார்க்க.

"மாயைகள் ஆற்றியே மறைந்து நின்றுநான்
ஏயென இயற்றுவன் அமர் என் றெண்ணினான்" (ஷை - 173)

X அகலிகை கல்லுரு எய்திய வரலாறு:- பாடல் 379 பக்கம் 458 பார்க்க.

அகலிகையை - "விலைமகள் அனைய நீயும்
கல்லிய லாதி என்றான் கருங்கலாய் மருங்கு வீழ்வாள்"
அகலிகை இந்தச் சாபம் எப்போது நீங்கும் என வணங்கிக் கேட்க -
"தசரத ராம னென்பான்
கழல்துகள் கதுவ இந்தக் கல்லுருத் தவிர்தி என்றான்"
- கம்ப ராமா அகலிகை 79-80.

(தொடர்ச்சி 449 ஆம் பக்கம் பார்க்க.)

கொல்கின்ற லீலைகள் செய்பவர், யாரையும் மயக்க வல்லவர் சூதான சொற்களைப் பேசும் கொவ்வைக்கனி போன்ற வாயை உடைய பொல்லார்கள், மேலே விழுபவர்போல (வெளியன்பு பாராட்டி)

மனத்தை நோவச்செய்து உறவாடுபவர்கள், இருட்டுக்கு ஒப்பான மனக்குற்றம் உடையவர்கள், உள்ளே பகைமை எண்ணம் கொண்டவர்கள், அத்தகைய பொதுமாதர்களின் மாயைச் சூழலிற் சுழல்கின்ற அடியேன் -

உய்யவே (பிழைக்கும்படி) உனது அழகியதோள்களும், பன்னிரு கையும், கடப்பமாலையும், திருமுகங்கள் ஆறும், முன்னதாக நான் தியானிக்க ஞான அறிவை நீ எனக்குத் தருவதற்கு வந்தருளுக.

கள்ளத் தனமும் மாயையும் நிரம்பிய தாரகாசுரனுடைய பெரிய தலை அற்றுவிழ, நீலமயில் மேலே விளங்கி, ஒப்பற்ற கைவேலைச் செலுத்தி அனுப்பின பராக்கிரமம் வாய்ந்த முருகனே!

கல்லின்மீது அழகிய திருவடி பட்டவுடனே அந்தக் கல் நல்ல ரூபத்துடன் (பெண் உருவாய்) வரக் காட்டிடையே (அகலிகைக்கு உற்ற (கௌவை) துன்பம் (அல்லது பழிச்சொல்) நீங்கச்சென்ற ஸ்ரீராமபிரானது மருகனே!

---

*(448 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

அகலிகை நிரபராதி என்று சுழியற் புராணம் கூறும்;
'குறைவிலா உனது வடிவினின் வந்தான்
'குலிசனென் றறிந்திலேன் இசைந்தேன்,
கறையிலா எனது மனநிலை ஐய
நாடொறுங் கண்டுளே தெளிந்து,
பொறையுட னதற்குத் தக்க செய்யாமல்
இகழ்ந்து கல் லாகெனப் புகன்ற
அறிவிலா முனியே யிக்கொடுஞ் சாபம்
அகல்வ தெந் நாளெனும் அளவில்

*** தசரத ராமன் கால்துகள் படக் கன்னியாய்.... வருவை எனலும் கல்லாய் வீழ்ந்தனள்" - சுழியற் புராணம் - கௌதம 9, 10.

*தென்னி †யேமுற் ‡நீரமு னோதிய
சொல்வ ழாமற் றானொரு வானுறு
செல்வி மார்பிற் பூஷண மாயனை மணவாளா-
தென்னு மேனற் சூழ்புன மேவிய
Xவள்ளி வேளைக் காரம னோகர
தில்லை மேலைக் கோபுர மேவிய
பெருமானே. (35)

## 625. அடியாருடன் சேர

தான தானன தனனா தானன
தான தானன தனனா தானன
தான தானன தனனா தானன தனதான

தாது மாமலர் Oமுடியா லேபத
றாத நூபுர அடியா லேகர
தாள மாகிய நொடியா லேமடி பிடியாலே-
சாடை பேசிய வகையா லேமிகு
வாடை பூசிய நகையா லேபல
தாறு மாறுசொல் மிகையா லேயன நடையாலே-
மோதி மீறிய முலையா லேமுலை
மீதி லேறிய கலையா லேவெகு
மோடி நாணய **விலையா லேமயல் தருமானார்

---

* தேவசேனை முருகவேளை நோக்கி - வள்ளியின் வரலாறு யாது என வினவ - முருகவேள்-

நீங்கள் இருவரும் திருமாலிடத்தே தோன்றினவர்கள், பன்னிரண்டு ஆண்டு எம்மை மணக்க வேண்டித் தவஞ் செய்தீர்கள். அப்போது யாம் 'ஒருவர் விண்ணிலும் ஒருவர் மண்ணிலும் தோற்றுவீர். பின்னர் உங்களை யாம் மணம் செய்வோம் என்று கூறினோம். நீ தேவர்கோன் மகளாய் வளர்ந்தனை. யாம் முன்னர்க் கூறியவாறே உன்னை முதலில் மணஞ் செய்துகொண்டேம். உனது இளையாளாகிய வள்ளி வேடர்பால் வளர்ந்தனள். இவளைப் பின்னர் 'அந்தமில் மாயைகள் ஆற்றியதற்பின்" மணம் செய்து கொண்டேம் என விளக்கமாகக் கூறினார் - கந்தபுராணம் 6-24-237-255. (பாடல் 435- பக்கம் 590 கீழ்க்குறிப்பும் பார்க்க)

† ஏமுற்று - ஏமம் உற்று- இன்பமுற்று.

‡ ஈரம் முன் ஓதிய சொல்-அன்பினாலே முன்செய்த வாக்குத் தத்தம்.

(தொடர்ச்சி 451 ஆம் பக்கம் பார்க்க)

ஆய்ந்து இன்பமுற்று அன்பினாலே முன் செய்த வாக்குத் தத்தம் தவறாமலே, ஒப்பற்ற விண்ணுலகில் வளர்ந்த செல்வி தேவசேனையை மார்பிலே ஆபரணம் போல அணைந்த மணவாளனே!

நன்கு விளங்கின தினைவளர் புனத்திலே இருந்த வள்ளிக்கு வேலைக்காரனாய் (காவற்காரனாய்) விளங்கின அழகனே, தில்லை மேலைக் கோபுரத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(ஞானப் போதமும் நீ தர வருவாயே)

## 625.

மகரந்தப் பொடிகள் தங்கிய நல்ல மலர்கள் தங்கும் தங்கள் ((முடியாலே) கூந்தலாலும், ஒழுங்குபெற நடக்கும் சிலம்பணிந்த பாதத்தாலும், கரம்கொண்டு தாளம் இடுகின்ற ஒலியாலும், வருபவர்களுடைய மடியைப்பிடித்து தம் வசப்படுத்துவதாலும் -

ஜாடையாகப் பேசும் வழக்க வகையாலும், மிக்க வாசனைகளைப் பூசிக்கொண்டு சிரிக்கும் சிரிப்பாலும், பல தாறுமாறான பேச்சுக்கள் பேசும் செருக்காலும், அன்ன நடைபோன்ற நடையாலும் -

முன்னே தாக்கி மேலெழுந்த கொங்கையாலும் அந்தக் கொங்கை மேல் உள்ள ஆடையாலும், பல (மோடி) விதமான (நாணயம்) நேர்மையை (வெளிக்) காட்டும் (விலையாலே) மதிப்பினாலே (கௌரவம்)- பெருமிதத்தாலும் காம மயக்கம் தருகின்ற மாதர்களின் -

---

(450 -ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)

X வேளைக்காரன் - பாடல் 167 -பக்கம் 387 பார்க்க.

"வேளைப்படி உரிய பணியைச் செய்யும் பணியாளன்" எனவும் பொருள்படும்.

O இந்தப் பாட்டில் முதல் இரண்டு அடிகளில் "முடியாலே, அடியாலே, நொடியாலே" எனவும் "வகையாலே, நகையாலே, மிகையாலே" எனவும் வருகின்ற வழி எதுகைகளின் அழகு கண்டு களிக்கத்தக்கன.

** விலை - மதிப்பு - விலையுடை அருந்தமிழ் மாலை" -சம்பந்தர் 3-4-11.

மோக வாரிதி தனிலே நாடொறு
மூழ்கு வேனுன தடியா ராகிய
மோன ஞானிக ளுடனே சேரவு மருள்வாயே;
*காத லாயருள் புரிவாய் நான்மறை
மூல மேயென வுடனே மாகரி
காண நேர்வரு திருமால் நாரணன் மருகோனே-
காதல் மாதவர் வலமே சூழ்சபை
நாத னார்தம திடமே வாழ்† சிவ
காம நாயகி தருபா லாபுலி சையில்வாழ்வே;
‡ வேத நூன்முறை வழுவா மேதினம்
வேள்வி யாலெழில் புனை Xமூ வாயிர
மேன்மை வேதியர் மிகவே பூசனை புரிகோவே-

---

* திருமால் கஜேந்திரனைக் காத்த வரலாறு - பாடல் 110 பக்கம் 162 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† சிவகாம சுந்தரி - நடராஜப் பெருமானது திருக்கூத்தை அருகில் (இடது பக்கத்தில்) இருந்து கண்டு களிக்கும் தேவி......

'பரமசிவன் ஆனந்த நடத்தின் வைத்த அருட்
கண்ணாளைச் சீரணிகொள் பொழிற் றில்லைச்
சிவகாம சுந்தரியைச் சிந்தை செய்வாம்'

- (பிரமோத்தர காண்டம்)

"மன்றின் அவனிடத்தில் வாழும் சிவகாமசுந்தரியைச் சிந்தை செய்வாம்" (குளத்தூர்ப் புராணம்)

‡ இந்த அடி தில்லைவாழ் அந்தணர்களுடைய சிறப்பை எடுத்து ஓதுகின்றது. இந்த ஓரடிதான் என் தந்தையார் வ.த. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் திருப்புகழ் ஏடுகளைத் தேடி வெளியிடுவதற்குக் காரணமாயிருந்தது.

1871 வருடத்தான் என் தந்தையாருக்குத் திருப்புகழ் அச்சிட வேண்டும் என்ற எண்ணம் முதல் முதல் உதித்தது. சிதம்பரம் தீக்ஷிதர்கள் ஒரு விவாதத்தில் தங்கள் பெருமையைக் காட்ட இந்தத் திருப்புகழ் அடியைக் கொண்ட "தாதுமாமலர் முடியாலே" என்னும் இப்பாடலைச் சான்றாக எடுத்துக் காட்டினதாகவும், இப்பாடலின் தேனொழுகும் இனிமை தன் மனத்தை மிக்குங் கவர்ந்து திருப்புகழில் தனக்கு ஆசை உண்டு பண்ணிற்று என்றும், இத்தகைய அற்புதப் பாடல்கள் பதினாறாயிரம் அருணகிரிநாதர் பாடியிருக்க ஓராயிரமேனும் கிடைத்து அச்சிட்டால், தான் எடுத்த ஜன்மம் பலன் பட்டதாகும் எனக் கருதினேன் என்றும், எந்தையார் என்னிடம் கூறினார் - (அருணகிரிநாதர் நூலாராய்ச்சி பக்கம் 28, 29- கீழ்க் குறிப்பு)

( தொடர்ச்சி பக்கம் 453.)

ஆசைக் கடலிலே நாள்தோறும் முழுகுகின்ற நான் உன்னுடைய அடியாராகிய மௌன ஞானிகளுடனே சேர்ந்து ஒழுகும்படி அருள் புரிவாயாக;

" அன்புவைத்து அருள்புரிவாயாக; நான்கு மறைகளுக்கும் மூலப்பொருளே! " என்று (கஜேந்திரன் கூறி அழைக்க) உடனே அந்த யானை காணும் வண்ணம் நேரே எதிர்வந்து உதவின திருமாலாம் நாராயணனுடைய மருமகனே!

அன்புவைத்த மகாதவசிகள் வலம் வந்து வணங்கிச் சூழும் கனகசபையிற் கூத்தப்பிரானுடைய இடதுபாகத்தில் வாழ்கின்ற சிவகாமி நாயகி பெற்ற குழந்தையே! புலியூர் (சிதம்பரத்தில்) வாழும் பெருமானே!

வேதநூலிற் சொல்லிய முறைப்படியே, தவறுதலின்றி, நாள்தோறும், யாகங்கள் - ஆராதனைகள் - செய்யும் ஒழுக்க அழகைக்கொண்ட மூவாயிரர் என்னும் பெருமை வாய்ந்த அந்தணர்களால் மிக நன்றாகப் பூசனை புரியப்படும் தலைவனே!

---

தில்லைவாழ் அந்தணரின் மேன்மை - சிவபெருமானே யாமும் அவர்களின் 'ஒருவன்' என்றதனாற் பெறப்படும். பாடல் *611* பக்கம் *414-415* கீழ்க்குறிப்பைப் பார்க்க; "அறுபதிற் றாகிய ஐம்பதிற்று முனிவருள் ஒருவனென்றிசைத்த இருபிறப்பாள!"..... சிதம்பர மும்மணி - *23*. மேலும் திருஞானசம்பந்தர் இவர்களைச் சிவ சாரூபத்தினராக (கணநாதர்களாக) இருக்கக்கண்டு வணங்கித் தமது பதிகத்தில் -

"நீலத்தார் கரியமிடற்றார், நல்ல நெற்றிமே லுற்ற கண்ணினார், பற்று சூலத்தார், சுடலைப்பொடி நீறணிவார், சடையார், சீலத்தார் தொழுதேத்து சிற்றம்பலம் '- எனப் புகழ்ந்து பரவியுள்ளார். *(3-1-3)*; தாம் கண்ட கோலத்தைத் திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாருக்கும் காட்டி அருளினார்-

"அண்டத்திறைவர் அருளால் அணிதில்லை முண்டத் திருநீற்று மூவாயிரவர்களும், தொண்டத் தகைமைக் கணநாதராய்த் தோன்றக், கண்டப் பரிசுபெரும் பாணர்க்குங் காட்டினார்'

- (பெரிய புராணம் - திருஞான *-170*)

"தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்"

- சுந்தரர் - *7-39-1*

"அரியானை அந்தணர்தம் சிந்தையானை - அப்பர் *6-1-1*.

(தொடர்ச்சி *454* ஆம் பக்கம் பார்க்க)

*வீறு சேர்வரை யரசாய் மேவிய
மேரு மால்வரை யெனநீள் **கோபுர**
**மேலை** வாயிலின் மயில்மீ தேறிய
பெருமாளே.(36)

## 626. அன்பு பெற

தனத்தத் தானன தானன தானன
தனத்தத் தானன தானன தானன
தனத்தத் தானன தானன தானன தந்ததான

எலுப்புத் தோல்மயிர் நாடிகு ழாமிடை
இறுக்குச் சீபுழு வோடடை மூளைகள்
இரத்தச் சாகர நீர்மல மேவிய கும்பியோடை

---

* மேருமலை போன்ற கோபுரமாதிய கட்டுவித்தான் இரணிய வர்மன் என்பது -

'மேருவினேர்பல கோலிய சோழேசன்' என வருவதாலும், சிற்சபை, ஆலயம் முதலிய அவன் சமைப்பித்தான் என்பது - "திரு அம்பல மொன்று செயப் பெற்றான்", "மூல இறைக்கும் பொற்றன்மயமா மொளிராலயமொன்று சமைப்பித்தான" "இன்னவகை திருப்பணிகள் பலவுஞ் செய்த இரணியவர்மனை முநிவர் யாரும் ஏத்தி"- என வருவனவற்றாலும் அறிக - (கோயிற் புராணம் திருவிழா 13,14,17,18).

---

*(453 - ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

'எல்லைகாண்டற் கரிய இறைவனிவர் தம்மில் யான் ஒருவன் என்னும், தொல்லைமா மரபுடையோர் மன்றுடையான் அருச்சனையாற் றூய்மை பூண்டோர், மல்லவா கமவிதியும் மகச்சடங்கும் மாமறையும் வரம்பு கண்டோர், தில்லைமூ வாயிரமா முநிவரருட் பதங்கருதிச் சிறந்து வாழ்வாம் - சிதம்பர புராணம் - பாயிரம் 9.

தில்லைவாழ் அந்தணர்களுக்கு இருக்கையும் மேருமலை போன்ற எழுநிலை மாளிகைகளையும், தேர்வரிசைகள் திருக்கோயில் கோபுரங்கள் - கனக சபை - முதலிய யாவும் செய்வித்து அந்தணர்களைக் கொண்டு திருவிழாவும் நடத்திவைத்த மகாதவசி "இரணியவன்மன்" (பாடல் 611- பக்கம் 414 கீழ்க்குறிப்பு) கௌடதேச அரசாட்சியைத் தம்பியர்க்குக் கொடுத்து இவன் தில்லையிலேயே திருக்கூத்தைத் தரிசிக்க விரும்பினதால் - இவனை வியாக்ரபாதர் சோழராஜனாக்கிப் புலிக்கொடியையும் தந்தார்.

" புலிப்பதி காவல் புரப்பாயென். றந்தமில் முந்து புலிக்கொடி யங்கை அசுத்துய்த்து... அண்ணல் பாதம் இரண்டும் எடுத்தவன் முச்சி பரிப்பித்தான்" கோயிற்புரா திருவிழா 67 (தொடர்ச்சி பக்கம் 455)

பொலிவு பொருந்திய மலையரசாக விளங்கும் மேரு என்னும் பெருமை வாய்ந்த மலைபோல உயர்ந்துள்ள கோபுரத்தின் மேலை வாயிற்புரத்தில் மயில்மீது ஏறிய வண்ணம் விளங்கும் பெருமாளே!

*(அடியாராகிய மோன ஞானிகளுடனே சேரவும் அருள்வாயே)*

## 626.

எலும்பு, தோல், மயிர், நாடி, குழாக்களின் நெருக்கம், அல்லது நாடிகளின் கூட்ட நெருக்கம் உள் அழுந்தியுள்ள சீ (சீழு), புழு, இவையுடன் பொருந்தியுள்ள மூளைகள், ரத்தக்கடல், நீர், மலம் இவையெலாம் உள்ள சேற்றுக் குளத்தில் *(அல்லது - மண் பாத்திரத்தில்)*-

---

**சூரியனுக்கு இரண்டு குமாரர்கள் "மனு, இயமன்" எனத் தோன்றினர். வெளிப்படப் பாவஞ் செய்தவரைத் தண்டிக்க மனுவும், வெளிப்படாமற் பாவஞ் செய்தவரை நரகத்தில் தண்டிக்க இயமனும் சிவபிரானால் நியமிக்கப்பட்டனர். மனு பூமியில் கௌட தேசத்தில் இருந்து ஆண்டார். நான்கு மனுக்கள் ஆண்டபின் ஐந்தாவது மனுவுக்கு பிறந்த பிள்ளை இரணியவர்மன். மனுவின் வழித்தோன்றலாக இவன் இருந்ததாலும், வியாக்ரபாதரால் சோழேசனாக ஆக்கப்பட்டதாலும் அருணகிரியார் இவனை 611-ஆம் பாடலில் "மநுநெறியுடன் வளர் சோணாடர்கோன்' எனக் குறிப்பித்தார். ஆதலால் அப்பாடலில் 'சோணாடர்கோன்' என்பது ஐயமின்றி இரணியவர்மனே. இவன் வியாக்ரபாதருடனும் பதஞ்சலியாருடனும், தேவர்களுடனும் தில்லையில் திருகூத்தைத் தரிசித்திருந்தானாதலால் - "மவுலியில் அழகிய பாதாள லோகனும்** மநுநெறியுடன் வளர்சோணாடர் கோனுடன் உம்பர்சேரும் மகபதி புகழ் புலியூர் வாழும் நாயகர்" என 611-ஆம் பாடலில் விளக்கம் தரப்பெற்றுளது.

X 'மூவாயிரவர் பூசனை புரிகோவே' என்றும், 611 ஆம் பாடலில் "திருதருகலவி மணாளா" - வள்ளி நாயகனே என்றும் 'திரிபுரம் எரிசெய்த கோவே' - நடராஜப் பெருமானே என்றும் கலம்பகமாகக் கூறப்பட்டதால் - அருணகிரியார்க்கு நடராஜரே முருகனாகவும், முருகனே நடராஜராகவும் சற்றேனும் பேதமின்றித் தரிசனம் தரப்பட்டது என்பது வியந்து போற்றத்தக்கதொரு நிலையாம் என்க.

இளைப்புச் சோகைகள் வாதம் விலாவலி
உளைப்புச் சூலையொ டேவலு வாகிய
இரைப்புக் கேவல மூலவி யாதியொ டண்டவாதங்;

குலைப்புக் காய்கனல் நீரிழி வீளையொ
டளைப்புக் காதடை கூனல்வி சூசிகை
குருட்டுக் கால்முட முமையு ளூடறு கண்டமாலை-

குடிப்புக் கூனமி தேசத மாமென
எடுத்துப் பாழ்வினை யாலுழல் நாயெனு
னிடத்துத் தாள்பெற ஞான சதாசிவ
அன்புதாராய்;

கெலிக்கப் போர்பொரு சூரர்கு ழாமுமி
ழிரத்தச் சேறெழ தேர்பரி யாளிகள்
கெடுத்திட் டேகடல் சூர்கிரி தூள்பட கண்டவேலா-

கிளர்ப்பொற் றோளிச ராசர மேவியெ
யசைத்துப் பூசைகொள் ஆயிப ராபரி
*கிழப்பொற் காளைமெ லேறு† மெ நாயகி
பங்கின்மேவும்;

‡ வலித்துத் தோள்மலை ராவண னானவன்
எடுத்தப் போதுடல் கீழ்விழ வேசெய்து
மகிழ்ப்பொற் பாதசி வாயந மோஅர சம்புபாலா-

மலைக்கொப் பாமுலை யாள்குற மாதினை
அணைத்துச் சீர்புலி யூர்பர மாகிய
வடக்குக் கோபுர வாசலில் மேவிய
தம்பிரானே. (37)

---

*கிழமை பொன் காளை - உரிமையாகிய அழகிய காளை.

† எ நாயகி - எம் - நாயகி - எம்முடைய பிராட்டி.

‡ ராவணன் கயிலையை எடுத்த வரலாறு:
- பாடல் 188-பக்கம் 440 கீழ்க்குறிப்பு.

சோர்வு, ரத்தக் குறைவுகள், வாயு மிகுதலாகிய பிணி, பக்கவலி வயிற்று உளைவு (குடைச்சல் நோய்), (சூலை) திருகுவலி குன்ம நோய்வகை, பலத்த மூச்சு வாங்குகை, இழிவான மூலநோய் - விரைவாதம் - குடலிறக்கம்-

நடுக்குவாதம், காய்கின்ற நெருப்புப் போன்ற சுரம், நீரிழிவு, கோழையின் கலப்பு, காதடைப்பு (செவிட்டுத் தன்மை), கூன், (உடற்கூன் - வளைவு), (விசூசிகை) - வாந்திபேதி நோய், குருட்டுத்தன்மை, கால் முடமாயிருத்தல், ஊமை (பேசவராமை), உள் பக்கத்தே அறுத்துச் செல்கின்ற கண்டமாலை (கழுத்தைச் சுற்றிவரும் புண்)-

இத்தகைய நோயெலாம் குடிபுகுந்து, கேடு செய்கின்ற இந்த வாழ்க்கையே நிலையானதென்று உடலெடுத்து - பாழ்படுத்தும் வினையீடாகத்திரிகின்ற - அடியேனாகிய நான் - உன்னுடைய திருவடியைப் பெற - ஞானமயமானதும் எப்போதும் மங்களகரமானதுமான அன்பைத் தந்தருளுக. - (அல்லது ஞானநிலை முத்தியில் அன்புதந்தருளுக) - அல்லது - ஞான சதாசிவ மூர்த்தியே! அன்புதந்தருளுக.

வெற்றி பெறவேண்டிப் போர்புரிந்த சூரர்களின் கூட்டம் கக்கும் ரத்தச்சேறு பெருக, தேர், குதிரை, யாளிகள் இவையெலாம் அழிபட்டுக் கடலும், சூரனும், எழுகிரியும் தூள்படும்படி செய்த வேலனே!

விளங்குகின்ற அழகிய தோள்களை உடையவள், அசைபொருள், அசையாப்பொருள் இவை இரண்டினும் கலந்தும். ஆட்டுவித்தும் பூஜை பெறுகின்ற ஆயி (தாய்), பரம்பொருளானவள், (தனக்கு) உரிமையான அழகிய எருதின்மேல் ஏறும் எம்முடைய பிராட்டி - பார்வதியின் - பாகத்தில் இருக்கும் - (சம்பு பாலா!)

வன்மையுடன் ஆட்டி அசைத்துத் தனது தோள் கொண்டு (கயிலை) மலையை ராவணனானவன் எடுத்த பொழுது அவனுடைய உடல் கீழே விழும்படி செய்து மகிழ்ந்த அழகிய திருவடியை உடைய 'சிவாயநம' என்னும் ஐந்தெழுத்துக்கு மூலப்பொருளான சிவசம்புவின் குமரனே! மலைபோன்ற கொங்கைகளை உடைய குறமாது வள்ளியை அணைத்துப் பெருமை வாய்ந்த புலியூரில் (சிதம்பரத்தில்) சிரேஷ்டமாய் விளங்கும் வடக்குக் கோபுர வாசலில் வீற்றிருக்கும் தம்பிரானே!

(ஞான சதாசிவ அன்புதாராய்)

## 627. சிவபதம் பெற

தான தானன தான தானன
தான தானன தான தானன
தான தானன தான தானன தனதான

நீல மாமுகில் போலும் வார்குழ
லார்கள் மாலைகு லாவ வேல்கணை
நீள வாள்விழி பார்வை *காதிரு குழையாட-
நீடு மார்பணி யாட வோடிய
கோடு போலிணை யாட நூலிடை
நேச† பாளித சோலை மாமயி லெனவேகிக்;
காலி னூபுர வோசை கோவென
ஆடி மால்கொடு நாணி யேவியர்
காய மோடணு பாகு பால்மொழி விலைமாதர்-
காத லாயவ ரோடு பாழ்வினை
மூழ்கி யேழ்நர காழு மூடனை
‡காரிர் பாருமை யாசி வாபத மருள்வாயே;
கோல மாமயி லேறி வார்குழை
யாட வேல்கொடு வீர வார்Xகழல்
கோடி கோடிடி யோசை போல்மிக Oமெருதாளாய்க்-
கோடு கோவென ஆழி **பாடுகள்
தீவு †† தாடசு ரார்கு ழாமொடு
கூள மாகவி ணோர்கள் வாழ்வுற விடும்வேலா;
நாலு ‡‡ வேதமு டாடு வேதனை
யீன் கேசவ னார்ச கோதரி
நாதர் பாகம்வி டாள்சி காமணி உமைபாலா-

---

* காதுதல் - வெட்டுதல். † பாளிதம் - பட்டுப் புடைவை; 'பாளிதசேலை' என்றார்- 725-ஆம் பாடலில். ‡காரிர் - காத்தருளீர் - காத்தருளும்.

X கழலின் ஒலி கோடி கோடி இடி ஓசை:- "பிள்ளைத்திரு அரையிற் கிண் கிணி ஓசை பதினாலுலகமும் கேட்டதுவே" கந்தர் அலங். 93.

O மெரு - மேரு "நிபுடமுடி நெடியகிரி எந்தமைக்கா எனவும் நிகழ்கின்ற துங்க நெடுவேல்" -வேல் விருத்தம் 9. ** பாடு - இடம். †† தாடு -வலிமை. -'தாடுடைய தருமனார் தமர்செக்கி லிடும் போது' - சுந்தரர் - 90 - 9.

‡‡ வேதம் ஊடாடு - வேதம் பயின்ற.

## 627.

கருமை மிக்க மேகம்போன்ற நீண்ட கூந்தலை உடையவர்கள் (அல்லது - கூந்தலில் நிரம்ப மதுவுடைய) மாலை விளங்க, வேல் - அம்பு - போல நீண்ட ஒளி பொருந்திய கண்பார்வைகள் சென்று வெட்டுவதுபோற் பாயும் இரண்டு (காதிற்) குழைகள் அசைய,

அகன்ற மார்பில் ஆபரணங்கள் அசையப் பரந்துள்ள மலைபோல இரண்டு (கொங்கைகள்) அசைய, நூல்போன்ற நுண்ணிய இடையில் தமக்கு இஷ்டமான பட்டுப் புடைவையுடன் - சோலையில் உலவும் அழகிய மயில்போலச் சென்று-

காலில் உள்ள சிலம்பின் ஓசை 'கோ' என ஒலிக்க ஆடி, மோகத்துடன் நாணம் (வெட்கம்) கொண்டு, வியர்வை (வேர்வை) கொண்ட (காயமோடு) தேகத்துடன், (அணு) அண்ணு - பாகு (பாகு அண்ணு) சர்க்கரையின் உருகிப் பொருந்திய பால்போன்ற, சொற்களை உடைய விலைமாதர்களாகிய (பொது மகளிராகிய)-

(காதலாய் அவரோடு) அவரோடு ஆசை பூண்டவனாய், பாழ்படுத்தும் வினையிலே முழுகி, ஏழு நரகுகளிலும் ஆழ்ந்துவிழும் மூடனாகிய என்னைக் காத்தருளும் ஐயா! கண்பார்த்தருளும் ஐயா! சிவபதம் தந்தருளுக.

அழகிய, பெருமைவாய்ந்த மயில் மீதேறி, நீண்ட குழைகள் (காதில்) ஆட, வேல்கொண்டு, வீரம் பெரிதுள்ள கழல்கள், கோடி கோடிக் கணக்கான இடிகள் ஒலி செய்வதுபோல மிக்கொலிக்க - மேருமலையும் பொடிபட்டுத் தூளாகச்-

சிகரங்கள் கோ என்று, விழாகடல் (பாடுகள்) இடங்களும், (தீவுகள்) தேசங்களும், (தாடு) வலிமைகொண்ட அசுரர் கூட்டங்களோடு (கூளமாக) குப்பையாக - அழிந்தொழிய - (விண்ணோர்கள்) தேவர்கள் வாழ்வுபெற்று விளங்கச் செலுத்தின வேலனே!

நான்கு வேதங்களையும் பயின்றுள்ள பிரமனைப் பெற்று திருமாலின் சகோதரி, (சிவ) பெருமானது (இடது) பாகத்தை விடாதவள், சிகாரத்னம் போன்ற உமாதேவி - ஆகிய பார்வதி குமாரனே!

*ஞான பூமிய தான பேர்புலி
யூரில் வாழ்தெய்வ யானை மானொடு
நாலு கோபுர வாசல் மேவிய பெருமாளே.(38)

## 628. முத்தி பெற

தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன
தான தத்ததன தான தத்ததன தந்ததான

வாத பித்தமொடு சூலை விப்புருதி
யேறு கற்படுவ னீளை பொக்கிருமல்
† மாலை புற்றெழுத லூசல் ‡ பற்சனியொ
Xடந்திமாலை-

மாச டைக்குருடு காதடைப்பு செவி
டூமை கெட்டவலி மூல மெுற்றுதரு
**மாலை யுற்ற††தொணு றாறு தத்துவர்க
ளுண்டகாயம்;

வேத வித்துபரி கோல முற்றுவிளை
யாடு வித்தகட லோட மொய்த்தபல
வேட மிட்டுபொரு ளாசை பற்றியுழல்
‡‡ சிங்கியாலே-

---

*ஞானபூமி - புலியூர் - என்றார். - "சிவஞானப் பூமித்தேன் புலியூர்" என்றார் 639 - ஆம் பாடலிலும். தில்லையிற் பெருமானது. நடனம் ஞானநடம்; சபை - ஞானசபை; இதுவே பொற்சபை, பொன்னம்பலம் -'ஞானமணி அம்பலத்தில் நாடகங் கண்டிறைஞ்சு நெறி நல்காய்' சிதம்பர புராணம் - திருச்சிற்றம் - 109. "சின்மயமாம் மன்று இரண்மய மொன்றுண்டு அது சேரப் பொன் மயமாகும் புலியினர் காணும் பொழுதென்றான்" - கோயிற்புரா - நடராச-42.'நாத புராதன ஞானவரோதய ஞான நடம்புரியும் பாத நிராமய' - சிதம்பர புரா - நியமச் - 19. † மாலை - கண்டமாலை. ‡பற்சனி - பதின்மூன்று வகைப்பட்ட சன்னிநோய் - அவைதாம் - கண்டகுப்சம். சிம்பகம், தாந்திரிகம், பக்கின நேத்திரகம், ருக்தாகம், சிஃகுலிகம், பிரலாபம், அந்தகம், இரத்தஷ்டீவி, சித்தவிப்பிரமம், சீதாங்கம் கர்ணிகம், அபின்னியாசம் சீவரட் சாமிருதம் - 22) X அந்திமாலை - மாலைக்கண் மெுற்று தரு - முதிரும்படியான விருக்ஷம்.

** மாலை யுற்ற - முறைமையாகப் பொருந்திய. †† 96 தத்துவங்கள் - பாடல் 157 - பக்கம் 366 - கீழ்க்குறிப்பு.

‡‡ சிங்கியாலே - அழிசெயலாலே.

ஞானபூமியாகிய பேர்பெற்ற **புலியூரில்** - சிதம்பரத்தில் வாழ்கின்ற தெய்வயானையொடும் - மான் (வள்ளி) யொடும் (அல்லது - தெய்வயானை ஆகிய மான் போன்றவளுடன்) நாலு கோபுர வாயில்களிலும் வீற்றிருக்கின்ற பெருமாளே!

*(சிவபாதம் அருள்வாயே)*

# 628.

வாதம் (வாயுமிகுதலால் ஆயபிணி), பித்தம், சூலை நோய் (வயிற்று உளைவு), (விப்புருதி) - புண்கட்டி வளர்கின்றதும், கல் போன்றதுமான ஒருவகைப் புண்கட்டி (சிலந்திநோய்) -கிரந்திப்புண் - கோழை, குத்திருமல், கண்டமாலை, புரை வைத்த புற்றுப்புண், (உடல்) (மனம்) தடுமாற்றம், (அல்லது ஊசி - பதனழிந்து - அழுகிப்போதல்) பலவித சன்னிநோய் (அல்லது பல் வேதனை காரணமாய் வந்த ஜன்னி), மாலைக்கண்-

அழுக்கு அடைவதால் வந்த குருடு (கண்ணிற் பூ விழுதல்), காது அடைப்பினால் வந்த செவிட்டுத் தன்மை, ஊமை, கெட்ட வலி நோய்கள், மூலநோய், - இத்தகைய நோய்கள் முதிர்கின்ற மரம் அனைய இந்த உடல், முறைமையாகப் பொருந்திய தொண்ணூற்றாறு தத்துவங்கள் இடம் பெறுகின்ற உடல்,

(வேதவித்து) கடவுள் (பரிகோலம்) பரிக்கின்ற - பாதுகாக்கின்ற திருக்கோலத்தைப் பூண்டு விளையாட்டாக ஆட்டுவிக்கின்ற கடலிடைத் தோணி (போல அலைப்புறும் உடல்). சூழ்கின்ற பலவிதமான வேஷங்களைப் பூண்டு, பொருளாசை கொண்டு திரிகின்ற (விஷம்போன்ற) அழிசெயலாலே-

வீடு கட்டிமய லாசை பட்டுவிழ
*வோசை கெட்டுமடி யாமல் முத்திபெற
†வீட ளித்து ‡மயி லாடு சுத்தவெளி சிந்தியாதோ;
Xஓத அத்திமுகி லோடு சர்ப்பமுடி
நீறு பட்டலற சூர வெற்பவுண
ரோடு பட்டுவிழ வேலை விட்டபுக ழுங்கிவேலா
ஓந மச்சிவய சாமி சுத்த அடி
யார்க ளுக்குமுப காரி பச்சையுமை
ஓர்பு றத்தருள்சி காம ணிக்கடவுள் தந்தசேயே
ஆதி Oகற்பகவி நாய கற்குபிற
கான பொற்சரவ ணா**ப ரப்பிரம
னாதி யுற்றபொருள் ††ஓது வித்தமைய றிந்தகோவே-
ஆசை பெற்றகுற மாதை நித்தவன
மேவி சுத்தமண மாடி நற்புலியு
ராடக கப்படிக கோபு ரத்தின்மகிழ்
தம்பிரானே.(39)

---

* ஓசை கேட்டு - உள்ளோசையாகிய நாதம் போய். † வீடளித்து - வீடளிக்க.

‡ மயிலாடு வெளி - ஆடுமயில் வெளி- பிரணவ மந்திரத்தால் பெறத்தகு வெளி- 'ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே' திருமந்திரம் 2676; சுத்த வெளி - 'உருவிலாத பாழில் வெட்ட வெளியிலாடு நாத நித்த உனது ஞானபாத பத்மம்' திருப்புகழ் 442. 'வெட்ட வெளியினில் என்னை விடுத்துச்சும்மா இரு என்றோன்" மயிற்பத்து.

X ஓத அத்தி - ஓதத்தையுடைய கடல். ஓதம் - திரை; "கடல் ஓதம் வந்துலவும் ஒற்றியூர்" - சுந்தரர் - VII 54-3

O கற்பகவிநாயகர் - சிதம்பரத்தில் மேற்குக் கோபுர வாயிலில் வீற்றிருக்கும் விநாயக மூர்த்தியின் பெயர் - பாடல் 591 - பக்கம் 356-கீழ்க்குறிப்பு. ** பரப்பிரம அனாதி.

†† ஓதுவித்தமை - ஓது விக்குந் தன்மை: மூலப்பொருள் இன்ன தென்று அறிந்திலன் பிரமன் என்று அவனைச் சிறையிலிட்டனையே உனக்கு அப்பொருள் கூற வருமோ எனத் தந்தையார் முருகவேளைக் கேட்டபொழுது - தம்மாற் கூறமுடியும் என்றும், தந்தையார் ரகசியமாகத் தாய்க்கு (பார்வதிக்கு) உபதேசித்தபொழுது தாம் தாயின் கூந்தலில் ஒரு வண்டாக இருந்து அந்த ரகசிய உபதேசத்தை உணர்ந்ததாகவும் முருகவேள் கூறின வரலாறு இங்கு உணர்த்தப் பட்டது:-

'ஓமென உரைக்குஞ் சொல்லின் உறுபொருள் உனக்குப் போமோ
போமெனில் அதனை யின்னே புகலென இறைவன் சொற்றான்;
முற்றொருங் குணரும் ஆதி முதல்வகேள் உலக மெல்லாம்
பெற்றிடும் அவட்கு நீ முன் பிறருண ராத வாற்றல்' (தொடர்ச்சி 463)

வீடுகட்டி, காமமயக்க ஆசையிற் பட்டு, வீழ்ந்து, உள்ளோசையாகிய நாதம்போய் (அல்லது கீர்த்தி அழிந்து) இறந்துபோகாது, முத்தி பெறுவதான வீட்டை அளிக்க - (மயிலாடு சுத்தவெளி) நீ மயில்மீது நிர்த்தனஞ் செய்கின்ற வெட்ட வெளியான - பரமானந்த நிலையைப் பெற - என் உள்ளம் சிந்திக்காதோ - (தியானிக்காதோ)!

(ஓதம்) திரையுள்ள கடல், மேகங்கள், ஆதிசேடனுடைய முடி, இவையெலாம் பொடிபட்டுக் கலங்க, சூரனும், எழுகிரியும், அங்கிருந்த அசுரர்களுடனே அழிந்து விழும்படி கடலிற் செலுத்தின புகழ்வாய்ந்த நெருப்பன்ன வேலாயுதத்தைக் கொண்டவனே!

ஓம் நமசிவய - என்னும் பிரணவத்தொடு கூடிய ஐந்தெழுத்துக்கு மூலப்பொருளாய கடவுள் பரிசுத்தமான அடியார்களுக்கு உபகாரம் செய்பவர், பச்சை உமை தமது ஒரு பாகத்தில் இருந்து அருள் சுரக்கும் சிகாமணித் தெய்வமாகிய சிவனார் பெற்ற குழந்தையே!

முதலிற் றோன்றிய கற்பக விநாயகர்க்குப் பின் தோன்றிய அழகிய சரவண மூர்த்தியே! பரப்பிரமன் முழுமுதற் கடவுளாகிய (சிவன்) ஆதியாயுள்ள மூல மந்திரப் பொருளை ஓதுவிக்கும் தன்மை எவ்வண்ணம் என்று தெரிந்திருந்த தலைவனே!

உன் ஆசையைப் பெற்ற (பாக்கியவதியான) குறவள்ளியைத் தினந்தோறும் தினைவனத்துக்குச் சென்று பரிசுத்தமான வகையில் திருமணம் புரிந்து நல்ல **புலியூர்** க்ஷேத்திரத்தில் பொன்னும் பளிங்கும்போல (அழகு) அமைந்த கோபுரத்தில் மகிழ்ந்து மேவும் தம்பிரானே!

(முத்திபெற மயிலாடு சுத்தவெளி சிந்தியாதோ)

---

சொற்றதோர் இனைய மூலத் தொல்பொருள் யாருங் கேட்ப
இற்றென இயம்ப லாமோ மறையினால் இசைப்ப தல்லால்.
என்றலும் நகைத்து மைந்த எமக்கருள் மறையின் என்னாத்
தன்றிருச் செவியை நல்கச் சண்முகன் குடிலை யென்னும்
ஒன்றொரு பதத்தின் உண்மை உரைத்தனன்...' கந்தபுரா. 1-17-37-9

**வண்டாக இருந்து உணர்ந்தார் என்பது:-**

"முன்பொரு நாள், நின் உருவம் கோடலானன்றே நெடு வேலான் முன்னிய வேதம் முழுதறிந்தான்" - கச்சியானந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது - 363-4 ஆதலால் - குமர குருபரரும் 'எந்தாயின் கொங்கலர் மைக்குழல் வாழ் பொறி வண்டே?" என்றார்.

- (முத்துக்குமார பிள்ளைத்தமிழ் - செங்கீரை 10)

## 629. அகப்பொருள் - மாலைபெற

தனந்தத்த தனதான தனந்தத்த தனதான
தனந்தத்த தனதான தனதான

சுரும்புற்ற பொழில்தோறும் விரும்புற்ற *குயில்கூவ
துரந்துற்ற குளிர்வாடை யதனாலுந்-
துலங்குற்ற மருவாளி விரைந்துற்ற படி†யால
தொடர்ந்துற்று வருமாதர் வசையாலும்;
அரும்புற்ற மலர்மேவு செழுங்கொற்ற அணையாலு
மடைந்திட்ட விடைமேவு மணியாலும்-
அழிந்துற்ற மடமானை யறிந்‡தற்ற மதுபேணி
அசைந்துற்ற மதுமாலை தரவேணும்;
கருங்கொற்ற Xமதவேழ முனிந்துற்ற Oகலைமேவி
கரந்துள்ள மடமானி னுடனேசார்-
கரும்புற்ற வயல்சூழு **பெரும்பற்ற புலியூரில்
களம்பற்றி நடமாடு மரன்வாழ்வே
இருந்துற்று மலர்பேணி யிடும்பத்தர் துயர்தீர
இதம்பெற்ற மயிலேறி வருகோவே-
இனந்துற்ற வருசூர னுருண்டிட்டு விழவேல்கொ
டெறிந்திட்டு விளையாடு பெருமாளே.(40)

---

*குயில், வாடை, மன்மதன் அம்பு, மாதர் வசைச்சொல், மலரணை - விடையின் மணி - இவை காமங் கொண்டார்க்குத் துன்பம் தரும் - பாடல் 218-பக்கம் 53-கீழ்க்குறிப்பு. "செழுந்தென்றல் அன்றில் இத் திங்கள் கங்குல் திரைவீரை தீங்குழல் சேவின்மணி, எழுந்தின் றென்மேல் பகையாட" - திருவிசைப்பா 2-5. "ஏற்றின் கண்டத்திற் கட்டுங் கதிர்மணிக்கிங் கென்கோலோ பைந்தொடியார் செய்த பகை" - சிதம்பரம் செய்யுட் கோவை 19. † ஆல - சேர. ‡ அற்றம் - சமயம்.

X கணபதியின் உதவியால் வள்ளியை முருகவேள் அடைந்தது.
- பாடல் 606 - பக்கம் 400 கீழ்க்குறிப்பு.

கயாசுரன் என்னும் யானை சிவபிரானை எதிர்த்து வந்தபோது தேவி பார்வதி பயந்தது - பாடல் 286-பக்கம் 210 கீழ்க்குறிப்பைப் பார்க்க "மடவரல அஞ்சு வந்த கரி - சம்பந்தர் I-79-4.

O கலை - காலை.

** வியாக்ரபாதர் பெரும்பற்றுவைத்துச் சிவனது நடனத்தைத் தரிசித்திருந்த தலம் பெரும்பற்றப் புலியூர்.

# 629.

வண்டுகள் உள்ள சோலைகள் தோறும் அச் சோலைகளை விரும்பி அங்கே அடைந்துள்ள குயில்கள் கூவுதலாலும், வெளிப்பட்டு வீசும் குளிர்ந்த வாடைக் காற்றாலும்

விளங்கிவரும் வாசனை மலர்களாம் (மன்மதனது) பாணங்களாகிய மலர்கள் வேகமாக வந்து மேலே பட்டுச் சேர்வதாலும், (என்னைப் பின்) தொடர்ந்து வருகின்ற பெண்களின் வசைப் பேச்சாலும்-

அரும்பு நிலையில் மலர்களால் ஆய செழுமை வாய்ந்த (காமன் தனது) வீரத்தைக் காட்டுதற்கு இடமான படுக்கையாலும், தத்தம் வீடுகளைச் சேர்ந்தடைய வரும் மாடுகளின் கழுத்திற் கட்டியுள்ள மணி ஓசையாலும்-

(மனம்) அழிந்துள்ள மடமானாகிய இப் பெண்ணின் நிலையை அறிந்து சமயம் பார்த்து விரும்பி உன் மார்பில் அசைந்தாடும் தேன் நிறைந்த புதிய மலர் மாலையைத் தந்தருள வேண்டுகின்றேன்;

*கரிய, வீரம்வாய்ந்த, மதவேழம் (கணபதியாகிய) மதயானை கோபத்துடன் வந்து எதிர்த்த அந்த சமயத்தில், தன்னை நாடி தன் பின் ஒளிந்து அடைக்கலம் புகுந்த மடமானாகிய வள்ளியுடனே சார்ந்த (வாழ்வே!) (அல்லது) கரிய, வீரம் வாய்ந்த, (மதவேழம்) கயாசுரன் என்னும் யானை கோபித்து வந்தபோது, (பயந்து) வந்து தன்பின் ஒளிந்துநின்ற மடமானாகிய பார்வதியுடனே சார்ந்த அரனுடைய குமாரனே!

கரும்புகள் வளரும் வயல்கள் சூழ்ந்துள்ள பெரும்பற்றப் புலியூராகிய சிதம்பரத்தில் இடமாகப் பொன்னம்பலத்தைக் கொண்டு திருநடம் ஆடுகின்ற சிவனது வாழ்வே! (குமாரனே)!

இருந்து பொருந்தி மலர்களை விரும்பியிட்டுப் பூசிக்கும் பக்தர்களுடைய துயரம்தீர, இன்பம் தரும் மயில்மீது ஏறி வருகின்ற தலைவனே !

சுற்றத்தார் நெருங்க வந்த சூரன் உருண்டு புரண்டு விழ, வேல்கொண்டு வீசி எறிந்து விளையாடும் பெருமாளே!

(மதுமாலை தரவேணும்)

---

*இங்கு விளக்கியவாறு முருகவேள், சிவபிரான் இருவர்க்கும் பொருந்துமாறு இவ் வடிகள் அமையும் அழகு குறிக்கற்பாலது.

## 630. புகழ் (பெற) திருச்

தனந்தத் தத்தன தானன தானன
தனந்தத் தத்தன தானன தானன
தனந்தத் தத்தன தானன தானன தனதான

இணங்கித் தட்பொடு பால்மொழி பேசிகள்
மணந்திட் டுச்சுக மாய்விளை யாடிகள்
*இளஞ்சொற் செப்பிகள் சாதனை வீணிகள் கடிதாகும்-
இடும்பைப் பற்றிய தாமென மேயினர்
பெருஞ்சொற் பித்தளை தானும்வை யாதவர்
இரும்பிற் பற்றிய கூர்விழி மாதர்கள் எவரேனும்;

பணஞ்சுற் றிக்கொளு பாயவு தாரிகள்
மணங்கட் டுக்குழல் வாசனை வீசிகள்
† பலஞ்செப் பித்தர மீளழை யாதவர் அவரோடே-
பதந்துய்த் துக்கொடு தீமைய மாநர
கடைந்திட் டுச்சவ மாகிவி டாதுன
பதம்பற் றிப்புக ழானது கூறிட அருள்வாயே;

வணங்கச் சித்தமி லாதஇ ராவணன்
சிரம்பத் துக்கெட வாளிக டாவியெ
மலங்கப் ‡ பொக்கரை யீடழி மாதவன் மருகோனே-
மதம்பட் டுப்பொரு சூரபன் மாதியர்
குலங்கொட் டத்திகல் கூறிய மோடரை
வளைந்திட் டுக்கள மீதினி லேகொல விடும்வேலா;

பிணம்பற் றிக்கழு கோடுபல் கூளிகள்
பிடுங்கிக் கொத்திட வேயம ராடியெ
பிளந்திட் டுப்பல மாமயி லேறிய முருகோனே-

---

*இளமை - தாழ்வு (சூடாமணி நிகண்டு)

† பலம் - பொன்

‡ பொக்கர் - பொய்மையுடைய இராக்கதர்.

## 630.

மனம் ஒருமித்து குளிர்ந்த பால்போன்ற சொற்களைப் பேசுபவர்கள், கூடினபின் சுகமாய் விளையாடுபவர்கள், தாழ்வான மொழிகளைச் சொல்பவர்கள், தாம் சொன்னதையே சாதிக்கும் பயனிலிகள் - கடுமையான -

துன்பம் பீடித்தவர்போல இருப்பவர்கள், பெரிய வார்த்தைகளைப் பேசிப் பித்தளை சாமான்களைக்கூட (வந்தவரிடம்) வைக்காதவர்கள் (பித்தளை சாமான்களைக்கூட கவர் பவர்கள்), இரும்பாலாய (வேல்) போன்ற கூரிய கண்களை உடைய மாதர்கள். யாராயிருந்த போதிலும் - (அவரிடம்)

பணம் கவர்ந்துகொள்ளும் தந்திரம்வல்ல (உதாரிகள்) மேம்பாடு உடையோர்கள், நறுமணம் கூடியதாய்ப் பின்னிக் கட்டியுள்ள கூந்தலினின்றும் வாசனை வீசச் செய்பவர்கள், பொன்னைக் (கொடுக்கின்றேன் என்று) சொல்லித் தர - (சொல்லித் தருமளவும்) மறுபடி (தமது வீட்டுக்கு) அழையாதவர்கள் - ஆகிய பொதுமகளிரோடு -

(பதம்) இன்பத்தை அனுபவித்துக் கொண்டு, கொடிய பெரிய நரகத்தை அடைந்து, பிணமாகி விடாமல் உனது திருவடியைப் பற்றி உனது திருப்புகழைக் கூற அருள்புரி வாயாக.

வணங்குதற்கு மனம் இல்லாத ராவணனுடைய பத்துத் தலைகளும் அற்றுவிழ அம்பைச் செலுத்தி மனங் கலங்கப், பொய்யை உடைய ராக்ஷதர்களின் வலிமையை அழித்த திருமாலின் மருமகனே!

ஆணவங்கொண்டு சண்டைசெய்த சூரபன்மன் ஆதியோரைத் (தங்கள்) குலப்பெருமை பேசிக் (கொட்டத்து) இறுமாப்புடன் பகைமைப் போர் சொல்லி வந்த மூடரைச் சூழ்ந்து வளைந்துப் போர்க்களத்திலே இறந்து போம்படி செலுத்தின வேலாயுதனே!

பிணத்தைப் பற்றிக் கழுகுகளுடன் பல பேய்கள் பிடுங்கிக் கொத்தி உண்ணும்படி போர்செய்து (பகைவர்களைப்) பிளந்தழித்து பலம் (வன்மை) கொண்ட சிறந்த மயிலில் ஏறிய முருகனே!

பிரிந்திட் டுப்பரி வாகிய ஞானிகள்
*சிலம்பத் தக்கழல் சேரவெ நாடிடு
பெரும்பற் றப்புலி யூர்தனில் மேவிய
பெருமாளே (41)

## 631. கதி, மதி பெற

தனந்தத் தத்தன தானன தானன
தனந்தத் தத்தன தானன தானன
தனந்தத் தத்தன தானன தானன தனதான

†விடுங்கைக் கொத்தக டாவுடை யானிட
மடங்கிக் ‡கைச்சிறை யானஅ நேகமும்
விழுங்கப் பட்டற வேயற லோதியர் விழியாலே

விரும்பத் தக்கன போகமு மோகமும்
விளம்பத் தக்கன ஞானமு மானமும்
Xவெறுஞ்சுத் தச்சல மாய்வெளி யாயுயிர்
விடுநாளில்;

இடுங்கட் டைக்கிரை யாயடி யேனுடல்
கிடந்திட் டுத்தம ரானவர் கோவென
இடங்கட் டிச்சுடு காடுபு காமுன Oமனதாலே

**இறந்திட் டுப்பெற வேகதி யாயினும்
இருந்திட் டுப்பெற வேமதி யாயினும்
இரண்டிற் றக்கதொ ருதியம் நீதர இசைவாயே;

---

* சிலம்பு அத்த கழல் சேர - சிலம்பையும் பொன்னாற் செய்யப் பட்ட வீரக்கழலையும் அணிந்த திருவடிகளைச் சேர - அத்தம் - பொன்.

† விடும் கைக்கு ஒத்த கடா - ஏறி நடத்துவதற்கு ஏற்ற எருமைக்கடா.

‡ கைச் சிறையான - கைவசத்தி லிருந்த.

X வெறும் சுத்த சலமாய் - வெறும் பொய்யாகி.

O மனதாலே இறந்திட்டு - மனோலயம் உற்று - மனம் அழிந்து "மனம் பாழ்படுக்கும் மலர்ப்பூசனை செய்து வாழ்வார்" சம்பந்தர் 2-116-7.

** இந்த அடி மனப்பாடஞ் செய்யத்தக்க வேண்டுகோளைக் கொண்டது.

பிரிந்திருந்து அன்பு நிறைந்திருந்த ஞானிகள் சிலம்பையும் பொன்னாற் செய்யப்பட்ட வீரக் கழலையும் அணிந்த (உனது) திருவடிகளைச் சேர விரும்பி வருகின்ற பெரும்பற்றப் புலியூரில் வீற்றிருக்கின்ற பெருமாளே!

(புகழானது கூறிட அருள்வாயே)

## 631.

(விடுங்கைக்கு ஒத்த) ஏறி நடத்துவதற்கு ஏற்ற எருமைக்கடாவை உடைய யமன் வசத்தே அடங்கிக், கை வசத்திலிருந்த அனேகம் பொருள்களும் (அறலோதியர் விழியாலே அறவே விழுங்கப்பட்டு) கருமணல்போலக் கறுத்த கூந்தலை உடைய பொதுமாதர்களின் கண்களாலே அடியோடு (விழுங்கப்பட்டு) கவரப்பட்டு -

விரும்பி அடையத் தக்கனவான போகங்களும் - ஆசைகளும், புகழத்தக்கனவான அறிவும் பெருமையும் - வெறும் முழுப் பொய்யாகி - (உயிர் வெளியாய்விடு நாளில்) உயிர் வெளிப்பட்டு போகின்ற அந்த நாளில் - (இறந்து போகின்ற நாளிலே)-

(அடியேன் உடல் இடுங்கட்டைக்கு இரையாய்) அடியேனுடைய உடலானது (சுடுகாட்டில்) அடுக்கப்படும் விறகுக் கட்டைகளுக்கு உணவாகிக் கிடக்கும்போது, சுற்றத்தார்கள் 'கோ' என்று கதறக், கிடக்கும் இடத்திற் (பாடையிற்) கட்டிச் சுடுகாட்டுப் ப்ரதேசத்தில் போவதற்கு முன்னே - என் மனமானது -

(இறந்திட்டு) லயம் அடைந்து அதனால் (கதியாயினும் பெறவே) நற்கதி அடையும் பலனைப் பெறவாவது, அல்லது உலகில் இருக்கும் போது நல்ல (மதி) அறிவைப் பெறவாவது - இந்த இரண்டில் தகுந்ததான லாபமான வரத்தை நீ எனக்குக் கொடுப்பதற்கு இசைந்தருள வேண்டும் (ஒப்புக்கொள்ள வேண்டுகின்றேன் - (அல்லது - ஊதியம் நீதர மனதாலே இசைவாயே) லாபத்தை நீ தருவதற்கு (உனது) மனதாலே (திருவுள்ளம்) கொண்டு இசைந்தருளுக.)

*கொடுங்கைப் பட்ட † மராமர மேழுடன்
நடுங்கச் சுக்ரிவ னோடம ராடிய
குரங்கைச் செற்றும கோததி தூளெழ நிருதேசன்-
குலங்கட் பட்டநி சாசரர் கோவென
இலங்கைக் குட்டழ லோனெழ நீடிய
‡ குமண்டைக் குத்திர ராவண னார்முடி அடியோடே
பிடுங்கத் தொட்டச ராதிப னாரதி
ப்ரியங் Xகொட் டக்கநன் மாமரு காஇயல்
Oப்ரபஞ்சத் துக்கொரு பாவல னாரென விருதூதும்-
ப்ரசண்டச் சொற்சிவ வேதசி காமணி
ப்ரபந்தத் துக்கொரு நாதச தாசிவ
பெரும்பற் றப்புலி யூர்தனில் மேவிய
பெருமாளே.(42)

## 632. பொதுமாதர் மீதுள்ள மயக்கு அற

தந்தன தானன தானத்தம்
தந்தன தானன தானத்தம்
தந்தன தானன தானத்தம் தனதான

**கொந்தள வோலைக ளாடப்பண்
சங்கொளி போல்நகை வீசித்தண்
கொங்கைகள் மார்பினி லாடக்கொண்
டையென்மேகம்-

* கொடுங்கை - கொடுமை. † மராமரம் - வாலி அழிபட்டது பாடல் 231- பக்கம் 78 கீழ்க்குறிப்பு:- "மராமரம் - ஏழும் எய்த வலத்தினான்" - பெரிய திருமொழி 1-8-5. "வாலியைக் கொன்று அரசு இளைய வானரத்துக் களித்தவனே" - பெருமாள் திருமொழி 8-7.

‡ குமண்டை - செல்வமேலீட்டா லுண்டாகுஞ் செருக்கு.

X கொட்டக்க - கொள்ளத்தக்க

O சம்பந்தரது பெருமையைக் காட்டும் விருது ஊதுதல் - "காளம் - வையம் ஏழுடன் மறைகளும் நிறைதவத் தோரும் உய்ய ஞானசம்பந்தன் வந்தான் என ஊத" "திருச்சின்னம்;"- "பாலறாவாயன் வந்தா னெனப் பிடிக்க"

தாரை - "மாமறை முதற் கலை அகிலமும் ஓதா துணர்ந்த முத்தமிழ் விரகன் வந்தானென ஊத" ஆர்கலியின் கிளர்ச்சி யெனச் சங்குதாரை அளவிறந்த பல்லியங்கள் முழக்கி யார்த்துப் பார்குலவு தனிக் காளம் சின்னமெல்லாம் பரசமய கோளரிவந்தா னென் றூத'- பெரிய புராணம் திருஞானசம்பந்தர் 221-3, 904. (தொடர்ச்சி பக்கம் 471 பார்க்க)

கொடுமைக்கு இடமான மராமரம் ஏழுடனே, சுக்கிரீவன் நடுங்கும்படி அவனோடு போர்செய்த குரங்காகிய வாலியை அழித்து, கடல் தூள்படும்படி அரக்கர் தலைவனுடைய -

குலத்தைச் சார்ந்த அரக்கர்கள் எல்லாம் "கோ" என்று அச்ச முற்று ஒலிட, இலங்கை நகருள் அக்கினி பகவான் எழுந்து வேலை செய்ய (தீப்பற்ற)ப், பெருத்த செல்வ மேலீட்டால் உண்டான செருக்கும், வஞ்சகமும் கொண்ட ராவணனுடைய தலைகள் அடியோடு -

பிடுங்கப்படும்படி செலுத்தின அம்பைக் கொண்ட மேலோனான இராமபிரான் (திருமால்) அதிக அன்பு கொள்ளத்தக்க நல்ல சிறந்த மருமகனே! இயற்றமிழ் ஆதிய வழங்கும் (முத்தமிழ் வழங்கும்) தென்னாட்டுக்கு ஒப்பற்ற கவிராஜன் என வெற்றிச் சின்னங்கள் ஊதும்

வீரம் வாய்ந்த பதிகங்களை ஓதிய சிவவேத சிகாமணியாகிய (சம்பந்த) மூர்த்தியே! நூல்வகைகளுக்கெல்லாம் தலைவனே! என்றும் மங்களகரமானவனே! **பெரும்பற்றப் புலியூரில் வீற்றிருக்கும் பெருமாளே!**

(ஊதியம் நீ தர இசைவாயே)

## 632.

தலைமயிர்ச் சுருளின் கீழ் காதோலைகள் அசைய சீரான சங்கின் ஒளிபோல பற்களின் (ஒளியை) வீசிக், குளிர்ந்த கொங்கைகள் மார்பிடத்தே அசைய, கொண்டை என்கின்ற (கறுத்த) மேகமும் -

---

(470 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

** கொந்தள ஓலை - இந்தப் பாடலிலும் 976- ஆம் பாடலிலும் வரும் "கொந்தள ஓலை" என்பது "கொந்திள ஓலை" என்றிருத்தல் வேண்டும். 'கொந்திள ஓலை - தளிர்க் கொத்தோடு கூடிய இள ஓலை - (கொந்து - கொத்து. இள ஓலை - குருத்தோலை) ஓலை - ஓர் காதணி. பனை ஓலைச் சுருள் போன்ற பொன் அணி. செந்தமிழ் vi-300-301.

*கொங்கெழு தோள்வளை யாடக்கண்
செங்கயல் வாளிகள் போலப்பண்
கொஞ்சிய கோகில மாகப்பொன் பறிகாரர்;

தந்திர மாமென வேகிப்பொன்
தொங்கலொ டாரமு மாடச்செந்
தம்பல வாயொடு பேசிக்கொண் டுறவாடிச்-

சம்பள மீதென வோதிப்பின்
பஞ்சணை மேல் † மய லாடச்சஞ்
சங்கையில் மூளியர் பால்வைக்குஞ் செயல்தீராய்;

‡ அந்தக னாருயிர் போகப்பொன்
திண்புர மோடெரி பாயப்பண்
டங்கச னாருடல் வேகக்கண் Xடழல்மேவி-

அண்டர்க ளோடட லார்தக்கன்
சந்திர சூரியர் வீழச்சென்
றம்பல மீதினி லாடத்தன் குருநாதா;

சிந்துர மோடரி தேர்வர்க்கம்
பொங்கமொ டேழ்கடல் சூர்பத்மன்
சிந்திட வேல்விடு வாகைத்திண் புயவேளே-

செங்குற மாதுமி னாளைக்கண்
டிங்கித மாயுற வாடிப்பண்
செந்தமிழ் மால்புலி யூர்நத்தும் பெருமாளே.(43)

---

* கொங்கு - வாசனை.

† மயலாடு அச்சம் சங்கை இல் மூளியர் எனப்பிரிக்க.

‡ யமன், திரிபுரம், மன்மதன், தக்கன் - இவர்களைச் சிவபிரான் அட்டது - பாட்டு - 399, பக்கம் 510 கீழ்க்குறிப்புக்களைப் பார்க்க.

X அழல்மேவி - தக்கன் செய்த யாகத்தினிடத்திற் சென்று. கண்டு - அழல். கண் - தழல் - எனவும் பிரிக்கலாம்.

வாசனையை, எழுப்பி வீச, கையில் வளையல்கள் ஒலிக்க, கண்ணானது செவ்விய கயல்மீன் போலவும், அம்புகள் போலவும் (விளங்க), இசை கொஞ்சும் குயிலென விளங்கிப் பொன்காசுகளைப் பறிக்கின்றவர்கள் -

தந்திரச் செயல்களுடன் சென்று பொன்மாலையும் பொன் ஹாரமும் (கழுத்தில்) அசைய, சிவந்த வெற்றிலை உண்ட வாயுடன் பேசியிருந்து (அத்தான் என்னும்) உறவு முறை கொண்டு கொஞ்சிப்பேசி -

(தனக்குக் கொடுக்கவேண்டிய) தொகை இன்னதென்று நிச்சயித்துப் பேசிப், பின்பு பஞ்சு மெத்தையின்மேல், காம மயக்கப் பேச்சைப் பேசும் (மூளியர்), (அச்சம்) பயமும், (சங்கை) ஐயுறவு - சந்தேகமும் இல்லாத மூளியர் - (உறுப்புக் குறையினர்)- அறிவிலிகளிடத்தே (அன்பு) வைக்கும் குணச்செயலை ஒழித்தருளுக.

யமனுடைய அரிய உயிர் அழிந்து போகவும், பொலிவு நிறைந்திருந்த வலிய திரிபுரங்கள் எரிபாய்ந்து அழியவும், முன்பு மன்மதனுடைய உடலம் வெந்து விழவும் (கண்டு) தமது திறத்தைக் காட்டி, (அழல்மேவி) தக்கன் செய்த யாகத்தினிடத்திற் சென்று (அல்லது - மன்மதனுடைய உடல் வேகும்படி கண் தழல்மேவி - நெற்றிக்கண் நெருப்பை மேவுவித்து - செலுத்தி )-

தேவர்களுடன் வன்மை வாய்ந்த தக்கனும், சந்திர சூரியர்களும் பங்கப்பட்டு விழச்செய்து போய் அம்பலத்தின் மீதே ஆடு அத்தன் - கூத்தாடின பெருமான் - சிவனுக்குக் குருநாதனே!

யானையுடன், (அரி) குதிரை - அல்லது சிங்கம் தேர்க் கூட்டங்களின் மிகுதி - எழுச்சியுடன், ஏழ்கடலும் - சூரபத்மனும் அழிபட வேலாயுதத்தைச் செலுத்தின வெற்றி வாய்ந்த திண்ணிய புயங்களைக் கொண்ட வேளே!

செவ்விய குறமாது ஆகிய வள்ளி மின்னாளை (மின்னல் போல ஒளிவீசும் அழகியைப்) பார்த்து இனிமையாய் உறவு பூண்டு விளையாடி, இசை நிரம்பிய செந்தமிழ் விளங்கும் பெருமைவாய்ந்த புலியூரை விரும்பும் பெருமாளே!

(மூளியர்பால் வைக்கும் செயல்தீராய்)

## 633. கழல் பெற

தனனா தத்தன தானத்தம்
தனனா தத்தன தானத்தம்
தனனா தத்தன தானத்தம் தனதான

நகையா லெத்திகள் வாயிற்றம்
பலமோ டெத்திகள் *நாணற்றின்
நயனா லெத்திகள் † நாறற்புண் தொடைமாதர்-
நடையா லெத்திக ளாரக்கொங்
கையினா லெத்திகள் மோகத்தின்
நவிலா லெத்திகள் தோகைப்பைங் குழல்மேகச்;
சிகையா லெத்திக ளாசைச் ‡சங்
கடியா லெத்திகள் பாடிப்பண்
திறனா லெத்திகள் பாரத்தின் தெருவூடே-
சிலர்கூ டிக்கொடு ஆடிக்கொண்
டுழல்வா ருக்குழல் நாயெற்குன்
செயலா லற்புத ஞானத்தின் **கழல்தாராய்;**
பகையா ருட்கிட வேலைக்கொண்
டுவரா ழிக்கிரி நாகத்தின்
படமோ டிற்றிட சூரைச்சங் கரிசூரா-
Xபணநா கத்திடை சேர்முத்தின்
சிவகா மிக்கொரு பாகத்தன்
பரிவால் சத்துப தேசிக்கும் குரவோனே;

---

* நாண் அற்று இன் நயனால்; நயனால் - நயனத்தால்.

† புண் - தசை - "பிறவற்றின் புண்ணும் மாந்தி" சிந்தாமணி 2822. நாறற் புண் - அல்குல் "கடிதடத்துப் புண்ணாங் குழியிடைத் தள்ளி"- பட்டினத்தார் திரு ஏகம்பமாலை - 23.

'நாறுங் குருதிச் சலதாரை'- 'காமத் துவாரம், ஒளித்திடும் புண் தேறுந் தசைப் பிளப் பந்தரங்கத்துள சிற்றின்பம்' - பட்டினத்தார் - காளத்தி

'புண்க ளாகிப் புரந்தரன் மெய்யெலாம் கண்களானது காமத்தினாலன்றோ' - திருக்குற்றாலப் புராணம் மந்தமாரு - 56.

‡ சம் கடி - சுகத்தைத் தரும் வாசனை.

X பண நாகத்திடை - 'நாகபணந்திகழ் அல்குல்' - சம்பந்தர் 1-4-4

'அரவேரிடையாள்'- சம்பந்தர் -3-3-5.

# 633.

சிரித்து ஏமாற்றுபவர்கள், வாயில் வெற்றிலை பாக்கு உண்ட தாம்பூல எச்சிலுடன் ஏமாற்றுபவர்கள், வெட்கமில்லாது இனிய நயனால் - நயனங்களால் - கண்களால் ஏமாற்றுபவர்கள்; (நாறல்) துர்க்கந்தம் கொண்ட தசைக்கு (அல்குலுக்கு) அடுத்துள்ள தொடைகளை உடைய மாதர்கள் -

தங்களுடைய நடைகொண்டு ஏமாற்றுபவர்கள், (மார்பிடமெல்லாம்) நிறைந்துள்ள கொங்கை கொண்டு ஏமாற்றுபவர்கள் - மோகம் தரக்கூடிய (நவிலால்) பேச்சினால் ஏமாற்றுபவர்கள், மயிலின் தோகைபோலப் பசிய கூந்தலாகிய மேகம் ஒத்த -

மயிர்முடியால் ஏமாற்றுபவர்கள், ஆசையை எழுப்பும் சுகத்தைத் தரும் வாசனைகளால் ஏமாற்றுபவர்கள், பாடல்களைப் பாடித் தமது இசைஞானத் திறத்தால் ஏமாற்றுபவர்கள். பெரிய திண்ணிய தெருக்களிலே -

சிலர் கூடிக்கொண்டும் ஆடிக்கொண்டும் திரிகின்றவர்களாகிய (பொதுமாதர்கள் வசமே) திரிகின்ற அடியேனுக்கு உனது திருவிளையாடற் செயலால் அற்புத ஞானமயமான வலிய உனது திருவடியைத் தந்தருளுக.

பகைத்துநின்ற அசுரர்கள் அஞ்ச, வேலாயுதத்தைக் கொண்டு, உவர்ப்பு (உப்புத் தன்மை) நிறைந்த கடலும், எழுகிரியும் அல்லது கிரவுஞ்சகிரியும், ஆதிசேடனுடைய படங்களும் குலைந்துவிழச் சூரனைச் சங்கரித்த சூரனே!

படங்கொண்ட பாம்புபோன்ற அல்குல் விளங்கும் அரையைச் சார்ந்துள முத்தாபரணம் அணிந்த (அல்லது முத்துப்போன்ற) சிவகாமித் தேவியை ஒரு பாகத்தில் வைத்துள்ள பெருமானாம் சிவபிராற்கு அன்புடனே 'சத்து' - மெய்ப்பொருளை உபதேசித்த சற்குருவே!

*சுகஞா னக்கடல் முழ்கத்தந்
தடியே னுக்கருள் பாலிக்குஞ்
† சுடர்பா தக்குக னேமுத்தின் கழல்வீரா-
சுக‡ ரே சத்தன பாரச்செங்
Xகுறமா தைக்கள வால்நித்தஞ்
சுகமுழ் கிப்புலி யூர்நத்தும் பெருமாளே.(44)

## 634. சிவபதம் பெற

தனதன தனன தனதன தனன
தனதன தனன தனதான

எழுகடல் மணலை அளவிடி னதிக
மெனதிடர் பிறவி அவதாரம்-
இனியுன தபய மெனதுயி ருடலு
மினியுடல் விடுக முடியாது;

கழுகொடு நரியு மெரிபுவி மறலி
கமலனு மிகவு மயர்வானார்-
கடனுன தபய மடிமையு னடிமை
கடுகியு னடிகள் தருவாயே;

Oவிழுதிக ழழகி மரகத வடிவி
விமலிமு னருளு முருகோனே-

---

* இது அருணகிரியார் வரலாற்றைக் குறிக்கும்.

† சுடர்பாதம் - "ஒரு சோதி வீசுவதும்... மணநாறு சீறடியே"- சீர்பாத வகுப்பு.

‡ ரேசம் - இரேசம் - இரசம் - சாறு, சுவை.

X களவால் சுகமுழ்கினது:-

"வள்ளி(யை).... அங்கையால் எடுத்தனன் புல்லினன் இன்பம் எய்தினான்"; "நாளை யாம் வந்திடுவோமென மறைந்து போயினான்"

தோழி முருகவேளை நோக்கி -

"நீர் கங்குற் போதில் ஈங்கு வந்திடுவ தொல்லாது....... ஆங்கவள் தன்னைக் கொண்டே அகலுதிர் அடிகள் என்றாள்"

-கந்த புராணம் 6-24-143, 144 162.

O விழு - சிறந்த - 'விழுப்பேற்றி னஃதொப்ப தில்லை'- திருக்குறள்-162.

சுகஞானக் கடலில் முழுகிக் களிக்கும்படியாக (உபதேச மொழியைத்) தந்து அடியேனுக்கு அருள்பாலித்த ஒளி வீசும் திருவடியை உடைய குகமூர்த்தியே! முத்தாலாய (வீரக்) கழல் அணிந்துள்ள வீரனே!

சுகச்சுவை கொண்ட கொங்கைப் பாரங்களைக் கொண்ட செம்மை வாய்ந்த குறமாது வள்ளியுடன் - களவு வழியில் - நாள் தோறும் - சுகம் அனுபவித்து முழுகின பெருமாளே! புலியூரை விரும்பி நிற்கும் பெருமாளே!

*(அற்புத ஞானத் திண் கழல் தாராய்)*

## 634.

ஏழுகடல்களின் மணலை அளவிட்டுப் பார்த்தால் என்ன அளவோ அந்த அளவினும் அதிகமாக உள்ளன என்னுடைய துன்பந்தரும் பிறவிகள் என்னும் அவதாரங்கள் (பிறவித் தோற்றங்கள்)

இனி, உனக்கே அடைக்கலமாம் என்னுடைய உயிரும் உடலும் இனியும் பிறப்பெடுத்து உடலைவிட, (என்னால்) முடியாது;

கழுகும், நரியும், எரியும், மண்ணும், யமனும், பிரமனும் (கழுகு, நரி, எரி, மண் என் உடலைப் பலமுறை உண்டும், யமன் என் உயிரைப் பலமுறை பிரித்தும், பிரமன் என் உடலை பலமுறை படைத்தும்) மிகவும் அலுத்துப்போய் விட்டார்கள் (சோர்வு அடைந்து உள்ளார்கள்)-

(என்) கடன் உன்மாட்டு அடைக்கலம் புகுவதே; நான் அடிமை பூண்பதும் உன்னிடம் அடிமை பூணுவதே; நீ விரைவில் உனது திருவடிகளைத் தந்தருளுவாயாக.

(விழு) சிறந்த அழகி, விளங்கும் அழகி, மரகத வடிவினள், (விமலி) பரிசுத்தமானவள் - ஆகிய பார்வதி முன்பு ஈன்றெடுத்த குழந்தையே!

*விரிதல மொரிய குலகிரி நெரிய
விசைபெறு மயிலில் வருவோனே;
எழுகடல் குமுற அவுணர்க ளுயிரை
யிரைகொளும் அயிலை யுடையோனே-
†இமையவர் முநிவர் பரவிய புலியு
ரினில்நட மருவு பெருமாளே.(45)

## 635. உபதேசமொழி பெற

தனதன தனன தனதன தனன
தனதன தனனாத் தனதான

தறுகணன் மறலி முறுகிய கயிறு
தலைகொடு விசிறீக் கொடுபோகுஞ்-
‡சளமது தவிர அளவிடு சுருதி
தலைகொடு பலசாத் திரமோதி;
Xஅறுவகை சமய முறைமுறை சருவி
யலைபடு தலைமூச் சினையாகும்-
அருவரு வொழிய வடிவுள பொருளை
Oஅலம்வர அடியேற் கருள்வாயே;
நறுமல ரிறைவி யரிதிரு மருக
** நகமுத வியபார்ப் பதிவாழ்வே
நதிமதி யிதழி பணியணி கடவுள்
நடமிடு புலியூர்க் குமரேசா;

---

* சூரன் சக்ரவாகப் புள்ளின் உருவங்கொண்டு போர் புரிந்த போது மரகத மலைபோல் ஒரு பெரிய மயில் உருவத்தை இந்திரன் எடுக்க, முருகவேள் அந்த மயில்மீது ஏறி அந்தப் புள்ளொடு பொருதனர். இந்திரனாம் அந்த மயிலின் வேகத்தை இந்தத் திருப்புகழ் அடி விளக்குகின்றது.

"நின்றிடு மஞ்ஞைப் புத்தேள் நெடுநிலங் கிழிய மேருக்
குன்றமும் புறஞ்சூழ் வெற்பும் குலைந்திடக் கரிகள் வீழ
வன்றிரை அளக்கர் நீத்தம் வறந்திடப் பணிகள் அஞ்சத்
தன்றுணைச் சிறகால் மோதி"

- கந்த புரா. 4-13-379

† தேவர்கள் பரவுவது - முநிவர் பரவுவது - பாடல் 611 பக்கம் 414; பாடல் 622, பக்கம் 444 பார்க்க. பரவின முநிவர்கள் வியாக்ரபாதர், பதஞ்சலி, உபமன்யு, வசிட்டர் ஆதியோர்.

‡ சளம் - வஞ்சனை. (தொடர்ச்சி 479 ஆம் பக்கம் பார்க்க)

விரிந்த இடமாகிய (கடல் - பூமி) எரிகொள்ள, (குலகிரி) கிரௌஞ்சகிரி நெரிந்து பொடிபட, வேகமாய் வரவல்ல மயிலில் வந்தவனே!

ஏழுகடல்களும் கொந்தளிக்க அசுரர்களுடைய உயிரை உணவாகக் கொண்ட வேலாயுதத்தை உடையவனே!

தேவர்களும் முநிவர்களும் போற்றிப் பணிந்த புலியூரில் நடனம் செய்கின்ற பெருமாளே!

(உன் அடிகள் தருவாயே)

## 635.

அஞ்சாமையாகிய வீரத்தையுடைய யமன் தனது திண்ணிய பாசக்கயிற்றின் நுனைத்தலையைப் பிடித்துக் கொண்டு வீசிப் பிடித்துக்கொண்டு போகும்

வஞ்சனைத்தொழில் (அல்லது துன்பம்) என்மாட்டு வாராத வழிக்கு அளந்து வகைப்படுத்தியுள்ள வேதம் முதலாக பல சாஸ்திர நூல்களை ஓதி -

ஆறுவகைப்பட்ட சமயங்கள் ஒன்றோடொன்று மாறு-பட்டு மோதித் தலைவேதனையாகப் - போராடும் -

அருவருப்பான செயல்கள் ஒழியச், சத்தான உருவமுள்ள (பேரின்பப்) பொருள் அமைதி உண்டாக அடியேனுக்கு உபதேசித்தருளுக;

நறுமணமுள்ள செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் தேவி-இலக்குமிக்கும் திருமாலுக்கும் அழகிய மருமகனே! (இமய) மலை பெற்ற பார்வதியின் செல்வக் குமாரனே)

கங்கை, சந்திரன், கொன்றை, பாம்பு - இவைதமை அணிந்துள்ள கடவுள் (சிவன்) நடஞ்செய்கின்ற புலியூரில் (சிதம்பரத்தில்) உள்ள குமரேசனே!

---

(478 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

X அறுவகை சமயம் - சமய வாது - வேண்டாமெனல் - பாடல் 156 பக்கம் 362 பாடல் 492 பக்கம் 114 பார்க்க.

O அலம்வர - அமைவுண்டாக

** நகம் உதவிய பார்ப்பதி - பர்வதராஜ புத்திரியாகிய பார்வதி; நகம் - மலை.

கறுவிய நிருதர் எறிதிரை பரவு
கடலிடை பொடியாப் பொருதோனே-
*கழலிணை பணியு மவருடன் முனிவு
கனவிலு மறியாப் பெருமாளே. (46)

## 636. மாதர்மீதுள்ள மயக்கு அற

தனதனா தத்ததன தனதனா தத்ததன
தனதனா தத்ததன தானனந் தனன
*** *** *** *** தந்ததான

இரசபா கொத்தமொழி யமுர்தமா ணிக்கநகை
யிணையிலா சத்திவிழி யார்பசும் †பொனிரர்
எழிலிநே ரொத்தஇரு ளளகபா ரச்செயல்க
ளெழுதொணா தப்பிறையி னாரரும் புருவர்
எழுதுதோ டிட்டசெவி பவளநீ லக்கொடிக
ளிகலியா டப்படிக மோர‡டடும் பொனுரு
Xதிங்கள்மேவும்-

Oஇலவுதா வித்தஇதழ் **குமிழைநே ரொத்தஎழி
லிலகுநா சிக்கமுகு ††மாலசங் கினொளி
யிணைசொல்க்ரீ வத்தரள வினவொள்
‡‡தா லப்பணையி
னியல்கலா புத்தகமொ டேர்சிறந் தவடி
யிணையிலா னைக்குவடெ XXனொளிநிலா துத்திபட
ரிகலியா ரத்தொடையு மாருமின்
பரச தங்கமார்பின்;

---

* இந்த அடி மனப்பாடஞ் செய்ய வேண்டிய அருமை அடி.
† பொனிரர் - பொன்னின் நீரார்; நீர் - குணம், தன்மை
‡ அடும் - அடுக்கும்.
X திங்கள் - திங்கள் போன்ற முகம்
O 'இலவலர்வாய்' - சிந்தாமணி - கோவிந்தையார் 74.
** குமிழம்பூ - மூக்கு - பாடல் 568, பக்கம் 300.
†† மால சங்கு - மாலினுடைய சங்கு.
‡‡ 'புறங்கால் சுமடமும் பொத்தகமும்' - உசித சூடாமணி
XX ஒளி நிலா - ஒளி நிலாவுகின்ற.

கோபித்து வந்த அசுரர்கள் வீசுகின்ற அலைகள் பரந்துள்ள கடலிடத்தே பொடிபட்டழியச் சண்டை செய்தவனே!

கழலிணைகளைப் போற்றிப்பணியும் அடியார்களுடன் கோபம் என்பதைக் கனவிலும் அறியாத (கருணாகர மூர்த்தியாம்) பெருமாளே!

(பொருளை அடியேற் கருள்வாயே)

## 636.

சுவை நிறைந்த சர்க்கரைபோன்ற மொழி, அமுத மாணிக்கம் போன்ற பற்கள், நிகரில்லாத வேல்போன்ற விழி, இவைதமை உடையவர்கள், பசும்பொன் போன்ற தன்மை உடையவர்கள், மேகத்துக்கு ஒப்பான இருண்ட கூந்தற் பாரத்தை உடைய செயலினர், எழுதுதற்கு முடியாததான பிறைபோன்ற அரிய புருவத்தினர், சித்திரம் எழுதினது போலமைந்துள்ள - தோடு கொண்ட - காது, பவளக்கொடியும், நீலக்கொடியும் ஒன்றோடொன்று மாறுபட்டு ஆடுவது-போலச், (செவ்விய சிரசிற் கரியகூந்தல் ஆட), ஸ்படிகத்தை அடுத்ததாய்த் தெளிந்ததும் பொன்னின் உருவம் கொண்டதுமான முகத்தில் உள்ள -

இலவம் பூப்போல அமைந்துள்ள வாயிதழ், குமிழம் பூவுக்கு ஒப்பான அழகு விளங்கும் மூக்கு, கமுகு, போன்று, திருமாலின் ஒளிகொண்ட சங்குக்கு ஒப்புகூறத்தக்க கழுத்து, அந்தக் கழுத்தில் முத்துமாலைக் கூட்டம், பிரகாசமுள்ள (தாலப்பனையின் இயல்கலா புத்தகம்) பனைஓலையால் அமைந்துள்ள பெருநூல் எழுதப்பட்ட ஓலைப்புத்தகம் போல அழகிய சிறந்த அடி. ஒப்பு இல்லாத ஆனை, மலை என்று சொல்லும்படிஒளி நிலாவுகின்றதும், தேமல் படர்ந்துள்ளதும், பிணைந்துள்ள (ஆரத்தொடை) முத்துமாலை அணிந்-துள்ளதும், நிறைந்த இன்பரசத்தைக் கொண்டுள்ளதுமான தங்கரூபமுள்ள மார்பில் -

வரிகள்தா பித்தமுலை யிசையஆ லிற்றளிரின்
வயிறு *நா பிக்கமல மாமெனுஞ் சுழிய
மடுவுரோ மக்கொடியென் †அளிகள்சூழ் வுற்றநிரை
மருவுநூ லொத்தஇடை யாரசம் பை‡யல்குல்
மணமெலா முற்றநறை கமலபோ துத்தொடையென்
வளமையார் புக்கதலி சேருசெம் பொனுடை
ரம்பைமாதர்-

மயலதா லிற்றடியெ னவர்கள்பா லுற்றுவெகு
மதனபா ணத்தினுடன் மேவிமஞ் சமிசை
வதனம்வேர் வுற்றவிர முலைகள்பூ ரிக்கXமிடர்
மயில்புறா தத்தைகுயில் போலிலங் கமளி
வசனமாய் பொத்தியிடை துவளமோ கத்துளமிழ்
வசமெலாம் விட்டுமற **வேறுசிந் தனையை**
**தந்துஆள்வாய்;**

முரசுபே ரித்திமிலை துடிகள்பூ ரித்தவில்கள்
முருடுகா ளப்பறைகள் தாரைகொம் புவளை
முகடுபேர் வுற்றவொலி யிடிகள்போ லொத்தமறை
முதுவர்பா டிக்குமுற வேயிறந் தசுரர்
முடிகளோ டெற்றியரி யிரதமா னைப்பிணமொ
டிவுளிவே லைக்குருதி நீர்மிதந் துதிசை
யெங்குமோட-

---

* நாபிக் கமலம் - "வலம்புரி யுந்திபொற்கமலம்" - தணிகைப் புராணம் - களவு 43. சுழி - "நீர்ச்சுழி"

† 'மதனன் நாண் ஒழுக்கம்' - (மதனன்நாண் - வண்டு) - உசித சூடா மணி (திருப்புகழ் 555, பக்கம் 266)

‡ அல்குல் கமலம்; - 'பெருகிய அல்குல் மணித்தடங் கமலம் தணிகைப் புரா - களவு 43. "தேன்கூடு... செந்தாமரைப் பூ" -உசித சூடாமணி.

X மிடறு என்பது சந்தநோக்கி மிடர் என்றாயிற்று.

முடுகி *வேல் விட்டுவட குவடு † வாய் விட்டமரர்
முநிவரா டிப்புகழ வேதவிஞ் சையர்கள்
முழவுவீ ணைக்கினரி யமுர்தகீ தத்தொனிகள்
முறையதா கப்பறைய வோதிரம் பையர்கள்
முலைகள்பா ரிக்கவுட னடனமா டிற்றுவர
முடிபதா கைப்பொலிய வே‡ ந டங்குலவு
கந்தவேளே;

அரசுமா Xகற்பகமொ டகில்பலா Oஇர்ப்பைமகி
ழழகுவே யத்திகமு கோடரம் பையுடன்
அளவிமே கத்திலொளிர் வனமொடா டக்குயில்க
ளளிகள்தோ கைக்கிளிகள் கோவெனம் பெரிய
அமுர்தவா விக்கழனி வயலில்வா ளைக்கயல்க
**ளடையுமே ரக்கனக நாடெனும் புலியுர்
சந்தவேலா-

அழகுமோ கக்குமரி விபுதையே னற்புனவி
யளிகுலா வுற்றகுழல் சேர்நடம் புதொடை
அரசிவே தச்சொருபி †† கமலபா தக்கரவி
யரியவே டச்சிறுமி யாளணைந் தபுகழ்
அருணரு பப்பதமொ டிவுளிதோ கைச்செயல்கொ
டணைதெய்வா னைத்தனமு மேமகிழ்ந் துபுணர்
தம்பிரானே. (47)

---

* "வேலுக் கணிகலம் வேலையும் சூரனும் மேருவுமே" .... கந்தர் அலங்காரம் 62 † வாய்விட்ட - வாய்விட

‡ நடம் - முருகன்ஆடல் - குடையும், துடியும் - பாடல் 354 பக்கம் 396, பாடல் 595 பக்கம் 366 கீழ்க்குறிப்பு.

X கற்பகம் - தென்னைமரம் . O இர்ப்பை - இலுப்பைமரம்.

** அடையும் ஏர் - அடைகின்ற. அழகினாலே.

†† கமல பாதக் கரவி - கமலம் போன்ற பாதத்தையுங் கரத்தையு முடையவள்.

வேகமாய் வேலாயுதத்தைச் செலுத்தி, (வடகுவடு) மேரு (வாய்விட) கலங்கிக்குலுங்க, தேவர்களும் முனிவர்களும் ஆடிப்புகழ, வேதம்வல்ல புலவர்கள் - முழவு - குடமுழா, வீணை, (கின்னரி) யாழ்வகை இவைகளின் அமுதகீதம் போன்ற தொனிகளுடன் முறை முறையாக ஒலியை எழுப்பி ஓதிட, ரம்பையாதி தேவமகளிர்கள் தத்தம் கொங்கைகள் கனக்க, ஒன்றுகூடி நடனம் ஆடினவராய் வர, கிரீடமும், கொடியும் விளங்கவே துடிக்கூத்து, குடைக்கூத்து - ஆடி விளங்கிய கந்தவேளே!

அரசமரம், மாமரம், தென்னைமரம், அகில், பலாமரம், இலுப்பைமரம், மகிழமரம், அழகுள்ள மூங்கில், அத்திமரம், கமுகமரம், வாழைமரம், இவையெலாம் கலந்து மேகமண்டலம் வரை உயர்ந்த சோலையில் உலவும் குயில்கள், வண்டுகள், மயில்கள், கிளிகள், (கோ எனம்) (கோ என) 'கோ' என்று ஒலிசெய, பெரிய அமுதநீரைக் கொண்ட குளங்களிலும், கழனிகளிலும், வயல்களிலும், வாளைமீன், கயல்மீன் இவைகள் அடைகின்ற அழகினாலே, அந்தப் பொன்னுலகம் என்று சொல்லும்படியாய் விளங்குகின்ற புலியூரில் (சிதம்பரத்தில்) வீற்றிருக்கும் அழகிய வேலனே!

அழகும் ஆசையும் கொண்ட குமரி, தேவதை, திணைப்புனத்திலிருப்பவள், வண்டுகள் குலவும் கூந்தலிற் சேர்ந்துள்ள கடப்ப மாலையை உடைய அரசி, வேத சொரூபம் கொண்டவள், தாமரையன்ன அடிகளையும் கரங்களையும் கொண்டவள், அருமை வாய்ந்த வேடச் சிறுமியாகிய வள்ளி அணைந்த புகழையுங்கொண்டு, சிவந்த உருவங் கொண்ட பாதங்களுடன், (இவுளி தோகை) தோகை இவுளி - கலாபம் கொண்ட குதிரையாம் மயில் மீதேறின திரு ஓலக்கத்துடன் உன்னை (அல்லது நீ) அணைந்த தெய்வயானையின் (தேவசேனையின்) கொங்கையையும் மகிழ்ந்து அவளைச் சேர்ந்த தம்பிரானே!

(சிந்தனையை தந்து ஆள்வாய்)

வேகமாய் வேலாயுதத்தைச் செலுத்தி, (வடகுவடு) மேரு (வாய்விட) கலங்கிக்குலுங்க, தேவர்களும் முநிவர்களும் ஆடிப்புகழ, வேதம்வல்ல புலவர்கள் - முழவு - குடமுழா, வீணை, (கின்னரி) யாழ்வகை இவைகளின் அமுதகீதம் போன்ற தொனிகளுடன் முறை முறையாக ஒலியை எழுப்பி ஓதிட, ரம்பையாதி தேவமகளிர்கள் தத்தம் கொங்கைகள் கனக்க, ஒன்றுகூடி நடனம் ஆடினவராய் வர, கிரீடமும், கொடியும் விளங்கவே துடிக்கூத்து, குடைக்கூத்து - ஆடி விளங்கிய கந்தவேளே!

அரசமரம், மாமரம், தென்னைமரம், அகில், பலாமரம், இலுப்பைமரம், மகிழமரம், அழகுள்ள மூங்கில், அத்திமரம், கமுகமரம், வாழைமரம், இவையெலாம் கலந்து மேகமண்டலம் வரை உயர்ந்த சோலையில் உலவும் குயில்கள், வண்டுகள், மயில்கள், கிளிகள், (கோ எனம்) (கோ என) 'கோ' என்று ஒலிசெய, பெரிய அமுதநீரைக் கொண்ட குளங்களிலும், கழனிகளிலும், வயல்களிலும், வாளைமீன், கயல்மீன் இவைகள் அடைகின்ற அழகினாலே, அந்தப் பொன்னுலகம் என்று சொல்லும்படியாய் விளங்குகின்ற புலியூரில் (சிதம்பரத்தில்) வீற்றிருக்கும் அழகிய வேலனே!

அழகும் ஆசையும் கொண்ட குமரி, தேவதை, தினைப்புனத்திலிருப்பவள், வண்டுகள் குலவும் கூந்தலிற் சேர்ந்துள்ள கடப்ப மாலையை உடைய அரசி, வேத சொரூபம் கொண்டவள், தாமரையன்ன அடிகளையும் கரங்களையும் கொண்டவள், அருமை வாய்ந்த வேடச் சிறுமியாகிய வள்ளி அணைந்த புகழையுங்கொண்டு, சிவந்த உருவங் கொண்ட பாதங்களுடன், (இவுளி தோகை) தோகை இவுளி - கலாபம் கொண்ட குதிரையாம் மயில் மீதேறின திரு ஓலக்கத்துடன் உன்னை (அல்லது நீ) அணைந்த தெய்வயானையின் (தேவசேனையின்) கொங்கையையும் மகிழ்ந்து அவளைச் சேர்ந்த தம்பிரானே!

(சிந்தனையை தந்து ஆள்வாய்)

## 637. திருவடி பெற

தனன தானன தனன தானன
தனன தானன தனதான

*இருளு மோர்கதி ரணுகொ ணாதபொ
னிடம தேறியெ னிருநோயும்-
எரிய வேமல மொழிய வேசுட
ரிலகு † மூலக வொளிமேவி;
அருவி பாய ‡இ னமுத மூறவுன்
அருளெ லாமென தளவாக-
அருளி யேXசிவ மகிழ வேபெற
அருளி யேயிணை யடிதாராய்;
பரம தேசிகர் குருவி லாதவர்
பரவை வான்மதி தவழ்வேணிப்-
பவள மேனியர் எனது தாதையர்
**பரம ராசியர் அருள்பாலா;

---

* இருள் - கதிர் - இரவு பகல். இரவு பகல் இல்லாத பொன் இடம். இரவு பகலற்ற இடம்; பாடல் 303 பக்கம் 250 கீழ்க்குறிப்பு. இதனையே "இருள் கதிரிலி பொற் பூமி". "வானிந்து கதிரிலாத நாடு" "சூரியனுடன் சோமனி பூலிவை அண்டாத சோதி மருவும் பூமி" என்றார் பிற இடங்களில் - பாட்டு 238 -பக்கம் 94, பாட்டு 179 பக்கம் 414; பாட்டு 1114.

† மூலக ஒளி - 'மூலகமலத்தில் அங்கியை நாடியினடத்தி'
- (திருப்புகழ் 647)

‡ இன் அமுதம் ஊற - "விந்துநாதம் கூடிய முகப்பில் இந்திரவான அமுதத்தை" - (திருப்புகழ் 647).

இதனைக் "கலா இன்ப அமுதூறல்" என்றார் (பாடல் 93 பக்கம் 218)

X சிவம் பெற்றால் மும்மலம் தீரும் சித்தி முத்தி பெறலாம். சிவானந்தம் பெறலாம்.

"சிவமான சிந்தையிற் சீவன் சிதைய பவமான மும்மலம் பாறிப்பறிய" - திருமந்திரம் 2539.

"சிவமான ஞானந் தெளிய ஒண் சித்தி, சிவமான ஞானத் தெளிய ஒண் முத்தி, சிவமான ஞானஞ் சிவபரத்தே யேகச் சிவமான ஞானஞ் சிவானந்தம் நல்குமே - திருமந்திரம் 1587.

(தொடர்ச்சி - பக்கம் 487)

# 637.

இருளும், கதிர் (சூரிய சந்திர ஒளி) எதுவும், அணுக முடியாத பொன்னிடத்தை (இரவு பகல் அற்ற இடத்தை) அடைந்து, என் வினை நோய் இரண்டும் (தீவினை - நல்வினை என்னும் இரண்டு நோயும்)

எரிபட்டழிய, (ஆணவம், கன்மம், மாயை என்னும்) மும்மலங்களும் ஒழிய, ஒளி விளங்கும் (மூலக ஒளி) மூலாக்கினி (மூலாதார அக்கினி) பொருந்தி -

அருவி பாய்வதுபோல இனிய தேவாமிர்தம் ஊற, உன் திருவருள் எல்லாம் எனக்கு உரியதாக -

உதவியருளி, சிவஞானத்தை நான் மகிழ்ந்து பெறும்படி அருளி உன் இணையடிகளைத் தந்தருளுக.

மேலான தேசிகமூர்த்தி, தமக்கு ஒரு குருவே இல்லாதவர், பரந்த வானில் உள்ள சந்திரன் (அல்லது கடல்போன்ற கங்கையும் வானில் உள்ள சந்திரனும்) தவழ்கின்ற சடையை உடைய,

O பவளமேனிப் பெருமான், எனது தந்தை, **பரம ரகசியத்தினர் அருளிய குழந்தையே!

---

O 'பவள வண்ணப் பரிசார் திருமேனி' சம்பந்தர் I-27-5.

** சிவபிரான் பரம ராசியர் என்பதற்கு ஒரு சான்று திருக்குற்றாலப் புராணம் கூறும்.

காமமே கதியாய்ப் பல பாவங்கள் செய்த ஒரு மறையவனைச் சிவகணத்தினர் சிவலோகத்துக்கு அழைத்துக் கொண்டுபோக, இது நீதியா என்று இயமன் அறிய விரும்பிச் சிவபிரானிடம் முறையிட அவர் இந்த மறையவன் இறக்கும்போது இவன் மேனியில் திருக்குற்றாலத்து மந்தமாருதம் (காற்று) வீசின புண்ணியத்தால் இவன் செய்த பாபங்கள் சூறைக் காற்றிற்பட்ட பஞ்சுபோல விலகிச் சிவபுண்ணியம் இவனுக்குக் கை கூடிற்று; ஆதலால் சிவபதம் இவன் சேர்ந்தனன் என விளக்கினார். இந்தப் "பரம ராசியம்" திருமால், வேதங்கள் - யார்க்கும் தெரியாது.

இந்த ரகசியத்தைச் சிவபிரான் வெளியிட இயமன் உணர்ந்து மகிழ்ந்தான்.

முகுந்தனாலும், பன்னரிய மறையாலும் தெரிவரிய பரம ராசியத்தின் பான்மை மன்னு பெருந்திரிகூடத் தென்றலங்கால் மகிமையென மகிழ்ச்சி கூர்ந்து... பகடேறித் தருமன் போந்து"

- (திருக்குற்றாலப் புராணம் - மந்தமாருதம் -133-34.)

*மருவி நாயெனை யடிமை யாமென
மகிழ்மெய் ஞானமு மருள்வோனே-
† மறைகு லாவிய புலியுர் வாழ்குற
மகள்மெ லாசைகொள் பெருமாளே. (48)

## 638. ஞானம் பெற

தான தனத்தம் தான தனத்தம்
தான தனத்தம் தனதான

‡ காவி யுடுத்துந் தாழ்சடை வைத்துங்
காடுகள் புக்குந் தடுமாறிக்-
காய்கனி துய்த்துங் Xகாயமொ றுத்துங்
காசினி முற்றுந் திரியாதே;
Oசீவ னொடுக்கம் பூத வொடுக்கம்
தேற வுதிக்கும் பர**ஞான-
தீப விளக்கங் காண எனக்குன்
சீதள பத்மந் தருவாயே;
பாவ நிறத்தின் தாருக வர்க்கம்
பாழ்பட வுக்ரந் தருவீரா-

*இது அருணகிரியாரின் வரலாறு கூறும். † மறைகுலாவிய புலியூர் 'தினைத்தனை வேதங் குன்றாத் தில்லைச் சிற்றம்பலம்'- அப்பர் 4-23-8. ‡ "மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம் பழித்த தொழித்து விடின்" திருக்குறள் -280. X வீடு ஞானமும் வேண்டுதிரேல் விரதங்களால் வாடி ஞான மென்னாவது - சம்பந்தர் - 2-22-11 O சீவனொடுக்கம் - சிவச் சொரூபமாய் ஒடுங்குதல் -

"ஒடுங்கி ஒடுங்கி உணர்த்தங் கிருக்கில்,
அடங்கி அடங்கிடும் வாயு அதனுள்
மடங்கி மடங்கிடு மன்னுயி ருள்ளே
நடங்கொண்ட கூத்தனும் நாடுகின் றானே"
"ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை
இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை
படும்பயன் இல்லை பற்றுவிட் டோர்க்கே"

- திருமந்திரம் 666, 1624.

'நற்கமலை ஊரிற் குறுகினேன் ஓர் மாத்திரை யளவென் பேரிற் குறுகினேன் பின்' - குமரகுரு - பண்டார - 24 எனக் கிந்தச் சீவன் புண்ணியச் சிவனாக் குறுகுமோர் வழியைப் புகன்றருள்

(தொடர்ச்சி பக்கம் - 489 பார்க்க.)

அடியேனிடம் வந்து கூடி, என்னை ஒரு அடிமையாகக் கொண்டு, மகிழ்ந்து, மெய்ஞ்ஞானத்தை எனக்கு அருளியவனே!

வேதம் விளங்கும் **புலியூரில்** வாழும் பெருமாளே! குறமகள் (வள்ளி) மேல் ஆசை கொண்ட பெருமாளே!

*(இணையடி தாராய்)*

## 638.

காவித்துணி கட்டியும், தாழ்ந்து தொங்கும்படி சடையை வளர்த்து வைத்தும், காட்டிற் புகுந்து தடுமாறியும் -

காய், பழங்களை உண்டும், தேகத்தை (விரதாதிகளால்) வருத்தியும், உலகம் முழுமையும் திரிந்து அலையாமல் -

சீவனுடைய ஒடுக்கமும், ஐம்பூதங்களுடைய ஒடுக்கமும் நன்றாக உண்டாகும்படி - மேலான ஞான -

ஒளி விளக்கத்தை நான் காணும்படி எனக்கு உனது குளிர்ந்த தாமரையன்ன திருவடியைத் தந்தருளுக.

பாவத்தின் நிறங்கொண்ட (பாவ உருவத்தினராகிய) தாரகாசுரனாதிய கூட்டத்தினராம் அசுரர்கள் பாழ்பட்-டொழிய (உக்ரம் தரு) கோபம் கொண்ட வீரனே!

---

*(488- ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)*

தணிகை நாயகனே' -தணிகை நாயகன் மாலை 69. இங்கே 'சீவன்' என்பதில் முதல் எழுத்து சீ - 2 மாத்திரை - ஒடுங்கிக் குறுகச் 'சிவன் ' சி - ஒரு மாத்திரை ஆதல் குறிப்பிடப்பட்டது

** ஞானத்தின் பெருமை:

"ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை - திருமந்திரம் 1467.

"முத்தி எய்தல் மெய்ச்சிவ ஞானத்தன்றி வேறுள கருமத் தாகாது"

- திருக்கூவப் புராணம்.

"உரைசெயிற் பரமஞான மொன்றும் முக்திக்கேது -

சரியைகற் கிரியையோகம் தாமொரு மூன்றும் ஞான மருவுதற் கேது - பிரபுலிங்க லீலை.

*பாணிகள் கொட்டும் பேய்கள் பிதற்றும்
பாடலை மெச்சுங் கதிர்வேலா;
† தூவிகள் நிற்குஞ் சாலி வளைக்குஞ்
சோலை சிறக்கும் புலியூரா-
சூரர் மிகக்கொண் டாட நடிக்குந்
தோகை நடத்தும் பெருமாளே.(49)

## 639. விலைமாதரை விலக்க

தானத் தானத் தாந்தன தானன
தானத் தானத் தாந்தன தானன
தானத் தானத் தாந்தன தானன தனதான

கோதிக் கோதிக் கூந்தலி லேமலர்
‡ பாவித் தாகச் சாந்தணி வார்முலை
Xகோடுத் தானைத் தேன்துவர் வாய்மொழி குயில்போலக்-
கூவிக் கூவிக் Oகொண்டிசை போலவெ
நாணிக் கூனிப் பாய்ந்திடு வார்சிலர்
கூடித் தேறிச் சூழ்ந்திடு வார்பொருள் வருமொவென்;
றோதித் தோளிற் பூந்துகி லால்முலை
மூடிச் சூதிற் **றூங்கமி லார்தெரு
வோடித் தேடிச் சோம்பிடு வார்சில விலைமாதர்-
†† ஒருச் சேரச் ‡‡ சேர்ந்திடு வார்க்லி
XXசூளைக் காரச் OOசாங்கமி லார்சில
வோரைச் சாகத் தீம்பிடு வார்செய லுறவாமோ;

---

* போர்க்களத்திற் பேய்கள் பாணிகள் கொட்டிப் பாடுவது
"பிள்ளை வீழ வீழவும் பெருந்துணங்கை கொட்டுமே
வள்ளை பாடி யாடி ஓடி வா எனா அழைக்குமே"
-கலிங்கத்துப் பரணி அவதாரம் 78.

† தூவிகள் - அன்னங்கள்.

'துவி நிணத்தின் சேறு வழுக்குந் தோறு நகைக்கும் பல பூதம்' என்றும் பாடம். ‡ பாவித்து - பரவ முடித்து Xகோடுத் தானை - கோடாகிய சேனையோடு

O காண்டு (ஆடவர்களைக்) கண்டு. ** தூங்கம் - தூக்கம். ††ஒருச்சேர - ஒருசேர, ஒருமிக்க. ‡‡ சேர்ந்திடுவார் கலி - கலியைச் சேர்த்திடுவார்கள்; கலி - தரித்திரம்.

XX சூளை - வேசி - "பரவசமாய்ப் பலர்ப் புணர்ந்து முயங்கு சூளையாய் முடிந்தனள்" (உபதேச - உருத்திராக்க- 113)

OO சாங்கம் - ஒழுங்கு.

கைகளைக் கொட்டும் (துணங்கைக் கூத்தாடிடும்) பேய்கள் உளறிக் குழறும் பாடல்களைப் பிரியப்பட்டு மெச்சுகின்ற ஒளிவேலனே!

அன்னங்கள் உலவும் நெல் வயல்கள் சூழ்ந்துள்ள சோலைகள் விளங்கும் புலியூரனே!

சூரர்கள் நிரம்பக் கொண்டாடும்படி நடிக்கின்ற மயிலை நடத்தும் பெருமாளே!

(ஞானதீப விளக்கம் காண.... பத்மந் தருவாயே)

# 639.

ஆய்ந்து ஆய்ந்து தலைமயிரை - அதில் மலர்களைப் பரவும்படி முடித்து, (அல்லது பரவமுடித்து உடலில்) சந்தனம் அணிந்துள்ள - கச்சு பொருந்திய - கொங்கை என்னும் மலைபோன்ற சேனையுடன் தேன் போலுள்ள பவளம் போன்ற வாய்மொழியாற் குயில்போல-

(கூவிக்கூவி) அழைத்து அழைத்து, (ஆடவர்களைக்) கண்டு இசையுடனே பேசும் பேச்சுக்குத் தக்கபடி வெட்கப்பட்டும், குனிந்தும், பாய்ந்தும் நடிக்கின்ற சில பொதுமகளிர், ஒன்று கூடியும், தெளிவுற்றும், சூழ்ந்து யோசிப்பவராய்ப் பொருள் வருமோ என்று

பேசித், தோள்மீது அழகிய புடைவையால் கொங்கையை மூடி, வஞ்சனை எண்ணத்துடன், தூக்கமும் இல்லாதவர்-களாய்த் தெருவில் ஓடியும் தேடியும் சோம்பலாய்க் காலங்கழிக்கும் சில பொதுமகளிர்

ஒருசேர - ஒருமிக்க (கலி) தரித்திர நிலையைச் சேர்ந்தவர்களாய்ச், (சூளைக்காரராய்), வேசிகளாய், ஒழுங்கு இல்லாதவர்களாய்த் தம்மிடம் வரும் சிலரைச் சாவும் அளவுக்குக் கேடு செய்பவர்கள் - அத்தகைய பொது மகளிரின் தொழில்களில் உறவு கொள்ளுதல் நல்லதா? (உறவு கூடாது என்றபடி).

வேதத் தோனைக் *காந்தள்கை யால்தலை
†மேல்குட் டாடிப் பாந்தள் சதாமுடி
வீரிட் டாடக் காய்ந்தசு ரார்கள்மெல் விடும்வேலா-
வேளைச் சீறித் ‡தூங்கலொ டேXவய
மாவைத் தோலைச் சேர்ந்தணி வாரிட
மீதுற் றாள்பொற் சாம்பவி மாதுமை தருசேயே;
Oநாதத் தோசைக் காண்டுணை யே**சுடர்
மூலத் தோனைத் தூண்டிட வே††யுயிர்
நாடிக் காலிற் சேர்ந்திட வேயருள் சுரமானை-
ஞானப் பால்முத் தேன்சுரு பாள்வளி
மாதைக் கானிற் சேர்ந்தணை வாய்‡‡சிவ
ஞானப் பூமித் தேன்புலி யூர்மகிழ்
பெருமாளே (50)

## 640. வாழ்க்கை நிலையாமை

தனதந்தத் தனனா தனதன
தனதந்தத் தனனா தனதன
தனதந்தத் தனனா தனதன தனதான

XXசகசம்பக் குடைசூழ் சிவிகைமெல்
மதவின்பத் துடனே பலபணி
OOதனிதம்பட் டுடையோ டிகல்முர சொலிவீணை-

---

*கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்' -பரிபாடல் -19 † பிரமனைக் குட்டியது - பாட்டு 608 பக்கம் 406 -கீழ்க்குறிப்பு ‡ தூங்கல் - யானை.

Xவயமா - புலி. O நாதத்து ஓசைக்கு - திருச்சிலம்போசை கேட்பிப்பதற்கு. திருச்சிலம்போசை முதலிய ஓசைகளைக் காணும் நிலை -பாடல் 179-பக்கம் 416- கீழ்க்குறிப்பு -2.

** சுடர் மூலத்தோனை - மூலாதாரக் கனலை.

மூலாதாரக் கனலை (சிவாக்கினியை) எழச் செய்தல்
- பாடல் 612- (உரை)- பக்கம் 417.

†† உயிர் நாடிக் காலில் சேர்ந்திட - பிராணவாசி சுழிமுனைநாடி மார்க்கத்திற் சார்வதற்கு. "உயிர் நாடிக் காலிற்" சேர்ந்திடல் - பாடல் 190 - பக்கம் 444.

‡‡ சிவஞானப்பூமி - பாடல் 627- பக்கம் -460-கீழ்க்குறிப்பு.

XX சக சம்பக் குடை = ஜகத்தோர் மெச்சும்பொருட்டு எதிரில் விருதாகப் பிடிக்கும் குடை OO தனிதம் - மேக கர்ச்சனை.

வேதம்வல்ல பிரமனைக் காந்தள் பூப்போன்ற கையினால் தலையின்மேல் குட்டி விளையாடிப் பாம்பின் (ஆதி சேடனுடைய) (சதமுடி) நூற்றுக் கணக்கான முடிகள் வேதனைப்பட்டு அசையக், கோபித்து அசுரர்களின் மேல் வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

மன்மதனைக் கோபித்து, யானை, புலி இவை தம் தோலை (போர்வையாகவும், உடையாகவும் ஒருசேர அணிபவருடைய (சிவனுடைய) இடது பாகத்திற் பொருந்தினவள், அழகிய சாம்பவி, மாது, உமை பெற்ற குழந்தையே!

(நாதத்தோசை) திருச்சிலம்போசை முதலிய நாதங்களை (காண்) கேட்பிப்பதற்குத் துணைபுரியும் (தேவே)! *மூலாதாரக் கனலைத் தூண்டி எழுப்பிப் பிராணவாசி சுழிமுனை நாடி மார்க்கத்திற் சார்வதற்கு (அருள்) (அருள்புரிவாயாக)! (அல்லது அருளுகின்ற) தேவருலகத்து மானாம் (தேவசேனை) யையும் (அல்லது, சுரமானை - சுரம் தினைக்காட்டிலிருந்த மானை வள்ளிமாதை)-

ஞானப்பால் போலவும், முப்பழங்களின் தேன் போலவும் இனிய சொரூபம் உடைய வள்ளிமாதைத் (தினைக்) காட்டிலும் - சேர்ந்து அணைந்தவனே! சிவஞானப் பூமியாகிய (தேன் - தென்) அழகிய (அல்லது தேன் - தேன் போல் இனிய) புலியூரில் மகிழ்ந்து வீற்றிருக்கும் பெருமாளே!

(விலைமாதர் உறவாமோ)

## 640.

ஜகத்தோர் மெச்சும் எதிரில் விருதாகப் பிடிக்கும் குடை, சூழும் பல்லக்கின்மேல், மகிழ்ச்சி மிக்க இன்பத்துடனே, பலவகைய ஆபரணங்களுடனே, (தனிதம் பட்டுடையோடு) பட்டுடையோடு - பட்டாலாய ஆடைகளுடனே - (தனிதம்) மேக கர்ச்சனைபோன்ற பலமுள்ள முரசவாத்தியம், ஒலிசெயும் வீணை -

---

*'மூலத்தோனைத் தூண்டிடவே... வளிமாதைச் சேர்ந்தணைவாய்' என்பதினின்றும் மூலாதாரத்தில் விளங்கும் விநாயகரை வேண்டி எழுப்ப அவர் உதவியால் வள்ளிமாதை முருகா நீ அணைந்தாய் - என்னும் உட்பொருளும் இங்கு தொனிக்கின்றதென்பர்.

*தவளந்தப் புடனே † கிடுகிடு
நடைதம்பட் டமிடோல் பலவொலி
‡ சதளம்பொற் றடிகா ரருமிவை புடைசூழ;
வெகுகும்பத் துடனே பலபடை
கரகஞ்சுற் றிடவே வரஇசை
வெகுசம்பத் துடனே யழகுட னிதமேவும்-
Xவிருமஞ்சித் திரமா மிதுநொடி
மறையும் பொய்ப் பெவுஷோ டுழல்வது
விடவும்பர்க் கரிதா மிணையடி தருவாயே;
திகுதந்தித் திகுதோ திகுதிகு
திகுதந்தித் திகுதோ திகுதிகு
திகுர்தஞ்செச் செகசே செககண எனபேரி-
திமிர் தங்கற் குவடோ டெழுகட
லொலிகொண்டற் **றுருவோ டலறிட
திரள்சண்டத் தவுணோர் பொடிபட விடும்வேலா;
†† அகரம்பச் சுருவோ டொளியுறை
படிகம்பொற் செயலா ளரனரி
அயனண்டர்க் கரியா ளுமையருள் முருகோனே-
‡‡ அமுர்தம்பொற் குவடோ டிணைமுலை
மதிதுண்டப் புகழ்மான் மகளொடும்
அருள்செம்பொற் புலியூர் மருவிய
பெருமாளே (51)

---

*தவளம் - தவளச்சங்கு † கிடுகிடு -ஒரு பறை.

‡ சதளம் - ஜனக்கூட்டம் Xவிருமம் - பிரமை. பிராந்தி. பெவுஷ - வாழ்வு; சம்பிரமம். **உரு -அச்சம், "உரு வுட்காகும்" (தொல் - சொல் - *302)* (உட்கு - அச்சம்) - 'நாணும் உட்கும் நண்ணுவழி அடைதர' குறிஞ்சிப்பாட்டு *184.* †† அகரம் ஆவாள்; 'அந்தமும் ஆதியும் ஆகிநின் றாளே' (திருமந்திரம் - *1076);* 'நீங்காத பச்சை நிறத்தை உடையவள்' *(1073* திருமந்திரம்); 'வேடம் படிகம்-பார்ப்பதி' (கூ *1067);* 'தானான பொன் செம்மை வெண்ணிறத்தாள்' (கூ *-1047)* ஆடுகின்ற மூவரும் அங்கே அடங்குவர்' (கூ *1077);* திருப்புகழ் *325* பக்கம் *306* கீழ்க்குறிப்பு.

'செயலாள்'- "ஞாலமெல்லாம் பெற்ற நாயகி" ஆதலின்; (அபிராமி அந்தாதி - *93)*

" நாகத் தணையானும் நளிர்மா மலரானும்
போகத் தியல்பினாற் பொலிய அழகாகும் ஆகத்தவள்'
(சம்பந்தர் I-85-9).

‡‡ "மூவா மருந்து உள்ளியன்ற..முலை" (மருந்து - அமுதம்) - சம்பந்தர் *3-2-4.*

தவளசங்கு (வெண்சங்கு), (தப்பு) பறையுடன் (கிடுகிடு என்னும் பறை, (நடை) ஊர்வலம்வரும் தம்பட்டம் (பறை வகை), (இடோல்) டோல் என்னும் வாத்தியம், இவை பலவற்றின் ஒலி எழ, (சதளம்) ஜனக்கூட்டம் (பெருகிப் பார்க்க), பொன்னாலாய தடிகாரர்கள் (பொன்தடி ஏந்தும் சேவகர்கள் - இவையெலாம் பக்கங்களிற் சூழ்ந்துவர -

நிறைந்த பூரண கும்பங்களுடனே, பலவித படைகளும், கரகங்களும் சூழ்ந்துவரக், கீத (வாத்தியங்கள்) மிக்க செல்வத்துடனும் அழகுடனும் தினந்தோறும் பொருந்திவரும் - (இந்த ஆடம்பரங்கள்)

(வெறும்) பிரமையாம்; (வெறும்) கோலமாம்; இது நொடிப்பொழுதில் மறைந்துபோகின்ற (பொய் சம்பிரமம் ஆம்; (இந்தப் பொய்வாழ்வுடன்) அலைகின்ற அலைச்சலை விடுதற்கு - தேவர்களுக்கும் காண்பதற்கு அரிதான - உனது இரு திருவடிகளைத் தந்தருளுக.

திகுதந்தித் திகுதோ திகுதிகு.... திகுர்தஞ் செச் செகசே செககண என்று பேரி வாத்தியம் -

(திமிர்தம்) பேரொலி செய, (கற்குவடு) மலைத்திரட்சிகளும், ஏழு கடல்களும் ஒலி எழுப்பிக் குலைந்து போய் அச்சத்துடன் அலற (கலங்க), கூட்டமாய்க் கொடுமையுடன் வந்த அசுரர்கள் பொடிபட்டு அழிய வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

(அகரம்) அகரஎழுத்துப்போல முதல்வியாய்ப், பச்சை நிறத்தவளாய், ஒளி பொருந்திய ஸ்படிகம், பொன் போன்றவளாய் (உலகை யீன்று போகம் அளிக்கும் அருமைச்) செயலினளாய், (அரன்) சிவனுக்கும், (அரி) திருமாலுக்கும், (அயன்) பிரமனுக்கும், தேவர்களுக்கும் கிட்டாத அருமை வாய்ந்தவளாயுள்ள உமையம்மை அருளிய குழந்தையே!

அமுதம் (பொதிந்த) அழகிய மலைபோல்வதான இரண்டு கொங்கைகளையும், சந்திரன் போன்ற முகத்தையும் கொண்ட புகழ் பெற்ற (மான்மகள்) மான் ஈன்ற மகளாம் வள்ளியுடன், அருள்பாலிக்கும் செம்பொன் (அம்பலம்) உள்ள புலியூரில் வீற்றிருக் கும் பெருமாளே!

(இணையடி தருவாயே)

## 641. திருவடியைப் பெற

தனனதந்தம் தனனதந்தம்
தனனதந்தம் தானந்தம் *** தனதான

*சகுடமுந்துங் கடலடைந்துங்
குளமகிழ்ந்துந் தோய்சங்கங்
கமுகடைந்தண் டமுதகண்டந்
தரளகந்தந் தேர்கஞ்சஞ்
சரமெனுங்கண் குமிழதுண்டம்
புருவெனுஞ்செஞ் சாபம்பொன் திகழ்மாதர்-
சலசகெந்தம் புழுகுடன்சண்
பகமணங்கொண் டேய்ரண்டந்
தனகனம்பொன் கிரிவணங்கும்
பொறிபடுஞ்செம் பேர்வந்தண்
சலன †சம்பொன் றிடைபணங்கின்
கடிதடங்கொண் டாரம்பொன் தொடர்பார்வை;
புகலல்கண்டஞ் சரிகரம்பொன்
சரணபந்தந் தோதிந்தம்
புரமுடன்கிண் கிணிசிலம்பும்
பொலியலம்புந் தாள்ரங்கம்
புணர்வணைந்தண் டுவரொடுந்தொண்
டிடர்கிடந்துண் டேர்கொஞ்சுங் கடைநாயேன்-

---

* "சகுடமுந்தும்" என்னும் இந்த அருமைப் பாடலை வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகள் "தவள சங்கப் பாடல்" என்று பேரிட்டுச் சங்கத்தொனி புலப்படும்படி வெகு அருமையாகப் பந்துவராளி ராகத்திற் பாடக் கேட்டிருக்கின்றோம்.

சகுடம் - சேம்பு. நீர்ச்சேம்பு, கடற்பூடு. "சகுட நீரெனச் சதமகம் புரியருந் தவத்தோன்' - வில்லி பாரதம் - குருகுல 14 சகுடம் நாய் - (நீர்நாய்கள் நீந்தித்திரியும் கடல் எனலுமாம்) "சகுடம்போல் அவன் மனதிற் சசிகாமம் பிடித்தலைப்ப" -திருக்குற்றால - மந்தமாரு - 38 சகுடம் முந்தும் கடல் - கடற்பாசி பின்னிக்கிடக்கும் நீர்போலப் பல இடர்கள் பின்னிக்கிடக்கும் 'சமுசார சமுத்திரம்' (அல்லது நீர்நாய்களைக் கொண்ட கடல் போல - பல நாய்க்குணங்கள் மேம்பட்டு விளங்கும் வாழ்க்கைக் கடல்)

† சம்பொன்று - சம்பையொன்று 'சம்பைக் கொடியிடை -திருப்புகழ் 210, 585.

## 641.

(சகுடம்) நீர்ச்சேம்பு (கடற்பாசி - முந்தும்) - (உந்தும்) -தோன்றிப் பின்னி மேற்பட்டுக் கிடக்கும் (கடல்) - கடல் போன்ற வாழ்க்கைக் கடலைக்கண்டு (உங்கு) (உவ்விடத்தில்) அங்கு அதில் உள்ளம் மகிழ்ந்தும், (தோய் சங்கம் கமுகு) சங்கம் கமுகு தோய் - சங்கு போலவும், கமுகு போலவும் பொருந்திநெருங்கும் அமுதம்பொதிந்த (கண்டம்) கழுத்து; முத்து (மாலை) அணிந்துள்ள (கந்தம்) கழுத்து அடிப்பாகம்; மலர்ந்த தாமரை, அம்பு இவைகளுக்கு ஒப்பான கண்கள்; குமிழம் பூப்போன்ற மூக்கு; புருவம் என்கின்ற செவ்விய வில், பொலிவு விளங்கும் (மாதர்) அழகு கொண்டதாய்

தாமரை மொட்டுப்போன்று, (கெந்தம்) நறுமணமுள்ள, புனுகு சட்டத்துடன் சண்பகம் இவற்றின் நறுமணம் கொண்டு, பொருந்தி இரண்டான (தனகனம் பொன்கிரி வணங்கும் பொறிபடும்) பொன்கிரி வணங்கும் பொறிபடும் கனதனம் - பொன்மலையும், (மேருவும்) கீழ்ப்படும்படிச் செய்வனவாய்த் தேமல் பரந்துள்ள கனத்த கொங்கைகள்; செவ்விய பேர்வழிகள், வந்து (அண்) நெருங்கும், சலனம் (அசைவு கொண்டுள்ள) (சம்பு) சம்பை மின்னலுக்கு, (ஒன்று) ஒப்பான இடை; (பணங்கின்) பணத்தின் - பாம்பின் படம் போன்ற (கடிதடம்) அல்குல் கொண்டவர்கள், அழகிய (பொன்) பொற்காசு (சம்பாதிப்பதிலேயே) (தொடர்) நாட்டம் செல்லுகின்றதென்பதை - (பார்வை) நோக்கமானது -

(புகலல் கண்டு) சொல்லுவதுபோல வெளிப்படுத்த, (அம் சரி கரம் பொன்) அம் கரம் பொன் சரி - அழகிய கையில் உள்ள பொன் வளையலும், (சரணபந்தம்) காலில் கட்டப்பட்டுள்ளதும், தோதிந்தம் என ஒலிப்பதுமான (புரம்) பரிபுரமும் - காலணியும், அதனுடன் கிண்கிணியும் சிலம்பும் (பொலி) விளங்கி, (அலம்பும்) ஒலிக்கின்ற, (தாள்) அடியுடன், (ரங்கம்) அரங்கில் - நாடக மேடையில் (புணர்வு அணைந்து அண்டுவர் ஓடும்) சேர்ந்து பொருந்தி நெருங்குபவராகிய (பொதுமகளிர்க்கும்) (தொண்டு இடர் கிடந்து) - வேலை செய்யும் வேதனையிற் பட்டுக்கிடந்துண்டு (அந்த) அழகில் ஈடுபட்டுக் கொஞ்சுகின்ற (கடைநாயேன்) கீழ்ப்பட்ட நாயனைய நான்-

புகழடைந்துன் கழல்பணிந்தொண்
பொடியணிந்தங் காநந்தம்

புனல்படிந்துண் டவசமிஞ்சுந்
தவசர்சந்தம் போலுந்தின்

புவனிகண்டின் றடிவணங்குஞ்
செயல்கொளஞ்செஞ் சீர்செம்பொன் கழல்தாராய்;

திகுடதிந்திந் தகுடதந்தந்
திகுடதிந்திந் தோதிந்தம்

டகுடடண்டண் டிகுடடிண்டிண்
டகுடடண்டண் டோடிண்டிண்

டிமுடடிண்டிண் டுமுடடுண்டுண்
டிமுடடிண்டெடன் றேசங்கம் பலபேரி-

செககணஞ்சஞ் சலிகைபஞ்சம்
பறைமுழங்கும் போரண்டஞ்

சிலையிடிந்துங் கடல்வடிந்தும்
பொடிபறந்துண் டோர்சங்கஞ்

சிரமுடைந்தண் டவுணரங்கம்
பிணமலைந்தன் றாடுஞ்செங் கதிர்வேலா;

அகிலஅண்டஞ் சுழலஎங்கும்
பவுரிகொண்டங் காடுங் *கொன்

புகழ்விளங்குங் கவுரிபங்கன்
குருவெனுஞ்சிங் காரங்கொன்

டறுமுகம்பொன் சதிதுலங்குந்
திருபதங்கந் தாளன்றென் றமரோர்பால்

---

*கொன் - கோன்.

புகழ்பெற்று உன்னுடைய திருவடியைப் பணிந்து ஒள்ளிய திருநீற்றை அணிந்து அச் சமயத்தில் ஆனந்தக் (கண்ணீரிற்) (படிந்துண்டு) படிந்து, (அவசம்)- பரவசம் (மிஞ்சும்) மேம்படும் - (தவசர்) தவசிகளுடைய -

தவத்தினருடைய (சந்தம் போலும்) சுகம் போன்ற நிலையில் (திண் புவனி கண்டு) திண்ணிய வலிய இப் பூமியின் நிலையை அறிந்து (புவி வாழ்க்கையின் நிலையாமையை அறிந்து) இன்று - இன்றே- இப்பொழுதே-அடிவணங்கும்) உனது திருவடியை வணங்கும்-(செயல் கொள) பணியை மேற்கொள்ள (அம் செம் சீர்) அழகிய செவ்விய சீரான உனது செம் பொன்னாலாய கழல்களை அணிந்த திருவடியைத் தந்தருளுக.

திகுடதிந்திந் தகுடதந்தம்....டிமுட டிண்டென்று ஒலிக்கும் சங்கமும் பல பேரிகளும்-

(செக கணம்சஞ்) செக சஞ்கணம்-செகசஞ் என்னும் ஒலித்திரளை எழுப்பும் (சல்லிகை) பெரும்பறையும், (பஞ்சம்) ஐவகை இசைக்கருவிகளும் (தோல்கருவி, தொளைக்கருவி, நரப்புக்கருவி, மிடற்றுக் கருவி, கஞ்சக்கருவி (வெண்கலத்தாலாய தாள வாத்தியம்), பறைகளும் முழங்குகின்ற போர்க்களத்தில், பூமியும், மலைகளும் இடிபடவும், கடல் வற்றிப்போகவும், தூள்பறக்கவும், அங்கிருந்தவர்களாம் (அசுரர்களின்) கூட்டம் தலை உடைந்தும், (நெருங்கி எதிர்த்துவந்த) அசுரர்களின் உடலானது பிணமாகும்படி எதிர்த்துப் பொருதும் அன்று (ஆடும்) போர்புரிந்த செவ்விய ஒளிவேலனே!

எல்லா உலகங்களும் சுழலும்படி எங்கும் சுழன்று (வலங்கொண்டு) அங்கு நடனம் செய்கின்ற (கொன்) கோன்-தலைவன், புகழ் விளங்குகின்ற (கவுரிபங்கன்) உமையொரு பாகத்தன்-ஆகிய சிவபிராற்கு குருமூர்த்தி என்கின்ற அழகிய பெருமையைப் படைத்து, ஆறுதிரு முகங்களையும் (பொன்சதி துலங்கும் திருபதன் -அழகிய (சதி)-தாள ஒத்துக்களை விளக்கும் (திரு) முத்திச் செல்வத்தைத் தரும் (பதம்) திருவடிகளையும் உடைய கந்தா-(என்று என்று)-எனப் பலமுறை ஓதித் தேவர்கள், (பால்) உன்மீது-

அலர் பொழிந்தங் கரமுகிழ்ந்தொண்
சரணமுங்கொண் டோதந்தம்

புனைகுறம்பெண் சிறுமியங்கம்
புணர்செயங்கொண் டேயம்பொன்

அமைவிளங்கும் *புலிசரம்பொன்
திருநடங்கொண் டார்†கந்தம் பெருமாளே.(52)

## 642. திருவடியைப் பெற

தாந்தன தானதன தாந்தன தானதன
தாந்தன தானதன தனதான

சாந்துட னேபுழுகுதோய்ந்தழ கார்குழலை
மோந்துப யோதரம தணையாகச்-

சாய்ந்துப்ர தாபமுடன் வாழ்ந்தநு ராகசுக
காந்தமொ ‡டூசியென மடவார்பால்;

கூர்ந்தக்ரு பாமனது போந்துன தாள்குறுகி
ஓர்ந்துண ராவுணர்வி லடிநாயேன்-

கூம்பவிழ் கோகநக பூம்பத கோதிலிணை
பூண்டுற வாடுதின முளதோதான்;

Xபாந்தளின் மீதினிதி னோங்குக னோதுயில்கொள்
நீண்டிடு மாலொடய னறியாது-

---

*புலிசரம்-புலீச்சுரம்.புலியூர்.

† 'கந்த அம் பெருமாளே ' எனப் பிரித்துக் கொள்க,

‡ காந்தமொ டூசியென-

"இரும்பைக் காந்தம் இழுக்கின்றவாறு" -தாயுமானவர்,

X பாந்தளின் மீதினிய பாங்குட னேதுயில் கொள்பாண்டவர் தூதனயன்" என்றும் பாடம்.

மலர்களைச் சொரிந்து, அழகிய கரங்களைக் கூப்பித்தொழுது. (உனது) ஒள்ளிய திருவடிகளை மனத்திற் கொண்டு, ஓத-புகழ்ந்து நிற்க (அந்தம்) அழகினைக் கொண்ட குறப்பெண்-சிறுமியாகிய வள்ளியின் அங்கங்களை அணைந்த வெற்றியைக் கொண்டு, அழகிய பொான் அமை - பொான் அமைப்பு - பொன்னம்பலம்-விளங்கும்-புலீச்சுரம் என்னும் புலியூரில் அழகிய - திருநடத்தைக் கொண்டவராகிய கூத்தப்பிரானாய் விளங்கும் கந்தனாகிய அழகிய பெருமாளே! (கந்தப் பெருமாளே!) அல்லது திருநடங் கொண்டு நிறைந்து பொலியும் கந்தப்பெருமாளே! அல்லது திருநடம் கொண்ட சிவபிராற்குரிய கந்த! அம் பெருமாளே!)

(செம்பொன் கழல்தாராய்)

## 642.

சாந்தும் புனுகு சட்டமும் தோய்ந்து அழகு நிறைந்த கூந்தலை விரும்பியும். கொங்கையே தலையணையாக-அதன்மேற் சாய்ந்தும், ஆடம்பரத்துடன் வாழ்ந்து காம இச்சை இன்பத்தில் காந்தமும் ஊசியும்போல வசீகரிக்கப்பட்டு, மாதர்களிடத்தே-

மிக்கெழுந்த அன்பு மனம் தொலைந்து, உன்னுடைய திருவடிகளை அணுகி ஆய்ந்தறிந்து உணர்கின்றோம் என்ற உணர்ச்சியில்லாத மௌன நிலையில் அடிநாயேனாகியநான்-

குவிந்து அவிழ்ந்த தாமரையன்ன (பூம்பத கோதிலிணைபூண்டு) அழகிய திருவடிகளாகிய குற்றமற்ற இணையை (இரண்டினையும்) (பூண்டு), மனதிற்கொண்டு உறவாடுதினம் - அன்பு கொள்ளும் நாள் (ஒன்று) உள்ளதோ - (கூறியருளுக)

(ஆதிசேடனாகிய) பாம்பின்மேலே இன்பமாக விளங்கிக் கண் துயில் கொள்ளுபவரும், நீண்டிடு (நீண்டரூபம் கொண்ட- வருமான) (மால்) திருமாலுடன் பிரமன் காண முடியாது நின்று-

---

* திருப்புகழ் 246, பக்கம் 118 பார்க்க.

பாம்புரு வானமுநி *வாம்புலி யானபதன்
ஏய்ந்தெதிர் காணநட மிடுபாதர்;

பூந்துணர் பாதிமதி வேய்ந்த† ச டாமகுட
மாங்கன காபுரியி லமர்வாழ்வே-

பூங்கமு கார்வுசெறி யூங்கந காபுரிசை
‡சூழ்ம்புலி யூரி லுறை பெருமாளே.(53)

## 643. முருகன் எழுந்தருளி வர

தனதனன தனதான தனதனன தனதான
தனதனன தனதான தனதான

சுடரனைய திருமேனி யுடையழகு முதுஞான
சொருப Xகிரி யிடமேவு Oமுகமாறும்-

சுரர்தெரிய லளிபாட மழலைகதி நறைபாய
துகிரிதழின் மொழிவேத மணம்வீச;

அடர்பவள வொளிபாய அரியபரி புரமாட
அயில்கரமொ டெழில்தோகை மயிலேறி-

அடியனிரு வினைநீறு படஅமர **ரிதுபூரை
அதிசயமெ னருள்பாட வரவேணும்;

---

*"வாம்புலியான முநி பாங்கொடு காண நடம்" என்றும் பாடம்.

+ 'சடா மகுடமாம் கனகாபுரி'- 'பொன் திரண்டன்ன புரிசடை" சம்பந்தர் I-77-1 "பொன்னன புரிதருசடை" - சம்பந்தர் -3-85-6.

+ "பூம் புலி யூரிலுறை" என்றும் பாடம்.

X கிரியிடம் - கிரீடம்.

O முகம் ஆறும் - முகம் ஆறுந் தோன்ற.

** இது பூரை அதிசயம் என அருள்பாட - இவன் ஏதுமற்றவன்; இவனுக்குக் கடவுள் அருள்செய்வது என்ன ஆச்சரியம் என்று திருவருளைக் கொண்டாட; பூரை - ஒன்றுமில்லாமை.

பாம்பு உருவமுள்ள முநிவராகிய பதஞ்சலியும், (வாம்) வாவும் - தாவிச் செல்லும் புலியுருவத்தின் பாதங்களைக் கொண்ட வியாக்ரபாத முநிவரும் பொந்தி நின்று எதிரே தரிசிக்கும்படி நடனஞ் செய்கின்ற திருவடிகளை உடைய கூத்தப் பெருமானுடைய (நடராஜருடைய)

அழகிய பூங்கொத்துக்களையும், பாதி நிலவையும் சூடியுள்ள ஜடா மகுடமாகிய (கனகாபுரியில்) பொன் முறுக்கில் - பொன் வண்ணப் புரிசடையில் விரும்பி விளையாடும் குழந்தையே!

அழகிய கமுகுமரங்களின் நிறைவு செறிந்துள்ள - நெருங்கியுள்ள பொன்னிற மதில்கள் சூழ்ந்துள்ள புலியூரில் (சிதம்பரத்தில்) வாழ்கின்ற பெருமாளே!

(பூம்பத இணைபூண் டுறவாடு தினம் உளதோ)

## 643.

(காலைக்) கதிர் போன்ற திருமேனியின் அழகும், முற்றின ஞான சொரூபமும் (ஞானத்தின் திருவுருவும்), கிரீடம் பொருந்திய திருமுகங்கள் ஆறும்,

(சுரர்) தேவர்கள் சூட்டின மாலைகளிலிருக்கும் வண்டுகள் பாட, அதனால் (அம் மாலைகளிலிருந்து) (மழலைகதி) - மெதுவான வகையில் - துளித்துளியாகத் தேன் பாய - பவளம் போன்ற வாயிதழிலிருந்து சொல்லப்படும் வேத மொழிகளின் நறுமணம் வீச-

அடர்ந்த பவளநிறத்தின் ஒளிபாய, அருமையான (பரிபுரம்) சிலம்பு ஒலிக்க, வேல் ஏந்திய திருக்கரத்துடன் அழகிய கலாபம் உள்ள மயில்மேல் ஏறி-

அடியேனுடைய - நல்வினை தீவினை என்னும் - இருவினைகளும் பொடிபட்டழிய, (அதைக் கண்டு) தேவர்கள் யாவரும் இவன் ஏதுமற்றவன் (ஒன்றுக்கும் உதவாதவன்) இவனுக்குக் கடவுள் அருள்செய்வது என்ன ஆச்சரியம் என்று (உனது திருவருளைக் கொண்டாடிப் பாட நீ எழுந்தருளி வரவேண்டும்.

*விடைபரவி அயன்மாலொ டமரர்முநி கணமோட
மிடறடைய விடம்வாரி யருள்நாதன்

மினலனைய இடைமாது இடமருவு குருநாதன்
மிகமகிழ அநுபூதி யருள்வோனே;

† இடர்கலிகள் பிணியோட எனையுமருள் குறமாதி
னிணையிளநிர் முலைமார்பி னணைமார்பா-

இனிய‡ முது புலிபாத னுடனரவு சதகோடி
யிருடியர்கள் புகழ்ஞான பெருமாளே. (54)

## 644. விலைமாதர் உறவு அற

தத்ததன தானதன தானதன தானதன
தத்ததன தானதன தானதன தானதன
தத்ததன தானதன தானதன தானதன தனதான

தத்தைமயில் போலுமியல் பேசிபல மோகநகை
யிட்டுமுட னாணிமுலை மீதுதுகில் மூடியவர்
சற்றவிடம் வீடுமினி வாருமென வோடிமடி
பிடிபோல-

---

*விடைபரவி - விடை பெற்றுப் பரவி.

† இது அருணகிரியார் வரலாற்றைக் குறிக்கும்.

‡ கோயிற் புராணத்தின்படி தில்லையில் முதலில் தவத்தில் இருந்தவர் வியாக்ரபாதர்; பின்புதான் பதஞ்சலி வந்து அவருடன் கூடினார்; ஆதலால் - 'முது புலிபாதன்' என்றும் "பாதனுடன் அரவு' என்றும் கூறினார்.

(விடை) நந்தி யெம்பெருமானைப் (பரவி) போற்றி வணங்கி (அவர் அனுப்பப்) பிரமனும், மாலும் தேவர்களும், முநிவர் கூட்டங்களும் ஓடிவந்து தம்மிடம் சரண்புக (அல்லது - இறைவன் சந்நிதிக்குப் போகலாம் என்று நந்தி அளித்த விடையைப் (பதிலைப்) போற்றி அயன் - மால் - அமரர் - முநிவர் கணம் ஓடிவந்து சரணடையத்) தமது நெஞ்சிடையே (அடையும்படி) பொருந்தி நிற்கும்படி விஷத்தை வாரியுண்டு (சரண் அடைந்தவர்களுக்கு அருள் புரிந்த நாதன் (தலைவன்)-

மின்னலுக்கு ஒப்பான இடையை உடைய மாது (பார்வதி) தனது இடது பாகத்தில் பொருந்தி உள்ள குருமூர்த்தியாகிய சிவபிரான் மிகவும் மகிழ அவருக்கு ஞானோபதேசப் பிரசாதத்தை அருளியவனே!

துன்பங்களும், கிரகசேஷ்டைகளும், நோய்களும் விலக, என்னையும் ஒரு பொருளாகக் கருதி எனக்கு அருளின் (குறமாதின்) வள்ளியின் இரண்டு இளநீர் போன்ற கொங்கைகள் அமைந்த மார்பில் அணையும் திருமார்பை உடையவனே!

இன்பநிலையில் உள்ள பழையமுநி வியாக்ரபாதருடன் (அரவு) பாம்புருவுள்ள பதஞ்சலி முநிவரும், நூறுகோடிக் கணக்கான இருடிகளும் புகழ்கின்ற ஞான மூர்த்தியாம் பெருமாளே!

(அருள் பாட வரவேணும்)

## 644.

கிளி போலவும், மயில் போலவும், தமது தன்மையைக் குறித்த பேச்சுக்களைப் பேசி, பலவிதமான மோகம் எழுப்பவல்ல சிரிப்பைச் சிரித்தும், அப்போதே வெட்கப்படுவதுபோல நாணத்தைக் காட்டியும், கொங்கை மேலே புடைவைகொண்டு மூடியும் நிற்கின்ற அவர் (அந்தப் பொதுமகளிர்) - (சற்று) கொஞ்சம் கிட்டத்தான் (அவிடம்) அந்த இடத்தில் (எங்கள்) வீடும் இருக்கின்றது; இனி நீங்கள் வரவேண்டும்' என்று கூறி ஓடி, மடியைப் பிடித்து இழுத்துச் செல்வதுபோல (அழைத்து)-

*தைச்சரச மோடுறவெ யாடியக மேலொடுபொ
யெத்தியணை மீதி† லிது காலமெனிர் போவதென
தட்டுபுழு கோடுபனி நீர்பலச வாதையவ ருடல்பூசி;

வைத்துமுக மோடிரச வாயிதழி னூறல்பெரு
கக்குழல ளாவசுழல் வாள்விழிக ளேபதற
வட்டமுலை மார்புதைய வேர்வைதர தோளிறுகி
யுடைசோர-

மச்சவிழி பூசலிட ‡வாய்புலியு லாசமுட
னொப்பியிரு வோருமயல் முழ்கியபின் ஆபரணம்
வைத்தடகு தேடுபொருள் சூறைகொளு வார்கலவி
செயலாமோ;

சத்திXசர சோதிOதிரு மாதுவெகு ரூபிசுக
நித்தியகல் யாணியெனை யீணமலை மாதுசிவை
**தற்பரனொ டாடுமபி ராமிசிவ காமியுமை
யருள்பாலா-

சக்ரகிரி மூரிமக மேருகடல் தூளிபட
ரத்நமயி லேறிவிளை யாடியசு ராரைவிழ
சத்தியினை யேவிஅம ரோர்கள்சிறை மீளநட
மிடுவோனே;

---

* தை - தைக்கும்படியான

† இது காலம் என் நீர் போவது என.

‡ வாய் புலி - வாய்ந்து புல்லி. X சரம் - மூச்சு, தனிமை

O 'திருமாது' - பார்வதி - பாடல் 538 - பக்கம் 228 கீழ்க்குறிப்பு.

** 'பாடக மெல்லடிப் பாவையோடும்...நாடக் மாடு நம் பெருமான்'. 'வரைமக ளோடுட னாடுதிர்' I-7-1; 3-124-2 - சம்பந்தர்.

தைக்கும்படியான காம இன்ப லீலைகளைச் செய்து, உறவு முறையிலே விளையாடி, வீட்டுக்குள் அழைத்துக் கொண்டுபோய், வஞ்சனை எண்ணத்துடன் - படுக்கையின் மேலே இருத்தி, ("இது காலம் என் நீர் போவது" என) இது தக்க சமயம் ஆச்சே! ஏன் நீர் போகின்றீர்" என்று சொல்லித் தட்டில் புனுகும், பன்னீரும் பலவகைய ஜவாதும் வைத்து வந்தவருடைய உடலிற் பூசியும்-

(முகத்தோடு) முகம் வைத்து இன்ப ரசமான வாய் இதழ் ஊறல் பெருக, கூந்தல் கலைந்து குலைய, சுழலுவனவும், வாள் போன்றனவுமான கண்கள் (பதற) துடிக்க - வட்டமான கொங்கை மார்பிற் புதைந்து திகழ, வேர்வை உண்டாக, தோளை இறுக அணைத்துப் புடைவை நெகிழ,

(மச்ச விழி) மீன்போன்ற கண்கள் (பூசலிட) காமப்போரை விளைவிக்க, (வாய்ந்து புல்லி) கிட்டித் தழுவி, ஆனந்தமாக, மனம், ஒப்பி, இருவோரும் காம மயக்கில் முழுகின பின்பு, (ஆபரணங்கள்) நகைகள் அடைமானம் வைக்கப்பட்டுத் (தம்மிடம் வந்தவர்) தேடின பொருளை யெல்லாம் சூறைக் காற்றுப்போல அடித்துக்கொண்டு போகின்றவர்களாகிய பொது மகளிருடன் கலந்து இன்பம் பெறும் தொழில் நல்லதாமோ (நல்லதன்று என்றபடி)

சத்தி, (சரசோதி) தனித்து (அல்லது உயிர்களின் மூச்சில்) விளங்கும் ஜோதி (அல்லது சரசுவதி), திருமாது - பார்வதி (அல்லது திருமகள்) பலவித (அல்லது நிரம்பின) ரூபி (உருவத்தை உடையவள்), சுக நிலையிலேயே இருக்கின்ற நித்யகல்யாணி, என்னை ஈன்ற (மலைப்பெண்) இமயமலைப் பெண், சிவை, இறைவனுடன் ஆடுகின்ற (அபிராமி) அழகி, சிவகாமி, உமை அருளிய பாலனே!

சக்ரவாளகிரியும், பலமுடைய மகா மேருமலையும் கடலும் புழுதிபட, ரத்னமயமான மயிலில் ஏறி, விளையாடி அசுரர்கள் அழிபட, சத்திவேலைச் செலுத்தித் தேவர்கள் சிறையினின்றும் வெளிவர அவர்களை மீட்டு நடனஞ்செய்தவனே!

துத்திதன பாரவெகு மோகசுக வாரிமிகு
சித்ரமுக ரூபியென தாயிவளி நாயகியை
சுத்தஅணை யூடுவட மா*முலைவி டாதகர
மணிமார்பா-
† சுத்தவம காதவசி காமணியெ னோதுமவர்
சித்தமதி லேகுடிய தாவுறையும் ஆறுமுக
சுப்ரமணி யாபுலியூர் மேவியுறை தேவர்புகழ்
பெருமாளே.(55)

## 645. மாதர்மீது மயக்கு அற

தத்த தத்தன தான தானன
தத்த தத்தன தான தானன
தத்த தத்தன தான தானன தனதான

துத்தி பொற்றன மேரு வாமென
வொத்தி பத்திரள் வாகு வாயவிர்
துப்பு முத்தொடு மார்பி னாடிட மயில்போலே-
சுக்கை மைக்குழ லாட நூலிடை
பட்டு விட்டவிர் காம னாரல்குல்
சுற்று வித்துறு வாழை சேர்தொடை
விலைமாதர்;
தத்தை புட்குர லோசை நூபுர
மொத்த நட்டமொ டாடி மார்முலை
சற்ற சைத்துகு லாவும் வேசிய ரவரோடே-
தர்க்க மிட்டுற வாடி யீளை‡ நொாய்
கக்கல் விக்கல்கொ ளூளை நாயென
சிச்சி சிச்சிXயெ னால்வர் கூறிட வுழல்வேனோ;
தித்தி மித்திமி தீத தோதக
தத்த னத்தன தான தீதிமி
திக்கு முக்கிட மூரி பேரிகை தவில்போடச்-

*முருகவேளின் திருக்கரம் "சுத்த அணையூடு 'வள்ளி முலையையும்', வேலை எப்போதும் விடாது பிடித்திருக்குமாம்; 'சுத்த அணையூடு வள்ளியின் 'முலை விடாத கரம்' என்றதன் உட்பொருள் - 'உண்மை அடியார்களின் பக்குவ நிலையை எப்போதும் விரும்பி அணைந்து காக்கும் கரம்' என்பது; 'வேலை மறவாத கரதலா' என்றார். 1050 ஆம் பாடலில்; அதன் பொருள் ஞானத்திருவருளை எப்போதும் மறவாது பாலிக்கும் கரத்தினர் என்பது. † சுத்த அம் மகாதவ. ‡ நொாய் - நோய்.

X என நால்வர் கூறிட எனப்பிரிக்க.

தேமல் பரந்த கொங்கைப் பாரங்களைக் கொண்ட அதிக மோகந் தர வல்லவளும், சுகக்கடல் போன்றவளும், மிக்க அழகுள்ள முக ரூபத்தைக் கொண்டவளும், எனது (ஆயி) தாய் வள்ளிநாயகியைப் பரிசுத்தமான படுக்கையிலே அவளது மாலை அணிந்த கொங்கையை விட்டுப் பிரியாத திருக்கரத்தை உடையவனே! அழகிய மார்பனே!

"பரிசுத்தமான (அம்) அழகிய மகா தவ சிகாமணி" என்று ஓதப்படுகின்ற (அல்லது ஓதுகின்ற) அடியார்களுடைய சித்தத்திலே - மனதிலே - குடியாக உறைகின்ற * "ஆறுமுக சுப்பிரமணியா!" **புலியூரிற்** பொருந்தி வீற்றிருக்கும் பெருமாளே! தேவர்கள் புகழும் பெருமாளே!

(பொருள் சூறைகொளுவார் கலவி செயலாமோ)

## 645.

தேமல் பரந்துள்ள அழகிய கொங்கை மேருமலையாம் என்று அதற்கு ஒத்ததாகி - இணையாகி, யானைக் கூட்டங்களின் வெற்றிபோல் வெற்றி கொண்டதாகி, விளங்கும் (துப்பு) பவள மாலை, (முத்து) முத்துமாலை இவைகள் மார்பிலே ஆட, மயில்போல-

பூமாலை அணிந்த கரிய கூந்தல் அசைய, நூல்போல நுண்ணிய இடையில் (பட்டு) பட்டாடை விட்ட அவிர் - விளங்கி ஒளிவிட காமனுக்கு உரிய இடமாகிய அல்குலைச் சுற்றி அமைய உடுத்து விளங்கும் வாழை போன்ற தொடைகளை உடைய (விலைமாதர்) பொதுமகளிர்-

கிளியாதிய புட்களின் (பறவைகளின்) குரலோசைக்குப் பொருந்த சிலம்புகள் ஒத்து ஒலிக்க, நடனம் ஆடி, மார்பில் உள்ள கொங்கையைக் கொஞ்சம் அசைத்துக் குலவிப் பேசும், பொதுமகளிர்களுடனே-

வாதம் செய்தும், உறவு பூண்டு பேசியும் (காலம் கழித்ததனால் வந்த) (ஈளை நோய்) இழுப்பு - கோழை நோய் (கக்கல்) வாந்தி, விக்கல், இவைகளைக் கொண்டு ஊளை நாய்போல இழிவுபட்டுச் சீச்சீ சீச்சி என்று நாலுபேர் (இழித்துப்) பேசும்படி திரிவேனோ!

தித்தி மித்திமி தீததோதக.....தீதிமி என்று திக்குகள் எல்லாம் (முக்கிட) முக்கித் திணற - வலியுள்ள பேரி வாத்தியம், (தவில்) (மேளவகை) இவைகள் ஒலி எழுப்ப-

---

* இது தில்லைக் கோயிலிலுள்ள ஆறுமுகசுவாமி சந்நிதிக்கு ஆம்.

சித்ர வித்தைய ராட வானவர்
*பொற்பு விட்டிடு சேசெ சேயென
செக்கு விட்டசு ரோர்கள் தூள்பட விடும்வேலா;
செத்தி டச்சம ணார்க டாபட
அற்று தைத்தசு வாமி யாரிட
சித்தி ரச்சிவ காமி யாரருள் முருகோனே-
தெற்க ரக்கர்கள் தீவு நீறிட
விட்ட அச்சுத ரீன மானொடு
சித்தி ரப்புலி யூரில் மேவிய பெருமாளே.(56)

## 646. தரிசனம் பெற

தானா தனத்ததன தானா தனத்ததன
தானா தனத்ததன தனதான

நாடா பிறப்புமுடி யாதோ வெனக் கருதி
நாயே னரற்றுமொழி வினையாயின்-
நாதா திருச்சபையி னேறாது சித்தமென
நாலா வகைக்குமுன தருள்பேசி;
வாடா மலர்ப்பதவி தாதா எனக்† குழறி
வாய்‡ பாறி நிற்குமெனை அருள்கூர-
வாராய் மனக்கவலை தீராய் நினைத்தொழுது
Xவாரே னெனக்கெதிர் முன் வரவேணும்;

---

* பொற்பு விட்டிடு - பொற்பூ இட்டு இட்டு. தாரகன் வதை பட்டவுடனே "மாலும்...கமலத்தேவும்...மகத்தின் வேந்தும் முநிவரும் சுரரும் ஆர்த்தார். தண் பூமாரி தூர்த்தனர்; சிங்கமுகன் மாய்ந்ததும் - 'பங்கயத்தன் ஆதி விண்ணோர் ...ஆடினார் பாடி மலர் தூர்த்தார் மகிழ்ந்தார்": சூரன் அடங்கினதும் - "ஆர்த்தனர் எழுந்து துள்ளி ஆடினர் பாடா நின்றார்...பொலங்கெழு பூவின்மாரி தூர்த்தனர்"...."தொழுதனர் சுடர்வேல் கொண்ட தீர்த்தனை" கந்தபுராணம் - *1-20-197-198; 4-12-457 4-14-2.*

† 'குழவி' - என்றும் பாடம்

‡ "நிற்கு மடியவரோடு' எனவும் பாடம்.

X "வாரே னெனக்கு மெதிர்" எனவும் பாடம்.

அழகிய வித்தைகள் வல்லோர் (மனங் களிப்புற்று ஆட) தேவர்கள் (பொன் பூ) அழகிய பொன்மலர்களை (இட்டு இட்டு) சொரிந்து, சொரிந்து ஜே! ஜே! (சேயே) குழந்தை முருகா என்று துதிக்கச், (செக்குவிட்டு) செக்கிலே போட்டு அசுரர்கள் பொடியாம்படி செலுத்தின வேலனே!

யமன் (செத்திட) இறக்கவும், (அவனது) எருமைக்கடா வீழ்ந்து அழியவும், அன்று உதைகொடுத்த சுவாமியாருடைய (சிவனுடைய) இடது பாகத்தில் உள்ள அழகிய சிவகாமியார் ஈன்ற குழந்தையே!

தெற்கே அரக்கர்கள் (இராவணாதியர்) இருந்த தீவு பொடியாகிப் பாழ்படச் செய்த (அச்சுதர்) திருமால் ஈன்ற (மானொடு) வள்ளியுடன் அழகிய புலியூரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(வேசிய ரவரோடே.....உழல்வேனோ)

## 646.

(நாடா) நாடி - ஆய்ந்து (பிறப்பு) பிறவி என்று ஓயாது வரும் இத் தொழில் ஒரு முடிவு பெறாதோ என்று (கவலையுடன்) எண்ணி, அடியேன் கூச்சலிடும் - ஓலமிடும் இந்த மொழி - (வினையாயின்) நான் முன்செய்த வினையின் விளைவினால் வருவது காரணமாயிருந்தால் (வினைப்பயனால் - பிறவி எடுக்கின்றேன் என்றால்)

நாதனே! (உனது) சந்நிதியில் (திரு ஓலக்கச் சபையில்) (ஏறாது சித்தமென) உன் திருமனதிலே (நான் அரற்று மொழி) ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது என்பதை நான் உணர்ந்து (நாலாவகைக்கும்) பலவாறாக - உன்னுடைய திருவருட் பெருமையையே பேசி-

என்றும் அழிதல் இல்லாத உனது திருவடி மலர் என்னும் பதவியை (முத்தியைக்) கொடுத்தருள், கொடுத்தருள் என்ற குழறி, வாய் கிழிபட்டு (ஓலிட்டு அரற்றி) நிற்கும் எனக்கு (உனது) திருவருள் மிக்குக் கூடும்படி,

வந்தருளுக, என் மனக் கவலையைத் தீர்த்தருளுக - உன்னைத் தொழுது வருதலே இல்லாத அடியேனுக்கும் எதிரிலே முன்னே எழுந்தருள வேண்டுகின்றேன்.

சூடா மணிப்பிரபை ரூபா *கனத்தவரி
தோலா சனத்தி யுமை யருள்பாலா-
† தூயா துதித்தவர்கள் நேயா வெமக்கமிர்த
‡ தோழா கடப்பமல ரணிவோனே;
ஏடார் குழற்சுருபி Xஞானா தனத்திமிகு
மேராள் குறத்திதிரு மணவாளா-
ஈசா O தனிப் புலிசை வாழ்வே சுரர்த்திரளை
ஈடேற வைத்தபுகழ் பெருமாளே. (57)

## 647. திருவடி பெற

தானதன தத்த தந்தன தானதன தத்த தந்தன
தானதன தத்த தந்தன தந்ததான

**நாலுசது ரத்த பஞ்சறை மூலகம லத்தி லங்கியை
நாடியின டத்தி மந்திர பந்தியாலே
நாரண புரத்தி லிந்துவி னூடுற இணக்கி நன்சுடர்
நாறிசை நடத்தி மண்டல சந்தியாறிற்;

---

* 'கனத்தி அரிசூழா சலத்தி' - என்றும் பாடம்.

அரிசூழ் அசலம் - கயிலை - சம்பந்தர் 'மடங்கல் தொடங்கு...கயிலை' - I-68-1.

† 'தாதா துதித்தவர்கள் பாகா' - என்றும் பாடம்.

‡ "என்னுடைய தோழனுமாய்" - சுந்தரர். 7-51-10. சுந்தரருக்குச் சிவபிரான் தோழராய் இருந்ததுபோல, அருணகிரியார்க்கும்.. முருகவேள் 'உடுக்கை இழந்தவன் கைபோல அங்கே, இடுக்கண் களைந்த' தோழராய் விளங்கினார் என்பது அருணகிரியாரின் வரலாற்றால் விளங்கும். வில்லியுடன் செய்த வாதிலும், சம்பந்தாண்டானோடு செய்த வாதிலும் வெற்றிதந்தும், பெருத்த காட்டில் வழிதப்பி விழித்தபோது மகாடவியில் நிற்பதொர் சகாயக் காரனாய்" உதவியும், "அபரிமித வித்தைகளும் அறியென இமைப்பொழுதில்" வாழ்வித்து உதவியும், அருள்புரிந்தகாரணத்தால் "நேயா", "அமிர்த தோழா" - என மனங்குழைந்து உருகுகின்றார் அருணகிரியார்.

X ஞான ஆதனத்தி - ஞானாசனத்தை உடையவள். 'ஞானா தனத்தியணமேராள்' என்றும் பாடம். 'அமுதாசனத்தி குற மடவாள்' என்றார் 582-ஆம் பாடலில். O 'தனிப்புலியூர் வாழ்வே' -என்றும் பாடம்.

** இந்தப் பாடலின் முதல் நான்கடிகளுக்கு எழுதியுள்ள உரை எங்கள் மூலப்பதிப்புள் பழைய வித்துவான்களின் உரை.

(சூடாமணி) தெய்வமணியின் ஒளி விளங்கும் உருவத்தினள், பெருமை வாய்ந்த சிங்கத்தின் தோலை ஆசனமாக உடையவள், உமாதேவி அருளிய குழந்தையே!

பரிசுத்த மூர்த்தியே! துதித்து வணங்குவோரின் நேயனே- (அன்பனே)! அடியேனுக்கு அமுதம் போல அருமை வாய்ந்த தோழனே! கடப்பமலர் அணியும் பெருமானே!

மலர் நிறைந்த கூந்தலை உடைய (வடிவத்தினள்), உருவத்தினள், ஞானாசனத்தை உடையவள், மிக்க அழகி - குறத்தி வள்ளியின் அழகிய மணவாளனே!

ஈசனே! ஒப்பற்ற புலியூரில் வாழும் செல்வனே! தேவர் கூட்டத்தை (ஈடேறச் செய்த) வாழ்வித்த புகழைக் கொண்ட பெருமாளே!

(எனக்கெதிர் முன் வரவேணும்)

## 647.

மூல கமலத்தில் அங்கியை - மூலாதார கமலத்துள்ள அக்கினியை - நாலு சதுரத்த பஞ்ச அறை - நாற்சதுரப் பிரமபீடமாகிய சம்மாரக் கிரமத்தின் அஞ்சாம் வீடாகிய சுவாதிஷ்டானத்திற் செல்லும்படி - மந்திர பந்தியாலே - மந்திர ஒழுங்கினாலே, - நாடியின் நடத்தி - சுழிமுனை நாடி மார்க்கத்திற் செலுத்தி,-

நாரண புரத்தில் - விஷ்ணு வீடாகிய மணிபூரகத்தில் உள்ள, - இந்துவின் ஊடு - அர்த்த சந்திராகாரமாகிய விஷ்ணுபீடத்தில், -உற இணக்கி - பொருந்தச் சேர்த்து-நன்சுடர் நாற - நல்லசுடர் தோற்றும்படியாக, - இசை நடத்தி,-அநாகத முதலிய மற்ற ஸ்தானங்களிலும் இணங்கி நடத்தி,-மண்டல சந்தி ஆறில் - அக்கினியாதி மும்மண்டலங்களிலுஞ் சந்தித்துள்ள ஆறாதாரங்களிலும் பொருந்திய-

*கோலமு முதிப்ப கண்டுள நாலிணை மறித்தி தம்பெறு
கோவென முழக்கு † சங்கொலி விந்துநாதங்;
கூடிய முகப்பி லிந்திர ‡ வானவமு தத்தை யுண்டொரு
கோடிநட னப்ப தஞ்சபை யென்றுசேர்வேன்;
X ஆலமல ருற்ற சம்பவி O வேரிலி குலக்கொ ழுந்திலி
** ஆரணர் தலைக்க லங்கொளி செம்பொன்வாசி-
†† ஆணவ மயக்க முங் ‡‡ கலி காமிய மகற்றி
யென்றனை
ஆளுமை பரத்தி சுந்தரி தந்தசேயே;
வேலதை யெடுத்து XX மிந்திரர் மால்விதி பிழைக்க
வஞ்சகர்
வீடெரி கொளுத்தி யெண்கட லுண்டவேலா-

---

* இருவழி யடைத்து மூலத் தொருவழி திறந்தாங் கெய்தும்.
பருதியோர் கோடி யொத்த பார்த்து நாதம்
ஒருபதுங் கேட்டு மும்மைக் குணம் புலத்துட னடக்கிப்
புருவமேல் நாட்டம் ஓட்டி ஆனந்தப் புணரி புக்கான்" -
என வரும் திருக்கழுக்குன்றப் புராணப்பாடல் ஈண்டு உணரற்பாலது
† சங்கொலி - பாடல் 179-பக்கம் 416 கீழ்க்குறிப்பு. ‡ 'அமுத சித்தி'
என்றார் இதனை - பாடல் 439; "ஞானம் உண்டு" என்றார்-பாடல்
612ல்

X ஆலம் மலருற்ற - கைவிரல்களினின்றுங் கங்கை முதலிய நதிகளை விரித்த; ஆலம் - நீர்.

கங்கையின் வரலாறு: பாடல் 446 - பக்கம் 622 கீழ்க்குறிப்பு.
'சங்கரன் விழிகள் மூடுந் தனாதுகை திறக்கும் எல்லை
அங்குலி யவையீ ரைந்தும் அச்சத்தால் வியர்ப்புத் தோன்ற
மங்கையத் தகைமை காணூஉ மற்றவை விதிர்ப்பப் போந்து
கங்கையோர் பத்தாய் யாண்டும் கடல்களிற் செறிந்த அன்றே'
-கந்த புரா - 6-13-369.

O வேரிலி குலக்கொழுந்திலி - ஆதியந்த மில்லாதவள்.

** சிவபிரான் பிரம கபாலம் ஏந்தினவராதலின் -அவரது இடது பாகத்தில் உள்ள தேவி அதை ஏந்துகின்றாள்.

"பிரமன் படுதலை ஏந்திய பரன்" - சம்பந்தர் I-9-9.

†† இந்த அடியில் அருணகிரியார் தமக்குத் தேவி அருளின வரலாற்றைக் குறிக்கின்றார் (பாடல் 439- "என்மாசு சேர் ஏழுபிறப்பையும் அறுத்த உமை") ‡‡ கலி - கல்லி. தோண்டி வேரறுத்து.

XX இந்திரர் பலர் - "ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர்" -அப்பர் 5-100-3.

கோலமும் உதிப்ப - விநாயகராதி சதாசிவாந்தமாகிய மூர்த்திகளின் திருக்கோலங்களும் பிறவும் பிரசன்னமாக, கண்டு - அவைகளைத் தரிசித்து, உள - சரீர நிலைக்கு ஆதாரமாகவுள்ள - நாலினை - நாலங்குலப் பிராணகலையை, மறித்து - ஒவ்வொரு சுவாசங்களின் வழியாகவும் சிறிது சிறிதாகக் கழிந்து போகாதபடி தடுத்து, இதம் பெறு - இனிமையாகிய, கோ என முழக்கு சங்கு ஒலி - கோ என்று முழங்கும் சங்கத்தொனியாகிய, விந்து நாதம் - விந்து சம்பந்த நாத ஒலி -

கூடிய முகப்பில் - கூடி முழங்கும் இடத்து நின்று, இந்திர வான அமுதத்தை - இந்திர போக மாகிய தேவாமிர்தத்தை, உண்டு - பருகி, ஒரு கோடி நடன பத அம் சபை - அநந்தாநந்த நடநம்புரியுங் குஞ்சிதபாத அழகிய திருச்சபையை, என்று சேர்வேன்- அடியேன் எக் காலத்து அடையப் பெறுவேன்?

(ஆலம்) நீரை, (மலருற்ற) - கைவிரல்களினின்றும் கங்கை முதலிய நதிகளாக விரித்த, (சம்பவி) - சாம்பவி - பார்வதி - (அல்லது - ஆலம் - நீரில் உண்டாகும் - மலர் - மலராகிய * தாமரையில் - உற்ற - வீற்றிருக்கின்ற சாம்பவி), (வேரிலி) அடியிலி, (குலக்கொழுந்திலி) சிறந்த முடியிலி - ஆதியந்த மில்லாதவள், (ஆரணர்) வேதம்வல்ல பிரமனுடைய, தலைக்கலம் - தலைக்கலனை - தலையோடாம் பாத்திரத்தைக் (கொளி) கொண்டவள், செம்பொன் போன்ற (உயர்ந்த) தன்மையை உடையவள்,

(என்னுடைய) ஆணவத்தையும், மயக்கத்தையும் (கல்லி) தோண்டி வேரறுத்து, (காமியம்) ஆசைகளை, ஒழித்து, என்னை ஆண்டருளின உமை, பராசத்தி, அழகி (பார்வதி) பெற்ற குழந்தையே!

வேல் ஏந்தி, இந்திரர்களும், திருமாலும், பிரமனும் பிழைக்கும் வண்ணம் வஞ்சகராகிய அசுரர்களின் இருப்பிடங்களை எரிமூட்டி மதிக்கத்தக்க கடல்களையும் வற்றச் செய்த வேலனே!

---

* பார்வதி தாமரையில் வீற்றிருப்பது:- "முக்கண்ணி விரும்பும் வெண்டாமரை" திருமந்திரம் 1067; 'அம்புயமேல் திருந்திய சுந்தரி' - அபிராமி அந்தாதி - 5.

*வேதசது ரத்தர் தென்புலி யூருறை யொருத்தி பங்கினர்
வீறுநட னர்க்கி சைந்தருள் தம்பிரானே. (58)

## 648. முத்தி பெற

தானத்தன தானத்தன தானத்தன தானத்தன
தானத்தன தானத்தன தனதான

நீலக்குழ லார்முத்தணி வாய்சர்க்கரை யார்தைப்பிறை
நீளச்சசி யார் பொட்டணி நுதல்மாதர்-

நீலக்கய லார்பத்திர வேலொப்பிடு வார்நற்† கணி
நேமித்தெழு தாசித்திர வடிவார் ‡ தோள்;

ஆலைக்கழை யார்Xதுத்திகொ ளாரக்குவ டார் கட்டளை
யாகத்தமி யேனித்தமு முழல்வேனோ-

ஆசைப்பத மேல்புத்திமெய் ஞானத்துட னேபத்திர
மாகக்கொள வேமுத்தியை யருள்வாயே;

○மாலைக்குழ லாளற்புத **வேதச்சொரு பா†† ளக்கினி
மார்பிற்பிர காசக்கிரி தனபார-

---

* 'நால் வேதத்தர் - சம்பந்தர் 3-9-7.

† கணி - குறித்து எழுதுவோன்.

‡ தோளுக்குக் கரும்பு உவமை, "கழை தோளானது அமைக்கினமாம். - திருப்புகழ் 734.

X துத்தி - தேமல்.

○ மாலைக்குழல்; மாலை - பூமாலை, இருள் -'மாலைமென் கேசம்' - திருப்புகழ் 43.

** 'வேதச் சொருபி' - திருப்புகழ் 636.

†† வேதப் சொருபாள், அக்கினி சொருபாள்; இறைவன் அனலுருவினன் ஆதலின் அவரது இடது பாகத்தில் உள்ள தேவியும் அக்கினி சொரூபத்தினள்; இறைவன் 'அனலுருவினன்' - சம்பந்தர் I-19-2 'அக்கினி மேனிப் பரனார்' என்றார் 7-ஆவது அடியிலும்.

(வேத சதுரத்தர்) சதுர் வேதத்தர் - (நான்கு வேதங்களையும்) உடைய பிரான், அல்லது நான்கு வேதங்களையும் கற்றவர்கள் (அல்லது வேதங்களில் சதுரர்கள்; வல்லவர்கள்) - (வாழும்), அழகிய புலியூரில் - (சிதம்பரத்தில்) வாழ்கின்ற (ஒருத்தி) ஒப்பற்ற தேவி பார்வதி - பங்கினில் மேம்பட்டு விளங்கும் நடனமூர்த்தியாகிய சிவபிரானுக்கு - (அவர் கேட்டபடியே மனம்) இசைந்து, அருள் (உபதேசம்) அருளிய தம்பிரானே!

(நடனப்பதம் சபை என்று சேர்வேன்)

# 648.

கரிய கூந்தலை உடையவர்கள், முத்துப் போன்ற (பல்) வரிசை உள்ள வாயில் (ஊறலாகிய) சர்க்கரையை உடையவர்கள்) (தைப்பிறை) *தைமாதத்துப் பிறைச் சந்திரன் (அல்லது அலங்காரம் உள்ள பிறைச்சந்திரன்) போன்றதும், (நீள) வளர்ந்த, (சசி) பூரண சந்திரன் போன்ற பொட்டை அணிந்துள்ளதுமான நெற்றியை உடைய மாதர்கள்,

கரிய கயல்மீன் போலவும், (பத்திரம்) வாள் போலவும், வேலுக்கு ஒப்பானதுமான (கண்ணை) உடையவர்கள், (நற்கணி) நல்ல திறமையுள்ள கணி - சித்திரம் எழுதுவோன், (நேமித்து) சிந்தித்து...நன்கு யோசித்தும் (எழுதாத) எழுத முடியாத, அழகிய வடிவு (உருவம் - காந்தி) நிறைந்த தோளானது-

(கரும்பாலையில் உள்ள) கரும்புபோல் உடையவர்கள், தேமல் பரந்துள்ள திரண்ட, (அல்லது) முத்து மாலை அணிந்த மலையன்ன, கொங்கையை உடையவர்கள், இட்ட கட்டளையாக (ஏவின வேலைகளைச் செய்துகொண்டே) தனியேனாகிய நான் தினந்தோறும் திரிந்து அலைவேனோ!

ஆசையுடன் உனது (பதமேல்) திருவடியின்மேல் புத்தியை வைத்து, மெய்ஞ் ஞானத்துடனே, (பத்திரமாகக் கொளவே) ஜாக்கிரதையாகப் பெறுமாறு முத்தியை அளித்தருளுக.

(பூ) மாலை அணிந்துள்ள கூந்தலை உடையவள், (அல்லது....இருண்ட கூந்தலை உடையவள்), அற்புதமான வேதச் சொரூபத்தை உடையவள், தனது அக்கினி உருவத்தில் மார்பில் ஒளி பொருந்திய மலைபோன்ற கொங்கைப் பாரத்தைக்

---

*தை - தை மாதம்; அலங்காரம் - "தை புனை மாது" (நிகண்டு).

வாசக்குயி லாள்நற்சிவ காமச்செய லாள் பத்தினி
மாணிக்கமி னாள்நிஷ்கள உமைபாதீர்;
சூலக்கையி னாரக்கினி மேனிப்பர னாருக்கொரு
சோதிப் பொருள் *கேள்விக்கிடு முருகோனே-
சோதிப்பிர காசச்†செய லாள்‡முத்தமிழ்
மானைப்புணர்
சோதிப்புலி யூர் நத்திய பெருமாளே. (59)

## 649. மாயப் பிறவி அற

தனனா தத்தன தனனா தத்தன
தனனா தத்தன தனதான

பனிபோ லத்துளி Xசலவா யுட்கரு
பதின்மா தத்திடை தலைகீ ழாய்ப்-
படிமே விட்டுடல் தவழ்வார் தத்தடி
பயில்வா Oருத்தியில் சிலநாள்போய்த்;
தனமா தர்க்குழி விழுவார் தத்துவர்
சதிகா ரச்சமன் வருநாளிற்-
றறியா **ரிற்சடம் விடுவா ரிப்படி
தளர்மா யத்துய ரொழியாதோ;

*கேள்வி - காது- "அணங்கின்வார் குழை மின் கொள் கேள்வி அறுப்ப வீழ்ந்ததே" (கந்த. புரா. சுருக்கம் 970)

"எங்கணும் விழிகள் எங்கணும் திருக்கேள்விகள்" - கந்த புரா - 3-12-133.

† செயல் - ஒழுக்கம் (சூடா - நிகண்டு).

‡ முத்தமிழ் மான் - வள்ளி: 'முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன்' என்ற கந்தரலங்காரத்திலும் (22) முத்தமிழால் வைதவர் - வள்ளியே; வள்ளியே வாழ்விக்கப் பட்டாள். தமிழ் நிலத்து மகளாதலின் இயற்றமிழும். "இனிய குரலினளாய்.....இந்தளாமிருத வசனத்த" ளாதலின் - இசைத் தமிழும். குறக்குலத்தினளாதலின் குறவஞ்சியாய் நாடக இயல்கள் இயற்கையாகவே அமைந்தவளாய் நாடகத் தமிழும் - வல்லவள் வள்ளி. இதன் விரிவை அருணகிரிநாதர் நூலாராய்ச்சி -பக்கம் 161-162 பார்க்க.

X சலவாயுள்கரு - சலத்துவார வழியாய்க் கருத்தரித்து.

"பனியனைய சிறிய துளி" - திருப்புகழ் 862, 246.

O உத்தி - பேச்சு: உரையாடல் (பிங்கலம்).

** இல் சடம் - தனக்கு வீடாகிய சரீரம்.

கொண்ட, அல்லது கொங்கைப் பாரா நறுமணங் கொண்ட, குயில்போன்றவள்; சிவபிரானிடத்தே காமம் நிறைந்த நல்ல செயிலினளுமான பத்தினி; மாணிக்கம் போன்று மின்னொளி வீசுபவள்; மாசற்றவள்; ஆகிய உமையைப் பாகத்திற் கொண்டவர்;

சூலத்தைக் கையிற் கொண்டவர், அனல் மேனிப் பரமனார் ஆகிய சிவபிராற்கு ஒப்பற்ற ஜோதிப் பொருளை அவர் செவியில் ஏற்றிய முருகனே!

ஜோதி ஒளி ஒழுக்கத்தினளும், முத்தமிழ் வல்லவளுமாகிய (மான்போன்ற) வள்ளியை அணைந்த பெருமாளே! (அல்லது முத்தமிழ்ப் பெருமாளே; மானை (வள்ளியைப்) புணர் பெருமாளே! சோதிப் புலியூரை விரும்பியுள்ள பெருமாளே!

(முத்தியை அருள்வாயே)

## 649.

பனிபோல அளவுள்ள ஒரு துளி (சுக்கிலம்) சலத்துவார வழியாய்க் கருத்தரித்துப், பத்துமாதக் கணக்கில் தலைகீழாகப்

(படி) பூமியில் (மேவிட்டு) வந்து பொருந்தி, உடல் கொண்டு தவழ்பவராய்ப், பின்பு தத்தித் தத்தி அடியிட்டு நடை பயில்பவராய் (உத்தியில்) (மழலைப்) பேச்சில் (உரை-யாடலில்) சில நாள்கள் ஒழியப் (பின்னர்)

கொங்கைகளை உடைய பெண்கள் என்னும் குழியில் விழுபவராய்த் (தத்துவர்) காலத்தைத் தாவிச் செலவிடுவார் (விரைவில் கழிப்பார்), (பின்பு) வஞ்சனை கொண்டவனான யமன் வருகின்ற அந்த நாளில்-

நிலைத்திருக்க முடியாதவராய்த் தமக்கு வீடாகிய சரீரத்தை விடுவார்; இப்படித் தளர்ந்தொழியும் மாயமான துயரம் நீங்காதோ!

*வினைமா யக்கிரி பொடியா கக்கடல்
† விகடா ருக்கிட விடும்வேலா-
விதியோ னைச்சது முடிநால் பொட்டெழ
மிகவே குட்டிய குருநாதா;
‡ நினைவோர் சித்தமொ டகலா மற்புகு
நிழலாள் பத்தினி மணவாளா-
X நிதியா மிப்புவி புலியூ ருக்கொரு
நிறைவே பத்தர்கள் பெருமாளே.(60)

## 650. சிவ ரகசியம் அறிய

தனதன தனதன தான தாத்தன
தனதன தனதன தான தாத்தன
தனதன தனதன தான தாத்தன தனதான

மகரமொ டுறுகுழை யோலை காட்டியு
மழைதவழ் வனைகுழல் மாலை காட்டியும்
வரவர வரஇத மூற லூட்டியும் வலைவீசும்-
மகரவி ழிமகளிர் பாடல் வார்த்தையில்
வழிவழி யொழுகுமு பாய வாழ்க்கையில்
வளமையி லிளமையில் Oமாடை வேட்கையில்
மறுகாதே;
** இகலிய பிரமக பால பாத்திர
மெழில்பட இடுதிரு நீறு சேர்த்திற
மிதழியை யழகிய வேணி யார்த்ததும் விருதாக-

---

*வினைமாயக்கிரி - கிரவுஞ்சம் - இது மாயையில் வல்லது "கிரவுஞ்ச வெற்பின் முன் ஏகி நீ வல்ல மாயைகள் செய்குதி செய்குதி என்று செப்பினான்" "சிறந்திடு மாய வெற்பைத் திருக்கைவேல் பொடித்த காலை" - கந்த புரா - I-20-174/ 193.

† விகடர் - செருக்குள்ளவர் - "நீடின விகடர்சேனை நெரிபட வுரங்கள்" (திருக்குற்றாலப் புராணம் - தக்கன் வேள்வி - 58.

‡ நினைப்பவர் மனத்தில் புகுந்து அகலாமல் இருப்பது:- "உனையே நினைந்திருந்தேன் வந்தாய் போயறியாய் மனமே புகுந்து நின்ற சிந்தாய்" - சுந்தரர் 7-21-1. 'பொற்றிருவடியென் குடி முழுதாளப் புகுந்தன போந்தன இல்லை' - திரு விசைப்பா - 16-2. X" புவிக்கு உயிராகும் திருத்தணி" என்றார் திருத்தணியை - 258 ஆம் பாடலில், 'இப்புவி நிதியாம் புலியூர்' என்றார் சிதம்பரத்தை இப் பாடலில். O மாடை - பொன். **இந்தப் பாடலின் மூன்றாவது நான்காவது அடிகளில் அருணகிரியார் கேட்கின்ற வினாக்கள்

(தொடர்ச்சி பக்கம் - 521 பார்க்க)

(வினைமாயக்கிரி) மாய வினைக்கிரி - மாயத்தொழில் வல்ல கிரௌஞ்சகிரி பொடியாகக், கடலில் (விகடார்) செருக்கு வாய்ந்த அசுரர்கள் (உக்கிட) அழிந்துபோகச் செலுத்தின வேலாயுதனே!

பிரமனை (ச் சதுமுடி) நான்கு முடிகளும் (நால்) நால - தொங்கிக் கவிழ்ந்து (பொட்டெழ) பொடிபடவும் (உடைபடவும்) பலமாகக் குட்டின குருநாதனே!

நினைத்துத் தியானிப்பவர்களுடைய உள்ளத்தில் அகலாமல் புகுந்திருக்கும் (நிழலாள்) ஒளி வீசுபவள், பத்தினியாகிய வள்ளியின் மணவாளனே!

நிதியாம் இப்புவி (இப் பூமிக்கு நிதி; பொருளின் திரள் (பொன்) போன்றதான புலியூரில் இருக்கும் ஒரு நிறை செல்வமே! பக்தர்கள் பெருமாளே!

(மாயத்துயர் ஒழியாதோ)

## 650.

மகரமீன் போன்ற குழையையும், காதோலையையும் காட்டியும், மழைபோன்ற அலங்கரிக்கப்பட்ட கூந்தலில் உள்ள மாலையைக் காட்டியும், பழகப் பழக வாயிதழ் ஊறலை ஊட்டியும், (காம) வலையை வீசும்-

மகரமீன் போன்ற கண்களை உடைய மகளிரின் பாடலிலும், பேச்சிலும் ஈடுபட்டு அந்த வழி வழியே நடக்கின்ற தந்திரமான வாழ்க்கையிலும், உள்ள செல்வத்திலும், இனிமையிலும், பொன்னைச் சேர்க்கும் ஆசையிலும், நான் சுழன்று மனங்கலங்காமல்-

மாறுபட்டுப் பேசின பிரமனுடைய கபாலமாகிய மண்டை ஓடாகிய பாத்திரத்தைச் (சிவபிரான்) (சேர்த்திறம்) தமது கரத்தில் ஏந்தின திறமும், அழகு விளங்க இடப்படுகின்ற திருநீறு அவர் உடலிற் சேர்ந்துள்ள திறமும், கொன்றையை அழகுள்ள சடையில் நிரம்பச் சேர்த்துள்ள திறமும், வெற்றிக்கு அடையாளமாக-

---

சம்பந்தப் பெருமான் தாம் அருளிய தேவாரப் பாக்களில் அவர் சிவனையும், அடியார்களையும் கேட்கும் வினாக்களைத் தழுவுகின்றன; உதாரணம் காட்டுவோம்:-

(i) பிரமகபாலம்; (1) 'இயலுமாறெனக் கியம்புமின்....வீரட்டன் அயன் பொய்ச்சிரம். அரிந்து மற்றதில் ஊண் உகந்த அருந்தியே' 3-86-6. (2) 'சொலீர் சிரமெனுங் கலனிற் பலி வேண்டிய செல்வமே' 2-2-10

(தொடர்ச்சி பக்கம் 522 பார்க்க.)

எழில்பட மழுவுடன் மானு மேற்றது
மிசைபட இசைதரு ஆதி தோற்றமு
மிவையிவை யெனவுப தேச மேற்றுவ தொருநாளே

ஜகதல மதிலருள் *ஞான வாட் கொடு
† தலைபறி யமணர்ச மூக மாற்றிய
‡தவமுனி Xசகமுளர் பாடு பாட்டென மறைபாடி-

தரிகிட தரிகிட தாகு டாத்திரி
கிடதரி கிடதரி தாவெ னாச்சில
சபதமொ டெழுவன தாள வாச்சிய முடனேநீள்;

அகுகுகு குகுவென ** ஆளி வாய்ப்பல
†† அலகைக ளடைவுட னாடு மாட்டமு
மரனவ னுடனெழு ‡‡காளி கூட்டமு மகலாதே-

---

*ஞானவாளாற் சமணரை வென்றது:- ஞானவாள் யமனையும் வெல்லும். 'நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்' -திருமந்திரம் 2968. 'ஞானச்சுடர்வடிவாள் கண்டாயடா அந்தகா வந்துபார் சற்றென் கைக்கெட்டவே' - கந்தரலங் - 25.

† தலைபறி அமணர்; பாட்டு 172 - பக்கம் 398 - கீழ்க்குறிப்பைப் பார்க்க. ‡ தவமுனி - "தவமுதல்வர் சம்பந்தர்" - பெரிய புரா. ஞானசம். 70 'மறைஞான ஞான முநிவன்' - சம்பந்தர் - 2-85-11.

X 'சகமுளர் பாடு பாட்டென' - இதனையே "பத்திமிக இனிய ஞானப் பாடல் பற்றுமரபு நிலையாகப் பாடித் திரிவோனே"

(தொடர்ச்சி பக்கம் 523 பார்க்க.)

---

(521-ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)

(ii) நீறடைந்த மேனி: (1) 'நீறடைந்த மேனியின் கண் நேரிழையாள் ஒருபால் கூறடைந்த கொள்கை என்னே!' 1-48-2. (2) 'நீறு மெய் பூசி - நடமாடு மாண்பது என்!' (2-50-3)

(iii) கொன்றை சூடியது: 'பொன்னை வென்ற கொன்றை மாலை சூடும் பொற்பென்னை கொலாம்' - 1-51-6.

(iv) கையில் மான்மழு ஏந்துவது: (1) 'கையடைந்த மானினோடு காரரவு வைத்தலென்னே!' 1-47-4(2). 'கையினில் வெண்மழுவும் பாம்புடன் வைத்தலென்னே!' 1-47-6.

(v) இசைதரு ஆதிதோற்றம்: 'நாற்றிசைக்கு மூர்த்தியாகி நின்றதென்ன நன்மையே' 3-52-10

'இகலிய பிரமன்' - பாடல் 285-பக்கம் 209- கீழ்க்குறிப்பு.

அழகுபெற மழுவும் மானும் (திருக்கரத்தில்) ஏற்ற தன்மையும், புகழ் விளங்க யாவராலும் சொல்லப்படும் ஆதியாகத் தோன்றிய தோற்றமும் இன்ன இன்ன காரணங்-களால் என்று எனக்கு - உபதேசித்துப் புலப்படுத்துவதான ஒரு நாள் உண்டா? ஒரு நாள் எனக்குக் கிடைக்குமா?

இப் பூமியில், அருள் நிறைந்த ஞானவாள் கொண்டு பறிதலையராம் சமணருடைய கூட்டங்களை அழித்த (திருஞான சம்பந்தப்பெருமானாம்) தவமுநியே! இப் பூமியில் உள்ளோர் பாடுகின்ற பாட்டுக்கள் போன்ற பாடல்களில் வேதசாரங்களை அமைத்துப் பாடினவனே!

தரிகிட தரிகிட தாகு டாத்திரி கிடதரி கிடதரிதா என்னும் சில ஒலிகளுடன் எழுகின்றனவான தாள வாத்தியங்களுடன் - நெடுநேரம்-

அகு குகு குகு எனும் ஒலியுடன் **ஆளியின் வாய் போன்ற வாயை உடைய பல ‡பேய்கள் முறையுடனே ஆடுகின்ற கூத்தும், சிவனாடலின்போது உடன் எழுந்து ஆடுகின்ற ‡‡ காளிகளின் கூட்டமும் நீங்காது உன்னைச்சூழ-

---

(522-ஆம் பக்கத் தொடர்ச்சி)

- என்றார் பிறிதோரிடத்து -பாடல் 1025; பாடல் 84 - பக்கம் 199 - கீழ்க்குறிப்பைப் பார்க்க.

O மறைபாடி - சம்பந்தர்; பாடினது ருக்வேதப் பொருள்; "தென்னூல் சிவபத்தி ருக்கு ஐயம்போக உரைத்தோன்" கந்தரந்தாதி - 96. "இருக்கு மொழிப் பிள்ளையார்" 'வேதந் தமிழால் விரித்தார்' - பெரிய புரா - ஞானசம் - 80. 289. 'சுருதித் தமிழ்க்கவி' "ஆரணகீத கவிதை' - திருப்புகழ் 280. 1049.

**ஆளிவாய் அலகைகள் - "பகுவாய பேய்கள்" - சம்பந்தர் 2-121-2. பிலவாய் பேய்" - தக்கயாக - 50. "வன்பிலத் தொடு வாதுசெய்வாயின" - கலிங்கத்துப் பரணி 6-3.

†† அலகைகளுடன் அரன் ஆடுதல் - "பேய்க்கணஞ் சூழ ஆடும்" சம்பந்தர் -I-77-3

‡‡ 'காளி காணி ஆடல் கொண்டான்' - சம்பந்தர் 3-56-3.

*அரிதுயில் சயனவி யாள மூர்த்தனு
மணிதிகழ் மிகுபுலி யூர்வி யாக்ரனு
†மரிதென முறைமுறை யாடல் காட்டிய
பெருமாளே.(61)

## 651. மோக்ஷம் பெற

தத்த தத்த தாத்த தத்த தத்த தாத்த
தத்த தத்த தாத்த தனதான

‡ மச்ச மெச்சு Xசூத்ரம் ரத்த பித்த மூத்ரம்
வைச்சி றைச்ச பாத்ர மநுபோகம்-
மட்க விட்ட சேக்கை உட்பு ழுத்த வாழ்க்கை
மட்கு லப்ப தார்த்த மிடிபாறை;
எய்ச்சி ளைச்ச Oபேய்க்கு மெய்ச்சி ளைச்ச நாய்க்கு
மெய்ச்சி ளைச்ச ஈக்கு மிரையாகும்-
இக்க டத்தை நீக்கி **அக்க டத்து ளாக்கி
இப்படிக்கு மோக்ஷ மருள்வாயே;
பொய்ச்††சி னத்தை மாற்றி மெய்ச்சி னத்தை யேற்றி
பொற்ப தத்து ளாக்கு புலியூரா-

---

*அரி துயில் சயன வியாள மூர்த்தன் - பதஞ்சலி பகவான்; ஆதிசேடனே பதஞ்சலியாக வந்தது- பாடல் 611-பக்கம் 414 கீழ்க்குறிப்பு.

† நடராஜப் பெருமானுடைய நடனங்களைக் கண்டு களிக்கும் பதஞ்சலி வியாக்ரபாதரே மெச்சும்படியான நடன தரிசனத்தை முருகவேள் அருணகிரியார்க்குக் காட்டினர் போலும்.

‡ மச்சம் - சப்பிரமஞ்சம் அலங்கரித்த கட்டில்

X "இதாகித சூத்திரம்" என்றார் 330-ஆம் பாடலில்.

O பேய் - நாய் - ஈ இவைகளுக்கு உடம்பு இரையாதல் - 'ஈ யெறும்பு நரி நாய்கணங் கழுகு காகம் உண்ப உடல்' - திருப்புகழ் 902 (கணம் - பேய்.)

** அக்கடம் - சுத்ததேகம்.

†† சினம் - சின்னம்; அடையாளம்.

திருமால் உறங்கும் படுக்கையான பாம்பாகிய (மூர்த்தன) ஆதிசேட மூர்த்தியாம் பதஞ்சலியும், அழகு பொலியும் பேர்பெற்ற புலியூரில் (நடராஜப்பெருமானுடைய நடன தரிசனம் கண்டு களிக்கும்) வியாக்கிரபாதரும் - ஆகிய இவ்விருவரும் கூட - (முருகா! உனது நடனம் (சிவனது திருக்கூத்தைவிட அதிக) அருமை வாய்ந்தது என்று வியந்து கூறும்படி விதம் விதமான கூத்துக்களை ஆடிக் காட்டின பெருமாளே!

(ஆதி தோற்றமும் ஏற்றுவ தொருநாளே!)

# 651.

(மச்சம்) மஞ்சம் - அலங்கரித்த கட்டில், மெச்சத் தக்க ஒரு பொறி (யந்திரம்), ரத்தம், பித்தம், மூத்திரம் -இவைகள் வைக்கப்பட்ட - பாய்ச்சப்பட்ட ஒரு - பாத்திரம் - அனுபோகம் (ஆக ஆக)- அனுபவித்தல் (ஆக ஆக)

வலிகுன்றி அழியும் இடம் (இருப்பிடம்), உட்புறத்தில் புழுத்துப் போயுள்ள வாழ்க்கை, மண் இனத்தால் (மண் வகையில்) (ஆக்கப்பட்ட) ஒரு பொருள், இடிந்து விழுகின்ற பாறை;

(எய்ச்சு) எய்த்து - இளைத்து, (இளைச்சு) மெலிந்த பேய்க்கும், இளைத்து மெலிந்த நாய்க்கும், இளைத்து மெலிந்த ஈக்களுக்கும் உணவாகின்ற ஒரு பொருள் - இத்தகைய-

இந்த (கூடத்தை) உடம்பை ஒழித்து அந்த சுத்த தேகத்தில் என்னைப் புகுத்தி இவ்வாறு (மோக்ஷம்) முத்தி வீட்டை அருள்புரிக.

தம்மாட்டு அன்பு வைத்தவருக்குப் பொய்யாகிய அடையாளங்களை ஒழித்து மெய்யான அடையாளங்களைத் தந்து அவர்களை உனது அழகிய பாதங்களில் ஏற்றுக் கொள்ளும் புலியூரனே!

*பொக்க ணத்து †நீற்றை யிட்டொ ருத்த னார்க்கு
புத்தி மெத்த காட்டு ‡ புனவேடன்;

பச்சி லைக்கும் வாய்க்கு ளெச்சி லுக்கும் வீக்கு
பைச்சி லைக்கு மாட்கொ ளரன்வாழ்வே-

பத்தி சித்தி காட்டி அத்தர் சித்த மீட்ட
பத்த ருக்கு வாய்த்த பெருமாளே (62)

---

* பொக்கணம் - ஒருவகை விபூதிப் பை. 'சுத்திய பொக்கணம்' - திருக்கோவையார் - 242. 'நீறது பூசித் தக்கைகொள் பொக்கணம் இட்டுடனாக' - சம்பந்தர் I-75-5.

† நீற்றையிட்ட ஒருத்தனார் - சிவகோசரியார். ‡ புனவேடன் கண்ணப்ப நாயனார். கண்ணப்பர் வரலாறு:- நாகனார் என்னும் வேடராஜனுடைய பிள்ளை திண்ணனார். இவர் வேட்டையாடச் சென்றவர் காளத்தி மலைமேல் சிவபிரானது திருவுருவத்தைக் கண்டதும் அனலிடையிட்ட மெழுகுபோல் உருகி அவரைத் தழுவி மோந்து "இம் மலைத் தனியே நீரிங்கிருப்பதோ என்று நைந்தார்" தம்முடன் வந்த நாணனைப் பார்த்துப் 'பச்சிலையும் பூவும் இட்டு நீரும் வார்த்தவர்" யார் என்று வினவினர். 'நாணன் ஒரு அந்தணன் இங்ஙனம் இக் கடவுளை நீராட்டிப் பூச்சூட்டினதை நான் பார்த்திருக்கிறேன்' என்றான். இதைக் கேட்டதும் தானும் அங்ஙனமே செய்ய விரும்பிப் - பன்றித் தசையைக் காய்ச்சிச் சுவைத்துப்பார்த்து சுவையுள்ளவையைப்பற்றி ஒரு தொன்னையில் நிவேதனத்துக்காக எடுத்துக்கொண்டு, அபிஷேகத்துக்கு வேண்டிய நீரைத் தமது வாயினில் அடக்கிக்கொண்டு, பூசைக்கு வேண்டிய மலரைத் தமது குடுமியில் துதையக்கொண்டு ஒரு கையில் வில்லும் அம்பும் மற்றொரு கையில் தொன்னை இறைச்சியுமாக மலைமீதேறி இறைவன் மீது வாய் நீரை உமிழ்ந்து அபிஷேகம் செய்து, மலர் பூசனைசெய்து, இறைச்சியை நிவேதனம் செய்தார். இங்ஙனம் இவர் செய்து, இரவெலாம் காவல் காத்து வந்தார். வழக்கமாய் அங்குப் பூசனை செய்யும் அருந்தவ முநிவர் சிவகோசரியார் அங்கு வந்து இறைச்சி கிடப்பதைக் கண்டு "ஐயோ யாரது செய்தார்" என அழுது விழுந்தார். பின்பு இடத்தைச் சுத்தி செய்து பூசை செய்து போனவர் - "இறைவனே நீதான் இங்ஙனம் அபசாரம் செய்பவனை ஒழிக்க வேண்டும்" என வேண்டினர். அவர் கனவில் இறைவன் தோன்றி - அப்படிப் பூசை செய்பவன் ஒரு வேடன், "அவனுடைய வடிவெல்லாம் நம் பக்கல் அன்பு; அவனுடைய அறிவெல்லாம் நம்மை யறியும் அறிவு. அவனுடைய செயலெல்லாம் நமக்கினியவாம்" - என மொழிந்து, "நாளை நீ ஒளித்திருந்து அவனது அன்பைக் காண்க' எனக் கூறி மறைந்தார்.

(தொடர்ச்சி பக்கம் 527)

*விபூதிப் பையிலிருக்கும் விபூதியை யிட்டு விளங்கின (ஒருத்தனார்க்கு) ஒப்பற்ற சிவகோசரியார் என்னும் அந்தணர்க்கு (இறைவனுக்கு அன்பே பிரதானம் என்னும் உண்மை அறிவை நன்கு காட்டின (புனவேடம்) மலைக்கொல்லைக் காட்டு வேடனாம் கண்ணப்பர் தந்த-*

*(பச்சிலைக்கும்) பச்சிலைப் பூஜைக்கும், (அவர்) (வாய்க்குள் எச்சிலுக்கும்) வாயில் இருந்து உமிழ்ந்த எச்சிலாம் அபிஷேகத்துக்கும், (வீக்கு) அவர் கட்டியிருந்த செவ்விய (சிலைக்கும்) வில்லுக்கும் - (அல்லது - அம்பறாத் தூணிப் பைக்கும், வில்லுக்கும்) உகந்து அவரை ஆட்கொண்டருளிய சிவனது செல்வக் குமரனே!*

*(பத்தி) முறைமையுடன் (சித்தி) மோக்ஷப் பொருளைக் (காட்டி) உபதேசித்து (அத்தர்) தந்தையாம் சிவபிரானுடைய (சித்தம் மீட்ட) உள்ளத்தை (மீட்ட) மீள்வித்த - வசப்படுத்தின பெருமாளே! (அல்லது) தமது பத்தி - சித்தியான (முதிர்ந்து கூடின) நிலையைக் காட்டி இறைவனது திருவுள்ளத்தைத் தம் பாலாக்கியுள்ள, பக்தர்களுக்கு அருமையாய்க் கிடைத்துள்ள பெருமாளே!*

*(மோக்ஷம் அருள்வாயே)*

---

*** அங்ஙனமே சிவகோசரியார் மறுநாள் மறைந்திருந்து பார்த்தனர். வழக்கம்போல் இறைச்சி நிவேதனத்துடன் திண்ணனார் வந்தனர். வந்ததும் இறைவன் கண்ணில் ரத்தம் ஒழுக இருப்பதைக் கண்டு "ஐயோ" எனப் பதைத்து வீழ்ந்து, பதைபதைத்துப் பச்சிலை பலவற்றின் சாற்றினை மருந்தென்று அந்தக் கண்ணில் பிழிந்தார்; ரத்தம் நிற்காததைக் கண்டு "ஊனுக்கு ஊன் இடுக" என்னும் முறைப்படித் தமது கண்ணையே அம்பினால் பெயர்த்தெடுத்து இறைவனார் கண்ணில் அப்பினார். ரத்தப் பெருக்கு நின்றது. கண்ணப்பர் தோள்கள் கொட்டிக் கூத்தாடினார். அப்போது இறைவனுடைய மற்றைக் கண்ணில் ரத்தம் பாயக் கண்டார். இதற்கு நான் அஞ்சேன் என்று தமது மற்றக் கண்ணையும் பெயர்த்தெடுத்து அப்ப நினைத்து இடம் தெரிய வேண்டி, இறைவனது திருக்கண்ணில் தமது இடது காலை ஊன்றி, கண்ணைப் பறிக்க அம்பை நாட்டினார். இறைவன் அச் செயல் கண்டு தரிக்காது - "நில்லு கண்ணப்ப, நில்லு கண்ணப்ப" என் அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப" - என்று சிவலிங்கத்தினின்றும் தோன்றிய தமது கையால் தடுத்துக் கண்ணப்பருக்குச் சிவகதி அளித்தனர். இந்நிகழ்ச்சியைக்*

*(தொடர்ச்சி - பக்கம் 528 பார்க்க.)*

## 652. பரம்பொருளைச் சேர

தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன
தனன தந்தன தந்த தானன தந்ததான

*மதிய மண்குண மஞ்சு நால்முக
நகர முன்கலை †கங்கை நால்குண
மகர முன்சிக ‡ரங்கி மூணிடை தங்குகோண-

---

*மதி - மண்ணுக்கு உதவுவது;

"மண்ணில் ஒண் பைங்கூழ் வளர்ப்பது உன் இடத்து அம்மை வைத்திடும் சத்தியே காண்" மீனாட்சி பிள்ளை - அம்புலி 5 சந்திரன் ஸஸ்யாதிபதி (தானியாதிபதி) ஆதலின் பைங்கூழை வளர்ப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

மண் குணம் அஞ்சு (ஐந்து): அவைதாம் - சத்தம், பரிசம், உருவம், இரதம், கந்தம்; (ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்) கடினத்தைத் தெரிவிப்பதாகிய கடகட" சத்தமும் (ஒலியும்), தட்பமும் வெப்பமும் இல்லாத பரிச குணமும், வெண்மை முதற் பல நிறமும் (உருவமும்), அறுவகைச் சுவையும் (கந்தமும்), புடவி (பூமி)க்கு உண்டு; (சிவஞான பாடியம் - பக்கம் 261)

(மண் - நால்முகம்) - பிருதிவி மண்டலம் - நாற்கோணமாய் வியாபித்திருக்கும். "நாற்கோணம் பூமி" (உண்மை விளக்கம் 4) முன்கலை - கலைகளுள் முதற்கலையான 'நிவ்ருத்தி கலா ரூபமாய்' பிருதிவி வியாபித்திருக்கும். (கிரியா க்ரம ஜ்யோதி வியாக்யாநம் பக்கம் 73) 'புடவி தத்துவத்தை அடக்கி நிற்பது நிவிர்த்திகலை' -சிவஞானபாடியம் -பக்கம் -292.

---

(527-ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)

கண்ட சிவகோசரியார் பெரு வியப்பு அடைந்து கண்ணப்பரது அன்பையும் இறைவன் திருவருளையும் நினைந்து நினைந்து உருகினார். இறைவனுக்கு அன்பே வேண்டுவது என்னும் உண்மையைக் கண்ணப்ப ரால் அறிந்தனர்;- என்பது வரலாறு. இவ் வரலாற்றின் விரிவைப் பெரிய புராணத்திற் காண்க. "வாய் கலசமாக வழிபாடு செயும் வேடன் மலராகு நயனம் காய் கணையி னாலிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே" - சம்பந்தர் - 3-69-4, திருப்புகழ் - 668, 1210-ம் பார்க்க.

# 652.

(மதியம்) சந்திரனது உதவியைக் கொள்ளும் (மண்ணின் குணம் அஞ்சு) மண்ணின் குணம் ஐந்தாகும்; அது (அந்த மண்மண்டலம்) நால்முகம் - நாற்கோண வடிவினது); பஞ்சாட்சரத்தில் 'ந' கரத்தையும், ('ந' என்னும் எழுத்தையும்), பஞ்சகலைகளில் முன் கலையான *நிவர்த்தி கலையையும் கொண்டது'; கங்கை - நீர் (அப்பு மண்டலம்) நான்கு குணம் கொண்டது; இது பஞ்சாக்ஷரத்தில் "ம" என்னும் எழுத்தைக் குறிக்கும்; (முன்) அப்பு மண்டலத்துக்கு முன் உள்ள அக்கினி மண்டலம் பஞ்சாக்ஷரத்தில் "சி" - 'சி' கரம் என்னும் எழுத்தைக் குறிக்கும்; (மூணிடை) தங்கு கோணம் - இந்த அக்கினி மண்டலம் மூன்று குணமும் முக்கோணமும் கொண்டது.

---

**நகரம்**: 'நமசிவய' என்னும் ஐந்தெழுத்தில் "மண்" நகரம் ஆகும். ஐந்தெழுத்தால் இறைவன் பிருதிவி ஆதிய ஐந்து பூதங்களையும் படைத்தனன் ஆதலின், நமசிவாய என்னும் ஐந்தெழுத்தும் பிருதிவி ஆதிய ஐந்து பூதங்களைப் படைத்ததாகும். - 'அஞ்செழுத்தாலைந்து பூதம் படைத்தனன்" - திருமந்திரம் - 966 ஐம்பூதத்துக்கும் ஐந்தெழுத்துக்கும் உள்ள சம்பந்தமும் ஆறாதார விளக்கமும் அநுபந்தத்திற் காண்க - பாடல் 220 பக்கம் 56-ம் காண்க.

† **கங்கை**: அப்பு மண்டலம் (நீர்) - நால்குணம் - அவைதாம் சத்தம், பரிசம், உருவம், இரதம் புனலுக்கு ஒழுகுதலைத் தெரிவிப்பதாகிய 'சளசள' ஒலியும், தட்பப் பரிசமும், வெண்மை நிறமும், உருவமும்) தித்திப்புச் சுவையும் உண்டு (சிவஞான பாடியம் - பக்கம் - 261)

**மகரம்**: நீரானது ஐந்தெழுத்தில் "ம" "ம' கரம்" ஆகும்.

‡ **அங்கி**: (தேயு மண்டலம் - தீ) ஐந்தெழுத்தில் "தீ" 'சி' கரம்; இது மூன்று கோணமாய் விளங்கும்" (" அனல் முக்கோணம்" -உண்மை விளக்கம் - 4) முக்குணம் உடையது. அவைதாம் - சத்தம், பரிசம், உருவம்; தேயுவுக்கு எரிதலைத் தெரிவிப்பதாகிய 'தமதம' ஒலியும், வெப்பப் பரிசமும், ஒளி நிறமும் உண்டு (சிவஞான பாடியம் - பக்கம் - 261)

---

*நிவர்த்தி கலை - ஆன்மாக்களைப் பாசத்தினின்றும் விடுவிப்பதாகிய கலை - ஏனைய நாலுகலைகள் பக்கம் 545 பார்க்க.

மதன முன்தரி சண்ட *மாருத
மிருகு ணம்பெற்றி லஞ்செ லோர்தெரு
வகர மிஞ்சிய கன்ப டா†கமொ ரொன்றுசேருங்;
கதிர டங்கிய அண்ட கோளகை
யகர நின்றிடும் ‡ரண்டு கால்மிசை
ககன மின்சுழி ரண்டு கால்பரி கந்துபாயுங்-
Xகருணை யிந்திரி யங்கள் சோதிய
அருண சந்திர மண்ட லீகரர்
கதிகொள் யந்திர Oவிந்து நாதமொ
டென்றுசேர்வேன்;

---

*மாருதம் (வாயு). இரு குணம் கொண்டது - அவைதாம் - 'சத்தம் பரிசம்'; வாயுவுக்கு ஊர்தலைத் தெரிவிப்பதாகிய 'கச கச' ஒலியும், தட்பமும் வெப்பமும் இல்லாத பரிசமும் உண்டு. (சிவஞான பாடியம் பக்கம் 261) "அஞ்செலோர் தெரு" என்பது வாயு (5 + 1) ஆறு கோணம் கொண்டது என்பதைக் குறிக்கும். "ஆர்க்கும் அறுகோணம் கால் (வாயு)" - உண்மை விளக்கம் 4. ஐந்தெழுத்தில் வாயு "வ" கரம் ஆகும்.

† கம் (ஆகாயம்) ஒரு குணம் கொண்டது - அது தான் 'சத்தம்' இது 'நீர்த்தரங்கம் போலத் தாரையாய்த் தோன்றும் எதிரொலி மாத்திரையே' ஆம் - (சிவஞான பாடியம் பக்கம் 261) ஐந்தெழுத்தில் ஆகாயம் "ய" ஆகும்: அண்ட கோளகை - என்றதால் 'வட்ட வடிவு' என்பது புலப்படும் "வட்டம் ஆகாயம்" - உண்மை விளக்கம் 4. மேற்சொன்ன பஞ்சபூத இலக்கணங்களைப் பின்வரும் பாடல்களிற் காண்க.

"நாற்கோணம் பூமி; புனல் நண்ணுமதி யின்பாதி
ஏற்கும் அனல் முக்கோணம் எப்போதும் - ஆர்க்கும்
அறுகோணம் கால், வட்டம் ஆகாயம் ஆன்மா
உறுகாய மாமிவற்றால் உற்று" - உண்மை விளக்கம் 4.
"பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி" - திருவாசகம்.

'மண்ணதனில் ஐந்தை மாநீரில் நான்கை வயங்கெரியில் மூன்றை மாருதத் திரண்டை விண்ணதனில் ஒன்றை' - அப்பர் VI-60-3.

‡ "ரண்டு கால்பரி (குதிரை) கந்து பாயும்" இரண்டு குதிரை இடைகலை, பிங்கலை "ஆரிய னல்லன் குதிரை இரண்டுள, வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை கூரிய நாதன் குருவின் அருள் பெற்றால் வாரிப் பிடிக்க வசப்படுந் தானே" - திருமந்திரம் 565.

(தொடர்ச்சி பக்கம் 531)

(மதனம்) அழித்தல் வன்மையை (முன்தரி) தன் முன்னே-தன்னிடத்தே (தரி) கொண்டுள்ள, (சண்ட மாருதம்) பெருங்காற்று - அதாவது-வாயுமண்டலம் இரண்டு குணத்தைப் பெற்றதாய், (அஞ்செலோர்தெரு) அஞ்சு + எல் + ஓர் + தெரு - அல்லது அஞ்சு - செல் - ஓர் - தெரு) ஐந்துடன் சேர்கின்ற ஒன்று - அதாவது - ஆறு - தெரு - (கோணம் குறுந்தெரு) எல் அஞ்சு ஓர் தெரு- ஒளி பொருந்திய ஆறு கோணம் - வாயுமண்டலம் ஆறு கோண வடிவினது - "வ" கரம் பஞ்சாக்ஷரத்தில் "வ" என்னும் எழுத்தைக் குறிக்கும்; மிஞ்சி - மிகுந்து, (அகன்படா) அகன்று பட்டுள்ள - விரிந்துள்ள, (கம்) ஆகாயம், ஓர் - ஒப்பற்ற, ஒன்று ஒரு குணத்தைச் (சேரும்) கொண்டதாகும்;

(இந்த ஆகாய மணடலம்) (சுதிரடங்கிய) சூரிய சந்திரர் அடங்கி விளங்குவதான, (அண்டகோளகை) அண்ட உருண்டையாம் - எனவே - இம் மண்டலம் வட்ட வடிவினதாம் - இதைப் பஞ்சாக்ஷரத்தில் "ய" கரம் - "ய" என்னும் எழுத்து நின்று விளக்கும்; (ரண்டு கால்மிசை) ரேசகம், பூரகம் என்னும் இரண்டு (கால்) வழி கொண்டு, (ககனம் மின் (அல்லது இன்) சுழி) - அண்டமாகிய ஒளி கொண்ட (சுழி) உச்சி - கபாலபரியந்தம், (ரண்டு கால்; பரி - கந்து பாயும்)- இடைகலை, பிங்கலை என்னும் (கால்) நடையுள்ள இரண்டு குதிரைகள் பாய்ந்து செல்வன ஆகும்); (அவைதமை வசப்படுத்த)

X கருணை இந்திரியங்கள் சோதிய - இந்திரியங்களின் ஒடுக்கத்தால் (கருணை) அருள்சோதி விளங்க, சூரிய மண்டலம், சந்திர மண்டலம், (அக்கினி மண்டலம்) ஆகிய மும்மண்டலங்களிற் பொருந்தியுள்ள மூர்த்திகள் (கதிகொள் பிரசன்னமாகும் (யந்திர) மந்திர சக்தியால் (நான்) O(விந்துநாதமொடு) லிங்காகார சிவத்துடன் என்று சேர்வேன்!

---

X 'கருணை இந்திரியங்கள் சோதிய்' (கருணை - அருள்) "ஐந்தில் ஒடுங்கில் அருளுடை யாரே" - திருமந்திரம் 2035.

O 'விந்துநாதம்' - லிங்காகார சிவம் - 'விந்துவும் நாதமும் மேவும் இலிங்கமாம்' - திருப்புகழ் 100 -பக்கம் 235 கீழ்க்குறிப்பு.

அதிர பம்பைகள் டங்கு டாடிக
முதிர அண்டமொ டைந்து பேரிகை
டகுட டண்டட தொந்த தோதக என்றுதாளம்-
அதிக விஞ்சையர் தும்ப்ரு நார்தரொ
டிதவி தம்பெறு சிந்து பாடிட
அமரர் துந்துமி சங்கு தாரைகள் பொங்கவூடு;
உதிர மண்டல மெங்கு மாயொளி
யெழ*கு மண்டியெ ழுந்து சூரரை
உயர்ந ரம்பொடெ லும்பு மாமுடி சிந்திவீழ-
உறுசி னங்கொடெ திர்ந்த சேவக
மழைபு குந்துய ரண்டம் வாழ்வுற
வுரகனும் † புலிகண்ட வூர்மகிழ் தம்பிரானே. (63)

## 653. பிறவியை நோதல்

தனன தனதன தனன தனதன
தனன தனதன தனன தனதன
தத்தத் தத்தன தத்தத் தத்தன
தத்தத் தத்தன தத்தத் தத்தன
*** *** *** தனதான

மருவு கடல்முகி லனைய குழல்மதி
வதன நுதல்சிலை பிறைய தெனும்விழி
மச்சப் பொற்கணை முக்குப் பொற்குமி
ழொப்பக் கத்தரி யொத்திட் டச்செவி
குமுத மலரித ழமுத மொழிநிரை
தரள மெனுநகை மிடறு கமுகென

---

* குமண்டி எழுந்து - பாட்டு 506, பக்கம் 152 கீழ்க்குறிப்பு.

† புலிகண்ட ஊர் - புலிக்கால் அண்ணல் வியாக்ரபாதரே தில்லை வனத்தில் இறைவனைக் கண்டு பணிந்தவர். பின்பு அவருடன் பதஞ்சலியார் வந்து கூடினர். இவ்விருவருக்காகவே சிவபிரான் நடன தரிசனம் தந்தனர். 'வேண்டி நங்கூத்துக் காண வியாக்கிரபாத னென்னு மாண்டகு முநியும் தில்லை வனத்தினன்; அவனும் நீயும் தாண்டவங் காண்டிர்" - எனப் பதஞ்சலிக்கு இறைவன் அருள் புரிந்தார். (கோயிற் புராணம் - பதஞ்சலி 91.)

ஒலிக்கின்ற (பம்பைகள்) பறைகள் "டங்கு டாடிக" என்னும் பேரொலியை முற்றினவகையில் எழுப்ப, அண்டங்களில், (ஐந்து பேரிகை) - துந்துமி (தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக் கருவி) என்னும் ஐவகை வாத்தியங்களும் டகுட டண்டட தொந்த தோதக் என ஒலிக்கத் தாளம்

மிக்கு ஒலிக்க, (விஞ்சையர்) பதினெண்கணங்களுள் ஒருவராகிய வித்தியாதரர், தும்புரு, நாரதர் என்பவர்களுடன் இன்பகரமான முறையில், சிந்து (இசைப்பாக்கள் ஒன்பது வகையுள் ஒன்று) என்னும் பா வகையைப்பாட, தேவர் துந்துமி (தேவபேரிகை), சங்கம், (தாரைகள்) நீண்ட ஊதுங் குழல்கள் (இவைகளின் ஒலி, ஊடு பொங்க இடையே மேலெழுந்தொலிக்க-

ரத்தப் பெருக்கின் வட்டம் எங்குமாய் விளக்கம் தரும்படிக் (குமண்டி யெழுந்து) குதித்தெழுந்து (எதிர்த்து வந்த) சூரர்களை - அவர்தம் பெரிய நரம்புகளுடன் எலும்பும் பெரிய முடிகளும் சிதறுண்டு விழக்-

கொண்ட கோபத்துடனே - எதிர்த்துப் போர்புரிந்த) பராக்ரமசாலியே! மழைபெய்து உயர்ந்த இப் பூமியில் உள்ளோர் வாழ்வுறும்படி, பாம்புருவர் பதஞ்சலியும், புலியுருவர் - வியாக்ரபாதரும் (இறைவனது நடனத்தைத்) தரிசித்த ஊராகிய சிதம்பரத்தில் மகிழ்ந்திருக்கும் தம்பிரானே!

(விந்து நாதமொ டென்று சேர்வேன்)

## 653.

பொருந்திய கடல், மேகம் இவைகளுக்கு ஒத்து கருமை நிறம் கொண்டது கூந்தல்; சந்திரனுக்கு ஒப்பு முகம்; நெற்றியானது வில். பிறை இவைகளுக்கு ஒப்பு; மதிக்கத்தக்க கண் ஆனது (மச்சம்) மீன், (பொற்கணை) அழகிய அம்பு இவைகளுக்கு ஒப்பு; (முக்கு) மூக்கானது (பொற் குமிழ்) அழகிய குமிழம்பூவை ஒத்து நிற்கும்; கத்தரிக்கோலை ஒத்துள்ளது காது; குமுதமலர் போன்றது வாயிதழ்; அமுதம் போன்றது சொற்கள் வரிசையாய் அமைந்த முத்துப் போன்றது பல் கழுத்து கமுகமரத்தை நிகர்க்கும் என

வைத்துப் பொற்புய பச்சைத் தட்டையொ
டொப்பிட் டுக்கம லக்கைப் பொற்றுகிர்
வகைய *விரலொடு கிளிகள் முகநக
மெனவு மிகலிய குவடு மிணையென
வட்டத் துத்திமு கிழ்ப்பச் †சக்கிரம்
வைத்தப் பொற்குட மொத்திட் டுத்திகழ்
முலைமேவும்-
வடமு நிரைநிரை தரள பவளமொ
டசைய பழுமர இலைவ யிறுமயி
ரற்பத் திக்கிணை பொற்புத் தொப்புளும்
அப்புக் குட்சுழி யொத்துப் பொற்கொடி
மதன னுருதுடி யிடையு மினலென
அரிய ‡கடிதட மமிர்த கழைரச
மட்டுப் பொற்கம லத்திற் சக்கிரி
துத்திப் பைக்கொரு மித்துப் பட்டுடை
மருவு தொடையிணை கதலி பரடுகொள்
கணையு Xமுழவென கமட மெழுதிய
வட்டப் புத்தக மொத்துப் Oபொற்சர
ணத்திற் பிற்புற மெத்துத் தத்தைகள் மயில்போலே;
தெருவில் முலைவிலை யுரைசெய் தவரவர்
மயல்கொ டணைவர மருள்செய் தொழில்கொடு
**தெட்டிப் பற்பல சொக்கிட் டுப்பொருள்
பற்றிக் கட்டில ணைக்கொப் பிப்புணர்
திலத மழிபட விழிகள் சுழலிட
மலர்க ளணைகுழ லிடைகொள் துகில்பட
தித்தித் துப்பிதழ் வைத்துக் கைக்கொடு
கட்டிக் குத்துமு லைக்குட் கைப்பட
திரையி லமுதென கழையில் ரசமென
பலவில் சுளையென வுருக வுயர்மயல்
சிக்குப் பட்டுடல் கெட்டுச் சித்தமும்
வெட்கித் துக்கமு முற்றுக் கொக்கென
நரைமேவிச்-

---

* "விரலுகிர்க்குக் கருதுங் கிளி மூக் கொப்பாமே"- (உசித சூடாமணி நிகண்டு). † வல்லுச் சக்கிரவாக மதன் மகுடம்' கூடி (தொடர்ச்சி 535 பக்கம்)

வைக்கப்படும்: அழகியபுயங்கள் பச்சை (தட்டை) மூங்கிலுக்கு ஒப்பிடப்படும்; தாமரையை நிகர்க்கும் கை; அழகியநகங்களை வகையாகக் கொண்ட விரல் (விரல் நகத்துக்குக்) கிளிகளின் ((முகத்து) மூக்கு நகம் ஒப்பாகும்; (இகலிய) ஒத்து நிற்கும் மலை இரண்டுபோல, வட்டமாய், வரித் தேமல் கொண்டு விளங்குவதாய், சக்கிரவாகப் புள் போன்றதாய், பொன் குடம் போன்று விளங்கும் கொங்கைகள் தம்மேல் உள்ள-

மாலைகளாய் வரிசை வரிசையாக முத்துடனும் பவளத்துடனும் அசைய, (பழுமர இலை) ஆலிலை போன்ற வயிறு, வயிற்று உரோமம் (அல் பத்திக்கு இணை) இருளின் வரிசைக்கு ஒப்பு; அழகிய கொப்பூழ் (தொப்புள்) நீரில் உள்ள சுழி (மொக்குளுக்கு) ஒப்பாகும்; அழகிய கொடி போன்றதும்; மன்மதனது உருவம் போலக் கண்ணுக்குப் புலப்படாத நுண்மை கொண்டதும், (துடி) உடுக்கை போன்றதுமான இடை மின்னலுக்கு ஒப்பாகவும், அருமை வாய்ந்த அல்குல் அமுதச் சுவை, கரும்பின் ரசம், தேன் கொண்ட (கூடு), அழகிய கமலம், (சக்கிரி) பாம்பின் பொறி கொண்ட படம் இவைகளுக்கு நிகராகும்; பட்டாடை பூண்டுள்ள தொடைகள் இரண்டும் வாழைக்கு ஒப்பாம்; பரடு கொண்ட கணைக்கால் முழவு வாத்தியம், ஒக்கும்; ஆமை, எழுதி நிறைந்த வட்டவடிவுள்ள (ஓலைப்) புத்தகம் போன்று இருக்கும் புறங்கால். இத்தகைய இலக்கணங்கள் நிரம்பிய பொதுமகளிர் - கிளிகள் போலவும் மயில்போலவும்

தெருவில் நின்று தங்கள் கொங்கைக்கு விலை பேசி அவரவர் காமமயக்கொடு அணையும்படி மயக்கும் தொழிலைச் செய்து, (தெட்டி) வஞ்சித்துப், பல பல விதமான சொக்கு மருந்துகளை உணவிலூட்டி, பொருளைக் கவர்ந்து, கட்டிலில் அணைதற்குச் சம்மதித்துப் புணர்ச்சிக்கு உட்பட, நெற்றிப் பொட்டு அழிந்துபோக, கண்கள் சுழல, மலர்கள் பொருந்தியுள்ள கூந்தலும், இடையில் உள்ள புடைவையும் குலைந்து கலையத் (தித்தி) அனுபவித்து, (துப்பு) பவளம் போன்ற (இதழ்) வாயிதழ் (வைத்து) (ஊறலைத்) தந்து, கை கொண்டு அணைத்து, ((குத்துமுலைக்குள்) திரண்டுள்ள கொங்கைகளைக் கையிற் பற்றிக், கடலினின்றும் அமுதம் கடைந்தெடுத்தது போலவும், கரும்பினின்றும் சாறு எடுப்பதுபோலவும், பலாப்பழத்தி னின்றும் சுளைகள் எடுப்பதுபோலவும், உருக, மெத்த காமமயக்கில் அகப்பட்டு, அதனால் உடல் நலம் கெட்டு. உள்ளமும் நாணம் உற்று (வெட்கம் அடைந்து) துயரமும் நிரம்ப அடைந்து, கொக்குப்போல (நரைமேவி) மயில் வெளுத்து-

‡ 'தேன்கூடரவ படம் செந்தாமரைப் பூ மதுக் குழாய்....அமுதம் சருக்கரைக் கூடு' - கூஷ

X முரவு கணைக்காலுக் கிணங்கும் உவமை' - கூஷ O புறங்கால் கமடமும் பொத்தகமும்' - கூஷ

** தெட்டி - வஞ்சித்து - 'தெட்டிப் பொருள் பறித்த பாவம் - பண விடு தூது 340. தெட்டிகள் - வஞ்சிப்பவர் - திருப்புகழ் 840.

செவியொ டொளிர்விழி மறைய மலசல
மொழுக பலவுரை குழற தடிகொடு
தெத்திப் பித்தமு முற்றித் தற்செய
லற்றுச் சிச்சியெ னத்துக் கப்பட
சிலர்கள் முதுவுடல் வினவு பொழுதினி
லுவரி நிறமுடை நமனு முயிர்கொள
செப்பற் றுப்*பிண மொப்பித் துப்பெய
ரிட்டுப் பொற்பறை கொட்டச் செப்பிடு
செனன மிதுவென அழுது முகமிசை
அறைய அணைபவ ரெடென சுடலையில்
சிற்றிக் குக்கிரை யிட்டிட் டிப்படி
நித்தத் துக்கமெ டுத்திட் டுச்சட **முழல்வேனோ;**
†குருவி னுருவென அருள்செய் துறையினில்
குதிரை கொளவரு நிறைத வசிதலை
கொற்றப் பொற்பதம் வைத்திட் டற்புத
மெற்றிப் பொற்பொரு ளிட்டுக் கைக்கொளு
முதல்வ ரிளகலை மதிய மடைசடை
அருண வுழைமழு மருவு திருபுயர்
கொட்டத் துப்‡புரர் கெட்டுப் பொட்டெழ
விட்டத் திக்கணை நக்கர்க் கற்புத
குமர னெனXவிரு தொலியு முரசொடு
வளையு மெழுகட லதிர முழவொடு
கொட்டத் துட்டரை வெட்டித் தட்கட
லொப்பத் திக்கும டுத்துத் தத்திட அமர்மேவிக்

---

* 'தொட்டுத் தடவித் துடிப்பொன்றுங் காணாது பெட்டப் பிண மென்று பேரிட்டு' க்ஷேத்திரத் திருவெண்பா 11 ஆம் திருமுறை.

† மாணிக்கவாசகர் வரலாறு:- பாடல் 439, பக்கம் 601 கீழ்க்குறிப்பு.

‡ புரர் - திரிபுர வரலாறு:- பாட்டு - 285, பக்கம் 206 கீழ்க்குறிப்பு.

X நக்கர்க் கற்புத குமரனென விருதொலி:

மூவர்கள் முதல்வன் வந்தான் முக்கணான் குமரன் வந்தான்
மேவலர் மடங்கல் வந்தான் வேற்படை வீரன் வந்தான்
ஏவருந் தெரிதல் தேற்றா திருந்திடும் ஒருவன் வந்தான்
தேவர்கள் தேவன் வந்தான் என்றன சின்னம் எல்லாம்"

- கந்த புராணம் - 4-12-303.

காதும், விளங்கியிருந்த கண்ணும், தத்தம் தொழில் மறைவுபட (செவிடும் குருடுமாகி), மலமும் ஜலமும் ஒழுக, பல பேச்சுக்களும் குழற, தடிகொண்டு இடறுண்டு நடக்க, பித்தம் முதிர்வு அடைந்து, தன்னுடைய செயல்கள் எல்லாம் ஒழிந்து, (கண்டவர்கள்) சீ சீ என்று இகழ்ந்து வருந்த, சிலர் (மூப்புண்ட உடல் நிலையைப் பற்றி) விசாரிக்க - அத்தகைய காலத்தில் - (உவரிநிறம்) கடல்போன்ற கரியநிறம் கொண்ட யமனும் உயிரைக் கொண்டுபோக; செப்பு அற்று (பேச்சு அடங்கி), (பிணம் ஒப்பித்துப் பெயரிட்டு) (பிணம் என்று) தீர்மானித்துப் பிணம் என்று பேர் வைத்து, பொலிவுள்ள கணப் பறைகள் கொட்டச், சொல்லப்படும் பிறப்பின் அழகு இதுதான் என்று கூறி அழுது, முகத்தில் அறைந்துகொண்டு, அங்குக் கூடியுள்ளவர்கள் 'எடுங்கள்' என்று கூறச் சுடுகாட்டில் (சிற்றிக்கு) சில் தீக்கு - சிலவாய நெருப்புக்கு இரையாக (உடலை) இட்டிட்டு - போட்டு, இவ் வண்ணம் என்றும் அழியாததான (நீங்காததான) துக்கநிலையைப் பூண்டு உடலெடுத்துச் சுழற்சி உறுவேனோ!

குருமூர்த்தியாய்த் தோன்றி அருள் பாலித்த திருப்பெருந்துறை என்னுந் தலத்தில், குதிரை வாங்குவதற்காக வந்த நிறை செல்வத் தவத்தினரான (மாணிக்கவாசகரின்) தலையில் வீரம் வாய்ந்த அழகிய தமது திருவடியைச் சூட்டி, அற்புத கோலத்தை வெளிப்படுத்தி, அதனால் அவர் மனத்தைத்தாக்கி இளகச் செய்து - பொலிவுள்ள (ஞானப்) பொருளை அவருக்கு (இட்டு) தந்து உபதேசித்து அவரைக் கைக்கொண்ட - தம் வசப்படுத்தின ஆண்டு கொண்டருளிய முதல்வர்- இளம்பிறை நிலவு அடைந்துள்ள சடையினர்; சிவந்த மானையும் மழுவையும், கொண்ட அழகிய புயத்தினர்-, (கொட்டத்து) இறுமாப்பும் சேட்டையும் செய்துவந்த (புரர்) முப்புரத்தினர் கேடுற்று அழியும்படி (விட்ட) அழியும்படிச் செய்த (திக்கு அணை) நக்கர்க்கு திகம்பரராகிய சிவபிரானுக்கு அற்புத குமாரன் என்று (விருதொலியும்), பெருமையை எடுத்து ஒலிக்கும் முரச வாத்தியமும், சங்கமும் - ஏழுகடல் போல (அதிர முழவொடு) முழவு வாத்தியத்துடன் சேர்ந்து பேரொலி எழுப்பச் சேஷ்டை மிக்க துஷ்டர்களாகிய அசுரர்களைச் சங்கரித்துத் (தண்) குளிர்ந்த கடல் போலவே பல திக்குகளிலும் (அவ்வசுரர்கள்) நிறைந்து பரக்கும்படிப் போருக்கு எழுந்து-

குருகு கொடிசிலை குடைகள் மிடைபட
மலைகள் பொடிபட வுடுக ளுதிரிட
கொத்திச் சக்கிரி பற்றப் பொற்பரி
எட்டுத் திக்குமெ டுத்திட் டுக்குரல்
குமர குருபர குமர. குருபர
குமர குருபர எனவொ தமரர்கள்
கொட்பப் புட்பமி றைத்துப் பொற்சர
ணத்திற் கைச்சிரம் வைத்துக் *குப்பிட
குலவு நரிசிறை கழுகு கொடிபல
கருட னடமிட குருதி பருகிட
கொற்றப் பத்திர மிட்டுப் பொற்கக
னத்தைச் சித்தமி ரக்ஷித் துக்கொளு மயில்வீரா;
†சிரமொ டிரணிய னுடல்கி ழி‡யவொரு
பொழுதி னுகிர்கொடு அரியெ னடமிடு
சிற்பர்த் திட்பதம் வைத்துச் சக்கிர
வர்த்திக் குச்சிறை யிட்டுச் Xசுக்கிரன்
அரிய விழிகெட இருப தமுமுல
கடைய நெடியவர் திருவு மழகியர்
தெற்குத் திக்கில ரக்கர்க் குச்சின
முற்றுப் பொற்றசர் தற்குப் புத்திர
செயமு மனவலி சிலைகை கொடுகர
மிருப துடைகிரி சிரமொர் பதும்விழ
திக்கெட் டைக்கக னத்தர்க் குக்கொடு
பச்சைப் பொற்புய லுக்குச் சித்திர மருகோனே-

---

* குப்பிட - கும்பிட † இரணியன் வதம் - பாடல் 327-1 பக்கம் -317 கீழ்க்குறிப்பு. ‡ அந்தி வேளையில் சங்கரித்தது - 'அந்தியில், அவன் பொற்கோயில் வாயலில் மணிக்கவான் மேல், வயிரவாள் உகிரில், பிளந்து..தேவர்கள் இடுக்கண் தீர்த்தான்'

-கம்பராமாயணம் - இரணியன் வதை 153.

X திருமால் மாவலியிடம் மூவடி மண் யாசித்தபொழுது (பாடல் 268, பக்கம் 166 கீழ்க்குறிப்பு சுக்கிரன் தத்த நீர் வார்க்கும் கமண்டலத்தின் துவாரத்திற் புகுந்து நீர் விழாமல் தடுக்க, வாமனர் அதை உணர்ந்து அந்தத் தடையை நீக்கத் தருப்பையால் துவாரத்திற் குத்திச் சுக்கிரனது கண்களில் ஒன்றைக் குருடாக்கினர்; சுக்கிரனும் அஞ்சி விலக, மாவலி நீர் வார்த்து மூவடி மண்ணைத் தத்தம் செய்தனன்.

(குருகுகொடி) கோழிக் கொடிகளும், (சிலை) ஒலி பொருந்திய, குடைகளும் நெருங்கிடவும், மலைகள் பொடிபடவும், நக்ஷத்திரங்கள் உதிர்ந்து விழவும், (கொத்திச் சக்கிரி பற்றப் பொற்பரி) பொற்பரி சக்கிரி கொத்திப் பற்ற - (உன்னுடைய) அழகிய குதிரையாம் மயிலானது (அஷ்ட) நாகங்களையும் கொத்திப் பிடிக்க - எட்டுத் திக்கில் இருந்தவர்களும் (குரல் எடுத்திட்டு) குரல் எடுத்திட - ஓலமிட, குமர குருபர! குமர குருபர! குமர குருபர! எனத் துதித்து நிற்கும் தேவர்கள் (கொட்ப) உன்னைச் சூழ்ந்து மலர்களை இறைத்து உனது அழகிய திருவடிகளில் தமது கைகளையும் முடிகளையும் வைத்துக் கும்பிட, (அல்லது திருவடிகளைச் சிரமேற் கை கூப்பித் தொழ) மகிழ்ந்து ஓடிவரும் நரிகளும், சிறையுள்ள கழுகுகளும், காக்கை பலவும், கருடனும் நடித்துக் கூத்தாட, ரத்தங்களைப் பருக, (கொற்றப் பத்திரம் இட்டு) உனது வீர வாளைப்பிரயோகித்து, அழகிய தேவருலகை மனம் வைத்து (ரக்ஷித்துக்கொளும்) காப்பாற்றித் தந்த மயில் வீரனே!

(சிரமொடிரணியனுடல் கிழிய) இரணியன் சிரமொடு உடல் கிழிய - இரணியனுடைய தலையும் உடலும் கிழிய, (ஒரு பொழுதின்) ஒப்பற்ற அந்திப்பொழுதில், தமது நகத்தைக்கொண்டு (அரி) அரிந்து....சிற்பர் (தொழிற்றிறம் வாய்ந்தவர்) எனடமிடு சிற்பர் (எல் நடம் இடு சிற்பர்)- ஒளிகொண்ட (அல்லது அந்திவேளையில்) நடனத்தைப் புரிந்த தொழிற்றிறம் வாய்ந்தவர், (திண்பதம்) திண்ணிய - வலிய தமது திருவடியை வைத்து (மகாபலிச்) சக்கரவர்த்தியைப் (பாதளத்திற்) சிறை வைத்துச் சுக்கிரனுடைய அருமையான கண் கெட்டுப்போக, இரண்டு திருவடிகளால் உலகம் முழுமையும் அளக்கும்படி நீண்டவர், (அழகிய திருவினர்) அழகிய லக்ஷ்மியை உடையவர், தெற்குத் திக்கிலே இருந்த (ராவணாதி) அரக்கர்கள்மேல் கோபம் மிகுந்து, அழகிய தசரதச் சக்கரவர்த்திக்குப் புத்திரராய், வெற்றியையும் மனோதிடத்தையும் (கோதண்டம் என்னும்) வில்லையும், கைக்கொண்டு கைகள் இருபது கொண்ட (ராவணனுடைய) தலை ஒருபத்தும் அற்றுவிழ எட்டுத் திக்கையும் தேவர்களுக்குக் (காத்துக்) கொடுத்த பச்சைநிறம் கொண்ட அழகிய மேகவண்ணனாம் திருமாலுக்குச் சிறந்த மருமகனே!

திலத மதிமுக அழகி மரகத
வடிவி பரிபுர நடனி *மலர்பத
†சித்தர்க் குக்‡ குறி வைத்திட் டத்தன
முத்தப் பொற்கிரி யொத்தச் சித்திர
சிலைகொள் Xதிருசர சுவதி Oவெகுவித
சொருபி **முதுவிய கிழவி யியல்கொடு
††செட்டிக் குச்சுக முற்றத் தத்துவ
சித்திற் சிற்பதம் வைத்தக் கற்புறு
திரையி லமுதென மொழிசெய் கவுரியி
னரிய மகனென புகழ்பு லிநகரில்
செப்புப் பொற்றன முற்றப் பொற்குற
தத்தைக் குப்புள கித்திட் டொப்பிய பெருமாளே. (64)

---

* மலர் பதம் - 'மலர்மிசை ஏகினான்' என வரும் திருக்குறளுக்குப் (3) பரிமேலழகர் "அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின் கண் அவர் நினைந்த வடிவொடு விரைந்து சேறலின்" என எழுதியுள்ள உரை ஈண்டு கவனிக்கற்பாலது அடியார்களுடைய குவிந்த உள்ளக் கமலத்தை மலர்த்தும் பதம் எனவும் பொருள் காண்பர். † சித்தர் ....பாட்டு 355 பக்கம் 398; பாட்டு 582-பக்கம் 330 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

‡ குறிவைத்திட்ட தனம் - இது காமாக்ஷியின் முலைத்தழும்பை ஏகாம்பரநாதர் பெற்ற வரலாற்றைக் குறிக்கும் பாடல் 463 பக்கம் 44 கீழ்க்குறிப்பைப் பார்க்க. தேவியின் வளைத்தழும்பையும் கொங்கைத் தழும்பையும் இறைவன் பெற்றதை - "மணிமுலைக் குவட்டினோடு ; - வளைக்கையால் நெருக்கிப் புல்லித் தணிவருங் காதல் விம்மக் காதலி தழுவலோடுந், திணியிருள் அறுக்குஞ் சோதித் திருவுருக் குழைந்து காட்டி, அணிவளைத் தழும்பினோடு முலைச்சுவ டணிந்தார் ஐயர்". "கற்றவர் உணர்வையும் கடந்த பேரொளி ** தேவி வால்வளைப் பொற்றழும்பொடு முலைச் சுவடு பூண்டதே" - காஞ்சிப்புராணம் - தழுவக் 380-381 "சுரிகுழல் மடந்தை துணை முலைக் கண்கள் தோய் சுவடு.....திருவாசகம் அருட்பத்து. 'கொழும் பவளச் செங்கனிவாய்க் காமக்கோட்டி கொங்கையிணை அமர் பொருது கோலங்கொண்ட தழும்புளவே"....அப்பர் 6-4-10.

X திரு சரசுவதி கொள்... சொருபி:- திருவைத், தவளச் சததள முளரியின் வனிதையை உதவு கடைக்கண் மடப்பிடியே"....மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்... முத்த-10.

"அம்பிகை வலக்கண்ணிற் திருமகள். இடக்கண்ணில் கலைமகள்:- 'திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை யிடக்கண் ஞானப் பெருமகள் நுதற்கணாகப் பெற்று வான் செல்வங் கல்வி, அருமை வீடளிப்பாள்....திருவிளை... 19-2. (தொடர்ச்சி பக்கம் - 541.)

பொட்டணிந்ததும், சந்திரனுக்கு நிகரானதுமான முகத்தைக் கொண்ட அழகி, மரகத (பச்சை) நிறத்தை உடையவள், (பரிபுரம்) சிலம்பணிந்து நடனம் புரிபவள், (மலர்பத சித்தர்) அடியார்களுடைய உள்ளத்தே மலர்கின்ற திருவடியை உடைய சித்த மூர்த்தியாகிய சிவபெருமானுக்குக் (குறிவைத்திட்ட) சுவட்டுக்குறி (வைத்திட்ட) வைத்த தனம் கொங்கைகள் - முத்துமாலை அணிந்துள்ள (பொன்கிரி) - பொன்மலை போன்ற கொங்கைகள் - இணைந்துள்ள (சித்திரச் சிவை) அழகிய சிவாம்பிகை, (கொள் திரு சரசுவதி வெகுவித சொருபி) திரு. சரசுவதி கொள் வெகுவித சொருபி - இலக்குமியையும் சரஸ்வதியையும் தனது (இரு கண்களாகக்) கொண்டு பலவிதமான உருவத்தைக் கொண்டவள், ** முதுவியகிழவி - பழையவளினும் பழையவள் (மிகப் பழைய கிழவி), முறைமையாக, (செட்டிக்கு) (வளையல்விற்ற) †† செட்டியாகிய சொக்கேசருக்கு (சிவனுக்கு) - (சுகம் முற்ற) சுகம் நிரம்ப, தத்துவ சித்தில் - தத்துவ அறிவு முறையில், (சிற்பதம்) தனது ஞான பாதத்தைத் திருவடியை வைத்த - சூட்டின (கவுரி), கற்புறு கவுரி - கற்பு உள்ள கவுரி, கடலிற் பிறந்த அமுதுபோன்ற இனிய சொற்களைப் பேசும் கவுரி - அத்தகைய (கவுரியின்) உமையின் அருமைப் பிள்ளையென விளங்கிப் புகழ் நிறைந்த புலியூரில், (செப்பு) சிமிழ் அல்லது கரகம் போன்ற பொலிவுள்ள கொங்கை திரண்டுள்ள அந்த அழகிய குறக்கிளி (வள்ளியின்) பொருட்டு புளகாங்கிதம் கொண்டு (ஒப்பிய) உன்னை அவ்வள்ளிக்கு ஒப்புக்கொடுத்து வீற்றிருக்கும் பெருமாளே!

(துக்கம் எடுத்திட்டுச் சடம் உழல்வேனோ)

---

காமாட்சி - கா - சரஸ்வதி; மா - இலக்குமி - அட்சி - கண் "கா எனப் பெயரிய கலைமகளை, முந்தை ஞான்று கண்ணெனப் புரந்தாய் மா எனப் பெயருடைய மற்றெனையும் மலர்ந்தநின் விழிபோற் புரந்தருளி ** காமக் கண்ணியாம் பெயரெய்துவை என்னாப் பூ எனப் பயில் அணைமிசைக் கிழத்தி போற்றிசைத்தலும் - காஞ்சிப்புரா - வீராட்ட 45. O" ஒன்றே பல உருவே அருவே என் உமையவளே".....அபிராமி ....அந்தாதி....30.

** "இவள் எங்கள் சங்கரனார் மனை மங்கலமாம். அவளே அவர் தமக் கன்னையும் ஆயினள் ஆகையினால், இவளே கடவுளர் யாவர்க்கும் மேலை இறைவியுமாம்" அபிராமி அந்தாதி - 44.

(தொடர்ச்சி பக்கம் 542 பார்க்க.)

## 653 - I. மனதுக்குப் புத்தி கூறல்

*தனனா தனத்ததன தனனா தனத்ததன*
*தனனா தனத்ததன தனதானா*

*மனமே உனக்குறுதி புகல்வே னெனக் கருகில்*
*வருவா யுரைத்த மொழி தவறாதே*
*மயில்வாக னக்கடவுள் அடியார் தமக்கரசு*
*மனமாயை யற்றசுக மதிபாலன்;*
**நினைவே துனக் †கமரர் சிவலோக ‡மிட்டுமல*
*நிலைவே ரறுக்கவல பிரகாசன்-*
*Xநிதிகா நமக்குறுதி அவரே பரப்பிரம*
*Oநிழலாளி யைத்தொழுது வருவாயே;*
***இனமோ தொருத்தி†† ருபி நல்மேர் மறைக்கரிய*
*இளையோ ளொரொப்புமிலி நிருவாணி-*
*எனையீ னெடுத்தபுகழ் கலியாணி பக்கமுறை*
*யிதழ்வேணி யப்பனுடை குருநாதா;*

---

*நினைவு - வருத்தம் - "எய்துவ தெல்லாம் நெறிமையிற் கூற நினைவின் அகன்றாள்" சிந்தாமணி 333. †அமரர் லோகம் கிடைப்பது...."ஞானசம்பந்தன் தமிழ் வல்லார்க் கடையா வினைகள் அமரலோகம் ஆள்வாரே" .....சம்பந்தர் 2-61-11. சிவலோகம் கிடைப்பது - "சம்பந்தன்....தமிழ் வல்லார் சிவலோகஞ் சேர்வாரே" 1-60-11. ‡இட்டு....அளித்து.

X சங்கநிதி, பதுமநிதி, கற்பகக்கா அவர் நமக்கு: - "நிதியே நித்தியமே"....திருப்புகழ் 927. O நிழல் - நீதி (பிங்கலம்)

** இனம் ....சுற்றம் "சுற்றம் நீ பிரானும் நீ"....சம்பந்தர் 3-52-3. "ஊர் பெற்றதாய் சுற்றமா யுற்றதாள்" திருப்புகழ் 1036. †† ரூபி அழகு உருவம் உடையவள்.

---

(541 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)

†† செட்டி - வளையல் விற்ற செட்டி - சிவபிரான் வளையல் விற்ற திருவிளையாடல் - பாடல் 612 பக்கம் 421 கீழ்க்குறிப்பு.

செட்டிக்கு - சுகமுற்ற - பதம் வைத்த கவுரி.
"சிவபிரான் மகுட கோடீரத்தடிச் சுவடு அழுத்தியிடு மரகதக் கொம்பு" - மீனாட்சிப்பிள்ளை - வருகை-5.
"சடையோன் அருந்திய நஞ்சு அமுதாகிய அம்பிகை"

- அபிராமி அந்தாதி 5

" சிவம் சத்திதன்னை யீன்றும் சத்திதான் சிவத்தை யீன்றும்"

- சித்தியார் - சுபக்க - 167.

# 653 - I.

மனமே! உனக்கு உறுதி தரக்கூடிய மொழிகளைச் சொல்லுவேன்; என்னுடைய சமீபத்தில் வா! நான் சொல்லும் சொற்படி தவறாமல் நடப்பாயாக!

மயில்வாகனம் ஏறும் தெய்வம்; அடியவர்களுக்கெல்லாம் அரசர்; மனம் மாயை என்பன இல்லாத (அல்லது மன மயக்கம் இல்லாத) சுக சொரூப அறிவுள்ள குழந்தை;

(நினைவேது உன்க்கு) வருத்தம் ஏது உனக்கு, அல்லது - உன் நினைவுக்கு (ஏது) காரணமாயிருப்பவன் - அல்லது உன் எண்ணம் எதுவோ அதையும், அமரர் லோகம் சிவலோகம் - வானோர் உலகு, சிவலோகம் இவைதமையும் அளித்து, (மலம்) (ஆணவம், கன்மம், மாயை என்னும்) மும் மலங்களின் நிலைத்துள்ள வேர்களை அறுக்க வல்ல ஒளியோன்-

சங்கநிதி, பதுமநிதி (அனையவன்), கற்பகக்கா (அனையவன்); நமக்கு உறுதி (நிலைப் பொருள்) அவனே; (பரப்பிரமம்) - முழுமுதற் கடவுள் அவனே; (நிழலாளி) நீதிமான்; (அத்தகைய பெருமானை நீ) வழிபட்டு வருவாயாக.

(இனம் ஒது ஒருத்தி) (நமது உண்மைச் சுற்றம்) என்று சொல்லக்கூடிய ஒருத்தி (ஒப்பற்றவள்), அழகு உருவம் உடையவள், நலமும், அழகும், கொண்ட வேதங்களுக்கு எட்டாத (என்றும்) இளையவள், ஒரு விதத்திலும் ஒப்பில்லாதவள், (உடையற்றவள்) திகம்பரி-

என்னைப் பெற்றெடுத்த (ஞானக் குழந்தையாய் காத்தருளிய) புகழ் நிறைந்த கலியாணி - அத்தகைய தேவியின் பக்கத்தில் உறைகின்ற (தேவியைப் பாகமாகக் கொண்ட) கொன்றையணிந்த அப்பனுடைய சிவபிரானுடைய குருமூர்த்தியே!

*முனவோர் துதித்து மலர் †மழைபோ லிறைத்துவர
முதுசூ ரரைத்தலை கொள் முருகோனே;
மொழிபாகு முத்துநகை மயிலாள் தனக்குருகு
முருகா‡ தமிழ்ப்புலியுர் பெருமாளே.(64-I)

## 654. ஞானம் பெற

தத்த தானன தத்தன தானன
தத்த தானன தத்தன தானன
தத்த தானன தத்தன தானன தனதான

முத்த மோகன தத்தையி னார்குர
லொத்த வாயித சர்க்கரை யார்நகை
முத்து வாரணி பொற்குவ டார்முலை விலைமாதர்·

Xமொக்கை போகOசெ குத்திடு வார்பொருள்
பற்றி வேறும ழைத்திடு வார்சிலர்
** முச்ச லீலிகை சொக்கிடு
வாரிடர் கலிசூழச்;

†† சித்தி லாடஅ ழைத்திடு வார்கவ
டுற்ற மாதர்வ லைப்புகு நாயெனை
‡‡ சித்தி ஞானம்வெ ளிப்பட வேXXசுடர் மடமீதே

---

*மூவரும் துதித்தல் - 'சிலைமகள் நாயன் கலைமகள் நாயன் திருமகள் நாயன் தொழும் வேலா' - திருப்புகழ் 261.

† பூமாரி பெய்து வந்தது - பாட்டு 645 பக்கம் 510 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

‡ தமிழ்ப் புலியுர் - பன்னிரு திருமுறை ஆசிரியர்களாலும் தமிழ்ப் பாக்களாற் பரவப்பட்ட தலம்...புலியூராதலின் தமிழ்ப் புலியூர் என்றார்.

X மொக்கை....வெட்கம் Oசெகுத்தல்....அழித்தல். ** முச் சலீலிகை சொக்கு....வாய்நீர், சிறுநீர், நாதநீர் ஆகிய மூன்று நீரின் சம்பந்தமான சொக்குமருந்து: சலிலம்...நீர் (பாடல் 230 பக்கம் 74)

†† சித்து - மாயவித்தை.

‡‡ சித்தி ....அஷ்டமாசித்திகள்....பாடல் 296-பக்கம் 236 கீழ்க்குறிப்பைப் பார்க்க. XXசுடர் மாடம் - நந்தி ஒளி காணும் லலாடஸ்தானம்; நந்தி ஒளி - பாடல் 439-உரைக் குறிப்பு. (பக்கம் 603)

(முனவோர்) முன்னவர்களான - அயன் - அரி - ருத்திரன் - என்னும் மூவர்களும் துதித்து, மலர்களை மழைபோல இறைத்து - மலர் மாரி பெய்துவர, பழைமை வாய்ந்த சூரனாதியோரின் தலைகளைக் கொய்தறுத்த முருகனே!

மொழிகள் சர்க்கரைபோலவும், (நகை முத்து) பற்கள் முத்துப் போலவும், கொண்ட மயில் அனைய சாயலாளான வள்ளியின் பொருட்டு மனம் உருகுகின்ற முருகனே! தமிழ் விளங்கும் புலியூர்ப் பெருமாளே!

(மனமே! தொழுது வருவாயே)

# 654.

முத்தம் தந்து (மோகனம்) காம மயக்கத்தைத் தருகின்ற கிளி போன்றவர்கள்; கிளியின் குரல் கொண்ட வாயில் நின்றும் இனிய சர்க்கரை போன்ற மொழியினர்; பற்கள் முத்துப்போன்றவர்; ரவிக்கை அணிந்த அழகிய மலைபோன்ற கொங்கைகளை உடைய விலைமாதர்கள் -

(மொக்கை) மதிப்பை இழக்கும்படி (அல்லது வெட்கமே -நாணமே தொலையும்படி அழிப்பவர்கள், பொருள் பற்றி பொருள்காரணமாக வேறு (ஆடவர்களையும்) அழைப்பவர்கள்; சிலர் - வாய் நீர், சிறு நீர், நாத நீர் ஆகிய மூன்று நீர்கள் சம்பந்தப்பட்ட சொக்கு மருந்தை உண்ணத் தருபவர்கள்; (இடரும்) துன்பமும் (கலியும்) தரித்திரமும் தொடர -

மாயவித்தைகளாடி அழைப்பவர்கள், (கவடு) வஞ்சனை கொண்ட மாதர்கள் - அத்தகையரது வலையிற் புகுகின்ற அடியேனுக்கு அஷ்டமாசித்திகளும், ஞானமும் தோன்றுமாறு, நந்தி ஒளி காணப்படும் லலாட ஸ்தானத்தே -

---

(529-ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

**பிரதிட்டாகலை;** ஆன்மாவை முத்தியில் உய்ப்பது **வித்யா கலை:** பந்த நிலை நீங்கிய ஆன்மாக்களுக்கு அனுபவ ஞானத்தைத் தருவது. **சாந்திகலை:** அனுபவ ஞானம் பெற்ற ஆன்மாக்களுக்கு விருப்பு வெறுப்புச் சங்கற்பம் முதலிய எல்லாத் துன்பங்களும் சாந்தமாகச் செய்வது. **சாத்தியதீதகலை:** அனுபவஞானம் பெற்று விருப்பு வெறுப்பு முதலிய எல்லாத் - துன்பங்களும் சாந்தமாகி நின்ற ஆன்மாக்கட்கு அத் துன்பங்களை முற்றும் ஒழியச் செய்வது; மலத்தை நீக்குதலாற் 'கலை'யெனப் பெயராயிற்று கலித்தல் -நீக்குதலும் செலுத்தலும் - சிவஞான பாடியம் - பக்கம் 205.

சித்தெ லா*மொரு மித்துன தாறினம்
வைத்து நாயென ருட்பெற வேபொருள்
செப்பி †யாறுமு கப்பரி வோடுனா் வருள்வாயே;
தத்த னானத னத்தன தானெனு
டுக்கை பேரிமு ழக்கிட வேகடல்
‡சத்த தீவுத யித்தியர் மாளிட விடும்வேலா-
சத்தி லோகப ரப்பர மேசுர
நிர்த்த மாடுக ழற்கரு ணாகர
தற்ப ராபர நித்தனொர் பாலுறை யுமைபாலா;
துத்தி மார்முலை முத்தணி மோகன
பொற்ப்ர காசமு ளக்குற மான்மகள்
துப்பு வாயிதழ் வைத்தணை சோதிபொன் மணிமார்பா-
Xசுட்டி நீலஇ ரத்தின மாமயி
லுற்று மேவிOய ருட்புலி யூர்வளர்
சுத்த னேசசி பெற்றபெ ணாயகி பெருமாளே(65)

---

*ஒருமித்த உ.ாது ஆறு எனப்பிரிக்க. உனது ஆறு - உன்னுடைய சடாக்ஷரத்தை இனம் வைத்து - இனமாக வைத்து.

† ஆறுமுகப் பரிவு - என்பது போற்றத்தக்க ஒரு அருமைத் தொடர் ஆறுமுகப் பரிவோடு என்றதனால் 'ஏறுமயிலேறி' என்னும் திருப்பாட்டில் (தொகுதி 1-பகுதி 1-பக்கம் 6-7) உள்ள ஆறு திருமுகங்களின் இயல்புகளை அமைத்து - 1. எனது உள்ளமாகிய மயில்மீது ஏறி விளையாடியும். 2. எனக்குக் குருவாக வந்து உபதேசித்தருளியும். 3 என்னுடைய வினைகளைத் தீர்த்தருளியும். '4 எனதுமாயா பாசங்களை ஒழித்தருளியும். 5 எனது ஆணவத்தை அடக்கி அருளியும், 6 என்னை உன்னோடு புணர்த்தி அருளியும் இங்ஙனம் ஆறு திருமுகங்களாலும் எனக்குக் கருணை புரிவாயாக எனப் பொருள் காணக்கிடக்கின்றது பின்னும் ஆறு திருமுகங்களும் ஈசன் திருமுகம் ஐந்தும் தேவி திருமுகம் ஒன்றும் என்றதனால் (பாடல் 444- பக்கம் 614 - கீழ்க்குறிப்பு சிவபிரான் - தேவி இருவர் கருணையும் எனக்குக் கூடுவதாக - எனவும், ஐசுவரியும், வீரியம், புகழ் திரு, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறு குணங்களும் (பாடல் 444 - பக்கம் 614 - கீழ்க்குறிப்பு) ஆறுமுகம் என்றதனால் அடியேனுக்கும் இந்த ஆறு குணங்கள் கூடுவதாக எனவும் பொருள் காணக் கிடக்கின்றது.

‡ சத்த தீவுகள் - (எழு தீவுகள்): பாடல் 554-பக்கம் 265 கீழ்க்குறிப்பு.
X சுட்டி - உச்சிக்கொண்டை.

O அருட்புலியூர் :- பிறக்க முத்தி அளிக்கும் திருவாரூர்; இறக்க முத்தி அளிக்கும் காசி; நினைக்க முத்தி அளிக்கும் அண்ணாமலை; தெரிசிக்க முத்தி அளிக்கும் சிதம்பரம் - ஆதலினால் 'அருட்புலியூர்' என்றார் -

(தொடர்ச்சி பக்கம் 547 பார்க்க.)

அறிவு எல்லாம் (ஒருமித்த) ஒன்று கூடின ஞானப்பொருளெலாம் ஒன்றுகூடி அமைந்துள்ள உனது ஆறு - உனது (ஆறெழுத்தை) முறைப்படி வைத்து உனது திருவருளை நாயேன் பெறுமாறு அந்த ஆறெழுத்தின் பொருளை விளக்கிச்சொல்லி, (ஆறுமுகப் பரிவோடு) உனது திருமுகங்கள் ஆறும் (அடியேன்மீது) கருணை கொண்டனவாய் (உணர்வு) ஞானத்தை அருள் புரிவாயாக.

தத்த னானத னத்தன தானென்று உடுக்கை, பேரி இவைகள் முழக்கம் செய்ய, கடல் சூழ்ந்த ஏழு தீவுகளிலும் இருந்த அசுரர்கள் இறந்துபடச்செலுத்தின வேலாயுதனே!

அருட்சத்தி, லோகங்களுக்கெல்லாம் முழுமுதற் கடவுளாய், ஈசுரனாய், நடனம் ஆடுகின்ற திருவடிகளை உடைய கருணாகரனாய், தானே பரம்பொருளாய், நித்தனாய், (அழியாதவனாய்) உள்ள சிவனுடைய (இடது) பாகத்தில் உள்ள உமாதேவியின் பாலனே! (அல்லது - ஞான சத்திதரரே லோகங்களுக்கெல்லாம் முழுமுதற்கடவுளாம் ஈசுரனே! நடனமாடும் திருவடிகளை உடைய கருணாகரனே! தானே பரம்பொருளாய் விளங்குபவனே! (நித்தனாகிய) அழியாதவனாகிய சிவபிரானது பாகத்தில் உள்ள உமா தேவியின் குழந்தையே!

தேமல் படர்ந்துள்ள மார்பகத்தே கொங்கையின்மீது முத்துமாலை அணிந்துள்ள அழகும், பொலிவுள்ள ஒளியும் கொண்டுள்ள குறத்தியாகிய மானின்மகள் வள்ளியினுடைய பவளம்போலச் சிவந்துள்ள வாய் இதழ் ஊறலைப் பருகி அவளை அணைகின்ற சோதியே! (அல்லது - ஒளி வீசும்), பொன்னும் மணியும் புனைந்துள்ள மார்பனே!

உச்சிக் கொண்டையும் நீல நிறமும், ரத்ன ஒளியும் கொண்டுள்ள சிறந்த மயில்மீது ஏறி அமர்ந்து (தரிசனம் செயமுத்தி அளிக்கும்) அருள் வாய்ந்த தலமாகிய புலியூரில் (சிதம்பரத்தில்) வீறுடன் விளங்கும் சுத்த மூர்த்தியே! (இந்திரன் மனைவி) சசிதேவி பெற்ற (பெண் நாயகி) தேவசேனையாம் திருமாதின் (மணவாளப்) பெருமாளே!

(ஆறுமுகப் பரிவோ டுணர்வு அருள்வாயே)

---

(பக்கம் 546 தொடர்ச்சி) 'தெரிசனஞ் செயத் தில்லையில், கமலையிற் செனிக்க, மரணமாய் விடக் கங்கை சூழ் வாரணாசியிலே. அருணைமாநகர் நினைத்திட முத்தி, அஞ்செழுத்தும், பிரணவத்தொடெம் பேர்களும் உரைக்கிலும் பெறலாம்.' -திருவெண்காட்டுப் புராணம்.

## 654-I - துதி

தனதனன தான தனதனன தான
தனதனன தானத் தனதானா

*பரம குருநாத கருணை யுபதேச
பதவி தரு ஞானப் பெருமாள்காண்-
† பக லிரவி லாத ஒளி வெளியில் மேன்மை
பகரு மதி காரப் பெருமாள்காண்-
திரு வளரு ‡ நீதி தினமானொக ராதி
Xசெக பதியை யாளப் பெருமாள்காண்-
செகதலமும் வானு மருவை Oயவைபூத
தெரிசனை **சிவாயப் பெருமாள்காண்-
ஒரு பொருள் தாகி அரு விடையையூரு
†† முமை தன் மணவாளப் பெருமாள்காண்-
‡‡ உகமுடிவு கால மிறுதிகளி லாத
உறுதியநு பூதிப் பெருமாள்காண்;
XXகருவு தனிலூறு மிகுவினைகள் மாய
கலவிபுகு தாமெய்ப் பெருமாள்காண்-
**கனக சபைமேவி அனவரத மாடு**
கடவுள்செக சோதிப் பெருமாளே (65-I)

---

* 'பரமருக்கொரு குருக்கள்" திருப்புகழ் 215. †இரவுபகல் இலாத ஒளி வெளி - திருப்புகழ்ப்பாடல் 303 பக்கம் 250 கீழ்க் குறிப்பு

‡ "நீதி நின்னையல்லால்.... நினைந்தறியேன்"- சம்பந்தர் 3-55-6.. வெண்ணியில் நீதியை நினையவல்லார் வினை நில்லாவே" சம்பந்தர் 2-14-2.

X "சக்கரவர்த்திப் பெருமாளே" திருப்புகழ் 1303.

O ஐம்பூதங்களையும் தந்தது ஐந்தெழுத்தே... பாட்டு 652 பக்கம் 529 கீழ்க்குறிப்பைப் பார்க்க. ** 'சிவாய' முத்தி பஞ்சாக்ஷரம்... திருப்புகழ்ப் பாடல் 207 பக்கம் 28 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

†† தில்லையில் முருகவேளைச் சிவபிரானாகவே அருணகிரியார் காண்கின்றார். "திரிபுர மெரிசெய்த கோவே நமோநமே" (திருப்புகழ் 611) என்புழிப் போல "இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன், மகன், தகப்பன், தமையன்" என்னும் கருத்தும் ஈண்டு ஒக்கும் - திருவாசகம் - பொற்சுண்ணம். ‡‡ "அந்தமில்லா அடிகள்" சம்பந்தா,, 1-27-1.

"மூன்று காலமும் தோன்ற நின்றனை".... சம்பந்தர் I - 128.

XX "தொடர்ந்த நம்மேல் வினை" ... சம்பந்தர் 2-114-7.

# 654 - I.

மேலான குருநாதனே! (அல்லது - பரமசிவனுக்குக் குருநாதனே!) கருணையுடன் உபதேசிப்பவனே! அருட் பதவியை (சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சிய பதவிகளை)த் தருகின்ற ஞானப் பெருமாள் நீதான்!

இராப் பகலற்றதான (ஞான) ஒளி வீசும் (சிதாகாச) வெளியில் மேன்மையான உண்மைப்பொருள்களை விளக்கிச் சொல்லவல்ல அதிகாரங் கொண்டுள்ள பெருமாள் நீதான்!

முத்திச் செல்வத்தை வளர்க்கின்ற நீதியே! நித்ய அழகனே! (அல்லது, அழிவில்லாத அழகுத்தன்மை யுடையவனே!) ஆதிப்பொருளே! பூவுலகச் சக்கரவர்த்தி - களையும் ஆள்கின்ற அந்தப் பெருமாள் நீதான்!

மண்ணும், விண்ணும், (மருவையவைபூத) மருவு ஐ அவை பூத - மருவு அவை ஐ பூத... பொருந்தினவைகளான ஐந்து பூதங்களிலும் கலந்து விளங்கித் தரிசனம் தரும் (சிவாயப் பெருமாள்) 'சிவாய' என்னும் முத்தி பஞ்சாக்ஷரத் திள் பொருளாய் விளங்கும் பெருமாள் நீதான் -

ஏக வஸ்துவாகி (தனிப்பொருளாகி) அருமையான இடபவாகனத்தில் ஏறுகின்ற - பார்வதியின் மணாளனாகிய - பெருமாளும் நீதான்!

யுக முடிவு, காலம், இறுதிகள் - என்பன இல்லாத (இவற்றைக் கடந்த) பெருமாள் நீதான்; உறுதி நிலைபெற்ற சிவாநுபூதிப் பெருமாள் நீதான்; (அல்லது) யுக முடிவு காலத்திற்கும் முடிவில்லாததான நிலைபெற்ற சிவாநுபூதியைத் தந்துதவும் பெருமாள் நீதான்!

கருக்குழியிலிருக்கும்போதே ஊறி வருகின்ற கொடிய வினைகள் அழிய அவ்வெவ் வினைகளின் புணர்ச்சி வாராவகை காக்கும் உண்மைப் பெருமாள் நீதான் - (அல்லது) கருவினிலேயே தொடரும் அருவினைகள் அழிய (என்னை) மாயப் பிரபஞ்ச சம்பந்தத்திற் புகுத்தாத உண்மைப் பெருமாள் நீதான் -

(சிதம்பரத்தில்) **பொன்னம்பலத்தில்** பொருந்தி எப்போதும் திருநடனம் செய்கின்ற கடவுளாகிய ஜெக ஜோதிப் பெருமாளே!

(வேலு மயிலுந் துணை)

**அநுபந்தம்:- ஆறு ஆதார சக்கரங்கள் (பாடல் 652.)**
**(தத்துவ தீபிகை என்னென்னும் நூலின் சுருக்கம்.)**

**மூலாதாரம்:** குய்யத்திற்கும் குதத்திற்கும் மத்தி; குண்டலிசக்தி; மாணிக்கநிறம்; நாலிதழ்க்கமலம்; 4 அக்ஷரம் (வசஷஸ); முக்கோணம்; ஓங்காரத்தின் நடுவில் விக்நேச்வரன் - வல்லபை சக்தி.

**சுவாதிஷ்டானம்:** அடி வயிறு; ப்ருத்வி - ஸ்தானம்; செம்பொன் நிறம்; ஆறிதழ்க் கமலம்; 6 அக்ஷரம் (ப (Ba), ப (Bha) ம, ய, ர, ல); நாற்சதுரம்; நகரத்தின் மத்தியில் பிரும்மா சரஸ்வதி.

**மணிபூரகம்:** உந்திக்கமலம்; (தொப்புளுக்கு நேர்) அப்புஸ்தானம்; மரகத நிறம்; பத்து இதழ்த்தாமரை; 10 அக்ஷரம் ட (da) I (dda) ண, த, த்த, த (Dha) த (Dhha) ந, ப, ப்ப), ம கரத்தின் நடுவில் விஷ்ணு மகாலக்ஷ்மி.

**அனாகதம்:** ஹிருதயகமலம், தேயுஸ்தானம்; அக்னிநிறம்; பன்னிரண்டிதழ்க்கமலம்; 12 அக்ஷரம் (க, க்க, க (Ga, (Cha) க (Gha), ங, ச, ச்ச, ஜ, ஜ்ஜ, ஞ, ட, ட்ட); முக்கோண மத்தியில் புஷ்பவட்டம்; சி கரத்தின் மத்தியில் ருத்திரனும் தேவியும்.

**விசுத்தி:** கண்டஸ்தானம்: வாயு ஸ்தானம்: கருநிறம். பதினாறிதழ்ப் புஷ்ப வட்டம்; 16 அக்ஷரம் (அ, ஆ இ, ஈ, உ, ஊ, ரு, ரூ, லு, லூ, ஏ, ஐ, ஓ, ஔ, அம்; அ:) அறுகோணம்; வகாரத்தின் மத்தியில் மகேச்வரன் மகேச்வரி.

**ஆஞ்ஞை:** லலாடஸ்தானம்; புருவமத்தி; ஆகாச-ஸ்தானம்; மேகநிறம் மூன்றிதழ்ப் புஷ்பம்; 3 அக்ஷரம் (ஹ, ள, க்ஷ) வட்டம்; ய காரத்தின் நடுவில் சதாசிவம் மனோன்மணி.

-: o :-

வேலு மயிலுந் துணை.

# பாட்டு முதற்குறிப் பகராதி.

# உள்ளுறை

## பாகம் - 2

உ

## காசி.

ரெயில்வே ஸ்டேஷன். சென்னையிலிருந்து (கல்கத்தா வழியாய்) சுமார் 1467-மைல். கங்கை நதி இங்கு வடக்கு முகமாக ஓடுகின்றது. கங்கையின் இடது கரையில் அமைந்துள்ள மஹா விசேஷமான ஸ்தலம். முத்தி ஸ்தலங்கள் ஏழனுள் ஒன்று. காசியின் எல்லையில் இறந்தோரை உமை தனது உத்தரீயத்தினால் இளைப்பாற்றச், சிவபிரான் பிரணவப்பொருளை உபதேசிப்பார்; "உருவரா தென்றுந் தன் எல்லை வட்டத்தினுள் உற்றிருந்தே இறந்தோர்க், குத்தரீ யத்தினால் உமையிளைப்பாற்றவே உம்பர்கோன் விசுவபதிவந், தொருவலச் செவியினுள் தாரகப் பிரமத்தை உபதேச மாயருளியும், ஓரெட்டு வடிவுதரு காசிநகர்." (க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ்).

'காசியை நினைக்க முத்தி காசியென் றுரைக்க முத்தி
காசியைக் காண முத்தி காசியைச் சூழ முத்தி
காசியில் வசிக்க முத்தி காசியைக் கேட்க முத்தி
காசியின் வசிப்போர் தம்மைக் கண்டு தாழ்ந் திடுதல் முத்தி'
'காசியுள்ள நர் காசி கேட்குநர்
காசி காணுநர் ஆசில் முத்தரே' -காசி ரகசியம்.

## 655. ஞானம் பெற

தான தத்தன தான தானன
தான தத்தன தான தானன
தான தத்தன தான தானன தனதான

தார ணிக்கதி பாவி யாய்வெகு
சூது மெத்திய மூட னாய்மன
சாத னைக்கள வாணி யாயுறு மதிமோக-
தாப மிக்குள வீண னாய்பொரு
வேல்வி ழிச்சிய ராகு மாதர்கள்
தாழு யச்செயு மேது தேடிய நினைவாகிப்;
*பூர ணச்சிவ ஞான காவிய
மோது தற்புணர் வான நேயர்கள்
பூசு மெய்த்திரு நீறி டாஇரு வினையேனைப்-
பூசி மெய்ப்பத மான சேவடி
காண வைத்தருள் ஞான மாகிய
போத கத்தினை யேயு மாறருள் புரிவாயே;

* சிவஞான காவியம் - தேவார திருவாசகங்கள்.

## 655.

இப்பூமியில் அதிக பாவியாய், மிக்க சூது நிறைந்த மூடனாய், மனத்தில் அழுந்தின திருட்டுப் புத்தி உடையவனாய், பொருந்திய மிக்க காம மயக்கில் (அல்லது - அறிவு மயங்கும்)

தாகம் (ஆசை) மிக்குள்ள வீணனாய், சண்டைக்கு உற்ற வேல் போன்ற கண்ணியர்களான (பொது) மாதர்கள் தாம் பிழைப்பதற்கு உதவி செய்யும் (ஏது) செல்வத்தைத் தேடித் தரும் நினைவைக் கொண்டு -

பூரணமான சிவஞான நூல்களை (ஓதுதலில் (மனம்) சேர்ந்துள்ள) - ஓதுதலில் விருப்பங் கொண்டுள்ள அன்பர்கள் பூசுகின்ற உண்மைத் திருநீற்றை - (உண்மை மகிமை வாய்ந்த) திருநீற்றை இடாத இரு வினையாளனை -

(திருநீற்றைப்) பூச வைத்து, உண்மைப் பதவியான உனது திருவடிகளைக் காணும்படி அருள்புரிந்து, திருவருள் மயமாம் ஞானம் என்கின்ற அறிவும் (எனக்குக்) கிட்டுமாறு அருள் புரிவாயாக;

*வார ணத்தினை யேக ராவுமு
னேவ ளைத்திடு போது மேவிய
மாய வற்கிட மாக வீறிய மருகோனே-
†வாழு முப்புர வீற தானது
நீறெ ழுப்புகை யாக வேசெய்த
மாம திப்பிறை வேணி யாரருள் புதல்வோனே;
‡ கார ணக்குறி யான நீதிய
ரான வர்க்குமு னாக வேநெறி
காவி யச்சிவ நூலை யோதிய கதிர்வேலா-
கான கக்குற மாதை மேவிய
ஞான சொற்கும ராப ராபர
**காசி** யிற்பிர தாப மாயுறை பெருமாளே.(1)

## 656. மாதர்மீது மயக்கு அற.

தந்தத் தனதன தானன தானன
தந்தத் தனதன தானன தானன
தந்தத் தனதன தானன தானன தனதான

மங்கைக் கணவனும் வாழ்சிவ னாமயல்
பங்கப் படமிசை யே Xபனி போல்மதம்
வந்துட் பெருகிட வேவிதி யானவ னருள்மேவி-
வண்டுத் தடிகைபொ லாகியெ நாள்பல
பந்துப் பனைபழ மோடிள நீர்குட
மண்டிப் பலபல வாய்வினை கோலும வழியாலே;
திங்கட் பதுசெல வேதலை கீழுற
வந்துப் புவிதனி லேOமத லாயென
சிந்தைக் குழவியெ னாவனை தாதையு
மருள்கூரச்-

---

* இது திருமால் முதலை வாயினின்றும் யானையை மீட்ட வரலாற்றைக் குறிக்கும் (பாட்டு 110 -பக்கம் 262 கீழ்க்குறிப்பு)

† திரிபுரம் எரித்த வரலாறு (பாட்டு 285 பக்கம் 206).

‡ இது முருகவேளின் கூறான சம்பந்தர் தேவாரம் பாடினதைக் குறிக்கின்றது.

X இங்குக் குழந்தை உற்பத்தி - வளர்ச்சி - கூறப்பட்டுள. (பாடல்கள் 241, 565 பார்க்க)

O மதலை - மகன் (பிங்கலம்)

*யானையை (கஜேந்திரனை) முதலை முன்பு வளைத்து (இழுத்த) போது அங்கு வந்து சேர்ந்து (உதவின) திருமாலுக்கு இன்பம் தரும் வழியில் மேம்பட்டு விளங்கும் மருமகனே!*

*வாழ்ந்திருந்த முப்புரங்களின் பொலிவு சாம்பலாகவும், புகை எழவும் செய்த சிறந்த திங்கட்பிறை அணிந்துள்ள சடைப்பெருமான் அருளிய புதல்வனே!*

*(எவைக்கும் மூல) காரண இலக்குப் பொருளான நீதிப் பெருமானான - சிவபிரானுடைய சந்நிதிகளிலே அறநெறியை ஓதும் பிரபந்தமாகிய சிவநூலாம் "திருநெறித் தமிழ்" எனப்படும் தேவாரத்தைச் (சம்பந்த மூர்த்தியாய்) ஓதின ஒளிவேலனே!*

*காட்டில் குறப்பெண் வள்ளியை விரும்பி அடைந்த, ஞானமொழி பேசும் குமரனே! மேலாம் பொருளே! **காசித்** தலத்தில் பிரபலமாக வீற்றிருக்கும் பெருமாளே!*

*(போதகத்தினை ஏயுமாறருள் புரிவாயே)*

## 656.

**ஒ**ருமாதும் அவள் கணவனும் வாழ்ந்து பொருந்தி காம இச்சை என்னும் சிறுமை தம்மீது அடைய - (அதன் மூலமாய்)ப் பனிபோலச் சுக்கிலம் தோன்றி உள்ளே பரவ, பிரமதேவனது அருள் கூடி -

வண்டு (தடிகை போல) தடித்து வளருவது போல ஆகி, நாள் பல செல்ல, பந்தின் அளவாகிப் (பின்பு) பனம் பழத்தின் (அளவாகி), (பின்னர்) இளநீர் போலவும், குடம் போலவும் நெருங்கி வளர்ந்து, பின்னும் பலபல வளர்ச்சியுடன் - புணர்தல் செய்த அந்த இடத்தின் வழியாக -

மாதம் பத்து ஆகத் தலைகீழாக வந்து பூமியில் (மதலாய் என) மகன் எனப் பேர் பெற்று, மனதுக்கு இனிய குழந்தையாகி - (அனை தாதையும்) அன்னையும் - தாயும், தந்தையும் அன்புமிக்கு, (அல்லது மருள் - ஆசை மயக்கம் மிக்கு)

செம்பொற் றடமுலை பால்குடி நாள்பல
பண்புத் தவழ்நடை போய்வித மாய்பல
சிங்கிப் **பெருவிழி யாரவ மாயதி லழிவேனோ;**
*அங்கைத் தரியென வேயொரு பாலக
னின்பக் கிருபைய தாயொரு தூண்மிசை
அம்பற் கொடுவரி யா† யிரண் யாசுர னுடல்பீறி-
அண்டர்க் கருள்பெரு மான்‡ முதி ராவணி
சங்குத் திகிரிக ரோனரி நாரவ
ரங்கத் திருவணை மேல்துயில் நாரணன் மருகோனே;

கங்கைச் சடைமுடி யோனிட மேவிய
Xதங்கப் பவளொளி பால்மதி போல்முக
கங்குற் றரிகுழ லாள்பர மேசுரி யருள்பாலா-

O கந்துப் பரிமயில் வாகன மீதிரு
கொங்கைக் குறமக ளாசையொ டேமகிழ்
கங்கைப் பதிநதி **காசியில்** மேவிய பெருமாளே.(2)

---

* இரணியன் வதை - வரலாறு பாடல் 327-1. பக்கம் 317 கீழ்க்குறிப்பு

'அங்கைத்து அரி' என்று கூறிய பிரகலாதனது திடத்தை -

"தூணிலும் உளன் முன் சொன்ன சொல்லினும் உளன் இத்தன்மை காணுதி விரைவின் என்றான்"

"யான் முன் சொன்னவன் தொட்ட தொட்ட இடந்தொறும் தோன் றானாயின், என்னுயிர் யானே மாய்ப்பல்" எனவரும் கம்ப ராமாயணத்திற் காண்க. (இரணியவதை - 124, 126)

† 'அசுரன் உடல்பீறி அண்டர்க்கருள் பெருமான் - "தீயெழப் பிளந்து நீக்கித் தேவர்கள் இடுக்கண் தீர்த்தான்" கம்பராமா - இரணி. 153.

‡ முதிர்தல் - ஒழிதல் - நீங்குதல் "கதிரொழி காறும் கடவுட்டன்மை முதிரா தந்நீர்" - சிலப்பதி 30-65-66.

X தேவி - தங்க நிறம், பவள நிறம் - கொண்டவள் என்பது காகினி, செய்யாள், என்னும் திருநாமங்களாற் பெறப்படும்; பால் மதிபோல் முகம் - தேவி - ஹாகினி வெண்ணிறத்தவளாதலின் - பாடல் 179 பக்கம் 416-417 கீழ்க்குறிப்பு-8; பாடல்-223 பக்கம்-62 கீழ்க்குறிப்பு 'செய்யாள் திருமகளாக உள்ளவள் எனலும் ஆம்; டாகினி, லாகினி என்னுந் திருநாமங்களோடு உள்ள அம்பிகையும் ஆம் " (அபிராமி அந்தாதி உரை - பாடல் 21),

O கந்து - குதிரையின் முழுப் பாய்ச்சல்.

செவ்விய பொலிவுள்ள பருத்த கொங்கைப் பாலைக் குடிக்கின்ற நாள்கள் பல செல்லப், பின்பு அழகிய தவழ் நடை நாள்களும் செல்ல, ஒழுங்கான பல (சிங்கி) விஷம் அனைய பெரிய கண்களை உடைய பொதுமகளிரொடு பொழுது போக்கும் பயனற்ற வாழ்க்கையில் அழிந்து போவேனோ!

அங்கைத்து அரி யெனவே (திருமால் கையகத்து உள்ளான் - (உள்ளங்கை நெல்லிக் கனிபோல எளிதிற் புலப்படுவான்) என்று ஒரு (பாலகன்) பிள்ளை - பிரகலாதன் - கூறிட - இன்பக் கிருபையதாய் - (அந்தப் பாலகனுடைய பேச்சுக்குக் குறை வராத வழியில்) இன்ப அன்புடனே ஒரு தூணிலிருந்து அழகிய பற்களைக்கொண்ட (கொடு) பயங்கரமான (அரியாய்) நரசிங்கமாய்த் (தோன்றி) இரணியாசுரனுடைய உடலைக் கிழித்து -

தேவர்களுக்கு உதவி புரிந்த பெருமான், முதிரா அணி (ஒழியாத) தம்மைவிட்டு நீங்காத ஆபரணங்களான (பாஞ்சசன்னியம் என்னும்) சங்கையும், (சுதரிசனம்என்னும்) சக்கரத்தையும், திருக்கரத்திற் கொண்டவன், அரி (ஹரி) நார - (காவிரி - கொள்ளிடம் என்னும் நதியின்) நீரிடையே உள்ள (அரங்கத்து) சீரங்கம் என்னும் தலத்தில் (ஆதிசேடன் என்னும்) சிறந்த - பெரிய அணைமேல் துயில் கொள்ளும் - பள்ளி கொள்ளும் நாராயணமூர்த்தியாகிய திருமாலின் மருகனே!

கங்கையைச் சடையில் தரித்துள்ள சிவபிரானுடைய இடது பாகத்திற் பொருந்தியவளாய்த் தங்கம், பவளம் இவற்றின் ஒளியும் கொண்டவளாய், பால்நிறத்துவெண்மதி போலத் திருமுகம் கொண்டவளாய், இருள் கொண்ட கூந்தலை உடைய பரமேசுரி அருளிய குழந்தையே!

(கந்துப் பரிமயில்) பாயவல்ல குதிரை போன்ற மயில் வாகனத்தின் மேல் இருகொங்கைகளை உடைய குறமகள் - வள்ளியை - ஆசையுடனே மகிழ்கின்ற பெருமாளே! கங்கை நதிக்கரையில் உள்ள (பதி) ஸ்தலமாகிய காசியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(பெருவிழியார் அவமாய் அதில் அழிவேனோ)

## 657. உய்ய.

தான தந்தன தானன தனதான

*வேழ முண்ட விளாகனி யதுபோல-
மேனி கொண்டு வியாபக மயலூறி;

நாளு † மிண்டர்கள் போல்மிக அயர்வாகி-
நானு மைந்து விடாதருள் புரிவாயே;

‡ மாள அன்றம ணீசர்கள் கழுவேற-
வாதில் வென்ற சிகாமணி மயில்வீரா;

காள கண்ட னுமாபதி தருபாலா-
காசி கங்கையில் மேவிய பெருமாளே.(3)

---

* வேழம் உண்ட விளங்கனி:

வேழம் என்னும் நோயால் உண்ணப்பட்ட விளாம்பழம் உள்ளீடில்லாமற் போகும். 'களிறுண்டதோர் விளங்கனிபோல் வறிதா' தஞ்சை வாணன்கோவை 56, சீவக சிந்தாமணியில் 'வேழந் துற்றிய வெள்ளில்" எனவரும் 232 பாட்டில் வேழம் - வெள்ளிலுக்கு (விளாம்பழத்துக்கு) வருவதொரு நோய் - என்றும், 1024-ஆம் பாடலில் - 'வெஞ்சின வேழம் உண்ட வெள்ளிலின் வெறியமாக நெஞ்சமு நிறையு நீல நெடுங்கணாற் கவர்ந்த கள்வி' என்ற இடத்துக் 'கொடிய வேழமென்னும் நோயுண்ட விளாம்பழம் போலே வெறுவி யேமாம்படி நெஞ்சையும் நிறையையும் பிறரறியாமற் கண்ணினாற் கவர்ந்த கள்வி' எனவும், வேழம் - தேரை போயிற் றென்றாற் போல்வதொரு நோயென்க இனி யானை யுண்டது வெறுவிதாம் என்றும் உரைப்ப. எனவும், 1122-ஆம் பாடலில் 'வெஞ்சின வேழமுண்ட விளங்கனி போன்று நீங்கி' என்ற இடத்து 'களிறுண்ட விளங்கனி போன்று வெறுவிதகாக அறிவு முதலியன நீங்கி' எனவும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார்.

வேழம் விளாம்பழத்துக்கு வருகின்ற ஒரு நோய் என்பதே உண்மைப் பொருள் என்பது - 'உலங்குண்ட விளங்கினிபோல் உள்மெலியப் புகுந்து என்னை நலங்கொண்ட நாரணற்கு என் நடலை நோய் செப்புமினே" - எனவரும் நாச்சியார் திருமொழியால் (8-6) நன்கு விளங்குகின்றது. (உலங்கு - கொசுகு)

† 'மிண்டு மனத்தவர் போமின்கள் மெய்யடியார்கள் விரைந்து வம்மின் - திருப்பல்லாண்டு. (‡ - பக்கம் 9- பார்க்க)

# 657.

**வே**ழம் என்னும் நோய் உண்ட விளாம்பழம் போல -

மேனி - (உள்ளீடு அற்ற - உள்ளிருக்கும் சத்து அற்ற) மேனியை அடைந்து எங்கும் காம இச்சை ஊறிப் பரவி -

நாள்தோறும் அறிவின்மையில் திண்மை (வலிமை) கொண்ட (மூடர்கள்) போன்று, மிகுந்த தளர்ச்சி யடைந்து -

நானும் மெலிந்து வாட்டமுறாதபடி அருள் புரிவாயாக!

(அன்று ‡ அமணீசர்கள் கழுவேற மாள) - முன்புசமணக் குருக்கள்மார் கழுவிலேறி மாளும் வண்ணம் -

(வாது செய்து அவ்) வாதில் வென்ற சிகாமணியே! மயில் வீரனே!

(காள கண்டன்) விஷமுண்ட கண்டனாகிய உமை கணவனாம் சிவபிரான் தந்த பிள்ளையே!

கங்கை (நதிக்கரையில் உள்ள) காசித் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(நானு நைந்து விடாதருள் புரிவாயே)

---

‡ அமணீசர்கள் - இவர்கள் சமண குருக்கள்மார். எண்ணாயிரவர். தளம்பு நெஞ்சுடைய எண்ணா யிரஞ்சமண் தலைவராயோர், உளம்பரி வொடுகழுக்கண் யோசனை யகல மேற, வளம்பட வாதுசெய்த வாரணம் என்னு நாமம், விளங்கிய தன்று முன்னா மேதகு தராதலத்தே"- திருவாலவா 49-38

"எண்ணாயிரவர்க்கும் விடாதவெதுப் பிவனால் விடுமென்ப திழித்தகவே

"மண்ணா உடம்பு தங்குருதி மண்ணக் கழுவின் மிசை வைத்தார் எண்ணா யிரவர்க் கெளியரோ நாற்பத் தெண்ணாயிரவரே - தக்கயாகப்பரணி 191, 219

## மாயாபுரி

(இது ஹரித்துவாரம்: - முத்தித் தலங்கள் ஏழனுள் இதுவும் ஒன்று; 'அரித்துவார மாயாபுரியே' - பிங்கலம்)

### 658. நினைந்துய்ய.

தனன தனந்த தானன தனதான

*சிகர † மருந்த ‡ வாழ்வது சிவஞானம்-
சிதறி யலைந்து போவது Xசெயலாசை
O மகர நெருங்க **வீழ்வது மகமாய-
மருவி †† நினைந்தி டாவருள் புரிவாயே;
‡‡ அகர நெருங்கி XX னாமய முறவாகி-
அவச மொடுங் OO கை யாறொடு முனமேகிக்;
ககன மிசைந்த *** சூரியர் புக††† மாயை-
‡‡‡ கருணை பொழிந்து மேவிய பெருமாளே.

---

* சிகரம் - 'சி' என்னும் எழுத்து. சிகரம் - 'சி' காரம் மஹாமநு. சிவாயநம என்பதில் 'சி' காரம் சிவத்தை உணர்த்தும்; மகரம் - ஆணவ மலத்தை உணர்த்தும்; திருப்புகழ் 262 -பக்கம் 152 கீழ்க்குறிப்பு.

† அருந்த - உச்சரிக்க. ‡ வாழ்வது - உண்டாவது.

X செயலாசை - பற்று. Oமகரம் - 'ம' என்னும் எழுத்து.

** வீழ்வது - வந்து சேர்வது.

†† நினைந்திடா அருள் - நினைப்பு மறப்பு அற்ற நிலையருள். 'நினைந்திட' என்பது 'நினைந்திடா' எனச் சந்தம் நோக்கி நீண்டது எனவும் கொள்ளலாம். ‡‡ அகரம் - வீதி,

XX ஆமயம் - நோய். OO கையாறு - செயலறுதல்.

*** சூரியர் -- ஆதித்தர் பன்னிருவர்.

††† மாயை - மாயாபுரி என்னும் ஸ்தலம்.

‡‡‡ இப் பாட்டின் பின் நான்கடிகள் சூரனது அரசாட்சியில் சூரியர்கள் பட்ட துன்பத்தையும் பின்னர் முருகவேளால் அடைந்த சுகத்தையும் விளக்குகின்றன; தனது நகராகிய வீர மகேந்திரபுரி வழியாகச் செல்லும்போது சூரியன் தனது உக்ரத்தை அடக்கி இளங்கதிர் பரப்பிச் செல்லுதல் வேண்டும் என்பது சூரனுடைய ஆக்ஞை (கட்டளை)

"அறத்தினை விடுத்த தீயோன் அருக்கனை நோக்கி நம்மூர்ப்
புறத்தினில் அரண மீதாய்ப் போகுதல் அரிது கீழ்மேல்
நிறுத்திய சிகரியூடு நெறிக்கொடு புக்கு; வான்போய்
எறித்தனை திரிதி நாளும் இளங்கதிர் நடாத்தி என்றான்"

- கந்தபுராணம் 2-17-3.

## மாயாபுரி

## 658.

"**சி**வாயநம" என்னும் பஞ்சாக்ஷரத்தில் உள்ள "சி" என்னும் மஹாமநுவை (அருந்த) உச்சரிப்பதனால் (வாழ்வது) உண்டாவது சிவஞானமாம் -

(அத்தகைய உச்சரிப்பால்) சிதறுண்டு அலைந்து அழிந்து போவது (மனம், வாக்கு, காயம் இவைகளின்) செயலும் ஆசைகளும் - (மோன ஞானம், நிராசை உண்டாகும் என்றபடி).

"ம" என்னும் எழுத்து நெருங்குவதால் வந்து கூடுவதுதான் மகாமாயம் (அல்லது -"ம" என்னும் எழுத்து நெருங்கும் பஞ்சாக்ஷரத்தை உச்சரிப்பதால் வீழ்வது - தொலைந்து போவது மகாமாயை)-

(மருவி) உன்னை மருவி - தியானித்து, அதன் பயனாக, நினைந்திடா அருள் (நினைப்பு மறப்பு அற்ற நிலையை) அருள் புரிவாயாக (அல்லது - மருவி ஐந்தெழுத்தை ஓதி நினைந்திட அருள்புரிவாயே)

(மகேந்திரபுரியின்) வீதிகளில் நெருங்கி வந்தால் நோய்க்கு (வருத்தத்துக்கு) உறவாகி - இடம் பெற்று

(அவசமொடும்) மயக்கத்துடனும் (கையாறொடும்) (தன் செயலற்றும் (முனம்) சூரனது அரசாட்சிக்காலத்தில் ஏகி) சென்று -

ஆகாயத்திற் பொருந்தியிருந்த ஆதித்தர் பன்னிருவரும் அவ்வூரிற் (புக) அஞ்சிப் புக, (அல்லது உன்னிடத்திற் சரண்புக) - (சூரசம்மாரஞ் செய்து அவர்களுக்குக்) (கருணை பொழிந்து மேவிய பெருமாளே) மாயாபுரியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அவர்களுக்கு) கருணை பாலித்து வீற்றிருக்கும் பெருமாளே! - **மாயை** (மாயாபுரியில்) மேவிய பெருமாளே!

(நினைந்திட அருள் புரிவாயே)

## வயிரவிவனம்.

(இது பஞ்சாப் மாகாணத்திற் சரஸ்வதி நதிக்கரையில் இருப்பதாகத் தெரிகின்றது; ஆயினுஞ் சரியான இடம் விளங்கவில்லை.)

## 659. அடியார்களைப் பணிய

தனதன தனத்த தான தனதன தனத்த தான
தனதன தனத்த தான தனதானா

*அருவரை யெடுத்த வீர னெரிபட விரற்க ளூனு
மரனிட மிருக்கு மாயி யருள்வோனே-
† அலைகட லடைத்த ராமன் மிகமன மகிழ்ச்சி கூரு
மணிமயில் நடத்து மாசை மருகோனே;
பருதியி னொளிக்கண் வீறும் அறுமுக நிரைத்த தோள்ப
னிருகர மிகுத்த ‡ பார முருகாநின்-
பதமல ருளத்தி னாளு நினைவுறு கருத்தர் தாள்கள்
பணியவு மெனக்கு ஞானம் அருள்வாயே;
சுருதிக ளுரைத்த வேத னுரைமொழி தனக் குXளாதி
சொலுவென வுரைத்த ஞான குருநாதா-
சுரர்பதி தழைத்து வாழ அமர்சிறை யனைத்து மீள
துணிபட அரக்கர் மாள விடும்வேலா;
மருமலர் மணக்கும் வாச நிறைதரு தருக்கள் சூழும்
வயல்புடை கிடக்கு நீல மலர்வாவி-
வளமுறு தடத்தி னோடு சரஸ்வதி நதிக்கண் வீறு
வயிரவி வனத்தில் மேவு பெருமாளே.

---

*இராவணன் கயிலையை எடுக்க முயன்று நெரிவு உண்டது;
- பாடல் 188-பக்கம் 440 - கீழ்க்குறிப்பு.

† வானரங்கள் மலைகளையும் மரங்களையும் கொண்டுவந்து போட ஸ்ரீராமர் முன்னிலையில் நளன் (விசுவகர்மாவின் பிள்ளை) ஐந்து நாளில் சமுத்திரத்தில் அணையைக் கட்டினான்.

‡ பாரம் - பெருமை - "பாரமாம் மரபினிற் பிறந்தவர்"
- வில்லி பார சம்பவ -39.

X முருகவேள் பிரமனைப் பொருள் வினாவினது
- பாடல் 212- பக்கம் 42-கீழ்க்குறிப்பு.

## வயிரவிவனம்
## 659.

அருமை வாய்ந்த (கயிலை) மலையை அசைத்து எடுக்க முயன்ற வீரனான ராவணன் நெரிபடும்படி (தமது) விரல்களை ஊன்றிய சிவபிரானது இடது பாகத்தில் இருக்கும் ஆயி (தாய் - பார்வதி) பெற்ற குழந்தையே!

அலை வீசுங் கடலை அணையிட்டு அடைத்த ஸ்ரீராமர் மிகவும் மனமகிழ்ச்சி கொள்ளும் ஆசை (மருகனே!); அழகிய மயிலை வாகனமாகக் கொண்டு (ஆசை) (எட்டுத் திக்கிலும்) நடத்தின மருகனே!

சூரியனது ஒளி தம்மிடத்தே விளங்கும் முகங்கள் ஆறு உடையவனே! வரிசையாயுள்ள தோளும், கரமும் பன்னிரண்டு கொண்டவனே! மிக்க பெருமை வாய்ந்த முருகனே! உனது

திருவடி மலரை உள்ளத்தில் நாளும் நினைத்துத் தொழுதிருக்கும் கருத்தை உடைய அடியார்களின் தாள்களைப் பணிந்தொழுகவும் எனக்கு ஞானத்தைத் தந்தருளுக.

வேதங்களைக் கூறும் பிரமன் சொன்ன மொழிகளுள் முதலாவதான சொல்லை (ஓம் என்பதற்குப் பொருளைச்) சொல்லுக என்று தந்தையார் கேட்க, (அங்ஙனமே) பொருள் ஞானகுருநாதனே! (அல்லது) உரைத்த சொல்லுக என்று (பிரமனைக்) கேட்ட ஞான குருநாதனே!

தேவர்களுக்குத் தலைவனான இந்திரன் செழிப்புடன் வாழத் தேவர்கள் சிறையிலிருந்தோர் யாவரும் (அல்லது இருந்த சிறையினின்றும் (தேவர்கள்) யாவரும்) மீளவும், வெட்டுண்டு அசுரர்கள் இறந்தொழியவும் செலுத்தின வேலாயுதனே!

வாசனை மலர்கள் மணம் வீசும் நறுமணம் நிறைந்துள்ள மரங்கள் சூழ்ந்துள்ள வயல்கள் பக்கத்தில் உள்ள நீலோற்பல மலர் மலர்ந்துள்ள நீர்நிலைகளின் -

வளப்பம் வாய்ந்த கரைகளோடு சரஸ்வதி என்னும் ஆற்றினிடத்தே விளங்குகின்ற **வயிரவி வனம்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(ஞானம் அருள்வாயே)

## வெள்ளிகரம்.

(இது அரக்கோணத்துக்கு வடக்கு 22-மைல் தூரத்திலுள்ள **வேப்பகுண்டா** ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து மேற்கு 12-மைல். வழியில் 10-ஆவது மைலிற் பள்ளிப்பட்டு என்னும் ஊரிருக்கின்றது.)

### 660 . மோனம் பெற

*தனதன தனன தனதன தனன*
*தய்ய தனத்த தந்த தனதானா*

அடலரி மகவு விதிவழி யொழுகு
மைவ ருமொய்க்கு ரம்பை யுடனாளும்-
அலைகட லுலகி *லலம்வரு கலக
வைவர் தமக்கு டைந்து தடுமாறி;
இடர்படு மடிமை யுளமுரை யுடலொ
டெல்லை விடப்ர பஞ்ச மயல்தீர-
எனதற நினது கழல்பெற † மவுன
**வெல்லை குறிப்ப தொன்று புகல்வாயே;**
வடமணி முலையு மழகிய முகமும்
வள்ளை யெனத்த யங்கு மிருகாதும்-
மரகத வடிவு ‡ மடலிடை யெழுதி
வள்ளி புனத்தில் நின்ற மயில்வீரா;
Xவிடதர திகுண ரசசிதர் நிமலர்
வெள்ளி மலைச்சி யம்பு குருநாதா-
விகசித O கமல பரிபுர முளரி
**வெள்ளி** கரத்த மர்ந்த பெருமாளே. (1)

---

* அலம் - சஞ்சலம் - துன்பம்; 'தக்கதென் கொல் என்றென்று **அலம்** தலையுற்ற அரும்புலன்கள் ஐந்தும்' - கம்பராமா - கைகேசி சூழ் - 13.

† மவுன எல்லை - ஞானநிலை - 'மோனம் என்பது ஞான வரம்பு" (கொன்றைவேந்தன்) என்றாராதலின்

‡ மடல் எழுதுதல் பாடல் 235-பக்கம் 87 கீழ்க்குறிப்பு; பாடல் 289 -பக்கம் 220; பாடல் 668 - பக்கம் 32 கீழ்க்குறிப்பு.

Xவிடத்தைத் தரித்த - தீ குண - ஞானத்தையே குணமாகக் கொண்ட - ரச சிதர் - சுவைகளை (ஜிதர் ஜெயித்தவர்)- அல்லது -விஷ -த விஷத்தைத் தருகின்ற ரதிகுண ரசஜிதர் - காம இச்சையாகிய சுவையை ஜெயித்தவர் - எனவும் பொருள் காண்பர்.

O கமலம் - தாமரை; நீர் - (திவாகரம்) - "முடிக்கமலம் சூடினோன்" - கமலம் - கங்கைநீர் - சிதம்பரம் மும்மணிக்கோவை 18

# வெள்ளிகரம்

## 660.

**வ**லிமை வாய்ந்த (அரி) திருமாலின் (மகவு) பிள்ளையான பிரமா எழுதிவிட்ட விதியின் வழியே செல்லுகின்ற ஐவரும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐவகை உணர்ச்சிகளும் நெருங்கி வேலைசெய்யும் (குரம்பையுடன் குடிலாகிய இவ்வுடலுடன் நாள்தோறும் -

அலைவீசும் கடல் சூழ்ந்த இவ்வுலகில் (அலம் வரு) துன்பம் உண்டாகின்ற கலகங்களைச் செய்யும் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் - பஞ்சேந்திரியங்களால் மனம் உடைபட்டுத் தடுமாற்றம் அடைந்து -

வருத்தங்களுக்கு ஆளாகின்ற அடிமையாகிய நான் மனம் வாக்கு, காயம் - இவை மூன்றும் (எல்லைவிட ப்ரபஞ்ச மயல் தீர) ப்ரபஞ்ச எல்லைவிட - உலகத்தில் (ஈடுபடுதல்) முடிவு பெற்றொழிய, (பிரபஞ்ச) மயல் தீர - மயக்கம் ஒழிய -

எனதற - எனது எனப்படும் பாசம் (மமகாரம்) நீங்க, உன்னுடைய திருவடியை அடைய, மோன வரம்பைக் குறிப்பதாகிய ஓர் உபதேசத்தை அருள்புரிவாயாக;

(வள்ளியின்) மணிவடம் அணிந்த கொங்கையும், அழகுள்ள திருமுகமும், வள்ளைக்கொடிபோல விளங்குகின்ற இரண்டு காதுகளும்

மரகத நிறமும், இவையெலாம் விளங்க, மடல் (படத்தில்) எழுதி, வள்ளியினுடைய தினைப்புனத்தில் நின்ற மயில்வீரனே!

விடதர் (விஷத்தைக் கண்டத்தில்) தரித்தவர், (அதி குணர்) மேம்பட்ட சிறந்த குணத்தைக் கொண்டவர், - அ சசிதர்) அந்த சசித(ர)ர் - அந்த சந்திரனைச் சடையில் தரித்தவர் (அல்லது அதிகுண ரச சி(த்)தர் - மேலான குண இனிமையைக் கொண்ட சித்தமூர்த்தி), பரிசுத்தர் (வெள்ளிமலை - கயிலை மலையில் வீற்றிருக்கும் சுயம்பு மூர்த்தியாகிய சிவபிரானுக்குக் குருநாதனே!

(விகசிதம்) மலர்ந்த தாமரை சிலம்பணிந்த (முளரி) தாமரை - போன்ற திருவடியை உடைய பெருமாளே! (அல்லது கமல விகசித முளரி - நீரில் மலர்கின்ற தாமரை, சிலம்பணிந்த தாமரை, ஆகிய திருவடியை உடைய பெருமாளே)! **வெள்ளிகரம்** என்னும் தலத்தில் அமர்ந்த பெருமாளே!

(மவுன எல்லை குறிப்பதொன்று புகல்வாயே)

# 661. திருவடியைப் பெற

தனதன தனன தனதன தனன
தய்ய தனத்த தந்த தனதான

சிகரிக ளிடிய நடநவில் *கலவி
செவ்வி மலர்க்க டம்பு சிறுவாள்வேல்-

திருமுக சமுக சததள முளரி
திவ்ய கரத்தி ணங்கு பொருசேவல்;

அகிலடி பறிய எறிதிரை யருவி
ஐவன வெற்பில் † வஞ்சி கணவாஎன்-

றகிலமு முணர மொழிதரு மொழியி
னல்லது பொற் பதங்கள் பெறலாமோ;

நிகரிட அரிய ‡ சிவசுத பரம
X நிர்வச னப்ர சங்க குருநாதா-

---

* கலவி - கலாபி: மயில். "வாசி அடியிட எண் திசைவரை தூள்பட்ட" - கந்தரலங்காரம் 11.

† 'வஞ்சி கணவா என்று மொழியின் அல்லது பொற்பதங்கள் பெறலாமோ' என்றது - "எந்தை ஈசன் எம்பெருமான் ஏறமர் கடவுள் என்றேத்திச் சிந்தை செய்பவர்க் கல்லால் சென்று கை கூடுவதன்றால் அரத்துறை அடிகள் தம் அருளே" என்னும் சம்பந்தப் பெருமான் திருவாக்கை நினைவூட்டுகின்றது.

இந்த 661-ஆம் பாடல் மனப்பாடஞ் செய்யவேண்டிய பாடல்களுள் ஒன்று.

‡ 'அதிவித மதுர' என்றும் பாடம்.

X 'நிர்வசன ப்ரசங்கம்' - "சும்மா இரு -- சொல்லற" என்னும் கருத்தது. 'அரனார் முன் - வாசகம் பிறவாதோர் ஞான சுகோதயம் புகல்வாசா தேசிக' என்றார் பிறிதோரிடத்து (திருப்புகழ் 705)

# 661.

அஷ்டகிரிகளும் பொடிபட நடனம் செய்கின்ற மயில், செவ்விதான (அன்றலர்ந்த -புதிய) கடப்பமலர், சிறுவாள், வேல்,

திருமுகக் கூட்டமாம் (நூற்றிதழ்த்) தாமரை - (தாமரை போன்ற ஆறு திருமுகங்களின் தோற்றம்) - திவ்யமான திருக்கையிற் பொருந்திய போர் செயவல்ல கோழி (இவைகளைக் கொண்ட.... கணவா!) (சேவல் - பொரு.... கணவா - கோழி - இவையெலாம் பொருந்திய (வள்ளி) கணவனே! எனலுமாம்.

அகில் மரத்தின் அடியைப் பறித்து எறியும் திரைவீசும் அருவிகள் பாய்கின்ற (ஐவன வெற்பில்) மலை நெல் விளையும் வள்ளி மலையில் வாழ்வுற்ற வஞ்சிக்கொடி போன்ற வள்ளியின் கணவனே! என்று

உலகெலாம் உணரச் சொல்லும் சொற்களால் அல்லது உனது அழகிய திருவடிகளைப் பெற முடியுமோ! (பெற முடியாது என்றபடி).

ஒப்பிடுதற்கு அருமையான சிவத்தின் சேயே! பரமனே! (அல்லது மேலான - அல்லது பரமனிடத்தில்) வாக்குக்கு எட்டாததான (அல்லது வசனம் இல்லாத தான - மௌனப்) பிரசங்கத்தைச் செய்த குருநாதனே!

நிரைதிகழ் பொதுவர் நெறிபடு பழைய
*நெல்லி மரத்த மர்ந்த அபிராம;
†வெகுமுக ககன நதிமதி யிதழி
வில்வ முடித்த நம்பர் பெருவாழ்வே-
விகசித கமல பரிமள கமல
வெள்ளி கரத்த மர்ந்த பெருமாளே. (2)

## 662. திருவடியைப் பெற

தனதன தய்ய தனதன தய்ய
தனதன தய்ய தனதான

குவலய மல்கு ‡ தவலிகள் முல்லை
குளிர்நகை சொல்லு முதுபாகு
குழையிள வள்ளை யிடைசிறு வல்லி
Xகுயமுலை கொள்ளை O விழைமேவிக்;

---

* இங்குக் குறிப்பிட்ட நெல்லிமரம் எங்குள்ளது என்பது விளங்க இல்லை ஆயினும் திரு ஏரக மான்மியத்தில் உள்ள பின்வரும் வரலாற்றால் சுவாமி மலையில் உள்ள நெல்லிமரம் என ஒருவாறு கொள்ளலாம்: "சிவபெருமானும் தேவியும் ஒன்றியிருந்தபோது - தேவர்கள் தாரகன் என்னும் அசுரனைக் கொல்ல வேண்டுமென்று பிரார்த்தித்தனர். சிவபிரான் தேவியை விட்டு, நீங்கித் தமது ரேதசைப் பூமி தேவியிடம் விட்டனர். "எங்கள் கிரீடைக்கு விக்கினம் பண்ணியதால் - தேவர்களே! நீங்கள் புத்திர ஹீனர்-களாகப் போகக்கடவது; பூமிதேவியே! நீ பலருடைய அனுபோகத்துக்கு உரியவளாகக் கடவது" எனப் பார்வதி சாபம் இட்டனள். பூமிதேவி ஷண்முகரைப் பிரார்த்தித்து இந்தச் சாபம் நீங்கப் பெற்று, அவரை விட்டுப் பிரிய மனமில்லாமல் அவருடைய பக்கத்திலே நெல்லி விருக்ஷவடிவமாய் நின்று சதா அவரைச் சேவித்து வந்தாள். குகமூர்த்தி சுவாமிமலைக்கு எழுந்தருளி வந்தபோது பூமிதேவி கூடவே வந்து அந்த க்ஷேத்திரத்தில் நெல்லி விருக்ஷமாய்ச் சுவாமி சந்நிதிக்குத் தென்பால் நின்றுகொண்டு நித்தியம் குக மூர்த்தியைச் சேவித்து வருகின்றாள்" - என்பது திருவேரக மான்மியம்.

இனி 'நெல்லி விருக்ஷம்' - திரு ஆவினன்குடி - பழநியிலும் உள்ளது 'திரு ஆவினன்குடிக் கோயிலின் வட கிழக்கில் சரவணப் பொய்கை அமைந்துளது; காவடி எடுப்போர் இத் தலத்தினின்றுமே தம் பிரார்த்தனைகளைக் கொண்டு செல்வர். இத்தல விருக்ஷம் "நெல்லி" யாகும். - பழநித்தல வரலாறு - பக்கம் 38.

(தொடர்ச்சி - பக்கம் 19 பார்க்க)

பசுக்கூட்டங்களை விளங்கக் கொண்ட (பொதுவர்) இடையர்கள் செல்லும் வழியில் உள்ள பழைய நெல்லி மரத்தின் கீழ் அமர்ந்த அழகனே!

ஆயிரமுகமாக ஓடும் ஆகாய கங்கையையும், நிலவையும், கொன்றையையும், வில்வத்தையும் சிரசிற் சூடியுள்ள (நம்பர்) பெருமானுடைய பெருஞ் செல்வமே!

மலர்ந்த தாமரையொத்த திருவடியை உடைய பெருமாளே! நறுமணமுள்ள தாமரையை ஒத்த திருவடியை உடைய பெருமாளே! **வெள்ளிகரத்தமர்ந்த** பெருமாளே! (அல்லது மலர்ந்த தாமரைகளும் நறுமணத் தாமரைகளும் உள்ள **வெள்ளிகரத்தில்** அமர்ந்த பெருமாளே எனலுமாம்.)

(பொற்பதங்கள் பெறலாமோ)

# 662.

**உ**லகில் நிறைந்த குறைபாடுள்ளவர்களாம் (பொது மகளிரின்) (குளிர்நகை முல்லை) குளிர்ந்தபற்கள், முல்லைமலர் போன்றவை; பேசும் சொல் முற்றின வெல்லம் போன்றது-

காது இளங்கொடி வள்ளைக்கொடி, இடை ஒரு சிறிய கொடி, (குயமுலை) இளமுலை - (அல்லது குயம் எனப்படும் கொங்கை) கொள்ளை - நிரம்பியுள்ளது - என்று எல்லாம் கூறி விருப்பம் மிக்கு அடைந்து -

---

*(18 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)*

பின்னும் - திருவாரூருக்குத் தெற்கே 8 மைல் தூரத்தில் உள்ள திரு நெல்லிக்கா என்னும் தேவாரம் பெற்ற தலத்திலும் "நெல்லிமரம்" ஸ்தல விருக்ஷம். அது கோயிலில் இருக்கின்றது.

† "இதழி வெகுமுக ககன நதி. உடுபதி சேர் ஜடாமவுலி" சீர்பாத வகுப்பு.

'வெகுமுக ககன நதி' - கங்கை ககனத்தில் நின்று இழிந்தது; கங்கைக்குச் "சுவர்க்கத்தில் மந்தாகினி", பூமியில் 'கங்கை' பாதளத்தில் 'போகவதி' எனப் பெயர் - (அபிதான சிந்தாமணி)

**கங்கை சூடிய வரலாறு** - பாடல் 446 பக்கம் 622 - கீழ்க்குறிப்பு.

‡ தவலிகள் - குறைவானவர்கள். தவல் - குற்றம், குறைவு.

X குயம் - இளமை (திவாகரம்); கொங்கை.

O விழைமேவி - விழைந்து மேவி; விழைதல்மேவி.

கவலைசெய் வல்ல தவலரு முள்ள
*கலவியில் தெள்ளு கவிமாலை-
கடிமல ரைய அணிவன செய்ய
கழலிணை பைய அருள்வாயே;
† தவநெறி யுள்ளு சிவமுனி துள்ளு
தனியுழை புள்ளி யுடனாடித்-
தருபுன வள்ளி மலைமற ‡வள்ளி
தருதினை மெள்ள நுகர்வோனே;
அவநெறி சொல்லு மவரவை கொல்லு
மழகிய Xவெள்ளி நகர்வாழ்வே-
Oஅடையலர் செல்வ மளறிடை செல்ல
அமர்செய வல்ல பெருமாளே.(3)

## 663. திருநாமம் கூற

தனதன தய்ய தனதன தய்ய
தனதன தய்ய தனதான

பொருவன கள்ள இருகயல் வள்ளை
புரிகுழை தள்ளி விளையாடும்-
புளகித வல்லி யிளகித வல்லி
புரியிள முல்லை நகைமீதே;

---

* கலவியில் - கலவியிலும்; உம் விகாரத்தால் தொக்கது.

† வள்ளி பிறப்பு வரலாறு. பாடல் 382-பக்கம் 464 - கீழ்க்குறிப்பு.

‡ வள்ளி தினைமா தர, கிழவர் (முருகவேள்) அதை உண்டனர் "பசிநோய் என்னத் தேனொடு கனியும் மாவும் செங்கையிற் கொடுப்பக் கொண்டு" - கந்த புரா - 6-24-100.

'தெள்ளித் தினைமாவும் தேனும் பரிந்தளித்த வள்ளிக்கொடி' - கந்தர் கலி வெண்பா

X வெள்ளிநகர் என்பது வெள்ளிகரம்.

O சூரசம்மாரம் ஆனவுடன் முருகவேளின் கட்டளைப்படி சூரனுடைய ஊர் (மகேந்திர நகரம்) கடல் நீரால் உண்ணப்பட்டது: "கருணையங் கடலாகியோன் வருணன் மா முகம் நோக்கியே....மகேந்திர நகரினை.... உண்குதி ஒல்லையில் தடிந்தென்றான்" "சலபதி.. இசைவுற்று துன்று பல்லுயிர் தம்மொடு மகேந்திரத் தொல்லூரை.... புணரியுள் அழுத்தினன்".

- கந்த புராணம். 4-16-15,16

கவலை தரவல்ல அந்தக் குறைபாடுள்ளவர்களுடன் உள்ளதான (நான் செய்யும்) கலவியிலும் - கலவிப் பொழுதிலும், தெளிந்த பாடல் மாலைகளையும் -

நறுமணமுள்ள மலர் மாலைகளையும் (ஐய) அழகுபெற (அணிவன செய்ய) அணிதல் செய்ய - அணிய (உனது) (சிவந்த) திருவடி யிணைகளை மெல்ல எனக்கு அருள் புரிவாயாக.

தவநெறியை மேற்பூண்டு தியானித்து இருந்த சிவமுநிவர் துள்ளிச்சென்ற ஒப்பரிய புள்ளிமானுடன் கலவி பூண்டு -

பெறப்பட்டவளான தினைப்புன வள்ளி, அந்த மலையில் இருந்த வேட்டுவக் குலத்து வள்ளி - (அல்லது பெறப் பட்டவளான வள்ளிமலையில் வாசஞ்செய்த வேட்டுவச்சி வள்ளி) கொடுத்த தினைமாவை மெதுவாக உண்டவனே!

பயனற்ற மார்க்கத்தைச் (சொல்லுமவர்) சொல்லி வந்த சமணரின் (அவை) கூட்டத்தைக் (கழுவில்) மாய்த்த செல்வனே! அழகிய **வெள்ளிகரம்** என்னும் நகரத்தில் வாழும் செல்வனே!

பகைவர்களுடைய (சூராதிகளுடைய) செல்வம் பொருள் எல்லாம் (அன்று) (கடல்) நீரில்மூழ்கி அழியும்படி போர் செயவல்ல பெருமாளே!

(கழலிணை பைய அருள்வாயே)

## 663.

**போர்** செய வல்லனவும் கள்ளத்தனம் உள்ளனவுமான இரண்டு கயல்மீன் போன்ற கண்களானவை வள்ளைக்கொடி போன்ற காதுகளை (அல்லது காதில் உள்ள குழையணி-களைத்) தாக்கித் தள்ளி விளையாடுகின்ற -

புளகாங்கிதம் கொண்ட கொடிபோல நெகிழ்ந்துள இளம்பெண்கள் (புரியிள) புன்னகை புரியும்போது தெரியும் முல்லை யரும்புபோன்ற பற்களின்மீது - பற்களைக் கண்டு -

*உருகிட வுள்ள விரகுடை யுள்ள
முலகுயி ருள்ள பொழுதேநின்-
றுமைதரு செல்வ னெனமிகு கல்வி
யுணர்வொடு சொல்ல வுணராதோ;
மருவலர் வள்ளி புரமுள வள்ளி
மலைமற வள்ளி மணவாளா-
† வளர்புவி யெல்லை யளவிடு தொல்லை
மரகத நல்ல மயில்வீரா;
அருவரை விள்ள அயில்விடு மள்ள
அணிவயல் வெள்ளி நகர்வாழ்வே-
அடையலர் செல்வ மளறிடை செல்ல
அமர்செய வல்ல பெருமாளே.(4)

## 664. திருவடியைப் பெற

தய்ய தய்ய தய்ய தய்ய
தய்ய தய்ய தனதான

கள்ள முள்ள வல்ல வல்லி
யையி லள்ளி பொருளீயக்-
‡கல்லு நெல்லு வெள்ளி தெள்ளு
கல்வி செல்வர் கிளைமாய;
அள்ளல் துள்ளி ஐவர் செல்லு
மல்லல் சொல்ல முடியாதே-

---

* பெண்களைக்கண்டு உருகும் உள்ளம் "உமை செல்வன்" எனச் சொல்ல உணராதா - என்கின்றார் இது "தத்தையங்கனையார் தங்கள்மேல் வைத்த தயாவை நூறாயிரங் கூறிட்டு, அத்தில் அங்கு ஒரு கூறு உன்கண் வைத்தவருக்கு அமருலகு அளிக்கும் நின் பெருமை" - என்னும் திருவிசைப்பாவை நினைவூட்டும்.

† சூரசம்மாரம் ஆனவுடன் (சூர) மயில் மீதேறிப் பார்முற்றும் முருகவேள் அம் மயிலை நடத்தினன் -

"சூர்திகழ் மஞ்ஞை யேறிச் சுமக்குதி எம்மை என்னாப்
பார்திசை வானம் முற்றும் பரியென நடாத்த லுற்றான்."
- கந்தபுரா - 4-13-499

‡ கல்லு - நவமணிகள்.

(உருகிட உள்ளதான) உருகத்தக்க, விரகு உடை உள்ளம் - உற்சாகத்தை உடைய (என்) உள்ளம் - இவ்வுலகில் - என் உயிர் இருக்கும் பொழுதே - நின்று - ஒரு வழியாக நிலைத்து நின்று

"உமை பெற்ற செல்வனே"- என்று மிகுந்த கல்வி உணர்ச்சியோடு சொல்லுதற்குத் தெரிந்து கொள்ளாதோ!

வாசனை மலர்கள் உள்ள 'வள்ளிபுரம்' உள்ள - வள்ளிமலை யென்னும் ஊரில் உள்ள 'வள்ளிமலை'யில் வாழ்ந்த வேட்டுவச்சி வள்ளியின் மணவாளனே!

வளர்ந்த - பெரிதாயுள்ள பூமியின் முழு எல்லையையும் அளவிட்ட பழைய - பச்சை நிறமுள்ள - நல்ல மயில் வீரனே!

அரிய கிரவுஞ்சமலை உடைபட வேலாயுதத்தைச செலுத்தின போர் வீரனே! அழகிய வயல் சூழ்ந்த **வெள்ளி நகரில்** வாழும் செல்வனே!

(சூராதிபராம்) பகைவர்களின் செல்வப் பொருள்களெல்லாம் (கடல்) நீரிற் படிந்தழியப் போர் செயவல்ல பெருமாளே!

("உமைதரு செல்வன்" எனச் சொல்ல உணராதோ)

## 664.

கள்ளத்தனம் உள்ள சாமர்த்தியம் உள்ள (வல்லி) ஒரு பெண்ணின் (பொது மகளின்) கையிலே நான் அள்ளி (என்) பொருள்களை அள்ளிக் கொடுப்பதாலே -

(எனக்கு ஆஸ்தியாயிருந்த) நவரத்னக் கற்களும், நெற்குவியல்களும், வெள்ளிப் பொருள்களும், தெளிந்த கல்விச் செல்வமும், செல்வமுள்ள சுற்றமும் (மாய) - எல்லாம் அழிந்து ஒழிய - எல்லாம் விலக -

(மாயைச்) சேற்றிலே குதித்து, ஐவர் (மெய் - வாய் - கண் - மூக்கு - செவி) என்னும் ஐம்பொறிகளும் செலுத்துகின்ற துன்பம் (ஐவரால்வரும் சஞ்சலம்) சொல்ல முடியாது;

*ஐய ரைய மெய்யர் மெய்ய
ஐய செய்ய **கழல்தாராய்;**
வள்ளல் புள்ளி நவ்வி நல்கு
வள்ளி கிள்ளை மொழியாலே-
மைய லெய்து மைய செய்யில்
வையில் வெள்வ ளைகளேற;
மெள்ள மள்ளர் கொய்யு நெல்லின்
† வெள்ள **வெள்ளி நகர்வாழ்வே-**
‡ வெய்ய சைய வில்லி சொல்லை
வெல்ல வல்ல பெருமாளே.(5)

## 665. நினைந்துய்ய.

தய்ய தய்ய தய்ய தய்ய
தய்ய தய்ய தனதான
Xதொய்யில் செய்யில் Oநொய்யர் கையர்
தொய்யு மைய இடையாலுந்-

---

*ஐயர் ஐய - முனிவர்க்கு முனிவனே.

† வெள்ளம் - மிகுதி

‡ வெய்ய - விரும்பத்தக்க - "வெய்ய நெய்அவி" - தக்கயாகப்பரணி 506 "நாதர் கற்க ஓரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே" - எனவருவதைக் காண்க - பாட்டு 327; இறையனாரகப் பொருளுக்குச் சங்கப் புலவர்கள் செய்த பொருள்களில் இன்னது தான் உண்மைப் பொருள் என விளக்கித் தம் மேன்மையை நாட்டின பெருமாள் எனலுமாம் (பாட்டு 350-பக்கம் 378- கீழ்க்குறிப்பு; பின்னும், பிரமனைச் சிறையினின்றும் விட்டு விடும்படி சிவபிரான் சொல்லச் சொன்னார் என்று நந்தி தம்மிடம் வந்து சொன்னபோதும், இறைவனே வந்து நேரிற் கூறியபோதும் சிறையினின்றும் விட முடியாது என்று அவர் சொல்லையும் முதலிற் கடந்து சொன்ன தீரத்தையும் இது உணர்த்தலாம்.

(i) நந்தி வந்து கூறினபோது முருகவேள் கூறினது:
"அன்ன வூர்தி அருஞ்சிறை நீக்கலன்
நின்னையுஞ் சிறை வீட்டுவன் நிற்றியேல்
உன்னி ஏகுதி ஒல்லையில்" கந்தபுரா I-17-13

(ii) சிவபிரான் நேரிற் கூறியபோது முருகவேள் கூறினது:
"நின்னை வந்தனை செய்யினும் நித்தலும்
தன்னகந்தை தவிர்கிலன் ஆதலால்
அன்ன வன்தன் அருஞ்சிறை நீக்கலன்" - கந்த புரா I-17-28

(தொடர்ச்சி பக்கம் -25 பார்க்க)

முநிவர்க்கு முநிவனே! மெய்யர்க்கு மெய்யனே! அழகிய சிவந்த உனது திருவடியைத் தந்தருளுக;

வள்ளலே! (அல்லது வள்ளல் தன்மை வண்மைக் குணம் வாய்ந்த) புள்ளி (நவ்வி) மான் (லக்ஷ்மி) ஈன்ற வள்ளிக் கிளியின் மொழிகளைக் கேட்டு

மோகம் கொண்ட ஐயனே! வயல்களில் (வையில்) புல்லில் - வெள்ளைச் சங்குகள் ஏற-

மெதுவாக உழவர்கள் பறித்தெடுக்கும் நெல்லின் மிகுதி (பெருக்கு) உள்ள **வெள்ளி** நகரில் வீற்றிருக்கும் செல்வனே!

விரும்புதற்குரிய மலை வில்லி (மேருமலையை வில்லாக வளைத்த சிவபிரானுடைய சொல்லை (பிரணவமொழியின் பொருளை அவருக்கு குருவாயிருந்து) வெற்றியுடன் மொழியவல்ல பெருமாளே!

(செய்ய கழல் தாராய்)

## 665.

(**கொ**ங்கைமேல்) பத்திக்கீற்றை (எழுதுதல்) செய்தால் எழுதினால் நெகிழ்ந்து தளர்பவர்கள், கீழ் மக்கள் - ஆகிய பொது மகளிருடைய, தொய்யும்- இளைத்து உள்ள, (ஐய)-நுண்ணிய இடையாலும்-

---

(24 -ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

ˈசையவில்லி- மலையாகிய வில்லை உடையவர்.

X தொய்யில் ...பத்திக்கீற்று மகளிர் கொங்கையில் சந்தனக் குழம்பால் எழுதும் கோலம் (பிங்கலம்);

'தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை'... மதுரைக் காஞ்சி 416. கரும்பையும் வல்லியையும் தோளில் எழுதித் தொய்யிலை முலைமேல் எழுதுவது.

"கரும்பும் வல்லியும் பெருந்தோள் எழுதி" -சிலப்பதி-2-29
'திருமுலைத் தடத்திடைத் தொய்யில்'..2 69

O நொய்யர்...தளருந் தன்மை யுடையோர்.

துள்ளி வள்ளை தள்ளி யுள்ளல்
சொல்லு கள்ள விழியாலும்

மைய செவ்வி மவ்வல் முல்லை
மல்கு நல்ல குழலாலும்-

மையல் கொள்ள எள்ளல் செய்யும்
வல்லி சொல்லை மகிழ்வேனோ;

செய்ய துய்ய புள்ளி நவ்வி
செல்வி கல்வ ரையிலேனல்-

*தெய்வ வள்ளி மையல் கொள்ளு
செல்வ பிள்ளை முருகோனே;

† மெய்யர் மெய்ய பொய்யர் பொய்ய
‡ வெள்ளை வெள்ளி நகர்வாழ்வே-

வெய்ய சைய வில்லி சொல்லை
வெல்ல வல்ல பெருமாளே.(6)

---

* வள்ளி உன்மீது மையல் கொண்டாள், வள்ளிமீது நீ மையல் கொண்டாய் என இரண்டு வழியாகவும் பொருள் கொள்ள அமைந்துள அழகு வியக்கற்பாலது. 'தொழுகணவற் கணிமண மாலிகை சூட்டி அரசளித்த பெண்ணரசி" என்னும் திருவிளையாடல் -தேவி துதி போல.

† "மெய்யானைத் தன்பக்கல் விரும்புவார்க்கு
விரும்பாத வரும்பாவி யவர்கட் கென்றும் பொய்யானை"
"மெய்யானைப் பொய்யரொடு விரவாதானை"
-அப்பர் vi-66-5; 46-8;

‡ வெள்ளை... வேங்கைமரம்; கள்ளமில்லாத மனத்தவன் நிஷ்களங்க சிந்தை யுள்ளவன் "வெள்ளைக் கில்லை கள்ளச் சிந்தை" (கொன்றவேந்தன்); 'கள்ளமே செய்கிலார்...சம்பந்தர் ... 3-26-6; வெள்ளை வெள்ளி நகர்... வெண்மணி மாடங்கள் நிரம்பினதால் 'வெள்ளை வெள்ளி நகர்" எனலுமாம்; பாடல் 666 பார்க்க.

எழுந்து பாய்ந்து, வள்ளைக்கொடி போன்ற காதைத் தள்ளி-காது வரைக்கும் பாய்ந்து தள்ளி, (உள்ளல்) மனத்தில் நினைத்துள்ள எண்ணத்தைச் (சொல்லும்) வெளிப்படுத்தும் திருட்டு விழியாலும்-

(மைய) கருநிறம் உடையதும், செம்மை வாய்ந்த (மௌவல்) காட்டு மல்லிகை, முல்லை நிறைந்துள்ளதுமான நல்ல கூந்தலாலும்

காம இச்சைகொள்ள (என்னை) எள்ளல் செய்யும்- இகழ்கின்ற (வல்லி) பெண்களின் பேச்சுக்கு மகிழ்ச்சி கொள்வேனோ! - கொள்ளலாகாது என்றபடி

செந்நிறத்தவனே! துய்யனே! (அல்லது) செவ்விய, பரிசுத்தமான, புள்ளிமான் (லக்ஷ்மியின்) (செல்வி) குமாரி, (கல்வரையில்) கல் நிறைந்த வள்ளி மலையில் தினைப் புனத்தில் இருந்த-

தெய்வ வள்ளிமேல் மோகம் கொண்ட (அல்லது தெய்வ வள்ளி மோகங்கொண்ட) செல்வ பிள்ளையான முருகனே!

மெய்யர்க்கு மெய்யனே! பொய்யர்க்குப் பொய்யனே! (வெள்ளை) கள்ளம் இல்லாதவனே (அல்லது, வேங்கை! மரங்கள் உள்ள) **வெள்ளி நகரில்** வாழும் செல்வனே!

விரும்பத்தக்க மலை வில்லி (சிவபிரானது) சொல்லை -பிரணவ மொழியின் பொருளை- (அல்லது இறையனார் அகப்பொருளின் பொருளை) இன்னதென விளக்கி வெற்றியைக் காட்டின (அல்லது - சிவபிரான் சொல்லைக் கடந்து பிரமனைச் சிறையினின்றும் விடேன் என்று தன் தீரத்தைக் காட்டின) பெருமாளே!

(வல்லி சொல்லை மகிழ்வேனோ)

## 666. ?

தய்யதன தான தய்ய தன தான
தய்யதன தான தனதான

*இல்லையென நாணி யுள்ளதின் மறாம
லெள்ளினள வேனும் பகிராரை-
† எவ்வமென நாடி யுய்வகையி லேனை
யெவ்வகையு நாமங் கவியாகச்;
சொல்லவறி யேனை யெல்லைதெரி யாத
தொல்லைமுத லேதென் றுணரேனைத்-
தொய்யுமுடல் பேணு பொய்யனை விடாது
துய்யகழ லாளுந் திறமேதோ;
‡ வல்லசுரர் மாள நல்லசுரர் வாழ
Xமையவரை பாகம் படமோது-
Oமையுலவு சோலை செய்யகுளிர் சாரல்
வள்ளிமலை வாழுங் கொடிகோவே;
வெல்லுமயி லேறு வல்லகும ரேச
வெள்ளிலுட னீபம் புனைவோனே-
**வெள்ளிமணி மாட மல்குதிரு வீதி
வெள்ளிநகர் மேவும் பெருமாளே (7)

---

* 666-ஆம் பாடல் மனப்பாடஞ் செய்யத் தக்கதொரு பாடல். "இலனென்னும் எவ்வம் உரையாமை. குலனுடையான் கண்ணே உள." 'சாதலின் இன்னாத தில்லை யினிததூஉம் ஈதல் இயையாக்கடை' திருக்குறள் 223,230.

" இறப்பச் சிறிதென்னா தில்லென்னா தென்றும்
அறப்பயன் யார்மாட்டுஞ் செய்க"
"இம்மி யரிசித் துணையானும் வைகலும்
நும்மில் இயைவ கொடுத்துண்மின்"
" இல்லா இடத்தும் இயைந்த அளவினால்
உள்ள இடம்போற் பெரிதுவந்து-மெல்லக்
கொடையொடு பட்ட குணனுடை மாந்தர்க்
கடையாவா மாண்டைக் கதவு" எனவரும் நாலடியார்ச்
செய்யுள்கள் ஈண்டு ஒப்பிடற் பாலன.

† எவ்வம்...வெறுப்பு... (சிந்தாமணி உரை 874); துன்பம்.

‡ இந்த அடி 313 -ஆம் பாடலிலும் வருகின்றது

X மை -குற்றம்

Oமை-இருள் "மைதழைத்தெழு சோலை ..... சம்பந்தர் 2-4-10.

**வெள்ளி... வெண்மை. 'வெள்ளி நோன்படை'-புறநா-41-10.

## 666.

இல்லை என்று சொல்வதற்கே வெட்கப்பட்டு, உள்ள பொருளளவுக்கு மறுக்காமல், *ஒரு எள்ளின் அளவாவது பகிர்ந்து கொடுக்காதவர்களை-

வெறுக்கத் தக்கவர்கள் என ஆய்ந்தறிந்து பிழைக்கும் வகையில்லாத என்னை, (அல்லது -கொடுக்காதவர்களிடம் என் துன்பத்தை எடுத்துக்கூற நாடிச்சென்று -பிழைக்கும் வகை தெரியாத என்னை) எந்த முறையினும் உன்னுடைய திருநாமங்களைப் பாடலாக அமைத்துச்-

சொல்லத் தெரியாத என்னை- முடிவெல்லை காண முடியாத பழைய மூலப்பொருள் இன்னது என்று உணராத என்னை-

(தொய்யும்) இளைத்துத் துவளும் இந்த உடம்பை விரும்பிப் போற்றும் பொய்யனாகிய என்னைப் புறக்கணித்து ஒதுக்கிவிடாமல் பரிசுத்தமான உனது திருவடி ஆண்டருளும் வழி எதுவோ (அறிகிலேன்)- வழி ஏதேனும் உண்டோ (அறிகிலேன்)

வலிய அசுரர்கள் மாளவும் நல்ல தேவர்கள் வாழவும் (மை அவரை) குற்றமுள்ளவர்களை (அல்லது மைய வரை-குற்றமுள்ள கிரவுஞ்சகிரியை) (பாகம்பட) கூறுபட்டழிய மோதின...(கோவே).

இருள் சூழ்ந்த சோலைகளையும் செவ்விய குளிர் வாய்ந்த மலைப் பக்கங்களையும் உடைய வள்ளிமலையில் வாழ்ந்த கொடிபோன்ற வள்ளியின் தலைவனே!

வெல்ல வல்ல மயிலில் ஏறுதல் வல்ல குமரேசனே! (வெள்ளில்) விளாத்தளிருடன் கடப்பமலரை அணிபவனே!

வெண்ணிற அழகிய மாடங்கள் நிறைந்த அழகிய (செல்வ நிறைந்த) வீதிகளை உடைய **வெள்ளி நகரில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(பொய்யனை விடாது ஆளுந் திறமேதோ)

---

* "நொய்யிற் பிளவளவேனும் பகிர்மின்கள் "-கந்தர் அலங்.18

## 667. உய்ய

தய்யதன தான தய்யதன தான
தய்யதன தான தனதான

*பையரவு போலு நொய்யஇடை மாதர்
பையவரு கோலந் தனைநாடிப்-

பையலென வோடி மையல்மிகு மோக
பவ்வமிசை வீழுந் தனிநாயேன்-

உய்யவொரு கால மையவுப தேச
முள்ளுருக நாடும் படிபேசி;

உள்ளதுமி லாது மல்லதவி ரோத
† உல்லசவி நோதந் தருவாயே;

வையமுழு தாளு மையகும ரேச
வள்ளிபடர் கானம் புடைசூழும்-

வள்ளிமலை வாழும் வள்ளிமண வாள
மையுததி யேழுங் கனல்மூள;

வெய்யநிரு தேசர் சையமுடன் வீழ
வெல்லயில்வி நோதம் புரிவோனே-

வெள்ளிமணி மாட மல்குதிரு வீதி
**வெள்ளிநகர்** மேவும் பெருமாளே.(8)

---

*அரவுபோலும் இடை...' அரவேரிடையாள்' -சம்பந்தர் .3-3-5.

" அரவுபோல் இடை" ...திருப்புகழ் 1110.

† உல்லச...உல்லாச. "நீயான ஞான விநோதந்தனை யென்று நீயருள்வாய்" கந்தரலங்காரம் (46) ; " உல்லாச நிராகுலவிநோதன் (கந். அநு-2)

## 667.

**படங்கொண்ட அரவுபோன்ற நுண்ணிய இடையை** *(மத்யப் ப்ரதேசத்தை)* உடைய மாதர்கள் மெல்லச் செய்து கொள்ளும் அலங்காரங்களை விரும்பி-

*சிறுவன் அற்பன்* எனும்படி ஓடி மோகம் மிக்க காமக் கடலில் விழுகின்ற தனித்த நாய்போன்றவனான நான்-

*பிழைப்பதற்கு* ஒரு காலத்தில், ஐயனே! *(உனது)* உபதேசத்தை என்னுடைய உள்ளம் உருகி விரும்பும்படி ஓதி

**உள்ளது என்றும் இல்லாதது என்றும், உண்டென்றும் இல்லையென்றும், இவையிரண்டும் அல்லாததும் அவிரோத** - மாறு - விரோதம் இல்லாததும், *(உல்லாச)* உள்ளக் களிப்பைத் தருவதும் , *(விநோதம்)* வியப்பைத் தருவதுமான (பொருளைத்) தந்தருளுக.

**உலகம் முழுமையும் ஆள்கின்ற ஐயனே! குமரேசனே!** வள்ளிக் கொடிகள் படர்ந்துள்ள காடுகள் பக்கத்திற் சூழ்ந்துள்ள-

*வள்ளிமலையில் வாழும் வள்ளியின் மணவாளனே!* கரிய கடல்கள் ஏழிலும் -நெருப்பெழ-

*கொடிய அசுரத் தலைவர்கள், அவர்களிருந்த கிரௌஞ்சகிரி, எழுகிரியுடன் மாண்டு விழ வென்ற* வேலாயுதத்துடன் விளையாடல் புரிந்தவனே!

*வெண்ணிற அழகிய மாடங்கள் நிறைந்த லக்ஷ்மீகரம் பொருந்திய வீதிகள் உள்ள* **வெள்ளி** *நகரில் வீற்றிருக்கும் பெருமாளே!*

*(அவிரோத உல்லச விநோதம் தருவாயே)*

## 668. நாம விசேடம்

தனன தனாதன தனன தனாதன தய்ய தனத்த தந்த
தானாதன தானந் தானன தந்ததான

*வதன சரோருக நயன சிலீமுக வள்ளி புனத்தில் நின்று
†வாராய்பதி காதங் காதரை யொன்றுமூரும்-
வயலு மொரேவிடை யெனவொரு காவிடை வல்லப மற்றழிந்து
மாலாய்‡ மட லேறுங் காமுக எம்பிரானே;

---

*இந்தப் பாடல் மிக அருமையான சந்தங் கொண்டது; மேலான பொருள் நிரம்பியது. மனப்பாடஞ் செய்யத் தகுந்தது; இறைவனுடைய நாம விசேஷத்தை எடுத்துரைப்பது.

† பதி.... திருத்தணிகை: இது 'இடமணித்து' என்னுந் துறை. தலைவன் தலைவியிடம் என்னுடைய ஊர் மிகச் சமீபத்தில் இருக்கின்றது என்று உரைப்பது. "என்னுடைய ஊரில் உள்ள வெண்மாடங்களின் வெள்ளொளி வீச உன்னுடைய ஊரில் உள்ள கரிய மலை வெள்ளைச் சட்டை அணிந்தது போல வெண்ணிறத்தைப் பெற்று விளங்கும், அவ்வளவு சமீபத்தில் உள்ளது என்னுடைய ஊர்" - என்னும் கருத்தமைந்தது கீழ்க்காட்டும் திருக்கோவையார்ப் பாடல் 15.

"வருங்குன்ற மொன்றுரித் தோன்தில்லை யம்பல வன்மலயத்
திருங்குன்ற வாண ரிளங்கொடி யே!யிட ரெய்த லெம்மூர்ப்
பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாய நும்மூர்க்
கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங்குழையே!

எம் ஊர் தணிகையில் குவளை மலர்த்தேனைப் பருகும் வண்டுகள் பாய்ந்து உம் ஊர்ச் சோலையில் தேனை நுகரும்; அவ்வளவு அருகில் உள்ளன நும் ஊரும் எம் ஊரும்.

"எம்மூர்வரைக் காவியிற்றேன், மாந்தளி பாய்ந்து நும்மூர் வரைச்
சோலை மது நுகரும்" ....தணிகைப்புராணம் களவு-79

‡ மடலேறுதல்...பாடல் 235, பக்கம் 87 கீழ்க்குறிப்பு,
வள்ளியின் பொருட்டுத் தணிகேசர் மடலேறுவேன் என்றது
"தவளத்த நீறு, என்பு, எருக்குந் தரித்துத் தகு மடல்மா
பவளத்த வாய் நுங்கை பண்பினைப் பாடிப் படங்கைதழீஇ
நும்மூர்வயிற் றூண்டுதுமே" ....தணிகைப் புராணம் களவு 262.

மடல் ஏறலாவது - "தலைவன் ஒவ்வாக் காமத்தாற் பனங்கருக்காற் குதிரையும், பனந்தருவினுள்ளனவற்றால் வண்டில் முதலானவுஞ் செய்து அக்குதிரையின் மேல் ஏறுவது, மடலேறுவான் திகம்பரனாய் உடலெங்கும் நீறுபூசிக், கிழி ஓவியர் கைப்படாது (தொடர்ச்சி பக்கம் 33 பார்க்க)

# 668.

(வதனம்) முகம்-(சரோருகம்) தாமரை போலவும், (நயனம்) கண் (சிலீமுகம்) அம்பு அல்லது வண்டு போலவும், கொண்ட வள்ளி நாயகியின் தினைப்புனத்தில் போய் நின்று - 'வருவாயாக (எம்முடன், (எம்) ஊர் - (திருத்தணிகை) காதம்) பத்தும், (காதம்) பத்தும் (இந்த அரை) (அரைப்பத்தும்) ஐந்தும் - ஆக இருபத்தைந்து மைல்தான் (நேராய்க் கணக்கிடின்) - ஒன்றுமூரும்- (ஒன்று உம் ஊரும்) - எம்பதி தணிகையும் உம் ஊர் வள்ளிமலையும் ஒன்று - ஒன்றேதான்; (ஒன்றுக்கொன்று அவ்வளவு சமீபம்); (அல்லது ஒன்றும் ஊரும் - நம் இருவர் ஊரும் நெருங்கி நிற்கின்றன).

(வயலும் ஒரே இடை) - (இரண்டு ஊருக்கும்) மத்தியில் ஒரே ஒரு வயல்தான் உள்ளது; என - என்றெல்லாம் கூறி - (ஒரு கா இடை) - (வள்ளியைச் சந்தித்த அந்த) ஒரு சோலையிலே - (வல்லபம் அற்று அழிந்து) - உன் வலிமை தொலைந்து அழிந்து, (வள்ளிமீது) இச்சை பூண்டவனாய் *மடல் ஏறின மோகம் கொண்டவனே! எம்பெருமானே! (என்றும்) -

---

(32 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

தானே தீட்டிக் கிழியின் தலைப்புறத்தில் அவன்பேரை வரைந்து கைப்பிடித்து, ஊர் நடுவே நாற்சந்தியில் ஆகார நித்திரையின்றி, அக்கிழிமேற் பார்வையுஞ் சிந்தையுமிருத்தி, வேட்கை வயத்தனாய் வேறுணர்வின்றி, ஆவூரினும் அழல்மேற்படினும் அறிதலின்றி,மழை வெயில் காற்றால் மயங்கா திருப்புழி, அவ்வூரிலுள்ளார் பலருங்கூடி வந்து 'நீ மடலேறுதியோ? அவளைத் தருதும், சோதனை தருதியோ என்ற வழி இயைந்தானாயின், அரசனுக்கறிவித்து அவன் ஏவலால் அவன் இனைந்து நையத் தந்து மடலேறு என்ற வழி ஏறுமுறைமை - பூளை, எலும்பு, எருக்கு இவைகளாற் கட்டிய மாலை யணிந்துகொண்டு அம் மாவிலேற, அவ்வடத்தை வீதியில் ஈர்த்தலும், அவ்வுருளை உருண்டோடும்பொழுது, பனங்கருக்கு அறுத்த இடமெல்லாம் இரத்தம் தோன்றாது வீரியந் தோன்றின், அப்போது அவளை அலங்கரித்துக் கொடுப்பது; இரத்தங் கண்டுழி அவனைக் கொலை செய்து விடுவது....இவை புலவரால் நாட்டிய வழக்கென்றுணர்க" - தஞ்சைவாணன் கோவை பாடல் 101 உரை.

*முருகன் மடலேறுவது - "மாநுடப் பெண்டிரைக் கடவுள் நயப்பது"- தொல்காப் - புறத்திணை 28 (பாடல் 697 கீழ்க்குறிப்பு).

*இதவிய காணிலை தளையென வேடுவ னெய்திடு
மெச்சில் தின்று
லீலாசல மாடுந் தூயவன் மைந்த†நாளும்-
இளையவ ‡மூதுரை மலைகிழ வோனெனXவெள்ள
மெனக்கலந்து
Oநூறாயிர பேதஞ் சாதமொ ழிந்தவாதான்;
**கதைகன சாபதி கிரிவளை வாளொடு கைவசி
வித்த††நந்த
கோபாலம கீபன் தேவிம கிழ்ந்துவாழக்-

*இது கண்ணப்ப நாயனார் சரிதம்-பாடல் 651-பக்கம் 526 கீழ்க்குறிப்பு.

† "என்றும் இளையாய்" - திருமுருகாற்றுப்படையைச் சார்ந்த வெண்பா 3, 4 அடிகள் முருகன் திருநாமவிசேடத்தால் முடிவிலாத பிறவி ஒழியும் என்னும் உண்மையை விளக்கும் அருமை வாய்ந்தன.

"மஞ்சனே மணியே மணிமிடற் றண்ணலே யென உள் நெகிழ்ந்தவர் துஞ்சுமாறறியார் பிறவார் இத்தொன்னிலத்தே" - என்னும் திருவாக்கு இங்கு கருதற்பாலது. (சம்பந்தர் II-52-6)

‡ மூதுரை - திருமுருகாற்றுப்படை - திருமுருகாற்றுப்படையில் "பழமுதிர்சோலைமலை கிழவோனே" என வருவதைக் குறிக்கின்றது. திருமுருகாற்றுப்படை மிகப் பழைய நூலாதலின் 'மூதுரை' எனப்பட்டது திருமுருகாற்றுப்படையைப் "பாவுள் முன்னுற வந்து நிற்கும் முருகாற்றுப்படை" - என்றார்-சிவப்பிரகாச சுவாமிகள்.

X 'வெள்ளம்' - ஒரு பேரெண் (பிங்கலம்)

O "நூறாயிரபேதஞ் சாதம்" - "உரைசேரும் எண்பத்து நான்கு நூறாயிரமாம் யோனிபேதம்" - சம்பந்தர் I-132-4. ஈரிரண்டு தோற்றத் தெழுபிறப்புள் யோனி எண்பான் ஆரவந்த நான்கு நூறாயிரத்துள் " கந்தர் கலிவெண்பா: நால்வகைத் தோற்றம் எழு வகைப் பிறப்பு - இவற்றின் வகை - தொகை விவரத்தை-

ஊர்வ பதினொன்றாம் ஒன்பது மானிடம்
நீர்பறவை நாற்காலோர் பப்பத்தாம் - சீரிய
பந்தமாம் தேவர் பதினா லயன்படைத்த
அந்தமில்சீர்த் தாவரநா லைந்து. (11+9+30+14+20=84)

என்னும் பழம்பாடல் விளக்குகின்றது.

(தொடர்ச்சி 35 ஆம் பக்கம் பார்க்க)

இனிப்புள்ளவை இவை நிறைய நெருங்கியுள்ளன என்று கூறக்கேட்டு (அந்த) வேடுவன் (கண்ணப்பர்) எய்திடும் - சேர்த்திட்ட எச்சில் உணவைத் தின்று - (கண்ணில் ரத்தம் காட்டின) லீலாசலம் (சலம் லீலை) பொய்ம்மையான விளையாடலை விளையாடிய சுத்த மூர்த்தியாம் சிவகுமாரனே! (என்றும்), நாளும்-எப்போதும்,

இளையவனே என்றும், மூதுரையாம் திருமுருகாற்றுப்-படையிற் சொன்னபடி-'மலை கிழவோனே' என்றும், ஓதினால் - (வெள்ளம் எனக் கலந்து) - வெள்ளக் கணக்காக எண்ணியதாய்க்கூடி நூறாயிர பேதமாய் வருவதான - (எண்பத்து நான்கு) நூறாயிர பேதமாக வருவதான (சாதம்-ஜாதம்) பிறப்புக்கள் - ஒழிந்தவாதான்-(ஒழிந்த ஆறு என்ன அற்புதம்தான்) ஒழிந்துபோயின-இது என்ன அற்புதந் தான்!

(கௌமோதகி என்னும்) கதையும், (கன சாபமும்) பெருமை பொருந்திய சாரங்கம் என்னும் வில்லும், (திகிரி) சுதரிசனம் என்னும் சக்கரமும், (வளை) பாஞ்ச சன்னியம் என்னும் சங்கமும், (வாள்) நாந்தகம் என்னும் வாளும்-ஆகப் பஞ்சாயுதங்களை (ஐம்படைகளை) கை வசிவித்த-கையில் தங்கவைத்த...(கள்வன்); நந்தகோபால மகிபன் என்னும் (கோகுலத்து) அரசனது தேவி - அசோதை மகிழ்ந்து வாழ

---

*(34 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*

** "நாந்தகம், சங்கு, தண்டு, நாணொலிச் சார்ங்கம், திருச்சக்கரம் ஏந்து பெருமை இராமனை" பெரியாழ்வார் 4-1-2.

†† நந்த கோபாலன்-நந்தன் கண்ணபிரானை வளர்த்த தந்தை, 'நந்தகோபாலன் மருமகளே நப்பின்னாய்' திருப்பாவை 18. நந்த கோபாலன் தேவி - அசோதை...கண்ணபிரானை வளர்த்த தாய் " கோதைக் குழலாள் அசோதைக்குப் போத்தந்த பேதைக்குழவி "

பெரியாழ்வார் 1-2-1.

*கயிறொ டுலூகல முருள வுலாவிய கள்வ
னறப†பயந்து
ஆகாயக பாலம் பீறநி மிர்ந்துநீள;
‡விதரண மாவலி வெருவ மகாவ்ருத வெள்ள
வெளுக்க நின்ற
நாராயண மாமன் Xசேயைமு னிந்தகோவே!
விளைவய லூடிடை வளைவிளை யாடிய
வெள்ளிநகர்க் கமர்ந்த
வேலாயுத மேவுந் தேவர்கள் தம்பிரானே. (9)

## திருவல்லம்.

(ரெயில்வே ஸ்டேஷன் வேலூருக்குக் கிழக்கு 8 மைல். நீவா என்னும் நதியின் மேற்கரையிலிருக்கின்றது. திருஞான சம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது. கந்தரந்தாதியிற் சொல்லப்பட்டுள்ளது).

### 669. திருநாமங் கூற

தனதன தானந் தனதன தானம்
தனதன தானம் தனதான

நசையொடு தோலுந் தசைதுறு நீரும்
நடுநடு வேயென் புறுகீலும்-

---

*கண்ணபிரான் உரலொடு உலாவிய கள்வன்.

வெண்ணெய் திருடினதற்காக உரலொடு கண்ணன் கட்டப்பட்டான் ..."நவநீதமுந் திருடி உரலோடெ யொன்றும் அரி" திருப்புகழ் 109 உலூகலம் உரல் "ஓர் உலூகலம் உடன் தவழ்ந்தவன்" ..வில்லி பாரதம். உலூகன் 5.

'பொத்த உரலைக் கவிழ்த்து அதன்மே லேறி
தித்தித்த பாலும் தடவினில் வெண்ணெயும்
மெத்தத் திருவயிறார விழுங்கிய அத்தன்"

பெரியாழ்வார் 1-9-7. கள்வன் என்பது:- "கள்ளக் குழவியாய்க் காலால் சகடத்தைத் தள்ளி உதைத்திட்டு" பெரியதிருமொழி 10-5-9,

† பயந்து ...பயப்பட ...நோக்கி-நோக்க-என்புழிப்போல் ...பாட்டு 404 பக்கம் 524 கீழ்க்குறிப்பு.

(தொடர்ச்சி 37 ஆம் பக்கம் பார்க்க)

## 798. வாழ்வுற

தனன தத்தனத் தனன தத்தனத்
தனன தத்தனத் தனதான

பகரு முத்தமிழ்ப் பொருளு மெய்த்தவப்
பயனு மெப்படிப் பலவாழ்வும்-
பழைய முத்தியிற் பதமு நட்புறப்
பரவு கற்பகத் தருவாழ்வும்;
புகரில் புத்தியுற் றரசு பெற்றுறப்
பொலியும் அற்புதப் பெருவாழ்வும்-
புலன கற்றிடப் பலவி தத்தினைப்
புகழ்ப லத்தினைத் தரவேணும்;
*தகரி லற்றகைத் தலம்வி டப்பிணைச்
சரவ ணத்தினிற் பயில்வோனே-
தனிவ னத்தினிற் புனம றத்தியைத்
தழுவு பொற்புயத் திருமார்பா;
சிகர வெற்பினைப் பகிரும் வித்தகத்
திறல யிற்சுடர்க் குமரேசா-
*செழும லர்ப்பொழிற் குரவ முற்றபொற்
றிருவி டைக்கழிப் பெருமாளே. (3)

---

* சிவபிரானது நெற்றிக்கண்ணினின்றும் வந்த ஆறு பொறிகளின் சூடு தாங்க முடியாமல் வாயு அப்பொறிகளை அக்கினியின் கையிற் கொடுக்க, அக்கினியும் தாங்கமுடியாமல் அப்பொறிகளைக் கங்கையில் விட, கங்கையும் தாங்க முடியாமல் பொறிகளைச் சரவண மடுவில் விட்டனள்: 'காலினோன் - திறற்படு வன்னிதன் சென்னிசேர்த்தினான்;

"தீயின் பண்ணவன் வேர்த்துடல் புழுங்குற: ஒரு பதம்
இடப் பெறாது, கங்கையின் அகத்துய்த் தானரோ;
கங்கைதன் சிரமிசை ஏந்தியே...சரவணம் எனுந் தடந் தன்னிற் சேர்த்தனள்" - கந்தபுராணம் - 1- 11-84-7.

"தீக்கடவுள் சீதப்பகீரதிக்கே சென்றுய்ப்பப் போதொருசற் றன்னவளும் கொண்டமைதற் காற்றாள் சரவணத்திற் சென்னியிற் கொண்டுய்ப்ப' -கந்தர் கலி வெண்பா.

தகரில் அற்றகை - தக்கன் யாகத்துப் பூசலில் தகர்க்கப்பட்டதால் அறுபட்ட கை - (பாடல் 390 - பக்கம் 487 கீழ்க்குறிப்பு)

தகரில் - வீரபத்திரர் தகர்த்தலால் எனவும், தகரில் - ஆட்டு முகத்தன் (தக்கன்) யாகத்தில் - எனவும் பொருள் கொள்ளலாம்.

(தொடர்ச்சி 363 ஆம் பக்கம் பார்க்க)

கயிறொ டுலூகலம் உருள-(உலூகலம்) உரலொடு கயிற்றினாற் கட்டப்பட்டு அந்த உரலை இழுத்து உருள-உலாவின (கள்வன்) (வெண்ணெய், தயிர் திருடி உண்டவன்), அல்லது உருள உலவி (சகடத்தை) உதைத்தவன்; (அல்லது கள்வனாய்-(கண்டவர்கள்) (அறப்பயந்து-அறப் பயப்பட), மிகப் பயப்படும்படி, ஆகாயத்தையும் தமது (கபாலம்) தலை கிழிக்கும்படி நிமிர்ந்து ‡ நீண்டு -

(விதரண மாவலி) கொடையிற் சிறந்த மகாபலிச் சக்கரவர்த்தி அச்சம் உற, மகா விரதசீல உருவத்து வாமனனாய்-(வெள்ள வெளுக்கநின்ற) - பகிரங்கமாய் எதிரில் நின்ற நாராயண மூர்த்தியாம் மாமனுடைய (திருமாலுடைய) சேயை-குழந்தையாகிய பிரமனைக் கோபித்த தலைவனே!

விளைச்சல் உள்ள வயலிடையே சங்குகள் தவழ்ந்து விளையாடுகின்ற **வெள்ளி** நகரில் வீற்றிருக்கும் வேலாயுதனே! (உன்னை) விரும்பும் தேவர்கள் தம்பிரானே!

(மலைகிழவோனென....சாதம் ஒழிந்தவா)

## திருவல்லம்

## 669.

(நசை) ஈரத்துடன் தோலும், (தசை) மாமிசமும், (துறு) அடைந்துள்ள நீரும், இடையிடையே எலும்பும், எலும்புகளைப் பூட்டியுள்ள பூட்டுப் பொருத்துக்களும்-

---

‡ மாவலிமுன் நீண்ட உருவம் கொண்டது.

பாட்டு 268 பக்கம் 166; பாடல் 458 பக்கம் 24 கீழ்க்குறிப்பு. மாவலியிடம் சென்றது; கள்வனாய் நீண்டது ..."கள்ளக்குறளாய் மாவலியை வஞ்சித்து" பெரியதிருமொழி 5-1-2.

மகாவ்ருதவெள்ள வெளுக்க நின்ற திருக்கோலத்தை

"புனையிழை யதிதி தன்பாற் புதல்வனாய்த் தோற்றிப் பூநீர்
நனைதரு குடுமி, மார்பில் நயந்தநூல், கரகம், தண்டு
துனைதரு கரிய மானின் தோலொடுத் தரீயம் முஞ்சி
இனையன பிரமசாரி யெனப் புனைந் திலங்கும் எல்லை"

-என வேதாரணிய புராணம் அகோரதேவர் அருளியது கூறும்.

X சேய்- பிரமன்-பிரமனைக் கோபித்தது....பாடல் 608-பக்கம் 406 பாடல் 571-பக்கம் 308 கீழ்க்குறிப்பு.

நலமுறு வேயொன் றிடஇரு கால்நன்
றுறநடை யாருங் குடிலூடே;
விசையுறு காலம் புலனெறி யே*வெங்
கனலுயிர் வேழந் திரியாதே-
விழுமடி யார்முன் பழுதற வேள்கந்
தனுமென வோதும் விறல்தாராய்;
இசையுற வேயன் றசைவற வூதும்
எழிலரி † வேழம் எனையாளென்-
றிடர்கொடு மூலந் தொடர்வுட னோதும்
இடமிமை யாமுன் வருமாயன்;
திசைமுக னாருந் திசைபுவி வானுந்
‡ திரிதர வாழுஞ் Xசிவன்மூதூர்-
தெரிவையர் தாம்வந் தருநட மாடுந்
திருவல மேவும் பெருமாளே.

## வேலூர்

(ரெயில்வே ஸ்டேஷன் காட்டுப்பாடி ஜங்ஷனிலிருந்து 4-மைல். காஞ்சீபுரத்துக் கடுத்த வாலாஜாபாத் ஸ்டேஷனுக் கருகில் "இளையனார் வேலூர்" என்னும் சுப்ரமணிய ஸ்தலம் இருக்கின்றது)

## 670. மாதர் மீது மயக்கற்றுத் தாள் சேர

தனன தாத்தன தானா தானன
தனன தாத்தன தானா தானன
தனன தாத்தன தானா தானன தந்ததான

அதிக ராய்ப்பொரு ளீவார் நேர்படில்
ரசனை காட்டிக ளியார் கூடினும்
அகல வோட்டிகள் மாயா ரூபிகள் நண்புபோலே-

---

*ஐம்புல வேழம்- '(தொண்டர்) அஞ்சுகளிறும் அடக்கி' சம்பந்தர்-2-114-1; 'பஞ்சேந்தியக் குஞ்சரம்' - பொன்வண்ணத் தந்தாதி-23.

† கஜேந்திரனுக்குத் திருமால் உதவினது-பாடல் 110-பக்கம்262.

‡ திரிதர-வலஞ்சூழ்ந்து திரிய. இதனால் - திருமால், பிரமா முதலியோர் பூசித்த தலம் திருவலம் என்பது தெரிகின்றது.

X "பழையவல்லம்" - திருப்புகழ் 274.

நலம் உறும்வண்ணம் (வேய்) வேய்தல்-பொருந்துதல் (அல்லது உறுவே-உறுதலே) ஒன்றிட-சேர, இரண்டு கால்கள் நன்கு பொருந்த நடை நிரம்பிய (இவ்) வுடலுக்குள்-

வேகம் பொருந்திச் செல்லும் காலத்தே (வாழும்-பொழுது,) ஐம்புலன்களின் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்) வழியாகக் கொடிய தீப் போன்றனவும், உயிருள்ள யானை போன்றனவுமான ஐம்பொறிகளும் (மெய், வாய், கண், மூக்கு, செவி) திரிந்து அலையாமல்

(உனது திருவடியில்) விழுந்து வணங்கும் அடியார்களின் முன்னிலையில், (பழுதற) குற்றமில்லாத வகையில், (அல்லது என் மாசு கழிய) வேளே! கந்தனே! என ஓதும் சக்தியைத் தந்தருளுக.

(இனிய) இசை பொருந்தும்படி, (அன்று) முன்பு சராசரங்கள் அசைவின்றி நிற்கும்படி, (புல்லாங்குழலை) ஊதவல்ல அழகிய கண்ணன் (திருமால்) .....கஜேந்திரன் எனையாண்டருளுக என்று-

வருத்தத்துடனே மூலப்பொருளே என்று (தொடர்வுடன்) பேரன்புடனே கூச்சலிட்டு அழைத்த இடத்துக்கு, கண் இமை இமைக்கும் நேரத்துக்கு முன்பே வந்து (உதவிய) திருமால்-திருமாலும்,

(திசை முகனாரும்) நான்முகனும்-பிரமனும்-திசைகளில் உள்ளோரும், மண்ணுலகத்தவரும், வானுலகத்தவரும் வலம் வந்து சூழ வாழ்கின்ற சிவபெருமானது பழைய ஊரும்

மாதர்கள் வந்து அரிய நடனங்களை ஆடுகின்ற தலமுமான - **திருவலத்தில்** மேவும் பெருமாளே!

(வேள், கந்தன் என ஓதும் விறல்தாராய்)

## வேலூர்
## 670.

**அ**திகமாக (நிரம்பப்) பொருள் கொடுப்பவர் நேர்பட்டால் (கிடைத்தால்) ரசனை... இரசனம் -சுவை....இன்பம் காட்டுபவர்கள், பொருள் கொடாதவர் கூடவந்தால் அவர்களைத் தம்மை விட்டு நீங்கும்படி ஓட்டுபவர்கள், மாயையே ஒரு உருவம் எடுத்தது போல்பவர்கள், நட்பு பாராட்டுவது போல

அசட ராக்கிகள் மார்மே லேபடு
முலைகள் காட்டிகள் கூசா தேவிழும்
அழகு காட்டிக ளாரோ டாகிலு மன்புபோலே;

சதிர தாய்த்திரி வோயா வேசிகள்
கருணை நோக்கிமி லாமா பாவிகள்
தருமு பேட்சைசெய் தோஷா தோஷிகள்
நம்பொணாத-

சரச வார்த்தையி னாலே வாதுசெய்
விரக மாக்கி விடாமு தேவிகள்
தகைமை நீத்துன தாளே *சேர்வதும்
எந்தநாளோ;

† மதுரை நாட்டினி லேவாழ் வாகிய
அருகர் வாக்கினி லேசார் வாகிய
வழுதி மேற்றிரு நீறே பூசிநி மிர்ந்துகூனும்-

மருவு மாற்றெதிர் வீறே டேறிட
அழகி போற்றிய மாறா லாகிய
மகிமையாற் சமண் வேரோ டேகெட
வென்றகோவே;

புதிய மாக்கனி வீழ்தே னூறல்கள்
பகலி ராத்திரி யோயா ஆலைகள்
புரள மேற்செல வூரர் பாயஅ ணைந்துபோதும்

---

* சேர்வது - இடைவிடாது நினைத்தல்-
'மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்' - திருக்குறள் 3 உரை.
† சம்பந்தரது வரலாறு - பாடல் 181 பக்கம் 420 கீழ்க்குறிப்பு.

(வந்தவர்களை) அசடர்களாக ஆக்குபவர்கள் மார்பு மேலே உள்ள கொங்கைகளைக் காட்டுபவர்கள், கூச்சம் இல்லாமல் (மேலே) விழுந்து தமது அழகைக் காட்டுபவர்கள், யாராயிருந்தாலும் (அவர்கள்மீது) அன்புள்ளவர்கள் போலச்

சாமர்த்தியமாய்த் திரிதலில் ஒய்தல் இல்லாத (எப்போதும்திரியும்) வேசிகள், அருள் நோக்கம் என்பதே இல்லாத மகா பாவிகள், வேண்டுமென்றே அலக்ஷியம் செய்கின்ற - புறக்கணிக்கின்ற - (தோஷா தோஷிகள்) பலவித (தோஷம்) குற்றம் - பாவம் - செய்பவர்கள் - நம்புதற்கு முடியாத-

பக்குவ வார்த்தைகளால் - இனிய காம சேஷ்டையை வளர்க்கும் பேச்சினால்- வாதுசெய்து- காமத்தை மூட்டி - (வந்தவர்களை) விடாது - போக ஒட்டாது பிடிக்கவல்ல மூதேவிகள் - (அத்தகைய பொது மகளிருடன்) (தகைமை நீத்து) கூடும் நிகழ்ச்சிகளைவிட்டு உன்னுடைய திருவடிகளை நான் (சேர்வதும்) இடைவிடாது சிந்திப்பதுமான ஒரு நாள் உண்டோ? ஒரு நாள் கிடைக்குமா!

மதுரைப் பிரதேசத்திலே வாழ்ந்திருந்த சமணர்களின் பேச்சிலே - கொள்கையிலே ஈடுபட்டிருந்த பாண்டியன் உடல்மீது திருநீறு பூசி, அவனுடைய கூன் நிமிரவும் -

பொருந்திய (வைகை) யாற்று வெள்ளநீரை எதிர்த்து (வீறுடன்) சிறப்புடன் (அவ் வெள்ளநீரில்) இட்ட ஏடு மேற்செல்லவும், (அழகி போற்றிய மகிமையால்)....அழகு நிறைந்த பாண்டிமாதேவி - மங்கையர்க்கரசி உன்னைத் துதித்துப் போற்றிய பத்தியின் சிறப்பாலும், (மாறாலாகிய மகிமையால்) மாறுபட்ட (பகைமை பூண்ட) சமணர் வாதத்தினால் ஏற்பட்ட நிகழ்ச்சிச் சிறப்பாலும் - அல்லது அழகி போற்றிய - மாறால் - வகையினால் ஏற்பட்ட சிறப்பாலும்) அந்த சமணர்கள் வேருடன் அழிய வெற்றி கொண்ட தலைவனே!

புதிய மாங்கனிகளினின்றும் விழுகின்ற தேன் ஊறல்களும், பகலும் இரவும் ஓயாது வேலை செய்யும் கரும்பாலைகளின் மேலே புரண்டு, மேற்சென்று, அயலில் உள்ள பல ஊர்களிலும் பாயும்படி சேர்ந்து போகின்ற-

புகழி னாற்கடல் சூழ்பார் மீதினி
லளகை போற்பல வாழ்வால் வீறிய
புலவர் போற்றிய **வேலூர்** மேவிய தம்பிரானே.(1)

## 671. இறைஞ்ச.

தானான தந்த தந்த தானான தந்த தந்த
தானான தந்த தந்த தனதான

சேலால மொன்று செங்கண் வேலாலும் வென்று மைந்தர்
சீர்வாழ்வு சிந்தை பொன்ற *முதல்நாடித்-

தேன்மேவு செஞ்சொ லின்சொல் தானோதி வந்தணைந்து
தீராத துன்ப இன்ப முறுமாதர்;

கோலாக லங்கள் கண்டு மாலாகி நின்ற னன்பு
கூராமல் மங்கி யங்க மழியாதே-

கோள்கோடி பொன்ற வென்று நாடோறு நின்றி யங்கு
**கூர்வாய்மை கொண்டி றைஞ்ச அருள்தாராய்;**

† மாலாலு ழன்ற ணங்கை யார்மாம தன்க ரும்பின்
வாகோட ழிந்தொ டுங்க முதல்நாடி-

---

* முதல் - 'முதலிலார்க்கு ஊதியம் இல்லை' - திருக்குறள் 449.

†**காமனை எரித்த வரலாறு:** - பாடல் 399 பக்கம் 510-கீழ்க்குறிப்பு.

**மாலால் உழன்று மன்மதன் அணங்கு (வருத்தம்) உற்றது:** சிவபிரான் மீது நீ சென்று உனது மலர்ப்பாணத்தை எய்யவேண்டுமென்று பிரமன் காமனுக்குச் சொன்னபோது - காமன் அஞ்சி, மயங்கி, ஏக்கம் உற்றான்:

"கிலேசமதாகி, வாட்டிய மென் மலர்போல் அணிமாழ்கி-"

'ஐங்கணைக் கரத்தினோன் அரந்தை எய்தி ஆதியாம்

புங்கவற்கு மாறுகொண்டு பொருகிலேன்" என்றான்; சிவபிரான் மீது அம்பு எய்ய மாட்டேன் என்று காமன் கூறப் பிரமன் உனக்குச் சாபம் இடுவேன் என்றனன்; உனது சாபத்தால் துன்பம் அடைவதைவிட ஈசன் மீது அம்பு செலுத்தி மாளுதல் நன்றெனக் காமன் கூறினன்.

"மதனவேள் அழுங்கி வெய்துயிர்த்து நினது வாய்ச்சூளின் துன்புழந்து படுதலிற் காளகண்டன் முன்பு சென்று கணைகள் தூஉய் மாளினுஞ் சிறந்த தம்ம மற்றும் உய்யலாகுமே" - என்று கூறி ஏகினன், அங்ஙனமே சென்று சிவன்மீது அம்பு எய்து அவர் நெற்றிக்கண் தீயால் மாண்டனன் - (கந்தபுரா-I-4-8, 54, 56, 57) (தொடர்ச்சி பக்கம் 43 பார்க்க.)

புகழ்பெற்ற காரணத்தால் கடலாற் சூழப்பெற்ற இப்பூமியில் (குபேரனது நகர்) அளகாபுரிபோல் பல வகையான வாழ்வால் மேம்பட்டு விளங்கும் **(வேலூரில்)** (புலவர்கள்) பண்டிதர்கள் அல்லது தேவர்கள் போற்றிய **வேலூரில் வீற்றிருக்கும் தம்பிரானே!**

*(உனதாளே சேர்வதும் எந்த நாளோ)*

## 671.

**சேல்**மீன் போலவும், (ஆலம்) விஷம் போலவும் உள்ள செவ்விய கண்ணாகிய வேலாலும் (மைந்தர்களை - ஆண்களை) வென்று அவர்களுடைய சீரும் நல் வாழ்வும் மனமும் குலைந்து அழியும்படி, (முதல் நாடி) முதலிலேயே யோசித்து - அல்லது அம் மைந்தர்களுக்கு உள்ள (முதல்) பொருளை - மூலதனத்தை விரும்பித்-

தேன் போன்ற செம்மை வாய்ந்த சொற்களையும், இனிய சொற்களையும் பேசி வந்து அணைந்து முடிவு இல்லாத துன்பத்தையும் இன்பத்தையும் அடைகின்ற மாதர்களின்-

ஆடம்பரங்களைப் பார்த்து மோக மயக்கம் கொண்டவனாய், (நின்றன் அன்பு) உன்மீது அன்பு பெருகாமல் பொலிவுகுறைந்து, உடல் அழிந்துபோகாமல்-

(கோள்) தீமை - இடையூறு கோடிக் கணக்கானவைகள் அழிந்து போகும்படி வென்று, தினந்தோறும் ஒழுக்க வழியிற் செல்வதான சிறந்த உண்மைப் பத்தியை மேற்கொண்டு (உன்னை) வணங்கும்படியாக உனது திருவருளைத் தந்தருளுக.

*(மாலால்) (இன்னது செய்வது என்று தெரியாத) மயக்கத்தினால் மனம் அலைப்புண்டு (அணங்கை) வருத்தத்தை (ஆர்) நிரம்பக்கொண்ட (மா) பெருமை பொருந்திய (மதன்) மன்மதன் (கரும்பின்) கையிற்கொண்ட கரும்புவில்லின், (வாகு) அழகுடனே (அழிந்துஒடுங்க) அழிபட்டு மறைய, (முதல்) முன்பு (நாடி) நாடினவரான - (எண்ணி எரித்தவரான) சிவபிரானுடைய-

---

* இனி மாலால் உழன்று - வள்ளிமீது கொண்ட மோகத்தால் அலைப்புண்டு, அணங்கை - வள்ளியை, ஆர் மாமதன் - மா ஆர் மதன் - பெருமை நிறைந்த மன்மதன் - (அவன்) கரும்பும், அழகும்-

(தொடர்ச்சி பக்கம் 44 பார்க்க)

வாழ்வான கந்த முந்த மாறாகி வந்த டர்ந்த
மாசூரர் குன்ற வென்றி மயிலேறி;
மேலாகு மொன்ற மைந்த மேனாடர் நின்றி ரங்க
வேலாலெ றிந்து குன்றை மலைவோனே-
வேய்போல வுந்தி ரண்ட தோள்மாதர் வந்தி றைஞ்சு
**வேலூர்வி** ளங்க வந்த பெருமாளே.(2)

## விரிஞ்சிபுரம்

*(ரெயில்வே ஸ்டேஷன் - வேலூருக்கு மேற்கிற் காட்டுப்பாடி ஜங்ஷனிலிருந்து 8-மைல். வரகவி - மார்க்க சகாய தேவரருளிய "திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ்" என்னும் மிக அருமையான நூல் அச்சிடப்பட்டுள்ளது. "கரபுரி" "கரபுரம்" எனவும் இத்தலத்துக்குப் பெயர் வழங்கும். ஸ்தல புராணம் உண்டு.)*

## 672. திருவடியை நினைந்திட

தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத்
தனதனத் தனதனத் தனதனத் தனதனத் தனதான

*ஒருவரைச் சிறுமனைச் சயனமெத் தையினில்வைத்
தொருவரைத் தமதலைக் கடையினிற் சுழலவிட்
டொருவரைப் பரபரப் பொடுதெருத் திரியவிட்
டதனாலே-

*இப் பாடலின் முதல் இரண்டு அடிகள் வேசையர் தந்திரத்தையும் அவரால் வரும் துன்பங்களையும் விளக்குகின்றன.

*(43-ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)*

அழிந்து ஒடுங்க - தனது கரும்பு வில்லும் அழகும் குலைபட்டு ஒடுங்க - மன்மதன் பாணங்கள் முருகவேளினிடம் வெற்றி பெறாது (காமனது ஐந்தாம் பாணம் அவரைக் கொல்லமாட்டாது பிழைபட) காமன் நாணமுற்று ஒடுங்க - முதல் நாடி - முன்பு - அந்த அணங்கை நாடி - விரும்பிச் சென்று (அவளை மணந்து) வாழ்வு பெற்ற கந்த - என்பதும் ஒருவாறு பொருந்தும்: முருகவேள் **மாலால் உழன்றது:-**

"குறமானோடு மகிழ் கருத்தாகி....உனது கட்பாணம் எனதுடை நெஞ்சு பாய்தல் காணாது மமதை விட்டாவி யுயவருள் பாராய்" (பாடல் 209)- என வருவனவற்றைக் காண்க.

காமன் கரும்போடு...ஒடுங்கியது. "காமன்கை மலர்கள் நாண வேடப்பெண் அமளிசேர்வை காண் எங்கள் பழநிமேவு பெருமாளே" - என்ற இடத்திற் காண்க. (பாடல் 179)

செல்வப் புதல்வனான கந்தனே! முற்பட்டுப் பகைமை பூண்டு வந்து நெருங்கி எதிர்த்த பெரிய சூராதிகள் அடங்க வெற்றி மயில்மேல் ஏறியவனே!

மேலான (ஒன்று) - மேலான (எண்ணம் ஒன்று) பரம்பொருளின் தியானம் (அமைந்த) பொருந்திய (மேனாடர்) விண்ணோர் நின்று பரிதபித்து வேண்ட வேலாயுதத்தைச் செலுத்திக் கிரௌஞ்ச மலையை எதிர்த்தழித்தவனே!

(பச்சை) மூங்கில்போலத் திரட்சியுள்ள தோள்களை உடைய மாதர்கள் வந்து வணங்கும் (பெருமாளே!) **வேலூர்** விளங்கும்படி வந்து வீற்றிருக்கும் பெருமாளே!

*(இறைஞ்ச அருள் தாராய்)*

## **விரிஞ்சிபுரம்*** *(கரபுரி)*

## 672.

(தும்மிடம் வந்த) ஒருவரைத் (தங்களது) சிறிய வீட்டில் உள்ள படுக்கை மெத்தையில் இருக்கவைத்து, ஒருவரைத் தங்களுடைய கடைத்தலை வாசலில் (புறக்கடையில்) மனக்குழப்பத்துடன் சுழலவைத்து, ஒருவரை (வேகத்துடன்) ஆத்திரத்துடன் தெருவில் திரியவைத்து, (அத்தகைய) செய்கைகளாலே-

---

* (கரம்) கழுதை முகமுள்ள அசுரராஜன் பூசித்த தலமாதலின் 'கரபுரி' எனப் பெயர் வந்தது; "நிருதர் தங்குலத் துதித்தனன் கரனெனும் நிருதன்....சூலபாணியாம் வழித்துணை மருந்தைத் தொழுதான்". விரிஞ்சிபுரத்துச் சிவபிரான் திருநாமம் 'வழித்துணை நாதர்' (திருவிரிஞ்சைப் புராணம் - கரபுரிச் சருக்கம்)

(விரிஞ்சன்) - பிரமன் பூசித்ததால் 'விரிஞ்சன் புரம்' ஆயிற்று; "கரபுரி யெனும்பதி விரிஞ்சைப் பெயர்படைத்து பிரமனுஞ் சிவகதி பெற்றான்" திருவிரிஞ்சைப் புராணம் - விரிஞ்சைப்புரி சருக்கம்)

"பூவிலுறையுந் தேவன் மாமுனி கரன் தூய பூசை புரியும் பாதனார், ஆரணி விரிஞ்சேசனார்" - விரிஞ்சை பிள்ளைத்தமிழ் - 20.

ஒருவருக் கொருவர்சக் களமையிற் சருவவிட்
டுருவுபத் திரமெடுத் தறையின்மற் புரியவிட்
*டுயிர்பிழைப் பதுகருத் தளவிலுச் சிதமெனச்
செயுமானார்;

தருமயற் ப்ரமைதனிற் றவநெறிக் கயலெனச்
† சரியையிற் கிரியையிற் றவமுமற் றெனதுகைத்
தனமவத் தினிலிறைத் தெவருமுற் றிகழ்வுறத்
திரிவேனைச்-

‡ சகலதுக் கமுமறச் சகலசற் குணம்வரத்
தரணியிற் புகழ்பெறத் தகைமைபெற் றுனதுபொற்
சரணமெப் பொழுதுநட் பொடுநினைந் திடஅருட்
டருவாயே;

குருமொழித் தவமுடைப் புலவரைச் சிறையில்வைத்
தறவுமுக் கிரம்விளைத் திடுமரக் கரைமுழுக்
கொடியதுர்க் குணஅவத் தரைமுதற் றுரிசறுத்
திடும்வேலா-

Xகுயில்மொழிக் கயல்விழித் துகிரிதழ்ச் சிலைநுதற்
சசிமுகத் திளநகைக் கனகுழற் றனகிரிக்
கொடியிடைப் பிடிநடைக் குறமகட் டிருவினைப்
புணர்வோனே;

---

* 'உயிர் பிழைப்பது கழுத்தளவி லுப்பிசம் எனச் செயுமானார்'. எனவும் ஒரு பாடம். (கழுத்தளவும் வீக்கம் கண்டால் பிழைப்பது அரிது போல).

† சரியை - கிரியை - விளக்கம் - பாடல் 331 - பக்கம் 330 கீழ்க்குறிப்பு.

‡ இந்த நாலாவது அடி - சொல்லழகும் பொருளழகும் கொண்டு அருமையாக அமைந்துள்ள வேண்டுகோளாகும். மனப்பாடஞ் செய்யத்தக்கது.

X இந்த ஆறாவது அடி - அருணகிரியாரின் வாக்கு வல்லமையைக் காட்டுகின்றது. "வாக்குக் கருணகிரி" என்ற முதுமொழிக்கு இது எடுத்துக்காட்டாகும்.

ஒருவருக் கொருவர் (சக்களமைபில்) சக்களமைப் பகைமையில் - போட்டிப் பகைமையில் - (சருவவிட்டு) - போராட விட்டு, அவர்கள் (உருவு பத்திரம் எடுத்து) வாளை உருவி எடுத்து அரையிலே மல் யுத்தம் செய்யும்படி வைத்து, உயிர் பிழைப்பதே - யோசித்துப் பார்க்கில் - (உச்சிதம் என) - தக்கது, மேல் என்னும்படிச் செய்கின்ற (மானார்) பொதுமகளிர்-

தருகின்ற காம இச்சை மயக்கத்தினால் - தவ வழிக்கு மாறுபட்டவனாகி - புறம்பாகி - சரியை மார்க்கத்திலும் - கிரியை மார்க்கத்திலும் செய்வதற்குள்ள தவ ஒழுக்கம் இல்லாதுபோய், எனது கையிலிருந்த பொருள் வீணாகச் செலவழித்து - (ஊரில் உள்ள) யாவரும் எனை நெருங்கி இகழ (இழித்துப் பேசத்) திரிகின்ற என்னுடைய-

எல்லாவித துக்கங்களும் நீங்கவும், எல்லாவித நற்குணங்களும் கூடவும், பூமியில் நான் புகழை அடையவும் புகழ் விளங்கி வாழவும் வேண்டிய (தகைமை) யோக்யதையை - மதிப்பைப் பெற்று, உன்னுடைய அழகிய திருவடிகளை எப்போதும் (நட்புடன்) அன்புடன் (நான்) நினைக்கும்-படியாக (உனது) திருவருளைத் தந்தருளுக;

தங்களுடைய குரு (பிரகஸ்பதி) சொன்ன சொற்படி தவநெறியில் இருந்த (புலவரை) தேவர்களைச் சிறையில் வைத்து மிகவும் (உக்கிரம்) கொடுமை செய்துவந்த அரக்கர்களாகிய, முற்றிலும் கொடிய கெட்ட குணத்து வீணர்களை முன்பு - அவர்கள் செய்த குற்றங்களுக்காக அறுத்தெறிந்த வேலாயுதனே!

குயில்போன்ற மொழியையும், கயல்மீன் போன்ற கண்களையும், பவளம் போன்ற வாயிதழையும் வில்போன்ற நெற்றியையும், சந்திரன் போன்ற முகத்தையும், புன்னகை-யையும், கருமேகம் போன்ற கூந்தலையும், (கிரிதனம்) மலை-போன்ற கொங்கைகளையும், கொடிபோன்ற இடையையும், (பிடி) பெண் யானையின் நடைபோன்ற நடையையும், கொண்டிருந்த குறமகள் - குறமகளாம் லக்ஷ்மியை (கிராத லக்ஷ்மியை) வள்ளியை அணைபவனே!

கருதுசட் சமயிகட் கமைவுறக் கிறியுடைப்
*பறிதலைச் சமணரைக் குலமுதற் பொடிபடக்
கலகமிட் டுடலுயிர்க் கழுவினுச் சியினில்வைத்
திடுவோனே-

கமுகினிற் குலையறக் கதலியிற் கனியுகக்
கழையின்முத் தமுதிரக் †கயல்குதித் துலவுநற்
கனவயற் றிகழ்திருக் கரபுரத் தறுமுகப்
பெருமாளே.(1)

## 673. ஆண்டருள

தனதனன தான தனதனன தான
தனதனன தான தனதானா

குலையமயி ரோதி குவியவிழி வீறு
குருகினிசை பாடி முகமீதே-

குறுவியர்வு லாவ அமுதினினி தான
குதலையுமொ ராறு படவேதான்;

பலவிதவி நோத முடனுபய பாத
பரிபுரமு மாட அணைமீதே-

பரிவுதரு மாசை விடமனமொ வாத
பதகனையு மாள நினைவாயே;

‡சிலைமலைய தான பரமர்தரு பால
சிகிபரிய தான குமரேசா-

---

* 'பறிதலை'ச் சமணர் - பாடல் 172-பக்கம் 398 கீழ்க்குறிப்பு.

† மீன் குதித்தலால் கமுகங்குலை விழுதல்:- 'கமுகு செங்கனி யுதிர்த்திட....வாளை குதிகொள்ள' - சம்பந்தர்-3-70-3.

'வாளையம் பகடு தாவிக் கள்ளூலாம் பசிய தாற்றுக் கமுகிளம் பாளைகீறும்' - நைடதம் - சுயம்வரம் 137

கமுகம் குலைவிழ கதலியின் கனி உகுதல் 'தெங்கம்பழங் கமுகின்குலை சாடிக் கதலி செற்று' - திருக்கோவை - 100.

‡ சிலைமலை - திரிபுரம் - எரித்தபோது - பாடல் 285-பக்கம் 206-கீழ்க்குறிப்பு.

ஆராய்ச்சி செய்துள்ள ஆறு சமயத்தாருக்கும் பொருந்தியுள்ள (கிறி) தந்திரம் உடையவர்களும், மயிர் பறிபடும் தலையருமான சமணர்களின் குலம் முன்பு பொடிபட்டு ஒடுங்க; வாதப்போர் செய்து, அவர்களுடைய உயிருள்ள உடலைக் கழுமுனையில் வைத்திட்டவனே!

(கமுகமரத்தின்) பாக்குமரத்தின் குலை அற்றுவிழ - (அந்த குலை தன்மீது விழுவதால்) கதலியில் - வாழை மரத்தினின்றும் பழங்கள் விழ (அந்தப் பழங்கள் தன்மீது விழும் அதிர்ச்சியால்) கரும்பினின்றும் முத்துக்கள் விழ - (அல்லது, கமுகங்குலை விழவும், கதலிக்கனி விழவும், கரும்பு முத்து உதிரவும்) (அத்தகைய வேகத்துடன) கயல்மீன்கள் குதித்து விளையாடும் நல்ல பெருமைவாய்ந்த வயல்கள் விளங்கும் அழகைக் கொண்ட **கரபுரம்** எனப் பெயருள்ள விரிஞ்சிபுரத்தில் (வீற்றிருக்கும்) ஆறுமுகப் பெருமாளே!

(நினைத்திட அருட் டருவாயே)

## 673.

(குலையமயி ரோதி) - ஓதி மயிர் குலைய - கூந்தல் மயிர் குலைந்துபோக, கண்கள் குவிய, விளக்கத்துடன் குருகின் இசை- கோழி முதலிய எட்டுப் பறவைகளின் புட்குரல் இசைபாடி (ஒலிசெய்து) முகத்தின் மேலே-

சிறு வியர்வை தோன்றி உலவ, அமுதம்போல இனிமை கொண்ட குதலைச் சொற்களும் ஒரு வழியாகத் தோன்றவே (அல்லது ஆறுபோலப் பெருகவே)-

பலவகைப்பட்ட விநோதங்களுடன் இரண்டு கால்களிலும் உள்ள சிலம்பும் அசைந்தொலிக்கப் படுக்கையின் மேல்-

அன்பு எழுகின்ற ஆசையை விடுவதற்கு மனம் ஒத்துக்கொள்ளாத இப் பாதகனையும் ஆண்டருள நினைந்தருளுக.

வில்லாக (மேரு) மலையைக்கொண்ட பரமர் தந்த குமரனே! மயிலைக் குதிரையாகக் கொண்ட குமரேசனே!

*திருமதுரை மேவு மமணர்குல மான
திருடர்கழு வேற வருவோனே;
† கலின்வடிவ மான அகலிகைபெ ணான
கமலபத மாயன் மருகோனே.
‡ கழனிநெடு வாளை கமுகொடிய மோது
கரபுரியில் வீறு பெருமாளே.(2)

## 674. திருவடியைப் பெற

தனன தந்த தானன தனன தந்த தானன
தனன தந்த தானன தனதான

நிகரில் பஞ்ச பூதமு நினையு நெஞ்சு மாவியு
நெகிழ வந்து நேர்படு மவிரோதம்
நிகழ்த ரும்ப்ர பாகர நிரவ யம்ப ராபர
நிருப அங்கு மாரவெ ளெனவேதம்;
சகர சங்க சாகர மெனமு ழங்கு வாதிகள்
சமய பஞ்ச பாதக ரறியாத
தனிமை கண்ட தானகிண் கிணிய தண்டை சூழ்வன
சரண புண்ட ரீகம தருள்வாயே;
மகர விம்ப சீகர முகர வங்க வாரிதி
மறுகி வெந்து வாய்விட Xநெடுவான
வழிதி றந்து சேனையு மெதிர்ம லைந்த சூரனு
மடிய இந்தி ராதியர் குடியேறச்;

---

* சமணர் கழு ஏறினது. பாடல் 181 - பக்கம் 422 கீழ்க்குறிப்பு.

† அகலிகை பெண் ஆனது:- பாடல் 379 பக்கம் 458- பாடல் 624 பக்கம் 448 கீழ்க்குறிப்பு. ‡ 'கழனி நெடுவாளை கமுகொடிய மோது கரபுரியில் வீறு பெருமாளே' - என இவ்வாறே முடிவதாக பல பாடல்கள் இருக்கக்கண்டு என் தந்தையார் அப் பாடல்கள் அருணகிரியார் வாக்காக இரா என்று அச்சிற் சேர்க்காது விட்டு விட்டனர். யாமும் அவைதமைச் சேர்க்கவில்லை.

X சூரனொடு போர் புரிந்தபோது அண்டத்துக்கு அப்பால் இருந்த அசுர சேனைகள் வராதவண்ணம் அண்டவாயிலை முருகவேள் அடைத்தனர். அப்போது சூரன் கணைகள் ஏவி ஆகாயவழியைத் திறந்து தன் சேனைகளை வரவழைத்தான். "வள்ளல் பகழி தன்னால் அண்டம தடைந்த வாயில் அடைத்ததும்....தகுவர் கோமான் கண்டனன்" அவுணர் செம்மல் செஞ்சரந் தூண்டி அண்டநெறிப் படுவாயில் பொத்து நெடுங்கணைக் கதவ முற்றும் அறுத்து நுண் தூளி ஆக்கி....கபாடம் நீக்கி

அழகிய மதுரையில் இருந்த சமணர் குலமான திருடர்கள் கழுவிலேற வந்தவனே!

கல் ரூபமாய்க்கிடந்த அகலிகை பெண்ணாக வரும்படிச் செய்த தாமரையன்ன திருவடியைக் கொண்ட திருமால் (ஸ்ரீ ராமரின்) மருமகனே!

கழனியில் இருக்கும் பெரிய வாளைமீன்கள் கமுகமரம் ஒடியும்படி மோதுகின்ற கரபுரியில் (விரிஞ்சிபுரத்தில்) வீற்றிருக்கும் பெருமாளே!

(பதகனையும் ஆள நினைவாயே)

## 674.

ஒப்பில்லாத (மண், நீர், தீ, காற்று, வான்) என்னும் ஐந்து பூதங்களும், நினைக்கின்ற நெஞ்சும், (ஆவியும்) உயிரும் நெகிழும்படி வந்து கூடுகின்ற 'விரோத மின்மை'யை (அவிரோத ஞானத்தை)க்

கூட்டுவிக்கின்ற (பிரபாகர) (ஞான) ஒளி உருவனே! (ஞான சூரியனே)! (நிரவயம்) அழிவிலாத (பராபரனே)! மேலாம் பொருளே! பரம்பொருளே! அரசே! அழகிய குமரவேளே என்று வேதங்கள் முழங்குவதும்-

சகரரால் ஏற்பட்டதும், சங்குகள் உள்ளதுமான கடல்போல ஒலி எழுப்பி வாதஞ் செய்வோராம் சமயவாதிகளாகிய பஞ்சபாதகர்கள் அறியாததும்-

தனிமை கண்டதுமான (ஊழிக் காலத்தில் தனித்து நிற்பதுமான) - கிண்கிணியும் தண்டையும் சூழ்ந்துள்ள உனது திருவடித் தாமரை யதனைத் தந்தருளுக;

மகரமீன்கள் உள்ளதும், (விம்ப, ஒளி கொண்டதும் - (சீகரம்) அலையுள்ளதும், (முகரம்) ஒலி கொண்டதும் - அல்லது சங்குகள் உள்ளதும், (வங்கம்) மரக்கலங்கள் செல்வனவுமான கடல் கலங்கி, சூடுண்டு, கொந்தளிக்கவும், பெரிய ஆகாய

வழியைத் திறந்து (வந்த) சேனைகளும், எதிர்த்துப் போர்செய்த சூரனும் மாண்டுபோக, இந்திரனாதி தேவர்கள் (விண்ணிற்) குடியேற-

---

பூாவொடு களிறுந் தேரும் வயவரும் வரம்பின்றாகி...வருக என்று தோள்கொட்டி ஆர்த்தான்; அவுணவெள்ளம் துண்ணென ஈண்டை ஏகி...சூழ்ந்த"

- கந்தபுரா. 4-13-249-251.

சிகர துங்க மால்வரை தகர வென்றி வேல்விடு
சிறுவ சந்த்ர சேகரர் பெருவாழ்வே-

திசைதொ றும்ப்ர பூபதி திசைமு கன்ப ராவிய
திருவி ரிஞ்சை மேவிய பெருமாளே. (3)

## 675. பசிப்பிணி போக்க

தனன தனதனத் தனன தனதனத்
தனன தனதனத் தனன தனதனத்
தனன தனதனத் தனன தனதனத் தனதானா

பரவி யுனதுபொற் கரமு முகமுமுத்
தணியு முரமுமெய்ப் ப்ரபையு மருமலர்ப்
பதமும் விரவுகுக் குடமு மயிலுமுட் பரிவாலே-

படிய மனதில்வைத் துறுதி சிவமிகுத்
தெவரு மகிழ்வுறத் தரும நெறியின்மெய்ப்
*பசியில் வருமவர்க் கசன மொருபிடிப்
படையாதே;

சருவி யினியநட் புறவு சொலிமுதற்
பழகு மவரெனப் பதறி யருகினிற்
சரச விதமளித் துரிய பொருள்பறித் திடுமானார்;

தமது ம்ருகமதக் களப புளகிதச்
சயில நிகர்தனத் திணையின் மகிழ்வுறத்
தழுவி யவசமுற் றுருகி மருளெனத் திரிவேனோ;

கரிய நிறமுடைக் கொடிய அசுரரைக்
கெருவ மதமொழித் துடல்கள் துணிபடக்
கழுகு பசிகெடக் கடுகி அயில்விடுத் திடுதீரா-

கமல அயனுமச் சுதனும் வருணனக்
கினியு நமனுமக் கரியி லுறையுமெய்க்
கணனு மமரரத் தனையு நிலைபெறப்
புரிவோனே;

---

* "பசித்து வந்தே ஏற்கு மவர்க்கெனின் எங்கேனும் எழுந்திருப்பார்" "இருபிடிசோறு கொண்டிட்டுண்டிரு" - கந்தரலங்காரம் 66, 57.

சிகரங்களை உடைய உயர்ந்த மாயையில் வல்ல கிரௌஞ்சமலை பொடிபட்டழிய, ஜெயவேலைச் செலுத்தின இளையோனே! சந்திரனை முடியிற் சூடியுள்ள சிவனது பெருஞ் செல்வமே!

திசைகள் தோறும் உள்ள மேன்மை பொருந்திய அரசர்களும், பிரமனும் பரவிப் போற்றின **திருவிரிஞ்சையில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(சரணபுண்டரீகம தருள்வாயே)

# 675.

**உ**ன்னைப் போற்றி உன்னுடைய அழகிய திருக்கரங்களையும் திருமுகங்களையும் முத்துமாலை அணிந்துள்ள திருமார்பையும், தேக ஒளியையும், நறுமண மலர்போன்ற திருவடிகளையும், உனதிடத்திற் பொருந்தியுள்ள சேவலையும், மயிலையும் உள்ளத்து அன்புடனே-

அழுந்திப் படியும்படி மனத்தில் வைத்துத் திடமான (சிவம்) சிவபத்தி மிகப் பெற்று, யாவரும் மகிழ்ச்சியுற, அறநெறியில் நின்று, உண்மையான பசியுடன் வருகின்றவர்-களுக்கு, உணவு, ஒருபிடி அளவேனும் இடாமல்-

(சருவி) கொஞ்சிக் குலவி, இனிய நட்பும்- உறவும் காட்டும் வார்த்தைகளைச் சொல்லி முதலிலிருந்தே பழகியவர்கள் போலப் (பதறி) அங்கலாய்த்து அருகில் இருந்து காமலீலைகளை விதம் விதமாகச் செய்து, வேண்டிய பொருளைப் பறிக்கின்ற (பொது) மகளிருடைய-

(மகளிர்தம்) கஸ்தூரிக் கலவை கொண்டதும், புளகாங்கிதம் கொண்டதும், மலைக்கு ஒப்பானதும் ஆன கொங்கை இரண்டையும் மகிழ்ச்சியுடன் தழுவி, தன்வசம் இழந்து, உருகி, அந்த மோக மயக்கத்துடனே திரிவேனோ!

கறுத்த நிறமுள்ள பொல்லாத அசுரர்களின் கர்வத்தையும், ஆணவத்தையும் ஒழித்து, அவர்கள் தேகம் துண்டுபடவும், கழுகுகளின் பசி கெடவும், வேகமாகச் சென்று வேலாயுதத்தைச் செலுத்தின தீரனே!

தாமரைமலரில் உள்ள பிரமனும், திருமாலும், வருணனும், அக்கினியும், யமனும், அந்த (வெள்ளை) யானையில் ஏறிவரும் உடற் கண்ணனும் (உடலெலாம் கண்கொண்ட - ஆயிரங் கண்ணனாகிய இந்திரனும், தேவர்கள் அனைவரும் தத்தம் பதவி நிலைக்கப்பெற்று விளங்கச் செய்தவனே!

இரையு முததியிற் கடுவை மிடறமைத்
*துழுவை யதளுடுத் தரவு பணிதரித்
திலகு பெறநடிப் பவர்மு னருளுமுத் தமவேளே;

இசையு மருமறைப் பொருள்கள் தினமுரைத்
தவனி தனி†லெழிற் கரும முனிவருக்
கினிய கரபுரப் பதியி லறுமுகப் பெருமாளே. (4)

## 676. திருவடியைப் பெற

தனன தந்த தான தனன தந்த தான
தனன தந்த தான தனதான

மருவு மஞ்சு பூத முரிமை வந்தி டாது
மலமி தென்று போட அறியாது-
மயல்கொ ளிந்த வாழ்வு அமையு மெந்த நாளும்
வகையில் வந்தி ராத அடியேனும்;

உருகி யன்பி னோடு உனைநி னைந்து நாளும்
உலக மென்று பேச அறியாத-
உருவ மொன்றி லாத பருவம் வந்து சேர
உபய துங்க பாத மருள்வாயே;

‡அரிவி ரிஞ்சர் தேட அரிய தம்பி ரானும்
அடிப ணிந்து பேசி கடையூடே-
அருளு கென்ற போது பொருளி தென்று காண
அருளு மைந்த ஆதி குருநாதா;

---

* புலித்தோல், அரவாபரணம் பூண்டது-
....பாடல் 286 - பக்கம் 210 கீழ்க்குறிப்பு.

† எழிற்கரும முநிவர் - திரிவிரிஞ்சை மான்மியத்தை அறுமுகன் பால் கேட்ட வசிட்டர் பல முநிவர்களுக்கும் அந்த மான்மியத்தை எடுத்துக் கூறினதாகத் திருவிரிஞ்சைப் புராணம் கூறும். வசிட்டருக்கு முருகவேள் உபதேசித்த காரணத்தால் - 'எழிற்கரும முநிவர் - வசிட்டர் என்றும் கொள்ளலாம் ஸ்தல மான்மியம் கேட்ட முநிவர்கள் என்றும் கொள்ளலாம்.

‡ சிவபிரான் உபதேசிப்பாயாக என முருகவேளைக் கேட்ட வரலாற்றைப் பாடல் 628- பக்கம் 462 கீழ்க்குறிப்பு பார்க்க.

ஒலிக்கின்ற கடலில் (எழுந்த) விஷத்தைக் கழுத்தில் நிறுத்திவைத்துப், புலியின்தோலை உடுத்து, பாம்பாகிய ஆபரணத்தைப் பூண்டு, விளக்கம் உற நடனம் செய்பவராகிய சிவபிரான் முன்பு ஈன்றளித்த உத்தம வேளே!

பொருந்திய அரிய வேதங்களின் பொருள்களை நாள்தோறும் ஆய்ந்துரைத்து, இப் பூமியில் அழகிய தமது கடமைகளைச் செய்யும் முநிவர்க்கு இனிய (பெருமாளே!) (கரபுரம்) **திருவிரிஞ்சைப்** பதியில் ஆறுமுகப் பெருமாளே!

(அசனம் ஒரு பிடிப் படையாதே திரிவேனோ)

## 676.

**பொ**ருந்தியுள்ள (மண், நீர், தீ, காற்று, வான்) என்னும் ஐந்து பூதங்களுக்குச் சொந்தமாகாத வண்ணம் - இது (இவ்வுடல்) மலம் (அழுக்கு) என்று உதறித்தள்ள அறியாமல்-

மயக்கம் கொண்ட இந்த வாழ்வு போதும் என்று எந்த தினத்திலும் அத்தகைய எண்ணம் நன்றாக மனத்தில் தோன்றுதல் இல்லாத அடியேனும்-

உள்ளம் உருகி அன்போடும் உன்னை நினைந்து நாளும் - (நாளும் உன்னை நினைந்து) (உலகம்) பிரபஞ்ச விஷயங்கள் என்று பேசும் பேச்சே பேச அறியாத-

இவ் வடிவினதாம் இது என்பது இல்லாத நிலை வந்துகூட (நிலையை நான் அடைவதற்கு) உனது இரண்டு பரிசுத்தமான திருவடிகளைத் தந்தருளுக.

திருமாலும், பிரமனும் தேடுதற்கு அரியவரான தம்பிரானாம் சிவபெருமானும் உனது திருவடிகளிற் பணிந்து பேசிக், கடைசியாக - (அந்த பிரணவப் பொருளை எனக்கு உபதேசித்து)

அருளுக என்று கேட்டபோது (பொருளிதென்று) இதுதான் பொருளென்று அவர் உணர்ந்து கொள்ளும்படி உபதேசித் தருளிய குழந்தையே! (அல்லது வீரனே!) (அங்ஙனம்) அந்த ஆதி சிவனுக்கும் (குருநாதன் ஆனவனே) குருநாதனே!

*திரியு மும்பர் நீடு கிரி பிளந்து சூரர்
செரு வடங்க வேலை விடுவோனே-
செயல மைந்த வேத தொனிமு ழங்கு வீதி
திருவி ரிஞ்சை மேவு பெருமாளே. (5)

## திருவாலங்காடு.

(ரெயில்வே ஸ்டேஷன் சென்னைக்கு மேற்கு 37-மைல். மூவர் தேவாரம் பெற்ற முதுநகர். காரைக்கால் அம்மையார் பதிகம் பாடி அப்பன் திருவடிக் கீழமர்ந்தருளும் தலம். பஞ்ச சபைகளுள் இது "ரத்ந" சபை. 'பழையனூர்' என்னும் ஸ்தலம் திருவாலங் காட்டுக்குக் கிழக்கு 1 மைல் தூரத்திலுள்ளது. ஸ்தல புராணம் உண்டு.)

### 677. தியானிக்க

தனதானந் தானன தானன
தனதானந் தானன தானன
தனதானந் தானன தானன தனதான

கனவாலங் கூர்விழி மாதர்கள்
†மனசாலஞ் சால்பழி காரிகள்
கனபோகம் போருக மாமிணை முலைமீதே-

கசிவாருங் கீறுகி ளாலுறு
வசைகாணுங் காளிம வீணிகள்
‡களிகூரும் பேயமு தூணிடு கசுமாலர்;

மனவேலங் கீலக லாவிகள்
மயமாயங் கீதவி நோதிகள்
மருளாருங் காதலர் மேல்விழு மகளீர்வில்-

* எழுகிரியின் வரலாற்றை - பாடல் 257-பக்கம் 140-கீழ்க்குறிப்பிற் காண்க. சூரனுடன் இம் மலை அவனுக்கு அரணாகித் திரிந்த தென்பதைத் தக்கயாகப்பரணி 5ன் விசேடக் குறிப்பைப் (பக்கம் 259) பார்க்க.

† மனசால் - அஞ்சால் - ஐந்தால் - ஐம்பொறிகளால்; 'நெஞ்சால் - அஞ்சால் - என்றார் 678 ஆம் பாடலில்.

‡ பேயமுதூண் - 'ஆவேச நீர்' என்றார் பிறிதோரிடத்து -பாடல் 362.

(சூரன் செல்லும் இடமெல்லாம் உடன்) திரிந்து (உம்பர்) விண் அளாவி நீண்டிருந்த எழுகிரியைப் பிளந்து சூரருடைய போர் ஒடுங்கும்படி வேலாயுதத்தைச் செலுத்தியவனே!

(செயல்) ஒழுக்கம் அமைந்த - ஒழுக்கத்துடன் ஓதப்பட்ட வேதத்தின் ஒலி முழங்கும் வீதியைக் கொண்ட **திரிவிரிஞ்சையில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(உபய துங்க பாதம் அருள்வாயே)

## திருவாலங்காடு

## 677.

**பெ**ருத்த கொடிய (ஆலம்) விஷம் மிக்குள்ள கண்களைக் கொண்ட மாதர்கள், (மன - சாலம்) மனத்திலே (ஜாலம்) வஞ்சனை நடிப்பு வண்ணம் மிக்குள்ள பழிகாரிகள், (அல்லது மனசால் - அஞ்சால் மனதாலும் ஐம்பொறிகளாலும் - பழிகாரிகள் - பழிப்புக்கிடமான செயல் செய்பவர்கள்), (கன - போக - அம்போருகம்) மிகுந்த போக சுகத்தைத் தரக்கூடியதும், தாமரை மொட்டுக்கு ஒப்பானதுமான கொங்கையின் மீதே-

(கசிவு ஆரும்) மன நெகிழ்வு - அன்பு மிகுதிக்கு அடையாளமாக அமைந்துள்ள (கீறு) கீறல்களாலும் (கிள்ளால்) கிள்ளின் குறிகளாலும் பழிப்புக்கு இடம் தரும் (காளிமவீணிகள்) கறுப்பை - களிம்பை அழுக்கைக் கொண்ட வீணர்கள் - (களி) களிப்பை - ஆவேசத்தைத் தரும் (பேய் அமுது ஊண்) தீய, வெறித்தன்மையைத் தரும் உணவை ஊணாகத் தருகின்ற அசுத்தர்கள்-

(மனவேலங் கீல கலாவிகள்) மனம் - ஏல் - அம் - கீலக-கலாவிகள் - மனத்தில் - (ஏல்) - பொருந்திய - (கீலக) தந்திரம் வாய்ந்த (அம்) அழகிய (கலாவிகள்) தந்திரவாதிகள், மயமாயம் (மாயமயம்) மாயம் நிறைந்த - வஞ்சனை - பாசாங்கு நிறைந்த - (கீத விநோதிகள்) - இசை ஞானத்தில் இன்பம் கொள்பவர்கள் (மருள் ஆரும்) காம மயக்கம் நிறைந்த காதலர்கள் (தம் மீது மோகம் கொண்டு வந்தவர்கள்) மேலே விழுகின்ற (பொது) மகளிர் - ஒளி பொருந்திய-

மதிமாடம் வானிகழ் வார்மிசை
மகிழ்கூரும் பாழ்மன மாமுன
மலர்பேணுந் தாளுன வேயரு ளருளாயோ;

தனதானந் தானன தானன
எனவேதங் கூறுசொல் மீறளி
ததைசேர்தண் பூமண மாலிகை யணிமார்பா-

*தகரேறங் காரச மேவிய
குகவீரம் பாகும ராமிகு
தகைசாலன் பாரடி யார்மகிழ் பெருவாழ்வே;

தினமாமன் பாபுன மேவிய
தனிமானின் † தோளுட னாடிய
‡ தினைமாவின் பாவுயர் தேவர்கள் தலைவாமா-

---

* முருகவேள் ஆட்டுவாகனம் கொண்ட வரலாறு:- நாரதர் ஒரு வேள்வி செய்தார். அந்த யாகத்தில் ஒரு ஆடு எழுந்தது. அது வடவாக்கினி போலக் கொதித்தெழுந்தது. யாவரும் அச்சம் உற்றனர். அந்த ஆட்டை அடக்கும்படித் தேவர்கள் வேண்ட வீரவாகுவை அனுப்பி அந்த ஆட்டைப் பிடித்துவரச் செய்து அதன்மேல் முருகவேள் ஏறி விளையாடினர்; அந்த ஆடு "ஒரு பேருருவு கொண்டே இப் புவியும் வானும் துரந்து....தாக்கி வரை பராகமெழ ஓடி திசைக்கரி இரிந்தலறி யேங்க - இரவி தேரொடு தகர்ந்து முரிவாக - முட்டும் பாயும் யாண்டும் உலவுற்றே...உயிர்கட் கிறுதி செய்து பெயர்காலை வீரவாகு கோடவை பற்றி யீர்த்து..... இளையவன் முன்னர் உய்த்தான் அன்று தொட் டமலமூர்த்தி உவகையால் அனைய மேடம் ஊர்ந்தனன் ஊர்தியாக" கந்தபுரா - தகரேறுபடலம் 4-25).

'நெருப்பிலுதித் தங்கட் புவனம் அனைத்தும் அழித்துலவும்
செங்கட் கிடாயதனைச் சென்று கொணர்ந்
தெங்கோன் விடுக்குதியென் றுய்ப்ப அதன்மீதிவர்ந்து
எண்டிக்கு நடத்தி விளையாடு நாதா! - கந்தர் கலிவெண்பா

† 'குறமாது.....கவினாரு புயத்தில் உலாவி விளையாடி' என்றார் பிறிதோரிடத்து (பாடல் 293)

‡ முருகவேள் தினைப்ரியர் ...'தேமார் தேமா காமீ" - என்றார் 381 ஆம் பாடலில்.

(மதிமாடம் வானிகழ்வார்) மாடம் மதி - வான் - நிகழ்வார் (உபரிகை உள்ள) வீடுகள் - மேல்மாடம் உள்ள வீடுகள் நிலவையும் வானத்தையும் (அளாவி) விளங்க இருப்பவர்கள் மீது மகிழ்ச்சி நிரம்பக்கொள்ளும் பாழான மனம் ஆம் (இது) - (உன) உன்னுடைய (மலர் பேணும்) தாமரைமலரை ஒத்த - (தாள்) திருவடியை, (உனவே) உன்னவே - தியானிக்கவே - (அருள்) உனது திருவருளை (அருளாயோ) பாலிக்க மாட்டாயோ!

தனதானந் தானன தானன என்று - வேதம் கூறு சொல் - வேதஞ் சொல்லுவோரது சொல்லொலியினும் மிகுந்ததான ஒலியுடன் (அளி) வண்டுகள் - நிறைந்து சேர்ந்துள்ள குளிர்ந்த பூவாலாகிய நறுமண மாலைகளை அணிந்த மார்பனே!

தகரேறங் காரச மேவிய குக-தகர்-ஏறு-அங்கு-ஆர்-அசம் மேவிய குக! (தகர்) நொறுங்குதலும் *(ஏறு) அழிவும் - அங்கு - அப்போது - ஆர் - நிறையச் செய்த - அசம் - ஆட்டின்மேல் - மேவிய - ஏறி அமர்ந்த - குகனே! (அல்லது ஆர் தகர் ஏறு அசம் மேவிய குக - அன்று நிறைவுடன் எழுந்த (தகர் ஏறு) ஆட்டுக்கிடா ஆகிய (ஆண் ஆடாகிய) அஜத்தின்மேல் - ஏறியமர்ந்த குகனே! வீரனே! (அம்பா குமரா) தேவி பார்வதியின் குமரனே! மிக்க (தகை) மேம்பாடு நிறைந்த அன்பு நிறைந்த அடியார்கள் மகிழ்கின்ற பெருஞ் செல்வமே!

(தினம் ஆம் அன்பாக) - தினந்தோறும் (உன்மீது) கொண்ட அன்புடனே தினைப்புனத்தில் இருந்த ஒப்பற்ற (மானின்) மான்போன்ற வள்ளியுடைய (தோளுடன் ஆடிய) தோளுடன் விளையாடிய (தினை மா இன்பா) தினைமாவில் பிரியம் உடையவனே! மேலான தேவர்களின் தலைவனே! (அல்லது தலை + வாமா - தலைவனான வாமா - அழகனே) (மா) பெருமை-

---

* ஏறு - அழிவு படுதல் - "சீறருங் கணிச்சியோன் சினவலின் அவ் வெயில் ஏறு பெற்றுதிர்வன போல்" கலித்தொகை 2.

திகழ்வேடங் *காளியொ டாடிய
†ஜெகதீசங் கேசந டேசுரர்
திருவாலங் காடினில் வீறிய பெருமாளே. (1)

## 678. அருள் பெற

தந்தானந் தாத்தம் தனதன
தந்தானந் தாத்தம் தனதன
தந்தானந் தாத்தம் தனதன தனதான

பொன்றாமன் றாக்கும் புதல்வரும்
நன்றாமன் றார்க்கின் றுறுதுணை
‡பொன்றானென் றாட்டம் பெருகிய புவியூடே-
பொங்காவெங் கூற்றம் பொதிதரு
சிங்காரஞ் சேர்த்திங் குயரிய
புன்கூடொன் றாய்க்கொண் டுறைதரு முயிர்கோல;

நின்றானின் றேத்தும் படிநினை
வுந்தானும் போச்சென் றுயர்வற
நிந்தாகும் பேச்சென் பதுபட நிகழாமுன்-
நெஞ்சாலஞ் சாற்பொங் கியவினை
விஞ்சாதென் பாற்சென் றகலிட
நின்தாள்தந் தாட்கொண் டருள்தர நினைவாயே;

---

* சிவபெருமான் காளியுடன் நிருத்தம் செய்தருளிய தலம் இத்தலம்.
"ஆடினார் காளி காண ஆலங்காட் டடிகளாரே"
- அப்பர் 4-68-8.

'அண்டம் புழைபட இடத்தாள் நீட்டி யற்புதன் காளிதோற்க ஆடியதிது' - திருவிளை - அருச்சனை 13.

† 'சங்கமேச' என்பது சந்தம் நோக்கி 'சங்கேச' என ஆயிற்றுப் போலும். 'சங்கமேசர்' - காவிரியுடன் பவானி நதியும் கூடும் இடமாகிய பவானி (திருநணா) என்னும் தலத்துச் சிவன்.

இனி 'சங்கு' என்பது ஒரு பேரெண். 'சங்கேச' என்பதற்குப் பல உயிர்களுக்கும் 'தலைவனே' எனவும் பொருள் கொள்ளலாம்.

‡ பொன் தான் என்று - எனப்பிரிக்க. புவியிற் கூற்றம் பொதிதரு சிங்காரம் - இதனுடன்

'நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை உடைத்திவ் வுலகு - என்னும் திருக்குறளை (336) ஒப்பிடுக.

திகழ்கின்ற வேடத்துடன் காளியுடனே நடனம் ஆடின - ஜெகதீச - சங்கேச - நடேசுரர் - ஜெகதீசனும் சங்க மேசனுமான (அல்லது சங்கேசனுமான) நடேசப் பெருமானுடைய (தலமாகிய) **திருவாலங் காட்டில்** விளங்கி நிற்கும் பெருமாளே!

*(தாள் உ(ன்)னவே அருள் அருளாயோ)*

# 678.

*(**பொன்**றா)* அழிவிலாத வகையில், *(மன்று ஆக்கும்)* சபையில் புகழைப் பெருக்கும் *(புதல்வரும்)* பிள்ளைகளும், *(நன்றாம் அன்று)* நல்லபடி நிலையான உதவியன்று (நிலைத்த உதவியாகாது); *(ஆர்க்கு இன்று உறுதுணை பொன்தான்)* யாருக்கு இக்காலத்தில் உற்ற துணையாகப் பொன்தான் உள்ளது - அதுவும் நிலைத்திருப்பதன்று (மக்கட் செல்வம், பொருட்செல்வம் இவையெலாம் நிலையில்லாதன) - என்னும் இந்தக் கூத்தாட்டமே நிறைந்துள்ள *(இப்)* பூமியிலே - பூலோக வாழ்க்கையிலே-

*(பொங்கா)* கோபித்து எழும் கொடிய யமன் (உயிரைக் கொண்டுபோக) மறைந்து நிற்கும் அலங்காரம் கொண்டதாய் இங்கு மேம்பட்டு நிற்கும் இழிவு நிறைந்த கூடு ஒன்றைக் கொண்டு அதனுள் உறைகின்ற உயிர் இடங்கொள்ள-

*நிற்கின்றான்* (இவன்), இப்போது உன்னைப் போற்றும்படியான நினைவுகூட (இவனுக்கு) இல்லாமற் போயிற்று என்னும்படியான மேன்மையற்ற நிந்தையாடுகின்ற பேச்சு என்பது உண்டாகிப் பரவுதற்கு முன்பாக-

மனத்தாலும், *(அஞ்சாலும்)* மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளாலும் உண்டாகிப் பெருகும் வினையானது (அதிகமாகாமல்) வளராமல், என்னிடத்தினின்றும் விட்டு நீங்க, (அவ்வினை ஒழிய) உனது திருவடிகளைத் தந்து என்னை ஆட்கொண்டு உனது திருவருளைத்தர நினைந்தருள வேண்டுகின்றேன்-

*குன்றால்வின் டாழ்க்குங் குடைகொடு
கன்றாமுன் காத்துங் †குவலய
முண்டார்கொண் டாட்டம் பெருகிய மருகோனே-
கொந்தார்பைந் தார்த்திண் குயகுற
மின்தாள்சிந் தாச்சிந் தையில்மயல்
கொண்டே சென்‡றாட்கொண் டருளென
மொழிவோனே;

அன்றாலங் Xகாட்டண் டருமுய
நின்றாடுங் கூத்தன் திருவருள்
அங்காகும் பொட்டின் பயனினை யருள்வாழ்வே-
அன்பால்நின் தாட்கும் பிடுபவர்
தம்பாவந் தீர்த்தம் புவியிடை
**அஞ்சாநெஞ் சாக்கந் தரவல பெருமாளே. (2)

---

* **குன்றேந்தி பசுக்களைக் காத்தது:-** திருவாய்ப்பாடியில் மழை வேண்டி ஆயர்கள் இந்திரனை வழிபடச் சமைத்த சோற்றைக் கண்ணன் இந்திரன் செருக்கை அடக்க நினைத்துக் கோவர்த்தன மலைக்கு அதை நிவேதித்து அதைத் தானே தேவதாரூபமாய் அமுது செய்தான். இந்திரன் கோபித்து கண்ணன் மேய்க்கும் கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் இடையர்களுக்கும் தீங்கு வரும்படி ஏழு நாள் கல்மழையைப் பெய்விக்க, கண்ணன் கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்து மழையை அங்ஙனம் தடுத்து உயிர்களைப் புரந்தனன்.

"இந்திரனுக் கென்று ஆயர்கள் எடுத்த எழில் விழாவில் பழ நடை செய், மந்திர விதியில் பூசனை பெறாது மழை பொழிந்திடத் தளர்ந்து ஆயர், எந்தம்மோடு இன ஆ நிரை தளராமல் எம்பெருமான் அருளென்ன, அந்தமில் வரையால் மழைதடுத்தானைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே" - பெரிய *திருமொழி 2-3-4.*

"காளநன் மேகமவை கல்லொடு கால் பொழியக்
கருதிவரைக் குடையாக் காலிகள் காப்பவனே"

- பெரியாழ்வார் *1-5-2.*

† **குவலயம் உண்டது;** - பாடல் *267* - பக்கம் *164* கீழ்க்குறிப்பு.

‡ **வள்ளியை வேண்டினது:**

"உய்திறம் வேறெனக் குளகொல் ஈண்டு நின்
கைதனில் இவ்வுயிர் காத்துக் கோடியால்" - கந்தபுரா *6-24-86.*

( தொடர்ச்சி பக்கம் 63 பார்க்க.)

மலையை (விண்) மேகங்களைத் தடுக்கும் குடையாகக் கொண்டு, கன்றுகளையும் பசுக்களையும் முன்பு காத்தவரும், பூமியை உண்டவருமான திருமாலின் பாராட்டு மிக்குள்ள மருகனே!

பூங்கொத்து நிறைந்த பசிய மாலை யணிந்துள்ள திண்ணிய கொங்கைகளை உடைய (குறமின்) வள்ளியின் திருவடிகள் (சிந்தாச் சிந்தையில்) நீங்காத தன் மனத்தில் காம மயக்கம் கொண்டு (அவளிடம்) போய் (என்னை) 'ஆட்கொண்டு அருளுக' எனக் கூறினவனே!

அன்று திருவாலங்காட்டில் தேவர்களும் பிழைக்க நின்று ஆடின (கூத்தன்) சிவபெருமானது திருவருள் அங்கு கூடும்படியான பதிகப் பாடல்களின் பயனை எடுத்து ஓதி அருளிய செல்வமே!

அன்பால் உனது திருவடியைக் கும்பிடுவர்களுடைய பாவத்தைத் தொலைத்து இப் பூமியிலே (அவர்களுக்கு) அஞ்சாத நெஞ்சத்தையும் (ஆக்கம்) செல்வங்களையும் தரவல்ல பெருமாளே!

(நின் தாள் தந்து ஆட்கொண்டருள்தர நினைவாயே)

---

X **அண்டர் உய்ய ஆடினது:**

"கொடிய வெஞ்சினக் காளியிக் குவலயம் முழுதும்
முடிவு செய்வனென் றெழுந்த நாள் முளரியான் முதலோர்
அடைய அஞ்சலும் அவள் செருக் கழிவுற, அழியாக்
கடவுள் ஆடலால் வென்ற தோர் வடவனம் (கண்டான்)"

- கந்த புரா. வழிநடை - 8.

O **பாட்டின் பயனினை யருளினது:** சம்பந்தப் பெருமானாகத் தாம் பாடின ஒவ்வொரு பதிக ஈற்றிலும் அப் பதிகப் பயனை ("ஞான சம்பந்தன் உரை செய்த திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே" முதல் "ஞான சம்பந்தன்..ஒண்டமிழ் வல்லார்க் கறும்பழி பாவ மவல மிலரே" வரை) என உலகுக்கு எடுத்துக்காட்டியுள்ளார். (I-1-11.3-125---11)

** "அஞ்சா நெஞ் சாக்கந் தரவல பெருமாளே" - இது மனப்பாடம் செய்ய வேண்டிய அடி - பாடல் 1183 ஈற்றடியையும் பார்க்க.

"பஞ்சின் மெல்லடிப் பாவையோர் பங்கனைத் தஞ்சமென் றிறுமாந் திவளாரையும் அஞ்சவா ளல்லள்" - அப்பர் 5-29-7.

## 679. கதி பெற

தனதன தானந் தாத்த தனதன தானந் தாத்த
தனதன தானந் தாத்த தனதான

புவிபுனல் காலுங் காட்டி சிகியொடு வானுஞ் சேர்த்தி
புதுமன *மானும் பூட்டி யிடையூடே-
பொறிபுல னீரைந் தாக்கி கருவிகள் நாலுங் காட்டி
புகல்வழி நாலைந் தாக்கி வருகாயம்;

பவவினை நூறுங் காட்டி சுவமதி தானுஞ் சூட்டி
பசுபதி பாசங் காட்டி புலமாயப்-
படிமிசை போவென் றோட்டி அடிமையை நீவந் தேத்தி
பரகதி தானுங் காட்டி யருள்வாயே;

சிவமய ஞானங் கேட்க †தவமுநி வோரும் பார்க்க
திருநட மாடுங் கூத்தர் முருகோனே-
திருவளர் மார்பன் போற்ற திசைமுக னாளும் போற்ற
ஜெகமொடு வானங் காக்க மயிலேறிக்;

குவடொடு சூரன் தோற்க எழுகடல் சூதந் தாக்கி
குதர்வடி வேலங் கோட்டு குமரேசா-
குவலயம் யாவும் போற்ற ‡பழனையி லாலங் காட்டில்
Xகுறமகள் பாதம் போற்று பெருமாளே.(3)

---

* மான் - குதிரை, புத்தி தத்துவம்.

† தவமுநிவோர் - திருவாலங்காட்டிற் கார்க்கோடகன், முஞ்சி கேசர் என்னும் முநிவர்கள் சிவபிரானது அருளைப் பெற்று அவரது நடன தரிசனத்தைப் பெற்றார்கள். (திருவாலங்காட்டுப் புராணம்)

‡ பழனை - பழையனூர். இந்த ஊர் திருவாலங்காட்டுக்கு மிக அருகில் உள்ளது. தேவாரத்திலும் "பழையனூர் ஆலங்காட்டெம் அடிகளே" எனச் சம்பந்தரும், 'பழனைமேய ஆலங்காட்டடிகள்', 'பழனைமேயார், பழனைபதியா உடையார்', என அப்பரும், "பழையனூர் மேய அத்தா! ஆலங்காடா" - எனச் சுந்தரரும் பழையனூர் ஆலங்காடு என இரண்டு ஊரையும் சேர்த்தே பாடியுள்ளார்கள்.

X குறமகள் பாதம் போற்று பெருமாள் - என்பது குறமகள் முருகவேளின் பாதம் போற்றுகின்றாள், குறமகளின் பாதத்தை முருகவேள் போற்றுகின்றார் - என இருவகையும் பொருள்பட நிற்கின்றது. (பாடல் 665-பக்கம் 26 பார்க்க)

# 679.

**மண்**, நீர், காற்று இவைகளைக் கூட்டியும், நெருப்பு, வான், இவைகளைச் சேர்த்தும், புதுமை வாய்ந்த மனம் என்னும் குதிரையைப் பூட்டியும், (அல்லது புத்தி தத்துவத்தையும் சேர்த்து) இவையுடன்-

ஐம்பொறி, ஐம்புலன் என (இரண்டு ஐந்து) பத்து பொருள்களை ஆக்கியும், (இவையுடன்) மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் நான்கு கருவிகளைப் பிணைத்தும், சொல்லப்படுகின்ற வழிகளாக (துவாரங்களாக) (நால் ஐந்து) ஒன்பது வாயில்களை உண்டுபண்ணியும் ஏற்படுகின்ற இந்த உடலுக்கு ஏதுவான-

பாவ வினைகள் (நூறும்) நூறுதலை - பொடிபட்டு அழிதலைக் காட்டி (பொடிபடச் செய்து), (சுவமதி) - சுபமதி - நல்ல அறிவை எனக்குப் பொருந்தவைத்து, (பசு, பதி, பாசம்) உயிர், கடவுள், தளை - என்னும் இம் முப்பொருள்களின் இலக்கணங்களை எனக்கு விளக்கி, ஐம்புலன்களும் மாய்ந்து ஒடுங்க -

இந்தப் பூமிக்குப் போ என்று என்னை விரைவில், அனுப்பி (ஓடச்செய்து), உனக்கு அடிமையான என்னை நீ வந்து வாழ்த்தி (பரகதியை) முத்தியையும் அடையச் செய்து அருள்புரிவாயாக.

சிவமயமான ஞானோபதேசத்தைக் கேட்டு (மகிழவும்), தவ நிறைந்த முநிவர்கள் பார்த்து (மகிழவும்) திருநடமாடுகின்ற கூத்தப் பெருமானுடைய * (முருகோனே) குழந்தையே!

இலக்குமி இருக்கும் (மார்பன்) திருமால் போற்றவும், பிரமன் நாள்தோறும் போற்றவும், மண்ணுலகையும் விண்ணுலகையும் காக்கும் பொருட்டு மயில் மீதேறி-

எழுகிரிகளுடன் சூரன் தோல்வியுற, எழுகடலையும் மாமரத்தையும் தாக்கி, எடுத்துக் கூர்வேலை அங்குச் செலுத்தின குமரேசனே!

உலகெலாம் போற்றப் **பழையனூரிலும் ஆலங்காட்டிலும்** வள்ளி பாதம் போற்றுகின்ற பெருமாளே!

(பரகதி தானுங் காட்டி அருள்வாயே)

---

* முருகன் - குழந்தை - பாடல் 693 பார்க்க.

## 680. தமிழ்ப்பாடல் பாட

தனதன தானந் தாத்த தனதன தானந் தாத்த
தனதன தானந் தாத்த தனதான

வடிவது நீலங் காட்டி முடிவுள காலன் கூட்டி
வரவிடு தூதன் கோட்டி விடுபாசம்-
மகனொடு மாமன் பாட்டி முதலுற வோருங் கேட்டு
மதிகெட மாயந் தீட்டி யுயிர்போமுன்;
படிமிசை தாளுங் காட்டி யுடலுறு நோய்பண் டேற்ற
பழவினை பாவந் தீர்த்து னடியேனைப்-
பரிவொடு நாளுங் காத்து விரிதமி ழாலங் கூர்த்த
**பரபுகழ் பாடென் றாட்கொ டருள்வாயே;**
*முடிமிசை சோமன் சூட்டி வடிவுள †**ஆலங் காட்டில்**
‡ முதிர்நட **மாடுங் கூத்தர்** புதல்வோனே-
முருகவிழ் தாருஞ் சூட்டி யொருதனி வேழங் கூட்டி
முதல்மற மானின் சேர்க்கை மயல்கூர்வாய்;
இடியென வேகங் காட்டி நெடிதரு சூலந் தீட்டி
யெதிர்பொரு சூரன் தாக்க வரஏகி-
இலகிய வேல்கொண் டார்த்து உடலிரு கூறன் றாக்கி
யிமையவ ரேதந் தீர்த்த பெருமாளே. (4)

---

* 'பிறை சூடின வரலாறு' - பாடல் 415 பக்கம் 548 கீழ்க்குறிப்பு.

† "சிதம்பரத்தினியற்று நடம் உத்தமமாம் இன்ப மேன்மை தாங்கியிடும் ஆனந்தத் தாண்டவம்; ஆருயிர்க் கிருளைத்தடுத்து ஆனந்தம் ஓங்கியிட அளிப்பதுவாம்."

"**ஆலவனம் அனைத்தினுக்கும் முதலான நடத்தானம், அருளார் நட்ட, மூலமதாம்,** அதனகத்துச் சண்ட தாண்டவங் ககன முகடு நோக்கி, மேலணுக இடத்தாளை எடுத்து, வலத்தாள் ஊன்றி விளைக்கு நட்டம், சாலுமிது சங்கார தாண்டவமாம் பிறப் பிறப்புத் தவிர்த்தலாலே" (திருவாலங் - புராணம் - சுநந்தர் உபதேச-35, 36).

சிதம்பரத்தில் செய்யப்பட்ட நடனம் - ஆனந்த தாண்டவம் அது ஆன்மாக்களுக்கு ஆணவமல இருளைநீக்கும். திருவாலங்காட்டிற் செய்யப்படும் நடனம் "சண்டதாண்டவம்" "ஊர்த்துவதாண்டவம்" இது ஆகாய உச்சியை நோக்கி மேலே செல்லும்படியாக இடது பாதத்தைத் தூக்கி வலது பாதத்தை ஊன்றிச் செயப்படும் 'சங்காரதாண்டவ'மாகும் - இது ஜனன மரணங்களை நீக்கும் தன்மையது.

‡ முதிர் நடம் - "ஆலவனம் - முதலான நடத்தானம், நட்ட மூலமதாம்" - என்றபடியால்.

## 680.

*(வடிவது)* நிறம் அதை *(நீலம்)* கறுப்பாகக் காட்டி *(முடிவுள)* முடிவு காலத்தில் *(உள்ள)* வருகின்ற காலன் *(கூட்டிவர விடு)* கூட்டி அனுப்புகின்ற *(தூதன்)* யமதூதன் *(கோட்டிவிடு)* வளைத்து எறிகின்ற *(பாசம்)* பாசக் கயிற்றினால் *(உயிர்போமுன்)* -

மகனும், மாமனும், பாட்டி முதலான உறவினர்களும் *(இருக்கின்ற நிலையைக்)* கேட்டு, *(மதிகெட)* புத்தி கலங்கும்படி, *(மாயம்)* பிரபஞ்ச மாயம் - உலகமாயை - *(தீட்டி)* அதிகம் கூர்மையடைந்து உச்ச நிலையடைய, உயிர் போவதற்கு முன்-

*(படிமிசை)* இப் பூமியிலே உனது திருவடிகளைக் காட்டி *(இந்த)* உடலுக்கு ஏற்பட்ட நோய்கள், பண்டு ஏற்ற பழவினை - முன் செய்த வினைப்பயனால் அடைந்துள்ள பழைய வினைகளாகிய பாவங்களை ஒழித்து உன் அடியவனாகிய என்னை-

அன்புடனே நாள்தோறும் காத்தளித்து விரிந்த *(தமிழாலங்கூர்த்த)* அம் தமிழால் கூர்த்த - அழகிய தமிழால் மேம்பட்ட (அல்லது விரிதமிழால் ... விரிந்த தமிழ் மொழியால்... அம் கூர்த்த அழகு மிக்க *(பரபுகழ்)* மேலான திருப்புகழைப் பாடுவாயாக என்று ஆட் கொண்டு அருளுவாயாக.

*சிரசின்மேல்* நிலவைத் தரித்து, அழகுள்ள **திருவாலங் காட்டில்** *(முதிர்நடம்)* *(முற்பட்ட)* முதன்மையான நடனத்தை ஆடுகின்ற கூத்தர் *(சிவபெருமானுடைய)* புதல்வனே!

நறுமணம் கமழும் மாலையையும், சூட்டி, ஒப்பற்றுத் தனித்துவர யானையையும் வரவழைத்து முன்பு *(வேடர்மான்)* வள்ளியொடு கூடுதலில் மோகம் மிக்கவனே;

இடி போல வேகத்தைக் காட்டி *(நெடிதரு)* புலால் நாற்றம் கொண்ட (அல்லது, நீண்ட) சூலாயுதத்தைத் தயாராக எடுத்து எதிரிலே சண்டை செய்த சூரன் தாக்குதற்கு வந்தபோது சென்று

விளங்குகின்ற வேலாயுதத்தை நுகரும்படி அனுப்பிச் சூரனுடைய உடலை இரண்டு கூறாக அன்று ஆக்கித் தேவர்களுடைய துன்பத்தைத் தீர்த்த பெருமாளே!

*(புகழ்பாடென் றாட்கொ டருள்வாயே)*

## திருவோத்தூர்.

[காஞ்சீபுரத்துக்குத் தென்மேற்கு 19-மைல்; கோயிலுக்கு மேற்புறத்திற் சேயாறு ஓடுகின்றது. திருஞான சம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது; ஆண்பனை பெண்பனை யான ஸ்தலம்; ஸ்தலபுராணம் உண்டு] சிவபிரான் * (ஒத்து) வேதத்தின் பொருளை முநிவர்களுக்கும் தேவர்களுக்கும் அருளிச் செய்த தலம்.

### 681. யார் முன்னிலையிற் பாடவேண்டுமென்பது

தனனாத் தானன தானம் தனனாத் தானன தானம்
தனனாத் தானன தானம் தனதான

†தவர்வாட் டோமர சூலந் தரியாக் காதிய சூருந்
தணியாச் சாகர மேழுங் கிரியேழுஞ்-
சருகாக் காய்கதிர் வேலும் ‡பொருகாற் சேவலு நீலந்
தரிகூத் தாடிய மாவுந் தினைகாவல்;
துவர்வாய்க் கானவர் மானுஞ் சுரநாட் டாளொரு தேனுந்
துணையாத் தாழ்வற வாழும் பெரியோனே-
துணையாய்க் காவல்செய் வாயென் றுணராப் பாவிகள் பாலுந்
தொலையாப் பாடலை யானும் புகல்வேனோ;
Xபவமாய்த் தானது வாகும் பனைகாய்த் தேமண நாறும்
பழமாய்ப் பார்மிசை வீழும் படிOவேதம்-

---

* 'சேயாற்றின் தடங்கரைக்கண் இமையோர் கட்கும் மெய்த்தவர்க்கும் ஓதுவித்தோம் ஆதலினால் மேவு திரு ஓத்தூர் என்னும், அத்தலத்தில் எமைத் தொழுவோர் அருமறை நூல் முழுதுணர்ந்து வீடு சேர்வர்" - -காஞ்சிப்புரா - திரு ஏகம்பம் - 80.

"ஒத்தின் உரைவரம்பு அகன்ற முக்கண் உத்தமன் சந்தைகூட்டி
அருமறை அறவோர்க் கோது வித்திட மதனைக் காண்மின்"
-திருவிளை - அருச்சனை - 14

† தவர் -- வில், தோமரம் - தண்டாயுதம், கைவேல். 'தவர்" முதல் 'காவல் செய்வாய்' வரையில் மனப்பாடஞ் செய்யவேண்டிய ஒரு நல்ல பகுதி - வேல், மயில், சேவல், தேவிமார், இறைவன் யாவரும் கூறப்பட்ட காரணத்தால் இப் பாடலை மனப்பாடம் செய்ய அது நற்றுணையாகும்.

‡ சேவல் - கால் கொண்டு பொருவதால் - காலாயுதம், பதாயுதம் எனப் பேர் பெறும்.

X பவ மாய்த்து ஆணது வாகும் எனப்பிரிக்க.

ஆண்பனைகள் காய்த்ததும் அப்பனைகளின் பிறவி ஒழிந்ததும்:- திருவோத்தூர்ப் பெருமானைச் சம்பந்தப் பெருமான் தரிசித்து

# திருவோத்தூர்.

## 681.

(துவர்) வில், வாள், (தோமரம்) தண்டாயுதம் (அல்லது கை வேல்), சூலம் இவைகளைத் (தரித்து)க், (காதிய) கொலைகளைச் செய்த சூரனும் (தணியா) வற்றாத கடல் ஏழும், மலைகள் ஏழும்-

சருகுபோல உலர்ந்து போம்படி எரித்தழித்த ஒளிவேலும், சண்டை செய்யவல்ல கால்களை உடைய சேவலும், நீலநிறம் கொண்டதும் நடனம் ஆட வல்லதுமான மயிலாம் குதிரையும் - தினைப்புனம் காத்த-

பவளம்போன்ற வாயைக் கொண்ட வேடர் மான் (வள்ளியும்), தெய்வலோகத்தவளாகிய ஒப்பற்ற தேன் அனைய தேவசேனையும் துணையாகக் கொண்டு குறைவு ஒன்று மின்றி, வாழ்கின்ற பெரியோனே!

(நீ) துணையாகக் காவல்செய்து புரப்பாய் என்று உணராத பாவிகளிடத்திற் சென்று, அழிவிலாத அருமைப் பாடல்களை நானும் சொல்லுவேனோ! (சொல்லித் திரிவேனோ) !

(பவம்) பிறப்பை ஒழித்து, ஆணாயிருந்த பனை காய்த்து நறுமணம் வீசும் பழங்களாய்ப் பூமியின்மீது விழும்படியாக-வேதத்தைப்

---

இருந்தபொழுது, அங்கு ஒரு அடியார் பெருமானிடம் வந்து - 'சிவ பெருமானுடைய உபயோகத்துக்காக அடியேன் வைக்கின்ற பனைகள் எல்லால் ஆண்பனையாகவே வளர்கின்றன; அதைக்கண்டு சமணர்கள் பரிகசிக்கின்றனர்' - என முறையிட்டனர். பெருமான் உடனே திருக்கோயிலுக்குச் சென்று திருப்பதிகம் பாடினர்; அப்பதிகத்தில் "குரும்பை ஆண்பனை யீன்குலை ஓத்தூர்" எனவர, இறைவன் அருளால் ஆண்பனை யெல்லாம் நிறைந்த குலைகளாய்க் குரும்பை காட்டிப் பெண் பனைகளாகக், கண்டோரெல்லாம் அதிசயித்தனர்.

பெருமானது திருவாக்கில் பட்டமையால் அந்த பனைகள் பாசம் விட்டு அகலப் பிறவியையும் ஒழித்துச் சிவத்தைக் கூடின.

"குரும்பை ஆண்பனை யீனும் என்னும் வாய்மை
குலவுதலால், நெருங்கும் ஏற்றுப் பனையெல்லாம்
நிறைந்த குலைகளாய்க் குரும்பை அரும்பு பெண்ணை
யாகியிடக் கண்டா ரெல்லாம் அதிசயித்தார்"

(ஏற்றுப்பனை ஆண்பனை)

(தொடர்ச்சி 70 ஆம் பக்கம் பார்க்க.)

படியாப் பாதகர் பாயன் றியுடாப் பேதைகள் கேசம்
பறி *கோப் பாளிகள் யாருங் கழுவேறச்;
சிவமாய்த் தேனமுதூறுந் † திருவாக் காலொளி சேர்வெண்
டிருநீற் றாலம ராடுஞ் சிறியோனே
செழுநீர்ச் ‡சேய்நதி ×யாரங் கொழியாக்
கோமளம் வீசுந்
திருவோத் தூர்தனில் மேவும் பெருமாளே.

## பாக்கம்.

[சென்னையிலிருந்து அரக்கோணம் போகும் வழியில் உள்ள தின்னனூர் ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து 3-மைல்.]

## 682. திருநாமம் கூறும் அறிவு பெற

தாத்தத்த தானதன தாத்தத்த தானதன
தாத்தத்த தானதன தனதான

கார்க்கொத்த மேனிகடல் போற்சுற்ற மானவழி
காய்த்தொட்டொ ணாதOவுரு ஒருகோடி-

---

*(69-ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)*
*"பிள்ளையார்தந் திருவாக்கிற் பிறத்த வாலத் தாலமுமுன்*
*புள்ளபாசம் விட்டகல ஒழியாப்பிறவி தனையொழித்து*
*....சிவமே கூடினவால்"*

*-(பெரிய புரா - சம்பந்தர் - 980, 983.*

O சமணர்கள் - 'வேதம் படியாப் பாதகர். பாயன்றியுடாப் பேதைகள், கேசம்பறி கோப்பாளிகள்" - என வருவது "மறை வழக்கமிலாதமா பாவிகள் பறிதலைக் கையர். பாயுடுப்பார்களை" - என வரும் சம்பந்தர் தேவாரத்தைத் *(3-108-3)* தழுவுகின்றது.

பறிதலையர் - பாடல் *172* பக்கம் *398* கீழ்க்குறிப்பு.

---

* கோப்பாளி - வரிக்கூத்து வகை - (சிலப். 3 - 13 உரை) 3-ஆம் பதிப்பு பக்கம் 88; கோப்பன் - கெட்டிக்காரன் - தேர்ந்த போக்கிரி.

† **கழுவேறத் திருவாக்கால்அமராடும்:** "வீதி கண்டவர் சீசீ சீயென வேதவஞ்சகர் பாழ்வாய் வீணர்கள் வாதிடுஞ்சமண் வேரோ டேயற வாழ்க அந்தணர் வானோ ரானென ஓது பண்டித ஞானா சாரியன்" - திருவையாற்றுப் புராணம்.

"அமணர் கூட்டத்தைச் செந்தமிழ்ப்பா ஒன்றினால் வென்றி நிரை கழுமேல் உய்த்தானை" - ஆளுடை பிள்ளையார் திருவுலா.

(தொடர்ச்சி பக்கம் 71)

படியாத பாதகர்கள், பாய் அல்லாமல் வேறு உடை அணியாத பேதைகள், (தலை) மயிர் பறிக்கும் (கோப்பாளிகள்) கூத்தாடிச் சமர்த்தர்கள் (ஆகிய சமணர்கள்) - எல்லாரும் - கழுவில் ஏறும்படி

சிவமயமானதும், தேனும் அமுதும் ஊறின போலத் தித்திக்கும் (உனது) திருவாக்கினாலும் (பாடல்களாலும்), (ஒளி) பெருமைவாய்ந்த வெள்ளைத் திருநீற்றாலும் வாதுப் போர் புரிந்த இளையோனே!

செழுமைவாய்ந்த நீரைக்கொண்ட சேயாறு முத்துக்களைக் கொழித்து அழகு வீசும் **திருவோத்தூர்** என்னும் தலத்தில் மேவும் பெருமாளே!

*(பாவிகள் பாலும்....பாடலை யானும் புகல்வேனோ)*

## பாக்கம்.

## 682.

(**கா**ர்க்கு) மேகத்துக்கு நிகரான (மேனி) நிறத்தை உடைய கடல்போலப் பரந்த (சுற்றமான - வழி) சுற்றத்தார்கள் பொருந்திய (வழியிலே) இடத்திலே(காய்த்து) பிறந்து தோன்றி, (ஒட்டொணாத) நிலத்து நிற்காத (உரு) (தோற்றம்) உடல்; ஒருகோடிக்கணக்கான-

---

*(70 ஆம் பக்கம் தொடர்ச்சி)*

"சமணை நிரைகழு நிறுத்தியன.....தமிழ்விரகன கவித் தொகையே"- ஆளுடைய பிள்ளையார் கலம்பகம்-35.

**திருநீற்றால் அமராடினது:**

"ஆலவாய் அண்ணல் நீறே மன்னு மந்திரமு மாகி
மருந்துமாய்த் தீர்ப்ப தென்று.....திருப்பதிகம் பாடி"
"திருவளர் நீறுகொண்டு திருக்கையால் தடவ....
வெப்பகன்று...வழுதியு முழுது முய்ந்தான்"

-பெரிய புரா - சம்பந்தர் - *764, 765, 770*

‡ சேய் நதி .... சே யாறு.

X ஆரம் கொழியா...முத்துக்களைக் கொழித்து.

O உரு - உடல் "உருவினில் நிறைந்து நின்றங் குணர்ந்திடும் உயிர்" *(சிவஞானசித்தி - சுபக்கம் சூத்திரம் 4-17.)*

*காக்கைக்கு நாய்கழுகு பேய்க்†கக்க மானவுடல்
காட்டத்தி னீளெரியி லுற‡ வானிற்;

கூர்ப்பித்த சூலனத னாற்குத்தி யாவிகொடு
போத்துக்க மானகுறை யுடையேனைக்-

கூப்பிட்டு சாவருளி வாக்கிட்டு Xநாமமொழி
கோக்கைக்கு நூலறிவு தருவாயே;

Oபோர்க்கெய்த்தி டாமறலி போற்குத்தி மேவசுரர்
போய்த்திக்கெ லாமடிய வடிவேலாற்-

**பூச்சித்தர் தேவர்மழை போற்றூர்க்க வேபொருது
போற்றிச்செய் வார்சிறையை விடுவோனே;

பார்க்††கொற்ற நீறுபுனை வார்க்கொக்க‡‡ஞானபர
னாய்ப்பத்தி கூர் மொழிகள் பகர்வாழ்வே-

XXபாக்கொத்தி னாலியலர் நோக்கைக்கு வேல்கொடுயர்
பாக்கத்தில் மேவவல பெருமாளே.(1)

---

* பாடல் 651 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† அக்கம் - அருகு, தானியம், கண்.

‡ வான் - ஆகாயம், வலிமை, பெருமை.

X நாமமொழி கோக்கைக்கு வேண்டிய அறிவை வேண்டுவது அவசியம். 'சோதி நாமமே ஓதி உய்ம்மினே' என்றாராதலின்.

-சம்பந்தர் I-96-3.

O மறலியின் வன்மை:

'கூற்றத் தன்ன மாற்றறா மொய்ம்பு'-திருமுருகாற்றுப்படை.

"கூற்றொத்தீயே மாற்றருஞ் சீற்றம்" - புறநானூறு 56.

** தேவர்கள் பூமழை பொழிதல்

-பாடல் 645 - பக்கம் 510 கீழ்க்குறிப்பு.

†† 'கொற்ற நீறு' - 'பேணி அணிபவர்க்கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு' சம்பந்தர் (2-66-4) என்றாராதலின்

‡‡ சம்பந்தர் பாடல்களைப் "பத்தி மிக இனிய ஞானப்பாடல்" என்றார் பிறிதோரிடத்து - திருப்புகழ் 1025.

XX பாக் கொத்து - பாமாலை.

காக்கைகளுக்கும், நாய்களுக்கும், கழுகுகளுக்கும், பேய்களுக்கும் (அக்கமான) (உணவுத்) தானியமான (அல்லது கண்ணான-அருகான) உடல் - (இது காட்டத்தில்) சுடுகாட்டில் பெரு நெருப்பிற் சேரும்படி - (வானில்) ஆகாயத்தை அளாவினதாயுள்ள (அல்லது) வலிமை கொண்டதான-

கூர்மை கொண்டதான சூலாயுதத்தை உடைய எமன் அந்த சூலத்தாற் குத்தி (எனது) ஆவியைக் (கொடு போ) கொண்டுபோகின்ற துக்கமான ஒரு குறையை (குறைபாட்டை) உடைய என்னை-(நீ) -

(கூப்பிட்டு) உன் அருகே அழைத்து, (உசா அருளி)-உசாவுதல் அருளி- விசாரித்துத் திருவருள் பாலித்துத் (பாடும்படியான) வாக்கை எனக்கு (இட்டு) அருளி, (நாமமொழி கோக்கைக்கு) உன் திருநாமங்களை சொற்களிற் (பாடலாக) அமைத்துக் கோப்பதற்கு வேண்டிய நூல் அறிவைத் தந்தருளுக.

போருக்கு இளைக்காத யமனைப்போல (குத்தி..... வேலினால்) எதிர்த்து வந்த அசுரர்கள் ஓடிப்போய்த் திசைதோறும் இறக்கும்படி கூரிய வேலினால் - (குத்தி) -

பூவைச் சித்தர்களும் தேவர்களும் மழைபோலத் (தூர்க்க) மிகப்பொழியச் சண்டைசெய்து, போற்றி வணங்கினவர்களாகிய தேவர்களுடைய சிறையை விட்டவனே!

(பாரில்) (பூமியில்) (கொற்ற நீறு) வெற்றி தருகின்ற திருநீற்றை அணிகின்ற சிவபிரானுக்கு மிக்க ஞானத்திற் சிறந்தவனாய் (ஞான சம்பந்தனாய்ப், பத்தியை நன்கு வளர்க்க வல்ல (மொழிகளை)ப் பாடல்களைச் சொன்ன செல்வனே! (அல்லது - சிவபிரானுக்கு மிக்க ஞான மூர்த்தியாய் பத்தியை வளர்க்கவல்ல (உபதேச) மொழிகளைக் கூறின குருமூர்த்தியாம் செல்வனே!)

பாமாலைகளால் (இயலர்) இயற்றமிழ் வல்ல புலவர்கள் (நோக்கைக்கு) விரும்பிப் பார்ப்பதற்கு, வேல் ஏந்தி சிறந்த பாக்கம் என்னும் தலத்தில் வீற்றிருக்க வல்ல பெருமாளே!

(நாமமொழி கோக்கைக்கு நூலறிவு தருவாயே)

## 683. தியானிக்க

தாத்தத் தனந்த தந்த தாத்தத் தனந்த தந்த
தாத்தத் தனந்த தந்த தனதான

**பாற்றுக்** கணங்கள் தின்று தேக்கிட் டிடுங்கு ரம்பை
நோக்கிச் சுமந்து கொண்டு பதிதோறும்

பார்த்துத் திரிந்து ழன்று ஆக்கத் தையுந்தெ ரிந்து
ஏக்கற்று நின்று நின்று தளராதே;

வேற்றுப் புலன்க ளைந்து மோட்டிப் புகழ்ந்து கொண்டு
கீர்த்தித்து நின்ப தங்க ளடியேனும்-

வேட்டுக் கலந்தி ருந்து *ஈட்டைக் கடந்து நின்ற
**வீட்டிற் புகுந்தி ருந்து மகிழ்வேனோ;**

மாற்றற்ற பொன்து லங்கு வாட்சக்கி ரந்தெ ரிந்து
வாய்ப்புற்ற மைந்த சங்கு தடிசாப-

மாற்பொற்க லந்து லங்க நாட்டச்சு தன்ப ணிந்து
வார்க்கைத்த லங்க ளென்று திரைமோதும்;

பாற்சொற்ற டம்பு குந்து வேற்கட்சி னம்பொ ருந்து
பாய்க்குட் டுயின்ற வன்றன் மருகோனே-

பாக்குக் கரும்பை கெண்டை தாக்கித் தடம் படிந்த
**பாக்கத்** தமர்ந்தி ருந்த பெருமாளே.(2)

---

* ஈடு - வருத்தம். "நாடுமின் இனி நாங்கள் செய்வதென் நீடினாலிருந்து எண்ணி நால்வரும்" - சிந்தாமணி 1762.

# 683.

(**பா**று - பருந்து) பருந்துகளின் கூட்டங்கள் தின்று ஏப்பமிடும் வயிறு நிறைதற்கு இடமான இந்த (உடற்) கூட்டை (நோக்கி) விரும்பிச் சுமந்துகொண்டு ஊர்கள் தோறும் - (காட்சிகளைப்)

பார்த்தும், திரிந்தும், அலைச்சல் உற்றும், செல்வத்துக்கு வழியைத் தெரிந்தும் (அதன்பொருட்டு) (ஏக்கற்று) இளைத்து-வாடி (நின்று நின்று) அங்கங்கு நின்று தளராமல்

(நான் முன்வருவதற்கு) வேறாக - மாறாக நிற்கின்ற ஐம்புலன்களையும் (ஓட்டி) அப்புறப்படுத்திப் பிரித்து - ஒருமைப்பட்ட மனத்தினனாய் - உன்னைப் புகழ்ந்துகொண்டு (கீர்த்தித்து) உன் கீர்த்தியையே பாடிப்பாடி உனது திருவடிகளை அடியேனும்-

விரும்பி (உள்ளம் உன்பால்) கலந்திருந்து, (ஈட்டை) வருத்தங்களை - துன்பங்களைக் கடந்து நின்ற மோக்ஷ வீட்டிற் புகுந்து இருந்து மகிழ்வேனோ!

உரைமாற்றுக் கடந்த பொன் விளங்கும் (நாந்தகம் என்னும்) வாளும், (சுதரிசனம் என்னும்) சக்கரமும் தெரிந்து பொருந்த அமைந்த (பாஞ்ச சன்னியம் என்னும்) சங்கமும், (தடி) கௌமோதகி என்னும் தண்டமும் - கதையும், (சாபம்) கோதண்டம் என்னும் வில்லும்-

(மால்) அழகிய (பொற்கலம்) பொன் ஆபரணங்களும் (துலங்க) விளங்க, (நாட்டு) நிலையாக வைத்துள்ள (அச்சுதன்) திருமாலைப் பணிந்து நீளும் (கைத்தலங்கள்) கைகள் என்று சொல்லும்படி (கைகள்போல உள்ள) அலைகள் மோதுகின்ற-

பால் என்று சொல்லும்படியான இடம் - (திருப்பாற்கடலில்) இடம் கொண்டு வேல்போலக் கூரிய கண்ணையும் கோபத்தையும் கொண்ட பாயான - ஆதிசேடன் என்னும் பாம்பணையில் துயில்கொண்டவனான திருமாலின் மருகனே!

(பாக்கு) கமுகமரத்துப் பாக்கையும், கரும்புகளையும் கெண்டை மீன் தாக்கிவிட்டுத் தடாகத்திற் படிகின்ற **பாக்கம்** என்னும் தலத்தில் வீற்றிருக்கின்ற பெருமாளே!

(வீட்டிற் புகுந்திருந்து மகிழ்வேனோ)

## திருவேற்காடு.

(சென்னைப்பட்டணத்துக்கு மேற்கேயுள்ள ஆவடி ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து தென்கிழக்கு சுமர் 4-மைல். பூவிருந்தவல்லிக்கு வடக்கு 2-மைல். திருஞானசம்பந்தஸ்வாமிகளுடைய பாடல்பெற்றது. இதற்கு ஸ்தலபுராணம் இருக்கின்றது.) 935-ஆம் பாடலிலும் இத்தலம் கூறப்பட்டுளது. சுவாமி வேதபுரீசுரர், வேற்கண்ணியம்மை, வேலாயுத தீர்த்தம்.

### 684. தமிழ்ப்பாடல் பாட

தானந்தா தனதான தானந்தா தனதான
தானந்தா தனதான தனதான

ஆலம்போ லெழுநீல மேலங்காய் வரிகோல
*மாளம்போர் செயுமாய விழியாலே-
ஆரம்பால் தொடைசால ஆலுங்கோ புரவார
ஆடம்பார் குவிநேய முலையாலே;

சாலந்தாழ் வுறுமால ஏலங்கோர் பிடியாய
வேளங்கார் துடி†நீப இடையாலே-
‡சாரஞ்சார் விலனாய நேகங்கா யமன்மீறு
காலந்தா னொழிவேது உரையாயோ;

Xபாலம்பால் மணநாறு காலங்கே Oயிறிலாத
மாதம்பா தருசேய வயலூரா-

---

* மாளப்போர் - மாளம்போர் (சந்தம் நோக்கி)

† நிபம் - உவம உருபு சந்தநோக்கி நீண்டது.

‡ சாரம் - இனிமை.

X பால் - இடம்: அம்பு - நீர்; மணம் - சேர்க்கை, கூடுகை; நாறுதல் - தோன்றுதல்.

O இறிலாத - ஈறிலாத. "அந்தரி-நீலி அழியாத கன்னிகை" அபிராமி அந்தாதி 8.

## 684.

(ஆலம்) (விஷம்) போல எழுந்து, *(நீலம் மேல் அங்கு ஆய்) நீலோற்பல மலருக்கும் மேலானதாக அங்கு அமர்ந்து, ரேகைகள் கொண்டு, அழகு வாய்ந்து, (கண்டோர்) மாளும்படியாக (இறந்துபோம்படி) போர் செய்யவல்ல மாயம் நிறைந்த கண்களாலே-

(ஆரம்) முத்துமாலை - (பால்) தம்மிடத்தே - (தொடை) மாலையாக (சால) மிகவும் - நன்றாக - (ஆலும்) அசைகின்ற (கோபுர) கோபுரம்போல எழுச்சிகொண்டு, (ஆர) மிகவும், (ஆடம்பார்) ஆடம்பரத்ததாய் - குவிந்துள்ளதாய், அன்புக் கிடமானதான கொங்கைகளாலே-

(சால) மிகவும், அம் -அழகுடன், தாழ்வுறும் - இளைத்துநிற்கும் அடங்கி நிற்பதாய் - மால - (மால் அ) ஆசை தரக்கூடியதாய்ப் (ஏல்) பொருந்தி, அங்கு ஒரு பிடியளவே யிருப்பதாய், (வேள் அங்கு ஆர்) விருப்பத்துக்கு அங்கு இடமாய் நிறைந்துள்ளதாய் (அல்லது காமன் அங்கு விளங்குவதான) துடி - உடுக்கை (நிபம்) போல்வதான இடையாலே-

(சாரஞ் சார்விலனாய்) சாரச்சார்விலனாய் - சார - சார்வதினால் மோகம் கொள்வதால் - மோகம் கொள்ளும் குறைபாட்டினால் (அல்லது) - சாரம் - (விழியாலே, முலையாலே, இடையாலே) (வரும்) இனிமை (காரணமாக) சார்பு இலனாய் (உய்வதற்குப்) புகலிடம் இல்லாதவனாய், (அனேகம்) அனேக முறை - அனேக பிறப்புக்களில் - (காய்) என்னைக் காய்ந்து - என் உயிரைக் கொண்டுபோன யமன் (மீறு காலந்தான்) என்னை இங்ஙனமே அதிகாரம் செய்து வென்று செல்லும் காலம்தான் - ஒழிவு- நீங்குவது -(ஏது) எப்படி, - என்றைக்கு? சொல்ல மாட்டாயோ!...(யமன் கையிற் சிக்காதிருப்பது எப்படி சொல்லி யருளுக என்றபடி)

(பால்) (பூமியின்) இடமெல்லாம் - (அம்பால்) (கடல்) நீரால். (மணம்) சேர்க்கை - கூடுகை, (நாறுகால்) (தோன்றுங்கால்) (பிரளயகாலத்து), (அங்கே) அப்போதும் (ஈறிலாத) அழிதல் இல்லாத (மாது, அம்பா,) தேவி அம்பிகை தந்துள்ள குழந்தையே! வயலூரனே!

---

* (நீலம் ஏல்விழி - அம்விழி - காய்விழி எனப் பிரித்து நீலோற்பலம் போன்ற கண், அழகியகண், காய்கின்ற கோபிக்கின்ற கண் - எனலுமாம்.

*பாடம்பார் திரிசூல நீடந்தா கரவீர
†பாசந்தா திருமாலின் மருகோனே;
வேலம்பார் குறமாது மேலும்பார் தருமாதும்
வீறங்கே யிருபாலு முறவீறு-
வேதந்தா வபிராம நாதந்தா வருள்பாவு
**வேலங்கா** டுறைசீல பெருமாளே. (1)

## 685. அருள் மொழி பெற

தாத்தாதன தானன தானன
தாத்தாதன தானன தானன
தாத்தாதன தானன தானன தனதான

கார்ச்சார்குழ லார்விழி யாரயி
லார்ப்பால்மொழி யாரிடை நூலெழு
வார்ச்சாரிள நீர்முலை மாதர்கள் மயலாலே-

---

* அந்தகனைச் சூலத்தாற் குத்தி அடக்கினது:

அந்தகாசுரன் இரண்யாக்ஷனுக்கு மைந்தன், பிரகலாதனுக்குத் தம்பி; இவன் திருமால் முதலிய தேவர்களை வருத்தினன்; சிவபிரான் வைரவ மூர்த்தியை ஏவ, அவர் சென்று சூலத்தினால் இவனைக் குத்தி எடுத்து மேலே உயர்த்திப் பிடித்து அடக்கினர். அங்ஙனம் இவனைப் பைரவர் காய்ந்த இடம் திருக்கோவலூர்.

"அவுணரிற் கள்வனான அந்தகற் காய்ந்து மூன்று
புவனமுங் கவலை தீர்த்த புண்ணியன் புரமீதாகும்"
- திருவிளை - அருச்சனை-16.

"அமர ரானவர் ஏத்த அந்தகன் தன்னைச் சூலத்தில்
ஆய்ந்ததே" - சம்பந்தர் - 3-38-10.

"அந்தன் தனை அயில் மூவிலை அழகார் கறையார்
நெடு வேலின் மிசை யேற்றான்" - சம்பந்தர் 1-12-5.

"அந்தகனை அயிற்சூலத் தழுத்திக் கொண்டார்'- அப்பர் -6-96-5.

இதன் விரிவைச் சிவபராக்ரமம் - "அந்தகாசுர விஜய பராக்ரமத்திற்" காண்க.

அந்தக அர - அந்தகனைச் சங்கரித்த வீரன் - சிவனுடைய பாசம் - அன்புக்கு - தா - இடம் பெற்றவன் - அவர் உடலில் இடப் பாகத்தைப் பெற்றவன் - எனலுமாம்.

அர - சங்கரித்தவன்-"தீவினையின் சேகு அர" - கந்தரந்தாதி 68.

தா--இடம் - "தத்தி தா"- கந்தரந்தாதி - 54.

† பாசம் - அன்பு - பக்தி: 'பாசம் பரஞ்சோதிக் கென்பாய்"
- திருவாசகம் - திருவெம்பாவை 2.

(தொடர்ச்சி பக்கம் 79 பார்க்க.)

(பாடு) பெருமை வாய்ந்த (அம்பு) அம்புபோல (ஆர்) கூர்மை கொண்ட (திரிசூலம்) முத்தலைச் சூலத்தால் - (நீடு) மேம்பட்டு நின்ற - (அந்தக) அந்தகாசுரனை - (அரவு) வருத்தின (வீர) வீரனான அல்லது ஈர - கருணையாளனான) சிவன்மீது (பாசம்) பத்தி - அன்பு (தா) தாவுதல் - பாய்தல் உடைய திருமாலின் மருகனே!

வேல் போலவும் அம்பு போலவும் உள்ள கண்களைக் கொண்ட (குறமாது) வள்ளியும், மேல் (உம்பர்) விண்ணோர் வளர்த்த மாது தேவசேனையும் பெருமிதத்துடன் அங்கே இரண்டு புறமும் பொருந்த விளங்கும்-

வேத முடிவில் இருப்பவனே! அழகனே! நாத (ஒலி) முடிவில் இருப்பவனே! திருவருளைப் பாலித்துப் பரப்பும் பெருமாளே! (வேலங்காடு) திருவேற்காடு என்னும் தலத்தில் வீற்றிருக்கின்ற தூய பெருமாளே.

(யமன்மீறு காலந்தான் ஒழிவேது உரையாயோ)

## 685.

**மே**கத்தைச் (சார்ந்த) ஒத்த கூந்தலை உடையவர்கள், கண் (ஆர்) கூரிய (அயிலார்) வேல் போன்றவர்கள், பால்போல இனிய மொழியை உடையவர்கள், இடையானது நூல்போல நுண்ணிதாகக் கொண்டுள்ளவர்கள், பொருந்திய இளநீருக்கு ஒப்பான கொங்கையை உடைய மாதர்கள் மீதுள்ள மோக மயக்கத்தாலே-

---

*சிவபிரானது உடலிடத்தே திருமால் இடம் பெற்றுள்ளார்:*

*"மாலுமோர் பாகம் உடையார்"...சம்பந்தர் 2-67-1*

*"பாதியாவுடன் கொண்டது மாலையே" - சம்பந்தர் 3-115-2*

*"பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து"*

*-பெரிய திருமொழி 3-4-9.*

*"மலைமங்கை தன் பங்கனை பங்கில் வைத்துகந்தான்"*

*...பெரிய திருமொழி 7-10-3.*

*"மாலை இடப் பாகத்தே மருவக் கொண்டார்"*

*...அப்பர் 6-96-3.*

*"மறிகடல் வண்ணன் பாகா" ...அப்பர் 4-62-8.*

*....திருப்புகழ் பாடல் 37...பக்கம் 105 கீழ்க்குறிப்பு.*

காழ்க்காதல தாமன மேமிக
வார்க்காமுக னாயுறு சாதக
மாப்பாதக னாமடி யேனை* நி னருளாலே;
பார்ப்பாயலை யோவடி யாரொடு
சேர்ப்பாயலை யோவுன தாரருள்
கூர்ப்பாயலை யோவுமை யாள்தரு குமரேசா-
†பார்ப்பாவல ரோதுசொ லால்முது
நீர்ப்பாரினில் மீறிய கீரரை
யார்ப்பாயுன தாமரு ளாலொர்சொ லருள்வாயே;
வார்ப்பேரரு ளேபொழி காரண
நேர்ப் ‡பாவச காரண மாமத
ஏற்பாடிக ளேயழி வேயுற அறைகோப-
வாக்காசிவ மாமத மேமிக
வூக்காதிப Xயோகம தேயுறு
Oமாத்தாசிவ பாலகு காவடி யர்கள்வாழ்வே;
வேற்காடவல் வேடர்கள் மாமக
ளார்க்கார்வநன் மாமகி னாதிரு
**வேற்காடுறை** **வேதபு ரீசுரர் தருசேயே-

---

*"நின் அருளாலே பார்ப்பாயலையோ .... குமரேசா" .... இந்தப்பகுதி... பத்திச்சுவை- சொட்டும் பகுதி....மனப்பாடத்துக்குத் தக்கது

† **பாவலர்களுள் நக்கீரரின் தலைமை:**

"பொய்யற்ற கீரன் முதலாம் புலவோர் புகழ்ந்த ஐயற் கெனது சிறு சொல்லும் ஒப்பாகும்"- கந்தபுரா *6-264.*

**திருமுருகாற்றுப்படை கேட்டு முருகவேள் மகிழ்ந்தது** "வள்ளி கன்னலும் அமுதும் தேனும் கைக்குமின் தீஞ்சொல் மாற்றித் தன்னிகர் புலவன் கூறுந் தமிழ்செவி தாழ்த்துக் கேளா அந்நிலை மனங்களிப்புற் றறுமுகம் படைத்த கோமான்" - காஞ்சிப்புரா.

இறையனார் அகப்பொருளின் உரையை நக்கீரர் சொல்லக் கேட்டு முருகவேள் மகிழ்ந்தது - பாடல் *350* பக்கம் *378-379* பார்க்க.

‡ பாவ ச காரணமாம் - பாவத்துக்குத் துணைக்காரண மாகிய.

X 'யோகமதே உறும் மாத்தா"!---முருகவேளுக்கு "யோகா சாரிய மூர்த்தி" என்று ஒரு பெயர்; கபிலர், கௌதமர், துர்வாசர், பைங்கலர் முதலிய முநிவர்களின் தவத்துக் கிரங்கி முருகவேள் யோக இயலை உணர்த்தும் திருக்கோலத்துடன் வீற்றிருந்து பலவகைத்தான யோகங்களின் இலக்கணங்களை அவர்களுக்கு உபதேசித்தார். -சுப்பிரமணிய பராக்ரமத்தில் இதன் விரிவைக் காண்க. "யோகத்தா றுபதேசத் தேசிக" - திருப்புகழ் *68.*

(தொடர்ச்சி பக்கம் 81 பார்க்க)

(காழ்) திண்ணியதான - உறுதிகொண்ட அன்பு பூண்டுள்ளதான மனமே (மிக) மேல் எழுச்சிகொள்ள, (வார்) பெரிய காமப்பித்தனா யிருக்கின்ற ஜாதகத்தைக் கொண்ட மகா பாதகனாகின்ற அடியேனை உனது திருவருள் கொண்டு -

பார்க்க மாட்டாயா! (உனது) அடியார்களொடு சேர்க்கமாட்டாயா, உனது நிரம்பிய திருவருளை நிரம்பத் தரமாட்டாயா? உமையவள் பெற்ற குமரேசனே!

பூமியில் உள்ள பாவலர்கள் (ஓது சொலால்) ஓதும் புகழ்ச் சொல்லால், பழைய நீர் சூழ்ந்த இப் பூமியில், மேம்பட்டு, முதல் தானத்துப் (பாவலராக) விளங்குபவரான நக்கீரரை (ஆர்ப்பாய்) மகிழ்ந்து ஏற்பவனே! உன்னுடைய திருவருளைப் பாலித்து ஒரு உபதேசச் சொல்லை (எனக்கு) உபதேசித்தருளுக.

(உலகத்துக்கு நீடிய பேரருளையே பொழிந்த மூல காரணனே! (நேர்) நேரிட்டு எதிர்த்த - பாவத்துக்குத் துணைக்காரணமாகிய (சமண) மதத்தை ஏற்பாடு செய்த (பரப்பிவந்த) சமண குருக்கள்மார் எண்ணாயிரவர் அழிதலை அடைய (தேவாரப் பாடல்களைச் சொன்ன) கோபங்கொண்ட-

திருவாக்கை உடையவனே! மா - சிவமதமே - பெருமை வாய்ந்த சிவமதமே பெருகும்படி (ஊக்கு) முயற்சிகளைச் செய்த (அதிபனே) தலைவனே! யோக நிலையில் இருக்கும் (மாத்தா) பெரியவனே! சிவனது குமாரனே! குகனே! அடியார்களின் செல்வமே!

வேல் ஏந்திக் காட்டில் வசிக்கும் (அல்லது - வேல மரங்கள் உள்ள காட்டில் வசிக்கும்) வலிய வேடர்களுடைய சிறந்த மகளாம் வள்ளியின்பால் (ஆர்வம்) அன்பு பூண்ட நல்ல அழகிய கணவனே! திருவேற்காடு என்னும் தலத்தில் வீற்றிருக்கும் வேதபுரீசுரர் பெற்ற குழந்தையே!

---

O ஆத்தா - கடவுளே. மாத்தான் - பெரியோன் 'மால்பிரமன் அறியாத மாத்தானை' - சுந்தரர் - 7 67 4; (வலிவலம்) மாத்து - பெருமை 'மாத்தாயுள்ள அழகனே'- அப்பர் 4-62-7

**வேத வித்தகன் வேற்காடு' - சம்பந்தர் -I-57-3

திருவேற்காட்டுக்கு "வேதபுரி" என்று ஒரு பெயர் உண்டு "வேதபுரி என்று பெயர் பொன்னுலக நீடுதிரு வேலவனம் என்று பெயரே"- திருவேற்காட்டுப் புராணம் - வேதவனச் சருக்கம்.

வேட்டார்மக வான்மக ளானவ
*ளேட்டார்திரு மாமண வாபொனி
னாட்டார்பெரு வாழ்வென வேவரு பெருமாளே.(2)

## வடதிருமுல்லைவாயில்.

(சென்னைப்பட்டணத்துக்கு மேற்கேயுள்ள ஆவடி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 3-மைல். அம்பத்தூர் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு $1^1/_2$ -மைல். சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய பாடல் பெற்றது. ஸ்தலபுராணம் உண்டு.)

### 686. கரையேற.

தனதய்ய தானன தானன
தனதய்ய தானன தானன
தனதய்ய தானன தானன தனதான

அணிசெவ்வி யார்திரை சூழ்புவி
தன † நிவ்வி யேகரை யேறிட
அறிவில்லி யாமடி யேனிட ரதுதீர-
அருள்வல்லை யோநெடு நாளின
மருளில்லி லேயிடு மோவுன
தருளில்லை யோ ‡ **இனமானவை யறியேனே;**
குணவில்ல தாXமக மேரினை
யணிசெல்வி யாயரு ணாசல
குருவல்ல மாதவ மேபெறு குணசாத-

---

* ஏடு - மேன்மை - "ஏடுடைய மேலுலகு" - 'ஏடமர் கோதை' சம்பந்தர் - 1-49-2, 3-17-5;

†நீவுதல் (i) தடவுதல் - 'தேவசேனை செந்தனம் நீவி நிற்கும் நேசனை" (கலாவதி). (ii) கடத்தல் - கை விடுதல் - "அருங்கடி நீவி" - குறிஞ்சிப்பாட்டு -20.

‡ 'இனமானவை அறியேனே'- இதனால்தான் 'அடியாரொடு சேர்ப்பாயலையோ' என்று முறையிட்டார் பிறிதோரிடத்து (பாடல் 685). "இனத்தானாம் இன்னான் எனப்படுஞ்சொல்"- என்றார் நாயனாராதலின் - திருக்குறள் 453; இனம் - இங்கு அடியார் கூட்டத்தைக் குறிக்கும்.

X மேருவைத் தேவி தரித்தது - வில்லைப் பிடிக்கும் இடதுகை- தேவியின் கை; "மலைசிலை ஒருகையில் வாங்கு நாரணி" - திருப்புகழ் 507. 'புரமெரிய இரணியதனுக் கைப்பற்றி... மேவும் புகழ்வனிதை - திருப்புகழ் 899.

வேள்வி நிரம்பிய அல்லது விரும்பிய - மகவான் - யாகபதியாகிய இந்திரனுடைய மகளானவளாம் தேவ-சேனையின் ஏடு ஆர் - மேன்மை நிறைந்த அழகிய சிறந்த மணவாளனே! (பொன்னின் நாட்டார்) பொன்னுலகத்தினரான தேவர்களுடைய பெருஞ் செல்வமென வந்துள்ள பெருமாளே!

(உனதாம் அருளால் ஓர் சொல் அருள்வாயே)

## வடதிருமுல்லைவாயில்.

## 686.

(அணி செவ்வியார்) அழகில் செம்மை வாய்ந்த மாதர்கள், கடல் சூழ்ந்த பூமி, (தனம்) பொன் - ஆன பெண் - மண் - பொன் என்னும் மூவாசைகளை - (நிவ்வியே) கடந்தே கரையேறிட - (அல்லது) - (அணி செவ்வியார் திரை சூழ்புவி)- (திரை சூழ்புவி) கடல் சூழ்ந்த இவ் வுலகில் - (அணி செவ்வியார்) - அழகிய - அல்லது ஆபரணம் அணிந்துள்ள - செவ்வியார் - செம்மைவாய்ந்த மாதர்களுடைய, (தனம்) கொங்கைகளை - (நிவ்வியே) (நீங்கியே அல்லது) நீவியே - தடவுகின்றவனாய் - கரையேறுதற்கு - அறிவிலாதவனாகிய அடியேனுடைய துயர் தீருதற்கு வேண்டிய -

திருவருளை வலிய அருள்வாயோ! அப்படி யன்றி நெடுங்காலத்துக்குக் கூட்டமான இருள் வீடாகிய பிறவி-களிலே (இடுமோ) கொண்டு விடுமோ (உனது அருள் இல்லையோ) - உனது திருவருள் என்மீது இல்லையோ? (இனமானவை அறியேனே) - உன்னொடு சம்பந்தப்பட்ட அடியார் கூட்டத்தை அறிந்தேனில்லையே! (அல்லது - *இனமானவை - தக்க நல்லவைகளை அறியேனே - எனலுமாம்)

(குணவில்லதா) சீரான வில்லாக - மகா மேருமலையைத் தரித்த செல்வி - ஆய் - (தாய்) பார்வதி தேவியுடன் கூடிய - அருணாசல குரு - அண்ணாமலையார்க்கு குருவாக வந்தவனே! வல்ல - திண்ணிய மாதவமே - பெரிய தவநிலையையே பெறும்படியான நற்குணத்தொடு கூடிய (சாத - ஜாத) பிறப்பிற் கிடைத்த -

---

* "இன வல்ல மான மன தருளாயோ"- என்றார் 689-ஆம் பாடலில்.

*குடிலில்ல மேதரு நாளெது*
*மொழிநல்ல யோகவ ரேபணி*
*குணவல்ல வாசிவ னேசிவ குருநாதா;*
**பணிகொள்ளி மாகண பூதமொ*
*டமர் † கள்ளி கானக நாடக*
*பரமெல்லி யார்பர மேசுரி தருகோவே-*
*‡படரல்லி மாமலர் பாணம*
*துடைவில்லி மாமத னாரனை*
*Xபரிசெல்வி யார்மரு காசுர முருகேசா;*
*மணமொல்லை யாகி ○நகாகன*
*தனவல்லி மோகன மோடமர்*
*மகிழ்தில்லை மாநட மாடின ரருள்பாலா;*
*மருமல்லி மாவன நீடிய*
*பொழில்மெல்லி காவன மாடமை*
*****வடமுல்லை வாயிலின்** *மேவிய பெருமாளே.* (1)

## 687. கதி பெற

*தான தானன தானன தந்தன*
*தான தானன தானன தந்தன*
*தான தானன தானன தந்தன தனதான*

*சோதி மாமதி போல்முக முங்கிளர்*
*மேரு லாவிய மாமுலை யுங்கொடு*
*தூர வேவரு மாடவர் தங்கள்மு னெதிராயே-*
*சோலி பேசிமு னாளிலி ணங்கிய*
*மாதர் போலிரு தோளில்வி ழுந்தொரு*
*சூதி னால்வர வேமனை கொண்டவ ருடன்மேவி;*

---

* "நாகபூஷணத்தி" என்றார் 889-ஆம் பாடலில் 'கானிடைக் கணமேத்த ஆடியஅழகன்', 'காவியங்கண் மடவாளொடும் காட்டிடை ஆடு திர்': 'பூதஞ்சூழப் பாடலாடலார் - என வருவன காண்க - சம்பந்தர் -2-52- 5; 3-124-6; 2-62-5

† "உள்ளங்கவர் கள்வன்" உடன் இருத்தலின் தேவி 'கள்ளி' ஆயினள். ' மாமாயைக் கள்ள ஒளியின் கருத்தாகும் கன்னியே' திருமந்திரம் -1117.

‡ 'மதன் பாணங்கள்' -- பாடல் 19 பக்கம் 60 கீழ்க்குறிப்பு.

X பரி - பெருமை (திவாகரம்) ○ நகா - நகம் -மலை.

** சீகாழிக்கு அருகில் உள்ளது "தென் திருமுல்லை வாயில்": அது சம்பந்தர் தேவாரம் பெற்றது.

(குடில் இல்லமே) உடலாகிய வீட்டை (அடியேனுக்கு) நீ தருகின்ற நாள் எது? (எப்போது தருவாய்) - மொழி - கூறுவாயாக! நல்ல யோகிகள் பணிகின்ற நற்குணம் வாய்ந்தவனே! சிவனே! சிவனுக்குக் குருமூர்த்தியே!

(பணிகொள்ளி) பாம்புகளை ஆபரணமாகக் கொண்டவள்; பெரிய கணங்களான பூதங்களொடு அமர்ந்துள்ள (கள்ளி) - திருடி; காட்டில் நடனம் (சிவனுடன் ஆடுகின்ற) மேலான மென்மை வாய்ந்தவள், பரமேசுரி - பெற்ற தலைவனே!

(நீரிற் படரும்) அல்லி - தாமரை - நீலோற்பலம் ஆதிய சிறந்த மலர்ப்பாணங்களை உடைய வில்லியாகிய அழகிய மன்மதனுடைய (அனை) - அன்னை - தாய், (பரி செல்வியார்) - பெருமைவாய்ந்த செல்வி - இலக்குமி தேவியின் மருகனே! தெய்வ முருகேசனே!

திருமணம் விரைவிற் செய்துகொண்டு (நகா கன தனவல்லி) கனதன நகவல்லி - பருத்த கொங்கைகளை உடைய - (நகவல்லி) - மலைக்கொடியாம் பார்வதி (மோகன மோடமர்) - வசீகரிப்புடன் அமர்ந்து மகிழும் - தில்லையில் (சிதம்பரத்தில்) பெரிய நடனத்தை ஆடி அருளினவர் அருளிய குழந்தையே!

வாசனையுள்ள மல்லிகை பெருங்காடாக வளர்ந்துள்ள சோலையும் மென்மைவாய்ந்த (கா) பூந்தோட்டங்களும் (வனம்) நீர் நிலைகளும் மாடு அமை - பக்கங்களிற் சூழ்ந்து அமைந்துள்ள **வடமுல்லை வாயிலில்** வீற்றிருக்கும் பெருமானே!

(கரையேறிட..... இனமானவை அறியேனே)

## 687.

**ஒ**ளி பொருந்திய சிறந்த நிலவைப்போல முகமும், விளங்கும் மேருமலை போன்ற பெரிய கொங்கையும் கொண்டு, தூரத்தில் வருகின்ற ஆண்மக்களின் முன்பு எதிர்ப்பட்டு -

தங்கள் (ஜோலி) வியாபாரப் பேச்சை (அவர்களுடன் பேசி (முன் நாளில்) பழமையாகவே (இணங்கிய) பழகின பெண்கள்போல அவர்களுடைய இரண்டு தோள்களிலும் விழுந்து அணைந்து, ஒரு வஞ்சகப் பேச்சினால் (அவர்களை) வரும்படி செய்து தங்கள் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போய், அங்ஙனம் வந்தவருடன் பொருந்தியிருந்து -

மோதி யேகனி வாயத ரந்தரு
நாளி லேபொருள் சூறைகள் கொண்டுபின்
மோன மாயவ மேசில சண்டைக ளுடனேசி-

மோச மேதரு தோதக வம்பியர்
மீதி லேமய லாகிம னந்தளர்
மோட னாகிய பாதக னுங்கதி பெறுவேனோ;

ஆதி யேயெனும் வானவர் தம்பகை
யான சூரனை மோதிய ரும்பொடி
யாக வேமயி லேறிமு னிந்திடு நெடுவேலா-

ஆயர் வாழ்பதி தோறுமு கந்துர
லேறி யே*யுறி மீதளை யுங்கள
வாக வேகொடு போதநு கர்ந்தவன் மருகோனே;

† வாதி னால்வரு காளியை வென்றிடு
மாதி நாயகர் வீறுத யங்குகை
வாரி ராசனு மேபணி யுந்திரு நடபாதர்-

‡ வாச மாமல ரோனொடு செந்திரு
மார்பில் வீறிய மாயவ னும்பணி
Xமாசி லாமணி யீசர்ம கிழ்ந்தருள்
பெருமாளே.(2).

---

* உறியார் வெண்ணெயுண்டு உரலோடும் கட்டுண்டு
- பெரிய திருமொழி 6-5-4.

† வாதினால் காளியை வென்றது. - பாடல் 677, பக்கம் 60.

‡ திருமுல்லைவாயிலில் பிரமன் பூசித்துப் பேறுபெற்றான்.

"பிரமனாடி நல்வரமெல்லாம் பெற்றிடு சிறப்பாற்
பிரமதீர்த்த மென்றொருபெயர் பேசிடப் பிறங்கும்"

இந்திரன், வருணன் முதலிய அஷ்டதிக்குப் பாலகர்கள் பூசித்தது.

"இந்திரன் முதல் எண்மரும் இறைவனை நாடி தீர்த்தங்கள் தம்பெயரானே முந்து தொட்டனர்"- திருமுல்லைவாயிற் புராணம் - தீர்த்த - 5, 17.

X மாசிலாமணீசுரர் - வடதிருமுல்லைவாயிலில் அமர்ந்தருளி-யிருக்கும் சிவபெருமான். "பாலிவடகரை முல்லைவாயிலாய் மாசிலா-மணியே" - சுந்தரர் 7-69-5.

வலிய அணைந்து கொவ்வைக்கனி போன்ற வாய் இதழைத் தருகின்ற நாளிலே (வந்துள்ளவருடைய) பொருளை யெல்லாம் (சூறைகள் கொண்டு) கொள்ளையடித்து பின்பு (அவருடைய பொருள் வற்றிப்போனபின்) மௌனமாயிருந்தும், வீணாகச் சண்டைகள் போட்டு இகழ்ந்து பேசியும்

மோசமே செய்கின்ற (தோதக வம்பியர்) வஞ்சனை செய்யும் துஷ்டர்கள் மீது காம இச்சைகொண்டு மனம் தளர்கின்ற மூடனாகிய பாதகனாகிய நான் நற்கதி பெறுவேனோ!

ஆதிமூர்த்தியே என்று போற்றின தேவர்களுக்குப் பகைவனாயிருந்த சூரனைத் தாக்கி அவன் நன்கு பொடியாக மயிலில் ஏறிக் கோபித்த நெடிய வேலாயுதனே!

இடையர்கள் வாழ்ந்திருந்த ஊர்கள் தோறும் மகிழ்ந்து சென்று உரலில் ஏறி உறிமேல் உள்ள வெண்ணெயைத் திருட்டுத்தனமாகக் *(கொடுபோத) கொண்டுபோய் வேண்டிய அளவு (அல்லது விரைவாக) உண்டவனுடைய (கண்ணனுடைய) மருகனே!

வாது செய்துவந்த காளியை வென்ற ஆதிநாயகர், மேலிட்டு விளங்கும் (கைபோல வரும்) திரைகளை உடைய (வாரி ராஜன்) கடலரசு வருணனும் பணிகின்ற அழகிய நடன பாதங்களை உடையவர்.

நறுமணமுள்ள சிறந்த தாமரையில் வீற்றிருக்கும் பிரமனோடு அழகிய இலக்குமி மார்பில் விளங்கும் திருமாலும் பணிந்து வணங்கின (வடதிருமுல்லைவாயில் இறைவர்) மாசிலாமணியீசர் மகிழ்ந்து அருளிய பெருமாளே!

(கதி பெறுவேனோ)

---

* அளை.. நுகர்ந்தவன்; போதம் நுகர்ந்தவன் - ஞான போஜனன் ஞானாகரன் - எனலுமாம்.

## 688 ஞானம் பெற

தய்யதன தான தந்தன
தய்யதன தான தந்தன
தய்யதன தான தந்தன தனதான

மின்னிடை* கலாப †தொங்கலொ
டன்னமயில் நாண விஞ்சிய
மெல்லியர்கு ழாமி சைந்தொரு தெருமீதே-
மெள்ளவுமு லாவி யிங்கித
சொல்குயில்கு லாவி நண்பொடு
வில்லியல்பு ரூர கண்கணை தொடுமோக;
கன்னியர்கள் போலி தம்பெறு
மின்னணிக லார கொங்கையர்
கண்ணியில்வி ழாம லன்பொடு பதஞான-
கண்ணியிலு ளாக சுந்தர
பொன்னியல் ‡ப தார முங்கொடு
Xகண்ணுறுவ ராம லின்பமொ டெனையாள்வாய்;
சென்னியிலு டாடி ளம்பிறை
வன்னியும ராவு கொன்றையர்
செம்மணிகு லாவு மெந்தையர் குருநாதா-
Oசெம்முகஇ ராவ ணன்தலை
விண்ணுறவில் வாளி யுந்தொடு
தெய்விகபொ னாழி வண்கையன் மருகோனே;

---

*கலாபம் - பதினாறு கோவையுள்ள மாதர் இடையணி; மேகலை-7 கோவை; பருமம் -18 கோவை; விரிசிகை-32 கோவை; காஞ்சி -8 கோவை; "காஞ்சி எண்கோவை எழுகோவை மேகலை, கலாபம் நானான்கு, பருமம் பதினெட்டு, விரிசிகை எண்ணான்கு கோவை யென்ப" - பிங்கலம்.

† தொங்கல் - முன்றானை - ஆடையின் முந்தானை.

‡ பதாரம் - பாதாரவிந்தம் - பாதாரம் - பதாரம்.

- திருப்புகழ் 220 பார்க்க.

Xகண்ணூறு - கண்ணேறு - திருஷ்டி தோஷம் 'ஆய்ந்து கண்ணூறழித் தாள் அணி நீறளித்தே" - தணிகை புரா - களவு 329.

O இராவணன் நிறம் கறுப்பு - "இருள் நிறத்தவன்" - சம்பந்தர் 3-79-8 இராமபிரானது வாளி பட்டு ரத்தம் பீறிட்டுச் "செம்முக இராவணன்" ஆயினன்....

(தொடர்ச்சி பக்கம் 89 பார்க்க.)

## 688.

**மி**ன்னல்போல உள்ள இடையில் (கலாபம்) கலாபமும், இடையணியும், தொங்கல் - புடைவை முந்தானையும் விளங்க, அன்னமும், மயிலும் நாணம் அடையும்படி (சாயலும்) நடையழகும், அவைகளின் மேற்பட்டு விளங்குவனவான மாதர் கூட்டம் ஒருமித்து ஒரு தெருவிலே

மெள்ள உலாவி இன்பகரமான சொற்களைக் குயில்போலப் பேசிக் குலவி நட்பு பாராட்டி வில்லைப் போன்ற புருவமும், கண் (கணை) அம்பு போலவும் கொண்டு மோக

கன்னியர்கள் போல இன்பநலம் பெறுகின்ற மின்னல்போல ஒளிவீசும் அணிகலன்களையும், (கல்லாரம்) செங்கழுநீர் மாலையையும் பூண்டுள்ள கொங்கையர்களாம் பொது மாதர்களுடைய (கண்ணியில்) வலையில் (நான்) விழாமல் அன்புகூர்ந்து ஞானபதமான (ஞான நிலையதான)

வலையினுள் அகப்படும்படி (உனது) சுந்தர - அழகிய (பொன்னியல்) பொலிவு நிறைந்த (பதாரமும்) பாதார விந்தத்தையும் (கொடு) கொடுத்து, (கண்ணுறு) கண்திருஷ்டி வராதபடி இனிமையுடன் என்னை ஆண்டருளுக.

சிரசில்... உலவித்திரியும் இளம்பிறையையும் வன்னியையும் பாம்பையும், கொன்றையையும் கொண்டவர், சிவந்த (மணிகள்) நாகரத்னங்கள் விளங்கும் எந்தை சிவபெருமானுடைய குருமூர்த்தியே!

(ரத்தத்தால்) செந்நிறங்காட்டிய இராவணனுடைய தலை ஆகாயத்தில் தெறித்து விழும்படி வில்லினின்றும் அம்பினைப் பிரயோகித்த தெய்விக பொன்மயச் சக்கரத்தை யேந்திய அழகிய திருக் கையனாகிய திருமாலின் மருகனே!

---

"அயன்படை யாண்டகைச் சக்கரப்படை யோடுந்
தழீஇச் சென்று"

"புக்கோடி யுயிர்பருகிப் புறம்போயிற் றிராகவன்தன்
புனித வாளி"

"குருதி பொங்கத் தேர் நின்று நெடுநிலத்துச் சிரமுங் கீழ்ப்பட விழுந்தான் சிகரம் போல்வான்"

- கம்ப ராமாயணம் - ராவணன் வதை *197, 198, 200.*

துன்னியெதிர் சூரர் மங்கிட
சண்முகம தாகி வன்கிரி
துள்ளிடவெ லாயு தந்தனை விடுவோனே-

*சொல்லுமுனி வோர் தவம்புரி
**முல்லைவட வாயில்** வந்தருள்
துல்யபர ஞான வும்பர்கள் பெருமாளே.(3)

## திருவலிதாயம்.

(இந்த ஸ்தலம் பாடியென வழங்கிவருகின்றது. இது சென்னைப் பட்டினத்துக்கு மேற்கேயுள்ள வில்லிவாக்கம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 2-மைல். குறட்டூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 1/2 மைல். திருஞான சம்பந்த ஸ்வாமிகளுடைய தேவாரம் பெற்றது. ஸ்தல மான்மியம் உளது.)

### 689. அடிபேண

தனதய்ய தானதன தனதான

மருமல்லி யார்குழலின் மடமாதர்-
மருளுள்ளி நாயடிய னலையாமல்;

இருநல்ல வாகுமுன தடிபேண-
†**இனவல்ல மானமன தருளாயோ;**

‡ கருநெல்லி மேனியரி மருகோனே-
கனவள்ளி யார்கணவ முருகேசா;

**திருவல்லி தாயமதி லுறைவோனே-**
திகழ்வல்ல மாதவர்கள் பெருமாளே.

---

* பிருகு, வசிட்டர், துருவாசர் - பூசித்த தலம். வசிட்டர் பூசித்துக் காமதேனுவைப் பெற்றார். (திருமுல்லைவாயிற் புராணம்.)

† 'இனமானவை அறியேனே'- என்றார் 686 ஆம் பாடலில்.

‡ 'கருசெல்லிமேனி' என்றும் பாடம். திருமாலின் நிறம் - கறுப்பு, நீலம், பச்சை என்ப; "கார், மலர்ப்பூவை, கடலை, யிருள், மணி அவையைந்து உறழு மணிகிளர் மேனியை" ,- பரிபாடல் 13-42.

நெருங்கி எதிர்த்துவந்த சூரர்கள் அழிய ஆறு திருமுகத்துடன் விளங்கி, வலிய கிரவுஞ்சகிரி எழுகிரி இவை (துள்ளிட) பதைபதைத்து மாள வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

(சொல்லும்) பேர்பெற்ற முநிவர்கள் (பிருகு, வசிட்டன் முதலானோர்) தவஞ்செய்த வட **திருமுல்லை வாயிலில்** வந்தருள் சுத்தமான மேலான ஞானனே! தேவர்கள் பெருமாளே! (அல்லது ..... வந்தருள் பெருமாளே! சுத்த மேலான ஞானமுள்ள தேவர்கள் பெருமாளே!

(ஞானகண்ணியிலுளாக........ எனையாள்வாய்)

**திருவலிதாயம்.**

## 689.

**வா**சனை பொருந்திய மல்லிகை மலர் நிறைந்த கூந்தலையுடைய அழகிய (பொது மகளிர் மீதுள்ள)

காமமயக்க நினைவுகொண்ட அடிநாயேன் அலைச்சல் உறாமல்,

(இரு நல்ல) நல்ல இரண்டாகும் உன்னுடைய திருவடிகளை விரும்பிப் போற்ற,

தக்கதான கற்பு மனத்தை (பெருமை வாய்ந்த மனத்தை) அருள்புரிய மாட்டாயோ!

கருநெல்லி போன்ற திருமேனியை உடைய திருமாலின் மருகனே!

பெருமை பொருந்திய வள்ளியம்மையாரின் கணவனே! முருகேசனே!

**திருவலிதாயம்** என்னும் தலத்தில் வீற்றிருப்பவனே!

விளக்கம் வாய்ந்த மகா தவசிகளின் பெருமாளே!

(இனவல்ல மானமன தருளாயோ)

## திருவொற்றியூர்.

(ரெயில்வே ஸ்டேஷன். சென்னைக்கு வடக்கு 5-மைல். மூவர் தேவாரமும் பெற்ற முதுநகர். ஸ்தல புராணம் உண்டு)

### 690. ஞானம் பெற

தனதனன தான தனதனன தான
தனதனன தான தனதான

கரியமுகில் போலு மிருளளக பார
கயல்பொருத வேலின் விழிமாதர்-
கலவிகளில் மூழ்கி ம்ருகமதப டீர
களபமுலை தோய அணையூடே;
விரகமது வான மதனகலை யோது
வெறியனென நாளு முலகோர்கள்-
விதரணம தான வகைநகைகள் கூறி
விடுவதன்முன் ஞான அருள்தாராய்;
அரிபிரமர் தேவர் முனிவர்சிவ யோகர்
அவர்கள்புக ழோத புவிமீதே-
அதிகநட ராஜர் பரவுகுரு ராஜ
அமரர்குல நேச குமரேசா;
சிரகர கபாலர் அரிவையொரு பாகர்
திகழ்* கநக மேனி யுடையாளர்-
திருவளரு † மாதி புரிய தனில் மேவு
ஜெயமுருக தேவர் பெருமாளே.(1)

---

* சிவபிரான் பொன் வண்ணத்தவர்:

"பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி ஈசனுக்கே" -பொன்வண்ணத்தந்தாதி (1)

† ஆதிபுரி யென்பது திருவொற்றியூர்.

"திருந்துமொரு பூலோக சிவலோக மென்னப்
பொருந்தி அருளே பரவுபுரி யென வகுத்தே
இருந்தருளி ஆதியில் இயற்றியிட லாலே
அரும்புரியின் நற்பெயரை "ஆதிபுரி" என்றான்".

- திருவொற்றியூர்ப் புராணம். இலிங்கோற் 36

கோயம்புத்தூர் ஜில்லாவிலுள்ள 'பேரூர்" என்னுந் தலத்துக்கும் "ஆதிபுரி: என்னும் பெயர் உண்டு.

## திருவொற்றியூர்.

## 690.

கரிய மேகம் போன்ற இருண்ட கூந்தற்பாரத்தையும், கயல்மீனுக்கு இணையான (மீனொடு சண்டைசெய்யும், வேல்போன்ற கண்களையும் உடைய மாதர்களின்

காம போகங்களில் முழுகிக் கஸ்தூரி, சந்தனம் இவைகளின் கலவையைப் பூசியுள்ள கொங்கையிற் படியப் படுக்கையிலே

காம சம்பந்தமான 'மன்மத நூலை' கொக்கோக சாத்திரத்தைப் படிக்கின்ற வெறிகொண்டவன் (இவன்) என நாள்தோறும் உலகத்தினர்

(விதரணமதான) சுறுக்கு என்று தைக்கும்படியான வகையில் (நகைகள்) பரிகாச மொழிகளைப் பேசி (இகழ்ந்து) விடுவதற்கு முன்பாக 'ஞானம்' என்பதை அளித்து அருளுக.

திருமால், பிரமா, தேவர்கள், முனிவர்கள், சிவயோகிகள், ஆகிய இவர்கள் (உனது) திருப்புகழைப் பரவி ஓதப் பூமியில் -

மேம்பட்டு விளங்கும் நடராஜப் பெருமான் போற்றுகின்ற குருராஜ மூர்த்தியே! தேவர் குலத்துக்கு அன்பனே! குமரேசனே!

(பிரம) கபாலத்தைக் கையில் ஏந்தியவர், தேவி ஒரு பாகத்தினர், விளங்கும் பொன் மேனியை உடையவர் (ஆகிய சிவபிரான்) வீற்றிருக்கும்

லக்ஷ்மீகரம் விளங்கும் 'ஆதிபுரி' (என்கின்ற திருவொற்றியூரில்) விளங்கிடும் ஜெய முருகனே! தேவர் பெருமாளே!

(ஞான அருள்தாராய்)

## 691. சிவகதி பெற

*தனதத்தன தானதன தனதத்தன தானதன*
*தனதத்தன தானதன தனதானா*

சொருபப்பிர காசவிசு வருபப்பிர மாகநிச
சுக*விப்பிர தேசரச சுபமாயா-

துலியப்பிர காசமத சொலியற்றர சாசவித
தொகைவிக்ரம மாதர்வயி றிடையூறு;

கருவிற்பிற வாதபடி யுருவிற் †பிர மோத அடி
களை‡ யெத்திடி ராகவகை யதின்மீறிக்-

கருணைப்பிர காசவுன தருளுற்றிட ஆசில்சிவ
கதிபெற்றிட ராணவையை யொழிவேனோ;

குருகுக்குட வாரகொடி செருவுக்கிர Xஆதபயில்
பிடிகைத்தல ஆதியரி மருகோனே-

குமரப்பிர தாபகுக சிவசுப்பிர மாமணிய
Oகுணமுட்டர வாவசுரர் குலகாலா;

**திருவொற்றியு றாமருவு நகரொற்றியூர் வாரிதிரை
யருகுற்றிடு மாதிசிவ னருள்பாலா-

---

* விப்பிரதேச - "புகலிக்கரசாகிய திருவளர் விப்பிரசிகாமணி" (சம்பந்தர்) - ஆளுடை கலம்பகம் -6, (11-ஆம் திருமுறை)

† பிரமோத - விரும்பத்தக்க. 'நின்னிற் சிறந்த நின்தாளிணையவை' - பரிபாடல் - 4-62.

‡ ஏத்திடு இராகவகை எனப்பிரிக்க.

X ஆதபயில் - ஆதப அயில்.

O குண முட்டர் அவா அசுரர் எனப்பிரிக்க.

** திரு வொற்றி யுறா மருவு - லக்ஷ்மி சேர்ந்து உற்றிருக்கும்.

## 691.

(**சொ**ரூபப் பிரகாச) பிரகாச சொரூபனே! (ஒளி உருவனே!) (விசுவரூப) சராசரம் அனைத்தையும் கொண்ட பேருருவனே! (பிரமாக) பிரமப் பொருளாய் நின்று - முழுமுதற் பொருளாய் நின்று, (நிசசுக) உண்மையான சுகத்தைத் தரும்பொருளே! (விப்பிரதேச - பிராமண தேஜசு கொண்டவனே! (ரச சுப) இன்ப சுபப் பொருளே! (மாயா) அழியாத

(துலியப் பிரகாச) சுத்த ஒளியே! (மதசொலியற்ற) மதங்களின் (சோலி) தொந்தரவைக் கடந்த - ரசா - சவித - தொகை - விக்ரம - இன்பம் கூடிய வகையதான பராக்ரமத்தை உடையவனே! மாதர்களின் வயிற்றினிடையே ஊறுகின்ற.

கருவிற் பிறவாதபடி, உருவில் (உனது) திருவுருவத்தில் (பிரமோத) விரும்பத்தக்க திருவடிகளை ஏத்திடு (போற்றுகின்ற) இராகவகையதில் - கீதவகைகளில் (அல்லது ஆசை வழிகளிலே) (மீறி) மேம்பட்டவனாய்

கருணை ஒளியனே! உன்னுடைய திருவருள் கூடுவதால் குற்றமிலாத சிவகதியை (நான்) பெற்றுத் துன்பங்களான யாவற்றையும் கடக்கமாட்டேனோ!

(குரு) நிறமுள்ள குக்குட வார (ஆர) கொடி (கோழி (ஆர) விளங்கி நிறையும் கொடி.... அல்லது (வார குக்குட கொடி).... உனது அன்புக்கு உகந்த கோழிக் கொடியையும், போரில் உக்ரமாய் வெயில் ஒளி கொண்டதான வேலையும் பிடித்துள்ள திருக்கரங்களை உடைய ஆதியே! திருமாலின் மருகனே! (அல்லது கைத்தலங்களை உடையவனே! ஆதி அரியின் மருகனே).

குமரனே! கீர்த்தி விளங்கும் குகனே! (மா) அழகிய சிவசுப்பிரமணியனே! (அல்லது சிவ.... (சுப்பிர) மிக்க தூய்மையான மாமணி... பேரொளியனே! (குணம் முட்டர்) குணம் (முட்டு) குறைவுடையவரும் (அவா) ஆசைமிக்க வருமான அசுரர் குலத்துக்குக் (காலனே) யமனே!

(திரு) இலக்குமி (ஒற்றி உறாமருவு) சேர்ந்து பொருந்தியிருக்கும் நகரமான திருவொற்றியூரில் கடலலைக்குச் சமீபத்திலிருக்கும் ஆதிசிவன் அருளிய குழந்தையே!

திகழுற்றிடு யோகதவ மிகுமுக்கிய மாதவர்க
ளிதயத்திட மேமருவு பெருமாளே.(2)

## திருமயிலை.

(இது மயிலாப்பூர் என வழங்கும். சென்னைக்குத் தெற்கு 4-மைல். திருஞான சம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல்பெற்றது. ஸ்தல புராணம் உளது 22-ஆம் எண்ணுள்ள பாடலும் பாடவேற்றுமைப்படி இத் தலத்துக்கு உரியதாம்.

## 692. குக சாயுஜ்யம் பெற

தனன தனதனன தனன தனதனன
தனன தனதனன தனதான

அமரு மமரரினி லதிக னயனுமரி
யவரும் வெருவவரு மதிகாளம்-

அதனை யதகரண விதன பரிபுரண
மமைய னவர்கரண அகிலேச;

நிமிர வருள்சரண நிபிட மதெனவுன
நிமிர சமிரமய நியமாய-

நிமிட மதனிலுண வலசி வசுதவர
நினது பதவிதர வருவாயே;

*சமர சமரசுர † அசுர விதரபர
‡ சரத விரத அயில் விடுவோனே-

---

*சமரச அமர சுர - ஒற்றுமையான பெருந்தன்மையுடைய தேவர்களுக்கு.

† அசுர இதர பர - பகைவராகிய கீழான அசுரர்மேல்.

‡ சரத விரத அயில் - உண்மையான ஆக்நாசத்தி யாகிய வேலை.

(திகழுற்றிடு) விளக்கம் கொண்ட யோகத்திலும் தவத்திலும் மிக்க விசேடமடைந்த மகா தவசிகளின் (இதயத்திடமே) நெஞ்சம் என்னும் இடத்திலேயே பொருந்தி விளங்கும் பெருமாளே!

(கதிபெற்று இடரானவையை ஒழிவேனோ)

## திருமயிலை.

## 692.

**பொா**ருந்திய தேவர்களில் (அதிகன்) மேம்பட்டவனான இந்திரன், பிரமன், திருமால் ஆதிய இவர்கள் அச்சங் கொள்ளும்படி வருகின்றது (அதிகாளம்) பெருத்த விஷம்

அதனை - அந்த விஷத்தை - அதகரண விதன - கரண விதன அத - மனோ துக்கத்தை ஹதம் செய்பவனே! பரிபூரணம் அமை அன்னவர் கரண - சிந்தை நிறைவு - சாந்தம் அமைந்தவர்கள் மனத்தில் இருப்பவனே! சகலத்துக்கும் ஈசனே!

(நிமிர அருள் சரணம்)- நிமிர சரணம் அருள் - இத்தாழ்வு நீங்கி நாங்கள் உய்ந்து உயர்ச்சிபெற உனது திருவடி துணை செய்யவேண்டும், (நிபிடம்) நெருங்கி வருகின்றது - (அது) அந்த விஷம் - (என) என்று (தேவர்கள்) முறையிட, (உன நிமிர) - உன்னநிமிர - நினைக்கின்ற அவ்வளவு பரப்பிலே - நினைக்கு மளவிலே - நினைத்தவுடனே, (சமிரமய) சமீரன்மய - வாயுவின் தன்மையில் - வாயு வேகத்திலே - (நியமாய) - (சரணம் அடைந்தவர்களைக் காப்பதே) கடமையாக - முறைமையாக -

நிமிஷநேரத்தில் (அந்த விஷத்தை) உ(ண்)ண வல்ல - உண்டருளின - சிவனுடைய (சுதவர) வரசுத - சிரேஷ்டமான குமரனே! (நினது பதவிதர) உனது குகசாயுஜ்ய (பதவியை) நிலையைத்தர வந்தருளுவாயாக.

(சமரச அமர சுர) ஒற்றுமையான பெருந்தன்மை உடைய தேவர்களுக்கு (இதர பர அசுர) பகைவராகிய கீழான அசுரர்மேல் (சரத விரத அயில்) உண்மையான ஆக்ஞா சத்தியாகிய வேலைச் செலுத்தியவனே!

தகுர்த தகுர்ததிகு திகுர்த திகுர்ததிகு
தரர ரரரரிரி தகுர் தாத;

எமர நடனவித மயிலின் முதுகில்வரு
மிமைய மகள்குமர எமதீச-

இயலி னியல்மயிலை நகரி லினிதுறையு
மெமது பரகுரவ பெருமாளே. (1)

## 693. மாதர்மீது மயக்கு அற

தனனத் தனதன தனதான

அயிலொத் தெழுமிரு விழியாலே-
அமுதொத் திடுமரு மொழியாலே;

சயிலத் தெழுதுணை முலையாலே-
தடையுற் றடியனு மடிவேனோ;

கயிலைப் பதியரன் *முருகோனே-
கடலக் கரைதிரை யருகேசூழ்;

மயிலைப் பதிதனி லுறைவோனே-
† மகிமைக் கடியவர் பெருமாளே. (2)

## 694. அருளின்பம் பெற

தனன தானன தானன தந்தத் தனதான

அறமி லாவதி பாதக வஞ்சத் தொழிலாலே-
அடிய னேன்மெலி வாகிம னஞ்சற் றிளையாதே;

---

* முருகோனே - குழந்தையே என்னும் பொருளில் வந்துள்ளது.

"சிவகாமி பத்தினியின் முருகோனே"- திருப்புகழ் 580

"காசிபற்கு நேய முருகா" ; "வெஞ்சிறை செய்த முருகாவோ" - கந்தபுராணம் - 2-8-94. 4-11-196 - என்புழிப் போல.

† மகிமைக்கு - மகிமை உடைய (உருபு மயக்கம்).

தகுர்த தகுர் ததிகு.... தரர ரரரரிரி தகுர் தாத என்று- (எமர) - முருகனடியாராகிய எம்மவர்க்கு வேண்டியதும், நடனவகைகள் கொண்டுள்ளதுமான மயிலின் முதுகிலே வருகின்ற (இமயராஜன் மகள்) - பார்வதி குமரனே! எங்கள் ஈசனே!

இயற்றமிழ் விளங்கும் (அல்லது - தகுதி வாய்ந்துள்ள) - **மயிலாப்பூர்** என்னும் நகரிலே இன்பமுடன் வீற்றிருக்கும் எங்கள் மேலான குருமூர்த்தியே! பெருமாளே!

(நினது பதவிதர வருவாயே)

## 693.

**வே**லை நிகர்த்து எழுந்துள்ள இரண்டு கண்களாலும் அமுதத்துக்கு ஒப்பான அருமைப் பேச்சாலும்

மலைக்கு இணையாக எழுந்துள்ள இரண்டு கொங்கைகளாலும்

(வாழ்க்கை) தடையுண்டு அடியேனும் இறப்பேனோ!

கயிலைப் பதியில் வீற்றிருக்கும் சிவபிரானது குழந்தையே!

கடலினுடைய கரையும் அலையும் சமீபத்திற்சூழ்ந்துள்ள

**மயிலை**நகரில் வீற்றிருப்பவனே!

பெருமை பொருந்திய அடியவர் பெருமாளே! (அல்லது - உன் பெருமைக்கு அடியவர் யாரோ அவர்தம் பெருமாளே!)

(தடையுற் றடியனு மடிவேனோ)

## 694.

**த**ருமமே இல்லாத மிக்க பாவகரமான வஞ்சனை கொண்ட செயல்களாலே -

அடியவனாகிய நான் (மெலிவு) தளர்ச்சியுற்று, மனம் கொஞ்சமும் சோர்வு அடையாமல் -

திறல்கு லாவிய சேவடி வந்தித் தருள்கூடத்-
தினமு மேமிக வாழ்வுறு மின்பைத் தருவாயே;

விறல்நி சாசரர் சேனைக ளஞ்சப் பொரும்வேலா-
விமல மாதபி ராமித ருஞ் *செய்ப் புதல்வோனே;

மறவர் வாணுதல் வேடைகொ ளும்பொற் புயவீரா-
**மயிலை** மாநகர் மேவிய கந்தப் பெருமாளே.(3)

## 695. கிருபை பெற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

இகல வருதிரை பெருகிய சலநிதி
நிலவு முலகினி லிகமுறு பிறவியி
னினிமை பெறவரு மிடருறு மிருவினை யதுதீர-

இசையு முனதிரு பதமலர் தனைமன
மிசைய நினைகிலி யிதமுற வுனதரு
†ளிவர வுருகிலி அயர்கிலி தொழுகிலி உமைபாகர்;

மகிழு மகவென அறைகிலி ‡நிறைகிலி
மடமை குறைகிலி மதியுணர் வறிகிலி
வசன மறவுறு மவுனமொ டுறைகிலி மடமாதர்-

மயம தடரிட இடருறு மடியனு
மினிமை தருமுன தடியவ ருடனுற
மருவ அருள்தரு **கிருபையின் மலிகுவ
தொருநாளே;**

---

*செய் - சிவப்பு "செய்யார் எரியாம் உருவம்"
- சம்பந்தர் 2-72-9.

† இவர்தல் - பொருந்துதல். 'மாதிவர் பாகன்'
- திருவாசகம் - 43-1.

‡ நிறைதல் - திருத்தியாதல் - "நிறைந்த மனத்து மாதருங் களித்தடி வணங்கிட " - திருவால வாய் - புராணம் 38-5.

'செல்வமென்பது சிந்தையின் நிறைவே' - சிதம்பரமும்மணி -26.

வெற்றி விளங்கும் உனது செவ்விய திருவடியைப் போற்றி செய்து வணங்கி உனது திருவருள் கூடுமாறு -

நாள்தோறும் நல்ல வாழ்வு தரும் இன்பத்தைத் தந்தருளுக.

வீரம் வாய்ந்த அசுரர்களுடைய சேனைகள் பயப்படும்படி சண்டை செய்த வேலனே!

பரிசுத்த மூர்த்தியே! தாய் அபிராமி பெற்ற செந்நிறத்த குழந்தையே!

வேடருடைய ஒள்ளிய நெற்றிகொண்ட வள்ளிப் பெண்மீது (வேடை) வேட்கை - (காம) விருப்பம் (பற்றுள்ளம்) கொண்ட அழகிய புயவீரனே!

**மயிலை** மாநகரில் வீற்றிருக்கும் கந்தப் பெருமாளே!

(இன்பைத் தருவாயே)

## 695.

ஒன்றோடொன்று மாறுபட்டு எழுகின்ற அலைகள் பெருகியுள்ள கடல் சூழ்ந்துள்ள உலகத்தில் இப்போது (இம்மையில்) உள்ள பிறப்பினுடைய இன்பத்தைப் பெறவும், வருகின்ற துன்பத்தோடு தடைகளோடு கூடிய (நல்வினை - தீவினை என்னும்) இருவினைகள் ஒழியவும் -

பொருந்திய உனது இரண்டு பாதமலர்களை மனம் பொருந்த நினையாதவன்; இன்பம் பெற உன்னுடைய திருவருள் கைகூடிக் கிடைக்க உருகுதல் இல்லாதவன்; (பத்தியால்) தளர்ச்சியுறாதவன் - தன்வசம் அழியாதவன், வணங்காதவன், உமாதேவியைப் பாகங்கொண்ட சிவபிரான் -

மகிழ்கின்ற குழந்தையே என்று கூறாதவன்; திருப்தியில்லாதவன்; அறிவின்மை (பேதைமை) குறையாதவன்; அறிவு, தெளிவு அறியாதவன்; பேச்சு அற, பொருந்திய மௌனநிலையினில் இருத்தல் இல்லாதவன், அழகிய மாதர்களின்

(மயம் அது) அழகானது (அடரிட) அடர்தல் செய்ய - மனத்திற் செறிந்து இடங்கொள்ள அதனால் துன்பம் அடைகின்றவன் - ஆகிய அடியேனும் இன்பசுகம் தருகின்ற உன்னுடைய அடியார்களோடு கூடிப் பொருந்தியிருக்கும் திருவருளைத் தருவதான உனது கிருபைக்கு நிறைந்த பாத்திரனாகி விளங்குவதான ஒரு நாள் கிடைக்குமா!

சிகர தனகிரி குறமக ளினிதுற
*சிலத நலமுறு சிலபல வசனமு
திறைய அறைபயி லறுமுக நிறைதரு மருணீத-

† சிரண புரணவி தரணவி சிரவண
‡ சரணு சரவண பவகுக சயனொளி
திரவ பரவதி சிரமறை முடிவுறு பொருணீத!

அகர உகரதி மகரதி சிகரதி
யகர அருளதி தெருளதி வலவல
அரண முரணுறு மசுரர்கள் கெட அயில்
விடுவோனே-

அழகு மிலகிய புலமையு மகிமையும்
வளமு முறைதிரு மயிலையி லநுதின
மமரு மரகர சிவசுத அடியவர் பெருமாளே.(4)

## 696. மாதர்மீது மயக்கு அற

தனதனன தான தந்த தனதனன தான தந்த
▲ தனதனன தான தந்த தனதான

இணையதில தாமி ரண்டு கயல்களென வேபு ரண்டு
இருகுழையின் மீத டர்ந்து அமராடி-

---

* சிலதன் - ஏவல் செய்வோன் : தோழன் - முருகன், (வள்ளி) வேளைக்காரன், "வேடிச்சி காவலன்" ஆதலின் "சிலதன்" எனப்பட்டார்.

† சிரவண புராண - கேள்விக்குரிய பழையவனே (கடவுளே) எனலுமாம்.

‡ உ - இறைவன் - கந்தரந்தாதி - (காப்பு 2)

உயர்ச்சியுற்ற கொங்கை மலைகளைக் கொண்ட (குறமகள்) வள்ளி இனிமைபெற (அந்த வள்ளிக்கு) சிலத நலமுறு - தோழன் (அல்லது ஏவல் செய்வோன்) (போன்று) நன்மைகொண்ட சிலபல பேச்சுக்களாய அமுதத்தை (அமுத மொழிகளை) வீசிப் பரப்பி (அவளுடன்) பேசப்பயின்ற அறுமுக வேளே! நிறைந்து விளங்கும் அருள்கொண்ட நீதிமானே!

சீரண (சீரண - சீர் - அண் - அ) பெருமை செறிந்த (சேர்ந்த) (புரணம்) நிறைவே! (விதரண) தயாள குணத்தனே! (விசிரவண) நிரம்பிய கேள்வி யுடையவனே! சரணு (சரண் + உ) அடைக்கலம் புகுதற்கு உரிய (உ) இறைவனே! சரவணமடுவில் தோன்றியவனே! குகனே! (சயன்) - சயந்தன் - சிவனுடைய ஒளி (திரவ) பாய்ந்தவனே! ஒளி சாரமே! பரனே! அதிக (சிரம்) மேன்மை உடையவனே! வேதத்தின் (மறைகளின்) முடிந்த பொருளான நீதியனே!

(அகர) அகரம் போல்பவனே முதற்பொருளே! உகர தீ சிவசக்தியாய் விளங்கும் நல்லறிவே! (மகர தீ) ஆணவ மதத்தை (தீ) தகிப்பவனே! (சிகர தீ) சிவமாகிய அறிவே! (யகர) - ஜீவான்மாவில் விளங்குபவனே! (அருளதி) - அதிக அருளே! (தெருளதி) - அதிக (தெருளே) ஞானமே! வலவல - மிக்க வலிமை வாய்ந்த (அரணம்) காவற் கோட்டைகளிலிருந்த முரணுறு அசுரர்கள் - (மாறு) பகைமை பூண்ட அசுரர்களும் அழியும்படி வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

அழகும், விளங்கும் புலமையும் (கல்வி ஞானமும்) பெருமையும், வளப்பமும் நிலைத்திருக்கும் **மயிலாப்பூரில்** நாள்தோறும் வீற்றிருந்தருளும் "ஹர ஹர" ஒலிக்கு உரிய சிவனுடைய குமாரனே! அடியவர்தம் பெருமாளே!

(கிருபையின் மலிகுவ தொருநாளே)

## 696.

**தூ**மக்கு ஒப்பில்லாதனவான இரண்டு கயல் மீன்களென்று சொல்லும்படி புரண்டு, இரண்டு செவிகளின் - (அல்லது குழைகளின்) மேலே நெருங்கிப் போர் செய்து-

இலகுசிலை வேள்து ரந்த கணையதிலு மேசி றந்த
இருநயனர் வாரி ணங்கு மதிபாரப்;

பணைமுலையின் மீத ணிந்த தரளமணி யார்து லங்கு
பருவரதி போல வந்த விலைமானார்-

பயிலுநடை யாலு ழன்று அவர்களிட மோக மென்ற
படுகுழியி லேம யங்கி விழலாமோ;

கணகனென வீர தண்டை சரணமதி லே விளங்க
கலபமயில் மேலு கந்த குமரேசா-

கறுவிவரு சூர னங்க மிரு *பிளவ தாகவின்டு
கதறிவீழ வேலெ றிந்த முருகோனே;

மணிமகுட வேணி கொன்றை அறுகுமதி யாற ணிந்த
மலையவிலி னாய கன்றன் ஒருபாக-

மலையரையன் மாது தந்த சிறுவனென வேவ ளர்ந்து
மயிலைநகர் வாழ வந்த பெருமாளே.(5)

## 697. அகப்பொருள் (அணைய விரும்புவது)

தனதனன தான தத்த தனதனன தான தத்த
தனதனன தானதத்த தனதான

களபமணி யார முற்ற வசனமுலை மீது கொற்ற
கலகமத வேள்தொ டுத்த கணையாலுங்-

---

* 'போரவுணன் அங்க மிருகூறாய் அடல் மயிலும் சேவலுமாய்' கந்தர் கலிவெண்பா.

'ஒருடல் இரண்டு கூறுபட விடுத்த நெடுவேலோய்' - கல்லாடம்.

"சூருரங் கிழித்துப் பின்னும் அங்கம திருகூ றாக்கி * * *பெருமான் செங்கை எய்தி வீற்றிருந்த தவ்வேல்"

- கந்த புராணம். 4-13-490-91.

விளங்கும் வில்லை உடைய மன்மதன் செலுத்தின அம்பைக் காட்டிலும் மிகச் சிறந்தனவான இரண்டு கண்களை உடையவர்கள், (வார்) கச்சு (ரவிக்கை) பொருந்தியுள்ளனவும் அதிக பாரமானவைகளுமான-

பருத்த கொங்கைகளின் மேலே அணிந்துள்ள முத்துமணி (மாலைகள்) நிரம்பி விளங்கும் (பருவ ரதி) இளமைவாய்ந்த ரதி (மன்மதன் மனைவி) போல வந்த விலை மாதர்கள்-

(பயிலு நடையால் மேற்கொண்டு ஒழுகும் தொழிலே நான் சுழன்று அலைந்து அந்த மாதர்கள் மீதுள்ள மோகம் என்கின்ற (காம இச்சை என்கின்ற) பெருங்குழியிலே மயங்கி விழலாமோ? (விழலாகாது என்றபடி).

கணகணென ஒலிக்கின்ற வீர தண்டைகள் (சரணமதிலே) திருவடிகளிலே விளங்கத், தோகைமயில் மேல் மகிழ்ந்து விளங்கும் குமரேசனே!

கோபித்துவந்த சூரனுடைய உடலை இரண்டு பிளவாகப் பிரியப் பிளந்து அவன் அலறி விழும்படி வேலைச் செலுத்தின முருகனே!

அழகிய முடியாகிய சடையிற் கொன்றை, அறுகு, நிலவு, கங்கையாறு இவைதமை அணிந்தவரும் (மேரு) மலையையே வில்லாகக் கொண்ட (நாயகன்) தலைவருமான சிவனது ஒரு பாகத்தில் உள்ள

(மலையரசன்) பர்வதராஜன் ஈன்ற மகள் பார்வதி பெற்ற குழந்தை யென்னும்படியாகவே வளர்ந்து, மயிலைப் பதியில் வாழ வந்துள்ள பெருமாளே!

(மோகமென்ற படுகுழியிலே மயங்கி விழலாமோ)

## 697.

கலவைச் சாந்தும் மணிமாலையும், கொண்ட தாமரை மொட்டுப்போன்ற கொங்கையின் மேலே - வீரம் வாய்ந்தவனும் குழப்பத்தை உண்டு பண்ணுகின்றவனும், காமவிகாரந் தருபவனுமான மன்மதன் செலுத்தின அம்புகளாலும்-

கனிமொழிமி னார்கள் முற்று மிசைவசைகள் பேச வுற்ற
கனலெனவு லாவு வட்ட மதியாலும்;

வளமையணி நீடு புஷ்ப சயன அணை மீ*து ருக்கி
வனிதை†மடல் நாடி நித்த நலியாதே-

வரியளியு லாவு துற்ற இருபுயம ளாவி வெற்றி
**மலரணையில் நீய ணைக்க வரவேணும்;**

துளபமணி மார்ப சக்ர தரனரிமு ராரி சர்ப்ப
துயில தர னாத ரித்த மருகோனே-

‡சுருதிமறை வேள்வி மிக்க **மயிலை**நகர் மேவு முக்ர
துரகதக லாப பச்சை மயில்வீரா;

---

* உருக்கி - உருகி.

† மடல் - மடலேறுதல் - பாடல் 668, பக்கம் - 32 பார்க்க. கடவுள் சம்பந்தமாக மட்டும் பெண்பாலார் மடலேறுதல் கூறப்படும்;

'மானோக்கின் - அன்ன நடையார் அலர்ஏச ஆடவர்மேல்
மன்னு மடலூரார் என்பதோர் வாசகமும்
தென்னுரையில் கேட்டறிவ துண்டு - அதனையாம் தெளியோம்
மன்னும் வடநெறியே வேண்டினோம் - வேண்டாதார்
***உம்பர்வாய்த் - துன்னும் மதியுகுத்த தூநிலா நீள் நெருப்பில்
தம்முடலம் வேவத் தளராதார் - காமவேள்
மன்னும் சிலைவாய் மலர்வாளி கோத்தெய்ய
பொன்னெடு வீதி புகாதார்" - எனவரும் "இயற்பா - பெரிய திருமடல்" இந்தப் பாடலுக்கு விளக்கம் தருகின்றது.

"காமப் பகுதி கடவுளும் வரையார்
ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்" - தொல் புறத்திணை 28 என்பதன் கீழ் - 'கடவுள் மாட்டுக் கடவுட் பெண்டிர் நயப்பனவும், அவர் மாட்டு மாநுடப் பெண்டிர் நயப்பனவும், கடவுள் மாநுடப் பெண்டிரை நயப்பனவும் பிறவுமாம், - எனவரும் உரையைக் காண்க. புறநானூறு - 83, நெய்தற்கலி 25, 30 செய்யுள் உரைகளையும் காண்க. இந்தப் பாடல் (697) கடவுள் மாட்டு மாநுடப்பெண் நயப்பது கூறிற்று: 1020 ஆம் பாடல் மாநுடப் பெண்மாட்டு கடவுள் நயப்பது கூறுகின்றது.

‡ "சுருதிமறை" - சுருதி - வேதம். மறை உபநிடதம் எனக் கொள்ளலாம். 'வேதத்து மறைநீ" - எனவரும் பரிபாடலின் (3...66) உரை காண்க.

(கனி) இனிமைகொண்ட மொழிகளை உடைய மின் அனைய ஒளிகொண்ட மாதர்கள் எல்லாரும் (இசை) பொருந்தும் பழிச்சொற்களைப் பேசுவதாலும், சேர்ந்துள்ள நெருப்புப்போல உலவிவரும் வட்டமான (பூரண) நிலவாலும்-

செழுமைகொண்ட விரிந்த பூவால் அமைந்த படுக்கை மெத்தைமீது உருகும் (இப்) பெண் மடலேற விரும்பி நாள்தோறும் துன்பம் உறாமல்-

ரேகைகள் கொண்ட வண்டுகள் உலவி நெருங்கியுள்ள இரண்டு புயங்களாலும் கலந்துகூடி, என் எண்ணம் கைகூடி வெற்றிதர (இந்த) மலர்ப்படுக்கையில் நீ (என்னை) அணைக்க வரவேண்டுகின்றேன்.

துளசிமாலை அணிகின்ற மார்பன், சக்கரம் தரித்தவன், அரி, (முராரி) முராசுரன் பகைவன், (சர்ப்பம்) ஆதிசேடன் என்னும் பாம்பில் (துயிலதரன்) தூக்கம் கொள்பவன்- ஆன திருமால் - (ஆதரித்த) ஆசைகொண்ட மருகனே!

வேதம், மறை (உபநிஷதம் - அல்லது தமிழ்மறை) வேள்வி இவை நிரம்பிய **மயிலைப்பதியில்** வீற்றிருக்கும் உக்ரமான குதிரையாகிய தோகையுடைய பச்சை மயில் வீரனே!

அளகைவணி கோர்கு லத்தில் *வனிதையுயிர் மீள ழைப்ப
†அருள்பரவு பாடல் சொற்ற குமரேசா-
அருவரையை நீறெ ழுப்பி நிருதர்தமை வேர றுத்து
அமரர்பதி வாழ வைத்த பெருமாளே. (6)

## 698. தரிசனம் பெற

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

கடிய வேக மாறாத ‡விரத சூத ராபாதர்
கலக மேசெய் பாழ்மூடர் வினைவேடர்-
கபட வீன ராகாத இயல்பு நாடி யேநீடு
கனவி கார மேபேசி நெறிபேணாக்;
கொடிய னேது மோராது விரக சால மேமூடு
குடிலின் மேவி யேநாளு மடியாதே-
குலவு தோகை மீதாறு முகமும் வேலு மீராறு
குவளை வாகும் நேர்காண வருவாயே;
படியி னோடு மாமேரு அதிர வீசி யேசேட
பணமு மாட வேநீடு வரைசாடிப்-

* வனிதை - பூம்பாவை.

† உயிர் அழைப்ப அருள்பரவு பாடல் சொன்னது:
மயிலாப்பூரில் திருஞான சம்பந்தப் பெருமானிடத்திற் பேரன்பு வைத்திருந்த சிவநேசச் செட்டியார் என்பவரின் புதல்வி பூம்பாவை பாம்பு கடிக்க இறந்தனள். திருஞான சம்பந்தர் மயிலாப்பூருக்கு வரும் வரையில் அவளது எலும்பையும் சாம்பலையும் அப்படியே குடத்திற் சேமித்து வைத்திருந்தார் செட்டியார். சம்பந்தப்பெருமான் வந்ததும் இந் நிகழ்ச்சி அவருக்குத் தெரிவிக்கப்பட்டது; அவர் அந்தக் குடத்தை மயிலைக் கபாலீசர் முன்னிலையிற் கோயில் மதிற்புறத்து வெளியில் வைக்கச்சொல்லி,

"மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் காபலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்!"

எனத் துவக்கும் அருள்பரவு பதிகத்தைப் பாடி, அப்பதிகத்திற் 'போதியோ பூம்பாவாய்' எனப் பாடல்தோறும் பாட - அக் குடம் உடைபட்டு அந்த எலும்பினின்று "பூம்பாவை" என்னும் பெண் உயிர்பெற்று 12 வயது நிரம்பப்பெற்று எழுந்தனள் என்பது வரலாறு.

‡விரதர்...அருவருப்பான சங்கற்பச்செயல் உடையோர். "விரதமாயை புரி சகுனி பொருசூது" - பாரத. நாடுகரந் 32.

(அளகை) அளகாபுரி - குபேர நகரத்துச் செல்வம் கொண்ட வணிகர் குலத்திலே (பிறந்த) **பூம்பாவை** என்னும் பெண்ணின் (இறந்த) உயிரை மீளும்படி அழைக்கவேண்டி (இறைவன்) திருவருளைப் பரவின பதிகத்தைச் சொன்ன குமரேசனே!

அருமைச் செயல்கள் கொண்டிருந்த (கிரெளஞ்ச) கிரியைத் தூளாக்கி, அசுரர்களை வேரறுத்து, தேவர் ஊரைப் (பொன்னுலகை) வாழவைத்த பெருமாளே!

(மலரணையில் நீ யணைக்க வரவேணும்)

## 698.

கடுமையான (வேகம்) கோபம் குறையாத சங்கற்பங்களை உடைய வஞ்சகர்கள், (ஆபாதர்) கீழானோர் (தீயர்), கலகத்தையே செய்கின்ற பாழான மூடர்கள் - (தீ) வினையே விரும்புவோர்-

வஞ்சனை கொண்ட இழிந்தோர், இத்தன்மை-யோருடைய நல்லது ஆகாத முறைகளை விரும்பியே, பெரிய வலியுள்ள *(விகாரமே) அவலட்சணங்களையே பேசி, நன்னெறியைப் போற்றாத-

கொடியவனாகிய (நான்) எதையும் ஆராய்ந்து அறியாமல், (காமம்) ஆசைக் கூட்டங்களே மூடியுள்ள இந்தக் குடிசையாகிய உடலில் இருந்து கொண்டே தினந்தோறும் அழிவுறாமல்-

விளங்கும் மயில்மீது (உனது) ஆறுமுகமும், வேலும், (ஈராறு) பன்னிரண்டு குவளை மலர்மாலை அணிந்த (வாகும்) தோள்களும் அடியேன் நேராக எதிரே காணும்படி வருவாயே.

(படியினோடு) பூமியோடு, பெரிய மேருமலை அதிரும்படியாகச் செலுத்தி, ஆதிசேடனுடைய பணா மகுடங்கள் அசைவுறவும், பெரிய மலைகளை மோதி-

---

* விகாரம்: காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், இடும்பு, அசூயை என எண் வகைப்பட்ட துர்க்குணம்.

பரவை யாழி நீர்மோத நிருதர் மாள வானாடு
பதிய தாக வேலேவு மயில்வீரா;

வடிவு லாவி யாகாச மிளிர்ப லாவி னீள்சோலை
வனச வாவி பூவோடை வயலோடே-

மணிசெய் மாட மாமேடை சிகர மோடு வாகான
மயிலை மேவி வாழ்தேவர் பெருமாளே.(7)

## 699. அருள் மொழி பெற

தனனா தனனாதன தனனா தனனாதன
தனனா தனனாதன தனதான

திரைவார் கடல்சூழ்புவி தனிலே யுலகோரொடு
திரிவே னுனையோ துதல் திகழாமே-

தினநா ளுமுனே துதி மனதா ரபினேசிவ
சுதனே *திரிதேவர்கள் தலைவாமால்;

வரைமா துமையாள் தரு மணியே குகனேயென
அறையா வடியேனுமு னடியாராய்-

வழிபா டுறுவாரொடு அருளா தரமாயிடு
மகநா ளுளதோசொல அருள்வாயே;

இறைவா ரணதேவனு மிமையோ ரவரேவரு
மிழிவா கிமுனேயிய லிலராகி-

இருளா மனதேயுற அசுரே சர்களேமிக
இடரே செயவேயவ ரிடர்தீர;

* திரி தேவர்கள் - மும் மூர்த்திகள்.

பரப்புள்ள கடலில் நீர் மோதவும், அசுரர்கள் இறக்கவும், வானுளோர் நாடு (பொன்னுலகம்) செழிப்புள்ள நகரமாகவும், வேலாயுதத்தைச் செலுத்தின மயில் வீரனே!

அழகுடன் வளர்ந்து ஆகாயம்வரை வளர்ந்து விளங்கும் பலாமரங்களின் பெரிய சோலையும், தாமரைக் குளமும், நீர்ப்பூக்கள் உள்ள ஓடைகளும், வயல்களும்,

அழகுள்ள மாடங்களும், சிறந்த மாடங்களின் சிகரங்களும் ஒன்றுகூடி அழகு விளங்கும் **மயிலாப்பூரில்** வீற்றிருந்து வாழ்கின்ற தேவர் பெருமாளே!

(நேர்காண வருவாயே)

## 699.

**தி**ரைகள் கொண்ட நீண்ட கடலாற் சூழப்பட்ட பூமியிலே உலகத்தாரோடு (திரிவேன் உனை ஓதுதல் திகழாமே) உனை ஓதுதல் திகழாமே திரிவேன் - உன்னை ஓதிப் புகழ்தல் இல்லாது திரிகின்றேன்; (இனி)

(தினநாளும்) நாள்தோறும் - முனே துதி மனது ஆர - முன்னதாகத் துதிக்கும் மனநிலை நிரம்பப்பெற்று - பின்னே - (அப்படிப்பட்ட மனம் வாய்ந்த பின்னர்) சிவ குமரனே! மும்மூர்த்திகளின் தலைவனே! பெரிய

(இமய) மலை மாது - உமையாள் பெற்ற மணியே! குகனே என்று (அறையா) ஓதி அடியேனும் உன்னுடைய அடியாராய்

வழிபாடு செய்பவர்களோடு அருளன்பு கூடியவனாகின்ற (மகாநாள்) விசேடநாள் ஒன்று உண்டோ - (மேற்கூறியவாறு) உன் நாமங்களைச் சொல்ல அருள் புரிவாயாக-

தலைமைபூண்ட - வெள்ளையானை - ஐராவதத்துக்குரிய தேவனாம் இந்திரனும், (பிற) தேவர்கள் யாவரும் இழிவான நிலைமையை அடைந்து - முன்பு, தமது தகுதியை இழந்தவர்களாகி-

(இருளாம் மனதே உற) மயக்க இருள்கொண்ட மனங்கொண்டவராக, அசுரத் தலைவர்கள் நிரம்ப இடர் துன்பச் செயல்களைச் செய்துவர, அந்தத் தேவர்களின் துன்பம் நீங்க-

மறமா வயிலேகொடு வுடலே யிருகூறெழ
மதமா மிகு*சூரனை மடிவாக-
வதையே செயுமாவலி யுடையா ய்ழகாகிய
**மயிலா புரிமேவிய** பெருமாளே.(8)

## 700. கதி பெற

தனதன தனதன தாந்த தானன
தனதன தனதன தாந்த தானன
தனதன தனதன தாந்த தானன தனதான

நிரைதரு மணியணி யார்ந்த பூரித
ம்ருகமத களபகில் சாந்து சேரிய
இளமுலை யுரமிசை தோய்ந்து மாமல ரணைமீதே-

நெகிழ்தர அரைதுகில் வீழ்ந்து மாமதி
முகம்வெயர் வெழவிழி பாய்ந்து வார்குழை
யொடுபொர இருகர மேந்து நீள்வளை
யொலிகூர;

விரைமலர் செறிகுழல் சாய்ந்து நூபுர
மிசைதர இலவிதழ் மோந்து வாயமு
தியல்பொடு பருகிய வாஞ்சை யேதக வியனாடும்-

வினையனை யிருவினை யீண்டு மாழ்கட
லிடர்படு †சுழியிடை தாழ்ந்து போமதி
**யிருகதி பெறஅருள் சேர்ந்து வாழ்வது**
**மொருநாளே;**

பரையபி நவைசிவை சாம்ப வீயுமை
‡யகிலமு மருளரு ளேய்ந்த கோமளி
பயிரவி திரிபுரை யாய்ந்த நூல்மறை சதகோடி-

---

* "சூரனை - வதையே செயு மாவலி யுடையாய்" - இது 'சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி' என வரும் திருமுருகாற்றுப்படையின் கருத்தது.

†சுழி - தீக்குணம்: "சுழியுடைத் தாயுடைக் கொடிய சூழ்ச்சியால் - "கம்பராமாயணம். பள்ளி 74.

‡ "பூத்தவளே புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம் காத்தவளே" - அபிராமி அந்தாதி 13

வீரம் வாய்ந்த சிறந்த வேலாயுதத்தைக்கொண்டு உடல் இரண்டு கூறுபட, ஆணவம் கொண்ட மாமரமாய் மிக்கெழுந்து நின்ற அல்லது ஆணவப் பெருமை மிக்க சூரனை அழிவுற-

வதைசெய்த மஹா வலிமையைக் கொண்டவனே! அழகு வாய்ந்துள்ள **மயிலாப்பூரில்** வீற்றிருக்கும் பெருமாளே!

*(அருளாதரமாயிடு...நாளுளதோ....அருள்வாயே)*

## 700.

**வ**ரிசையமைந்த ரத்னாபரணங்கள் நிறைந்ததாய், மிக்கெழுந்ததாய், கஸ்தூரி - கலவை, அகில், சந்தனம் சேர்ந்துள்ள இள முலைகள் உள்ள (உரம்மிசை) மார்புமீது - அணைந்து நல்ல மலர்ப் படுக்கை மேலே -

(நெகிழ்தர அரைதுகில்) அரைதுகில் நெகிழ - இடுப்பில் உள்ள ஆடை தளர, விழுந்து, நல்ல சந்திரன் ஒத்த முகத்தில் வெயர்வு உண்டாக, கண்கள் பாய்ந்து நீண்ட குழைகள் உள்ள காதுகளொடு சண்டைசெய, இரண்டு கைகளிலும் உள்ள பெரிய வளைகள் ஒலி மிகச்செய-

நறுமண முள்ள மலர் நிறைந்துள்ள கூந்தல் சரிவுற்று, (கால்களில்) உள்ள சிலம்பு ஒலிசெய, இலவ மலர்போலச் சிவந்த வாயிதழை மோந்து அந்த வாயூறலை (இயல்பொடு) முறையே பருகும் விருப்பத்தையே தக்க சிறப்பாக - தக்க ஒழுக்கமாகத் தேடுகின்ற-

வினைக்கு ஈடானவனை, இருவினையிலே (ஈண்டும்) இம்மையிலும் இப் பிறப்பிலும், ஆழ்ந்த கடல்போன்ற துக்கத்திற் படுகின்ற தீய குணத்திலே (அல்லது துக்கமாகிய பெருஞ் சுழியிலே) தாழ்ந்து போகின்ற என் புத்தி பெருமைவாய்ந்த நல்லகதியைப் பெறுமாறு (உனது) திருவருளைக்கூடி வாழ்ந்து இன்புறுவதுமான ஒரு நாள் கிடைக்குமா?

(பரை) பராசக்தி, (அபிநவை) சிவத்தினின்றும் பிரிவு படாதவள், (புதியள்) சிவன் தேவி, சம்புவின் சக்தி, உமை, எல்லா உலகங்களையும் (அல்லது யாவற்றையும்) அருளின அருள்கொண்ட அழகி, (பயிரவி) அச்சந் தருபவள் அல்லது பைரவராம் சிவபிரானது பத்தினி, (திரிபுரை), மும்மூர்த்திகளுக்கும் மூத்தவள், (ஆய்ந்த நூல் மறை சதகோடி) சதகோடி நூல்மறை ஆய்ந்த - நூறுகோடிக் கணக்கான நூல்களும் உபதேச ரகசியப் பொருள்களும் ஆய்ந்துள்ள-

பகவதி *யிருசுட ரேந்து காரணி
மலைமகள் கவுரி†வி தார்ந்த மோகினி
படர்சடை யவனிட நீங்கு றாதவள் தருகோவே-
குரைகடல் மறுகிட மூண்ட சூரர்க
‡ளணிகெட நெடுவரை சாய்ந்து தூளெழ
முடுகிய மயில்மிசை யூர்ந்து வேல்விடு முருகோனே-
குலநறை மலரளி சூழ்ந்து லாவிய
மயிலையி லுறைதரு சேந்த சேவக
குகசர வணபவ வாய்ந்த தேவர்கள்
பெருமாளே.(9)

## 701. அருள் பெற

தனதன தத்தன தானா தானன
தனதன தத்தன தானா தானன
தனதன தத்தன தானா தானன தனதான

வருமயி லொத்தவ ரீவார் மாமுக
மதியென வைத்தவர் தாவா காமிகள்
வரிசையின் முற்றிய வாகா ராமியல் மடமாதர்-
மயலினி லுற்றவர் மோகா வாரிதி
யதனிடை புக்கவ ராளாய் நீணிதி
Xதருவிய லுத்தர்கள் மாடா மாமதி மிகOமூழ்கி;

---

* இருசுடர் ஏந்து காரணி; சந்திர சூரியாிடையே அம்பிகை எழுந்தருளியிருத்தல்: 'பானு மண்டல மத்யஸ்தா' (லலிதா 275); "சந்த்ர மண்டல மத்யகா" - "உறைகின்றநின் திருக்கோயில் அமுதம் நிறைகின்ற வெண்திங்களோ" "தான் போயிருக்கும்.....அலர்கதிர் ஞாயிறுந் திங்களுமே" "இரவு பகல் சூழுஞ் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்றதே" - அபிராமி அந்தாதி - உரை....20, 34, 47. 'இளநிலாத் தோன்று மதிமண்டலத் தமுதமயமாய் அம்மை தோன்றுகின்றதும்' மீனாட்சி பிள்ளைத் தமிழ் 95.

† "ஒன்றே பல உருவே அருவே என் உமையவளே"
....அபிராமி அந்தாதி 30.

‡ அணி - படை வகுப்பு (பிங்கலம்)

X தரு - மரம் என்பது ஒருவரைக் குறிக்கும்போது (இழிவு) வைதற் சொல்லாகும். (உ - ம்.)'மரமனையானுக் கிந்த மானை விதித்த பிரமனை யான் காணப்பெறின்' - தனிப்பாடல்.

O மூழ்கி - மூழ்குகிறவன்.

பகவதி, சூரியன் சந்திரன் என்னும் இரு சுடர்களும் (மத்தியில்) தரிக்கின்ற மூல தேவதை; இமயமலையின் புத்திரி, கவுரி, (விதார்ந்த மோகினி) விதம் பல கொண்ட - (பல உருவினளான அழகி) - அல்லது வி து ஆர்ந்த மோகினி....சந்திர மண்டலத்திற் பொருந்தி நிரம்பிய அழகி, படர்ந்த சடையுடைய சிவனது இடது பாகத்தில் நீங்காது விளங்கும் தேவி பார்வதி பெற்ற தலைவனே!

ஒலிக்கின்ற கடல் கலங்க, (கோபம்) பொங்கி எழுந்த சூரர்களின் படை வகுப்புக்கள் அழிய, பெரிய (கிரவுஞ்ச) மலை வீழ்ந்து பொடிபட, வேகமாகச் செல்லும் மயில்மேல் ஏறி வேலாயுதத்தைச் செலுத்தின முருகனே!

நல்லதேன் உள்ள மலர்களில் வண்டுகள் சூழ்ந்து உலாவும் **மயிலாப்பூரில்** வீற்றிருக்கும் சேந்தனே! பராக்ரமம் வாய்ந்தவனே! குகனே! சரவணபவனே! பொருந்திய தேவர்கள் பெருமாளே!

*(கதிபெற.....வாழ்வதும் ஒரு நாளே!)*

## 701.

**அ**சைந்து வரும் மயில் போன்றவர்கள், பொருள் கொடுப்பவர்கள் வந்தால் அவர் முன்பு தமது அழகிய முகத்தைப் பூரண நிலவுபோல வைத்துக் கொள்பவர்கள், (தாவா) தாவாத....எதிர் பாய்தல் இல்லாத (பதிலுக்கு) உண்மையில்....மோகம் கொள்ளாத) காமிகள் ஆசைக்காரிகள் (அல்லது....தாவாத - கெடாத-நீங்காத ஆசைக்காரிகள்) (வரிசையின் முற்றிய) ஒழுங்கு நிறைந்துள்ள (வா கு ஆர் ஆம் இயல் மடமாதர்) அழகு நிறைந்த தகுதி வாய்ந்த மெல்லிய மாதர்களுடைய-

மோகமயக்கத்தில் பட்டு அவர்கள் மீதுள்ள மோகம் என்னும் கடலிடையே புகுந்து அவர்களுக்கு (ஆளாய் நீணிதி) நீணிதி ஆளாய் (என்னுடைய) பெரிய சொத்துக்களெல்லாம் அவர்களுடைய ஆளுகைக்கு உட்பட்டு - (என் பொருள்களை எல்லாம் அவர்களுக்கே தத்தம் செய்து), தரு இயல் - மரமனைய (அருட்குணமே இல்லாத) அந்த (லுத்தர்கள்) லோபிகளாம் (அப்பொதுமகளிர்) மாடா - மாடாக - பக்கலிலே - பொதுமகளிர் மாட்டு - எனது (மா மதி) - நல்ல புத்தியானது மிகவும் முழுகிக் கிடக்கின்ற (நான்)-

தருபர வுத்தம வேளே சீருறை
அறுமுக நற்றவ லீலா கூருடை
அயிலுறை கைத்தல சீலா பூரண பரயோக
சரவண வெற்றிவி நோதா மாமணி
தருமர வைக்கடி நீதா வாமணி
மயிலுறை *வித்தவு ளாதா ரா†மணி
பெறுவேனோ;

திரிரிரி தித்திதி தீதீ தீதிதி
தொகுதொகு தொத்தொகு தோதோ தோதிகு
திமிதிமி தித்திமி ஜேஜே தீதிமி தொதிதீதோ-
தெண‡ வரி மத்தள மீதார் தேமுழ
திடுவென மிக்கியல் வேதா வேதொழு
திருநட மிட்டவர் காதே மூடிய குருபோதம்;
உரை செயு முத்தம வீரா நாரணி
உமையவ Xளுத்தர பூர்வா காரணி
உறுஜக ரக்ஷணி நீரா வாரணி தருசேயே-
உயர்வர முற்றிய கோவே யாரண
மறைமுடி வித்தக தேவே காரண
ஒருமயி லைப்பதி வாழ்வே தேவர்கள்
பெருமாளே(10)

---

* வித்தம்....ஞானம், அறிவு. "வித்தமிலா நாயேற்கும்" -அருட்பா 1, சிவநேச 64. 'அறிவே! உன்னையல்லால் அறிந்தேத்த மாட்டேனே' சுந்தரர் 7-26-4. † அணி....பெருமை (பிங்கலம்).

‡ சிவபிரானது நடனத்தின்போது - திருமால் மத்தளம் வாசிப்பர், நந்தி முழவங் கொட்டுவர். பிரமா தாளம் போடுவர்; வாணன் (வாணாசுரன்) குடமுழவு வாசிப்பான்:

"வரத்தின் அருள்பெற்ற மத்தள மாயோன் தன் கரத்தினனியொத்திக் களிப்ப.....நரைத்தலையோன் தாளம் பிடிக்க" - கச்சி ஆனந்த ருத்சேரர் வண்டு விடுதூது 193, 194.

**வாணன் வேண்டுகோள்**: "ஒரு கணமாய் இருந்து குடமுழ எடுத்துன் இலயம் பார்த்துக் குஞ்சிதத் தாளுக் கொக்கக் கொட்டி நடங்கண் டெனுளங் குளிரவேண்டும்"....ஞான உபதேச 2436.

**பிரமன் வேண்டுகோள்**: 'நந்தியம் பகவான்! எனக்குமே தாளம் நல்குதி நிருத்த நோக்குதற்கே" ....ஞான உபதேச 1983.

**திருமாலும் மத்தளமும்**: 'கன்றுகொண் டெதிர்ந்து கனி யுதிர்த்திடு செங்கண்ணன் நடத்துக்கு ஒன்றவே படகம் மத்தளம் சதியோ டொத்திட முழக்கியுண் மகிழ்ந்தான்' - ஞான உபதேச 1945

**நந்தி முழவம் வாசித்தல்**: "நந்தி முழவங் கொட்ட நட்டம் நாத னாடுமே" - திருவிசைப்பா (கோயில் 3.)

X 'சண்டிகை நாற்றிசை தாங்கி நின்றாளே' - திருமந்திரம் 1050.

(தரு பர உத்தம) திருவருளைத் தரும் (பாலிக்கும்) மேலான உத்தமனே! வேளே! பெருமை வாய்ந்த ஆறுமுகனே! நல்ல தவ விளையாடல்களை உடையவனே! கூர்மை கொண்ட வேலைப் பிடித்த கரத்தனே! (சீலா) தரும மூர்த்தியே! பரிபூரண மூர்த்தியே! மேலான யோக மூர்த்தியே!

சரவணபவனே! வெற்றி விநோதனே! உயர்ந்த ரத்னத்தைத் தரும் பாம்பை அடக்குகின்ற (நீதா ஆம்) நீதியுள்ளதான அழகிய மயில்மேல் வீற்றிருக்கும் (வித்த) ஞான மூர்த்தியே! (உன் ஆதாரம் அணி) உன் ஆதரம் - உன் அன்பு அல்லது ஆதாரம் - உனது பற்றுக்கோடு என்கின்ற - (அணி) பெருமையைப் பெறுவேனோ.

திரிரிரி தித்திதி தீதீ தீதிதி - ஜேஜே தீதிமி தொதிதீதோ-

தென என்று (அரி) திருமால் மத்தளம் மீதார் (மீது - ஆர்) மேலே நிரம்ப வாசிக்கும் (தேம்) இடத்தில், (அல்லது மீதார்தே - மேலே கூடித் தரிசிக்க நின்ற தேவர்கள்) முழ - முழவு வாத்தியத்தை திடு என (திடுதிடு என்று வாசிக்க), மிகுந்த தகுதி வாய்ந்த (வேதாவே) பிரமன் (தொழு) (தாளம் போட்டுத்) தொழுகின்ற அழகிய நடனம் செய்யும் சிவனுடைய செவிகளை *(உபதேசம்பெறவேண்டி) பொத்திய (மூடிக்கேட்கும்படி வைத்த) குருமூர்த்தியாய் ஞானப்பொருளை

(உரைத்த) உபதேசித்த மேலான வீரனே! நாரணி, உமையவள், (உத்தர பூர்வ காரணி) வடக்கு கிழக்கு முதலிய திசைகளின் மூல தேவதை! (அல்லது வட உத்தர - பூர்வ - ஆகார-அணி-உறு) அல்லது வடக்கு, கிழக்கு ஆதிய திக்குகளின் உருவம் கொண்ட அழகு பொருந்திய - திகம்பரியாகிய ஜகரக்ஷணி) - உலகை ரக்ஷிப்பவள்! (நீராவாரணி) - நீர் ஆவாரணி - ஆவாரண நீர் - மறைக்கின்ற சத்திக் குணம் (திரோதான சத்தி) உடைய சத்தி ஈன்ற குழந்தையே!

மேலான வரங்கள் நிரம்பத் தருந்தலைவ! வேத உபநிடத முடிவில் விளங்கும் ஞானனே! மூலகாரணனே! ஒப்பற்ற **மயிலாப்பூரில்** வாழ்பவனே! தேவர்கள் பெருமாளே!

(ஆதாரமணி பெறுவேனோ)

---

*உபதேசம் பெறும்போது செவியை மடக்கிக் கவனமாய்க் கேட்பது 'காது பொத்தரைக் கின்னரர்', போர்த்த நீள்செவியாளரந்தனர்க்கு....ஆல் நிழற் கீழறம்புரிந்து - சுந்தரர் 65-6, 55-7.

## திருவான்மியூர்.

(சைதாப்பேட்டை ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 4 மைல். மயிலாப்பூருக்குத் தெற்கு 3 மைல். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் இவர் தம் பாட்டல் பெற்றது. ஸ்தலபுராணமும் உளது.)

### 702. திருவடியைப் பெற

தனதான தானதன தனதான தானதன
தனதான தானதன தனதான

*குசமாகி யாருமலை மரைமாநு ணூலினிடை
குடிலான ஆல்வயிறு குழையூடே-
குறிபோகு மீனவிழி மதிமாமு காருமலர்
குழல்கார தானகுண மிலிமாதர்;
புசவாசை யால்மனது உனைநாடி டாதபடி
புலையேனு லாவிமிகு புணர்வாகிப்-
† புகழான பூமிமிசை ‡ மடிவா யிறாதவகை
பொலிவான பாதமல ரருள்வாயே;
நிசநார ணாதிதிரு மருகாவு லாசமிகு
நிகழ்போத மானபர முருகோனே-
X நிதிஞான போதமர னிருகாதி லேயுதவு
நிபுணாநி சாசரர்கள் குலகாலா;
O திசைமாமு காழியரி மகவான் **மு னோர்கள்பணி
சிவநாத ராலமயில் அமுதேசர்-
திகழ்பால மாகமுற மணி††மாளி மாடமுயர்
திருவான்மி யூர்மருவு பெருமானே.

---

* குசவாமியான என்றும் பாடம். † புகழான பூமி - பூமிக்குள்ள பெருமை: 'நெருநல் உளனொருவன் இன்றில்லை யென்னும் பெருமை உடைத்திவ்வுலகு' - திருக்குறள்-336. ‡ 'அடியேன் உறாதவகை' என்றும் பாடம். X நிதிஞானபோதம் - சிவஞான போதம்.

O திருவான்மியூரில் (i) பிரமன் பூசித்துத் திருவிழாவும் நடத்தினதாகப் புராணம் கூறுகின்றது. (ii) கண்ணபிரான் பூசித்துத் தன்னைப் பற்றிய பாவம் தொலையப் பெற்றனன்; இராமர் பூசித்து ராவணனைக் கொல்ல வரத்தைப் பெற்றனர்; இந்திரன் பிருகு முநிவரின் மகளை முத்தமிட்ட காரணத்தால் அவரால் அரக்கனாமாறு சபிக்கப்பட்டு நாரத முநிவரால் திருவான்மியூருக்குக் கொண்டுவரப்பெற்று, அங்கு தீர்த்தத்தில் முழுகப் பெற்றுச் சாபம் நீங்கப் பெற்றனன், - திருவான்மியூர்ப் புராணம்,** திருவான்மியூரிற் பூசித்த பிறர் - வான்மீகர், சந்திரன், சூரியன், வேதம், காமதேனு, இயமன், பிருங்கி.

†† மாளி....மாளிகை என்பது கடைக் குறை.

# திருவான்மியூர்.

## 702.

(குசமாகி) கொங்கை எனப்பட்ட நிறைந்துள்ள மலை, (மரை) தாமரையின் அழகிய நுண்ணிய நூல்போன்ற இடை, (குடிலான) குடிசை, அல்லது கருவுக்கு இருப்பிடமான ஆலிலை போன்ற வயிறு, காதின் குழைக்குளே-

குறிபோகின்ற மீன் போலும் கண், சந்திரன் போன்ற அழகிய முகமாகிய நிறைந்த மலர், (அல்லது நிறைந்த மலர்சூழ விளங்கும்) கூந்தலாகிய மேகம் - (எனக்கொண்ட) நற்குணம் இல்லாத (பொது) மகளிரின்-

(புசம்) தோள்மீதுள்ள ஆசையினால் என் மனது உன்னை நாடாதபடி, இழி தகையனான நான் (அங்கும் இங்கும்) உலவித்திருந்து, (அத்தகைய வழிகளிலே) அதிக சேர்க்கையடையவனாகி-

புகழ்பெற்ற இப் பூவுலகிலே (மடிவாய்) அழிவு உற்றவனாய் (இறாதவகை) முடிந்து போகாத வண்ணம்) பிரகாசமுள்ள உனது திருவடித் தாமரையை அருள்வாயே!

மெய்யனான நாராயணமூர்த்தி என்னும் தலைவனது அழகிய மருகனே! உள்ளக் களிப்பு மிகுந்து உண்டாகும் அறிவு - ரூபமான மேலான முருகனே!

நிதிச் செல்வமான (பொக்கிஷம் போன்ற) ஞான போதத்தை - (ஞான போதம்) சிறந்த ஞானோபதேசத்தைச் சிவனது *இரண்டு காதிலே உபதேசித்தருளிய சாமர்த்திய-சாலியே! (நிசா சரர்கள்) இருளிற் சஞ்சரிப்பவர்களான அசுரர் குலத்துக்கு யமன் போன்றவனே!

(திசைமாமுகன்) நான்முகன் - பிரமன், ஆழியரி - சக்ரதரனாகிய திருமால், (மகவான்) இந்திரன் (முனோர்கள்) முதலானவர்கள் பணிகின்ற (சிவநாதர்) சிவமூர்த்தி, (ஆலம்) விஷத்தை, (அயில்) உண்ட (அமுதேசர்) அமுதன்ன ஈசன்....(அத்தகைய பெருமானது)

விளக்கமுற்ற (பால) குழந்தையே! (மாகம் உற) ஆகாயத்தை அளாவும்படி அழகிய மாளிகை மாடங்கள் உயர்ந்துள்ள **திருவான்மியூரில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(பாதமலர் அருள்வாயே)

---

* பாடல் 109, பக்கம் 259 கீழ்க்குறிப்பு * பார்க்க.

## கோசைநகர்.

(கோசைநகர் என்பது கோயம்பேடு. சென்னைக்கு மேற்கு 6 மைல். பூவிருந்தவல்லிக்குப் போகும் வழி.)

### 703. திருவடியை நினைக்கும் அருள்பெற

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தனதான

*ஆதவித பாரமுலை மாதரிடை நூல்வயிற
தாலிலையெ னாமதன கலைலீலை-
யாவும்விளை வானகுழி யானதிரி கோணமதி
லாசைமிக வாயடிய னலையாமல்;
நாதசத கோடி†மறை யோலமிடு நூபுரமு
னானபத மாமலரை நலமாக-
நானநுதி னாதினமு மேநினைய வேகிருபை
நாடியரு ளேயருள வருவாயே;
சீதமதி யாடரவு வேரறுகு மா‡இறகு
சீதசல மாசடில பரமேசர்-
சீர்மைபெற வேயுதவு கூர்மைதரு வேலசிவ
சீறிவரு மாவசுரர் குலகாலா;
கோதைகுற மாதுXகுண தேவமட மாதுமிரு
பாலுமுற வீறிவரு குமரேசா-
**கோசைநகர்** வாழவரு மீசடியர் நேசகரு
வேசமுரு காவமரர் பெருமாளே.(1)

---

* ஆதம் - விருப்பம் † நூபுரம் மறை ஓலமிடுவது - பாடல் 333, பக்கம் 336 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

‡ இறகு - கொக்கின் இறகு - பாடல் 180. பக்கம் 418 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

X முருகவேள் வள்ளியை மணந்த பின் வள்ளியுடன் தேவசேனையிடம் சென்றனர் தேவசேனையைக்கண்டதும் வள்ளி வணங்கினள்; வணங்கின வள்ளியைத் தேவசேனை 'எடுத்துப் புல்லி...ஈங்கொரு தமியளாகி இருந்திடு வேனுக் கின்றோர் பாங்கிவந் துற்றவாறு நன்றெனப் பரிவு கூர்ந்தாள்"; பின்னர், வள்ளியின் வரலாற்றை முருகவேள் தேவசேனைக்கு விளக்கினர்; அவ் விளக்கத்தைக் கேட்ட தேவசேனை வள்ளியைப் புல்லி "இன்றுனைத் துணையாப் பெற்றேன் எம்பிரான் அருளும் பெற்றேன்" என மகிழ்ந்தாள். - (கந்த புராணம் 6-24-235, 254) இந் நிகழ்ச்சியைக் கருதித் தேவசேனையைக் "குணதேவ மடமாது" என்றார் அருணகிரியார்.

## கோசை நகர்

# 703.

**வி**ருப்பந் தருவதான கனம் - கொங்கை, (மாதர் அழகுள்ள இடை- நூல், வயிறு ஆலிலை, (எனா) என்று உவமை கூறி, காம சாத்திர விளையாடல்கள்-

எல்லாம் உண்டாகும் குழியான முக்கோணம் அதில் (அல்குலில்) ஆசை மிகவும் கொண்டு, அடியேன் அலைச்சல் உறாமல்,

(நாதனே!) (அல்லது ஒலியுடன்) நூறுகோடி (மறைகள்) ஆகம மந்திர உபதேசப் பொருள்களைச் சத்தத்தால் தெரிவிக்கும் (உனது) சிலம்பு முன்னதாக விளங்கும் திருவடியாம் அழகிய மலரை நன்மை பெறுமாறு

நான் நாள்தோறும் நிதமும் நினைக்கும்படி உனது கிருபையை நாடி (அங்ஙனம் நாடுவதால்) உனது திருவருளை நீ (அருள்) பாலிக்க வரவேண்டுகின்றேன்.

குளிர்ந்த நிலவு, ஆடும் அரவு, குறுவேர், அறுகு, (அல்லது) ஏர் அறுகு - அழகிய அறுகு, நிறம் உள்ள (கொக்கின்) இறகு, குளிர்ந்த (கங்கை) நீர், இவைதமைக் கொண்ட அழகிய சடையை உடைய பரமேசர்-

(உலகங்கள்) செம்மை பெறவே தந்த கூரிய வேலனே! சிவனே! கோபித்து வரும் பெரிய அசுரர்களின் குலத்துக்கு யமனே!

பெண்ணினல்லவளான குறமாது (வள்ளி) நற்குணம் உள்ள தேவ அழகிய மாது தேவசேனை - ஆக இருவரும் இரண்டு பக்கத்திலும் பொருந்த விளக்கத்துடன் வரும் குமரேசனே!

**கோசை** நகரில் வீற்றிருக்க வந்துள்ள ஈசனே! அடியார்க்கு நேசனே! சர்வேசனே! முருகா! தேவர் பெருமாளே!

(அருள வருவாயே)

## பெருங்குடி

(சரியான இடம் விளங்க இல்லை. சைதாப்பேட்டை, மதுரை, திருவாரூர், வலங்கைமான், (திருநெல்வேலி ஜில்லாவில்) ராதாபுரம், ஆகிய சப்டிஸ்ட்ரிக்டுக்களிற் 'பெருங்குடி' என்னும் பெயருடைய கிராமங்கள் இருக்கின்றன.

## 704.

தனந்தன தனந்தன தனந்தன தனந்தன
தனந்தன தனந்தன தனதான

தலங்களில் வருங்கன *இலங்கொடு மடந்தையர்
தழைந்தவு தரந்திகழ் தசமாதஞ்-
சமைந்தனர் பிறந்தனர் கிடந்தன ரிருந்தனர்
தவழ்ந்தனர் † நடந்தனர் சிலகாலந்;
துலங்கு நலபெண்களை முயங்கினர் மயங்கினர்
தொடுந்தொழி லுடன்‡ தம க்ரகபாரஞ்-
சுமந்தன ரமைந்தனர் குறைந்தன ரிறந்தனர்
சுடும்பினை யெனும்பவ மொழியேனோ;
Xஇலங்கையி லிலங்கிய இலங்களு ளிலங்கரு
ளிலெங்கணு மிலங்கென முறையோதி-
இடுங்கனல் குரங்கொடு நெடுங்கடல் நடுங்கிட
எழுந்தருள் முகுந்தனன் மருகோனே;
பெலங்கொடு விலங்கலு நலங்கஅ யில்கொண்டெறி
ப்ரசண்டக ரதண்டமிழ் வயலூரா-
Oபெரும்பொழில் கரும்புக ளரம்பைகள் நிரம்பிய
பெருங்குடி மருங்குறை பெருமாளே(1)

---

* இலம் கொடு - இல்லம் கொண்டு.

† "நல்வாயில் செய்தார் நடந்தார் உடுத்தார்
நரைத்தார் இறந்தார் என்று நானிலத்திற்
சொல்லாய்க் கழிகின்றது" - சுந்தரர் - *7-3-1.*

‡ தம - தம்முடைய. X 'வாக்குக்கு அருணகிரி' என்னும் மூதுரைக்கு எடுத்துக் காட்டு இந்த ஒரு அடியே போதுமானது. கண்ணகி மதுரைக்கு நெருப்பிட்டபோது-

"பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்க"- என்று சிலப்பதிகாரத்தில் *(21-53)* வருவதும் இங்கு கருதற்பாலது. O 'பெரும் பொழி லரம்பைகள் கரும்புக ணெருங்கிய" என்றும் பாடம்.

# பெருங்குடி

## 704.

(தலங்களில்) பூமியில் உள்ள இடங்களில் இருக்கின்ற பெரிய இல்லம் (வீட்டில்) இருந்துகொண்டு, மாதர்களின் பூரித்துள்ள (உதரம்) வயிற்றிலே செம்மையாகப் பத்து மாதம் -

வளர இருந்தனர், (பின்னர்) பிறந்தனர், (பின்னர்) படுக்கையிற் (குழந்தையாய்க்) கிடந்தனர், (பின்னர்) உட்கார்ந்தனர், அதன் பின் தவழ்ந்து சென்றனர், (அதன் பின்னர்) நடக்கலுற்றார், பின்பு சிலகாலம்

விளக்கமுள்ள நல்ல பெண்களொடு பொருந்தி இருந்தனர்; அவர்மீது மோக மயக்கம் கொண்டனர். அவர்களைத் தொட்டுத்தழுவும் தொழிலுடனே - (அல்லது தொட்ட - தான் மேற்கொண்ட தொழிலிலே தமது இல்லற வாழ்க்கைப் பாரத்தைச்

சுமந்தனர், அவ் வாழ்க்கையிலே உடன்பட்டு இருந்தனர், பின்பு தமது தொழில், பொலிவு, வலிமை இவையெலாம் குறைந்து மங்கி இருந்தனர்; (ஈற்றில்) இறந்தனர்; இப் பிணத்தைச் சுட்டெரியுங்கள் இனி; என்றெல்லாம் சொல்லப்படுகின்ற இப் பிறப்பை ஒழிக்க மாட்டேனோ!

இலங்கை நகரில் விளக்கமுற்றிருந்த வீடுகளுள் விளக்கமுற்ற அருள் (தயை - அன்பு) இல்லாத எல்லா இடத்தும் (ஏ! அக்கினியே! (நீ) பற்றி எரிவாயாக) என்று கட்டளையிட்டு (அல்லது நீதியை எடுத்துரைத்து)

(இடுங்கனல்) கனல் இடும் - நெருப்பை வைத்த குரங்கு அநுமனொடு, *பெரிய கடலும் நடுக்கம் கொள்ள எழுந் தருளின (முகுந்தன்) ராமபிரானது நல்ல மருகனே!

பலத்துடனே கிரவுஞ்சகிரி அசைவு உற வேல்கொண்டு எறிந்த மிக்க வீரம் கொண்டவனே! தண்ணிய தமிழ் விளங்கும் வயலூரனே!

பெரிய பொழில்களில் கரும்பும் வாழையும் நிரம்பி விளங்கும் பெருங்குடி என்னும் தலத்துக்கு அருகே வீற்றிருக்கின்ற பெருமாளே!

(பவம் ஒழியேனோ)

---

* கடல் நடுங்கினது: பாடல் 177, பக்கம் 412 கீழ்க்குறிப்பு.

## மாடம்பாக்கம்.

(செங்கற்பட்டு ஜில்லா வண்டலூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 7-மைல்.)

### 705. ஆண்டருள

தான தந்தன தானா தானன
தான தந்தன தானா தானன
தான தந்தன தானா தானன தனதான

தோடு றுங் *குழை யாலே கோல்வளை
சூடு செங்கைக ளாலே யாழ்தரு
கீத மென்குர லாலே தூமணி நகையாலே-
† தூம மென்குழ லாலே யூறிய
தேனி லங்கித ழாலே யாலவி
லோச னங்களி னாலே சோபித அழகாலே;
பாட கம்புனை தாளா லேமிக
வீசு தண்பனி நீரா லேவளர்
பார கொங்கைக ளாலே ‡ கோலிய விலைமாதர்-
X பாவ கங்களி னாலே யான்மயல்
மூழ்கி நின்றய ராதே நூபுர
பாத பங்கய மீதே யாள்வது கருதாயோ;
O நாட ருஞ்சுடர் தானா வோதுசி
வாக மங்களி னானா பேத **வ
நாத தந்த்ரக லாமா போதக வடிவாகி-
நால்வி தந்தரு வேதா வேதமு
நாடி நின்றதொர் மாயா தீதம
னோல யந்தரு நாதா ஆறிரு புயவேளே;

---

* குழை - காது; இஃது ஆகுபெயர்.

† தூமம் - புகை; கூந்தலுக்கு அகிற் புகை ஊட்டுவது வழக்கம். "நறிய அகிற் புகையிட் டாற்றுங் குழற்காடு" - முத்துக் குமாரசுவாமிப் பிள்ளைத் தமிழ் தால-3. ‡ கோலிய - வளைத்த.

X பாவகம் - வஞ்சக நடிப்பு. "அடைக்கலப் பொருளை வெளவிப் பாவகம் பலவுஞ் செய்து" - பெரிய புரா. திருநீல - 26.

O நாடருஞ் சுடர் - சிவபெருமான்.

** அநாதன்-"விண்ணோர் பரவி நின்ற நாதனை ஞாலம் விழுங்கும் அநாதனை" - இயற்பா திருவிருத்தம் 79.

## மாடம்பாக்கம்.

## 705.

**தோடு** என்னும் ஆபரணமுள்ள காதினாலே, திரட்சி உள்ள வளையல்களை அணிந்துள்ள செவ்விய கைகளாலே, யாழ்போல இனிய இசை கொண்ட மெல்லிய குரலாலே, பரிசுத்தமான ஒளிவீசும் பற்களாலே-

(அகிற்) புகையூட்டிய மெல்லிய கூந்தலாலே, (ஊறிய தேன் இலங்கு இதழாலே) தேன் ஊறிய இலங்கு இதழாலே - தேன் ஊறின விளக்கம் உள்ள வாயிதழாலே, (ஆலம்) விஷம் போன்ற (விலோசனங்களினாலே) கண்களாலே, ஒளி வீசும் அழகாலே-

பாடகம் என்னும் அணி புனைந்த கால்களாலே, நிரம்ப வீசப்பட்ட குளிர்ந்த பன்னீராலே, வளர்ந்துள்ள பாரமான கொங்கைகளாலே, (ஆடவர்களை) வளைக்கின்ற பொது மகளிருடைய-

வஞ்சக நடிப்புச் செயல்களாலே நான் மோகத்தில் முழுகி நின்று தளர்ச்சியுறாமல் சிலம்பணிந்த உனது பாத தாமரை மீதே என்னை ஆட்கொண்டு சேர்க்கும் வகையை நீ நினைக்கமாட்டாயோ!

(நாடுதற்கு) தேடிக் காண்பதற்கு அருமையான சோதிப் பொருள் சிவபிரானாக - முருகவேளாக-ஓதுகின்ற சிவாகமங்களில் பலவித பேதங்களாற் போற்றப்படும் (அநாதனே) - தனக்குமேலே தலைவன் இல்லாதவனே! மந்த்ர தந்த்ர சாஸ்திரங்களிற் கூறப்படும் சிறந்த ஞான வடிவினனாகி-

(இருக்கு, யசுர், சாமம், அதர்வணம்) எனப்படும் நால்வகைப்பட்ட வேதங்களையும் ஓதித் தரும் (வேதா) - பிரமனும் (அல்லது சராயுசம் (கருப்பையிற் பிறப்பன), அண்டசம் (முட்டையிற் பிறப்பன), உற்பீசம் (வித்திற் பிறப்பன), சுவேதசம் (வேர்வையிற் பிறப்பன), என நால்வகை உயிர்த் தோற்றங்களைப் படைக்கின்ற (வேதா) பிரமனும், வேதங்களும் நாடி நின்றதான, ஒப்பற்ற மாயைகளைக் கடந்து நிற்கும் மன ஒடுக்கத்தை (சாந்தியை)த் தரும் நாதனே! பன்னிரு திருப்புயங்களை உடையவனே!

*வாட யங்கிய வேலா லேபொரு
†சூர்த டிந்தருள் வீரா மாமயி
லேறு கந்தவி நோதா கூறென அரனார்முன்-
‡வாச கம்பிற வாதோர் ஞானசு
கோத யம்புகல் Xவாசா தேசிக
O மாடை யம்பதி வாழ்வே தேவர்கள்
பெருமாளே. (1)

## 706. ஆண்டருள

தனன தத்தன தனன தத்தன
தனந்தந் தந்த தந்தா
... ... ... தனதனா தனனா

விலைய றுக்கவு முலைம றைக்கவு
மணந்துன் றுஞ்செ ழுந்தார்
புனைமு கிற்குழல் தனைய விழ்க்கவும்
விடங்கஞ் சஞ்ச ரஞ்சேர்
விழிவெ ருட்டவு மொழிபு ரட்டவு
நிணந்துன் றுஞ்**ச லம்பா யுதிரநீ ருடனே-
வெளியி னிற்கவும் வலிய முட்டரை
யெதிர்ந்தும் பின்தொ டர்ந்தே
யிலைசு ணப்பொடி பிளவெ டுத்திடை
திரும்பும் பண்ப ரன்றே
யெனவு ரைத்தவர் தமைவ ரப்பணி
யுடன்கொண் டன்பு டன்போய் சயனபா யலின்மேல்;

---

* வா டயங்கிய--வான் தயங்கிய - ஒளி பொருந்திய.

† "சூர்த டிந்தருள் வீரா மாமயில்
வாசிகொண்ட விநோதா தாரக மரனார்முன்
வாசகந் தவறாதே ஓதுப
தேச நன்குரு வானாய் வானுயர்
மா பரங்கிரி மீதே மேவிய பெருமாளே"- என்றும் பாடம்.

‡ "நிர்வசனப் பிரசங்கம்" என்றார் 661-ஆம் பாடலில்.

X வாசா தேசிகன் - உபதேச குரு.

O மாடையம்பதி யென்பது மாடம்பாக்கம்.

** சலம் - சுழற்சி. 'சலம் வரும் குயவன திகிரித் தன்மைபோல்'
- கம்ப ராமாயணம் ராவணன் வதை - 63.

ஒளி பொருந்திய வேலாயுதத்தாலே, சண்டை செய்த சூரனை அழித்தருளின வீரனே! அழகிய மயிலில் ஏறும் கந்தனே! வினோதனே! 'நீ சொல்லுக' என்று கேட்ட சிவபிரானது முன்னிலையில்-

வாக்கால் தோற்றுவிக்க முடியாததான ஞான சுகத்தைப் பிறப்பிப்பதான பொருளை உபதேசஞ் செய்த தேசிகமூர்த்தியே (குருமூர்த்தியே)! **மாடம்பாக்கம்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் செல்வமே! தேவர்கள் பெருமாளே!

*(ஆள்வது கருதாயோ)*

## 706.

**வி**லைபேசி முடிவுசெய்யவும், கொங்கையை (ஆடையால்) மறைக்கவும் நறுமணம் நிறைந்துள்ள செழுமை கொண்ட பூ மாலையை அணிந்துள்ள மேகம்போன்ற (கரிய) கூந்தலை அவிழ்த்து விடவும், விஷம், (கஞ்சம்) தாமரை, (சரம்) அம்பு இவைகளுக்கு நிகரான கண்கொண்டு (ஆடவர்களை) வெருட்டவும், சொன்ன சொல்லைப் புரட்டிப் பேசவும் - மாற்றிப் பேசவும், மாமிசம், (துன்றும் சலம்பாய் உதிர நீருடனே) நிரம்பிய ஜலமும், பாய்கின்ற ரத்த நீருடன் (ரத்தத்துடனே) (அல்லது) நெருங்கிச் (சலம்) சுழற்சியுடன் பாய்கின்ற ரத்த நீருடனே-

வெளியிலே வந்து நிற்கவும், வலிய (வேண்டுமென்றே) (முட்டரை) மூடராயுள்ளோரை எதிர்ப்பட்டு அவர்களுடன் பேசியும்) அவர்களைப் பின் தொடர்ந்தும், வெற்றிலை, சுண்ணாம்பு, தூள்பாக்கு) இவைதமை எடுத்துக்கொடுத்து, '(நீங்கள்) இடையிலே (அப்படியே) நமது வீட்டுக்குத் திரும்பி வரும் நற்குணத்தவர் அன்றோ' (என உரைத்து) என்று நன்மொழி பேசி (அவர்தமை) அவர்களை (வரப்பண்ணி) தமது வீட்டுக்கு வரச் செய்து (உடன்கொண்டு) தம்முடனே அழைத்துச் சென்று அன்புடன் போய் உறங்கும் படுக்கையின் மேலே-

கலைநெ கிழ்க்கவு மயல்வி ளைக்கவு
நயங்கொண் டங்கி ருந்தே
குணுகி யிட்டுள பொருள்ப றித்தற
முனிந்தங் கொன்று கண்டே
கலக மிட்டவ ரகல டித்தபின்
வரும்பங் கங்கு ணங்கோர் புதியபே ருடனே-
கதைகள் செப்பவும் வலச மர்த்திகள்
குணங்கண் டுந்து ளங்கா
மனித னிற்சிறு பொழுது முற்றுற
நினைந்துங் கண்டு கந்தே
கடிம லர்ப்பத மணுகு தற்கறி
விலன் பொங்கும்பெ ரும்பா
தகனையா ளுவையோ;
*சிலைத னைக்கொடு மிகஅ டித்திட
மனந்தந் தந்†த ண‡ந்தா
மரைமலர்ப்பிர மனைந டுத்தலை
யரிந்துங் கொண்டி ரந்தே
Xதிரிபு ரத்தெரி புகந கைத்தருள்
சிவன்பங் கங்கி ருந்தா ளருளுமா முருகா-

---

* அருச்சுனனுடைய வில்லால் சிவன் அடிபட்டது:

தவஞ் செய்துகொண்டிருந்த அருச்சுனனைக் கொல்ல துரியோதனனுடைய ஏவலின்படி மூகாசுரன் என்ற அசுரன் பன்றி ரூபமாய் அருச்சுனனிடம் வந்தான். அப்போது சிவபிரான் வேடனாக வந்து பாணம் செலுத்தி அந்தப் பன்றியைக் கொன்றனர். அருச்சுனனும் அந்தப் பன்றியின்மீது ஒரு அம்பைச் செலுத்தினான். முன்னதாக ஒருவர் அம்பு விட்டிருக்கும்போது நீ ஒரு அம்பு செலுத்தினது சரியன்று என்று வேடனுடன் வந்தவர்கள் உரைக்க, அதனால் கலாம் ஏற்பட்டு விஜயனுக்கும் வேடனுக்கும் வில் யுத்தமும் மல் யுத்தமும் ஏற்பட, அருச்சுனனுடைய வில் முறிபட்டது. முறிபட்ட வில்லால் அருச்சுனன் வேடனை முடிமீது அடித்தான், அந்த அடி பிரமன், திருமால் முதலிய யாவர்மீதும் பட்டது. மற்போரில் விஜயனை வேடன் தனது பத மலரால் உந்தி விண்ணில் எறிந்தான். கீழே விழும் அருச்சுனனுக்கு இறைவன் காட்சி தர அவன் வணங்கி நின்றான்; இறைவன் அருச்சுனனுக்குப் பாசுபதாஸ்திரம் முதலிய தந்து மறைந்தார்.

"நின்னுடன் அமர்செய்து நின்வில் நாணறுத் தந்நெடு வில்லினால் அடியும் உண்டனன்" - வில்லி பாரதம். அருச்சுனன் தவம் - 27.

(தொடர்ச்சி பக்கம் 129 பார்க்க.)

ஆடையை (நெகிழ்க்கவும்) தளர விடவும், மோகத்தை உண்டுபண்ணவும், (நயத்துடனே) உபசார வார்த்தைகள் பேசி அங்கிருந்தபடியே, (குணுகியிட்டு) கொஞ்சிப் பேசி, (வந்தவரிடம்) உள்ள பொருள்களை எல்லாம் பறித்துப் பின்னர் (வந்தவருடைய) பொருள் வற்றினவுடன் (அற) மிகவும், கோபித்து; அச்சமயத்தில் ஏதேனும் ஒரு சாக்கு (ஒரு வியாஜம்) ஒரு போலிக் காரணம் (கண்டே) கற்பித்துக் கொண்டே, (கலகமிட்டு) கலகப் போர்செய்து, வந்தவரை அகன்று ஓடும்படி அடித்து, அனுப்பின பின்னர் (வரும் பங்கு அங்கு உணங்க ஓர் புதிய பேருடனே), அப்படி ஓட்டப்பட்டவர்களால் வந்த பங்குப் பொருள் (அங்கு) ஒரு நாள் சுருங்க ஒரு புதிய பேர்வழியைப்பற்றி அவருடனே

பொய்க் கதைகளைச் சொல்லவும் வல்ல சாமர்த்தியசாலிகள் - அத்தகையோர்களின் குணத்தைக் கண்டும் நிலை கலங்காத மனிதனைப் போல ஒரு சிறுபொழுதேனும் நன்கு மனம் பொருந்த (உன்னை) நினைந்தும், (உன்னைத்) தரிசித்து மனம் களித்தும், நறுமணமுள்ள மலர்கள் பொருந்திய உனது திருவடியை அணுகிச் சேர்வதற்கு உரிய அறிவு இல்லாதவனாய், மிக்கு எழுகின்ற பெரிய பாவியாகிய என்னை ஆண்டு அருளுவையோ (ஆண்டு அருளுக என்றபடி)

வில்லைக்கொண்டு (வில்லால்) நன்றாய்த் தன்னை அடிக்கும்படியான மனத்தைத் (தந்து) அருச்சுனனுக்குக் கொடுத்தும், (அந்தணன்) மறையோனும் தாமரை மலர் மீது வீற்றிருப்பவனுமான பிரமனுடைய (நடுத் தலையை உச்சித் தலையை அரிந்தும், அந்தத் தலையிலே பலிப்பிச்சை ஏற்றும், திரிபுரத்தில் எரிபுகும்படி சிரித்தும் - அருள் விளையாடல்கள் செய்த சிவனுடைய (இடது) பாகத்தில் இருப்பவளாம் பார்வதிதேவி அருளிய அழகு முருகனே!

---

† 'அந்தணன் தா' என்பது 'அந்தணந்தா' எனச் சந்தநோக்கி மருவிற்று. இனி 'அம் தண் அம் தாமரை' எனப் பிரித்து 'அழகிய குளிர்ந்த நீரில் தோன்றும் தாமரை எனலுமாம்' (அம் - அழகு நீர்.)

‡ **பிரமன் நடுத் தலையை அரிந்தது** - பாடல் 285, பக்கம் - 209 கீழ்க்குறிப்பு.

(தொடர்ச்சி பக்கம் 130 பார்க்க.)

செருவி டத்தல கைகள் தெனத்தென
 தெனந்தெந் தெந்தெ னந்தா
 எனஇ டக்கைகள் மணிக ணப்பறை
 டிகுண்டிங் குண்டி குண்டா
 டிகுகு டிக்குகு டிகுகு டிக்குகு
 டிகுண்டிங் குண்டி குண்டீ யெனஇரா வணனீள்;

மலையெ னத்திகழ் முடிகள் பத்தையு
 மிரண்டஞ் சொன்ப தொன்றேய்
 பணைபு யத்தையு மொருவ கைப்பட
 வெகுண் *டம் பொன்றெ றிந்தோன்
 மதலை † மைத்துன அசுர ரைக்குடல்
 திறந்தங் கம்பி ளந்தே மயிலின்மேல் வருவாய்-

வயல்க ளிற்கய லினமி குத்தெழு
 வரம்பின் கண்பு ரண்டே
 பெருகயற் ‡ கொடு சொரியு நித்தில
 நிறைந்தெங் குஞ்சி றந்தே
 வரிசை பெற்றுயர் X**தமனி யப்பதி**
 யிடங்கொண் டின்பு றுஞ்சீர் இளைய
 நாயகனே. (2)

---

*(129 ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)*

**பிரமன் தலையிற் பலி ஏற்பது;** வயிரவக் கடவுள் பிரமனது அறுபட்ட தலையைக் கையில் ஏந்தி முநிவர், தேவர், திருமால் முதலியோரிடம் சென்று ரத்த பிச்சை வாங்கி அவரவர் தம் ஆணவத்தை அடக்கினர்.

**சிவபிரான் வயிரவ மூர்த்திக்கு இட்ட கட்டளை:**

"கமலத்தோன் சென்னி இகழ்ந்தது நம்மை உச்சி, இருந்ததே அதனை வல்லே அகழ்ந்தனை கரத்தி லேந்தி முநிவர் ....... தேவர் புரந்தொறும் போதி....சோரிதானே ...ஐயமாக வாங்குதி - அன்னோர் அகந்தை மாற்றி அடைதி" - கந்தபுராணம் 6-13-167-168.

X திரிபுரம் எரித்தது - பாடல் 285, பக்கம் 206 பார்க்க.

---

* "அம்பு ஒன்று எறிந்தோன்" - பாடல் 452, பக்கம் 6 கீழ்க்குறிப்பைப் பார்க்க. (தொடர்ச்சி பக்கம் 131 பார்க்க.)

(செரு இடத்து) போர்க்களத்திலே பேய்கள் 'தெனத் தென தெனந்தெந் தெந்தெனந்தா எனக் கூறிக் குதித்தாட, இடக்கைகள் (இடக் கையாற் கொட்டப்படும் வாத்தியங்கள் - பெரு முரசு வகை), மணிகளும், கணப்பறை [பறைவகை - அதமக்கருவி]களும் டிகுண்டிங் குண்டி குண்டா .... குண்டி குண்டீ என ஒலிக்க, இராவணனுடைய பெரிய

மலைபோல விளங்கின தலைகள் பத்தையும், இரண்டு அஞ்சு (10) ஒன்பது (9) + (1)-சேர்ந்த இருபது பெரிய புயங்களையும் ஒரு வழிப்பட்டு ஒழியும்படி கோபித்து ஒரு அம்பை எறிந்தவனாகிய திருமாலின் பிள்ளை (பிரமனுக்கு அல்லது மன்மதனுக்கு) மைத்துன முறையினனே! அசுரர்களுடைய குடலை வெளிப்படுத்தி அவர்களுடைய உடலைப் பிளந்து மயில்மேல் வந்தவனே!

வயல்களிற் கயல்மீன் கூட்டங்கள் மிக்கு எழுந்து வரம்பினிடத்தே புரண்டு பெருகும் பக்கங்களிலே சங்குகள் சொரிகின்ற முத்துக்கள் நிறைந்து, எங்கும் விளக்கம் தரும் (வரிசை பெற்று) மேம்பாட்டினைப் பெற்று, விளங்கும் (தமனியப்பதி) மாடம்பாக்கம் என்னும் தலத்தை இடமாகக் கொண்டு இன்புறுகின்ற மேன்மை மிக்க (இளைய நாயகனே) இளமை வாய்ந்த தலைவனே!

(பெரும் பாதகனை ஆளுவையோ)

---

*(130-ஆம் பக்கம் கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி.)*

† "வேதா மைத்துன வேளே" - திருப்புகழ் - 823.
"காமவேள் மைத்துனப் பெருமாளே" - திருப்-1108, 1109

‡ கொடு-கோடு-சங்கு

X தமனியப்பதி என்பது மாடம்பாக்கம். தமனியம் மாடு - பொன். திரு அன்னியூர் என்னும் தேவாரம் பெற்ற தலம் - திருநீடூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு 3-மைலில் உள்ளது. பொன்னூர் என வழங்குகின்றது.

## கோடை நகர்

(இது 'வல்லைக்கோட்டை என வழங்கும். திருவள்ளூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு 11-மைல் தூரத்திலுள்ள ஸ்ரீ பெரும்பூதூருக்குத் தெற்கு 6 மைல். வண்டலூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு 12-மைல். சிங்கபெருமாள் கோயில் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 10 மைல். வாலாஜாபாத் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 12-மைல் . ஸ்வாமி பெயர் "கோடையாண்டவர்" இரண்டு தேவிமார்களுடனும் வீற்றிருக்கின்றார்.

## 707. அன்பு பெற

*தானதன தான தந்த தானதன தான தந்த*
*தானதன தான தந்த தனதான*

*ஆதிமுத னாளி லென்றன் தாயுடலி லேயி ருந்து*
*ஆகமல மாகி நின்று புவிமீதில்-*

*ஆசையுட னேபி றந்து நேசமுட னேவ ளர்ந்து*
*ஆளழக னாகி நின்று விளையாடிப்;*

*பூதல மெலாம லைந்து மாதருட னேக லந்து*
*பூமிதனில் வேணு மென்று பொருள்தேடிப்-*

*போகமதி லேயு ழன்று பாழ்நர கெய் தாம லுன்றன்*
**பூவடிகள் சேர அன்பு தருவாயே;**

*சீதைகொடு போகு மந்த ராவணனை மாள வென்ற*
*தீரனரி நார ணன்றன் மருகோனே-*

*தேவர்முநி வோர்கள் கொண்டல் மாலரிபிர் மாவு நின்று*
*தேடஅரி தான வன்றன் *முருகோனே;*

*கோதைமலை வாழுகின்ற நாதரிட பாக நின்ற*
*கோமளிய நாதி தந்த குமரேசா-*

---

*முருகன்-குழந்தை என்னும் பொருளில் வந்துள்ளது.
- பாடல் 679, 693 பார்க்க.

## கோடை நகர்.

## 707.

முதல் முதலிலே என்னுடைய தாயின் உடலில் இருந்து, உடல் அழுக்குடன் இருந்து, (பின்பு) இந்தப் பூமியிலே-

ஆசையுடனே பிறந்து-பிறக்கும்போதே ஆசையுடன் பிறந்து, (பெற்றோர்-சுற்றத்தார் இவர்தம்) அன்பால் வளர்ந்து, ஆள் அழகன் என்னும்படியாக விளங்கி விளையாடி-

பூமியில் எல்லா இடங்களிலும் அலைந்து திரிந்து. பெண்களுடனே மருவிக் கலந்து, பூமியில் வேண்டியிருக்கிற-தென்று பொருள்களைத் தேடி-

(போகங்கள்) சுகங்களிலேயே திரிதலுற்று, பாழான நரகத்தை நான் அடையாமல் உன்னுடைய மலரன்ன திருவடிகளைச் சேர அன்பு தந்தருளுக.

சீதையைக் கொண்டுபோன அந்த (அல்லது-மந்த-அறிவு மழுங்கிய) ராவணனைக் கொன்று வென்ற தைரியசாலி, ஹரி, நாராயணனுடைய மருகனே!

தேவர்கள், முநிவர்கள். மேக நிறங்கொண்ட திருமாலாம் ஹரி, பிரமா இவர்களெல்லாம் நின்று தேடியும் காணுதற்கு அரியவராய் நின்ற சிவனது குழந்தையே!

(*கோதை) தேவி, (மலை) கயிலைமலையில் வாழ்கின்ற நாதர்-சிவபிரானது இடது பாகத்தில் இடங் கொண்டிருக்கும் (கோமளி) அழகி, (அநாதி) தொடக்கம் இல்லாதவள் தந்த குமரேசனே!

---

*கோதை-பார்வதி - 'கொம்பியல் கோதைமுன் அஞ்ச கோதை துணையாதி முதல் வேத விகிர்தன்" -சம்பந்தர்-3-18-4; 68-6.

'கோதைமலை' என்ற ஒரு தலம் சேலம் ஜில்லாவில் இருக்கிறது என்பர்.

*கூடிவரு சூரர் தங்கள் மார்பையிரு கூறு கண்ட
† கோடைநகர் வாழ வந்த பெருமாளே. (1)

## 708. அன்பு பெற

தானதன தான தந்த தானதன தான தந்த
தானதன தான தந்த தனதான

சாலநெடு நாள்ம டந்தை காயமதி லேய லைந்து
சாமளவ தாக வந்து புவிமீதே-
சாதகமு மான பின்பு சீறியழு தேகி டந்து
தாரணியி லேத வழ்ந்து விளையாடிப்;
பாலனென வேமொ ழிந்து பாகுமொழி மாதர் தங்கள்
பாரதன மீத ணைந்து பொருள்தேடிப்-
பார்மிசையி லேயு ழன்று பாழ்நரகெய் தாம லொன்று
**பாதமலர் சேர அன்பு தருவாயே;**
‡ ஆலமமு தாக வுண்ட ஆறுசடை நாதர் திங்கள்
ஆடரவு பூணர் தந்த முருகோனே-
X ஆனைமடு வாயி லன்று மூலமென வோல மென்ற
ஆதிமுதல் நார ணன்றன் மருகோனே;

---

*கூடிவரு சூரர் - சூரபத்மா - (சூரனும் பதுமனும்,) சூரன் பதுமன் என்னும் இருவரே ஒரு வடிவமாகி சூரபத்மா என ஆனார்.

'நீவிர் தாம் இருவிர் ஒருவடிவாகி நிருதரிற் சூரபத்மா வென்
றோவிலா விறல்கூர் பெயர்தரித் திமையோர்க் குறுபகையா
யுடற்றிடுநாள். தாவில்சீர் எமதாணையில் உமக்கொழுகு தாழ்பசுஞ் சிறகர்மாயூரஞ், சேவலாம் வடிவுண் டாமென முறுவல் சிறிது கூர்ந்துரைத் தனுப்பினனால்' - உபதேச காண்டம் ஞானவரோ-84.

மாமரமாய் நின்ற சூரனது உடல் வேலால் தடியப்பட்டு, அறுபட்டு விழுந்தும் தவச்சிறப்பால் கூறுபட்ட உடல் அழியாது ஒன்று கூடிட பழைய உருவத்துடன் சூரன் போருக்கு வந்தான்.

வேல் அவன் உடலை மறு முறையும் கிழித்து இருகூறாக்கிற்று.
"சூருரங் கிழித்துப் பின்னும் அங்கம திருகூறாக்கி
எஃகம் வான் போயிற்றம்மா"
"மெய்பகிர் இரண்டுகூறும் சேவலு மயிலுமாகி"

-கந்த புரா-4-13-490, 492

† 'கோவைநகர் வாழவந்த பெருமாளே' - என்றும் பாடம்.

'கோவல் நகர் வாழவந்த பெருமாளே' - என்றும் பாடம். (கோவை - கோயமுத்தூர்; கோவல் - திருக்கோவலூர்).

(தொடர்ச்சி பக்கம் 135 பார்க்க.)

ஒன்று கூடி வந்த சூரர்களுடைய மார்பை இரண்டு கூறாகக் கண்ட பெருமாளே! கோடை நகரில் வாழ்ந்திருக்கும் பெருமாளே!

(பூவடிகள் சேர அன்பு தருவாயே)

## 708.

மிகவும் நீண்ட நாள்கள் ஒரு பெண்ணின் (கருவிலே) உடலிலே (கிடந்து) அலைச்சலுற்று, (பின்பு) சாவும் அளவுக்குள்ள துன்பத்துக்கு ஆளாகி வந்து பூமியிலே-

(சாதகமும் ஆன பின்பு) பிறப்பு என்பதை அடைந்த பின்னர், பலமாக அழுது, கிடந்து, தரையிலே தவழ்ந்து விளையாடிப் (பின்பு)

பால உருவினனாய்ப் பேச்சுக்கள் பேசிச் சர்க்கரை போல இனிக்கும் சொற்களைக் கொண்ட மாதர்களின் பெருத்த கொங்கைமீது அணைந்து, பொருள்தேட வேண்டி-

பூமியிலே திரிந்து (ஈற்றில்) பாழான நரகத்திற்போய்ச் சேராமல், பொருந்திய (உனது) திருவடி மலரைச் சேர்வதற்குரிய அன்பைத் தந்தருளுக.

விஷத்தை அமுதமாக உண்ட கங்கையாற்றைச் சடையிற் சூடியுள்ள நாதர், சந்திரனையும், படமெடுத்தாடும் பாம்பையும் பூண்டுள்ளவர் - (ஆன சிவபிரான்) தந்த முருகனே!

(ஆனை) கஜேந்திரனால் (அன்று) மடுவிடத்தே 'ஆதி மூலமே' என்றும் 'நீயே தஞ்சம்", என்றும் கூவி அழைக்கப்பட்ட ஆதி முதல்வனான நாராயணமூர்த்தியின் மருகனே!

---

‡ சிவபிரான் ஆலம் உண்டது - பாடல் 509 பக்கம் 162 பார்க்க.

X ஆனை அழைக்கத் திருமால் வந்து உதவினது - பாடல் 110. பக்கம் 262 பார்க்க.

கோலமலர் வாவி யெங்கு மேவுபுனம் வாழ்ம டந்தை
கோவையமு தூற லுண்ட குமரேசா-
கூடிவரு சூர டங்க மாளவடி வேலெறிந்த
*கோடைநகர் வாழ வந்த பெருமாளே.(2)

## 709. அகப்பொருள் - கடப்பமாலை பெற

தானா தானா தானா தானா
தானா தானத் தனதானா

†(ஏறா னாலே) நீறாய் மாயா
(‡வேளே வாசக் Xகணையாலே-
ஏயா வேயா மாயா (வேயா
லாமே ழோசைத் தொளையாலே;)
மாறா யூறா யீறாய் மாலாய்
Oவாடா மானைக் கழியாதே-
வாராய் பாராய் **சேரா யானால்
வாடா நீபத் தொடைதாராய்;
சீறா வீறா ††ஈரேழ் பார்சூழ்
சீரார் தோகைக் குமரேசா-
தேவா சாவா மூவா நாதா
தீரா கோடைப் பதியோனே;

---

* 'கோவை நகர் வாழுவந்த பெருமாளே" - 'கோவல் நகர் வாழுவந்த பெருமாளே' - என்றும் பாடம்.

'கோடை நகர்' என்பது திருச்செங்கோடு அன்று என்பது "அருணைதிருத் தணிநாக மலைபழநிப் பதிகோடை அதிப" (திருப்புகழ் 800) என வருவதில் நாகமலை திருச்செங்கோடு வேறாகக் கூறப்பட்டிருத்தலாற் பெறப்படும்.

† ஏறு ஆனாலே - இடபமும் பசுவும் கலந்து வருதலாலும்,

‡ வேள் ஏ வாசம் கணையாலே - மன்மதன் ஏவுகின்ற புஷ்ப பாணத்தாலும். X கணையாலே ஏய்ந்து ஏய்ந்து கணைபட்டுப் பட்டு மாய்ந்து எனலுமாம். O வாடுதல்- நீங்குதல் "சூலமும்...கரத்தினில் வாடா திருத்தி" - கல்லாடம் 88, 29. ** 'சேராயானால் நீபத் தொடை தாராய்' என்பது 'தொடங்கினள் மடலென் றணி முடித் தொங்கற் புற இதழாகிலும் அருளான்' - எனவரும் திருவிசைப்பாவை நினைவூட்டுகின்றது. †† "சூர்திகழ் மஞ்ஞை ஏறிச் சுமக்குதி எம்மை என்னாப் பார்திசை வானமுற்றும் பாரியென நடாத்த லுற்றான்" - கந்த புராணம்-4-13-499. பாடல் 267-பக்கம் 164.

அழகிய மலர்த் தடாகங்கள் எங்கும் இருந்த தினைப் புனத்தே வாழ்ந்த பெண் (வள்ளியின்) கொவ்வைக் கனி போன்ற வாயின் அமுதூறலை உண்ட குமரேசனே!

இரண்டு கூறாகியும் ஒன்று கூடி வந்த சூரன் அடங்கி ஒடுங்கக் கூரிய வேலைச் செலுத்தின பெருமாளே! **கோடை நகரில் வாழ வந்த பெருமாளே!**

*(பாதமலர் சேர அன்பு தருவாயே)*

# 709.

***(ஏறு ஆனாலே)** இடபமும் பசுவும் கலந்து வருதலாலும், சாம்பலாயும் அழிவு படாத மன்மதவேள் ஏவுகின்ற மணமுள்ள புஷ்ப பாணத்தாலும்,

ஏயா ஏயா - பொருந்துதலுற்றுப் பொருந்துதலுற்று (மாயா) கவலை மிகுதியால் வருந்தி, (வேயால் ஆம் ஏழு ஓசைத் தொளையாலே) - புல்லாங்குழலில் உண்டாகின்ற ஏழிசையைத் தருகின்ற தொளைகளாலே-

(மாறாய்) எழிலும் நிறமும் மாறுதல் அடைந்து, (ஊறாய்) (ஊறு) துன்பமுற்று, (ஈறாய்) முடிவடைந்தது போலாகி, (மாலாய்) ஒரே மோக மயக்கமாய், (உன்மேல் நினைவு) நீங்குதல் இல்லாத மான்போன்ற இவளை (இந்தப் பெண்ணை) (நீ) ஒதுக்காமல்-

வந்து பார்த்துச் சேராவிட்டால் - (அல்லது வருவாயாக, பார்ப்பாயாக! இவளுடன் சேர்வதற்கு மனமில்லாவிட்டால்) உனது வாடாத கடப்ப மாலையையாவது தந்தருளுக.

பொங்கி மேலெழுந்து வெற்றியுடன் பதினான்கு லோகங்களையும் வலம் வந்த சிறப்பு நிறைந்த மயில்வாகனக் குமரேசனே!

தேவனே! இறப்பு இல்லாத, மூப்பு இல்லாத நாதனே! தைரியமுள்ளவனே! **கோடைப்பதியில் வீற்றிருப்பவனே!**

---

* ஏறானாலே நீறாய் மாயா - ஏறானாலே நீறாகி மாய்ந்தது போலாகி - எனவும் பொருள் காணலாம்.

வேறாய் மாறா யாறா மாசூர் .
வேர்போய் வீழப் பொருதோனே-
*வேதா போதா வேலா பாலா
வீரா வீரப் பெருமாளே. (3)

## 710. அகப்பொருள் - அணையப் பெற

தான தந்த தனத்த தத்த தனதானா

ஞால மெங்கும் வளைத்த ரற்று கடலாலே-
நாளும் வஞ்சி யருற்று ரைக்கும் வசையாலே;
ஆல முந்து மதித்த ழற்கும் † அழியாதே-
ஆறி ரண்டு புயத்த ணைக்க வருவாயே;
கோல மொன்று குறத்தி யைத்த ழுவுமார்பா-
கோடை யம்பதி யுற்று நிற்கு மயில்வீரா;
கால னஞ்ச வரைத்தொ ளைத்த ‡ முதல்வானோர்-
Xகால்வி லங்கு களைத்த றித்த பெருமானே(4)

---

* குட்டுண்டு சிறையிலிருந்தமையால் பிரமன் அறிவு வரப்பெற்றான்-

'போதினன் ஐய உன்றன் புதல்வன் ஆற்றியவித் தண்டம்
ஏதமன் றுணர்வு நல்கி யானெனும் அகந்தை வீட்டித்
தீதுசெய் வினைகள் மாற்றிச் செய்தது புனிதம் என்றான்"
- கந்த புராண- 1-17-34.

† கடலொலி, மாதர்வசை, எறிநிலவு - இவை காமங் கொண்டாரை வருத்துவன - பாடல் 218, பக்கம் 54 கீழ்க்குறிப்பு 1.

‡ முதல் - முதல்வனே.

X 'அரியரி பிரமாதியர் கால் விலங்க விழ்க்கும் பெருமாளே' என்றார் 218-ஆம் பாடலில்.

(வேறாய்) வேறுபட்ட மனத்தனாய், (மாறாய் ஆறாம்) மாறுபட்ட (பகைமை பூண்ட) வழியிற் செல்பவனான பெரிய சூரன் (வேரற்று) அடியோடு விழும்படிச் சண்டை செய்தவனே!

(வேதனுக்கு) பிரமனுக்கு அறிவு ஊட்டினவனே! (அல்லது, வேதம் வல்லவனே! அறிவாளியே!) வேலனே! குழந்தையே! வீரனே! வீரம் வாய்ந்த பெருமாளே!

(நீபத் தொடை தாராய்)

## 710.

பூமியின் எல்லாப் பக்கங்களிலும் வளைந்துகொண்டு ஒலிக்கின்ற கடலாலும்-

தினந்தோறும் மாதர்கள் சேர்ந்து சொல்லும் வசை மொழியாலும்-

விஷத்தைச் செலுத்துகின்ற சந்திரன் என்னும் நெருப்பாலும் அழிவுறாமல்-

(உனது) பன்னிரண்டு புயங்களாலும் (இவளை) அணைக்க வந்தருளுக;

அழகு பொருந்திய குறத்தி வள்ளியைத் தழுவின மார்பனே!

கோடையம்பதியிற் பொருந்தி நிற்கின்ற மயில் வீரனே!

காலனும் (யமனும்) அஞ்சும்படி (கிரௌஞ்ச) கிரியைத் தொளை செய்த முதல்வனே! (வானோர்) தேவர்களுடைய

கால் விலங்குகளை உடைத்தெறிந்த பெருமாளே!

(அணைக்க வருவாயே)

## 711. நரகினில் விழுவோர் இவர் இவரெனல்

தானன தந்தன தந்த தந்தன
தானன தந்தன தந்த தந்தன
தானன தந்தன தந்த தந்தன தனதான

தோழமை கொண்டுச லஞ்செய் குண்டர்கள்
ஓதிய நன்றிம றந்த குண்டர்கள்
சூழ்விர தங்கள்க டிந்த குண்டர்கள் பெரியோரைத்-
தூஷண நிந்தைப கர்ந்த குண்டர்கள்
ஈவது கண்டுத கைந்த குண்டர்கள்
சூளுற வென்பதொ ழிந்த குண்டர்கள் தொலையாமல்;

வாழநி னைந்துவ ருந்து குண்டர்கள்
நீதிய றங்கள்சி தைந்த குண்டர்கள்
மானவ கந்தைமி குந்த குண்டர்கள் வலையாலே-
மாயையில் நின்றுவ ருந்து குண்டர்கள்
தேவர்கள் *சொங்கள்க வர்ந்த குண்டர்கள்
வாதை† ந **மன்றன்வ ருந்தி டுங்குழி விழுவாரே;**

‡ ஏழு மரங்களும் வன்கு ரங்கெனும்
வாலியு மம்பர மும்ப ரம்பரை
ராவண னுஞ்சது ரங்க லங்கையு மடைவேமுன்-
ஈடழி யும்படி சந்த்ர னுஞ்Xசிவ
சூரிய னுஞ்சுர ரும்ப தம்பெற
ராம சரந்தொடு புங்க வன்திரு மருகோனே;

Oகோழி சிலம்பந லம்ப யின்றக
லாப நடஞ்செய மஞ்சு தங்கிய
கோபுர மெங்கும்வி ளங்கு மங்கல வயலூரா-
கோமள அண்டர்கள் தொண்டர் மண்டலர்
வேல னெனும்பெய ரன்பு டன்புகழ்
**கோடை** யெனும்பதி வந்த இந்திரர் பெருமாளே. (5)

---

* சொம் - சொத்து; உடைமை.

† இங்ஙனம் நரகில் வீழ்வோரின் அட்டவணையை - *428, 769, 1031,1149* எண்ணுள்ள பாடல்களிற் காணலாகும்.

‡ மராமரம் - வாலி அழிபட்டது - பாடல் *231*, பக்கம் - *78* பார்க்க. கடல்மேற்பாணம்: பாடல் *177* பக்கம் *412*.

X சிவசூரியன்: 'அருக்கன் பாதம் வணங்குவர் அந்தியில். அருக்கனாவான் அரனுரு வல்லனோ' - அப்பர் *5-100-8*.

O கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்' -திருவெம்பாவை-*8*.

# 711.

நட்பை வெளிக்காட்டி நண்பருக்கு வஞ்சனை செய்யும் கீழோர், போதித்த நன்றியை மறந்த கீழோர் அநுட்டிக்க வேண்டிய விரதங்களை விலக்கி அழித்த கீழோர், பெரியோரை

வைது நிந்தித்து இகழ்ந்து பேசின கீழோர், ஒருவருக்கு ஈதலைப் பார்த்து அதைத் தடை செய்த கீழோர், சத்திய வார்த்தை என்பதை ஒழித்த கீழோர், எப்போதும் அழிதலின்றித் தாமே)

வாழ நினைத்து (அதற்காக வருந்தும் கீழோர், நீதியும் தருமமும் இல்லாத (அல்லது, அழித்த) கீழோர், குற்றமும் ஆணவமும் மிக்குள்ள கீழோர் - (பாச) வலையினால் - ஆசை வலையால்

(உலக) மாயையில் நின்று வருந்துகின்ற கீழோர், தேவர்களின் (கடவுளரின்) சொத்தை அபகரித்த கீழோர் - ஆகிய இவர்கள் யாவரும் - வேதனைக்கு இடமாகிய - யமனார் வருத்துகின்ற (நரகக்) குழியில் விழுவார்கள்;

மராமரம் ஏழும், வலிமை மிக்க குரங்காகிய வாலியும், (அம்பரமும்) கடலும், சிறந்த பரம்பரையில் - சம்ப்ரதாயத்தில் வந்த ராவணனும், அவனது சதுரங்க சேனைகளிருந்த- (யானை, தேர், குதிரை, காலாட்படை இருந்த) இலங்கையும் எல்லாம் முன்பு

வலிமை குன்றி அழியும்படியும், சந்திரனும் சிவ சூரியனும் தேவர்களும் தத்தம் பதவியிலே நிலைபெற "ராமசரம்" என்னும் ராம மந்திரம் கூடிய அம்பைச் செலுத்தின சிறப்புற்ற மூர்த்தியாகிய ஸ்ரீராமபிரானது அழகிய மருகனே!

கோழி ஒலி செய்ய, அழகுமிக்க தோகையையுடைய மயில் நடனம் செய்ய மேகங்கள் தங்கிய கோபுரங்கள் எங்கும் விளங்குகின்ற மங்களகரமான வயலூர் வாசனே!

அழகிய தேவர்களும், தொண்டர்களும், மண்டலாதி-பர்களும், 'வேலன்' என்கின்ற பெயரை அன்புடனே புகழ்கின்ற பெருமாளே! **கோடை**. எனும் பதியில் வந்துள்ள பெருமாளே! இந்திரர்களுக்குப் பெருமாளே!

(குண்டர்கள் நமன்தன்...குழிவிழுவாரே)

## 712. கழல் பெற

தானத் தானத் தானத் தானத்
தானத் தானத் தனதான

தோடப் பாமற் *றோய்தப் பாணிச்
சூழ்துற் றார்துற் †றழுவாருந்-
தூரப் போகக் கோரப் பாரச்
சூலப் பாசச் சமனாரும்;
பாடைக் கூடத் தீயிற் றேறிப்
பாழ்பட் டேபட் டழியாதே-
பாசத் தேனைத் தேசுற் றார்பொற்
பாதத் தேவைத் தருள்வாயே;
‡ ஆடற் சூர்கெட் டோடத் Xதோயத்
தாரச் சீறிப் பொரும்வேலா-
Oஆனைச் சேனைக் கானிற் றேனுக்
காரத் தாரைத் தரும்வீரா;
**கூடற் பாடிக் கோவைப் பாவைக்
கூடப் பாடித் திரிவோனே-
கோலச் சாலிச் சோலைச் சீலக்
கோடைத் தேவப் பெருமாளே.(6)

---

* தோய்தற் பணி தோய்தப் பாணி என வந்துளதுபோலும். † இது ஒருவர் இறந்துபோக மாதர்கள் சுற்றி உட்கார்ந்து ஒருவர் தோள்மேலே ஒருவர் கைகோத்து அழுகின்ற வழக்கத்தைக் குறிக்கின்றது.

‡ ஆடல் - போர்; திவாகரம். X தோயம் - சமுத்திரம்.

O தேவசேனைக்கு முத்துமாலையும், வள்ளிக்குக் கடப்ப மலர் மாலையும் முருகவேள் தந்தனர் போலும்.

** கூடற்பாடி - மதுரைநகர் - கோவை. (ஆலவாய்ச் சொக்கரை) பாவை (அங்கயற்கண்ணியுடன்) கூடப்பாடின பாட்டு; இது-

" மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டி மாதேவி
பணி செய்து நாடொறும் பரவப்
பொங்கழல் உருவன் பூத நாயகன்நால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே" - சம்பந்தர் 3-120-1.

-என வரும் தேவாரப் பாடலைக் குறிக்கின்றது.

## 712.

ஒவ்வொருவர் தோள்மேலும் (தப்பாமல்) சரியான தோய்தல் உற (பாணி) கையாற் பற்றிச் சூழுதல் நெருங்கிச் (சூழ்ந்திருந்து) அழுகின்றவரும்-

தூரப் போகும்படி கோரமான கனத்த சூலத்தையும் பாசக்கயிற்றையும் கொண்ட (சமன்) எமன், (ஆரும்) வந்து பொருந்துவான் வந்த சேர்வான் - (அப்போது)

பாடை (கூட) கட்டப்பட்டு (தீயில் தேறி) நெருப்பில் கூட்டப்பட்டு பாழ் அடைந்து குலைந்து அழிந்துபோகாமல்

(உலக) ஆசைகளிற் கட்டுண்ட என்னை (உனது) (தேசு) ஒளி, (உற்று பொன் ஆர் பாதத்தே) பொருந்தி அழகு நிறைந்த திருவடியில் (வைத்து) சேர வைத்து அருள் புரிவாயாக - (அல்லது) தேசு (ஞான ஒளி) ஞானம் உற்றார் (உள்ளவர்) தேசுற்றார் - ஞானிகளின் திருவடியிற் சேர்த்து வைத்து அருள் புரிவாயாக;

(ஆடல்) போர் புரிந்த சூரன் கேடுற்று ஓட (அவன் சென்று மாமரமாய்க் கிடந்த) கடலிலே, (ஆர) மிகவும் (சீறி) கோபித்துச் சண்டை செய்த வேலனே!

(ஆனைச் சேனை) தெய்வயானையாம் தேவசேனைக்கும், (கானில் தேனுக்கு) வனத்தில் வாழ்ந்த தேன்போன்ற வள்ளிக்கும் (ஆரம்) முத்து மாலையையும், (தாரை) கடப்ப மாலையையும் தந்த வீரனே! (அல்லது) ஆனைகளின் (சேனை) கூட்டம் நிறைந்த - மிக்கிருந்த கானில் - வள்ளிமலைக் காட்டில், தேனுக்கு - தேன்போன்ற வள்ளிக்கு (ஆரத்தாரை) முத்து-மாலையைத் தந்த வீரனே!

(கூடற்பாடி) கூடல் நகரில் உள்ள (கோவை) சிவபிரானைப், (பாவை) தேவி அங்கயற்கண்ணியுடன் கூட ஒன்று சேர்த்துப் பாடித் திரிந்த வள்ளலே!

அழகிய நெல்லின் பொழில்கள் உள்ள, நல் ஒழுக்கத்தார்கள் உள்ள, **கோடையில்** தெய்வப் பெருமாளே!

(பாதத்தே - வைத்தருள்வாயே)

## 713. இறத்தல் ஒழிய

தானத்த தான தந்த தானத்த தான தந்த
தானத்த தான தந்த தனதான

**வா**சித்த நூல்ம தங்கள் பேசிக்கொ டாத விந்து
வாய்மைப்ர காச மென்று நிலையாக-
மாசிக்க பால மன்றில் நாசிக்கு ளோடு கின்ற
*வாயுப்பி ராண னொன்று மடைமாறி;
† யோசித்த யாரு டம்பை நேசித்து றாத லைந்து
ரோமத்து வார மெங்கு முயிர்போக-
யோகச்ச மாதி கொண்டு மோகப்ப சாசு மண்டு
லோகத்தில் **மாய்வ தென்று மொழியாதோ;**
வீசப்ப யோதி துஞ்ச வேதக்கு லால னஞ்ச
மேலிட்ட சூர்த டிந்த கதிர்வேலா-
வீரப்ர தாப ‡ பஞ்ச பாணத்தி னால்ம யங்கி
வேடிச்சி காலி லன்று விழுவோனே;
கூசிப்பு காவொ துங்க X மாமற்றி காத ரிந்த
O கூளப்பு ராரி தந்த சிறியோனே-
கோழிப்ப தாகை கொண்ட கோலக்கு மார **கண்ட
**கோடைக்குள்** வாழ வந்த பெருமாளே.(7)

---

* வாயுப் பிராணன்...யோசித்து - பிராணவாயுவைச் சுழுமுனையிற் கூட்டி நிறுத்தி, (விந்து வாய்மைப் ப்ரகாசம் என்றும் நிலையாக) ஆன்மாவைப் பரசிவனொடு கூட்டி நிலைக்கச் செய்து - என்பது கருத்தாகும்.

இங்குக் கூறிய யோக நிலைக் கருத்தை-

"வாயுவினைப் பிங்கலையால் வாங்கியே சுழுமுனையில்
நேயமுற நிறுவியா றாதார நிலையொருவி
ஆயபர சிவனொடுதன் ஆன்மாவை யோசித்தே
காயமதை மூலத்திற் கனலாலே கழித்திட்டான்"

- திருவொற்றியூர்ப் புராணம் - இலிங்கோற்பத்தி - *21.*

† யோசித்து - கூட்டி.

‡ பஞ்சபாணங்களின் தன்மை - பாடல் *19*-பக்கம் *60* பார்க்க.

X மாமன் திகாது அரிந்த - மாமனாகிய தக்கனைத் தடைபடாது தலையரிந்த - பாடல் *390*-பக்கம் *484*-கீழ்க்குறிப்பு.

O கூளப் புரம் - எளிய திரிபுரம்.

** கண்டன் - வீரன். "புரங்கள் மூன்றெரித்த கண்டனே" திருவிசைப்பா *13-6.* 'தெவ்வர்புர மெரி கண்டா' - கோயிற் புராணம் *நடராச-26.*

# 713.

கற்றுள்ள நூல்களும் மதங்களும் விளக்கம் தந்து (கொடுக்காத) சொல்லாத (விந்து) - சிவ தத்துவமாகிய உண்மை ஒளியானது என்றும் நிலைத்திருக்கவேண்டி-

(மாசிக் கபாலமன்றில்) மேகம்போலப் படர்ந்த மண்டை ஓடாகிய வெளியிடத்தும், மூக்குக்குள்ளும் ஓடுகின்ற பிராணவாயுவாகிய ஒன்றை, (மடை மாறி) அது) செல்லும் மதகு வழியை மாற்றி-

(யோசித்து) (சுழு முனையிற்) கூட்டி (அதனால்) (அயர் உடம்பை) தளர்ச்சியுறும் உடம்பின்மீது நேசம் வைத்து (உறாது) சிவயோக நிலையில் நில்லாது அலைந்து, மயிர்த்தொளை எங்கும் உயிர் போகும் வண்ணம்-

(கருமு) யோக சமாதி நிலையைப் பூண்டு, மோகம் என்கின்ற பேய் நிரம்பியுள்ள இந்த உலகிலே இறந்து போதல் - என்றைக்கும் நீங்காதா!

(அலை) வீசுகின்ற பயோதி கடல் (துஞ்ச) வலிமை குன்ற, பிரமன் என்கின்ற குயவன் அஞ்சி நிற்க, மேலே எதிர்த்து வந்த சூரனைச் சங்கரித்த ஒளிவேலனே!

வீரம் உள்ளன என்னும் கீர்த்தியைப் பெற்றுள்ளன-வான (மன்மதனது) ஐந்து மலர்ப் பாணங்களால் (காம) மயக்கம் கொண்டு (வேடிச்சி) வள்ளியின் காலில் அன்று விழுந்து வணங்கினவனே!

(கூச்சம்) அச்சம் அடைந்து போய் ஒதுங்கும்படி, மாமனாகிய தக்கனைத் தடைபடாது தலை யரிந்தவரும், எளிய திரிபுரத்தைப் பகைத்து எரித்தவருமான சிவன் தந்த இளையோய்!

கோழிக்கொடி கொண்ட அழகிய குமரனே! (கண்ட) வீர! கோடைப்பதியில் வாழ்கின்ற பெருமாளே!

•

(மாய்வ தென்றும் ஒழியாதோ)

## திருப்போரூர்.

(இது செங்கற்பட்டு ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 16-மைல். சென்னையிலிருந்து மோட்டார் பஸ்ஸில் போகலாம். சிதம்பர ஸ்வாமிகள் பாடிய "திருப்போரூர்ச் சந்நிதி முறை" இத் தலத்து மூர்த்தியின் பெருமையை நன்கு விளக்கும்.)

### 714. மாதர்மீதுள்ள மயக்கு அற

தனத்தா தானன தானா தானன
தனத்தா தானன தானா தானன
தனத்தா தானன தானா தானன தனதான

அனுத்தே னேர்மொழி யாலே மாமய
லுடைத்தார் போலவு மோர்நா ளானதி
லடுத்தே தூதுகள் நூறாறா னதும் விடுவார்கள்-
அழைத்தே வீடினி லேதா னேகுவர்
நகைத்தே மோடிக ளாவார் காதலொ
டடுத்தே மாமுலை மீதே மார்புற அணைவார்பின்;
குனித்தே பாகிலை யீவார் பாதியில்
கடிப்பார் வாயிதழ் வாய்நீ ரானது
குடிப்பார் தேனென நானா லீலைகள் புரிவார்கள்-
குறித்தே மாமய லாலே நீள்பொருள்
பறிப்பா ராசுகள் சூழ்மா பாதக
குணத்தார் **மாதர்கள் மே*லா சாவிட அருள்வாயே;**
† வனத்தே வேடுவர் மாதா மோர்மினை
யெடுத்தே தான்வர வேதான் யாவரும்
வளைத்தே சூழவு மோர்வா ளால்வெலும் விறல்வீரா-
‡ மலர்த்தே னோடையி லோர்மா வானதை
பிடித்தே நீள்கர Xவாதா டாழியை
மனத்தா லேவிய மாமா லானவர் மருகோனே;
சினத்தே சூரர்கள் போராய் மாளவு
மெடுத்தோர் வேல்விடு தீரா தாரணி
திருத்தோ ளாஇரு Oபாதா தாமரை முருகோனே-

---

* ஆசா - ஆசை. † வேடர்கள் வள்ளியை எடுத்துச் சென்ற முருகவேளை வளைத்துப் போரிட்டது - பாடல் 341-பக்கம் 354 கீழ்க்குறிப்பு. ‡ யானையை முதலைவாயினின்றும் மீட்டது - பாடல் 110 பக்கம் 262 கீழ்க்குறிப்பு

X வாதாடாழியை - வாதாட ஆழியை. O பாதா தாமரை - பாத தாமரை.

## திருப்போரூர்.

## 714.

(அனுத் தேன் நேர்) தேன் அனு நேர் - தேன் கூடினதற்கு ஒப்பான - பேச்சுக்களாலே மிக்க மோகம் கொண்டவர்கள் போல நடித்தும், ஒரே தினத்தில் (அடுத்தே) மேலுக்குமேலே தூதுகள் (நூறாறு) அறுநூறு (அல்லது நூற்றாறு-106) விடுவார்கள்-

அழைத்துக்கொண்டு தங்கள் வீட்டுக்குள்ளே போவார்கள், சிரிப்புடனே பிணக்கத்தையும் செருக்கையும் காட்டுவர், ஆசையுடனே சமீபத்தில் தங்கள் பெரிய கொங்கையின்மேலே மார்பு பொருந்தும்படி அணைவார்கள் பின்பு-

ஆடியும் (வளைந்தும்) பாக்கு, வெற்றிலை கொடுப்பார்கள், (அங்ஙனம் கொடுக்கும்போது) பாதியில் கடிப்பார்கள், வாய் இதழிலிருக்கும் நீரை (இதழூறலைக்) குடிப்பார் (தேனென) தேன்போலப் பாவித்துக் குடிப்பார்கள், விதம் விதமான விளையாடல்களைச் செய்வார்கள்.

(குறித்தே) ஒரு காரியத்தைக் குறிப்பாக வைத்துக் கொண்டு மிக்க மோகவிளைவு ஊட்டிப் பெரும்பொருள் அனைத்தையும் பறிப்பார்கள்; (ஆசுகள்) குற்றங்களைக் கொண்ட மஹா பாவ குணத்தவர்கள்-அத்தகைய மாதர்கள்மேல் எனக்கு உள்ள ஆசையை நான் விடுவதற்கு நீ அருள்புரிவாயக.

காட்டில் வேடர் குலத்துப் பெண்ணாகிய ஒரு (மின்னை) மின் போன்ற ஒளிகொண்ட வள்ளியை (நீ) எடுத்துப்போகவே (வேடர்) யாவரும் (உன்னை) வளைத்துச் சூழ (அப்போது) ஒரு வாள் கொண்டு அவர்களை வென்ற (ஜெயவீரனே!) பெருமை வாய்ந்த வீரனே!

மலர்களின் தேன் சொட்டும் ஓடையில் (நீர் நிலையில்) ஒரு மிருகமான யானையைப் பிடித்துக்கொண்டு ஒரு பெரிய முதலை (வாதாட) போர்செய்ய, சக்கரத்தை மனங்கொண்டு செலுத்தின (அல்லது மனோபாவனையால் அனுப்பின) சிறந்த திருமாலுக்கு மருகனே!

கோபித்துச் சூரர்கள் போர்செய்து இறக்கும்படி எடுத்து ஒரு வேலைச் செலுத்தின தீரனே! மாலை அணிந்த அழகிய தோளனே! இரண்டு பாத தாமரைகளைக் கொண்ட முருகனே!

திருத்தேர் சூழ்மதி ளேரார் தூபிக
ளடுக்கார் மாளிகை யேநீ ளேருள
திருப்போ ரூருறை தேவா தேவர்கள்
பெருமாளே.(1)

## 715. ஈனம் அற

தனத்தா தான தந்த தனத்தா தான தந்த
தனத்தா தான தந்த தனதான

உருக்கார் வாளி கண்கள் பொருப்பார் வார்த னங்கள்
உகப்பார் வால சந்த்ர னுதனூலாம்-
உருச்சேர் நீண்ம ருங்குல் பணைத்தோ ளோதி கொண்ட
லுவப்பா மேல்வி ழுந்து திரிவோர்கள்;
அருக்கா மாதர் தங்கள் *வரைக்கே யோடி யின்ப
வலைக்கே பூணு நெஞ்ச னதிபாவி-
அசட்டால் மூடு கின்ற மசக்கால் மாயு மிந்த
அவத்தா லீன மின்றி யருள்வாயே;
எருக்கார் †தாளி தும்பை மருச்சேர் போது கங்கை
யினைச்சூ டாதி நம்பர் புதல்வோனே-
‡இருக்கா லேநி னைந்து துதிப்பார் Xநாவி னெஞ்சி
லிருப்பா Oயானை தங்கு மணிமார்பா;
செருக்கா லேமி குந்த கடற்சூர் மாள வென்ற
திறற்சேர் வேல்கை கொண்ட முருகோனே-

---

* வரை - இடம். "மலைவரைமாலை யழிபெயல் காலை". -பரிபாடல் 10-1.

† தாளி - "தாளி அறுகாம் உவந்த தார்" - திருவாசகம் 19-9.
'தாளி அறுகின் தாராய் போற்றி' - 4-201.

‡ "இருக்காலே நினைந்து" - 'ஒருக்கால் நினைத்திட் டிருக்கால் மிகுத்திட் டுரைப்பார்கள்' - திருப்புகழ்-534 பக்கம் 220.

X 'நாவிலும் நெஞ்சிலும்' இறைவன் மன்னுதல்---
"சிந்தையுள்ளும் நாவின்மேலும் (சென்னியும்) மன்னினான்"-சம்பந்தர் I-73-9.

O யானை - தேவசேனை - "ஆனைதன் நாயக" "குறத்தி ஆனையொ டருக்கொணாமலை.....பெருமாளே" - திருப்புகழ் 235, 431.

அழகிய தேரும், சூழ்ந்துள்ள மதிலும், அழகு நிறைந்த கோபுரங்களும், அடுக்கு மெத்தைகள் கொண்ட மாளிகைகளும் - ஆக நீடிய அழகுகள் வாய்ந்த திருப்போரூரில் உறைகின்ற தேவனே! தேவர்கள் பெருமாளே!

(மாதர்கள்மேல் ஆசாவிட அருள்வாயே)

## 715.

உருக்கி எடுத்த (அல்லது உருக்கு - எஃகாலாகிய) அம்பு போன்ற கண்கள், மலை போன்று நிறைந்து பெருத்த (கச்சு அணிந்த) கொங்கைகள், உகப்பு (மகிழ்ச்சி) ஆர் - நிரம்பும் நிரம்பத் தரும், (வால சந்திரன்) இளம்பிறை ஒத்த (நுதல்) நெற்றி, நூல் போன்ற-

உரு அமைந்த நீண்ட இடை, பெரிய (அல்லது மூங்கில் அனைய) தோள், (ஓதி கொண்டல்) கொண்டல் - மேகம் போன்ற, ஓதி - கூந்தல் - இவைகளின்மேல் (உவப்பா) உவப்பாக - மகிழ்ச்சியாக (விரும்பி), மேல் விழுந்து - (மாதர்) மேல் விழுந்து திரிகின்றவர்களை-

(அருக்கா) விரும்பாத அல்லது அசட்டை பண்ணுகின்ற பொது மாதர்களின் இருப்பிடத்துக்கே (அல்லது மலையன்ன கொங்கையை விரும்பியே) ஓடி, அந்த காமசுக வலைக்கே பூண்ட மனத்தினன், மகாபாவியாகிய நான்-

(எனது) அசட்டுத் தனத்தால் மூடுகின்ற (மசக்கால்) மனந் தடுமாறுதலால் மழுங்கும் இந்த (அவத்தால்) கேட்டினால் நான் (ஈனம்) இழிவு அடையாதவாறு அருள்புரிவாயாக.

எருக்கு, (ஆர்) ஆத்தி, (தாளி) அறுகு, தும்பை, வாசனை பொருந்திய மலர்கள், கங்கையாறு இவைதமைச் சூடியுள்ள ஆதி, நம்பர் - ஆகிய சிவபிரானது புதல்வனே!

இருக்கு என்னும் மறையால் (வேத மந்திரத்தால்) நினைத்து (அல்லது இருகால் - இரண்டு திருவடிகளையே நினைந்து) போற்றி செய்வோருடைய நாவிலும் நெஞ்சிலும் இருப்பவனே! தேவசேனை அணையும் அழகிய மார்பனே!

ஆணவத்தால் மிக்கெழுந்த (கடற்சூரன்) கடலில் மாமரமாய் நின்ற சூரன் அழிய வென்ற வெற்றி வாய்ந்த வேலாயுதத்தைக் கையிற்கொண்ட முருகனே!

திணைக்கோர் காவல் கொண்ட குறத்தேன் மாது பங்க
திருப்போ ரூர மர்ந்த பெருமாளே. (2)

## 716. தாளில் விழ

தான தானன தானன தான தானன தானன
தான தானன தானன தனதான

சீரு லாவிய வோதிம மான மாநடை மாமயில்
சேய சாயல்க லாமதி முகமானார்-
தேனு லாவிய மாமொழி மேரு நேரிள மாமுலை
சேலு லாவிய கூர்விழி குமிழ்நாசி;

தாரு லாவிய நீள்குழல் வேய ளாவிய தோளியர்
சார்பி லேதிரி வேனைநி னருளாலே-
சாம வேதியர் வானவ ரோதி நாண்மலர் தூவிய
தாளில் வீழ * வினாமிக அருள்வாயே;

காரு லாவிய நீள்புன வேடர் மால்வரை மீதுறை
காவல் மாதினொ டாவல்செய் தணைவோனே-
†காண ஆகம வேதபு ராண நூல்பல வோதிய
கார ணாகரு ணாகர முருகோனே;

போரு லாவிய சூரனை ‡வாரி சேறெழ வேல்விடு
பூப சேவக மாமயி மிசையோனே-
போதன் மாதவன் மாதுமை பாதி யாதியு மேதொழு
போரி மாநகர் மேவிய பெருமாளே.(3)

---

* வினா - ஆராய்ச்சி அறிவு, விவேகம்; 'வினாவோடுபாடி அருள் வழிபட' "வினாவுடனே தொழ" - திருப்புகழ் 149, 732.

† சம்பந்தராய் வேதாகமங்களைக் கூறினரென்பது:-

"பன்மறையோர் செய்தொழிலும் பரமசிவா கமவிதியும் நன்மறை யின் விதிமுழுது மொழிவின்றி நவின்றனையே" -ஆளுடை கலம்பகம் 1.

‡ வாரிசேறெழ-'கலக்கினும் தண்கடல் சேறாகாது' என்றிருந்தும் வாரிசேறுபடும்படி வேல்கலக்கிற்று என்பது வேலின் பிரபாவத்தைக் காட்டுகின்றது. 'மகர சலதி அளறாக' என்றார் 718-ஆம் பாடலிலும்.

தினைப்புனத்துக்கு ஒரு காவல் கொண்டிருந்த (குறத்தேன் மாது) குறக்குலத்துத் தேன்போல் இனிய மங்கையின் பங்கனே! திருப்போரூர் அமர்ந்த பெருமாளே!

(ஈனமின்றி அருள்வாயே)

# 716.

அழகு விளங்கும் அன்னத்துக்கு ஒப்பான அழகிய நடை, நிறம், சிறந்த மயிலுக்கு ஒப்பான செம்மை வாய்ந்த சாயல், பூரணகலைத் திங்களுக்கு ஒப்பான முகம் - இவைகளைக் கொண்ட மாதர்கள்-

தேன் போன்ற அழகிய பேச்சு, மேருக்கு ஒப்பான இளமை விளங்கும் பருத்த கொங்கை, சேல்மீன் போன்ற கூரிய கண், குமிழம்பூப் போன்ற மூக்கு-

மாலை குலவும் நீண்ட கூந்தல், மூங்கில் போன்ற தோள் இவைகளை உடையவர்கள்-(இத் தகையோர்களின்) இணக்கத்திலே திரிகின்ற என்னை உனது திருவருளாலே-

சாமவேதம் வல்ல மறையோர்களும் தேவர்களும் போற்றி செய்து புது மலர்கள் தூவின (உனது) திருவடியில் விழுந்து வணங்கும் (வினா) ஆராய்ச்சி அறிவை நிரம்ப அருள் செய்வாயாக.

மேகம் உலவும் பெரிய புனத்தில் உள்ள வேடர்கள் வாழ்ந்த பெரிய (அந்த வள்ளி) மலை மேலே இருந்து (தினை) காவல் புரிந்த மாது (வள்ளிமீது) (ஆவல் செய்து-) விருப்பம் காட்டி அவளை அணைந்தவனே!

(காண) யாவரும் அறியும் வண்ணம் ஆகமம், வேதம், புராண நூல் (இவைகளின் சாரம்) பலவற்றையும் ஓதின (தேவாரமாகப் பாடி அருளிய) காரணனே - அல்லது ஆகமம், வேதம், புராணநூல் பலவும் ஓதித் துதித்துள்ள தலைவனே! மூல புருஷனே (அல்லது தலைவனே!) கருணாகரனே! முருகனே!

போர் செய்யவந்த சூரன்மீது - கடலும் சேறு படும்படி வேலாயுதத்தை விட்ட அரசே! பராக்ரமனே! அழகிய மயில்மீது அமர்வோனே!

போதன் - மலரில் வாழ்பவன் - பிரமன், திருமால், மாது உமையை பாதி பாகத்திற் கொண்ட ஆதியாகிய சிவன் - ஆக இம் மூவரும் தொழுகின்ற பெருமாளே! திருப்போரூர் மாநகரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(தாளில்வீழ வினாமிக அருள்வாயே)

# 717. துதி

தனன தானன தானன தனன தானன தானன
தனன தானன தானன தனதான

திமிர மாமன மாமட மடமை யேனிட ராணவ
திமிர மேயரி சூரிய திரிலோக-
தினக ராசிவ காரண பனக பூஷண ஆரண
சிவசு தாவரி நாரணன் மருகோனே;

குமரி சாமளை மாதுமை அமலி யாமளை பூரணி
குணக லாநிதி நாரணி தருகோவே-
குருகு காகும ரேசுர சரவ ணாசக ளேசுர
*குறவர் மாமக ளாசைகொள் மணியேசம்;

பமர பாரப்ர பாருண படல தாரக மாசுக
† பசுர பாடன ‡ பாளித Xபகளேச-
பசித பாரண வாரண துவச ஏடக மாவயில்
பரவு Oபாணித பாவல பரயோக;

---

* குறவர்மகள் ஆசைகொள் மணி"- இரு பொருள் கொண்ட அழகு - பாடல் 679 கீழ்க்குறிப்பு X போல.

† பசுரம் - 'பாசுரம்' குறுகிற்று. இது 'வாழ்க அந்தணர்' எனத் துவக்கும் சம்பந்தர் திருப்பதிகம்; பாடல் 181 பக்கம் 422 கீழ்க்குறிப்பு.

"பாசுரம் பாடலுற்றார் பரசமயங்கள் பாற' - பெரிய புராணம் ஞான சம்பந்தர் - 818.

‡ பாளிதம் பட்டு வர்க்கம், கண்ட சருக்கரை - (பிங்கலம்). சந்தனம். பகளா - என்பது சக்தியின் ஓரம்சம் என்பர். பகளேச - சக்தீசுரன் - முருகவேள் - "கோமள சக்திப் பெருமாள்" ஆதலின் (திருப்புகழ் 158). அல்லது, பகளேச பசித பாரண - சத்திக்கு நாயகனான சிவனுக்கு உரிய திருநீற்றில் திருப்தியுள்ளவனே!

பாளித பகள - பட்டணிந்த தேவி - எனலுமாம்-

'செம்பட்டுடையாளை' - அபிராமி அந்தாதி 84.

X பளகேச - என்பது பகளேச - மொழிமாற்று எனலுமாம்.

O பாணிதம்..கற்கண்டு, கருப்பஞ்சாறு.

# 717.

இருள் கொண்டதாம் மனத்தையும் மிக்க அறியாமையையும் கொண்டவனான என்னுடையவருத்தம், ஆணவம், என்னும் இருட்டை (அரி) விலக்கும் சூரியனே! மூவுலகங்களுக்கும் ஒளிதரும்

சூரியனே! சிவனே! மூலபுருஷனே! (பன்னக பூஷண) - நாகாபரண வேத முதல்வரான சிவகுமாரனே! ஹரி நாராயணரது மருகனே!

குமரி, (சாமளை) சாமள நிறம் (கருமை கலந்த பச்சைநிறம்) பொருந்தியவள், மாது, உமை, (அமலி) மலமற்றவள், (யாமளை) சியாமள நிறத்தை (பச்சை நிறத்தை) உடையவள், பூரணி (நிறைந்தவள்), குணச் செல்வி, கலைச் செல்வி, நாரணி பெற்ற தலைவனே!

குருமூர்த்தியே! குகனே! குமரேசனே! சரவணனே! (சகளேசுர) உருவத்திருமேனி கொண்ட ஈசனே! குறவர்தம் சிறந்த மகள் - வள்ளி (மீது) ஆசை கொண்ட மணியே! (அல்லது) வள்ளி (உன் மீது) ஆசை கொண்ட மணியே! நன்றாக

(பமரம்) வண்டுகள் (மொய்க்கும்) பாரமான (ப்ரபா) ஒளி வீசுகின்ற (அருண) சிவந்த (படல) கூட்டமான (வெட்சி) மாலைகளை அணிந்தவனே! (தாரக) பிரணவப் பொருளானவனே! (மாசுக) பெரிய சுகப்பொருளே! (பசுரபாடன) 'வாழ்க அந்தணர்' என்னும் திருப்பாசுரம் பாடி (உலகுக்கு நீதி) (பாடன) உபதேசித்தவனே! (பாளித) - (செம்) - பட்டு அணிந்தவனே! (பகளேச) பளகேச (பளகம் - மலை) மலைக்கு அதிபனே - குறிஞ்சிவேந்தே!

(பசித) (பாரண) திருநீற்றில் திருப்தியுள்ளவனே! (வாரண துவச) கோழிக் கொடியனே! ஏடகமா அயில் இலைத் தன்மையைக் கொண்ட அல்லது மேன்மை கொண்ட சிறந்த வேலாயுதத்தை ஏந்திய (பாணித) கையனே! அல்லது கற்கண்டு போன்றவனே! பாடலில் வல்லவனே! மேலான யோக மூர்த்தியே!

சமப ராமத சாதல *சமய மாறிரு தேவத
சமய நாயக மாமயில் முதுவீர-

சகல லோகமு மாசறு சகல வேதமு மேதொழு
சமர மாபுரி மேவிய பெருமானே (4)

உத்தரமேரூர்.

(செங்கற்பட்டு ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 18-மைல்.)

## 718. அறிய

தனன தனன தனதான தனன தனன தனதான
தனன தனன தனதான தனதான

சுருதி மறைக ளிருநாலு திசையி லதிபர் முநிவோர்கள்
துகளி † லிருடி யெழுபேர்கள் சுடர்மூவர்-

சொலவில் முடிவில் முகியாத ‡ பகுதி புருடர் நவநாதர்
தொலைவி லுடுவி னுலகோர்கள் மறையோர்கள்;

அரிய Xசமய மொருகோடி அமரர் சரணர் சதகோடி
Oஅரியு மயனு மொருகோடி யிவர்கூடி-

---

* சமயம் ஆறிரு: உட்சமயம்6: வைரவம், வாமம், காளா முகம், மாவிரதம், பாசுபதம், சைவம் (பிங்கலம்)

சைவம், வைஷ்ணவம், சாத்தம், சௌரம், காணாபத்தியம், கௌமாரம்....என வைதிக மதம் ஆறு.

† முநிவர் எழுவர்: அகத்தியன், புலத்தியன், அங்கிரசு, கௌதமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டன் - (பிங்கலம்): அத்திரி, பிருகு, குச்சன், வசிட்டன், கௌதமன், காசிபன், அங்கிரசு எனவும், மரீசி, அத்திரி, அங்கிரசு, புலத்தியன், புலகன், கிரது, வசிட்டன் - எனவும், அத்திரி, ஆங்கீரசன், கௌதமன், ஜமதக்னி; பரத்துவாசன், வசிட்டன், விசுவாமித்திரன் - எனவும் கூறப்படும்.

‡ பகுதி புருடர் - பிரகிருதி புருஷர்.

X 'சமயகோடிகளெலாம்' - தாயுமானார்.

O "நூறுகோடி பிரமர்கள் நொங்கினார், ஆறுகோடி நாராயணர் அங்ஙனே" - அப்பர் 5-100-3.

*(சமம்)* வாதப்போர் செய்யும், பரமத *(புறமதங்களான)* *(சமணம், புத்தம்)* இவை தம் *(சாதல)* நசிவுக்கு *(இறப்புக்குக்)* காரணமா யிருந்தவனே! *(சமயம் ஆறிருதேவத)* ஆறு சமயங்களுக்கும் உரிய *(இருதேவத)* பெரிய தேவனே! அல்லது அகச்சமயம் ஆறு, புறச்சமயம் ஆறு என்ற பன்னிரு சமயங்களிலும் உள்ள தெய்வமே! சமயங்களுக்கெல்லாம் *(நாயகனே)* தலைவனே! அல்லது *நல்ல சமயத்தில் உதவும் நாயகனே! அழகிய மயில்மேல் வரும் *(முது)* பேரறிவு வாய்ந்த வீரனே!

எல்லா லோகங்களும் குற்றமற்ற எல்லா வேதங்களும் *(மறைகளும்)* தொழுகின்ற பெருமாளே! *(சமரமாபுரி)* திருப்போரூர் என்கிற பெரியநகரில் வீற்றிருக்கும் பெருமாளே!

## உத்தரமேரூர்.

## 718.

*(சுருதி)* வேதங்கள், *(மறைகள்)* உபநிஷதம் ஆகமங்கள், *(இரு நாலு திசையில் அதிபர்)* எட்டுத் திக்குப் பாலகர்கள் (இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்), *(முநிவோர்கள்)* முநிவர்கள், குற்றமில்லாத *(ரிஷிகள்)* இருடிகள் ஏழுபேர் (அகத்தியன், புலத்தியன், அங்கிரசு, கௌதமன், வசிட்டன், காசிபன், மார்க்கண்டன்), சூரியன், சந்திரன், அக்கினி எனப்படும் மூன்று சுடர்கள்-

சொல்லுதற்கு முடிவில் முடியாத *(பிரகிருதி புருஷர்)* பிரபஞ்ச மாயா அதிகாரிகள், *(நவநாதர்கள்)* - சத்தியநாதர், சதோக நாதர், ஆதி நாதர், அனாதி நாதர், வகுளி நாதர், மதங்க நாதர், மச்சேந்திர நாதர், கடேந்திர நாதர், கோரக்க நாதர்), ஆகிய பிரதானசித்தர் ஒன்பதின்மர், தூரத்தில் உள்ள நஷத்திர உலகில் உள்ளவர்கள், வேதம் வல்லோர்கள்-

அருமையான சமயங்கள் கோடிக் கணக்கானவை, தேவர்கள், சரணர்கள் *(அடியார்கள், வீரசைவப் பெரியோர்கள்)* அல்லது சாரணர் - (பதினெண் கணத்துள் ஒரு சாரார்) நூற்றுக் கோடிபேர், திருமால், பிரமா - ஒரு கோடி பேர் - இவர்களெல்லாம் கூடி-

---

* "ஆபத்தில் அஞ்சல் என்ற பெருமாளே" - பாடல் *1201.*

அறிய அறிய அறியாத அடிக ளறிய அடியேனும்
அறிவு ளறியு மறிவூற அருள்வாயே

வரைகள் தவிடு பொடியாக நிருதர் பதியு மழிவாக
*மகர சலதி அளறாக முதுசூரும்-

மடிய அலகை நடமாட விஜய வனிதை மகிழ்வாக
மவுலி † சிதறி இரைதேடி வருநாய்கள்;

நரிகள் கொடிகள் பசியாற உதிர நதிக ளலைமோத
நமனும் வெருவி யடிபேண மயிலேறி-

நளின வுபய கரவேலை முடுகு முருக ‡ வடமேரு
நகரி யுறையு மிமையோர்கள் பெருமாளே.(1)

## 719. நினைக்க

தான தந்த தான தந்த தான தந்த தான தந்த
தான தந்த தான தந்த தனதான

தோலெ லும்பு சீந ரம்பு பீளை துன்று கோழை பொங்கு
சோரி பிண்ட மாயு ருண்டு வடிவான-

தூல பங்க காயம் வம்பி லேசு மந்து நான்மெ லிந்து
சோரு மிந்த நோய கன்று துயராற-

ஆல முண்ட கோன கண்ட லோக முண்ட மால்வி ரிஞ்ச
னார ணங்க ளாக மங்கள் புகழ்தாளும்;

---

* சலதி அளறாக - பாடல் 716-பக்கம் 150 கீழ்க்குறிப்பைப் பார்க்க.
'மவுலி - தலை' 'தும்பையஞ் சிகழிகை மவுலி சூட்டினான்'
-கந்த புராண 4-3-24.

† சிதறி - சிதற - பாடல் 404-பக்கம் 524 - கீழ்க்குறிப்பு.

‡ வட மேரு நகரி - உத்தரமேரூர்.

அறிந்து பார்க்க, அறிந்து பார்க்க, அறிய முடியாத (உனது) திருவடிகளை அறிய அடியேனும் எனது அறிவுக்கு உள்ளேயே அறிய வல்லதான அறிவு ஊறும்படி நீ அருள்புரிவாயாக,

கிரௌஞ்சம் ஆதிய மலைகள் தவிடுபொடியாக, அசுரர்களுடைய ஊர்கள் அழிவுபெற, மகர மீன்கள் உள்ள கடல் சேறாகப், பழைய சூரனும்

அழிவுற, பேய்கள் நடனம் செய்ய, விஜயலக்ஷ்மி மகிழ்ச்சிகொள்ள, (அரக்கர்களுடைய) தலைகள் சிதறிவிழ, உணவுதேடி வந்த நாய்களுடன்,

நரிகளும், காக்கைகளும், பசி நீங்க, ரத்த ஆறு அலைமோதி ஓட, யமனும் அச்சமுற்று (உனது) திருவடியைத் துதிக்க, மயிலில் ஏறி-

தாமரை போன்ற (உபயம்) மகிமை வாய்ந்த திருக்கரத்து வேலாயுதத்தை விரைவிற் செலுத்தின முருகனே! (வட மேருநகரி) **உத்தரமேரூர்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே! தேவர்கள் பெருமாளே!

(அறியும் அறிவூற அருள்வாயே)

# 719.

**தோ**ல், எலும்பு, (சீ) சீழ், நரம்பு, பீளை, நெருங்கியிருக்கும் கோழை, மேலெழும் ரத்தம் -இவை ஒரு பிண்டமாய் உருண்டு ஒரு வடிவு ஏற்பட்டு-

கண்ணுக்குப் புலனாய (பருத்த), (பங்க) பாவத்துக்கு இடமான, (காயம்) உடலை வீணாகச் சுமந்து நான் மெலிவுற்றுத் தளருகின்ற இந்த, (நோய்) பிறவிநோய் விலகி என் துயரம் முடிவுபெற-

விஷத்தை உண்ட தலைவன் (சிவன்), (அகண்ட லோகம் உண்ட மால்) விரிந்த (அல்லது எல்லா) உலகங்களை(யும்) உண்ட திருமால், பிரமன், வேதங்கள், ஆகமங்கள் - இவையெல்லாம் - புகழ்கின்ற உனது திருவடிகளையும்-

ஆன னங்கள் மூவி ரண்டு மாறி ரண்டு தோளு மங்கை
யாடல் **வென்றி வேலு மென்று நினைவேனோ;**
வால சந்த்ர சூடி சந்த *வேத மந்த்ர ரூபி யம்பை
†வாணி ‡பஞ்ச பாணி தந்த முருகோனே-
Xமாயை யைந்து வேக மைந்து பூத மைந்து
நாத மைந்து
வாழ்பெ ருஞ்ச ராச ரங்க ளுறைவோனே;
Xவேலை யன்பு கூர வந்த ஏக தந்த யானை கண்டு
வேடர் மங்கை யோடி யஞ்ச அணைவோனே-
வீர மங்கை Oவாரி மங்கை பாரின் மங்கை
மேவு கின்ற
**மேரு மங்கை** யாள வந்த பெருமாளே. (2)

---

*வேதமந்த்ர ரூபி....'அருமறைக்கு முன்னாய் நடுவெங்குமாய் முடிவாய முதல்வி' - "எழுதா மறையின் ஒன்றும் அரும்பொருளே" -அபிராமி அந்தாதி 10, 55.

† **வாணி** - **கா** என்னும் வாணியையும், **மா** என்னும் இலக்குமியையும் அக்ஷத்தினின்றும் தோற்றுவித்தும், அக்ஷமாகக் கொண்டும் "காமாக்ஷி" எனப் பெயர் போந்தது (அக்ஷம்-கண்)

"தாமரைத் தவிசின் மாதும்...வாணியுந் தன் கண்ணென உடைய பச்சைக் கவின்பெறும் உமைமாது"- வீரசிங்காதன புராணம். பாடல் 653-பக்கம் 540 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

‡ பஞ்சபாணி என்பது பார்வதிக் கொருபெயர், தேவிக்கு ஆயுதம் பஞ்சபுட்ப பாணம் ஆதலின்; 'தாமங் கடம்பு, படை பஞ்ச பாணம்' - அபிராமி அந்தாதி - 73.

X **மாயை ஐந்து:** தமம், மாயை, மோகம், அவித்தை, அநிர்தம், *(1)* ஜீவ சைதன்னியத்தை மறைக்கையால் தமம். *(2)* ஜகரூபமான அந்நிதாத் தோற்றத்துக்குக் காரணமாகையால் மாயை, *(3)* விபரீத ஞானம் உண்டாக்குகையால் மோகம், *(4)* உணர்வு அழிக்கையால் அவித்தை, *(5)* சத்து ரூபத்துக் கந்நியமாகையால் அநிர்தம்.

**வேகம் ஐந்து:** இது காற்றின் ஐந்து குணங்களை குறிக்கின்றது போலும். அவைதாம் ..... போக்கு, வரவு, நோய், கும்பித்தல், பரிசம் என்பன; வேகம் - விரைந்தகதி.

'வேகம்' - சத்தியெனக் கொண்டு சிற்சத்தி, பராசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி இவைகளைக் குறிக்கின்றன எனக்கொள்ளலாம். உயிர்க்கு ஒளியாக நிற்பது சிற்சத்தி, பிராணன் முதலிய வாயுவாக நிற்பது பராசத்தி, பஞ்சபூதமாக நிற்பது இச்சா சக்தி, ஐம்பொறி யுணர்ச்சியாக நிற்பது ஞானசத்தி, மற்றை வினைத்துணையாக நிற்பது கிரியா சத்தி. இனி

(தொடர்ச்சி பக்கம் 159 பார்க்க.)

திருமுகங்கள் ஆறினையும், பன்னிரண்டு தோள்களையும், அழகிய திருக்கரத்தில் உள்ள போரில் வெற்றி கொள்ளும் வேலாயுதத்தையும் என்று நான் தியானிப்பேனோ (அல்லது) என்றும் - எப்போதும் நினைக்கமாட்டேனோ! (நினைக்க வேண்டும் என்றபடி).

(பால சந்திரனை) இளம் பிறையைச் சூடியுள்ள சிவனும், அழகிய (அல்லது சந்த சுரங்கள் கொண்ட) வேத மந்த்ர உருவத்தளான அம்பிகை, (வாணி) கலைமகளை ஒரு கூறாக உடையவள், ஐந்து மலர்ப் பாணங்களைப் படையாகக் கொண்டவள் - பார்வதி பெற்ற குழந்தையே!

ஐந்து மாயை, ஐந்து வேகம், ஐந்து பூதம், ஐந்து நாதம் வாழ்கின்ற பெரிய (சராசரங்கள் - இயங்கு திணை - நிலத்திணைப் பொருள்கள் - அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள்) இவைகள் எல்லாவற்றிலும் உறைபவனே!

வேலை - வேண்டிய வேளையில் - சமயத்தில் - அன்பு மிக்கு வந்த (ஒற்றைக் கொம்புடைய விநாயக மூர்த்தியாம் யானையைக் கண்டு வேடர்பெண் - வள்ளி ஓடி அஞ்சி வந்தபோது (அவளை) அணைந்தவனே!

(வீர மங்கை) வீர லக்ஷ்மி, வாரி மங்கை - பாற்கடலில் தோன்றிய லக்ஷ்மி, (பாரின் மங்கை) பூதேவி - இவர்கள் (மங்களமாக) விளங்கும் - **மேருமங்கை** எனப்படும் உத்தரமேரூரில் ஆட்சி புரியும் பெருமாளே,

(தாளும், ஆனனங்களும், தோளும், வேலும் - நினைவேனோ)

---

ஐம்புலன்களை வேகமாகச் செலுத்தும் சுவை, ஒளி, ஊறு, ஒலி, நாற்றம் எனவும் கொள்வர்; மனோவேகம், வாயுவேகம், ஒலிவேகம், ஒளிவேகம், அசுவவேகம், அசுவகதி 5:- மல்லகதி, மயூரகதி, வானரகதி, வியாக்ரகதி, விடபகதி (அல்லது சரகதி, சசகதி) எனவும் கூறலாம் பஞ்ச தாரை--இவை விக்கிதம், வற்கிதம், உபகண்டம், சவம், உபசவம், அல்லது மாசவம் என்ற ஐவகைக் குதிரைநடை - திருவாலவா - 28-47.

பூதம் ஐந்து: நிலம், நீர், தீ, காற்று, விசும்பு.

நாதம் ஐந்து: (இது சத்தம் - ஓசை 5) தோற் கருவி, துளைக் கருவி, நரப்புக் கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக் கருவி என்பன. 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' - அப்பர் 6-38-1.

'நாதத்தினி லாடி...தேவர் பிரானே'- திருமந்திரம் -2756.

X வேலை - வேளை: O வாரி கடல், நீர்: வாரிமங்கை - கங்கை எனலுமாம்.

## 720. கண் பார்த்தருள

தானனத் தனதான தானனத் தனதான
தானனத் தனதான தனதான

நீள்புயற் குழல்மாதர் பேரினிற் க்ருபையாகி
நேசமுற் றடியேனு நெறிகேடாய்-
*நேமியிற் பொருள்தேடி யோடியெய்த் துளம்வாடி
நீதியிற் சிவவாழ்வை நினையாதே;
பாழினுக் கிரையாய நாமம்வைத் தொருகோடி
பாடலுற் றிடவேசெய் திடுமோச-
பாவியெப் படிவாழ்வ னேயர்கட் குளதான
பார்வைசற் றருளோடு பணியாயோ;
ஆழியிற் றுயில்வோனு மாமலர்ப் பிரமாவு
† மாகமப் பொருளோரு மனைவோரும்-
ஆனைமத் தகவோனும் ஞானமுற் றியல்வோரு
‡ மாயிரத் திருநூறு மறையோரும்;
வாழுமுத் தரமேருர் மேவியற் புதமாக
வாகுசித் திரதோகை மயிலேறி-
மாறெனப் பொருசூர னீறெழப் பொரும்வேல
மான்மகட் குளனான பெருமாளே.(3)

## 721. அருள் பெற

தான தந்தன தத்தா தத்தன
தான தந்தன தத்தா தத்தன
தான தந்தன தத்தா தத்தன தனதான

மாதர் கொங்கையில் வித்தா ரத்திரு
மார்பி லங்கியல் முத்தா ரத்தினில்
வாச மென்குழ லிற்சே லைப்பொரும் விழிவேலில்-

---

*நேமி - பூமி (திவாகரம்)

† ஆகமப் பொருளோர்: ஆகமம் - முதல்வன் வாக்கு; சிவனிடமிருந்து தோன்றிய காமிகம் முதல் வாதுளம் வரை உள்ள ஆகமங்கள் இருபத்தெட்டு.

‡ உத்தரமேரூரில் 'ஆயிரத் திருநூறு மறையோர்' என்றார். இவ்வாறே நூல்களிற் கூறப்படுவன:- தில்லையில் மூவாயிரவர். திருப்பெருந்துறை முந்நூற்றுவர், திரு ஆக்கூர் ஆயிரவர், திருவீழிமிழலை ஐந்நூற்றுவர், † சீகாழி நானூற்றுவர், மதுரையில் 'நண்ணுபுகழ் மறையோர் நாற்பத்தெண்ணாயிரவர்' (தக்கயாகப்பரணி - பக்கம்-92. † ஆளுடைய பிள்ளை - உலா)

## 720.

**நீ**ண்ட, மேகம்போல இருண்ட, கூந்தலை உடைய மாதர்களின் மேல் அன்புவைத்து நட்புவைத்து அடியேனும் நன்னெறியை இழந்தவனாகி-

பூமியில் பொருள் தேடுவதற்காக ஓடி, இளைத்து, உள்ளம் சோர்ந்து, நீதியான சிவவாழ்வை - மங்களகரமான வாழ்க்கையை நினையாமல்-

பாழுக்கே உணவாயிற்று என்று சொல்லும்படியாகப், பேர்களை வைத்து ஒரு கோடிக் கணக்கான பாடல்களை அமையும்படியாக இயற்றுகின்ற மோசக்கார

பாவியாகிய நான் எங்ஙனம் வாழ்வேன்! உனது அன்பர்களுக்கு என்று நீ வைத்துள்ள பார்வையைக் (கிருபாகடாக்ஷத்தை) கொஞ்சம் திருவருள் வைத்து (எனக்கும்) பாலிக்க மாட்டாயோ!

கடலிலே பள்ளி கொண்டுள்ள திருமாலும், சிறந்த மலராம் தாமரையில் வீற்றிருக்கும் பிரமாவும், சிவாகமத்துக்கு உரிய மூல முதல்வராம் சிவபிரானும் பிறர் யாவரும்,

ஆனை மத்தகம் கொண்ட கணபதியும், ஞானம் அடைந்து உலவும் ஞானிகளும், ஆயிரத் திருநூறு மறையவர்களும்

வாழ்கின்ற **உத்தரமேரூரில்** வீற்றிருந்து அற்புதமாக அழகிய விசித்திரமான கலாபத்தைக் கொண்ட மயிலில் ஏறி-

பகைவன் எனச் சண்டை செய்ய வந்த சூரன் தூளாகச் சண்டை செய்த வேலனே! மான்மகள் வள்ளிக்கு உரியவனால் விளங்கி இருப்பவனாகிய பெருமாளே!

(பார்வைசற் றருளோடு பணியாயோ)

## 721.

**மா**தர்களுடைய கொங்கையிலும், விரிந்த அழகிய மார்பில் விளங்குந் தன்மையை உடைய முத்துமாலையிலும், நறுமணம் உள்ள மெல்லிய கூந்தலிலும், சேல்மீன் போன்ற கண்ணாகிய வேலிலும்-

மாமை யொன்றும லர்த்தாள் வைப்பினில்
வாகு வஞ்சியில் மெய்த்தா மத்தினில்
வானி ளம்பிறை யைப்போல் நெற்றியில் மயலாகி;

ஆத ரங்கொடு கெட்டே யிப்படி
ஆசை யின்கட லுக்கே மெத்தவும்
ஆகி நின்றுத வித்தே நித்தலும் அலைவேனோ-

ஆறி ரண்டுப ணைத்தோ ளற்புத
*ஆயி ரங்கலை கத்தா மத்திப
னாயு ழன்றலை கிற்பே னுக்கருள் புரிவாயே;

† சாத னங்கொடு தத்தா மெத்தென
வேந டந்துபொய் பித்தா வுத்தர
மேதெ னும்படி தற்காய் நிற்பவர் சபையூடே-

தாழ்வில் சுந்தர னைத்தா னொற்றிகொள்
நீதி தந்திர நற்சார் புற்றருள்
சால நின்றுச மர்த்தா வெற்றிகொ
ளரன்வாழ்வே,

வேத முங்கிரி யைச்சூழ் நித்தமும்
வேள்வி யும்புவி யிற்றா பித்தருள்
வேர்வி ழும்படி செய்த்தேர் மெய்த்‡ தமிழ்
மறையோர்வாழ்-

மேரு மங்கையி லத்தா வித்தக
வேலொ டும்படை குத்தா வொற்றிய
வேடர் மங்கைகொள் சித்தா பத்தர்கள்
பெருமாளே.(4)

---

*ஆயிரங்கலை கத்தன் -சகலகலா வல்லவ மூர்த்தி
-பாடல் 320 பக்கம் 296-கீழ்க்குறிப்பு.

† சுந்தரர் சரிதம் - பாடல் 545, பக்கம் 242 கீழ்க்குறிப்பு.

‡ தமிழ் மறையோர் - 'செந்தமிழர் தெய்வமறை நாவர்'... அர்ச்சனைகள் செய்ய அமர்கின்ற அரனூர்....வேதியர் விரும்புபதி வீழிநகரே" - சம்பந்தர் 3-80-4 - என வருவதும் காண்க.

(மாமை) அழகு பொருந்திய மலருக்கு ஒப்பான பாதமாகிய இடத்திலும், (வாகு) அழகிய, வஞ்சிக்கொடி போன்ற இடையிலும், உடலில் அணிந்துள்ள (தாமத்தினில்) மாலையிலும், வானில் உள்ள இளம் பிறைக்கு ஒப்பான நெற்றியிலும் மோகங் கொண்டவனாய்ப்-

பற்று வைத்துக் கெட்டுப்போய், இவ் வண்ணம் ஆசைக் கடலுக்கே மிகவும் ஈடுபட்டவனாய் நின்று தவி தவிப்புற்று தினந்தோறும் அலைச்சல் உறுவேனோ!

பன்னிரண்டு பெருமை வாய்ந்த தோள்களை உடைய அற்புதனே! ஆயிரக் கணக்கான கலைகளுக்குத் தலைவனே! (மத்திபனாய்) சாமானிய மனிதனாய்த் திரிந்து அலைகின்ற எனக்கு அருள் புரிவாயாக.

(சாதனம் கொடு) ஆவணச் சீட்டு ஒன்று எடுத்துக் கொண்டு (தத்தா மெத்தெனவே) முதுமையால் மிகவும் தத்தி தத்தி நடந்து சென்று, "பொய் பேசும் பித்தனே - மறுமொழி என்ன பேசுவாய்" என்னும்படி யெல்லாம் (சுந்தரர்) தம்மைக் (காயும்படி) கடிந்து கூறும்படி (திருமணப் பந்தலின் கீழ்) நின்றவராய்ச் - சபை நடுவிலே-

தாழ்வு இல் சுந்தரனை - (தும்மாட்டு) வணக்கம் இல்லாத (அல்லது மேலான) சுந்தரனை (சுந்தர மூர்த்தியை)த் தான் (ஒற்றி கொள்) தமக்கு அடிமையாக அனுபவிக்கும் பாத்தியதையை (வழக்காடி) அடைய நீதி முறையாலே நல்ல துணைக் காரணங்களைக் கொண்டு கிருபை மிகவும் கொண்டு கிருபை மிகவும் வைத்து சாமர்த்தியமாக வெற்றிபெற்ற சிவனாரது செல்வனே!

வேதப் பயிற்சியையும், கிரியை மார்க்கமாக நாள்தோறும் யாகங்கள் செய்வதையும் பூமியிலே நிலையாக ஏற்படுத்தி (இறைவனது) அருள் வேரூன்றி விழும்படி - அருள் வேர் நன்கு பதியும்படி (செய்த்தேர்) (செய்த-ஏர்) - செய்த அழகிய உண்மையாளராகிய செந்தமிழ் அந்தணர்கள் வாழ்கின்ற

**உத்தரமேரூர்** என்னும் தலத்தில் அத்தனே! அதிசயத் தன்மை உடையவனே! வேற்படை முதலிய படை கொண்டு குத்துதலும் அடித்தலும் செய்யும் வேடர்களுடைய மகள் (வள்ளியை)க் கொண்ட மனத்தினனே - வள்ளி தன் மனத்திற் கொண்ட சித்த மூர்த்தியே! பக்தர்கள் பெருமாளே!

(அலைகிற்பேனுக்கு அருள் புரிவாயே)

## மதுராந்தகம்

(ரெயில்வே ஸ்டேஷன். செங்கற்பட்டுக்குத் தெற்கு 15-மைல்.)

### 722. திருவடியைப் பற்ற

தனதாந்த தத்த தனன தத்தத்
தந்த தத்த தந்த தனதான

குதிபாய்ந்தி ரத்தம் வடிதொ ளைத்தொக்
கிந்த்ரி யக்*கு ரம்பை வினைகூர்தூர்-
குணபாண்ட முற்ற கிலமெ னக்கைக்
கொண்டி ளைத்த யர்ந்து சுழலாதே;

உதிதாம்ப ரத்தை †யுயிர்கெ டப்பொற்
கிண்கி ணிச்ச தங்கை விதகீத-
உபயாம்பு யப்பு ணையையி னிப்பற்
றுங்க ருத்தை யென்று தருவாயே;

கதைசார்ங்க கட்கம் வளைய டற்சக்
ரந்த ரித்த கொண்டல் மருகோனே-
கருணாஞ்ச னக்க மலவி ழிப்பொற்
பைம்பு னக்க ரும்பின் மணவாளா;

மதனாந்த கர்க்கு மகவெ னப்‡பத்
மந்த னிற்பி றந்த குமரேசா-
மதுராந்த கத்து Xவடதி ருச்சிற்
றம்ப லத்த மர்ந்த பெருமாளே.(1)

---

* "பொருந்திய குரம்பை தன்னைப் பொருளெனக் கருத வேண்டா" - அப்பர் - 4-42-1.

† உயிர் கெட - ஆன்மத்துவம் நீங்க.

‡ முருகவேள் தாமரையிற் பிறந்தது:- திருப்புகழ் 133, 150, 1005, 1152, 1267, 316ன் கீழ்க்குறிப்பு X (பக்கம் 284) பார்க்க.

X மதுராந்தகத்தில் 'வடதிருச்சிற்றம்பலம்' எனப் பெயர் வழங்கின முருகனாலயம் ஒன்று அருணகிரியார் காலத்து இருந்தது போலும்.

## மதுராந்தகம்.

## 722.

**குதித்துப்** பாய்ந்து ரத்தமானது வடிகின்ற தொளைகளை உடையதும், (தொக்கு) தோலொடு கூடியதும், (இந்திரியம்) ஐம் பொறிகளுடன் கூடியதுமான (குரம்பை) - உடல்; வினை மிகுந்து (தூர்) நிரம்பியுள்ள-

(குணபாண்டம்) குணங்களுக்கு கொள்கலமான உடம்பு - இதனை (உற்று) அடைந்து அகிலமெனக் கைக்கொண்டு - இந்த உடம்பே (உடம்பைப் போற்றுதலே) எல்லாம் - சகல செல்வமாம் என மேற்கொண்டு - அதனால் இளைத்துச் சோர்வுற்றுத் திரியாமல்-

(போற்றித் துதிக்க மனத்தில்) உதிக்கின்றதாகும் (பரத்தை) பரம்பொருளை, (உயிர்கெட) ஆன்மத்துவம் நீங்க, அழகிய கிண்கிணி, சதங்கை இவை விதம் விதமாக கீதங்களைச் செய்யும்,

(உபய அம்புய) இரண்டு தாமரையன்ன (உனது) திருவடிகளாம் (புணையை) தெப்பத்தை - இனியேனும் பற்றி உய்யும் கருத்தை (எனக்கு) எப்போது தருவாய்!

கதை, சாரங்கம், வாள், சங்கு, வலிமை வாய்ந்த சக்கரம் எனப்படும் பஞ்சாயுதங்களைத் தரித்துள்ள மேக நிறத்துத் திருமாலின் மருகனே!

கருணையும் (அஞ்சனம்) மையும் கொண்ட தாமரை யனைய கண்களைக் கொண்ட அழகிய பசிய தினைப்-புனத்திருந்த கரும்புபோல இனித்த வள்ளியின் மணவாளனே!

மன்மதனுக்கு யமனாயிருந்த - (மன்மதனை எரித்தழித்த) சிவபிரானுக்குக் குழந்தையாகத் தாமரையிற் பிறந்து விளங்கின குமரேசனே!

**மதுராந்தகத்தில்** வட திருச்சிற்றம்பலத்தில் அமர்ந்து விளங்கும் பெருமாளே!'

(உபயாம்புயப் புணையைப் பற்றுங் கருத்தைத் தருவாயே)

## 723. உபதேசம் பெற

தனதாந்த தத்த தனன தத்தத்
தந்த தத்த தந்த தனதான

சயிலாங்க னைக்கு ருகி*யி டப்பக்
கங்கொ டுத்த கம்பர் வெகுசாரி-
சதிதாண்ட வத்தர் சடையிடத்துக்
கங்கை வைத்த நம்பர் உரைமாளச்;

செயல்மாண்டு சித்த மவிழ நித்தத்
த்வம்பெ றப்ப கர்ந்த வுபதேசஞ்-
சிறியேன்த னக்கு முரைசெயிற்சற்
றுங்†கு ருத்து வங்கு றையுமோதான்;

அயில்வாங்கி யெற்றி யுத்தி யிற்கொக்
கன்ற னைப்பி ளந்து சுரர்வாழ-
‡ அகிலாண்ட முற்று நொடியி னிற்சுற்
றுந்தி றற்ப்ர சண்ட முழுநீல;

மயில்தாண்ட விட்டு Xமுதுகு லப்பொற்
குன்றி டித்த சங்க்ர மவிநோதா-
மதுராந்த கத்து வடதி ருச்சிற்
றம்ப லத்த மர்ந்த பெருமாளே.(2)

---

* பார்வதி சிவனது இடது பாகத்தைப் பெற்றது:- பாடல் 301 பக்கம்-246, பாடல் 548 பக்கம் 248 கீழ்க்குறிப்புக்களைப் பார்க்க.

† குருத்துவம் குறையுமோதான் - என முருகவேளை வினவுதல் அவரொடு "அசதியாடுதல்" ஆகும். அசதியாடுதல் - பரிகசித்தல்.

‡ சூரனைச் சங்கரித்த பின் மயில்மீது அகிலாண்டங்களைச் சுற்றினது:- பாடல் 267, பக்கம் 164 கீழ்க்குறிப்பு ‡ பார்க்க.

X மேருவைச் செண்டா லடித்தது - திருப்புகழ் - 2, பக்கம் 23 கீழ்க்குறிப்பு, பொற்குன்று - கிரௌஞ்சம் எனவும் கொள்ளலாம்.

'சொன்ன (சொர்ண) கிரௌஞ்சகிரி" - கந்தரலங்காரம் 19; 'கனகிரௌஞ்சம்' திருப்புகழ் 454. 'குருகு பெயர் பெற்ற கனவ - சிகரி'- வேடிச்சி காவலன் வகுப்பு (கனம் - பொன்)

## 723.

*(சயில அங்கனைக்கு)* மலைமகளாகிய பார்வதிக்கு *(உருகி)* அவள் பக்திக்கு உருகித் *(தமது)* இடது பாகத்தைத் தந்தருளின *(கம்பர்)* சிவனார், பலவிதமான *(சாரி)* வட்டமாய் ஓடுதல் முதலான கூத்துக்களையும்

*(சதி)* தாள ஒத்துக்களையும் கொண்ட ஆடலை உடையவர், சடையிடத்திலே கங்கையை வைத்துள்ள *(நம்பர்)* பெருமான் ஆகிய சிவபிராற்கு - வாக்கு அழியவும்,

செயல் அழியவும், மனம் அழியவும், *(நித்தத்துவம்)* என்றும் உளதாம் தன்மையைப் பெற - நீ செய்த உபதேசத்தைச்

சிறியவனாகிய எனக்கும் நீ சொல்லி உதவினால் கொஞ்சமேனும் உனது குருத்துவம் குருமூர்த்தியாம் பதவி குறைந்துவிடுமா என்ன!

வேலாயுதத்தை எடுத்துச் செலுத்திக் கடலிலிருந்த மாமரமாய் நின்ற சூரனைப் பிளந்து, தேவர்கள் வாழ-

சகல அண்டங்கள் முழுமையும் ஒரு நொடிப் போதில் சுற்றின வலிமை வாய்ந்த, கடுமை கொண்ட, முழு நீல நிறங்கொண்ட

மயிலைப் பாய்ந்தோடச் செய்தவனும், பழைய சிறந்த பொன்மயமான *(குன்று)* மேருமலையை *(இடித்த)* செண்டால் அடித்தவனுமான *(சங்கிராம - விநோதா)* போர்விநோதனே! *(போர் விளையாடலை உடையவனே)!*

**மதுராந்தகத்தில்** வட திருச்சிற்றம்பலம் என்னும் திருக் கோயிலில் வீற்றிருக்கும் பெருமாளே!

*(குருத்துவங் குறையுமோ தான்)*

## 724. திருவடியைப் பெற

தனதாந்தன தானன தந்தன
தனதாந்தன தானன தந்தன
தனதாந்தன தானன தந்தன தந்ததான

*மனைமான்சுத ரான சுணங்கரு
† மனம்வேந்தினை யான தனங்களு
மடிவேன்றனை யீண அணங்குறு வம்பராதி-
மயமாம்பல வான கணங்குல
மென ‡ ப்ராந்தியும் X யானென தென்றுறு
வனவாம்பிர மாத குணங்குறி யின்பசார;
இனவாம்பரி தான்ய தனம்பதி
விடஏன் றெனை O மோன தடம்பர
மிகுதாம்பதி கான கணங்கன வும்பரேசா-
இடவார்ந்தன ** சானு நயம்பெறு
கடகாங்கர சோண வியம்பர
இடமாங்கன †† தானரு ளும்படி யென்றுதானோ;

---

* மனை, மக்கள் இவரால் சோர்வு உண்டாகும்:-

'மனைவி தாய் தந்தை மக்கள் மற்றுள சுற்றமென்னும் வினையுளே விழுந்தழுந்தி வேதனைக் கிடமாகாதே' - அப்பர் 4-71-1.

† தனங்கள் (செல்வம்) அல்லலிற் படுத்தி மனத்தை வேகச் செய்யும் 'செல்வ மென்னும் அல்லலிற் பிழைத்தும்' - திருவாசகம் போற்றித்திரு 39

‡ ப்ராந்தி - மாயை - மயக்கம் - "மனை மக்கள் சுற்றம் எனுமாயாவலை" - திருப்புகழ் 1301.

X 'யான் எனது' - பிரமாத குணம் - ஏனெனில் இவை அற்றால்தான் உண்மைப் பொருள் விளங்கும்.

"யான்தான் எனுஞ்சொல் இரண்டுங் கெட்டாலன்றி யாவருக்கும் தோன்றாது சத்தியம்" - கந்தர் அலங். 95

O மோன நிலையில்தான் கடவுளைக் காண இயலும்:-

"நினது கழல் பெற மவுன எல்லை குறிப்ப தொன்று புகல்வாயே"- என்றார் பிறிதோரிடத்து (திருப்புகழ் 660)

**முருகவேளின் விசுவரூப நிலையில் தேவர் கூட்டம் அவருடைய "சானு"வில் (முழந்தாளிற் காணப்பட்டது).

'சானு வடிவமை முழந்தாள் விஞ்சை வானவராதியானோர்' கந்த புராணம் 4-13-424.

†† தாளே - இறைவனுடைய அங்கங்களில் மேலான தென்பதற்கு-

(தொடர்ச்சி பக்கம் 169 பார்க்க).

# 724.

**ம**னைவி, பெருமை பொருந்திய மக்கள் ஆகிய (சுணங்கரும்) சோர்தல் தருபவர்களும், (மனம் வேகும்) மனம் நொந்து வெந்து போதற்குத் (திணையான) இடந் தருவதான (தனங்களும்) செல்வங்களும், இறந்து போகின்ற எளியேனைப் பெற்ற (அணங்கு) தெய்வத்துக்கு ஒப்பான தாய், (உறு வம்பர் ஆதி) உற்றாராய்ப் பயனற்றவர்களான பிறர் - முதலானோர் தம்-

மயமான பலவகைப்பட்ட கூட்டத்தார், குலத்தார், என்கின்ற (பிராந்தியும்) மயக்கமும்; 'யான்', 'எனது' என்று உறுவனவாம் - கூடியுள்ளனவாம், (பிரமாத) அளவு கடந்து செல்லும் - குணமும், நோக்கமும்; இன்பத்துக்கும், (சாரம்) இனிமைக்கும் -

(இன) தக்கதாகப் பொருந்திய (வாம்பரி) வாவும்பரி - தாண்டிச்செல்லும் குதிரைகள், தான்யங்கள், தனங்கள் (சொத்துக்கள்), (பதி) இருக்கும் ஊர் - இவையெலாம் விட்டு நீங்கும்படி, என்னை (ஏன்று) ஏன்றுகொண்டு (மோன தடம்) மோன நிலையையும் (பர மிகுதாம் பதிகாண) மேம்பட்டு மிக்கு நிற்கும் **பதி** - தெய்வத்தையும் - நான் கண்டு களிக்கக் - கூட்டமான பெருமை தங்கிய (உம்பர்) தேவர்கள் ஏசுதலின்றி (நன்கு) பொருந்திய

இடங்கொண்டு நிறைந்துள்ள (சானு) (முழந்தாள்), (நயம் பெறு) நல்லதான கடகம் அணிந்துள்ள கரம், (சோண) சிவந்த (வியம்) உடல், (இவைகளுக்கு) மேலான இடமான பெருமை பொருந்திய (உனது) திருவடியை நீ (எனக்கு) அருளும் (படி), நிலை அல்லது வாய்ப்பு (என்று தானோ) என்றைக்கோ! எந்தத் தினத்திலோ - அறிகிலேனே!

---

'நின்னிற் சிறந்த நின்தாள் இணையவை" - பரிபாடல் 4-62 பாடல் 691 பக்கம் 94 பார்க்க.

இனி:- "இடவார்ந்தன சானு நயம்பெறு...கரம்" என்பதற்குக் "கீழே தொங்கப்போட வார்ந்தன.... நீண்டனவாகிய, சானு நயம்பெற முழங்காலினோடு நட்புப் பெறுகின்ற, கடக அம்கர - வளைகளையுடைய அழகிய திருக் கரங்களை உடையவனே (ஆஜானு பாகுவே என்படி): சோண - சிவப்பான, இயம் பரவு இடமாம் - வாத்தியங்களோடு புகழ்வதற்கு இடமாகிய, கனதாள்....பெருமையை உடைய திருவடிகளை" எனப் பொருள் காண்பர் வாகீச கலாநிதி பிரமஸ்ரீ கி. வா. ஜகந்நாத ஐயரவர்கள்.

தன தாந்தன தான தனந்தன
தெனதோங்கிட தோன துனங்கிட
தனவாம்பர மான நடம்பயில் எம்பிரானார்-
தமதாஞ்சுத * தாபர சங்கம
மெனவோம்புறு தாவன வம்படர்
தகு†தாம்பிர சேவித ரஞ்சித வும்பர்வாழ்வே;
முனவாம்பத ‡மூடிக வந்தன
முயல்வான் Xபிடி மாடிமை யைங்கரர்
Oமுகதாம்பின மேவுறு சம்ப்ரம **சங்கணாறு-
முககாம்பிர மோடமர் சம்பன
மதுராந்தக மாநக ரந்திகழ்
†† முருகாந்திர மோடம ரும்பர்கள்
தம்பிரானே. (3)

---

* "தாபர சங்கமம் என ஓம்புறு தாவல்; நவம் படர்தகு தாம்பிர சேவித" - எனப் பிரித்துத் தாவரமும் சங்கமும் என்று பாதுகாத்தற்குரிய பரந்த பொருள்களிலும், புதுமை பரவுதற்கு ஏற்ற செப்பு விக்ரகங்களிலும் சேவிப்பதற்கு உரியவனே" - எனப் பொருள் காண்பர் - வித்துவான் பிரமஸ்ரீ கி. வா. ஜகந்நாத ஐயரவர்கள்.

† தாம்பிர சேவித - தாம்பிரம் - சிவப்பு, இது செஞ்சூட்டை உடைய சேவலை ஆகு பெயராய்க் குறிக்கின்றது. தாம்பிர சூடம் என்பது சேவல். வம்பு அடர் தகு தாம்பிரம் என்பது புதிதாக (இறைவனை) நெருங்கித் தக்கநிலையை அடைந்த சூரனது ஒருகூறாகிய சேவல்; 'தாம்பிர சேவித' - என்றது முருகவேளின் சொற்படி (சேவகம்) பணியைச் சேவல் செய்ததைக் குறிக்கும், சேவலை நோக்கி முருகவேள் 'நீ கொடியாகி நமது தேரை அலங்கரிப்பாயாக' என்றார்: சேவல் அங்ஙனமே செய்தது.

"நீ கொடியே ஆகி...நமதுதேரின் மேவினை ஆர்த்தி என்னத்தக்கதே பணியிதென்னா எழுந்தது....விண்மேல்": செந்நிறங் கெழீஇய சூட்டுச் சேவலங்கொடி யொன்றாகி" .....தேர்மீப்போய்.....உருமேறுட்க....ஆர்த்து மற்றவண் உற்றதன்றே" - கந்த புராணம், 4-13-497, 498 பின்னும் ஒருமுறை சேவல் முருகவேளின் பணியை ஏற்றுச் செய்தது:- வள்ளியைக் களவாடிச் சென்ற முருகனை வேடர்கள் சூழ்ந்து அம்பு வீச, இறைவன் ஆணையை அறிந்து சேவல் ஒரு ஆர்ப்புக் கொள்ள வேடர்கள் மாண்டு வீழ்ந்தார்கள்.

'எம்பிரான் அருளால் பாங்கர்...சேவல் ஆர்ப்புக் கொள்ள...யாரும்....மாண்டு ....புவியில் வீழ்ந்தார்' - கந்த புராணம் 6-24-184,

‡ மூடிக வந்தனம் முயல்வான்:- கஜாமுகாசுரன் என்பவன் மூஷிக ரூபத்துடன் விநாயகரை எதிர்ப்பதற்கு வந்தான், அப்போது அதன்மீதேறி விநாயகர் அந்த மூஷிகத்தை வணங்கச் செய்தனர்.

(தொடர்ச்சி பக்கம் 171 பார்க்க)

தன தாந்தன தான தனந்தன ...தன - என்னும்படியான சிரேஷ்டமான நடனத்தைச் செய்கின்ற எம்பிரான் சிவனார்-

தமக்குரிய குழந்தையே! (தாபரம்) அசையாப் பொருள், (சங்கமம்) அசையும் பொருள் - எனப் பொருள்களை (ஓம்புறு) பாதுகாத்தல் செய்ய (தாவன) ஸ்தாபன - சிருஷ்டித்தவனே! ஏற்படுத்தினவனே! (வம்பு அடர்) புதுமை நிறைந்த, (தகு) தக்கதான (தாம்பிர) சூடம் எனப்படும் சேவலாற் சேவித - சேவைசெய்யப் படுபவனே! (ரஞ்சித) இன்பந்தருகின்ற தேவர் செல்வமே!

(முன) முன்ன - (அண்ணா! வா என்று முருகவேள்) நினைத்த உடனே - வாம் பத - (வாவும் பத) தாண்டி வேகமாய் வந்த திருவடிகளை உடையவரும், மூடிக - பெருச்சாளி (வந்தனம்) (வணக்கம்) செய்யும்படி (முயல்வான்) முயற்சி எடுத்துக் கொண்டவனும், (பிடி) பெண்யானை போன்ற வள்ளியின் (மாடு) பக்கத்தில் (இமை) இமைத்த (காட்டானையாக) ஒளிவிட்டு விளங்கினவருமான (ஐங்கரர்) விநாயக மூர்த்தியின் எதிரில் தோற்றிய தம்பியே! பொருந்தியுள்ள (சம்ப்ரம) களிப்பு நிறைந்த (சங்கணாறு) - அழகு செய்கின்ற கூட்டமாகிய - ஆறு -

(திரு) முகங்களுடன் (காம்பிரமோடு) கம்பீரமோடு வீறுடனே வீற்றிருக்கும் (சம்பன்ன) பாக்கியவானே! சம்பத்து உள்ளவனே! மதுராந்தக மகா நகரத்தில் விளங்குகின்ற முருகா! (அம் திரமோடு அமர்) நல்ல உறுதியான (பத்தியுடன்) உள்ள தேவர்களின் தம்பிரானே!

(கன தாள் அருளும்படி என்று தானோ)

---

"இபமுகத்தவுணன் சீற்றத்தோர் ஆகு ஆனான்
செம்மல் தன்னைத் தாக்கிய வருதலோடும்... துப்பின்தாக்கி
நீ நமைச் சுமத்தி யென்று மேக்குயர் பிடரில் தாவி
வீற்றிருந் தூர்தல் உற்றான்"....கந்தபுராணம் 6-14-250, 252,
(ஆகு - மூஷிகம் - பெருச்சாளி)

X பிடிமாடு இமை ஐங்கரர் - வள்ளியின் பக்கல் நெருங்கி வந்த கணபதி - பாடல் 587 - பக்கம் 348 கீழ்க்குறிப்பு.

O முகதா ஆம் பின்ன - எதிரில் தோற்றிய தம்பீ,

** சம் கண ....அழகு செய்கின்ற கூட்டமாகிய,

†† முருக அம் திரமோடு அமர் எனப்பிரிக்க.

## சேயூர்.

(இது 'செய்யூர்' என வழங்கும். மதுராந்தகத்துக்குக் கிழக்கு 16-மைல். அந்தகக் கவி வீரராகவ முதலியார் பாடியருளிய "சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்" அச்சிடப்பட்டுள்ளது)

### 725. மாதர்மீது மயக்கு அற

தனனாதன தானன தானன
தனனாதன தானன தானன
தனனாதன தானன தானன தனதான

முகிலாமெனும் வார்குழ லார்சிலை
புருவார்கயல் வேல்விழி யார்சசி
முகவார்தர ளாமென வேநகை புரிமாதர்-

முலைமாலிணை கோபுர மாமென
வடமாடிட வேகொடி நூலிடை
முது*பாளித சேலைகு லாவிய மயில்போல்வார்.

†அகிசேரல்கு லார்தொடை வாழையின்
அழகார்கழ லார்தர வேய் தரு
அழகார்கன நூபுர மாடிட நடைமேவி-

அனமாமென யாரையு மால்கொள
விழியால்சுழ லாவிடு பாவையர்
அவர்பாயலி லேயடி யேனுட லழிவேனோ;

ககனார்பதி யோர்முறை கோவென
இருள்காரசு ரார்படை தூள்பட
கட‡லேழ்கிரி நாகமு நூறிட விடும்வேலா-

Xகமலாலய நாயகி வானவர்
தொழுமீசுர னாரிட மேவிய
கருணாகர ஞானப ராபரை யருள்பாலா;

---

* பாளித சேலை...பாடல் 627 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† அகி - அம்பு.

‡ ஏழ்கிரி - பாடல் 43 பக்கம் 117 - கீழ்க்குறிப்பு.

X கமலாலய நாயகி - பார்வதி - பாடல் 31 - பக்கம் 91 - கீழ்க்குறிப்பு.

# சேயூர்.

## 725.

மேகம் என்று சொல்லும்படியான நீண்ட கூந்தலை உடையவர்கள், வில்லைப் போன்ற புருவத்தை உடையவர்கள், கயல்மீன் போன்ற வேலைப் போன்ற கண்களை உடையவர்கள், (சசி) சந்திரன் போன்ற (முகவார்) முகத்தை உடையவர்கள், தரளாம் எனவே - தரளம் - முத்துப் போலவே பற்களைக் கொண்டு சிரிக்கின்றவர்களாகிய மாதர்கள்;

கொங்கைகள் பெருமை பொருந்திய இரண்டு கோபுரங்கள் என்று சொல்லும்படி விளங்க, (அவைகளின் மேலே) வடம் - மணிவட, மாலைகள் (ஆடிடவே) அசைந்து விளங்கக், கொடிபோலவும், நூல் போலவும், நுண்ணிய இடையில், (முது) வேலைப்பாடு முற்றின, (பாளிதசேலை) பட்டுப்புடைவை விளங்கவுள்ள மயிலனைய மாதர்கள்-

பாம்பு போன்ற அல்குலை உடையவர்கள், வாழை போன்ற தொடை அழகினர்கள், கழல் - சிலம்பு (அல்லது கால் மோதிரம்) ஒலிக்கப் பொருந்திய அழகினர்கள், (கனம்) பொன்னாலாய நூபுரம் (பாத கிங்கிணி) ஒலிசெய நடந்து சென்று

அன்னப்பறவை என்னும்படி யாரையும் விருப்பம் (மோகம்) கொள்ளும்படி கண் கொண்டே சுழல விடுகின்ற பாவையர் - இத்தகையோரது படுக்கையிலே அடியேன் உடல் அழிபடுவேனோ!

விண்ணுலகிலுள்ள ஊரினர்கள் (தேவர்கள்) கோ என்று முறையிட இருளைப்போலக் கரிய நிறம் உடைய அசுரர் படைகள் தூளாக, கடலும், எழுகிரியும், (நாகமும்) (பிற) மலைகளும் தூளாகச், செலுத்தின வேலாயுதனே!

தாமரையில் கோயில் கொண்டிருக்கும் நாயகி, தேவர்கள் தொழுகின்ற ஈசனுடைய இடது பாகத்தில் உள்ளவள், கருணைக்கு இருப்பிடமானவள், ஞான பரதேவதை ஆகிய பார்வதி பெற்ற குழந்தையே!

மகிழ்மாலதி நாவல்ப லாகமு
குடனாட* நி லாமயில் கோகில
மகிழ்நாடுறை மால்வளி நாயகி மணவாளா-

†மதிமாமுக வா‡ வடி யேனிரு
வினைதூள் பட வேயயி லேவிய
Xவளவாபுரி வாழ்மயில் வாகன பெருமாளே (1)

## பேறை நகர்.

## 726.

"நீலமயில் சேரும்" எனத் தொடங்கும் இத்தலத்துப் பாடல் 327 - 1ஆம் பாடலாகக் குன்றுதோறாடலிற் சேர்க்கப்பட்டுள்ளது. தொகுதி - 2, பக்கம் 316 பார்க்க.

---

* நிலா - ஒளி - "அணி நிலா வீசுமாலை - சிந்தாமணி 2531.

† முருகன் திருமுகம் மதிக்கு ஒப்பு.

"முழுமதியன்ன ஆறு முகங்களும்" - கந்தபுரா. 1-20-126.

‡ இது அருணகிரியாரின் வரலாற்றுக் குறிப்பாகும்;- முருகவேள் வேல் கொண்டு அருணகிரியாரின் (நாவிற் பொறித்து) இருவினையைப் போக்கினது-

"விடியாமல மாயைகளாம் இருள் தீர்த்துத்தீர்த்து...பாட்டு மிக ஓத முனாள் ஒரு நேயனுள் நாக்கில் தீட்டும் வடிவேலுடனே" "அருணகிரிநாதர் .....நாவிற் பொறித்து" - திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ் - காப்பு-2. சிறுதேர்-1.

(தொடர்ச்சி பக்கம் 175 பார்க்க)

மூகிழமரம், (மாலதி) மல்லிகை, நாவல்மரம், பலாமரம், (கமுகு) பாக்குமரம், இவைகளில் விளையாடும் (நிலா) ஒளி பொருந்திய மயிலும், குயிலும் மகிழ்ந்திருக்கும் பிரதேசமாகிய வள்ளிமலையில் இருந்த பெருமை தங்கிய வள்ளி நாயகியின் மணவாளனே!

சந்திரனைப் போன்ற அழகிய முகத்தனே! அடியேனுடைய இருவினையும் தூளாகவே வேலை உபயோகித்த பெருமாளே! வளவாபுரி எனப் பெயரிய சேயூரில் (செய்யூரில்) வீற்றிருக்கும் பெருமாளே! மயில் வாகனப் பெருமாளே!

(அடியேன் உடல் அழிவேனோ)

## பேறை நகர்.

## 726.

இப் பாடலின் உரையைத் தொகுதி 2-பாடல் 327-1 பக்கம் 317 - பார்க்க.

---

(பக்கம் 174 கீழ்க்குறிப்புத் தொடர்ச்சி)

X வளவாபுரி என்பது சேயூர்; இதனைச் 'சேயூர் முருகன் பிள்ளை தமிழிற்' காண்க.

O 'மதுராபுரி மேவி யுலாவிய பெருமாளே' என்றும் பாடம்.

வளவநகர் - வளவாபுரி - இவை சேயூரைக் குறிக்கும். சோழனுடைய நகரம் என்பது பொருள். "செம்பிய வளவன் வந்துனக் காலயம் சகலமும் தந்ததிற் பின்"-

'தெரிதமிழ் வளவ னகரியின் முருக!'' திருமகள்மருக! வருகவே!

-சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்.

## திருவக்கரை.

(தென்னாற்காடு ஜில்லாவி லுள்ள மயிலம் ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து 3-மைல் சென்று, மயிலம் சேர்ந்து அங்கிருந்து வானூர் போகும்வழியில் 4½ மைல் சென்று, அங்கு வழியைவிட்டு வயல் வழியாகச் செல்லும் வண்டிப் பாதையில் 5-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

### 727. அடிமைப் பட

தனதன தத்தன தனதன தத்தன
தனதன தத்தன தனதானா

கலகலெ னச்சில கலைகள் பிதற்றுவ
தொழிவ துனைச்சிறி துரையாதே-
கருவழி தத்திய மடுவ தனிற்புகு
கடுநர குக்கிடை யிடைவீழா;

உலகு தனிற்பல பிறவி தரித்தற
வுழல்வது விட்டினி யடிநாயேன்-
*உனதடி மைத்திரள் அதனினு முட்பட
வுபய மலர்ப்பத மருள்வாயே;

குலகிரி † பொட்டெழ அலைகடல் வற்றிட
நிசிசர னைப்பொரு மயில்வீரா-
குணதர வித்தக குமர புனத்திடை
குறமக ளைப்புணர் மணிமார்பா;

அலைபுன லிற்றவழ் வளைநில வைத்தரு
மணிதிரு வக்கரை யுறைவோனே-
‡ அடியவ ரிச்சையி லெவையெவை யுற்றன
அவைதரு வித்தருள் பெருமாளே.(1)

---

* "இவ் வேண்டுகோள் அருணகிரியார்க்கு நிறைவேறிற்று என்பதற்குச் சான்று- "இடுதலைச் சற்றுங் கருதேனைப் போதமிலேனை யன்பாற் கெடுதலிலாத் தொண்டரிற் கூட்டியவா கிரவுஞ்ச வெற்பை அடுதலைச் சாதித்த வேலோன்" என வரும் கந்தரலங்காரம் *(100)*

† "பொட்டாக வெற்பைப் பொருத கந்தா" *-கந்தரலங்-34.*

‡ இது முருகன் திருவருட் பெருமையைக் காட்டும் அருமையான அடி. மனப்பாடஞ்செய்ய வேண்டிய அடி.

## திருவக்கரை.

## 727.

'கலகல' என்னும் ஓசையுடன் சில நூல்களைக் கற்றுப் பிதற்றல் (ஒழிவது) ஒழிய வேண்டியது; உன்னைக் கொஞ்சமேனும் துதிக்காமல்-

கருவிற் புகுதற்கு வேண்டிய வழியில் வேகமாகச் செலுத்தும் மடுவில் (பள்ளத்திற்) புகுந்து, பொல்லாத நகரத்தின் மத்தியில் வீழாமல்-

உலகிலே பல பிறப்புக்களை எடுத்து மிகவும் திரிதலை விட்டு, இனியேனும் அடிநாயேனாகிய நான்-

உன்னுடைய அடியார் கூட்டத்திலும் உட்பட்ட ஒருவனாக உனது இரண்டு மலர்ப்பாதங்களை அருள்வாயே.

(குலம்) கூட்டமான எழுகிரி தொளைபட்டுப் பொடிபட, அலைகடல் வற்றிப்போக அசுரனாம் சூரனொடு (பொரும்) சண்டைசெய்த (அயில் வீரா) வேல் வீரனே!

நற் குணத்தவனே! ஞானமூர்த்தியே! குமரனே! (தினைப்) புனத்திடையே குறமகள் வள்ளியை அணைந்த அழகிய மார்பனே!

அலைவீசும் நீரிலே தவழ்கின்ற சங்குகள் ஒளியை வீசுகின்ற அழகிய **திருவக்கரை** என்னும் தலத்தில் வீற்றிருப்பவனே!

அடியார்களுடைய ஆசையில் என்ன என்ன ஆசைகள் உள்ளனவோ அன்ன அன்ன ஆசைகளை வரவழைத்துப் பூர்த்திசெய்யும் (தந்து உதவும்) கருணை மூர்த்தியாம் பெருமாளே!

(அடிமைத்திரள் அதனினும் உட்பட பதம் அருள்வாயே)

## 728. நற்குணம் வர

தத்தன தத்தன தத்தன தத்தன
தத்தன தத்தன தத்தன தத்தன
தத்தன தத்தன தத்தன தத்தன தனதான

பச்சிலை யிட்டுமு கத்தைமி னுக்கிகள்
குத்திர வித்தைமி குத்தச மர்த்திகள்
*பப்பர மட்டைகள் கைப்பொருள் பற்றிட
நினைவோர்கள்-

பத்திநி ரைத்தவ ளத்தர ளத்தினை
யொத்தந கைப்பில்வி ழிப்பிலம யக்கிகள்
பக்ஷமி குத்திட முக்கனி சர்க்கரை யிதழூறல்;

எச்சி லளிப்பவர் † கச்சணி மெத்தையில்
இச்சக மெத்தவு ரைத்துந யத்தொடு
மெத்திய ழைத்து அணைத்தும யக்கிடு மடமாதர்-

இச்சையி லிப்படி நித்தம னத்துயர்
பெற்றுல கத்தவர் சிச்சியெ னத்திரி
இத்தொழி லிக்குணம் விட்டிட **நற்பத மருள்வாயே;**

நச்சர விற்றுயில் பச்சைமு கிற்கரு
ணைக்கடல் பத்மம லர்த்திரு வைப்புணர்
நத்து தரித்தக ரத்தர்தி ருத்துள வணிமார்பர்-

நட்டந டுக்கட லிற்பெரு வெற்பினை
நட்‡ டர வப்பணி சுற்றிம தித்துள
Xநத்தமு தத்தையெ ழுப்பிய ளித்தவர்
மருகோனே;

---

* பப்பரமட்டைகள் - பாடல் 508, 570. 1228 பார்க்க.

† கச்சணி மெத்தை - ரவிக்கை பூண்ட கொங்கை என்பது தொனிக்கின்றது.

‡ அரவப்பணி - பாம்பு - ஒரு பொருள் இரட்டைச்சொல்; அல்லது கடைதல் ஆற்றாது (அரவம்) ஒலி செய்த (பணி) பாம்பு எனலுமாம்.

X திருமால் கடலைக் கடைந்து அமுதத்தை அளித்தது பாட்டு 509, பக்கம் 162 கீழ்க்குறிப்பு.

# 728.

பச்சிலைப்பொடி பூசி முகத்தை மினுக்குபவர்கள், வஞ்சகமான வித்தைகளில் மிக்க சாமர்த்திய சாலிகள், (பப்பர மட்டைகள்) கூத்தாடும் பயனிலிகள், (வருபவர்தம்) கைப்பொருளை அபகரிப்பதிலேயே எண்ணம் வைத்துள்ளவர்கள்-

(பத்தி நிரை) வரிசை வரிசையாக உள்ள (தவள) வெள்ளை நிறத்து (தரளத்தினை) முத்துக்களை ஒத்த பற்களாலும், கண் பார்வையாலும் மயக்குபவர்கள், அன்பு மிகும்படி மா, பலா, வாழை - என்னும் முப்பழங்களையும், சர்க்கரையையும் (போன்ற) வாயிதழ் ஊறலாம்-

எச்சிலைத் தருபவர்கள், (கச்சு அணி மெத்தையில்) கச்சைக் கயிற்றாலாய அழகிய மெத்தையில் - கயிற்றுக் (கட்டிற்) படுக்கையில் - (இச்சகம்) முகஸ்துதியான வார்த்தைகள் நிரம்பப்பேசி (நயத்தொடும்) பக்குவமாக (எத்தி) ஏமாற்றி- வஞ்சித்து அழைத்து, அணைத்து, மயக்குபவர்கள் ஆகிய அழகிய (பொது) மாதர்களின் மேலுள்ள-

ஆசையிலேயே இவ்வண்ணம் தினந்தோறும் மனவருத்தத்தை அடைந்து, உலகோர்கள் சீ சீ என வெறுப்புக்காட்டத் திரிகின்ற (எனது இந்தத் தொழிலும், எனது இந்தக் குணமும் நான் விட்டொழிக்க (உனது) நல்ல திருவடியைத் தந்தருளுக;

விஷமுள்ள (அரவம்) ஆதிசேடனாம் பாம்பின்மேல் துயில்கின்ற பச்சை மேகம் போன்றவரும், கருணைக் கடலானவரும், தாமரைமலரில் வாசம் செய்யும் இலக்குமியைச் சேர்பவரும், சங்கு தரித்த கரத்தினரும், திருத்துளப மாலையை அணிந்துள்ள மார்பினரும்,

நட்டநடுக்கடலில் - கடலில் நடுமத்தியில் பெரிய (மந்தர) மலையை நாட்டி, (அரவப்பணி) பாம்பை (வாசுகிப் பாம்பைக் கயிறாகச்) சுற்றி, (மதித்து) மர்த்தித்து - கடைந்து, உளம் நத்து அமுதத்தை - உள்ளத்தில் - மனத்தில் ஆசைப்பட்ட அமுதத்தை வரப்பண்ணித் (தேவர்களுக்கு) அளித்தவருமான திருமாலின் மருகனே!

*கொச்சைமொ ழிச்சிக றுத்தவி ழிச்சிசி
றுத்தஇ டைச்சிபெ ருத்தத னத்திகு
றத்தித னக்கும னப்ரிய முற்றிடு குமரேசா-

† கொத்தவிழ் பத்மம லர்ப்பழ னத்தொடு
குற்றம றக்‡ கடி கைப்புனல் சுற்றிய
கொட்புள நற்றிரு வக்கரை யுற்றுறை
பெருமாளே. (2)

## சிறுவை.

(இது 'சின்னம்பேடு' எனவும், 'சிறுவரம்பேடு' எனவும் வழங்கும். பொன்னேரிக்கு மேற்கு 7-மைல் தூரம். சென்னை - ஆரணி வழியில் 20 மைல் சென்று பனப்பாக்கத்துக்கு அருகில் இறங்கித் தெற்கு 1-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். சிறுவரம்பேடு என்பது சிறுவர் (குசலவர்) அம்பெடுத்ததைக் குறிக்கும். 731-ஆம் பாடலைப் பார்க்க. இத் தலத்துத் திருமாலுக்கு 'திருவூரகப் பெருமாள்' என்று பெயர். 732 ஆம் பாடலைப் பார்க்க. முருகருக்கு தனிக்கோயில் உளது. காஞ்சீபுரத்துக்கு வடக்கு 5-மைலில் சிறுவாக்கம் என்று ஒரு தலம் உளது. விக்கிரவாண்டிக்குச் சமீபத்திலும் சிறுவை என ஓரூர் இருப்பதாகத் தெரிகின்றது.)

## 729. தரிசனம் பெற

தந்ததன தனதான தந்ததன தனதான
தந்ததன தனதான தனதான

அண்டர்பதி குடியேற மண்டசுரர் உருமாற
அண்டர்மன மகிழ் மீற Xவருளாலே-
அந்தரியொ டுடனாடு சங்கரனு மகிழ்கூர
ஐங்கரனு முமையாளு மகிழ்வாக;
மண்டலமு முநிவோரு மெண்டிசையி லுளபேரு
Oமஞ்சினனு மயனாரு மெதிர்காண-

---

* 'வாக்குக் கருணகிரி' - என்பதற்கு இந்த அடியையும் எடுத்துக் காட்டலாம் (பாடல் 672-நான்காவது, ஆறாவது அடிகள், பாடல் 373 மூன்றாவது அடி - போலச் சிறந்தது). 'பருத்தமுலை சிறுத்த இடை...மறச்சிறுமி' - வேல் வகுப்பு.

† கொக்கு மரிக்கு மயிற் படை விட்டருள்!
கொற்றவ சத்த கிரிப்புனல் சுற்றிய
கொட்புள நற்பழ நிப்பதி யுற்றிடு பெருமாளே'-
என்றும் பாடம். (‡,X, O தொடர்ச்சி பக்கம் 181 பார்க்க.)

திருந்தாப் பேச்சினளும், கரிய கண்களை உடையவளும், சிறிய இடையை உடையவளும், பெரிய கொங்கைகளை உடையவளும் ஆன குறவள்ளியின் மனத்தில் ஆசை கொண்ட (நிரம்பக்கொண்ட) குமரேசனே!

இதழ்க் கொத்துக்கள் விரிகின்ற தாமரை மலர்ப் (பழனங்களும்) வயல்களும் - மருத நிலங்களும், (குற்றமற) நன்றாக - கடிகைப்புனல் - கடிகை என்னும் ஆற்றின் நீரும் சுற்றியுள்ள வளைந்துள்ள நல்ல **திருவக்கரை** என்னும் தலத்தில் பொருந்தி வீற்றிருக்கும் பெருமாளே!

(நற்பதம் அருள்வாயே)

## சிறுவை.

## 729.

**தே**வர் தலைவனாம் இந்திரன் (தனது) பொன்னுலகத்திற் குடியேறவும் நெருங்கி வந்த அசுரர்கள் உருமாறி இறக்கவும், தேவர்கள் மனத்தில் மகிழ்ச்சி அதிகமாகக் கொள்ளவும், அன்று காட்டின அந்த அருளோடு - அத்தகைய அருளோடு-

காளியுடன் ஆடின சங்கரன் மகிழ்ச்சி மிகக் கொள்ளவும் விநாயகரும் பார்வதியும் களிப்பு மிகக் கொள்ளவும்,

பூமியில் உள்ளோரும், முனிவர்களும், எட்டுத் திசைகளில் உள்ளவர்களும், இந்திரனும், பிரமனும், எதிர் நின்று காணவும்,

---

(180 ஆம் பக்கம் தொடர்ச்சி)

‡ கடிகை: ஒரு ஆறு: 'கொடுக்கூர் ஆறு' என வழங்குகின்றது கடிகை - 'வேகம்' எனவும் பொருள் கொள்ளலாம்.

X மகிழ்மீற அன்று வந்த அந்த அருள் போலவே இன்று மயிலுடனாடி (என்முன்) வரவேணும் எனமுடிக்க.

O மஞ்சிளன் - இந்திரன்.

மங்கையுட னரிதானு மின்பமுற மகிழ்கூற
*மைந்துமயி லுடனாடி வரவேணும்;

† புண்டரிக விழியாள அண்டர்மகள் மணவாள
புந்திநிறை யறிவாள வுயர்தோளா-
பொங்குகட லுடனாகம் விண்டுவரை யிகல்சாடு
‡ பொன்பரவு கதிர்வீசு வடிவேலா;

Xதண்டரள மணிமார்ப Oசெம்பொனெழில் செறிரூப
**தண்டமிழின் மிகுநேய முருகேசா-
சந்ததமு மடியார்கள் சிந்தையது குடியான
தண்சிறுவை தனில்மேவு பெருமாளே.(1)

---

*மைந்து - வலிமை

† புண்டரிக விழி - "முண்டக மலர்ந்ததன்ன (மூவிரு முகமும்) கண்ணும் - கந்த புரா 4-4-235.

‡ பொன் - தேவகுரு பிரகஸ்பதி பரவினது:-

(1) சூரனாதிய அசுரர்களின் வரலாற்றைப் பிரகஸ்பதி முருகவேளுக்கு அவர் கேட்டபோது எடுத்துரைத்து 'எல்லாம் தெரிந்த நின்முன் நான் இவ் வரலாற்றை உரைத்த பிழையைப் பொறுத்தருள வேண்டும்' எனக் கூறிப் பணிந்தனர். முருகவேளும் "கூறுக" என யாம் கேட்க நீ கூறினாய் - ஆதலின், பிழையொன்றும் இல்லை எனக் கூறிப் பிரகஸ்பதியைத் தேற்றினர். 'பொறுத்தி யென் குற்றம் என்று பொன்னடித் துணையைப் பொன்னோன்...அன்பிற் பூண்டு வணங்கினன் தொழுது போற்றி" "கதிர்வே லண்ணல் எம் முரை கொண்டு சொற்றாய் உறத்தகு பிழையில் யாதும் உன்னலை இருத்தி என்றான்" - (கந்த புரா - 2-43-138)

முருகன் குழந்தையாய் விளையாடின பொழுது தன்னை எதிர்த்த இந்திரனாதி தேவர்களை மாய்த்தனன் - இதை நாரதர் மூலம் அறிந்த தேவகுரு முருகவேளிடம் சென்று அவரைப் போற்றி இறந்துபட்ட தேவர்கள் உயிர் பெற்றெழுமாறு செய்தனர். "பொன்னவன்...வேண்டிட வான் மன்னவனாதியர் - அந்நிலை எழும்வகை அருள் செய்தானரோ" - கந்த புரா 1-14-78

X தரளமணி மார்பன் - "முத்தணியும் உரமும்"

- திருப்புகழ் 675.

O எழில் செறிரூப - "அந்தம் வெகுவான ரூபக்கார", "அழகான மேனி தங்கிய வேளே", "மற்றவர் ஒப்பில ரூபா". - திருப்புகழ் 41, 101, 838.

** தமிழின் நேய - "தமிழ்க்கு நல்ல தண்டமிழ் முருகன்"

-திருவாலவா, திருவிளை 44-26.

(அலர்மேல் மங்கை) இலக்குமியுடன் திருமாலும் இன்பத்துடன் தமது மகிழ்ச்சியை எடுத்து ஓதவும், வலிமை நிறைந்த மயிலுடன் ஆடி (என்முன்) வரவேணும்; (அல்லது மயிலுடன் என்னை நாடி - விரும்பி என்முன் வரவேணும்).

தாமரைமல ரொத்த கண்களை உடையவனே! தேவர் வளர்த்த மகள் - தேவசேனையின் மணவாளனே! அறிவு நிறைந்த ஞானமும் கொண்டவனே, உயர்ந்த புயங்களை உடையவனே!

பொங்கின கடலுடன், நாகம் விண்டு - எழுகிரிகள் பிளவுபட (வரை) கிரெளஞ்சகிரியின் (இகல்) வலிமையைச் சாடு - பாய்ந்தழித்த, பொன்னொளி பரப்பிச் சுடர் வீசும் கூரிய வேலனே! (அல்லது பொன் - தேவகுரு - பிரகஸ்பதி போற்றி நின்ற கதிர்வீசு வடிவேலனே! (அல்லது பொங்கு கடலுடன் வரை ஆகம் விண்டு - கிரெளஞ்சகிரியின் உடல் (விண்டு) விள்ள - உடைபட்டழிய, அந்த மலையின் இகல் - வலிமையைச் சாடின வேலா எனலுமாம்)

குளிர்ந்த முத்துமாலை அணிந்த அழகிய மார்பனே! செம்பொன்னின் அழகு செறிந்த உருவத்தனே! நல்ல தமிழில் மிகுந்த நேசம் கொண்டுள்ளவனே! முருகேசனே!

எப்போதும் அடியார்களின் மனதே இடமாகக் கொண்ட பெருமாளே! குளிர்ந்த **சிறுவை** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(மயிலுடனாடி வரவேணும்)

## 730. அருள் வேண்டுதல்

தானன தானன தானா தனாதன
தானன தானன தானா தனாதன
தானன தானன தானா தனாதன தனதான

சீதள வாரிஜ பாதா நமோநம
*நாரத கீதவி நோதா நமோநம
சேவல மாமயில் ப்ரீதா நமோநம மறைதேடுஞ்

சேகர மானப்ர தாபா நமோநம
ஆகம சாரசொ ரூபா நமோநம
தேவர்கள் சேனைம கீபா நமோநம கதிதோயப்;

பாதக †நீவுகு டாரா நமோநம
மாவசு ரேசக டோராநமோநம
‡பாரினி லேஜய வீராநமோநம மலைமாது-

பார்வதி யாள்தரு பாலாந மோநம
நாவல ஞானம னோலாந மோநம
பாலகு மாரசு வாமீந மோநம அருள்தாராய்;

போதக மாமுக னேரானசோதர
நீறணி வேணியர் நேயா ப்ர பாகர
பூமக ளார்மரு கேசா மகோததி யிகல்சூரா-

---

* நாரதகீத விநோதர் - முருகவேள்; முருகவேள் இசைப்ரியர் பாடல். 173. பக்கம் 400 கீழ்க்குறிப்பு X

† நீவு - அழிக்கும்.

‡ இது சம்பந்தராயப் புவியிலே சமணர்களை வென்று ஜயம் பெற்று வீரத்தைக் குறிக்கும்.

## 730.

குளிர்ந்த தாமரை போன்ற திருவடிகளை உடையவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; நாரத முநிவருடைய இசையில் (விநோதம்) மகிழ்ச்சி கொள்பவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன், கோழிக் கொடியை உடையவனே! சிறந்த மயில்மீது பிரியமுள்ளவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன், வேதங்கள் தேடுகின்ற

(சேகரமான) அழகான கீர்த்தியை உடையவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன், ஆகமங்களின் சாரமே சொரூபமாகக் கொண்டவனே! உன்னை வணங்குகின்றேன் உன்னை வணங்குகின்றேன், தேவர்களின் சேனைக்கு (மகீபனே) அரசனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (அடியார்கள்) நற்கதியை அடையும் பொருட்டு (அவர்களுடைய)

பாதகத்தைப்பிளந்து அழிக்கின்ற(குடார) கோடாலியே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; பெரிய அசுரர் தலைவர்கள் அஞ்சும்படியான (கடோரா) கொடுமை காட்ட வல்லவனே! உன்னை வணங்குகின்றேன்! வணங்குகின்றேன்; பூலோகத்தில் ஜயவீரனாய் விளங்குபவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; இமயமலைப் பெண்-

பார்வதிதேவி பெற்ற குழந்தையே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; வாக்கு வல்லமை உடையவனே! ஞான (மன - உலா) மனத்தில் உலாக் கொள்பவனே (உலவுகின்றவனே)! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; பால குமார சுவாமியே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; உனது திருவருளைத் தந்தருளுக.

(போதகம்) யானையின் அழகிய முகத்தைக் கொண்ட விநாயகருக்கு இளைய சகோதரனே! திருநீறு அணிந்த சடைப் பெருமான் சிவனுடைய அன்புக்கு உரியவனே! (அல்லது சடையர்களாம் முநிவர்களின் அன்பனே); ஒளிக்கு இடமானவனே (ஞான சூரியனே)! இலக்குமியின் மருகனே! ஈசனே! கடலைப் பகைத்து (அது சுவற வேல்விட்ட) சூரனே!

போதக மாமறை ஞானா தயாகர.
தேனவிழ் நீபந றாவா ருமார்பக
*பூரண மாமதி போலா றுமாமுக முருகேசா;

மாதவர் தேவர்க ளோடே† முராரியு
மாமலர் மீதுறை வேதா வுமேபுகழ்
‡மாநில மேழினு மேலா னநாயக வடிவேலா-

வானவ ரூரினும் வீறாகி வீறள
காபுரி வாழ்வினு மேலாக வேதிரு
வாழ்சிறு வாபுரி வாழ்வே சுராதிபர் பெருமாளே.(2)

## 731. திருவடியைப் பெற

தனன தான தனன தந்த, தனன தான தனன தந்த
தனன தான தனன தந்த தனதான

பிறவி யான சடமி றங்கி வழியி லாத துறைசெ றிந்து
பிணிக ளான துயரு ழன்று தடுமாறிப்-

பெருகு தீய வினையி னொந்து கதிக டோறு மலைபொ ருந்தி
பிடிப டாத ஜனன நம்பி யழியாதே;

நறைவி ழாத மலர்மு கந்த வரிய மோன வழிதி றந்த
நளின பாத மெனது சிந்தை யகலாதே

நரர்சு ராதி பரும்வ ணங்கு மினிய சேவை தனைவி ரும்பி
நலன தாக அடிய னென்று பெறுவேனோ;

---

* "முழுமதியன்ன ஆறுமுகங்களும்" - கந்த புரா - I-20-126 "மதிமா முகவா" - திருப்புகழ் 725.

† முராரி - பாடல் 522-பக்கம் - 196 கீழ்க்குறிப்பு.

‡ நிலம் ஏழு - பாடல் 157-பக்கம் 364-365 கீழ்க்குறிப்பு.

(போதக மாமறை) மாமறை போதக - சிறந்த வேதங்களை உபதேசிக்க வல்லவனே! ஞானனே! (தயைக்கு) கிருபைக்கு இருப்பிடமானவனே! தேன் சொட்டும் கடப்பமாலையின் நறுமணம் நிறைந்து வீசும் மார்பிடத்தை உடையவனே! அழகிய பூரண சந்திரன் போல விளங்கும் ஆறுமாமுகனே! முருகேசனே!

மாதவர் (தவமுநிவர்கள்), தேவர்கள், அவர்களுடன் (முராரி) முரன் என்னும் அசுரனைக் கொன்ற திருமால், சிறந்த தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமா - இவர்கள் யாவரும் புகழும் (நாயகனே!) பெரிய உலகுகள் ஏழினும் மேலான தலைவனாக விளங்குபவனே! கூரிய வேலனே!

தேவர்கள் ஊரினும் மேம்பட்டதாகி விளங்கி (அளகாபுரி)- குபேரன் திருநகர் அளகாபுரி வாழ்வினும் மேம்பட்ட சிறப்பினதாக இலக்குமி வாசஞ் செய்யும் **சிறுவாபுரி** என்னும் தலத்தில் வாழும் செல்வமே! தேவர் தலைவர்களுக்குப் பெருமாளே!

(அருள் தாராய்)

## 731.

**பி**றப்புக்கு ஏற்பட்ட உடலிற் புகுந்து, நல்வழியல்லாத வழிகளில் நெருங்கிப்போய், நோய் முதலிய துக்கங்களில் வேதனைப்பட்டுத் தடுமாற்றம் அடைந்து-

வளர்ந்து பெருகும் கெட்ட வினைகளின் பயனால் கஷ்டப்பட்டு, இங்ஙனம் - பிறப்புகள்தோறும் அலைச்சலை அடைந்து, (பிடிபடாத) (அதன் உண்மைத்) தன்மை புலப்படாத பிறப்பை விரும்பி அழிந்து போகாமல்-

தேன் நீங்காத மலர் நிரம்பக் கொண்டுள்ளதும், அருமையான மௌன வழியைத் திறந்துகாட்டின (உனது) தாமரை போன்ற திருவடி என் மனத்தை விட்டு நீங்காமல்-

மனிதரும், தேவர் தலைவர்களும் வணங்குகின்ற உனது இனிமையான தரிசனத்தை விரும்பி நன்மை பெறும்படியான பாக்கியத்தை அடியேன் என்று பெறுவேனோ!

*பொறிவ ழாத முநிவர் தங்கள் நெறிவ ழாத
பிலனு ழன்று
பொருநி சாச ரனைநி னைந்து வினைநாடிப்-

பொருவி லாம லருள்பு ரிந்து மயிலி னேறி
நொடியில் வந்து
புளக மேவ தமிழ்பு னைந்த முருகோனே;

† **சிறுவ ராகி யிருவ ரந்த** கரிப தாதி கொடுபொ
ருஞ்சொல்
சிலையி ராம னுடனெ திர்ந்து சமராடிச்-

செயம தான நகர மர்ந்த அளகை போல வளமி குந்த
**சிறுவை** மேவி வரமி குந்த பெருமாளே. (3)

## 732. இடர் அற

தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன
தான தந்தன தானன தானன தனதான

**வேலி** ரண்டெனு நீள்விழி மாதர்கள்
காத லின்பொருள் மேவின பாதகர்
வீணில் விண்டுள நாடிய ருமைகள் விலைகூறி-

---

* இங்கு கூறப்பட்ட சரித்திரம் இன்னதென்று நன்கு புலப்படவில்லை. ஆயினும் நக்கீரரின் வரலாறு ஒருவாறு பொருந்துகின்றது. நக்கீரரைக் குதிரை முகத்தைக் கொண்டிருந்த பெண் பூதத்தினின்றும் முருகவேள் காத்தனர் என்று அருணகிரியார் கூறுவர்.

-பாடல்கள் 91, 156-கீழ்க் குறிப்புக்களைப் பார்க்க.

(இங்கு பூதம் என்னாது 'நிசாசரன்' என வருகின்றது)

† ஸ்ரீராமருடைய புதல்வர்கள் லவன் - குசன் என்பவர்கள் ஸ்ரீராமரொடு பொருது ஜெயித்த ஸ்தானம் இந்தச் சிறுவாபுரி என்பது இத்தலத்து வரலாறு. சிறுவர்கள் அம்பெடுத்துச் செலுத்தி வெற்றி பெற்றதால் "சிறுவர் அம்பெடு" - சிறுவரம்பேடு (சின்னம்பேடு) என இத்தலத்தின் பெயர் வழங்குகின்றது.

(பொறி) ஐம்பொறிகளும் (வழாத) வழுவாத வண்ணம் - தவறான வழியிற் போகாதபடி காத்திருந்த (முநிவர்) நக்கீர முநிவர் (தங்கள்) தமது (நெறி) - நித்ய அநுட்டான நெறியை (வழாத) தவறுதல் இல்லாத வழியில் நின்று காத்த (குகையில் அகப்பட்டு எப்போதும் போல சிவத்யானத்திலேயே இருந்த) பிலன் - குகையில், (உழன்று) மன அலைச்சலுற்று, பொரு நிசாசரனை - (குகையில் அகப்பட்டவர்களைப்) பொருது அழிக்க நினைந்திருந்த அரக்கனை ராக்ஷசனை - நினைந்து, வினை நாடி அந்த அரக்கனிடமிருந்து பிழைக்கும் செயலை நாடினவரான நக்கீரருக்கு-

(பொரு இலாமல்) ஒப்பில்லாத வகையில் - (தனித்த அன்பு வழியில்) - அருள்புரிந்து - கிருபை கூர்ந்து, மயில்மேல் ஏறி ஒரு நொடிப்பொழுதில் வந்து (கற்சிறையினின்றும் அவரை மீட்டு) புளகம் மேவ - புளகாங்கிதம் கொள்ளுமாறு மிக்க மகிழ்ச்சி பூத்து (தமிழ் புனைந்த) திருமுருகாற்றுப்படை என்னும் தமிழ் மாலையை ஏற்றுப் புனைந்த - அணிந்துகொண்ட முருகனே!

சிறுவரான லவகுசர் என்னும் (ஸ்ரீராமரின் புதல்வர்கள்) இருவரும் அந்த யானைப்படை, காலாட்படை இவைகளைக் கொண்டு, போரிடையே சொல்லும் சொற்களுடன் வில் ஏந்திய ஸ்ரீராமருடன் எதிர்த்துப் போர்செய்து-

வெற்றிகொண்ட நகரமான **சிறுவை**, குபேரனது அளகாபுரி போல வளப்பம் மிக்கதான **சிறுவை** (சிறுவாபுரி)யில் வீற்றிருந்து வரங்களை நிரம்பத்தரும் பெருமாளே!

(நளினபாதம் என்று பெறுவேனோ)

# 732.

**வேல்** இரண்டு என்று கூறும்படியான நீண்ட விழிகளை உடைய மாதர்கள், ஆசையுடனே பொருளை விரும்பும் பாதகத்தினர், (வந்தவருடன்) வீணாக (விண்டு) பகைத்து உள்ளத்தை ஆராய்பவர், (சில சமயத்தில்) ஊமைகள் போல இருப்பவர்கள் - விலைபேசி

*வேளை யென்பதி லாவசை பேசியர்*
*வேசி யென்பவ ராமிசை மோகிகள்*
*மீது நெஞ்சழி யாசையி லேயுழல் சிறியேனும்;*
*மால யன்பர னாரிமை யோர்முனி*
*வோர் புரந்தர னாதிய ரேதொழ*
*மாத வம்பெறு தாளிணை யேதின மறவாதே-*
*வாழ்த ருஞ்சிவ போகந னூனெறி*
*யேவி ரும்பி*வி னாவு டனேதொழ*
*வாழ்வ ரந்தரு வாயடி யேனிடர்* **களைவாயே;**
*நீல சுந்தரி கோமளி யாமளி*
*† நாட கம்பயில் நாரணி பூரணி*
*நீடு ‡ பஞ்சவி Xசூலினி O மாலினி யுமைகாளி-*
*நேயர் பங்கெழு மாதவி யாள்சிவ*
*காம சுந்தரி யேதரு பாலக*
*நீர்பெ ருஞ்சடை யாரருள் தேசிக முருகேச;*
*ஆலில் நின்றுல கோர்நிலை யேபெற*
*மாநி லங்களெ லாநிலை யேதரு*
***ஆய னந்†† திரு வூரக மால்திரு*
*மருகோனே-*

---

* வினா - ஆராய்ச்சி அறிவு - பாடல் *149, 716* பார்க்க.

† 'நாடகம் பயில் நாரணி'; - 'பாடக மெல்லடிப் பாவையோடும் ....நாடகமாடு நம்பெருமான்' - சம்பந்தர் *1-7-1*.

‡ பஞ்சவி - பஞ்சமி - "கவுரி பஞ்சவி யாயீ மாயீ"

- திருப்புகழ் *1136*

X சூலினி "தூய சடைமுடிச் சூலினி" - திருமந்திரம் *1104*.

O மாலினி - அக்ஷரங்களின் தெய்வமாக இருப்பவள் - எனவும் ஆம் (அபிராமி அந்தாதி *77* உரை.)

** ஆயன் - திருமால்- "ஆயர் குலத்தினில் வந்து தோன்றிய அஞ்சன வண்ணன்" - பெரியாழ்வார் *1-7-11*.

†† திருவூரகமால்: சிறுவாபுரியில் பெருமாளுக்குத் 'திருவூரகப் பெருமாள்' என்று பெயர். திருவூரகம் என்பது காஞ்சீபுரத்தில் உள்ள 'உலகளந்த பெருமாள் கோயில்' - என்பர். திருமழிசை யாழ்வார், திருமங்கை யாழ்வார் - இவர்களாற் சொல்லப்பட்ட தலம். "குன்றிருந்த மாட நீடு பாடகத்தும் ஊரகத்தும் நின்றிருந்து வெஃகணைக் கிடந்ததென்ன நீர்மையே" - (திருமழிசை யாழ்வார் - திருச்சந்த விருத்தம் - *63*)"காமரு பூங்கச்சி ஊரகத்தாய்" - திருமங்கையாழ்வார் - திருநெடுந்தாண்டகம் *13*.

சமயம், நேரம் என்பது இல்லாமல் (வசைப் பேச்சுக்களை) பழிப்புச் சொற்களைப் பேசுபவர்கள், (வேசிகள்) பரத்தையர் எனப்படுவோர்களாவார், இசையில் ராகங்களில் (மோகிகள்) ஆசை கொள்பவர் – (ஆகிய விலைமாதர்) மீது மனம் கசிதலுற்று அழியும் ஆசையில் திரிகின்ற சிறியேனும் –

திருமால், பிரமா, சிவனார், தேவர், முநிவர்கள், இந்திரன் முதலானோர் தொழும்படியான மகா தவத்தைப் பெற்ற (உனது) இரண்டு திருவடிகளையே நாளும் மறவாமல் --

நல்வாழ்வைத் தரவல்ல சிவபோகத்தை விளக்கும் நல்ல நூல்கள் கூறிய வழியையே (நான்) விரும்பி, (வினாவுடனே) ஆராய்ச்சி அறிவுடன் உன்னைத் தொழுது வாழும் வரத்தைத் தருவாய், அடியேனுடைய வருத்தங்களை நீக்கி யருள்வாயே,

நீலநிற அழகி, (கோமளி) இளமை வாய்ந்தவள், (யாமளி) பச்சை நிறத்தை உடையவள், கூத்துக்கள் பல பயிலும் நாரணி, (பூரணி) நிறைந்தவள், சிறந்த (பஞ்சவி) –பஞ்சமி --ஐந்தாவது சக்தியாகிய அநுக்கிரக சக்தி, (சூலினி) திரிசூலத்தைத் தரித்தவள், (மாலினி) மாலையை அணிந்தவள், உமையவள், காளி.

அன்பர்கள் (அல்லது - தன் அன்புக்கு உரிய சிவன்) பக்கம் விளங்கி உதவும் (மாதவியாள்) (குருக்கத்திக்கொடி போன்றவள்) துர்க்கை., சிவகாமசுந்தரி - தந்த குழந்தையே! கங்கை நீர் தங்கும் பெருஞ் சடைப்பிரான் பெற்ற (தேசிக) குருமூர்த்தியே! முருகேசனே!

ஆலிலையி லிருந்தபடியே உலகத்தில் உள்ளவர்கள் நிலைபெற்று வாழவும், பெரிய உலகங்களெல்லாம் நிலை பெற்று விளங்கவும் காக்கின்ற (ஆயன்) இடையர் குலத்துத் திருமால், நம் நமக்கு உரிய (அல்லது அம் -- அழகிய) திருவூரகம் என்னும் தலத்தில் விளங்கும் திருமாலின் அழகிய மருகனே!

*ஆட கம்பயில் கோபுர மாமதி
லால யம்பல வீதியு மேநிறை
வான தென்சிறு வாபுரி மேவிய பெருமாளே.(4)

## திருவாமாத்தூர்.

(விழுப்புரம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 4-மைல். மூவர் தேவாரமும் பெற்றது, ஸ்தல புராணம் உண்டு.)

## 733. மாதர்மீதுள்ள மயக்கற

*தனதன தான தானன, தனதன தான தானன*
*தனதன தான தானன தனதான*

அடல்வடி வேல்கள் வாளிக ளவைவிட வோடல் நேர்படு
மயில்விழி யாலு மாலெனு மதவேழத்-

தளவிய கோடு போல்வினை யளவள வான கூர்முலை
யதின்முக மூடு மாடையி னழகாலுந்;

துடியிடை யாலும் வாலர்கள் துயர்வுற மாய மாயொரு
துணிவுட னூடு மாதர்கள் துணையாகத்-

தொழுதவர் பாத மோதியுன் வழிவழி யானெ னாவுயர்
துலை† யலை மாறு போலுயிர் சுழல்வேனோ;

அடவியி னூடு வேடர்க ளரிவையொ டாசை பேசியு
‡ மடிதொழு தாடு மாண்மையு முடையோனே-

---

* 'ஆடகமாடம் நெருங்கு கூடல்' - சம்பந்தர் I-7-1.

† அலைமாறு - (கடல்) அலையிற்பட்ட (மாறு) துரும்பு -
'பௌவத் தெவ்வத் தடந்திரையால் எற்றுண்டு'
- திருவாசகம் சதகம் - 27

‡ அடி தொழுதாடும் ஆண்மை - ஆண்மை - தமது கடமையைச் சீர்பெற நிறைவேற்றுதல். இறைவன் கடமை " தன் கடன் அடியேனையும் தாங்குதல்" - யான் எனது அற்ற அடியார்க்கு எளியனாதல் இறைவன் கடமை - பாடல் 199-பக்கம் 13, பாடல் 317 - பக்கம் 288 கீழ்க்குறிப்புக்களைப் பார்க்க.

பொன்போல விளங்கும் கோபுரம், பெரிய மதில், கோயில், பல வீதிகளும் நிறைந்துள்ள அழகிய **சிறுவாபுரியில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(அடியேன் இடர் களைவாயே)

# திருவாமாத்தூர்

## 733.

**வ**லிமை வாய்ந்த கூரிய வேல்கள், அம்புகள் இவைகளைக் காட்டிலும் (ஓடுதல்) ஓடிப்பாய்தல் அல்லது கலக்குதல் (நேர்படும்) நன்கு பயின்ற கூரிய கண்களாலும், (மால் எனும்) காம மயக்கம் எனப்பட்ட (மதவேழத்து) மதங்கொண்ட ஆனையின் - (அல்லது - 'மால்' எனத் திருமாலை அழைத்த மதவேழமாம் - கஜேந்திரனுடைய)

(அளவிய) இடத்துள்ள (கலந்துள்ள) தந்தம் போன்றதும், வினையின் அளவே அளவாகக் கொண்டதுமான (வினை அளந்து தோன்றியதான) மிக்கெழுந்ததான கொங்கையாலும், அதன் (முகம்) தோற்றத்தை மூடி மறைக்கும் ஆடையின் அழகாலும்

(துடி) உடுக்கை போன்ற இடையாலும், (வாலர்கள்) பாலிய வயதுள்ள ஆண் பிள்ளைகள் (துயர்வு) துயரம் அடைய, (மாயமாய்) மாயவித்தையுடனும் ஒப்பற்ற தைரியத்துடனும் (ஊடும்) பிணங்குகின்ற (மாதர்கள்) பொது மகளிர்களையே துணையாகக் கொண்டு -

(தொழுது) வணங்கி, (அவர் பாதம் ஓதி) அவர்தம் பாதங்களைப் புகழ்ந்து, (உன் வழி வழி யான் எனா) - உன்னுடைய பரம்பரை (மனிதன்) யான் என்று கூறி, (உயர் துலை) துலை (தொலைதூரம்) வெகுதூரம் - உயர் - உயர்ந்து எழுகின்ற (அல்லது துலை) ஏற்ற மரம்போல உயர்ந்து எழுகின்ற (அலை)- அலையிற்பட்ட, (மாறுபோல்) உலர்ந்த கொம்பு, (குச்சு - மிலாறு) - போல, உயிர் அலைச்சல் உறுவேனோ!

காட்டிலுள்ளே இருந்த வேடர்களின் பெண்ணாம் வள்ளியுடன் (உன்) காதலைத் தெரிவித்துப் பேசும் பேச்சையும் அவளுடைய திருவடியைத் தொழுது விளையாடும் ஆண்மைக் குணத்தையும் (அல்லது வாய்மையையும்) உடையவனே!

அழகிய தோளி ராறுடை அறுமுக வேளே னாவுனை
அறிவுட னோது மாதவர் பெருவாழ்வே;
விடை *யெறு மீசர் நேசமு மிகநினை வார்கள் தீவினை
யுகநெடி தோட மேலணை பவர்மூதூர்
†விரைசெறி தோகை மாதர்கள் விரகுட னாடு மாதையில்
விறல்மயில் மீது மேவிய பெருமாளே.(1)

## 734. திருவடியை விரும்ப

தந்த தத்தன தானாதன தந்த தத்தன தானாதன
தந்த தத்தன தானாதன தனதான

கண்க யற்பிணை மானோடுற வுண்டெனக்கழை தோளானது
நன்‡க மைக்கின மாமாமென முகையான
கஞ்ச மொத்தெழு கூர்மாமுலை குஞ்ச ரத்திரு கோடோடுற
விஞ்சு மைப்பொரு கார்கோதைகொ டுயர்Xகாலன்;
பெண்டனக்குள கோலாகல மின்றெடுத்திளை யோராவிகள்
மன்பி டிப்பது போல்நீள்வடி வுடைமாதர்
பின்பொ ழித்திடு மாமாயையி லன்பு வைத்தழியாதேயுறு
Oகிஞ்சி லத்தனை **தாள்பேணிட அருள்தாராய்;**

---

* எறும் - ஏறும்.

† "மாதர்கள் ஆடும் மாதை" - இக் கருத்தைப் 'பாலினேர் மொழி மங்கைமார் நடம் ஆடி யின்னிசை பாட நீள்பதி... ஆமாத்தூர்' என வருமிடத்தும் காண்க - (சம்பந்தர் 2-50-4) ‡ அமை - மூங்கில்

X மாதரைக் காலனுக்கு ஒப்பிட்டது:

"மாதரை மாய வருங்கூற்றம் என்றுன்னக், காதல தாகிய காமம் கழிந்திடும், சாதலும் இல்லை சதகோடி ஆண்டினும், சோதியினுள்ளே துரிசறுங் காலமே" - திருமந்திரம் 1953.

'பெண்ணோ அவளல்லள் பெண்ணுருவு கொண்டிருந்து
மண்ணோர்களை யெல்லாம் மாய்க்க வருங் கூற்றே'

-ராமாயணம் - உத்தரகாண்டம் - திக்கு விசயம் 177

O மாதர்மீது வைக்கும் ஆசையில் கிஞ்சித்தேனும் உன் தாளில் வைக்க அருள்புரிவாயாக - என்னும் இவ் வேண்டுகோள் -

'தத்தையங் கனையார் தங்கள்மேல் வைத்த தயாவை நூறாயிரங் கூறிட்(டு) அத்தில் அங்கொரு கூறு (உன்) கண் வைத்தவருக்(கு) அமருல களிக்கும் நின்பெருமை' எனவரும் திருவிசைப்பாவை (13-8) நினைவூட்டுகின்றது.

அழகிய தோள் பன்னிரண்டு உடைய ஆறுமுகவேளே என்று உன்னை ஞானத்துடன் ஓதுகின்ற மகாதவசிகளுக்குப் பெருஞ் செல்வமா யுள்ளவனே!

ரிஷப வாகனத்தில் ஏறும் சிவபிரான்மீது அன்பு மிகவும் உள்ளத்திற் கொண்டவர்கள் (சிவனடியார்கள்) (தமது) தீவினையானது (உக, நெடிது ஓட) சிதறுண்டு தூரத்தே விலகிஓட, (மேல்) தன்னிடத்தே (அணைபவர்) வந்து சேர்ந்து தரிசிப்பதான பழைய ஊராகிய (ஆமாத்தூர் என்னும் தலத்தில்)

நறுமணம் நிறைந்த மாதர்கள் (விரகுடன்) சாமர்த்தியத்துடன், (ஆடும்) நடனம் செய்யும் (மாதையில்) **ஆமாத்தூர்** என்னும் தலத்தில் - வீரம் வாய்ந்த மயில்மீது வீற்றிருக்கும் பெருமாளே!

(மாதர்கள் துணையாக - உயிர் சுழல்வேனோ)

## 734.

**கண்**ணானது கயல்மீன், பெண்மான், இவைகளுக்குச் சம்பந்தம் கொண்டது எனவும், கரும்பு போன்ற தோள் நல்ல மூங்கிலுக்கு ஒப்பாகும் ஒப்பாகும் எனவும், மொட்டான -

தாமரை போன்று வளர்ந்து மிக்கெழுந்துள்ள அழகிய கொங்கைகள் யானையின் இரண்டு தந்தங்களுக்கு ஒப்பாகப் பொருந்தியுள்ளன எனவும், நிரம்பி மேம்பட்டு (மை) அஞ்சனத்துக்கு (அல்லது இருளுக்கு) ஒப்பான கருமேகம் போன்றது கூந்தல் எனவும் - இவைகளைக் கொண்டு பெருமை வாய்ந்த யமனே -

'பெண்' என்னும் ஒரு உருவுக்கு உள்ள கோலாகலத்தை ஆடம்பரங்களை இன்று எடுத்து இளைஞர்களுடைய உயிர்களை (மன்) நன்றாகப் பிடிப்பதுபோல வந்துள்ள பெருமை வாய்ந்த அழகுள்ள மாதர்களின் -

(பின்பு) பிறகே செலவழியும் மகா மாயையில் (பெரு மோகத்தில்), அன்பை வைத்து (நான்) அழிந்து போகாமல், அந்த ஆசையில் உள்ள (கிஞ்சில் அத்தனை) சிறிய ஒரு அளவுக்கு (உள்ள ஆசையை) (உனது) திருத்தாள்களை விரும்ப உனது திருவருளைத் தந்தருளுக.

விண்ட னக்குற வானோனுடல் கண்ப டைத்தவன்
வேதாவொடு
விண்டு வித்தகன் வீழ்தாளினர் விடையேறி-

*வெந்த னத்துமை யாள்மேவிய சந்த னப்புய மாதீசுரர்
வெங்க யத்துரி யார்போர்வையர் மிகுவாழ்வே;

† தண்பு டைப்பொழில் சூழ்மாதையில் நண்பு
வைத்தருள் தாராதல
முங்கி ளைத்திட வானீள்திசை யொடுதாவித்-

தண்டரக் கர்கள் கோகோவென விண்டிடத்தட மாமீமிசை
சண்ட விக்ரம வேலேவிய பெருமாளே.(2)

## 735 அருள் பெற

தனதன தானத் தானன, தனதன தானத் தானன
தனதன தானத் தானன தனதான

கருமுகில் போல்மட் டாகிய அளகிகள் தேனிற் பாகொடு
கனியமு தூறித் தேறிய மொழிமாதர்-

கலவிகள் நேரொப் பாகிகள் மதனிகள் காமக்
க்ரோதிகள்
கனதன பாரக் காரிகள் செயலோடே;

பொருகயல் வாளைத் தாவிய விழியினர் சூறைக் காரிகள்
‡ பொருளள வாசைப் பாடிகள் புவிமீதே-

---

* வெம் - விருப்பம்.

† திரு ஆமாத்தூரிற் சோலைகள்:

"அம்மா மலர்ச்சோலை ஆமாத்தூர்"- சம்பந்தர் 2-44-2.

‡ பொருளளவாசை காட்டுவர் பொதுமகளிர் என்பது:- 'கைக் காசுக்கள வருள்பவர்' 'காசள வுறவாடி' - திருப்புகழ் 156, 329.

விண்ணுலகுக்கு (அல்லது விண்ணவர்க்கு) உறவு பூண்டவனும், உடலெலாம் கண் கொண்டவனுமான இந்திரன், (வேதா) பிரமன், (விண்டு) திருமால் என்னும் (வித்தகன்) பேரறிவாளன் - இவர்கள் விழுந்து வணங்கும் திருவடியை உடையவர், ரிஷப வாகனத்தில் ஏறுபவர் -

விருப்பத்துக்கு இடமான (தனத்து) கொங்கையை உடைய உமையாள் விரும்பி அணையும் சந்தனம் பூசின புயங்களை உடைய (மாதீசுரர்) அர்த்த நாரீசுரர் அல்லது ஆமாத்தூர் ஈசர், கொடிய யானையின் உரியையே நிரம்பின போர்வையாகக் கொண்டவர் - ஆகிய சிவபிரானது - பெருஞ் செல்வமே!

குளிர்ந்த பக்கங்களில் உள்ள சோலைகளாற் சூழப்பட்ட திரு **ஆமாத்தூரில்** பிரியம் வைத்துத் திருவருளால் (தாராதலம்) தராதலமும் (உலகும்) கிளைத்திட - செழிப்புற்று ஓங்க, வானிலும், பெரிய திசைகளிலும் பரந்து நிறைந்து,

(தண்டு) (யாவரையும்) வருத்தின அரக்கர்கள் கோகோ என்று அலறி (விண்டிட) இரிந்து ஓடத், (தட மா மிசை) - பெரிய மயில் மீதேறிக், கோபமும் பராக்ரமும் கொண்ட வேலாயுதத்தைச் செலுத்தின பெருமாளே!

(தாள் பேணிட அருள் தாராய்)

## 735.

**க**ரிய மேகம் போன்று, (மட்டு) வாசனை கொண்டுள்ளதாகிய கூந்தலை உடையவர்கள், தேனில் வெல்லத்துடன் பழம் அமுதம் இவைகள் ஊறித் தெளிந்தது போன்ற பேச்சுக்களை உடைய மாதர்கள் -

(கலவிகள்) புணர்ச்சியையும் தருதற்கு நேராக ஏற்புடையவர்கள், (மதனிகள்) செருக்கு உடையவர்கள், காமமும் (குரோதமும்) கோபமும் கொண்டவர்கள், (கனம்) (வட்டமான) கொங்கைப் பாரத்தை உடையவர்கள், தொழில் முயற்சியுடன்

சண்டை செய்யும் கயல் மீனையும், வாளை மீனையும் கடக்கவல்ல கண்களை உடையவர்கள், கொள்ளைக் காரிகள், (தங்களுக்குக் கிடைத்த) பொருள் எவ்வளவோ அவ்வளவுக்கே தங்கள் ஆசையைச் செலுத்துபவர்கள் - பூமியில்

பொதுவிகள் போகப் பாவிகள் வசமழி வேனுக் கோரருள்
புரிவது தானெப் போதது புகல்வாயே;
தருவடு தீரச் சூரர்கள் அவர்கிளை மாளத் தூளெழ
சமனிலை யேறப் பாறொடு கொடிவீழத்-
தனதன தானத் தானன எனஇசை பாடிப் பேய்பல
தசையுண வேல்விட் டேவிய தனிவீரா;
அரிதிரு மால்சக் ராயுத னவனிளை யாள் *முத்
தார் நகை
அழகுடை யாள்மெய்ப் பாலுமை யருள்பாலா-
† அரவொடு பூளைத் தார்மதி அறுகொடு வேணிச் சூடிய
‡ அழகர்தென் Xமாதைக் கேயுறை
பெருமாளே. (3)

## 736. தவநெறி யுற

தான தனதன தனதன தனதன
தான தனதன தனதன தனதன
தான தனதன தனதன தனதன தனதான

கால முகிலென நினைவுகொ டுருவிலி
காதி யமர்பொரு கணையென வடுவகிர்
காணு மிதுவென இளைஞர்கள் Oவிதவிடு கயலாலுங்-

---

* "முத்தாம்பிகை யம்மை" - திருவாமாத்தூரில் தேவியார் திருநாமம், இந்த அம்மை மிக்க சக்தி வாய்ந்தவள், "இந்த முத்தம்மாள் என்னைத் துரத்திக் கொத்துவாளோ" எனக் கூறித் தன் முன்னிலையிற் பொய் சொன்ன ஒருவனைப் பாம்பாக வெருட்டித் துரத்திக் கொத்தின தேவி. "முத்தை வென்ற முறுவலாள் உமை பங்கன் ஆமாத்தூர் அம்மானே". - சம்பந்தர் - 2-50-10.

† சிவன் அரவு பூளை அணிதல்:
'விளவு சிறுபூளை .... விட அரவு சூடு. இறைவர்' (திருப்புகழ் 273)

‡ ஆமாத்தூர் உறை சிவன் - அழகர்
"அழகியரே ஆமாத்தூர் ஐயனாரே"
"ஆமாத்தூர் அழகனைச் சிந்தியாதவர் தீவினையாளரே"
- அப்பர் 6-9, 5-44-2

X மாதை - திரு ஆமாத்தூர் -
'பாதி கொண்டதும் மாதையே பணிகின்றேன் மிகு மாதையே" சம்பந்தர் 3-116-2
"வண்ண மதிமுடி நாயகரே மாதை யழகிய நாயகரே"
- திரு ஆமாத்தூர்க் கலம்பகம் 49.

O விதவிடல் - விசேடித்துரைத்தல்.

பொதுமகளிராய்க் காலம் கழிப்பவர்கள், போகம் - காம இன்பத்தைத் தரும் பாவிகள், ஆகிய இவர்கள் பால் வசம் அழிகின்ற எனக்கு, ஒப்பற்ற உனது திருவருளைப் புரிவதுதான் எப்போது - அதைச் சொல்லி யருளுக.

(தரு) கற்பக விருக்ஷங்களை (பொன்னுலகை) (அடு) அழித்த தைரியத்தை உடைய அசுர சூரர்கள், அவர்களின் சுற்றத்தார் - ஆக யாவரும் மாண்டு பொடியெழ, யமனுடைய (நிலை) கொலைத்தொழில் (ஏற) பெருக, பருந்துகளுடன் காக்கைகள் (வீழ) விரும்பி வந்து சேரவும் -

தனதன தானத் தானன என்று இசை பாடிப் பேய்கள் பலவகைப்பட்ட மாமிசங்களை உண்ணும்படியும் வேலாயுதத்தை விட்டனுப்பின ஒப்பற்ற வீரனே!

ஹரி, திருமால், சக்ராயுதத்தை உடையவன் - (எனப்படும் பெருமானுக்குத்) தங்கை, முத்தார்நகை அம்மை எனும் பெயருடைய அழகி, (சிவனுடைய) மெய்யில் (உடலில்) (பால்) ஒரு பாகத்தில் (பாதியில்) உள்ள (அல்லது சத்திய குணம் கொண்ட) உமாதேவி அருளிய குழந்தையே!

பாம்பையும், பூளை என்கின்ற பூவால் ஆகிய மாலையையும், நிலவையும், அறுகுடன் சடையிற் சூடியுள்ள அழகருடைய அழகிய **திருவாமாத்தூரில்** வீற்றிருக்கின்ற பெருமாளே!

(அருள் புரிவதுதான் எப்போது புகல்வாயே)

# 736.

**உ**ரிய காலத்திற் பெய்த மழையென்று நினைவுகொண்டு- (அத்தகைய மழையைக் கண்டால் வரும் மகிழ்ச்சிபோல் மகிழ்ச்சி பூண்டு), (உருவிலி) உருவில்லாதவனான மன்மதன் கொல்வதற்குப் போர் புரிந்துவிட்ட அம்பு என்றும், மாவடுவின் வகிர் பாருங்கள் இது என்றும், இளைஞர்கள் விசேடித்து உரைக்கும் கயல் மீன்போன்ற கண்களாலும் -

*கான மமர்குழ லரிவையர் சிலுகொடு*
*காசி னளவொரு தலையணு மனதினர்*
*காம மிவர்சில கபடிகள் படிறுசொல் கலையாலுஞ்*
*சால மயல்கொடு புளகித கனதன*
*பார முறவண முருகவிழ் மலரணை*
**சாயல் தனின்மிகு கலவியி லழிவுறும் அடியேனைச்-*
*சாதி குலமுறு படியினின் முழுகிய*
*தாழ்வ தறஇடை தருவன வெளியுயர்*
*தாள தடைவது* **தவமிக நினைவது தருவாயே;**
*வேலை தனில்விழி துயில்பவ னரவணை*
*வேயி னிசையது நிரைதனி லருள்பவன்*
*வீர † துரகத ‡ நரபதி வனிதையர் கரமீதே-*
*X வேறு வடிவுகொ டுறிவெணெய் தயிரது*
*வேடை கெடவமு தருளிய பொழுதினில்*
*O வீசு கயிறுட னடிபடு சிறியவ னதிகோப*

---

* *சாயல் - துயிலிடம் - (பிங்கலம்)*

† துரகதம் - குதிரை - கற்கி.

கற்கி அவதாரம்: திருமாலின் தசாவதாரங்களில் இனி நிகழும் அவதாரம்; திருமால் குதிரை உருவாய் வந்து உலகில் நேர்மையை நிலைநிறுத்துவர்.

‡ நரன் - அருச்சுனன் "ஞாலமுண்டவனுக் குயிரெனச் சிறந்தோன், நரனெனு நாமமும் படைத்தோன் - பாரத அருச்சுனன் தவம் - 75 பதி - குரு - பிங்கலம்

X வேறுவடிவு: - தொட்டிற் குழந்தையா யிருந்த போதிலும் உறி எட்டும்படியான அளவுக்குக் கையை நீட்டி வெண்ணெயைத் திருடி உண்ட வடிவினர் -

'நாரார் உறி யேற்றி நன்கமைய வைத்ததனை**
தாரார் தடந்தோள்கள் உள்ளளவும் கைநீட்டி
ஆராத வெண்ணெய் விழுங்கி - ஓராதவன்போல்
கிடந்தானை"- இயற்பா சிறிய திருமடல் 31.

O *'அளையது திருடியடிபடு சிறியவன் நெடியவன்'* திருப்புகழ் 132; கோகுலத்தில் உள்ள இடையர் மனைகளிலெல்லாம் சென்று பால் தயிர், வெண்ணெய் இவைகளைத்திருடி உண்ண, இடைச்சிகள் முறையிட, யசோதை கண்ணனை வயிற்றில் கயிற்றினாற் கட்டி உரலொடு பிணித்து வைத்தாள் - என்பது வரலாறு. - திருப்புகழ் 231-பக்கம் 78 கீழ்க்குறிப்பு.

(கானம்) அமர் குழல் - காடுபோன்ற கூந்தலை (அல்லது வாசனை பொருந்திய கூந்தலை) உடைய மாதர்கள், (சிலுகொடு) சண்டைக் கூச்சலுடன், (தாம்பெற்ற) காசின் அளவு - பொருள் அளவே, ஒருதலை அ(ண்)ணும் மனதினராய் - ஒருதலைக் காமம் பொருந்திய மனத்தினராய் - காமம் (இவர்) கொண்ட சில கபட நெஞ்சத்தினராய் (படிறு) வஞ்சனைப் பேச்சு பேசும் சாத்திரங்களாலும் -

மிக்க மோகம் கொண்டு புளகாங்கிதம் பூண்ட கனத்த கொங்கைப் பாரம் பொருந்த, அழகிய, வாசனை வீசுகின்ற மலர்ப்படுக்கை உள்ள (சாயல்தனில்) துயிலிடத்தே மிகுந்த புணர்ச்சியில் அழிவுறும் அடியேனை -

சாதி, குலம் என்கின்ற இவையுள்ள (படியினில்) இப் பூமியில் (முழுகிய) வந்து உதித்து முற்றும் அனுபவிக்கின்ற சிறுமை நீங்க, (இடை தருவன) வழி தந்து உதவுகின்ற - பராகாச வெளியில் உள்ள உனது (தாளது அடைவது) திருவடியை அடைவதையும், தவநெறியை மிகவும் நினைப்பதையும், தந்து உதவுக.

(வேலைதனில் அரவணை விழி துயில்பவன்) கடலில் ஆதிசேடனாம் பாம்பணையில் கண் துயில்பவன், புல்லாங்குழலின் இசை கொண்டு பசுக் கூட்டங்களுக்கு அருள் புரிபவன், (பார்த்த சாரதியாய்) வீரமுள்ள குதிரைகளைச் செலுத்தின கண்ணபிரான் (நரபதி) - அருச்சுனனுக்குப் (பதி) குரு - அல்லது - வீரமுள்ள துரகதம் - குதிரை கற்கி அவதாரம் கொள்ளும் அரசு, மாதர்களின் கையால்

வேறே உருவம் கொண்டு (கள்ள வேடம் பூண்டு) உறியில் இருந்த வெண்ணெய், தயிர், இவைகளை உண்ணும் (வேடை) வேட்கை - தாகம் தீர அமுதைப் பங்கிட்டு அருளின சமயத்தில், எறியப்பட்ட கயிற்றால் அல்லது கரமீதே வீசுகயிறு - கையினால் வீசப்பட்ட கயிற்றினால் அடிபட்ட சிறியவன் மிக்க கோபம் கொண்டிருந்த

*வாலி யுடனெழு மரமற நிசிசரன்
வாகு முடியொரு பதுகர மிருபது
மாள†வொருசரம் விடுமொரு கரியவன் மருகோனே-
வாச முறுமலர் விசிறிய பரிமள
**மாதை நகர்**தனி லுறையுமொ ரறுமுக
வானி லடியவ ரிடர்கெட அருளிய
பெருமாளே (4)

## தச்சூர்.

## (ஆண்டார் குப்பம்.)

*("தச்சூர் வடக்காகும் மார்க்கத்தில்" உள்ளது. இது ஆண்டார் குப்பம் என்னும் பிரபல சுப்ரமண்ய ஸ்தலம். பொன்னேரி ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் உள்ளது: ஆரணி, கள்ளக்குறிச்சி, திட்டக்குடி ஆகிய சப்டிஸ்டிரிக்டுக்களிலும், புதுக்கோட்டைக்குச் சமீபத்திலும், "தச்சூர்" எனப் பெயரிய கிராமங்கள் இருக்கின்றன.)*

## 737. அருள் வேண்டுதல்

தத்தா தனத்தான தாத்தத் தனந்த
தத்தா தனத்தான தாத்தத் தனந்த
தத்தா தனத்தான தாத்தத் தனந்த தனதான

அச்சா யிறுக்காணி காட்டிக் கடைந்த
செப்பார் முலைக்கோடு நீட்டிச் சரங்க
ளைப்போல் விழிக்கூர்மை நோக்கிக் குழைந்து உறவாடி
அத்தா னெனக்காசை கூட்டித் தயங்க
வைத்தா யெனப்பேசி ‡மூக்கைச் சொறிந்து
X அக்கா லொருக்கால மேக்கற் றிருந்தி
ரிலையாசை;

வைச்சா யெடுப்பான பேச்சுக் கிடங்க
ளொப்பா ருனக்கீடு பார்க்கிற் கடம்பன்
மட்டோ எனப்பாரின் மூர்க்கத் தனங்க ளதனாலே

---

* வாலி - மராமரம் - வீழ்த்தியது - திருப்புகழ் 231-பக்கம் 78 கீழ்க்குறிப்பு.

† ஒரு சரம் விட்டது - பாடல் 452- பக்கம் 6 கீழ்க்குறிப்பு.

‡ மூக்கைச் சொறிதல் - காரியம் நிறைவேற வேண்டி ஒருவருடைய மூக்கைச் சொறிந்து தனது வேண்டுகோளைத் தெரிவித்தல், தனது எளிமையைக் காட்டுதல்.

X " அன்று வந்தொரு நாள் நீர் போனீர் பின்பு கண்டறியோம் நாம்" - என்பது போன்ற தந்திரப்பேச்சு - திருப்புகழ் 46.

வாலியுடன் ஏழு மராமரங்களும் அற்று விழவும், அரக்கன் ராவணனுடைய அழகிய தலை ஒருபத்தும், கைகள் இருபதும் அழியும்படியும் ஒரு அம்பை விட்ட ஒப்பற்ற கரியவனும் ஆன திருமாலின் மருகனே!

நறுமணம் உள்ள மலர்கள் வீசின வாசனையைக் கொண்ட திரு ஆமாத்தூர் என்னும் நகரில் வீற்றிருக்கும் ஒப்பற்ற அறுமுகனே! விண்ணுலகில் இருந்த அடியார்களின் துன்பம் நீங்க அருளின பெருமாளே!

(தவமிக நினைவது தருவாயே)

## தச்சூர்

## 737.

(அச்சாய்) வலிமை உடையதாய், இறுக்கு (அழுந்தப் பதிந்துள்ள) ஆணி காட்டி - இரும்பாணி போன்றும் கடைந்தெடுக்கப்பட்ட செப்புக்குடம் போன்றும் உள்ள சிமிழ்போன்ற கொங்கையாம் மலையை முன் காட்டியும், அம்புகள் போன்ற கண்களால் கூர்மையுடன் - நுண்மையாகப் பார்த்தும், (குழைந்து) மனம் நெகிழ்ச்சி காட்டி உறவாடியும் -

அத்தான் என்று அழைத்து, ஆசையும் கலந்து, (தயங்க வைத்தாய் எனப் பேசி) நீ என்னை வாடும்படி வைத்து விட்டாய் என்று பேசி, (மூக்கைச் சொறிந்து) - (வந்தவருடைய) மூக்கை (ஆசையுடன்) சொறிந்து, அந்தக் காலத்தில் (முன்பு) ஒரு காலத்தில் (ஏக்கற்று)- ஆசையால் விரும்பி எம்மிடம் வந்திருந்தாய், (ஆனால்) இப்போது (இலையாசை) ஆசை எம்மீது இல்லை -

வைச்சாய் எடுப்பான பேச்சுக் கிடங்கள் - (ஆகையால்) (எடுப்பான பேச்சுக்கு இடங்கள் வைச்சாய்) நிந்தையான பேச்சுக்கு நீ இடம் தந்துவிட்டாய் (ஒப்பார் உனக்கீடு பார்க்கிற் கடம்பன் மட்டோ) - பார்க்கில் - யோசித்துப் பார்க்கில், உனக்கு ஒப்பு - ஈடு- உனக்கு ஒப்பானவர்கள், ஈடானவர்கள்- உன்னைப் போலத் தகுதியுள்ளவர்கள் யார் இருக்கிறார்கள், கடம்பன் - முருகன் முதலாக - (முருகன் முதலாக உனக்கு ஒப்பார் யாரும் இல்லை) என்று கூறிப், (பாரில்) இவ்வுலகில் மூர்க்கத்தனம் கொண்ட செய்கைகளாலே -

மைப்பா கெனக்கூறி வீட்டிற் கொணர்ந்து
புற்பா யலிற்காலம் வீற்றுக் கலந்து
வைப்பார் தமக்காசை யாற்பித் தளைந்து
திரிவேனோ;

எச்சாய் மருட்பாடு மேற்பட் டிருந்த
பிச்சா சருக்கோதி *கோட்டைக் கிலங்க
மிக்கா நினைப்போர்கள் †வீக்கிற் பொருந்தி
நிலையாயே

‡எட்டா மெழுத்தேழை யேற்குப் பகர்ந்த
முத்தா வலுப்பான போர்க்குட் டொடங்கி
Xயெக்காலு மக்காத ○சூர்க்கொத் தரிந்த
சினவேலா!

தச்சா! மயிற்சேவ லாக்கிப் பிளந்த
சித்தா! குறப்பாவை தாட்குட் படிந்து
சக்காகி யப்பேடை யாட்குப் புகுந்து மணமாகித்-

---

***கோட்டைக் கிலங்க மிக்க நினைப்பார்கள் வீக்கிற்பொருந்தி-**
"சிறையிடல்போற் சுடர்மனக் குகையுள் ஏகம்பத்
தோமெனும் பொருளை அடக்கி ஆனந்தம் உறுநர்"
(காஞ்சிப் புராணம்)

† **வீக்கில் பொருந்தி** - "பத்திவலையிற் படுவோன் காண்க"
(திருவாசகம் 3-42)

"சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந் தருளுவ தினியே"
(திருவாசகம் 37)

‡ எட்டாம் எழுத்து - தமிழில் "அ" என்னும் எழுத்து; இது சிவத்தைக் குறிக்கும்; ஏனைய விவரங்களைப் பாடல் 453 பக்கம் 8 கீழ்க்குறிப்பிற் பார்க்க.

இந்த அடி அருணகிரியாரின் வரலாற்றைக் குறிக்கும்.

X எக்காலு மக்காத சூர்க்கொத்து அரிந்த சினவேலா! தச்சா! இங்கு முருகவேளை ஒரு தச்சனுக்கு ஒப்பிட்டார். முருகவேள் என்னும் தச்சன் மக்கிப்போய்க் கெட்டுப்போகாத (அழியா வரம்பெற்ற) சூரன் என்னும் மாமரத்தை வேலால் அரிந்து அந்த மரத்துண்டுகளைக் கொண்டு மயில், சேவல் என்னும் உருவங்களை ஆக்கினன் (இது சூர்மாவை வேலால் அழித்து, அவன் மயில் சேவலாய் வர - சூரனாம் மயிலைத் தமக்கு வாகனமாகவும், சேவலைக் கொடியாகவும் ஏற்றதைக் குறிக்கும்.) இந்த அருமைச் செயலைச் செய்ததனால் முருகனை "மயில் சேவலாக்கிப் பிளந்த சித்தா" என்றார், சித்த மூர்த்திகளே இத்தகைய அற்புதச் செயல்களைச் செய்வார்களாதலின், இந்தத் திருவிளையாடலை

(மைப்பாகு)- கரிய வெல்லக்கட்டி போல இனிக்கப் பேசித் தமது வீட்டுக்கு அழைத்துக் கொண்டுபோய், கோரைப்புல் பாயில் தக்க சமயத்தில் (வீற்றுக் கலந்து வைப்பார் தனித்துக் கலக்கும் (பொதுமகளிர்) தங்கள்மேல் ஆசை பூண்ட காரணத்தால் (பித்து) பைத்தியம் நிலை கலப்புண்டு திரிவேனோ!

(எச்சாய்) உயர்ந்த பொருளாய், அல்லது எஞ்சி நிற்கும் பொருளாய் - எஞ்சி நிற்பவராய், (மருட்பாடு மேற்பட்டிருந்த) மருள் (மயக்கம்) கடந்தவராய் இருந்த, பிச்சு ஆசருக்கு - பித்து என்னும் குற்ற முள்ளவருக்கு (பித்தராம் சிவபிரானுக்கு) ஓதி -உபதேசித்தவனே! கோட்டைக்கு இலங்க - மதிலரண் கொண்ட கோட்டையிற் சிறையிட்டது போல (மனமெனும் கோட்டையில்) விளங்கும்படி அதிகமாக - மிகவும் நன்றாய்த் தியானிப்பவர்களின் (வீக்கில்) பக்தி என்னும் கட்டிலே (பொருந்தி) அகப்பட்டு நிலைப்பவன் அன்றா நீ! (நிலைப்பவன் என்றபடி)

(எட்டாம் எழுத்து) எட்டாம் எழுத்தை ஏழையேனுக்கு உபதேசித்த முத்தனே (முத்திக்கு வித்தே)! பலமான போரில் தலையிட்டு (போரைத் தொடங்கி), எப்போதும் (மக்கிப் போகாத) அழியாத சூரனாம் மாமரத்தையும் அவனுடைய குடும்பத்தையும் அரிந்து தள்ளின கோபம் கொண்ட வேலாயுதனே!

தச்சனே, (மாமரத்தினின்றும்) மயில், சேவல் வரும்படி அதனைப் பிளந்த சித்த மூர்த்தியே! குறப்பாவை வள்ளியின் தாளுக்குள் படிந்து வணங்கி, அவளுக்குச் (சக்காகி) கண்போல இனியனாகி, அந்தப் பெண்ணை அடையும் பொருட்டு அவளிருக்கும் இடத்திற்புகுந்து சென்று, அவளை மணந்து -

---

(204-ம் பக்கத் தொடர்ச்சி)
"முருகப்பாசாரி" என்னும் தலைப்பில் யான் எழுதின கட்டுரையைக் காண்க.... (அமிர்தவசனி அக்டோபர்... நவம்பர் 1952-மலர் 4 இதழ் 7)

O "சூர் அரிந்த சினவேலா" ..... முருகன் சீற்றம் - 'வெஞ்சூர் தடிந்த அஞ்சுவரு சீற்றத்து முருகவேள்" ... பெருங்கதை-I-42-230.

தப்பாம லிப்பூர்வ மேற்குத் தரங்கள்
தெற்காகு மிப்பாரில் கீர்த்திக் கிசைந்த
*தச்சூர் வடக்காகு மார்க்கத் தமர்ந்த
பெருமாளே.(1)

## திருக்கோவலூர்.

(ரெயில்வே ஸ்டேஷன். தென்னாற்காடு ஜில்லாவிலுள்ளது. அஷ்ட வீரத் தலங்களுள் ஒன்று. அந்தகாசுரனைச் சம்ஹரித்த ஸ்தலம். திருஞானசம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல்கள் பெற்றது. ஸ்தல புராணம் உண்டு. 707. 708 ஆம் பாடல்களும், பாட வேற்றுமையின்படி இத் தலத்துக்கு உரியனவாம்.)

## 738. மாதர்மீது மயக்கு அற

*தான தானன தானன, தான தானன தானன*
*தான தானன தானன தனதான*

பாவ நாரிகள் மாமட மாதர் வீணிக ளாணவ
பாவை யாரிள நீரன முலையாலும்-

பார்வை யாமிகு கூரயி லாலு மாமணி யார் குழை
பார காரன வார்குழ லதனாலுஞ்;

சாவ தார விதாரமு தார்த ராவித ழாலித
சாத மூரலி தாமதி முகமாலுஞ்-

சார்வ தாவடி யேனிடர் வீற மாலறி வேமிகு
சார மாயதி லேயுற லொழிவேனோ;

ஆவ ஆர்வன நான்மறை யாதி மூல பராவரி
யாதி காணரி தாகிய பரமேச-

ஆதி யாரருள் மாமுரு கேச மால் † மரு கேசுர
னாதி தேவர்க ளியாவர்கள் பணிபாத;

---

*பொன்னேரி தாலூகா, ஜமீன் கிராமம் தச்சூருக்கு வடக்கில் "ஆண்டார் குப்பம்" என்னும் சுப்பிரமண்ய ஸ்தலம் இருக்கின்றது.

† மருகேசுர அனாதி எனப் பிரிக்க.)

(தவறுதலின்றி) எப்போதும் இந்த கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு எனும் நாலு திசைகள் கொண்ட இந்தப் பூமியில் பிரபலமான பேருடன் விளங்கும் **தச்சூர்** என்னும் ஊர் வடக்கே அமைந்துள்ள (மார்க்கத்து) வழியில் - **ஆண்டார் குப்பம்** என இப்போது வழங்கும் ஸ்தலத்தில் - வீற்றிருந்தருளும் பெருமாளே!

*(பித்தளைந்து திரிவேனோ)*

## திருக்கோவலூர்

## 738.

**பா**வச்செயல் செய்கின்ற மாதர்கள், அழகும் மேன்மையும் உள்ள மாதர்கள், வீண் பொழுது போக்குபவர்கள், (ஆணவம்) செருக்கு உடைய (பாவையார்) மாதர்கள், இளநீர்போன்ற கொங்கையாலும்,

கண் ஆகிய மிக்க கூர்மையான வேலாலும், சிறந்த ரத்னம் நிறைந்த குழையாலும், பாரமான, மேகத்துக்கு நிகரான நீண்ட கூந்தலாலும்,

(சாவது) கொல்லுங்குணம், (ஆர) நிறைந்துள்ளதும், விதாரம் - செவ்விய இலவு போன்றதும் ஆன அமுது ஆர்தரா இதழால் - அமுது ஆர்தரு இதழால் - அமுது நிறைந்துள்ள வாயிதழாலும், (இத சாத மூரல்) இதம் - இனிமை, சாத (ஜ்யாத - தோன்றுவதாகும், (மூரல்) புன்சிரிப்பாலும், (இதாமதி) இதம் மதி முகமாலும் - இனிமை ஊட்டும் நிலவு போன்ற முகத்தாலும் -

(சார்வதா) சர்வதா - எப்பொழுதும், அடியேனுடைய துன்பங்கள் (வீற) (மிக) அதிகமாக, (மால் அறிவே) காம மயக்கப் புத்தியே அதிக இனிமை தருவதாய் - அத்தகைய புத்தியின் வழியிலே பொருந்து தலை விலக்கேனோ!

(ஆவ-) ஆகவேண்டியனவற்றை, (ஆர்வன) நிரம்பக் கூறும் நான்குமறைகள் (வேதங்களின்) முதல்வனும், மூலப் பரமனும், (அரி ஆதி) திருமால் முதலான தேவர்களும் காண்பதற்கு அரியவருமான பரமேசருமாகிய -

ஆதிமூர்த்தியார் பெற்ற அழகிய முருகேசனே! திருமாலின் (மருகேசுர) மருகேசனே! அனாதி மூர்த்தியே! (ஆதி - தொடக்கம் இல்லாதவனே)! தேவர்கள் யாவரும் பணிகின்ற பாதனே!

*கோவ தாமறை யோர்மறை யோது மோதம் விழாவொலி
கோடி யாகம மாவொலி மிகவீறும்-
கோவை மாநகர் மேவிய வீர வேலயி லாயுத
கோதை யானையி னோடமர் பெருமாளே.(1)

## தேவனூர்.

(இது தென்னாற்காடு ஜில்லாவிலுள்ள செஞ்சிக்கு வடகிழக்கு 5மைல். திருக்கோவலூருக்கு 2-மைலிலும் செய்யூர், கள்ளக்குறிச்சி, ஜயங்கொண்ட சோழபுரம் ஆகிய சப் டிஸ்டிரிக்ட்டுக்களிலும், 'தேவனூர்' என்னும் கிராமங்கள் உள்ளன. தேவார வைப்புஸ்தலம்.)

## 739. ஆசைகள் அற

தான தான தந்த தந்த
தான தான தந்த தந்த
தான தான தந்த தந்த தனதான

ஆறு மாறு மஞ்சு மஞ்சும் ஆறு மாறு மஞ்சு மஞ்சும்
ஆறு மாறு மஞ்சு மஞ்சும் அறுநாலும்-
† ஆறு மாய சஞ்ச லங்கள் வேற தாவி ளங்கு கின்ற
ஆர ணாக மங்க டந்த ‡ கலையான;
ஈறு கூற ரும்பெ ருஞ்சு வாமி யாயி ருந்த நன்றி
யேது வேறி யம்ப லின்றி யொருதானாய்-
யாவு மாய்ம ணங்க டந்த மோன வீட
டைந்தொ ருங்கி
யா ○ன வாவ டங்க என்று பெறுவேனோ;

---

* திருக்கோவலூரும் மறையவரும்
"தூய நான் மறையாளர் சோமுச் செய்ய
** திருக்கோவ லூரதனுள் கண்டேன் நானே."
(சோமு--- சோமயாகம்)
"சீரேறு மறையாளர் நிறைந்த செல்வத்
திருக்கோவலூர்" - பெரிய திருமொழி 2 10-1, 8
† தத்துவங்கள் (96 - பாடல் 157 -பக்கம் 366-கீழ்க்குறிப்பு
‡ கலையான ஈறு - உபதேச கலையாகிய சித்தாந்தம்.
○ அவா - "அநாதியாய அவிச்சையும் (அஞ்ஞானமும்), அது பற்றி யானென மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கிது வேண்டும் என்னும் அவாவும், அது பற்றி அப் பொருட்கட் செல்லும் ஆசையும், அதுபற்றி அதன் மறு தலைக்கட் செல்லும் கோபமுமென வடநூலார் குற்றம் ஐந்தென்றார். (குறள் 360 உரை)

(கோ அதா-) மேன்மையாக - சிறப்பாக, மறையோர் வேதங்களை ஓதும் (ஓதம்) (ஓசை) வெள்ளமும் (அல்லது மோதம் - மகிழ்ச்சியும்), திருவிழாக்களின் ஒலியும் கோடிக் கணக்கான ஆகமங்களின் பேரொலியும் மேம்பட்டு மிக்கு எழுகின்ற

திருக்கோவலூர் என்னும் பெரிய நகரில் வீற்றிருக்கின்ற வீரனே! வேல் என்கின்ற கூரிய ஆயுதத்தை உடையவனே! கோதை யானையினோடு - மாது தேவசேனையுடன் (அல்லது) கோதை (வள்ளி), (யானை) தேவசேனை இவர்களோடு) வீற்றிருக்கும் பெருமாளே!

(மாலறிவே - அதிலேயுற லொழிவேனோ)

## தேவனூர்.

## 739.

(ஆறும் ஆறும்) பன்னிரண்டும், (அஞ்சும் அஞ்சும்) பத்தும், (ஆறும் ஆறும்) பன்னிரண்டும், (அஞ்சும் அஞ்சும்) பத்தும், (ஆறும் ஆறும்) பன்னிரண்டும், (அஞ்சும் அஞ்சும்) பத்தும், (அறு நாலும்) இருபத்து நான்கும் -

ஆறும் ஆய (12 + 10 + 12 + 10 + 12 + 10 + 24 + 6) தொண்ணூற்று ஆறு ஆன (சஞ்சலங்கள்) (துன்பங்களுக்குக் காரணமான) தத்துவங்களுக்கும் வேறாக விளங்குகின்றதும், வேதம், ஆகமம் இவைகளைக் கடந்ததும், உபதேச கலையாகிய-

(ஈறு) சித்தாந்தமே சொல்லுதற்கு அரியதான பெரிய தெய்வ நிலையா யிருந்ததுமான (நன்றி) நன்மைப் பொருளை, (ஏது) மூலகாரணம் வேறு சொல்லுதற்கு இல்லாமல் - ஒப்பற்ற தானாகவே நின்று -

எல்லாமாய் விளங்கி, மனங்கடந்ததான மோன இன்ப வீட்டை, அடைந்து (ஒருங்கி மனம் ஒருமைப்பட்டு ஒடுங்கி நான்) எனது ஆசைகளெல்லாம் அடங்கும்- படியான (பாக்கிய நிலையை) என்று பெறுவேனோ!

மாறு கூறி வந்தெ திர்ந்த சூரர் சேனை மங்க வந்த
வாரி மேல்வெ குண்ட சண்ட விததாரை-
வாகை வேல கொன்றை தும்பை மாலை கூவி
ளங்கொ ழுந்து
வால சோம னஞ்சு பொங்கு பகுவாய;
சீறு மாசு ணங்க ரந்தை ஆறு வேணி கொண்ட
நம்பர்
தேசி காக டம்ப லங்கல் புனைவோனே-
தேவர் யாவ ருந்தி ரண்டு பாரின் மீது வந்தி
றைஞ்சு
**தேவ னூர்வி ளங்க வந்த பெருமாளே.** (1)

## 740. புகழ்ந்து துதிக்க

தான தான தந்த தந்த, தான தான தந்த தந்த
தான தான தந்த தந்த தனதான

தார காசு ரன்ச ரிந்து வீழ வேரு டன்ப றிந்து
*சாதி பூத ரங்கு லுங்க முதுமீனச்-
† சாக ரோதை யங்கு ழம்பி நீடு தீகொ ளுந்த
அன்று
‡தாரை வேல்தொ டுங்க டம்ப மததாரை;
ஆர வார வும்பர் கும்ப வார ணாச லம்பொ ருந்து
மானை யாளு நின்ற குன்ற மறமானும்-
ஆசை கூரு நண்ப என்று மாம யூர கந்த என்றும்
**ஆவல் தீர என்று நின்று புகழ்வேனோ;**

---

* ஏழுமலை, கிரவுஞ்சம், கடல், இவையெலாம் வேலால் தீக்கொளுந்தப் பட்டது.

"களவுடை வாழ்க்கை யுளமனக் கொடியோன்
படர்மலை ஏழும் குருகுமர் பொருப்பும்
மாவெனக் கவிழ்ந்த மறிகட லொன்றும்
கடுங்கனற் பூழி படும்படி நோக்கிய
தாரையெட் டுடைய கூரிலை நெடுவேல்" - கல்லாடம் *61.*

† 'வேல்பட் டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும்"
'வேலுக் கணிகலம் வேலையும் சூரனும் மேருவுமே"
- கந்தரலங்காரம் *40, 62.*

‡ தாரை -- கூர்மை -
" தாரை எட்டுடைய கூரிலை நெடுவேல்" -கல்லாடம் *61.*

பகையைச் சொல்லி வந்து எதிர்த்த சூரருடைய சேனைகள் மங்கி அழிய, கப்பல்கள் உலவும் கடலைக் கோபித்ததும், (சண்டவித) விரைவு - கோபம் இவை வாய்ந்ததும், கூர்மை கொண்டதும்

வெற்றி கொண்டதுமான வேலை ஏந்தியவனே! கொன்றை, தும்பை இவற்றாலாய மாலைகள், வில்வக் கொழுந்து, பாலசந்திரன் (இளம்பிறை), விஷம் பொங்கி எழும் பிளப்பு வாயையுடையதும்

சீறிக் கோபிப்பதுமான (மாசுணம்) பாம்பு, (சுரந்தை) திருநீற்றுப் பச்சை, கங்கை ஆறு இவைகளைச் சடையிற் கொண்ட (நம்பர்) பெருமான் - சிவனுக்குத் (தேசிகா) குருமூர்த்தியே! கடப்பமாலை அணிபவனே!

தேவர்கள் யாவரும் ஒன்றுகூடிப் பூமியிலே வந்து வணங்கும் **தேவனூர்** விளங்க வந்த பெருமாளே!

*(யான் அவா அடங்க என்று பெறுவேனோ)*

## 740.

**தா**ரகாசுரன் நிலை பெயர்ந்து வீழ்ந்து (மாள), வேருடன் பறிபட்டுச் சிறந்த மேருமலையும் (குலுங்க) நடுக்கம் கொள்ள, முற்றின மீன்களைக் கொண்ட

சாக ரோதையங் குழம்பி (அம் ஓதை சாகரம் குழம்பி) அழுகும் ஆரவாரமும் கொண்டுள்ள கடல் கலக்க முற்று பெருந் தீயிற்பட அன்று கூரிய வேலைச் செலுத்தின கடம்பனே! மதநீர் ஒழுக்கையும்

ஆரவாரத்தையும் கொண்டதும், தேவலோகத்தில் உள்ளதும், (கும்பம்) மத்தகத்தைக் கொண்டதும் ஆன (அசலவாரண) மலைபோன்ற ஐராவதம் என்னும் யானைமீது வீற்றிருந்த (மானையாளும்) (மானாள்) மான்போன்ற தேவசேனையும், (நின்ற குன்ற மறமானும்) குன்றம் நின்ற - வள்ளிமலையில் இருந்த வேடப்பெண் மான்போன்ற வள்ளியும் -

(ஆக இருவரும்) ஆசை மிகவும் கொள்ளும் நண்பனே என்றும், சிறந்த மயில்வாகனனே, கந்தனே என்றும் என் ஆசைதீர என்று நான் மனம் ஒருமைப்பட்டு நின்று புகழ்வேன்! (அல்லது) என்றைக்கும் மனம் ஒருமைப்பட்டு நின்று புகழ மாட்டேனோ!

*பார மார்த ழும்பர் †செம்பொன் மேனி யாளர்
கங்கை வெண்க
பால மாலை கொன்றை தும்பை சிறுதாளி-

பார மாசு ணங்கள் சிந்து வார வார மென்ப டம்பு
பானல் கூவி ளங்க ரந்தை அறுகோடே;

சேர வேம ணந்த நம்ப ரீச னாரி டஞ்சி றந்த
‡சீத ளார விந்த வஞ்சி பெருவாழ்வே-

தேவர் யாவ ருந்தி ரண்டு பாரின் மீது வந்தி
றைஞ்சு
தேவ னூர்வி ளங்க வந்த பெருமாளே. (2)

## 741 பரம்பொருள்

தான தானன தனனா தனதன
தான தானன தனனா தனதன
தான தானன தனனா தனதன தந்ததான

Xகாணொ ணாதது உருவோ டருவது
பேசொ ணாதது உரையே தருவது
காணு நான்மறை முடிவாய் நிறைவது பஞ்சபூதக்-

காய பாசம தனிலே யுறைவது
மாய மாயுட லறியா வகையது
காய மானவ ரெதிரே யவரென வந்துபேசிப்;

---

* பாரமார் தழும்பர் - பாடல் 463 - பக்கம் 44 - கீழ்க்குறிப்பு

† செம்பொன்மேனி - "பொன்னியலுந் திருமேனி"
- சம்பந்தர் - 3-106-3.

‡ பார்வதி - தாமரையில் வீற்றிருப்பது
- பாடல் 31பக்கம் 91-கீழ்க்குறிப்பு.

X பரம்பொருள் இலக்கணம் - இவ்வாறு விளக்கப்பட்ட பாடல்கள் 13, 489, 501, 980, 1052 எண்ணுள்ளன.

(பாரமார் தழும்பர்) தேவியின் மிக்க கொங்கைப் பாரத்தின் தழும்பு கொண்டவர், செம்பொன் போன்ற திருமேனியை உடையவர், கங்கை, வெண்ணிறத்த கபால-மாலை, கொன்றை, தும்பை, (சிறு தாளி) ஒருவகைச் செடி(ப்பூ.)

பாரமான பாம்புகள், (சிந்து வாரம்) நொச்சி, (ஆரம்) கடம்பு, (என்பு) எலும்பு, அடம்பு - ஒருவகைக் கொடிப் பூ, (பானல்) கருங்குவளை, (கூவிளம்) வில்வம், கரந்தை, அறுகுடனே

சேர்ந்து விளங்கி மணக்கும் (நம்பர்) பெருமான், ஈசனார் ஆகிய சிவனது இடது பாகத்திற் சிறந்து விளங்கும் குளிர்ந்த (அரவிந்த) தாமரையில் வீற்றிருக்கும் மாது பார்வதி தேவியின் பெருஞ் செல்வமே!

தேவர்கள் எல்லாரும் ஒன்றுகூடிப் பூமியில் வந்து வணங்கும் **தேவனூருக்கு** விளக்கம் தர வந்துள்ள பெருமாளே!

(ஆவல்தீர என்று நின்று புகழ்வேனோ)

## 741.

**கா**ண்பதற்குக் கூடாததும், உருவமும் அருவமும் கொண்டதும், *பேசுதற்கு முடியாததும், (பலவித) உரை விளக்கங்களுக்கும் இடம் தருவதும் (அல்லது - பேசும் திறத்தைத் தருவதும்), காணப்படும் நான்கு மறைகளுக்கும் (வேதங்களுக்கும்) முடிவான பொருளாய் நிறைந்து நிற்பதும் - (மண், நீர், தீ, காற்று. ஆகாயம் என்னும்) ஐம்பூதங்களால் ஆய -

(இந்த) உடல் மீதுள்ள பாசத்திலே (ஆசையிலே) இருந்து விளங்குவதும், மாயப்பொருளாய் நின்று இவ் வுடலால் அறிய முடியாத வகையில் இருப்பதுவும், † (காயமானவர் - காய சித்திபெற்றவராலும் தம் எதிரே அவரைப்போல மனிதனாய் வந்து பேசினாலும் - இன்னாரென அறிந்து

---

* **'உரையே தருவது'** - ஆகமப் பிரமாணத்தால் அறியப்படுவது.

† **'காயமானவர் எதிரே அவரென வந்து பேசிப் பேணொணாதது'**- சரீரத்தை உடைய மனிதர்கள் முன்னே பக்குவ காலத்தில் அவரைப் போல மானிடச் சட்டை சாத்திவந்து உபதேச முதலியவை செய்தும். மனிதருள் ஒருவராக மதிக்கமுடியாது.

பேணொ ணாதது வெளியே யொளியது
மாய னாரய னறியா வகையது
*பேத பேதமொ டுலகாய் வளர்வது விந்துநாதப்-

பேரு மாய்கலை யறிவாய் துரியவ
தீத மானது வினையேன் முடிதவ
பேறு மாயருள் **நிறைவாய் விளைவது ஒன்றுநீயே;**

வீணொ ணாதென அமையா தசுரரை
நூறி யேயுயிர் நமனீ கொளுவென
வேல்க டாவிய கரனே யுமைமுலை யுண்டகோவே-

வேத நான்முக †மறையோ னொடும்விளை
யாடி யேகுடு மியிலே கரமொடு
வீற மோதின மறவா குறவர்கு றிஞ்சியூடே;

சேணொ ணாயிடு மிதண்மே லரிவையை
மேவி யேமயல் கொளலீ லைகள் செய்து
‡சேர நாடிய திருடா வருடரு கந்தவேளே-

Xசேரொ ணாவகை வெளியே திரியுமெய்ஞ்
ஞான யோகிக ளுளமே யுறைதரு
O **தேவ னூர்வரு** குமரா வமரர்கள்
தம்பிரானே. (3)

## திருவதிகை.

(இது தென்னாற்காடு ஜில்லா பண்ணுருட்டி ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு $1^{1}/_{2}$ மைல். கெடில நதியின் வட கரையி லுள்ளது. மூவர் தேவாரமும் பெற்றது. ஸ்தல புராணம் உண்டு.)

---

* "வேறாய் உடனானான்"- சம்பந்தர் - 1-11-2.

† பிரமனைக் குட்டிய லீலை - பாடல் 608 பக்கம் 406 - கீழ்க்குறிப்பு.

‡ செம்மான் மகளைத் திருடுந்திருடன்' - கந்தர நுபூதி - 12.

X ஞானிகள் பறவைபோலத் திரிவது; யாரும் தம்முடன் ஒட்டாத வகையில் திரிவது - பாடல் 235-பக்கம் 88-கீழ்க்குறிப்பு.

O "தேவை யூர்வரு" என்றும் பாடம்: தேவை என்பது இராமேசுரம்.

போற்ற முடியாததும், ஆகாய வெளியில் ஒளியாய் நிற்பதும், திருமால் பிரமா இவர்களால் அறியமுடியாத வகையில் இருப்பதும், பேதம் அபேதம் (வேற்றுமை ஒற்றுமை) எனப்படும் தன்மைகளுடன் உலகமாய் வளர்வதும் - (விந்து) (பீடம்), நாதம் (இலிங்கம்)எனப்படும்

பேருடையதாயும், கலை அறிவாயும் (நூலறிவாகவும்), (துரியத்துக்கு) யோகியர் தம் மயமாய் நிற்கும் உயர் நிலைக்கும் (அதீதமானது) மேற்பட்டதானதும், (வினையேன்) வினைக்கு ஈடான என்னுடைய முடிந்த தவத்தின் பேறாக உள்ளதும், திருவருள் நிறைவாய் விளைகின்றதும் - ஆக இந்த இலக்கணங்களெல்லாம் பொருந்தியவன் நீ ஒருவனே!

‡ (வீண்) வீணான காரியம் கூடாதென (விலக்கி) (அமையாத) அடங்கியிராத அசுரர்களைப் பொடியாக்கி அவர்கள் உயிரை -"யமனே! நீ கொள்வாயாக" என்று கூறி வேலைச் செலுத்தின திருக்கரத்தனே! உமையின் கொங்கைப் பாலை உண்ட அரசே!

வேதம் கற்றவனும் நான்கு முகத்தவனும் ஆன அந்தணன் பிரமனொடும் - பேசி விளையாடியே - அவன் குடுமியிலே திருக்கரத்தால் பலமாகக் குட்டின வீரனே! குறவர்களின் மலை நிலத்து ஊராம் வள்ளிமலையில் -

மிக உயரம் பொருந்தியுள்ளதாய்க் கட்டப்பட்டிருந்த பரண் மீதிருந்த பெண் வள்ளியிடம் சென்று காம மயக்கம் கொள்ளும்படியான திருவிளையாடல்களைச் செய்து அவளுடன் அணைய விரும்பின திருடனே! அருள்பாளிக்கும் கந்தவேளே!

Xயாரும் தம்மிடம் அணுக முடியாதவகையில் வெளியிலேயே திரிந்து கொண்டிருக்கும் மெய்ஞ்ஞான யோகிகளின் உள்ளத்தே விளங்கி வீற்றிருக்கும் தம்பிரானே! **தேவனூரில்** எழுந்தருளியுள்ள குமரனே! தேவர்கள் தம்பிரானே!

(அருள் நிறைவாய் விளைவது ஒன்று நீயே)

---

‡ **'வீண் ஒணாது என அடையாது'** - யுத்தஞ் செய்தல் வீண், அது தகாது என்று சும்மா இராது (அசுரரைக் கொன்று)

X **"சேரொணாவகை"** - கருவிகள் ஒன்றும் தாக்காவண்ணம் - இவையும், பக்கம் 213-கீழ்க் குறிப்புக்கள்*, †, அவையும் - கொழும்பு ஆசிரியர் மு. திருவிளங்கம் அவர்களின் உரை.

## 742. கலவி மயக்கு ஒழிய

தனதனனத் தனதனனத் தனதனனத் தனதனனத்
தனதனனத் தனதனனத் தனதான

பரவுவரிக் கயல்குவியக் குயில்கிளியொத் துரைபதறப்
பவளநிறத் ததரம்விளைத் தமுதூறல்-

பருகிநிறத் தரளமணிக் களபமுலைக் குவடசையப்
படைமதனக் கலையடவிப் பொதுமாதர்;

சொருகுமலர்க் குழல்சரியத் தளர்வுறுசிற் றிடைதுவளத்
துகிலகலக் க்ருபைவிளைவித் துருகாமுன்-

சொரிமலர்மட் டலரணைபுக் கிதமதுரக் கலவிதனிற்
சுழலுமனக் கவலையொழித் தருள்வாயே;

*கருகுநிறத் தசுரன்முடித் தலையொருபத் தறமுடுகிக்
கணைதொடுமச் சுதன்மருகக் குமரேசா-

கயிலைமலைக் கிழவனிடக் † குமரிவிருப் பொடுகருதக்
கவிநிறையப் பெறும்வரிசைப் புலவோனே;

திரள்கமுகிற் றலையிடறிப் பலகதலிக் குலைசிதறிச்
செறியும்வயற் கதிரலையத் திரைமோதித்-

‡ திமிதிமெனப் பறையறையப் பெருகுபுனற் கெடிலநதித்
திருவதிகைப் பதிமுருகப் பெருமாளே.(1)

---

* கருகுநிறத்த சுரன்- ராவணன்- "கறுத்த அரக்கன்" -சம்பந்தர் 2-57 8.

† குமரி விருப்பொடு கருதக், கவி நிறையப் பாடினது;

"பணைமுலை மெத்தப் பொதிந்து பண்புறுகின்ற பாலைப் பலதிசை மெச்சத் தெரிந்த செந்தமிழ் பகர் என இச்சித்து உகந்து கொண்டருள் தம்பிரானே"

"நுகர் வித்தகமாகு மென்று உமை
மொழியிற் பொழிபாலை உண்டிடு... பாலன்"

- திருப்புகழ் 136, 110

‡ ஆற்றில் வெள்ளம் வருவதை ஊராருக்கு உணர்த்த திமிதிமென்று பறை அறைவிப்பது அக்காலத்திய வழக்கம்.

# 742.

**அ**கன்று, ரேகைகளோடு கூடியதாய்க் கயல்மீன் போல உள்ள கண்கள் குவியக், குயில் போலவும் கிளி போலவும் பேசும் மொழி (பதற) கலங்கி வெளிவரப், பவளத்தின் நிறம்கொண்ட வாயிதழ்கள் விளைவிக்கும் அமுதன்ன ஊறலை-

உண்டு, ஒளிகொண்ட முத்து மணிமாலை அணிந்த (சந்தனக்) கலவைபூண்ட கொங்கை மலை அசைதர, (படை மதனக் கலையடவி) ஐந்து மலர்ப் பாணங்களை உடைய மன்மதனது சாஸ்திரக் காட்டை - சாஸ்திரக் குப்பையை - உணர்ந்துள்ள (கொக்கோக சாஸ்திரத்தைக் கற்றுள்ள) பொது மாதர்கள் -

மலர் சொருகியுள்ள கூந்தல் சரியவும், தளர்ந்துள்ள சிற்றிடை துவண்டுபோகவும் (துவட்சியுறவும்) கட்டியுள்ள ஆடை விலகவும் காம ஆசையை விளைவித்து (ஆசையை எழுப்பி) (மனம்) உருகி எதிரே -

சொரியப்பட்ட மலர்களின் வாசனை பரந்துள்ள படுக்கையிலே புகுந்து இன்பந்தரும் இனிமைப் புணர்ச்சியிலேயே சுழலுகின்ற என் மனக்கவலையை ஒழித்தருளுவாயாக.

கரிய நிறத்தையுடைய அசுரன் (ராவணனது) மகுடமணிந்த தலை ஒருபத்தும் அற்றுவிழ வேகமாகச் சென்று அம்பைச் செலுத்தின திருமாலின் மருகனே! குமரேசனே!

கயிலைமலைக்கு உரியவனாம் சிவனது இடது பாகத்தில் உள்ள குமரி (பார்வதி) (விருப்பத்தொடு கருதிப் பிரசாதிக்க (பாலமுது ஊட்ட) (அந்தப் பிரசாதத்தின் பலத்தால்) பாடல்கள் நிறையப் பாடும் திறத்தைப் பெற்ற (வரிசை) மேம்பாட்டைத் - தகுதியையுடைய ஞானசம்பந்தப் புலவனே!

திரண்ட கமுகமரத்தின் உச்சியில் இடறியும் பல வாழைகளின் குலைகள் சிதறிடவும், நிறைந்த வயல்களில் நெற்கதிர்கள் அலைச்சல் படவும், அலைகள் வீசி -

திமிதிமி என்று பறைகள் முழங்கப் பெருகிவரும் வெள்ளநீர் கொண்ட கெடில நதிக்கரையில் உள்ள திரு **அதிகைப்** பதியில் வீற்றிருக்கும் முருகப் பெருமாளே!

(மனக்கவலை யொழித்தருள்வாயே)

## 743 பன்னிரு புயங்களை ஓத

தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன
தனன தானன தனதன தனதன தனதான

விடமும் வேலன மலரன விழிகளு
மிரத மேதரு மமுதெனு மொழிகளும்
விரகி னாலெழு மிருதன வகைகளு மிதமாடி-
மிகவு மாண்மையு மெழினல முடையவர்
வினையு மாவியு முடனிரு வலையிடை
வெளியி லேபட விசிறிய விஷமிக ளுடன்மேவா;
இடரு றாதுனை நினைபவர் துணைகொள
இனிமை போ*லெழு பிறவியெ னுவரியி
னிடைகெ டாதினி யிருவினை யிழிவினி லிழியாதே-
இசையி னாடொறு மிமையவர் முநிவர்கள்
ககன பூபதி யிடர்கெட அருளிய
இறை† நி னாறிரு புயமென வுரைசெய அருள்வாயே;
படரு மார்பினி லிருபது புயமதொ
டரிய மாமணி முடியொளி ரொருபது
படியி லேவிழ ‡வொருகணை தொடுபவ ரிடமாராய்-
Xபரவை யூடெரி பகழியை விடுபவர்
பரவு வார்வினை கெட அரு ளுதவியெ
பரவு பால்கட லரவணை துயில்பவர் மருகோனே;
அடர வேவரு மசுரர்கள் குருதியை
அரக ராவென அலகைகள் பலியுண
அலையும் வேலையும் அலறிட எதிர்பொரு மயில்வீரா-

---

* எழுபிறவி - தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர் வாழ்வன, தாவரம் - (பாடல் 668-பக்கம் 34 கீழ்க்குறிப்பு)

† நின் ஆறிருபுயமென உரைசெய அருள்வாயே - எனத் திரு அதிகையில் அருணகிரியார் வேண்டினர். இவ் வேண்டுகோளுக்கு இசையப் பின்னர் -

"முற்றிய பனிருதோளும் செய்ப்பதியும் வைத்துயர்
திருப்புகழ் விருப்பமொடு செப்பு"
(விநா-துதி-3-பக்கம் 10) - என வயலூரில் அநுக்கிரகிக்கப் பெற்றார்.

‡ ஒரு கணை தொடுபவர் - பாடல் 452 -பக்கம்6 கீழ்க்குறிப்பு.

X கடல்மீது பாணம்விட்டது - பாடல் 177-பக்கம் 412 குறிப்பு.

# 743.

**வி**ஷமும் வேலும் போன்றனவும், மலர் போன்றனவுமான கண்களும், ருசியைத்தரும் அமுது என்று சொல்லும்படியுள்ள மொழிகளும், உற்சாகத்துடன் வளர்ந்துள்ள இரண்டு கொங்கை உறுப்புக்களும் இன்பம் தருவனவாய்க் கொண்டு -

மிக்க அகங்காரத்தையும் அழகு நலத்தையும் கொண்டவர்கள், (ஆண்மக்களின் தொழில் திறமும், ஆவியும் இரண்டும் ஒரு சேரவேதங்களுடைய பெரிய வலையிலே பகிரங்கமாகவே சிக்கும்படி (அந்த வலையை) வீசுகின்ற விஷமிகளுடன் மேவி - சேர்ந்து -

துன்பப்படாமல், உன்னை நினைக்கின்றவர்களின் துணையைப் பெறுதற்கு, இன்பம் போலக் காணப்படுகின்ற ஏழு பிறவி என்கின்ற (உவரியினிடை) கடலிடையே (கெடாது) அகப்பட்டு அழியாமல், இனியேனும் இருவினை என்கின்ற இழிந்த நிலையில் இறங்காமல் -

புகழுடனே நாள்தோறும் தேவர்கள், முநிவர்கள் விண்ணுலக அரசன் இந்திரன் ஆதிய தேவர்களின் துன்பம் தொலைய அருள் புரிந்த இறைவனே! உன்னுடைய பன்னிரு புயங்களைப் (போற்றி) உரைக்க அருள்புரிவாயாக.

பரவி அகன்றுள்ள மார்பின் பக்கத்திலுள்ள இருபது புயங்களும், அருமையான சிறந்த ரத்ன கிரீடங்கள் விளங்கும் ஒப்பற்ற பத்துத் தலைகளும் பூமியில் அற்றுவிழ ஒரு அம்பைச் செலுத்தினவர், (இடம்) சந்தர்ப்பம் (ஆராய்) ஆராய்ந்தறிந்து

கடலின் மீது எரி அம்பைப் பிரயோகித்தவர், தம்மைப் போற்றுபவர்களுடைய வினைகெட அருள் பாலித்துப், பரந்துள்ள பாற்கடலில் பாம்பணையில் துயில் கொள்பவரின் மருகனே!

நெருங்கி வந்த அசுரர்களின் ரத்தத்தை (உணவு கிடைத்த மகிழ்ச்சியால்) அரகரா என்று மகிழ்ந்து கூவி பேய்கள் உணவு உண்ண, அலை வீசி அலையும் கடலும் கூச்சலிட, எதிர் பொருத - சண்டை செய்த மயில் வீரனே!

அமர ராதிய ரிடர்பட அடர்தரு
கொடிய தானவர் *திரிபுர மெரிசெய்த
அதிகை மாநகர் மருவிய சசிமகள்
பெருமாளே.(2)

## திருவாமூர்.

(இது திருவதிகைக்குச் சமீபத்திலுள்ளது. பண்ணுருட்டியிலிருந்து 5-மைல். இது திருநாவுக்கரசு ஸ்வாமிகளுடைய தமக்கையாராகிய திலகவதியார் என்பவர் அவதரித்துச் சிவபுண்ணியஞ் செய்து புகழை வளர்ப்பதற்கு ஆதார ஸ்தானமாக இருந்த தலம்)

## 744. அகப்பொருள்

தான தனன தனத்தந் தனதான

சீத மதிய மெறிக்குந் தழலாலே-
சீறி மதனன் வளைக்குஞ் சிலையாலே;
ஓத மருவி யலைக்குங் கடலாலே-
ஊழி யிரவு தொலைக்கும் படியோதான்;
†மாது புகழை வளர்க்குந் திருவாமூர்-
வாழு மயிலி லிருக்குங் குமரேசா;
காத லடியர் கருத்தின் பெருவாழ்வே-
† காலன் முதுகை விரிக்கும் பெருமாளே.

---

* திரிபுரத்தை எரித்த இடம் திருவதிகை.

"பூமன் சிரங்கண்டி, அந்தகன் கோவல், புரம் அதிகை"
'தேமன்னு கொன்றையுந் திங்களும் சூடிதன் சேவகமே" (தனிப்பாடல்)

"முற்றா வெண்மதி சூடும் முதல்வனார்
செற்றார் வாழுந் திரிபுரந் தீயெழ
விற்றான் கொண்டெயில் எய்தவர் வீரட்டம்
கற்றா லல்லதென் கண் துயில் கொள்ளுமே"- அப்பர் 5-53-4.

† மாது - திலகவதியார், அப்பர் சுவாமியின் தமக்கையார் - "தமது தமக்கையாரால் சைவ சமயத்திற்கு மீட்கப் பெற்றுச் சூலைநோய் நீங்கத் திருவருள் பெற்ற புனிதத் தலமாகிய திருவதிகை வீரட்டானத்தில் அப்பருக்குத் தனி ஆலயம் இருக்கிறது. அதில் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றுள் "புகழ்மாது விளங்க" என்ற தொடக்கத்துக் குலோத்துங்கன் I காலத்துக் கல்வெட்டும் (ஒன்று) இருக்கின்றது" - பெரிய புராண உரை - திருநாவுக்கரசு நாயனார் புராணம் - பக்கம் 770.

(தொடர்ச்சி. பக்கம் 221)

தேவர் முதலானோர் துன்பப் படும்படி மேல் விழுந்து நெருங்கி எதிர்த்த பொல்லாத அசுரர்கள் வாழ்ந்திருந்த முப்புரங்களை எரித்த இடமாகிய (திரு) **அதிகை** மகா நகரில் வீற்றிருக்கும் பெருமாளே! இந்திராணியின் மகள் தேவசேனையின் பெருமாளே!

*(நின் ஆறிரு புயமென உரைசெய அருள்வாயே)*

## 744.

## திருவாரூர்

குளிர்ந்த நிலவு வீசுகின்ற நெருப்பாலும் -

கோபித்து மன்மதன் வளைக்கின்ற வில்லாலும் -

அலைகள் வீசி அலைக்கின்ற கடலாலும்

ஊழிபோல (நீடித்துள்ள) இராப்பொழுது தொலைக்குந் தன்மையதோ தான் (தொலைக்க முடியவில்லையே, என் செய்வேன் என்றபடி)

(மாது) திலகவதியாரின் புகழை வளர்க்கும் தலமாம் **திருவாரூரில்**

வாழும் குமரேசனே! மயிலில் வீற்றிருக்கும் குமரேசனே!

அன்புள்ள அடியார்களின் கருத்தில் உறையும் பெருஞ் செல்வமே!

யமனுடைய முதுகைப் பிளவு கொள்ளும்படி அடித்து வெருட்டும் பெருமாளே!

*(இரவு தொலைக்கும் படியோதான்)*

---

'மாது புகழை வளர்க்குந் திருவாயா' -என்றும் பாடம் - இந்தப் பாடங்கொண்டால் 'மாது' என்பது "மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவையைக் குறிக்கும்". முதுகை விரித்தல் - புறங்காட்டச் செய்தலும் முதுகு விரியும்படி அடித்தலும்; முருகன் அடியவராகிய அருணகிரியாரே -

"அந்தகா! உனைப் பாரறிய வெட்டிப் புறங்கண்டலாது விடேன் வெய்ய சூரனைப் போய் முட்டிப் பொருத செவ்வேற் பெருமாள் திருமுன்பு நின்றேன்" கந்-அலங் 64 -என யமனை வெருட்டுகின்றார் எனில் - முருகவேள் 'காலன் முதுகை விரிக்கும் பெருமாள்' என்பது மிகவும் பொருத்தமே.

† 'காம னழகில் மிகுக்கும் பெருமாளே' -- என்றும் பாடம்.

## வடுகூர்.

(இஃது 'ஆண்டார் கோயில்' என வழங்குகின்றது. புதுச் சேரிக்கு மேற்கு 10-மைலிலுள்ள சின்னபாபு சமுத்திரம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு 2-மைல், திருஞான சம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

### 745. திருவடியைத் தொழ

தனதன தனனா தனதன தனனா
தனதன தனனா தனதான

அரியய னறியா தவரெரி புர*மூ
ணதுபுக நகையே வியநாதர்
அவிர்சடை மிசையோர் வனிதையர் பதி†சீ
றழலையு மழுநேர் பிடிநாதர்;

‡வரைமக ளொருகூ றுடையவர் Xமதனா
கமும்விழ விழியே வியநாதர்
மனமகிழ் குமரா எனவுன திருதாள்
**மலரடி தொழுமா றருள்வாயே;**

அருவரை யிருகூ றிடவொரு மயில்மேல்
Oஅவனியை வலமாய் வருவோனே
அமரர்க ளிகல்நீ டசுரர்கள் சிரமேல்
அயில்தனை விசையாய் விடுவோனே;

வரிசையொ டொருமா தினைதரு வனமே
மருவியொர் குறமா தணைவேடா
மலைகளில் மகிழ்வாய் மருவிநல் **வடுகூர்**
வருதவ முநிவோர் பெருமாளே. (1)

---

* மூணு - மூன்று என்பதன் மரூஉ.

† அழல் - மழு - ஏந்துவது - பாடல் 286-பக்கம் 210 கீழ்க்குறிப்பு

‡ பார்வதி ஒரு கூறு; - பாடல் 301 பக்கம் 246 கீழ்க்குறிப்பு.

X மன்மதனை எரித்தது - பாடல் 288-பக்கம் 216 கீழ்க்குறிப்பு.

O உலகை மயில்மேல் வலம் வந்தது; பாடல் 267 பக்கம் 164 கீழ்க்குறிப்பு ‡ பார்க்க.

# 745.

**தி**ருமாலாலும் பிரமனாலும் காணமுடியாதவர், நெருப்பு புரம் மூன்றிலும் புகும்படித் தமது சிரிப்பை ஏவிய தலைவர் - (புரம் மூன்றையும் சிரித்தெரித்த தலைவர் என்றபடி); -

விளங்கும் சடைமீது ஒரு மாது கங்கையைக் கொண்டவர், (பதி) கடவுள், (அல்லது - கங்கையாம் மாதின் (பதி) தலைவர்), காய்ந்து வந்த நெருப்பையும் மழு ஆயுதத்தையும் நேராகக் கையில் ஏந்தியுள்ள தலைவர் -

மலைமகள் பார்வதியை ஒரு பாகத்தில் உடையவர், மன்மதனுடைய உடலும் (எரிபட்டுவிழ) கண்ணினின்றும் (தீயை)ச் செலுத்தின தலைவர் -

மனம் மகிழும் குமரனே! என்று உன்னுடைய இரண்டு தாளாகிய மலர்ப்பாதங்களை தொழும்படியாக அருள்-புரிவாயாக.

அருமை வாய்ந்த (கிரவுஞ்ச) கிரி இரண்டு கூறாகப் பிளவு படும்படி (செய்து) ஒப்பற்ற மயில்மேலே (ஏறி) உலகை வலமாக வந்தவனே!

தேவர்களோடு பகைமை பூண்டிருந்த பெரிய அசுரர்களின் தலைகள்மீது வேலாயுதத்தை வேகத்தொடு செலுத்தினவனே!

(வரிசையொடு) நல்ல நிலையில் ஒப்பற்ற சிறந்த (தினை தரு வனமே) தினை வளரும் காட்டுக்குச் சென்று ஒப்பற்ற குறப்பெண் வள்ளியை அணைந்த வேடனே!

மலையிடங்களிற் ப்ரீதி கொண்டவனே! (மனம்) பொருந்தி நல்ல **வடுகூர்** என்னும் தலத்தில் வருகின்ற தவமுனிவர்களின் பெருமாளே!

(மலரடி தொழுமா றருள்வாயே)

## திருத்துறையூர்.

(இது 'திருத்தளூர்' என மருவி வழங்குகின்றது. பண்ணுருட்டிக்கு வடமேற்கு 5-மைல். திருத்துறையூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு $1^1/_2$ -மைல். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது)

## 746. பொதுமாதர் உறவு அற

தானத்தன தானத்தன தானத்தன தானத்தன
தானத்தன தானத்தன தனதான

ஆரத்தன பாரத்துகில் மூடிப்பலர் காணக்கையில்
யாழ்வைத்திசை கூரக்குழ லுடைசோர-
ஆகப்பனி நீரப்புழு கோடக்குழை யாடப்பிரை
யாசப்படு வார்பொட்டணி சசிநேர்வாள்;
கூரக்கணை வேல்கட்கயல் போலச்சுழல் வார்சர்க்கரை
கோவைக்கனி வாய்பற்கதி ரொளிசேருங்-
கோலக்குயி லார்பட்டுடை நூலொத்திடை யார்சித்திர
கோபச்செய லார்பித்தர்க ளுறவாமோ;
பூரித்தன பாரச்சடை *வேதக்குழ லாள்பத்தர்கள்
பூசைக்கியல் வாள்பத்தினி சிவகாமி-
பூமிக்கடல் † மூவர்க்குமு னாள்பத்திர காளிப்புணர்
போகர்க்குப தேசித்தருள் குருநாதா;
சூரக்குவ டாழித்தவி டாய்முட்டசு ராருக்கிட
சோர்விற்கதிர் வேல்விட்டருள் விறல்வீரா-
‡தோகைச்செய லாள்பொற்பிர காசக்குற
மான்முத்தொடு
சோதித் துறை யூர் நத்திய பெருமானே. (1)

---

* வேதக் குழலாள் - தேவி வேதாகரம் உடையவளாதலின் வேதக் குழலாள் என்றழைக்கப் பெற்றாள்.

"ஆரணாகாரி - தருணவாணிலா வீசு சடிலமோலி" என்றார் தக்கயாகப் பரணியில்; ஆரணம் - வேதம்; ஆகாரம் - உடம்பு (107)

'சுருதிகளின்... கொழுந்தும் - வேரும்... திரிபுரசுந்தரி யாவதறிந் தனமே' - அபிராமி அந்தாதி 2.

வள்ளியை 'வேதச் சொரூபி' என்றார் 636-ஆம் பாடலில்.

† "முதல் மூவருக்கும் அன்னே" - அபிராமி அந்தாதி 25.

‡ இந்த எட்டாவது அடியுடன் 648 ஆம் பாடலின் எட்டாவது அடியை ஒப்பிட்டுப் பார்க்க.

# 746.

முத்துமாலை அணிந்துள்ள கொங்கைப் பாரங்களைப் புடைவையால் மூடிப், பலரும் காணக் கையிலே யாழ் வைத்து இசை நிரம்பப் பாடிக், கூந்தலும் உடையும் சரிய -

(ஆகம்) தேகத்தில் பன்னீருடன் புனுகு சட்டமும் ஓட - கலந்து பாய, (காதில்) குழைகள் ஆட, (பிரயாசைப் படுவார்) கஷ்டம் எடுத்துக் கொள்பவர்கள், பொட்டு அணிந்துள்ள சசி - சந்திரன் (நேர்) போன்ற (முகத்தில்), வாளாயுதம்-

கூர்மை கொண்டுள்ள அம்பு, வேல் இவை போன்ற கண்ணை மீன்போலச் சுழற்றுபவர்கள், சர்க்கரை (யொத்த மொழிகள் வரும்) கொவ்வைக்கனி போன்ற வாயிற் பற்கள் சூரிய சந்திரன் ஒளிபோல ஒளி வீச

அழகிய குயில் போலப் பேசுபவர்கள், பட்டுப் புடைவையை நூல் போன்ற நுண்ணிய இடையில் அணிந்துள்ளவர்கள், சித்திரம்போல அழகியராய்க் கோபச் செய்கைகள் நிரம்பியுள்ள (பித்தர்கள்) பித்துப் பிடித்தவர்-களாம் பொது மகளிரின் உறவு ஆமோ! (உறவு கூடாது என்றபடி)

(பூரி) நிறைந்துள்ள (தனபாரம்) கொங்கைப் பாரத்தையும் சடையையும் கொண்டுள்ள (வேதக்குழலாள்) வேத சொரூபக் கூந்தலை உடையவள், பக்தர்களின் பூஜையை ஏற்றுக் கொள்பவள், பத்தினி, சிவகாமி -

பூமி, கடல், மூவர் - (அரி, அயன், உருத்திரன்) - ஆகிய எல்லாவற்றுக்கும் முன்னவள், பத்ரகாளி - ஆகிய பார்வதி அணைந்து சேரும் (போகர்க்கு) இன்ப அனுபவம் உடையவர்க்கு (சிவனுக்கு) உபதேசித்து அருளின குருமூர்த்தியே!

சூரனும், (குவடு) கிரௌஞ்சகிரியும், கடலும் தவிடு பொடிபட, முட்டிப் பொருத அசுரர்கள் மெலிந்து அழிய, (சோர்வு இல் கதிர் வேல் ) அயர்ச்சி இல்லாத வீரம் உள்ள ஒளி வேலைச்செலுத்தி அருளின வெற்றி வேலனே!

மயில் போன்ற இயலினாள், அழகிய ஒளி கொண்ட (குறமான்) வள்ளி என்கின்ற முத்துப்போன்ற தேவியுடன் ஒளி வீசும் **துறையூர்** என்னும் தலத்தை விரும்பியுள்ள பெருமாளே!

(பித்தர்கள் உறவாமோ)

## 746-I பிறவிநோயற

தனதான தனத்தன தானன
தனதான தனத்தன தானன
தனதான தனத்தன தானன தனதான

வெகுமாய விதத்துரு வாகிய
திறமேபழ கப்படு சாதக
விதமேழ்கட லிற்பெரி தாமதில் சுழலாகி-

வினையான கருக்குழி யாமெனு
மடையாள முளத்தினின் மேவினும்
விதியாரும் விலக்கவொ ணாதெனு முதியோர்சொல்;

தகவாம தெனைப்பிடி யாமிடை
கயிறாலு மிறுக்கிம காகட
சலதாரை வெளிக்கிடை யேசெல வுருவாகிச்-

சதிகாரர் விடக்கதி லேதிரள்
புழுவாக நெளித்தெரி யேபெறு
மெழுகாக வுருக்கு **முபாதிகள்** **தவிர்வேனோ;**

உககால நெருப்பதி லேபுகை
யெழவேகு முறைப்படு பாவனை
யுறவே குகை யிற்புட மாய்விட வெளியாகி-

உலவாநர குக்கிரை யாமவர்
பலவோர்கள் தலைக்கடை போயெதிர்
உளமாழ்கி மிகக்குழை வாகவு முறவாடித்;

தொகலாவ தெனக்கினி தானற
வளமாக அருட்பத மாமலர்
துணையே **பணியத் தருவாய்ப**ரி மயில்வேலா!

# 746- I

**எ**ண்ணிலாத மாய வகைகளால் (உருவாகிய திறமே) உடலெடுக்கும் இயல்பிலே - பழகப் படுகின்ற பிறப்பு வகைகள் ஏழு கடலினும் பெரிதாகும்; அத்தகைய பிறப்பிற் சுழலுதல் உற்று -

வினைக்கு ஈடான கருக்குழியானது சேரும் என்கின்ற அறிகுறியானது உள்ளத்திலே பதிந்து இருந்தபோதிலும், விதியை யாராலும் விலக்க முடியாது என்கின்ற பெரியோர் வாசகம் -

பொருத்தமுளதே ஆகும்; (ஏனெனில்) (அது) அந்த விதி (எனைப்பிடியா) என்னைப் பிடித்து, நெருங்கிய கயிற்றால் அழுத்தமாகக் கட்டி பெரிய (குடம்) உடம்பிலுள்ள (சலதாரை) சாக்கடை வழியே வெளியிடத்தே (செல உருவாகி) - உருவாகிச் செல - உருவம் அடைந்து வெளிவரச் (செய்கின்றது) - (அதனால்) ஏற்படும்:-

(சதிகாரர்) மோசக் காரராகிய ஐம்புலன்களின் சேட்டைகளையும், (விடக்கதிலே) மாமிசத்திலே திரண்டு புழுப்போல நெளிவுண்டு, நெருப்பிற்பட்ட மெழுகுபோல உடலை உருக்குகின்ற (உபாதிகள்) வேதனைகளையும் நான் ஒழிக்க மாட்டேனோ!

உகாந்த காலத்தில் நெருப்பிலே புகை உண்டாகி வேகின்ற மாதிரியாய்க் கோப பாவனையைக் (குறிகளை) (இரக்க வந்தவரிடம்) காட்டிக், குகையில் (உலோகங்களை உருக்கும் கலத்திலே - பாத்திரத்திலே) புடமிட்டது போல (புடம் வைத்ததுபோல) உள்ளம் கொதிப்பைப் பெற்று வெளி வருவதால்

அழியாத நரகத்துக்கு இரையாகுபவர்களாகிய பலபேர்களின் வீட்டு வாசலண்டை போய், (அவர்கள்) எதிரே நின்று உள்ளம் வேதனைப்பட்டு மிகவும் குழைந்த நெஞ்சினனாய் அவர்களுடன் உறவு பூண்டு -

சேர்தலானது (சேரும் வினை) எனக்கு இனியேனும் ஒழிவதாக; நான் செப்பம் உற, உனது திருவருள் பெருகும் சிறந்த பாத மலர்களை எனக்குத் துணை செய்யும்படி தருவாயாக; குதிரையாம் மயிலையும் வேலையும் உடையவனே!

துதிமாதவர் சித்தர்ம கேசுரர்
அரிமால்பிர மர்க்கருள் கூர்தரு
**துறையூர்** நக ரிற்குடி யாய்வரு பெருமாளே.(2)

## திருநாவலூர்.

*(இது 'திருநாமநல்லூர்' என வழங்குகின்றது. பண்ணுருட்டிக்கு மேற்கு 11-மைல், உளுந்தூருக்குப் போகும் பாதை. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் திருஅவதாரம் செய்த ஸ்தலம்; அவருடைய பாடல் பெற்றது. ஸ்தல புராணம் உண்டு.)*

## 747. அகப்பொருள்

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான

கோல *மறை யொத்த மாலைதனி லுற்ற
கோரமதன் விட்ட கணையாலே-
கோதிலத ருக்கள் மேவுபொழி லுற்ற
கோகிலமி குத்த குரலாலே;
ஆலமென விட்டு வீசுகலை பற்றி
ஆரழலி றைக்கு நிலவாலே-
† ஆவிதளர் வுற்று வாடுமெனை நித்த
**மாசைகொட ணைக்க வரவேணும்;**
‡ நாலுமறை கற்ற Xநான்முகனு தித்த
நாரணனு மெச்சு மருகோனே-
நாவலர்ம திக்க வேல்தனையெ டுத்து
நாகமற விட்ட மயில்வீரா;
சேலெனும் விழிச்சி வேடுவர் சிறுக்கி
சீரணி தனத்தி லணைவோனே-
சீதவயல் சுற்று **நாவல்**தனி லுற்ற
தேவர்சிறை விட்ட பெருமாளே.(1)

---

* மறை - உருக்கரந்த வேடம் - மறைந்த வேஷம்-
"மறைவல்லன் மடவாய் யான்" - சிந்தாமணி 2027.

† மன்மதன் கணை, குயிலின் குரல், நிலவொளி - இவை காமம் கொண்டவர்க்கு வேதனை தருவன - (பாடல் 218 -பக்கம் 54)

‡ "மறைவல்ல நான்முகனும்" - சம்பந்தர் 3-54-10.

X "நான்முகனை நாராயணன் படைத்தான்" - இயற்பா - நான்முகன் திருவந்தாதி -1.

துதிக்கின்ற மகா தவசிகளும், சித்தர்களும் மகேசுரன், (அரி) இந்திரன், திருமால், பிரமா இவர்களுக்கெல்லாம் திருவருள் பாலிக்கும் பெருமாளே! **துறையூர்** நகரில் குடியாய் வந்து வீற்றிருக்கும் பெருமாளே!

(உபாதிகள் தவிர்வேனோ)

## திருநாவலூர்.

## 747.

**அ**ழகிய (மறை) உருக்கரந்த (மறைந்த) வேஷத்துடன் மாலைப் பொழுதில் வந்து சேர்ந்துள்ளவனும், (கோரம்) கொடுமை வாய்ந்தவனுமான மன்மதன் செலுத்தியுள்ள (புட்ப) பாணங்களாலும்,

(கோது இல தருக்கள்) குற்றம் - பயனின்மை இல்லாத - நல்ல செழிப்பான மரங்கள் பொருந்திய சோலையில் உள்ள குயிலின் பலமான குரலாலும் -

(ஆலம் என) விஷச் சுவாலைகளை எறிந்து வீசும் ஒளி மூலமாக நிறைந்து நெருப்பைப் பரப்பி இறைக்கின்ற நிலவாலும் -

ஆவியானது தளர்ச்சியடைந்து வாடுகின்ற என்னை தினந்தோறும் ஆசையுடனே அணைக்க வரவேணும்;

நான்கு வேதங்களையும் கற்ற பிரமனைத் தோற்றுவித்த நாரணனும் மெச்சுகின்ற மருகனே!

(நாவலர்) புலவர்கள் மதிக்கும்படி வேலாயுதத்தை எடுத்து (நாகம்) (கிரவுஞ்சமலை) பொடிபடச் செலுத்தின மயில் வீரனே!

சேல்மீன் போன்ற கண்ணை உடைய வேடுவப் பெண்ணின் சீரும் அழகும் கொண்ட கொங்கையில் அணைபவனே!

குளிர்ந்த வயல்கள் சூழ்ந்துள்ள **நாவலூரில்** வீற்றிருக்கும் பெருமாளே! தேவர்களைச் சிறையினின்றும் மீட்ட பெருமாளே!

(ஆசைகொ டணைக்க வரவேணும்)

## திருவெண்ணெய்நல்லூர்.

(திருவெண்ணெய் நல்லூர் ரோட் ஸ்டேஷனிலிருந்து வடக்கு 4 மைல் பண்ணுருட்டிக்கு மேற்கு 15-மைல். திருக்கோவலூருக்குப் போகும் பாதை. விழுப்புரம் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 12-மைல் திருக்கோவலூரி லிருந்து 14-மைல். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுடைய பாடல்பெற்றது.)

## 748. யோகநிலை

தனதன தத்தன தனதன தத்தன
தனதன தத்தன தனதன தத்தன
தனதன தத்தன தனதன தத்தன தனதான

பலபல தத்துவ மதனை யெரித்திருள்
பரையர ணப்படர் வடவன லுக்கிரை
படநட நச்சுடர் பெருவெளி யிற்கொள விடமேவிப்-
பவன மொழித் * திரு வழியை யடைத்தொரு
பருதி வழிப்பட விடல்கக னத்தொடு
பவுரி கொளச்சிவ மயமென முற்றிய பரமூடே;
கலகலெ னக்கழல் பரிபுர பொற்பத
வொலிமலி யத்திரு நடன மியற்றிய
கனக சபைக்குளி லுருகி நிறைக்கட லதில்மூழ்கிக்-
கவுரி மினற்சடை யரனொடு நித்தமொ
டனக † சகத்துவம் வருதலு மிப்படி
கழிய நலக்கினி நிறமென விற்றுட லருள்வாயே;
புலையர் ‡ பொடித்தளும் அமண ருடற்களை
நிரையில் கழுக்களி லுறவிடு சித்திர
புலவனெ னச்சில விருது படைத்திடு மிளையோனே-

---

* இருவழி யடைத்தலும் - நடனப்பதம் சேர்தலும்
- பாடல் 647-பக்கம் 514- மூலமும் கீழ்க்குறிப்பும்.

† 'சகத்துவம் வருதல்' - 'உலகத்தொரு நீயாகத் தோன்றும்'
நிலை - திருமுருகாற்றுப்படை - 294.

"உலகத்திடத்தே நீ ஒருவனுமே பிறர்க்கு வீடளித்தற்கு உரியையாய்க் கேடின்றித் தோன்றும்படி" - என்பது ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரை - பாடல் 173 பக் 398, 402 பார்க்க.

‡ சமணர் - திருநீற்றை விலக்குபவர்கள் -
"நீற்று மேனிய ராயினர் மேலுள்ள
காற்றுக் கொள்ளவும் நில்லா அமணரை" - சம்பந்தர் 3-108-8

# 748.

பலபல வான (தத்துவம் அதனை) தத்துவ சேஷ்டைகளையும், (எரித்திருள்) (இருள) - அஞ்ஞான இருளையும் (எரித்து) எரிசெய்து, (பரை) சிவபிரானது அருட்சத்தியே (அரணம்) - காவலாகப், (படர்) துக்கங்களை (வட அனலுக்கு இரைபட) வடவா முகாக்கினிக்கு இரையாகும்படி ஆக்கி, (நடனச்சுடர்) நடன ஜோதியை (பெருவெளியில்) பரந்த பராகாச வெளியிலே (கொள்) கண்டுகொள்ளும் படியாக, (இடம் மேவி)- (பொருந்திய இடத்தை) விந்து நாதம் கூடும் முகப்பிற் சேர்ந்து -

வாயுவை அடக்கி, (இருவழியை) இடைகலை, பிங்கலை என்னும் இரண்டு வழிகளையும் மாற்றி அடைத்து, (ஒரு பருதி வழிப்பட விடல்) ஒப்பற்ற சூரிய ஜோதியின் பிரகாச நிலையில் அமைந்து, (ககனத்தொடு) ஆகாய வெளியில், (பவுரிகொள) நடனம் கொள்ளச், சிவமயமாய் முற்றும் பரந்த பரவெளியில் -

கலகலென்று கழலும் சிலம்பும் அழகிய திருவடியில் ஒலி நிரம்பத் திருநடனம் இயற்றிய பொற்சபையில் உருகி நின்று (நிறைக்கடல்) நிறைந்த சுகானந்த கடலில் முழுகுவதால் -

(கவுரி) தேவி பார்வதி, மின்னல் ஒத்த சடையுடைய பரசிவன் இவரொடு - (அல்லது) (இவர்தம் திருவருளால்) எப்போதும் குற்றமற்ற (சகத்துவம்) "உலகத்தொரு நீயாகத் தோன்றும்" நிலை வந்து கூடவும், இவ்வாறு கழியும்படியான (நலக்கு) நன்மையால் இனி (நிறம்) புகழொளி (என் நவிற்று உடல்) எனக் கூறப்படும் உடலைத் தந்தருளுக, (புகழுடலே நிலைத்து நிற்குமாதலின்);

(புலையர்) இழிந்தோர், (பொடித்தளும்) திருநீற்றை விலக்கித்தள்ளும் (அமணர்) சமணர்களின் உடல்களை (நிரையில் கழுக்களில்) கழு நிரையில் - கழுமுனை வரிசைகளில் (உறவிடு) பொருந்தவிட்ட, சித்திர புலவன் என - விசித்திரமான - அல்லது, சித்திரகவி பாடவல்ல - புலமை கொண்டவன் எனச் சில வெற்றிச் சின்னங்களைப் பெற்ற இளையவனே!

புனமலை யிற்குற மகளய லுற்றொரு
கிழவ னெனச்சுனை தனில வளைப்புய
புளகித முற்றிபம் வரவனை யப்புணர்
மணிமார்பா;

மலைசிலை பற்றிய கடவு ளிடத்துறை
கிழவி யறச்சுக் குமரி * தகப்பனை
மழுகொடு வெட்டிய நிமலிகை பெற்றருள்
முருகோனே-

மகிழ்† பெணை யிற்கரை பொழில்முகில் சுற்றிய
**திருவெணெய் நற்பதி** புகழ்பெற அற்புத
‡ மயிலின் மிசைக்கொடு திருநட மிட்டுறை
பெருமாளே.(1)

## திருப்பாதிரிப்புலியூர்.

*(ரெயில்வே ஸ்டேஷன், கூடலூருக்கு வடக்கு 3-மைல். கெடில நதியின் தென்கரையி லுள்ளது. திருஞானசம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் இவர்களுடைய பாடல் பெற்றது. ஸ்தலபுராணம் உண்டு.)*

## 749. உபதேசம் பெற

தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன
தனதன தனன தனந்த தானன தனதான

நிணமொடு குருதி நரம்பு மாறிய
தசைகுடல் மிடையு மெலும்பு தோலிவை
நிரைநிரை செறியு முடம்பு நோய்படு முதுகாயம்-

நிலைநிலை யுருவ மலங்க ளாவது
நவதொளை யுடைய குரம்பை யாமிதில்
நிகழ்தரு பொழுதில் முயன்று மாதவ
முயவோரும்;

---

* தகப்பனை மழுகொடு வெட்டிய நிமலிகை - பிதாவாகிய (மதியாத) தக்கனை (வீரபத்திரரால்) மழுக்கொண்டு வெட்டுவித்த நின்மலி - பாடல் 390-பக்கம் 484-485 கீழ்க்குறிப்பு.

† 'பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர் அருட்டுறை" -சுந்தரர் தேவாரம் -7-1-1

‡ மயிலின் மிசை நட்டம்: திருவெண்ணெய் நல்லூரில் அருணகிரியார்க்கு (மயில்மேல்) நடன தரிசனத்தை முருகவேள் தந்தனர் என்பது இதனாற் பெறப்படும்.

(புனமலையில்) தினைப்புனம் உள்ள வள்ளி மலையில் (குறமகள்) வள்ளியின் (அயல் உற்று) பக்கத்திற் சென்று, ஒரு கிழவன் என - ஒரு கிழவன் என வேடம் பூண்டு, சுனையிலே அவளது புயத்தைப், புளகாங்கிதத்துடன், யானை வந்து எதிர்ப்பட, அணைந்து புணர்ந்த அழகிய மார்பனே!

(மலை) மேரு மலையை வில்லாகப் பிடித்த சிவபிரானது இடது பாகத்தில் இருக்கின்ற உரிமை வாய்ந்தவள், தருமமே புரியும் சுக குமாரி, பிதாவாகிய தகப்பனை - தக்கனை - மழுக்கொண்டு வெட்டுவித்த நின்மலி பெற்றருளிய குழந்தையே!

மகிழ்ச்சி தரும் பெண்ணை யாற்றின் கரையில் சோலையும் மேகமும் சூழ்ந்த **திருவெண்ணெய்** என்னும் நல்ல ஊரில் புகழ் விளங்க அற்புதகரமான மயிலின்மேல் வீற்றிருந்து திருநடனம் புரிந்து விளங்கும் பெருமாளே!

(நிறமெனவிற்றுடல் அருள்வாயே)

## திருப்பாதிரிப்புலியூர்.

## 749.

(**நி**ணம்) மாமிசத்தொடு ரத்தம், நரம்பு இவை, கலந்துள்ள சதை, குடல், நெருங்கியுள்ள எலும்பு, தோல், இவை வரிசை வரிசையாக நெருங்கியுள்ள உடம்பு, நோய் உண்டாகும் பழைய உடல் -

அந்த அந்த நிலைக்கு ஏற்ப (வயதுக்குத் தக்கபடி) உருவமும் (மலங்களும்)- உடல் மாசுகளும் உண்டாவதும், ஒன்பது தொளைகளை உடைய (குரம்பையாம் இதில்) சிறு குடிலாகிய இந்த உடலில் (நிகழ்தரு பொழுதில்) இந்த உயிர் உலவும் பொழுதே - உயிருடன் இருக்கும்போது - வேண்டிய முயற்சிகளைச் செய்து (மாதவம்) சிறந்த தவங்களை - (உய) உய்யும் பொருட்டு, (ஒரும்) உணரும்

உணர்விலி செபமுத லொன்று தானிலி
நிறையிலி முறையிலி யன்பு தானிலி
உயர்விலி யெனினுமெ னெஞ்சு தா* னினை
வழியாமுன்-
ஒருதிரு † மரகத துங்க மாமிசை
யறுமுக மொளிவிட வந்து நான்மறை
யுபநிட மதனைவிளங்க நீயருள் புரிவாயே;
புணரியில் விரவி யெழுந்த ‡ ஞாயிறு
விலகிய புரிசை யிலங்கை வாழ்பதி
பொலமணி மகுட சிரங்கள் தாமொரு பதுமாறிப்-
புவியிடை யுருள முனிந்து கூர்கணை
யுறுசிலை வளைய வலிந்து நாடிய
புயலதி விறலரி விண்டு மால்திரு மருகோனே;
அணிதரு கயிலை நடுங்க வோX ரெழு
குலகிரி யடைய இடிந்து தூளெழ
அலையெறி யுததி குழம்ப வேல்விடு முருகோனே-
O அமலைமு னரிய தவஞ்செய் பாடல
வளநகர் மருவி யமர்ந்த தேசிக
அறுமுக குறமக ளன்ப மாதவர் பெருமாளே. (1)

---

* நினைவு அழியாமுன் - இறந்து படுமுன் நினைவு அழிதல் -
"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட்டு" -சம்பந்தர் I 130-1.
'ஒன்பது வாசல் வைத்தாய் ஒக்க அடைக்கும்
போது உணர மாட்டேன்' - அப்பர் 6-99-1.
† மரகத துங்கமா - மயில்.
‡ ஞாயிறு விலகிய புரிசை இலங்கை: பாடல் 426-பக்கம் 572 கீழ்க்குறிப்பு பாடல் 1184-ம் பார்க்க.
X மலை ஏழு; கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி அன்றிக் கந்த மாதனங் கூட்டி எட்டெனவும் படும்.
O "நற்றவம் உமையாள் நங்கை பாதிரி நீழல் தங்கிப் புரிதவம் பகர்தலுற்றாம்".
'ஏடவிழ்ந்தலர் பாதிரி யின்னிழல்....
'எண்ணருந்தவம் செய்தனள் யாவரும்
கண்ணருஞ் சிவன் தன்னருள் காணவே'
- திருப்பாதிரிப் புலியூர்ப் புராணம்.
- தேவி பாடலவனம் - சருக்கம் 36 தேவி தவ சருக்கம் 1, 2.

உணர்ச்சி இல்லாதவன் (நான்), ஜெபம் முதலான ஒரு நல்லொழுக்கமும் இல்லாதவன் (நான்), (நிறையிலி) - காப்பன காத்துக் கடிவன கடியும் ஆண்மைக் குணம் இல்லாதவன் (நான்), (முறையிலி) ஒழுக்கம் இல்லாதவன் (நான்), அன்புகூட இல்லாதவன் (நான்), மேன்மைக்குணம் இல்லாதவன் (நான்)- இவ் வண்ணம் (பல குறைகள் என்னிடம் இருப்பினும்)- என் நெஞ்சு நினைவு என்பதை இழக்கு முன்னரே -

ஒப்பற்ற அழகிய பச்சை நிறமுடைய உயர்ந்த மயில் என்னும் குதிரைமேல், (உனது) ஆறு திருமுகங்களும் (ஒளிவிட) பிரகாசிக்க (நீ எதிர்) வந்து, நான்கு வேதங்கள், உபநிஷத்துக்கள் ஆகிய இவைகள் எனக்கு விளங்கும்படி நீ அருள்புரிவாயாக.

கடலிற் கலந்து படிந்து எழுகின்ற சூரியன் அஞ்சி விலகும் மதில்களை உடைய இலங்கையில் வாழ்ந்த தலைவன் ராவணனுடைய பொன்மய ரத்னமகுடங்கள் அணிந்திருந்த தலைகள் ஒரு பத்தும் நிலை பெயர்ந்து (அறுபட்டு)

பூமியில் உருளும்படிக் கோபித்துக் கூரிய அம்புகள் பொருந்திய, கையிலிருந்த, வில்லை வளைத்து, முயற்சி எடுத்துக்கொண்டு தேடிச் சென்ற மேகநிறத்துப் பெருமான், மிக்க வீரம் வாய்ந்த அரி, விண்டு, மால் எனப் பெயர்கள் கொண்ட திருமாலின் அழகிய மருகனே!

அழகுள்ள கயிலைமலையும் நடுங்க, (ஒரெழு குலகிரி) மலை ஏழு அல்லது (1 + 7) அஷ்ட குலகிரிகள் எல்லாம் இடிந்து தூள்பறக்க, அலை வீசும் கடல் குழப்பங் கொள்ள வேல்விடு முருகனே!

தேவி முன்பு அரிய தவஞ் செய்த தலமாகிய பாடல வள நகரில் (**திருப்பாதிரிப் புலியூரில்**) பொருந்தி வீற்றிருக்கும் தேசிக மூர்த்தியே! அறுமுகனே! (குறமகள்) வள்ளியின் அன்பனே! பெரிய தவசிகளின் பெருமாளே!

(உபநிடமதனை விளங்க நீ அருள் புரிவாயே)

## திருமாணிகுழி.

(இந்த ஸ்தலம் திருப்பாதிரிப்புலியூருக்கு 4- மைல் தூரத்திலுள்ளது. மாணி - பிரமசாரி உருவம் கொண்ட வாமனர் பூசித்த தலம் "பண்டு வாமனனாய் மண்ணிரந்த செங்கணவன் வழிபட்ட திருமாணிகுழி" - பெரிய புரா - தடுத்தாட் 90. திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

## 750 . தியானிக்க

தனத்த தானன தானான தானன
தனத்த தானன தானான தானன
தனத்த தானன தானான தானன தந்ததான

மதிக்கு நேரெனும் வாண் *மூகம் வான்மக
நதிக்கு மேல்வரு சேலேனு நேர்விழி
மணத்த வார்குழல் மாமாத ராரிரு கொங்கைமூழ்கி-
மதித்த பூதர மாமாம னோலயர்
செருக்கி மேல்விழ நாடோறு மேமிக
வடித்த தேன்மொழி வாயூற லேநுகர்
பண்டநாயேன்;
பதித்த நூபுர சீர்பாத மாமலர்
† படைக்குள் மேவிய சீராவொ டேகலை
‡ பணைத்த தோள்களொ டீராறு தோடுகள்
தங்குகாதும்-
பணிக்க லாபமும் வேலோடு சேவலும்
வடிக்கொள் சூலமும் வாள்வீசு நீள்சிலை
படைத்த வாகையு நாடாது பாழில்ம யங்கலாமோ;
கதித்து மேல்வரு மாசூரர் சூழ்படை
நொறுக்கி மாவுயர் தேரோடு மேகரி
கலக்கி யூர்பதி தீமூள வேவிடும் Xவஞ்சவேலா-

* மூகம் - முகம்.

† இதனால் "சீரா" என்பது ஒரு படை எனத் தெரிகின்றது. அது "உடைவாள்" , "சீராவினால் அறுத்தறுத் தொதுக்கிய பெருமாளே"- திருப்புகழ் 1132. 'கட்டிய சீராவும்', 'அரையிற் கட்டும் சீராவும்'- கந். அலங்காரம் - 27, 81.

‡ இங்ஙனம் தோள்கள் முதலியவற்றை நாட விரும்பிய தம்முடைய வேண்டுகோளின் படியே, பின்னர் "ரகைஷதரு சிற்றடியு முற்றிய பன்னிருதோளும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பு"- (விநா-துதி-3) என அருணகிரியார் அநுக்கிரகிக்கப் பட்டார் (Xதொடர்ச்சி - பக்கம் 237)

# 750.

சந்திரனுக்கு ஒப்பு என்று சொல்லும்படியான ஒளி பொருந்திய முகம், சிறந்த மகா நதியாகிய (அல்லது ஆகாய மகா நதியாகிய கங்கையிலே உலாவும் சேல் என்று கூறும்படியான கண், நறுமணமுள்ள நீண்ட கூந்தல் - இவைதமை உடைய அழகிய மாதர்களின் இரண்டு கொங்கைகளிலே முழுகி -

மதிப்பு வைத்திருந்த (பூதரம் ஆம் ஆம்) மலைகளே இவையாகும், ஆகும் என்று (மனோலயர்) அவைகளிலே மனம் லயப்பட்டவராய்ச் (செருக்கி) பெருமிதம் உற்று அவைதம் மேல் விழுந்து, நாள்தோறும் மிக நன்றாக வடித்தெடுக்கப்பட்ட தேன் போன்ற மொழியும், வாயிதழ் ஊறலுமே அநுபவிக்கின்ற (பண்டம்) ஒரு பொருளாகிய நாயனைய அடியேன் -

(பதித்த நூபுரம்) (நூபுரம்) சிலம்பு சூழ்ந்துள்ள சீரான பாதமாம் சிறந்த மலரும், ஆயுதங்களுள் ஒன்றாகப் பொருந்திய சீரா (உடைவாளும்), (கலை) ஒளி கொண்ட, பருத்த தோள்களோடு, பன்னிரண்டு (தோடுகள்) காதணிகள் தங்கி விளங்கும் காதுகள்-

பாம்பை அடக்கும் மயிலும், வேலும், சேவலும், கூர்மைகொண்ட சூலாயுதமும், ஒளி வீசுகின்ற நீண்ட வில்லைப்பிடித்த வெற்றியையும் நான் விரும்பித் தியானிக்காது பாழான எண்ணங்களிலும் செய்கைகளிலும் மயக்கம் கொள்ளலாமா! (கொள்ளலாகாது என்றபடி)

கொதித்து மேலெழுந்து வருகின்ற பெரிய சூரர்கள் சூழ்ந்துள்ள சேனைகளைப் பொடியாக்கியும் குதிரைகள், பெரிய தேர்கள், யானைகள் இவைகளைக் கலக்கியும், ஊர்களையும் நகரங்களையும் தீ மூண்டு எரியும்படிச் செலுத்தின வஞ்சகங்கொண்ட வேலனே!

---

(236-ஆம் பக்கம் - தொடர்ச்சி)

X " வஞ்சவேல்" - வேல் - அடியார்களுக்கு நிழலாகவும் பகைவர்க்குத் தழலாகவும் இருக்கும் - இதுவே இறைவன் தன்மை; 'வாரமதாம் அடியார்க்கு வாரமாகி, வஞ்சனை செய்வார்க் கென்றும் வஞ்சனாகும் சீரரசை" என்றார் அப்பர் - (6-86-4). " வஞ்சவேல் கொடு முனிபவ" என்றார் பிறிதோரிடத்து (திருப்புகழ் 773)

களித்த பேய்கண மாகாளி கூளிகள்
திரட்பி ரேதமெ லேமேவி மூளைகள்
கடித்த பூதமொ டேபாடி யாடுதல் கண்டவீரா;
குதித்து வானர மேலேறு தாறுகள்
குலைத்து *நீள்கமு கூடாடி †வாழைகொள்
குலைக்கு மேல்விழ வேரேறு போகமும் வஞ்சிதோயுங்-
குளத்தி லூறிய தேனூறல் ‡மாதுகள்
குடித்து லாவியெ சேலோடு Xமாணிகொள்
குழிக்குள் மேவிய வானோர்க ளேதொழு
தம்பிரானே. (1)

## திருவேட்களம்.

(சிதம்பரத்திற்குக் கிழக்கு 2-மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் இவர்களுடைய பாடல் பெற்றது)

## 751. மறவேன் என்றது

தனனத்தன தாத்தன தானன
தனனத்தன தாத்தன தானன
தனனத்தன தாத்தன தானன தனதான

Oசதுரத்தரை நோக்கிய பூவொடு
கதிரொத்திட ஆக்கிய கோளகை
தழையச்சிவ பாக்கிய நாடக அநுபூதி-
சரணக்கழல் காட்டியெ னாணவ
மலமற்றிட வாட்டிய ஆறிரு
சயிலக்குல மீட்டிய தோளொடு முகமாறுங்;

---

* கமுகங்குலை அற்று வாழைக்குலைமேல் விழுதல் -
"கமுகின் எற்றி வாழைப்பழங்கள் சிந்தும் ஏமாங்கதம்"
-சிந்தாமணி 31.
'தெங்கம்பழம் கமுகின்குலை சாடிக் கதலி செற்று"
- திருக்கோவை -100.
- பாடல் 672 பக்கம் 48 கீழ்க்குறிப்பும் பார்க்க.

† "வாளைகள்" என்றும் பாடம்.

‡ மாதுகள் - மிகுந்த மகரந்தங்கள்.

X "வாளைகள் குதித்துலாவிய வேளூரில் மேவிய தம்பிரானே"
"வாளைகள் குதித்துலாவிய வேலூரில் மேவிய தம்பிரானே"
- என்றும் பாடங்கள்.

O மூலாதார கமலம் - 'ஆசை நாலு சதுரக் கமலம்'
என்றார் 439-ஆம் பாடலில்.

மகிழ்ச்சிகொண்ட பேய்க்கூட்டங்களும், பெரிய காளியும், கூளிகளும் (பெருங்கழுகுகளும்) திரண்டுகிடக்கும் பிணங்களின் மேலே விழுந்து, அப் பிணங்களின் மூளைகளைக் கடித்துத்தின்ற பூதங்களோடே, பாடி ஆடுதலைக் கண்ட வீரனே!

குதித்து, குரங்குகள் மேலே உள்ள குலைகளைக் குலைத்து நீண்ட கமுக மரங்களினிடையே ஊடாடுவதால், (குதித்து விளையாடுவதால்) அக் கமுகங்குலைகள் அறுபட்டு வாழைக்குலைகள் மேல் விழும்படியான அழகுநிறை செழுமையையும், பெண்கள் குளிக்கும் (அல்லது (பூக்) கொடிகளைக் கொண்டுள்ள)

குளத்திலூறி உள்ள (மலர்த்) தேன்களின் சாரத்தையும் மிகுந்த மகரந்தங்களையும் உண்டு உலாவுகின்ற மீன்கள் ஓடுதலையும் உடைய (மாணி கொள் குழிக்குள்) **திருமாணிகுழி** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் (தம்பிரானே)! தேவர்களும் தொழுகின்ற தம்பிரானே!

(*பாழில் மயங்கலாமோ*)

## திருவேட்களம்.

## 751.

**நா**ன்கிதழ் கொண்டதாய், தரையின் நான்கு திசைகளையும் நோக்கியதாய் உள்ள பூவொடு (மூலாதார கமலம் முதல்) கதிரொத்திட ஆக்கிய கோளகை - முச்சுடர்களால் ஆன மண்டலங்கள் (அக்கினியாதி மும்மண்டலங்கள் வரையில்) - ஆறாதார நிலைகளெல்லாம் - குளிர்ந்து தழைய சிவப்பேற்றைத் தருவதான நாடக (அநுபூதி) பெரும்பேறு ஆகிய

திருவடிக் கழலை (அடியேனுக்குக்) காட்டி என்னுடைய ஆணவமலம் (யான் எனது எனும் அகங்காரம்) (அற்றிட) தொலைந்து போம் வண்ணம் அதை (வாட்டிய) கெடுத்து ஒழித்த உனது பன்னிரண்டு (சயிலக்குலம்) குலசயிலம் - சிறந்த மலைகள் போன்ற தோள்களையும் (முகமாறும்) ஆறுமுகங்களையும்,

கதிர்சுற்றுக நோக்கிய பாதமு
மயிலிற்புற நோக்கிய னாமென
கருணைக்கடல் காட்டிய கோலமும் அடியேனைக்-
கனகத்தினு நோக்கினி தாயடி
யவர்முத்தமி ழாற்புக வேபர
கதிபெற்றிட நோக்கிய பார்வையு *மறவேனே;

சிதறத்தரை நாற்றிசை பூதர
நெரியப்பறை மூர்க்கர்கள் மாமுடி
சிதறக்கட லார்ப்புற வேயயில் விடுவோனே-
சிவபத்தினி † கூற்றினை மோதிய
பதசத்தினி ‡ மூத்தவி நாயகி
XசெகOமிப்படி தோற்றிய பார்வதி யருள்பாலா

**விதுரற்கும ராக்கொடி யானையும்
விகடத்துற வாக்கிய மாதவன்
விசையற்குயர் தேர்ப்பரி யூர்பவன் மருகோனே-

---

* முதல் நான்கு அடிகள் அருணகிரியாரின் வரலாற்றைக் குறிக்கும்.

† யமனை உதைத்த திருவடி - இடது திருவடி - தேவியின் திருவடி - "சிதைத்தான் வாமச் சேவடி தன்னால்" - கந்தபுரா.... மார்க்கண் (2-5-253). 'கூற்றுவனைக் காய்ந்த அபிராமி' .. 'கூற்று மரித்திடவே உதை பார்வதி' - திருப்புகழ் 760. 789 (பாடல் 93-ம் பார்க்க).

‡ 'கறைக் கண்டனுக்கு மூத்தவளே'- அபிராமி அந்தாதி 13, 'சத்திதான் சிவத்தை யீன்றும்' - சிவஞான சித்தியார் சுபக். 167.

X தேவி -- செகங்களைத் தோற்றுவித்தது
- திருப்புகழ் 267பக்கம் 164.

O இப்படி -- பாடல் 33 பக்கம் 97 கீழ்க்குறிப்பு.

** விதுரனுக்கும் துரியோதனனுக்கும் மனம் வேறுபடக் (கண்ணபிரான்) வைத்த வரலாறு:-

பாண்டவர்களுக்கு உரிய பாகத்தைத் துரியோதனனிடம் கேட்கும் பொருட்டு தூது சென்ற கண்ணபிரான் துரியோதனனுடைய மாளிகையில் தங்காமல் விதுரனுடைய இல்லத்தில் தங்கினார். ராஜ சபையில் துரியோதனன் தனது சிறிய தந்தை விதுரரை இகழ்ந்து, 'என் வீட்டில் உண்டியை மறுத்தவனுக்கு நீ அமுதளித்தாய்; நீ தாசிமகன் தானே; என்னுடைய அன்னத்தை அருந்திப் பாண்டவர் மீது அன்பு கொண்டுள்ளாய்' எனப் பேசினான். விதுரர் வெகுண்டு 'இங்ஙனம் பேசிய உன் வாயைத் துணிப்பன். ஆயினும் பொறுக்கின்றேன். நாளை நடக்கும்

ஒளி சுற்றிலும் பரவி (ஆன்மாக்களைப்) பாதுகாக்கின்ற திருவடியும், (மயிலின்புறம்) மயில்மேலிருந்து (நோக்கியனா-மென) பாதுகாக்கின்றவனாம் என வந்து (உனது) கருணைக்கடலைக் காட்டி அருளிய திருக்கோலத்தையும், அடியேனைப்

பொன்னினும் இனிமையான பார்வையுடனே அடியார்கள் (யான்பாடும்) முத்தமிழ்கொண்டு பாடிக் (கதி) புகவும், அல்லது அடியவர் பாடும் முத்தமிழ்கொண்டு யான் பாடிப் புகவும் (அடியேன்) மேலான நற்கதியைப் பெறவும், கடாக்ஷித்துப்பார்த்த பார்வையையும் மறவேன்;

தரை சிதற - பூமி அதிர, நாலு திசைகளிலுள்ள மலைகள் நெரிந்து பொடிபடப் பறையடித்துவந்த மூர்க்க அசுரர்களின் பெரியமுடிகள் சிதறுண்டு விழக், கடல் ஒலி செய்து வாய்விட, வேலைச் செலுத்தினவனே!

சிவனது பத்தினியும், எமனை உதைத்த பாதங்களைக் கொண்ட சக்தி வாய்ந்தவளும், யாவர்க்கும் மூத்தவளும், (விநாயகி) தடைகளை (இடர்களை) நீக்குபவளும், அண்டங்களை இவ்வாறு சிருஷ்டித்தவளுமாகிய பார்வதி அருளிய குழந்தையே!

விதுரனுக்கும், (அரவுக்கொடி) பாம்புக்கொடி கொண்ட துரியோதனனுக்கும் (விகட) வேறுபடும்படியான (துறவை) பிரிவினை (அல்லது விடகத்து உறவை) (மனம் வேறுபட்ட உறவை) (ஆக்கிய) உண்டு பண்ணின (இருவர் உறவையும் பேதப்படுத்தின) (மாதவன்) கண்ணபிரான், அருச்சுனனுடைய பெரிய தேர்க்குதிரைகளைப் (பார்த்தசாரதியாய்)ச் செலுத்தினவன் ஆகிய திருமாலின் மருகனே!

---

*(240ம் பக்கம் தொடர்ச்சி)*

போரில் அறமே வெல்லும். இதோ என்னுடைய ஒப்பற்ற வில்லையும் ஒடித்துத் தள்ளுகின்றேன்' எனக் கூறி ஒடித்தெறிந்தார்.

"வசையென்னை நீ சொன்னவாய் குருதி சோர வாள்கொடு" "துணிப்பன் யான்" ** இனிச் சமரில் நின்று வெங்கணை தொடேன் எனா வில்லிரண்டினும் உயர்ந்த வில்லதனை வேறிரண்டு பட வெட்டினான்". *(வில்லி. கிருஷ்ணன் தூது - 129-131.)*

வெளியெட்டிசை *சூர்ப்பொரு தாடிய
கொடிகைக்கொடு கீர்த்தியு லாவிய
விறல்மெய்த்திரு வேட்கள மேவிய பெருமாளே.(1)

## 752. ஆசை அற

தாத்தன தானன தாத்தன தானன
தாத்தன தானன தனதான

† மாத்திரை யாகிலு நாத்தவ றாளுடன்
வாழ்க்கையை நீடென மதியாமல்-
மாக்களை யாரையு மேற்றிடு சீலிகள்
மாப்பரி வேயெய்தி அநுபோக;
பாத்திர மீதென மூட்டிடு மாசைகள்
பாற்படு ஆடக மதுதேடப்-
பார்க்கள மீதினில் மூர்க்கரை யேகவி
பாற்கட லாளென வுழல்வேனோ;
‡ சாத்திர மாறையு நீத்தம னோலய
X சாத்தியர் மேவிய பதவேளே-

* சூரனுடைய இருபிளவில் ஒரு பிளவு சேவலாகி வர முருகவேள் அதனைக் கொடியாக நியமித்தனர்.

"மாறிவரு சேவற் பகையைத் திறல் சேர் பதாகை என மேவத் தனித்துயர்த்த மேலோனே"- கந்தர் கலி வெண்பா.

"பசுந்தழைத் தோகையும் செஞ்சிறைச் சேவலும் தாங்கியும் மலர்க்கரம் தங்கியும் நிலைத்த பேரொளி மேனியன்" - கல்லாடம் 75.

† இதனால் அருணகிரியார் பொது மகளிரையே விலக்குதல் வேண்டும் என்றனர் என்பதும், இல்லற மகளிரைப் போற்றுகின்றனர் என்பதும் தெளிவாக ஏற்படுகின்றன.

‡ சாத்திரம் ஆறு: வேதாந்தம், வைசேடிகம், பாட்டம், பிரபாகரம், பூருவமீமாஞ்சை, உத்தர மீமாஞ்சை, *(1)* **வேதாந்தம்** உபநிடதம்; *(2)* **வைசேடிகம்** - கணாதரால் தாபிக்கப்பட்ட மதம் (கணாதமதம்); தர்க்க சாஸ்திரம்: பொருள் நிச்சயம் பண்ணுதற்கு உபகாரமாயுள்ளது; *(3)* **பாட்டம்** குமாரில பட்டரால் பிரசாரம் செய்யப்பட்ட பூர்வ மீமாஞ்சை மதம்; வேதமே தெய்வமென்று ஏற்படுத்திய மதம்; *(4)* **பிரபாகரம்** - பிரபாகரன் என்பவனால் பிரசாரஞ் செய்யப்பெற்ற மீமாஞ்ச மதவகை; (மீமாஞ்சை-பூர்வமீமாஞ்சை உத்தர மீமாஞ்சை என்ற இரு பிரிவினையுடையதாய் வேத வேதாந்தப் பொருள்களை விசாரித்தற்குக் கருவியாயுள்ள சாஸ்திரம் - வேதார்த்தம் இது என்று நிச்சயித்துக் கூறும் நியாய சாஸ்திரம்); *(5)* **பூருவ மீமாஞ்சை**. மீமாஞ்சையின் முற்பகுதி வேதத்திற் கரும காண்ட

வெளியிலே எட்டுத் திசைகளிலும் சூரனாய் நின்று சண்டைசெய்து (சேவலாய் மாறி நின்ற - கொடியைக் கையிலேந்திப் புகழ் விளங்க உலவின பெருமாளே! வெற்றியும் சத்தியமும் விளங்கும் பெருமாளே! **திருவேட்களம்** எனும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

*(தோள், முகம் ஆறு, பாதம், கோலம், பார்வை மறவேன்)*

## 752.

**ஒ**ரு சிறிய அளவுகூட வாக்கு தவறாத (மனைவியுடன்) நடத்தும் (இல்லற) வாழ்க்கையைப் பெரிதென மதிக்காமல் -

(அறிவுகெட்ட) பேர்வழிகள் யாராயிருந்தாலும் அவர்களை எல்லாம் ஏற்று அனுபவிக்கும் ஒழுக்கத்தை உடைய (பொது மாதர்களின்மீது) மிக்க அன்பைப் பூண்டு (அவர்களை) அனுபவிக்கும் -

பாத்திரம் இவன் என்று (பிறர்கூற), மூண்டு எழுகின்ற ஆசைகளிலே ஈடுபட்டு, (ஆடகம்) பொன் (பொருள்) அதைத் தேட -

பூமியிடத்தேயுள்ள மூர்க்கர்களை (உலோபிகளையே) எனது பாடலில், பாற்கடலிற் (பள்ளி கொண்டிருக்கும்) திருமாலே இவன் என்று புகழ்ந்து திரிவேனோ!

ஆறு சாஸ்திரங்களையும் கடந்து மனம் லயப்பட (மனவேகம் ஒடுங்கும்படி) வைத்த சாமர்த்தியம் உள்ளவர்கள் (மனோலயம் சாத்தியம் ஆகும்படி செய்த பெரியோர்கள்) விரும்பிப் போற்றும் திருவடிகளை உடைய வேளே!

---

(242-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆராய்ச்சி பற்றிச் சைமினி முநிவர் இயற்றிய சாஸ்திரம். (6) **உத்தர மீமாஞ்சை**. வேதத்தின் பிற்பகுதியான ஞானகாண்ட விசாரணைச் சாத்திரம் (பிரமசூத்திரம் முதலிய நூல்கள். பிரமசூத்திரம் - வேதாந்த சூத்திரம் - வேத வியாசரால் செய்யப்பட்ட நூல்)

× **சாத்தியர்**. தேவருள் ஒருவகையினரும் 'சாத்தியர்' எனப்படுவர், "விசுவதேவர் வசுக்கள் **சாத்தியராதி** விண்ணவர்"

சேது புராணம் - கலிதீர்த்த - 7.

தாத்தரி தாகிட சேக்கெனு மாநட
தாட்பர னார்தரு குமரேசா;

*வேத்திர சாலம தேற்றிடு வேடுவர்
† மீக்கமு தாமயில் மணவாளா-
வேத்தம தாமறை யார்த்திடு சீர்திரு
வேட்கள மேவிய பெருமாளே.(2)

## திருநெல்வாயில்.

(இது சிவபுரி என வழங்கும். சிதம்பரத்துக்குத் தென்கிழக்கு 3-மைல் திருஞான சம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது)

## 753. அருள் வேண்டுதல்

தனன தானன தானனாத் தனந்த
தனன தானன தானனாத் தனந்த
தனன தானன தானனாத் தனந்த தனதான

அறிவி லாதவ ரீனர்பேச் சிரண்டு
பகரு நாவினர் லோபர்தீக் குணங்க
ளதிக பாதகர் மாதர்மேற் கலன்கள் புனை ‡ யாதர்-

அசடர் பூமிசை வீணராய்ப் பிறந்து
திரியு மானுடர் பேதைமார்க் கிரங்கி
யழியு மாலினர் நீதிநூற் பயன்கள் தெரியாத;

நெறியி லாதவர் சூதினாற் கவர்ந்து
பொருள்செய் பூரியர் மோகமாய்ப் ப்ரபஞ்ச
நிலையில் வீழ்தரு மூடர்பாற் சிறந்த தமிழ்கூறி-

நினைவு பாழ்பட வாடிநோக் கிழந்து
X வறுமை யாகிய தீயின்மேற் கிடந்து
நெளியு நீள்புழு வாயினேற் கிரங்கி யருள்வாயே;

---

*வேத்திர சாலம் - அம்புக் கூட்டம்.

† மீக் கமுது - மிக்க அமுது.

‡ ஆதர் - அறிவிலார்.

X இது அருணகிரிநாதரின் அடிநாள் வரலாற்றைக் குறிக்கும்.

'தாத்தரிதாகிட சேக்' என்று சிறந்த நடனம் செய்கின்ற திருவடிகளை உடைய சிவபிரான் தந்த குமரேசனே!

அம்புக் கூட்டங்களைக் கொண்டு திரியும் வேடர்களின் மிக்க அமுதன்ன மயில் இயல் வள்ளியின் மணவாளனே!

(வேத்தமதாம்) - வேத்தியமதாம் - அறியப் படுவதான வேதங்கள் ஒலிசெயும் சீரான **திரு வேட்களத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(உழல்வேனோ)

## திருநெல்வாயில்.

## 753.

**அ**றிவு இல்லாதவர்கள், (ஈனர்) இழிவானவர்கள், பேச்சு இரண்டு பேசும் நாவினை உடையவர்கள் (சொன்ன சொற்களை மாற்றுபவர்கள்), உலோபிகள், கெட்ட குணங்களையே கொண்டு மிக்க பாபச் செயல்களைச் செய்பவர்கள், மாதர்களுக்கு (பொது மகளிருக்கு) ஆபரணங்களைப் புனைந்து பார்க்கும் அறிவிலிகள், -

அசடர்கள், பூமியில் வீண்காலம் போக்குபவர்களாய்ப் பிறந்து திரிகின்ற மனிதர்கள், பெண்கள்மீது (காம) இரக்கம் கொண்டு அழிந்துபோகும் ஆசை மனத்தினர்கள் நீதி நூல்களின் பயன்களை அறியாதவராய் -

நன்னெறியிற் போகாதவர்கள், சூதாட்டத்தால் சூதினால் பொருள் கவர்ந்து அப் பொருளைச் சேகரிக்கும் (பூரியர்) கீழ் மக்கள், ஆசைப் பெருக்கால் உலக நிலையையே (உலக இன்பத்தையே) விரும்பும் மூடர்கள் - இத்தகையோரிடம் சென்று நல்ல தமிழ்ப் பாடல்களை பாடிக்காட்டி -

நினைவு தேய்ந்து பாழாக, வாட்டமுற்று, கண்பார்வையும் மங்கிப்போய், 'தரித்திரம்' என்கின்ற நெருப்பிலே கிடந்து நெளிகின்ற பெரிய புழுப்போல ஆன என்மீது இரங்கி - இரக்கங்கொண்டு அருள்புரிவாயாக.

நறிய வார்குழல் வானநாட் டரம்பை
மகளிர் காதலர் தோள்கள்வேட் டிணங்கி
நகைகொ *டேழிசை பாடிமேற் பொலிந்து களிகூர-
நடுவி லாதகு ரோதமாய்த் தடிந்த
தகுவர் மாதர்ம ணாளர்தோட் பிரிந்து
நசைபொ றாதழு தாகமாய்த் தழுங்கி யிடர்கூர;
மறியு மாழ்கட லூடுபோய்க் கரந்து
† கவடு கோடியின் மேலுமாய்ப் பரந்து
வளரு மாவிரு கூறதாய்த் தடிந்த வடிவேலா-
மருவு காளமு கீல்கள்கூட் டெழுந்து
மதியு லாவிய மாடமேற் படிந்த
வயல்கள் மேவு நெல் வாயில்வீற் றிருந்த
பெருமாளே.(1)

## விருத்தாசலம்.

'திருப்புகழ்' எண் 234 பாடலையும் இத்தலத்துக்கு உரியதாகக் கொள்ளலாம்.

(ரெயில்வே ஸ்டேஷன், விழுப்புரத்துக்குத் தென்மேற்கு 34-மைல்; கூடலூருக்குத் தென்மேற்கு 35-மைல். சிதம்பரத்திலிருந்து 28-மைல், மூவர் தேவாரமும் பெற்ற முதுநகர். ஸ்தல புராணம் உண்டு.)

## 754. விலைமாதர்களின் உறவு அற

தனத்தானன தானன தானன
தனத்தானன தானன தானன
தனத்தானன தானன தானன தனதான

குடத்தாமரை யாமென வேயிரு
தனத்தார்மதி வாணுத லாரிருள்
குழற்காடின மாமுகில் போல்முது கலைமோதக்-

*ஏழிசை - குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்; சத்த சுரம்; ஷட்ஜம், இடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதம் (ச ரி க ம ப த நி).

† சூரன் பல கிளைகளை உடைய மாமரமாய் கடல் நடுவில் கவிழ்ந்து நின்றான்.

'கவடு கோத்தெழும் உவரி மா' - திருப்புகழ் 1062.

'துன்னு பல் கவடு போக்கிச் சூதமாய் அவுணன் நின்றான்.

(தொடர்ச்சி பக்கம் 247) கந்த புராணம் 4-13-468.

நறுமணங்கொண்ட நீண்ட கூந்தலை உடைய தேவலோகத்து அரம்பை மகளிர் தத்தம் காதலர்களுடைய தோள்களை விரும்பிப் பொருந்திக் களிப்புச் சிரிப்புடனே ஏழிசை பாடியும் குதூகலித்து மகிழ்ச்சி பொங்கவும் -

நடுநிலைமை (நியாயம்) இல்லாதவராய், (குரோதமாய்) கோபம் மிக்கவராய், (தடிந்த) அழிதொழிலைச் செய்த அசுரமகளிர் தங்கள் கணவர்களின் தோள்களைப் பிரிந்து, தங்கள் ஆசையை அடக்கமுடியாமல் அழுது தங்கள் தேகத்தை ஒறுத்துத் துன்பம் கொண்டு வருத்தமே பெருகவும் -

(மறியும்) அலைகள் கிளர்ந்து எழும் ஆழ்கடலின் உள்ளே சென்று மறைந்து கிளைகள் கோடிக்கணக்கின் மேலாக விரிந்து வளர்ந்த (சூரனாம்) மாமரம் இரண்டு கூறாகும்படி வெட்டிப் பிளந்த கூரிய வேலாயுதனே!

பொருந்திய கருமேகங்கள் கூட்டமாய் எழுந்து, நிலவு உலவுகின்ற மாடங்களின் மேற் படிகின்ற திருநெல்வாயிலில், வயல்கள் உள்ள, **திருநெல்வாயிலில்** வீற்றிருக்கும் பெருமாளே!

*(புழுவாயினேற் கிரங்கி அருள்வாயே)*

## விருத்தாசலம்.

## 754.

**கூடம்** என்றும், தாமரை மொட்டு என்றும், உவமிக்கத்தக்க இரண்டு கொங்கைகளை உடையவர் பிறைபோன்ற ஒளி பொருந்திய நெற்றியர், இருள்போல இருண்ட கூந்தல் - காடுபோல அடர்ந்து, மேகம்போலக் கறுத்து, முதுகில் அலைமோதுவது போலப் புரள,

---

*246-ம் பக்கத் தொடர்ச்சி*

'கவடு பலபோக்கிக்*** கீழ்மேல் நின்ற அக்கொடுந் தொழிற் கொக்கு' - கல்லாடம்.

குலக் *கார்மயி லாமென வேகயல்
விழித்தார்கர மேல்கொடு மாமுலை
குடத்தியாழ்கிளி யாமென வேகுயில் குரலோசை;

படித்தார்மயி லாமென வேநடை
நெளித்தார்பல காமுகர் வார்கலை
பழிப்பாரவ ராசையை மேல்கொடு விலைமாதர்-

படிக்கார்மின லாமென வேநகை
புரித்தார்பலர் வாயிதழ் சேர்பொருள்
பறிப்பார்பழி காரிகள் நாரிக ளுறவாமோ;

† அடைத்தார்கட லோர்வலி ராவண
குலத்தோடரி ‡யோர்சர னார்சின
மழித்தார்முகி லேய்நிற ராகவர் மருகோனே-

Xஅறுத்தாரய னார்தலை யேபுர
மெரித்தாரதி லேபுல னாருயி
ரளித்தா **ருடல் பாதியி லேயுமை அருள்பாலா;

---

*கார்மயில் - மேகத்தைக் கண்டால் மயிலுக்கு மகிழ்ச்சி. "கார்பெற்ற தோகையோ" - நளவெண்பா - கலிநீங்கு -92

† கடலை அடைத்தது - சேதுபந்தனம் செய்தது - பாடல் 149 -அடி 5 பாடல் 177-பக்கம் 412 கீழ்க்குறிப்பு.

இராமர் பாணத்துக்கு அஞ்சின வருணன் கடலில் அணை செய்து நீங்கள் போகலாம் என்று ஸ்ரீராமருக்கு உரைக்க, அங்ஙனம் அணைகட்டிக் கடலை அடைத்து ஸ்ரீராமர் சேனைகளுடன் சென்றனர்.

'செல்லுதி சேது வென்றொன் றியற்றியென் சிரத்தின்மேலாய்'
**"குன்றி கொண்டடுக்கிச் சேது குயிற்றுதிர் என்று கூறிச் சென்றனன் இருக்கை நோக்கி வருணனும்" - கம்பராமா - வருணனை வழி 84, 85

"எய்த யோசனை யீண்டொரு நூறிவை
ஐயிரண்டின் அகலம் அமைந்திடச்
செய்ததால் அணை என்றது செப்பினார்
வையநாதன் சரணம் வணங்கியே"

- கம்பராமா சேதுபந்தனம் 71

‡ ஓர் சரம் - பாடல் 452-பக்கம் 6 கீழ்க்குறிப்பு.

(249 ஆம் பக்கம் பார்க்க)

*சிறப்புற்ற மேகத்தைக் கண்ட மயிலின் களிப்புப்போலக் களிப்பைக் கொண்டதும், கயல்மீன் போன்றதுமான கண்களைக் கொண்டவர்களாய், மாலை அணிந்ததும், கையின்மேல் ஏந்தியுள்ளதும், அழகிய கொங்கை போன்றதுமான குடத்தை ஒருபாற் கொண்டதுமான யாழ் என்றும், கிளி என்றும் சொல்லும்படியான குயில் ஓசைபோன்ற குரலோசையைக்*

*கற்றவராய், மயில் என்று சொல்லும்படியான நெளிந்த நடையினராய்ப், பல (காம) தூர்த்தர்களின் பெரிய காம சாஸ்திர அறிவைப் பழிப்பவர்களானவராய் ஆசையை மேற்பூண்டு, விலைமாதராய்,*

*(படி) படிந்துள்ள மேகத்தில் தோன்றும் மின்னல் என்று சொல்லும்படியான ஒளிகொண்ட பற்கள் தெரியச் சிரிப்பவர்களாய்ப், பல பேர்வழிகளின் வாயிதழ் அனுபவிப்பவர்களாய்ப், பொருளைப் பறிப்பவர்களாம் பழிகாரிகளாகிய மாதர்களின் உறவு ஆமோ (உறவு ஆகாது என்றபடி)*

*(அடைத்தார் கடல்) கடலை அணையிட்டு அடைத்தவராய், ஒப்பற்ற வன்மை வாய்ந்திருந்த ராவணனை அவன் குலத்தோடு அரிந்து தள்ளி அழித்த ஓர் அம்பைக் கொண்டவர், (அசுரர்களின்) (சினத்தை) கோபத்தை இவ்வாறு அழித்தொழித்தவர், மேகத்துக்கு ஒப்பான (கறுத்த) நிறம் கொண்டவராகிய ராகவ மூர்த்தியின் மருகனே!*

*(அறுத்தார் அயன்ார் தலையே) பிரமனது தலையை அறுத்துத் தள்ளினவர், திரிபுரத்தை எரித்தவர், அந்தத் திரிபுரத்தில் இருந்த அசுரர்களில் (புலனார்) அறிவுள்ள மூன்று அசுரத் தலைவர்களின் உயிரைக் காத்தருளினவர், ஆகிய சிவபிரானது பாதி உடலில் உள்ள உமாதேவி அருளிய குழந்தையே!*

---

*248ஆம் பக்கத் தொடர்ச்சி*

X அயன்தலை அறுத்தது - பாடல் 285-பக்கம் 209 கீழ்க்குறிப்பு.

O புரம் எரித்தது - பாடல் 285-பக்கம் 206 கீழ்க்குறிப்பு.

** பாதி உடல் உமை - பாடல் 301-பக்கம் 246 கீழ்க்குறிப்பு.

விடத்தாரசு ரார்பதி வேரற
அடித்தாய்கதிர் வேல்கொடு சேவகம்
விளைத்தாய்குடி வாழம ரோர்சிறை மிடிதீர-
*விழித்தாமரை போலழ கா†குற
மகட்கான ‡வ ணாXஎன தாயுறை
விருத்தாசலம் வாழ்மயில் வாகன பெருமாளே. (1)

## 755. அருள் பெற

தனதன தனதன தனதன தனதன
தனதன தனதன தனதான

Oதிருமொழி யுரைபெற அரனுன துழிபணி
செயமுன மருளிய **குளவோனே-
††திறலுயர் மதுரையி லமணரை யுயிர்கழு
தெறிபட மறுகிட விடுவோனே;

‡‡ஒருவரு முனதருள் பரிவில ரவர்களி
னுறுபட ருறுமெனை யருள்வாயோ-
XXஉலகினி லனைவர்கள் புகழ்வுற அருணையில்
ஒருநொடி தனில்வரு மயில்வீரா;

OOகருவரி யுறுபொரு கணைவிழி குறமகள்
கணினெதிர் தருவென முனமானாய்-

---

* "முண்டக மலர்ந்ததன்ன..... கண்ணும்" கந்தபுரா 4-4-235

† குறமகட் கான வணா - 'நினக்கு நேரழ குள்ளவ ரில்லவள் தனக்கு நேர ழகுள்ளவர் தாமில்லை" - தணிகைப்புரா - களவு -31.

‡ வணா - வண்ணா - அழகனே.

X "எனதாய்"- பார்வதி தேவியையும் அருணகிரியார் அருமையுடன் போற்றுவர் - "என துயிரெனுந் த்ரியம்பகி" "என்றனை ஆள் உமைபரத்தி", " என்மாகசேர் எழுபிறப்பையும் அறுத்த உமை" என்றார் பிற இடங்களில் (திருப்புகழ் 52, 647, 439)

O சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 628- பக்கம் 462 குறிப்பு.

** குளவோன் - குளம் - நெற்றி, எனக் கொண்டு சிவனது நெற்றிக்கண்ணில் தோன்றியவனே எனலுமாம் - "விடமாக் கொன்ற நெடுவேற் குளவன்"- கல்லாடம் 83.

†† சமணரைக் கழுவில் ஏற்றியது - பாடல் 181-பக்கம் 422.

(தொடர்ச்சி 251 -ம் பக்கம் பார்க்க.)

(விடத்தார்) விஷகுணம் கொண்ட அசுரர்களுடைய ஊர்கள் வேருடன் அற்றுவிழ (அடித்தாய்) சங்காரம் செய்தாய், ஒளிவேல் கொண்டு பராக்ரமச் செயல்களைப் புரிந்தாய் (குடிவாழ் அமரோர்) தேவர்கள் குடிபுகவும் அவர்களுடைய சிறையும் வறுமையும் நீங்கவும் -

தாமரை போன்ற கண்களை உடைய அழகனே! குறமகள் (வள்ளிக்கும்) பிரியமுள்ள (வண்ணா) அழகனே! என்னுடைய தாய் (விருத்தாம்பிகை) அமர்ந்துள்ள **விருத்தாசலத்தில்** வாழும் மயில்வாகனப் பெருமாளே!

(நாரிகள் உறவாமோ)

## 755.

**மு**த்தி மொழியாம் பிரணவப் பொருளின் விளக்கப் பொருளைப் பெறச் சிவபிரான் உன்னிடத்தே வணங்க, முன்பு (அவருக்கு) அப் பொருளை உபதேசித்த (குளவனே) குளத்தில் உற்பவித்தவனே! (சரவண பவனே!)

ஒளிமிக்க மதுரையில் சமணர்களின் உயிர் கழுவில் (தெறிபட மறுகிட) மறுகிட்டுத் தெறிபட - கலக்க முற்றுச் சிதறுண்ண - வைத்தவனே!

(ஒருவு அரும்) நீக்குதற் கரிதான உன்னுடைய திருவருளில் அன்பில்லாதவர்களைப் போலத் துன்பத்தை அனுபவிக்கின்ற என்னைக் கண்பார்த்தருளாயோ!

உலகத்தில் யாவரும் புகழும்படித் திருவண்ணாமலையில் ஒரு நொடிப் பொழுதில் வந்து உதவிய மயில்வீரனே!

கரிய ரேகைகள் பொருந்திப் பொருதற்கு உற்ற அம்புபோன்ற கண்களை உடைய குறமகள் (வள்ளியின்) கண்களின் எதிரே (வேங்கை) மரமாக முன்பு ஆனவனே!

---

(250-ஆம் பக்கத் தொடர்ச்சி)

†† **முருகனது அருள் பெறாதவர் துன்பப்படுவர்:**

'வெல்லலர் வினை துற அறத்தின் மேவினும்
வல்லிதன் கேள்வனை மனத்துன்னார்களே'

- தணிகைப் புராணம் - இராம. (க)

XX **இது அருணகிரியாரின் வரலாற்றைக் குறிக்கும்**

- பாடல் 331-பக்கம் 330 கீழ்க்குறிப்பு ‡ பார்க்க.

OO **முருகர் வேங்கை மரமானது:**

- பாடல் 287 - பக்கம் 214 கீழ்க்குறிப்பு O பார்க்க.

கருமுகில் பொருநிற அரிதிரு மருமக!
*கருணையில் மொழிதரு முதல்வோனே;
முருகலர் தருவுறை யமரர்கள் சிறைவிட
முரணுறு மசுரனை முனிவோனே-
† முடிபவர் வடிவறு சுசிகர முறைதமிழ்
முதுகிரி வலம்வரு பெருமாளே. (2)

## 756. அருள் பெற

தனதத்த தனதத்த தனதத்த தனதத்த
தனதத்த தனதத்த தனதான

பசையற்ற வுடல்வற்ற வினைமுற்றி நடைநெட்டி
பறியக்கை சொறியப்பல் வெளியாகிப்-
‡ படலைக்கு விழிகெட்ட குருடுற்று மிகநெக்க
பழமுற்று X நரைகொக்கி னிறமாகி;
விசைபெற்று வருபித்தம் வளியைக்க ணிலைகெட்டு
மெலிவுற்று விரல்பற்று தடியோடே-
வெளிநிற்கும் விதமுற்ற இடர்பெற்ற ஜனனத்தை
விடுவித்து னருள்வைப்ப தொருநாளே;
O அசைவற்ற நிருதர்க்கு மடிவுற்ற பிரியத்தி
னடல்வஜ்ர கரன்மற்று முளவானோர்-

---

*தனக்கு முருகவேள் உபதேசித்தது:
"அன்புற உபதேசப் பொருள் ஊட்டி மந்திர தவஞானக்
கடலாட்டி என்றனை" என்றார் பிறிதோரிடத்து - திருப் 814.
"எனைமரண மாற்றிய கருணைவார்த்தை யிருந்தவாறென்"
- திருப்புகழ் 1061.

† முடிபவர் வடிவறு சுசிகரம் உறை முதுகிரி: - உயிர் விடும் பிராணிகளுக்கெல்லாம் பார்வதி தேவியார் தமது ஆடையால் வீசி இளைப்பாற்றச் சிவபிரான் ஐந்தெழுத்தை உபதேசம் செய்து அப் பிராணிகளுக்குத் தமது சிவரூபத்தைத் தந்தருளும் தலம் திருமுதுகுன்றம். 'தூசினால் அம்மை வீசித் தொடையின் மேற் கிடத்தித் துஞ்சு மாசிலா உயிர்கட் கெல்லாம் அஞ்செழுத் தியல்பு கூறி, ஈசனே தனது கோலம் ஈந்திடும் இயல்பால் அந்தக் காசியின் விழுமிதான முதுகுன்ற வரையும் கண்டான்' கந்தபுரா - வழிநடை 13.

‡ படலை - படலம்.

X "தலைமயிர்; கொக்குக் கொக்க நரைத்து" - திருப் 447-பக்கம் 622.

O அசைவு - சலிப்பு.

கரிய மேகத்தை ஒத்த நிறத்தை உடைய திருமாலின் அழகிய மருமகனே! கருணையுடன் (உபதேச) மொழியை (எனக்குத்) தந்த முதல்வனே!

நறுமண மலர்கொண்ட (கற்பக) விருக்ஷ நீழலில் இருக்கும் தேவர்களின் சிறையை விடுமாறு, மாறுபட்டு நின்ற (அசுரனை) சூரனைக் கோபித்தவனே!

(விருத்தாசலத்தில்) இறப்பவர்கள் (வடிவறு) பிறப்பு அறுகின்ற (சுசிகரம்) தூயபெற்றி, (உறை) உள்ள * தமிழில் முதுகிரி எனப் பெயர் பெற்ற (அல்லது தமிழ் விளங்கும் முதுகிரியில்), (வலம்வரு) வெற்றியுடன் எழுந்தருளியுள்ள பெருமாளே!

(படர் உறும் எனை அருள்வாயோ)

## 756.

ஈரமில்லாத இவ்வுடல் (வரவர) வற்றிப்போக செய்த வினை முதிர்ச்சி அடைந்து, நடையும் (நெட்டி)- பறிய - ஒழுங்கற்றுக் கோணலாகத் தள்ளாடுதலை அடைந்து நிலை பெயரக் கை சொறியும் தொழிலையே மேற்கொள்ள, பற்கள் வெளியே நீண்டுவர -

கண் பூமறைப்பால் பார்வை யிழந்து குருட்டுத்தன்மை அடைந்து, மிகவும் நெகிழ்ந்து - கரைந்து பழம்போலப் பழுத்து நரைத்து மயிர் கொக்குப்போல வெண்ணிறமாகி -

வேகத்துடன் வருகின்ற பித்தத்தாலும் வாயுவினாலும் (கண்) இடமும் நிலைத்திருக்கும் தன்மையும் தடுமாறிக்கெட்டு, மெலிதலை அடைந்து, கைவிரலினால் பிடிக்கப்பட்ட தடியுடனே -

வெளியே நிற்கின்ற தன்மை மிகும்படியான துன்பமே கொண்டதான (இந்த) பிறப்பினின்றும் (என்னை) விடுதலை செய்து உன்னுடைய திருவருளைத் தந்து காக்கும் ஒரு நாள் உண்டா!

சலிப்பு - கலக்கம் இல்லாத அசுரர்கள் மடிந்து இறந்தொழிதலில் பிரியங்கொண்ட வலிய வஜ்ராயுதக் கையனாகிய இந்திரனும் மற்றும் உள்ள தேவர்களும் -

---

*வடமொழியில் 'விருத்தாசலம்' 'விருத்தகிரி' என்று இத் தலத்துக்குப் பெயர். தமிழில் 'முது குன்றம்', 'பழமலை' எனப் பெயர்.

அளவற்ற *மலர்விட்டு நிலமுற்று மறையச்செய்
† அதுலச்ச மரவெற்றி யுடையோனே;
வசையற்று முடிவற்று வளர்பற்றி ‡ னளவற்ற
வடிவுற்ற முகில்கிட்ணன் மருகோனே-
X மதுரச்செ மொழிசெப்பி யருள்பெற்ற சிவபத்தர்
வளர் விர்த்த கிரியுற்ற பெருமாளே. (3)

## வேப்பூர்.

(வட ஆற்காடு ஜில்லா ஆற்காட்டுக்குச் சமீபம்; பாலாற்றங் கரையில் உள்ள தலம்.)

தனதன தனதன தனதன தாந்த
தாத்தான தந்த தனதான

## 757. உபதேசம் பெற

குரைகட லுலகினி லுயிர்கொடு போந்து
கூத்தாடு கின்ற குடில்பேணிக்-

---

*வானோர் நிரம்பப் பூமாரி பொழிதல் - பாடல் 645-பக்கம் 510 குறிப்பு.

† அதுல - சமான மில்லாத

‡ தம் பொருட்டுக் கண்ணபிரான் துரியோதனனிடம் தூது செல்லவேண்டும் என்று பாண்டவர்கள் யோசித்தபொழுது, சகாதேவனை நோக்கிக் கண்ணபிரான் உன் யோசனை என்ன என்று கேட்கச் சகாதேவன் - பெருமானே! துரியோதனன் எங்களுக்குப் பூமி கொடுத்தால் என்ன? கொடாவிட்டால் என்ன? உங்கள் மாயையை யார் அறிவார்? உங்கள் திருவுளத்துக் கருத்து எதுவோ அதுவே எனக்கும் கருத்து' என்றான். இவன் நமது எண்ணத்தை வெளிவிட்டு விடுவான் என அறிந்து கண்ணபிரான் தனியாக ஓரிடத்திற் சகாதேவனை அழைத்துக் கொண்டுபோய் -பாரதப்போர் நடவாதிருக்க வழி என்ன சொல் என்றார், அப்போது சகாதேவன் 'பெருமானே'- நீ பூபாரம் தீர்க்க வந்துள்ளாய்; உன்னையல்லால் வேறு யாராலும் அந்தப் போரை நிறுத்த முடியாது; உன்னை நான் கட்டிப்போட்டால் பாரதப்போர் வாராது" என்றான்; அதைக் கேட்ட கண்ணபிரான் என்னை நீ எவ்வண்ணம் கட்டுவாய் எனச் சகாதேவன் "உன் வடிவத்தை காட்டு, கட்டுகிறேன் என்றான்"- கண்ணனும் உடனே கட்டு பார்க்கலாமென்று தன்போலவே உருவம் "பதினாறாயிரம்" கொண்டான், சகாதேவன் மூல உருவம் இதுதான் என்று அறிந்து கண்ணபிரானது அடியிணைகளைத் தன் கருத்தினாற் கட்டினான். கண்ணபிரான் மகிழ்ந்து என் பாதத்தை இனி விடுக - இந்த

(தொடர்ச்சி பக்கம் 255)

அளவு கடந்த (நிறைய) மலர்விட்டு - பூமாரி பொழிந்து தேவர்கள் - பூமி முழுமையும் மறையும்படிச் செய்கின்ற ஒப்பில்லாதவனே! போரில் வெற்றியே உடையவனே!

பழிப்புக்கு இடமில்லாமல் முடிவிலாது வளர்ந்திருந்த மிக அதிகமாயிருந்த - பற்றின் - (பாண்டவர் மீதிருந்த) ஆசை காரணத்தால் அளவு கடந்த வடிவை அளவற்ற வடிவைக் கொண்ட மேக நிறத்தவனாம் கண்ணபிரானது மருகனே!

இனிமைதரும் செம்மையான புகழ் மொழிகளை ஓதி உனது திருவருளைப் பெற்ற சிவபக்தர்கள் நிரம்பியுள்ள விருத்தாசலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

*(உன் அருள் வைப்ப தொருநாளே)*

# வேப்பூர்

## 757.

ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த உலகத்திலே உயிர் எடுத்து வந்து கூத்தாடுகின்ற (இந்த) உடலை விரும்பிப் போற்றி-

---

விஷயத்தை எவருக்கும் வெளியிடாதே என்று உரைத்தார்; பின்பு பாண்டவர் ஐவருக்கும் துரோபதைக்கும் ஆறுதல் மொழிகூறித் தூதுக்குப் புறப்பட்டுச் சென்றார் - என்பது பாரதவரலாறு. பாண்டவரிடத்தில் தமக்கு வளர்ந்திருந்த பற்றினால் தனது அளவற்ற வடிவத்தைக் கண்ணபிரான் சகாதேவனுக்குக் காட்டினார் - என்னும் வரலாறு இங்கு குறிக்கப்பட்டுள்ளது.

"மாயனும் அன்பன் மனமறிவான் கட்டுக என்
றாய வடிவுபதி னாறாயிரங் கொண்டான்
தூயவனும் மூலமாந் தோற்ற முணர்ந்தெவ்வுலகுந்
தாய அடியிணைகள் தன்கருத்தினாற் பிணித்தான்"

- என்பது வில்லிபாரதம் கிருஷ்ணன் தூது -37

இதனையே அருணகிரியார் 'வளர்பற்றின் அளவற்ற வடிவுற்ற முகில்கிட்ணன்' என இங்கே குறித்துள்ளார்.

X 'அணிகலைச் செஞ்சொலார் பயில்தரும் திரு முது குன்றமே'

"சாவாதவர் பிறவாதவர் தவமே மிக உடையார் மூவாதபன் முநிவோர் தொழும் முதுகுன்று" 'தெரிந்த அடியார் சிவனே யென்று..... இரவும் பகலும் ஏத்தும் சீர் முதுகுன்றே"

" பூசை செய்த அடியார் நின்று புகழ்ந்தேத்த முதுகுன்றே'

*- சம்பந்தர் 3-34-7 1-12-6; 1-131-10; 2 64-4, 8.*

குகையிட மருவிய கருவிழி மாந்தர்
*கோட்டாலை யின்றி யவிரோதம்;

வரஇரு வினையற † உணர்வொடு தூங்கு
வார்க்கே விளங்கு மநுபூதி-

வடிவினை யுனதழ கியதிரு வார்ந்த
வாக்கால்மொ ழிந்த ருளவேணும்;

திரள்வரை பகமிகு குருகுல வேந்து
‡ தேர்ப்பாகன் மைந்தன் மறையோடு-

தெருமர நிசிசரர் மனைவியர் சேர்ந்து
தீப்பாய இந்த்ர புரிவாழ;

விரிதிரை யெரியெழ முதலுற வாங்கு
வேற்கார கந்த புவியேழும்-

மிடிகெட விளைவன வளவயல் சூழ்ந்த
வேப்பூர மர்ந்த பெருமாளே. (2)

---

* கோட்டாலை - துன்பம்.

† 'தூங்காமல் தூங்கி' தாயுமானவர் - காண்பேனோ - 10
"ஆங்கார மற்றுன் அறிவான அன்பருக்கே
தூங்காத தூக்கமது தூக்கும் பராபரமே"
- தாயுமா - பராபர - 74.

"முருகன் உருவங் கண்டு தூங்கார்"- கந். அலங். 55.
"தூங்கிக் கண்டார் சிவலோகமும் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் சிவயோகமுந் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் சிவபோகமுந் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் நிலை சொல்வதெவ் வாறே'
- திருமந்திரம் 129.

‡ பிரமன் மறையொடு கலங்க வேலாற் சிறையிடப் பட்டான்.
- பாடல் 95- பக்கம் 224; பாடல் 212-பக்கம் 42; பாடல் 571
- பக்கம் 310 கீழ்க்குறிப்பு.

மலைக்குகை யிடம்போல உள்ள கருவிலே (இழி) இறங்கி விழுகின்ற மாக்களுக்கு (மனிதர்களுக்கு) ஏற்படும் (கோட்டாலை) துன்பங்கள் இல்லாமல், (அவிரோதம்) விரோதமின்மை என்னும் உள்ளப்பண்பு -

வர, (இருவினை) நல்வினை தீவினை இரண்டும் ஒழிய, உணர்வொடு தூங்குவார்க்கே - ஞான உணர்வொடு இருப்பவர்க்கே விளங்கும்படியான (அநுபூதி) அனுபவஞான (அல்லது அருட்ப்ரசாத)

வடிவத்தை உனது அழகிய லக்ஷ்மீகரம் பொருந்திய திருவாக்கால் உபதேசித் தருளவேண்டும்;

திரண்டு பருத்த (கிரவுஞ்ச) மலை பிளவுபடவும், குருகுல வேந்தனாகிய அருச்சுனனுடைய தேர்ப்பாகனாய் விளங்கிய கண்ணன் - திருமாலின் - மைந்தனாம் பிரமன் தான் கற்ற வேதமும் தானுமாய் -

கலக்கம் உற, அசுரர்களின் மனைவிமார்கள் ஒன்று கூடி தீயில் பாய்ந்து இறக்கவும், தேவேந்திரனுடைய (புரி) ஊர் - பொன்னுலகம் வாழவும் -

விரிந்த கடலில் தீ எழவும் - தான் முதன்மையாம் தன்மை விளங்க, (வாங்கு) பிரயோகித்த (செலுத்தின) வேலாயுதத்தை உடையவனே! கந்தனே! உலகேழின்

வறுமை நீங்கும் அளவுக்கு செழிப்பான விளைச்சலைத் தருகின்ற வயல்கள் சூழ்ந்த **வேப்பூரில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(வாக்கால் மொழிந்தருள வேணும்)

## நிம்பபுரம்.

(நிம்பபுரம் என்பதும் வேப்பூரா யிருக்கலாம்; நிம்பம் - வேம்பு. ஹம்பிக்கு அருகிலும் நிம்பபுரம் என்று ஓர் ஊர் இருக்கின்றது.)

## 758. வீடுபெற

தந்ததன தான தந்ததன தான
தந்ததன தான தனதான

அஞ்சுவித பூத முங்*கரண நாலு
†மந்திபகல் யாது மறியாத-
அந்தநடு வாதி யொன்றுமில தான
அந்தவொரு **வீடு** **பெறுமாறு;**
மஞ்சுதவழ் சார லஞ்சயில வேடர்
மங்கைதனை நாடி வனமீது-
வந்தசர ணார விந்தமது பாட
வண்டமிழ்வி **நோத** **மருள்வாயே;**
குஞ்சரக லாப வஞ்சியபி ராம
குங்குமப டீர வதிரேகக்-
கும்பதன மீது சென்றணையு மார்ப
குன்றுதடு மாற இகல்கோப;
வெஞ்சமர சூர னெஞ்சுபக வீர
வென்றிவடி வேலை விடுவோனே-
விம்பமதில் சூழு **நிம்பபுர** வான
விண்டலம கீபர் பெருமாளே.(1)

---

*கரணம் 4: - சித்தம் - இஃதி யாதாகற்பாற்று எனச் சிந்திக்கும்; பின்பு மனம் - இஃது இன்னது ஆகற்பாற்று எனப் பற்றும்; அதன்பின் அகங்காரம் - இஃது ஆமோ அன்றோ இதனை இன்னதெனத் தெளிவேன் யான் எனத் தெளிவு பிறவாதெழும்; அதன்பின் புத்தி இஃது இன்னதெனத் தெளிவுறும்.

- (சிவஞான போதம் 4 சூத்திரம் 'சிந்தித்தாய்ச் சித்தம்' என்ற வெண்பாவின் உரை)

† அந்தி - இரவு "அந்தி காவலன் (சந்திரன்) அமுதுறு பசுங்கதிர்" - பெரிய திருமொழி 8 5-1.

அந்தி பகல் - இரவு பகல் - கேவலம் சகலம் - மறப்பு. நினைப்பு என்பர் பாடல் 303 பக்கம் 250 கீழ்க்குறிப்பு.

## நிம்பபுரம்

## 758.

**பி**ருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் எனப்படும் பஞ்ச பூதங்களும், மனம், புத்தி, அகங்காரம், சித்தம் எனப்படும் கரணங்கள் நான்கும், இரவு - பகல் - எவையும் அறியாத -

முடிவு, நடு, முதல் ஒன்று இல்லாததான - அந்த ஒப்பற்ற வீட்டின்பத்தைப் பெறுமாறு -

மேகம் தவழ்கின்ற மலைப்பக்கங்களை உடைய அழகிய மலை வேடர்களின் மங்கைதனை (வள்ளியை) விரும்பி வள்ளிமலைக் காட்டில் -

வந்து சேர்ந்த திருவடித் தாமரைகளைப் பாட (அடியேனுக்கு) வண்தமிழ் அற்புத அழகைத் தந்தருளுக.

யானை வளர்த்ததும், (கலாபம்) இடையணி அணிந்துள்ளதும் ஆன வஞ்சி (அல்லது மயில்போன்ற சாயலுடையவளும் ஆன) வஞ்சி பெண் (தேவசேனையின்) அழகிய செஞ்சாந்தும் சந்தனமும் (அதிரேகம்) மிகுதியாகக் கொண்டுள்ள

குடம்போன்ற கொங்கை மீது (மனம்) பாய்ந்து அணைகின்ற மார்பனே! கிரௌஞ்சகிரி தடுமாற்றம் அடையும்படி அதைப் பகைத்துக் கோபித்தவனே! (அல்லது தடுமாற்றம் அடையவும், பகையும் கோபமும் கொண்டு)

கொடிய போர்செய்த சூரனுடைய நெஞ்சு பிளவுபடவும் வீரம் வாய்ந்த வெற்றிதரும் கூரிய வேலைச் செலுத்தினவனே!

ஒளி பொருந்திய மதில் சூழ்ந்துள்ள நிம்பபுரம் என்னும் தலத்தில் வாழ்கின்ற பெருமாளே! விண்தலமகீபர் - விண்ணுலகத் தரசர்களுக்குத் - தேவேந்திரர்களுக்குப் - பெருமாளே!

(வீடு பெறுமாறு வண்டமிழ் அருள்வாயே)

## வேப்பஞ்சந்தி.

(இது வேப்பூரோ வேறு தலமோ விளங்கவில்லை).

### 759. திருவடியைப் பெற

*தாத்தந் தந்தத் தந்தத் தனனத் தனதான*

நாட்டந் தங்கிக் கொங்கைக் குவடிற் படியாதே-
நாட்டுந் தொண்டர்க் கண்டக் **கமலப் பதமீவாய்;**
வாட்டங் கண்டுற் றண்டத் தமரப் படைமீதே-
*மாற்றந் தந்துப் பந்திச் சமருக் கெதிரானோர்;
கூட்டங் கந்திச் சிந்திச் சிதறப் பொருவோனே-
† கூற்றன் பந்திச் சிந்தைக் குணமொத் தொளிர்வேலா!
வேட்டந் தொந்தித் தந்திப் பரனுக் கிளையோனே-
**வேப்பஞ் சந்திக்** கந்தக் குமரப் பெருமாளே. (1)

## திருக்கூடலையாற்றூர்.

(இது மணிமுத்தநதியும் வெள்ளாறுங் கூடு மிடத்தில் இருக்கின்றது விருத்தாசலத்திலிருந்து 14-மைல். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

### 760. காலன் அணுகா வகை

*தாத்ததனத் தாந்ததன தானதன தானதன*
*தாத்ததனத் தாந்ததன தானதன தானதன*
*தாத்ததனத் தாந்ததன தானதன தானதன தந்ததான*

**வா**ட்டியெனைச் சூழ்ந்தவினை யாசையமு வாசையனல்
மூட்டியுலைக் காய்ந்தமழு வாமெனவி காசமொடு
மாட்டியெனைப் பாய்ந்துகட வோட்டமொ டாடிவிடு விஞ்சையாலே-

---

* மாற்றம் - வஞ்சின மொழி
'மாற்றம் மாறான் மறலிய சினத்தன்' (புறநானூறு 341)

† நடுவன் - தருமன் - அறக்கடவுள் எனப் பெயர் பெற்ற யமதருமராஜனைப் போல ஒழுங்கான நீதி நெறியில் நிற்கும் வேல் அதனால் 'கூற்றன் பந்தி (ஒழுங்கு).... வேல்' என்றார்: "நீதிவேல்" என்றார் 350 ஆம் பாடலிலும்.

## வேப்பஞ்சந்தி

## 759.

(**நாட்டம்**) நோக்கமும் விருப்பமும் (உன்பால்) தங்க வைத்துக் கொங்கை மலைகளிற் படியாமல் -

(தங்கள் கருத்தை உனது திருவடியில்) நாட்டவல்ல தொண்டர்களுக்கு, அண்ட (கிட்டும்படியாக) கமலப்பதம் - திருவடித் தாமரையை (ஈவாய்) நீ கொடுத்துதவுவாய்.

சோர்வு காணும்படியாக விண்ணில் உள்ள தேவர்களின் படைமேலே -

(மாற்றம்) வஞ்சினமொழி - எதிர்த்துப் பேசும் மொழி - (தந்து) பேசிக் கூட்டமாகப் போருக்கு எதிர்த்து வந்தவராம் (அசுரர்கள்)

கூட்டமெல்லாம் (*கந்தி) கெட்டு, (சிந்திச்சிதற) பிரிபட்டுச் சிதறுண்ணச் சண்டை செய்தவனே!

யமனுடைய (பந்தி) ஒழுங்கான (சிந்தைக்குணம்) மனத்தின் பண்பை நிகர்த்து விளங்கும் வேலை உடையவனே!

அடியார்களின் விருப்பத்தை (நிறைவேற்றும்) பெருமான், (தொப்பையை) உடையபெருமான், யானைமுகப் பெருமான் ஆகிய கணபதிக்கு இளையவனே!

**வேப்பஞ்சந்தி** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் கந்தப் பெருமாளே! குமரப் பெருமாளே!

(கமலப் பதமீவாய்)

## திருக்கூடலையாற்றூர்

## 760.

(**வாட்டி** எனை) என்னை வாட்டிச் சூழ்ந்துள்ள வினையும், († ஆசைய) பொன்னாசை முதலான மூவாசை - மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்னும் மூவாசைகளும், (அனல் மூட்டி) தீயை மூட்டி, உலையில் காய்ந்த (மழுவாம் என) - பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்புபோல, (விகாசமொடு) - மலர்ச்சியொடு - (நன்றாக) (மாட்டி எனை) என்னை மாட்டிவைத்துப் பாய்தலுற்றுக், ‡ (கடவு ஓடு) வழியில் - வாழ்க்கை வழியில், (அடமோடு) பிடிவாதமாய் (ஆடிவிடு) ஆட்டி வைக்கின்ற மாயவித்தை காரணமாய் -

---

* கந்துதல் - கெடுதல். † ஆசை - பொன். ‡ கடவு - வழி.

வாய்த்தமலர்ச் சாந்துபுழு கானபனி நீர்களொடு
காற்றுவரத் தாங்குவன மார்பிலணி யாரமொடு
வாய்க்குமெனப் பூண்டழக தாகபவி சோடுமகிழ்
வன்புகூரத்;

தீட்டுவிழிக் காந்திமட வார்களுட னாடிவலை
பூட்டிவிடப் போந்துபிணி யோடுவலி வாதமென
சேர்த்துவிடப் பேர்ந்துவினை மூடியடி யேனுமுன
தன்பிலாமல்-

தேட்டமுறத் தேர்ந்து *மமிர் தாமெனவெ யேகி† நம
னோட்டிவிடக் காய்ந்துவரி ‡வேதனடை யாளமருள்
சீட்டுவரக் காண்டுநலி காலனணு காநினரு
ளன்புதாராய்;

வேட்டுவரைக் காய்ந்துகுற மாதையுற வாடி Xயிருள்
நாட்டவரைச் சேந்தகதிர் வேல்கொடம ராடிசிறை
மீட்டமரர்க் காண்டவனை வாழ்கநிலை யாக
Oவைகும் விஞ்சையோனே-

**வேற்றுருவிற் போந்துமது ராபுரியி லாடிவைகை
யாற்றின்மணற் றாங்குமழு வாளியென தாதைபுர
††மேட்டையெரித் தாண்டசிவ லோகன் விடை
யேறியிட முங்கொளாயி;

---

* அமிருத்து ஆம் எனவே - சாவு இல்லை யென்று.

† நமன் ஏவ காலன் வருவான்: 'ஏமனால் ஏவி விடுகாலன்' - திருப்புகழ் 1051. காலன் - இயமன் மந்திரியும் தூதனும் - 'தருமரா சற்கா வந்த கூற்றனைக் குமைப்பர் போலும் குறுக்கை வீரட்டனாரே' - அப்பர் 4-49-2. 'தருமனும் மடங்கலும்' - பரிபாடல் - 3-8.

‡ பிரமன் எழுதி அனுப்பும் சீட்டு: "ஏட்டின் விதிப்படியே" - பாடல் 789, 'அகூரதேவி கோவின் விதிப்படி'- பாடல் 1204. பிரமன் ஏட்டின்படி காலன் வருதல் - திருப்புகழ் 1183, 1242 பார்க்க.

X இருள் நாட்டவர் - அசுரர்; தேவர்கள் உலகை "இருட்டிலாச் சுரர் உலகு' என்றார் 344-ஆம் பாடலில் இருள் - அஞ்ஞானமுமாம்.

O வைகும் - வைக்கும்.

** இது பிட்டுக்கு மண் சுமந்த திருவிளையாடல் - பாடல் 439 பக்கம் 601; பாடல் 443-பக்கம் 614.

†† மேடு - ஏடு - பெருமை, மேன்மை.

கிடைத்துள்ள மலர், சாந்து, புனுகுசட்டம், பன்னீர் இவைகளுடனே நல்ல காற்றுவர அனுபவித்து, தாங்குவனவாய் மார்பில் ஆபரணங்கள், முத்துமாலைகள் நன்கு கிடைத்ததென அணிந்து அழகுபெற, (பவிசோடு) சோபையுடனே - விளக்கத்துடனே - (மகிழவு) மகிழ்ச்சியும் அன்பும் மிக்குப் பெருக -

(மை) தீட்டின (அல்லது கூரிய) கண்களை உடைய ஒளி பொருந்திய மாதர்களுடனே விளையாடி, அந்த (காம) வலையிலே மனம் பூட்டப்பட்டு, போய், நோய்களுடன் வலிகளும், வாதநோயும் என(ப்பல நோய்கள்) ஒன்று சேர்ந்துவிட, (பேர்ந்து) - நிலைமாறி, வினைகள் மூடி, அடியேனும் உன்மீது அன்பு இல்லாமல் -

(தேட்டம் உற) சேகரித்த பொருள் (நிரம்ப) இருப்பதால் மனம் ஒருவாறு தெளிவு பெற்று சாவு என்பதே இல்லை என்னும் எண்ணத்துடனே வாழ்நாளைச் செலுத்த- நமனார் (தமது தூதர்களை) ஓட்டி அனுப்ப, (காய்ந்து) மெலிந்து, (வரி) எழுத்துள்ளதும், பிரமனது அடையாளம் கொண்டதுமான (சீட்டு) ஓலைச்சீட்டு வரப் பார்க்கும்படி (நலிகின்ற) வருத்துகின்ற காலன் (என்னை) அணுகாதபடிக்கு உன்னுடைய அருளையும் அன்பையும் எனக்குத் தந்து உதவுக.

வேடர்கள் மீது வெகுண்டு (குறமாது) வள்ளியுடன் உறவு கொண்டாடியும், (இருள் நாட்டவரை) - அஞ்ஞான நிலையினராம் அசுரர்களைச் சிவந்த ஒளிவீசும் வேல்கொண்டு போர்செய்து, (தேவர்களைச்) சிறையினின்றும் மீட்டு அத் தேவர்களின் ஆண்டவன் தலைவனாம் இந்திரனை வாழும்படியாக வாழ்க்கை நிலையாக வைத்த கலைஞனே!

வேறு உருவில் (கூலியாள் உருவில்) சென்று மதுராபுரியில் (மண் சுமப்பவனாக) விளையாடி, வைகை யாற்றில் மணலைச் சுமந்த மழு ஏந்தினவரும், என்னுடைய தந்தையும், திரிபுரத்தினுடைய (ஏட்டை) அல்லது மேட்டை - மேன்மையை (பெருமையை) எரித்து ஆண்ட சிவலோகனும், இடபவாகனத்தில் ஏறினவரும் ஆகிய சிவபிரானது இடது பாகத்தைக் கொண்டதாய்;

கோட்டுமுலைத் தாங்குமிழை யானஇடை கோடிமதி
தோற்றமெனப் போந்தஅழ கானசிவ காமிவிறல்
*கூற்றுவனைக் காய்ந்தஅபி ராமிமன தாரஅருள்
கந்தவேளே!

கூட்டுநதித் தேங்கிய†வெ ளாறுதர ளாறுதிகழ்
நாட்டிலுறைச் சேந்தமயி லாவளிதெய்
வானையொடெ
கூற்றுவிழத் தாண்டி‡யென தாகமதில் வாழ்குமர
தம்பிரானே.

## கடம்பூர்.

(சிதம்பரத்துக்குத் தென்மேற்கு 15 - மைலிலுள்ள மன்னார்குடிக்குத் தெற்கு 4-மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகள். திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல் பெற்றது.)

## 761. திருவடி பெற

தானனம் தானான தானனம் தானான
தானனம் தானான தனதான

வாருமிங் கேவீடி தோபணம் பாஷாண
மால்கடந் தேபோமெ னியலூடே-
வாடிபெண் காள்பாயை போடுமென் றாசார
வாசகம் போல்கூறி யணைமீதே;

சேருமுன் காசாடை வாவியும் போதாமை
தீமைகொண் டேபோமெ னடமாதர்-
சேரிடம் போகாம லாசுவந் தேறாமல்
சீதளம் பாதார மருள்வாயே;

---

* கூற்றுவனைக் காய்ந்த அபிராமி - பாடல் 751- பக்கம் 240 குறிப்பு.

† வெள்ளாறு தரளாறு திகழ் நாடு - வெள்ளாறும் மணிமுத்த நதியுங் கூடும் இடமாகிய கூடலையாற்றூர்; தரள ஆறு - மணி முத்த நதி. தரளம் - முத்து.

‡ எனது ஆகமதில் வாழ் குமரன் - "இறைவனே... (ஈசா) உடலிடங்கொண்டாய்"- திருவாசகம் - 22-5, 10.

*மலையன்ன கொங்கைகளைத் தாங்கும் நூல்போன்ற இடையையும், கோடி சந்திரர்களுடைய தோற்றங்கொண்டு வந்தது போன்ற அழகையும் கொண்ட சிவகாமி, வலிமை கொண்ட யமனை (உதைத்து) அழித்த (அபிராமி) அழகியாம் பார்வதிதேவி மனங்குளிரப் பெற்றுகந்த கந்தவேளே!*

*(கூட்டுநதித் தேங்கிய வெளாறு தரளாறு) வெள்ளாறும் தரளாறு (மணிமுத்த நதியும்) கூட்டுநதி தேங்கிய - ஒன்றுகூடி நிறைந்துவரும், விளக்கங்கொண்ட (நாட்டில்) இடத்தில் - **கூடலையாற்றூர்** என்னுந்தலத்தில் வீற்றிருக்கின்ற சேந்தனே! மயிலனே! வள்ளி தெய்வயானையுடன், (என்னிடம் வரமுடியாமல்) யமன் ஒதுங்கித் தாண்டி ஓடி விழும்படியாக, - என்னுடைய உடலிடத்தேயே (குடிகொண்டு) வாழ்கின்ற குமரனே! தம்பிரானே!*

*(காலன் அணுகா(த) நின் அருளன்பு தாராய்)*

## கடம்பூர்

## 761.

*__வா__ரும் இங்கே! என் வீடு இதோ இருக்கின்றது! பணம் எனக்கு விஷம் மாதிரி! உம்முடைய ஆசையை தீர்த்துக் கொண்டே போங்கள் என்னுடைய - இயலூடே - அன்புடனே கலந்து;*

*வாருங்களடி பெண்களே, பாயைப் போடுங்கள் என்று (ஆசாரவாசகம்) மரியாதைப் பேச்சுக்கள் போன்றவைகளைப் பேசிப் படுக்கையில்*

*சேர்வதற்கு முன்பாக காசு (பொருளையும்) ஆடைகளையும் *(வாவியும்) வேண்டிய அளவுக்கு வவ்வியும் (பற்றிக்கொண்டும்), (போதாமை தீமை கொண்டே) அவை போதா என்று குற்றம் கூறிப் (போமென் அடம் - மாதர்) ஓடிப்போம் என்கின்ற அடம் பிடிக்கும் (பிடிவாதம் பிடிக்கின்ற) அல்லது போம் என்று (நடம் + மாதர்) நடிக்கின்ற விலைமாதர்கள் -*

*உள்ள இடத்தில் (நான்) போகாமலும், (ஆசுவந்தேறாமல்) குற்றங்கள் என்னைச் சேர்ந்து பெருகாமலும், உனது குளிர்ந்த பாத தாமரையைத் தந்தருள்வாயே!*

---

*வாவியும் - வவ்வியும், அல்லது அவாவியும் (ஆசைப்பட்டும்).

நாரணன் சீராம கேசவன் கூராழி
நாயகன் பூவாயன் மருகோனே-
*நாரதும் பூர்கீத மோதநின் றேயாடு
நாடகஞ் சேய்தாள ரருள்பாலா;

சூரணங் கோடாழி போய்கிடந் தேவாட
† சூரியன் தேரோட அயிலேவீ-
தூ நறுங் காவேரி சேருமொண் சீறாறு
சூழ்கடம் பூர்தேவர் பெருமாளே.

## திருவரத்துறை.

(இது 'திருநெல்வாயில் அரத்துறை' எனப்படும். விருத்தாசலத்துக்குத் தென்மேற்கு 11-மைல் தூரத்திலுள்ள பெண்ணாகடம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 4-மைல். மூவர் தேவாரமும் பெற்ற ஸ்தலம். இங்குச் சிவபெருமான் திருஞான சம்பந்த ஸ்வாமிகளுக்கு முத்துக் குடையும் முத்துச் சிவிகையும் அளித்தருளியது இத் திருப்புகழிற் கூறப்பட்டுளது.)

---

*** சிவ சந்நிதியில் நாரதரும் தும்புருவும் கீதம் இசைத்தல்**

"இலங்கும் ஏழிசை யாழெடுத் தியாவரும் உருகத்
துலங்கு நாரதர் தும்புரு முதலியர் பாட"

- சிதம்பர புராணம் - திருச்சிற்றம்பல 44.

"கோல இசைத் தும்புரு நாரதர் ... துதிகள் கூறுவாரால்"

- திருநெல்வேலி புராணம் - தாம்பிரசபை நடனம் -42.

"வந்து தும்புரு நாரதாதியர் மகரயாழ் இசை பகரவே
சந்த்ரசேகரர் தையல் காட்டு சிங்கா சனத்தில் இருந்தனர்"

ஆனந்த சவுந்தரிய நடனம் - 19.

**நாரதர் பூசிக்க இறைவன் தந்த வரம்:**

"பண்தரும் வீணை நம்பால் வாசிக்கும் பதமும் தந்தோம்"

**வரம் பெற்று நாரதர் வாசிப்பது:**

"முனி தோளின் மன்னிய வீணை நாலிரு திசையும் மருவியோர் யோசனை கேட்க இன்னிசை சிறந்தெப் போதினு முக்கண் இறைவனையே துதி செயுமால்"

- திருநெல்வேலிப் புராணம் - நாரதச் சருக்கம் - 19, 22.

† சூரியன் தேர் சூரன் சொற்படி வழிமாறிப் போய்க் கொண்டிருந்தது; - பாடல் 658- பக்கம் 10 கீழ்க்குறிப்பு.

நாராயணன், ஸ்ரீராமன், கேசவன், கூர்மை கொண்ட சக்ராயுதந் தரித்த நாயகன் - பூவாயன் - (பூ - பூலோகத்தில் ஆயன் - (ஆயர்) இடையர் குலத்துவந்த கண்ணபிரான்; அல்லது (*பூ - தாமரைப்பூ அன்ன - வாயன் - திருவாயை யுடையவன்), அல்லது (பூ - பூதேவிக்கு - வாயன் - நாயகனாக வாய்த்தவன்), அல்லது (பூ - † பூவுலகை (உண்டு அதைத் தன் தாய் யசோதைக்கு) வாய் திறந்து காட்டினவன்) ஆகிய திருமாலின் மருகனே!

நாரதர் தும்புரு இவர்கள் இசைபாட நின்று ஆடுகின்ற நடனத்தைச் செய்கின்ற திருவடியையுடைய சிவபெருமான் அருளிய குழந்தையே!

சூரனும் அவன் வருத்துஞ் செயல்களும் கடலிற்போய் (மாமரமாய்க் கிடந்தே) அழியவும், சூரியனுடைய தேர் (பழைய முறைப்படித் தடையின்றி) ஓடவும் வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

பரிசுத்தமான மணம் வீசுகின்ற காவிரியுடன் சேர்கின்ற ஒள்ளிய சிற்றாறு சூழ்கின்ற கடம்பூரில் வீற்றிருக்கின்ற பெருமாளே! தேவர் பெருமாளே!

*(சீதளம் பாதாரம் அருள்வாயே)*

---

* பூ - " ஆம்பூ முழங்கி"- திருப்புகழ் *1187.*

†வராக அவதாரத்திலும், இறைவனது திருவடியைத்தேட வராகமாய் அமைந்தபோதும், மண்ணை வாயாற் கிண்டினவன்; அடியார்களின் இதயப் பூவில் இருப்பவன் எனலுமாம் ; 'அகண்டலோகம் உண்ட மால்' -பாடல் *719.*

## 762. மாதர் சிக்கு அற

தனன தத்தனத் தனன தத்தனத்
தனன தத்தனத் தனதான

கறுவி மைக்கணிட் டினித ழைத்தியற்
கவிசொ லிச்சிரித் துறவாடிக்-
களவு வித்தையிட் டுளமு ருக்கிமுற்
கருதி வைத்தவைப் பவைசேரத்;
தறுக ணிற்பறித் திருக ழுத்துறத்
தழுவி நெக்குநெக் குயிர்சோரச்-
சயன மெத்தையிற் செயல ழிக்குமித்
தருணி கட்கசுப் படலாமோ;
பிறவி யைத்தணித் தருளு நிட்களப்
பிரம சிற்சுகக் கடல்மூழ்கும்-
பெருமு னித்திரட் பரவு செய்ப்பதிப்
ப்ரபல *கொச்சையிற் † சதுர்வேதச்;
சிறுவ ‡ நிற்கருட் கவிகை நித்திலச்
சிவிகை யைக்கொடுத் X தருளீசன்-

---

* கொச்சை - சீகாழிக்கு உரிய பன்னிரண்டு பெயர்களுள் ஒன்று கொச்சை. பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சை வயம், கழுமலம் - எனப் பன்னிரு பெயர்கள் சீகாழிக்கு உண்டு.

† 'நான்மறை வல்ல ஞான சம்பந்தன்' எனச் சம்பந்தப் பெருமானே தம்மைக் குறித்துள்ளார் சம்பந்தர் 3-1-11.

சம்பந்தரை 'வேத பாரகன்' என்றார் சேக்கிழார் -

"மணிமுத்தின் சிவிகை நின்றும் வேத பாரகர் இழிந்து"

"சண்பையாளி வேதபாரகன் மும்மைத் தமிழின் வேந்தன்"

- திருஞான. புரா - 913, 1019.

‡ பெண்ணாகடம் என்னும் தலத்தைத் தரிசித்துச் சம்பந்தப் பெருமான் திருநெல்வாயில் அரத்துறைக்குப் போக விரும்பி திருவடித் தாமரை நோவ நடந்து மாறன்பாடி என்னும் தலத்தில் தங்கினார். அன்றிரவு திரு அரத்துறை ஈசன் தனது குமாரரின் வழி வருத்தத்தைத் திருவுளத்தடைத்து, அவர் ஏறிச்செல்ல முத்துச் சிவிகையும், நிழல்தர முத்துக் குடையும், ஊதுதற்கு முத்துச் சின்னங்களும் தந்தருளினார். திருஅரத்துறை முதலிய தலங்களை முத்துச் சிவிகையிலேறிச் சென்றே சம்பந்தர் தரிசித்தனர்.

(தொடர்ச்சி -பக்கம் 269)

# திருவரத்துறை.

## 762.

**கோ**பித்து, மையைக் கண்ணில் இட்டு, இனிதாக அன்புடனே அழைத்து இயற்றமிழ்ப் பாடல்களைச் சொல்லி, சிரித்து, உறவுகொண்டு விளையாடி -

களவு வித்தைகளைக் கொண்டு உள்ளத்தை உருக்கி முன்னதாகவே யோசித்து வைத்த (வைப்பு அவை) சேமப் பொருள்கள் எல்லாம் தம்மைச் சேரும்படி-

கொடுமை காட்டிப் பறித்து, (அங்ஙனம் பறித்த பின்பு) இருவர் கழுத்தும் ஒன்றாம்படி அணைத்து நெகிழ்ந்து நெகிழ்ந்து உயிரும் சோரும்படி

படுக்கை மெத்தையிலே செய்வதின்னது என்று தெரியாத வகைக்குச் செயல் அழிக்கின்ற இந்த இளம் பெண்களிடையே அகப்படலாமோ (அகப்படல் கூடாது என்றபடி).

பிறவிப் பிணியைத் தொலைத்தருளக் கூடிய உருவமில்லாத, முழுமுதற் பொருளான ஞானானந்தக் கடலில் முழுகும்

பெரிய முநிவர் கூட்டங்கள் போற்றுகின்ற வயலூரில் புகழ் விளங்க வீற்றிருப்பவனே! சீகாழியில் நான்கு வேதங்களும் வல்லவனாய் வந்த

(திருஞான சம்பந்தச்) சிறுவனே! உன்பால் திருவருள் வைத்து (முத்து)க் குடையும், முத்துப் பல்லக்கும் கொடுத்தருளின சிவன் (வீற்றிருக்கும்)

---

"வருந்துங் கொலாம் கழல் மண்மிசை யேகிடின்என்று மென்றார்த்
திருந்தும் புகழ்ச் சண்பை ஞான சம் பந்தர்க்குச் சீர்மணிகள்
பொருந்துஞ் **சிவிகை கொடுத்தனன்** காண் புண ரித்திகழ் நஞ்
சருந்தும் பிரான் நம் **அரத்துறை மேய அரும் பொருளே**".

- ஆளுடைய பிள்ளை அந்தாதி - 83.

X அருள் ஈசன் - என்றார்: ஏனெனில் தான் பெற்ற அருளை நினைந்து மகிழ்ந்து **ஈசன் அருள்** யாருக்குக் கிட்டும் என்பதையே கருத்தாகவைத்துச் சம்பந்தப்பெருமான் திரு அரத்துறையிற் பதிகம் பாடினார். உ -ம்.

"எந்தை ஈசன் எம்பெருமான் ஏறமர் கடவுள் என்றேத்திச்
சிந்தை செய்பவர்க் கல்லால் சென்றுகை கூடுவ தன்றால்
** நெல்வாயில் அரத்துறை யடிகள் தம் அருளே'

- சம்பந்தர் 2-90-1.

செகத லத்தினிற் புகழ்ப டைத்தமெய்த்
திருவ ரத்துறைப் பெருமாளே. (1)

## யாழ்ப்பாணாயன் பட்டினம்.

('யாழ்ப்பாணாயன்பட்டினம்' என்பது அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனாருடைய ஊராகிய திரு எருக்கத்தம்புலியூராக இருக்கலாம். நடுநாட்டில் விருத்தாசலத்துக்குத் தெற்கு 7-மைல். ஈழநாட்டில் 'யாழ்ப்பாணம்' என்னும் ஊர் இருக்கின்றது.)

## 763. ஞானம் பெற

தாத்தா தானம் தத்தன தனதன
தாத்தா தானம் தத்தன தனதன
தாத்தா தானம் தத்தன தனதன தனதான

பூத்தார் சூடுங் கொத்தலர் குழலியர்
பார்த்தால் வேலுங் கட்கமு மதன்விடு
போர்க்கார் நீடுங் கட்சர மொடுநமன் விடுதூதும்-
*போற்றாய் நாளுங் கைப்பொரு ளுடையவர்
மேற்றா ளார்தம் பற்றிடு ப்ரமையது
பூட்டா மாயங் கற்றமை விழியின ரமுதூறல்;
வாய்த்தார் பேதஞ் செப்புபொய் விரகியர்
நூற்றேய் நூலின் சிற்றிடை யிடர்பட
வாட்டாய் வீசுங் கர்ப்புர ம்ருகமத மகிலாரம்-
மாப்பூ ணாரங் கச்சணி முலையினர்
† வேட்பூ ணாகங் கெட்டெனை யுனதுமெய்
வாக்கால் **ஞானம் பெற்றினி வழிபட**
**அருளாயோ;**
ஆத்தாள் மால்தங் கைச்சிக னிகையுமை
கூத்தா டாநந் தச்சிவை திரிபுரை
‡ யாட்பேய் பூதஞ் சுற்றிய பயிரவி புவநேசை-

---

* போற் றாய் - போல் தாய்; தாய் - தாவி.

† வேட் பூணு - வேட்கை பூண்டு.

‡ தேவி ஆளும் பேய்ப்படை, பூதப்படை:
"தொல்லை நாயகியுடைய பேய்க்கணங்கள் சொல்லுவாம்"
- தக்கயாக - 120.

** இறைவி..... பூதமும் கழுதுமே ககன முழுதுமே" - தக்கயாக. 55.

பூமியிடத்தே புகழ் பெற்ற சத்திய (வாசகப்) பெருமாளே! திரு அரத்துறைப் பெருமாளே!

(தருணிகட் ககப் படலாமோ)

## யாழ்ப்பாணாயன் பட்டினம்

## 763.

பூவாலாகிய மாலையைச் சூடும் கூந்தலை உடையவர், பூங்கொத்துக்களைச் சூடும் கூந்தலை உடையவர், பார்த்தால் பார்வையானது வேல், (கட்கம்) வாள் போலவும், மன்மதன் செலுத்தும் போருக்கு என்றே நிறைந்த பெருகியுள்ள (கள் சரம்) தேன் கொண்ட பூ அம்புகள் போலவும், யமன் ஏவி அனுப்பியுள்ள தூதும்

போலவும் பாய்ந்து, நாள்தோறும் (யார் கையிற்) பொருள் உளதோ அந்தப் பொருள் உடையவர்கள்மீது (தாள் ஆர் தம்பற்றிடு) முயற்சி நிறையச் செய்து தம்மீது (பற்று) அன்பு வரும்படியான (ப்ரமையது) ஆசை மயத்தை ஏற்றி, மாய வித்தைகளைக் கற்றுள்ள அஞ்சனம் பூசின கண்ணினர்; வாயிதழ் அமுது ஊறல்

வாய்ந்தவர்கள், மனம் மாறுபடுதல் உண்டாகும்படிப் பேசும் (பொய் விரகியர்) பொய் நிறைந்த உபாயத்தினர், நூல் தேய் நூலின் - நூலிலும் தேய்ந்து மெலிந்த அல்லது (நூறாம் நம்பர் எண்ணாக) வெகு நுண்ணிதாக நூற்கப்பட நூல்போன்ற சிறிய இடை துன்பப்படும்படி (வாட்டாய் வீசும்)- வாள் தாய் வீசும் - ஒளி தாவி வீசுவதும் பச்சைக் கற்பூரம், கஸ்தூரி, அகில், (ஆரம்) மாலை -

சிறந்த ஆபரணங்கள், முத்துமாலை, ரவிக்கை இவைதமை அணிந்துள்ள கொங்கையினர் - இவர்கள்மேல் வேட்கை (ஆசை) பூண்டு, உடல்நலம் கெட்ட என்னை உனது சத்தியவாக்கால் நான் ஞானத்தை அடைந்து இனி (உன்னை) வழிபடுமாறு திரு அருள் புரிய மாட்டாயா!

தாய், திருமாலின் தங்கை, (கனிகை) கன்னிகை, உமை, நடனம் செய்யும் ஆனந்த சிவாம்பிகை, திரிபுரை, தான் ஆளும் பேய்களும் பூதங்களும் சுற்றியுள்ள பயிரவி, (புவனேசை) - புவனங்களுக்கு ஈசுவரி,

*ஆக்கா யாவும் பற்றியெ திரிபுற
நோக்கா ஏதுஞ் செற்றவள் திருவிளை
யாட்டா †லீசன் பக்கம துறைபவள் பெறுசேயே;
ஏத்தா நாளுந் தர்ப்பண செபமொடு
‡நீத்தார் ஞானம் பற்றிய குருபர
Xயாப்பா ராயுஞ் சொற்றமி ழருள்தரு முருகோனே-
Oஏற்போர் தாம் **வந் திச்சையின் மகிழ்வொடு
வாய்ப்பாய் வீசும் பொற்ப்ரபை நெடுமதிள்
யாழ்ப்பா ணாயன் பட்டின மருவிய
பெருமாளே.(1)

## ஸ்ரீ முஷ்டம்.

(சிதம்பரத்திலிருந்து 24-மைல். விருத்தாசலத்துக்குத் தெற்கு 7 மைலிலுள்ள 'ராஜேந்திர பட்டணம்' எனப்படும் எருக்கத்தம் புலியூருக் குக் கிழக்கு 4-மைல். விஷ்ணு க்ஷேத்திரம்.)

## 764. தரிசனம் பெற

தனனத்த தான தனனத்த தான
தனனத்த தான தனதான

††கழைமுத்து மாலை புயல்முத்து மாலை
கரிமுத்து மாலை மலைமேவுங்-

---

*ஆக்கல்-பற்றுதல் - செறுதல் - முத்தொழிலும் தேவி பூண்டவள்; 'பூத்தவளே புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம் காத்தவளே பின் கரந்தவளே' - அபிராமி அந்தாதி 13.

† ஈசன் பக்கம துறைபவள் - பாடல் 301 - பக்கம் 246.

‡ 'முற்றா வற்றா மெய்ப் போதத்தே யுற்றார் சித்தத்துறைவோனே' - திருப்புகழ் 1120.

"ஞானம் புகலுடையோர் தம் உள்ளப்
புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர்" - சம்பந்தர் 1-132-6.

X "யாப்பாராயும் சொற்றமிழ்" - முத்தமிழ்க்கும் இலக்கியமாயுள்ள சம்பந்தர் தேவாரம்.

O ஏற்பவர்க்கு மகிழ்ச்சியுடன் ஈதல் உடையவர் வாழும் ஊர் யாழ்ப்பாணாயன் பட்டினம் என்கின்றார்-இது 'இரப்போர்க் கெந்நாளும் காலம் பகராதார் காழிந் நகர்' என்னும் தேவாரத்தையும் (சம்பந்தர் I-81-9) 'ஈத்துவக்கும் இன்பம்' என்னும் திருக்குறளையும் (228) நினைவூட்டுகின்றது

** வந்து - வர. (†† தொடர்ச்சி பக்கம் 273)

ஆக்கா யாவும் பற்றியே (யாவும் ஆக்கா பற்றியே) எல்லாவற்றையும் ஆக்கியும், (பற்றியும்) கொண்டு காத்தும் திரிபு உற நோக்கா - வேறுபாடு பொருந்தப் பார்த்தும் எதையும் (செற்றவள்) அழித்தவள் - (படைத்தல், காத்தல், அழித்தல் - முத்தொழிலையும் செய்பவள் - திருவிளையாடலாக ஈசனுடைய (இடது) பக்கத்தில் வீற்றிருப்பவள் - ஆகிய பார்வதி பெற்ற குழந்தையே!

(எத்தா நாளும்) நாளும் ஏத்தா - தினந்தோறும் போற்றிசெய்து, (தர்ப்பணம்) நீர்க்கடன், ஜெபம் இவை செய்து, (அல்லது இவை தமைத்) துறந்தோராயினோர் தமது ஞான நிலையிற் பற்றிய குருபர மூர்த்தியே; யாப்பிலக்கணத்தை ஆய்ந்தெடுத்த (யாப்பிலக்கணம் ஆய்ந்தமைந்த) சொற்களைக் கொண்ட தமிழ்ப் பாடல்களை அருளிய முருகனே!

ஏற்பவர்கள் தாம் வர (அவர்களுக்கு) இஷ்டத்துடனும் மகிழ்ச்சியுடனும் (பொருளை) வாய்க்கும்படி - சேரும்படி வீசுகின்ற (கொடையாளிகள் உள்ள) யாழ்ப்பாணாயன் பட்டினம் மருவிய பெருமாளே! (பொற்பிரபை நெடுமதிள்) பொன்னொளி வீசும் நீண்ட மதில் சூழ்ந்துள்ள **யாழ்ப்பாணாயன் பட்டினத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(ஞானம் பெற்றினி வழிபட அருளாயோ)

## ஸ்ரீ முஷ்டம்.

## 764.

(கழை) மூங்கில் அல்லது கரும்பு தரும் முத்தாலாய மாலை, (புயல்) மேகம் தருகின்ற முத்தாலாயமாலை (கரி) யானை தரும் முத்தாலாய மாலை, மலையிற் கிடக்கும்

---

(272-ஆம் பக்கம் - தொடர்ச்சி.)

†† முத்து பிறக்கின்ற இடங்கள் - பாடல் 306-பக்கம் 260 கீழ்க்குறிப்பு; பாடல் 278-பக்கம் 192 கீழ்க்குறிப்பு.

பலவித முத்துமாலைகளையும் மார்பில் அணிந்துவர வேண்டும் என்கின்றார் - இக் கருத்து-

"மழையின் முத்தும், தவள மதியின் முத்தும், கமல மலரின் முத்தும், கரியினீள் - வளர் மருப்பின்கண் ஒளிகிளரு முத்துங்

(தொடர்ச்சி 274 ஆம் பக்கம் பார்க்க.)

கடிமுத்து மாலை வளைமுத்து மாலை
கடல்முத்து மாலை யரவீனும்;

அழல்முத்து மாலை யிவைமுற்று மார்பி
னடைவொத்து லாவ அடியேன்முன்-

அடர்பச்சை மாவி லருளிற்பெ ணோடு
*மடிமைக்கு ழாமொ டருள்வாயே;

†மழையொத்த சோதி குயில்தத்தை போலு
‡மழலைச்சொ லாயி யெமையீனு-

---

(273 ஆம் குறிப்புத் தொடர்ச்சி)

கதலிவரு கனிக்கண் பொழி நிலா, விழையு முத்தும், குருகு தலையின் முத்தும் கமுகின் மிடையு முத்தும், தெரிவைமார் மிடறின் முத்தும், கிருடி யெயிறு முத்தும், கிளையின் விளையு முத்தும், பணையினார் கழையின் முத்தும் பணில முதவு முத்தும், செநெலின் கதிரின் முத்தும், புனலுலாம், கயலின் முத்தும், சலவர் முழுகு நத்தின் வயிறு கஞலு முத்தும், புகழுதாய்த், தழையு முத்தும் புனையு மணி யுரத்தின் குமர! தருக முத்தம் தருகவே, தணிகை வெற்பின் கண் அமர் அறுமுகப் பொன்குழவி! தருக முத்தந் தருகவே! - தணிகைப் பிள்ளைத் தமிழ்.

(1) மூங்கில்முத்து (எங்ஙனம் பெறப்படும்) என்பது முதுவேய் கலகலென ஒலிகொள் கதிர் முத்தம் அவை சிந்து காளத்திமலை' 327-5

'வேரல் நரன்றுக்க வெண்மணிக் குப்பை"-தணிகையாற்றுப் படை-384.

(2) கரிமுத்து - யானை முத்து எங்ஙனம் பெறப்படும் என்பது:

"பருக்கை யானை மத்தகத்து அரிக்குலத் துகிர்ப்புக, நெருக்கி வாய நித்திலம் நிரக்கும் நீள் பொருப்பனூர்" - சம்பந்தர் 2-101-1.

'வேழத்தின் வெண்மருப்பினைக் கீழ்ந்து சிங்கங்
குருகுண்ண முத்து உதிரும் கேதாரமே" - சம்பந்தர் 2-114-9.
"பிறழ்பற் பேழ்வாய்ப் பின்முன் பார்வைச்
சிங்க வல்லேறு பொங்குசினந் திருகி
எழுந்து தாய்த் துமிப்ப இருங்கடா யானை
மத்தகம் பிளந்து மாயிருங் குன்றத்து
வெண்புன லருவி வீழ்வன போலச்
சலசல வுக்க தரளக் குவாலும்" - தணிகை யாற்றுப்படை 385.

(தொடர்ச்சி பக்கம் 275)

(கடி) சிறப்பு வாய்ந்த முத்தாலாய மாலை, (வளை) சங்கிற் கிடைக்கும் முத்தாலயமாலை, கடலிற் கிடைக்கும் முத்தாலாய மாலை, பாம்பு தரும்

சூடுள்ள முத்தாலாயமாலை-இப்படிப்பட்ட எல்லா மாலைகளும் மார்பிலே (அடைவு ஒத்து) தகுதி பெறவே புரண்டசைய அடியேன் எதிரே-

அடர்ந்த - நெருங்கிய பச்சைநிறக் குதிரை - மயில்மீதே - திருவருள் சுரந்து - பெண்ணோடு (உனது பத்தினிகள்) தேவசேனை - வள்ளியுடனும் (அல்லது - அருளிற்பெண்- *இச்சா சத்தியாம் வள்ளியுடனும்) அடியார் கூட்டத்தோடும் வந்து அருள் புரிவாயாக.

(மழை யொத்த சோதி) மேகம்போலு நிறத்தை உடைய சோதியுமை, குயிலும் கிளியும் போன்றவள், மழலைமொழி பேசும் தாய், எம்மைப் பெற்ற

---

*"இச்சா சக்தி தெய்வ வள்ளிக்கு ஹர ஹரோ ஹரா"-திருமுருகன் ஹர ஹரோ ஹரா கும்மி.

---

பக்கம் 274 தொடர்ச்சி

(3) **அரவினும் அழல் முத்து** என்பர்- பாம்பு உமிழும் முத்துமணி ரத்னம் சுடும் என்பது.

" சுடுமணி உமிழ் நாகம்" - சம்பந்தர் *1-118-1.*

(4) **கடல் முத்து** (எங்ஙனம் பெறப்படும் என்பது)

"கடல்வாழ் பரதர் மனைக்கே நுனை மூக்கின்
சங்கம் ஏறி முத்தம் ஈனும் சண்பை" - சம்பந்தர் *1-66-1.*

"சங்கு கடல் திரையால் உதையுண்டு சரிந்து இரிந்து, ஒசிந்து, அசைந்து, இசைந்து சேரும் வெண்மணற் குவைமேல் தங்கு கதிர்மணி நித்திலம்" - சம்பந்தர் *1-136-2.*

*'அடிமைக் குழாம் உடன் வரவேண்டும்' என்பது அருணகிரியார் வேண்டுகோள் - "பழைய அடியவருடன்....ஒரு விசை வரவேணும்" -திருப்புகழ் *387.*

† மழை - நீருண்ட மேகம் - தேவியை

"மைம் மலர் நீலநிறங் கருங்கண்ணி"

-என்பர் அப்பரும் - VI-89-5.

‡ தேவி - 'மழலைச் சொல் ஆயி' என்பர் 'கிளி மழலைக் கேடில் மங்கையோர் கூறுடையான்' - சம்பந்தர் *-1-105-6.*

*மதமத்த நீல களநித்த நாதர்
மகிழ்சத்தி யீனு முருகோனே;

செழுமுத்து மார்பி னமுதத்தெய் வானை
† திருமுத்தி மாதின் மணவாளா-

சிறையிட்ட சூரர் தலைவெட்டி ஞான
திருமுட்ட மேவு பெருமாளே.(1)

## 765. மாதர் உறவு அற

தனனத் தத்தன தானன தானன
தனனத் தத்தன தானன தானன
தனனத் தத்தன தானன தானன தனதான

சரம்வெற் றிக்கய லாமெனும் வேல்விழி
சிலைவட் டப்புரு வார்குழல் கார்முகில்
தனமுத் துக்கிரி யாமெனு நூலிடை மடவார்கள்-

‡ சனுமெத் தப்பரி வாகிய மாமய
லிடுXமுத் தித்திகழ் மால்கொடு பாவையர்
தகுதத் தக்கிட தோதகு தீதென விளையாடும்;

விரகத் துர்க்குண வேசைய ராசையர்
பணமெத் தப்பறி காரிகள் மாறிகள்
விதமெத் தக்கொடு மேவிகள் பாவிகள் அதிபோக-

---

* மதமத்தம் - (ஊமத்தை) 'வன்னி கொன்றை மதமத்தம் எருக்கொடு கூவிளம் பொன்னியன்ற சடையிற் பொலிவித்த புராணனார்' - சம்பந்தர் 2-7-1.

† தேவசேனை - முத்திமாது -
"முத்தித்தரு பத்தித் திருநகை அத்தி" - திருப்புகழ் 1.
"ஆரிய கேவலி" - திருப்புகழ் 918
'கோழி பிறப்பு குலமஞ்ஞை காப்பு, கரந்
தாழு மயிற்கையிற் சங்காரம் - வாழ்குறவர்
ஏர்மகள் தி ரோபவம் இந்திரன் பெண் இன்பமுத்தி
தேர்முருகன் ஐந்து திறம்" - என்னும் பாடலும் இதற்குச் சான்றாம்.

‡ சனு - சரசம், தயவு.

X உத்தி - யுத்தி; முத்தி - முத்தம்.

(மத மத்தம்) மதமத்தை - பொன்னூமத்தை - ஊமத்தம் பூவை அணிந்தவரும்) நீலநிறம் கொண்ட கழுத்தை உடையவரும், (நித்த நாதர்) என்றும் அழியாதிருப்பவருமான தலைவர் அல்லது, நி(ர்)த்தம் கூத்தாடும் தலைவர் (சிவபிரான்) மகிழ்கின்ற (சத்தி) பார்வதி தேவி பெற்ற குழந்தையே!

செழிப்புள்ள முத்துமாலை அணிந்த மார்பை உடைய அமுதமயமான தெய்வயானை ('அமுதவல்லி' யாயிருந்த தேவசேனை), அழகிய முத்தியைத் தரவல்ல மாதுஆம் (தேவசேனையின்) மணவாளனே!

சிறையில் (தேவர்களை) வைத்த சூரர்கள் (அந்தத் தேவர்களுக்கு இட்ட) தளை - விலங்கை தறித்தெறிந்தவனே! அல்லது சூரர்களின் (கூட்டக்) கட்டை வெட்டித் தொலைத்த - ஞானனே! திரு முட்டம் என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அருளிற் பெணோடும் அடிமைக் குழாமொ டருள்வாயே)

## 765.

(சரம் வெற்றி) வெற்றிச்சரம் - ஜயத்தையே தரும் அம்பு, கயல்மீன் என்று உவமிக்கப்படும் வேல் போன்ற கண்கள், வில்லைப்போல வட்டமாக வளைந்த புருவம், (வார்குழல் கார்முகில்) கார்முகில் வார்குழல் - கரியமேகம் போல நீண்ட கூந்தல், (தனமுத்துக்கிரி) - கிரிமுத்துத்தனம் - மலை-போன்றதும் முத்துமாலை அணிந்ததுமான கொங்கை, (ஆமெனு நூலிடை) நூல் இடையாம் எனும் - நூலுக்கு ஒப்பாகும் இடை என்று சொல்லத்தக்க மாதர்கள்

(சனு) சரசத்தில் - காம விளையாட்டில் அதிக அன்பு கூடுகின்ற பெரிய காம மயக்கத்தைத் தருகின்ற யுக்தி விளங்குகின்ற (அல்லது - முத்தம் விளைவிக்கும்) ஆசையோடு கூடிய பெண்கள், தகுதத் தக்கிட தோதகு தீதென நடித்து விளையாடுகின்ற

சாமர்த்தியத்தையுடைய துர்க்குணத்தவரான வேசையர், ஆசையொடு கூடியவர், பணத்தை அதிகமாகப் பறிக்கின்ற பேர்வழிகள் (அடிக்கடி குணம்) மாறுபவர்கள், பலவிதமான (நடை-பாவனை) மேற் கொள்பவர்கள், பாவிகள், அதிக போகம் (அநுபவித்ததனால்) -

மெலிவுற் றுக்குறி நாறிகள் பீறிகள்
கலகத் தைச்செயு மோடிகள் பீடிகள்
விருதிட் டுக்குடி கேடிகள் சேடிகள் உறவாமோ;
*பொருவெற் றிக்கழை வார்சிலை யானுட
லெரிபட் டுச்சரு காய்விழ வேநகை
புகுவித் தப்பிறை வாழ்சடை யானிட மொருமாது-
புகழ்சத் திச்சிலு காவண மீதுறை
† சிவபத் திப்பர மேஸ்வரி யாள்திரி
புவனத் தைப்பரி வாய்முத லீனுமை யருள்பாலா;
திரையிற் பொற்கிரி யாடவும் வாசுகி
புனைவித் துத்தலை நாளமு தார்சுவை
‡ சிவபத் தர்க்கிது வாமென வேபகி ரரிராமர்-
Xதிருவுற் றுப்பணி யாதிவ ராகர்த
மகளைப் பொற்றன வாசையொ டாடிய
**திருமுட் டப்பதி** வாழ்முரு காசுரர்
பெருமாளே.(2)

---

* மன்மதனைச் சிரித்து எரித்தது - பாடல் 399 - பக்கம் 510.

† சிவபத்திப் பரமேசுரி:- தேவி சிவனிடத்தில் மிக்க பத்தி உடையவள்.

இது காஞ்சியில் இறைவி இறைவனைப் பூசித்த பான்மையிற் பெறப்படும்.

"இங்கு நாத நீ மொழிந்த ஆகமத்தின்
இயல்பினால் உனை அருச்சனை புரியப்
பொங்குகின்ற தென் ஆசை என்றிறைஞ்சிப்
போக மார்த்தபூண் முலையினாள் போற்ற"

- பெரிய புராணம் - திருக்குறிப்பு - 52.

‡ திருப்பாற்கடல் அமுதைத் திருமால் - சிவபத்தர்க் கிதுவாம் - எனப் பகிர்ந்தனர் என்கின்றார் தேவர்கள் யாவரும் சிவபக்தர்களாதலின், அமுதத்துக்கு முன்பு நஞ்சு எழுந்தபோதும் தேவர்களே சிவனை அடுத்துத் துதித்தனர்.

"அண்ட வானவர்களும் அமரரும்....பணிய ஆலமுண்ட மாகண்டனார் - சம்பந்தர் 3-89-7.

"ஒரு தோழந் தேவர் விண்ணிற் பொலிய அமுதம் அளித்த....அண்ணல்" - சம்பந்தர் 1-74-7.

"வானவர் வேதத்தின் இசைபாடி விரை மலர்கள் சொரிந்தேத்தும் பாதத்தீர்" - சம்பந்தர் 2-81-1.

(தொடர்ச்சி 279-ஆம் பக்கம் பார்க்க.)

(உடல்) மெலிவடைந்து, குறி துர்நாற்றமுள்ளவர்கள், (பீறிகள்) கிழிவுண்டவர்கள், கலகமே செய்யும் மூதேவிகள், (பீடிகள்) பீடித்துத் துன்புறுத்துபவர்கள், விருதுபேசி - பெருமைப் பேச்சுக்களைப் பேசிக் குடியைக் கெடுப்பவர்கள், (சேடிகள்) இளமை உடையோர் இத்தகையோரது உறவு ஆமோ! (உறவு ஆகாது என்றபடி)

போரில் வெற்றியையே தரும் கரும்பாகிய நீண்ட வில்லை உடைய மன்மதனது உடல் எரிபட்டு உலர்ந்த சருகுபோல் விழும்படி (தீச்) சிரிப்பைச் செலுத்திய பிறை நிலா வாழ்கின்ற சடையரின் இடது பாகத்தில் உள்ள ஒப்பற்ற மாது,

எல்லாராலும் புகழப் படுகின்ற (பரா) சக்தி, நிலைகுலையாத மனப்பான்மையை மேற்கொண்டுள்ள சிவபக்தி நிறைந்த பரமேஸ்வரியாள், மூவுலகையும் அருளுடனே முன்பு (ஈன்றவள்) படைத்தவளான உமாதேவி அருளிய குழந்தையே!

கடலில் பொன்மலையாகிய மேரு (மத்தாக)ச் சுழன்று ஆடும்படி வாசுகி என்கின்ற பாம்பைக் கயிறாகக் கட்டி முன்பொரு காலத்தில் (அமுதார்சுவை) சுவையாரமுது - சுவை நிறைந்த அமுதத்தை சிவபக்தர்களுக்கே (இது ஆம் என்று) இது உரியதாம் என்று பங்கிட்டுக் கொடுத்த திருமாலாம் இராமர்,

லக்ஷ்மிதேவி சென்று பணிந்து பூசித்த ஸ்ரீ ஆதிவராகப் பெருமாள் - அவரது மகளாகிய வள்ளியுடைய அழகிய கொங்கை மீது ஆசை கொண்டு அவருடன் விளையாடின (முருகா)! திரு முட்டப்பதி எனுந்தலத்தில் வாழ்கின்ற முருகா! தேவர்கள் பெருமாளே!

(குடிகேடிகள் சேடிகள் உறவாமோ)

---

X ஸ்ரீ முஷ்ணம் திருமாலின் திருநாமம் "ஆதிவராகப் பெருமாள்" என்பது. லக்ஷ்மி பூசித்ததலம். ஸ்ரீமுஷ்ணம் எட்டு ஸ்வயம் வ்யக்த ஸ்தலங்களில் ஒன்று - மற்றவை - ஸ்ரீரங்கம், திருவேங்கடம், வானமாமலை, புஷ்கரம், நைமிசாரணியம், பத்ரிகாசிரமம், சாளக்கிராமம் என்பன.

## திருநல்லூர்.

(சிதம்பரத்துக் கடுத்த கொள்ளிடம் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 3-மைல். இஃது 'ஆச்சாபுரம் நல்லூர்' என வழங்கும். 'திருநல்லூர்ப் பெருமணம்' என்ப திதுவே. திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது. அவருடைய திருமணம் நடந்த திருப்பதி. ஸ்தல புராணம் உண்டு.)

### 766. யோக தரிசனம்

தான தந்ததன தான தந்ததன
தான தந்ததன தான தந்ததன
தான தந்ததன தான தந்ததன தந்ததான

*மூல முண்டகனு பூதி மந்திரப
ராப ரஞ்சுடர்கள் †மூணு மண்டல ‡அ
தார சந்திமுக மாறு Xமிந்த்ரதரு வுந்தளாமேல்-
மூது ரம்பலவர் பீட மந்தமுமி
லாத பந்தவொளி யாயி ரங்கிரண
மூணு மிந்துவொளிர் சோதி விண்படிக
Oவிந்து நாதம்;
ஓல மென்று **பல தாள சந்தமிடு
சேவை கண்††டமுதை வாரி யுண்‡‡டுலகி
ரேழு கண்டுவிளை யாடி யிந்துகதி ரங்கிXXசூலம்-

---

* இப் பாட்டின் முதல் நான்கடியின் கருத்து-

"மூல நிலத்தில் அதோ முகமாய் முகிழ்த்து விழியின் பொடு துயிலும், மூரிப்பாம் பெக் காலனலை மூட்டி யெழுப்பி நிலமாறும், சீலமொடும் போய்த் தரிசித்துச் செழுமா மதியின் அமுதகடல், தேக்கி யகத்தங் கசைவறுமோர் தெய்வத் தவத்தோர் உளவிழியில், காலும் தீப மினல்பந்தம் கடிகூர் விறிசு கதிர் மதிபோற், காட்டும் ஒளியாய் இவையாவும் கடந்தாங் கழிவில் பேரொளியாய்ச், சால விளங்கும் விந்துவெனும் தடமா மயிலோய் தாலேலோ! தமரக் கடலைக் கடைந்தமுதம் தருவோன் மருகா தாலேலோ" எனவரும் திருப்போரூர்ப் பிள்ளைத் தமிழிலும் காணக் கிடக்கின்றது.

† மூணு மண்டல அதாரசந்தி - 'மண்டல சந்தி ஆறில்' என்றார்.

‡ அதார - ஆதார - 647-ஆம் பாடலில்.

X இந்த்ர தரு - "கற்பகந்தெரு" என்றார் 612-ஆம் பாடலில்

Oவிந்து நாதம் ஓலம் 'கோ என முழங்கு சங்கொலி விந்து நாதம்"-என்றார் 647-ஆம் பாடலில்.

* பலதாள சந்தமிடு சேவை - "கோடி நடனப்பதஞ் சபை என்று சேர்வேன்" - பாடல் 647 பார்க்க.

(தொடர்ச்சி - பக்கம் 281)

# திருநல்லூர்
# 766.

*(மூல முண்டகம்)* மூலாதார கமலத்தில் உள்ள *(அனுபூதி மந்திரம்)* அனுபவ ஞானத்தைத் தரும் மந்திரம், *(பராபரஞ் சுடர்கள் மூணு மண்டலம்)* மேல்நிலையில் உள்ள சூரிய மண்டலம், சந்திர மண்டலம், அக்கினி மண்டலம் எனப்படும் மும்மண்டலங்கள், *(அதார சந்திமுகம் ஆறும்)* ஆதாரங்களாக சந்திக்கப்படும் இடங்களான (மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம், விசுத்தி, *(ஆக்ஞை)* எனப்படும் ஆறு ஆதாரங்கள், *(இந்த்ர தருவும்)* -கற்பக விருக்ஷம்போல விரும்பிய எல்லாம் அளிக்கத்தக்க மேலைச் சிவவீதி - இவைகளை எல்லாம் *(தளாமேல்)* தள்ளா - தாண்டி அவைகளின்மேல் - *(சென்று)*-

பழைய *(அம்பலவர் பீடம்)* - எல்லாத் தத்துவங்களும் ஒடுங்கும் பரவெளிப் பீடமாம் லலாடஸ்தான மண்டபத்தில் *(அந்தமும் இலாத)* முடிவு இல்லாத, பந்தஒளி ஆயிரம் கிரணம் - திரண்ட ஒளியாய் விளங்கும் ஆயிரம் கிரணங்கள் வீசும், மூணு- மூன்றாம்பிறை நிலவின் வடிவைக் கொண்ட ஆஞ்ஞை ஆதாரத்தில் - *(இந்து ஒளிர்சோதி)* சந்திர ஒளியுடன்கூடி, *(விண்படிக)* மேல்நிலையில் பளிங்குபோல விளங்கும் *(விந்து நாதம்)* - விந்து சம்பந்த நாத ஒலி.

ஓலம் என்று - அபயம் இட்டு அழைத்தல் போன்ற ஒலியுடன் - பல வகைய தாளங்கள் சந்தங்கள் கலக்கும் நடன தரிசனத்தைக் கண்டு, *(அமுதவாரி உண்டு)* தேவாம்ருத கடலைப்பருகி, *(உலகு ஈரேழு கண்டு)* - பதினாலுலகங்களையும் அங்கே விளக்கமுறத் தரிசித்து அனுபவித்து, இந்து - கதிர் - அங்கி - சந்திரன் - சூரியன் - அக்கினி என்னும் - இடைகலை, பிங்கலை, சுழுமுனை எனப்படும் மூன்று நாடிகளின் வழியே - சூலம்போல-

---

†† அமுதை வாரி உண்டு - " இந்திர வான அமுதத்தை உண்டு" என்றார் *647*-ஆம் பாடலிலும்.

‡‡ உலகு இரேழு கண்டு "லோகங்கள் வலமதாட" - பாடல் *179.*

"அகில வனாதி யெங்கும், வெளியுற மெய்ஞ்ஞான இன்ப அமுது" என்றார் *141* ஆம் திருப்புகழில்.

XX சூலம் ஒடு - பாடல் ...."சூலம் பெற ஓடிய வாயுவை "சூலமென ஓடு சர்ப்ப வாயுவை" என்றார் *190, 790* ஆம் பாடலில்.

ஓடு மந்தகலி காலொ டுங்க* நடு
தூணில் தங்கவரி ஞான வண்கயிறு
மீத ணைந்துசத கோடி † சந்த்ரவொளி
சந்தியாதோ;

சூலி யந்திரிக பாலி சங்கரிபு
ராரி யம்பரிகு மாரி ‡ யெண்குணசு
வாமி பங்கிசிவ காம சுந்தரியு கந்தசேயே-

சூர சங்கரகு மார இந்திரச
காய அன்பருப கார சுந்தரகு
காஎ னுஞ்சுருதி யோல மொன்றநட
னங்கொள்வேலா;

சீல Xவெண்பொடியி டாத வெஞ்சமணர்
மாள வெங்கழுவி லேறு மென்றுபொடி
நீறி டுங்கமல பாணி Oசந்த்ரமுக கந்தவேளே-

தேவ ரம்பையமு தீண மங்கைதரு
மான ணைந்தபுய தீர **சங்கரதி
யாகர் வந்துறைந லூர மர்ந்துவளர் தம்பிரானே (1)

---

*நடுதூண்....."சூலம்பெற ஓடிய வாயுவை மூலந்திகழ் தூண் வழியே அளவிட ஓடி" - என்றார் 190-ஆம் பாடலில்.

† சந்த்ர ஒளியைச் சந்தித்தல் - "சந்திர வெளிக்குவழி அருள்வாயே" என்றார் 398-ஆம் பாடலில்.

‡ சிவபிரான் எண் குணத்தவர் - 'எண்ணமரும் குணத்தார்' சம்பந்தர் 2-69-1.

X வெண்பொடி யிடாத வெஞ்சமணர்....பாடல்-748 பக்கம் 230 கீழ்க்குறிப்பு.

O சந்த்ரமுக கந்தவேள்.....பாடல்-725 பக்கம்-174 -கீழ்க்குறிப்பு.

** "சிவலோகத் தியாகர்" என்பது ஆச்சாபுர நல்லூரிற் சிவ பெருமான் திருநாமம்.

கும்பகோணத்துக் கடுத்த சுந்தரபெருமாள் கோயில் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 2 மைல் தூரத்திலுள்ள நல்லூர் என்னுந் தேவாரம் பெற்ற ஸ்தலத்தில் வீதிவிடங்கத் தியாகர் மூன்று நாள் வந்து உறைந்ததாகத் திருநல்லூர்ப் புராணம் கூறும்.

ஓடுகின்ற (அந்த கலிகால் ஒடுங்க) அந்தப் பிராணவாயு ஒடுங்க - நடு தூணில் தங்க - வீணா தண்டம் எனப்படும் - முதுகு எலும்பில் தங்கி, வரி ஞானவன் கயிறு மீதணைந்து அமைவதான ஞான வளப்பம், பொருந்திய சுழுமுனைக் கயிற்றின் மீதணைந்து - (அல்லது முதுகெலும்பில் தங்க மயமான ஞானவளப்பம் பொருந்திய சுழுமுனை நாடி) - மீதணைந்து - வழியே மேலே அணைந்து நூறுகோடி சந்திரர்களின் ஒளியை (சிவப்பேரொளியைச்) சந்திக்கும் பாக்கியம் கிட்டுமா!

சூலாயுதத்தை ஏந்தியவள், பராகாசவடிவை உடையவள், கபாலம் ஏந்தியவள், சங்கரி, புரத்தைப் பகைத்து எரித்தவள். (அம்பரி) அம்பு + அரி, திரிபுரசம்மாரத்தில் அம்பாயிருந் அரி - வைஷ்ணவி - அல்லது - சிதாகாசத்தில் உறைபவள், என்றும் இளையவள், எண் குணத்தவரான சிவபெருமான் பங்கில் உறைபவள் - ஆகிய சிவகாமசுந்தரி (சிவனை விரும்பும் கவுரி) மகிழும் குழந்தையே!

சூரனைச் (சங்கர குமார) சங்கரித்த குமரவேளே! இந்திரனுக்கு உதவி செய்பவனே! அன்பர்களுக்கு உபகாரம் செய்பவனே! அழகனே! குகனே! என்றெல்லாம் வேதங்கள் (ஓலம்ஒன்ற) முறையிட்டு உரைப்பத் திருநடனம் கொண்ட வேலனே!

பரிசுத்தமான திருவெண்ணீற்றை அணியாதவர்களும் பொல்லாதவர்களுமான சமணர்கள் இறக்கும்படி கொடிய கழுவில் ஏறுங்கள் என்று திருவிளையாடல் இயற்றிப் பொடி - நீற்றை (கூன் பாண்டியன் முதலான) அடியார்களுக்கு அளித்த தாமரைக்கையனே! சந்திரன் போன்ற முக விலாசத்தை-யுடையவனே! கந்தவேளே!

தேவரம்பை போன்றவளும், (அமுது ஈன்ற மங்கை) பாற்கடலமுதுடன் ஈனப்பட்ட (தோன்றிவந்த) (மங்கை) லக்ஷ்மியளித்த மானாகிய வள்ளி (அல்லது அமுது ஈணமங்கை - அமுதவல்லி என்ற பெயர் பொருந்தி இருந்த மங்கை, தருமான் - கற்பகத்தரு நிழலில் இருந்த மான் தேவசேனை - அணைந்த திருப்புயத்தை யுடையவனே! தீரனே! சங்கரதியாகர் - சிவலோகத் தியாகர் என்னும் திருநாமம் உடைய சிவபிரான் வந்து உறைகின்ற திரு நல்லூரெனுந் தலத்தில் பொருந்தி வீற்றிருக்கின்ற தம்பிரானே!

(சதகோடி சந்த்ர ஒளி சந்தியாதோ)

## திருமயேந்திரம்.

(ஆச்சாபுரத்துக்கு வடகிழக்கு 4-மைல். திருஞான சம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

### 767. மாதர் மயக்கு அற

தந்தன தந்தன தாந்த தானன
தந்தன தந்தன தாந்த தானன
தந்தன தந்தன தாந்த தானன தனதான

வண்டணி யுங்கமழ் கூந்த லார்விழி
அம்பிய லுஞ்சிலை போந்த வாணுதல்
வண்டர ளந்திக ழாய்ந்த வார்நகை குயில்போல-

வண்பயி லுங்குவ டாண்ட மார்முலை
யின்பொறி யங்குமி ழாம்பல் தோள்கர
வஞ்சியெ னுங்கொடி சேர்ந்த நூலிடை
மடவார்பொன்;

கண்டவு டன்களி கூர்ந்து பேசிகள்
குண்டுணி யுங்குரல் சாங்க மோதிகள்
கண்சுழ லும்படி தாண்டி யாடிகள் சதிகாரர்-

கஞ்சுளி யுந்தடி யீந்து போவென
நஞ்சையி டுங்கவ டார்ந்த பாவிகள்
கம்பையி லுஞ்சட மாய்ந்து நாயனு
முழல்வேனோ;

அண்டரு டன்தவ சேந்து மாதவர்
புண்டரி கன்திரு பாங்கர் *கோவென
அஞ்சலெ னும்படி போந்து வீரமொ டசுராரை-

அங்கமொ டுங்கிட மாண்டொ டாழிக
ளெண்கிரி யும்பொடி சாம்பர் நூறிட
அந்தக னுங்கயி றாங்கை வீசிட விடும்வேலா;

* கோ....இரங்கற் குறிப்பு. "அலைகொண்ட வாரிதி கோ கோ கோ கோ என நின்று வாய்விட" - திருப்புகழ் 328, பாடல்கள் (826, 1139)ம் பார்க்க.

# திருமயேந்திரம்

## 767.

**வ**ண்டுகள் மொய்க்கும் நறுமணக் கூந்தலை உடையவர்கள், கண்ணானது அம்பு போன்றிருக்கும்; வில்லைப் போன்ற ஒளி பொருந்திய நெற்றி, வளப்பம் பொருந்திய முத்தை நிகர்த்து விளங்குவனவாய் நன்கு அமைந்த ஒழுங்கான பற்கள், குயில்போல

நன்கு பயிலும் (மொழிகள்), மலைபோன்று மார்பில் உள்ள கொங்கை, அதில் அழகிய (பொறி) தேமல், அழகிய குமிழம்பூப் போல மூக்கு, (ஆம்பல்) மூங்கில் போன்ற தோளும் கையும், வஞ்சிக்கொடி போன்ற நூலுக்கு இணையான இடை, இவைதமை உடைய மாதர்கள் - பொன் (பொருளைக்)

கண்டவுடனே மகிழ்ச்சி மிக்குப் பேசுபவர்கள், (குண்டுணியுங் குரல்) கலகத்தை மூட்டும் குரலுடனே (சாங்கம்) எல்லா விஷயங்களையும் பேசுபவர்கள், கண்கள் சுழலும்படித் தாண்டுவதும் ஆடுவதுமாய் உள்ள வஞ்சனைப் பேர்வழிகள்-

(கஞ்சுளி) பரதேசிப் பையையும் தடியொன்றையும் கொடுத்துப் (பிச்சைக் காரனாக்கி)ப் போ என்று. விஷத்தையும் கலந்து கொடுக்கும் வஞ்சம் நிறைந்த பாவிகள் - (அத்தகையோரது) கம்பையிலும் - அதிகார வரம்பில் - எல்லையில், சடம் மாய்ந்து - இவ்வுடல் நலிவுற்று - கெடுதலடைந்து - அடியேனும் திரிவேனோ!

தேவர்கள், தவநிலையை (ஏந்தும்) மேற்கொண்டுள்ள மகா தவசிகள், (புண்டரிகன்) தாமரையோன் - பிரமன், திருபாங்கர் லக்ஷ்மியின் கணவர் - இவர்களெல்லாம் (கோ என) இரங்கி ஓலம் என, அவர்களை அஞ்சாதீர்கள் என்னும்படிச் சென்று வீரத்துடனே, அசுரர்களை -

அவர்களுடைய உடல் ஒடுங்கி (மாண் - மாண்டல்) தொட - இறத்தல் உண்டாக - அல்லது மாண்டு (ஓட) ஓட - இறந்தொழிய, கடல்களும் எட்டு மலைகளும் பொடி சாம்பராய்த் தூளாக, யமனும் அவனது பாசக்கயிற்றை, ஆங்கு - அவ்விடம் (ஐ) வியப்புடன் வீச, வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

செண்டணி யுஞ்சடை பாந்தள் நீர்மதி
யென்பணி யன்கன சாம்பல் பூசிய
செஞ்சட லன்சுத சேந்த வேலவ முருகோனே-
திங்கள்மு கந்தன சாந்து மார்பின
*ளென்றனு ளம்புகு பாங்கி மானொடு
சிந்தைம கிழ்ந்துமயேந்த்ரமேவிய பெருமாளே. (1)

## சீகாழி.

(ரெயில்வே ஸ்டேஷன். சிதம்பரத்திற்குத் தெற்கு 11-மைல். திருஞான சம்பந்த ஸ்வாமிகள் திருவவதாரஞ் செய்தருளிய திருப்பதி. மூவர் தேவாரமும் பெற்ற முதுநகர். புகலி, சண்பை, பிரமபுரம், கொச்சை, கழுமலம், பூந்தராய் என்பன ஸ்ரீ காழியின் திரு நாமங்கள். ஸ்தல புராணம் உண்டு.)

## 768. அகப்பொருள்

தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன
தனதன தனதன தந்த தானன தந்ததான

†அலைகடல் சிலைமதன் அந்தி யூதையும்
அரிவையர் வசையுட னங்கி போல்வர
அசைவன விடைமணி யன்றில் கோகிலம் அஞ்சி நானும்-
அழலிடு மெழுகென வெம்பி வேர்வெழ
அகிலொடு ம்ருகமத நஞ்சு போலுற
அணிபணி மணிபல வெந்து நீறெழ அங்கம்வேறாய்;
முலைகனல் சொரிவர முன்பு போல்நினை
வழிவச மறஅற நின்று சோர்வுற
முழுதுகொள் விரகனல் மொண்டு வீசிட மங்கிடாதே-
முருகவிழ் திரள்புய முந்து வேலணி
முளரியொ டழகிய தொங்கல் தாரினை
முனிவற நினதருள் தந்தென் மாலைமு னிந்திடாதோ;

---

* இது அருணகிரியார்க்கு வள்ளியம்மை பாலிருக்கும் பத்தியைக் காட்டுகின்றது.

† கடல் முதலானவை காமத்தை வளர்ப்பன;
- திருப்புகழ் 218 - பக்கம் 53 கீழ்க்குறிப்பு.

பூச்செண்டை அணிந்துள்ள சடையில் (பாந்தள்) பாம்பு, கங்கைநீர், சந்திரன், எலும்பு இவைகளை அணிந்தவன், பெருமை பொருந்திய திருநீற்றைப் பூசியுள்ள சிவந்த தேகத்தினன் - ஆகிய சிவனது குமாரனே! சேந்தனே (சிவப்பு நிறமுடையவனே! வேலனே! முருகோனே!

சந்திரன் போன்ற திருமுகத்தையும், கொங்கையிற் சந்தனம் கொண்ட மார்பையும் உடையவள், என்னுடைய உள்ளத்திற் புகுந்துள்ள "பாங்கி மானொடு" - தோழி வள்ளியுடன் - உள்ளம் மகிழ்ந்து **மயேந்திரம்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(நாயனும் உழல்வேனோ)

## 768.

**அ**லைவீசும் கடல், வில்லேந்திய மன்மதன், மாலைக்காலத்துக் காற்று, மாதர்களின் வசைப்பேச்சு இவையெலாம் நெருப்புப்போல (என்னிடம்)வர, அசைந்து வருவனவாம் விடைகளின் (மாடுகளின்) மணி, அன்றில் பறவை, குயில் இவைகளின் ஓசைக்குப் பயந்து நானும்-

நெருப்பிலிட்ட மெழுகுபோல வாடி, வியர்வை உண்டாக, அகிலும் கஸ்தூரியும் விஷம்போலப் பொருந்த, அணிந்துள்ள ஆபரணங்கள், ரத்னமாலைகள் பலவும் வெந்து சாம்பலாக, உடலின் நிலை வேறுபட்டு,

கொங்கை நெருப்பைச் சொரிய, முன்புபோல- முன்பிருந்த - நினைவானது அழிந்து தன்வசம் (அற அற) மிகக்கெட நின்று தளர்ச்சியுண்டாக, முழு நிலையில் வந்துள்ள காம உணர்ச்சி நெருப்பை மொண்டுவீச - அதனால் நான் வாட்டமுற்றுச் சோர்வு அடையாமல்

வாசனை வீசுகின்ற திரண்ட புயங்கள், (உந்து வேல்) செலுத்தப்படும் வேலாயுதம் (அல்லது முந்துவேல் - எதிர்ப்பட்டு விளங்கும் வேல்), அழகிய (முளரி) (பாத) தாமரை. (அல்லது வேல் அணிந்துள்ள திருக்கரத் தாமரை) இவையுடன் அழகிய தொங்கும் மாலையை (அல்லது தொங்கல் தார் - பூமாலைகளை - (என்மீது) முனிவு அற - வெறுப்பு கோபமில்லாமல் உன்னுடைய திருவருளானது எனக்குத் தந்து எனக்குள்ள மாலை - காம மயக்கத்தைக் கோபித்து நீக்காதோ!

சிலைநுதல் கயல்விழி *செஞ்சொல் வானவி
திரிபுரை பயிரவி திங்கள் சூடிய
திகழ்†சடை நெடியவள் ‡செம்பொன் மேனியள்
Xசிங்கமேறி-
Oதிரள்படை யலகைகள் பொங்கு கோடுகள்
திமிலையொ டறைபறை நின்று மோதிட
**சிவனுட னடம்வரு மங்கை மாதுமை தந்தவேளே;
மலைதனி லொருமுநி தந்த ††மாதுதன்
மலரடி வருடியெ நின்று நாடொறு
‡‡மயில்பயில் குயில்கிளி வம்பி லேகடி
தொண்டினோனே;
மழைமுகில் தவழ்தரு மண்டு கோபுர
XX மதிள்வயல் புடையுற விஞ்சு காழியில்
வருமொரு கவுணியர் மைந்த தேவர்கள்
தம்பிரானே (1)

## 769. மாயை கழல

தனன தான தானான, தனன தான தானான
தனன தான தானான தனதான

இரத மான தேனூற லதர மான மாமாத
ரெதிரி லாத பூணார முலைமீதே-
இனிது போடு மேகாச உடையி னாலு மாலால
விழியி னாலு மாலாகி யநுராக;

---

* "அஞ்சொல் மங்கை" - சம்பந்தர் 1-108-4.

† 'பேழைவார் சடைப் பெருந் திருமகள்" - சம்பந்தர் 2-107-6.

‡ "பொன்னங் கொடிநிகர் இமையவல்லி" - கூர்மபுராணம் உத்தர காண்டம். "பொன்மேனி உமை" - திருப்புகழ் 448. பொன்மேனி ஆதலின் பிங்கலை, காகினி எனப் பெயர்.

X "வன்மான் உகைத்த கொடி" - (வன்மான் - சிங்கம்) - தக்கயாகப்-பரணி 76.

O தேவிக்குப் பேய்ப்படை: "தொல்லை நாயகி யுடைய பேய்க் கணங்கள் - தக்கயாக 120.

** சிவனும் தேவியும் ஆடல் - "அணங்கினோ டாடல்புரி எந்தை" -சம்பந்தர் I-133-1.

†† முருகவேள் வள்ளியின் மலரடியை வருடுதல். "குறமகள் பாதம் வருடிய மணவாளா" திருப்புகழ் 225; திருப்புகழ் 790, 1143-ம் பார்க்க.

(தொடர்ச்சி 289-ஆம் பக்கம் பார்க்க).

வில்லைப் போன்ற நெற்றி, கயல்மீன் போன்ற கண், செம்மைவாய்ந்த சொல் - இவைதமை உடைய (வானவி) தேவி, (திரிபுரை) - மும்மூர்த்திகளுக்கும் மூத்தவள், பயிரவி (பைரவராகிய சிவனது பத்தினி), சந்திரனைச் சூடிய விளக்கமுற்ற சடையை உடைய பெரியவள், செம்பொன்மேனி நிறத்தவள், சிங்கவாகனம் கொண்டவள்,

கூட்டமான படையாகப் பேய்களை உடையவள், ஒளிபொங்கி மேலெழும் (கோடுகள்) - ஊது கொம்புகள், (திமிலை) ஒருவகைப் பறை, ஒலிக்கின்ற பறை, இவையெலாம் இருந்து பேரொலி மோத - எழுப்பச், சிவனுடனே நடம்செயும் மங்கை, மாது, உமை, என்ற பார்வதி பெற்ற வேளே!

(வள்ளிமலைச் சாரலில் (தவஞ் செய்திருந்த) ஒரு முநி (சிவமுநிவர்) பெற்ற மாது - வள்ளியின் மலரன்ன திருவடியை வருடியே நின்று (கால்பிடித்து நின்று), நாள்தோறும், மயில், நெருங்கிவரும் குயில், கிளி இவைகளை (ஓட்டும் தொழிலில்) புதியவனாய் (கடி) கவண்கல் கொண்டு கடிந்து ஓட்டி (வள்ளிக்கு ஆயால் ஓட்டும் தொழிலில்) உதவித் தொண்டு செய்தவனே!

மழை கொண்ட மேகங்கள் தவழும் நெருங்கிய கோபுரங்கள், மதில், வயல் இவை சூழ மேம்பட்டு விளங்கும் **சீகாழியில்** அவதரித்த ஒப்பற்ற கவுணிய குலத்துப் பிள்ளையே! தேவர்கள் தம்பிரானே!

(நினதருள் என் மாலை முனிந்திடாதோ)

## 769.

**சு**வை நிரம்பிய தேன் போல ஊறும் வாயிதழ் ஊறலை உடைய அழகிய மாதர்கள் அணிந்துள்ள நிகரொப்பு இல்லாத ஆபரண மாலைகள் கொண்ட கொங்கையின் மேலே-

அழகாக அணிந்துள்ள மேலாடை உடையினாலும், ஆலகால விஷம்போன்ற கண்ணாலும், காம மயக்கம் கொண்டு, காமப்பற்றினால்-

---

‡‡ வள்ளியை மகிழ்விக்கத் தானும் ஆயால் ஓட்டினன் போலும் முருகன்;

XX மதில் - வயல் - காழியில்: "மாமதில்சூழ் கடற்காழி" - சம்பந்தர் 2-9-11; 'வயற்காழி' - சம்பந்தர் I-59-11.

விரக மாகி யேபாய லிடைவி டாமல் நாடோறு
ம்ருகம தாதி சேரோதி நிழல்மூழ்கி-
விளையு மோக மாமாயை கழலு மாறு நாயேனும்
விழல னாய்வி டாதேநி னருள்தாராய்;
*அரக ராள னாமூடர் †திருவெ ணீறி டாமூடர்
‡அடிகள் பூசி யாமூடர் கரையேற-
அறிவு நூல்க லாமூடர் நெறியி லேநி லாமூடர்
Xஅறம்வி சாரி யாமூடர் Oநரகேழிற்;
புரள வீழ்வ ரீராறு கரவி நோத சேய்சோதி
**புரண பூர ணாகார முருகோனே-
புயலு லாவு ††சேணாடு பரவி நாளு மீடேறு
புகலி மேவி வாழ்தேவர் பெருமாளே. (2)

---

*** அரகர - என்பதன் சிறப்பு**

"அரகர என்ன அரிய தொன்றில்லை
அரகர என்ன அறிகிவர் மாந்தர்
அரகர என்ன அமரரும் ஆவர்
அரகர என்ன அறும்பிறப் பன்றே" -திருமந்திரம் 916.

**† வெண்ணீற்றின் சிறப்பு;**

"கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வரே யாமாகில்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி
சிங்காரமான திருவடி சேர்வரே" - திருமந்திரம் 1666.

திருநீற்றுப் பதிகம் - சம்பந்தர் 2-66 பார்க்க.'துயர் கெடுகெனப் பூசு வெண்ணீறு' 2-78-2.

‡ அடிகள் - சிவபிரான் - 'அனலெரி ஆடும் எம் அடிகள்' - சம்பந்தர் 3-21-1.

**அடிகளைப் பூசித்தலின் சிறப்பு:**

"கற்றுக் கொள்வன வாயுள நாவுள
இட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுளன் நாமுளோம்
ஏற்றுக் கோநம னால் முனி வுண்பதே" - அப்பர் 5-91-6.

X அறம் விசாரியா மூடர்-வட மொழியில் 'தருமம் சரா' - தருமத்தைச் செய் எனவும், ஔவையார் 'அறஞ்செய விரும்பு' எனவும், கூறின உபதேசத்தினும் நயம் உடையது 'அறத்தை விசாரி' என அருணகிரியார் சொல்லியுள்ள உபதேசம் - என ஒரு அறிஞர் கூறினார்.

(தொடர்ச்சி - பக்கம் 291)

காம வேதனைப்பட்டு படுக்கையில் எப்போதும் நாள்தோறும் கஸ்தூரி முதலிய நறுமணங்கள் சேர்ந்துள்ள கூந்தலின் நிழலிலே முழுகினவனாய் - அதனால்

ஏற்படும் காம மயக்கம் என்கின்ற பெரிய (மாயை) மாயாசக்தி என்னை விட்டு அகலுமாறும், அடியேன் *வீணனாகாதவாறும் (பயனற்றவனாகாதவாறும்)* உன்னுடைய திருவருளைத் தந்து உதவுக.

*அரகரா என்று கூறாத மூடர்களும், திருவெண்ணீற்றை விபூதியை - இடாத மூடர்களும், (அடிகள்) கடவுளைப் பூசியாத மூடர்களும், கரையேறுதற்கு வேண்டிய -*

அறிவைத்தரும் நூல்களைப் படியாத மூடர்களும், நன்னெறியில் நில்லாத மூடர்களும், தருமம் இன்னதென்றுகூட விசாரணை செய்யாத (ஆய்ந்தறியாத) மூடர்களும் - நரகம் ஏழிலும்

புரளும்படி விழுவார்கள், பன்னிரண்டு (திருக்கரங்களை உடைய விநோதனே! சேயே! ஜோதியே! நிறைந்த அல்லது ஒளி பொருந்திய பூரண உருவத்தனே! முருகனே!

மேகங்கள் உலவும் விண்ணுலகத்தவர் போற்றிப் பரவி நாளும் ஈடேறுகின்ற **சீகாழியில்** வீற்றிருந்து வாழும் தேவர் பெருமானே!

*(நின் அருள் தாராய்)*

---

*(பக்கம் 290 தொடர்ச்சி)*

○ நரகில் வீழ்வோர் - இவரிவர் என்பதை - *711*-ஆம் பாடல் பக்கம் *140* கீழ்க்குறிப்பைப் பார்க்க.

** புரணம் - ஒளி.
*"புரணவாட் கண்ணி சொல்வான்"* -சேது புராணம் - சாத்தியா *18.*

†† விண்ணவர் பரவுவது:
"விண்ணவர் தொழு புகலி" - சம்பந்தர் *3-3-10.*
"வானுளோர் அடுத்தடுத்துப் புகுந்தீண்டும்....புகலி"
-சம்பந்தர் *2-122-10.*

## 770. கழல் பெற

*தானத்தன தான தனந்த, தானத்தன தான தனந்த*
*தானத்தன தான தனந்த தனதான*

**ஊ**னத்தசை தோல்கள் சுமந்த காயப்பொதி மாய மிகுந்த
ஊசற்சுடு நாறு குரம்பை மறைநாலும்-
ஓதப்படு நாலு முகன்ற னாலுற்றிடு கோல மெழுந்து
ஓடித்தடு மாறி யுழன்று தளர்வாகிக்;

கூனித்தடி யோடு நடந்து ஈனப்படு கோழை மிகுந்த
கூளச்சட மீதை யுகந்து புவிமீதே-
கூசப்பிர மாண ப்ரபஞ்ச மாயக்கொடு நோய்க ளகன்று
கோலக்**கழ லேபெற** இன்று அருள்வாயே;

*சேனக்குரு கூடலி லன்று ஞானத்தமிழ் நூல்கள் பகர்ந்து
சேனைச்சம ணோர்கழு வின்கண் மிசையேறத்-
தீரத்திரு நீறு புரிந்து மீனக்கொடி யோனுடல் துன்று
† தீமைப்பிணி தீர வுவந்த குருநாதா;

கானச்சிறு மானை நினைந்து ஏனற்புன மீது நடந்து
காதற்கிளி யோடு மொழிந்து சிலைவேடர்-
காணக் ‡ கணியாக வளர்ந்து ஞானக்குற மானை மணந்து
**காழிப்பதி** மேவி யுகந்த பெருமாளே.(3)

---

* சேனைக்குரு - சமண குருமார்கள் 'சேனன்' என்னும் பட்டம் தாங்கி இருந்தனர்.

"சந்து சேனனும் இந்து சேனனும் தரும சேனனும் கருமைசேர், கந்து சேனனும் கனக சேனனும் முதலாகிய பெயர் கொளா" சம்பந்தர் *3-39-4.*

குருகூடல் - சம்பந்தர் காலத்தில் மதுரையிற் பாண்டி நாட்டிற் சமணகுருமாரால் சமணர் மதம் மிகப் பரவியிருந்தது.

"கன்னி நாடெங்கு மிந்தக் காரமண் காடு மூடித் துன்னின" திருவிளை - சமணரைக் *3.*

† சம்பந்தரது இந்த லீலை - பாடல் *181* பக்கம் *420, 421, 422* கீழ்க்குறிப்பு.

‡ கணி - வேங்கைமரம்.

வள்ளி முன்பு வேங்கைமரமாய் முருகவேள் நின்றது
- பாடல் *416* - பக்கம் *551 - 553.*

# 770.

**அ**ழிந்து போகும் தன்மையதான மாமிசம், தோல்கள், இவைகளைச் சுமக்கும் உடற்சுமை, மாயம் மிக்கதும், பதன் அழியும் தன்மையொடு கூடியதும், ஈற்றில் சுடப்படுவதும், நாறுவதுமான கூடு (அல்லது சிறுகுடில்), வேதம் நான்காலும்

ஓதப்படுகின்ற நான்குமுகன் (பிரமனால்) ஏற்படுத்தப்-பட்டு அழகுடன் உருப்பெற்று எழுந்து ஓடியும், தடுமாறியும், திரிந்தும், தளர்வடைந்து

உடல் கூனி, தடியுடனே நடந்து இழிவைத்தரும் கோழை மிக்க (கூளச்சடம்) குப்பையான உடலான இதை மகிழ்ந்து பூமியில்-

கூசும்படியாக (நாணம் உறும்படியாக), விதிப்பிரகாரம் செல்வதான (இந்த) உலக மாயத்தில் உண்டாகும் கொடிய நோய்கள் நீங்கி, உனது அழகிய திருவடியையே பெறுமாறு இன்று அருள் புரிவாயாக.

' சேனன்' என்னும் (பட்டப்பெயர் வைத்திருந்த சமண குருமார்கள் இருந்த (கூடலில்) மதுரையில் (அல்லது குரு கூடல் - பெருமை வாய்ந்த மதுரையில்) அன்று ஞானத்தமிழ் நூல்களாகிய தேவாரப் பாக்களைப் பாடிக் கூட்டமான சமணர்களைக் கழுவின்மேல் ஏறும்படி-

திடத்துடன் திருநீற்றைத் தந்து பரப்பி மீன்கொடி ஏந்தும் பாண்டியனுடைய உடலில் சேர்ந்த கொடிய (சுர) நோய் தீர அருட்சுரந்த குருநாதனே!

(வள்ளிமலைக்) காட்டில் இருந்த சிறுமானாகிய வள்ளியை நினைந்து தினைப்புனத்தின் மீது நடந்து சென்று ஆசைக்கிளியாம் அவளுடன் பேசியும், வில் ஏந்திய வேடர்கள்

காணும்படியாகக் (கணி) வேங்கை மரமாய் வளர்ந்து நின்றும், அந்த ஞானமானை, குறமானைத் திருமணஞ்செய்து **சீகாழிப்** பதியில் அமர்ந்து மகிழும் பெருமாளே!

(கோலக் கழலே பெற இன்று அருள்வாயே)

## 771. கரைசேர

தய்யா தத்தன தானன தானன
தய்யா தத்தன தானன தானன
தய்யா தத்தன தானன தானன தனதான

ஒய்யா ரச்சிலை யாமென வாசனை
மெய்யா ரப்பணி பூஷண மாலைக
ளுய்யா நற்கலை யேகொடு மாமத விதமாகி

ஒவ்வா ரிப்படி யோரென வேயிரு
கையா ரக்கணை மோதிர மேய்பல
வுள்ளார் செப்பிட ஏழுற நாளிலு முடல்பேணிச்

செய்வா ரிப்படி யேபல வாணிப
மிய்யா ரிற்பண மேயொரு காசிடை
செய்யார் *சற்பனை காரர்பி சாசரு னடிபேணாச்

செய்வா ரிற்படு நானொரு பாதகன்
மெய்யா எப்படி யோர்**கரை சேர்வது**
செய்யா யற்புத மேபெற வோர்**பொரு ளருள்வாயே**

மையா ரக்கிரி யேபொடி யாய்விட
பொய்சூ ரப்பதி யேகெட வானவர்
வையாய் பொற்சர ணாஎன வேதொழ விடும்வேலா

*வையா ளிப்பரி வாகன மாகொளு
துவ்வா ழிக்கட லேழ்மலை தூளிசெய்
† மைபோ லக்கதி ரேய்நிற மாகிய மயில்வாழ்வே

* சற்பனை - வஞ்சகம் "சாமங்கள் தோறும் இவர் செய்யும் பூசைகள் சர்ப்பனையே" - பட்டினத்தார் - பொது 44.

* "வாசி விசை கொண்ட வாகனப் பீலியின் கொத் தசைபடு கால் பட்டசைந்தது மேரு அடியிட எண் திசை வரை தூள்பட்ட, அத் தூளின்வாரி திடர்பட்டதே" - கந் - அலங்காரம் 11.

'வையாளிவரு பச்சைப் ப்ரவாளமயிலாம்' - மயில் விருத்தம் 7.

† "மை போலக் கதிர்" - "மாமுகிலென்னவே ககனமுக டுறவீசி நிமி ருமொரு நீலக்கலாப மயிலாம்" - மயில் விருத்தம் 9.

# 771.

**அ**லங்கார ஒழுங்கு அமைந்த சிலை யுருவம் என்று சொல்லும்படி நறுமணம் உடலில் நிரம்ப, அணி ஆபரண மாலைகளைச் சுமந்து, நல்ல ஆடையை அணிந்து, மாமத இதமாகி - (அல்லது விதமாகி) மிக்க காம இன்பததராகி, அல்லது...காமவகையிற் பட்டவராய்த்-

தமக்கு ஒப்பாகமாட்டார் (இப் படியோர்) இந்தப் பூமியில் உள்ளோர் என்று சொல்லும்படி, இரண்டு கைகள் நிறையக் (கணைமோதிரம்) முத்திரை மோதிரம் பல அணிந்துள்ளவர்களாய் சொல்லப்புகின் (ஏம்) கலக்கம் உறும் (அந்த) நாள்களிலும் உடலை விரும்பிப் பாதுகாத்து-

இப்படியே பல வாணிபம் செய்வார் இவ்வாறே பல வியாபாரங்கள், செய்வார்கள் கொடாதவர்கள்போல பணம் ஒரு காசு அளவுகூட வெளிவிடார்கள் (கொடார்கள்), (சற்பனைகாரர்) வஞ்சகப் பேர்வழிகள், பிசாசு போன்றவர்கள் - உன் திருவடியைப் போற்றாது

(தமது தொழிலைச்) செய்பவர் கூட்டத்திற் பட்டவனாகிய நான் ஒரு பாவி, உண்மையாக எப்படி ஒரு கரை நான் சேர்வதும் செந்நிறச் சேயே! அற்புதம் ஆகும் வண்ணம் அந்த ஒப்பற்ற பொருளை எனக்கு உபதேசித் தருளுக.

இருள் நிறைந்த அந்த கிரவுஞ்சகிரி பொடியாகிப் போகவும், பொய் நிறைந்த சூரனுடைய ஊர் பாழாகவும் (அல்லது சூரனாம் தலைவன் அழியவும்) தேவர்கள் - 'எங்களை நல்ல நிலையில் வைத்தருள்வாய் -பாதுகாத்தருள்வாய் - அழகிய திருவடிகளை உடையவனே! என்று தொழ வேலைச் செலுத்தினவனே!

(வையாளிப்பரி வாகனமா கொளும் மயில் வாழ்வே!) சவாரிக்கு உதவும் குதிரை வாகனமாகக் கொண்டுள்ள மயில் வாழ்வே! (துவ்வு ஆழி) (அகத்தியரால் உண்ணப்பட்ட) ஆழ்கடல், ஏழு மலைகள் இவைகள் கலக்கமுறவும், தூளாகவும், செய்த மயில் வாழ்வே! (மைபோலக்கதிர்) பசுமை நிறம்கொண்ட (அல்லது கருமேக நிறம்கொண்ட) ஒளி பொருந்திய நிறத்தை உடைய மயில் வாழ்வே! (மயில்மேல் வரும் செல்வமே!)

தெய்வா னைக்கர சேகுற மான்மகிழ்
*செய்யா †முத்தமி ழாகர னேபுகழ்
தெய்வீ கப்பர மாகுரு வேயென விருதூதத்-

திய்யா ரக்கமு வேறிட நீறிடு
கையா அற்புத னே‡பிர மாபுர
செய்கா ழிப்பதி வாழ்முரு காசுரர்
பெருமாளே. (4)

## 772. அலைதல் அற

தத்தா தத்தா தத்தா தத்தா
தத்தா தத்தத் தனதான

கட்கா மக்ரோ தத்தே கட்சீ
மிழ்த்தோர் கட்குக் கவிபாடிக்-

கச்சா பிச்சா கத்தா வித்தா
ரத்தே யக்கொட் களைநீளக்;

கொட்கா லக்கோ லக்Xகோ ணத்தே
யிட்டா சைப்பட் டிடவேவை-

Oகொட்டா னக்கூ னுக்கா எய்த்தே
னித்**தீ தத்தைக் களைவாயே;

---

* செய்யா - அழகா; செய்யன் - சிவந்தவன் - "செய்யன் சிவந்த ஆடையன்" - திருமுருகாற்றுப்படை 206.

† திருஞானசம்பந்தர் தம்மைத் "தமிழாகரன்" என்றும் "முத்தமிழ் விரகன்" என்றும் கூறியுள்ளார் - சம்பந்தர் 3-117-11; 115-11.

‡ பிரமாபுரம் - பிரமன் பூசித்த தலம் சீகாழி. 'பிரமன்...அரன்...சரண இணை பரவ வளர் பிரமபுரம்' - சம்பந்தர் 3-67-12.

X கோணம் - திரிகோணம் போன்ற உறுப்பு - அல்குல் - "குழியான திரிகோணம்" - பாடல் 703.

O கொள் தானக்கு கொள் தானத்துக்கு; தானத்துக்கு என்பதில் அத்துச் சாரியை தொக்கி நிற்பதால் 'தானக்கு' என நின்றது.

** தீதத்தை - தீது + அ(த்)தை - தீது அதை.

தெய்வயானைக்குத் தலைவனே! குறமான் (வள்ளி) மகிழ்கின்ற செய்யனே (செந்நிறம் உடையவனே)! முத்தமிழுக்கு இருப்பிடமானவனே! புகழத்தக்க தெய்விகம் பொருந்திய பரம்பொருளே! குருவே! என்று வெற்றிச் சின்னங்கள் ஊதத்

(தியார்) தீயராம் (சமணர்கள்) கழுஏற, திருநீறு பரப்பியிட்ட திருக்கரத்தனே! அற்புதனே! பிரமாபுரம் என்னும் பெயர் பெற்றதும், (செய்) வயல்கள் சூழ்ந்ததுமான காழிப்பதியில் வாழ்கின்ற முருகா! தேவர் பெருமாளே!

(ஓர் பொருள் அருள்வாயே)

# 772.

கள்ளிலும், காமத்திலும், (குரோதத்தே) கோபத்திலும் (கண் சிமிழ்த்தோர்கட்கு) கண் சிமிழ்த்தவர்கள்மீது - கண் கொட்டுபவர்கள் மீது - கடைக்கணிப்பவர்மீது - (கள், காமம், கோபம் இவைதமைத் தள்ளாது ஏற்றுக் கொள்ளுபவர்கள் மீது) இவைகளின் கட்டிற் பட்டவர்மீது - பாடல் பாடிக்....

(கச்சா பிச்சாக) தெளிவுமுறை யில்லாத வழியில் (தாவித்து ஆரத்தே) (பாடப்பட்டோன் பெருமையை) ஆரத்தே தாபித்து பாமாலையில் நிலைநாட்டி, அக் கொட்களை - (அங்ஙனம் பாடினதால்) கொள்களை - கொண்ட பொருள்களை - நெடுக - நெடுநாளாக.......

கொள்கால் - சேகரிக்கும்பொழுது - அப் பொருளை அக்கோலக் கோணத்தே - அந்த அழகிய திரிகோணம் போன்ற அல்குலுக்கே (இட்டு) கொடுத்து ஆசைப்பட்டிடவே வைத்து (இங்ஙனம்)

கொள் தானத்துக்கு (ஏற்கும் தானத்துக்கு - தானப் பொருளுக்காகவும், (இந்த) ஊனுக்கா - உடலுக்காகவும் (தேடி) (எய்த்தேன்) இளைத்தேன்; (இத் தீதத்தை) இத் தீது அதை - (எனக்குள்ள) இந்தத் தீய குணத்தை நீக்கி அருளுவாயாக.

*வெட்கா மற்பாய் சுற்றூ மர்ச்சேர்
†விக்கா னத்தைத் தரி‡ மாறன்-
வெப்பா றப்பா டிக்கா ழிக்கே
புக்காய் வெற்பிற் குறமானை;
முட்கா னிற்கால் வைத்தோ டிப்போய்
முற்சார் செச்சைப் புயவீரா-
Xமுத்தா முத்தீ யத்தா சுத்தா
முத்தா முத்திப் பெருமாளே.(5)

## 773. மறவேன் என்றது

தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன
தந்த தானன தனதன தனதன தனதான

கொங்கு லாவிய குழலினு நிழலினு
நஞ்ச ளாவிய விழியினு மிரணிய
குன்று போல்வளர் முலையினு நிலையினு மடமாதர்-
கொம்பு சேர்வன இடையினு நடையினு
மன்பு கூர்வன மொழியினு மெழில்குடி
கொண்ட சேயித ழமுதினு நகையினு மனதாய;
○செங்கை யாளியை அணுவிடை பிளவள
வின்சொல் வாசக மொழிவன இவையில
சம்ப்ர தாயனை அவலனை ஒளிதிக ழிசைகூருந்-
தண்டை நூபுர மணுகிய இருகழல்
கண்டு நாளவ மிகையற** விழியருள்
தந்த பேரருள் கனவிலு நனவிலு மறவேனே;

---

* வெட்காமல் பாய் சுற்று ஊமர் - சமணர்...."நாணழித் துழல்வார் சமணர்".... சம்பந்தர் 25-3-10.

"பாயுடுப்பார்கள்" - சம்பந்தர் 3-108-3.

'நின் றுண் சமணர்...ஒன்றும் உணரா ஊமர்' - சம்பந். 1-71-10.

† விக்கானம்...விக்கனம்...விக்கினம் - (தீது) "விக்கனங்கள் அந்தொண்டர்க்கு அடாமைச் சென்றாண்டருள்" மருதூரந்தாதி 28,

‡ மாறன் வெப்பாறப் பாடியது - பாடல் 181 பக்கம் 420 குறிப்பு.

X இம் முடிவுள்ள திருப்புகழ்ப் பாடல்களின் எண் 377, 483, 1119-1126:

(† தொடர்ச்சி பக்கம் 299)

நாணமில்லாமல் (பாய் சுற்று ஊமர்) ஆடையாக அரையிற் பாயைச் சுற்றிக்கொள்ளும் (ஊமர்), அறிவிலிகளாம் சமணர்களைச் சேர் (சேர்ந்த) விக்கினத்தை - தீதை - தரி - கொண்டிருந்த பாண்டியனுடைய

சுரம் தணியும்படி "மந்திரமாவது நீறு" என்னும் திருநீற்றுப் பதிகத்தைப் பாடிச் சீகாழியிற் புக்கிருந்தவனே! (வள்ளி) மலையில் குறப்பெண் வள்ளியை-

முள்ளுள்ள காட்டிற் கால்வைத்து ஓடிப்போய் (முற்சார்) முன்பு (வள்ளியின் தினைப்புனத்தே) சார்ந்த வெட்சி மாலையை அணிந்த புயவீரனே!

முத்தி முதல்வனே! (சூரியன், சந்திரன், அக்கினி என்னும்) முச்சுடர்களுக்கும் தலைவனே! சுத்தனே! முத்தனையவனே, முத்தி தரும் பெருமாளே!

(தீதைக் களைவாயே)

## 773.

**வா**சனை வீசும் கூந்தலிலும், அதன் நீழலிலும், அல்லது ஒளியினும், விஷம் கலந்த கண்களிலும், பொன் மலைபோல வளர்ந்துள்ள கொங்கையிலும், இருக்கும் நிலையிலும் (தன்மையினும்) அழகிய மாதர்களின்-

கொம்புபோல மெல்லிய இடையிலும், நடையிலும், அன்பு மிக்கெழும் பேச்சிலும், அழகு குடிகொண்ட சிவந்த வாயிதழ் அமுதினும், அவர்களுடைய நகையிலும் (சிரிப்பிலும்) மனது பாய்கின்ற

எண்ணங் கொண்டவன், அணு அளவேனும், அதன் பிளவளவேனும் இனிய சொற்பேச்சு பேசுவதே இல்லாததான வழக்கம் கொண்டவன். வீணன் ஆகிய நான் விளங்குவதும் ஒலி மிக்கதுவுமான (கீதம் மிக்க)

தண்டை, சிலம்பு, இவை அணிந்துள்ள (உனது) இரண்டு கழலடிகளைக் கண்டு. (என்) நாள் வீணாகப் பெருகுதல் அற, (உனது) திருக்கண்ணோக்க அருளை நீ (எனக்குத் தந்த பேரருளைக் கனவிலும் நனவிலும் மறவேன்;

---

O சங்கை - எண்ணம் "சங்கையிற் சழக்கிலன்" - கம்பராமா - சம்பாதிப்படலம் 28.

** இது அருணகிரியார் சக்ஷு தீக்ஷை பெற்ற வரலாற்றை விளக்கும்.

வங்க வாரிதி முறையிட நிசிசரர்
துங்க மாமுடி பொடிபட வடவனல்
மங்கி நீறெழ அலகைகள் நடமிட மயிலேறி-
*வஞ்ச வேல்கொடு முனிபவ அழகிய
† சண்பை மாநக ருறையுமொ ரறுமுக
வந்த வானவர் மனதினி லிடர்கெட
நினைவோனே;

பங்க வீரியர் ‡ பறிதலை விரகினர்
மிஞ்சு பாதக ரறநெறி பயனிலர்
பந்த மேவிய பகடிகள் கபடிகள் நிலைகேடர்-
பண்பி லாதவர் கொலைசெயு மனதின
ரிங்கெXணாயிர ருயரிய கழுமிசை
O பஞ்ச பாதகர் **முனைகெட அருளிய
பெருமாளே. (6)

---

* வஞ்சவேல் - பாடல் 750 - கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† சீகாழியின் பன்னிரு பெயர்களின் - பெயர்க் காணரம்:-

(1) கணபதியால் கொல்லப்பட்ட கஜமுக அசுரனுக்கு அஞ்சின வேணு என்னும் இந்திரன் பூசித்த தலமாதலின் "வேணுபுரம்"

(2) சூரனுக்கு அஞ்சின தேவர்கள் புகலிடமாக வந்த தலமாதலின் "திருப்புகலி".

(3) தேவகுருவாம் பிரகஸ்பதி தான் இழந்த அதிகாரத்தை மீட்டும் பெறப் பூசித்து அதிகாரத்தைப் பெற்ற தலம் வெங்குரு.

(4) பூவுந் தாராயும் பூசித்ததால் பூந்தராய் எனப் பெயர்.

(5) அமிர்தம் பங்கிட்டபொழுது திருமாலால் சிரம் தறிபட்ட ராகு கேதுக்களின் இரண்டு சிரங்களும் தமது உடல் வேண்டிப் பூசித்ததால் சிரபுரம்.

(6) கௌதம முநிவர் சாபத்தால் புறாவுள்ள பிரசாபதி என்னும் ரிஷி - தான் உண்ணத் தன் உடல் மாமிசத்தைக் கொடுத்த அரசன் நல்ல உடல் பெறவும், தன் சாபம் தீரவும் பூசித்துப் பேறு பெற்ற தலமாதலின் புறவம்.

(7) துர்வாசருடைய சாபத்தால் கிருஷ்ணபகவானைச் சார்ந்த கோபாலரெல்லாரும் சண்பைக் கதிர்களால் குத்துண்டு மாண்டார்கள்; கிருஷ்ணபகவானும் பரமபதம் அடைந்தார். அந்தத் தோஷம் தம்மைத் தாக்காதிருக்க துர்வாசம் பூசித்த தலமாதலின் துர்வாசர் சண்பைமுனி எனப்பட்டார், தலம் சண்பை எனப்பெயர் பெற்றது; இந்தச் சாப வரலாற்றை பாடல் 268 பக்கம் 166 கீழ்க்குறிப்பிற் X பார்க்கவும்.

(† தொடர்ச்சி 301 பக்கம் பார்க்க).

கப்பல்கள் உலவும் கடல் முறையிட (கலங்கி ஒலிக்க), அசுரர்களின் உயர்ந்த பெரிய முடிகள் (தலைகள்) பொடியாக, வடவாக்கினியும் அடங்கிச் சாம்பலாக, பேய்கள் நடமாட, மயிலில் ஏறி,

வஞ்ச வேல்கொண்டு (துஷ்டர்களை வஞ்சித் தழிக்கும் வேல்கொண்டு) கோபித்தவனே! அழகிய **'சண்பை'** எனப் பெயரிய சீகாழி மகாநகரில் வீற்றிருக்கும் ஒப்பற்ற ஆறுமுகனே! உன்னிடம் (அடைக்கலம் புக) வந்த தேவர்களின் மனத்தில் உள்ள வருத்தம் நீங்குமாறு நினைத்தவனே!

(பங்க வீரியர்) பங்கப்பட்ட - தோல்வியடைந்த வலிமைவாய்ந்தவர், தலைவன் மயிர் பறிக்கும் உற்சாகத்தினர், மிகுதியான பாவம் செய்தவர்கள், தருமநெறியின் பயன் இல்லாதவர் (பயனை அடையாதவர்கள்), பாசத்திற் கட்டுண்ட வேஷக்காரர்கள், வஞ்சகர்கள், நிலை கெட்டவர் (தன்மை கெட்டவர்)

நல்ல பண்பு (குணம்) இல்லாதவர், கொலை செய்ய இசையும் மனத்தினர், இங்கு அவர்கள் எண்ணாயிரம்பேரும் உயரமாயிருந்த கழுவின்மேலே, பஞ்சபாதகர் ஆதலினாலே, அவர்களுடைய (முனை) முதன்மை கெட்டழியும்படி அருளின பெருமாளே!

(பேரருள் கனவிலும் நனவிலும் மறவேனே)

---

(8) காளி என்கின்ற நாகம் பூசித்ததால் **சீகாழி** என்று பெயர் போந்தது.

(9) மற்ற ரிஷிகளின் சாபத்தால் பராசர முநிவர் மச்சகந்தியை மணந்து மச்ச கந்தம்... துர்க்கந்தம் உடலிற் பற்றப் பெற்றார். அவர் சீகாழியிற் பூசித்து அந்தக்கொச்சை நாற்றம் நீங்கப் பெற்றார் ஆதலின் **'கொச்சை'** என்று சீகாழிக்குப் பெயர் வந்தது.

(10) இத் தலத்திற் ஆன்மாக்களின் மலம் கழுவப்படலாற் **'கழுமலம்'** என்பது பெயர்.

(11) பிரமன் பூசித்ததால் 'பிரமபுரம்' எனப் பெயர்.

(12) பிரளய காலத்தில் தோணிபோல மிதந்த காரணத்தால் **'தோணிபுரம்'** எனப் பெயர்.

‡ பறிதலை - பாடல் 172 பக்கம் 398 கீழ்க்குறிப்பு.

X எண்ணாயிரவர் - சமணர் - பாடல் 657 பக்கம் 9 கீழ்க்குறிப்பு.

O பஞ்சபாதகம் - பாடல் 79-பக்கம் 183.

** 'உறையவு மருளிய' என்றும் பாடம்.

## 774. மிடி அகல

தந்த தந்தன தனதன தனதன
தந்த தந்தன தனதன தனதன
தந்த தந்தன தனதன தனதன தனதான

சந்த னம்பரி மளபுழு கொடுபுனை
கொங்கை வஞ்சியர் சரியொடு கொடுவளை
தங்கு செங்கையர் அனமென வருநடை மடமாதர்-
சந்த தம்பொலி வழகுள வடிவினர்
வஞ்ச கம்பொதி மனதின ரணுகினர்
தங்கள் நெஞ்சக மகிழ்வுற நிதிதர அவர்மீதே;

சிந்தை வஞ்சக நயமொடு பொருள்கவர்
தந்த்ர மந்த்ரிகள் தரணியி லணைபவர்
செம்பொ னிங்கினி யிலையெனில் மிகுதியு
முனிவாகித்-
திங்க ளொன்றினில் நெனல் பொரு ளுதவில
னென்று சண்டைகள் புரிதரு மயலியர்
சிங்கி யுங்கொடு **மிடிமையு மகல**நி
னருள்கூர்வாய்;

*மந்த ரங்குடை யெனநிரை யுறுதுயர்
சிந்த அன்றடர் மழைதனி லுதவிய
மஞ்செ னும்படி வடிவுறு மரிபுகழ் மருகோனே-

மங்கை யம்பிகை மகிழ்சர வணபவ
துங்க வெங்கய முகன்மகிழ் துணைவநல்
வஞ்சி தண்குற மகள்பத மலர்பணி மணவாளா;

தந்த னந்தன தனதன தனவென
வண்டு விண்டிசை முரல்தரு மணமலர்
தங்கு சண்பக முகிலள வுயர்தரு பொழில்மீதே-

---

* மலையைக் குடையாகக் கொண்டு பசுக்களைக் கண்ணபிரான் காத்தது - பாடல் 145- பக்கம் 336 கீழ்க்குறிப்பு அவர் எடுத்த கோவர்த்தனமலை பெரிய மலை ஆதலின் அதை மந்தர மலைக்கு ஒப்பிட்டு 'மந்தரங்குடை' என்றார். கோவர்த்தனகிரி பெரியமலை - "வண்ணமால் வரையே குடையாக மாரி காத்தவனே" என்றார் பெரியாழ்வார் (5-1-8).

# 774.

சந்தனம், நறுமணமுள்ள புனுகு சட்டம் இவைதமை அணிந்துள்ள கொங்கைகளை உடைய மாதர்கள், (சரி) கைவளையலொடு வேறு வளைவுள்ள வளையல்களும் அணிந்துள்ள செவ்விய கையினர், அன்னம்போல நடந்து வரும் நடையை உடைய அழகிய மாதர்கள்-

எப்போதும் விளக்கமுள்ள அழகுள்ள வடிவத்தினர், வஞ்ச எண்ணங்கள் நிறைந்துள்ள மனத்தினர், தம்மை நெருங்கி வந்தவர்கள் தங்கள் மனம் மகிழும்படி பொருளைத்தர அவர்கள்மேல்-

மனதில் (அகத்தே) வஞ்சனை கொண்டு - (புறத்தே) நயமான பேச்சுக்களைப் பேசிப் பொருளைக் கவர்கின்ற தந்திரம் வாய்ந்த யோசனைக்காரர்கள், பூமியில் தம்மை அணைபவர்கள் (இங்கு) தங்களிடம் செம்பொன் (என்னிடம்) இல்லையே எனச் சொன்னால், அதிகமாகக் கோபித்து

(திங்கள் ஒன்றினில்) ஒருமாத காலத்தில் (நெனல்) நேற்றுக்கூட பொருள் உதவி செய்தானில்லை (இவன்) என்று சண்டைகள் விளைக்கும் ஆசைக்காரிகள் (ஆகிய இப் பொதுமகளிருடைய) விஷம் போன்ற உறவும் (அதனால் வரும்) பொல்லாத வறுமையும் என்னை விட்டு அகல உனது திருவருளைப் பாவிப்பாயாக.

(மந்தர) மலையைக் குடையாகப் பிடித்து பசுக்களுக்கு உற்ற துயர் ஒழியும்படி அன்று அடர்ந்த மழையில் உதவி புரிந்த (அரி) திருமால், (மஞ்சு) மேகம் என்னும்படியான நிறத்தைக் கொண்ட (அரி) திருமால் புகழ்கின்ற மருகனே!

மங்கை அம்பிகை (பார்வதி) மகிழும் சரவணபவனே! உயர்வும் விரும்பத்தக்க தன்மையும் கொண்ட யானை முகப்பெருமான் விநாயகர் மகிழும் சகோதரனே! நல்ல வஞ்சிக்கொடி போன்ற பெண், குளிர்முகக்குறமகளாம் வள்ளியின் பதமலரைப் பணியும் மணவாளனே! (அல்லது) வள்ளி உன் பதமலரைப் பணிய நின்ற மணவாளனே!

தந்த னந்தன தனதன தனவென்று வண்டு (இசைவிண்டு முரல்தரு) இசையை வெளிவிட்டு ஒலிசெயும் நறுமண மலர்கள் உள்ள சண்பக விருக்ஷங்கள் மேகத்தின் அளவுக்கு உயர்ந்து வளரும் சோலையிலே-

சங்கு நன்குமிழ் தரளமு மெழில்பெறு
துங்க வொண்பணி மணிகளும் வெயில்விடு
சண்பை யம்பதி மருவிய அமரர்கள்
பெருமானே (7)

## 775. துதிக்க

தனதன தந்தன தந்தன தந்தன
தனதன தந்தன தந்தன தந்தன
தனதன தந்தன தந்தன தந்தன தனதான

*சருவி யிகழ்ந்து மருண்டு வெகுண்டுறு
சமயமு மொன்றிலை யென்ற வரும்† பறி
தலையரு நின்று கலங்க விரும்பிய தமிழ்கூறுஞ்-

‡ சலிகையு நன்றியும் வென்றியு மங்கள
பெருமைக ளுங்கன முங்குண மும்பயில்
சரவண மும்பொறை யும்புக ழுந்திகழ்
தனிவேலும்;

விருது துலங்க சிகண்டியி லண்டரு
முருகி வணங்க வரும்பத மும்பல
விதரண முந்திற முந்தர முந்தினை புனமானின்-

ம்ருகமத குங்கும கொங்கையில் நொந்தடி
வருடிம ணந்துபு ணர்ந்தது வும்பல
விஜயமு மன்பின்மொ ழிந்துமொ ழிந்தியல்
மறவேனே;

---

*முதல் நான்கடியில் சம்பந்தர் பெருமையும் முருகவேளின் பெருமையும் கலந்து வருவன கண்டு களிக்கத்தக்கன. 5, 6, 7 அடிகளில் திருமாலின் பராக்ரமச் செயல்கள் கூறப்பட்டுள்ளன; இந்தப் பாடல் ஒரு அழகிய பாடல் - மனப்பாடம் செய்யத்தக்கது.

† பறிதலையர் - சமண குருமார் - பாடல் 172-பக்கம் 398 கீழ்க்குறிப்பு.

‡ சலிகை - செல்வாக்கு. முருகவேளின் சலிகை முதலான பதினாறு அருமை லக்ஷணங்களை இங்கு வெகு அழகாக அருணகிரியார் அடுக்கியுள்ளது படிக்கப் படிக்க இன்பம் பயக்கின்றது.

சங்கு நன்கு வெளிக் கக்குகின்ற முத்தும், அழகுள்ள பரிசுத்தமான ஒள்ளிய நாகரத்னங்களும் ஒளிவீசம் சண்பை என்னும் நகரில் (சீகாழியில்) வீற்றிருக்கும் பெருமாளே! தேவர்கள் பெருமாளே!

(மிடிமை...அகல நின் அருள் கூர்வாய்)

## 775.

மதப் போராட்டத்தில் ஒருவரை ஒருவர் இகழ்ந்தும், மருட்சி அடைந்தும் (விளக்கமின்றி மயங்கியும்), (இடையிடையே) கோபித்தும் வருவதான சமயங்களும், சமயம் என்பதே (அல்லது தெய்வம் என்பதே) ஒன்று இல்லை என்பவரும், பறிதலையராம் சமண மதத்தினரும் - இங்ஙனம் யாவரும் நின்று கலங்கும்படியாக, யாவரும் விரும்பத்தக்க தமிழ்ப்பாடல்களைச் சொல்லும்-

செல்வாக்கையும், உபகார குணத்தையும், வெற்றியையும், மங்களகரமான (பல) பெருமைகளையும், சீர்மையையும், நற்குணத்தையும் நீ குழவியாய்ப் பயின்ற சரவண தீர்த்தத்தையும் (மடுவையும்) உனது பொறுமையையும், புகழையும், விளங்கும் ஒப்பற்ற வேலாயுதத்தையும்,

வெற்றிச் சின்னங்கள் விளங்க மயில்மீது தேவர்களும் மனம் உருகி வணங்கும்படியாக வருகின்ற திருவடியையும், உனது பலவிதமான (விதரணமும்) கொடைப் பெருமைகளையும், உனது சாமர்த்தியத்தையும், (தரமும்) தகுதியையும் (மேன்மையையும்), தினைப்புனத்து மான் - வள்ளியின்-

கஸ்தூரி, குங்குமம் (செஞ்சாந்து) அணிந்துள்ள கொங்கையில் மயங்கி நொந்து, அவளது திருவடியை வருடி (கால்பிடித்து), மணஞ்செய்து, அவளைப் புணர்ந்து அணைந்து நின்றதையும், பின்னும் உனது பல (விஜயமும்) வெற்றிச் செயல்களையும் அன்புடனே (மொழிந்து மொழிந்து) பலமுறை எடுத்துப் போற்றித் துதித்து - உனது பெருமையை (என்றும்) மறவேன், மறக்கமாட்டேன்.

கருதியி லங்கை யழிந்துவி டும்படி
அவுணர டங்கம டிந்துவி ழும்படி
கதிரவ னிந்து விளங்கி வரும்படி விடுமாயன்-
*கடகரி யஞ்சி நடுங்கி வருந்திடு
மடுவினில் வந்துத வும்புய லிந்திரை
கணவன ரங்க முகுந்தன் வருஞ்†சக டறமோதி;
‡ மருது குலுங்கி நலங்க முனிந்திடு
வரதன லங்கல் புனைந்தரு ளுங்Xகுறள்
வடிவனெ டுங்Oகடல் மங்கவொ ரம்புகை தொடுமீளி-
மருக**பு ரந்தர னுந்தவ மொன்றிய
††பிரமபு ரந்தனி லுங்குக னென்பவர்
மனதினி லும்பரி வொன்றிய மர்ந்தருள் பெருமாளே. (8)

## 776. அகப்பொருள்

தந்தத்தன தானன தந்தத் தனதான

‡‡ சிந்துற்றெழு மாமதி அங்கித் திரளாலே-
தென்றற் XXறரு வாசமி குந்துற் றெழலாலே;
அந்திப்பொழு தாகிய கங்குற் றிரளாலே-

---

* கஜேந்திரனை மடுவிற் காத்தது:
-பாடல் 110-பக்கம் 262 கீழ்க்கு றிப்பு.

† சகடுதைத்தது:- பாடல் 111-பக்கம் 264 கீழ்க்குறிப்பு.

‡ மருது குலுங்கத் தவழ்ந்தது:- பாடல் 143 பக்கம் 332 கீழ்க்குறிப்பு.

X குறள் வடிவு:- பாடல் 458 பக்கம் 24 - கீழ்க்குறிப்பு.

O கடல்மேற் பாணம் தொட்டது:
-பாடல் 177 பக்கம் 412 கீழ்க்குறிப்பு.

** சீகாழி - இந்திரன் தவமிருந்த தலம் - 'தேவேந்திரன் ஊர்' 'புரந்தரன் ஊர்' - 'இந்திரன் ஊர்'
- (சம்பந்தர் 2-73-2. 410, 11; 2-74-10)

†† "பிரம புரமும் குகநாமமும் - உன்னுதலின் சிறப்பு.
உமையொடிருந்த பிரான் பிரமா புரம் உன்னுமினே"
- சம்பந்தர் 3-56-8.

குகனென்று மொழிந்துருகுஞ் செயல்தந் துணர்வென்
றருள்வாய் - கந்தர் அநுபூதி - 15.

(தொடர்ச்சி 307 - ஆம் பக்கம் பார்க்க.)

(ராவணன் செய்த பிழையை) மனத்தில் எண்ணி, இலங்கை அழிந்து போம்படியும், அரக்கர்கள் எல்லாரும் இறந்து விழும்படியும், சூரியனும் சந்திரனும் (பழைமை முறைப்படி) விளக்கத்துடன் வரும்படியும் செய்த திருமால் -

மதகரி (கஜேந்திரன்) பயந்து நடுக்கமுற்று வருத்த முற்றிருந்த மடுவினிடத்தே வந்து உதவின மேகநிறப் பெருமான், இலக்குமி கணவன், சீரங்கத்தில் பள்ளிகொண்டிருக்கும் முகுந்தன், தன்னைக் கொல்லவந்த அசுரன் மாளும்படி வண்டியை உதைத்து மோதினவன்,

மருதமரம் குலுங்கி நொந்துபோகக் கோபித்த வரதன், மாலை சூடியருளும் (குறள்) வாமன வடிவமூர்த்தி, பெரிய கடல் நொந்து வாட்டமுற ஒரு அம்பைக் கையால்தொட்ட (மீளி) பராக்ரமசாலி - (திண்ணியன்) - ஆகின்ற திருமாலின்

மருகனே! இந்திரன் தவம் பொருந்திச் செய்த (பிரமபுரம்) ***சீகாழி*** என்னும் தலத்திலும், குகன் என்பவர் மனத்திலும் அன்பு பொருந்தி அமர்ந்தருளும் பெருமாளே!

(பல விஜயமும் மொழிந்தியல் மறவேனே)

## 776.

(சிந்து) கடலிற் பொருந்தி எழுகின்ற அழகிய சந்திரன் (வீசும்) நெருப்புப் பிழம்பாலே - (மிகுதியாலே)

தென்றல் காற்று - சந்தனச் சோலையின் நறுமணத்துடன் எழுந்து வருவதாலே -

மாலைப் பொழுதாகிய இரவின் செறிவாலே - (இருட் கூட்டத்தாலே)

---

"குகா குகா என வகை வராதோ" - திருப்புகழ் 326

திருநீறிடும்போது தியானிக்கவேண்டிய மூன்று தலங்களில் ஒன்று சீகாழி - "கழுமலம், கற்பகவூர், செருத்தணி செப்பி" -கந்தரந்தாதி 29.

‡‡ நிலவு, தென்றல், கங்குல், காமத்தை வளர்த்தி வருத்துவன - திருப்புகழ் 218- பக்கம் 53 கீழ்க்குறிப்பு.

XX தரு வாசம் - சந்தனச் சோலையின் பரிமளம்.

அன்புற்றெழு பேதைம யங்கித் தனியானாள்;
நந்துற்றிடு வாரியை மங்கத் திகழாயே-
நஞ்சொத்தொளிர் வேலினை யுந்திப் பொருவேளே;
*சந்தக்கவி நூலினர் தஞ்சொற் கினியோனே-
சண்பைப்பதி மேவிய கந்தப் பெருமாளே. (9)

## 777. பெண்ணாசை அற

தத்தனா தத்தனத் தத்தனா தத்தனத்
தத்தனா தத்தனத் தனதான

† செக்கர்வா னப்பிறைக் கிக்குமா ரற்கலத்
தெற்கிலூ தைக்கனற் றணியாத-

சித்ரவீ ணைக்கலர்ப் பெற்றதா யர்க்கவச்
சித்தம்வா டிக்கனக் கவிபாடிக்;

‡ கைக்கபோ லக்கிரிப் பொற்கொள்ரா சிக்கொடைக்
கற்பதா ருச்செகத் த்ரயபாநு-

---

* சந்தக்கவி: - இறைவனுக்கு உகந்தது: அதனால்தான் சந்தக் கவி யாக 'முத்தைத்தரு' என்னும் முதலெடுத்து, முருகவேள் அருணகிரியார்க்குத் தந்தனர் போலும்: யமன் வந்தபோது மார்க்கண்டேயர் வடநூற் சந்தக் கவியால் துதிசெய்திருந்தனர் என்றும் கந்தபுராணம் கூறுகின்றது:-

"அந்தக் காலத் தெம்முயிர் காப்பான் அரனுண்டால்
வந்தக் கூற்றன் என் செய்வன் என்னா வட தொன்னூல்
சந்தப் பாவில் போற்றுதல் செய்தே தனிநின்ற
மைந்தற் காணூஉ எம்பெரு மானும் மகிழ்வுற்றான்

- (கந்தபுரா 2-5-246)

† பிறை, காமன்வில், தென்றல், வீணை ஓசை, வசைமொழி - இவை காமத்தை வளர்ப்பன - பாடல் 218-பக்கம் 53 கீழ்க்குறிப்பு.

‡ கைக்க -- அலங்காரம் செய்ய "கைஇ கோலஞ்செய்து" மதுரைக் காஞ்சி 419

அன்புகூடி மிகுந்தெழும் இப்பேதைப் பெண் மயக்கங்கொண்டு தனித்திருக்கின்றாள்;

சங்குகள் உள்ள கடல் மங்கிக் கலங்கின தோற்றம் (விளக்கம்) ததும்பும்படியாக

விஷம்போன்று விளங்கும் (விஷாக்கினிபோலச் சுடர்வீசும்) வேலாயுதத்தைச் செலுத்திச் சண்டை செய்த வேளே!

சந்தக்கவி நூல் சொல்லும் புலவர்களுடைய சொல்லிற் பிரியம் உடையவனே (சுவை காண்பவனே)!

**சண்பைப்பதி** (சீகாழியில்) வீற்றிருக்கும் கந்தப்-பெருமாளே!

(பேதை மயங்கித் தனியானாள்)

# 777.

**செ**வ்வானத்து நிலவுக்கும், (இக்கு மாரற்கு) கரும்புவில் ஏந்தும் மன்மதனுக்கும், அ(ல்)ல, இவை மாத்திரம் அல்ல - தெற்கிலிருந்து வரும் (ஊதைக்கு) காற்றுக்கும் (அல்லது - அலத் தெற்கில் ஊதைக்கு - அல் - இரவில் வீசும் - அத் தெற்கில் ஊதைக்கு அந்தத் தென்றல் காற்றுக்கும்) அனல் தணியாத - நெருப்புப்போலச் சுடுகின்ற தன்மை குறையாத -

(சித்ரவீணைக்கு) இன்பகரமான ஓசையைத் தரும் வீணைக்கும், அலர் - வசைமொழி கொண்ட தாயர்க்கும், அவச் சித்தம் வாடி வீணான உள்ளமானது வாட்டம் அடைந்து, (பொது மாதர்க்குக் கொடுக்கப் பொருள்வேண்டிப் பணம் உள்ளவர்களைத் தேடிச்சென்று அவர்கள்மீது) கனக் கவிபாடி - பெருத்த பாடல்களைப்பாடி -

(அவர்களை அப் பாடல்களில்)- (கை) துதிக்கையையும் (கபோலம்) கன்னத்தையும் உடைய (கிரி) மலைபோன்ற ஐராவதம் (போலப் பெருமை உடையவர்) என்றும், (பொன் கொள்) பொன் சேரும் (ராசி) அதிர்ஷ்டம் உள்ளவர் என்றும், (அல்லது - கைக்க - போல - அலங்கரித்ததுபோல அலங்காரவகையில் - துதித்து (கிரிப்பொற் கொள் ராசி) பொன் ராசி கொள்கிரி - பொற் குவியலைக்கொண்ட கிரி (மேருமலை) என்றும், கொடையில் (ஈதலிற்) பேர்போன கற்பக விருக்ஷம் என்றும், செகத்ரயபாநு (லோகம் மூன்றிலும் விளங்கும் சூரியன்) என்றும்,

கற்றபேர் வைப்பெனச் செத்தையோ கத்தினர்க்
கைக்குணான் வெட்கிநிற் பதுபாராய்;
சக்ரபா ணிக்குமப் *பத்மயோ னிக்குநித்
தப்ரதா பர்க்குமெட் டரிதாய-
தத்வவே தத்தினுற் பத்திபோ தித்தஅத்
தத்வரு பக்கிரிப் புரைசாடிக்;
கொக்கிலே புக்கொளித் திட்டசூர் Xபொட்டெழக்
குத்துரா †வுத்தபொற் குமரோனே-
கொற்றவா வுற்பலச் செச்சைமா லைப்புயக்
கொச்சைவாழ் முத்தமிழ்ப் பெருமாளே.(10)

## 778. காயம் நிலையாமை

தனதன தாந்த தான, தனதன தாந்த தான
தனதன தாந்த தான தனதான

தினமணி சார்ங்க பாணி யென மதிள் நீண்டு சால
தினகர னேய்ந்த மாளி கையிலாரஞ்-
செழுமணி சேர்ந்த பீடி கையிலிசை வாய்ந்த பாடல்
‡வயிரியர் சேர்ந்து பாட இருபாலும்;

இனவளை பூண்கை யார்க வரியிட வேய்ந்து மாலை
புழுககில் சாந்துபூசி யரசாகி-

---

* "சக்ரபாணியுடனே சகத்ரயந்தரு தசப்பிதா மகர்கள் தம் மொடும் **கூடி நின்றனன் பத்மயோனியே'

"பத்மயோனி என்றது பிறந்த வழிக்கூறல்" அதுதான் இருபெய ரொட்டு ஆகுபெயர்" - தக்கயாகப் பரணி 472-உரை.

'உந்தியெழுந்த உருவ மலர் தன்னில் சந்தச் சதுமுகன். தன்னைப் படைத்தவன்' - பெரியாழ்வார் 2 5-8.

† ராவுத்தன் - குதிரை வீரன்

"சூர்க்கொன்ற ராவுத்தனே" "கலாபத் தனி மயிலேறும் இராவுத்தனே" - கந்தரலங்காரம் 37, 50.

"இவுளி முகியைப் பொருத ராவுத்தனானவனும்"

- வேடிச்சி காவலன் வகுப்பு.

‡ வயிரியர் - பாணர்: புகழ்ந்து பாடுவோர் "வயிரியர் தோள் வலி புகழ" என்பர் பொதுப்பாடலினும் 1254.

கற்ற புலவர்களின் (வைப்பு) சேமநிதி நீ என்றும், (பொய்யான புகழ்கூறிக்) குப்பையாம் செல்வயோகம் படைத்த மனிதர்களின் கையில் நான் அகப்பட்டு வெட்கம் அடைந்து நிற்கின்ற நிலையை நீ கண் பார்ப்பாயாக.

சக்கரம் திருக்கையிற் கொண்ட திருமாலுக்கும், (திருமாலின் உந்தித்) தாமரையில் தோன்றிய பிரமனுக்கும், அழியாதவர் என்னும் கீர்த்தி வாய்ந்த பரமசிவத்துக்கும் எட்டுதற்கு அரியதான -

உண்மையான வேதத்தின் உற்பத்தியை (தோற்றத்தை) உபதேசித்த அந்த ஞான சொரூபனே! (கிரி) கிரௌஞ்சகிரியின் (புரை) பெருமையைக் குலைத்து,

மாமரத்திலே புகுந்து ஒளித்திருந்த சூரன் தொளைபடக் குத்தின ராவுத்தனே (வீரனே)! அழகிய குமரனே!

அரசனே! நீலோற்பலம், வெட்சிமாலை இவைகளை அணிந்த புயங்களை உடைய பெருமாளே! (கொச்சை) **சீகாழி**யில் வாழ்கின்ற முத்தமிழ்ப் பெருமாளே!

(வெட்சி நிற்பது பாராய்)

# 778.

(**தி**னமணி) சூரியன், (சார்ங்கபாணி) சாரங்கம் என்னும் வில்லைக் கையிற்கொண்ட திருமால், என்று சொல்லும்படி, மதில் நீளமுள்ளதாய், (சால) மிகவும் (தினகரன்) சூரியனை (சூரியன்ஒளியை) (ஏய்ந்த) பொருந்திய மாளிகையில் - அரண்மனையிலே, முத்தாலும்

(செழு) அழகுள்ள ரத்னத்தாலும் அலங்கரிக்கப்பட்ட (பீடிகையில்) பீடத்திலே (அமர்ந்து), இசை - கீதம் பொருந்திய பாடல்களைப் புகழ்ந்து பாடுவோர் ஒன்று கூடிப் பாடவும், இரண்டு பக்கங்களிலும் -

ஒரேமாதிரியான வளையல்களைப் பூண்ட கையை உடைய மாதர்கள் (நின்று) கவரிவீச, வேய்ந்துமாலை - மாலைகளைச் சூடி - புனுகுசட்டம், அகில், சந்தனம் இவைகளைப் பூசிக்கொண்டு, அரசபதவியிலிருந்து -

இனிதிறு மாந்து வாழு மிருவினை நீண்ட காய
*மொருபிடி சாம்ப லாகி விடலாமோ;
வனசர ரேங்க வான முகடுற வோங்கி ஆசை
மயிலொடு பாங்கி மார்க ளருகாக
மயிலொடு மான்கள் சூழ வளவரி †வேங்கை யாகி
மலைமிசை தோன்று மாய வடிவோனே;
‡ கனசமண் Xமூங்கர் கோடி கழுமிசை Oதூங்க நீறு
கருணைகொள் பாண்டி நாடு பெறவேதக்-
கவிதரு காந்த பால கழுமல பூந்த ராய
**கவுணியர் வேந்த தேவர் பெருமாளே.(11)

## 779. கந்த புராணம்

தானாதன தானன தானன
தானாதன தானன தானன
தானாதன தானன தானன தந்ததான

†† பூமாதுர மேயணி மான் மறை
வாய்நாலுடை யோன்மலி வானவர்
கோமான்முநி வோர்முதல் யாருமி யம்புவேதம்-
பூராயம தாய்மொழி நூல்களும்
ஆராய்வ திலா தட லாசுரர்
போரால்மறை வாயுறு பீதியின் வந்துகூடி;

---

* 'ஒருபிடி பொடிக்கும் இலையெனும் உடலாமோ' என்றால் 585-ஆம் பாடலிலும்.

† வேங்கை மரமானது - பாடல் 416-பக்கம் 551 கீழ்க்குறிப்பு.

‡ சமணர்கள் கழு ஏறினதும் - மதுரையில் திருநீறு பரவினதும் - பாடல் 181 பக்கம் 42: பாடல் 283 பக்கம் 202 கீழ்க்குறிப்பு.

X மூங்கர் - ஊமையர் - 'கொத்தைக்கு மூங்கர் வழிகாட்டுவித்து' - அப்பர் 4-99-2.

'நின்றுண் சமணர்.... ஒன்றும் உணராஊமர்' -சம்பந்தர் I-71-10.

O தூங்குதல் - தொங்குதல் -

"சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கு" - குறுந்தொகை -18,

"பைங்காய் தூங்கும் பந்தர்" - பெரும்பாண் 267.

* சம்பந்தர் கவுணியர்குலம்'

"கவுணியர் குலபதி காழியர்கோன்"- சம்பந்தர் 1-112-11

"கழுமலவூரிற் கவுணியன் ஞானசம்பந்தன்" - சம்பந்தர் 1-98-11.

†† லக்ஷ்மி திருமால் மார்பில்:

"பங்கயத் திருந்த பொன்னை ஆகத்தில் ஒருவன் வைத்தான்"

- கம்பராமா - மாரீசன் -76; திருமருமார்பிலவன்' - சம்பந்தர் 2-68-9.

இன்ப மயமாய் மிக்க பெருமையுடனே வாழ்கின்ற இருவினைக்கு ஈடான (இந்தப்) பெரிய உடலானது (ஈற்றில்) ஒருபிடி சாம்பலாகி அழிந்து படலாமோ!

(வனசரர்) காட்டில் திரிபவர்கள் - வேடர்கள் (ஏங்க) அதிசயித்து ஆரவாரிக்க, வானத்தின் உச்சியைத் தொடும்படி வளர்ந்து, (தான்) ஆசையாய் (வளர்த்த) மயிலும் தோழிமார்களும் சமீபத்தில் இருக்க

மயில்களும் மான்களும் சூழ, செழித்துள்ள உயர்ந்த வேங்கைமரமாகி (வள்ளி) மலை மேலே தோன்றின மாய வடிவத்தனே!

பெருத்த சமண் ஊமையர்கள் (கோடி) பலரும் கழுவின்மேல் (தூங்க) தொங்க, திருநீறு - உன் கருணைக்குப் பாத்திரமான பாண்டிநாடு பெற - பாண்டிநாட்டிற் பரவ - வேதப்பொருள் கொண்ட

பாடல்களை அருளிய (காந்த) ஒளிகொள் மேனியனே - அழகனே! (பால) குழந்தையே! கழுமலம், பூந்தராய் எனப் பெயர்கள் உள்ள **சீகாழிப்** பதியனே! கவுணிய குலத்தனே! அரசே! தேவர் பெருமாளே!

(காயம் ஒருபிடி சாம்பலாகி விடலாமோ)

## 779.

**பூ** மாது (தாமரையில் வீற்றிருக்கும் லக்ஷ்மி தேவியை) (உரமேயணி) மார்பிடத்தே வைத்துள்ள (மால்) திருமாலும், வேதம் சொல்லும் வாய் நான்கு உடையவனாகிய பிரமனும், கூட்டமான தேவர்களின் தலைவனான இந்திரனும், முநிவர்கள் முதலான யாவரும், சொல்லப்படும் வேதப்பொருளை

ஆராய்ச்சியுடன் கூறும் நூல்களில் ஆராய்ச்சி செய்யாத (அடல் அசுரர்) வலிய அசுரர்கள் செய்யும் போருக்குப் பயந்து மறைந்து, தாம்கொண்ட பயம் காரணமாக வந்து ஒன்றுகூடி - (ஒருங்கே வந்து)

நீமாறரு ளாயென ஈசனை
பாமாலைக ளால்தொழு தேதிரு
நீறார்தரு மேனிய தேனியல் கொன்றையோடு-
நீரேர் தரு *சானவி மாமதி
காகோதர மாதுளை கூவிளை
நேரோடம் விளாமுத லார்சடை யெம்பிரானே;
போமாறினி வேறெது வோதென
வேயாரரு ளா†லவ ரீதரு
போர்வேலவ நீலக லாவியி வர்ந்துநீடு-
‡ பூலோகமொ டேயறு லோகமு
நேரோர் நொடி யேவரு வோய்சுர
Xசேனாபதி யாயவ னேயுனை யன்பினோடுங்;
காமாவறு சோம ஸமானன
தாமாமண மார்தரு நீபசு
தாமாவென வேதுதி யாதுழல் வஞ்சனேனைக்-
காவாயடி நாளசு ரேசரை
யேசாடிய கூர்வடி வேலவ
Oகாரார்தரு காழியின் மேவிய தம்பிரானே.(12)

## 780. திருவடி பெற

தனனத்தத் தானத் தானன, தனனத்தத் தானத் தானன
தனனத்தத் தானத் தானன தனதான

மதனச்சொற் காரக் காரிகள் பவளக்கொப் பாடச் சீறிகள்
மருளப்பட் டாடைக் காரிக ளழகாக-

*சானவி கங்கை - சன்னு முநிவரிடத்தினின்று தோன்றியவள் "சன்னுவின் செவிவழி வரலால் நிகரில் சானவி யெனப் பெயர் படைத்து" -கம்பராமா - அகலிகை 61.

† அவர் ஈதரு போர் வேலவ - அவர் கொடுத்துதவிய, (போர்) வேலை உடையவனே! - எனவும் பொருள் தொனிக்கும் -இவ்வாறே பாடல் 61ல் இருண்ட கண்டர் தந்த அயில் வேலா' என்ற இடத்தும் பொருள் தொனிக்-கும். இது முருகவேள் போருக்குப் புறப்படுமுன் சிவபிரான் அவருக்கு வேல் கொடுத்த நிகழ்ச்சியைக் குறிக்கும். 'எப் படைக்கும் நாயகமாவதொரு தனிச்சுடர் வேல் நல்கியே மதலைகைக் கொடுத்தான்' கந்தபுரா 1-18-38.

‡ ஏழுலகம் - பாடல் 46 பக்கம் 123 கீழ்க்குறிப்பு.

X இந்தப் பாடலில் முதல் ஆறு அடிகள் தேவர் முறையீடு முதல் முருகவேள் தேவசேனாபதியாகப் போருக்கு எழுந்தருளும் வரையில் கந்த புராணச் சுருக்கமாய் அமைந்துள்ளன.

O 'காருலவும் பொழிற் காழி' - சம்பந்தர் 2-11-5.

நீ (மாறு) (அந்த அசுரர்களாம் பகைவர்களை அழிக்கவல்ல ஒரு) பகைவனை நீ தந்தருள் என்று ஈசனைப் பாமாலைகள் பாடித் தொழுது, திருநீறு விளங்கும் மேனியனே! தேன் பொதியும் கொன்றைப் பூவுடனே -

நீர் அழகுடன் ததும்பும் (சானவி) கங்கையையும், சிறந்த நிலவையும், (காகோதரம்) பாம்பையும், மாதுளம் பூ, வில்வம், (நேரோடம்) நாவல் இலை, விளா இலை, முதலியன நிறைந்துள்ள சடையணி எம்பெருமானே!

(எங்களுக்கு உய்ந்து) போகும் வழி இனி (உன்னை ஒழிய) வேறு எது உளது, சொல்லி யருளுக (எனவே) என்று முறையிடவே, நிறைந்த கருணை அருளால் (அவர்) அந்த சிவபெருமான் (ஈதரு) தந்தருளிய வேலவனே! நீலத் தோகை மயிலில் ஏறி நீண்ட

(இந்தப் பூலோகத்துடனே பாக்கி ஆறு லோகங்களையும் நேராக ஒரே நொடிப் பொழுதில் (சுற்றி) வந்தவனே! தேவர்களின் சேனாதிபதியானவனே! உன்னை அன்பினால் -

(காமா) மன்மத அழகு உடையவனே! ஆறு (பூரண) சந்திரருக்குச் (சம) சமமான (ஆனன) திருமுகங்களை உடையவனே! (தாமா மணமார்தரு நீப) மணமார்தரு நீப தாமா! மணம் நிறைந்து வீசும் கடப்பமாலை அணிந்தவனே! (சுதாமா) நல்ல ஒளியை உடையவனே! என்றெல்லாம் (உன்னைத்) துதிக்காமல் திரிகின்ற வஞ்சகனாகிய என்னைக்

காத்தருளுக! முன்பு அசுரர் தலைவர்களாகிய சூரன் முதலானவர்களைச் சங்கரித்த மிகக் கூரிய வேலாயுதத்தை உடையவனே! மேகங்கள் நிறைந்துள்ள **சீகாழியில்** வீற்றிருக்கும் தம்பிரானே!

(வஞ்சனைக் காவாய்)

## 780.

**ம**ன்மதன் சம்பந்தமான சொற்களை உறைப்புடன் (உற்சாகத்துடன்) பேசுபவர்கள், பவளக்கொப்பு காதில் ஆடும்படிக் கோபிப்பவர்கள், கண்டோர் மருளும்படியாக பட்டு ஆடைகளை அணிந்தவர்கள், அழகாக,

மவுனச்சுட் டாடிச் சோலிகள் இசலிப்பித் தூசைக் காரிகள்
வகைமுத்துச் சாரச் சூடிகள் விலைமாதர்;

குதலைச்சொற் சாரப் பேசிகள் *நரகச்சிற் சாடிப் பீடிகள்
† குசலைக்கொட் சூலைக் காலிகள் மயல்மேலாய்க்

கொளுவிக்கட் டாசைப் பாசனை பவதுக்கக் காரச் சூதனை
குமுதப்பொற் **பாதச் சேவையி லருள்வாயே;**

கதறக்கற் சூரைக் கார்கட லெரியத்‡ திக் கூறிற் பாழ்பட
Xககனக்கட் டாரிக் காயிரை யிடும்வேலா

கதிர்சுற்றிட் டாசைப் பால்கிரி யுறைபச்சைப் பாசக் கோகில
கவுரிப்பொற் Oசேர்வைச் சேகர முருகோனே;

---

* நரக அச்சில் சாடி பீடிகள் - நரகமாகிய அச்சிற் சாய்வித்துத் துன்பப் படுத்துவோர்.

† குசலை கொள் சூலை காலிகள் - (தமது செய்கைக்குத்) தடையாக வந்த கர்ப்பத்தை வெளிப்படுத்துவோர்.

‡ எட் 'டிகை நீசமுட்டரை ஓட வெட்டிய பானு சத்திகை எங்கள் கோவே' - திருப்புகழ் 277.

X ககனம் - சேனை.

O தேவி முருகவேளை அணைதலால்—தேவியின் மார்பில் உள்ள சந்தனக் கலவை முருகவேளின் மேலே பட்டு அதை அவர் பூசிக்கொள்வதாகின்றது.

"இமைய மயில் தழுவு மொரு திருமார்பில்
ஆடுவதும்... மணநாறு சீறடியே" - சீர்பாத வகுப்பு.

மௌனத்தாலேயே தங்களுக்கு வேண்டியதைச் சுட்டிக்காட்டிக் காரியத்தைச் சாதிப்பவர்கள், (இசலிப்பித்து) பிணங்குதலால் தங்கள் ஆசையை வெளிப் படுத்துபவர்கள், வகை வகையான முத்துமாலைகளைப் பொருந்த அணிந்து கொள்பவர்கள், விலைமாதர்கள் (உடலை விலைக்கு விற்பவர்கள்)-

மழலைப் பேச்சுக்களைப் பொருந்தப் பேசுபவர்கள், நரகமாகிய அச்சில் சாய்வித்துத் துன்பப் படுத்துவோர், (தமது செய்கைக்குத்) தடையாக வந்த கர்ப்பத்தை வெளிப்படுத்துவோர், (அல்லது) கொள்சூலை குசலை காலிகள் - கொண்ட காப்பத்தைத் (குசலை) தந்திரவகையில் காலி செய்பவர் கலைத்து ஒழியச் செய்பவர் - (மேல்), மோகம் மேற்பட்டு

(அதனால்) கொள்ளப் பட்டவனாய்க் கட்டுண்டு அந்த ஆசையில் பாசம் (பற்று) கொண்ட என்னை, (பவம்) பிறப்பால்வரும் துக்க நிகழ்ச்சிகளிற் பட்ட (சூதனை), வஞ்சகனைக் (குமுதமலர்) ஆம்பல்மலர் அணிந்த உனது அழகிய திருவடிச் சேவைதந்து புரந்தருளுவாயாக.

(கதறக்கற்சூரை) கற்சூர்கதற - கல் - ஏழுகிரியும், அவை காவலாயிருந்த சூரனும் கதறி அழவும், (கார்கடல்) கரியகடல் எரியவும், திக்கு - எட்டுத் திசைகளும் (திசை அசுரர்களும்) ஊறில் பாழ்பட ஊறுபட்டுப் பாழ்பட - இடையூறு பட்டுப் பாழ்படவும், அல்லது கூறில் - கூறுமிடத்து திக் (திக்கு அசுரர்கள்) பாழ்படவும், ககனம் - (அசுர) சேனைகளை, (அல்லது) க - தீப்போன்ற - கனம் - பெருமை வாய்ந்த (கட்டாரிக்கா) வாளுக்கு, இரையிடும் இரை - உணவாகும்படி செய்த வேலனே!

(கதிர் சுற்றிட்ட) சூரியன் வலம்வரும் (ஆசைப்பால்கிரி) ஆசை - கிரி - பால் (ஆசைகிரி) பொன்மலை மேருவின், பால் - பக்கத்திலுள்ள இமயமலையில் அல்லது கயிலையில், உறை - வீற்றிருக்கின்ற (பச்சைப்பாசக் கோகில கௌரி பச்சை நிறமுள்ள கௌரி, பாசம் - அன்பு நிறைந்த (அல்லது பாசாங்குசம் கொண்ட) கௌரி, கோகிலம் குயில் போன்ற கௌரி - பார்வதியின் அழகிய (சேர்வை) சந்தனக்கலவை (சேகர) மேற்படும்படி கொள்ளும் முருகவேளே!

திதலைப்பொற் *பாணிக் கார்குயி லழகிற் பொற்
றோகைப்பாவையை

தினமுற்றுச் சாரத் தோள்மிசை யணைவோனே-

† திலதப்பொட் டாசைச் சேர்முக மயிலுற்றிட்
டேறிக்காழியில்

சிவன்மெச்சக் ‡ காதுக் கோதிய பெருமாளே.(13)

## 781. அருள

தனதனன தத்ததன தனதனன தத்ததன
தனதனன தத்ததன தனதான

விடமெனமி குத்தவட வனலென வயர்த்துரவி
விரிகதி ரெனப்பரவு நிலவாலே-

விதனமிக வுற்றுவரு ரதிபதி கடுத்துவிடு
விரைதரு விதட்கமல கணையாலே;

---

* பாணி - அன்பு, அழகு. (பிங்கலம்); சொல் (சூடாமணி)

† முருக வேளின் நெற்றியிற் பொட்டு:
"புண்டரம் பூத்த நுதற் பொட்டழகும்" - கந்தர் கலிவெண்பா 38

‡ உமை முலைப் பாலுண்ட சம்பந்தர் முதல் முதல் காழியிற் பாடின "தோடுடைய செவியன் விடையேறி" எனத் தொடங்கும் பதிகம் இறைவன் செவியைச் சிறப்பிக்கின்றது.

(திதலை) தேமலையும், (பொன்) அழகிய (பாணி) அன்பையும் அல்லது (சொல்லையும்) கொண்ட, (கார்குயில்) கரியகுயில் (போன்று) அழகுடைய பொலிவு நிறைந்த (தோகைப்பாவையை) மயில் போன்ற பாவையை (பதுமைபோன்ற) வள்ளியை (சாரத் தின முற்று)- சாரும்பொருட்டு - அவ்வளைத் தழுவும் பொருட்டுத் தினம் உற்று - நாள்தோறும் அவளிடம் சேர்ந்து அவள் தோள்மிசை அணைந்தவனே!

(திலதப் பொட்டு) சிறந்த பொட்டு, (ஆசைச்சேர்முக) விருப்பமுடன் அணியும் திருமுகத்தையுடையவனே! (அல்லது பொட்டு அணிந்துள்ள (ஆசைச்சேர்) பொன்னை நிகர்க்கும் திருமுகங்களையுடையவனே! மயில் உற்றிட்டு ஏறி - மயிலில் பொருந்தி ஏறி **காழியில்** (அமர்ந்துள்ள பெருமாளே!); சிவன் மெச்சும்படியாக அவர் காதில் உபதேசம் செய்த பெருமாளே! (அல்லது) மயிலில் பொருந்தி ஏறியவனே! சீகாழிப் பதியில் சிவபிரான் விரும்பும்படியாக அவர் காதைச் சிறப்பித்துத் "தோடுடைய செவியன்" என்ற தேவாரப்பாவை ஓதின பெருமாளே!

(பாதச் சேவையி லருள்வாயே)

# 781.

**வி**ஷம்போலப் பொருந்திய வடவாக்கினி என்று சொல்லும்படியாக (உயர்த்து) மேலெழுந்து, (ரவிவிரி கதிரென) சூரியனது வெப்பம் மிக்க கிரணங்களென்று சொல்லும்படியாகத் தனது கிரணங்களைப் பரப்பும் சந்திரனால்

துன்பம் மிக அடைந்து (அச் சமயத்தில்) வருகின்ற (அல்லது சந்திரனால் வருகின்ற வருத்தும் தொழிலை மிகக் கொண்டு),ரதியின் கணவனாகிய மன்மதன் (கடுத்துவிடு) கோபித்துச் செலுத்துகின்ற (விரைதரு) வாசனை தருகின்ற இதழ்களுடைய (பூங்கணைகளுள்) தாமரைக்கணை கொண்டு

அடலமரி யற்று *திசை யினில்மருவி மிக்கவனல்
அழலொடு கொதித்துவரு கடைநாளில்-
அணுகிநம னெற்றமயல் கொளு† மநிலை சித்தமுற
அவசமொ டணைத்தருள **வரவேணும்;**
அடவிதனில் மிக்கபரு வரையவ ரளித்ததிரு
அனையமயில் ‡ முத்தமணி Xசுரயானை-
அழகிய மணிக்கலச முலைகளில் மயக்கமுறு
மதிவிரக Oசித்ரமணி மயில்வீரா;
**கடதடக ளிற்றுமுக ரிளையவ கிரிக்குமரி
கருணையொ டளித்ததிற முருகோனே-
††கமலமல ரொத்தவிழி யரிமருக பத்தர்பணி
**கழுமல** நகர்க்குமர பெருமாளே. (14)

## கரியவனகர்.

(இது ஸ்ரீகாழி ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு $3^1/_2$ மைல் தூரத்திலுள்ள 'கொண்டல் வண்ணன்குடி' என்னுந் தலமாய் இருக்கலாம். 'கொண்டல் வண்ணன்குடி' என்பது 'கொண்டல் வள்ளுவக்குடி' என மருவியதுபோலும். 'கொண்டல்' எனத் தேவாரத்தில் வைப்பு ஸ்தல மொன்றுண்டு.)

## 782. இடர் தொலைய

தனதன தனனத் தான தாத்தன
தனதன தனனத் தான தாத்தன
தனதன தனனத் தான தாத்தன தனதான

‡ அளிசுழ லளகக் காடு காட்டவும்
விழிகொடு கலவித் தீயை மூட்டவும்
அமளியில் முடியப் போது போக்கவும் இளைஞோர்கள்-

---

* திசையினில் - சமயத்தில். † அ நிலை - அந் நிலை; அச் சமயம்.

‡ தேவசேனைக்கு முத்தமாலை உரியது - 'செழு முத்து மார்பின் தெய்வானை' - திருப்புகழ் 764; பாடல் 712 பக்கம் 142 கீழ்க்குறிப்பு.

X சுர யானை - தேவ யானை.

O மயில் காலில் மணி நடமிடும் பொழுது சப்தித்தல் - "வருதுரக மயில் மணிகள் சத்திக்க நிர்த்தமிட" - பாடல் 147.

**கடதட கும்பக் களிற்றுக் கிளைய களிற்றினையே'

-- கந்தரலங்காரம்.

(தொடர்ச்சி 321-ஆம் பக்கம் பார்க்க)

(அடல் அமர் இயற்று) வலிய போரைச் செய்யும் (திசையினில்) சமயத்தில் - காம மிக்கு வேதனைப்படும் சமயத்தில் - மருவி (பொருந்தினவனாய்) (மிக்க அனல் அழலொடு) மிக்க நெருப்புத் தணல்போலக் கோபக் கொதிப்புடன் படுகின்றகடை நாளில் - ஈற்றுப் பொழுதில் -

(என்னை) அணுகி யமன் (எற்ற) தாக்க (நான்) மயக்கம் கொள்ளும் அந்த சமயத்தில், (சித்தம் உற) நீ மனதுவைத்து (அவசமொடு) பரவசத்துடன் (மிக்க களிப்புடன்) என்னை **அணைத்தருள வரவேணும்;**

காட்டில் (மிக்க) நிறைந்திருந்த (பருவரையர்) பெருத்தமலை வாசிகளாகிய வேடர்கள் போற்றி வளர்த்த லக்ஷ்மி போன்ற மயிலாம் வள்ளி, முத்தமாலை அணிந்த தேவயானை (இவ் விருவர்களின்)

அழகிய மணிமாலைகளுள்ள (கலசம்) குடம் போன்ற கொங்கைகளின் மோகம் கொள்ளும் அதிக காமங்கொண்டவனே, அழகிய மணிகள் புனைந்த மயில் வீரனே!

(கட தட) மதமும் பெருமையுங் பொருந்திய யானைமுகப் பெருமானாம் விநாயகருக்கு (இளையவ) தம்பியே! இமயமலைப் புத்திரியாகிய பார்வதி (தேவர்கள்மீது) கருணை பூண்டு அளித்த (திறம்) சாமர்த்திய சாலியாகிய முருகனே!

தாமரைமலர் போன்ற கண்களையுடைய திருமாலின் மருமகனே! பக்தர்கள் பணிகின்ற கழுமல நகர் எனப்படும் **சீகாழிக்** குமரனே! பெருமாளே!

(அணைத்தருள வரவேணும்)

## கரியவனகர்

## 782.

**(அளி)** வண்டுகள் (சுழல்) மொய்க்கும் கூந்தலாகிய காட்டைக் காட்டுதற்கும், கண் கொண்டு (கண்ணாற்) காமத்தீயை மூட்டுதற்கும், படுக்கையில் (முடிய) சதா - எப்போதும் பொழுதுபோக்கவும், இளவயதினராயுள்ள

---

†† 'கண்ணுங் கமலம் கமலமே கைத்தலமும் மண்ணளந்த பாதமும் மற்றவையே... திருமாமணிவண்ணன் தேசு'- இயற்பா... மூன்றாம் அந்தாதி 9.

‡‡ 'அளி முரல்' - என்றும் பாடம்.

அவர்வச மொழுகிக் காசு கேட்கவும்
அழகிய மயிலிற் சாயல் காட்டவும்
அளவிய தெருவிற் போயு லாத்தவும் அதிபார;
இளமுலை மிசையிற் றூசு நீக்கவும்
முகமொடு முகம்வைத் தாகை யாக்கவும்
இருநிதி யிலரைத் தூர நீக்கவும் இனிதாக
எவரையு மளவிப் போய ணாப்பவும்
நினைபவ ரளவிற் காதல் நீக்கியென்
இடரது தொலையத் தாள்கள்காட்டிநின்
அருள்தாராய்;
நெளிபடு களமுற் றாறு போற்சுழல்
*குருதியில் முழுகிப் பேய்கள் கூப்பிட
† நிணமது பருகிப் பாறு காக்கைகள் கழுகாட
நிரைநிரை யணியிட் டோரி யார்த்திட
அதிர்தரு சமரிற் சேனை கூட்டிய
நிசிசரர் மடியச் சாடு வேற்கொடு பொரும்வீரா;
களிமயில் தனில்புக் கேறு தாட்டிக
அழகிய கனகத் தாம மார்த்தொளிர்
கனகிரி புய‡ முத் தார மேற்றருள் திருமார்பா
கரியவ னகரிற் றேவ பார்ப்பதி
யருள்சுத குறநற் பாவை தாட்பணி
கருணைய தமிழிற் பாடல் கேட்டருள்
பெருமாளே.

---

* பேய்கள் ரத்தத்தில் முழுகுவது:

"ஒழுகு உதிரந்தனில் முழுகி எழுந்தன நிருதரை முனிந்த போர்க் களத்தில் அலகையே" - போர்க்களத்தலகை வகுப்பு.

† மாமிசத்தை உண்பன பருந்து முதலிய:-

"நரிநாய்பேய் பாறொடு கழுக்கள் கூகைதாமிவை புசிப்ப தான பாழுடல்" - திருப்புகழ் 898.

"நரிகள் கங்கு காகமிவை தின்ப தொழியாதே" - திருப்புகழ் 120

‡ முருகனும் முத்துமாலையும் - 'தண்டரள மணிமார்ப' - திருப்புகழ் 729.

'கரியவ னிளையத் தேவி பார்ப்பதி யருள் செய்த குமரக்கீரர் பாட்டியல் கருணைகொடருளிப் பாடல் கேட்டருள் பெருமாளே' என்றும் பாடம்.

அவர்களின் வசத்தில் பழகி அவர்களைக் காசு கேட்பதற்கும், அழகிய மயில்போன்ற (தங்கள்) சாயலைக் காட்டுதற்கும், அளவிய (சந்திக்கும் பொருட்டு)த் தெருவில் போயுலாத்துதற்கும், அதிக பாரமான

இளமுலை மேலுள்ள ஆடையை நீக்குதற்கும், முகமொடு முகம் வைத்து ஆசை யுண்டுபண்ணுதற்கும், நிரம்ப சொத்து இல்லாதவரைத் தூரத்தே வெருட்டி நீக்குதற்கும், இனிய சொற்களுடன்

எல்லாருடனும் கலந்துபோய் (அணாப்பவும்) அவர்களை ஏமாற்றவும், (நினைபவரளவில்) நினைக்கின்றவர்-களாகிய பொதுமகளிர் சம்பந்தப்பட்டவரையில் என் ஆசையை நீக்கி, என் வருத்தமெல்லாந் தொலைய உன் திருவடிகளைக் காட்டி உன் திருவருளைத் தந்தருளுக:

(நெளிபடு) சுழற்சியுறும் (களம் - உற்று) போர்க்களத்தில் சேர்ந்து (அங்கே) ஆறுபோலச் சுழன்று ஓடும் ரத்தத்தில் முழுகிப் பேய்கள் கூச்சலிட, மாமிசத்தை உண்டு (பாறு) பருந்துகளும், காக்கைகளும், கழுகுகளும் விளையாட

கூட்டங் கூட்டமாக வரிசையாக நின்று, ஓரி (நரிகள்) ஆரவாரஞ்செய்ய, (இவ்வாறு) அதிர்ச்சியுறும் போரில் சேனைகளைக் கூட்டிவந்த அசுரர்கள் இறக்கும்படி சங்காரஞ்-செய்யும் வேல்கொண்டு போர்செய்த வீரனே!

செருக்கைக் கொண்டிருந்த மயில்மேல் புகுந்து ஏறும் (தாட்டிக) பலவானே! அழகிய பொன்மாலை நிறைந்து விளங்கும் பொன்மலை (மேரு) போன்ற புயங்களை உடையவனே! முத்துமாலை ஏற்றணிந்துள்ள அழகிய மார்பனே!

**கரியவனகர்** எனுந் தலத்தில் வீற்றிருக்கும் தேவனே! பார்வதி யருளிய (சுத) பிள்ளையே! (குறநற்பாவை) நல்ல குறப்பாவையாம் வள்ளியின் தாளைப் பணிகின்ற (அல்லது, பாவை உனது தாளைப் பணிகின்ற) கருணை மூர்த்தியே! தமிழ்ப் பாடல் கேட்டருளும் பெருமாளே!

(இடரது தொலைய நின் அருள் தாராய்)

## வைத்தீசுரன் கோயில்

(ரெயில்வே ஸ்டேஷன். இது தேவாரத்திற் 'புள்ளிருக்கு வேளூர்' எனப்படும் ஸ்ரீகாழிக்கு மேற்கு 3 1/2 மைல், திருஞான சம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல் பெற்றது. ஸ்தல புராணம் உண்டு. முருகவேள் - முத்துக்குமரர் விசேஷ சந்நிதி: இவருக்குக் குமரகுருபரர் சுவாமிகள் பாடிய 'பிள்ளைத்தமிழ்' ஒன்று உண்டு.)

### 783.

தனத்தன தானத் தனதான
உரத்துறை போதத் தனியான-
உனைச்சிறி தோதத் தெரியாது;
*மரத்துறை போலுற் றடியேனும்-
† மலத்திருள் மூடிக் கெடலாமோ;
பரத்துறை சீலத் தவர்வாழ்வே-
பணித்தடி வாழ்வுற் றருள்வோனே;
‡ வரத்துறை நீதர்க் கொருசேயே-
Xவயித்திய நாதப் பெருமாளே. (1)

### 784 திருவடியைப் பெற

தத்தன தான தான, தத்தன தான தான
தத்தன தான தான தனதான

எத்தனை கோடி கோடி விட்டுட லோடி யாடி
யெத்தனை கோடி போன தளவேதோ-

---

* மரம் - ஊக்கம் ஞானமில்லாதவனை 'மரம் அனையான்' என்பர்.

"மரமனையா னுக்கிந்த மானை விதித்த பிரமனையான் காணப் பெறின்" - தனிப்பாடல்

'உரமொருவற் குள்ள வெறுக்கை அஃதில்லார் மரம்; மக்களாதலே வேறு' - திருக்குறள் 600

'களையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும் அவையல்ல நல்ல மரங்கள் - சவை நடுவே நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய மாட்டாதவன் நல் மரம்' - மூதுரை - 14.

† மலத்திருள்: 'ஞானச் செல்வங்களைச் சாதகனுக்குத் தெரியாமற்படி மறைத்துக் கொண்டு திரைபோல நிற்கும் இருட்டாகிய மாயா மலமும், விஷ்ணுகிரந்தி யாகிய காமிய மலமும். ருத்திர கிரந்தியாகிய ஆணவ மலமும்' - என்றார் திருவாசக உரையாசிரியர் ஸ்ரீ சுந்தரமாணிக்க யோகீஸ்வரர் - பக்கம் 674

(தொடர்ச்சி பக்கம் 325)

## வைத்தீசுரன் கோயில்

## 783.

(**உ**ரத்துறை) உரம் - துறை) வன்மைக்கிடமான அல்லது (உரத்து உறை வன்மையொடு பொருந்திய (போதம்) ஞானத்தின் தனிப் பொருளான -

உன்னைக் கொஞ்சமேனும் போற்றத் தெரியாமல்;

மரத்து உறை - மரப்பண்டம், மரத்துறை - மரமாம் இடம் - மரக்கட்டை போல இருந்து அடியேனும் -

ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களின் இருள்மூடி நான் கெட்டுப்போகலாமா! (கெட்டுப் போகலாகாது) என்றபடி

மேலான நிலையில் உள்ள புனித வாழ்க்கையர்களின் செல்வமே!

(பணித்து அடி) அடியிற் பணிவித்து வாழ்வு உறும்படி அருள்வோனே!

வரந்தரும் வழியையே தமது நீதியாகக் கொண்ட சிவனது ஒப்பற்ற குழந்தையே!

**வயித்தியநாதராம்** பெருமாளே! (அல்லது) வயித்தியநாதராம் சிவபிராற்குப் பெருமாளே!

(மலத்திருள் மூடிக் கெடலாமோ)

## 784.

**எ**த்தனை கோடி கோடிக் கணக்கான (உடலை) விட்டுப் (புது) உடலில் ஓடிப்புகுந்தும், ஆடியும், இங்ஙனம் எத்தனை கோடி (ப்பிறப்பு) வந்து போய்விட்டது! இதற்கு அளவும் உண்டோ!

---

‡ சிவபிரான் வரத்துறை நீதர் - அதனால்தான் 'வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்றார் அப்பர் 6-23-1.

X முருகவேளைப் 'பவரோக வயித்தியநாதப் பெருமாள்' என்பர் அருணகிரியார் பாடல் 293-பார்க்க. 'வைத்தீசுரன் கோயிற் சிவபிரானுக்கு வைத்தியநாதப் பெருமாள்' என்று பெயர்.

"மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னை" -அப்பர் 6-54 8.
"நடம் நவிற்று திறல் வேளூர் வயித்திய
நாதனைப் போற்றுதும்"
- முத்துக்குமாரசுவாமிப் பிள்ளைத்தமிழ் காப்பு (3)

இப்படி மோக போக மிப்படி யாகி யாகி
யிப்படி யாவ தேது இனிமேலோ;
*சித்திடில் சீசி சீசி குத்திர மாய மாயை
சிக்கினி லாயு மாயு மடியேனைச்-
சித்தினி லாட லோடு முத்தமிழ் வாண ரோது
சித்திர ஞான பாத மருள்வாயே;
† நித்தமு மோது வார்கள் சித்தமெ வீட தாக
நிர்த்தம தாடு மாறு முகவோனே-
நிட்கள ரூபர் பாதி பச்சுரு வான மூணு
நெட்டிலை சூல பாணி யருள்பாலா;
பைத்தலை நீடு மாயி ரத்தலை மீது பீறு
‡ பத்திர பாத நீல மயில்வீரா-
பச்சிள பூக பாளை செய்க்கயல் தாவு வேளூர்
பற்றிய மூவர் தேவர் பெருமாளே. (2)

## 785. வேசையர் உறவு அற

தான தத்தனந் தான தத்ததன
தான தத்தனந் தான தத்ததன
தான தன்தனந் தான தத்ததன தனதான

பாட கச்சிலம் போடு செச்சை மணி
கோவெ னக்கலந் தாடு பொற்சரணர்
பாவை சித்திரம் போல்வர் பட்டுடையி னிடைநூலார்-

---

* வாழ்க்கையை இங்ஙனமே அப்பரும் வெறுக்கின்றார்
"படுவன பலவுங் குற்றம் பாங்கிலா மனிதர் வாழ்க்கை
கெடுவதிப் பிறவி சீசீ" - 4-76-10

† "சொற் கோலத்தே நாற்காலைச் சேவிப்பார்
சித்தத் துறைவோனே" - திருப்புகழ் 1125.

‡ மயிலின் அடியை நொச்சியின் இலைக்கு உவமை கூறுவது:
"மயிலடி யிலைய மாக்குரல் நொச்சி"
- குறுந்தொகை 138; நற்றிணை 115-5.
"மயிலடி யன்ன மாக்குரல் நொச்சி" - நற்றிணை 305-2.
"நொச்சிப் பாசிலை யன்ன பைந்தாள் மஞ்ஞை"
- திருவிளை இந்திரன் 74.
"நொச்சி யிலைபுரை பைந்தாட் கலாப மாமயில்"
"பரவு நொச்சியின் பாசிலை யன்ன பைந்தாளும்"
- மாயூரப்புரா - பக்கம் 2, 48 (தக்கன் மகம்புரி)

இவ்வாறு மோகமும் போகமும் கலந்து, இவ்வாறே பிறந்து பிறந்து, இவ்வாறு ஆய்க்கொண்டு வருவது ஏனோ! இனிமேல் (ஒ - சித்திடில்)

யோசித்துப் பார்க்கின் சீசி சீசி இழிவானது இந்த மாயமான மாயை (வாழ்க்கை); இதன் சிக்கினிலே அகப்பட்டு மாய்கின்ற அடியேனை -

அறிவுத்துறையில் பயில்வித்து முத்தமிழ் வல்ல புலவர்கள் ஓதுகின்ற உனது விசித்திரமான அல்லது அழகிய ஞானமயத் திருவடியைத் தந்தருளுக:

நாள்தோறும் உன்னை ஓதிப் போற்றுபவர்களின் உள்ளமே இருப்பிடமாக அதில் நடனம் புரியும் ஆறுமுகவனே!

அருவமும் (உருவ மின்மையும்) உருவம் உண்மையும் உள்ளவர், பாதி உருவம் பச்சை நிறத்தினர், மூன்று நீண்ட இலைகளை உடைய சூலத்தைக் கையில் ஏந்தியவர் பெற்ற குழந்தையே!

(ஆதிசேடனது) (பை) படங்கொண்ட தலைகள் - பெரிய ஆயிரந்தலைகளின் மேலே கீறிக்கிழிக்கும் (பத்திர பாதம்) நொச்சிப் பத்திரம் - நொச்சியிலை போன்ற கால்களை உடைய (அல்லது பத்திரம்)- வாள் போன்ற நகக் கால்களை உடைய) நீலமயில் வீரனே!

பசிய இளங் கமுகமரத்தின் பாளையின்மீது (மடலின்மீது) செய் - வயலில் உள்ள கயல்மீன் தாவுகின்ற **வேளூர்** என்னும் தலத்தில் விருப்புடன் வீற்றிருக்கும் (அரி, அயன், அரன், எனும்) மூவர் பெருமாளே! தேவர் பெருமாளே!

(ஞான பாதம் அருள்வாயே)

# 785.

**பா**டகம் (ஒருவகைக் காலணி), சிலம்பு, இவையுடன் சிவந்த மணிகள் கோக்கப்பட்டது போல ஒன்று சேர்ந்து அசைகின்ற அழகிய கால்களை உடையவர்கள், (பாவை சித்திரம்) சித்திரப்பதுமை போல்பவர்கள், பட்டு உடை அணிந்துள்ள (நூல் இடையார்) நூல்போல நுண்ணியதான இடையை உடையவர்கள்

*பார பொற்றனங் கோபு ரச்சிகர*
*மாமெ னப்படர்ந் தேம லிப்பரித*
*பாகு நற்கரும் போடு சர்க்கரையின் மொழிமாதர்;*
*ஏடகக்குலஞ் சேரு மைக்குழலொ*
*டாட ளிக்குலம் பாட நற்றெருவி*
*லேகி புட்குலம் போல பற்பலசொ லிசைபாடி-*
*ஏறி யிச்சகம் பேசி யெத்தியிதம்*
*வாரு *முற்பணந் தாரு மிட்டமென*
† *ஏணி* **வைத்துவந் தேற விட்டிடுவர் செயலாமோ;**
*சேட னுக்கசண் டாள ரக்கர்குல*
*மாள அட்டகுன் றேழ லைக்கடல்கள்*
*சேர வற்றநின் றாட யிற்கரமி ரறுதோள்மேல்-*
‡ *சேணி லத்தர் பொன் பூவை விட்டிருடி*
*யோர்கள் கட்டியம் பாட எட்டரசர்*
*சேசெ யொத்த செந் தாமரைக்கிழவி புகழ்வேலா;*

---

*முற்பணந்தாரும் இட்டமென - முற்பணம் தாரும்; தாரும் இட்டமென - எனத் 'தாரும்' என்ற சொல் இடைநிலைத் தீபமாய் அமைந்தது.

† "ஏறிட்டிட் டேணியை வீழ்விடு முழுமாயர்" என்றார் 979-ஆம் பாடலில்.

ஏறவிட்டு ஏணியைப் பிடுங்கிச் செல்லுதல் ஒரு பழமொழி.

தங்களை நம்பினவர்களை மேல் நிலைக்கு ஏணி கொண்டு ஏற்றி, அந்த அருள் நிலையில் நின்று கீழிறங்கா வண்ணம் ஏணியை வாங்கிவிடுவார் - எடுத்துவிடுவார் இறைவன். வேசையரோதங்களை நம்பினவர்களை ஆபத்து நிலையில் ஏற்றி அந்த ஆபத்தில் நின்றும் அவர்கள் மீள முடியாத வகையில் ஏணியை எடுத்து விடுவார்கள். ஆதலின் வேசையர் ஏணிச் செய்கை இறைவன் ஏணிச் செய்கைக்கு நேர் மாறாம் என்க.

"எறிகதிரோன் மண்டலத்தூ டேற்றி வைத்து ஏணி வாங்கி அருள் கொடுத்திட் டடியவரை யாட்கொள்வான்" - பெரியாழ்வார் 4-9-3.

"திருப்புகழை யோதீர் பரகதிக் கஃதேணி"

- திருப்புகழ்ச் சிறப்புப் பாயிரம் - பக்கம் 4.

‡ வானோர் பொன்பூ பொழிதல்

"வானவர் பொற்பூ விட்டிடு சேசெ சேயென"

- திருப்புகழ் 645-பக்கம் 510

பாரமான அழகிய கொங்கை கோபுர உச்சி என்று சொல்லும்படியாக விரிந்து (ஏமலிப்பர்) - ஏமருதல் கொள்வர் களிப்புறுவார்கள், இதம் - இன்பகரமான (பாகு) வெல்லம், நல்ல கரும்பு, சர்க்கரை போல இனிக்கும் பேச்சினை உடைய மாதர்கள்

(ஏடகக்குலம்) (ஏடகம்) மலர்க்கூட்டங்களைக் கொண்ட கரிய கூந்தலில் விளையாடும் வண்டின் கூட்டங்கள் பாட, அழகிய தெருக்களிற் சென்று, பறவை யினம்போலப் பலபல சொற்கள் அமைந்த ராகங்களைப் பாடி -

மிகுந்த (இச்சகம்) முகஸ்துதியான பேச்சுக்களைப் பேசி, வஞ்சித்து, இன்ப மொழியாலே வாருங்கள், (முற்பணம் தாரும்) முன்னதாகப் பணத்தைக் கொடுங்கள், (தாரும் இட்டமென) பணத்துடன் உங்கள் இஷ்டத்தையும் (அன்பையும்) கொடுங்கள் என (அல்லது முன்னதாகப் பணத்தைக் கொடுங்கள், அதுவே எங்கள் விருப்பம் என, அல்லது முன்னதாகப் பணத்தைக் கொடுங்கள், அப்பால் உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள் என - என்றெல்லாம் கூறி ஏணிவைத்து வந்து ஏறும்படி செய்து பின்னர் ஏணியை - (இறங்க ஒட்டாது) எடுத்துச் செல்பவர்களான (வேசையர்களின்) செயல்களை நம்புதல் ஆமோ - நம்புதல் கூடாது என்றபடி).

(சேடன்) ஆதிசேடன் (உக்க)- மெலிய, சண்டாளரான கொடும்பாதகர்களான அரக்கர்கள் குலம் மாண்டொழிய, நீ (அட்ட) அழித்த (குன்று ஏழு) ஏழுகிரியும், அலைவீசும் ஏழுகடல்களும் ஒன்று சேர வற்ற - (நீர்மை குறையும்படி) உலர்ந்துபோக நின்று விளையாடின வேல் ஏந்திய திருக்கரங்களாம் (ஈரறு தோள்மேல்) பன்னிரண்டு தோளின்மேல் -

(சேண் நிலத்தர்) விண்ணுலகத்தவர் பொன் மலரைப் பொழிய (பூமாரி பெய்ய), (இருடியர்கள்) ரிஷிகள் (கட்டியம்) புகழப் பாடல்கள் பாட, எட்டுத் திக்கிலும் உள்ள அரசர்கள் ஜே ஜே என்று தாளமிட்டு முழங்க, (செந்தாமரைக் கிழவி) இலக்குமிதேவி புகழும் வேலனே!

*நாட கப்புனங் காவ லுற்றசுக
மோக னத்திமென் தோளி சித்ரவளி
நாய கிக்கிதம் பாடி நித்த† மணி புனைவோனே!
‡ ஞான வெற்புகந் தாடு மத்தர் Xதையல்
நாய கிக்குநன் பாக ரக்கணியும்
நாதர் மெச்சவந் தாடுOமுத்தமருள் பெருமாளே. (3)

## 786. அருள் பெற

தான தான தத்த தந்த தான தான தத்த தந்த
தான தான தத்த தந்த தனதான

மாலினாலெ டுத்தகந்தல் **சோறி னால்வளர்த்த பொந்தி
மாறி யாடெ டுத்த சிந்தை யநியாய-
††மாயை யாலெ டுத்து மங்கி னேனை யாள
னக்கி ரங்கி
‡‡ வாரை யாயி னிப்பி றந்து இறவாமல்;
XXவேலி னால்வி னைக்க ணங்கள் தூள
தாள ரித்து உன்றன்
வீடு தாப ரித்த அன்பர் கணமூடே-

---

*அகம் - மலை -- "பொற்பக வினாயகன்" பொற்பு -- அக --வில் நாயகன் -- அழகிய மலையாகிய வில்லைக் கொண்ட நாயகன் -

-திருவாலவாயுடை புரா-காப்பு 2.

† "அணி புனைதல்-அணி திருத்தல்" -பாடல் 96-ஈற்றடி காண்க.

முருகன் வள்ளியின் கூந்தலை வாரி அலங்கரித்து, நெற்றியைத் தடவி, இடையணி புனைந்து, காலிற் சிலம்பை ஒழுங்காக அணி புனைந்து, வள்ளியின் அங்கமெல்லாம் தொட்டு மகிழ்ந்தனனாம்.

"கருமந் தழுநர் மனம்போல் இருள் குழல் கைபுனைந்து
தருமந் தழைநர் உளம்போல் ஒளிர் நுதல் தைவந்துமின்
பருமந் தழையப் பயிற்றிப் பதநூ புரந்திருத்தி
அருமந்த மெய்முழு துந்தொட என்னோ அருந்தவமே"

--தணிகைப்புரா-களவு 186.

(பருமம்--18 வடங்கொண்ட் இடையணி)

‡ **ஞானமலை** என்றே ஒரு தலம் உளது பாடல் 391, 392 பார்க்க.

**Xதையல் நாயகி** என்பது வைத்தீசுரன்கோயிலி லெழுந்தருளியிருக்கும் உமாதேவியாரின் பெயர்

O" முத்த மருள் பெருமாளே"--வைத்தீசுரன் கோயில் முருகவேளுக்கு "முத்துக் குமார்" என்று பெயர் "குமரனை முத்துக்குமரனைப் போற்றுதும்" மீனாட்சி பிள்ளைத்தமிழ் காப்பு 4.

**'சோற்றுத் துருத்திச் சுமை சுமப்ப' -தாயுமான. பராபர-217.

(தொடர்ச்சி பக்கம் 331)

நாடகப்புனம் (அகம்நாடு புனம்)--நீ மனத்தில் நாடி (விரும்பி)ச் சென்ற தினைப் புனத்தில் (அல்லது) நாடு--நீ தேடிச் சென்ற அகம்--புனம்--மலைப்புனம்--மலை வள்ளிமலையில் (தினைப் புனத்தில்) காவல் இருந்த சுக மோகனத்தி (முருகனை மயக்கினவள்)), மெல்லிய தோளை உடையவள், ஆகிய அழகிய வள்ளி நாயகிக்குஇன்பகரமான பாடல்களைப் பாடி நாள்தோறும் அணிஆபரணங்கள் புனைபவனே (அணிவித்து அழகு பார்ப்பவனே)!

ஞானம் என்னும் மலையில் மகிழ்ந்து விளையாடுபவர், **'தையல் நாயகி'** என்னும் திருநாமமுடைய தேவியை நல்ல தமது பாகத்திற் கொண்டவர், (அக்கு) ருத்ராக்ஷமாலை அல்லது எலும்பு மாலையை அணிந்துள்ள தலைவராம் சிவபிரான் மெச்ச வந்து விளையாடும் பெருமாளே! முத்தம் அருள்--முத்தம் அவருக்குத் தந்தருளும் பெருமாளே! அல்லது உத்தமர் உள் பெருமாளே--உத்தமர்களின் உள்ளத்தே விளங்கும் பெருமாளே!

(ஏணி ஏற விட்டிடுவர் செயலாமோ)

## 786.

**ஆ**சையே ஒரு உருவாகி அமைந்த கந்தல் (கந்தை)-சோறுகொண்டு வளர்க்கப்படும் (பொந்தி) சரீரம், மாறி மாறி எண்ணங்கொள்ளும் உள்ளம், இவைதமை அநியாயமான

மாயையால் (பிரபஞ்ச மயக்கத்தால்) எடுத்தவனாகி வாட்டம் உறுகின்றேன், ஐயனே! எனக்கு இரங்கி வந்தருளுக ஐயனே! இனிப் பிறப்பதும் இறப்பதும் இல்லாமல் - (உனது திருக்கை)

வேலினால் (எனது) வினைக் கூட்டங்களைத் தூளாம்படி எரிசெய்து (உனது) மோக்ஷ வீட்டைத் தந்தருளுக; (பரித்த) பரிந்த - அன்பு நிறைந்த அடியார் கூட்டத்திலே -

---

†† "மாயா ப்ரபஞ்ச மயக்கத்தி லேவிழுந்தே
யோயா சனனம் ஒழித்திலேன் பூரணமே" - பட்டி. பூரண 90.

‡‡ வாரையா - வாரும் ஐயா - என்பதன் மரூஉ.

xx **வேல்தான் வினைகளைத் தொலைக்கும்:**
"வினையோட விடுங் கதிர்வேல்" - கந்தரநுபூதி 40.
"வினை எறியும் வேல்" - திருப்புகழ் 1200.

மேவி யானு னைப்பொல் சிந்தை யாக வேக ளித்து கந்த
*வேளெ யாமெ னப்† ப ரிந்து அருள்வாயே;
காலி னாலெ னப்ப ரந்த சூரர் மாள வெற்றி கொண்ட
‡கால Xபாநு சத்தி யங்கை முருகோனே-
Oகாம பாண மட்ட நந்த கோடி மாத ரைப்பு ணர்ந்த
**காளை யேறு கர்த்த னெந்தை யருள்பாலா;
சேலை நேர்வி ழிக்கு றம்பெ ணாசை தோளு றப்பு ணர்ந்து
சீரை யோது பத்த ரன்பி லுறைவோனே-
தேவர் மாதர் சித்தர் தொண்டர் ஏக ††வேளு ருக்கு கந்த
சேவல் ‡‡கேது சுற்று கந்த பெருமாளே. (4)

---

* "ஞான சத்தி தரனை அகத்துற நிஷ்ப்போர் அவனே ஆவர்"
- தணிகைப் புராணம் - குமாரே - 45.

† பரிந்து - பரிய; அன்புகூர்ந்திருக்க.

‡ வேலுக்கு - காலன் உவமை - காலன் - கூற்றம் - சீற்றத்துக்கும், வலிமைக்கும் பேர் பெற்றவன்.

"கூற்றத் தன்ன மாற்றரு முன்பு" - புறநானூறு 362.
"கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்" - 56.
"கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பு" - திருமுருகா - 81

X வேலின் ஒளிக்கு - சூரிய ஒளி - உவமை-
"திவாகரர் வடிவை உருக்கி வடித்த
திருக்கை வேல்" - பூத வேதாள வகுப்பு.
"சுடர்ப்பரிதி யொளிப்ப ஒளிர் ஒளிப்பிரபை
வீசும் - குகன் வேலே" - வேல் வகுப்பு.

O காளை - திருமால் - பல மாதரைப் புணர்ந்தது -

"கண்ணபிரான் நரகாசுர வதஞ்செய்து அவனாற் கொண்டு போகப்பட்ட மந்தர கிரியினுடைய சிகரமான ரத்ன கிரியிற் பல திசைகளிலிருந்தும் கொணர்ந்து சிறை வைக்கப் பட்டிருந்த தேவ சித்த கந்தர்வாதி கன்னிகைகள் பதினாறாயிரம் பேரையும் தான் மணந்து கொண்டு, அவர்களும் தானுமாக ஒரு ஸிம்ஹாஸநத்தில் வீற்றிருக்கும்போது ஸ்ரீ த்வாரகையிற் கண்டாருண்டு. பதினாறாயிரத் தொரு நூற்றுவர் என்று ஸ்ரீ விஷ்ணு புராணத்திற் கூறப்படுகின்றது"

"மாமணி வண்ணனை மருவுமிடம் நாடுதிரேல் - பல்லாயிரம் பெருந்தேவி மாரொடு பௌவம் எறிதுவரை, எல்லாருஞ் சூழச் சிங்காசனத்தே யிருந்தானைக் கண்டாருளர்" - பெரியாழ்வார் திருமொழி 4-1-6. திவ்யார்த்த தீபிகை (உரை) பக்கம் 349 50.

(தொடர்ச்சி பக்கம் 333)

யானும் மேவி - நானும் கலந்து - உன்னைப் போல (பரிசுத்த) உள்ளம் பெறவே, மகிழ்ந்து மகிழ்ச்சிகொள்ளும் வேளே (கந்தவேளே) (ஆம்) நமக்கு உற்ற துணையாகும் என்று (அல்லது வேளே யாம் என்னும் சிவோக நிலையை அடைந்து) அன்பு கூர்ந்திருக்க அருள் புரிவாயாக.

காற்றினாற் பரந்ததுபோலப் பரவியிருந்த சூரர்கள் இறக்கும்படி, ஜெயம் பெற்ற யமன் போன்றவலிமையையும், (பாநு) சூரியன் போன்ற பேரொளியையும் கொண்ட சத்திவேலை அங்கையிற் கொண்ட முருகனே!

மன்மதனுடைய பாணம் (அட்டதனால்) வருத்தினதால் (கணக்கிலாத) பலகோடி மாதர்களைப் புணர்ந்த காளையாகிய திருமாலாம் (விடை) இடபத்தின்மேல் ஏறின தலைவன், எந்தை சிவபிரான் அருளின குழந்தையே!

சேல்மீனுக்கு ஒப்பான கண்ணை உடைய குறப்பெண்ணை ஆசையுடன் அவள் தோள் பொருந்தச் சேர்ந்து உறைவோனே! (உனது) சீரை - புகழை ஓதும் பக்தர்களின் அன்பில் வீற்றிருப்பவனே!

தேவர்களும், மாதர்களும், சித்தர்களும், தொண்டர்களும் சென்று வணங்க (வேளூர்) புள்ளிருக்கு வேளூர் என்னும் வைத்தீசுரன் கோயில் என்னும் தலத்தை மகிழ்ந்த பெருமாளே! சேவற்கொடி சுற்றியிருக்க மகிழும் பெருமாளே! (வேளே யாமெனப் பரிந்து அருள்வாயே)

---

** காளை ஏறு கர்த்தன் எந்தை:

திரிபுர சம்மாரத்துக்குச் சிவபிரான் எழுந்தருளினபோது இறைவன் வெற்றி அடையப் போவது நம்மால் என்று தேவர்கள் நினைத்தனர். இதை உணர்ந்த இறைவன் தேரைச் சற்று அழுத்த தேர் ஒடிந்து யாவரும் நிலை கலங்கினர். அப்போது திருமால் ரிஷபமாகி இறைவனைத் தாங்கினர் - என்பது வரலாறு.

" தேர் ஒடிந்திட அக்காலை.....இடபமாகி

மாதவன் தாங்கினானால்" - திருவதிகைப் புரா - திரிபுர தகன.40.

"தடமதில்கள் அவை மூன்றும் தழலெரித்த அந்நாளில் இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ" -திருவாசகம் - சாழல் 15

†† வேளூருக்கு உகந்த எனப்பிரிக்க

‡‡ கேது - கொடி சேவற்கொடியில் முருகனுக்கு மகிழ்ச்சி:

கோழி யோங்கிய கொடி வாழிய பெரிதென் றேத்தி'

'வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ" -திருமுருகா - 38, 219.

## 787. யோகப் பேறு

தானா தானன தாத்த தந்தன
தானா தானன தாத்த தந்தன
தானா தானன தாத்த தந்தன தனதானா

*மூலா தாரமொ டேற்றி யங்கியை
ஆறா தாரமொ டோட்டி யந்திர
மூலா வாயுவை யேற்று நன்சுழி முனையூடே-

மூதா தார† ம ரூப்பி லந்தர
நாதா கீதம தார்த்தி டும்பர
மூடே பாலொளி ஆத்து மந்தனை விலகாமல்;

மாலா டூனொடு சேர்த்தி தம்பெற
நானா வேத‡ம சாத்தி ரஞ்சொலும்
வாழ்ஞா னாபுரி யேற்றி மந்திர தவிசூடே-

மாதா நாதனும் வீற்றி ருந்திடும்
வீடே மூணொளி காட்டி சந்திர
வாகார் தேனமு தூட்டி **யென்றனை யுடனாள்வாய்;**

சூலாள் மாதுமை தூர்த்த சம்பவி
மாதா ராபகல் ×காத்த மைந்தனை
சூடோ டீர்வினை வாட்டி ○மைந்தரெ
னெமையாளுந்-

---

* இப் பாடலின் கருத்து - பாடல் 190, 439, 647 எண்ணுள்ள பாடல்களால் விளக்குறும்.

† மரூப்பில் - மருப்பில். ‡ ம சாத்திரம் - மகா சாஸ்திரம்.

× காத் தமைந் தனை - காத்து அமைந்த அன்னை.

○ மைந்தர் என எமையாளும் எனப்பிரிக்க.

# 787.

மூலாதார கமலத்தில் (அங்கியை ஏற்றி) அக்கினியை எழுப்பி, அந்த அக்கினியை ஆறு ஆதாரங்களிலும் செல்லும்படி ஓட்டிச் செலுத்தி, ஆதார யந்திரங்களின் மூலமாக (அல்லது ஆதார யந்திரங்களின் வழியே (மூலா வாயுவை) பிரதானமான பிராணவாயுவை (ஏற்று நன்சுழி முனையூடே - நன்சுழி முனையூடே ஏற்று) நல்ல சுழுமுனைவழியே (கணக்காக) ஓடச் செய்து-

(மூதாதார) (சம்மார கிரமத்தில்) மூத்ததான - முதல் ஆதாரமான லலாடஸ்தானத்து 'ஆஞ்ஞை' ஆதாரத்தின் பிறைச்சந்திர வடிவின் (மருப்பில்) கோட்டில் (அந்தரம்) புருவமத்தியிடமாம் ஆகாச ஸ்தானத்தில் - நாதகீதமது - நாத கீதங்கள் - (சங்கத் தொனிகள்) (ஆர்த்திடும்) ஒளிசெயும் மேலான இடத்தில் - பிரமரந்திர நிலையில் - ஒளித்து நிற்கும் (ஆத்துமந்தனை) ஜீவாத்மாவைத் தவறிப்போகாத வழியில்-

ஆசை ஊடாடும் இந்த உடலிலே ஈடுபடவைத்து இன்பம் பெருக, பலவகைய வேதங்களும் மகா சாஸ்திரங்களும் சொல்லிப் புகழும் - தழைத்த ஞானாதனத்தில் - ஞான நிலையில் (துவாத சாந்தவெளியில்) ஏற்றி - (அந்த நிலையில்) (ஐந்தெழுத்தாம்) மந்திர பீடத்திடையே-

மாதா நாதனும் - ஸ்ரீ பார்வதி பரமேஸ்வரர் வீற்றிருந்தருளும் வீடே - திருச்சபையில், அக்கினி, சூரியன், சந்திரன் - என்னும் முச்சுடர்களின் ஒளியைத் தரிசிப்பித்து அங்கே சந்திரவாகார் தேனமுது - மதிக்கலா தேனமுதம் பொங்கி எழ, அதை ஊட்டுவித்து என்னை உடனிருந்து ஆண்டருளுக;

சூலத்தை ஏந்தினவள், *மாது உமை, தூர்த்த அருள் பொழியும் சாம்பவி சம்புவின் மனைவி - சத்தி, மாதா - தாய், இரவும் பகலும் காத்து அமைந்த அன்னை, சூட்டோடு - சுடுதலோடு நம்மை ஈர்த்து இழுத்துச் செல்கின்ற வினைகளை வாட்டி தொலைத்து மைந்தர் என - குழந்தையைக் காப்பதுபோல் நம்மை காத்து ஆளுகின்ற

---

* மாது - 'மைதூர்த்த' - 'மை நிரம்பிய' எனவும் கொள்வர்.

தூயாள் *மூவரை நாட்டு மெந்தையர்
வேளூர் வாழ்†வினை தீர்த்த சங்கரர்
‡தோய்சா ரூபரொ டேற்றி ருந்தவ ளருள்பாலா;
வேலா ஏழ்கடல் வீட்டி வஞ்சக
மூடார் சூரரை வாட்டி யந்தகன்
வீடு டேவிய கார்த்தி ரம்பரி மயில்வாழ்வே-
X வேதா நால்தலை சீக்கொ ளும்படி
கோலா காலம தாட்டு மந்திர
வேலா மால்மக ளார்க்கி ரங்கிய பெருமாளே. (5)

## 788. வேசையர் உறவு அற

தான தானதன தானதன தானதன
தான தானதன தானதன தானதன
தான தானதன தானதன தானதன தனதான

மேக வார்குழல தாடதன பாரமிசை
யார மாடகுழை யாடவிழி யாடபொறி
மேனிவாசனைகள் வீச அல்குல் மோதிபரி மளமேற
மீனு லாடையிடை யாடமயில் போலநடை
Oயோல மோலமென பாதமணி நூபுரமு
மேல்வில் வீசபணி **கீரகுயில் போலகுரல்
முழவோசை;

---

* மூவரை நாட்டும் எந்தையர்:

"சங்கேந்தும் மலர்க் குடங்கைப் புத்தேளும், மறைக்கோவும், தழல்கால் சூலம், அங்கேந்தும் அம்மானும் தத்தமது தொழில்தலை நின்றாற்றச் செய்து குனித்தருளும் பெருவாழ்வு" - காஞ்சிப்புராணம் கடவுள் வாழ்த்து.

† "வினையாயின தீர்த்தருளே புரியும் விகிர்தன்" -சம்பந்தர் 1-70-7.

"தீவினைக்கோர் மருந்தாவான்" - 2-43-11

‡ உருவமேனி அரனுடன் உமை:- "கருணை திருவுருவாகிப் பேரணங்கி னுடனாடும்" - கோயிற் புராணம் பாயிரம்.

X முருகவேள் பிரமனைக் குட்டியது: பாடல் 608 பக்கம் 40 - கீழ்க்குறிப்பு.

O தனபாரம் ஆட, இடை ஆட, ஓலம் ஓலம் என்று பாதம் அணி நூபுரம் (ஒலித்தல்) - கொங்கையின் பாரம் தாங்காது இடை ஒடியுமே என்று பயந்து காற் சிலம்பு புலம்புகின்ற தென்பதாம் - இக் கருத்தை-

(தொடர்ச்சி பக்கம் 337)

பரிசுத்த தேவதை; பிரமா, விஷ்ணு, ருத்திரன் என்னும் மூவரையும் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் பதவியில் தாபித்த எம்பெருமான், புள்ளிருக்கு வேளூரில் வாழ்கின்ற வினைதீர்த்த சங்கரர் வைத்திய நாதராய் - பலவினை தீர்க்கும் சங்கரர் சிவபிரான், சாரூபம் தோய்ந்தவர் - உருவத் திருமேனி கொண்டவர் - ஆகிய பெருமானொடு ஏற்று - பொருந்தி இருப்பவளாம் பார்வதி அருளிய குழந்தையே!

வேலனே! ஏழு கடலையும் வாட்டி, வஞ்சக மூடர்களாகிய சூரர்களையும் வாட்டி, யமபுரிக்கு அவர்களை அனுப்பின கோபத்தைக் கொண்ட மயில்வாகனனே! (அல்லது, குதிரையாக மயிலைக்கொண்ட செல்வனே!)

பிரமனுடைய நான்கு தலைகளும் சீ (சீழ்) கொள்ளும்படி (குட்டி) ஆடம்பரம் செய்த மந்திர வேலனே! திருமாலின் மகள் - வள்ளிமீது கருணை காட்டிய பெருமாளே!

(என்றனை உடனாள்வாய்)

## 886.

**மே**கம்போலக் கறுத்து நீண்ட கூந்தலானது ஆட கொங்கைப் பாரங்களின் மேலே முத்துமாலை ஆட, காதில், குழைகள் ஆட, கண்கள் ஆட, தேமல் அல்லது பொலிவு பரந்துள்ள உடல் நறுமணங்களை வீச, அல்குலின் மேற்பட்டு நல்ல மணம் அதிகரிக்க-

மீனுல் - மின் நூல் - ஒளிவீசும் நூலாடையானது இடையில் ஆட, மயில்போல நடை நடக்க, பாதமணி நூபுரம் ஒலம் ஒலம் என, ஒலம் ஒலம் என்று முறையிடும் ஒலியுடன் பாதத்தில் அணிந்துள்ள சிலம்பு சப்திக்க (அல்லது பாதத்தில் ரத்னச் சிலம்பு சப்திக்க) மேலே வில் - ஒளியை, வீசபணி - பணிவீச - ஆபரணங்கள் வீச, கீரம் பால் போலவும் குயில் போலவும் உள்ள குரலுடன் முழவோசை - முரசொலிபோல

---

"மோட்டிளங் கொங்கை முடியச் சுமந்தேற
மாட்டா திடையென்று வாய்விட்டு - நாட்டேன்
அலம்புவார் கோதை அடியிணையில் வீழ்ந்து
புலம்புமா நூபுரங்கள் பூண்டு" எனவரும் - நளவெண்பாவிற் காண்க (சுயம்வர 33)

** கீரம்....பால்

ஆக வேயவைகள் கூடிடுவர் வீதிவரு
வோரை வாருமென வேசரச மோடுருகி
ஆசை போலமனை யேகொடணை வார்கள்குவ டதிபார-
*ஆணி மாமுலையின் மூழ்கிசுக வாரிகொடு
வேர்வை பாயஅணை யூடமளி யாடியிட
ரான சூலைபல நோய்கள்கட லாடியுட
லுழல்வேனோ;

நாக லோகர்மதி லோகர்பக லோகர்விதி
நாடு ளோர்களம ரோர்கள்†கண நாதர்‡ விடை
நாதர் வேதியர்கள் ஆதிXசர சோதிதிகழ்
முநிவோர்கள்-

Oநாத ரேநரர்ம னாரணர்பு ராணவகை
வேத கீதவொலி பூரையிது பூரையென
நாச மாயசுரர் மேவுகிரி தூளிபட விடும்வேலா;
தோகை மாதுகுற மாதமுத மாதுவினல்
**தோழி மாதுவளி நாயகிமி னாளைசுக
சோக மோடிறுகி மார்முலைவி டாமலணை
புணர்வோனே-

---

* ஆணி - ஆதாரம். "ஆணியாய் உலகுக்கு எல்லாம் அறம் பொருள் நிரப்பும் அண்ணல்" கம்பராமா கடல் தாவு - 26.

† கணநாதர் - பதினென் கணங்களுக்கு நாதர்-
பதினெண் கணங்கள்: அமரர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், கந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர், பிசாசர், அந்தரர், முநிவர், உரகர், ஆகாயவாசிகள், போக பூமியர்.

‡ விடை நாதர் - நந்தி நாதர் - 'நந்தி அருள் பெற்ற நாதரை நாடிடின் நந்திகள் நால்வர்' (சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்) திருமந்திரம் 67, கயிலையில் திருக்கோயிலைக் காக்கும் நந்திகளும் உண்டு 'நந்திகள் உய்ப்ப' -கந்தபுரா -I-7-18, 10-40; 17-4; IV- 18-3.

X சரசோதி - பாடல் 590-பக்கம் 354 கீழ்க்குறிப்பு.

O நாதர் - எண்மர்.

"நந்தி அருள் பெற்ற நாதரை நாடிடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுநி,
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே" - திருமந்திரம் 67.

நவநாதர்கள் - பாடல் 718 அடி 2-பக்கம் 155.

** தோழிமாது - துணைமாது -
"இன்றுனைத் துணையாப் பெற்றேன் எம்பிரான் அருளும் பெற்றேன்" (தேவசேனை வள்ளியை நோக்கிக் கூறுவது) (-கந்தபுரா 6-24-254.)

ஒலி பெருகவே, அவைகள் - சபைகள் கூட்டங் கூட்டமாகக் கூடுவார்கள், அங்ஙனம் கூடி வீதியில் வரும் ஆடவர்களை வாருங்கள் என்று நயமுடன் இனிய வார்த்தைகள் சொல்லி, மன உருக்கத்துடன், ஆசை பூண்டவர்கள் போலத் தங்களுடைய வீட்டிற்கு கொண்டுபோய்ச் சேர்வார்கள்; அங்கு குவடு மலைபோன்றதும் அதிகபார முள்ளதுமான,

ஆணி - காமத்துக்கு ஆதாரமாயுள்ள, மா - அழகுள்ள கொங்கையில் முழுகிச் சுகக்கடலை அநுபவித்து வேர்வை பாயப் படுக்கையில் அமளி யாடி - கோலாகலத்துடன் இன்பம் அநுபவிக்க, அதனால் பின்னர் வருத்தம் வருவதான சூலைநோய் முதலான பல நோய்களாம் கடலில் ஆடி - வேதனைப்பட்டு இத் தேகத்துடன் அலைச்சல் உறுவேனோ;

நாகலோகத்திலுள்ளவர்கள், சந்திரமண்டலத்தில் உள்ளவர்கள், பகல் லோகர் - சூரியமண்டலத்தில் உள்ளவர்கள் விதி நாடுளோர்கள் - பிரமலோகத்தில் உள்ளவர்கள், தேவர்கள், கணநாதர்கள், நந்திகண நாதர்கள், அந்தணர்கள், முதன்மையான யோகமார்க்கத்தில் ஏற்படும் ஜோதி விளங்கும் முநிவர்கள்-

நாதரே - நவநாத சித்தர்கள், நரர்கள் - மனிதர்கள், மன்-நாரணர் நிலைபெற்ற நாராயண மூர்த்திகள் - புராணவகை, பதினெண்புராணங்கள், வேத கீத ஒலிகள் இவையெலாம், அசுரர்களின் முடிவு காலம், இதுவே - முடிவு காலம் என்று சொல்ல, நாசமாயசுரர் - அசுரர் நாசமாக, அவர்களிருந்த கிரி கிரவுஞ்சம் - எழுகிரி முதலானவை பொடிபடச் செலுத்திய வேலனே!

மயிலனைய மாது, குறமாது, அமுதமாதின், அமுதவல்லி எனப் பெயர் பூண்டிருந்த தேவசேனையின் நல்ல தோழிமாது, துணையா யமைந்தமாது ஆகிய* வள்ளி நாயகி என்கின்ற மின்னாளை மின்னொளி கொண்டவளைச் சுகத்துடனும், சோகம் - விரக தாபத்துடனும் இறுகி - அழுந்தக்கட்டி மார்பில் அவளது * கொங்கையை விடாது அணைத்துச் சேர்ந்தவனே!

---

* "வள்ளியின் முலைவிடாமல் அணைதல்"
-பாடல் 644-பக்கம் 508 கீழ்க்குறிப்பு.

தோளி ராறுமுக மாறுமயில் வேலழகு
மீதெய் வானவடி வாதொழு*தெ ணா† வயனர்
சூழ ‡காவிரியும் Xவேளூர்முரு காவமரர்
பெருமாளே. (6)

## திருக்கடவூர்.

(மாயூரத்துக்குத் தென்கிழக்கு 13-மைல். ரெயில்வே ஸ்டேஷன். சீகாழி ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென் கிழக்கு 14-மைல். தரங்கம்பாடிக்குப் போகும் வழி: மூவர் தேவாரமும் பெற்றது. அட்ட வீரத் தலங்களுள் யமனை உதைத்தருளிய தலம்.)

## 789. சாம்போது அருள் பெற

தாத்த தனத்தன தானன தானன
தாத்த தனத்தன தானன தானன
தாத்த தனத்தன தானன தானன தனதான

○ஏட்டின் விதிப்படி யேகொடு மாபுர
வீட்டி லடைத்திசை வேகசை **மூணதி
லேற்றி யடித்திட வேகட லோடம தெனவேகி
ஏற்கு மெனப்பொரு ளாசைபெ ணாசைகொ
ளாத்து வெனத்திரி யாபரி யாதவ
மேற்றி யிருப்பிட மேயறி யாமலு முடல்பேணிப்;
பூட்டு சரப்பளி யே†† மத னாமென
ஆட்டி யசைத்திய லேதிரி நாளையில்
‡‡பூத்த மலக்குகை யோபோதி சோறென கழுகாகம்-

---

* எணா - எண்ணி † வயனர் - சடாயு சம்பாதியென்னும் பறவை வடிவினர். வயானம் - பறவை,

‡ காவிரியும் - சோலை விரிகின்ற.

X புள்ளிருக்கு வேளூர் (வைத்தீசுரன் கோயில்) சம்பாதி - சடாயு பூசித்த தலம்.

"தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே" -சம்பந்தர் 2-43-11;

○ ஏட்டின் விதிப்படி - பிறத்தல் நாள், இறத்தல் நாள் பிரமனது சீட்டுப்படி - பாடல் 760-ம் பார்க்க.

** மூணு - பாடல் 190-1, 2 அடிகளைப் பார்க்க.

†† 'மதன சரக்கென' என்றார் 285-ஆம் பாடலில்.

‡‡ 'பூத்த மலத்ரய பூரியை' - (291-ஆம் பாடல்)

தோள்கள் பன்னிரண்டு, திருமுகங்கள் ஆறு, மயில், வேல், இவைகள் அழகுக்கு மேலான ஏய்வான, - உவமைப்பொருளா யிருக்கின்ற - மேம்பட்டுப் பொருந்தியுள்ள வடிவா - அழகு உருவம் உள்ளவனே! தொழுது வணங்கி, ஏணா எண்ணி - தியானித்து வயனர் - ஜடாயு சம்பாதி என்னும் பறவை வடிவினர் சூழ்ந்து பரவும் வேளூர் - புள்ளிருக்கு வேளூரில் - வைத்தீசுரன் கோயிலில், கா - சோலைகள் - விரியும் - விரிந்து பரந்துள்ள **வேளூரில்** வீற்றிருக்கும் முருகா! தேவர்கள் பெருமாளே!

*(உடல் உழல்வேனோ)*

## *திருக்கடவூர்.*

## 789.

**பி**ரமனது (ஏடு) சீட்டிற் கண்ட விதியின் பிரகாரம் (இந்த உயிரைக்) கொண்டுபோய் நல்ல (புரம்) உடலாகிய ஒரு வீட்டிலே சேர்த்துப், பொருந்தவே (கசை மூணு) (அடிக்கும்) சவுக்குப்போன்ற மூன்று (சுழுமுனை, இடைகலை, பிங்கலை) - என்னும் நாடிகளை அதிற் பொருத்தி, (அடித்திட) அடித்துச் செலுத்தக், கடலில் (ஓடம்) படகு ஓடுவதுபோலப் போந்து (காலம் கழித்து)

நல்லதென்று பொருளாசை, பெண்ணாசை (கொளா கொண்டு, (து) - தூ - என) 'தூ' என்று (பலர் இகழத்) திரிந்தும் வருந்தியும், தவம் சேர்ந்துள்ள இருப்பிடம் இன்னதென்றே அழியாமலும் இவ் வுடலை விரும்பிப் பாதுகாத்து-

(பூட்டப்பட்ட) சரப்பளியே (சரப்பணியே) வயிரமழுத்திய கழுத்தணி விளங்க - மதனாமென - மதனனாமென - மன்மதன் இவன் என்னும்படி ஆட்டியும், அசைத்தும், ஒழுங்காகத் திரிகின்ற காலத்தில் - நிரம்பின மலஞ்சேர்ந்த குகையோ இது, பொதிசோறோ இது என்று கழுகும் காகமும்-

போற்றி நமக்கிரை யாமென வேகொள
நாட்டி லொடுக்கென வேவிழு போதினில்
*பூட்டு பணிப்பத மாமயி லாவருள் புரிவாயே;
† வீட்டி லடைத்தெரி யேயிடு பாதக
னாட்டை விடுத்திட வேபல சூதினில்
வீழ்த்த விதிப்படி யேகுரு காவலர் வனமேபோய்-

‡ வேற்றுமை யுற்றுரு வோடியல் நாளது
பார்த்து முடித்திட வேயொரு பாரத
மேற்புனை வித்தம காவிர மாயவன் மருகோனே;
கோட்டை யழித்தசு ரார்பதி கோவென
மூட்டி யெரித்தப ராபர சேகர
கோத்த மணிக்கதி ரேநிக ராகிய வடிவேலா-

*கூற்று மரித்திட வேயுதை பார்வதி
யார்க்கு மினித்தபெ ணாகிய மான்மகள்
கோட்டு முலைக்கதி பாகட வூருறை
பெருமாளே. (1)

---

* 'நாகபந்த மயூரா' - (100-ஆம் பாடல்)

† பாரத வரலாறு:

தருமனாகிய ஐவரையும் கொல்லத் துரியோதனன் ஒரு அரக்கு மாளிகையைக் கட்டி அதில் அவர்களை இருக்கச் செய்தான்; நடு நிசியில் நெருப்பு வைத்து அவ் வீட்டைக் கொளுத்த ஏற்பாடு செய்திருந்தான்; இந்தச் சூதின் ரகசியத்தை அந்த மாளிகையைக் கட்டினவன் பீமனுக்குத் தெரிவித்திருந்தான் பீமன் அந்த மாளிகைக்குத் தானே நெருப்பு வைத்துவிட்டு தனது சகோதரர்களையும் தாயையும் எடுத்துக்கொண்டு ஒரு சுரங்கத்தின் வழியே மாளிகையினின்றும் வெளியேறினான்.

‡ பாண்டவர்கள் அஞ்ஞாதவாசம் செய்தபோது மாறு வேடத்துடனும் மாறு பெயர்களுடனும் விராட ராஜனிடம் காலம் கழித்து வந்தார்கள். தருமர் - கங்காபட்டர் என்னும் பெயருடன் சந்நியாசி கோலத்துடனும், வீமன் - வல்லன் என்னும் பெயருடன் சுயம்பாகி வேலையிலும், அருச்சுனன் நபுஞ்சகனாகி ஸ்திரீ வேஷத்துடன் பிரகந்நளை என்னும் பெயருடனும், நகுலன் - தந்திரிபாலன் என்னும் பெயருடன் குதிர வைத்தியனாகவும் சாரதியாகவும், சகாதேவன் - தாமக்கிரந்தன் என்னும் பெயருடன்

(தொடர்ச்சி பக்கம் 343)

விரும்பி நமக்கு (இவ்வுடல்) உணவாம் என்று கொள்ளும்படிப் பூமியில் (அடங்கியாயிற்று) என்று இவ்வுடல் விழுகின்ற இறந்துபோம் அச் சமயத்தில் - தன் காலில் அழுத்திக் கட்டிவைத்துள்ள பாம்பைக் காலிற்கொண்ட அழகிய மயிலனே! அருள் புரிவாயாக.

(வீட்டில்) (அரக்கு) மாளிகையில் தருமனாதிய பஞ்சபாண்டவரை இருக்கச் செய்து எரியிட்ட பாதகனாம் துரியோதனனுடைய நாட்டை விட்டுப் போகும்படி பல சூதாட்டங்களில் ஏற்பட்ட விதிப்ரகாரம் குருகுலத்து அரசராம் (ஐவரும்)காட்டுக்குப்போய்-

வேறு வேடம்பூண்டு அஞ்ஞாதவாசம் (மறைவு வாசம்) செய்திருந்த நாளின் முடிவு பார்த்து, அந்த நாள் முடிந்திடவே, அல்லது நூற்றுவரை முடித்திடவே (அழிவு செய்யவே), ஒரு பாரத யுத்தத்தை மேற்புனைவித்த - மேலே நடக்கும்படிச் செய்த மகா வீர மாயவராம் திருமாலின் மருகனே!

சூரனது பட்டணமாம் மகேந்திரபுரியின் கோட்டைகளை அழித்து, அசுரர் தலைவனான சூரன் 'கோ' என்று அலற, அவனது நகரத்தை நெருப்பு மூட்டி எரித்த பராபரம் பொருளே! (சேகரனே) அழகனே! கோக்கப்பட்ட ரத்ன ஒளிக்கு நிகரான கூரிய வேலனே!

கூற்றுவன் இறந்து போம்படி உதைத்த பார்வதி-யம்மையாருக்கு இனிமைதரும் பெண்ணாகிய மான் மகள் (மானின் மகள் - அல்லது மால்மகள் - மாலின்மகள்) வள்ளியின் மலையன்ன கொங்கைக்கு உரிய தலைவனே! திருக்கடவூரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அருள் புரிவாயே)

---

(342 ஆம் பக்கம் தொடர்ச்சி)
மாடு மேய்ப்பவனாகவும், துரோபதை - மாலினி என்னும் பேருடன் விராடராஜன் மனைவியிடத்திலும் - அமர்ந்து காலம் கழித்த வரலாறு இங்கு குறிக்கப்பட்டுளது

† கூற்றைப் பார்வதி உதைத்தது:
- பாடல் 751-பக்கம் 240, பாடல் 399-பக்கம் 51).

## 790. அருள் பெற

தானதன தான தத்த தானதன தான தத்த
தானதன தான தத்த தனதான

*சூலமென வோடு சர்ப்ப வாயுவைவி டாதடக்கி
தூயவொளி காண முத்தி விதமாகச்-
சூழுமிருள் பாவ கத்தை வீழஅழ லூடெ ரித்து
சோதிமணி பீட மிட்ட மடமேவி;

மேலைவெளி யாயி ரத்து நாலிருப ராப ரத்தின்
மேவி†யரு ணாச லத்தி னுடன்மூழ்கி-
‡வேலுமயில் வாக னப்ர காசமதி லேத ரித்து
வீடுமது வேசி றக்க **அருள்தாராய்;**

ஓலசுர ராழி யெட்டு வாளகிரி மாய வெற்பு
மூடுருவ வேல்தொ டுத்த மயில்வீரா-
ஓதுகுற மான்வ னத்தில் மேவியவள் Xகால்பி டித்து
ளோமெனுப தேச வித்தொ டணைவோனே;

---

* சூலமென ஓடுதல் - 'சூலம்பெற ஓடிய வாயுவை" -பாடல் 190.

† "அருணாசலம் - சிவஒளி ஆறாதாரங்களுள் - அருணாசலம் மணிபூரகம் மணிபூரகம்; அப்பு ஸ்தானம் (தொகுதி 3) - பக்கம் 549-க்கு அடுத்த அநுபந்தம் பார்க்க. அப்பு ஸ்தானமாதலின் அருணாசலத்தின் உடன் மூழ்கி" என்றார்.

இதனையே 'நூறு பத்தினுடன் எட்டு இதழாகி.. அருணவிற்பதி' என்றார் 439-ஆம் பாடலில்.

குரு கமலத்தில் - அருண விற்பதியில் - இறைவனை அடையலாகும்.

"நாடி யொராயிரம் வந்த தாமரை மீதிலமர்ந்த
நாயகர் பாதம் இரண்டும் அடைவேனோ"

- என்றார் 1263-ஆம் பாடலில்.

‡ வேலு மயில்...தரித்து--

"இயல் வேலுடன் மா அருள்வாயே" - பாடல் 563

'வேல் மயில் கொடுத்து" (பாடல் 413)

"உனது மயில்மேல் இருத்தி ஒளிர் இயல் வேல் அளித்து"

-(பாடல் 1218)

(தொடர்ச்சி 345 பக்கம் பார்க்க)

# 790.

சூலம்போல மூன்று கிளைகளாக - ஓடுகின்ற பாம்பு போன்ற பிராணவாயுவை வெளியேறாது அடக்கிப், பரிசுத்தமான பரவெளி ஒளியைக் காணவும் முத்தி நிலை கைகூடவும்-

சூழ்ந்துள்ள ஆணவ இருளாம் உருவம் அழிபட யோக நெருப்பில் அதை எரித்து, ஜோதி ரத்னபீடம் அமைந்துள்ள (மடம் மேவி) நிர்மல வீட்டை அடைந்து-

(மேலை வெளி) அந்த மேலைப் பெருவெளியிலே (பர ஆகாச வெளியில்) ஆயிரத்தெட்டு இதழோடும் கூடியதான மேலான குருகமலத்தில் சேர்ந்து (அருணாசலத்தின் உடன் மூழ்கி) துவாதசாந்தத் தானத்தில் சிவஞான ஒளியாம் இன்பப் புனலில் முழுகி-

வேல் மயில் வாகனம் இவைதம் தரிசன ஒளியை அந்த நிலையிலே கிடைக்கப்பெற்று, முத்தி நிலையைச் சிறப்புடன் பெறும் அருளினைத் தந்தருளுக.

ஓலமிட்டு (இரக்க ஒலியிட்டு) அசுரரும் கடல் எட்டும் (எண்திசைக் கடலும்) சக்ரவாளகிரியும் அழிபடவும், கிரௌஞ்சகிரி தொளை பட ஊடுருவும்படியாகவும் வேலாயுதத்தைச் செலுத்தின மயில் வீரனே!

சொல்லப்பட்ட (குறமான்) வள்ளியின் (வனத்தில்) தினைப் புனக்காட்டிற் சென்று அவளுடைய காலைவருடி (அன்புகாட்டி) (அவளது) உள்ளத்தே பதிய 'ஓம்' என்கின்ற பிரணவ உபதேசமாகிய (வித்தொடு) மூலப்பொருளோடு (அவள் உள்ளத்தே பதிய ஓம் எனும் பிரணவ உபதேசம் செய்து) அணைந்தவனே!

---

*(344-ஆம் பக்கம் தொடர்ச்சி)*

X கால் பிடித்து - என்பதற்கு (வள்ளியின்) பிராணவாயுவை அடக்கி எனவும் பொருள் காண்கின்றனர் (உபதேச வித்து - 'ஓம் என்னும் பிரணவப்பொருள் - பாடல் 224-பக்கம் 64 பார்க்க); இனி, "உள் ஓம் என் உபதேசவித்தோடு அணைவோனே" - என்றது - ஓம் எனும் பிரணவ உபதேசத்துக்கு வித்தாகிய - மூலப்பொருளாகிய விநாயக மூர்த்தியைத் தமது உள்ளத்தே தியானித்து - (அவர் உதவி கொண்டு) - வள்ளியை அணைந்தவனே - என்னும் பொருளும் கொள்ளக் கிடக்கின்றது - பாடல் 639-பக்கம் 493 கீழ்க் குறிப்பைப் பார்க்க.

***காலனொடு மேதி மட்க வூழிபுவி மேல்கி டத்து**
**காலனிட மேவு சத்தி யருள்பாலா-**
**† காலமு தல் வாழ்புவிக்க தாரநகர் கோபு ரத்துள்**
**கானமயில் மேல்த ரித்த பெருமாளே.(2)**

## திருப்படிக்கரை

(இது 'திருமண்ணிப்படிக்கரை' யெனவும், 'இலுப்பைப்பட்டு' எனவும் வழங்கும். வைத்தீசுரன்கோயிலுக்கு மேற்கு 6-மைல். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது. ஸ்தல புராணம் உண்டு.)

## 791. திருப்புகழ்ப் பகர

தனத்த தத்தனத் தனத்த தத்தனத்
தனத்த தத்தனத் தனதான

**அருக்கி மெத்தெனச் சிரித்து மைக்கணிட்**
**டழைத்தி தப்படச் சிலகூறி-**
**அரைப்ப ணத்தைவிற் றுடுத்த பட்டவிழ்த்**
**தணைத்தி தழ்க்கொடுத் தநுராகத்;**

**துருக்கி மட்டறப் பொருட்ப றிப்பவர்க்**
**குளக்க ருத்தினிற் ப்ரமைகூரா-**
**துரைத்து செய்ப்பதித் தலத்தி னைத்துதித்**
**துணைத்தி ருப்புகழ்ப் பகர்வேனோ;**

---

* திருக்கடவூர் - மார்க்கண்டேயருக்காகச் சிவபிரான் யமனை உதைத்த ஸ்தலம்-

"மார்க்கண்டர்க்காக அன்று காலனை உதைப்பர் போலும்
கடவூர் வீரட்டனாரே" -அப்பர் 4-31-9.

"கறுவிவீழ் காலன் மார்பிற் சேவடிக் கமலஞ்சாத்திச்
சிறுவனுக் காயுள் ஈந்த சேவகப் பெருமான் மேய
அறைபுனற் பழனமூதூர்" - திருவிளை - அருச்சனை -22.

† புவிக்கு ஆதாரநகர் - சிதம்பரம் எனவும் கொள்ளலாம். சிதம்பரம் - பிரபஞ்சவடிவமான சுராட்புருஷனது இருதய ஸ்தானம். "சுராட் புருடனுள்ளத்து அண்டரு மதிக்கலாற்றா அற்புதத் தனிக் கூத்தாடல்" - கந்தபுரா வழிநடை-15. 'விண்டலமே போற்றும் விராட் புருடனாரிதய புண்டரிகமான புலியூரே'-புலியூர் வெண்பா இந்தப் பொருளில் இந்தத் திருப்புகழ் சிதம்பரத்துத் திருப்புகழாகும்

காலனும் (அவன் ஏறிவந்த) மேதி - எருமையும் அழிய (ஊழி) விதிப்படியே பூமியின்மேல் விழும்படி உதைத்துக் கிடத்தின (கால) பாதத்தை உடைய (காலகாலனாம்) சிவனது இடது பாகத்தில் உள்ள (சத்தி) அபிராமி அருளிய பாலனே!

ஊழிக்காலம் முதலாக வாழ்ந்துவரும் இந்தப் பூமிக்கு ஆதாரநகர் - ஆதாரஸ்தான நகராயுள்ள (திருக்கடவூரில்) கோபுரத்துள்ளே காட்டுமயில் போன்ற மயில்மீது வீற்றிருக்கும் பெருமாளே!

(வீடுமதுவே சிறக்க அருள் தாராய்)

## திருப்படிக்கரை.

## 791.

* (அருக்கி) அருமை பாராட்டி, அமைதியாகச் சிரித்து, மைபூசின கண் கொண்டு அழைத்து, இன்பம் பெருகும்படி சில (வார்த்தைகள்) பேசி,

(அரைப்பணம்) (அரையில் பாம்புபோன்ற உறுப்பு) அல்குலைப் பணம்பெறும் பொருட்டு விற்பனைசெய்து, கட்டியுள்ள பட்டாடையை அவிழ்த்து அணைத்து, வாயிதழ் ஊறலைத் தந்து, காமலீலையில்

உள்ளத்தை உருகவைத்து, குறைவிலா வகையில் (நிரம்பப்) பொருள் பறிக்கின்ற பொதுமகளிர்பால், (எனது) உள்ளக் கருத்தில் மயக்கம் மிக்கெழாது,

(உரைத்து செய்ப்பதித் தலத்தினை) - செய்ப்பதித் தலத்தினை உரைத்து - † வயலூர் என்னும் தலத்தைப் போற்றி உரைத்து, (துதித்து உனை) உனைத்துதித்து - உன்னைப் புகழ்ந்து திருப்புகழ்ப் பாடல்களைச் சொல்வேனோ! (சொல்லவேண்டும் என்றபடி)

---

*இப் பாடலின் துவக்கம் 252-ஆம் பாடலின் துவக்கத்தை ஒக்கும்.

† வயலூரைத் துதித்துத் திருப்புகழ்ப் பகர்வேனோ - என்னும் இந்த ஆசை பின்னர் வயலூரில் அருணகிரியாருக்கு நிறைவேறிற்று (விநாயகர் துதி - 3, திருப்புகழ் 105-அடி 4-பார்க்கவும்) -

"அருணகிரிநாதர் வரலாறு - பக்கம் 35, 36 பார்க்கவும்.

(தொடர்ச்சி 348 ஆம் பக்கம் பார்க்க)

தருக்க மற்கடப் படைப்ப லத்தினிற்
றடப்பொ ருப்பெடுத் தணையாகச்-
சமுத்தி ரத்தினைக் குறுக்க டைத்ததிற்
றரித்த ரக்கர்பொட் டெழவேபோர்;

செருக்கு விக்ரமச் சரத்தை விட்டுறச்
செயித்த வுத்தமத் திருமாமன்-
திருத்த கப்பன்மெச் சொருத்த முத்தமிழ்த்
***திருப்ப டிக்கரைப்** பெருமாளே. (1)

## மாயூரம்.

(ரெயில்வே ஸ்டேஷன். திருஞான சம்பந்த ஸ்வாமிகள் திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல் பெற்றது. ஸ்தல புராணம் உண்டு.)

## 792. திருவடியைப் புகழ

தனதன தத்தத் தனந்த தானன
தனதன தத்தத் தனந்த தானன
தனதன தத்தத் தனந்த தானன தனதான

† அமுதினை மெத்தச் சொரிந்து மாவின
தினியப ழத்தைப் பிழிந்து பானற
வதனொடு தித்தித் த‡ கண்ட ளாவிய விதழாராய்-

---

(347 ஆம் பக்கத் தொடர்ச்சி)

திருமண்ணிப் படிக்கரையில் அருணகிரியாருடைய கனவில் முருகவேள் தோன்றித் "திரிசிராப்பள்ளிக்கு அருகில் உள்ள வயலூரில் உள்ளேம். நமது திருப்புகழை நித்தம் பாடும் அன்பை அத் தலத்திற் பிரசாதிப்போம். நீ அங்கு வருக" எனக் கட்டளையிட்டு மறைந்தார். அருணகிரியார் விழித்தெழுந்து 'பெருமாளே! நீ அடியேற்குப் புலப்படவைத்த வயலூரை என்று காண்பேன்' உன் திருப்புகழை நித்தம் பாடும் பாக்கியத்தை என்று பெறுவேன்' என உள்ளம் உருகி - "புயற்பொழில் வயற்பதி நலப்படு ப்ரியத்தொடு புலப்பட எனக்கருள் பெருமாளே' என்றும், "செய்ப் பதித் தலத்தினைத் துதித்துனைத் திருப்புகழ்ப் பகர்வேனோ திருப்படிக்கரைப் பெருமாளே" என்றும் போற்றினர் - இந்த வேண்டுகோள் வயலூரில் நிறைவேறிற்று என்பது -

(*,†,‡ - பக்கம் 349 பார்க்க.)

செருக்கு உள்ள குரங்குப்படைப் பலத்தினால் பெரிய மலைகளை எடுத்துப்போட்டு அணைகட்டிக்-

கடலைக் குறுக்கே அடைத்து, (அதில்) அந்த அணைவழியாகச் சென்று அங்கிருந்த அரக்கர்கள் பொடியாகப் போர்-

மிக்கெழ வீரம் உள்ள அம்பைச் செலுத்திப் படைவைத்து வெற்றிகொண்ட மேலான அழகிய மாமன் (திருமாலும்)

அழகிய அப்பா (சிவனும்) மெச்சுகின்ற ஒப்பற்றவனே! முத்தமிழ்ப் பெருமாளே! ***திருப்படிக்கரை** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(உனைத் திருப்புகழ்ப் பகர்வேனோ)

## மாயூரம்

## 792.

†தேவாமிர்தத்தை நிரம்ப ஊற்றி, மாமரத்தின் இனிப்பான பழத்தை அதனுடன் பிழிந்து, (அவையுடன்) பாலும், தேனும் (கூட்டி) (அவையுடன்) தித்திக்கின்ற ‡கற்கண்டையும் கலந்த அத்தனைச் சுவையுள்ள வாயிதழ் (ஊறலை) உடையவர்களாய்-

---

(348 ஆம் பக்கத் தொடர்ச்சி)

"செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பென எனக்கருள்கை மறவேனே" (விநா - துதி-3)

"திருப்புகழ் நித்தம் பாடும் என்பது செய்ப்பதியில் தந்தவன் நீயே" (திருப்புகழ் 105) என வருவனவற்றால் நன்கு தெரிகின்றது (அருணகிரிநாதர் வரலாறு - பக்கம் 35-36-பார்க்கவும்)

* "திருத்தணிப்பதிப் பெருமாளே" - என்றும் பாடம்.

† அமுதை நிரம்பச் சொரிதலும், அதனொடு இனிய மாம்பழச்சாறு, பால், தேன், கற்கண்டு இவைகளைச் சேர்ப்பதும், செய்து கிடைக்கும் ருசியது - வாயிதழ் ஊறல் - என வரும் அருணகிரியாரின் இத் திருவாக்கினின்றே - அவர் பாடிய திருப்புகழ்தான் அத்தகைய கூட்டுச் சுவையது எனக் காண்கின்றார் திருமலை முருகன் பிள்ளைத்தமிழ் பாடிய கவிராஜ பண்டாரத்தையா-

"உதிருங் கனியை நறும்பாகில் உடைத்துக் கலந்து தேனைவடித், தூற்றி யமுதின் உடன்கூட்டி ஒக்க குழைத்த ருசி பிறந்து மதுரங் கனிந்த திருப்புகழ்ப் பாமாலை" - என்றார்

‡ கண்டு - கற்கண்டு.

அழகிய பொற்றட் டி*னொண்டு வேடையின்
வருபசி யர்க்குற் றவன்பி னாலுண
வருள்பவ ரொத்துத் தளர்ந்த காமுகர் மயல்தீரக்;

† குமுதம் விளர்க்கத் தடங்கு லாவிய
நிலவெழு முத்தைப் புனைந்த பாரிய
குலவிய சித்ரப் ப்ரசண்ட பூரண தனபாரக்-

குவடிள கக்கட் டியுந்தி மேல்விழு
மவர்மய லிற்புக் கழிந்த பாவியை
குரைகழல் பற்றிப் புகழ்ந்து **வாழ்வுற**
**அருள்வாயே;**

வமிசமி குத்துப் ப்ரபஞ்சம் யாவையு
‡ மறுகிட வுக்ரக் கொடும்பை யானபுன்
மதிகொ டழித்திட் டிடும்பை ராவணன் மதியாமே-

மறுவறு கற்பிற் சிறந்த சீதையை
விதனம் விளைக்கக் குரங்கி னாலவன்
வமிச மறுத்திட் டிலங்கு மாயவன் மருகோனே;

Xஎமதும லத்தைக் களைந்து பாடென
அருள அதற்குப் புகழ்ந்து பாடிய
இயல்கவி மெச்சிட் டுயர்ந்த பேறருள் முருகோனே;

எழில்வளை மிக்கத் தவழ்ந்து லாவிய
Oபொனிநதி தெற்கிற் றிகழ்ந்து மேவிய
இணையிலி ரத்னச் ****சிகண்டி** யூருறை
பெருமாளே.(1)

---

* நொண்டு - மொண்டு.

† குமுதம் விளர்க்க - வாய் வெளுக்க

‡ மறுகிட - கலக்கமுற.

X இது அருணகிரியார் வரலாற்றைத் தெரிவிக்கும் பகுதி.

O " காவிரி கலந்து வரு தென்கரை...மயிலாடுதுறை"
- சம்பந்தர் 3-70-7.

**சிகண்டியூர் - மாயூரம்.

அழகான பொன்தட்டில் மொண்டு காம தாகத்துடன் வரும் மோகப்பசி யுள்ளவர்மேல் வைத்த அன்பினால் அவர்கள் உண்ணும்படி (அருள்பவர்) கொடுப்பவர்கள் போன்று, இளைப்புள காமிகளின் மோகமயல் நீங்க

வாய்வெளுக்க, இடம்பரந்த நிலவொளி வீசும் முத்துமாலை அணிந்த, பருத்து விளங்கும் அழகிய, மிக்கெழுந்த நிறைந்த கொங்கைப் பாரமாம்-

மலை இளகும்படி (கட்டி) அணைத்து வயிற்றின்மேல் விழுகின்ற அவர்களின் மோகவலையிற் பட்டு அழிந்த பாவியாகிய நான் (உனது) ஒலிக்கும் கழல் அணிந்த திருவடியைப் பற்றிப் புகழ்ந்து நல்வாழ்வை அடைய அருள்புரிவாயாக-

(வமிசம்) தன் குலத்தினர் பெருக, உலகம் எல்லாம் கலக்கம் உற, உக்கிரமான (கொடும்பையான) கொடுமையான இழிவான புத்தியைக் கொண்டு அழிவுதரும் செயல்களைச் செய்து துன்பம் விளைவித்த ராவணன் - பொருட்படுத்தாமல்-

குற்றமற்ற கற்பில் மேம்பட்ட சீதைக்குத் துக்கம் விளைவிக்க, குரங்குகளின் உதவியைக் கொண்டு அந்த ராவணனுடைய குலத்தை அறுத்து விளங்கும், திருமாலின் மருகனே!

என்னுடைய மும்மலங்களையும் அறுத்துத் தொலைத்து, பாடுவாயாக என நீ எனக்குத் திருவருள் பாலிக்க, அதன்படி அடியேன் உன்னைப் புகழ்ந்து பாடின, உழுவலன்புடன் பாடின பாடல்களை மெச்சிப் பிரியப்பட்டு மேலான பேற்றினை எனக்கு அருளின முருகனே!

அழகிய சங்குகள் நிரம்பத் தவழ்ந்து உலாவுகின்ற (பொன்னி நதி) காவிரியின் தெற்குக் கரையில் விளங்குகின்ற தனக்கு ஒப்பு இல்லாத ரத்னமயமான **மயிலாடுதுறையில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(வாழ்வுற அருள்வாயே)

பாகை.

(இது மாயூரத்துக்குச் சமீபத்திலுள்ள "பாகசாலை" என்னும் சுப்பிரமணிய ஸ்தலமா யிருக்கலாம். 'கடல் சுழி பாயும் பாகை' என 794-ஆம் பாடலிற் கூறப்பட்டுளதால் கடற்கரைத் தலம் இது. மணலூர் ரெயில் ஸ்டேஷனுக்குத் தெற்கு சுமார் 2 மைலிலும் 'பாகை' என்றொரு தலம் உண்டு.

## 793. திருவடி உற

*தான தானன தானம், தான தானன தானம்*
*தான தானன தானம் தனதான*

ஆடல் மாமத ராஜன் பூசல் வாளியி லேநொந்
தாகம் வேர்வுற மால்கொண் டயராதே-
ஆர வாணகை யார்செஞ் சேலி னேவலி லேசென்
றாயு வேதனை யேயென் றுலையாதே;

சேடன் மாமுடி மேவும் பாரு ளோர்களுள் நீடுந்
த்யாக மீபவர் யாரென் றலையாதே-
தேடி நான்மறை நாடுங் காடு மோடிய **தாளுந்**
தேவ நாயக நானின் **றடைவேனோ;**

பாடு நான்மறை யோனுந் தாதை யாகிய மாலும்
பாவை பாகனு நாளுந் தவறாதே-
பாக நாண்மலர் சூடுஞ் சேக ராமதில் சூழ்தென்
**பாகை** மாநக ராளுங் குமரேசா;

*கூட லான்முது கூனன் றோட வா†துயர் வேதங்
கூறு நாவல மேவுந் தமிழ்வீரா-
கோடி தானவர் தோளுந் தாளும் வீழ வுலாவுங்
கோல மாமயி லேறும் பெருமாளே.(1)

---

* பாண்டியன் கூனை நீக்கியது - பாடல் 181-பக்கம் 422 கீழ்க்குறிப்பு.

† உயர் வேதம் கூறும் நாவலம் மேவும் தமிழ் வீரா: உயர்ந்த தமிழ் வேதமாகிய தேவாரப் பாக்களை - திருப்பாசுரம் முதலிய பாக்களைக் - கூறின நா வன்மை கொண்ட தமிழ் வீரனே!

## பாகை.

## 793.

**கா**மலீலைகளை விளைக்கும் சிறந்த மன்மத ராஜனுடைய காமப்போரிற் செலுத்தப்படுகின்ற (மலர்ப்) பாணங்களாலே மனம் நொந்து, உடலில் வேர்வை வர மோகங்கொண்டு தளராமலும்-

(ஆரம்) முத்துப்போன்ற ஒளிவீசும் பற்களை உடையவர்களாம் (பொது) மகளிர்களின் செவ்விய சேல்மீன் போன்ற கண்களின் கட்டளைக்கு இணங்கிச் சென்று ஆயுள்காலம் வரையில் துன்பமே என்னும்படி நிலைகுலைந் தழியாமலும்

ஆதிசேடனுடைய சிறந்த முடிகளின்மேல் தாங்கப்படுகின்ற (இந்தப்) பூமியில் உள்ளவர்களுள், பெருகிய கொடை கொடுப்பவர் - (பேர் சிறந்த கொடையாளிகள்) யார் யார் என்று தேடி அலையாமலும்-

தேடி நான்கு வேதங்களும் நாடுகின்றதும், (வள்ளியின்) தினைப்புனக் காட்டில் ஓடி அலைந்ததுமான - உனது திருவடிகளை தேவநாயகனே! நான் இன்று அடையப் பெறுவேனோ!

பாடுகின்ற நான்கு மறைகளும் வல்ல பிரமாவும், அவனுக்குத் தந்தையாகிய திருமாலும், பெண்ணொரு பாகனாம் சிவனும், நாள்தோறும் தவறாமல்-

பக்குவமாய் அன்று மலர்ந்ததான மலர்களைச் சூட்டுகின்ற (சேகரனே) திருமுடியை உடையவனே! மதில்கள் சூழ்ந்த அழகிய **பாகை** மாநகரில் வீற்றிருந்தருளும் குமரேசனே!

மதுரைப்பதியரசன் (கூன் பாண்டியனுடைய) நெடுநாளாயிருந்த கூன் அன்று தொலைந்து (முதுகு) நிமிரும்படி, (சமணரொடு) செய்த வாது சம்பந்தமாய் உயர்ந்த வேதப்பொருள் கொண்ட தமிழ்ப் பாடல்களைப் பாடின நாவின் வெற்றிபெற்ற தமிழ் வீரனே!

கோடிக்கணக்கான அசுரர்களின் கையும் காலும் அற்றுவிழ உலவின பெருமாளே! அழகிய சிறந்த மயிலேறும் பெருமாளே!

(தாள்....அடைவேனோ)

## 794. சிவயோகபதம் பெற

தான தனந்தன தான தனந்தன
தான தனந்தன தனதான

ஈளை சுரங்குளிர் வாத மெனும்பல
நோய்கள் வளைந்தற இளையாதே
ஊடு படுஞ்சிறு கூடு புகுந்திடு
காடு பயின்றுயி ரிழவாதே;
மூளை யெலும்புகள் நாடி நரம்புகள்
வேறு படுந்தழல் முழுகாதே
மூல மெனுஞ்சிவ யோக பதந்தனில்
வாழ்வு **பெறும்படி** மொழிவாயே;
*வாளை நெருங்கிய வாவியி லுங்கயல்
சேல்கள் மறிந்திட வலைபீறா
வாகை துதைந்தணி கேதகை மங்கிட
மோதி வெகுண்டிள மதிதோயும்;
பாளை நறுங்கமழ் பூக வனந்தலை
சாடி நெடுங்கடல் கழிபாயும்
**பாகை** வளம்பதி மேவி வளஞ்செறி
† தோகை விரும்பிய பெருமாளே.(2)

## 795. மவுனம் உற

தனன தனதன தனன தனதன
தான தானன தனதான

குவளை பொருதிரு குழையை முடுகிய
கோல வேல்விழி மடவார்தங்
கொடிய ம்ருகமத புளக தனகிரி
கூடி நாடொறு மயலாகித்;
துவள வுருகிய சரச விதமது
சோர வாரிதி யலையூடே

* வாளையின் பராக்ரமத்தைக் கூறுகின்றன 5 - 7 அடிகள்; இவ்வடிகளின் கருத்து 272-ஆம் பாடலின் 5 - 7 அடிகளின் கருத்தை ஒக்கும்.

† தோகை -793 ஆம் பாடலில் 'கோலமா மயில் ஏறும் பெருமாளே' என்றதனால் இங்கும் தோகை என்பதற்கு 'மயில்' எனவும் பொருள் கொள்ளப்பட்டது.

## 794.

(ஈளை) கோழை, சுரம், குளிர், (வாதம்) வாயு மிகுதலாகிய பிணிக்கூறு, என்னும்பல நோய்கள் சூழ்ந்து மிக்க இளைப்பு அடையாமல்-

(ஈடுபடும்) வலிமையை யிழந்து துன்புறம் சிறிய கூடாகிய இந்த உடலிற் புகுந்து, (ஈற்றில்) இடுகாடு சுடுகாட்டிற் சேரும்படி உயிரை இழக்காமல்-

மூளை, எலும்புகள், நாடிகள், நரம்புகள், இவையெலாம் வேறுபட்டொழியத் தீயில் முழுகி வேகாமல்-

மூலப்பொருளான சிவயோகபதவியில் (நான்) வாழ்வு பெறும்படி உபதேசித்தருளுக.

வாளை மீனானது தனக்குச் சமீபத்தில் உள்ள குளத்தில் இருக்கின்ற கயல்மீன், சேல்மீன் இவைகள் முதுகிட்டு ஓட வலைகளைக் கிழித்துத் தாவி-

வெற்றியே மிகுந்து, வரிசையாயிருந்த தாழைகள் உருக்குலைய அவைகளின் மேல் மோதிக் கோபித்து, பிறைச்சந்திரன் படியும்

பாளைகளைக்கொண்ட நறுமணம் வீசும் கமுகமரக்காட்டில் அம்மரங்களின் உச்சியிற் பாய்ந்து ஒடித்து, பெரிய கடலின் கழியிற் பாய்கின்ற

**பாகை** என்னும் செழும் பதியில் மேவி வளப்பம் நிறைந்த மயிலை (அல்லது வள்ளியம்மையை) விரும்பிய பெருமாளே!

(வாழ்வு பெறும்படி மொழிவாயே)

## 795.

**கு**வளை மலருக்கு ஒப்பென்று போர்செய்வதாகி, இரண்டு குழைகளையும் வெருட்டுவதான அழகிய வேல்போன்ற கண்களை உடைய பெண்களின்-

பொல்லாதனவும், கஸ்தூரி யணிந்தனவும், புளகம் கொண்டனவுமான கொங்கை மலைகளைக்கூடி நாள்தோறும் மோகம் கொண்டவனாய்

துவட்சியுற உருகின லீலை விதங்களில் தளர்ச்சியுற அக் காமக் கடல்களின் அலைகளுக்குள்ளே-

சுழலு மென*துயிர் மவுன பரமசு
கோம கோததி படியாதோ;
கவள கரதல கரட விகடக
போல பூதர முகமான-
கடவுள் கணபதி பிறகு வருமொரு
கார ணாகதிர் வடிவேலா;
பவள மரகத கநக வயிரக
பாட கோபுர †அரிதேரின்-
பரியு மிடறிய புரிசை தழுவிய
பாகை மேவிய பெருமாளே. (3)

## திருவிடைக்கழி.

(மாயூரத்துக்குத் தென்கிழக்கு 13-மைல் தூரத்திலுள்ள திருக்கடவூரிலிருந்து 4-மைல். இதற்குத் திருவிசைப்பாவிற் சேந்தனார் பாடல் உள்ளது. இங்குத் திருக் குராமர நீழலில் முருகக்கடவுள் வீற்றிருக்கின்றார்)

## 796. பெண்கள் மயக்கு அற

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

அனலப் பரிபுக் கருணத் ரயம்வைத்
தடர்பொய்க் குருதிக் குடில்பேணா-
அவலக் கவலைச் சவலைக் கலைகற்
றதனிற் பொருள்சற் றறியாதே;

குனகித் தனகிக் கனலொத் துருகிக்
குலவிக் கலவிக் கொடியார்தங்-
கொடுமைக் கடுமைக் குவளைக் கடையிற்
குலைபட் டலையக் கடவேனோ;

---

*மவுன சுகத்திற் படிய வேண்டும் என்ற வேண்டுகோளின்படி மவுன நிலை அருணகிரியார்க்குக் கிடைத்தது என்பது-

"மௌனத்தை யுற்று...நிர்க்குணம் பூண்டென்னை மறந்திருந்தேன் இறந்தே விட்ட திவ்வுடம்பே" - கந்தரலங் - 19.

"அரியமோன வழிதிறந்த நளின பாதம்" - திருப்புகழ் - 731,

† அரி - சூரியன்; சூரியனது தேர்வழியைத் தடைசெயும் உயரம் உள்ள மதில்கள் - "எல்லை தேர்வழித் தடைசெயும் இம்மதில்" (எல்லை - சூரியன்) - திருவிளை - திருநகர - 23.

சுழல்கின்ற என்னுடைய உயிர் 'மௌனநிலை' என்கின்ற 'பரம சுகம்' ஆகிய பெரிய கடலிற் படிந்து திளைக்காதோ!

கவளம் - வாயளவு கொண்ட உணவைக் கொள்ளும் துதிக்கையையும், மதம்பாயும் சுவடுகொண்ட அழகிய கன்னத்தையும் உடைய மலையின் (அதாவது யானையின்) முகத்தைக் கொண்ட

கடவுளாம் கணபதியின் பின்னர்த் தோன்றிய ஒப்பற்ற மூலப்பொருளே! ஒளியும் கூர்மையும் கொண்ட வேலனே!

பவளத்தின் (செந்நிறத்தையும்), மரகதத்தின் (பச்சை நிறத்தையும்), கனகம் - பொன்னின் (மஞ்சள் நிறத்தையும்), வயிரத்தின் (வெண்ணிறத்தையும்) கொண்ட திருக்கதவத்-தையும், கோபுரத்தையும் கொண்டு, சூரியன் தேரின்-

குதிரைகளும் இடறும்படி உயர்ந்துள்ள மதில்கள் சூழ்ந்துள்ள பாகை என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே! (உயிர் மவுன பரம சுக மகோததி படியாதோ)

## திருவிடைக்கழி

## 796.

(அனல்) நெருப்பு, (அப்பு) நீர், (அரி) காற்று, முதலான பஞ்ச பூதங்கள் சேர்ந்ததும், (குணத்ரயம்) சத்துவம், இராசதம், தாமதம் என்ற முக்குணங்கள் வைக்கப்பட்டதும், நிரம்பப்பொய்யானதும் (சற்றும்நிலைத்துநிற்காததும்) ரத்தத்தோடு கூடியதுமான (இந்தக்) குடிசை (உடலை) விரும்பி-

பயனற்றதும், கவலைகளுக்கு இடம் தருவதும், மனக் குழப்பம் தருவதுமான நூல்களைக்கற்று - அந்நூல்களில் உள்ள பொருளையும் கொஞ்சம்கூட அறியாமல்

(குனகி) கொஞ்சிப்பேசியும், (தனகி) உள்ளம் களித்தும், நெருப்பில் (பட்ட மெழுகுபோல) உருகியும், (குலவி) நெருங்கி உறவாடியும், (கலவி) புணர்ச்சிசெயும் (கொடியன்ன) (அல்லது பொல்லாத) பெண்களின்-

கொடுமையிலும், கடுமையிலும், *(குவளை) குவளை மலர்போன்ற கண்ணின் கடைப்பார்வையிலும், (குலைபட்டு) நிலைகெட்டு நான் அலைச்சல் உறக்கடவேனோ! அந்த அலைச்சல் வேண்டாம் என்றபடி:

---

* குவளை - கண்ணுக்கு உவமை - 'தேனிமிர் குவளைக்கண் திருமகள் அனையாளை" - சிந்தாமணி 2429.

"பசலை யார்ந்தன குவளை யங்கண்ணே" - குறுந்தொகை 13.

திணைவித் தினநற் புனமுற் றகுறத்
திருவைப் புணர்பொற் புயவீரா-
தெளியத் தெளியப் பவளச் சடிலச்
*சிவனுக் கொருசொற் பகர்வோனே;
† கனகச் சிகரக் குலவெற் புருவக்
கறுவிப் பொருகைக் கதிர்வேலா-
கழியைக் கிழியக் கயல்தத் துமிடைக்
கழியிற் குமரப் பெருமாளே. (1)

## 797. திருவடியைப் பெற

தனத்தனதத் தனத்தனதத் தனத்தனதத் தனத்தனதத்
தனத்தனதத் தனத்தனதத் தனதான

இரக்குமவர்க் கிரக்கமிகுத்
தளிப்பனசொற் பனத்திலுமற்
றெனக்கியலுக் கிசைக்கெதிரெப் புலவோரென்-
றெடுத்துமுடித் தடக்கைமுடித்
‡ திரட்டையுடுத் திலைச்சினையிட்
டடைப்பையிடப் ப்ரபுத்துவமுற் றியல்மாதர்:
குரக்குமுகத் தினைக்குழலைப்
பனிப்பிறையொப் பெனப்புயலொப்
பெனக்குறுகிக் Xகலைக்குள்மறைத் திடுமானின்-

---

* சிவனுக்கு உபதேசம் - பாடல் 628 - பக்கம் 462 - 463

† கனகவெற்பு - கிரௌஞ்சம் - "பொன்னஞ்சிலம்பு புலம்ப வரும் எங்கோன்" - கந்தரலங்காரம் 89

‡ இரட்டை - அரையாடை மேலாடைகள், 'இரட்டைகள் அழுக்கானாலும், மடி குலையாமல், வைக்குமாபோலே, (ஈடு -5-9-3) இரட்டை ஆடை - மேலாடை அவசியம்என்பது-

'மேலாடை யின்றிச் சவை புகுந்தால் இந்த மேதினியோர் நூலாயிரம் படித்தாலும் எண்ணார்" - நையாண்டிப்புலவர்.

புலவர்கள் கைக்கு மோதிரம் முதலிய ஆடம்பரங்கள்

'நெளிய முதுதண்டு சத்ர சாமர நிபிடமிட வந்து கைக்கு மோதிரம் நெடுகியதி குண்டல ப்ரதாபமும் உடையோராய்" திருப்புகழ் - 181

X கலைக்குள் (ஆடைக்குள்) அல்குலை மறைத்தல்:

"மருவொரு குறியுளாரும் வான்பெரும் புடவை கொண்டு
பெருகுறச் சூழ்ந்து சூழ்ந்து பெருந்திரோ தானஞ் செய்வார்" -
திருநாகைக்காரோணப்புராணம் - காசுதீர்த்த - 25.

மானின் குளம்படி - அல்குலுக்கு உவமை - "பருவமேழுக்கு அல்குல்தன்னைத் தொடரும் உவமை பெண்குறிக்குச் சொல்லத்தகு-

தினை விதைக்கப்பட்ட நல்ல கொல்லையில் இருந்த குறலக்ஷ்மி வள்ளியை அணைந்த அழகிய தோள்களை உடைய வீரனே!

தெளியத் தெளிய (தெள்ளத்தெளியும்படி - நன்கு தெளியும்படி, பவளநிறத்ததான - செந்நிறமான - சடையை உடைய சிவபிரானுக்கு ஒப்பற்ற (பிரணவச்) சொல்லை உபதேசித்தவனே!

தங்கமயமான சிகரங்களைக்கொண்ட சிறந்த (கிரவுஞ்ச) மலை (ஊடுருவும்படிக் கோபித்துப் பொருத ஒளி வேலனே! கையில் ஏந்தியுள்ள ஒளி வேலனே!

கழியை (உப்புநீர்ப்பரப்பு) கிழியும்படிக் கயல் மீன்கள் குதிக்கின்ற (திரு) **இடைக்கழி** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் குமரப் பெருமாளே!

(அலையக் கடவேனோ)

# 797.

**யா**சிப்பவரிடத்தே இரக்கம் மிகக்கொண்டு கொடுப்பன என்பது கனவிலுங்கூட இல்லாத எனக்கு இயற்றமிழ் வல்லபத்திலோ இசைத்தமிழ் வல்லபத்திலோ (எதிர்ஒப்பு) ஒப்பாக எதிர்நிற்கக்கூடிய - எந்தப் புலவர் உளர் என்று-

(எடுத்து) பாடல் அமைத்து எடுத்து, ((முடியையும்) தலையையும் பெரிய கைகளையும் (முடித்து) அலங்கரித்து, இரட்டை உடுத்து - அரையாடை, மேலாடைகளை உடுத்து (இலச்சினையிட்டு) முத்திரை மோதிரம் அணிந்து, ஒருவர் வெற்றிலைப் பை ஏந்திவர (பிரபுத்வம்உற்று) பெரிய பிரபுவின் தன்மையை மேற்கொண்டு - பெரிய பிரபுபோல ஆடம்பரம் கொண்டு, பொருந்திய மாதர்களின்-

குரங்கு முகத்தினை - பனிப்பிறை ஒப்பென, குழலை - புயல் ஒப்பென - குரங்குபோன்ற முகத்தைக் குளிர்ந்த நிலவுக்கு ஒப்பென்றும், கூந்தல் மேகத்துக்கு ஒப்பென்றும் சொல்லி அணைந்து, (கலைக்குள் ) ஆடைக்குள் - மறைத்துவைக்கப்படும் மானின்-

---

மான் குளம்பென்றே" - உசிதசூடாமணி - கலை - ஆண்மான் எனவும் பொருள் கொண்டதாதலின் கலைக்குள் மறைத்திடுமான் - என்பதிற் சொற்சாதுரியமும் உளது.

குளப்படியிற் சளப்படுமிப்
பவக்கடலைக் கடக்க இனிக்
குறித்திருபொற் கழற்புணையைத் தருவாயே;
அரக்கரடற் கடக்க அமர்க்
களத்தடையப் புடைத்துலகுக்
கலக்கணறக் குலக்கிரிபொட் டெழவாரி-
அனைத்தும்வறப் புறச்சுரர்கற்
பகப்புரியிற் புகக் *கமலத்
தனைச்சிறையிட் டிடைக்கழியிற் பயில்வோனே;
கரக்கரடக் † களிற்றுமருப்
புலக்கையினிற் கொழித்தமணிக்
கழைத்தரளத் தினைத் ‡ தினையிற் குறுவாளைக்-
கணிக்குறவக் குறிச்சியினிற்
சிலைக் X குறவர்க் கிலச்சைவரக்
கயத்தொடுகைப் பிடித்தமணப் பெருமாளே. (2)

---

* பிரமனைச் சிறையிட்டது: பாட்டு 212 - பக்கம் 42 கீழ்க்குறிப்பு.

† யானையின் தந்தத்தை உலக்கையாகக் கொள்ளுதல்:

1. "கு (ற்) றக், குறச்சத்திக்கு, அத்திக்கோடு பறித்துக் கொடு ஆதி" - கந்தரந்தாதி 11. (குற - குற்றுதற்கு)
2. 'யானைவெண் மருப்புலக்கை' சீவகசிந்தாமணி 1562.
3. "களிற்றுக் கோடு உலக்கையாக" கலித்தொகை 41
4. 'யானைக்கோட்டால் வெதிர் நெற் குறுவா' 42
5. 'மகளிர் குறுவரே வான்கோட்டால்' - சிலப்-29
6. 'வேழத்துப் பணை மருப்புலக்கை'- பெருங்கதை 2-14-49
7. 'கொல்யானைத் தந்த வுலக்கைதனை யோச்சி' -கலிங்கத் 133, 513.
8. 'உயர்ந்த வாரணக் கொம்பே உலக்கையா' - (மோகவதை 764)
9. 'ஆனைக்கோடு அனைத்தும் பொற்பூண் முசலமே யாக' - தக்க யாகப் பரணி - 735
10. 'கருங்களிற்றின் வெண்கொம்பால் கல்லுரல்வாய் நல்லார் பெருந்தினை வெண் பிண்டி யிடிப்ப' - ஈங்கோய் 20.

‡ தினையிற் குறுவாள் - தினைபோலக் குற்றி விளையாடுபவள்.

X குறவர்க்கு இலச்சை: அவர்கள் அறியாமல் வள்ளியை வெளவியதால் வந்த கூச்சம், வெட்கம்.

(தொடர்ச்சி 361 ஆம் பக்கம் பார்க்க.)

குளம்படி போன்ற அல்குலில் (சளப்படும்) துன்பப்படும் இந்தப் பிறப்பு என்னும் கடலை நான் தாண்டி உய்ய இனி (அடியேனைக்) குறித்து - கண்பார்த்து - உனது இரண்டு அழகிய திருவடி என்னும் (புணையை) தெப்பத்தைத் தந்தருளுக.

அசுரர்களின் (அடல்) வலிமையைத் தொலைத்தழிக்க (அமர்க்களத்து) போர்க்களத்தில் (அடையப் புடைத்து) நன்றாக அலைத்து அடித்து, உலகின் (அலக்கண்) துன்பம் நீங்கக், (குலக்கிரி) உயரிய கிரௌஞ்ச கிரி பொடிபட்டுதிரக், கடல்கள்

எல்லாம் வற்றிப்போகத் தேவர்கள் கற்பக லோகத்தில் (பொன்னுலகில்) குடியேற, (கமலத்தனை) தாமரையில் வீற்றிருக்கும் பிரமதேவனைச் சிறையிற்போட்டு திரு **இடைக்கழி** என்னும் தலத்தில் பொருந்தி யிருப்பவனே!

துதிக்கையையும் (கரடம்) மதம்பாய் சுவட்டையும் உடைய யானையின் தந்தமாகிய உலக்கைகொண்டு கொழித்து எடுக்கப்பட்ட ரத்னங்களையும், மூங்கில் முத்தையும் தினை குத்துவதுபோல (இடிப்பதுபோல)க் (குற்றி) இடித்து விளையாடுபவளை - (விளையாடின வள்ளியை)

(கணி) வேங்கை மரங்கள் உள்ள குறவர் (குறிச்சியினில்) மலைநில ஊரில் (அல்லது சோதிடம் - குறி சொல்லவல்ல குறவர் குலத்து ஊரில்) (வள்ளிமலையில்), வில்ஏந்திய குறவர்கள் நாணும்படி, (கயத்தொடு) ஐராவத ஆனை வளர்த்த தேவசேனையுடன் - கைப்பிடித்த (மணஞ்செய்த) மணவாளப் பெருமாளே!

(கழற்புணையைத் தருவாயே)

---

(360 ஆம் பக்கத் தொடர்ச்சி.)

"அடுந்திறல் எயினர் சேரி அளித்திடு நீயே எங்கள்
மடந்தையைக் கரவில் வெளவி வரம்பினை அழித்துத் தீரா
நெடுந்தனிப் பழிய தொன்று நிறுவினை; புதல்வர் கொள்ள
விடந்தனை அன்னை ஊட்டின் விலக்கிடு கின்றா ருண்டோ!

கந்தபுராணம் - 6 - 24 - 191.

## 798. வாழ்வுற

தனன தத்தனத் தனன தத்தனத்
தனன தத்தனத் தனதான

பகரு முத்தமிழ்ப் பொருளு மெய்த்தவப்
பயனு மெப்படிப் பலவாழ்வும்-
பழைய முத்தியிற் பதமு நட்புறப்
பரவு கற்பகத் தருவாழ்வும்;
புகரில் புத்தியுற் றரசு பெற்றுறப்
பொலியும் அற்புதப் பெருவாழ்வும்-
புலன கற்றிடப் பலவி தத்தினைப்
புகழ்ப லத்தினைத் தரவேணும்;
*தகரி லற்றகைத் தலம்வி டப்பிணைச்
சரவ ணத்தினிற் பயில்வோனே-
தனிவ னத்தினிற் புனம றத்தியைத்
தழுவு பொற்புயத் திருமார்பா;
சிகர வெற்பினைப் பகிரும் வித்தகத்
திறல யிற்சுடர்க் குமரேசா-
*செழும லர்ப்பொழிற் குரவ முற்றபொற்
றிருவி டைக்கழிப் பெருமாளே. (3)

---

* சிவபிரானது நெற்றிக்கண்ணினின்றும் வந்த ஆறு பொறிகளின் சூடு தாங்க முடியாமல் வாயு அப்பொறிகளை அக்கினியின் கையிற் கொடுக்க, அக்கினியும் தாங்கமுடியாமல் அப்பொறிகளைக் கங்கையில் விட, கங்கையும் தாங்க முடியாமல் பொறிகளைச் சரவண மடுவில் விட்டனள்: 'காலினோன் - திறற்படு வன்னிதன் சென்னிசேர்த்தினான்;

"தீயின் பண்ணவன் வேர்த்துடல் புழுங்குற: ஒரு பதம்
இடப் பெறாது, கங்கையின் அகத்துய்த் தானரோ;
கங்கைதன் சிரமிசை ஏந்தியே...சரவணம் எனுந் தடந் தன்னிற் சேர்த்தனள்" - கந்தபுராணம் - 1- 11-84-7.

"தீக்கடவுள் சீதப்பகீரதிக்கே சென்றுய்ப்பப் போதொருசற் றன்னவளும் கொண்டமைதற் காற்றாள் சரவணத்திற் சென்னியிற் கொண்டுய்ப்ப' -கந்தர் கலி வெண்பா.

தகரில் அற்றகை - தக்கன் யாகத்துப் பூசலில் தகர்க்கப்பட்டதால் அறுபட்ட கை - (பாடல் 390 - பக்கம் 487 கீழ்க்குறிப்பு)

தகரில் - வீரபத்திரர் தகர்த்தலால் எனவும், தகரில் - ஆட்டு முகத்தன் (தக்கன்) யாகத்தில் - எனவும் பொருள் கொள்ளலாம்.

(தொடர்ச்சி 363 ஆம் பக்கம் பார்க்க)

# 798.

**சொ**ல்லப்படுகின்ற முத்தமிழ் நூல்களின் பொருளையும், உண்மைத் தவத்தாற் பெறப்படும் பயனையும், எத்தன்மையான பலவகைய வாழ்வையும்,

பழைமையாய் வரும் முத்திச் செல்வ நிலையையும், யாவரும் நண்புவைத்துப் போற்றும் கற்பகத்தரு வாழ்வையும் கற்பகவிருக்ஷ தேவலோக வாழ்வையும்,

(புகர்இல்) குற்றம் இல்லாத புத்தியுடன் அரசவாழ்வைப் பெறப்பெற்று விளங்கும் அற்புதமான சிறந்த வாழ்வையும்,

ஐம்புலச் சேட்டைகள் நீங்கப்பெற பலவகையாலும் (உன்னை) (அல்லது உனது பலவகைப்பட்ட பெருமைகளையும்) புகழும் திடத்தினை அறிவின் பலத்தையும், நாவின் வன்மையையும் தந்தருள வேண்டும்;

(தக்கன் யாகத்தில் நடந்த பூசலில்) தகர்க்கப்பட்டு அற்றுப்போன கைகளைக்கொண்ட அக்கினி தேவனது கைத்தலம் விட (கைத்தலங்கள்) கைகள் (பொறிகளின் சூடு தாங்காது கங்கையில் விட்டுவிட, (பிணை) சேர்ந்த சரவண மடுவில் பொருந்தி இருந்தவனே!

தனியாக (வள்ளிமலைக்) காட்டில் தினைப்புனம் காத்திருந்த வேடப்பெண்ணைத் தழுவின அழகு புயங்களையும் திரு மார்பையும் உடையவனே!

சிகரங்களைக் கொண்டிருந்த கிரௌஞ்ச மலையைப் பிளந்து பகிர்ந்த (வித்தகம்) ஞானத்தையும் வெற்றியையுங் கொண்ட (சுடர் அயில்) ஒளிவீசும் வேலாயுதத்தை உடைய குமரேசனே!

செழுவிய பூஞ்சோலையிற் குராமரங்கள் உள்ள அழகிய **திருவிடைக்கழிப்** பெருமாளே!

(புகழ் பலத்தினைத் தரவேணும்)

---

*திருவிடைக்கழியும் பொழிலும்: 'தேனமர் பொழில்சூழ் திருவிடைக்கழியில் திருக்குரா நீழற்கீழ் நின்ற...குல இளங்களிறு" திளையிளம்பொழில்சூழ் திருவிடைக்கழியில் திருக்குரா நீழற்கீழ் நின்ற முளை யிளங்களிறு" - "செழுந்தடம் பொழில்சூழ் திருவிடைக்கழியில் திருக்குரா நீழற்கீழ் நின்ற எழுங் கதிர்ஒளி" - (திருவிசைப்பா)

திருக்குரா நிழற்கீழ் முருகன் - என்பது திருவிடைக்கழி முருகனையே குறிக்கும். "கொந்துவார் குரவடியினும்" என்னும் இடத்தும் (பாடல் 289) காண்க. பாடல் 201-ம் பார்க்க.

## 799. அடியாரொடு சேர்க்க.

*தனனதன தத்தனத் தனதனன தத்தனத்*
*தனனதன தத்தனத் தனதான*

படிபுனல்நெ ருப்படற் பவனம்வெளி பொய்க்கருப்
பவமுறைய வத்தைமுக் குணநீடு-
பயில்பிணிகள் மச்சைசுக் கிலமுதிர மத்திமெய்ப்
பசிபடுநி ணச்சடக் குடில்பேணும்;
உடலது பொறுத்தறக் கடைபெறுபி றப்பினுக்
குணர்வுடைய சித்தமற் றடிநாயேன்-
உழலுமது கற்பலக் கழலிணையெ னக்களித்
*துன துதம ரொக்கவைத் தருள்வாயே;
† கொடியவொரு குக்குடக் கொடியவடி விற்புனக்
கொடிபடர்பு யக்கிரிக் கதிர்வேலா-
குமரசம ரச்‡ சினக் குமரவணி யத்தன்மெய்க்
குமரமகிழ் Xமுத்தமிழ்ப் புலவோனே;
தடவிகட மத்தகத் தடவரைய ரத்தரத்
தடலனுச வித்தகத் துறையோனே-
தருமருவு மெத்தலத் தருமருவ **முத்தியைத்
தருதிருவி டைக்கழிப் பெருமானே. (4)

---

* உனது தமர் - முருகன் அடியார்களைக் குறிக்கும்.

† கொடிய சூரனே மயிலும் சேவலும் ஆனான் ஆதலின் கொடிய ஒரு குக்குடக்கொடி என்றார். "கொடிய ஒரு குக்குடக் கொடிய" என்பதிற் சிலேடைச் சொல்லழகைக் காண்க.

‡ சினக்கும் அரவு அணி அத்தன் எனப் பிரிக்க. சினக்கும் -கோபிக்கும்.

X முத்தமிழ்ப் புலவன் - "நூலறி புலவன்" - திருமுருகாற்றுப்படை. "பெருந்தமிழ் விரித்த அருந்தமிழ்ப் புலவன்" - கல்லாடம். "தோலாத முத்தமிழ் நாவா" - முத்துக்குமார. பிள்ளைத்தமிழ்" 30 - "கொழு தமிழ் உணரு முதற் புலமைக் குக கொட்டுக சப்பாணி குரவடி யமரும் இடைக்கழி யற்புத கொட்டுக சப்பாணி" - திருவிடைக்கழி முருகன் பிள்ளைத் தமிழ்.

"மதித்த முத்தமிழிற் பெரியோனே" - திருப்புகழ் 294.

"தமிழ்தனைக் கரைகாட்டிய திறலோனே" - 1286.

4, 5, 6, 7 அடிகளில் கொடிய கொடிய, குமர குமர, தடவி தடவ, தருமருவு தருமருவ என வழி எதுகையும் சிலேடையும் விரவி வருகின்றன.

** திருவிடைக்கழி "முத்திதரும் தலம்" என்று இங்கு கூறப்பட்டது கவனிக்கற்பாலது.

# 799.

*(படி)* பூமி, *(புனல்)* நீர், நெருப்பு, *(அடற் பவனம்)* வலிமை கொண்ட வாயு, *(வெளி)* ஆகாயம், பொய், கருவிற் பிறப்பு கூடும் அவஸ்தை, *(சாத்துவிகம், ராஜசம், தாமதம் என்னும்)* முக்குணங்கள் நெடிதாய்க்-

கூடிவரும் நோய்கள், *(மச்சை)* மூளை, அல்லது எலும்பின் சத்து, சுக்கிலம் *(உதிரம்)*, ரத்தம், *(அத்தி)* எலும்பு, *(மெய்ப்பசி)* உடலில் உண்டாகும் பசி, உள்ள *(நிணம்)* மாமிசம், இவை கூடிய சடக் குடில்- அறிவிலாத பொருளாகிய சிற்றிலாகப் போற்றப்படும்.

*(இந்த)* தேகத்தைத் தாங்கி மிகவும் கீழானதாய்ப் பெறப்பட்ட இப்பிறப்பிலே ஞானத்தோடு கூடிய உள்ளம் இல்லாதுபோய் அடி நாயேனாகிய நான்-

திரிகின்ற இது, *(கற்பு அல)* நீதியன்று - ஆதலால் *(நீ)* உனது திருவடியிணையை எனக்குத் தந்து, உனது *(தமர்)* - உன்னை அண்டியுள்ள பழைய அடியார் கூட்டத்துடன் என்னையும் ஒருசேர வைத்து அருள்புரிய வேண்டுகின்றேன்.

கொடுமை வாய்ந்ததும் ஒப்பற்றதுமான கோழியைக் கொடியாக உடையவனே! அழகுள்ள தினைப்புனத்து *(வள்ளிக்)* கொடிபடரும் புயமலைகளை உடைய ஒளிவேலனே!

*(குமர)* இளியோய்! *(சமர சினக்கும் அரவு)* போரில் மிகக் கோபிக்கும் பாம்பை அணியும் *(அத்தன்)* ஐயன் சிவபிரானது மெய்ப் புதல்வனே! *(யாவரும்)* மகிழும், முத்தமிழிலும் வல்ல புலவனே!

விசேடமான அழகிய மத்தகத்தோடு கூடிய பெரிய மலையை ஒத்தவரான கணபதியின் *(அத்தர்)* தந்தையின் *(அத்த)* குருவே! *(அந்தக் கணபதியின்)* - அடல் அனுச - பராக்ரமம் வாய்ந்த தம்பியே! அல்லது தடவரையார் - கணபதியின் - அத்தரத்து அடல் அனுச - அந்த மேன்மையும் வீரமும் வாய்ந்த தம்பியே! ஞானநிலையில் உறைபவனே அல்லது ஞானத்துறையில் விளங்குபவனே!

*(தரு)* விருக்ஷங்கள் *(மருவும்)* பொருந்தி விளங்கும் **திருவிடைக்கழிப்** பெருமாளே! *(எத்தலத்தரும்)* எந்தப் பூமியில் உள்ளவரும் தன்னிடம் அடைந்தால், அவர்க்கு முத்தி-நிலையைத் தரும் **திருவிடைக்கழிப்** பெருமாளே!

*(உனது தமர் ஒக்கவைத்து அருள்வாயே)*

## 800. திருப்புகழ் ஓத

தனதனனத் தனதான தனதனனத் தனதான
தனதனனத் தனதான தனதான

பழியுறு *சட் டகமான குடிலையெடுத் திழிவான
பகரும்வினைச் செயல்மாதர் தருமாயப்-

படுகுழிபுக் கினிதேறும் வழி தடவித் தெரியாது
பழமைபிதற் றிடுலோக முழுமூடர்;

உழலும்விருப் புடனோது பலசவலைக் கலைதேடி
யொருபயனைத் தெளியாது விளியாமுன்-

உனகமலப் பதநாடி யுருகி† யுளத் தமுதூற
உனது திருப் புகழோத அருள்வாயே;

தெழியுவரிச் சலராசி மொகுமொகெனப் பெருமேரு
திடுதிடெனப் பலபூதர் விதமாகத்-

திமிதிமெனப் பொருசூர னெறுநெறெனப் பலதேவர்
ஜெயஜெயெனக் கொதிவேலை விடுவோனே;

அழகுதரித் திடுநீப சரவணவுற் பவவேல
அடல்தருகெற் சிதநீல மயில்வீரா-

அருணைதிருத் தணி‡நாக மலைபழநிப் பதிகோடை
அதிபஇடைக் கழிமேவு பெருமாளே. (5)

---

* சட்டகம் - உடல். "உயிர்புகுஞ் சட்டகம்" கல்லாடம் 8. "உயிரன்னாள் சட்டகம்" - திருவிளை. - பழியஞ்சின. 16.

† அமுதூறினால் இறைவனைக் காணலாகும்: 'காயத்துள்ள முதூற வூற நீ கண்டுகொள் என்று காட்டிய' -திருவாசகம் - 42-5.

‡ ஆறு தலங்கள் சொல்லப்பட்ட இந்த அடியினால் நாகமலை வேறு கோடை வேறு என்பது புலப்படுகின்றது. கோடை - வல்லக் கோட்டை - பாடல் 707 - 713 பார்க்க.

## 800.

(பழி) பாவம் - குற்றம் இவைகளுக்கு இடமான (சட்டகம்) உடலாகிய இந்தக் குடிசையை எடுத்து இழிவான சொற்களைச் சொல்லும் தொழில் வினைகளை - வினையைப் பெருக்கும் செயல்களை உள்ள மாதர்கள் தருகின்ற மாயமான

படுகுழியில் வீழ்ந்து நல்லபடி கரையேறும் வழி உண்டோ எனத் தடவிப் பார்த்தும் தெரியாமல், பழங்கொள்கைகளையே (ஆராய்ச்சியின்றி)ப் பிதற்றுகின்ற லோகத்தில் உள்ள முழுமூடர்கள்-

திரிந்து ஆசையுடன் ஓதுகின்ற பல மனக்குழப்பம் தரும் நூல்களைத் தேடி, ஒரு பயனையும் தெளிந்துகொள்ள முடியாமல் இறந்து போவதற்கு முன்பாக-

உன்னுடைய தாமரைப் பதங்களை விரும்பி, உருகி, உள்ளத்தே பத்தி அமுதரசம் ஊற உனது திருப்புகழை ஓதுதற்கு அருள்வாயே!

(தெழி) முழங்குகின்ற (உவரி) உப்பு நீரைக்கொண்ட (சலராசி) கடல் மொகு மொகு என்று கொந்தளிக்கவும், பெரிய மேருமலை திடு திடு என்று இடிபட்டுப் பொடிபடவும், பலவகைய பூதர்கள் விதம் விதமாகத்

திமி திமி என்று களிப்புறவும், சண்டைசெய்த சூரன் (மாமரம்) நெறு நெறு என்று முறியவும், (இதைக்கண்ட) பல தேவர்களும் ஜெய ஜெய என்று போற்றவும் கொதிக்கின்ற (கோபித்து எழும்) வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

அழகு கொண்டுள்ள கடப்பமாலையை அணிந்தவனே! சரவணத்தில் (உற்பவித்தவனே) தோன்றினவனே! வேலனே! வெற்றியைத் தருவதும், (கெற்சிதம்) முழங்கி ஒலிப்பதும், நீலநிறம் உள்ளதுமான மயில்வீரனே!

திரு அண்ணாமலை, திருத்தணி, (நாகமலை) திருச்செங்கோடு, பழநிநகர், (கோடை) வல்லக்கோட்டை இத்தலங்களில் வாழும் தலைவனே! திரு **இடைக்கழி** மேவும் பெருமாளே!

(உனது திருப்புகழ் ஓத அருள்வாயே)

## 801. வேசையர் மயக்கு அற

தனத்த தானன தனதன தனதன
தனத்த தானன தனதன தனதன
தனத்த தானன தனதன தனதன தனதான

பெருக்க மாகிய நிதியினர் வரின்மிக
நகைத்து வாமென அமளிய ருகுவிரல்
பிடித்து போயவர் தொடையொடு தொடைபட வுறவாடிப்-
பிதற்றி யேயள விடுபண மதுதம
திடத்தி லேவரு மளவுந லுரைகொடு
பிலுக்கி யேவெகு சரசமொ டணைகுவர் கனமாலாய்;
முருக்கி னேரித ழமுதுப ருகுமென
வுரைத்து லீலைக ளதிவித மொடுமலை
முலைக்கு ளேதுயில் கொளமயல் புரிகுவர்
*பொருள்தீரின்-
முறுக்கி யேயுதை கொடுவசை யுரைதரு
மனத்து ரோகிக ளிடுதொழில் வினையற
முடுக்கி யேயுன திருகழல் மலர்தொழ
அருள்தாராய்;
நெருக்கி யேவரு மவுணர்கள் குலமற
வுறுக்கி யேமயில் முதுகினில் விசைகொடு
நிலத்தி லேசமர் பொருதவ ருயிர்பலி கொளும்வேலா-
† நெகத்தி லேஅயன் முடிபறி யிறை‡திரி
புரத்தி லேநகை புரிபர னடியவர்
நினைப்பி லேயருள் தருசிவ னுதவிய புதல்வோனே;
செருக்கு வேடுவர் தருமொரு சிறுமியை
மருக்கு லாவிய மலரணை மிசைபுணர்
திருக்கை வேல்வடி வழகிய குருபர முருகோனே-

---

* பொருள் தீர்ந்தால் வேசையர் செய்யும் செயல் - *1147* ஆம் பாடலைப் பார்க்க. வேசையர் பொருள் உள்ள வரையில்தான் நேசிப்பார் என்பது -

"விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும்
துளக்கற நாடின் வேறல்ல - விளக்கொளியும்
நெய்யற்ற கண்ணே யறுமே அவரன்பும்
கையற்ற கண்ணே அறும்" - நாலடியார்.

† பிரமன் தலையை நகத்தால் கிள்ளியது - பாடல் *286* - பக்கம் *209* கீழ்க்குறிப்பு.

‡ திரிபுரம் எரித்தது - பாடல் *285* பக்கம் *200* கீழ்க்குறிப்பு.

## 801.

**தி**ரண்டு பெருகியுள்ள செல்வத்தை உடையவர்கள் தம்மாட்டு வந்தால், மிகவும் களித்துச் சிரிப்புடன் வாரும் என்று படுக்கை அருகில் வந்தவரின் விரலைப் பிடித்து அழைத்துக் கொண்டுபோய் அவர் தொடையோடு தம் தொடை நெருங்கிப்பட உறவு மொழிகளைப் பேசி விளையாடி-

பல (அன்பு மொழிகளைப்) பிதற்றி, தாம் கணக்கு வைத்திருந்த பண (முழுமையும்) தம்முடைய இடத்திலே வந்து சேரும் வரைக்கும் நல்ல இன்பகரமான வார்த்தைகளால் (பிலுக்கு) - பகட்டுப் பேச்சுக்களை (தந்திரப் பேச்சுக்களை)ப் பேசி மிக்கஇனிய வழியில் அணைவார்கள் - (பின்னும்) பெருத்த அன்பு பூண்டவர்கள் போல

முருக்கம் பூப்போலும் சிவந்த வாயிதழ் அமுதூறலை உண்ணும் என்று கூறி காமலீலைகளிற்பல விதங்கள் காட்டி மலைபோன்ற கொங்கைமீது (சாய்ந்து) தூங்கும்படி மோகம் ஊட்டுபவர்; பொருள் வற்றிப்போனால்-

முறுக்கும் திருப்புமாய்க் கோபக்குறி காட்டி உதையும் உதைத்து வசைப்பேச்சும் (இகழ்ந்துபேசும் பேச்சும்) பேசுகின்ற நன்றி கெட்டவர்கள், மனத்திலே பாதக நினைவு கொண்டவர்கள் - (ஆகிய வேசையர்களின்) செய்யும் செயல்களில் ஈடுபடும் கருத்து அற்றுப்போம்படி விரைவில் என்னைத் திருப்பி உன்னுடைய இரண்டு திருவடிமலர்களைத் தொழும்படியான திருவருளைத் தந்தருளுக.

நெருங்கிவந்த அசுரர்களின் கூட்டம் அழிபடக் கோபித்து, மயிலின் முதுகில் வேகமாய் வந்து இந்தப் பூமியிற் போர்செய்தவர்களாகிய அந்த அசுரர்களின் உயிரைப் பலிகொண்ட வேலனே!

கைந்நகத்தால் பிரமனுடைய தலையைக் கிள்ளிப்பறித்த இறைவன், திரிபுரத்தில் (தீயெழ)ச் சிரித்த பரமன், அடியவர் நினைப்பிலே (நினைத்து வேண்ட) அருள்பாலிக்கும் சிவன் பெற்ற பிள்ளையே!

அகந்தை கொண்ட வேடர்கள் வளர்த்த ஒப்பற்ற (சிறுமி) வள்ளியை, நறுமணம் வீசும் மலர்ப்படுக்கையின்மேல் அணைந்த திருக்கைவேலுடன் திருவுருவம் அழகுள்ள குருபரனே! முருகனே!

சிறக்கு மாதவ முனிவரர் மகபதி
யிருக்கு வேதனு மிமையவர் பரவிய
**திருக்கு ராவடி** நிழல்தனி லுலவிய
பெருமாளே. (6)

## 802. அகப்பொருள்

தனத்த தானன தனதன தனதான

*மருக்கு லாவிய மலரணை கொதியாதே-
வளர்த்த தாய்தமர் வசையது மொழியாதே;

கருக்கு லாவிய அயலவர் பழியாதே-
கடப்ப மாலையை யினிவர விடவேணும்;

தருக்கு லாவிய கொடியிடை மணவாளா-
சமர்த்த னேமணி மரகத மயில்வீரா;

***திருக்கு ராவடி** நிழல்தனி லுறைவோனே-
*திருக்கை வேல்வடி வழகிய பெருமாளே.(7)

## 803. மாதர்மீது மயக்கு அற

தனன தத்தன தனதன தனன தத்தன தனதன
தனன தத்தன தனதன தனதான

முலைகு லுக்கிகள் கபடிகள் வடிபு ழுக்கைக ளசடிகள்
முறைம சக்கிகள் திருடிகள் மதவேணூல்-

மொழிப சப்பிகள் விகடிகள் அழும னத்திகள் தகுநகை
முகமி னுக்கிகள் கசடிகள் இடையேசூழ்;

*இந்த மூன்று அடிகளை 801-ஆம் பாடலிற் காணலாகும்.

சிறப்புற்ற மகாதவசிகளும், முநிசிரேஷ்டர்களும், இந்திரனும், இருக்குவேதம் வல்ல பிரமனும், தேவர்களும் போற்றிப் பரவின பெருமாளே! திருக்குராமரத்தின் அடிநிழலில் விளங்கிப் பொலியும் பெருமாளே!

(இருகழல் மலர்தொழ அருள்தாராய்)

## 802.

**ந**றுமணம் கமழும் மலர்ப்படுக்கை கொதித்துச் சூடு தராமலும்-

வளர்த்த தாயும் சுற்றத்தாரும் வசைமொழிகளைப் பேசாமலும்-

(கரு) காரணம் வைத்துக்கொண்டு (குலாவிய) நட்பாடின (அல்லது கருக்கு உலாவிய - புத்திகூர்மை கொண்ட) அயலார்கள் பழிச்சொல் கூறாடாலும் (நீ உனது)

கடப்ப மலர்மாலையை இனி அனுப்பிவைக்க வேண்டுகின்றேன்;

கற்பக விருக்ஷத்தின் கீழ்விளங்கிய கொடிபோன்ற இடையை உடைய தேவசேனையின் மணவாளனே!

சமர்த்தனே! மணிநிறம் மரகத நிறம் கொண்ட மயில் வீரனே!

திருக்குராமரத்தின் அடிநிழல் தன்னில் வீற்றிருப்பவனே!

திருக்கையில் வேல் (ஏந்தின), திருவுருவம் அழகுள்ள, பெருமாளே! (கடப்பமாலையை இனிவர விடவேணும்)

## 803.

**கொ**ங்கையைக் குலுக்குபவர்கள், வஞ்சனை நெஞ்சினர், வடித்து எடுக்கப்பட்ட புழுக்கைகள் (பிழுக்கைகள்), முட்டாள்கள், (மாமா, அத்தான் என) முறை கூறி (அல்லது அவர்கள் குலதரும முறைப்படி) மயங்கச் செய்பவர்கள், திருடிகள், காமவேளினுடைய நூலிற் (கொக்கோக சாத்திரத்திற்) கூறியபடி-

பேச்சினால் ஏய்ப்பவர்கள், (விகடிகள்) கபடம் (அல்லது செருக்கு) உடையவர்கள், சிணுங்கி அழுகின்ற மனத்தை உடையவர்கள், தக்க சிரிப்புடன் முகத்தை மினுக்குபவர்கள், குற்றம் உள்ளவர்கள், இடையில் - இடுப்பிற் சூழ்ந்துள்ள-

கலைநெ கிழ்த்திக ளிளைஞர்கள் பொருள்ப றித்தம ளியின்மிசை
கனியி தழ்ச்சுருள் பிளவிலை யொருபாதி-
கலவி யிற்றரும் வசவிகள் விழிம யக்கினில் வசமழி
கவலை யற்றிட நினைதருள் புரிவாயே;

அலைநெ ருப்பெழ வடவரை பொடிப டச்*சம ணர்கள்குலம்
அணிக ழுப்பெற நடவிய மயில்வீரா-
†அரன ரிப்பிர மர்கள்முதல் வழிப டப்பிரி யமும்வர
அவர வர்க்கொரு பொருள்புகல் பெரியோனே;

‡சிலைமொ ளுக்கென முறிபட மிதிலையிற்*சந கமனருள்
திருவி னைப்புண ரரிதிரு மருகோனே-
திரள்வ ருக்கைகள் கமுகுகள் சொரிம துக்கத லிகள்வளர்
திருவி டைக்கழி மருவிய பெருமாளே. (8)

## தான்தோன்றி.

(இஃது ஆக்கூர் என்னும் ஸ்தலம். திருஞானசம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல்பெற்றது. மாயூரத்துக்குக் கிழக்கு 10-மைல். இத்தலத்திலுள்ள ஆலயத்துக்குத் "தான்தோன்றி மாடம்" எனப் பெயர். "தான் தோன்றி யப்பர்" என்பது ஆக்கூரிற் சிவபிரான். திருநாமம். 'தான் தோன்றிமலை' கருவூரிலிருந்து 2 மைல். மலை சிறிது.)

---

*சமணர்களைக் கழுவேற்றினது - பாடல் 181-பக்கம் 422 கீழ்க்குறிப்பு.

† முருகவேள் மூவர்க்கும் உபதேசித்தது:

1. சிவனுக்கு **உபதேசித்தது** - பாடல் 327 - பக்கம் 314.
2. திருமாலுக்கு **உபதேசித்தது**. (ராமாவதாரத்தில்) - சிவஞானம் உபதேசிக்கப் பெற்றார்.

"மன்றல் கமழ் கடம்பணிந்த வரைமார்பன் எதிர்தோன்றி
நின்றருளுஞ் சிவஞானம் நயந்தேற்றுப் பதிபுக்கான்"

(தணிகைப்புராணம் - இராமனருள்பெறு - 44)

3. பிரமனுக்கு **உபதேசித்தது**:- திருவேரகத்தில் பிரமன் முருகவேளை நோக்கித் தவஞ்செய்ய பிரணவத்தின் உண்மையை உபதேசிக்கப் பெற்றான். - ( திரு ஏரக மான்மியம் பக்கம் 103)

(தொடர்ச்சி 373 ஆம் பக்கம் பார்க்க)

ஆடையைத் தளர்த்தி விடுபவர்கள், இளைஞர்களின் பொருளைப் பறித்துப் படுக்கையிலே கனிபோன்ற தங்கள் வாயிதழில் உள்ள சுருள் பாக்கு வெற்றிலையில் ஒரு பாதி -

புணர்ச்சி வேளையில் தருகின்ற (வசவிகள்) தேவதாசிகள் (அல்லது) கெட்ட நடத்தை உடையவர்கள், (ஆகிய பொதுமகளிரின்) கண் மயக்கிலே நான் வசம் அழியும் கவலை எனைவிட்டொழிய உன்னுடைய திருவருளைப் பாலித்தருளுக.

கடல் தீக் கொப்புளிக்க, வடக்கிலுள்ள (வரை) (கிரௌஞ்ச) மலை பொடியாக, சமணர்களின் கூட்டம் வரிசையாய் வைக்கப்பட்டிருந்த கழுவில் ஏறக் காரியத்தை நடத்தின மயில் வீரனே!

அரன், அரி, பிரமன் மூவரும் முன்பு வழிபட்டுப் போற்ற அவர்கள்மேல் அன்பு பூண்டு, அவரவர்க்கு ஒப்பற்ற ஒரு (உபதேசப்) பொருளை உபதேசித்த பெரியவனே!

‡ வில் மொளுக்கென்று முறிபட மிதிலாபுரியில் சநகராஜன் அருளின (திருவினை) லக்ஷ்மீகரம் கொண்ட சீதையை அணைந்த திருமாலின் திருமருகனே!

திரண்டுள்ள பலா, கமுகு, சொரிகின்ற தேன்கொண்ட வாழை இவை யெல்லாம் வளர்கின்ற **திருவிடைக்கழி** என்னும் ஊரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(கவலை யற்றிட நினதருள் புரிவாயே)

---

(372-ஆம் பக்கத் தொடர்ச்சி)

‡ **ராமபிரான் சனகர் முன்னிலையில் வில்லை முறித்தது:**
வில்லதனை ஆண்டகை நாணினி தேற்றினான் * *
தாள்மடுத்து முன்பயில் சூத்திரமிது எனத் தோளின்வாங்கினான்
ஏத்தினர் இமையவர் இழிந்த பூமழை
வேத்தவை நடுக்குற முறிந்து வீழ்ந்ததே - (கம்பராமா கார்முக- 61.)

† சநக மன் - ஜநக ராஜன்.

## 804. கழல் தொழ

தாந்தாந்த தத்ததன தாந்தாந்த தத்ததன
தாந்தாந்த தத்ததன தனதான

*சூழ்ந்தேன்ற துக்கவினை சேர்ந்தூன்று மப்பில்வளர்
† தூண்போன்ற இக்குடிலு முலகூடே-
சேர்ந் ‡தூய்ந்து மக்கினியில் நூண்சாம்பல் பட்டுவிடு
தோம்பாங்கை யுட்பெரிது முணராமே;

வீழ்ந்தீண்டி நற்கலைகள் தான்தோண்டி மிக்கபொருள்
வேண்Xடீங்கை யிட்டுவர குழுவார்போல்-
வேம்பாங்கு மற்றுவினை யாம்பாங்கு மற்றுவினை
வாம்பாங்கில் நற்**கழல்கள் தொழஆளாய்;**

வாழ்ந்தான்ற கற்புடைமை வாய்ந்தாய்ந்த நற்றவர்கள்
வான்தோன்று மற்றவரு மடிபேண-
Oமான்போன்ற பொற்றொடிகள் தாந்தோய்ந்த நற்**புயமும்
வான் தீண்ட வுற்றமயில் மிசையேறித்;

தாழ்ந்தாழ்ந்த மிக்ககடல் வீழ்ந்தீண்டு வெற்பசுரர்
சாய்ந்தேங்கவுற்றமர்செய் வடிவேலா-
**தான் தோன்றி யப்பர்குடி** வாழ்ந்தீன்ற நற்புதல்வ
தான்தோன்றி நிற்கவல பெருமாளே.(1)

---

* சூழ்ந்து என்ற வினை - வினை நம்மைச் சூழ்ந்துளது. அது காலணி 'பாடகம்' போலச் சூழ்ந்துளது என்றார் கல்லாடத்தில் "பழவினை புகுந்த பாடகம் போல"

† தூண்-பாரந் தாங்குவது-"அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ, டைந்து சால் பூன்றிய **தூண்**" திருக்குறள் 983

‡ ஊய்தல் - பத னழிதல்.

X ஈங்கையிட்டு வர குழுவார் போல் - பொற்கொழுக் கொண்டு வரகுக்கு உழுபவர்போல; ஈங்கை - ஈகை; பொன். 'பொற் கொழுக் கொண்டு வரகுக் குழுவதென்' என்பர் உய்யவந்த தேவநாயனாரும். (திருவுந்தியார் - 38)

O இப் பொற்றொடிகளை 'அருட்கொடி யிரண்டு' என்றார் கல்லாடத்தில் 59

** புயமும் - புயமும் பிற அங்கமுந் தோன்ற.

## 804.

சூழ்ந்து சம்பவிக்கின்ற துக்கந்தரும் வினைகள் ஒன்றுகூடி நிலைபெறுவதற் கிடமானதும், நீரால் வளருவதுமான தூணை யொத்த இந்த உடலும் உலகிடையே-

தளர்ச்சியுற்று பதன் அழிந்து, அக்கினியில் நுண்ணிய சாம்பற் பொடியாகிவிடும் குற்றம் வாய்ந்த தன்மையை நெஞ்சினுள் நன்கு ஆய்ந்து உணராமல்-

(வீழ்ந்து) விரும்பி, விரைவுடன் சென்று, நல்ல கல்வி நூல்களில் ஆழ்ந்து ஆய்ந்து அறிந்து, நிரம்பப் பொருள் தேடவேண்டி, பொற்கொழுக் கொண்டு (பொன்னாலாய ஏர்க்காறு கொண்டு) வரகுக்கு உழுபவர்போல

மனம்வேகும் தகைமையும் ஒழிந்து, வினை பெருகும் தகைமையும் ஒழிந்து, நல்ல (கதி) விளையும்படியான தகைமையில் உனது நல்ல திருவடிகளை நான் தொழும்படி என்னை ஆண்டருளுக.

வாழ்வுற்று மேலான செந்நெறி வாய்க்கப்பெற்று ஆய்ந்த ஒழுக்கத்தில் உள்ள நல்ல தவசிகளும், வானில் உள்ள பிறரும் (தேவர்களும்) (அல்லது - வான் - பெருமை) விளங்கும் பிறரும் உனது திருவடியை விரும்பிப் போற்ற

மான் போன்ற (பொற்றொடிகள்) பொன்வளையல்களை அணிந்த மாதர் (வள்ளி தெய்வயானை) இருவரும் அணைந்துள்ள நல்ல புயமும் (பிற அங்கங்களும்) தோன்ற, ஆகாயத்தை அளாவும்படி உயர்ந்துள்ள மயில்மேல் ஏறி-

கீழே மிக ஆழ்ந்துள்ள பெரிய கடலில் வீழ்ந்து நெருங்கியிருந்த (எழு) கிரியிலிருந்த அசுரர்கள் தளர்வுற்று வருந்தும்படிப் போய்ப் போர்புரிந்த கூர்வேலனே!

* 'தான் தோன்றியப்பர்' என்னும் திருநாமத்தை உடைய சிவபிரான் (திரு ஆக்கூர்ச் சிவன்) தேவியுடன் குடிகொண்டிருந்து வாழ்ந்து தந்த நல்ல குமரனே! தானே தோன்றி (சுயம்பு மூர்த்தியாய் விளங்கி) நிற்கவல்ல பெருமாளே!

(நற்கழல்கள் தொழ ஆளாய்)

---

* 'தானே தழைந்து சிவமாகித் தானே வளர்ந்து தானே இருந்த தார்வேணி யெந்தை' - திருப்புகழ் 1220.

## கந்தன் குடி

*(சோழநாட்டிற் பேரளம் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 3-மைல். அம்பகரத்தூர் ஸ்டேஷனி லிருந்து 1-மைல்.)*

## 805. பவம் அற

*தந்தந்தன தந்தந்தன தந்தந்தன தந்தந்தன*
*தந்தந்தன தந்தந்தன தனதான*

**எந்தன்சட லங்கம்பல பங்கம்படு தொந்தங்களை*
*யென்றுந் துயர் பொன்றும்படி யொருநாளே-*
*இன்பந்தரு செம்பொன்கழ லுந்துங்கழல் தந்தும்பினை*
*† யென்றும்படி பந்தங்கெட மயிலேறி;*

*வந்தும்பிர சண்டம்பகி ரண்டம்புவி யெங்குந் திசை*
*மண்டும்படி நின்றுஞ்சுட ரொளிபோலும்-*
*வஞ்சங்குடி கொண்டுந்திரி நெஞ்சன்துக ளென்றுங்கொளும்*
*வண்டன்தமி யன்றன்**பவம்** **ஒழியாதோ;***

*தந்தந்தன திந்திந்திமி யென் றும்பல சஞ்சங்கொடு*
*தஞ்சம்புரி கொஞ்சுஞ்சிறு மணியாரம்-*
*சந்தந்தொனி கண்டும்புய லங்கன்சிவ னம்பன்பதி*
*சம்புந்தொழ நின்றுந்தினம் விளையாடும்;*

*கந்தன்குக னென்றன்குரு வென்றுந்தொழு ‡ மன்பன்கவி*
*கண்டுய்ந்திட அன்றன்பொடு வருவோனே-*
*கண்டின்கனி சிந்துஞ்சுவை பொங்கும்புனல்*
*X தங்குஞ்சுனை*
***கந்தன் குடி** யின்தங்கிய பெருமாளே.* (1)

---

* எந்தன் - என்றன்; மரூஉ.

† என்றும்படி - எப்போதும் போல.

‡ அன்பன் - நக்கீரர்; அவர் வரலாற்றைப் பாடல் *91* -பக்கம் *212* கீழ்க்குறிப்பிற் காண்க.

X 'தங்கும் பொழில் கந்தங்கொள்ப ரங்குன்றமர்' எனவும் பாடம்.

# 805.

**என்**னுடைய (சடலமாகிய அங்கம்) உடலாகிய உறுப்பு பல வகைத்தான (பங்கம்) இடர்களிற்படும் (தொந்தங்கள்) தொடர்புகள், எக்காலத்தும் உள்ள துயர்நிலை இவை ஒழியும்படியான ஒரு நாள் உண்டா!

இன்பத்தைத் தரும் (உனது) செம்பொன்னாலாய கழல் என்னும் காலணிகள் பொருந்திய (கழல் தந்தும்) திருவடிகளைத் தந்து பின்பு எப்போதும்போலப் (பந்தம் கெட) பாசபந்தங்கள் அழிய நீ மயிலில் ஏறி-

வந்து - (பிரசண்டம் பகிரண்டம் புவியெங்கும் திசை மண்டும்படி சுடரொளிபோலும் நின்று) வீரத்துடன் வெளியிலே உள்ள அண்டங்கள், பூமி எங்கும், திசையெல்லாம் நிறையும்படி பெருஞ்சோதி போல நின்று - (தரிசனந்தந்து) நின்று, அவ்வாறு நீ நிற்பதால்-

வஞ்சகமே குடிகொண்டு திரிகின்ற நெஞ்சினனும், குற்றமே என்றும் செய்கின்ற (வண்டனும்) தீயோனுமான தனியனேனுடைய (பவம்) பிறப்பு ஒழியாதோ - நீங்காதோ!

தந்தந்தன திந்திந்திமி என்றும், (பல சஞ்சம்கொடு) சஞ் சஞ் என்னும் பல ஒலியுடனேயும், தஞ்சம்புரி (அடியார்களுக்கு அடைக்கலம் - புகல் அளிக்கின்றேன் என்று சொல்வது-போலக்கொஞ்சி ஒலிக்கும் சின்னமணி மாலைகளின்

சந்த ஒலியைக் கண்டும், புயல் அங்கன் - மேகநிற உடலை உடைய திருமால், (சிவனம்பன்) - சிவன் என்னும் பெரியோன், (படைப்புப்) பதி - தலைவனாகிய (சம்பு) பிரமன் - (மூவரும்) தொழ விளங்கி நின்று, தினந்தோறும் (அடியார் உள்ளத்தில்) விளையாடுகின்ற-

கந்தனே! குகனே! என்றன் குருவே! என்று தொழுத (அன்பன்) நக்கீரருடைய பாடலைக் கேட்டு (அவர்) (அடைபட்ட குகையினின்றும் - பூதத்தினின்றும்) பிழைத்து உய்யும்படி அன்று அன்புடன் (அவர்முன்) வந்தவனே!

(கற்கண்டுபோல இனிக்கும்) பழங்கள் சிந்துவதால் சுவை மிக்க நீர் உள்ள சுனைகள் விளங்கும் **கந்தன்குடி** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(தமியன் தன் பவம் ஒழியாதோ)

## திலதைப்பதி.

(இத்தலம் "கோயிற்பத்து" என வழங்கும். பேரளம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு சுமார் 3-மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

## 806. மலம் அற

தனனத் தனனா தனதான

*இறையத் தனையோ அதுதானும்-
இலை†யிட் டுணலேய் தருகாலம்;
அறையிற் பெரிதா மலமாயை-
**அலையப் படுமா றினியாமோ;**
‡ மறையத் தனைமா சிறைசாலை-
வழியுய்த் துயர்வா னுறுதேவர்;
சிறையைத் தவிரா விடும்வேலா-
**திலதைப் பதிவாழ்** பெருமாளே.(1)

## 807. சிற்றின்பம் அற

தனனத் தனன தந்த தனனத் தனன தந்த
தனனத் தனன தந்த தனதான

பனகப் படமி சைந்த X முழையிற் றரள நின்று
O படர்பொற் பணிபு னைந்த முலைமீதிற்-

---

* இறை - அற்ப அளவு - அணு அளவு;
"இறையு ஞானம் இலாத என் புன்கவி"
-கம்பரா-சிறப்பு 10.
"விரலால் இறை ஊன்றினான்" - சம்பந்தர் 2-121-8.

† "நித்தம் இருபிடி சோறு கொண் டிட்டுண்டிரு" -(கந்தரலங்காரம்-57)
"நாம் போம் அளவும் எமக்கென்னென்
றிட்டுண் டிரும்" - ஔவையார்-நல்வழி 11.

‡ மறை அத்தனை - பிரமனை.
பிரமனைச் சிறையிட்டது: பாடல் 212-பக்கம் 42 கீழ்க்குறிப்பு

X 'பனகப்பட மிசைந்த மணியில்' 'என்றும் பாடம். மணி பெண்குறியின் ஓர் உறுப்பு.

O 'பவளப் பணி புனைந்த' என்றும் பாடம்.

## திலதைப்பதி

## 806.

(**இ**றை யத்தனையோ அதுதானும்) அணு எவ்வளவோ அவ்வளவு கூட-

இல்லை (ஒருவருக்கு) இட்டபின் நாம் உண்ணுதல் என்னும் அறநெறி என்னிடத்தில்; இங்ஙனம் பொருந்திய காலம் !இறை யத்தனையோ அது தானும் இலையிட்டுணல் - இட்டு உண்ணல் [இறை யத்தனையோ அது தானும் இலை - ஒருவருக்கு இட்டபின் நாம் உண்ணுதல் என்னும் அறநெறி என்னிடத்தில்) இறை யத்தனை அற்ப அளவு கூட -(கொஞ்சமேனும்) (இலை) கிடையாது; ஏய்தரு காலம் - இங்ஙன் (பொருந்திய) வீணாகச் சென்ற காலம்]-

(அறையில்) சொல்லப்புகின் மிகப் பெரிதாம் - எவ்வளவோ நீண்டகாலம் இங்ஙனம் 'இட்டு உணலை'க் கைவிட்டேன்; மலத்தினும் மாயையினும்-

அலைச்சல் உறும் [இத் தீ] நெறி இனி ஆமோ - இனிக் கூடாது என்றபடி;

வேதம்கற்ற தலைவன் பிரமனைப் பெரிய சிறைச்சாலைக்குப்

(போகும் வழியில் விட்டு) போம்படி வைத்து, உயர்ந்த வானத்தில் உள்ள தேவர்களின்

சிறையை நீக்கிவிட்ட வேலனே!

**திலதைப்பதி** என்னும் தலத்தில் வாழ்கின்ற பெருமாளே.

(அலையப்படுமா றினியாமோ)

## 807.

(**பன்**னகம்) பாம்பின் படம்போல் உள்ள (முழையில்)- குகைபோன்ற அல்குலிலும், (தரளம்) முத்துமணி நின்று அசைந்து உலவும் அழகிய, அல்லது பொன்னாலாய, ஆபரணங்களைப் பூண்டுள்ள கொங்கை மேலும்-

பரிவற் றெரியு நெஞ்சில் முகிலிற் கரிய கொண்டை
படுபுட் பவன முன்றி லியலாரும்;

அனமொத் திடுசி றந்த நடையிற் கிளியி னின்சொல்
அழகிற் றனித ளர்ந்து மதிமோக-
மளவிப் புளக கொங்கை குழையத் தழுவி யின்ப
அலையிற் றிரிவ னென்று மறிவேனோ;

தனனத் தனன தந்த தனனத் தனன தந்த
தனனத் தனன தந்த தனதானா-
தகிடத் தகிட தந்த திமிதத் திமித வென்று
*தனிமத் தளமு ழங்க வருவோனே;

செநெனற் கழனி பொங்கி திமிலக் கமல மண்டி
†செறிநற் கழைதி ரண்டு வளமேவித்-
திருநற் சிகரி துங்க வரையைப் பொருவு கின்ற
திலதைப் பதிய மர்ந்த ‡பெருமாளே. (2)

## 808. புகழ் கூற

தனனத் தனத்த தந்த தனனத் தனத்த தந்த
தனனத் தனத்த தந்த தனதான

மகரக் குழைக்கு ளுந்து நயனக் கடைக்கி லங்கு
வசியச் சரத்தி யைந்த குறியாலே-

வடவெற் பதைத்து ரந்து களபக் குடத்தை வென்று
மதர்விற் பணைத்தெ ழுந்த முலைமீதே;

---

* இசை முழங்கும் இடத்தில் முருகன் வருவான்: "இன்னியம் கறங்க...ஆண்டு உறைதலும்" - திருமுருகாற்.

† "தெளியப் புனலியங்கு புலியூரா-
திருபொற் புகழிலங்கு மருணைப் பதியில் வந்து
திலை பொற்பதி யமர்ந்த பெருமாளே" - என்றும் பாடம்
-திலை பொற்பதி - தில்லையம்பதி - சிதம்பரம்.

‡ இந்த 807-ஆம் பாடலில் - 'முருகர்' சொல்லப்படவில்லை. 'பெருமாளே' என்றதனால் - வழக்கம்போல 'முருகப்பெருமாளே' எனப் பொருள் கொள்ளவேண்டும்.

(பரிவு) உண்மை அன்பு [அற்று] இல்லாமல், [எரியும் நெஞ்சில்] பொருள்வேண்டியே எரிச்சல்படும் (வேசையர்களின்) உள்ளத்திலும், மேகம்போலக் கறுத்த கூந்தலிலும், படுபுள் பவன முன்றில் - புட்குரலுக்கு (எட்டுப் பறவைகள் செய்யும் புட்குரல்களுக்குப்) பவனம் - இருப்பிடமான (முன்றிலில்) - வெளியிடமாம் (கழுத்திலும்), இயல் ஆரும் - தகுதி நிறைந்துள்ள-

அன்னநடைக்கு ஒத்த சிறந்த நடையிலும், கிளியின் இனியமொழிக்கு ஒப்பான சொல்லிலும், அழகிலும், தனித்து நின்று தளர்ந்தும், அதிக மோகம் (காம இச்சை) (அல்லது (மதி) அறிவானது மோகத்தை)

(அளவி) கொண்டு - அதில் மனம் கலந்து, புளகங் கொண்டுள்ள கொங்கைகள் குழையும்படியாகத் தழுவி இன்பக்கடலில் திரிகின்றவனான நான் என்றேனும் (அல்லது எப்போதும்) (உன்னை) அறிவேனோ! (அறிந்து உய்வேனோ)!

தனனத் தனன தந்த...தனதானா

தகிடத் தகிட தந்த திமிதத் தமித என்று தனியாக மத்தளம் ஒலிக்க வருபவனே!

செம்மையான நெற்பயிர் விளையும் நல்ல கழனிகள் செழிப்புற்று ஓங்கி, (திமிலம்) பெரிய மீன்களும், தாமரையும் நிறைந்து, நெருங்கிய நல்ல கரும்புகள் திரட்சியாக வளர்ந்து வளப்பம் உற்று,

அழகிய நல்ல சிகரங்களை உடைய உயர்ந்த மலைக்கு நிகராக விளங்கும் **திலதைப்பதி** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே! (என்று மறிவேனோ)

## 808.

**ம**கர மீன்போல அமைந்த குழைகள் மீது தாவிப் பாயும் கண்களின் (கடையில்) ஓரத்தில் விளங்கும் (வசி) கூர்மை வாய்ந்த (அச்சரத்தில்) - அல்லது வசியம் செய்யவல்ல - அந்த அம்பால் ஏற்பட்ட குறியாலும் -

(வடவெற்பு) மேருமலையை (துரந்து) (வடக்கே) ஓட வைத்து, சந்தனக்கலவை அணிந்த குடத்தை ஜெயித்து, (மதர்வில்) செழிப்புடன் பெருத்து எழுந்த கொங்கைமேலும்-

உகமெய்ப் பதைத்து நெஞ்சும் விரகக் கடற்பொ திந்த
வுலைபட் டலர்ச்ச ரங்கள் நலியாமல்-
உலகப் புகழ்ப்பு லம்பு கலியற் றுணர்ச்சி கொண்டு
*னுரிமைப் **புகழ்ப்ப கர்ந்து** **திரிவேனோ;**

† புகர்கைக் கரிப்பொ திந்த முளரிக் குளத்தி ழிந்த
பொழுதிற் கரத்தொ டர்ந்து பிடிநாளிற்-
பொருமித் திகைத்து நின்று வரதற் கடைக்க லங்கள்
புகுதக் கணத்து வந்து கையிலாருந்;

திகிரிப் படைத்து ரந்த வரதற் குடற்பி றந்த
சிவைதற் பரைக்கி சைந்த புதல்வோனே-
‡ சிவபத்தர் முத்த ரும்பர் தவசித்தர் சித்த மொன்று
**திலதைப் பதிக்கு** கந்த பெருமாளே.(3)

## திருவம்பர்.

(பேரளம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு சுமார் 4-மைலி லுள்ள 'அம்பர் மாகாளம்' என்னும் தலத்துக்குக் கிழக்கு சுமார் 1-மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய தேவாரம் பெற்றது.)

## 809. *(பிறவி யற)*

*தான தந்தனந் தான தந்தன*
*தான தந்தனந் தான தந்தன*
*தான தந்தனந் தான தந்தன தந்ததான*

சோதி மந்திரம் போத கம்பரவு
ஞான கம்பரந் தேயி ருந்தவெளி
தோட லர்ந்தபொன் பூவி ருந்த இட
முங்கொளாமல்-

---

* 'புகழ்ப் பகர்ந்து திரிவேனோ' - இவ் வேண்டுகோள் வயலூரில் அருணகிரியார்க்குச் சித்தித்தது. "திருப்புகழ் நித்தம் பாடும் அன்பது **செய்ப்பதியிற்** றந்தவன் நீயே" என வருதல் காண்க; *(திருப்பு. - 105)* இந்த 4-ஆம் அடி மனப்பாடத்துக்குத் தக்கது.

† கஜேந்திர மோக்ஷம் - பாடல் *110*-பக்கம் *262*.

‡ இந்த அடி (திலதைப்பதி) சம்பந்தர் தேவாரத்தில் வரும்-

(தொடர்ச்சி *383* ஆம் பக்கம் பார்க்க)

உகமெய்ப் பதைத்து (மெய் உகப் பதைத்து) உடல் நடுங்கிப் பதைப்புற என் நெஞ்சம் காமமோகக் கடலில் ஏற்பட்ட விரகாக்கினி உலையில் அவஸ்தைப்படுமாறு (மன்மதனது) மலர்ப்பாணங்கள் என்னை வேதனைப் படுத்தாமல்-

உலகினரின் புகழ்க் கூச்சல் என்னும் (கலி) செருக்கு நீங்கி, ஞான உணர்ச்சிகொண்டு உனக்கு உரித்தான திருப்புகழைச் சொல்லி நான் திரியலாகாதா! (திரியவேண்டும் என்றபடி)

புள்ளியை உடைய துதிக்கையை உடைய யானை (கஜேந்திரன்) - (முளரி பொதிந்த குளத்து) - தாமரை நிறைந்திருந்த குளத்தில் (இழிந்த பொழுதில்) இறங்கினபோது (கர) முதலை (அந்த யானையைத்) தொடர்ந்து பிடித்த அந்த நாளில்-

துன்புற்றுத் திகைத்து நின்று, வரதராம் திருமாலுக்கு அடைக்கல முறையீடுகள்செய்ய, ஒரு க்ஷணப்பொழுதில் வந்து தமது திருக்கையில் விளங்குகின்ற

சக்கரப்படையை ஏவின அந்த வரத (ராஜப்) பெருமானுக்கு உடன் பிறந்தவளாகிய சிவை, (தற்பரை) பராசத்திக்கு இனிய, குழந்தையே!

சிவபக்தர்கள், முத்தர் (முத்திநிலை பெற்றவர்), தேவர், தவம்நிறை சித்தர் இவர்கள் மனது பொருந்தி (வணங்கும்) **திலதைப்பதித்** தளத்தில் மகிழும் பெருமாளே!

(புகழ்ப் பகர்ந்து திரிவேனோ)

## திரு அம்பர்

## 809.

(**யோ**கத்தால் அடையப்படும்) ஜோதி ஒளி மண்டபம், (ஞான) உபதேச அனுக்கிரகத்தால் அடையக்கூடிய (ஞான - கம் - ஞான அகம்) ஞானாகாச மாம் பரந்த பெருவெளி, (புண்ணியத்தால் அடையப்படும்) இதழ் அவிழ்ந்த பொன்மலர் இருந்த இடம் (கற்பகப் பொன்மலர் மணக்கும் தேவருலகம்) இத்தகைய மேலான பதங்களை அடையும் முயற்சியைக் கொள்ளாமல்-

---

'பத்த சித்தர் பணிவுற் றிறைஞ்சுந் திலதைப்பதி'-2-118-10. என்பதைத் தழுவுகின்றது. முத்தர் - (ஆவி முத்தர்) இவர்கள் விழிக்குத்தான் இறைவன் புலப்படுவான் - "ஆவி முத்தர்தம் விழியினன்றி முன்னுறா நிமல மூர்த்தி" - கந்தபுரா 1-14-30.

சூது பந்தயம் பேசி யஞ்சுவகை
சாதி விண்பறிந் தோடு கண்டர்மிகு
தோத கம்பரிந் தாடு சிந்துபரி கந்துபாயும்;
வீதி மண்டலம் பூண மர்ந்துகழி
கோல மண்டி நின் றாடி யின்பவகை
வேணு மென்று கண் சோர ஐம்புலனொ டுங்குபோதில்-
*வேதி யன்புரிந் தேடு கண்டளவி
லோடி வெஞ்சுடுங் காட ணைந்துசுட
வீழ்கி வெந்† துகுந் தீடு மிந்த இட
ரென் றுபோமோ;
‡ ஆதி மண்டலஞ் சேர வும்பரம
சோம மண்டலங் கூட வும்பதும
வாளன் மண்டலஞ் சார வுஞ்சுழிப டர்ந்ததோகை-
ஆழி மண்டலந் தாவி யண் டமுத
லான மண்டலந் தேடி யொன் Xறதொமு
கான மண்டலஞ் சேட ணங்கணயில்
கொண்Oடுலாவிச்;
சூதர் மண்டலந் தூளெ ழுந்து பொடி
யாகி விண்பறந் தோட மண்டி யொரு
சூரி யன்திரண் டோடகண்டு **நகை கொண்டவேலா-
††சோடை கொண்டுளங் கான மங்கைமய
லாடி இந்திரன் தேவர் வந்து தொழ
சோழ மண்டலஞ் சாரு மம்பர் வளர்
தம்பிரானே.(1)

---

* 'வேதியன்...ஏடு' - பாடல் 760 பார்க்க. † உகுந்தீடும் - உகுந்திடும்; சந்தநோக்கி நீண்டது. ‡ ஆதி மண்டலம் - ஆதித்த மண்டலம். X அதோமுகமான மண்டலம் - பாதாள லோகம்.

O மயில் இங்ஙனம் உலவும் ஆற்றல் - "தடக்கொற்ற" என்னும் அலங்காரச் செய்யுள் 96 பார்க்க.

** இந்தப் பாடலில் 5-6-7 அடிகள் முருகன் திருவிளையாடல்களைக் குறிக்கின்றன.

'ஆதவ முதல்வன் தன்னை அவிர்மதிப் பதத்தில் ஓச்சும்
சீதள மதியை வெய்யோன் செல்நெறிப் படுத்திச் செல்லும்'
-கந்தபுரா 1-14-26.

'ககன வட்டத்தினொடு பருதி வட்டத்தைவளை
திகிரி வட்டத்திலிட்டு'-முத்துக்குமார...பிள்ளைத்தமிழ் - செங்கீரை-3.

†† சோடை - விருப்பம் "சமர்புரி சோடை கொண்டனன்"
-விநாயகர் புரா-74-64.

சூதாட்டப் பந்தயங்கள் பேசி, அஞ்சுவகை சாதி - ஐந்து வகைப்பட்ட ஜாதியர்-(இனத்தினராம்) ஐம்புலன்கள் - விண்ணையும் நிலை பெயர்த்து ஓடவல்ல (கண்டர்) வீரர்கள், மிக்க (தோதகம்) வஞ்சகச் செயல்களை அன்பு காட்டுவது போலப் புரிந்து, (சிந்துபரி) - கடற்குதிரை - வடவா முகாக்கினி (சுந்துபாயும்) முழுப்பாய்ச்சல் பாய்வது போலப் பாய்ந்து செல்லும்

வீதி மண்டலம் - வீதி வட்டத்தில், பூண் அமர்ந்து - பூணு-தலைக் கொண்டு - சிக்கிக்கொண்டு, கழி - மிக்க, கோலமண்டி அலங்காரங்கள் நிறையும்படி நின்று அனுபவித்து - இன்பவகையே வேண்டுமென்னும் கண் நோக்கத்தால் தளர்ந்து - (ஈற்றில்) ஐம்புலன்களும் ஒடுங்குகின்ற அந்தச் சமயத்தில்

(வேதியன்) பிரமன் - (புரிந்து) தெரிந்து அனுப்பின (ஏடு - சீட்டைப் பார்த்த அளவில், (ஓடி) உயிர் பிரிந்து ஓட, கொடிய சுடுகாட்டைச் சேர்ந்து (உற்றார்) என் உடலைச் சுட்டெரிக்கக் கழிந்துபோய் வெந்து (உகுந்திடும்) சாம்பலாகச் சிதறிப் போகின்ற இந்த வருத்தம் என்று ஒழியுமோ!

(ஆதித்த மண்டலம்) சூரிய மண்டலங்கள் ஒன்று சேரவும், சிறந்த சந்திரமண்டலம் அதனுடன் கூடவும், தாமரையில் வீற்றிருக்கும் பிரமனது உலகம் அங்கு கூடவும், வளைவு காட்டும் (கண் போன்ற வளைவுகள்) படர்ந்துள்ள தோகையைக் கொண்ட (உனது) மயில்.

கடல் வட்டத்தைக் கடந்து அங்கங்கே உள்ள அண்டங்களாம் பிரதேசங்களைத் தேடிப் பொருந்தியும், (அதோ முகான மண்டலம்) கீழே உள்ள பாதாள லோகத்தில் உள்ள ஆதிசேடனை அங்குக் கொத்தி அதை (அயில்) உணவுகொண்டு உலாவவும்

(சூதர்) சூரியர்களின் மண்டலங்கள் தூளெழுந்து பொடியாகி விண்ணிற் பறந்தோடவும் நெருங்கி அங்ஙனம் நெருங்கி வருவதைக் கண்டு ஒவ்வொரு சூரியனும் உருண்டு புரண்டு ஓடுவதைக் கண்டு (நகை கொண்ட) சிரித்து விளையாடின வேலனே!

(சோடை கொண்டு உளம்) உள்ளத்தில் (சோடை) விருப்பம் கொண்டு, காட்டு மங்கையாம் வள்ளிமீது எழுந்த மோகத்தில் அவளுடன் விளையாடி, இந்திரனாதி, தேவர்கள் வந்துதொழச் சோழ மண்டலத்தைச் சார்ந்த **அம்பர்** என்னும் தலத்தில் வாழ்ந்து வீற்றிருக்கும் தம்பிரானே! (இடர் என்று போமோ)

## திருமாகாளம்.

(இஃது அம்பர் மாகாளம் என்னும் ஸ்தலமாய் இருக்கலாம். பேரளத்துக்குத் தென்கிழக்கு சுமார் 4-மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல பெற்றது. கீழ்வேளூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சுமார் 3-மைல் தூரத்தில் 'ஆனைமாகாளம்' என்னும் ஒரு ஸ்தலம் இருக்கின்றது.)

## 810. நாம விசேடம்

தானான தானதன தானதன தானதன
தானான தானதன தானதன தானதன
தானான தானதன தானதன தானதன தனதான

காதோடு தோடிகலி யாடவிழி வாள்சுழல
கோலாக லாரமுலை மார்புதைய பூணகல
காரோடு கூடளக பாரமல ரோடலைய அணைமீதே-

காலோடு காலிகலி யாடபரி நூபுரமொ
டேகாச மானவுடை வீசியிடை நூல்துவள
காவீர மானஇத ழூறல்தர நேரமென மிடறோதை;

நாதான கீதகுயில் போல அல்குல் மால்புரள
மார்போடு தோள்கரமொ டாடிமிக நாணழிய
நானாவி நோதமுற மாதரொடு கூடிமயல் படுவேனை-

நானாரு நீயெவனெ னாமலென தாவிகவர்
சீர்பாத மேகவலை யாயுமுன வேநிதமு
*நாதாகு மாரமுரு காஎனவு மோத அருள் புரிவாயே;

பாதாள சேடனுட லாயிரப ணாமகுட
மாமேரொ டேழுகட லோதமலை சூரருடல்
பாழாக தூளிவினி லேறபுவி வாழவிடு சுடர்வேலா-

---

* 'நாதா குமார முருகா' - 'நாதா குமார நம' என்பது மந்திரம்; 'நாதா குமார நம' என்றரனார் ஓதாய் என ஓதியது' -கந்தர நுபூதி 36.

# திருமாகாளம்

## 810.

**காதி**லுள்ள தோடுடன் (இகலி) மாறுபட்டுப் பாயும் கண் வாள்போலச் சுழல, (கோலாகல - ஆரம் - முலை) ஆடம்பரமுள்ளதும் முத்துமாலை அணிந்ததுமான கொங்கை (மார் - புதைய) மார்பை மறைக்க, (மார்பில் உள்ள) ஆபரணங்கள் அகன்றுபோக, மேகம் போன்ற கூந்தற்பாரம் அதிற் சூடியுள்ள மலர்களுடன் அலைய, படுக்கையின்மேல்-

காலுடன் கால் இகலி - மாறுபட்டு அசைய, (பரி) தரித்துள்ள, சிலம்புடன், மேலே அணிந்துள்ள ஆடைவீசப்பட்டு நூல்போன்ற இடை துவட்சியுற, காவீரமான - கவீரமான - செவ்வலரிபோலச் சிவந்த வாயிதழ் ஊறலைத்தர, அன்பு காட்டுவதுபோலக் கண்டத்து ஒலி-

(நாதமான) இனிய ஒலியான கீதம்போல ஒலிக்கும் குயில்போல விளங்கி, அல்குலில் அன்பொழுச்கம் புரள, மார்பும், தோளும், கையும் ஒன்றோடொன்று பிணைபட்டு ஆடி, மிகவும் நாணம் கெட்டழிய, பலவித வினோதங்களை அனுபவித்து, பெண்களோடு கூடி மோக மயக்கம் கொள்கின்ற என்னை-

நான் ஆர், நீ எவன் (எவன் நீ) என்று என்னைப் புறக்கணிக்காமல் என்னுடைய உயிரை வசீகரிக்கின்ற (உனது) சீரிய திருவடித் தியானமே எனக்குள்ள கவலையாய், (முன்னவே, நினைக்கவும்) நாள்தோறும் "நாதா! குமார! முருகா" என்று ஓதவும் திருவருளைத் தந்தருளுக!

பாதாளத்தில் உள்ள ஆதிசேடனுடைய உடல், ஆயிரம் படங்களாம் மகுடங்கள், மகாமேரு இவைகளுடன் ஏழுகடல் வெள்ளம், கிரௌஞ்சமலை, சூரர்களின் உடல் - இவையெலாம் பாழ்பட, பொடிபட்ட தூள் விண்ணிலே போய்ப்படிய உலகுவாழச் செலுத்தின ஒளிவேலனே!

பாலாழி மீதரவின் மேல்திருவொ டேயமளி
சேர்நீல ரூபன்வலி ராவணகு ழாமிரிய
பாரேவை யேவிய *மு ராரியைவர் தோழனரி
மருகோனே;

மாதாபு ராரிசுக வாரிபரை நாரியுமை
ஆகாச ரூபியபி ராமிவல மேவுசிவன்
†மாடேறி யாடுமொரு நாதன்மகிழ் ‡போதமருள்
குருநாதா-

Xவானோர்க ளீசன்மயி லோடுகுற மாதுமண
வாளாகு காகுமர மாமயிலின் மீது திரு
மாகாள மாநகரில் மாலொடடி யார்பரவு
பெருமாளே. (1)

## இஞ்சிகுடி

(இது பேரளம் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபம். திருமாகாளத்துக்கு வடக்கு 2 மைல்.)

### 811. பாட

தந்ததனத் தான தான தனதன
தந்ததனத் தான தான தனதன
தந்ததனத் தான தான தனதன தனதான

குங்குமகற் பூர நாவி யிமசல
சந்தனகத் தூரி லேப பரிமள
கொங்கைதனைக் கோலி நீடு முகபட நகரேகை-

---

* முராரி - பாடல் 522-பக்கம் 196 கீழ்க்குறிப்பு.

† இடபத்தின் மேலிருந்தபடியே இறைவன் நடம் புரிதல்:
'பேரிடபமோடும்....நின்று நடமாடி" -
"எருதுகைத்து அருநட்டம் ஆடல் பேணுவர்'
-சம்பந்தர் 3-82-7; 2-107-2.

‡ சிவனுக்கு உபதேசித்தது:
-பாடல் 327-பக்கம் 314; பாடல் 628-பக்கம் 462.

X வானோர்க ளீசன் மயில் - தேவேந்திரனுடைய மகளாகிய தெய்வயானை.

பாற்கடலின்மேல் பாம்பின்மேல் இலக்குமியுடன் படுக்கை கொண்ட நீல உருவத்தினன், வலிமை பொருந்திய ராவணனும் அவன் கூட்டத்தாரும் அஞ்சி ஓடி விலகப் பூமியில் (ஏவை) அம்பைச் செலுத்தின முராரி, (முராசுரனுடைய பகைவனும்), பஞ்சபாண்டவர் ஐவரின் தோழனுமான திருமாலின் மருகனே!

மாதா, (புராரி) திரிபுரத்தை எரித்தவள், சுகக்கடல், பரதேவதை, நாரி (பெண்), உமை, ஆகாச சொரூபி, (அபிராமி) அழகி, ஆகிய பார்வதியின் வலப்பால் உள்ள சிவன், ரிஷப (விடை) வாகனன், நடனம் செய்யும் ஒரு தலைவன் (அல்லது விடையின்மேல் நடிக்கும் ஒப்பற்ற தலைவன் ஆகிய சிவன்) மகிழும்படியான ஞானப்பொருளை அவருக்கு அருளின குருமூர்த்தியே;

(வானோர்கள் ஈசன்) தேவேந்திரன் (வளர்த்த) மயில்போன்ற தேவசேனையுடன் (குறமாது) வள்ளியை மணந்த மணவாளனே! குகனே! குமரனே! சிறந்த மயிலின்மீது **திருமாகாள** மகா நகரில் ஆசையுடனே அடியார்கள் பரவி வழிபடும் பெருமாளே!

(நாதா, குமாரமுருகா எனவும் ஓத அருள்புரிவாயே)

## இஞ்சிகுடி

## 811.

**கு**ங்குமம், பச்சைக் கற்பூரம், (நாவி) புனுகுச்சட்டம்) (இம சலம்) பனிநீர் - பன்னீர், சந்தனம், கஸ்தூரி, இவைகளின் (இலேபம்) பூசுகையால் நறுமணம் கொண்டுள்ள, நகரேகை கொண்டுள்ள, கொங்கை வளையும்படி பெரிய (முகபடம்) மூடு துணியை - ரவிக்கை மேலாடை முதலிய அணிந்து,

கொண்டைதனைக் கோதி வாரி *வகை வகை
துங்கமுடித் தால கால மென வடல்
கொண்டவிடப் பார்வை காதினெதிர்பொரு மழுதேயாம்;

அங்குளநிட் டூர மாய விழிகொடு
வஞ்சமனத் தாசை கூறி யெவரையு
மன்புடைமெய்க் கோல ராக விரகினி லுறவாடி-
அன்றளவுக் கான காசு பொருள்கவர்
மங்கையர்பொய்க் காதல் மோக வலைவிழ
லன்றியுனைப் பாடி வீடு புகுவது மொருநாளே;

சங்கதசக் ரீவ னோடு † சொலவள
மிண்டுசெயப் போன வாயு சுதனொடு
சம்பவசுக் ரீவ னாதி ‡ யெழுபது வெளமாகச்-
சண்டகவிச் சேனை யால்மு Xனலைகடல்
குன்றிலடைத் தேறி மோச நிசிசரர்
தங்கிளைகெட் டோட ஏவு சரபதி மருகோனே;

Oஎங்கநினைப் போர்கள் நேச சரவண
சிந்துகர்ப் பூர ஆறு முககுக
எந்தனுடைச் சாமி நாத வயலியி லுறைவேலா-

---

***பெண்கள் கூந்தலை வகை வகையாக முடித்தல்**: முடித்தல் ஐவகை என்ப; அவைதாம் - கொண்டை, குழல், பனிச்சை, முடி, சுருள், (திவாகரம்): கொண்டை, குழல், பனிச்சை, அளகம், துஞ்சை எனவும் கூறுவர். இவைகளுக்கு 'ஐம்பான் முடி' எனப்பெயர்:

"குழலையும் அளகத்தையும் வகுத்தும், கொண்டையைத் தொகுத்தும், பனிச்சையையும் துஞ்சையையும் விரித்தும்" என விளக்கினார் - *சிந்தாமணி 2437 உரையில்.*

† **'சொலவள மிண்டு செயப்போன அநுமான்'** -

அநுமானைச் 'சொல்லின் செல்வன்' என்றார் கம்பர் - "யார் கொல் இச் சொல்லின் செல்வன்......விரிஞ்சனோ விடை வல்லானோ" - *கம்பரா-மராமர-20.*

‡ **எழுபது வெள்ளம் சேனை**:

-பாடல் *515* பக்கம் *180*-கீழ்க்குறிப்பு.

X **கடல் அடைத்தது**:

-பாடல் *149*-அடி *5*; பாடல் *754*-பக்கம் *248* கீழ்க்குறிப்பு.

O இது உருக்கமுள்ள அடி; மனப்பாடம் செய்யத் தக்கது.

*கூந்தலைச் சீவி வாரி விதம் விதமாக அழகிய வகையில் முடித்து,* ஆலகால விஷம்போல வலிமை *(கொண்டதான)* விஷப் பார்வை *(கண் ஆனது) காதின் எதிரில் போய்ச் சண்டையிடும் அமுத மயத்ததாம்;*

அவ்வண்ணம் அங்கு உள்ள *(நிஷ்டூரம்)* கொடுமை கொண்டதான மாய சக்தி உள்ள கண்கொண்டு, உள்ளே வஞ்சகமுள்ள மனத்துடனே, *(புறத்தே)* ஆசை மொழிகளைக் கூறிச் *(சந்தித்த)* எவருடனும் அன்பு காட்டி. மெய்யே உருவெடுத்ததோ என்னும்படி ஆசைகூடிய சாமர்த்தியத்துடன் மொழி பேசி-

அன்றைய பொழுதுக்கான காசுப் பொருளைக் கிரகிக்கின்ற *(பொது)* மங்கையரின் பொய்யன்பாகிய மோகவலையில் விழுதல் இல்லாமல் உன்னைப்பாடி மோக்ஷ வீட்டில் புகும்படியான ஒரு நாள் *(எனக்குக்)* கிடைக்குமா?

*(சங்கம்)* கூட்டமான *(தசக்ரீவனோடு)* பத்துத்தலையனாம் ராவணனோடு *(சொல)* தூது சொல்லுதற்கு வேண்டிய *(வளம்)* சொல்வளம் முதலிய ஆற்றல்கொண்டு *(மிண்டு செயப்போன)* வீரச்செயல்கள் செய்வதற்குச் சென்ற *(வாயி சுதனொடு)* அநுமாரொடு, *(சம்பவ)* நிகழ்ச்சிகளிற் சம்பந்தப்பட்ட சுக்ரீவன் முதலான எழுபது வெள்ளம் சேனையுடன்-

*(சண்ட)* வலிமை வாய்ந்த *(கவிச் சேனையால்)* குரங்குப் படையால் முன்பு அலைகடலைக் குன்றுகள் *(சிறுமலைகள்)* கொண்டு அடைத்து - அணைகட்டிக் - *(கடலைத்தாண்டி)* அக்கரையில் *(இலங்கையில்)* ஏறி, மோசம் எண்ணமுடைய அசுரர்களுடைய சுற்றம் அழிந்து ஓடச்செலுத்தின அம்பினைக் கொண்ட தலைவன் **ஸ்ரீ**ராமரின் - திருமாலின் மருகனே!

எந்தப் ப்ரதேசத்திலிருந்து நினைப்பவர்களுக்கும் நேசனே! சரவணனே! *(சிந்துரம்)* செம்பொடி - *(கர்ப்பூரம்) பச்சைக்கர்ப்பூரம் இவை அணிந்துள ஆறுமுகனே! குகனே! அடியேனுக்கு உரிய சாமிநாதப் பெருமானே! வயலூரில் உறைகின்ற வேலனே!

---

* *'கர்ப்பூரச் சொக்கர்' - மதுரைக் கலம்பகம் 54.*

இன்புறுபொற் கூட மாட நவமணி
மண்டபவித் தார வீதி புடைவளர்
இஞ்சிகுடிப் பார்வ தீச ரருளிய பெருமாளே.(1)

## திருநள்ளாறு.

(ரெயில்வே ஸ்டேஷன். காரைக்காலுக்கு மேற்கு 3-மைல். மூவர் தேவாரமும் பெற்றது. ஸ்தலபுராணம் உண்டு.)

### 812. குமரா என உருக

தத்த தந்தன தானன தானன
தத்த தந்தன தானன தானன
தத்த தந்தன தானன தானன தனதான

*பச்சை யொண்கிரி போலிரு மாதன
முற்றி தம்பொறி சேர்குழல் வாளயில்
பற்று புண்டரி காமென ஏய்கயல் விழிஞான-
பத்தி வெண்டர ளாமெனும் வாணகை
† வித்ரு மஞ்சிலை போல்நுத லாரிதழ்
பத்ம செண்பக மாமநு பூதியி னழகாளென்;
றிச்சை யந்தரி பார்வதி மோகினி
தத்தை பொன்கவி னாலிலை போல்வயி
றிற்ப சுங்கிளி யானமி னூலிடை யபிராமி-
எக்கு லங்குடி லோடுல கியாவையு
‡ மிற்ப திந்திரு நாழிநெ லாலற
மெப்பொ தும்பகிர் வாள்கும ராஎன வுருகேனோ;

---

* "பச்சை" எனத்தொடங்கி உமாதேவியாரின் பெருமையை ஓதும் இச் செய்யுள், மதுரையிற் சமணர்கள் சம்பந்தமூர்த்தி ஸ்வாமிகளுடன் வாது செய்கையில், ஸ்வாமிகள், தேவாரத் திருப்பதிகங்களுள், திருநள்ளாற்றில் வீற்றிருக்கும் உமாதேவியாரின் பெயராகிய 'போக மார்த்தபூண் முலையினாள்..." என்னும், அத்தலத்துப் பாடலுள்ள ஏட்டைத் திருவருளாற் பெற்ற அதனை நெருப்பிலிட, அது பச்சையாகவே இருந்த அற்புதத்தைக் குறிப்பால் விளக்குகின்றது.

† வித்ருமம் - சிலை - இதழ் - நுதல் என வரிசைப் படுத்தாது நுதல் - இதழ் என்று இடம் மாறி உவமை கூறினது முரண் நிரனிறையணி (நிரலே நிறுத்தி மொழிமாற்றிப் பொருள் கொள்வது)

‡ இருநாழி நெல்லால் அறம் வளர்த்தது
-பாட்டு 460-பக்கம் 34 கீழ்க்குறிப்பு.

இன்பம் தரத்தக்க அழகிய கூடங்கள், மாடங்கள், புதிது புதிதான நவரத்னங்கள் இழைக்கப்பட்ட மண்டபங்கள் அகன்ற தெருக்களின் பக்கத்தே வளர்கின்ற **இஞ்சிகுடி** என்னும் தலத்தில் பார்வதிபாகர் - சிவன் அருளிய பெருமாளே!

(உனைப் பாடி வீடு புகுவதும் ஒரு நாளே!)

## திருநள்ளாறு.

## 812.

**ப**ச்சைநிற முள்ளதும், ஒளி உள்ளதும் மலை-போன்றதுமான இரண்டு பெரிய கொங்கைகளைக் கொண்டு இன்பம் அனுபவிக்கும் (பொறி) வண்டுகள் (அல்லது பொலிவு) சேர்கின்ற கூந்தலையும், (வாள்) ஒளி கொண்ட வேல் போன்றதும், தாமரையின் தகைமையது என்று சொல்லத்தக்கதும், (கயல்ஏய்) மீன் போன்றதுமான கண்களையும், ஞானஒளி

வரிசையில் உள்ள வெள்ளை முத்துக்கள் என்னும்படியான ஒளிவீசும் பற்களையும், (வித்ருமம் சிலைபோல் நுதலாரிதழ்) சிலைபோல் நுதல் - வித்ருமம்போல் இதழ் - வில்லுக்கு ஒப்பான நெற்றியையும், வித்ருமம் - பவளம், (பத்மம்) தாமரை, செண்பகம் இவைக்கு ஒப்பான இதழையும் (உடைய) ஞான அருட்பிரகாச அழகி, எனப்படுபவள்,

இச்சையெலாம் பூர்த்திசெயும் (அந்தரி) பராகாசவடிவி, பார்வதி, (மோகினி) - பேரழகி, (தத்தை) கிளி, பொன்னின் அழகுவாய்ந்த ஆலிலைபோன்ற வயிற்றினள், இல்லறம் நடத்தும் பசுங்கிளி போல்பவள், மின்னலும் நூலும் போன்ற இடையை உடைய (அபிராமி) அழகி -

எல்லாக் குலத்தாருக்கும், எல்லா உடலுக்கும், உலகங்கள் எவைக்கும், இருந்த இடத்தில் இருந்தே இரண்டு (நாழி) படி நெல்கொண்டு (முப்பத்திரண்டு) அறங்களையும் எப்போதும் பங்கிட்டு அளிப்பவள் - ஆகிய பார்வதி - (ஏலவார் குழலியின்) குமரனே! என்று (கூறி) உள்ளம் உருகமாட்டேனோ!

கச்சை யுந்திரு வாளுமி ராறுடை
பொற்பு யங்களும் வேலுமி ராறுள
கட்சி வங்கம லாமுக மாறுள முருகோனே-
கற்ப கந்திரு நாடுயர் வாழ்வுற
சித்தர் விஞ்சையர் மாகர்*ச பாசென
கட்ட வெங்கொடு சூர்கிளை வேரற விடும்வேலா;

† நச்சு வெண்பட மீதணை வார்முகில்
பச்சை வண்புய னார்கரு டாசனர்
நற்க ரந்தநு கோல்வளை நேமியர் மருகோனே-
நற்பு னந்தனில் வாழ்வளி நாயகி
யிச்சை கொண்டொரு வாரண மாதொடு
நத்தி வந்துந ளாறுறை தேவர்கள்
பெருமாளே.(1)

## வழுவூர்.

(இது தேவார வைப்பு ஸ்தலம், மாயூரத்துக்குத் தெற்கில் உள்ள இலந்தங்குடி ரெயில் ஸ்டேஷனுக்கு மேற்குக் கால் மைல். அஷ்டவீரத் தலங்களுள் ஒன்று. தாருகாவன இருடிகள் ஏவிய யானையைச் சிவபிரான் உரித்தருளிய ஸ்தலம்.)

## 813. சிவநேசம் வர

தனனாதன தானன தானன
தனனாதன தானன தானன
தனனாதன தானன தானன தனதானா

‡ தருவூரிசை யாரமு தார்நிகர்
குயிலார்மொழி தோதக மாதர்கள்
தணியாமய லாழியி லாழவு மமிழாதே-
தழலேபொழி கோரவி லோசன
மெறிபாசம காமுனை சூலமுள்
சமனார்முகில் மேனிக டாவினி லணுகாதே;

---

*'சபாஷ்' என்ற இந்தச் சொல்லினின்றும் - மகமதியர் கால அரசாட்சி வந்துவிட்ட காலம் அருணகிரியார் காலம் என்பது பெறப்படும்.

† வெண்படம் - ஆதிசேடன் வெண்ணிறம் உடையவன்
- (தக்கயாகப்பரணி 282- உரைக்குறிப்பு.)

‡ தரு-மரம் - மூங்கில்; ஒருவகை இசைப்பாட்டு.

அரையிற் கச்சை, அழகிய வாள், பன்னிரண்டு அழகிய புயங்கள், வேல், பன்னிரண்டு கண்கள், மங்களமான தாமரையன்ன திருமுகங்கள் ஆறு இவை கொண்ட முருகனே!

கற்பகமரம் உள்ள செல்வ நிறைந்த நாடு - பொன்னுலகம் உயர்ந்த வாழ்வைப்பெறச் சித்தர்களும், விஞ்சையர்களும், (மாகர்) விண்ணுலகத்துத் தேவர்களும், 'சபாஷ்' என்று மெச்சக், கஷ்டம் கொடுத்து வந்த மிகக் கொடிய சூரனது சுற்றத்தார் யாவரும் வேரறச் செலுத்தின வேலனே!

விஷமுள்ள வெண்ணிறப்படம் கொண்ட ஆதிசேடன் மீது (அணை) படுக்கை கொண்டவர், மேகநிறம், பச்சைநிறம் கொண்ட வளமார்ந்த புயத்தை உடையவர், கருடவாகனங் கொண்டவர், நல்ல கரத்தில் வில், அம்பு, சங்கு, சக்கரம் கொண்டவர் மருகனே!

நல்ல தினைப்புனத்தில் வாழ்ந்திருந்த வள்ளி நாயகியின்மீது காதல்கொண்டு (அல்லது வள்ளிநாயகியின் காதலைப் பெற்று), ஒப்பற்ற வாரணமாதொடு (யானை வளர்த்த தேவசேனையுடன் விரும்பி வந்து **திருநள்ளாறு** என்னும் தலத்தில் உறைகின்ற பெருமாளே! தேவர்கள் பெருமாளே! (குமரா என உருகேனோ!)

## வழுவூர்
## 813.

(**தருவூர் இசையார்**) மரம் - மூங்கிலில் - புல்லாங்குழலில் ஏற்படுகின்ற இசையார் - குழலிசையார் - குழல்போல் இசைபாட வல்லார், அமுதனையவர், (குயிலார் நிகர்மொழி - குயிலின் குரலுக்கு ஒப்பான (இனிய) மொழியார், (தோதக மாதர்கள்) வஞ்சகஞ்செயும் மாதர்கள் - (இவர்மீதுள்ள குறைவுபடாத காம இச்சைக் கடலில் ஆழ்ந்தும் ஆழாமல் - (ஆழ்ந்து அமிழாமல்) அமிழ்ந்து போகாமலும் -

நெருப்பையே பொழிகின்ற பயங்கரமான கண்கள், எறிந்து வீசப்படும் பாசக்கயிறு, விசேடமான முனைகளை (நுனியை) உடைய சூலம் (உள்) இவைகளை உடைய அல்லது முள் முனை சூலம் முள்போன்ற கூர்மையுடைய சூலம் (உடைய) யமனார், கரு மேகம் போன்ற நிறங்கொண்ட (தனது) எருமைக் கடாவின்மேல் ஏறிவந்து (என்னை) அணுகாமலும் -

கருவூறிய நாளுமு நூறெழு
மலதேகமு மாவலு மாசைக
படமாகிய பாதக தீதற மிடிதீரக்-

*கனிவீறிய போதமெய் ஞானமு
மியலார்சிவ நேசமு மேவர
கழல்சேரணி நூபுர **தாளிணை** **நிழல்தாராய்;**

புருகூதன்மி னாளொரு பாலுற
சிலைவேடுவர் மானொரு பாலுற
† புதுமாமயில் மீதணை யாவரு மழகோனே-

புழுகார்பனிர் மூசிய வாசனை
யுரகாலணி கோலமென் மாலைய
‡ புரி நூலுமு லாவுது வாதச புயவீரா;

மருவூர்குளிர் வாவிகள் சோலைகள்
செழிசாலிகு லாவிய கார்வயல்
மகதாபத சீலமு மேபுனை வளமுதூர்-

மகதேவர்பு ராரிச தாசிவர்
சுதராகிய தேவசி காமணி
**வழுவூரில்**நி லாவிய வாழ்வருள் பெருமாளே. (1)

---

* இந்த அடி மிக நயமானது; மனப்பாடஞ் செய்யவேண்டிய அடி. 813- ஆம் பாடலே அழகிய பாடல்; மனப்பாடத்துக்கு உரியது.

† புதுமை - எழில், அதிசயம்:
'புதுமயி லூர்பரன் புராணம்' - கந்தபுரா - அவையடக்கம் 13.
'புதிய மயில் ஏறுகந்த' - திருப்புகழ் 142.

‡ புரிநூல் - "பத்மக் கரங்களும் செம்பொனூலும்"
- திருப்புகழ் 1277.
'மணிப்பூண் அகன்மார்பும் பைம்பொற் புரிநூலும்'
- கந்தர்கலி வெண்பா 54.

(கருவூரிய நாளு முநூறு) (கருவில் ஊறிநின்ற முந்நூறு நாள்களும், (பின்பு எழுகின்றதான மலங்களுக்கு இடமான தேகமும், (ஆவலும் ஆசை) ஆசை ஆவலும் - பொன் ஆசை (முதலான மூவகை ஆசைகளும் - மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசைகளும்), கபடமாகிய பாதகதீது - வஞ்சகத்தால் ஏற்படும் பெரும் பாபத் தீமைகள் அற்றுப்போகவும், வறுமை தொலையவும் -

(கனி) இனிமை மிக்க அல்லது முதிர்ந்த அறிவும், மெய்ஞ்ஞானமும், தகுதி மிக்க சிவ நேசமும் (எனக்கு) உண்டாக, கழலும் அதனுடன் சேர்ந்துள்ள அழகிய (அல்லது ஆபரணமாம்) சிலம்பும் (கொண்ட உனது) தாளிணை நீழலைத் தந்தருளுக.

இந்திரனுடைய (மின்ஒத்த) மகள் தேவசேனை ஒரு பக்கம் வீற்றிருக்க, வில் ஏந்திய வேடர்மான் வள்ளியம்மை ஒரு பக்கம் வீற்றிருக்க, (புது மாமயில்) அதிசயிக்கத்தக்க, (அல்லது எழில் உடைய) சிறந்த மயில்மீது (அணைந்து) ஏறிவரும் அழகனே!

புனுகுசட்டம், நிறைந்த பன்னீர் இவை நெருங்கக்கூடிய வாசனையுள்ள... மாலைய (மாலையை உடையவனே)! உரகாலணி கோலமென் மாலைய - (உரம் கால்) மார்பிடத்தே (அல்லது மார்பிலும் திருவடியிலும்) அணிந்துள்ள அழகிய மெல்லிய மாலையனே (மாலையை உடையவனே)! முப்புரி நூல் (பூணூல்) அசைகின்ற (துவாதச) பன்னிரண்டு புயங்கள் கொண்ட வீரனே!

வாசனை குலவும் குளிர்ந்த குளங்கள், சோலைகள் செழிப்புள்ள நெல் தழைத்துள்ள (கார் வயல்) அழகிய (அல்லது பசுமைகாட்டும்) வயல்கள்... (புணை) சேர்ந்துள்ள (வள மூதூர்) வளப்பம் உள்ள பழைய ஊர், மகதாபத சீலமு மேபுனை வள முதூர் - விசேடமான (தாபதம்) முனிவர் வாசங்களைக் கொண்ட அழகினை உடைய வளப்பம் உள்ள பழைய ஊராகிய (வழுவூரில்).... பெருமாளே)!

மகாதேவர், புரத்தை எரித்தவர், சதாசிவர் ஆகிய சிவனது பிள்ளையாகிய தேவசிகாமணியே! **வழுவூரில்** வீற்றிருந்து (அடியார்க்கு) வாழ்வு அருளும் பெருமாளே!

(தாளிணை நிழல் தாராய்)

## 814. சரித்திர வரலாறு

தனனா தத்தன தாத்த தந்தன
தனனா தத்தன தாத்த தந்தன
தனனா தத்தன தாத்த தந்தன தனதான

*தலைநா ளிற்பத மேத்தி யன்புற
வுபதே சப்பொரு ளூட்டி மந்திர
தவஞா னக்கட லாட்டி யென்றனை யருளாலுன்.

சதுரா கத்தொடு கூட்டி யண்டர்க
ளறியா முத்தமி ழூட்டி முண்டக
தளிர்வே தத்துறை காட்டி மண்டலம் வலமேவுங்;

கலைசோ திக்கதிர் காட்டி நன்சுட
ரொளிநா தப்பர மேற்றி முன்சுழி
கமழ்வா சற்படி நாட்ட முங்கொள விதிதாவிக்-

கமலா லைப்பதி சேர்த்து முன்பதி
வெளியா கப்புக ஏற்றி யன்பொடு
கதிர்தோ கைப்பரி மேற்கொ ளுஞ்செயல் **மறவேனே;**

சிலைவீ ழக்கடல் கூட்ட முங்கெட
அவுணோ ரைத்தலை வாட்டி † யம்பர
சிரமா லைப்புக வேற்ற வுந்தொடு கதிர்வேலா-

---

* இது அருணகிரிநாதர் திருவடி தீக்ஷை, உபதேசம் முதலிய பேறுகளைப் பெற்ற வரலாற்றைக் குறிக்கும்.

† அம்பர சிர மாலைப் புக ஏற்ற - ஆகாயத் துச்சியி லுள்ள சுவர்க்கத்தில் இந்திரனைக் குடியேற்ற; மால் - இந்திரன்.

# 814.

எனது அடிநாளில் (வாழ்க்கைத் தொடக்கத்தில்) உனது திருவடியை (என் தலைமீது) வைத்து, அன்புடனே உபதேசப் பொருளை (எனக்குப்) போதித்து, சிவமந்திரங்களாலே (என்னைத்) தவஞானக் கடலில் ஆட்டுவித்து - தவநிலை ஞானநிலை இவை தமிற் புகவைத்து - என்னை (உனது) திருவருளினாலே உன்னைச் சார்ந்த -

(சதுராகத்தோடு) சதுர் - சாமர்த்தியம் உள்ள, ஆகத்தொடு - ஆகத்தினரோடு - உடலினரோடு - (உன் சதுராகத்தொடு) உன்னைச் சார்ந்துள்ள தேர்ச்சிபெற்ற அடியார் கூட்டத்துடன் - (என்னைக்) கூட்டி வைத்துத், தேவர்களும் அறியாத முத்தமிழையும் எனக்குப் போதித்து, முண்டக தளிர் வேதத்துறை (முண்டக உபநிஷத் முதலான உபநிடத உண்மைகளையும் வேதத்துறை - வேத வழிகளையும் புலப்படுத்தி, அக்கினியாதி மும்மண்டலங்களும் உள்ள மேலிடத்தே

கலைசோதிக் கதிர்காட்டி - இடைகலை - பிங்கலை என்னும் நாடிகளின் மார்க்கமாக ஏற்படும் ஜோதி ஒளியைத் தரிசிப்பித்து, (ஆன்மாவை) அந்த - நல்ல பேரொளியுள்ள பரநாதத்தொடு -பரசிவத்தொடு கூட்டி, முன்னதாக சுழிமுனை நாடி விளங்கும் (வாசற்படி) முதல் வாயிலினிடத்தே - கவனம் கொள்ள, விதிதாவி - பிரமபீடமாகிய சுவாதிஷ்டான ஆதாரத்தைக் கடந்து -

கமலாலைப்பதி சேர்த்து - மூலாதார ஸ்தலமான திருவாரூர் முதலிற் சேர, அது முதலாக உள்ள தலங்கள் - பிற ஆதார ஸ்தலங்களாகிய திரு ஆனைக்கா, திரு அண்ணாமலை, சிதம்பரம், காளத்தி, காசி இவைகள் புலப்பட யோக ஒளியை ஏற்றிவைத்து, அன்புடனே ஒளிவீசும் தோகையை உடைய மயில்வாகனத்தின் மேல் நீ வந்து அருளிய செயலை மறக்க மாட்டேன், (யோகாநுபூதி தந்து, யோக நிலைக் காட்சிகளை யான் காணவைத்த அன்பையும், மயில்மேல் தந்த தரிசனத்தையும் மறவேன் என்றவாறு).

விற்படைகள் வீழவும், கடல்போன்ற கூட்டம் கெட்டழியவும், அசுரர்களின் தலைகளை அழித்து, (அம்பர சிரத்தில்) ஆகாயத்து உச்சியில் உள்ள சுவர்க்கத்தில் (மாலை) இந்திரனை - புக ஏற்ற - குடியேற்றிவைக்கச் செலுத்தின ஒளிவேலனே!

சிவகா மிக்கொரு தூர்த்த ரெந்தையர்
வரிநா கத்தொடை யார்க்கு கந்தொரு
சிவஞா னப்பொரு ளூட்டு முண்டக அழகோனே;

மலைமே வித்தினை காக்கு மொண்கிளி
யமுதா கத்தன வாட்டி யிந்துள
மலர்மா லைக்குழ லாட்ட ணங்கிதன் மணவாளா-

வரிகோ ழிக்கொடி மீக்கொ ளும்படி
நடமா டிச்சுரர் போற்று தண்பொழில்
வழுவூர் நற்பதி வீற்றி ருந்தருள்
பெருமாளே.(2)

**கன்னபுரம்.**

(இது 'கண்ணபுரம்' என்னுந் தலமாயிருக்கலாம்: நன்னிலம் ரெயில் ஸ்டேஷனுக்குச் சமீபம்.) கொங்கு மண்டலத்திற் காங்கேய நாடு என்னும் பகுதியில் † 'கன்னபுரம்' என ஒருதலம் உளது.

## 815. வீடுபெற

தன்னதனத் தன்னதனத் தன்னதனத் தன்னதனத்
தன்னதனத் தனாதாத்த தந்ததான

அன்னமிசைச் செந்நளிநச் சென்மிகணக் கந்நியமத்
தன்னமயப் புலால்யாக்கை துஞ்சிடாதென்

றந்நினைவுற் றன்னினைவுற் றன்னியரிற் றன்னெறிபுக்
கன்னியசற் றுலாமுச்ச டங்கயோகம்;

என்னுமருட் கின்னமுடைப் பன்னவைகற் றின்னவைவிட்
டின்னணமெய்த் தடாமார்க்க மின்புறாதென்-

† 'தேங்கு கன்னபுரம்.... செழிக்குங் காங்கேய நாடெங்கள் நாடே" - கொங்கு மண்டல ஊர்த்தொகை. பக்கம் 5,6.

(சிவகாமி) சிவகாம சுந்தரியின் ஒப்பற்ற (தூர்த்தர்)- காமுகர், என் தந்தையார், கோடுள்ள பாம்புமாலை அணிந்தவர் - ஆகிய சிவனுக்கு - மகிழ்ச்சியுடன் ஒப்பற்ற சிவஞானப் பொருளை உபதேசித்த அழகனே! தாமரை மலரில் விளங்கின அழகனே!

(வள்ளிமலையில்) இருந்து தினைப்புனம் காத்த அழகுக் கிளி, அமுதன்ன உடலும் கொங்கையும் கொண்டவள், (இந்துளம்) கடப்பமலர் மாலையைக் கூந்தலில் விளங்கக்கொண்ட (அணங்கி) அழகு வடிவை உடையவளாம் (அல்லது குழலாள், தண் அங்கி குளிர்ந்த அங்கத்தை உடையவளாம்) வள்ளியின் மணவாளனே!

(வரி)- நீண்ட கோழிக்கொடி மேலே விளங்கும்படி நடனமாடித், தேவர்கள் போற்றுகின்ற குளிர்ந்த சோலை சூழ்ந்த **வழுவூர்** என்னும் நல்ல ஊரில் வீற்றிருந்தருளும் பெருமாளே!

(மறவேனே)

## கன்னபுரம்.

## 815.

**அ**ன்னப்பறவையின் மேல் (ஏறுபவனும்), செவ்விய நளினம் (திருமாலின் உந்தித்) தாமரையில் (சென்மி) ஜென்மித்தவனுமான (பிறந்தவனான) பிரமனுடைய (கணக்கு) (சீட்டிற் கண்ட) கணக்கில் உள்ள (அந் நியமத்து) அந்தவரை யறுக்கையின்படி - அந்தக் கணக்கின்படி, (அன்னமயம்) சோற்றின் மயமான (புலால்) மாமிசத்தோடு கூடியதுமான (யாக்கை) உடலானது இறந்து போகாது - அழியாது என்ற

அந்த நினைவு கொண்டே, (அல் நினைவு) மயக்க நினைவுகள் கொண்டே, (அன்னியரில்) (தன்னெறிபுக்கு) அயலார் போன்ற - பகைவர் போன்ற - ஐம்புலன்களின் - வழியே புகுந்து சென்றும், (ஐம்புலன்கள்) ஆட்டுவித்தபடியே ஆடியும்), (அன்னிய) வேறும் - (பின்னும்) சிறிது சிறிதாக உலவுகின்ற மூச்சு அடங்கும்படி யோகம்

என்கின்ற (மருள்) மயக்கத்தைத்தரும் உணர்ச்சிகொண்டு (கின்னம் உடை) துன்பத்தைத்தரும் (பன்னவை கற்று - பல் நவை கற்று - பலவிதமான குற்றத்துக்கு இடமான (நூல்களை)ச் செயல்களைப் படித்து மேற்கொண்டும், பின்பு (இன்னவை விட்டு)- அங்ஙனம் கற்ற இவைகளையும் விடுத்து (இன்னணம்) இவ்வாறாக (எய்த்து) - இளைப்புற்று - (அடாமார்க்கம்) அடாத மார்க்கம் - தகாதவையான வழிகள் இன்பத்தைத் தருவன அல்ல என்று உணர்ந்து-

றின்னதெனக் கென்னுமதப் புன்மைகெடுத் தின்னல்விடுத்
தின்னதெனப் படாவாழ்க்கை தந்திடாதோ;

கன்னல்மொழிப் பின்னளகத் தன்ன நடைப்*பன்னவுடைக்
கண்ணவிரச் சுறாவீட்டு கெண்டையாளைக்-

† கன்னமிடப் பின்னிரவிற் றுன்னுபுரைக் கன்முழையிற்
கன்னிலையிற் புகாவோர்த்து நின்றவாழ்வே,

பொன்னசலப் பின்னசலச் சென்னியினற் கன்னபுரப்
பொன்னிநதிக்கரா நீர்ப்பு ‡ யங்கனாதா-

பொன்மலையிற் பொன்னினகர்ப் புண்ணியர்பொற்
பொன்மவுலிப்
பொன்னுலகத் திராசாக்கள் தம்பிரானே. (1)

---

*'பன்னஉடை' - இலை ஆடை-'தழை உடுத்த குறத்தி'
-(திருப்புகழ் 296)-

† பின் இரவில் காத்து நின்றது :

'கருமால் இருள்கழி யாமுன்னர் இவ்வரை கையகன்றே'
-தணிகைப்புரா-களவு-578

'குரம்பையின் புறம்போய் நின்றான் **'நீர் கங்குற் போதில் ஈங்கு வந்திடுவ தொல்லாது'-கந்த புரா-வள்ளி-161-162.

‡ புயங்கன்-சிவன்- (1) புயங்க நடனம் செய்பவன்;
(2) பாம்பை அணிந்தவன்.

"அந்த ஒண் புயங்க நட்டம் ஆடிட வேண்டும்"
-திருவாலவா-புரா-32-8.

"அதிரவீசி ஆடுவாய் அழகன் நீ புயங்கன் நீ" -சம்பந்தர்-3-52-4.

"இராவணன் தோள் நெரித்த புயங்கராகமா நடத்தன்"
-சம்பந்தர் 1-53-8.

புயங்கனாதா-புயங்கனுக்கும் நாதா-"சிலைமகள் நாயன்...
தொழும்வேலா" - திருப்புகழ் 261.

(இன்னது) இவ் வழிதான்-(எனக்கு என்னும்) எனக்கு உயர்ந்ததாம் என்கின்ற, (மதப் புன்மை கெடுத்து) கொள்கையின் இழிவாந் தன்மையை ஒழித்து, (இன்னல் விடுத்து) துன்பங்கள் யாவற்றையும் ஓட்டி விலக்கி-(இன்னதெனப்படா வாழ்க்கை) இத்தன்மைத்து என்று (வாய்விட்டு) விளக்க முடியாத பேரின்ப வாழ்க்கையை (உனது திருவருள்) (தராதோ) பாலிக்காதோ!

(கன்னல்மொழி) கரும்பு (அல்லது கற்கண்டு) போன்ற மொழியையும், பின் அளகம் - பின்னப்பட்ட கூந்தலையும், அன்னம் போன்ற நடையையும். (பன்னம் உடை) தழையிலைகளால் ஆய ஆடையையும் (கொண்டவளாய்க்) கண்ணானது - கண் அவிர் - விளக்கம் கொண்டுள்ள அந்த சுறாமீனையும் அடக்கவல்ல (ஓட்டி விலக்கவல்ல) கெண்டை-மீன் போன்றவளைக்-

களவிற் கொண்டு போவதற்காக - (பின் இரவில்) இராப்பொழுதின் பிற்பாகத்தில் - பொழுது விடியுமுன் துன்னு - பொருந்திய (புரை) இடமான - வீடுபோன்ற ஒரு கல் முழையில் ஒருகற் குகையில், கன்னிலையில்-கல் நிலையில்-கற்சிலைபோல அசைவற்ற நிலையில்-புகுந்திருந்து வேர்வையுற நின்று காத்திருந்த செல்வனே!

(பொன் அசலம்) (பொன்மலை) மேருமலைக்குப் (பின்), அசலம்-பின்பு அசைவற்ற தன்மையில் அடுத்ததான - அசைவில்லாத - எதனாலும் கலக்கம் உறாத - சென்னியின் - சோழராஜனுடைய (ஆளுகையில் உள்ள) நற்கன்னபுரம் - நாதா - அழகிய **கன்னபுரம்** என்னும் தலத்தில் நாதா (தலைவனே)! (பொன்னி நதிக்கரார் நீர்ப்புயங்கனாதா)- கரா நீர்ப் பொன்னி நதி (கன்னபுரப்) புயங்கனாதா! - முதலைகள் வாசம் செய்யும் காவிதி நதிக்கரைக்) **கன்னபுரத்தில்** (புயங்க) புயங்க நடனம் செய்யும் சிவபிரானுக்குத் தலைவனே! (அல்லது புயங்கன் - பாம்பணிந்த சிவனுக்கும் நாதனே)!

(பொன்மலையில்) கயிலைமலையிலும், பொன்னின் நகர்-லக்ஷ்மி வாசம் செய்யும் வைகுண்டத்திலும் (உள்ள) புண்ணியர்களுக்கும், பொற்பொன் மவுலி-அழகிய பொற்கிரீடங்களை அணிந்துள்ள (பொன்னுலகத்து) தேவலோகத்து-இராசாக்களுக்கும் இந்திரர்களுக்கும் தம்பிரானே!

(இன்னதெனப் படா வாழ்க்கை தந்திடாதோ)

## திருவாஞ்சியம்.

*(நன்னிலம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு சுமார் 7-மைல். திருவாரூருக்கு வடமேற்கு 11-மைல். மூவர் தேவாரமும் பெற்ற ஸ்தலம்.)*

### 816. செல்வம், யாக்கை நிலையாமை.

*தனதாந்த தத்த தனதன*
*தனதாந்த தத்த தனதன*
*தனதாந்த தத்த தனதன தனதான*

*இபமாந்தர் சக்ர பதிசெறி*
*படையாண்டு சக்ர வரிசைக*
*ளிடவாழ்ந்து திக்கு விசயம ணரசாகி-*
*இறுமாந்து வட்ட வணைமிசை*
*விரிசார்ந்து வெற்றி மலர்தொடை*
*யெழிலார்ந்த பட்டி வகைபரி மளலேபந்;*

*தபனாங்க ரத்ந வணிகல*
*னிவைசேர்ந்த விச்சு வடிவது*
*தமர்சூழ்ந்து மிக்க வுயிர்நழு வியபோது-*
*தழல் தாங்கொ ளுத்தி யிடவொரு*
**பிடிசாம்பல் பட்ட தறிகிலர்*
*தனவாஞ்சை மிக்கு* **னடிதொழ நினையாரே;**

*உபசாந்த சித்த குருகுல*
*பவபாண்ட வர்க்கு வரதன்மை*
*யுருவோன்ப்ர சித்த நெடியவன் †ரிஷிகேசன்-*

---

* இந்தப் பாடலின் முதல் நான்கடியின் கருத்து-

"முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரு முடிவிலொரு
பிடி சாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு பின்னுமிந்தப்
படி சார்ந்த வாழ்வை நினைப்பதல்லாற் பொன்னி னம்பலவர்
அடிசார்த்து நாமுய்ய வேண்டுமென் றேயறி வாரில்லையே"-எனவரும் பட்டினத்தார் திருவாக்கின் கருத்தை ஒக்கும்; திருப்புகழ் 778-ஆம் பாடலின் கருத்தும் இதுவே.

'இறந்தால் ஒருபிடி சாம்பருங் காணாது மாய உடம்பிதுவே' - கந் - அலங் - 57.

† 'இருடீகேசன் எம்பிரான்' - திருவாய்மொழி 2-7-10.

# திருவாஞ்சியம்

## 816.

(இபம்) யானைப்படை, (மாந்தர்) காலாட்படை முதலிய படைகளை உடைய சக்ரவர்த்தியாய், நிறைந்துள்ள நால்வகைப் படைகளையும் ஆண்டு (கொண்டு) அரசுபுரிந்து, தனது ஆக்ஞா சக்கரம் வேலை முறைகளை நடத்த அங்ஙனம் வாழ்ந்து, திக்குவிஜயம் செய்து, உலகுக்கு அரசனாகி (ஏக சக்ரவர்த்தியாகி)

பெருமை மிக அடைந்து, வட்டவடிவான சாய்வு மெத்தை அணையின்மேல் உள்ள விரிப்பிற் சார்ந்து - சாய்ந்த-மைந்து-ஜெயத்தைக் குறிக்கும் (வாகை) மலர்மாலை (என்ன), (எழிலார்ந்த) அழகு நிரம்பின (பட்டி வகை)-ஆடை (துணி) வகைகள் என்ன; நறுமணக் கலவைப் பூச்சு (என்ன),

(தபனாங்க ரத்ந அணிகலன்) சூரிய ஒளியைத் தன் உறுப்பிலே கொண்ட - தன்னகத்தே கொண்ட ரத்ந மணியாலாய அணிகலன் (ஆபரணங்கள்) என்ன! இங்ஙனம் இவையெலாம் சேர்ந்த - (விச்சு வடிவது) ஒரு (மனித) வித்துவின - வித்தின் வடிவு இது; (இவ்வடிவினின்றும்-உடலினின்றும்) உறவினர் சூழ்ந்திருக்கப் பெருமை மிக்க-உயிரானது நழுவியபோது - பிரிந்துபோன பொழுது-

நெருப்பிலே இட - அந்த நெருப்பு கொளுத்திவிட (ஈற்றில்) அவ்வுடல் ஒருபிடிசாம்பலான நிலையை அடைவதை அறிந்திலர், பொருளாசை மிகுந்து உனது திருவடியைத் தொழ நினைக்கின்றார் இல்லை - நினைப்பதில்லை-

(உபசாந்த) மன அமைதி கொண்ட சித்தம் - உள்ளத்தை உடையவர்களும், குருகுலத்தில் (பவ) உதித்தவர்களுமான (தருமன் முதலிய பஞ்ச) பாண்டவர்க்கு (வரதன்) வேண்டிய வரங்களைக் கொடுத்தவன், மை உருவோன் - கரு மேகநிறத்தவன், பிரசித்த நெடியவன், கீர்த்தி பெற்றவன், விசுவரூபம் கொண்டவன், ரிஷிகேசன் (இருடிகேசன்)

*உலகீன்ற பச்சை யுமையணன்
†வடவேங்க டத்தி லுறைபவ
னுயர்சார்ங்க சக்ர கரதலன் மருகோனே-
த்ரிபுராந்த கற்கு வரசுத
‡ரதிகாந்தன் மைத்து னமுருக
திறல்பூண்ட Xசுப்ர மணியஷண் முகவேலா-
திரைபாய்ந்த பத்ம தடவய
லியில்வேந்த Oமுத்தி யருள்தரு
திருவாஞ்சி யத்தி லமரர்கள் பெருமாளே. (1)

## திருச்செங்காட்டங்குடி

(நன்னிலம் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 6-மைல். திருஞான சம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல் பெற்றது. சிறுத்தொண்ட நாயனாருடைய ஸ்தலம்.)

## 817. உபதேசம் பெற

தந்தான தானதன தானதன தானதன
தந்தான தானதன தானதன தானதன
தந்தான தானதன தானதன தானதன தனதான

**வங்கார மார்பிலணி தாரொடுயர் கோடசைய
கொந்தார மாலைகுழ லாரமொடு தோள்புரள
வண்காதி லோலைகதிர் போலவொளி வீசஇதழ் மலர்போல-

---

*'பூத்தவளே புவனம் பதினான்கையும்'-அபிராமி அந்தாதி 13.

† 'வேங்கடமே...ஆழிப்படை தொட்டு வானவரைக் காப்பான் மலை'- இயற்பா - நான்முகன் 48.

‡ ரதிகாந்தன் மைத்துனன் - முருகன் - 'காமவேள் மைத்துனப் பெருமாளே' - திருப்பு. 835, 1108, 1109.

X 'மாமயிலூருஞ் சுப்பிரமண்ணியன்' - திருவிசைப்பா 7-3.

O திருவாஞ்சியம் முத்தியளிக்குந் தலங்களுள் ஒன்று;
"தில்லைவனங் காசி திருவாரூர் மாயூரம்
முல்லைவனங் கூடல் முதுகுன்றம்-நெல்லைகளர்
காஞ்சிகழுக் குன்றமறைக் காடருணை காளத்தி
வாஞ்சியமென் முத்தி வரும்".-என்னும் பாடல் கவனிக்கற்பாலது. திருவாஞ்சியத்தில் இறப்பவர்க்கு யம வாதனை இல்லை. 'கடிய கூற்றமும் கண்டகலும், புகல்தான்வரும்...திருவாஞ்சியத்தடிகள் பாதம் அடைந்தார் அடியார் அடியார்கட்கே - சம்பந்தர் 2-7-9. (தொடர்ச்சி 407 ஆம் பக்கம் பார்க்க.)

உலகங்களைத் தந்த பச்சைநிற உமையம்மையின் அண்ணனும், வடவேங்கடம் என்னும் தலத்தில் வீற்றிருப்பவனும், மேலான சாரங்கம் (வில்), சக்கரம் (சுதரிசனம்) இவைதமைக் கையகத்தே கொண்டுள்ளவனும் ஆன திருமாலின் மருகனே!

முப்புரங்களுக்கு (அந்தகனாயிருந்த) யமனாயிருந்த - (திரிபுரத்தை அழித்த) சிவபிரானுக்கு (வர சுத) சிரேஷ்டமான பிள்ளையே! ரதியின் கணவன் மன்மதனுக்கு மைத்துன முறை உடையவனே! முருகனே! பராக்ரமம் வாய்ந்த சுப்பிரமணியனே! ஷண்முகனே! வேலனே!

அலைகள் பாயும் தாமரைத் தடாகங்கள் உள்ள வயலூர் அரசே! முத்தியைத் தருவதான **திருவாஞ்சியம்** என்னும் தலத்தில் தேவர்கள் பெருமாளே!

*(உன் அடிதொழ நினையாரே)*

## திருச்செங்காட்டங்குடி

## 817.

*(**மா**ர்பிலணி வங்கார தாரொடு)* மார்பில் அணிந்துள்ள *(வங்கார தார்)* பொன்மாலையுடனே மேலான மலையன்ன கொங்கைகள் அசைய, *(பூங்கொத்துக்கள் நிறைந்த மாலையணிந்துள்ள கூந்தலும் (ஹாரம்) மணிமாலையும் தோளிற் புரண்டசைய, வளப்பம் உள்ள காதிலே ஓலை (காதணி) சூரிய ஒளி போன்ற ஒளியை வீச, வாயிதழ்- (குமுத) மலர்போல விளங்க-

---

*(406-ஆம் பக்கத் தொடர்ச்சி)*

காசியில் இறந்த உயிருக்கு வயிரவர் சூலத்தழுத்தும் வாதனை சிறிது உண்டு. அதுவும் கிடையாது திருவாஞ்சியத்தில் இறப்போர்க்கு; ஆதலால் இத்தலம் காசியினும் சிறந்ததென்று தலபுராணம் கூறும்:-

'செயிரறு காசி முத்தி சிறந்திடும் இறந்த மாக்கட்
கயின்முனை நெடிய மூலத் தழுந்துநோய் சிறிதுண் டந்த
வயிரவ வாதை தானும் இல்லைஅந் நகரின் மாய்ந்த
உயிர்வலச் செவிக்கெ மூத்தைந் துரைத்தரன் அளிப்பன் முத்தி".

** வங்காரம் - பொன்.

மஞ்சாடு சாபநுதல் வாளனையவேல் விழிகள்
கொஞ்சார மோககிளி யாகநகை பேசியுற
வந்தாரை வாருமிரு நீருறவெ னாசைமய
லிடுமாதர்;

*சங்காளர் சூதுகொலை காரர்குடி கேடர்சுழல்
சிங்கார தோளர்பண ஆசையுளர் சாதியிலர்
சண்டாளர் சீசியவர் மாயவலை யோடடியெ
னுழலாமற்-

† சங்கோதை நாதமொடு கூடிவெகு மாயையிருள்
வெந்தோட மூலஅழல் வீசவுப தேசமது
தண்காதி லோதியிரு பாதமலர் சேரஅருள்
புரிவாயே;

சிங்கார ரூபமயில் வாகனந மோநமென
கந்தாகு மாரசிவ தேசிகந மோநமென
சிந்தூர பார்வதிசு தாகரந மோநமென
விருதோதை-

சிந்தான சோதிகதிர் வேலவந மோநமென
கங்காள வேணிகுரு வானவந மோநமென
திண்சூர ராழிமலை தூள்படவை வேலைவிடு
முருகோனே;

---

* சங்கம்-சங்கமம் : கூடுகை.

† சங்கோதை நாதம் - பாடல் 179-பக்கம் 416-கீழ்க்குறிப்பு.

(மஞ்சு ஆடு சாபம்) - அழகு விளங்கும் வில் (அல்லது மேகத்தின் வானவில்) போன்ற நெற்றி, வாள், வேல்போன்ற விழிகள், கொஞ்சுதல் மிக நிறைந்த ஆசைக் கிளிபோன்று சிரிப்பு மொழிகளைப் பேசித் தம்மை நண்ணி வந்தவர்களை 'வாரும், இரும், நீர் (நமக்கு) உறவினராயிற்றே' என்றெல்லாம் ஆசை மயக்கத்தை ஊட்டுகின்ற (பொது) மாதர்கள்-

கூடிக் களிப்பவர்கள், (சூது) வஞ்சக ஒழுக்கத்தினர், கொலையும் செயுங் குணத்தினர், குடி கெடுப்பவர், திரிகின்றவர், அலங்கார தோளினர், பண ஆசை உள்ளவர்கள், சாதிபேதம் கவனிக்காத சண்டாளர்கள், சீசி, இத்தகையோரது மாயவலைகளிலே அடியேன் சிக்கி அலையாமல்-

(யோக வழியிற் கிடைக்கும்) சங்க ஓசை ஒலியை (தசநாதங்களை) அனுபவித்து, மிக்க மாயையாம் இருள் வெந்து ஒழிந்துபோக, மூலாக்கினி வீசிட, உபதேசத்தை (எனது) குளிர்ந்த காதில் ஓதி, (உனது) இரண்டு பாதமலரைக் கூடும்படியான திருவருளைத் தந்தருளுக.

அலங்காரமான உருவத்தொடு கூடிய மயில் வாகனனே! (அல்லது - அலங்காரமான உருவத்தனே! மயில்வாகனனே!) உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; கந்தனே! குமரனே! சிவனுக்குக் குருமூர்த்தியே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன்; (சிந்தூரம்) செம்பொடி - குங்குமம் அணிந்துள்ள பார்வதியின் (சுத-ஆகர) பிள்ளையாய் அமைந்தவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன், என்று வெற்றிச் சின்னங்களின் ஓசை-

கடல்போல முழங்க ஜோதிஒளி கொண்ட வேலாயுதனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன் - எலும்பா-பரணனும், சடாமுடி உடையவனுமான சிவனுக்குக் குருமூர்த்தியானவனே! உன்னை வணங்குகின்றேன், வணங்குகின்றேன், (என்று முழங்கவும்), வலிமை மிக்க சூரனாதியரும், கடலும், எழுகிரி - கிரவுஞ்சம் ஆகிய மலைகளும் பொடியாக (வை) கூரிய-வேலைச் செலுத்தின முருகனே!

*இங்கீத வேதபிர மாவைவிழ மோதியொரு
பெண்காத லோடுவன மேவிவளி நாயகியை
யின்பான தேனிரச † மார்முலைவி டாதகர
மணிமார்பா-
‡ எண்டோளர் Xகாதல்கொடு Oகாதல்கறி யேபருகு
**செங்காடு** மேவிபிர காசமயில் மேலழகொ
டென்காதல் **மாலைமுடி ஆறுமுக வாவமரர்
பெருமாளே.(1)

## திருவிற்குடி

(திருவாரூருக்கு வடக்கு சுமார் 5-மைல் தூரத்திலுள்ள விற்குடி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 3-மைல். அஷ்டவீரத் தலங்களுள் ஒன்று. சலந்தரனைச் சங்கரித்த தலம். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

## 818.

தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன
தத்த தத்ததன தத்த தத்ததன தந்ததான

சித்தி ரத்திலுமி குத்த பொற்பவள
மொத்த மெத்தஅழ குற்ற குத்துமுலை
சிற்ப சிற்பமயி ரொத்த சிற்றிடைய வஞ்சிமாதர்-
†† சித்த மத்தனையு முற்ற ளப்பகடல்
மொய்த்த சிற்றுமண லுக்கு மெட்டியது
‡‡சிக்கு மைக்குழல்கள் கஸ்து ரிப்பரிம
ளங்கள்வீசப்;

---

* பிரமனை மோதினது-பாடல் 608 பக்கம் 406 கீழ்க்குறிப்பு.

† முலைவிடாத கர-பாடல் 522; 644-பக்கம் 508 கீழ்க்குறிப்பு.

‡ **சிவபிரான் எண் தோளர்** : "எண்டோளர் முக்கண்ணர் எம்மீசர் இறைவர்" - சம்பந்தர். 1-130-10

X இது சிறுத்தொண்ட நாயனார் சரிதம் :

பிள்ளைக்கறி வேண்டுமென்று சிவனே ஒரு மகா விரதியர் போல வந்து உணவை விரும்ப, சிறிதும் தயங்காது தனது பிள்ளையையே அரிந்து சமைத்து உணவாகத் தந்த திடவிய பத்திப் பெருந்தகை சிறுத்தொண்டர், அவரது ஊர் திருச் செங்காட்டாங்குடி.

O காதல் கறி-காதலன் கறி: பிள்ளைக்கறி; பிள்ளை-சீராளன்.

** மாலை-பாடல். "காழியர் மன்னன் உன்னிய †† மாலை யீரைந்து". "ஞானசம்பந்தன் சொல் ஈரைந்து மாலையும்" -சம்பந்தர் 3-22-11, 3-34-11. (தொடர்ச்சி - பக்கம் 411)

(இங்கீத) இங்கிதமான - இனிமை வாய்ந்த வேதம் படித்த பிரமன் விழும்படி அவனை மோதியும், ஒப்பற்ற பெண்ணாகிய வள்ளிமேற் கொண்ட காதலோடு (அவள் வசித்த) (தினைக்) காட்டுக்குச் சென்று அந்த வள்ளிநாயகியின் இன்பமயமான தேன்போல இனிப்பதான மார் முலையை விடாத கரதலமும், அழகிய மார்பும் கொண்டவனே!

எட்டுத் தோள்கொண்ட சிவபிரான் ஆசையுடனே (காதல்கறியை) பிள்ளைக்கறியை உண்ட **திருச்செங்காட்டங்குடி** என்னும் தலத்தைச்சேர்ந்து, ஒளிவீசும் மயில்மேல் அழகாக வீற்றிருந்து - அடியேனுடைய ஆசையால் எழுந்த இத் தமிழ்ப்பாட்டை (அல்லது எனது தமிழ் மாலைகளை) புனைந்தருளும் ஆறு முகத்தனே! தேவர் பெருமாளே! (இருபாத மலர் சேர அருள் புரிவாயே)

## திருவிற்குடி

## 818.

**சி**த்திரத்திலும் மிக்க விசித்திரத்தைக் கொண்டதாய், பொன்னிறம்-பவளநிறம் இவை கொண்டதாய் மிக அழகிய திரட்சியை உடையதான கொங்கை, (சிற்ப சிற்பம்) மிக நுண்ணிதான நுட்பமான- மயிரிழை போன்று நுண்ணிதான சிறிய இடை - இவைதமை உடைய வஞ்சிக்கொடி போன்ற மாதர் (பொதுமகளிர்) (இவர்களுடைய) -

உள்ளம் அத்தனையும் முழுமையும் அளந்தால் அது கடலில் மொய்த்துள்ள சிறுமணல் அளவையும் *எட்டத்தக்கதாம் - (சிறுமணலின் தொகையையும் எட்டும் அப்பொது மகளிரின் உள்ளத்து எண்ணங்கள் என்பதாம்); சிக்குள்ள (தங்கள்) கரிய கூந்தல்களில் கஸ்தூரி வாசனை வீச-

---

(410 ஆம் பக்கத் தொடர்ச்சி.)

†† பொது மகளிரின் சித்தம்-கடல் மணலின் அளவினது, கடல் மணலுக்கும் தொலைவானது-மேற்பட்டது:-

"முப்பதுகோடி மனத்தியர்" - திருப்புகழ் 1190;

"நூறாயிர மனமுடை மாபாவிகள்" "வஞ்சமே கோடி கோடிகள்"

-திருப்புகழ் 583-பக்கம் 330-கீழ்க்குறிப்பு; பாடல் 237

‡‡ "குழல் முக்கலச் சிக்கும் பிடிக்கும்" - (காளமேகம்)

---

* மணலுக்கும் (எட்டியது)-தொலைவானது எனலுமாம்.

பத்தி ரத்திலுமி குத்த கட்கயல்கள்
வித்து ருத்தநுவ ளைத்த நெற்றிவனை
பற்க ளைப்பளிரெ னச்சி ரித்துமயல் விஞ்சைபேசிப்

பச்சை ரத்நமயி லைப்பொ லத்தெருவி
லத்தி யொத்தமத மொத்து நிற்பர்வலை
பட்டு ழைத்து *குழி யுற்ற அத்தியென
மங்குவேனோ;

தத்த னத்தனத னத்த னத்தனன
தித்தி மித்திமிதி மித்தி மித்திமித
தக்கு டுக்குடுடு டுக்கு டுக்குடென சங்குபேரி-

சத்த முற்றுகடல் திக்கு லக்கிரிகள்
நெக்கு விட்டுமுகி லுக்கு சர்ப்பமுடி
சக்கு முக்கிவிட கட்க துட்டசுர ரங்கமாள;

வெற்றி யுற்ற †கதிர் பத்தி ரத்தையரு
ளிச்சு ரர்க்கதிப திப்ப தத்தையுறு
வித்த ளித்து‡மதி பெற்ற தத்தைமண முண்டவேலா-

Xவெட்கி டப்பிரம னைப்பி டித்துமுடி
யைக்கு லைத்துசிறை வைத்து முத்தர் புகழ்
விற்கு டிப்பதியி லிச்சை யுற்றுமகிழ்
தம்பிரானே.(1)

---

* குழி யுற்ற அத்தி - படுகுழியில் வீழ்ந்த யானை.
அது மிகவும் துன்புறும் - "குழிப்படு களிற்றிற்
படர்கூர் எவ்வமொடு பதைத்தனர்" -பெருங்கதை 1-46-53.
"நீடுகுழி யகப்பட்ட....களிறுநிலை கலங்க" -புறநானூறு 17.
"குழி கொன்று பெருங்கை யானை பிடிபுக் காங்கு"
-பட்டினப்பாலை 223-4.

† கதிர் பத்திரம் - வேலாயுதம்.

‡ மதி-யானை - பாடல் 590-கீழ்க்குறிப்பு.

X " வெட்கி டப்பிரம னைப்பி டித்துமுடி
யைக்கு லைத்துநட லைச்செ ருக்கையழி
வித்த நத்தர்புகழ் கச்சி யுற்றுமகிழ் தம்பிரானே" என்றும் பாடம்.
பிரமன் முடியைக் குலைத்தது
-பாடல் 608-பக்கம் 406-கீழ்க்குறிப்பு.

(பத்திரத்திலும்) வாளினும் மிக்க கூரிய கண்ணாம் (கயல்) மீன்கள் - கயல் மீன்களாம் கண்கள், (வித்துரு) மின்னல்போல ஒளிவிடுவதாய், வில்லை வளைத்தது போன்ற நெற்றி, (இவைகளுடன்) உரு அமைந்த பற்களைப் பளீரெனச் சிரித்துக் காட்டிக் காமத்தை ஊட்டும் மாயவித்தைப் பேச்சுக்களைப் பேசி-

பச்சை ரத்ன மயில்போலத் தெருவில் ஆனைக்கு உற்ற மதம்போன்ற மதத்துடன் நிற்பார்கள்-இத்தகைய பொது-மாதர்களின் வலையிற்பட்டு, உழைத்து, படுகுழியில் விழுந்த யானை போல மனம் குலைந்து நிற்பேனோ!

தத்த னத்தனத....டுக்குடுக்குடென்று சங்கும், பேரியும் (முரசும்)-

ஒலிசெய்து, கடலும், திக்கில் உள்ள சிறந்த அஷ்டகிரிகளும் நெகிழ்ந்து கட்டுவிட, மேக இடியைக் கேட்டு (சர்ப்பம்) ஆதிசேடனது முடிகளும் (சக்கு) கண்களும் - (முக்கிவிட) - துன்பம் உற, வாள் ஏந்திய துஷ்ட அசுரர்களின் உடல் அழிதர-

ஜெயம் கொண்ட ஒளி வாளை - வேலாயுதத்தை (அருளி) பிரயோகித்து, தேவர்களுக்கு (அதிபதிப்பதத்தை) தலைமை-யாம் நிலையை, (உறுவித்து அளித்து)-சேரும்படி அருள் செய்து, (மதி) யானை - ஐராவதம் வளர்த்த கிளியாம் தேவசேனையைத் திருமணஞ் செய்துகொண்ட வேலனே!

வெட்கப்படும்படிப் பிரமாவைப் பிடித்து அவனது குடுமித்தலையை அலைவித்து, அவனைச் சிறையிலிட்டு, ஜீவன் முத்தர்களாம் பெரியோர் புகழ்கின்ற **திருவிற்குடி** என்னும் தலத்தில் ஆசை பூண்டு மகிழ்கின்ற தம்பிரானே!

(குழியுற்ற அத்தியென மங்குவேனோ)

## விஜயபுரம்.

*(இது திருவாரூர் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து திருவாரூருக்குப் போகும் வழியில் உள்ளது.)*

## 819. திருவடி அடைய

*தனதன தந்தன தானன, தனதன தந்தன தானன*
*தனதன தந்தன தானன தனதான*

குடல்நிண மென்புபு லால் *கமழ் குருதிந
ரம்பிவை தோலிடை
குளுகுளெ னும்படி மூடிய மலமாசு-
குதிகொளு மொன்பது வாசலை யுடையகு
ரம்பையை நீரெழு
குமிழியி னுங்கடி தாகியெ யழிமாய;
† அடலையு டம்பைய வாவியெ அநவர தஞ்சில சாரமி
லவுடத மும்பல யோகமு முயலாநின்-
றலமரு சிந்தையி னாகுல மலமல மென்றினி யானுநி
னழகிய **தண்டை வி டாமல ரடைவேனோ;**
இடமற மண்டு நிசாசர ரடைய மடிந்‡தெழு பூதர
மிடிபட இன்ப மகோததி வறிதாக-
இமையவ ருஞ்சிறை போயவர் பதியு ளிலங்க Xவிடாதர
எழில்பட மொன்று Oமொராயிர முகமான;
விடதர கஞ்சுகி மேருவில் வளைவதன் முன்புர** நீறெழ
வெயில்நகை தந்த புராரி††ம தனகோபா-
விழியினில் வந்து பகீரதி மிசைவள ருஞ்சிறு வாவட
**விஜய** புரந்தனில் மேவிய பெருமாளே. (1)

---

* கமழ்தல் - பரத்தல். 'வியலிடங் கமழ இவணிசை யுடையோர்க்கு' (புறநானூறு 50) என்புழிப்போல, 'கமழ்தல்' ஈண்டுப் பரத்தற் பொருட்டாய் நின்றது.

† அடலை - துன்பம். 'அடலைக் கடல் கழிவான்நின் அடியிணையே அடைந்தார்.' - அப்பர் 4-110-6.

‡ எழுபூதரம் - எழுகிரி - பாடல் 43-பக்கம் 117 கீழ்க்குறிப்பு.

X விடு ஆதர - விடும் ஆதரவானவனே.

O "செம்பொன் வரையோர் பினாகமதாய்ச் சேடன் நாணாய்" ஞானவரோ...உபதேச காண்டம் 2121; O சேடன் "மணிசேர் ஆயிரம் இருந்தலைகளாய் விரி பணம்" - மயில் வகுப்பு.

** திரிபுரம் எரித்தது: பாடல் 285 பக்கம் 206 பார்க்க.

†† காமனை எரித்தது - பாடல் 399 - பக்கம் 510 கீழ்க்குறிப்பு.

# விஜயபுரம்

## 819.

குடல், கொழுப்பு, எலும்பு, மாமிசம், (ஊன்), பரந்துள்ள ரத்தம், நரம்பு, இவைகள் தோலின் இடையே குளுகுளு என்று அமையும்படி வைத்து மூடப்பட்டுள்ளதும், மலமும் பிற அழுக்குகளும்,

பொதிந்துள்ள ஒன்பது துவாரங்களை உடைய சிறு குடிலாகிய இவ்வுடலை - நீரிலே தோன்றுகின்ற மொக்குளினும் வேகமாக அழிகின்ற மாயமான-

(அடலை) சாம்பலாகப் போகின்ற (அல்லது துன்பத்துக்கு ஈடான) உடம்பை விரும்பி எப்போதும் சில சாரம் இல்லாத (உபயோகமில்லாத) மருந்துகளையும் பலவித யோகவகைகளையும் உபயோகித்துப் பார்த்து-அநுட்டித்துப் பார்த்து-

வேதனைப்படுகின்ற மனத்தில் படும் (ஆகுலம்) துன்பம் (அலம் அலம்) போதும் போதும் ; என்றைக்குத்தான் இனி (அல்லது, போதும் போதும் என்றுணர்ந்து இனி) நானும் உன்னுடைய அழகிய தண்டை எப்போதும் சூழ்ந்துள்ள திருவடிமலரை அடைவேனோ (தெரிய இல்லையே)!

காலி இடம் சற்றும் இல்லாமல் நெருங்கும் அசுரர்கள் எல்லாரும் இறந்துபடவும். (எழுபூதரம்) எழுகிரிகள் இடிபட்டுப் பொடியாகவும், காட்சிக்கு இன்பம் தரும் கடல் வற்றிப்போகவும்-

தேவர்களும் சிறை நீங்கி அவர்களுடைய (அமராவதி) என்னும் ஊரில் விளங்கவும் விட்ட (செய்வித்த) ஆதரவானவனே! அழகிய படங்கள் பொருந்தும் ஒரு ஆயிரம் முகங்களைக் கொண்ட

விஷம் தரிப்பதான பாம்பாகிய ஆதிசேடன் மேருமலை என்னும் வில்லில் (நாணாகப்) பூட்டப்பட்டு அவ் வில் வளைபடு முன்னரே, திரிபுரங்கள் சாம்பலாக ஒளிவீசும் சிரிப்பை வெளியிட்ட புராரி (திரிபுரப் பகைவர்), மன்மதனைக் கோபித்து (எரித்தவர்)-ஆகிய சிவபிரானது

கண்களிற் (பொறியாகப்) பிறந்து, கங்கையின் மீது வளர்ந்த சிறுவனே! வட **விஜயபுரத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(தண்டை விடாமல ரணைவேனோ)

## திருவாரூர்.

(ரெயில்வே ஸ்டேஷன். நாகப்பட்டினத்துக்கு மேற்கு 14-மைல். மூவர் தேவாரமும் பெற்ற முதுநகர்.

தன் மகன் ஏறிச்சென்ற தேரின் கீழ்ப்பட்டு மடிந்த கன்றின் தாயான பசுவின் துயரைச் சகியாது அம் மகன் பட்டுமடிய அவன் மீது தேர் ஊர்ந்து சென்ற "மநுநீதி கண்ட சோழன்" அரசு புரிந்த திருப்பதி. இதனை யித்தலத்துக் குரிய திருப்புகழ் 6-ஆம் பாடலிற் காண்க; ஸ்தல புராணம் உண்டு.)

## 820. வாழ்நாள் வீணாளாகாமல்

தானா தானா தானா தானா
தானா தானத் தனதான

கூசா தேபா ரேசா தேமால்
கூறா நூல்கற் றுளம்வேறு-
கோடா தே*வேல் பாடா தேமால்
கூர்கூ தாளத் தொடைதோளில்;

வீசா தேபார் பேசா தேசீர்
வேதா தீதக் கழல்மீதே-
வீழா தேபோய் நாயேன் **வாணாள்**
**† வீணே போகத் தகுமோதான்;**

நேசா வானோ ரீசா வாமா
நீபா கானப் புனமானை-
நேர்வா யார்வாய் ‡சூர்வாய் சார்வாய்
நீள்கார் சூழ்கற் பகசாலத்;

---

* வேலைப் பாடுங்கள் - என்பது அருணகிரியார் அழுந்தச் சொல்லும் உபதேசங்களுள் ஒன்று-

"ஆடும்பரி வேல் அணிசேவலெனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்"
"வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்"-கந்தரநுபூதி 1. 40.
"காய்வேல் பாடேன்" - திருப்புகழ் 1062.

† கூச்சமில்லாமலும், உலகினரின் ஏசுதல் இல்லாமலும், உள்ளம் கோணல் வழியிற் செல்லாமலும் நான் வேல் பாடவேண்டும். அத்தகைய நிலையில் இருந்து, நான் வேலைப் பாடாமலும், மாலையை

(தொடர்ச்சி 417 ஆம் பக்கம்)

# திருவாரூர்

## 820.

*(நாண்)* நாணங்கொள்ளாமல், உலகினர் என்னை ஏசாமல் (இகழாமல்), (மால்) - (உனது) பெருமையைக் கூறாத நூல்களை (அசட்டு நூல்களைக் கற்று - அதனால் உள்ளம் வேறு - மாறாகி (அல்லது - மால் கூறா நூல் - மூவாசையைக் கூறாத (எழுப்பாத) (ஞான) நூல்களைக் கற்று, உள்ளம் மாறாகி)

(கோடாதே) கோணல் வழியைப் பின்பற்றாமல் நன்னெறியில் இருப்பதை விட்டு விட்டு (உனது) வேலாயுதத்தைப் பாடாமலும், ஆசை மிக்கெழக் கூதாள மாலையை உனது (பன்னிரு) தோள்களில்

வீசாமலும், (உனது) பேர் - புகழைப் பேசாமலும், சிறப்புற்றதும், வேதத்துக்கு மேற்பட்டு எட்டாததுமான உனது திருவடியின் மேல்-

வீழாமலும், போய், அடியேனுடைய வாழ்நாள் வீண்நாளாகப் போதல் நீதியோதான்-போகலாகாது என்றபடி;

அன்பனே! தேவர்களுக்குத் தலைவனாம் ஈசனே! (வாமா- அழகனே! கடப்பமாலையனே! காட்டில் திணைப்புன மான் வள்ளியைச்-

சந்தித்தவனே! (உள்ளம்) குளிர்ந்தவனே! (திருப்தி அடைந்தவனே)! (சூர்வாய் சார்வாய்) சூரனிருந்த இடம் மகேந்திர நகரைச் சென்று சார்ந்தவனே! (சூரனைத்தேடிச் சென்றவனே!) பெரிய மேகங்கள் சூழ்ந்துள்ள கற்பக விருக்ஷக் கூட்டங்கள் உள்ள-

---

(416-ஆம் பக்கத் தொடர்ச்சி)

உனது தோளில் வீசாமலும், உன் பேர் (புகழைப்) பேசாமலும், உன் கழலில் வீழாமலும் (போய்)-காலம் கழித்து - என் வாழ்நாள் வீணே போகத் தகுமோ! - என்றவாறு.

கூசாமலிருக்கவும், பார் ஏசாமலிருக்கவும், உளம் கோடா-மலிருக்கவும் நான் வேலைப் பாடவேண்டும் - அங்ஙனம் வேலைப் பாடாதே - எனலுமாம்.

‡ சூர்வாய் சார்வாய் - சூரனாகிய மயிலைச் சார்வாய் (வாகனமாக நடத்துவாய்) - எனலுமாம்.

தேசா *தீனா †தீனா ரீசா
சீரா சூரிற் பெருவாழ்வே
சேயே வேளே ‡பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே.(1)

## 821. அகப்பொருள் (நாரையை வினவுதல்)

தானா தானா தானா தானா
தானா தானத் தனதான

Xகூர்வாய் நாராய் வாராய் போனார்
கூடா ரேசற் றலஆவி-
கோதா னேன்Oமா தாமா றானாள்
கோளே கேள்மற் றிளவாடை;

ஈர்வாள் போலே மேலே வீசா
ஏறா வேறிட் டதுதீயின்-
ஈயா வாழ்வோர் பேரே பாடா
ஈடே றாரிற் கெடலாமோ;

சூழ்வா ழாதே மாறா தேவாழ்
சூழ்வா னோர்கட் கருள்கூருந்-
**தோலா வேலா வீறா சூர்வாழ்
சோதீ பாகத் துமையூடே;

---

* ஆதீனம் - உரிமை, வசம், ஆளுகை.

† தீனர் - வறியவர் "தீனரைத் தியக்கறுத்த திருவுரு வுடையர் போலும்" -அப்பர் 4-56-9.

‡ பூ - பொலிவு, அழகு, தீப்பொறி.

X "பவளக் கூர்வாய்ச் செங்கால் நாராய்" - சத்திமுத்தப் புலவர்.

O மாதா, கேளிர், வாடை, - காமங் கொண்டார்க்குப் பகை
- (பாடல் 218-பக்கம் 53 கீழ்க்குறிப்பு பாடல் 802;)

* * முருகன் தோல்வி அறியாதவர்; நினைத்ததை முடிப்பவர் - "மாறா வென்றி....செய்யோன்" "முருகொத்தீயே முன்னியது முடித்தலின்" புறநானூறு 56.

(தேசாதீனா) தேச ஆதீனா - தேசமாகிய பொன்னுலத்துக்கு உரிமையாளனே! (ஆதீனார் -உன்னை நம்பி இருந்த தேவர்களுக்கு (அல்லது தீனார் - ஏழைகளுக்கு) ஈசா - தலைவனே! சிறப்பு வாய்ந்த **திருவாரூரில்** (வீற்றிருக்கும்) பெருஞ் செல்வனே!

சேயே! வேளே! பொலிவு உள்ளவனே (அல்லது தீப்பொறியாய்த் தோன்றினவனே)! தலைவனே! தேவனே! தெய்வப் பெருமாளே! (தேவர்கள் பெருமாளே)!

(வாணாள் வீணே போகத் தகுமோதான்)

## 821.

**கூ**ரிய வாயை உடைய நாரையே! (இங்கே) வா! என்னை விட்டுப் பிரிந்துபோனவர் திரும்பி வந்து (என்னைக்) கூடாரோ - சேராரோ! கொஞ்சமல்ல என் ஆவி (உயிர்) (மிகவும்)

குற்றம் அடைந்தது; (பயனற்றதாயிற்று); (என்) மாதா-தாயும் (மாறானாள்) என்னொடு மாறுபட்டுப் பகையானாள்; (கோளேகேள்) கேள்-கேளிர் - சுற்றத்தார்கள் - கோள் மூட்டுதலிலேயே (என்மேல் அலர் தூற்றுதலிலேயே) ஈடுபட்டுள்ளார்கள்; மற்றும் இளவாடைக் காற்றானது-

அறுக்கின்ற வாள்போல என் மேலே வீசி, ஏறா - ஏறி, (ஏறிட்டது தீயின்) தீப்போல - நெருப்புப்போல (ஏறிட்டது) மேலே படுகின்றது:

ஈயாமல் ஒருவருக்கு ஒன்றும் கொடாமல் வாழ்கின்றவர்களின் பேரைப் பாடி ஈடேறாது தவிப்பவர் போல (நானும்) கெடலாமோ!

சூரன் வாழாதவண்ணம், (மாறாதே வாழ்சூழ்)-தங்களது (சுக) நிலை மாறாமல் உள்ள வாழ்வைச் சூழும் (ஆய்ந்து தேடும்) தேவர்களுக்கு அருள் நிரம்பப் பாலித்த-

தோல்வியே அறியாத வேலனே! மேம்பட்டு விளங்கும் **திருவாரூரில்** வாழ்கின்ற ஜோதி (சிவன்), அவரது ஒரு பாகத்தில் உள்ள உமை-இவர்கள் (ஊடே) மத்தியிலே-

சேர்வாய் * நீதீ வானோர் வீரா
சேரா ரூரைச் சுடுவார் தஞ்-
† சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே. (2)

## 822. இகழ்ச்சி யற

தானா தானா தானா தானா
தானா தானத் தனதான

பாலோ தேனோ பாகோ வானோர்
பாரா வாரத் தமுதேயோ-
பாரோர் சீரோ வேளேர் வாழ்வோ
‡ பானோ வான்முத் தெனநீளத்;
தாலோ தாலே லோபா டாதே
தாய்மார் நேசத் துனுசாரந்-
தாரா தேபே ரீயா தேபே
சாதே யேசத் தகுமோதான்;
Xஆலோல் கேளா மேலோர் நாண்மா
லானா தேனற் புனமேபோய்-
ஆயாள் தாள்மேல் வீழா வாழா
ஆளா Oவேளைப் புகுவோனே;

---

* "நீதி நின்னையல்லால் நெறியாது நினைந்தறியேன்"
-சம்பந்தர் 3-55-6.

† இந்த அடியைப் பாடல்கள் 1041-1045 எண்ணுள்ள பாடல்களிலும் காணலாம்.

‡ 'பானோ' - பாநுவோ - பாடல் 826 பார்க்க.

X ஆலோலம் - பறவை யோட்டு மொலி.

O " வேளைப் புகுவோனே" - பாடல் 166-பக்கம் 387, பாடல் 625 பக்கம் 451 கீழ்க்குறிப்பு.

(சேர்வாய்) (சோமாஸ்கந்த மூர்த்தி உருவில்) விளங்குவாய்! நீதிப்பெருமானே! தேவர்களுக்கு வீரனே! (சேரார்) பகைவர்களுடைய ஊரை (திரிபுராதிகளின் ஊரைச்) சுட்டவராகிய சிவனது

குழந்தையே! வேளே! (பூவே)-பொலிவு உள்ளவனே! தலைவனே! தேவனே! தேவப் பெருமாளே!

(ஈடேறாரிற் கெடலாமோ)

## 822.

**பா**ல் தானோ நீ, தேன் தானோ நீ, வெல்லக்கட்டி தானோ நீ, தேவர்கள் (பாராவாரத்து) - கடலினின்றும் கடைந்தெடுத்த அமுதமோ நீ-

உலகோரின் சிறப்புப் பொருளோ நீ, மன்மதன் போன்ற அழகிய வாழ்வோ நீ, (பானோ)-பானுவோ (சூரியனோ நீ), (வான்) சிறந்த முத்தோ நீ என்று விரிவாகத் (தாய்மார்)

தாலோ தாலேலோ என்று என்னை (அருமையுடன்) பாடாமலும், தாய்மார்கள் (நேசத்து) அன்புடனே (உனு - உன்னு) நினைத்து, (சாரம்) தனசாரமாம்-முலைப்பால்-

தராமலும், (பேர் ஈயாதே)-* புகழ்ச்சிக்கு உரிய பேர் ஒன்றும் கொடாமலும், (அன்புடனே என்னுடன்) குலவாமலும் இகழ்ச்சிக்கிடமாய் நான் வளர்வது நீதியோதான்!

(ஆலோலம்) வள்ளி ஆயால் ஓட்டும் ஒலியைக் (கேளா) கேட்டு, மேலோர் நாள்-முன்பு ஒரு நாள், (மால்) ஆசை - (ஆனாது) - கெடாவகையில் (குறையா வகையில்), (ஏனற் - புனமேபோய்) அவளிருந்த தினைப்புனத்துக்குச் சென்று-

(ஆயாள்)-தாய் வள்ளியின் கால்மேலே வீழ்ந்தும், (வாழா) அதனால் வாழ்வு பயன்பட்டதென்று வாழ்ந்தும், (ஆளா) வள்ளிக்கு ஆளாக-(வேளைப் புகுவோனே)- சமயத்திற் புகுந்து நின்றவனே! (அல்லது பொழுது போக்கினவனே!) (வள்ளி வேளைக்காரனாக விளையாடினவனே)!

---

* 'தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலில் தோன்றாமை நன்று' - திருக்குறள் 236-ன் கருத்து.

சேலோ டேசே ராரால் சாலார்
சீரா ரூரிற் பெருவாழ்வே-

சேயே வேளே பூவே கோவே
தேவே தேவப் பெருமாளே. (3)

## 823. கழல் பெற

தானானத் தனதான

நீதானெத் தனையாலும் - நீடூழிக் க்ருபையாகி;
மாதானத் தனமாக - மா*ஞானக் கழல்தாராய்;
†வேதாமைத் துனவேளே - வீராசற் குணசீலா;
ஆதாரத் தொளியானே - ஆரூரிற் பெருமாளே.(4)

## 824. திருவடியை நினைக்க

தனதன தனன தனதன தனன
தானான தந்த தனதான

மகரம துகெட இருகுமி ழடைசி
வாரார்ச ரங்க ளெனநீளும்-

மதர்விழி வலைகொ டுலகினில் மனிதர்
வாணாள டங்க வருவார்தம்;

பகர்தரு மொழியில் ம்ருகமத களப
பாடீர கும்ப மிசைவாவிப்-

---

* ஞானக்கழல்-
"சுத்த ஞானமென்னும் தண்டையம் புண்டரிகம்"
-(கந்தரலங்காரம் 92)

† வேதா - திருமாலின் மகன்; முருகவேள் - திருமாலின் மருகனாதலால் முருகவேள் வேதாவின் மைத்துனர் - பாடல் 929-ம் பார்க்க.

"மதனனுக்கும் சதுமுகற்கும் மைத்துனன் காண் அம்மே"
-திருமலையாண்டவர் குறவஞ்சி. 52-(2)

சேல் மீனோடே சேர்ந்து (ஆரால்) ஆரல் மீன்கள் (சாலார்) மிகுந்து நிறைந்துள்ள சீர்பெற்ற திரு ஆரூரிற் பெருஞ்செல்வமே!

சேயே! வேளே! பொலிவுள்ளவனே! தலைவனே! தேவனே! தேவப்பெருமாளே!

(ஏசத் தகுமோதான்)

# 823.

(முருகா) நீதான் எவ்வகையாலும்-எல்லா வகையாலும்-(என்மீது)-நீண்ட ஊழிகாலம் வரையில் (எப்போதும்) கிருபை கூர்ந்தவனாகி-

சிறந்த (தானத் தனமாக) தானப் பொருளாக - மேலான ஞானபீடமாகிய உனது திருவடியைத் தந்தருளுக.

பிரமாவின் மைத்துனனாகிய செவ்வேளே! - வீரனே! சற்குண சீலனே!

*ஆறாதாரங்களிலும் ஒளியாய் விளங்குபவனே! - திருவாரூரிற் பெருமாளே!

(மாஞானக் கழல்தாராய்)

# 824.

மகரமீனும் தன்முன் (நிலைகலங்கிக்) கெட, இரண்டாய், குமிழம்பூப் போன்ற மூக்கை (அடைசி) நெருங்கிச் சேர்ந்து, நீளம் மிக்க அம்புகள் என்று சொல்லும்படி நீண்டுள்ளதாய்ச்-

செழிப்பு மிக்க **கண்** என்னும் வலை கொண்டு உலகில் மனிதர்களின் - ஆண்மக்களின் வாழ்நாள் (அடங்க) முழுமையும் (அல்லது சுருங்கும்படி) (வருவார் தம்) எதிர்தோன்றி வருகின்ற மாதர்களின்-

பேசும் பேச்சிலும், கஸ்தூரி, (களப பாடீரம்) (பாடீர களபம்) சந்தனக் கலவை கொண்டுள்ள குடம் போன்ற கொங்கைமீது (வாவி) தாவிப்

---

* ஆறாதாரங்கள் - பாடல் 220-பக்கம் 56 பார்க்க.

படி*மன துனது பரிபுர சரண
பாதார விந்த நினையாதோ;
நகமுக சமுக நிருதரு மடிய
நானாவி லங்கல் பொடியாக-
நதிபதி கதற †வொருகணை தெரியு
நாராய ணன்றன் மருகோனே;
அகனக ‡கனக சிவதல முழுது
மாராம பந்தி யவைதோறும்-
அரியளி விததி முறைமுறை கருது
மாகூர மர்ந்த பெருமாளே.(5)

## 825. திருவடி பெற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

கரமு Xமுளரியின் மலர்முக மதிகுழல்
கனம தெனுமொழி கனிகதிர் முலைநகை
கலக மிடுவிழி கடலென விடமென மனதூடே-
கருதி யனநடை கொடியிடை யியல்மயில்
கமழு மகிலுட னளகிய ம்ருகமத
களப புளகித கிரியினு மயல்கொடு திரிவேனும்;
இரவு பகலற இகலற மலமற
இயலு மயலற விழியினி ரிழிவர
இதய முருகியெ யொரு Oகுள பதமுற மடலூடே-

---

* பெண்களை நினைக்கும் மனது உன்னை நினைக்க லாகாதா!-
"தத்தையங் கனையார் தங்கள் மேல் வைத்த
தயாவை நூறாயிரங் கூறிட்டு, அத்தில் அங்
கொரு கூறுன்கண் வைத்தவருக் கமருல களிக்கும்
நின் பெருமை" - திருவிசைப்பா - 13-8.

† 'ஒருகணை தெரியும் நாராயணன்'-பாடல் 452-பக்.6 கீழ்க்குறிப்பு.

‡ 'கனக மாணிக்க வடிவனே' - திருப்புகழ் 427.

X 'முளரியின்' என்பது இடைநிலைத் தீபமாகக் கொண்டு 'முளரியின் கரம்', 'முளரியின் மலர்முகம்' எனப் பொருள் காணலாம். "திருமுகங்கமலம் ... துணைக்கரம் கமலம்"
-தணிகைப் புராணம் - களவு 43.

O குள பதம் - சர்க்கரைப் பாகு பதம்.

படியும்(என்) மனம் உனது சிலம்பணிந்த சரணம் - அடைக்கல ஸ்தானமாகிய திருவடித் தாமரையை நினைக்கமாட்டாதோ!

(நகமுக சமுக) மலை இடங்களின் முன்புள்ள அசுரர்கள் இறந்துபட, பலவித மலைகளும் பொடிபட-

(நதிபதி) கடல் கதற, ஒரு அம்பைச் செலுத்தின நாராயணனுடைய மருமகனே!

(அகல் நக) அகன்ற மலையிடங்களுக்கு உரியவனே! கனக-(செம்) பொன் வடிவனே! - சிவதல முழுதும்- சிவ ஸ்தலங்கள் எல்லாவற்றிலும் (அமர்ந்த பெருமாளே!) *(ஆராம பந்தி) சோலைகளின் வரிசைகள் தோறும்

அழகிய † வண்டுகளின் கூட்டம் வரிசை வரிசையாக (மலர்த்தேனை) எண்ணி விரும்பும் திருவாரூரில் அமர்ந்த பெருமாளே! (மனது உனது-பாதாரவிந்தம் நினையாதோ).

# 825.

கரங்கள் (முளரியின்மலர்) தாமரையையும், முகம் நிலவையும், கூந்தல் (கனமது) மேகத்தையும், எண்ணும் மொழி-மதிக்கத்தக்க சொற்கள் கனி - பழத்தையும் கதிர் மு(ல்)லை நகை - கதிர்நகை-ஒளி பொருந்திய பற்கள் (முலை) முல்லைமலரையும், (கலகம்) போரை (சச்சரவை) விளைக்கும் கண்கள் கடலையும், விஷத்தையும் ஒக்கும் என்று மனதுக்குள்ளே-

எண்ணி, அன்னம்போன்ற நடை, கொடிபோன்ற இடை (இயல் மயில்) மயில் போன்ற சாயல். நறுமணம் வீசும் அகிலுடன் இழைந்துள்ள கஸ்தூரிக்கலவை, புளகாங்கிதம் - கொண்ட கிரி-(யினும்) கொங்கை இவைகளில் மோகம் கொண்டு திரிகின்ற நானும்-

‡ இரவு பகல் அற, பகை எண்ணம் அற, (அவிரோத ஞானம் உற), மும் மலங்கள் அற, வந்து பொருந்துகின்ற ஆசைகள் அற(ஒழிய)க், கண்களில் நீர் இழிவர-நீர் ஒழுக, உள்ளம் உருகி ஒரு பாகுவெல்லம் போன்ற (பதத்தை) நிலையப் பொருந்த-மடலில்-

---

* சோலைகளின் வரிசைகள் தோறும் அமர்ந்த பெருமாளே எனவும் சேர்க்கலாம்-"காடும் காவும் கவின் பெறு துருத்தியும்...புதுப் பூங் கடம்பும்" என்றாராதலின்-திருமுருகாற்.

† இங்கே வண்டுகள் - முநிவர்கள் எனலுமாம் (உருவகம்): 'அலந்து மதுகர முநிவர் பரவ வளர் கமலம் அனைய திருவடியிணைகள்'-எனவரும் சிவப்ரகாசச் செய்யுளையும்-'முநிவராகிய வண்டுகள் ஆசைப்பட்டுத் தோத்திரம் பண்ண' -என வரும் அதன் உரையையும் காண்க. 'மதுப முகரித...கவிமாலை சூடுவதும்...சீறடியே' - சீர்பாத வகுப்பு-(அருணகிரிநா. நூலாராய்ச்சி-பக்.180).

‡ இரவு பகல் அற-பாடல் 303-பக்கம் 250 கீழ்க்குறிப்பு.

*யெழுத அரியவள் குறமக ளிருதன
கிரியில் முழுகின இளையவ னெனுமுரை
யினிமை பெறுவது மிருபத மடைவது
மொருநாளே;

† சுரபி மகவினை யெழுபொருள் வினவிட
மனுவி னெறிமணி ‡ யசைவுற விசைமிகு
துயரில் செவியினி லடிபட வினவுமி னதிதீது-
துணிவி லிதுபிழை பெரிதென வருமநு
உருகி யரகர சிவசிவ பெறுமதொர்
சுரபி யலமர விழிபுனல் பெருகிட நடுவாகப்;

பரவி யதனது துயர்கொடு நடவிய
Xபழுதின் மதலையை யுடலிரு பிளவொடு
Oபடிய ரதமதை நடவிட மொழிபவ னருளாரூர்ப்-
படியி லறுமுக சிவசுத கணபதி
யிளைய குமரநி ருபபதி சரவண
பரவை முறையிட அயில்கொடு நடவிய
பெருமாளே.(6)

---

* 'எழுதிட அரிய எழில் மறமகள்' - திருப்புகழ் 1080.

† திருவாரூரில் மநுநீதிச் சோழன் மகன் செலுத்தின தேர் அவன் அறியாமல் ஒரு பசுவின் கன்றின்மேல் ஏற அக் கன்று இறந்தது. கன்றை இழந்த தாய்ப்பசு துயரம் எய்தி, சோழனது அரண்மனை வாயிலில் இருந்த ஆராய்ச்சி மணியைத் தன் கொம்பால் அசைத்து அடித்தது. சோழன் திடுக்கிட்டு நடந்த விவரங்களை அறிந்து தன் மகன்மீது தன் தேரைச் செலுத்தி மகனை மடிவித்துப் பழிக்குப் பழிவாங்கி அறத்தை நிறுவினன். சோழனது நீதித் திறத்தைக் கண்ட இறைவன் இறந்த கன்றும் மகனும் உயிர்பெற்றெழுமாறு அருளினர். இதன்விரிவைப் பெரிய புராணத்திற்-காண்க.

"தன்னுயிர்க் கன்று வீயத் தளர்ந்த ஆ தரியா தாகி
முன்னெருப் புயிர்த்து விம்மி முகத்தினிற் கண்ணீர் வார
மன்னுயிர் காக்குஞ் செங்கோன் மனுவின்பொற் கோயில் வாயிற்
பொன்னணி மணியைச் சென்று கோட்டினாற் புடைத்த தன்றே"

‡ அசைவுறவிசை-அசைவு உறு அ இசை. விசை மிகுதுயர்- வேகம் மிக்க துயர்-எனலுமாம்.

X பழுதின் மதலை - குற்றமடைந்த மதலை, பழுது இல்மதலை-குற்றம் இல்லாத மதலை-என இரு பொருள்பட உளது.

O "ஒரு மைந்தன் தன் குலத்துக் குள்ளானென் பதுமுணரான்
தருமந்தன் வழிச் செல்கை கடனென்று தன்மைந்தன்
மருமந்தன் தேராழி யுறவூர்ந்தான் மனுவேந்தன்"
(மருமம் - மார்பு) - பெரிய புரா-திருவாரூர் 27, 44.

எழுதுதற்கு முடியாத அழகினளாம் குறமகளின் வள்ளியின் - இரண்டு கொங்கை மலைகளில் முழுகின இளையவனே என்கின்ற (உரையானது) சொல்லானது எனக்கு இன்பம் தருவதும், நான் உன் இரண்டு பதங்களை அடைவதுமான ஒரு நாள் (என்றேனும்) வருமா!

(சுரபி) பசு (மகவினை) இறந்துபட்ட தன் கன்றினை, எழுபொருள் வினவிட - எழுப்புதற்கு வழியை ஆராய்ந்து நாடி-(மனுவின்)மநுநீதி சோழனுடைய (நெறி மணி) - அறநெறியைக் காட்டும் ஆராய்ச்சி மணியை (அசைவு உற) சென்று அசைத்து ஆட்ட, அ இசை - அந்த மணி ஒலியானது மிக்க துயரை விளைத்து (அரசனது) காதில் (அடிபட) ஒலிக்க, (அரசன் அச்சம் உற்று) வினவுமின்-போய் விசாரியுங்கள், அதிதீது - மிகவும் கொடுமையான செயல் ஏதோ நடத்திருக்கின்றது-

(துணிவில்) நிச்சயித்துப்பார்க்கில் - ஆய்ந்து பார்க்கில் -ஏதோ பெரிய பிழை வந்துளது என எழுந்து வந்த மநுச்சோழன் - உள்ளம் உருகி, அவன் வாயினின்றும் "ஹரஹர சிவசிவ" என்ற வார்த்தைகளை வரச்செய்த ஒப்பற்ற அந்தப் பசு வேதனைப்பட்டு கண்ணீர் பெருக்குதலைக் கண்டு, நடுநிலைமை அறிந்து-

(இறைவனைத்) தியானித்து, அந்த பசுவுக்குத் துயரத்தை தரும்படியாகத் (தேரை) (நடவிய) ஓட்டின (பழுதின்-மதலையை) குற்றத்துக்கு ஆளான தனதுபிள்ளையின் உடல் இருண்டு பிளவுபடும்படி அவன்மேல் படியும்படித் தேரை நடத்தும்படிச் சொன்னவனாகிய மநு ஆண்டருளின திருவாரூர் (அல்லது மநுவுக்கு அருள்பாலித்த திருவாரூர்)ப்

(படியில்) பூமியில் - தலத்தில் ஆறுமுகனே! சிவகுமாரனே! கணபதியின் தம்பியே! குமரனே! அரசர் தலைவனே! சரவணனே! கடல் முறையிட்டலற வேல்கொண்டு செலுத்தின பெருமாளே!

(இருபதம் அடைவதும் ஒரு நாளே)

## 826. மனம் உருக

தானா தானா தனதன தனதன
தானா தானா தனதன தனதன
தானா தானா தனதன தனதன தனதான

பாலோ தேனோ பலவுறு சுளையது
தானோ வானோர் அமுதுகொல் கழைரச
பாகோ வூனோ *டுருகிய † மகனுண வருண்ஞானப்-
பாலோ வேறோ மொழியென அடுகொடு
வேலோ கோலோ விழியென முகமது
‡ பானோ வானூர் நிலவுகொ லெனXமகண்
மகிழ்வேனை;

O நாலாம் ரூபா கமலஷண் முகவொளி
யேதோ **மாதோம் எனதகம் வளரொளி
நானோ நீயோ படிகமொ டொளிரிட மதுசோதி
நாடோ வீடோ †† நடுமொழி யெனநடு
தூணோர் தோளா சுரமுக கனசபை
நாதா தாதா எனவுருகிட அருள் புரிவாயே;
மாலாய் ‡‡ வானோர் மலர்மழை பொழியவ
தாரா சூரா எனமுநி வர்கள்புகழ்
மாயா ரூபா அரகர சிவசிவ XXஎனவோதா-
OOவாதா டூரோ டவுணரொ டலைகடல்
கோகோ கோகோ எனமலை வெடிபட
வாளால் வேலால் மடிவுசெய் தருளிய முருகோனே;

---

* உருகிய-ஒன்றுபட்ட † மகன் - திருஞான சம்பந்தர்.
‡ பானோ-பாநுவோ. X மகள்-பெண்கள். O நாலாம்-பல.
"ஒன்றாய் இருதிறமாய்...அளப்பிலவாய்
நின்றாய் சிவனேயிந் நீர்மையெலாம் தீங்ககற்றி
நன்றாவி கட்கு நலம் புரிதற் கேயன்றோ. -கந்தபுரா-3-9-78.
** மா தோம்-பெருங் குற்றம். †† நடுமொழி-உண்மையை மொழி.
‡‡ முருகன் அவதரித்த பொழுது வானோர் மலர்மாரி பொழிந்தனர்.
"அயனும் மாலும் வான்திகழ் மகத்தின் தேவும்
முநிவரும் மலர்கள் தூவி, ஏன்றெமை அருளு கென்றே
ஏத்திசை எடுத்துச் சூழ்ந்தார்" -(கந்தபுரா-திருஅவதார-93)
XX ஓதா - ஓதாமல்.
OO" வாதாடு அவுணரொடு ஊரொடு" என மாற்றிப் பொருள்கொள்க.

# 826.

**பா**லோ! தேனோ! பலாப்பழத்தில் உள்ள சுளைதானோ! தேவர்கள் உண்ணும் அமுதம் தானோ! கரும்புரச வெல்லப்பாகோ! ஊன் ஒன்றுபட்ட - (குழந்தையாய் அவதரித்த) அல்லது ஊன் உருகப்பாடிய மகன் - திருஞானசம்பந்தர் உண்ணும்படி (தேவி) அருளின ஞானப்

பால்தானோ! வேறு-வேறு ஏதாவதோ-(மகளிரின்) மொழி என்றும், அடு கொடு-கொல்லுதலைக் கொண்ட வேல்தானோ, அம்புதானோ (அவர்களின்)கண்கள் என்றும், முகமானது-பானுவோ-சூரிய ஒளியதோ, ஆகாயத்தில் ஊர்ந்து செல்லும் சந்திர ஒளியோ என்றும், (மகள்) பெண்கள்பால் மகிழ்ச்சிகொள்ளும் நான்-

(நாலாம் ரூபா)-பல உருவமும் கொண்ட உருவத்தனே! தாமரை போன்ற ஆறுமுக ஒளியே! வேறு எதுவோ! (மாதோம் எனது அகம்) பெருங்குற்றம் கொண்ட என்னுடைய மனத்தில் வளர்கின்ற சோதியே! நானோ நீயோ பளிங்குபோல விளங்கும் இடம்; அது (ஒரு) சோதி

நாடுதானோ அல்லது மோக்ஷவீடோ! நடுநிலைமையான உண்மையை மொழி என்று வேண்டி, நடுவில் உள்ள தூணுக்குச் சமமான தோள்களை உடையவனே! தேவர்கள் முன்னிலையில் பெருமைதங்கிய சபையில் நாதனாய் விளங்குபவனே! (தாதா) கொடையாளனே! {(அல்லது உனது திருவருளைத் தா (கொடு) தா (கொடு)} என்று என்மனம் உருகுமாறு திருஅருள் புரிவாயாக;

காதல் பூண்டவராய்த் தேவர்கள் பூமாரி பொழிய (அவதாரா) அவதரித்தவனே-தோன்றியவனே! சூரனே! என்று முநிவர்கள் புகழும் மாயாரூபனே! 'ஹர ஹர! சிவ சிவ!' என்று ஓதாமல்

வாதாடி நின்ற அவுணர்களும், அவர்தம் ஊரில் இருந்தவர்களும், அலைகடலும் கோகோ கோகோ என்று அலறவும், மலைகள் (கிரவுஞ்சம் எழுகிரி)-வெடிபட்டுப் பொடியாகவும், வாளாலும் வேலாலும் அவர்களை அழிவு செய்தருளிய முருகனே!

*சூலாள் மாலாள் மலர்மகள் கலைமகள்
† ஓதார் சீராள்‡ கதிர்மதி குலவிய
தோடாள் கோடா ரிணைமுலை குமரிமுன் அருள்பாலா-
தூயா ராயார் இதுசுக சிவபத
வாழ்வா Xமீனே வதிவமெ னுணர்வொடு
சூழ்சீ ராளர் மருவிய இமையவர் பெருமாளே(7)

## பெரியமடம்.

(கும்பகோணத்தில் ஸ்ரீ மகாமக தீர்த்தத்தின் வடகரையிலுள்ள வீர சைவமடம்.)

"குடந்தையம் பதியிற் கோதிலாப் பெரிய
மடந்தனில் வாழ்வீர மயேச்சுரர் வாழியே"
-தக்கயாகப்பரணி பக்கம் 255.

## 827. தீக்ஷை பெற

தனதனன தானதன தத்தனா தாத்த
தனதனன தானதன தத்தனா தாத்த
தனதனன தானதன தத்தனா தாத்த தனதான

கலகவிழி மாமகளிர் கைக்குளே யாய்ப்பொய்
களவுமத னூல்பலப டித்தவா வேட்கை
கனதனமு மார்புமுற லிச்சையா லார்த்து கழுநீரார்-
கமழ்நறைச வாதுபுழு கைத்துழாய் வார்த்து
நிலவரசு நாடறிய கட்டில்போட் டார்ச்செய்
கருமமறி யாதுசிறு புத்தியால் வாழ்க்கை கருதாதே;
தலமடைசு சாளரமு கப்பிலே காத்து
நிறைபவுசு வாழ்வரசு சத்யமே வாய்த்த
தெனவுருகி யோடியொரு சற்றுளே வார்த்தை
தடுமாறித்-

---

* சூலாள் - துர்க்கை.

† ஓது ஆர் சீராள். "தவளரூப சரச்சுதி யிந்திரை...சேவித...சத்தி பரம்பரி" - திருப்புகழ் 337.

‡ கதிர் (சூரியனையும்) மதி (சந்திரனையும்) தோடாகக் கொண்டவள்-எனலுமாம். சூரியன், சந்திரன் - தேவிக்குக் குழை-

'வயங்கு குழை மதியமோ வாளிரவி மண்டலமே'. தேவிக்கு
மதியம் முத்தக்குழை; இரவி மண்டலம் மாணிக்கக் குழை
-தக்கயாகப்பரணி 116-உரை

X ஈனே வதிவம் - இத்தலத்திலேயே உறைவோம்.

*(சூலாள்) துர்க்கை, (மாலாள்) - திருமாலுக்கு உரியவளாம், மலர்மகள்-பூமகள்-லக்ஷ்மி, கலைமகள்-சரஸ்வதி, இவர்கள் ஓதி நிற்கும் சீர்படைத்தவள், ஒளிவீசும் நிலவின் ஒளிகொண்ட தோடு-என்னும் அணியை அணிந்தவள். (கோடார் இணைமுலை) மலைபோன்ற கொங்கை இரண்டை உடைய குமரி, தேவி-முன்பு அருளொடு அளித்த குழந்தையே!*

*பரிசுத்தமாக இருப்பவர்கள், இதுவே (இத் திருவாரூர் வாழ்வே) சுகமான சிவபத வாழ்வு-இத்தலத்திலேயே நாம் இனித் தங்கிவாழ்வோம் என்ற ஞான உணர்ச்சியொடு வந்து சூழ்கின்ற சிறப்புள்ள திரு **ஆரூரில்** சேர்ந்துள்ள **தேவர்** பெருமாளே!*

*(உருகிட அருள் புரிவாயே)*

## பெரியமடம்

## 827.

***க**லகத்தை விளைக்கக்கூடிய கண்களை உடைய அழகிய மாதர்களின் கைக்குள்ளே (ஆய்) அகப்பட்டு, பொய், களவு, காம சாத்திரம் (பல படித்து) பலவும் கற்று, (அவா, வேட்கை)-ஆசை, விருப்பத்துடன் கனத்த கொங்கைகளும் மார்பிற் பொருந்துதலை இஷ்டத்துடன் சேர்த்துக், கழுநீர்ப்பூ நிரம்பி*

*மணக்கும் நறுமண ஜவ்வாது, புனுகு இவைகளைக் கலந்து ஊற்றிப் பரிமளிக்கவைத்து, நில அரசு - நிலத்தில் - பூமியில் உள்ள அரசர் முதல் நாட்டில் உள்ளார் யாவரும் அறியும்படியாகக் கட்டிற் படுக்கை போட்டவர்களாம் (வேசையர்கள்) செய்கின்ற தொழில்களின் (சூதை) அறியாமல் எனக்குள்ள அற்ப புத்தியால் எனது வாழ்க்கையின் (அருமையை) எண்ணாமல்-*

*(அந்த வேசையர்களுள்ள) தலம்-இடத்தை, அடைக-நெருங்கிச்சென்று, அவர்களுடைய வீட்டு ஜன்னல் வாயில்களின் முன்புறத்தில் காத்துநின்று - பின்னர், (அவர்களால் அழைக்கப்பட்டவுடன்) நிறைந்த (பவுசு) ஐசுவரியமும், அரசவாழ்வும், சத்யப்பேறும் கிடைத்தன போல மகிழ்ந்து, மனம் உருகி, அவர்கள் வீட்டுக்குள் ஓடி, உள்ளே இருக்கும் கொஞ்ச நேரத்துக்குள் அவ் வேசையர்களுடன் பேசும் பேச்சும் தடுமாறி-(அவர்களைத்)*

தழுவியநு ராகமும்வி ளைத்துமா யாக்கை
தனையுமரு நாளையும வத்திலே போக்கு
தலையறிவி லேனைநெறி நிற்கநீ *தீக்ஷை
தரவேணும்;

† அலகில்தமி ழாலுயர்ச மர்த்தனே போற்றி
‡ அருணைநகர் கோபுரவி ருப்பனே போற்றி,
அடல்மயில்ந டாவியப்ரி யத்தனே போற்றி அவதான-

அறுமுகசு வாமியெனும் அத்தனே போற்றி
Xஅகிலதல மோடிவரு நிர்த்தனே போற்றி
Oஅருணகிரி நாதஎனும் அப்பனே போற்றி அசுரேசர்;

---

* தீட்சை-நயன தீட்சை, பரிச தீட்சை, மானச தீட்சை, வாசக தீட்சை, சாத்திர யோகதீட்சை, ஔத்திரி தீட்சை, என ஏழுவகைப்படும்.

(1) நயன தீட்சை-சீடனைக் குரு தனது அருட்பார்வையால் ஞானம் உண்டாகும்படிச் செய்வது:

(2) பரிச தீட்சை - தன் பரிசத்தால் குரு சீடனுக்கு ஞானம் உண்டாக்குதல்

(3) மானச தீட்சை - சீடனது மனத்துள் யோக சத்தியால் குரு பிரவேசித்து அவனுக்குச் சுத்தி செய்வித்தல்.

(4) வாசக தீட்சை-பஞ்சாக்ஷரத்தைப் பதினொரு மந்திரங்களுடன் உச்சரிக்கும் முறையைக் குரு சீடனுக்கு உபதேசித்தல்.

(5) சாத்திர தீட்சை-சிவாகம தத்துவங்களை ஆசிரியன் மாணவனுக்கு உபதேசிப்பது -(சைவாகமாதி சிவ சாத்திரப் பொருளைப் போதித்தல்):

(6) யோக தீட்சை - யோக மார்க்கத்தால் குரு சீடனது உடலுட் பிரவேசித்து அவனது ஆன்மாவைக் கிரகித்துச் சிவன் திருவடியிற் சேர்ப்பித்தல். (நிராதார யோகத்தை அப்பியாசம் பண்ணுவிக்கை எனவும் கூறப்படும். நிராதாரயோகம் என்பது-ஆத்மா தற்போதம் இழந்து பற்றற நிற்கும் நிலை):

(7) ஔத்திரி தீட்சை-ஓமம் முதலிய கிரியைகள் செய்து குரு சீடனுக்கு ஞானம் ஊட்டுதல். இது கிரியாவதி, ஞானவதி என இருவகைப்படும்; கிரியாவதி - குண்ட மண்டலாதிகளையும் வேதிகளையும் புறத்தே அமைத்து ஆகமத்திற் கூறியபடி செய்யும் தீட்சை வகை; ஞானவதி -வேண்டும் சாதனங்களையும் கிரியைகளையும் குரு தனது பாவனையாற் செய்துகொள்ளும் தீட்சை வகை.

(தொடர்ச்சி-பக்கம் 433 பார்க்க)

தழுவிக் காமலீலைகளைச் செய்தவனாய்ச் சிறந்த என் உடலையும் அருமையான வாழ்நாளையும் வீணிலே போக்குகின்ற - (தலை அறிவிலேனை) உத்தம அறிவு இல்லாத நான் (அல்லது முதலில் அறியவேண்டிய ஆரம்ப அறிவும் இல்லாத நான் நன்னெறியிலே நிற்கும்படி நீ (தயை புரிந்து) தீக்ஷை செய்தருளவேண்டும்.

அளவிலாத தமிழறிவால் உயர்ந்துள்ள சாமர்த்திய சாலியே போற்றி! திரு அண்ணாமலைப்பதிக் கோபுரத்தில் விரும்பி வீற்றிருப்பவனே போற்றி! வலிய மயிலை நடத்தி ஓட்டினதிற் பிரியம் வைத்தவனே போற்றி! (அவதானம்) மேன்மையான செயல்களைச் செய்த

ஆறுமுக சுவாமி என்னும் தலைவனே போற்றி! எல்லாப் பூமிகளிலும் ஓடிவந்த நிருத்த மூர்த்தியே போற்றி! 'அருணகிரிநாத' என்று என்னை அழைத்த அப்பா போற்றி! அசுரத் தலைவர்களின்

---

*(432 ஆம் பக்கத் தொடர்ச்சி)*

† தமிழால் உயர் சமர்த்தன்-சம்பந்தப் பெருமான், முத்தமிழ் விரகர்.

‡ தனக்கு அருளிய முருகவேளை அருணகிரியார் இங்கு குறிக்கின்றார். இவர் தான் "ஆடக விசித்ரகன கோபுர முகப்பில் அருணாபுரியில் நிற்கும் அடையாளக்காரன்" (வேளைக்காரன் வகுப்பு). 'அடலருணைத் திருக்கோபுரத்தே அந்த வாயிலுக்கு வட வருகிற் சென்று கண்டு கொண்டேன்...இளைய களிற்றினையே' (கந்தரலங்காரம்)-காப்புச் செய்யுள் -எனக் குறிப்பிக்கப்பட்டவர்.

X அகிலதலம் ஓடிவந்தது-பாடல் 184-பக்கம் 430-கீழ்க்குறிப்பு பாடல் 267 பக்கம் 164-கீழ்க்குறிப்பு.

O இந்த அடி 'நாதன்' எனும் பட்டத்தைத் தந்து 'அருணகிரிநாத' என முருகவேள் தன்னை அழைத்த வரலாற்றைக் கூறுகின்றது (அருணகிரிநாதர் வரலாறு-பக்கம் 46, 231-பார்க்க).

பெலமடிய வேல்விடுக ரத்தனே போற்றி
கரதலக பாலிகுரு வித்தனே போற்றி
பெரியகுற மாதணைபு யத்தனே போற்றி
பெருவாழ்வாம்

*பிரமனறி யாவிரத தக்ஷிணா மூர்த்தி
† பரசமய கோளரித வத்தினால் வாய்த்த
**பெரியமட** மேவியசு கத்தனே ‡ யோக்யர்
பெருமாள். (1)

## சோமநாதன்மடம்.

(ஆரணி தாலூக்காவில் உள்ள புத்தூரில் சோமநாதன் மடம் உளது.)

## 828. மௌனோபதேசம் பெற

தனதனன தான தான, தனதனன தான தான
தனதனன தான தான தனதான

Xஒருவழிப டாது மாயை யிருவினைவி டாது நாளு
முழலுமநு ராக மோக அநுபோகம்-
உடலுமுயிர் தானு மாயு னுணர்விலொரு காலி ராத
வுளமுநெகிழ் வாகு மாறு அடியேனுக்;

Oகிரவுபகல் போன ஞான பரமசிவ யோக தீர
மௌனமொழியும் வீசு பாச கனகோப-

---

* **பிரமனறியாவிரத தக்ஷிணாமூர்த்தி** - இது பிரணவப் பொருளை அறியாத பிரமனைச் சிறையிட்ட வரலாறு
-பாடல் 212-பக்கம் 42 கீழ்க்குறிப்பு.

† **பரசமயகோளரி** - ஞான சம்பந்தருக்கு ஒரு பெயர்-
"சைவரெல்லாம் - ஆர்கலியின் கிளர்ச்சியெனச்
சங்குதாரை அளவிறந்த பல்லியங்கள் முழக்கி யார்த்துப்
பார்குலவு தனிக்காளம் சின்ன மெல்லாம்
**பரசமய கோளரி** வந்தானென் றூத..."
-பெரியபுரா-ஞானசம்-604.

‡ யோக்யர்-யோகியர்.

(தொடர்ச்சி 435 ஆம் பக்கம் பார்க்க.)

வலிமை அழிய வேலைச் செலுத்தின திருக்கரத்தாய் போற்றி! (கரதலத்தில்) கையில், கபாலம் ஏந்தியுள்ள குரு-சிவனுக்கும் - வித்தனே-ஞான (உபதேசப்) பண்டிதனாய் நின்றவனே போற்றி! பெருமைவாய்ந்த குறமாது அணையும் திருப்புயங்களை உடையவனே போற்றி! பெருஞ்செல்வப் பொருளாம்-

பிரமனும் அறியாத விரத தக்ஷிணா மூர்த்தியே (உபதேச மூர்த்தியே)! பிற சமயங்களை (சமண-புத்த மதங்களை) அழிக்கவந்த சிங்கமே! தவச் செயலால் கிடைக்கும் (சுகத்தனே) சுகப்பெருமானே! பெரியமடம் என்னும் இடத்திலே வீற்றிருக்கும் சுகப்பொருளே! யோகியர்தம் பெருமாளே!

(நீ தீக்ஷை தரவேணும்)

## சோமநாதன் மடம்

## 828.

ஒரு வழியில் நிலைத்து நிற்க¶ முடியாமல் மாயைகளும் இருவினைகளும் என்னை விடாமல், நாள்தோறும் அலைச்சல் தருகின்ற காமலீலை மோக அனுபோகத்திற் பட்டு

உடலும் உயிருமே (எண்ணமதாய்), உன் உணர்ச்சி (நீ உள்ளாய் என்னும் உணர்ச்சி) ஒரு காலும் இல்லாத என் உள்ளமும் நெகிழ்ந்து கசியும்படி, அடியேனுக்கு

இரவும் பகலும் கடந்த ஞான பரமசிவ யோகமே தீரத்தைத் (தைரியத்தைத்) தருவது என மொழிந்து காட்டுவதும், வீசப்படுவதான பாசக்கயிற்றைக் கொண்ட பெருத்த கோபம் உள்ளவர்களான-

---

(434-ஆம் பக்கத் தொடர்ச்சி).

X**மாயையின் வன்மை** - 'பொய்ம்மாயப் பெருங்கடலிற் புலம்பாநின்ற புண்ணியங்காள் தீவினைகாள் திருவே நீங்கள் இம்மாயப் பெருங்கடலை யரித்துத் தின்பீர்" ; "ஐம்பெருமா பூதங்காள் ஒருவீர் வேண்டிற் றொருவீர் வேண்டீர்" -(அப்பர்-6-27-1, 2)

O இரவு பகல் போன ஞானம்

-பாட்டு 303-பக்கம் 250-கீழ்க்குறிப்பு

*எமபடரை மோது **மோன வுரையிலுப தேச வாளை**
யென துபகை தீர நீயும் **அருள்வாயே;**

†அரிவையொரு பாக மான அருணகிரி நாதர் பூசை
அடைவுதவ றாது பேணும் அறிவாளன்-
‡அமணர்குல கால னாகும் அரியதவ ராஜ ராஜன்
Xஅவனிபுகழ் **சோமநாதன்** மடமேவும்;

முருகபொரு சூரர் சேனை முறியவட மேரு வீழ
முகரசல ராசி வேக முனிவோனே-
Oமொழியுமடி யார்கள் கோடி குறைகருதி னாலும் வேறு
முனியஅறி யாத தேவர் பெருமாளே. (1)

---

*** மோனவாள் எமபடரை மோத வல்லது:**

"எனது மனசிற் பரம சுக மவுன கட்கமதை
யமன்முடி துணிக்க விதியா வைத்த பூபதியும்"

(வேடிச்சி காவலன் வகுப்பு)

"இறக்க எனதெதிர் நடக்கும் யமபடர்
கடக்க விடுவதொ ரியற்கை அருள்வதும்...
அறுமுக ஒருத்தன் அருளிய பெருத்த வசனமே"

(பெருத்த வசன வகுப்பு)

† திரு அண்ணாமலையில் தேவி இறைவனது இடது பாகத்தைப் பெற்றதாக அருணாசல புராணம் கூறுகின்றது:

-(பாடல் 301)-பக்கம் 246-ம் பார்க்க).

காஞ்சியில் தவஞ் செய்திருந்த தேவியைத் திருவண்ணாமலைக்கு வா-அங்கே 'பாகம் தருவோம்' என இறைவன் கூறத், தேவி அங்ஙனமே சென்று கௌதமர் ஆசிரமத்தருகே தவஞ்செய்ய இறைவன் வெளிப்பட்டுத் தமது இடப்பாகத்தைத் தந்தருளினார். "முத்தி...தன்னை நினைத்தபேர்க் களிக்கும் மூதூர்...அங்கே வாரணி முலையாய் பாகம் தருகுவோம் வருதி என்றார்" 'மங்கையே நமதிடப்புறத் துறையென மகிழ்வுற் றங்கையா லணைத்தருளினன் உருகி ஒன்றானார்-அருணாசல புரா-திருக்கண்-24; இடப்பாகம்-64;

-திருப்புகழ் 548-பக்கம் 248-கீழ்க்குறிப்பைப் பார்க்க.

‡ 'அமணர் குலகாலன் மேகம் அனைய கவிராஜ ராஜன் அவனிபுகழ் சோமநாதன் மனமேவும் முருக' - என்றும் பாடம்.

(தொடர்ச்சி 437-ஆம் பக்கம் பார்க்க.)

யமதூதர்களை மோதி வெருட்டத் தக்கதுமான மௌன நிலையதாய்ப், பேச்சிலாததான (ஞான) உபதேசம் என்கின்ற வாளை எனது உட்பகை புறப்பகை யாவும் ஒழிந்துபோக நீயும் (தயைகூர்ந்து) அருள்புரிதல் வேண்டும்;

தேவி ஒரு பாகமான அருணாசல மூர்த்தியின் பூஜையை (முறை) ஒழுங்கு தவறாமல் போற்றுகின்ற அறிவாளியும்-

சமணர் குலத்துக்கு ஒரு யமனாகத் தோன்றியவரும், அருமையான தவ ராஜ ராஜருமான உலகம் புகழும் 'சோமநாதன்' மடத்தில் வீற்றிருக்கும்

முருகனே! சண்டைசெய்த சூராதிகளின் சேனை முறிபட்டு அழியவும், வடக்கில் உள்ள மேருமலை பொடிபட்டு விழவும், (முகரம்) பேரொலி செய்யும் (அல்லது சங்குகளைக்கொண்ட (சலராசி) கடல் வெந்து வற்றவும் கோபித்தவனே!

உன்னைத் துதிக்கும் அடியார்கள் கோடிக்கணக்கான குறைகளைக்கருதி உன்னிடம் முறையிட்டாலும் அவர்களின் எண்ணத்துக்கு மாறாக அவர்கள் மீது கோபிப்பது என்பதையே அறியாத தேவர் பெருமாளே!

(மோன ...உபதேசவாளை ... அருள்வாயே)

---

(436 ஆம் பக்கத் தொடர்ச்சி.)

X "அண்ணாமலையாரை ஆத்மார்த்த மூர்த்தியாகக் கொண்டு நியமந் தவறாது பூஜை செய்து வந்தவரும், அமணர் குலத்தைக் கண்டித்தவரும், அரியத வராஜ ராஜராக விளங்கினவரும், பெரும் புகழ் பெற்றவருமான 'சோமநாதன்' என்பவர் புத்தூரில் தமக்கு உரிய ஒரு மடத்தில் உள்ள முருகவேளை வழிபட்டு வந்தார். இந்தச் சோமநாத மடத்திலிருந்த முருகவேளையும் அருணகிரியார் பாடிச், சோமநாதரது பத்தியையும் தவப் பண்பையும் இப் பாடலிற் சிறப்பித்துள்ளார்.

புத்தூரில் உள்ள சிவாலயத் திருமதிலிற் காணும் சாசனம் ஒன்று (கி.பி. 1370) சோமநாத ஜீயர்க்கு இப் புத்தூர்க் கோயிலும் மடமும் உரிமையாக உதவப்பட்டனவாகத் தெரிவிக்கின்றது. (சாசனத் தமிழ்க்கவி சரிதம்-பக்கம் 125-126). "அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்" - பக்கம் 132-133.

O முருகன் கருணையைக் காட்டும் இந்த அருமை அடி மனப்பாடஞ் செய்யத் தக்கது.

## திரியம்பகபுரம்.

(இது 'மதுரமாணிக்கம்' என்னுந் தலம் என்பர். திருவாரூரிலிருந்து 8-மைல்.)

### 829. மாதர் மீதுள மயக்கற

தனன தந்தனந் தனதன தனதன
தனன தந்தனந் தனதன தனதன
தனன தந்தனந் தனதன தனதன தனதான

உரையொ ழிந்துநின் றவர்பொரு ளெளிதென
வுணர்வு கண்டுபின் திரவிய இகலரு
ளொருவர் நண்படைந் துளதிரள் கவர்கொடு
பொருள்தேடி-
உளம கிழ்ந்துவந் துரிமையில் நினைவுறு
சகல *இந்த்ரதந்த் ரமும்வல விலைமக
ளுபய கொங்கையும் புளகித மெழமிக
வுறவாயே;
விரக வன்புடன் பரிமள மிகவுள
முழுகி நன்றியொன் றிடமல ரமளியில்
வெகுவி தம்புரிந் தமர்பொரு சமயம துறுநாளே-
விளைத னங்கவர்ந் திடு†பல மனதிய
ரயல்த னங்களுந் தமதென நினைபவர்
வெகுளி யின்கணின் றிழிதொழி லதுவற
அருள்வாயே;
செருநி னைந்திடுஞ் சினவலி யசுரர்க
ளுகமு டிந்திடும் படியெழு பொழுதிடை
செகம டங்கலும் பயமற மயில்மிசை தனிலேறித்-
திகுதி குந்திகுந் திகுதிகு திகுதிகு
தெனதெ னந்தெனந் தெனதென தெனதென
திமிதி மிந்திமிந் திமிதிமி திமியென வருபூதம்;

---

* இந்த்ர தந்த்ரம்-இந்திர ஜாலவித்தை போல மயக்கவல்ல வித்தைகள், வஞ்சகச் சொற்கள், செயல்கள்; "இந்திரஜாலம் புரிவோன் யாவரையும் தான் மயக்கும் தந்திரம்"

- கந்தர்கலி வெண்பா.

† பல மனதியர் - "நூறாயிர மனமுடை மாபாவிகள்"

-திருப்புகழ் 583.

# திரியம்பகபுரம்

## 829.

(உரை யொழிந்து நின்றவர்) பேசுதற்கு இயலாமல் விழித்து நிற்கின்ற இவரிடம் பொருள் (எளிது) அற்பமே எனத் தமது உணர்ச்சியினால் அறிந்து, பின்பு (திரவிய இகலருள் ஒருவர்) (திரவியம்) - பொருள், (இகலருள்) - வலிமை உடையவர்களுள் - பொருட் செல்வம் நிரம்பப் படைத்தவருள் ஒருவருடைய நட்பை அடைந்து, அவரிடத்துள்ள திரண்ட பொருளைக் கவரும் எண்ணம் கொண்டு அங்ஙனம் பொருளைத்தேடி-

உள்ளம் மகிழ்ந்து (உவந்து) களிப்புற்றுத் தமக்குள்ள உரிமையைக் காட்டத், தமக்கு ஞாபகமுள்ள எல்லாவித இந்திர ஜால வித்தைகளையும் காட்டவல்ல (விலைமகள்) பொதுமகளிரின் இரண்டு கொங்கைகளும் புளகம் கொள்ள நிரம்ப உறவு காட்டி-

(விரக அன்புடன்) காமத்தைக் காட்டும் அன்புடன் நறுமணம் மிக அந்தக் காம உள்ளத்திலேயே முழுகி, நன்றி பொருந்தினவராய், மலர்ப்படுக்கையில் பலவித லீலைகளைச் செய்து கலவிப்போர் செய்யும் சமயம் வாய்க்கும் அந்த நாளிலே-

பெருகியுள்ள தனம் - (செல்வத்தை) பொருள்களை அபகரிக்கும் பலவித எண்ணங்களை உடைய வேசியர், பிறருடைய சொத்துக்களையும் தம்முடையதே என்று நினைப்பவர்கள் ஆகிய (பொதுமகளிரின்) கோப மொழிகளில் (நின்று) அகப்பட்டு நிற்கும் இழிவுள்ள என் செயல் இனி அற்றுப்போக அருள்புரிவாயாக.

போரையே நினைந்திருக்கும் கோபமும் வலிமையும் கொண்டுள்ள அசுரர்கள், உகாந்த காலம்போல (யுகம் முடியும் காலம்போல) (போருக்கு) எழுந்த பொழுதினிலே, உலகம் முழுமையும் பயம் நீங்க, மயில் மேலே ஏறி-

திகுதி குந்திகுந் ..., திமிதிமி திமியென வந்த பூதங்கள்,-

கரையி றந்திடுங் கடலென மருவிய
வுதிர மொண்டுமுண் டிடஅமர் புரிபவ
கலவி யன்புடன் குறமகள் தழுவிய முருகோனே-
கனமு றுந்த்ரியம் பகபுர மருவிய
கவுரி தந்தகந் தறுமுக என இரு
கழல்ப ணிந்துநின் றமரர்கள் தொழுவல
பெருமாளே. (1)

## சிக்கல்.

(ரெயில்வே ஸ்டேஷன். நாகபட்டினத்துக்கு மேற்கு 3-மைல். ஸ்வாமி சந்நிதி கட்டுமலைமேலிருக்கின்றது. திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

## 830. அருள்பெற

தன்ன தத்த தனத்த தானன
தன்ன தத்த தனத்த தானன
தன்ன தத்த தனத்த தானன தனதான

கன்ன லொத்த மொழிச்சொல் வேசியர்
வன்ம னத்தை யுருக்கு லீலையர்
கண்வெ ருட்டி விழித்த பார்வையர் இதமாகக்-
கையி லுற்ற பொருட்கள் யாவையும்
வையெ னக்கை விரிக்கும் வீணியர்
கைகள் பற்றி யிழுத்து மார்முலை தனில்வீழப்;
பின்னி விட்ட சடைக்கு ளேமலர்
தன்னை வைத்து முடிப்பை நீயவி
ழென்னு மற்ப குணத்த ராசையி லுழலாமற்-
*பெய்யு முத்தமி ழிற்ற யாபர
என்ன முத்தர் துதிக்க வேமகிழ்
†பிஞ்ஞு கர்க்குரை செப்பு நாயக அருள்தாராய்;
வன்னி யொத்த படைக்க லாதிய
துன்னு கைக்கொ ளரக்கர் மாமுடி
மண்ணி லற்று விழச்செய் மாதவன் மருகோனே-

---

* 'முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன்'
-கந்தரலங்-22.

† சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 327-பக்கம் 314-கீழ்க்குறிப்பு.

கரை கடந்து எழுந்த கடல்போல உள்ள ரத்தத்தை மொண்டு உண்ணும்படிப் போர் புரிந்தவனே! சேர்க்கை யன்பு பூண்டு குறமகள் வள்ளியைத் தழுவின முருகனே!

பெருமை தங்கிய **திரியம்பகபுரம்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பார்வதி தேவி அருளிய கந்தனே! ஆறுமுகனே என்று உனது இரண்டு திருவடிகளையும் பணிந்து நின்று தேவர்கள் தொழுதற்குரிய பெருமாளே!

*(இழிதொழி லதுவற அருள்வாயே)*

## சிக்கல்

# 830.

**க**ற்கண்டு (அல்லது கரும்பு) போல இனிக்கும் பேச்சுக்களைப் பேசும் வேசியர், கடினமான மனத்தையும் உருக்கவல்ல லீலைகளைச் செய்பவர்கள், கண்கொண்டு வெருட்டி விழிக்கின்ற பார்வையர், இனிய வழியில் பக்குவமாகக்-

'கையில் உள்ள பொருள்கள் முழுமையும் வைத்திடு இப்படி' என்று கூறிக் கையை விரிக்கின்ற வீணினர் (பயனற்றவர்), கைகளைப் பிடித்து இழுத்து மார்பிற் கொங்கைமீது விழும்படியும்,

பின்னி வைத்துள்ள கூந்தலிலே மலர்களை வைத்துப் (பொருள்) முடிப்பை நீ அவிழ்ப்பாயாக என்று கூறுகின்ற அற்ப குணத்தராகிய அவ் வேசையர்களின் ஆசையில் நான் அலைச்சல் உறாமல்-

'சொல்லப்படும் இயல் இசை நாடகம் எனப்படும் முத்தமிழில் ஆசை கொண்டவனே' என்று முத்தி நிலை அடைந்த பெரியோர்கள் போற்றிசெய்ய மகிழ்கின்ற நாயகனே! (அல்லது) மகிழ்கின்ற பிஞ்ஞகர்க்கு (சங்கரிக்கும்) சிவனுக்கு உபதேசச் சொல் சொல்லும் (நாயகனே) தலைவனே! அருள் தருவாயாக.

அக்கினிக்கு ஒப்பான படைக்கலங்கள் முதலிய பொருந்தும் கைகளை உடைய அரக்கர்களின் பெரிய தலைகள் பூமியில் அற்றுவிழும்படிச் செய்கின்ற திருமாலின் மருகனே!

மன்னு பைப்பணி யுற்ற நீள்விட
மென்ன விட்ட முடுக்கு சூரனை
மல்லு டற்று முருட்டு மார்பற அடைவாகச்;
சென்னி பற்றி யறுத்த கூரிய
மின்னி லைத்த திறத்த வேலவ
செய்ய பொற்புன வெற்பு மானணை மணிமார்பா-
*செம்ம னத்தர் மிகுத்த மாதவர்
நன்மை பெற்ற வுளத்தி லேமலர்
செல்வ **சிக்கல்** நகர்க்குள் மேவிய
பெருமாளே. (1)

## 831. கண்பார்த்து வாழ்வருள்

தனதன தத்தத் தந்தான தானன
தனதன தத்தத் தந்தான தானன
தனதன தத்தத் தந்தான தானன தனதானா

புலவரை ரக்ஷிக் குந்தாரு வேமது
ரிதகுண வெற்பொக் கும்பூவை மார்முலை
பொருபுய திக்கெட் டும்போயு லாவிய புகழாளா-
பொருவரு நட்புப் பண்பான வாய்மையி
லுலகிலு னக்கொப் புண்டோவெ னாநல
பொருள்கள் நிரைத்துச் செம்பாக மாகிய
கவிபாடி;
விலையில்த மிழ்ச்சொற் குன்போலு தாரிகள்
எவரென மெத்தக் கொண்டாடி வாழ்வெனும்
† வெறிகொளு லுத்தர்க் கென்பாடு கூறிடு மிடிதீர-
மிகவரு மைப்பட் டுன்பாத தாமரை
சரணமெ னப்பற் றும்பேதை யேன்மிசை
விழியருள் வைத்துக் குன்றாத **வாழ்வையு
மருள்வாயே;**

---

* 'அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற் றைம்புலனும் அடக்கி ஞானம் புகலுடையோர் தம் உள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர்-சம்பந்தர் *1-132-6.*

செம்மனத்தர்-'செம்மனக்கிழவோர்'-என்றார் திருவிசைப்பாவில்--*14-6.*

† 'மிடுக்கிலாதானை வீமனே விறல் விசயனே வில்லுக்கிவனென்று கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை' சுந்தரர்-*7-34-2.*

பொருந்திய படத்தை உடைய பாம்பினுடைய பெரிய விஷம் என்று சொல்லும்படி (வேலாயுதத்தைச்) செலுத்தி முடுகி எதிர்வந்த சூரனை அவனது மற்போற் செய்யும் கரடு முரடான மார்பு பிளக்கவும்-தக்கவகையில்-

அவனது தலையைப் பற்றி அறுத்த கூர்மை கொண்ட மின்போல ஒளிரும் பராக்ரமம் வாய்ந்த வேலாயுதத்தை உடையவனே! செம்மை வாய்ந்த அழகிய திணைப்புனமுள்ள (வள்ளி) மலையில் இருந்த மான்போன்ற வள்ளியை அணைந்த அழகிய மார்பனே!

செம்மை வாய்ந்த மனத்துப் பெரியோர்கள், பெருந்தவம் மிக்கவர், ஆகிய இவர் தம் நல்ல எண்ணம் கொண்ட உள்ளத்திலே விளங்கி நிற்கும் செல்வனே! **சிக்கல்** என்னும் நகரிலே வீற்றிருக்கும் பெருமாளே! (அல்லது, உள்ளத்திலே விளங்கி நிற்கும் பெருமாளே! செல்வம் நிறைந்த சிக்கல்...மேவிய பெருமாளே!) (அருள் தாராய்).

## 831.

**பு**லவர்களை ஆதரித்து ரக்ஷிக்கும் கற்பக விருக்ஷமே! இனிமை மிக்க குணம் கொண்ட மலைக்கு நிகரான மாதர் கொங்கையில் திளைக்கும் புயத்தவனே! திசை எட்டிலும் போய் உலாவுகின்ற புகழாளனே!

ஒப்புவமை அற்ற நட்புத்தன்மை கூடிய சத்திய நிலையில் உலகிலே உனக்கு ஒப்பாவார் ஒருவர் உளரோ என்று நல்ல பொருட் சொற்களை வரிசையாக வைத்துச் செவ்விய முறையில் அமைந்துள்ள பாடல்களைப் பாடி-

விலைமதிப்பைக் கடந்த தமிழ்ச்சொல்லை ஆதரிப்பதற்கு உனைப்போல (உதாரிகள்) சிறந்த கொடையாளிகள் யார்தான் உள்ளார்கள் என்று நிரம்பக் (கொண்டாடி)ப் புகழ்ந்து - (தமது) வாழ்வே பெரிது என்னும் (வெறிகொள்)-தீவிர உணர்ச்சி கொண்டுள்ள (லுத்தர்க்கு) லோபிகளிடம் என் (பாடு) வருத்தங்களைப் போய் முறையிடும் (வறுமை) தரித்திர நிலை நீங்க-

மிக்க அருமைப்பாடுடனே-பிரயாசையுடனே உனது பாத தாமரைகளைப் புகலிடம் எனப் பற்றியுள்ள பேதையாகிய என்மீது நீ திருக்கண் அருள் வைத்துக் குறைவிலா வாழ்வை (பேரின்பவாழ்வை)த் தந்தருளுக.

இலகிய வெட்சிச் செந்தாம மார்புய
சிலைநுதல் மைக்கட் சிந்தூர வாணுதல்
இமயம கட்குச் சந்தான மாகிய முருகோனே-
இளையகொ டிச்சிக் கும்பாக சாதன
னுதவுமொ ருத்திக் குஞ்சீல நாயக
*எழிலியெ ழிற்பற் றுங்காய மாயவன்
மருகோனே;

அலர்தரு புட்பத் துண்டாகும் வாசனை
திசைதொறு முப்பத் தெண்காதம் வீசிய
அணிபொழி லுக்குச் சஞ்சார மாமளி யிசையாலே-
அழகிய† **சிக்கற் சிங்கார வேலவ**
சமரிடை மெத்தப் பொங்கார மாய்வரும்
அசுரரை வெட்டிச் சங்கார மாடிய
பெருமாளே. (2)

## நாகபட்டினம்

(ரெயில்வே ஸ்டேஷன். மூவர் தேவாரமும் பெற்றது. ஸ்தல புராணம் உண்டு.)

## 832. முத்திபெற

தான தத்த தத்த தந்த தான தத்த தத்த தந்த
தான தத்த தத்த தந்த தனதான

‡ஓல மிட்டி ரைத்தெ ழுந்த வேலை வட்ட
மிட்டஇந்த
ஊர்மு கிற்ற ருக்க ளொன்று மவராரென்-

---

* 'வண்ணமுகி லன்ன எழில் அண்ணல்' - சம்பந்தர் 3-74-9.

† சிக்கல் முருகவேளின் திருப்பெயர் - சிங்காரவேலவர்.
"சிக்கலம் பதிமேவு சிங்காரவேலனாந்
தேவர் நாயகன் வருகவே"
-க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ்.

‡ பொருள் வேண்டிப் பொருள் உள்ளோரிடம் தான் ஓலமிட்டு (அபயங்கூறி)ச் செல்வதால், கடல் இரைந்து திரை புரள்வதும் கடல் ஏதோவேண்டி ஓலமிட்டு ஒருவரிடம் முறையிடுவது போலத் தன் கருத்துக்குத் தோன்றுகின்றபடியால் "ஓலமிட்டு இரைத்தெழுந்த வேலை"- என்றார்.

(தொடர்ச்சி-பக்கம் 445 பார்க்க)

விளங்குகின்ற வெட்சிப் பூவாலாய சிவந்த மாலை அணிந்த மார்பும் புயமும் கொண்டவனே! வில்லைப்போன்ற புருவத்தையும், மைபூசிய கண்களையும், குங்குமப்பொட்டு அணிந்த ஒளிவீசும் நெற்றியையும் கொண்ட இமயமலைப் புத்திரியாகிய பார்வதிக்கு மைந்தனாக வந்த குழந்தையே!

இளையவளும் (கொடிச்சி) மலைநாட்டுப் பெண்ணு-மாகிய வள்ளிக்கும், (பாகசாதனன்) இந்திரன் பெற்ற ஒப்பற்றவளாகிய தேவசேனைக்கும் உரிய பரிசுத்த நாயகனே! (எழிலி) மேகத்தின் அழகைக் கொண்ட திருமேனியை உடைய திருமாலின் மருகனே!

மலர்கின்ற புஷ்பத்தில் உண்டாகின்ற வாசனையானது (திசைகள் தோறும்) எட்டுத் திசைகளிலும் முப்பத்தெட்டு காதம் வரை (380 மைல்) வரை வீசுகின்ற அழகிய நந்தவனங்களில் சஞ்சரிக்கும் வண்டின் இசை ஒலியால்-

அழகு பெற்று விளங்கும் **சிக்கல்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் சிங்கார வேலனே! போரிடையே மிகவும் பொங்கிக் கொதிப்புடனே வந்த அசுரர்களை வெட்டிச் சங்கரித்த பெருமாளே!

(குன்றாத வாழ்வையும் அருள்வாயே)

## நாகபட்டினம்

## 832.

**ஓ**லமிடுவதுபோல (அபயக்குறியுடன்) ஒலிசெய்து (அல்லது-சப்தமிட்டுப் பேரொலி செய்து) திரை எழுகின்ற கடல் வட்டத்துக்குள் உள்ள (இந்தப் பூமியில் உள்ள) ஊர்களில், (முகில்) ஒன்று - மேகம்போலக் (கைம்மாறு கருதாது கொடுக்கும் பிரபுக்கள்), (தருக்கள்) ஒன்று கற்பகவிருக்ஷம் போலக் (கேட்டதைக் கொடுக்கும் பிரபுக்கள்) யார் உள்ளார்கள் என்று (தேடிப்போய்)-

---

(444 ஆம் பக்கத் தொடர்ச்சி)

அல்லது-தன்னிடையே கிடந்த மாமரமாம் சூரனைக் கொல்ல எழுந்த முருகவேளின் வேல் வருவதைக்கண்டு ஓலமிட்டு அஞ்சி இறைஞ்சின கடல் எனலுமாம்; உக்கிரபாண்டியன் கடல் சுவறவேலை விட்டபோது ஓலமிட்டதையும் குறிக்கலாம். (திருவிளை-புராணம்).

*றாம ரைப்ர சித்த ரென்று மூட ரைச்ச
மர்த்த ரென்றும்
ஊன ரைப்ர புக்க ளென்று மறியாமற்;
கோல முத்த மிழ்ப்ர பந்த மால ருக்கு ரைத்த நந்த
கோடி யிச்சை செப்பி வம்பி லுழல்நாயேன்-
கோப மற்று மற்று மந்த மோக மற்று னைப்ப ணிந்து
கூடு தற்கு முத்தி யென்று தருவாயே;
வாலை துர்க்கை சத்தி யம்பி லோக கத்தர்பித்தர் பங்கில்
மாது பெற்றெ டுத்து கந்த சிறியோனே-
வாரி பொட்டெ ழக்ர வுஞ்சம் வீழ நெட்ட
யிற்று ரந்த
வாகை மற்பு யப்ர சண்ட மயில்வீரா;
† ஞால வட்ட முற்ற வுண்டு ‡ நாக மெத்தை
யிற்று யின்ற
Xநார ணற்க ருட்சு ரந்த மருகோனே-
நாலு திக்கும் வெற்றி கொண்ட சூர பத்ம
னைக்க ளைந்த
நாக பட்டி னத்த மர்ந்த பெருமாளே. (1)

## 833. மறவேன் என்பது

தான தந்ததன தந்ததன தந்ததன
தான தந்ததன தந்ததன தந்ததன
தான தந்ததன தந்ததன தந்ததன தந்ததான

மார்பு ரம்பினளி னங்கிரியெ னுந்தனமொ
டார மும்படித ரம்பொறியு டன்பணிகள்
மாலை யொண்பவள மும்பரி மளங்கலவை
தொங்கலாட-

---

*'முற்றிலாதானை முற்றனே யென்று மொழியினும் கொடுப்-பாரிலை', 'நொய்ய மாந்தரை விழுமிய, தாயன்றோ புலவோர்க்கெலாம் என்று சாற்றினும் கொடுப்பாரிலை'-சுந்தரர் 34-9,7.

† பூமியை உண்டது - பாடல் 267-பக்கம் 164-கீழ்க்குறிப்பு.

‡ "நாகமூர்த்தி சயனமாய் நலங்கடல் கிடந்து"
-திருச்சந்த விருத்தம் 17.

" நாகமேறி நடுக்கடலுள் துயின்ற நாராயணனே"
-திருவாய் மொழி 4-3-3.

பேசவும் வாய்வராத பேர்வழிகளை மகா கீர்த்தி வாய்ந்த பிரபு என்றும், முட்டாளைச் சமர்த்தர் இவர் என்றும், (ஊனரை) குற்றம் குறை உள்ளவரை பிரவு இவர் என்றும், என்னுடைய அறிவீனத்தால்-

அழகிய முத்தமிழ் நூல்களை (உலக) ஆசை கொண்டுள்ள பேர்வழிகளிடம் சொல்லிநின்று, கணக்குக் கடந்த (எண்ணிலாத) கோடிக் கணக்கான என் விருப்பங்களைத் தெரிவித்து வீணே திரிகின்ற அடியேன்-

கோபம் என்பதை ஒழித்து, பின்னும் அந்த ஆசை எனப்பட்டதையும் ஒழித்து, உன்னைப் பணிந்து (உன் திருவடியைக்) கூடுதற்கு முத்தியை என்று தந்தருளுவாய்!

வாலை (என்றும் இளையாள்), துர்க்கை, சத்தி, அம்பிகை, உலக கர்த்தா ஆகிய பித்தராம் சிவபிரானது (இடது) பாகத்திலே உள்ள தேவி - பெற்று எடுத்து மகிழ்ந்த சிறியோனே!

கடல் வற்றிப்போகக், கிரவுஞ்சம் தூள்பட்டு விழ, நெடிய வேலைச் செலுத்தின வெற்றி பொருந்திய, மற்போருக்குத் தக்கதான புயங்களை உடைய வலிமைவாய்ந்த மயில் வீரனே!

பூமி மண்டலம் முழுமையும் உண்டு, ஆதிசேடன் என்னும் பாம்புமெத்தையில் துயில் கொண்ட நாராயணனுக்கு அருள் பாலித்த மருகனே!

நான்கு திசைகளிலும் ஜயம்கொண்ட சூரபத்மாவை அடக்கி ஒடுக்கிய (பெருமாளே)! **நாகபட்டினத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(முத்தியென்று தருவாயே)

## 833.

**வ**லிய மார்பிடத்தில் - நளினம் - தாமரை மொக்கு எனவும், கிரி-மலை எனவும் (சொல்லத்தக்க) தனமொடு - கொங்கையொடு, (ஆரமும்) முத்துமாலையும், படிந்த மேன்மையான தேமலுடன் ஆபரணங்களும் மாலையாயமைந்த ஒள்ளிய பவளமும், நறுமணச் சந்தனக் குழம்புடன் (பூ) மாலை அசைய-

---

X விஷ்ணுமூர்த்திக்குச் சிவசாரூப்பிய மளித்தது - பாடல் 458. பக்கம் 27-கீழ்க்குறிப்பு. திருத்தணிகையில் வேலனைப் பூசித்துச் சக்கரம், சாரங்கம் இவைகளை நாரணர் பெற்றார்:- 'ஆதி சார்ங்கமும்...சாமியளித்தனன்; தணிகைப் புராணம் - நாரணன் அருள்பெறு படலம்-22.

O மார்புரம் பின் - புரம் பின்மார்புரம் - உடல், பின் - இடம், மார்-மார்பு; உரம் மார்பு - வலிய மார்பு இடம்.

வாள்ச ரங்கணிய லுங்குழைத ளம்பளக
பார தொங்கலணி பெண்கள்வத னங்கள்மதி
வாகை யென்ப* இத முஞ்சலச மென்பகள சங்குமோக;
சார மஞ்சள்புய முங்† கிளிமு கங்களுகிர்
பாளி தம்புனைது வண்டிடையொ டின்பரச
தாழி யென்பஅல்கு லுந்துளிர ரம்பைதொடை
ரம்பைமாதர்-
தாள்ச தங்கைகொலு சுங்குலசி லம்புமணி
யாடல் கொண்டமட மங்கையரு டன்‡ கலவி
தாக முண்டுழல்கி னுங்கழலு றுங்கழல்ம
றந்திடேனே;
வீர வெண்டையமு ழங்கவரி சங்குமுர
சோடு பொன்பறைத தும்பவிதி யுஞ்சுரமும்
வேத விஞ்சையரு டன்குமுற வெந்துகவ டர்ந்தசூரன்-
வீற டங்கமுகி லுங்Xகமற O நஞ்சுடைய
ஆயி ரம்பகடு கொண்டவுர கன்குவடு
மேகொ ளுந்தபல சிரந்தனையெ றிந்து** நட
னங்கொள்வேலா;
†† நார சிங்கவடி வங்கொடுப்ர சண்டிரணி
யோன டுங்கநட னஞ்செய்துஇ லங்கைவலி
ராவ ணன்குலம டங்கசிலை கொண்டகரர் தந்தமூல-

---

* 'செங்கமலம் ஒப்புக் கண்டு மொழிந்தா ரீரிதழ்க்கும்'
-உசிதசூடாமணி.

‡ * 'விரலுகிர்க்குக் கருதுங்கிளிமூக் கொப்பாமே' -உசிதசூடாமணி

‡ கலவி தாகத்தினும் உன்கழல் மறவேன் "காமக் கலவிக் கள்ளை மொண்டுண்டயர்கினும் வேல் மறவேன்" - (கந் அலங்-37)

"மடவார்தோள்....புணர்ந்துமதி மயங்கினும்...நின்பதங்கள் மறவேன்" - திருப்புகழ் 1275.

Xகமற-வேக-"கடல் தீவுகள் கமற வெந்தழல் வேல்விடு சேவக"திருப்புகழ் 856.

O **ஆதிசேடன் வலிமை:** "பாராம் அனைத்தும் ஒரு மலர்போல் முடிமேல் தரிக்கும் பணிவேந்தன், ஓராயிரஞ் செம்முடி மணிகள் கதிராயிரம் போல் ஒளி பரப்ப"

- செவ்வந்தி புராணம் - திருமலைச் சருக்கம் 28.

** இந்த நடனம் குடைக்கூத்து - பாடல் 354-பக்கம் 396 கீழ்க்குறிப்பு.

†† இரணிய சம்மாரம்-பாடல் 327-1-பக்கம் 317-கீழ்க்குறிப்பு.

வாள்போல (சரம்) அசைகின்ற கண்ணானது பொருந்திய (காதில் உள்ள) குழைகளைத் தள்ளும் அம்பு என்னும்படியும், (அளகபாரம்) கூந்தற் பாரத்தில், தொங்கல்-பூமாலையை அணிந்துள்ள பெண்களின் முகங்கள் சந்திரனையும் (வாகை) வெற்றி கொண்டன என விளங்க, வாயிதழும், தாமரை இதழ்போல விளங்க, (களம்) கழுத்து-சங்குபோல விளங்க, காதலை

எழுப்பும் மஞ்சள் பூசப்பட்ட தோளும், கிளியின் முகம் (மூக்குப்போன்ற) நகங்களும், பட்டாடை அணிந்து துவட்சி அடைந்துள்ள இடையுடனே, இன்பரசம் பொதிந்துள்ள (தாழி) பாண்டம் என்று சொல்லத்தக்க அல்குலும், தழைத்-துள்ள (அரம்பை) வாழை என்னும்படியான தொடைகளையும் உடைய ரம்பை என்னும் தெய்வப்பெண் போன்ற மாதர்கள்-

காலில் உள்ள சதங்கை, கொலுசு, சிறந்த சிலம்பு இவைகளைப் பூண்டு அழகிய நடனத்தைச் செய்யும் (அல்லது ஆடல்கள்-காமலீலைகள் செய்யும்) அழகிய பெண்கள் - இவர்மீது காமதாகம் கொண்டு நான் திரிந்தபோதிலும் போற்றப்படும் உனது திருவடிகளை நான் மறக்கமாட்டேன்;

வீர (வெண்டையம்) காலணி ஒலிக்க, (வரி) இசையை எழுப்பும் (அல்லது-ஒழுங்கான வரிசையில்) சங்கு, முரசு, அழகிய பறை-இவை பேரொலி செய்ய, பிரமனும், தேவர்களும், வேதம் ஓதவல்ல (விஞ்சையருடன்) கலைஞானம் உள்ளவருடன் (குமுற) - கலந்து ஓசையை எழுப்ப, வெந்து அழிய நெருங்கிவந்த சூரனுடைய

(வீறு)கொழுப்பு - கர்வம் - அடங்க, மேகமும் (கமற) மிக ஒலிக்க (அல்லது சூடேறிவேக), விஷத்தைக்கொண்ட ஆயிரம் யானையின் பலம்கொண்ட ஆதிசேடனுடைய(குவடு) மலையன்ன உச்சிகள் (கொளுந்த) வேக, (அசுரர்களின்) பல தலைகளை அறுத்தெறிந்து நடனம் கொண்ட வேலனே!

நரசிங்க வடிவத்தைக் கொண்டு, கடுமை கொண்ட இரணியனை நடுங்கவைத்து நடனம் செய்து, இலங்கையில் வலிமை வாய்ந்த ராவணனுடைய கூட்டம் அடங்கி அழிய கோதண்டம் என்னும் வில்லை ஏந்திய கரங்களை உடைய திருமால் பெற்ற-மூல

*ஞான மங்கையமு தஞ்சொருபி யென்றனொரு
தாய ணங்குகுற மங்கையைம ணந்தபுய
நாகை யம்பதிய மர்ந்துவளர் நம்பர்புகழ்
தம்பிரானே. (2)

## 834. திருவடியைக் கூட

தனனா தனனா தனனா தனனா
தனனா தனனா தனதான

விழு† தா தெனவே கருதா துடலை
வினைசேர் வதுவே புரிதாக-
விருதா வினிலே ‡யுலகா யதமே
லிடவே மடவார் மயலாலே;
அழுதா கெடவே அவமா கிடநா
ளடைவே கழியா துணையோதி-
அலர்தா ளடியே னுறவாய் மருவோ
ரழியா வரமே தருவாயே;
தொழுதார் வினைவே ரடியோ டறவே
துகள் தீர் பரமே தருதேவா-
சுரர்பூ பதியே கருணா லயனே
சுகிர்தா வடியார் பெருவாழ்வே;
Xஎழுதா மறைமா முடிவே வடிவே
லிறைவா எனையா ளுடையோனே-
Oஇறைவா எதுதா வதுதா **தனையே
இணைநா கையில்வாழ் பெருமாளே. (3)

---

* "ஞானா தனத்தி...குறத்தி" திருப்புகழ் 646.
"ஞான குறமாது"-திருப்புகழ் 98, 987.
ஞானபத்தினி - திருப்புகழ் 1218.

† தாது-சுக்கிலம்.

‡ உலகாயதம் - தேகமே ஆத்மா, போகமே மோக்ஷம் என்னும் மதம்.

X எழுதா மறை-வேதம்: எழுதப்படாமல் வாய் மூலமாகவே தலை முறை தலை முறையாக வந்தமையால் எழுதாமறை எனலாயிற்று; எழுதும் மறை - தேவாரம்.

(தொடர்ச்சி 451 ஆம் பக்கம்)

ஞான மங்கை, அமுத உருவினள், எனது ஒப்பற்ற தாய், தெய்வப்பெண் ஆகிய குறப்பெண்ணை (வள்ளியை) மணந்த திருப்புயத்தை உடையவனே! **நாகபட்டினத்தில்** அமர்ந்து விளங்கும் (நம்பர்) சிவன் புகழும் தம்பிரானே! (அல்லது அமர்ந்து விளங்கும் தம்பிரானே! (நம்பர்) சிவபிரான் புகழும் தம்பிரானே!

(கழல் மறந்திடேனே)

# 834.

**வி**ழுகின்ற (தாது) சுக்கிலம் என்று (கருதாது உடலை)-உடலைக் கருதாமல், வினையின் சேர்க்கையே - வினை பெருகுதலையே விரும்புவதாய்-

வீணாக, (உலகாயதம்) - போகமே மோக்ஷம் என்னும் புத்திமேலிட்டதனால் மாதர்களின் மயல் காரணத்தால்-

(அழுது ஆகெடவே)-(நான்) அழுதும் ஐயோ கெட்டுப்போயும் (அவமாகிட) வீணாக, (நாள் அடைவே)-என் வாழ்நாள் முழுமையும் (கழியாது) கழிந்து போகாமல் உன்னைப் புகழ்ந்து துதித்து

மலருற்ற உன் திருவடியே அடியேனுக்கு உற்ற உறவாகக் கூட்டிவைக்கும் ஒப்பற்றதும் அழியாததுமான வரத்தைத் தந்தருளுக.

தொழுகின்ற அடியார்களுடைய வினையின் வேர் அடியோடு அற்றுப்போகக் குற்றமற்ற மேலாம்பதவியையே தருகின்றதேவனே!

தேவர்களுக்கு அரசே! கருணைக்கு இருப்பிடமானவனே! (சுகிர்தா) புண்ணியனே! அடியார்களுடைய பெருவாழ்வே!

(எழுதாமறை) வேதத்தின் சிறந்த முடிவுப்பொருளே! சூரியவேலை ஏந்தும் இறைவனே! என்னை ஆட்கொண்டுள்ளவனே! (ஆளாக உடையவனே)!

இறைவனே! (ஏதுதா அதுதா) நீ எதைக் கொடுக்க வேண்டுமென்று எண்ணுகின்றாயோ அதைக் கொடுத்தருளுக (எனக்கு என்று ஒரு விருப்பம் வேண்டாம்); (தனையே இணை) தனக்குத்தானே (இணையான) நிகரான **நாகபட்டினத்தில்** வாழ்கின்ற பெருமாளே!

(அழியாவரமே தருவாயே)

---

"எழுதாச் சுருதி எழுதுஞ் சுருதி செழுமாத் திருச்செவியுட்சேர்த்தி" -பூவணநாதருலா 61. "எழுதா மறையும் எழுதும் மறையும் வழுவாது கேட்டு மகிழ்ந்து - திருவிடை மருதூருலா 197.

O 'வேண்டத் தக்க தறிவோய் நீ" - திருவாச-குழைத்த-6.

[ ** தொடர்ச்சி 452-ஆம் பக்கம் பார்க்க. ]

## எட்டிகுடி

[இது நாகபட்டினத்துக்குச் சமீபத்தி லுள்ள கீழ்வேளூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 7-மைல் தூரத்தி லுள்ள 'திருக்கோளிலி' என்னும் ஸ்தலத்துக்குச் சமீபம். சுப்பிரமணிய க்ஷேத்திரம். இங்குச் சித்திராபௌர்ணமி யன்று அநேகங் காவடிகள் வருகின்றன]

### 835. மாதர்மீது மயக்கு அற

தனனத் தனனத் தனனத் தனனத்
தனனத் தனனத் தனதான

*உரமுற் றிருசெப் பெனவட் டமுமொத்
திளகிப் புளகித் திடமாயே-
உடைசுற் றுமிடைச் சுமையொக் கஅடுத்
தமிதக் கெறுவத் துடன்வீறு;

தரமொத் துபயக் களபத்†தளமிக்
கவனத் தருணத் தனமீதே-
சருவிச் சருவித் தழுவித் தழுவித்
தவமற் கவிடுத் துழல்வேனோ;

அரிபுத் திரசித் தசஅக் கடவுட்
கருமைத் ‡திருமைத் துனவேளே-
அடல்குக் குடநற் கொடிகட் டியனர்த்
தசுரப் படையைப் பொருவோனே;

பரிவுற் றவருக் கருள்வைத் தருள்வித்
தகமுத் தமிழைப் பகர்வோனே-
பழனத் தொளிர்முத் தணியெட் டிகுடிப்
பதியிற் குமரப் பெருமாளே. (1)

---

* இந்தத் திருப்புகழ்ப் பாடலும் 125-ஆம் பாடல் "இரு செப்பென" எனத் துவக்கும் அதுவும் சொல்லும் பொருளும் பெரிதும் ஒத்திருப்பது கவனிக்கற் பாலது. † தளம்-செஞ்சாந்து - "தளத் தேந்திள முலையார் - சம்பந்தர் 2-47-3.

‡ முருகவேள் காமனுக்கு மைத்துனர்:- பாடல் 816-பக்கம் 406.

---

[பக்கம் 451 தொடர்ச்சி.]

**"கற்றுமிக் குணர்ந்தீர் இந்நகர்க் குவமை கரைதரின் அதுவலாலியாதே" - நாகைப்புரா - நகரப்படலம் 10.

## எட்டிகுடி

# 835.

**மா**ர்பிலே பொருந்தி, இரண்டு சிமிழ்களாமென வட்ட வடிவுகொண்டு, குழைவு கொண்டு, புளகாங்கிதம் கொண்டு வலிமை கொண் டு,

ஆடை சுற்றி அணியப்படும் இடைக்குச் சுமையாக (பாரமாக) ஒக்க அடுத்து - நன்கு பொருந்தி, (அமிதக் கெறுவத்துடன்)-அளவுகடந்த கர்வத்துடன் மேம்பட்டு விளங்கும்

தன்மை கொண்டனவான (உபய) இரண்டு (களபம்) கலவைச் சாந்தும் (தளம்) செஞ்சாந்தும் நிரம்பின (வனம்) அழகுவாய்ந்த, தருணத் தனமீதே-இள முலைகள் மீ து-

(சருவிச் சருவி) பழகிப் பழகி, தழுவித் தழுவி தவத்தை (அற்க விடுத்து) நிலையாக விடுத்து - வேரோடு விடுத்துத்- திரிவேனோ!

திருமா லுக்கு புத்திரனான (சித்தசன்) மன்மதன் என்னும் அந்தக் கடவுளுக்கு அருமையான திரு மைத்துனனே! வேளே!

வலிமை வாய்ந்த நல்ல சேவற்கொடியைக் கட்டி, (அனர்த்த அசுரப் படையை) துன்பம் விளைவித்து வந்த அசுர சேனையுடன் சண்டை செய்தவனே!

அன்புவைத்த அடியார்கள்மேல் கருணைவைத்துத் திருவருளைப் பாலிக்கும் ஞான மூர்த்தியே! முத்தமிழைச் சொன்னவனே (சம்பந்த மூர்த்தியாய்த் தேவாரப் பாக்களை அருளியவனே)!

வயல்களிற் பிரகாசிக்கின்ற முத்துக்களைக் கொண்ட எட்டிகுடி என்னும் பதியில் வீற்றிருக்கும் குமரப் பெருமாளே!

(தவமற்க விடுத் துழல்வேனோ)

## 836. ஆண்டருள

தாந்த தந்தன தான தனத்தம் தனதான

ஓங்கு மைம்புல னோட நினைத்தின் பயர்வேனை-
ஓம்பெ றும்ப்ரண வாதி யுரைத்தெந்
தனையாள்வாய்;

வாங்கி வெங்கணை சூரர் குலக்கொம் புகடாவி-
வாங்கி நின்றன*ஏவி லுகைக்குங் குமரேசா;

†மூங்கி லம்புய வாச மணக்குஞ் சரிமானு-
மூண்ட பைங்குற மாது மணக்குந் திருமார்பா;

காங்கை யங்கறு‡பாசில் மனத்தன் பர்கள்வாழ்வே-
Xகாஞ்சி ரங்குடி ஆறு முகத்தெம்
பெருமாளே. (2)

## 837. திருவடியைப் பெற

தனதத்த தனதத்த தனதத்த தனதத்த
தனதத்த தனதத்த தனதான-

Oகடலொத்த விடமொத்த கணையொத்த பிணையொத்த
கயலொத்த மலரொத்த விழிமானார்-

---

* ஏ-மிகுதி-பெருக்கம். "ஏவார் மலையே சிலையா"
-சம்பந்தர் 2-62-2.

† மூங்கிலம்புயம்-'வேயுறுதோளி" -சம்பந்தர் 2-85-1.

‡ பாசு-பாசம்
"பாசற்றவர் பாடி நின்றாடும் பழம்பதி" -(சுந்தரர்-50-7)

X 'காஞ்சிரங் குடி' என்பது 'எட்டி குடி' தலத்துப் பெயரை இங்ஙனம் மாற்றிக் கூறுவது அருணகிரியார்க்கு ஒரு மகிழ்ச்சி. பிறிதோ ருதாரணம் - பந்தணை நல்லூரைக் கந்துகாபுரி என்பர்-(பாடல் 860); கந்துகம்-பந்து.

O இந்த அடி சொற்பொருட் பின்வரு நிலையணி.

## 836.

பெருகி வளரும் (சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்- என்னும்) ஐந்து புலன்களும் என்னை இழுத்துக்கொண்டு ஓட - அவ் வழியே நான் ஓட நினைத்து இன்பம் கொண்டு அயர்ச்சி (தளர்ச்சி) கொள்பவனாகிய எனக்கு

'ஓம்' என்னும் பிரணவப் பொருள் ஆகிய மந்திரங்களை உபதேசித்து அடியேனை ஆண்டருளுக;

(வாங்கி) வில்லை வளைத்து, (வெங்கணை) கொடிய அம்புகளைக் கொண்ட, (சூரர் குலம் கொம்புகள் தாவி) - சூரர்களாகிய சிறந்த வீரக் கிளைஞர்கள் பாய்ந்துவர - (அல்லது, வில்லைவளைத்துக் கொடிய அம்புகளைச் சூரர்களின் சிறந்த கூட்டங்களின்மீது - கடாவி - செலுத்தி-)

(வாங்கி நின்றன) வளைந்து நின்ற (சேனை) மீது நிரம்பப் பிரயோகிக்கும் குமரேசனே! அல்லது (ஏவில் உகைக்கும்) அம்புகொண்டு செலுத்தின குமரேசனே!

மூங்கில் போன்ற அழகிய புயங்களை உடைய நறுமணமுள்ள (குஞ்சரி மானும்) யானைமகள் - தேவசேனையும்-

காதல் மூண்டெழ நீ சென்று உறவாடிய (அல்லது பக்தி மூண்டிருந்த) அழகிய குறமாது வள்ளி மணந்த (அல்லது வள்ளியை) மணந்த திருமார்பனே!

(காங்கை) வெப்பம் - மனக்கொதிப்பு - அங்கு (அற்ற) - இல்லாத, (பாசு) பாசங்கள் - ஆசைகள் இல்லாத மனத்தராகிய அன்பர்களின் செல்வமே!

(காஞ்சிரம் குடி) **எட்டிகுடி** என்னுந் தலத்தில் வீற்றிருக்கும் ஆறுமுகத்து எம் பெருமாளே! (எமதாறுமுகப் பெருமாளே)

(எந்தனை ஆள்வாய்)

## 837.

கூடல் போலவும், விஷம் போலவும், அம்பு போலவும், மான் போலவும், மீன் போலவும், தாமரை மலர்போலவும் உள்ள கண்ணை உடைய மாதர்களின்-

கனசெப்பு நளினத்து முகைவெற்பை நிகர்செப்பு
கதிர்முத்து முலைதைக்க அகலாதே;

மிடலுற்ற கலவிக்கு ளுளநச்சி வளமற்று
மிடிபட்டு மடிபட்டு மனமாழ்கி-
மெலிவுற்ற தமியற்கு னிருபத்ம சரணத்தை
மிகநட்பொ டருள்தற்கு வருவாயே;

*தடையற்ற கணைவிட்டு மணிவஜ்ர முடிபெற்ற
தலைபத்து டையதுட்ட னுயிர்போகச்-
† சலசத்து மயிலுற்ற சிறைவிட்டு வருவெற்றி
தருசக்ர தரனுக்கு மருகோனே;

திடமுற்ற கனகப்பொ துவில்நட்பு டனடித்த
சிவனுக்கு விழியொத்த புதல்வோனே-
செழுநத்து மிழுமுத்து வயலுக்குள் நிறைபெற்ற
திகழெட்டி குடியுற்ற பெருமாளே. (3)

## 838. அலைச்சல் அற

தத்தன தத்தன தானா தானா
தத்தன தத்தன தானா தானா
தத்தன தத்தன தானா தானா தனதான

மைக்குழ லொத்தவை ‡ நீலோ மாலோ
அக்கணி ணைக்கிணை சேலோ வேலோ
மற்றவர் சொற்றெளி பாலோ பாகோ வடிதேனோ-

---

* "தடையற்ற கணைவிட்டு" இக் கருத்தை "எடுத்த வேல் பிழை புகல் அரிதென எதிர் விடுத்து ராவணன் மணிமுடி துணிபட"

-எனவரும் 842-ஆம் பாடலிலும் காண்க.

† சலசத்து மயில் - சீதை; சலசம் - தாமரை.

‡ நீலம் - இந்திர நீலம், கருங்குவளை, "அறல் இந்திர நீலம்...குழலுக் கிணையாமே" - உசிதசூடாமணி; நீலம் - இருள் எனலுமாம்.

மால் - கருமை.

(கனசெப்பு) பொற்சிமிழ், தாமரையின் மொட்டு, மலை இவைக்கு நிகர் என்று சொல்லப்படும், ஒளிகொண்ட முத்துமாலை அணிந்துள்ள கொங்கை (மனத்திலே) தைக்க (அழுந்திப்பதிய) - அந்த எண்ணம் மனத்தைவிட்டு நீங்காமல்-

வலிமை வாய்ந்த கலவியின்பத்தில் (புணர்ச்சியில்) உள்ளம் (மனது) நச்சி (விருப்பம் கொண்டு), அதனால் வளம்-செல்வம்-உடல்நலம் ஆகிய வளப்பங்கள் அழிந்து, வறுமையை அடைந்து, சோம்பல் அடைந்து, மனம் மயங்கி அழிந்து-

மெலிவு அடைந்துள்ள தனியனாகிய எனக்கு உனது தாமரையன்ன திருவடியை மிக்க அன்புடனே அருளுவதற்கு வந்துதவுக.

தடையேயிலாத (குறிதவறாத) அம்பைச் செலுத்தி மணி, வஜ்ரம் இவை பதிக்கப்பெற்ற கிரீடத்தைக் கொண்ட தலை பத்து இருந்த துஷ்டன் - ராவணனுடைய உயிரை மாள்வித்துத் (போகச்செய்து)

தாமரையில் வீற்றிருக்கும் மயில்-லக்ஷ்மி-சீதை-இருந்த சிறையை நீக்கிவந்த வெற்றியைக் கொண்ட (சக்ரதரனுக்கு) சக்ராயுதம் ஏந்தின திருமாலுக்கு மருகனே!

மெய்ம்மை வாய்ந்த - (அல்லது உறுதி பயக்கும் (கனகப்பொதுவில்) பொன்னம்பலத்தில் (பதஞ்சலி வியாக்ரபாதர் மீதுள்ள) அன்புடனே நடஞ்செய்த சிவபிரானுக்குக் கண்போல இனிய புதல்வனே!

செழிப்புள்ள (நத்து) - சங்கு ஈன்ற முத்துக்கள் வயலிலே நிறைந்து விளங்கும் **எட்டிகுடி**யில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அருள்தற்கு வருவாயே)

## 838.

**க**ரிய குழலுக்கு ஒப்பானவை கருங்குவளையோ! (மாலோ) கருமையோ! அந்தக் கண்கள் இரண்டுக்கும் ஒப்பானவை சேல்மீனோ! வேலோ! பின்னர், அப் பெண்களின் சொல்லுக்கு இணை தெளிவுள்ள பாலோ, வெல்லமோ! வடித்த தேனோ!

வத்திர மெய்ச்சசி தானோ நாணா
குத்துமு லைக்கிள நீரோ மேரோ
வைப்பதி டைக்கிணை நூலோ*மேலோ வெனமாதர்;

தக்கவு றுப்பினுள் மாலே மேலாய்
லச்சைய றப்புணர் வாதே காதே
† சைச்சையெ னத்திரி நாயே னோயா தலையாதே-

‡ தற்பொறி வைத்தருள் பாராய் தாராய்
தற்சமை யத்தXக லாவே னாதா
தத்தும யிற்பரி மீதே நீதான் வருவாயே;

முக்கணர் மெச்சிய பாலா சீலா
O சித்தசன் மைத்துன வேளே தோளார்
மொய்த்தம ணத்தது ழாயோன் மாயோன் மருகோனே-

முத்தமிழ் வித்வவி நோதா கீதா
மற்றவ ரொப்பில ரூபா தீபா
முத்திகொ டுத்தடி யார்மேல் மாமால் முருகோனே;

இக்குநி ரைத்த**வி ராலூர் சேலூர்
செய்ப்பழ நிப்பதி யூரா வாரூர்
மிக்கவி டைக்கழி வேளூர் தாரூர் வயலூரா-

---

* மேல் - ஆகாயம், இடைக்கு ஆகாயம் உவமை. 'மருங்கு நிட்கள ஆகாசம் நேரென' - (திருப்புகழ் 506) "துடி, விண்,மின்.....இடைக்கு ஒப்பாம்"-உசிதசூடாமணி.

† சை-இகழ்ச்சிக் குறிப்பு.

‡ தற்பொறி-பாடல் 413-பக்கம் 544-கீழ்க்குறிப்பு.

X கலை-ஒளி.

O சித்தசன் மைத்துன வேளே-பாடல் 835-கீழ்க்குறிப்பு.

**விரா லூர்-விராலியூரை (விராலி மலையைக்)குறிக்கலாம்.

முகமானது உண்மையாகவே சந்திரன் தானோ; வெட்குதலின்றி எழுந்துள்ள குத்துமுலைகளுக்கு ஒப்பானவை இளநீரோ, மேருமலையோ: (வைப்பதிடைக் கிணை) இடைக்கு இணை வைப்பது-இடைக்கு ஒப்பாகக் கூறப்படுவது நூலோ, அதனிலும் மேலான (நுண்ணியதான) ஒன்றோ! (அல்லது மேலோ - ஆகாசமே) என்றெல்லாம் மாதர்களுடைய

மனத்தைக் கவரத்தக்க அவயவங்களுள் காம மயக்கம் மிக்கவனாய், கூச்சமில்லாமல் (புணர்) சேர்கின்ற (வாது ஏகாதே) போட்டிச் சண்டையில் நுழையாமல். சீசீ எனப் பிறர் சொல்லும்படி திரிகின்ற நாயேன் ஓய்வின்றி அலையாமல்-

உனது (பொறி) இலச்சினையை - முத்திரையை - (வேல் -மயில் அடையாளத்தை என்மேற் பொறித்து வைத்துக் கண்பார்த்தருளுக, (தற்சமையத்த) கௌமார சமயத்தவனே (அல்லது சிவசமயத்தவனே!) (கலா-வேல்-நாதா) ஒளிவேல் ஏந்தும் நாதனே! தத்து மயற்பரி) தாவிச் செல்லும் மயில் வாகனத்தின் மேலே நீதான் வந்தருளவேணும்.

(முக்கண்ணர்) சிவபிரான் மெச்சின பாலனே! சீலனே (தூயவனே)! மன்மதனது மைத்துன வேளே! தோள்கள் நிரம்ப மொய்த்துள்ள நறுமணமுள்ள துழாய் (துளசி) மாலை அணிந்தவனாம் திருமாலின் மருகனே!

முத்தமிழ்ப் புலமை வாய்ந்த விநோதனே! இசை-ஞானியே! பிறர் எவரும் (உனக்கு) நிகராகாத (உருவத்தனே) உருவ அழகனே! ஒளிவளர் விளக்கே! முத்தியைத் தந்து அடியார்மேல் மிக்க ஆசை கொள்ளும் முருகனே!

கரும்பு வரிசையாயுள்ள (விராலியூர் அல்லது) (விரால்) வரால்மீன்கள் ஊர்வதும், சேல்மீன்கள் ஊர்வதுமான (செய்) வயல்கள் உள்ள பழநிப்பதி ஊரனே! திருவாரூர், சிறப்புற்ற திரு இடைக்கழி, (புள்ளிருக்கு) வேளூர், தார்-பூ அரும்புகள் ஊர்-அடர்ந்து நிறைந்துள்ள **வயலூர்** என்னும் தலங்களில் வீற்றிருப்பவனே!

*எச்சுரு திக்குளு நீயே தாயே
சுத்தவி றற்றிறல் வீரா தீரா
எட்டிகு டிப்பதி வேலா மேலோர் பெருமாளே. (4)

## எண்கண்

(இது திருவாரூரி லிருந்து நீடாமங்கலம் போகும் வழியில் உள்ள திருமதிக்குன்றம் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சமீபம். † எண்கண், எட்டிகுடி, சிக்கல் மூன்றிலும் உள்ள முருகக்கடவுளின் திருவுருவங்கள் ஒரே சிற்பியினுடைய கைவேலை என ஆன்றோர் கூறுவர்.)

## 839. பணிய

தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த தந்த தனதான

சந்த னந்தி மிர்ந்த ணைந்து குங்கு மங்க டம்பி லங்கு
சண்ப கஞ்செ றிந்தி லங்கு திரடோளுந்-
தண்டை யஞ்சி லம்ப லம்ப வெண்டை யஞ்ச லன்ச லென்று
‡சஞ்சி தஞ்ச தங்கை கொஞ்ச மயிலேறித்;

திந்தி மிந்தி மிந்தி மிந்தி தந்த னந்த னந்த னென்று
சென்ற சைந்து கந்து வந்து க்ருபையோடே-
Xசிந்தை யங்கு லம்பு குந்து சந்த தம்பு கழ்ந்து ணர்ந்து
செம்ப தம்ப ணிந்தி ரென்று மொழிவாயே;

அந்த மந்தி கொண்டி லங்கை வெந்த ழிந்தி டும்ப கண்டன்
அங்க முங்கு லைந்த ரங்கொள் பொடியாக-

---

*எச்சமயத் தார்களுமெம் மிறையிறை யென் றேத்தவவர்க்
கச்சமயந் தோறுஞ் சென் றருள்புரிவா னாகினையே
-(கதிர்காமக் கலம்பகம் 1)

† எண்கண் (839), எட்டிகுடி (835) சிக்கல் (830) இம் மூன்று தலங்களையும் ஆன்றோர் ஒன்று படுத்திக் கூறுவர் : முருகவேளின் அழகிய திருவுருவை ஒரு சிற்பி 'எண்கண்' என்னும் தலத்துக்கு அமைக்க, அத்தகைய அழகிய உரு வேறொன்று செய்யாதிருக்க வேண்டி அரசன் அச் சிற்பியின் ஒரு கையை வெட்டிவிட்டான் என்றும், அந்தக் குறையுடனே அதனிலும் அழகான முருகன் உருவை 'எட்டிகுடியில் அந்தச் சிற்பி அமைத்தான்

[தொடர்ச்சி 461 ஆம் பக்கம் பார்க்க.]

எத்தகைய வேதத்துக்குள்ளும் நீயே தாய்போல மூலப்பொருளாய் நிற்கின்றாய்! பரிசுத்த பராக்ரம திறமை-வாய்ந்த வீரனே! தீரனே! **எட்டிகுடிப்பதியில்** வீற்றிருக்கும் வேலனே! வானோர் (அல்லது பெரியோர்க்குப்) பெருமாளே!

(நீ தான் வருவாயே)

## எண்கண்

## 839.

*சந்தனத்தை நிரம்பப்பூசிச் சேர்ந்து, குங்குமம், கடம்பு, விளங்கும் சண்பகம், இவை நெருங்கி விளங்கும் திரண்ட தோள்கள் விளங்க-*

*தண்டையும் அழகிய சிலம்பும் ஒலிசெய, வெண்டையம் (வீரக்காலணி) சலன்சல் என்று ஒலிக்க, (சஞ்சு இதம்- உருவம் இனிதாக அமைந்துள்ள (சதங்கை) கிங்கிணி கொஞ்சுவது போல ஒலிக்க, மயில்மீது ஏறி-*

*திந்தி மிந்தி மிந்தி மிந்தி...தனந்தனென்று (சென்றசைந்து) மெல்ல அசைந்து உகந்துவந்து - மகிழ்ச்சியுடன் வந்து கிருபையுடனே-(என்)*

*மனமாகிய அழகிய கோயிலிற் புகுந்து, 'எப்போதும் புகழ்ந்து, அறிந்து, செவ்விய பதங்களைப் பணிந்து இருப்பாயாக' என்று மொழிந்தருளுக.*

*அந்த மந்தி - பேர்போன அந்தக் குரங்கு அநுமாரைக்கொண்ட இலங்கை வெந்து அழியவும், இடும்ப-கொடுஞ்செயலைக் கொண்ட (கண்டன்)-வீரனாம் ராவணனுடைய உடலும் அழிபட்டு, (அரங் கொள பொடியாக) அரத்தினால் ராவினதுபோலப் பொடியாக-தூளாக*

---

எனவும், அரசன் சிற்பியின் மற்றொரு கையையும் வெட்டினான் என்றும், இரண்டு கையும் அற்ற நிலையிற் சிக்கலிற் பின்னும் அழகிய முருகன் உருவத்தை அந்தச் சிற்பி அமைக்க, முருகவேள் அச் சிற்பியின் மீது உகந்து-அவன் அமைத்த மயில் மீதிருந்தபடியே விண்ணில் அவனையும் அழைத்துப் பறந்து மறைந்தனர் எனவும் கர்ண பரம்பரைச் சேதி கூறும்

‡ சஞ்சிதம் - சஞ்சு இதம்; சஞ்சு - சாயல்.

X சிந்தை அம் குலம் - மனமாகிய அழகிய கோயில்.

அம்ப*கும்ப னுங்க லங்க வெஞ்சி னம்பு ரிந்து நின்று
அம்பு கொண்டு வென்ற கொண்டல் மருகோனே;
இந்து வுங்க ரந்தை தும்பை கொன்றை யுஞ்ச
லம்பு னைந்தி
டும்† ப ரன்ற னன்பில் வந்த குமரேசா-
‡ இந்தி ரன்ப தம்பெ றண்டர் தம்ப யங்க
டிந்த பின்பு
**எண்க ணாங்க** மர்ந்தி ருந்த பெருமாளே. (1)

## திருக்குடவாயில்.

[திருவாரூரிலிருந்து நீடாமங்கலம் போகும் வழியி லுள்ள குறடாச்சேரி ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 8-மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.]

## 840. கழல்பெற

தனனா தத்தன தனனா தத்தன
தனனா தத்தன தனதான

அயிலார் மைக்கடு விழியார் மட்டைகள்
அயலார் நத்திடு விலைமாதர்-
அணைமீ திற்றுயில் பொழுதேX தெட்டிக
ளவரே வற்செய்து தமியேனும்;
மயலா கித்திரி வதுதா னற்றிட
மலமா யைக்குண மதுமாற-
மறையால் மிக்கருள் பெறவே யற்புத
மதுமா லைப் **பத** மருள்வாயே;
கயிலா யப்பதி யுடையா ருக்கொரு
பொருளே கட்டளை யிடுவோனே-
கடலோ டிப்புகு முதுசூர் பொட்டெழ
கதிர் வேல் விட்டிடு திறலோனே;

* கும்பன்-'கும்பகர்ணன்' என்பது குறுகிற்று. 'கும்பகன்' என்றார் 405, 965-ஆம் பாடல்களில்; 'கும்பாகன்' என்றார் 374-ஆம் பாடலில்; கும்பன் என்றும் ஒரு அரக்கன் உண்டு. "ராவணனுக்கு நண்பன்-சித்தர்களைச் சிறையிட்டவன். சுக்ரீவனாற் கொல்லப்பட்டன்"- அபிதான சிந்தாமணி.

† "**பரன்சி லம்ப** மர்ந்த" என்றும் பாடம்; பரன் சிலம்பு - திருப்பரங்குன்றம்.

‡ இந்திரன் பதம்பெற அண்டர்தம் பயங்கடிந்து எனப் பிரிக்க.

X தெட்டிகள் - பாடல் 653-பக்கம் 534 கீழ்க்குறிப்பு.

அம்பு முதலிய பாணங்களைக் கொண்டிருந்த(கும்பனும்) கும்பகர்ணனும் உள்ளங்கலங்கக் கொடுங் கோபத்துடன் நின்று அம்பை ஏவி வெற்றிகொண்ட மேக வர்ணனாம் திருமாலின் மருகனே!

பிறை, (கரந்தை) திருநீற்றுப் பச்சை, தும்பை, கொன்றை, (ஜலம்) கங்கை, இவைதமை அணியும் சிவபிரானுடைய (சிவபிரான் தேவர்கள் பால்வைத்த) அன்பால் தோன்றின குமரேசனே!

தேவேந்திரன் தன் பதத்தைப் பெறுமாறு தேவர்களுடைய பயத்தைத் தவிர்த்த பின்னர், **எண்கண்** என்னும் தலத்தில் வீற்றிருந்தருளும் பெருமாளே!

(செம்பதம் பணிந்திரென்று மொழிவாயே)

## திருக்குடவாயில்

## 840.

**வே**ல் போன்ற, கரிய விஷம் போன்ற (அல்லது மைபூசிய விஷம் கொண்ட) கண்களை உடையவர்கள். (மட்டைகள்) - பயனற்றவர்கள், பக்கத்தில் வருபவர்கள் (அல்லது பிறர்) ஆசை கொள்ளும் விலைமாதர்கள் (விலைக்கு உடலை விற்பவர்கள்)

படுக்கையில் தூங்கும் பொழுதிலேயே (தெட்டிகள்) வஞ்சிப்பவர்கள்-(ஆகிய பொதுமகளிர்) ஏவின வேலைகளைச் செய்து அடியேனும்

மோக மயக்கம் கொண்டவனாய்த் திரிகின்றதுதான் ஒழிந்துபோக, ஆணவம், கன்மம், மாயை எனப்படும் மும்மலங்களால் ஏற்படும் மாயைக்குணம் ஒழிந்துபோக-

மறைகளை-வேதங்களை ஓதுவதால் (ஓதி) நிரம்பத் திருவருளை நான் பெறுமாறு, அற்புதமான தேன் நிரம்பிய மாலைகள் அணியப்பட்ட உனது **திருவடியைத்** தந்தருளுக.

கயிலாயப்பதியை உடையவராகிய சிவனுக்கு ஒப்பற்ற பிரணவப் பொருளை மேல்நிலையில் நின்று உபதேசித்தவனே!

கடலில் ஓடிப் புகுந்த பழைய சூரன் அழிபட ஒளி வேலைப் பிரயோகித்த பராக்ரமசாலியே!

குயிலா லித்திடு*பொழிலே சுற்றிய
குடவா யிற்பதி யுறைவோனே-

குறமா தைப்புணர் சதுரா வித்தக
குறையா மெய்த்தவர் பெருமாளே. (1)

## 841. தனி சரிதம்

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தனதான

† சுருதி யாயிய லாயியல் நீடிய
தொகுதி யாய்வெகு வாய்வெகு பாஷைகொள்
தொடர்பு மாயடி யாய்நடு வாய்மிகு
துணையாய்மேல்-

துறவு மாயற மாய்நெறி யாய்மிகு
விரிவு மாய்விளை வாயருள் ஞானிகள்
சுகமு மாய்முகி லாய்மழை யா‡யெழு
சுடர்வீசும்;

பருதி யாய்மதி யாய்நிறை தாரகை
பலவு மாய்வெளி யாயொளி யாயெழு
பகலி ராவிலை யாய்நிலை யாய்மிகு பரமாகும்-

பரம மாயையி னேர்மையை யாவரு
மறியொ ணாததை நீXகுரு வாயிது
பகரு மாறுசெய் தாய்முதல் நாளுறு பயனோதான்;

---

* 'பூஞ்சோலை வாசம் வீசும் குடவாயில்' - "பைம்பொழிலும் சூழ்ந்த குடவாயில்" - சம்பந்தர் 2-58-6,5

† மனப்பாடஞ் செய்யத்தக்க அருமையான பாடல்.

‡ சூரியனுடைய கிரணங்கள் ஏழு நிறங்கள் கொண்டன - சிவப்பு, ஆரஞ்சு, மஞ்சள், பச்சை, நீலம், கருநீலம், ஊதா; சூரியனுடைய சுழுமுனைக்-கதிர் சந்திரனுக்கும், அரிகேசம் நக்ஷத்திரங்களுக்கும், விச்வகன்மா புதனுக்கும், விச்சுவா வெள்ளிக்கும், சத்துவிசு செவ்வாய்க்கும, சருவாவசு வியாழத்துக்கும், சுவராடு சனிக்கும் ஒளிதரும். அமுதகதிர் மழை பொழிவிக்கும். (அபிதான சிந்தாமணி)

X அருணகிரியார் முருகவேளிடம் தான் பெற்ற உபதேசத்தின் பெருமையை நினைந்து வியக்கின்றார்.

குயில்கள் கூவுகின்ற சோலைகள் சூழ்ந்துள்ள **குடவாயில்** என்னும் நகரில் உறைபவனே!

(குறமாது) வள்ளியை அணைந்த (சதுரனே) சாமர்த்திய-சாலியே! ஞான மூர்த்தியே! குறைவுபடாத உண்மைத் தவ-நிலையை உடையார் தம் பெருமாளே!

(பதம் அருள்வாயே)

## 841.

**வே**தமாய், (இயலாய்) ஆகமமாய் (அல்லது - இயற்றமி-ழாய்), அத்தகைய (ஆகமங்களின்) - இயற்றமிழின் - மிக்குள்ள தான பகுதியாய் பலவுமாய் - அநேகம் (பாஷைகளில்) மொழிகளில் கொள்ளப்பட்ட சம்பந்தத்தை உடையதாய், அடிப்படையாய், நடுவாய், மிக்க துணையாய்ப் பின்னும்,

(துறவுமாய்) எல்லாவற்றையும் விட்ட நிலையதாய், தருமமாய், நல்லொழுக்க வழியாய், மிகுந்த விரிவு உடையதாய், விளைவுப் பொருளாய், அருள் நிரம்பிய ஞானிகள் அனுபவிக்கும் சுகப் பொருளாய், மேகமாய், மழையாய், ஏழுவகைச் சுடர்களைக் கிரணங்களை வீசும் (அல்லது எழுகின்ற ஒளியை வீசுகின்ற) - அல்லது உதயமாம் ஒளியை வீசும்-

சூரிய மூர்த்தியாய், சந்திரனாய், நிறைந்துள்ள நக்ஷத்திரங்கள் பலவுமாய், ஆகாய வெளியாய், சோதியாய், உண்டாகின்ற பகலும், இரவும் இல்லாததாய், நிலைத்துள்ளதாய் உள்ள, மிக்க மேலான பொருளான-

மகா மாயையின் (நேர்மையை) உண்மைத் தத்துவத்தை, உண்மை நிலையை, எவரும் அறிய முடியாததை, நீ குருவாக வந்து - அதை - இங்ஙனம் (உலகுக்கு) எடுத்து ஓதுமாறு (எனக்குத்) திருவருள் புரிந்தாய்! இந்த பாக்கியம் யான் முற்பிறப்புகளிற் செய்த தவத்தின் பயன்தானோ!

*கருது மாறிரு தோள்மயில் வேலிவை
கருதொ ணாவகை யோரர சாய்வரு
கவுணி யோர்குல வேதிய னாயுமை கனபாரக்-
களப பூண்முலை யூறிய பாலுணு
மதலை யாய்மிகு பாடலின் மீறிய
கவிஞ னாய்விளை யாடிடம் வாதிகள் கழுவேறக்;
குருதி யாறெழ வீதியெ லாமலர்
நிறைவ தாய்விட† நீறிட வேசெய்து
கொடிய மாறன்மெய் கூனிமி ராமுனை
குலையா‡ வான்-
குடிபு கீரென மாமது ராபுரி
யியலை யாரண வூரென நேர்செய்து
**குடசை** மாநகர் வாழ்வுற மேவிய பெருமாளே. (2)

**வலிவலம்.**

[திருவாரூருக்குத் தென்கிழக்கு 6-மைல். மூவர் பாடலும் பெற்றது.]

## 842. திருவடியைத் தொழ

தனத்த தானன தனதன தனதன
தனத்த தானன தனதன தனதன
தனத்த தானன தனதன தனதன தனதான

தொடுத்த நாள்முதல் மருவிய இளைஞனும்
இருக்க வேறொரு பெயர்தம திடமது
துவட்சி யேபெறி லவருடன் மருவிடு பொதுமாதர்-

---

* இங்ஙனம் பன்னிருதோள், வேல், மயில் இவை தமை மறைத்து முருகவேள் சம்பந்தராய் வந்தார் எனக் கூறும் இப் பகுதி-

"சடை மறைத்துக் கதிர் மகுடந் தரித்து, நறுங் கொன்றை யந்தார் தணந்து வேப்பந், தொடை முடித்து, விடநாகக் கலனகற்றி மாணிக்கச் சுடர்ப்பூண் ஏந்தி, விடை நிறுத்திக் கயலெடுத்து, வழுதிமரு மகனாகி மீன நோக்கின், மடவரலை மணந்துலக முழுதாண்ட சுந்தரனை வணக்கஞ் செய்வாம்"- என்னும் திருவிளையாடற் பாடலை நினைவூட்டுகின்றது.

ஞானசம்பந்தப் பெருமானது லீலை-பாடல் *181*-பக். *420* குறிப்பு.

† "மன்னனி றணிந்தா னென்று மற்றவன் மதுரை வாழ்வார்.
துன்னிநின் றார்களெல்லாம் தூயநீறணிந்து கொண்டார்"
"நீதியும் வேத நீதி யாகியே நிகழ்ந்த தெங்கும்
மேதினி புனித மாக வெண்ணீற்றின் விரிந்த சோதி
மாதிரந் தூய்மை செய்ய" -(பெரியபுரா-ஞானசம்-*857*, *858*.)

(தொடர்ச்சி *467*-ஆம் பக்கம்)

யாவராலும் கருதிப் போற்றப்படும் பன்னிரு தோள்கள், மயில், மேல் இவைதமை எவரும் கண்டு கருதா வகையில் (மறைத்து), (காழிப்பதி) அரசாக - வந்த கவுணிய குலத்தினருட் சிறந்த (வேதியனாய்) மறையோனாய், உமாதேவியின் மிக்க பாரமான-

கலவைச் சாந்து அணிந்த கொங்கையில் ஊறின பாலை உண்ட குழந்தையாய், மிக்க பாடல்கள் பாடுவதில் எவரினும் மேம்பட்ட கவிஞனாய்த் திருவிளையாடல்கள் செய்திருந்த சமயத்தில், வீண்வாதுக்கு வந்த (சமணர்கள்) கழுவிலேறவும்-

அவர்கள் ரத்தம் ஆறாகப் பெருகவும், வீதிகளில் எல்லாம் பூமாரி நிரம்பிவிடவும், திருநீற்றை யாவரும் இடும்படிச்செய்து, (கொடிய) மனக்கோட்டம் கொண்டிருந்த - செம்மைநெறி கோணி (விளைவுபட்டு)ச் சமண்சார்பிற் பட்டிருந்த பாண்டியனுடைய கூன் பட்ட உடல் நிமிர்ந்து விளங்கவும், (முனை) (சமண்) பகையை அழித்து, வானில் (பொன்னுலகில்)

குடி புகுவீர்களாக எனச் சிறந்த மதுரைப் பட்டணத்தின் (முன்பிருந்த சமண்) நிலையை மாற்றி **வேதபுரி** என்னும்படியாக அந்த ஊரை நேர்மையான செந்நெறியிற் சேர்ப்பித்துத், **திருக்குடவாயில்** என்னும் பெரிய நகரத்தில் வாழ்வுகொண்டு வீற்றிருக்கும் பெருமாளே!

(நீ குருவாய் இது பகருமாறு செய்தாய்)

## வலிவலம்

## 842.

**மு**தன் முதலாகப் பழக்கம் ஏற்பட்ட நாள் முதலாகத் தம்மிடம் பொருந்தியிருக்கும் ஓர் இளைஞன் இருக்கவும், வேறொரு பேர்வழி தமதிடத்தில் (காமத்தினால்) குழைவு கொண்டு வரப்பெற்றால் அவருடன் சேர்கின்ற பொதுமகளிருடைய

---

‡ "வான்குடி புகீரென (மதுராபுரி யியலை ஆரண ஊரென நேர் செய்து):- சமணரொடு செய்த வாதில் இறுதியாகப் பாடின திருப்பாசுரத்துப் பதிகப் பயனைக் கூறுமிடத்து

"பாசுரஞ் சொன்ன பத்தும் வல்லார்கள்
வானோர் உலகாளவும் வல்லரன்றே"
எனச் சம்பந்தப் பெருமான் அருளியுள்ளார்-சம்பந்தர் *3-54-12*

துவக்கி லேயடி படநறு மலரயன்
விதித்த தோதக வினையுறு தகவது
துறக்க நீறிட அரகர வெனவுள மமையாதே;

அடுத்த பேர்மனை துணைவியர் தமர்பொருள்
பெருத்த வாழ்விது சதமென மகிழ்வுறு
மசட்ட னாதுலன் அவமது தவிரநி னடியாரோ-

டமர்த்தி மாமலர் கொடுவழி படஎனை
யிருத்தி யேபர கதிபெற மயில்மிசை
யரத்த மாமணி யணிகழ லிணைதொழ
அருள்தாராய்;

*எடுத்த வேல்பிழை புகலரி தெனஎதிர்
விடுத்து ராவணன் மணிமுடி துணிபட
எதிர்த்து மோர்கணை விடல்தெரிகரதலன்
மருகோனே-

எருக்கு மாலிகை குவளையி னறுமலர்
கடுக்கை மாலிகை பகிரதி சிறுபிறை
யெலுப்பு மாலிகை புனைசடி லவனருள்
புதல்வோனே;

† வடுத்த மாவென நிலைபெறு நிருதனை
அடக்க ஏழ்கட லெழுவரை துகளெழ
வடித்த வேல்விடு கரதல ம்ருகமத புயவேளே-

---

* முருகன் கைவேல் குறி தவறாது வெற்றி கொள்வதுபோல-இராமன் கை அம்பு குறி தவறாது வெற்றியே கொள்ளும் என்பர் "தடையற்ற கணைவிட்டு" என்றார் 837-ஆம் பாடலில்.

† மாமரமாய் நின்ற சூரன் தழையும் காயும் பழமும் தோன்ற நின்றான்-

"தழை புகையின் நல்கிப், பொன்னென இணர்கள் ஈன்று, மரகதம் புரையக் காய்த்துச், செந்நிற மணிகளென்னத் தீம்பழம் கொண்டு...சூதமாய் அவுணன் நின்றான்" - கந்தபுரா 4-13-468.

வடுத்த - மாவடுவை வெளிக்காட்டும் மாமரம். வடுத்தல் - வெளிப்படுத்துதல் - பாடல் 406-பக்கம் 530 கீழ்க்குறிப்பு.

கட்டிலே (சிக்கலிலே) மாட்டிக் கொள்ளும்படியாக நறுமணமுள்ள (தாமரை) மலரில் வீற்றிருக்கும் பிரமன் விதித்த வஞ்சகத்தொடு கூடிய (அல்லது துக்கம் தருவ நான) வினை பொருந்திய செயல்களை ஒழிக்கவும், திருநீறிடவும், ஹரஹர என்று வாய்விட்டுரைக்கவும் (என்னுடைய) (உள்ளம்) மனது பொருந்தாதோ!

(அடுத்தபேர்) உற்றார்களும் (நட்பினரும்), மனைவியும், சகோதரிகளும், சுற்றத்தாரும், செல்வமும் ஆகிய இவை கூடிய பெரிய வாழ்வாகிய இதனையே (சதமென) நிலையானதென்று மகிழ்கின்ற (அசடன்) முட்டாள், (ஆதுலன்) வறிஞன் ஆகிய எனது வீணான வாழ்க்கை ஒழிய, உன்னுடைய அடியார்களோடு (என்னையும்)

(ஒருவனாகச்) சேர்த்து நல்ல மலர்கொண்டு உன்னை வழிபடுமாறு என்னைத் (தவநிலையில்) இருத்தி, மேலானகதியை (நான்) பெற, மயில்மீது விளங்கும் சிவந்த, சிறந்த ரத்னமணிகள் பொருந்திய வீரக்கழல்களணிந்த இரு திருவடிகளைத் தொழும்படியாக உனது திரு அருளைத் தந்தருளுக;

(நீ) எடுத்துச் செலுத்தின வேலாயுதமானது (குறி) தவறுதல் இல்லை என்பதுபோல எதிரே பிரயோகித்து, இராவணனுடைய ரத்ன முடிகள் சிதறுமாறு எதிர்த்தும் நேராகத் தனது ஒப்பற்ற ஓரம்பைச் செலுத்தத் தெரிந்த திருக்கரத்தை உடைய திருமாலின் மருகனே!

வெள்ளெருக்கு மாலை, (குவளையின்) கழுநீரின் நறுமணமுள்ள மலர்மாலை, கொன்றைமாலை, கங்கை, இளம்பிறை, எலும்புமாலை இவையெலாம் அணிந்துள்ள சடைப்பெருமான் அருளிய புதல்வனே!

பிஞ்சுவிட்ட மாவடுக்கள் வெளியே தோன்றும்படி யமைந்த மாமரமாக நிலைபெற்று நின்ற அசுரனாம் சூரனை அடக்கவும், எழுகடல், எழுமலை இவை வற்றவும், பொடியாகவும், கூரிய வேலாயுதத்தைச் செலுத்தின திருக்கரங்களை யுடையவனே! கஸ்தூரியணிந்த திருப்புயங்களையுடைய செவ்வேளே!

வனத்தில் வாழ்குற மகள்முலை முழுகிய
கடப்ப மாலிகை யணிபுய அமரர்கள்
மதித்த சேவக **வலிவல** நகருறை பெருமாளே.(1)

## வேதாரணியம்.

*(ரெயில்வே ஸ்டேஷன். திருத்தருப்பூண்டி ஜங்ஷனிலிருந்து 21-மைல். மூவர் தேவாரமும் பெற்ற ஸ்தலம். ஸ்தல புராணங்கள் உள்ளன.)*

## 843. திருவடியைச் சிந்திக்க

*தானன தத்தத் தந்தன தந்தன தனதான*

சூழும்வி னைக்கட் டுன்பநெ டும்பிணி கழிகாமஞ்-
சோரமி தற்குச் சிந்தைநி னைந்துறு துணையாதே;

ஏழையெ னித்துக் கங்களு டன்தின முழல்வேனோ-
ஏதம கற்றிச் செம்பத **சிந்தனை** **தருவாயே;**

ஆழிய டைத்துத் *தங்கையி லங்கையை யெழுநாளே-
ஆண்மைசெ லுத்திக் கொண்டக ரும்புயல்
மருகோனே;

வேழமு கற்குத் தம்பியெ னுந்திரு முருகோனே-
**வேத வனத்**திற் சங்கரர் தந்தருள் பெருமாளே.(1)

## 844. மாயை தொலைய

*தான தனத்தன தந்த, தான தனத்தன தந்த
தான தனத்தன தந்த தனதான*

சேலை யுடுத்துந டந்து மாலை யவிழ்த்துமு டிந்து
சீத வரிக்குழல் கிண்டி யளிமூசத்-

* 'எழுநாளே ஆண்மை செலுத்தி யிலங்கையைத் தம் கைக் கொண்ட கரும்புயல்' எனப் பிரித்துக்கொள்க.

(வள்ளிமலைத் திணைப்புனக்) காட்டில் வாழ்ந்த குறமகளின் கொங்கை முழுகிய [அல்லது கொங்கையில் முழுகிய] கடப்பமாலை அணிந்த திருப்புயனே! [தேவர்கள் மதிக்கின்ற பராக்ரமசாலியே! **வலிவலம்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே]

[கழலிணை தொழ அருள்தாராய்]

## வேதாரணியம்

## 843.

**(எ**ன்னைச்) சூழ்ந்துள்ள வினை காரணமாக வருகின்ற துன்பம், நீண்ட நோய், (கழி) மிகுந்தகாமம்-

[சோரம்] களவு, வஞ்சனை இவைகளை மனத்தில் நினைவு கொண்டிருந்தால் எனக்கு உற்ற துணை எது உளது?

[ஏழையேன்] ஏழையாகிய நான் இத்தயை துக்கங்களுடன் நாள்தோறும் அலைச்சலுறுவேனோ!

இந்தக் குற்றத்தினை நீக்கி உனது செம்மையான திருவடியைச் சிந்திக்கும் எண்ணத்தைத் தந்தருளுவாயாக!

சமுத்திரத்தை அணையாலடைத்து (தம் கை) இலங்கையை எழுநாளே ஏழு நாளிலே இலங்கையைத் தமது கையில்-

தமது ஆண்மையைச் செலுத்தி, [கொண்ட] கைக்கொண்ட கரியமேக நிறத்துத் திருமாலின் மருகனே!

யானைமுகத்துக் கணபதியின் தம்பி எனச் சொல்லப்படும் அழகிய முருகனே!

**வேதவனத்தில்** (வேதாரணியத்தில்) வீற்றிருக்கும் சிவபெருமான் தந்தருளிய பெருமாளே!

(செம்பத சிந்தனை தருவாயே)

## 844.

**ஆ**டையை உடுத்து நடந்தும், (கூந்தலிலுள்ள) மாலையை அவிழ்த்து முடிந்தும், குளிர்ந்த [அரி] அழகிய [அல்லது வரி-ஒழுங்கான] [கூந்தலைக்கிளறி] வண்டுகள் நெருங்கி மொய்க்க

தேனி லினைக்கமொ ழிந்து காமு கரைச்சிறைகொண்டு
தேச மனைத்தையும் வென்ற விழிமானார்;

மாலை மயக்கில்வி ழுந்து காம கலைக்குளு ளைந்து
மாலி லகப்பட நொந்து திரிவேனோ-
வால ரவிக்கிர ணங்க ளாமென வுற்றப தங்கள்
மாயை தொலைத்திட வுன்ற னருள்தாராய்;

*பாலை வனத்தில்ந டந்து நீல அரக்கியை வென்று
பார மலைக்குள கன்று கணையாலேழ்-
பார மரத்திர்ள் மங்க வாலி யுரத்தையி டந்து
† பால்வ ருணத்தலை வன்சொல் வழியாலே;

வேலை யடைத்துவ ரங்கள் சாடி யரக்கரி லங்கை
வீட ணருக்கருள் கொண்டல் மருகோனே-
‡ மேவு திருத்தணி செந்தில் நீள்பழ நிக்குளு கந்து
**வேத வனத்தில** மர்ந்த பெருமாளே. (2)

---

* "விச்வாமித்திர முநிவருடன் சென்று அங்கநாடு கடந்து ஒரு பாலைவனங் கண்டு, அங்கு விச்வாமித்திரர் உபதேசித்த பலை, அதிபலை என்னும் மந்திரங்களைப் பெற்றுப் பாலைவனம் கடந்து, தாடகையை வதைத்து"-அபிதான சிந்தாமணி, பக்கம் 185.

"ஓர் சுடு சுரங் குறுகினார். எரிசுடர்க் கடவுளும் கருதில் வேம் உள்ளமும் காணில் வேம் நயனமும்" - (கம்பராமா - தாடகைவதை-4,5.)

மராமரம் அட்டது, வாலியை அட்டது, கடலை அடைத்தது-விபீஷணருக்கு அருளியது-(பாடல் 231-பக்கம் 78; பாடல் 578,பக்கம் 322; பாடல் 659-பக்கம் 12; பாடல் 565-பக்கம் 288-பார்க்க)

† 'வழியினைத் தருதி என்றான் வருணனை நோக்கி வள்ளல்'
'செல்லுதி சேது என்றொன் றியற்றியென் சிரத்தின்மேலாய்'
'குன்றிகொண் டடுக்கிச் சேது குயிற்றுதிர் என்று கூறிச்'
'சென்றன னிருக்கை நோக்கி வருணனு மருளிற் சென்றான்'.
-கம்பராமா-வருணனை 82, 85.

'போகைக்கு நீவழிகாட் டென்று போய்' - கந்தரலங் 54.

‡ முருகவேளுக்கு உகந்த தலங்களென-திருத்தணி, செந்தில், பழநி-மூன்றையும் எடுத்துக் காட்டுகின்றார் (பாடல் 289 அடி-2 பார்க்க); மேவு திருத்தணி-(முருகன்) விரும்பும் திருத்தணி-

"உள மகிழ்ச்சியோடு திருத்தணி பற்றிய
பெருமாளே" - திருப்புகழ் 268-பக்கம் 168 கீழ்க்குறிப்பு.

[தொடர்ச்சி 473 ஆம் பக்கம்.]

தேன்போல் இனிக்கும்படியான மொழிகளைப் பேசியும், காமப்பித்து உடையாரைச் (சிறைகொண்டு) தன் வசப்படுத்தியும் (இவ்வாறு) தேசம் முழுமையும் வெற்றிகொள்ளும் கண்களையுடைய (பொது) மாதர்களின்-

இருண்ட மயக்கத்தில் விழுந்து, காமநூல்களைப் படித்து வருந்தி, காம மயக்கத்தில் அகப்பட்டு மனம் நொந்து திரிவேனோ!

இளஞ்சூரியனுடைய கிரணங்கள் என்று சொல்லும்-படியான ஒளிகொண்டு விளங்கும் உனது திருவடிகள் என்னுடைய மயக்க அறிவைத் தொலைக்கும்படி உனது திரு அருளைத் தந்தருளுக;

பாலைவனத்தில் நடந்து கரியநிறங்கொண்ட அரக்கி-தாடகையை வதைத்து வென்று பெரிய மலையாம் சித்ரகூட பர்வதத்தினின்று நீங்கி அப்பாற் சென்று, அம்பு கொண்டு ஏழு

பெரிய மராமரங்களின் கூட்டத்தை அழிவு செய்து, வாலியினுடைய மார்பைப் பிளந்து [பால்] அப்பால் சென்று [அல்லது தன்னிடத்தில் அஞ்சி ஓடிவந்த] வருணராஜன் சொன்ன வழியின்படி-

சமுத்திரத்தை அணைகட்டி அடைந்து [வரங்கள் சாடி அரக்கர்கள் வாழ்ந்திருந்த [வரங்கள்] சூழல்களைச் [சாடி] அழிவுசெய்து, இலங்கை அரசாட்சியை விபீஷணருக்கு அருள்புரிந்த அல்லது சூழல்களையும் இலங்கையையும் சாடி [அழித்து] விபீஷணருக்கு அருள் பாலித்த] மேகநிறத்துத் திருமாலின் மருகனே!

விரும்பத்தக்க திருத்தணிகை, திருச்செந்தூர், பெரிய பழநி இம் மூன்று தலங்களிலும் ப்ரீதி கொண்டு **வேதாரணியத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே.

*(மாயை தொலைத்திட உன்றன் அருள் தாராய்)*

---

"அலைவாயுகந்த பெருமாளே" - திருப்புகழ் *44, 45, 84;*

"செந்தில் மகிழ் தம்பிரானே" - *65;*

"செந்திலில் இன்புறு தம்பிரானே" *86;*

"செந்தில் உகந்தருள் பெருமாளே" *88;*

'தென் பழநிமலை மேலுகந்த பெருமாளே *185*

"பழநியில் அன்புற்றிருக்கும்...பெருமாளே *186*

## 845. தவநெறி பற்ற

*தானன தத்த தனந்த, தானன தத்த தனந்த*
*தானன தத்த தனந்த தனதான*

**நூ**லினை யொத்த மருங்குல் தேரினை யொத்த நிதம்பம்
நூபுர மொய்த்த பதங்கள் இவையாலும்-
*நூறிசை பெற்ற பதங்கொள் மேருவை யொத்த தனங்கள்
† நூல்வல்ம லர்ப்பொரு‡ துண்டம் அவையாலும்;

சேலினை யொத்திடு கண்க ளாலும ழைத்திடு பெண்கள்
தேனிதழ் பற்றுமொ ரின்ப வலைமுழ்கிச்-
சீலம னைத்து மொழிந்து காமவி தத்தி லழுந்தி
தேறுத **வத்தை யிழந்து திரிவேனோ;**

வாலஇி ளப்பிறை தும்பை யாறுக டுக்கை கரந்தை
X வாசுகி யைப்புனை நம்பர் தருசேயே-
○மாவலி யைச்சிறை மண்ட ஓரடி யொட்டிய ளந்து
வாளி பரப்பியி லங்கை யரசானோன்;

மேல்முடி பத்தும ரிந்து தோளிரு பத்தும ரிந்து
வீரமி குத்தமு குந்தன் மருகோனே-
மேவுதி ருத்தணி செந்தில் நீள்பழ நிக்குளு கந்து
**வேதவ னத்தில** மர்ந்த பெருமாளே.(3)

---

* மேருவின் பெருமையைக் கந்தபுராணம் விந்தகிரிப்படலம் பாடல்கள் 3-7 பார்க்க.

† நூல் வல் மலர்-தாமரை. ‡ துண்டம் - முகம்

X வாசுகி, ஆதிசேடன் இவைகளைச் சிவபிரான் அணிவதாகப் புராணங்கள் கூறும்-

'வாயு வான பஞ்சடைத்துத் திருமால் துயிலும் மலரணையே
யாய விடமாம் யாக்கையமைத் தரனா ரணியு மரும்பணியே
தாய ருதர மெனவுலகைத் தலையிற் சுமையாத் தரிப்போனே
தூய பொருளே உனக்குநிகர் உளரோ உலகிற் சொல்லாயே.

-தேவர்கள் ஆதிசேடனைத் துதித்தது -(செவ்வந்திப்புராணம் -திருமலை-30).

[தொடர்ச்சி 475 ஆம் பக்கம்]

## 845.

**நூ**லுக்கு ஒப்பான இடை, தேருக்கு ஒப்பான அல்குல், சிலம்பு அணிந்த பாதங்கள் இவைகளாலும்

[நூல்திசை] நூல்கள் மூலமாகத் திசைகளிற் புகழ்பெற்ற தகுதி வாய்ந்த [அல்லது [நூறுஇசை] நூற்றுக்கணக்கான [மிகுந்த] இசைபெற்ற கீர்த்திபெற்ற [தகுதிவாய்ந்த] மேருமலையை ஒத்த கொங்கைகள், தாமரைமலரை ஒத்த முகம் அவைகளாலும்

சேல்மீனை ஒத்து நிற்கும் கண்களாலும் (ஆடவர்களை) அழைக்கின்ற பெண்களின் தேன்போல் இனிக்கும் வாயிதழைப் பற்றி அனுபவிக்கின்ற ஒரு இன்ப வலையில் நான் முழுகி-

என்னுடைய ஆசாரங்கள் அனைத்தையும் ஒழியவிட்டு, காமலீலைகளிலேயே அழுந்தினவனாய், தேர்ந்து அடையத்தக்க தவநிலையை இழந்து அலைச்சல் உறுவேனோ!

பால இளம்பிறை, தும்பை, கங்கை, கொன்றை, கரந்தை [திருநீற்றுப் பச்சை] வாசுகி என்னும் பாம்பு இவைகளை அணிந்துள்ள சிவபெருமான் பெற்ற குழந்தையே!

மகாபலிச் சக்கரவர்த்தி [பாதலத்தில்] சிறையில் ஒடுங்க, ஓரடியால் [ஒட்டி] பேசின பேச்சின்படி-வாக்குதத்தத்தின்படி, அளவிட்டும், அம்பைச் செலுத்தி இலங்கை அரசனான இராவணன்

இராவணன்மேல் [வாளி பரப்பி] அம்பைச் செலுத்தி அவன் தலை பத்தையும் அரிந்தும், அவன்தோள் இருபதையும் அரிந்தும், வீரம் மிக்குநின்ற திருமாலின் மருகனே!

விரும்பத்தக்க திருத்தணிகை, திருச்செந்தூர், பெரிய பழநி, இம் மூன்று தலங்களிலும் ப்ரீதிகொண்டு **வேதாரண்யத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(தவத்தை யிழந்து திரிவேனோ)

---

"ஆனவாசுகி அன்றுற வின்றும் ஞானமேனியர் மேனியனாகந் தானுறைந்திடு தன்மைய தாமே"-திருவொற்றியூர் புரா.-வாசுகி-37.

○ **மாவலியைச் சிறையிட்டது** - பாடல் 268-பக்கம் 166கீழ்க்குறிப்பு

## * 845 - 1 துதி

தானதனத் தான தந்த தானதனத் தான தந்த
தானதனத் தான தந்த தனதான

காதலுடைத் தாகி யன்று ஆரணியத் தேந டந்து
கானவர்பொற் பாவை கொங்கை அணைவோனே!

கோதில்தமிழ்க் கான†கும்ப மாமுனிவற் காம ணஞ்செய்
கோலமளித் தாளு‡மும்பர்.......... X முருகோனே!

Oகோகனகத் தான்வ ணங்கி..........
கோடிமறைக் காட மர்ந்த பெருமாளே! (1)

### கோடி (குழகர் கோயில்.)

(இது வேதாரணியம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு அடுத்த அகத்தியான் பள்ளி ஸ்டேஷனுக்குத் தெற்கு 5-மைல். சுந்தர மூர்த்தி ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

---

* முழுப்பாடல் கிட்டாமல் ஒரு பகுதியே கிடைத்துள்ளது. வாக்கு அருமையாயுள்ளது; படித்து மகிழத்தக்கது. ஆதலின் இங்கு இப் பகுதி வெளியாகின்றது.

† இப் பகுதியில் வேதாரணியத்திற் சிவபிரான் அகத்தியர்க்குத் திருமணக்கோல தரிசனந் தந்த சரிதம் விளக்கப்பட்டுள்ளது.

சிவபிரான்-பார்வதி-இவர்தம் திருமணத் கோலத்தைக் காண முநிவர் தேவராதியோர் இமயமலையிற் கூடிய காரணத்தால் வடபால் தாழத் தென்பால் உயர்ந்திட்டது; பூவுலகைச் சமன் செய்யச் சிவன் அகத்தியரைத் 'தென்திசைக் கேகுக - வையம் நிலைபெறும்' என்றார்; அகத்தியர் 'ஐயனே! உனது மணவாளக் கோலத்தைக் காணாது எங்ஙனம் ஏகுவேன்' எனச் சிவபிரான் 'நீ செல்லுக: நீ இருக்கும் இடத்துக்கு வந்து நாம் மணவாளக் கோலம் காட்டுவோம்' என்றார். அங்ஙனமே அகத்தியர் செல்ல, அகத்தியர்க்குச் சிவபிரான் வேதாரணியத்தில் தனது மணவாளக் கோலத்தைக் காட்டினர்- என்பது புராண வரலாறு.

(தொடர்ச்சி-பக்கம் 477 பார்க்க)

## 845 - 1.

**அ**ன்பு பூண்டவனாகி - முன்பொருகாலத்தில் - (வள்ளிமலைக்) காடுகளிலே நடந்து, வேடர்கள் பெற்ற அழகிய நங்கை வள்ளியின் கொங்கையை அணைந்தவனே!

குற்றமில்லாத தமிழில் விருப்பம் நிறைந்த அகத்திய முநிவருக்காகத் தனது திருமணக் கோலக்காட்சியைத் தந்து அவரை ஆட்கொண்ட சிவபிரானது குழந்தையே!

பிரமன் வணங்கி..........................கோடி என்னும் தலத்திற் கடுத்த **வேதாரணியத்தில்** அமர்ந்த பெருமாளே!

---

"சிந்தைய தழுங்க லின்றித் தென்மலைச் சேறி அங்கண்
வந்துநம் வதுவைக் காட்சி வழங்குதும் மகிழ்ந்து காண்டி"

- கந்தபுராணம் 1-10-59.

"என்னையோர் பொருளாய் வந்திங் கியன்மண வாளக் கோலந்
தன்னையின் றெனக் களித்த தாணுவே போற்றி திங்கள்
மன்னுசெஞ் சடையாய் போற்றி மறைதொழு மணாளா போற்றி
நன்னுதல் பாகா போற்றி நாதனே போற்றி யென்று
தாளில் வீழ கும்ப மீன்றோன் தனையுகந் தெடுத்து நாதன்

-வேதாரணிய புராணம் (பரஞ்சோதி) மணவாள-63-4.

‡ உம்பர் - தேவராகிய சிவபிரான்.

X முருகோனே - குழந்தையே! இப் பொருளில் இச் சொல்லை அருணகிரியார் ஆள்வது வழக்கம்.

-பாடல் 93, பக்கம் 98 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

O கோகனத்தான் - பிரமன். பிரமன் பூசித்தது:

தான் படைத்த அழகி திலோத்தமையைக் கூடினதால் பிரமன் படைக்கும் ஆற்றலை இழந்தான்: வேதாரணியத்தில் சிவபிரானைப் பூசித்து அந்தத் தோஷம் நீங்கிப் படைக்கும் ஆற்றலையும் பிரமன் பெற்றான்-

"பெற்ற நன்மகள் தன் சாயற் பெருநலன் நுகர்ந்த வாற்றால்
அற்றறி வடங்கி மூட மாகியே அவலங் கூர்ந்து
மற்றறிதற் கென்கொல் சாந்தி என அவன் மதித்து முன்னும்
கற்றவன் சிருட்டி வேத வனத்தெனக் கருத்திற் கொண்டான்.
அரன்பாதம் போற்றித், துனியுறு தீமைநீங்கித் தோற்றமார்
தொழிலும் மேவி, இனிதென இருக்கை மேவி இன்பமுற்
றமர்ந்தா னன்றே"

-வேதாரணிய புராணம் - அகோரதேவர்-பிரமதீர்த்த-12, 17.

## 846. முருகா என

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தனதான

நீலமுகி லானகுழ லானமட வார்கள்தன
நேயமதி லேதினமு முழலாமல்-
நீடுபுவி யாசைபொரு ளாசைமரு ளாகியலை
நீரிலுழல் மீனதென முயலாமற்;

காலனது *நா† வரவ வாயிலிடு தேரையென
காயமரு வாவிவிழ அணுகாமுன்-

* நா-வார்த்தை-'நம்பி நாவினுள் உலக மெல்லாம் நடக்கும்'
- சிந்தாமணி 316.

இங்கு வார்த்தை என்பது காலன் **வைது** உயிரை இழுத்துச் செல்லும் வார்த்தைகள்; அத்தகைய வைதற்சொற்கள் அணுகாமுன்-அருள் தாராய் என்றார்; காலன் திட்டுகின்ற - வைதற் சொற்களை பின்வரும் பேரூர்ச் சாந்தலிங்க சுவாமிகளின் பாடலிற் பரக்கக் காணலாம்:-

"என்ன செய்குவாய் மனமே-நாளை
எமனிடத்தில்-நீ என்ன செய்குவாய் மனமே!
நாளைக்-**கறுத்த** உருவமும் **பருத்த** உடலமும்
கனலைப்போல **விழியும்** தனதில்லாத **மொழியும்**
கண்டவ ரஞ்சிடு பாசமும்-இரு
தண்டகமாகிய சூலமும்-ஈட்டுக்
கருநிற மாகிய எருமைக் கடாவினில் **ஏறி**
ஒரு இமைப் பொழுதினிற் பெருவரை போலவே **சீறிக்**
கால தூதருடன் **கூடியே** - இந்த ஞாலந் தனிலே உன்னைத் **தேடியே**
**கண்டு**, அடியார்க்குத் **தொண்டு**, செய்யாமல் நித்தம் **உண்டு**,
உறக்கம் **கொண்டு**, **பெண்டு** பிள்ளைக் குழைக்கும் **பேயே**! அட **நாயே**!
என்று **கட்டிக்** கரமதனால் **கிட்டிச்** சிரசுதனில்
**குட்டித்**, திறமாகவே **திட்டி**, உலகுதனில்
**ஒட்டிக் கிரட்டி** யாகிய **வட்டி** வாங்கிப் பையில் **கொட்டி**,
அதை இருப்புப் **பெட்டி** தனிலே வைத்துக்
**கெட்டி** செய் **திட்டு** வைத்த **மட்டீ**!

(தொடர்ச்சி 479-ஆம் பக்கம்)

# கோடி (குழகர் கோயில்)

# 846.

கரியமேகம் போன்ற கூந்தலைக்கொண்ட மாதர்களின் கொங்கைமேலுள்ள ஆசையிலே நான் நாள்தோறும் அலைச்சல் உறாமலும்,

நீண்ட (பெரிய) புவியாசை - உலக ஆசை, மண்ணாசை, பொருளாசை - பொருள்களின் மேலுள்ள ஆசை - பொன்னாசை, இவற்றில் மயக்கங்கொண்டு, அலை மிகுந்த கடல் நீரின் நடுவே அலைச்சலுறுகின்ற மீனைப்போல உழலும் பொருட்டு முயற்சி செய்யாமல்,

(காலனது நா) காலனது (என்னை விரட்டும்) பேச்சு என்கின்ற பாம்பின் வாயினுள் அகப்பட்ட தேரைபோல, (நான் கலங்க, காயம் மருவு ஆவி விழ - இவ்வுடலில் பொருந்தியுள்ள உயிரானது உடலை விட்டு நீங்கி அவன் கையிற் சிக்கி விழும்படி காலன் நெருங்கிவரும் முன்பு, (அல்லது - காலனுடைய நாவாகிய பாம்பின்வாயில் அகப்பட்ட தேரைபோல, (இந்த) உடலிலுள்ள உயிரானது அவன் கையில் அகப்பட்டு விழும்படி அந்தக் காலன் எனை அணுகுவதற்கு முன்பாக-)

---

*அட! **காசாசை** பிடித்த **பிசாசே** - நீ - ஏறித்திரி*
*    **கரிகள்** எங்கே! பெரும் **பரிகள்** எங்கே!*
*தந்தக் **கட்டில்** எங்கே! தங்கத் **தொட்டில்** எங்கே!*
*    பவுன் காசும் எங்கே! கொண்ட காத லெங்கே!*
*உத்தியோகம் எங்கே! வியாபாரம் எங்கே!*
*    துறைத்தனமும் எங்கே! அதைக் காட்டு!*
*அரைக்கா சளவாகிலும் தாசருக் கீயாத **கருமீ**!*
*    மிக்க **வறுமீ**! - கொண்ட கன்னி யிருக்கத்*
*தாசி தன்னிடைச் சுகித்த**சண்டாளா**! - என்றும்*
*    கருத்திற் சிவநாமத்தைத் துதித்திடாமல் - வீண்*
***பொழுதைப்** போக்குகின்ற **கழுதை**! எங்கள்*
*    **கடவுளைத்** துதியாத **மடையா**! வா! எனத்தானே உதையானோ!*
*        என்ன செய்குவாய் மனமே - நாளை*
*            எமனிடத்தில் - நீ என்ன செய்குவாய் மனமே!"*

[தொடர்ச்சி 480 ஆம் பக்கம் பார்க்க.]

*காதலுட னோதுமடி யார்களுட னாடியொரு
கால்முருக வேளெனவு மருள்தாராய்;
சோலைபரண் மீதுநிழ லாகதினை காவல்புரி
தோகைகுற மாதினுட னுறவாடிச்-
சோரனென நாடிவரு வார்கள்வன † வேடர்விழ
சோதிகதிர் வேலுருவு மயில்வீரா;
கோல‡வழல் நீறுபுனை யாதிசரு வேசரொடு
கூடிவிளை யாடுமுமை தருசேயே-
X கோடுமுக வானைபிற கானதுணை வாகுழகர்
கோடிநகர் மேவிவளர் பெருமாளே. (1)

## திருப்பெருந்துறை.

[இது அறந்தாங்கி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 8-மைல். தேவார வைப்பு ஸ்தலம். இங்கு மாணிக்கவாசக ஸ்வாமிகள் ஞானோபதேசம் பெற்றனர். இங்குச் சிவபிரானுக்குக் "குருந்த நீழற் குரு மூர்த்தி" என்னும் ஒரு திருநாமம் உண்டு; இவை "ஞானப்ரசங்கத் திருப்பெருந் துறை", "குருத்வ சங்கரர்" எனத் திருப்புகழிற் பாராட்டப்பட்டுள்ளன. ஸ்தலபுராணம் உண்டு.]

## 847. சடம் விட

தனத்த தந்தன தானன தந்தத்
தனத்த தந்தன தானன தந்தத்
தனத்த தந்தன தானன தந்தத் தனதான

இரத்த முஞ்சியு மூளை யெலும்புட்
டசைப்ப சுங்குடல் நாடிபு னைந்திட்
டிறுக்கு மண்சல வீடுபு குந்திட் டதில்மேவி-

[479 ஆம் பக்கத் தொடர்ச்சி] † அரவவாயி விடுதேரையென- 'பாம்பின்வாய்த் தேரையாய்'-சம்பந்தர் 2-79-6. 'பாம்பின் வாய்த் தேரைபோல' - அப்பர் 4-46-1. 'அரா நுகர வாதையுறு தேரைகதி - திருப்புகழ் 207; நஞ்சு புசிதேரை-திருப்புகழ் 62.

* இந்த நாலாவது அடி மனப்பாடம் செய்யத்தக்கது.

† வேடர் விழ வேலேவிய விஷயத்தை விஜயமங்கலத்துக்குரிய பாடல்-940-ஏழாவது அடியிலுங் காண்க - பாடல் 341-பக்கம் 354, பாடல் -344, பக்கம் 362, 363 கீழ்க்குறிப்புக்களைப் பார்க்க.

‡ அழல் நீறு - "பூசும் சுடுநீறு" - "வெங்கனல் வெண்ணீறு" -சம்பந்தர்-1-85-6, 3-102-5.

[தொடர்ச்சி 481 ஆம் பக்கம்]

அன்புடன் (உன்னை) ஓதுகின்ற அடியார்களுடன் விரும்பி, ஒரு முறையாவது "முருகவேள்" என்று நான் புகழுமாறு நின் திருவருளைத் தந்தருளுக.

(வள்ளிமலைக் காட்டிலுள்ள) சோலை மரங்கள் (தினைப்புனத்திலுள்ள) பரண்மீது நிழல்தரத் தினைப் பயிர்களைக் காவல்செய்துவந்த, மயில்போன்ற சாயலை-யுடைய, குறமகளாம் வள்ளியுடன் உறவு கொண்டாடி (நீ வள்ளியைக் கொண்டுசெல்ல)

கள்வன் என்று உன்னைத்தேடி வந்தவர்களான காட்டு வேடர்களெல்லாம் மாண்டுவிழ மிக்க ஒளி வீசும் வேலாயுதத்தைச் செலுத்தின மயில் வீரனே!

அழகுள்ளதும், (வினைகளை அழிப்பதில்) நெருப்புப் போன்றதுமான (அல்லது) - பசுவின் சாணத்தை நெருப்பிலிட்டுச் சுட்டெடுக்கப்படும் திருநீற்றை அணிந்துள்ள ஆதிப்பிரானும், எல்லாவற்றிற்கும் ஈசனுமான சிவபெரு-மானொடு கூடி விளையாடுகின்றற உமையம்மை பெற்ற குழந்தையே!

தந்தத்தை முகத்திற்கொண்ட (ஆனை) கணபதிக்குப் பின்வந்த துணைவனே! (தம்பியே)! குழகர் என்னும் திருநாமத்துடன் சிவபிரான் வீற்றிருக்கும் கோடி என்னும் தலத்தில் விரும்பி வீற்றிருக்கும் பெருமாளே!

(முருகவேளெனவும் அருள்தாராய்)

## திருப்பெருந்துறை

## 847.

ரத்தமும், சீயும்(சீழும்). மூளை, எலும்பு, உள்ளே உள்ள (தசை) மாமிசம், பசிய குடல், நாடிகள் இவைகள் கொண்டு யாக்கப்பட்டு - கட்டப்பட்டு, (இறுக்கு) அழுத்தமாய்க் கட்டப்பட்டுள்ள மண்ணாலும், நீராலும் ஆன (வீட்டில்) உடலில் நுழைவு பெற்று, அதில் இருந்து-

---

X" கோடுமுக வானைபிற கானமயி லாசுருதி
கோடிவனம் வாழிளைய பெருமாளே" - எனவும்,
'கோடுமுக வானைபிற கான துணை வாசுருதி
கூர் திருநெல் வேலியுறை பெருமாளே" எனவும் பாட பேதங்களுள்ளன. O சியும் - சீயும்.

இதத்து டன்புகல் சூதுமி குந்திட்
டகைத்தி டும்பொரு ளாசையெ னும்புட்
டெருட்ட வுந்தெளி யாதுப றந்திட் டிட*மாயா;

பிரத்தம் வந்தடு வாதசு ரம்பித்
துளைப்பு டன்பல வாயுவு மிஞ்சிப்
பெலத்தை யுஞ்சில நாளுளொ டுங்கித்
† தடிமேலாய்ப்-

பிடித்தி டும்பல நாள்கொடு மந்திக்
குலுத்தெ னும்படி கூனிய டங்கிப்
‡ பிசக்கு வந்திடு போதுபி னஞ்சிச் சடமாமோ;

தரித்த னந்தன தானன தந்தத்
திமித்தி மிந்திமி தீதக திந்தத்
தடுட்டு டுண்டுடு டூடுடி மிண்டிட் டியல்தாளம்-

தனத்த குந்தகு தானன தந்தக்
கொதித்து வந்திடு சூருடல் சிந்தச்
சலத்து டன்கிரி தூள்படெ றிந்திட் டிடும்வேலா;

சிரத்து டன்கர மேடுபொ ழிந்திட்
டிரைத்து வந்தம ரோர்கள் படிந்துச்
Xசிரத்தி னுங்கமழ் மாலைம ணம்பொற்
சரணோனே-

---

* மாயா பிரத்தம் வந்து-மாயை அதிகரித்து.

† 'துடிகொண்டு குரங்கெனவே நடந்து' - பாடல் 554-பக்கம் 262.

‡ பிசகு - மரணம் (இடக்கரடக்கல்).

X தேவர்கள் வணங்குவதால் அவர்களுடைய தலைமாலைகளின் மணம் முருகவேளின் திருவடிகளில் மணப்பது:
- பாடல் 513-பக்கம் 312.

"சுரர்மாமுடி....கமழும் கழலே" - கந்தர நுபூதி-44.

இன்பகரமாய்ப் பேசும் சூதான மொழிகள் மிகுதியாய் (அகைத்திடும்) கிளைத்து எழுகின்ற பொருளாசை என்கின்ற பறவை, பிறர் தெளிவு ,பெறச்சொன்னாலும் - அறிவுறுத்தினாலும் - தெளியாமல், மேலும் மேலும் பறப்பதாயிருக்க - பிரபஞ்ச - மாயை என்பது-

அதிகரித்து வந்து, உண்டாகின்ற வாதம், சுரம், பித்தம் இவைகளின் (உளைப்புடன்) வருத்துதலோடு - இவைகள் செய்யும் வேதனைகளுடன் - பலவகைய வாயுக்களும் அதிகரித்து, இருக்கின்ற பலத்தைச் சில நாள்களுக்குள் ஒடுக்கித், தடிமேல் கை ஊன்றுவதாய்ப்-

பிடித்து நடப்பதான பல நாள்கள் செல்ல, குரங்குக் கூட்டத்தவன் இவன் என்று சொல்லும்படியாக, உடல் கூனி, (சத்துக்கள்) அடங்கி, (இறுதியாக) பிசக்கு - பிசகு - அழிவு வந்திடும் சமயத்தில், (தைரியத்தை இழந்து) பின்பு அஞ்சுவதான இந்த (உடல்) தேகம் ஆமோ! (பிறவி வேண்டாம் என்றபடி)

தரித்த னந்தன...டூடுடி மிண்டிட் என ஒலிக்கின்ற தாளத்துடன்

தனத்த குந்தகு தானன தந்தக் கென்று கோபித்து எழுந்து வந்த சூரனுடைய உடல் அழியவும், (சலத்துடன்) கடல் வற்றிப்போவதுடன் (அல்லது நடுக்கத்துடன்) எழுகிரி, கிரெளஞ்சம் பொடிபடவும் செலுத்தி நின்ற வேலாயுதனே!

தலையுடன் (தலை வணக்கத்துடன்) கரம் - கையானது, ஏடு-மலர் ஏடுகளை (மலர்களை)ப் பொழிந்து, (இரைத்து வந்து) போற்றிசெய்யும் ஒலியுடன் வந்து தேவர்கள் (உன்னை) வணங்குவதால் அவர்களுடைய தலையில் மணக்கின்ற மாலைகளின் நறுமணத்தைப்பெற்ற அழகிய திருவடிகளை உடையவனே!

செகத்தி னின்குரு வாகிய தந்தைக்
*களித்தி டுங்குரு† ஞானப்ர சங்கத்
திருப்பெ ருந்துறை மேவிய கந்தப் பெருமாளே. (1)

## 848. பிறவி யற

தனத்தனந் தனதன தனத்தனந் தனதன
தனத்தனந் தனதன தனதான

‡வரித்தகுங் குமமணி Xமுலைக்குரும் பையர்மன
மகிழ்ச்சிகொண் டிடஅதி விதமான-
வளைக்கரங் களினொடு வளைத்திதம் படவுடன்
மயக்கவந் ததிலறி வழியாத;

கருத்தழிந் திடஇரு கயற்கணும் புரள்தர
களிப்புடன் களிதரு மடமாத்ர்-
கருப்பெருங் கடலது கடக்கவுன் திருவடி
களைத்தருந் திருவுள மினியாமோ;

பொருப்பகம் பொடிபட அரக்கர்தம் பதியொடு
புகைப்பரந் தெரியெழ விடும்வேலா-

---

* சிவனுக்கு உபதேசகுரு - பாடல் 327 - பக்கம் 314.

† ஞான ப்ரசங்கம்-

மாணிக்கவாசகர் குதிரை வாங்கச் சென்றபோது (பாடல் 439-பக்கம் 601) திருப்பெருந்துறையில் சிவனே குருமூர்த்தியாக இருந்து அடியார்களுக்கு ஞானோபதேசம் செய்வதைக் கண்டு காந்தத்தால் இழுக்கப்பட்ட இரும்புபோல இழுக்கப்பட்டுத் தாமும் அவ் வடியார்ளுடனிருந்து உபதேசம் பெற்றனர்: அதனால் 'ஞானப்ரசங்கத் திருப்பெருந்துறை' எனப்பட்டது.

"பரிந்து மாணவர்கள் சூழப் பத்தனார் வரவு பார்த்துப்
பெருந்துறைக் குருந்த நீழல் இருந்தனன் பெரிய ஆசான்"
'நோக்கினால் பாவகத்தால் நுவலரும் பரிசனத்தால்
காக்குமீ னுடலடக்கங் கமடமொண் பறவை யென்ன
ஆக்கினான் ஆக்கு முன்னர் அடைந்தது பரம ஞானம்
வாக்கில்நா மடந்தை சேர்ந்தாள் அகன்றன மலங்கள் முன்றும்"
-திருவாலவாயுடை - 27 -(44-48)

(தொடர்ச்சி 485-ஆம் பக்கம் பார்க்க.)

உலகுக்கெல்லாம் குருவாய் விளங்கும் உனது தந்தைக்கு (உபதேசம்) அளிக்க குருவே! உன் தந்தையார் - (சிவபிரான்) அடியர் கூட்டத்துக்கு - ஞானப் பிரசங்கம் செய்த இடமாகிய **திருப்பெருந்துறையில்** விரும்பி வீற்றிருக்கும் பெருமாளே!

(இச் சடமாமோ)

## 848.

(**வ**ரித்த) தொய்யில் எழுதப்பட்டதும் (அல்லது - சந்தனக்கலவை பூசப்பட்டதும்) குங்குமத்தை அணிந்ததுமான (முலைக் குரும்பையர்) குரும்பை முலையர் - தென்னங் குரும்பை யொத்த கொங்கையர் மனமகிழ்ச்சி கொள்ளுமாறு பல வகையான

வளையல்கள் அணிந்துள்ள (தமது) கரங்களால் (ஆடவர்களை) வசீகரித்து இழுத்து, (இதம்பட உடல்) வந்தவர்கள் உடலில் இன்பம் ஊறுமாறு, காம மயக்கத்தை ஊட்டும் செய்கைகளால், (சாதாரணமாய் அறிவு அழியாத-

கருத்தும் அழிவுபெற, இரண்டு கயல்மீன் போன்ற கண்களும் புரளச், சந்தோஷத்துடனே மகிழ்ச்சியைத் தருகின்ற இளவயதுள்ள மாதர்களால் (ஏற்படுகின்ற)

(கரு) பிறவி என்கின்ற பெருங்கடலைத் தாண்டுதற்கு உன்னுடைய திருவடிகளை (அடியேனுக்குத்) தருதற்கு (உனது) திருவுள்ளம் இனியேனும் கூடுமோ!

கிரவுஞ்சத்தின் உள்ளிடம் பொடிபடவும், அரக்கர்கள் தாமிருந்த ஊர்களுடன் புகை பரந்த எரியிற் பட்டழியவும் செலுத்தின வேலனே!

---

(பக்கம் 484 தொடர்ச்சி.)

‡ வரித்த-(தொய்யில் எழுதப்பட்ட) - தொய்யில் - மகளிர் தனங்களில் சந்தனக் குழம்பால் எழுதுங் கோலம் (பிங்கலம்).

"வள்ளுகிர் வரித்த சாந்தின் வனமுலை"-சிந்தாமணி 2532.

"முலைமுதல் முற்றத்து வரித்த சாந்தின் வண்ணம்"

-பெருங்கதை 1-46-225.

-திருப்புகழ் பாடல் 665-பக்கம் 25 கீழ்க்குறிப்பையும் பார்க்க.

X " குரும்பை முலைமலர்க் குழலி" - சுந்தரர் 7-16-1.

புகழ்ப்பெருங் கடவுளர் களித்திடும் படிபுவி
பொறுத்த *மந் தரகிரி கடலூடே;
திரித்தகொண்டலு †மொரு மறுப்பெறுஞ் சதுமுக
திருட்டியெண் கணன்முத லடிபேணத்-
‡திருக்குருந் தடியமர் Xகுருத்வசங் கரரொடு
திருப்பெருந் துறையுறை பெருமாளே. (2)

## 849. மாதர்மீது மயக்கு அற

தனன தந்தனந் தனதன தனதன
தனன தந்தனந் தனதன தனதன
தனன தந்தனந் தனதன தனதன தனதான

முகர வண்டெழுங் கருமுகி லலையவு
முதிய நஞ்சுமிழ்ந் தயில்விழி குவியவு
முகிள சந்திரன் பொருநுதல் வெயரவு மமுதூறும்-
முருகு தங்குசெந் துகிரிதழ் தெரியவு
மருவு சங்கநின் றொலிகொடு பதறவு
முழுது மன்புதந் தமளியி னுதவிய அநுராகச்;
Oசிகர கும்பகுங் குமபுள கிததன
மிருபு யம்புதைந் திட**நடு விடைவெளி
தெரிய லின்றியொன் றிடவுயி ருயிருட னுறமேவித்
திமிர கங்குலின் புதவிடு மவசர
நினைவு நெஞ்சினின் றறவவர் முகமது
தெரிச னஞ்செயும் பரிவற இனியருள் புரிவாயே

---

* "மந்தராசலம் கடலிலே சுழன்றது மறுகி" - செவ்வந்திப் புராணம் திருமலை-51.

† ஒருமறு - இறைவனை இகழ்ந்ததால் ஐந்து தலைகளுள் ஒருதலை கிள்ளப்பட்டுள்ள மறு - பாடல் 285 பக்கம் 209-கீழ்க்குறிப்பு.

‡ குருந்தமரம் - திருப்பெருந்துறையில் "கொழுமலர்ச் சோலைத் திருப்பெருந்துறையிற் குருந்தடி யிருந்தருள் பரனே" -திருப்பெருந்துறைப் புராணம் - உபதேச-70.

X குருத்வ சங்கரர் - பாடல் 847-பக்கம் 484 குறிப்பு.

O சிகரம் - மலை

**நடு இடைவெளி தெரியாதவாறு ஒன்றிடல் (அணைந்து சேருதல்)- 'தோளுந் தாளும் பிணைந்துருவொன் றெய்தி
நாளு நாகர் நுகர்ச்சி நலத்தரோ" - சிந்தாமணி 1347.

புகழ் மிகுந்த பெரிய (கடவுளர்) தேவர்கள் மகிழும்படி, பூமியைத் தாங்கும் மந்தரகிரியைக் கடலிடையே-

(மத்தாகச்) சுழலச் செய்த மேகநிறத்துத் திருமாலும், ஒரு (மாசு) குறையைப் பெற்ற (தனக்கிருந்த ஐந்து தலையில் ஒரு தலையை இழந்த குறையைப் பெற்ற) நான்கு முகங்களிலும் பார்வைகொண்ட எட்டுக் கண்ணனாம் பிரமன் முதலான தேவர்கள் தமது பாதத்தை விரும்பிப் போற்ற-

திருக் குருந்த மரத்து அடியில் வீற்றிருந்தருளின குருமூர்த்தியாம் சங்கரருடனே **திருப்பெருந்துறை** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

*(கருக்....கடலது கடக்கத்...திருவுளம் இனியாமோ)*

# 849.

**ஒ**லிசெயும் வண்டுகள் (மலர் மணத்தேனை மோந்து உண்ணவந்த வண்டுகள்) எழுந்து மொய்க்கும் கரிய கூந்தல் அலைச்சல் உறவும், பெரு விஷத்தை உமிழ்கின்ற வேல்போன்ற கண்கள் குவியவும், அரும்பி மலரும் பிறைச் சந்திரனை ஒத்த நெற்றியில் வெயர்வு எழவும், இதழ் ஊறலாம் அமுது ஊறுகின்ற-

நறுமணம் தங்கும் செவ்விய பவளம்போன்ற வாயிதழ் தெரியவும், பொருந்திய சங்குபோன்ற கண்டம் (கழுத்திலிருந்து) வெளிப்படும் புட்குரல் ஒலியுடன் பதட்டம் உறவும், முழு அன்பையும் தந்து படுக்கையிற் காட்டின காமப்பற்றுக் கிடமானதும்,

(சிகரம்) மலை போன்றதும், குடம் போன்றதும், குங்குமம் பூசியுள்ளதும், புளகாங்கிதம் கொண்டதுமான கொங்கைகள் இரண்டு புயங்களிலும் அழுந்திட, மத்தியிலே வெளியிடம் தெரியாத வண்ணம், ஒருவரை ஒருவர் இறுக அணைந்திட, உயிரும் உயிரும் கலந்து பொருந்தக் கூடி-

இருண்ட இரவில் (இன்பு உதவிடும்) கலவி இன்பத்தைத் தந்து உதவும் (அவசர நினைவு) சமயங்களின் ஞாபகம் நெஞ்சிலிருந்து ஒழிந்துபோக, (அம் மாதர்களின்) முக தரிசனத்தைச் செய்ய விரும்பும் அன்பு ஒழிந்துபோக, இனி எனக்கு அருள்புரிவாயாக,

மகர நின்றதெண் டிரைபொரு கனை*கடல்
மறுகி யஞ்சிவந் தடிதொழு திடவொரு
வடிகொள் செஞ்சரந் தொடுபவ னிருபது புயவீரன்-
மடிய வங்குசென் றவனொரு பதுமுடி
முடிய முன்புமண் டமர்பொரு தமர்† நிழல்
மதிலி லங்கையும் பொடிபட அருளரி மருகோனே;
நிகரி லண்டமெண் டிசைகளு மகிழ்வுற
விரகு கொண்டுநின் றழகுறு மயில்மிசை
நினைவி னுந்தியம் புவிதனை வலம்வரு மிளையோனே-
நிலவ ரும்புதண் டரளமு மிளிரொளிர்
பவள மும்பொரும் பழனமு மழகுற
நிழல் **குருந்தமுஞ் செறிதுறை** வளர்வுறு
பெருமாளே. (3)

## திருத்துருத்தி.

(திருத்துருத்தி என்பது குற்றாலம். ரெயில்வே ஸ்டேஷன், மாயூரத்துக்குத் தென்மேற்கு $5^1/_2$-மைல். மூவர் தேவாரமும் பெற்றது.)

## 850. திருவடியை நேசிக்க

தனத் தனத்தன தானன தானன
தனத் தனத்தன தானன தானன
தனத் தனத்தன தானன தானன தனதான

மலைக் கனத்தென மார்பினி லேயிரு
முலைக் கனத்துற வேயிடை நூலென
‡ வளைத்து குப்பமை யார்குழல் தோளோடும்
Xஅலைமோத-
மயிற் குலத்தவ ராமென நீள்கலை
நெகிழ்த்து வித்திரு வார்விழி வேல்கொடு
மயக்கி னத்தினர் மேல்மறு பாடும விழியேவி;

* கடல் (வருணன்) அஞ்சி வரும்படி கடல்மீது அம்பு ஏவினது - பாடல் 177-பக்கம் 412 கீழ்க்குறிப்பு

† இராவணனுடைய ஆணைக்கு அஞ்சிச் சூரியன் இலங்கையிற் புகமுடியா திருந்தானாதலின் 'நிழல் மதில் இலங்கை' - என்றார் எனலுமாம் - பாடல் 426-பக்கம் 572-கீழ்க்குறிப்பு.

‡ வளைத்து உகுப்ப- வளைத்துவிட.

X குழல் அலைமோத - பாடல் 754-முதலடி.

மகர மீன்கள் உள்ள தெள்ளிய திரைகள் மோதும் ஒலிகடல் (வருணன்) கலக்கத்துடன் பயந்து (தனது) திருவடியில் தொழுது வணங்கும்படி ஒரு கூர்மையான செவ்விய அம்பைச் செலுத்தினவனும், இருபது புயங்களைக் கொண்ட வீரன் (ராவணன்)

இறக்கும்படி (அங்கு) இலங்கைக்குப் போய் அவனுடைய ஒரு பத்து தலைகளும் அழிபட, முன்பு நெருங்கின போரைச் செய்து (அமர்நிழல் - நிழல் அமர்) ஒளி பொருந்திய மதில் சூழ்ந்த இலங்கை நகர் பொடிபட அருளினவனுமான திருமாலின் மருகனே!

நிகர்இல்-ஒப்பிலாத-சிறந்த அண்டங்களிலும் எட்டுத் திசைகளிலும் உள்ளவர்கள் மகிழ்ச்சிகொள்ள, சாமர்த்தியத்துடன், ஏறி நின்று அழகு பொருந்திய மயிலை மனோவேகத்தினும் அதிவேகமாகச் செலுத்தி (அம்புவிதனை) (அழகிய) பூலோகத்தை வலம்வந்த இளையோனே!

நிலவொளிபோல வெள்ளொளி வீசும் குளிர்ந்த முத்துக்களும் விளங்கி ஒளிதரும் பவளமும் கலந்து இலங்கும் வயல்கள் அழகுதர, நிழல் தரும் குருந்தமரம் நிறைந்த (துறை) இடமாகிய **திருப்பெருந்துறையில்** விளங்கி வீற்றிருக்கும் பெருமாளே!

(அருள் புரிவாயே)

## திருத்துருத்தி
## 850.

**ம**லைப்பாரம் போல மார்பில் இரண்டு கொங்கைகளும் பாரத்தைத் தருவதால், இடையானது நூலென்னும்படி வளைவுபெற, கருமை நிறைந்த கூந்தலானது தோள்மேலே அலை வீசுவதுபோலப் புரள

மயிற் பறவையின் கூட்டத்தவர்கள் போலப் பெரிய (தமது) ஆடைகளை நெகிழ்த்துவித்து - தளர்த்திவைத்து, இரண்டு நீண்ட கண்கள் என்னும் வேல்கொண்டு மயக்குவித்துத் (தம்மை) விரும்பி வந்தவர்மேல் (மறு) குற்றங்களை (பாடும்) கூறுவது போன்ற (அல்லது) (மறுபாடும்) மறுபடியும் (அல்லது)மாறுபாடுள்ள-பகைமை உள்ள) அந்தக் கண்களைச் செலுத்தி-

விலைக் கெனத்தன மாயிர மாயிர
முலைக்க ளப்பினு மாசைபொ தாதென
வெறுப்பர் குத்திர காரியர் வேசையர் மயல்மேலாய்-

*வெடுக் கெடுத்தும காபிணி மேலிட
முடக்கி வெட்கு மதாமத வீணனை
மினற் பொலிப்பத மோடுற வேயருள் புரிவாயே;

அலைக் கடுத்த சுரார் பதி கோவென
விடப் பணச்சிர மாயிர சேடனும்
அதிர்த்தி டக்கதிர் வேல்விடு சேவக மயில்வீரா-

† அடைக் கலப்பொரு ளாமென நாயெனை
அழைத்து முத்திய தாமநு பூதியெ
னருட்டி ருப்புக ழோதுக வேல்மயி லருள்வோனே;

---

* இது அருணகிரியாரின் வரலாற்றைக் குறிப்பது. அவர் ஆதியில் நோயிற்பட்டதைக் குறிக்கும். "மாதர் இருவிழியாகும் அம்புக்கும் மதனவேள் வாளிக்கும் நடுவாகியே மாலாகும் அருணகிரி"-என்றார் திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழில்.

† இதுவும் அருணகிரியாரின் வரலாற்றுப்பகுதி. "இத்தலத்தில் முருகவேள் அருணகிரியாரது கனவில் தோன்றி "அன்ப! நீ எனக்கு அடைக்கலப் பொருள் ஆவாய்; அருணையிலும் (திருப்புகழ் 563), எட்டிகுடிப் பதியிலும் (திருப்புகழ் 838), பொதிய மலையிலும் (திருப்புகழ் 413) நீ விரும்பிய வண்ணம் இதோ (உன் தோளில்) நமது வேற்பொறி, மயிற் பொறியை இட்டோம். முத்தி தரவல்ல நமது அநுபூதியையும் அருள்மயமாம் நமது திருப்புகழையும் ஓதும் பணியையே நீ பணியாகக் கொள்வாயாக" என அருளி மறைந்தார். அருணகிரியாரும் விழித்தெழுந்து தமது தோளில் வேல் அடையாளம் மயில் அடையாளம் இருக்கக் கண்டு மெய் சிலிர்த்து உள்ளங் குளிர்ந்து, "முருகா! நாயனைய என்னையும் பொருட்படுத்தி அழைத்து அடைக்கலப் பொருள்போல அருமை பாராட்டி வேற்பொறி மயிற்பொறி யிட்டனையே" என மகிழ்ந்து ......."இறைவா! நான் வேசையர் மயலே மேலதாய், மகா பிணி மேலிட முடங்கி வெட்கமடைந்த மஹா மதவீணன்; இனி, எனக்கு அவ்வுறவு நேராதிருக்க உன் திருவடியின் உறவே உறவாகும் பாக்கியம் வேண்டும்.....என வேண்டிப் பணிந்தனர்"

-(அருணகிரிநாதர் வரலாறு பக்கம் 108-109)

(தொடர்ச்சி 491 ஆம் பக்கம் பார்க்க)

கொடுக்கவேண்டிய (விலை) பொருளுக்காகத் (தனம்) பொன் ஆயிரமாயிரமாக அவர்தம் கொங்கையின் பொருட்டு அளந்து கொடுத்தாலும் அவர்கட்குள்ள ஆசையால் அவையும் போதாதென்றே வெறுப்பைக் காட்டுபவரும். வஞ்சனைச் செயலினரும் ஆன வேசையர் (விலைமாதர்களின்) (காம) மயக்கமே மேலோங்கிப் (பின்னர்)-

(வெடுக்கெடுத்து) திடீரென்று மிகக் கொடியதொரு பெருநோய் பீடிக்க ஒடுங்கி, வெட்கப்படுகின்ற, பெருத்த மதம் பிடித்த வீணனாகிய நான் மின்னல்போல் ஒளி வீசுகின்ற உன்னுடைய திருவடியில் பொருந்திச் சேரவே அருள் புரிவாயாக.

கடலைப்போய் அடுத்த (கடலிலே புக்குநின்ற) (அசுரார்பதி) அசுரர் தலைவன் - சூரன் ' கோ என்று அஞ்சி அலற, விஷமுள்ள படங் கொண்ட தலைகள் ஆயிரங்கொண்ட ஆதிசேடனும் அதிர்ச்சி உற-கலங்க, ஒளிவேலைச் செலுத்தின பராக்ரம சாலியே! மயில் வீரனே!

அடைக்கலம் வைக்கப்பட்ட பொருளைப் (பாதுகாப்பது போல) அடியேனைப் (பொருட்படுத்தி) அழைத்து 'முத்தியைத் தரவல்ல திருவருட் பிரசாத ஞானத் திருப்புகழை நீ ஓதுவாயாக' எனத் திருவாய் மலர்ந்து வேல்பொறி மயிற்பொறி (வேல் அடையாளம், மயில் அடையாளம்) ஆகிய ரக்ஷைகளை அருளினவனே!

---

முருகவேளின் அடிமைப் பொருள் இவன் என்று இயமன் தெரிந்துகொண்டு தன்னை அணுகாதிருப்பதற்கு வேல் பொறி-மயில்பொறி கேட்கின்றார் அருணகிரியார். இவ்வாறு இடபப்பொறி, சூலப்பொறி வேண்டி அப்பர் பெருமான் சிவபிரானிடம் விண்ணப்பித்துள்ளார்.

'பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம் போற்றி செய்யும்

என்னாவி காப்பதற் கிச்சை யுண்டேல் இருங்கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி, மேவு கொண்டல்
துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச் சுடர்க் கொழுந்தே"

'இடபம் பொறித்தென்னை ஏன்று கொள்ளாய் இருஞ்சோலை திங்கள் தடவும் கடந்தையுள் தூங்கானை மாடத்தெந் தத்துவனே" -அப்பர் *4-109. 1, 10.* பாடல் *413*-பக்கம் *544*-கீழ்க்குறிப்பு.

*சிலைக்கை முப்புர நீறெழ வேதிரு*
*வுளத்தி லற்பமெ னாநினை தேசிகர்*
*சிறக்க முத்தமி ழாலொரு பாவக மருள்பாலா-*
**திருக் கடப்பலர் சூடிய வார்குழல்*
*குறத்தி கற்புட னேவிளை யாடியொர்*
**திருத் துருத்தி**யில் வாழ்முரு காசுரர்
*பெருமாளே.* (1)

## திருவீழிமிழலை.

*(இது குற்றாலத்துக்குத் தெற்கு 6-மைல் மூவர் தேவாரமும் பெற்றது.)*

## 851. முருகா என ஓத

*தனனா தனனா தனனா தனனா*
*தனனா தனனா தனதான*

*எருவாய் கருவாய் தனிலே யுருவா*
*யிதுவே பயிராய் விளைவாகி-*
*இவர்போ யவரா யவர்போ யிவரா*
*யிதுவே தொடர்பாய் வெறிபோல;*
*† ஒருதா யிருதாய் பலகோ டியதா*
*யுடனே யவமா யழியாதே-*
*ஒருகால்* **முருகா** *பரமா* **குமரா**
*உயிர்கா* **வெனவோ** **தருள்தாராய்;**
*‡ முருகா வெனவோர் தரமோ தடியார்*
*முடிமே லிணைதா ளருள்வோனே-*

---

* வள்ளியம்மைக்கும் கடப்பமலர் ப்ரீதி என்பது 'கடம்பு தொடை அரசி...வேடச் சிறுமி'

-பாடல் 636; பாடல் 712-பக்கம் 142 கீழ்க்குறிப்பு.

† "எனக்குத்தா யாகியாள் என்னையீங் கிட்டுத்
தனக்குத்தாய் நாடியே சென்றாள்-தனக்குத்தாய்
ஆகி யவளும் அதுவானால் தாய் தாய்க் கொண்
டேகு மளித்திவ் வுலகு" - என்னும் நாலடியாரை நினைவூட்டுகின்றது இந்த அடி.

‡ முருகன் குமரன் குகனென்று மொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்"

-என்றார் கந்தர் அநுபூதியிலும் (15).

மேருமலையாம் வில் கையில் பிடித்தபடியே இருக்க-*அதை உபயோகப்படுத்தாது - முப்புரங்கள் தீயினால் நீறுபட்டழிய திருவுள்ளத்தில் சிறிதளவே நினைத்த தேசிகப் பெருமான் (குருமூர்த்திப் பெருமான்) பெருமை அடைய (முத்தமிழ் கொண்டு ஒப்பற்ற தியானக் கருத்துப் பொருளை (பிரணவப் பொருளை) உபதேசித்த குழந்தையே! (அல்லது) முத்தமிழால் ஒப்பற்ற தியானத்துக்கும் கருத்துக்கும் உரியதான தேவாரப் பாக்களை அருளிய குழந்தையே!

அழகிய கடப்பமலர் சூடிய நீண்ட கூந்தலை உடைய குறத்தி வள்ளியின் கற்புக் குணங்களில் திளைத்து விளையாடி ஒப்பற்ற **திருத்துருத்தியில்** (குற்றாலத்தில்) வாழும் முருகனே! தேவர் பெருமாளே!

(பதமோடுறவே அருள் புரிவாயே)

## திருவீழிமிழலை

## 851.

(**எ**ருவாய்) உற்பத்திக்கு வேண்டிய எருவாய், (கருவாய்) கருப்பக் கருவாய், அதனில் நின்றும் உருவம் ஏற்பட்டு இவ் வுருவே பயில் வளர்வதுபோல விளைவதாகி - விளை-பொருளாகி-

இவர் இவர் என்று இன்று இருப்பவராய்ப் பின்பு (இறந்துபட்டு) அவர் அவர் என்று சொல்லும்படியாகி, அவர் அவர் என்று பேசப்பட்டவர் (பிறந்தபின்) இவர் இவர் என்று சொல்லும்படியாகி இங்ஙனமே ஒரு தொடர்ச்சியாய் - வெறி பிடித்ததுபோல

ஒரு தாயர், இரண்டு தாயர், பல கோடிக்கணக்கான தாய்மார்களை அடைந்தவனாய் வீணாக நான் அழிவுறாமல்-

ஒருமுறை (யேனும்) முருகா! பரமா! குமரா! எனது உயிரைக் காத்தருள் என உன்னைக் கூவி ஓதுமாறு உனது திருவருளைத் தந்தருளுக (ஏனென்றால்)

'முருகா' என ஒரே முறை ஓதுகின்ற அடியார்க்கு நீ அவர்கள் தலைமீது உனது இரண்டு திருவடிகளையும் வைத்து அருள்பவனாயிற்றே! திருவடி (தீக்ஷை செய்யும் கருணை வள்ளலாயிற்றே!)

---

* 'ஓரம்பே முப்புரம்...ஒன்றும் பெருமிகை உந்தீபற' -திருவாசகம்.

*முநிவோ ரமரோர் முறையோ வெனவே
முதுசூ ருரமேல் விடும்வேலா;
திருமால் பிரமா வறியா தவர்சீர்
சிறுவா திருமால் மருகோனே-
†செழுமா மதில்சே ரழகார் பொழில்சூழ்
திருவீ ழியில்வாழ் பெருமாளே. (1)

## திருவாவடுதுறை.

(மாயூரத்துக்கு மேற்கு 10-மைல் தூரத்திலுள்ள நாரசிங்கன் பேட்டை ரெயில்வே ஸ்டேஷனுக்கு தென்கிழக்கு 1½-மைல். மூவர் தேவாரமும் பெற்றது.)

## 852. சலிப்பற

தத்ததன தான தனத்தனத் தத்த தத்த
தத்ததன தான தனத்தனத் தத்த தத்த
தத்ததன தான தனத்தனத் தத்த தத்த தனதான

‡சொற்பிழைவ ராம லுனைக்கனக் கத்துதித்து
நிற்பதுவ ராத பவக்கடத் திற்சுழற்றி
சுக்கிலவ தார வழிக்கிணக் கிக்களித்து விலைமாதர்-
துப்பிறைய தான இதழ்க்கனிக் குக்கருத்தை
வைத்துமய லாகி மனத்தைவிட் டுக்கடுத்த
துற்சனXமகாத கரைப்புவிக் குட்டழைத்த நிதிமேவு;

---

* சூரனுக்கு அஞ்சி தேவர்கள் ஓலமிட்ட வகை:-
"நண்ணினர்க் கினியாய் ஓலம் ஞானநா யகனே ஓலம்
பண்ணவர்க் கிறையே ஓலம் பரஞ்சுடர் முதலே ஓலம்
எண்ணுதற் கரியாய் ஓலம் யாவையும் படைத்தாய் ஓலம்
கண்ணுதற் பெருமான் நல்கும் கடவுளே ஓலம் ஓலம்!
தேவர்கள் தேவே ஓலம் சிறந்தசிற் பரனே ஓலம்
மேவலர்க் கிடியே ஓலம் வேற்படை விமலா ஓலம்
பாவலர்க் கெளியாய் ஓலம் பன்னிரு புயத்தாய் ஓலம்
மூவரு மாகி நின்ற மூர்த்தியே ஓலம் ஓலம்"
-கந்தபுராணம் 4-13-460, 461.

† திருவீழிமிழலை மதிலும் - பொழிலும் :
"வான் அணவு மாமதில்...வளங்கொள் பொழில்வாய்
...வீழி நகரே" - சம்பந்தர் 3-80-9.

‡ மனப்பாடம் செய்யத்தக்க பாடல் இது.

[தொடர்ச்சி 495-பக்கம்]

முநிவர்கள், தேவர்கள், முறையோ முறையோ என உன் முன்பு ஓல மிட, பழைய சூரனது மார்பின்மேல் செலுத்தின வேலனே!

திருமாலும் பிரமனும் அறியாதவராகிய சிவபிரானது மேன்மை(ச் சிறுவனே) புதல்வனே! திருமாலின் மருகனே!

செழிப்புள்ள அழகிய மதில் சூழ்ந்த அழகு நிறைந்த சோலை சூழும் **திருவீழி மிழலையில்** வாழும் பெருமாளே!

(முருகா, குமரா, உயிர்கா என ஓதருள் தாராய்)

## திருவாவடுதுறை

## 852.

(**து**திக்குஞ்) சொற்களில் பிழை ஒன்றும் வராமல் உன்னை நிரம்பத் தோத்திரம் செய்து, நிற்பது என்பதே வராத-ஓய்ந்து நிற்பது எனபதே இல்லாத-ஓயுதலின்றி மேலும் மேலும் வரும்-பிறப்பாகிய (கடத்தில்) காட்டில் சுழலுண்டு சுக்கிலம் மூலமாய் (அவதாரம் ஆகும்) பிறப்பு எடுக்கின்ற வழியில் இணங்கிப் பொருந்தி மகிழ்ச்சி பூண்டு விலைமாதர்களின்

(துப்பு இறையதான) பவளம் தங்குவதான-பவளம் போன்ற வாயிதழ் ஊறலாம் பழத்தின் ருசியில் (எனது) எண்ணத்தை வைத்து, காம மயக்கம் கொண்டு மனத்தை அந்தக் காம மயக்கத்தின் வழியே செலுத்தி, (கடுத்த) மிக்குள்ள (துற்சன)பொல்லாதவர்களான-துர்க்குணம் உடையவர்களான (மகா காதகர்களை) மகா கொடியவர்களை-இப் பூமியிலே வளப்பம் பொருந்தி செல்வம் நிறைந்த-

---

‡ சொற்பிழை வராத வண்ணம் பாடவேண்டும் என்பது அருணகிரியாரின் உபதேசமொழி; இங்ஙனமே எழுத்துப் பிழையும் வரக்கூடாது என்று கந்தரலங்காரத்தில் (2)-

"அயில்வேலன் கவியை அன்பால் எழுத்துப் பிழையறக் கற்கின்றிலீர்"- என உபதேசித்துள்ளார். இந்த உபதேச மொழிகளை அடியார்கள் அவசியம் பின்பற்றி நடக்கவேண்டும்.

X ம காதகரை - மகா காதகரை.

கற்பகஇ ராச னெனப்படைக் குப்பெருத்த
அர்ச்சுனந ராதி யெனக்கவிக் குட்பதித்து
கற்றறி*வி னாவை யெடுத்தடுத் துப்படித்து
மிகையாகக்-

கத்திடுமெ யாக வலிக்கலிப் பைத்தொலைத்து
கைப்பொருளி லாமை யெனைக்கலக் கப்படுத்து
கற்பனைவி டாம லலைத்திருக் கச்சலிக்க
விடலாமோ;

† எற்றபணிய ராவை மித்துவெட் டித்துவைத்து
‡ பற்றியக ராவை யிழுத்துரக் கக்கிழித்து
Xஎட்கரிப டாம லிதத்தபுத் திக்கதிக்கு நிலையோதி-

Oஎத்தியப சாசின் முலைக்குடத் தைக்குடித்து
முற்றுயிரி லாம லடக்கிவிட் டுச்சிரித்த
யிற்கணையி ராமர் சுகித்திருக் கச்சினத்த
திறல்வீரா:

**வெற்பெனம தாணி நிறுத்துருக் கிச்சமைத்து
வர்க்கமணி யாக வடித்திருத் தித்தகட்டின்
மெய்க்குலம தாக மலைக்கமுத் தைப்பதித்து
வெகுகோடி-

---

* வினா - சொல்.

† அராவைத் துவைத்து - இது காளிங்க நிர்த்தத்தைக் குறிக்கின்றது- பாடல் 245-2, பக்கம் 114கீழ்க்குறிப்பு; பாடல் 402-பக்கம் 518 கீழ்க்குறிப்பு.

‡ கராவை (முதலையைக்)கிழித்தது - பாடல் 110-பக்கம் 262 கீழ்க்குறிப்பு.

X எண்கரி - எட்கரி - என திரிந்ததென்றால் - மதிப்புக்கு உரிய யானை - எனப் பொருள்படும்.

O பேய்முலை உண்டது
-பாடல் 115, பக்கம் 274; பாடல் 408-பக்கம் 534-கீழ்க்குறிப்பு.

**7,8, அடிகள் - மயிலின் உடல் வர்ணனை; இவ்வாறே "பலநிற மிடைந்த விழுசிறை யலர்ந்த பருமயில்" (திருப்புகழ் 164), "ரத்னரேகை யொக்கச் சிறக்கு மாமயில்" (திருப்புகழ் 298),

"மரகதத் தமனிய மயில் (திருப்புகழ் 382), "இரணிய சயிலம், ரசித சயிலம், மரகத சயிலம் என.....நிழல் வீசி......கலப கக மயில், (திருப்புகழ் 1095)- வருவன காண்க.

கற்பகவிருக்ஷம் போன்ற ராஜனே (நீ) என்றும், படையிலே மிகச் சிறந்த அர்ச்சுனராஜனே (நீ) என்றும் துதித்து நான் பாடும் கவிகளிலே அங்ஙனம் அமைத்து, நான் கற்று அறிந்த (வினாவை) சொற்களை (எடுத்து) பொறுக்கி அமைத்து, (அடுத்துப் படித்து) அம் மனிதர்களை அண்டி - நெருங்கிப்போய் அவர்கள்மீது நான் அமைத்த கவிகளைப்) படித்து - அனாவசியமாக - அளவுக்கு மிஞ்சி-

(கத்திடும்) கூச்சலிடும் (மெய் ஆக) உடலைக் கொண்டவனாய், (வலி) வன்மைகொண்ட (நல்ல) (எனது) (கலிப்பை)-பொலிவைத் (தொலைத்து)-இழந்து, கையில் பொருள் இல்லாத காரணத்தால் என்னை கலககமுறச் செய்யும் (கற்பனைகளை) காரிய ஏற்பாடுகளில் (விடாமல்) ஓயுதலின்றி நான் அலைச்சலுறும்படியும், சலிப்புறும்படியும் என்னை நீ கைவிடலாமோ!

எற்பணி (எல்) ஒளி பொருந்திய (பணி அராவை) நாகப்பாம்பைக் (காலின்கீழ்) மிதித்து, வெட்டித் துவைத்து (உழக்கி)க் கலக்கி, (கஜேந்திரனைப்) பற்றியிழுத்த முதலையை வெளியே இழுத்து (உரக்கக்கிழித்து) பலமாகக் கிழித்தெறிந்து-(எள்) அவமதிப்புக்கு இடமான (கரி)- யானை - கஜேந்திரன் - படாமல்-அந்த முதலையின் வாயில் பட்டு அழியாமல், இதத்த-இதம் நன்மை-இன்பம் தரக்கூடிய புத்தி (கதிக்கு நிலை) அடையக்கூடிய (நிலையை) உறுதிப்பொருளை அதற்கு ஓதி-(சொல்லி)-

வஞ்சனை எண்ணத்துடன் வந்த (பசாசின்) அலகையின் கொங்கைக் குடத்தை -(உறிஞ்சிக்) குடித்து, முழுதும் உயிர் இல்லாத வகையில் அந்தப் பிசாசை அடக்கிவிட்டுச் (சிரித்த, அயில் கணை) கூரிய அம்பைக் கொண்ட (இராமர்) திருமால் சுகமாக இருக்கும்படி (சூரனாதியரைக்) கோபித்து (அழித்த) பராக்ரம வீரனே!

மலையென்னும் படியாய், (மதாணி) பொன் பதக்கம் ஒன்றை எடைபார்த்து உருக்கி உருவுசெய்து அதில் (வர்க்கமணி) பலவகையான ரத்னங்களை (வடித்திருத்தி) பொறுக்கி எடுத்து அமைத்து, (பொன்) தகட்டினுடைய சரியான கூட்டம் என்று பிரமிக்கும்படிச் செய்து, அதிலே முத்துக்களைப் பதிவுசெய்து, (அதனால்) பலகோடி

விட்கதிர தாக நிகர்த் தொளிக் கச்சிவத்த
ரத்தினப டாக மயிற்பரிக் குத்தரித்து
மிக்கதிரு **வாவ டுநற்றுறைக்** குட்செழித்த
பெருமாளே.(1)

## மருத்துவக்குடி,

*(இஃது ஆடுதுறை ரெயில்வே ஸ்டேஷனி லிருந் து 2-மைல்.)*

## 853. உணர்ச்சி பெற

*தனத்த தத்தன தானா தானன*
*தனத்த தத்தன தானா தானன*
*தனத்த தத்தன தானா தானன தனதான*

கருத்தி தப்படு காமா லீலைகள்
விதத்தை நத்திய வீணா வீணிகள்
கவட்டு விற்பன மாயா வாதிகள் பலகாலுங்-

கரைத்து ரைத்திடு மோகா மோகிகள்
அளிக்கு லப்பதி கார்போ லோதிகள்
கடைக்க ணிற்சுழ லாயே பாழ்படு வினையேனை;

உரைத்த புத்திகள் கேளா நீசனை
யவத்த*மெத்திய ஆசா பாசனை
யுளத்தில் மெய்ப்பொரு ளோரா மூடனை யருளாகி-

உயர்ச்சி பெற்றிடு மேலா†மூதுரை
யளிக்கு நற்‡பொரு ளாயே மாதவ
வுணர்ச்சி பெற்றிட வேநீ **தாளினை**
**யருள்வாயே;**

செருக்கி வெட்டிய தீயோ ராமெனு
மதத்த துட்டர்கள் மாசூ ராதிய
சினத்தர் பட்டிட வேவே லேவிய முருகோனே-

---

* மெத்திய-மிகுந்த.

† மூதுரை-வேதம்-'எலாம் முற்று மோர்ந்தவர் மூதுரை யர்த்தமே' - தாயுமா-பொன்னை மாதரை-51.

‡ பொருள் - மகன், - "அசுரன் தாருகனைப் பொருது பொன்றுவித்த பொருளினை முன் படைத்துகந்த புனிதன்" -சுந்தரர் 7-16-9.

விண்ணிலுள்ள சூரியனது ஒளி கூடியது போன்ற ஒளிவீசச், சிவந்த (ரத்னபடம்) ரத்னப்போர்வை போர்த்தது போன்ற (ஆகம்) உடலினைக் கொண்ட மயில் (அல்லது ரத்ன படாகம் - (படகம்) - ரத்ன திரைச்சீலை கொண்டது போன்ற மயில்) வாகனத்தின்மீது அமர்ந்து மிகச் சிறந்த **திரு ஆவடுதுறை** என்னும் நல்ல பதியில் விளக்கமுறும் பெருமாளே!

*(சலிக்க விடலாமோ)*

## மருத்துவக்குடி

## 853.

**க**ருத்துக்கு இனிமை வாய்க்கும்படிக் காமலீலைகளில் (பல) விதங்களை விரும்பியுள்ள மகா வீணிகள் (கவட்டு விற்பன) வஞ்சக அறிவுடையவர் (அல்லது வஞ்சகப் பிரசங்கத்தால்) (மாயாவாதிகள்) மயக்கம் ஊட்டத்தக்க பேச்சினை உடையவர், பல முறையும்-

மனம் கரையும்படிப் பேசவல்ல (மோகா மோகிகள்) காமமயக்கம் மிகக் கொண்டவர்கள், (அளிக்குலம்) வண்டின் கூட்டங்கள் (பதி) வந்து பதிகின்ற - படிகின்ற, கரியமேகம் போன்ற கூந்தலை உடையவர்கள் - ஆகிய பொது மாதர்களின் கடைக்கண் (மயக்கிற்பட்டு) சுழலுதலாகிப் பாழாகப் போகின்ற வினைக்கு ஈடான என்னை-

(பெரியோர்கள்) சொன்ன நற்புத்திகளைக் கேளாத (நீசனை) இழிந்தோனை, (அவத்தம்) பயனற்றவையே மிகுந்த ஆசைகளிலே (பாசம்) பற்று உடையவனை, உள்ளத்தில் உண்மைப்பொருள் இன்னதென (ஓராத) ஆராய்ந்தறியாத மூடனை - உனது திருவருளைப் பெற்றவனாகி-

உயர்வு பெற்ற - மேலான (மூதுரை) வேதத்திற் குறிக்கப்பெற்ற நல்ல பிள்ளையாகி, சிறந்த தவஞானத்தைப் பெறுமாறு நீ உனது திருவடியினைத் தந்தருளுக;

கர்வம் கொண்டு பகைவர்களை வெட்டி யழித்த பொல்லார்கள் எனப்பட்ட மதங்கொண்ட துஷ்டர்களாம் பெரிய சூரனாதிய கோபங்கொண்ட அசுரர்கள் அழியும்படியே வேல் ஆயுதத்தைச் செலுத்தின முருகனே

சிவத்தை யுற்றிடு தூயா* தூயவர்
கதித்த முத்தமிழ் மாலா யோதிய
செழிப்பை நத்திய சீலா வீறிய மயில்வீரா;
வரைத்த வர்க்கரர் சூரா பாணிய
ரதிக்கு ணத்தரர் தீரா தீரர்த
† மனத்தி யற்படு ஞானா தேசிக வடிவேலா-
வருக்கை யிற்கனி சாறாய்‡ மேலிடு
தழைத்த செய்த்தலை யூடே பாய்தரு
**மருத்துவக்குடி** வாழ்வே தேவர்கள்
பெருமாளே.(1)

## திருப்பந்தணை நல்லூர்.

(இது திருவிடைமருதூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வட கிழக்கு 71/2-மைல். குற்றாலம் ஸ்டேஷனுக்கு வடமேற்கு 6-மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல் பெற்றது.)

## 854. மாயை நீங்க

தனதந்தன தனதந்தன தனதந்தன தான
தனதந்தன தனதந்தன தனதந்தன தான
தனதந்தன தனதந்தன தனதந்தன தானத் தனதான

xஇதசந்தன புழுகுஞ்சில மணமுந்தக வீசி
யணையுந்தன கிரிகொண்டிணை யழகும்பொறி சோர
இருளுங்குழல் மழையென்பo நவரசங்கொளு மோகக்
குயில்போலே-
இடையுங்கொடி மதனன்தளை யிடுகுந்தள பார
இலையுஞ்சுழி தொடைரம்பையு மமுதந்தட மான
இயலங்கடி தடமும்பொழி மதவிஞ்சைகள் பேசித்
தெருமீதே;

---

* இது முருகவேளுக்குத் தமிழின் மீதுள்ள ப்ரீதியைக் காட்டும்.

† சிவபிரானது மனத்தே விளங்கும் தேசிகர்-வேலர்-
"மத்தச் சடைப் பரமர் சித்தத்தில் வைத்த கழலோனே"
"நட்டமிடும் உத்தமர் நினைக்கு மனமொத்த கழல் வீரா"

‡ மேலிடு-மேலிட்டு. -(திருப்புகழ் 306, 312)

x 608-ஆம் பாடலின் சந்த இசை கொண்டது இப் பாடல்.

o நவரசமாவன:- சிங்காரம், ஆசியம், கருணை, ரௌத்திரம், வீரம், பயம், குற்சை (அருவருப்பு), அற்புதம், சாந்தம்.

*சிவமங்களம் பொருந்திய பரிசுத்த மூர்த்தியே! பரிசுத்தங்கொண்ட பெரியோர்கள் அருளிய முத்தமிழ்ப் பாக்களை அன்புடன் ஓதுகின்ற வளத்தை விரும்புகின்ற ஒழுக்கம் கொண்டவனே! மேம்பாடுடன் விளங்கும் மயில் வீரனே!*

*(வரை) கயிலைமலையில் (வீற்றிருக்கும்) தவர்க்கு அரர் தவத்தினர்க்கும் இறைவனாம் பெரியோர், சூலத்தைத் திருக்கையிற் கொண்டவர், அதிக் குணத்து அரசர்-மேம்பட்ட குணத்தை உடைய பெரியார், மிக்க தைரியமுள்ளவர்-ஆகிய சிவபிரானுடைய மனத்திலே பொருந்தி விளங்கும் ஞானதேசிக மூர்த்தியே! கூரிய வேலனே!*

*பலாப்பழங்கள் சாறாகி மேலிட்டுத் தழைத்த வயல்களின் இடங்களிலே பாய்கின்ற* ***மருத்துவக்குடியில்*** *வாழ்கின்ற செல்வமே! தேவர்கள் பெருமாளே!*

***(தாளிணை அருள்வாயே)***

### *திருப்பந்தணைநல்லூர்*

## 854.

**இ**ன்பந்தருவதான சந்தனம், புனுகுசட்டம், இவை போன்ற சில வாசனைப் பொருள்கள் தக்கபடி வீச, அணைகின்ற கொங்கை மலைகள் இரண்டையும் கொண்டும், அழகிய (மெய், வாய், கண், மூக்கு, செவி) எனப்படும் இந்திரியங்கள் சோர்வு அடையவும், இருண்ட கூந்தல் மழை என்னும்படி நீண்டு விளங்கவும், நவரசங்களையும் கொண்ட (பேச்சுக்களாலும்) மோகத்தை ஊட்டும் குயில்போலப்பேசி-

இடையானது கொடிபோல விளங்க, மன்மதன் இடும் விலங்கோ எனும்படியான கூந்தல்பாரம் என்ன, (இலை) ஆலிலைபோன்ற வயிறு என்ன, சுழி-உந்திச்சுழி (கொப்பூழ்) என்ன, தொடை அரம்பை-அரம்பைத் தொடை-வாழை போன்ற தொடை என்ன, அமுதந் தடமான-காம அமுதம் தங்கும் இடமான தன்மைகொண்ட அழகிய அல்குல் என்ன, இவைகளைக் கொண்டு, மன்மத லீலைக்கலை வித்தைப் பேச்சுக்களைப் பேசிக்கொண்டு, தெருவிலே-

பதபங்கய மணியும்பரி புரமங்கொலி வீச
நடைகொண்டிடு மயிலென்பன கலையுஞ்சுழ லாட
பரிசும்பல மொழியுஞ்சில கிளிகொஞ்சுகை போலப்
பரிவாகிப்-

*பணமுண்டென தவலம்படு நினைவுண்டிடை சோர
இதுகண்டவர் மயல்கொண்டிட மனமுஞ்செயல் மாற
பகலுஞ்சில இரவுந்துயில் சிலவஞ்சகர் **மாயைத்
துயர்தீராய்;**

திதி திந்திமி தனதந்தன டுடு டுண்டுடு பேரி
டகுடங்குகு டிகுடிங்குகு படகந்துடி வீணை
செகணஞ்செக வெனவும்பறை திசையெங்கினு
மோதக் கொடுசூரர்-

சிரமுங்கர வுடலம்பரி யிரதங்கரி யாளி
நிணமுங் குடல் தசையுங்கட லெனசெம்புன லோட
சிலசெம்புள்கள் கழுகுஞ் சிறு நரியுங்கொடி யாடப்
பொரும் வேலா;

† மதவெங்கய முரிகொண்டவர் மழுவுங்கலை பாணி
யிட மன்பொடு வளருஞ்சிவை புகழ்சுந்தரி யாதி
வளருந்தழ லொளிர் சம்பவி பரைவிண்டிள
தோகைத் தருசேயே

---

* 'பணம் உண்டென எனது' - 'பணமுண்டெனது' - எனக் குறுக்கம்.

† யானையை உரித்தது - பாடல் 286, பக்கம் 210 கீழ்க்குறிப்பு

மான்மழு ஏந்துவது

இடதுபாகம் தேவி - பாடல் 301, பக்கம் 246 கீழ்க்குறிப்பு.

பாத தாமரையிற் சேர்ந்துள்ள (பரிபுரம்) சிலம்பு - அங்கு (ஒலிவீச) சப்திக்க, நடக்கின்ற மயில்கள் என்னும்படி ஆடையும் சுழன்று ஆட, ஒழுங்கு விதம் பலவாக, சில பேச்சுக்களுடன் கிளி கொஞ்சுவதுபோலப் பேசி அன்பு பூண்டு-

(பணம் உண்டெ்டன) பணம் இருக்கிறதென்று, பணம் இருக்கிறதென்று - (எனது அவலம்படு) என்னுடைய வேதனைப்படும் நினைவிலே நான் (எண்ணம் பூண்டிருக்க), இடை - மத்தியிலே (சோர) (பணம்) வற்றிப்போய்த் தளர்ச்சியுற, இந் நிலையைக் கண்டு அவ் விலைமாதர் (மயல் கொண்டிடு அம் மனமும்) மோகம் கொண்டிருந்த அந்த (தங்கள்) மனமும் நேசச் செயலும் மாறுதல் கொள்ள, அதனால் (பகலும் சில இரவும்) சில பகலும் இரவுமே துயில் கொள்ள· (இணங்கும்) சில வஞ்சக மாதர்கள் மீதுள்ள (காம) மாயைத் துயரைத் தீர்த்தருளுக.

திதி திந்திமி தன தந்தன டுடு டுண்டுடு எனப் (பேரி) போர்முரசு ஒலிக்க, டகுடங்குகு டிகு டிங்குகு எனப் (படகம்) சிறுபறை, (துடி) உடுக்கை, வீணை இவை ஒலிக்க, செகணஞ் செக எனப் பறை திசைகள் எங்கும் சத்திக்க, கொடிய சூரர்களின்

தலையும், கையும், உடலும், குதிரையும், தேரும், யானையும், யாளியும், கொழுப்பும், குடலும், சதையும் (அறுபட்டதனால்) கடல்போலச் சிவந்த ரத்தம் பெருகி ஓட, சில பருந்து போன்ற சிவந்த பறவைகள், கழுகு, சிறிய நரிகள், (கொடி) காக்கைகள் (உணவு கிடைக்கும் களிப்பினால்) ஆடச், சண்டை செய்த வேலனே!

மதம்கொண்ட கொடிய யானையை உரித்தவர், மழுவையும், மானையும் (பாணி) கையிற் கொண்டவர்-ஆகிய சிவனது இடது பாகத்தில் அன்புடன் இருந்து விளங்கும் சிவை, புகழப்படும் அழகி, ஆதிதேவதை, வளர்ந்தோங்கும் நெருப்புப்போலச் சிவந்து விளங்கும் சாம்பவி, (பரை) பராசக்தி, (விண்டு) திருமாலின் (இளந்தோகை) இளைய மயிலனையாள் - இளையவள் - தங்கை தந்த குழந்தையே!

வதனஞ்சசி யமுதம்பொழி முலைநன்*குற மாதொ
டிசையுஞ்சுரர் தருமங்கையொ டிதயங்களி கூர
வருபந்தணை நகர்வந்துறை விமலன்குரு நாதப்
பெருமாளே. (1)

## 855. கழல் பெற

தனதன தந்த தனதன தந்த
தனதன தந்த தனதான

இருவினை யஞ்ச வருவினை கெஞ்ச
இருள்பிணி துஞ்ச மலமாய-
என திடர் மங்க வுனதருள் பொங்க
இசைகொடு துங்க புகழ்கூறித்;

திருமுக சந்த்ர முருகக டம்ப
சிவசுத கந்த குகவேல-
சிவசிவ என்று தெளிவுறு †நெஞ்சு
திகழந டஞ்செய் கழல்தாராய்;

‡ மருதொடு கஞ்ச னுயிர்பலி கொண்டு
மகிழரி விண்டு மருகோனே-

---

* வள்ளியுடன் இசைந்து - மனம் பொருந்தும் தேவி - தேவசேனை. வள்ளியின் வரலாற்றை முருகவேள் சொல்லக் கேட்ட தேவசேனை மனமிக மகிழ்ந்து என் தங்கையுடன் கூடப் பெற்றேனே என மகிழ்கின்றாள். 'வள்ளி...வணக்கம் செய்ய...பொருக்கென எடுத்துப் புல்லி ஈங்கொரு தமியளாகி இருந்திடுவேனுக் கின்றோர் பாங்கி வந்துற்றவாறு நன்றெனப் பரிவு கூர்ந்தாள்'.

குறவர் பாவை...தௌவை தன்திருப் பதங்கள் தம்மைத் தாழ்தலும் எடுத்துப் புல்லி இன்றுனைத் துணையாகப் பெற்றேன்- என்றாள். கந்தபுராணம் 6-24-235, 254.

† நெஞ்சு திகழ, கழல் தாராய் - "நினைக்கின்றேன் மனத்துன்னை வைத்தாய்" - (சுந்தரர் 7-1-1).

"நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன் நினையாதொரு போதும் இருந்தறியேன்" (அப்பர் 4-1-2)-என-இடையறாத பத்தி நிலையைப் பெறுதற்கு வேண்டிய வரமாகும்.

‡ மருதை - அழித்தது பாடல் 143-பக்கம் 332-கீழ்க்குறிப்பு.
கஞ்சனை மாய்த்தது-பாடல் 397-பக்கம் 502-கீழ்க்குறிப்பு.

(வதனம் சசி) சசி-சந்திரன் போன்ற (வதனமும்) திருமுகமும், பால் அமுதம் பொழியும் கொங்கையும் கொண்ட நல்ல குறப்பெண். வள்ளியுடனும், அவ்வள்ளியுடன் (இசையும்) அன்பு பொருந்தும் (தேவர் வளர்த்த மங்கை) தேவசேனையுடனும் உள்ளம் மகிழ்ச்சி மிக, வளர்ச்சியுறும் திருப்பந்தணை நல்லூர் என்னும் தலத்தில் வந்து வீற்றிருக்கும் சிவபிரானது குருமூர்த்திப் பெருமாளே! (மாயைத் துயர்தீராய்)

## 855.

பெரிய எனது பழைய வினை (சஞ்சித வினை) பயப்படும்படியும் (அல்லது - *சஞ்சிதவினை, பிராரத்தவினை இரண்டும் அஞ்ச - பயப்பட), வருவினை ஆகாமியவினை-வந்து இனித் தாக்கவேண்டிய வினைகளும் - நாங்கள் வரவில்லை எனக் கெஞ்சிக் கூத்தாடி விலக, இருண்ட நோய்வகைகள் வாராது மடிய, மலம் - ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும், மாய - அழிந்தொழிய

என்னுடைய வருத்தமெல்லாம் குறைந்து ஒழிய, உன்னுடைய திருவருள் மேம்பட்டுப் பெருக-இசையுடனே பரிசுத்தமான உனது திருப்புகழை ஓதி-

(திருமுக சந்த்ர) சந்திரன்போன்ற குளிர்ந்த அழகிய திருமுகத்தை உடையவனே! முருகா! கடம்பா! சிவ குமாரா! கந்தா! குகா! வேலா!

சிவ சிவ - என்று கூறி - அதனால் - தெளிவுபெற்ற எனது நெஞ்சு பொலிவுபெற, நடனம்புரியும் உனது திருவடியைத் தந்தருளுக;

மருதமரம், கம்சன்-இவர்தம் உயிரைப் பலி கொண்டு (மாய்த்து) மகிழ்ந்த அரி - திருமாலின் மருகனே!

---

*சஞ்சிதவினை - பழவினையுள் - அனுபவித்தது போக எஞ்சிநிற்பது. இது குருவின் திருநோக்கால் அழிந்துபோம்.

பிராரத்தம்-இம்மையிற் பயனளிக்கும் பழவினை. "தனுவி-னெடுக்கும் பிராரத்தம்"

- விநாயகபுரா-83-19.

ஆகாமியம் -இனி உறும் பிறப்பில் வரும் புண்ணிய பாவங்கள் "மேல்வரும் ஆகாமியமும்" -திருக்காளத்தி -புரா-12-28.

"சஞ்சிதம் எல்லாம் ஞானத்தழல் சுட்டு வெண்ணீறாக்கும் கிஞ்சிலா காமியந்தான் கிட்டாமல் விட்டுப்போகும் விஞ்சின பிராரத்வத்தின் வினை அனுபவித்துத் தீரும்" - கைவல்யநவ-

வதைபுரி கின்ற நிசிசரர் குன்ற
வலம்வரு செம்பொன் மயில்வீரா;

அருகுறு மங்கை யொடுவிடை யுந்து
மமலனு கந்த முருகோனே-

அருள் செறி பந்த ணையிலிரு மங்கை
*அமளிந லங்கொள் பெருமாளே. (2)

## 856. முருகா என

தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன
தனன தந்தன தானன தானன தனதான

† எகினி னம்பழி நாடக மாடிகள்
மயிலெ னுஞ்செய லா‡ரகி நேரல்குல்
இசையி டுங்குர லார்கட னாளிகள் வெகுமோகம்-

எனவி ழுந்திடு வார்முலை மேல்துகில்
அலைய வுந்திரி வாரெவ ராயினும்
இளகு கண்சுழல் வார்விலை வேசியர் வலைவீசும்;

அகித வஞ்சக பாவனை யால்மயல்
கொடுவி ழுந்திட ராகமு நோய்பிணி
யதிக முங்கொடு நாயடி யேனினி யுழலாமல்-

அமுத மந்திர ஞானொப தேசமும்
அருளி யன்புற வேமுரு காவென
அருள்பு குந்திட வேகழ லார்கழல் அருள்வாயே;

---

* இந்த 855-ஆம் பாடலின் தொடக்கத்தையும் முடிவையும் 543-ஆம் பாடலொடு ஒப்பிடுக.

† எகின்-அன்னம்-"மடலவிழ் மரைமாட்டு எகின் என" சோணசைல மாலை 5.

‡ அகி - பாம்பு.

உயிர்களுக்கு வதை புரிந்த - உயிர்களைக் கொன்ற அசுரர்கள் ஒடுங்கி அடங்க, வெற்றி கொண்ட (அல்லது உலகை வலம்வந்த) செம்பொன் மயில்மீது விளங்கும் வீரனே!

பக்கத்திலுள்ள தேவி - பார்வதியுடன் ரிஷபவாகனத்தைச் செலுத்தும் அமலன் - குற்றமற்ற சிவன் ப்ரியப்படும் குழந்தையே!

அருள் நிறைந்த **பந்தணை நல்லூர்** என்னும் தலத்தில் (வள்ளி தேவசேனை என்னும்) இரண்டு தேவிமார்களின் படுக்கை இன்பத்தை அனுபவிக்கும் பெருமாளே!

(நடஞ்செய் கழல் தாராய்)

## 856.

(**ஏ**கின் இனம்பழி) அன்னப் பறவைகளின் கூட்டத்தைப் பழிக்கவல்லவராய் நாடகம் நடிப்பவர்கள் (நடை முதலிய பாவனைகளில்) மயில் என்று சொல்லத்தக்க செயலினை உடையவர்கள், பாம்புக்கு ஒப்பான அல்குலைக் கொண்டவர்கள், (இசை) பண்களைக் காட்டும் குரலினை உடையவர்கள், கடன் கொள்ளுபவர்கள், மிக்க மோகம்

கொண்டுளோம் என்பவர் போல (மேலே) விழுபவர்கள், கொங்கைமேல் ஆடை அலையும்படித் திரிபவர்கள், யாராயிருந்தபோதிலும் இரங்குபவர்போல நெகிழ்ச்சியைக் காட்டும் கண்களைச் சுழற்றுபவர்கள், விலைக்கு (உடலை விற்கும்) வேசியர் - காம வலையை வீசுகின்ற

தீமையைத் தருவதான வஞ்சக நினைப்புள்ள நடத்தையால் மயங்கி நான் மோகம் கொண்டு (அவர்கள் வீசினவலையில்) விழ, அதனால் பின்னர், ராகம் (ஆசை), நோய், பிணி இவைகளை நிரம்பக்கொண்டு நாயனைய அடியேன் இனிமேலும் அலைச்சலுறாமல்-

அமுதம் அனைய (ஆறெழுத்து) மந்திரத்தையும் ஞான உபதேசத்தையும் எனக்கு அருளி, (நான்) அன்பு கூடிய மனத்துடனே (உன்னை) முருகா என்று சொல்லும்படியான திருவருள் எனக்குக் கூடுமாறு கழல் அணிந்த உனது திருவடியைத் தந்தருளுக.

ககன விஞ்சையர் கோவென வேகுவ
டவுணர் சிந்திட வேகடல் தீவுகள்
கமற வெந்தழல் வேல்விடு சேவக முருகோனே-
கரிநெ டும்புலி தோலுடை யா*ரெனை
யடிமை கொண்டசு வாமிச தாசிவ
கடவு ளெந்தையர் பாகம் விடாவுமை
யருள்பாலா;

†செகமு மண்டமு மோருரு வாய்நிறை
நெடிய அம்புயல் மேனிய னாரரி
‡திருவு றைந்துள மார்பக னார்திரு மருகோனே-
தினைவ னந்தனில் வாழ்வளி நாயகி
வளர்த நம்புதை மார்பழ காமிகு
திலக **பந்தணை** மாநகர் மேவிய பெருமாளே(3)

## 857. வணங்க

தந்தன தனத்த தந்தன தனத்த
தந்தன தனத்த தனதான

கும்பமு நிகர்த்த கொங்கையை வளர்த்த
கொஞ்சுகிளி யொத்த மொழிமானார்-
Xகுங்கும பணிக்குள் வண்புழுகு விட்ட
கொந்தளகம் வைத்த மடவார்பால்;

வம்புகள் விளைத்து நண்புகள் கொடுத்து
மங்கிநர கத்தில் மெலியாமல்-

---

*அருணாசலேசுரரும் அருணகிரியாரை ஆட்கொண்டனர் என்பது இதனாற் பெறப்படும் - "அருணகிரிநாதர் வரலாறு பக்கம் 11-12; சிவபிரான் இவரை ஆட்கொண்டு திருநீறும் அளித்தார் என்பதைத் திருப்புகழ் 568-ஆம் பாடலிற் காண்க.

† "எங்கும் உளன் கண்ணன்" - திருவாய்மொழி 2-8-9.

"ஏழுலகமும் துன்னி முற்றுமாகி நின்றசோதி" 4-3-8.

‡ "திருவாழ் மார்வன் தன்னை" - பெரிய திருமொழி 7-6-7.

"திருக்கலந்து சேரும் மார்ப தேவ தேவ தேவனே"

- சந்த விருத்தம் 103.

X குங்கும பணி - குங்குமபரணி - எனக் கொள்ளலாம்; பரணி-பணி-இடைக்குறை; தாதகி - தாகி என்புழிப் போல.

விண்ணிலுள்ள (விஞ்சையர்) வித்தியாதரர் 'கோ' (எனவே) கோவென்று அலறி இரங்க, (குவடு) கிரவுஞ்சமும் எழுகிரியும், அவுணர்களும் அழியுமாறும், கடலும், தீவுகளும் (கமற) மிக வேகுதல் உறக் கொடிய நெருப்பை வீசும் வேலாயுதத்தைச் செலுத்தின பராக்ரம சாலியே! முருகனே!

யானை, பெரிய புலி இவைகளின் தோலைப் புனைந்தவர், என்னை அடிமையாகக் கொண்ட சுவாமி சதாசிவ மூர்த்தி, கடவுள், என் தந்தை, ஆகிய சிவபிரானது (இடது)பாகத்தை விட்டுப் பிரியாத உமாதேவி அருளிய குழந்தையே!

உலகம், அண்டங்கள் இவை முழுதிலும் ஒரு உருவாய் நிறைந்து விளங்கும் பெரிய அழகிய மேக நிறத்து மேனியராம் அரி, லக்ஷ்மி வாசம் செய்கின்ற மார்பை உடையவர் - ஆகிய திருமாலின் மருகனே!

தினைப் புனத்தில் வாழ்ந்த வள்ளி நாயகியின் வளர்ச்சி மிகும் கொங்கையிற் படிந்த - அழுந்திய மார்பழகனே! மிகுந்த (திலகம்) சிறப்பு வாய்ந்த **பந்தணைநல்லூர்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(கழலார் கழல் அருள்வாயே)

# 857.

குடத்தை ஒத்த கொங்கையை வளர்த்துள்ளவர்களும், கொஞ்சுகின்ற கிளி போன்ற பேச்சினை உடையவர்களும் ஆன மான் அனைய மாதர்கள்

குங்குமம் ஆதிய அலங்காரத்துடன் (அல்லது குங்கும பரணிக்குள் இருந்த) நல்ல புனுகை விட்டு வாரப்பட்ட (கொந்தளகம்) (கொந்து) பூங்கொத்துக்கள் உள்ள (அளகம்) கூந்தலை உடைய மாதர்கள்- இவர்களிடத்தே-

வீண் செயல்களைச் செய்து நட்புச் செயல்களைக் காட்டி அழிந்து நரகில் மெலியாதவாறு (நலிவு உறாதவாறு)

வண்*கயிலை சுற்றி வந்திடு பதத்தை
வந்தனைசெய் புத்தி தருவாயே;

பம்புநதி யுற்ற பங்கொருச மர்த்தி
பண்டுள தவத்தி லருள்சேயே-

பைம்புய லுடுத்த தண்டலை மிகுத்த
பந்தணை நகர்க்கு ளுறைவோனே;

† சம்புநிழ லுக்குள் வந்தவ தரித்த
சங்கரர்த மக்கு மிறையோனே-

சங்கணி கரத்த ரும்பர்பய முற்ற
சஞ்சல மறுத்த பெருமாளே.(4)

## 858. வினை கெட

தந்ததன தந்தனந் தனதனத்
தந்ததன தந்தனந் தனதனத்
தந்ததன தந்தனந் தனதனத் தனதான

X கெண்டைகள்பொ ருங்கண்மங் கையர்மலர்க்
கொண்டைகள்கு லுங்கநின் றருகினிற்
கெஞ்சுபலு டன்குழைந் தமளியிற் கொடுபோய்வண்-

---

* கயிலையிலிருந்த தந்தை கூற, கயிலையிலிருந்து உலகெலாம் வலம் வந்தது - பாடல் 184-பக்கம் 430 கீழ்க்குறிப்பு; "கார்மயிற்பரி நடாவி யோய்வினொர் கணந்தனிற் கயிலை மேவினான்

-பழநித்தல புராணம் - திருவாவினன்குடி - 46.

† சம்பு - நாவல்மரம்-சம்பு நிழலில் இறைவன் வீற்றிருத்தல்:- இவ் வரலாற்றை பாடல் 501 பக்கம் 140-கீழ்க்குறிப்பிற் பார்க்க. திரு ஆனைக்காவுலாவிற் பின்வருமாறு காணலாகும்- (8-18)

"இருடி ஒருவன்...சம்பு தருவின் அடியிற்றவமே புரியக், கரத்தில் தவளக் கனியொன்று வீழ...கனியைக் கயிலையிற்போய் நக்கன் தனக்களிப்ப...முக்கணான்...அருந்தி விதை மாமுனிக்கு நல்க, முனி தாங்கி அருந்த..உடலில் வேராய்...வெண்ணாவலாய்

(தொடர்ச்சி 511 ஆம் பக்கம் பார்க்க.)

வளப்பமுள்ள கயிலைமலையைச் சுற்றி வந்த திருவடியை (வந்திக்கின்ற) வணங்கிப் போற்றி செய்கின்ற புத்தியைத் தந்தருளுவாயாக.

(பம்புநதி, பங்கு உற்ற ஒரு சமர்த்தி) (சடையிற்) செறிந்துள்ள கங்கை நதி. (சிவனார்) பாகத்திற் பொருந்தியுள்ள ஒப்பற்ற சாமர்த்தியம் உள்ள பார்வதிதேவி இவர்கள் இருவரும் தத்தமது பழைமையுள்ள (நல்ல) தவப்பேற்றால் அருளின குழந்தையே!

பசிய மேகங்கள் படியும் சோலைகள் மிக்குள்ள **பந்தணை நல்லூர்** என்னும் தலத்தில் வீற்றிருப்பவனே!

[சம்பு] (நாவல்மர) நிழலில் வந்து தோன்றிய சங்கரர்க்கும் (சிவனுக்கும்) தலைவனே!

சங்கை ஏந்தின திருக்கரத்தர் [திருமாலும்], தேவர்களும் [சூராதியர்களிடம் கொண்ட] பயத்தினால் ஏற்பட்ட மனக்கவலையை - துன்பத்தை - நீக்கி ஒழித்த பெருமாளே!

(வந்தனை செய் புத்தி தருவாயே)

## 858.

**கெ**ண்டைமீன்கள் போன்ற கண்களையுடைய மாதர்கள், மலர் அணிந்த தமது கொண்டைகள் குலுங்க நின்று, சமீபத்திலிருந்து தாழ்ந்த குரலுடன் பற்கள் தெரியும்படி வேண்டிக் குழைந்து [இளகின] மனமுடையவராய்ப் - படுக்கையிற் கொண்டுபோய், நல்ல-

---

எழுந்து சாகையொடு தழைப்பத் தானோங்கி ஓகையுடன், நின்று பரவ நிருத்தன் கருத்துடனே, இன்று முதற் சம்புமுனி இப்படிப் போய் - நளின முனி பூசித்த ஞான பூமிக்கண்..இருப்பாய் உன் நிழலிலே யாமுறைவோம் என்ன, விருப்பால் அவன் வந்து விட்டான்"

X இப் பாடல் 47-ஆம் பாடலின் சந்தத்தைக் கொண்டது.

கெந்தபொடி யும்புனைந் துறவணைத்
திண்பவச னந்தருந் தொழிலடுக்
கின்றமய லின்படுந் துயரறப் ப்ரபைவீசுந்;

தண்டைகள் கலின்கலின் கலினெனக்
கிண்கிணி கிணின்கிணின் கிணினெனத்
*தண்கொலு சுடன்சிலம் பசையவுட் பரிவாகிச்-

சந்ததமும் வந்திரும் பரிமளப்
பங்கய பதங்களென் கொடுவினைச்
சஞ்சல மலங்கெடும் படியருட் புரிவாயே;

தொண்டர்கள் சரண்சரண் சரணெனக்
கொம்புகள் குகுங்குகுங் குகுமெனத்
துந்துமி திமிந்திமிந் திமினெனக் குறுமோசை-

சுந்தரி மணஞ்செயுஞ் சவுரியக்
கந்தகுற வஞ்சி தங் கருவனத்
துங்க மலை யும்புரந் தமரருக் கிடர்கூரும்;

பண்டர்கள்பு யங்களும் பொடிபடக்
கண்டவப்ர சண்டகுஞ் சரியெழிற்
பைந்தருவ னம்புரந் தகெழயிற் புடைசூழும்-

*தண்-அருள். "தண்கலந்த சிந்தையோடு" - சேது புரா-சீதை-5. என்புழிப்போல; "தண் கழல்" - திருப்புகழ் 16. "தண்ணமர் திண்கொடி" - அப்பர் IV-4-5.

வாசனைத் தூள்களைப்பூசித் தம்மீது படும்படி-யணைத்து, இன்பகரமான பேச்சுக்களுடன் கூடிய செயல்களால் உண்டாகின்ற காம மயக்கில் படுகின்ற துன்பம் நீங்க, ஒளி வீசுகின்ற (உனது)

[காலில் அணிந்துள்ள] தண்டைகள் கலின் கலின் கலின் என்று ஒலிசெய்ய, கிண்கிணியானது கிணின், கிணின், கிணின் என்று ஒலிசெய்ய, அருளைப்பாலிக்கும் கொலுசும், சிலம்பும் அசைந்தொலிக்கத் திருவுள்ளத்தில் அன்பு கூர்ந்து (நீ)

எப்போதும் [என்முன்] வந்து. பெருமை தங்கிய நறுமணமுள்ள தாமரையன்ன திருவடிகளை - என்னுடைய பொல்லாதவினை, கவலை, மலம் [ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்கள்] இவை யாவும் அழிந்து போம்படி அருள்புரிவாயாக;

அடியார்கள் சரணம் சரணம் சரணம் என்று வணங்கவும், ஊது கொம்புகள் குகும் குகும் குகும் என்று ஒலி செய்யவும், துந்துமி வாத்தியம் [பேரிகை] திமிந் திமிந் திமின் என்று ஒலி செய்யவும், இவ்வாறு [அணுகிக்] குறுகும் ஓசை ஒலிக்க

(சுந்தரி) அழகி தேவசேனையைத் திருமணஞ்செய்த பராக்ரமம் உள்ள கந்தனே! (அல்லது) அழகிய வள்ளியை மணஞ்செய்த திறல் வாய்ந்த கந்தனே! அந்தக் குறக்கொடியாம் வள்ளி தங்கியிருந்த அரிய வனம் (தினைக்காடு) உள்ள பரிசுத்தம் வாய்ந்த வள்ளிமலையையும் காத்துத், தேவர்கட்கு துன்பத்தை மிகவும் விளைத்த

பண்டர்கள் - வண்டர்கள் - (மிண்டர்களாகிய) அசுரர்களுடைய கைகள் அறுபட்டொழிய (கண்டவ) செய்தவனே! ப்ரசண்ட (மிகச் சிறப்புவாய்ந்த) குஞ்சரி (ஐராவதயானையால் வளர்க்கப்பட்ட) தேவசேனை வளர்ந்த அழகிய பசுமைவாய்ந்த கற்பக மரக்காடுகள் உள்ள தேவலோகத்தைப் (புரந்து) காத்தளித்து (அகழ்) அகழியும். (எயில்) மதிலும் பக்கத்தில் சூழ்ந்துள்ள-

*பந்திவரு மந்திசெண் பகமகிற்
சந்துசெறி கொன்றைதுன் றியவனப்
**பந்தணையில்** வந்திடுஞ் சரவணப் பெருமாளே.(5)

## 859. திருவுருவைத் தியானிக்க

தான தந்ததன தான தந்ததன
தான தந்ததன தான தந்ததன
தான தந்ததன தான தந்ததன தந்ததான

தேனி ருந்தஇத ழார்ப ளிங்குநகை
யார்கு ளிர்ந்தமொழி யார்ச ரங்கள்விழி
சீர்சி றந்தமுக வாரி ளம்பிறைய தென்புருவர்-

தேன மர்ந்தகுழ லார்க ளங்கமுகி
னார்பு யங்கழையி னார்த னங்குவடு
சேர்சி வந்தவடி வார்து வண்ட†இடை
புண்டரீகம்;

சூனி யங்கொள்செய லார ரம்பைதொடை
யார்ச ரண்கமல நேரி ளம்பருவ
தோகை சந்தமணி வாரு டன்கலவி யின்பமுடே-

---

* பந்தி வரு மந்தி-குரங்குகள் கூட்டமாய் இனத்துடன் இருத்தல்.

'நெருங்கி இனமாய்...நின்று கருமந்தி விளையாடு காளத்தி மலையே; "குரக்கினம் விரை பொழிலின்மீது கனியுண்டு"-(சம்பந்தர் 3-69-3; 2-34-8).

† இடை சூனியம்:-

இடையில்லை என்றே சொல்லும்படி அவ்வளவு நுண்ணியது.

'இராத இடை' - திருப்புகழ் 201.

'வேதாவானோன் எழுதினான் - இலையோ' - திருப்புகழ் 150.

புண்டரிகம் - அல்குலுக்கு உவமை-

'பெருகிய அல்குல் மணித்தடங் கமலம்'

-தணிகைப் புராணம்-களவு-43.

புண்டரிகம் - ஒரு பாம்பு என்பர். புண்டரீகம் (பாம்பு-அரவு) போன்ற இடை-எனவும் கொள்ளலாம்-'அரவிடை' 'அரவேரிடை' என வருவன காண்க-சம்பந்தர் 3-7-6, 3-3-5.

(பந்தி) கூட்டமாய் (வரிசையாய்) (மந்தி) குரங்குகள் வருகின்ற செண்பகம், அகில், சந்தனம், நெருங்கிய கொன்றை இவை (துன்றியவனம்) பொருந்திய சோலை (சூழ்ந்த) - **திருப்பந்தணை நல்லூர்** என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கும் சரவணப் பெருமாளே!

(வினை...கெடும்படி யருட் புரிவாயே)

# 859.

**தேன்** (தேன் என இனிக்கும் வாயூறல்) உள்ள வாயிதழ்களை யுடையவர், பளிங்கு போன்ற வெண் பற்களையுடையவர், குளிர்ந்த பேச்சையுடையவர், அம்புகள் போன்ற கண்களையும், அழகு சிறந்த (முகவார்) முகத்தையும், உடையவர், (இளம்பிறையது) இளம்பிறை போல்வது (என்) என்று சொல்லத்தக்க (புரூவர்) நெற்றிப்புருவத்தை யுடையவர்-

வண்டுகள் பொருந்திய கூந்தலை உடையவர், (களங் கமுகினார்) கமுகு களத்தினர் - கமுகு போன்ற மெல்லிய கழுத்தினை உடையவர், (புயங்கழையினார்) மூங்கில் - கரும்பு - போன்ற தோளையுடையவர், கொங்கைகள் மலையை நிகர்க்க (சிவந்த வடிவார்) சிவந்த நிறத்தினையுடையவர், துவட்சியுற்ற இடையையும், புண்டரீகம் (தாமரை போன்ற) அல்குலையும் கொண்டவர்,*

(சூனியங்கொள் செயலார்) (சூனியம்) மயக்கும் மந்திரத்தை (மாரண வித்தையைக்) கொண்ட தொழிலினை உடையவர். (அரம்பை) வாழை போன்ற தொடையை-யுடையவர், (சரண்கமல நேர் - கமலநேர் சரண்) தாமரை ஒத்த பாதத்தை உடையவர், இளம் பருவத்தையுடைய (இள) மயில் போன்றவர், சந்தன முதலிய பூசிக் கொள்பவர்- இத்தகையாருடன் செய்யும் சேர்க்கை இன்பத்திலே

---

*இடை-சூனியம்கொள் செயலார். புண்டரீகம் சூனியம்கொள் செயலார்-இடை (சூனியம்) இல்லை என்றே சொலத் தக்கவர்; அல்குலை விற்கும் தொழில் சம்பந்தமாகச் சூனியம் வைப்பவர். - எனவும் பொருள் தொனிக்கும்.

சோக முண்டுவிளை யாடி னுங்*கமல
பாத மும்புயமி ராறு மிந்துளபல்
தோட லங்கலணி மார்ப மும்பரிவு
ளங்கொள்வேனே;

ஓந மந்தசிவ ரூபி யஞ்சுமுக
நீலி கண்டிகலி யாணி விந்துவொளி
யோகை தங்குமபி ராமி யம்பிகைப யந்தவேளே-

ஓல மொன்றவுணர்†சேனை மங்கையர்கள்
சேறு டன்குருதி யோட எண்டிசையும்
ஓது கெந்தருவர் பாட நின்றுநட
னங்கொள்வேலா;

ஏனல் மங்கைசுசி ஞான ரம்பையென
தாயி சந்த்ரமுக பாவை வஞ்சிகுற
மானொ டும்பர்தரு மான ணைந்தழகி
லங்குமார்பா-

ஏர்க ரந்தையறு‡கோடு கொன்றைமதி
யாற ணிந்தசடை யார்வி ளங்குமெழில்
ஈறில் பந்தணைந லூரம ர்ந்துவளர்
தம்பிரானே. (6)

## 860. சந்தத் தமிழ்பாட

தனனந் தத்தன தனந்த தானன
தனனந் தத்தன தனந்த தானன
தனனந் தத்தன தனந்த தானன தனதான

மதியஞ் சத்திரு நிறைந்த மாமுக
மயிலஞ் சக்கிளி யினங்க ளாமென
மதுரஞ் செப்பிய மடந்தை மேனகை ரதிபோல-

---

* 'கண்டுண்ட சொல்லியர்' என்னும் கந்தரலங்காரச் செய்யுளின் (37) கருத்து இது.

† சேனை - கூட்டம் - 'குரிசிலை விடாத சேனையே'
-கம்பராமாய-தைல-8

‡ சிவபிரான் ஓடு அணிந்துள்ளது:
'ஓடு முடிக்கிலர் போலும்' - 2-65-10.

சோர்வு கொண்டு (நான்) பொழுது போக்கினும், (உன்னுடைய) தாமரையன்ன திருவடிகளையும், தோள்கள் பன்னிரண்டையும், (இந்துளம்) கடம்பு முதலிய பல மலர்களாலாய மாலை அணிந்த திருமார்பையும் (பரிவு உளம்) அன்பு நிறைந்த (எனது) மனதில் (கொள்வேன்) (நான்) தியானிப்பேன் (அன்புடன் நான் தியானிப்பேன்).

ஓம் நம (சிவாய) என்னும் அந்த சிவத்துடன் கலந்த உருவத்தினள், அஞ்சு திருமுகங்களைக் கொண்ட நீலி, கண்டி கலியாணி-ரத்னமாலை அணிந்துள்ள கலியாணி, (விந்து)-சிவஞான சக்தி, ஒளி ஓசை இவைக்கு ஆதாரமாம் அபிராமி, அம்பிகை ஆன உமை பெற்ற (செவ்) வேளே!

அபயக்குறிப்புடன் எழுந்த சத்தம் இட்ட அசுரர்களின் கூட்டமும் அவர்களின் மங்கையர்களும் (இறந்துபட) அவர்தம் உடற்சேறுடன் (மாமிசச் சேறுடன்) ரத்தம் புரண்டு ஓட, எட்டுத் திசையிலும் இருந்து புகழும் கந்தருவர்கள் பாட, நடனம் கொண்ட வேலனே!

தினைப்புனத்து மங்கை, பரிசுத்தமான ஞானமய ரம்பை, எனது தாய், சந்திரன் போன்ற திருமுகம் கொண்ட பாவை, வஞ்சிக்கொடி போல்வாள், ஆகிய குறமான்-வள்ளியையும், தேவர் வளர்த்த மான் தேவசேனையையும் அணைந்து அழகு விளங்கும் திருமார்பனே!

அழகிய (கரந்தை) திருநீற்றுப் பச்சை, அறுகு, தலையோடு, கொன்றை, நிலா, கங்கையாறு இவைகளை அணிந்த சடையை உடையவர் எழுந்தருளியுள்ளதும். அழகுள்ளதும், அழிவிலாததுமான **திருப்பந்தணைநல்லூர்** என்னும் தலத்தில் வீற்றிருந்து விளங்கும் தம்பிரானே!

(கமலபாதமும்...மார்பமும்...உளங்கொள்வேனே)

## 860.

**ச**ந்திரனும் அஞ்சி நாணும் படியான பொலிவு நிறைந்த அழகிய முகத்துடன், மயிலும் (இவர்களின் சாயலின்முன் நமதுசாயல் எந்தமூலை) என பயப்படக், கிளியின் கூட்டங்கள் போல விளங்கி, இனிமை தரும்படியான மொழிகளைப் பேசும் மேனகை, ரதி எனப்படும் தேவலோகத்து அரம்பை போல விளங்கி,

மருவும் பொற்குட மெழுந்த மாமுலை
வளர்வஞ் சிக்கொடி நடந்த வாறென
வருதுங் கக்கட லணங்கு போல்பவர் தெருவூடே;
நிதமிந் தப்படி யிருந்து வாறவர்
பொருள் தங்கப்*பணி கலந்து போய்வர
நெறிதந் திட்டவர் வசங் களாமென வுழலாதே-
† நிதிபொங் கப்பல தவங்க ளாலுனை
மொழியும் புத்திகள் தெரிந்து நானுனை
‡ நிகர்சந் தத்தமிழ் சொரிந்து **பாடவு** மருள்தாராய்;
நதிமிஞ் சச்சடை விரிந்த நாயக
னுமையன் பிற்செயு மிகுந்த பூசனை
நலமென் றுட்குளிர் சிவன்ப ராபர னருள்பாலா-
X நவகங் கைக்கிணை பகர்ந்த மாமணி
நதிபங் கிற்குலவு** **கந்து காபுரி**
நகர்பொங் கித்தழைய வந்து வாழ்வுறு முருகோனே;
கெதிதங் கத்தகு கணங்கள் வானவர்
††அரிகஞ் சத்தவர் முகுந்தர் நாவலர்
கிளைபொங்கக் க்ருபை புரிந்து வாழ்கென அருள்நாதா-

---

* பணி-பண்ணி.

† இந்த நாலாவது அடி அருமையான வேண்டுகோளைக் கொண்டுள்ளது. மனப்பாடம் செய்யவேண்டியது.

‡ இது அருணகிரியாரின் வரலாற்றுக் குறிப்புக்கு உதவுவது. இந்த வேண்டுகோள் அவருக்கு வயலூரிற் சித்தித்தது.

'திருப்புகழ் நித்தம் பாடும் அன்பது செய்ப்பதியில்
தந்தவன் நீயே' - (திருப்புகழ் 105)

-அருணகிரிநாதர் வரலாறு - பக்கம் 70.

X **நவகங்கைக் கிணையானது மண்ணி நதி-**

ஒன்பது கங்கை நதி கூடினால் ஒத்த பெருமையது மண்ணி நதி-என்றும் பொருள்படும். மண்ணியாறு முருகவேளால் வரவழைக்கப்பட்டு 'சுப்பிரமணிய நதி' என்றும் பெயர் கொண்டிருந்தது.

'மொழிதரு குடிஞை யாய பலவுளும் முருகப் புத்தேள்
பொழிதரு கருணை யாலே யழைத்திடப் போந்த மண்ணி
வழிதரு வெள்ள மேன்மை வகுப்பவர் யாவர் அன்னோன்
செழிதரு முருவுஞ் சீரும் எனச்சிறந் தோங்கு நாளும்'

-(மண்ணிப் படிக்கரைப் புரா-நாட்டுப் 11.)

[தொடர்ச்சி 519 ஆம் பக்கம்]

பொருந்தியுள்ள தங்கக்குடம் போல எழுந்துள்ள அழகிய கொங்கைகளுடன், விளங்கும் வஞ்சிக்கொடி நடந்து உலவுவது போல நடந்து, (துங்கக் கடல்வரு அணங்கு போல்பவர்) உயர்ந்த கடலில் தோன்றி எழுந்த தேவி இலக்குமி போன்ற அழகினர், தெருக்களிலே

தினந்தோறும் இந்த மாதிரி இருந்து (தம்மிடம்) (வாறவர்) வருபவர்களுடைய பொருள்களையும் தம்மிடமே தங்கும்படியாகப் பண்ணி, அவர்களுடன் கலந்து, போகவும் வரவும் வழி கொடுப்பவர்களின் வசப்பட்டவன் என்று சொல்லும்படியாக நான் திரியாமல்-

செல்வம் (பொருட்டிரள்) பொங்கவும், பல தவப்பேற்றின் பயனால் உன்னைப் புகழும்படியான அறிவு புலப்பட்டு நான் உன்னை ஒளிவீசும் சந்தத் தமிழ்ப்பாக்களை நிரம்பப் பொழிந்து பாடவும் உன்னுடைய திருவருளைத் தந்தருளுக;

கங்கை பொங்கியெழும் சடைவிரிந்த தேவர், உமை அன்போடு செய்த சிறந்த பூஜையை 'நன்று இது' எனக் கொண்டு உள்ளங் குளிர்ந்த சிவன், பராபரமூர்த்தி அருளிய குழந்தையே!

புதுமை நிறைந்த கங்கை நதிக்கு ஒப்பாகும் என்று சொல்லப்பட்டுள்ள **மண்ணி** யாற்றின் பக்கத்தே விளங்குகின்ற (கந்துகாபுரி) **பந்தணைநல்லூர்** என்னும் திருப்பதியானது செல்வங்களெல்லாம் மேம்பட்டு விளக்கமுறும் வண்ணம் (அத்தலத்துக்கு) வந்து வாழ்வு கொள்ளும் முருகனே!

நற்கதி நிலை தம்மிடம் தங்குவதற்கு வேண்டிய பெருமை பொருந்திய பதினெண் கணங்கள். (வானவர்) தேவர், (அரி) இந்திரன், (கஞ்சத்தவர்) பிரமன், (முகுந்தர்) திருமால், நாவலர் (புலவர்கள்)-இவர்தம் (கிளை) கூட்டம் சிறப்புற்று விளங்க, அருள்பாலித்து, வாழுங்கள் என்று அருளிய நாதனே!

---

O மணிநதி-மண்ணியாறு

** கந்துகாபுரி - பந்தணை நல்லூர்; கந்துகம்-பந்து.

†† அரி-இந்திரன்.

கெருவம் பற்றிகல் விளைந்த சூரொடு
தளமஞ் சப்பொரு தெழுந்து *தீயுகள்
கிரவுஞ் சக்கிரி வகிர்ந்த வேலுள
பெருமாளே. (7)

## திருப்பனந்தாள்.

(கும்பகோணத்துக்கு வடகிழக்கு 10-மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

### 861. நற்பொருள் பெற

தந்தா தத்தன தந்தா தத்தன
தந்தா தத்தன தனதான

கொந்தார் மைக்குழ லிந்தார் சர்க்கரை
யென்றே செப்பிய மொழிமாதர்-

கொங்கார் முத்துவ டந்தா னிட்டத
னந்தா னித்தரை மலைபோலே;

வந்தே சுற்றிவ ளைந்தா லற்பம
னந்தா னிப்படி யுழலாமல்-

† மங்கா நற்பொரு ‡ ளிந்தா X அற்புதம்
என்றே ○யிப்படி அருள்வாயே;

---

* தீயுகள் கிரவுஞ்சம் - கிரவுஞ்சன் என்னும் அவுணன் மாயையால் மலை உரு எடுத்துப் பல மாயைகள் புரிந்தனன். அகத்திய முநிவரை அவ்வாறு தன் மாயையால் மயக்க, அவர் கோபித்து'ஏ! வெய்யோய் நீ மலையாகவே கிடந்து முருகவேளின் வேலால் இறந்துபோகக் கடவை' எனச் சபித்தார்.

"அடலெரி கனைந்துசூழ...மாயை சூழ்ந்தான்"

-கந்தபுரா 2-24-8.

† மங்கா நற்பொருள் :

'அந்தமில் பொருள்' - சம்பந்தர் 3-114-11.

'பன்னு நன்பொருள்' 2-102-1.

'ஆயுநன் பொருள்... நுண் பொருள் ஆதியே' 3-114-1.

(தொடர்ச்சி 521 ஆம் பக்கம்.)

கருவம்கொண்டு பகைமை பூண்ட சூரனுடன் அவனுடைய சேனையும் பயப்படும்படி சண்டைசெய்து, கிளம்பித் தீ தாவி எழும் கிரவுஞ்ச மலையைப் பிளவுபடுத்தின வேலாயுதத்தைக் கொண்ட பெருமாளே!

*(சந்தத்தமிழ் சொரிந்து பாடவும் அருள் தாராய்)*

## திருப்பனந்தாள்.

## 861.

பூங்கொத்துக்கள் நிறைந்த கரிய கூந்தலையும். (இந்தார்) சந்திரன் போன்ற முகத்தையும் (அல்லது சந்திரனைக் கண்டதுபோலக் கண்களைக் குளிரச்செய்யும் வனப்பையும்) கொண்டவர்கள், சர்க்கரை என்றே சொல்லப்பட்ட மொழிகளை உடையவர்கள் ஆகிய மாதர்களின்-

வாசனை கொண்டதும், அந்த முத்துமாலை பூண்டுள்ள அந்த (தனம்) கொங்கையானது இப் பூமியில் உள்ள மலைபோல-

எதிர்வந்து தோன்றிச் சுற்றி(என் மனத்தை) வளைந்தால் - மனத்தைச் சூழ்ந்து கவர்ந்து பற்றினால், அதனால் இந்த ஏழை மனமானது (இழிவானவற்றையே நாடும் இம் மனமானது) (மோக மயக்கம் அடைந்து) இப்படியே (அலைந்தலைந்து அலைச்சலுறும்; இங்ஙனம்) அலைச்சல் உறாமல்-

மங்குதல்-அழிதல் இல்லாத சிறந்ததொரு உபதேசப் பொருள் 'இதோ இருக்கின்றது பெற்றுக்கொள்; இது ஒரு அற்புதப்பொருள்' என்று நீ கூறி இவ் வண்ணம் - இப்போதே-அருள் புரிவாயாக.

---

[பக்கம் 520 தொடர்ச்சி.]

‡ **இந்தா**- ஒரு அருமைப் பிரயோகம்; 330-ஆம் பாடலிற் போல 'இதோ பெற்றுக்கொள்' என்னும் பொருளில் வந்துளது.

'இந்தா இஃதோர் இளங்குழவி யென்றெடுத்து....தேவிகையில் ஈந்தனனே' - கந்தபுரா 6-24-35.

X **நற்பொருள் இந்தா அற்புதம்:**

'வள்ளிகோன் அன்று எனக் குபதேசித்த தொன்றுண்டு கூறவற்றோ' - (கந்தரலங்-9) என்னும் அற்புதத்தது.

O இப்படி-பாடல் 33-பக்கம் 97 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

இந்தோ டக்*கதிர் கண்டோ டக்கட
மண்டா நற்றவர் குடியோட-
எங்கே யக்கிரி யெங்கே யிக்கிரி
யென்றே திக்கென வருசூரைப்;

பந்தா டித்தலை விண்டோ டக்களம்
வந்தோ ரைச்சில ரணகாளிப்-
பங்கா கத்தரு கந்தா மிக்கப
ணந்தா ரூற்றருள் பெருமாளே.(1)

## திருவிடைமருதூர்.

(ரெயில்வே ஸ்டேஷன். கும்பகோணத்துக்கு வடகிழக்கு 5-மைல். மூவர் தேவாரமும் பெற்ற ஸ்தலம். ஸ்தலபுராணம் உண்டு.)

### 862. வினை - மலம் அற

தனதனன தனதனன தனதனன தனதனன
தான தானனா தான தானனா
* * * தனதன தனதான

†அறுகுநுனி பனியனைய சிறியதுளி பெரியதொரு
ஆக மாகியோர் பால ரூபமாய்
அருமதலை குதலைமொழி தனிலுருகி யவருடைய
ஆயி தாதையார் மாய மோகமாய்

அருமையினி லருமையிட மொளுமொளென வுடல்வளர
ஆளு மேளமாய் வால ரூபமாய் அவரொரு
பெரியோராய்-

* சூரனது திக்குவிசயத்தின்போது - சூரன் வருதலைக் கண்டு - 'கரந்து வைகினன் ஆழியந் தேருடைக் கதிரோன்'

-கந்தபுரா 2-12-28.

† பனியனையதுளி-திருப்புகழ் 241-பக்கம் 98; பாடல் 565 பக்கம் 288 கீழ்க்குறிப்பு. இத்தகைய வர்ணனையைப் பட்டினத்தார் அருளிய 'உடற் கூற்று வண்ணத்திற்' காண்க,- திருப்புகழ் பாடல் 162-ம் பார்க்க.

சந்திரன் பயந்து ஓடவும், சூரியன் அதைக் கண்டு தானும் ஓடவும், (கடம் மண்டா) காட்டிலும் (மண்டி) நெருங்கிச்சென்று (அங்குள்ள) நல்ல தவசிகளும் குடும்பத்துடன் ஓடவும்

எங்கே அந்த மலையில் (ஒளித்திருப்பவர்கள்), எங்கே இந்த மலையில் (ஒளித்திருப்பவர்கள்) என்று கூறியே (திக்கென) அங்கங்கே உள்ளவர்களின் உள்ளம் திக் எனும்படி- திடுக்கிடும்படியாக வந்த சூரனைப்-

பந்தடிப்பது போல அடித்து வெருட்டியும், தலையற்றுப் போய்ச்சிதறி விழவும், போர்க்களத்தில் வந்தவர்களை (வந்த அசுரர்களை)ச் சில ரண தேவதைகளுக்கு - (ரண காளி முதலிய சில ரண தேவதைகளுக்குப்)

பங்கிட்டுத் தந்த கந்தனே! (சிறப்பு) மிக்க (திருப்) **பனந்தாளில்** வீற்றிருந்தருளும் பெருமாளே!

(பொருள் இந்தா...என்றே...அருள்வாயே)

## திருவிடைமருதூர்
## 862.

**அ**றுகம் புல்லின் நுனியில் உள்ள பனிபோலச் சிறிய துளி (ஒன்று) பெரியதான ஒரு உடலை அடைந்ததாகி, ஒரு குழந்தை உருவம் கொண்டு வெளிவர, அந்த அருமைக் குழந்தையின் மழலை மொழிகளிற் கனிவுகொண்டு மனம் உருகி (அவருடைய) அக் குழந்தையுடைய தாயும் தந்தையும் அதன்மீது(மாய மோகமாய்)ப் பிரபஞ்ச மாயையின் வசப்பட்டு ஆசை பூண்டவராய்,-(அருமையினில் அருமையிட) அருமையிலும் அருமையாய் - வெகு வெகு அருமையாக (அன்பு காட்டி வளர்க்க), மொளு மொளு என்று உடலும் வளர, (ஆளாகி) ஆளும் (மேளமாய்)-கவலையற்ற இன்ப வாழ்க்கையராய், இளம்பருவ உருவத்தை அடைந்து, அவர் ஒரு பெரியவராகி-

அழகுபெறு நடையடைய கிறுதுபடு மொழிபழகி
ஆவி யாயவோர் தேவி மாருமாய்
*விழுசுவரை யரிவையர்கள் படுகுழியை நிலைமையென
வீடு வாசலாய் மாட கூடமாய்

† அணுவளவு தவிடுமிக பிதிரவிட மனமிறுகி
ஆசை யாளராய்‡ஊசி வாசியாய் அவியுறு
சுடர்போலே;
வெறுமிடிய னொருதவசி யமுதுபடை யெனுமளவில்
மேலை வீடுகேள் கீழை வீடுகேள்

திடுதிடென நுழைவதன்முன் எதிர்முடுகி யவர்களொடு
சீறி ஞாளிபோல் ஏறி வீழ்வதாய்
விரகினொடு வருபொருள்கள் சுவறியிட மொழியுமொரு
வீணியார்சொலே மேல தாயிடா விதிதனை
நினையாதே-

மினுகுமினு கெனுமுடல மறமுறுகி நெகிழ்வுறவும்
வீணர் சேவையே பூணு பாவியாய்
மறுமையுள தெனுமவரை விடும்விழலை யதனின்வரு
வார்கள் போகுவார் காணு மோஎனா

விடுதுறவு பெரியவரை மறையவரை வெடுவெடென
மேள மேசொலா யாளி வாயராய் மிடையுற
வருநாளில்;

---

* 'ஊனுலா முடைகொள் ஆக்கை உடைகல மாவ தென்றும் மானுலா மழைக்க ணார்தம் வாழ்க்கையை மெய்யென்றெண்ணி' அப்பர் 4-67-6.

† தவிடும் இக - இகுதல் - தாழே விழுதல்

'மாரியின் இகுதரு...கடுங்கணை' மலைபடு 226.

'தவிடினாற் பிளவு எனினும் ஏற்பவர் தாழாதீயேன்' திருப்புகழ் 1062, 'சிறுமிக் குமரநிகர் வீர்பகிர' - கந்தரந்தாதி 97.

'அணு அளவு தவிடுமிகள்' என்றும் பாடம் (தவிடு-உமிகள்).

‡ ஊசிவாசியாய்-ஊசி எவ்வாறு தனக்குள் அமைய நூல் ஒன்றையே விடுகின்றதோ அவ்வாறு தனக்கு வேண்டியவர்களுக்கு மாத்திரம் இடம் தருங் குணத்தனாய்-(பிறருக்கு உபகாரம் செய்யாதவனாய்):

அழகு விளங்கும் நடையைக் கொண்டவராய், ஒய்யாரத்தைக் காட்டும் பேச்சுக்களிற் பழகினவராய், உயிர்போல அருமைவாய்ந்த மனைவிமாருடன், விழப் போகின்ற சுவரை மாதர்கள் என்னும் பெருங்குழியை - என்றும் நிலைத்திருக்கும் சுகம் என எண்ணி, வீடும் வாசலும் மாடமும் கூடமும் கட்டி யனுபவித்து, அணு அளவு தவிடும் (இக) - தாழேவிழ - தாழேவிழுந்து சிதறக் கூடாதென மனம் அழுத்தம் அடைந்து. ஆசைக்கு ஆளாகி, ஊசியின் தன்மைபூண்டவராய் அவிந்து போவதற்கு முன் ஒளிவிட்டு எரியும் சுடர் (தீபம்) போல-(பின்வரும்கேடு தெரியாது மகிழ்ந்திருந்து)

சுத்த தரித்திரன் ஒருவனோ, ஒரு தவபுருஷனோ அமுது படையுங்கள் என்று கேட்ட உடனே 'மேலை வீட்டுக்குப் போய்க் கேள்', 'கீழை வீட்டுக்குப் போய்க் கேள்' எனச் சொல்லிக்கொண்டு திடுதிடென்று நடந்து போய்ப், பிச்சை கேட்ட அவர் (வீட்டுக்குள்) நுழைவதற்கு முன்பாகவே எதிரே வேகமாகச் சென்று, அவர்கள் மேல்-மிகக் கோபித்து நாய்போல மேலே பாய்ந்து விழுந்து, தமது சாமர்த்தியத்தால் சேர்த்த பொருள்கள் வற்றிப்போவதற்கான பேச்சுக்களைப் பேசும் ஒரு வீணர்களின் பேச்சே நல்லதென மேற்கொள்ளப்பட்டதாகி, வரப்போகும் விதியின் போக்கை (சற்றும்) யோசிக்காமலே-

மினுகு மினுகு என்று செழிப்புற்றிருந்த தேகம் முற்றும் வளைவுற்று நெகிழ்ச்சி அடைந்து, வீண் பொழுது போக்குபவர்களின் தரிசனத்தையே மேற்கொண்ட பாவியாகி, மறுபிறப்பு உண்டே-அம் மறுபிறப்பில் துன்பம் நேரும் - என அறவுரை கூறுபவரை - விடும்-உமது பேச்சை நிறுத்தும் - விழலை யதனின் வருவார்கள் - போகுவார் - கோரைப்புல் போலத் தோன்றி மறைபவர்கள்-(மறுமை என்ற ஒன்றை) காண்பார்களா என்ன! என்று எதிர்த்துப் பேசியும், பாசங்களை விட்ட துறவிகளாயுள்ள பெரியவர்களையும், வேதியர்களையும் வெடு வெடு என்று கடுமையாகப் பேசி, (மேளமே சொலாய்) தவில் வாத்தியம் போலப் பேரொலியுடன் இரைந்து பேசி, யாளி போலத் திறந்த வாயினனாய், (மாதர்களுடன்) புணர்ச்சி பொருந்திக் காலங் கழித்து வருநாளில்-

வறுமைகளு முடுகிவர வுறுபொருளு நழுவசில
வாத மூதுகா மாலை சோகைநோய்
பெருவயிறு வயிறுவலி* படுவன்வர இருவிழிகள்
பீளை சாறிடா ஈளை மேலிடா
வழவழென உமிழுமது கொழகொழென ஒழுகிவிழு
வாடி யூனெலாம் நாடி பேதமாய் மனையவள்
மனம்வேறாய்-
† மறுகமனை யுறுமவர்கள் நணுகுநணு கெனுமளவில்
‡ மாதர் சீயெனா வாலர் சீயெனா
கனவுதனி லிரதமொடு குதிரைவர நெடியசுடு
காடு வாவெனா வீடு போவெனா
வலதழிய விரகழிய வுரைகுழறி விழிசொருகி
வாயு மேலிடா ஆவி போகுநாள் மனிதர்கள்
பலபேச;
X இறுதியதொ டறுதியென உறவின்முறை கதறியழ
ஏழை மாதராள் மோதி மேல்விழா
எனதுடைமை யெனதடிமை யெனுமறிவு சிறிதுமற
ஈமொ லேலெனா வாயை ஆவெனா
இடுகுபறை சிறுபறைகள் திமிலையொடு தவிலறைய
ஈம தேசமே பேய்கள் சூழ்வதாய்
ஒரிதனி லிடும்வாழ்வே-

---

* 'தொழு நொய்வர' என்றும் பாடம்
'கனைகொள் இருமல் சூலைநோய் கம்பதாளி குன்மமும்
இனைய பலவும் மூப்பினோ டெய்திவந்து நலியாமுன்'
-சம்பந்தர் (2-100-4)

† "வனமனையில் மனைவியர்கள்" - என்றும் பாடம்.

‡ "ஏலவார் குழலினார் இகழ்ந்துரைப்பதன் முனம்"
-சம்பந்தர் 2-97-9.

X "இறுதிதனை அறுதியென" - என்றும் பாடம்.

O "மானிட வாழ்வென வாழ்வென நொந்து
விறகிட மூடி யழல்கொடு போட
வெந்து விழுந்து முறிந்து நிணங்கள்
உருகி எலும்பு கருகி யடங்கி
யோர்பிடி நீறு மிலாத உடம்பை
நம்பு மடியேனை யினி யாளுமே"
-பட்டினத்தார்-உடற்கூற்று வண்ணம்

வறுமைகள்(தரித்திர திசை)நெருங்கிவர, கையில் உள்ள பொருள்கள் விலகி ஒழிய, சிலவகையான (வாதநோய்) வாயு சம்பந்தமான நோய்கள், ஊது காமாலை (உடல் வீக்கம் தரும் காமாலை), (சோகை நோய்) - ரத்த மின்மையால் முகம்வெளுத்து ஊதுமாறு செய்யும் நோய், (பெருவயிறு) மகோதர நோய், வயிற்றுவலி, (படுவன்)-ஒருவகைப் புண்கட்டி - இவையெலாம்வர, இரண்டு கண்களிலும் பீளை ஒழுக்குஉற, (ஈளை) கோழை மேலிட்டு எழ, வழவழ என்று உமிழ்கின்ற (கோழை) கொழ கொழ என்று ஒழுகிவிழ (ஊனெலாம் வாடி)-தேகத்தில் உள்ள சதையெல்லாம் வற்றிப்போய், நாடியும் பேதப்பட்டு வேறாகி, மனையவள் மனம் வேறாய்-மனையாளும் (இனி எப்படி இவர் பிழைப்பது என) மன உறுதி வேறுபட்டு (தைரியத்தை இழந்து)-

(மறுக) கலக்கம்உற, வீட்டில் உள்ளவர்களும் (நணுகும் நணுகும்) சமீபித்துப்போய்ப் பாருங்கள், சமீபித்துப் போய்ப் பாருங்கள் என்று சொல்லும்போது, (மாதர்) பெண்கள் சீ என வெறுக்க, (வாலர்) குழந்தைகள் சீ என வெறுக்க, கனவிலே தேர்வருவது போலவும், குதிரை வருவது போலவும் காட்சிகள் ஏற்பட, பெரிய சுடுகாடு வா வா என்று கூப்பிட, (வாழ்ந்திருக்கும்) வீடு போ போ என்று வெருட்டி அனுப்ப, (வலது) சாமர்த்தியம் எல்லாம் அழிந்து ஒடுங்க, (விரகு அழிய) உற்சாகம் எல்லாம் அழிந்து ஒடுங்க, பேச்சு குழறிப் போக, கண்கள் சொருகிப்போக, (வாயு மேலிடா) மேல் மூச்சு எழ, உயிர் (உடலைவிட்டுக்) கழியும்நாளில், மனிதர்கள் பல பேச்சுக்கள் பேச-

இவர் முடிவோடு நமது எல்லா வளமும் அற்றதென்று சுற்றத்தார்கள் கதறியழ, அறியாமை கொண்ட மாதர்கள் (தலையில்) அடித்துக்கொண்டு மேலே விழ, என்னுடைய பொருள், என்னுடைய அடிமை ஆள்கள் என்கின்ற அறிவு சிறிதளவும் இல்லாது ஒழிய, ஈக்கள் மொலேல் என்று மொய்க்க, வாயை ஆ என்று திறந்து (உயிர் கழிந்ததும்), ஒடுங்கின ஒலி செயும் பறை, சிறு பறைகள், (திமிலை) பறைவகை, (தவில்) மேளவகை - இவைகள் ஒலிக்கச் சுடுகாட்டுப் பிரதேசத்துக்கே (சேர்க்கப்பட்டு)ப் பேய்களாற் சூழப்பட்டு எரியில் இடப்படும் வாழ்வே இது; இத்தகைய வாழ்க்கையை-

இணையடிகள் பரவுமுன தடியவர்கள் பெறுவதுவும்
ஏசி டார்களோ பாச நாசனே
இருவினைமு மலமுமற* இறவியொடு பிறவியற
ஏக போகமாய் நீயு நானுமாய்

இறுகும்வகை † பரமசுக மதனையரு ளிடைமருதில்
‡ ஏக நாயகா லோக நாயகா இமையவர்
பெருமாளே.(1)

## 863. வழிபட

தனன தனதனன தான தானதன
தனன தனதனன தான தானதன
தனன தனதனன தான தானதன தந்ததான

இலகு குழைகிழிய வூடு போயுலவி
யடர வருமதன னூல ளாவியெதி
ரிளைஞ ருயிர்கவர ஆசை நேர்வலைபொ
திந்தநீலம்-

இனிமை கரைபுரள வாகு லாவுசரி
நெறிவு கலகலென வாசம் வீசுகுழ
லிருளின் முகநிலவு கூர மாணுடைய
கன்றுபோக;

மலையு மிதழ்பருகி வேடை தீரவுட
லிறுக இறுகியநு ராக போகமிக
வளரு மிளகுதன பார மீதினில்மு யங்குவேனை-

---

* இறப்பு - பிறப்பை - இறவி பிறவி - என்றது அருமைப் பிரயோகம்
'பிறவி யிறவி யிலாதார் போலும்' - அப்பர் 6-28-9.
'பெருந்தகை பிறவி னொ டிறவு மானான்' - சம்பந்தர் 1-110-1.

† "பரமசுக மதனையரு ளியசுருதி" என்றும் பாடம்.

‡ இடைமருதீசர் - 'ஏகநாயகர்' - எனப்படுவார்.
'தேறுபுகழ் இடைமருதில் உறையேக நாயகன்
செய்ய தாளும்" - மருதவன புராணம்.

உனது இரண்டு திருவடிகளைப் போற்றி செய்யும் உன்னுடைய அடியவர்கள் பெறுவதென்றால் அங்ஙனம் அவர்கள் பெறுவதை (உலகத்தவர்) இகழமாட்டார்களா-ஏ! பாச நாசம் செய்யும் பெருமானே! ஆதலால் - (நல்வினை தீவினை என்னும்) இருவினையும். ஆணவம், கன்மம், மாயை - (எனப்படும்) மும்மலங்களும் நீங்கவும், இறப்பொடு பிறப்பு என்பது ஒழியவும், ஒரே இன்பநிலையில். நீயும் நானும் ஒன்றுபட்டு அழுந்திக் கலக்கும் வகை வருமாறு பேரின்ப நிலையதனை அருள்புரிவாயாக! **திருவிடைமருதூரில்** வீற்றிருக்கும் தனிநாயகனே! லோக நாயகனே! தேவர்கள் பெருமாளே!

(பரமசுகம் அதனை அருள்)

# 863.

**வி**ளங்குகின்ற (குழை) காதணி தாக்குண்ணும்படி அதனிடையே போய் உலவி நெருங்கி வந்தும்,காம சாத்திரத்தை ஆய்ந்தாய்ந்து தன் எதிரே வரும் இளைஞர்களின் உயிரைக் கவர்வதற்கு ஆசை கூடிய வலையாக அமைந்தும் உள்ள நீலோற்பலம் போன்ற கண்கள்-

இனிமை என்பது (கரைபுரண்டு) மிக்கெழுந்து ஒழுக, தோளில் (கையில்) விளங்கும் (சரி) வளைவகை ஒன்றோடொன்று நெரிப்புண்டு கலகல என்று ஒலிக்க, நறுமணம் கமழும் கூந்தல் என்னும் இருளில் முகம் என்னும் நிலாவொளி மிக்கு எழுந்து விளங்க, சிறந்த ஆடை விலகிப் போக-

எதிர்ப்பட்டு பொருதற்குரிய - எதிர்த்து மோதும் - வாயிதழ் ஊறலை உண்டு, காமதாகம் அடங்கவேண்டி, உடலை அழுந்தக் கட்டி அணைத்து, காமப்பற்றால் ஏற்படும் (போகம்) இன்பசுகம் நன்றாக வளர்ந்தும், நெகிழ்ச்சியுறும் கொங்கைப் பாரங்களின் மேலே தழுவிப் புணரும் எனக்கு-

*மதுர கவியடைவு பாடி வீடறிவு
முதிர அரியதமி ழோசை யாகவொளி
வசன முடையவழி பாடு சேருமருள் தந்திடாதோ;

கலக அசுரர்கிளை மாள மேருகிரி
தவிடு படவுதிர வோல வாரியலை
கதற வரியரவம் வாய்வி டாபசித ணிந்தபோகக்-

கலப மயிலின்மிசை யேறி வேதநெறி
பரவு மமரர்குடி யேற நாளும்விளை
கடிய கொடியவினை வீழ வேலைவிட
வந்தவாழ்வே;

† அலகை யுடனடம தாடு‡ தாதைசெவி
நிறைய மவுனவுரை யாடு நீபஎழில்
அடவி தனிலுறையும் வேடர் பேதையம
ணந்தகோவே-

Xஅமணர் கழுவில்விளை யாட வாதுபடை
கருது குமரகுரு நாத ○நீதியுள
தருளு மிடைமருதில் மேவு மாமுனிவர்
தம்பிரானே. (2)

---

* இவ் வேண்டுகோள் வயலூரிற் சித்தித்தது.

"அன்ப! நீ பந்தணை நல்லூரில் "சந்தத்தமிழ் சொரிந்து பாடவும் அருள்தாராய்" (860) என்றும், திருவிடை மருதூரில் "மதுரகவி யடைவு பாடி...வழிபாடு சேரும் அருள் தந்திடாதோ" (863) என்றும், கும்பகோணத்தில் 'சித்ரத் தமிழாலுன் செம்பொனார்வத்தைப் பெறுவேனோ' (870) என்றும், சப்தஸ்தானத் திருப்புகழில் "திருப்புகழ் தணிய ஓசையில் ஓத எனக்கருள் புரிவாயே" (890)என்றும் வேண்டிய வண்ணமே, மதுரமும் சித்ரமும் செறிந்த சந்தத் திருப்புகழ்ப் பாக்களைப்.......பாடும் வரத்தை அருளினோம்; இனி நீ நித்தம் அத்தகைய திருப்புகழ்ப் பாக்களைப் பாடவேண்டும்..." எனக் கட்டளையிட்டு மறைந்தார். - அருணகிரிநாதர் வரலாறு - பக்கம் 70.

† சிவபிரான் பேய்களுடன் ஆடுதல்:

'பேய்க்கணஞ்சூழ ...ஆடுமெம் அடிகள்' - சம்பந்தர் 1-77-3.

‡ தந்தைக்கு உபதேசித்தது: -பாடல் 628-பக்கம் 462 கீழ்க்குறிப்பு.

X சமணரைக் கழு ஏற்றியது: -பாடல் 181-பக்கம் 422 கீழ்க்குறிப்பு.

(தொடர்ச்சி 531 ஆம் பக்கம்)

இனிமை நிரம்பிய பாடல்கள் எல்லாவகையினவும் பாடி, வீட்டின்ப ஞானம் நிரம்ப உண்டாக, அருமையான (செந்) தமிழ் ஓசை பிறக்க, ஒளி வசனம் - அறிவு மொழிகள் பொலிகின்ற வழிபாட்டு நெறியிற் சேரும்படியான பாக்கியத்தை உனது திருவருள் பாலிக்காதோ!

(கலகம்) போர் செய்யும் அசுரர்களின் கூட்டம் அழிய, மேருமலை தவிடு பொடியாக, ரத்தவெள்ளமாம் ஓலமிடும் கடல்-சத்தமிடும் கடலின் அலைகள் பேரொலியிட, கோடுகள் பொருந்திய பாம்பை வாயினின்றும் விடாது தன் - பசி அடங்கின இன்பம் கொண்ட

தோகை மயில்மேல் ஏறி, வேத சன்மார்க்கத்தைப் போற்றும் தேவர்கள் (பொன்னுலகிற்) குடியேற, நாள்தோறும் விளைகின்ற- ஏற்படுகின்ற-மிகப் பொல்லாத வினை வீழ்ந்தழிய, வேலை ஏவுதற்கு எனத் தோன்றிய (என்) செல்வமே!

பேய்களுடன் நடமாடும் தந்தை (சிவனுடைய) காது நிரம்ப மவுன உபதேசம் செய்த கடப்ப மாலையை அணிந்தவனே! அழகிய (வள்ளிமலைக்) காட்டில் வாசம் செய்த வேடர் மகளை மணந்த தலைவனே!

சமணர்கள் கழுவில் துள்ளிக்குதிக்க வாதுப் போர் கருதிச் செய்த குமரனே! குருநாதனே! நீதியுள்ளனவற்றை அருளிச் செய்யும் தம்பிரானே! **திருவிடைமருதூரில்** வீற்றிருக்கும் தம்பிரானே! சிறந்த முநிவர்களுக்குத் தம்பிரானே!

(வழிபாடு சேரும் அருள் தந்திடாதோ)

---

O நீதி அருளுவதால் இறைவனை-நீதி-என்றே கூறுவர் சம்பந்தர்.
"வெண்ணியில் நீதியை நினையவல்லார் வினை நில்லாவே"
"நீதீ நின்னை யல்லால் நெறியாது நினைந்தறியேன்"
-சம்பந்தர் 2-14-2; 3-55-6.

## 864. தவநெறி பற்ற

தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தனதனன தனதனன தந்தனந் தந்தனந்
தனதனன தனதனன தந்தனந் தந்தனந் தந்ததான

* படியையள விடுநெடிய கொண்டலுஞ் சண்டனும்
† தமரசது மறையமரர் சங்கமுஞ் ‡ சம்புவும்
பரவரிய நிருபன்விர கன்சுடுஞ் சம்பனன்
Xசெம்பொன்மேனிப்-

பரமனெழில் புனையுமர வங்களுங் கங்கையுந்
திருவளரு முளரியொடு திங்களுங் கொன்றையும்
Oபரியகுமி ழறுகுகன தும்பையுஞ் **செம்பையுந்
துன்றுமூலச்;

சடைமுடியி லணியுநல சங்கரன் கும்பிடுங்
குமரனறு முகவன்மது ரந்தருஞ் செஞ்சொலன்
சரவணையில்வருமுதலி†† கொந்தகன்கந்தனென்
றுய்ந்துபாடித்-

தணியுமொலி புகலும்வித மொன்றிலுஞ் சென்றிலன்
XXபகிரவொரு தினையளவு பண்புகொண் டண்டிலன்
**தவநெறியி** லொழுகிவழி **பண்படுங்**
**கங்கணஞ்OOசிந்தியாதோ;**

---

* படியை அளவிட்டது - பாடல் 268 பக்கம் 166.

† தமர சதுமறை:-
"தமரமதூ ...ன் வளர் சதுமறை எனவும்"
-கம்பராமா-திருஅவதார 126.

‡ சம்பு - பிரமன்.

X 'பொன்னொளி கொள்மேனி' - சம்பந்தர் 1-71-6.

O பரிய குமிழறுகு - ஒருவகைய பெரிய அறுகம்புல் வகை.

** செம்பை - சிற்றகத்தி - 'அகத்தியோடு வன்னி கொன்றை... சடைப் பெய்தாய்' சம்பந்தர் - 2-98-2.

†† கொந்தகன் - படைத்தலைவன் (தேவசேனாபதி)
'கொந்தகப் பெருமான் என்றே நன்னெறிப்
பட்டங் கட்டி நல்கினான் பரிவட் டங்கள்"
- திரு ஆலவாய் - 39-27.

[தொடர்ச்சி 533 ஆம் பாக்கம் பார்க்க.]

# 864.

பூமியைத் தனது காலால் அளவிட்ட பெரிய மேகநிறங் கொண்ட திருமாலும், (சண்டனும்) யமனும், அல்லது சூரியனும், (தமரம்) ஒலியுடன் ஓதப்படும் (சதுமறை) நான்கு வேதங்களும், தேவர் கூட்டமும், பிரமனும் போற்றுதற்கு அரிய அரசன், சாமார்த்தியம் உள்ளவன், (சுடும்) சுட்டழிக்கும், சம்பன்னன் - சம்பத்து உடையவன் (அழித்தல் தொழில் மூர்த்தி), செம்பொன் போன்ற மேனியை உடைய-

பரமன், அழகு கொண்ட பாம்புகளையும். கங்கையையும், லக்ஷ்மிதேவி வாசம்செய்யும் தாமரையையும், நிலவையும், கொன்றையையும், பருத்த குமிழம்பூவையும், அறுகம் புல்லையும் பெருமை வாய்ந்த தும்பை மலரையும், (செம்பையும்) சிற்றகத்தி மலரையும், நெருங்கிப் பிரதானமாக இருக்கின்ற

சடைமுடியில் அணிந்துள்ள நல்ல சங்கரன் (சிவபிரான்) வணங்குகின்ற குமரன், ஆறுமுகத்தன், இனிமைபயக்கும் செவ்விய சொற்களை உடையவன், (கங்கையில்) சரவண மடுவில் வந்த முதல்வன், (தேவ) சேனாபதி, கந்தன் என்று ஈடேறும்படிப் பாடிக்

குளிர்ந்த சொற்களைச் சொல்லும் வழி ஒன்றிலும் போகின்றேன் இல்லை; பங்கிட்டு (ஒருவருக்கு ஒன்று ஈய) கொடுக்க ஒரு தினை அளவு ஈகைக் குணத்தையும் கொண்டு (கிட்டுகின்றேன் இல்லை) அணுகுதல் கிடையாது; அப்படிப்பட்ட எனக்குத் தவவழியில் ஒழுகி நல்வழியில் சீர்பெறும் பிரதிக்ஞை - ஒரு பிடிப்பான முயற்சி யெண்ணம் உதிக்காதோ! (எண்ணம் உதிக்க உன் திருவுளம் நினைக்காதா)!

---

‡‡ ஒலி - சொல் - 'நின்னுருவமும் ஒலியும் ஆகாயத்துள' - பரிபாடல் 4-31.

XX "பகிர நினைவொரு தினையள விலுமிலி" -திருப்புகழ் 1009.

OO "வேண்டிக் கொள்வேன் தவநெறியே" - சுந்தரர் 7-13.

கடுகுபொடி தவிடுபட மந்திரந் தந்திரம்
பயிலவரு நிருதருட லம்பிளந் தம்பரங்
கதறிவெகு குருதிநதி பொங்கிடுஞ் சம்ப்ரமங்
கண்டுசேரக்-

கழுகுநரி கொடிகருட னங்கெழுந் தெங்குநின்
*றலகைபல திமிலைகொடு தந்தனந் தந்தனங்
கருதியிசை பொசியுநசை கண்டுகண் டின்புறுந்
துங்கவேலா;

† அடல்புனையு **மிடைமருதில்** வந்திணங் குங்குணம்
பெரியகுரு பரகுமர சிந்துரஞ் சென்றடங்
கடவிதனி லுறைகுமரி சந்திலங் குந்தனந்
தங்குமார்பா-

அருணமணி வெயிலிலகு தண்டையம் பங்கயங்
கருணைபொழி வனகழலி லந்தமுந் தம்பமென்
றழகுபெற நெறிவருடி யண்டருந் தொண்டுறுந்
தம்பிரானே.(3)

---

* அலகைகள்-பறை முதலிய வாத்தியங்களை முழங்கிப் பேய்கள் மாமிசத்தைப் புசித்தலும், ரத்தத்தைப் பருகுதலும்-

"குருதிக் கடலைப் பெருகப் பருகி்க்....களிக்கும் ஒரு திரள்
கொடு கொட்டி படத் துடி கொட்டி...வளைத்திருக்கும் ஒருதிரள்
சதையைச் சில கைக் கொள பறிக்கும் ஒரு திரள்
.......அறுமுகன் தயித்தியர் பட்டுவிழப்
பொருதிட்ட செருக் களத்தில் அலகையே"
-(செருக்களத் தலகை வகுப்பு)

† அடல் - தல விசேட நெற்றி -
"மருதவாணன்...விருப்பம் அமைத்த-மிடைசீர்
மருதவட்ட மான்மியம் போல் மற்றொன் றுண் டென்று
கருதவட்ட ஞாலத்துக் காணேன்-கருதி. தன்பால்
வந்து புகுந்த பதம் வான்பத மெல்லாம் புகுதும்,
முந்துதெரி கண்ணிரண்டு மூன்றாகும்..........
-திருவிடை மருதூர் உலா 679.

"இடைமரு தீசனைப் பணிதற் கொருவ ரெண்ணுற்
றெழுந்திடிலங் கவர்வினையும் எழுந்து நிற்கும்,
நடையுறிலவ் வூர்நோக்கிப் புறவூர் நோக்கி
நடக்குமது சொல்லாமல், அவர்க ளேகத்
திடமிலரா யுடனொருகால் திரும்பி னாலும்
திரும்பாது சென்றவினை சென்ற தேயாம்,
புடவிபுகழ் காசியினுற் றிலகு கங்கைப்
புனல்படிந்து வருபலன்மற் றவருக் கெய்தும்"

(தொடர்ச்சி - பக்கம் 535 பார்க்க)

கடுகுபோலப் பொடிப் பொடியாய்த் தவிடுபடும்படி மந்திரமும் தந்திரமும் பயின்று வந்த அசுரர்களின் உடல்களைப் பிளந்தும், (அம்பரம்) கடல் கதறி நிரம்ப ரத்த ஆறு பொங்கி ஓடும்படியான களிப்புக்கிடமான நிறைவை (நிறைந்த உணவைக் கண்டு) அப்போர்க்களத்தில் சேரும்படி-

கழுகும், நரியும், (கொடி) காக்கையும், கருடனும் அங்கு வந்து கூடி எங்கும் நிற்கவும், பேய்கள் பல (கூடி) - (திமிலை) பம்பைமேளம் ஒருவகைப் பறை கொண்டு தந்தனம், தந்தனம் என (கருதியிசை) இசை கருதி - இசைகளைக் கருதி எழுப்பி, (பொசியும்) (நிணத்தை) உட்கொள்ளும் (நசை) ஆசையைப் பார்த்துப் பார்த்து மகிழ்ச்சி யுறுகின்ற பரிசுத்த வேலனே!

வெற்றி விளங்கும் **திருவிடைமருதூரில்** வந்து பொருந்தியிருக்கும் குணத்திற் சிறந்த குருபரனே! குமரனே! யானைகள் போய் (அடங்கும்) உறங்கும் - தூங்கும் (வள்ளிமலைக்) காட்டில் வாசஞ்செய்த குமரி - வள்ளியின் சந்தனம் விளங்கும் கொங்கையிற் படியும் திருமார்பனே!

சிவந்த ரத்னங்கள் ஒளிவீசி விளங்கும் தண்டைகள் அணிந்த அழகிய தாமரை போன்றதும், கருணை பொழிவதுமான கழல்களின் (திருவடிகளின்) அழகே (நமக்குத்) (தம்பம்) பற்றுக்கோடாம் என்று (அல்லது திருவடிகளே நமக்கு முடிவான பற்றுக்கோடாமென்று) (உணர்ந்து) (உறுதி பூண்டு) (நெறி அழகு பெற வருடி)- அந்த நன்னெறியையே அழகு வாய்க்கத் தடவிப் பற்றி (மெதுவாகக் கைப்பிடித்து) - தேவர்களும் தொண்டு பூண்டுள்ள தம்பிரானே!

(தவநெறியில்....பண்படும் கங்கணம் சிந்தியாதோ)

---

"முத்திதந் தருளிடு தலங்கள்...அனேகம் உண்டு...அவற்றிடைமருததிக மாய்க் குலவும், யாதினாலெனில் அநாதியா யிலங்கலின்"-

-மருதவனப் புராணம் தலவிசேட 28, 13.

இவ்வாறு இத் தலத்தின் பெருமை முருகவேளால் வசிட்டராதிய முநிவர்களுக்கு எடுத்து ஓதப்பட்டது.

மதுரையில் வரகுண பாண்டியனுக்கு உற்ற பிரமகத்தி தோஷம் திருவிடை மருதூரில் விலகிற்று - [வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய திருவிளையாடல்].

## 865. சிவஞானம் பெற

தனதனதன தான தானன, தனதனதன தான தானன
தனதனதன தான தானன தந்ததான

புழுகொடுபனி நீர்ச வாதுட னிருகரமிகு மார்பி லேபன
புளகிதஅபி ராம பூஷித கொங்கையானை-

பொதுவினில்விலை கூறு மாதர்கள் மணியணிகுழை மீது தாவடி
பொருவனகணை போல்வி லோசன வந்தியாலே;

மெழுகெனவுரு காவ னார்தம திதயகலக மோடு மோகன
வெகுவிதபரி தாப வாதனை கொண்டுநாயேன்-

மிடைபடுமல மாயை யால்மிக கலவியஅறி வேக சாமிநின்
விதரணசிவ ஞான போதகம் வந்துதாராய்;

எழுகிரிநிலை யோட வாரிதி மொகுமொகுவென வீச மேதினி
யிடர்கெடஅசு ரேசர் சேனைமு றிந்துபோக-

இமையவர்சிறை மீள நாய்நரி கழுகுகள்கக ராசன் மேலிட
ரணமுககண பூத சேனைகள் நின்றுலாவச்;

*செழுமதகரி நீல கோமள அபிநவமயி லேறு சேவக
செயசெயமுரு காகு காவளர் கந்தவேளே-

† திரைபொருகரை மோது காவிரி வருபுனல்வயல் வாவி சூழ்தரு
திருவிடைமரு தூரில் மேவிய தம்பிரானே. (4)

---

* முருகவேளுக்கு யானை வாகனமும் உண்டு, அந்த யானை பிணிமுகம் எனப்படும்-பாடல் 207பக்கம் 28, பாடல் 474-பக்கம் 71 கீழ்க்குறிப்பு.

† 'எறிதிரை கரை பொரும் இடைமருது' - சம்பந்தர் 1-122-2.
'பொழிலும் வயலுஞ் சூழ்ந்த இடைமருது' 2-56-8.

## 865.

**பு**னுகு சட்டத்தொடு பன்னீர், ஜவ்வாது இவைகளுடன் இரண்டு கைகளிலும் நிரம்பினதாய், மார்பில் லேபனம்-(சந்தனம் கஸ்தூரி இவைகளின்) பூச்சு, (பூசுதல் கொண்டதாய்), புளகாங்கிதம் கொண்டதாய், அழகுள்ளதாய், அலங்காரம் பூண்டதாய் உள்ள கொங்கை யானை-யானை போற் பெரிய கொங்கைகளைப்-

பொதுவாகப் பலர்க்கும் விலை கூறும் மாதர்கள் (வேசையர்களின்) ரத்னம் பதித்துள்ள குழைகளின்மீது (தாவடி) போர் புரிவனவான அம்புகள் போன்ற (விலோசனம்) கண்கள் (உண்டுபண்ணும்) (வந்தியாலே) - கஷ்டத்தாலே - கொடுமையாலே-

(தீயிலிட்ட) மெழுகுபோல உள்ளம் உருகி, (அன்னார் தமது இதய கலகமோடு) அவ் வேசையர்களின் உள்ளத்தே தோன்றும் சச்சரவால் மனமயக்கம் கொண்டவனாய்ப், பலவிதமான பரிதபிக்கத்தக்க - மனவேதனை - துன்பம் அடைந்து அடியேன்-

நெருங்கிவரும் மும்மலங்களின் மாயை வசத்தால் மிகவும் (கலவிய)-கலந்து-கலக்கம் கொண்ட என் அறிவானது ஏக (தொலைந்து அழிய), சாமீ (கடவுளே) ! உனது (விதரணம்) கொடையாக சிவஞானோபதேசத்தை நீ எழுந்தருளிவந்து தந்து உதவுக;

எழுகிரிகள் நிலைபெயர்ந்தோட, கடல் மொகுமொகு என்று கலங்கி அலைகள் வீச-மண்ணுலகத்தவரின் துன்பங்கள் கெட, அசுரத் தலைவர்களின் சேனையெல்லாம் தோற்று ஓட-

தேவர்கள் சிறையினின்றும் விடுபட, நாய், நரி, கழுகுகள், (ககராஜன்) பக்ஷிராஜனாம் கருடன் மேலேவட்டமிட, போர்க்களத்தில் பூதகண சேனைகள் நின்று உலவ-

செழுமை வாய்ந்த (மதகரி) - பிணிமுகம் என்னும் யானைமீதும். நீல நிறமுள்ள அழகிய, புதிய மயில்மீதும் ஏறுகின்ற பராக்ரம சாலியே! ஜெய ஜெய, முருகா! குகா! புகழோங்கு கந்தவேளே!

அலைகள் ஒன்றோடொன்று மோதிக் கரையில் மோதுகின்ற காவிரியில் வரும் நீர் பாயும் வயல்களும், குளங்களும் சூழ்ந்துள்ள **திருவிடைமருதூரில்** வீற்றிருக்கும் தம்பிரானே! (சிவஞானபோதகம் வந்து தாராய்).

## திரிபுவனம்.

(இது திருவிடைமருதூர் ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து 2-மைல். தேவாரவைப்பு ஸ்தலம்.)

### 866. திருவடியைப் பெற

தனதன தனதன தனதன தனதன
தத்தத் தத்தன தத்தத் தத்தன தந்ததான

தனுநுதல் வெயர்வெழ விழிகுழி தரவளை
சத்திக் கச்சில தித்திக் கப்படும் அன்புபேசித்-
தழுவிய மகளிர்த முகிழ்முலை யுரமிசை
தைக்கச்*சர்க்கரை கைக்கப் பட்டன
தொண்டையூறல்;
கனவிலு நுகர்தரு கலவியின் வலையிடை
கட்டுப் பட்டுயிர் தட்டுப் பட்டழி கின்றதோதான்-
கதிபெற விதியிலி மதியிலி யுனதிரு
கச்சுற் றச்சிறு **செச்சைப் பத்மப தம்பெறேனோ;**
முனைமலி† குலிசைதன் ம்ருகமத புளகித
முத்தச் சித்ரத னத்துக் கிச்சித அம்புராசி-
முறையிட முதுநிசி சரர்திரள் முதுகிட
முட்டப் பொட்டெழ வெட்டிக் குத்துமடங்கல்வீரா;
அனுபவ மளிதரு நிகழ்தரு மொருபொருள்
அப்பர்க்‡கப்படி யொப்பித் தர்ச்சனை கொண்டநாதா-
அகிலமு மழியினு நிலைபெறு **திரிபுவ**
**னத்துப்** பொற்புறுசித்திச் சித்தர்கள்
தம்பிரானே.(1)

## கும்பகோணம்.

(ரெயில்வே ஸ்டேஷன். திருஞானசம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல் பெற்றது. ஸ்தல புராணம் உண்டு.)

---

* வாயூறல் - சர்க்கரை - "இதழ் சர்க்கரைப் பழமொடுறழூறல்"- திருப்புகழ் 928.

† "குலிசாயுத குஞ்சரவா" - கந்தர நுபூதி 45.

‡ "அப்படி" - சொற் பிரயோகம் - பாடல் 33-பக்கம் 97 கீழ்க் குறிப்பைப் பார்க்க.

## திரிபுவனம்

## 866.

**வி**ல்லைப் போன்ற நெற்றியில் வெயர்வு உண்டாக, கண்கள் குழியிட்டுச் சுருங்க, வளையல்கள் சப்திக்க, சில ருசிகரமுள்ள அன்புப் பேச்சுக்களைப் பேசித்-

தழுவுகின்ற (பொது) மகளிருடைய அரும்புவிட்டுத் தோன்றும் கொங்கை மார்பின்மேல் தைக்க, சர்க்கரையும் கசக்கின்றது என்று சொல்லும்படியான வாயிதழ் ஊறலைக்-

கனவிலும் பருகுகின்ற புணர்ச்சி என்கின்ற வலையிலே (நான்) கட்டுப்பட்டு, (என்) உயிரானது தட்டுப்பட்டு (மாட்டிக்கொண்டு) அழிந்து போகின்றது தானோ (எனக்கு இட்ட விதி)!

நல்ல கதியைப் பெறுதற்கு வேண்டிய விதிப் பயன் இல்லாதவன் (நான்), அறிவு இல்லாதவன் (நான்)-அத்தகைய நான்) உன்னுடைய இரண்டு (கச்சு உற்ற) கால் பட்டிகை அணிந்துள்ள, சிறிய, வெட்சி, தாமரை அணிந்துள்ள திருவடியைப் பெறுவேனோ!

கூர்மை மிக உள்ள குலிசாயுதனாகிய இந்திரனது மகள் தேவசேனையின் கஸ்தூரி யணிந்ததும், புளகம் கொண்டதும், முத்துமாலை அணிந்ததும், அழகியதுமான கொங்கை மீது (இச்சித) ஆசை கொண்டவனே! கடல்-

ஓலமிட்டுக் கதறவும் பழைமைவாய்ந்த அசுரர்களின் கூட்டம் பின்னிட்டு ஓடவும், முற்றிலும் பொடிபட, வெட்டிக் குத்தின சிங்க வீரனே!

ஞானானுபவத்தை, (அளிதரும்) கொடுக்க வல்லதாய் (நிகழ்தரும்) உள்ள ஒப்பற்ற உபதேசப் பொருளை (பிரணவப் பொருளை) தந்தையாம் சிவபிராற்கு அந்த அருமையான வகையில் (அல்லது அந்த க்ஷணமே) உபதேசித்து அவரால் பூசிக்கப்பெற்ற (குருமூர்த்தியாம்) தலைவனே!

எல்லாப் பொருள்களும் அழியுங் காலத்தும் தான் அழியாது நிலைபெற்று நிற்கும் **திரிபுவனம்** என்னும் ஸ்தலத்தில் அழகு கொண்ட சித்திகளில் வல்ல சித்தர்களுக்கெல்லாம் தம்பிரானே!

(செச்சைப் பத்ம பதம் பெறேனோ)

## 867. கும்பகோணம்

தந்ததனத் தானதனத் தந்ததனத் தானதனத்
தந்ததனத் தானதனத் தனதான

*இந்துகதிர்ச் சேரருணப் பந்திநடுத் தூணொளிபட்
டின்பரசப் பாலமுதச் சுவைமேவு-
† எண்குணமுற் றோனடனச் சந்த்ரவொளிப் பீடகமுற்
றெந்தை‡நடித் தாடுமணிச் சபையூடே;
Xகந்தமெழுத் தோடுறுசிற் கெந்தமணப் பூவிதழைக்
கண்டுகளித் தேயமுதக் கடல்மூழ்கிக்-
Oகந்தமதித் **தாயிரவெட் டண்டமதைக்
கோல்புவனக்
**கண்டமதைக் காணஎனக் கருள்வாயே;**
திந்ததிமித் தீதகுடட் டுண்டுமிடட் டாடுடுடிட்
டிந்தமெனக் காளமணித் தவிலோசை-

---

* "உடுபதியை முட்டி யமுதூறல் உருகிவர" - எனவரும் 547-ஆம் பாடலைப் பார்க்க. இனி, இந்த முதலடிக்கு-

"சந்திரனும் சூரியனும் சேர்ந்த இடைகலை பிங்கலை நாடிகள் ஒன்று சேர்ந்த செந் நிறத்தின் வரிசை போன்ற நடுவிலுள்ள தூணின் ஒளிபட்டு (சுழுமுனை நாடியின் ஒளிபட்டு," - எனப் பொருள் காண்பர் கொழும்புப் பெரியார் மு.திருவிளங்கம் அவர்கள்; இப்பொருளுக்கு - "இந்து சுதிர்...ஓடும் அந்த கால் நடுதூணில் தங்க"எனவரும் 766-ஆம் பாடலைப் பார்க்க.

† 'எண்குண முற்றோன்' - 'எண்குண சுவாமி' - பாடல் 766.

‡ நடித்தாடு...சபை - "அமுதத்தை உண்டொரு கோடி நடனப் பதஞ்சபை" - என்றார் 647-ஆம் பாடலில்.

X "கந்தம் எழுத்தோடுறு - மூல மொழியோடு பொருந்திய-மூல மொழி என்பது பிரணவம்; சிற்கெந்த மணப்பூ இதழை ஞானமாகிய மணம் கமழும்பூ இதழை"

- (இது திருவிள்ங்கம் அவர்கள் உரை)

'கெந்த மணப்பூ இதழ்' - இறைவன் பூ வண்ணத்தன்
'மருவாய் மலராய்' - கந்தரநுபூதி 51.
'பூவண்ணம் பூவின் மணம்போல மெய்ப்போத இன்ப
மாவண்ண மெய் கொண்டவன்-திருவிளையாடல்; பாயிரம்.

[தொடர்ச்சி 541 ஆம் பக்கம் பார்க்க]

## கும்பகோணம்

## 867.

சந்திரமண்டல ஒளியை-முட்டி (அங்கே) அந்த செவ்விய ஒழுங்கான திரட்சியுள்ள சோதி ஸ்தம்பத்தின் நடுப்பாகத்தே தாக்குண்பதால் பெருகிவரும் இன்பரசப் பாலமுதம் (இன்பச்சுவை தரும் பாலனைய அமுத ஊறலின் இனிய சுவையை) மேவு (மேவி) -அனுபவித்து-

எண் குணம் கொண்ட இறைவன் நடனம் இயற்றும் நில ஒளிவீசும் பெருமை வாய்ந்த இடத்தைத் தரிசித்து, அங்கே எந்தை சிவபிரான் நடனஞ்செய்து கூத்தாடும் அழகிய சபையின்கண்-

(கந்தம்) கூட்டமான (எழுத்தோடுறு) ஐம்பத்தொரு அக்ஷரங்களோடு (அல்லது பெருமை மணம்கொண்ட பிரணவ எழுத்தோடு) (சித் கெந்த மண) அறிவு என்கிற மிக்க நறுமணம் கொண்ட (பூ இதழை) இதழ்ப் பூவை-ஞான இதழ்கொண்ட மலரை-ஞானவாசம் வீசும் நறுமணப் பூவை - கண்டு களித்து (அறிவை அறிவால் அறிந்து) - அமுதக் கடலில் முழுகி - (ஆனந்தவாரியில்) முழுகி-

அந்த நறுமணத்தைப் போற்றிசெய்து, ஆயிரத்தெட்டு அண்டங்களையும் வளைத்துக் கொண்டுள்ள (புவனக் கண்டமதை) ஈரேழுபுவனப் பகுதிகளை - பதினாலுலகங்களையும் - காணும்படி எனக்கு அருள்புரிவாயாக

திந்த திமித் தீதகுடட் டுண்டுமிடட் டாடுடுடிட் டிந்தம் என்று எக்காளம், மணிகள், (தவில்) மேள வகைகள் இவைகளின் ஓசை

---

O கந்த மதித்து - 'கந்தவேளே! (நீ) நன்கு மதித்து' - என்பது ஆசிரியர் திருவிளங்கம் அவர்கள் உரை.

** 'ஆயிரவெட் டண்டமதைக்கோல் புவனக் கண்டமதைக்காண'

'அமுதவாரி உண்டு உலகு ஈரேழு கண்டு விளையாடி' 'லோகங்கள் வலமதாட' 'அகில புவனாதியெங்கும் வெளியுற'- என வருவன காண்க - திருப்புகழ் 766, 179, 141-பார்க்க.

இனி, ஆயிரத்தெட்டு அண்டம் அதை-என்பதற்கு - ஆயிரத்தெட்டு இதழோடு பொருந்திய கமலத்தை உடைய துவாத சாந்த வெளியை எனவும், 'கோல புவனக் கண்ட மதை' என்பதற்கு அழகிய அந்த துவாதசாந்த வெளியை' - எனவும் பொருள் கொள்வர் ஆசிரியர் திருவிளங்கம்.

சிந்தைதிகைத் தேழுகடற் பொங்கவரிச் சூர்மகுடச்
செண்டுகுலைத் தாடு* மணிக் கதிர்வேலா;

குந்தியரித் தாழ்துளபச் செந்திருவைச் சேர்களபக்
கொண்டல்நிறத் தோன்மகளைத் தரைமீதே-

கும்பிடகைத் தாளமெடுத் தம்பொனுருப் பாவைபுகழ்க்
**கும்பகொணத்** தாறுமுகப் பெருமாளே.(1)

## 868. மாதர்மீதுள்ள மயக்கு அற

தந்ததனத் தானதனத் தந்ததனத் தானதனத்
தந்ததனத் தானதனத் தனதான

தும்பிமுகத் தானைபணைக் கொம்பதெனத் தாவிமயற்
றொந்தமெனப் பாயுமுலைக் கனமாதர்-

† தும்பிமலர்ச் சோலைமுகிற் கங்குலிருட் காரினிறத்
தொங்கல்மயிற் சாயலெனக் குழல்மேவிச்;

செம்பொனுருக் கானமொழிச் சங்கினொளிக் காமநகைச்
செங்கயலைப் போலும்விழிக் கணையாலே-

சிந்தைதகர்த் தாளுமிதச் சந்த்ரமுகப் பாவையர்தித்
திந்திமெனுற் **றாடுமவர்க் குழல்வேனோ;**

---

* 'மணிக்கதிர் வேலா' - பாடல் 286-பக்கம் 212 பார்க்க.

'மணிவேற் சேவலங் கொடியோன்' - கல்லாடம். 56

† "சிறைவண்டினஞ், சோலை, இருள்...சூழலுக் கிணையாமே" (உசித சூடாமணி)

(அசுரர்களின்) மனம் திகைக்கும்படியும் ஏழுகடல்களும் பொங்கி எழுமாறும், சிங்கம்போன்ற சூரனுடைய மணிமுடியிலுள்ள (செண்டு) பூச்செண்டை அழித்துத் தள்ளி விளையாடின மணிகட்டிய ஒளி வேலனே

(குந்தியரித்தாழ்) அரி குந்தித் தாழ் - வண்டுகள் மொய்த்துக் குந்தி விரும்புகின்ற துளபமாலை அணிந்தவனும், செவ்விய இலக்குமியைச் சேர்பவனும் ஆன, (களபம்) கலவைச் சாந்து அணிபவனும்,மேக நிறத்தவனும் ஆன - திருமாலின் மகளாம் வள்ளியை இப் பூமியின் கண்ணே-

கும்பிடும்பொருட்டுக் கைத்தாளம் போட்டு (அந்த) அழகிய பொன் - பொலிவு - உருவத்தவளாம் (அல்லது (பொன்) லக்ஷ்மியின் உருவ அழகைக் கொண்ட) பாவை வள்ளியைப் புகழ்ந்து போற்றின (அல்லது, வள்ளி புகழ்ந்து போற்றின) பெருமாளே! **கும்பகோணத்தில்** வீற்றிருக்கும் ஆறுமுகப் பெருமாளே! (எனக்கு அருள்வாயே)

## 868.

**து**திக்கையை உடைய முகத்தைக்கொண்ட ஆனையின் பெருத்த கொம்புபோல வெளித் தோன்றிக், காம இச்சைக்குச் சம்பந்தம் உடையதென மேலேழுகின்ற கொங்கையைக் கொண்ட பெருமை வாய்ந்த மாதர்கள்-

வண்டுகளின் கூட்டம், மலர்ச்சோலை, மேகம், இரவு, இருள், இவற்றின் கார் (கரு) நிறத்தைக்கொண்டு, (தொங்கல்) தோகை மயிலின் சாயல்-அழகு இதென்று சொல்லும்படியான கூந்தலை உடையவர்களாய்-

செம்பொன் இளகி விழுகின்றதோ என்னும்படியான மொழியுடன், சங்கின் வெள்ளொளி போன்று காமத்தை ஊட்டும் பற்களுடன், செவ்விய கயல்மீன் போன்ற கண்களாம் அம்புகள் கொண்டு

(கண்ட ஆடவர்களின் மனத்தை) நொறுக்கிச் சிதற வைத்து ஆள்கின்ற இன்பத்தை ஊட்டும் சந்திரன் போன்ற முகத்தைக் கொண்ட (பாவையர்) பதுமை போன்றவர்கள், தித்திந்திம் எனப் பொருந்தி நடனம் ஆடுபவர் - அத்தகையோர் பொருட்டு நான் அலைச்சல் உறுவேனோ!

தம்பிவரச் சாதிதிருக் கொம்புவரக் கூடவனச்
சந்தமயிற் சாய்விலகிச் சிறைபோகச்-
சண்டர்முடித் தூள்கள்படச் சிந்தியரக் கோர்கள்விழத்
*தங்கநிறத் தாள்சிறையைத் தவிர்மாயோன்;
கொம்புகுறிக் †காளமடுத் திந்தமெனுற் றாடிநிரைக்
கொண்டுவளைத் தேமகிழச் சுதனீண-
கொங்சுசுகப் பாவையிணைக் கொங்கைதனிற் றாவிமகிழ்க்
கும்பகோணத் தாறுமுகப் பெருமாளே. (2)

## 869. ஞானம் பெற

தந்தனா தத்ததன தந்தனா தத்ததன
தந்தனா தத்ததன தனதான

கெண்டைநே ரொத்தவிழி மங்கைமோ கக்கலவை
கெந்தவா சப்புழுகு மணநாறுங்-
கிம்பு‡ரீ சக்களப கொங்கையா னைச்சிறிது
Xகிஞ்சுகா ணப்பெருகி யடியேனும்;
மண்டிமோ சக்கலவி கொண்டுகா மித்துருகி
Oவண்டனா கப்புவியி லுழலாமல்-
வந்துஞா னப்பொருளி லொன்றுபோ தித்துனது
மஞ்சுதா ளைத்தினமு மருள்வாயே;

---

* சீதையின் நிறம்-
"என்னிறம் உரைக்கேன்.....பொன்னிறங் கறுக்கும்
என்றால் மணிநிறம் உவமை போதா" -கம்பராமா-நாடவிட்ட-65.

† யமுனை நதியில் ஒரு மடுவில் தன் விஷாக்கினியால் கலக்கின காளியன் என்னும் ஐந்துதலை நாகத்தைத் தண்டிக்கக் கண்ணபிரான் அருகிலிருந்த கடப்ப மரத்திலிருந்து அப் பாம்பின் தலைமேற் குதித்துத் துவைத்து நிர்த்தனம்செய்து அதன் வலியை அடக்கினர். நாக கன்னிகைகளின் வேண்டுகோளின்படி அந்தக் காளியனை உயிரோடு கடலிற்சென்று வாழும்படி விட்டருளினர்.

-பாடல் 245-2பக்கம் 114; 402-பக்கம் 518-கீழ்க்குறிப்பு.

‡ ஈசன் - பச்சைக் கற்பூரம்.

X கிஞ்சு - சிறிதான - 'ஆனந்த வாக்காலே கிஞ்சளவு கேட்கலுமாகும்' (ஒழிவிலொ - பொது-24.)

O வண்டன் - தீயோன் 'வண்டர் மும்மதில் மாய்தர எய்தவன்'
-சம்பந்தர் 1-58-7; திருப்புகழ் 805-ம் பார்க்க.

*(தம்பி)* தம்பியாம் இலக்குமணன்கூட வர, *(சாதி)* தன்மையிற் சிறந்த *(திருக்கொம்பு)* கொம்புபோல மெலிந்த திரு-இலக்குமி அனைய சீதை உடன்வர அவளைக் கண்டு காட்டில் உள்ள அழகிய மயில்களெல்லாம் இவள் சாயலின் முன் நமது சாயல் எந்த மூலை என ஒதுங்கி விலகி *(சிறை)* ஒருபுறம் போக

*(சண்டர்)* கடுங்கோபம் உடையவர்களாம் அரக்கர்களின் முடிகள் தூள்களாமாறு சிதறவைத்து *(அந்த)* அரக்கர்கள் மாண்டு விழும்படிச் செய்து, தங்க சொரூப முள்ளவளாம் சீதையின் சிறையை நீக்கின **ஸ்ரீ**ராமபிரானாம் திருமால்-

ஊது கொம்பை *(புல்லாங்குழலை)* குறி *(தனக்கு)* அடையாளமாகக் கொண்டு, *(காளம்)* விஷம் நிரம்பின *(மடு)* மடுவில் திந்தம் என்று பொருந்தி நடனம் செய்தவனும், *(நிரை)* பசுக் கூட்டங்களை ஒன்று கூட்டி வளைத்து ஓட்டி மகிழ்ந்தவனுமான *(அச்சுதன்)* கண்ணபிரான் - *(ஈண)* பெற்ற-

கொஞ்சும் *(சுகம்)* கிளிபோன்ற பாவை - பதுமை வள்ளியின் இரண்டு கொங்கைகள் மீது தாவி மகிழும் பெருமாளே! **கும்பகோணத்து** ஆறுமுகப் பெருமாளே!

*(ஆடுமவர்க் குழல்வேனோ)*

## 869.

**கெ**ண்டைமீன் போன்ற கண்களை உடைய மாதர்கள் மீதுள்ள ஆசைக் கலப்பானது - மிக்க நறுமணமுள்ள புனுகு சட்டத்தின் வாசனை வீசுவதும்-

கிம்புரி - தந்தத்திற் பூணணிந்தது போற் பூணணிந்ததும் ஈசக்களபம் - பச்சைக் கர்ப்பூரக் கலவை யணிந்ததுமான கொங்கை என்னும் யானையைச் சிறிதளவு கண்டதும் *(காமம்)* பெருகுற்று - அதிகமாகி, அதனால் அடியேனும்

விரைந்து சென்று மோசக்கலவி - வஞ்சகத்துக்கு இடமான புணர்ச்சியின்பம் கொண்டு, காம உணர்ச்சியிலே உள்ளம் உருகி *(வண்டனாக)* தீயோனாகப் பூமியில் *(நான்)* அலைச்சல் உறாமல் -

*(நீ)* வந்து ஞானப் பொருளில் ஒன்றை *(எனக்கு)* உபதேசித்து உன்னுடைய அழகிய திருவடியை நாள்தோறும் தந்தருளுக;

அண்டர்வா ழப்பிரபை சண்ட*மே ருக்கிரியி
ளைந்துவீ ழப்பொருத கதிர்வேலா-
† அஞ்சுவா யிற்பரனை நெஞ்சிலூ றித்தவசி
‡ னன்புளா ரைச்சிறையி டசுரோரைக்;
கொண்டுபோய் Xவைத்தகழு நெஞ்சிலே றக்கழுகு
கொந்தியா டத்தலையை யரிவோனே-
கொண்டல்சூ ழக்கழனி சங்குலா விப்பரவு
**கும்பகோ ணத்திலுறை** பெருமாளே. (3)

## 870. சித்ரத் தமிழ்பாட

தந்தனா தத்தத் தனதான

Oபஞ்சுசேர் நிர்த்தப் பதமாதர்-
பங்கமார் தொக்கிற் படியாமற்;
செஞ்சொல்சேர்****சித்ரத் தமிழா**லுன்-
செம்பொனார் வத்தைப் பெறுவேனோ;
††பஞ்சபா ணத்தற் பொருதேவர்-
பங்கில்வாழ் சத்திக் குமரேசா;
குஞ்சரீ வெற்புத் தனநேயா-
**கும்பகோ ணத்திற்** பெருமாளே. (4)

---

* "வேலுக் கணிகலம் வேலையுஞ் சூரனும் மேருவுமே"

-கந்தரலங் - 62.

† அஞ்சு வாயில் - பஞ்சேந்திரிய வழிகளாலும்.

‡ அன்புளார் -, சிவபக்தர்கள் - தேவர்கள்

-பாடல் 765-பக்கம் 278 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

X வைத்த-கூர்மையாகிய, கழு - சூலம் (திவாகரம்)

O "பஞ்சொக்கும் அடிகள்" - கம்பராமா - மாரீசன் 70

** சித்ரத்தமிழ் கொண்டு பாட வேண்டினது - இவ் வேண்டுகோள் வயலூரில் சித்தித்தது

-பாடல் 860, 863-பக்கம் 530 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

†† பஞ்சபாணத்தன்

-மன்மதன்-பாடல் 19-பக்கம் 60-கீழ்க்குறிப்பு.

தேவர்கள் வாழவேண்டி, ஒளிவீசுவதும் வலிமை கொண்டதுமான மேருமலை (கிரவுஞ்சம்) கலக்குண்டு விழும்படிப் போர்புரிந்த ஒளி வேலனே!

பஞ்சேந்திரிய வழிகளாலும் சிவபிரானை உள்ளத்தில் ஊறவைத்து (அழுந்தவைத்து)த் தவநெறியில் அன்புள்ள (தேவர்களை)ச் சிறையிலிட்ட அசுரர்களைக்-

கொண்டுபோய்க் கூர்மைகொண்ட (கழு) சூலம் அவர்கள் நெஞ்சில் ஏறிப் பாயவும், கழுகுகள் கொத்தி விளையாடும்-படியும் அவர்கள் தலையை அரிந்தவனே!

மேகங்கள் சூழ்ந்த அந்த வயல்களிற் சங்குகள் உலவிப் பரவும் (பரந்திருக்கும்) **கும்பகோணத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

*(தாளைத் தினமும் அருள்வாயே)*

## 870.

பஞ்சுக்கு ஒப்பானதும் நடனம் செய்வதுமான பாதத்தை உடைய மாதர்களின்-

பாவம்(அல்லது குற்றம்) நிறைந்த உடம்புத் தோலிலே நான் படியாமல்-

செம்மையான சொற்கள் அமைந்துள்ள சித்ரத்- தமிழால் - (அழகிய தமிழால்) உன்னுடைய

செம்பொன்னுக்கு ஒப்பான அன்பைப் பெற மாட்டேனோ!

ஐந்து மலர்ப் பாணங்களைக் கொண்ட மன்மதனைப் பொருதழித்த தேவர் (சிவபிரானது)

(இடது) பாகத்தில் வாழ்கின்ற (பரா)சத்தியின் குமரனாம் தலைவனே!

யானை-ஐராவதத்தால்-வளர்க்கப்பட்ட தேவசேனையின் மலைபோன்ற கொங்கையை விரும்புவனே!

**கும்பகோணத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

*(உன் ஆர்வத்தைப் பெறுவேனோ)*

## 871. நாமவிசேடம்

*தானதன தந்த தானதன தந்த*
*தானதன தந்த தனதான*

**மா**லைதனில் வந்து வீதிதனில் நின்று
வாசமலர் சிந்து குழல்கோதி-
வாரிருத னங்கள் பூணொடுகு லுங்க
மால்பெருகி நின்ற மடவாரைச்;
சாலைவழி வந்து போமவர்க ணின்று
தாழ்குழல்கள் கண்டு தடுமாறித்-
தாகமயல் கொண்டு மாலிருள ழுந்தி
சாலமிக நொந்து தவியாமற்;
*காலையிலெ ழுந்து னாமமெமொ ழிந்து
காதலுமை மைந்த எனவோதிக்-
† காலமுமு ணர்ந்து ஞானவெளி கண்கள்
காணஅரு ளென்று பெறுவேனோ;
கோலமுட னன்று சூர்படையின் முன்பு
கோபமுட னின்ற குமரேசா-
கோதையிரு பங்கின் மேவவளர் **கும்ப
கோண** நகர் வந்த பெருமாளே. (5)

## 872. பிறப்பற

*தனத்த தந்தன தனதன தந்தத்*
*தனத்த தந்தன தனதன தந்தத்*
*தனத்த தந்தன தனதன தந்தத் தனதான*

**க**றுத்த குஞ்சியும் வெளிறி யெழுங்கொத்
துருத்த வெண்பலு மடைய விழுந்துட்
கருத்து டன்திகழ் மதியு மருண்டுச் சுருள்நோயாற்-
கலக்க முண்டல மலமுற‡ வெண்டிப்
பழுத்தெ ழும்பிய முதுகு முடங்கக்
கழுத்தில் வந்திளை யிரும லொதுங்கக்
கொழுமேனி;

---

* "காலை எழுந்து தொழுவார் தங்கள் கவலை களைவாய் கறைக் கண்டா" - சுந்தரர் 7-41-5. "சோதி நாமமே ஓதி உய்ம்மினே"-சம்பந்தர் 1-96-3.

† இறைவன் திருநாமங்களை ஓதுவதால் (ஞான) உணர்வும், ஞானக் கண்ணும் பெறலாகும்: 'உமை அலர்கொடு ஓதியர் உணர்வுடையோரே' - சம்பந்தர் 3-94-2; 'உமை உணர்பவர் கண்மதி மிகுவது கடனே' சம்பந்தர் 3-98-1.

‡ வெண்டி-நீர்வற்றி.

## 871.

**மா**லைப் பொழுதில் வந்து வீதியிலே நின்று, நறுமணம் உள்ள மலர்களைச் சிந்தும் கூந்தலைச் சீவிச் சிக்கெடுத்து

ரவிக்கை அணிந்த இரண்டு கொங்கைகளும் (அணிந் துள்ள) ஆபரணங்களுடன் குலுங்க, ஆசை-காமம் பெருகி நின்ற மாதர்களைத்-

தெருவின் வழியே வந்து போகின்ற ஆடவர்கள் நின்று (கண்டு) அம்மாதர்களின் தாழ்ந்து தொங்கும் கூந்தலைப் பார்த்து (உள்ளம்) தடுமாறிக்

காம மயக்கம் கொண்டு ஆசை இருளிலே அழுந்தி மிக மிக (மனம்) நொந்து (தவிப்பதுபோலத்) தவிப்பு உறாமல்

காலையில் எழுந்து, உன்னுடைய திருநாமங்களையே மொழிந்து, அன்பார்ந்த உமையின் குமரனே என்று ஓதி,

இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் எனப்படும் மூன்று காலங்களையும் உணரும்படியான சக்தியை அடைந்து, ஞானாகாச வெளியை (நான்) ஞானக் கண்கொண்டு காண, (உனது) திரு அருளை என்று பெறுவேனோ!

போர்க் கோலத்துடன் அன்று சூரனது சேனைகளின் முன்பு கோபத்துடன் நின்ற குமரேசனே!

மாதர்கள் (வள்ளி-தேவசேனை) இரண்டு பக்கங்களிலும் விளங்கக் (கல்வி, செல்வம்) வளரும் **கும்பகோணப்** பதியில் வந்து வீற்றிருக்கும் பெருமாளே! (அருளென்று பெறுவேனோ)

## 872.

**க**றுத்த மயிரும் வெளுத்துப்போய், எழுந்து வரிசையாய் உருவு கொண்டிருந்த வெள்ளைப் பற்களும் எல்லாம் விழுந்து போய், உள்ளே கருத்துக்களுடன் விளங்கியிருந்த புத்தியும் மருட்சி அடைந்து - மயக்க அறிவாகி, (உடலைச்) சுருட்டி மடக்கும் நோயால்-

கலக்கம் அடைந்து (இவ் வாழக்கை) போதும் போதும் என்னும் மனநிலை வர, நீர்வற்றிப் பழுத்த பழமாய், நிமிர்ந் தோங்கி இருந்த முதுகு வளைவு உறக், கழுத்திலே வந்து கோழையும் இருமலும் ஒதுங்கி நிற்கக், கொழுத்திருந்த மேனியானது-

அறத்தி ரங்கியொர் தடிகை நடுங்கப்
பிடித்*தி டும்புறு† மனைவியு நிந்தித்
தடுத்த மைந்தரும் வசைகள் விளம்பச் சடமாகி-

அழுக்க டைந்திடர் படுமுடல் பங்கப்
பிறப்பெ னுங்கட லழிய லொழிந்திட்
டடுத்தி ருந்திரு வடிதனை யென்றுற்
றிடுவேனோ;

புறத்த லம்பொடி படமிக வுங்கட்
டறப்பெ ருங்கடல் வயிறு குழம்பப்
‡புகட்ட ரங்கிய விரக துரங்கத் திறல்வீரா-

பொருப்பு ரம்படர் கிழிபட வென்றட்
டரக்கர் வன்றலை நெரிய நெருங்கிப்
புதைக்கு றுந்தசை குருதிகள் பொங்கப்
பொரும்வேலா;

சிறுத்த தண்டைய மதலையொ ரஞ்சச்
சினத்து மிஞ்சரி திரிதரு குன்றத்
தினைப்பு னந்திகழ் குறமகள் கொங்கைக்
கிரிமேவிச்-

செருக்கு நெஞ்சுடை முருக சிகண்டிப்
பரிச்சு மந்திடு குமர கடம்பத்
திருக்கு டந்தையி லுறைதரு கந்தப்
பெருமாளே.(6)

---

* இடும்பு - அவமதிப்பு.

† "மனையவள் மனம் வேறாய்....மாதர் சீயெனா
வாலர் சீயெனா" - திருப்புகழ் 862.

†† புகட் டரங்கிய - புகவிட்டு அரங்கிய; அரங்கிய-அரக்கிய.

மிகவும் (திரங்கி)-வற்றிச், சுருங்கி, ஒரு தடியைக் கையிலே நடுக்கத்துடன் பிடித்த, அவமதிப்புக் கிடமான மனைவியும் (நிந்தித்து) இகழ, பக்கத்திலுள்ள அடுத்துள்ள பிள்ளைகளும் (வசைகள் விளம்ப) பழிக்க, அறிவில்லாத பொருள் போலாகி,

உடலெலாம் அழுக்கு சேர, வேதனைப்படும் உடலுக்கு இடமாம் சேறுபோன்ற - (அல்லது பாவத்துக்கு இடமான) பிறப்பு என்கின்ற கடலில் அழிந்து போவது ஒழிந்து, (அடுத்திருந் திருவடிதனை) இரும் திருவடிகளை அடுத்து - பெருமை வாய்ந்த (உனது) திருவடிகளை அடுத்து - சரண்புக்கு என்று நான் பொருந்தி இருப்பேனோ!

வெளியிடங்கள் எல்லாம் பொடிபட்டு மிகவும் நிலை கலங்கவும், பெரிய கடலும் அதனது உட்புறமெல்லாம் குழம்பிக் கலங்கவும், (ஆங்காங்குள்ள) அசுரர்கள்மீது புகவிட்டு அவர்களை அரக்கிய - தேய்த்துச் சிதைத்த சாமர்த்தியமுள்ள குதிரையாகிய மயிலேறும் பராக்ரமசாலியாகிய வீரனே!

(பொருப்பு) கிரௌஞ்சகிரியின் (உரம்)-(படர்) படர் உரம் பரவியிருந்த வலிமை (பரந்த திண்மை) பிளவு உண்டு அழிந்து போகும்படி வெற்றியடைந்து, (பகைவர்களை) அட்டு-கொன்று, அரக்கர்களின் வலிமை கொண்ட தலைகள் நெரிபட்டு (அழிய) - நெருங்கச் சென்று உள்ளடங்கியுள்ள சதை, ரத்தம் இவைகள் (பொங்க) மேலெழப் போர்செய்த வேலனே!

சிறிய தண்டைகளை அணிந்தவனே! (மதலையோர்) பிள்ளைகள் பயப்படும்படி (அல்லது சிறிய தண்டைகள் அணிந்த (வேட்டுவக்) குழந்தைகள் பயப்படும்படி) (சினத்து மிஞ்சு அரி) கோபம் மிக்க சிங்கம் திரிகின்ற (வள்ளி) மலையில் தினைப்புனத்தில் விளங்கியிருந்த (குறமகள்) வள்ளியின் கொங்கையாம் மலையை (மேவி) விரும்பி, அடைந்து (அதனால்)

செருக்கு - மகிழ்ச்சிகொண்ட நெஞ்சத்தை உடைய முருகனே! மயில் என்னும் குதிரை சுமக்கின்ற குமரனே! கடம்பனே! **திருக்குடந்தையில்** (கும்பகோணத்தில்) வீற்றிருக்கும் கந்தப் பெருமாளே!

(திருவடிதனை யென்றுற் றிடுவேனோ)

## 873.

தனத்த தந்தன தானன தானன
தனத்த தந்தன தானன தானன
தனத்த தந்தன தானன தானன தனதான

செனித்தி டுஞ்சல*சாழலு மூழலும்
விளைத்தி டுங்குடல் பீறியு மீறிய
செருக்கொ டுஞ்சதை பீளையு மீளையு
முடலூடே

தெளித்தி டும்பல சாதியும் வாதியும்
இரைத்தி டுங்குல மேசில கால்படர்
சினத்தி டும்பவ நோயென வேயிதை
யனைவோருங்;

கனைத்தி டுங்கலி காலமி தோவென
வெடுத்தி டுஞ்சுடு காடுபு காவென
கவிழ்த்தி டுஞ்சட மோபொடி யாய்விடு
முடல்பேணிக்-

கடுக்க னுஞ்சில பூடண மாடைகள்
இருக்கி டுங்கலை யேபல வாசைகள்
கழித்தி டுஞ்சிவ யோகமு ஞானமு மருள்வாயே;

தனத்த னந்தன தானன தானன
திமித்தி திந்திமி தீதக தோதக
தகுத்து துந்துமி தாரைவி ராணமொ டடல்பேரி-

சமர்த்த மொன்றிய தானவர் சேனையை
வளைத்து வெஞ்சின வேல்விடு சேவக
சமத்து ணர்ந்திடு மாதவர் பாலருள்
புரிவோனே;

---

* சாழல் - கூத்துவகை; மகளிர் விளையாட்டு -
'நல்லார்தந் தோள்வீச்சு நற் சாழல்' - (சிலப் 3-13-உரை);

## 873.

*(செனித்திடும்)* பிறப்பு என்கிற *(சலம்)* பொய்ம்மையோடு கூடிய *(சாழலும்)* சாழல் விளையாட்டுப் போன்ற ஒரு விளையாட்டாகிய கூத்து என்ன, *(ஊழலும்)* அந்தப் பிறப்புடன் கூடிய *(ஊழலும்)* ஆபாசம் என்ன, பிறப்பில் ஏற்படும் குடல், அந்தக் குடலைக் கிழித்தெழுவது போல மேனோக்கி எழுகின்ற ஆணவம் என்ன! *(உடலூடே சதை பீளையும் ஈளையும்)* (அந்த உடலில் உள்ள) சதை, பீளை, கோழை என்ன!

ஏற்பட்ட பல ஜாதி என்ன! (தங்கள் ஜாதி மேற்பட்ட தென்று) வாதிப்பவர் என்ன! கூச்சலிட்டுப் பேசும் குலத்தவர் என்ன! இங்ஙனம் *(சிலகால்)* - சில சமயங்களில் *(படர்)* துன்பம் -வருத்தம்; *(சினத்திடும்)* கோபித்து எழுவதுபோல மிகுந்து எழும் *(பவநோய்)* பிறப்பு ஒரு நோய் என்றே இவ் வாழ்வை எல்லாரும்

ஒலித்து எழும் கலிகாலத்தின் கூத்தோ இது என்று கூறுவதும், *(பிணத்தை)* எடுங்கள் சுடுகாட்டுக்குப் போக என்று (கூறுவதும்), அங்கேபோய்க் கவிழ்க்கப்படுவதுமான இந்த உடல் *(தீயால்)* பொடியாகச் சாம்பலாய்விடும்; அத்தகைய உடலை நான் விரும்பிப் போற்றி-

(அவ்வுடலை அலங்கரிக்க) கடுக்கன் ஆதிய சில ஆபரணங்களை அணிவது என்ன! *(ஆடைகள்)* உடைகள் அணிவது என்ன, *(இருக்கு)* வேத மந்திரங்களாற் பெறப்படும் *(கலை)* சாத்திர நூல்கள் படிப்பது என்ன, பல திறத்த ஆசை வகைகளைக் கொண்டிருப்பது என்ன!- ஆக இவை எல்லாவற்றையும் ஒழிக்கவல்ல சிவ யோகத்தையும் சிவ ஞானத்தையும் அருள் புரிவாயாக.

தனத்த னந்தன தானன தானன....தகுத்து என்று *(துந்துமி)*, பறை, *(தாரை)* நீண்ட ஊதுங்குழல், *(விராணம்)* வீராணம்-பெரிய பறை, இவையுடன் *(அடல் பேரி)*-வெற்றி முரசு இவைகளுடன் கூடிப்

*(பொருதலுக்கு)* போருக்கு என்று கூடி வந்த அசுரர் சேனையை வளைத்துக் கொடிய கோபங்கொண்ட வேலாயுதத்தைச் செலுத்தின பராக்ரமசாலியே! (உனது *(சமத்து)* திறமையைத் தெரிந்துள்ள மாதவர் பால் - முநிவர்களுக்கு அருள் பாலிப்பவனே!

தினைப்பு னந்தனி லே*மய லாலொரு
மயிற்ப தந்தனி லேசர ணாஎென
திருப்பு யந்தரு மோகன மானினை யணைவோனே-
சிவக்கொ ழுஞ்சுட ரேபர னாகிய
தவத்தில் வந்தருள் பாலக்ரு பாகர
திருக்கு டந்தையில் வாழ்முரு காசுரர்
பெருமாளே.(7)

## சோமீச்சுரம்.

(இது சோமநாதர் கோயில். கும்பகோணத்திலுள்ள சிவாலயங்களி லொன்று. தேவார வைப்பு ஸ்தலம்.)

## 874. ஓத

தனனதன தனனதன தானான தானதன
தனனதன தனனதன தானான தானதன
தனனதன தனனதன தானான தானதன தனதான

கரியகுழல் சரியமுகம் வேர்வாட வாசமுறு
களபமுலை புளகமெழ நேரான வேல்விழிகள்
கயல்பொருது செயலதென நீள்பூச லாடநல
கனிவாயின்-
கமழ்குமுத அதரவிதழ் தேனூறல் பாயமிகு
கடலமுத முதவியிரு தோள்மாலை தாழவளை
கலகலென மொழிபதற மாமோக காதலது
கரைகாணா;
தெரியணுகு மெழுகுபத மாய்மேவி மேவியிணை
யிருவருட லொருவரென நாணாது பாயல்மிசை
† யிளமகளிர் கலவிதனி லேமூழ்கி யாமுகினு
மிமையாதே-

---

* 'பணியா என வள்ளி பதம் பணியும் தணியா அதி மோக தயாபரனே' (கந்-அநுபூதி-6).

† மனப்பாடஞ் செய்யவேண்டிய அருமைப் பாகம் இது முதல்.

'மகளிர் கலவிதனிலே மூழ்கி யாமுகினும்...இருபதமும் யானோத ஞானமதை யருள்வாயே' என இப் பாடலிற் கேட்டவர் "மடவார் தோள்...புணர்ந்து மதிமயங்கினும்...நின்பதங்கள் மறவேனே" என 1275-ஆம் பாடலிலும், 'மங்கையருடன் கலவி தாகமுண் டுழல்கினும் ...கழல் மறந்திடேனே' என 833-ஆம் பாடலிலும், 'மெல்லியர் காமக்கலவிக்கள்ளை மொண்டுண் டயர்கினும் வேல் மறவேன்' எனக் கந்தரலங்காரத்திலும் (37) திடத்துடன் கூறியுள்ளார்.

தினைப்புனத்திலே - காம இச்சையால் - ஒப்பற்ற மயில் போன்ற வள்ளியின் பாதத்தில் (சரண் நான் என) அடைக்கலம் நான் என்று (நீ)கூறத், தனது திருப்புயங்களை உனக்குத் தந்த மயக்கவல்ல மான் வள்ளியை அணைபவனே!

(சிவக்கொழுஞ்சுடரே) சிவத்தினின்றும் தோன்றிய செவ்விய சுடரே! (பரனாகிய தவத்தில் வந்தருள் பால க்ருபாகர) தவத்தில் வந்தருள் பரனாகிய பால க்ருபாகர - தவஞ்செய்வோர் பொருட்டுப் பரமனாக வெளித்தோன்றி வந்து அருளும் குழந்தைக் க்ருபாகரனே! **திருக்குடந்தை** (கும்ப-கோணத்தில்) - வாழும் முருகா! தேவர்கள் பெருமாளே!

(சிவயோகமும் ஞானமும் அருள்வாயே)

## சோமீச்சுரம்

## 874.

**க**றுத்த கூந்தல் சரிந்துவிழ, முகம் வேர்வுகொள்ள, நறுமணம் உள்ள (களபமுலை) கலவைச்சாந்து அணிந்துள்ள கொங்கை புளகாங்கிதம் கொள்ள, செவ்வையான வேல் போன்ற விழிகள் கயல்மீன்கள் பொருகின்ற (சண்டை செய்கின்ற) செயலை ஒக்கப் பெரிய பூசலைச் செய்ய (காதுகளோடு பொர), நல்ல கொவ்வைக்கனி போன்ற வாயில்-

நறுமணம் உள்ள குமுதமலர் ஒத்த அதரம் எனப்படும் இதழினின்றும் தேன் அனைய ஊறல் பாய, அது நிரம்பக் கடலமுதம் போன்ற அமுதத்தை உதவ, இரண்டு தோள்களிலும் மாலை தாழ்ந்து புரள, வளைகள் கலகல என்று ஒலிக்க, மொழிகள் பதற, மிக்க காம ஆசையானது கரை கடந்து பெருகி

எரியிற்பட்ட மெழுகின் நிலையை (மேவி - அடைந்து, மேவி இணை) இணையாக ஒன்றுபட்டு, இருவர் உடலும் ஒருவர் உடல் போல இணைந்து, கூச்சமில்லாமல், படுக்கையில் இளம் பெண்களுடன் புணர்ச்சியின்பத்தில் நான் முழுகி ஆழ்ந்திருந்தாலும், கண் இமை கொட்டுதலின்றி

இரவினிடை துயிலுகினும் யாரோடு பேசுகினும்
இளமையுமு னழகுபுனை யீராறு தோள்நிரையும்
இருபதமு மறுமுகமும் யானோத ஞானமதை
யருள்வாயே;

*உரியதவ நெறியில்நம நாராய ணாயவென
ஒருமதலை மொழியளவி லோராத கோபமுட
னுனதிறைவ னெதனிலுள னோதாய டாவெனுமு
னுறுதூணில்-

உரமுடைய அரிவடிவ தாய்மோதி வீழவிரல்
உகிர்புதைய இரணியனை மார்பீறி வாகைபுனை
† உவணபதி நெடியவனும் வேதாவும் நான்மறையு
முயர்வாக;

‡ வரியளிக ளிசைமுரல வாகான தோகையிள
மயிலிடையில் நடனமிட ஆகாச மூடுருவ
வளர்கமுகின் விரிகுலைகள் பூணார மாகியிட
மதில்சூழும்-

X மருதரசர் படைவிடுதி வீடாக நாடிமிக
மழவிடையின் மிசையிவரு **சோமீசர் கோயில்**தனில்
மகிழ்வுபெற வுறைமுருக னேபேணு வானவர்கள்
பெருமாளே. (1)

---

* இரணிய சம்மாரம்

-பாடல் 327-1 பக்கம் 317-கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† 'உபநிடத னெடியவனும்' என்றும் பாடம்.

‡ ஏழாவது அடி - ஒரு நாடகக்காட்சி - பாடல்-வண்டு, ஆடல்-மயில், கமுகு-ஆடல் பாடலுக்கு ஆபரணங்கள் இனாம் தரும் தலைவர்.

X முற்காலத்தில் கோயில்கள் மன்னர்களின் படை வீடாக உபயோகப் பட்டனவாம்.

"படைவீடு என்பது இன்னதென்று பத்துப் பாட்டில் ஒன்றாகிய மலைபடு கடாத்தில் விளக்கப்பட்டிருக்கிறது. சேயாற்றங்கரையில் நவிரம் என்னும் மலையில் காரியுண்டிக் கடவுளின் கோயில் சேனைகளாற் சூழப்பட்டிருந்ததென்று சொல்லியிருத்தல் இக்

(தொடர்ச்சி 557 ஆம் பக்கம் பார்க்க.)

இரவில் தூங்கினாலும், யாருடனாவது பேசிக்கொண்டு இருந்தாலும், உன்னுடைய இளமையையும் உன்னுடைய அழகு பூண்டுள்ள பன்னிரண்டு தோள் வரிசையையும், இரண்டு திருவடிகளையும், ஆறுமுகங்களையும், நான் ஓதும்படியான ஞானத்தை அருள்புரிவாயாக;

சரியான தவநெறியிலிருந்து "நம நாராயணாய" என்று ஒரு பிள்ளை (பிரகலாதன்) சொன்னவுடனே ஆராய்ச்சி அறிவு இல்லாத கோபத்துடன் "உன் கடவுள் எதனில் உளன் சொல்லடா" என்று கேட்டு முடியுமுன்னே அங்கிருந்த தூணில்-

வலிமையுடைய (நர) சிங்கத்தின் உருவமாய் (இரணியன்மேல்) மோதி அவனை விழச்செய்து, தனது விரல்களின் நகம் புதைய அவனுடைய மார்பைக் கீறிப் பிளந்து வெற்றி சூடினவனும், கருடனுக்குத் தலைவனும், நெடியவனும் (மாவலியின் பொருட்டு நீண்டவனும்) ஆன திருமாலும், பிரமனும், நான்கு வேதங்களும் மேன்மை பெற-

ரேகைகள் உள்ள வண்டுகள் இசை எழுப்ப, அழகுள்ள தோகை வாய்ந்த இளமயில் நடுவில் நடனம் செய்ய, ஆகாசத்தையும் ஊடுருவிச் செல்லும் அளவுக்கு வளர்ந்துள்ள கமுகமரத்தின் விரிந்த குலைகள் பூணுதற்குரிய ஹாரம் போல - ஆபரணமாக விளங்க, மதில் சூழ்ந்துள்ளதும்,

மருதரசர் (மருதநிலத்து மன்னர்கள்) (படைவிடுதி) பாசறையிடத்துக்குத் தக்க தலம் என மிக விரும்பத்தக்கதுமான **(சோமீசர் கோயிலில்)**, இளமை வாய்ந்த இடபத்தின்மேல் ஏறிவரும் சோமீசர் என்னும் திருநாமமுடைய சிவபிரானது கோயிலில் - மகிழ்ச்சியுடன் வீற்றிருக்கும் முருகனே! விரும்பி நிற்கும் தேவர்கள் பெருமாளே!

(ஓத ஞானமதை அருள்வாயே)

---

கருத்தைப் புலப்படுத்தும் ** நன்னன் என்பான் அந்த ஸ்தலத்தைப் பாதுகாத்தற்குப் படைகளை அங்கை வைத்திருந்தான்"

-சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும் - பக்கம் 57.

இந்த ஈற்றடியின் பொருள் பின்னும் ஆராயத் தக்கது.

## கொட்டையூர்.

(இது கும்பகோணத்துக்கு மேற்கு 2-மைல். திருநாவுக்கரசு ஸ்வாமிகளுடைய தேவாரம் பெற்றது.)

### 875. அடியார்களொடு கூட

தத்ததனத் தத்ததனத் தத்ததனத் தத்ததனத்
தத்ததனத் தத்ததனத் தனதான

பட்டுமணிக் கச்சிறுகக் கட்டியவிழ்த் துத்தரியப்
பத்தியின்முத் துச்செறிவெற் பிணையர்*மென்-
† பற்பமுகைக் குத்துமுலைத் தத்தையர்கைப் புக்குவசப்
பட்டுருகிக் கெட்ட வினைத் தொழிலாலே;

துட்டனெனக்‡ கட்டனெனப் பித்தனெனப் X ப்ரட்டனெனச்
சுற்றுமறச் சித்தனெனத் திரிவேனைத்-
துக்கமறுத் துக்கமலப் பொற்பதம்வைத் துப்பதவிச்
சுத்தியனைப் பத்தரில்வைத் தருள்வாயே;

சுட்டOபொருட் கட்டியின்மெய்ச் செக்கமலப்
பொற்கொடியைத்
துக்கமுறச் **சொர்க்கமுறக் கொடியாழார்-
சுத்தரதத் திற்கொடுபுக் குக்கடுகித் தெற்கடைசிச்;
சுற்றுவனத் திற்சிறைவைத் திடுதீரன்;

---

* என்-என்று சொல்லும். † பற்பம்-பத்மம், தாமரை.

‡ "கட்டராய் நின்று நீங்கள் காலத்தைக் கழிக்க வேண்டா" - அப்பர் 4-41-2.

"சிறு நாயினுங் கடையாய வெங்கட்டனேனையும்" -திருவாசகம் 30-2.

X ப்ரட்டன் - ப்ரஷ்டன்-

"அழுக்கரைக் கழுக்களாய பிரட்டரைக் காணா கண்" -திருவிசைப்பா 4-3.

O பொருட்கட்டி - பொற்கட்டி. சீதையைத் 'தங்க நிறத்தாள்' என்றார் - 868-ஆம் பாடலிலும்.

** சொர்க்க முறக் கொடி யாழார் சுத்த ரதம் - ஆகாயத்தை அளாவும் யாழ் (வீணைக்) கொடியைப் பெற்ற (ராவணனது) ரதம்.

(தொடர்ச்சி-பக்கம் 559 பார்க்க)

# கொட்டையூர்

## 875.

பட்டாலாகிய அழகிய ரவிக்கையை அழுத்தமாகக் கட்டியும் அவிழ்த்தும், (உத்தரியப் பத்தியின்) மேலாடையின் வரிசையின் கீழ் முத்து (மாலை) நெருங்கிய மலை யிரண்டாகும் என்று சொல்லத் தக்கனவும்-

தாமரை மொட்டுப் போன்றனவுமான குத்து முலைகளை உடைய கிளை போன்ற வேசையர்களின் கையில் அகப்பட்டு, அவர் தம் வசத்திலே சிக்கி உருகிக் கேடு தருவதும் வினையைப் பெருக்குவதுமான செயல்களிலே-(ஈடுபட்டுத்)-

துஷ்டன் என்றும், துன்பத்துக்கு ஆளானவன் என்றும், பித்தன் என்றும், (பிரட்டன்) நெறியினின்று வழுவினவன் என்றும், எங்கும் திரியும் (மறச்சித்தன்) பாவ எண்ணங்களை உடையவன் என்றும் திரிகின்ற என்னுடைய

துக்கங்களை ஒழித்துத், தாமரையன்ன அழகிய திருவடியில் என்னைச் சேர்த்தும், (பதவிச் சுத்தி) சுத்திப்பதவி-பரிசுத்தமான நல்ல பதவியை அணைந்துள்ள பக்தர் கூட்டத்திற் சேர்ப்பித்தும் அருள் புரிவாயாக.

சுட்ட தங்கக்கட்டி போன்ற தேகத்தை உடையவளும், செங்கமலத்தில் வீற்றிருக்கும் இலக்குமியுமேயான அழகிய கொடிபோன்ற சீதையைத் துக்கப்படும்படிச் செய்து, ஆகாயத்தை அளாவும் (யாழ்) வீணைக்கொடி விளங்கும்-

தூய்மை வாய்ந்த தேரில் (அவளை) எடுத்துக் கொண்டுபோய் வேகமாகத் தெற்குத் திசையை (அடைசி) நெருங்கி, வளைந்தமைந்த (அசோக) வனத்திற் சிறையில் வைத்த (ராவணன்) என்னும் தைரியசாலியின்

---

**ராவணனுக்கு வீணை (யாழ்) கொடி:**

*(சடாயு) ராவணனுடைய "காண்டகு நீண்ட **வீணைக்** கொடிப் பற்றி யொடித்துயர் வானவர் ஆசி கொண்டான்"*

*-கம்ப ராமா-சடாயு உயிர்-107.*

*கொட்டமறப்*புற்றரவச் செற்றமறச் சத்தமறக்*
*குற்றமறச் சுற்றமறப் பலதோளின்-*
*கொற்றமறப் பத்துமுடிக் கொத்துமறுத் திட்டதிறற்*
*† கொற்றர்பணிக்* **கொட்டைநகர்ப்** *பெருமாளே.*(1)

## சிவபுரம்

[கும்பகோணத்துக்குத் தென்கிழக்கு 3-மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகள் திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல்பெற்றது.]

## 876. ஞானநெறி பெற

*தனன தந்தன தானன தானன*
*தனன தந்தன தானன தானன*
*தனன தந்தன தானன தானன தனதான*

*‡ மனமெ னும்பொருள் வானறை கால்கனல்*
*புனலு டன்புவி கூடிய தோருடல்*
*வடிவு கொண்டதி லேபதிXமூணெழு வகையாலே-*
*வருசு கந்துய ராசையி லேயுழல்*
*மதியை வென்றுப ராபர* **ஞானநல்**
**வழிபெ றும்படி** *நாயடி யேனைநி* **னருள்சேராய்;**
*செனனி சங்கரி ஆரணி நாரணி*
*விமலி Oயெண்குண பூரணி காரணி*
*சிவைப ரம்பரை யாகிய பார்வதி அருள்பாலா;*

---

* **ராவணனுக்குப் "புற்றவரச் செற்றம்"** - *(பாம்பின் கோபம்)-*
'தீவிடத் தரவந்தானே, உருசெழு சீற்றம் பொங்கிப்
பணம்விரித் துயர்ந்த தொத்தான்' - கம்பராமா-சடாயு-65.

† **கொட்டையூரில் திருமால்** *(சிவனைப்)* **பூசித்து வணங்கினது:**

"ஓணத்தவன் போற்ற இட்டத்தன்"
"மால்பரவி வணங்கு தென்கோடீச் சுரவள்ளல்"
-கோடீச்சுரக் கோவை *137, 389.*

‡ "ஐம்பூதத்தான் ஆகியதோர் ஆக்கைக் குகையுட் படுமுயிர்"
- வேற்பத்து - *9.*

X பதிமூணு எழு வகை-*(தத்துவம் 96; இதிற் சிவதத்துவம் 5-நீங்க மற்ற) 91-தத்துவக்கூட்டம் - (பாடல் 157-பக்கம் 366-367.)*

*(தொடர்ச்சி 561 ஆம் பக்கம்)*

(கொட்டம்) இறுமாப்பு அழிவடைய, புற்றுப் பாம்பின் கோபம்போலக் கோபிக்கும் கோபம் அற்று ஒழிய, (சத்தம்) குரல் ஒலியும் அடங்க, சுற்றத்தார்கள் யாவரும் மாண்டுபோக, அவனுக்கு இருந்த பல தோள்களின்

வீரம் குலையப் பத்துமுடிக் கூட்டத்தை அறுத்துத் தள்ளின வீரம்கொண்ட (கொற்றர்) கொற்றவர்-வெற்றியாளராம் **ஸ்ரீ** ராமர் (திருமால்) பணிந்து பூசித்த **கொட்டையூரிற்** பெருமாளே!

*(பத்தரில் வைத் தருள்வாயே)*

## சிவபுரம்

## 876.

**ம**னமென்னும் ஒரு பொருளுடனே (வான்) ஆகாயம், (அறைகால்) எறிகின்ற காற்று, நெருப்பு, நீர், இவையுடன் (புவி) மண் (ஆகப் பஞ்சபூதங்கள்) கூடியதான ஒரு தேகம் என்னும் உருவத்தைக் கொண்டு, அதிலே (13 x 7) 91 தத்துவக் கூட்டங்களின் கூறுபாடுகளாலே-

ஏற்படுகின்ற இன்பம், துன்பம், ஆசை எனும் இவற்றிலே அலைச்சலுறுகின்ற என் புத்தியை நான் ஜெயித்து அடக்கி மிக மேலானதான ஞானமென்னும் நன்னெறியைப் பெறும்படியாக, நாயனைய அடியேனுக்கு உன்னுடைய திருவருளைக் கூட்டுவிப்பாயாக!

(ஜெனனி) (உலகங்களின்) தோற்றத்துக்கு ஆதாரமானவள், சங்கரி, (ஆரணி) வேத முதல்வி (அல்லது) ஆத்திமலரணிந்தவள், நாராயணி, (விமலி) குற்றமற்றவள், எண் குணங்களும் நிறைந்தவள், எவற்றிற்கும் காரணமானவள், சிவை, பராபரை ஆகிய பார்வதிதேவி அருளிய குழந்தையே!

---

O எண்குணம்-பாடல் 766-பக்கம் 282 கீழ்க்குறிப்பு

எண் குணங்களாவன - தன் வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றல் உடைமை, வரம்பில் இன்பம் உடைமை (திருக்குறள் (9) உரை).

சிறைபு குஞ்சுரர் மாதவர் மேல்பெற
அசுரர் தங்கிளை யானது வேரற
*சிவனு கந்தருள் கூர்தரு வேல்விடு முருகோனே;
† கனக னங்கையி னாலறை தூணிடை
மனித சிங்கம தாய்வரை பார்திசை
கடல்க லங்கிட வேபொரு தேயுகிர் முனையாலே-
கதற வென்றுடல் கீணவ னாருயி
ருதிர முஞ்சித றாதமு தாயுணு
கமல வுந்திய னாகிய மால்திரு மருகோனே;
தினக ரன்சிலை வேளருள் மாதவர்
சுரர்க ளிந்திர னாருர காதிபர்
திசைமு கன்செழு மாமறை யோர்புக ழழகோனே-
‡ திரும டந்தையர் நாலிரு வோர்நிறை
அகமொ டம்xபொனி னாலய நீடிய
**சிவபு ரந்தனில்** வாழ்குரு நாயக
பெருமாளே! (1)

## திருநாகேச்சுரம்.

*(ரெயில்வே ஸ்டேஷன். கும்பகோணத்துக்குக் கிழக்கு 4-மைல். மூவர் பாடலும் பெற்றது.)*

## 877. கடையாய பிறப்பினர்

தானான தானத் தனத்த தத்தன
தானான தானத் தனத்த தத்தன
தானான தானத் தனத்த தத்தன தனதான-

ஆசார வீனக் குதர்க்க துட்டர்கள்
மாதாபி தாவைப் பழித்த துட்டர்கள்
ஆமாவி னூனைச் செகுத்த துட்டர்கள் பரதாரம்-

---

* முருகவேளுக்குச் சிவபிரான் வேல் தந்தது:
"அவர் ஈதரு போர் வேலவ" பாடல் 779-பக்கம் 314 கீழ்க்குறிப்பு.

† இரணிய சம்மாரம்:- பாடல் 327-1.பக்கம் 317 கீழ்க்குறிப்பு.

‡ திரு மடந்தையர் நாலிருவோர் - அஷ்ட லக்ஷ்மி-தனலக்ஷ்மி, தானிய லக்ஷ்மி, தைரிய லக்ஷ்மி, வீர லக்ஷ்மி, வித்தியா லக்ஷ்மி, கீர்த்தி லக்ஷ்மி, விஜய லக்ஷ்மி, ராஜ்ய லக்ஷ்மி.

[தொடர்ச்சி 563 பக்கம்.]

சிறையிலடைபட்டிருந்த தேவர்களும், பெரிய முநிவர்களும் மேலான சுக நிலையைப்பெற, அசுரர்களுடைய கூட்டமெல்லாம் வேரற்றழியச் சிவபெருமான் மகிழ்ந்து (உனக்கு) அருளிய கூர்மைகொண்ட வேலைச் செலுத்தின முருகனே!

(கனகன்) இரணியன் தனது அங்கையால் அறைந்த தூணினின்றும் (மனித சிங்கமதாய்) நரசிங்கமாய், மலை, பூமி, திசைகள், கடல் இவையாவும் கலக்கம் கொள்ளும்படித் (தோன்றி) (அந்த இரணியனுடன்) போர்செய்து நகத்தின் நுனியாலே

(அந்த இரணியனைக்) கதறியழும்படிச் செயங்கொண்டு அவன் உடலைக் கீறிப் பிளந்து, அவனது அரிய உயிரை இரத்தம் சிதறாதவண் ணம் அமுதாக உண்ட தாமரை போலும் (உந்தி) கொப்பூழை உடையவனாகிய திருமாலின் அழகிய மருகனே!

சூரியன். (கரும்பு) வில்கொண்ட (வேள்) மன்மதன், அருள் நிறைந்த முநிவர்கள், தேவர்கள், இந்திரர்கள், நாகலோகத்துத் தலைவர்கள், பிரமன், செழுவிய சிறந்த அந்தணர்கள்-போற்றிப் புகழும் அழகனே!

அஷ்ட லக்ஷ்மிகள் நிறைந்த வீடுகளுடன், அழகிய பொன்னால் ஆய (ஆலயம்) கோயில் சிறப்புற்று விளங்கும் **சிவபுரம்** என்னும் தலத்தில் வாழ்கின்ற குருமூர்த்தியே! பெருமாளே! (ஞானநல் வழிபெறும்படி....அருள் சேராய்).

## திருநாகேச்சுரம்

## 877.

**ஆ**சார ஒழுக்கங்களில் குறைபாடு உடையவர்களாய் விதண்டாவாதம் (முறைகெட்ட தருக்கம்) செய்பவரான துஷ்டர்கள், தாய் தந்தையரைப் பழிக்கின்ற துஷ்டர்கள், (ஆமா) பசுவின் மாமிசத்துக்காக அதைக் கொல்லும் துஷ்டர்கள், பிறன் மனைவியை-

---

X அகமொ டம்பொனின் ஆலயம்:
'நகர்மதிள் கனம் மருவிய சிவபுரம்' (கனம் - பொன்). சம்பந்தர் 1-21-5.

ஆகாதெ னாமற் பொசித்த துட்டர்கள்
நானாவு பாயச் சரித்ர துட்டர்கள்
ஆவேச நீரைக் குடித்த துட்டர்கள்
தமியோர்சொங்;

கூசாது சேரப் பறித்த துட்டர்கள்
ஊரார்க ளாசைப் பிதற்று துட்டர்கள்
கோலால வாள்விற் செருக்கு துட்டர்கள் குருசேவை-

கூடாத பாவத் தவத்த துட்டர்கள்
ஈயாது தேடிப் புதைத்த துட்டர்கள்
கோமாள நாயிற் கடைப்பி றப்பினி லுழல்வாரே;

* வீசாவி சாலப் பொருப்பெ டுத்தெறி
பேரார வாரச் சமுத்தி ரத்தினில்
மீளாம லோடித் துரத்தி யுட்குறு மொருமாவை-

வேரோடு வீழத் தறித்த டுக்கிய
போராடு சாமர்த் தியத்தி ருக்கையில்
வேலாயு தா† மெய்த் திருப்பு கழ்ப்பெறு
வயலூரா;

நாசாதி ப்ரா ரத் ததுக்க மிக்கவர்
மாயாவி காரத் தியக்க றுத்தருள்
ஞானோப தேசப் ப்ரசித்த சற்குரு வடிவான-

---

* விசா விசாலப் பொருப்பு எடுத்தெறி...சமுத்திரம்:
'மலைக்கு நிகரொப்பன வன்திரைகள் வலித்தெற்றி முழங்கி...
அலைக்குங் கடல்' - சுந்தரர் 7-4-1.
'மலைக் குவடெனத் திரை' - சம்பந்தர் 3-76-1.

† அருணகிரியார் தடுத்தாட் கொள்ளப்பட்டுத் திருப்புகழ் நித்தம் ஓதும் பேற்றினைப் பெற்ற தலம் - வயலூர்
-திருப்புகழ் 105, 135 பார்க்க.

(இச்சித்தல்) கூடாது என்னும் நல்லறிவு இல்லாமல் (பொசித்த) அனுபவித்த துஷ்டர்கள், பலவித தந்திரச் செயல்களைச் செய்த வரலாற்றை உடைய துஷ்டர்கள், (ஆவேச நீரை)க் கள்ளைக் குடித்த துஷ்டர்கள். (தமியோர்) திக்கற்றவர்களின் (சொம்) சொத்தைக்-

கூச்சப்படாமல் தமக்குச் சேரும்படி பிடுங்கின துஷ்டர்கள், ஊரார்களுடைய (எல்லாருடைய) ஆசைகளையும் (தாமே கொண்டு) அறிவின்றிக் குழறும் துஷ்டர்கள், (கோலால) கோலாகல - ஆடம்பரத்துடன் வாள் போரிலும் விற்போரிலும் அகந்தை பூண்டு (தீயன செய்யும்) துஷ்டர்கள் - குருவின் சேவை

கிடைக்கப்பெறாத (பாவத்து அவத்த) பாவமும் கேடும் கொண்ட துஷ்டர்கள், ஒருவருக்கும் கொடுக்காமல் தேடித் தேடிப் (பொருளைப்) புதைத்து - மறைத்துச் சேகரிக்கும் துஷ்டர்கள் ஆகிய இந்தத் துஷ்டர்கள் யாவரும் (கோமாள நாயில்) கும்மாளம் போடும் நாயின் இழிவான பிறப்பை அடைந்து அதில் அலைச்சல் உறுவார்கள்-

வீசிப் பெரிய (மலையை எடுத்து) மலைபோன்ற அலைகளை எடுத்து எறிகின்ற மிக்க ஒலியைப் பெருக்கும் கடலில் (பகைவன் - சூரன்) திரும்பமுடியாத வகையில் ஓடி (அவனைத்) துரத்திப், பயம்கொண்ட அந்த ஒப்பற்ற மாமரமாம் சூரனை-

வேருடன் விழும்படியாக வெட்டிக் குவித்த போரினைச் செய்ய திறமை வாய்ந்ததும் (உனது) திருக்கையில் உள்ளதுமான வேலாயுதனே! மெய்ம்மையே வாய்ந்த (உனது) திருப்புகழை (யான் ஓதி நீ) பெறவைத்த வயலூரனே!

(நாசம்) கேடு முதலிய தீயன பயக்கும் (பிராரத்த துக்கம்) இம்மையில் அனுபவிக்கவேண்டிய பழவினையால் வரும் துக்கம் மிக்கவர்களுடைய மாயை சம்பந்தமாய்க் கவலையைத் தரும் மயக்கத்தை ஒழித்தருளும் ஞான உபதேசம் செய்த கீர்த்தியைக் கொண்ட சற்குரு வடிவமான

நாதாவெ னாமுற் றுதித்தி டப்* புவி
யாதார மாய்கைக் கு† முட்ட முற்றருள்
**நாகேச** நாமத் தகப்பன் மெச்சிய பெருமாளே.(1)

**கூந்தலூர்.**

[இது கும்பகோணத்துக்குத் தென்கிழக்கு 7-மைல் தூரத்திலுள்ள 'பேணு பெருந்துறை' என்னுந் தலத்துக்கு அருகிலுள்ளது. தேவார வைப்பு ஸ்தலம்.] அரிசிலாற்றின் தென்கரையில் உளது; வடகரையில் 'கருவிலி' என்னும் தலம் உளது.

## 878. பூசிக்க

தனதன தனதன தாந்த தானன
தனதன தனதன தாந்த தானன
தனதன தனதன தாந்த தானன தனதான

தரையினில் வெகுவழி சார்ந்த மூடனை
வெறியனை நிறைபொறை வேண்டி டாமத
சடலனை மகிமைகள் தாழ்ந்த வீணனை
மிகுகேள்வி-
தவநெறி தனைவிடு தாண்டு காலியை
யவமதி யதனில்பொ லாங்கு தீமைசெய்
‡ சமடனை வலியஅ சாங்க மாகிய தமியேனை;
விரைசெறி குழலியர் வீம்பு நாரியர்
மதிமுக வனிதையர் வாஞ்சை மோகியர்
விழிவலை மகளிரொ டாங்கு கூடிய வினையேனை-
X வெகுமல ரதுகொடு வேண்டி யாகிலு
மொருமல ரிலைகொடு மோர்ந்து யானுனை
விதமுறு பரிவொடு வீழ்ந்து **தாடொழ அருள்வாயே;**

---

* புவி ஆதாரமாய்கைக்கு - உலகுக்கெல்லாம் ஆதாரமாய்ப் பயன் படும்படியான ஒரு நீதிநெறி விளக்கம். அத்தகைய விளக்கப் பொருளை முருகவேள் சிவனுக்கு உபதேசித்தார். அங்ஙனம் சிவபிராற்கு அவர் உபதேசித்த பொருள் 'வள்ளிச் சன்மார்க்கமாம்' என்று அருணகிரியார் 317-ஆம் பாடலில் விளக்கியுள்ளார்; ஆதலால் உலகினோர் உய்வதற்கு ஆதாரம் அந்த வள்ளிச் சன்மார்க்கத்தைக் கைப்பற்றுதலேயாம். -(பாடல் 317-பக்கம் 288-கீழ்க்குறிப்பு).

† "முட்ட முற்றருள்" - பிரணவப் பொருள் முழுமையும் விவரித்து விளக்குதல் - "பிரணவ முதுபொருட் செறிவெலாம் மொழிதரக் கேட்டான்" - தணிகைப் புராணம்-வீராட்ட-117.

‡ சமடன் - மசடன் - என்பதன் திரிபு எனக் கொள்ளலாம்; சமடன்-மடமையோடு கூடினவன் எனவும் பொருள் காண்பர்.

X இந்த அடி மனப்பாடஞ் செய்யத்தக்க அருமையான அடி.

நாதனே!' - என்று முன்னொருகாலத்தில் (உன்னை உன் தந்தை) துதிசெய்ய, புவி ஆதாரம் ஆய்கைக்கு - உலகினருக்கு ஒரு ஆதரவுச் சாதனம் (பிரமாணம்) ஆகும் பொருட்டு - முழுதும் நன்றாக நீ அருளிய **'நாகேசன்'** என்னும் திருப்பெயரை உடைய தந்தையால் (சிவபிரானால்) மெச்சப்பெற்ற பெருமாளே!

(துட்டர்கள் ...கடைப்பிறப்பினில் உழல்வாரே)

## கூந்தலூர்

## 878.

இந்தப் பூமியிலே நல்ல நெறியில் நில்லாது பல (தீய) வழிகளிலும் சார்ந்துள்ள மூடனாகிய என்னை, குடிவெறி கொண்டவன் போன்ற பித்தனை, (நிறை) மனத்தைக் கற்புவழியில் நிறுத்துதல், (பொறை) பொறுமை அடக்கம் இவை இருக்கவேண்டும் என்கின்ற விருப்பமே இல்லாத (மத சடலனை) செருக்குக் கொண்ட அறிவிலாப் பொருள் போன்றவனை, ஒருவித பெருமையும் இல்லாது தாழ் நிலையில் இருக்கும் வீணனை, நிரம்பின கேள்வி,

தவவழி இவைகளை விட்டுத் (தாண்டு காலியை) கண்டவழியில் திரிபவனை, (அவமதியதனில்) கெட்ட புத்தியால் - பயனற்ற புத்தியால் - (பொல்லாங்கு) கேடு, தீமை செய்கின்ற (சமடனை) மசடனை - குணங்கெட்டவனை, வேண்டுமென்றே சாதியில் விலக்கப்பட்டவனாய்க் கதியற்ற-வனை (அல்லது, ஒழுக்கம் இல்லாத கதியிலியை)

நறுமணம் நிறைந்த கூந்தலை உடையவர், பிடிவாதமுள்ள மாதர், சந்திரனை ஒத்த முகத்தை உடைய மாதர், விருப்பத்தை எழுப்பும் காமமயக்கிகள், கண் என்னும் வலையை வீசும் மகளிர் - இத் தகையோருடன் அவ்வச் சமயங்களில் கூடிய தொழில் உடையவனாகிய நான்-

நிரம்ப மலர்கொண்டு விரும்பிப் பூசித்தாகிலும், அல்லது ஒரு பூவோ ஒரு இலையோ கொண்டாகிலும். (உன்னை) நினைத்து, நல்ல வகையான அன்புடன் கீழே வீழ்ந்து உனது திருவடியைத் தொழுமாறு அருளுவாயாக;

ஒருபது சிரமிசை போந்த ராவண
னிருபது புயமுட னேந்து*மேதியு
†மொருகணை தனிலற வாங்கு மாயவன் மருகோனே-
உனதடி யவர்புக ழாய்ந்த நூலின
ரமரர்கள் முனிவர்க‡ளீந்த பாலகர்
உயர்கதி பெறஅரு ளோங்கு மாமயி லுறைவோனே;
குரைகழல் பணிவொடு கூம்பி டார்பொரு
களமிசை யறமது தீர்ந்த சூரர்கள்
குலமுழு தனைவரு மாய்ந்து தூளெழ
முனிவோனே-
Xகொடுவிட மதுதனை வாங்கி யேதிரு
மிடறினி லிருவென ஏந்து மீசுரர்
குருபர னெனவரு கூந்த லூருறை
பெருமாளே. (1)

## திருச்சத்திமுத்தம்.

[கும்பகோணத்துக்குத் தென்மேற்கு 4-மைல். திருநாவுக்கரசு ஸ்வாமிகளுடைய தேவாரம் பெற்றது.]

## 879. மாதர்மீது மயக்கு அற

தனதனன தத்தத்த தத்தத்த தத்ததன
தனதனன தத்தத்த தத்தத்த தத்ததன
தனதனன தத்தத்த தத்தத்த தத்ததன தனதான

குடகரிம ருப்பிற்க திர்த்துப்ர மிக்கமிக
Oவுரமிடநெ ருக்கிப்பி டித்துப்பு டைத்துவளர்
கனககுட மொத்துக்க னத்துப்பெ ருத்தமணி
யணியாலே-

---

* ஏதி - வாள்.

† ஒரு கணை வாங்கினது - பாடல் 452-பக்கம் 6 கீழ்க்குறிப்பு

‡ ஈந்த பாலகர் - கொடுத்து ரக்ஷிப்போர்.

X சிவபெருமான் விடத்தை வாங்கி உண்டது-
"அழல்கான்ற நஞ்சை எனத்தா என வாங்கியதுண்ட
கண்டன்" - சம்பந்தர் 2-19-10.
"நஞ்சைக் கண்டத் தடக்கு மதுவும் நன்மைப் பொருள்
போலும்" - சம்பந்தர் 1-69-2.

[தொடர்ச்சி 569-ஆம் பக்கம் பார்க்க]

*ஒப்பற்ற பத்துத் தலைகளுடன் (போருக்கு) வந்த ராவணன், இருபது கரங்களுடன் ஏந்தின வாளானது தனது ஒரே பாணத்தால் அற்றுவிழும்படி (பாணத்தைச்) செலுத்தின திருமாலின் மருகனே!*

*உன்னுடைய அடியார்களுடைய புகழை ஆராய்ந்த நூல் வல்லவர்களும், அல்லது உனது அடியார்களும், (உனது) திருப்புகழை ஆய்ந்த நூல் வல்லவர்களும், தேவர்களும், முநிவர்களும், கொடையால் ரக்ஷிப்போர்களும், உயர்ந்த நற்கதியைப்பெற, அருள் விளங்கும் அழகிய மயிலில் வீற்றிருப்பவனே!*

*ஒலிக்கின்ற உனது திருவடியைத் தாழ்மையுடன் கும்பிடாதவர்களும், சண்டை செய்யும் போர்க்களத்தே தருமநெறியைக் கைவிட்டவர்களுமான சூராதிகளின் குல முழுமையும் - அசுரர்கள் யாவரும் - மாண்டுபோய்ப் பொடியாகும்படிக் கோபித்தவனே!*

*பொல்லாத விஷத்தைக் 'கொடு' என வாங்கி அழகிய கழுத்தினில் 'இரு' என்று அதை நிறுத்தி, அங்கேயே அதைத் தாங்கி நிலைக்கவைத்த சிவபிரானுக்குக் குருமூர்த்தி என வந்துள்ள பெருமாளே! **கூந்தலூர்** என்னும் தலத்தில் உறைகின்ற பெருமாளே!*

*(தாள் தொழ அருள்வாயே)*

## திருச்சத்திமுத்தம்.

## 879.

*(கூடகரி) காட்டுயானையின் (அல்லது) மதயானையின், தந்தம்போலக் (கதிர்த்து) - ஒளியுடன் வெளிப்பட்டு யாவரும் மிகவும் பிரமிக்கத்தக்கவகையில், மார்பிடம் முழுமையும் நெருக்கமாக அடைத்துப் பருத்து வளர்கின்றதும், பொற்குடம் போன்றதும், பெரிதாயுள்ள ரத்னாபரணத்தாலே கனம் கொண்டுள்ளதும்,*

---

O **உரம் இடம் நெருக்குதல்:**

*"ஈர்க்கிடை போகா இளமுலை மாதர்" -திருவாசகம்-போற்றி 34.*

*"இடையீர்போகா இளமுலை" - சம்பந்தர் 1-54-2.*

கதிர்திகழு செப்பைக்க திக்கப்ப தித்துமகிழ்
கமலமுகை பட்சத்தி ருத்திப்பொ ருத்துமுலை
கமழ்விரைகொள் செச்சைக்க லப்பைப்பொ
தித்ததனை விலகாது;

கடுவைவடு வைப்பற்றி விற்சிக்க வைத்தசெய
லெனநிறமி யற்றிக்கு யிற்றிப்பு ரட்டிவரு
கயல்விழிவெ ருட்டித்து ரத்திச்செ விக்குழையின்
மிசைதாவுங்-

களமதன னுக்குச்ச யத்தைப்ப டைத்துலவு
கடுமொழிப யிற்றக்க ளைத்துக்கொ டிச்சியர்கள்
கணியினில கப்பட்ட ழுத்தத்து யர்ப்படுவ
தொழியேனோ;

*அடலைபுனை முக்கட்ப ரற்குப்பொ ருட்சொலரு
மறைதனையு ணர்த்திச்செ கத்தைப்† பெ ருத்தமயில்
அதனைமுன டத்திக்க ணத்திற்றி ரித்துவரு
மழகோனே-

அபகடமு ரைத்தத்த மெத்தப்ப டைத்துலகி
‡லெளியரைம ருட்டிச்செ கத்திற்பி ழைக்கவெணு
மசடர்தம னத்தைக்க லக்கித்து ணித்தடரு
மதிசூரா;

விடவரவ ணைக்குட்டு யிற்கொட்க்ரு பைக்கடவுள்
Xஉலவுமலை செப்பைச்செ விக்கட்செ றித்துமிக
விரைவிலுவ ணத்திற்சி றக்கப்ரி யத்தில்வரு
மொருமாயோன்-

---

* அடலை - சாம்பல். "சாம்பல் பூசுவர்" - அப்பர் 5-25-9.
"அடலைகொண்டு....பாண்டியன் சுரந்தணித்து"
-திருவிளை-சமணரை-82.

† மயில்மீது செகத்தைச் சுற்றியது - பாடல் 267-பக்கம் 164; பாடல் 184-பக்கம் 430-கீழ்க்குறிப்பு.

‡ "எளியரை வலியர் வாட்டின் வலியரை இருநீர் வைப்பின் அளியறத் தெய்வம் வாட்டும்"
-காஞ்சிப்புராணம் - கடவுள் வாழ்த்து.

X உலவுமலை செப்பு - யானை கூப்பிட்டது - இதன் வரலாறு பாடல் 110 பக்கம் 262-கீழ்க்குறிப்பு.

ஒளி விளங்கும் சிமிழ்போல நன்கு தோன்றும்படி பொருத்திவைக்கப்பட்டு, மகிழ்ச்சியை ஊட்டும் தாமரையின் மொட்டைப்போல அன்புடன் பாராட்டப்பட்டு அமைந்துளதுமான கொங்கையை, நறுமணம் வீசும் வாசனைகொண்ட செந்நிறமுள்ள (கலப்பை) கலவைச் சாந்து (பொதிந்துள்ள) நிரம்பியுள்ள கொங்கையை - விட்டு நீங்காது-

விஷத்தையும், மாவடுவையும் போன்று (வில்) புருவமான வில்லின் கீழ்ச் சிக்கவைத்த செயலுக்கு ஒப்ப நின்று, (நிறம் இயற்றிக் குயிற்றி) ஒளி தருதலைச் செய்து - ஒளிவீசிப் புரள்வதாய் எழுகின்ற கயல்மீன் போன்ற கண்கள் வெருட்டியும், ஓட்டியும், காதில் உள்ள குழையின்மீது பாய - (அதனால்)

க(ள்)ள மதனனுக்கு - திருட்டுத்தனம் உள்ள மன்மதனுக்கு வெற்றியைத் தந்து உலவுகின்ற கடுமையான சொற்களை (அல்லது விஷம் போன்ற மொழியை) அதிகமாகப் பேச அதனால் நான் களைத்துச் சோர்வு உற்று அந்தக் (கொடிச்சியர்களின்) கொடி போன்ற பெண்களின் (கணியினில்) க(ண்)ணியினில் - வலையில் அகப்பட்டு (அந்தச் சிக்கு) என்னை அழுத்துவதால் துன்பப்படுவதை ஒழிக்க மாட்டேனோ! நீக்கேனோ!

சாம்பல் பூசும் முக்கண் பெருமானுக்குப் பொருள் சொல்லி அரிய மறைப்பொருளை உபதேசித்து, உலகத்தைப் பெருத்த மயிலை முன்பு நடத்தி, ஒரு கணப்பொழுதிற் சுற்றி வந்த அழகனே!

(அபகடம்) பொல்லாங்கு - வஞ்சகப் பேச்சைப் பேசி, (அத்தம்) பொருட்செல்வம் நிரம்ப உடையவராய், உலகிலே எளியோரைப் பயமுறுத்தி மயக்கிப் பூமியிற் பிழைக்க எண்ணுகின்ற மூடர்களின் மனத்தைக் கலக்கியும், (துணித்தும்) வெட்டிப் பிளந்தும், நெருக்கும் அதி சூரனே!

விஷங்கொண்ட பாம்பணையில் துயில் கொள்ளும் கிருபா மூர்த்தி, யானை (கஜேந்திரனுடைய) (செப்பை) செப்புதலை - கூச்சலிட்டழைத்ததைக் காதில் நன்கு ஏற்று மிக்க வேகத்துடனே கருடன்மீது விளங்கிப் பிரியத்துடனே வந்த ஒப்பற்ற திருமால்-

விழைமருக கொக்கிற்ச முத்ரத்தி லூற்றவனை
நெறுநெறென வெட்டுக்ர சத்தித்த னிப்படைய
விடையவர்தி ருச்சத்தி முத்தத்தி னிற்குலவு
பெருமாளே.(1)

## திருவலஞ்சுழி.

[கும்பகோணத்துக்கு மேற்கு 4-மைல். திருஞான சம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல் பெற்றது.]

### 880. மாதர் உறவு அற

தனன தந்தன தானா தானன
தனன தந்தன தானா தானன
தனன தந்தன தானா தானன தனதான

மகர குண்டல மீதே மோதுவ
*வருண பங்கய மோபூ வோடையில்
மருவு செங்கழு நீரோ† நீவிடு வடிவேலோ-

மதன்வி டுங்கணை யோவா ளோசில
கயல்கள் கெண்டைக ளோசே லோகொலை
மறலி யென்பவ னோமா னோமது நுகர்கீத;

முகர வண்டின மோவான் மேலெழு
‡ நிலவ ருந்துபு ளோமா தேவருண்
முதிய வெங்கடு வோதே மாவடு வகிரோபார்-

Xமுடிவெ னுங்கட லோயா தோவென
வுலவுO கண்கொடு நேரே சூறைகொள்
முறைய றிந்தப சாசே போல்பவ ருறவாமோ;

---

* வருணம் - எனக் கொண்டால், நிறமுள்ள அல்லது நீரில் உள்ள - எனப் பொருள் காணவும்.

† நீ விடுவேல் - பாடல் 1154-பார்க்க.

‡ நில அருந்து புள் - பாடல் 926-பார்க்க.

X "கடலினும் பெரிய கண்கள்" - கம்பராமா-மாரீசன்-70.

O முதல் நான்கு அடிகள் "கண்" வர்ணனை - பாடல்கள் 99, 126, 552, 578; 926, 943, 1049-போன்றது.

அன்பு கொள்ளும் மருகனே! (கொக்கில்) மாமரமாகக் கடலில் நின்ற சூரனை நெறு நெறென வெட்டின உக்ர வேலாயுதம் என்னும் ஒப்பற்ற படையை உடையவனே! இடபவாகனங் கொண்ட சிவபிரான் (வீற்றிருக்கும்) **திருச்சத்திமுத்தம்** என்னும் தலத்தில் விளங்கும் பெருமாளே!

(துயர்ப்படுவ தொழியேனோ)

## திருவலஞ்சுழி

## 880.

**ம**கரமீன்போலச் செய்யப்பட்ட(குண்டலம்)காதணியின் மேலே வந்து தாக்குவனவாய் (அருண பங்கயமோ பூ ஓடையில்) தாமரைக்குளத்தில் உள்ள சிவந்த தாமரையோ, பொருந்திய செங்கழுநீர்ப் பூவோ, நீ செலுத்தும் கூரிய வேலோ,

மன்மதன் செலுத்தும் பாணமோ, வாளோ, சில கயல்மீன்களோ, கெண்டைமீன்களோ, சேல்மீன்களோ, கொலைத் தொழில் புரியும் யமன் என்னப்பட்டவனோ, மானோ, தேன் உண்டு இசை

ஒலிக்கும் வண்டின் கூட்டமோ, ஆகாயத்தின் மீது எழுந்து நிலவை சந்திரிகையை உண்ணும் புள்ளோ - சகோரப்பக்ஷியோ (நிலாமுகிப் புள்ளோ), மகாதேவர் - சிவபிரான்-உண்ட பழைய கொடிய (ஆலகால) விஷமோ, (தேமா) தித்திக்கும் மாவின் வடுவின் பிளப்போ, உலகு

முடியும்போதெழும் கடலோ, (பின்) எதுவோ என்று சொல்லும்படி உலவுகின்றதான கண்கள் கொண்டு நேரே கொள்ளையடிக்கும் வழியைத் தெரிந்துள்ள பிசாசே ஒத்தவரான (பொதுமகளிரின்) சம்பந்தம் ஆமோ! (சம்பந்தம் கூடாது என்றபடி)

*நிகரில் வஞ்சக மாரீ சாதிகள்
தசமு கன்படை கோடா கோடிய
நிருத ரும்பட† வோரே வேவியெ யடுபோர்செய்-

நெடிய னங்கனு மானோ ‡டேயெழு
பதுவெ ளங்கவி சேனா சேவித
நிருப னம்பரர் கோமான் ராகவன் மருகோனே;

சிகர வும்பர்கள் Xபாகீ ராதிகள்
பிரபை யொன்றுபி ராசா தாதிகள்
சிவச டங்கமொ டீசா னாதிகள் சிவமோனர்-

தெளியு மந்த்ரக லாபா யோகிகள்
அயல்வி ளங்குசு வாமீ காமரு
திருவ லஞ்சுழி வாழ்வே தேவர்கள்
பெருமாளே.(1)

## திருப்பழையாறை.

[கும்பகோணத்துக்குத் தென்மேற்கு 4-மைல் தூரத்தி லுள்ள பட்டீச்சுரத்திலிருந்து வடதளி, பம்பைப்படை என்னும் ஊர்கள் வழியாக 1-மைல் சென்றால் இந்தத் தலத்தையடையலாம். திருநாவுக்கரசு ஸ்வாமிக ளுடைய தேவாரம் பெற்றது.]

---

* மாரீசன் - நிகரில் வஞ்சகன் - இவன் மாயையில் வல்ல ஓர் அரக்கன். தாடகைக்கும் சுந்தன் என்ற இயக்கர் தலைவனுக்கும் குமாரன். சுபாகுவின் உடன் பிறந்தவன். அகத்தியருக்கு இடையூறு செய்ய அவரது சாபத்தால் அரக்கனானவன். ராவணனுக்கு மாமன் முறை பெற்றவன். ராவணன் சீதையைக் கவருதற்கு வஞ்சனைச் சூழ்ச்சி சொல்ல மாரீசன் அவனுக்குத் துணையாகப் பொன்மான் உருவம் கொண்டு சீதைமுன் உலவச், சீதை அந்த மானைப் பிடித்துத் தரும்படி இராமனை வேண்டினள். ராமரும் மானைப் பின் தொடர்ந்து சென்று, அது மாயமான் என்றறிந்து அதனைத் தன் அம்பினால் வீழ்த்த அது "ஹா! சீதா லக்ஷ்மணா" என்று இராமர் குரலாற் சத்தமிட்டு விழுந்து இறக்க, அந்தக் குரல் தனது கணவன் குரல் என எண்ணிச் சீதை தனக்குக் காவலாயிருந்த இலக்குமணனை "நீ சென்று நாதனைப் பார்த்துவா" - என

(தொடர்ச்சி 575-ஆம் பக்கம் பார்க்க)

ஒப்பில்லாத வஞ்சகச் செயலில் வல்ல மாரீசன் முதலிய அரக்கர்கள், ராவணன், அவனுடைய கோடா கோடிக் கணக்கான சேனை அரக்கர்கள் இவர்கள் யாவரும் அழியும்படி ஒரு (ஏ) அம்பைச் செலுத்திக் கொல்லும் போரை, அல்லது அடுத்துவந்த போரைச், செய்த

(நெடியன்) (மாயோன்), அங்கு அநுமாருடன் எழுபது வெள்ளம் குரங்குப் படையால் வணங்கப்பெற்ற அரசன், (அம்பரர்) தேவர்களுக்குத் தலைவன், ராகவனாய் அவதரித்தவன்-ஆகிய திருமாலின் மருகனே!

மேலான தேவர்கள், பகீரதன் முதலிய அடியார்கள், (ஞான) ஒளி பொருந்திய (பிராசாதாதிகள்) அனுக்கிரகம் (வரப்பிரசாதம்) பெற்றவர்கள், சிவ சம்பந்தமான கிரியைகள் வல்ல ஈசானன் முதலியோர், சிவ மௌனிகள்-

தெளிந்துள்ள மந்திரகலா - மந்திர சாத்திரத்தில் - பாய் யோகிகள் - மனத்தைச் செலுத்தின யோகிகள் - இவர்கள் யாவரும் பக்கத்திலே விளங்கநின்ற சுவாமியே! [அல்லது, சிவமௌனிகள் - இவர்கள் தெளிந்துள்ள பிரணவ மந்த்ர ரூபமான (கலாபா) கலாப மயிலனே! யோகிகள் பக்கத்திலே விளங்கும் சுவாமியே! அழகிய **திருவலஞ்சுழியிற்** செல்வனே! தேவர்கள் பெருமாளே! (பசாசே போல்பவர் உறவாமோ)

---

வெருட்டி அனுப்பித் தனித்திருந்தபொழுது - இராவணன் சந்யாசி வேஷத்துடன் வந்து சீதையை வஞ்சித்து அவளிருந்த நிலத்தைப் பேர்த்து அப்படியே தேரில்வைத்து இலங்கைக்குச் சென்று சீதையை அசோகவனத்திற் சிறையில் வைத்தான். சீதையை இழந்த ராமபிரான் சுக்ரீவன் என்னும் குரங்கின் தலைமையில் அநுமன் முதலான எழுபது வெள்ளம் சேனையுடன் சென்று, ராவணனைக் கொன்று, சீதையை மீட்டனர்.

† ஒரு ஏ (அம்பு) - பாடல் 452-பக்கம் 6-கீழ்க்குறிப்பு

‡ எழுபது வெள்ளம் சேனை - பாடல் 811-பக்கம் 390; பாடல் 515-பக்கம் 130 கீழ்க்குறிப்பு.

x **பகீரதன்** - சூரிய வமிசத்து அரசன்; சாம்பலாய்ப் போன தன் மூதாதையர்களான சகரர்கள் நற்கதி அடைய வானத்தினின்று கங்கையை வரவழைத்தவன்; முருகவேளை வல்லக் கோட்டையிற் பூசித்தவன்; வெள்ளிக்கிழமை விரதம் பூண்டு தன்னை வென்ற கோரன் என்னும் அசுரனைக் கொல்வித்தவன்-(கந்தபுராணம்-6-23 (4.7)).

## 881. திருவடியைப் பெற

தானத்தத் தானன தானன
தானத்தத் தானன தானன
தானத்தத் தானன தானன தனதான

தோடுற்றுக் காதள வோடிய
வேலுக்குத் தானிக ராயெழு
சூதத்திற் காமனி ராசத விழியாலே-
சோடுற்றத் தாமரை மாமுகை
போலக்கற் பூரம ளாவிய
தோல்முத்துக் கோடென வீறிய முலைமானார்;
கூடச்சிக் காயவ ரூழிய
மேபற்றிக் காதலி னோடிய
கூளச்சித் தாளனை மூளனை வினையேனைக்-
கோபித்துத் தாயென நீயொரு
போதத்தைப் பேசவ தாலருள்
கோடித்துத் தானடி யேனடி பெறவேணும்;
வேடிக்கைக் காரவு தாரகு
ணாபத்மத் தாரணி காரண
வீரச்சுத் தாமகு டாசமர் அடுதீரா-
வேலைக்கட் டாணி*ம காரத
சூரர்க்குச் சூரனை வேல்விடு
†வேழத்திற் சீரரு ளூறிய இளையோனே;

*மகாரத சூரன் - அதிரதர், மகாரதர், சமரதர், அர்த்தரதர், எனத் தேர் வீரர் - நால்வகைப் படுவர்; அதிரதர் - இவர் ஒரு தேரில் நின்று தேர், குதிரை, சாரதிகளுக்கு அழிவு வராமல் காத்துப் பல ஆயிரம் தேரோடு எதிர்த்து வேறு துணையில்லாமலே போர் செய்து வெல்லும் வல்லமை உடையார்; மகாரதர் பதினாயிரம் தேர் வீரரொடு பொருபவர்; சமரதர் - ஒரு தேர் வீரனொடு தாமும் ஒருவராய்த் தோலாமற் போர்புரிய வல்லவர்; அர்த்தரதர் - போர் புரிந்து பின்னடையும் தேர் வீரர்; இவர் இருவர் சேர்ந்தால் ஒரு சமரதனுக்கு ஒப்பாவர்;

"இற்றைநாள் அதிரதர் மகாரதர் சமரதாதியர் எவரொடும், கொற்ற வஞ்சி மிலைச்சி ஏகுக குருநிலத்திடை என்னவே"

-வில்லிபாரதம் - அணிவகுப்பு-1

† முருகவேளின் குழந்தைப் பருவத்துத் திருவிளையாடலின் போது அவரை முருகவேள் என உணராத இந்திரன், ஐராவதம்,

(தொடர்ச்சி 577-ஆம் பக்கம் பார்க்க)

# திருப்பழையாறை

## 881.

(**காதில் உள்ள**) தோட்டினைச் சேர்ந்து காது வரைக்கும் ஓடி, வேலுக்கு ஒப்பாக விளங்கி, (சூதத்தில்) சூது அதில் - உபாயத்தில் மன்மதனது ரஜோகுணம் அடங்கின கண்கள்-

(சோடு) இரட்டையாய்ப் பொருந்தி, தாமரையின் அழகிய மொட்டுப் போன்று, பச்சைக்கற்பூரம் சேர்ந்த கலவையை அணிந்து, (தோல்) தோலும், முத்து மாலையும் கொண்ட மலைபோல (அல்லது யானையின் முத்து உள்ள தந்தம்போல) மேலிட்டெழுந்த கொங்கைகளை உடைய மாதர்கள்-

கூடுதற்குச் சிக்கலாயிருப்பவர்-எளிதில் அகப்படாதவர்- (தடை பல செய்பவர்) அத்தகைய வேசையர்க்கு (ஊழியமே பற்றி) பணிவிடைகளே-(தொண்டே) செய்து, ஆசையுடன் காலங் கழிக்கும் (கூளனை) குப்பை போன்று உபயோகம் இல்லாத (சித்து - ஆளனை) அறிவுகொண்ட என்னை, (மூளனை)-அத்தகைய சிற்றறிவுடன் முயற்சிகள் செய்ய முற்படும் என்னை, வினைக்கு ஈடான என்னை-

(நீ) கோபித்து - கண்டித்து, தாய் போல நீ ஒப்பற்றதான ஞானத்தை உபதேசிக்க. (அதால்) அங்ஙனம் ஞானம் பெற்றமையால் உன்னுடைய திரு அருளைக் (கோடித்து) புகழ்ந்து (உன்னை)ப் பிரார்த்தித்து, அடியேன் (உன்னுடைய) திருவடியைப் பெறவேண்டும்;

விநோதமான திருவிளையாடல்களைச் செய்பவனே! (உதாரகுணா) தாராளகுணம் உடையவனே (கொடையாளனே)! தாமரை மலர்மாலை அணியும் மூலபுருஷனே! (தலைவனே)! வீரம் பொருந்திய பரிசுத்த மூர்த்தியே! கிரீடம் அணிந்தவனே! போரிற் கொல்லும் தீரனே!

வேலையில் (கட்டாணி) சமர்த்தனே! (அல்லது) வேலையில் சமர்த்தனும், (அல்லது கடலில் மாவாய் நின்ற சமர்த்தனும்) மகாரத சூரர்களுக்கெல்லாம் சூரனுமாகிய சூரன்மீது வேலைச் செலுத்தின (இளையோனே)! (வேழத்தில்) ஐராவதம் என்னும் யானையின்மீது சீரான திருவருள் ஊறின இளையோனே!

---

மற்றும் வானவர் யாவரும் அவரொடு பொருது மாண்டனர். பின்னர் பிரகஸ்பதி வந்து முருகனை வேண்ட, யாவரும் உயிர்பெற்று எழ, முருகவேள் அருளினர் [தொடர்ச்சி 578-ஆம் பக்கம் பார்க்க]

ஆடத்தக் காருமை பாதியர்
*வேதப்பொற் கோவண வாடையர்
ஆலித்துத் தானரு ளூறிய முருகோனே-
† ஆடப்பொற் கோபுர மேவிய
ஆடிக்கொப் பாமதிள் சூழ்பழை
யாறைப்பொற் கோயிலின் மேவிய
பெருமாளே.(1)

## திருச்சக்கிரப்பள்ளி

[தஞ்சாவூருக்கு வடகிழக்கு 11-மைல் தூரத்தி லுள்ள ஐயம் பேட்டை ஸ்டேஷனுக்கு மேற்கு அரைமைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.]

### 882. கலவியிச்சை அற

தத்த தத்தன தத்தன தத்தன
தத்த தத்தன தத்தன தத்தன
தத்த தத்தன தத்தன தத்தன தனதான

திட்டெ னப்பல செப்பைய டிப்பன
பொற்கு டத்தையு டைப்பன வுத்தர
திக்கி னிற்பெரு வெற்பைவி டுப்பன வதின்மேலே-

[577-ஆம் பக்கத் தொடர்ச்சி]
'வேள் செலுத்துங்கணை...அயிராவதம் நெற்றியுள் மேவி
ஆவிகொண்டு புறம்போத....அது மாண்டதன்றே"
'பொன்னவன் வேண்டிட...மன்னவனாதியர்
மால்களிற் றொடும் அந்நிலை எழும்வகை
அருள் செய்தானரோ" - கந்தபுராணம் 1-14-50, 78.

இனி, வேழம் - ஆனை - என்பது வேழ மங்கையைக் குறிக்குமாயின் தேவசேனைபால் அருள் ஊறியவன் எனப் பொருள்படும்; தேவசேனையை - ஆனை என்றே ('ஆனைதன் நாயக' 'குறத்தி ஆனையொடு' என) 235, 431-ஆம் பாடல்களிற் கூறியுள்ளார்.

* **வேதக் கோவணம்**: "அரையில் தஞ்ச மாமறைக் கோவண ஆடை" - பெரிய புராணம்-அமர் நீதி-8.

வேதம் - சிவபிரானுக்குப் பீடிகை, பாதுகை, வாகனம்,
(தொடர்ச்சி 579-ஆம் பக்கம் பார்க்க)

கூத்தாட வல்லவர், உமாதேவிக்குத் தமது உடலிற் பாதிபாகம் கொடுத்தவர், வேதத்தையே அழகிய கோவண ஆடையாகக் கொண்டவர், (ஆலித்து) களித்து மகிழ்ச்சி பூண்டு திருவருள் சுரந்து தந்த குழந்தையே!

(ஆடப் பொற் கோபுரம்) ஆடகப் பொற் கோபுரம்- பொன்மயமான அழகிய கோபுரத்தைக் கொண்டதும், பொருந்திய (ஆடி) கண்ணாடிக்கு (அல்லது பளிங்குக்கு) ஒப்பான மதில் சூழ்ந்துள்ளதுமான **பழையாறை** என்னும் தலத்தில் அழகிய திருக்கோயிலில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அடியேன் அடி பெறவேணும்)

## திருச்சக்கிரப்பள்ளி

## 882.

*(செப்புக்குடத்தை உவமை கூறலாம் என்றால்) திட் திட் என்று செப்புத்தகட்டை அடிபடும்படிச் செய்வன; பொற்குடத்தை உவமை கூறலாம் என்றால் அந்தக் குடத்தை உடைபடும்படிச் செய்வன; (மேருமலையை ஒப்பிடலாம் என்றால்) தோற்றதற் கடையாளமாக - (அந்தப்) பெருத்த மேருமலை † வடக்குத்திசையில் கொண்டு-போய்த் தவஞ்செயத் தள்ளி விடப்பட்டது; - அதற்கு மேல் உவமை தேடிச்

---

நூபுரம், கோவணம், விழி, மொழி, வடிவு.

"மறையே நமது பீடிகையாம் மறையே நமது பாதுகையாம்
மறையே நமது வாகனமாம் மறையே நமது நூபுரமாம்
மறையே நமது கோவணமாம் மறையே நமது விழியாகும்
மறையே நமது மொழியாகும் மறையே நமது வடிவாகும்"

-திருவிளை-உலவாக்கிழி-9.

"மறை நான்கே வான் சரடாத் தன்னையே
கோவணமாச் சாத்தினன் காண் சாழலோ"

திருவாசகம் - சாழல்-2.

† ஆடம்-"ஆடகம்" - இடைக்குறை.

---

* இது கொங்கை வர்ணனை - உவமிக்கப்படும் பொருள்கள் எல்லாம் உபமேயப் பொருளாம் கொங்கைக்கு இன்ன காரணத்தால் இணையாகா - இழிவுடையன - என விளக்கும் முறையில்

[தொடர்ச்சி 580-ஆம் பக்கம் பார்க்க]

செப்ப*வத்திம ருப்பையொ டிப்பன
புற்பு தத்தையி மைப்பி லழிப்பன
செய்த்த லைக்கம லத்தைய லைப்பன திறமேய;
† புட்ட னைக்கக னத்தில்வி டுப்பன
சித்த முற்பொர விட்டுமு றிப்பன
‡ புட்ப விக்கன்மு டிக்குறி யுய்ப்பன இளநீரைப்
புக்கு டைப்பன முத்திரை யிட்டத
னத்தை விற்பவர் பொய்க்கல **விக்குழல்**
**புத்தி** யுற்றமை **யற்றிட** எப்பொழு **தருள்வாயே;**
துட்ட நிக்ரக சத்தித ரப்ரப
லப்ர சித்தச மர்த்தத மிழ்த்ரய
துட்க ரக்கவி தைப்புக லிக்கர செனுநாமச்-

---

*(579-ஆம் பக்கத் தொடர்ச்சி)*

அமைந்துள்ள பாடல் இது. இத்தகைய பாடல்கள் *345, 550;* **கண்** வர்ணனையில் இத்தகைய - பாடல் எண் *126.*

செப்புக்குடம் கன்னான் உலைக்களத்தில் அடிபடும்; பொன்குடம் உடைத்தால் உடைபடும்; தன் தோல்விக்கு அடையாளமாக மேரு வடக்கே தவம் கிடக்கும்; யானையின் தந்தம் ஒடிபட்ட துண்டு; நீர்க்குமிழி ஒரு நொடியில் அழிவுறும்; தாமரையோ தடாகத்தில் அலையில் அலைச்சல் உறும்; சக்கரவாகம் பறந்து உயர ஓடிப்போம்;...மன்மதனுடைய முடி எரிபட்டு விழும்; இளநீர் உடைபடும்: இங்ஙனம் இந்த உவமைப் பொருள்கள் எல்லாம் கொங்கைமுன் தோல்வியுற்றன என்னும் விஷயம் முத்திரையிட்ட பத்திரம்போல விளங்குகின்றது. இவ்வாறு பெருமைவாய்ந்த கொங்கைகளை விற்பவராம் விலைமாதர்களின் அற்ப இன்பச் சேர்க்கையிற்படும் புத்தி அழிந்து நற்புத்தி வர அருள்வாயே- என்றபடி.

† **உத்தர திக்கில் விடுப்பன**: வடக்கிருத்தல் என்பது உயிர் துறக்கும் துணிவுடன் வடக்கு நோக்கியிருந்து பிராயோபவேச விரதத்தை மேற் கொள்ளுதல். பிராயோபவேச விரதம்-உயிர் விடுதற் பொருட்டு தருப்பையில் உணவின்றி யிருக்கும் மகா விரதம்:

"புறப்புண் நாணி வடக்கிருந்தோனே" - புறநா-*66.*

---

* கம்சன் ஏவின குவலயாபீடம் என்னும் யானையின் தந்தங்களைப் பறித்து எடுத்து அவற்றால் யானையையும் பாகனையும் ஸ்ரீ கிருஷ்ண பகவான் கொன்றனர்.

-பாடல் *120* பக்கம் *286* கீழ்க்குறிப்பு.

[தொடர்ச்சி *581*-ஆம் பக்கம் பார்க்க]

சொல்ல- யானையின் தந்தம் (உண்டு) - (அந்தத் தந்தத்தையும்) ஒடித்துத் தள்ளுவன; நீர்க்குமிழியை - ஒப்பிடலாம் என்றால் - அதை இமைப்பொழுதில் அழியும்படிச் செய்வன; வயல்களில் உள்ள தாமரை மொட்டை உவமிக்கலாம் என்றால் அதை நீரில் அலையச் செய்வன; சாமர்த்தியம் உள்ள

சக்கிரவாகப்பக்ஷியை உவமிக்கலாம் என்றால் அதை ஆகாயத்தில் பறக்க விடுவன; (ஆடவர்களின்) உள்ளத்தைத் தன்னொடு சண்டை செய்யவிட்டு அதை அழியச் செய்வன; புஷ்ப பாணத்தையும் கரும்பு வில்லையும் கொண்ட மன்மதனுடைய கிரீடத்தை உவமிக்கலாம் என்றால் அந்த முடியையும் குறிவைத்துத் தள்ளுவன (சிவனது நெற்றிக்கண்ணால் எரிபட்டுத் தொலைவன)-இளநீரை (உவமிக்கலாம் என்றால்) அதுவும்

எடுத்து உடைக்கப்படுவதாம் - (இங்ஙனம் எதுவும் தமக்கு உவமையாக முடியா என்னும் உண்மையை) முத்திரையிட்டு விளக்கும் கொங்கைகளை (விலைக்கு) விற்பவராம் பொதுமகளிரின் நிலைத்திராத - பொய்யான - புணர்ச்சியின்பம் வேண்டித் திரியும் புத்தி எனக்குப் பொருந்தியுள்ளதே! அது அற்றுத் தொலைய (நீ) எனக்கு எப்பொழுது அருள்புரிவாய்!

துஷ்டர்களை அடக்கும் சத்திவேலைத் தரிப்பவனே! பிரபலமும், பிரசித்தமும் கொண்ட (மஹா கீர்த்திகொண்ட சமர்த்தனே! (தமிழ்த்ரய) முத்தமிழில் (துஷ்கரம்) முடிப்பதற்கு (யாத்தற்கு) அருமையானவையான பாடல்களைத் (திருஞான சம்பந்தராய்)ப் (புகலி) சீகாழிக்கு அரசு என்னும் (நாமம்) புகழ் பெற்று-

[580-ஆம் பக்கத் தொடர்ச்சி]

† புள் - சக்ரவாகப்புள்.

‡ புட்ப இக்கன் - மன்மதன் - சிவபிரான் மன்மதனை எரித்தது -பாடல் 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு.

சொற்க நிற்கசொ லட்சண*தட்சண
குத்த ரத்தில †கத்திய னுக்கருள்
சொற்கு ருத்வம கத்தவ சத்வஷண் முகநாத;
தட்ட றச்சமை யத்தைவ ளர்ப்பவ
ளத்தன் முற்புகழ் செப்ப‡வ நுக்ரக
சத்து வத்தைய ளித்திடு செய்ப்பதி மயிலேறி-
Xசட்ப தத்திரள் மொய்த்தம ணப்பொழில்
மிக்க ரத்நம திற்புடை சுற்றிய
**சக்கி ரப்பளி** முக்கணர் பெற்றருள்
பெருமாளே.(1)

## திருக்குரங்காடு துறை.

[வட குரங்காடுதுறை என்னும் ஸ்தலம் கும்பகோணத்துக்கடுத்த ஐயம்பேட்டை ஸ்டேஷனிலிருந்து 4-மைல். வழியில் திருச்சக்கிரப்பள்ளி என்னும் ஸ்தலம் இருக்கின்றது. திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.

தென் குரங்காடுதுறை என்பது ஆடுதுறை. ரெயில்வே ஸ்டேஷன். திருவிடைமருதூருக்குக் கிழக்கு 2 1/2 மைல்; திருஞான சம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல் பெற்றது.]

## 883. திருவுருவ அலங்காரத் துதி

தனந்தான தனத்தனனத் தனந்தான தனத்தனனத்
தனந்தான தனத்தனனத் தனதான

அலங்கார முடிக்கிரணத் திரண்டாறு முகத்தழகிற்
கசைந்தாடு குழைக் கவசத் திரடோளும்-

---

* தட்சண - கு - தெற்கில் உள்ள பூமி "குப்பாவை கொண்டாள் கலை" தணிகை உலா253. குத்தரம் - குதரம் - மலை; தட்சண குதரம் - பொதியமலை-

† அகத்தியருக்கு உபதேசித்தது
-பாடல் 185-பக்கம் 433 கீழ்க்குறிப்பு.

'வேல் இறைவன் இயம்பிய ஞான முற்றுணர்ந்து
...பொதியம்....அடுத்து...இருந்தனன் முநிவன்"
-தணிகைப் புராணம் - அகத்-அருள்-512.

[தொடர்ச்சி 583 ஆம் பக்கம் பார்க்க.]

(அப் பாடல்களைக் கற்பவர்களுக்கு) சொர்க்கம் நிற்க -வானுலகம் நிலைத்து நிற்கும்படி (சொல் லக்ஷண) சொன்ன அழகை உடையவனே! (தட்சணம்) தெற்குத் திசையில் உள்ள-(கு) பூமியாகிய-பொதிய மலையில் உள்ள அகத்திய முநிவருக்குத், தரத்தில் - மேன்மையான வகையில் - உபதேசச் சொல்லைச் சொன்ன குருமூர்த்தியாம் பெருமையை உடைய ஷண்முக நாதனே!

(தட்டு அற) தடையிலாத - குற்றமிலாத வகையில் (சமயத்தை) சைவ சமயத்தை - சிவமதத்தை - வளர்ப்பவளாகிய தேவி பார்வதி, (அத்தன்) சிவபிரான் - (முன்) இவர்களின் திருக்கோயில் சந்நிதானத்தில், (அல்லது முன்பு) புகழ் செப்ப - உனது திருப்புகழைப் பாடும்படியான (அநுக்ரக சத்துவத்தை) திருவருள் (சத்துவத்தை) சாரத்தை - வலிமையை எனக்குப் பிரசாதித்த வயலூர் என்னும் தலத்தில் மயில் வாகனனாய் விளங்குபவனே! (அல்லது - சிவபிரான் முன்பு உன்னைப் (புகழ் செப்ப) புகழும்படியாக அவருக்குக் (குருமூர்த்தியாய்) உண்மைப் பொருளை அவருக்கு அனுக்கிரகம் செய்த (உபதேசித்த) வயலூர் மயில்வாகனா!

(சட் பதத்திரள்) அறுகால் கொண்ட வண்டின் கூட்டம் மொய்க்கின்ற நறுமணச்சோலை மிக்குற்று விளங்குவதும், ரத்னமயமான மதில் பக்கங்களிற் சுற்றியுள்ளதுமான **சக்கிரப் பள்ளி** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் முக்கண்ணராம் சிவபிரான் பெற்றருளிய பெருமாளே!

(கலவிக்கு உழல் புத்தி...அற்றிட...அருள்வாயே)

## திருக்குரங்காடுதுறை.

## 883.

**அ**லங்காரமான கிரீடம், ஒளி திரண்டுள்ள ஆறுமுகங்களிலும் அழகுடன் அசைந்தாடுகின்ற குழைகள், கவசம், திரண்ட தோள்களின்மேல்-

---

‡ அருணகிரியார் வயலூரில் அனுக்கிரகம் பெற்றது - பாடல் 105-பார்க்க. (அருணகிரியார் வரலாறு-பக்கம் 64).

X "வண்டறை மலர்மலி ....சக்கரப்பள்ளி"-சம்பந்தர் 3-27-4.

அலந்தாம மணித்திரளைப் புரண்டாட நிரைத்தகரத்
தணிந்தாழி வனைக் கடகச் சுடர்வேலுஞ்;

சிலம்போடு மணிச்சுருதிச் சலங்கோசை மிகுத்ததிரச்
சிவந்தேறி மணத்த மலர்ப் புனைபாதந்-

திமிந்தோதி திமித்திமிதித் தனந்தான தனத்தனனத்
தினந்தோறு நடிப்பது *மற் புகல்வேனோ;

இலங்கேசர் வனத்துள்வனக் † குரங்கேவி யழற்புகையிட்
டிளந்தாது மலர்த் திருவைச் சிறை‡மீளும்-

இளங்காள முகிற் கடுமைச் சரங்கோடு கரத்திலெடுத்
திருங்கான நடக்குமவற் கினியோனே;

குலங்Xகோடு படைத்தசுரப் பெருஞ்சேனை யழிக்கமுனைக்
கொடுந்தாரை வெயிற் கயிலைத் தொடும்வீரா-

---

* மன்-நிரம்ப-"ஊன் உண் எனும் உரை கூறா, மன் ஈய" - திருப்புகழ் 1210.

† இலங்கையில் அநுமார் நெருப்பிட்டது

- பாடல் 704-அடி 5-பார்க்க.

இராவணன் ஏவலால் அநுமாரின் வாலில் அரக்கர்கள் நெருப்பை ஊட்ட, அநுமார் தன் வாலைப் பரப்பி இலங்கை ஊரைச் சுட்டெரித்தார்.

'பாதகர் இருக்கை பற்ற....வயங்கெரி மடுப்பன் என்னாப்
பொன்னகர் மீதே தன் போர் வாலினைப் போகவிட்டான்'

-கம்பராமா. பிணிவீட்டு-135.

"முடியச் சுற்றி முழுது முருக்கிற்றால்
கடிய மாமனை தோறுங் கடுங்கனல்"

-கம்பராமா-இலங்கையெரி-1.

‡ மீளும்-மீட்கும். X கோடு - கொடுமை.
"கோடற வைத்த கோடாக் கொள்கை"

-பதிற்றுப்-37-11.

திருப்தி தரும்படியான (அல்லத போதுமான) (தாமம்) பூமாலைகள், ரத்னமணிக்கூட்ட (மாலைகள்) புரண்டாடுங் (காட்சி) வரிசையாய் அமைந்தனவும், திருக்கரங்களில் அணியப் பட்டனவுமான மோதிரம், புனைந்துள்ள வீரகடகம் - கங்கணம், ஒளிவீசும் வேல்-

சிலம்பு, அழகிய வேத ஒலி காட்டும் (சலங்கு) சலங்கை - சதங்கை - இவைகள் ஓசை மிகுந்த ஒலி செய்யச் செந்நிறம் மிக்கு நறுமணம் வீசும் மலர்கள் புனைந்துள்ள திருவடிகள்-

திமிந்தோதி திமித்திமிதித் தனந்தான தனத்தனன என்னும் வகையில் நாள்தோறும் நீ நடனம் செய்யும் அழகு-ஆக இவைகளை எல்லாம் (மன்) நன்றாக - நிரம்ப - நான் சொல்லுவேனோ-சொல்லித் துதிக்க மாட்டேனோ!

இலங்கைக்குத் தலைவனான ராவணனுடைய (அசோக) வனத்தில். (வனம்) அழகுள்ள (அல்லது காட்டில் வாசம் செய்யும்) குரங்கை (அநுமாரை) அனுப்பி, அவரால் இலங்கையில் நெருப்பின் புகையைக் கிளம்பவைத்து, மென்மை வாய்ந்த பூந்தாதுகளை (மகரந்தப் பொடியைக்) கொண்ட செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் லக்ஷ்மியாம் சீதையின் சிறையை மீட்ட-

இளமை வாய்ந்தவரும், கரிய மேகநிறங் கொண்டவரும். (கடுமை) கொடிதான (சரம்) அம்பையும், (கோடு) வளைந்த வில்லையும் (அல்லது கடுமை, கோடு சரம், கடுமையும் (கோடு) கொடுமையும் கொண்ட அம்பைக்) கையிற் கொண்டவரும். (தந்தையின் சொல்வழியே) இருண்ட பெரிய காட்டில் நடந்து வனவாசம் செய்தவருமான (ஸ்ரீராமருக்கு - திருமாலுக்கு) இனியவனே! (உகந்தவனே)!

(குலம்) கூட்டமான இனத்தாரையும், (கோடு) கொடுமையையும் கொண்டிருந்த அசுரர்களின் பெரிய சேனையை அழிக்கப் போர் முனையில், கொடியதும், கூர்மை உடையதும், வெயிற்கு - ஒளிக்குப் பேர் போனதுமான (அயிலை) வேலாயுதத்தைப் பிரயோகித்த வீரனே! (அல்லது சேனையை அழிக்க (முனை) போர்க்களத்தில் கொடிய முன்னணிப் படையின் (வெயிற்கு) வெயில்போன்ற கொடுமையைக் குலைக்க வேலைச் செலுத்தின வீரனே!)

*கொழுங்காவின் மலர்ப்பொழிலிற் கரும்பாலை
புணர்க்குமிசைக்
**குரங்காடு துறைக்** குமரப் பெருமாளே.(1)

## 884. மாதர்மீது மயக்கு அற

தனத்தனந் தான தனதன
தனத்தனந் தான தனதன
தனத்தனந் தான தனதன தனதான

குறித்தநெஞ் சாசை விரகிகள்
நவிற்றுசங் கீத மிடறிகள்
குதித்தரங் கேறு நடனிகள் எவரோடுங்-

குறைப்படுங் காதல் குனகிகள்
† அரைப்பணங் கூறு விலையினர்
கொலைக்கொடும் பார்வை நயனிகள் நகரேகை;

பொறித்தசிங் கார முலையினர்
வடுப்படுங் கோவை யிதழிகள்
பொருட்டினந் தேடு கபடிகள் ‡தவர்சோரப்-

புரித்திடும் பாவ சொருபிகள்
உருக்குசம் போக சரசிகள்
புணர்ச்சிகொண் டாடு **மருளது தவிர்வேனோ;**

நெறித்திருண் டாறு பதமலர்
மணத்தபைங் கோதை வகைவகை
நெகிழ்க்குமஞ் சோதி வனசரி மணவாளா-

---

* "குரையார் பொழில்சூழ் குரங்காடு துறையே"
-சம்பந்தர் 2-35-8.

† " அரைப்பணம் கூறு விலையினர்" - இது இருபொருள் தருகின்ற சிலேடை, விலை அரைப்பணம் (அரைக்காசு) என்று சொல்பவர்கள் என்னும் பொருளும் தொனிக்கும்,

‡ தவர் சோர்தல் - புணர்ச்சி கொண்டாடு மருள்:-

'துறவினர் சோரச் சோர நகைத்து' - திருப்புகழ் 158.

'துறந்தவர்க்கும் உடல்முழுதுந் தோல்திரைந்த முதுமையர்க்கும்
அறந்தலைநின் றாக்குநர்க்கும் அழிபிணியில் உழக்குநர்க்கும்

(தொடர்ச்சி 587-ஆம் பக்கம் பார்க்க)

செழிப்புள்ள சோலையிலும் பூஞ்சோலைகளிலும் கரும்பு ஆலைகள் (புணர்க்கும் இசை) வேலை செய்யும் ஒலி கேட்கும் குரங்காடு**துறை**யில் குமரப் பெருமாளே!

(நடிப்பதுமற் புகல்வேனோ)

## 884.

(**பொா**ருளைக்) குறித்த நெஞ்சில் ஆசை கொண்ட காமிகள், பாடும் சங்கீதம் அமைந்த கண்டத்தினர், குதித்து நாடக மேடையில் ஏறி நடனம் செய்பவர்கள், யாரோடும்

தங்கள் குறைகளை அடுத்துச் சொல்லிக் காதலை ஊட்டிக் கொஞ்சிப் பேசுபவர்கள், (அரைப்பணம்) அரையில் உள்ள பாம்பன்ன அல்குலை விலை பேசி விற்பவர்கள், கொலைத் தொழிலைக் காட்டும் கொடிய கண்பார்வை உடையவர்கள், நகத்தின் குறிகள்-

பதியப் பெற்றுள்ள அழகிய கொங்கையை உடையவர்கள், காயத் தழும்புள்ளதும் கொவ்வைக்கனி போன்றதுமான வாயிதழை உடையவர்கள், பொருளைத் தினந்தோறும் தேடுகின்ற வஞ்சக நெஞ்சினர், தவசிகளும் சோர்ந்து போகும்படிச்

செய்கின்ற பாப உருவத்தினர், மனத்தையும் உடலையும் உருக்கவல்ல (சம்போக சரசிகள்) புணர்ச்சி லீலை செய்பவர்கள் - அத்தகையோர்களின் சேர்க்கையை விரும்பி மகிழும் மயக்கத்தை ஒழிக்கமாட்டேனோ!

(நெறித்து) குழற்சியடைந்தும் - சுருண்டும், (இருண்டும்) கருநிறம் கொண்டும். (ஆறுபதம்) அறுகால் - வண்டுகள் மொய்க்கும் மலர்களின் நறுமணம் கொண்டும் விளங்கும் புதிய மாலைகள் வகை வகையாகக் கட்டு தளரும் (மஞ்சு ஓதி) கருமேகம் போன்ற கூந்தலை உடைய (வனசரி) வேடப்பெண் வள்ளியின் மணவாளனே!

---

'சிறந்த பரத் தையர்கலவி செய்யாமை யுறுமேனும்
மறந்தழையும் அவர் விழிக்கு வாடாத மனமில்லை'

-விநாயக புரா-திருநகர-82.

நெருக்குமிந்த் ராதி யமரர்கள்
வளப்பெருஞ் சேனை யுடையவர்
நினைக்குமென் போலு மடியவர் பெருவாழ்வே,

செறித்தமந் தாரை மகிழ்புனை
மிகுத்ததண்*சோலை வகைவகை
தியக்கியம் பேறு† நதியது பலவாறுந்-

திரைக்கரங் கோலி நவமணி
கொழித்திடுஞ் சாரல் வயலணி
திருக்குரங் காடு துறையுறை பெருமாளே.(2)

## 885. பிறப்பின் பயன் பெற

தனந்த தனத்தான தனந்த தனத்தான
தனந்த தனத்தான தனதான

குடங்கள் நிரைத்தேறு தடங்கள் குறித்தார
வடங்கள் ‡அசைத்தார செயநீலங்-
Xகுதம்பை யிடத்தேறு வடிந்த Oகுழைக்காது
குளிர்ந்த முகப்பார்வை வலையாலே;

உடம்பு மறக்கூனி நடந்து மிகச்சாறி
யுலந்து மிகக்கோலு மகலாதே-
** உறங்கி விழிப்பாய பிறந்த பிறப்பேனு
முரங்கொள பொற்பாத மருள்வாயே;

---

* "சோலைசூழ் கொத்தலர் குரங்காடுதுறை" - அப்பர் 5-63-2.

† "தரங்காடும் தடநீர்ப் பொன்னித் தென்கரைக்
குரங்காடுதுறை" - அப்பர் - 5-63-1.

‡ அசைத்தார - அசைத்தவர்களுடைய.

X குதம்பை - காதுவளர்க்குந் தக்கை.

O குழைக் காது - குழையைக் காதுகின்ற.

**"உறங்கி விழித்தா லொக்குமிப் பிறவி" - சுந்தரர் (திருவரத்துறை) தேவாரம் - 7-3-4.

"உறங்குவது போலும் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு" - திருக்குறள் 339.

கூட்டமாயுள்ள இந்திரன் ஆதிய தேவர்களுக்கும், வளப்பம் கொண்டுள்ள பெரிய சேனையை உடையவர்களாம் அரசர்களுக்கும். (அல்லது, வளப்பெருஞ் சேனை உடையவர்களாகிய இந்த்ராதி யமரர்களுக்கும்), நினைத்துத் துதிக்கும் என்னைப் போன்ற அடியார்களுக்கும் பெருஞ் செல்வமாய் விளங்குபவனே!

நிறைந்துள்ள மந்தாரைமலர், மகிழம்பூ இவைகளைக் கொண்டு நிரம்பி விளங்கும் குளிர்ந்த சோலைகள் வகை வகையானவையும், கலக்கி ஜலம் நிறைந்துவரும் ஆறானது பல துறைகளிலும்-

அலையாகிய கரங்களை வளைத்துப் புதிய மணிவகைகளைக் கொண்டு தள்ளுகின்ற பக்கங்களையும், வயல்களையும் அணிந்துள்ள **திருக்குரங்காடுதுறை** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(மருளது தவிர்வேனோ)

## 885.

**கு**டங்கள் (இரண்டு) வரிசையாய் அமையப் பெற்றது போல விளங்கும் (தடங்கள்) கொங்கையிடங்களைக் கருதி, ஆங்கே (ஆரவடங்கள்) முத்து மாலைகள் பொருந்த அசைத்தவர்களுடைய - (செய்ய) செம்மை வாய்ந்த அல்லது (ஜெய) வெற்றி விளங்கும் (நீலம்) நீலோற்பலம் போன்ற கண்கள்-

காது வளர்க்கும் தக்கை (அல்லது காதணி) உள்ள இடத்திலே விளக்கமுற்று, (வடிந்த) நீண்ட குழைகளைக் (காதுகின்ற) வெட்டுவதுபோலப் பாய்கின்ற குளிர்ந்த முக தரிசனம் (முகத்தோற்றம்) என்னும் வலையாலே-

உடம்பானது (கெட்டு) மிகவும் கூன் அடைந்து, நடையும் மிகச் சரிந்து, (உடலும்) மிகக் கெட்டுக், கையிற் கோலும் நீங்காமல்-

தூங்கி விழித்துக் கொண்டதுபோன்ற (இப்போது) பிறந்துள்ள இப் பிறப்பாவது திண்மை (ஞானம்) பெறும்படியாக உனது அழகிய திருவடியைத் தந்தருளுக.

விடங்கள் கதுப்பேறு *படங்க ணடித்தா †ட
விதங்கொள் முதற்பாய லுறைமாயன்-
‡விலங்கை முறித்தோடி யிடங்கள் வளைத்தேறு
விளங்கு முகிற்கான மருகோனே;
தடங்கொள் வரைச்சாரல் நஞ்சங்கு மயிற்பேடை
தழங்கு மியற்பாடி யளிசூழத்-
தயங்கு வயற்சாரல் குரங்கு குதித்தாடு
Xதலங்க ளிசைப்பான பெருமாளே. (3)

## காவளூர்.

(இது சோழநாட்டில் திட்டை ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 6-மைல்.)

## 886. மோகம் ஒழிய

தான தானன தத்தன தந்தன
தான தானன தத்தன தந்தன
தான தானன தத்தன தந்தன தனதான

மானை நேர்விழி யொத்தம டந்தையர்
பாலை நேர்மொழி யொத்துவி ளம்பியர்
வாச மாமலர் கட்டும ரம்பைய ரிருதோளும்-
மார்பு மீதினு முத்துவ டம்புரள்
காம பூரண பொற்கட கம்பொர
வாரி நீலவ ளைக்கைபு லம்பிட அநுராகம்;

---

* படங்கண் நடித்து ஆடு - காளிங்கனது படத்தின்மீது ஆடி நடிக்கும். காளிங்கன்மீது நடனம் - பாடல் 245-2 பக்கம் 114 ஓ-குறிப்பு; பாடல் 402-பக்கம் 518 கீழ்க்குறிப்பு.

† அவிதம் கொள் முதல் பாயல் - அத்தகைமைகொண்ட சர்ப்ப சயனம்.

‡ வில் அங்கை முறித்து - வில்லைக் கையால் முறித்து; சீதையை மணக்க, சனக மகாராஜர் சபையில் வில்லை ஸ்ரீராமர் முறித்தனர்-

"ஆடக மால்வரை யன்னது தன்னை **
ஏடவிழ் மாலையி தென்ன எடுத்தான்......
** கையால் எடுத்தது கண்டனர் இற்றது கேட்டார்"

-கம்பராமா-கார்முகப் 33, 34

ஓடி-சென்று-"திரைகட லோடியும் திரவியம் தேடு"

-என்புழிப்போல (கொன்றைவேந்தன்)

(தொடர்ச்சி 591 ஆம் பக்கம் பார்க்க.)

விஷம் கவுளில் (கன்னத்தில்) ஏறக் (காளிங்கனது) படத்தின்மீது ஆடி நடிக்கும் அத் தகைமை கொண்ட சிறந்த சர்ப்ப சயனப் பாயலிற் பள்ளிகொள்ளும் மாயன்-

வில்லை அங்கையால் முறித்துச் சென்று, தாம் செல்லும் இடங்களை எல்லாம் சிறப்பாக்கி வைத்து விளங்கின மேகநிற அண்ணல் ஸ்ரீராமர் - ஆகிய திருமாலுக்குப் பிரியமான மருகனே!

(தடம்) நீர் நிலைகளைக் கொண்ட மலைச்சாரல்களில் நடுங்குகின்ற மயிலும் அதன் பெடையும் சூழ, ஒலி செய்யும் தகுதியுடன் பாடி வண்டுகள் சூழ-

விளங்கும் வயற் பக்கங்களைக் கொண்ட, குரங்குகள் குதித்து விளையாடும் தலங்களில், மனம் உவந்து வீற்றிருக்கும் பெருமாளே!

(பொற்பாதம் அருள்வாயே)

## காவளூர்

## 886.

**மா**னுக்கொத்த கண்ணொடு கூடிய மங்கையர், பாலுக்கொத்த மொழியொடு கூடிய பேச்சினர், நறுமணமுள்ள நல்ல மலரை அணிந்துள்ள, (அழகில்) தெய்வமகளிரை ஒத்தவராகிய வேசையர்-இவர்களின் இரண்டு தோள்கள் மீதிலும்-

மார்பின் மீதிலும், முத்துமாலை, புரள, (காமபூரண) காம இச்சைக்குப் பூரண இடம் தரும் தங்கக் கடகம் என்னும் வளை பொருந்த, (அல்லது ஒளி வீச), கடல் நீலநிறமுள்ள (வளைக்கை - கைவளை) வளையல் ஒலிசெய, காமப் பற்று-

---

(590-ஆம் பக்கத் தொடர்ச்சி)

X "**தடங் கதலிக்கான**" என்றும் பாடம்; கதலிக்கானம் என்பது திருக்கழுக்குன்றம். குரங்கு குதித்தாடு தலங்கள் - வட குரங்காடுதுறை - தென் குரங்காடுதுறைத் தலங்கள்.

ஆன நேரில்வி தத்*திர யங்களும்
நாண மாறம யக்கியி யம்பவும்
ஆடை சோரநெ கிழ்த்தியி ரங்கவும் உறவாடி-

ஆர வாரந யத்தகு ணங்களில்
வேளி னூல்களை கற்றவி ளம்பவும்
ஆகு மோகவி பத்துமொ ழிந்துனை
யடைவேனோ;

சான கீதுய ரத்தில ருஞ்சிறை
போன போதுதொ குத்தசி ணங்களில்
தாப சோபமொ ழிப்பஇ லங்கையு மழிவாகத்-

†தாரை மானொரு சுக்கிரி பன்பெற
வாலி வாகுத லத்தில்வி ழுந்திட
சாத வாளிதொ டுத்தமு குந்தனன் மருகோனே;

கான வேடர்சி றுக்குடி லம்புன
மீதில் வாழித ணத்திலு றைந்திடு
காவல் கூருகு றத்திபு ணர்ந்திடு மணிமார்பா-

காவு லாவிய பொற்கமு கின்திரள்
பாளை வீசம லர்த்தட முஞ்செறி
காவ ளூர்தனில் முத்தமி ழுந்தெரி
பெருமாளே.(1)

## தஞ்சை.

(இது தஞ்சாவூர். ரெயில்வே ஸ்டேஷன். தேவார வைப்பு ஸ்தலம்.)

## 887. மாதர் மீதுள மயக்கு அற

தந்தன தானன தனதான

அஞ்சன வேல்விழி மடமாதர்-
அங்கவர் மாயையி லலைவேனோ;

---

* விதத்திரயங்கள் - முச்சலிலிகை வகைகள் - பாடல் 230-பக்கம் 74 கீழ்க்குறிப்பு.

† தாரையைச் சுக்கிரீவனுக்கு அளித்தது, வாலியை அட்டது - பாடல் 578-பக்கம் 322 கீழ்க்குறிப்பு.

பிடிக்கும் சமயத்தில் (விதத்திரயங்களும்) முச்சலிலிகை மருந்து வகைகளைக் கொண்டு, நாணம் ஒழியும்படித் (தம்மிடம் வந்தவரை) மயக்கிப் பேச்சுக்களைப் பேசவும், இடையல் அணிந்துள்ள ஆடை தளர நெகிழ்த்தி இரக்கம் காட்டுதல் போல உறவாடியும்-

ஆடம்பரமான வகையொடு கூடிய குணத்துடனும், நயத்தொடு கூடிய குணத்துடனும், காமநூல் சாத்திரங்களில் (கொக்கோக சாத்திரத்தில்) தாம் கற்றுள்ள நுணுக்கங்களை எல்லாம் எடுத்துச் சொல்வதனால் ஏற்படும் (மோக விபத்தும்) காம மோகத்தால் வரும் ஆபத்தும் ஒழிந்து உன்னைச் சேர்வேனோ!

ஜானகி, துன்பத்துடன் அரிய சிறையிற்பட்டு இருந்தபோது உண்டான கோபத்துடன் (தனது தாப சோபம்) துன்பத்தையும் துக்கத்தையும் நீக்குதற் பொருட்டு, இலங்கை அழியவும்,

தாரை என்னும் மாதினை ஒப்பற்ற சுக்கிரீவன் பெறவும், வாலிவெற்றி (அழிந்து) பூமியில் மாண்டுவிழவும், தோன்ற (காணும்படி) எடுத்த அம்பினைச் செலுத்தின திருமாலின் நல்ல மருகனே!

காட்டு வேடர்களின் சிறிய குடிசையிலும், அழகிய தினைப்புனத்திலும், அதன் மீது இருப்புக்காக அமைந்த பரணிலும் வீற்றிருந்து காவலை (மிகுதியாக) மிக நன்றாகச் செய்த குறத்தி (வள்ளி) அணைந்திடும் அழகிய மார்பனே!

சோலையிலுள்ள அழகிய கமுக மரங்களின் கூட்டம் தமது பாளைகளை வீசுவதும், நீர்ப்பூ உள்ள குளங்கள் நிறைந்துள்ளதுமான **காவளூர்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் (பெருமாளே!) (இயல், இசை, நாடகம் என்னும் ) முத்தமிழும் தெரிந்த பெருமாளே!

(மோக விபத்தும் ஒழிந்துனை அடைவேனோ)

## தஞ்சை

## 887.

**மை** பூசின வேலன்ன கண்களை உடைய அழகிய மாதர்களாம்

அவர்களிடத்தில் மாயை மயக்கில் நான் அலைச்சல் உறுவேனோ!

விஞ்சுறு மாவுன தடிசேர-
விம்பம தாயரு ளருளாதோ;
நஞ்சமு தாவுணு மரனார்தம்-
நன்கும ராவுமை யருள்பாலா;
தஞ்சென வாமடி யவர்வாழத்-
தஞ்சையில் மேவிய பெருமாளே. (1)

## 888. பிரமை தீர

தந்த தானனத் தந்த தானனத்
தந்த தானனத் தனதான

அம்பு ராசியிற் கெண்டை சேலொளித்
தஞ்ச வேமணிக் குழைவீசும்-
அங்க ணாரிடத் தின்ப சாகரத்
தங்கி மூழ்குமிச் சையினாலே;

எம்பி ரானுனைச் சிந்தி யா*தொழித்
திந்த்ர சாலஇப் ப்ரமைதீர-
இங்கு வாவெனப் பண்பி னாலழைத்
தெங்கு மானமெய்ப் பொருள்தாராய்;

கொம்பு போலிடைத் தொண்டை போலிதழ்க்
கொண்டல் போல்குழற் கனமேருக்-
குன்று போல்முலைப் பைங்கி ராதியைக்
கொண்ட கோலசற் குணவேலா;

† சம்ப ராரியைக் கொன்ற தீவிழிச்
சம்பு போதகக் குருநாதா-

---

* ஒழித்த இந்த்ரசால எனப்பிரிக்க.

† சம்பராரி - மன்மதன்: சம்பரன் - ஒரு அசுரன். இவன் கிருஷ்ணனுக்கு ருக்குமணியிடத்துப் பிறந்த பிரத்தியும்நனைத் தனக்குப் பகைவன் என எண்ணி சிசுவாயிருக்கையில் கடலில் இட்டனன். அந்தச் சிசுவை ஒரு மீன் விழுங்கிற்று; அம் மீன் ஒரு வலைஞன் வலையில் அகப்பட்டது. அவன் அதைச் சம்பரனிடம் கொடுத்தான். சம்பரன் மனைவி மாயாவதி அதைக் கறிசெய்ய அரிந்தபோது அதனுள்ளேயிருந்து கிடைத்த குமரனை அவள் வளர்த்தாள்: அவன் வளர்ந்த பின் சம்பரன்தான் தன்னைக்

(தொடர்ச்சி 595-ஆம் பக்கம் பார்க்க)

(விஞ்சுறுமா - விஞ்சுறுமாறு) நான் மேம்பட்டு விளங்கவும் உனது திருவடியைச் சேரவும்

ஒளிவகையில் உனது திருவருள் எனக்கு அருளாதோ!
விஷத்தை அமுதாக உண்ட சிவபிரானுடைய
நல்ல குமரனே! உமை அருளிய குழந்தையே!
சரண் நீயே எனக் கொண்டுள்ள அடியார்கள் வாழத்
(தஞ்சை) **தஞ்சாவூரில்** வீற்றிருக்கும் பெருமாளே!
(அருள் அருளாதோ)

## 888.

கடலில் உள்ள கெண்டை மீன், சேல் மீன் இவை (ஒளித்து அஞ்சவே) அஞ்சி-பயந்து ஒளித்திடுமாறு, ரத்னக் குழைகள் அளவும் வீசி விளங்கும்-

அழகிய கண்களை உடைய மாதர்கள்பாற் கிடைக்கும் இன்பக் கடல்போன்ற நெருப்பில் முழுகும் காம விருப்பால்

எம்பெருமானே! உன்னை நான் தியானிக்காத வண்ணம் என்னைப் பிரிக்கும் இந்திரஜாலம் (மாயவித்தை) போன்ற இந்த மயக்க அறிவு நீங்க-(நீ என்னை)

இங்கேவா என்று (ஆட்கொள்ளும்) முறையில் அழைத்து எங்கும் நிறைந்துள்ளதான உண்மைப் பொருளைத் (தந்தருளுக) உபதேசித்தருளுக;

கொம்பு போன்ற மெல்லிய இடை, கொவ்வைக் கனி போன்ற வாயிதழ், மேகம் போன்ற கூந்தல், பருத்த மேரு

மலை போன்ற கொங்கை - இவைகளை உடைய அழகிய வேட்டுவப்பெண் வள்ளியை (மணம்) கொண்ட அழகிய சற்குண வேலனே!

(சம்பராரி) மன்மதனைக் கொல்வித்த நெருப்புக் கண்ணை உடைய (சம்பு) சிவனுக்கு உபதேசம் செய்த குருமூர்த்தியே!

---

கடலில் இட்டவன் என உணர்ந்து (அக் குமரன்) அவனை (சம்பரனைக்) கொன்றான். இவன் முற் பிறப்பில் மன்மதன், மாயாவதி ரதிதேவி; சம்பரனைக் கொன்ற காரணத்தால் மன்மதனுக்குச் சம்பராரி எனப் பெயர். மீன் வயிற்றில் உதித்ததால் மீனக்கொடி (மன்மதனுக்கு).

மன்மதனை எரித்தது - பாடல் 399, பக்கம் 510.
சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 628, பக்கம் 462.

சண்ட கோபுரச் செம்பொன் மாளிகைத்
தஞ்சை மா நகர்ப் பெருமாளே*(2)

## 889. ஞானம் பெற

தந்த தானன தான தான தத்த தந்த
தந்த தானன தான தான தத்த தந்த
தந்த தானன தான தான தத்த தந்த தனதான

கந்த வார்குழல் கோதி மாலை யைப்பு னைந்து
†மஞ்ச ளாலழ காக மேனி யிற்றி மிர்ந்து
கண்ட மாலைக ளான ஆணிமுத்த ணிந்து
தெருவூடே-
கண்ட பேரையெ லாம வாவி னிற்கொ ணர்ந்து
வண்ப யோதர பார மேரு வைத்தி றந்து
கண்க ளாகிய கூர வேலை விட்டெ றிந்து
விலைகூறி;
வந்த பேர்களை யேகை யாலெ டுத்த ணைந்து
கொண்டு தேனித ழூறு வாயை வைத்த ருந்தி
மந்த மாருதம் வீசு பாய லிற்பு ணர்ந்து
மயல்பூணு-
மங்கை மாரநு போக தீவி னைப்ப வங்கள்
மங்கி யேகிடு மாறு **ஞான வித்தை தந்து**
வண்டு லாவிய நீப மாலை சற்றி லங்க
**வருவாயே;**
‡இந்த்ர தாருவை ஞால மீதி னிற்கொ ணர்ந்த
சங்க பாணிய னாதி கேச வப்ர சங்க
னென்று வாழ்மணி மார்பன் வீர விக்ர மன்றன்
மருகோனே-

---

* இப் பாடல் மனப்பாடம் செய்யத் தக்கது.

† 'முட்டற்ற மஞ்சளை எண்ணெயிற் கூட்டி முகமினுக்கி"
-பட்டினத்தார் - திரு ஏகம்ப 29.

‡ தேவலோகத்துப் பாரிஜாத விருக்ஷத்தைக் கண்ணபிரான் பூவுலகுக்குக் கொணர்ந்தது
-பாடல் 15-பக்கம் 507; பாடல் 1279 பார்க்க.

இதன் விவரம்:- "கண்ணபிரான், நரகாசுரனைக் கொன்று அவனால் முன்னே கவர்ந்துகொண்டு போகப்பட்ட (இந்திரன் தாயான) அதிதியின் குண்டலங்களை அவளுக்குக் கொடுப்பதற்காகக் கருடன்மேல் சத்தியபாமையுடன் தேவலோகத்திற்குச் செல்ல, அங்கு இந்திரன் மனைவி

(தொடர்ச்சி 597-ஆம் பக்கம் பார்க்க)

வலிமை - திண்மை வாய்ந்த கோபுரமும் செம்பொன் விளங்கும் மாளிகைகளையும் கொண்ட **தஞ்சை** மாநகரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(ப்ரமைதீர மெய்ப்பொருள் தாராய்)

## 889.

**ந**றுமணமுள்ள நீண்ட கூந்தலைச் சிக்கெடுத்துவாரி, மாலையைச் சூடிக்கொண்டு, மஞ்சளை அழகுடன் உடலில் நிரம்பப் பூசிக், (கண்டம்) கழுத்தில் மாலையாக ஆணி முத்துமாலையை அணிந்து, தெருவிலே

பார்த்த பேர்வழிகளை எல்லாம் (அவாவினில்) ஆசையுடன் அழைத்துக் கொண்டுவந்து, வளப்பம் உள்ள கொங்கைப் பாரமாகிய மேரு மலையைத் திறந்து வெளியிற் காட்டி, கண்கள் என்னும் கூரிய வேலாயுதத்தை வேகமாகச் செலுத்தித் (தனக்குச் சேரவேண்டிய தொகை இவ்வளவு என்று) விலைபேசி-

வந்தவரைக் கையால் எடுத்து அணைந்துகொண்டு, தேன்போல இனிக்கும் வாயிதழ் ஊறலை வாயை வைத்துப் பருகி, (மந்த மாருதம்) தென்றல் வீசும் பாயலிலே புணர்ந்து காமமயக்கம் கொள்ளும்-

மாதர்களுடன் அனுபோகம் செய்வதால் வரும் கொடிய வினைகளுடன் கூடிய பிறப்புக்கள் எல்லாம் குலைந்து தொலைந்து போம்படி **ஞான** வித்தையை அடியேனுக்குத் தந்து. (நீயு ம்) வண்டுகள் உலாவும் கடப்பமாலை சற்றே என்முன் விளங்க வருவாயே.

இந்த்ரலோகத்துக் கற்பக விருக்ஷத்தைப் பூமிக்குக் கொண்டுவந்த (பாஞ்ச சன்னியம் என்னும்) சங்கத்தைக் கையில் ஏந்தியவன், ஆதிகேசவன் என்னும் - ப்ரகியாதி (கீர்த்திப் பெயர்) பெற்றவன், (என்று) சூரியனுடைய ஒளிபோன்ற ஒளிதங்கி விளங்கும் கவுத்துவம் என்னும் மணியை மார்பில் அணிந்துள்ளவன், வீர பராக்ரமன் - ஆகிய திருமாலின் மருகனே!

---

இந்திராணி பாரிஜாதப் பூ மானிடப் பெண்ணாம் சத்யபாமைக்குத் தகாதென்று கொடாதிருக்கச், சத்தியபாமையின் வேண்டுகோளின்படி கருடனைக் கொண்டு அந்தப் பாரிஜாத மரத்தையே வலியப் பறித்து வந்து சத்யபாமையின் வீட்டு முற்றத்தில் நட்டருளினார். அப்போது இந்திரன் முதலிய தேவர்கள் கண்ணபிரானொடு போர் செய்யக், கண்ணபிரான் தனது சங்க நாதத்தினாலே அவர்களை மோகித்து விழும்படிச் செய்தனர்.

(தொடர்ச்சி 598-ஆம் பக்கம் பார்க்க.)

எண்டி சாமுக வேலை ஞால முற்று மண்டு
கந்த தாருக சேனை நீறு பட்டொ துங்க
வென்று பேரொளி சேர்ப்ர காசம் விட்டிலங்கு
கதிர்வேலா;

சந்த்ர சேகரி நாக. பூஷ ணத்தி யண்ட
முண்ட நாரணி யால போஜ னத்தி யம்பை
தந்த பூரண ஞான வேள்கு றத்தி துஞ்சு
மணிமார்பா-

சண்ட நீலக லாப வாசி யிற்றி கழ்ந்து
கஞ்சன் வாசவன் மேவி வாழ்ப திக்கு யர்ந்த
தஞ்சை மாநகர் ராஜ கோபு ரத்த மர்ந்த
பெருமாளே.(3)

## சப்தஸ்தானம்.

[இவை திருவையாறு, திருப்பழனம், திருச்சோற்றுத்துறை, திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம் என்னும் ஏழு ஸ்தலங்கள். ஒவ்வொன்றும் பாடல் பெற்றது. திருவையாற்றுப் பஞ்சநதேஸ்வரர் ஏனைய ஆறு ஸ்தலங்களுக்கும் வந்து காட்சி கொடுத்தருளும் சப்த ஸ்தான உற்சவம் சித்திரை பௌர்ணமியிற் கொண்டாடப்படும்.]

## 890. திருப்புகழ் ஓத

தனன தானன தான தனத்தன
தனன தானன தான தனத்தன
தனன தானன தான தனத்தன தனதான

மருவு லாவிடு மோதி குலைப்பவர்
சமர வேலெனு நீடு விழிச்சியர்
மனதி லேகப டூரு பரத்தைய ரதிகேள்வர்-

---

(597-ஆம் பக்கத் தொடர்ச்சி)

"என் நாதன் தேவிக்கன் றின்பப்பூ ஈயாதாள்
தன் நாதன் காணவே தண்பூ மரத்தினை
வன்னாதப் புள்ளால் வலியப் பறித்திட்ட
என்நாதன் வன்மையைப் பாடிப் பற-
-எம்பிரான் வன்மையைப் பாடிப் பற-

"கற்பகக் காவு கருதிய காதலிக்கு
இப்பொழு தீவனென் று இந்திரன் காவினில்
நிற்பன செய்து நிலாத்திகழ் முற்றத்துள்
[தொடர்ச்சி 599-ஆம் பக்கம் பார்க்க]

எட்டுத் திக்கிலும் உள்ள கடல் (கடலால் சூழப்பட்ட) பூமி முற்றிலும் நிறைந்து விளங்கும் கந்தனே! தாருகனும் அவன் சேனையும் (அல்லது , முற்றிலும் அண்டு உகந்த-நெருங்கி மகிழ்ந்த தாருகன் சேனை) தூள்பட்டு அழிய ஜெயித்து பெரும்புகழ் கொண்ட ஒளி பரப்பி விளங்கும் ஒளி வேலனே!

சந்திரனைச் சூடினவள், பாம்பை ஆபரணமாகக் கொண்டவள், பூவுலகை உண்ட நாரணி (வைஷ்ணவி), விஷத்தை உண்டவள், அம்பிகை - ஆகிய பார்வதி பெற்ற ஞான பூரணனாம் வேளே! குறத்தி - வள்ளி துயில் கொள்ளும் அழகிய மார்பனே!

அதிவேகம் கொண்டதும், நீலநிறத் தோகை உள்ளதுமான மயிலாம் குதிரைமீது விளங்கிப், பிரமன் - இந்திரன் வீற்றிருந்துவாழும் பதிகளாகிய (தலைநகராகிய) மனோவதி, அமராவதி என்னும் ஊர்களினும் மேம்பட்டதான தஞ்சை (தஞ்சாவூர்) என்னும் பெரும் பட்டணத்தில் உள்ள ராஜ கோபுரத்தில் அமர்ந்தருளும் பெருமாளே! (நீபமாலை சற்றிலங்க வருவாயே)

## சப்தஸ்தானம்

## 890.

**ந**றுமணம் உலவும் கூந்தலைக் கலைத்து அவிழ்ப்பவர்; போருக்கு உற்ற வேல் என்று சொல்லத்தக்க நீண்ட கண்களை உடையவர்கள்; மனதிலே வஞ்சனை ஊறும் பரத்தையர்; ரதியின் கணவனாகிய

---

*(598-ஆம் பக்கத் தொடர்ச்சி)*

உய்த்தவன் என்னைப் புறம்புல்குவான்"
உம்பர்கோன் என்னைப் புறம் புல்குவான்"

-பெரியாழ்வார் *3-9-1; 1-9-9;*

'அருட்கொண்டல் அன்ன அரங்கர் சங்கோசையில் அண்டமெல்லாம்
வெருட்கொண் டிடர்ப்பட மோகித்து வீழ்ந்தனர் வேகமுடன்
தருக்கொண்டு போகப் பொறாதே தொடருஞ் சதுர்முகனும்
செருக்கொண்ட முப்பத்து முக்கோடி தேவருஞ் சேனையுமே'.

*-(பிள்ளைப் பெருமாளையங்கார்)*.

*மதன னோடுறழ் பூச லிடைச்சியர்
இளைஞ ராருயிர் வாழு முலைச்சியர்
மதுர மாமொழி பேசு குணத்தியர் தெருமீதே;

சருவி யாரையும் வாவெ னழைப்பவர்
பொருளி லேவெகு ஆசை பரப்பிகள்
சகல தோதக மாயை படிப்பரை யணுகாதே-

† சலச மேவிய பாத நினைத்துமுன்
அருணை நாடதி லோது திருப்புகழ்
தணிய வோகையி லோத எனக்கருள் புரிவாயே;

‡அரிய கானக மேவு குறத்திதன்
இதணி லேசில நாளு மனத்துடன்
அடவி தோறுமெ வாழியல் பத்தினி மணவாளா-

அசுரர் வீடுகள் நூறு பொடிப்பட
உழவர் சாகர மோடி யொளித்திட
அமரர் நாடுபொன் மாரி மிகுத்திட
நினைவோனே;

---

* மதனனோடு உறழ் இடை - மன்மதனைப் போல உருவம் இல்லாதது இடை.

† அருணகிரியாரின் இவ் வேண்டுகோள் வயலூரில் நிறைவேறிற்று - பாடல் 105 அடி 4-பார்க்க.

‡ பரண்மீதும், காடுகளிலும் வள்ளி வாழ்ந்தனள்; அந்தக் காடுகள் சண்பகக் காடு, சந்தனக் காடு முதலியன;

"செண்ப காடவி யினுமித ணினுமுயர்
சந்த னாடவி யினுமுறை குறமகள்"- திருப்புகழ் 289.

மன்மதனுக்கு ஒப்பானதும், (காமப்) போருக்கு உற்றதுமான இடையை உடையவர்கள், இளைஞர்களின் அரிய உயிர் தங்கிவாழ்கின்ற கொங்கையை உடையவர்கள், இனிமை வாய்ந்த பெரிய பேச்சுக்களைப் பேசும் குணத்தினர், தெருவில்

(சருவி) கொஞ்சிக் குலவி யாரையும் வா என்று அழைப்பவர், பொருள் பெறுவதில் மிக்க ஆசை பரந்துள்ள நெஞ்சினர், எல்லாவித வஞ்சகமான மாயை வித்தைகளையும் கற்பவர், (இத்தகைய) வேசையர்களை நான் நெருங்காமல்-

தாமரைக்கு ஒப்பான உனது திருவடியைத் தியானித்து, முன்பு திருவண்ணாமலைப் பிரதேசத்தில் நான் ஓதின சந்தப்பாவாம் திருப்புகழை உள்ளங் குளிர்ந்த மகிழ்ச்சியுடனே (எப்போதும்) ஓதும்படியான பாக்கியத்தை எனக்கு நீ அருள்புரிவாயாக!

(செல்லுதற்கு) அரிய (வள்ளிமலைக்) காட்டில் இருந்த குறத்தி தனது (தினைப்புனத்துப்) பரண்மீதில் சில நாளும், (மனத்துடன்) மனம் வைத்து ஆசையுடன், (அடவிதோறுமே) (சந்தனக்காடு, செண்பகக்காடு முதலிய) காடுகள் தோறுமே வாழ்ந்து உலவின, உழுவலன்புடைய பத்தினித்தேவியாகிய வள்ளியின் மணவாளனே!

அசுரர்கள் இருப்பிடங்கள் எல்லாம் தூளாகிப் பொடியாக (அல்லது நூற்றுக்கணக்காகப் பொடிபட), (உழவர்) (அசுரப்) படைவீரர்கள் (பயந்து) கடலுள் ஓடி ஒளித்துக்கொள்ள, தேவர்களின் நாடு (பொன்னுலகம்) பொன்மழை மிகச் சொரிய - நினைந்து உதவினவனே!

*திருவின் மாமர மார்பழ னப்பதி
அயிலு †சோறவை யாளுது றைப்பதி
திசையி னான்மறை தேடிய முற்குடி விதியாதிச்-
சிரமு மாநிலம் வீழ்தரு மெய்ப்பதி
பதும நாயகன் வாழ்பதி நெய்ப்பதி
திருவை யாறுட னேழுதி ருப்பதி
பெருமாளே (1)

## திருவையாறு.

(தஞ்சாவூருக்கு வடக்கு 7-மைல், சப்த ஸ்தானங்களுள் முதன்மையான து. மூவர் தேவாரமும் பெற்றது.)

## 891. வீடுற

தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன
தனன தானன தானன தானன தனதான

சொரியு மாமுகி லோஇரு ளோகுழல்
சுடர்கொள் வாளிணை யோபிணை யோவிழி
சுரர்த மாரமு தோகுயி லோமொழி யிதழ்கோவை-
துவர தோஇல வோ‡ தெரி யாஇடை
துகளி லாவன மோபிடி யோநடை
துணைகொள் மாமலை யோமுலை தானென
உரையாடிப்;

பரிவி னாலெனை யாளுக நானொரு
பழுதி லானென வாணுத லாரொடு
பகடி யேபடி யாவொழி யாஇடர் படுமாயப்-

* திருப்பழனமும் மாமரமும்:
"காவேரி நலமஞ்சுடைய நறுமாங்கனிகள் குதிகொண்டெதிருந்தி... திரைமுன் சேர்க்கும் பழன நகர்" - சம்பந்தர் 1-67-5.

† சோறவை யாளு துறைப்பதி - திருச்சோற்றுத்துறை.

நான்மறைதேடிய முற்குடி - திருவேதிகுடி. விதி சிரம் வீழ்தருபதி- திருக்கண்டியூர், பதுமநாயகன் வாழ் பதி - திருப்பூந்துருத்தி. நெய்ப்பதி - திருநெய்த்தானம்.

திருச் சோற்றுத் துறை - இந்த ஸ்தலம்-சிவபக்தனான அருளாளன் என்னும் மறையவன் பசியால் வருந்தும்போது, சுவாமி அவனுக்கு எடுக்க எடுக்கக் குறையாத சோறு அளித்தருளிய ஸ்தலம். வேதம் பூசித்த தலம் வேதிகுடி. வைரவரால் பிரமனது சிரம் துண்டிக்கப்பட்ட தலம் கண்டியூர். சூரியன் பூசித்ததலம் போலும். திருப்பூந்துருத்தி-

[தொடர்ச்சி 603 ஆம் பக்கம் பார்க்க]

லக்ஷ்மீகரம் பொருந்திய மாமரங்கள் நிறைந்த **திருப்பழனம்** என்னும் ஊர், உண்பதற்குஉரிய (சோறவையாளு 'துறைப்பதி) **திருச் சோற்றுத்துறை**, திசைகள் தோறும் நான்கு வேதங்கள் (ஈசனைத்) தேடிய (தேடி அடைந்த) பழம்பதியாகிய **திருவேதிகுடி**, பிரமனுடைய முதல்

தலை (உச்சித்தலை) பெரிய பூமியில் கிள்ளப்பட்டு வீழ்த்தப்பட்ட உண்மை நகரமாம் **திருக்கண்டியூர்**, தாமரையின் நாயகனாம் சூரியன் பூசித்து வாழ்ந்த ஊராகிய **திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம், திருவையாறுடன்** ஆக ஏழு திருப்பதிகளிலும் வாழ்கின்ற பெருமாளே!

(திருப்புகழ்...ஓத எனக்கருள் புரிவாயே)

## திருவையாறு

## 891.

**சொரி**ந்து மழையாய் விழும் இருண்ட மேகமோ அல்லது இருள்தானோ கூந்தல், ஒளிகொண்ட வாள்கள் இரண்டோ அல்லது மானோ கண்; தேவர்களின் அருமையான அமுதம் தானோ அல்லது குயிலின் குரல்தானோ மொழி; வாயிதழானது கொவ்வைக்கனி தானோ (அல்லது)

பவளமோ, இலவமலரோ; தெரியா - கண்ணுக்குத் தெரியாத உருவத்ததோ இடையானது; குற்றம் இல்லாத அன்னமோ, பெண் யானையோ (அன்ன நடையோ - பெண் யானை நடையோ) நடையானது, இரட்டையாயுள்ள பெரிய மலைகளோ கொங்கைகள் - என்றெல்லாம் உவமைகள் எடுத்துப் பேசி,

'அன்புடன் என்னை ஆண்டருளுக', நான் ஒரு குற்றமுமில்லாதவன்' என்று ஒள்ளிய நெற்றியை உடைய மாதர்களுடன் (பகடியே) வெளி வேஷப் பேச்சுக்களையே பேசிப் படித்து, நீங்காத துன்பத்திற்கு இடமான (இந்தப் பிறவி யென்னும்) மாயக்-

---

(602 ஆம் பக்கத் தொடர்ச்சி)

‡ 'தெரியா இடை' - பாடல் 201 (இராத இடை)

பரவை மீதழி யாவகை ஞானிகள்
பரவு நீள்புக ழேயது வாமிகு
பரம **வீடது சேர்வது மாவது** **மொருநாளே;**
கரிய மேனிய னானிரை யாள்பவன்
அரிய ராவணை மேல்வளர் மாமுகில்
*கனகன் மார்பது பீறிய வாளரி கனமாயக்-
கபடன் மாமுடி யாறுட னாலுமொர்
கணையி னால்நில மீதுற நூறிய
கருணை மால் † கவி கோபக்ரு பாகரன்
மருகோனே;
‡ திரிபு ராதிகள் தூளெழ வானவர்
திகழ வேமுனி யாவருள் கூர்பவர்
Xதெரிவை பாதியர் சாதியி லாதவர் தருசேயே-
சிகர பூதர நீறுசெய் வேலவ
திமிர Oமோகர வீரதி வாகர
**திருவை யாறுறை** தேவக்ரு பாகர
பெருமாளே. (1)

## திருப்பூந்துருத்தி.

[தஞ்சாவூருக்கு வடமேற்கு 8-மைல். சப்தஸ்தானங்களுள் ஒன்று. திரு நாவுக்கரசு ஸ்வாமிகளுடைய தேவாரம் பெற்றது.]

## 892. ஞானாசாரம் பெற

தாந்த தத்தன தானா தானன
தாந்த தத்தன தானா தானன
தாந்த தத்தன தானா தானன தந்ததான

**வீங்கு** பச்சிள நீர்போல் மாமுலை
சேர்ந்த ணைத்தெதிர் மார்பூ டேபொர
வேண்டு சர்க்கரை பால்தே னேரிதழ் உண்டுதோயா-

---

* இரணியன் மார்பைக் கிழித்தது
- பாடல் 327-1-பக்கம் 317-கீழ்க்குறிப்பு.

† கவி கோப - வாலியைக் கோபித்தது; வாலியை அட்டது.
- பாடல் 231-பக்கம் 78 கீழ்க்குறிப்பு.

‡ திரிபுராதிகளை எரித்தது - பாடல் 285-பக். 206 கீழ்க்குறிப்பு.

X தெரிவை பாதியர் - பாடல் 301-பக்கம் 246 கீழ்க்குறிப்பு.

O மோகரம் - மயக்கம்.

கடலிலே அழியாதபடி, ஞானிகள் போற்றுகின்ற பெரும் புகழே உருவான சிறந்த (பரம வீடது) மேலான மோக்ஷ வீட்டைச் சேர்வதும் (அங்ஙனம் சேரத்) தகுந்தவனாவதுமான ஒரு நாள் (எனக்குக்) கிடைக்குமா!

கரிய நிறத்தினன், பசுக் கூட்டத்தை மேய்த்து ஆள்பவன், (அரி) திருமால், பாம்பணையின் மேல் துயில் வளர் கரிய முகில், பொன்னிறத்தனாம் இரணியனுடைய மார்பைக் கிழித்த (வாளரி) - ஒளிவீசும் (அரி), (அல்லது ஆளரி) நரசிங்கம், பலமான மாயங்களில் வல்ல-

வஞ்சகனாம் (ராவணனுடைய) பெரிய முடிகள் (ஆறும் நாலும்) பத்தும் * ஒரே பாணத்தால் நிலத்தின்மீது விழும்படித் தூளாக்கிய கருணை நிறைந்த திருமால். (கவி) வாலி எனும் குரங்கைக் கோபித்து (அழித்த) கிருபைக்கு இடமானவன் (ஆன திருமாலின்) மருகனே!

திரிபுர அசுரர்கள் தூளாமாறு (சாம்பலாமாறு), தேவர்கள் விளங்கும்பொருட்டு (முனியா) திரிபுராதியர்மேல் கோபித்துத் (தேவர்களுக்கு) அருள் மிகப் பாலித்தவர், தேவிக்குத் தன் உடலிற் பாதி கொடுத்தவர், சாதி என்பதே இல்லாதவர் - ஆன சிவபிரான் தந்த குழந்தையே!

சிகரங்களை உடைய (கிரௌஞ்ச) மலையைத் தூளாக்கி அழித்த வேலனே! இருள் - அஞ்ஞானம் (என்பதைப் போக்கவல்ல) வீர சூரியனே! **திருவையாற்றில்** எழுந்தருளி-யிருக்கும் தேவனே! கிருபாகர மூர்த்தியே! பெருமாளே!

(வீடது சேர்வதும் ஆவதும் ஒரு நாளே)

## திருப்பூந்துருத்தி.

## 892.

**ப**ருமை கொண்டுள்ள பச்சை இளநீர் போல உள்ள பெரிய கொங்கைகளைச் சேர்ந்து அணைத்து எதிரில் உள்ள மார்பில் அழுந்தும்படிப் பொருந்தவைத்து, விரும்பத்தக்க சர்க்கரை, பால், தேன் இவைகளுக்கு ஒப்பான வாயிதழ் (ஊறலை) உண்டு தோய்ந்து

* ஒரே பாணம் - பாடல் 452, பக்கம் 6 - கீழ்க்குறிப்பு.

வேண்டு ரைத்துகில் வேறாய் மோகன
வாஞ்சை யிற்களை கூரா வாள்விழி
மேம்ப டக்குழை மீதே மோதிட வண்டிராசி;

ஓங்கு மைக்குழல் *சாதா வீறென
† வீந்து ‡ புட்குரல் கூவா வேள்கலை
யோர்ந்தி டப்பல க்ரீடா பேதXமு யங்குமாகா-
Oஊண்பு ணர்ச்சியு மாயா வாதனை
தீர்ந்து னக்கெளி தாயே மாதவ
மூன்று தற்குமெய்ஞ் ஞானா சாரம்வ ழங்குவாயே;

தாங்கு** நிற்சரர்†† சேனா‡‡ நீதரு
னாங்கு ருத்ரகு மாரா கோஷண
தாண்ட வற்கருள் கேகீ வாகன துங்கவீரா-
XXசாங்கி பற்சுகர் சீநா தீசுர
ரேந்த்ரன் மெச்சிய வேலா போதக
சாந்த வித்தக ஸ்வாமீ நீபவ லங்கன்மார்பா;

---

* சாதா - சதா. † வீந்து - விழுந்து.

‡ புட்குரல் - பாடல் 197-பக்கம் 6-கீழ்க்குறிப்பு.

X முயங்கு - முயங்குதல் - தொழிற் பெயர் விகுதி ஈறு கெட்டு 'முயங்கு' என நிற்கின்றது.

O ஊண் - ஆன்மாவின் சுக துக்கானுபவம் - "ஊண் ஒழியாது உன்னின்" (சிவப்பிர-19).

** நிர்ச்சரர் - சைன விரதத்தினர்: நிர்ச்சரம் - சுடுபாறையிற் கிடத்தல், தலைமயிர் பறித்தல் முதலிய சைன விரதம். (சிவஞான பாடியம் - அவையடக்கம் - ஆருகதம்)

†† சேனா - சேனை - கூட்டம் - பாடல் 859-பக். 516 கீழ்க்குறிப்பு.

‡‡ நீதர் - நீசர் - 'நீதரல்லார் தொழு மாமருகல்'-சம்பந்தர் 1-6-10.

நீதர் உன்னியது : சம்பந்தப் பெருமான் மங்கையர்க்கரசியாரின் வேண்டுகோளின்படி மதுரைக்கு வந்தவுடனே சமணர்கள் பலவித தீய கனவுகளைக் கண்டு கவலைபூண்டு மனம் நொந்தனர்-"கண்களும் இடமே ஆடி மேல்வரும் அழிவுக்காக வேறு காரணமும் காணார், மாலுழந் தறிவு கெட்டு மயங்கினர் அமணர் எல்லாம்" -பெரியபுரா-ஞானசம்-633.

XX சாங்கிபற் சுகர் சீனாதீசுரா-

'சார்ங்க கைத்தலன் வானா டாளமரேந்த்ரன் மெச்சிய' எனவும்,

[தொடர்ச்சி 607 ஆம் பக்கம் பார்க்க]

விரும்பத்தக்க (உரை) பேச்சுக்களைப் பேசி, ஆடையும் வேறாக, காம மயக்க ஆசையில் மகிழ் கூர்ந்து, ஒளி பொருந்திய கண்கள் மேலிட்டுக் காதில் உள்ள குழைகள் மீது மோத, வண்டின் கூட்டங்கள்

மிக்குள்ள கரிய கூந்தல் (சாதா) சதா - எப்போதும் ஈறென வீந்து (விழுந்து) - முடிவு வரைக்கும் விழுந்து (அல்லது வீறென வீந்து-பொலிவுடனே விழுந்து), புட்குரல் ஒலியைக் கூவச்செய்து காம சாத்திர நூல்களை அறியும்படி பலவகையான (காம) லீலைகளின் பேதங்களை (வகைகளை) (நான்) (முயங்கும்) (முயங்குதல்) முயற்சி செய்தல் (ஆகா) கூடாது.

(ஊண்) ஆன்மா அனுபவிக்க வேண்டிய சுக துக்க நுகர்ச்சி - (புணர்ச்சி) கூடுதலும், மாயை சம்பந்தமாய் ஏற்படும் துன்பங்களும் ஒழிந்து, (உனக்கு) உன் திருவடிக்கே - (திருவடித் தியானத்தில்) எளிதான வகையிலேயே - சிறந்த தவநிலை ஊன்றிப் பொருந்துவதற்கு மெய்ஞ்ஞான ஆசார ஒழுக்கத்தைப் பிரசாதித்து அருளுவாயாக.

(சைனமதக் கொள்கைகளை அநுட்டித்துத்) தாங்கி நின்ற (நிர்ச்சரர்) சைன விரதத்தினராம் - சைனக் குருக்கள் மார்களின் (சேனா) கூட்டமாகிய (நீதர்) நீசர்கள் - (உன் ஆங்கு) ஆங்கு (மதுரையில்) உன் - உன்னுதலுக்கு - ஏதோ தீங்குவரப் போகிறதென்று நினைப்பதற்கு இடமாய் நின்ற ருத்ரகுமாரா - சிவகுமரனே! கோஷண தாண்டவற்கு - வாத்தியங்களின் கோஷத்துடன் - பேரொலியுடன் தாண்டவம் செய்யும் சிவபிராற்கு (உபதேசப் பொருளை) அருளிய (கேகீவாகன) மயில்வாகனனே! உயர்ந்த வீரனே!

சாங்கிபர் - ஆத்ம தத்வத்தை விவரிக்கும் சாங்கிய யோகம் பயின்றவர்கள், சுகப் பிரமரிஷி, சீ நாதர் - லக்ஷ்மியின் நாதர் (திருமால்), ஈசுரர் - சிவபிரான், தேவேந்திரன் மெச்சின வேலனே! (போதக) உபதேச குருவே! - (சாந்த) சாந்த மூர்த்தியே! (வித்தக)ப் பேரறிவாளனே! சுவாமியே! கடப்பமாலை அணிந்த மார்பனே!

---

'சார்ங்க கைத்தல மாலோ டீச மகேந்த்ரர் மெச்சிய' எனவும் பாடங்கள் பிற பதிப்புக்களில் உள்ளன.

[தொடர்ச்சி 608 ஆம் பக்கம் பார்க்க]

பூங்கு ளத்திடை தாரா வோடன
மேய்ந்த செய்ப்பதி நாதா மாமலை
போன்ற விக்ரக சூரா ரீபகி ரண்டரூபா-
போந்த பத்தர்பொ லாநோய் போயிட
வேண்ட நுக்ரக போதா மேவிய
**பூந்து ருத்தியில்** வாழ்வே தேவர்கள்
தம்பிரானே. (1)

## திருநெய்த்தானம்.

*(இதுவும் சப்தஸ்தானங்களில் ஒன்று. திருவையாற்றுக்கு மேற்கு 1-மைல். திருஞான சம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல்பெற்றது.)*

## 893. திருவடி மறவாமை

*தனனத் தானத் தனதன தனதன*
*தனனத் தானத் தனதன தனதன*
*தனனத் தானத் தனதன தனதன தனதான*

முகிலைக் காரைச் சருவிய குழலது
சரியத் *தாமத் தொடைவகை நெகிழ்தர
முளரிப் பூவைப் பனிமதி தனைநிகர் முகம்வேர்வ
முனையிற் காதிப் பொருகணை யினையிள
வடுவைப் பானற் பரிமள நறையிதழ்
முகையைப் போலச் சமர்செயு மிருவிழி
குழைமோதத்;
துகிரைக் கோவைக் கனிதனை நிகரிதழ்
பருகிக் காதற் றுயரற வளநிறை
துணைபொற் றோளிற் குழைவுற மனமது களிகூரச்-
சுடர்முத் தாரப் பணியணி ம்ருகமத
நிறைபொற் பாரத் திளகிய முகிழ்முலை
† துவளக் கூடித் துயில்கினு **முனதடி மறவேனே;**

---

*(607 ஆம் பக்கத் தொடர்ச்சி)*

*'சாங்கிபற்சுகர்' - சார்ங்கி - இடைகுறைந்து சாங்கி என நின்றது - சார்ங்கி - திருமால், பல்சுகர் - பேரின்ப ரூப சிவன், சீன - சிரஞ்சீவிகளான - இது வடமொழிச் சொல், அதீசுரர் - கடவுளர், இந்திரன்' எனப் பிரித்துப் பொருள் காண்பர் ஸ்ரீலஸ்ரீ ஈசுர சுவாமிகள் (திருவண்ணாமலை).*

* *தாமம் - 18 கோவையுள்ள மாதர் இடையணி.*

† *833, 859, 1099, 1275 எண்ணுள்ள பாடல்கள் இத்தகைய கருத்தைக் கொண்டன.*

தாமரைப்பூ உள்ள (அல்லது அழகிய) குளத்தில் (தாரா) குள்ள வாத்துடனே அன்னப்பறவைகள் மேய்கின்ற **வயலூர்ப்** பெருமானே! பெரியமலை போன்ற (விக்ரகம்) உருவத்தைக் கொண்டிருந்த சூரனுக்கு (அரி) பகைவனே! (பகிரண்டம்) வெளியண்டங்களாய் நிற்கும் உருவத்தனே!

(உன்னடியை வேண்டிப்) போந்த (வந்த) பக்தர்களின் பொல்லாத நோய்கள் எல்லாம் ஓடிப்போக, வேண்டிய அனுக்கிரகப் பிரசாதங்களைத் தரும் (போதா) அறிஞனே! பொருந்திய **திருப்பூந்துருத்தி** என்னும் தலத்துச் செல்வனே! தேவர்கள் தம்பிரானே!

(ஞானாசாரம் வழங்குவாயே)

## திருநெய்த்தானம்

## 893.

(முகிலை) மேகத்தையும், (காரை) இருள் அல்லது கருமையையும், (சருவிய) பழகிய - கூடி நின்ற கூந்தலானது சரிந்துவிழத், (தாமம்) இடையணியும், (தொடை) பூமாலை வகைகளும் தளர்ந்து நெகிழ, தாமரை மலரையும், குளிர்ந்த சந்திரனையும் ஒத்த முகமானது வேர்வைதர-

முனையினால் - நுனியால் வெட்டுதல்போல முட்டு-கின்றதும், போருக்கு உற்றதுமான (கணையினை) அம்பை, இளமாவடுவை, கருங் குவளையை, நறுமணமும் தேனும் நிறைந்த (முகைஇதழை) தாமரை மொட்டின் இதழைப்போல விளங்கிப் போர்புரியும் இரண்டு கண்களும் காதில் உள்ள குழைகளை மோதப்-

பவளத்தையும், கொவ்வைக் கனியையும் ஒத்த வாயிதழ் ஊறலை உண்டு, காம வருத்தம் நீங்க, வளப்பம் நிறைந்த இரண்டு அழகிய தோள்களிலும் (மனமது குழைவுற) மனம் உருகி நின்று மகிழ்ச்சி மிக

ஒளிவீசும் முத்துமாலையாம் ஆபரணத்தை அணிந்துள்ளதும், கஸ்தூரி நிறைந்ததும், அழகுள்ளதும், பாரமுள்ளதும், நெகிழ்ச்சி கொண்டதும், குவிந்து தோன்றுவதுமான கொங்கை துவட்சியுறும்படி (நான்) (வேசையரொடு) கூடித் தூங்கினும் உன்னுடைய திருவடியை மறக்க மாட்டேன்.

குகுகுக் கூகுக் குகுகுகு குகுவென
திமிதித் தீதித் திமிதியென் முரசொடு
குழுமிச் சீறிச் சமர்செயு மசுரர்கள் களமீதே-
குழறிக் கூளித் திரளெழ வயிரவர்
குவியக் கூடிக் கொடுவர அலகைகள்
* குணலிட் டாடிப் பசிகெட அயில்விடு குமரேசா;

செகசெச் சேசெச் செகவென முரசொலி
திகழச் சூழத் திருநட மிடுபவர்
செறிகட் காளப் பணியணி யிறையவர் தருசேயே-
சிகரப் பாரக் கிரியுறை குறமகள்
கலசத் தாமத் தனகிரி தழுவிய
† திருநெய்த் தானத் துறைபவ சுரபதி
பெருமாளே.(1)

## திருப்பழுவூர்.

(திருவையாற்றுக்கு வடக்கு 10-மைல். அரியலூருக்குப் போகும் பாதை. திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

### 894. வேசியர் உறவு அற

தனன தந்தன தாத்த தானன
தனன தந்தன தாத்த தானன
தனன தந்தன தாத்த தானன தனதான

விகட சங்கட வார்த்தை பேசிகள்
அவல மங்கைய ருத்தை நாறிகள்
விரிவ டங்கிட மாற்றும் வாறென வருவார்தம்-

விதம்வி தங்களை நோக்கி யாசையி
லுபரி தங்களை மூட்டி யேதம
‡ இடும ருந்தொடு சோற்றை யேயிடு
விலைமாதர்;

---

* குணலை - ஆரவாரத்துடன் நடிக்கும் கூத்து-குருதிக் கடலைப் பெருகப் பருகிக் குணலைத் திறனிற் களிக்கும் ஒரு திரள்......செருக்களத்தில் அலகையே' - திருவகுப்பு (8)

† "திருநெய்த் தானச் சுரர்பதி பரவிய" - என்றும் பாடம்.

‡ இடுமருந்து - பாடல் 230-பக்கம் 74-கீழ்க்குறிப்பு.

குகுகுக் கூகுக்...குகு என்றும், திமிதித் தீதித் திமிதி என்றும் முரசவாத்தியத்துடன் (பறையுடன்) ஒன்று கூடிக் கோபாவேசத்துடன் போர் புரிந்த அசுரர்களின் போர்க்களத்திலே

(குழறி) கூச்சலிட்டுக் (கூளி) பெருங்கழுகுகளின் (அல்லது பேய்களின்) கூட்டம் கூட, (ரணகள) அட்ட பைரவர்கள் குவிந்து-ஒன்று கூடிக் கொண்டு வரப்-பேய்கள், (குணலையிட்டு ஆடி)க் கொக்கரித்து ஆரவாரத்துடன் ஆடித் தமது பசியை ஆற்றிக்கொள்ள வேலாயுதத்தைப் பிரயோகித்த குமரேசனே!

செக செச் சேசெச் செக என்று முரசு (பறை) ஒலி முழங்கித் தம்மைச் சூழத் திருநடனம் செய்பவர். (செவி உணர்ச்சியும்) கூடிய கண்களையும் விஷத்தையும் கொண்ட பாம்பை அணியாகக்கொண்ட இறைவர்-சிவபிரான் அருளிய குழந்தையே!

சிகரங்களை உடையதும், பருத்துப் பாரமுள்ளதுமான (வள்ளி) மலையில் இருந்த குறமகளாம் வள்ளியின் கலசம் (குடம்) போன்றதும், (தாமம்) பூமாலை யணிந்ததுமான கொங்கை மலைகளைத் தழுவிய (பெருமாளே!) **திருநெய்த்தானம்** என்னும் தலத்தில் வீற்றிருப்பவனே! தேவர் தலைவன் - இந்திரனுக்குப் பெருமாளே! (உனதடி மறவேனே)

## திருப்பழுவூர்
## 894.

**ஆ**சியமானதும் (பரிகாசமானதும்), சங்கடம் தரக் கூடியதுமான பேச்சுக்களைப் பேசுபவர்கள், துன்பத்துக்கு ஏதுவான மாதர்கள், அழுக்கு நாற்றம் வீசுபவர். (விரிவு) செல்வப் பெருக்கு ஒடுங்கி (நிலை) மாறுதற்கு வாய்ப்பு இஃதென்னும்படித் தம்மிடம் வருபவர்களுடைய (தம்முடைய செல்வத்தை இழக்க வருவார்களுடைய) அல்லது - செல்வப் பெருக்கை (மாற்றும் வாறு) ஒழிக்கும் அலகுமாறு என்னும் வகையில் வருவார்களுடைய)-

அப்போதைக் கப்போது உள்ள நிலைமையைக் கவனித்து, தங்களுக்கு உள்ள ஆசை காரணமாக (உபரிதங்களை) சுரத விசேடங்களை - காம இச்சையை மூளச்செய்து தாங்கள் இடுகின்ற மருந்தொடு சோற்றைக் கலந்து கொடுக்கின்றவர் களாகிய விலை மாதர்கள்-

சகல மஞ்சன மாட்டி யேமுலை
படவ ளைந்திசை முட்டி யேவரு
சரச இங்கித நேத்தி யாகிய சுழலாலே-

சதிமு ழங்கிட வாய்ப்ப ணானது
மலர வுந்தியை வாட்டி யேயிடை
தளர வுங்கணை யாட்டும் **வேசிய ருறவாமோ;**

*திகிரி கொண்டிரு ளாக்கி யேயிரு
தமையர் தம்பியர் மூத்த தாதையர்
திலக மைந்தரை யேற்ற சூரரை வெகுவான-

செனம டங்கலு மாற்றி யேயுடல்
தகர அங்கவர் கூட்டை யேநரி
திருகி யுண்டிட ஆர்த்த கூளிக ளடர்பூமி;

அகடு துஞ்சிட மூட்டு †பாரத
முடிய அன்பர்க ளேத்த வே‡ யரி
யருளு மைந்தர்கள் வாழ்த்து மாயவன் மருகோனே-

அமர ரந்தணர் போற்ற வேXகிரி
கடல திர்ந்திட நோக்கு மாமயில்
அழகொ டும்பழு வூர்க்குள் மேவிய பெருமாளே. (1)

---

* சக்கரத்தால் சூரியனை மறைத்தது
-பாடல் 350-பக்கம் 380-கீழ்க்குறிப்பு.

† பாரதம் முடிய வைத்தவர் - திருமால்-
"நீ பாரத அமரில் யாவரையும் நீறாக்கிப்
பூபாரம் தீர்க்கப் புரிந்தாய் புயல் வண்ணா!"
-வில்லிபாரதம் - கிருஷ்ணன் தூது-34.

‡ அரி அருளு மைந்தர் - தரும வீம அருச்சுனர்;
அரி - இயமன்: வாயு : இந்திரன்.

X "கால் பட்டசைந்தது மேரு, அடியிட எண்டிசை வரை தூள்பட்ட அத் தூளின் வாரி திடர்பட்டதே" - கந்தரலங் 11.

எல்லாவித நீராடல்களையும் ஆடிக். கொங்கை மேலே படும்படி (வளைந்து) இணங்கி, இசை ஞானத்தைக் காட்டி அதனால் உண்டாகும் காமசேஷ்டை வகையதான இனிமையான, (நேத்தி) -நேதியாகிய - முறைப்பட்ட சுழற்சியான ஆடலாலே-

(சதி) தாள ஒத்து முழங்க, வாயில் இசைப்பாடல்கள் பிறக்க, (உந்தியை) வயிற்றை (வாட்டி), இடை தளரக் கண்களை ஆட்டி அசைக்கும் வேசியர்கள் - இவர்களுடைய சம்பந்தம் ஆமோ - சம்பந்தம் கூடாது என்றபடி,

சக்கரத்தைக் கொண்டு (பகலை) இருளாக்கி, இருதமையர்- கர்ணன், துரியோதனன் ஆகிய இரண்டு தமையன்மார்களையும், ஏனைய தம்பிமார்களையும், (துரியோதனனுடைய தம்பியர்களையும்), மூத்த தாதையர் - திருதராஷ்டிரன். பீஷ்மர் ஆகிய தந்தை, பாட்டன் நிலையில் உள்ள பெரியோர்களையும், துரியோதனன் பிள்ளை இலக்கண குமரனாதிய சிறந்த பிள்ளைகளையும், போரை ஏற்றுவந்த சூரர்களான பகைவர்களையும் - அதிகமான (நிறைந்த)

பகைவராம் ஜனங்கள் எல்லாரையும் அழிவு செய்து, அவர்கள் உடல் பொடியாக, அவர்களுடைய தேகங்களை நரிகள் திருகி உண்ணப், பேரொலி செய்யும் பேய்கள் (அல்லது கழுகுகள்) நிறைந்த போர்ட ூமியில்-

(அகடு) நடுவு நிலைமை குறைய மூள்வித்த பாரதப்போர் முடிய, அன்பர்கள் துதி செய்ய, (அரி) இயமன், வாயு, இந்திரன் ஈன்ற மைந்தர்களான தருமன், வீமன், அருச்சுனன் இவர்கள் வாழ்த்தித் துதிக்கும் திருமாலின் மருகனே!

தேவர்களும், அந்தணர்களும் துதிக்கவே, மலையும் கடலும் அதிர்ச்சி கொள்ளும்படி நோக்கவல்ல (செய்யவல்ல) சிறந்த மயில்மேல் அழகுடனே பழுவூர் என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(வேசியர் உறவாமோ)

## பெரும்புலியூர்.

[இது திருவையாற்றுக்கு மேற்கு 2½ மைல். திருஞான சம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.]

### 895. திருவடியைப் பெற

*தனந்தனன தானத் தனந்தனன தானத்*
*தனந்தனன தானத் தனதான*

*சதங்கைமணி வீரச் சிலம்பினிசை பாடச்*
*சரங்களொளி வீசப் புயமீதே-*
*தனங்கள்குவ டாடப் படர்ந்தபொறி மால்பொற்*
*சரங்கண்மறி காதிற் குழையாட;*

*இதங்கொள்மயி லேரொத் துகந்தநகை பேசுற்*
*றிரம்பையழ கார்மைக் குழலாரோ-*
*டிழைந்தமளி யோடுற் றழுந்துமெனை நீசற்*
*றிரங்கியிரு* **தாளைத் தருவாயே;**

*சிதம்பரகு மாரக் கடம்புதொடை யாடச்*
*சிறந்தமயில் மேலுற் றிடுவோனே-*
*சிவந்தகழு காடப் பிணங்கள்மலை சாயச்*
*சினந்தசுரர் வேரைக் களைவோனே;*

**பெதும்பையெழு கோலச் செயங்கொள்சிவ காமிப்*
*ப்ரசண்டஅபி ராமிக் கொருபாலா-*
*பெரும்புனம தேகிக் குறம்பெணொடு கூடிப்*
**பெரும்புலியூர்** *வாழ்பொற் பெருமாளே.* (1)

---

* பெதும்பை - 8 முதல் 11 வயது வரையுள்ள பெண்
"அந்தரி நீலி அழியாத கன்னிகை" - அபிராமி அந்தாதி-8.
"அகிலாண்ட கோடி யீன்ற அன்னையே பின்னையும்
கன்னியென மறை பேசும் ஆனந்த ரூப மயிலே"
-தாயுமானவர் - மலைவளர்-5.

"பெற்றாள் சக தண்டங்கள் அனைத்தும் அவை பெற்றும் முற்றா முகிழ் முலையாள்"
-வில்லிபாரதம் அருச்சுன தீர்த்த-15.

# பெரும்புலியூர்

## 895.

(சதங்கை) கிங்கிணி, ரத்னங்கள் அமைக்கப் பெற்ற வீரச் சிலம்பு - இவை யிரண்டும் இசை பாடக், (கழுத்தில் அணிந்துள்ள) (சரங்கள்) மணி வடங்கள் ஒளியைப் பரப்பத், தோள் மேலே-தோள்மேல் ஒளி பரப்பி விளங்க,

(தனங்கள் குவடாடப் படர்ந்த பொறி) பொறி படர்ந்த தனங்கள் குவடாட - தேமல் படர்ந்துள்ள கொங்கை மலைகள் அசைந்தாட, (மால்) ஆசையை விளைக்கும் அழகிய அம்பு போன்ற கண்(மறி) தடுத்துத் தாக்குகின்ற காதில் குழைகள் ஆட

இனிமை வாய்ந்த மயிலின் (சாயல்) அழகைக் கொண்டு, மகிழ்ச்சியைக் காட்டும் சிரிப்புடன் பேசி, ரம்பை போன்ற அழகினை உடையவர்களும், கரிய கூந்தலை உடையவர்களுமான (மங்கையருடனே) (அல்லது ரம்பையின் அழகு போன்ற அழகு நிறைந்த மைக்குழலாருடனே)

நெருங்கிப் பழகி, படுக்கையே இடமாகப் பொருந்தி அதிலே அழுந்திக் கிடக்கும் என்மீது நீ சற்று இரங்கி உனது இரண்டு தாளைத் தந்தருளுவாயாக.

சிதம்பரேசராம் சிவபிரானது குமாரனே! கடப்பமாலை அசைந்தாடச், சிறப்புற்ற மயில்மேல் வீற்றிருப்பவனே!

சிவந்த கழுகுப் பறவைகள் (களிப்புடன்) ஆடப், பிணங்கள் மலை மலையாகச் சாய்ந்து குவியும்படிக் கோபித்து அசுரர்களின் வேரைக் களைந்து எறிந்தவனே!

பெதும்பைப் பருவத்தின் இளமை அழகு தன்னிடத்தே வெற்றியுடன் விளங்கும் சிவகாமி, வீரம் விளங்கும் அபிராமி - ஆகிய தேவியின் ஒப்பற்ற (பாலனே) குழந்தையே!

பெரிய (வள்ளிமலைத் திணைப்) புனத்துக்குச் சென்று குறப்பெண் - வள்ளியுடன் கூடிப் - பெரும் புலியூர் என்னும் தலத்தில் வாழ்கின்ற அழகிய பெருமாளே!

(இருதாளைத் தருவாயே)

## நெடுங்களம்.

(திரிசிராப்பள்ளிக்கு அடுத்த திருவெறும்பியூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கு 7-மைல். திருஞான சம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)

## 896. கவலை யற

தந்ததன தந்ததன தந்ததன தந்ததன
தந்ததன தந்ததன தந்ததான

பஞ்சபுல னும்பழைய ரண்டுவினை யும்பிணிகள்
பஞ்செனவெ ரிந்துபொடி யங்கமாகிப்-

பண்டறவு டன்*பழைய தொண்டர்களு டன்பழகி
† பஞ்சவர்வி யன்பதியு டன்குலாவக்;

குஞ்சரமு கன்குணமொ டந்த‡ வனம் வந்துலவ
Xகொஞ்சியசி லம்புகழல் விந்துநாதங்-

கொஞ்சமயி லின்புறமெல் வந்தருளி யென்கவலை
கொன்றருள்நி றைந்தகழ லின்றுதாராய்;

எஞ்சியிடை யுஞ்சுழல அம்புவிழி யுஞ்சுழல
இன்பரச கொங்கைகர முங்கொளாமல்-

Oஎந்தவுடை சிந்தபெல மிஞ்சியமு தம்புரள
இந்துநுத லும்புரள கங்குல்மேகம்;

---

* தொண்டர்களுடன் பழகினால் வினை பொடியாகும்-
"விண்டொழிந்தன நம்முடை வல்வினை..தொண்டரோ
டினிதிருந் தமையாலே" - சம்பந்தர் 2-106-2.

† பஞ்சவர் வியன்பதி - பாண்டியர்களின் பெருமைத் தலைநகர் - கூடல்-ஆதலால் (பஞ்சவர் வியன்பதியுடன்) கூடலுடன் - குலாவ கூடிக் குலவ - என்றும் ஒரு பொருள் கிடைக்கின்றது.

‡ வனம் - உறைவிடம்

X ஆறாதாரங் கடந்த பெருவெளியில் சிலம்போசை முதலிய ஒலிக்கும் - என்பது - பாடல் 179-பக்கம் 416 கீழ்க்குறிப்பு.

O எந்த - மீற

# நெடுங்களம்

## 896.

(சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்) என்னும் ஐம்புலன்களும் பழைமையாக வரும் நல்வினை தீவினை என்னும் இரண்டு வினைகளும், பிணிநோய்களும் பஞ்சு எரிவது போல எரிந்து பொடி உறுப்பு அல்லது பொடி வடிவம் ஆகி

பண்டு அற - முதலிலேயே அற்றுப்போக, உடன்-தாமதமின்றிப் - பழைய அடியார்களுடன் இணங்கிப் பழகிப், பஞ்சவர் வியன்பதி உடன் குலாவ - சுவாதிஷ்டானத்தில் பிரமனும், மணிபூரகத்தில் திருமாலும், அநாகதத்தில் உருத்திரரும், விசுத்தியில் மகேசுரரும், ஆக்ஞையில் சதாசிவமும் விளங்க (ஆறாவது ஆதாரமாகிய மூலாதாரத்தில்)

(குஞ்சரமுகன்) - (குணமொடந்த வனம் வந்து உலவ)-விநாயகரும் வந்து உலவ, ஆக - விநாயகராதி சதாசிவாந்தமாகிய மூர்த்திகளின் திருக்கோலங்கள் குணமொடு - சீருடனே - நன்றாக - (அந்த வனம்)-அவரவர்க்கு உரிய உறைவிடங்களில் - ஆறாதாரங்களில் வந்து உலவ - வந்து விளங்க - அப்போது கொஞ்சுவதுபோன்ற இனிய சிலம்பின் ஓசை, கழலின் ஓசை, விந்து சம்பந்த நாத ஒலி-இவையெலாம்-

இனிமையுடன் ஒலிக்க, மயிலின் முதுகின்மேல் நீ வந்து காட்சி தந்து, எனது கவலையை ஒழித்து, திருவருட் ப்ரசாதம் நிறைந்த உனது திருவடியை இன்று தந்தருளுக;

இடையும் எஞ்சி சுழல - இடையும் மெலிவுற்றுச் சுழல - நைய, அம்பு போன்ற கண்களும் சுழல. இன்பச்சாறு (சுவை) நிறைந்த கொங்கைகளைக் கரத்திற் கொள்ள முடியாதவகையில், அடங்காவகையில், (எந்த) மீறிப் பூரிக்க (அல்லது, கொங்கைகளைக் கரத்திற் கொளா - கொண்டு - (மல்) கலவிப்போர்)

(எந்த) மீற-பெருக-ஆடை குலைய - பெலம் மிஞ்சி - அதிவேகத்துடன் அமுதம் - அமுதரசம் பெருக - பிறை போன்ற நெற்றியும் (புருவமும்) - சுருங்க - இருளும் மேகமும் (அல்லது இருண்ட மேகமும்)

அஞ்சுமள கம்புரள மென்குழைக ளும்புரள
*அம்பொனுரு மங்கைமண முண்டபாலா-
அன்பர்குல வுந்திருநெ டுங்களவ ளம்பதியில்
அண்டரய னும்பரவு தம்பிரானே.(1)

## குறட்டி

[புதுக்கோட்டைக்குக் கிழக்கு 5-மைல்.]

## 897. மாயை ஒழிய

தானன தனத்த தான, தானன தனத்த தான
தானன தனத்த தான, தனதான

கூரிய கடைக்க ணாலு மேருநிக ரொப்ப தான
கோடதனில் மெத்த வீறு முலையாலுங்-
கோபவத ரத்தி னாலு மேவிடு விதத்து ளால
கோலவுத ரத்தி னாலு மொழியாலும்;

சீரிய வளைக்கை யாலு மேகலை நெகிழ்ச்சி யேசெய்
சீருறு நுசுப்பி னாலும் விலைமாதர்-
சேறுதனி னித்த மூழ்கி நாளவ மிறைத்து மாயை
சேர்தரு முளத்த னாகி யுழல்வேனோ;

தாரணி தனக்குள் வீறி யேசமர துட்ட னான
ராவணன் மிகுத்த தானை பொடியாகச்-
சாடுமுவ ணப்ப தாகை நீடுமுகி லொத்த மேனி
தாதுறை புயத்து மாயன் மருகோனே;

---

* பொன் உரு மங்கை - பொன் - பொலிவு எனக் கொண்டு தெய்வக் கோலம் பெற்றாளாதலின் - வள்ளியையும் பொன் உரு மங்கை என்று கூறலாம்-

"வள்ளல்...நங்கை தனை அருளொடு நோக்க-
குறவர் மாதர் குயிற்றிய கோலம் நீங்கி
முன்னுறு தெய்வக் கோல முழுதொருங் குற்றதன்றே"

-கந்த புரா-6-24-197.

பச்சைக் குறத்திபோலப், பச்சை நிறத்துப் பார்வதியையும் "தங்க நிறம்" என்பர் - "தங்கப் பவளொளி ....பரமேசுரி"-பாடல் 656..(சீதையையும் "தங்க நிறத்தாள்" எனக் கூறி உள்ளார் - பாடல் 868.)

அஞ்சும்படி அவ்வளவு கறுத்த கூந்தல் புரண்டு அலைய, மென்மைவாய்ந்த குழைகளும் புரள, அழகிய பொன் உருவம் விளங்கும் மங்கை (தேவசேனையைத்) திருமணஞ் செய்து கொண்ட குமரனே!

அன்பர்கள் விளங்கும் **திருநெடுங்களம்** என்னும் வளப்பம் உள்ள ஊரில் தேவர்களும் பிரமனும் பரவிப் போற்றும் தம்பிரானே!

(கவலை கொன்று...கழல் இன்று தாராய்)

## குறட்டி

## 897.

**கூ**ர்மை கொண்ட கடைக்கண் பார்வையாலும், மேரு மலைக்கு ஒப்பான மலைபோல மிகவும் மேம்பட்டு எழுகின்ற கொங்கையாலும்,

(இந்த்ர) கோபம் (தம்பலப்பூச்சி) போன்ற வாயிதழ்களாலும் (உதடுகளாலும்), பொருந்தியுள்ள மாதிரியில்-தன்மையில்-ஆல்-ஆலிலை போன்ற அழகிய வயிற்றினாலும், பேச்சினாலும்,

சிறந்த வளையல்களை அணிந்துள்ள கைகளாலும், (மேகலை) இடையணியை நெகிழ்ந்து விழும்படிச் செய்கின்ற அழகு அமைந்த இடையினாலும், (விலைப்..தர்) வேசையர் என்கின்ற

சேற்றிலே (நான்)தினந்தோறும் முழுகி, (என்னுடைய) வாழ்நாளை வீணிலே செலவழித்து, மாயை பொருந்திய - மாயை அறிவு கொண்ட - மனத்தனாகித் திரிவேனோ!

பூமி யதனில் மேம்பாடு உடையவனாகிப் போர் செயும் துஷ்டனான ராவணனும் அவனுடைய மிகப் பெருஞ் சேனைகளும் பொடிபட்டு அழியச்

(சாடும்) தாங்கி அழித்த, கருடக் கொடிகொண்ட, பெரிய (கரு) மேகம் ஒத்த திருமேனியையும். (தாது) மலர்மாலை அணிந்துள்ள புயங்களையும் கொண்ட திருமாலின் மருகனே!

*வாரண முரித்து †மாதர் மேகலை வளைக்கை நாண
மாபலி முதற்கொ ணாதன் முருகோனே-

வாருறு தனத்தி னார்கள் சேருமதி ளுப்ப ரிகை
வாகுள குறட்டி மேவு பெருமாளே.(1)

## 898. பிறப்பு அற

தானன தனத்த தான தானன தனத்த தான
தானன தனத்த தான தனதான

நீரிழிவு குட்ட மீளை வாதமொடு பித்த மூல
நீள்குளிர் வெதுப்பு வேறு முளநோய்கள்-

வேருறு புழுக்கள் கூடு நான்முக னெடுத்த வீடு
நீடிய விரத்த மூளை தசைதோல்சீ;

பாரிய நவத்து வார நாறுமு மலத்தி லாறு
பாய்பிணி யியற்று பாவை நரிநாய்பேய்-

பாறொடு கழுக்கள் கூகை தாமிவை புசிப்ப தான
பாழுட லெடுத்து வீணி லுழல்வேனோ;

---

* சிவபிரான் யானையை அட்டுத் தோலை உரித்தது:
- பாடல் 286-பக்கம் 210 கீழ்க்குறிப்பு.

† மாதரிடம் பலிக்குச் சென்றது :

தாருகா வனத்து முனிவர்கள் கடவுளிடத்தில் அன்பு இல்லாதவர்களாகி வேள்விகள் பல செய்து வந்தனர். இவர்களுடைய தருக்கை அடக்க வேண்டிச் சிவபிரான் திருமாலை மோகினிவேடம் கொள்ளும்படிச் சொல்லித் தாமும் பலிக்கலன்-பிச்சைப் பாத்திரமும் சூலமும் கையில் ஏற்றுத் தாருகா வனத்துக்குச் சென்றார். திருமால் தமது பெண் வேடத்தால் முநிவர்களை மயக்கினர். சிவபிரான் இசை பாடி ஐயம் (பிச்சை) ஏற்க, முநிவர்களின் வீடுகள் உள்ள தெருவிற் சென்றனர். இவர் அழகைக் கண்ணுற்ற இருடி பத்தினிகள் இவர்மீது மோகங்கொண்டு நாணம், கைவளை, ஆடை மூன்றையும் இழந்து வருந்தினர்-

"கண்ணுறு மாதர் யாரும் காமன் ஐங் கணையின் மூழ்கி
உண்ணிகழ் உணர்வு மாழ்க உயிர்பதை பதைத்துச் சோர
அண்ணல்தன் காதல் என்னும் ஆழ்திரைப் பட்டார் அன்னார்"

(தொடர்ச்சி 621-ஆம் பக்கம் பார்க்க)

யானையைச் சங்கரித்து அதன் தோலை உரித்து, (தாருகா வனத்து இருடி) பத்தினிகளின் இடையணி, கைவளைகள், நாணம் - இவை மூன்றையும் அழகிய பிச்சையால் - பிச்சையாக முன்னாளிற் கொண்ட (நாதன்) சிவபிரானது குழந்தையே!

ரவிக்கையை அணிந்த கொங்கைகளை உடையவர்கள் (அல்லது பெருஞ் செல்வர்கள்) சேர்ந்து வாழும் மதிலையும மேல் மாடங்களையும் கொண்ட அழகுள்ள குறட்டி என்னும் தலத்தில் வீற்றிருக்கின்ற பெருமாளே!

(மாயை....உளத்தனாகி உழல்வேனோ)

## 898.

நீரிழிவு, குஷ்டநோய், (ஈளை) கோழை, (வாதம்) வாயு இவையுடன் பித்தநோய், மூலநோய், நெடிதாக நிகழும் குளிர்நோய், சுரநோய், வேறும் உள்ள நோய்கள்-

கூடியதாய், புழுக்களுக்கு இருப்பிடமானதாய்ப், பிரமன் உண்டாக்கின வீடு, நெடிதாய்ப் பரவியிருக்கும் ரத்தம், மூளை தசை (மாமிசம்) தோல், சீ (சீழ்)

பருத்துள்ள ஒன்பது துவாரங்கள், நாறும் - தோன்றும் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களின் (ஆறு) வழியாக (பாய்பிணி) ஏற்படுகின்ற பிணிவகைகளோடு (இயற்றப்பட்ட) ஆக்கப்பட்ட ஒரு பொம்மை (பதுமை), நரியும், நாயும், பேயும்-

பருந்தும் கழுகுகளும், (கூகை) கோட்டான்களும் இவைதாம் உண்ணுதற்கு உரிய பாழான (இந்த) தேகத்தை நான் எடுத்து வீண்பொழுது போக்கித் திரிவேனோ!

---

(620-ஆம் பக்கத் தொடர்ச்சி)

"பூணி லங்கிய பொற்றொடி சங்கினம்
மாணு றுந் துகில் மற்றிவை சோர்தலும்
காணு கின்றனர் கைநெரித் தஞ்சியே
நாணி வீதி நடுவிருந் தார்சிலர்"
"தெரிவையர் யாரையும்
கொல்லு கின்றது வேபலி கொள்வதோ
சொல்லு மென்று தொடர்ந்திடு வார்சிலர்"

-கந்தபுரா 6-13-46, 52, 75.

நாரணி யறத்தி னாரி *ஆறுசம யத்தி†பூத
நாயக ரிடத்து காமி ‡மகமாயி-
நாடக நடத்தி கோல நீலவரு ணத்தி வேத
நாயகி யுமைச்சி நீலி திரிசூலி;

வாரணி முலைச்சி ஞான பூரணி கலைச்சி நாக
வாணுத லளித்த வீர மயிலோனே-
மாடமதில் முத்து மேடை கோபுர மணத்த சோலை
வாகுள குறட்டி மேவு பெருமாளே. (2)

## அத்திப்பட்டு.

(புதுக்கோட்டைக் கடுத்த கந்தர்வ கோட்டையி லிருந்து 7-மைல். தென் ஆற்காடு ஜில்லா திருவெண்ணெய் நல்லூர், குறிஞ்சிப்பாடி ஆகிய சப்டிஸ்டிரிக்டுக்களிலும், வட ஆற்காடு ஜில்லா செங்கம் சப்டிஸ்டிரிக்டிலும், செங்கற்பட்டுஜில்லா சைதாப்பேட்டை சப்டிஸ் டிரிக்டிலும் 'அத்திப்பட்டு' எனப் பெயரிய கிராமங்கள் உள்ளன.)

## 899. திருவடியைப் பெற

தனதனன தனதனன தத்தத் தத்ததன
தனதனன தனதனன தத்தத் தத்ததன
தனதனன தனதனன தத்தத் தத்ததன தனதான

கருகியறி வகலவுயிர் விட்டுக் கிக்கிளைஞர்
கதறியழ விரவுபறை முட்டக் கொட்டியிட
கனகமணி சிவிகையில மர்த்திக் கட்டையினி
லிடைபோடாக்-

---

* "ஆறு சமயத்தி"-
"சமயம் ஆறும் தலைவி இவளாயிருப்ப தறிந் திருந்தும்"
-அபிராமி அந்தாதி 63.
"உத்தமி முன் காத்த மதம் ஆறும்" - கச்சி ஆனந்த-தூது-45.
"ஆண்ட நாயகி சமயங்கள் ஆறும்"
-பெரியபுரா-திருக்குறிப்பு-84.
"சமயம் ஆறினையும் தாயென வளர்த்து" - கந்த-நகர-78.

(தொடர்ச்சி 623 ஆம் பக்கம் பார்க்க)

நாரணி, (32) அறங்களைப் புரிந்த (நாரி) தேவி, ஆறு சமயங்களையும் காத்து வளர்ப்பவள், (பூதநாயகர்) பூத கணங்களுக்குத் தலைவரான சிவபிரானது இடது பாகத்தில் விரும்பி இருப்பவள், மகமாயி

திருவிளையாடல்களை இயற்றுபவள் (நடனம் ஆடுபவள்), அழகிய நீலநிறம் உடையவள், வேதத் தலைவி, உமையம்மை, (நீலி) மூலாதாரத்தில் கரிய நிறத்தோடும் 'சாகினி' என்னும் திருநாமத்தோடும் உள்ளவள், முத்தலைச் சூலத்தைக் கொண்டவள்,

ரவிக்கையை அணிந்த கொங்கையை உடையவள், ஞானம் பூரணமாகக் கொண்டவள், கலைகளுக்குத் தலைவி, (நாகம்) மலை (மகளாம்) (வாணுதல்) - ஒள்ளிய நெற்றியைக் கொண்ட தேவி - பெற்ற வீர மயில்வாகனனே!

மாடங்களும் (மெத்தைவீடுகளும்), மதில்களும், முத்து இழைத்த மேடான தளங்களும், கோபுரங்களும், நறுமணம் வீசும் சோலைகளும் கொண்டு அழகு வாய்ந்துள்ள குறட்டி என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

*(பாழுடலெடுத்து வீணில் உழல்வேனோ)*

## அத்திப்பட்டு

## 899.

*(உடல்)* வற்றித் தீந்தது போலாகி, அறிவும் நீங்கி, உயிர் பிரிந்தவுடன், (உக்கிக் கிளைஞர்) கிளைஞர் - சுற்றத்தார் உக்கி உள்ளம் நைந்து கதறி அழ, (விரவு) வந்து சேர்ந்த பறைகள் யாவும் சப்திக்க, பொன் - மணி, (பொன் அழகு) துலங்கு பல்லக்கில் (உடல்) இடப்பட்டு (சுடுகாட்டில்) விறகுக் கட்டைகளின் மத்தியிலே போடப்பட்டு-

---

*(622-ஆம் பக்கத் தொடர்ச்சி)*

† **பூத நாயகர்:**

பூதகணங்களின் தலைவர் - "பூதபதயேநம" - சிவ அட்டோத்தரம்.

"பொங்கழல் உருவன் பூதநாயகன்" - சம்பந்தர் *3-120-1.*

"பூதநாயகர் புற்றிடங் கொண்டவர்" - பெரிய புரா-திருக்கூட்ட-*1.*

‡ மகம் - ஆயி - யாக முதல்வி எனலுமாம்.

கரமலர்கொ டரிசியினை யிட்டுச் சித்ரமிகு
கலையையுரி செய்துமறைகள் பற்றப் பற்றுகனல்
கனகனென எரியவுடல் சுட்டுக் கக்ஷியவர்
வழியேபோய்;

மருவு*புனல் முழுகிமனை புக்குத் துக்கமறு
மனிதர்தமை யுறவுநிலை சுட்டுச் சுட்டியுற
மகிழ்வுசெய்து அழுதுபட வைத்தத் துட்டன் மதன்
மலராலே-

மயல்விளைய அரிவையர்கள் கைப்பட் டெய்த்துமிக
மனமழியு மடிமையைநி னைத்துச் சொர்க்கபதி
வழியையிது வழியெனவு ரைத்துப் பொற்கழல்கள்
தருவாயே;

பொருவின்மலை யரையனருள் பச்சைச் சித்ரமயில்
†புரமெரிய இரணியத னுக்கைப் பற்றியியல்
புதியமுடு கரிய‡தவ முற்றுக் கச்சியினி
லுறமேவும்-

புகழ்வனிதை தருபுதல்வ பத்துக் கொத்துமுடி
புயமிருப தறவுமெய்த் சக்ரக் கைக்கடவுள்
பொறியரவின் மிசைதுயிலு சுத்தப் பச்சைமுகில்
மருகோனே;

அரியமர கதமயிலி லுற்றுக் கத்துகட
லதுசுவற அசுரர்கிளை கெட்டுக் கட்டையற
அமரர்பதி யினியகுடி வைத்தற் குற்றமிகு
மிளையோனே-

---

* புனல் முழுகி.... துக்கம் அறுதல்
-பாடல் 162-பக்கம் 376-கீழ்க்குறிப்பு.

† தேவி புரம் எரித்தது - பாடல் 304-பக்கம் 256-கீழ்க்குறிப்பு

‡ தேவி கச்சியில் தவம் செய்தது
- பாடல் 460-பக்கம் 34 கீழ்க்குறிப்பு.

(உறவினரின்) மலரன்ன கைகளால் அரிசியிடப்பட்டு அழகுள்ள துணியும் எடுபடப்பட்டு, உடலின் மறைவான இடங்களில் எல்லாம் ( பற்றப் பற்று கனல்) பற்றுகனல் பற்ற-பிடிக்கின்ற நெருப்பு பற்றிக் கணகணென்று எரிய, உடலானது (இங்ஙனம்) சுடப்பட்டு பக்கத்தில் இருந்தவர்கள் தாம் வந்த வழியே திரும்பிப்போய்

பொருந்திய நீரில் முழுகி, வீட்டுக்குப் போய்த் துக்கம் நீங்குகின்றார்கள் மனிதர்கள் - (இத்தகைய மனிதர்களை) இன்ன உறவு இவர் என்று உறவு முறையைக் குறித்துக் குறித்து அத்தகைய குறிப்பால் (அவர் பொருட்டு) மகிழ்ச்சி பூணவும், அழுது படுதலும் ஏற்படவும், துஷ்டனான மன்மதனது மலரம்பால்-

காம உணர்ச்சி உண்டாகப் பெண்களின் கையில் அகப்பட்டு, இளைத்து, மிகவும் மனம் நொந்தழிதலையும் கொண்ட அடிமையை நீ நினைத்துச் சொர்க்கலோக ஊருக்கு போகும் வழியை 'இதுதான் வழி' யெனக் காட்டிச் சொல்லி உனது அழகிய திருவடியைத் தந்தருளுக;

(பொருவில்) தனக்கு நிகரில்லாத - மலையரசன் பர்வதராஜன்-பெற்ற பச்சை அழகு மயில், திரிபுரம் எரிபட (மேருவாம்) பொன் வில்லைக் கைப்பற்றினவள், (இயல்) உழுவலன்புடன் (புதிய) அதிசயமானவகையில் ஊக்கத்துடன் அருமையான தவத்தை மேற்கொண்டு காஞ்சிப்பதியிற் பொருந்தி விளங்கும்

புகழ்பெற்ற தேவி (பார்வதி) அருளிய புதல்வனே! (இராவணனுடைய) பத்துக் கொத்தான தலைகளும். புயம் இருபதும் அற்று விழச் செலுத்தின சக்ராயுதக் கையனான கடவுள், புள்ளிகளைக் கொண்ட ஆதிசேடன் என்னும் பாம்பின்மேல் துயில் கொள்ளும் சுத்தமான பச்சைநிற மேக வண்ணன் (திருமாலின்) மருகனே!

அருமையான மரகதநிற மயில்மீது வீற்றிருந்து, ஒலிக்கும் கடல் சுவறவும், அசுரர் கூட்டம் அழிபட்டு (கட்டையற - கட்டற) கட்டோடு ஒழிய, தேவர் தலைவன் இந்திரன் சுகத்துடன் (குடி வைத்தற்கு உற்ற) குடி ஏறுதற்குத் தக்கபடி வைத்த மிக்க இளையவனே!

அருணமணி வெயில்பரவு பத்துத் திக்குமிக
மழகுபொதி மதர்மகுட தத்தித் தத்திவளர்
அணியகய லுகளும்வயல் **அத்திப் பட்டி**லுறை
பெருமாளே.(1)

## அத்திக்கரை.

[புதுக்கோட்டையைச் சார்ந்த அத்திப்பட்டுக்கு 3-மைலில் அத்திக்கரை' என்னும் ஓரூர் உண்டு.]

## 900. முத்தி உற

தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன
தத்தத்தன தத்தத் தனதன தனதான

*தொக்கைக்கழு விப்பொற் றகுமுடை
சுற்றிக்கல னிட்டுக் கடிதரு
சொக்குப் †புலி யப்பிப் புகழுறு களியாலே-

சுத்தத்தைய கற்றிப் பெரியவர்
சொற்றப்பிய கத்தைப் புரிபுல
சுற்றத்துட னுற்றிப் புவியிடை யலையாமல்;

முக்குற்றம கற்றிப் பலகலை
கற்றுப்பிழை யற்றுத் தனையுணர்
முத்தர்க்கடி மைப்பட் டிலகிய அறிவாலே-
முத்தித்தவ சுற்றுக் கதியுறு
சத்தைத்தெரி சித்துக் கரையகல்
**முத்திப்புண** ரிக்குட் புகவர **மருள்வாயே**

---

O இப் பாடல் 'முத்தைத்தரு' என்னும் முதற்பாட்டின் சந்தத்தில் அமைந்தது - பாடல் 1171-ம் இந்தச் சந்தமே.

† புலி - நால்வகைச் சாந்தி லொன்று; பீதம், கலவை, வட்டிகை, புலி- என்பன நால்வகைச் சாந்துகள்.

செம்மணிகள் (பத்துத் திக்கும் வெயில் பரவு) பத்துத் திக்குகளிலும் ஒளி வீசி மிக்க அழகு நிறைந்து, (மதர்) செழிப்புடன் விளங்கும் (மகுட!) (கிரீடம்) மணி முடியை உடையவனே! குதித்துக் குதித்து (தாவித் தாவி) வளர்கின்ற (அணிய) வரிசையாக உள்ள (அல்லது அழகிய) கயல்மீன்கள் தாவிக் குதிக்கும் வயல்கள் உள்ள **அத்திப்பட்டில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(பொற் கழல்கள் தருவாயே)

## அத்திக்கரை

## 900.

(**தொ**க்கை) உடலின் தோலைக் கழுவி, (பொன் தகும் உடை) அழகு உள்ள ஆடையைக் கட்டிக்கொண்டு, (கலன் இட்டு) ஆபரணங்களை அணிந்து, (கடி தரு) வாசனை வீசுகின்ற - சொக்குப்புலி - மயக்கி வசப்படுத்தவல்ல (புலி) சாந்தை அப்பி-(அப்பிக் கொள்பவர்களை) - நிறையப் பூசிக்கொள்பவர்களாகிய மாதர்களைப்-புகழ்ந்து அதனால் வரும் களிப்பால் - களிப்பு மயக்கால்-

பரிசுத்தமான நிலையை நீக்கி-கைவிட்டு, பெரியோர்கள் சொல்லும் புத்திமதியை அநுசரியாது நடந்து, (அகத்தை) பாபச் செயல்களைச் செய்யும் ஐம்புலன்கள் முதலாய் பல சுற்றத்துடன் உற்று - ஐம்புலன்கள் முதலாய் பல சுற்றம் போகும் வழியே போய் - (புலன்களை அறிவு கொண்டு அடக்காமல் விட்டு) இந்தப் பூமியின்கண் நான் அலைச்சல் உறாமல்-

(காமம், வெகுளி, மயக்கம் எனப்படும்) முக் குற்றங்களையும் நீக்கிப் பல கலைநூல்களையும் கற்றுப் பிழையான வழிகளை நீக்கி - ஒழித்துத், தன்னை அறிந்த பரிசுத்த ஞானிகளுக்கு அடிமை பூண்டு அத்தகைய ஒழுக்கத்தால் விளக்கமுறும் அறிவு கொண்டு

முத்தியை அடையக்கூடிய தவநிலையை அடைந்து, கதி (மோக்ஷம்) தரக்கூடிய (சத்தை) உண்மைப் பொருளைத் தரிசித்துக், கரையிலாத - எல்லைக்குட்படாத - முத்தி என்னும் கடலுள் (நான்) புகுமாறு வரம் தந்தருளுவாயாக.

திக்கெட்டும டக்கிக் *கடவுள
ருக்குப்பணி கற்பித் தருளறு
சித்தத்தொட டுத்துப் படைகொடு பொருசூரர்-
செச்சைப்புய மற்றுப் புகவொரு
சத்திப்படை விட்டுச் சுரர்பதி
சித்தத்துயர் கெட்டுப் பதிபெற அருள்வோனே;
†அக்கைப்புனை கொச்சைக் குறமகள்
அச்சத்தையொ ழித்துக் கரிவரும்
‡அத்தத்தி லழைத்துப் பரிவுட னணைவோனே-
அப்பைப்பிறை யைக்கட் டியசடை
அத்தர்க்கரு மைப்புத் திர விரி
**அத்திக்கரை** யிச்சித் துறைதரு பெருமாளே. (1)

## கந்தனூர்.

[புதுக்கோட்டைக்குத் தெற்கு 3-மைல்.]

## 901. ஞானம் பெற

தந்தனா தத்தன தந்தனா தத்தன
தந்தனா தத்தன தந்ததான

**வி**ந்துபே தித்தவடி வங்களா யெத்திசையு
மின்சரா சர்க்குலமும் வந்துலாவி-

---

*சூரபதுமன் திக்கு விஜயம் செய்தபிறகு தேவர்களுக்கெல்லாம் வெவ்வேறு வேலைகள் வைக்கின்றான்-

**திருமால்** - சூரன் அழைக்கும் போதெல்லாம் உடனே வந்துபோக வேண்டும்;

**பிரமன்** - பஞ்சாங்கம் நாளும் சொல்லிப் போகவேண்டும்.

**சூரியன்** - இளங்கதிரே பரப்பவேண்டும்.

**சந்திரன்** - குறைதல் வளர்தல் இல்லாது நாளும் பூரண சந்திரனாய் வந்துபோதல் வேண்டும்.

**அக்கினி** - தனது ஊரில் யார் நினைத்தாலும் உடனே அவர்கள் இட்ட பணியைச் செய்யவேண்டும்; தொட்டால் குளிர்ந்திருக்க வேண்டும்.

**யமன்** - தனது ஊரில் எந்த அவுணன் உயிரையும், யானை, குதிரை இவைதம் உயிரையும் கொல்ல நினைக்கக் கூடாது.

**காற்று** - நறுமண வாசத்தை வீசிச் செல்லவேண்டும்

(தொடர்ச்சி பக்கம் 629)

திக்கு எட்டையும் அடக்கி வெற்றி கொண்டு, தேவர்களுக்கெல்லாம் (பணி கற்பித்து) வேலைகளைக் கட்டளையிட்டு - தேவர்களை வேலையிட்டு ஏவல் கொண்டு. கருணை என்பதே இல்லாத (கடின) மனத்துடன் அணுகிப் படைகொண்டு சண்டை செய்த சூரர்களின்-

(ரத்தத்தால் சிவந்த) புயங்கள் எல்லாம் அற்றுப் பூமியில் (புக)-விழும்படி, ஒப்பற்ற (சத்தி) வேற்படையைச் செலுத்தித் தேவர் தலைவனாம் இந்திரன் மனத்துயரம் நீங்கித் தனது ஊரைப் (பொன்னுலகைப்) பெறுமாறு அருளியவனே!

சங்குமணியை அணிந்த இழிகுலத்தளாம் குறமகள் வள்ளியின் பயத்தை நீக்கி, யானை எதிரில் வந்த சிறு வழியில் அவளைத் தன் மாட்டு அழைத்து அன்புடன் அணைந்தவனே!

கங்கை நீரையும், பிறைச் சந்திரனையும் முடித்துள்ள சடைப் பெருமானுக்கு அருமைப் பிள்ளையே! விளக்கமுற்றுப் பொலியும் **அத்திக்கரை** என்னும் தலத்தில் விரும்பி வீற்றிருக்கும் பெருமாளே!

(முத்திப் புணரிக்குட் புகவரம் அருள்வாயே)

## கந்தனூர்

## 901.

**(விந்து)** சுக்கிலம் வெவ்வேறான உருவங்களாய் எல்லாத் திசைகளிலும் ஒளிபெறும் சராசரக் குலமும் (சரம் - அசையும் பொருள், அசரம் - அசையாப் பொருள்) என்னும் கூட்டமாய் (இவ் வுலகில்) வந்து காலம் கழித்து-

---

(தொடர்ச்சி:-) **வருணன்** - பன்னீரில் நறுமணம் கலந்து இடங்கள் தோறும் தூவவேண்டும். ஈரத்தைக் காற்று துடைக்க வேண்டும்.

**இந்திரன்** - தேவர் கூட்டங்களுடனும் முனிவர் கூட்டங்களுடனும் வந்து இட்ட வேலையைச் செய்யவேண்டும்.

**தேவர்கள்** - நாள்தோறும் மீன்களை உணவுக்குக் கொண்டு வந்து சேர்க்கவேண்டும். கந்தபுராணம் 2-17-(1)-(9); 18-(3).

† அக்கு - சங்குமணி.

‡ அத்தம் - சிறுவழி. யானையை வரவழைத்து வள்ளியை அச்சமுறச் செய்து வள்ளியை அணைந்தது

-பாடல் 680, 719, 748; 606-பக்கம் 400-கீழ்க்குறிப்பு.

விண்டுபோய் விட்டவுடல் சிந்தைதா னுற்றறியு
மிஞ்சநீ விட்டவடி வங்களாலே;

வந்துநா யிற்கடைய னொந்துனா னப்பதவி
வந்துதா இக்கணமெ யென்றுகூற
*மைந்தர்தா விப்புகழ தந்தைதா யுற்றுருகி
வந்துசே யைத்தழுவல் சிந்தியாதோ;

அந்தகா ரத்திலிடி யென்பவாய் விட்டுவரு
மங்கிபார் வைப்பறையர் மங்கிமாள-
அங்கைவேல் விட்டருளி யிந்த்ரலோ கத்தின்மகிழ்
அண்டரே றக்கிருபை கொண்டபாலா;

†எந்தனா விக்குதவு சந்த்ரசேர் வைச்சடையர்
எந்தைபா கத்துறையு மந்தமாது-
எங்குமாய் நிற்குமொரு **கந்தனூர்** சத்திபுகழ்
எந்தைபூ சித்துமகிழ் தம்பிரானே.(1)

## வாலிகொண்டபுரம்.

*(திரிசிராப்பள்ளியிலிருந்து 4-மைல். சென்று திருவானைக்காவைச் சேர்ந்து, அங்கிருந்து 28-மைல் சென்று பெரம்பலூரைச் சேர்ந்து, அங்கிருந்து 8-மைல் சென்றால் இத்தலத்தை யடையலாம்.)*

## 902. தொண்டனாக

தான தந்ததன தான தந்ததன
தான தந்ததன தான தந்ததன
தான தந்ததன தான தந்ததன தந்ததான

ஈயெ றும்புநரி நாய்க ணங்கழுகு
காக முண்பவுட லேசு மந்துஇது
ஏல்வதென்றுமத மேமொ ழிந்துமத
‡ வும்பல்போலே-

---

* இந்த அடி 277-ஆம் பாடலின் 3, 4 அடிகளின் கருத்தைத் தழுவும்.

† இது அருணகிரியார்க்கு அருணாசலேசுரரே உதவிய வரலாற்றைக் குறிக்கும் - பாடல் 856-பக்கம் 508-கீழ்க்குறிப்பு.

‡ உம்பல் - யானை.

(விண்டுபோய்) பின்பு பிரிந்து (அழிந்துபோய்) உடலை விடுவதை (என்) மனது ஆய்ந்து அறியும்; (இங்ஙனம்) நிரம்ப நீ எனக்கு அளிக்கும் வடிவங்களில் பிறப்புக்களில்-

(நான்) வந்து நாயினுங் (கடையனாய்)க் கீழ்ப்பட்டவனாய் மனம் நொந்து ஞானநிலையை இந்த க்ஷணமே வந்து கொடு என்று உன்னிடம் முறையிடும்போது

குழந்தைகள் (பெற்றோர்களிடம்) தாவி நின்று புகழ்ந்தால் தந்தையும் தாயும் (அம் மொழிகளைக் கேட்டு) மனம் உருகி வந்து அக் குழந்தைகளைத் தழுவிக் கொள்வதை உன் உள்ளம் சிந்தியாதோ - நீ (சற்று) நினைக்கக் கூடாதா - (நீ எனக்குத் தந்தைதாய் ஆயிற்றே - என் முறையீட்டைக் கேட்டு என்னை ஆதரிக்கக் கூடாதா என்றபடி), (அல்லது, என் உள்ளம் சிந்தியாதோ - தழுவிக் கொள்வதை நினைத்துநீயும் அங்ஙனம் என்னை ஆதரிப்பாய் என்னும் உண்மை என் சிந்தையிற் புலப்படாதோ)

(அந்தகாரத்தில்) பேரிருளில் இடி இடிப்பதுபோல வாய்விட்டு வரும் - கூச்சலிட்டு வருகின்ற (அங்கி பார்வை) தீப்போன்ற கண்களை உடைய பறையர் - இழிகுலத்தராம் அசுரர்கள் ஒடுங்கி மாண்டுபோக-

அழகிய திருக்கை வேலைச் செலுத்தி அருளி, இந்த்ர லோகத்தில் மகிழ்ச்சியுடன் தேவர்கள் குடியேற அருள் புரிந்த குமரனே!

எனது ஆவிக்கு உதவி புரிந்தவரும், சந்திரனைச் சேர்த்து வைத்துள்ள சடையரும், எந்தையும் ஆன சிவபிரானும், அவரது (இடது) பாகத்து அமர்ந்துள்ள அந்தப் பார்வதி தேவியும் - ஆக இருவரும் -

எங்கும் நிறைந்து வீற்றிருக்கும் ஒப்பற்ற **கந்தனூரில்** (சத்தி) தேவி புகழும் எந்தை சிவபிரான் பூசித்து மகிழ்ந்த தம்பிரானே!

(ஞானப் பதவி வந்து தா)

## வாலி கொண்ட புரம்

## 902.

ஈ, எறும்பு, நரி, (நாய்கணம்) நாய்க்கூட்டம் (அல்லது - நாய், (கணம்) பேய், கழுகு, காகம் இவைகள் உண்ணும் (இந்த) உடலை நான் சுமந்து, இது தக்கது என்று (நினைத்து) ஆணவ மொழிகளையே பேசி மதயானைபோல

ஏது மென்றனிட கோலெ னும்பரிவு
மேவி நம்பியிது போது மென்கசில
ரேய்த னங்கள் தனி வாகுசிந்தைவச
னங்கள்பேசிச்;

சீத தொங்கலழ காவ ணிந்துமணம்
வீச மங்கையர்க ளாட வெண்கவரி
சீற கொம்புகுழ லூத தண்டிகையி லந்தமாகச்-
சேர்க னம்பெரிய வாழ்வு கொண்டுழலு
மாசை வெந்திடவு னாசை மிஞ்சிசிவ
சேவை கண்டுனது பாத **தொண்டனென**
**அன்புதாராய்;**

சூதி ருந்தவிடர் மேயி ருண்டகிரி
சூரர் வெந்துபொடி யாகி மங்கிவிழ
*சூரி யன்புரவி தேர்ந டந்துநடு பங்கினோடச்-
சோதி யந்தபிர மாபு ரந்தரனு
மாதி யந்தமுதல் தேவ ருந்தொழுது
சூழ மன்றில்நட மாடு மெந்தைமுத லன்புகூர;
வாது கொண்டவுணர் மாள செங்கையயி
லேவி யண்டர்குடி யேற விஞ்சையர்கள்
மாதர் சிந்தைகளி கூர நின்று† நட
னங்கொள்வோனே-

---

*சூரியன் தேர்...நடு பங்கினோட - "நமது ஊர்க் கோட்டை மதில்மேல் உன்னால் போக முடியாது; கீழ் மேலாக உள்ள கோபுரத்துக்குள் நுழைந்து அவ் வழியே புகுந்து இளங்கதிர் பரப்பி நீ போவாயாக" என்பது சூரன் சூரியனுக்கு இட்ட கட்டளை-

"..........அருக்கனை நோக்கி நம்முர்ப்,
புறத்தினில் அரணமீதாய்ப் போகுதல் அரிது கீழ்மேல்
நிறுத்திய சிகரியூடு நெறிக்கொடு புக்கு வான்போய்
எறித்தனை திரிதிநாளும் இளங்கதிர் நடாத்தி என்றான்"

-கந்தபுரா-2-17-3.

சூரசம்மாரம் ஆன பின்புதான் சூரியன் தேர் நடு நேராகப் போக முடிந்தது.

† இந்த நடனம் அசுரர்களைச் சங்கரித்தபின் முருகவேள் போர்க்களத்தில் குடையைத் தாழ்த்து ஆடிய 'குடைக்கூத்து'

"படைவீழ்த் தவுணர் பையு ளெய்தக்
குடைவீழ்த் தவர்மு னாடிய குடையும்" - சிலப்பதி 6-52.

எதுவும் - எல்லாம் என்னுடைய (கோல்) - ஆட்சியில் (அடங்கியது) என்னும்படி (பரிவு மேவி) இன்ப நிலையை - சுக நிலையை அடைந்து, (அந்த நிலை நிலைத்து நிற்குமென) நம்பி - இது போதும் - இந்த ஆடம்பரங்கள் போதுமா இவர்க்கு என்று சிலர் கூறும்படி - பொருந்திய தனங்கள் (பொருட் செல்வம்), ஒப்பற்ற (வாகு) அழகிய (சிந்தை) எண்ணங்கள், கொண்டு, பேச்சுக்கள் பேசி,

குளிர்ந்த மாலைகளை அழகாக அணிந்து, நறுமணம் வீச, மங்கையர்கள் நடனம் ஆட, வெள்ளைச் சாமரங்கள் மேலெழுந்து வீச, ஊதுகொம்பு, புல்லாங்குழல் முதலியன ஊதிவர, பல்லக்கில் அழகாக-

வீற்றிருக்கும் பெருமை கூடிய பெரிய வாழ்வைக் கொண்டு திரியும் ஆசையானது வெந்து அழிய, உன்மீது ஆசைமிகுந்து, (சிவ) மங்களகரமான உனது தரிசனத்தைப் பார்த்து உன் திருவடித் தொண்டனெனும் படியான அன்பைத் தருவாயாக.

(சூது) வஞ்சனைச் செயல்களுக்கு இருப்பிடமாயிருந்த (விடர்) மலைப்பிளவுகளைக் கொண்டிருந்த இருண்ட மலை (கிரௌஞ்சமும்), அசுர சூரர்களும் வெந்து பொடியாகி அழிந்து விழ, சூரியனுடைய குதிரைகள் பூட்டிய தேர் (சூரன் ஆட்சிக்காலத்தின் முன் போனது போல) சென்று (நடு பங்கின் ஓட) நேர்வழியில் நடுப்பாகத்தில் ஓட-

(பொன்) ஒளி பொருந்திய அந்தப் பிரமாவும், இந்திரனும், முதல் தேவர் முதல் கடைத் தேவர் வரை எல்லாத் தேவர்களும் வணங்கிச் சூழ்ந்து நிற்கக் (கனக) சபையில் நடமாடும் எந்தை சிவபிரான் முதலாக யாவரும் அன்பு மிக்கு நிற்க (அல்லது நடமாடும் முதல்வனான எந்தை - சிவபிரான் அன்பு மிக்கு நிற்க)

போருக்கு என்று வாது செய்துவந்த அசுரர்கள் மாண்டு அழிய, செவ்விய திருக்கையில் உள்ள வேலாயுதத்தைச் செலுத்தித், தேவர்கள் (பொன்னுலகிற்) குடியேற, (விஞ்சையர்கள்) வித்தியாதரர்களின் மாதர்கள் மனம் மிக மகிழ நின்று நடனம் புரிபவனே!

வாச கும்பதன மானை வந்து *தினை
காவல் கொண்டமுரு காள னும்பெரிய
**வாலி கொண்டபுர** மேய மர்ந்துவளர்
தம்பிரானே. (1)

## திருமாந்துறை.

[திரிசிராப்பள்ளிக்கடுத்த திருவானைக்காவுக்கு வடகிழக்கு 10-மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.]

### 903. திருவடியைப் பெற

தாந்தன தனந்த தாந்தன தனந்த
தாந்தன தனந்த தனதான

ஆங்குடல் வளைந்து நீங்குபல்நெ கிழ்ந்து
ஆய்ஞ்சுதளர் சிந்தை தடுமாறி-
ஆர்ந்துள கடன்கள் வாங்கவு மறிந்து
ஆண்டுபல சென்று கிடையோடே;
ஊங்கிருமல் வந்து வீங்குகுடல் நொந்து
ஓய்ந்துணர் வழிந்து உயிர்போமுன்-
ஓங்குமயில் வந்து சேண்பெறஇ சைந்து
**ஊன்றிய பதங்கள் தருவாயே;**
வேங்கையு முயர்ந்த தீம்புன மிருந்த
வேந்திழையி னின்ப மணவாளா-
வேண்டுமவர் தங்கள் பூண்டபத மிஞ்ச
வேண்டிய பதங்கள் புரிவோனே;
† மாங்கனி யுடைந்து தேங்கவயல் வந்து
மாண்புநெல் விளைந்த வளநாடா-
‡ மாந்தர் தவ ரும்பர் கோன்பரவி நின்ற
**மாந்துறை** யமர்ந்த பெருமாளே.(1)

---

* முருகவேள் தினை காத்தது:
-பாடல் 768-அடி 7: பக்கம் 289 கீழ்க்குறிப்பு.

† "மந்தமார் பொழில் மாங்கனி மாந்திட மந்திகள்"
"நன்று மாங்கனி கதலியின் பலங்களும்....வாரி...
நேர்வரு காவிரி வடகரை மாந்துறை-சம்பந் 2-110-8, 10.

‡ "மாந்துறைப் புனிதனெம் பெருமானைப்
பரிவினாலிருந் திரவியும் மதியமும் பார்மன்னர்
பணிந்தேத்த மருத வானவர் வழிபடு மலரடி வணங்குதல்
செய்வோமே" - சம்பந்தர் 2-110-6.

நறுமணம் உள்ளதும், குடம் போன்றதுமான கொங்கையை உடைய மான்போன்ற வள்ளியிடம் வந்து தினைப்புனத்தைக் காவல் பூண்ட முருகா! (எண்ணும்) மதிக்கத்தக்க, பெரிய, **வாலிகொண்ட புரத்தில்** பொருந்தி வீற்றிருந்து இலகும் தம்பிரானே!

(உனது பாத தொண்டெனன அன்பு தாராய்)

## திருமாந்துறை

## 903.

(ஆம்) நன்றாயிருந்த, குடல் வளைவுற்றுக் கூனி-விழவேண்டிய பற்கள் தளர்ச்சியுற்று, ஆய்ந்து ஓய்வுறும் மனம் தடுமாற்றம் அடைந்து

நிறைய இருந்த கடன்கள் வாங்க வேண்டுவனவற்றை அறிந்து (வாங்கி), பல வருஷங்கள் - (இங்ஙனம்) செல்லப் படுக்கையிலேயே (கிடந்து)

நிரம்ப (அல்லது அவ்விடத்தில்) இருமல் நோய் ஏற்பட்டு, வீங்கும் குடலும் நோவுற்று, சோர்வு அடைந்து, உணர்ச்சியும் அடங்கி, அழிந்து, உயிர் போவதற்கு முன்பு-

விளங்கி நிற்கும் மயில் (மேல் நீ) வந்து, (அடியேன்) விண்ணுலகை அடைவதற்கு நீ மனம் உவந்து ஒப்பி (கிருபைகூர்ந்து), நிலைபெற்ற உனது பதங்களைத் (திருவடியைத்) தந்தருளுக.

வேங்கை மரங்களும் உயர்ந்தோங்கியுள்ள இனிய தினைப்புனத்தே இருந்த மாதேவி - வள்ளியின் - இனிய மணவாளனே!

வேண்டிக்கொள்ளும் அடியார்கள் கொண்டுள்ள (பதம் மிஞ்ச) பதவி மேம்பட்டு விளங்க, அவர்கள் விரும்பின (பதவிகளை அல்லது) திருவடியை அருள்புரிபவனே!

மாம்பழம் உடைந்து அதன்சாறு (வயலில் தேங்கவந்து) * வயலில் நிறைந்து தங்கும்படி சேர்ந்து (அதனால்) மாண்பு நெல் - நல்ல அழகிய நெல் விளையும் வளப்பமுள்ள (சோழ) நாடனே!

மனிதர்களும், தவசிகளும், தேவேந்திரனும் பரவிப் போற்ற நின்ற, **மாந்துறையில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(ஊன்றிய பதங்கள் தருவாயே)

## * வயலூர்.

[இது திரிசிராப்பள்ளிக்குத் தென்மேற்கு 6-மைல். வழியில் $2^1/_2$-மைலில் 'உய்யக்கொண்டான்' என வழங்குந் 'திருக்கற்குடி' என்னுந் தேவாரமும் திருப்புகழும் பெற்ற ஸ்தலம் இருக்கின்றது. வயலூருக்கு 'மணப்பாறை' ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து போகலாம். வயலூர் ராஜகெம்பீர வளநாட்டைச் சார்ந்தது; திருக்கற்குடி - ராஜகெம்பீரன் மலை-பாடல் 390-தலைப்பைப் பார்க்க. அருணகிரியார் திருப்புகழ் நித்தம் பாடும் அன்பை வயலூரில் அநுக்கிரகிக்கப் பெற்றனர்; 105-ஆம் பாடலைப் பார்க்க].

## 904. உபதேசம் பெற

*தனதன தானான தானந், தனதன தானான தானந்*
*தனதன தானான தானந் தனதான*

அரிமரு கோனே நமோவென் றறுதியி லானே நமோவென்
றறுமுக வேளே நமோவென் றுனபாதம்-
அரகர சேயே நமோவென் றிமையவர் வாழ்வே நமோவென்
† றருண சொரூபா நமோவென் றுளதாசை;
பரிபுர பாதா சுரேசன் றருமக ளாதா வராவின்
பகைமயில் வேலா யுதாடம் பரநாளும்-
பகர்தலி லாதாளை யேதுஞ் சிலதறி யாவேழை நானுன்
‡ பதிபசு பாசோப தேசம் பெறவேணும்;

---

* இத் தலத்துக்குச் சம்பந்தப் பெருமான் அருளியதும் "கணி" எனத் துவக்குவதுமான ஒரு பதிகம் உண்டு என்பதும், அப் பதிகத்தில் தமது வரலாற்றைச் சம்பந்தர் கூறி மகிழ்ந்தன ரென்பதும், வயலூரில் இருந்தபோது திரிசிராமலை அப்பர் சம்பந்தருடைய கனவில் தோன்றி அவரைச் சிராமலைக்கு வா எனப் பணித்து மறைந்தன ரென்பதும், அங்ஙனமே சம்பந்தர் திரிசிராப்பள்ளிக்குப் பொழுது விடியாமுன் புறப்பட்டுச் சென்று இறைவனைத் தரிசித்துப் பதிகம் பாடினரென்பதும் - அருட்கவி சேது ராமனாருக்கு உதித்த பாடல்களால் தெரிகின்றன; கீழ்க்காட்டிய அடிகள் அப் பாடல்களில் வருவன.

1. கணியெனத் துவக்கி வயலியிற் சரித்ர
கவிசொலிச் சிரித்து - விளையாடும்
கவுணியப் ப்ரசித்த..........

-(18-5-54 தேதியிற் பாடிய பாடல்)

[தொடர்ச்சி 637 ஆம் பக்கம் பார்க்க]

## வயலூர்
## 904.

திருமாலின் மருகனே உன்னை வணங்குகின்றேன் என்றும், முடிவு (அந்தம்) இல்லாதவனே உன்னை வணங்குகின்றேன் என்றும், ஆறுமுக வேளே உன்னை வணங்குகின்றேன் என்றும், உன்னுடைய திருவடியை

அரகர! சேயே! வணங்குகின்றேன் என்றும், தேவர்களின் செல்வமே! உன்னை வணங்குகின்றேன் என்றும், செந்நிறச் சொரூபனே! உன்னை வணங்குகின்றேன் என்றும் துதித்து வணங்க எனக்கு ஆசை இருக்கின்றது,

சிலம்பணிந்த பாதனே! தேவேந்திரன் தரும் மகள் தேவசேனையின் கணவனே! பாம்புக்குப் பகையான மயில் (வாகனத்தையும்) வேலாயுதத்தையும் கொண்ட ஆடம்பரனே! (கோலாகலனே)! ஒருநாளேனும்

(பகர்தல் இலா தாளை.) (நான் நினைத்துச்) சொல்லுதல் இல்லாத - சொல்லாத (உன்) திருவடியைச் சற்றேனும் - சிறிதளவேனும் அறியாத ஏழையாகிய நான் - உன் (திருவாயால்) பதி, பசு, பாசம் எனப்படும் திரிபதார்த்தங்களாகிய நித்தியப் பொருள்களின் இலக்கணங்களைப் பற்றி உபதேச மொழிகளைப் பெறவேண்டும்.

---

(தொடர்ச்சி) 2. கணியெனாத் தொடங்கி வயலி போய்த் தொடர்ந்த
 கவியினாற் புகழ்ந்து பெருமானைக்
கருதிவாழ்த் துகந்து திரிசிராச் சிலம்பர்
 கனவு தோற்றி வந்து வருமாறே
பணியிடாக் கரந்த வுடனிராப் படர்ந்த
 பகலி லார்த் தெழுந்து பதியேகிப்
பனுவல் பாட் டறிந்து பதிகமேற் பயின்று
 பரவியேத்தி நின்ற பெருமாளே.

-(31-8-54 தேதியிற் பாடினது).

† முருகவேள் செந்நிறத்தவன். 'செய்யன் சிவந்த ஆடையன்' - திருமுருகாறு. 'சிவப்பின் செக்கர் நிறமாயிருக்கும் பெருமாளே. -திருப்புகழ் 275.

‡ பதி-கடவுள் ; பசு - சீவான்மா ; பாசம் - மும்மலம் ; பதி ஞானம் - இறைவனைப் பற்றிய அறிவு ; பசு ஞானம் - ஆன்ம

[தொடர்ச்சி 638 ஆம் பக்கம் பார்க்க]

கரதல *சூலாயு தாமுன் சலபதி போலார வாரங்
கடினசு ராபான சாமுண் டியுமாடக்-
கரிபரி மேலேறு வானுஞ் செயசெய சேனா பதீயென்
களமிசை தானேறி யேயஞ் சியசூரன்;
குரல்விட நாய்பேய்கள் பூதங் கழுகுகள் † கோமாயு காகங்
குடல்கொள வேபூச லாடும் பலதோளா-
‡ குடதிசை வாராழி போலும் படர்நதி காவேரி சூழுங்
குளிர்வய லூரார மேவும் பெருமாளே. (1)

## 905. மாதர்மீது மயக்கு அற

தானதன தாத்த தானதன தாத்த
தானதன தாத்த தனதான

ஆரமுலை காட்டி மாரநிலை காட்டி
யாடையணி காட்டி அநுராக-
ஆலவிழி காட்டி ஓசைமொழி காட்டி
ஆதரவு காட்டி எவரோடும்;
ஈரநகை காட்டி நேரXமிகை காட்டி
யேவினைகள் காட்டி யுறவாடி-

(637-ஆம் பக்கத் தொடர்ச்சி)

சொரூப ஞானம்; பாச ஞானம் - வாக்குகளாலும், கலாதி ஞானத்தாலும் அறிவும் அறிவு;

"பாச ஞானத்தாலும் பசு ஞானத்தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதி ஞானத்தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடி" - சிவஞான சித்தி-சுபக்-9-1.

"பதி பசு பாசம் எனப் பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நிலாவே" - திருமந்திரம் 115.

* முருகவேளுக்குச் சூலாயுதமும் உண்டு - பாடல் 35, 750 பார்க்க.

† கோமாயு - நரி.

காவேரி கடலுக்கு ஒப்பிடப் பட்டது:

"கடல் போற் காவேரி" - சம்பந்தர் 1-67-5.

"திரைக்கடற் பொரு காவிரி மாநதி" - திருப்புகழ் 923.

[தொடர்ச்சி 639 ஆம் பக்கம் பார்க்க]

கையிற் சூலாயுதம் கொண்டவனே! முன்பு (சலபதி) கடல் போல (ஆரவாரம்) பேரொலியும், கொடிய (சுராபானம்) கள் குடித்தலும் உடைய (சாமுண்டி) துர்க்கை, (பயிரவி) ஆட-

யானையாகிய (பரி) வாகனத்தின்மேல் ஏறுவானும் (இந்திரனும்) ஜெயஜெய சேனாபதியே என்று ஆரவாரிக்க போர்க்களத்தில் (நீ) புக்குப் பயந்திருந்த சூரன்-

(அழுகைக்) கூச்சலிடவும், நாயும், பேய்களும், பூதங்களும், கழுகுகளும், நரியும், காக்கையும் (அவனது) குடலைக் கீறித் தின்னவும், சண்டை செய்த பல தோள்களைக் கொண்டவனே! (அல்லது) பலமான - வன்மை கொண்ட - தோளனே!

மேற்குத் திசையிலிருந்தும் பெரிய கடல்போலப் பரவி வருகின்ற ஆறு-காவிரி (காவிரியாறு)-சூழ்ந்துள்ள குளிர்ந்த **வயலூரில்** உள்ளம் நிறைந்து வீற்றிருக்கும் பெருமாளே!

(உபதேசம் பெறவேணும்)

## 905.

**மு**த்துமாலை அணிந்துள்ள கொங்கையைக் காட்டி, (மார) மார்பினுடைய தன்மையைக் காட்டி, (மாரனிலை - மன்மதனுடைய கலை - கொக்கோக சாத்திரத்தில் உள்ள காம நிலைகளைக் காட்டி), ஆடை ஆபரணங்களைக் காட்டி காம இச்சையை ஊட்டும்

விஷம் கொண்ட கண்களைக் காட்டி, (பண்) ஓசை கொண்ட சொற்களைக் காட்டி, அன்பினைக் காட்டி, யாரோடும்

குளிர்ந்த சிரிப்பை (தயையைக் காட்டும் சிரிப்பைக்) காட்டி, பொழுதெலாம் (மிகை) தீச் செயலைக் காட்டியே - செய்த - வினைகளைப் பெருக்கி, (அல்லது அவர்) தொழிலுக்கு உரிய செயல்களைக் காட்டிச் சினேகம் செய்து (நட்பைக் காட்டி),

---

தொடர்ச்சி:- X மிகை - தீச்செயல்.

"குற்றமே செயினும் குணமெனக் கொள்ளும்
கொள்கையால் **மிகை** பல செய்தேன்" - சுந்தரர் 7-69-6.

ஏதமயல் காட்டு மாதர்வலை காட்டி
மீடழிதல் காட்ட லமையாதோ;
*வீரவப ராட்டு சூரர்படை காட்டில்
வீழனலை யூட்டி மயிலூர்தி-
† வேலையுறை நீட்டி ‡வேலைதனி லோட்டு
வேலைவிளை யாட்டு வயலூரா;
சேரமலை நாட்டில் வாரமுடன் வேட்ட
சீலிகுற வாட்டி மணவாளா-
தேசுபுகழ் தீட்டி யாசைவரு கோட்டி
தேவர்சிறை மீட்ட பெருமாளே.(2)

## 906. சிவ அறிவுவரக் - காத்தருளுக

தனதனன தனதனன தத்தத்த தத்ததன
தத்தத்த தத்ததன
...... ...... ...... ...... தந்ததான

இகல்கடின முகபடவி சித்ரத்து திக்கைமத
மத்தக்க ளிற்றையெதிர்
புளகதன மிளகினி தெட்டிக்க முத்தொடுகை
கட்டிப்பி ணித்திறுகி
யிதழ்பொதியி னமுதுமுறை மெத்தப்பு சித்துருகி
முத்தத்தை யிட்டுX நக தந்தமான-

---

* வீர அபராட்டு: அபரம் - எதிர்; ஆட்டு - வல்லமை.

† வேலுக்கு உறை - ஆயுதக்கூடு உண்டென இதனால் தெரிகின்றது.

‡ **வேலையில் வேலை விட்டது**. கடல் சுவற வேலை விட்ட திருவிளையாடல்: (முருகவேள்) உக்கிர பாண்டியராய் அசுவமேதம் தொண்ணூற்றாறு செய்தபொழுது இந்திரன் பொறாமைகொண்டு வருணனை நோக்கி நீ கடலாய் உருத்துச் சென்று மதுரையை அழிப்பாயாக என்றான். வருணனும் அங்ஙனமே கடலை மதுரைமேற் பொங்கிவரச் செய்தான்; உக்கிர பாண்டியருடைய கனவிலே இறைவன் தோன்றி 'உனது வேற்படையை எறிந்து வெற்றிகொள்' என்றனர்; (இவ் வேல் சிவபிரான் உக்கிர பாண்டியனுக்கு அளித்தது); பாண்டியனும் அவ்வாறே அந்தவேலைப் பொங்கிவரும் கடல்மீது செலுத்தக் கடல் சுஃறென வறண்டு கால் மட்ட அளவுக்குச் சுருங்கி நின்று அடங்கிற்று.

"கருங்கடல் பொரிய ஒருங்குவேல் விடுத்த
அதற்கருள் கொடுத்த முதற்பெரு நாயகன்" - கல்லாடம் 75.

[தொடர்ச்சி 641 ஆம் பக்கம் பார்க்க]

(ஏதம்) கேடு விளைக்கும் (மயல்) காம மயக்கத்தைக் (காட்டும்) ஊட்டும் மாதர்கள் தமது காம வலையை விரித்து (எனது) வலிமை யெல்லாம் தொலைந்து போகும்படி செய்வித்தல் அடங்காதா! இல்லையாகாதா!

(வீர அபர ஆட்டு) வீரத்துடன் எதிர்க்கும் வல்லமை கொண்ட சூரர்களின் சேனை என்னும் காட்டில் நெருப்பு விழும்படிப் புகுவித்து மயில் வாகனத்தை ஊர்ந்தவனே!

வேலாயுதத்தை அதன் உறையினின்றும் எடுத்து நீட்டி கடலிலே செலுத்தின (வேலை) செய்கையாம் விளையாட்டை மேற்கொண்ட வயலூர்ப் பெருமானே!

மலைநாட்டில் சேர - வள்ளிமலைப் ப்ரதேசத்தில்(சேர) சேர்ந்து, (வாரமுடன்) அன்புடனே நீ விரும்பின (சீலம்) நல்லொழுக்கத்தைப் பூண்டிருந்த குறத்தி - வள்ளியின் மணவாளனே! (அல்லது (உன்னைச்) சேர (சேருதற்கு) வள்ளிமலைப் ப்ரதேசத்தில் அன்புடனே விரும்பியிருந்த நல்லொழுக்கத்தளாகிய குறத்தியின் மணவாளனே!)

(உனது) ஒளி வாய்ந்த புகழை விளக்கமுறச் சொல்லி ஆசை மிகும் (கோட்டி) கூட்டத்தாராகிய தேவர்களின் சிறையை நீக்கின பெருமாளே! (ஈடழிதல்...அமையாதோ).

## 906.

(இகல்) வலிமை, (கடினம்) கடுமை, முகபடம் முகத்துக்கு இடும் அலங்காரத்துணி, (விசித்ரம்) பேரழகு, துதிக்கை, மதஜலம், மதம் இவைகளைக் கொண்ட யானையை எதிர்க்கும் திறத்ததாய்ப் புளகங்கொண்ட கொங்கை நெகிழ்ச்சியுற (இனிது) ஆசையுடன் (எட்டி) தாவிக் கழுத்தைக் கைகொண்டு கட்டி அணைத்து அழுத்தி, வாயிதழாம் (பொதியின்) நிறைவினின்றும் (கிடைக்கும்) அமுதை-வாயூறலை (காம) சாத்திரப்படி நிரம்ப உண்டு உருகி முத்தமிட்டு நகத்தைக் கொண்டும், பற்களைக் கொண்டும்

---

தொடர்ச்சி:- இனிக் கடலில் வேலைவிட்டது கடல்நடுவே மாமரமாய் நின்ற சூரன்மீது முருகவேள் வேலை ஏவினதையும் குறிக்கும்;

"மணித்தோகை மேற்றோன்றி மாக்கடற்சூர் வென்றோன்
அணிச்சே வடியெம் அரண்" - (இரும்பல் காஞ்சி).
"கடல்மாக் கொன்ற தீப்படர் நெடுவேல்" - கல்லாடம் 41.

X நகக்குறி, (தந்தம்) பற்குறி - நகத்தால் இட்ட குறி, பல்லால் இட்ட குறி.

இடுகுறியும் வரையையுற நெற்றித்த லத்திடையில்
எற்றிக்க லக்கமுற
இடைதுவள வுடைகழல இட்டத்த* ரைப்பையது
தொட்டுத்தி ரித்துமிக
இரணமிடு முரணர்விழி யொக்கக்க றுத்தவிழி
செக்கச்சி வக்கவளை செங்கைசோர;

அகருவிடு ம்ருகமதம ணத்துக்க ணத்தபல
கொத்துக்கு ழற்குலைய
† மயில்புறவு குயில்ஞிமிறு குக்கிற்கு ரற்பகர
நெக்குக்க ருத்தழிய
‡ அமளிபெரி தமளிபட வக்கிட்டு மெய்க்கரண
வர்க்கத்தி னிற்புணரு மின்பவேலை-

அலையின்விழி மணியின்வலை யிட்டுப்பொ ருட்கவர
கட்டுப்பொ றிச்சியர்கள்
மதனகலை விதனமறு வித்துத்தி ருப்புகழை
யுற்றுத்து திக்கும்வகை
அபரிமித சிவஅறிவு சிக்குற்று ணர்ச்சியினில்
ரக்ஷித்த ளித்தருள்வ தெந்தநாளோ;

திகுடதிகு தகுடதகு திக்குத்தி குத்திகுட
தத்தித்த ரித்தகுட
செகணசெக சகணசக செக்கச் செகச்செகண
சத்தச்ச கச்சகண
திகுதிகுர்தி தகுதகுர்த திக்குத்தி குத்திகுர்தி
தக்குத்த குத்தகுர்த திங்குதீதோ-

---

* அரைப்பை - அல்குல்.

† மயில் புறவு - புட்குரலுக்கு உரிய புட்கள்
-பாடல் 323-பக்கம் 300-கீழ்க்குறிப்பு.

‡ அமளி அமளிபட - பாடல் 189, 510, 1099-பார்க்க.

இடப்பட (குறிகள்) அடையாளங்கள் (வரையை உற) - ரேகைகள் போலத் தெரிய, நெற்றியாகிய இடத்திலே (முகத்தோடு முகம் அணைவதாய்)த் தாக்கிக் கலக்கம் கொள்ளும்படி, இடை நெகிழவும், ஆடை கழன்று போகவும். (இட்டத்து) ஆசையுடனே (அரைப் பை யது) (அரையில் உள்ள பாம்புப் படம் போன்ற) அல்குலைத் தொட்டு - பரிசித்து - திரித்து மிக - (அதை) மிகவும் அலைத்து - (இரணம் இடும்) போர் புரியும் (முரணர்) பகைவர்களின் கண் போல (இயற்கையாகக் கறுத்திருக்கும் விழியானது) மிகச் சிவந்த நிறத்தை அடையவும், வளை அழகிய கையில் நெகிழவும்-

(அகரு) அகிலும் அதனுடன் சேரும் கஸ்தூரியும் ஒன்று சேர்ந்து நறுமணம் வீச, (கனத்த) மேகம் போன்ற அல்லது பாரமான - அடர்த்தியுள்ள பலவிதமான (கொத்து) பூங்கொத்துக்களைக் கொண்ட கூந்தல் கலைந்து விழ, மயில், புறா, குயில், வண்டு, (குக்கில்) செம்போத்து, ஆகிய புட்களின் குரலைக் காட்டி, உளம் நெகிழ்ந்து உணர்ச்சி அழியப் படுக்கையில் நிரம்ப (அமளிபட) (ஆரவாரம்) எழ வக்கிட்டு - வதக்கப்படுவது போலச் சூடேற - மெய் (உடல் சம்பந்தப்பட்டு செய்யப்படும்) (கரணம்) கலவி - (வர்க்கத்தினில்) வகைகளில், புணர்ச்சி செய்து சுகம் அனுபவிக்கும் அச் சமயத்தில்-

(அலையின்) கடல்போற் பெரிய கண்ணின் மணியாம் வலையை வீசி, (எனது) பொருளைக் கொள்ளை கொள்ளப் பாசம் (விளைக்கும்) பொறிச்சியர்கள்) தந்திரக்காரர்களின் (மதனகலை) மன்மதனது சாத்திரமாம் கொக்கோக சாத்திர அறிவால் வரும் (அல்லது காமலீலைக் குரிய - புணர்ச்சிக்கு உரிய கரணங்களால் ஏற்படும்) (விதனம்) துக்கத்தை (அறுவித்து) அழித்துத் தொலைத்து, உனது திருப்புகழில் நாட்டம் வைத்துத் துதிக்கும்படி, எல்லை கடந்த சிவஞானம் சிக்குற்று உணர்ச்சியினில் - (உணர்ச்சியினில்) என் அறிவிலே பெறப் படும்படியாக (நீ என்னை)க் காப்பாற்றிக் காத்தளித்து - என் சோர்வை நீக்கி அருள்வது எந்த நாளிலோ! (எந்நாள் எனைப் புரப்பாய் - என்றபடி)

திகுட திகு தகுடதகு...தக்குத்த குத்தகுர்த திங்குதீதோ

திரிரிதிரி தரிரிதரி தித்தித்தி ரித்திரிரி
தத்தித்த ரித்தரிரி
டிகுடடகு டகுடிகு டிட்டிட்டி குட்டிகுடி
டட்டட்ட குட்டகுட
தெனதிமிர்த தவில்மிருக டக்கைத்தி ரட்சலிகை
பக்கக்க ணப்பறைத வண்டைபேரி;
வகைவகையின் மிகவதிர வுக்ரத்த ரக்கர்படை
பக்கத்தி னிற்சரிய
*எழுது துகில் முழுதுலவி † பட்டப்ப கற்பருதி
விட்டத்த மித்ததென
வருகுறளி பெருகுகுரு திக்குட்கு ளித்துழுது
தொக்குக்கு னிப்புவிட வென்றவேலா-
வயலிநகர் பயில்குமர பத்தர்க்க நுக்ரகவி
சித்ரப்ர சித்தமுறு
அரிமருக அறுமுகவ ‡ முக்கட்க ணத்தர்துதி
தத்வத்தி றச்Xசிகர
வடகுவடில் நடனமிடு Oமப்பர்க்கு முத்திநெறி
தப்பற்று ரைக்கவல தம்பிரானே.(3)

---

* கொடிகள் பல உலவுதலால் சூரியன் (வெயில்) மறைவு படுதல்-இருளாதல்:-

"பல்வேறு கொடியும் படாகையு நிரைஇ
* * காரிருள் கழுமி விண்ணுற் றியங்கும்
வெய்யோன் அழுங்க" - பெருங்கதை 2-6-21.
"பல்வே றுருவிற் பதாகை நீழற்
செல்கதிர் நுழையா" - பட்டினப்பாலை 182.
"கொடியின் மிடைவால் வெயிற் புரிவிலாத...(புகலி)
-சம்பந்தர் 2-122-4.

†கண்ணபிரான் சூரியனைச் சக்கரத்தால் மறைத்து அஸ்தமித்ததுபோலக் காட்டினது பாடல் 350-பக். 380-கீழ்க்குறிப்பு

‡ முக்கட் கணத்தர் - பதினொருகோடி உருத்திரர் - இவர்கள் "இமையா முக்கண் அண்டர்தம் பெருமான் என்ன அமைந்த தொல் வடிவமுள்ளார்". தான் பரம் என்று அகந்தை கொண்டதனால் தனது படைப்புத் தொழில் முட்டுப்பாடுறுவதைக் கண்ட பிரமன் இறைவனை வேண்டிப் பல காலம் தவமியற்றப் பிரமன் நெற்றியிலிருந்து இறைவன் திரு அருளால் பதினொரு ருத்திரர்கள் பிரமனுக்கு உதவி செய்யத் தோன்றினார்கள். அந்தப் பதினொரு

[தொடர்ச்சி 645-ஆம் பக்கம் பார்க்க]

திரிரிதிரி தரிரிதரி...டட்டட்ட குட்டகுட என்று (திமிர்த) ஒலிசெய்யும் (தவில்) மேளவகை, மிருக டக்கை - (மிருகம்) -வேட்டைக்கு (இங்கு அசுர வேட்டைக்கு உரித்தான) இடக்கை பெரு முரசுவகை, கூட்டமான (சலிகை) பெரும் பறைவகை, (பக்கங்களிலே வரும் (கணப்பறைகள்) தோற் கருவி வகை, (தவண்டை) பேருடுக்கை, (பேரி) முரசு - (இவை)

வகை வகையாக மிகவும் ஒலி எழுப்ப, உக்ரமுடன் - கோபமுடனே அரக்கர்களின் சேனை பக்கங்களிலே சரிந்து விழ, (எழுது) சித்திரம் வரைந்த (துகில்) விருதுக் கொடியானது போர்க்களம் முழுதும் உலவி பட்டம் பகலில் (பருதி) சக்ராயுதத்தை விடுத்து அஸ்தமிக்க வைத்ததுபோல இருளாக்க, (அங்கு - போர்க்களத்தில்) வந்துள்ள குறளிகள் - பிசாசுகள் பெருகிவரும் ரத்தங்களிற் குளித்து, (உழுது) திளைத்து விளையாடி, (தொக்கு) உடல், (குனிப்புவிட) வளைவை விட - நிமிர்ந்தெழும்படி வெற்றி பெற்ற வேலனே!

**வயலூரில்** எப்போதும் மகிழ்ந்து வீற்றிருக்கும் குமரனே! பக்தர்களுக்கு அனுக்கிரகம் செய்பவனே! விநோதமான கீர்த்திகளைக் கொண்ட திருமாலின் மருகனே! ஆறு திருமுகத்தனே! முக்கட் கணத்தர் -சிவ சாரூபக் கூட்டத்தினர் - (அல்லது ருத்ர மூர்த்திகள்) துதிக்கும் அறிவுத் திறம் கொண்டவனே! சிகரங்களை உடைய (வடகுவடில்) வடக்கே உள்ள கயிலை மலையில் நடம்புரியும் தந்தை சிவபிராற்கு முத்தி மார்க்கத்தை - முத்தி அடையும் வழியை (மூலப் பொருளை)ப் பிழையிலா வகையிற் போதிக்கவல்ல தம்பிரானே! (அல்லது -அப்பர்க்கு தந்தையாகிய சிவனை அடைவதற்கு (வேண்டிய) முத்திவழியைச் சம்பந்தராகத் - 'திருநெறிய தமிழ், எனப்படும் தேவார வாயிலாகத் - தப்பிலாத வகையில் உரைக்கவல்ல - சொல்லவல்ல தம்பிரானே!

(ரக்ஷித்தருள்வ தெந்தநாளோ)

---

ருத்திரர்கள் உயிர்களைச் சிருட்டிக்க அவர்களின் உருவு கொண்ட பதினொருகோடி உருத்திரர்கள் தோன்றினர். அதன் பின் பிரமனும் சிருட்டிக்கும் ஆற்றல் பெற்றான்.

(-கந்தபுராணம்-உருத்திரர் கேள்விப்படலம் 2-14).

[தொடர்ச்சி 646-ஆம் பக்கம் பார்க்க]

## 907. மாதர்மீதுள்ள மயக்கு அற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

இலகு முலைவிலை யசடிகள் கசடிகள்
*கலைகள் பலவறி தெருளிகள் மருளிகள்
எயிறு கடிபடு முதடிகள் பதடிகள் எவரோடும்-
இனிய நயமொழி பழகிக ளழகிகள்
மடையர் பொருள்பெற மருவிகள் சருவிகள்
† யமனு மிகையென வழிதரு முழிதரும் விழிவாளால்;
உலக மிடர்செயு நடலிகள் மடலிகள்
சிலுகு சிலரொடு புகலிக ளிகலிகள்
உறவு சொலவல துரகிகள் விரகிகள் பிறைபோலே-
உகிர்கை குறியிடு கமுகிகள் சமுகிகள்
பகடி யிடவல கபடிகள் முகடிகள்
**உணர்வு கெடும்வகை ‡ பருவிக ளுருவிக ளுறவாமோ;**

---

[645-ஆம் பக்கத் தொடர்ச்சி]

X கயிலையில் அக்கினி காந்தச் சிகரங்களாய் 1001-சிகரங்கள் உண்டு. அவைகளில் நடேசர் மூர்த்தம் 108-என்பர்.

"இவை புடை சூழ்ந்த சிகரமா யிரத்தொன்று
எரிதழற் காந்தமா யிலங்கும்
அவைகளில் நடேசன் மூர்த்தநூற் றெட்டு" ஞான உபதேச 30

O அப்பர்க்கு முத்திநெறி - அப்பரை அடைவதற்கு - எனவும் பொருள் காணலாம் - 'மதுரைக்கு வழி' என்புழிப் போல.

---

* கலை - புணர்ச்சிக்கு உரிய கரணங்கள்; மகளிர்க் குரியவாக மணிமேகலை 2-ஆம் காதையிற் (வரி 19-32) கூறிய கலைகள். -சிந்தாமணி 1625. உரை ;

**இனி**, பரத்தையர்க்குரிய கலைகள் 64:-
"யாழ் முதலாக அறுபத் தொரு நான்கு
ஏரிள மகளிர்க் கியற்கை யென் றெண்ணிக்
கலையுற வகுத்த காமக் கேள்வி" - பெருங்கதை 1-35-84.
"எண்ணான் கிரட்டி யிருங்கலை பயின்ற பண்ணியன்
மடந்தையர்"- சிலப்பதி 22-138.
"எண்ணெண் கலையோர் இருபெரு வீதியும்"-சிலப்-14-167.

(தொடர்ச்சி 647 பக்கம்)

# 907.

**வி**ளங்கும் கொங்கையை விலைக்கு விற்கின்ற மூடர்கள், குற்றம் உள்ளவர்கள், (கலைகள்) புணர்ச்சிக்கு உரிய கரணங்கள் பலவற்றையும் அறிந்துள்ள விளக்கத்தை - தெளிவை - உடையவர்கள், (மருளிகள்) மருட்டுபவர்கள் - மயக்குபவர்கள், பற்கடிகள் அடையப் பெற்ற - பற்குறிகளைக் கொண்ட உதட்டை உடையவர்கள், பதர்கள் - அற்பர்கள் யாரோடும்-

இனிமையான நயமான பேச்சுகளைப் பேசப் பழகினவர்கள், அழகுடையவர்கள், முட்டாள்களுடைய பொருளைப் பெறுதற்கு அவர்களுடன் சேருபவர்கள், (சருவிகள்) கொஞ்சிக் குலாவுபவர்கள், யமனும் அனாவசியம் அதிகமே என்னும்படியான அழிதரும் - அழித்தல் தொழிலைச் செய்வதும் (அல்லது வழிதரும் - வழியைக் காட்டுவதும்) அங்கும் இங்கும் திரிகின்றதுமான - சுழலுகின்றதான கண் என்னும் வாள் கொண்டு

உலகத்துக்கே துன்பம் ஊட்டும் (நடலிகள்) செருக்கு உள்ளவர்கள் - (அல்லது பாசாங்கு செய்ய வல்லவர்கள்), (மடலிகள்) மடல் ஊரும்படிச் செய்பவர்கள் (அல்லது பனங்கருக்குப் போல்பவர்கள்), (சிலுகு) சண்டைப் பேச்சு சிலரோடு பேசுபவர்கள், பகைமை பூண்பவர்கள், உறவுமுறை (மாமா, அத்தான் என்னும் உறவுமுறை) கூறவல்ல துரோகிகள், சாமர்த்திய சாலிகள், பிறைபோல-

(உகிர்கை) கை உகிர் - கைந் நகத்தால் அடையாளக் குறியை இடுபவர்கள், (கமுகிகள்) - கமுக்கம் - ரகசிய அடக்கம் உள்ளவர்கள், (சமுகிகள்) பேட்டி யளிப்பவர்கள் (அல்லது ஒரு கூட்டத்தினர்), (பகடியிடவல) வெளிவேஷம் போடவல்ல வஞ்சக நெஞ்சினர், (முகடிகள்) மூதேவிகள், நல்ல அறிவு கெட்டுப் போகும்படிப் (பருவிகள்) அரிப்பு அரிப்பவர்கள், (உருவிகள்) கையிற் பொருள் வரும்படி சரசமாகப் பேசுபவர்கள் - ஆகிய விலைமாதர்களின் சம்பந்தம் நல்லதா (நல்லதல்ல என்றபடி)

---

தொடர்ச்சி:- † "நன்மனைதோறும் பெண்களைப்படைத்து, நமனை என் செயப் படைத்தனையே" தனிப்பாடல் (விவேக சிந்தாமணி-82)

‡ பருவி - பருவுதல் - அரித்தல் - 'பருவிக் குறவர் புனத்திற் குவித்த பருமாமணி முத்தும்' - சம்பந்தர் 1-69-5.

அலகை புடைபட வருவன பொருவன
கலக கணநிரை நகுவன தகுவன
அசுரர் தசைவழி நிமிர்வன திமிர்வன *பொடியாடி-
அலரி குடதிசை யடைவன குடைவன
† தரும வநிதையு மகிழ்வன புகழ்வன
அகில புவனமு மரகர கரவென அமர்வேள்வி;
திலக நுதலுமை பணிவரு செயமகள்
கலையி னடமிட ‡ வெரிவிரி முடியினர்
திரள்ப லுயிருடல் குவடுக ளெனநட மயிலேறிச்-
சிறிது பொழுதினி லயில்விடு குருபர
அறிவு நெறியுள அறுமுக இறையவ
த்ரிசிர கிரியயல் வயலியி லினிதுறை
பெருமாளே X (4)

## 908. எல்லாம் அவன் செயலே

தன்னா தனத்தன தன்னா தனத்தன
தன்னா தனத்தன தந்ததான

என்னால் பிறக்கவும் என்னா லிறக்கவும்
என்னால் துதிக்கவும் கண்களாலே-
என்னா லழைக்கவும் என்னால் நடக்கவும்
என்னா லிருக்கவும் பெண்டிர்வீடு;

---

* படைகளின் தூளிஎழ அதில் சூரியன் மறைதலுறுவது.
'அருக்கன் வெருண்டே பூழிவான் முகடு போர்த்தெழல் காணா
வாழி என்றதில் மறைந்து படர்ந்தான் - கந்தபுரா 4-3-51.
சூரியன் மேற்குக் கடலில் முழுகுவது-
"அருக்கனும்...மேற்றிசை வேலை மூழ்கி"
-வில்லி பாரதம் 16-ஆம் போர் 91.

† "சலதி யுடைபட முதிர்வன எதிர்வன" என்றும் பாடம்.

‡ "எரி விரி முடியினர்" - அரக்கர் - அசுரர் - இவர்களுக்கு எரி போன்ற தலைமுடி; இவர்கள் விரித்த தலை மயிரினர்.
"எரியன மணிமுடி இலங்கைக்கோன்" - சம்பந்தர் 3-19-8.
"விரித்த குஞ்சியர் எனும் அவுணர்" - திருப்புகழ் 5.
" தானவர் ....செய்ய பங்கியும்" - கந்தபுரா 4-5-25.

X இந்தப் பாடலில் " அசடிகள் கசடிகள்" என்பது போன்ற வழி எதுகை நிரம்ப வருவன காண்க.

பேய்க்கூட்டங்கள் பக்கங்களிற் சேரும்படி வரவும், சண்டை செய்யவும், கலகம் செய்யும் (கணம்) பேய்களின் வரிசை சிரிக்கவும், மேம்பட்டு விளங்கவும், (இறந்துபட்ட) அசுரர்களின் (தசைவழி) மாமிசக் குவியல் கிடைத்தபோது அதை (உள்ளம் குளிர்ந்து) தின்று நிமிரவும், திமிர்வன (விறைப்பு) விடவும், (போர்ப்) புழுதிகளிற் குளித்து-

சூரியன் மேற்குத் திசையிற் சேரவும். (மேற்குக் கடலில்) (புழுதிபோக) முழுகவும், தரும தேவதை மகிழ்ச்சியுறவும், புகழை எடுத்துக் கூறவும், எல்லா உலகங்களும் அரகரஅர என்று துதித்துப் போற்றவும், போர்க்கள வேள்வியில் - போர்க்களச் சாலையில்-

பொட்டணிந்த நெற்றியைக் கொண்ட உமாதேவிக்குப் பணி செய்யும் (செயமகள்) துர்க்கை, சாத்திரப்படி (அல்லது தனது மான் வாகனத்தின்மீது) நடனமிட, (எரிவிரி முடியினர்) நெருப்புப்போலச் சிவந்ததும், விரித்துள்ளதுமான தலைமயிர் முடியை உடைய (அசுரர்) கூட்டம் பலவற்றின் உயிர் (வாசம் செய்திருந்த) உடல்கள் (குவடுகள் என) மலைபோற் குவிய (பிணக்குவியல் மலைபோலெழ), நடனம் வல்ல மயிலில் ஏறி-

கொஞ்சம் நேரத்திலே வேலைச் செலுத்தின குருபரனே! ஞான மார்க்கத்தைக் கொண்டுள்ள ஆறுமுகனே! இறைவனே! திரிசிராப்பள்ளிக்குச் சமீபத்தில் உள்ள (பக்கத்தில் உள்ள) **வயலூரில்** இன்பமுடன் வீற்றிருக்கும் பெருமாளே!

*(உணர்வு கெடும்வகை...உருவிகள் உறவாமோ)*

## 908.

**என்** திறத்தால் நான் பிறப்பதற்கும், என் திறத்தால் நான் இறப்பதற்கும், என் திறத்தால் நான் துதிப்பதற்கும், என் கண் கொண்டு

ஒருவரைப் பார்த்து நான் அழைப்பதற்கும், என் கால் கொண்டு நான் நடப்பதற்கும், என் திறம் கொண்டு நான் ஓரிடத்தில் இருப்பதற்கும், மாதர்கள், வீடுகள் (இவற்றை)

என்னால் சுகிக்கவும் என்னால் முசிக்கவும்
என்னால் சலிக்கவும் தொந்தநோயை-
என்னா லெரிக்கவும் என்னால் நினைக்கவும்
என்னால் தரிக்கவும் *இங்குநானார்;
† கன்னா ருரித்தஎன் மன்னா எனக்குநல்
கர்ணா மிர்தப்பதம் தந்தகோவே-
‡ கல்லார் மனத்துட னில்லா மனத்தவ
X கண்ணா டியிற்றடம் கண்டவேலா;
O மன்னான தக்கனை முன்னாள்மு டித்தலை
வன்வாளி யிற்கொளும் ** தங்கருபன்-

---

* முதல் நான்கு அடிகள் - எல்லாம் ஈசன் செயல் என்பதை விளக்குகின்றன:-

"வெய்யவினை என்னிச்சையோ அருணை ஈசா
படைத்தளிக்கும் உன்னிச்சை யன்றோ உரை"

*-அருணகிரியந்தாதி 99.*

"ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே....காண்பாரார்
கண்ணுதலாய் காட்டாக் காலே" - அப்பர் *6-95-3.*

"ஊட்டுவிப் பானும் உறக்குவிப் பானுமிங் கொன்றொ டொன்றை
மூட்டுவிப் பானும் முயங்குவிப் பானும் முயன்றவினை
காட்டுவிப் பானும் இருவினைப் பாசக் கயிற்றின்வழி
யாட்டுவிப் பானும் ஒருவனுண் டேதில்லை யம்பலத்தே"

*- பட்டினத்தார்-திருத்தில்லை-11.*

"நானா ரொடுங்க நானார் வணங்க நானார் மகிழ்ந்து உனைஓத
நானார் இரங்க நானார் உணங்க நானார் நடந்து விழ நானார்"

*-திருப்புகழ் 1220.*

† "கன்னா ருரித்தென்ன என்னையுந்தன் கருணையினாற்
பொன்னார் கழல்பணித் தாண்டபிரான்" - திருவாசகம் *11-9.*

‡ "கல்லா நெஞ்சின் நில்லான் ஈசன்" - சம்பந்தர் *3-40-3.*

X திருமுருகன்பூண்டி யென்னுந் தலத்தில் முருகபிரான் வேல் கொண்டு தடம் (தீர்த்தம்) கண்டதைத் திருமுருகன்பூண்டிப் புராணம் உபதேசச் சருக்கம்-*33*-ஆம் பாடலிலும், தீர்த்தச் சருக்கம்-*4*, *5*-ஆம் பாடலிலும் காண்க.

'தோட்டு நாண்மலர்க் கடுக்கையந் தொங்கலார்க் கன்பா
யாட்ட நீர்த்தட மண்மையி லின்றிய வதனால்
நீட்டு பொற்றிருக் கைத்திரு வேலையந் நிலத்தில்
நாட்டி னானிலங் கீண்டது நாகமுண் ணடுங்க'. *(33)*

[தொடர்ச்சி *651* ஆம் பக்கம் பார்க்க.]

நான் அனுபவித்துச் சுகிப்பதற்கும், (இது வேண்டும் அது வேண்டும்) என்று நான் கிலேசித்து மெலிதற்கும், இதுபோதும் என்று நான் அலுப்பு உறுவதற்கும் (சோர்வு அடைதற்கும்), வாதபித்தசிலேட்டுமங்கள் ஒன்றோடொன்று பிணைந்திருப்பதால் வருகின்ற நோய்களை (அல்லது வினைச் சேர்க்கையால் - புணர்ச்சியால் - வரும் நோய்களை)

நான் எரித்துத் தள்ளுதற்கும், பல நினைவுகளையும் நான் நினைப்பதற்கும், இன்ப துன்பங்களை தாங்குதற்கும் நான் இங்கு நான் ஆர் (எனக்கு என்ன திறம் - என்ன சுதந்திரம் - உண்டு - ஒன்றும் இல்லை என்றபடி)

கல்லினின்றும் நார் உரிப்பதுபோல ( என் நெஞ்சக்கன கல்லைக்கனிவித்த (கசியப்பண்ணின) அரசே! அடியேனுக்கு நல்ல, செவிக்கு அமிர்தம் போன்ற, (பதம்) உபதேச மொழியை அருளின (உபதேசித்த) தலைவனே!

உன்னைக் கற்றறியாதார் நெஞ்சங்களில் நிற்பது என்பதையே நினைக்காத மனத்தை உடையவனே-நெஞ்சில் தங்காதவனே! கண்ணாடிபோல மிகத் தெளிவு உள்ள (தடம்) நீர் நிலையை வேல் கொண்டு கண்டவனே!

அரசாய் விளங்கின தக்ஷப்பிரஜாபதியை முன்பு (அவனுடைய) முடியையும் தலையையும் (அல்லது கிரீடம் அணிந்த தலையை) கொடுமை வாய்ந்த அம்பினாற் கொய்த தங்க சொரூபனான சிவனுக்கு-

---

தொடர்ச்சி:- 'பழுத்த கொற்றவேற் படைமிகு விரைவினாற் பாய்ந்த வழித்த லத்திடை வந்ததோர் மாசறு தீர்த்தம்'. (34)

இவ் வண்ணம் வயலூரிலும் முருகவேள் தீர்த்தங் கண்டதாக ஐதிகம் இருப்பதால் இப் பாடலிற் குறிக்கப்படுவது வயலூர்த் தடாகமே. 'சத்தி தீர்த்தம்' எனப்படும் இந்தத் தீர்த்தத்தின் பெயரே வேலால் தோன்றியது என்பதை விளக்கும்; இதன் நீர் பளிங்கு போன்றது. அதனால் 'கண்ணாடியில் தடம்' என இந்தப் பாடலிலும், 'ஒத்த நிலாவீசு நித்தில நீராவி.....வயலூரா' - எனத் திருப்புக்கொளியூர்த் திருப்புகழிலும் (950) அருணகிரியார் இந்தத் தீர்த்தத்தைப் புகழ்ந்துள்ளார்.

O தக்களை வீட்டியது - பாடல் 390-பக்கம் 484 குறிப்பு.

** தங்கரூபன் - சிவன்:- "பொன்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி....ஈசனுக்கே" - பொன்வண்ணத் தந்தாதி 1.

மன்னா குறத்தியின் மன்னா வயற்பதி
மன்னா *மூவர்க்கொரு தம்பிரானே.†(5)

## 909. மாதர்மீதுள்ள மயக்கு அற

தனனாத் தனதன தனனாத் தனதன
தனனாத் தனதன தனதான

கடல்போற் கணைவிழி சிலைபோற் பிறைநுதல்
கனிபோற் றுகிரிதழ் எழிலாகும்-
கரிபோற் கிரிமுலை கொடிபோற் றுடியிடை
கடிபோற் பணியரை யெனவாகும்;

உடல்காட் டினிமையி லெழில்பாத் திரமிவ
ளுடையாற் கெறுவித நடையாலும்-
ஒருநாட் பிரிவது மரிதாய்ச் சுழல்படும்
ஒழியாத் துயரது தவிரேனோ;

குடலீர்த் தசுரர்க ளுடல்காக் கைகள்நரி
கொளிவாய்ப் பலஅல கைகள்பேய்கள்-
கொலைபோர்க் களமிசை தினமேற் றமரர்கள்
குடியேற் றியகுக வுயர்‡தாழை;

மடல்கீற் றினிலெழு விரைபூப் பொழில்செறி
வயலூர்ப் பதிதனி லுறைவோனே-
மலைமேற் குடியுறை கொடுவேட் டுவருடை
மகள்மேற் ப்ரியமுள பெருமானே.(6)

---

* மூவர்க்கும் மன்னன் முருகவேள்- "சிலைமகள் நாயன் கலைமகள் நாயன் திருமகள் நாயன் தொழும் வேலா" - திருப்புகழ் 261.

† இப் பாடலுக்குத் 'தன்னா தனத்தன தந்ததான' என்பதே சந்தம்; 'தன்னா தனத்தனம்' என வரும் அடிகளில் 'ம்' ஓசை அழுந்தல் இல்லை. இதை 'ஆரிடத்தின்' பாற் படுத்துக.

-பாடல் 169-பக்கம் 390 கீழ்க்குறிப்பு.

‡ "மடல்விண்ட முடத்தாழை", "மொட்டலர்த்த தடந்தாழை முருகுயிர்க்கும்", "நறவிரிவு நற்றாழை"

-சம்பந்தர் 2-48-4; 2-41-4; 1-136-6.

*அரசே! குறத்தி (வள்ளியின்) தலைவனே!* **வயலூர்** *அரசே! பிரமன், மால், அரன் மூவர்க்கும் ஒப்பற்ற அரசாய் விளங்குபவனே!*

(இங்கு நான் ஆர்)

## 909.

*(கூடல் கணை போல் விழி)* கடல் போலவும், அம்பு போலவும் உள்ளன கண்கள்; *(சிலை)* வில்லைப் போலவும், *(பிறை)* பிறைச் சந்திரன் போலவும் உள்ளது நெற்றி; கொவ்வைக் கனிபோலவும் பவளம் போலவும் உள்ளது வாயிதழ்; அழகு பொருந்திய

யானைபோலவும், மலைபோலவும் உள்ளன கொங்கைகள்; கொடிபோலவும், துடி (உடுக்கை) போலவும் உள்ளது இடை; (கடி) காவலிடம் போலவும், (பணி) பாம்புபோலவும் உள்ளது (அரை) அல்குல் என்று உவமானம் சொல்லத்தக்க-

தேகத்தைக் காட்டும் இன்ப நிலைக்கு (எழில் பாத்திரம் இவள்) இவளே அழகிய எடுத்துக் காட்டான பாத்திரம் - கொள்கலம் (எனமயங்கி) அவளது ஆடை அழகிலும், செருக்கு-கருவமுடைய நடை அழகிலும் - (அவளை விட்டு)

ஒருநாள் பிரிவதுகூட அரிதாக - முடியாத காரியம் என்று (அவள் மயக்கிலேயே) சுழற்சியுறும் (இந்த) தொலையாத - நீங்காத துன்பத்தைத் தொலைக்க மாட்டேனோ!

அசுரர்களின் உடலினின்றும் குடலை இழுத்து வெளிப்படுத்திக் காக்கைகள், நரிகள், பல கொள்ளிவாய்ப் பிசாசுகள், பேய்கள்,

கொல்லுதல் (நிறைந்த) போர்களத்திலே நாள்தோறும் அந்தக் குடலை (ஏற்று) அடைந்து உண்ணத் தேவர்களை (விண்ணுலகிற்) குடியேற்றின குகனே! உயரமாக வளர்ந்துள்ள தாழையின்

(மடல் கீற்றினில்) மடல் (ஏட்டுத் துண்டுகளில் எழுகின்ற (உண்டாகின்ற) நறுமணம் உள்ள பூ (தாழம்பூ) நிறைந்த சோலைகள் நிரம்பியுள்ள **வயலூர்ப்** பதியில் வீற்றிருப்பவனே!

மலைமேலேயே குடித்தனம் செய்து வசிக்கும் கொடிய வேடர்களுடைய மகள் - வள்ளியின்மீது - பிரியங் கொண்டுள்ள பெருமாளே! (துயரது தவிரேனோ)

## 910. மாதர்மீதுள்ள மயக்கு அற

தனனத் தான தான தனதன
தனனத் தான தான தனதன
தனனத் தான தான தனதன தனதான

கமலத் தேகு லாவு மரிவையை
நிகர்பொற் கோல மாதர் மருள்தரு
கலகக் காம நூலை முழுதுண ரிளைஞோர்கள்-
கலவிக் காசை கூர வளர்பரி
மளகற் பூர தூம கனதன
கலகத் தாலும் வானி னசையுமி னிடையாலும்;
விமலச் சோதி ரூப இமகர
வதனத் தாலு நாத முதலிய
விரவுற்* றாறு கால்கள் சுழலிருள் குழலாலும்-
வெயிலெப் போதும் வீசு மணிவளை
அணிபொற் றோள்க ளாலும் வடுவகிர்
விழியிற் பார்வை யாலு மினியிடர் படுவேனோ;
சமரிற் பூதம் யாளி பரி† பிணி
கனகத் தேர்கள் யானை யவுணர்கள்
தகரக் கூர்கொள் வேலை விடுதிற லுருவோனே-
சமுகப் ‡ பேய்கள் வாழி யெனஎதிர்
புகழக் கானி லாடு பரிபுர
சரணத் தேக வீர Xஅமைமன மகிழ்வீரா;
அமரர்க் கீச னான சசிபதி
மகள்மெய்த் தோயு நாத குறமகள்
Oஅணையச் சூழு நீத கரமிசை யுறுவேலா-

---

* ஆறு கால்கள் - வண்டுகள். † பிணி - பிணித்த: கட்டிய.

‡ "காவியங்கண் மடவாளொடும் காட்டிடை....ஆடுதிர்"
"சுரிகுழல் நல்லதுடி யிடையோடு....காட்டிடை ஆடுதிர்"
"காட்டில்.....பேய்கள் நகைசெய நட்டம் நவின்றோன்"

-சம்பந்தர் 3-124-6,5; 2-68-5.

X அமை - அம்மை.

O வள்ளியின் பத்தி நிலையைச் சோதிக்கப் பல மாயைகள் முருகவேள் செய்தனர்; சோதித்து ஆள்வதே இறைவன் கைக் கொண்டுள்ள நீதியாதலின் 'குறமகள் அணையச் சூழும் நீத' என்றார்.

'இவள்பாற் போய்ப் பொருந்தியும் வேட்கை புகன்றும் அகன்றும் வருந்தியும் வாழ்த்தியும் மாயைகள் செய்தேம்-கந்தபுரா 6-24-248.

## 910.

**தா**மரையில் விளங்கும் அரிவை - மாது லக்ஷ்மிக்கு - ஒப்பான அழகிய அலங்காரம் உள்ள மாதர்கள்மீது மருட்சியை (மோகமயக்கத்தைத்) தருகின்றதும், கலக்கம் தருவதுமான காமசாத்திரத்தை (கொக்கோக சாத்திரத்தை) முற்றும் உணர்ந்துள்ள இளைஞர்களின்-

புணர்ச்சி யின்பத்துக்கு ஆசை மிக்கெழ நிரம்பிய நறுமணமுள்ள பச்சைக்கற்பூரம், (தூமம்) அகிற்புகை போன்ற நறும்புகை-இவைதமைக் கொண்டுள்ள கனத்த கொங்கைகள் எழுப்பும் மனக்கலக்கத்தாலும், ஆகாயத்தில் அசைகின்ற மின்னல் போன்ற இடையாலும்,

களங்கம் இல்லாத ஒளிமயமான (பனிக்கிரணம் கொண்ட) சந்திரபிம்பம் ஒத்த முகத்தாலும், (பாட்டு) ஓசை முதலிய கலந்து எழச் செய்யும் வண்டுகள் சூழ்ந்து சுழலும் இருள் நிறமான (கரிய) கூந்தலாலும்,

ஒளியை எப்போதும் வீசுகின்ற ரத்னவளைகளை அணிந்துள்ள அழகிய கைகளாலும், மாவடுவின் கீற்றனைய கண்களின் பார்வையாலும், இனி வருத்தம் உறுவேனோ!

போரில் பூதம், யாளி, குதிரை இவைகள் கட்டப்பட்டுள்ள பொன்மயமான தேர்களும், யானைகளும், அசுரர்களும் பொடிபட்டழியக் கூர்மை கொண்ட வேலாயுதத்தைச் செலுத்தின பராக்ரம உருவத்தனே!

கூட்டமான பேய்கள் "வாழி" என்று எதிர் நின்று புகழக் காட்டில் (சிவனுடன்) நடனம் செய்கின்ற சிலம்பணிந்த திருவடிகளை உடைய (தனிவீரம்) நிகரிலாத வீரம் வாய்ந்த அம்மை - பார்வதி மனம் மகிழ்கின்ற வீரனே!

தேவர்களுக்குத் தலைவனும் இந்திராணியின் கணவனுமான இந்திரனுடைய மகள் தேவசேனையின் உடலைத் தழுவும் நாதனே! குறமகள் வள்ளி உன்னை அணைவதற்கு வேண்டிய சூழ்ச்சிகளைச் செய்த நீதிமானே! திருக்கையிற் கொண்ட வேலாயுதனே!

*அருளிற் சீர்பொ யாத கணபதி
திருவக் கீசன் வாழும் வயலி யின்
அழகுக் கோயில் மீதில் மருவிய பெருமாளே.(7)

## 911. ஞானம் பெற

தனதத்த தானான தனதத்த தானான
தனதத்த தானான தந்ததான

கமையற்ற சீர்கேடர் வெகுதர்க்க கோலாலர்
களையுற்று மாயாது மந்த்ரவாதக்
கடைகெட்ட ஆபாத முறுசித்ர கோமாளர்
கருமத்தின் மாயாது கொண்டுபூணுஞ்
சமயத்த †ராசார நியமத்தின் மாயாது
சகளத்து ளேநாளு நண்புளோர்செய்
சரியைக்ரி யாயோக நியமத்தின் மாயாது‡
சலனப்ப டாஞானம் வந்துதாராய்;
அமரிற்சு ராபான திரிபுத்ர Xராலோக
மதுதுக்க மேயாக மிஞ்சிடாமல்-

* வயலூரில் கணபதியின் திருநாமம் 'பொய்யாக் கணபதி', இவரே 'வித்தக மருப்புடைய பெருமாள்'; இவரே 'செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு செப்பு' என அருணகிரியார்க்கு அருளினவர். அருணகிரிநாதர் வரலாறு - பக்கம் 63, 64 பார்க்க.

வயலூரிற் சிவபிரான் திருநாமம் - அக்னீசுரர் (அக்கீசர்)
-திருப்புகழ் 209-ம் பார்க்க.

† "வீடு ஞானமும் வேண்டுதிரேல் விரதங்களால்
வாடி ஞான மென்னாவது" - சம்பந்தர் 2-2-11.

‡ (கடவுளை அடைவதற்கோ, ஞானம் பெறுதற்கோ) எந்த வழி எளிதானதோ - அதையே அருணகிரியார் வேண்டுவார், அதையே உபதேசிப்பார் - உதாரணமாக

"காட்டிற் குறத்தி பிரான் பதத்தே கருத்தைப் புகட்டின் வீட்டிற் புகுதல் மிக எளிதே" என்னும் கந்தரலங்காரத்தையும் (85), "உலக கலைகளும் அலம் அலம்" (திருப்புகழ் 912), "சிவநூலின்....யந்த்ரத்துக் கேள்வி அலம் அலம் வம்பிற் சுற்றாது பரகதி அருள்வாயே" (திருப்புகழ் 945) என வருவனவற்றையும் காண்க.

விரதம், சரியை, கிரியை முதலியன சுற்றுவழி, கஷ்டமான வழி என்பது - 'விரத முதலாய பல மெய்த்தவத்தின் உண்மைச் சரியை கிரியா யோகம் சார்வித்து.....ஆலோகம் தன்னை அகற்று வித்து......... மலபரிபாகம்

(தொடர்ச்சி 657-ஆம் பக்கம் )

திருஅருள் பாலிப்பதிற் புகழ் பொய்ம்மையுறாத கணபதியும் (**"பொய்யாக் கணபதி"** என்னும் பெயருடைய விநாயகப் பெருமானும்), அழகிய **"அக்னீசுரர்"** என்னும் திருநாமம் கொண்ட சிவபிரானும் வாழ்கின்ற **வயலூரில்** உள்ள அழகு நிறைந்த கோயிலுள் வீற்றிருக்கும் பெருமாளே!

(இனி இடர் படுவேனோ)

## 911.

**பொா**றுமை யில்லாத (சீர் கெட்டவர்களும்) ஒழுங்கீனர்களும், நிரம்பத் தருக்கம் பேசும் ஆடம்பரவாதி-களுமான (மனிதர்களால்) நான் களைப்பு (சோர்வு) உற்று மடியாமலும், மந்த்ரவாதம் செய்யும்

மிக இழிவு நிலையில் உள்ள தாழ்மை வாய்ந்த சித்திரப் பேச்சு அலங்காரப் பேச்சு - பொய்ப் பேச்சுப் பேசிக் கொண்டாட்டம் போடுபவர்களின் செய்கைகளிற் சிக்கி மடியாமலும், மேற்கொண்டு ஒழுகும்

(அவ்வச்) சமயங்களுக்கு உரிய ஆசார நியமங்களிற் - கட்டுப் பாடுகளிற் பட்டு மடியாமலும், உருவ வழிபாடு செய்து நாள்தோறும் அன்பு வைத்துள்ளோர்கள் புரியும்-

சரியை, கிரியை, யோகம் எனப்படும் ஒழுக்கங்களை மேற்கொண்டு மடியாமலும், (நேரே) எவ்வித சஞ்சலங்களுக்கும் உட்படாத ஞானத்தை (நீ) வந்து எனக்குத் தந்தருளுக.

போரில், கட்குடியரான (திதி புத்திரர்) அசுரர்களின் அறியாமையானது (உலகுக்குத்) துக்கத்தையே தர(அந்தத் துக்கம்) வளர்ச்சி யுறாதவழிக்கு - அந்தத் துக்கத்தை ஒழிக்க

---

வருமளவிற் பன்னாள் அலமருதல் கண்ணுற்று அருளி.....அறிவிற் காணரிய மெய்ஞ்ஞானக் கண் காட்டி"- என வரும் கந்தர்கலி வெண்பாவாற் பெறப்படும்.

X ஆலோகம் - தெளிந்த அறிவு. ஆலோகம் என்பது அலோகம் என்பதன் விகாரம் எனக் கொண்டால் - அலோகம் - அறியாமை எனப் பொருள்படும்-

"ஆலோகந் தன்னை அகற்றுவித்து"

-கந்தர் கலிவெண்பா (உ.வே.சா. - குறிப்புரை) 20.

•அடமிட்ட வேல்வீர திருவொற்றி யூர்நாதர்
அருணச்சி காநீல கண்டபார;
மமபட்ச மாதேவ ரருமைச்சு வாமீநி.
மலநிட்க ளாமாயை †விந்துநாதம்-
வரசத்தி மேலான பரவத்து வேமேலை
வயலிக்குள் வாழ்தேவர் தம்பிரானே. (8)

## 912. அறிவு பெற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

குருதி கிருமிகள் சலமல மயிர்தசை
மருவு முருவமு ‡ மலமல மழகொடு
குலவு பலபணி பரிமள மறுசுவை Xமடைபாயல்-
குளிரி லறையக மிவைகளு மலமல
மனைவி மகவனை யநுசர்கள் முறைமுறை
குனகு கிளைஞர்க ளிவர்களு மலமல
மொருநாலு;
சுருதி வழிமொழி ○சிவகலை யலதினி
யுலக கலைகளு மலமல மிலகிய
தொலைவி லுனைநினை பவருற வலதினி
யயலார்பால்-

---

* அடமிட்ட வேல் - அதனால் '(அசுர விதரபர) சரத விரத அயில்' என்றார் 692-ஆம் திருப்புகழிலும்.

† 'விந்து - நாதம் - சத்தி - மேலான - பரவத்துவே' - இது முருகவேளை 'ஏகநாதன்' எனக் குறிக்கின்றது. 'சிவம் சத்தி நாதம் விந்து சதாசிவன் திகழும் ஈசன், உவந்தருள் உருத்திரன்தான் மாலயன் ஒன்றி னொன்றாய்ப், பவந்தரும் அருவ நாலிங் குருவநா லுபய மொன்றாய், நவந்தரு பேதம் ஏக நாதனே நடிப்பன் என்பர்' -சிவஞானசித்தி சுபக் 164.

இறைவன் - ஏகநாதன்; சிவம், சத்தி, நாதம், விந்து - என அருவத் திருமேனி நான்கு; மகேசன், உருத்திரன், மால், அயன்- என உருவத் திருமேனி நான்கு, சதாசிவம் - என அருவுருவத் திருமேனி - ஆக இவ் வொன்பது வர்க்கத்தினும் வேற்றுமையின்றி நின்று அவ்வத் தொழில்களைச் செய்வன், இதனை 'நவந்தருபேதம்' என்பர்.

[தொடர்ச்சி 659 ஆம் பக்கம் பார்க்க]

(அடம் இட்ட) சஞ்சாரம் செய்த - செலுத்தப்பட்ட அல்லது பிடிவாதம் பிடித்த வேலை ஏந்திய வீரனே! திருவொற்றியூர் நாதர் (தலைவர்), சிவந்த (சிகா) சடையையும், நீல கண்டத்தையும், (பாரம்) பெருமையையும் கொண்டவரும்

என்மீது அன்புள்ளவருமான மகா தேவர் - சிவபிராற்கு அருமையாக வாய்ந்த (குரு) சுவாமியே! மாசில்லாதவனே! உருவமில்லாதவனே! மாயை, விந்து, நாதம் -

வரங்களைத் தரும் சத்தி இவைகளுக்கு மேலான பரம்பொருளாம் (வஸ்துவே) பொருளே! (ஏகநாதனே)! மேலை **வயலூர்** என்னும் தலத்தில் வாழ்கின்ற தேவர் தம்பிரானே!

(ஞானம் வந்து தாராய்)

## 912.

**ர**த்தம், புழுக்கள், ஜலம், மலம், மயிர், மாமிசம் - சதை, இவை பொருந்திய உருவமாம் இவ்வுடல் எடுத்தது போதும் போதும், அழகொடு விளங்கும் பலவிதமான ஆபரணங்களும், நறுமண முள்ளனவும், ஆறுவித சுவைகள் கூடியுள்ளனவுமான சோறு, படுக்கை,

குளிருக்கு அடக்கமான அறைகளை உடைய வீடு - இவைகளும் போதும் போதும், மனைவி, குழந்தைகள், (அனை) தாயார், கூடப் பிறந்தவர்கள் (தம்பிகள்), உறவு முறை கூறிக் கொஞ்சிக் குலவும் சுற்றத்தினர், இவர்களும் போதும் போதும், ஒரு நான்கு-

வேதங்களின் மார்க்கங்களை எடுத்துக் கூறும் சைவ சித்தாந்த நூல்கள் தவிர வேறு உலக சம்பந்தமான நூல்களை ஓதுதலும் போதும் போதும், விளங்கி நிற்பவனும், அழிவிலாதவனுமான உன்னை நினைப்பவர்களுடைய நட்புத் தவிர இனி அயலார்களிடத்தே

---

தொடர்ச்சி:- ‡ அலம் அலம் - போதும் போதும். இங்ஙனம் 'அலம் அலம்' என வரும் பிறிதொருபாடல் 510.

X மடை - சோறு.

O சிவ கலை - சைவசித்தாந்த நூல்.

சுழல்வ தினிதென வசமுடன் வழிபடு
முறவு மலமல மருளலை கடல்கழி
துறைசெ **லறிவினை** யெனதுள மகிழ்வுற
**அருள்வாயே;**

விருது முரசுகள் மொகுமொகு மொகுவென
*முகுற †ககபதி முகில்திகழ் முகடதில்
விகட இறகுகள் பறையிட அலகைகள் நடமாட-

விபுத ரரகர சிவசிவ சரணென
விரவு கதிர்முதி ரிமகரன் வலம்வர
வினைகொள் நிசிசரர் பொடிபட அடல்செயும்
வடிவேலா;

‡மருது நெறுநெறு நெறுவென முறிபட
வுருளு முரலொடு தவழரி மருகசெ
வனச மலர்சுனை புலிநுழை முழையுடை யவிராலி-

மலையி லுறைகிற அறுமுக குருபர
கயலு மயிலையு மகரமு முகள்செநெல்
**வயலி** நகரியி லிறையவ அருள்தரு
பெருமாளே.(9)

## 913. மெய்ம்மை உணர

தனதானன தனதானன தனதானன தனதானன
தனதானன தனதானன தந்ததான

குயிலோமொழி அயிலோவிழி கொடியோஇடை
பிடியோநடை
குறியீர்தனி செறியீரினி யென்றுபாடிக்-

குனகாவடி பிடியாவிதழ் கடியாநகம் வகிராவுடை
குலையாவல்கு லளையாவிரு கொங்கைமீதிற்;

---

* முகுற-குமுற; எழுத்து நிலைமாறல்.
† கக பதி - கருடன்.
‡ மருது முறிபட்டது -
பாடல் 143-பக்கம் 332 கீழ்க்குறிப்பு.

சுற்றித் திரிவது நல்லதென்று அவர்கள் வசப்பட்டு அவர்களைப் பின்பற்றி வழிபடுகின்ற நட்பும் போதும் போதும், (உனது) திருவருள் அலைகள் வீசும் கடலின் கால்களின் துறை வழியில் செல்லும் அறிவை என்னுடைய உள்ளம் மகிழ்ச்சிபெற அருள் புரிவாயாக,

(விருது) வெற்றிச் சின்ன முரசுகள் (பறைகள்) மொகு மொகு மொகு என்று (குமுற) பேரொலி செய்ய, கருடன் மேகம் விளங்கும் (உச்சியில்) ஆகாயத்தில் அகன்ற தனது இறகுகளைக்கொண்டு (பறையிட) வட்டமிட, பேய்கள் நடமாட-

தேவர்கள் ஹரஹர சிவசிவ சரணம் என்று ஒலி எழுப்பப், பொருந்திய சூரியனும், (இமம் முதிர்கரன்) பனி - குளிர் நிறைந்த கிரணங்களை உடைய சந்திரனும் வலம்வர, (வினை) தீச் செயலைக் கொண்ட அசுரர்கள் பொடிபட்டழியப் போர் செய்த கூரிய வேலனே!

மருதமரம் நெறு நெறு நெறு என்று முறிபடும்படி உருண்டு சென்று உரலுடனே தவழ்ந்து சென்ற கண்ணபிரான் - திருமாலின் மருகனே! (செவ் வனசம்) செந்தாமரை மலருகின்ற சுனையும், புலி நுழையும் குகையும் கொண்ட விராலி-

மலையில் வீற்றிருக்கின்ற ஆறுமுகனே! குருபரனே! கயல்மீன்களும், (மயிலை) 'மயிலை' எனப்படும் மீன்களும், (மகரமும்) மகர மீன்களும் (உகள்) தாவித் திரியும் செந்நெல் (வயல்களைக் கொண்ட ஊரில்) **வயலூர்ப்** பதியில் இறைவனே! திரு அருள் பாலிக்கும் பெருமாளே!

(அறிவினை .....மகிழ்வுற அருள்வாயே)

## 913.

(**உ**ங்கள் பேச்சின் குரல்) குயிலின் குரலோ, உங்கள் கண் வேலோ, உங்கள் இடை கொடியோ, உங்கள் நடை - பெண் யானையின் நடையோ - இவ் வழகைத் தெரிந்து கொள்ளுங்கள், தனியாக வந்து நெருங்கிப் பழகுங்கள் இனி, என்றெல்லாம் (வேசையரைப்) புகழ்ந்து பாடிக்

கொஞ்சிப் பேசி, அவர்தம் காலைப் பிடித்தும், வாயிதழைக் கடித்தும், நகம் கொண்டு கீறியும், ஆடையைக் கலைத்தும், அல்குலைக் கலந்து திளைத்தும் (அனுபவித்தும்), இரண்டு கொங்கைகள் மீதிலும்-

பயிலாமன மகிழ்மோகித சுகசாகர மடமாதர்கள்
பகையேயென நினையாதுற நண்புகூரும்-
*பசுபாசமு மகிலாதிக பரிபூரண புரணாகர
பதிநேருநி னருளால்மெயு ணர்ந்திடேனோ;
வெயில்வீசிய கதிராயிர † வருணோதய விருணாசன
விசையேழ்பரி ரவிசேயெனு மங்கராசன்-
விசிகாகவ மயல்பேடிகை படுபோது‡சன் னிதியானவன்
விதிXதேடிய திருவாளிய ரன்குமாரா;
○அயலூருறை மயிலாபல கலைமானுழை புலி **தோல்களை
†† யகிலாரம தெறிகாவிரி வண்டல்மேவும்-

---

* பசுபாசமும் அகிலாதிக...பதி - பதி அணுகில் பசுவும் பாசமும் ஒழிவனவாம்;

"பதியினைச் சென்றணுகாப் பசுபாசம்
பதியணுகிற் பசுபாசம் நிலாவே" - (திருமந்திரம் 115)

† அருணன் - சூரியன் சாரதி;

"அருணன் இந்திரன் திசை அணுகினன் இருள்போய்
அகன்றது உதயம்......." - திருவாசகம் - பள்ளியெழுச்சி:

**‡ போர்க்களத்தில் கர்ணனுக்குத் திருமால் தரிசனம் தந்தது-** போரில் - அருச்சுனன் ஏவின அம்பால் உயிர் தடுமாற்றம் அடைந்துகர்ணன் கலங்கும்போது கண்ணபிரான் ஒரு வேதியனாகிக் கர்ணனிடம் சென்று - நான் வறுமைப் பெருந்துயர் அடைந்துளேன்;உன்னால் கூடிய பொருளைக் கொடு எனக் கேட்கக், கர்ணன் உனக்கு வேண்டிய பொருள் எது என்றான். அப்போது கண்ணபிரான் 'நின் புண்ணியம் அனைத்தும் உதவுக' என்றார். அங்ஙனமே கர்ணனும் தந்தனன். கண்ணபிரான் மகிழ்ந்து தனது தெய்விக உருவைக் கர்ணன் காணும்படி அருளினர்.

"போற்றிய கன்னன் கண்டுகண் களிப்பப்
புணரி மொண் டெழுந்த கார் முகிலை
மாற்றிய வடிவும் பஞ்ச ஆயுதமும்
வயங்குகைத் தலங்களுமாகிக்
கூற்றுறழ் கராவின் வாயினின் றழைத்த
குஞ்சர ராசன்மு னன்று
தோற்றிய படியே தோற்றினான் முடிவுந்
தோற்றமு மிலாதவைந் துளவோன்"
- வில்லிபாரதம் 17-ஆம் போர் 244.

[தொடர்ச்சி 663 ஆம் பக்கம் பார்க்க]

நெருங்கிப் பொருந்திப் பழகியும், மனம் களிப்பதற்கு இடமாயுள்ள வரும், (மோகிதம்) காம மயக்கச் சுகக் கடல் போலுள்ளவருமான மாதர்கள் - பகைத்து விலக்கத்தக்கவர்களே என்று நான் நினையாமல் இருப்பதற்கு ஆதரவை மிகக் காட்டும்

(பசு) ஜீவான்மா, (பாசம்) தளை - மும்மலக் கட்டு, (அகிலம்) ஆக எல்லாவற்றுக்கும் அதிகனே - மேம்பட்டவனே! நிறைபொருளே! (புரணம் ஆகர) ஒளிக்கு இருப்பிடமானவனே! கடவுளாகிய உன்னிடத்தில் (நேரும்) உள்ள திருவருளால் (மெய்)-உண்மைப் பொருளை நான் உணர மாட்டேனோ!

ஒளி வீசுகின்ற ஆயிரக் கணக்கான கிரணங்களை வீசுபவனும், உதய காலத்தில் இருளை ஒழிக்க வல்லவனும், (தன் தேரில் பூட்டப்பட்டனவும்) வேகமாகச் செல்ல வல்லனவுமான ஏழு குதிரைகளைக் கொண்டவனுமான சூரியனுடைய பிள்ளை எனப்பட்ட அங்க தேசத்து அரசனான கர்ணன்-

அம்புகள் நிறைந்த போரில், (அயல்)-தனக்குப் புறம்பாயிருந்த பகையாயிருந்த (பேடி) அருச்சுனனுடைய - (கை) கை அம்பால் (படுபோது) இறந்து படும்போது (சன்னிதியானவன்) (அந்தக் கர்ணனுக்குப்) பிரத்யக்ஷமாய்த் தரிசனந் தந்தவனும் (திருமாலும்), (விதி) பிரமனும் ஆக இருவரும் தேடின - தனது அடிமுடியைத் தேடிய (திருவாளி) செல்வ நாயகனான (அரன்) சிவபிரானது குமரனே!

பக்கங்களில் உள்ள ஊர்கள் எல்லாவற்றிலும் வீற்றிருக்கும் மயில் வாகனனே! பலவகையான கலைமான், (உழை) பிறவகைய மான் (அல்லது பசு), புலி, யானைகளையும், அகில், சந்தனம், இவைகளையும் தள்ளி வீசிக்கொண்டுவரும் காவிரிநதியின் (வண்டல்) நீர்மண்டிய பொடிமண் உள்ளதும்,

---

தொடர்ச்சி:- * அடிமுடி தேடிய வரலாறு:
-பாடல் 319, பக்கம் 292; பாடல் 535-பக் 222 கீழ்க்குறிப்பு.

O அயலூர் -பக்கத்தில் உள்ள ஊர்கள் -

"ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்" - திருமுருகாற்.

[தொடர்ச்சி 664 ஆம் பக்கம் பார்க்க]

அதிமோகர **வயலூர்**மிசை திரிசேவக முருகேசுர
அமராபதி யதில்வாழ்பவர் தம்பிரானே. (10)

## 914. கழல் பெற

தான தான தனத்தந் தான தான தனத்தந்
தான தான தனத்தந் தனதான

கோவை வாயி தழுக்குந் தாக போக மளிக்குங்
கோதை மாதர் முலைக்குங் குறியாலும்-
கோல மாலை வளைக்குங் தோளினாலு மணத்தங்
கோதி வாரி முடிக்குங் குழலாலும்;
ஆவி கோடி யவிக்குஞ் சேலி னாலு மயக்குண்
டாசை யா*யினு நித்தந் தளராதே-
ஆசி லாத† மறைக்குந் தேடொ ணாதொரு வர்க்கொன்
றாடல் தாள்க **ளெனக்கின்** றருள்வாயே;
சேவி லேறு நிருத்தன் தோகை பாக ‡ ளளிக்குந்
X த்யாக சீல குணத்தன் திருமாலும்-
O தேடொ ணாத பதத்தன் **தீதிலாத மனத்தன்
†† தேயு வான நிறத்தன் புதல்வோனே;

---

[663-ஆம் பக்கத் தொடர்ச்சி]

எதுகையை நோக்கும்போது - அயிலூர் - என இருக்கலாம் எனத் தோன்றுகின்றது. அயிலூர் - வேலூர் எனப் பொருள்படும்.

** தோல் - யானை.

†† "களிற்றிள மருப்பொடு...சந்தமாரகிலொடு
....உந்துமா காவிரி" - சம்பந்தர் 3-91-2-
"மண்டிய வண்டல் மிண்டி வருநீர பொன்னி"
-சம்பந்தர் 2-83-4.

---

* இனும் - இன்னும்.

† "வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே" -
"அப் பெருமறை தேடிய அரும்பொருள்" - திருவாசகம் 1-34; 41-3.

‡ "உலகங் காக்க நின்ற கண்ணுதல்" - சம்பந்தர் 1-65-2.

X "வரமும் ஆயிரம் உடையார்" - சம்பந்தர் 2-94-5.

[தொடர்ச்சி 665-ஆம் பக்கம் பார்க்க]

அதிக மனோகரமானதும் ஆன **வயலூரில்** உலவும் பராக்ரம சாலியே! முருகனே! ஈசுரனே! தேவர் தலைநகராம் அமராவதியில் வாழும் தேவர்கள் தம்பிரானே!

*(நின் அருளால் மெய் உணர்ந்திடேனோ)*

# 914.

**கொ**வ்வைக் கனிபோன்ற வாயிதழுக்கும், காம தாகத்தையும் இன்பத்தையும் கொடுக்கின்ற, - மாலை புனைந்துள்ள மாதர்களின் கொங்கைக்கும், பெண் குறியாலும் (அல்குலாலும்)-

அழகிய மாலையை வளையப் புனைந்துள்ள தோள்களாலும், வாசனை கொண்டதும், அழகாகச் சிக்கெடுத்து வாரி முடிக்கின்ற கூந்தலாலும்,

கோடிக்கணக்கான (ஆவி) உயிர்களை அழிக்கின்ற சேல்மீன் போன்ற கண்ணாலும், நான் காம மயக்கம் கொண்டு ஆசை பிறந்தவனாய் இனியும் தினந்தோறும் சோர்வு அடையாமல்-

குற்றமில்லாத வேதங்களாலும் தேடிக் காண முடியாத (ஒருவர்க்கு) சிவபிரானுக்கு (ஒன்று)ம் பொருந்திய (மனதுக்கு உவந்த) (ஆடல் தாள்கள்) வெற்றி பொருந்திய திருவடிகளை (அல்லது நடனப் பதங்களை) எனக்கு இன்று தந்தருளுக;

இடப வாகனத்தில் ஏறும் நடன மூர்த்தி, மயிலனைய பார்வதி தேவியைப் பாகத்திற் கொண்டவன், காத்தளிக்கும் கொடையருட்குணம் கொண்ட தூய ஒழுக்கமான குணங் கொண்டவன், திருமாலும்

தேடமுடியாத திருவடியை உடையவன், தீமையே இல்லாத மனத்தை உடையவன், நெருப்பின் நிறம் உடையவன் - ஆய - சிவனது குமாரனே!

---

*(664-ஆம் பக்கத் தொடர்ச்சி)*

o "திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை" -திருவாசகம் 11-1.

** "நன்றுடையானைத் தீயதில்லானை" - சம்பந்தர் 1-98-1.

†† அழல் திகழ் நிறத்தர் - சம்பந்தர் 1-78-5.

காவிடாத திருச்செங் கோடு நாடு தனக்குங்
காவி சூழ் **வயலிக்கும்** ப்ரியமானாய்-
காதி மோதி யெதிர்க்குஞ் சூர தீரர் ப்ரமிக்குங்
கால னாடல் தவிர்க்கும் பெருமாளே. (11)

## 915. அன்பை மறவேன்

தானன தனத்த தானன தனத்த
தானன தனத்த தனதான

*தாமரையின் மட்டு வாசமல ரொத்த
தாளிணை நினைப்பி லடியேனைத்-
தாதவிழ் கடுக்கை நாக மகிழ் கற்ப
தாருவென † மெத்தி யவிராலி;
மாமலையி னிற்ப நீகருதி யுற்று
வாவென அழைத்தென் மனதாசை-
மாசினை யறுத்து ஞானமுத **ளித்த**
**வாரமினி நித்த மறவேனே;**
காமனை யெரித்த தீநயன நெற்றி
‡ காதிய சுவர்க்க நதிவேணி-
கானிலுறை Xபுற்றி லாடுபணி யிட்ட
காதுடைய அப்பர் குருநாதா;
சோமனொ டருக்கன் மீனுலவு மிக்க
சோலைபுடை சுற்று **வயலூரா-**

---

* முதல் நான்கு அடிகள் அருணகிரிநாதரின் வரலாற்றை விளக்குகின்றன.

† மெத்திய - மிகுந்த.

‡ **காதிய சுவர்க்க நதி:** அழிக்க வல்ல வேகத்துடன் வந்த ஆகாச கங்கை - (பாடல் 446-பக்கம் 622-கீழ்க்குறிப்பு.)

"இதுவோர் நீத்தம்...யாண்டும் கல்லென விரைத்தி யாரும் முடிவுறு திறத்தால் அண்டம் முழுவதுங் கவர்ந்த முன்னாள் விடமெனப் பரித்தே ஈது விமல நீ காத்தி என்றார்"; 'மேதினி அண்ட முற்றும் விழுங்கிய கங்கை" - கந்தபுராணம் 6-13-371, 373.

X "புற்றில் நாகம் அணிந்தவன்" - சம்பந்தர் 3-5-7.

**பணியிட்ட காது:** (பாம்பே குழையும், தோடும் சிவனுக்கு)
'படந்தாங்கிய அரவக் குழைப் பரமேட்டி' - சம்பந்தர் 1-9-3.
'தோடரவத் தொரு காதன்" - 1-62-2.

சோலைகள் (நீங்காத) நிறைந்த திருச் செங்கோடு ப்ரதேசத்திலும், கருங்குவளை மலரும் (நீர் நிலைகள்) சூழ்ந்துள்ள **வயலூரிலும்** பிரியங் கொண்டுள்ளவனே!

கொன்று மோதி எதிர்த்துப் போர் புரியும் சூர தீரர்கள் எல்லாம் பிரமிக்கும்படியான பெருமாளே! காலனுடைய கூத்தைக் (கொல்லுந் தொழிலை) அவனுக்கு இல்லாமற் செய்த - காலனுக்கு வேலை யில்லாதபடித் தானே (அசுரர்களின்) உயிரை மாய்த்த - பெருமாளே!

*(ஆடல் தாள்கள் எனக்கின் றருள்வாயே)*

# 915.

***தா***மரையின் நிரம்ப நறுமணமுள்ள மலருக்கு ஒப்பான (உனது) திருவடி யிரண்டின் நினைப்பே இல்லாத அடியேனை

"மகரந்தப்பொடி விரியும் கொன்றை, சுரபுன்னை, மகிழமரம் இவைகள் கற்பக விருக்ஷங்கள் என்னும்படியாக நிறைந்துள்ள விராலி என்கின்ற

பெருமை வாய்ந்த (அல்லது அழகிய) மலையில் யாம் வீற்றிருக்கின்றோம்; நீ (அத்தலத்தை) நினைப்பில் வைத்து வருவாயாக" எனக் கூறி அழைத்து என்னுடைய மனத்தில் உள்ள ஆசைகள்,

குற்றங்கள் இவைகளை (அல்லது - ஆசை என்கின்ற குற்றத்தை) ஒழித்து ஞான அமுதப் பிரசாதத்தைத் தந்த (உனது) அன்பை இனி எந்நாளும் மறக்கமாட்டேன்;

மன்மதனை எரித்த நெருப்புக் கண்ணையுடைய நெற்றியையும், (காதிய) எவற்றையும் அழிக்க வல்லதாய்ப் பாய்ந்து வந்த ஆகாய கங்கையைச் சூடியுள்ள சடையையும்,

காட்டில் இருக்கும் புற்றில் படமெடுத் தாடுகின்ற பாம்பை அணிந்துள்ள காதையும் கொண்ட அப்பர்- சிவபிரானுக்குக் - குருநாதனே!

சந்திரனொடு சூரியனும் நக்ஷத்திரங்களும் உலவுகின்ற (அளவுக்கு) உயர்ந்த சோலை, பக்கங்களிற் சுற்றியுள்ள (சுற்றுப் பக்கங்களில் உள்ள), **வயலூரனே!**

சூடிய தடக்கை வேல்கொடு விடுத்து
சூர்தலை துணித்த பெருமாளே.(12)

## 916. திருவுருவை மறவேன்

தனன தான தானான தனன தான தானான
தனன தான தானான தனதான

*திருவு ரூப நேராக அழக தான மாமாய
திமிர மோக மானார்கள் கலைமூடுஞ்-
† சிகரி யூடு தேமாலை யடவி யூடு போயாவி
செருகு மால னாசார வினையேனைக்;
கருவி ழாது சீரோதி யடிமை பூண லாமாறு
‡ கனவி லாள்சு வாமீநின் மயில்வாழ்வுங்-
கருணை வாரி கூரேக முகமும் வீர மாறாத
**கழலு நீப வேல்வாகு மறவேனே;**
சருவ Xதேவ தேவாதி நமசி வாய நாமாதி
சயில நாரி பாகாதி புதல்வோனே-
Oசதம கீவல் போர்மேவு குலிச பாணி மால்யானை
சகச மான சாரீசெ யிளையோனே;

---

* 'இந்திரையுஞ்சரி சொல ஒணாத மடந்தையர்' - திருப்புகழ் 23.

† 'கொழுமணி யேர் நகையார் கொங்கைக் குன்றிடைச்
சென்று குன்றி விழும் அடியேனை"- திருவாசகம் 6-27.

"குழற்காட்டில் கண்ணிவைப்போர் மாயங் கடக்கு நான் எந் நாளோ" தாயுமானவர். திருப்புகழ் 934-அடி 3-ம் பார்க்க.

‡ அருணகிரியாரின் வரலாறு கூறுவது இது: ஏக முகத்துடன் முருகவேள் மயில் வாகனத்தின் மீது கடப்ப மாலையும் வேலாயுதமும் விளங்கத் தமது கனவில் வந்து தம்மை ஆண்டதைக் குறிக்கின்றது.

X'தேவதேவன்", 'நமசிவாய", இவை சிவபிரானுடைய திருநாமங்களைக் குறிப்பன:-

"ஏரார் இளங்கிளியே...திருநாமம் தேர்ந்துரையாய்...
எம்பெருமான் தேவர் பிரான்" - திருவாசகம் - தசாங்கம்.
'தேவ தேவன் மன்னும் ஊர் திருந்து காழி சேர்மினே"
-சம்பந்தர் 2-97-2.

"நக்கர்தம் நாமம் நமச்சிவாய என்பார் நல்லரே"
-சம்பந்தர் 3-9-9.

O சதமகன் - இந்திரன் - பாடல் 232-பக்கம் 82.

(துடக்கை சூடிய வேல்கொடு) அகன்ற திருக்கரத்தில் ஏந்திய வேல் கொண்டு - அதைச் செலுத்தி - சூரனது தலையை வெட்டித் துணித்த பெருமாளே!

(ஞானமு தளித்த வாரமினி நித்த மறவேனே)

## 916.

**லக்ஷ்மியினுடைய** உருவத்துக்கு நிகரான அழகைக் கொண்ட மகா மாய இருளான காம இச்சையை ஊட்டும் (மான அன்ன) பொது மாதர்களின் ஆடை மூடியுள்ள-

மலை (கொங்கை)யிற் சம்பந்தப்பட்டும், இனிய பூமாலை அணிந்துள்ள அடவி - காடு (கூந்தலிற்) சம்பந்தப்பட்டும். (ஆவி போய் செருகும்) - உயிரே போய்ச் சிக்கிக் கொள்ளும் (மால்) காம மயக்கம் உள்ள (அனாசார வினையேனை) ஒழுக்கம் இல்லாத தொழிலனாகிய என்னைக்

கருவில் (பிறப்பில்) விழாத வண்ணம் (சீரோதி) உன்னுடைய (சீர்) திருப்புகழை நான் ஓதி (அல்லது சீர் - சிறப்பான பொருளை நீ உபதேசித்து) உனக்கு அடிமை பூணும் வகை வரும்படி எனது கனவில் (வந்து) ஆண்டருளிய சுவாமியே! மயில்மேல் வீற்றிருக்கும் (நின்) உனது (வாழ்வும்) திருவோலக்க தரிசனத்யையும்

கருணைக்கடல் போல மிக்க ஒளிவீசும் உனது ஒற்றைத் திருமுகத்தையும், வீரம் என்றும் (மாறுதலில்லாத) நீங்காத உனது திருவடியையும், கடம்பையும், வேல் ஏந்திய திருப்புயத்தையும் (அல்லது வேல் அழகையும்) நான் மறவேன்;

எல்லாத் தேவர்களுக்கும் தேவனாய் விளங்குபவனும், ஆதிப்பிரானும், 'நமசிவாய' என்னும் திருநாமத்தை உடைய முதல்வனும், மலைப் பெண்ணாம் பார்வதி பாகனாகிய முதல்வனுமான சிவபிரானது குமாரனே!

நூறு மகங்களை யாகங்களை முடித்த - ஆற்றலு-டையவனும், வலிய போரில் ஊடாடுபவனுமான வஜ்ராயுதகரன் (இந்திரனுடைய) பெரிய ஐராவதம் என்னும் யானையின்மீது (சகசமான - சகஜமான வழக்கமான - உரித்தான, (சாரீ) உலாவுதல் செய்யும் ஓடுதலைச் (சவாரி) செய்யும் இளைஞனே!

மருவு லோக மீரேழு மளவிடாவொ ணாவான
வரையில் *வீசு தாள்மாயன் மருகோனே-
† மநு நியாய சோணாடு தலைமை யாக வேமேலை
வயலி மீது வாழ்தேவர் பெருமாளே. (13)

## 917. திருவடியை மறவேன்

தத்த தனதன தனனா தனனா
தத்த தனதன தனனா தனனா
தத்த தனதன தனனா தனனா தனதான

‡ நெய்த்த சுரிகுழ லறலோ முகிலோ
பத்ம நறுநுதல் சிலையோ பிறையோ
நெட்டை யிணைவிழி கணையோ பிணையோ
இனிதூறும்-
நெக்க அமுதிதழ் கனியோ துவரோ
சுத்த மிடறது வளையோ கமுகோ
நிற்கு மிளமுலை குடமோ மலையோ
அறவேதெய்ந்;
தெய்த்த இடையது கொடியோ துடியோ -
மிக்க திருவரை அரவோ ரதமோ
இப்பொ னடியிணை மலரோ தளிரோ எனமாலாய்-
இச்சை விரகுடன் மடவா ருடனே
செப்ப மருளுட னவமே திரிவேன்
ரத்ந பரிபுர Xஇருகா லொருகால் மறவேனே;
Oபுத்த ரமணர்கள் மிகவே கெடவே
தெற்கு நரபதி திருநீ றிடவே
புக்க அனல்வய மிகஏ டுயவே உமையாள்தன்-

---

* திருமால் உலகளந்தது:
-பாடல் 268-பக்கம் 166-பாடல் 458 பக்கம் 24-கீழ்க்குறிப்பு.

† மநு நியாய சோணாடு: மநுநீதிச் சோழன் நீதியோடும் ஆண்ட சரிதத்தை நினைப்புப் படுத்துவது இது:
-பாடல் 825-பக்கம் 426 கீழ்க்குறிப்பு.

‡ 151-ஆம் திருப்புகழ் முதல் இரண்டடிகள் போல அமைந்துள்ளன இப் பாடலின் முதல் மூன்றடிகள்.

X "நெஞ்சில் ஒருகால் நினைக்கில் இருகாலும் தோன்றும் முருகா என்றோதுவார் முன்" - என்னும் திருமுருகாற்றுப்படைத் தனிப் பாடலை இது நினைவூட்டுகின்றது.

O சம்பந்தர் லீலை - பாடல் 181-பக்கம் 420-பாடல் 841-பக்கம் 466-கீழ்க்குறிப்பு. (தொடர்ச்சி 671 ஆம் பக்கம் பார்க்க)

பொருந்திய உலகங்கள் பதினான்கினும், அளவிடுதற்கு முடியாத எல்லை அளவுக்குத், (தனது) தாள்வீசு மாயன் - திருவடியை நீட்டின (மாயன்) திருமாலின் மருமகனே!

மநுநீதிச் சோழன் நீதியொடு ஆண்ட சோழநாடு சிறந்த நிலையை அடையும பொருட்டே **மேலை வயலூர்** என்னும் தலத்தில் வந்து வாழும் பெருமாளே! வாழும் தேவர்களுக்குப் பெருமாளே!

(கழலு நீப வேல் வாகும் மறவேனே)

## 917.

**எ**ண்ணெய் நெய்ப்பு கொண்டதும், சுருண்டுள்ளதுமான கூந்தலானது கருமணலோ, மேகமோ! தாமரை மலரின் நறுமணம் வீசும் நெற்றியானது வில்லோ, பிறைச் சந்திரனோ! நீண்ட இரு கண்களும் அம்போ, மானோ! இனிப்புடன் ஊறி-

நெகிழ்ந்து வரும் வாயூறலாம் அமுதத்தைத் தரும் இதழ்வாய் கொவ்வைக் கனியோ, பவளமோ! பரிசுத்தமான கழுத்தானது சங்கோ, கமுகோ! தாழாது நிற்கின்ற இள முலையானது குடமோ, மலையோ! அடியோடு தேய்ந்துபோய்

இளைத்துள்ள இடையானது கொடியோ, உடுக்கையோ! சிறந்த அழகிய (அரை) அல்குலானது பாம்போ, தேரோ! இந்த அழகிய அடி யிரண்டும் மலரோ, தளிரோ! என்றெல்லாம் மோகம் கொண்டவனாய்-

காம இச்சையுடன் பெண்களுடனே (செப்ப) பேசுதற்கு வேண்டி, அந்த மயக்கமாகவே (அல்லது செப்பம் செவ்வையான - பூரணமான - மயக்கத்துடனே) (அவமே) வீணாகத் திரிகின்ற நான் ரத்னச் சிலம்பணிந்த உனது இரண்டு திருவடிகளையும் ஒருகாலும் மறக்க மாட்டேன்;

புத்தர்கள், சமணர்கள், மிகவும் அழிவுற, தெற்கு (பாண்டி நாட்டு) அரசன் திருநீறு இட, இடப்பட்ட (அனல் வசம்) நெருப்பினிடையே நல்ல வண்ணம் ஏடு (எரிபடாது பச்சையாய்) ஊறு இலாது விளங்க, உமையம்மையின்

---

"புக்க அனல் புனல் திரு ஏ டுயவே" என்றும் பாடம்

-பாடல் 500-அடி 5-ம் பார்க்க.

*புத்ர னெனஇசை பகர்நூல் மறைநூல்
கற்ற தவமுனி †பிரமா புரம்வாழ்
பொற்ப ‡கவுணியர் பெருமா னுருவாய்
வருவோனே;

Xசத்த முடையஷண் முகனே குகனே
வெற்பி லெறிசுட ரயிலா மயிலா
சத்தி கணபதி யிளையா Oயுளையா யொளிகூருஞ்-
சக்ர தரஅரி மருகா முருகா
உக்ர இறையவர் புதல்வா முதல்வா
**தட்ப முளதட வயலூ ரியலூர்
பெருமாளே. (14)

## 918. வேசையர் உறவு அற

தனன தத்தன தானன தானன
தனன தத்தன தானன தானன
தனன தத்தன தானன தானன தனதான

முலைமறைக்கவும் வாசலி லேதலை
மறைய நிற்கவும் ஆசையு ளோரென
முகிழ்ந கைச்சிறு தூதினை யேவவு முகமோடே-
முகம ழுத்தவும் ஆசைகள் கூறவு
நகம ழுத்தவும் லீலையி லேயுற
முறைம சக்கவும் வாசமு லாமல ரணைமீதே;
கலைநெ கிழ்க்கவும் வாலிப ரானவர்
உடல்ச ளப்பட நாள்வழி நாள்வழி
††கறைய ழிக்கவு நானென வே‡‡யணி விலைமீதே-

---

* "புத்ரன் என உரை நுகர்வோன்" - என்றும் பாடம்.

† பிரமாபுரம் - சீகாழி - பாடல் 773-பக்கம் 301 கீழ்க்குறிப்பு.

‡ சம்பந்தர் - கவுணியர் கோத்திரம்-
"கவுணியர் கோத்திரம் விளங்கச் செப்பு நெறி
வழிவந்தார் சிவபாத இருதயர்" - பெரியபுரா-சம்பந்தர்-15.

X சத்தம் - சக்தம்.

O "ஏறூர்ந்தான் ஏறே உளையாய் என் உள்ளத்துறை"
-திருமுருகா - தனிப்பாடல்

** தட்பம் - குளிர்ச்சி.

†† கறை - ரத்தம் - "புறங்கறை யொழுகு செம்புண்"
-(பிரபுலிங். துதி-15)

‡‡ அணி - அண்ணி: சார்ந்து.

பிள்ளையென்று சொல்லும்படி, இசைத்தமிழால் சொல்லப்பட்ட நூலை, வேதம் அனைய நூலை உணர்ந்து (திருநெறித் தமிழ் என்கின்ற தேவாரத்தை) ஓதிய தவமுனியே! பிரமாபுரம் என்று பேருள்ள சீகாழியில் வாழ்ந்த அழகனே! கவுணியர் குலத்துப் பெருமான் என்னும் திருவுருவத்துடனே வந்தவனே!

(சத்தம்) சக்தம்-சக்தி வாய்ந்த ஆறுமுகனே, குகனே! (வெற்பில் அயிலா! எறிசுடர் அயிலா) மலைகளில் வீற்றிருக்கும் வேலனே! சுடர் எறி அயிலா - ஒளிவீசும் வேலாயுதனே! அல்லது வெற்பில் - எறிசுடர் அயிலா - (கிரௌஞ்ச) மலைமீது விட்ட ஒளிவேலனே! மயில்வாகனனே! சக்திவாய்ந்த கணபதிக்குத் தம்பியே! (உளையாய்) என்றும் எங்கும் உள்ளவனே (அல்லது அழிதல் இல்லாதவனே)! - ஒளி மிக வீசும்

சக்ராயுதத்தை ஏந்திய திருமாலின் மருகனே! முருகனே! உக்ர மூர்த்தியாகிய இறைவன்-சிவனது-புதல்வனே! முதல்வனே! குளிர்ச்சி பொருந்திய (தடம்) நீர் நிலைகள் உள்ள **வயலூரில்** தகுதியுடன் வீற்றிருக்கும் பெருமாளே!

(இருகால் ஒருகால் மறவேனே)

# 918.

**கொ**ங்கையை மறைக்கவும், ஒரு வாசற்படியருகில் தலை மறையும்படி நிற்கவும், ஆசை கொண்டுள்ளார் போல புன்னகை என்கின்ற ஒரு சிறிய தூதை அனுப்பவும், முகத்துடனே

முகத்தை (வைத்து) அழுத்தவும், ஆசை மொழிகளைப் பேசவும், நகங்கொண்டு அழுத்தவும், காம லீலையிற் பொருந்துமாறு மாமா, அத்தான் என உறவு முறை கூறி மயக்கவும், நறுமணம் உலவும் மலர்ப் படுக்கையின் மேலே-

ஆடையை நெகிழ்ச்சியுறச் செய்தும், இளைஞர்களாயுள்ளோர்களின் உடலானது (சளப்பட) துன்பப்படும்படி, நாள்போக - வரவரக்- (கறை அழிக்கவும்) அவர்களது - ரத்தத்தைக் கெடச்செய நானுள்ளேன் என்பது போல (அண்ணி) சார்ந்து நெருங்கி (எனக்குத் தரவேண்டிய) பொருள் இதுவே-

கடிய சத்திய மாமென வேசொலி
யவர்கொ டப்பண மாறிட வீறொடு
கடுக டுத்திடு வாரொடு கூடிய தமையாதோ;
மலையை மத்தென வாசுகி யேகடை
கயிறெ னத் *த்திரு மாலொரு பாதியு
மருவு மற்றது வாலியு மேலிட அலையாழி-
வலய முட்டவொ ரோசைய தாயொலி
திமிதி மித்திமெ னாவெழ வேயலை
மறுகி டக்கடை யாவெழ மேலெழு மமுதோடே;
†துலைவ ருத்‡ திரு மாமயில் வாழ்வுள
வயலை யற்புத னேவிளை யானவை
தொடர றுத்திடு மாரியX கேவலி மணவாளா-
துவள்க டிச்சிலை Oவேள்பகை வா**திரு
மறுவொ ரெட்டுட னாயிர மேலொரு
துகள றுத்தணி யாரழ காசுரர் பெருமாளே. (15)

---

* திருமாலும் வாலியுமாகக் கடல் கடைந்தது :
-பாடல் 122-பக்கம் 288-கீழ்க்குறிப்பு, பாடல் 956-ம் பார்க்க.
(வாலி...) 'தேவர் வேண்ட வேலையை விலங்கல் மத்தில்
சுற்றிய நாகம் தேய அமுதெழக் கடைந்த தோளான்"
-கம்ப ராமா-உருக்காட்டு 30.

இந்திரன் முதலிய தேவர்கள் கடைவதற்குச் சக்தி யில்லாது
மயங்கினபொழுது - வாலி உதவினன்.
"பெயர்வுற வலிக்கவும் மிடுக்கில் பெற்றியார்
அயர்வுறல் உற்றதை நோக்கி யானது
தயிரெனக் கடைந்தவர்க் கமுதந் தந்தவும்
மயிலியற் குயில்மொழி மறக்க லாவதோ" -கம்பராமா-வாலிவதை-18.

† துலை வரு - ஒப்பாக வந்த.

‡ திரு மா மயில் - லக்ஷ்மி. கடல் கடைந்தது; அமுதுடன் லக்ஷ்மி தோன்றினது - பாடல் 604-பக்கம் 396.

X கேவலி - முத்தியைத் தரவல்ல தெய்வயானை. தேவசேனை-முத்தி மாது - பாடல் 764-பக்கம் 276 கீழ்க்குறிப்பு.

O வேள் பகைவன் - மன்மதன் தரத்தக்க சிற்றின்பத்துக்கு எதிரிடையாகிய பேரின்பத்தைத் தருபவன்.

** திரு மறு - சிறப்பான மச்சரேகை. ஆயிரத்தெட்டு மறு: இது இறைவனுக்கு ஓர் அழகு - உத்தம லக்ஷணம். ஜைன மூர்த்திக்கும் இது உண்டு. 'மார்பிற் செம்பொறி' - திருமுருகா - 104.

[தொடர்ச்சி 675 ஆம் பக்கம் பார்க்க]

(நான் கூறுவது) கண்டிப்பான உண்மை மொழியாம் - என்றெல்லாம் சொல்லி அவர்கள் கொடுத்து வருகின்ற அந்தப் பணம் (மாறிட) வருதல் இல்லாது மாறியவுடன் அல்லது ஆறிட - குறைய, (வீறொடு) வெறுப்பும் கர்வமும் கலந்த மனப் பன்மையோடு (கடுகடுத்திடுவாரொடு) சிடுசிடு என்று சினந்து பேசுபவரோடு சேர்ந்து ஒழுகினது (இனியேனும்) முடிவு அடையாதோ!

(மந்தர) மலையை மத்தாக நாட்டி, வாசுகி என்னும் பாம்பைக் கடைகின்ற கயிறாகக் கொண்டு, திருமால் ஒரு பாதிப்புறமும், பொருந்திய மற்றொரு பாதிப் புறத்தை வாலியுமாக முற்பட்டு, அலை வீசும் கடலை-

பூவலய முழுமையும் (பூமிவட்டம்) முழுமையும்) ஒரே பேரொலியாய்ச், சப்தம் திமி திமித்தெம் என்று கிளம்பவும், கடல் கலங்கவும் கடைதலை மேற்கொள்ள, (அப்போது) மேலே எழுந்த அமுதுடனே

ஒப்பாக வந்த திருமாமயில் - மயிலனைய லக்ஷ்மியின், வாழ்வுள - வாழ்க்கைக்கு இடமான - லக்ஷ்மீகரம் விளங்குகின்ற-வயலூரில் அற்புத மூர்த்தியே! (அல்லது (திரு) அழகிய லக்ஷ்மியின் (மாமயில்) சிறந்த மயிலனைய மகளான வள்ளியின் (வாழ்வுள) வாழ்வுக்குப் பங்காளனான **வயலூர்** அற்புத மூர்த்தியே! வினைகளின் (தொடர்) தொடர்கை (தொடருவதை) அறுத்தெரியும்-(ஆரிய) அழகு - மேன்மை இவை கொண்ட (கேவலியின்) முத்தியைத் தரவல்ல தேவசேனையின் மணவாளனே!

(துவள்) வளைந்துள்ள (கடி) புதுமை வாய்ந்த (அல்லது சிறப்புள்ள) (சிலை) கரும்பு வில்லைக் கொண்ட (வேள்) காம வேளாம் மன்மதனுக்குப் (பகைவர்) எதிரியாய் அவன் தரும் சிற்றின்பத்துக்கு எதிரான பேரின்பத்தைத் தரும் செவ்வேளே! அழகிய (மறு) மச்சரேகை ஆயிரத்தெட்டு மேலாகக்கொண்டு, ஒப்பற்ற குற்றமெலாம் அறுத்தெறியும் அழகைக் கொண்ட அழகனே! தேவர்கள் பெருமாளே!

(கடு கடுத்திடு வாரொடு கூடிய தமையாதோ)

---

'செம்பொன் வரைமேல் பசும்பொன் எழுத்திட்டதே போல்
அம்பொன் பிதிர்வின் மறுஆயிரத் தெட் டணிந்து
வெம்புஞ் சுடரிற் சுடருந் திருமூர்த்தி விண்ணோர்
அம்பொன் முடிமேல் அடித்தாமரை சென்னி வைப்பாம்"-சிந்தா.2

## 919. வேசையர் மீது ஆசை அற

தானன தனத்தத் தாத்த, தானன தனத்தத் தாத்த
தானன தனத்தத் தாத்த தனதான

மேகலை நெகிழ்த்துக் *காட்டி வார்குழல் விரித்துக் காட்டி
வேல்விழி புரட்டிக் காட்டி யழகாக-
மேனியை மினுக்கிக் காட்டி நாடக நடித்துக் காட்டி
வீடுக ளழைத்துக் காட்டி மதராசன்;
ஆகம முரைத்துக் காட்டி வாரணி தனத்தைக் காட்டி
யாரொடு நகைத்துக் காட்டி விரகாலே-
ஆதர மனத்தைக் காட்டி வேசைகள் மயக்கைக் காட்ட
ஆசையை யவர்க்குக் காட்டி ய ழிவேனோ;
மோகன விருப்பைக் காட்டி †ஞானமு மெடுத்துக் காட்டி
மூதமிழ் முனிக்குக் கூட்டு குருநாதா-
‡மூவுல களித்துக் காட்டி சேவலை யுயர்த்திக் காட்டு
Xமூரிவில் மதற்குக் காட்டு வயலூரா;

---

* "காட்டி, காட்டி" என வரும் பிற பாடல்களின் எண்:- 90, 446, 905, 1175, 1257.

† ஞானமும், தமிழும் அகத்தியருக்கு முருகவேள் உபதேசித்தது:-
"செந்தமி ழென்னும் திருத்தகு பாடை
தந்தருள் ஞானமுந் தந்தரு ளென்றான்"
"செழுந்தமி ழுஞ்சிவ ஞானமும் வேட்பின்
எழுந்துயர் காவி யிருங்கிரி யண்மின் தழுந்தர முண்டு"
"வேலிறைவன் இயம்பிய ஞான முற்றுணர்ந்து
.......பொதியம் அடுத்து முத்தமிழை வளர்த்து
வாழ்ந்திருந்தனன் முனிவன்"

-தணிகைப்புரா - அகத்தியன் 4,5, 512.

‡ "சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே"

- குறுந்தொகை - கடவுள் வாழ்த்து.

X மன்மதன் வில்லின் வன்மைக்குத் தம்மை ஒரு குறிப் பொருளாக உலகுக்குக் காட்டினார் முருகவேள் - காமன் வில்லினாற் படுபவர்கள் எவ்வாறு துடிப்பார்கள் என்பதைத் தாமே வள்ளிபாற் செய்த லீலைகளிற் காட்டினார்-

[தொடர்ச்சி 677-ஆம் பக்கம் பார்க்க]

# 919.

அணிந்துள்ள (மேகலை) இடையணியை தளர்த்திக் காட்டி. நீண்ட கூந்தலை விரித்துக் காட்டி, வேல் போன்ற கண்களைப் புரட்டிக் காட்டி, அழகு பொலியும்படி-

(மேனியை) உடலை மினுக்கிக் காட்டி, கூத்துக்களை நடித்துக் காட்டித், தமது வீடுகளுக்கு அழைத்துக் காட்டி, மன்மத ராஜனுடைய

சாத்திர நூலை (கொக்கோக சாத்திரத்தை) விளக்கி எடுத்துரைத்துக் காட்டி, ரவிக்கை அணிந்த கொங்கையைக் காட்டி, எல்லாருடனும் சிரித்துக் காட்டி, உபாய வகையிலே (தந்த்ர வகையாலே)-

அன்பு வைத்துள்ளது போன்ற தமது மனத்தைக் காட்டி - (இங்ஙனம் எல்லாம்) வேசையர்கள் காம மயக்கம் ஊட்ட, நான் எனது ஆசையை அவர்களிடம் காட்டி அழிந்துபோகக் கடவனோ!

ஆசை மிக்க விருப்பத்தைக் காட்டி (விருப்பத்துடனே) ஞான சாத்திரங்களை விரித்து எடுத்து உரைத்துக் காட்டி. பழந்தமிழ் வல்ல அகத்திய முநிவருக்கு அந்த ஞானத்தைக் (கூட்டுவித்த)உபதேசித்த குருநாதனே! (அல்லது - ஞானமும் காட்டி, பழந்தமிழை (அதன் இலக்கணம் முதலியவற்றை) அவருக்குத் தெளிவித்த குருநாதனே)!

மூன்று உலகங்களையும் காத்துக் காட்டி, சேவற் கொடியை உயர்த்திக் காட்டும் வயலூரனே! (மூரி) வலிமை கொண்ட (கரும்பு) வில்லை மன்மதனுக்கு படையாகத் தந்து உதவின வயலூர்ப் பெருமானே! (அல்லது - மூரிவில் வலிமை கொண்ட (கரும்பு) வில்லை ஏந்தின மன்மதனுக்கு (காட்டு) குறிப் பொருளாக இருந்த வயலூர் முருகனே! (மன்மதனுடைய வில்லின் வலிமை எவ்வளவினது என்று உலகோர் தெரிவதற்கு - முருகவேள் வள்ளிபால் கொண்ட மையலே ஒரு எடுத்துக் காட்டாக - இருந்தது என்றபடி)

---

(தொடர்ச்சி):- "கன்று காமநோய்க் கவலை யுள்வைத்தான்;
"மையல் மானுட வடிவந் தாங்கினான்;
"கலைப்படு மதியப் புத்தேள் கலங்கலம் புனலில் தோன்றி
அலைப்படு தன்மைத் தன்றோ அறுமுகன் ஆடல் எல்லாம்"
[தொடர்ச்சி 678 ஆம் பக்கம் பார்க்க]

வாகையை முடித்துக் காட்டி கானவர் சமர்த்தைக் காட்டி
*வாழ்மயில் நடத்திக் காட்டு மிளையோனே!
மாமலை வெதுப்பிக் காட்டி தானவர் திறத்தைக் காட்டி
வானவர் சிரத்தைக் காத்த பெருமாளே.(16)

## 920. வேசையர்மீது மயக்கு அற

தான தனதன தந்தன தந்தன
தான தனதன தந்தன தந்தன
தான தனதன தந்தன தந்தன தனதான

வாளின் முனையினு நஞ்சினும் வெஞ்சம
ராஜ நடையினு மம்பதி னும்பெரு
வாதை வகைசெய்க ருங்கணு மெங்கணு மரிதான-
வாரி யமுதுபொ சிந்துக சிந்தசெ
வாயு நகைமுக வெண்பலு நண்புடன்
வாரு மிருமெனு மின்சொலு மிஞ்சிய பனிநீருந்;
தூளி படுநவ குங்கும முங்குளி
ரார மகில்புழு கும்புனை சம்ப்ரம
சோதி வளர்வன கொங்கையு மங்கையு
†மெவரேனுந்-
தோயு மளறெனி தம்பமு முந்தியு
மாயை குடிகொள்கு டம்பையுள் மன்பயில்
சூளை யரையெதிர் கண்டும ருண்டிட
லொழிவேனோ;
‡காளி திரிபுரை யந்தரி சுந்தரி
நீலி கவுரிப யங்கரி சங்கரி
காரு ணியசிவை குண்டலி சண்டிகை த்ரிபுராரி-

---

(677 ஆம் பக்கத் தொடர்ச்சி)

"மாமடல் ஏறி நும்மூர்த் தெருவதனில்
ஓட்டுவேன் இது நாளையான் செய்வதென் றுரைத்தான்"
"குமரற் கீது திருவிளை யாடல் போலாம்"
'வேட்கை புகன்று....மாயைகள் செய்தேம்"
-கந்தபுரா 6-24-64, 65, 73, 136, 160, 248.

---

* மயில் நடத்திக் காட்டியது:- பாடல் 267-பக்கம் 164-குறிப்பு.

† 'எத்தனைபேர் நட்டகுழி எத்தனைபேர் தொட்டமுலை' பட்டினத்தார்.

‡ தேவியின் துதி நிரம்பவரும் பாடல் இது; இது போன்ற பாடல்களின் எண் - 23, 337, 434, 464, 526, 1001, 1129, 1133.

(வாகையை) வேடர்களுக்குத் தெரியாதவாறு வள்ளியைக் கவர்ந்ததால் - தமது வெற்றியைக் காட்டிக், (கானவர்) வேடர்களின் திறம் (தமது திறத்தின் முன்பு எவ்வளவு சிறிது என்பதைக் (காட்டி) தெரிவித்து - நல்வாழ்வு பெற்ற (சூரனாம்) மயிலை (உலகெலாம்) நடத்திக் காட்டின இளையோனே!

பெரிய கிரவுஞ்சமலை வெந்து போம்படிச் செய்து காட்டி. அசுரர்களுடைய திறமையெல்லாம் இவ்வளவுதான் என்பதையும் காட்டித், தேவர்களுடைய தலையைக் காத்த பெருமாளே! (தேவர்களின் தலை தப்பினது தம்பிரான் புண்ணியம் - என்றபடி).

(ஆசையை அவர்க்குக் காட்டி அழிவேனோ!)

## 920.

**வா**ளின் நுனியைக் காட்டிலும், விஷத்தைக் காட்டிலும், கொடிய யமராஜனுடைய தொழிலைக் காட்டிலும், அம்பைக் காட்டிலும், பெருத்த வேதனை வகைகளைச் செய்கின்ற கரிய கண்ணும், எங்கும் கிட்டுதற்கு அரிய

கடல் அமுது வெளிப்பட்டு வடியும் செவ்வாயும், சிரித்த முகமும், வெண்மைநிறப் பல்லும், நட்பைக் காட்டி 'வாரும், இரும்' எனக் கூறுகின்ற இனிய மொழியும், மிகுந்த பன்னீரும்-

பூந்தாதுடன், புதிய செஞ்சாந்தும், குளிர்ச்சிதரும் சந்தனமும், அகிலும், புனுகு சட்டமும் அணிகின்ற ஆடம்பரத்துடன் கூடிய ஒளி பெருகுவதான கொங்கையும், அழகிய கையும் யாராயிருந்த போதிலும் (வந்து)

தோய்கின்ற சேறு என்னத்தக்க அல்குலும், கொப்பூழும், உலகமாயை குடிகொண்டுள்ள (இந்த) உடலில் நன்கு காலங்கழிக்கும் (சூளையரை) வேசியரை எதிரே கண்டு மருட்சி நான் அடைதலை (நான் மயங்குவதை) ஒழிக்க மாட்டேனோ!

காளி, (திரிபுரை) (மும் மூர்த்திகளுக்கும் மூத்தவள்) (அந்தரி) பராகாசவடிவை உடையவள், (சுந்தரி) அழகி, (நீலி) கரியநிறத்தி - சாகினி, கவுரி, பயங்கரி (பயத்தைத் தருபவள் - பயத்தைப் போக்குபவள்), சங்கரி, கருணை நிறைந்த சிவாம்பிகை, (குண்டலி) சுத்தமாயையாம் சத்தி, (சண்டிகை) துர்க்கை, திரிபுரத்தைப் பகைத்து எரித்த சிவனது,

காதல் மனைவிப ரம்பரை யம்பிகை
ஆதி மலைமகள் மங்கலை பிங்கலை
கான நடனமு கந்தவள் *செந்திரு அயன்மாது;
வேளி னிரதிய ருந்ததி யிந்திர
தேவி முதல்வர்வ ணங்குத்ரி யம்பகி
மேக வடிவர்பின் வந்தவள் தந்தரு ளிளையோனே-
† வேலு மயிலுநி னைந்தவர் தந்துயர்
தீர வருள் தரு கந்தநி ரந்தர
மேலை வயலையு கந்துள நின்றருள்
பெருமாளே.(17)

## 921. முத்தி பெற

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தத்தத்த தத்ததன தத்தத்த தத்ததன
.......... .......... ..........
......... ......... .......... ......... தந்ததான

விகட பரிமள ம்ருகமத இமசல
வகிர படிரமு மளவிய களபமு
மட்டித்தி தழ்த்தொடைமு டித்துத்தெ ருத்தலையில்
உலவி யிளைஞர்கள் பொருளுட னுயிர்கவர்
கலவி விதவிய ளரிவையர் மருள்வலை
யிட்டுத்து வக்கியிடர் பட்டுத் தியக்கியவர்
விரவு நவமணி ‡ முகபட எதிர்பொரு
புரண புளகித இளமுலை யுரமிசை
தைக்கக் கழுத்தொடுகை யொக்கப்பி ணித்திறுகி
யன்புகூர-

---

*லக்ஷ்மி, சரஸ்வதி, ரதி, இந்திராணி இவர்களால் வணங்கப்படுபவள் தேவி - என்பதை 337-ஆம் பாடலிலுங் காண்க.

† 'வேலுமயிலு நினைந்தவர் தந்துயர் தீர அருள்தரு கந்த' - என்பது வேலும் மயிலும் என்னும் திருமந்திரத்தின் சக்தியைக் காட்டுகின்ற மகுடப் பகுதி - மனப் பாடத்துக்கும் அநுட்டானத்திற் கொண்டுவருதற்கும் உரியது.

‡ முகபட - முகப்படுதல் - முன் தோன்றுதல்-
'விழியிணைக்கு முகப்பட்டிடும்' (பாரத - நச்சு - 19).

ஆசைமனையாட்டி, (பரம்பரை) முழுமுதல் தேவி, அம்பிகை, முதல்வி, மலைமகள், [மங்கலை] என்றும் சுமங்கலியா யிருப்பவள், (பிங்கலை) பொன்னிறம் படைத்தவள், காட்டில் நடனத்தில் பிரியங்கொண்டவள் - செம்மையான இலக்குமி, (அயன்மாது) சரஸ்வதி,

மன்மதன் மனைவி ரதி, (வசிட்டர் மனைவி) அருந்ததி, (இந்திரன் தேவி) இந்திராணி, முதலிய தேவதைகள் வணங்கும் முக்கண்ணி, - மேகநிறங்கொண்ட திருமாலின் (பின் வந்தவள்) தங்கை - ஆகிய பார்வதி அருளிய இளையோனே!

வேலையும் மயிலையும் நினைக்கின்ற அடியார்களுடைய துன்பம் தீரும்படியாக அருள்பாலிக்கின்ற கந்தனே! (நிரந்தர) முடிவில்லாதவனே - கடவுளே! **மேலை வயலூர்** என்னும் தலத்தில் (உகந்து உளம்) உள்ளம் உகந்து - மகிழ்ந்து நின்றருளும் பெருமாளே!

(மருண்டிடல் ஒழிவேனோ)

## 921.

(**வி**கட) மிகுதியான - நிரம்ப, நறுமணம் வீசும், கஸ்தூரி, (இமசலம்) பனிநீர் - பன்னீரை, வகிர - பங்கு கொண்ட-பன்னீர் கலந்த (படிரமும்) சந்தனமும் இவை கலந்துள்ள கலவையைப் பூசிக் கொண்டு, மலர் மாலையை முடித்துக்கொண்டு, தெருவின் முன்புறத்தில் உலாவி, இளைஞர்களின் பொருளுடனே அவர்களின் உயிரையும் கவர்கின்ற (கலவி விதம்) புணர்ச்சிவகைகளைக் காட்டும், (வியன்) வியக்கத்தக்க மாதர்கள் தமது மயக்கவலையில் இட்டு கட்டிப்போட்டு, வேதனைப் படும்படி (தியக்கி) மயங்கச் செய்து, அவர்களுடைய - பொருந்திய நவமணிமாலை நவரத்தினமாலை - முக(ப்)பட - முன் தோன்ற - எதிரில் (பொர) முட்டுகின்ற (புரணம்) நிறைவு அல்லது ஒளிகொண்டதும், புளகாங்கிதம் கொண்டதுமான இளங் கொங்கைகள் மார்பின்மீது அழுத்தம் உறப் பதியக், கழுத்திலே கைசேரக் கட்டி அழுத்தி அன்பு மிக்கெழ-

விபுத ரமுதென மதுவென அறுசுவை
அபரி மிதமென இலவிதழ் முறைமுறை
துய்த்துக்க ளித்துநகம் வைத்துப்ப லிற்குறியின்
வரையு முறைசெய்து *முனிவரு மனவலி
கரையு மரிசன பரிசன ப்ரியவுடை
தொட்டுக்கு லைத்துநுதல் பொட்டுப்ப டுத்திமதர்
விழிகள் குழைபொர மதிமுகம் வெயர்வெழ
மொழிகள் பதறிட ரதிபதி கலைவழி
கற்றிட்ட †புட்குரல்மி டற்றிற்ப யிற்றிமடு
வுந்திமுழ்கிப்;

புகடு வெகுவித கரணமு மருவிய
வகையின் முகிலென இருளென வனமென
ஒப்பித்த நெய்த்தபல புட்பக்கு ழற்சரிய
அமுத நிலைமல ரடிமுதல் முடிகடை
குமுத பதிகலை குறைகலை நிறைகலை
சித்தத்த ழுத்தியநு வர்க்கத்து ருக்கி ‡யொரு
பொழுதும் விடலரி தெனுமநு பவமவை
முழுது மொழிவற மருவிய கலவியி
தத்துப்ரி யப்படந டித்துத்து வட்சியினில்
நைந்துசோரப்-

* முனிவர் மனவலி கரைதல்
-பாடல் 158-பக்கம் 368-கீழ்க்குறிப்பு.

† புட்குரல் - பாடல் 197-பக்கம் 6-கீழ்க்குறிப்பு.

‡ ஒரு பொழுதும் விடலரிது எனும் அனுபவம்-
'மா அநுபவம் இது சற்றும் விடவோ
இயலா தியலாதே' - திருப்புகழ் 1140.

தேவர்கள் (கடைந்தெடுத்த) அமுதம் எனவும், (மது) தேன் எனவும், அறுசுவையும் அளவற்ற வகையிற் கூடியதெனவும், இலவமலர் ஒத்த செவ்விதழை (வாயூறலை) (முறை முறை) பலமுறை அல்லது முறைப்படி அனுபவித்து மகிழ்ந்து, நகக் குறிகளை வைத்து, பற்குறி வரையும் முறையே குறிகளை வைத்து, முநிவர்களும் தமது மனத்திண்மை கரைந்து குலையுமாறு, (அரிசனம்) மஞ்சள் பூசப்பட்ட இடங்களைத் தொட்டும், பிரியமாய் அணிந்துள்ள ஆடையைத் தொட்டுக் கலைத்தும், நெற்றியில் உள்ள பொட்டை அழியச் செய்தும், செருக்கு அல்லது மகிழ்ச்சி கொண்ட கண்கள் காதிலுள்ள குழைகள் வரையும் எட்டி முட்ட, நிலாப்போன்ற முகத்தில் வெயர்வு உண்டாக, மொழிகள் பதறிப் பதறி வர, (ரதிபதி) ரதியின் கணவன் - மன்மதனுடைய - சாத்திர வழியிலே (கொக்கோக சாத்திரத்திற் கூறியவாறு) கற்றுள்ள புட்குரல்களைக் (கண்டத்தில்) கழுத்திற் பயில்வித்து, மடுப்போன்ற (நீர் நிலைப்பள்ளம் போன்ற) கொப்பூழில் முழுகிப்-

புகடு - புகட்டப்பட்ட - செய்யப்பட்ட பலவிதமான - கலவித் தொழில்களைப் பொருந்திய முறைகளில் (கரு) மேகம் என்றும், இருள் என்றும், காடு என்றும் ஒப்புமை கூறப்பட்டதும், நெய்ப்பு பளபளப்பு உள்ளதும். பல பூக்களை அணிந்துள்ளதுமான கூந்தல் சரிந்து விழ, அந்த (அமுத நிலை) இன்பகரமான நிலையை மலரன்ன அடி முதல் முடிவரையும் (குமுதபதி கலை) சந்த்ரகலையில் குறை கலை முதல் நிறைகலை வரையும் - கிருஷ்ணபக்ஷம் முதல் சுக்லபக்ஷம் முடிய - (எப்போதும் என்றபடி), மனத்திலே அழுத்தி, அனுவர்க்கத்து உருக்கி - (அந்தச் சிற்றின்ப வழியையே) அனுசரித்து - அனுட்டித்து அதிலேயே மனம் உருகி, ஒரு பொழுது கூட அந்த வழியை விட்டு விலகுதல் அரிதென்னும்படியான அனுபவமானது அடியோடு நீங்குதல் இல்லாமற் பொருந்திய (கலவி) புணர்ச்சியில் (இதத்துப் பிரியப்பட) இன்பகரமாய் ஆசையுடனே (நடித்து) ஆட்டம் ஆடி - அந்தத் (துவட்சியினில்) சோர்வினில் மனம் நைந்து வாட்ட மடையச்-

புணரு மிதுசிறு சுகமென இகபரம்
உணரு மறிவிலி ப்ரமைதரு திரிமலம்
அற்றுக்க ருத்தொருமை யுற்றுப் *பு லத்தலையில்
மறுகு பொறிகழல் நிறுவியெ சிறிதுமெய்
உணர்வு முணர்வுற வழுவற வொருஜக
வித்தைக்கு ணத்ரயமும் நீர்த்தத்து வைத்துமறை
புகலு மநுபவ வடிவினை யளவறு
அகில வெளியையு மொளியையு மறிசிவ
தத்வப்ர சித்திதனை முத்திச்சி வக்கடலை
யென்றுசேர்வேன்;

திகுட திகுகுட திகுகுட திகுகுட
தகுட தகுகுட தகுகுட தகுகுட
திக்குத்தி குத்திகுட தக்குத்த குத்தகுட
டுமிட டுமிமிட டுமிமிட டுமிமிட
டமட டமமட டமமட டமமட
டுட்டுட்டு டுட்டுமிட டட்டட்ட டட்டமட
திகுர்தி திகுதிகு திகுகுர்தி திகுகுர்தி
தகுர்தி தகுதகு தகுகுர்தி தகுகுர்தி
திக்குத்தி குத்திகுர்தி தக்குத்த குத்தகுர்தி
என்றுபேரி-

திமிலை கரடிகை பதலைச லரிதவில்
தமர முரசுகள் குடமுழ வொடுதுடி
சத்தக்க ணப்பறைகள் மெத்தத்தொ னித்ததிர
அசுரர் குலஅரி அமரர்கள் ஜயபதி
குசல பசுபதி குருவென விருதுகள்
ஒத்தத்தி ரட்பலவு முற்றிக்க லிக்களழு
சிகர கொடுமுடி கிடுகிடு கிடுவென
மகர சலநிதி மொகுமொகு மொகுவென
† எட்டுத்தி சைக்களிறு மட்டற்ற றப்பிளிற நின்றசேடன்;

---

* புலத்தலையில் மறுகு பொறி-
'பஞ்சேந்திரிய வஞ்ச முகரிகாள்...
நும்முடைய மம்மராணை நடாத்துகின்றீர்' - அப்பர் 6-27-9.
'ஒர ஒட்டார் ஒன்றை உன்ன ஒட்டார்....ஐவர்'
-கந்தரலங்-4.

† எட்டுத் திசைக்களிறு - பாடல் 554-பக்கம் 265.

சேர்கின்ற இந்தச் சுகம் அற்ப சுகமென உணர்ந்து, இகத்தின் நன்மையையும் பரத்தின் நன்மையையும் உணர்ந்து அறியக்கூடிய அறிவு இல்லாத நான், மயக்கத்தைத் தரும் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களும் நீங்கப்பெற்று, எண்ணம் (பலவிதமாகச் சிதறாமல்) ஒரு வழிப்பட்டு, ஐம்புலன்களின் வாயிலில் அகப்பட்டுக் கலங்குகின்ற அறிவை (உனது) திருவடியில் நிலைநிறுத்திச், சற்று உண்மை உணர்ச்சி அறிவில் ஏற்பட, குற்றமெல்லாம் ஒழிய, ஒப்பற்ற இவ் வுலக வித்தைகளையும், முக் குணங்களையும் (நிர்த்தத்து வைத்து) நான் ஆட்டுவித்தபடியே ஆடவைத்து - (என் வசமாக்கி, வேதங்கள் சொல்லுகின்ற அனுபோக உருவினை, அளவு கடந்த முழுப் பெரு வெளியையும் ஒளியையும் அறியக்கூடிய சிவானுபவ உண்மைக் கீர்த்திப் பொருளை, முத்தி என்னும் சிவ சமுத்திரத்தை நான் என்று கூடுவேன்!

திகுட திகுகுட திகுகுட திகுகுட, தகுட தகுகுட தகுகுட தகுகுட... ... திக்குத்தி குத்திகுர்தி தக்குத்த குத்தகுர்தி என்று பேரி (முரசு) வாத்தியம்

(திமிலை) பறைவகை, (கரடிகை) கரடி கத்துவது போன்ற ஓசையையுடைய பறைவகை, (பதலை) மத்தளவகை, (சல்லரி) சல் என்னும் ஓசையுடைய பறை (அல்லது) கைத்தாளம்), (தவில்) மேளவகை, (தமரம்) ஒலி செய்யும் (முரசுகள்) பறைவகைகள், (குடமுழு) முழவு வாத்தியவகை இவைகளுடன் (துடி) உடுக்கை யென்னும் பறைவகை, சப்தம் செய்கின்ற (கணப்பறைகள்) தோல் கருவிப் பறைகள் நிரம்ப ஒலிசெய்து அதிர்ச்சியுறச் செய்ய, அசுரர் கூட்டத்துக்குப் பகைவன், தேவர்களின் ஜயவீரத் தலைவன் (வெற்றிச் சேனாபதி), நன்மையையே தரும் பசுபதி - சிவபிராற்குக் குரு - என்று வெற்றிச் சின்னங்கள் ஒரே கூட்டமாய்ப் பலவும் நிரம்பி ஒலிசெய்ய, அவ் வொலியின் எழுச்சியால், (சிகரம்) மலைகளின் (கொடுமுடி) உச்சிகள் எல்லாம் கிடு கிடு கிடு என்று அதிர, மகர மீன்கள் வாழும் (சலநிதி) கடலானது மொகு, மொகு மொகு என்று கலக்கமுற, எட்டுத் திசைகளிலும் உள்ள யானைகள் (மட்டற்று அறப் பிளிற) அளவு கடந்து மிகவும் (பிளிற) கூச்சலிட, (உலகைத் தாங்கி நிற்கும்) ஆதிசேடனுடைய-

மகுட சிரதலம் நெறுநெறு நெறுவென
அகில புவனமும் ஹரஹர ஹரவென
நக்ஷத்ர முக்கிவிழ வக்கிட்ட துட்டகுண
நிருதர் தலையற வடிவெனு மலைசொரி
குருதி யருவியின் முழுகிய கழுகுகள்
பக்கப்ப ழுத்தவுடல் செக்கச்சி வத்துவிட
வயிறு சரிகுடல் நரிதின நிணமவை
எயிறு அலகைகள் நெடுகிய குறளிகள்
பக்ஷித்து நிர்த்தமிட ரக்ஷித்த லைப்பரவி யும்பர்வாழ-
மடிய அவுணர்கள் குரகத கஜரத
கடக முடைபட வெடிபட எழுகிரி
அற்றுப்ப றக்கவெகு திக்குப்*ப டித்து†நவ
நதிகள் குழைதர இபபதி மகிழ்வுற
அமர்செய் தயில்கையில் வெயிலெழ மயில்மிசை
அக்குக்கு டக்கொடிசெ ருக்கப்பெ ருக்கமுடன்
வயலி நகருறை சரவண பவகுக
‡இயலு மிசைகளு நடனமும் வகைவகை
சத்யப்ப டிக்கினித கஸ்த்யர்க்கு ணர்த்தியருள்
தம்பிரானே. (18)

## திருத்தவத்துறை.

[திரிசிராப்பள்ளிக் கடுத்த திருவானைக்காவி லிருந்து 12-மைல். இது 'லாலிகுடி' என வழங்குகின்றது. தேவார வைப்பு ஸ்தலம்.]

## 922. மாதர்மீதுள்ள மயக்கு அற

தானன தந்தன தத்த தத்தன
தானன தந்தன தத்த தத்தன
தானன தந்தன தத்த தத்தன தனதான

காரணி யுங்குழ லைக்கு வித்திடு
கோகன கங்கொடு மெத்தெ னப்பிறர்
காணவ ருந்திமு டித்தி டக்கடு விரகாலே-

* படித்து - படிந்து.

† நவ நதிகள் - பாடல் 147-பக்கம் 342 கீழ்க்குறிப்பு

‡ "இலக்கணத் திலக்கியத் தமிழ்த்ரயத் தகத்தியற் கறிவோதும் சமர்த்தரிற் சமர்த்த" - திருப்புகழ் 958.

"அகத்திய முநிக்கொரு தமிழ்த்ரயம் உரைத்தவன்" - சித்துவகுப்பு.

கிரீடம் (படம் கொண்ட) தலையிடங்கள் நெறுநெறு நெறு என்று முறிய, சகல உலகங்களும் ஹர, ஹர, ஹர என்று ஒலிசெய, நக்ஷத்திரங்கள் எல்லாம் உதிர்ந்து விழ, (வக்கிட்ட) வேகுதல் போன்ற துஷ்ட குணத்தை உடைய அசுரர்களின் தலைகள் அற்றுவிழ, அவர்களின் மலைபோன்ற உருவத்திலிருந்தும் சொரிகின்ற ரத்தப் ப்ரவாகத்தில் முழுகினதால் கழுகுகளின் புறமும், பழுத்துள்ள - முதிர்ந்த உடலும் ஒரே சிவப்பு நிறமாக, (அசுரர்களின்) வயிற்றினின்றும் சரிந்த குடலை நரிதின்ன, மாமிசத்தைப் பற்களை உடைய பேய்களும் நீண்ட (குறளிகள்) பிசாசுகளும் உண்டு நடனம் செய்யும்படி நீ, காப்பாற்றின செயலைப் போற்றித் தேவர்கள் வாழவும்,

அசுரர்கள் இறந்தொழியவும், குதிரை, யானை தேர் (கடகம்) காலாட்படைச் சேனைகள் இவையெலாம் உடைபடவும், (வெடிபட) பிளவு படவும், (சூரனுக்கு அரணாயிருந்த) எழுகிரிகள் உருக்குலைந்து தூள் பறக்கப் பல திக்குகளிலும் அத் தூள்கள் படிந்து நவநதிகளும் குழைவு பெற (இளகுபதம் பெற), (இபபதி) (வெள்ளை) யானையின் தலைவனான இந்திரன் மகிழ்ச்சியுறவும் போரினைச் செய்து, வேலாயுதம் திருக்கையில் ஒளி வீச, மயிலின் மீது விளங்கி, அந்தக் கோழிக்கொடி பெருமையுடன் விளங்கப் (பெருக்கமுடன்) செல்வ வளர்ச்சியுடன் **வயலூரில்** வீற்றிருக்கின்ற சரவணபவனே! குகனே! இயல், இசை, நாடகம் எனப்பட்ட முத்தமிழையும் பிரிவு பிரிவாக உண்மையான முறையில் இனிமையுடனே அகத்திய முநிவருக்குப் போதித்து அருளின தம்பிரானே!

(முத்திச் சிவக்கடலை என்று சேர்வேன்)

## திருத்தவத்துறை

## 922.

**மேக**த்தை நிகர்க்கும் கூந்தலைக் (குவித்து) ஒன்று சேர்த்து, அதில் (இடு) அணியும் தாமரை இதழ் கொண்டு பக்குவமாகப் பிறர் காணும்படியாகச் சிரமப்பட்டு முடித்திடக், கடு விரகாலே - விஷத்தை உட்கொண்ட தந்திரத்தால் - அல்லது கடிய உபாயத்தால்-

காதள வுங்கய லைப்பு ரட்டிம
னாதிகள் வஞ்சமி குத்தி டப்படி
காமுக ரன்புகு வித்த கைப்பொரு ளூறவாகிப்;

பூரண கும்பமெ னப்பு டைத்தெழு
சீதள குங்கும மொத்த சித்திர
பூஷித கொங்கையி லூற்று முத்தணி *பிறையான-

† போருவை யொன்றுநெ கிழ்த்து ருக்கிமெய்
யாரையும் நெஞ்சைவி லைப்ப டுத்திடு
**பூவையர் தங்கள்ம யக்கை விட்டிட அருள்வாயே;**

வீர புயங்கிரி யுக்ர விக்ரம
பூத கணம்பல நிர்த்த மிட்டிட
வேக முடன்பறை கொட்டி டக்‡ கழு கினமாட-

Xவீசிய பம்பர மொப்பெ னக்களி
வீசந டஞ்செய் Oவிடைத்த னித்துசர்
வேதப ரம்பரை யுட்க ளித்திட வரும்வீரா;

சீரணி யுந்திரை தத்து முத்தெறி
காவிரி யின்கரை மொத்து மெத்திய
சீர்புனை கின்றதி **ருத்த வத்துறை** வரும்வாழ்வே-

சீறியெ திர்ந்தவ ரக்க ரைக்கெட
மோதிய டர்ந்தருள் பட்ச முற்றிய
தேவர்கள் தஞ்சிறை வெட்டி விட்டருள்
பெருமாளே. (1)

---

* பிறை - மகளிர் தலையணி வகை - 'தண்ணம் பிறையும் தலைபெற நிறுத்துக' (கல்லா. 14)

† போருவை - போர்த்தலை - தரித்தலை -

'ஆரம் போர் திருமார்பை' - கம்பராமா-ராவணன் வதை-240.

‡ "கழுதினமாட" - என்பது பாடமாயின் 'பேய் வகைகளாட எனப் பொருள் படும்.

X பம்பரம் போல நடம் - இது நடனச் சுழற்சியின் வேகத்தைக் காட்டும். "பம்பரமே போல ஆடிய சங்கரி" - திருப்புகழ் 66.

O விடைத் தனித் துசர் - விடைக் கொடி யுடைய சிவபிரான்.

காதுவரைக்கும் கயல்மீன் போன்ற கண்ணை ஒரு புரட்டுப் புரட்டி, (மனாதிகள்) மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனப்படும் அந்தக் கரணங்களில் எல்லாம் வஞ்சனை எண்ணமே அதிகரிக்கத் தங்களிடம் வந்து படியும் (கீழ்ப்படியும்) காமிகள் - காமங்கொண்ட புருஷர்களின் (அன்பு) ஆசை மயக்கம் கொண்டுவந்து கொட்டுகின்ற கைப் பொருளினால் (உறவு) சம்பந்தம் ஏற்பட்டுப்

பூரண குடம்போலப் பருத்து எழுகின்ற குளிர்ந்த செஞ்சாந்து ஒத்தப்பட்டுள்ள (பூசப்பட்டுள்ள) அழகிய அலங்கரிக்கப்பட்ட கொங்கை பொருந்தி, முத்துக்களால் ஆய பிறையான தலையணி (தலை ஆபரணமான)

(போருவை) தரித்திருத்தலை (அலங்காரம்) ஒன்றைத் தளர்த்திக், (காண்போர்) (மெய்) உடலை உருக்கி, யாராயிருந்தாலும் அவர்தம் மனத்தைத் தமக்கு விற்பனை யாகும்படிச் செய்கின்ற (தம் வசப்படுத்துகின்ற) (பொது) மாதர்கள் மீதுள்ள காம மயக்கத்தை விட்டுத் தொலைக்கும்படி அருள் புரிவாயாக;

வீரம் வாய்ந்த புயமலையை உடைய ஊக்கமிக்க பராக்ரம சாலியே! பூதகணங்கள் பல நடனம் செய்ய வேகத்துடனே பறை வாத்தியங்கள் முழங்கக், கழுகுக் கூட்டங்கள் ஆட-

வீசி எறியப்பட்ட பம்பரம்போல மகிழ்ச்சி பொங்க நடனம் செய்த விடைக் கொடியை உடைய ஒப்பற்ற சிவபிரானும், வேத (பரம்பரை)-முதல்வி - பார்வதியும் உள்ளம் களிப்புற வருகின்ற வீரனே!

ஒழுங்கு அல்லது ஓசை பொருந்திய அலைகள் புரண்டு முத்துக்களை வீசுவதுமான (காவிரியின் கரை) காவிரி கரையில், காவிரி கரைமேல், மோதி நிரப்புகின்ற அழகைக் கொண்டுள்ள **திருத்தவத்துறையில்** எழுந்தருளியுள்ள செல்வமே!

கோபித்து எதிர்த்து வந்த அரக்கர்கள் கெட்டு அழியும்படி அவர்களை மோதி (அடர்ந்து) நெருக்கி அருள்பாலித்த பெருமாளே! அன்பு நிறைந்த தேவர்களின் சிறையை வெட்டி நீக்கி அருளிய பெருமாளே!

(மயக்கை விட்டிட அருள்வாயே)

## 923. கதி பெற

தனத்த தத்தன தானன தானன
தனத்த தத்தன தானன தானன
தனத்த தத்தன தானன தானன தனதான

நிரைத்த நித்தில நீள்மணி மாலைகள்
பொறுத்த வெற்பினை மார்முலை மேலணி
நெறித்த நெய்க்குழல் வாள்விழி மாமதி
முகமானார்-

நெளித்த சிற்றிடை மேல்கலை யாடையை
யுடுத்தி யத்தமு ளோர்தமை யேமயல்
நிரப்பி நித்தமும் வீதியில் நேருறு நெறியாலே;

கரைத்தி தக்குயில் போல்மொழி மாதர்கள்
வலைக்கு ளிற்சுழ லாவகை யேயுன
கழற்று தித்திடு வாழ்வது தான்மன துறமேவிக்-

கதித்த பத்தமை சாலடி யார்சபை
மிகுத்தி ழிக்குண பாதக னேனுயர்
**கதிக்க டுத்துயர் வாகவு மேயரு ளுரையாதோ;**

வரைத்த நுக்கர் மாதவ மேவின
ரகத்தி டத்தினில் வாழ்சிவ னார்திரு
மணிச்செ விக்குள் *மெய்ஞ் ஞானம தோதிய
வடிவேலா-

மதித்த முத்தமி ழாய்வினர் மேலவ
ருரைத்து ளத்திரு வாசக மானது
மனத்து †ளெத்தழ கார்புகழ் வீசிய
மணிமாடத்;

‡திரைக்க டற்பொரு காவிரி மாநதி
பெருக்கெ டுத்துமெ பாய்வள நீர்பொலி
செழித்த நெற்செநெல் வாரிக ளேகுவை
குவையாகச்-

---

* சிவபிரானுக்கு உபதேசித்தது
-பாடல் 327-பக்கம் 314 கீழ்க்குறிப்பு.

† எத்து - ஏத்து.

‡ காவிரி - கடலுக்கு ஒப்பிடப் பட்டது
- பாடல் 904-அடி 8 பார்க்க.

# 923.

**வ**ரிசையாயுள்ள முத்து (மாலைகளையும்) நீண்ட ரத்னமாலைகளையும் தாங்கியுள்ளதும், மலைக்கு இணையானதும், மார்பில் விளங்குவதுமான கொங்கை, மேலே ஆபரணங்களைக் கொண்டுள்ளதும், குழற்சியானதும், நெய்ப்பு உள்ளதுமான (குழல்) கூந்தல், வாள்போன்ற கண், அழகிய சந்திரன் போன்ற முகம் இவைகளைக் கொண்டுள்ள மாதர்கள்

நெளியும் சிறிய இடையின்மேல் மேகலை பூண்ட ஆடையை உடுத்து, (அத்தம் உளோர்) பொருள் உள்ளவர் தமக்கே காம இச்சை நிரப்பித், தினந்தோறும் தெருவில் (நேருறு நெறியாலே) பக்குவமான வழியிலே-

(கரைத்து) கூப்பிட்டழைத்து, (இதம்) நன்மை தரும் குயில்போல மொழி பேசுகின்ற மாதர்களின் வலைக்குள்ளே சுழலாதவகைக்கு, உன்னுடைய திருவடியைத் துதிக்கின்ற வாழ்வே மனத்திற் பொருந்த இருந்து-

உண்டாகும் பத்திநிலை (சால்) நிரம்பியுள்ள அடியார்களின் (சபை) கூட்டத்தை மிக இழிவாகப் பேசும் குணம் கொண்ட பாவியாகிய நான், உயர்ந்த நற்கதியை அடுத்து - நாடி, மேன்மை அடையவே உன்னுடைய திருவருள் ஒரு மொழி உபதேசிக்காதோ! (அல்லது மேன்மை அடையவே நீ அருளும் உபதேசமொழி எதுவோ!)

(வரைத்தனு) (மேரு) மலையை (தனு) வில்லாக ஏந்தின திருக்கரத்தை உடையவர், நல்ல தவத்தை மேற்கொண்டவர்களின் உள்ளமாகிய இடத்தில் வாழ்கின்றவர் - ஆகிய சிவபிரானுடைய (திருமணி) சிறப்பும் அழகும் கொண்ட காதில் மெய்ஞ்ஞானத்தை உபதேசித்த கூரிய வேலனே!

போற்றத்தக்க முத்தமிழை ஆய்ந்தவர், மேலோர், சொல்லியுள்ள திருவாசகம் - அழகிய உபதேச மொழிகளை (அடியார்கள்) மனத்தில் ஏத்துகின்ற, அழகு நிறைந்த, புகழ் விளங்கும் மணி மாடங்களை உடைய (செய்ப்பதி)-

அலைவீசிக் கடலுக்கு நிகரானதான காவிரிப் பெரு நதியின் வெள்ளம் பெருகிப் பாய்கின்ற வளப்பமுள்ள நீரால் பொலிவு விளங்கும் செழிப்புள்ள நெல், செந்நெல் (வாரிகளே) விளைவுகளே கும்பல் கும்பலாகப்

செருக்கு செய்ப்பதி வாழ்முரு கா*அறம்
வளர்த்த நித்யகல் யாணிக்ரு பாகரி
திருத்த வத்துறை மாநகர் தானுறை
பெருமாளே. (2)

## பூவாளூர்

[இது திருத்தவத்துறைக்கு வடக்கு 2 -மைல். ஸ்தல புராணம் உண்டு.]

### 924. ஆண்டருள

தான தாத்தன தானா தானன
தான தாத்தன தானா தானன
தான தாத்தன தானா தானன தனதான

காலன் வேற்கணை யீர்வா ளாலமு
நேர்க ணாற்கொலை சூழ்மா பாவிகள்
காம சாத்திர வாய்பா †டேணிக ளெவரேனுங்-
காத லார்க்கும்வி னாவாய் கூறிகள்
‡போக பாத்திர மாமூ தேவிகள்
காசு கேட்டிடு மாயா ரூபிக ளதிமோக;
மாலை முட்டிகள் வானூ டேநிமிர்
ஆனை போற்பொர நேரே போர்முலை
மார்பு காட்டிகள் நானா பேதக மெனமாயா-
மாப ராக்கிக ளோடே சீரிய
போது போக்குத லாமோ நீயினி
வாஞெ னாப்பரி வாலே யாள்வது மொருநாளே;
Xபால றாத்திரு வாயா லோதிய
ஏடு நீர்க்கெதிர் போயே வாதுசெய்
பாடல் தோற்றிரு Oநாலா மாயிர சமண்மூடர்-

* காஞ்சியில் அறம் வளர்த்தது - பாடல் 460-அடி 8.

† ஏணிகள் - பாடல் 785-பக்கம் 228 கீழ்க்குறிப்பு.

‡ "மோக பாத்திரம்" என்றும் பாடம்.

X சம்பந்தர் லீலை
- பாடல் 181-பக்கம் 420 பாடல் 841-பக்கம் 460 கீழ்க்குறிப்பு.

O சமணர் எண்ணாயிரத்தர்
-பாடல் 332-பக்கம் 334 கீழ்க்குறிப்பு.

பெருகிக் கிடக்கும் (செய்ப்பதி) - வயலூரில் வாழ்கின்ற முருகனே! (காஞ்சியில்) அறம் வளர்த்த நித்ய கல்யாணியும், கிருபாகரியுமான தேவி உறைகின்ற **திருத்தவத்துறை** என்னும் பெரிய ஊரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(உயர்வாகவுமே அருளுரையாதோ)

## பூவாளூர்
## 924.

**ய**மன், வேல், அம்பு, அறுக்கும் வாள், விஷம் - இவைகளுக்கு ஒப்பான கண்கொண்டு கொலைத் தொழிலையே செய்யத் சூழ்ச்சி செய்கின்ற மகா பாவிகள், காம சாத்திரத்தை (கொக்கோ சாத்திரத்தை) வாய் பாடாகக் கொண்டவர்கள் (கரதலப் பாடமாகக் கொண்டவர்கள்), ஏணியின் தன்மை கொண்டவர்கள், (அல்லது ஏண் - கர்வப்பேச்சுப் பேசுபவர்கள்), யாராயிருந்தாலும் அவருடனே-

காம இச்சை நிறைந்த (வினா) சொற்களை வாய்கொண்டு பேசுபவர்கள், காம இன்பத்துக்குப் (பாத்திரம்) கொள்கலமான - இடமான - மகா மூதேவிகள், பொருள் தா எனக் கேட்கின்ற மாய சொரூபிகள், அதிக ஆசை

மயக்கத்தை மூட்டுபவர்கள், ஆகாயத்தை நிமிர்ந்து நோக்கும் ஆனை போலச் சண்டை செய நேராகப் போருக்கெழும் கொங்கை மார்பைக் காட்டுபவர்கள், பலவிதமான (பேதகம்) வேறுபாடுகளைக் கொண்டதான - மாயைகளைச் செய்யவல்ல-

மகா பராக்குக் காரிகளுடனே - பெரிய நோக்கத்தை உடையவர்களுடனே - உத்தமமான என் பொழுதைப் போக்குதல் நல்லதாகுமோ (நல்லதாகாது ஆதலால்) நீ இனி என்னை வா என்று அன்புடனே அழைத்து ஆள்வதான ஒரு நாள் எனக்குக் கிடைக்குமா!

தேவியின் முலைப்பால் நீங்காத திருவாயால் நீ பாடின பா ஏடு (வைகையாற்றின்) நீரை எதிர்த்துப் போக, வாது செய்த பாடலுக்குத் தோற்ற எண்ணாயிரம் சமண மூடர்களும்-

பாரின் மேற்கழு மீதே யேறிட
நீறி டாத்தமிழ் நாடீ டேறிட
பாது காத்தரு ளாலே கூனிமி ரிறையோனும்;
ஞால மேத்திய தோர்மா தேவியும்
ஆல வாய்ப்பதி வாழ்வா மாறெணு
*ஞான பாக்கிய பாலா வேலவ மயில்வீரா-
† ஞான தீக்ஷித சேயே ‡காவிரி
யாறு தேக்கிய கால்வாய் மாமழ
நாடு போற்றிய பூவா ளூருறை பெருமாளே.(1)

## திருப் பராய்த்துறை.

[திரிசிராப்பள்ளிக் கடுத்த எழுமனூர் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு $1^1/_2$மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல்பெற்றது.]

## 925. ஈசன் உடலிடங் கொள்ள

தானன தந்தன தாத்த தத்தன
தானன தந்தன தாத்த தத்தன
தானன தந்தன தாத்த தத்தன தனதான

வாசனை மங்கையர் போற்று சிற்றடி
பூஷண கிண்கிணி யார்ப்ப ரித்திட
மாமலை ரண்டென நாட்டு மத்தக முலையானை-
வாடைம யங்கிட நூற்ற சிற்றிழை
நூலிடை நன்கலை தேக்க இக்குவில்
மாரன்வி டுங்கணை போற்சி வத்திடு விழியார்கள்;
நேசிகள் வம்பிக ளாட்ட மிட்டவர்
தீயர்வி ரும்புவர் போற்சு ழற்றியெ
நீசனெ னும்படி யாக்கி விட்டொரு பிணியான-

* ஞான பாக்கியர் - சம்பந்தர் - பாடல் 332-பக்கம் 334 குறிப்பு.

† ஞான தீக்ஷிதர் - அருணகிரியார்க்கும், சிவனுக்கும் ஞான தீக்ஷை செய்தவர். - பாடல் 814 பக்கம் 398 குறிப்பு; பாடல் 925 அடி 7, 8

அகத்தியர்க்கும் ஞான தீக்ஷை செய்தார் - பாடல் 919-அடி 5.

"நாத கார்த்திகை சேயே" - என்றும் பாடம்.

‡ காவிரி கால்வாய் - பூவாளூர் திருக்கோயிலுக்கு வடக்கே ஒரு சிற்றாறு ஓடுகிறது. அது பங்குனி நதி என்னும் பெயர் கொண்டது. 'கயா பல்குனி' எனவும் வழங்கும்.

(மதுரைப்) ப்ரதேசத்தில் கழுமேல் ஏறவும், திருநீற்றை இடாதிருந்த தமிழ் நாடு (மதுரை) ஈடேறவும் பாதுகாத்து உனது திருவருளாலே தனது கூன் நிமிரப்பட்ட அரசன் (பாண்டியன்) நெடுமாறனும்-

உலகெலாம் போற்ற நின்ற ஒப்பற்ற மாதேவி பாண்டியன் மனைவி மங்கையர்க்கரசியும், திரு ஆலவாய் என்னும் திரு நகரத்தில் உள்ளவர்களும், நல் வாழ்வு அடையும்படி (எணும்) திருவுள்ளத்தில் நினைத்தருளின ஞான பாக்கிய பாலனே! (ஞானச் செல்வக் குழந்தையே)! வேலவனே! மயில் வீரனே!

ஞானதீக்ஷை செய்தவனே! குழந்தையே! காவிரியாறு நிறைந்து வரும் கால்வாய் உள்ளதும், சிறந்த *மழநாட்டுப் பகுதியில் சிறப்புடன் உள்ளதுமான **பூவாளூரில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(பரிவாலே ஆள்வதும் ஒரு நாளே)

## திருப்பராய்த்துறை

## 925.

**ந**றுமணங் கொண்ட மாதர்களின் விரும்பத்தக்க சிற்றடியில் ஆபரணமாய் விளங்கும் (கிண்கிணி) பாத சதங்கை ஒலிசெய்ய, அழகிய மலை இரண்டு என்று சொல்லும்படியாக ஸ்தாபிக்கப்பட்டு (நிலை நிறுத்தப்பட்டு) (மத்தகயாணை) மத்தகத்தைக் (கும்பஸ்தலத்தைக்) கொண்ட யானை போன்ற கொங்கையின்-

(வாடை) (சுகந்த) வாசனை (மயங்கிட) கலந்து சேர, நூற்கப்பட்ட மெல்லிய இழைநூல் ஒத்த இடையில் அழகிய ஆடை நிறைந்து விளங்க, கரும்பு வில்லை ஏந்திய மன்மதன் செலுத்தும் மலர்ப் பாணமாகிய (செந்)தாமரை போலச் சிவந்து திகழும் கண்களை யுடையவர்கள்-

நேசம் பாராட்டுபவர்கள், பயனிலிகள், பலவித கூத்தாட்டங்களை ஆட்டுவிப்பவர், பொல்லாதவர், விரும்பி நேசிப்பவர் போல அலையவைத்து, 'இழிந்தோன்' எனும்படி (என்னை) ஆக்கிவிட்டு ஒரு நோய்க்கிடமான - நோயாளன் என்னும்படியான-

---

* "மா மழ நாடு போற்றிய பூவாளூர்" - சோழ நாட்டின் பழங்காலப் பிரிவுகளுள் மேல்மழ நாடு என்பதைச் சார்ந்தது பூவாளூர்: 'மாவள நாடு போற்றிய பூவாளூர்' என்றும் பாடம்.

நீரின்மி குந்துழ லாக்கை யிற்றிட
யோகமி குந்திட நீக்கி *யிப்படி
† நீயக லந்தனில் வீற்றி ருப்பது மொருநாளே;

தேசம டங்கலு மேத்து மைப்புய
லாயநெ டுந்தகை வாழ்த்த ‡ வச்சிர
தேகமி லங்கிய தீர்க்க புத்திர முதல்வோனே

தீரனெ னும்படி சாற்று விக்ரம
சூரன டுங்கிட வாய்த்த வெற்புடல்
தேயந டந்திடு கீர்த்தி பெற்றிடு கதிர்வேலா

மூசளி பம்பிய நூற்றி தழ்க்கம
லாசனன் வந்துல காக்கி வைத்திடு
Xவேதன கந்தையை மாற்றி முக்கண ரறிவாக

மூதறி வுந்திய தீக்ஷை செப்பிய
ஞானம்வி ளங்கிய மூர்த்தி யற்புத
மூவரி லங்குப ராய்த்து றைப்பதி
பெருமாளே.(1)

## தென்கடம்பந்துறை.

["கடம்பந்துறை" என்பது "கடம்பர்கோயில்". திரிசிராப்பள்ளிக்கு மேற்கேயுள்ள குழித்தலை ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடமேற்கு 1-மைல். திருநாவுக்கரசு ஸ்வாமிக ளுடைய பாடல் பெற்றது. ஸ்தலமான்மியம் இருக்கின்றது.]

---

* இப்படி - பாடல் 33-பக்கம் 97-கீழ்க்குறிப்பு.

† அகலந்தனில் வீற்றிருப்பது - உடலிடங் கொள்வது-
"இறைவனே நீ யென் உடலிடங் கொண்டாய்
இனி யுன்னை என்னிரக் கேனே" - திருவாசகம் 22-5.

‡ சிவபிரான் - "தமக் கென்றும் சேவு வார்"
[illegible]

X [illegible]

(நீரில் - நீர்மையில்) குணத்தில் - தன்மையில் நிரம்பவும் சுழன்று வேதனைப் படுகின்ற இந்த (ஆக்கையில்) உடலில் (திடயோகம்) கலங்காத (சிவ) யோக நிலை மேம்பட்டு எழ (அல்லது ஆக்கை இற்றிட - உடல் தன்மை பாசம் - முடிவு பெற - (சிவ) யோகம் மிக்கெழ), (என்னை) மேற் சொன்ன தீ நெறியினின்றும் நீக்கி (விலக்கி), (இப்படி) இந்த க்ஷணமே இந்த அற்புதமான வகையில் நீ (கருணை கூர்ந்து) அகலந்தனில் - (எனது) மார்பகத்தில் (என் உடலிடத்தே) வந்து வீற்றிருக்கும் படியான ஒப்பற்ற நாளொன்று எனக்குக் கிடைக்குமா!

தேசங்களெல்லாம் போற்றுகின்ற கரியமேக நிறத்தனான பெருந்தகை (திருமால்) வாழ்த்த, (வச்சிரதேகம்) அழியாத திருமேனி விளங்கும் (தீர்க்க புத்திர) பூரணனாம் சிவனுடைய புத்திரனே! முதல்வனே!

தீரன் என்று சொல்லும்படிப் பேர் பெற்றிருந்த பராக்ரம சாலியாகிய சூரபத்மா (நடுங்க) பயங்கொள்ள, அவனுக்கு (வரத்தினால் கிடைத்த) வெற்புடல் - மலை போன்ற (வஜ்ர) தேகமும் தேய்ந்து ஒழியப், (போரை) நடத்திப் புகழ் பெற்றுள்ள ஒளி வேலனே!

மொய்க்கின்ற வண்டுகள் நிறைந்த நூறு இதழ்களைக் கொண்ட தாமரை ஆசனன் (தாமரையில் வீற்றிருப்பவனும் தோன்றி உலகங்களைச் சிருஷ்டித்து வைத்துள்ளவனுமான (வேதன்) பிரமனுடைய ஆணவத்தை அகற்றி, முக்கண்ணராம் சிவபிரான் தெரிந்து கொள்ளும்படி-

பேரறிவு விளங்கின (தீக்ஷை) உபதேச மொழியைச் சொன்ன ஞானம் ஒளிசெயும் மூர்த்தியே! அற்புத [illegible] (பிரமன், திருமால், சிவன்) மூவரும் (அல்லது - அற்புத ஆலயங்கள் செய்த நாயன்மார் - சம்பந்தர் - அப்பர் - சுந்தரர் மூவரும்) விளங்குகின்ற திருப்பராய்த்துறைப் பதிப் பெருமாளே!

(நீ [illegible])

## 926. திருவடியைச் சேர

தனதனன தந்தனந் தந்தனந் தந்தனந்
தனதனன தந்தனந் தந்தனந் தந்தனந்
தனதனன தந்தனந் தந்தனந் தந்தனத் தனதான

புணரியும னங்கனம் புஞ்சுரும் புங்கருங்
கயலினொடு கெண்டையுஞ் சண்டனுங் கஞ்சமும்
புது *நிலவ ருந்தியுந் துஞ்சுநஞ் சும்பொருப் பெறிவேலும்-
பொருவெனஇ கன்றகன் றங்குமிங் குஞ்சுழன்
றிடைகடைசி வந்துவஞ் சம்பொதிந் திங்கிதம்
புவியிளைஞர் முன்பயின் றம்பொனின் †கம்பிதக் குழைமோதிக்;

குணலையொடு மிந்த்ரியஞ் சஞ்சலங் கண்டிடும்
படியமர்பு ரிந்தருஞ் சங்கடஞ் சந்ததங்
கொடுமைசெய்து ‡ சங்கொடுஞ் சிங்கிதங் குங்Xகடைக் கணினார்பால்-
குலவுபல செந்தனந் தந்துதந் தின்புறுந்
த்ரவிதகர ணங்களுங் கந்தநின் செம்பதங்
குறுகும்வகை யந்தியுஞ் சந்தியுந் **தொந்தமற் றமைவேனோ;**

---

* நில வருந்தி - சகோரபட்சி - பாடல் 880 பார்க்க.
"பனிக்கதிர் உண்ணச் சகோரம் பசிப்ப" - கல்லாடம் 94.

† கம்பிதம் - அசைதல்.

‡ சங்கு - ஒரு ஆயுதம்.
"எழுக் கொடு முத்தலை எஃகம்வில் நாஞ்சில்
கழுக்கடை சங்கொடு கப்பணம் வெவ்வாள்
மழுக்கதை சக்கரம் வச்சிர மாதி
விழுப்படை யாவும் விராவிய கையார்" - கந்தபுரா 3-16-7.

X முதல் மூன்றடி கண் வர்ணனை (பாடல் 880-ம் பார்க்க) கண்ணில் வெண்மை, கருமை - அகலம் - உண்டு.

"ஈசற்கி யான் வைத்த அன்பின் அகன்று, அவன் வாங்கிய என் பாசத்திற் கா ரென்று, அவன் தில்லையின் ஒளி போன்று, அவன் தோள் பூசத்திரு நீறென வெளுத்து, அவன் பூங்கழல் யாம், பேசத் திருவார்த்தையிற் பெருநீளம் பெருங் கண்களே" - திருக்கோவை - 109.

# தென்கடம்பந்துறை

## 926.

(புணரியும்) கடலும், (அனங்கன் அம்பும்) மன்மதனுடைய பாணங்களும், (சுரும்பும்) வண்டும், கரிய கயல்மீனும், கெண்டைமீனும், (சண்டனும்) யமனும், (கஞ்சமும்) தாமரையும், புதிய நிலவைச் சந்திரிகையை உண்ணும் சகோரபட்சியும், இறத்தலைச் செய்விக்கும் விஷமும், கிரௌஞ்சத்தைத் தூளாக்கின (உனது) வேலும்-

ஒக்கும் என்னும்படி (இகன்று) பகை பூண்டதாயும், அகலம் கொண்டதாயும், அங்கும் இங்கும் சுழல்வதாயும், மத்தியிலும் ஓரத்திலும் சிவந்ததாயும், வஞ்ச எண்ணத்தை அடக்கினதாயும், (இங்கிதம்) இனிமையைப் பூமியிலுள்ள இளைஞர்கள் முன்பு (பயின்று) திறமையுடன் காட்டி, அழகிய பொன்னால் அமைந்து அசைகின்ற (காதிலுள்ள) குழைகள் மீது மோதி-

(குணலையொடும்) ஆரவார நடிப்புடன், (இந்திரியம்) ஐம்பொறிகளும் துன்பம் காணும்படி கலகப்போர் செய்து, கொடிய வேதனை உண்டாகும்படி எப்போதும் கொடுமை செய் துசம் கொடும் - கொடுமை செய்யும் துவசம் - கொடி கொண்டும், கொடுமை செய்வதற்கே (துசம்) கொடி யேந்தியுள்ளதும், விஷம் தங்குவதுமான கடைக் கண்ணியரிடத்தே (அல்லது) கொடுமை செய்து - கொடி செயல்களைச் செய்து தீமை செய்து, (சங்கொடு) சங்கின் வெண்ணிறத்தோடு (அல்லது சங்கு என்னும் ஆயுதமும்), சிங்கி - விஷமும் (விஷத்தின் கருமையும்) தங்குகின்ற கடைக்கண் பார்வை கொண்ட மாதர்களிடத்தே-

விளங்கும் பலவகையான செவ்விய (தனம்) பொருள்களைக் கொடுத்துக் கொடுத்து மகிழ்ச்சி அடைகின்ற (மனம், வாக்கு, காயம் என்னும்) மூன்று வகையான கருவிகளும், கந்தவேளே! உனது செம்மை நிறைந்த திருவடியை அணுகுதற்கு - சேர்வதற்குண்டான வழியை (அந்தியும் சந்தியும்) காலையும் மாலையும் - தொந்தம் அற்று பிரபஞ்சத் தொடர்பு நீங்கி - உலகபாசம் அற்று அமைதியுடன் ஒருமைப்பட்டு இருக்க மாட்டேனோ!

*துணர்விரிக டம்பமென் தொங்கலும் பம்புறும்
புழுகு †மச லம்பசுஞ் சந்தனங் குங்குமந்
தொகுகளப முந்துதைந் தென்றுநன் கொன்றுபத்
திருதோளுந்-
தொலைவில்சண்மு கங்களுந் தந்த்ரமந் த்ரங்களும்
பழநிமலை யும்பரங் குன்றமுஞ் செந்திலுந்
துதிசெயுமெ யன்பர்தஞ் சிந்தையுஞ் சென்று
‡செய்ப் பதிவாழ்வாய்;
கணபணபு யங்கமுங் கங்கையுந் திங்களுங்
குரவுமறு குங்குறுந் தும்பையுங் கொன்றையுங்
கமழ்சடில சம்புவுங் கும்பிடும் பண்புடைக்
குருநாதா-
கனகுடகில் நின்றகுன் றந்தருஞ் சங்கரன்
Xகுறுமுனி கமண்டலங் கொண்டு முன் கண்டிடுங்
கதிசெய்நதி வந்துறுந் **தென்கடம் பந்துறைப்**
பெருமாளே (1)

---

* கடம்பந்துறை - (கடம்பர் கோயில்)-சிவபிரான் கண்ணுவ முநிவருக்கும், தேவர்களுக்கும் கடம்ப விருக்ஷத்தில் தோன்றிக் காட்சி கொடுத்த தலம்; கடப்ப மரமே ஸ்தல விருக்ஷம்; இது பற்றியே கடப்பமாலை இங்குக் கூறப்பட்டது போலும்.

† அசலம் பசுஞ் சந்தனம் - பொதியமலைச் சந்தனம் முருகவேளுக்குப் ப்ரீதி - என்பதை-

"கார் மலையச் சந்தனமும் வட இமயக் காரகிலும் போர் மலையக் கடவதொரு பிள்ளைக்குப் போக்குதியே" என வருமிடத்துக் காண்க - *தக்கயாகப் பரணி 228.*

‡ செய்ப் பதி - வயலூர்.

X காவிரி - குடகு மலையில் தோன்றினதும், அகத்தியர் சிவபிரானிடம் பெற்று வந்த கமண்டலத்தினின்றும் பெருகியதும் -

"கோதிலாத குறுமுனி தன்னொடும் போதல் வேண்டும் பொருபுனற் காவிரி மாது நீ" - எனச் சிவபிரான் காவிரிக்குக் கட்டளை யிட்டனர்.

"நீடு காவிரி நீத்தத்தை நீ யினிக், கோடி உன் பெருங்குண்டிகைப் பாலெனா, நாடி யத்திறம் செய்தலும் நன்முனி, மாடு சேர்ந்தனள் மாநதி என்பவே"

"அகத்தியன் கொங்கின்பால் வந்து அருச்சனை புரிந்து மேவும்......

குண்டிகை அதனைத் தள்ளிக் குளிர் புனற் கன்னி.........பாரில் நீ படர்தி என்றான்" - *கந்தபுரா 2-23-20, 26; 2-27-32, 36.*

(தொடர்ச்சி 701 ஆம் பக்கம் பார்க்க)

பூங்கொத்துக்கள் விரிந்துள்ள கடப்ப மரத்தின் மலர்களாலாய மென்மையான மாலையும், நிறைந்துள்ள புனுகும், (பொதிய) மலையில் விளையும் பசுமை வாய்ந்த சந்தனமும், குங்குமமும் கூட்டப்பட்ட (களபமும்) கலவைச் சாந்தும், ஒன்றுகூடி நெருங்கிப் பொதிந்துள்ளனவும் எப்போதும் நன்மையே பாலிப்பவைகளுமான - பன்னிரண்டு தோள்களும்-

அழிவு - சோர்வு - இலாத உனது ஆறு முகங்களையும், தந்திர மந்த்ரங்களையும் - உனது பூசனைக்கு உரிய நூல்களையும், மந்திரங்களையும், பழநிமலையையும், திருப்பரங்குன்றத்தையும் திருச்செந்தூரையும், துதி செய்து போற்றுகின்ற மெய்யன்பர்களுடைய சிந்தையிற் புகுந்தும், வயலூர் என்னும் தலத்து வீற்றிருந்தும் - வாழ்பவனே!

கூட்டமான படங்களுடைய பாம்பும், கங்கையும், சந்திரனும், குராமலரும், அறுகம்புல்லும், சிறிய தும்பை மலரும், கொன்றை மலரும், நறுமணம் கமழும் சடையை உடைய சிவபிரானும் கும்பிட்டு வணங்கும் தகுதி - பெருமையைக் கொண்டுள்ள குருநாதனே!

பெருமை தங்கிய குடகில் (குடகு தேசத்தில் - Coorg)-உள்ள மலையில் - குடகுமலையினின்றும் தோன்றி வரும் - (காவிரி), சிவபிரான் தர (அல்லது - சிவனுக்கு இணையான சிவனை வழிபடும்) (குறுமுனி) அகத்தியர் கொண்டுவந்த கமண்டலத்திலிருந்து முன்பு தோன்றி வெளிவந்த நதியாகிய காவிரி - வந்து பொருந்தும் **தென் கடம்பந்துறை** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(தொந்தமற் றமைவேனோ)

---

தொடர்ச்சி:- நாரதர் செய்த சூழ்ச்சியால் விந்தமலை மேருமலைக்குப் போட்டியாக பிரமலோகம்வரை உயர்ந்து வழியை அடைத்தது. தேவர்கள் அகத்தியரை வேண்ட, அகத்தியர் சிவபிரானை வேண்டி விந்தத்தை அடக்கும் ஆற்றலைப் பெற்றார். அப்போது சிவபூஜைக்குத் தீர்த்தம் வேண்டுமென அகத்தியர் வேண்ட, சிவபிரான் காவிரியை அழைத்து ஒரு குண்டிகையில் அடங்கச் செய்து அகத்தியருடன் அனுப்பினார். அந்த குண்டிகை நீருடன் அகத்தியர் தென்திசைக்கு வரும்போது - வழியில் கிரவுஞ்ச கிரியையும், விந்தத்தையும் அடக்கிக், கொங்கு தேயத்துக்கு அருகே (குடகில்) தங்கிச் சிவபூஜை

(தொடர்ச்சி 702 ஆம் பக்கம் பார்க்க)

## கருவூர்.

[ரெயில்வே ஸ்டேஷன். திரிசிராப்பள்ளிக்கு மேற்கு 45-மைல். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது. இதுவே "வஞ்சி" என்பாருமுளர்.]

## 927. சிவஞானம் பெற

தனதானத் தனதான

மதியால்வித் தகனாகி - மனதாலுத் தமனாகிப்;
பதிவாகிச் சிவஞான - பரயோகத் தருள்வாயே;
* நிதியேநித் தியமேயென் - நினைவேநற் பொருளாயோய்;
† கதியேசொற் பரவேளே - **கருவூரிற்** பெருமானே (1)

## 928. பொது மாதர்களின் இணக்கம் அற

தனனத் தனத்ததன தனனத் தனத்ததன
தனனத் தனத்ததன தனதான

இளநிர்க் குவட்டுமுலை யமுதத் தடத்தைகனி
யிரதக் குடத்தையெணு மரபோடே-
இருகைக் கடைத்துஇடை துவளக் குழற்சரிய
இதழ்சர்க்க ரைப்பழமொ டுறமுறல்;
‡ முளரிப்பு வொத்தமுக முகம்வைத் தருத்திநல
முதிரத்து வற்பஅல்குல் மிசைமுழ்கி-

---

(701-ஆம் பக்கத் தொடர்ச்சி)

செய்து வந்தனர். அப்போது சீகாழியில் இருந்த இந்திரன் தனது சிவ பூஜைக்கு நீரில்லாது வருந்த, நாரதர் கூறிய தந்திரத்தின்படி விநாயகரை அவன் பூசித்து வணங்க, அவர் எதிர் தோன்றி வேண்டிய வரம் யாதென - "அகத்திய முனிவரின் கமண்டலத்திற் காவிரி நதி அடங்கியுள்ளது. அந்தக் கமண்டலத்தை நீங்கள் கவிழ்த்துவிட்டால் பரவிவரும் நதி என் நந்தவனத்துக்கு வேண்டிய நீரைத் தரும்" என, விநாயகரும் அங்ஙனமே கவிழ்க்க, காவிரி பெருகி வந்து இந்திரனுடைய நந்தவனத்துக்கு வேண்டிய நீரைத் தந்தது என்பது வரலாறு.

---

* "நிதியொப்பானை நிதியிற் கிழவனை.........
கதியொப்பானைக் கண்டீர் நாம் தொழுவதே - அப்பர் 5-3-6.

(தொடர்ச்சி 703 ஆம் பக்கம் பார்க்க)

## கருவூர்

## 927.

**என்** புத்திகொண்டு நான் ஒரு பேரறிவாளனாகி, என் மனம் நன்னெறியையே பற்ற அதனால் நான் ஒரு உத்தம புருஷனாகி - சிரேஷ்டனாகி

(சிவஞான பதிவாகி) சிவ ஞானத்தில் என் மனம் ஊன்றுவதாகி, மேலான யோக வழியை (நான் பற்றும்படி) அருள் புரிவாயாக.

(என் செல்வமே! அழிவிலாப் பொருளே! என் தியானப் பொருளே! சிறந்த பேரின்பப் பொருளானவனே! (அல்லது - நன்மை தருங் கடவுளே!).

என் புகலிடமே! (சொல்) எல்லாராலும் புகழப்படும் மேலான செவ்வேளே! கருவூர்த் தலத்துப் பெருமாளே!

(பரயோகத் தருள்வாயே)

## 928.

**இ**ளநீர் போன்றதும், மலை போன்றதுமான கொங்கையாகிய அமுதம் பெருகும் இடத்தை, கனிரசம் அடங்கியுள்ள குடத்தை, (எண்ணும்) மதிக்கும் (மரபோடே) வழக்க முறையில் (அல்லது கொக்கோக சாத்திர முறைப்படி-

(இருகைக்கு அடைத்து) இரண்டு கைகளிலும் அடையச் செய்து, இடை நெகிழவும், கூந்தல் சரியவும், வாயிதழினின்றும் சர்க்கரை போலவும், பழம் போலவும், ஊறும் ஊறலை-

தாமரை மலர் போன்ற முகத்தோடு முகத்தை வைத்துப் (அருத்தி) பருகி - உண்டு, (நலம் - முதிர - து) - நலம் - இன்பம், (முதிர)-முற்றுவதால் உண்டாகும், (து) அனுபவத்துடன் - இழிந்த அல்குலிடத்தே முழுகி-

---

தொடர்ச்சி:- "நிதியினை பவளத் தூணை நெறியினால் நினையவல்லார் கதியினை" - திருமங்கையாழ்வார் குறுந்தாண்டகம் 1.

† "கதியாய் விதியாய்க் குருவாய் வருவாய் அருள்வாய் குகனே" - கந்தரநுபூதி 51.

‡ முளரிப் பு - முளரிப் பூ.

மொழிதத்தை யொப்பகடை விழிகட்*சிவப்பமளி
முழுகிச்சு கிக்கும் வினை யறஆளாய்;

நளினப் பதக்கழலு மொளிர்செச்சை பொற்புயமெ
† னயனத்தி லுற்றுநட மிடும்வேலா-
நரனுக் கமைத்தகொடி யிரதச்‡சு தக்களவ
னறைபுட்ப நற்றுளவன் மருகோனே;

களபத் தனத்திசுக சரசக் குறத்திX முக
Oகமலப் புயத்துவளி மணவாளா-
கடலைக் குவட்டவுணை யிரணப் படுத்தியுயர்
கருவைப் பதிக்குளுறை பெருமாளே. (2)

## 929. அனுபூதி பெற

தனனா தனனத் தனனா தனனத்
தனனா தனனத் தனதான

தசையா கியகற் றையினால் முடியத்
தலைகா லளவொப் பனையாயே-

---

* சிவப்ப அமளி எனப்பிரிக்க.

† பக்தர்களுடைய கண்களிலே கடவுள் பொலிவர்; நடமிட்டுப் பொலிதல் பின்னும் விசேடம்; இது அருணகிரியாரின் பத்திப் பெரு நிலையை விளக்கும், அவர் வரலாற்றைக் குறிக்கும்.

"என் கணிலாடு தழல்வேணி எந்தையர்" - என வரும் இடத்துக் கீழ்க் குறிப்பைப் பார்க்க (திருப்புகழ் 98-பக்கம் 230)

‡ சுதக் களவன் - சூதக் களவன்; சூதன் - (அருச்சுனனுக்குத்) தேர்ப்பாகன்; கண்ணபிரான்.

களவன்:- கள்வன் - (வெண்ணெய்) திருடினதுஅல்லாமல் அவர் செயலெலாம் கள்ளத்தன்மையது. உதாரணம்-

1. "நவநீதமுந் திருடி" - திருப்புகழ் 109.

2. "கள்ளக் குழவியாய்க் காலால் சகடத்தைத் தள்ளி உதைத்திட்டு" -பெரிய திருமொழி 10-5-9.

3. "கள்ளக் குறளாய் மாவலியை வஞ்சித்து" -பெரிய திருமொழி 5-1-2.

4. "கான ஆனையின் கொம்பினைப் பீழ்ந்த கள்ளப் பிள்ளை" - சுந்தரர் 7-57-8.

[தொடர்ச்சி 705 ஆம் பக்கம்]

பேச்சு - கிளியின் பேச்சுக்கு ஒப்பாக, கடைவிழிகள் கடைக்கண்கள் - செந்நிறம் கொள்ள - படுக்கையில் முழுகிச் சுகிக்கின்ற (இன்பம் அனுபவிக்கும்) தொழில் தொலையும்படி (என்னை) ஆண்டருளுக.

தாமரை போன்ற திருவடியில் உள்ள வீரக் கழலும், விளங்குகின்ற வெட்சிமாலை அணிந்த அழகிய திருப்புயங்களும், என்னுடைய (நயனத்தில்) கண்களில் இடம் பெற்று விளங்க நடனம் செய்கின்ற வேலனே!

(நரனுக்கு) அருச்சுனனுக்கு அமைத்த - ஏற்பட்டிருந்த (அநுமக்) கொடி பறக்கும் தேரில் - (சூதன்) தேர்ப்பாகனாக விளங்கின (களவன்) திருடன் - அல்லது களாப்பழத்து நிறங்கொண்டவன், (நறை) தேன் கொண்ட மலர்களையும் சிறந்த துளவமாலையையும் அணிந்தவன் - ஆகிய திருமாலின் மருகனே!

கலவைச் சாந்து அணிந்துள்ள கொங்கையை உடையவள், இன்பகரமான காமலீலைகள் இயற்றும் குறத்தி, கமலமுக - கமலபுயம் - தாமரையன்ன முகத்தையும், தாமரையன்ன திருக்கரங்களையும் உடைய வள்ளியின் மணவாளனே!

கடலை, (கிரெளஞ்ச) மலையை, (அவுணை) - அவுணனாம் சூரனை - (இரணப்படுத்தி) புண்படுத்தி அழித்து, உயர் பெருமாளே - பேர்பெற்ற பெருமாளே! (அல்லது) உயர் - மேலான **கருவூர்ப் பதி**க்குள் வீற்றிருக்கின்ற பெருமாளே!

(அமளி முழுகிச் சுகிக்கும் வினை அற ஆள்வாய்)

## 929.

**மா**மிசமாகிய திரளால் முழுமையும் - தலை முதல் கால் அளவும் - (ஒப்பனையாயே) அலங்காரமாகவே (அமையப் பெற்று)

---

(தொடர்ச்சி) களவன் - களாப்பழத்தின் நிறம் கொண்டவன், களவம் - களா.

"கனிக் களவத் திருவுருவத் தொருவனையே கழல் தொழுமா
கல்லீர்களே" - பெரிய திருமொழி 11-6-4.

X வள்ளியின் முகம், கரம் இரண்டும் கமலம்: 'திருமுகங் கமலம் .... துணைக்கரம் கமலம்' - தணிகைப் புராணம்-களவு 43.

O கமலம் - இடைநிலைத் தீவகம்.

தடுமா றுதல்சற் றொருநா ளுலகிற்
றவிரா வுடலத் தினைநாயேன்;

*பசுபா சமும்விட் டறிவா லறியப்
படுபூ ரணநிட் களமான-
பதிபா வனையுற் † றநுபூ தியி‡லப்
படியே யடைவித் தருள்வாயே;

Xஅசலே சுரர்புத் திரனே குணதிக்
Oகருணோ தயமுத் தமிழோனே-
அகிலா கமவித் தகனே துகளற்
றவர்வாழ் வயலித் திருநாடா;

** கசிவா ரிதயத் தமிர்தே மதுபக்
†† கமலா லயன்மைத் துனவேளே-

---

* பசு பாசம் - பசு - ஜீவான்மா: பசு கரணம் - தற்போதச் செயல்கள். பாசவினை - பந்தத்திற்கு ஏதுவாகிய வினைகள்.

3, 4 அடிகள் சன் மார்க்க நிலையைத் திருமந்திரத்தில் (1486) உள்ளவாறே விளக்குகின்றன:-

"பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சம் கசியக் கசிவித்
தொசியாத வுண்மைச் சொரூபோ தயத்துற்
றசைவான தில்லாமை யானசன் மார்க்கமே"

† இந்த அநுபூதி அருணகிரியார் அடையப் பெற்றார் என்பது-

"ஆணவ அழுக்கடையும் ஆவியை விளக்கி யநுபூதி அடைவித்ததொரு பார்வைக் காரனும்..........குறத்தி திருவேளைக்காரனே" என்னும் திருவகுப்பால் அறியக் கிடக்கின்றது.

‡ அப்படியே - என்பது "மீளா அடிமை உமக்கே ஆளாய்" - என்பது போல-(சுந்தரர் 7-95-1)

X சூரியகுலத்துச் சமற்காரன் என்னும் அரசன் துறவறம் பூண்டு திருவாரூரிற் பெருந்தவஞ் செய்யப் ப்ரத்யக்ஷமான சிவபெருமானை "இத் தலத்தோர் சிவலிங்கம் தாபிக்க யான் காதல் வைத்தனன்; அச் சிவலிங்க மாமணியில் உலகுய்ய.....நீ முதல்வி யொடும் நித்தலும் நீங்காதுறைய வேண்டும்" என வேண்டிக் கொண்டான். அவ் வரத்தைச் சிவபிரான் அளித்தனர். அதன்படி அரசன் தாபித்துப் பூசித்த லிங்கமே - "அசலேசர்" :

"மன்னவன் தவம் புரிந்து வேண்டிய வரத்தால் வள்ளல்,
இன்னருளோடு நீங்கா தென்றும் வீற்றிருந்த லாலே,

[தொடர்ச்சி 707 ஆம் பக்கம் பார்க்க]

தடுமாறுதல் - தடுமாற்றம் அடைதல் - சஞ்சலம் உறுதல் கொஞ்சமேனும் ஒருநாள் கூட இந்த உலகத்தில் நீங்காத - என்றும் சஞ்சலத்துக்கே இடமான - (இந்த) உடம்பை உடைய அடியேன்-

(பசு) தற்போதத்தையும் - அகங்காரத்தையும், (பாசம்) பந்தங்களையும் விட்டு, ஞானத்தால் (அறியப்படு) அறியப்படுகின்ற 'பூரணமானதும்', உருவமில்லாததுமான

(பதிபாவனை) - பரம்பொருளாம் கடவுள் தியானத்தை மேற்கொண்டு அனுட்டித்து, (அநுபூதியில்) அந்த அனுபவ ஞானத்தில் (அப்படியே) மறுபடி மீளாவண்ணம் (என் சிந்தனை மாறாதவண்ணம் - அந்தத் தியான நிலையிலேயே) என்னை ஒப்படைத்துச் சேர்ப்பித்து அருள்புரிவாயாக,

(அசலேசுரர்) (கயிலை) மலைக் கடவுளாம் சிவனது புத்திரனே (அல்லது - அசைவற்றிருக்கும் ஈசனாம் - தாணுவாம்-சிவனது புத்திரனே)! குணதிக்கு - கிழக்குத் திசையில் தோன்றும் (அருணோதய) உதய சூரியனது ஒளிபோன்ற ஒளியை உடையவனே! முத்தமிழ்க் கடவுளே!

சகல ஆகமங்களிலும் வல்லவனே! குற்றமற்றவர்கள் வாழும் வயலூர் என்னும் அழகிய ப்ரதேசத்தில் வீற்றிருப்பவனே!

உள்ளங் கசிபவர்களுடைய மனத்தில் ஊறுகின்ற அமிர்தமே! (மதுபம்) வண்டு மொய்க்கின்ற தாமரை மலரை இருப்பிடமாகக் கொண்டுள்ள பிரமனுக்கு மைத்துன முறையில் உள்ள வேளே!

---

அன்னதோர் இலிங்க மூர்த்திக் கசலேசன் எ[redacted]னும் நாமம்,
உன்னருந்தவத்தின் மிக்கீர் உலகினிற் பொலிந்த தன்றே"
-(திருவாரூர்ப் புராணம் - அசலேசச் சருக்கம்) 28.

O " கதிராயிர அருணோதய!" - திருப்புகழ் 913.

"ஞாயிறு கடற் கண்டாஅங் கோவற இமைக்கும் சேண்
விளங்கவிர் ஒளி" - திருமுரு. 'சதகோடி சூரியர்கள் உதய மென... சோதி' - சீர்பாத வகுப்பு.

** "கருதுவார் இதயத்துக் கமலத் தூறும் தேனவன் காண்"
"உருகுமனத் தடியவர்கட் கூறுந் தேனை" -அப்பர் 6-87-1 6-84-3.

†† பிரமன் மைத்துன வேள் - பாடல் 823-பக். 422 கீழ்க்குறிப்பு.

கருணா கரசற் குருவே குடகிற்
கருவூ ரழகப் பெருமாளே.(3)

## 930. உயர் வாழ்வுற

தத்தத் தனதன தானன தானன
தத்தத் தனதன தானன தானன
தத்தத் தனதன தானன தானன தனதான

நித்தப் பிணிகொடு மேவிய காயமி
*தப்புப் பிருதிவி வாயுவு தேயுவு
நிற்பொற் ககனமொ டாமிவை பூதக லவைமேவி-
நிற்கப் படு†முல காளவு மாகரி
டத்தைக் கொளவுமெ நாடிடு மோடிடு
நெட்டுப் பணிகலை பூணிடு ‡ நானெனு மடவாண்மை;

எத்தித் திரியுமி தேதுபொ யாதென
வுற்றுத் தெளிவுண ராதுமெய் ஞானமொ
டிச்சைப் படஅறி யாதுபொய் மாயையி லுழல்வேனை-
எத்திற் கொடுXநின தாரடி யாரொடு
முய்த்திட் டுனதரு ளாலுயர் ஞானமு
திட்டுத் திருவடி யாமுயர் வாழ்வுற இனிதாள்வாய்;

தத்தத் தனதன தானன தானன
தித்தித் திமிதிமி தீதக தோதக
டத்தக் குடகுகு தாகுட தீகுட வெனபேரிச்-

---

* "ஐம்பூதத்தால் ஆயது உடல் - பாடல் 876-அடி 1. பார்க்க.

† உலகாளவும் நாடுவர் - "ஐம்பெருமா பூதங்காள்! இவ்வவனியெல்லாம் உம்பரமே உம் வசமே ஆக்கவல்லீர்". "ஐயோ வையகமே போதாதே" - அப்பர் 6-27-2,4.

‡ "நான் நான் இங்கெனும் அகந்தை எனக்கேன் வைத்தாய்" - தாயுமா-பன்மாலை 5. நானா எனவரு முத்திரை - திருப்புகழ் 1146.

X "அடியாரொடு சேர்ப்பாயலையோ" - என்றார் 685-ஆம் பாடலிலும்; இந்த வேண்டுகோள் அருணகிரியார்க்குக் கை கூடிற்று என்பது
'போதமிலேனை அன்பாற் கெடுதலிலாத் தொண்டரிற்
கூட்டியவா........வேலோன்" - என்னும்

[தொடர்ச்சி 709 ஆம் பக்கம் பார்க்க]

கருணாகரனே! சற்குரு மூர்த்தியே! (குடகு) மேற்குத் திசையில் உள்ள **கருவூரில்** வீற்றிருக்கும் அழகுப் பெருமாளே!

*(அநுபூதியில் ...அடைவித் தருள்வாயே)*

# 930.

**நா**ள் தோறும் பிணியுடன் கூடிய தேகம் இது; இது (அப்பு) நீர், (பிருதிவி) மண், வாயு, (தேயு) அக்கினி, (நில்) உள்ளதான (பொன்) பொலிவுள்ள (ககனம்) ஆகாயம் எனப்படும் ஐம்பூதங்களின் சேர்க்கையால் உண்டாகி

நிற்கப்படும் - நிற்கின்ற தோன்றாகும்; உலகமெல்லாம் ஆளவேண்டும், (மாகர்) விண்ணவர் இடத்தையும் (மேலுலகத்தையும்) கொள்ளவேண்டும் - என்னும் ஆசை கொண்டு (நாடிடும்) அதற்கு வேண்டிய முயற்சிகளை மேற்கொள்ளும்; ஓடிடும் - அதற்காக அங்கும் இங்கும் ஓடி அலையும்; (நெட்டு) செருக்குடன் ஆபரணங்களையும், ஆடைகளையும் அணிந்து கொள்ளும்; "நான்" என்கின்ற முட்டாள்தனமான (ஆண்மை) அகங்காரத்துடன்

வஞ்சித்துத் திரியும்; இது ஏது - இது என்ன! அல்லது - இந்நிலை ஏதும் சற்றும் பொய்யாது - பொய்யாகாது, நிலைத்திருக்கும், என்று திடமாக நினைத்துத் தெளிவான உண்மையை உணராமல், மெய்ஞ்ஞானத்தை விரும்ப அறியாமல், பொய்யான மாயையிலேயே அலைச்சல் உறுகின்ற என்னை

(எத்தில் கொடு) தந்திரமாக ஆட்கொண்டு உன்னுடைய அடியார்களுடன் என்னைக் கொண்டு சேர்ப்பித்து, உன் திருவருளால் சிறந்த ஞான அமுதத்தை (இட்டு) அளித்து, (உனது) திருவடியாகிய மேலான வாழ்வை நான் அடையும்படி இனிதே ஆண்டருளுக;

தத்தத் தனதன தானன தானன.......தாகுட தீகுட என்று (ஒலிக்கும்) பேரி - முரசின்

---

கந்தரலங்காரச் செய்யுளால் (100) தெரிகின்றது; அடியாரொடு கூடப் பெறுதலே பெரும் பேற்றினுட் பேறு.

"அத்தன் ஆண்டுதன் அடியாரிற் கூட்டிய அதிசயங்
கண்டாமே" - என்றார் மணிவாசகரும்-

O அருணகிரியார்க்கு இங்கு விரும்பியவாறே ஞான அமுது கிடைக்கப் பெற்றதைப் பாடல் 814-கூறும்.

சத்தத் தொலிதிகை தாவிட வானவர்
திக்குக் கெடவரு சூரர்கள் தூள்பட
சர்ப்பச் சதமுடி நாணிட வேலதை யெறிவோனே;

வெற்றிப் பொடியணி மேனியர் *கோகுல
சத்திக் கிடமருள் தாதகி வேணியர்
வெற்புப் புரமது நீறெழ காணிய ரருள்பாலா-

வெற்புத் தடமுலை யாள்வளி நாயகி
சித்தத் தமர்கும ராளமை யாள்கொள
வெற்றிப் புகழ்கரு வூர்தனில் மேவிய
பெருமாளே. (4)

## 931. மாதர்களின் சேர்க்கை யற

தத்தன தத்த தனதன, தத்தன தத்த. தனதன
தத்தன தத்த தனதனத் தனதான

முட்டம ருட்டி யிருகுழை தொட்டக டைக்க ணியலென
மொட்பைவி ளைத்து முறையளித் திடுமாதர்-

முத்தமி ரத்ந மரகதம் வைத்தவி சித்ர முகபட
மொச்சிய பச்சை யகில்மணத் தனபாரம்;

கட்டிய ணைத்து நகநுதி பட்டக ழுத்தி லிறுகிய
கைத்தல மெய்த்து வசனமற் றுயிர்சோருங்

கட்டமு யக்கி னநுபவம் † விட்டவி டற்கு நியமித
கற்பனை பக்ஷ முடனளித் தருளாதோ;

---

* கோகுலம் - கண்ணன் வளர்ந்த ஆயர்பாடி. 'ஆயர் குலத்தினில் வந்து தோன்றிய அஞ்சன வண்ணன்' - பெரியாழ்வார் 1-7-11.

"மாலை இடப்பாகத்தே மருவக் கொண்டார்"- அப்பர் 6-96-3.

† 'விட்டு விடற்கு' என்றும் பாடம். (விட்டு விடற்கு - விடுதற்கு)

(சத்தத்தொலி) - பேரொலி திசைகளைக் கடந்து தாவிச் செல்ல. தேவர்கள் வாழும் திசைகள் கலங்கிக் கெட, வந்த சூரர்கள் தூளாகச், (சர்ப்பம்) (ஆதிசேடனது நூற்றுக்கணக்கான பணாமுடிகள் (நாணிட) அச்சம் கொள்ள வேலாயுதத்தைச் செலுத்தினவனே!

ஜெயத்தையே தரும் திருநீற்றை அணிந்த திருமேனியர், (கோகுல சத்தி) ஆயர்பாடியில் வளர்த்த சத்தி (கிருஷ்ணனுக்குத் திருமாலுக்குத் - தமது இடது பாகத்தைத் தந்தருளிய ஆத்திமாலைச் சடையர், வெற்புப்புரம் - மலை போன்ற திரிபுரங்கள் சாம்பலாம்படிக் கண்டவர் ஆகிய சிவபிரான் அருளிய குழந்தையே!

மலைபோன்ற பெரிய கொங்கையளாம் வள்ளி நாயகியின் உள்ளத்தில் வீற்றிருக்கும் குமரனே (அல்லது வள்ளிநாயகி உனது உள்ளத்தில் இருக்கப்பெற்ற குமரா)! எம்மை ஆட்கொள்ள ஜெயப் புகழ் விளங்கும் கருவூரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(உயர் வாழ்வுற இனிதாள்வாய்)

## 931.

முழுதும் (மருட்டுவதாகி) மயக்குவதாகி இரண்டு காதின் குழைகளையும் தொடுகின்ற கடைக் கண்ணின் தன்மை யிதுவே என்று (காண்பார்தம்) (உள்ளத்தில் மொள்ளுதலை உண்டுபண்ணி), உள்ளத்தை மொண்டு கவர்ந்து, (முறை) உறவு முறையைக் கூட்டி வைக்கின்ற (பொது) மாதர்களின்–

முத்து, ரத்னம், மரகதம் இவை வைத்து ஆக்கப்பட்ட (விசித்ரமான) வினோதமான (முகபடம்) முன்னே அணிந்துள்ள ஆடை - மேலாடை (மொச்சிய) நெருங்கிச் சுற்றியுள்ளதும், பசிய அகிலின் நறுமணம் கொண்டதுமான கொங்கைப் பாரங்களைக்

கட்டியணைத்து, நகங்களின் நுனி பட்டுள்ள கழுத்தில் அழுத்தமாக அணைத்த கைகள் சோர்ந்து, பேச்சும் சோர்ந்து, உயிரும் சோரும்படியான-

கஷ்டமான (முயக்கின்) புணர்ச்சித் தொழிலின் அனுபவத்தை விட்டு ஒழித்த இந்த விடற்கு -(விடனுக்கு) தூர்த்தனுக்கு - காமுகனுக்கு (நியமித) வகைப்பட்ட (கற்பனை) சங்கற்பம் ஒன்றை - ஒழுக்க நெறி ஒன்றை அன்புடனே தந்தருளாதோ (உனது திருவருள்)!

வெட்டிய கட்க முனைகொடு வட்டகு ணத்து ரணமுக
விக்ரம வுக்ர வெகுவிதப் படைவீரா-
வெற்றியை யுற்ற குறவர்கள் பெற்றகொ டிக்கு மிகமகிழ்
வித்தக *சித்த †வயலியிற் குமரேசா;
கிட்டிய பற்கொ டசுரர்கள் மட்டற வுட்க வடலொடு
‡கித்திந டக்கு மலகைசுற் றியவேலா-
Xகெட்டவ ருற்ற துணையென நட்டருள் சிட்ட Oபசுபதி
**கொர்ப்பு ரத்தி லறுமுகப் பெருமாளே.(5)

## 932. விதியை நினைந்து ஒழுக

தந்தன தனன தனதாத்தன
தந்தன தனன தனதாத்தன
தந்தன தனன தனதாத்தன தனதான

சஞ்சல சரித பரநாட்டர்கள்
மந்திரி குமரர் படையாட்சிகள்
சங்கட மகிபர் தொழு ஆக்கினை முடிசூடித்-

---

* சித்தன் - இது முருகக் கடவுளின் ஆயிர நாமத்துள் ஒன்று. "சித்தன் வாழ்வு" என்று சொல்லுகின்ற ஊர் முற்காலத்து ஆவினன்குடி யென்று பெயர் பெற்ற தென்றுமாம்; "சித்தன் என்பது...பிள்ளையாருக்குத் திருநாமம்" (திருமுருகாற்று .....உரை); பிள்ளையார்-முருகவேள்; 'சித்த' பாடல் 355-ல் "விராலி சித்ர மலைமேல் உலாவு சித்த" என்றார்.

† கருவூருக்குக் கிடைத்த ஏழு பாடல்களில் 4 பாடல்களில் வயலூர் வருவதால் - வயலூரைச் தரிசித்த அண்மைப் பொழுதிற் கருவூரை அருணகிரியார் தரிசித்திருத்தல் வேண்டும்.

‡ கித்தி- "கித்தி நின்றாடும் அரிவையர் தெருவிற்
கெழுவு கம்பலை செய் கீழ்க் கோட்டூர் - திருவிசைப்பா 10-11.

X கெட்டவர் - 'நான்' என்பது கெட்டவர்; ஆணவம் அற்றவர் -
"ஊன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டென் உள்ளமும் போய்
நான் கெட்டவா பாடித் தெள்ளேணங் கொட்டாமோ"
-திருவாசகம் 11-18.

"அற்றவர்கள் நற்றுணைவன்" - சம்பந்தர் 3-68-2.

O கருவூரிற் சிவபிரான் திருநாமம் 'பசுபதீசுரர்'. பசு-காமதேனு பூசித்துச் சிருட்டித் தொழில் செய்ய வரம் பெற்று

[தொடர்ச்சி 713 ஆம் பக்கம் பார்க்க.]

வெட்டவல்ல (கட்கம்) வாளின் முனை கொண்டு - அட்ட குணத்து - (பகைவர்களை) அழித்த குணங்கொண்ட (விக்ரம)! (ரணமுக) போர் முகத்து - (போரில்) (விக்ரம) பராக்ரமனே! (உக்ரனே) கோபம் கொள்பவனே! பலவிதமான ஆயுதங்களை உடைய வீரனே!

ஜெயம் பெறுபவர்களான குறவர்கள் பெற்ற, கொடி-கொடி போன்ற வள்ளியின்மீது மிக்க மகிழ்ச்சி கொள்ளும் (வித்தகனே) பேரறிவாளனே! சித்த மூர்த்தியே! வயலூரில் வீற்றிருக்கும் குமரேசனே!

(கிட்டிய பற்கொடு) அச்சத்தால் (தங்கள்) பல் ஒன்றோடொன்று பட்டு இறுகும்படி அசுரர்கள் அளவு கடந்து பயப்பட, (அடலொடு) வலிமையோடு (அல்லது வெற்றியுடன்) கித்தி நடக்கும்) ஒற்றைக்காலால் தாவி நடக்கும் பேய்கள் சூழ்ந்துள்ள வேலனே!

(கெட்டவர்) ஆணவம் அழிந்தவர்களுக்கு உற்ற துணையாக இருந்து அவர்களை விரும்பி நட்பு பூண்டு திருவருள் பாலிக்கும் சிட்டனே! (சிரேஷ்டமானவனே)! பசுபதீசுரர் என்னும் திருநாமங்கொண்ட சிவபிரானது தலமாகிய கெர்ப்ப புரத்தில் (கருவூரில்) வீற்றிருக்கும் ஆறுமுகப் பெருமாளே!

(நியமித கற்பனை....அளித்தருளாதோ)

# 932.

**து**ன்ப சரித்திரத்தைக் கொண்ட (பர நாட்டர்கள்) பிறதேசத்தவர்களும், மந்திரிகளும், குமரர்படையாட்சிகள் - இள வீரர்களைக் கொண்ட படைத் தலைவர்களும், கஷ்ட நிலையில் இருந்த அரசர்களும், தொழுது நிற்க, (ஆக்ஞை) கட்டளை செலுத்தவல்ல (ஏக சக்ராதிபதியெனும்) திருமுடியைச் சூடிக்கொண்டு

---

அகிலமும் அளித்த காரணத்தால், ஊர் 'கருவூர்' என்றும், சுவாமி "பசுபதி" என்றும், கோயில் 'ஆநிலை' என்றும் பெயர் பெற்றன.

"ஆனடுத்துயர் பூசனை யாற்றி அகிலமும்
தானளித் தலினாற் கருவூ ரெனத் தக்கது
வானடுத் தெழும் வஞ்சி பசுபதி யாயினார்
பான நஞ்சினர் பாழியும் ஆனிலை ஆயிற்றே" - பேரூர்ப் புராணம் - குழகன் குளப்பு-120.

** கெர்ப்ப புரம் - கருவூர்.

தண்டிகை களிறு பரிமேற்றனி
வெண்குடை நிழலி லுலவாக்கன
சம்ப்ரம விபவ சவுபாக்கிய முடையோராய்;

குஞ்சமும் விசிற இறுமாப்பொடு
பஞ்சணை மிசையி லிசையாத்திரள்
கொம்புகள் குழல்கள் வெகுவாத்திய மியல்கீதங்-

கொங்கணி மகளிர் பெருநாட்டிய
நன்றென மனது மகிழ்பார்த்திபர்
கொண்டய னெழுதும் **யம*கோட்டியை யுணராரே;**

† பஞ்சவர் கொடிய வினை நூற்றுவர்
வென்றிட சகுனி கவறாற்பொருள்
பங்குடை யவனி பதிதோற்றிட அயலேபோய்ப்-

பண்டையில் விதியை நினையாப்பனி
ரண்டுடை வருஷ முறையாப்பல
பண்புடன் மறைவின் முறையாற்றிரு வருளாலே;

வஞ்சனை நழுவி நிரைமீட்சியில்
முந்துத முடைய மனைவாழ்க்கையின்
வந்தபி னுரிமை யதுகேட்டிட இசையாநாள்-

மண்கொள விசையன் விடுதேர்ப்பரி
யுந்தினன் மருக வயலூர்க்குக
**வஞ்சியி** லமரர் சிறைமீட்டருள் பெருமாளே. (6)

---

* யமலோகத்திற் படவேண்டிய துன்பங்கள், கோட்டி - துன்பம்

† பின் நான்கு அடிகள் 'பாரத கதை'ச் சுருக்கமாம். துரியோதனாதிகள் சகுதினியின் உதவி கொண்டு சூதாட்டத்திற் பஞ்ச பாண்டவர்களை வென்றதும், (நாடிழந்த) பாண்டவர்கள் சூதாட்டத்திற் செய்த சபதம் தவறாதபடி பன்னிரண்டு வருஷம் காட்டிற் காலங் கழித்துப் பதின்மூன்றாம் வருஷம் அஞ்ஞாதவாசம் செய்ததும், அஞ்ஞாதவாசம் முடிந்தபின் விராடன்நாட்டில் துரியோதனன் படைகளால் கவரப்பட்ட நிரையை அருச்சுனன் மீட்டதும், பின்பு பாண்டவர்கள் தங்கள் பாகத்தைத் துரியோதனனிடம் கேட்க, அவன் இணங்காததால் இருதிறத்தார்க்கும் போர் நிகழ, அப்போது அருச்சுனனுடைய தேரிற் சாரதியாக அமர்ந்து கண்ணபிரான் தேரைச் செலுத்தினதுமான வரலாறு இங்கு கூறப்பட்டுளது.

(தண்டிகை) பல்லக்கு, யானை, குதிரை, இவைகளின் மேல் ஏறி வீற்றிருந்து, தனிப்பட்ட - ஒப்பற்ற - வெள்ளைக் குடை நிழலிற் செல்பவராய்ப், பெருமை தங்கிய சிறப்புற்ற, செல்வ வாழ்வான, மிக்க பாக்கிய நிலையைக் கொண்டவராய்

(குஞ்சமும்) ஈயோட்டி எனப்படும் விசிறி வீசச், செருக்குடனே பஞ்சணை மெத்தையில் வீற்றிருந்து, நிரம்பின ஊது கொம்புகள், குழல்கள் முதலான பலவித வாத்தியங்களினின்றும் எழுகின்ற இசை ஒலி பெருக-

நறுமணம் சீமழும் பெண்களின் விசேட நாட்டியங்களைப் பார்த்து, இவை நன்றாயுள்ளன என்று மனம் மகிழும் பெரிய ராஜாக்கள் - (அயன்) பிரமன் (கொண்டு) இவர்களைத் தனது கணக்கிற் கொண்டு (உட்படுத்தி) எழுதியுள்ள (யம கோட்டியை) யமன் படுத்தப் போகின்ற துன்பங்களை மனத்தில் அறிகின்றாரில்லையே (அல்லது) அறிகின்றாரில்லையோ)

தருமன் முதலாய பஞ்ச பாண்டவர்கள் - கெட்டசெயலைக் கொண்ட துரியோதனாதிகள் நூற்றுவரும் வெற்றிகொள்ளச் சகுனி என்பவன் ஆடிய சூதாட்டத்தினால் தங்கள் பொருளையும், பாகமாய் இருந்த பூமியையும் ஊர்களையும், தோற்றுப்போனதால். நாட்டைக்கடந்து வேற்றிடத்துக்குச் சென்று,

பழைய தமது வினையை நினைத்துப் பன்னிரண்டு வருஷம் அங்கே காலம் கழித்து, பலவகைப்பட்ட விதங்களில் (மறைவின் முறையால்) அஞ்ஞாத வாசமாகத் (தாங்கள், இருக்கும் இடம் யாவரும் அறியாத வகையில் வாசஞ் செய்து) (இறைவன் ) திருவருளால்-

(வஞ்சனை) சபத நாள் (13 ஆண்டும்) நழுவி - நழுவ - நீங்க (முடிவு பெற), நிரைமீட்சியில் - (கவரப்பட்ட) பசுக்களை மீட்டபின், முன்பு தங்களுக்கு இருந்த இல்லற நிலையில் வந்த பின்பு, தங்களுக்கு உரிய பாகத்தைக் கேட்க, அதற்குத் (துரியோதனன்) இசையா(த)நாளில் - இணங்காத நாளில் - இணங்காதபோது -

அவர்கள் பாகத்துப் பூமியைப் பெறும்படி, அருச்சுனன் விட்ட தேரின் குதிரையைச் செலுத்தின (திருமாலின்) மருகனே! வயலூர்க் குகனே! (வஞ்சியில்) **கருவூரிற்** பெருமாளே! தேவர் சிறை மீட்டருளிய பெருமாளே!

(பார்த்திபர் யமகோட்டியை உணராரே)

## 933. சொரூப தரிசனம் பெற

*தனதன தந்தன தாத்தன, தனதன தந்தன தாத்தன*
*தனதன தந்தன தாத்தன தனதான*

முகிலள கஞ்சரி யாக்குழை யிகல்வன கண்சிவ
வாச்* சிவ
முறுவல்மு கங்குறு வேர்ப்பெழ வநுபோக-
முலைபுள கஞ்செய வார்த்தையு நிலையழி யும்படி
கூப்பிட
முகுளித பங்கய மாக்கர நுதல்சேரத்;

துயரொழு குஞ்† செல பாத்திர மெலியமி குந்துத
ராக்கினி
துவளமு யங்கிவி டாய்த்தரி வையர்தோளின்-
துவயலி நின்றன வ்யாத்தமும் ‡ வயலியல் வஞ்சியில்
மேற்பயில்
**சொருபமு நெஞ்சிலி ராப்பகல் மறவேனே;**

சகலம யம்பர மேச்சுரன் மகபதி யுய்ந்திட வாய்த்தருள்
சரவண சம்பவ தீர்க்கஷண் முகமாகிச்-
சருவுக்ர வுஞ்சX சி லோச்சய முருவவெ றிந்தகை
வேற்கொடு
சமர முகந்தனில் O நாட்டிய மயிலேறி;

அகிலமு மஞ்சிய வாக்ரம விகடப யங்கர ராக்கத
அசுரர கங்கெட **வார்த்திடு கொடிகூவ-

---

* சிவம் - சந்தோஷம்.

† செலம் - நீர் - 'செல சரமாகிய பலவும்' - கம்பராமா - சடாயுகாண் 28.

‡ 'வயலியில்' என்றும் இருந்திருக்கலாம்.

X சிலோச்சயம் - மலை-(பாடல் 990-அடி 5)

O 'நடநவில் மரகத துரகதம்,' நடமிடு மா, நடன விதமயில் -(பாடல் 1246, 422 , 692 பார்க்க)

** ஆர்த்திடு கொடி கூவ:- 'எரி தழற் பண்ணவன், வாவு குக்குட, மாண்கொடி யாகியே, தேவ தேவன் திருநெடுந் தேர்மிசை, மேவி ஆர்த்தனன் அண்டம் வெடிபட' - கந்தபுரா 4-13-206.

# 933.

மேகம் போன்ற கூந்தல் சரிய, (காதிலுள்ள) குழையொடு பகைத்து வருவன போன்ற கண்கள் (சிவவா) சிவக்க, மகிழ்ச்சியைக் காட்டும் புன்சிரிப்புடன் கூடிய முகத்திற் சிறு வியர்வை தோன்ற-இன்ப நுகர்ச்சிக்கு இடமான-

கொங்கைகள் புளகம் கொள்ள, பேசும்பேச்சும் நிலைத்து நில்லாத வழியில் எழ - பதறுவது போல எழ - (முகுளித பங்கயமா) குவிந்த தாமரையாக - தாமரை போலக் கைகள் - அல்லது தாமரை போன்ற அழகிய கைகள் - நெற்றியிற் சேரத்

(துயர் ஒழுகும்) துன்பமே பெருகுவதும், (செல பாத்திரம்) நீரொடு கூடியதுமான (பாத்திரம்) கொள்கலமாம், இந்த உடல் மெலிந்து (உதராக்கினி மிகுந்து) வயிற்றில் எரி அதிகமாகித் துவண்டுபோகும் அளவுக்கு - துவட்சி - சோர்வு உறும் அளவுக்கு - (முயங்கி) தழுவிப் புணர்ந்து, (விடாய்த்து) களைப்பு அடைந்து, (அவ்வாறு) மாதர்களின் தோள்களில்

(துவயலி) துவையல் போல உழக்கப்பட்ட அரைபட்ட நான், (நின்தன) உன்னுடைய (வியாத்தமும்) எங்கும் நிறைந்துள்ள தன்மையையும் - கீர்த்தியையும், (வயலியல்) வயல்கள் பொருந்திய (வஞ்சியில்) மேல் - கருவூரில் (பயில்) பொருந்தி விளங்கும் உனது (சொரூபமும்) வடிவழகையும் (எனது) நெஞ்சில் இரவும் பகலும் மறக்க மாட்டேன்;

எங்கும் நிறைந்த பொருளாம் பரமேசுரன் (மகபதி) இந்திரன் உய்யும் பொருட்டு நேர்ந்து அருளின (தோற்றுவித்த) சரவணபவனே! (தீர்க்க) அறிவுத் தெளிவும் வசீகரமும் காட்டும் ஆறு திருமுகங்களைக் கொண்டவனாகி-

(சருவு) போராடிய கிரவுஞ்ச (சிலோச்சயம்) மலையை ஊடுருவிச் செல்லும்படி எறிந்த திருக்கை வேல் கொண்டு, (சமர முகந்தனில் - போர்க்களத்திலே (நாட்டிய மயில்) நடனம் செய்யும் மயிலில் ஏறினவனாய்

எல்லாரும் பயப்படும்படியான ஆக்ரம - ஆக்ரமித்தலையும் (வலிய கவர்தலையும்), அல்லது அக்ரமத்தையும் - அநீதத்தையும், (விகடம்) தொந்தரையையும், (பயங்கரம்) அச்சத்தையும் தந்த ராக்ஷத அசுரர்களின் அகங்காரம் அழிய (கொடியில் விளங்கின) கோழி கூவ-

அமரர டங்கலு மாட்கொள அமரர்த லங்குடி யேற்றிட
அமரரை யுஞ்சிறை மீட்டருள் பெருமானே (7)

## நெருவூர்.

(கருவூர் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 6-மைல்)

## 934. திருவடி மறவேன்

தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன
தனன தனதன தனதன தனதன தனதான

குருவு மடியவ ரடியவ ரடிமையு
மருண மணியணி கணபண விதகர
குடில *செடிலினு நிகரென வழிபடு குணசீலர்

குழுவி லொழுகுதல் தொழுகுதல் விழுகுதல்
அழுகு தலுமிலி நலமிலி பொறையிலி
குசல கலையிலி தலையிலி நிலையிலி விலைமாதர்;

† மருவு முலையெனு மலையினி லிடறியும்
அளக மெனவள ரடவியில் மறுகியு
மகர மெறியிரு ‡ கடலினில் முழுகியு முழலாமே

Xவயலி நகரியி லருள்பெற மயில்மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே;

---

* செடில் - பிரார்த்தனைக்காக முதுகின் தோலில் கொக்கியைச் செலுத்தி அந்தக் கொக்கியை அதற்கென நாட்டப்பெற்ற நீண்ட கழையில் மாட்டி ஒருவனைத் தூக்கியாட்டுங் கருவி.

† 'சிகரியூடு தேமாலை அடவியூடு' என்றார் முன்னும் (பாடல் 916 -அடி 2).

‡ கடல்-கண்-'கடல்போற் கணை விழி' -பாடல் 909.

X இது அருணகிரியாரின் வரலாற்றை அறிவிப்பது; அவரது நன்றி மறவாமையையும் விளக்குவது.

தேவர்கள் எல்லாரையும் ஆட்கொள்ளவும், தேவர் தலமாம் - பொன்னுலகத்தில் (அவர்களைக்) குடியேற்றிடவும், தேவர்களைச் சிறையினின்றும் மீட்டருளிய பெருமாளே!

(சொருபமும் ....இராப்பகல் மறவேனே)

## நெருவூர்

## 934.

ஆசாரிய நிலையினும், அடியவர் - சீடனாயிருக்கும் நிலையினும். (அடியவர் அடிமையும்) அந்தச் சீடருக்கு அடிமையாயிருக்கும் நிலையினும், சிவந்த ரத்தினங்களைக் கொண்டுள்ள கூட்டமான படங்களை உடைய பாம்பின் (விதகர) தன்மை அமைந்த-(மிகக் கொடிய என்றபடி) (குடில) வளைவுள்ள (செடிலினும்) செடிலாட்டக் கருவியிலிருக்கும் நிலையினும் - (நிகரென) - ஒப்ப நினைக்கும் - மனம் அடங்கி ஒருமைப்பட்டு நின்று - உன்னையே வழிபடுகின்ற நற்குண சீலர்களுடைய-

கூட்டத்தை அனுசரித்துக் நடத்தல், போற்றுதல், விழுந்து வணங்குதல், அங்குப் (பத்திப் பரவசத்தால்)அழுதல், இவை ஒன்றும் இல்லாதவன், நன்மை ஒன்றும் பெறுதற்கிலாதவன், பொறுமை யில்லாதவன், க்ஷேமத்தைத் தரும் நூல்களைப் படியாதவன், (தலையிலி) சிறப்பானது ஒன்றும் (அல்லது மூளை) இல்லாதவன், நிலைத்த புத்தி யில்லாதவன், பொதுமாதர்கள்

கொண்டுள்ள கொங்கை யென்னும் மலையினில் இடறி விழுந்தும், கூந்தல் என்னும் பெயரொடு வளர்கின்ற காட்டில் மனம் கலக்கமுற்றுத் திரிந்தும், மகரமீன் போன்ற குழைகளைத் தாக்கும் இரண்டு (கண் எனும்) கடலில் முழுகியும் அலைச்சல் உறாமல்-

வயலூர்ப் பதியில் (அடியேன்) உனது திருவருளைப் பெற்று மகிழ, நீ மயில்மீது வந்து உதவின - அளித்ததான - நறுமணம் வீசுவதும். (வெகுவித மதுகரம்) பலவிதமான வண்டுகள் மொய்ப்பதுவுமான (உனது) தாமரை மலர் போன்ற திருவடியைக் கனவிலும் மறவேன், நனவிலும் (விழித்திருக்கும்-போதும்) மறவேன்; (சொப்பன நிலையினும் சாக்கிர நிலையினும் - எப்போதும் என்றபடி) மறவேன்.

*உருவு பெருகயல் கரியதொர் முகிலெனு
மருது நெறிபட முறைபட † வரைதனில்
உரலி னொடுதவழ் விரகுள இளமையு மிக‡ மாரி.
உமிழ நிரைகளி னிடர்கெட வடர்கிரி
கவிகை யிடவல மதுகையு நிலைகெட
Xவுலவில் நிலவறை யுருவிய வருமையு
மொருநூறு-
நிருப ரணமுக வரசர்கள் வலிதப
Oவிசயன் ரதமுதல் நடவிய வெளிமையு
நிகில செகதல முரைசெயு மரிதிரு மருகோனே-
நிலவு சொரிவளை வயல்களு நெடுகிய
குடக தமனியு நளினமு மருவிய
**நெருவை** நகருறை திருவுரு வழகிய
பெருமாளே.(1)

---

* *கண்ணபிரான் மருது முறியத் தவழ்ந்தது - பாடல் 143-பக்கம் 332 கீழ்க்குறிப்பு.*

† *'வரைதனில் உரல்'-"பெருமா உரலிற் பிணிப்புண்டிருந்து, இருமா மருதம் இறுத்த இப் பிள்ளை" - பெரியாழ்வார் 1-2-10. 'பொய்ம்மாய மருதான அசுரரைப் பொன்றுவித்து' - பெரியாழ்வார் 3-1-3.-(அசுரர் - கரிய நிறத்தவர்)*

‡ *மலை குடையாக நிரை காத்தது :*

*-பாடல் 145-பக்கம் 336 கீழ்க்குறிப்பு.*

X *கண்ணபிரான் நிலவறை உருவியது:- பாண்டவருக்காகக் கண்ண பிரான் துரியோதனனிடம் தூது சென்றபோது, துரியோதனன் குழி யொன்று பறித்து, அந்தக் குழியில் அரக்கர்களையும் மல்லர்களையும் இருத்தி, அந்தக் குழியின் மேல் ஆசனம் வகுத்து அவரை இருக்க என்றான்; அவர் அதன் மிசை இருத்தலும் அந்த ஆசனம் நெறு நெறென அந்த நில அறையிற் புக்கது. இந்த மோசத்தைக் கண்ட கண்ணபிரான் கோபங் கொண்டு, விசுவரூபம் கொண்டு, அங்கிருந்த மல்லர், அரக்கர் முதலிய வீரர்கள் யாவரையும் சின்னா பின்னமாக்கி அழித்தனர்.*

*"தவசி னிருத்தலுமே, நெறு நெறெனக் கொடு நில அறையிற் புக நெடியவன் அப்பொழுதே...வஞ்சனை நன்றிதெனா.... வெகுண்டு... உலகொன்று படும்படி நின்று நிமிர்ந்தனனே. நிலத்தறை மேவிய வீரரெலாம்...கல்லென உட்கினர் தத்தம் உடற் பல கால் கொடுதைத்திடவே; ஆயிரம் ஆயிரம் அங்கை புறப்பட அண்டரு மாதவரும். பாயிர நான்மறை பாடி வியந்து பணிந்து புகழ்ந்தனரே". வில்லி-கிருஷ்ணன் தூது 191-208.*

*(தொடர்ச்சி 721 ஆம் பக்கம் பார்க்க)*

உருவம் பெரியதாய், (அயல்) பக்கத்திலிருந்த கரிய ஒரு மேகம் போன்ற மருதமரம், தாம் செல்லும் வழியில் ஒடிபட்டுவிழ, (முறைபட) அதனால் நீதி வெளிப்பட, மலை போன்ற உரலினுடன் தவழ்ந்து சென்ற சாமர்த்தியம் கொண்ட இளமை அழகையும், நிரம்ப (மாரி) மழை

பொழியப், பசுக் கூட்டத்தின் துயர் நீங்க, நெருங்கிய (கோவர்த்தன) மலையைக் (கவிகை) குடையாகப் பிடிக்கவல்ல (மதுகையும்) வலிமையையும், நிலை தடுமாற உலவுதற்கு வழியில்லாததுமான பாதாள அறையில் விசுவரூபத்துடன் தோன்றி எழுந்த அருமையையும் (பெருமையையும்), ஒப்பற்ற நூறு-

(நிருபர்) அரசர்கள் (துரியோதனாதியர் நூறு பேரும்) போர்க்களத்தில் உற்ற மற்ற அரசர்களும் வலிமை கெட்டொழிய அருச்சுனனுடைய தேரை முன்பு செலுத்தி ஓட்டின செளலப்பியத்தையும் (அடியார்க்கு உதவும் எளிமைக் குணத்தையும்), எல்லாப் பூமிகளும் புகழ்ந்து உரைக்கும் திருமாலின் திருமருகனே!

ஒளி வீசுகின்ற சங்குகள் உள்ள வயல்களும், நீண்டுள்ளனவும் மேற்குத் திசையில் உள்ளனவுமான (தமனியும்) வன்னிமரங்களும், தாமரையும் (அல்லது தண்ணீரும்) பொருந்திய நெருவூர்ப் பதியில் வீற்றிருக்கும் பெருமாளே! திருவுருவம் அழகிய பெருமாளே!

(மலரடி கனவிலு நனவிலு மறவேனே)

---

(தொடர்ச்சி) O துரியோதனன், அருச்சுனன் இருவரும் போரில் நீ துணை செய்ய வேண்டுமென்று கண்ணபிரானை வேண்டினர். அப்போது துரியோதனன் 'போரில் நீ (படை) ஆயுதம் ஒன்றும் எடுக்காமல் இருக்கவேண்டும்" எனக் கண்ணபிரானை வேண்டினன். கண்ணபிரான் சரி என்று ஒத்துக்கொண்டு அருச்சுனனைப் பார்த்து உனக்கு நான் என்ன உதவி செய்ய வேண்டுமெனக் கேட்டனர். அருச்சுனன் "ஐயனே! நீ எனக்குத் தேர்ப்பாகனாக இருந்தால் யான் யாரையும் வெல்வேன்" என்றனன். கண்ணபிரான் துரியோதனனை நோக்கி, "நான் இந்த அருச்சுனனுக்குத் தேர்ப்பாகன் வேலை செய்வது தவிர , ஆயுதம் செலுத்தி உங்களோடு போர் செய்வதில்லை எனக் கூறித் தம்மைத் தவிர யாதவசேனை அனைத்தையும் துரியோதனனுக்கு உதவியாகத் தந்து துரியோதனனை அனுப்பினர்.

"நடையுடைப் புரவித் திண்தேர் நானிவற் கூர்வ தன்றி
மிடைபடை ஏவி நும்மோ டமர் செயேன் வேந்த என்றான்"

-வில்லி பாரதம் - வாசுதேவர் படைத்துணை-16.

## திருவெஞ்சமாக்கூடல்.

*(கரூர் ரெயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கு 12-மைல். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.)*

## 935. அறிவு பெற

***தந்தனாத் தானத் தனதான***

*வண்டுபோற் சாரத் தருள்தேடி-
† மந்திபோற் காலப் பிணிசாடிச்;

‡ செண்டுபோற் பாசத் துடனாடிச்-
X சிந்தைமாய்த் தேசித் தருள்வாயே;

**தொண்டராற் காணப் பெறுவோனே-
†† துங்கவேற் கானத் துறைவோனே;

---

* இறைவன் திரு அருளைப் பெறுதற்கு - அவர் மாலையைப் பெறுதற்கு - வண்டுதான் சரியான தூது என்று புலவர்கள் 'வண்டு விடு தூது' பாடுவர். மலர்த்தேன் சாரத்தை வண்டு நன்கு பருகும். "தண் துளித்தேன் வாய் மடுத்துத் தேக்கெறிந்து மன்னுகளி மிக்கு" - என்றார் கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டு விடுதூதில் *(353)*. அந்த வண்டு போல உனது திருவருளை நாடிப் பருகி நான் களிக்கவேண்டும் - என்றபடி. இனி இறைவன் திருமேனியில் உள்ள மாலை மலர்களின் தாதில் ஆடும் தவம் வண்டுக்குத் தானே உண்டு. ஆதலால் அது செய்த தவம் பெரிதே! அத்தகைய தவத்தை நான் தேடவேண்டும் - எனலுமாம்; இறைவனது மார்பகத்துப்

பொலங் கடுக்கைத் தாமத்தின் விரைத்தா தாடிப் பொன்திரண்ட தென இருக்கும் பொறிவண்டு செய்தவமென் புகலுவீரே' - என்றார் குமரகுருபரர்:- காசிக் கலம்பகம் *54*.

† குரங்கு குதித்தெழுந்து தாவுதல்:

'செருவுறு குதிரையிற் பொங்கிச் சாரல்

இருவெதிர் நீடமை தயங்கப் பாயும்" - குறுந்தொகை *385*.

‡ **செண்டு** : பிரம்பு போன்ற ஒரு ஆயுதம், அதன் தலைப்பில் இரண்டு வளைவுகள் உண்டு. இந்த ஆயுதம் ஐயனாருக்கு உண்டு. இந்த ஆயுதத்தால் தான் உக்கிர பாண்டியன் மேரு மலையைப் புடைத்தது-

[தொடர்ச்சி 723 ஆம் பக்கம் பார்க்க]

# திருவெஞ்சமாக்கூடல்

## 935.

**வ**ண்டு எவ்வாறு மலர்த்தேனை (சாரத்தை) நாடிப் பருகிக் களிக்கின்றதோ அவ்வாறு நான் உன் திருவருள் என்னும் தேனை நாடவும்-

(மந்தி) குரங்கு எவ்வாறு மரக்கிளைகளைத் தாண்டித் திரிய வல்லதா யிருக்கின்றதோ அவ்வாறு நான் காலன் பிணிப்பை யமன் என்னைப் பாசத்தினாற் பிணிப்பதைக்-கட்டுவதைத் - தாண்ட வல்லவனாமாறும்-

செண்டாயுதத்தை எறிந்தால் எவ்வாறு பகையை அது மாய்க்குமோ அவ்வாறு நான் பாசங்களுடன் போராடி (வெல்லுமாறும்)-

(என்) மனத்தை (நீ) (மாய்த்து) அழியவைத்து - சும்மா இருக்கும் நிலையைத் தந்து - மெய்யறிவை அருள்வாயே;

அடியார்களாற் காணப் பெறுவோனே அடியார்களுக்குக் காட்சி அளிப்பவனே!

பரிசுத்தமான (வேற்கானம்) திருவேற்காடு என்னும் தலத்தில் வீற்றிருப்பவனே!

---

(தொடர்ச்சி)

'மேரு....செருக்கு மாற....செண்டினால் அடித்துநின்றான்
அடித்தலும் அசையா மேரு அசைந்து... துடித்தது'

- திருவிளை-மேருவை-25.

X சிந்தை மாய்தல் - மலர்ப்பூஜை மனத்தை மாய்க்கும்
"மனம் பாழ் படுக்கும் மலர்ப்பூசனை செய்து வாழ்வார்"

-சம்பந்தர் 2-116-7.

O அறிவு பெறுதல்:
"உமை உணர்பவர் கண்மதி மிகுவது கடனே" - சம்பந்தர் 3-98-1.

** தொண்டர் காணப் பெறுதல்:
'பேணி வழிபாடு பிரியா தெழுந் தொண்டர்
காணும்......காரோணத்தானே" - சம்பந்தர் 1-84-5.

†† வேற்காடு - பாடல் 684, 685 ஸ்தலக் குறிப்பைப் பார்க்க பக்கம் 76.

*மிண்டராற் காணக் கிடையானே-
வெஞ்சமாக் கூடற் பெருமாளே.(1)

## திருப்பாண்டிக்கொடுமுடி:

[ரெயில்வே ஸ்டேஷன். ஈரோட்டுக்குத் தென்கிழக்கு 23-மைல். கரு வூருக்கு மேற்கு 17-மைல். மூவர் தேவாரமும் பெற்ற ஸ்தலம். ஸ்தல புராணம் உண்டு.]

### 936. கதி பெற

தனதனத் தனனத் தனதான

இருவினைப் பிறவிக் கடல்மூழ்கி-
இடர்கள்பட் டலையப் புகுதாதே;
திருவருட் கருணைப் ப்ரபையாலே-
திரமெனக் கதியைப் பெறுவேனோ;
†அரியயற் கறிதற் கரியானே-
‡ அடியவர்க் கெளியற் புதநேயா;
Xகுருவெனச் சிவனுக் கருள்போதா-
கொடுமுடிக் குமரப் பெருமாளே.(1)

### 937. மாதர்மீதுள மயக்கு அற

தாந்தத் தனதன தாந்தத் தனதன
தாந்தத் தனதன தனதான

Oகாந்தட் கரவளை சேந்துற் றிட**மத
காண்டத் தரிவைய ருட†† னூசி.

---

* "மிண்டரை விலக்கிய விமலன்" - சம்பந்தர் 1-112-10.
"கரப்பாய் பத்தி செய்யாதவர் பக்கல்" - சம்பந்தர் 3-119-2.
† 'அரியும் நற்பிரமனும்.....அளவிட அரியவர்' - சம்பந் 3-89-9.
‡ " அன்பு செய்வாரவர்க் கெளியவர்" - சம்பந்தர் 2-108-6.
X சிவகுரு - பாடல் 628-பக்கம் 462-கீழ்க்குறிப்பு.
O காந்தள் - கரத்துக்கு உவமை -
"மென் காந்தள் கையேற்கும் மிழலை" - சம்பந்தர் 1-132-4.
பூப்புரை அஞ்சலி காந்தள் காட்ட" - திருவாசகம் 3-75.
கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்" - பரிபாடல் 19-76.
கைவிரிந்தன காந்தளும் - சூளாமணி - நாட்டு -11.

(தொடர்ச்சி 725 ஆம் பக்கம் பார்க்க.)

மிண்டர்களால் - மதங் கொண்டவர்களால் - ஆணவம் மிக்கோர்களாற் காணக் கூடாதவனே - மிண்டர்களின் புலனுக்கு அகப்படா தவனே!

**வெஞ்சமாக்கூடல்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே! (சித் அருள்வாயே)

## திருப்பாண்டிக்கொடுமுடி

## 936.

**ந**ல்வினை - தீவினை என்னும் இருவினை காரணமாகத் தோன்றும் பிறவி என்கின்ற கடலில் மூழ்கி

வேதனைகளில் அவஸ்தைப் பட்டு அலையுமாறு புகாமல்

உனது திருவருளாம் கருணை ஒளியாலே

(ஸ்திரமான வகையில்) நிலையானவகையில் - (நான்) நல்ல கதியைப் பெறுவேனோ!

திருமாலும் பிரமனும் அறிதற்கு அரியவனே!

அடியார்களுக்கு எளியவனாய்க் கிடைக்கும் அற்புத நண்பனே!

குருமூர்த்தியாய்ச் சிவபிராற்கு அருளிய ஞானசாரியரே!

**கொடுமுடி** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் குமரப் பெருமாளே!

(கதியைப் பெறுவேனோ)

## 937.

**கா**ந்தள் மலர்போலுள்ள (கரவளை) வளைகரம் - வளையல் அணிந்துள்ள கைகள் (சேந்துற்றிட) சிவக்க, (மதகாண்டத்து) - காம காண்டத்து - காமனுடைய வில்லுக்குப் பயன்படும் - மாதர்களுடன், ஊசிக்கும்-

---

(தொடர்ச்சி): **மதகாண்டம் - காம காண்டம்; மன்மதனுடையவில் கரும்புவில், பூவில், இரும்பு வில் என மூன்று.

"கயக்கணின்ற பூவின்மிக்க காம காண்டம், கன்னல் வில்
இயக்கமான பாரவில் எடுத்து மொய்ம்பில் ஏந்தியே" **

(கந்தபுரா 1-4-62)

[தொடர்ச்சி 726 ஆம் பக்கம் பார்க்க]

காந்தத் துறவென வீழ்ந்தப் படி *குறி
காண்டற் கநுபவ விதமேவிச்;
சாந்தைத் தடவிய கூந்தற் கருமுகில்
சாய்ந்திட் டயில்விழி குழைமீதே-
தாண்டிப் பொரவுடை தீண்டித் தனகிரி
தாங்கித் தழுவுத லொழியேனோ;
மாந்தர்க் கமரர்கள் வேந்தற் † கவரவர்
வாஞ்சைப் படியருள் வயலூரா-
‡ வான்கிட் டியபெரு மூங்கிற் புனமிசை
மான்சிற் றடிதொழு மதிகாமி;
பாந்தட் சடைமுடி யேந்திக் குலவிய
பாண்டிக் கொடுமுடி யுடையாரும்-
பாங்கிற் பரகுரு வாங்கற் பனையொடு
பாண்சொற் பரவிய பெருமானே (2)

---

*(725-ஆம் பக்கத் தொடர்ச்சி)*

*(1) கரும்பு வில் - 'வேழச்சிலை ** காம வேள்'-திருப்புகழ் 1108 (வேழம்-கரும்பு)"வெண் கரும்பு"-"காமனார் வெள்ளைக் கருப்பு வில்" அழகர் கலம்பகம் 71.*

*(2) பூ வில் - இதைக் காம காண்டம் (மத காண்டம்), காம நூல், மன்மத தந்திரம் என்பர் - சிலப்பதி 2-42-5 உரை.*

*"அலரின் நீள்சிலை", "பூங்குலை சிலையாக்*

*கொண்டவர்" -மதுரைக் கலம்பகம் 20, 74.*

*காமனைப் "புஷ்ப தந்வா" என்பர் வட நூலார்.*

*" காம காண்டம்" - மறைசை அந்தாதி 7.*

*(3) இரும்பு வில்- 'இயக்கமான பாரவில்' - கந்தபுரா 1-4-62.*

தேவர்மேல் எய்வது பூவில், மாநுடர்மேல் எய்வது கரும்புவில், இராக்கதர்மேல் எய்வது இரும்புவில்.

"கதியுடைத் தேவர்மேல் பூவில், மாநுடரின் மேற் கருப்புவில்,

இராக்கதரின் மேற் காமுறும் இருப்புவில்" - ஆசிரிய நிகண்டு - முதற் றொகுதி *6*

*(செந்தமிழ் - தொகுதி 7-பகுதி 1. பக்கம் 63)*

†† "இரும்பைக் காந்தம் இழுக்கின்றவாறு" -தாயுமானவர் 'பொன்னை' *24.*

---

* குறி *- பாடல் 914 அடி 1-பார்க்க.*

*(தொடர்ச்சி 727 ஆம் பக்கம் பார்க்க)*

காந்தத்துக்கும் உள்ள உறவு போல உறவாடி (அக் காம மயக்கில்) விழுந்து, அந்த நிலையிலே பெண் குறியைக் காணுதற்கு வேண்டிய அனுபவ வழிகளை நாடிப் பொருந்தி-

நறுஞ்சாந்து தடவப்பட்டுள்ள ( கூந்தற் கருமுகில்) கரிய மேகம் போன்ற கூந்தலின்மீது சாய்ந்து படுத்து, வேல் போன்ற கண்ணானது (காதில் உள்ள) குழைகளின் மீது-

தாவிச் சென்று தாக்கும்படி, ஆடையைத் தொட்டு, (தனகிரி) மலையன்ன கொங்கைகளைப் பிடித்துத் தழுவும் அச் செயலை ஒழிக்க மாட்டேனோ!

(மாந்தர்க்கு) மனிதர்களுக்கும், (அமரர்கள் வேந்தற்கு) தேவர் அரசனாம் - இந்திரனுக்கும், அவரவர் விரும்பியபடியே அருள்பாலிக்கும் வயலூரனே!

ஆகாயத்தைக் கிட்டி நெருங்கும் பெரிய மூங்கிற் காடு உள்ள (வள்ளிமலைத் தினைப்) புனத்தின் மீதிருந்த மான் போன்ற வள்ளி நாயகியின் சிறிய பாதங்களைத் தொழுத காம மிக்கவனே!

பாம்பைத் தமது சடைமுடியில் தாங்கி விளங்குபவரும், **பாண்டிக் கொடுமுடி** என்னும் தலத்தை உடையவருமான சிவபிரானுக்கும்

உரிய முறையில் மேலான குருவான சங்கற்பத்தோடு (ஏற்பாட்டுடன்), பண் போன்ற சொற் கொண்டு - (இசைப் பாட்டுப் போன்ற இனிய (சொல்) உபதேசச் சொல்லைப்) (பரவிய) வெளிப்படுத்தின - உபதேசித்த பெருமாளே!

(தனகிரி தழுவுதல் ஒழியேனோ)

---

(726-ஆம் பக்கம் தொடர்ச்சி)

† "அடியவ ரிச்சையில் எவை எவை யுற்றன
அவை தருவித்தருள் பெருமாளே"

- என்றார் பாடல் 727 - லும்.

‡ வான் கிட்டிய மூங்கிற் புனம் - இது வள்ளிமலை மூங்கிற் புனம்- 'தேனைப் பருக மர்க்கட சமூகம் அமை தொட்டிறால் எட்டுவரை மன்றற் பைம்புனத்தாள்' - (அமை-மூங்கில்) - பூத வேதாள வகுப்பு.

## சேலம்.

(ரெயில்வே ஸ்டேஷன்.)

### 938. அகப் பொருள் - அணைந்தருளுக.

தனதன தானத் தனதன தானத்
தனதன தானத் தனதான

பரிவுறு நாரற் றழல்மதி வீசச்
சிலைபொரு காலுற் றதனாலே-
பனிபடு சோலைக் குயிலது கூவக்
குழல்தனி யோசைத் தரலாலே;

மருவியல் மாதுக் கிருகயல் சோரத்
தனிமிக வாடித் *தளராதே-
மனமுற வாழத் திருமணி மார்பத்
தருள்முரு காவுற் றணைவாயே;

கிரிதனில் வேல்விட் டிருதொளை யாகத்
தொடுகும ராமுத் தமிழோனே-
† கிளரொளி நாதர்க் கொருமக னாகித்
திருவளர் ‡ சேலத் தமர்வோனே;

பொருகிரி சூரக் கிளையது மாளத்
Xதனிமயி லேறித் திரிவோனே-
Oபுகர்முக வேழக் கணபதி யாருக்
கிளையவி நோதப் பெருமாளே.(1)

---

*நிலவு, தென்றல், குயில். குழல் இவை விரகதாபம் கொண்டவர்-களுக்கு வேதனை தருவன

-பாடல் 218-பக்கம் 53 கீழ்க்குறிப்பு.

† சிவன் - 'ஒளிகொள் மேனி உடையாய்' - சம்பந்தர் 2-61-6.

‡ 'சோலைக் கமர்வோனே" என்றும் பாடம்; சோலை-சோலைமலை - பழமுதிர் சோலை.

X 'தனிமயிலேறிப் பொருவோனே' என்றும் பாடம்; மயிலேறி உலகை வலம் வந்தது - பாடல் 267-பக்கம் 164-கீழ்க்குறிப்பு.

[தொடர்ச்சி 729 ஆம் பக்கம் பார்க்க]

# சேலம்

## 938.

இரக்கம் கொண்ட (நார்) அன்பு - (அற்று) சற்றும் இல்லாமல் - (அழல்) நெருப்பை நிலவு வீசுவதாலும், (சிலை) பொதியமலையினின்றும் பொருந்தி வரும் (கால்) தென்றற் காற்று வந்து மேலே படுவதாலும்,

குளிர்ச்சியுள்ள சோலையிற் குயில் கூவுதலாலும், குழல் (புல்லாங்குழல்) ஒப்பற்ற இன்னிசையைத் தருவதாலும்-

தனியே பொருந்திய தன்மையில் உள்ள இந்தப் பெண் தனது இரண்டு (கயல்மீன் போன்ற) கண்களும் சோர்வுறும்படித், தனியே கிடந்து மிகவும் வாட்டமுற்றுத் தளர்ச்சியுறாமல்-

மனம் ஒருமைப்பட்டு (நிம்மதியாக) வாழும் பொருட்டு (உனது) அழகிய ரத்னமாலையணிந்த மார்பிடத்தே - கிருபாகர மூர்த்தியாகிய முருகா! - நீ வந்து அணைந்தருளுவாயாக.

கிரௌஞ்ச மலைமீது வேலாயுதத்தைச் செலுத்தி அது பெருந் தொளைபட்டழியும்படிச் செய்த குமரனே! இயல், இசை, நாடகம் எனப்படும் முத்தமிழ்ப் பெருமானே!

பேரொளிச் சொரூபனாம் தேவனாகிய சிவபெருமானுக்கு ஒப்பற்ற பிள்ளையாகி, லக்ஷ்மீகரம் பெருகி ஓங்கும் **சேலம்** என்னும் பதியில் வீற்றிருப்பவனே!

போருக்கு எழுந்த எழுகிரியும் சூரனும் அவன் சுற்றத்தினரும் இறக்க, ஒப்பற்ற அந்தச் சூரனாம் மயில் மீதேறி (உலகை) வலம் வந்தவனே!

புள்ளியை உடைய முகத்தைக் கொண்ட யானையின் திருமுகத்தைக் கொண்ட கணபதிப் பெருமானுக்கு இளைய பெருமாளே! அற்புதப் பெருமாளே!

(அணைவாயே)

---

(தொடர்ச்சி) ○ புகழ் முகவேழம் - 'புதல்வரை....புகர்முக வேழத்து....ஏற்றி' மணிமேகலை 3-142.

"யானைப் புகர் முகம்" - குறுந்தொகை 284.

## ராஜபுரம்.

[இது சேலம் (சூரமங்கலம்) ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து 20-மைல். இங்கு ஸ்வாமி இருதேவிமார் சமேதராய் ஆறு திருமுகங்களுடன் வீற்றிருக்கின்றார். இத்தலத்துக்கு மேற்கு 3-மைலிற் 'கொங்கணகிரி' இருக்கின்றது.]

## 939. நரஸ்துதி வேண்டாம்

*தந்த தானன தத்தன, தந்த தானன தத்தன*
*தந்த தானன தத்தன தனதான*

*சங்கு வார்முடி பொற்கழல் பொங்கு சாமரை *கத்திகை*
*தண்டு மாகரி பெற்றவன் வெகுகோடிச்-*
*சந்த பாஷைகள் கற்றவன் மந்த்ர வாதிச துர்க்கவி*
*சண்ட மாருத மற்றுள கவிராஜப்;*
*† பங்கி பாலச ரச்வதி சங்க நூல்கள்வி தித்தப்ர*
*பந்த போதமு ரைத்திடு புலவோன்யான்-*
*பண்டை ‡ மூவெழு வர்க்கெதிர் கண்ட நீயுமெ னச்சில*
**X பஞ்ச பாதக ரைப்புகழ் செயலாமோ;**
*O வெங்கை யானை வனத்திடை துங்க மாமுத லைக்குவெ*
*ருண்டு மூலமெ னக்கரு டனிலேறி-*

---

* கத்திகை - விருதுக்கொடி.

† கவிராஜ பங்கி = கவிராஜன் என்னும் பட்டத்தைத் தனக்கு உரிய பங்காகத் - தனக்கே உரிமையாகக் - கொண்டவன்.

‡ அருணகிரியார் காலத்தில் புலவர்கள் இவ்வாறு விருதுகளுடன் உலவினர் போலும் - பாடல் 80-அடி 4 பார்க்க: அவர் காலத்தில் இருந்த வில்லிபுத்தூரார் என்னும் பெரும் புலவர் போலிப் புலவர்களைக் கண்டித்தன ரென்பதும் பின் வரும் பாடலால் தெரிகின்றது.

"குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியனீங் கில்லை, குறும்பியளவாக் காதைக் குடைந்து தோண்டி எட்டினமட் டறுப்பதற்கோ வில்லையில்லை, இரண்டொன்றா முடிந்து தலை யிறங்கப் போட்டு வெட்டுதற்கோ கவியொட்டக் கூத்தனில்லை, விளையாட்டாக் கவிதைதனை விரைந்து பாடித் தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைகளுண்டு, தேசமெங்கும் புலவரெனத் திரியலாமே" (தனிப்பாடல்).

‡ மூவெழுவர் - தலை யிடை கடைப்படு 21-வள்ளல்கள்.

- பாடல் 304-பக்கம் 255 கீழ்க்குறிப்பு.

X பஞ்சமா பாதகங்கள்:- பாடல் 79-முதலடி.

[தொடர்ச்சி 731 ஆம் பக்கம் பார்க்க]

# ராஜபுரம்

## 939.

**த**ன்னுடைய விருதை (வெற்றிச் சின்னத்தை) எடுத்து ஓதும் சங்கமென்ன, நீண்ட கிரீடம் என்ன, பொன்னாலாய வீரக் கழல் என்ன, மேலெழுந்து விளங்கும் சாமரங்கள் என்ன, விருதுக்கொடி என்ன, (தண்டு) சிவிகை - பல்லக்கு என்ன, மா - குதிரை என்ன, கரி-யானை என்ன இவையெலாம் கொண்டவன், பல கோடிக் கணக்கான

அழகிய பாஷைகளைக் கற்றவன், மந்த்ரவாதத்தில் வல்லவன், (ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனப்படும்) நான்கு வகைக் கவிகளிலும் வல்லவன், சண்டமாருதம் - கொடுங்காற்றுப் போலப் பேச வல்லவன், மற்று பட்டப் பேர்களாக உள்ள 'கவிராஜ

பங்கி' 'பால சரஸ்வதி' என்னும் பட்டங்களைக் கொண்டவன், சங்க நூல்களிற் சொல்லப்பட்டுள்ள பிரபந்த அறிவு உரைகளை எடுத்து ஓதவல்ல புலவன் நான்-

பழைய தலை, இடை, கடை எனப்படும் [மூ ஏழு 21] வள்ளல்களுக்கு ஒப்பானவன் நீ - என்றெல்லாம் சில ஐம்பெரும் பாதகங்களைச் செய்தவரைப் புகழ்கின்ற செயல் நன்றா - [அங்ஙனம் புகழும் செயல் ஒழிவதாக என்றபடி]

[வெம்] விரும்பத்தக்க துதிக்கையை உடைய [யானை] கஜேந்திரன்- [வனத்திடை] ஜலத்தினிடையே உயர்ந்த பெரிய முதலை [வாய்ப்பட்டு] மருட்சியுற்று [பயந்து] 'மூலமே' [என] என்று கூச்சலிட்டபோது, கருடன்மேல் ஏறி-

---

O வனத்திடை - ஜலத்தினிடத்தில்; கஜேந்திரன் வரலாறு - பாடல் 110-பக்கம் 262 கீழ்க்குறிப்பு.

இந்திரத்யும்நன் என்னும் அரசன் விஷ்ணு பூஜை செய்கையில் அகத்தியர் வர, அரசன் கருத்தைப் பூசையில் இருத்தி வைத்த காரணத்தால் அவர் வருகையை உணராதிருக்க, அவர் தம்மைக் கவனிக்கவில்லை என்று நினைத்து 'நீ யானையாகக் கடவை' என அரசனைச் சபித்தனர்; யானையான பின்னும் விஷ்ணு பூஜையை அந்த யானை விடாது செய்து வந்தது. ஒரு நாள் தாமரைத் தடாகத்திற் பூப் பறிப்பதற்கு அந்த யானை இறங்கின பொழுது, தேவலன் என்னும் முனிவர் நீர் நிலையில் நின்று தவஞ் செய்தவரின் காலை 'ஹூஹூ' என்னும் கந்தருவன் இழுத்த

[தொடர்ச்சி 732 ஆம் பக்கம் பார்க்க]

விண்ப ராவஅ டுக்கிய மண்ப ராவஅ தற்குவி
தம்ப ராவஅ டுப்பவன் மருகோனே;
கொங்க ணாதித ரப்பெறு கொங்கி னூடுசு கித்திடு
கொங்கின் வீரக ணப்ரிய குமராபொற்-
கொங்கு லாவுகு றக்கொடி கொங்கை யேதழு
விச்செறி
கொங்கு ராஜபு ரத்துறை பெருமாளே.

## 939 A - பவானி கூடல்

[பாடல் 968-கீழ்க்குறிப்பைப் பார்க்க.]

## 939 B - சென்னிமலை

[பாடல் 339 - பக்கம் 348 - கீழ்க் குறிப்பைப் பார்க்க]

சென்னிமலை: கோயமுத்தூர் ஜில்லா ஈங்கூர் ரெயில் ஸ்டேஷனுக்குச் சமீபம்;இது'சிரகிரி' எனவும் சொல்லப்படும். திரிசிராப்பள்ளிப் பாடல்களில் 332, 334, 339 எண்ணுள்ள பதிகங்களில் 'சிரகிரி' என வருகின்றது; 332-ஆம் பாடலில் 'நன்றுடையானை' என்னும் திரிசிராப்பள்ளித் தேவாரக் குறிப்பு இருப்பதாலும், 334-ஆம் பாடலில் வயலூருடன் அயலில் உள்ள சிரகிரி இணைக்கப்பட்டுள்ளதாலும் - இந்த இரண்டு பாடல்களிலும் வரும் 'சிரகிரி' என்பது 'திரிசிரகிரி' - திரிசிராப்பள்ளி எனக் கொள்ளவேண்டும் - 339-ஆம் பாடலை மாத்திரம் சென்னிமலைக்கு உரியதாகவும் வைத்துக் கொள்ளலாம்.

-அருணகிரிநாதர் வரலாறு பக்கம்-59, 60.

## 939 C - கதித்தமலை

[பாடல் 186-பக்கம் 436-கீழ்க் குறிப்பைப் பார்க்க]

---

[731 ஆம் பக்கத் தொடர்ச்சி]

காரணத்தால் - அவரது சாபத்தால் அந்தத் தடாகத்தில் முதலையாய்க் கிடந்தவன் - அந்த யானையின் காலைப் பற்றி இழுக்க, யானை 'ஆதிமூலமே' என்று கூவி அழைக்க, திருமால் கருடன் மீதேறி வந்து சக்கரத்தைச் செலுத்தி முதலையைத் துணித்து, யானையை அதன் வாயினின்றும் மீள்வித்து இறுதியில் அதற்கு முத்தி அருளினர் என்பது வரலாறு-

"தாழைதண் ணாம்பல் தடம் பெரும் பொய்கைவாய்
வாழு முதலை வலைப்பட்டு வாதிப்புண்

[தொடர்ச்சி 733 ஆம் பக்கம் பார்க்க]

விண்ணுலகம் போற்றவும், [அடுக்கடுக்காயுள்ள] பதினாலுலகம் போற்றவும், [அதற்கு] அந்த அந்த உலகத்துக்கு [இதம்] நன்மை [பராவ - அடுப்பவன்] பரவ - பெருகும்படி அடுத்து உதவுபவனான திருமாலின் மருகனே!

*கொங்கணாதி - கொங்கண ரிஷியாம் முதல்வரால் (பொன்) தரப்பட்ட (கொங்கினூடு) கொங்கு நாட்டில் சுகமாயிருக்கின்ற (கொங்கின் வீர) பூந்தாதுக்கள் (உள்ள மாலை) அணிந்த வீரனே! பதினெண் கணங்களும் ப்ரியப்படுபவனே! குமரனே! அழகிய

(கொங்கு) நறுமணம் வீசும் குறக்கொடி (வள்ளியின்) கொங்கைகளையே அணைந்து நெருங்கும் பெருமாளே! † கொங்கு மண்டலத்தில் உள்ள [ராசிபுரம் என வழங்கும்] **ராஜபுரத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(பஞ்ச பாதகரைப் புகழ் செயலாமோ)

---

(தொடர்ச்சி): "வேழும் துயர்கெட விண்ணோர் பெருமானாய்
ஆழிபணி கொண்டானால் இன்று முற்றும்
அதற்கு அருள் செய்தானால் இன்று முற்றும்"
- பெரியாழ்வார் 2-10-8.

---

*கொங்கணாதி தரப் பெறு கொங்கு - கொங்கு நாட்டில் இருந்த கொங்கணச் சித்தர் தாமிர முதலிய லோகங்களைப் பொன் செய்து விரும்பினோர்க்குக் கொடுத்தனர்; ஆதலால் அவருக்கும் கொங்கு நாட்டுக்கும் சம்பந்தம் உண்டு எனத் தெரிகின்றது.

'தோற்றிய செம்பு தரா ஈயம் பித்தளை சூழ் பச்சிலைச்
சாற்றுட னாக ரசங்கந் தகமிட்டுத் தந்திரமாய்த்
தேற்றுந் தவம்பெற்ற கொங்கணச் சித்தர்முன் செம் பொன் செய்து
மாற்றுரை கண்டது பொன்னூதி யூர் கொங்கு மண்டலமே.
(கொங்கு மண்டல சதகம் 37)

'கொங்கணவர் நாடு கொங்கு நாடா யிருக்கலாம்'
- அபிதான சிந்தாமணி

'கொங்கனாதி தரப் பெறு' என்பதும் பாடமா யிருக்கலாம்:
'கோதைகம ழுங்கவிகைக் கொங்கனென விள்ளுங்
கோதைநனி யாண்டதொரு கொங்குவள நாடு'
- பேரூர்ப் புராணம் - நாட்டுப் -2.

(கோதை - சேரன்)

† கொங்கு மண்டலத்து 24 நாடுகளுள் ஒன்று - ராசிபுர நாடு.

## விஜயமங்கலம்.

[இது ஈரோட்டுக்கும் திருப்பூருக்கும் மத்தியில் உள்ளதொரு ரெயில்வே ஸ்டேஷன். ஸ்டேஷனுக்கு வடக்கில் இரண்டு மைல் தூரத்தில் விஜயமங்கலம் ஊர் உள்ள து; திருப்புகழ்ப் பாடல் 185-பக்கம் 436-கீழ்க்குறிப்பைப் பார்க்க.]

## 940. மறவேன்

தனன தந்தனத் தானான தானன
தனன தந்தனத் தானான தானன
தனன தந்தனத் தானான தானன தனதான

கலக சமப்ரமத் தாலேவி லோசன
மலர்சி வந்திடப் பூணார மானவை
கழல *வண்டெனச் சாரீரம் வாய்விட அபிராமக்-
கனத னங்களிற் கோமாள மாகியெ
பலந கம்படச் சீரோடு பேதக
கரண முஞ்செய்துட் பாலூறு தேனித ழமுதூறல்;
† செலுவி மென்பணைத் தோளோடு தோள்பொர
நிலைகு லைந்திளைத் தேராகு மாருயிர்
செருகு முந்தியிற் போய்வீழு மாலுட னநுராகந்-
தெரிகு மண்டையிட் டாராத சேர்வையி
லுருகி மங்கையர்க் காளாகி யேவல்செய்
திடினு நின்கழற் **சீர்பாத நாளினி மறவேனே;**
‡ உலக கண்டமிட் டாகாச மேல்விரி
சலதி கண்டிடச் சேXராய மாமவ
ருடன்ம டிந்திடக் Oகோபாலர் சேரியில் மகவாயும்-
உணர்சி றந்தசக் ராதார நாரணன்
மருக மந்திரக் காபாலி யாகிய
உரக கங்கணப் பூதேசர் பாலக வயலூரா;

---

* இது புட்குரல் - பாடல் 197-பக்கம் 6-கீழ்க்குறிப்பு.

† செலுவி - செலுத்தி.

‡ **உலக்கையை ராவினதும், ஆயர் எல்லாம் மடிந்ததும்:-** வரலாற்றைப் பாடல் 268-பக்கம் 166, 167, 169-கீழ்க் குறிப்பிற் பார்க்க. உலக-உலகை-உல(க்)கையை.

X ஆயம் - கூட்டம்.

O வடமதுரையில் கம்ஸனுடைய சிறைக் கூட்டத்திலே பிறந்த கண்ணபிரான் - கம்ஸனுக்குத் தப்பி ஆயர்பாடியில் நந்தகோபருடைய திருமாளிகையில் வளர்ந்தார்.

## விஜயமங்கலம்

## 940.

(கலவியில் சேர்க்கையில் உண்டாகும்) ஊடற் கலக பரபரப்பால் கண் மலர் சிவக்க, பூண்டுள்ள முத்துமாலை முதலிய மாலைகள் கழன்று விழ, (புட்குரல்) வண்டு முதலியவற்றின் (சாரீரம்) ஒலிகளை வெளிப்படுத்த, அழகிய

பருத்த கொங்கைகளைக் கண்டு (கோமாளம் ஆகி) பெருங்களிப்புடன் குதித்து மகிழ்பவனாய் - பல நகக்குறிகள் உண்டாகச் சிறந்த, வெவ்வேறு வகையான (கலவி) புணர்ச்சிகளைச் செய்து உள்ளத்தில் - பால்போலவும் தேன்போலவும் இனிக்கும் வாயிதழ் அமுதன்ன ஊறலைச்-

செலுத்தி, மெல்லிய வேய் (மூங்கிலனைய) தோளோடு தோள் இணைந்து!பட, நிலைமை தளர்ந்து, இளைத்து ஏராகும் ஆருயிர் அழகாயிருக்கும் (நல்ல) அரிய உயிர் (இளைத்து) சோர்வு அடைந்து, பொருந்திய [உந்தியில்] வயிற்றின்மீது போய் விழுகின்ற காமப்பற்று

வெளிக்காட்டும் (குமண்டை இட்டு) களிப்புக் கூத்தாடி, தணிவுபெறாத - அடங்காத - கூட்டுறவில் உள்ளம் உருகி, மாதர்களுக்கு அடிமைப்பட்டு அவர்கள் இட்ட வேலைகளைச் செய்தபோதிலும், உனது [வீரக்] கழலணிந்த சிறப்புற்ற திருவடிகளை நான் இனி மறக்கமாட்டேன்;

உலக்கையைக் (கண்டம் இட்டு) துண்டு துண்டாகப் - பொடிப் பொடியாக ராவித் தூளாக்கி, ஆகாயம் மேலே விரிந்துள்ள (நடுக்) கடலில் அப் பொடிகளைச் சேரும்படிச் செய்து, கூட்டமான ஆயர் அனைவரும் ஒரு சேர (அல்லது தம்முடன்) மடிய-இறந்துபடக், கோபாலர் சேரியில் - இடையர் சேரியில் குழந்தையாய் வளர்ந்தும்-

(விளையாடின) ஞானம் சிறந்த சக்ராயுதக் கையனான அல்லது - சக்கரத்தை ஏந்தியவரும், ஆதாரம் காப்பவருமான நாராயண மூர்த்தியின் மருகனே!(ஐந்தெழுத்து)மந்திரத்தின் (பஞ்சாட்சரத்தின் மூலப் பொருளானவரும், (பிரம கபாலத்தைக் கையில் ஏந்தினவரும், பாம்பைக் கையிற் (கங்கணமாக) வளையாகக் கொண்டவரும், பூதகணங்களைக் கொண்ட தலைவருமான ஈசனுடைய பிள்ளையே! வயலூரானே!

*விலைத ருங்கொலைப் போர்வேடர் கோவென
இனையு மங்குறப் பாவாய்வி யாகுலம்
விடுவி டென்றுகைக் கூர்வேலை யேவிய
இளையோனே-

விறல்†சு ரும்புநற் க்ரீதேசி பாடிய
விரைசெய் பங்கயப் பூவோடை மேவிய
**விஜய** மங்கலத் தேவாதி தேவர்கள்
பெருமாளே.(1)

## சிங்கை (காங்கேயம்.)

[இது ஈரோட்டு - திருப்பூர் மார்க்கத்தில் உள்ள ஊற்றுக்குழி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 14-மைல்.]

## 941. வினையற மயில்மீது வர

தந்ததன தந்த தந்ததன தந்த
தந்ததன தந்த தனதான

சஞ்சரியு கந்து நின்றுமுரல் கின்ற
தண்குவளை யுந்து குழலாலுந்-

தண்டரள தங்க மங்கமணி கின்ற
சண்டவித கும்ப கிரியாலும்;

நஞ்சவினை யொன்றி தஞ்சமென வந்து
நம்பிவிட நங்கை யுடனாசை-

நண்புறெனை யின்று நன்றில்வினை கொன்று
நன்றுமயில் துன்றி வரவேணும்;

கஞ்சமலர் கொன்றை தும்பைமகிழ் விஞ்சி
கந்திகமழ் கின்ற கழலோனே-

---

* வேடர்மீது வேல் விட்டது - வரலாற்றைப் பாடல் 341-பக்கம் 354; பாடல் 344-பக்கம் 362,363;பாடல் 846-பக்கம் 480 கீழ்க்குறிப்புக்கள் .

† வண்டுகள் 'தேசி' ராகம் பாடுவது - பாடல் 351-அடி 7.

(விலை தரும் கொலை) கொலைதரும் வி(ல்)லை கொலை செய்யும் வில்லைக் கொண்டு போர் புரியும் வேடர்கள் (கோவென) கோ என்று பேரொலியிட்டுக் கூவி நெருங்க, (அதைக் கண்டு வருந்திய வள்ளியை நோக்கி) "வருந்துகின்ற அழகிய குறப்பாவையே! நீ வருத்தத்தைக் (கவலையை) விடு, விடு" என்று கூறிக் கையிலிருந்த கூரிய வேலாயுதத்தைச் செலுத்தின இளையோனே!

வீரம் வாய்ந்த வண்டுகள் நல்ல முயற்சியுடன் "தேசி" ராகத்தைப் பாடிடும் நறுமணம் கொண்ட தாமரைப் பூக்களைக் கொண்ட நீர் நிலைகள் உள்ள **'விஜயமங்கலத்தில்'** வீற்றிருக்கும் பெருமாளே! தேவாதி தேவர்களுக்குப் பெருமாளே!

*(சீர்பாதம் நானினி மறவேனே)*

## *சிங்கை (காங்கேயம்)*

## 941.

*(சஞ்சரி)* சஞ்சரீகம் - வண்டு மகிழ்ந்து நின்று ரீங்காரம் செய்யும் குளிர்ச்சி பொருந்திய குவளைமலர் விளங்கும் கூந்தல் மூலமாகவும்-

குளிர்ந்த முத்து (மாலை), (தங்கம்) பொன் மாலை உடலில் அணிந்துள்ள (சண்டம்) வலிமை கொண்ட குடம் போன்ற மலையாம் கொங்கை மூலமாகவும்-

விஷம் கொண்ட செயலைப் பொருந்தி நீயே தஞ்சம் என்று (வெளி வேஷத்துடன்) - வந்து நம்பிவிட - வந்து என்னை நம்பி நிற்க (அல்லது, நான் நம்பும்படி வர), அந்த மாதுடனே ஆசை-

நட்புவைக்கின்ற என்னைக் (காத்தருள) - இன்றே - இந்நாளே - (நன்று இல் வினை) தீயவினைகளை அழித்து - (என்னுடைய தீயவினைகளை இந்நாளே அழித்து) நன்மைதரும் மயிலிற் பொருந்தி வரவேணும்;

தாமரை மலர், கொன்றை மலர், தும்பை மலர், மகிழம்பூ, இவைகள் நிறைந்து நறுமணம் கமழும் திருவடியை உடையவனே!

*கன்றிடுபி ணங்கள் தின்றிடுக ணங்கள்
கண்டுபொரு கின்ற கதிர்வேலா;

† செஞ்சொல்புனை கின்ற எங்கள்குற மங்கை
திண்குயம ணைந்த திருமார்பா-
செண்பகமி லங்கு மின்பொழில்சி றந்த
சிங்கையில மர்ந்த பெருமாளே.(1)

## 942. வினை அற

தந்ததன தான தந்ததன தான
தந்ததன தான தனதான

சந்திதொறு நாண மின்றியகம் வாடி
உந்தி பொரு ளாக அலைவேனோ-
சங்கைபெற நாளு மங்கமுள மாதர்
தங்கள்வச மாகி அலையாமற்;

சுந்தரம தாக எந்தன்வினை யேக
சிந்தைகளி கூர அருள்வாயே-
தொங்குசடை மீது திங்களணி நாதர்
மங்கைரண காளி தலைசாயத்;

தொந்திதிமி தோதி தந்திதிமி தாதி
என்றுநட மாடு மவர்பாலா-
துங்கமுள வேடர் தங்கள்குல மாதை
மங்களம தாக அணைவோனே;

கந்தமுரு கேச மிண்டசுரர் மாள
அந்தமுனை வேல்கொ டெறிவோனே-

---

* பேய்கள் பிணம் தின்பது

"எழுங்கடற் பகைப் பிணத்தும் ரவி திகந்த எல்லைபோய்
விழுங்கடற் பகைப் பிணத்தும் ஓடி யுண்டு மீள்பவே" -தக்கயாக -124.

† 'செஞ்சொல் புனைகின்ற ....குறமங்கை' - வள்ளியின் வசனத்தை" "இந்தளாம்ருத வசனம்" என்றார்.

- பாடல் 289-பக்கம் 220-அடி 7-கீழ்க்குறிப்பு பார்க்க.

(கன்றிடு பிணங்கள்) வாடி அழுகின பிணங்களைத் தின்னும் (கணங்கள்) பேய்கள் (அல்லது - நாய், நரி, காக்கை, பருந்து முதலியவற்றின்) கூட்டங்கள் காணும்படிச் சண்டை செய்யும் ஒளி வேலனே!

செவ்விய சொல்லை உடைய - பண் அனைய சொல், அமைந்துள்ள எங்கள் குறமங்கை - வள்ளியின் வலிய (குயம் அணைந்த) கொங்கையை அணைந்த அழகிய மார்பனே!

செண்பக மலர்கள் விளங்கும் இனிய சோலைகள் சிறப்புடன் மிளிரும் **சிங்கை** என்னும் தலத்தில் வீற்றிருந்தருளும் பெருமாளே!

(மயில் துன்றி வரவேணும்)

## 942.

(சந்திதொறும்) காலையும் மாலையும் வெட்கமில்லாமல், உள்ளம் சோர்வு உற்று, வயிறே காரியமாக, அலைச்சல் உறுவேனோ!

(சங்கை பெற நாளும்) நாளும் - தினந் தோறும் அச்சங்கொண்டு (அங்கம்) உடலழகுள்ள மாதர்களின் வசப்பட்டுத் திரியாமல்-

அழகுபெற, என்னுடைய வினை தொலைந்து ஒழிய, என் மனம் மகிழ்ச்சியுற (அல்லது நீ மகிழ்ந்து) அருள் புரிவாயாக.

தொங்கும் சடையின்மேல் சந்திரனை அணிந்துள்ள பெருமான், மங்கையும் போர்க் கெழுந்தவளுமாகிய காளி நாணித் தலைகுனியத்

தொந்திதிமி தோதி தந்திதிமி தாதி என்று நடனம் ஆடின பெருமான் - ஆகிய சிவனது குமாரனே!

உயர்ந்த (தவம் பெற்ற) வேடர்களின் குலத்தில் வளர்ந்த மாது வள்ளியை மங்களகரமாக அணைந்தவனே!

கந்தனே! முருகேசனே! (மிண்டு) நெருங்கிப் போரிட வந்த அசுரர்கள் இறக்க (அந்தம்) அழகிய (அல்லது) அந்த, (கூரிய) முனை கொண்ட (அல்லது போர்) வேல் கொண்டு எறிந்து அழித்தவனே!

கம்பர்கயி லாசர் மைந்தவடி வேல
சிங்கைநகர் மேவு பெருமாளே.(2)

## பட்டாலியூர்.

[இது 'பட்டாலி சிவமலை' என வழங்கும். காங்கேயத்துக்குச் சமீபம். ஸ்தலபுராணம் உண்டு.]

## 943. திருவடி பெற

தனதன தனனத் தான தானன
தனதன தனனத் தான தானன
தனதன தனனத் தான தானன தனதான

*இருகுழை யிடறிக் காது மோதுவ
பரிமள நளினத் தோடு சீறுவ
இணையறு †வினையைத் தாவி மீளுவ வதிசூர-
எமபடர் படைகெட் டோட நாடுவ
அமுதுடன் விடமொத் தாளை யீருவ
ரதிபதி கலைதப் பாது சூழுவ ‡முநிவோரும்;

உருகிட விரகிற் பார்வை மேவுவ
பொருளது திருடற் காசை கூறுவ
யுகமுடி விதெனப் பூச லாடுவ வடிவேல்போல்-
உயிர்வதை நயனக் காதல் மாதர்கள்
மயல்தரு கமரிற் போய்வி ழாவகை
உனதடி நிழலிற் சேர வாழ்வது மொருநாளே;

முருகவிழ் தொடையைச் சூடி Xநாடிய
மரகத கிரணப் பீலி மாமயில்
முதுரவி கிரணச் சோதி போல்வய லியில்வாழ்வே-

---

* முதல் நான்கு அடிகள் - கண் வர்ணனை - பாடல் 880 போல.

† தாவி மீளுவ - என்றதனால் - தாவ வேண்டும் மீளவும் வேண்டும்; எனவே, வினையினும் இருமடங்கு வலியன கண்கள் என்பது பெறப்பட்டது

‡ முநிவரும் உருகுதல் - பாடல் 158, 362, 921, 1277 பார்க்க.

X நாடிய மாமயில் - மயிலாகி முருகவேளுக்கு வாகனமாகத் (தனது முற்பிறப்பில்) விரும்பினவன் சூரன் - "விசாகனருள் சிந்தை செய்த சூரன்....கலாப மயிலாகி மற்றிவனை ஏந்திட மனந்தனில் நினைந்தான்" - உபதேச காண்டம் 98. திருப்புகழ் 442-பக்கம் 610 கீழ்க்குறிப்பு.

*(கச்சி) கம்பர் - ஏகாம்பரநாதர், கயிலாயர் ஆகிய சிவனது பிள்ளையே! கூரிய வேலாயுதத்தை உடையவனே!* **சிங்கை நகரில்** *வீற்றிருக்கும் பெருமாளே!*

*(வினை ஏக அருள்வாயே)*

## *பட்டாலியூர்*

## 943.

**கா***திலுள்ள இரண்டு குழைகளையும் எற்றிக் காதுகளை மோதுவன, நறுமணம் உள்ள தாமரை மலர்களை (எங்களுக்கு நீ உவமையா என்று) சீறிக் கோபிப்பன, தனக்கு நிகரே இல்லாத வினையையும் தாவி மீள்வன, மகா சூரத்வம் உடைய*

*யமதூதர்களின் சேனை (இவைகளின் கொடுமை முன் நமது கொடுமை எவ்வளவு என்று அஞ்சிப் பின்னடைந்து ஓடும்படி வழி தேடுவன, அமுதும் விஷமும் கலந்தன போல் நின்று ஆளையே அறுத்துத் தள்ளுவன, ரதி கணவனுடைய (மன்மதனுடைய) சாத்திர நூல் பொய்யாகாத வண்ணம் வழிதேடுவன, முநிவர்களும்*

*உருகும்படியாகத் தந்திரத்துடன் கூடிய பார்வையை உடையன, (வந்தவனுடைய) பொருளைக் கவரும் பொருட்டு ஆசை மொழிகளைப் பேசுவன, யுக முடிவு தானோ இது என்னும்படி கலாம் (போர்) விளைவிப்பன, - (இத்தகையவனாய் அமைந்து) கூரிய வேலாயுதம் போல*

*உயிரை வதைக்கும் கண்களை உடைய ஆசை மாதர்களின் காம மயக்கம் தருகின்ற நிலப் பிளப்பில் நான் போய் விழாத வகைக்கு உனது திருவடி நீழலிற் பொருந்த வாழும்படியான வாழ்க்கை கிடைக்கும் ஒரு நாள் எனக்கு வாய்க்குமா!*

*நறுமணம் வீசும் மாலையை அணிந்து, உனக்கு வாகனமாகும்படி விரும்பின பச்சை ஒளி வீசும் தோகை கொண்ட சிறந்த மயில்மீது (முதுரவி) முற்றின ஒளி கொண்ட சூரியனைப் போல விளங்கி* **வயலூரில்** *வாழும் செல்வனே!*

முரண்முடி யிரணச் சூலி மாலினி
சரணெனு மவர்பற் றான சாதகி
முடுகிய *கடினத் தாளி வாகினி †மதுபானம்;
பருகினர் பரமப் போக மோகினி
அரகர வெனும்வித் தாரி ‡யாமளி
பரிபுர சரணக் காளி கூளிகள் நடமாடும்-
பறையறை Xசுடலைக் கோயில் நாயகி
Oஇறையொடு மிடமிட் டாடு காரணி
பயிரவி யருள்பட் டாலி யூர்வரு
பெருமாளே. (1)

## 944. இளமையிலே அடிமை செய

தத்தான தனன தனதன, தத்தான தனன தனதன
தத்தான தனன தனதன தனதான

கத்தூரி யகரு ம்ருகமத வித்தார படிர இமசல
கற்பூர களப மணிவண மணிசேரக்-
கட்டார வடமு மடர்வன நிட்டூர கலக மிடுவன
கச்சோடு பொருது நிமிர்வன தனமாதர்;

---

* கடினத்தாளி வாகினி:- தாளி - பனை; இங்கு பனை போன்ற கால்களை உடைய பேய்கள்; பேய்களின் காலும் கையும் பனங்காடு போல இருக்கும். "கரு நெடும் பனங்காடு முழுமையும் காலும் கையும் உடையன போல்வன" - கலிங்கத்துப் பரணி 6-2; வாகினி - படை; தேவி பேய்க் கணங்களைப் (படையாக) உடையவள்-

'தொல்லை நாயகி யுடைய பேய்க் கணங்கள்'-தக்க. பரணி 120.

ஆளிவாகினி:- ஆளி - யாளி சிங்கம், தேவிக்கு யாளி வாகனம்; சிங்க வாகனம் இரண்டும் உண்டு:

(1) 'யாளி யூர்தி துர்க்கா பரமேசுவரி' - தக்கயாக-729 உரை.

(2) 'சிங்கவாகனி வந்து செந்திருமா தொடிருக்கவே'

-கலிங்-பரணி. 11-8.

'தேவி வன்மானுகைத்த கொடி' - தக்க. 76-உரை.

† "மதுபானம் பருகினர் பரமப் போக மோகினி"-சத்தி உபாசனை முறையைக் கூறும் ஆகமமாம் வாம தந்திரப்படித் தேவியை வழிபடுபவர்கள் மதுபானம் கொள்வர். வாம மார்க்கப் பெண்களும் நறவு உண்பார்கள். மது, மச்சம், (மாங்கிசம்) மாமிசம், முத்திரை, மைதுனம் - இவற்றை "மகார பஞ்சகம்" என்று கூறுவர் வாம மதத்தினர். தக்கபரணி 24, 51 உரை. ‡யாமளி - யாமள சாத்திரம் என்பது சக்தி பூசையைப் பற்றிக் கூறும் ஒரு தாந்திரிக நூல். அதற்கு உரியவள் யாமளி.

[தொடர்ச்சி 743 ஆம் பக்கம் பார்க்க]

(முரண்) வலிமை வாய்ந்த முடியை உடைய போர்க்கு உற்ற சூலாயுதத்தை ஏந்தினவள். (மாலினி) *யாலையை அணிந்தவள், (அல்லது அக்ஷரங்களின் தெய்வமாக இருப்பவள் -துர்க்கை), நீயே (சரணம்) தஞ்சம் என நிற்கும் அடியார்களுக்குப் பற்றாக இருக்கும் குணத்தினள், வேகமாகச் செல்லும் கடினமான (தாளி) பனையன்ன கால்களை உடைய பேய்ப் படையை உடையவள் (அல்லது கடினத்து ஆளி வாகினி - கடிய யாளிவாகனம் சிங்கவாகனம் - உடையவள், மதுபானம் (கள்ளுணாவை)-

உண்பவர்களுக்கு (வாம தந்திரப்படி) உபாசிப்-பவர்களுக்கு, அல்லது, மதுபானம் பருகினர் - அமுது பருகின தேவர்களுக்கு (பரம போக மோகினி) மேலான போகத்தை அளிக்கும் மோகனாங்கனை (அழகி), 'அரகர' என்று விஸ்தாரமாக - நிரம்ப ஒலி செய்பவள், (யாமளி) சியாமள நிறத்தை உடையவள், சிலம்பணிந்த கால்களை உடைய காளி, பேய்கள் நடிக்கின்றதும்

பறைகள் ஒலிப்பதுமான சுடுகாட்டுக் கோயிலில் இருக்கும் தேவி, (இறை) பரசிவனொடும் இடம் கண்டு நடனம் செய்யும் காரணி (காரணமாக நடிப்பவள்), பயிரவி - ஆகிய தேவி பெற்ற பெருமாளே! **பட்டாலியூரில்** எழுந்தருளியுள்ள பெருமாளே! (உனதடி நிழலிற் சேர வாழ்வதும் ஒருநாளே)

## 944.

**க**ஸ்தூரி, (அகரு) அகில், (ம்ருகமதம்) கஸ்தூரி மஞ்சள், நிறைய சந்தனம், (இமசலம்) பன்னீர், பச்சைக் கற்பூரம் கலவைச் சாந்து இவைகளை அணிவதாய், ரத்னங்களுடன் சேர்க்கப்பட்டுக்-

கட்டார வடமும் - கட்டப்பட்ட - ஆரவடமும் - முத்துமாலையும் நெருங்கினதாய் - (நீட்டூர) கொடிய கலகங்களை விளைவிப்பதாய், ரவிக்கையுடன் முட்டி நிமிர்வதாய் உள்ள கொங்கையை உடைய மாதர்களின்

---

(தொடர்ச்சி) X 'சுடலை நாரியொர் பாகமாக நடமாட வல்ல...நம்பன்' - சம்பந்தர் 2-87-1.

O "இடமிட்டாடுதல்" - " புன்சடை இடம் பெறக் காட்டகத் தாடிய வேடத்தர்" - சம்பந்தர் 2-108-3.

---

* அபிராமி அந்தாதி உரை - செய்யுள் 77.

கொத்தூரு நறவ மெனவத ரத்தூறல் பருகி யவரொடு
கொற்சேரி *யுலையில் மெழுகென வுருகாமே-
† கொக்காக நரைகள் வருமுன மிக்காய **விளமை யுடன்முயல்**
குற்றேவல் **அடிமை செயும்வகை யருளாதோ;**
‡ அத்தூர புவன தரிசன நித்தார கனக நெடுமதி
லச்சான வயலி நகரியி லுறைவேலா-
X அச்சோவெ னவச வுவகையி லுட்சோர்த லுடைய பரவையொ
டக்காகி விரக பரிபவ மறவேபார்;

---

* 'எரியுறு மெழுகின் உள்ளம் சோர' - பெருங்கதை 1-46-249.

† இந்த அடியால், இந்தப் பாடல் பாடின பொழுது அருணகிரியார் இளவயதினர் என்பது தெரிகின்றது.

'கொக்காக நரை' - 'தலைமயில் கொக்குக்கு ஒக்க நரைத்து'

-திருப்புகழ் 447.

இளமை முதற் கொண்டே பத்தி செய்ய வேண்டும், கடவுளுக்கு அடிமை பூணவேண்டும் என்னும் அரிய நீதியும் புலப்படுகின்றது. இதனாலன்றோ இளவயதினராகிய சுந்தரர் - 'பத்திமையும் அடிமையையும் கைவிடுவான் பாவியேன் பொத்தின நோய்' (7-51-1) என்றார். 'இளமை கழியாமை எய்திய நாளில் இசையினால் ஏத்துமின்' - திருமந்திரம் 186.

‡ தூரத்தில் வரும்பொழுதே - வயலூர் திருக்கோயிலின் மதில்-கோயிலுக்கு அடையாளமாக நின்று தரிசிப்பதற்கு உதவுகின்றது என்கின்றார்; தூர தரிசன தலங்களைப்பற்றி

- பாடல் 311-பக்கம் 272, 273 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

X சுந்தரமூர்த்தி சுவாமிகள் திரு ஒற்றியூரிற் சங்கிலி நாச்சியாரைத் திருமணஞ் செய்து கொண்டார் எனக் கேள்வியுற்ற (அவர் முதல் மனைவி)திருவாரூப் பரவையார்-சுந்தரர் திரு ஆரூருக்கு வந்தவுடன் - அவரைத் தமது இல்லத்தில் ஏற்றுக்கொள்ள மறுக்கச், சுந்தரர் பரமனையே தமக்காகத் தூது சென்று பரவையை இணங்கும்படி செய்ய வேண்டுமென வேண்டினர். பரமனும் தூது செல்ல இணங்கிக் கோயில் அர்ச்சகர் போலப் போய்ப் பரவையாரை வேண்ட, அவர் பரமன் வேண்டுகோளுக்கு இணங்க இல்லை. ஆதலால் சுந்தரர் மறுமுறையும் மிக வேண்டப் பரமன் இரண்டாவது முறை தமது சுயரூபத்துடன் தூது சென்றார். நம்மிடம் அருச்சகராக வந்தவர் பரமன் தானோ என்று பரவையார் அதிசயத்துடனும் அச்சத்துடனும் உள்ளம் சோர்ந்திருக்கும் சமயத்திற் பரமன் காட்சி தந்து பரவையை நோக்கி "நீ சுந்தரன் உன்னிடம் வர இசைதல் வேண்டும்' எனப், பரவையாரும் 'தங்கள் கட்டளைக்கு இணங்கினேன்' என்று கூறி வணங்கினள்

[தொடர்ச்சி 745 ஆம் பக்கம் பார்க்க.]

(கொத்து) திரளாக ஊர்கின்ற - பூங்கொத்தினின்று வடிகின்ற, (நறவம்) தேன் என்று சொல்லும்படி ஊறும் வாயிதழ் ஊறலை உண்டு, அந்த மாதர்களோடு, கொல்லன் சேரியில் உள்ள நெருப்பு உலையில் (அடுப்பில்) விழுந்த மெழுகுபோல நான் உருகி அழியாமல்-

கொக்குப்போல வெண்ணிறமாக நரைகள் வருமுன்பு (கிழவனாவதற்கு முன்பு), இந்த உடலின் இளம்பருவம் இருக்கும் பொழுதே, முயற்சி செய்து, உனக்குப் பணிவிடைகளை அடியேன் செய்யும் வழியை உனது திருவருள் எனக்குக் கூட்டுவிக்காதா!

(அத் தூர புவன தரிசனம்) அந்தத் தூர பூமியிலிருந்தே (தூரத்திலிருந்தே) தரிசனத்தை (நித்தாரம்) நிச்சயமாகத் தருவதான பொன் னெடுமதிலை (அச்சான) அடையாளமாகக் கொண்ட வயலூர்ப் பதியில் வீற்றிருக்கின்ற வேலனே!

(அச்சோ) சுந்தரருக்குத் தூதாக (இறைவன் தான் அருச்சகராக வந்து போனாரோ (இது) என்ன அதிசயம் என்று தன்சவ மழிந்த மகிழ்ச்சியில் உள்ளம் சோர்வு அடைந்திருந்த பரவைமீது (அக்காகி) கண்ணும் கருத்துமாயிருந்த (சுந்தரருடைய) விரக பரிபவம் - பரவையை விட்டுப் பிரிந்திருப்பதால் ஏற்பட்ட கவலை (அறவே) நீங்குதற்கு, பார் - இந்தப் பூமியில் (திருவாரூர்ப் ப்ரதேசத்தில்)

---

- என்பது வரலாறு; அங்ஙனம் 'அச்சோ' என்றும், அவசம் அடைந்தும், பரவையார் உள்ளம் சோர்ந்தார் என்பதை-

'அதிசயம் பலவுந் தோன்ற அறிவுற்றே அஞ்சிக் கெட்டேன்
எதிர்மொழி எம்பி ரான்முன் என்செய மறுத்தேன் என்பார்;
கண்டுயில் எய்தார் வெய்ய கையற வெய்தி யீங்கின்
றண்டர்தம் பிரானார் தோழர்க் காகஅர்ச் சிப்பார் கோலங்
கொண்டணைந் தவரை யானும் கொண்டிலேன் பாவி யேனென்
றொண்சுடர் வாயி லேபார்த் துழையாரோ டழியும் போதில்,

- எனவரு மிடத்துக் காண்க. (பெரியபுரா-ஏயர்கோன் - 359)

தூது வந்தவர் இறைவனே என்றறிந்ததும் பரவையார் சுந்தரர் தம்மிடம் வருதற்கு இணங்கினர் என்பது

"அளிவரும் அன்பர்க் காக அங்கொடிங் குழல்வீ ராகில்
எளிவரு வீரு மானால் என் செய்கேன் இசையா தென்றார்"

- என விளக்கப்பட்டுளது. (பெரிய புரா-ஏயர்கோன்-366)

*பத்தூரர் பரவ விரைவுசெல் †மெய்த்தூதர் விரவ வருடரு
பற்றாய பரம பவுருஷ குருநாதா-
பச்சோலை குலவு பனைவளர் மைச்சோலை மயில்கள் நடமிடு
பட்டாலி மருவு மமரர்கள் பெருமாளே. (2)

## 945. முத்தியை எளிதிற் பெற

தந்தத்தத் தான தனதன, தந்தத்தத் தான தனதன
தந்தத்தத் தான தனதன தனதான

‡சங்கைக்கத் தோடு சிலுகிடு சங்கிச்சட் கோல சமயிகள்
சங்கற்பித் தோதும் வெகுவித கலைஞானச்-
சண்டைக்குட் கேள்வி Xயலமல மண்டற்குப் பூசை யிடுமவர்
சம்பத்துக் கேள்வி யலமல மிமவானின்;

மங்கைக்குப் பாக னிருடிக ளெங்கட்குச் சாமி யெனவடி
வந்திக்கப் பேசி யருளிய சிவநூலின்-
மந்த்ரப்ரஸ்த் தார தரிசன யந்த்ரத்துக் கேள்வி யலமலம்
Oவம்பிற்சுற் றாது பரகதி யருள்வாயே;

* பத்து ஊரர்:- அடியார்களுக்கு உரிய பத்து இலக்கணங்களையும் கொண்டிருந்த சுந்தரமூர்த்தி சுவாமிகள். பத்து இலக்கணம் - பாடல் 612-பக்கம் 419 கீழ்க்குறிப்பு: ஊரன் - சுந்தரமூர்த்திகளைக் குறிக்கும்; 'சடையனவன் சிறுவன் பத்தனூரன்' (சுந்தரர் 7-7-11) எனச் சுந்தரரே தம்மைக் குறிக்கின்றார்.

† தூதர்:- பக்கம் 744 குறிப்பு X-பார்க்க.

‡ சமய சண்டைகளை அருணகிரியார் வெறுப்பர்:
-பாடல் 492-பக்கம் 114-கீழ்க்குறிப்பு.

X அலம் அலம் - போதும் போதும் - பாடல் 510,912 பார்க்க.

O வம்பிற் சுற்றாது பரகதியை எளிதில் பெறும் வழியையே அருணகிரியார் விரும்புகின்றார்-

"காட்டிற் குறத்தி பிரான்பதத்தே கருத்தைப் புகட்டின்
வீட்டிற் புகுதல் மிக எளிதே"
என்றார் கந்தரலங்காரத்திலும் (85).

இங்ஙனமே, குமர குருபரரும் எளிய வழியையே விரும்பினர்:-
"சத்திநி பாதநின் சந்நிதிப் பட்ட
இத்திறத் தெளிதினில் எய்திய தெனக்கே - அதனாற்

(தொடர்ச்சி 747 ஆம் பக்கம் பார்க்க)

பத்தூரர் (பத்து ஊரர்) அடியார்க்கு உரிய பத்து இலக்கணங்களும் பொருந்திய (ஊரர்) சுந்தரர் தம்மைப் பரவிப் போற்ற, வேகமாகத் (தூது) சென்ற உண்மைத் தூதர், தம்முடன் (விரவ) உள்ளம் கலக்கத் திருவருளைப் பாலிப்பவரும், (பற்று) உற்ற துணையாக இருப்பவருமான பரமர் (சிவபிரானுக்குப்) (பவுருஷம்) ஆண்மைக்குணம் நிறைந்த குருமூர்த்தியே! (தூதர் கலந்து கேட்க, அவருக்குப்....பரம - மேலான குருநாதனே எனலுமாம்.)

பசிய ஓலைகளைக் கொண்டு விளங்கும் பனைமரங்கள் வளர்ந்துள்ள (மை) இருண்ட சோலைகளில் மயில்கள் நடனம் செய்கின்ற **பட்டாலியூரில்** வீற்றிருக்கும் பெருமாளே! தேவர்கள் பெருமாளே! (வீற்றிருக்கும் தேவர் பெருமாளே)!

(குற்றேவல் அடிமை செயும் வகை அருளாதோ)

## 945.

(**ச**ங்கை) சந்தேகத் (குத்தோடு) கூச்சலோடு (சிலுகிடு) வாதம் செய்யும் - சண்டை செய்யும், (சங்கி) (கூட்டமாயுள்ள) கூடியுள்ள ஆறுவித சமயத்தினர்களும் தாம் தாம் உறுதி செய்துகொண்டு பேசுகின்ற பலவிதமான சாத்திர ஞானச்

சண்டைக்கு வேண்டிய கேள்வி அறிவு போதும் போதும்; (அண்டற்கு) கடவுளுக்கென்று பூஜை செய்பவர்களுடைய செல்வமாம் கேள்வி அறிவும் போதும் போதும், இமயராஜனது-

பெண்ணாம் பார்வதிக்குப் பாகர் என்றும், ரிஷிகள் எல்லாம் எங்களுக்குச் சுவாமி என்றும், தமது திருவடியைத் துதிக்க, ஓதி விளக்கியுள்ள சிவநூல்களிற் கூறப்பட்ட

மந்த்ர - மந்திரங்களின் (பிரஸ்த்தார) கணக்குப் பிரமாணக் காட்சியை விளக்கும் மந்த்ர சக்கரங்களைப் பற்றிய ஆராய்ச்சி அறிவும் போதும் போதும் - (இங்ஙனமெல்லாம்) வீணாண சுற்றான வழிகளில் நான் சுற்றி அலையாமல் (பரகதியை) மோக்ஷத்தை நீ தந்து அருளுவாயாக;

---

(தொடர்ச்சி) சரியையில் தாழ்க்கலை கிரியையிற் பணிக்கலை
யோகத் துய்க்கலை பாகமு நோக்கலை
"நாளையின் றெனஒரு வேளையு நவிற்றலை
ஈண்டெனக் கருளுதி இறைவ!
பூண்டு கொண் டிருப்பனின் பொன்னடித் துணையே"
-பண்டார மும்மணிக் கோவை - 29.

வெங்கைச்சுக் ரீபர் *படையையி லங்கைக்குப் போக விடவல
வென்றிச்சக் ரேசன் மிகமகிழ் மருகோனே-
† வெண்பட்டுப் பூணல் வனகமு கெண்பட்டுப் பாளை விரிபொழில்
விஞ்சிட்டுச் சூழ ‡ வெயில்மறை வயலூரா;

கொங்கைக்கொப் பாகும் வடகிரி செங்கைக்கொப் பாகு நறுமலர்
கொண்டைக்கொப் பாகு முகிலென வனமாதைக்-
கும்பிட்டுக் Xகாதல் குனகிய இன்பச்சொற் பாடு மிளையவ
Oகொங்கிற்பட் டாலி நகருறை பெருமாளே.(3)

## திருமுருகன் பூண்டி.

திருப்பூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 5-மைல், சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது. அவருக்குச் சேரமான் கொடுத்த பொருளைச் சிவபிரான் தமது கணங்களை வேடர்களாக அனுப்பிப் பறித்துப் பின்னர் அவருக்குத் திருப்பிக் கொடுத்த **தலம். ஸ்தல புராணமுண்டு.

## 946. திருவடியைப் பூண

தனதனனந் தாந்தத் தனதான

அவசிய†† முன் வேண்டிப் பலகாலும்-

---

*கடலைக் கடந்தது: பாடல் 754-பக்கம் 248 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† வெண்பட்டுப் பூணல் கமுகு...பாளைவிரி பொழில்: இது கமுகின் பாளையின் மென்மையைக் குறிக்கின்றது-

"கமுகின் இணைப்பொதி யவிழ்ந்த அம்மென்
பாளை" - பெருங்கதை 3-4-49.

கமுகின் பாளை விரிதல்:- "வேரிக் கொழுந்தாற் றிளம்பாளை விரிபூங் கமுகு" - முத்துக் குமார-பிள்ளைத் தமிழ்-சிற்றில் 4.

‡ பொழில் வெயிலை மறைப்பது:- "வெயிற்கு எதிர்ந்து இடங்கொடாது அகங் குளிர்ந்த பைம்பொழில்" - சம்பந்தர் 2-98-6.

X "காதல் குனகிய இன்பச்சொல்" -பாடல் 209-அடி 7,8 பார்க்க.

பட்டாலியூர் - கொங்கு மண்டலத்தில் காங்கேய நாட்டுப் பகுதியைச் சேர்ந்தது. "கந்தர் மேவிய பட்டாலி ....கங்கா குல நாட்டார் செழிக்கும் காங்கேய நாடெங்கள் நாடே" - கொங்கு மண்டல ஊர்த்தொகை-7.

(தொடர்ச்சி 749 ஆம் பக்கம் பார்க்க)

வெங்கை - விரும்பத்தக்க ஒழுக்கத்தைக் கொண்ட அல்லது (வெம்) பராக்ரமம் பொருந்திய (கை) ஆற்றலை உடைய சுக்ரீவருடைய (வானர) சேனையை இலங்கைக்கு (கடல் கடந்து) போகும்படி விட வல்லவனும், ஜயத்தையே தரு சக்கரத்தை ஏந்தினவனுமான பெருமானாம் திருமால் மனம் மிக மகிழும் மருகனே!

வெள்ளைப்பட்டு அணிந்துளது போல நல்ல. (வனம்) அழகிய (கமுகமரம்) பாக்குமரங்கள் (எண்பட்டு) மதிக்கத்தக்க வகையில் பாளைகளை விரிக்கின்ற சோலைகள் மிக்குச் சூழ்வதால் வெயில் மறை படுகின்ற வயலூரில் வீற்றிருப்பவனே!

உன் கொங்கைக்கு ஒப்பாவது, (வடகிரி) மேருமலையே என்றும், உன் செங்கைக்கு (செவ்விய கைக்கு) நிகராவது நறுமணத் தாமரையே என்றும், உன் கூந்தலுக்கு இணையாவது (கரு) மேகமே என்றும் (வள்ளிமலைக்) காட்டிலிருந்த மங்கை - வள்ளியைக்

கும்பிட்டு வணங்கி ஆசையுடன் கொஞ்சிப் பேசி இனிய சொற்களைக் கொண்டு (அந்த வள்ளியைப்) பாடிப் பரவின இளையவனே! கொங்கு நாட்டுப் பட்டாலி நகரில் வீற்றிருக்கும் பெருமாளே!

(வம்பிற் சுற்றாது பரகதி அருள்வாயே)

## திருமுருகன் பூண்டி

## 946.

(உன்னைப் பணிவது இன்றியமையாததென உணர்ந்து) அவசியமென அறிந்து, உன்னைப் பணிந்து (வேண்டிப் பலகாலும்) பலகாலும் வேண்டி - பல முறையும் பிரார்த்தித்து

---

தொடர்ச்சி: ** "சுந்தரர்க்குப், பறித்த பொருள்கள் அனைத்தினையும் பரிசு கொடுக்கும் பரமர்திரு, முருகன் பூண்டி யினிதுறையும் முருகா தாலோ தாலேலோ" (க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ்) திருமுருகன் பூண்டி. கொங்கு மண்டலத்தைச் சார்ந்தது:-

"சுந்தரர் சொற்றமிழ்க்கா, அனத்தின் நடையுடை யாள்பாகன் தென்முரு காபுரிசூழ், வனத்தில் அடித்துப் பறித்ததுவுங் கொங்கு மண்டலமே" - கொங்கு மண்டல சதகம்-15.

†† உன் வேண்டி - உன்னை வேண்டி.

அறிவினுணர்ந்த *தாண்டுக் கொருநாளில்;
தவசெபமுந் தீண்டிக் கனிவாகிச்-
**சரணமதும் பூண்டற் கருள்வாயே;**
சவதமொடுந் தாண்டித் † தகரூர்வாய்-
‡ சடுசமயங் காண்டற் கரியானே;
Xசிவகுமரன் பீண்டிற் பெயரானே-
**திருமுருகன் பூண்டிப்** பெருமாளே.(1)

## அவிநாசி.

[திருப்பூர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடக்கு 8-மைல். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது. ஸ்தல புராணம் உண்டு].

## 947. வீடு பெற

தனதானத் தனதான

இறவாமற் பிறவாமல் - எனையாள்சற் குருவாகிப்;
Oபிறவாகித் **திரமான - **பெருவாழ்வைத் தருவாயே;**
குறமாதைப் புணர்வோனே - குகனேசொற் குமரேசா;
அறநாலைப் புகல்வோனே - **அவிநாசிப்** பெருமாளே.(1)

---

***ஆண்டுக் கொருநாளில் தவசெபம் தீண்டுதல்:** இங்ஙனம் ஆண்டுக்கொரு முறையேனும் ஆண்டவனைத் தரிசிக்கும் அநுட்டானத்தை இப்போது ஆண்டு தோறும் டிசம்பர் இறுதி நாளில் இரவு திருத்தணியில் கூடிப் பாடுவதில் அன்பர்கள் மேற்கொண்டிருக்கிறார்கள். அருணகிரிநாதர் வரலாறு-பக்கம் 75, 127

† ஆட்டு வாகனம்:- பாடல் 677-பக்கம் 58 கீழ்க்குறிப்பு

‡ "அறுவரும்...தெரிவரும் சத்யம்" - திருப்புகழ் 456.
"சமய பஞ்சபாதகர் அறியாத...சரண புண்டரீகம்" -திருப்புகழ் 674.

X 'சிவகுமர அன்பு ஈண்டில் பெயரானே' எனப் பிரித்துக் கொள்க.
"உள்ளம் உருகில் உடனாவார்" -சம்பந்தர் 2-111-3; திருவுந்தியார் 7.

O பிறவாகி - "ஊரே பேரே பிறவே" - திருப்புகழ் 954.

** திரம் - முத்தி.

என்னுடைய அறிவில் உன்னை யுணர்ந்து, வருஷத்திற்கு ஒரு தினமாவது

தவ ஒழுக்கத்தையும் ஜெப ஒழுக்கத்தையும் மேற்கொண்டு உள்ளங் கனிந்து-

உன்னுடைய திருவடியையும் (மனத்தே) தரிப்பதற்கு நீ அருள்புரிவாயாக.

(சவத மொடும்) 'இதை அடக்குவேன்' என்னும் ப்ரதிக்ஞையொடு குதித்து ஆட்டின்மீது ஏறி அதை (ஊர்வாய்) செலுத்துவாய்;

ஆறு சமயத்தவராலும் காணுதற்கு அரியவனே!

சிவகுமரனே! அன்பு கொண்டு நெருங்கில், அங்ஙனம் நெருங்கினவரை விட்டுப் பிரியாதவனே!

**திருமுருகன் பூண்டி** என்னுந் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(சரணமதும் பூண்டற் கருள்வாயே)

## அவிநாசி
## 947.

**இ**றவா வரந்தந்தும், பிறவா வரந்தந்தும்- எனையாண்டருளும் குருவாகியும்,

வேறு துணையாகியும் (ஸ்திரமான) நிலையான- அழியாததான (அல்லது முத்தியாகிய) - பெருவாழ்வை- மோக்ஷவீட்டைத் தந்தருளுவாயாக,

குறமாது (வள்ளியை)ச் சேர்பவனே! - குகனே! (எல்லாராலும்) புகழப்படுகின்ற குமரேசனே!

அறம், பொருள், இன்பம் வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களையும் உபதேசிப்பவனே - **அவிநாசியில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(பெருவாழ்வைத் தருவாயே)

## 948. திருவடியை மறவேன்

தந்தத்தத் தானன தானன
தந்தத்தத் தானன தானன
தந்தத்தத் தானன தானன தனதான

பந்தப்பொற் பாரப யோதர
முந்திச்சிற் றாடகை மேகலை
பண்புற்றுத் *தாளொடு மேவிய துகிலோடே-

பண்†டெச்சிற் சேரியில் வீதியில்
கண்டிச்சிச் சாரொடு மேவியெ
பங்குக்கைக் காசுகொள் வேசியர் பனிநீர்தோய்;

கொந்துச்சிப் பூவணி கோதையர்
சந்தச்செத் தாமரை வாயினர்
கும்பிட்டுப் பாணியர் வீணிய ரநுராகங்-

கொண்டுற்றுப் பாயலின் மூழ்கினு
மண்டிச்செச் சேயென வானவர்
கொஞ்சுற்றுத் தாழ்பத **தாமரை** **மறவேனே;**

அந்தத் ‡தொக் காதியு Xமாதியும்
வந்திக்கத் தானவர் வாழ்வுறும்
அண்டத்துப் பாலுற மாமணி யொளிவீசி-

Oஅங்கத்தைப் பாவைசெய் தாமென
சங்கத்துற் றார்தமி ழோதவு
வந்து **க்கிட் டார்கழு வேறிட வொருகோடிச்;

---

* "சேலை காலில் விழ விட்டு" - பாடல் 964.

† வேசையரை - "பலர் எச்சிற் காசைக் காரிகள்" என்றாராதலின் (488-ஆம் பாடல்) எச்சிற் சேரி - வேசியர் சேரியாகும்.

‡ தொக்கு ஆதி - சரீர சிருட்டிக்குத் தலைவ னான பிரமன்.

X ஆதி - 'ஆதிமூலம்' என்னும் விஷ்ணு.

O எலும்பைப் பெண்ணாக்கினது
- பாடல் 697-பக்கம் 108 கீழ்க்குறிப்பு.

** கழுவேறினது - பாடல் 181-பக்கம் 420 கீழ்க்குறிப்பு.

## 948.

(பந்தம்) ரவிக்கையால் கட்டப்பட்ட (அல்லது திரண்ட), அழகிய, கனத்த,(பயோதரம்)கொங்கை,உந்தி வயிற்றில் கட்டப்பட்டுள்ள, சிறிதாக ஆடு அகை (அசைந்து விளங்கும்) மேகலை (இடையணி, இவை நன்கு பொருந்தி, பாதம் வரைக்கும் தொங்குகின்ற ஆடையுடனே

பழமையாயிருக்கும்(எச்சில் சேரியில்) பரத்தையர் சேரியில் உள்ள தெருவில் (நின்று) (வருபவர்களை)க் கண்டு - பார்த்து, இச்சிச்சாரொடு - தம்மை இச்சித்து விரும்புபவர்களுடன் (மேவியே) பொருந்தியே, தம்முடைய பங்குக்குரிய (உடல் விற்பனைக்கு உரிய) காசைப் பறிக்கின்ற வேசையர் - விலைமாதர், பன்னீர் தோய்ந்துள்ள

(கொந்துச்சி) உச்சியில் (முடியில்) கொந்துப்பூ அணி-பூங்கொத்தாகிய மலர்களை (அல்லது பூங்கொத்தையும், உச்சிப்பூ என்னும் தலையணியையும்) அணிந்துள்ள கோதையர் (பெண்கள்), அழகிய செந்தாமரை போன்ற வாயிதழை உடையவர், (கும்பிட்டுப்பாணியர்) வணக்கத்தைக் காட்டும் கைகளை அல்லது சொற்களை உடையவர் (கும்பிட்டுப் பேசுபவர்கள்), வீண் காலம் போக்குபவர்கள் - (இத்தகையோர்மீது) காம இச்சை

(நான்) கொண்டு அவர்களிடமே பொருந்தி அவர்களுடைய படுக்கையில் முழுகினபோதிலும். (மண்டிச் செச்சே யென வானவர்) தேவர்கள் (மண்டி) உனை நெருங்கி ஜேஜே என்று (வாழ்த்தி)க் கொஞ்சுதல் செய்து - தாழும் - வணங்குகின்ற உன் பாத தாமரையை (நான்) மறவேன்;

அந்தத் (தொக்காதியும்) சரீர ஸ்ருஷ்டிக்குத் தலைவனான பிரமனும், (ஆதியும்) ஆதிமூலமெனுந் திருமாலும், வந்திக்கத்தான் வணங்கித் துதிக்கவேதான் - துதிக்கும்படி அவரவர் வாழ்கின்ற (அண்டத்துப் பாலுற) அண்டங்காளகிய இடங்களில் சேர்ந்து வாழவும், (மாமணி ஒளிவீசி) அழகிய ரத்னமாலையின் ஒளிவீச-

எலும்பினின்றும் பெண்ணைப் படைக்கின்றோம் என்று சங்க காலத்துப் புலவர்களின் தமிழ் போன்ற செந்தமிழ்ப் பாடலை நீ ஓதவும், (உவந்து கிட்டார்) உன்னுடைய அருமை பெருமை தெரிந்து மகிழ்ந்து உன்னைச் சேராதவர்களாகிய சமணர்கள் கழுவிலேறவும், ஒரு கோடிக்கணக்கான

சந்தச்செக் காளநி சாசரர்
வெந்துக்கத் தூளிப டாமெழ
சண்டைக்கெய்த் தாரம ராபதி குடியேறத்-
தங்கச்*செக் கோலசை சேவக
†கொங்கிற்றொக் காரவி நாசியில்
தண்டைச்‡சிக் காரயில் வேல்விடு
பெருமாளே (2)

## 949. யமபயம் அற வரவேணும்

தனத்த தந்தன தானன தானன
தனத்த தந்தன தானன தானன
தனத்த தந்தன தானன தானன தனதான

மனத்தி ரைந்தெழு மீளையு மேலிட
கறுத்த குஞ்சியு மேநரை யாயிட
மலர்க்க ணண்டிரு ளாகியு மேநடை தடுமாறி-
வருத்த முந்தர தாய்மனை யாள்மக
வெறுத்தி டங்கிளை யோருடன் யாவரும்
வசைக்கு றுஞ்சொலி னால்மிக வேதின
நகையாட;
எனைக்க டந்திடு பாசமு மேகொடு
சினத்து வந்தெதிர் சூலமு மேகையி
லெடுத்தெ றிந்தழல் வாய்விட வேபய முறவேதான்-
இழுக்க வந்திடு தூதர்க ளானவர்
பிடிக்கு முன்புன தாள்மல ராகிய
இணைப்ப தந்தர வேமயில் மீதினில் வரவேணும்;

---

* செக்கோல் - செங்கோல்.

† அவிநாசி - கொங்கு மண்டலத்தைச் சார்ந்தது-
"பூவென்ற சீரடி யாரூர்ப் பரவைதன் போகங்கொளும்
பாவென்ற செந்தமிழ்ச் சுந்தரன் பாடிப் படர்குளத்தில்
ஆவென்ற வாயின் முதலைகொள் பிள்ளையை யன்று கொண்டு
வாவென் றழைத்த அவிநாசி சூழ்கொங்கு மண்டலமே"
-கொங்கு மண்டல சதகம் 16.

‡ சிக்கார - சிங்கார.

(சந்தச்) - செ - (ரத்தம் ஒழுகுவதால்) சிவந்த - (சந்தம்) நிறத்தைக் கொண்டவர்களும், (காளம்) விஷகுணங் கொண்டவர்களுமான (நிசாசரர்) அசுரர்கள், (தீயைக் கக்கும்) பாணங்களால் வெந்து சிதறவும். (போர்க்களத்தில்) தூசி (படாம் எழ) போர்வைபோல் - திரைச்சீலை போல மேலே தூசி கிளம்பி எழவும், போரில் (எய்த்தார்) இளைத்தவர்களான தேவர்கள் அவர்களுடைய ஊராகிய அமராவதியில்- பொன்னுலகில் - குடியேறவும்

தங்கமயமான செங்கோல் (ஆட்சியை) அசை - புரிந்த (சேவக) பராக்ரமசாலியே! கொங்கு நாட்டில் (தொக்கு) சேர்ந்துள்ள **அவிநாசி** யென்னுந் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே! தண்டையணிந்த பெருமாளே! (சிங்கார) அழகிய (அயில்) கூரிய வேலாயுதத்தைச் செலுத்தும் பெருமாளே!

(பத தாமரை மறவேனே)

## 949.

**ம**னம் (திரைந்து) சுருங்கி வேதனைப்படும்படி எழுகின்ற (அல்லது நெஞ்சில் இரைந்து ஒலியுடன் எழுகின்ற) (ஈளை) கோழை அதிகரிக்கவும், கருநிறமுள்ள தலைமயிர் நரை கொண்டு வெளுக்கவும், தாமரை மலர் போன்றகண் (அண்டு இருளாகி) இருள் அண்டுதலாகி - கண் பஞ்சடைந்து - பார்வை குறையவும், நடை தடுமாற்றம் அடைவதாகியும்,

துன்பத்தைத் தர, தாய், மனையாள், குழந்தைகள் வெறுத்திடு அம் கிளையோர் - வெறுப்புக் கொள்ளும் நல்ல சுற்றத்தார், அவருடன் மற்றெல்லாரும் பழிக்கும்படியான சொற்களைச் சொல்வதால் பேச்சினைப் பேசி - நிரம்ப நாள்தோறும் பரிகசித்துச் சிரிக்க-

என்னைக் (கடந்திடு) அடக்கி வெற்றி கொள்ளும் பாசக்கயிறு கொண்டு கோபத்துடனே வந்து எதிர்த்துச் சூலத்தைக் கையில் எடுத்து அதை என்மேல் வீசி, அழல் - நெருப்பை வாய் கக்க, நான் பயங் கொள்ளும்படியே,

(என்னை) இழுக்கவந்திடும் (எம) தூதர்களானவர் (என்னை)ப் பிடிப்பதற்கு முன்பாக (நீ) உன்னுடைய தாள் தாமரையாகிய இருதிருவடிகளையும் அடியேனுக்குத் தரும் பொருட்டு மயில் மேல் வந்தருள வேண்டும்;

*கனத்த செந்தமி ழால்நினை யேதின
நினைக்க வுந்தரு வாயுன தாரருள்
† கருத்தி ருந்துறை வாயென தாருயிர் துணையாகக்-
கடற்ச லந்தனி லேயொளி சூரனை
‡ யுடற்ப குந்திரு கூறென வேயது
கதித்தெ ழுந்தொரு சேவலு மாமயில் விடும்வேலா;
Xஅனத்த னுங்கம லாலய மீதுறை
திருக்க லந்திடு மாலடி நேடிய
Oஅரற்க ரும்பொருள் தானுரை கூறிய குமரேசா;
அறத்தை யுந்தரு வோர்கன பூசுரர்
நினைத்தி னந்தொழு **வாரம ராய்புரி
யருட்செ றிந்தவி நாசியுள் மேவிய
பெருமாளே.(3)

---

* இந்த மகுட அடி மனப்பாடம் செய்யத் தக்கது. பண்பார்ந்த செந்-தமிழால் முருகனைப் பாடவேண்டும் என்பது அருணகிரியாரின் பேராசை;
'வேலுஞ்செஞ் சேவலும் செந்தமிழாற் பகரார்வம் ஈ"
-கந்தரலங்காரம் 52.

(1) "செந்தமிழ் வழுத்தியுனை அன்பொடு துதிக்க மனம் அருள்வாயே";
(2) "சித்திர நித்தத் தமிழாலுன் நாமத்தைக்
கற்றுப் புகழ்கைக்குப் புரிவாயே" ;
(3) "தமிழ்ச் சுவையிட்டு....எய்த்திட...அருள்வாயே"
(4) " செஞ்சொல் சேர் சித்ரத் தமிழாலுன் செம்பொனார்
வத்தைப் பெறுவேனோ";
(5) "சரணாரவிந்தமது பாட வண்டமிழ் விநோதம் அருள்வாயே;"
(6) "தமிழால் .....பாடென்று ஆட்கொ டருள்வாயே;"
(7) "தமிழிசையதாகவே மொழி செய்தே நினைந்திடுமாறு
**அருள்வாயே;"
(8) "சுத்தச் சித்தித் தமிழைத் திட்டத்துக்குப் புகலப்
பெறுவேனோ;"
(9) "தமிழ்க் கொற்றப் புகழ்ச் செப்பித் திரிவேனோ;"
(10) " செந்தமிழ் பாடும் புலப்பட்டம் கொடுத்தற்கும்
* * க்ருபைச் சித்தம் புரிவாயே;"
(11) "எனக் கென்றப் பொருட் டங்கத் தொடுக்குஞ் சொற்
றமிழ்த்தந்திப் படி யாள்வாய்".

-(திருப்புகழ் 398, 1303, 1024, 870, 758, 680, 584, 475, 468, 34, 33).

(தொடர்ச்சி 757 ஆம் பக்கம் பார்க்க)

பொருள் கனத்த - பொருள் செறிந்த செந்தமிழால் உன்னையே தினந்தோறும் நினைக்கவும் (தருவாய் உனதாரருள்) உன்னுடைய நிறைந்த திருவருளைத் தந்தருள வேண்டும்; (கருத்திருந் துறைவாய் என தாருயிர் துணையாக) என்னுடைய அருமை உயிர்க்குத் துணையாக நீ என்கருத்திலேயே பொருந்தி வீற்றிருந்தருளவும் வேண்டும்;

கடல் நீரிலே ஒளித்திருந்த சூரனுடைய உடலைப் பிரிவு செய்ய அது இரண்டு கூறாகத் தோன்றி எழுந்து ஒப்பற்ற சேவலும் அழகிய மயிலும் ஆகும்படி செலுத்திய வேலாயுதத்தை உடையவனே!

(அனத்தனும்) அன்னவாகனமேறும் பிரமனும், (கமலாலயமீதுறை) செந்தாமரைக் கோயிலின்மீது வீற்றிருக்கும் (திரு) இலக்குமி சேர்ந்துள்ள திருமாலும், ஆக இருவரும் அடி (முடி) தேடிய (அரற்கு) சிவபெருமானுக்கு அரிய பொருளை விளக்கி உபதேசித்த குமரேசனே!

அற நெறியை உபதேசிப்பவரும் (தருமோபதேசம் செய்பவரும்) பெருமை பொருந்திய அந்தணர்களும் உன்னை நாள்தோறும் தொழுபவர்களாய் (அமராய்புரி) அமர்ந்திருத்-தலை விரும்பியுள்ள(அவிநாசியுள் மேவிய பெருமாளே)! திருவருள் நிறைந்து (அடியார்களுக்கு அருள் நிறையப் பாலித்து) **அவிநாசி** யென்னுந் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே. (மயில் மீதினில் வரவேணும்)

---

*(தொடர்ச்சி): முருகவேளின் குழந்தைத் திருவிளையாடல்களைக் கூறுமிடத்து அவர் " செந்தமிழ் வடாதுகலை சேர்ந்துழி உலாவும்"- என்றார் கந்தபுராணத்தில் 1-14-5.*

† 'நினைக்கின்றேன் மனத்துன்னை வைத்தாய்' - சுந்தரர் 7-1-1.

‡ சூரன் இரு கூறானது:

'போராவுணன் அங்கம் இருகூறாய் அடல் மயிலும் சேவலுமாய்த்
துங்கமுடன் ஆர்த்தெழுந்து தோன்றுதலும்" - கந்தர் கலிவெண்பா.

திருப்புகழ் 737-பக்கம் 204 கீழ்க்குறிப்பு.

X அயனும் அரியும் சிவபிரானது அடிமுடி தேடினது:

- பாடல் 319-பக்கம் 292-கீழ்க்குறிப்பு.

O சிவனுக்கு உபதேசித்தது - பாடல் 327-பக்கம் 314-கீழ்க்குறிப்பு.

** அமராய்புரி - அமர்தலை உடையராய், புரி - புரிதல்.

- அமர் - அமர்தல் - முதனிலைத் தொழிற் பெயர்.

## திருப்புக்கொளியூர்.

[இஃது அவிநாசிக்குச் சமீபம். சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் முதலைவாயினின்றும் பிராமணப் பிள்ளையை மீட்டுக் கொடுத்தருளிய ஏரிக்குத் தெற்கில் இவ்வூர் இருந்ததாம். இப்பொழுது கொல்லை வெளியா யிருக்கின்றது.]

## 950. திருவடியை மறவேன்

தத்தன தானான தத்தன தானான
தத்தன தானான தனதான

பக்குவ வாசார லட்சண சாகாதி
பட்சண மாமோன சிவயோகர்-
பத்தியி *லாறாறு தத்துவ மேல்வீடு
பற்று†நி ராதார நிலையாக;
அக்கண மேமாய துர்க்குணம் வேறாக
‡ அப்படை யேஞான வுபதேசம்-
அக்கற வாய்பேசு சற்குரு நாதாவு
னற்புத **சீர்பாத** **மறவேனே;**

உக்கிர வீராறு மெய்ப்புய னேநீல
வுற்பல வீராசி மணநாற-
ஒத்X நி லாவீசு நித்தில நீராவி
யுற்பல ராசீவ வயலூரா;
பொக்கமி லாவீர விக்ரம மாமேனி
Oபொற்ப்ரபை யாகார அவிநாசிப்

---

* ஆறாறு தத்துவம் - பாடல் 294-பக்கம் 232 கீழ்க்குறிப்பு.

† பற்று நிராதார நிலையாக:-
"ஆதாரத்தாலே நிராதாரத் தேசென்று
மீதானத் தேசெல உந்தீபற
விமலற் கிடமதென் றுந்தீபற" - திருவுந்தியார் 8.

‡ "அப் படையே ஞான உபதேசம்" - இது "பரமசுக மவுன கட்கம்" (வேடிச்சி காவலன் வகுப்பு), 'மோன உரையில் உபதேச வாள்" திருப்புகழ் 828, " தனி ஞானவள்" கந்தரலங்காரம் 69, 'ஞானவாள் ஏந்தும் ஐயர்' (திருவாசகம் 46-1) என்றெல்லாம் குறிக்கப் பட்டுளது.

X நீராவியின் நிலாவீசு நித்திலத் தன்மை - இதனைக் "கண்ணாடியில் தடம்" என்றார் 908 ஆம் பாடலில்.

[தொடர்ச்சி 759 ஆம் பக்கம் பார்க்க.]

## திருப்புக்கொளியூர்

## 950.

**ப**க்குவமான - தக்கதான - ஆசார நிலையில்நின்று, லட்சணமான - பொருந்தியதான (சாகாதி) பச்சிலை முதலான உணவையே உண்டு, சிறந்த மோன நிலையில் நிற்கும் சிவயோகிகள்-

(தங்களுடைய) பக்தி நிலையில் முப்பத்தாறு தத்துவங்களுக்கும் மேற்பட்டதாயுள்ள மோக்ஷ வீட்டைப் பற்றுவதானதும், எப்பற்றுக்களும் அற்றதானதுமான, (நிலையாக) நிலையை நான் அடைவதாய்

அந்தக்ஷணமே, (அந் நிலையை அடைந்தவுடனே) - மாயமாகவந்து (என்னைப் பற்றியுள்ள) துர்க்குணம் எல்லாம் (வேறாக) என்னை விட்டொழிய (அல்லது துர்க்குணம் எல்லாம் மாய்ந்து என்னை விட்டுப் பிரிய), (அப்படையே ஞான உபதேசம்) அந்த ஞான உபதேசமே படையாக - ஞானமே (வாட்) படையாக

அக்கு - (அற) (பாசத்தின்) உரிமை எல்லாம் (அற்றுப்) போம்படி (வாய்பேசு) உபதேசமொழியை வாய்விட்டுரைத்த சற்குரு நானே! உன் அற்புத (அழகிய) திருவடிகளை நான் மறவேன்;

உக்கிர (ஊக்கம் மிக்க) பனிரண்டு புயங்களை யுடையவனே! மெய்ப் புயனே - உண்மை நெறியைக் காட்டும் புயங்களை உடையவனே! நீலோற்பல (வீ) மலர்களின் (ராசி) கூட்டங்களின் நறுமணம் வீச

பொருந்தினதாயுள்ள நிலவொளி வீசுவதும், முத்துப்போல் தெளிவு உள்ளதுமான(நீராவி) நீர் நிலைகள் (உற்பலம்) குவளைமலரையும் (ராசீவம்) தாமரையையும் கொண்ட வயலூரர்ப் பெருமானே!

(பொக்கம்) பொய் இல்லாத - மெய்ம்மையான வீரங் கொண்டவனே! விக்ரம - பராக்ரமசாலியே! (மாமேனி) அழகிய மேனி (நிறம்) பொன்னொளிவீசும் தேகத்தை- யுடையவனே! அவிநாசி என்னுந் தலத்தில்

---

(தொடர்ச்சி)O முருகவேள் "பொற் ப்ரபை ஆகாரம்"
"மாழைபொரு மேனியவ", " செம்பொன் மேனிய"

-திருப்புகழ் *161, 1304.*

*பொய்க்கலி போமாறு மெய்க்கருள் சீரான
புக்கொளி யூர்மேவு பெருமாளே.(1)

## 951. துதி

தனத்தத்தன தானன தானன
தனத்தத்தன தானன தானன
தனத்தத்தன தானன தானன தந்ததான

† மதப்பட்டவி சாலக போலமு
முகப்பிற்சன வாடையு ‡ மோடையு
மருக்கற்புர லேபல லாடமு Xமஞ்சையாரி-
O வயிற்றுக்கிடு சீகர பாணியு
**மிதற்செக்கர்வி லோசன †† வேகமு
‡‡ மணிச்சத்தக டோரபு ரோசமு மொன்றுகோல,
விதப்பட்டவெ ளானையி லேறியு
நிறைக்கற்பக நீழலி லாறியும்
விஷத்துர்க்கன சூளிகை மாளிகை யிந்த்ரலோகம்-

---

* இது கலியுகத்தில் நிகழ முடியாத ஒரு அற்புத நிகழ்ச்சியாய்க் கலி யுகத்தின் பொய்ம்மையை வெருட்டி நீக்கி, முதலை உண்ட பிள்ளையை முதலை வாயினின்றும் சுந்தரமூர்த்திப் பெருமான் மீட்டுக் கொடுத்த நிகழ்ச்சியைக் குறிக்கின்றது. பாட்டு 398 பக்கம் 506. இந்த நிகழ்ச்சி கலியின் பொய்ம்மையை விலக்கி, இறைவன் திருவருளின் மெய்ம்மையை நாட்டிற்று - என்கின்றார்.

† முதலிரண்டடியில் (ஐராவதம்) வெள்ளை யானையின் வர்ணனை.

‡ ஓடை - யானை நெற்றிப் பட்டம்.

"அண்ணல் யானை அணிந்த பொன்செய் ஓடை"

-புறநானூறு 326.

X மஞ்சு - யானை முதுகு; ஆர்தல் - பொருந்துதல்.

O வயிற்றுக்கிடு சீகர பாணி - பாணி - பறை; சீகரம் - செல்வச் செழிப்பு; யானை மீது பறை ஏற்றி வெற்றியைத் தெரிவித்தல் வழக்கம்:

"வையம் அறிய....யானைப் பிணர் எடுத் தேற்றிப்
பறை விட்டன்றால்" - பெருங்கதை 3-27-219.

** மிதல் - மிதத்தல் - மிகுதல்:

†† யானையின் வேகம் - வாயு வேகம், மனோ வேகம் போன்ற தென்பர்-

"கால் கிளர்ந்தன்ன வேழம்" -திருமுரு - 82 (கால்-வாயு)

[தொடர்ச்சி 761 ஆம் பக்கம் பார்க்க]

(பொய்க்கலி போமாறு) கலியின் பொய்ம்மை (அசத்திய) நிலை நீங்குமாறு, இறைவனுடைய திருவருளின் மெய்ம்மை நிலை சீரோங்கி-புகழோங்கி விளங்கினதுமான திருப்புக் கொளியூர் என்னுந் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே.

(உன் அற்புத சீர்பாத மறவேனே)

## 951.

மதம் பெருகுவதற்கு இடமானதும், விசாலமானதுமான (கபோலமும்) கதுப்பும் (மதம் பாயும் இடமும்), முன் புறத்தில் (சன்ன ஆடையும்) நுண்மையான முகபடாமும். (ஓடை) நெற்றிப் பட்டமும், மரு (வாசனை பொருந்திய) பச்சைக் கற்பூரம் கூடிய (இலேபம்) பூச்சு (கலவையைக்) கொண்ட (லலாடமும்) நெற்றியும் (மஞ்சையாரி) மஞ்சை - யானையின் முதுகை - முதுகில் - ஆரி பொருந்தும்படி-

வயிற்றில் இடுகின்ற செல்வச் செழிப்பைக் காட்டும் (பாணியும்) பறையும் (முரசும்), (மிதல்) மிதத்தலைக் காட்டும் - மிகவும் சிவந்த கண்களும், அதிவேகமாகச் செல்லும் செலவும், மணிகளின் சப்தம் மிகப் பலமாகக் கேட்கும்படிக் கட்டப்பட்ட கழுத்துக் கயிறும் - இவையெலாம் பொருந்திய அழகிய-

கோலத்தைக் கொண்ட வெள்ளையானை (ஐரா-வதத்தின்) மீது ஏறி பவனி வந்தும், நிறைந்து செழிப்பு உற்ற கற்பக விருக்ஷ நீழலில் அமைதியா யிருந்தும், விஷத்துர்க்கன-(விஷம்) விடம், துர்க்கம், அன்ன - (விடம்) மலை, (துர்க்கம்) மலைக் கோட்டை, (அன்ன) போன்ற - மலைக் கோட்டை போன்றனவும், (சூளிகை) - நிலா முற்றங்களை உடையனவு-மான (மாளிகை) அரண்மனைகளை உடைய தேவேந்திர லோகத்தில் - பொன்னுலகத்தில்-

---

"சிந்தையின் ஒழிக்கும் செலவிற் றாகி **
இந்திரன் களிற்றொ டிணைந்துடன் பிறந்த
இரும்பிடி - பெருங்கதை 1-42-215-19.

‡‡ மணி - "கயிறு பிணிக்கொண்ட கவிழ்மணி
மருங்கிற் பெருங்கை யானை" - புறநானூறு 3.

புரோசம் - புரோசை - யானை கழுத்திலிடும் கயிறு -
"மணியும் புரோசையும்" "வீக்குறு புரோசை"

-பெருங்கதை 1-53-33; 1-49-12.

விளக்கச்சுரர் சூழ்தர வாழ்தரு
பிரப்புத்வகு மாரசொ ரூபக
* வெளிப்பட்டெனை யாள்வய லூரிலி ருந்தவாழ்வே;

இதப்பட்டிட வே†கம லாலய
வொருத்திக்கிசை வானபொ னாயிர
மியற்றப்பதி தோறுமு லாவிய தொண்டர்தாள-
இசைக்கொக்கவி ராசத பாவனை
யுளப்பொற்றொடு பாடிட வேடையி
லிளைப்புக்கிட வார்மறை யோனென வந்துகானிற்

றிதப்பட்டெதி ரே‡பொதி சோறினை
யவிழ்த்திட்டவி நாசியி லேவரு
திசைக்குற்றச காயனு மாகிம றைந்துபோமுன்

---

* இது வயலூர் முருகன் அருணகிரியாரின் கனவில் வந்து அருளிய வரலாற்றைக் குறிப்பது: திருப்புகழ் - பாடல் 916, 105, 271 (அடி எட்டின் பாடபேதம் - பக்கம் 176 கீழ்க்குறிப்பு) பார்க்க.

† கமலாலய ஒருத்தி - திருவாரூரிற் பரவையார்.

திருவிழாக் காணவரும் அடியார்களுக்குப் பொன், மணி, துணி, அமுது முதலியன கொடுத்து உபசரிப்பது பரவையாரின் வழக்கம். அந்தப் பணி நிறைவேறுதற் பொருட்டே சுந்தரர் இறைவனிடம் பொன் வேண்டுவார்.

**சுந்தரர் பொன் வேண்டின இடங்கள்:** (1) **திருப்புகலூர்.**

'செறிபுன் சடையார் திருவாரூர்த் திருப்பங் குனியுத் தரத்திருநாள்
குறுக வரலும் பரவையார் கொடைக்கு விழாவிற் குறைவறுக்க
நிறையும் பொன்கொண் டணைவதற்கு நினைந்து நம்பி திருப்புகலூர்
இறைவர் பாதம் பணிய எழுந் தருளிச் சென்றங் கெய்தினார்"
- பெரிய புரா. ஏயர்கோன்-46.

(2) **திருப்பாச்சிலாச்சிராமம்.**

"நன்று பெருகும் பொருட்காதல் நயப்புப் பெருக நாத ரெதிர்
நின்று பரவி" - பெரிய புரா. (ஏயர்கோன்-79.)

(3) **விருத்தாசலம்.** (திருமுதுகுன்றம்)

"நாதர்பாற் பொருள்தாம் வேண்டி....குறிப்பொடும் பரவும் போது,
** பனிமதிச் சடையார் தாமும் பன்னிரண் டாயிரம் பொன்....
நல்கிட (பெரிய புரா-ஏயர்கோன்-106, 107)

இந்தப் பன்னிரண்டாயிரம் பொன்னும் பரவையாரின் பொருட்டே:

[தொடர்ச்சி 763 ஆம் பக்கம் பார்க்க]

(விளக்க) புகழ் கொண்ட தேவர்கள் சூழ்ந்து பணிய வாழ்கின்ற - பிரபுவாம் தன்மை கொண்ட - ஆட்சி புரியும் - இளைஞனாம் திருவுருவம் உடையவனே! பிரத்யக்ஷமாக (என் முன் வந்து) என்னை ஆண்டருளிய வயலூரில் வீற்றிருந்தருளும் செல்வனே!

இன்பம் அடையுமாறு திருவாரூரிலிருந்த பரவையாருக்கு ஏற்றதான பொன் ஆயிரத்தைச் சம்பாதிக்க - பெறவேண்டித் - தலங்கள் தோறும் சென்று தரிசித்த தொண்டர் (அடியராம் சுந்தரர்), தாளத்தின்

இசைக்குப் பொருந்தும்படி (ராசத பாவனை) உறுதியான முயற்சித் தெளிவுடன், உள்ளப் பெருக்கத்துடன் (நிறைந்த பத்தியுடன்), பதிகம் பாடி வருகையில், (வேடையில்) கோடைக்கால வெப்பத்தால் அவருக்கு உண்டான இளைப்பு (உக்கிட) நீங்க, (வார்) நேர்மையான (அல்லது ஆர் - அருமையான) மறையவர் கோலத்துடன் (சுந்தரர் வந்து கொண்டிருந்த) காட்டிலே வந்து-

திதப்பட்டு - நிலையாகவே - ப்ரத்யக்ஷமாய் (சுந்தரரின்) எதிரே தோன்றித் (தாம் கொண்டுவந்த) கட்டுச் சோற்றை அவிழ்த்துத் தந்தவரும், அவிநாசித் தலத்துக்கு (சுந்தரர் வரும்போது) திசை தடுமாறி அவர் மயங்கினபோது - அவருக்குச் செல்லவேண்டிய திசையைக் காட்டச் சகாயனாய் வந்து உதவி செய்து மறைந்து போனவரும், (சில ஆண்டுகளுக்கு) முன்பு

---

"எனக்குச், செம்பொனைத் தந்தருளித் திகழும் முதுகுன் றமர்ந்தீர்
வம்பமருங் குழலாள் பரவை யிவள் வாடுகின்றாள்
எம்பெருமா னருளீர் அடியே னிட்ட ளங்கெடவே" - (சுந்த. 7-25-2)

‡ **மறையோனாய் வந்து சுந்தரருக்குப் பொதிசோறு அளித்ததும், திசைக்குற்ற துணை செய்ததும்:**

சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவிநாசி என்னும் தலத்தைத் தரிசிக்கும் பொருட்டுக் காட்டு வழியிற் செல்லும்போது வெப்பத்தினால் இளைப்பும் பசியும் அவரை வருத்தின. அப்போது சிவபிரான் மறையவர் திருக் கோலத்துடன் சுந்தரரின் எதிர் தோன்றி அவருக்குப் பொதிசோறும் நீரும் தந்து அவரது இளைப்பை ஆற்றினர்.

[764 ஆம் பக்கத் தொடர்ச்சி]

செறிப்பித்த *கராவதின் வாய்மக
வழைப்பித்தபு ராணக்ரு பாகர
திருப்புக்கொளி யூருடை யார்புகழ் தம்பிரானே.(2)

## 952. ஞானம் உற

தனத்தத்தன தான தான தானன
தனத்தத்தன தான தான தானன
தனத்தத்தன தான தான தானன தந்ததான

வனப்புற்றெழு கேத மேவு கோகிலம்
அழைக்கப்பொரு மார னேவ தாமலர்
மருத்துப்பயில் தேரி லேறி மாமதி †தொங்கலாக
மறுத்துக்கடல் பேரி மோத வேயிசை
பெருக்கப்படை கூடி மேலெ ழாவணி
வகுத்துக்கொடு சேம மாக மாலையில்
வந்துகாதிக்;
கனக்கப்பறை தாய ளாவ நீள்கன
கருப்புச்சிலை காம ரோவில் வாளிகள்
களித்துப்பொர வாசம் வீசு வார்குழல்
மங்கைமார்கள்-

---

[763-ஆம் பக்கத் தொடர்ச்சி]

"கரதல கமண்டலத்திற் கங்கைநீர் கவினத் தூக்கி
விரதவே தியர்போல் நேரே விரைந்தெழுந் தருளி யந்தோ
பரதவித் திளைத்து வந்தீர் பாதேயம் உளது சற்றிங்
கிரதமின் றெனினும் உண்பீர் பசிக்கின்பம் எய்தும் என்றார்"

பின்னர் சுந்தரர் "ஐயா! புக்கொளியூர் அவிநாசிக்குப் போகும் திசை தெரியவில்லை; எத்திசை போகவேண்டும் அருளுக" என்று அந்த மறையரைக் கேட்க, அவர் "இதோ! இந்த மேற்குத் திசை நெறியிலே போகவும்" எனக் கூறிப் புக்கொளித்தனர்.

"கொங்கில்வா ரணவா சிக்கு, நெறியெது என்று கேட்ப
நேர் குட திசைபோ என்று, பிறிதிணை யில்லா வாய்மை
பேசிநின் றொளித்தா ரன்றே"-

"குறைந்த புன் மதியி னேற்குக் கொணர்ந்தமு தளித்தாய் போற்றி
உறைந்துபுக் கொளிசென் றேற உயர்நெறி உரைத்தாய் போற்றி
மறைந்த வான் பொருளே போற்றி"

- அவிநாசிப் புரா-சுந்தர-244, 246, 247.

---

* முதலை வாயினின் றும் பிள்ளையை மீட்டது"

- பாடல் 398-பக்கம் 506, பாடல் 446-பக்கம் 621.

[தொடர்ச்சி 765 ஆம் பக்கம் பார்க்க]

(ஏரியிற் சேர்ந்திருந்த முதலையின் வாயினின்றும் (அது உண்ட) பிள்ளையைச் (சுந்தரர் பாட்டுக்கு இணங்கி) (அது கரையிற் கக்கும்படி) வரச் செய்தவருமான பழையராம் கருணாகரமூர்த்தி, **திருப்புக்கொளியூர்** என்னும் தலத்தை உடையவராய் வாழ்பவர் - ஆகிய சிவமூர்த்தி புகழும் தம்பிரானே!

## 952.

அழகு கொண்டு எழுகின்றதும், துக்கம் விளைவிப்பதுமான (எக்காளமான) குயில் அழைக்க, (பொருதற்கு) போரிடுவதற்கு வரும் மன்மதன் தனது பாணங்களாகிய மலர் கொண்டு, தென்றற்காற்றாகியதேரில் ஏறிக்கொண்டு, அழகிய சந்திரன் வெண் குடையாக விளங்க,

(அலைகள் மாறி மாறிவரும்) கடலானது முரசப்பறையாய் மோத, புல்லாங்குழல் இன்னிசையைப் பெருகச்செய்ய, (படைகூடி) சேனையாகிய மகளிர்கூடி மேலெழுந்து புறப்பட்டு ; அணிவகுத்ததுபோல வரிசை வரிசையாக வகுத்துக் கொண்டு, நன்றாக மாலை நேரத்தில் வந்து கொல்லுவது போலக்

(கனக்க) மிகுதியாக பறையொலி விரிந்து பரவுதலாக, நீண்ட பெருமைவாய்ந்த (கருப்புச்சிலைகாமர்) காமர் கருப்புச்சிலை - அழகிய தனது கரும்பு வில்லில், ஓவில் (ஓவுதலில்லாது) - இடையறாது (வாளிகள்) அம்புகளைக் களிப்புடனே - மகிழ்ச்சியுடன் வீசிப் (பொர) என்னுடன் போர் செய்வதால் நறுமணம் பரந்து நீண்ட கூந்தலையுடைய மாதர்களின்

---

(தொடர்ச்சி:) † தொங்கல் - வெண்குடை. மன்மதனுக்குக் குயில்-எக்காளம்; பாணம் - மலர்கள்; தென்றல் - தேர்; சந்திரன்-குடை; கடல் - முரசு; மகளிர் - படை, சேனை; கரும்பு - வில்; மாலை - இலஞ்சி, மகிழம்பூ; மஞ்சள் சோலை - படை வீடு; கமுகம் பாளை - கவரி; மல்லிகை - தம்பலம் துப்பும் கலசம்; தாழம்பூ - வாள்.

'தொடை இலஞ்சி; மஞ்சளிளஞ் சோலை படை வீடு;
படைமங்கை யர்கமுகம் பாளை - யிடுகவரி;
காளாஞ்சி மல்லிகையாம்; காரிகையீர் மாரனுக்கு
வாளாமோ லைப்பூவு மால்

இரத்தினச் சுருக்கம் - பாடல் 555-பக்கம் 266-கீழ்க்குறிப்பு.

கலைக்குட்படு மாகி மாயும
துனக்குப்ரிய மோக்ரு பாக ராஇது
கடக்கப்படு நாம மான ஞானம
தென் றுசேர்வேன்;
புனத்திற்றினை காவ லான காரிகை
தனப்பொற்குவ டேயு மோக சாதக
குனித்தப்பிறை சூடும் வேணி நாயகர் நன்குமாரா-
*பொறைக்குப்புவி போலு நீதி மாதவர்
சிறக்கத்தொகு பாசி சோலை மாலைகள்
புயத்துற்றணி பாவ சூர னாருயிர்
கொண்டவேலா;
சினத்துக் †கடி வீசி மோது மா‡கட
லடைத்துப்பிசி தாச னாதி மாமுடி
தெறிக்கக்கணை யேவு வீர மாமனும் Xஉந்திமீதே-
செனித்துச்சதுர் வேத மோது நாமனு
மதித்துப்புகழ் சேவ காவி ழாமலி
**திருப்புக்கொளி** யூரில் மேவு தேவர்கள்
தம்பிரானே.(2)

## பேரூர்

[கோயமுத்தூர் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 3-மைல். தேவார வைப்புஸ்தலம். ஸ்தலபுராணம் உண்டு.]

## 953. ஞானோபதேசம் பெற

தானாத் தனதான

தீராப் பிணிதீர - சீவாத் துமஞான;

---

* பொறுமைக்குப் பூமியை உதாரணமாக எடுத்துக் காட்டுவர்.
"அகழ்வாரைத் தாங்கும் நிலம் போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை" - திருக்குறள் 151.
"பொறையுடைய பூமி நீரானாய் போற்றி" - அப்பர் 6-56-1.
† கடி - விரைவாக.
‡ கடலை அடைத்தது - பாடல் 754-பக்கம் 248-கீழ்க்குறிப்பு.
X திருமாலின் உந்தியில் (நாபியில்) உதித்தவன் பிரமன்:-
"மாலும் மொய்யொளி உந்தியில் வந்திங் கருமறை யீந்த
உரவோனும்" - சம்பந்தர் 1-100-9.

கலைக்குள் (ஆடையுள்-அல்லது அவர்கள் சம்பந்தமான கொக்கோக சாத்திரத்துள்) படு - அகப்பட்டு, (அல்லது கலைக்கு உட்படு - கலைக்கு உட்பட்டு) பேதமாகி - மனம் வேறுபட்டு, நான் இறந்து படுவது உனக்குப் பிரியந்தானோ! கருணாகரனே! இந்த என் தலை விதியைத் தாண்டிக் கடக்கக் கூடியதும், பெருமை பொருந்தியதுமான ஞான நிலையை நான் என்று கூடுவேன்!

(வள்ளிமலை)த் தினைப் புனத்தில் காவல் செய்து வந்த பெண்ணின் வள்ளியின் கொங்கையாகிய பொன் மலையில் பொருந்தின மோகத்தை (ஆசையைக்) கொண்ட ஜாதகத்தையுடையவனே! வளைவுள்ள பிறையைச் சூடும் சடையையுடைய பெருமானுடைய நல்ல புதல்வனே!

பொறுமைக்குப் பூமியைப் போலும் என்றபடி, (பொறுமையுள்ள) நீதி கொண்ட மகா தவசிகள் சிறப்புற்று வாழ, நெருங்கிய பசிய (பசுமை பொருந்திய - குளிர்ந்த) சோலையிலுள்ள மலராலாய மாலைகளைப் புயத்திலணிந்துள்ளவனும், பாவியுமான சூரனுடைய அரிய உயிரை வவ்விய வேலனே!

கோபித்து வேகமாக அலைகளை வீசி மோதுகின்ற பெரிய கடலை (அணையிட்டு) அடைத்து (பிசிதாசனாதி) பிசித - அசன - ஆதி -மாமிசமுண்ணும் அரக்கர் முதல்வனான ராவணனுடைய சிறந்த தலை முடிகள் அற்றுவிழப் பாணத்தை ஏவின வீரம் பொருந்திய மாமனாகிய திருமாலும், அவருடைய கொப்பூழிலே-

உதித்து நான்மறையோதும் (நாமன்) பெருமை பொருந்திய பிரமனும் நன்மதிப்பு வைத்துப் புகழ்கின்ற பராக்ரமசாலியே! திருவிழாக்கள் நிறைந்து பொலியும் **திருப்புக்கொளியூர்** என்னுந் தலத்தில் வீற்றிருக்கும் தம்பிரானே! தேவர்கள் தம்பிரானே!

(ஞானம தென்று சேர்வேன்)

## பேரூர்

## 953.

முடிவே இல்லாத பிணி (பிறவி நோய்) முடிவு பெற - சீவனாகிய ஆத்துமாவைப் பற்றிய இந்தச் சிற்றுயிர்க்கு உற்ற ஞான நிலையைத் தருவதும்-

ஊராட் சியதான - ஓர்வாக் கருள்வாயே!

பாரோர்க் கிறைசேயே - பாலாக் கிரிராசே;

பேராற் பெரியோனே - பேரூர்ப் பெருமாளே.(1)

## 954. வீடு பெற

தத்த தானன தத்த தானன
தானா தானா தானா தானா தனதான

மைச்ச ரோருக நச்சு வாள்விழி
மானா ரோடே நானார் நீயா ரெனுமாறு-

வைத்த போதக சித்த யோகியர்
வானாள் கோனாள் வீணாள் காணா
ரதுபோலே;

நிச்ச மாகவு மிச்சை யானவை
நேரே தீரா* வூரே பேரே பிறவேயென்-

நிட்க ராதிகண் முற்பு காதினி
நீயே தாயாய் நாயேன் மாயா தருள்வாயே;

---

* "ஊர், பெற்றதாய், சுற்றமா யுற்றதாள்" - திருப்புகழ் 1036.

பிறவே! - 'குருவாகிப் பிறவாகி' - திருப்புகழ் 947.

உலக முழுவதையும் ஆட்சி செய்யக்கூடியதுமான - ஓர் (ஒப்பற்ற) உபதேச மொழியொன்றை (எனக்கு) உபதேசித்தருளுக;

உலகோர்க்குத் தலைவனான சிவனது குமாரனே! (அல்லது உலகோர்க்கு (இறை) தலைவனே! சேயே - செவ்வேளே) பாலா - இளையோய், மலையரசே - (குறிஞ்சிவேந்தே)!

புகழாற் பெரியவனே! - பேரூர்ப் பெருமாளே!

(ஓர்வாக் கருள்வாயே)

## 954.

**மை** பூசியுள்ளதும், (சரோருகம்) தாமரை போன்றதும், (நஞ்சு) விஷம் போன்றதும், வாள் போன்றதுமான கண்களைக் கொண்ட பெண்களுடனே, நான் யார் நீ யார் என்னும் வகையில் (மாதர் மயக்கால் சிறிதேனும் தாக்கப்படாதவராய்)

(தங்கள் மன நிலையை) வைத்துள்ள ஞானத்துடன் கூடிய நெஞ்சினராகிய (அல்லது சித்தராம்) யோகிகள் தமது வாழ் நாள், கோள் நாள் (கோளாலும், நாளாலும்) கிரக தோஷத்தாலும் நக்ஷத்திர தோஷத்தாலும், வீணாகப் போம்படியான நாளாகாக் காணமாட்டார் (யோகியர் தங்கள்வாழ்நாளை க்ரஹ சேஷ்டையால் தாக்குண்டு வீணாகப் போக விடமாட்டார்); அது போலவே

(நிச்சமாகவும்) உறுதியாக (அல்லது எப்பொழுதும்) (இச்சையானவை) மண், பெண், பொன் என்னும் மூவாசைகள் (நேரேதீரா) ஒரு வழியாக முடிவு பெறுவதில்லை; - ஆதலால் (ஊரே, பேரே, பிறவே) எனது சொந்த ஊர்போல் இனியவனே! என் பேர் போல இனியவனே! (பிறவே) - எனக்கு இனிய பிற பொருள்களும் ஆனவனே! (நிஷ்கராதிகள் என்முன் புகாது) என்னை

(நிஷ்கராதிகள்) நிச்சயமாய்ப் பீடிக்கின்றவைகளாகிய மூவாசைகள், மும்மலங்கள், முக் குற்றங்கள், முக் குணங்கள் முதலிய) எவையும் முற்பட்டு என்னைத் தாக்காதபடி, இனிமேல், நீயே தாய்போல் என்மீது அன்பு பாராட்டி அடியனேன் இறந்துபோகா வண்ணம் அருள் புரிவாயாக;

*மிச்ச ரோருக வச்ர பாணியன்
வேதா வாழ்வே நாதா தீதா வயலூரா-
வெற்பை யூடுரு வப்ப டாவரு
வேலா சீலா பாலா காலா யுதமாளி;
† பச்சை மாமயில் மெச்ச வேறிய
பாகா சூரா வாகா போகா தெனும்வீரா-
‡பட்டி யாள்பவர் Xகொட்டி யாடினர்
பாரு ரொசூழ் பேரு ராள்வார் பெருமாளே.(2)

[690-ஆம் பாடலையும் இத்தலத்துக்கு உரியதாகக் கொள்ளலாம்.]

---

* 'வனச மேல்வரு தேவா!' - திருப்புகழ் 150.
இந்திரன் - ஆயிரங் கண்ணனான வரலாறு
- பாடல் 413 பக்கம் 546 கீழ்க்குறிப்பு

† சூரனாம் மயிலை அடக்கி அதன்மீது முருகவேள் ஏறி விளங்குவதைக் கண்டு தேவர்கள்-

"ஆர்த்தனர் எழுந்து துள்ளி ஆடினர் பாடா நின்றார் **
சுடர்வேல் கொண்ட தீர்த்தனை எய்திச் சூழ்ந்து
சிறந்துவாழ்த் தெடுக்க லுற்றார்". - கந்தபுரா 4-14-1, 2.

‡ திருமால் தில்லைத் திருநடனத்தைத் தரிசிக்க விரும்பின போது, சிவபிரான் திருமாலை நோக்கிச் 'சிதம்பர தரிசனம் பதஞ்சலி வியாக்ரபாதருக்குச் சுதந்திரமாக்கினோம். நீ விராட்புருடனுக்கு விந்து ஸ்தானமாயுள்ள மேலைச் சிதம்பரம் எனப்படும் பேரூரில் வெள்ளியம்பலத்தில் - (காலவமுநி, காமதேனு - இவர்களுடன்) 'கோமுநியாய்' வந்து நடன தரிசனம் செய்வாயாக' என்றனர்.

பிரமன் படைப்புத் தொழில் வராது வருந்திச் சிவபிரானிடம் முறையிட அவர், நீ 'பட்டி முநியாய்ப்' பேரூரில் வந்து பத்தி செய்வாயாகில் எமது நடனத்தையும், எண்ணுற்ற வரத்தையும் பெறலாம் என்றனர். அங்ஙனமே, திருமால் - 'கோமுநிவனாகவும்' பிரமா - 'பட்டிமுநிவ'னாகவும் பேரூரில் வழிபட்டு நடராஜப் பெருமானுடைய ஆடலைக் கண்டு மகிழ்ந்தனர் - என்பது பேரூர்ப் புராணம்.

"பத்திசெய் கோமுனி பட்டி மாமுனி
உத்தமர் இருவரும் ....வித்தக னடந்தொழும் நியம மேவினார்"
- பேரூர்ப் புரா - நிருத்தப்-133.

X கொட்டி யாடினர்-
"திரிபுரம் எரியத் தேவர் வேண்ட...இமையவன்
ஆடிய கொடு கொட்டி ஆடல்" - சிலப்பதி 6-40.

[தொடர்ச்சி 771 ஆம் பக்கம் பார்க்க]

(மிச்ச ரோருக) சரோருகமீ - தாமரைமீது விளங்கினவனே! (அல்லது - சரோருகம் - தாமரை போன்ற கண்களை (மி) மீ - உடலெல்லாம் கொண்டுள்ள) (வச்சிரபாணியன்) குலிசாயுத மேந்திய கையனாகிய இந்திரன், (வேதா) பிரமன் இவர்கள் போற்றும் செல்வமே! (நாதாதீதா) நாத ஒலிக்கு மேல்நிலையிலுள்ளவனே! வயலூரனே!

கிரௌஞ்சகிரியை உள்ளூடுருவும்படித் தொளைத்துச் சென்ற வேற்படையை உடையவனே! பரிசுத்தனே! பாலனே! (காலாயுதமாளி) காலே ஆயுதமாகக் கொண்டுள்ள கோழியைக் கொடியாக ஆள்பவனே!

பச்சை நிறமுள்ளதும், அழகுள்ளதுமான (சூரனாம்) மயில்மீது, (தேவர்கள் முதலானோர்) மெச்சும்படி ஏறின பாகனே! (நடத்துபவனே)! அடா! சூரனே! ஆஹா! அப்புறம் போகாதே, (நில்) என்று சொன்ன வீரனே!

(பட்டியாள்பவர்) (பிரமனாம்) பட்டிமுநிக்கு அருள் செய்தவர், (கொட்டியாடினர்) கொடு கொட்டி என்னும் நடனத்தை ஆடினவர், பாரூர் பூமியில் ஊராகத் திகழும் (பேரூரை), ஆ சூழ் பேரூர் - ஆ (காமதேனு) சூழ் (வலஞ் செய்து பூசித்த) பேரூரை, ஆள்வார் - ஆண்டருள்பவராகிய சிவபெருமானுக்குப் பெருமாளே!

(நாயேன் மாயா தருள்வாயே)

---

(தொடர்ச்சி): "படுபறை பல இயம்பப் பல்லுருவம் பெயர்த்து நீ கொடு கொட்டி யாடுங்கால்"

-கலித்தொகை - கடவுள் வாழ்த்து.

○ ஆ சூழ் - காமதேனு பூசித்த தலம் பேரூர்.

பிரமதேவர் படைப்புத் தொழில் செய்ய எண்ணிச் சிவலோகத்தில் இருந்த பொழுது தீய ஊழினால் நித்திரை செய்தனர்; அப்போது திருமால் காமதேனுவை நோக்கி 'நீ தவம்புரிந்து சிவனார் அருள் பெற்றுச் சிருட்டித் தொழில் செய்வாயாக' என்றனர்; அங்ஙனமே, காமதேனு பேரூரில் தவஞ்செய்து கொண்டிருந்தபோது அதனுடைய இளங்கன்று அங்கிருந்த புற்றினை மிதித்தது; அதன் அடி புற்றினுள் இருந்த ஆதிலிங்க மூர்த்தியின் திருமுடியிலே அழுந்திப் பெயர்க்கக் கூடாமையால், கொம்புகளாற் குத்தி அது அப் புற்றை உடைத்தது. கொம்புகளும், கால் குளம்பும் பட்டதனால் இலிங்கம் திருமுடியில் குளம்புச் சுவடு, கொம்புச் சுவடு

[தொடர்ச்சி 772 ஆம் பக்கம் பார்க்க]

## கொடும்பாளூர்.

[திரிசிராப்பள்ளிக் கடுத்த விராலிமலையிலிருந்து 3-மைல். "கோனாட்டுக் கொடும்பாளூர்" - கொங்குமண்டல சதகம்-பக்கம் 27. கோனாடு - பாடல் 350 பக்கம் 382-கீழ்க்குறிப்பு.

பரமகுடிக்குத் தென் மேற்கு 10 மைலிலும், பாத்திபனூருக்குத் தெற்கு 10 மைலிலும், "கொடுமளூர்க் குமரன்கோயில்" என்னும் ஒரு சுப்பிரமணியர் சந்நிதி - இரண்டு உடை மரங்களின் (குடைவேல் மரங்களின்) கீழ் - இருக்கின்றது.]

## 955. உபதேசம் பெற.

தனதனனந் தத்தத் தனதனனந் தத்தத்
தனதனனந் தத்தத் தனதான

கலைகளுரெனுங் *கற்புக் கலியுகபந் தத்துக்
கடனபயம் பட்டுக் கசடாகுங்-
கருமசடங் கச்†சட் சமயிகள்பங் கிட்டுக்
கலகலெனுங் கொட்புற் றுடன்மோதும்;

அலகில்பெருந் தர்க்கப் பலகலையின் பற்றற்
றரவியிடந் தப்பிக் குறியாத-
‡அறிவையறிந் தப்பற் றதனினொடுஞ் சற்றுற்
றருள்வசனங் கிட்டப் பெறலாமோ;

கொலைகளுரெனுங் கொச்சைக் குறவரிளம் பச்சைக்
கொடிமருவுஞ் செச்சைப் புயமார்பா-
கொடியநெடுங் கொக்குக் குறுகவுணன் பட்டுக்
குரைகடல்செம் பச்Xசக் கரவாளச்;

---

[771 ஆம் பக்கத் தொடர்ச்சி]

பெற்றது. இந் நிகழ்ச்சியை அறிந்த காமதேனு மிக்க கவலைப்பட, இறைவர் இந்தக் குளம்படிச் சுவடும் கோட்டுச் சுவடும் குதூகலத்தோடு கொண்டுள்ளோம் என்று கூறிக் காமதேனுக்கு நடன தரிசனமும் முடிவில் முத்தியையும் அளித்தனர். காமதேனு பட்டி (தொழு - மாட்டுக் கொட்டில்) அமைத்துப் பேரூரில் தங்கித் தொழுதமையால் பேரூருக்குக் - காமதேனுபுரம், பட்டிபுரி எனவும், சுவாமிக்குப் பட்டி நாதர் எனவும் பெயர் போந்தன. பேரூர் முத்தித் தலமாதலால் சிருட்டித் தொழில் செய்யும் ஆற்றலை வஞ்சித் தலத்தில் (கருவூரில்) சிவபிரான் காமதேனுக்கு அருளினர்.

(*,†, ‡, X - 773 ஆம் பக்கம் பார்க்க)

# கொடும்பாளூர்

## 955.

கலை வல்லோர் எ(ண்)ணும்-மதிக்கும் (கற்பு) கல்வியிலும், கலியுக சம்பந்தமான கட்டுக்களில் ஏற்படும் (கடன்) கடமைகளிலும் (அபயம்பட்டு) அடைக்கலம் புகுந்தது போலச் சிக்கி, (கடன பயம்பட்டு) கடமைகள் சம்பந்தமாய் அச்சம் அடைந்து, குற்றமுள்ளதான (பயனற்ற)

(கரும) செயலாம் (சடங்கம்) சடங்குகளைக் கூறும் ஆறு சமயத்தாரும் தத்தமக்குள் (சாதப் பேச்சைப்) பங்கிட்டுக் கொண்டுக் 'கலகல' என்னும் ஒலிக் குறிப்புடன் (கொட்-புற்று)மனம் சுழன்று அலைந்து ஒருவரோ டொருவர் தாக்கும்-

கணக்குக்கு அடங்காத (அளவு கடந்த) பெரிய தர்க்கத்துக்கு (வாதத்துக்கு) இடந்தரும் பல கலைநூல்களிலும் (பற்றற்று) ஆசையை விட்டொழிந்து, (அரவியிடம்) (அந்தத் தர்க்க வாதங்கள்) ஒலிக்கும் இடங்களினின்றும தப்பிப் பிழைத்துக், குறியாத (சுட்டிக் காட்ட முடியாத)

அறிவு இன்னதென்பதை அறிந்து. அந்த (அறிவை) அறிந்த அந்தப் பற்றுடனே சிறிது காலம் நிலைத்திருந்து, (உனது) திருவருள் வாக்கு (உபதேசம்) கிடைக்கப் பெறுவேனோ! (கிடைப்பது கூடுமா!)

கொலைஞர்கள் என்னப்பட்ட (கொச்சை) இழிஞர்களான குறவர்களிடம் (வளர்ந்த) இளம் பச்சைக் கொடி (இளமை வாய்ந்த பச்சை நிறத்துக் கொடிபோன்ற வள்ளி அணையும் வெட்சிமாலைப் புயத்தையும் மார்பையும் கொண்டவனே!

கொடுமை வாய்ந்த பெரிய மா மரமாகி நெருங்கின அசுரன் - சூரன் அழிபட்டு ஒலிக்கும் கடல் (செம்ப) (செம்முதல் உற) கலங்க, சக்கரவாள

---

(தொடர்ச்சி) : *கற்பு - கல்வி - "உலகந் தாங்கிய மேம்படு கற்பு" "தொலையாக் கற்ப" - பதிற்றுப் 59-8, 80-17;

† சமயங்களின் வாதக் கூச்சல்:- பாடல் 492, 945 பார்க்க.

‡ அறிவை அறிதல் - பாடல் 509-அடி 8; பாடல் 718-அடி 4 பார்க்க

X "சக்ரகிரி முதுகு நெளியப் புவியை வளையவரும் விக்ரம கலாபச் சிகாவலனும்" - வேடிச்சி காவலன் வகுப்பு

சிலைபகஎண் டிக்குத் திகிரிகளும் பத்துத்
திசைகளினுந் தத்தச் செகமேழுந்-
திருகுசிகண் டிப்பொற் குதிரைவிடுஞ் *செட்டித்
திறல கொடும் பைக்குட் பெருமாளே. (1)

## கீரனூர்.

(பழநிக்கு வடக்கு 10-மைல். தாராபுரம் போகும் வழி.)

## 956. வேசையர் மீதுள மயக்கு அற

தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன
தான தானன தத்தன தத்தன தனதான

†ஈர மோடுசி ரித்துவ ருத்தவும்
நாத கீதந டிப்பிலு ருக்கவும்
ஏவ ராயினு மெத்திய ழைக்கவு மதராஜன்-
‡ஏவின் மோதுக ணிட்டும ருட்டவும்
வீதி மீதுத லைக்கடை நிற்கவும்
ஏறு மாறும னத்தினி னைக்கவும் விலைகூறி;
ஆர பார தனத்தைய சைக்கவு
மாலை யோதிகு லைத்துமு டிக்கவும்
ஆடை சோரஅ விழ்த்தரை சுற்றவும் அதிமோக-
ஆசை போல்மன இஷ்டமு ரைக்கவு
மேல்வி ழாவெகு துக்கம்வி ளைக்கவும்
ஆன தோதக வித்தைகள் கற்பவ ருறவாமோ;
Xபார மேருப ருப்பத மத்தென
நேரி தாகஎ டுத்துட னட்டுமை
பாக ராரப டப்பணி சுற்றிடு கயிறாகப்-

* செட்டி - முருகவேளுக்கு ஒரு பெயர் "முருகன் வேள் செட்டி யாறு முகன் குகன் குழகன் மாயோன் மருகன்" - சூடாமணி நிகண்டு. 'செட்டி யெனுமொர்திரு நாமக்கார" - திருப்புகழ் 1026. - பாடல் 215, பக்கம் 48-கீழ்க்குறிப்பைப் பார்க்க.

† ஈரம் - அன்பு "ஈரமும் குருசீர்பாதசேவையும்" பாடல் 100;
"ஆனைக்காவுடை ஆதியை நாளும் ஈரமுள்ளவர் நாளும் எம்மையும் ஆளுடையாரே" - சுந்தரர் 7-75-7. ‡ ஏ வின் - அம்பு போல.

X கடல் கடைந்த வரலாறு:- பாடல் 509-பக் 162 கீழ்க்குறிப்பு.

மலை பிளவுபட, எட்டுத் திசைகளில் உள்ள மலைகள் *பத்துத் திசைகளிலும் (தத்த) சிதற (செழ்ம் ஏழும்) எழு உலகங்களிலும்

முறுக்கி விடப்பட்ட மயில் என்கின்ற அழகிய குதிரையைச் செலுத்திவிடும் செட்டியாம் (திறல) செட்டி எனப் பெயர் கொண்ட பராக்ரம சாலியே! **கொடும்பை** [கொடும்பாளூர்] என்னும் தலத்துள் வீற்றிருக்கும் பெருமாளே! [அருள் வசனம் கிட்டப் பெறுவேனோ]

## கீரனூர்

## 956.

**க**ருணை நிறைந்த முகத்துடனே சிரித்து [வருத்தவும்] அழைப்பதற்கும், ஒலி நிறைந்த இசையாலும், நடனத்தாலும் மனத்தை உருக்குதற்கும், யாராயிருந்த போதிலும் வஞ்சித்து அழைப்பதற்கும், மன்மத ராஜனுடைய - காமனுடைய

அம்புபோலத் தாக்குகின்ற கண்கொண்டு [மருட்டவும்] மயக்குதற்கும். தெருப்பக்கத்தில் தலைவாசற் படியிடத்தே நிற்பதற்கும், தாறுமாறான எண்ணங்களை மனத்தில் நினைப்பதற்கும், [தங்கள் உடலை விற்பதற்கு] விலை பேசி

முத்துமாலை யணிந்ததும், கனத்ததுமான கொங்கையை அசைப்பதற்கும், பூமாலை அணிந்துள்ள கூந்தலை அவிழ்த்து முடிப்பதற்கும், ஆடை நெகிழும்படி அவிழ்த்து இடுப்பிற் சுற்றுதற்கும், அதிக மோகங்கொண்ட

ஆசை யுள்ளவர்கள் போலத் தங்கள் மனதாசைகளை - தங்கள் இஷ்டங்களை - எடுத்துச் சொல்வதற்கும், மேலே விழுந்து மிக்க துக்கத்தை உண்டு பண்ணுதற்கும், வேண்டியதான [தோதக வித்தைகள்] வஞ்சனை வித்தைகளைக் கற்றுள்ளவர்களான வேசையர்களின் சம்பந்தம் நல்லதாகுமா? [ஆகாது என்றபடி]:

கனத்த மேருமலையை மத்தாகச் செம்மையாக எடுத்து [உடனே அதை] நட்டு [நாட்டி], உமை பாகர் - உமையைப் பாகத்திற் கொண்டுள்ள சிவபிரானது ஆர படம்பணி - மாலையாக விளங்குவதும், படங்களைக் கொண்டதுமான பாம்பை அந்த மத்துக்குச் சுற்ற வேண்டிய கயிறாகப் பூட்டிப்

---

*பத்துத்திசை - எட்டுத்திசைகளுடன் கீழும் மேலும் சேர்த்துப் பத்துத் திசை.

*பாதி வாலிபி டித்திட மற்றொரு
பாதி தேவர் பிடித்திட †லக்ஷ்மி
பாரி சாதமு தற்பல சித்திகள் வருமாறு;
கீர வாரிதி யைக்கடை வித்ததி
காரி யாயமு தத்தைய ளித்தக்ரு
பாளு வாகிய பச்சுரு வச்சுதன் மருகோனே-
கேடி லா‡வள கைப்பதி யிற்பல
மாட கூடம லர்ப்பொழில் சுற்றிய
**கீர னூருறை** சத்தித ரித்தருள்
பெருமாளே. (1)

## குளந்தைநகர்.

('குளந்தைநகர்' என்பது 'பெரியகுளம்'. மதுரைஜில்லா "கொடைக்கானல்ரோட்" என்னும்ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 28-மைல்.)

## 957. யமபயம் அற

தனந்த தானனத் தனதன தனதான

தரங்க வார்குழற் றநுநுதல் விழியாலம்-
தகைந்த மாமுலைத் துடியிடை மடமாதர்;
பரந்த மாலிருட் படுகுழி வசமாகிப்-
பயந்து காலனுக் குயிர்கொடு தவியாமல்;

**வரந்த** ராவிடிற் பிறரெவர் தருவாரே-
மகிழ்ந்து Xதோகையிற் புவிவலம் வருவோனே;
Oகுரும்பை மாமுலைக் குறமகண் மணவாளா
**குளந்தை** மாநகர்த் தளியுறை பெருமாளே. (1)

---

* பாதி வாலி பிடித்தது - கடல் கடைந்தது
- பாடல் 918-பக்கம் 674; பாடல் 122-பக்கம் 288 கீழ்க்குறிப்பு.

† இலக்குமி முதலியோர் வரப் பெற்றது: பாடல் 918-பக்கம் 674; பாடல் 604-பக்கம் 396 - கீழ்க்குறிப்பு.

‡ அளகாபுரியை ஒப்பிட்டது - அந்தத் தலத்தின் செல்வ வளப்பத்தைக் காட்டுதற்கு - பாடல் 730 - அடி 8 பார்க்க.

X பாடல் 267-பக்கம் 164 கீழ்க்குறிப்பு.

O "குரும்பை முலை மலர்க் குழலி" - சுந்தரர் 7-16-1.

ஒரு பாதி வாலி பிடிக்க, மற்றொரு பாதியைத் தேவர்கள் பிடித்திட, இலக்குமி, பாரிஜாதம் முதலான பல [சித்திகள்] அரும் பொருள்கள் வெளிப்பட்டு வரும்படிப்-

பாற்கடலைக் கடைவித்த அதிகாரியாய் [தலைவனாய்] அமுதத்தைத் [தேவர்களுக்கு] அளித்தருளிய கிருபா மூர்த்தியாகிய பச்சை நிறத் திருமாலின் மருகனே!

அழிவில்லாத [குபேரன் நகராகிய] அளகாபுரி போலப் பல மாட கூடங்கள், மலர்ச் சோலைகள் சூழ்ந்துள்ள **கீரனூர்** என்னும் தலத்தில் வேல் ஏந்தி அருளும் பெருமாளே!

[தோதக வித்தைகள் கற்பவர் உறவாமோ]

## குளந்தை நகர்

## 957.

**அ**லைபோலப் புரளுகின்ற நீண்ட கூந்தல், வில்லைப் போன்ற நெற்றி, [ஆலம் விழி] விஷம் அனைய கண்-

[தகைந்த] காண்போர் மனத்தைக் கவரும் - வசப்படுத்தும் சிறந்த கொங்கை, துடி [ உடுக்கை] போன்ற இடை - இவைதமை உடைய அழகிய பெண்கள் மீதுள்ள-

நிரம்பிய மோகம் என்னும் இருள் நிறைந்த பெரிய குழியில் அகப்பட்டு - வசப்பட்டு -

[இறுதிக் காலத்தில்] [காலனுக்குப் பயந்து] - யமனுக்கு அஞ்சி உயிர் நடுங்கத் தவியாமல் - [நான் நல்லபடி இருக்கும்படியான]-

வரத்தை நீ கொடுக்கா விட்டால் வேறு எவர்தாம் கொடுப்பார்கள்?

மகிழ்ச்சியுடன் மயில் மீதேறி பூமியை வலம் வந்தவனே!

குரும்பை [தென்னங் குரும்பை] போன்ற அழகிய கொங்கையைக் கொண்ட குறமகள் வள்ளியின் மணவாளனே!

**குளந்தை** [பெரிய குளம்] என்னும் பெரிய ஊர்க் கோயிலில் வீற்றிருக்கின்ற பெருமாளே!

[வரம் [நீயன்றி] வேறு எவர் தருவார்]

## தனிச்சயம்.

[இது மதுரைக்கு மேற்கே யுள்ளது. சோழவந்தான் சப்டிஸ்டிரிக்டைச் சேர்ந்தது. "ஐயங்கோட்டை தனிச்சயம்" என வழங்கும். பாண்டியன் **தனித்து** நின்று இந்திரனை **ஜயித்த** இடம்.]

## 958. பிறப்பற

*தனத்தனத் தனத்தனத் தனத்தனத் தனத்தனத்*
*தனத்தனத் தனத்தனத் தனதான*

*இலைச்சுருட் கொடுத்தணைத் தலத்திருத்தி மட்டைகட்
கிதத்த†புட்கு ரற்கள்விட் டநுராகம்-
எழுப்பிமைக் கயற்கணைக் கழுத்தைமுத் தமிட்டணைத்
தெடுத்திதழ்க் கடித்துரத் திடைதாவி;

அலைச்சலுற் றிலச்சையற் றரைப்பைதொட் டுழைத்துழைத்
தலக்கணுற் றுயிர்க்களைத் திடவேதான்-
அறத்தவித் திளைத்துறத் தனத்தினிற் புணர்ச்சிபட்
டயர்க்குமிப் **பிறப்பினித்** **தவிராதோ**;

கொலைச்செருக் கரக்கரைக் கலக்குமிக் கருக்குடக்
கொடித்திருக் கரத்தபொற் பதிபாடுங்-
‡குறித்தநற் றிருப்புகழ்ப் ப்ரபுத்துவக் கவித்துவக்
குருத்துவத் தெனைப்பணித் தருள்வோனே;
Xதலைச்சுமைச் சடைச்சிவற் கிலக்கணத் திலக்கியத்
தமிழ்த்ரயத் தகத்தியற் கறிவோதுஞ்-

---

* இலைச்சுருள் - சுருட்டிய வெற்றிலை - "இலைச்சுருள் எடுத்துக் கட்டீர்" - தக்கயாக. 757. விசேடக் குறிப்பு.

† புட்குரல் - பாடல் 197-பக்கம் 6-கீழ்க்குறிப்பு.

‡ அருணகிரியாரின் வரலாற்றைக் குறிப்பது; திருப்புகழ் பாட அருளிய கருணையை எடுத்துக் கூறுவது.

X சிவனுக்கு உபதேசம் பாடல் 327.பக். 311; அகத்தியருக்கு உபதேசம்; பாடல் 185-பக்கம் 433; பாடல் 882-பக்கம் 582; பாடல் 921-பக்கம் 686 குறிப்பு; முருகவேள் சிவனுக்கும், அகத்தியருக்கும் ஞானோபதேசம் செய்ததை அருணகிரியார் இங்குக் கூறுகின்றார். ஒரு பெரியார் (முருகரந்தாதி பாடிய ஞானியார்) இவர்கள் இருவருடன் அருணகிரியாரையும் சேர்த்துப் பின் வரும் அருமைப் பாடலைப் பாடியுள்ளார்.

[தொடர்ச்சி 779 ஆம் பக்கம் பார்க்க]

## தனிச்சயம்

## 958.

சுருட்டிய வெற்றிலையைக் கொடுத்து [அணைத்தலத்து] படுக்கை யிடத்தில் இருக்க வைத்தும், [மட்டைகட்கு] பயனற்ற முட்டாள்களுக்கு இன்பம் தரக்கூடிய புட்குரல்களை விடும்படிக் காமப்பற்றை

எழுப்பியும், மை பூசப்பட்டதும், கயல்மீன் போன்றதுமான கண்ணிலும் கழுத்திலும் முத்தம் தந்து அணைத்தும், எடுத்தும், வாயிதழைக் கடித்தும், மார்பிடத்தே தாவியும்

அலைச்சலுற்று, நாணத்தை விட்டு, அரைப்பை [அரையை] [பாம்பின் படம்போன்ற அல்குலைத்] தொட்டு, [அந்தக்காமலீலைகளிலேயே] உழைப்புற்று உழைப்புற்று, துன்பம் அடைந்து உயிர் களைத்துப் போகும் அளவுக்கு-

மிகவும் தவிப்பு அடைந்து இளைப்பு உற (மாதர்களின்) கொங்கையிற் சேர்க்கையுற்று அலுத்துப்போகும் இந்த பிறப்பு இனியேனும் ஒழியாதோ - நீங்காதோ!

கொலை செய்வதிற் பெருமை கொள்ளும் அரக்கர்களைக் கலங்கச் செய்த (திருக்கரத்த)! மேம்பட்ட கோழிக் கொடியைத் திருக்கரத்தில் உடையவனே! அழகிய தலங்கள் தோறும் (உன்னைப்) பாடும்படியான

நோக்கத்தைக் கொண்ட நல்ல திருப்புகழிற் பிரபுஸ்தானமான (மிக மேம்பட்ட நிலையதான) கவிபாடும் குருஸ்தானத்தில் என்னை நிலைக்கவைத்துக் கட்டளையிட்டு அருள் புரிந்தவனே!

தலையிற் சுமைபோற் பாரமான சடையைக் கொண்ட சிவபிரானுக்கும், உன்னிடத்தே இலக்கணம் - இலக்கியம் எல்லாம் கற்ற, இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ் வல்ல அகத்திய முநிவருக்கும், ஞானோபதேசம் செய்த

---

'வேலா சரணஞ் சரணமென் மேல்வெகு ளாமலினி
மேலா யினுங்கடைக் கண்பார் பருப்பத வேந்தன்மகள்
பாலா குறுமுனி யார்க்குந் திருப்புகழ் பண்ணவர்க்கும்
ஆலால முண்டவர்க் கும்முப தேசித்த ஆண்டவனே".

சமர்த்தரிற் சமர்த்தபச் சிமத்திசைக் குளுத்தமத்
**தனிச்சயத்** தினிற்பிளைப் பெருமாளே. (1)

## 959. இறந்துபோம் அன்று அருளுக

தனத்த தந்தன தனதன தந்தத்
தனத்த தந்தன தனதன தந்தத்
தனத்த தந்தன தனதன தந்தத் தனதான

உரைத்த சம்ப்ரம வடிவு திரங்கிக்
கறுத்த குஞ்சியும் வெளிறிய பஞ்சொத்
தொலித்தி டுஞ்செவி செவிடுற வொண்கட்
குருடாகி-

உரத்த வெண்பலு நழுவிம தங்கெட்
டிரைத்து கிண்கிணெ னிருமலெ ழுந்திட்
டுளைப்பு டன்தலை கிறுகிறெ னும்பித்
தமுமேல்கொண்;

டரத்த மின்றிய புழுவினும் விஞ்சிப்
பழுத்து ளஞ்செயல் வசனம் வரம்பற்
றடுத்த பெண்டிரு மெதிர்வர நிந்தித்
தனைவோரும்-

அசுத்த னென்றிட வுணர்வது குன்றித்
துடிப்ப துஞ்சிறி துளதில தென்கைக்
கவத்தை வந்*துயி ரலமரு மன்றைக்
கருள்வாயே;

திரித்தி ரிந்திரி ரிரிரிரி ரின்றிட்
டுடுட்டு டுண்டுடு டுடுடுடு டுண்டுட்
டிகுட்டி குண்டிகு டிகுடிகு டிண்டிட் டிகுதீதோ-

திமித்தி மிந்திமி திமிதிமி யென்றிட்
டிடக்கை துந்துமி முரசு முழங்கச்
செருக் களந்தனில் நிருதர் தயங்கச் சிலபேய்கள்;

---

* "உயிர் போகும் அந்த நாளில் எனக்கு அருளுக" - இவ் வேண்டுகோளை அப்பர் பெருமானும் விண்ணப்பிக்கின்றார்:-

"மிழலையுள்ளீர் இறக்கின்று நும்மை மறக்கினும் என்னைக் குறிக் கொண்மினே" - அப்பர் 4-95-10.

சமர்த்தரிற் சமர்த்தனே! (சாமர்த்தியத்தில் முதல் ஸ்தானத்தில் இருப்பவனே!) (பச்சிமத்திசைக்குள்) மேற்குத் திசையில் உள்ளதும், உத்தமமான ஸ்தலமுமான **தனிச்சயம்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பிள்ளைப் பெருமாளே!

(இப் பிறப்பினித் தவிராதோ)

# 959.

**எ**ல்லாரும் புகழும்படியாக (சம்பிரமமாக) மிக ஒழுங்காக இருந்த வடிவமானது திரங்கி - வதங்கல் உற்று - சுருங்கலுற்று, கறுப்பாயிருந்த தலைமயிரும் வெளுத்துப் பஞ்சுபோலாகி, நன்றாக ஒலிகளைக் கேட்டிருந்த காது செவிடாகி, ஒளி பொருந்தியிருந்த கண் குருடாகி-

பலத்துடன் அழுத்தமாயிருந்த வெண்ணிறப் பல்லும் நழுவி விழுதலுற்று, மதம் - நான் என்றிருந்த இறுமாப்பு நிலை அழிந்து, மூச்சு வாங்கி, கிண்கிண் என்னும் ஒலியுடன் இருமல் உண்டாகி, வேதனையுடன் தலை கிறுகிறு என்னும் பித்தமும் மேல் கொண்டு எழ-

ரத்தம் இல்லாத புழுவைக் காட்டிலும் அதிகமாக (உடல்) வெளுத்து, மனம், செயல். வாக்கு இவைகள் ஒரு அளவு கடந்து- ஒழுங்கீனமான நிலையை அடைந்து, சேர்ந்துள்ள மாதர்களும் எதிரே வர இகழ்ந்து தூஷித்து, யாவரும்

(இவன்) அசுத்தன் - அழுக்கன் என்று சொல்லும் படியாக, உணர்ச்சி குறைந்துபோய், நாடி துடிப்பதும் சிறிதே இருக்கின்றது - இல்லை என்றே சொல்லலாம் - என்னும்படியான கஷ்டநிலை வந்து கூடி உயிர் வேதனைப்படும் அந்த நாளில் நீ எனக்கு அருள் புரிவாயக.

திரித்தி ரிந்திரி ரிரிரிரி ரின்றிட்..........டிகுடிகு டிண்டிட் டிகு தீதோ-

திமித்தி மிந்திமி திமிதிமி யென்று ஒலிக்கும்படி (இடக்கை) இடக்கையாற் கொட்டம் தோற்கருவி, (துந்துமி) பேரிகை, (முரசு) பறைப் பொது இவையெலாம் ஒலிக்க, போர்க்களத்தில் அசுரர்கள் திகைக்க - கலக்கம் கொள்ளச், சில பேய்கள்

*தரித்து மண்டையி லுதிர மருந்தத்
திரட் பருந்துகள் குடர்கள் பிடுங்கத்
தருக்கு சம்புகள் நிணமது சிந்தப் பொரும்வேலா-
†தடச் சிகண்டியில் வயலியி ‡லன்பைப்
படைத்த நெஞ்சினி லியல்செறி கொங்கிற்
றனிச்ச யந்தனி லினிதுறை கந்தப்
பெருமாளே. (2)

## மதுரை.

[இஃது **ஆலவாய், கூடல்** எனவும் பெயர்பெறும். பொற்றாமரைத் தீர்த்தம். சிவபெருமான் சங்கப்புலவர்களுடன் வீற்றிருந்து தமிழை வளர்த்தருளிய திருப்பதி. பஞ்ச சபைகளில் ரஜத சபையை (வெள்ளியம்பலத்தைக்) கொண்டுள்ள நற்பதி. திருஞான சம்பந்த ஸ்வாமிகள் சமணரை வாதில் வென்ற வளம்பதி. ஸ்ரீமாணிக்கவாசக ஸ்வாமிகள் பொருட்டுச் சிவபிரான் நரிபரியாக்கிய திருநகர். அவர் இதுபோல் 64-திருவிளையாடல்களை இயற்றியருளிய அருநகர். திருஞான சம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல் பெற்றது. ஸ்தல புராணங்கள் உள்ளன. -725-ஆம் பாடலின் பாட பேதத்தையும் பார்க்க. பக்கம் 175 கீழ்க்குறிப்பு.]

## 960. ஞான நிலைப் பெருமை

தனதன தனனத் தந்த தானன
தனதன தனனத் தந்த தானன
தனதன தனனத் தந்த தானன தந்ததான

அலகில வுணரைக் கொன்ற தோளென
மலைதொளை யுருவச் சென்ற வேலென
அழகிய கனகத் தண்டை சூழ்வன புண்டரீக-
அடியென முடியிற் கொண்ட Xசூதள
மெனவன சரியைக் கொண்ட மார்பென
அறுமுக மெனநெக்0கென்பெ லாமுரு கன்புறாதோ;

---

* "குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரல்....கழிமுடைக் கருந்தலை" - திருமுருகாற் 52.
"இரத்த நதியிடை குடித்தும்" - பொருகள - வகுப்பு.
"குருதிக் கடலைப் பெருகப் பருகி" - செருக்கள வகுப்பு.
† "தழைத்த கண்டியில் வயலியி லன்பை" என்றும் பாடம்.

(தொடர்ச்சி 783 ஆம் பக்கம் பார்க்க)

(தரித்து மண்டையில்) மண்டை ஓட்டை எடுத்து ஏந்தி அதில் ரத்தத்தைப் பிடித்துப் பருகக், கூட்டமான பருந்துகள் குடல்களைப் பிடுங்க (கிடைக்கும் உணவைக் கண்டு, களிப்புறும் நரிகள் தாம் உண்ணும் மாமிசத்தைச் சிந்திச் சிதறப் போர் செய்த வேலனே!

(தடம்) பெருமை வாய்ந்த மயில் மீதும், வயலூர் என்னும் தலத்திலும், அன்பு பொருந்தியுள்ள (அடியார்களின்) நெஞ்சகத்தும், தகுதி நிறைவுற்ற கொங்கு நாட்டில் **தனிச்சயம்** என்னும் தலத்திலும் இன்பத்துடனே வீற்றிருக்கும் கந்தப் பெருமாளே!

*(உயிர் அலமரும் அன்றைக் கருள்வாயே)*

## மதுரை

## 960.

**கணக்கற்ற அசுரர்களைக் கொன்று அழித்த தோள்** - என்று (உனது தோளைப்) புகழ்ந்தும், கிரவுஞ்ச மலையைத் தொளை படும்படி ஊடுருவிச் சென்ற வேல் - என்று (உனது வேலைப்) புகழ்ந்தும், அழகிய பொன்னாலாய தண்டை சூழ்ந்துள்ளதும், தாமரை போன்றதுமான

அடி என்று (உனது திருவடியைப்) புகழ்ந்தும், (முடியிற் கொண்ட கூதளம் என) கூதாளம் கொண்ட முடி என - வெண்தாளியினது தண்ணிய பூவை அணிந்துள்ள முடி என்று (உனது திருமுடியைப் புகழ்ந்தும், (வனசரி) வேட்டுவச்சியாம் வள்ளியை அணைந்த மார்பு என்று (உனது திருமார்பைப்) புகழ்ந்தும், ஆறுமுகம் என்று (உனது ஆறு திருமுகங்களைப்) புகழ்ந்தும், உள்ளம் நெகிழ்ந்து, என்னுடைய எலும்பெல்லாம் உருகும்படியான அன்பு எனக்குக் கூடாதோ! (கிட்டாதா என்றபடி)

---

(தொடர்ச்சி) தடம் - பெருமை (திவாகரம்) "அருளினன் தடமிகு நெடுவாள்" - சம்பந்தர் *3-119-8.*

‡ "நிறைபெற்ற அடியார்கள் நெஞ்சுளானே"

"அன்பரானவர் வாயினு ளத்தனே"

-சம்பந்தர் *1-119-4; 3-115-11.*

X கூதளம் - 'வெண் கூதாளத்துத் தண்பூ"-

'வெண்தாளியினது தண்ணிய பூ' - பட்டினப்பாலை உரை *85.*

[தொடர்ச்சி *784* ஆம் பக்கம் பார்க்க]

* கலகல கலெனக் கண்ட பேரொடு
சிலுகிடு சமயப் பங்க வாதிகள்
கதறிய வெகுசொற் பங்க மாகிய பொங்களாவுங்-
-கலைகளு மொழியப் பஞ்ச பூதமு
மொழியுற மொழியிற் றுஞ்சு றாதன
கரணமு மொழியத் தந்த **ஞானமி ருந்தவாறென்;**
இலகுக டலைகற் கண்டு தேனொடு
மிரதமு றுதினைப் பிண்டி பாகுடன்
இனிமையி னுகருற் றெம்பி ராெனொரு
கொம்பினாலே-
†எழுதென மொழியப் பண்டு பாரதம்
வடகன சிகரச் செம்பொன் மேருவில்
எழுதிய ‡பவளக் குன்று தாதையை
யன்றுசூழ;
Xவலம்வரு மளவிற் சண்ட மாருத
விசையினும் விசையுற் றெண்டி சாமுக
மகிதல மடையக் கண்டு மாசுண முண்டுலாவு-
மரகத கலபச் செம்புள் வாகன
மிசைவரு முருகச் ○சிம்பு ளேயென
**மதுரை**யில் வழிபட் டும்ப ரார்தொழு
**தம்பிரானே (1)

---

*(783 ஆம் பக்கத் தொடர்ச்சி)*

முருகருக்கு உகந்த மலர்களுள் ஒன்று - கூதளம்:
*"கூதாள ! கிராத குலிக்கு இறைவா" கந்தர நுபூதி - 38*
*"கூதள கந்த மாலிகை தோய்தரு...கழல்"*
*"முருகவிழ் கூதாள மாலிகை தழுவிய சீர்பாத"*
*- திருப்புகழ் 99, 1137.*

○ பத்தியால் என்பும் உருக வேண்டும். " என்னை உன்பாத பங்கயம் பணிவித்து, என்பெலாம் உருகநீ எளிவந்து உன்னை என்பால் வைத்து" - *திருவிசைப்பா 11-8.*

"என்பு நைந்துருகி" - *திருவாசகம்-4-80.*

---

* *சமய கலை - வாதம் இவைகளை அருணகிரியார் வெறுத்தல்*
*- பாடல் 945-பார்க்க.*

† விநாயகர் பாரதக் கதையை எழுதினது :
*- பாடல் 441-பக்கம் 608 கீழ்க்குறிப்பு.*

*(தொடர்ச்சி 785 ஆம் பக்கம் பார்க்க)*

*கல கல கல என்னும் பேரொலியுடன் கண்ட பேர்களுடனே கூச்சலிட்டுச் சமயக் குற்றங்களை எடுத்துப் பேசி வாதம் செய்வோர்கள் உரக்கக் கத்தும் பல சொற்களாம் சேறு அல்லது குற்றம் ஆகும் (பொங்கு அளாவும்) கொதிப்பைப் பொருந்திய*

*சாத்திர நூல் உணர்ச்சியெல்லாம் ஒழிந்து நீங்க பஞ்சபூதங்களால் (மண், நீர், தீ, காற்று, விண் எனப்படும்) ஐம்பூதங்களின் செயல்களும் அடங்கி நீங்கச், சொல்லப்புகின் (எப்போதும் தனது சேஷ்டை) துஞ்சுறாதன - ஓய்தல் இல்லாத (கரணம்) (அந்தக் கரணம்) மனம் ஒடுங்கி ஒழிய, நீ எனக்கு உபதேசித்தருளிய ஞானத்துக்கு உள்ள பெருமை தான் என்ன ஆச்சரியகரமா யுளது!*

*நல்ல விளக்கமுள்ள கடலை, கற்கண்டு, தேன், இவைகளுடன் ருசிகரமான (தினைப்பிண்டி) தினைமாவு, வெல்லம் இவற்றை மகிழ்ச்சியுடன் உண்ணுதலைச் செய்யும் எம்பெருமான், ஒற்றைக் கொம்பால்-*

*'எழுதியருளுக' என (வியாச முநிவர்) வேண்ட, முன்பு பாரதக் கதையை, வடக்கே உள்ளதும் கனத்த சிகரங்களை உடையதுமான செம்பொன் மலையாம் மேரு மலையில் எழுதினவனும், பவளமலை அனையவனும் ஆகிய கணபதி அன்று தாதையைச் (சிவபெருமானை)ச் சுற்றிவந்து*

*வலம் வரும் நேரத்துக்குள் மிகக் கொடிய காற்றின் வேகத்தினும் மேம்பட்ட வேகத்துடன் எட்டுத் திசையிடங்களைக் கொண்ட உலகம் முழுவதையும் பார்த்து, பாம்பை உண்டு உலவுகின்ற*

*பச்சைத் தோகையைக் கொண்ட செம்மையுற்ற பட்சியாகிய மயில் வாகனத்தின் மீது வந்த முருகச் சரபமே! என்று புகழ்ந்து* ***மதுரைத்*** *தலத்தில் வழிபட்டுத் தேவர்கள் தொழுகின்ற தம்பிரானே! (ஞான மிருந்தவாறென்)*

---

*(தொடர்ச்சி)* ‡ விநாயகர் - பவள நிறத்தினர் - பாடல் *441*-பக்கம் *608* கீழ்க்குறிப்பு. ‡ X உலகை வலம் வந்தது - பாடல் *184*-பக்கம் *430* கீழ்க்குறிப்பு. O சிம்புள் - சிங்கத்தைக் கொல்லவல்லதாகக் கூறப்படும் எண்காற் புள்.

** இந்தப் பாடலில் (ஒவ்வோரடியின் ஈற்றுச் சந்தத்துக்கு முன் சந்தம்) தொங்கலொடு பொருந்தும் வழியெதுகை அழகைக் காண்க.

## 961. திருவடியைப் பெற

தானதன தத்த தானதன தத்த
தானதன தத்த தனதான

ஆனைமுக வற்கு நேரிளைய பத்த
ஆறுமுக வித்த கமரேசா-
*ஆதியர னுக்கும் வேதமுதல் வற்கும்
ஆரணமு ரைத்த குருநாதா;
தானவர் குலத்தை வாள்கொடு துணித்த
சால்சதுர் மிகுத் திறல்வீரா-
தாளிணைக ளுற்று மேவியப தத்தில்
வாழ்வொடு சிறக்க அருள்வாயே;
வார்†னெழு புவிக்கு மாலுமய னுக்கும்
யாவரொரு வர்க்கு மறியாத-
மாமதுரை ‡சொக்கர் மாதுமை களிக்க
மாமயில் நடத்து முருகோனே;
Xதேனெழு புனத்தில் Oமான்விழி குறத்தி
சேரமரு வுற்ற திரள்தோளா-
தேவர்கள் கருத்தில் மேவிய பயத்தை
**வேல்கொடு தணித்த பெருமாளே. (2)

## 962. சீர்பாத வகுப்பைப் பாட

தனன தனந்தன தனன தனந்தன
தனன தனந்தன தனதான

பரவு நெடுங்கதி ருலகில் விரும்பிய
†பவனி வரும்படி யதனாலே-

---

* பிரமனுக்கும் சிவனுக்கும் வேதப்பொருள் உரைத்தது - பாடல் 327 -பக்கம் 314; பாடல் 628-பக். 462-கீழ்க்குறிப்பு. ††

† மேலுலகேழு - கீழுலகேழு -பாடல் 157-பக்கம் 364, 365 கீழ்க்குறிப்பு.

‡ சொக்கர் - மதுரைச் சிவனது திருநாமம். "திரு ஆலவாய்ச் சொக்கன் என்னுள் இருக்கவே" - சம்பந்தர் 3-39-11.

X 'தேன் எழு புனம்' - 'தேன் வரை வள்ளி' - கல்லாடம் 56.

O "மானருள் குறத்தி சேர மகிழ்வுற்ற" - என்றும் பாடம்.

** "தீர விடுவித்த பெருமாளே" - என்றும் பாடம்.

[தொடர்ச்சி 787 ஆம் பக்கம் பார்க்க]

## 961.

**ஆ**னை முகத்தைக் கொண்ட கணபதிக்கு நேராகப் பின் தோன்றிய இளையவனாம் அன்பனே! ஆறு திருமுகங்களைக் கொண்ட (வித்தக) ஞானியே! தேவர்களுக்கு அரசாம் தலைவனே!

முதல்வராம் சிவபெருமானுக்கும், வேதத் தலைவனாம் பிரமனுக்கும் வேதப்பொருள் உபதேசித்த குருநாதனே!

அசுரர் குலத்தை வாள்கொண்டு வெட்டி அழித்த (சால்சதுர் மிகுத்த) சதுர் சால் மிகுத்த - சாமர்த்தியம் நிறைந்த மிகுந்துள்ள பராக்ரமம் வாய்ந்த வீரனே!

உனது திருவடிகள் இரண்டையும் தியானித்துப் பொருந்துதலைக் கொண்ட பதவியில் நல்வாழ்வுடன் (நான்) விளங்கும்படி அருள்புரிவாயாக;

விண்ணுலகம் ஆதிய எழுவகைப்பட்ட உலகத்தினர்க்கும், திருமாலுக்கும், பிரமனுக்கும், வேறு எவர்க்கும் அறிய முடியாத-

சிறந்த **மதுரைத்** தலத்துச் **சொக்கேசரும்**, மாது பார்வதியும் மகிழ்ச்சியுறும்படி, அழகிய மயிலைச் செலுத்தி நடத்தும் முருகனே!

தேன் உண்டாகும் (வள்ளிமலைக்) காட்டில் மான்போலும் கண்ணைக் கொண்ட குறத்தி - வள்ளி (உன்னைச்) சேரும்படி (அவளிடம்) அணுகிய திரண்ட தோளனே!

தேவர்களின் உள்ளத்தில் (சூரன் பொருட்டு) இருந்த பயத்தை வேலாயுதங் கொண்டு நீக்கிய பெருமாளே!

*(வாழ்வொடு சிறக்க அருள்வாயே)*

## 962.

**எ**ல்லாராலும் போற்றப்படும் நீண்ட கிரணங்களை உடைய சூரியன் உலகெலாம் விரும்பும்படி உலாவரும் காட்சி தானோ (இது) இந்தத் திருவடி - என்று சிறப்பித்தும்-

---

†† (தொடர்ச்சி) சூரியன் உலகோர் விரும்பும் உலாவருவதனால் (பகர வளங்கள்) அழகிய வளங்கள் பலவும் இலகி விளங்குகின்றன;

[தொடர்ச்சி 788 ஆம் பக்கம் பார்க்க.]

பகர வளங்களு நிகர விளங்கிய
*இருளை விடிந்தது நிலவாலே;
†வரையினி லெங்கணு முலவி நிறைந்தது
வரிசை தரும்‡பத மதுபாடி-
வளமொடு செந்தமி ழுரைசெய ×அன்பரு
மகிழ வரங்களு மருள்வாயே;
அரஹர சுந்தர அறுமுக என்றுனி
அடியர் பணிந்திட மகிழ்வோனே-
அசலநெ டுங்கொடி அமையுமை தன்சுத
குறமக ளிங்கித மணவாளா;
கருதரு திண்புய சரவண ○குங்கும
களபம ணிந்திடு மணிமார்பா-
**கனக மிகும்பதி மதுரை வளம்பதி
யதனில் வளர்ந்தருள் பெருமாளே. (2)

---

(787 ஆம் பக்கத் தொடர்ச்சி)

நில வொளியால் இருள் ஒழிகின்றது: (அதுபோல - சூரியனது ஒளியையும் சந்திரனுடைய ஒளியையும் கொண்ட உன் திருவடி சகல வளங்களையும் தந்து, அஞ்ஞான இருளையும் ஒழிக்கும் என்பது முதலிரண்டடிகளின் கருத்தாகும். "உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு, பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டாஅங் கோவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி" (திருமுருகாற்), "சதகோடி சூரியர்கள் உதயமென...இருளகல ஒரு சோதி வீசுவதும் மணநாறு சீறடியே" (சீர்பாத வகுப்பு) என்றதனால் சூரியனது ஒளியைக் கொண்டது முருகன் திருவடி என்பதும், 'சந்திர நிறங்களும்', 'பலகோடி வெண்மதி போல' (திருப்புகழ் 6, 1185) என்றதனால் சந்திர ஒளியையும் கொண்டது திருவடி என்பதும் பெறப்படுகின்ன.

பவனி வரும்படி யதனாலே - பவனிவருந் தரத்தைச் சிறப்பித்தும்.

---

* இருளை விடிந்தது நிலவாலே - இருளைப் போக்கி உதயமாகுஞ் சந்திரனைச் சிறப்பித்தும்.

† 'குன்றுதோ றாடலு நின்றதன் பண்பே' - திருமுரு. 217.
'பலகுன்றிலும் அமர்ந்த பெருமாளே' - திருப்புகழ் 233.

‡ 'பதமது பாடி.....தமிழ் உரை செய' - இதே வேண்டுகோளை "**நின்பதயுகப் ப்ரசித்தி** என்பன **வகுத்துரைக்க** நின்பணி தமிழ்த் த்ரயத்தை அருள்வாயே" எனப் பிறிதோரிடத்தும் (பாடல் 1233) விண்ணப்பித்துள்ளார். இங்ஙனம் இங்குக் கேட்டவரம் சித்தித்ததின் பயன்தான் அருணகிரியார் பின்னர், 'சீர்பாத வகுப்பு' முதலானது பாடினது.

(தொடர்ச்சி 789 ஆம் பக்கம் பார்க்க).

சொல்லக்கூடிய வளப்பங்களுக்கெல்லாம் ஒப்பாக விளங்குகின்றதும் இருளைப் போக்கி உதயமாவதுமான நிலவொளிதானோ இது - இந்தத் திருவடி என்று சிறப்பித்தும்

மலையிடங்களில் எவ்விடத்தும் உலாவி நிறைந்து (வரிசை தரும்) ஒழுங்கான காட்சியைத் தருகின்ற (பதம்) உனது திருவடிகளை (நான்) பாடி

(சொல்வளம் பொருள்) வளம் கூடிய - செழுமை வளத்துடன் செந்தமிழ்ப் பாவால் (உன்னை உரைசெய) - உன்னைச் சொல்லிப் புகழுதற்கும், அப் பாடல்களைக் கேட்டு அன்பர்கள் மகிழவும் வரங்களைத் தந்து அருள்புரிவாயாக;

ஹர ஹர! அழக! ஆறுமுகத்தவனே! என்றெல்லாம் (உனி) உன்னி-தியானித்து அடியார்கள் (உன்னை) வணங்க மகிழ்ச்சி கொள்பவனே!

(இமய) மலையில் தோன்றிய பெருமை வாய்ந்த கொடியனைய அ(ம்)மை உமையின் பிள்ளையே! (குறமகள்) வள்ளிக்கு இனிமை வாய்ந்த மணவாளனே!

நினைத்தற்கும் அருமையான திண்ணிய புயங்களை உடையவனே! சரவணபவனே! செஞ்சாந்துக் கலவை அணிந்துள்ள அழகிய மார்பனே!

(பொன்னொளி) பொன் மாடங்கள் நிரம்பிய நகராகிய மதுரை என்னும் செழிப்புள்ள தலத்தில் விளங்கி வீற்றிருந்தருளும் பெருமாளே!

(பதமதுபாடி– உரைசெய அருள்வாயே)

---

X தமது பாடலை அன்பர்கள் கேட்டும், பாடியும் மகிழ வேண்டும், அவர்களும் கரையேற வேண்டும் என்னும் 'கருணை' நோக்கம் அருணகிரியார்க்கு உண்டு; 'அன்பினாலே **ஏனோரும் ஓதுமாறு** தீதற நான் ஆசுபாடி' என்றார் பிறிதோரிடத்து (பாடல் 1129); இதனாலும் 'கருணைக் கருணகிரி' எனப் பெயர் பெற்றனர்.

"காசுக்குக் கம்பன், கருணைக் கருணகிரி"
ஆசுக்குக் காளமுகில் ஆவனே, - தேசுபெறும்
ஊழுக்குக் கூத்தன், உவக்கப் புகழேந்தி
கூழுக்கிங் கௌவையெனக் கூறு" - (தனிப்பாடல்)

O மார்பில் **குங்குமம்**:-
பரந்த மார்பிற் குங்குமம் நிலவிய தென்ன' - கல்லாடம் 17.

** 'ஆடக மாடம் நெருங்கு கூடல்'-(ஆடகம்-பொன்) சம்பந்தர் 1-7-1.

## 963. அடியாரோடு கூட

தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன
தனத்த தாத்தன தனதன தனதன தனதனத் தனதான

பழிப்பர் வாழ்த்துவர் சிலசில பெயர்தமை
ஒருத்தவர் வாய்ச்*சுரு ளொருவர்கை யுதவுவர்
பணத்தை நோக்குவர் †பிணமது தழுவுவர்
அளவளப் பதனாலே-

படுக்கை வீட்டினு ‡ளவுஷத முதவுவர்
அணைப்பர் Xகார்த்திகை வருதென வுறுபொருள்
பறிப்பர் மாத்தையி லொருவிசை வருகென
அவரவர்க் குறவாயே;

அழைப்ப ராஸ்திகள் கருதுவ Oரொருவரை
முடுக்கி யோட்டுவ ரழிகுடி யரிவையர்
அலட்டி னாற்பிணை யெருதென மயலெனு
நரகினிற் சுழல்வேனோ-

அவத்த மாய்ச்சில படுகுழி தனில்விழும்
விபத்தை நீக்கியு **னடியவ ருடனெனை
அமர்த்தி யாட்கொள மனதினி லருள்செய்து
கதிதனைத் தருவாயே;

---

* சுருள் - வெற்றிலைச் சுருள் - திருப்புகழ் 163, 958-அடி 1.

† " பெருகு பொருள் பெறில் அமளியில் இதமொடு குழைவோடே பிணமும் அணைபவர்" - திருப்புகழ் 60.

‡ மருந்திடுதல்:- பாடல் 230-பக்கம் 74 கீழ்க்குறிப்பைப் பார்க்க.

X இது - அருணகிரியார் காலத்தில் (15-ஆம் நூற்றாண்டில்) கார்த்திகைத் திருநாள் சிறப்பாக இருந்தது என்பதைக் காட்டுகின்றது; ஏழாம் நூற்றாண்டில் - சம்பந்தர் காலத்திலேயே, இந்தத் திருநாள் பெண்களாற் கொண்டாடப்பட்டது-

" தொல் கார்த்திகை நாள் தளத்தேந் திளமுலையார்
தையலால் கொண்டாடும் விளக்கீடு" - சம்பந்தர் 2-47-3.

"குன்றிற் கார்த்திகை விளக்கிட்டன்ன" - சிந்தாமணி 256.

திருவண்ணாமலையே இந்தத் திருநாளுக்கு முக்கிய தலம் அன்றும் இன்றும்.

[தொடர்ச்சி 791 ஆம் பக்கம் பார்க்க]

# 963.

(பழிப்பர் வாழ்த்துவர் சில சில பெயர்தமை,) சில பெயர்தமைப் பழிப்பார்கள், சில பெயர்தமை வாழ்த்துவார்கள், பொருள் கொடாவிட்டால் சில பேரைப் பழித்துப் பேசுவார்கள், பொருள் கொடுத்தால் சிலபேரை வாழ்த்திப் புகழ்வார்கள், ஒருத்தர் வாய்க்கென்று (அல்லது வாயில்) வைத்த வெற்றிலைச் சுருளைப் பிறிதொருவர் கையிற் கொடுத்து உதவுவார்கள், பணத்தின் மேலேயே நோக்கமாய் இருப்பார்கள், பிணத்தையும் (பொருள் கிட்டினால்) தழுவுவார்கள், கலந்து பேசிக்கொண்டே, பேசிக் கொண்டிருக்கும் போதே-

படுக்கை வீட்டுக்குள் மருந்திடுவார்கள், அணைத்துக் கொள்வார்கள், கார்த்திகைப் (பண்டிகை) வருகின்றதே (செலவுக்கு வேண்டுமென்று) பொருளைப் பறிப்பார்கள், மாதத்துக்கு ஒரு முறையாவது நீங்கள் வந்து போகவேண்டுமென்று தம்மிடம் வந்த ஒவ்வொருவரிடமும் உறவு பாராட்டுபவர்களாய்

அழைப்பார்கள், தம்மிடம் வருபவர்க்குள்ள ஆஸ்தி அத்தனையும் பறிக்க எண்ணுவார்கள் (தாம் ஆஸ்தி சேர்க்க எண்ணுவார்கள்); (பொருள் கொடாத ஒருவரை) வெருட்டி ஓட்டி விடுவார்கள் - இங்ஙனம் (அழிகுடி அரிவையர்) குடியையே அழிக்கின்ற பொது மாதர்களின் (அலட்டினால்) உபத்திரவத்தால் (மற்றொரு மாட்டுடன்) இணைத்துக் (கட்டப்பட்ட) எருது போலக் காமப் பித்து என்னும் நரகத்தில் சுழற்சி அடைவேனோ!

(இவ்வாறு) பயனற்றுக் கேடுறுவதாய்ச் சில படுகுழியில் (பெருங்குழியில்) விழும் ஆபத்தினின்றும்என்னை நீக்கிக் காத்து உன்னுடைய அடியார்களுடன் என்னையும் கூட்டி அமர்த்தி - நிலையாயிருக்கச் செய்து, ஆட் கொள்ளும் வகைக்கு உன் திருமனதில் அருள் கூர்ந்து (நினைத்து) (எனக்கு) நல்ல கதியைத் தந்தருளுவாயாக;

---

[தொடர்ச்சி ] O முடுக்கி ஓட்டுவர் - "பொருள்தீரில் முறுக்கியே உதைகொடு வசை யுரைதரு மனத்துரோகிகள்" - திருப்புகழ் 801.

** அடியார் கூட்டுறவை விரும்புதல்

- பாடல் 930-பக்கம் 708-கீழ்க்குறிப்பு X

தழைத்த சாத்திர மறைபொரு ளறிவுள
குருக்கள் போற்சிவ நெறிதனை யடைவொடு
*தகப்ப னார்க்கொரு செவிதனி லுரைசெய்த
முருகவித் தகவேளே-
சமத்தி னாற்புகழ் சனகியை நலிவுசெய்
திருட்டு ராக்கத னுடலது துணிசெய்து
சயத்த யோத்தியில் வருபவ னரிதிரு மருமகப்
பரிவோனே
செழித்த வேற்றனை யசுரர்க ளுடலது
பிளக்க வோச்சிய பிறகம ரர்கள்பதி
செலுத்தி யீட்டிய சுரபதி மகள்தனை மணமதுற்
றிடுவோனே.
திறத்தி னாற்பல சமணரை யெதிரெதிர்
† கழுக்க ளேற்றிய புதுமையை யினிதொடு
திருத்த மாய்ப்புகழ் **மதுரை**யி லுறைதரும்
அறுமுகப் பெருமாளே.(4)

## 964. திருவடியிற் பக்தி பெற

தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன
தான தானதன தத்ததன தத்ததன தத்ததான

சீத வாசனைம லர்க்குழல்பி லுக்கிமுக
மாய வேல்விழிபு ரட்டிநகை முத்தமெழ
தேமல் மார்பினிள பொற்கிரிப ளப்பளென
தொங்கலாரஞ்-

---

* சிவபிராற்கு உபதேசித்தது - பாடல் 327 பக். 314 குறிப்பு.

† கழுவில் ஏற்றியது - சமணர் கழு ஏறின (ஸ்)தம்பம் - " போற்று சீர்ப் பிள்ளையார் தம் புகழ்ச் சயத் தம்ப மாகும்"

-பெரிய புரா - சம்பந்தர்-856.

சமண் அழித்த சம்பந்தரின் புகழ் பெருகியது:-

"சமணை நீக்கி உலகெலாம் உய்யக் கொண்ட
ஞானசம்பந்தர் வாய்மை ஞாலத்திற் பெருகி யோங்கத்
தேனலர் கொன்றை யார்தந் திருநெறி நடந்த தன்றே"

-பெரிய புரா-சம்பந்த-859.

மதுரைவாசிகள் சம்பந்தரைப் புகழ்ந்தது:-

"பிள்ளையார்...மதுரை மூதூர்....வந்தருளக் கண்டு.....துன்னிய மாதர் மைந்தர் விடிவதாய் முடிந்த திந்த வெஞ்சமண் இருளும் என்பார்" - பெரிய புரா-801, 805.

விரிவாகத் தழைந்துள்ள சாத்திரங்களில் மறை பொருளாயுள்ள ரகசியங்களை ஞான நிறைந்த குருமூர்த்தி-போல விளங்கிச் சிவ சன்மார்க்கங்களை முறையோடு - தக்கபடி (உனது) தந்தையாகிய சிவபிரானது ஒப்பற்ற திருச் செவியில் உபதேசித்த முருக! ஞானியே! செவ்வேளே!

தன்னுடைய சாமர்த்தியத்தால், புகழ் பெற்ற ஜானகியை (சீதையை)த் துன்பத்துக்கு ஆளாக்கிய திருட்டு ராக்ஷதனாம் ராவணனுடைய உடலைத் துண்டு படுத்தி அழித்துச், (சயத்து) வெற்றி நிலையில் அயோத்தி நகருக்கு வந்தவராகிய (ஸ்ரீ ராமரின்) திருமாலின் அழகிய மருமகனாய் அன்பு கூர்ந்தவளே!

செழுமைவாய்ந்த வேலாயுதத்தை அசுரர்களின் உடல்கள் பிளக்கும்படிச் செலுத்தின பின்னர்த், தேவர்களை அவர்களுடைய பதி ஊராகிய பொன்னுலகுக்கு அனுப்பிவைத்து, (ஈட்டிய) ஈண்டிய - நெருங்கி நின்ற - அண்டி நின்ற - தேவர் தலைவனாம் இந்திரனது மகள் - தேவ சேனையைத் திருமணஞ் செய்து கொண்டவனே!

சாமர்த்தியத்தாற் பல சமணர்களை எதிர் எதிராய் அமைக்கப்பட்ட கழுமரங்களில் (நீ) ஏறவைத்த அற்புத நிகழ்ச்சியை இன்பகரமாய்த், தத்தம் பிழை திருந்தின நிலையினராய், யாவரும் புகழ்ந்த **மதுரை** மாநகரில் வீற்றிருக்கும் ஆறுமுகப் பெருமாளே! (கதிதனைத் தருவாயே)

## 964.

**கு**ளிர்ந்த வாசனையுள்ள மலரணிந்த கூந்தலை அலங்கரித்து, முகத்தில் உள்ள, மயக்குவதான, வேல் போலும் கண்களைப் புரட்டி, புன்சிரிப்பு முத்துப்போன்ற பற்களினின்றும் தோன்ற (அல்லது முத்தம் - பிரியத்தை - மகிழ்ச்சியைத் தெரிவிக்க), தேமல் படர்ந்த மார்பில் உள்ள (இள பொற்கிரி) பொன் இளகிரி அழகிய இளமை விளங்கும் மலையன்ன கொங்கையின்மீது (தொங்கல் ஆரம் பளப்பளென) தொங்கல் ஆரம்-(ஆரத் தொங்கல்)முத்துமாலை - பளபள என்று விளங்க (அல்லது *கொங்கை பளபள என்று விளங்க - அதன்மீது முத்துமாலை)-

* 'மடமாதர் மார்படைத்த கோடு பளீர் பளீரென' - திருப்பு.441.

*சேரு மோவியமெ னச்சடமி னுக்கிவெகு
வாசை நேசமும்வி ளைத்துஇடை யுற்றவரி
† சேலை காலில்விழ விட்டுநடையிட்டு‡மயி
லின்கலாபச்;

சாதி யாமெனவெ ருட்டிநட மிட்டுவலை
யான பேர்தமையி ரக்கவகை யிட்டுகொடி
சாக நோய்பிணிகொ டுத்திடர்ப டுத்துவர்கள்
பங்கினூடே-

தாவி மூழ்கிமதி கெட்டவல முற்றவனை
பாவ மானபிற விக்கடலு ழப்பவனை
தாரு லாவுபத பத்தியிலி ருத்தவது
மெந்தநாளோ;

Xவாத வூரனைம தித்தொருகு ருக்களென
ஞான பாதம்வெளி யிட்டுநரி யிற்குழுவை
வாசி யாமெனந டத்துவகை யுற்றரச னன்புகாண-

மாடை யாடைதர பற்றிமுன கைத்துவைகை
யாறின் மீதுநட மிட்டுமணெ டுத்துமகிழ்
மாது வாணிதரு பிட்டுநுகர் பித்தனருள்
கந்தவேளே;

---

* "ஊருவிற் றோன்றிய உயிர் பெய் ஓவியம்" என்றார் ஊர்வசியை கம்ப-ராமா- மாரீசன்-22.

† "தாளொடு மேவிய துகில்" - பாடல் 948-அடி 1.

‡ "மயிலின் குழா அம் ஏய்ப்ப' - பெருங்கதை 2-7-93.

X மாணிக்கவாசகர் வரலாறு:- பாடல் 439 - பக்கம் 601 கீழ்க்குறிப்பு; பாடல்கள் -4, 653-ம் பார்க்க.

சேர்ந்துள்ள சித்திரப் பதுமையோ இவ் வுருவம் என்று சொல்லும்படி உடலை மினுக்கி மிக்க காமப் பற்றையும் நட்பையும் வரப்பண்ணி அரையிற் கட்டியுள்ள (வரி) கோடுகள் உள்ள (அல்லது அரி அழகுள்ள) புடைவை கணுக்கால் அளவும் தொங்கும்படி விட்ட, (அழகாக) நடந்து (கலாப மயிலின்) தோகை விளங்கும் மயிலின்-

இனமாமென்று சொல்லும்படி வந்தவர்களை வெருட்டியும், நடித்தும், தங்கள் வலையில் விழும் பேர்வழிகளைத் தம்மை இரந்து வேண்டும்படியான வழிக்குக் கொண்டுவர (இட்டுகொடி) கொடியிட்டு துவசம் கட்டியும் - முயன்று நின்றும் - சாதற்கே, நோயும் பிணியும் தந்து - (நோய்பிணி வரும்படிச் செய்து), துன்பம் உண்டு பண்ணுபவர்களாம் (வேசையர்தம்) பக்கத்தே வேசையரிடத்தினுள் - வேசையர்பால் -

பாய்ந்து, (காமத்தில்) முழுகி, அறிவு கெட்டு, துன்பம் அடைந்தவனை, பாவத்துக்கு காரணமான பிறவிக் கடலில் உழன்று பிரயாசைப் படுபவனை, மாலைகள் விளங்கும் உனது (பதபத்தியில்) திருவடிப் பத்தியில் - திருவடியைப் பத்தி செய்யும் நிலையில் என்னை நீ இருத்தி வைப்பதும் எந்த நாளிலோ! என்றைக்கோ!

திருவாதவூரில் அவதரித்த மாணிக்க வாசகரைக் குறிக்கொண்டு, ஒரு குருமூர்த்தியாக நின்று, ஞான பாதத்தை - (முத்திக்கு வழிகளான சரியாபாதம், கிரியாபாதம், யோக-பாதம், ஞானபாதம் என்ற நால் வகையான சைவ சமய மார்க்கங்களுள்) ஞான மார்க்கத்தை அவருக்கு (வெளியிட்டு) வெளிப்பட உபதேசித்தும், நரிகளின் கூட்டத்தைக் குதிரை-களாம்படி (நடத்தின) (நடத்து) ஒரு திருவிளையாடலில் (உவகை உற்று) மகிழ்ச்சி பூண்டும், பாண்டியன் (தனது) அன்பு தோன்ற

(மாடையாடை) பொன்னாடை தர, அதை வாங்கிக் கொண்டு, முன் சிரித்தும், வைகை யாற்றங்கரை மீது கூத்தாடி, மண் எடுத்து மகிழ்ந்தும், (மாது வாணி) பிட்டு வாணிபம் செய்த மாது வந்தியம்மையார் தந்தை பிட்டை உண்டுப் (விளையாடின) பித்தனால் (சிவபிரான்) பெற்றருளிய கந்த வேளே!

வேத லோகர்பொனி லத்தர்தவ சித்தரதி
பார சீலமுனி வர்க்கமுறை யிட்டலற
வேலை யேவியவு ணக்குலமி றக்கநகை
கொண்டசீலா-

*வேத மீனகம லக்கணர்மெய் பச்சைரகு
ராம ரீணமயி லொக்கமது ரைப்பதியின்
மேவி வாழமரர் முத்தர்சிவ பத்தர்பணி
தம்பிரானே.(5)

## 965. திருவடி பணிய

தனனத் தந்தன தந்தன தனதன
தனனத் தந்தன தந்தன தனதன
தனனத் தந்தன தந்தன தனதன தனதான

புருவச் செஞ்சிலை கொண்டிரு கணைவிழி
யெறியக் கொங்கையி ரண்டெனு மதகரி
பொரமுத் தந்தரு மிங்கித நயவித மதனாலே-

புகலச் சங்கிசை கண்டம தனிலெழ
உருவச் செந்துவர் தந்தத ரமுமருள்
புதுமைத் தம்பல முஞ்சில தரவரு மனதாலே;

பருகித் தின்றிட லஞ்சுக மெனமன
துருகிக் குங்கும சந்தன மதிவியர்
படியச் சம்ப்ரம ரஞ்சித மருள்கல வியினாலே-

பலருக் குங்கடை யென்றெனை யிகழவு
மயலைத் தந்தரு மங்கையர் தமைவெகு
பலமிற் கொண்டிடு வண்டனு முனதடி
பணிவேனோ;

---

* திருமால் வேதத்தைத் தேடித் தந்தது - மச்சாவதாரத்தில்
- பாடல் 245-பக்கம் 108-கீழ்க்குறிப்பு.
"ஆரணற்கு மறைதேடி யிட்ட திருமால்" என்றால் 580-ஆம் பாடலில்.

வேத லோகர் - வேதமோதும் நன் மக்கள், (பொன் நிலத்தர்) பொன்னுலகத்துத் தேவர்கள், தவசிகள், சித்தர்கள், மிக்க பெருமை வாய்ந்த ஒழுக்கம் நிறைந்த முனிகணங்கள் - இவர்களெல்லாம் முறையிட்டுக் கூச்சலிட்டலற வேலாயுதத்தைச் செலுத்தி (அவுணக்குலம்) அசுரர் கூட்டம் இறக்கும்படிச் சிரித்த (சீலனே) தூயனே!

(அசுரனாற் கவரப்பட்ட) வேதத்தை மீட்டுத்தந்த (கமலக்கண்ணர்) தாமரை போன்ற கண்களை உடையவரும், உடல் பச்சை நிறமுள்ளவருமான (ரகுராமர்) திருமால் தந்த (மயில்) பெண்களான - தேவசேனை - வள்ளி இவர்கள் இருவருடனும் (அல்லது வள்ளியுடன்) மதுரைப்பதியில் வீற்றிருந்து வாழ்கின்ற தம்பிரானே! தேவர்களும், ஜீவன் முத்தர்களும், சிவபத்தர்களும் வணங்குகின்ற தம்பிரானே!

(பத பத்தியில் இருத்துவதும் எந்த நாளோ)

## 965.

**பு**ருவமாகிய நல்ல வில்லை ஏந்தி, இரண்டு கண்களாகிய அம்புகளை வீசிக், கொங்கைகளாம் இரண்டு மதயானைகள் சண்டை செய்ய, முத்தத்தைத் தருகின்ற இனிமை வாய்ந்த உபசார வழிகளாலே-

பேசச், சங்கின் ஒலி போன்ற ஒலி கழுத்தில் உண்டாக அல்லது சங்கு போன்ற கழுத்தில் (இசை) ஒலி எழ - (புட்குரல் எழ), உருவம் - நிறம், செம்மை வாய்ந்ததாய்த் துவர் தந்த அதரம் பவளம் போன்ற தான வாயிதழ் (கீழுதடு) தருகின்ற எழில் வாய்ந்த தாம்பூல எச்சில் சிலவற்றையும் கொடுக்க, (உணர்ச்சி) எழும் மனதுகொண்டு (அந்த எச்சிலைக்)

குடித்து உண்ணுதல் நல்ல சுகமாம் என்று மனம் உருகிக், குங்குமமும் சந்தனமும் அதிக வேர்வையினால் கலந்து படிய, களிப்பையும், (ரஞ்சிதம்) இன்பத்தையும் தருகின்ற புணர்ச்சித் தொழிலாலே-

பலருக்கும் கடையன் (கீழானவன்) இவன் என்று என்னை இகழும்படியாகக் காம மயக்கத்தைத் தருகின்ற அரிய மாதர்களை மிக்க பலமாக நம்பிப் பிடித்துக் கொண்டுள்ள (வண்டன்) தீயனாகிய நானும் உன்னுடைய திருவடியைப் பணிவேனோ!

திருவைக் கொண்டொரு தண்டக வனமிசை
வரவச் சங்கொடு வந்திடு *முழையுடல்
சிதறக் கண்டக வெங்கர னொடுதிரி சிரனோடு-
திரமிற் றங்கிய † கும்பக னொருபது
தலைபெற் றும்பரை வென்றிடு மவனொடு
சிலையிற் கொன்றமு குந்தன லகமகிழ் மருகோனே;
மருவைத் துன்றிய பைங்குழ லுமையவள்
சிவனுக் கன்பரு ளம்பிகை ‡ கவுரிகை
மலையத் தன்தரு சங்கரி கருணைசெய் முருகோனே-
Xவடவெற் பங்கய லன்றணி குசசர
வணையிற் றங்கிய பங்கய முகதமிழ்
மதுரைச் Oசெங்கிலி மண்டப இமையவர்
பெருமாளே. (6)

## 966. திருவடியைப் பெற

தனன தான தானத் தனந்த
தனன தான தானத் தனந்த
தனன தான தானத் தனந்த தனதான

முகமெ லாநெய் பூசித் தயங்கு
நுதலின் மீதி லேபொட் டணிந்து
முருகு மாலை யோதிக் கணிந்த மடமாதர்-
முதிரு மார பாரத் தனங்கள்
மிசையி லாவி யாய்நெக் கழிந்து
முடிய மாலி லேபட் டலைந்து பொருள்தேடிச்;

* உழை-மானுருக்கொண்ட மாரீசன். மாரீசன் - கரன் - இவர்கள் வரலாற்றைப் பாடல் 231-பக்கம் 78-கீழ்க்குறிப்பிற் பார்க்க.

திரிசிரன் - இவன் சூர்ப்பணகையால் தூண்டப்பட்டு இராமபிரானிடம் யுத்தத்துக்கு வந்து இரண்டு தலை யிழந்து பிறகு ஒரு சிரத்துடன் மாயத்தால் யுத்தம் செய்து இறந்தவன். இவனுக்கு மூன்று சிரம். (அபிதான சிந்தாமணி)

லக்ஷ்மணரால் மூக்கு அரியப்பட்ட சூர்ப்பணகையின் உடன் பிறந்தவன் கரன். தூஷணன், திரிசிரன், கரன் இவர்கள் மூவரும் சூர்ப்பணகையின் தூண்டுதலால் ராமரொடு பொருது இறந்தவர்கள்.

† கும்பகன் - கும்பகர்ணன் இராவணன் தம்பி - பாடல் 839-பக்.462 கீழ்க்குறிப்பு. ‡ கவுரிகை - கவுரி - பாடல் 303-அடி 6 பார்க்க.

(தொடர்ச்சி 799 ஆம் பக்கம் பார்க்க)

லக்ஷ்மியாம் சீதையை அழைத்துக் கொண்டு ஒப்பற்ற தண்டகாரணியத்தில் வந்திருந்தபொழுது, பயத்தோடு வந்து உலவின (உழை) மாரீச மானின் உடல் பாணம் பட்டுச் சிதறி அழியத், துஷ்டர்களான கொடிய கரன், திரிசிரன் என்னும் அரக்கர்களையும்-

(திரம்) வலிமை கொண்டிருந்த (அல்லது மலைபோல இருந்த) கும்பகர்ணனையும், ஒப்பற்ற பத்துத் தலைகளைப் பெற்றுத் தேவர்களை வென்றவனான (அவனும்) ராவணனையும், தமது கோதண்டம் என்னும் வில்லேந்திக் கொன்ற முகுந்தன் - திருமாலின் நல்ல உள்ளம் மகிழ்கின்ற மருமகப் பிள்ளையே!

வாசனை கொண்ட மருக்கொழுந்தைச் சூடியுள்ள அழகிய கூந்தலை உடைய உமையவள், சிவபிராற்குத் தனது அன்பைக் காட்டும் அம்பிகை, கௌரி, மலையரசன் (இமவான்) பெற்ற சங்கரி (பார்வதி) தனது கருணையை அன்பைக்) காட்டும் குழந்தையே!

வடவெற்பு - வடக்கே உள்ள இமயமலைக்கு அங்கு அயல் - அங்க சமீபத்தில் உள்ள (அன்று) முன்பு அழகிய குச சரவணையில்-(குசம்) தருப்பைகள் வளர்ந்து சூழ்ந்திருந்த (அல்லது - குசம் - நீர் நிறைந்திருந்த) சரவண மடுவில் தங்கியிருந்த தாமரையன்ன திருமுகத்தை உடையவனே! தமிழ் (வளர்ந்த) மதுரையிற் சங்கிலி மண்டபம் எனப்படும் மண்டபத்தில் வீற்றிருக்கும் பெருமாளே! தேவர் பெருமாளே! (உனதடி பணிவேனோ)

## 966.

**முகம்** முழுமையும் வாசனைத் தயிலத்தைப் பூசியும், விளங்கும் நெற்றியில் பொட்டு இட்டுக்கொண்டும், வாசனையுள்ள, பூமாலையைக் கூந்தலிலே அணிந்துள்ள அழகிய மாதர்களின்-

முற்றினதும், முத்துமாலை அணிந்ததும், கனத்ததுமான கொங்கைகளின் மேல் (ஒரே) உயிராய், உள்ளம் நெகிழ்ந்து அழிந்து, எப்போதும் காம மயக்கிலே அகப்பட்டு (அதனால்) (வேசையர்க்குப் பொருள் கொடுக்க வேண்டி) நான் அலைந்து, பொருள் தேடி-

---

X 'இமையச் சாரல் தங்கிய கமலம்பூத்த சரவணம்'கந்தபுரா 1-11-90.

O சங்கிலி மண்டபம்-இது 'கிளி மண்டபம்' என இப்போதுவழங்கும்.

செகமெ லாமு லாவிக் கரந்து
திருட னாகி யேசற் றுழன்று
திமிர னாகி யோடிப் பறந்து திரியாமல்-

தெளியு ஞான மோதிக் கரைந்து
சிவபு ராண நூலிற் பயின்று
செறியு மாறு தாளைப் பரிந்து **தரவேணும்;**

*அகர மாதி யாமக்ஷ ரங்க
ளவனி கால்வி ணாரப் பொடங்கி
அடைய வேக ரூபத்தி லொன்றி முதலாகி-

அமரர் காண வே†யத்த மன்றில்
அரிவை பாட ஆடிக் கலந்த
அமல நாத னார்முற் பயந்த முருகோனே;

சகல வேத சாமுத்ரி யங்கள்
சமய மாறு லோகத்ர யங்கள்
தரும நீதி சேர்தத் துவங்கள் தவயோகம்-

---

*அகரமாதி....அக்ஷரங்கள் முதலாகி - அக்ஷரங்கள் ஐம்பத்தொன்று -அகாராதி க்ஷகாராந்தம் ஐம்பத்தொன்றாகும் - (மூலாதாரம் 4, சுவாதிஷ்டானம், 6; மணி பூரகம் 10, அனாகதம் 12, விசுத்தி 16; ஆஞ்ஞை-3; - தொகுதி 3-பக்கம் 549-ன் பின்புறமுள்ள அநுபந்தத்தைப் பார்க்க): "இணையார் கழலிணை ஐம்பத்தொன்றாகும்" [திருமந்திரம் 898] - "ஆதி எழுத்தவை ஐம்பத்தோடொன்றென்பர்" [திருமந்திரம் 963]

"ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தின் அடைவை அறிந்தபின்
ஐம்ப தெழுத்தே அஞ்செழுத் தாமே." -(திருமந்திரம் 2698)

-இதனால் எல்லாம் ஆயின ஐம்பதெழுத்துக்களே என்ப; இவ்வெழுத்துக்களுட் சிறந்தன ஐந்தெழுத்துக்களே என்பதும் விளக்கமா-கின்றன. இந்த ஐந்தெழுத்தைக் கொண்டே மண். நீர், காற்று, தீ, விண் என்னும் ஐந்து பூதங்களும் படைக்கப்பட்டன, பல யோனிகளும் படைக்கப்பட்டன, யாவும் காக்கப் படுகின்றன, இறைவன் ஏகரூபத்தில் ஐந்தெழுத்திலே அமர்ந்து விளங்குகின்றான்.

(தொடர்ச்சி 801 ஆம் பக்கம் பார்க்க)

உலகம் முழுமையும் உலவித் திரிந்தும், ஒளித்தும், திருட்டுத் தொழிலனாகி சற்று அலைந்து, மந்தனாகி, அங்கும் இங்கும் ஓடிப் பறந்து திரியாமல்-

தெளிவைத் தரும் ஞான நூல்களை ஓதி ஒலித்தும், சிவபுராண நூல்களிற் பயின்றும், மனம் நெருங்கிப் பொருந்துமாறு உனது திருவடியை அன்பு கூர்ந்து தரவேண்டும்.

அகரம் முதலானவையாம் *(51)* அக்ஷரங்கள் பூமி, (கால்) காற்று, விண், (ஆர்) நிறைந்த (அப்பு) நீர், இவையுடன் (அங்கி) தீ இவையெலாம் கூடிட, ஏக ரூபத்தில் - ஒரு உருவமாகக் கூத்தனாய் -நடராஜப் பெருமானாய்) அமைந்து - முதற் பொருளாக விளங்கி-

தேவர்கள் தரிசிக்கப் பொன்னம்பலத்தில் (தில்லையில் சிதம்பரத்தில்) தேவிபாட அங்கு ஆடி விளங்கின - மலமற்றவராம் (நாதனார்) நடராஜப் பெருமானால் முன்பு தந்த குழந்தையே!

சகல வேதங்களிலும் கூறப்பட்ட (சாமுத்ரியங்கள்) லக்ஷணங்கள், ஆறு சமயங்கள், மூன்று லோகங்கள், தரும நீதிகளுடன் சேர்ந்த உண்மைகள், தவம், யோகம், இவையெலாம் சிறந்து ஓங்கும்படிப்

---

(தொடர்ச்சி:) "அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத் தாற்பல யோனி படைத்தனன்
அஞ்செழுத் தாலிவ் வகலிடந் தாங்கினன்
அஞ்செழுத் தாலே அமர்ந்துநின் றானே"

-திருமந்திரம் *966.*

"அகார முதலாக ஐம்பத்தொன் றாகி * * நகார முதலாகும் நந்திதன் நாமமே"-திருமந்திரம் *2699;* பாடல் *652*-ன் குறிப்புக்களைப் பார்க்க. திருப்புகழ் பாடல் *1127*-ம் பார்க்க.

பூதங்கள் ஐந்திற் புணர்ந்து ஆடுபவர் - நடராஜப் பெருமான்;
'பூதங்கள் ஐந்திற் புணர்ந்தாடும் சித்தனே' - திருமந்திரம் *2730.*

† அத்த மன்று - பொன்னம்பலம். **அரிவை பாட ஆடுவது:**
"கீதம் உமைபாட....வேத முதல்வன் நின்றாடும்"

-சம்பந்தர் *1-46-7.*

**தேவர்கள் காணத் தில்லைப் பொன்னம்பலத்தில் ஆடுதல்,**
"இமையவர் துதிசெய....தில்லை மன்றில் ஆடலதுடையார்"

-சம்பந்தர் *2-94-9:*

தவறி லாம லாளப் பிறந்த
தமிழ்செய் *மாறர் † கூன்வெப் பொடன்று
தவிர **ஆல** **வாயிற்** சிறந்த பெருமாளே.(7)

## 967. மாதர் மீதுள மயல் அற

தானத்தன தானன தானன
தானத்தன தானன தானன
தானத்தன தானன தானன தனதான

‡ ஏலப்பணி நீரணி மாதர்கள்
கானத்தினு மேயுற வாடிடு
மீரத்தினு மேவளை சேர்கர மதனாலும்-
Xஏமக்கிரி மீதினி லேகரு
நீலக்கய மேறிய னேரென
ஏதுற்றிடு மாதன மீதினு மயலாகிச்;
சோலைக்குயில் போல்மொழி யாலுமெ
தூசுற்றிடு நூலிடை யாலுமெ
தோமிற்கத லீநிக ராகிய தொடையாலும்-
சோமப்ரபை வீசிய மாமுக
சாலத்திலு மாகடு வேல்விழி
சூதத்தினு **நானவ** **மேதின** **முழல்வேனோ;**
Oஆலப்பணி மீதினில் மாசறு
மாழிக்கிடை யேதுயில் மாதவ
**னானைக்கினி தாயுத வீயருள் நெடுமாயன்-

---

* நின்றசீர் நெடுமாற நாயனார் - (கூன்பாண்டியன்):-
" நெடுமாற னார்பெருமை யுலகேழு நிகழ்ந்ததால்"
" தென்னாடு சிவம்பெருகச் செங்கோலுய்த் தறமளித்துச்
சொன்னாம நெறிபோற்றி....பொலிகின்றார்."
" திருநீற்றின் நெறிவிளங்க உரைசெய் பெரும்
புகழ் விளக்கி ஓங்குநெடு மாறனார்"
- பெரிய புராணம்-நின்ற சீர்நெடுமாற 1,2,9.

† **"கூன்வெப்பு நீங்கப் பெற்றது"**:
- பாடல் 181-பக்கம் 420-2 கீழ்க்குறிப்பு.

‡ ஏலம் - மயிர்ச்சாந்து 'ஏலமார்தரு குழல்' - சம்பந்தர் 3-32-4.

X கொங்கைக்கு - மேரு மலையும்; முலைக் காம்புக்கு - கரிய நீல யானையும் உவமை கூறப்பட்டுளது.

(தொடர்ச்சி 803 ஆம் பக்கம் பார்க்க)

பிழையிலா வகையில் ஆட்சி செய்வதற்கே தோன்றிய தமிழ் வளர்த்த (கூன்) பாண்டியரின் சுரத்தொடு கூனும் அன்று நீங்கத் (திரு ஆலவாயில்) **மதுரைத்** திரு ஆலவாய்த் திருக்கோயிலில் சிறந்து வீற்றிருக்கும் பெருமாளே!

(தாளைப் பரிந்து தரவேணும்)

## 967.

**ஏ**லப் பனி நீர் - (ஏலம்) மயிர்ச் சாந்தும், பன்னீரும் மேற்கொள்ளும் மாதர்களின் இசை(ப்) பாடல் மீதும், அவர்கள் உறவாடிப் பேசும் (ஈரத்தினும்) அன்பு மொழிகள் மீதும், வளையல் அணிந்த கரங்களின் மீதும்

(ஏமக்கிரி) பொன்மலை (மேருமலை) மேலே, கரிய நீல (கயம்) யானை ஏறிய தன்மையதாமென்னும்படிப் (பொன்னிறக் கொங்கைகளின் மீது கரிய நீல முலைக்காம்புகள்) பொருந்தினவாய் விளங்கும் அழகிய கொங்கைகளின் மீதும் காம இச்சை பூண்டு-

சோலையில் உள்ள குயிலினி குரல் போன்ற பேச்சுக்களாலும், ஆடை அணிந்துள்ள நூல் போன்ற இடையாலும், குற்றமில்லாத வாழைக்கு ஒப்பான தொடையாலும்,

நிலவொளி வீசிடும் அழகிய முகத்தின் மினுக்கு நடிப்பாலும், பெருமை வாய்ந்ததும் விஷம் கொண்டதுமான (அல்லது அழகியதும்,கடுமை வாய்ந்ததுமான) வேல் போன்ற கண்களின் சூது (அதினும்) சூதிலும், நான் வீணாகவே நாள்தோறும் அலைச்சல் உறுவேனோ!

விஷங்கொண்ட பாம்பின் (ஆதிசேடன்) மேலே (அல்லது ஆல்-ஆலிலையில் அந்தப் பாம்பின் மேலே) குற்றமற்ற (பாற்) கடலிடையே அறிதுயில் கொண்டுள்ள மாதவன் - (பெரியோன்) கஜேந்திரனுக்கு அன்புடனே உதவி செய்தருளிய பெரிய மாயன்-

---

(தொடர்ச்சி)O "ஆலத் திலையான் அரவின் அணைமேலான்
நீலக் கடலுள் நெடுங்காலம் கண் வளர்ந்தான்"

-பெரியாழ்வார் 2-6-6.

** கஜேந்திரனுக்கு உதவியது

- பாடல் 939-பக்கம் 731 கீழ்க்குறிப்பு.

*ஆதித்திரு நேமியன் †வாமன
நீலப்புயல் நேர்தரு மேனியன்
ஆரத்துள வார்திரு மார்பினன் மருகோனே;
‡கோலக்கய மாவுரி போர்வையர்
Xஆலக்கடு வார்கள நாயகர்
Oகோவிற்பொறி யால்வரு மாசுத குமரேசா-
**கூர்முத்தமிழ் வாணர்கள் வீறிய
சீரற்புத மாநக ராகிய
கூடற்பதி மீதினில் மேவிய பெருமாளே.(8)

## 968. ஞான வாழ்வு பெற

தனதான தானத் தனதான

கலைமேவு ஞானப் பிரகாசக் — கடலாடி ஆசைக் கடலேறிப்;
பலமாய வாதிற் பிறழாதே — பதிஞான வாழ்வைத் தருவாயே;
மலைமேவு ††மாயக் குறமாதின் — மனமேவு வாலக் குமரேசா;

---

* 'ஆதி ஆதி ஆதி நீ'- நாலாயிரப்பிரபந்தம்-திருச்சந்த விருத்தம்- 34.

† 'வாமனன் என் மரதக வண்ணன்' - திருவாய்மொழி 2-7-8.
வாமனாவதாரம் - பாடல் 458-பக்கம் 24 கீழ்க்குறிப்பு.

‡ யானைத்தோல் போர்வை
-பாடல் 236-பக்கம் 210-கீழ்க்குறிப்பு.

X விஷம் உண்டது - பாடல் 509-பக்கம் 162 கீழ்க்குறிப்பு.

O "முக்கட் பரஞ்சோதி ....ஐந்துமுகத்தோ டதோ
முகமுந் தந்து திருமுகங்கள் ஆறாகிச் செந்தழற்கண் ஆறும்
** தீப்பொறி ஆறுய்ப்ப - ** சரவணத்தில்**
உய்ப்பத் திருவுருவாய்" - கந்தர்கலி வெண்பா.
'தொல்லைத் திருமுகம் ஆறுங் கொண்டான் ** திருமுகம் ஆறு
தன்னில் பொற்புறு நுதற்கண் தோறும் புலிங்க
மொன்றொன்று தந்தான்; ** மூவிருபொறிகள் தோன்றி
மூதண்டங் காறுஞ் சென்ற...சரவணம் எனும்தடந்
தன்னிற் சேர்த்தனன் **ஒருதிரு முருகன் வந்தாங்
குதித்தனன் உலகம் உய்ய" - கந்தபுரா 1-11 (43-92).

(தொடர்ச்சி 805 ஆம் பக்கம்)

ஆதிமூர்த்தியாய் விளங்கும் அழகிய சக்ராயுதன், (அல்லது ஆதிமூர்த்தி, திருநேமியன்), வானரூபம் (குறள்-வடிவம்) எடுத்தவன், நீலமேகம் போன்ற திருமேனியை உடையவன், மாலையாகத் துளவத்தை நிரம்பக் கொண்ட அழகிய மார்பை உடையவன் - ஆகிய திருமாலின் மருகனே!

அழகிய யானையின் பெரிய உரித்தோலைப் போர்வையாகக் கொண்டவர், ஆலகால விஷம் நிறைந்த கண்டத்தைக் (கழுத்தைக்) கொண்ட தலைவர் - ஆகிய சிவபிரானுடைய (கோவிற்பொறி) கண்களினின்றும் வந்த தீப் பொறிகளினின்றும் வெளிவந்த அழகிய பிள்ளையாம் குமரேசனே!

சிறந்த முத்தமிழ்ப் புலவர்கள் விளங்கின சிறப்பைக் கொண்ட அற்புத மகா நகரமாம் **கூடற்பதி**யில் (மதுரை நகரில்) வீற்றிருக்கும் பெருமாளே!

(நான் அவமே தினம் உழல்வேனோ!)

## 968.

**க**லைகள் எல்லாம் தன்னுள் அடங்கியுள்ள ஞான ஒளியான கடலிடையே திளைத்துக் குளித்து. மூவாசை எனப்படும் கடலைத் தாண்டிக் கடந்து,

பலத்ததான (சமய) வாதங்களில் மாறுபட்டுக் கிடக்காமல் - (பதி ஞான வாழ்வை) கடவுளைப் பற்றிய ஞான வாழ்வை - சிவஞான வாழ்வைத் தந்தருளுவாயாக.

(வள்ளி) மலையில் இருந்த ஆச்சரியத் தோற்றத்தைக் கொண்ட குறப்பெண் வள்ளியின் மனத்திலே வீற்றிருக்கும் இளங் குமரேசனே!

---

(தொடர்ச்சி) ** மதுரை - முத்தமிழ் வாணர்கள் வீறிய நகர் -

"முத்தமிழ் தேர்தரு மதுரைத் தலம்"

- மீனாட்சி பிள்ளைத்தமிழ் 5.

"சால்பாய மும்மைத் தமிழ் தங்கிய வங்கண் மூதூர்"

-பெரிய புரா-மூர்த்தி - 5.

"முத்தமிழோர் எண் மதுரை"

-திருவிளையாடற் பயகரமாலை 56.

†† 'முகமாயமிட்ட குறமாது' - பாடல் 199-பக்கம் 12.

*சிலைவேட சேவற் கொடியோனே †திருவாணி கூடற் பெருமாளே.(9)

## 969. அன்பு நிலை கூட

தானத் தனதான

நீதத் துவமாகி - நேமத் துணையாகிப்;
‡ பூதத் துயவான - Xபோதைத் தருவாயே;
Oநாதத் தொனியோனே - ஞானக் கடலோனே;
கோதற் றமுதானே - கூடற் பெருமாளே. (10)

## 970. திருவடியைக் கூட

தனதன தத்தந் தான தானன
தனதன தத்தந் தான தானன
தனதன தத்தந் தான தானன தனதான

மனநினை சுத்தஞ் சூது காரிகள்
அமளிவி ளைக்குங் கூளி மூளிகள்
மதபல நித்தம் பாரி நாரிக ளழகாக

வளைகுழை முத்தும் பூணும் வீணிகள்
விழலிகள் மெச்சுண் டாடி பாடிகள்
வரமிகு வெட்கம் போல வோடிகள் தெருவூடே;

---

* 'சிலை வேடனானது' - பொய்யா மொழிக்காக வேடனானது:
- பாடல் 422-பக்கம் 562-கீழ்க்குறிப்பு.

வள்ளிக்காக வேடனானது:- 'வனசர் கொம்பினைத் தேடி ஒரு வேட வடிவு கொண்டு பித்தாகி' - திருப்புகழ் 1230.

"வரிவில் வாளியன் நீலக்குஞ்சியன் நெடியன் வேட்டுவக்
கோலத்தைக் கொடு குமரன் தோன்றினான்"-கந்தபுரா. 6-24-66.

† திருவாணிகூடல் - திருமகளும் கலைமகளும் விளங்கும் கூடல்-
"திருமகட்கொடு தாமரைக் கூடமே; திருமால்
மருமகட்குவெண் டாமரை மாடமே....இப் பேரூர்"
-திருவிளையாடல்-திருநகர 4.

குறிப்பு: இந்த 968-ஆம் பாடல் பவானித் தலத்துக்கு உரியது. 'திருவானிகூடற் பெருமாளே' என்பதே சரியான பாடம் என்பர். வானி என்பது பவானி. வானிநதி - பவானி நதி; வானிகூடல் காவிரியாற்றுடன் வானி என்னும் பவானியாறு **கூடுவதால்,**

(தொடர்ச்சி 807 ஆம் பக்கம் பார்க்க.)

(பொய்யா மொழிப் புலவர் பொருட்டு) வில்லேந்திய வேடனாய் விளங்கினவனே! (அல்லது, வள்ளியின் பொருட்டு வில்லேந்திய வேடனது உருவம் கொண்டு சென்றவனே)! சேவற் கொடியைக் கொண்டவனே! இலக்குமியும் சரஸ்வதியும் (செல்வமும் கல்வியும்) விளங்கும் **கூடற்** பெருமாளே! (மதுரை நகர்ப் பெருமாளே)!

(பதிஞான வாழ்வைத் தருவாயே)!

## 969.

(**நீ**தத்வம்) நீதித்தன்மை கொண்டதாய் (அல்லது (நீதம்) - நீதியில் (துவம்) நிலை பெற்றதாய்)-நியமமான-சீரிய ஒழுக்கத்தில் ஒழுகுவதற்குத் துணை செய்வதாய்,

உயிர்வர்க்கங்களின் மீது கருணை செய்வதாய் விளங்கும் -(போதை) மூதறிவை - பெரிய ஞானத்தைத் தந்தருளுக.

ஒலியும் ஓசையுமாய் விளங்குபவனே - ஞானசமுத்திரமே!

குற்றமிலாத அமுதம் அனையவனே! **கூடற்** பெருமாளே! (மதுரை நகர்ப் பெருமாளே)

(போதைத் தருவாயே)

## 970.

**ம**னத்தில் நினைக்கின்ற முற்றின சூதான எண்ணங்களையே கொண்டவர்கள், ஆரவாரம் (அமர்க்களங்களைச்) செய்யும் பேயன்ன விகாரத்தினர்கள், (மதபலம்) ஆணவ பலத்தை - அகங்காரத்தை நாள்தோறும் (பாரி) பாரிக்கின்ற - விரித்துக் காட்டுகின்ற மாதர்கள் அழகாக-

(கை)யில் வளையல், (காதிற்) குழைகள், (மார்பில்) முத்துமாலை இவைகளைப் பூணும் வீணிகள் (வீண்பொழுது போக்குபவர்கள்), (விழலிகள்) பயனற்றவர்கள், மெச்சுப் படுதலில் ஆசைபூண்டு ஆடுபவர்கள் பாடுபவர்கள், வருவதற்கு மிக்க வெட்கம் கொண்டவர்கள்போல ஓடுபவர்கள், தெருவிலே

---

**'வானிகூடல்'** எனப் பெயர். "குடகில் வருங் காவிரி புகு வானிக்கொழு நாடு" - அவிநாசிப் புராணம். கல்வெட்டுக்களில் 'திருவானி கூடல்' எனும் பெயர் வருகின்றது. (செந்தமிழ்ச் செல்வி-சிலம்பு 13 - பரல் 5-பக்கம் 239; (பவ-மார்கழி;)

(தொடர்ச்சி 808 ஆம் பக்கம் பார்க்க)

குனகிகள் பகூடிம் போல பேசிகள்
தனகிக ளிச்சம் பேசி கூசிகள்
குசலிகள் வர்க்கஞ் சூறை காரிகள் பொருளாசைக்-

கொளுவிக ளிஷ்டம் பாறி வீழ்பட
அருளமு தத்தின் சேரு மோர்வழி
குறிதனி லுய்த்துன் பாத மேறிட அருள்தாராய்;

தனதன தத்தந் தான தானன
டுடுடுடு டுட்டுண் டூடு டூடுடு
தகுதிகு தத்தந் தீத தோதக எனபேரி-

தவில்முர சத்தந் தாரை பூரிகை
வளைதுடி பொற்கொம் பார சூரரை
சமர்தனில் முற்றும் பாறி நூறிட விடும்வேலா;

தினைவன நித்தங் காவ லாளியள்
நகைமுறை முத்தின் பாவை மான்மகள்
திகழ்பெற நித்தங் கூடி யாடிய முருகோனே-

திரிபுர நக்கன் பாதி மாதுறை
யழகிய *சொக்கன் காதி லோர்பொருள்
செலவரு ளித்தென் கூடல்மேவிய
பெருமாளே. (11)

---

!807 ஆம் பக்கத் தொடர்ச்சி

‡ பூதத்தயவு:- 'எவ்வுயிருந் தன்னுயிர்போல் எண்ணுந் தபோதனர்கள் செவ்வறிவை நாடிமிகச் சிந்தை வைப்ப தெந்நாளோ' தாயுமானவர்.

X போதை - பேரறிவு. 'போதையார் பொற்கிண்ணத்தடிசில்' சம்பந்தர் - 3-24-2.

O 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' - அப்பர் 6-38-1. 'ஓசை - அனர்த்த சத்தம்; ஒலி - அர்த்த சத்தம்' என்பர்.

---

* சிவபிரானுக்கு உபதேசித்தது:

-பாடல் 327-பக்கம் 314-கீழ்க்குறிப்பு.

கொஞ்சிப் பேசுபவர்கள், அன்பு கொண்டவர்கள் போலப் பேசுபவர்கள், (தனகிகள்) சரசஞ் செய்பவர்கள் (அல்லது) சண்டையிடுபவர்கள், (இச்சம்) இச்சை - தங்கள் விருப்பத்தைப் பேசிக் கூச்சம் கொள்பவர்கள் - (அல்லது - விருப்பமான வார்த்தைகளைப் பேசிக் கூசுபவர்கள்- நாணம் கொள்பவர்கள்); (குசலிகள்) தந்திரம் உள்ளவர்கள் (வர்க்கம்) பிசாசு அனையவர்கள், கொள்ளைக் காரிகள், பொருளாசை

கொண்டவர்கள்-(இத்தகைய வேசையர்மீது) எனக்கு உள்ள ஆசை சிதறுண்டு விழுந்து தொலையவும், உனது திருவருளாம் அமுதத்தைச் சேரும் - பருகும்படியான ஒரு வழியைக் காட்டும் அடையாளத்தில் என்னைச் சேர்ப்பித்து உனது திருவடியைக் கூடுதற்குத் திருவருளைத் தந்தருளுக;

தனதன தத்தந் தான தானன ....தகுதிகு தத்தம் தீத தோதக என்று பேரி (பறை)

(தவில்) மேளவகை, (முரசு) போர்ப்பறை, சத்தம் ஒலி செய்யும் (தாரை)நீண்ட ஊதுங்குழல், (பூரிகை) ஊதுகுழல், (வளை) சங்கு. (துடி) உடுக்கை, (பொற் கொம்பு) பொலிவுள்ள ஊது கொம்பு - இவையெலாம் (ஆர) நிறைந்து ஒலிசெய, சூரராம் அசுரர்களைப் போரில் யாவரும் சிதறுண்டு அழிந்து பொடிபடச் செலுத்தின வேலனே!

தினைப் புனத்தை நாள்தோறும் காவல் செய்து கொண்டிருந்தவள், பற்களின் (முறை) வரிசை முத்துப் போல உள்ள பதுமை போன்ற அழகி, மானின் வயிற்றிற் பிறந்தவள் - ஆகிய - வள்ளி விளக்கம்பெற நாள்தோறும் அவளுடன் கூடி விளையாடின (முருகனே) இளைஞனே!

முப்புரங்களை எரித்த (நக்கன்) நிர்வாணி, பாதி பாகத்தில் - இடது பாதியில் மாது - பார்வதிதேவி உறைகின்ற அழகிய சொக்கன் (சொக்கநாதப் பெருமான்) ஆகிய சிவனது காதில் ஒப்பற்ற (பிரணவப்) பொருளைப் புகும்படி ஓதி அருளித் (தென்) மதுராபுரியில் வீற்றிருக்கும் பெருமாளே!

(பாத மேறிட அருள் தாராய்)

## 971. சிவம் பெற

தத்ததன தத்ததன தத்ததன தத்ததன
தத்ததன தத்ததன தனதான

*முத்துநவ ரத்நமணி பத்திநிறை சத்தியிட
மொய்த்தகிரி முத்திதரு வெனவோதும்-
முக்கணிறை வர்க்குமருள் வைத்தமுரு கக்கடவுள்
† முப்பதுமு வர்க்கசுர ரடிபேணி;

பத்துமுடி தத்தும்வகை யுற்றகணி விட்டஅரி
‡ பற்குனனை வெற்றிபெற ரதமுரும்-
பச்சைநிற முற்றபுய லச்சமற வைத்தபொருள்
பத்தர்மன துற்றசிவம் **அருள்வாயே;**

தித்திமிதி தித்திமிதி திக்குகுகு திக்குகுகு
தெய்த்ததென தெய்த்ததென தெனனான-
திக்குவென மத்தளமி டக்கைதுடி தத்ததகு
செச்சரிகை செச்சரிகை யென ஆடும்;

X அத்தனுட னொத்தநட நித்ரிபுவ னத்திநவ
சித்தியருள் சத்தியருள் புரிபாலா-

---

* இந்த 971-ஆம் பாடலின் முதல் நாலடிகளின் கருத்து 'முத்தைத்தரு பத்தித் திருநகை' எனத் துவக்கும் முதற் பாடலின் முதல் நாலடியின் கருத்தை ஒருவாறு தழுவும்.

† **முப்பத்து மூன்று வகைத் தேவர்கள்:**

"நால் வேறியற்கைப் பதினொரு மூவரொ
டொன்பதிற் றிரட்டி உயர்நிலை பெறீஇயர்" - என வரும் திருமுருகாற்றுப்படை உரையில் - ஆதித்தன், உருத்திரன், வசு, மருத்துவன்என நான்குகூறாய்ப் பகுக்குங்கால், ஆதித்தர் பன்னிருவர், உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்தவர் இருவர் - ஆக முப்பத்து மூவராயினர் - எனவிளக்கம் தரப்பட்டுள து.

‡ பற்குனனை - பற்குனன்: அருச்சுனன். அருச்சுனனுக்குத் திருமால் தேர்ச் சாரதியான து - பாடல் 229-பக்கம் 72-குறிப்பு ‡

X **அத்தனுடன் ஒத்த நடனி:**

"அணங்கினொ டாடல் புரி எந்தை"-
"இணைபிணை நோக்கி நல்லாளோ டாடும் இயல்பினராகி"
-சம்பந்தர் 1-133-1; 3-101-6.

# 971.

முத்தும், நவரத்ன மணிகளும் வரிசையாக நிறைந்து விளங்கும் (சத்தி) பார்வதி தேவி தமது இடது பாகத்தில் நெருங்கியுள்ள (கிரி) மலையன்ன சிவன், முத்திக் கனியை அளிக்கும் (தரு) விருக்ஷம், என்றெல்லாம் சிறப்பித்து ஓதப்படும் - (அல்லது - முத்தும், நவரத்ன மணிகளும் வரிசையாய் நிறைந்துள்ள (சத்தி) கிரியாசக்தியாம் தேவசேனை இடதுபாகத்தில் விளங்க நின்றமலையே! முத்திக் கனியைத் தரும் கற்பக விருக்ஷமே! என்று ஓதிப்பணிந்த)-

முக்கண் மூர்த்திக்கும் அருள் பாலித்து உபதேசித்த முருகக் கடவுளே! முப்பத்து மூன்று வகையான தேவர்களாலும் திருவடி விரும்பிப் போற்றப் படுபவனே!(அல்லது - முப்பத்து மூன்று வகைத் தேவர்களும் தமது திருவடியைப் பேணி - பேண - போற்றி விரும்ப)

(ராவணனுடைய)பத்துத் தலைகளும் சிதறுண்ணும்படி தமதிடமிருந்த அம்பைச் செலுத்தின அரி (திருமால் அல்லது பகைவன்), அருச்சுனன் ஜெயம் பெறும் வகையில் அவனது தேரைச் செலுத்தின-

பச்சைநிறம் கொண்ட மேகநிறப் பெருமான் - ஆகிய திருமால் (சூரன் - அவன் தம்பியர் சிங்கமுகன், தாரகன் இவர்களிடத்தில்) வைத்திருந்த பயத்தை நீங்கவைத்த - நீக்கின (பொருள்) கடவுளே! பக்தர்கள் மனத்தில் பொருந்தி விளங்கும் சிவமே! அருள்வாயே! (அல்லது) (சிவம்) மங்களகரத்தை - மங்கலத்தை அருளுவாயே!

தித்திமிதி தித்திமிதி திக்குகுகு திக்குகுகு -தெய்த்ததென தெய்த்ததென தெனனான-

திக்குவென - திக்கு என்று மத்தளம், (இடக்கை) இடது கையால் அடிக்கப்படும் ஒரு தோற்கருவி, (துடி) உடுக்கை இவையெலாம் தத்தகுகு செச்சரிகை செச்சரிகை என்று ஒலிக்க, நடனமாடும்

பெரியோன் சிவனுடன் அவரது நடனத்துக்கு ஒத்ததான (நடநி) நடனத்தைப் புரிபவள், (த்ரிபுவனத்தி) மூன்று லோகங்களையும் ஈன்றவள் (மூன்று லோகங்களுக்கும் முதல்வி), (நவசித்தி) புதுமையான - அற்புதகரமான சித்திகளை - வரப் ப்ரசாதங்களை அருள்பவள் ஆகிய (சத்தி) தேவி ஈன்றருளிய குழந்தையே!

*அற்பவிடை † தற்பமது முற்றுநிலை பெற்றுவள
‡ ரற்Xகனக பத்மபுரி பெருமாளே. (12)

## ஸ்ரீ புருஷமங்கை.

[இது'நாங்குநேரி'என வழங்கும். திருநெல்வேலியிலிருந்து தெற்கே 19-மைல்.] வானமாமலை, 'தோதாத்ரி' எனவும் இத் தலத்துக்குப் பெயர் உண்டு. சிரீவரமங்கை - என்பது இத் தலத்தில் எழுந்தருளியுள்ள நாச்சியாரின் திருநாமத்தால் வந்த பெயர். நம்மாழ்வார் மங்களா சாஸநம்.

## 972. பரம் பொருளை உணர

தானதன தந்த தந்தன
தானதன தந்த தந்தன
தானதன தந்த தந்தன தனதான

ஆடல்மத னம்பின் மங்கைய
ராலவிழி யின்பி றங் கொளி
யாரமத லம்பு கொங்கையின் மயலாகி-
Oஆதிகுரு வின்ப தங்களை
நீதியுட னன்பு டன்பணி
யாமல்மன நைந்து நொந்துட லழியாதே;

** வேடரென நின்ற ஐம்புல
னாலுகர ணங்க ளின்தொழில்
†† வேறுபட நின்று ணர்ந்தருள் பெறுமாறென்-

---

* அற்ப இடை - நுண்ணிய இடையையுடைய மாதர்கள்.

† தற்பம் - மெத்தைவீடு. ‡ அல் - மதில்.

X கனக பத்மம் - பொற் றாமரை.

**இத் தீர்த்தத்தின் பெருமை:** இத் தீர்த்தம் **மதுரைத்** திருக்கோயிலுள் உள்ளது. "எண்டிசைய நதி வாவி வடிவான மா தீர்த்தம் எல்லாம் இப் **பொற், புண்டரிக தடத்தில்** ஒரு கோடியிலோர் கூறு நிகர் போதா ஈது, கண்டதனால் அறம், தீண்டப் பெற்றதனால் நற்பொருள், அங்கையால் அள்ளிக்,கொண்டதனால் இன்ப நலம், குடைந்ததனாற் பேரின்பம் கொடுக்கு மன்றே"-திருவிளை-தீர்த்த 32.

"எண்ணில் பெரும் பாவம் இமைப்பளவில் நீக்குவிக்கும்
புண்ணியநன் னீர்பொலியும் பொற்றாமரை"

-திருவாலவாய்-புராணம் 27-23.

(தொடர்ச்சி 813 ஆம் பக்கம் பார்க்க)

நுண்ணிய இடையை உடைய மாதர்களின் மெத்தை வீடுகள் எல்லாம் நிலை பெற்றனவாய் உயர்ந்த மதில்களுடன் விளங்குகின்றதும் - பொற்றாமரைக் (குளம்) விளங்குகின்றதுமான (அல்லது நுண்ணிய இடை மாதர்கள் மெத்தை வீடுகளில் எல்லாம் நிலையாக வாழ்ந் தோங்குகின்றதும், மதில்கள் சூழ்ந்துள்ளதும், பொற்றாமரைக் குளம் விளங்குவதுமான) (புரி) பட்டணமாம் **மதுரையில்** (வீற்றிருக்கும்) பெருமாளே! (சிவம் அருள்வாயே!)

## ஸ்ரீ புருஷமங்கை

## 972.

**போ**ர்க்கெழுந்த மன்மதனது (மலர்ப்) பாணங்களாலும் மாதர்களின் விஷம் கொண்ட கண்களாலும். (அல்லது) மங்கையர் - மாதர்களுடைய, ஆடல் மதன் அம்பின் போர்க்கெழுந்த மன்மதனுடைய அம்பு போன்றதும், விஷம் கொண்டதுமான (விழியின்) கண்களாலும்), விளக்கம் கொண்டு பிரகாசிப்பதும். (ஆரம் அது அலம்பு) முத்துமாலை (அலம்பு) அசைவதுமான கொங்கையாலும் (நான்) மோகம் கொண்டவனாகி-

ஆதிகுரு - ஆதியாகிய சிவபிரானுக்கும் குருவாகிய (உனது) திருவடிகளை (அல்லது முதற்குருவாம் சிவனது, அல்லது குலமுதற் குருவின்-திருவடியை) உண்மையுடனும் - அன்புடனும் ஒழுக்க நெறியில் - (மெய்யன்புடன்) பணிந்து வழிபடாமல், மனம் சோர்வடைந்து வருந்தி, என் உடல் அழிவுறாமல்-

வேடர்கள் போல நிற்கும் (சுவை, ஒளி. ஊறு, ஓசை நாற்றம்) எனப்படும் ஐவகை உணர்ச்சிகளின் செய்கைகளும், (மனம், புத்தி, அகங்காரம், சித்தம் எனப்படும்) நான்கு கரணங்களின் செய்கைகளும் (வேறுபட நின்று) - என்னைத் தாக்குறாவகையில் நான் வேறுபட்டுநின்று (உன்னை) உணர்ந்து (உனது) திருவருளைப் பெறுமாறு, என்னுடைய

---

O "ஆதி, ஆதிப்பிரான், ஆதியாய அடிகள்" - (சிவன்)

- சம்பந்தர் 1-3-6, 2-10-7, 1-135-3.

** 'ஐம்புல வேடரின் அயர்ந்தனை' - சிவஞானபோதம் 8-சூத்திரம்.

†† "உடலம் வேறு, யான் வேறு, கரணம் வேறு வேறாக உதறி"- திருப்புகழ் 1047.

வேடைகெட வந்து சிந்தனை
மாயையற வென்று துன்றிய
வேதமுடி வின்ப ரம்பெரு ளருள்வாயே
*தாடகையு ரங்க டிந்தொளிர்
மாமுனிம கஞ்சி றந்தொரு
தாழ்வறந டந்து திண்சிலை முறியாவொண்-
ஜாநகித னங்க லந்தபின்
† ஊரில்மகு டங்க டந்தொரு
தாயர்வ சனஞ்சி றந்தவன் மருகோனே,
‡ சேடன்முடி யுங்க லங்கிட
X வாடைமுழு தும்ப ரந்தெழ
தேவர்கள்ம கிழ்ந்து பொங்கிட நடமாடுஞ்-
சீர்மயில மஞ்சு துஞ்சிய
Ο சோலைவளர் **செம்பொ னுந்திய
ஸ்ரீபுருட மங்கை தங்கிய பெருமாளே. (1)

---

* தாடகையைக் கடிந்தது, யாகத்தைப் புரந்தது, வில்லைமுறித்தது சீதையை மணந்தது -பாடல் 431-பக்கம் 582 கீழ்க்குறிப்பு.

† தாய் சொற்படி மகுடம் துறந்தது: பரதனே ஆளவேண்டும், நீ பதிலான்கு வருடம் காட்டிற் காலம் கழிக்க வேண்டும், இது அரசன் சொன்னது என்று கைகேயி ஸ்ரீ ராமருக்கு உரைத்தபோது, அவ் வாசகத்தைக் கேட்ட ஸ்ரீ ராமரின் திருமுகம் - 'அப்பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா' என்றார் கம்பர். (கைகேசி சூழ் 108). 'தாயே ! அரசன் பணியே' இல்லாது உன் பணியா யிருந்தாலும் நான் மறுப்பனோ' என்றாராம் ஸ்ரீ ராமர்-

"மன்னவன் பணியன் றாகி னும்பணி மறுப்ப னோ என்
பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ
என்னினி யுறுதி யப்பால் இப்பணி தலைமேற் கொண்டேன்
மின்னொளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன்"

(கம்பராமா- கைகேசி சூழ் 110).

‡ மயில் நடமாட சேடன்முடி கலங்குவது:
"சேடன்முடி திண்டாட ஆடல்புரி....மயில்" - மயில் விருத்தம் 2.

X மயிலின் வேகத்தால் காற்று பரவுதல்
"வாசி விசை கொண்டிட வாகனப் பீலியின் கொத்து
அசைபடு கால் பட்டசைந்தது மேரு" - கந்தரலங்-11.

(தொடர்ச்சி 815 ஆம் பக்கம் பார்க்க)

[வேடை கெட-வந்து] ஆசைகள் எல்லாம் அற்றுப் போம்படி. [வந்து சிந்தனை] நீ என் எண்ணத்தே வந்து கலந்து. [எனக்குள்ள] மாயை அற - மாயா சக்திகள் ஒடுங்கும்படி - மயக்க அறிவு நீங்க [என்று] எப்போது - பொருந்தியுள்ள வேதங்களின் முடிவில் விளங்கும் பரம்பொருளை அருளுவாய் [உபதேசிப்பாய்] [அல்லது ஆசைகள் அழியும்படி வந்து, [எனது] எண்ணங்களில் உள்ள [மாயை] வஞ்சனை, பொய் இவைகள் அழியும்படி வென்று - ஜெயித்துப், பொருந்திய வேதமுடிவில் உள்ள பரம்பொருளை [உதவி] அருள்வாயாக,

தாடகை என்னும் அரக்கியின் [உரம்] வலியைக் [கடிந்து] அழித்து, விளங்கிநின்ற பெருமை கொண்ட முநி - விசுவாமித்திர முநிவரின் யாகத்தைச் சிறப்புற்று விளங்கவைத்து. ஒருவித (தாழ்வும்) குறையும் இல்லாத வகையில் நடந்து, [மிதிலையில் - சனகராஜன் முன்னிலையில் வலிய வில்லை முறித்து, [ஒண்] இயற்கை அழகு பெற்ற-

[ஜானகி] ஜனகமகாராஜன் மகளாம் சீதையின் கொங்கையை அணைந்த பின்னர் [திருமணத்துக்குப் பின்பு] [ஊரில்] அயோத்தியில் ராஜமகுடத்தை - பட்டாபிஷேகத்தைத் துறந்து, ஒப்பற்ற தாய் (கைகேயியின்) சொற்படி நடந்த சிறப்பைக் கொண்டவரான (ஸ்ரீ ராமரின்) திருமாலின் மருகனே!

ஆதிசேடனுடைய முடிகளும் கலக்கம் கொள்ள, [வாடை] காற்று எங்கும் பரவி வீசத், தேவர்களுக்குக் களிப்பு மேற்கிளர்ந்து எழ, நடனத்தை செய்யும்

அழகிய பெருமைவாய்ந்த மயில் வாகனனே! மேகங்கள் படிந்துள்ள சோலைகள் விளங்குவதும், செவ்விய [பொன்] செல்வம் [பொலிவு] பெருகி நிற்பதுவுமான **ஸ்ரீ புருட மங்கை** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே! அல்லது, [சோலைவளர் பெருமாளே] சோலைமலையில் - பழமுதிர் சோலையில் வீற்றிருக்கும் பெருமாளே! செம்பொன்னிறம் [உந்திய] விளங்கும் பெருமாளே! **ஸ்ரீ** புருடமங்கை தங்கிய பெருமாளே!]

[பரம்பொருள் அருள்வாயே]

---

O சோலை - சோலைமலை - பாடல் 938 கீழ்க்குறிப்பு.

** முருகவேள் - செம்பொன் நிறம் - பாடல் 950 கீழ்க்குறிப்பு.

## 973. மாதர் மீதுள்ள மயக்கு அற

தானதன தந்த தந்த தானதன தந்த தந்த
தானதன தந்த தந்த தனதானா

கார்குழல்கு லைந்த லைந்து வார்குழையி சைந்த சைந்து
காதலுறு சிந்தை யுந்து மடமானார்-
காமுகர கங்க லங்க போர்மருவ முந்தி வந்த
காழ்கடிய கும்ப தம்ப இருகோடார்;

பேர்மருவு மந்தி தந்தி வாரணஅ ணங்க ணங்க
பேதையர்கள் தங்கள் கண்கள் வலையாலே-
பேரறிவு குந்து நொந்து காதலில லைந்த சிந்தை
பீடையற வந்து நின்ற னருள்தாராய்;

ஏர்மருவு *தண்டை கொண்ட தாளசைய வந்த கந்த
ஏகமயி லங்க துங்க வடிவேலா-
† ஏமனுமை மைந்த ‡ சந்தி சேவலணி கொண்டு அண்டர்
ஈடெறஇ ருந்த செந்தில் நகர்வாழ்வே

தேருகள்மி குந்த சந்தி வீதிகள ணிந்த கெந்த
சீரலர்கு ளுந்து யர்ந்த Xபொழிலோடே

---

*தண்டைத்தாள் அசைய வந்த கந்த - இது அருணகிரியாருடைய வரலாற்றைக் குறிக்கும்.

-(பாடல் 331, 916, 513, 515, 289 முதலியன பார்க்க)

† 'ஏ விளங்கும் நுதல்...பாகம் * * மேஉிய புண்ணியரே';
'ஏவார் மலை' - ஏ - பெருமை - சம்பந்தர் 1-117-3; 2-62-2.

‡ சந்தித்த சேவல் - "மாறிவரு சேவற் பகையைத் திறல்சேர்
பதாகையென மேவத் தனித்துயர்த்த மேலோனே"

-கந்தர்கலி வெண்பா.

'சேவலோடு பிணிமுக வுருவாய் வந்து பெருந்தகை
முன்னம் புக்கான்' - கந்தபுராணம் 4-13-493.

X "தேன மாம்பொழில் தண் சிரீவர மங்கலத்தவர்"
- திருவாய்மொழி 5-7-6. சீபுருட மங்கையானது சிரீவர மங்கை, சிரீவர மங்கை நகர் எனப்படும்.

# 973.

மேகம் போன்ற கூந்தல் கலைந்து அலைவதாலும், நீண்ட குழை அதற்கு ஒக்கவே அசைவுறுவதாலும், காம இச்சை கொண்ட (சிந்தை) எண்ணத்தை மேலெழுப்பும் இளம் பெண்கள்-

(காமுகர்) காம இச்சை கொண்ட ஆண்களின் உள்ளம் கலங்கும்படிச் சண்டை யிடுவதற்கு முந்தி வந்ததுபோல முன்னே எதிர்ப்பட்டு வருவதும், வயிரம் (உறுதியும்) கடினமும் கொண்ட குடம்போலவும், (தும்பம்) யானைத்தறி (அல்லது கவசம்) போலவும் உள்ள இரண்டு மலையன்ன கொங்கைகளை உடையவர்கள்

பேர் கூறப்புகின், மந்தி (அவர் தம் சேஷ்டையால்) பெண்குரங்கு, தந்தி (அவர் தம் விஷக் குணத்தால்) பாம்பு, வாரணம் (அவர் தம் மதம் - ஆணவத்தால்) யானை என்னத் தக்கவர்கள், (அனங்கன்) மன்மதனுக்கு (அங்கம்)*படையாய்) உறுப்பு உள்ள பேதையர்கள் மாதர்கள் - இத்தகையோரின் கண்கள் என்னும் வலையாலே

சிறந்த என் அறிவு (உகுந்து) சிதறிப்போய், மனம் நொந்து. காம இச்சையில் அலைப்பு உண்ட மனத்தின் (பீடை அற) துன்பம் அற்று ஒழிய, நீ வந்து உன்னுடைய திருவருளைத் தந்தருளுக;

அழகு பொருந்திய தண்டையை அணிந்த திருவடி அசைய (என்) எதிர் வந்த கந்தனே! (ஏக மயில்) ஒப்பற்ற (சூரனாம்) ஒரு மயிலை (அங்க) அடையாளமாக - (அல்லது வாகன) உறுப்பாகக் கொண்டவனே! பரிசுத்தமும் கூர்மையும் கொண்ட வேலனே!

(ஏ மன் உமை) பெருமை பொருந்திய உமாதேவியின் பிள்ளையே! (சந்தி) சூரனது இருகூறில் ஒன்றாய் (உன்னைச்) சந்தித்த கோழியை (அணி) கொடியாகக்கொண்டு, தேவர்கள் ஈடேற வீற்றிருந்த செந்தில் நகர்ச் செல்வனே!

தேர்கள் நிரம்பின (தெருக்கள்) கூடும் சந்தி இடங்களமைந்த வீதிகளைக் கொண்டதும். நறுமணம் கொண்ட சிறந்த (அலர்) மலர்கள் (குளுந்து) குளிர்ச்சியுடன் மேம்பட்டு விளங்கும் சோலைகளுடனே-

---

* மன்மதனுக்குப் படை -மகளிர் - பாடல் 952-பக்கம் 765 குறிப்பு.

சேரவெ யிலங்கு துங்க வாவிக ளிசைந்தி ருந்த
ஸ்ரீ புருட மங்கை தங்கு பெருமாளே.(2)

## 974. கதி பெற

தானதன தந்த தானதன தந்த
தானதன தந்த தனதான

வேனின்மத *னைந்து பாணம்விட நொந்து
வீதிதொறு நின்ற மடவார்பால்-
வேளையென வந்து தாளினில் விழுந்து
வேடைகெட நண்பு பலபேசித்;
தேனினு மணந்த வாயமுத முண்டு
சீதள தனங்க ளினின்முழ்கித்-
தேடிய தனங்கள் பாழ்பட முயன்று
† சேர்கதிய தின்றி யுழல்வேனோ;
‡ ஆனிரை துரந்து Xமாநில மளந்தொ
Oராலிலையி லன்று துயில்மாயன்-
**ஆயர்மனை சென்று பால்தயி ரளைந்த
ஆரண முகுந்தன் மருகோனே;
†† வானவர் புகழ்ந்த கானவர் பயந்த
மானொடு விளங்கு மணிமார்பா-

---

* ஐந்து பாணம் - பாடல் 19-பக்கம் 60 கீழ்க்குறிப்பு.

† 'சேர்கதி யகன்று திரிவேனோ'; - என்றும் பாடம்.

‡ ஆனிரை துரந்தது. "ஆனிரை மேய்க்க நீ போதி" -பெரியாழ்வார் 2-7-1; இது கண்ணபிரான் ஆனிரை மேய்த்ததைக் குறிக்கும்.

X மாநிலம் அளந்தது - பாடல் 268-பக்கம் 166 கீழ்க்குறிப்பு.

O ஆலிலையில் துயில்வது:
"ஆலத் திலையான் அரவின் அணைமேலான்
நீலக் கடலுள் நெடுங்காலம் கண் வளர்ந்தான்"
-பெரியாழ்வார் 2-6-6.

** ஆயர் மனையில் பால்தயிர் அளைந்தது
- பாடல் 362-அடி 5 பார்க்க.

†† வானவர் புகழ்ந்த கானவர்:
(வேடரிடத்தே வளர்ந்த வள்ளியை முருகவேள் தாமே சென்று வலிய ஆட்கொண்டு மணஞ்செய்யும் கோலத்தைக் கண்ட தேவேந்திரன் 'என்னே இந்த வேடராஜன் செய்த புண்ணியம்' என்று வியந்து புகழ்ந்தான்)

(தொடர்ச்சி 819 ஆம் பக்கம் பார்க்க)

ஒரு சேரவே - பொருந்தி விளங்கும் பரிசுத்தமான தடாகங்கள் பொருந்தியுள்ள **ஸ்ரீ புருஷமங்கையில்** வீற்றிருக்கும் பெருமாளே! *(நின்றன் அருள் தாராய்)*

## 974.

*(வேனின் மதன்)* - வேனிலான் - மன்மதன் தனது மலர்ப் பாணங்கள் ஐந்தையும் செலுத்த, மனம் வேதனை அடைந்து வீதிகள் தோறும் நின்றுள்ள மாதர்களிடத்தே

இதுவே சமயம் என்று வந்து அவர்கள் காலில் விழுந்து, ஆசைதீர நட்பான பல பேச்சுக்களைப் பேசித்

தேனைவிட அதிக நறுமணம் - நறுஞ்சுவை கொண்ட வாயிதழ் அமுத ஊறலைப் பருகி, (அம் மாதர்களின்) தண்ணிய கொங்கைகளில் முழுகித்

தேடின பொருள் எல்லாம் அழிய, முயற்சி செய்து, அடையவேண்டிய கதியை (மோக்ஷ வீட்டை) அடைதலில்லாமல் (வீணாக) அலைந்து திரிவேனோ!

பசுக் கூட்டங்களைத் (துரந்து) ஓட்டிச் செலுத்தியும், பெரிய பூமியைத் (திருவடி கொண்டு) அளந்தும், ஒரு ஆலிலையில் (ஊழி) அன்று துயில் கொண்டவனுமான மாயன்,

இடையர் வீடுகளிற் போய்ப் பாலையும் தயிரையும் (அளைந்த) கலந்து பருகின - வேதம் (போற்றும்) முகுந்தன் - ஆகிய திருமாலின் மருகனே!

வானவர் புகழ்ந்த மானொடு - கானவர் பயந்த மானொடு தேவர்கள் புகழ்ந்த போற்றிய மான் - தேவசேனையுடனும், வேடர்கள் மகளாய் வளர்த்த மான்-வள்ளியுடனும், விளங்கும் அழகிய மார்பனே! (அல்லது வானவர்-தேவர்களும் புகழ்ந்த - 'என்னே! இந்த வேடர்களின் பாக்கியம் - என்று ஆச்சரியத்துடன் புகழ்ந்த - வேடர்-களின் மகளாய் வளர்ந்த - வள்ளியுடன் விளங்கும் அழகிய மார்பனே!

---

(தொடர்ச்சி): "எத்துணை யறங்கள் சால ஈட்டினன் வேடர் கோமான்
பத்தியிற் பலநாள் தாழ்ந்தென் பாவையை யளிப்ப ஏற்ற
உத்தமன் தானே அண்மி ஒளியில னாகித் தாழ்ந்து
புத்திரி செங்கை பற்ற என்றனன் புலவர் கோமான்"

(தொடர்ச்சி 820 ஆம் பக்கம் பார்க்க.)

*மாமறை முழங்கு ஸ்ரீ புருட மங்கை
மாநக ரமர்ந்த பெருமாளே. (3)

## இலஞ்சி.

[இது தென்காசி ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு $3^1/_2$-மைல். தூரத்தி லுள்ள 'குற்றாலம்' என்னும் ஸ்தலத்துக்குச் சமீபத்திலுள்ளது. இத் தலத்துத் தல விருக்ஷம் இலஞ்சி - மகிழமரம்]. 'திரு இலஞ்சி முருகன் உலா' அச் சேறி யுள்ளது. குற்றாலத்தில் இருந்த திருமாலின் ஆலயம் திருமுற்றம் எனப்படும். அகத்தியர் அங்குச் செல்ல அவரைக் கண்ட வைணவர்கள் அவரை அங்கு வர ஒட்டாது வெருட்டினர். அகத்தியர் இந் நிகழ்ச்சியை இலஞ்சி முருகனிடம் விண்ணப்பிக்க அவர் ஓதிக் கொடுத்த தந்திரப்படி வைணவ வேடம் பூண்டு அகத்தியர் சென்று குற்றாலத்தில் இருந்த திருமாலைக் குறுகு குறுகு என்று கூறி † மகா லிங்கமாக்கினர். (கந்த புராணம் 2-28).

## 975. யமன் வராதொழிய நீ வருக

தனந்த தனதன தனந்த தனதன
தனந்த தனதன தனதான

கரங்க மலமின தரம்ப வளம்வளை
களம்ப கழிவிழி மொழிபாகு
கரும்ப முதுமுலை குரும்பை ‡குருகுப
கரும்பி டியினடை யெயின்மாதோ;

[819 ஆம் பக்கத் தொடர்ச்சி]

(தொடர்ச்சி) [திருமாலும் வேடராஜனை வியந்து "மாதவன் என்ற எனக்குப் பேரே ஒழிய மாதவம் ஒன்றும் எனக்கு இல்லை; உண்மையான மாதவன் இந்திரனே; இந்திரனிலும் பெரிய மாதவன் இந்த வேடராஜன்" எனப் புகழ்ந்தார்.]

"மாதவன் எனும் பேரல்லால் மாதவம் ஈங்கொன் றில்லை
மாதவன் புலவர் கோமான்; மற்றவன் தன்னிற் சால
மாதவன் புளினர் கோமான் ** என்றனன் மதுவை அட்டோன்"

[புலவர் கோமான் - இந்திரன்; புளினர் கோமான் - வேடராஜன் மதுவை அட்டோன் - திருமால்].

-தணிகைப் புராணம் வள்ளி திருமண 176-177.

* "தெருள்கொள் நான்மறை வல்லவர் பலர் வாழ் சிரீவர மங்கல நகர்", 'வேத வேள்வியறாச் சிரீவர மங்கலநகர்', திருநான் மறைகள் வல்லார் மலிதண் சிரீவர மங்கை" - திருவாய்மொழி 5-7-3, 4-7-9.

[தொடர்ச்சி 821 ஆம் பக்கம பார்க்க].

பெருமை வாய்ந்த வேதங்கள் ஒலிக்கின்ற (வேத ஒலி முழங்கும் ஸ்ரீ புருட மங்கை என்னும் மகா நகரத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(சேர் கதியதின்றி உழல்வேனோ)

## இலஞ்சி

## 975.

**தி**ருக்கரம் - (கமலம்) தாமரைக்கு நிகராகும்; மின் அதரம் - ஒளி பொருந்திய வாயிதழ் பவளத்துக்கு ஒப்பாகும்; வளை - சங்குக்கு ஒப்பாகும் (களம்) கழுத்து; பகழி - அம்புக்கு ஒப்பாகும் கண்; மொழி - சர்க்கரை,

கரும்பு, அமுது (இவைகளுக்கு ஒப்பாகும்); கொங்கை தென்னங்குரும்பைக்கு ஒப்பாகும்; (குருகு) இளமை (பகரும்) விளங்கும் (பிடி) பெண் யானையின் நடைக்கு (அல்லது) (குருகு) பறவைகளில் அன்னம், (பகரும்) சொல்லப்படும் (பிடி) பெண்யானை - இவைகளின் நடைக்கு) நிகராகும் நடை; (இத்தகைய) வேடர்மாது - வள்ளியின்

---

† *திருமாலை லிங்கமாக்கினது:*

"குருவா யகத்தியர் உன்னைப் பணிந்திடக்
கூடும் வைணவர் நாணவே
குளிர்சித்தி ராநதிக் குற்றால மாகுதிரி
கூடாச லப்பதிக்குள்
மருவார் துழாய் மௌலி யுஞ்சங்கு சக்கரமும்
மணிவண்ண முங்காணவே
வளர்நெடிய மால்வடிவு குறுகு குறு கென்றே
மகாலிங்க வடிவ மாக்கிப்
பெருவான மதிநதி முடிக்குஞ் சடாடவிப்
பெம்மானை யம்மானிடம்
பிரியாத எந்தைதனை யைந்தான னத்தனைப்
பெருமானை அர்ச்சியென்றே
திருவாய் மலர்ந்தருள்செய் தென்னிலஞ் சிக்குமர!
செங்கீரை யாடி யருளே
சிறியனேன் அறிவினுட் குடிகொண்ட தெய்வமே!
செங்கீரை யாடி யருளே.

(க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ்)

‡ குருகு - குருத்து. இளமை - (சூடாமணி) 'சிங்கக் குருகு' - சிங்கக்குட்டி.

டரங்க நககன தனங்கு தலையிசை
யலங்க *நியமுற மயில்மீதே-
அமர்ந்து பவவினை களைந்து வருகொடி
யவந்த கனகல வருவாயே;
தரங்க முதியம கரம்பொ ருததிரை
†சலந்தி நதிகும ரெனவான-
தலம்ப ரவ‡மறை புலம்ப வருசிறு
சதங்கை யடிதொழு பவராழி;
இரங்கு Xதொலைதிரு வரங்கர் மருகOப
னிரண்டு புயமலை கிழவோனே-
இலங்கு தரதமிழ் விளங்க வருதிரு
இலஞ்சி மருவிய பெருமாளே. (1)

## 976. திருவடியைப் பெற

தந்தன தான தனந்தன தானத்
தந்தன தான தனந்தன தானத்
தந்தன தான தனந்தன தானத் தனதான

**கொந்தள வோலை குலுங்கிட வாளிச்
சங்குட னாழி கழன்றிட மேகக்
கொண்டைகள் மாலை சரிந்திட வாசப் பனிநீர்சேர்-

---

* நிய(ம)ம் - இடைக்குறை - நிச்சயம் - பிங்கலம்.

† 'சலதி' - சந்தம் நோக்கி 'சலந்தி' என ஆயிற்று.
சலதிநதி - கடல் போலும் கங்கை - என்றார் -
'ஆழ்கடல் எனக் கங்கை', 'திரைக் கங்கை வெள்ளம்'
-சம்பந்தர் *1-57-4; 3-106-1.*

‡ சதங்கை - மறை ஒலி ஒலிப்பது - "மறை சதுர் விதந்
தெரிந்து வகைசிறு சதங்கை கொஞ்சு மலரடி"
-திருப்புகழ் *50.*

X தொலை - தொல்லை. 'தொல்லையஞ்சோதி'
- திருவாய்மொழி *8-2-6.*

O 'பனிரண்டு புய' என்பதற்கு ஏற்பப்-
'பாடுந் திருப்புகழைப் பன்னிரண்டு நற்புயமும்
சூடுங் கருணைச் சுவாமி'
- என்றார் திரு இலஞ்சி முருகன் உலாவில் *(68).*

** கொந்திள ஓலை - என்றிருத்தல் வேண்டும்
- பாடல் *632*-பக்கம் *471*-கீழ்க்குறிப்பு.

(அரங்க நக கன தனம்) நக-கன-தனம் அரங்க (நகம்) மலைபோன்ற-கனத்த கொங்கைகள் (நீ அணைந்து வருவதால்) அரங்க - அழுந்துதல் உற, குதலை இசை - மழலைச் சொல்போல வும் இன்னிசை கூடிய (அவ் வள்ளியின் மொழி) (அலங்க) அசைவுபெற - அசைவுற்று வெளிவர, (நியம் உற) நியமம் உற - நிச்சயமாகவே - திண்ணமாக, மயிலின்மேல் - (நீ)-

ஏறி வீற்றிருந்து (எனது) பிறப்பாகிய வினையை ஒழித்து, (என்னைப் பிடிக்க) வரும் (கொடிய அந்தகன் அகல) பொல்லாத யமன் என்னை அணுகாது நீங்கும்படி வந்தருளுவாயாக;

(தரங்க...நதி, முதிய மகரம் பொருத திரை சலந்தி நதி) (தரங்கம்) அலைகளைகொண்ட நதி (கங்கை), (முதிய) முற்றின மகரமீன்கள் சண்டையிட்டு விளையாடுவதும், (திரை) அலைகள் வீசுவதுமான (சலந்தி)-சலதி அல்லது சலநிதி போன்றதும், கடல் போன்றதுமான - நதி (ஆகிய) கங்கையின் குமரனே! (காங்கேயனே!) என்று வான (தலம்)-

வானுலகத்தவர் - விண்ணவர்- போற்றிப் பரவ, வேதம் ஒலி செய்து போற்ற, எழுந்தருளும் சிறிய கிண்கிணிகள் அணிந்துள்ள (உனது) திருவடிகளைத் தொழுபவரும், கடலிடையே

(இரங்கு) கருணையுடன் பள்ளி கொண்டுள்ள (தொல்லை) பழையவாரம் (திரு அரங்கர்) (சீரங்கத்துப் பெருமானும்) ஆகிய திருமாலின் மருகனே! பன்னிரண்டு திருப்புயங்களை உடையவனே! குறிஞ்சி நிலத்துக்கு உரியவனே (குறிஞ்சி வேந்தே)!

விளக்கம் பூண்டுள்ள தமிழ்மொழி விளங்க வந்த (சம்பந்தராய்த் தண்டமிழ் மொழிந்த) பெருமாளே! திரு **இலஞ்சி** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(அந்தகன் அகல வருவாயே)

## 976.

(**கொ**ந்தள ஓலை) தலைமயிர்ச் சுருளின்கீழ்க் காதோலைகள் குலுங்கி அசைய, (வாளி) வாளி என்னும் காதணியும். (சங்கு) சங்கு வளையலும். (ஆழி) மோதிரமும் கழல, (கரு) மேகம் போன்ற கூந்தலில் உள்ள பூமாலை சரிய, நறுமணப் பன்னீர் சேர்ந்த-

கொங்கைகள் மார்பு குழைந்திட வாளிக்
கண்கயல் மேனி சிவந்திட கோவைக்
கொஞ்சிய வாயி ரசங்கொடு மோகக் கடலூடே;
*சந்திர ஆர மழிந்திட நூலிற்
பங்கிடை யாடை துவண்டிட நேசத்
தந்திட மாலு ததும்பியு ழுழ்குற் றிடுபோதுன்-
† சந்திர மேனி முகங்களு நீலச்
‡ சந்த்ரகி மேல்கொ டமர்ந்திடு பாதச்
Xசந்திர வாகு சதங்கையு மோசற் றருள்வாயே;

Oசுந்தரர் பாட லுகந்திரு தாளைக்
கொண்டுநல் தூது நடந்தவ **ராகத்
தொந்தமொ டாடி யிருந்தவள் ஞானச் சிவகாமி-
†† தொண்டர்க ளாக மமர்ந்தவள் நீலச்
சங்கரி மோக சவுந்தரி கோலச்
சுந்தரி காளி பயந்தரு ளானைக் கிளையோனே;

இந்திர வேதர் பயங்கெட சூரைச்
சிந்திட வேல்கொ டெறிந்துநல் தோகைக்
கின்புற மேவி யிருந்திடு ‡‡ வேதப் பொருளோனே-

---

* சந்திர ஆரம் - சந்திரன் போன்ற வட்டமான தங்க வளையங்கள் கோக்கப் பெற்ற மாலை வகை.

† சந்திர மேனி - 'சந்திர நிறங்களும்' - பாடல் 16.

‡ சந்த்ரகி - மயில்.

X சம் திர வாகு சதங்கை - சுகத்தைச் செய்கின்ற திரமான அழகையுடைய சதங்கை.

O 'சுந்தரருக்காகத் தூது சென்றது:

-பாடல் 944-பக்கம் 744-கீழ்க்குறிப்பு.

** சிவனது ஆகத் தொங்கமொ டாடி - சிவனுடைய உடலிற் சேர்ந்தவளாய் நடன மாடினவள்-

"ஆடுவர் தூமுறுவல் துளங்கும் உடம்பினராய்"
"நாரியொர் பாகமாக நடமாட வல்ல நம்பன"

- சம்பந்தர் 3-102, 4; 2-87-1.

†† சிவபிரான் 'போற்றி யென்பாரவர் தங்கள் ஆகம் உறைவிடமாக அமர்ந்தவர் - சம்பந்தர் 2-69-5.

‡‡ "நாலந்த வேதத்தின் பொருளோனே" - திருப்புகழ் 1295.

கொங்கைகள் மார்பில் துவள, (வாளி) அம்பு போன்றதும், (கயல்கண்) கயல்மீன் போன்றதுமான கண்ணும் மேனியும் சிவக்கக், கொவ்வைப்பழம் போலிருந்து கொஞ்சும் வாயிதழ் இனிப்பு ஊறலைக் கொடுக்கக், காம இச்சைக் கடலிடையே-

சந்த்ரஹாரம் எனப்பட்ட பொன்மாலை அலைந்து குலைய, நூல் போன்ற பாகமான இடையில் ஆடை குலைந்து துவட்சியுற, (நேசம்) அன்பு (தந்திட) தரும்படி, (மாலு) மால் - காம இச்சை, (ததும்பியும்)- பொங்கி எழுந்து - (அந்த இச்சையில் நான்) முழுகுகின்ற சமயத்தில், உன்னுடைய

நிலவொளி மேனியையும், திருமுகங்களையும். நீல மயில் மேல் ஏறி அமர்ந்திடும் திருவடியில் உள்ளதும் (சந்திர) நிலவொளியையும் (அல்லது சம் திர - சுகத்தைச் செய்கின்ற திரமான) (வாகு) அழகையும் கொண்டதுமான (சதங்கை) கிங்கிணியையும் (நான் காணும்படி) சற்று அருள்வாயே.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் திருப்பாட்டில் மகிழ்ந்து தமது இரண்டு திருவடிகள் கொண்டே (கால்நடையாய்) நல்ல தூது நடந்தவருடைய (சிவனுடைய) ஆகத் தொந்தமொடாடி -தேகத்திற் சேர்ந்தவளாய் நடனமாடி யிருந்தவள், ஞான-வல்லியாம் சிவகாமியம்மை.

அடியார்களுடைய உடலிடத்தே இடங்கொண்டு அமர்ந்தவள், நீலநிறச் சங்கரி, (மோக சௌந்தரி) மோக அழகி, அழகிய சுந்தரி, காளி, பெற்றெடுத்த யானைக்கு கணபதிக்கு - இளையவனே!

இந்திரர்கள், பிரமர்கள் இவர்கள் அடைந்த பயம் நீங்கச், சூரன் அழிந்தடங்க, வேலைச் செலுத்தி, நல்ல மயில்மேல் இன்பகரமாக வீற்றிருக்கும் - வேதப் பொருளானவனே!

எண்புன மேவி யிருந்தவள் மோகப்
பெண்திரு வாளை *மணந்திய லார்சொற்
கிஞ்சியளாவு **மிலஞ்சி** விசாகப் பெருமானே (2)

## 977. திருவடியைப் பெற

தனந்த தனந்த தனந்த தனந்த
தனந்த தனந்த தனதானா

சுரும்பணி கொண்டல் நெடுங்குழல் கண்டு
துரந்தெறி கின்ற விழிவேலால்-
சுழன்று சுழன்று துவண்டு துவண்டு
சுருண்டு மயங்கி மடவார்தோள்;
விரும்பி வரம்பு கடந்து நடந்து
மெலிந்து தளர்ந்து மடியாதே-
விளங்கு கடம்பு விழைந்தணி தண்டை
விதங்கொள் **சதங்கை** **யடிதாராய்;**
பொருந்த லமைந்து சிதம்பெற நின்ற
†பொலங்கிரி யொன்றை யெறிவோனே-
புகழ்ந்து மகிழ்ந்து வணங்கு குணங்கொள்
புரந்தரன் வஞ்சி மணவாளா;
இரும்புன மங்கை பெரும்புள கஞ்செய்
குரும்பை மணந்த மணிமார்பா-
‡இலஞ்சியில் வந்த இலஞ்சிய மென்று
**இலஞ்சி** யமர்ந்த பெருமானே.(3)

---

* மணந்தியர் - மணந்த இயல்.

† 'பொன்னஞ் சிலம்பு புலம்பவரும் எங்கோன்' - கந்தர் அலங் 89.
"குருகு பெயர் பெற்ற கனவடசிகரி"
- வேடிச்சி காவலன் வகுப்பு (கனம் - பொன்)
பொன்னஞ் சிலம்பு - மேரு எனக் கொண்டால் 'மேருவைச் செண்டாலடித்த திருவிளையாடற் கருத்தாகும்.
- பாடல் 2-பக்கம் 23 கீழ்க்குறிப்பு.

‡ "இலஞ்சி - மடு, குளம்; இலஞ்சியம் - குளத்தில் உற்பவித்தவன்; குளத்தில் தோன்றினதால் 'குளவன்' என்று முருகவேளுக்கு ஒரு பேர்; 'குளவன் குன்ற(ம்)'-கல்லாடம் 50."உமையாள் பயந்த இலஞ்சியமே"
- கந்தரலங்காரம் 22.

"மன்னிலஞ்சி சூழும் மலரிலஞ்சி யுஞ்சூழ்ந்த
தென்னிலஞ்சி வாழும் திருக்குமரன்"
[இலஞ்சி - குளம், மகிழமரம்] - திரு இலஞ்சி முருகன் உலா-74.

*மதிக்கத்தக்க தினைப் புனத்தில் மேவியிருந்தவள், (மோகப்பெண்) (உனக்கு மோகம் தந்த) நங்கை, (திருவாள்) - லக்ஷ்மீகரம் நிறைந்தவள் - ஆகிய வள்ளியைத் திருமணஞ் செய்த (இயல் ஆர்) தகுதி நிறைந்த (சொற்கு) புகழுக்கு (அல்லது - இயலார் - இயற்றமிழ்ப் புலவர்களின் சொல்லுக்கு) உரிய பெருமாளே! (இஞ்சி அளாவும்) மதில்கள் ஓங்கி உயர்ந்துள்ள இலஞ்சித் தலத்தில் வீற்றிருக்கும் விசாகப் பெருமாளே! (அல்லது - இயற்றமிழ்ப் புலவர்களின் சொற்கு - சொல்லின் பெருக்கம் போல உயர்ந்து பெருகியுள்ள மதில்கள் உயர்ந்துள்ள இலஞ்சியில் விசாகப் பெருமாளே!)- (சதங்கையு மோ சற்றருள்வாயே.)*

# 977.

*(அணிந்துள்ள மலரின்மேல் வண்டுகள் உள்ள கருமேகம் போன்ற நீண்ட கூந்தலைப் பார்த்தும், செலுத்தி வீசப்பட்ட வேல் போன்ற கண்ணைப் (பார்த்தும்)-*

*(என்) மனம் சுழற்சியடைந்து கலங்கிக் கலங்கித், துடித்துத் துடித்து (வருந்தி வருந்தி) (சுருண்டு) சோர்வுற்று, மயக்கம் உற்று, மாதர்களின் தோளை-*

*விரும்பி, அளவு கடந்து நடந்து, மெலிந்தும், தளர்ந்தும் (நான்) இறந்து போகாமல்-*

*விளங்குகின்ற உனது கடப்ப மாலையை விரும்பி அழகிய தண்டையையும் பல இன்னிசை வகைகளை ஒலிக்கும் கிண்கிணியையும் அணிந்த திருவடியைத் தந்தருளுக.*

*நன்றாய்ப் பொருந்தி அமைந்து (உசிதம் பெற) மேன்மை பெற நின்ற பொன்கிரியாம் கிரவுஞ்சத்தை எறிவோனே - அழித்தவனே! (அல்லது பொன் மலையாம் மேருவைச் செண்டால் அடித்தவனே)!*

*(உன்னைப்) புகழ்ந்தும் உனது ஆற்றலைக் கண்டு மகிழ்ந்தும். (உன்னை) வணங்கியும் வழிபட்ட குணத்தைக் கொண்ட இந்திரனுடைய மகள் (வஞ்சிக் கொடிபோன்ற நங்கை) தேவசேனையின் மணவாளனே!*

*பெரிய (தினைப்) புனம் காத்த மங்கை (வள்ளியின்) நிரம்பப் புளகாங்கிதம் கொண்ட (தென்னங்குரும்பை போன்ற) கொங்கையை அணைந்து கலந்த அழகிய மார்பனே!*

*(இலஞ்சியில்) குளத்தில், வந்த காரணத்தால் (இலஞ்சியம்) குளத்தில் உற்பவித்தவன் - குளவன் - என்று திருப்பெயர் கொண்டு **இலஞ்சி** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!*

*(சதங்கை அடிதாராய்)*

## 978. (அகப் பொருள்)

தான தனந்த தான தனந்த
தான தனந்த தனதான

*மாலையில் வந்து மாலை வழங்கு
†மாலை யநங்கன் மலராலும்-
வாடை யெழுந்து வாடை செறிந்து
வாடை யெறிந்த அனலாலுங்;
கோல மழிந்து சால மெலிந்து
கோமள வஞ்சி தளராமுன்-
கூடிய கொங்கை நீடிய அன்பு
கூரவு மின்று **வரவேணும்;**
‡கால னடுங்க வேலது கொண்டு
கானில் நடந்த முருகோனே-
Xகான மடந்தை நாண மொழிந்து
காத லிரங்கு குமரேசா;
சோலை வளைந்து சாலி வளைந்து
சூழு **மிலஞ்சி** மகிழ்வோனே-

---

* மாலையில் வந்து-
"காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்" - திருக்குறள் 1227.

† மாலை அனங்கன் - மன்மதனுக்கு மாலை 'மகிழம்பூ மாலை'
- பாடல் 952-பக்கம் 765 கீழ்க்குறிப்பு.

மாலை - சமயம் - எனவும் பொருள் செய்யலாம்
"வஞ்சமென் றுணர்ந்த மாலை வாய்"
-(கம்ப ராமா- திரு அவ-51)

‡ "மானவேல் முட்டை" யாக முருகவேள் கானகத்தே பொய்யா மொழிப் புலவரை வழி மறித்த வரலாறு-
- பாடல் 422 அடி 6; பக்கம் 562 கீழ்க்குறிப்பு-பார்க்க.

X"வள்ளி நாணும்படியாக (மொழிந்தது) - பேசினது:
"வள்ளி ! நீ தினைப்புனம் காத்திடல் இழிவான தொழில்; என்னுடன் வருவாயாக; விண்ணுலகத்து நங்கையர் யாவரும் உன்னை வணங்கும்படியான வாழ்வைத் தருவேன்" என்று பல உபசார மொழிகளை முருகவேள் கூறினபோது -'இவர் கூறுவது நன்றாயிருக்கின்றது' என எண்ணி நாணத்துடன் வள்ளி-

(தொடர்ச்சி 829 ஆம் பக்கம் பார்க்க)

# 978.

(**மா**லையில்வந்து) மாலைப்பொழுதில் - அந்திப் பொழுதில்-இரவில் வந்து, (மாலை) காம இச்சையை (வழங்கு) தருகின்ற (மாலை) (மகிழம்பூ) மாலை (அணிந்த) (அனங்கன்) (அல்லது மாலை-சமயம் தெரிந்துவரும்) அனங்கன் - மன்மதன் (எய்கின்ற) மலர்ப் பாணங்களாலும்

வாடைக்காற்று எழுந்து, அதனுடன் கலந்துவரும் வாடை-(மலர்) வாசனைகள் மிகுந்து- அந்த மணத்துடன் வரும் அந்த வாடைக் காற்றானது - (வாடை) வடவா முகாக்கினி போல வீசி எறியும் நெருப்பாலும்-

(தனது) அழகெலாம் அழிந்து, மிகவும் மெலிந்து, இந்த இளமை வாய்ந்த பெண் சோர்வு அடையா முன்பு

(கூடிய கொங்கை) இவளது கொங்கையைக் கூடி (நீ) குன்றாது நீளும் அன்பு மிக்குளழ இன்று வந்தருளவேண்டும்.

காலனும் அஞ்சும்படி வேல் ஏந்திக் காட்டில் (பொய்யாமொழி வரும் காட்டில் வேடனாய்) நடந்த முருகனே!

(வள்ளிமலைக்) காட்டில் (தினைப்புனத்தில்) இருந்த பெண்-வள்ளி நாணும்படி, அவளுடன் பேசி அவள்மீது உனக்கிருந்த காதலை வெளிப்படுத்தி (அல்லது மடந்தை முன் (நீ) நாணம் ஒழிந்து வெட்கத்தை விட்டு அவளிடம் காதல் மொழிகளை உருகத்துடன் பேசி) மனம் உளைந்த குமரேசனே!

சோலைகள் சூழ்ந்து நெற்பயிர் விளைந்து சூழ்ந்துள்ள **இலஞ்சி** என்னும் தலத்தில் மகிழ்ச்சி கொண்டவனே!

---

"ஐயரே! நானோ இழிகுலத்தவரான வேடர் பாவை! நீரோ முழுதுலகாளும் முதல்வர்; என்னைத் தழுவ வேண்டி உம்மைத் தாழ்த்தி நீர் பேசுதல் பழிக்கு இடமாகுமே ஒழிய நல்ல தன்று "புலி பசித்தால் புல்லை உண்ணுமா" - என்றாள்.

"குமரன் சிந்தையில் ஒன்றிய கருத்தினை உற்று நோக்கியே நன்றிவர் திறமென நாணிக் கூறுவாள்"

"இழிகுல மாகிய எயினர் பாவை நான், முழுதுல கருள்புரி முதல்வர் நீரெனைத், தழுவுதல் உன்னியே தாழ்ச்சி செப்புதல், பழியது வேயலால் பான்மைத் தாகுமோ"-

** "என் கலவியை விரும்புதல் கடன தன்றரோ

புலியது பசியுறில் புல்லுந் துய்க்குமோ" - கந்தபு *6-24-89-9.*

முருகவேள் தமது நாணத்தை விட்டுப் பரிதபிக்கப் பேசினர்.

- பாடல் *209, 261, 1002, 1003.*

*சூரிய னஞ்ச வாரியில் வந்த
சூரனை வென்ற பெருமாளே. (8)

## திருக்குற்றாலம்.

[தென்காசி ரெயில்வே ஸ்டேஷனுக்கு மேற்கு மூன்றரை மைல். திருஞான சம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது. பஞ்ச சபைகளுள் சித்திர சபையை உடைய தலம். 485 ஆம் பாடலின் [பக்கம் 98 கீழ்க்குறிப்பு ]பாட பேதத்தையும் பார்க்க. ஸ்தல புராணம் உண்டு.]

### 979. ஆதரவு பெற

தானத்தத் தானன தானன
தானத்தத் தானன தானன
தானத்தத் தானன தானன தனதான

ஏடுக்கொத் தாரலர் வார்குழ
லாடப்பட் டாடைநி லாவிய
ஏதப்பொற் றோள்மிசை மூடிய கரமாதர்-
ஏதத்தைப் பேசுப ணாளிகள்
வீசத்துக் காசைகொ டாடிகள்
† ஏறிட்டிட் டேணியை வீழ்வீடு முழுமாயர்;
மாடொக்கக் கூடிய காமுகர்
மூழ்குற்றுக் காயமொ டேவரு
வாயுப்புற் சூலைவி யாதிக ளிவைமேலாய்-
மாசுற்றுப் பாசம் விடாசம
னூர்புக்குப் பாழ்நர கேவிழு
மாயத்தைச் சீவியு னாதர வருள்வாயே

---

* சூரன் மாமரமாய்க் கடலில் நின்றபோது-அதன் அளவையும் பரப்பையும் கண்டு சூரியன் முதலான தேவர்கள் அஞ்சினர்:-

"அம்புலியும் நீத்தம் அடுங்கதிர் படைத்த கோவும் ** கடாவிற் செல்லும் மடங்கலும் வெருவச் சூரன் மாவுருக் கொண்டுநின்றான்' -கந்தபுரா 4-13-471; மா - மாமர உருவம்; மா - பெரிய உருவம்:

† ஏறிட்டு ஏணியை வீழ்த்தி விடுபவர்:

- பாடல் 785-பக்கம் 328-கீழ்க்குறிப்பு † பார்க்க.

இறைவன் ஏணியிட்டு விண்ணுலகு ஏற உதவுதலை அப்பரும் "பேணித் தொழுமவர் பொன்னுல காளப் பிறங்கருளால் ஏணிப் படிநெறி யிட்டுக்" கொடுப்பர் என்றார். 4-92-16.

சூரியனும் (தான் உதிப்பதெப்படி என்று) அஞ்சும்படியாகக் கடலில் நின்று கொண்டிருந்த சூரனை (அட்டுச்) செயித்த பெருமாளே!

(இன்று வரவேணும்)

## திருக்குற்றாலம்

## 979.

இதழ்களை உடைய கொத்தான மலர்களைக் கொண்ட நீண்ட கூந்தல் அசைந்தலைய, (நிலாவிய ஏதப்பொற்றோள் மிசை பட்டாடை மூடிய மாதர்) - விளங்குவதும், (காணும் ஆடவர்களுக்கு) ஏதம் - துன்பம் தருவதுமான அழகிய தோள்மேலே பட்டாடை மூடியுள்ள மாதர்கள், (கரமாதர்) (கரம்) விஷம் - பொருந்திய மாதர்கள் (அல்லது பட்டாடை பொருந்திய....தோள்மேல் மூடியுள்ள கைகளைக் கொண்ட - கைகொண்டு தோள்களை மூடியுள்ள - மாதர்கள் -

குற்றம் கண்டே பேசுகின்றவரும், பண ஆட்சியிலேயே நோக்கம் வைத்துள்ளவர்களும், (வீசத்துக்கு ஆசை கொண்டு ஆடிகள்) - ஒரு மாகாணி அளவே (உண்மை) ஆசை கொண்டவர்களாய் நடிப்பவர்களும். ஏறவிட்டபின் ஏணியை வீழ்த்தித் (தள்ளி) விடுபவர்களும், முழு (மாயர்) வஞ்சகர்களும்

மாடுபோலக் கூடும் காமங் கொண்டவர்களும் (ஆகிய பொது மாதர்கள் வசம்)முழுகுதல் உற்று-முழுகி அதனால் (காயமோடே) உடலிலே வந்த (வாயுப்புற் சூலை) புல் - இழிவான கெட்டதான வாயுசூலை - ஒருவகைச் சூலை நோய் - (வயிற்றுளைவு) நோயாதிகளான இவை அதிகப்பட்டு-

(மாசு உற்று) கேடு அடைந்து (மாண்டு), பாசக் கயிற்றை விடாத யமனுடைய (ஊரை) லோகத்திற் புகுந்துப், பாழான - இழிவான அல்லது கேட்டைத்தரும் நரகத்திலே விழும் (மாயத்தை) தீமையைச் (சீவி) செதுக்கிக் கழித்து உன்னுடைய (ஆதரவை) அன்பை - உதவியைத் - தந்தருளுக.

தாடுட்டுட் டூடுடு டீடிமி
டூடுட்டுட் டூடுடு டாடமி
தானத்தத் தானத நாவென வெகுபேரி-
தானொத்தப் பூதப சாசுகள்
*வாய்விட்டுச் சூரர்கள் சேனைகள்
சாகப்பொற் றோகையி லேறிய சதிரோனே;
கூடற்கச் சாலைசி ராமலை
காவைப்பொற் காழிவெ ளூர்திகழ்
கோடைக்கச் சூர்கரு வூரிலு முயர்வான-
கோதிற்†பத் தாரொடு ‡மாதவ
சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக்குற் றாலமு லாவிய பெருமாளே. (1)

## 980. பேரின்ப வாழ்வை உற

தானத்தத் தானன தானன
தானத்தத் தானன தானன
தானத்தத் தானன தானன தனதான

Xவேதத்திற் கேள்வி யிலாதது
போதத்திற் காண வொணாதது
Oவீசத்திற் றூர மிலாதது கதியாளர்-
வீதித்துத் தேடரி தானது
**ஆதித்தற் காய வொணாதது
††வேகத்துத் தீயில் வெகாதது சுடர்கானம்;

---

* வாய்விட்டு - வாய்விட † பத்தார் - பத்தர்கள்.

‡ "மாமுனிவர் கோடீர மாதவஞ்செய் குற்றாலம்" - (கோடீர - கோள் தீர) குற்றாலச் சிலேடை வெண்பா-27.

X "நான்மறை எட்டிற் றெட்டாதது" - திருப்புகழ் 489.
"வேதக் காட்சிக்கும் உபநிடத் துச்சியில் விரிந்த
போதக் காட்சிக்கும் காணலன்" - கந்தபுரா 3-21-127.
"நால் வேதத்தாலும் அறிவொண்ணா நடை"
-சம்பந்தர் 1-131-1.

O "தேடொணாத் தேவனை என்னுளே தேடிக் கண்டு கொண்டேன்" - (அப்பர் 4-9-12) என்றதனால் ஆயினர் கடவுள்.

(தொடர்ச்சி 833 ஆம் பக்கம் பார்க்க.)

தாடுட்டுட் டுடுடு டீடிமி ..........தானதனா என்று பலபேரி வாத்தியங்கள் - முரசப் பறைகள்-

தானொத்து - அப்பூத பசாசுகள் - (முரசப் பறைகளை ஒத்தனவாய் - முரசப் பறைகள் போன்று அங்கிருந்த பூதங்களும் பேய்களும் (வாய்விட) ஒலிசெய்ய, சூரர்களின் படைகள் எல்லாம் (அல்லது) - சூரர்களும் படைகளும் (சாக) இறக்க, அழகிய மயிலில் ஏறிய பெருமை வாய்ந்தவனே (அல்லது) அழகனே!

(கூடல்) மதுரை, (கச்சாலை) கச்சிக் கச்சாலை, (சிராமலை) திரிசிராப்பள்ளி, (காவை) திருஆனைக்கா, அழகிய சீகாழி, [புள்ளிருக்கு] வேளூர் [வைத்தீசுரன் கோயில்], விளங்கும் [கோடை] வல்லக் கோட்டை, திருக்கச்சூர், கருவூர் ஆகிய தலங்களிலும், மேன்மை வாய்ந்தவர்களும்,

குற்றமில்லாதவர்களுமான பக்தர்களுடனே, மகா தவஞ்செய்த பரிசுத்தர்களான சித்தராகிய பெரியோர்கள் கருதிவந்து வலம்வரும் அழகிய திருக் **குற்றாலம்** என்னும் தலத்திலும் உலவுகின்ற பெருமாளே!

(உன் ஆதரவு அருள்வாயே)

## 980.

**வே**தங்களிலே ஆராயப் படாதது; அறிவு கொண்டு காண முடியாதது; (வீசம்) மாகாணி தூரங்கூட இல்லாதது [நமது உள்ளத்துளேயே இருப்பது]; நற்கதியடைய விரும்புவோர்-

[வீதித்து] பகுத்து ஆராய்ந்து தேடுதற்கு முடியாதது, சூரியனால் காய முடியாதது, [சுடர்கானம் வேகத்துத் தீயில் வேகாதது] கானம் சுடர் - காட்டு நெருப்பின் கடுமை கொண்ட - தீயிலும் வேகாதது,

---

(832-ஆம் பக்கத் தொடர்ச்சி)

** "பரிதி காயில் வாடாது" - திருப்புகழ் 1052.

†† "வடவை மூளில் வேகாது" - திருப்புகழ் 1052.

*வாதத்துக் கேயவி யாதது
காதத்திற் பூவிய லானது
வாசத்திற் பேரொளி யானது மதமேறு-
மாயத்திற் காய மதாசல
† தீதர்க்குத் தூரம தாகிய
‡ வாழ்வைச்சற் காரம தாஇனி யருள்வாயே;
Xகாதத்திற் காயம தாகும
தீதித்தித் தீதிது தீதென
காதற்பட் டோதியு மேவிடு கதிகாணார்
காணப்பட் டேகொடு நோய்கொடு
வாதைப்பட் டேமதி தீதக
லாமற்கெட் டேதடு மாறிட அடுவோனே;
கோதைப்பித் தாயொரு வேடுவ
ருபைப்பெற் றேவன வேடுவர்
கூடத்துக் கேகுடி யாய்வரு முருகோனே-
கோதிற்பத் தாரொடு மாதவ
சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக்குற் றாலமு லாவிய பெருமாளே.(2)

---

* "பவனம் வீசில் வீழாது சலியாது" - திருப்புகழ் 1052.

† "மாசர்க்குத் தோணொணாதது' - திருப்புகழ் 343.

‡ இதனைப் "பரம ஞான வீடு" என்றார் திருப்புகழ் 1052-ல்.

பரம்பொருளின் இத்தகைய இலக்கணத்தை 343, 489, 501, 741, 1052 - எண்ணுள்ள பாடல்களிற் காணலாம்.

X கா - தத்தில் - தத்தில் கா - இந்த (தத்தில்) ஆபத்தான நிலையில், கா - காப்பாற்றுங்கள்; காயம் அது ஆகும் - உடலாகின்ற, அ - அந்த, (தீ) நெருப்பு (சுரவெப்பம்) நிறைந்த தித்தி - தோல்பை - தீது இது தீது என - துன்பம் தருவது துன்பம் தருவது என்று - (சமண குருக்கள் மாருடன்) கூன் பாண்டியன் அன்புவைத்து (ஓதியுமே) முறையிட்டும் கூட, விடுகதி-(அந்தச்) சுரம்விட்டு நீங்கும் வழியைக் காணாதவர்களான சமண குருக்கள்மார்-

யாவரும் காணும்படியே - கழுமுனையில் மிக்க நோய் கொண்டு வேதனைப்பட்டே தங்களுடைய அறிவின் தீமை (ஈனம்) நீங்காமலே கெட்டுத் தடுமாறி அழியும்படி அவர்களைச்(சம்பந்த மூர்த்தியாய்) அழித்தவனே!

- 5,6 அடிகளுக்கு இப்படிச் சிறப்பான பொருள் காணலாம்.

(கூன் பாண்டியனுடைய சுரம் தீர்த்தது; சமணரைக் கழுவேற்றினது-வரலாறு - பாடல் 181-பக்கம் 420 கீழ்க்குறிப்பு)

(வாதத்துக்கே) காற்றினால் (தன் ஒளி) அவிந்து போகாதது, (வாசத்திற் காதத்திற் பூ இயலானது)-நறுமணம் வீசுவதில் ஒரு காததூரம் - பத்துமைல் தூரம் நறுமணம் வீசும் மலரின் தன்மை வாய்ந்தது, பெரிய ஜோதியாய் விளங்குவது, ஆணவ மதம் ஊறுகின்ற

மாயம் பொருந்திய (இந்த) காயம் - உடலில் மதாசல தீர்க்கு மதசலம் - ஆணவம் என்னும் மதநீர் உள்ள - குற்றம் வாய்ந்தவர் களுக்கு - எட்ட முடியாத தூரத்தில் இருப்பது - ஆன - இத்தகைய பெருவாழ்வைச் சற்காரமதா)- அடியேனை மதித்துப் பொருட்படுத்தி இனி அருளுவாயாக.

(காதத்திற்ற) கொலைத் தொழிலில் (காயமதாகும்) காழ்ப்பு (உறைப்புக்) கொண்டதான (மதீ) (மதி) அறிவைத் (தித்தி) திருத்தி, (தீ து இது தீ து என) (இங்ஙனம் கொலைத்தொழில் செய்வது) தீயது இது, தீயது இது என்று—கெடுதல் இது என்று (ஒரு முறைக்கு இருமுறை) அன்பு வைத்து (ஓதியும்) புத்தி சொன்னபோதிலும், (மேவிடு) உள்ளதான நற்கதியைக் காணாதவர்கள்-

பிரத்யக்ஷமாகவே பொல்லாத நோய் கொண்டு வேதனைப்பட்டே, அறிவின் தீமை நீங்காமல் (கெட்ட புத்தி நீங்காமல்) கேடுற்றுத் தடுமாறும்படி * (அவர்களை வருத்துபவனே!)

(கோதை) பெண்மேல், காமப்பித்துடன் ஒப்பற்ற †வேட உருவத்தைத் தாங்கிக் காட்டு வேடர்களின் (கூடத்துக்கே) கூட்டத்தினடுவே - வீட்டுக்கு - குடியாக வந்த முருகனே!

குற்றமற்ற பக்தர்களுடனே சிறந்த ‡தவம் ஒழுக்கம் வாய்ந்த சித்தர் முதலானோர் வந்து வலம்வரும் அழகிய குற்றாலம் என்னும் தலத்தில் உலாவும் பெருமாளே!

(வாழ்வை ....அருள்வாயே)

---

* இந்த 5-6-அடிகள் அசுரர்களுக்கும், புலால் உண்பவர்களுக்கும் பொருந்தும் 'அருளாட்சி யாங்கில்லை ஊன் தின்பவர்க்கு' (திருக்குறள் 252) என்றாராதலின்.

† வள்ளியைக் காண முருகன் வேடுவரூபம் கொண்டது:

-பாடல் 968-பக்கம் 806 கீழ்க்குறிப்பு.

‡ மாதவ சித்தாதியர் சூழுந் தலம் - குற்றாலம்:- "தவமுநிவர் கூட்டரவும் அவரிருக்குத குகையும், சஞ்சீவி முதலான விஞ்சை மூலிகையும், கவனசித்த ராதியரும் மவுனயோ கியரும், சுத்திருங்குங் கயிலாயம் ஒத்திருக்கும் அம்மே" - குற்றாலக் குறவஞ்சி 48 (6-7).

## 981. திருவடியைத் தொழ

தத்தான தனத்த தத்தன
தத்தான தனத்த தத்தன
தத்தான தனத்த தத்தன தனதான

முத்தோலை தனக்கி ழித்தயி
லைப்போரிக லிச்சி வத்துமு
கத்தாமரை யிற்செ ருக்கிடும் விழிமானார்-
முற்றாதிள கிப்ப ணைத்தணி
கச்சார மறுத்த நித்தில
முத்தார மழுத்து கிர்க்குறி யதனாலே;

*வித்தார கவித்தி றத்தினர்
பட்டோலை நிகர்த்தி ணைத்தெழு
வெற்பான் தனத்தில் நித்தலு முழல்வேனோ;
† மெய்த்தேவர் துதித்தி டத்தரு
பொற்பார்கம லப்ப தத்திணை
மெய்ப்பாக வழுத்தி டக்ருபை புரிவாயே;

‡ பத்தான முடித்த லைக்குவ
டிற்றாட வரக்க ருக்கிறை
பட்டாவி விடச்செ யித்தவன் மருகோனே-

---

* வித்தார கவி: 'வித்தார கவியாவான் மும்மணிக் கோவையும் பன்மணிமாலையும் மறமும் கலிவெண்பாவும் மடலூர்ச்சியும் முதலாகிய நெடும்பாட்டும், கோவையும், பாசண்டமும், கூத்தும், விருத்தமும், கதை முதலாகிய செய்யுளும், இயலிசை நாடகங்களோடும் கலை நூல்களோடும் பொருந்தப் பாடும் பெருங்கவியெனக் கொள்க' - யாப்பருங்கல விருத்தியுரை.

தனத்துக்கு வித்தாரகவியின் பட்டோலையை உவமையாகக் கூறினது - அருணகிரியாரின் கவித் திறத்தைக் காட்டுகின்றது. கொங்கை - மலைக்கு, மேருவுக்கு ஒப்பாகும் என்பதெல்லாம் சாதாரண கவிகள் எடுத்துக்கூறும் உவமை. அருட் கவிகளுக்கே இத்தகைய அரிய உவமைகள் உதிக்கும்.வித்தார கவியின் கவிப் பெருக்கத்துக்கு ஓர் அளவே கூறமுடியாது; அதுபோலக் கொங்கையின் பெருக்கத்துக்கும் ஓரளவே கிடையாது - என்பதை ஓர் அரிய அழகிய உவமையால் விளக்கியுள்ளார் அருணகிரியார்: இத்தகைய அரிய உவமை அருட்கவிகளே எடுத்தாள வல்லார்கள் என்பதைக் "கண்ணுக்கு " மணிவாசகனார் எடுத்துக் காட்டின உவமையிலும் [பாடல் 926 "(ஈசற்கியான் வைத்த)" என்னும்

[தொடர்ச்சி 837 ஆம் பக்கம் பார்க்க]

# 981.

முத்தாலாகிய ஓலைதனை (முத்துக் கம்மலைக்) கிழித்து - தாக்கி, அயிலை - வேலாயுதத்துடன், போர் - போரில், இகலி மாறுபட்டுப் பகைத்து, சிவந்தநிறம் கொண்டு, முகமாகிய தாமரை மலரில், (செருக்கிடும்) கர்வித்து நிற்கும் - அகந்தை கொண்டிருக்கும் கண்களை உடைய மாதர்களின்-

முற்றாமல், நெகிழ்ச்சி உடையதாய்ப், பெருத்துள்ளதாய், அழகிய [அல்லது அணிந்துள்ள] ரவிக்கை மேலுள்ள, ஆரம் - மாலையை, அற்றுப் போம்படிச் செய்த - (நித்தில முத்தாரம்) நல்ல முத்துமாலை கொண்டதும், அழுத்துவதால் உண்டான நகக் குறியைக் கொண்டதும்-

விஸ்த்தார கவிகளைப்பாட வல்ல திறமை வாய்ந்த புலவர்களின் (பட்டோலை) ஓலைப் புத்தகத்துக்கு (நிகர்த்து இணைத்து) ஒப்பாய் இணையுற்றதாய் எழுந்துள்ள மலை போன்ற கொங்கைகளில் தினந்தோறும் அலைச்சல் உறுவேனோ!

உண்மைத் தேவர்கள் போற்ற அவர்களுக்கு உதவும் (உனது) அழகு நிறைந்த தாமரையன்ன திருவடியை (மெய்ப்பு ஆக) உண்மைப் பத்தியுடனே (அல்லது புகழ்ந்து) நான் (வழுத்திட) போற்ற நீ கிருபை புரிந்து அருளுவாயாக;

பத்து முடிகளைக் (கிரீடங்களைக்) கொண்ட தலையாம் மலைகள் அறுபட்டு அசைந்துவிழ, அரக்கர்களுக்குத் தலைவனான ராவணன் போரில் அழிந்து உயிர் விடும்படி வெற்றி கொண்டவனான (ஸ்ரீராமன்) திருமாலின் மருமகனே!

---

பாட்டு - பக்கம் 698 கீழ்க்குறிப்பு), கொங்கையின் பெருக்கத்தைக் கல்லாடனார் "திருவடி புகழுநர் செல்வம் போலும் அண்ணாந்தெடுத்த அணியுறு வனமுலை" [கல்லாடம் 41] எனக் காட்டிய உவமையிலும், கம்பர் - கோதாவிரி ஆற்றைச் "சான்றோர் கவியெனக் கிடந்த கோதாவரி" [கம்ப ராமா - சூர்ப்ப-1] என அருமையாக உவமித்துள்ள இடத்தும் காணலாகும்.

† தேவர்களை - மெய்த்தேவர் - என்பது-
"பற்றறநான் பற்றிநின்ற மெய்த்தேவர் தேவர்க்கே
சென்றூதாய் கோத்தும்பீ" - திருவாசகம் - கோத்தும்பி 5.

‡ ராவணன் தலை - மலைக்கு ஒப்பிட்டது
- பாடல் 278-பக்கம் 190 கீழ்க்குறிப்பு ‡ பார்க்க

*பற்பாசன்மி கைச்சி ரத்தைய
றுத்†தாதவ னைச்சி னத்துறு
பற்போகவு டைத்த தற்பரன் மகிழ்வோனே;

கொத்தார்கத லிப்ப ழக்குலை
வித்தாரவ ருக்கை யிற்சுளை
கொத்தோடுதி ரக்க தித்தெழு ‡கயலாரங்-

கொட்டாசுழி யிற்கொ ழித்தெறி
சிற்றாறுத னிற்க ளித்திடு
குற்றாலரி டத்தி லுற்றருள் பெருமாளே.(3)

## ஆய்க்குடி

[தென்காசி ரெயில்வே ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 5-மைல். சிறந்த சுப்ரமணிய ஸ்தலம். பால் பாயச நிவேதனம் விசேஷம். கொங்கு நாட்டிலும் ஆய்க்குடி என்றொரு ஊர் உண்டு. பாடல் 1181-ம் பார்க்க]

## 982. பிறவியற

தாத்தனத் தானதன தாத்தனத் தானதன
தாத்தனத் தானதன தனதான

வாட்படச் சேனைபட வோட்டியொட் டாரையிறு
மாப்புடைத் தாளரசர் பெருவாழ்வும்-

மாத்திரைப் போதிலிடு காட்டினிற் போமெனஇல்
வாழ்க்கைவிட் டேறுமடி யவர்போலக்;

கோட்படப் பாதமலர் பார்த்திளைப் பாறவினை
கோத்தமெய்க் கோலமுடன் வெகுருபக்

---

* பற்பாசன்-பத்மாசனன்:பிரமன். பிரமனது சிரத்தை அறுத்தது;- பாடல் 285-பக்கம் 209-கீழ்க்குறிப்பு.

† சூரியன் பற்களைத் தகர்த்தது. - பாடல் 390-பக்கம் 486-கீழ்க்குறிப்பு.

‡ முத்துக்களைக் கொழிக்கும் ஆறு:
"பொருந்து சித்ர நதித்துறைகள் பொன்னு முத்துக் கொழிக்கும்" - குற்றாலக் குறவஞ்சி 48-9.

பத்ம பீடத்திலிருக்கும் பிரமனுடைய அதிகமாயிருந்த ஐந்தாவதான தலையை அறுத்துச், சூரியனைக் கோபித்து அவனுடைய பற்கள் உதிரும்படி உடைத்தெறிந்த (தற்பரன்) பரம்பொருளாம் சிவபிரான் மகிழ்ச்சி கொள்ளும் பெருமானே!

கொத்தாயுள்ள (கதலிப் பழக்குலை) வாழைப் பழக்குலைகளும், விரிந்துள்ள பலாப் பழங்களின் சுளைகளும், கொத்தாக (அப்படியே) உதிரும்படிக் குதித்துத் தாவுகின்ற *கயல்மீன்கள் -(ஆரம்) முத்துக்களைக்

(கொட்டா) கொட்டி நீர்ச்சுழிகளில் தெள்ளி ஒதுக்கி வீசும் சிற்றாற்றினில் மகிழ்கின்ற திருக் குற்றாலத்துச் சிவபிரான் அருகே வீற்றிருந்தருளும் பெருமாளே!

(பதத்தினை வழுத்திடக் கிருபை புரிவாயே)

## ஆய்க்குடி

## 982.

**வா**ள் வீச்சு படுவதால் சேனைகள் அழியும்படி (ஓட்டி ஓட்டாரை) (ஓட்டாரை) பகைவர்களை ஓட்டி வெருட்டி, இறுமாப்பு செருக்குக் கொண்ட (தாள்) முயற்சியை உடைய †அரசர்களின் பெரிய வாழ்வும்-

ஒரு நொடிப் பொழுதில் சுடுகாட்டில் (அழிந்து) போகும் என (உணர்ந்து), இல்லற வாழ்க்கையை (விட்டுத்) துறந்து (ஏறும்) கரையேறும் அடியார்களைப் போலக்-

(கோள்பட) ஒரு கோட்பாட்டை - ஒரு துணிவான முடிவை மேற்கொள்ளவும் (அல்லது கிரக சேஷ்டை அழியவும்) (உனது) திருவடி மலரைக் கண்டு (இளைப்பாறவும்)- ‡ வினையினால் (கோத்த) ஏற்படுகின்ற தேகம் என்னும் கோலத்துடன் - பல உருவங்களாம்-

---

*கயல் புனலிற் குதித்தெழுதல்: 'வரிகொள் செங்கயல் பாய்புனல்,2-1-9. 'செங்கயில் - குதி கொளும் 2-92-10.

† அரசன் வாழ்வும் அழிபடுதல் - பாடல் 778 பார்க்க.

‡ 'வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை தானொழிந்தால் தினைப்போ தளவுநில் லாதுகண் டாய்' - பட்டினத்தார் -பொது.

கோப்புடைத் தாகியல மாப்பினிற் பாரிவரு
கூத்தினைப் பூரையிட அமையாதோ;

*தாட்படக் கோபவிஷ பாப்பினிற் பாலன்மிசை
சாய்த்தொடுப் பாரவு† நிள் கழல்தாவிச்-
சாற்றுமக் கோரவுரு கூற்றுதைத் தார்‡மவுலி
தாழ்க்கவஜ் ராயுதனு மிமையோரும்;

ஆட்படச் சாமபர மேட்டியைக் காவலிடு
மாய்க்குடிக் காவலவு ததிமீதே-
ஆர்க்குமத் தானவரை வேற்கரத் தால்வரையை
ஆர்ப்பெழச் சாடவல பெருமாளே.(1)

## திருப்புத்தூர்.

(மதுரைக்கு வடகிழக்கு 39-மைல். அறந்தாங்கி ரெயில் ஸ்டேஷனிலிருந்து 27-மைல். காரைக்குடி ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து 12-மைல். திருஞான சம்பந்த ஸ்வாமிகள், திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல் பெற்றது. ஸ்தலபுராணம் உண்டு. திருப்பத்தூருக்கு வடமேற்கு 15-மைலிற் 'பிரான்மலை' என்று வழங்கும் கொடுங்குன்றமும், திருப்புத்தூருக்குக் கிழக்கு 7-மைலிற் குன்றக்குடியும் இருக்கின்றன.)

---

* சிவபிரான் மார்க்கண்டருக்காக யமனை உதைத்தது:
-பாடல் 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு †.

பாம்பின் கோபம் - "அரவு வெகுண்டன்ன"
-புறநானூறு 376. சிந்தாமணி 1878.

† 'நீள்' என்பது 'நிள்' எனக் குறுகியது.

‡ சிவபிரான் மவுலி தாழ்த்தது-

முருகவேளிடத்தில் உபதேசம் பெற்றபோது சிவபிரான் வணங்கிக் கேட்டார் அந்த மறை மொழியை:

"எதிருறுங் குமரனை யிருந்தவி சேற்றியங்
கதிர்கழல் வந்தனை யதனொடுந் தாழ்வயின்
சதுர்பட வைகுபு தாவரும் பிரணவ
முதுபொருட் செறிவெலாம் மொழிதரக் கேட்டனன்"
-தணிகைப் புரா-வீராட்ட-117.
-பாடல் 327-பக்கம் 314 கீழ்க்குறிப்பு.

(தொடர்ச்சி 841 ஆம் பக்கம் பார்க்க)

(கோப்பு உடைத்தாகி) அமைப்பு - அலங்காரங்களைப் பெற்று, (அலமாப்பினில்) துன்பங்களில், பாரிவரு கூத்தின் - பாரித்துவரும் வளர்ந்துவரும் ஆட்டத்தில், இனியேனும் இந்தப் (பூரை) பயனற்றவனை - இட - நீ இடுதல் - நீ தள்ளுதல் (அமையாதோ) போதாதோ - ஒரு முடிவு பெறாதோ! (அல்லது - பாரிவரு கூத்து வளர்ந்து வரும் ஆட்டம் இனி (பூரையிட) (பூர்த்தியாக) முடிவு பெறுதல் (அமை- யாதோ) பொருந்தலாகாதோ (கூடாதோ)!

கால் பட்டால் கோபித்துச் சீறும் விஷப் பாம்பு போல, (பாலனாம்) மார்க்கண்டன்மீது (சாய் - தொடுப்பு) குறிக்- கொண்டு தொடர்தல் மிக்கவுடன் - குறித்துப் பிடிக்கத் தொடர்ந்தவுடன் (தமது) நீண்ட திருவடியை நீட்டி-

*(உன்னை விடேன் பார் என்று) பேசின அந்தக் கோர ரூப யமனை உதைத்த பரமசிவன் தமது முடியைத் தாழ்க்கவும், குலிசாயுதனாம் இந்திரனும் தேவர்களும்

ஆட்பட்டு நிற்கவும், † (சாமம்) பொன்னிறமுடைய ‡(பரமேட்டியை)ப் பிரமனைக் (காவலிடும்) சிறையிலிட்ட **ஆய்க்குடி** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் அரசே! கடலிலே-

(ஆர்க்கும்) போர்புரிந்த அந்த சூரனாதி அசுரர்களையும் வேற்கரத்தால் - திருக்கரத்து வேலாயுதத்தால், (வரையை) அவ் வசுரர்கள் இருப்பிடமாக இருந்த எழுகிரியையும் (ஆர்ப்பு எழ) பேரொலி உண்டாகும்படிச் (சாடவல்ல) கொல்ல (அழிக்க) வல்ல பெருமாளே!

(கூத்தினிப் பூரையிட அமையாதோ)

---

* யமன் கூறுவது -'தேவர் காப்பினும்...மூவர் காப்பினும்...ஏவர் காப்பினும்...ஆவி கொண்டன்றி மீண்டும் அகல்வனோ'

-கந்தபுரா 2-5-238.

"மறலியா ரெதிராகில் உய்கிலர் வருக"

-திருவெண்காட்டுப் புராணம்-சுகவேத-10.

† சாமம் - பொன்: 'சாமவரை வில்லாக * * மதிலெய்தான்'

-சம்பந்தர் 2-44-6.

‡ பரமேட்டி - பிரமன் (பிங்கலம்), பிரமன் பொன்னிற மேனியன் "பொன்னிற நான்முகன்", " செம்பொனின் மேனியனாம் பிரமன்" சம்பந்தர் 3-7-9-; 1-107-9.

பிரமனைக் காவலில் (சிறை) இட்டது - பாடல் 212-பக்கம் 42.

## 983. சரியை, கிரியை, நெறி பற்ற

தனத்தத் தான தனன தனதன
தனத்தத் தான தனன தனதன
தனத்தத் தான தனன தனதன தனதான

கருப்புச் சாப னனைய இளைஞர்கள்
ப்ரமிக்கக் காத லுலவு நெடுகிய
கடைக்கட் பார்வை யினிய வனிதையர் தனபாரங்-
களிற்றுக் கோடு கலச மலிநவ
மணிச்செப் போடை வனச நறுமலர்
கனத்துப் பாளை முறிய வருநிக ரிளநீர்போற்;
பொருப்பைச் சாடும் வலியை யுடையன
அறச்சற் றான இடையை நலிவன
புதுக்கச் சார வடமொ டடர்வன எனநாளும்-
புகழ்ச்சிப் பாட லடிமை யவரவர்
ப்ரியப்பட் டாள வுரைசெ யிழிதொழில்
*பொகட்டெப் போது †சரியை கிரியைசெய் துயில்வாழ்வேன்;
‡ இருட்டுப் பாரில் Xமறலி தனதுடல்
பதைக்கக் கால்கொ டுதைசெய் தவன்விழ
Oஎயிற்றுப் போவி யமர ருடலவர் தலைமாலை-
**எலுப்புக் கோவை யணியு மவர்மிக
அதிர்த்துக் ††காளி வெருவ நொடியினில்
எதிர்த்திட் டாடும் வயிர பயிரவர் ‡‡நவநீத;

---

* பொகட்டு - போகவிட்டு.

† சரியை கிரியை-விளக்கம் - பாடல் 331-பக். 330-கீழ்க்குறிப்பு.

‡ பார் இருள் கொண்டது என்பது:- "எங்கும் உலகம் இருள் நீங்க இருந்த எந்தை" - சிந்தாமணி-2812.

X யமனை உதைத்தது - பாடல் 399-பக்கம் 510 கீழ்க்குறிப்பு †

O எயில் துப்பு ஒவி - திரிபுரங்களின் வலியைத் தொலைத்து;
திரிபுரம் எரித்த வரலாறு - பாடல் 285-பக்கம் 206 கீழ்க்குறிப்பு.

**"எலும்பும் அணிந்த விடையூர்தியான்"
"பூணல் வெள்ளெ லும்பினான்" - சம்பந்தர் 2-117-3; 2-99-7:

†† காளியொடாடல்: 'காளியைக் குணஞ்செய் கூத்துடையோன்"
'காளிகதும் ஓவ நின்று நடமாடி' - சம்பந். 3-119-1; 2-32-5.

(தொடர்ச்சி 843 ஆம் பக்கம் பார்க்க)

# திருப்புத்தூர்

## 983.

(கருப்புச் சாபன்) கரும்பு வில்லையுடைய மன்மதன் போன்ற இளைஞர்கள் பிரமித்து மயங்கும்படி காம இச்சை உலவுகின்றதும், நீண்டதுமான கடைக்கண் பார்வையை உடைய இனிமை வாய்ந்த மாதர்களின் கொங்கைப் பாரங்கள்-

"யானையின் தந்தம், குடம், நிறைந்த நவரத்னச் செப்பு (சிமிழ், கரகம்), (ஓடை) நீர் நிலையில் மலர்ந்துள்ள (வனச நறுமலர்) தாமரையின் நறுமணமலர், பாரத்துடன் தென்னம் பாளையும் முறியும்படி எழுந்துள்ள (நிகர்) ஒளியுள்ள இளநீர் போன்று

மலையையும் மோதிச் செயிக்கவல்ல வலிமையைக் கொண்டன, (அறச் சற்றான) மிகவும் (சற்றான) அற்பமாயுள்ள - இளைத்துள்ள இடையை மெலியும்படிச் செய்வன, புதிய ரவிக்கையுடனும், (ஆரவடம்) முத்துமாலை யுடனும் நெருங்குவன" - என்றெல்லாம் நாள்தோறும்-

புகழும் பாடல்களை (அம் மாதர்களுக்கு) அடிமைப்பட்ட (அவரவர்) அந்த அந்தக் காதலர்கள் ஆசையுடன் எடுத்தாண்டு பேசப் பாடுகின்ற (அல்லது - அடிமையாகிய நான் (அவரவர்) அந்த அந்த மாதர்கள் அன்பு கொண்டு என்னை ஏற்கும்படிப் பேசும்) இழிவான தொழிலைச் செய்கையைப் போகவிட்டு, (நான்) எப்போது சரியை, கிரியை மார்க்கங்களில் நின்று உழைத்து உயிர் வாழ்வேன்!

அஞ்ஞானம் நிறைந்த (இந்தப்) பூமியில் யமனுடைய உடல் பதைக்கும்படிக் கால் கொண்டு (விழ உதை செய்தவன்) விழும்படி அவனை உதைத்தவர், (எயில்) திரிபுரங்களின் வலியைத் தொலைத்தவர், தேவர்களின் உடல், அவர்களின் தலைமாலை (சிரங்களாலாய மாலை) ஆகிய

எலும்பு வடத்தை மாலையை அணிந்தவர், மிகவும் நடுங்கச் செய்து) முழக்கம் செய்து, காளியானவள் அஞ்சும்படி ஒரு நொடிப்பொழுதில் எதிர்த்து நடனம் புரிந்த வயிர பயிரவர் பயிரவமூர்த்தி, வெண்ணெயைத்

---

(தொடர்ச்சி)‡‡ நவநீத திருட்டுப் பாணி -கண்ணபிரான் - "தாழியில் வெண்ணெய் தடங்கை யார விழுங்கிய பேழைவயிற் றெம்பிரான்" - பெரியாழ்வார் 1-4-9.

திருட்டுப் பாணி *யிடப முதுகிடை
சமுக்கிட் டேறி யதிர வருபவர்
செலுத்துப் † பூத மலகை யிலகிய படையாளி-
செடைக்குட் ‡ பூளை மதிய மிதழிவெ
ளெருக்குச் சூடி குமர Xவயலியல்
திருப்புத் தூரில் மருவி யுறைதரு
பெருமாளே.(1)

## 984. தீவினை ஒழிய

தான தாத்த தனத்தத் தானன
தான தாத்த தனத்தத் தானன
தான தாத்த தனத்தத் தானன தனதான

வேலை தோற்க விழித்துக் காதினில்
ஓலை காட்டி நகைத்துப் போதொரு
வீடுகாட்டி யுடுத்தப் போர்வையை நெகிழ்வாகி-
மேனி காட்டி வளைத்துப் போர்முலை
யானை காட்டி மறைத்துத் தோதக
வீறு காட்டி யெதிர்த்துப் போரெதிர்
வருவார்மேல்;

கால மேற்க வுழப்பிக் கூறிய
காசு கேட்டது கைப்பற் றாஇடை
காதி யோட்டி வருத்தப் பாடுடன் வருவார்போல்-
காதல் போற்று மலர்ப்பொற் பாயலின்
மீத ணாப்பு மசட்டுச் சூளைகள்
காம நோய்ப்படு சித்தத் தீவினை
யொழியேனோ;

---

* திருமால் இடபமாய்ச் சிவபிரானைத் தாங்கியது:
-பாடல 786-பக்கம் 333 கீழ்க்குறிப்பு.

† சிவபிரானது படை பூதமும் பேயும்:
"பலபூதப் படையான்" - சம்பந்தர் 1-37-7.
"பல் படை பேயவை' - சம்பந்தர் 1-117-6.

‡ "பூளையும் வன்னியும்...சடை வைத்தவர்" - சம்பந்தர் 3-43-4.
'வெள்ளெருக் கரவம் விரவுஞ் சடை...அரன்' - அப்பர் 5-79-1.

X 'வயலியில்' என்றும் பாடம் இருக்கலாம்- 984-ஆம் பாடலிலும் வயலூர் வருவதால்.

திருடின கரங்களை உடைய (திருமாலாம்) இடபத்தின் முதுகின்மேல் (சமுக்கு இட்டு) சேணம் போட்டு ஏறி முழக்கத்துடன் வருபவர், செலுத்தப்படும் பூதம், பேய்க்கணம் - இவை விளங்குகின்ற படையாளி (இவைகளைப் படையாகக் கொண்டவர்)

சடையில் பூளைப்பூ, நிலவு, கொன்றை, வெள்ளெருக்கு இவைகளைச் சூடியுள்ளவர் - ஆகிய சிவபிரானது குமரனே! வயல்கள் பொருந்திய **திருப்புத்தூர்** என்னும் தலத்திற் பொருந்தி வீற்றிருக்கும் பெருமாளே!

*(எப்போது சரியை கிரியை செய்துயிர் வாழ்வேன்)*

## 984.

**வே**லாயுதமும் தோற்றுப் போகும்படிக் கண்கொண்டு பார்த்து. காதில் உள்ள ஓலையைக் காட்டி, சிரித்து, போகவேண்டிய ஒரு வீட்டையும் காட்டி, அணிந்துள்ள மேலாடையை (நெகிழ்வாகி) நெகிழும்படி விட்டு-

(மேனி) உடலைக் காட்டி, (வளைத்து) (ஆடவர்களின்) மனத்தைக் கவர்ந்து, போருக்கு எழுந்தது போன்ற கொங்கையாம் யானையைக் காட்டியும், மறைத்தும், (தோதகம்) வஞ்சகத்தின் (வீறு) முழு சக்தியையும் காட்டி- உபயோகப்படுத்தி, எதிர்த்துச் சண்டையிட்டு எதிரே வருபவர்களிடத்தே-

காலத்துக்குத் தக்கபடி - சமயத்துக்குத் தக்கவாறு - (உழப்பி) பேசும் வார்த்தைகளை மழுப்பி, தாம் சொன்ன காசைக் கேட்டு அதை (முதலில்) கைப்பற்றிப் பின்பு மத்தியிலே - (காதி) (மனம் வேறுபட்டுப்) பிரிந்து (அவர்களை வெருட்டி) ஓட்டிப் (பின்னும் அவர் பொருள் தந்தால் - வருத்தப்பாடுடன் வருவார்போல் - தாம் முன்பு வெருட்டி ஓட்டின செய்கைக்கு வருந்தி வந்தவர்கள் போல நடித்துத்)

தமது (காதலை) அன்பைக் காட்டும் மலர் விரித்த அழகிய படுக்கையில் (அணாப்பும்) ஏமாற்றுகின்ற (அசட்டுச் சூளைகள்) மூட வேசிகள் மீது காம இச்சை என்னும் நோய் வாய்ப்படும் மனத்தால் ஏற்படும் தீவினையை விலக்கேனோ! தீவினையினின்றும் நீங்கிப் பிழையேனோ!

ஆல கோட்டு மிடற்றுச் சோதிக
பாலி *பார்ப்பதி பக்ஷத் தால்நட
மாடி † தாத்திரி பட்சித் தாவென வுமிழ்‡வாளி-
ஆடல் கோத்த சிலைக்கைச் சேவக
னோடை பூத்த தளக்கட் Xசானவி
யாறு தேக்கிய கற்றைச் சேகர Oசடதாரி;
சீல மாப்பதி மத்தப் **பாரிட
சேனை போற்றிடு †† மப்பர்க் கோதிய
சேத னார்த்தப்ர சித்திக் கேவரு முருகோனே-
சேல றாக்கயல் தத்தச் சூழ்வய
லூர வேற்கர ‡‡ விப்ரர்க் காதர
தீர XXதீர்த்த **திருப்புத் தூருறை** பெருமாளே. (2)

---

* பார்வதி பக்கத்திருக்க நடமாடல்
'நாரியொர் பாகமாக நடமாடவல்ல...நம்பன்'-சம்பந்தர் 2-87-1

† பூமியைத் திருமால் உண்டு உமிழ்ந்தது
- பாடல் 267-பக்கம் 164 கீழ்க்குறிப்பு. †
'வையம் ஏழுங் கண்டாள் பிள்ளை வாயுளே' - பெரியாழ். 1-1-6.

‡ திரிபுரம் எரித்தபோது - திருமால் அம்பாக அமைந்தது
-பாடல் 285-பக்கம் 206 கீழ்க்குறிப்பு.

X 'சானவி' - கங்கையாறு - பகீரதச் சக்கரவர்த்தி தன் பிதுர்க்களின் சாபம் நீங்கத் தவம் புரிந்து கங்கையை வரவழைத்தனன். கங்கை தமது ஆச்சிரமத்தின் வழியில் வருவதை அறிந்த சந்நு முநிவர் அதனை ஆசமனஞ்செய்தனர். பகீரதன் அவரை வேண்ட அவர் அதைத் தமது காதின் வழியாக வெளியே விட்டனர். அவர் காதின் வழியாய் வெளிவந்ததால் கங்கை சாநவி எனப் பெயர் பெற்றனள்.

"சகரர் தம்பொருட் டருந்தவம் பெரும்பகல் தள்ளிப்
பகிர தன்கொணர்ந் திடுதலாற் பகிரதி யாகி
மகித லத்திடைச் சன்னுவின் செவிவழி வரலால்
நிகரில் சானவி எனப் பெயர் படைத்ததிந் நீத்தம்"
-கம்பராமா - அகலிகை 61.

O சடாதாரி - சடாரி எனக் குறுகிற்று. கங்கையைச் சூடிய வரலாறு - பாடல் 446-பக்கம் 622 கீழ்க்குறிப்பு.

** பாரிட சேனை போற்றிடும் அப்பர்:
"குலவு பாரிடம் போற்ற வீற்றிருந்து"
"பாரிடம் போற்றிசைப்ப" - சம்பந்தர் 2-27-1; 1-64-7.

(தொடர்ச்சி 847 ஆம் பக்கம் பார்க்க)

(ஆலகோடு) விஷத்தின் வரம்பு - அடையாளத்தைக் காட்டும் கழுத்தை உடைய ஜோதிப் பெருமான் - (பிரம) கபாலத்தைக் கையில் ஏந்தினவன், பார்வதி அன்பு வைத்து மகிழ (அல்லது பார்வதி பக்கத்திலிருக்க) நடனமாடுபவன், (தாத்திரி) பூமியைப் (பட்சித்து) உண்டு, ஆவென்று வாய்திறந்து உமிழ்ந்து விளையாடின (திருமாலை) (வாளி) அம்பாகத் (திரிபுர சம்மார)

(ஆடல்) போரில், (கோத்த) அமைத்துக் கொண்ட (சிலை) மேருவாகிய மலை வில்லைக் கையில் ஏந்திய பராக்ரமசாலி, (ஓடை பூத்த தளக்கள்) நீர்நிலைகளில் பூத்த பூ இதழ்களின் மது கலந்த (சானவி) கங்கையாறு நிறைந்து தோன்றும் திரண்ட முடியாம் சடையைத் தரித்துள்ளவன்,

(சீலம்) பரிசுத்தத்தை உடைய (மா) சிறந்த (பதி) கடவுள், (மத்தம்) களிப்பு நிறைந்த (பாரிட சேனை) பூதப்படைகள் போற்றிநிற்கும் அப்பர், - ஆகிய சிவனுக்கு - (ஓதிய சேதன அர்த்த ப்ரசித்திக்கே வரு) (சேதன அர்த்தம்) ஞானப்பொருளை உபதேசித்த (ப்ரசித்திக்கே வரு) கீர்த்தியே மிகக் கொண்டுள்ள முருகனே!

சேல்மீன்களும், நீங்காத கயல்மீன்களும், (தத்த) குதிக்கச் சூழ்ந்துள்ள வயலூரில் வீற்றிருப்பவனே! வேல்கொண்ட திருக்கரத்தனே! (விப்பிரர்க்கு) அந்தணர்க்கு (ஆதர) பற்றுக் கோடாய் உள்ளவனே! தீரனே! (தீர்த்த) பரிசுத்த மூர்த்தியே! (அல்லது, சிவகங்கை, சீதளி என்னும் தீர்த்த சேடங்களை உடைய) **திருப்புத்தூர்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(தீவினை ஒழியேனோ)

---

(தொடர்ச்சி) †† சிவபிரானுக்கு உபதேசித்தது

-பாடல் 327-பக்கம் 314 கீழ்க்குறிப்பு.

‡‡ 'விப்ரர்க் காதர'- 'அந்தணர் வெறுக்கை' - திருமுருகாற்:

'வேதியர் வெறுக்கையும் அனாதி பரவஸ்துவும்' - வேளைக்காரன் வகுப்பு; 'விப்ரகுல யாகச் சபாபதி' - வேடிச்சி காவலன் வகுப்பு.

XX திருப்புத்தூர்ச் சிவனையும்"தீர்த்தன்"என்றார் அப்பர் பெருமான் : 'தீர்த்தன் காண்...திருப்புத்தூரில் திருத்தளியான் காண்' அப்பர் 6-76-1. 'அத்தடம் சுமலையாற் சீதளிப் பெயர்த்தாம்'

-திருப்புத்தூர்ப் புராணம்.

## திருவாடானை.

[மானாமதுரை ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து, சிவகங்கை, காளையார்கோயில் என்னும் ஊர்கள் வழியாகப் போனால் 44-மைல், காளையார் கோயிலுக்குக் கிழக்கு 21-மைல். பரமகுடி இராமநாதபுரம், அறந்தாங்கி ஆகிய ரெயில்வே ஸ்டேஷன்களிலிருந்து 30-மைல்; ஆனால் இவ் வழிகள் கஷ்டம். திருஞானசம்பந்த ஸ்வாமிகளுடைய பாடல் பெற்றது.]

### 985. அருள் பெற

தானான தத்ததன தானான தத்ததன
தானான தத்ததன தனதான

**ஊ**னாரு முட்பிணியு மானாக வித்தவுட
லூதாரி பட்டொழிய வுயிர்போனால்-
ஊரார் குவித்துவர ஆவா வெனக்குறுகி
ஓயா முழக்கமெழ அழுதோய;

நானா விதச்சிவிகை மேலே கிடத்தியது
நாறா தெடுத்தடவி யெரியூடே-
நாணாமல் வைத்துவிட நீறாமெ னிப்பிறவி
நாடா தெனக்குனருள் **புரிவாயே;**

*மானாக துத்திமுடி மீதே நிருத்தமிடு
மாயோனு மட்டொழுகு மலர்மீதே-
வாழ்வா யிருக்குமொரு வேதாவு மெட்டிசையும்
வானோரு மட்டகுல கிரியாவும்;

ஆனா வரங்கருடன் வானார் பிழைக்கவரு
† மாலால முற்றவமு தயில்வோன்முன்-
‡ஆசார பத்தியுடன் ஞானாக மத்தையருள்
**ஆடானை** நித்தமுறை பெருமாளே.(1)

---

* காளிங்கன் மீது நிர்த்தம்:- பாடல் 245-2 பக்கம் 114 கீழ்க்குறிப்பு X; பாட்டு 402-பக்கம் 518; பாட்டு 868-பக்கம் 544-கீழ்க்குறிப்பு † பார்க்க.

† சிவபிரான் நஞ்சை உண்டது
-பாடல் 509-பக்கம் 162 கீழ்க்குறிப்பு ‡ பார்க்க.

‡ ஆசார பத்தியுடன் உபதேசம் பெற்றது
-பாடல் 982, பக்கம் 840-கீழ்க்குறிப்பு.

# திருவாடானை

## 985.

(ஊன்) மாமிசமும், (ஆரும் உள் பிணியும்) நிறைந்து உள்ளே இருக்கும் நோய்களும், (ஆனா)நீங்காது (கவித்த) வளைய மூடப்பட்ட (இந்த) உடல் (ஊதாரிபட்டு) கேடுற்று (ஒழிய) நீங்கும்படி - அழியும்படி உயிர் போய் விட்டால்

ஊரார்கள் கும்புகூடிவர, ஐயோ என்று கூறி அவர்கள் அணுகி, (ஓய்விலாத கூச்சல் உண்டாகும்படி அழுது, பின்னர் (ஓய) அழுகை அடங்கப்-

பலவிதமான பல்லக்கின்மேலே (பிணத்தைக்)கிடத்தி, அது (நாறாது) துர்நாற்றம் வீசுமுன் (அல்லது தெரியாதபடி (உடலை) மூடி எடுத்துக் கொண்டுபோய்) (அடவி) சுடுகாட்டில் எரியின் மத்தியிலே

கூசாமல் வைத்து விட்டுவிட (அவ் வுடல்) சாம்பலாகும் என்ற விதியுள்ள இந்தப் பிறவியை (நான் விரும்பாதபடி எனக்கு உன் திருவருளைத் தருக.

(மால் நாகம்) காளிங்கன் என்னும் பெரிய பாம்பின் (துத்தி) புள்ளிகள் உள்ள படத்தின் மேலே நடனம் செய்த திருமாலும், தேன் ஒழுகும் (தாமரை) மலர்மேல்.

வாழ்வு கொண்டிருக்கும் ஒப்பற்ற பிரமனும், எட்டுத் திசைகளில் உள்ளவர்களும், தேவர்களும், சிறந்த எட்டு மலைகள் (அஷ்டகிரிகளில்) உள்ளவர்களும்-

(ஆனா அரக்கருடன்) (கடல் கடைந்தபோது அங்கு) நீங்காது நின்ற அசுரர்களுடன் வானகத்துள்ள கணங்கள் பிழைக்கும்படி - எழுந்தஆலகாலவிஷம் (முற்ற) அத்தனையும் -(அல்லது உற்ற-தமக்குக் கிடைத்த) அமுதமாக உண்ட சிவபிரான் முன்பு-

* ஆசாரத்துடனும் பக்தியுடனும் (கேட்க அவருக்கு) (அல்லது சிவபிரானது முன்னிலையில் † சாத்திர முறைப்படி) ஞான ஆகமப்பொருளை - வேதாகமங்களின் ஞானப் பொருளை (அருள்) - உபதேசித்த பெருமாளே! திருஆடானை என்னும் தலத்தில் நாள்தோறும் வீற்றிருக்கும் பெருமாளே! (எனக்கு உன் அருள்புரிவாயே)

---

* பால் 982-பக்கம் 840 கீழ்க்குறிப்பு; † 'அப்பொருள் பொழுதிட மறிந் தியல்புளித் தந்திடத் தக்கது' - தணிகைப்புரா - வீராட்ட 111.'மூலத் தொல்பொருள் யாருங் கேட்ப இற்றென இயம்பலாமோ மறையினால் இசைப்ப தல்லால் - கந்தபுரா 1-17-38.

## உத்தரகோசமங்கை.

[ராமநாதபுரம் ரெயில்வே ஸ்டேஷனிலுருந்து 7-மைல். இது மாணிக்கவாசக ஸ்வாமிகளால் மிகப் பாராட்டப் பெற்றது. ஸ்தலபுராணம் உண்டு.]

## 986. ஞானம் பெற

தத்தன தானத் தனதன தந்தத்
தத்தன தானத் தனதன தந்தத்
தத்தன தானத் தனதன தந்தத் தனதான

கற்பக ஞானக் கடவுண்மு னண்டத்
திற்*புத சேனைக் கதிபதி யின்பக்
கட்கமை †பாகப் பமமுது வெண்சர்க் கரைபால்தேன்-
கட்டிள நீர்முக் கனிபய றம்பொற்
றொப்பையி னேறிட் டருளிய தந்திக்
கட்டிளை யாய்‡பொற் பதமதி றைஞ்சிப் பரியாய;
பொற்சிகி யாய்கொத் துருண்மணி தண்டைப்
பொற்சரி நாதப் பரிபுர என்றுப்
பொற்புற வோதிக் கசிவொடு சிந்தித் தினிதேயான்-
பொற்புகழ் பாடிச் சிவபத மும்பெற்
றுப்பொருள் ஞானப் பெருவெளி யும்பெற்
றுப்புக லாகத் Xதமுதையு முண்டிட் டிடுவேனோ;

---

* புத சேனை - தேவசேனை † பாகு அப்பம் அமுது.

‡ 'பொற்பதம் இறைஞ்சித் சூரன் முருகவேளுக்கு மயில் வாகனமானது:-

சூரன், பதுமன், சிங்கமுகன், தாரகன், என்னும் நான்கு பூதர்கள் முருகவேளின் சேவல், மயிலுடன் சேர்ந்து கயிலை வாயிலில் கருடனாதிய ஊர்திகளை வதைத்தார்கள். தேவர்கள் முறையிட்டால் இதை அறிந்த முருகவேள் இந் நான்கு பூதர்களையும் 'அசுரர்களாகுக' எனச் சபித்தார். அப்பொழுது சூரனும் பதுமனும் 'அண்ணலே! நாங்கள் மயிலும் சேவலுமாகித் தங்களுக்குப் பணி செய நெடுங்காலமாகத் தவம் புரிகின்றோமே' என விண்ணப்பிக்க, 'நீங்கள் இருவரும் ஒரு வடிவாகி 'சூரபத்மா' என்னும் அசுரனாய் எம்முடன் போர் புரியும்போது எமது ஆணையால் மயிலும் சேவலும் ஆவீர்கள்' என முருகவேள் அருள் புரிந்தார்.

"பரம!வாரணம் மயில் ஆக,உன்னருங் கோடி தவமிழைக்கின்றோம். உதித்திடும் அசுரர் தோற்றத்தின், பின்னரெக் காலம் விடுதலை

[தொடர்ச்சி 851 ஆம் பக்கம் பார்க்க]

## உத்தரகோச மங்கை

## 986.

'கற்பக விருக்ஷம் போல (அடியார்க்கு) அவர்கள் வேண்டுவதை ஈயும் ஞான மூர்த்தியாம் கடவுளே! முன்பு விண்ணுலகத்தில் வளர்ந்த (புதசேனைக்கு) தேவசேனைக்குத் தலைவனாயிருப்பவனே! (அல்லது தேவர்களின் படைத் தலைவனே)! இன்பரசமான (கள்) தேன் சுவை கொண்ட கரும்பு, (பாகு) வெல்லம், அப்பம், (அமுது) உணவு (சோறு), வெள்ளைச் சர்க்கரை, பால், தேன்-

(கட்டு)நிரம்ப இளநீர்-அல்லது (கட்டி - இளநீர் கல்கண்டு-இளநீர்), (முக்கனி) வாழை, மா, பலா என்னும் முப்பழம், பயறு ஆகிய இவைகளை அழகிய பொலிவுள்ள வயிற்றில் ஏற்றுக்கொண்டருளம் யானையாகிய கணபதியின் (கட்டிளையாய்) வலிமை நிறைந்த இளைஞனே! உன் திருவடியை வணங்கி வேண்டி உனக்கு வாகனமான

அழகிய மயிலையுடையவனே திரளாக உள்ளதும், உருட்சியுள்ளதுமான ரத்நம் பதித்த தண்டையையும், அழகும், ஒழுங்கும் உள்ளதாய் ஒலிக்கின்றதான சிலம்பையும் அணிந்தவனே!' என்றெல்லாம் அழகாக உன்னைத் துதித்து மனங்கசிந்து தியானித்து நன்றாக நான்

உனது அழகிய திருப்புகழைப் பாடிச், சிவநிலையையும் பெற்று மெய்ஞ்ஞானப் பெருவெளியாம் (சிதாகாச) உயர் நிலையைப் பெற்று, (அப்போது உண்டாவதாகச்) சொல்லப்படுகின்ற உடலில் ஊறும் ஞான அமுதை உண்ணப் பெறுவேனோ!

---

(850 ஆம் பக்கத் தொடர்ச்சி)

எமக்குப் பெறுமெனக் குமரவேள் உரைக்கும்." "நீவிர்தாம் இருவிர் ஒரு வடிவாகி நிருதரிற் சூரபத்மா என், றோவிலா விறல் கூர் பெயர் தரித் திமையோர்க் குறுபகையா யுடற்றிடுநாள், தாவில்சீர் எமதாணையால்... பசுஞ்சிறகர் மாயூரம் சேவலாம் வடிவுண்டாம் என..... உரைத்தனுப்-பினனால்"

-உபதேச காண்டம் (ஞான வரோதயர்) 83, 84.

X அமுதம் - சிவ அமுது

-பாடல்கள் 563, 593-அடி 1-பார்க்க.

*தெற்பமு ளாகத் திரள்பரி யும்பற்
குப்பைக ளாகத் தசுரர்பி ணந்திக்
கெட்டையு மூடிக் குருதிகள் † மங்குற் செவையாகித்-
‡ திக்கய மாடச் சிலசில பம்பைத்
தத்தன தானத் தடுடுடு டெங்கச்
செப்பறை தாளத் தகுதொகு டெங்கச் சிலபேரி;
Xஉற்பன மாகத் Oதடிபடு **சம்பத்
தற்புத மாகத் தமரர்பு ரம்பெற்
றுட்செல்வ மேவிக் †† கனமலர் சிந்தத் தொடுவேலா-
‡‡ உட்பொருள் XXஞானக் குறமக ளும்பற்
சித்திரை நீடப் பரிமயில் முன்பெற்
றுத்தர கோசத் தலமுறை கந்தப் பெருமாளே. (1)

## இராமேசுரம்.

[ரெயில்வே ஸ்டேஷன். திருஞானசம்பந்த ஸ்வாமிகள் திருநாவுக்கரசு ஸ்வாமிகள் ஆகிய இருவர் பாடல் பெற்றது. ஸ்தல புராணம் உண்டு.]

### 987. யாக்கையைப் பழித்தல்

தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தானதன தானதன
தானதன தானதன தானதன தானதன தனதான

வாலவய தாகியழ காகிமத னாகிபணி
வாணிபமொ டாடிமரு ளாடிவிளை யாடிவிழல்
வாழ்வுசத மாகிவலு வாகிOOமட கூடமொடு
பொருள்தேடி-

---

* தெற்பம் - போர்ச் செருக்கு. † மங்குல் - திசை.

‡ திக் கஜங்கள் - அஷ்ட கஜங்களின் பெயர் (கிழக்காதி முறையே)-பாடல் 554-பக்கம் 265-கீழ்க்குறிப்பிற் காண்க.

X உற்பனம் - தோற்றம். O தடி - மின்னல். **சம்பம் - இடி.

†† கனமலர் சிந்துதல் - தேவர்கள் பொன்மாரி சொரிதல்.
-பாடல் 645-பக்கம் 510 கீழ்க்குறிப்பு.

‡‡ உட்பொருள் ஞானக் குறமக ளும்பொற்
சித்திர நீலப் பரிமயி லுஞ்சுற்
றுத்தர கோசத் தருள்கொடு கந்தப் பெருமாளே- என்றும் பாடம்.

XX "ஞானக் குறமகள் - 'ஞான குறமாது'
-பாடல் 98, 833, 987-பர்க்க.

OO மட கூடம் - மாட கூடம்.

போர்ச் செருக்குள்ள தேகத்தையுடைய கூட்டமான (பரி) குதிரைகளும். (உம்பல்) யானைகளும், (இறந்து) குப்பை களாகவும், அசுரர்களுடைய பிணங்கள் எட்டுத்திக்குகளையும் மூடி அவர்களின் ரத்தத்தால் திசைகளெல்லாம் செந்நிற மடையவும்,

(எட்டுத்) திக்குகளிலுள்ள யானைகள் (அஷ்டகஜங்கள்) அயர்ந்து அசைவு உறச், சிலசில பம்பை (பறைவகை) என்னும் வாத்தியங்கள் தத்தன தானத் தடுடுடு என்று ஒலிக்க, (செப்பறை தாளம்-தாளம் செப்பு அறை) தாளங்கள் ஒலிக்கும் ஒலி தொகு தொகு என்று ஒலிக்கச், சிலபேரி (முரசு) வாத்தியங்கள்

(துடிபடு சம்பத்து உற்பனமாக) இடி இடிப்பதுபோலவும், மின்னல் மின்னுவதுபோலவும் தோற்றம் கொடுக்க - காட்சியை அளிக்க, அற்புதமான (மாகத்து) விண்ணுலகத்துத் தேவர்கள் தங்கள் ஊர் (பொன்னுலகத்தைத்) திரும்பப் பெற்று, அவ்வூருக்கு உள்ள செல்வங்களையுமடைந்து (புஷ்ப-மாரியாகப்) பொன் மலர்களைச் சிந்தச், செலுத்தின வேலாயுதத்தை யுடையவனே!

உண்மைப் பொருளை அறிந்த ஞானியாம் குறமகள் வள்ளியும். (உம்பல்) யானை (ஐராவதம்) வளர்த்த (சித்திரை) அழகை உடையவளாம் தேவசேனையும்,(நீடு)மேம்பட்ட அந்த வாகனமாம் மயிலும், சந்நிதியில் விளங்கப் பெற்று **உத்தர கோசமங்கை** என்னுந் தலத்தில் வீற்றிருக்கின்ற கந்தப் பெருமாளே! (ஞான அமுதை உண்டிட்டிடுவேனோ)

## இராமேசுரம்

## 987.

**பா**ல்ய வயதை (கட்டிளமை வயதை) அடைந்து, அழகு நிரம்பப் பெற்று, (மதனாகி) மன்மதன்போல விளங்கி, பணி வாணிபமொடு ஆடி, - வாணிபப் பணியொடு ஆடி - ஊதியத்தை - (லாபத்தைத்) தரவல்ல பல தொழில்களை மேற்கொண்டு நடத்தி, (மருளாடி) மருட்சி - மயக்க அறிவைப் பெற்றுக், (கலவியிற்) காலம் போக்கி, விழல் வாழ்வு சதமாகி - பயனற்ற வாழ்க்கையையே நித்தியமெனக் கொண்டு, அத்தகைய வாழ்விலேயே மனது உறுதிபெற்று, மாடகூடம் கொண்ட செல்வனாய்ப் பொருளைத் தேடி-

வாசபுழு கேடுமல ரோடுமன மாகிமகிழ்
வாசனைக ளாதியிட லாகிமய லாகிவிலை
மாதர்களை மேவியவ ராசைதனி லேசுழல
சிலநாள்போய்த்;

தோல்திரைக ளாகிநடை யாகிகுரு டாகியிரு
கால்கள்தடு மாறிசெவி மாறிபசு பாசபதி
சூழ்கதிகள் மாறிசுக மாறி*தடி யோடுதிரி
யுறுநாளிற்-

சூலைசொறி யீளைவலி வாதமொடு நீரிழிவு
சோகைகள மாலைசுர மோடுபிணி தூறிருமல்
சூழலுற மூலகசு மாலமென நாறியுட
லழிவேனோ;

நாலுமுக னாதியரி யோமென †அ தாரமுரை
யாதபிர மாவைவிழ மோதிபொரு ளோதுகென
நாலுசிர மோடுசிகை தூளிபட தாளமிடு
மிளையோனே-

நாறிதழி வேணிசிவ ரூபகலி யாணிமுத
லீணமக வானைமகிழ் தோழவன மீதுசெறி
ஞானகுற மாதை‡தினை காவில்மண
மேவுபுகழ் மயில்விரா;

---

* 'தடிகொண்டு நடத்தல்' - முதுமை வர்ணனை
- பாடல் 554-அடி 3-4; பக்கம் 262-கீழ்க்குறிப்பு X.

† அதாரம் - ஆதாரம். பிரமனைக் குட்டியது - பாடல் 608 பக்கம் 406-கீழ்குறிப்பு †† பார்க்க. 'ஓம்' என்பதன் பொருள் தெரியாது பிரமன் மயங்கினன்-

"குமரவேள் **ஓமெனப்படும் மொழிப்பொருள் இயம்புகென்
றுரைத்தான்"

"தூமறைக் கெலாம் ஆதியும் அந்தமும் சொல்லும்
ஓமெனப்படும் ஓரெழுத் துண்மையை உணரான்
மாமலர்ப் பெருங் கடவுளும் மயங்கினான்"

....கந்தபுரா 1-16-9, 13.

‡ காவில் மணம் மேவியது: "இளைய மங்கையை இருளை ஏனலின். விளைதரும் புனம் மெல்ல நீங்கியே, அளவில் மஞ்ஞைகள் அகவும் மாதவிக். குளிர் பொதும்பரிற் கொண்டு போயினாள். ....எடுத்தனன் புல்லினன் இன்பம் எய்தினான்"

(பொதும்பர் - இளமரக்கா.) - கந்தபுரா 6-24-140, 143.

நறுமணம் உள்ள புனுகு, (ஏடுமலர்) இதழ்களோடு கூடிய மலர் இவைகளில் (மனமாகி) மனத்தைச் செலுத்தினவனாய், மகிழ்ச்சியுடன் வாசனைப் பொருள்கள் முதலியவற்றை அணிந்தவனாய் காமப் பற்றைக் கொண்டு, பொது மகளிரை விரும்பி, அவர்கள் மீது கொண்ட ஆசையிலே சுழல, அங்ஙனம் சில நாள் போக-

உடலின் தோல் சுருங்கலுற்று, (மயிர்) வெண்ணிறம் பூண்டு, குருடனகி, இரண்டு கால்களும் தடுமாற்றம் அடைந்து, காது (மாறி) கேட்குந்தொழில் அற்று, (பசு, பாசம், பதி-) (உயிர், தளை கடவுள்) என்னும் முதற் பொருள்களைப் பற்றிய அறிவு (பசு ஞானம், பாச ஞானம், பதி ஞானம்) - என ஏற்பட்டிருந்த அறிவு வழிகள் யாவும் மறைதலுற்று, சுகமெலாம் கெட்டுத் தடிகொண்டு நடந்து திரியும் நாள்களில்-

சூலைநோய், சொறிநோய், ஈளைநோய் [கோழை], வலிகள் (இழுப்புக்கள்), வாதம் (வாயு மிகுதலால் வரும் பிணிகள்), நீரிழிவு, (சோகை) ரத்தமின்மை, கண்டமாலை (கழுத்தில் வரும் நோய்), சுரம், இவைகளுடன் சேர்ந்துள்ள (தூறிருமல்) கிளைத்தெழுகின்ற இருமல் இவையெலாம் சூழ்ந்து பற்ற,அடிக்காரணமாம்!கசுமாலம் ஆபாச மென்னும்படியான (உடல்நாறி) இந்த உடல் துர்நாற்றம் அடைந்து அழிதல் உறுவேனோ!

நான்கு முகங்களைளக் கொண்டவனும், "ஆதி அரி ஓம்" என்பதற்கு ஆதாரமான பொருளைச் சொல்லத் தெரியாதவனும் ஆகிய பிரமாவை விழும்படித் தாக்கிப் பொருளைச் (சரியானபொருளைச்) சொல்லுக என்று அவனது நான்கு தலைகளும் குடுமிகளும் சிதறுண்டு அலையத் (தாளமிடு) தாளமிடுவது போலக் குட்டின இளையோனே!

நறுமணம் வீசும் கொன்றையை அணிந்த (வேணி) சடையர் -(அல்லது சடைச்சி), சிவரூபத்தில் (சிவனது இடது பாகத்தில்) அமைந்துள்ள கலியாணி - பார்வதி இவர் - முதலில் ஈன்ற மகவு-குழந்தையாகிய யானை - கணபதி மகிழும் (தோழ) சகோதர நட்பாளனே) (அல்லது) கலியாணி முன்பு ஈன்ற (மகவு) குழந்தையே! (ஆணை) தேவசேனை மகிழும் தோழனே! (வள்ளிமலைக் காட்டிலே) பொருந்தி இருந்த குறமாதாகிய வள்ளியைத், திணைப்புனச் சோலையில் மணம் பூண்ட புகழ் வாய்ந்த மயில் வீரனே!

*ஒலமிடு தாடகைசு வாகுவள ரேழுமரம்
வாலியொடு நீலிபக னோடொருவி ராதனெழு
மோதகட லோடுவிறல் ராவணகு ழாமமரில்
பொடியாக-

---

* (1) தாடகை சுவாகு வதம் - பாடல் 431-பக்கம் 582-கீழ்க்குறிப்பு; -பாடல் 508-பக்கம் 158-கீழ்க்குறிப்பு.

தாடகை ஓலமிட்டு ஆர்ப்பரித்துச் சப்தத்துடன் வந்தாள்-

"வானோர் இடங்களும் நெடுந்திசையும் ஏழுலகு மெங்கும்

அடங்கலு நடுங்க வுருமஞ்ச நனியார்த்தாள்"

ஆர்த்துவந்த அரக்கியை 'நீ கொல்லுக; அது அறச்செயலே' என்று விசுவாமித்திரர் கூற இராமபிரான்...தமது பாணத்தால் கொன்றனர்: பாணம்பட்டு அவள் விழுந்ததை-

"கடையுகத் தெழுந்த மேகம் மின்னொடும் அசனியோடும் வீழ்வதே போல வீழ்ந்தாள்" - என்றார் கம்பர்.

-கம்ப ராமா-தாடகை வதை 50, 74.

(2) ஏழுமரம் - மராமரங்களை ஸ்ரீ ராமர் அட்டது:

- பாடல் 231-பக்கம் 78 கீழ்க்குறிப்பு.

(3) வாலிவதம் - பாடல் 231-பக்கம் 78, பாடல் 287-பக்கம் 214 கீழ்க் குறிப்பு; பாடல் 631-பக்கம் 470 கீழ்க்குறிப்புகளைப் பார்க்க.

(4) நீலி - நீலி - என்பது கறுத்த நிறம் கொண்ட அரக்கி - சூர்ப்பணகை, அல்லது அயோமுகி என்பவளைக் குறிக்கின்றது போலும்; தாடகையை " நீல அரக்கி" என்றார் 844-ஆம் பாடலில்; "அல்லின் மாரி யனைய நிறத்தவள்"

- என்றார் கம்பர் - கம்பராமா-தாடகை 71.

(1) ராவணன் தங்கை சூர்ப்பணகை ராம லக்ஷ்மணர்களைக் கண்டு காதல் கொண்டு, தன்னை மணஞ் செய்யுமாறு வேண்ட அவர்கள் மறுத்தமையால் சீதையை எடுத்துச் செல்ல அவள் தொடங்குகையில் இலக்குமணர் அவளது மூக்கு, முலை, காதுகளை அறுத்துத் துரத்தினார்.

(2) அயோமுகி என்னும் அரக்கி இலக்குமணரைக் கண்டு மோகம் கொண்டு தன்னை அணையும்படி வேண்ட இலக்குமணர் மறுக்க, அவரை மோகன மந்திரத்தால் மயக்கி எடுத்துக் கொண்டு செல்ல, மயக்கம் தெளிந்தவுடன் லக்ஷ்மணர் அவளுடைய மூக்கைத் துணித்து மீண்டனர்.

(5) பகன் - கண்ணனைக்கொல்லக் கம்சனால் அனுப்பப்பட்ட (பகம்) கொக்கு உருக்கொண்ட அசுரன், கண்ணபிரானால் வாய் பிளவுண்டு இறந்தான். யமுனைக் கரையில் பகாசுரன் கண்ணனை விழுங்க, அவன்

(தொடர்ச்சி 857 ஆம் பக்கம் பார்க்க)

கூச்சலிட்டு வந்த தாடகை, சுவாகு, வளர்ந்திருந்த மராமரங்கள் ஏழு, வாலி, நீலி, பகன், ஒப்பற்ற விராதன், எழுந்து அலைகள் வீசும் கடல், வலிமை மிக்க ராவணன் அவனைச் சேர்ந்த அரக்கர் கூட்டங்கள் யாவரும் போரிற் பொடிபட்டழிய-

---

*(856 ஆம் பக்கத் தொடர்ச்சி)*

நெஞ்சில் கண்ணன் நெருப்புப்போல எரிக்க, அவன் கண்ணனை உமிழ்ந்து மூக்கால் குத்த நினைக்கையில். அந்தக் கொக்கின்வாய் அலகுகளை இரு கைகளாலும் பற்றிக் கண்ணன் அப் புள்ளைக் கிழித்தெறிந்தான்.

"பள்ளத்தில் மேயும் பறவை யுருக்கொண்டு
கள்ள அசுரன் வருவானைத் தான்கண்டு
புள்ளிது என்று பொதுக்கோ வாய்கீண்டிட்ட பிள்ளை"

- பெரியாழ்வார் *2-5-4.*

கும்பகர்ணனைக் - கும்பாகன் (பாடல் *374*), கும்பன் (பாடல் *839*), கும்பகன் (பாடல் *965*) என்றார்; அவனையே இங்கு 'ப..ன்'என்றார் எனவும் கொள்ளலாம். திருமாலின் பல அவதாரச் செயல்களை ஒன்று சேர்த்துங் கூறுவர் அருணகிரியார் - பாடல் 775 பார்க்க.

*(6)* விராதன் - இவன் வீணை வாசிக்கும் தும்புரு என்னும் கந்தருவன்; ரம்பையுடன் காம விகாரத்தால் ஊடல் கொள்ள குபேரன் இவனை அரக்கனாம்படிச் சபித்தனன். இராமபிரான் காட்டில் வாசஞ் செய்தபோது சீதையை இந்த அரக்கன் தூக்கிச்செல்ல இராம இலக்குமணரால் கையறுப்புண்டு ராமர் தாள்பட்ட பாக்கியத்தால் சுவர்க்கம் அடைந்தான்.

"விராத னெனுமக், கோர வெங்கணுரு மேறன கொடுந் தொழிலினான்....மலரன்னம் அனையாளை ஒருகைச், சொல்லும் எல்லையில் முகந்து உயர் விசும்பு தொடர" * *

'சேவடியினால் அமலன் உந்துதலுமே' சாபம் விட்டு ** விளங்கினன்.

"கரக்கவந்த காமநோய், துரக்க வந்த தோமினால்,
இரக்கமின்றி யேவினான், அரக்க மைந்தனாயினேன்"
"வேதநூல், பூண்டநின் பொலங்கொள் தாள்,
தீண்டலின்று தேரினேன்"

-கம்பராமா. விராதன்வதை *19, 20, 45, 46, 66, 70.*

*(7)* கடலை அட்டது:- பாடல் *177*-பக்கம் *412* கீழ்க்குறிப்பு பாடல் *754*-பக்கம் *248* கீழ்க்குறிப்பு.

ஓகைதழல் வாளிவிடு மூரிதநு நேமிவளை
பாணிதிரு மார்பனரி கேசன்மரு கானவெ
யோதமறை ராமேசுர மேவுகும ராவமரர்
பெருமாளே. (1)

## 988. மாதர்மீதுள மயக்கு அற

தானா தனத்ததன தானா தனத்ததன
தானா தனத்ததன தனதான

வானோர் வழுத்துனது *பாதார பத்மமலர்
மீதே பணிக்கும்வகை யறியாதே-
மானார் வலைக்கணதி லேதூளி மெத்தையினி
லூடே யணைத்துதவு மதனாலே;

தேனோ கருப்பிலெழு பாகோ விதற்கிணைக
ளேதோ வெனக்கலவி பலகோடி-
தீரா மயக்கினொடு நாகா படத்திலெழு
சேறாடல் பெற்றதுய ரொழியேனோ;

மேனாடு பெற்றுவளர் சூராதி பற்கெதிரி
னூடேகி நிற்குமிரு கழலோனே-
†மேகார வுக்ரபரி தானேறி வெற்றிபுனை
வீரா குறச்சிறுமி மணவாளா;

‡ஞானா பரற்கினிய வேதாக மப்பொருளை
நாணா துரைக்குமொரு பெரியோனே-
நாரா யணற்குமரு காவீறு பெற்றிலகு
ராமே சுரத்திலுறை பெருமாளே. (2)

---

* பாதாரம் - பாதாரவிந்தம்
-பாடல் 220-பக்கம் 56-அடி 1 பார்க்க.

† மேகாரம் - பாடல் 149-அடி 4 பார்க்க.

‡ சிவபிராற்கு முருகவேள் உபதேசித்தது
-பாடல் 327-பக்கம் 314 கீழ்க்குறிப்பு.

களிப்புடன் நெருப்பு விசும் அம்பைச் செலுத்தின, (கையை உடையவன்), வலிமை வாய்ந்த வில், சக்கரம், சங்கு இவைகளை ஏந்தின கையை உடையவன், இலக்குமி வாசம் செய்யும் திருமார்பை உடையவன், அரி, (கேசன்) கேசவன், ஆகிய திருமாலின் மருகனே! என்று மறைகள் ஓதிப்புகழும் **ராமேசுரத்தில்** வீற்றிருக்கும் குமரனே! தேவர் பெருமாளே!

(நாறி உடல் அழிவேனோ)

## 988.

**தே**வர்கள் போற்றுகின்ற உன்னுடைய திருவடித் தாமரையாம் மலர்மேலே பணி செய்யும் வகையை உணராமல்-

(மான் விழியராம்) மாதர்களின் கண்வலையிலே (பட்டு) (தூளி) பூந்தாதுகள் நிறைந்த மெத்தையினில் - ஊடே - மெத்தைப் படுக்கையிலே - அணைத்துப் பெறும் அந்த (சிற்றின்ப) நிகழ்ச்சியால்-

தேனோ, கரும்பிலிருந்து வரும் சர்க்கரைக் கட்டியோ, இதற்குச் சமமாவன பின் எவை தானோ - என்று கூறிப் புணர்ச்சி பல கோடிக் கணக்கான - பலவாகத்-

(தீராத) அடங்காத மோகத்தோடு (நாகபடம் போன்ற) அல்குற் சேற்றில் விளையாடுதலால் அடைந்துள்ள துயரத்தை விலக்க மாட்டேனோ!

மேல் நாடாகிய விண்ணுலகத்தையும் (போரில்) வென்று அடைந்து, மேம்பட்ட சூராதிபனாகிய சூரபத்மாவின் எதிரே போரிற் புகுந்து நின்ற இரண்டு திருவடிகளை உடையவனே!

மயில் என்கின்ற உக்ரமான வாகனத்தில் ஏறி அமர்ந்து வெற்றி பெற்ற வீரனே! குறச்சிறுமி (வள்ளியின்) மணவாளனே!

ஞானபரன் - ஞானப் பரம்பொருளாகிய சிவபிரானுக்கு இனிமையான வேதாகமங்களின் பொருளை - வேதப் பொருளையும் ஆகமப் பொருளையும் - கூசாமல் எடுத்து உபதேசித்த ஒப்பற்ற பெரியோனே!

நாராயண மூர்த்திக்கு மருமகனே! (வீறு) சிறப்பு பெற்று விளங்கும் **ராமேசுரத்தில்** வீற்றிருக்கும் பெருமாளே!

(துயர் ஒழியேனோ)

# இடம் விளங்காத ஸ்தலங்கள்.

## 1. இந்தம்பலம்.

### 989. திருவடியைப் பெற

*தனன தனதனன தந்தந் தனத்ததன*
*தனன தனதனன தந்தத் தனத்ததன*
*தனன தனதனன தந்தத் தனத்ததன தனதான*

அமல *கமலவுரு †சங்கந் தொனித்த ‡மறை
அரிய பரமவெளி யெங்கும் பொலித்தசெய
Xலளவு மசலமது கண்டங் கொருத்தருள வறியாத-
Oதகர முதலுருகொ ளைம்பந் தொரக்ஷரமொ
டகில புவனநதி யண்டங் களுக்குமுத
லருண கிரணவொளி யெங்கெங் குமுற்றுமுதல் நடுவான;

கமல துரியமதி லிந்துங் கதிர்ப்பரவு
கனக நிறமுடைய பண்பம் **படிக்கதவ
ககன சுழிமுனையி ††லஞ்சுங் களித்தமுத ‡‡சிவயோகம்-
கருணை யுடனறிவி தங்கொண் டிடக்கவுரி
குமர குமரகுரு வென்றென் றுரைப்பமுது
கனிவு வரஇளமை தந்துன் பதத்திலெனை யருள்வாயே;

---

* கமலம் 1008 இதழோடு கூடிய குருகமலம்
-பாடல் 439 பக்கம் 598 கீழ்க்குறிப்பு O-பார்க்க
† சங்கம் - சங்க ஒலி - பாடல் 179-பக்கம் 416 கீழ்க்குறிப்பு;
இந்த ஒலி யோகியர்க்கே தெரிவது.
"கடலொடு மேகம் களிறொடும் ஓசை
அடவெழும் வீணை அண்டரண் டத்துச்
சுடர்மனு வேணுச் சுரிசங்கின் ஓசை
திடமறி யோகிக்கல் லால்தெரி யாதே" - திருமந்திரம் 607.
‡ மறை - இரகசியம். X அளவும் - அளவிட் டறியும்.
O "அகர முதலான 51 அக்ஷரங்கள்" -
-பாடல் 966-பக்கம் 800 கீழ்க்குறிப்பு-திருப்புகழ் 1127-ம் பார்க்க.

(தொடர்ச்சி 861 ஆம் பக்கம் பார்க்க)

# இந்தம்பலம்

## 989.

(அமல) மாசு இல்லாததாய், (கமல உரு) (ஆறாதாரங்களுக்கு அப்பால் உள்ளதாய் 1008 இதழோடு கூடிய) - குருகமல உருவிடத்தே (பிராணவாயுவைச் செலுத்த அப்போது உண்டாகும்) சங்கம் தொனித்த மறை - சங்க நாதம் - சங்கஒலி உண்டாகும் (மறை) ரகசியமாய், அருமையாய், மேலானதான ஞானவெளி எங்கும் பொலிவுறும் செயலை அளவிட்டறியும் (அசலம் அது கண்டு) நிலை பெற்றதான தன்மையை உணர்ந்தும், அவ் விடத்தில் எவராலும் தனது (உளவு) உண்மைத் தன்மையை அறிய முடியாததாய்-

அகாராதி க்ஷகாராந்தம் உருக் கொண்டுள்ள ஐம்பத்தொரு அக்ஷரங்களுக்கும், சகல லோகங்களுக்கும், நதிகளுக்கும், அண்டங்களுக்கும் முதன்மை பெற்றதாய், செந்நிறச் சுத்த சோதிப் பேரொளியை எல்லா இடங்களிலும் வீசிப் பொருந்தியதாய், முதலும் நடுவுமாய்-

(கமல துரிய மதில்) துரியம் - யோகியர் தன் மயமாய் நிற்கும் உயர் நிலையாம் பிரமரந்திர கமலத்தில் சந்திரகாந்தி பரந்துள்ளதும், பொன்னொளி வீசும் தன்மை கொண்டதும், அழகிய ஸ்படிக நிறமான சுத்த வாயிலைக் கொண்ட ஆகாய வெளியில் பரவெளியில்,-சுழிமுனை நாடியின் உச்சியில் (மெய்,வாய்,கண்,மூக்கு, செவி என்னும்)பஞ்சேந்திரியங்களும் இன்பம் பெறக்கூடியதாய் (விளங்கும்) அமுதம்போல இனிக்கும் சிவயோக நிலையை

உனது கருணையால் அறியும்படியான வழியை (நான்) அடையவும், 'பார்வதியின் குமரனே! குமர குருவே' (என்றென்று) என்று பலமுறை கூற - முதிர்ந்த கனிந்த பத்தி நிலை வர - அதற்கு வேண்டிய பால்ய வலிமையைத் தந்து உன் திருவடியில் என்னைச் சேர்த்தருளுவாயாக.

---

** படிக் கதவம் - படிகக் கதவு. " இந்து ஒளிர் சோதிவிண் படிகம்" - பாடல் 766 அடி 2.

†† அஞ்சும் - பஞ்சேந்திரியங்களும்.

‡‡ சிவயோகத்தின் நிலை - பாடல் 357-அடி 1-3 பார்க்க.

திமிலை பல*முருடு திந்திந் திமித்திமித
டுமுட டுமுடுமுட டுண்டுண் டுமுட்டுமுட
திகுட திகுடதிகு திந்திந் திகுர்த்திகுர்த திகுதீதோ-
செகண செகணசெக செஞ்செஞ் செகக்கணென
அகில முரகன்முடி யண்டம் பிளக்கவெகு
திமிர்த குலவிருது சங்கந் தொனித்தசுரர் களமீதே;
அமரர் குழுமிமலர் கொண்டங் கிறைத்தருள
† அரிய குருகுகொடி யெங்குந் தழைத்தருள
அரியொ டயன் முனிவ ரண்டம் பிழைத்தருள
விடும்வேலா-
அரியன் மகள் தனமொ டங்கம் புதைக்க முக
அழகு புயமொடணை யின்பங் களித்துமகிழ்
அரிய மயிலயில்கொ டிந்தும் பலத்தின் மகிழ்
பெருமாளே.(1)

## 2. ஏழுகரை நாடு.

## 990. பேரின்பப் பொருளைப் பெற

தனதன தாத்தன தனதன தாத்தன
தனதன தாத்தன தந்ததான

‡ விரகற நோக்கியு முருகியும் வாழ்த்தியும்
Xவிழிபுனல் தேக்கிட அன்புமேன்மேல்-

---

* முருடு - ஒரு வாத்தியம்.

† 'கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி வாழிய பெரிதென் றேத்தி', 'வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ', 'மாண்டலைக் கொடியொடு மண்ணி' - திருமுருகாற்-38, 219, 227.

‡ விரகு - தந்திரம் - வஞ்சனை - துரியோதனன் பாண்டவர்கள் இருக்க அரக்குமாளிகை வகுத்தது-

'மெழுகினால் நமக்காலயம் வகுத்ததும் விரகே'

-வில்லிபாரதம் - வாரணாவ *119.*

X "கண்ணில் ஆனந்த வெள்ளம் மெய்யெலாம் பொழிய"

"கண்ணும் பொழி மழை யொழியாதே"

"கண்ணி லானந்த அருவி நீர் சொரிய"

-பெரிய புரா-சம்பந்-*865;* திருநாவு-*167;* சுந்தரர்-தடுத்தாட் *107.*

(தொடர்ச்சி *863* ஆம் பக்கம் பார்க்க.)

*(திமிலை)* பறையும், *(பல முருடு)* பல மத்தள வகைகளும் *திந்திந் திமித்திமித ...திந்திந் திகுர் த்திகுர்த திகுதீதோ*

செகண செகண செக செஞ்செஞ் செகக்கண் என்று ஒலிக்கவும், பிரபஞ்சம் எல்லாமும், ஆதிசேடன் முடிகளும், அண்டங்களும் பிளந்து போம்படி மிக்க *(திமிர்தம்)* பேரொலியை எழுப்பும் *(கூட்டமான)* பல வெற்றிச் சின்னங்களைச் சங்கங்கள் *(தொனித்து)* ஒலி எழுப்பவும், அசுரர்களொடு பொருத போர்க்களத்திலே-

தேவர்கள் ஒன்றுகூடி *(பொன்)* மலர்கள் கொண்டு அங்கே இறைத்தருள *(பூமாரி பொழிய)*, அருமைவாய்ந்த கோழிப்பறவையின் கொடி எங்கும் பரந்து விளங்கத், திருமாலும், பிரமனும், முநிவர்களும். அண்டங்களும் பிழைத்து உய்யச் செலுத்தின வேலாயுதனே *(வேலைச் செலுத்தினவனே)!*

திருமாலின் புதல்வி வள்ளியின் கொங்கைகளிலே உனது உடல் புதையும்படிக் கூடித்,திருமுக அழகுடன் திருப்புயங்களால் அவளை அணைத்து இன்பச் சுகத்தில் திளைத்து மகிழ்கின்ற பெருமாளே! அருமை வாய்ந்த மயிலுடனும் வேலாயுதத்துடனும் **இந்தம்பலம்** என்னும் தலத்தில் மகிழ்கின்ற பெருமாளே!

*(உன் பதத்தில் எனை அருள்வாயே)*

## 2. எழுகரை நாடு

## 990.

*(**வீ**ரகு)* தந்திரம் இன்றி உண்மை நிலையுடன் உன்னைக் கருதியும், *(உன்னை நினைந்து)* உருகியும், *(உன் திருநாமங்களைக் கூறி உன்னை)* வாழ்த்தியும், கண்களில் நீர் நிறைந்து வழிய, அன்பு மேலும் மேலும்

---

*(862-ஆம் பக்கத் தொடர்ச்சி)*

"என்னை யாண்டாய்க்கு . உள்ளந்தாள் நின்று உச்சியளவும் நெஞ்சாய் உருகாதால் உடம்பெல்லாம் கண்ணாய் வெள்ளந்தான் பாயாதால்" - திருவாசகம் - சதகம் 21.

மிகவு*மி ராப்பகல் பிறிதுப ராக்கற
† விழைவுகு ராப்புனை யுங்குமார;

முருக‡ஷ டாக்ஷர சரவண கார்த்திகை
முலைநுகர் பார்த்திப என்றுபாடி-
மொழிகுழ றாத்தொழு Xதழுதழு தாட்பட
Oமுழுதும லாப்பொருள் தந்திடாயோ;

**பரகதி காட்டிய விரகசி லோச்சய
பரமப ராக்ரம ††சம்பராரி-
படவிழி யாற்பொரு பசுபதி போற்றிய
பகவதி பார்ப்பதி தந்தவாழ்வே;

---

* "இரவும் பகலும் பிரியாது வணங்குவன் எப்பொழுதும்"
-அப்பர் 4-1-1.

† குரவு - முருகருக்கு உகந்த மலர் திருவிடைக்கழியிலும் பழநியிலும் குராவடி வேலர் விளங்குவர்..."திருவிடைக்கழியில் திருக்குரா நீழற் கீழ்நின்ற வேலுலாந் தடக்கை வேந்தன் என் சேந்தன்" - திருவிசைப்பா-7-1. "அராப்புனை வேணியன் சேயருள் வேண்டும் அவிழ்ந்த அன்பால், குராப் புனை தண்டையந் தாள் தொழல் வேண்டும்" - கந்தர் அலங்-74.

‡ சடாக்ஷரம் - ஆறெழுத்து - பாடல் 326, 327 (பக்கம் 310, 315) கீழ்க்குறிப்புக்களைப் பார்க்க. (பாடல் 191-ம் பார்க்க).

ஆறெழுத்தில் ஒரு எழுத்து மோக்ஷத்தைத் தரும்; ஒரு எழுத்து வஜ்ர தேகத்தைத் தரும்; ஒரு எழுத்து செல்வத்தைத் தரும்; ஒரு எழுத்து திருவருளைத் தரும்; ஒரு எழுத்து ஞானத்தைத் தரும்; ஒரு எழுத்து திருவடியைத் துதிக்கும் அறிவைத் தரும் - என்பர்.

"கதிகாட்டும் ஓரெழுத் தோரெழுத் தேவஜ்ர காயந்தரும்
நிதிகாட்டும் ஓரெழுத் தோரெழுத் தேயுள் நிரப்புமருள்
மதிகாட்டும் ஓரெழுத் தோரெழுத் தேயென்னுள் வைத்த பொற்றாள்.
துதிகாட்டும் மே; குக! நின்னா றெழுத்துள்ள சூத்திரமே"
-ஆறெழுத்தந்தாதி.

X அழுதழுது ஆட்பட்டால் தான் இறைவனை அடைதல் கூடும்-
"அழுதால் உன்னைப் பெறலாமே"
- திருவாசகம் - சதகம் 90.

O முழுதும் அல்லாப் பொருள் - உலகப்பொருள் யாவற்றையுங் கடந்த பொருள்.

(தொடர்ச்சி 865 ஆம் பக்கம் பார்க்க)

பெருகவும், இரவும் பகலும் உன்னை நினைக்கும் நினைவு தவிர வேறு சிந்தனைகள் அற்றுஒழிய, '(உன்) விருப்புக்குரிய குராமலரை அணியும் குமர மூர்த்தியே!

முருகனே! சடாக்ஷ மூர்த்தியே (ஆறெழுத்தண்ணலே)! சரவண (பவனே)! கார்த்திகை மாதர்களின் கொங்கை (முலைப்பாலை)ப் பருகின அரசே!' (என்றெல்லாம்) பாடி

மொழிகள் குழறும்படி (உன்னைத்) துதிசெய்து வணங்கி, அழுது அழுது - ஓயாமல் அழுது - நான் உனக்கு ஆளாக - (எதுவும் அல்லாததான பொருளை) உலகப் பொருள் யாவற்றையும் கடந்த (ஞானப்) பொருளை - இது என்று சுட்டிக்காட்ட இயலாத அந்தப் பொருளை - அடியேனுக்குத் தரமாட்டாயா! (தந்தருளுக என்று வேண்டியதாகும்);

(உலகோர்க்குத் தேவார மூலமாய், (அல்லது அடியேனுக்கு உபதேச மூலமாய்)ப்) பரகதியை - மோக்ஷ வீட்டைக் காட்டின (விரக) சாமர்த்தியசாலியே! (சிலோச்சய) மலையரசே! மகா பராக்ரமசாலியே! (சம்பராரி) மன்மதன்

அழிய, (நெற்றிக்)கண் கொண்டு அவனை எதிர்த்தழித்த (பசுபதி) சிவபிரான் போற்றித் துதித்த (வாழ்வே)! பகவதியாம் பார்வதி ஈன்றருளிய (வாழ்வே) செல்வமே!

---

(864 ஆம் பக்கத் தொடர்ச்சி)

முழுதுமலாப் பொருள்:

"வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரியன்று சரீரியன்றே" -கந்தரலங்-9.
"உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே" - கந். அநுபூதி 13.
"மண்ணில்லை விண்ணல்லை வலயமல்லை, மலையல்லை கடலல்லை
வாயுவல்லை, எண்ணல்லை, எழுத்தல்லை எரியும் அல்லை
யிரவல்லை, பகலல்லை யாவும் அல்லை" - அப்பர் 6-45-9.

** பரகதி காட்டினது: இதை அருணகிரியாரின் வரலாற்றுக் குறிப்பாகவும் கொள்ளலாம்.

†† சம்பராரி - மன்மதன் - பாடல் 888-பக்கம் 594 கீழ்க்குறிப்பு.
மன்மதனைச் சிவபிரான் எரித்தது - பாடல் 399 பக்கம் 510.
சிவபிரான் கந்தவேளைப் போற்றினது-உபதேசம் பெற்றபோது-
-பாடல் 982-பக்கம் 840 கீழ்க்குறிப்பு.

இரைகடல் தீப்பட நிசிசரர் கூப்பிட
*எழுகிரி யார்ப்பெழ வென்றவேலா-
† இமையவர் நாட்டினில் நிறைகுடி யேற்றிய
‡ எழுகரை நாட்டவர் தம்பிரானே. (1)

## 3. ஒடுக்கத்துச் செறிவாய்.

---

### 991. நல்ல புத்தியைப் பெற

தனத்தத் தத்தன தாத்த தத்தன
தனத்தத் தத்தன தாத்த தத்தன
தனத்தத் தத்தன தாத்த தத்தன தனதான

வழக்குச் சொற்பயில் வாற்ச ளப்படு
Xமருத்துப் பச்சிலை தீற்று மட்டைகள்
வளைத்துச் Oசித்தச **சாத்தி ரக்கள வதனாலே-
மனத்துக் கற்களை நீற்று ருக்கிகள்
சுகித்துத் தெட்டிக ளூர்த்து திப்பரை
மருட்டிக் குத்திர வார்த்தை செப்பிகள் மதியாதே:
எழுத்தைக் கட்டிய ணாப்பி நட்பொடு
சிரித்துப் பற்கறை காட்டி கைப்பொருள்
††கழற்றிக் கற்புகர் மாற்று ரைப்பது கரிசாணி-

---

* எழுகிரியைச் சாடினது
-பாடல் 257-பக்கம் 140 கீழ்க்குறிப்பு.

† குடி ஏற்றினது - சூரசம்மாரம் ஆனபின்பு முருகவேள் அழிபட்ட பொன்னுலகை முன்போல ஆக்கும்படித் தெய்வத் தச்சனிடம் கூற, அவனும் பொன்னுலகைப் பொன்னுலகாக்க, அவர் இந்திரனுக்கு முடிசூட்டி மகிழ்வித்தார் - என்பது கந்தபுராணம்-

"இந்திரன் அனைய காலை எம்பிரான் முன்னர் ஏகி
வந்தனை புரிந்து போற்றி வளமலி துறக்க நாடு
முந்துள அரசுஞ் சீரும் முழுதொருங் களித்தி எந்தாய்
உய்ந்தனன் இதன்மேல் உண்டோ ஊதியம் ஒருவர்க்
கென்றான்" - கந்தபுரா 5-3-42.

‡ எழுகரை நாடு கொங்கு மண்டலத்தைச் சேர்ந்தது. கொங்குமண்டல சதகம் - பக்கம் 61.

எழுகரைநாடு என்று ஒரு தனித்தலமும் குடகு நாட்டில் உளதென்பர்.

(தொடர்ச்சி 867 ஆம் பக்கம் பார்க்க)

ஒலிக்கின்ற கடல் எரிபடவும், அசுரர்கள் அலறிக் கூச்சலிடவும், எழுகிரிகளும் பேரொலியிட்டுக் கூச்சலிடவும் ஜெயித்த வேலனே!

தேவர்களின் உலகில் (பொன்னுலகில்) தேவர்கள் யாவரையும் நிறைவுற்ற குடியாக அமரும்படி குடியேற்றின தம்பிரானே! எழுகரை நாடு என்னும் தலத்தவர் தம் தம்பிரானே! (முழுது மலாப் பொருள் தந்திடாயோ)

## 3. ஒடுக்கத்துச் செறிவாய்

## 991.

**வ**ழக்காடும் சொற்களிற் பயின்றுள்ளதால், (சளப்படு) வஞ்சனைக் கிடமான மருந்துப் பச்சிலைகளைத் (தீற்றும்) ஊட்டுகின்ற - உண்ண வைக்கின்ற - (மட்டைகள்) பயனிலிகள், (ஆடவர்களைத் தமது வலையில்) இழுத்து வளைத்து மன்மத சாத்திரத்தில் - கொக்கோக சாத்திரத்திற் கூறியுள்ள (களவதனாலே) வஞ்சன வழியாலே-

(தம்மிடம் வந்தவர்களின்) கல் போன்ற மனத்தையும் பொடிபடுத்தி உருக்க வல்லவர்கள், சுகத்தையடைந்தே (தெட்டிகள்) வஞ்சிப்பவர்கள், ஊரில் தம்மைத் துதித்துப் போற்றுபவர்களை (மருட்டி) மயக்கி, (குத்திர வார்த்தை) வஞ்சக வார்த்தைகளைப் பேசுபவர்கள், மதிப்புவைக்காமலே-

கழுத்தைக் கட்டி (அணாப்பி) ஏமாற்றி, நண்பு காட்டிச் சிரித்து, பல்லில் (வெற்றிலை உண்ட) (கறை) நிறத்தைக் காட்டிக், கையில் உண்டான பொருளைப் பிடுங்கிக், (கல்) ரத்னக்கல் (கிடைத்தால்) அதன் (புகர்) - நிறம், குற்றம் முதலியனவற்றையும். (மாற்று) தங்கம் (கிடைத்தால்) (உரைப்பு அது) அதன் மாற்றறிய உரைக்கை, (கரிசு) குற்றம் இவை தமை அறிய (ஆணி) உரையாணி (பொன் உரைக்கும் கல்) கொண்டும்

---

(தொடர்ச்சி) X மருந்துப் பச்சிலை - பாட்டு 230-பக்கம் 74 குறிப்பு.

O சித்தசன் (மனத்தில் தோன்றுபவன்) மன்மதன்.

** "சாத்திரக் கடல் வழியாலே" - என்றும் பாடம்.

†† 'கழற்றிக் கைப்புக மாற்றி முப்பது கரிசாணி' என்றும் பாடம்.

கணக்கிட் டுப்பொழு தேற்றி வைத்தொரு
பிணக்கிட் டுச்சிலு காக்கு பட்டிகள்
கலைக்குட் புக்கிடு **பாழ்த்த புத்தியை**
**யொழியேனோ;**

*அழற்கட் டப்பறை மோட்ட ரக்கரை
நெருக்கிப் பொட்டெழ † நூக்கி யக்கணம்
அழித்திட் டுக்குற வாட்டி பொற்றன
கிரிதோய்வாய்-

‡ அகப்பட் டுத்தமிழ் தேர்த்த வித்தகர்
சமத்துக் கட்டியி லாத்த முற்றவன்
அலைக்குட் கட்செவி மேற்ப டுக்கையி
லுறைமாயன்;

---

* 'அழுக்குப் பப்பர' என்றும் பாடம்.

† 'நோக்கி' என்றும் பாடம். (பாடல் 263-பக்கம் 155 குறிப்பு †)

‡ தமிழ் வித்தகர் சமத்தில் ஆத்தம் உற்றவன் திருமால் என்பது அவர் திருமழிசை ஆழ்வாரின் சொற்படி நடந்த வரலாறு:- பாடல் 3-பக்கம் 26-கீழ்க்குறிப்பு-இதன் விவரம்:-

காஞ்சியில் திருமழிசை ஆழ்வாரிடம் கணிகண்ணன் என்பவர் பணிவிடை செய்து வந்தனர். ஒரு கிழவி ஆழ்வார் இருந்த இடத்தில் அலகிடுதல், மெழுகுதல் ஆதிய வேலை செய்து வந்தாள். ஆழ்வார் அனுக்கிரகத்தால் அவள் முதுமை நீங்கி அழகிய இளமை வாய்ந்த சுந்தரியானாள். இவ் வரலாற்றை அறிந்த அரசன் அவளைத் தன் பட்டமகிஷி ஆக்கிக்கொண்டு தானும் இளமை அடைவதற்கு வழி யாதென்று அவளை வினவ, அவள் 'ஆழ்வாருக்கு அந்தரங்க நண்பர் கணிகண்ணர் என்பவர். அவர் இங்கு பிக்ஷைக்கு வருவார். அவர் மூலமாகக் காரியத்தை நிறைவேற்றலாம்' என்றனள். அரசன் கணிகண்ணரைக் கண்டு தனது எண்ணத்தை நிறைவேற்றி வைக்கும்படி வேண்ட, அவர் அரசன் வேண்டுகோளுக்கு இணங்கவில்லை. கணிகண்ணர் திருவாக்கால் தன்னைப் பாடப்பெற்றால் நன்மை பிறக்கும் என்றெண்ணித் தன்மீது கவிபாட வேண்டும் என்று அரசன் அவரை வேண்ட 'அவர் நான் நரஸ்துதி செய்ய மாட்டேன்-நாராயண ஸ்தோத்திரம் தான் சொல்வேன்' என்று கூறி-

'ஆடவர்கள் எங்ஙன் அகன்றொழிவார் வெஃகாவும்
பாடகமும் ஊரகமும் பஞ்சரமா - நீடியமால்
நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ
மன்றார் பொழிற் கச்சி மாண்பு' - என்று பாட அரசன் சினந்து 'நம்மைப் பாடு என்றால் நகரத்தைப் பாடினாய் - நீ இவ்

(தொடர்ச்சி 869-ஆம் பக்கம் பார்க்க;

*கணக்குப் பார்த்துக் காலம் கடத்தி வைத்துப் (பொழுது போக்கி)-(அதன் காரணமாக) ஒரு பிணக்கு இட்டு (சண்டையிட்டுச்), சிலகு ஆக்கு - குழப்பம் உண்டு பண்ணும் (பட்டிகள்) வியபிசாரிகளின் (கலைக்குள்) புணர்ச்சிக்கு உரிய கரணங்களுள் நுழைகின்ற பாழான புத்தியை விலக்க-மாட்டேனோ!*

*(அழல் கண்) நெருப்புப் போன்ற கண்ணையும். (தப்பறை) பொய்யையும் சூதையும் கொண்ட (மோட்டு) மடமை கொண்ட அசுரர்களை (நெருக்கி) நசுக்கி, அவர்கள் (பொட்டெழ) பொடியாம்படி, (நூக்கி) முறித்துத் தள்ளி, அந்த க்ஷணமே அவர்களை அழித்துப், (பின்னர்) குறப்பெண் வள்ளியின் அழகிய கொங்கை மலையில் (தோய்ந்தவனே) அணைந்தவனே!*

*(தமிழ் தேர்ந்த வித்தகர் அகப்பட்டு (அல்லது - தேர்ந்த வித்தகர் தமிழ் அகப்பட்டு) - தமிழில் வல்ல அறிஞர்களிடத்தே (அகப்பட்டு) வசப்பட்டு - அல்லது சிறந்த அறிவாளிகளின் தமிழிலே வசப்பட்டு, (அப் புலவர்களின்) (சமத்துக் கட்டியில்) சாமர்த்தியமான இறுகிய பொருளில் (ஆத்தம்) இஷ்டம் கொண்டவன், கடலிலே (ஆதிசேடன் என்னும்) பாம்பின்மேற் படுக்கை கொண்டிருக்கும் (மாயோன்) திருமாலாம் (சிவமுனிவர்க்கு)*

---

*(868 ஆம் பக்கத் தொடர்ச்சி)*

வூரை விட்டுப் போ' என அவரை வெருட்ட, கணிகண்ணர் ஆழ்வாரிடம் இந் நிகழ்ச்சியைக் கூற - ஆழ்வார் 'நாமும் உம்முடன் வருவோம் - பெருமாளையும் அழைத்துச் செல்வோம்' என்று கூறி-

'கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா - துணிவொன்றிச்
செந்நாப் புலவன்யான் செல்கின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய் சுருட்டிக் கொள்' - என்று பாடினர்.

பெருமாளும் அவர் சொல்லுக் கிணங்க, மூவரும் அவ்வூரை விட்டு விலகப், பல திருக் கோயில்களில் இருந்த பெருமான்களும் ஊரை விட்டு விலகினார்கள்; காஞ்சி இருளடைந்தது. அரசன் நடு நடுங்கிக் கணிகண்ணரிடம் ஓடி வணங்கித் தன் பிழையைப் பொறுத்தருள வேண்டுமெனப் பணிய, அவரும் ஆழ்வாரிடம் இதை விண்ணப்பிக்க, ஆழ்வார்-

*(தொடர்ச்சி 870 ஆம் பக்கம் பார்க்க)*

உழைக்கட் பொற்கொடி மாக்கு லக்குயில்
விருப்புற் றுப்புணர் தோட்க்ரு பைக்கடல்
*உறிக்குட் கைத்தல நீட்டு மச்சுதன் மருகோனே.
† உரைக்கச் செட்டிய னாய்ப்பன் முத்தமிழ்
மதித்திட் டுச்செறி ‡ நாற்க விப்பணர்
**ஒடுக்கத் துச்செறி வாய்த்த லத்துறை**
பெருமாளே.(1)

## 4. காமத்தூர்.

## 992. *(அகப் பொருள் - நற்றாயிரங்கல்)*

தானத் தானத் தானத் தானத்
தானத் தானத் தனதானா

ஆகத் தேதப் பாமற் சேரிக்
கார்கைத் தேறற் கணையாலே.
Xஆலப் பாலைப் போலக் கோலத்
தாயக் காயப் பிறையாலே;

---

*(869 ஆம் பக்கத் தொடர்ச்சி)*

'கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டும் - துணிவுடைய
செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்படுத்துக் கோள்' - என்று முன்பு பாடிய பாட்டை மாற்றிப்பாட மூவரும் முன்போல காஞ்சியிற் சேர்ந்து காஞ்சிக்குப் பொலிவு உண்டாக்கினர் - என்பது வரலாறு. இங்ஙனம் ஆழ்வார் சொன்னபடி பெருமாள் செய்ததால் பெருமாளுக்குச் 'சொன்ன வண்ணம் செய்த பெருமாள்' என்று தமிழிலும், 'யதோக்தகாரீ' என்று வடமொழியிலும் பெயர் ஏற்பட்டது. இம் மூவரும் ஒரு இரவு தங்கியிருந்த ஊருக்கு 'ஓரிரவிருக்கை' எனப் பெயர் வந்தது. இது 'ஓரிகரை' என மருவி வழங்கப்படுகிறது.

---

* 'உறியை முற்றத்து உருட்டிநின் றாடுவார்
நறுநெய் பால்தயிர் நன்றாகத் தூவுவார்' - பெரியாழ் 1-1-4.

† செட்டியாய்த் தமிழ் மதித்தது:பாடல் 350-பக்கம் 378-கீழ்க்குறிப்பு† பார்க்க.

‡ முருகவேள் நாற்கவிப் புலவர் - கடவுட் புலவர் - என்பது -
'வாமன முனிக்கொரு தமிழ்த்ரயமும் அபரிமிதமாக
விவரித்த கடவுட் புலவன்' - பூதவேதாள வகுப்பு.

(தொடர்ச்சி 871 ஆம் பக்கம் பார்க்க.)

(உழைக்கண்)இலக்குமியாம் மானின் இடத்தேபிறந்த (பொற்கொடி பொன் கொடி போன்ற அழகு சிறந்த குயிலனைய வள்ளிமீது காதல்கொண்டு அவளை அணைந்த தோளையுடைய கருணைக் கடலே! (வெண்ணெய், தயிர் வைத்திருந்த) உறிக்குள்ளே கையை நீட்டின அச்சுதன் - திருமாலின் மருகனே! (அல்லது, கட்செவிப் படுக்கையில் உறை மாயன், உழைக்கட் பொற்கொடி - மானுருவில் வந்த பொன்கொடி போன்றவளும், அழகு சிறந்த குயில் போன்றளுமான இலக்குமியின் தோளை அணைந்த கருணைக்கடல், உறிக்குள் கையை நீட்டின அச்சுதன் - ஆகிய திருமாலின் மருகனே!)

உண்மைப் பொருளைத் தெரிவிக்கச் (செட்டியனாய்) ருத்ர ஜன்மர் என்னும் பெயர் கொண்ட செட்டிப் பிள்ளையாய்ப், பல சங்கப் புலவர்கள் கூறிய முத்தமிழ்ப் பொருள்களை ஆய்ந்து மதித்து நிறைர்த ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனப்படும் நால்வகைக் கவிகளிலும் வல்ல (கவிகளுடன்) - புலவர்களுடன் அணைந்த - சங்கப் புலவர்களுடன் கூடியிருந்த - பெருமாளே! அல்லது நால்வகைக் கவிகளும் கூடிய - நால்வகைக் கவிகளிலும் வல்ல பெருமாளே! **ஒடுக்கத்துச்செறிவாய்** என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாளே!

(பாழ்த்த புத்தியை ஒழியேனோ)

## 4. காமத்தூர்.

## 992.

(**ஆ**கத்தே) உடலிலே (தப்பாமல்) குறி தவறாது (சேர்) வந்து படுகின்ற (இக்கு ஆர் கை) கை ஆர் இக்கு - (மன்மதனது) கையில் உள்ள கரும்பு வில்லினின்றும் புறப்படும் (தேறல்) மது நிறைந்த (மலர்ப்) பாணங்களாலும்-

(ஆலம்) விஷம் கொண்டதாய், (பாலைப்போல) பால் போலும் வெண்ணிறத்ததாய், (கோலத்து ஆய) அழகு வாய்ந்ததான (காயம்) உடலை உடைய நிலவாலும்-

---

'பலர்புகழ் நன்மொழிப் புலவரேறே' - திருமுருகாற்றுப்படை.

'பெருந்தமிழ் விரித்த அருந்தமிழ்ப் புலவன்' - கல்லாடம்.

'கொழுந்தமிழ் உணரு முதற் புலமைக் குக
கொட்டுக சப்பாணி' - திருவிடைக்கழி பிள்ளைத் தமிழ்.

போகத் தேசற் றேதற் பாயற்
பூவிற் றீயிற் கருகாதே-

போதக் காதற் போகத் தாளைப்
பூரித் தூரப் புணராயே;

தோகைக் கேயுற் றேறித் தோயச்
சூர்கெட் டோடப் பொரும்வேலா-

*சோதிக் காலைப் போதக் கூவத்
தூவற் சேவற் கொடியோனே;

பாகொத் தேசொற் பாகத் தாளைப்
† பாரித் தார்நற் குமரேசா-

பாரிற் காமத் தூரிற் சீலப்
பாலத் தேவப் பெருமாளே.(1)

## 5. முள்வாய்.

சித்தூரிலிருந்து பலமனேரி போகும் வழியில் ஏழாவது மைலில் இவ்வூர் உளதென்பர்.

## 993. இறைவன் உளம்புக

தன்னா தனந்த தந்த தன்னா தனந்த தந்த
தன்னா தனந்த தந்த தனதான

மின்னார் பயந்த மைந்தர் தன்னா டினங்கு விந்து
வெவ்வே றுழன்று ழன்று மொழிகூற-

* சோதி - சூரியன். 'புணரி யெழுஞ் சூரியனைப் புலரிக் காலைச்...சிறையடித்துத் தினந் தினமும் அழைத்துலவுஞ் சேவலே' -சேவற்பத்து.

† பாரிப்பு - விருப்பம்.

(போகத்து) புணர்ச்சி இன்பத்தில் (ஏசற்றே) ஆசைப்பட்டே (அல்லது) புணர்ச்சி வேண்டி வருத்தமுற்று அதனால் (தன் பாயல்) (தன்) படுக்கையில். (தீயில்) பூவில் நெருப்புப்பட்ட பூப்போலக் கருகிப் போகாமல்

(போத) பிழைத்துப் போம்படி (காதல்) ஆசை வைத்துள்ள (போகத் - தாளை) இன்பத்துக்கு இடமாம் (உனது) தாளில் திருவடியில் - பூரித்து ஆர - (என்மகள்) உள்ளத்து மகிழ்ச்சி நிறைந்து (ஆர) திருப்தி அடைய (அவளைச்) சேர்த்தருள மாட்டாயோ! (அல்லது - போதக் காதல் - (போதம்) நல்ல ஞானத்துடன் கொண்ட காதலை உடைய (போகத்தாளை) - இன்ப அனுபவத்துக்கு உரிய இவளை (என் மகளை) பூரித்து - உள்ளம் பூரித்து - உள்ள மகிழ்ச்சியுடன் ஆர -நன்கு கூடியருளமாட்டாயோ - நன்கு கூடி யருளுக - என்றபடி)

தோகைக்கே உற்று ஏறி--(இந்திரனாகிய) மயில் மேற் பொருந்தி ஏறித், (தோயம்) கடல் நீரில் நின்ற சூரன் அழிந்து போம்படிப் போர் செய்த வேலனே!

(சோதி) சூரியனைக் காலையில் (போத) வரும்படி கூவுகின்றதும் அத் (தூவல்) அந்த இறகினை உடையதுமான கோழிக் கொடி கொண்டவனே!

(பாகு) சர்க்கரைக்கு ஒப்பான இனிமை கொண்ட சொற்களின் (பாகத்தாளை) பக்குவம் உடைய வள்ளியைப் (பாரித்து ஆர் நற் குமரேசா) விரும்பி உள்ளம் பூரித்த நல்ல குமரேசனே!

இப் பூமியில் **காமத்தூர்** என்னும் தலத்தில் (சீலம்) தூய்மை கொண்ட குழந்தைப் பெருமாளே! தெய்வப் பெருமாளே! (ஆரப் புணராயே)

## 5. முள்வாய்

## 993.

(**உ**யிர் போகும் சமயத்தில்) (வீட்டிலுள்ள) மாதர்கள், பெற்ற மக்கள், (நான்) இருக்கும் (நாடு) ஊரார், (இனம்) சுற்றத்தினர் (இவர்கள் யாவரும்) கும்புகூடியும், தனித் தனியாகவும், அங்கும் இங்கும் சென்று சென்று, (என்னைப் பற்றிப்) பேச்சுக்கள் பேச-

**விண்மேல் நமன்க ரந்து மண்மே *லுடம்பொ ருங்க**
**மென்னா ளறிந்த டைந்து உயிர்போமுன்;**
**†பொன்னார் சதங்கை தண்டை முந்நூல் கடம்ப ணிந்து**
**‡பொய்யார் மனங்கள் தங்கு மதுபோலப்-**
**பொல்லே னிறைஞ்சி ரந்த சொன்னீ தெரிந்த முங்கு**
**Xபுன்னா யுளுங்க வின்று புகுவாயே;**
**Oபன்னா ளிறைஞ்சு மன்பர் **பொன்னா டுறங்கை தந்து**
**பன்னா கணைந்து சங்க முறவாயிற்-**
**பன்னூல் முழங்க லென்று ††விண்ணோர் மயங்க நின்று**
**பண்ணூது கின்ற கொண்டல் மருகோனே;**
**முன்னாய் மதன்க ரும்பு வின்னேர் தடந்தெ ரிந்து**
**முன்னோர் பொருங்கை யென்று முனையாட-**
**மொய்வார் நிமிர்ந்த கொங்கை மெய்ம்மாதர் வந்தி றைஞ்சு**
**முள்வாய் விளங்க நின்ற பெருமாளே.(1)**

---

* 'உடம்பு ஒருங்கு அ மெல் நாள்' எனப் பிரிக்க; ஒருங்கல் - அடங்கல்.

† முருகவேளின் அணிகலன்கள்
-பாடல் 1277-அடிகள் 5-7பார்க்க.

‡ 'மெய்யராகிப் பொய்யை நீக்கி வேதனையைத் துறந்து
செய்யரானார் சிந்தையானே' - சம்பந்தர் 1-50-4.

X 'புல்நாய்' - 'நாயிற் கடையாம் நாயேனை'
-திருவாசகம் - குழைத்த - 8.

கவின்று - 'கிளைக் கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு'
-(கவின்று - அழகு பெற்று) - திருமுருகா - 29.

O பன்னாள் (தேவர்கோன் - இந்திரன்) இறைஞ்சினது:
'நிமலனை உன்னிப் பன்னாள் நெடுந்தவம் உழத்த லோடும்'
'நொந்தனை அளப்பில் காலம் நோற்றனை'
-கந்தபுரா. 1-3-32, 33.

**'பொன்னாடு உற அம் கை தந்து' எனப்பிரிக்க.

†† தேவர்கள் மயங்கச் சங்க நாதம் செய்தது-
"அரங்கர் சங்கோசையில் அண்டமெல்லாம்
வெருட்கொண் டிடர்ப்பட மோகித்து வீழ்ந்தனர்"

இவ் வரலாற்றைத் திருப்புகழ் 889-பக்கம் 596-599 கீழ்க்குறிப்பிற் பார்க்க.

மேலே - ஆகாயப் பரப்பிலிருந்து யமன் (சுரந்து) கண்ணுக்குத் தெரியாமல் மறைவாக, மண்மேல் உள்ள இந்த உடம்பினின்றும் (உயிர்) அடங்கி நீங்கவேண்டிய அந்த மெலிவு நாளைத் தெரிந்துவர, என் உயிர்போவதற்கு முன்-

பொன்மயமான சதங்கை, தண்டை, முந்நூல் (முப்புரி நூல் - பூணூல்), கடம்பு இவைகளை அணிந்து, (பொய்யார்) பொய்யே பேசாத - மெய்ம்மை யாளர்களின் மனங்களில் நீ வாசம் செய்து (அவர்களுக்கு உதவுவது) போல-

இந்தப் பொல்லாதவனாகிய நான் வணங்கி உன்னை வேண்டுகின்ற சொற்களையும் நீ (பொருட்படுத்தித்) தெரிந்துகொண்டு, (அழுங்கு) மனம் வருந்தும் இந்தப் (புல் நாய் உள்ளும்) இழிந்த நாயாகிய (அடியேன்) உள்ளத்திலும் (கவின்று) அழகுபெறப் புகுந்தருளுவாயாக.

பல நாள்களாக வணங்கி வரும் அன்பர்களாகிய (தேவர்கள்) தமது (பொன் நாடு) பொன்னுலகத்தை (உற) மீண்டும் அடைய - அங்கை தந்து - (அவர்கள் அழகிய கைவசம்) கொடுத்து உதவி செய்த, பன்னாகணைந்து - பன்னகம் பாம்பணையில் (அணைந்து ) (படுக்கை கொண்டு), சங்கம் - (பாஞ்ச சன்னியம் என்னும்) சங்கை (உறவாயில் - வாயில் உற) வாயில் வைத்துப்-

பல நூல்களும் - பல சாத்திரங்களும் இச் சங்கத்தொனியில் முழங்குகின்றது என்னும்படித், தேவர்களும் மயங்கும்படியாக நின்று (பலவித) பண்களையும் ஊதின மேக வண்ணனாம் திருமாலின் மருகனே!

முன்னாய் மதன் - மதன் முன்னாய் - மன்மதன் முன்னாக நின்று, தனது (கரும்பு வில்) - தனது கரும்புவில்லை நேர்தடம் தெரிந்து நேராக (எய்ய வேண்டிய) இடத்தை அறிந்து, முன்பாக (ஓர்) ஒரு (பொருங்கை) (பொருகை) போர்செய்யும் தொழிலை மேற்கொண்டதுபோல, (முனையாட) போர்த்தொழிலைப் புரிய - மன்மதன் காலமும் இடமும் அறிந்து தனது போர்த்தொழிலைப் புரிய - அதாவது காம இச்சையை ஊட்ட

நெருங்கி ரவிக்கையுள் நிமிர்ந்துள்ள கொங்கையை உடைய உண்மைக் குணம். கொண்ட மாதர்கள் வந்து வணங்குகின்ற **முள்வாய்** என்னும் தலத்தில் விளக்கமுற நிற்கும் பெருமாளே! (நாய் உள்ளம் கவின்று புகுவாயே)

## 6. வாகைமாநகர்.

(திருவோத்தூர் சப்டிஸ்ட்ரிக்டில் வாகை என்னும் ஓரூர் இருக்கின்றது.) பாடல் 365-கீழ்க்குறிப்பு ‡ பாடபேதத்தைப் பார்க்க.

## 994. காம இச்சை அற

தான தான தனத்த, தான தான தனத்த
தான தான தனத்த தனதான

*ஆலை யான மொழிக்கு மாளை யூடு கிழிக்கு
மால கால விழிக்கு முறுகாதல்-
ஆசை மாத ரழைக்கு மோசை யான தொனிக்கு
மார பார முலைக்கு மழகான;
ஓலை மேவு குழைக்கு மோடை யானை நடைக்கு
† மோரை சாயு மிடைக்கு மயல்மேவி-
ஊறு பாவ வுறுப்பி லூறல் தேறு கரிப்பி
லூர வோடு விருப்பி லுழல்வேனோ;
‡ வேலை யாக வளைக்கை வேடர் பாவை தனக்கு
மீறு காத லளிக்கு Xமுகமாய-
மேவு வேடை யளித்து நீடு Oகோல மளித்து
** மீள வாய்மை தெளித்து மிதண்மீது;

---

* ஆலை - கரும்பு 'ஆலையஞ் சிலைவேள் ஆகம் அழல்பட'
-கந்தபுரா 1-4-90.

† ஓரை - குரவைக்கூத்து - (பிங்கலம்)

‡ முருகவேள் வளையல் செட்டியாய் வள்ளியிடம் வந்தது
-பாடல் 612-பக்கம் 422 கீழ்க்குறிப்பு.

X 'முகமாயம்' - 'வாவியில் உதித்த முக மாயக்காரனும்'
-வேளைக்காரன் வகுப்பு, பாடல் 199-பக்கம் 12 கீழ்க்குறிப்பு X.

** நீடு கோலம் அளித்தது - வேட்டுவக் கோலம், செட்டிக் கோலம், வேங்கைமரக் கோலம், தவக்கிழவர் கோலம், தெய்வ உருவம் ஆகிய கோலங்கள்.

(1) "வேட்டுவக் கோலத்தைக் கொடு குமரன் தோன்றினான்"
"மாநுட நல்வடி வங்கொடு நின்றான்"
-கந்தபுரா. 6-24-66, 82.

(2) 'செட்டி வடிவைக் கொடு தினைப்புனமதிற் சிறுகுறப் பெண் அமளிக்குள் மகிழ்செட்டி" - திருப்புகழ் 215-அடி 8.

(3) "வேங்கையின் உருவமாகி வேற்படை வீரன் நின்றான்"
-கந்தபுரா 6-24-75.

(தொடர்ச்சி 877 ஆம் பக்கம் பார்க்க)

# 6. வாகை மாநகர்

## 994.

(ஆலை) கரும்பு போன்ற மொழிக்கும், ஆளையே உள்ளூடறுக்கும் ஆலகால விஷம் போன்ற விழிக்கும் - காம இச்சை என்னும்

ஆசையைக்கொண்ட மாதர்கள் அழைக்கின்ற ஓசை கொண்ட குரலின் தொனிக்கும், முத்து மாலை அணிந்த பாரமான கொங்கைக்கும், அழகான

காதோலைக்கும், பொருந்திய குழையணிக்கும், நெற்றிப் பட்டம் அணிந்துள்ள (பெண்) யானையின் நடைபோன்ற நடைக்கும், (ஓரை) குரவைக் கூத்தில் சாய்வதுபோலச் சாய்ந்துள்ள இடைக்கும், நான் மோகம் கொண்டவனாகி,

(ஊறு) காம ஊறல் பாவு அவ் உறுப்பில்-பரவும் அந்த (உறுப்பில்) அவயவத்திலும், (அந்த) ஊறலைத் (தேறும்) அறியும் (கரிப்பில்) காரமான அநுபவத்திலும், (ஊர ஓடு) தினைவு கொண்டு வேகமாகச்செல்லும் ஆசையிலேயே அலைச்சல் ஊறுவேனோ!

வேலையாக வளைக்கை(கைவளை வேலையாக)கையில் வளையலிடும் வேலையைப் பூண்டவனாகி - வளை விற்கும் செட்டியாய் வேடர்பாவை தனக்கு - வேடர் மகளாம் வள்ளிக்கு - மீறு காதல் மிக்கெழும் ஆசையை ஊட்டின (முகமாய) மாயமுக! மாயம் பூண்ட (மாயத்தால் மாநுட உருவம் பூண்ட) திருமுகத்தை உடையவனே!

பொருந்தும்படி (வேடை) வேட்கையை - காம நோயைத் தந்தும், பெருமை வாய்ந்த (கோலம்) அழகு உருவங்களைக் காட்டியும், மீண்டும் (இறுதியாக) உண்மையை அறிவித்தும், பரண் மீதிலே-

---

(தொடர்ச்சி) (4) "சைவநெறி நற்றவ விருத்த வேடமது கொண்டு
வரும் வேடரெதிர் சென்றான்" -கந்தபுரா 6-24-94.

(5) "கருணை செய்து தொல் லுருவம் காட்டினனே"
'முந்நான்கு தோளும் முகங்களோர் மூவிரண்டும்
கொன்னார்வை வேலும் குலிசமும் ஏனைப்படையும்
பொன்னார் மணிமயிலும் மாகப் புனக்குறவர்
மின்னாள்கண் காண வெளிநின் றனன் விறலோன்"
-கந்தபுரா 6-24-115, 116.

(தொடர்ச்சி 878 ஆம் பக்கம் பார்க்க.)

மாலை யோதி முடித்து *மாது தாள்கள் பிடித்து
†வாயி லூறல் குடித்து மயல்தீர-
வாகு தோளி லணைத்து மாக மார்பொழி லுற்ற
வாகை மாநகர் பற்று பெருமாளே. (1)

## 7. ‡விசுவை.

## 995. திருவடியைப் பெற

தனன தனந்த தனன தனந்த
தனன தனந்த தனதான

திருகு செறிந்த குழலை வகிர்ந்து
முடிமலர் கொண்டொ ரழகாகச்-
செயவரு துங்க முகமும் விளங்க
முலைகள் குலுங்க வருமோக;
அரிவையர் தங்கள் வலையில் விழுந்து
அறிவு மெலிந்து தளராதே-

(877 ஆம் பக்கத் தொடர்ச்சி)

** வள்ளியிடம் வாய்மை தெளித்தது - "நீ முற்பிறப்பில் திருமாலின் மகள். எம்மை அணையவேண்டித் தவஞ் செய்தாய்; அதனால் இப்போது உன்னை அடைந்தேன்" - என முருகவேள் உண்மையை வள்ளிக்கு விளக்கினார்.

"உம்மை யதனில் உலகமுண்டோன் தன் மகள்நீ
நம்மை அணையும்வகை நற்றவஞ் செய்தாய்; அதனால்
இம்மை தனிலுன்னை எய்தினோம் என்றெங்கள்
அம்மை தனித்தழுவி ஐயன் அருள்புரிந்தான்"

-கந்தபுரா 6-24-119.

* "குறமகள் பாதம் வருடிய மணவாளா"
"குறத்தி பதத்துணை வருடி" - திருப்புகழ் 225, 296.

† "வாயிதழின் சுவையால்" - திருப்புகழ் 1002.

‡ இது வடக்கே உள்ள விசாக பட்டினம் தானோ வேறு தலமோ தெரியவில்லை: அருணகிரியார் வட நாட்டுத் தலங்களையும் தரிசித்தனர் என்பதை அவருடைய பாடல்கள் 655-659

(தொடர்ச்சி 879 ஆம் பக்கம் பார்க்க)

மலர் மாலையை வள்ளியின் கூந்தலிலே முடித்தும், (அந்த) மாது வள்ளியின் காலை வருடியும், அவள் வாயிதழ் ஊறலைப் பருகியும் மோகம் தீர -

அழகிய தோள்களில் (அவளை) அணைத்தும், ஆகாயத்தை அளாவும் சோலைகள் உள்ள **வாகை** மாநகரில் வந்து விருப்புடன் வீற்றிருக்கும் பெருமாளே!

(விருப்பில் உழல்வேனோ)

## 7. விசுவை

## 995.

திருகுபில்லை அணிந்துள்ள கூந்தலை (வகிர்ந்து) வாரி வகுத்து, முடியில் மலர் அணிந்து, ஒருவகையான அழகு விளங்கச்

செய்வதால் வரும் சிறப்பான முகம் விளக்கம்தர, கொங்கைகள் குலுங்க வருகின்ற, மோகத்தைத் தரும்

மாதர்களின் வலையிலே விழுந்து, அறிவு மெலிவுற்று, (நான்) சோர்வு அடையாமல்

---

தெளிவாக்குகின்றன. மேலும் பாடல் *819*-ல் வட **விஜயபுரந்தனில்** மேவிய பெருமாளே" என்ற அடியில், 'வட' என்ற குறிப்புளதால் இந்தத் தலம் விஜயவாடா என இப்போது வழங்கும் (Bezwada) என்று தோன்றுகின்றது. இங்கே மலையடிவாரத்தில் 'அறுமுகனார்' கோயில் ஒன்று இருக்கின்றது. அருட்கவி சேதுராமனார் அந்த முருகரைத் (*22-8-1954* தேதியில்) தரிசித்தபொழுது பின்வரும் அடிகள் அவர் பாடல்களில் உதித்துள.

1. "**அஜவாகன லக்ஷண ! உத்தர**
   **விஜயாபுரி** மெத்தவு மெச்சிய மந்தகாசா"
2. "கிருட்டி ணாநதி நீளலை மோதிட
   **வடக்கில் வாழ்விஜ** யாபுரி மேவிய பெருமாளே"

மேலும், இந்த வட விஜயபுரத்தைத்தான் அருணகிரியார் பாடியுள்ளளார் என்பதும்-

'அருணகிரி பரவுமலை அடிவாரத்-
தறுமுகவ விஜயபதி மருகோனே:
வருமடியர் தொழுதமயில் மிசையோனே!
**வட விஜய** புரமருவு பெருமாளே'

என வரும் சேதுராமனார் வாக்கால் தெளிவாகின்றது.

அமரர் மகிழ்ந்து தொழுது வணங்கு
ணடியிணை யன்பொ டருள்வாயே

வரையை முனிந்து விழவெ கடிந்து
வடிவெ லெறிந்த திறலோனே-
*மதுரித செஞ்சொல் குறமட மங்கை
நகிலது பொங்க வரும்வேலா;

விரைசெறி கொன்றை யறுகு புனைந்த
விடையரர் தந்த முருகோனே-
விரைமிகு † சந்து பொழில்கள் துலங்கு
விசுவை விளங்கு பெருமாளே.

---

* வள்ளியின் செஞ்சொல் - 'இந்தளாம்ருத வசனம்', 'சஞ்சி தாம்ருத வசனம்', 'பண்கள் தங்கு அடர்ந்த இன்சொல்'; 'நல்ல கொல்லியைச் சேர்க்கின்ற சொல்' (திருப்புகழ் 289, 79, 96, கந்தரலங்காரம் 10) என்றெல்லாம் வியக்கப்பட்டுளது.

† "சந்தமர் பொழிலணி சண்பை" - சம்பந்தர் 3-18-11.

தேவர்கள் மகிழ்ச்சியுற்றுத் தொழுது வணங்குகின்ற உனது திருவடியிரண்டையும் அன்புடனே (எனக்குத்) தந்தருளுவாயாக;

கிரௌஞ்சகிரிமேற் கோபித்து, அது அழிபட்டு விழும்படிக் கண்டித்துக், கூரிய வேலை அதன்மேற் செலுத்தின திறமை வாய்ந்தவனே!

இனிமை வாய்ந்த செவ்விய சொற்களை உடைய குறமகளாம் அழகிய வள்ளியின் (நகில்) கொங்கைகள் பூரிக்க அவளிடம் சென்ற வேலனே!

நறுமணம் கொண்ட கொன்றை, அறுகு இவைகளைச் சூடியுள்ள இடபவாகனராம் (அரர்) சிவபிரான் அருளிய குழந்தையே!

வாசனை கொண்ட சந்தன மரச் சோலைகள் விளங்கும் **விசுவை** என்னும் தலத்தில் விளங்கி வீற்றிருக்கும் பெருமாளே!

(அடியிணை அன்பொ டருள்வாயே)

**—வேலுமயிலுந் துணை—**

வேலு மயிலுந் துணை.

# முருகவேள் பன்னிரு திருமுறை

## பொருளடக்கம் - (தொகுதி 3, 4)

பாடல்களின் பாட பேதங்கள் முதலியவற்றால் ஏற்பட்ட வேறு ஸ்தலங்களும் அவற்றுக்கு உரிய பாடல்களின் எண்களும்.



வேலு மயிலுந் துணை.

## முருகவேள் பன்னிரு திருமுறை - தொகுதி 4.

# பாட்டு முதற்குறிப் பகராதி.

உ

வேலு மயிலுந் துணை

# முருகவேள் பன்னிரு திருமுறை

## விஷய ஆராய்ச்சி --- (தொகுதி 3, 4.)

## சிவபிரான்

திருமால்:

**திருவிளையாடற் சரிதங்கள்:**



**தேவசேனை**



**தொகைவகை:**

**நாயன்மார்:**

## பாரத விஷயங்கள் 481



## பார்வதி:

முருகன்:

**முனிவர்கள்**

## ராமாயண விஷயங்கள்



## ராவணன்